# சங்க இலக்கியப் பொருட்களஞ்சியம்

## தொகுதி இரண்டு



தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர்

# சங்க இலக்கியப் பொருட் களஞ்சியம்




## தொகுதி – 2

## க – கௌ

*முதன்மைப் பதிப்பாசிரியர்*

முனைவர் இரா. சாரங்கபாணி
எம்.ஏ., எம்.லிட்., பிஎச்.டி.
இலக்கியத்துறை
தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர்.



**தமிழ்ப் பல்கலைக் கழகம்**
**தஞ்சாவூர்**

தமிழ்ப் பல்கலைக்கழக வெளியீடு : 52 – 2

திருவள்ளுவராண்டு ஆடி 2017 சூலை 1986

| | | |
|---|---|---|
| நூல் | : | சங்க இலக்கியப் பொருட்களஞ்சியம் தொகுதி இரண்டு |
| முதன்மைப் பதிப்பாசிரியர் | : | முனைவர் இரா. சாரங்கபாணி |
| மொழி | : | தமிழ் |
| பொருள் | : | களஞ்சியம் |
| பதிப்பு | : | முதற் பதிப்பு 1986 |
| | | மறுபதிப்பு - 2003 |
| பக்கம் | : | 612 |
| தாள் | : | டி.என்.பி.எல் மேப்லித்தோ 16kg |
| அளவு | : | 1/4 டெம்மி |
| நூற்கட்டுமானம் | : | முழு காலிகோ கட்டு |
| விலை | : | உரூ. 400/- |
| படிகள் | : | 500 |
| அச்சு | : | தமிழ்ப் பல்கலைக்கழக மறு தோன்றி அச்சகம், தஞ்சாவூர். |

# பதிப்பு முகவுரை

சங்கவிலக்கியப் பொருட்களஞ்சியம் முதல்தொகுதி அகரம் முதல் ஒளகார விறுவாயுள்ள பெயர்களுக்குப் பொருள் விளக்கம் எழுதப்பெற்று ஏப்பிரல் 86-இல் வெளிவந்தது. அதனைத் தொடர்ந்து ககரம் முதல் கௌகாரம் வரையுள்ள பெயர்களுக்குரிய பொருள் விளக்கம் இவ்விரண் டாம் தொகுதியாக வெளி வருகின்றது. இத்தொகுதியைப் பயன்படுத்து வோர் இக்களஞ்சிய உருவாக்கத்திற்கு மேற்கொண்ட நெறிமுறைகளை முதல் தொகுதியின் பதிப்பு முகவுரையில் அறிந்து கொள்ளுதல் செய்தி யைத் தெளிவாக உணர்தற்குத் துணையாகும்.

ஒரு சொல்லுக்குப் பலபொருள் காட்டும் போது ஒன்று தொழிற் பெயராக இருக்குமாயின் அதற்கு நூல்வரிசையில் முதலில் வந்த இடத் திற்கு மட்டும் விளக்கம் எழுதிப் பிற இடங்களுக்கு அவை பயின்ற இடங்கள் மட்டும் சுட்டப்பெறும். சான்றாகக் 'கோள்' என்பதற்குப் பல பொருள்களையும் காட்டி, அது கொள்ளுதல்' என்ற பொருளில் வரும் போது முதலில் வருவதற்குமட்டும் விளக்கம் எழுதி பிறவற்றிற்கு அவை பயின்ற இடங்களை மட்டும் குறிக்கப்பட்டுள்ளதைக் காணலாம்.

இப்பொருட் களஞ்சியம் விரைவில் உருவாக்கத் திட்டம் வகுத்து இடையிடையே கலந்து உரையாடிப் பல நற்கருத்துக்களைப் புலப்படுத்திப் பல்லாற்றானும் உதவிய தமிழ்ப் பல்கலைக் கழகத் துணைவேந்தர் வ.அய். சுப்பிரமணியனார் அவர்கட்கும் இப்பணிக்கு உறுதுணையாக இருந்த பல்கலைக் கழக ஆட்சிக் குழுவினர்க்கும் என் உளமார்ந்த நன்றி.

இக்களஞ்சியத் தொகுப்பு உருவாவதற்கு விளக்கக் குறிப்பு எழுதித் துணைபுரிந்த முதுநிலை ஆய்வாளர் புலவர் சி. செல்வத்தாண்டவன, எம்.ஓ.எல்., சிறப்பு உதவியாளர்கள் முனைவர் வ. குருநாதன, எம்,ஓ.எல்., பி.எட்., பி.எச்.டி., புலவர் நா. செல்வராசு, எம்.ஏ., எம்.பில்., புலவர் இரா. சொக்கலிங்கம், எம். ஏ., பி. எட்., கையெழுத்துப் படிகளைத்

தட்டச்சுச் செய்துதவிய செல்வி இரா. மலர்விழி, பி.சயி., ஆகியோர்க்கும் நன்றியுடையேன். இக்களஞ்சிய வெளியீட்டுக்குத் துணைநின்ற பேராசிரியர் முனைவர் சோ. ந. கந்தசாமி அவர்களுக்கும் மெய்ப்புத்திருத்தம் செய்துதவிய புலவர் இரா. கணபதி, பி.லிட்., அவர்களுக்கும், விரைந்து செம்மையாக அச்சுப்பணி செய்து குறித்த காலத்தில் இத்தொகுதி வெளியிட உதவிய அண்ணாமலைநகர் 'சிவகாமி அச்சகத்தார்க்கும்' கட்டமைப்பு முதலியன செய்து இப்பதிப்பு அழகாக வெளிவர உதவிய தமிழ்ப் பல்கலைக்கழகப் பதிப்புத் துறையினர்க்கும் என்நன்றியைப் புலப்படுத்திக் கொள்கின்றேன்.

இதனைத் தொடர்ந்து சகரம் முதலிய உயிர்மெய் எழுத்துக்களை முதலாகக் கொண்ட தொகுதிகள் வெளிவரும். இக்களஞ்சியத்தைக் கண்ணுறும் அறிஞர் பெருமக்கள் எவையேனும் குறைகள் காணுவாராயின் அவற்றைத் தெரிவித்தால் நன்றியுடன் ஏற்று அடுத்த பதிப்பினைச் செம்மையாக வெளியிட வாய்ப்பாக இருக்கும்.

*இரா. சாரங்கபாணி*

*பதிப்புதவியாளர்*

புலவர் சி. செல்வத்தாண்டவன், எம்.ஓ.எல.,
முனைவர் வ. குருநாதன், எம்.ஓ.எல்., பி.எட்., பிஎச்.டி.,
புலவர் நா. செல்வராசு, எம்.ஏ., எம்.பில்.,
புலவர் இரா. சொக்கலிங்கம், எம்.ஏ., பி.எட்.,

# சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| அகத். | — | அகத்திணையியல் |
| அகம். | — | அகநானூறு |
| அ.சி. | — | அபிதான சிந்தாமணி |
| உ.வே.சா. | — | உ.வே. சாமிநாதையர் |
| ஔவை.து. | — | ஔவை. துரைசாமிப் பிள்ளை |
| ஐங். | — | ஐங்குறுநூறு |
| ஐங்.தி. | — | ஐங்குறுநூறு-திரட்டு |
| க.க. | — | கலைக் களஞ்சியம் |
| க.வா. | — | கடவுள் வாழ்த்து |
| கலி. | — | கலித்தொகை |
| குறி. | — | குறிஞ்சிப்பாட்டு |
| குறு. | — | குறுந்தொகை |
| ச.சி.பெ. | — | சங்க காலச் சிறப்புப் பெயர்கள் |
| சிறு. | — | சிறுபாணாற்றுப்படை |
| சூ. | — | சூத்திரம் |
| த.பே. | — | தமிழ்ப் பேரகராதி |
| த.வ.க. | — | தமிழ்ப் புலவர் வரலாற்றுக் களஞ்சியம் |
| தி. | — | திரட்டு |
| தொல். | — | தொல்காப்பியம் |
| நச்.நச்சர். | — | நச்சினார்க்கினியர் |
| ந.சு. | — | ந. சுப்பிரமணியன் |
| ந.மு.வே. | — | ந.மு. வேங்கடசாமி நாட்டார் |
| நற். | — | நற்றிணை |
| நெடு. | — | நெடுநல் வாடை |
| பக். | — | பக்கம் |
| பட். | | பட்டினப் பாலை |
| பதி. | — | பதிற்றுப் பத்து |
| பதி.தி. | — | பதிற்றுப் பத்து - திரட்டு |
| பதி.ப. | — | பதிற்றுப் பத்து – பதிகம் |
| ப.மு. | — | பல்லவர் காலத்துக்கு முன் (Pre-Pallavan Tamil Index) |
| பரி. | — | பரிபாடல் |
| பரி.தி. | — | பரிபாடல் - திரட்டு |
| பி.நா. | — | பின்னத்தூர் நாராயணசாமி ஐயர் |
| புறம். | — | புறநானூறு |
| பெரு. | — | பெரும்பாணாற்றுப்படை |
| பெருமழை. | — | பெருமழைப் புலவர் பொ.வே. சோமசுந்தரனார் |
| பொரு. | — | பொருநராற்றுப்படை |
| பொருள். | — | பொருளதிகாரம் |
| மது. | — | மதுரைக் காஞ்சி |
| மலை. | — | மலைபடுகடாம் |
| முரு. | — | முருகாற்றுப்படை |
| முல்லை. | — | முல்லைப்பாட்டு |
| மொ.அ.து. | — | மொ. அ. துரையரங்கசாமி |
| வ.பி.அ. | — | வரலாற்றுப் பின்னணியில் அகநானூறு uru in its Historical Setting) |
| வெ. | — | வெண்பா |
| வே.வி. | — | வேங்கடவிளக்கு |
| வை.பி. | — | வையாபுரிப் பிள்ளை |

# சங்க இலக்கியப் பொருட்களஞ்சியம்

## க

**கங்கன்** - சேரன் படைத்தலைவன். கங்கர் மரபைச் சார்ந்தவன் (ப. மு. பக். 191). சேரன் படைத்தலைவர் அறுவருள் ஒருவன் (வே. வி. அகம். 44). சோழன் பெரும்பூட் சென்னியின் படைத்தலைவ னாகிய பழையன் என்பான் நன்னன, ஏற்றை, அத்தி, துன்னருங் கடுந்திறல் கங்கன், கட்டி, புன்றுறை என்னும் சேரர் படைத்தலைவர் அறுவரைப் பாசறையில் தாக்கிப் பொருது மாய்நதான்; அதுகண்டு பொறாத பெரும்பூட் சென்னி கழுமலம் என்னும் ஊரைக் கைப்பற்றிச் சேரன் படைத்தலைவனான கணையன் உட்பட ஏனைய படைத்தலைவரையும் வென்றான் (அகம். 44:7-14).

**கங்கு** - எல்லை. கிணைப்பொருநனும் அவன் சுற்றத்தாரும் வாட்டாற் றெழினியாதனிடம் பெற்ற செல்வத்திற்குக் கங்கு—எல்லை-இல்லை (புறம். 396: 25).

**கங்குல்** - இரவு. முள்ளூரை அடுத்த சிறுகாடு கங்குல் -இரவு- ஓரிடத்தே உறங்குவது போன்று இருள் செறிந்திருந்தது (புறம். 126:6-8). கிணைப்பொருநன் தடாரியை முழக்கிச் சோழன் நலங்கிள்ளியின் புகழ் பாட, கங்குலின் கடையாமத்திலும் உறங்காத அச்சோழன் கிணைக்குரல் கேட்டுச் சிறப்புடைய புத்தாடையினையும் கலன்களையும் உணவினையும் அவனுக்கு வழங்கினான் (புறம். 400:4-14). பகைவரைப் பொருட்படுத்தாத வீரர், தமக்கு வரையறுத்த இடங்களைக் காவல் புரியாராய் மிகவும் கரிய கங்குலிலும் வீரவளை ஒளிவிடும்படி, தோளைப் பிணித்த கைகளை யுடையவராய்க் கூதிர்ப்பாசறைக்கண் திரிவர் (பதி. 81:8-14). கங்குலும் நண்பகலும் துஞ்சாமல் கடல் ஆரவாரிப்பது 'தொணடைமான் இளந்திரையனை யான் பெற்றேன்' என்னும் செருக்கினாலேயாம் (பெரு. வெ.). அல்லங்காடியில் பண்டங்கட்கு விலை கூறும் மகளிரும் அப்பவணிகரும் கூத்தரும் ஏனை மாந்தரும் இனிதே துயில்கொள்ளக் கங்குலின் இடையாமம் வந்தது (மது. 621-631). ஊர்காப்பாளர் தெய்வம் உலவும் செயலற்ற கங்குலிலும் மதுரை வீதிகளில் உலவிக் காவல் செய்வர் (மது. 647-652). மலை முழைஞ்சில் உள்ள விலங்குகளால் கங்குலில் தலைவனுக்கு உண்டாகும் துன்பத்தை நினைத்துத் தலைவி வலைப்படு மயிலபோலக கலங்குவாள் (குறி. 250-261). மடப்பத்தை யுடைய மங்கையர் பாடல் ஓர்த்தும் நாடகம் நயந்தும் மாடத்திருந்து நிலவுப் பயன் துய்த்தும் காமபானத்தை உண்டு மகிழ்ந்தும் பட்டாடையை நீக்கிப் புணர்ச்சிக்காலத்துக்கேற்ற மென்மையுடைய துகிலை உடுத்துக் கணவரொடு கூடி மகிழ்ந்தும் பின்பு கடைக் கங்குலில் (இரவின் கடையாமத்தில்) மணல் மேட்டில் கண் துயின்றனர் (பட். 106-117). 'காவலாளர் சோர்வுற்றிருக்கும் நிலையை மறைய உணர்ந்து கங்குலில் வருதற்கும் நீ உரியை' எனப் பகற்குறிக்கண் செறிப்பறிவுறுத்தி வரைவு கடாவும் தோழி தலைவனிடம் கூறல் (அகம். 2:14,15) பானாட் கங்குலில், பெருங்கைக் கரடி ஈயல்புற்றத்தைத் தோணடும் போது, அதன் வள்ளுகிர் பட்டுப் புற்றிலிருந்த பாம்பு வலிகெடும் (அகம். 8:1-4). மழை நீங்கிய முன்பனிக் கடைநாளில் பனியுடன் கூடிய கரிய கங்குலின் வெள்ளத்தைத் தலைவி தமியளாய்த் தன் ஊரில் நீந்தி வருந்துவள் எனத் தலைவன தன் நெஞ்சிற்குக் கூறல் (அகம். 24:5-10) கங்குலில் (இரவின் கடையாமத்தில்) உழவர் உழவுக்கு வேண்டும் ஆட்களை அழைக்கும் ஓசை மிக்கிருந்தது (அகம். 37:1,2). சேற்றில் நிறறலை வெறுத்த எருமை, ஊரார் துயிலும் கங்குலில் தளையை அறுத்துக் கொண்டு வேலியைக் கொம்பினால் நீக்கி, வயலிலுள்ள மீன் கெட்டோட வள்ளைக் கொடியை மயக்கித் தாமரை மலரைத் தின்றது (அகம். 46:1-6). பாண்டியன முசிறிப்பட்டினததை முற்றுகையிட்டுச் செய்த போரில விழுப்புண்பட்ட வீரர்போல மிகவும் வருந்தி நடுக்கங்குலும் பகலும் பிரிவால் வருந்தித் தலைவி அழுவாள் எனப் பொருள்வயிற் பிரிந்த தலைவன் கிழத்தியை நினைந்து சொல்லல் (அகம். 57:14-19). கூதிர்க்காலத்தில் உயிர்களெல்லாம் உறங்கும் பானாட் கங்குலில் மேகம் இடியுடன் மழை பொழிய, கொடிச்சியர் தநதையர் வேட்டைக்குச் சென்ற காட்டில் துயிலிடம் பெறாது வீடு திரும்பிப் புலித்தோலில் படுத்தனர் (அகம். 58: 1-6). தலைவனைப் பிரிந்திருக்கும் தலைவி, பலரும் உறங்கும் கங்குலில் வாடையால் வருந்தித் தலைவன் வரும் காலத்தை நோக்கி மனைமரம் முறிய வளைத்துப் பிடித்து அதன் புறத்தே நின்றிருநதாள் (அகம்.

58:10-14). 'மலர்தார் மார்பனைக் கண்டோர் பலர்; அவருள், இருட்செறிந்த கங்குலில அணையின் கண்ணே தங்கி, நீர் சொரியும் கண்களோடு மெலிந்த தோளை யுடையேன் யானே' என்று கூறித தலைவி தோழிக்கு அறத்தொடு நின்றாள் (அகம. 82:14-18). திருமணம் நிகழ்ந்த தலைநாட் கங்குலில் ஓரில்லில் தலைவன் தலைவியைத் தழுவினான் (அகம். 86:20). மலைப்பக்கத்தில் கண்ணொளி கெடுமாறு மின்னி மழை பொழிந்த பானாட் கங்குலில் குஞ்சரத்தைத் தாக்கிக் கொடுவரிப் புலி முழங்கியது (அகம். 92:1-4). பானாட் கங்குலில் வானம் விண்மீனைப் பூத்தது போல உச்சிமலையின் பக்கலில் முசுண்டை வெள்ளிய மலர்களைப் பூத்தது (அகம். 94:1-3). பொறி விடுகின்ற கொளளிக் கட்டை போல மின்னி மிக்க மழை பொழிந்த நடு நாளாகிய கங்குலில், கொல்லும் விலங்குகள் திரியும் இருளில் தலைவன் இரவுக் குறிக்கண் வருதல் தலைவிக்கு அச்சந்தருவதாகும் (அகம். 108:7-11). கரடிக்கூட்டம், கறையான் புற்றை உடைத்துப் புற்றாஞ்சோற்றினை எடுக்கும் அரைநாட் கங்குலில் நீ வருதல் எமக்குத் தீங்கு தருவதாகும்' என வரைவு கடாவும் தோழி தலைவனிடம் கூறினாள் (அகம். 112:1-4,8). பனிவருத்துகின்ற அரைநாள் கங்குலில் தனிமை எய்தியவரின் பொறுக்கும் வல்லமையை ஆராயாது, வாடைக் காற்று தண்ணென வீசி வருத்தியது (அகம். 125:11-13). 'தலைவியைப் பிரிநது சென்றபின் நினைத்து இரங்கவேணடி வரும்' எனறு நினைத்த தலைவன் நள்ளென்னும் ஒலியுடைய கங்குலிலும் அவளுக்குத் துணையாயினான் (அகம். 129:1,2). கங்குல்தோறும் இனிய கனவுகள் தோனறுகின்றன; புள்நிமித்தங்களும் நல்லவாகின்றன; என நெஞ்சம் விரும்புகின்றது; ஆதலால், பொருள்தேடச் சென்ற நம் தலைவர் மதிநிறைந்து அறுமீன் சேரும் நாளில் விளக்கேற்றி மாலை நாறறிக் கார்த்திகை விழாவினைக் கொண்டாட வர விரும்புகிறேன எனத் தலைவி தோழிக்குக் கூறல் (அகம். 141:1-11,29). 'இரவுக் குறிக்கண் நினனுடன் கூடிக் களித்த தலைவி, பின் நீ வரும் வழியருமை நினைந்து துன்புறுதலால், வேட்டுவரும் துயிலும் கங்குலில் புலி வழங்கும் சிறு நெறிக்கண் வாரற்க' எனத் தோழி இரவுக் குறி மறுத்துத் தலைவனை வரைவுகடாயினாள் (அகம். 168:1,2,11-14). காலிறங்கி இடியுடன் பெருமழை பொழியும் கங்குலின் நடுவில தலைவன் தனியே வருதலை நினைந்து தலைவியின் கண் கலுழும் (அகம். 182:9-12). மகட்போக்கிய நற்றாய் வேலனிடம், 'கங்குலில் இடையறாது அழும் தன் கண் இனிது துயிலும் வண்ணம் தன மகளைத் தலைவன் கொண்டு வந்து விடுவானோ, தன் வீட்டிற்கே அழைத்துச் செல்வானோ, அவன் குறிப்பு யாது' எனக் கழங்கினால் ஆய்ந்து கூற வேண்டினாள் (அகம்; 195:15-19). இளவேனிற்காலத்தும் கங்குல் பொழுது துயிலின்றிக் கழியும் எனக்கூறி வருந்தும் தலைவியிடம் தலைவன் விரைந்து மீண்டு நின் வாயமுதம் உண்பான் எனக் கூறித் தோழி தேற்றினாள் (அகம். 237:5-8, 15-17). நாம் ஆயத்தாரோடு விளையாடியபொழுது வந்து நம் வண்டல் மனையைப் பாராட்டிய தலைவன் நம்மிடம் மறுமொழி பெறானாய்ப் பெயர்ந்தனன். அதுமுதல் அலர் தூற்றும் பெண்டிரால் கலங்கும் நமமுடன் கங்குலில் கடற்றுறையும் துஞ்சவில்லை எனத் தோழி தலைமகட்குக் குறை நயப்பக் கூறினாள் (அகம். 250:5-14). 'கார்காலத்து நடுவே மழை பொழிந்த கங்குலின் நடுவே பெருங்குளத்தின் சிறிய கரையை இரவில் காப்பவன் போல அன்னை துயிலாது தன்னைக் காவல் கொண்டனள்' என்பது தலைமகளின் சிறைப்புறக்கூற்று (அகம். 252:11-14). நீங்காத வாடைக்காற்று கங்குலில் கடிமனை மாடத்து வீசி அறமில்லாது வருத்தியமையால் தலைவி இழை நெகிழ்ந்து நலனழிந்தாள் (அகம். 255:15-17). ஓங்கு நடையினையும் சினத்தையும் உடைய யானைகள் கங்குலில் சூழ நிற்கப் பகைவரை முற்றுகையிட்ட வேந்தன் பாசறைக்கண் உள்ள தலைவர் நம் நிலை யறிவாரோ எனத் தலைமகள் தோழிக்குக் கூறல் (அகம். 264:10-15). கடவுள் மரத்தில் முள்ளால் மிடையப் பெற்ற கூட்டில், பேடை தன் சேவலோடு கூடப்பெறாது வருந்தும் கங்குலிலும் தலைவன் தன் ஊர்க்குச் செல்ல எண்ணுவதால் தலைவி அடையும் துன்பத்தை உணர்த்தித் தோழி வரைவு கடாயினாள் (அகம். 270:11-15). அணங்குடை நெடுங் கோட்டருவி, கங்குலில் புலியினைக் கொன்ற பெருங்கை யானையின் புலால் நாறும் புள்ளி பொருந்திய நெற்றியினைக் கழுவியது (அகம். 272: 1-3). மனைவியால் பெறும் இன்பம் காரணமாகப் பொருள் தேடப் பிரிந்து செல்லாதவர், நட்டோரின் வறுமையையும் கேளிரின் துன்பத்தையும் பகைவரின் பெருக்கத்தையும் காண்பர் எனக்கருதி உள்ளத்தில் கங்குல் பகலாகத் தோன்றி மூண்ட கவலைத் தீயைத் தலைவன் முயற்சி மழையால் அவித்துப் பொருள் தேடச் சென்றான் (அகம். 279:1-9). 'நடுக்கங்குலிலும் பொலிவற்ற மாலைக் காலத்திலும் பிரிவால் கலங்கி, நம் நினைவால் மிக்க துன்பம் அடையும் தலைவி நிலை என்னாகுமோ' எனப் பொருள்வயிற் பிரிந்த தலைவன் நெஞ்சிற்குரைத்தல் (அகம். 297:1-4). 'நாடனே, பெருங் காட்டிடத்தைக் கடந்து அரைநாள் இரவில் நீ இங்கு வந்து

தைக் காட்டினும், 'நம் தலைவர் காலம் நீட்டியாது வருவர்' எனறு கூறிக் கங்குலில் உசாத்துணை யாகித் துயிலாதிருந்த தோழி உன் வரவு கண்டு உவந்தது எனக்கு இனிதாகின்றது' என்று இரவுக் குறிக்கண் தலைவி தலைவனிடம் கூறினாள் (அகம். 298:13,14,20-23). தலைவன் பொருள்வயிற் பிரியின், நுதல் பசந்து தோள் மெலிந்து அழகழிந்து பகலும் கங்குலும் மயங்குதலுற்றுக் கண்ணீர் பெருக்கித் தலைவி துன்புறுவள் எனத் தோழி கூறிச் செலவு விலக்கினாள் (அகம். 307:1-6). கங்குலிற் பெய்த மழை, புலியொடு பொருது வருந்திய களிற்றின் மத்தகத்தில் உண்டான புண்ணைக் கழுவியது (அகம். 308:1-3). 'மின்னி மழை பொழிந்த பானாட் கங்குலில் ஆராக் காமம் வருத்த, மலை முகட்டி லிருந்து வீழ்வார் போல் அச்சம் உண்டாக நடுங்கித் துணையின்றி வாடுவையோ' என அல்லு குறிப் பட்ட தலைவன் நெஞ்சொடு புலம்பினான் (அகம். 322:1-6). 'நளியிருங் கங்குலில் புணர்குறி வாய்த்த களவும் எல்லையின்றி நீண்டது; அன்னையும் இக் களவினை உள்ளத்திற்கொண்டு ஒழியாது காக்கின் றாள்; ஆதலால், இவண் தங்குதல் எவ்வாறு இய லும்; தலைவி இரங்கத்தக்கவள்' எனத் தலைவன் கூறியதைத் தலைவி தோழியிடம் எடுத்து மொழிந் தாள் (அகம். 325:3-6). மழைபொழிந்த இருள் செறிந்த யாமத்தில் தலைவன் பாம்பின் தலையை இடறிக்கொண்டு வந்து தலைவியின் முலையிடைப் பொருந்தித் தன் வருத்தம் நீங்கத் தழுவிக் கங்கு லில் இன்புற்றான் (அகம். 328:3-7). 'இவ்வுலகம் தனக்கே உரித்தாக ஆளும் செல்வம் உண்மை யாகவே கைகூடியதாயினும், கங்குலில் தோன்றும் கனவு போல் அது மறையும்' எனத் தலைவன் பொருள் கடைக்கூட்டிய நெஞ்சிற் குரைத்தல் (அகம். 379:6-9). இப்பொழுது மாலைக்காலம் வந்தது; இதன் பின்னர்க் கங்குலும் வரும்; யான் என் செய் வேன் எனத் தலைவனைப் பிரிந்த தலைவி வருந்தி னாள் (குறு. 122:3,4). கூகை குழறினும் முன்றிலி லுள்ள பலாமரத்தில் குரங்கு தாவித் துள்ளினும் முன்பு அஞ்சிய என் நெஞ்சம் இப்பொழுது ஆரி ருட் கங்குலில் அஞசாமல் தலைவரிடத்தே செல்லு தலைத் தவிராது எனத் தலைவி கூறல் (குறு. 153). 'நடுக்கங்குலிலும் நின் ஆரவாரம் செவிப்படும்; யான் ஒரு தலைவனால் அணங்குற்றது போல நீயும் ஒரு தலைவனால் வருத்தம் அடைந்தனை போலும்' எனக் கடலை நோக்கிக் கழிபடர் மிக்க தலைவி கூறினாள் (குறு. 163). தலைவர் குறித்துச் சென்ற இளவேனிற் பருவம் வந்தது; அவர் வருகை யைக் கூறும் தூதும் வந்திலது; ஆதலால், துயிலு தற்கினிய கங்குலில் உடன் துயிலுதலை அவர் மறந்தார்; என் கூந்தலணையையும் நினையாராயி னார் எனப் பருவ வரவு கண்ட தலைவி கூறல் (குறு. 254). கடுஞ்சூல் நோயுடைய அன்றிற்பெடை தன் துணையை அழைக்கும் நடுக் கங்குலில் தலைவ னது தேர் வாராவிடினும் வருவது போலக் காதி னிடத்து ஒலித்தலால் என் கண் துயில் துறந்தன எனத்தலைவி கூறல் (குறு.301:3-8). தலைவி நளளென் கங்குலில் தன்னொடு ஒத்த ஒழுக்கமுடையவளா கவும் வைகறையில் அயலாரைப் போனற ஒழுக்க முடையவளாகவும் நடந்துகொள்ளும் ஆற்றலைத் தலைவன் வியந்து கூறினான் (குறு. 312:4,8). 'மழை மிகுதியால் வானும் நிலனும் காணமுடியாத, பலரும் துஞ்சும் பானாட் க்ங்குலில், எவ்வாறு எம் ஊரறிந்து வந்தாய்' என இரவுக்குறிவந்த தலை வனைத் தோழி நொந்து வினவினாள் (குறு. 355). இரவு வரம்பாக மாலைப் பொழுதை நீந்தலே அரிது; அதற்குப்பின் வரும் கங்குல் வெள்ளம் கடலினும் பெரிதாகும்; ஆதலால் மாலைக் காலத் தைக் கடந்து என்ன பயன் எனத் தலைவி தோழி யிடம் வருந்திக் கூறினாள் (குறு. 387). மகன் பிறந்ததனால் தலைவன் நள்ளென் கங்குலிற் கள்வன் போலத் தன் இல்லம் சென்றான் எனத் தலைவிக்குப் பாங்காயினார் கேட்பப் பரத்தை கூறல் (நற். 40:10-12). பலாமரங்கள் நிறைந்த முன்றிலினகண் இலலக்கிழத்தி கங்குலில் அருவியின் ஒலிகேட்டு உறங்குவள் (நற். 77:5-7). 'அன்னை நம் களவறிந்து தலைவன் யாங்குளன் எனறு வினவும்; புன்னை மரங்களையுடைய சேரியின்கண் நடு யாமத்துக் கங்குலிலும் தலைவன் தோமணியோசை மெலல ஒலிக்கும்; இதற்கு யான் என செயவேன்' எனத் தோழி சிறைபபுறத்தானாகிய தலைவற்குக் கூறி வரைவு கடாயினாள் (நற். 145.6-11). கூட்டில் தன பெடையைப் பிரியாது புணர்ந்திருக்கும் அன்றிலின உயங்கு குரலுடன் கலந்து வந்த கங்குல், தன் செயலறுமாறு கையறவைத் தந்தது என மடல் வலித்த தலைவன் தோழியிடம் கூறி னான் (நற். 152:6-9). கடலில் மீன் பிடிக்கும் பரதவர் தம் மரக்கலங்களில் கங்குலில் ஏற்றிய விளக்கு இளஞாயிற்றின் எதிரொளி போலத் தோன்றும் (நற். 219:5-8). செறிந்த இருளையுடைய கங்குலில் பறவை யொலிப்பதைக் கேட்குந்தோறும் காதலன் ஊர்ந்து வரும் தேர்மணியோசையோ எனக்கருதித் தலைவி ஊரெல்லாம் உறங்குகினற கங்குலிலும் துயில்கொள்ளாதிருந்தாள் (நற். 287: 9-11). 'இளமை கழியின் பெறற்கரிது; வாழ்நாள் அளவை அறிந்தாரும் இலர்; ஆதலால் நின்னை அணைத்தபடியே கங்குல் கழிவதாக' என முன்பு கூறிப் பிரிந்த தலைவனின் பொய்யுரையால் அவன்

துனபுறாது வாழ்வானாக எனத் தலைவி கூறி னாள் (நற். 314:1-8). பிரிவால் ஆற்றாமை மீதூர்ந்த தலைவி, அணிந்த கலன நெகிழத் தனிமைத் துன்பத் துடன் நீணட கங்குல் முழுதும் துயில் பெறாது வருநதினாள் (நற். 348.7,8). பெய்யா வானம் பெயத் தொடஙகியது; தலைவி பிரிவால் வளை நெகிழ அழத் தொடஙகினாள்; அதற்கெதிராகக் கஙகுலில் முழஙகும் இடியோசை போலக் கோவலர் குழல் ஊதினா (நற். 371·5-9). 'நடுநாளாகிய கங்குலினும் வருகினற உன்னை விலங்கு தாக்கின் யான்அதன் விளைவறியேன' எனக் கூறித் தோழி இரவுக்குறி மறுததல (ஐங். 296:3,4). இடைசசுரத்துச் சிறிது கணணயர்ந்தாலும் நள்ளென கங்குலினகண் மனையிடத்தே தலைவியைக் கனவிற் காண்பேன்; ஆதலினால் தலைவியை மறந்தேன் அல்லேன் எனத் தோழியிடம் தலைவன் கூறல் (ஐங். 324: 1-3). தலைவன்பாற் செலலாமல் தன் உயிரைக் காகக முயனறும், மலர் மணம் நெடுவெண்டிங் களைக் கொண்ட கங்குலில் வநது வருத்தத்தைத் தரும் எனபது தலைவி கூற்று (கலி. 29:18-21). மழைமிகக கஙகுலில் தலைவன செய்யும் இரவுக் குறியை உற்றுக் கேட்டு வருந்தும் தலைவியின் தோளகள் மெலிந்தன (கலி. 48: 8, 9). தலைவியின் அழகு கெடுமாறு பகலிலும் துன்பம் தரும் பிரிவு வருத்தம், கங்குலிற் கனவின்கண்ணும் வந்து அவளைத் துன்புறுத்தியது (கலி. 53: 18, 19). கங்குலில உயிர்களெல்லாம் சேரத்துயின்றன (கலி. 65:3). மகளிர் முன்கையிற் கிடந்த தொடியாலே வடுவுண்டாகுமாறு கங்குலில தம் கணவரோடு கூடினர் (கலி. 66:4,5). தன தந்தையாகிய துரோ ணனைக் கொனற சிகண்டியின தலையை அசுவத் தாமன் கங்குலிற் கொய்தான் (துரோணனைக் கொன் றவன திடடததுய்மன எனறு பாரதம் கூறும்) (கலி. 101: 30-32). உயிர்கள் பொருள்களைக் காண முடியாத வாறு கங்குல இருளைப் பரப்பிச் செயலறுமாறு செயதது (கலி. 123:6). தோள் துறந்து அருளாத தலைவரைப போலத் தாழை மீதிருந்த நாரை நளியிருங் கங்குலில் தலைவியின துயரை அறியா மலும அளி செயயாமலும் தனக்குக் காமநோயா லான வருத்தமிலலாமல மாறாமற் கூவும் (கலி. 128: 1-5). ஊர்காவலர் காக்கும் கஙகுலிடத்துக் கன விலே யான நினைத்தவாறே வந்து தோன்றிய தலைவனை வளைந்து பிடித்துக் கொண்டு பையென விழித்தபோது, பிடித்த கையுள்ளே மறைந்தான என்பது பிரிவால் வாடும் தலைவி கூற்று (கலி. 142: 32-36). மேகம் காலைப் பொழு தில் கடலை முகந்து மாலையில் மலையைச் சேர்ந்து உயிரினமெல்லாம் துயிலும் கங்குலில் மழை பெய்தமையால் வையை பலவகை மணததை உடன்கொண்டு பிறர்க்குக் கொடுத்தது (பரி. 20: 6-11).

**கங்குல் வெள்ளம்** - இரவாகிய வெள்ளம். பிரிவால் வருந் தும் தலைவி, 'இரவுப் பொழுதை எல்லையாகக் கொண்டு மாலைக் காலமாகிய கடலை நீந்தினோ மாயின் அடுத்து வரவிருக்கும் கங்குல வெள்ளம் - இரவாகிய வெள்ளம் - அக்கடலைக் காட்டிலும் பெரிதாதலின மாலையை நீந்துவதால் வரும் பயன் யாது' எனக் கலங்கினாள் (குறு. 387).

**கங்குல்வெள்ளத்தார் - புலவர்.** இவர் குறுந்தொகை 387-ஆம் பாடலின ஆசிரியர். இவரின் இயற்பெயர் தெரிந்திலது. பிரிவுத துன்பத்தால் வாடும தலைவி 'மாலைப்பொழுது நம் துன்பத்தை மிகுதியாக்கு கின்றது; வரப்போகும் கங்குலாகிய வெள்ளமோ கடலைவிடப் பரந்ததாயிற்றே' எனக் கலங்குவதாக இவர் கூறும் குறுந்தொகைப் பாடலில வரும் 'கங் குல் வெளளம்' என்னும் உருவகத் தொடரால் தலைவியின உள்ளத்தமைந்த நுட்பவுணர்வுகள் புலப்படுகின்றன. இச் சிறப்பு மிக்க தொடரை ஆண்டமையான் 'கஙகுல் வெள்ளத்தார்' என்னும் பெயா இவர்க்கமைந்தது (ச. சி. பக். 7).

**கங்கை - ஓர் யாறு.** வளந்தரும் மழை நீங்கிய கோடைக் காலத்து உயிர்ப் பன்மைகளெல்லாம் சென்று நீர் அருநதக் கங்கைக் கரையைப் பொரும் மிக்க வெள் ளம் நிறைந்தது போலக் குமணன் புலவர்க்கும் இரவலர்க்கும் அளிக்கும் தலைமை யுடையவன் (புறம். 161:5-8). குடவர் கோமானாகிய கடல்பிறக் கோட்டிய செங்குட்டுவன் கடவுட் பத்தினிக்குப் படிவம் அமைக்க விரும்பி வடவர் மீது படையெடுத் துச் சென்று ஆரிய அரசனை வெனறு, இமயததில் கறகொணடு அக்கல்லை இனிய பல அருவிகளை யுடைய கங்கை யாற்றில் நீர்ப்படுததினான் (பதி. ப. 5:2-7). தேவர்களிருக்கும் மேருவின் உச்சியி லிருந்து இழிதரும் கடத்தற்கரிய கங்கை பொன் கொழிக்கும் (பெரு. 429-431). தலையாலங்கானத் துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியனுக்கு அடங்கிய மன்னர் நாட்காலத்தே திறையாகக் கொடுத்த சீரிய கலங்களும் பிறவும் கங்கையாறு ஆயிரமுகமாகக் கடலிற் செனறாற போல மதுரை அரண்மனையில் நிறைநதிருந்தன (மது. 694-697). பட்டினப்பாக்கத்து மறுகுகளில் நிறைந்திருக்கும் அளவற்ற பொருள்களில் கங்கையாற்றில் விளைந்த பொருள்களும் இருந்தன (பட். 190). தலைவர் நம் மினும் உறுதியுடையதாகத் துணிந்த பொருள்,

கங்கையாற்றின் அடியில் நந்தரால் மறைத்து வைக்கப்பெற்று அழிந்த செல்வமோ என ஆற்றாமை மிக்க தலைவி தோழியை வினவினாள் (அகம். 265: 4-6,23). 'யாழிசை ஒத்த இனிய குரலையுடைய குருகுகளிருக்கும் கங்கையாற்றின்கண்ணே ஓடுகின்ற மரக்கலத்திலேறித் தலைவர் சென்றிருப்பாரோ, ஓரிடத்தும் போகார்; இன்னே வருகுவர்' எனப் பிரிவிடை மெலிந்த தலைவியைத் தோழி தேற்றல் (நற். 189:4-6). இமைய மலையின் உச்சியிலிருந்து இழியும் அருவியையுடைய கங்கையாற்றின் கரையை உடைத்துச் செல்லும் நீர் வெள்ளம் போன்று என் நிறையை யழித்துச் செல்லும் காம வெள்ளத்தை நீந்துமாறறியேன் எனத் தலைவி எதிரழிந்து கூறினாள் (நற். 369:7-11). கரைகளில் நின்ற மரங்களின் பூவும் மகளிர் கூந்தலினின்று வீழ்ந்த மலரும் மைந்தர் மார்பினின்று உதிர்ந்த மலரிதழ்களும் பரந்து விளங்குதலால் வையை, விண் மீனாகிய முத்து விளங்கும் வானத்தில் கங்கை பெயர்ந்ததை ஒத்தல் (பரி. 16:32-38).

**கங்கைவாரி - கங்கைபடுபொருள்.** பட்டினப்பாக்கத்து மறுகுகளில் தலைமயங்கிக் கிடந்த பல்வேறுபட்ட பொருள்களுள் கங்கைவாரியும் – கங்கை படுபொருளும் - இருந்தது (பட். 190).

**கச்சம் – கச்சைக்கயிறு.** கோத்துக் கட்டிய கச்சம்-கச்சைக் கயிறு - தின்றமையால் உண்டான தழும்பு பொருந்திய அடிகளில் மாநிதிக் கிழவர் வீரக் கழலை அணிந்தனர் (மது. 436).

**கச்சி - காஞ்சிநகர்.** 'பரிசிலை நச்சிச் சென்றோர்க்குப் பாதுகாப்பாகிய கைவண்மையினையுடைய தலைவன் கச்சியினகண் - காஞ்சி நகரிடத்தே-இருக்கிறான்' எனத் தொண்டைமான இளந்திரையனைக் குறிப்பிட்டு அவனிடம் பரிசில பெற்று வரும் பெரும்பாணன், பெற விரும்பும பாணனை ஆற்றுப் படுத்தினான (பெரு. 420,421).

**கச்சிப்பேட்டு இளந்தச்சனார் - புலவர்.** இவர் கச்சிப் பேடு என்னும் ஊரில் வாழந்து தச்சுத் தொழிலில் சிறப்பெய்தியமையின் கசசிப்பேட்டு இளந்தச்சனார் எனப்பட்டார். கச்சிப்பேட்டில் வாழ்ந்த தச்சனார் என்னும் மற்றொரு புலவரினும் வேறுபடுத்தற்கு இவரை இளந்தச்சனார் என்றும் அவரைப் பெருந தச்சனார் என்றும் அழைத்தனர் (ஔவை. து. நற். 266). இவர் நற்றிணையில ஒரு பாடல் (266) மட்டும் பாடியுள்ளார். அப்பாடலில் பிரிந்த தலைமகன் வருந்துணையும் இல்லின்கண் ஆற்றியிருத்தல் கற்புடை மகளிரின் கடன் எனக் கூறப்பட்டுள்ளது.

**கச்சிப்பேட்டுக் காஞ்சிக் கொற்றனார் - புலவர்.** இவர் காஞ்சியைச் சார்ந்த ஊராகிய கச்சிப் பேட்டில் வாழ்ந்தவர்; கொற்றனார் என்னும் பெயரினர். இவர் பாடியனவாகக் குறுந்தொகையில இரு பாடல்கள் (213, 216) காணபபடுகின்றன. தனன லத்தையும் பேணாது, மறியின் பசியையும் வெயில் வெப்பததையும் நீக்கும் கலைமானை உவமை கூறுவதன வாயிலாகத் தன் நசையையே கருதாது இல லறம் புரியும் கடமையை நினைந்து அரிய பொருள தேடச் சென்ற தலைவனை நினையுமாறு செயயும் பாங்கினை 213–ஆம் பாடலும் செல்வத்தைக் 'கேடில் விழுப்பொருள்' என்று கூறுதலை 216-ஆம் பாடலும் உணர்த்துகின்றன.

**கச்சிப்பேட்டு நன்னாகையார் - பெண்பாற் புலவர்.** காஞ்சியை அடுத்த கச்சிப்பேட்டில் வாழ்ந்தவர். நாகையார் என்பது இவரின் இயற்பெயர். இவர் இயற்றியனவாகக் குறுந்தொகையில் ஆறு பாடலகள (30, 172, 180, 192, 197, 287) உள. உண்மை போலத் தோன்றிப் பொய்யாக முடிகின்ற கனவை 'வாய்த்தகைப் பொய்ககனா' என்பர் (குறு. 30). ஏழூர்க்குப் பொதுவாகிய தொழிலின் பொருட்டு ஓர் ஊரின்கண் அமைத்த துருத்தியைப் போல் தலைவியின் நெஞ்சம் வெய்துயிர்த்து வருநதியது (குறு. 172) எனவும் களிற்றின் கூட்டத்திறகு ஒரு யானை தலைமை பெற்று நிற்கும்; பேயின பல போல யானையடியின நகம் இருக்கும் (குறு. 180) எனவும் மகளிர் தம் காதலரைப் பிரிந்த காலத்தில் கூந்தலைப் புனைந்து மலரணியார் (குறு. 192) எனவும் காதலர்ப் பிரிநத மகளிர்க்குக் கூதிர் கூற்றமாகும் (குறு. 197) எனவும் மகளிர் பன்னிரண்டு திங்கள் கருப்பம் தாங்குவர் (குறு. 287) எனவும் கூறியுள்ளார்.

**கச்சிப்பேட்டுப் பெருந்தச்சனார் – புலவர்.** காஞ்சியை யடுத்த கச்சிப்பேட்டில் வாழ்ந்தவர். அவ்வூரில் இளந்தச்சனார் ஒருவரிருந்தமையின இவர் பெருந் தச்சனார் என்று அழைக்கபபட்டார். இவர் இயற்றிய இரு பாடல்கள் (144, 213) நற்றிணையில் உள்ளன. புலியால் களிறு தாக்கப்படப பிடி பிளிற்றும் ஓசைகேட்டுத் தலைவி நடுங்கினாள் என்பதன் வழியே ஆற்றது ஏதத்தாலே தலைவன் தாக்கப் படுவனோவெனத் தலைவி நெஞ்சழிந்தாள் என்னும் செய்தியைப் பெற வைக்கும் இவரது சிறப்புப் பாராட்டற்குரியது (144).

**கச்சிப்பேடு - காஞ்சியை யடுத்த சிறூர்.** இப்பெயரில் காணப்பெறும் பேடு என்பது, ஒரு பெருநகரில அமைந்த சிறுபகுதியைக் குறிக்கும் 'பேட்டை' என்பதைப் போன்றது (ப. மு. பக். 192). இளந

தச்சனார், காஞ்சிக் கொற்றனார், நன்னாகையார், பெருந்தச்சனார் ஆகிய புலவர் இவ்வூரினர்.

**கச்சு** – 1. **அரைப்பட்டிகை.** வேலன்படிமத்தான் இடையில் கச்சு-அரைப்பட்டிகை-அணிந்திருந்தான் (முரு. 208). கண்மாறாடவர் நீலநிறக் கச்சினையும் மெல்லிய நூலாற் செய்த ஏணியை அரையிலே சுற்றிய சுற்றினையும் உடையவர் (மது. 639-642). கரிய கச்சினைப் பூண்ட வயிற்றில் கட்டப் பெற்ற மணியுடன் புனலின்கண் விரும்பி ஆடியவன் ஆட்டனத்தி (அகம். 376:8-10). தலைவன் கச்சினை வரிந்து கட்டி இரவுக்குறியிடத்து வருதல் (ஐங். 206:5).

2. **தோட்பட்டிகை.** மார்பகத்துக் குறுக்கே கிடந்த கச்சில்-தோட்பட்டிகையில்–வெள்ளிய கைப்பிடியை உடைய ஒள்வாளைக் கொண்டவர் வம்பலர் (பெரு. 71,76). ஒள்வாளைக் கச்சின்கண் பூண்ட மங்கையர் அரண்மனையில் இரவுக்காலத்தில் பாவை விளக்குகளைக் கொளுத்துவர் (முல்லை. 46-48).

3. **குதிரை முதுகில் கட்டும் வார்.** பனைமடலால் ஒரு குதிரையைச் செய்து அதற்குச் சிறிய மணிகளையும் பெரிய கச்சினையும் பூட்டி, அதில் தலைவன் ஏறுதல் (நற். 220:1-3).

**கச்சை** - **இடையில் கட்டும் துணி.** பெருந்தகை மறவன் நீலநிறமுடைய கச்சை-இடையில் கட்டும் துணி - யினையும் பூததொழில் செய்யப்பட்ட ஆடையினையும் பீலிக் கண்ணியையும் உடையவன் (புறம். 274: 1,2) சோழன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளியின குதிரைப படையிலுள்ள குதிரைகள் கதியும் சாரியையுமாகப் பகுக்கப்படும் செலவினையும் கச்சையினையும் உடையன (புறம். 377:24). காண்டவ வனத்தை எரியூட்டிய கணையை உள்ளடக்கிய தூணியையும் பூத்தொழில் கொண்ட கச்சையையும் உடைய புகழினன் (அருச்சுனன்) (சிறு. 238, 239). தலைமகன வில்லேந்தி அம்பு தெரிந்து நுண்வினைக் கச்சை கட்டி வந்தனன் (குறி. 124,125). 'விரைந்த செலவினால் வருந்திய இளைய வீரர் இடையிற் செறித்த கச்சையின் பிணிப்பை நெகிழ்த்துத் தாம விருமபிய வண்ணம் அமர்நத நடையராய மெல்ல வருவாராக' எனத் தலைவன தன் தோப்பாகனிடம கூறினான் (நற். 21: 1-3). கச்சு - 1 காண்க.

**கசடு** - 1. **குற்றம்.** கசடு - குற்றம் - செறிந்த காட்சி நீஙகாத உள்ளத்தினையுடைய தெளிவில்லாதவர், 'அறவினையைச் செயவோமா, வேண்டாமா' என்று கருதி ஐயப்பாடு கொளவர் (புறம். 214:1-3). கன விலுமபிறரை இரந்து தனக்குற்ற இடுககண்களைக என வேண்டியறியாத கசடு இல்லாத நெஞ்சினையும் பெருமித நடையினையும் உடையவன் கடல்பிறக்கோட்டிய செங்குட்டுவன் (பதி. 44: 5-7).

2. **வடு.** படம் விரித்த பாம்பின் பொறி போன்று கையினது கசடு - வடு - பட்டுக் கிடந்த கண்ணகன்ற தடாரியை யுடையவன் பொருநன் (பொரு. 69, 70).

**கசிவு** – 1. **வியர்வை.** உண்ணாமையால் உடல் வாடி, கண்கள் நீர் நிறைந்து கசிவு - வியர்வை - பொருந்திய தன் சுற்றததை வருத்தும் பசி நோயாகிய பகையைக் கூறி ஆய் அண்டிரனிடம் ஓடைகிழார் பரிசில் வேண்டினார் (புறம். 136: 6-9). பசி தின்னப்பட்டு உலர்ந்த கசிவுடைய உடம்பு அவிழ் புகுவதறியாமையின் வாடிய குடர் குளிப்ப நெய்யுடையடிசிலைப் பாடுநர் சுற்றத்திற்குக் குமணன் நல்கினான் (புறம். 160: 4-12).

2. **இரக்கம்.** கசிவு - இரக்கம் - எய்திய பல சுற்றத்தோடு வருத்தும் பசி நோயாகிய பகையைப் புலப்படுத்தி ஆய் அண்டிரனிடம் ஓடைகிழார் பரிசில் வேண்டினார் (புறம். 136: 8,9). கண்ணொளி மழுங்கிய கசிவோடு வலிமை குறைந்து, அருஞ்சுரம் கடந்து சென்ற கணவனை நினைந்து துயருழந்தான் பரிசிலனின் மனைவி (புறம். 161:11-14).

**கஞ்சகம்** - **கறிவேம்பு.** அந்தணர் வீட்டில் நெற்சோற்றையும் பசுவெண்ணெயில் வெந்த மாதுளங்காய்த் துண்டங்களையும் மிளகுப்பொடி கலந்த கஞ்சகத்தின் - கறிவேம்பின் - நறிய இலை அளாவப் பட்ட மாவடுவையும் பெறுவீர் எனப் பெரும்பாணன் ஆற்றுப்படுத்தப்பட்டான் (பெரு. 305-310).

**கஞ்சி** - **சோற்றின் வடிநீர்.** காவிரிப்பூம்பட்டினத்து அறம் நிலைபெற்ற அட்டிற் சாலையில் சோற்றை வடித்தொழுக்கிய கஞ்சி - சோற்றின வடிநீர் - யாறு போலப் பரந்தொழுகியது (பட். 44,45).

**கட்குத்திக் கள்வன்** - **விழித்திருக்கும்போதே ஏமாற்றுபவன்.** ஆயர் இனத்தவளான தலைவி தன் காதலனை 'நீ ஒரு கட்குத்திக் கள்வன' - விழித்திருக்கும் போதே ஏமாற்றுபவன்-என மொழிதல் (கலி. 108:49).

**கட்கேள்வி** – **கண்ணாலேயே கேட்டல்.** எழுச்சியையுடைய மணியையும் நிற அழகுடைய பொறிகளையும் கட்கேள்வியையும் - கண்ணாலேயே கேட்டலையும் - கவைத்த நாவையும் உடையது பாம்பு (புறம். 382: 13-15).

**கட்சாடி** - **கள் வைக்கும் கலன்.** வேற்று நாட்டின்கண் ஆனிரை கவரச் சென்ற வீரன் மிகுந்த ஆனிரையோடு விரைந்து வருவானாகலின் பிறர்க்கு வார்ப்

பதைத் தவிர்த்துக் கள்விருப்பமுடையவனான அவனுக்கு முதுகட்சாடியைக் காத்து வைப்பா யாக என்று உண்டாட்டுக்கிடையே மறவன் ஒருவன் கூறினான் (புறம். 258:6-11).

**கட்சி - 1. காடு.** கட்சியின் - காட்டின்கண் - இருக் கும் மயிலைப் போலச் சுரத்தின்கண் விறலி இருந்தனள் (புறம். 60:4,5). முல்லை நிலத் தோட்டத் தில உழவர் அறுவடைக்குப் புகுங் காலத்தே, அதன்கண தங்கியிருந்த குறும்பூழ்ப் பறவை தன் பறத்தலாற்றாத பிள்ளைகளையும் கூட்டிச் சென்று கட்சியின்கண் தங்கும் (பெரு. 201–206). நன்னனது நவிரமலைப் பக்கத்தே கட்சியின்கண் தோகை விரித்தாடிய மயில் ஆடியிளைத்து நிற்கும் (மலை. 233–235). மழை பொழிந்த இரவில் தினையை மேய்ந்த யானைக் கூட்டம் இரிந்தோடுமாறு சேணோன் எறிந்த கவண் கல்லின கடுமையான ஒலிகேட்டுப் புலி முழங்க யானை பிளிறக் கட்சி யில் மயில் ஆலும் (அகம். 392:12–17). தலைவனது அழகிய கானத்தில் நீலமணி போலும் நிறமுடைய மலைகள் அமைந்த கட்சியினுள் இளமயில்கள் ஆடும் (ஐங். 250:2,3). வேங்கை மலர்கள் உதிர்கின்ற உயர்ந்த மலையிலுள்ள கட்சியிலிருக்கும் மயில்கள் பார்த்திருத்தலைக் கிளிகள் அறியாமல் பக்கத்தே யுள்ள தினைப்புனத்தில் கதிர்களைக் கவரும் (நற். 13:7-9).

**2. கூடு.** நள்ளென்னும் யாமத்தின்கண் அன்றிற் சேவல் தன் பெடையோடு தடா மரத்தினது உயர்ந்த கிளையில் அமைத்த கட்சியில் - கூட்டில்- தங்கி ஒலிக்கும் (குறு. 160:1-4), பறவைகள் ஒரு சேரப் பூஞ்சோலைகளிலுள்ள தத்தம் கட்சிகளில் சென்று சேரச் சுடர் மழுங்கக் கதிரவன் மறைந் தான (நற். 117:3–6). தலைவியது ஊரில் சேணோன் அமைத்த நெடுங்காற் பரணைக் கானத்தின்கண் உள்ள மயில்கள் கட்சியெனக் கருதித் தங்கும் (நற். 276:5-7).

**3. புகலிடம்.** ஏறைக்கோனின் உயர்ந்த மலை யிடத்தே மாலைப் பொழுதில் இனத்தினின்றும் பிரிந்து கட்சி - புகலிடம் - காணாத கடமானேறு தன் மடமான் பிணையை அழைக்கும் (புறம். 157: 8-11). வெட்சிக் கானத்தின்கண் வேட்டுவர் அலைத்தலினால் கட்சி காணாத கடமாவின் நல் லேறு, மணி கிளரப் பொன் மிளிர விரைந்தோடும் (புறம். 202:1–4).

**கட்டளை - உரைகல்.** கருங்கை வினைஞரின் காதலஞ் சிறுவர் பொன்னை யுரைத்து மாற்றுக் காணும் கட்டளை - உரைகல் - ஒப்பச் சண்பங் கோரைக் காயில் தோன்றிய சுண்ணங்களை அப்பிக்கொண்ட மார்பினை உடையவர் (பெரு. 220-223). கட்ட விழ்ந்து மலர்ந்த வெண் கூதாள மலர்க் கொத்துக் களை உராய்தலாலே அவற்றின் பொன்னிறத் தாதுகள் உதிரப் பெற்ற காட்டுப்பனறி பொன னுரை கட்டளை போலத் தோனறும் (அகம். 178: 2,9-11). கருமையொளி வீசுகின்ற சிறகுகளையுடைய குயில் தன் மேனி பொன்னின் உரை பொடி விளங் கும் கட்டளையினை ஒத்துத் தோன்றுமாறு மாமரத் தின் பூந்தாதுகளைக் கோதும் (குறு. 192:3-5). வேப்பமரத்தின் புள்ளிபட்ட அருநிழலில் சிறுவர் கட்டளைக்கல் போன்ற அரங்குகளை வட்டினாற் சீறி யமைத்து நெல்லிக் காய்களால் வட்டாடுவர் (நற். 3:2-4). கரிய நிறமுடைய தும்பி, பூந்தாதுகள் தன் மேனியில் உதிரப் பெற்றமையால் கட்டளைக் கல் போலக் காட்சியளிக்கும் (ஐங். 215:1). நன் பொன் போன்ற தினைக் கதிர்களை மேயும் பன்றி தன் கரிய மேனியில் அக்கதிர்கள் படிதலால் பொன னுரை கட்டளைக்கல்லை ஒத்திருக்கும் (ஐங். 263:1,2).

**கட்டளை வலித்தல் - தரத்தை உறுதி செய்தல்.** இளஞ் சேரலிரும்பொறை பகைவர் நாட்டை வென்று கைப்பற்றியபின் உருக்குதலமைந்து ஒளிவிடும் பொற்கட்டிகளுள் இன்னவர் இன்னதனைப் பெறு வர் என்று அவரவர் கட்டளை வலித்து - தரத்தை உறுதிசெய்து - தானை வீரர்க்குதவினான் (பதி. 81:15-17).

**கட்டி - 1. சேரன் படைத்தலைவருள் ஒருவன்.** சேரன் படைத்தலைவராகிய நனனன், ஏற்றை, அததி, கங் கன், கட்டி, புன்றுறை என்னும் அறுவரும் குழுமி யிருந்த போர்க்களத்தே பருநதுகள் ஊன் உணணு மாறு சோழன் படைத்தலைவனான பழையன் வீரப்போர் புரிந்து விழுப்புண்பட்டு மாயந்தான் (அகம் 44:7-11).

**2. வடுகர் தலைவன்.** போரில் பகைவரைக் கொல் லும் ஆற்றல் மிக்க தானைகளையுடைய கட்டி என்பான் பாணனோடு கூடித் தித்தன் வெளியன என்ற சோழ மன்னனை எதிர்த்துப் போரிட வந்து அச்சோழனின் உறையூர் நாளோலக்கத்தில் ஒலித்த கிணையொலி கேட்டே அஞ்சி அவனொடு பொரா மல் ஓடினான் (அகம். 226:13–17). பல்வேற் கட்டி யது நல்ல நாடு கஞ்சங் குல்லையாலாகிய கண் ணியை யணிந்த வடுகர் வாழும் பகுதியாகும் (குறு. 11:5,6).

**3. பொற்கட்டி.** பகைவர் நாட்டினை வென்று கைப் பற்றிய இளஞ்சேர விரும்பொறை அழலினால் உருக்குதலமைந்து ஒளிவீசும் கட்டிகளை பொற்

கட்டிகளை - வீரர்க்குத் தரம் தெரிந்துதவினான் (பதி. 81:15-17). ஆய்மகள மோர் விற்றதைக் கொண்டு சுற்றம் அருத்தி நெய் விற்றதைக் கொண்டு கட்டியாகப் பசும்பொன்னை வாங்கா மல் எருமை நலலான் கருநாகினை வாங்குவாள் (பெரு. 162-165).

**4, வெல்லக்கட்டி.** களவுக் காலத்தில் தலைவியிடம் பேரனபு பூண்டிருநத தலைவன அவள் வேம்பின் பசுங் காயைத் தரினும் அதனைத் தேம்பூஙகட்டி- வெலலக்கட்டி - எனப் பாராட்டிக் கூறினான் (குறு.196:1,2).

**5. மண்கட்டி.** உழவர் தலைகுவிந்த கட்டிகளை - மண்கட்டிகளை - உடைய தோட்டத்தில் ஏர்களைச் சேர்த்து மண் பிறழுமாறு அரிதாளை யுடைய நிலத்தைப் பிளந்து உழுதனர் (அகம். 41:4-6).

**கட்டிப்புழுக்கு – வெல்லக் கட்டியொடு கூட்டிய அவரை விதை முதலியவற்றின் அவியல்.** கட்டிப்புழுக்காகிய உணவினையுடைய கொங்கர்க்குத் தலைவன் இளஞ் சேரலிரும்பொறை (பதி. 90:25).

**கட்டில் - 1. அரசுகட்டில்.** பாண்டியன் தலையாலங் கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனால் பிணிப் புண்டிருந்த யானைக்கட்சேய் மாந்தரஞ்சேரலிரும் பொறை வலிதில் தப்பிப்போய்க் கட்டில் - அரசு கட்டில் - எய்தினான் (புறம். 17 அடிக்குறிப்பு). உயர்ந்த கட்டில், அமைச்சர், பெரிய நாடு முதலிய வற்றை உடையவராய் இருந்தும் கொடை செய் யாது தம் பெயரை உலகில் நிறுத்தாமல் தம்மோடே கொணடு இறந்துபோன அரசர் சேயாற்று மணலினும பலராவர் (மலை. 550-556). தான் கெட்ட விடத்துத தனக்கு வலிந்து வந்து கட்டில் எய்தப் பிறர் செய்த உதவியை மறந்துவிட்ட மன்னன போலத தலைவியிடத்து நனறிமறத்தல் தலைவ னுக்கு அமையாது (குறு. 225:3-5).

**2. படுக்கைக் கட்டில்.** வாரைச் செலுத்தும் ஊசியா னால புலைமகன் கட்டில் - படுககைக் கட்டில் - பின்னுவான் (புறம். 82:3,4). பரத்தையிற் பிரிந்து வந்த தலைவன் குறுகிய கால்களையுடைய கட்டிலி னிடததேயமைநத நறுமணப்பூக்கள் பரப்பப்பெற்ற படுக்கையில தன் புதல்வனைத் தழுவிய போது தலைவி அவனிடத்துப் புலவி தணிந்து அவனைப் புறததே தழுவினாள் (குறு. 359:3-6). முன்றிலிடத்தே இடபபட்டிருந்த கட்டிலில் தலைவி அருகி நக்கவும் புதல்வன் தன் மார்பில் ஊரவும் மாலைப்பொழு தில் தலைவன் மகிழநகையினபம் எய்திய ருந்தான் (ஐங். 410:1-3).

**3. படைக்கலக்கட்டில்.** சோழன் குளமுற்றத்துத் துஞ் சிய கிள்ளி வளவனைச் சினப்பித்த பகைவர் நாட் டில் ஆடவர் படைக்கலங்கள் தாம் வைக்கப்பெற்ற கட்டிலோடு கவிழ்வதாகக் கனவு கண்டு அவன் படையெடுப்பை உணர்ந்து வருந்தினர் (புறம். 41: 10-18).

**4. தெய்வக்கட்டில்.** தகடூரெறிந்த பெருஞ்சேரலிரும் பொறை தனக்குப் பணியாத பகைவேநதர்தம் பட் டத்து யானைகளின் கொம்புகளை யறுத்து அவற் றினாற் செய்து வைக்கும் தெய்வத்தன்மையுடைய கட்டிலின் மேல் இருந்தல்லது அயிரைமலைக் கொற்றவை பலி கொள்ளாள் (பதி. 79:13-18). அரசுகட்டில், கால்கழி கட்டில், முரசுகட்டில் காண்க.

**கட்டு - 1. அடுக்கு.** நிலமும் ஆகாயமும் சுவர்க்கமும் என மூன்றுங் கூடிய புணர்ச்சியாக அடுக்கப்பட்ட அடைவின்கண் முதற்கட்டாகியது – முதலடுக்காகி யது - நிலம் (புறம். 6:5,6).

**2. செறிவு.** வற்கடம் மிக்க வேனிற் காலத்தே பசித்த ஆனிரையைக் காக்கும் கோவலர் கூரிய கொடுவாளால் வேங்கை மரத்தின் கொம்புகளைப் பூக்களுடனே உதிருமாறு கழித்து அம்மரத்தின் தழையாகிய கட்டினை - செறிவினை - அழிப்பர் (புறம். 224:13-16).

**3. பிணிப்பு.** பரங்குன்றத்தில் கார்காலத்தில் தோன் றும் காநதட் பூக்களின் குலைகள், போரில் தோற்றுக் கட்டுண்டார் கைகளை யொக்கும்; தும்பி கட்டவிழ்த்த காந்தள் முகைகள் கட்டினை யுடைய யாழ் நரம்பின் புரியை நெகிழ்ப்பார் கைகளை யொக்கும் (பரி. 18:34-37).

**4. முறத்தில் நெல் வைத்து எண்ணிக் காணும் குறி.** செவிலி கட்டுவிச்சியைக் கொண்டு தலைவியது நோயினைக் குறித்துக் கட்டு-குறி - காணும் நிலை யில்தோழி அறத்தொடு நின்றாள் (குறு. 23,26. அடிக் குறிப்பு). குன்ற நாடனின் பிரிவால் தலைவி நெற்றி யிற் பரந்த பசலை நோயைக் கண்டு செவிலி முது பெண்டிரொடு கட்டுவிச்சியை அழைத்து முறத்திற் பரப்பிய நெல்முன் தலைவியை நிறுத்திக் கட்டு வினவினாள் (நற். 288:4-7).

**கட்டுரை - புனைந்துரை.** களவுக் காலத்தில் பலபல கட்டுரைகளால்-புனைந்துரைகளால் - தலைவியைப் பாராட்டி இனிய மொழி இயம்பிய தலைவன் கற்புக் காலத்தில் அவளுக்கு இன்னாமை தருமாறு பிரியக் கருதினான் (கலி. 14:7,8).

**கட்டுவடம் – காலணிகலன்.** வையையில் நீர் வரவினைக்

கேட்ட மதுரை மகளிருட் சிலர், கட்டுவடத்தோடு -காலணிகலனோடு-கால் மோதிரமும் அணிந்து அதனைக் காணச் சென்றனர் (பரி. 12:24).

**கட்டூர் - 1. பாசறை.** செல்வக் கடுங்கோ வாழியாதனின் படைமறவர் தாம் வேற்று நாட்டிடத்துச் சென்று தங்கிய கட்டூர் - பாசறை - நடுவே முரசு முழங்கப் பகைவரின் விரும்பதக்க சித்திரங்கள் நிலைபெற்ற மதிலை அழித்தல்லது உண்ண மாட்டார் (பதி. 68: ௪-6). இளஞ்சேரலிரும்பொறையின் வீரர் தம் பகைவர் அஞ்சுகின்ற கட்டூரின்கண் தாம் அரிதாக வந்து தங்குதலை அஞ்சமாட்டார் (பதி. 82:2). வெண்பூவினையுடைய வேளைச் செடியோடு சுரைக் கொடி இடந்தோறும் கலந்து படர்ந்திருப்பதும் வேறு பல மொழிகள் பேசப்படுவதுமான கட்டூரி லுள்ள வீரர்க்குத் தலைவன் இளஞ்சேரலிரும் பொறை (பதி. 90:29,30). கடல்பிறக்கோட்டிய செங்குட்டுவன் பல மொழியும் கலந்த கட்டூரினைத் தான் வேண்டுமிடங்களில் அமைத்துப் பொருதற்கு மாற்றாரை நில எல்லைக்குள் காணாமையின், சினமிக்குக் கடலைப் பிறக்கிடும்படி ஓட்டினான் (அகம். 212:14-19). 'புகழ்சால் சிறப்பினையுடைய காதலியைத் தனித்திருக்குமாறு விடுத்து அருந் தொழிற் கட்டூர்க்கு வந்தனையே' என்று பாசறைக் கண் இருந்த தலைமகன் பருவவரவின்கண் தலை வினை நினைந்து நெஞ்சோடு புலந்து கூறினான் (ஐங்.445:1,2).

**2. போர்க்களம்.** கடல் கிளர்ந்தாற் போன்ற கட்டூர் -போர்க்களம்-நடுவே வேலினைப் பகைவர் பக்கம் திருப்பித் தன் மறவரைச் செலுத்தித் தானும் சென்று பகைப்படையைப் பிளந்து தடுத்துப் படை நடுவில் வெட்டுண்டு கிடந்த சிறப்புடையாளனா கிய மகனது மறமாண்பு கண்டு, அவன் தாயின் வாடு முலை ஊறிச் சுரந்தன (புறம். 295). சேரன் படைத்தலைவராய நன்னன், ஏற்றை, அத்தி, கங்கன், கட்டி, புன்றுறை என்னும் அறுவரும் கூடி வந்த அளவிடற்கரிய கட்டூரினிடத்தே பருந்துகள் ஊனுண்ணுமாறு பலரையும் கொன்று வீழ்ததிப் பெரும் போா செய்த சோழன் படைத்தலைவ னான பழையன் விழுப்புண் பட்டு இறநதமை கண்டு, பெரும்பூட்சென்னி சேரனின் தானைத் தலைவன் கணையனை அகப்படுத்திக் கழுமலத் தைக் கைப்பற்றினான் (அகம். 44:7-14).

**கட்டேறல் - கள்ளாகிய தெளிவு.** பாணரின் கலம் நிரம் பப் பெய்த போது சிந்திய இனிய கட்டேறல்- கள்ளாகிய தெளிவு - கல்லை யுருட்டி யொழுகும் (புறம். 115:2-4). நாரைப் பிழிந்துகொள்ளப்பட்ட விரும்பத் தக்க கட்டேறலைப் பாணர் சுற்றம் நுகர்ந்தது (புறம். 170:12,13). 'செங்கண் மகளிரொடு சிறு துனி கொண்டு அழகிய கட்டேறலை ஆராய்ந்த கலத்திற் பெய்துதர உண்டு மகிழ்க' எனக் கோதமனார் அறவோன் மகனை வாழ்த்தி னார் (புறம். 366:6,14,15). கானவர் மூங்கிலிலே யிருந்து முற்றின தேனாற் செய்த கட்டேறலைக் குன்றகச் சிறுகுடியிலுள்ள சுற்றத்தாரோடு உண்டு மகிழ்வர் (முரு. 194-196). மதுரையில் ஓணநாள் விழாவின் போது மறவர் கடுங்கட்டேறலை யுணடு திரிவர் (மது. 591,596,599). மூங்கிற்குழாய்க்குள்ளே பெய்த முற்றிய தேனாற் செய்த கட்டேறலை வழி யில் குறைவின்றிப் பருகிச் செல்லலாம் எனக் கூத்தர் ஆற்றுப்படுத்தப்பட்டனர் (மலை. 171,172). நன்னன் வேண்மானின் அரண்மனை வாயிலில காணப்படும் பல்வேறு வகைக் கையுறைப் பொருள் களுள் மூங்கிற்குழாயிலே முற்றிய தேனாற் செயத கட்டேறலும் ஒனறாகும் (மலை. 522). தெளிந்த கட்டேறலை அருந்திய மகளிர் தம் கணவரது பரத்தைமையைப் பாடிக் காஞ்சிமர நிழலில் குரவை அயர்வர் (அகம். 336:6-9). சிற்றூரில் உள்ளார், அழகிய மூங்கிற் குழாயில் முற்றிய தேனாகிய கட் டேறலை உண்டு மகிழ்வர் (அகம். 368:14,15).

**கட்பு - களைபறித்தல்.** மருத நிலத்திலுண்டாகும் பல் வேறு ஓசைகளுள் கட்பினால் - களைபறிததலால்- உண்டாகிய ஓசையும் ஒன்றாகும் (மது. 258).

**கடகம் - கையணி.** வழிநடை வருத்தமும் உலைவு முடைய வன்பரணரின் காய்பசியை நீக்கிய கண் டீரக்கோப் பெருநள்ளி, அவருக்குத் தன் மார்பணி யாகிய ஆரத்துடன முன்கைக் கடகத்தையும் - கை யணியையும்-ஈந்தான் (புறம். 150:20,21). முன்னாட் போரில் அழிந்த படைகளின் நிலையை எணணிப் பாசறையில் இருந்த மன்னன், பின்னாட் போரி னைப் பற்றிய நினைவுடனே ஒரு கையைப் படுக் கையின் மேலே வைத்து, ஒரு கையின கடகத்தை முடியோடு சேர்த்து நீள நினைந்திருந்தான் (முல்லை. 75,76).

**கடந்தட்டான் - வஞ்சியாது எதிர் நின்று பொருது கொன் றவன்.** அவுணரைக் கடந்தட்டானாகிய - வஞ்சி யாது எதிர்நின்று பொருது கொன்றவனாகிய - திருமாலினது இருங்குன்றில மயிலகள் அகவுவத னாலும் குயில்கள் கூவுவதனாலும் முழைக்கண் இடையறாது எதிரொலி எழும் (பரி. 15: 40-45).

**கடந்தடுதல் - வஞ்சியாது எதிர்நின்று போரிட்டுக் கொல் லுதல்.** ஒடுங்கா உள்ளத்தினையும் ஓம்பா ஈகை யினையும் உடைய சேரலாதனாகிய கடுங்கோ வாழியாதன் கடந்தடு தானையை - வஞ்சியாது

எதிர்நின்று போரிட்டுக் கொல்லும் தானையை உடையவன் (புறம். 8: 4, 5). கடநதடு தானையை யுடைய மூவேந்தரும் கூடிப் பொருதாலும் பாரி யின பறம்புமலை கொள்ளுதற்கு அரிது (புறம். 110: 1, 2). இளம்பல் கோசர் கடந்தடு வாய் வாளினை யுடையவர் (மது. 773). முக்கண்ணை யுடைய இறைவன், கடந்தடு முன்பினால் மாயஞ் செய் அவுணரையும் மூன்றெயில்களையும் அழித் தான் (கலி. 2: 3-5).

**கடப்பாட்டாளன்** - ஒப்புரவாளன். 'தலைவன் வருந்தும் இயல்பினன்; பழிககு அஞ்சுபவன்; ஆதலின் நின் மேனியில் பரவிய பசலை, கடப்பாட்டாளன் - ஒப்புரவாளன் - பெற்ற பொருள் போன்று நீங்கு மாறு விரைந்து வந்து அருள்செய்வான்' என வரை விடை வைத்துப் பிரிந்தவிடத்துத் தலைவியைத் தோழி ஆற்றுவித்தாள் (குறு. 143).

**கடப்பாடு** – ஒப்புரவு. கடப்பாட்டாளன் காண்க.

**கடப்பு** - 1. வெற்றி. 'விளங்கு புகழ்க் கபிலன் இன்றுள னாயின் நன்று' என்ற சிறப்பிற் கொப்ப நீ பகை வரை வென்ற கடப்பை - வெற்றியை - யான் பாடுவேன்' எனப் பொருந்திலிளங் கீரனார் சேர மான் மாந்தரஞ்சேரலிரும்பொறையிடம் புகன் றார் (புறம். 53:12-15).

2. கடத்தல். நிலவுலகத்தையே கடப்பு - கடத்தல் - வல்லது போன்ற விரைவு கொண்டது தலைவனின் பறவை போல் விரைந்தியங்கும் குதிரை (அகம். 64:2). விசும்பைக் கடப்பு அன்ன விரைவுடைய குதிரைகள் மணி ஒலிக்கத் தலைவனின் தேரை மாளிகை வாயிலில கொணர்ந்து நிறுத்தின (நற். 361:3-7).

3. மிக்க கொடுமை. அசோகந் தண்பொழிலில் மிக்க அழகுடைய இளமாவின் தளிரை ஒத்த நிறமுடைய வளே, நீ பாணடியனாற் செறப்பட்டவர் மருமத்தே தைத்த அம்பைக் காட்டிலும் நின் அழகால் நோவைச் செயதல் கடப்பு -(கொடுமைகளின்) மிக்க கொடுமை - அல்லவா எனக் கைக்கிளைத் தலைவன் தலைவியிடம் கூறினான் (கலி. 57:12-15).

**கடம்** - 1. காடு. கோவலர். கல்லுயர் கடத்திடை - காட்டிடத்தே - கதிர்மணி பெறுதற்கிடனாகப் பூழி யர் கோவாகிய பல்யானைச் செல்கெழு குட்டு வனின் செருப்பென்னும் மலை திகழ்ந்தது (பதி. 21: 20-23). முல்லைப் புதரில் மொய்க்கும் வண்டினம் கடத்திடையில் பிடவ மரத்தின் தொடுத்தது போல மலரும் பூக்குலையில் தங்கும் (பதி. 66: 16,17). கல்லென்னும் ஒலியுடைய கடத்திடைச் சென்றால் ஆங்குள்ள ஆயரிடம் பாலும் மிதவை யும் பெறலாம் எனக் கூத்தர் ஆற்றுப்படுத்தப்படு கிறார் (மலை. 415-417). உள்ளுநரை வருத்தும் ஊக் கம் ஒழியும் கடத்திடை மாண்வினையின் பொருட்டு என் உடம்பு ஆண்டுப் பிரிந்து நின்றதல்லது நெஞ் சம் நின்கண்ணே தங்கியது எனத் தலைவன் தலை வியிடம் கூறினான (அகம். 29:19-23). உள்ளுநரை வருத்தும் ஊக்கம் ஒழியும் கடத்திடையே யுள்ள சுரத்தை நம் தலைவர் கடந்தனராயினும் உன்னை நினைந்து நெஞ்சம் உருக விரைந்து வருவர் எனத் தோழி பிரிவாற்றாத தலைவிக்குக் கூறினாள் (அகம். 231:8-10). அச்சம் தோன்றும் கடத்திடைக் கோடைக் காறறு உதிரச் செய்த இருப்பையின் வெள்ளிய பூக்களைக் கரடிக் கூட்டம் கவர்ந்துண் ணும் (அகம். 267:5-8). கோங்கின் குடைபோன்ற பூக்கள் கடத்திடையே வைகறையில் விண்மீன்க ளெனத் தோன்றி அழகுபெற மணங்கமழும் (நற். 48:3-5). உடன் போக்கு மேற்கொண்ட தலைவ னையும் தலைவியையும் காணிரோ என வினவிய செவிலிக்கு 'இக் கடத்திடைக் காணாதிருந்தேமல லேம்; கண்டேம்' என முக்கோற் பகவர் கூறினர் (கலி. 9:7-9). பல பசுவையுடைய பொதுவர் கல்லி டத்தனவும் கடத்திடத்தனவுமாகிய மலர்கள் பல வற்றாலுஞ் செய்த கண்ணியைச் சூடினர் (கலி. 103:4,5).

2. பாலை. கள்ளிக் காடுகளையுடைய கடத்திடை - பாலை நிலத்தில் - கூர் எயிற்றுச் செந்நாய் வருந்து பசிப் பிணவுடன் நடுகல் நிழலில் தங்கும் (அகம். 53:6-11). பேய்த்தேர் ஓடும் காய்ந்த கடத்தின்கண் சிறுகண் யானை தன் நெடுங்கையை நீட்டி நீர் பெறாது வருந்திச் செல்லும் (அகம். 179:3-6). நிதியினைச் சொரிந்துவிட்ட உள்ளீ டில்லாத துணிப்பை போலப் பாம்பு உடல்வாடிக் கிடக் கும் வறட்சி மிக்க கடத்திடை, வம்பலராய அம்பு பட்டு மாய்ந்தோரின் புண்ணின் குருதியைக் காக்கை மாந்தும் (அகம். 313:11-16). மழை துறந்த தனிமை மிக்க கடத்தில் கள்ளியினது காய் வெடிக் கும் கடுநொடி துணைப் புறாக்களைப் பிரிக்கும் (குறு. 174:1-3). கானம் வெம்பிய வறட்சி மிக்க கடத்தில், கல்லின்கண் ஊறுகின்ற நீரைத் துதிக் கையை நீட்டி அறவாங்கி முகந்து கொண்ட களிற்றி யானை தன் பிடியினை நோக்கி ஓடும். (நற். 186:1-4). கள்ளிச் செடிகளைக் கொண்ட கடத்திடைக் கூர் எயிற்றுச்செந்நாய் தன் வயாநோயுற்ற பிணவுக்கு உணவாகப் பன்றியைப் பார்க்கும் (ஐங். 323:1, 2). 'வெப்பமேறிய பொடி நிறைந்து கிடக்கும் வெயில் நிறைந்த கடம் நீந்தி வந்தனமாயினும் இனி மேற்செல்லுதலைத் தவிர்வோமாக' எனத்

தலைவன் தன நெஞ்சிற்குக் கூறினான் (ஐங். 330., 2). நெல்லி மரங்கள் தழைத்தலின்றி உயர்ந்துள்ள மலைகள் சுடும் கடத்திடை எனது நெஞ்சம் பின் தொடரவும் பிரிந்து சென்ற தலைவர், அப்பாலை நிலக் கற்பாறையினும் வலிய நெஞ்சுடையவர் எனத் தலைவி தோழியிடம் கூறினாள் (ஐங்.334:2-4).

3. கடமை. மனை வாழ்வுக்குரிய கடம்-கடமைகளை மேற்கொண்ட பெருமுது பெண்டிரேமாகிய நமக்குத் துனியிடையே தலைவரைப் பற்றி இன்னாச் சொற்கள் என்ன பயனைத் தரும் எனத் தலைவி தோழியிடம் கூறினாள் (குறு. 181). தலைவி தான் நிற்கின்ற நிலைமை உயர்தற்குக் காரணமான கடவுளுக்கு வரைவு முடிந்தால் செய்யும் கடம் மேற்கொண்டு தான் குறிபெறாமையின் எய்திய வருத தம் பலவற்றையும் எண்ணிக் கவன்றாள் (கலி. 46: 16,17). 'தலைவி உன் குறை முடித்தலைக் கடம் பூண்டாள்' எனத் தலைவனிடம் கூறாமைக்குத் தன் மெய்யைத் தொட்டுச் சூளுரைக்குமாறு தோழியிடம் தலைவி கூறினாள் (கலி. 63:12,13).

4. மதம். ஆதிசேடன் திருக்கோயிலின்கண் கடம் - மதம் - கொணட களிறு மேகததைப் போன்று முழங்கும் (பரி. தி. 1:51,59).

5. அருநெறி. தான் செல்லும் நெறி மழை பெய்தது போனறு நறுமலர் பரவக் குளிர்ச்சியுடையதாயினும் தலைவியைப் பிரிந்து செல்வதால் கடம் - அருநெறி- உடைய சோலைமிக்க காடிறந்த தலைவனுக்கு அது வெவ்விதாகத் தோன்றியது (ஐங். 328).

**கடம்படுவோர்** - நேர்ந்து கொள்வோர். மதுரையிலிருந்து பரங்குன்றத்திற்குச் சென்ற தலைமகளிருள், செவ்வேளைக் கண்டு, 'எம் வயிறு கருவுறுக' எனக் கடம்படுவோரும் - நேர்ந்து கொள்வோரும்-இருந் தனர் (பரி. 8:106).

**கடம்பமர் செல்வன்** - கடப்ப மரத்தில் தங்கும் செவ்வேள். 'பரங்குன்றமே, கறை மிடற்றண்ணலுக்கு இறைவி ஈன்ற கடம்பமர் செல்வனாகிய செவ்வேளின கடி நகரை ஆடவரும் மகளிரும் வழிபடச் செல்வத் துடனே மண்ணகம் வருந்த மழை வறந்ததாயினும் அருவிநீர் மிகும் செல்வம் நிலைபெறுக' எட ப் புலவர் வேண்டுவர் (பரி. 8:125-130).

**கடம்பமர் நெடுவேள்** - கடப்ப மரத்தில் தங்கும் முருகன். போரில் பிறக்கிடாத வம்பலர் கடம்பமர் நெடு வேளாகிய முருகனை ஒத்த வலிமையையும் வேல் கொண்ட பெரிய கையினையும் உடையவர் (பெரு. 75,76).

**கடம்பன்** - குடிப்பெயர். முல்லை நிலத்துச் சிற்றூரில் துடியன், பாணன், பறையன், கடம்பன் என்னும் இந்நான்கல்லது வேறு குடியுமில்லை என மாங்குடி கிழார் குறிப்பிட்டுள்ளார் (புறம். 335:7,8).

**கடம்பனூர்ச் சாண்டிலியனார்** - புலவர். கடம்பனூரில் வாழ்ந்தவராதலின் கடம்பனூர்ச சாண்டிலியனார் என்று அழைக்கப் பெற்றார். சாண்டிலியர் என் னும் முனிவர் பெயரைக் கொண்ட இவரது ஒரே பாடல் குறுந்தொகை (307) ஆக அமைந்துள்ளது. பிடியின் வருத்ததைத நீக்க முயலும் களிற்றினைத் தலைவன் தான் செல்லும் வழியிலே கணடும் தன் வருத்தத்தை நீக்க அவன முயலவில்லையே என்று தலைவி தோழியிடம் குறிபபாகக் கூறியதை அப பாடல் உணர்த்தும். உடைந்த வளையலைப பிறைக்கு உவமை கூறியிருபபது சிறப்பாக உள்ளது.

**கடம்பின் பெருவாயில்** - கடப்ப மரத்தைக் காவல் மரமாகக் கொண்ட பெரிய அரண்மனை வாயில். தேருருள் போலும் பூவினையுடைய கடம்பின் பெருவாயிலைக் கொண்ட நன்னனைக் களங்காயக கண்ணி நார் முடிச் சேரல் வெனறான் (பதி. ப. 4: 7,8).

**கடம்பு** - கடப்பமரம். கார்காலத்து நறிய கடம்பின- கடப்பமரத்தின் - பசிய இலையுடன் விரவிய மாலை யணிந்தவர் முருகன (புறம். 23:3,4). பகைவர் பலரால் காக்கப் பெற்ற கடம்பின் அடிமரத்தை வெட்ட ஏவிப் பின் அதனால முரசு செயது கொண்டவன் இமைய வரம்பன் நெடுஞ்சேரலாதன (பதி. 11:12-16). அவன், பகையரசர் தலை நடுங்கி வணங்க, அவரது காவல மரமாகிய கடம்பினை வெட்டி யழித்தான் (பதி. 12:2,3). கடல் கடந்து கடம்பறுத்தியறறிய முரசுக்கு வீரர் அரும்பலி தூவினர் (பதி. 17:4-6). முநநீர்த தீவிலுள்ள பகைவரை அழித்து அவர்தம் கடமபையும் தடிநத கடுஞ்சினமுடையவன இமையவரம்பன நெடுஞ் சேரலாதன (பதி. 20:2-5). நன்னனுககுரிய பெருவாயிலில உருள்வடிவமான பூக்களைக் கொண்ட கடமபமரஙகள நிறைநதிருநதன (பதி. ப. 4.7). குடக்கோ இளஞ்சேரலிரும்பொறை பகைவர்தம் தெயவத் தன்மை வாய்நத கடம்பின் முழுமுதலைத் தடிந தான (பதி. 88:6). முருகன் உறையும பலவேறு இடங்களுள் கடமபும் ஒனறாகும (முரு. 225) பொய்கை அடைகரையில உயாந்து வளர்ந்த கடம பின் இணைதல் நிறைநத பூங்கொத்து நீருண் துறையிடததே இந்திர கோபதததை ஒத்த தாஅத உதிர்க்கும் (சிறு. 68-71). உழவர் வயலை அறுவடை செய்யும்பொழுது, அதனகண் தஙகியிருக்கும் குறும் பூழ்ப்பறவை தன்னுடைய வண்ணக் கடம்பின நறு

மலரை ஒக்கும் இளம்பிள்ளைகளோடு அவ்விடத்தை விட்டகன்று காட்டில் தங்கும் (பெரு. 201-205). அச் சத்தைச் செய்யும் வேலன் இனனியம் முழஙகக் குறிஞ்சிமலர் சூடிக் கடம்பு சூடுதலால் எழிலமிகும் முருகனைத் தன மெய்க்கணணே நிறுததி வழி பட்டான (மது. 611-614). திணணிய நிலையினை யுடைய கடம்பினது திரண்ட அடிமரததை மாலை சுறறி வளைத்தாற போலத தலைவியும் தோழியும் கைகோததுக் கொண்டு தலைவனைச் சூழ்ந்து நினறனர் (குறி. 176,177). வெள்ளிய பனநதோட்டைக் கடப்ப மலரொடு சூடித் தாளத்தோடு பொருந்த இனிமையாகப் பாடி, முருகனின் பெரும் பெயரை ஏத்தி வேலன வெறியாடுவான் (அகம். 98:16-19). வெற்றிமுரசங் கொணட சேரலாதன் கடற்பகைவரைப் பிறக்கிடச் செய்து கடம்பு அறுத்து இமையத்து வில் பொறித்தான் (அகம. 127: 3-5). ‘முருகனை மனைக்கண் வருவித்து அவனது கடம்பும் களிறும பாடித் தோடும் தொடலையும் கைக்கொண்டு வேலன் அசைந்தாடுதல் நன்றோ எனத் தலைவி தோழியை வினாவினாள் (அகம். 138: 10-13). சேரலாதன் கடலின்கண பகைவரை ஓட்டி அவர்தம் காவல மரமாய கடமபினையும் அறுத்து முரசு செய்தான் (அகம். 347:3-5). தலைவியைச் சார்ந்தவர் கடம்பின் மீது கொடியை உயர்த்துக் கட்டி, மாலை சூட்டி வெறியாட்டயர்ந்தனர் (அகம். 382:3,7). தலைவி கொண்ட நோயின் தன்மையறியாது கார் காலத்து மலரும் கடப்ப மாலையைச் சூடி வேலன் வேண்டுதலினாலே வெறிக்களத்திற்கு வந்த முருகன் அறியாமையுடையவன என்று தோழி தெய்வத்துக் குரைபபாளாய் வெறி விலக்கினாள் (நற். 34:8-11). ஏறு தனது கோட்டினால் குத்தி எடுத்த குடர்களைப் பருந்து எடுத்துச் செல்ல, அவை அதன வாயினினறும் தப்பிக் கடப்ப மரத்தின் மீது வீழநத்ன; கடமபின் மீதிருந்த குடர்கள் ஆண்டுறையும் தெய்வத்திற்கு மகிழச்சியுஂணடாக வேண்டி இட்ட மாலைகள் போல் காட்சியளித்தன (கலி. 106: 27-29). திருமால் ஆலமரத்தின் கீழும் கடப்ப மரத்தினகண்ணும் நல்யாற்று நடுவிலும் குன்றங்களிலும் பிறவிடங்களிலும் பொருந்திப் பற்பல பெயர்களையுடையவராக விளங்குகிறார் (பரி. 4:67-69). தேர் உருள் போன்ற பூங்கொத்தைக் கொண்ட கடம்பின் மாலையை உடையவர் செவ்வேள் (பரி. 5:81). தண்ணறுங்கடம்பின் மணம் கமழும் தாதூதும் வண்டுகளின் இசைகள் பண்களை ஒத்தன (பரி. 14:3,4). அறிவு எல்லையால் அறியப்படாத புகழ்பூத்த கடப்ப மரத்தின்கண் அமர்ந்திருப்பவர் செவ்வேள் (பரி. 19:2). பரங்குன்றத்தில் கடப்ப மரத்தின்கண் அமர்ந்த நல்ல நிலையைச் சுற்றத்தோடு தொழுது வாழத்தினேம் என நப்பண்ணனார் பாடுவர் (பரி. 19:103-105). செவ்வேள் வள்ளிப் பூவை இடைஇடையே இட்டுத் தொடுத்த கடம்பின் தேருருள் போன்ற பூவால் இயனற நறுமாலை சூடியுள்ளார் (பரி. 21:10,11). தேருருள் போலும் பூஙகொத்தைக் கொண்ட கடம்பின்கண் அமர்ந்துள்ள செவ்வேளுக்கு எடுக்கும் நறும்புகை மணம் கமழும் காற்றை உடையது திருப்பரங்குன்றம் (பரி. 21:50-53).

**கடமா** – **காட்டுப்பசு.** வெட்சிக் கானத்து வேட்டுவர் அலைப்பதனால் புகலிடம் காணாத கடமாவின் - காட்டுப்பசுவின் - நல்லஏறு மணி கிளரப் பொன் மிளிர மலைப்பக்கத்து விரைய ஓடும் (புறம். 202:1-4). கல்லென்னும் ஆரவாரத்தை உடைய காட்டின்கண் கடமாவைத் தலைவன அலைப்பப் பகற்பொழுது ஒளிமங்கியது (குறு. 179:1,2).

**கடமான் - காட்டுமான்.** ஞாயிறு மறைகின்ற பொழுதில் இனத்தினின்றும் தலைமயங்கித் தான் சேருமிடம் காணாத கடமான் - காட்டுமான் - நல்லேறு தன் இளம் பிணையை அழைக்கும் (புறம். 157:9-11). கூத்தர் நன்னனின் மலையைச் சார்ந்த சிற்றூர்க்குச் செல்லின் ஆங்குவாழும் குறமகளிடம் கடமானின் கொழுவிய தசையை உணவுடன் பெறலாம் என ஆற்றுப்படுத்தப்படுகிறார் (மலை. 175,184,185).

**கடமை - கடமைமான்.** ‘வண்டே, நீ தலைவனுடைய மலைக்குச் செல்வாயாயின், கடமை - கடமைமான்- நிறைந்த தோட்டத்திலுள்ள தினையிடத்தே களை எடுப்போரின் தங்கையாம் தலைவி இன்னும் தன் தமரோடேயே இருக்கிறாள் எனக் கூறுக’ என்று வண்டைத் தோழி தூதனுப்பினாள் (குறு. 392).

**கடல்** - ஆழி. கீழைக் கடலில் - ஆழியில் - தோன்றிய ஞாயிறு பின்னும் மேலைக் கடலில் மூழ்கும் புதுவருவாய்இடையறாத ஊர்களையுடைய நல்லநாட்டிற்கு வேந்தன் பெருஞ்சோற்றுதியஞ் சேரலாதன் (புறம். 2:9-11). நிலைபெற்ற கடலெல்லைக்கண் அமைந்த நிலவுலகத்தை உவாநாள் மதிபோலும் வடிவினையுடைய உயர்ந்த வெண்கொற்றக் குடை நிழல் செய்ய, ஆணைச்சக்கரம் செலுத்தி அரசாணட ஈர நெஞ்சினையும் நீங்கா ஈகையினையு முடைய பாண்டியர் மருகன் கருங்கையொள்வாட் பெரும்பெயர் வழுதி (புறம். 3:1-5). ‘குதிரை பூட்டப் பெற்ற பொற்றேரின் மேல் பொலிந்து தோன்றுதலால் கரிய கடலின்கண்ணே ஓங்கியெழும் செஞ்ஞாயிற்றினது ஒளியைப் பெற்றிருக்கின்றான்’ என்று சோழன உருவப் பஃறேர் இளஞ்சேட் சென்னியைப் பரணர்

பாடினார் (புறம். 4:13-16). இமயமலையின் வடக
கேயும் குமரியின் தெற்கேயும் கிழக்கின்கண் உள்ள
கரையை மோதுகின்ற தோண்டப்பட்ட கடற்குக
கிழக்கேயும் பழையதாய் முதிர்ந்த கடலின் மேற்
கேயும் நிலவுலகத்தும் மேலுலகத்தும் நின்னாணை
யால் பிறர் அஞ்சும் அச்சமும் நின் புகழும் பரவுக
எனப் பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப்
பெருவழுதியைக் காரிகிழார் வாழ்த்தினார் (புறம்.
6:1-8). பாண்டியன பல்யாகசாலை முதுகுடுமிப்
பெருவழுதி தன்னொடு போர்செய்தற்கு மாறுபட்ட
பகைவர் நாட்டினகண் கடல்போலும் தனது படை
புகுமாறு செலுத்தித் தன் யானையைத் தடை
யினறி ஏவி விளைநிலப் பக்கத்தையுடைய அரிய
மதிலரண் பலவற்றைக் கைப்பற்றினான (புறம். 6:
11-14). தெற்கே கன்னியாறும் வடக்கே இமய
மலையும் கிழக்கேயும் மேற்கேயும் கடல்களும்
எல்லையாக, இடைப்பட்ட நிலத்தே குன்றும் மலை
யும் காடும் நாடுமாகிய இவற்றை யுடையோர்
யாவரும் வழிமொழிய நிலவுலக முழுவதையும்
ஆண்டோரது மரபைக் காத்தவன் யானைக்கட்
சேய் மாநதரஞ்சேரலிரும்பொறை (புறம். 17:1-8).
'பகைவர் அஞ்சும்படி பெருத்தலால் கடலெனக்
கருதி மேகம் நீர்முகக்க மேற்கொள்ளும் படை
யினை உடைய குடவர் கோவே' எனறு குறுங்
கோழியூர் கிழார் யானைக்கட்சேய் மாந்தரஞ்
சேர லிரும்பொறையைப் பாராட்டி விளித்தார்
(புறம். 17:36,37,40). ஒலிக்கும் கடலாற் சூழப்பட்ட
அணுச்செறிந்த அகனற இடத்தையுடையது உலகம்
(புறம். 19:1). வேள் எவ்வியது மிழலைக் கூற்றத்து
நல்லூர்களில் நெலலை யரியும் உழவர் செஞ்ஞா
யிற்றினது வெயிலை வெறுப்பின் தெளிந்த கட
லலை மேல் பாய்ந்து ஆடுவர் (புறம். 24:1-3,17-19).
பெரிய கடலின் ஆழத்திடத்தே காற்றால் புடைக்
கப்பட்ட மரக்கலம் நீரைககிழித்து விரைந்தோடு
வது போலப் போர்க்களத்தே சென்று களிறு அக்
களததை அகலப்படுத்திச் செல்லும் (புறம். 26:1-3).
கடலால் வரும் பல பண்டங்களையுடைய நாட்டை
உடையோன் சோழன நலங்கிள்ளி (புறம். 30:14).
சோழன் நலங்கிள்ளி தன் பகைப்புலத்தின் கணணே
தங்கிவிட்டுக் கீழ்க்கடல் பின்னதாக, மேற்கடலினது
வெள்ளலைகள் தன் குதிரைக் குளம்பை அலைகக
வலமாக முறையே வருதலு முணடென்று எண்ணி
நெஞ்சு நடுங்கும் அவலததினால் வடவரசர் கண்
துயிலா ராயினர் (புறம். 31:12-17). சோழன் குள
முற்றத்துத் துஞசிய கிள்ளி வளவனின் படை கடல்
போல முழங்கும் (புறம். 42:3). மலையின் இழிந்து
பெரிய கடலைநோக்கி நிலவெல்லையிலிருந்து பாயும்
பல்யாறு போலப் புலவரெல்லாரும் சோழன் கிள்ளி
வளவனை நோக்கி விரைவர் (புறம். 42:19-21). 'சேர
மான் கோக்கோதை மார்பனைக் குறிஞ்சி நிலமுடை
மையால் நாடனென்று சொலவேனோ, மருத
நிலமுடைமையால ஊரனென்று சொலவேனோ,
நெய்தல நிலமுடைமையால் ஒலி முழங்குகினற
குளிர்ந்த கடலையுடைய சேர்ப்பனென்று சொல
வேனோ, எவ்வாறு சொல்வேன்' என்று அவனது
நாட்டுவளம் பாடுகிறார் பொயகையார் (புறம. 49:
1-3). கலப்பைப் படையை யுடைய பனைககொடி
யோன் (நம்பி மூத்த பிரான்) கடற்கணணே வளரும்
புரிந்த சங்கினை யொக்கும வெண்ணிறத்தினன
(புறம். 56: 3,4). பாணடியன் சித்திரமாடத்துத் துஞ
சிய நன்மாறன் தன் பகைவாக்கு எநநாளும் சுடும்
வெம்மைதவிராது கடலிடத்தே கிளர்நதெழுகின்ற
ஞாயிற்றை யொப்பான் (புறம். 59:4-6). சோழன
போர்வைக் கோப் பெருநற்கிள்ளியின படையார
வாரம் எழுகடலுங் கூடி யொலிக்கும் ஒலியினும்
பெரிது (புறம். 81:1). அதியமான் நெடுமானஞ்சி
நிலவகலத்தைத் தன்னுளளேயடக்கும் கடல்போன்ற
படையை யுடையவன் (புறம். 97:14). மலையமான
திருமுடிக்காரியின் நாடு கடலாற் கொள்ளப்படாது
(புறம்.122:1,2). சினமிகக தானையுடைய சேரன் மேல
கடலின்கண் பொனனைத் தரும் நாவாய செலுத்திய
அவ்விடத்து வேறு பிறர்தம் மரக்கலங்கள
செல்லமாட்டா (புறம். 126:14-16). ஆய் அண்டி
ரன் தன்னையெதிர்த்த கொங்கரை மேலைக் கடற
கண்ணே ஓட்டிய நாளில அவா தம் வேலகள் பல
வற்றையும் கீழே போட்டுவிட்டுப் புறங்கொடுத்
தோடினர் (புறம். 130: 5-7). நாஞ்சில கருங்கால
வேங்கை நாள்தோறும் பூக்கும பொன்போலும்
பூவைச் சுமந்து மணிபோலும நீர் கடலிற் செனறு
கலக்கும் பக்கமலையை யுடையது (புறம. 137:9-12).
தெளிநத கடலாற் சூழப்பட்ட உலகமுழுவதையும்
பிற வேந்தர்க்குப் பொதுவாதலின்றித தமக்கே
உரியதாகக கொண்டு ஆண்ட பேரரசாக்கும் நடு
நாள் யாமத்திலும் பகலும் உறங்காது விலஙகு
வேட்டையாடும் கல்லாத ஒருவனுககும் உணபது
நாழி; உடுப்பவை இரணடே (புறம. 189: 1-5).
சோழன் குராப்பள்ளித துஞ்சிய பெருந்திருமாவள
வன் கடலைக் கணடாற் போலும் ஒளளிய படைக்
கலம் பொருந்திய பெரிய சேனையை உடையவன்
(புறம். 197:3). 'செறிந்த அலைகளையுடைய பெரிய
கடல் நீரினும் அக்கடல் கொழித்திட்ட மணலினும்
மழைத்துளியினும் நீ விரும்பிய செல்வத்துடனே
புகழும் விளங்கி நீடு வாழ்க' என வடமவணணக்
கன் பேரிசாத்தனார், பாண்டியன இலவந்திகைப்

பள்ளித் துஞ்சிய நன்மாறனை வாழ்த்தினார் (புறம். 198.18-23). வானால் கவிக்கப் பெற்றுப் பெருங்கடலால சூழப்பட்டது இவ்வையகம் (புறம். 201:16,17). நீர்வேட்கை யுற்றோர் தெளிந்த நீர்ப்பரப்பின் ஒலிக்கும் அலைகளை யுடைய பெரிய கடல்நீரை உணணமாட்டார் (புறம். 204:5,6). புது மழையைப் பெய்தல் வேண்டிக் கால் வீழ்த்துக் கடலினிடத்தே திரண்ட தலைமையை யுடைய முகில் நீரின்றி மீளாதவாறு போலக் கடிய நெடுவேட்டுவனிடம் சென்ற பரிசிலர் சுற்றம் தேருடன களிறும் பெறுதலின்றி மீளாது (புறம். 205:10-14). மூவனின் நாட்டில் நெய்தலை யுடைய வயற்கண் நெல்லறுகக்கும் உழவர் ஆமபலினது இலையினால் மதுவையுண்டு தெளிந்த கடலினது ஒலிக்கும் அலையின் இனிய சீராகிய தாளததிற கேற்ப ஆடுவர் (புறம். 209:2-6). வெளிமான் இறந்தமை யறியாது அவனிடம் பரிசில்பெறச் சென்ற பெருஞ்சித்திரனார்க்கு இளவெளிமான் சிறிதே கொடுப்ப அதனை ஏற்காத அவர் தம் நெஞ்சை விளித்து, 'மிக்க அலையையுடைய கடலின்கண் மண்டிய ஆற்றுநீர் போல விரைந்து போய் நம் அருமையுணாநத வண்மையோரிடமிருநது மிகுதியுடைய பரிசிலைக் கொண்டு வருவோம், எழுந்திராய்' எனக் கூறினார் (புறம். 237:17-20). வெளிமான் இறந்த செய்தி கேட்டு வருந்திய பெருஞ்சித்திரனார், 'மழையையுடைய இரவில் மரக்கலங்கவிழ்ந்த காலத்துப் பொறுத்தற் கரிய துன்பமுற்ற நெஞ்சுடனே கணணில்லாத ஊமன் கடலினகண் அழுந்தினாற்போல எல்லையளந்து அறியப்படாத துனப வெள்ளத்தின மறுசுழிக்கண்பட்டுச் சுழலுவதைக் காட்டிலும் இறத்தலே நன்று' என நொந்து கூறினார் (புறம. 238:14-19). பாசறை தன் பரப்பினாலும் ஆர்ப்பினாலும் கண்டோர் கடலென்று மயஙகத தக்கதாயிருத்தல் (புறம. 294:2). கடல் கிளர்நதெழுவது போல் பாசறை ஆரவாரம் மிக்கிருத்தல் (புறம். 295:1). பருத்திவேலிச் சீறூர் மனனனுடைய உழுந்தின் தோலையுண்ட தளர் நடைப் புரவி கடலநீரைப் பிளந்து செல்லும் தோணி போலப் பகைவருடைய படைத்திரளைப் பிளந்து சென்றது (புறம். 299:1-3). சிறுவருவாயினையுடைய சீறூரில வாழும் வன்மையோன, போர்க்களத்தே தன் வேந்தனின் முன்னணிப் படை கெட்டழியுமாறு பகைவேந்தனின் படை நெருக்கி மேல்வந்தபோது தான் ஒருவனே உயர்ந்த வாளை வலக்கையில் தாங்கியவனாய் எதிர்நின்று அப்பகைப்படை தன்னைக் கடந்து மேற்செல்லாதபடி தடுக்குமாற்றால், பெரிய கடலைத் தடுத்துத் தாங்கி நிறகும் கரையை ஒத்தான் (புறம். 330). மறவனது பெருந்தகைவேல் பெரிய கடல் போன்ற தானையையுடைய வேந்தர் மார்பினும் அவர் ஊர்ந்து வரும் பெரிய களிற்றியானையது முகத்தினும் சென்று பாய்தலில் தப்பாது (புறம். 332:2,9,10). மகளிர் கடல் நீரில் விளையாடி அதனால் தம் மேனியிற் படிந்த உவர் நீங்கக் குளத்தில் மூழ்கி எழுவர் (புறம். 339: 6,7). முழங்குகின்ற கடலாகிய முழவையுடைய முசிறி நகர், மலைபடு பொருளையும் கடல்படு பொருளையும் கலந்து இரவலர்க்கு ஈயும் குட்டுவனுடையது (புறம். 343:7-10). யானையும் தேரும் மாவும் மறவருடனே நெருங்கி ஆரவாரிக்கும் கடலைக் கண்டாற்போன்ற அகன்ற தானையையும் வென்றெறி முரசினையுமுடைய வேந்தர் தம்மாற் காதலிக்கப் பெற்ற பெண்ணை அவள் தந்தை மணஞ்செய்து கொடாவிடின் வறிதே அமைதியாக இரார் (புறம். 351:1-7). நீர்வளம் மிகுந்த புரவலர் மருத நிலத்தூர்களைப் பார்ப்பார்க்குக் கொடுக்குங்கால் அவர் கையிற் பெய்த நீர் கடலளவும் பரக்குமாறு மிகுதியாகக் கொடுப்பர் (புறம். 362: 12,13). கரிய கடல் சூழ்ந்த இப்பெரிய நிலவுலகத்தைச் சிறிதும் பிறர்க்கின்றித் தாமே தமக்குரியதாக ஆண்ட வேந்தர் மிகப் பலர் (புறம். 363:1-4). பெரிய மழைமேகம் நீர்கோடற்பொருட்டுக் கடற்குச் சென்றாற்போல யானும ஒப்பற்ற நின்னை நினைந்து வந்தேன் என்று ஆய் அண்டிரனிடம் உறையூர் ஏணிச்சேரி முடமோசியார் உரைத்தார் (புறம. 375:13,14). சோழன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளி மலை பயந்த மணியும் காடு கொடுத்த பொன்னும் கடல் நல்கிய முத்தும் வேறுபட்ட உடையும் கள் நிறைந்த குடமும பொருநனுக்கு வழங்கினான் (புறம். 377:16-20). கடலின் முழக்கத்தைக் கொண்ட தானையையும் போர் வெல்லுதலில் விருப்பத்தையும் உடைய தலைவன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளி (புறம். 377:29,30). தென்னவர்க்குத் தானை மறவனான நாஞ்சில் வள்ளுவன் கடல் போன்ற தானையையும் இனிய புகழையுடைய போர்வென்றியையும் உடையவன் (புறம். 380:3-5). விசும்பிலிருந்து பெய்த மழைநீர்த் துளி கடற்குள் வீழ்ந்து முத்தாகும் (புறம். 380:6). சோழநாட்டு வேந்தனான நலங்கிள்ளி கடலில் கடற்படையுடனே சென்று பகைவரை வென்று பெரும்பொருள் கொண்ட மறங்கெழுமிய வலிய முயற்சியுடையவன் (புறம். 382:1-3). சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனின் நாட்டில் கடல் சார்ந்த நெய்தற் பகுதியில் காற்றால் கொணரப்பட்ட மரக்கலங்களை மகளிர் எண்ணுவர் (புறம்.

386:14). சோழன் குளமுற்றத்துத்துஞ்சிய கிள்ளி வளவனின் தாள் நிழலில் வாழும் யாம் எறிகின்ற அலைகளையுடைய பெரிய கடல் முடிவெய்தும் ஊழிக்காலமே வரினும் அதுகண்டு என்செய்வது என்று அஞ்சமாட்டோம என எருக்காட்டூர்த் தாயங்கண்ணனார் கிணைப்பொருநன் கூற்றில் வைத்து அவ்வளவன் புகழ் பாடுவர் (புறம். 397:23-27). விசும்பின்கண் விளங்கும் வெண்மதியம் பதினைந்துநாள் முறையே முதிர, கடலின் நடுவே அதனைக் கண்டாற்போன்ற தடாரிப் பறையை யறைந்து பொருநன் சோழன் நலங்கிள்ளியின் புகழைப் பாடினான் (புறம். 400:1-4). மலைபோல் எழும் அலைகள வெள்ளிய சிறுதுளிகளாக உடையுமாறு காற்று வீசி அலைக்கப்பட்டு அசையும் நீரும் செறிவான பெரிய பரப்புமுடைய கரிய கடலினுள் சென்று அங்கே அவுணர்க்குப் பாதுகாவலாக இருந்த சூரனின மாமரத்தினை முருகவேள் வெட்டினார் (பதி. 11:1-6). கடலிடைப்பட்ட நிலவுலகத்தே இந்நாவலந்தீவு முழுதையும் ஆண்ட நின் முன்னோர் போல நிலைபெற்று உலகின்கண் அழியாத நல்ல புகழை நிலைநாட்டி வாழ்வாயாக என்று இமைய வரம்பன் நெடுஞ்சேரலாதனைக் குமட்டூர்க் கண்ணனார் வாழ்த்தினார் (பதி.14:19-22).அலைகள் சிறுசிறு திவலைகளாக உடையும்படி கரிய கடலைக் கடந்து சென்று பகைவரது காவல்மரமாகிய கடம்பினை வெட்டி அதனால் இமையவரம்பன் நெடுஞ்சேரலாதன் வெற்றி முரசம் செய்தான் (பதி. 17: 4,5). இமையவரம்பன் நெடுஞ்சேரலாதன் ஒலிக்கின்ற கடலை எல்லையாகக் கொண்ட தமிழகம் விளங்குமாறு அதனைத் தன் செங்கோலின் கீழ் நிறுத்தினான் (பதி. ப. 2: 5,6). பல்யானைச் செல்கெழு குட்டுவன்பால வருவார் வரைவின்றி உண்ணவேண்டி அவனது மனையில் நிணம் பொருந்திய இறைசசியை வேக வைத்துத் தாளிதம் செய்யுந்தோறும் அதன் ஒலி கடலொலி போல அடங்காமல் ஆரவாரிக்கும் (பதி. 21: 8-12). தீய பண்புகள் நீங்க நன்மை புரிந்து கடலும் கானமும் பயன்படு பொருள்கள் பலவற்றையும் கொடுக்க அவற்றைக் கொண்டு, நாட்டு மக்களை மூப்பும் பிணியுமின்றி நெடுங்காலம் வாழ்வித்த வலியோர் வழிவந்தவன் பல்யானைச் செல்கெழு குட்டுவன் (பதி. 22: 5-11). குளிர்ந்த கடற் பக்கத்தை யுடைய நெய்தல் நிலத்திலும் ஏனை நிலங்களிலும் வாழும் மக்களும் வேந்தரும் வேளிரும் நடுஙகும் படி பல்யானைச செலகெழு குட்டுவனது முரசு அறையப்பட்டது (பதி. 30). பல்யானைச் செல்கெழு குட்டுவன் மேறகேயும் கிழக்கேயுமுள்ள இரு கடல நீரையும் ஒரு பகலிலே ஆடினான் (பதி. ப. 3:7). பல பொருள்களும் திரளுதலையுடைய கடலை ஆடையாக உடுத்தது ஞாலம் (பதி. 31: 1,2). 'நெடுந்தகாய், காற்றால் சிறு சிறு திவலைகளாக உடையும் அலைகளை யுடைய குளிர்ந்த கடலில் விரைந்த செலவினையுடைய புரவியையூர்ந்த நின் தாள்கள் வருந்துதலினின்றும் நீங்குமோ' என்று பரணர் கடல்பிறக்கோட்டிய செங்குட்டுவனை வினவினார் (பதி. 41: 16,17,25-27). கடல்பிறக்கோட்டிய செங்குட்டுவன் கூத்தர் சுற்றம் வாழக் கொடுத்த குதிரைகளை எண்ணின், அவை பெரிய கரிய தெளிந்த கடலில் மிக்க திரைகளையுடைய பரப்பின் மேல் வரும் அலைகளினும் பலவாகும் (பதி. 42:14, 15, 21-23). 'மேகம் முகந்து கொள்வதனால் குறையாமலும் ஆற்றுநீர் புகுவதனால் மிகாமலும் இருந்து குறுக்காக வீசும் காற்றினால் கடாவப்படும் அசையும் நீர் நிறைநத கடலிடத்தே வேலினை ஏவி முழங்கும் அலையை யுடைய அக்கடலிற் புகுந்து, தம்மை யெதிர்த்த பகைவரைப் பொருது அழிதத வேந்தர் நின் முன்னோருள் ஒருவருமிலர்' என்று கடல்பிறக்கோட்டிய செங்குட்டுவனைப் பரணர் பாடினார் (பதி. 45:18-22). சங்குகள் ஒலிக்கும் ஆழி கலங்க வேலினை ஏவிக் கரையில் மோதி உடையும் அலைகளையுடைய பரப்பொடு கூடிய படுகடலினது அரணாகின்ற வலிமையை அழித்த குட்டுவனைக் கண்டோர் அவனைப் பாடி விட்டுப் பிரிந்து செல்வோமென்று கருதமாட்டார் என்பது பரணர் கூற்று (பதி.46: 11-14). 'கடல் நீரிலே புகுநது அதன கணனே வருந்தி முயனற பரதவனே' எனப் பரணர் கடற போர் செய்த செங்குட்டுவனைப் பழிப்பது போலப் புகழ்ந்துள்ளார் (பதி. 48: 3, 4). 'நின் மலையிலே தோன்றி நின் கடலிலே கலக்கும் ஆற்றினிடத்தே நீர்விழாவையும் வேனிற்காலத்தில் சோலைகளிலே வாழும் பேரெழில் வாழ்க்கையையும் உடைய ஆயத்தார் ஆடும் இனிய புனலையுடைய காஞ்சியாறறுப பெருந்துறை மணலினும் பலகாலம் நின் பெயர் வாழவதாக' என்று செங்குட்டுவனைப் பரணர் வாழ்த்தினார் (பதி. 48:12-18). ஆழிப் பரப்புக் கலங்குமாறு காற்று மோதுதலால் பேரலைகள் இடி போல முழங்கும் கடலைச் சார்ந்த கானற்சோலையாகிய குடபுலத்தை நோக்கிச் செல்லும்போது, ஆடுகோட்பாட்டுச் சேரலாதன தண்ணிய கடற் பரப்பினைச் சார்ந்து அடம்பங்கொடிகள் நெருங்கிய கரையிலே அலவன் ஆடியதால் உண்டான சுவடுகளை மறைக்கும் நுண்மணலைக் காற்று வீசுகினற பனஞ்சோலையில் அரசுமேவும் அணிதிகழ

விளங்கியிருப்பான்; இருந்து, வடக்கே இமயமலையும தெற்கே பனியாழியும் கீழமேல் கடலகளுமாகிய நாலெல்லைக்குட்பட்ட அரசரும் பிறரும் குழுமிய பநதரில விறலியரின் பாடலைக் கேட்டுப் பொழுது போககுவான் (பதி. 51: 1-22). இனிய ஓசையையுடைய அலைகள ஒலிககினற ஆழிவழியாக வந்த நனகலச் செலவம் தொகுக்கப்பட்டிருக்கும் பண்டசாலைகள் உள்ள தாழை மணங்கமழும் கானலம் பெருநதுறையுடைய தணணிய கடற்கரைப் பகுதியாகிய நல்ல நாட்டுக்குத் தலைவன் ஆடுகோட்பாட்டுச் சேரலாதன (பதி. 55: 3-6). சேரனது நற வென்னும் ஊரினகண வில்லை யுடைய மறவர் பொஙகுகின்ற பிசிரை யுடைய அலைகளோடும் மேகங்களோடும் கலந்து வரும் குளிர்ந்த கடற்காற்றினால் உடல் நடுங்குவர் (பதி. 60:9-12). 'பாணனே, நீ உன் நெடுமொழிச் சுற்றத்தோடு நேரிப் பொருநனாகிய செல்வக் கோமானைப் பாடிச் சென்றால் பந்தரென்னும் பெயரையுடைய மூதூரிடத்தேயுள்ள தெளிநத கடலில் விளைந்த முத்துக்களோடு கொடுமணம் என்னும் ஊரிலுண்டான நல்ல அணிகலன் களைப் பெறுவாய்' என்று கபிலர் பாணாற்றுப் படைத்துறையில் செலவக் கடுங்கோ வாழியா தனின வணமையைப் பாடியுள்ளார் (பதி. 67: 1-4, 22, 23). காறறே குறுந்தடியாய அமைந்து அடிக்கக் கடல் ஒலித்தாற் போனறு பாசறை நடுவே முரசம் முழங்கச் செல்வக்கடுங்கோ வாழியாதனின் படை மறவர் பகைவரின் எயிலை யெறிவர் (பதி. 68:1-5). கடல்போற் பரந்த சேனையிடத்தே கடிய குரலையுடைய முரசங்கள் காற்றினால் மோதப்பட்ட கடலைப் போல் கடுமையுடையனவாய் முழங்கச் செலவக்கடுஙகோ வாழியாதனின் மறவர் பகைவரைக் கொன்றனர் (பதி. 69:3-9). பண்டங்களை விலைக்கு விற்கும் வணிகர் பெரிய கடலில் நீந்திய மரக்கலத்தைப் பழுதுபார்த்து அதற்கு வனமையைச் சோபபதுபோலப் பெருஞ்சேரலிரும்பொறை யானைத் தொகுதிக்குப் போரில நேர்ந்த புண்ணை ஆற்றி அவற்றை இரபபோர் வாழக் கொடுப்பான் (பதி. 76:4-7). தெளிநத கடலைநோக்கிச் செல்லும் ஆற்று நீரில செலுத்தும் கருப்பந் தெப்பத்தைக் காட்டிலும் இளஞசேரலிரும்பொறை அருளுதலில் வலலவன (பதி. 87:3-5). தெண்கடல் வளைந்த மலர்தலை உலகத்தில் திசைகளிலெல்லாம் தம் பெயர் பரவிய பகைவரை அழித்து வெற்றியெய்திய பெரியோர் மருகன இளஞசேரலிரும்பொறை (பதி. 88:3,4,14). இளஞ்சேரலிரும்பொறையை 'வளைந்த கடலோசையாகிய முழவினையுடைய தொண்டியென்னும் பட்டினத்துள்ளார்க்குத் தலைவனே' என்றும் 'பெருங்காற்று எழுப்பிய, உயர்ந்து வரு தலையுடைய அலைகள் நுண்மணலால் ஆகிய அடைகரையிடத்தே வந்து உடையும் குளிர்ந்த கடற்பக்கத்தை யுடைய நாட்டுக்கு உரியவனே' என்றும் பெருங்குன்றூர் கிழார் விளிப்பர் (பதி. 88:21,40-42). கரையிலே வந்து பரத்தலை யுடைய கடல்போன்ற பகைவரால் தடுத்தற்கரிய சேனையை யுடையவன் இளஞ்சேரலிரும்பொறை (பதி. 90:31). செறிந்த பெரிய பரப்பினையுடையது கரிய கடல் (பதி. இ. 1:8). பலர் புகழ் ஞாயிற்றைக் கடலிடத்தே கண்டாற்போல இமைத்துப் பார்ப்பதற்குக் காரணமாவதும் கட்புலனால் நோக்குவார் கண்ணிடங்களெல்லாவற்றினும் சென்று விளங்குவதுமான அவிரொளியுடையவர் முருகப்பெருமான் (முரு. 2,3). நிலம் முதிர்ந்த குளிர்ச்சியை யுடைய கடல் தன் நிலை குலையும்படி உள்ளே சென்று சூரபன்மாவைக் கொன்ற வேலினையுடையவர் முருகன் (முரு. 45,46). ஒலிக்கும் கடலிடையே அரணமைத்து ஆண்ட சூரனைக் கொன்றவர் முருகவேள் (முரு. வெ. 1). மேகம் கடலிடத்தே நீர்முகத்தலை மறந்த பெரிய வற்கடக் காலத்திலும் ஒரு வேலி நிலம் ஆயிரம் கலம் செந்நெல் விளையுமாறு காவிரி புரக்கும் நாட்டிற்கு உரியவன் சோழன் கரிகாற் பெருவளத்தான் (பொரு. 236, 237,246-248). பேகன் முதலிய வண்மையோர் எழுவரும் அக்காலத்தே மேற்கொண்டிருந்த கொடைப் பாரத்தைப் பரந்த கடலாகிய வேலியையுடைய உலகமெல்லாம் விளங்கும்படி தானொருவனாகத் தாங்கியவன் நல்லியக்கோடன் (சிறு. 113-115). கடல் பரந்து எற்றிப் பொருதலாலே அலையும் நீரையுடைய கானல் வெண்மணலிடத்தே நின்ற தாழை அன்னம் போலப் பூக்கும் (சிறு. 146, 150). குளிர்ந்த கடல் சூழ்ந்த உலகில் தன்னைப் பாதுகாப்பாரைப் பெறாமல் பொழிமழை துறந்த புகை சூழ்ந்த குன்றத்தில் பழுமரத்தைத் தேடித் திரியும் பறவை போலச் சுற்றத்துடன் பயனின்றி ஓடித் திரிந்த பெரும்பாணனை விளித்துத் தொண்டைமான் இளந்திரையனிடம் பரிசில் பெற்று வநத பெரும் பாணன் ஆற்றுப்படுத்தினான் (பெரு. 18-22). புலால் நாற்றத்தையுடைய கடல்சூழ்ந்த வானம் சூடிய அகன்ற இடத்தையுடையது உலகம் (பெரு. 409,410). மலையினின்று விழுகினற அருவி அம் மலையிலுள்ள பண்டங்களை வாங்கிக் கொண்டு கடலுக்குக் கொடுக்கச் சென்றாற்போலப் பல்வேறு திறைப் பொருள்களோடு அரசர் பலர் தொண்டைமான் இளந்திரையனை வணங்கச் சென்றனர் (பெரு. 427,428). கீழ்க்கடலாகிய எல்லையிடத்து முந்

நீர் நடுவே பகற்பொழுதைச் செய்யும் ஞாயிறு தன் கதிர்களைப் பரப்பித் தோனறினாற்போலத் தொண்டைமான் இளந்திரையன் தன்னைச் சார்ந் தோர் நடுவிலிருந்து முறைவேண்டுநர்க்கும் குறை வேண்டுநர்க்கும் அருள் செய்வான் (பெரு. 441-444). அலை பரவுகின்ற கடலிடத்தே நீரை முகந்த மேகத்தினின்றும பகலில் பெய்யும் மழைத்துளியின கண் மினனல ஓடுவதுபோல விறலியர் தம் கரிய கூநதலில் அழகுபொலியப் பொனமாலையை மலை யக் கொடுக்கும் தொண்டைமான இளந்திரையன், கரிய கடலில் சங்கைக் கண்டாற போன்ற வெள் ளிய கழுததுமயிரையுடைய குதிரைகள் நானகினைச் சேரப்பூட்டிய பொற்றேரைப் பாணர்க்குக் கொடுப் பான (பெரு. 483-490). தொண்டைமா னிளந்திரை யனை யான் பயந்தேன எனுஞ் செருக்கால இருள் சூழ்ந்த பெரிய கடல், கங்குலும் பகலும் துஞ்சா இயல்பினதாய் இடையறாது ஆர்ப்பரிக்கும் (பெரு. வெ.). அகனற உலகத்தை வளைத்து மாவலி வார்த்த நீர் தன் கையிலே சென்ற அளவிலே விண்ணகத்தே நிமிர்ந்த திருமாலைப் போலக் கடிய செலவினை யுடைய மேகம் ஒலி முழங்கும் குளிர்ந்த கடலைக் குடித்து வலமாக வந்து மலைகளின் மேல்நின்று உலகத்தை வளைத்தெழும் (முலலை. 1–5). பகைவர் நாட்டில் போர் முடித்துத் தலைவர் வாரா முன்னர் மேகம் கடல் முகந்து வந்தது (முல்லை. வெ. 2). தெற்கே குமரியும் வடக்கே பெருமலையும் (இமயமும்) கிழக்கேயும் மேற்கேயும் கடலகளும் எலலையாக இடைப்பட வாழவோரெல்லாம் ஏவல் கேட்கும் படி வெற்றியோடு நடந்த கொற்றவர்க்குத் தலை வன பாண்டியன தலையாலங்கானத்துச செரு வென்ற நெடுஞ்செழியன் (மது. 70-74). தெளிந்த கடலாகிய ஆழ்ந்த கிடங்கினை யுடைய நெல்லின் ஊரை (சாலியூரை) கொண்ட கொற்றவன் நெடுஞ் செழியன் (மது. 86-88). நெடுஞ்செழியன் விரிகின்ற கடல் போலும் பரந்த படையுடனே தடையறப் பகைவரிடததே சென்று விசும்பார்ப்பெழ அம்பு விடுத்து, சங்கு முழஙக அவர் பெருமையைக் கெடுதது வென்று கொன்று நாடுகள் அழிய மதில் களைக் கைப்பற்றினான் (மது. 180-187). ‘முழங்கு கின்ற கடலாகிய எல்லையை யுடைய மலாதலை உலகத்தில உள்ளவருடனே தேவருலகத துள்ள மேலோர் பகைவராக வரினும், அப்பகைவர்க்கு அஞ்சிப் பணிந்தொழுக மாட்டாய்’ என்று நெடுஞ் செழியனின் மறவியல்பை மாங்குடி மருதனார் சுட்டுகிறார் (மது. 199-201). மேகம் கீழ்த்திசைக் கடலிலிருந்து நீரை முகந்து, மேற்றிசைக் கடலரு கின் மலையிடத்தே தங்கி இரவும் பகலும் அறி யாதவாறு இருண்டு இடியுடன் பெருமழை பொழிதலினால் மேடு, பள்ளம் எங்கும நீர் திரண்டு பெருக அந்நீர் குழியில் விழுந்து அருவி ஒலிப்பக் கழைவளர் சாரலில் களிற்றினம் நடுங்கக் கீழ்த் திசைக் கடலைச சென்றடையும் (மது. 238-245). அருவிகள் வறண்டு அழகற்ற மலையிடத்து முழைஞ்சுகள் கோடைச் சூறாவளியை முகக்கையி னால் காற்று மிகுந்த கடலபோல் ஒலியெழுப்பும் (மது. 306-309). நெடுஞ்செழியனின நெய்தல நில வளம் பலவற்றுள் முழங்கு கடல் தந்த விளங்கு கதிர் முத்தம் ஒனறாகும் (மது. 315,325). கரிய கடலில் உள்ள வெள்ளிய சங்கை யொத்த நரை மயிரினை யுடையராகிய தொன்முது பெண்டிர் நறும்பூவுடனே நுகர்பொருள்களை யேந்தி மனைகள் தோறும் சென்று விற்பர் (மது. 407-409, 422,423). மதுரை நகர மாடங்களில் கொடித் தண்டுகளில் ஏற்றப்பட்ட பெருங்கொடிகளைத் தெளிந்த கடலலைபோல எழுந்து விழும்படி காற்று அடித்தலினால் அம்மாடங்களின நிலா முற்றங்கள் தோறும் இருந்து விழாக்காணும மகளிா முகம் மேகத்தில் மறையும் திங்களைப் போல் ஒருகால் தோன்றி ஒருகால் மறையும் (மது. 446-452). கூத்தர் சுற்றத்துடன் வாழ்த்துகின்ற குளிர்ந்த கடல் சேர்நத நாட்டையுடையவனாகிய சேரனது நாளோ லக்க இருப்பில் சிறநதோர் கூடி, அவன் கேட்பத் தருககஙகளை பேசுதலின ஆரவாரம் எழும் (மது. 523-526). பெரிய கடல் சூழந்த இடத்தினின்றும் புலால நாறும் அலைகளையுடைய ஓதம கரிய கழி யில் ஏறிப் பாயுங்கால அங்கு வாழும் பல்வேறு பறவைகள் ஆரவாரம் செயதன (மது. 540-543). நடு இரவில் யாவரும் துயின்ற மதுரை நகர் ஒலி நிறைந்தடங்கிய குளிர்ந்த கடலை ஒத்திருந்தது (மது. 629-631). நெடுஞ்செழியனுக்கு அடங்கியோர் நாள்தோறும் தமககுச் செலவம் மிகுதற்கு அவ னைக் கைதொழுது வாழ்த்தித் திறையாகக் கொடுத்த கலனகளும் பிற பொருள்களும கங்கை யாறு ஆயிரமுகமாகக கடலிற் சென்று புகுவது போலப் புகுநதமையான் மதுரை தேவருலகம போற் பொலிந்தது (மது. 694-699). குடகமலை யிடத்தே தலையினை வைததுக் கடலிடத்தே சென்றடையும் காவிரி வான் பொய்ப்பினும் தான் பொயயாதது (பட். 5,6). கடறகரை ஊர்களில் பரத வர் பிள்ளைகள் கடலிறாக்களின சூடுகளைத் தினறு, வயலாமைப் புழுக்குண்டு அடுப்பம் பூச் சூடி விளையாடுவர் (பட். 62-65). பரதவர் உவா நாளில் பரந்த கருமையுடைய குளிர்நத கடலில மீன் பிடித்தற்குப் போகாது மனவெழுச்சி தவிர்ந்து

தம் மகளிரொடு கூடிக் காவிரியின் புகார்முகத்தே தீவினை போகக் கடலாடியும அதனால் தம் மேனி யிற படிந்த உப்புப்போக நீரிலே குளித்தும் அலவ னாட்டியும அலைமீது பாய்ந்தும் விளையாடுவர் (பட. 90-103). மேகம் தான் முகந்த நீரை மலை யிடத்தே சொரிதற்காகவும் மலையிற் சொரிந்த நீரை மீண்டு கடலிலே பரப்புதற்காகவும் மாரிக் காலத்தே மழை பெய்தல் (பட். 126-128). தென் கடல முத்தும் குணகடல் பவளமும் போன்ற பல செல்வங்களும் தம்முள் மயங்கிய இடமகன்ற தெருக்களையுடையது காவிரிப்பூம்பட்டினம் (பட். 189,193). 'தெய்வத்தன்மையுடையனாகலின் இவன் கடல்களை யெல்லாம் தூர்த்தலையும் செய்வான்' என்று உலகத்தார் மேற்கூறும்படியாகத் துறை போனவன சோழன் கரிகாற் பெருவளத்தான் (பட். 271-273). மலையில் விளைந்த பொருள்களை யெல் லாம் வாரிக்கொண்டு யாறு கடலை நோக்கி ஓடு வது போல, நனனன் சேய் நன்னனிடமிருந்து பரி சிற பொருள்களைப் பெற்றுக் கொண்டு யாம் வருகின்றோம் என்பது ஆற்றுப்படுத்தும் கூத்தன் கூறறு (மலை. 51-53). 'செம்மறித்திரள் வெள்யாட் டுடனே ஓசை எழுப்பும் காட்டிடத்தே கடல்போலே ஒலிக்கும் பல யாட்டினங்களை யுடைய திரள்க ளிலே இரவில் செல்வீராயின் பாலும் பாற்சோறும் பெறுவீர்' என்று கூத்தர் ஆற்றுபபடுத்தப்படுகின் றனர் (மலை. 414-417). நன்னனது மூதூரிலுள்ள தெரு கடலெனவும் முகிலெனவும் ஒலிகக்கும் ஆர வாரமுடையது (மலை. 483,487). நன்னன் வேண மாளின தலைவாயிலில் ஆமான் கனறு முதல் பல வேறு கையுறைப் பொருள்களும் குடமலையிற் பிறந்த காவிரியாறு கடலிற் கலக்கினற ஆழ்ந்த புகார்முகத்தை யொப்ப நிறைந்திருந்தன (மலை. 500-529). முருங்கையின் வெள்ளிய பூக்கள் கடிய சூறாவளி வீச ஆர்ததலுற்று உடைநத அலைகளின் துளிகளைப் போல் பரநது கிடத்தலின், காடு கட லின் கரையகம் போலத தோனறும் (அகம். 1:16-19). பெரிய கடற்பரப்பில எழும் திரைத் திவலைகளை ஏற்றுக்கொண்டதனால விண்மீன்களைப போன்ற மெல்லரும்புகளைத் தோற்றுவித்த முடப்புன்னை யினது கிளையில் பறவைகள் தங்கும் (அகம். 10:1-4). தெனனவனாகிய பாண்டியன் தன் கடலில பிறந்த முத்தினாலாகிய ஆரமும் தன மலையாகிய பொதி யிலில் விளைநது குறவரால கொண்டுவந்து தரப் பெற்ற சந்தனமாகிய ஆரமும் எனற இருபேராரங் களையும் எழில் பெற அணியும் திருவீழ்மார்பினன் (அகம். 13:1-6). பரதமாக்கள் நெடுங்கயிற்றாற் பின்னிய குறிய கணகளையுடைய அழகிய வல்லை யினால் கடல் ஒலியடங்கிய காலத்தே இனமீன் களை முகப்பர் (அகம். 30:1-3). மாலைப்பொழு தில் நீல நிறத்தை யுடைய பெருங்கடல் ஒலி மிகுந்து முழங்கும் (அகம். 40:2,6). கடலின்கண் நீரை நிரம்பப் பருகிய நிறைந்த சூலையுடைய கருமுகில்கள் கார்ப்பருவத்தே ஒளிமிக்க மினன லோடு வலப்பக்கமாக எழுந்து முழங்கும் (அகம். 43:1,2). வான வரம்பன கடலிடத்தே மாற் றாரைப் புடைபெயரச் செய்த வெற்றியினை உடையவன் (அகம். 45:16,17). நெய்தல் தலைவன் களவுக் காலத்தே கடலொலி அவிந்து தோணி இயக்கமின்றி ஒழிந்து பெரிய கழியில் சுறா முத லிய மீன்கள் செருக்கித் திரியினும் அயற் பெண் டிர் அலர்தூற்றினும் பகலிலும் தலைவியை அக லாதவனாகி அடுத்தடுத்து வருவான் (அகம். 50:1-6). பரதவன் பெரிய கடற்பரப்பில் சிவந்த இறாமீன்கள் நடுங்கும்படி கொடுந்தொழில் செய்து அகப்படுத் தும் வலையினால் நெடும் படகிலிருந்து மீன் பிடிக் கும் தொழிலில் தங்குவான் (அகம். 60:1-3). குளிர்ந்த கடற்கரையை உடையவன் சேர்ப்பன் (அகம். 80:3). கோசரது நியமமென்னும் ஊர் பெரிய கடல் போலும் ஆரவாரத்தினை யுடையது (அகம். 90:10, 12). மேகஞ் சூழ்ந்த இரவில் பெரிய அலை முழக்கத் தோடு இயக்கமும் ஓய்ந்திருந்த கரிய கடலில், கொழுமீனைப் பிடிக்கும் பரதவர் தம் தோணியில் கொளுத்தி வைத்த ஒளிபொருந்திய விளக்கம் வேந்தனது பாசறைக்கண்ணே யானையினது முகத்திற் பிணித்த நெற்றிப் பட்டத்தின் ஒண்சுடர் போலத் தோன்றும் (அகம். 100: 5-10). ஆயத்தா ரோடு தலைவி கடலாடிக் கானலில் சிற்றில் இழைத்துச் சிறுசோறு சமைத்துப் பின் இளைப் பாறி யிருந்தாள் (அகம். 110:5-9). மறப்போரில் வல்லவனான செழியன் கூடற் பறந்தலையில் தம் முள் கூடியெதிர்ந்து வந்த சேர சோழப் பேரரசரின் கடல்போன்ற பெரும் படையைக் கலங்கத் தாக்கி அவர்தம் ஓடுபுறங்கண்டனன் (அகம். 116: 13-18). காவிரியாறு கடலில் கலக்கும் பெருந்துறையின் கண்ணே பெரிய கடலோதம் இறா மீனோடு கரைக்கு வந்து அங்குக் கிடக்கும் மாலையோடு மீளும் (அகம். 123:11-13). 'நடு யாமத்தில் தன் காமம் செறிந்து கடலினும் மிகுதியாகப் பரவிக் கரை கடந்து செல்லும்' என்று தலைவி தோழியி டம் கூறுவாள் போலச் சிறைப்புறத் தலைவன் கேட் பக் கூறினாள் (அகம். 128:3,4). துளையிடாத புதிய முத்துக்கள் விளையும் தெளிந்த கடலையுடைய வீரன் திண்ணிய தேரினையுடைய செழியன் (அகம். 137: 13,14). தென்னவன் தன்னோடு மாறுபட்ட

பகைவரை வென்ற, கடல்போலும் தானையினை யுடையவன் (அகம. 138:6,7). சிறுகுடிப் பரதவர் பெரிய கடலில் மீனவேட்டம் ஆடுவர் (அகம். 140:1). கடல் மீன்களும் துஞ்சும் இடையாமதநில தலைவி மெல்லத் தனனிடம் வநது இனிய மொழிகளைப் பேசித் தொடிக்கண வடுக்கொளத தனனை முயங்கிச சென றாள என இரவுக்குறி வநது மீளும் தலைவன தன நெஞசோடு சொல்லி உவந்தான் (அகம். 142:20-26). கொள்ளக் குறைவு படாததும் சங்குகள பெருகும் ஆழத்தினை யுடைமையால் அளபபரிதாகியதும திரண்ட கரிய தோற்றத்தினையுடையது மாகிய கடலபோனற வானில், அழற்கொடி யொத்த மின்னல் இருளைப் பிளந்து செலல இடியுடன் கூடிய மழை நளளிரவில் பொழிதல (அகம். 162:1-6). புலியால் கொன்று தின்னப் பட்ட யானையின எஞ்சிய ஊனில் மறவர் எடுத்துச் சென றதும் போக மிகுந்ததனை, ஒலிக்கின்ற அலை பொருந்திய கடலில விளையும் அமிழ்த மாகிய உப்பினைக் கொணரும் உமணர் தீக்கடைகோலால் ஆக்கிய சிறுதீயில் வதககிச் சோற்றுலையில் கூட்டிச் சமைபபர் (அகம. 169: 3-7). நள்ளிரவில் தாழை மரத்தினது தாழந்த கிளையின் மேலே பசிப்பிணியோடு இளைப்புறறிருக்கும் கடற் சிறு காக்கை நீர்ப்பரப்பின்கண் தன் பெடைக் காககையோடு கூடி வெளளிய இறா மீனைத் தின்பதாகக் கனவு காணும் (அகம். 170:9-12). கடலைக் கண்டாற போல மருதநிலப் பரப்பு பரந்து விரிந்திருத்தல் (அகம. 176:1). பெரிய கூட்டத்தையுடைய முகிலகள ஆரவாரத்தோடு தோனறிப் பனித்துறைப் பெருஙகடலினூடே சென்று நீரைப் பருகி உட்கொண்டு மேற்றிசை வானில் எழுந்து சூலுற்ற பெண்யானைக் கூட்டங்களைப் போல் இடந்தொறும் நெருங்கிப் பரவக் காரகாலம் வந்தது (அகம். 183:5-10). காட்டரணிலுளளோர் குடிபோகிய பாழ்நாட்டின் அருவழியில பனங்குருத்தைத் தின்னும் யானை காலைப பொழுதில் துயிலு மிடத்தே அசைந்து கொண்டிருக்கும் நிலை, சுறாமீன்களுள்ள குளிர்ந்த துறைகளை நீநதிச் சென்று காலையில் மீன் வேட்டை குறித்தெழுந்த பரதவர் தங்குதற்குரிய கடலதோணிகளைப் போல் தோன்றும் (அகம். 187: 17-23). பெருங் கடல்நீரைப் பெரிய கூட்டமாகிய மேகம் முகந்து கொள்ளும் (அகம். 188:1). புன்னைக் கிளையில் தங்கிய நாரை ஓடுமாறு பொஙகிவரும் வாடைக்காற்றுடன் அலைகள் அலைத்துக் கொண்டிருக்கவும், ஒரு நாள் தலைவனொருவன கடலோரமாய்த் தேரைச் செலுத்திச் சோலைக்கு வந்தனன். (அகம். 190:7-10). 'ஏதிலாரைப் போலத் தலைவியைப பிரிநது பொருளீட்டுதற்குக் கடல்போன்ற கானம் பிறபடுமாறு நீ செல்லுதற்குரியை' என்று தலைவன் நெஞ்சினை நோக்கிக் கூறினான (அகம். 199:13-15). நிறைமதி நாளில் ஞாயிறு மறைந்த அந்திப பொழுதில அச்சம் பொருநதிய பெரிய கடல ஆரவாரித்து எழுநதாற் போல ஊரார் கூறும் அலர் மன்றின்கண் பரவியது (அகம். 201: 8-10). பாண்டியன் உலக முழுவதும நிழல் செய்த கெடாத வெண்கொற்றக் குடையினையும் கடல் போனற சேனையினையும் செருககிய குதிரையினையும் உடையவன் (அகம. 204.1,2). பரதவரின் எறியுளியால் தாக்கப்பெற்ற பெருமீன், விசும்பினை அணிசெய்யும் விலலைப் போலத் தாவித தன் புணணினினறும் ஒழுகிய உதிரத்தால் புலால நாறும் கடல் நீரின் நிறம மாறுபட நீர்ப்பரபபைக் கலக்கி வலிகுன்றிக் கரையோரத்தே வரிசையாக நிறுத்தப் பட்டிருக்கும் படகின பககலில் வந்து ஒதுங்கும் (அகம். 210:1-6). கடல் போன்ற தானையினை உடையவன் குட்டுவன் (அகம். 212:15,16). கடலாடு மகளிர் புலிநகக் கொன்றைப் பூவினைக் கொய்தனர் (அகம. 216:8). ஊணூரில் முழங்கும கடலோதம காலையில் பெருகிச் சுழலும் (அகம. 220:12,13). கழார்ப்பெருந்துறை நீர்விழாவில் தன் காதலனான ஆட்டனத்தியைக் காவிரி வெள்ளம் கவர்ந்து கொண்டதனால திசையெலலாம் தேடி, மதி மருணடு வாடிய ஆதிமநதிககு அவனைக் காட்டிப் பின் ஒலிக்கும கடலிற் புகுநது உயிர் விட்ட மருதி பாடல்சால சிறப்புப பெற்றாள் (அகம். 222:5-12). காவிரி வெள்ளத்தால கொள்ளபபட்ட ஆட்டனத்தியைப் பிரிநத ஆதிமநதி அழுத கணணளாய நாடுதோறும் ஊாதோறும சென று, 'என் தலைவனைக் கடல்கொண்டதோ, புனல ஒளித்ததோ' எனத் தன துன்பத்தைச சொல்லிப் பெரிதும் பேதுற்றாள் (அகம். 236:16-21). செறிந்த கடலாகிய திரைச் சுரத்தில் திரிநது வருந்திய படகினகண இருந்தவாறே பலவாய மீனகூட்டங்கள வாழுமிடஙகளை விளககொளியினால் தலைவியின் தநதை அவள் தமையன்மாாக்குக் காட்டுவான் (அகம். 240:4-7). புலால் வீசும அலைகளையுடைய பெருங்கடல் நீரை இடையே பிளநதவாறு கப்பல செல்லும் (அகம். 255:1,2). விளங்கும் கதிர்கள் விரியப் பெற்ற அச்சம பொருந்திய ஞாயிற்று மண்டிலம் உயர்நதோர் தொழ அசையும் அலைகளையுடைய பெருங்கடலில் தோனறும் (அகம். 263:1,2). கடலநீரில் விளையும் உப்பினை வண்டிகளிலேற்றி உமணர் எடுத்துச் செல்வர் (அகம். 295:9,10). பயன் பொருநதிய

செலவங்களைத் தரும் பல கதிர்களை யுடைய ஞாயிறு, உலகிறகுத தொழிலகளைத தருதறகு வலமாக எழுநது விளங்கிப பெரிய கடலில தோனறினாறபோல வேங்கை நீலமணியையொத்த மாலைக் காலததே நிறைய மலர்நதது (அகம். 298: 1–4). தலைவியது தோள நலததினைத் தலைவன புது வதாக நுகாநத நாளில, கடலே அறியும் சான்றாக அவன அவளிடம சூள்மொழி கூறினான (அகம். 320: 12–14). சிறுகுடிப் பரதவர் பெருங்கடலிற செலுத் திய படகுபோலத தலைவனின் தேர் மணற்குவியல் மேலும் மணலமேட்டுத் தாழை மடல்களினிடத்தும் அடும்புக கொடியை யறுத்துக் கொண்டு ஏறியும் இறங்கியும சென்று மறையும் (அகம. 330:11-17). எப்பொழுதும ஒலி முழங்கும் இயல்புடையது கடல (அகம. 334:4). பரதவா விசையுடன் சென்று மீன பிடிக்கும்போது சுறா மீன்கள் ஒருங்கே பாய்ந்து கிழிதத வலைகள், தொழிலொழிந்து மனை முறறததில தாழை மரத்தின மீது கிடநது, குளிர்ந்த கடலினின்று அசைநதுவரும் காற்று வீசுந்தோறும் அசையும தெளிந்த கடறபரப்பினையுடையது தலை வியின ஊர் (அகம். 340:19-24). சேரலாதன பெரிய கடலினகண பகைவரை ஓட்டி அவாதம காவல மரமான கடம்பினை அறுதது, அதனாற் செயத முரசினது கண் முழங்கினாற்போலச் சேரிப பெண டிர் தலைவியைக குறித்து அமபலும் அலரும மொழிநதனர் (அகம. 347:3-7). மாலைக்காலம் அந்தி வானத்தின செந்நிற அழகுடன கடலின் நீலநிற அழ கையும கொண்டு வநதது (அகம. 360.8,9). கைவண மையுடைய சோழா கடலபோலுந தானையினையும் உடையவர் (அகம. 369.13). மேகங்கள பெரிய கடல நீரை முகநது, திசைகள எலலாம் இருணடு உலகு மறைய வலமாக எழுநது மின்னி மழை பொழியும (அகம. 374.1–6). பனைமரங்கள் மிக்க தலைவியது சிறு நலலூரிலுள்ள புலால நாறறம வீசும் அலை களையுடைய கடலும அதன கரையிலுள்ள சோலை யும நிலவும இருளும போலத தோன்றும் (குறு. 81:5-7). விரிநத அலைகளையுடைய பெருங்கடலால சூழப் பெற்றது இவவுலகம (குறு.101:1). கீழக்கடல் அலைக்கு அருகில உள்ள சிறகிழநத நாரை சேரனது (மேல கடறகரையில் அமைநத) தொணடியென்னும் பட்டி னததின துறையில வாழும் அயிரை மீனாகிய உணவைப பெறத தலை நிமிாந்தது போலத் தொலைவிலுள்ள பெறறகரிய தலைவியை நினைக் கினறாய எனத தலைவன நெஞ்சுநோககிக கூறி னான (குறு 128). கரிய கடல நடுவே தோனறிய எட்டாம் நாள திங்கள் போலத தலைவியின் கூந் தலுக்கு அயலே தோனறிய சிறு நுதல் தோன்றி யது (குறு. 129 3-5). கழியிடத்தனவாய மலர்களைப் பறிததும் கடலிலுள்ள அலையினகண தவழ்ந்தும் ஆயததார் விளையாடினர் (குறு. 144:1-3). மீனுண் ணும கொக்குகளை யுடைய சோலை சூழ்ந்த பெருந்துறையி னிடததே தாழையை அலைகள் அலைக்கின்ற நளளிரவிலும் நின் ஆரவாரம கேட்கு மாறு புலமபுதறகுக் கடலே, நீ யாரால் வருதத மடைநதாய எனத தலைவன் பாலுள்ள காதலால் செயலற்று வருநதும் தலைவி வினவினாள (குறு. 163). மரந்தை என்னும் ஊரிடததே குளிர்நத கடலலைகள மோதிப் பெயர்ததலாலே நாரையினம் அங்கிருந்து வேறிடம் போய அயிரைமீனை உண் ணும் (குறு.166:1-3). 'கடல் ஒலியடங்கக் கானல் மயக்கமுடையதாகிக கழி பொலிவழிந்தது; இன்று தலைவர் வருவர்' என்று தலைவியிடத்துத் தோழி கூறினாள் (குறு. 177:1-5). பொற்படைகளால் பொலிவுபெறற வெள்ளிய தேரின்கண ஏறி, அலை யாற் கலங்கிய கடலினது நீர்ததுளி தேருருளை களை நனைக்கும்படி சோப்பன் தலைவியைப் பிரிநது சென்றான் (குறு. 205:3-5). தலைவர் ஊர்ந்த நெடுநதேர் தெணகடல் அடை கரையில் தெளி மணி ஒலிக்க நாம் காணும்படி வந்து, பினபு நாமே நாணும்படி மீண்டு செல்லும் எனறு தோழி தலைவனின குறையைத் தலைவி நயக்க வேண்டிக் கூறினாள (குறு. 212:1-3). தலைவரது தண்கடல் நாட்டு அலைகள் கானலிலுள்ள நமது சிறுகுடி முன்றிலில் வநது மீண்டு செலலும் எனறு தலைவி தோழிக்குக கூறினாள் (குறு. 228:3-6). 'தண்ணிய கடற்கரையை யுடைய சோபபனே' என்று தலைவ னைத தோழி விளித்தல் (குறு. 236:6; நற். 331:8; ஐங. 196.4). வினைமுற்றி மீளும் தலைவன் வரும் வழி யிடைச் சோலைகளில் கொல்லுதல் வல்ல புலிகள கரிய கடலலைபோல முழங்கித திரியும் (குறு. 237: 5-7). தலைவரது மணிநெடுங்குன்று தெள்ளிய அலைகளையுடைய கடலில ஆழ்கின்ற கப்பலைப் போல மாலைககாலத்து மயங்கிருளில மறைகின்றது எனத் தலைவி தோழியிடம நொந்து மொழிந்தாள (குறு. 240.5-7). பறவைகள் ஒலிக்கும் பெரிய கடற் கரையையுடைய சேர்பபன என்று தலைவனைத் தலைவி குறிததல் (குறு. 243:4). பெருங்கடற்கரை யினகண உளள சிறுவெண்காக்கை நடு இரவில் இரையின் பொருட்டுக் கழிகளில பசிய இலை களைக் கலக்கித துழாவும் (குறு. 246:1-3). தலைவி யின தநதை வலிய சுறாமீன எறிநததனால் உண டான புண ஆறி, மீணடும் மீனவேட்டை ஆடு தற்கு நீல நிறததையுடைய பெருங்கடற் புகுந்தான் (குறு. 269:3,4). தலைவியோடு தலைவன் களவுக்

காலத்தே கடலாடியும் கானற் சோலையிடத்துத் தங்கியும் அவளைத் தழுவிச் சென்றான் (குறு. 294: 1-4). தலைவியைக் கூடிப் பிரியும் தலைவன் 'கடல் சூழ்ந்த இந்நிலவுலகத்தையே பெறினும் யான் நினது நட்பினை விடமாட்டேன்' என்று அவளிடம் கூறினான் (குறு. 300:7,8). கழியிடத்து மீனைத் தேடியுண்டு இளைப்புற்ற நாரைகள், கரையிலுள்ள தாழையின்மேல் தங்கிப் பெருங்கடலின் கரையில் மோதியுடைகின்ற அலையோசை யாலே உறங்கும் (குறு. 303:1-3). தண்ணிய கடற் கரையினையுடைய சேர்ப்பனைக காணும்போது அவனிடம் பேசமாட்டேன் என்று தலைவி ஊடியிருந்தாலும், அவனைக் கண்டவுடன் அவள் நெஞ்சம் அவ்வூடலை மறநது இன்மொழி பேசி அவனைக் கூடுதற்கு இசைகிறது (குறு. 306). தலைவனது தேர் பெரிய கடலினது புலால் நாற்றம் வீசும் அகனற துறையினகண்ணே பாகனின் வேகத்தடையையும் மீறி விரைந்து சென்றதை ஆயத்தாரெல்லாரும் கண்டதனால் அலர் ஒழியாது என்று தலைவி தோழியிடம் கூறுவாளாய்ச் சிறைப்புறத்துத் தலைவனுக்கு அலர் அறிவுறுத்தினாள் (குறு. 311). பெருங் கடற்கரையின்கண் வாழும் சிறுவெண்காக்கை கழியிடத்து இரையைத் தேடியுண்டு பூக்கமழ் சோலையிடத்துத் தங்கும் (குறு. 313:1-3). எழுகின்ற பிறைமதி கடலினிடத்தே காணப்பட்டாற் போல, வெள்ளிய அருவி தலைவனது மலையினிடத்தே ஒழுகித் தோன்றும் (குறு. 315:1,2). வலிய கடல் பொருத விரவு மணல் அடைகரையிடத்து விளையாட்டு மகளிர் அலைத்ததனால் மெலிந்த நண்டு களை அலை கொண்டு சென்று அவற்றின வருத்தம் களையும் (குறு. 316:4-7). பெருங்கடலினிடத்தே பரதவர் வேட்டத்தாற் கொண்டு வந்த மீனகளின் வற்றல் கழியினிடத்தே அவர் கொண்டு வந்த இறாமீன் வற்றலோடு வெண்மணலெங்கும் புலால நாற்றம்-பரவிக் கிடக்கும் (குறு. 320:1-3). கடலாடு மகளிர் கானலில் இழைத்த சிற்றிலினிடத்தே தலைவிக்குத் தலைவனோடு முதலில் நட்புத் தொடங்கியது (குறு. 326:2,3). விளங்கும் அலைகளையுடைய பெருங்கடலுக்கு எல்லை தோன்றினாலும், தலைவனோடு நமக்கமைந்த நட்பு வெவ்வாய்ப் பெண்டிரது பழிச் சொல்லுக்கு அஞ்சிக் கெடுவது எவ்வாறு ஏற்படுமெனத் தலைவியிடம் தோழி கூறி ஆற்றுவித்தாள் (குறு. 373:2-4,8). இரவை எல்லையாக வைத்துக் கையறு மாலையை நீந்தினோமாயினும் அம்மாலைக்குப் பின் வரும் இரவின் மிகுதி கடலினும் பெரிது எனத் தோழியிடம் தலைவி கூறினாள் (குறு. 387). விளையாட்டு மகளிரைக் கண்டு அஞ்சி நண்டுகள் கடலுக்குள் ஓடிமறையும் துறையினையுடையவன் தலைவன் (குறு. 401:3,4). கானலஞ் சிறுகுடிப் பரதவர் கடல்மேற் சென்று மீன்வேட்டமாடுதலைத் தொழிலாக உடையவர் (நற். 4:1). விடியற் காலத்தில் மழைபெய்து விட்ட மலையிலிருந்து கரிய கடலின் அலைபோல அருவி இழிந்து காட்டினிடையே ஓடியது (நற். 17:1-3). பொறையனது பாசறைக்கண்ணே மதங்கொண்டதோர் ஒற்றை மருப்புடைய யானையை நினைந்து நெஞ்சு நடுங்கித் துஞ்சாத மறவர் பின்னர் அலையோயந்த கடல் போல இனிதுறங்குமாறு அந்த யானை மதமடங்கியது (நற். 18:5-9). கானற் சோலையைப் பொருந்திய சிறுகுடிக்கண் வாழ்வோராய் நீலநிறப் பெருங்கடலும் கலங்குமாறு அதன்மேற் சென்று வலைவீசி மீனபிடிக்கினற பரதவருடைய மகள் தலைவி (நற். 45:1-3). தெண்கடற் சேர்ப்பனாகிய தலைவன் வாழ்கின்ற ஊரின்கண்ணே சென்று, நாம் அவன் கருத்தை ஆராய்ந்தறியின அதனால் ஏதமுளதோ என்று தோழி தலைவியை இரவுக்குறி நயப்பித்தாள் (நற். 49:7,10). வலிமையுடைய கடலிலே சென்று மீன் பிடித்து வருநதிய பெருவலைப் பரதவர் புதிய மணற்பரப்பின்கண் மிகுதியான மீன்களைக் காயவிடுவர் (நற். 63:1,2). நீர் பெருகிய கழிகளில் துணையுடன் சுறாமீன் இயங்குதலும் செய்யும்; இரவில் ஒலிக்கின்ற குளிர்ந்த கடலில் விளக்குகளைக் கொண்டு எம் சுற்றத்தினரும் மீன்வேட்ட மாடச் சென்றனர்; ஆதலின் பொங்குகின்ற பிசிரையும் முழவுபோல ஒலித்தலையு முடைய அலையெழுநது உடைந்து விழுகின்ற கடற்கரைப்-பக்கத்தேயுளள எம்மூர்க் கண் இன்றிரவு தங்கிச் செல்லின அதனால் உனக்கு நேரும் குறை யாதோ என்று தலைவனிடம் தோழி வினவினாள் (நற். 67:6-12). பெருங்கடற் சேர்ப்பனை எனக்கு ஏதிலாளனெனப் பலரும் கூறுகினற தற்கேற்பத் தெளிந்த கடற்கரையிலுள்ள கண்டல் மர வேலியையுடைய இவ்வூரும் அவனால் விரும்பப் படும் பரத்தையை அவன் மனைவியென அறிந்து மொழிகின்றது எனத் தலைவனின் பரத்தைமையைப் பாணனிடம் கூறித் தலைவி அவனுக்கு வாயில் மறுத்தாள் (நற். 74:5-11). புன்னை பூத்த இன்னிழல் மிக்க கரையையுடைய ஓசை முழங்கும் குளிர்ச்சி மிக்க கடலிடத்துப் பெடையுடன் நாரை துழவி மீன் தேடும் (நற். 91:2-4). அறிவில்லாது பருவத்தை மறந்து கடல் நீரை உண்ட நிறைசூல் உடைய கரிய மேகம், தாங்கமாட்டாமே பெய்த மழையைக் கார்கால மழையெனக் கருதி மறதியுற்ற உள்ளத்தோடு மடமையுடைய பிடவும் கொன்றை

யும் கோடலும் மலர்ந்தன *(நற். 99:5-10)*. பெருங் கடலின மோதுகின்ற அலைகளாலே கொழிக்கப் பட்ட மணலமேட்டில் விளையாடும் நண்டுகளைப் பிடிக்க, அவை ஓடுமிடமெல்லாம் ஓடியும் பிடிக்க இயலாமல் களைப்புற்றாள் தலைவி *(நற். 106:1-4)*. கார்ப் பருவத்தின்கண் மீண்டு வருவேன் என்று கூறிப் பிரிநத தலைவனின் வரவை அறிந்து விரும்பிக் கரிய கடலினது நீரையுணடு மினனி மேகம் மழை பெயதது *(நற். 112:5-10)*. இனிய நீரையுடைய பெரிய கடலும் சிறிதேயெனனும்படியாக அநநீரை யுண்டு மேகம மழைபபருவங் காட்டியது *(நற். 115:3-7)*. பெருங்கடல அலைமிகுந்து முழஙக மாலைப் பொழுது வந்தது *(நற். 117:1,7)*. கீழ்க் கடலிலே மேகம் நீரை முகநது எழுநது, மேலைப் பக்கம் ஏறிச் சென்று இருள செயது மின்னி எங்கும் மழையைப் பொழிதல் *(நற். 153:1-4)*. தெளிந்த அலைகளை யுடைய பெரிய கடற்பரப்பின்கண விரும்பியுறை கினற நீரர மகளோ என்று களவுக் காலத்தில தலைவியைத் தலைவன் பாராட்டினான் *(நற். 155: 5,6)*. நீர்மிக்க கடற்கரைக்கண் உள்ள சில்குடிப் பாக்கத்தினர் நடுயாமத்து முறிந்து விழும் அலை யொலி கேட்டுத் துயிலுவர் *(நற். 159:9-11)*. பெருங் கடலருகில் புன்னையும் தாழையும இருத்தல் *(நற். 163:7,8)*. பிரிவுக் குறிப்பறிநது வேறுபட்ட தலைவி யிடம் 'நின்பால் எனக்குளள காதல் கடலினும் பெரிதாயிருக்கின்றதாகலின் நின்னை யான் எவ் வாறு பிரிவேன' என்று தலைவன் கூறினான் *(நற். 166:9,10)*. நெடுங்கடலிலே பரதவர் வலைவீசிப் பிடித்த மீன்களை மணற்பரப்பில் குவிப்பர் *(நற். 175:1,2)*. ஊர்ந்து செலகின்ற கடலின நீர் உப்பு விளையும உபபளங்களில ஓடிப பரக்கும் *(நற். 211:1,2)*. மோதுகின்ற அலை கொழித்திட்ட மணல் மேடாகிய நெடுங்கரையின்கண் நெருஙகிய கட லின புறத்தே தாழை இருத்தல் *(நற். 211:6,7)*. கீழ்க் கடலினின்று எழுநது கதிாகளைப பரப்பிப் பகற் பொழுதைச செயது விளங்கிய பகலவன் மேற்கு மலையில் மறைந்தான *(நற். 215:1,2)*. புலவு நாற றதை யுடைய அலைகள் வந்து மீளுங்கால கரை யில விளையாடும் சிறிய கால்களையுடைய நண்டு களோடு பெயாகின்ற கடலில் சிறுகுடிப் பரதவர் பெருமீன பிடிபபர் *(நற். 219:4-6)*. பெருங்கடற் பரபபில சிறுவெண காகஙகைகள தம் கரிய முதுகு நனையுமபடி நீராடும் *(நற். 231:3,4)*. பெருங்கடற் சேர்ப்பன நமமை அணங்குதல் அறியானாய்த் தான அணங்குறறமை கூறித் தொழுதல் நகை யுடையதாகிறது எனறு தலைவியிடம் தோழி கூறி னாள *(நற். 245:1,9-12)*. விரிந்த அலைகளையுடைய கடல் வற்றினாற் போலத் தினைக் கதிர்கள் எல் லாம் காயும் பருவம் எய்தின *(நற். 259:8-10)*. மேகம் செறிந்த கடல்நீரை முகந்து இருண்டு மிக்க மழையைப் பெய்தது *(நற். 289:3-5)*. வில்லால் அடிக் கப்பட்ட பஞ்சுபோல் நிரம்பிய அலைகளிலே காற்று மோதுதலால் பிசிர்கள் மிகுகின்ற நெருக்க மான கடற்கரையினை யுடைய சேர்ப்பன் என்று நெய்தல் தலைவன சுட்டப் பெறுதல் *(நற். 299:7-9)*. தெளிந்த கடலிலே பரதவர் மீன் பிடித்தற்கு இட்ட வலையைக் கிழித்துக் கொண்டு சுறாமீன் விரைந் தேகும் *(நற். 303:8-11)*. மகளிர் கடல்நீராடுகின்ற அகலிடத்திலே நின் நலத்தைப் பாராட்டத் தலை வன் இப்பொழுதே வருவான் என்று தலைவியைத் தோழி குறியிடத்தே தங்கியிருக்க வற்புறுத்தினாள் *(நற். 307:3-5)*. தொகுதியான கரிய மேகம் விசும்பி டம் அதிருமாறு இடித்து மின்னிக் கடல்நீரை முகந்தன *(நற். 329:10,11)*. முழங்கு கடல் முகந்த நிறைந்த சூலையுடைய கரிய மேகம் திசை மறையப் பரவி, மலை புரண்டு விழச் செய்து முழங்கிய இடியால் பாம்பினைக் கொன்று வான்தோயும் குன்றுகளைச் சூழ்ந்து மழை பெய்தது *(நற். 347:1-5)*. பால் நிரம்பிய கடல் போல நீலநிற விசும்பிலே நிலவு பல கதிர்களைப் பரப்பியது *(நற். 348:1,2)*. நிலத்தின் கண் ஆழ்ந்த இடத்தினையுடைய தெளிந்த கடலி னருகே இரைதேடி அருந்திய அன்னங்கள் தம் இளம் பிள்ளைகளுக்கு இரைகொண்டு போகும் *(நற். 356: 1-5)*. தலைவன் கண்டல் மரங்களை வேலியாக வுடைய கழி சூழ்ந்த தோட்டங்கள் நிறைந்த தெண்கடல் நன்னாட்டுச் செல்வன *(நற். 363:1,2)*. பெரிய கடலிடத்தே இராப்பொழுதில் தண் கதிர்த் திங்கள் தோன்றுதலால், வலிய அலைகள் மோதும *(நற். 375:6-8)*. இரவில் தெரிந்த கடலின் கண்ணே முழங்குகினற அலைகள் முழவோசை போல மெல்ல மெல்ல ஒலித்து நெடுநாள் புண்ணுற் றாரைப் போலப் புரண்டு புரண்டு அசைநதியங் கும் *(நற். 378:2-4)*. சுறாமீனை வலையிட்டுப் பிடிக் கும் தந்தை, நீர்ககாக்கைகள் ஒலிக்கும் பெருங் கடலில மீன் வேட்டைக்குச் செலலும போது பிள்ளைகளை உடன்கொண்டு செலலாமையின அவர்கள் வீட்டில் அழுது நின்றனர் *(நற். 392:1-3)*. கடற்கரையின்கண் விளஙகியது மரந்தை நகர் *(நற். 395:9)*. வரைவு கருதி வரும தலைவனது தேர் மணியோசை நம்மூர் நீலநிறப் பெருங்கடற் பறவை களைப் போல இடைவிடாது ஒலிக்கும் என்று தோழி செவிலியிடம் கூறினாள *(ஐங. 102)*. முழங் கும் கடலின் அலை கொணர்ந்து ஒதுக்கிய முத்தம் வெண்மணலிடத்தே கிடந்து மிளிரும *(ஐங. 105:1,2)*.

காம நோயினால் தலைவியது மேனி குளிர்ந்த கடலிடத்தே தோன்றிய சங்கினும் வெளிறித் தோன்றியது (ஐங். 106:3,4). தலைவி குளிர்ந்த கடலிடத்தே தோன்றும் அலைகளின் ஒலியைக் கேட்குந்தோறும் உறங்காதவளாய் வருந்தினாள் (ஐங். 107). கழியினகண்ணதாகிய முள்ளிச்செடி மலரும் குளிாநத கடற்கரையையுடைய சேர்ப்பன் தலைவியின் தோளைத் துறந்தால் அவன் நயந்த தோள் என்னாகும் எனத் தோழி கூறுதல் (ஐங்.108:1,2). கடலில உள்ள நாரை சென்று மடலமைந்த பனைமரங்களில் ஆரவாரிக்கும் (ஐங். 114:3,4). தலைவனிடத்துக் காதறகேணமையுடையாளொருத்திகுளிர்ந்த பெரிய கடலினது அலையின்கண் பாய்ந்தாடினாள் (ஐங். 123). தலைவனின் காதலியாகிய பேதையொருத்தி தன் விளையாட்டுப் பாவையை அலை கவர்ந்து கொண்டதனாலே சினந்து மணலைக் கைகளால் வாரி வீசிக் கடலைத் தூர்ப்பதற்கு முயன்றாள் (ஐங். 124). தலைவனின் காதற்பேதை யொருத்தி தன் மையுண்ட கண்களை மலர்களெனக் கருதி மொய்த்த வண்டினத்தை ஓட்டும் வகையறியாமல் தெளிந்த கடலினது பெரிய அலையில் பாய்ந்து மூழ்கினாள் (ஐங். 126). தெண்கடற் சேர்ப்பன் என்று தலைவனைத் தலைவி குறித்தல் (ஐங். 157: 4). பெருங்கடற் கரையில் சிறுவெண்காக்கை வாழ்தல் (ஐங். 161-170.1). தன்னெஞ்சினைத் தலைவி கவர்ந்து கொண்டதனால் குளிர்ந்த துறையையுடைய தொண்டிப் பட்டினத்தின் பக்கத்தேயுள்ள வலிய கடலில் முழங்கும் அலைகளைப் போன்று தலைவன் இரவிலும் துயில் மறந்தான் (ஐங். 172). 'தண்கடற்சேர்ப்பன்' என்று தலைவனைத் தலைவி குறித்தல் (ஐங். 183:3). தலைவனது பரத்தைமையைக் குறிப்பாகச் சொல்லி வாயில் மறுக்கும் தலைவி, 'தலைவன் ஊர் கடலைத் தனக்கு அணிகலனாக அணிந்தது; எனக்கு அவர் நட்பு அக்கடலினும் பெரிதாகவுள்ளது' என்றாள் (ஐங். 184:3,4). கடலாடு மகளிர் நெய்தல் தழையால் பாவையைப் புனையவில்லை (ஐங். 187:2,3). என் நெஞ்சத்தைக் கொண்டொளித்தவள் கடலிற் பிறந்த சங்கினாற் செய்யப்பட்ட செறிந்த வளைகளையணிந்த முன் கையினையுடையவள் எனத் தலைவன் தன பாங்கனிடம் கூறினான் (ஐங். 191:1,5). சங்கினங்கள் கரையிடத்தே ஊர்ந்து திரியவும் கடல் எழுந்து முழங்கவும் அலையோசை ஆர்க்கும் துறையில் ஓடும் மரக்கலத்தைப் பரதவர் செலுத்துவர் (ஐங். 192:1,2). கடலின்கண் பிறந்த சங்கினை அறுத்துப் பின்னர் அரத்தினாற் பிளந்து செய்யப்பட்ட அழகிய வளைகளை யணிந்தவள் தலைவி (ஐங். 194:1,2). சங்கீன்ற நன்முத்துக்களைப் பரதவர் விற்றற்கிடமான கடல்பொருந்திய நெய்தல் நிலத் தலைவனுடைய காதலி அவனுக்கு அருந்துயர் நல்கி இனிய உறக்கத்தைக் கவர்நது கொண்டாள் (ஐங். 195). 'செறிவளை நெகிழ்த்த தலைவனது அலைவீசும் கடல் நாட்டை மணலமேடேறிக் காண்போம்; வருக' எனத் தலைவியைத் தோழி அழைத்தாள் (ஐங். 199). ஆறுகளிலிருநது மிகுதியாய்ச் சென்று விழும் நீரால் நிறையாத மிகுகடல் போலும் அடங்காத பரத்தைமையுடையவன் தலைவன் (கலி. 73:19,20). தலைவி மகன சூடியிருந்த உருட்சியமைந்த மூன்று வடங்களில் கரிய க ..லின முத்துக்களும் பன்மணியும் கோக்கப்பட்டிருந்தன (கலி. 85:12,13). மிக்க அலைகளோடு ஊர்ந்து வந்து பாண்டியனின் நாட்டினைக் கடல் கவர்ந்து கொண்டமையின், அவன் மெலிவின்றிப் பகைவர் மேற்சென்று அவரை வணக்கினான் (கலி. 104:1-4). பெருமையை யுடைய கடல் கலக்கமுறும்படி அதனுள் சென்று மாமரத்தினை வெட்டிய மீளாத போரையுடைய வேலேந்தியவர் முருகன (கலி. 104: 13,14). ஒலிக்கும் கடலில் விளைந்த முத்தங்களோடு மற்றுமுள்ள பொருள்களும் பாண்டியனுக்குத் தீதின்றிப் பொலிக என்று உட்கொண்டு ஆயர் தெய்வத்திற்குச் சிறப்புச் செய்வாராய் ஏறுதழுவினர் (கலி. 105:2-7,22). கடலுக்குள்ளே பரதவர் சிறிய தெப்பத்தை ஏறினாற் போலப் பொதுவர் ஏறுகளின்மேற் பாய்ந்து அவற்றை ஊர்ந்து தழுவினர் (கலி. 106:24,25). தெளிநத கடற்பரப்பின் திரையை நீக்கித் தோன்றும் தண்கதிர் மதியத்தின் நிலாவொளி எங்கும் பரந்தது (கலி. 121:1-3). பாட்டோடு யாழிசையையும் கேட்டுத் திருமால் பள்ளி கொண்டிருந்தமை போலப் புன்னையின் மலர்கள் தோறும் ஆரவாரிக்கும் சுரும்பினத்தின் ஓசையோடே தும்பியின் குரலையும் கேட்டுப் பெரிய கடல் ஒலியவிந்து உறக்கத்தைக் கொள்ளும் (கலி. 123: 1-5). பெரிதாகிய கடற்கரையில் மணலிடத்தே ஞாழல் முதலிய மரங்களின் பூக்கள் கிடப்பது செருமிகு நேமியானது (திருமாலின்) திருத்தோளில் சேர்ந்த மாலை போன்றது (கலி. 127:1-5). 'பாய்ந்து வரும் அலைகள் ஒலித்தல் மாறாத பரப்புடைய நீர் நிறைந்த பனிக் கடலே, துறைவன் எம்மைத் துறந்தானென்று வருந்துவாரை நீ மேலும் வருத்த வேண்டி முழங்குகின்றாயோ, நீயும் எம்மைப் போல முன் காதல் செய்து பின் பிரிந்தாரை உடையையாய் வருந்துகின்றாயோ' என்று தலைவி அதனிடத்தே வினவினாள் (கலி. 129:8-11). நீரையுடைய பெரிதாகிய கடற்றெய்வத்தை நோக்கித் தலைவி

யிடத்தே தலைவன் நின்னைப் பிரியேன் என்று
சூளுற்றுத் தெளிவித்தான் (*கலி. 131:1*). தெளிந்த
கடலை யுடைய தண்ணிய சேர்ப்பனே என்று
தலைவனைத் தோழி விளித்தல் (*கலி. 132: 7*).
ஞாயிறு மேற்கு மலையினில் மறைகையினாலே
பெரிய கடலில் ஓதம் ஏறுகின்ற நீர் மிக்குக் கரை
சேரக் கய மலர்கள் வாய் குவிய, அக்காலத்தே
கரிய கடல் ஒலித்து, உலகெல்லாம் நடுக்குற்று
அச்சமெய்த, தான் தோற்றுவித்த நிலத்தை மீண்
டும் தானே தன்னிடத்து ஒடுக்கிக் கொள்ளும்
தன்மையை யொத்த இராக்காலத்தைத் தான்
படைப்பது போல் தோன்றுகின்ற மாலை தோன்
றியது (*கலி. 134:4-10*). தலைவரை நேரில் காண
மாட்டாது நினைத்தலின வருத்தத்தில் அழுந்திக்
கவலை மிக்க நெஞ்சோடு கலங்குதல் நோக்கிக்
கடல் இந்த அவலத்தைத் தன்னுடைய மெய்
யிலே கொண்டது போல அரற்றுதற்குக் காரணம்
என்னோ என்றாள் தலைவி (*கலி. 134:11-14*).
'காமரு பூங்கடற் சேர்ப்ப' எனத் தலைவனைத்
தோழி விளித்தல் (*கலி. 135:4*). 'தேன்போலும்
மொழியினை யுடைய மாதர், தான் காமுறாது
என்னைக் காமுறுத்தின காமமாகிய கடலிலே
அகப்பட்டு இரவிலும் பகலிலும் மனவருத்த
மாகிய அலைகள் வந்து அலைக்கையினால் மடன்
மாவினையே தெப்பமாகக் கொண்டு நீந்துவேன்'
என்று மடலேறுந் தலைவன் சான்றோர்க்குக்
கூறினான் (*கலி. 139:14-17*). பிரிவு நீட்டித்த நிலை
யில், ஓஒ கடலே என்று விளித்துத் தன் காமக்
கலக்கத்தை யெல்லாம் அதனிடம் சொல்லிப் புலம்பு
வோளாகிய தலைவியின் கலங்களுர் தீரத் தலை
வன் வந்தனன் (*கலி. 144:55,59,63,68*). மேகமே,
என் கண்ணீராற் சிறந்த கடலிலே நீ நின் இனத்
தோடே கூடி முகந்து பரந்து முழங்கிச் சென்று,
என்னைத் துறந்தவனாகிய தலைவன் போன
கானத்திலே நெருப்புச் சுடாமல் துளிகளை வீசிப்
பெய்ய மாட்டாயோ என்று தலைவி புலம்பி
வேண்டுதல் (*கலி. 145:18-22*). ஞாயிறே, நீ என்
காதலரைக் கூட்டிக் கொண்டு விரைந்து கடல்மேலே
நாட்காலையிலே வருவா யாயின் யான், என்
நோயின் நடுக்கத்தோடு மாலையாகிய பகையும்
பொறுத்து என் நெஞ்சினைப் பாதுகாத்துப் பின்
னர் அவரைக் காண்பேன என்று தலைவி பேசுதல்
(*கலி. 145:32-35*). பெருங்கடல் தனனிறம் தோன்றா
மல் புல்லென்னுமாறு மாலை வருதல் (*கலி. 145:
38,40*). மேகமே, தலைவன் செய்த துயரால்
எனக்கு மூண்ட காமததீயின் வெம்மை ஆறும்படி
நீ கடலிலே நீரை முகந்து என்மேலே இடை
விடாமல் பெய்ய வேண்டும் என்று தலைவி
வேண்டினாள் (*கலி. 145:55-58*). கடல் தரும் மணி
(*பரி. 1-17*). 'நீ உலகளந்த காலத்தில் நினக்கு
அஞ்சியோடிக் கடலிற் பாய்ந்த அவுணர்க்கும்
பிழை செய்யாது நின்ற அவுணர்க்கும் முதல்வன்
நீ' எனத் திருமாலைக் கடுவனிளவெயினனார்
பாடுவர் (*பரி. 3:54-56*). செவ்வேள், பரந்த கரிய
பனிக்கடலில் பாறைகள் துகள்படப் பிணிமுகம்
என்னும் யானைமேல் ஊர்ந்து போர் புரிந்து
சூர்மாவினது அடியைத் தடிந்தார் (*பரி. 5:1-4*).
முகில்கள், நிறைந்த கடலின்கண நீரை முகந்து
கொண்டு வானில் எங்கும் பரவித் தம் பாரம்
தீர்ந்து இளைப்பாறுதற் பொருட்டு மழைபொழிந்
தன (*பரி. 6:1,2*). காற்றால் எறியப்பட்ட புடை
பெயரும் கடலைப் போலவும் மயங்கு கடலைக்
குடிக்கும் மேகக்குரலைப் போலவும் மதுரையில்
மணமுரசு அதிர்ந்தது (*பரி. 8:29-34*). மலையிடத்தே
மாலைப் பொழுதில் பெய்த மிக்க மழையினால்
வையைப் புனல் எல்லை சென்று காணப்படாத
கடலைக் கூடுதற்குக் காலைப் பொழுதில் வந்தது
(*பரி. 10:1,2,3*). வையை வருகின்ற வரவு செறிந்த
தொரு கடல் கிளர்ந்து வருகின்றாற் போல் இருந்
தது (*பரி. 12:7,8*). தன் நீலநிறத்தோடு மாறுபடும்
வெண்ணிறப் பாற்கடல் நடுவே தலையாயிரத்
தினை யுடைய சேக்கையில் கிடப்பவன் துளவஞ்
சூடிய அறிதுயிலோன் (திருமால்) (*பரி. 13:26-29*).
திருமால் கடலையொத்த திருமேனியை யுடையவர்
(*பரி. 13:42,43*). கல்லென ஒலிக்கும் கடலும் மணற்
பரப்பாகிய கானலும்போல, மாயோனும் பலதேவ
னும் கருமையும் வெண்மையு மாகிய வேறுவேறு
நிறத்தினர் (*பரி. 15:11,13*). மலையினின்றும் கடலை
நோக்கி ஆறு விரைந்து வருதல் (*பரி. 16:27*). சூல்
முதிர்ந்த மேகம் கடலைக் குறைபடுத்தி முகந்த
நீராலே மலையில் கல் துணிபட மழை பெய்து
புலியைக் குத்திப் பிளந்த யானையது குருதி படிந்த
கொம்பினைக் கழுவியது (*பரி. 20:1-5*). மேகம்
காலைப் பொழுதின்கண் கடலை முகந்து, கதிரவன்
மறைந்த மாலைப் பொழுதில் மேற்கு மலையைச்
சேர்ந்து இரவில் மழை பொழியும் (*பரி. 20:6-8*).
தலைவியின ஆயத்தாரிடமிருந்து தப்பிச் செல்லும்
காதற் பரத்தை வையையாறு கடலை மடுத்தாற்
போலத் தன் ஆயத்தாரிடையே விரைந்தோடி ஒளிந்
தனள் (*பரி. 20:38-42*). கடலின்கண் நிரலாக வரும்
வெள்ளிய அலைகளைப் போன்று இடையிடையே
கருமை விரவிய நரையினையுடையோரும் சுடர்
மதிக் கதிரெனத் தூய நரையோரும் பிறரும், இருந்
தையூரில் உள்ள உத்தியணிந்த எருத்தின் வரை

கெழு செல்வன் (ஆதிசேடன்) திருக்கோயிலுக்கு அவி.. பொருள் முதலியவற்றை ஏந்திச் சென்றனர் (பரி. தி. 1:42-49). மகர மீனையுடைய அலை புரள்கின்ற கடலின்கண் திருமால் ஆமையுருக்கொண்டு தனது அழகிய முதுகின்மேல் மந்தர மலையைத் தாங்கி அமிழ்தம் திரண்டெழும்படி செய்தார் (பரி. தி.1:64-68). வையையாறு தான் தோன்றிய மேற்கு மலை தொடங்கிச் சென்று கலக்கும் கடல் வரையிலும் வரிசை வரிசையாக நுரைகளைச் சுமந்து கொணர்ந்து கடலிடத்தும் அதன் கரையிடத்தும் சேர்க்கும் (பரி. தி.2:65). கரைபுரளச் செல்லும் வையைப் புனல் அலைபுரளும் கடலிடத்தே புகும் (பரி.தி. 2:64-66).

**கடல்கெழு செல்வி - கடல்தெய்வம்.** பகலில் ஆயத்தாரோடு புன்னை நிழற்கண் ஆடிப் பின் இல்லத்திற்குச் சென்றால், இரவில் தந்தையது அரிய காவலில் பட நேரிடும் என்று அதற்கஞ்சிச் செல்லுதல் ஆற்றாத தலைவி, ஞாழல் மலர்க் கண்ணியுடன் நெய்தல் மாலை அசைய அந்திக் காலத்தே கடல் கெழு செல்வி-கடல்தெய்வம்-கரையின்கண் நிற்பது போலக் கானலிடத்தே நின்றாள் (அகம். 370:3-13).

**கடல்பிறக்கோட்டிய செங்குட்டுவன் - சேர வேந்தன்.** இவன் இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனுக்குச் சோழன் மணக்கிள்ளி மகள் வயிற்றிற் பிறநதவன் (பதி. ப. 5:2,3). செங்குட்டுவன் என்ற இயற்பெயரையுடைய இவன் கடல் பின்னிடுமாறு அதனுட் புகுந்து சென்று அங்கிருந்த பகைவரை வென்றழித்த தனிச் சிறப்பினால் கடல்பிறக்கோட்டிய செங்குட்டுவன் என்று அடையடுத்து அழைக்கப் பெற்றான். இவன் பெயர் சேரமான் கடலோட்டிய வேல்கெழு குட்டுவன் என்றும் காணப்படுகிறது (புறம். 369-அடிக்குறிப்பு). இவன் கடல்பிறக்கோட்டிய செய்தி புறப்பாடல்களிலேயன்றி (பதி. 41,45,46,48) அகப்பாடலிலும் (அகம். 212) பரணரால் பலபடப் பாராட்டப்பட்டுள்ளது. இவனைப் பாட்டுடைத் தலைவனாகப் பாடிய அவரே யன்றி, மலையமான் திருமுடிக் காரியைப் பாடிய மாறோக்கத்து நப்பசலையாரும் இச் செய்தியைச் சிறப்பித்துரைப்பர் (புறம். 126). பதிற்றுப் பத்தினுள் ஐந்தாம் பத்தாக வரும் பத்துப் பாடல்களை இவன்மேற் பாடிய பரணர் புறநானூற்றில 369-ஆம் எண்ணில் வருவதொரு பாடலையும் இவனைச் சிறப்பிதததே பாடியுள்ளார். இவன், தன்னை அவர் பாடிய பத்துப் பாடல்களுக்கு உம்பற்காட்டு வருவாயையும் தன் மகன் குட்டுவன் சேரலையும் பரிசிலாகக் கொடுத்தான் (பதி. ப. 5 – அடிக்குறிப்பு). கடவுட் பத்தினியாகிய கண்ணகிக்குச் சிலை வடிப்பதற்கான கல்லினை எடுக்க வேண்டி இமயமலைக்கு விரைந்து செல்லுமிடையே தன்னையெதிர்த்த ஆரியர் தலைவனை வென்ற இவன், தான் எடுத்த கல்லைக் கங்கையிலே நீராட்டிக் கொணர்ந்தான் (பதி. ப. 5:4-7). இமய மலையில் விற்பொறித்ததும் (சிறு. 48,49) நன்னன் வேண்மானது வியலூரை யழித்ததும் கொடுகூரை யெறிந்ததும் (பதி. ப. 5:10-12) அறுகையென்பானது நட்புக் கருதி மோகூர் மன்னனான பழையனை வென்று அவனது முரசத்தைக் கைக்கொண்டதும் அவன் காவல் மரமான வேம்பினை வெட்டி அதனை முரசு செய்வதற்கேற்பத் துணித்து அவன் உரிமை மகளிரது கூந்தலையரிந்து திரிதத கயிற்றினால் அவன் களிறுகளைக் கடாக்களாகப் பூட்டிய வண்டியில் அம்மரத் துண்டுகளை ஏற்றி வந்ததும் (பதி. 44:10–17;49:7-17; பதி. ப. 5:13-17) தன்மைத்துன வளவனாகிய கிள்ளியின் அரசுரிமைக்குப் போட்டியிட்ட ஒன்பது மன்னரையும் நேரிவாயில் என்னுமிடத்தே ஒரே பகலில் ஒழித்து அவ்வளவனின் ஆட்சியை ஒருநிலைப்படுத்தியதும் (பதி. ப. 5:18-20) இச் செங்குட்டுவனின் வெற்றிச் செயல்களாக வருகின்றன. இச் செயல்களெல்லாம் சிலப்பதிகாரச் செங்குட்டுவனுக்கும் சொல்லப்பட்டிருப்பதனால் இவனும் அவனும் ஒருவனே எனலாம்.

**கடல்மரம் - மரக்கலம்.** கடலிலே தாம் ஏறியிருக்கும கடல்மரம் - மரக்கலம் - கடிய புயற்காற்று வீசிச் சுழற்றுதலாலே கவிழ்ந்ததாக, அதனுடன் ஒருசேரக் கடலில் வீழ்ந்த பலரும் அங்கே மிதந்துவரும் பலகை ஒன்றைப் பற்றிக்கொண்டு தனித்தனியே இழுப்பது போலத் தலைவனின் வருகையறிந்த பரத்தையர் பலரும் அவன் கைகளைப் பற்றி ஈர்த்தனர் (நற். 30:4-10).

**கடல்மீன் - கடலில் வாழும் மீன்.** கடல்மீன் – கடலில் வாழும் மீன் - துயிலும் நள்ளென் யாமத்தில் தலைவி பாவை நடைபயின்றாற் போலப் பைய வந்து தலைவனைத் தழுவினாள் (அகம். 142: 20-25). முடமுதிர் நாரை கடுஞ்சூல் வயவொடு கானஞ் செல்லாதிருந்த தன் பெடைக்குக் கடல் மீனைக்கொண்டு போய்க்கொடுக்கும் (நற். 263.5-7). இடைவிடாது அலை வீசும் கடல் மீனைத் தின்று பறவைக் கூட்டம் மாலைப் பொழுதில் தததம் கூடுகள் சென்றடையும் (நற். 382:3,4). இரவு நடுயாமத்தில் பரதவர் விளக்கங்களைக் கொண்டு வேட்டைமேற் சென்று கடல் மீன்களைப் பிடித்து விடியவிற் கொண்டு வந்து கானலிற் குவிப்பர் (நற். 388:4-6).

**கடல்விளையமிழ்து - உப்பு.** பாலை வழியில் புலி கொன்று தின்று விட்டுப் போன களிற்றின் ஊனில, அந்நிலத்து மறவர் கோலிற் கோத்து எடுத்துச்

சென்றது போக எஞ்சியதை அவ் வழியே கடல் விளையமிழ்து - உப்பு - கொண்டு போகும் உமணர், தீயில வதக்கிச் சோற்றுலையிற் கூட்டி யாக்குவர் (அகம். 169.3-8).

**கடல்விளையமுதம்** - உப்பு. அலைகளையுடைய கடல் விளையமுதம் - உப்பு - மழையை ஏற்றுக் கரைந் தொழிதல் போல, நீ உள்ளம் உருகி யொழிதலுக்கு யான் அஞ்சுகின்றேன் என்று தோழி தலைவியிடம் கூறினாள (நற். 88:3-5).

**கடலக வரைப்பு** - நிலவுலகம். 'கடலக வரைப்பினுள் - நிலவுலகில் - இந்நாவலந் தீவு முழுவதையும் ஆணைச் சக்கரம் செலுத்தி ஆண்ட நின் குடி முதல்வரைப் போல, நீயும் நிலைநின்று நல்லிசை நிறுத்தி இவ்வுலகத்தோடே கெடுத லொழிந்து வாழவாயாக' என்று இமையவரம்பன் நெடுஞ்சேர லாதனைக் குமட்டூர்க் கண்ணனார் வாழ்த்தினார் (பதி. 14:18-22).

**கடலங் காக்கை** - கடற்காக்கை. சிவந்த வாயினை யுடைய கடலங் காக்கையின் - கடற்காக்கையின் - சேவல் அடும்பங் கொடி. நெருங்கிய வெண்மணற் பரப்பின் ஒருபால் நிரம்பிய சூலோடு தங்கியிருக்கும் தன் விருப்பமிக்க பேடைக்காகக் கரிய சேற்றினிடத் துப் புதைந்திருக்கும் அயிரைமீனைப் பிடிக்கக் கழி யில்ஆழந்த இடத்தினைத் துழாவும் (நற். 272: 1-6).

**கடலங்கானல்** - கடற்கரைச் சோலை. கடலங்கானலி டத்தே - கடற்கரைச் சோலையிடத்தே - விளையா டும் தோழியர் கூட்டம் பாராட்டிய தன் பெண்மை நலத்தைத் தலைவன் பிரிவினால் இழந்தேன் எனத் தலைவி மொழிந்தாள் (குறு. 245:1,2).

**கடலன்** - குறுநில மன்னன். விளங்கில் என்னும் ஊருக்கு உரியவன்; சினந்து போரெதிரும் பகை வருடைய படைப்பரப்பு முழுவதும் களிற்றோடு படக் கொன்று வெல்லும் போராற்றல் மிக்கவன். சிறந்த கைவண்மையும் உடையவன் (அகம். 81:11-13).

**கடலுள் மாய்ந்த இளம்பெருவழுதி** - அரசப் புலவர். இளம்பெருவழுதியார் காண்க.

**கடலூர்ப் பல்கண்ணனார்** - புலவர். இவர் பெயர் கூட லூர்ப் பல்கண்ணனார் என்றும் காணப்படுகிறது. நற்றிணையில் 200,380 என்ற எண்களில் அமைந்த இரு பாடல்களையும் பாடியவர் கூடலூர்ப் பல் கண்ணனார் ஒருவரே என்று பி. நா. பதிப்புக் கூறும். ஆனால் 380-ஆம் பாடலாசிரியரைக் கடலூர்ப் பல்கண்ணனார் என்று வையாபுரிப் பிள்ளை சங்க இலக்கியப் பதிப்புக் குறிக்கின்றது. இரு பாடல்களும் மருதத்திணைக்கண் பாணர்க் குத் தோழி வாயில்மறுத்ததாகிய ஒருதுறையிலேயே அமைந்துள்ளன. அட்டில் வேலையினால் ஆடை மாசுண்டும் புதல்வனுக்கு ஊட்டும் பால்முடை நாறியும் காணப்பெறும் தலைவி, தூய அணி களணிந்த பரத்தையர் சேரியிலேயே பழகும் தலை வனுக்கு ஒவ்வாள் என்று பாணனைத் தோழி வாயில்மறுக்கும் நயம் இவர் பாடலில் காணப் பெறும் (நற். 380).

**கடலை** - தானிய வகை. பாரியது பறம்பு நாட்டில் நறுநெய்யிலே கடலை துள்ள அதனோடு சோற் றைச் சமைப்பர் (புறம். 120:14).

**கடலொலி** - கடலினது ஓசை. போரை வெல்லுதலில் விருப்பமுடைய தலைவனான சோழன் இராச சூயம் வேட்ட பெருநற்கிள்ளி கடலொலி - கடலி னது ஓசை - கொண்ட தானையினை உடைய வன் (புறம். 377: 29, 30). விருந்தினர் இடம் மாறிச் செல்லாது உண்ணுதற்காகப் பல்யாணைச் செல்கெழு குட்டுவனது மனையில் இறைச்சியை வேகவைத்துத் தாளிக்குந்தோறும் கடலொலி போல அடங்காது ஆரவாரம் தோன்றும் (பதி. 21:9-12).

**கடவர்** - 1. அரசனால் சிறப்பிக்கக் கடமைப் பட்ட படை. வீரர் முதலியோர். அதியமான் நெடுமானஞ்சி தன் கடவர்க்கு - படை வீரர் முதலியோர்க்கு - கொடுக்கும் அளவினும் மிகுதியாகத் தன்னிடத்து வந்து இரப்பவர்க்குக் கொடுப்பான் (புறம். 315:2,3).

2. கடன்காரர். நெடுந்தகையொருவன் தனக்குச் சிறுவிளைவாக வந்த வரகினைத் தன்னை வளைத் துக் கொண்ட கடவர்க்கு - கடன்காரருக்கு - கொடுத்து எஞ்சியதை அவனிடத்து வரும் பசித்த பாணர் உண்டனர் (புறம். 327:1-4). வினைவல பாங்கின் தலைவன் தன்னை யொத்த தலைவியைக் கண்டவுடனே கடவரைக் கடன் கொடுத்தவர் கேட்குமாறு போல, அவளை மறித்து அவளிடத் துள்ள பண்டங்களை வினவினான் (கலி. 108:22, 23).

**கடவன்** - கடப்பாடுடையவன். தன் மென்தோளை அணைந்த அந்நாள் பிழையாவ ஞ்சினம் உரைத்த கள்வனும் கடவனும் - கடப்பாடுடையவனும் - புணை போன்றவனும் தலைவனே எனத் தலைவி தோழியிடம் கூறினாள் (குறு.318:6-8).

**கடவுட்கடன்** - தெய்வத்திற்குச் செய்யும் முறைமை. கரி காற் பெருவளத்தானிடம் பரிசுபெற விரும்பிய பாடினியும் பொருநனும் கானத்தே தங்கிச் செல் லும் வழியிலேற்பட்ட துன்பந்தாங்கிக் காட்டி

லுள்ள கடவுட் கடனை - தெய்வத்திற்குச் செய்ய ம் முறைமையை - செய்து முடித்துப் பினனர்ப் பய ணந தொடங்கினர் (பொரு. 49-52).

**கடவுட்கடிநகர்** - தெய்வமுடைய கோயில். கடவுட் கடி நகர் - கோயில் - தோறும் தன மகனை வலம் வரச் செயது அழைத்து வருக எனத் தலைவி தோழி யிடம் கூற, அவள் காலந் தாழதது வந்ததற்குத் தலைவி இவன் தந்தையின பரத்தையருள யார் வீட்டில தங்கினாய்; கூறுக என அவளைக் கேட் டாள் (கலி. 84:6-9).

**கடவுட்கற்பு** - தெய்வக் கற்பு. தலைவன் வினை முடித்து வநது நின்றது, கடவுட் கற்புடன - தெயவக் கற்புடன் - குடிக்கு விளக்காகிய புதலவனைப் பயந்த புகழமிகு சிறப்பினை யுடைய தலைவிக்கே யன்றித் தனக்கும் இனிதாகின்றது எனத தோழி கூறினாள் (அகம். 184: 1-4,19). கடவுட் கற்பினையுடைய மடபபம் பொருந்திய தலைவி, 'இமமாலைப பொழுதில் தலைவர் வாராராயின அவாதம நிலை என்னாகும்; அதுபற்றி எனக்குக் கூறுக எனப பாணனை வினவினாள் (அகம. 314:13-15). தன் தோள்வளை நெகிழ்த்த கொடியனாகிய தலைவன, பரததையர் வீட்டிலிருந்து வருங்காலத்துத தலைவி கடவுட் கற்பினால இன்முகந திரியாது அவனை எதிர் கொண்டழைததுப பேணினாள் (குறு.252:2-4).

**கடவுட் காந்தள்** - கடவுளுக்குரிய காந்தள். இரவுககுறி யிடை வந்து மீளுந் தலைவியைக் குறித்துத் தலை வன் தன் நெஞ்சோடு உவநது கூறுகையில, அவள் தோள் நள்ளியின் பக்க மலையிடத்தே வண்டுகள் தேனையும் தாதையும் உண்ணும்படி மலர்நத கட வுட் காந்தள் - கடவுளுக்குரிய காந்தள் - மலர்க ளுள்ளும் வியப்பு மிகக அழகிய மலர்கள் பலவும் ஒருங்கு திரண்டு மணப்பதுபோல மணநது, சேய் மைக்கண் இருப்பினும் நடுங்கத் தக்க துயரினைத தரும் என மொழிநதான (அகம். 152:14-18,24).

**கடவுட் பத்தினி** - தெய்வமாகிய பத்தினிப்பெண் (கணணகி). கடலபிறக்கோட்டிய செஙகுட்டுவன், கடவுட் பததினியாகிய கணணகியின படிவம் அமைததறகுக் கலகொள்ள விரும்பி, வடநாடு சென்று அங்கு எதிர்த்த ஆரிய அரசனை வென்று இமயத்துக கலலெடுததுக கங்கையில் மண்ணிக் கொணர்ந்தான் (பதி. ப. 5:3-7).

**கடவுட் பள்ளி** - பௌத்தப பள்ளி. பேரிளம் பெண்டிர் தம சிறு பிள்ளைகளை அணைததுக் கொண்டு கடவுட் பள்ளி - பௌத்தப்பள்ளி - சென்று பூவும் புகையும் இட்டு வழிபாடு செய்தனர் (மது. 461-467).

**கடவுட் பெயரிய கானம்** - கொற்றவையாகிய கடவுளின் பெயர் கொண்ட காடு (விந்தாடவி). இளஞ்சேரலிரும் பொறை, கடவுட் பெயரிய கானததுடன - விநதா டவியுடன - மலை யுயரக் கடலாற சூழப்பட்ட உலகத்துத் தம் பெயர்விளங்கச செயத பகைவர் தேயக் கடலில் போரிடுக் கடமபாகிய காவல மரத்தைத தடிநது கொற்றம எய்திய பெரியோா மரபில் வநதவன (பதி. 88:2-6,14).

**கடவுண்மை** - கடவுள் தன்மை. பரத்தைமை யொழுக்க முடைய தலைவன தான காலந தாழதது வநத மைக்குக் காரணம கடவுளரைக் கணடு வநதமையே எனக கூறக் கேட்ட தலைவி, 'கடவுணமை - கடவுள தனமை - மேறகொணடொழுகும் பரததையருள நீ கூறிய கடவுள், எநதக கடவுள' எனக கேட்டுத் தலைவனை எள்ளினாள் (கலி. 93:8-10).

**கடவுநர்** - வினாவுவார். மாலைக்காலத்தில் பலர்புகு வீட்டு வாயிலை அடைகக எணணிய கடவுநா - வினாவுவார் - வழககபபடி விருந்துண்ண வருவீர் இருக்கின்றீரோ, என்று கேட்கும் பொழுதிலும நம தலைவர் வாராராயினர் எனப பொழுது கண்டு அழிந்த தலைவி கூறினாள் (குறு. 118).

**கடவுவோர்** - செலுத்துவோர். வையையில நீராடச செல்லும் ஆடவர்களில் விரையும குதிரை கடவு வோரும் - செலுததுவோரும - களிறறின மேற செலவோரும் இருந்தனர் (பரி. 12 28).

**கடவுள்** - தெய்வம். பாண்டியன கூடகாரததுத துஞசிய மாறன் வழுதியைப் பகைத்தோா நாடு, அவனால அழிககபபடடு வளங் குனறியமையின மககள பலி யிடுதலைக் கைவிட ஆணடு மனறததினகண உளள தூணில உறைநத கடவுள - தெயவம - அதைவிட்டு நீங்கியது (புறம. 52.12-14). புலலிலை எருககம பூவா யினும் ஒருவன் அனபுடன சூட்டுவதைக கடவுள ஏற்றுக் கொள்வாா (புறம. 106:2,3). குறமாக்கள உயாபலி தூவி மழை வேணடிய போது மழை மிகப் பெயயப பின மழைகுறையுமாறு கடவுளை வேண்ட, மழைகணமாறியது கணடு மகிழநதனர் (புறம. 143.1-4). இருள செறிநத முழையினையும மிக்க வலியினையும உடையதும கடவுளால் காக கப் பெறுவதுமாகிய பெருஙகல (பொதினி மலை) பேகனுக்குரியது (புறம. 158 10-12). கடவுள உறை யும் ஆலமரததின பழததை நேறறும் உணடோம என நினையாது பினனும புளளினம உணண அவ விடம் செலலும (புறம. 199:1-3). வள்ளலைப பாடிப பரிசிலபெறச செலலும பாணன தலைவிரிதது எதிர்வரும் மனையோளைக கணடு அத் தீநிமித்தத தால் உணடாகும தீங்கு நீங்கக களா நிலததுளள கள்ளிமர நிழலிலுள்ள கடவுளை வேணடினான் (புறம. 260:3-5). பகைவரை நேரநினறு பொருது

வென்று களிறெறிந்து தாமும் பட்ட வீரர்க் கமைதத நடுகல்லைப் பரவுதலனறி, நெல் சொரிநது வழிபடும் வேறு கடவுளும் இல்லை (புறம். 335:9-12). கிணைப்பொருநன கிணைககண் ணுறையும் கடவு ளுக்கு வழிபாடு செயயக் கருதின, பெறறகுரிய உணவைப பெறுவது தாழ்க்குமெனக் கருதி அக் கடவுளை வழிபடானாயினான (புறம். 399:26). இளம்பிறை சேர்ந்த நுதலும் கறைமிடறும் சூலப் படையும் உடைய காலக் கடவுளாகிய சிவனுக்கு வெற்றி மிக்குயர்க எனப் புலவர் வாழ்த்துவர் (பதி. க. வா. 9-12). காடாக இருந்த இடஙகளெல் லாம் இமையவரம்பன் நெடுஞ்சேரலாதனின் ஆட் சியில் கடவுளுறையும் கோயில்களாயின (பதி. 13:20). பல்யானைச்செலகெழுகுட்டுவன் நாட்டில் அச்சம் பொருநதிய மரபினையுடைய கடவுளைப் பேணும் பொருட்டுச் செய்த வேள்வியினின்று எழுந்த ஆவுதியைத் தேவரும் விழைந்தனர் (பதி. 21:5-7:15). முரசை வழிபடுவோன் மிக்க சினத்துடன் முழங் கும் மந்திர ஒலியால் அரிய திறன படைத்த முறைமையுடைய முரசுறை கடவுளைப் பிண்ட மேந்தி வழிபட்டான (பதி. 30:33-35). இசைத்துறை யில் வல்ல இளையர், இசைக்கலன்கள் உடைய பையைக் காததண்டின் இருபுறமும் தொங்கவிட் டுத் தாம் செல்லும் வழியில் தீங்குவாராமை குறித் துக் கடவுளைப் பரவினர் (பதி. 41:5,6). கடவுள் நிலைபெற்ற கல்லோங்கு நெடுவரையாகிய இமய மலை கடல்பிறககோட்டிய செங்குட்டுவன ஆண்ட நாட்டின் வடஎலலையாக இருநதது (பதி. 43:6,7). ஓய்மானாட்டு நல்லியக் கோடனின் அரண்மனை, கடவுள் உறையும் மேருமலை ஒரு கண்ணை விழித் துப் பார்த்தா லொத்த அடையாத வாயிலையுடை யது (சிறு. 205,206). நீர்மிக்க நெடுங்கயத்தில் தீப் பட மலர்ந்த கடவுள் சூடுதற்குரிய ஒள்ளிய தாம ரைப்பூ சூடுதறகுரியதனறு (பெரு. 289,290). திரு வெஃகாவில உள்ள பூமலி பெருந்துறையில் இள வேனிற் செவ்வியை நுகர்வாரோடு தங்கி இளைப் பாறி ஆண்டுள்ள அருந்திறற் கடவுளை (திருமாலை) வழிபட்டு இனிய யாழை வாசித்துச் செல்க எனப் பெரும்பாணன் ஆற்றுப்படுத்தப் பெற் றான் (பெரு. 389-392). இரணடாம் சாமத்திற்கும் நானகாம் சாமத்திற்கும் இடைப்பட்ட சாமத்தில் கடவுள் உலாவும் (மது. 651). கடவுட்குரிய நெருப்புப்போலும் இதழ்களையுடைய தாமரைப் போது குளத்தில் மலர்ந்தன (மது. 710,711). தலை வியின நோய் தெய்வத்தான் வந்ததென்று அறியுநர் கூறக்கேட்ட தாய், பல்வேறு உருவினை யுடைய கடவுளைப் பேணி, மலர் தூவி நறை விரைகள் செலுத்தி வழிபட்ட பின்னரும் நோய் தணியாமையின் மனஞ்சுழன்றாள் (குறி. 3-8). மலை யில உறையும் கடவுளாகிய முருகனை வாழ்த்திக் கைதொழுது நின்னைப் பிரியின் அறனல்லது செய் தேனாவேன் எனத் தலைவன் வஞ்சினங் கூறி மலைவீழ் அருவியின் நீரைக் குடித்தமையால் தலைவி அவன் சூளுரையை நம்பினாள் (குறி. 208-211). உலகம் நடுங்கும் அஞ்சத்தக்க கடுந்திறல் வாய்ந்த நஞ்சை ஊணாக்கிக் கொண்ட கடவுள் (சிவன்) நவிரம் என்னும் மலையில் உறையும் (மலை. 81-83). கோயிலிற் பரவுதற்கரிய முறைமையினையுடைய கடவுளைக் கண்டீராயின் தொழுதலை மட்டும் செய்ம்மின்; இனனியங்களை முழக்க வேண்டா' எனக் கூத்தர் ஆற்றுப்படுத்தப் பெறுகிறார் (மலை. 230-232). கூத்தர் சென்ற காட்டு வழியில் மறவரின் பீடும் பெயரும் பொறிக்கப்பட்டு மராமரத்தின் நிழலிலே நடப்பட்ட கடவுட்டன்மை பொருந்திய நடுகற்கள் இருந்தன (மலை. 394-396). இனிய பாட் டினைப் பாடுபவரும் விறல்பட ஆடுபவருமாகிய விறலியர், நன்னன் அரண்மனையைக் குறுகித் தம் இயல் வழுவாது அருந்திறற் கடவுளை முதலில் வாழ்த்திப் பினனர் அவன் புகழ்பாடத் தொடங் கினர் (மலை. 535-539). பொதியில் மலையில் உள்ள அடியார்களை வருத்துதலில்லாத கடவுளை (முருக வேளை) குறவர் வழிபட்டுச் சந்தன மாலையைத் தென்னவனுக்கு அளித்தனர் (அகம். 13:2-4). பிரிவால் வருந்தும் தலைவியின் சொல்லிற்கு மறுமொழி கூற இயலாத பாணன், யாழில் செவ்வழிப் பண்ணை மெல்லென இசைத்துக் கடவுளை வாழ்த்தித் துயர் கொண்ட மெய்யனாய்த் தலைவியின் துன்பத்தைத் தலைவனுக்குணர்த்தச் சென்றான் (அகம். 14:14-17). விழுததொடை மறவராகிய கரந்தை வீரர் பதுக் கைககண் உள்ள கடவுளை வழிபடுதற்கு அந்நடு கல்லில பீலி சூட்டித் துடிப்படுத்துத் தோப்பிக் கள்ளொடு செமமறிக் குட்டியைப் பலிகொடுப்பர் (அகம். 35:6-9). சேரனது கொல்லி மலையில் விளங் கும் பக்கமலையில் அழகுறக் கடவுளாக எழுதப் பெற்ற பாவை போன்றவள் தலைவி (அகம். 62:13-16). அருந்திறல் கடவுள் உறையும் செல்லூரின் கிழக்கே கோசர்க்குரிய நியமம் என்னும் வளமு டைய ஊர் இருந்தது (அகம். 90:9-12). சுற்றத்தார் முதலியோர்க்கு விருந்தளித்து மணமனையை அழ குறுத்திக் கடவுட் பேணி மணமுழாவொலிக்கத் திருமணம் செய்தல் (அகம். 136:1-8). தன் மகளுற்ற நோய் நீங்குமாறு துறையினிடத்து நிலைபெற்ற கடவுளுக்குக் கையுறைப் பொருளாகக் கள்ளையும் கண்ணியையும் வெள்ளாட்டுக் கிடாயையும் செலுத்

திய பின்னரும், நோய் தணியாமை கண்டு தா" வருநதினாள் (அகம. 156:13-17). வணிகச் சாதநி னைக் கொன்று அவர் பொருள் கவரும் மறவர்க்கு அஞ்சிய மக்கள் குடிபெயர்ந்த பாழ்பட்ட ஊரி லிருந்த கடவுளும் புறம் பெயர்ந்தது (அகம்.167:7-15). நீ விரும்பிய தலைவனுக்கே நினனைக் கொடுக்கத் தந்தையும் தாயும் இசைந்தனர்; யாமும் நம் மணத் திற்கு வரைந்த நாள விரைந்து வருவதாக என்று கைகூப்பித் தொழுது இல்லுறை கடவுட்குப் பலி செலுததுவோம் எனத் தோழி தலைவியிடம் கூறி னாள் (அகம். 282:12,15-18). ஊா பாழானமையின, புற்றுக்களும் புதர்களும் நிறைந்த பொதியிலிருநத கடவுள் தான் உறையும் தூணிலிருந்து அகன்றது (அகம. 307.11,12). குறவர் தாம் சமைத்த தோப் பியை உயர்ந்த உசசியை உடைய கடவுள் உறை யும் மலைக்குப் படைத்துப் பினனர் மகளிர் உண் பிக்க அதனை உணடனர் (அகம. 348:7-9). பாழி மலையைப் பிறரால் அழித்தற்கரிய முறைமையினை யுடைய கடவுள் காத்தலினால் அஙகுள்ள தேனி றாலைப் பிறராற் கவர வியலாது (அகம். 372:1-3). தெறுதற்கரிய கடவுளின்முன் தன் முனகை பற்றித் தேற்றிய சொல்லைக் கடந்து தலைவன் பிறனாயி னான் எனக் காதறபரத்தை கூறினாள் (அகம். 396: 7-10). பொதுவிடத்திலுளள மராமரததில் இருக்கும் பிறர்ககு அச்சம் செய்யும் கடவுள் கொடுமையுடை யாரை வருத்தும் என்று அறிந்தோர் கூறுவர் (குறு. 87:1,2). தினைப் புனத்தில் குறவன், கடவுட் குப் பலியாக இட்ட தினைக்கதிரைத் தெரியாமல் உணட மயில் வெறியாடுகினற மகளிரின் (தேவ ராட்டியின்) நடுங்கியது (குறு. 105:1-4). ஆமான் மீது எயத அம்புக்குறி பிழைத்தமைக்குக் காரணம் மலையில தெய்வம் வெளிபபோந்து நிற்றலே எனக் கருதிய கானவன, மழை பெய்தால அதனவீறு தணியும் என்று கருதி உயர்ந்த மலையிடத்தேறிச் சுற்றததுடன கடவுளை வழிபட்டு மழை வேணடி னான (நற். 165:1-5). பாணர் தெறலருங் கடவுள முன்னர் அதன சினம் அடங்குமாறு சீறியாழின நரம்பின் ஓசையை எழுப்பிப் பாடுவர் (நற். 189: 2-4). வயற்கரையிலுளள எரிபோன்ற பூவையுடைய வேங்கை மரததில் கடவுள் உறையும் (நற. 216:6,7). வெறியெடுககுங்கால் கடவுளாகிய முருகனுககு ஆடு முதலியவற்றைப் பலிகொடுதது வழிபடுவர் (நற். 251.8). பணடுதொட்டுக கடவுள் உறையும் பனை மரத்தில் கட்டிய குடம்பையுள் துணைபுணர் அனறில் இருந்தது (நற். 303:2-5). நெடிய விழுது களையுடைய ஆலமரத்தி விருக்கும் கடவுட்குப் படைததிட்ட பலிச் சோற்றைக் காக்கைகள் தின்றன (நற். 343:4,5). ஒருபொழுதும் பிரியேன் என்று தலைவன் கூறிய சூள பொய்ததமையால், அவனை வருத்தாதே எனக் கணங்களை யுடைய கடவுளைப் பலி தூவி வழிபடுவோம்; வருக' எனறு தோழி தலைவியை அழைததாள் (நற். 358: 5-7). குறையிரக்குந் தலைவனிடம், 'தலைவி எமக் கோர் கண்கணட கடவுள்' எனத் தோழி அவளது பெருமை கூறல் (நற். தி. 2:7). தலைவியின மெலிவு தெய்வத்தாலாயது எனக கருதும் தமர்முன் அறத் தொடு நிற்குந் தோழி, பெருநதுறைக்கண கணடு தலைவியை வருத்தியவன் கடவுளலலன்; மக்கள் இனத்தினனே எனறு தெளிவிததாள் (ஐங். 18[illegible]) அறியாமையுடைய வேலன் எதுகேட்பினும, மலைக குரிய கடவுளாகிய முருகனை வாழததிப் பாடி, இது தெயவத்தானாயது; இதற்கு மருந்து வெறியாடுதல எனறு கூறுவான; ஆதலால் தலைவியுறற நோயதீர வெறியாடுதல மருநதாகாது எனக கூறிது தோழி வெறி விலக்கினாள (ஐங. 243). குனறககுறவன் கடவுளாகிய முருகனை வேணடி வழிபாடு செயது அவனருளாலே பெறற மகளாகிய தலைவியைப பிரியறக; எனத் தோழி தலைவனிடம கூறிச் செலவு தவிர்த்தாள (ஐங். 257). விரைவில மணம நிகழவேணடும் எனத் தலைவி மலையுறை கடவுளா கிய முருகனை வேங்கை மலர்தூவித தேன பலி செயது வேண்டினள (ஐங். 259). தனநிலை உயர் தறகுக் காரணமான கடவுளுக்குத தன வரைவு முடிநதாற் செய்யுங் கடனகளை மேற்கொணட தலைவி அலலகுறிப்பட்ட தலைவறகு உண்டாய துனபததை யெலலாம எணணி வருநதினாள எனத தோழி தலைவனிடம உரைததாள (கலி. 46.16, 17). 'நாம மணம செயய இபபொழுது முகுததம் எனறு அநத முகுததம் வாயபபச சொனன அநதக கடவுளைக் காண' எனத தலைவன தலைவிக குரைததான (கலி. 93 11-13) 'நினனைப் பெறும வேடகையோடு நீ செயத குறியிடததே தபபாமல வநத கடவுள, விழுநது முளைதத பறகளையும பாாத்தவா உயிரைப பறிததுக கொளளும உருவத தையும உடையராய உன மனையிடததே சேரும முறைமையோடு வநததைக் கணடாயோ,' எனத தலைவி தலைவனை வினவினாள் (கலி. 93 17-20). மயிர்சசாநதும புழுகும் மணககும கூநதலுககுக காலை செயயும ஒபபனைக கேறப, 'நீ பூபபலி யிட்ட கடவுளைக் கணடு வநதாயோ' எனத தலைவி தலைவனை இடித்துரைத்தாள் (கலி. 93: 21-24). சூரபனமாவைக கொனற சிறநத வேலை யுடைய முருகனைப் புகழந்து, செறிநத காம வேட்கையுடன திருப்பரங்குனறதது நினனோடே

மாரிக் காலத்தில் பலநாளுந் தங்கின கடவுளைக் கண்டாயோ எனத் தலைவனைத் தலைவி நகை யாடினாள் (கலி. 93: 26-28). பல்லுயிரும் வருத்த முறும் ஊழிக்கால இறுதியில் பசுங்கட் கடவுள் (பசிய நிறத்தைத் தன் பாகத்தே யுடைய உருத்திரன்) எருமை ஏற்றை ஏறும் கூற்றுவனின் நெஞ்சைப் பிளந்து அவன் குடரைக் கூளிக்கிட்டான் (கலி. 101: 24-26). நூறாயிரங் கையினை யுடைய ஆறாவ தாகிய மனவுணர்ச்சியில் அறிதற்குரிய கடவுளே எனத் திருமாலைக் கடுவனிள வெயினனார் விளித் துள்ளார். (பரி.3:43). உலகத்தை அழிக்கும் கடவுளின் (சிவபெருமானின்) மகன் எனச் செவ்வேளைக் கடுவனிள வெயினனார் குறிப்பிட்டுள்ளார் (பரி. 5:13). பரத்தையர் வீடு சென்று மீண்ட தலைவன் தலைவியிடம் நாமிருவரும் சென்று உடனே துறவ கத்திருக்கும் வாழ்க்கைக்கு உதவியா யிருக்கும் கடவுளரைக் கண்டு அவரிடம் தங்கினேன் என்று கூறினான் (கலி. 93:5-7). பரத்தையரைக் கடவுள ராகக் கூறிய தலைவனை நோக்கி, 'நீ கண்ட கடவுளர் தம்முள்ளும் மணமிக்க நின் மார்பு பழைய தன்மை கெட வேறுபடும்படி அதனை வடுப்படுத்தியவர் யாவர்' எனக்கேட்டு எள்ளி நகையாடினாள் (கலி. 93: 29-31). நீ உடனே சொல் லாது போனால் நின்னை முயங்கிய நெட்டிருங் கூந்தற் கடவுளர் (பரத்தையர்) எல்லாருக்கும் முட்டுப் பாடுண்டாதலும் கூடும்; ஆதலால் ஆண்டே செல்க எனப் பரத்தை மனைபுக்கு வந்த தலைவ னிடம் தலைவி வாயில் மறுத்துப் புலந்தாள் (கலி. 93:33-36).

**2. தேவர்.** பல்யானைச் செல்கெழு குட்டுவன் நாட்டில் தெய்வத்திற்குச் செய்த வேள்வி ஆவு தியை வானத்து நிலைபெறும் கடவுளரும்-தேவரும்- விரும்பினர் (பதி. 21:5-7,15). கடவுளுக்கு அஞ்சிய அவுணர், வானத்தில் தமக்குக் காப்பாகத் தூங் கெயில் அமைத்தனர் (பதி. 31:18,19). செல்வக் கடுங்கோ வாழியாதன் அமைச்சர் முதலிய சுற்றம் சூழ விருப்ப வேள்விகளைச் செய்து கடவுளாகிய தேவரை உண்பித்தான் (பதி. 70:17,18).

**3. கொற்றவை.** வெற்றிமடந்தையாகிய கடவுள் - கொற்றவை - வாழும் வாகை மரத்தின் துய்களை உடைய பூவைப் பனங்குருத்தொடு சேர்த்துக் கட்டிச் சேரநாட்டு மன்னர் அணிந்தனர் (பதி. 66: 14,15). அஞ்சுவரு மரபினையுடைய கடவுளாகிய கொற்றவை வாழும் அயிரைமலை போல் பெருஞ் சேரலிரும் பொறையின் புகழ் நிலைபெறுக என அரிசில் கிழார் வாழ்த்தினார் (பதி. 79:18,19).

**4. கடவுள் தன்மை.** ஓதல்வினையிடத்துச் சென்ற தலைவர் கையால் தொழும் மரபினை யுடைய கடவுள் - கடவுள் தன்மை - நிறைந்தவர் (அகம். 125:14,15). கடவுள் வாய்ந்த கற்சுனையில் பூத்த பூக்களைப் பறியாமல் பூப்பலிக் கென்று விட்டு வைத்தல் (நற். 34:1,2). நீ நின்னிடத்துச் சிறந்த நிறைநத கடவுளவை (கடவுள் தன்மையை உடையை) எனத் திருமாலைக் கடுவனிள வெயினனார் குறிப் பிடுவர் (பரி. 4:63).

**5. அருந்ததி.** செல்வக் கடுங்கோ வாழியாதனின் பெருநதேவி விரும்பத்தக்க கடவுளாகிய அருந் ததியை வென்ற கற்பினையும் நறுநுதலினையும் உடையவள் (பதி. 65:9,10). தெருவில் தனியே விளையாடிய தன் மகனை எடுத்தணைத்த பரத் தையைக் கண்ட தலைவி, தலைவனிடம் அணங் கருங் கடவுளாகிய அருந்ததியை ஒத்த பரத்தை, நின் மகனின் தாயாதலை இசைந்தேன் என இகழ்ந்துரைத்தாள் (அகம். 16:5-19).

**6. முனிவர்.** கிட்டுதற்கரிய வலியினை யுடைய தொன்முது கடவுள் (அகத்திய முனிவர்) இராவணனைத் தமிழ்நாட்டை யாளாதபடி போக்கினார் (மது. 40, 41) என்பது நச். உரை. (இதற்குத் தென்னவன் பெயரைக் கொண்ட நெருங்குதற்கரிய வலியினை உடைய தொன்முது கடவுள் - சிவபெருமான் - வழிவந்தவன் நெடுஞ்செழியன் எனக் கொள்வது பொருந்தும்). கண்ணாலே காணும்படி விரைவில் வருதற்குரிய அணிமையில் தலைவன் இருந்தும், கடவுளை (முனிவரை) அணுகி வாழ்பவர் அஞ்சி விலகி ஒழுகுதல போலத் தலைவன் மனத்தால் நீங்கி ஒழுகுகின்றான் எனத் தலைவி வாயில் புக்க தோழிக்குக் கூறல் (குறு. 203:3-5).

**7. தெய்வத்தச்சன்.** வேர்ப்பலா மரங்கள் நிறைந்த கொல்லி மலையில் நிலைபெறும் கடவுள் - தெய்வத் தச்சன் - இயற்றிய பலரும் புகழும் சிறப்பினை யுடைய கொல்லிப்பாவை போன்ற அழகினைத் தலைவி பெற்றிருந்தாள் (அகம். 209:15-17).

**8. தெய்வக் கற்பு.** கடவுள் - தெய்வக் கற்பு - வாய்ந்த ஒருமீனாகிய சாலினி என்று அருந்ததி சுட்டப்படுகிறாள் (பரி. 5:44).

**கடவுள் சான்ற கற்பு - தெய்வத்தன்மை வாய்ந்த கற்பு.** பாண்டியன் இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன் மாறனின் கடவுள் சான்ற கற்பு - தெய்வத்தன்மை வாய்ந்த கற்பு - வாய்ந்த மனைவியும் அவள் ஈன்ற புதல்வரும் பொலிக என்று வடம வண்ணக்கன் பேரி சாத்தனார் வாழ்த்துவர் (புறம். 198:2-5).

**கடவுள் மரம்** - தெய்வம் தங்கியிருக்கும் மரம். கடவுள் மரத்தில - தெய்வம் தங்கியிருக்கும் மரத்தில் - முள்ளால் மிடையப் பெற்ற கூட்டிலிருக்கும் பெடை அன்றில் கங்குற்பொழுதில் தன் சேவலுடன் கூடப்பெறாது வருநதும் (அகம். 270:12-14). தலைவனின் ஊர்முகத்துள்ள பொய்கைக்கரையின அருகில் கடவுள் முதுமரம் இருந்தது (நற். 83:1,2).

**கடவுள்மீன்** – தெய்வக் கற்புடைய விண்மீனாகத் திகழும் அருந்ததி. ஏழு முனிவரின் மனைவிமார் எழுவருள் ஒருத்தியாகிய அருந்ததி 'கடவுள் மீன' எனச் சிறப்பிக்கப் பெறுகிறாள் (பரி. 5:44).

**கடவுளர்** - தெய்வங்கள். கடவுள் - 1 காண்க.

**கடவுளாலம்** - தெய்வமுறையும் ஆலமரம். கடவுளாலதது - தெயவமுறையும் ஆலமரத்தின் - பெருங் கிளைகளி லுள்ள பழததை நேற்று உண்டோம் என்றெண்ணாது புள்ளினம் பினனும் உண்ண அவ் விடம் செல்லும் (புறம். 199:1-3). நெடிய விழுதுகளையுடைய கடவுளாலத்துள்ள காக்கைகள் ஆங்குப் படைத்துப் போட்ட பலிச் சோற்றை உண்ணும் (நற். 343:4,5).

**கடவுளெழுதிய பாவை** - கடவுளரால் எழுதப்பெற்ற கொல்லிப் பாவை. பொறையனது கொல்லி மலையின் அடுக்கத்து அகலிடம் அழகுறுமாறு விளங்கும் கடவுளெழுதிய பாவை - கடவுளரால் எழுதப் பெற்ற கொல்லிப்பாவை – போன்று தலைவி யிருந்தாள் (அகம். 62:13-16).

**கடற்கரை** - கடலின் அணை. கடற்கரையை – கடலின் அணையை - கரைத்திடும் நீரோட்டம் மிக்கது காவிரிப் பேரியாறு (அகம். 126:5). பெருங்கடற் கரையில் சிறுவெண் காக்கை வாழும் (குறு. 246:1; 313:1; ஐங். 161-170:1).

**கடற்படை** - கடற்சேனை. சோழநாட்டுப் பொருநனான நலஙகிள்ளி கடற்படை - கடற்சேனை - கொண்டு பகைவரைவென்று பொருள்களைக் கொள்ளும் பெரு முயற்சி யுடையவன் (புறம். 382:1-3).

**கடற்பரப்பு** - கானலிடம். ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் தண் கடற்பரப்பின் - கானலிடத்தின் - அடுப் பங்கொடிகள் வளர்ந்த அடைகரையிலுள்ள பனஞ் சோலையில் அணிகளால் பொலிவு பெற்றுஆடும் விறலியரது பாடலைக் கேட்டிருந்தான் (பதி. 51:6-10,22). 'தலைவி நின் திறத்துக் கொள்ளும் அவலம் நீங்கத் தெளிந்த கடற்பரப்பினை யுடைய எம் உறைதற்கினிய ஊரில் நீ தங்கிச் சென்றால் நேரும் குறை யாதோ' என்று தோழி தலைவனிடம் வினவினாள் (அகம். 340:12,13,24).

**கடற்றெய்வம்** - கடலாகிய தெய்வம். நெய்தற்றலைவி ஊசலாடும்போது ஆங்குவந்து தலைவன் – கடல் தெய்வத்தை - கடலாகிய தெய்வத்தை - நோக்கி, 'நின்னிற் பிரியேன்' என்றுதெளிவித்து அவளது தோளை மணந்தான் (கலி. 131:1,2).

**கடறு** - காடு. விறலியர் தாம் பறித்த கீரை மேல் தூவச் சில அரிசி வேண்டினராக, நாஞ்சில் வள்ளுவனோ அவர் தம் வறுமையையும் தன மேமபாட்டையும் தூககிப் பார்த்து கடறு - காடு - சூழநத குன்றத் தன்னதோர் யானையைப் பரிசிலாக ஈநதான் (புறம். 140:2-8). சோழன் இராச சூயம்வேட்ட பெருநறகிள்ளி தனனைக் கணட கிணைஞனுக்கு மலைபயந்த மணியும் கடறு பயந்த பொனனும் கடல் பயந்த முத்தும் பிறவும் நல்கினான் (புறம். 377:13-18). வானுற ஓங்கிய மரங்கள் செறிந்த கடற்றிலும் (காட்டிலும்) பிற இடங்களிலுமுளளவர்களும் முடியுடை வேந்தரும் வேளிரும் கூடி வஞ்சினம் மொழிந்து பகைவர் நடுங்கப் பொருதனர் (பதி. 30:29-31). ஆடுகோட்பாட்டுச் சேரலாதன பகைவர் தரும் நாட்டைத் திறையாகப் பெற்றுக் கொண்டு அவருக்கு அருள்செய்து, பின மலைகள் உயர்ந்த நாட்டகத்தே உள்ள கடறு சூழ்ந்த தன் மூதூருக்குத் திரும்புவான் (பதி. 53:2-5). பல்வகைப் பயன்களும் நிலைபெற்ற கடறுடை ஊர்களையும் காவற் காட்டையும் கொண்ட தகடூரை அழித்து வெற்றி கொண்டவன் பெருஞ்சேரல் இரும்பொறை (பதி. 78:7-9). கடுங்கண் கானவர் அருஞ்சுரவழியில் நெடுஞ்செவிக் குறுமுயல்களைப் போக்கறவளைத்துக் கடற்றின்கண் கொள்ளைகொள்வர் (பெரு. 115-117). நெளவிமான பிணையொடு தான் வளர்நத கடற்றில் பொன்கொழிககும்படி சுழன்று துள்ளும் (மது. 274-276). புலியன்ன மறவர் எரி தவழும பெருங்கடற்றில் இலைகள கசிந்து உதிரபபெற்ற மரஙகளையுடைய காட்டில் வாழும் வாழககை யுடையவர் (அகம். 75:4-6). தேக்கு நிறைநத சோலையைக் கொண்ட கடறு உயாந்த பாலை வழியிலுள்ள இருப்பையின பூங்கொத்துக்கள் அழகு பெற்ற குடியிருப்பினை யுடைய சீறூரில் சிவந்த நிலத்தே உதிர்ந்து கிடந்தன (அகம். 225:9-13). நெஞ்சினைச் சுடுகின்ற கவலையாகிய மிகக தீயினை ஆள்வினையாகிய மழையால் அவித்து, நாளும் இக்கடற்றில வருநதி இருபபோமாக எனத் தலைவியைப பிரிநத தலைவன தன நெஞ்சிற்குக கூறினான் (அகம். 279:7-9). மலை அழகு நீஙகிய கடறுடைய பாலைவழி மிகக கொடியது (அகம். 325: 10,11). வெப்பம் மிக்க கொடிய கடறறை அடையும் வழிச் செல்வோர் வேறுவேறாகப் பிரிநது அலறும் படி பெருங்களிற்றினை ஆணபுலி கொல்லும்

(அகம். 389:17-20). கடற்று மருங்கில் தோண்டிய குழியில் ஊறிய நீரை உண்ட ஆனிரை வறண்ட நிலத்தே சென்றது (அகம். 399:6-9). வினை முற்றி மீண்ட தலைவன் வழியிலே கடற்றில் தழைத்த வெட்சி மலர் கமழும் மையிருங் கூந்தலையுடைய தலைவி நட்பையே நினைத்துக் கொண்டிருந்த தாகத் தோழியிடம் கூறினாள் (குறு. 209:4-7). 'கொடுஞ்சிலை மறவர் வம்பலர் தொலைய எதிர் நின்று கடற்றைக் கொள்ளையிடும் யானை மிக்க கானம் கடந்து நம் மேனி பசக்குமாறு நம் தலைவர் பிரிந்து செல்வாரோ,' எனத் தலைவி தோழியைக் கேட்டாள் (குறு. 331:2-7).

2. மலைச்சாரல். கானத்தில் வேட்டுவர் அலைப்ப தால் புகலிடம் காணாத கடமா நல்லேறு விரைந் தோடியபோது கடறு - மலைச்சாரல் - இடத்திருந்த மணி மேலே கிளம்பியது (புறம். 202:1-4). பெரிய மூங்கில்கள் ஒலிக்கும் கோடு காய்ந்த கடற்றில் உள்ளவாகிய காடுகளைக் கடந்து தலைவன் சென்றான் (அகம். 395:14,15).

3. மலைவழி. ஆறலைகள்வர் கொன்ற வம்பமாக் களின் பிணங்கள கொடிய கடறு - மலைவழி- மருங்கில் முடைநாற்றம் வீசியதால் அவற்றைத் தின்ன வந்த உறுபசிக் குறுநரிகள் மீண்டு சென்றன (நற். 164:6-10).

**கடன்** - 1. கடமை. அந்திக் காலத்தில் அந்தணர் செய்யும் கடன் - கடமை - ஆகிய ஆவுதிபண்ணும் முத்தீ யாகிய விளக்கின்கண மான்பிணைகள் துஞ்சும் இமய மலையும் பொதிய மலையும் போன்று நடுக்கின்றி நிற்பாயாக எனச் சேரமான் பெருஞ்சோற் றுதியனை முரஞ்சியூர்முடிநாகராயர் வாழ்த்துகிறார் (புறம். 2:20-24). 'எம் அம்பை விரையச் செலுத்துவோம்; தென்புலத்தாருக்குரிய அருங்கடன்களைச் செய்யும் பொன் போலும் புதல்வரைப் பெறாதீ ரெல்லாம் நும் அரண்சேர் மின்' என அறத்தாறு நுவலும் பூட்கை உடைய வன் பாண்டியன் பல்யாக சாலை முதுகுடுமிப் பெருவழுதி (புறம். 9:3-6). பாணர் மாலையில் மருதப் பண்ணையும் காலையில் செவ்வழிப் பண்ணையும் தம் யாழில் முறை மறந்து பாடிய தற்குக் காரணம் நள்ளி பாணரைப் புரத்தலைக் கடனாகக் கொண்ட வண்மையால்தான் என வன்பரணர் கூறுவர் (புறம். 149). அரண் பகை வரிடத்ததாகவும் அதனைக் கொள்வதன்முன் தனதெனக் கருதிப் பாணர்க்குக் கடனாகக் கொடுக்கும் வள்ளியோன் நெய்தலங் கானல் இளஞ்சேட்சென்னி (புறம். 203:9-11). பகைவர் எறிந்த வேல் நெஞ்சிற் பாய்ந்துருவிச் செல்லவும் மறவன் செயற்கரிய தன் போர்க் கடனைச் செய்து முடித்தான் (புறம். 282:1,2). தன்னைக் குறித்து வரும் படையை எதிர் ஏற்கும் மறவன் மார்பில் பகைவர் தம் கடனை ஆற்றவேண்டி எறிந்த அம்பும் வேலும் மொய்த்தலால் உடம்பும் கட் புலனாகாத உயிரும் கெட்டன (புறம். 282:4-6). 'மகனைப் பெற்று வளர்த்து விடுதல் தாய்க்குக் கடன்; அவனைச் சான்றோனாக்குதல் தந்தைக்குக் கடன்; அவனுக்கு வேல்வடித்துக் கொடுத்தல் கொல்லற்குக் கடன்; நல்லொழுக்கத்தை நல்குதல் வேந்தற்குக் கடன்; வாளுடன் போர்க்களம் சென்று எதிர்த்துவரும் களிற்றியானைகளைக் கொன்று வெற்றியுடன் மீளுதல் வீரனுக்குக் கடன்' என மறக்குடியில் பிறந்த மகள் ஒருத்தியின் கூற்றாகப் புலவர் பொன்முடியார் கூறுவர் (புறம். 312). சோறு சமைக்கும் வீருப்பத்தை மறந்த தன் மட்பானையை நிமிர்த்துச் சமைக்கச் செய்யும் கடனை அறிந்தாளும் செல்வர் பிறநாடுகளில் இல்லாததால் சோழநாட்டுக் கிள்ளி வளவனிடம் கிணைஞன் வந்தான் (புறம்.393:4,5). இமையவரம் பன் நெடுஞ்சேரலாதன் கொடைக் கடனைவிரும்பிய ஒருபாற் கோடாத நெஞ்சினன் (பதி. 20:23). புகழ் மிக்க நன்கலங்களைத் திறையாகத் தரும் நாடு களைக் காப்பது நினது கடனாகும் என்று காக்கை பாடினியார் நச்செள்ளையார் ஆடுகோட்பாட்டுச் சேரலாதனிடம் கூறுகிறார் (பதி. 59:18,19). செல்வக் கடுங்கோவாழியாதன் இளந்துணையாகிய புதல் வரைக் கொண்டு முதியோர்க்குரிய தொண்டினைச் செய்வித்துத் தொன்று தொட்ட கடன ஆற்றிய அண்ணலாவான் (பதி. 70:21,22). போர்விழையும் ஆற்றல் படைத்த பெருஞ்சேரலிரும்பொறை இந் நிலவுலகத்து வாழ்வார்கசு அரசர் செய்தற் குரிய அரிய கடன்களைச் செய்து முடித்தவன் (பதி. 74: 21,22). நூற் கேள்வியையுடைய அந்தணர் செய்தற் கரிய கடனாக வேள்வியைச் செய்து முடித்தனர் (பெரு. 315,316). தொண்டைமான் இளந்திரையன் தன்னை வேண்டி வந்த பரிசிலர்க்குக் கொடை யாகிய கடனைச் செய்து முடித்தான் (பெரு. 446). இளந்திரையன் புலவர்க்குப் பூண் முதலிய வழங் குதலைக் கடனாகக் கொண்டான் (பெரு. 450). பெரும்பாணன் பேரியாழை இயக்குமுறையிலே இயக்கி அவ்யாழுக்குச் செய்யும் கடனை முறை யுடன் செய்து கையால் தொழுது வாழ்த்தினான் (பெரு.462,463). நன்னன் வேற்போரின் விளக்கத்தை யுடைய அறிவுடையோர்க்குக் கொடைக்கடனைச் செய்து முடித்தான் (மலை. 88,89). நன்மை தீமை

களை ஆய்ந்துணரும் வள்ளல்கள் மாய அவர்கள் மேற்கொண்டிருந்த கொடையாகிய கடனைச் செய்து முடித்த செம்மல் நன்னன் ஆவான் (மலை. 542,543). உதியன் குழுமூரிடத்தே கொடைக்கடனை ஏற்றுக் கொண்ட கோடா நெஞ்சினன் (அகம். 168: 5-7). 'தலைவ, செல்லாதே; நினபாற் செய்யும் கடன் மிகவும் உடையேன' எனக் காதற்பரத்தை தலைவனிடம் புலந்து கூறினாள் (அகம். 376:1). திருமணம் நிகழுங்கால் தலைவி அடையும நாணத்தைக கணடு செவிலி பாராட்ட, நற்றாய் தன் தலைமையறிநது தான் செய்யவேண்டிய கடனைச் செய்தாள் (அகம. 397:1,2). மலைப்பக்கத்திலுள்ள கொற்றவைக்குக் கடன்கழித்தலைச் செய்யோம; கையில் காபபு நூலைக் கட்டவும் செயயோம் எனத் தலைவி தோழியிடம் கூறினாள் (குறு. 218: 1,2). தமமுடைய கடனை நிறைவேற்றும் பொருட்டுப் பொருள் தேடும் முயறசிக்கண உளள உள்ளப் பிணிப்பினாற் செனறவர் நம் தலைவர் எனத் தோழி கூறினாள் (குறு. 255:6-8). காந்தளரும்புகள் மலரும் வரை காத்திராமல் வண்டுகள் அவற்றைக் கிண்டித் திறக்கும் பொழுது முன்பே தாம் அறிந்த சான்றோரைக் கணட கடனறிமாக்களைப் போல அவ்வரும்புகள் இடமளித்து இதழ் விரிந்தன (குறு. 265:1-5). வரகு நாற்றின் ஒறறை இலையை மான்குட்டி தின்று காலை உணவுண்ணும் கடனைக் கழிக்கக் கூடிய காலம் கார்காலம் (குறு. 282: 1-4). மினனொளியால இருளைப் பிளந்து கொணடு முழஙகும மேகம் சூல்முதிர்தலால் தன் கடன் தீரக் கணணொளி மறையும்படி எங்கும் பரநதது (நற். 228:1-3). சான்றோராகிய நம் தலைவர் தாம் செய்யும் கடனிலிருந்து குறைபடார் என்று தலைவி தோழிக்குக் கூறினாள் (நற். 327:4,5). ஆயததாரோடு கூறிய சூளைக் கடனன்று எனறு கருதுவாளோ எனத் தலைவி தோழியைக் கேட்டாள் (ஐங. 31). பாண்டியன் தன் மனைவிமாரோடும் வினைக்கடன் அறிந்த தன கண்ணாம் அமைச்சரோடும் திருபபரஙகுனறில் ஏறி வலம் வநதான் (பரி. 19:20-24).

2. முறைமை. பாணன் கையிடத்து, கடன் - (இலக்கண) முறைமை - நிரம்பிய யாழ் இருந்தது (புறம். 69:1). சில அரிசியே கேட்டதற்குப் பெருங் களிற்றை நல்கிய நாஞ்சில் வள்ளுவன கொடைமடம் உடையவன் போலும்; பெரியோர் தாம் செயதற்குரிய கடனை (கொடையை) போற்றாரோ, என ஔவையார் அவன் வணமையை வியந்தார் (புறம். 140:5-10). முகிலகள் வேண்டுமிடத்தில் திரண்டு பெருமலை போலும் தோறறத்தை உடைய வாய்ச் சூல் முதிர்ந்து உருமேறு இடிககும் மின் முதலிய தொகுதியுடன் கூடிப் பெய்தலைக் கடனாகச் செய்தன (புறம. 161:2-4). இவ்வுலகத்தார்க்கு நெல்லும் உயிரனறு; நீரும் உயிரன்று; மன்னனே உயிராவான்; அதனால 'யானே உயிர்' என்பதை அறிவது வேலமிகு தானை வேநதர்ககுக் கடனாகும (புறம். 186:1-4). வைகறைப் பொழுதில பாணர் கைதேர்ந்த சீறியாழை எடுததுக கடனறிந் திசைத்தனர் (புறம். 398:5,6). பாணன் கடனை அறிநது மரபோடு யாழ் வாசிப்பதில் வல்லவன் (பதி. 67:3). பாடினி காடுறை கடவுளுககு மனமகிழச்சியாகச் செயய வேண்டிய கடனகளைச செய்து முடிததாள் (பொரு. 52). பாலையாழை இயக்குதல வலல பாணமகன வாசிக்கும் கடனறிநது அதனை இயக்கினான் (சிறு. 37). செயயவேணடுவனவாகிய கடனறிநது பிறவிதோறும தலைவனும தலைவியுமாகிய இருவேமாகப் பயினறு வந்த இவ்வுலகத்தில பிரிவினால ஒருவராகிய துனபததினினறு உயவதற்கு உயிர் போவதாகுக எனத தலைவி கூறுகிறாள் (குறு. 57:4-6). தலைவனின பரததைமையாலே பரததையா புலவியாற செயத வடுககளைக் கணடிருத்தல நமககுக் கடனெனறு கருதித தலைவி நொநதிருபபாள (கலி. 75.32,33). பிறர் நோயும தம நோயபோல் போற்றுதல உலகததுளள சானறோர்க்கெல்லாம் கடனாகும (கலி. 139:2,3). மடனமா ஏறுகினற தலைவன சானறோரைப பார்தது எனது துயரைப போககுதலும நுமது முறைமையாகும எனறு கூறினான (கலி. 139 37).

3. காடு. இவவாழக்கைககு வேணடும பொருளில்லை எனறு கூறிவநது இரந்தவர்க்கு ஈயாமை இழிவாகும எனறெணணிக கடன - காடு - கடந்து சென்று தேடும பொருள் மதிக்கும பொருளாகுமோ எனத் தோழி பொருளவயிற பிரிவேன் எனற தலைவனைக் கேட்டாள (கலி. 2:19,20).

4. கொடுத்து வாஙகும் பொருள். ஒரு நெடுந்தகை தன சுற்றததாரின வறுமையைக் களையுத தனனூர் வாழும சிறு புல்லாளரிடம வரகினைக கடனாக இரநதான (புறம். 327:5-7). உணபதற்குரிய கடன் வாங்குங காலதது முகமலர்நதும கொடுக்குங் காலதது முகம வாடியும வேறுபடுதல் பண்டும உலகததியலபாகும (கலி. 22:1-3).

**கடா - கடாவிடுமிடம்.** எருது களிறாக வாள்மடல ஓச்சிப புணைகட்டிச் சூழ்வரச் செயத, காலாட்கள வீழந்த கடாவின - கடாவிடுமிடதது - தடாரிப பறை ஒலிக்க, 'நின பெரிய போாக்களம் பொலிக' எனறு சோழன இளஞசேட்சென்னி வாழ்ததப்

பெற்றான் (புறம். 370:17-19). படைவீரர் மாய்ந்த கடாவின்கண் தடாரிப்பறையை அறைந்துகொண்டு கிணைஞன் சென்றான (புறம். 371:16-18).

**கடாஅக்களிறு** - மதமுடைய ஆண்யானை. 'கடாஅக் களிற்றினும் அஞ்சாத எருதைக் கைநெகிழ விடாது நீ கொள்வாயாயின, இவ்வாய மகள் தோள் ஏனைய மகளிர் தோளினும் வெற்றிக் கொடியை உண்டாககினவாம்' எனத தோழி தலைவனிடம் கூறினாள் (கலி. 101:36-38). கடாஅயானை, கடாக் களிறு காண்க.

**கடாஅம்** – 1. மதநீர். பொன்னோடையையும் புகரணிந்த மத்தகத்தினையும் அணுகுதற்குரிய வலிமையையும் மணம் நாறும் கடாஅத்தையும்-மதநீரையும்" கொண்ட யானையின் இரும்பிடர்த்தலையிலிருந்து போர் செய்தவன் கருங்கை ஒள்வாள் பெரும்பெயர் வழுதி (புறம். 3:7-13). வரியுடைய தேனீ ஒலிக்கும் வாயின்கண் வந்து புகுகின்ற கடாஅம் உடைய பகைவர்யானை போர்க்களத்தில் படுமாறு அமர் புரிந்தவன் அதியமான் (புறம். 93:12-14). பெருங் களிற்றின் அணைதற்கரிய கடாஅம்பட்ட நிலைமை போன்று, பகைவர்க்கு இன்னாதவன் அதியமான் (புறம். 94:4,5). மதிலினுடைய நெடுங்கதவுகளைத் தாக்கியதால் மருப்பின் நுனி முரிந்து பன்றியின் கொம்பு போலாகிய இளங்களிறுகள், கடாஅம் சொரிந்து கடுஞ்சினம் கொண்டு கணைய மரம், காவல மரம் முதலியவற்றை அழிக்கும் (பதி. 16: 5-8). கடாஅம் சொரியும் தலையையும் வன்கண் மையையும உடைய யானை பொருத வயல்கள் வளம்பயத்தலை அறியாவாயின (பதி. 25.2,3) பகைவரது போர்களை அழித்த போர்த்தொழில் வல்ல யானை கடாஅம் பொழிநது கடுஞ்சினங் கொண்டு திரிந்தன (பதி. 82:4,5). இலங்குதொடி யணிந்த வெற்றிதரும் யானை கடாஅம் சொரிந்து நிலம்புடைததுத திரியும் (பதி. தி. 2:1,2). மயக்கத்தை யுடைய யானை கார்காலத்து உருமேறு போல முழங் கித் தன் பெரிய கையால் நிலததையெறிநது சினந் திகழும் கடாஅம் செருக்கி மரஙகளை முறித்தது (குறி. 162-165). கடுஞ்சினததையும கமழும் கடாஅததாலே சேறுண்டான தலையினையும் உடைய போர்த் தொழில் பயின்ற பெரிய யானை களத்து வீரரைக் கொனறது (மது. 44-48). வண்டுகள் ஆர்பபரிததற் குக் காரணமான கடாஅம் உடையது களிறு (அகம். 78:3,4). இருமபுலி கொனற பெருங்கை யானைக் கவுளினகண மிக்கொழுகும கடாஅதது வண்டின் கூட்டம் முரன்றது (அகம். 88.9-11). வரிநுதலையும் வாயிடத்துப் புகும் கடாஅத்தையும் மறததன்மை யையும் பகைபபடையை அணுகி ஆளைப் பிடித்து நிலத்தில் அறைந்து கொல்லும் தன்மையையுமுடையது களிற்றியானை (அகம். 93:16-20). கடாஅம் சொரிதல் மாறிப் போன யானைகளைப் போன்று மழை பெய்து பெய்து வறிதாகிய மேகம் விண்ணில் திரிந்தது (அகம். 125:8-10). வண்டு வேங்கை மலரை ஊதிக் காந்தள மலரில் துயின்று யானைக் கவுளி லிருந்து ஒழுகும் கடாஅம் நீரைப் பருகுவதாகக் கனாக் கண்டது (அகம. 132:10-13). வலிய கையை யும் செருக்குப் பொருந்திய வலிமையையும் வண்டு மொய்ககும் கடாஅத்தையும் உயர்மருப்பையும் உடைய யானை மலையிலுள்ள மரத்தை அழித்துப் புலியைக் குத்தித் தினையைக் கவர்ந்துண்ணும் (அகம். 148:1–6). வண்டுகள் ஆர்க்கும் கடாஅம் வற்றி மறைந்த கவுளையும் மெலிந்து நீண்ட கொம்புகளையும் உடைய யானைகள் நீரின் பொருட்டுக் கிணற்றில் பன்முறையும் துழாவின (அகம். 207:8-10). யானை வாயினுள் புகும் கடாஅத் தொடு சினமும் மிகுந்தமையால் புலியின் நிறம் கொண்ட வேங்கை மரத்துடன் மாறுபட்டு அதன் அடிப்பகுதியைக் குத்தியது (அகம். 227:6–9). மிகுதி யாகப் பொழியும் கடாஅம் காரணமாகச் செருக் குற்றுப் பெரிய களிறுகள் காட்டில் உலவும் (அகம். 298:9,10). வேங்கையின் அடுமுரணைத் தொலைத்த நெடுநல்யானை மயக்கத்தைத் தரும் கடாஅம் காரணமாகச் செருக்குற்று மதஞ்சிறந்து வழிப் போவாரைக் கொல்லும் (அகம். 307:6-9). கடாஅம் ஒழிந்த சினந் தணிந்த யானையின் ஒற்றை மருப் புப் போன்று குன்றில் அருவி இலங்கியது (நற். 18: 8-10). வேம்பின் கிளைகளை முறித்துக் கடாஅம் காரணமாகச் செருக்கிய கடுஞ்சினத்தையும் வலிமை யையும் கொண்ட களிறு காட்டில திரியும் (நற். 103: 2-4). முன் வண்டுகள் மொய்க்கும் கமழும் கடாஅம் கொணட எழில் யானைகள் தம் கொம்புகளை நிலத்தில் ஊனறிக் கைகளை நிமிர்த்து வறிதே கிடந்தன (கலி. 8:4,5). பால் போன்ற மருப்பினை யும் உரலை ஒக்கும் அடியினையும் ஈரத்தினை யுடைய நறியதாய்க் கமழும் கடாஅத்தினையும் உடையது யானை (கலி. 21:1,2). களிப்பு விளங்கு கின்ற கடாஅத்தினையுடைய கடுங்களிறுகள் தங்கி யிருக்கும் மூங்கில் நிறைந்த மலையைத் தீ சூழ்ந்து கொள்ளத் தலைமை பொருந்திய வேழம் அக்களிறு களைக் காத்துப் புறஞ்சேர்க்கும் (கலி. 25:5-11). முத்துவடத்தைக் கொண்ட நின் இள முலைகள், வலிமையையும் மிகுந்த கடாஅததினையுமுடைய பாணடியனின் யானைகளின் கொம்புகளிலும் சினமுடையவாயிருந்தன; நின் பருவத்திற்கு இது தக்கதோ என்று காமஞ்சாலா இளமையோள்

வயின் கைக்கிளைத் தலைவன் கேட்டான் (கலி. 57: 18,19). 'புதிய யானை நீ ஏறமாட்டாத பாகனாம படியாக, நின்னைக் கைகடந்து கடாஅம்படும்; அவ்வாறு படாதவாறு ஓம்புக' எனத் தலைவி பரத்தையரை யானையாகக் கூறித் தலைவனிடம் புலந்தாள் (கலி. 97:30, 31).

2. ஓசை (ஆகுபெயர்). தாழ்ந்த மலையிலும் உச்சி மலையிலும் எழுந்த பல ஓசைகளும் பிற ஓசைகளுடன சேர்ந்து மலைகளாகிய யானை உண்டாக்கும கடாஅம் - ஓசை - திசைகளெல்லாம் பரந்தன (மலை. 345-348). கடாம் காணக.

**கடாஅயானை** - மதம் மிகக களிறு. பேகன் கடாஅ யானையினை - மதம் மிக்க களிற்றினை - உடையவன் (புறம். 141: 12; 142: 4; 145: 3). கடாஅ யானையின் அடிசசுவடு போல் தடாரிப் பறையின தெண்கண தோனறும் (புறம். 368: 14, 15). ஒனனார் உளம குலைய நடந்து பகைவரை அழித்து மணிஓசை செயயும் கடாஅ யானையின கூட்டம் அலறப் பகைவர் நாட்டை வென்றவன் இமையவரமபன் நெடுஞ்சேரலாதன் (பதி. 20:11-14). கடாஅ யானை மைநதர் தேயப் பொருது, கட்டுத்தறியை முறித்துப் பாசறையில் முழங்கும் (பதி. தி. 4:7-10). கடாஅ யானை சின மிகுப் பரிக்கோற்காரரைக் கொன்று, பாகரை வீசிக் காலிற் கட்டிய சங்கிலியைப் பேணாது கட்டப்பட்ட தறியை முறித்துக கொண்டு கமபத்தைக் கைவிட்டுச் சுழன்றது (மது. 380-383). வானில இடியேறு முழஙகினும் அதறகு எதிராக எழுந்து கடாஅ யானை பாசறையில முழஙகும் (அகம. 144: 11-13). கடாஅ யானையது கவுளின பக்கத்தைப் போல மலையினினறு அருவிநீர் இழிதரும் (அகம. 205: 16-18). கடாஅ யானையின் கூட்டம் போர்க் களத்திற் சிதைநதொழிய மனனர் குலததினை வேரறுத்தவன் மழுவாள் நெடியோன் (பரசுராமன) (அகம. 220:4,5). காட்டில் கடாஅ யானை தன் வாயில நிறையுமாறு புகுத்திய பெரியகை, மலைக்குகையுள் நுழையும பாம்பு போலத் தோனறும் (அகம். 391: 10-13). கடாஅக களிறு, கடாக களிறு காண்க.

**கடாஅவுறுத்தல்** - கடாவிடுதல். நன்னனது பகக மலைகளிடத்தே பலாப்பழததின சுளையை விரும்பினோரெல்லாம் தினறு கீழ்வீழந்து கிடக்கும் மிச்சிலான பழத்தின் விதைகளைப பிரித்துப் பயன் கொள்ளுதறகுப் பிள்ளைகள் கனறுகளைப் பிணைத்துக் காந்தளின் துடுப்புப்போலும் மடலால் அடித்துக் கடாஅவுறுபபர் - கடாஅவிடுவர் - (மலை. 289,336-339). அதரிதிரித்தல், கடாவழித்தல காண்க.

**கடாக்களிறு** - மதத்தினையுடைய ஆண்யானை. அழகாலும் தொழிலாலும் மயிலுடன் மாறுபட்ட மகளிர் கடாக்களிறு போன்ற தத்தம் கணவன்மாரொடு கூடி வந்து குளவாய் அமர்ந்தான் (ஆதிசேடன) திருக்கோயிலை வணங்கினர் (பரி. தி. 1:61-63) கடாஅக் களிறு, கடாஅ யானை காண்க.

**கடாம்** - மதநீர். தேனீ ஒலிக்கும் கமழும கடாம் - மதநீர் - கொண்ட புண்வழலை வடியும் பெருநதலையுடைய வலிய மழகளிறு கம்பததைப் பொருநதித் தான் நின்ற நிலையில் அசைநது கொணடிருநதது (புறம். 22:6-9). வண்டினம் பாயநதுண்ணும் கடாம் காரணமாகக் களிறு குத்துககோலை மதியாது சென்றது (பதி. 53.17,21). வரிபொருந்திய நுதலினையும் வாயிடத்துப் புகும கடாததையும மறத் தன்மை மிக்க ஆற்றலையும உடைய களிறு பகைப் படையை அணுகி மறவரைப பிடிதது நிலததில அறைநது கொல்லும் (அகம். 93:16-20). சினமிக்க கனனத்தினினறு வாயிற்புகும் கடாத்தையுடைய களிறு வேங்கை அடிமரததில பாயநதது (அகம. 227: 6-9). வாயிடததே பெருகி வீழகினற கடாததையும வெள்ளிய மருப்பையும உடைய களிறறோடு புலி தாககிப பொருதது (கலி. 46:3,4). கமழகினற கடாம விளங்கும் பெருங்களிறறினத்துடன மலையில புலிகள போர்செய்யும (கலி. 48 5-7). பூககள விறபவரின மலருடனே ஊர்புகுந்த வணடுகளுக்கு உததம இலககணஙகளையுடைய யானையின கமழ கடாததில முன் படிநதிருநத வணடுகள அக்கடாததினை நலகி விருநது செயயும (கலி. 66 1-4). எழில மருபபுடைய வேழம மிகுகினற கடாம சொரிதல காரணமாகப பாகனுககுச செயயும் தொழிலகளைத தவிர்நது தோடடியைக் கைகடநது தான வேணடியவாறு ஒழுகியது (கலி. 138:1,2). கடாஅம் காணக.

**கடாவழித்தல்** - கடாவிடுதல். மலையனைய நிலையினையுடைய பல நெற்போாகளை நாடகாலையில கடா வழிதது - கடாவிட்டு - குவிதத நெலலை வலவில இளையர் மனனரிடமிருநது நாளுணவாகப பெறறனர் (புறம். 353.8-10). அதரிதிரிததல், கடாஅவுறுத் தல் காண்க.

**கடி** — 1. காவல். அமபு தஙகும் கடி - காவல - பொருந்திய அரணுடன அறம துஞசும் செஙகோலையுடையவன சேரமான யானைககட்சேய மாநதரஞ சேரலிரும்பொறை (புறம். 20:16,17). நலஙகிளரியின களிறு தன கோட்டின் நுனைமுகம் தேயப பகைவரது கடிமதில் மீது பாயும் (புறம். 31:7,8) கடிமனை (புறம். 36:10). கடிமதில் அரண்பல கடந்தவன நெடுமானஞ்சி (புறம். 92:4-6). கடியுடைவியனகர் (புறம். 95:3;247:8;272:4;390.6; நெடு. 49; அகம். 15.11;49:14;

298:16; நற். 156:2; 255:3; 305:3). அருங்கடி முனை யரண் (புறம். 210:14). கடிகா (புறம். 239:2). அருங்கடி மூதூர் (புறம். 336:7; முல்லை. 7). அருங்கடிவியனகர் (புறம். 383:7; சிறு. 187; அகம். 224:17). அருங்கடிப் பிடவூர் (புறம். 395.20). பலர்கூடிக காத்த கடம்பின் கடியுடை முழுமுதலைக் தடிநது முரசு செய்தவன் இமையவரம்பன் நெடுஞ்சேரலாதன் (பதி. 11:12-14). கடியுடை வியன்புலம (பெரு. 41). கடிநகர் (பெரு. 125), கடிபுலம் (பெரு. 140; அகம். 101:10). கடிமதில் (பெரு. 451; அகம. 24:11; பரி. 20:107). அருங்கடி வரைபபு (நெடு. 107). 'என் தந்தையின் கடத்தற்கரிய கடிகடந்து யானும் தலைவனுமே தேர்ந்து கொண்ட களவு மணம் இஃது' எனத் தலைவி கூறினாள் (குறி. 20,21). அள்நதறியாப் பல பண்டங்கள் அருங்கடிப் பெருங்காப்பில் (சுங்கச் சாவடியில்) வந்து குவிந்து கிடக்கும் (பட். 131-133). கடியரண் (பட். 230). கடிமுரசம் (பட். 237). அருங்கடி வரைப்பின ஊர் (பட். 270). அருங்கடி வாயில் (மலை. 490). அருங்கடிய்ய மேற்கொள்ளும் தநதையின் காவலாளர் சோர்வுற்றிருக்கும் செவ்வியை அறிந்து இரவில் வருதலும உரியை எனப் பகற்குறிக்கண் வநத தலைவனைத் தோழி வரைவு கடாயினாள் (அகம். 2:13-15). ஓமை மரத்தின் பெருங்கிளையில் கடி உடைய அகன்ற இடத்தில் ஈன்று காவறபட்ட தன் பேடைக்கு எருவைச் சேவல் இரைகொணரும் (அகம். 3:2-5). கானவன மகள் இல்லின் அருங்கடி கடந்து விடலையோடு சுரம் படர்ந்தாள (அகம. 7:8-13). தன் தநதையின அருங்கடி கடந்து தலைவி சென்றாள் (அகம. 17.7). 'நின வரவினை அறவில யாய காணின் செறிய அருங் கடிப்படுககுவள' எனத் தோழி தலைவனுககுக் கூறி வரைவு கடாயினாள் (அகம. 100:12-15). களிறு அருஞ்சுர நெறிகளைக் கடிகொள்ளும் (அகம். 65: 16,17;247:9). அருஙகடிக காபபின அஞசுவரு மூதூர் (அகம். 114:12). தாய் தலைவியை அருங்கடிப் படுத்தினள் (அகம். 150:6).அருங்கடிக் காவலர் (அகம். 162:7). அருங்கடி நெடுநதுாண (அகம். 220:8). கடி மதில் வரைபபின ஊனூர் (அகம். 227:18). அருங்கடி அன்னை (அகம. 252:14). கடிமனை மாடம் (அகம். 255:16). அருங்கடிப் பாழி (அகம். 258:1). 'எந்தையின் அருங்கடி கடந்து பின் இரங்காமைக்குக் காரண மான நல்வினை ஒனறனை யான செய்தேன' எனத் தோழி தலைவியிடம் கூறினாள (அகம். 268:12-14). பொயகையில் வாளைமீனைத் தின்னக், கடி இல் லம் புகும் கள்வன போல, நாரை மெல்ல ஒதுங்கும் (அகம். 276:1-5). எனனோடு கூடிய தலைவனை எனது தோளே கட்டுந்தறியாக, என கூந்தலாகிய கயிற்றால் கட்டி, அவன் மார்பினைக் கடிகொள்வேன எனப் பரத்தை கூறினாள் (அகம். 276:11,12). கடி புனம் (அகம். 308:14). அருங்கடி காப்பின் அகநகர் (அகம. 311:2). யானையுடன பொருது புண்பட்டு மலைக்குகையில் கிடக்கும் ஆண்புலியைப் பெண்புலி கடிகொள்ளும் (அகம். 362:3-6). தலைவி தன் தந்தையால் இற்செறிக்கப்பட்டு அருங்கடிப்படுவாள் (அகம. 370:6,7). நீந்தும் தொழில் கல்லாத யானை கடி புனலில் விளையாடக் கற்றது (அகம். 376:2).தலைவியின் தொன்னலத்தைக் கடிகொள அன்னை காக்கும் (நற்.23:3-5). நெடுநா ஒண்மணி கடிமனையில் ஒலித்து (நற். 40:1). அறனில்லாத அன்னை இற்செறித்துத் தலைவியை அருங்கடிப்படுத்தினாள் (நற். 65:6;295:3,4). குறவனின் மகள் அருங்கடிக் காப்பினள் (நற். 201:1,2). ஊரார் கூறும் அலரினால் தலைவி அருங்கடிப் படுகுவள் எனக் கூறித் தோழி தலைவனை வரைவு கடாயினாள் (நற். 223:4,5). தலைவி இளமை தீர்ந்தனள் எனத் தாய் அவளை வளமனையில் அருங்கடிப் படுத்தினாள் (நற். 351:1, 2). அருங்கடி அன்னையின் காவல் நீங்கித், தலைவனூர் செல்வோமா எனத் தோழி தலைவியைக் கேட்டல் (நற். 365:1-5). தலைவன் நம் அன்னையின் அருங்கடியினும் படாமல் மறைந்து வந்து நிற்கின்றான் எனத் தலைவி தோழியிடம் கூறினாள் (ஐங். 115:3,4). யானை வழியைக் கடிகொள்ளும் (கலி. 21:2,3). தலைவன் பரத்தையரைக் கடிகொள்ளுதல் (கலி. 72:9). கடிஅரணம் (கலி. 86:7). கடிகொள் இருங்காப்பு (குறமபு) (கலி. 110:1). 'மடநெஞ்சே, கொல்லும் சுறவினம் போவாரைப், போகாதபடி, கடிகொண்ட மாலைப்பொழுதில் காமநோய் செய்தவனிடம் சென்றாயே, நீ அவனைப் புல்லவும் பெற்றாயோ, புல்லாயோ' என ஆற்றாத தலைவி தன்னெஞ்சினை வினவினாள் (கலி. 123:9-11). ஊர்க் காவலர் நகரைக் கங்குலில் கடிகொள்வர் (கலி. 142:33). கடி மறுகு (பரி. தி. 1:27).

2. மணம். நெடுமனையில் கடிநறை – மணங்கமழும் அகில் முதலியவற்றை - புகைத்து நெடுந்தகை ஒருவனுடைய புண்ணை அவன் மனைவி காத்தாள் (புறம். 281:6-9). கடிகமழ் கலிமா (குறி. 76). கடியிரும் புன்னை (குறி. 93). ஆண்குரங்கு தோண்டிய பலாப்பழத்தைக் கண்ட காவல் மறந்த கானவன் பின்னர்க் கடியுடை மரநதொறும வலையை மாட்டினான் (குறு. 342:1-3). கொலலி மலையிலுளள மலைப் ப்ச்சை சூடுதலால் தலைவியின கூநதல் கடிபதம் கமழும் (நற். 346:9,10). கடிமலர் கமழும் நாற்றம் இராக்காலததே தலைவியை வருததும் (கலி. 29:21). இளமரக்காவில் கடி மலரைத் தேன்னம்

ஊதியது (கலி. 36:6). மலையில் காந்தட் பூ கடி கமழும் (கலி. 39:15). மலையில் கடிகமழும் சுனை உள்ளது (கலி. 45:1,2). கயத்திடத்துக் கடிகமழும் தாமரைப் பேரரும்பு, கரைக்கண் நிற்கும் மாமரத் தின் வடு தீண்ட மலரும் (கலி. 72:7,8). கடிகயம் (கலி. 92:44). கடிகா (92:51). கடிமலர்ப்புன்னை (கலி. 135:6). கடி சுனை (பரி. 9:61).

3. மிகுதி. அருங்கடி - பெறுதற்கரிய மிகுதியுடைய - தீஞ்சுவை அமுதொடு பிறவற்றையும் அடிசிலு டன் பாணர்க்குத் தொண்டைமான் இளந்திரையன் நல்குவான் (பெரு. 475-479). புலியொடு பொருது புண்பட்ட யானையின் நற்போர் விரும்பிய கான வரின் அம்பு பட்டு அவ்வியானை பிளிறுதல், கடி இடி (மிகுதியான இடி முழக்கம்) போல் தோன்றும் (நற். 65:5-8). பெரும்புலி களிற்றினைக் கொன்று முழங்குதல் கடி இடியின் முழக்கம் போலுள்ளது (நற். 344:9,10). கடியுடை மரங்கள் ஆற்றிடைக் குறையிலுள்ளன (கலி. 48:5-7). 'கடவுளை யுடைய தாகிய கடிநகர் தோறும் தன் மகனை வலஞ்செய் வித்து வா' எனத் தலைவி தோழியிடம் கூறினாள் (கலி. 84:6,7). ஒருதத்தி தன் அடிதாழ்ந்த துகிலை ஒரு கையாலே தழுவிகொண்டு, முடி தாழ்ந்த கருங்கூந்தலை மற்றைக் கையாலே பற்றிக கொண்டு கடியுடைய பூக்களுள்ள கயததில் பாய்ந்தாள் (கலி. 92:42-44). விளையாட்டு மகளிர் கடிகாவில அணி கலன் ஆர்ப்பத் தம்மில மயங்கி வண்டுகளுககுக் கெட்டோடினர் (கலி. 92:51-54).

4. சிறப்பு. கருங்காற் குறிஞ்சி சான்ற பக்கமலை களால் சூழப்பட்ட பெறுதற்கரிய கடி - சிறப்பு - அமைந்த மாமலைகள் தழுவப்பட்டு மதுரையின் ஒரு பக்கம் காட்சியளித்தது (மது. 300,301). ஆயர், முதுகுடியில் வந்த பாண்டியனுக்கு உரிய முததுக் களோடு கடல்படு பொருளகளும் தீதின்றிப் பொலிக என்று தெய்வக்கடி (தெய்வத்திற்குச் சிறப்பு) செய்தனர் (கலி. 105:2-6). கடம்பமர் செல்வன் கடி நகர் (கோயில்) (பரி. 8: 126). மகளிர் வையையில் ஆடிய நீர் விழவினால் வானுலகத்தின் கடி நீங்கி யது (பரி. 12:99). பாண்டியன, முருகன் தங்கிய கடிநகரை வலம்வந்தான் (பரி. 19:28,29).

5. திருமணம். தலைவர் சென்ற வழி கொன்றை சூடிக கடிபுகுவனர் போல் - திருமண விழாவிற்குச் செலவார் போனறு - அணி செய்து கொளளும் மறவர்களையும் - உடையது (ஐங். 432). தான பிரிந்து மீளுமளவும் தலைவி கடிமனை (வரைவினை யுடைய இலலறததை) காத்தோம்ப வல்லளோ எனத் தலைவன் கூறினான் (கலி. 24:9). நம் மனைக்கண் நிகழும் கடி தலைவனை விட்டு நீங்காமல் யாய்க்கு அறத்தொடுநிலை வகையாற் கூறின, அது நமக்கு நல்லதாகும் என்று தோழியிடம் தலைவி கூறி னாள் (கலி. 54:16,17).

6. புதுமை. குறவன் தோட்டத்தில் விளைந்த சிறு தினையில், கடியுண்கடவுளுக்கு - புதியதை உண் ணும் கடவுளுககு - இட்டு வைத்த கதிரை அறியாது உண்ட மயில வெய்துற்று நடுங்கியது (குறு. 105:1-4). தலைவனது கடிமார்பில் பரத்தை தான் குறித்த படியே வடுக்களை உணடாக்குவாள் (கலி. 8?: 28-30). ஒருத்தி அசோகினது சிவந்த கடி மலரைத் தன் செவியிலே செருகிக் கொண்டாள் (பரி. 12:86).

7. விளக்கம். 'நீர் நாண நெய் வழங்கியும் எண் நாண வேள்வி பல செய்தும மண் நாணப் புகழ் பரப்பியும் அருங்கடிப் பெருங்காலை - பெறுதற் கரிய விளக்கம் அமைந்த வேள்வி முடிபாகிய பெரிய காலத்து - விருநதினரைப் பொருந்திய நினது மேம்பட்ட நிலையை எந்நாளும் யாம் காண்போ மாக' என ஆவூர் மூலங்கிழார் சோணாட்டுப் பூஞ்சாற்றூர்ப் பார்ப்பான் கௌணி யன விண்ணந்தாயனை வாழ்த்தினார் (புறம். 116: 21-26). மழை நிறையப் பெய்த கடிகொண்ட பெரு நிலததில் நினறு ஆநிரை அறுகமபுலலைத தின னும் (கலி. 109:1,2).

8. அச்சம். தும்பை சூடிச் சினநதெழுந்த பகைவர் கடிமுனையில் - அச்சத்தையுடைய போர்முனையில் - அலறும்படி நார்முடிச் சேரல முரசம முழங்கு அரண்களை அழித்தான (பதி. 39.3-8). அருங்கடி வேலன் இத்தீங்கு முருகனால் வந்தது என்று கூறும் சொல்லினகண கேட்டோரை வளைத்துக் கொண்டு இன்னிசை முழங்க முருகனைப் பரவு வான (மது. 611-614). பூதங்காக்கும புகலருங் கடி நகரில் குயில் தன் பெடையுடன் போந்து தூது ணம் புறவுடன் துச்சிலாகத் தங்கும் (பட். 55-58).

9. கடுமை. நன்னன் மலைநாட்டில் தெய்வம் விரும் பும் நிரைத்த இதழ்களைக் கொண்ட குவளைக் கடிவீ - குவளையின் கடுமையுடைய பூவை - அறி யாது தொடின் அச்சத்தால் உயிர் போமபடி நடுக கத்தைப் பெறுதலும் கூடும் எனக் கூததர் ஆற்றுப் படுத்தப்பட்டனர் (மலை. 188-191). கவண்கலலின வேகமான கடிஇடியால் (கடுமையான தாககுதலால) மூங்கில் தண்டு உடைந்தது (அகம். 309:12,13). கார் காலத்தில முழங்கும் உருமினது கடிஇடி போல வாச்சியங்கள ஒலிததன (கலி. 105:23,24).

10. பேய். சோறு இடுகின்ற நெறியினையறிந்த

கடிவாலுவன் - பேய்மடையன்-பின்னிடாத படை வீரர்க்குச் சோறு வழங்கினான் (மது. 36-38).

11. விளக்கமுடைய தாளம் (ஆகுபெயர்). கடி - விளக்க முடைய தாளத்தை - கைக் கொண்டு ஒலிக்கும் வலிய வாயையுடைய எலலரி போன்ற இசைக் கருவி களையும் கூத்தர் கொண்டு வந்தனர் (மலை. 10).

12. வரைவு (எல்லை). கடிகொள் - வரைவினைக் கொணட - இருங்காப்பு (குறும்பு) (கலி. 110:1).

13. பூசை. கடிமரத்தில் - பூசையையுடைய (கடம்பு) மரத்தில் – வேலன் ஆட்டுக் கிடாயைக் கட்டினான் (பரி. 17:3).

**கடிகா – காவற்சோலை.** நம்பிநெடுஞ்செழியன் கடிகா வின்-காவற்சோலையின-பூச்சூடினன் (புறம். 239:2). நெடுஞ்செழியனின் படைவீரர் தம் பழைய பகை வரின நிலததே புகுந்து அவரது கடிகாவை அழித் தனர் (மது. 152, 153). கடிகாவில் விளையாட்டு மகளிர் அணிகள் ஆர்ப்பத் தம்மிலே மயங்கி வண்டு களுக்குக் கெட்டோடினர் (கலி. 92:51-54).

**கடிகை - 1. கண்டசருக்கரை.** அமிர்தாற் செய்தது போன்ற இனிய பாகான கடிகையும் - கண்டசருக் கரையும் - ஊனசோறும் கிழங்கும் மதுரை மக் களுக்கு உணவாகக் கிடைத்தன (மது. 532-535).

2. காம்பு. குறும்படை மழவர், மணி மாறி மாறி ஒலிப்பதும் கடையாணியிட்ட கடிகை – காம்பு- கொண்டதும் கூரிய முனை உடையதுமாய நெடு வேலை உடையவர் (அகம. 35:3,4). நெய்தற் பூப் போலும உருவினையுடைய அழகிதாக விளங்கும் அகனற இலையினையும் மயில் தோகையால் விளக்கமுற்ற கடிகையினையும் மூட்டுவாயமைந்த சுரையினையும் கரிய தணடினையும உடையது வேல் (அகம். 119:11-13).

3. துண்டம். கரும்பின் அடிப்பகுதியில் வெட்டிய கடிகையை - துண்டத்தை - உண்டாற் போன்ற சுவையுடையது தலைவியின வாலெயிறு ஊறிய இனிய நீர் (குறு. 267:2–4).

4. கட்டுவடம். தலைவன் காதலித்தூர்ந்த காமக் குதிரை (பரத்தை) நீலமணியைத் தோலிலே வைத்துத் தைத்துச் செய்த கடிகை - கட்டுவடம் - ஆகிய கழுததிற் கட்டுதலையுடைய வல்லிகையைக் கொண் டது (கலி. 96:10).

**கடிகைநூல் - காப்பு நாண்.** மன்னன் போர் கருதிப் பிரிநது செனறமையால் அரசமாதேவி பொன் வளையல கிடந்து தழும்புபட்ட தன கையில் வலம் புரி வளையலணிநது கடிகை நூல் - காப்பு நாண்- கட்டி ஒப்பனையினறி யிருந்தாள் (நெடு. 141,142).

**கடிநகர் - மணமனை.** நன்னாளில் கடிநகரை - மண மனையை - புனைந்து கடவுளை வழிபட்டு மண முழவுடன் முரசம் ஒலிக்கத் திருமணம் செய்தல் (அகம். 136:5-8). புது மணமகள் உணவு மிக்க கடி நகரில் அடுப்பில் பாலை உலையாக வைத்து நெற் கதிர் கொணர்ந்து மகளிருடன கூடி அவலிடித்தாள் (அகம். 141:14-18).

**கடிப்பகை – வெண்சிறு கடுகு.** நூற்கேள்வி முழுது மறிந்த கூததர் கடிப்பகை - வெண்சிறு கடுகு – அளவும் கொடி முறுக்கு இல்லையாம்படி தீற்றி ஓசையை ஓர்ந்து பார்த்து யாழ் நரம்பினைக் கட்டினர் (மலை. 22-24).

**கடிப்பு - 1. குறுந்தடி.** கடிப்பினால் – குறுந்தடியால் – முரசொலித்தல் (புறம். 158:1;366:1;369:4,5; பதி. 17: 5,7;19:7,8;40:3;41:23;76:3; அகம். 251:9; குறு. 270:3). காற்று கடிப்பாக அமையக் கடல் ஒலித்தாற் போன்று முரசு முழங்கியது (பதி. 68:1). பகைவர் மேல் படைகளை எடுத்தெறியும்படி ஏவிய கடியின் (கடிப்பின்) புடைத்தலால் முரசதிரும் (ஈண்டுக் கடிப்பு கடி எனக் கடைக் குறைந்தது) (பதி. 84:1,2). தமது பறையை முழக்கும் கடிப்போ எனப் பாணர் ஐயுறு மாறு கொன்றைக் கனிகள் காற்றால் பாறைகளில் உதிர்ந்து கிடந்தன (நற். 46:5-8).

2. குழாய். கரடிக் கூட்டம் உருவியுண்ட மிச்சி லாகிய இருப்பைப் பூக்களை எயினமகளிர் கணுக் களுடைய நீண்ட மூங்கிற் கடிப்பில் - குழாயில் - தொகுத்துச் சென்று சீறூர்த் தெருக்களில் விற்றனர் (அகம். 331:1-7).

3. காவல். கடிப்புடை – காவல் பொருந்திய - வியன கர் (நற். 98:8).

4. காதுவளர்க்கும் அணி. மகளிர் கடிப்பு - காது வளர்க்கும் அணி - இட்டுத் தாழ வளர்த்த தம் காதில் கனங்குழை யணிநதனர் (பரி. தி. 1:33).

**கடிமகள் – மணமகள்.** கார்காலத்தில் கொடிகளில் மலர்ந்த முல்லை கடிமகள் - மணமகள் - கூந்தலைப் போல மணநது அங்குள்ள வண்டினத்தை வேற்றி டம் செல்லவொட்டாது தடுக்கும (அகம. 244:4-6).

**கடிமரம் - காவல் மரம்.** நெடுஞ்செழியன் பகைவர் ஊர்தோறும் சோலையிலுள்ள கடிமரங்களை - காவல் மரங்களை - நவியத்தால் வெட்டி நிலை கலங்கச் செய்தான (புறம். 23:8,9). சோழன் குள முற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவன் கருவூரை முற்றுகையிட்டபோது, அவன் வீரர் கருவூர் மன்ன னின் நகர்ப் புறத்துக் காவுதோறும் உள்ள கடி மரங்களை நவியத்தால் வெட்டிய ஓசை கேட்டும்

போருக்கெழாமல அம்மன்னன் கடிமனைக்குள்ளே அடைபட்டுக் கிடநதான் (புறம். 36:7-11). 'நின் நெடுநல் யானைகளுக்கு முன்பு நட்டுள்ள தறிகள் ஆற்றமாட்டாதன வாதலான அவற்றுக்குத் தறிகளாக உதவத் தக்க பகைவர்தம் கடிமரங் களை நீ வெட்டுதலைத் தவிர்க' எனக் காவிரிப் பூம் பட்டினத்துக் காரிக்கண்ணனார் பாண் டியன நன்மாறனுக்குச் சந்து செய்யும் கருத்தின ராய உரைத்தார (புறம். 57: 10,11). இளவெளி மான சிறிது கொடுப்பக் கொள்ளாது பெருஞ் சித்திரனார் குமணனைப் பாடிக் களிறு பெற்று வநது வெளிமானூர்க் கடிமரம் வருந்தக் கட்டினார் (புறம. 162: 5-7; அடிககுறிப்பு). களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரலின தூசிப் படை வலிய களிறு களைப பகைவர் நாட்டிடத்துள்ள கடிமரத்தில் பிணைத்து அவர் நாட்டு நீர்நிலைகளை அழித்தது (பதி. 33:2-5).

2. கட்டுந்தறி. மகண் மறுத்தமையான் மகட்பெற விருமபிய வேந்தன சினக்க அவன் யானைகள் கடிமரம - கட்டுத்தறி-சேராவாய்ப் பொர நின்றன (புறம். 336: 1-4).

3. பூசையுடைய மரம். கடி மரத்தில் - பூசையுடைய (கடமபு) மரத்தில் - வேலன் ஆட்டுக் கிடாயைக் கட்டினான் (பரி. 17:3).

**கடிமனை** – 1. காவலையுடைய கோயில் (அரண்மனை). கிள்ளி வளவன் கருவூரை முற்றுகையிட்ட காலை அவன வீரர் கருவூர் மன்னனின் நகர்ப்புறத்தே யுளள காவுதோறு முள்ள கடிமரத்தை வெட்டிய ஓசை அம்மன்னனின் மதில் சூழ்ந்த கடிமனையில் - காவலையுடைய கோயிலில் - ஒலித்தது (புறம். 36: 7–10).

2. வரைவினையுடைய இல்லறம். தான் பிரிந்து மீள வருமளவும், தலைவி கடிமனை-வரைவினையுடைய இலலறத்தை - காத்தோம்ப வல்லளோ எனத் தலை வன் கேட்டான் (கலி. 24: 9).

**கடிய நெடுவேட்டுவன்** - வள்ளல். இவன் வேடர் தலைவன; தன்னைச் சார்ந்தவருக்கு உதவி புரிநது பகைவரை யழிக்கும் ஆற்றலுடையவன்; கோடை மலைககுத் தலைவன; புறம் 205-ஆம் பாடலில் பெருந்தலைச் சாத்தனார் இவனைப் பாடி யுள்ளார். இப்பாடலின் அடிக்குறிப்பில் இவன் அப் புலவர்க்குப் பரிசில் நீட்டித்தான் எனத் தெரிகிறது.

**கடியலூர் உருத்திரங் கண்ணனார்** - புலவர். கண்ணனார் என்பது இவர் இயறபெயர். கடியலூர் இவரது ஊர்; அது பாண்டிய நாட்டிலுள்ள திருநெல்வேலி மாவட்டத்திலுள்ளது (ப. மு. பக். 203). உருத்திரன் என்பது இவர்தம் தந்தை பெயராகலாம். தொல் காப்பிய மரபியல 74-ஆம் நூற்பாவின் பேராசிரியர் உரையால இவர் அந்தணராகக் கருதப் பெறுவர். பெரும்பாணாற்றுப்படை 402-404 அடிகள் இவர் திருமாலிடத்து மிக்க ஈடுபாடுடையவர் என உணர்த்தும். தொண்டைமான் இளநதிரையனைத் தலைவனாகக் கொண்டு பெருமபாணாற்றுப் படையையும் சோழன கரிகாற் பெருவளத்தானைத் தலைவனாகக் கொண்டு பட்டினப் பாலையையும் பாடியுள்ளார். கரிகாற பெருவளத்தான் இவர் பாடிய பட்டினபபாலையைக் கேட்டு மகிழ்ந்து பதினாறு நூறாயிரம் பொன பரிசளித்தான். இவர் பாடியவை குறுந்தொகையில் ஒன்றும் (352) அகநானூற்றில் ஒன்றும (167) உள்ளன. நானிலத்தின இயல்புகளையும் ஆணடுறைவோரின் பழக்க வழக்கங்களையும் ஒழுகலாறுகளையும் நன் கறிந்து தம் பாடல்களில் புலப்படுத்தியுள்ளார். தலைவனைப் பிரிந்த பொழுதுதான் மாலைக் காலந் துன்பந்தரும் என உணர்ந்தேன் என்னும் தலைவியின் கூற்றால (குறு. 352) இவர் அவளது மனவியல்பை உணர்த்தும் திறன புலனாகும். எயினர் கொள்ளைக்கு அஞ்சி மக்கள் குடிபோய ஊரிலிருந்த கடவுளும புறத்தே போயவிட்டதை (அகம். 167) உணர்த்தும்.

**கடு** - 1. நஞ்சு. அரவு கடு - நஞசு - கரந்திருக்கும் பல லினையுடையது (புறம். 17:38). கடுவுடனே ஒடுங் கிய துளையினையுடைய வெள்ளிய எயிற்றினையும் அழலென உயிர்கதும் அச்சந் தரும கடுநதிறலையும் உடையது பாமபு (முரு. 148-150).

2. கடு மரம். பககமலையில கடு கடு மரம் - செழிதது வளர்நதது (மலை. 14).

**கடுக்கை** – கொன்றை. புதிய ஏரைப பூட்டும் உழவர் கடுக்கை - கொனறை - சூடினா (பதி. 43:16). இடை யர் கொழித்த வெள்ளிய வரகரிசியைக கொத்துகள் நிறைந்த கடுக்கையின் பூநதாது போல வடித்த சோற்றைப் பசுமபாலுடன கூட்டிப பகுததுண்பர் (அகம. 393:10-17). கோவலர் ஆனிரையைக் கொம் பொலியால் திரட்டித் தளாந்த நிலையுடைய கடுககை மர நிழலில தங்கச செயது குழலூதுவர் (அகம். 399:8-11).

**கடுகுபெருந்தேவனார்** - புலவர். பெருந்தேவனாா என் பது இயற்பெயர். கடுகு எனனும் அடைமொழியின் காரணம் புலபபடவிலலை. கடுகுவணிகம் செய்த மையால் இபபெயர் வந்திருக்கலாம் (ப. மு. பக்.204). பாண்டிய நாட்டிலுள்ள கடுகுச் சந்தை என்னும்

ஊரினராகலாம் என்பர் உ. வே. சா (குறுந்தொகை. பாடினோர் வரலாறு, பக். 133). இவர் பாடிய பாடல ஒன்று (255) குறுந்தொகையி லுள்ளது. தலைவன தன கடமைகளை நிறைவேற்றும் பொருட்டுப் பொருள் முயற்சிக்கண் உள்ள பிணிப்பினால் பல் வேறிடங்களுககும் செலவதாக அப்பாடல் கூறும். வையாபுரிப்பிள்ளை பதிப்பு இவரைப் பெருந்தேவ னார் எனறே கருதும்.

**கடுங்கண் - 1. வன்கண்மை.** கடுங்கண்ண - வன்கண் மையுடைய - கொல்களிறு (புறம். 14:1). கடுங்கண் யானை (புறம். 337:15; அகம். 63:4; குறு. 331:4; நற். 108:2). கடாஅஞ் சென்னிய கடுங்கண் யானை (பதி. 25:2). கடுங்கண் வேழம் (மலை. 325). காட்டில் கடுங் கண் மறவர் எழுப்பிய தண்ணுமை ஒலி அருஞ் சுரம் செல்வோரின் நெஞ்சம் நடுக்குற ஒலிக்கும் (அகம். 87:7-9). கடுங்கண் வயப்புலி முழையினினறு வெளிப்போந்து முழங்கியது (அகம். 168:11,12). கடுங்கண் மறவர் தம் பகழிகளைச் செப்பம் செய்ய நடுகல்லில் தேய்ப்பர் (அகம். 297:6,7). தூது சென்ற பார்ப்பானின் கையிலுள்ள மடித்த வெள்ளோலையைப் பொன் என்று கருதிக் கடுங் கண் மழவர் அவனைக் கொனறனர் (அகம். 337: 7-11). சுரநெறியில கடுங்கண் ஆடவராகிய ஆற லைப்போர் அம்பு எய்யும் முயற்சியொடு பதுங்கி யிருக்க வழிப்போக்கர் இன்மையின தம் வறுமை களைவாரைக் காணாது வருந்தினர் (அகம. 365: 7-9).

**2. தறுகண்மை.** கடுங்கண் - தறுகண்மையுடைய - கேழல் (புறம். 168:4;190:6). களங்கொண்டு கனலும் கடுஙகண யானை (புறம. 200:7). புலிக்கணததனன கடுங்கட் சுற்றம் (புறம. 341:7). ஞமலியோடு சென்று காட்டிலுளள முயலகளை வளைத்துப் பிடித்துக் கடுஙகண கானவர் கொள்ளைகொள்வர் (பெரு. 112-116). கடுங்கட் கூளியர் பகைவர் ஊரைச் சுட்டெ ரிததனர் (மது. 691,692). கடுங்கட்பன்றி (அகம. 18:6). கடுங்கட் கோசருககுரியது நியமம் எனனும ஊர் (அகம். 90.12). கடுஙகண மழவர் களவாகிய உழ விறகு ஒடுங்காடு சென்றனர் (அகம். 91.11,12). கடுங் கண் மழவராகிய வெட்சி வீரர் தமமை எதிர்த்த கரந்தையாரை வென்று போக்கி ஆனிரையைக் கைப் பறறி வனபுலத்துயத்தனர் (அகம். 309:2,3). ஆறலைப் போரை அஞசாத கடுங்கண் காளையாகிய தலை வன் முனனே செல்ல அவன்பின் தன் மகள் செல் வாளோ என மகட்போக்கிய தாய் கவன்றாள் (அகம. 321·12,13). பிறைபோன்ற மருபபினையுடைய கடுங்கண் பனறியின இறைச்சியினைத் தின்ற புலி மலைச் சாரலிடத்து முழங்கும் (அகம். 322:10,11). கொல்லிமலையைச் சார்ந்த சிறுகுடியிலுள்ளோர் பசித்தாராயின, கடுங்கண வேழத்தின் கொம்பை விறறு உண்பர் (குறு. 100:3-5). கடுஙகண் மறவர் வமபலரிடம் கொள்ளும் பொருள் இல்லையெனி னும் அவர் துள்ளுதலைக் கண்டு மகிழ்வதற்காக அவர் உயிரைக் கொள்வர் (கலி. 4:3-5). கடுஙகண் புலியடியைப் போல் மலையில வாழையின வளைந்த காயையுடைய குலைகள் தொங்கும் (கலி. 43: 24-27). கடுங்கண் இரும்புலியைக் கொள்ள நிறுத் தின வலையிலே குறுநரி அகப்பட்டது (கலி. 65:23-25).

**3. அஞ்சாமை.** தோணியை யுடைய தமையன் கொண்டு வந்த கடுங்கண் வயமீனகளைச் செல்வத் தங்கையர், விழாச் செய்யும் தெருக்களில் விலை கூறி விற்றனர் (அகம், 320:2-4). கடுங்கட்காளை யாகிய தலைவனுடன தலைவி நெடுநதேரேறிச் சுரங்கடந்தாள் (ஐங. 385:1-3).

**கடுங்கால் - சுழற்காற்று.** கடுங்கால் - சுழற்காற்று - சுற்றியடிக்கும் பெரும் பரப்பினை யுடைய விசும் பிடத்தே தோய்ந்து திகழும் வெணகொற்றக் குடை யின் அருட்சிறப்பினை முரசறைவோர் நுவலுதற் குக் காரணமாய வேந்தன் இமையவரம்பன நெடுஞ் சேரலாதன் (பதி. 17:12-14). பலயானைச் செல்கெழு குட்டுவனின் பகைவர் நாடுகள் அவனால் தீயிடப பட்ட காலததில் கடுங்கால் சுழன்றடித்தலால் சுடர் உருத்தெழுநது பரவிய இடங்களையுடைய பாழவெளிகளாக நிலைபெற்றன (பதி. 25:6-9). கடலில் அலைகளை இடையே பிளநதவாறு மரக் கலம் கடுங்காலோடு கரைசேர அதன பாய மரத்தை எடுதது நிறுத்துதல (மது. 76-79). கடுங் காற்று காணக.

**கடுங்காற்று - சுழற்காற்று.** பாய் கட்டின வலிய கயிற்றை அறுத்துப் பாயையும் கிழித்துப் பாய் மரத்தையும் அடியிலே முறித்துக் கடுங்காற்று - சுழற்காற்று - நாறறிசையிலும் சேர வீசுதலினால் கடலிடத்து நெடுஞ்சுழியில் மரக்கலம் சிககிச் சுழன் றது (மது. 375-379). நெடுமபெருங்குனறத்தில கடுங் காற்றுச் சுழன்றது (அகம. 258:6). உழவர் களததில போரினைப் பரப்பிக் கடாவிட்டு உதிர்தத நெல லைக் கடுங்காறறில தூற்றுகையினால் பறநது போன துரும்புகள் பக்கததே யுள்ள உப்பளப் பாத்திகளில் பரவின (அகம. 366:2-5). கடுங்கால் காணக.

**கடுஞ்சூல் - 1. முதற்சூல்.** கடுஞ்சூல் முண்டகம் -

முதற்சூலையுடைய கழிமுள்ளி - ஒளியுடைய நீல மணி போலப் பூத்தது (சிறு. 148). கடுஞ்சூல் மந்தி, பரிக்கோலை யுடையார் நெகிழ்ந்த செவ்வியைப் பார்த்து யானைக்கிட்ட நெய்ம்மிதி கவளத்தைக் கவர்ந்து சென்று சோலையில் உண்ணும் (பெரு. 393-395). கடுஞ்சூல் மகளிர் பூசைக்கு வேண்டும் பொருள்களுடன் மயில்போல மெல்ல நடந்து திருக்கோயிலுக்குச் சென்று இறைவனை வணங்கினர் (மது. 607-609). களிறு தன் தடக்கையால் தழுவவும் கானத்திலுள்ள ஆளிக்கு அஞ்சிக் கடுஞ்சூல் மடப்பிடி நடுங்கும் (அகம். 78:1-6). மழை தவழ் சிலம்பில் கடுஞ்சூல் ஈன்ற மடப்பிடி தன் யாக்கையினை விருப்பம் மிக்க களிறு தடவ வாழையஞ் சிலம்பில் துயிலும் (அகம். 328:11-14). புளிச்சுவை வேட்கையுடைய கடுஞ்சூல் மகளிர், பன்னிரண்டு திங்கள் நிறைந்த கருப்பத்தைத் தாங்கி நடக்கவியலாது தளர்ந்தது போல் மேகம் நீரைச் சுமந்து குன்றின்மேல் ஏறவியலாது தளர்ந்தது (குறு. 287: 3-8). பனையின் மடலில் கட்டிய கூட்டிலிருந்து கொண்டு அன்றிற் சேவலைக் கடுஞ்சூல் வயவுப் பெடை பானாட் கங்குலில் அழைக்கும் (குறு. 301:1-4). தலைவி, சுற்றத்தார் ஓம்புகின்ற கடுஞ்சூலுடையவளாய் மகவீன்று குடிக்கு உதவினாள் (நற். 370:1,2). மூங்கில் உயர்ந்த பக்கமலையில் கடுஞ்சூல் வயப்பிடி கன்றையீன்று வருந்த அதன் புனிற்று நிலை தீர்த்தற் பொருட்டுக் களிறு முற்றிய தினைக் கதிரைக் கவர்ந்தது (நற். 393:1-4). தலைவியின் கடுஞ்சூற் சிறுவனின் முறுவலினும் தலைவியைப் பிரிந்து செய்யும் பொருள் இனிமை தருமோ எனத் தோழி பொருள்வயிற் பிரியக் கருதும் தலைவனைக் கேட்டாள் (ஐங். 309:3-5). நின் கடுஞ்சூல் மகள் தான் விரும்பிய காதலனுடன் செல்லுதலைக் காட்டகத்தே கண்டோம் எனத் தலைவியின் தாய்க்கு இடைச்சுரத்துக் கண்டோர் கூறினர் (ஐங். 386). யானை, தான் விரும்பின பிடிக்கு உண்டான கடுஞ்சூலினாலுண்டாய வயா நோய்க்கு இனிய கருப்பங்கோலை முறித்துக் கொடுக்கும் (கலி. 40:26-28). கடுஞ்சூலில் கன்றீன்ற பசு விடிந்த போதும் மேயப் போகாமல் வீட்டின் அண்மையில் தொழுவில் கட்டப்பட்ட கன்றைச் சூழ்ந்து நிற்கும் (கலி. 110: 12-14),

**2. நிறைசூல்.** மலையை அடுத்த சுரநெறியில், கடுஞ்சூல் - நிறைந்த சூலினையுடைய - இளம்பிடியைத் தழுவிக் கிடந்த களிறு தன்மீது கன்று ஏறி யிறங்கப் பள்ளி கொண்டிருக்கும் (அகம். 197: 13-15). புன்னைக் கிளையிலிருக்கும் கடுஞ்சூலையுடைய வெண்குருகு அலையோசைக்கு வெருவும் (நற். 31: 10,11). மணற்பரப்பின் ஒருபால் கடுஞ்சூலுடன் தங்கிய பெடைக்கு அயிரை மீனைத் தேர்ந்தெடுக்க நீர்க்காக்கைச் சேவல் கழியிடத்துள்ள குட்டத்தைத் துழாவும் (நற். 272:1-6).

**கடுஞ்சொல் – வன்சொல்.** நள்ளிரவில் மூதூரின் அல்லங்காடியும் ஏனைய தெருவும் ஓய்ந்து உறங்கினாலும் வன்மொழி தேர்ந்து கடுஞ்சொற்களால் நம்மீது வையும் அன்னை உறங்கமாட்டாள் என்று தலைமகள் தோழிக்குக் கூறினாள் (அகம். 122.1-4). மனைவாசலில் வந்து நின்று தன்னைக் குறித்துத் தன் பரத்தை சொல்லும் கடுஞ்சொற்களைத் தலைவன் அறியாதவன் போல இருந்து தலைவியை நயந்தான் (கலி. 97:1).

**கடுந்தொடைக் காவினார் - புலவர்.** வழக்கவொழுக்கத்தாற் பெயர் பெற்றவர் என்று வையாபுரிப் பிள்ளையின் சங்க இலக்கியப் பதிப்புக் கூறும். கடுந்தொடைக்கா என்ற ஊரினர் (ப. மு. பக். 204). எனவும் கூரம்புகளைக் கட்டி இருமுனையிலும் தொங்கவிட்டுத் தூக்கிச் செல்லும் காவடியைக் கடுந்தொடைக்கா என்று புனைந்துரைத்துப் பெயர் பெற்றவராயிருக்கலாம் (ச. சி. பெ. பக். 98) எனவும் கருதப் பெறுகிறார். காவினார் என்பதைப் புலவர் பெயராகக் கொண்டு அதனைப் பூங்காவனம் என்ற இக்காலத்து வழக்கிலுள்ள சோலைத் தெய்வத்தின் முற்காலப் பெயராக இருக்கலாம் என்றும் கடுந்தொடை என்ற சொற்றொடரைப் பாடலில் பயன்படுத்திய அப்புலவர் கடுந்தொடைக் காவினார் எனப்பட்டார் என்றும் வேறுவகைப் பெயர் விளக்கத்தையும் இவர் பெறுவர் (ச. சி. பெ. பக். 98). இவர் பாடலாக அகநானூறு 109 - ஆம் பாடல் மட்டுமே உள்ளது. பொருள்வயிற் பிரியும் தலைவன் இடைச்சுரத்தே தலைவியை நினைந்து மீளக் கருதிய தன்னெஞ்சிற்குச் சொல்வதாக வரும் அப்பாடலில் தலைவியின் நலமும் இடைச்சுரக் கொடுமையும் புலவரால் நன்கு புனையப் பெறுகின்றன.

**கடுந்தோட் கரவீரனார் - புலவர்.** கரவீரம் என்பது அலரியைக் குறிக்கும். அவ்வகையில் அலரிப் பூச்சூடும் சிவனுக்குக் கரவீரன் என்பதும் ஒரு பெயர். கரவீரம் எனும் பெயரில் திருவாரூருக்கருகில் சிவத் தலமொன்றும் உள்ளது. எனவே, சிவன் பெயராலோ, சிவத்தலப் பெயராலோ இப்புலவரும் கரவீரன் எனப் பெயர் பெற்றிருக்கலாம் என்பார் உ. வே. சா. (குறுந்தொகை. பாடினோர் வரலாறு பக். 132). கடிய தோளையுடைய கரவீரனார் என்பது கொண்டு இவரை உறுப்பினாற் பெயர்

பெற்றவர் வரிசையில் சேர்ப்பர் வையாபுரிப் பிள்ளை. குறுந்தொகையில் உள்ள 69-ஆம் பாடலை இவர் பாடியுள்ளார். ஆண்குரங்கு இறந்துவிட்ட நிலையில் கைம்மைத் துயருக்கு ஆற்றாத பெண்குரங்கு மரமேறுதலையும் உணவு தேடுதலையும் அறியாத தன் குட்டியை இனத்தோடே ஒப்படைத்துத் தான் உயர்ந்த மலையிலேறிப் பாய்ந்து உயிரை மாய்த்துக் கொள்வதை இவர் புனைந்துள்ளார். அவ்வாறு புனைந்து 'நீ இரவுக் குறி வரும்போது உனக்கு ஏதம் நேருமாயின் உன் காதலியும் உயிர் வாழாள்' என்று தோழி தலைவனுக்கு உள்ளுறையில் உணர்த்தியுள்ளமை நயம் வாய்ந்ததாகும்.

**கடுப்பு - 1. விறுவிறுப்பு.** அதியமான் பொகுட்டெழினி தன்னை வாழ்த்திப் பாடிய கிணைப் பொருநனுக்குத் தேளினது நஞ்சுக் கடுப்பை - விறுவிறுப்பை - ஒத்த நாட்பட்ட தேறலைப் பொற்கலத்திலே உண்ணக் கொடுத்தான் (புறம். 392:16-18).

**2. விரைவு.** காற்றின் கடுப்பை- விரைவை - ஒத்த குதிரைகள் கடுகிச் செல்லும் (அகம். 224:5).

**3. வெகுட்சி.** பாம்பினது கடுப்பினை–வெகுட்சியை- ஒத்த தன்மையது தோப்பிக்கள் (அகம். 348: 6,7). குற்றமாகிய மறமுடையாரிடத்துத் திருமால் கடுநவை உண்டாக வருத்தும் கடுப்பினை உடையவர் (பரி. 4:49-51).

**கடுப்புடைப்பறவை - குளவி.** கொடுக்கினால் கொட்டப்பட்டவருக்கு நஞ்சினால் தரும் கடுப்புடைய பறவையினம் - குளவியினம் - போன்று கழனிகளில் பசுமையற முற்றிய பெருஞ்செந்நெல் தோன்றியது (பெரு. 228-230).

**கடும்பகல் - நண்பகல்.** சோழன் குளமுற்றத்துத்துஞ்சிய கிள்ளி வளவன் கடும் பகற் பொழுதில் தன் அரச இருக்கையிலிருந்து பரிசிலர்க்குத் தேர் வழங்குவன் (புறம். 69:17,18). மழைபொழிந்த நள்ளிரவிலே நீ தனியையாய்க் குறியிடத்தே வந்தமை நினைந்து தலைவி கண்கலங்கி அழுவதனால் இனி நீ கடும் பகலில் வருதல் வேண்டும் என்று தோழி தலைவனிடம் கூறினாள் (அகம். 182:10-13). 'மாலைக் காலமே, நீ எப்பொழுதும் வரும்பொழுதிலேயே வருவாய் போலப் பிறர்க்குக் காட்டி இப்பொழுது கடும் பகற் பொழுதிலே வருகின்றாய்' என்று பிரிவாற்றாத தலைவி அம்மாலைப் பொழுதோடு நொந்து கூறினாள் (ஐங். 183:3,4). 'குறளனே, கடும் பகலிலே வந்து என் கையைப் பிடித்து நின் இல்லத்திற்கு வருமாறு அழைக்க யான் நினக்கு உரிமைப் பெண்டோ' என அடியோர் பாங்கின் தலைவியான கூனி அத்தகு தலைவனை வினவினாள் (கலி. 94:14-16). 'கடும் பகல் ஞாயிறே, நீ உன் எல்லாக் கதிர்களையும் பரப்பி இப்பகற் பொழுதோடே போகாது நிற்றலை யான் விரும்புகின்றேன்' என்று தலைவனது பிரிவின்கண் தலைவி மாலைப் பொழுதுக் கஞ்சிக் கூறினாள் (கலி. 145: 26-30).

**கடும்பு - சுற்றம்.** யானைக்கட் சேய் மாந்தரஞ்சேரலிரும்பொறை மாற்றரசர் பணிந்து தந்த திறைப் பொருளால் தம்மைச் சேர்ந்தவரின் கடும்பை- சுற்றத்தை-காத்தான் (புறம். 22:26-29). நலங்கிள்ளி தன்னைப் பாடிவரும் பரிசின் மாக்களுடைய கடும்பின் அடுகலத்தை நிறைக்கும் உணவுப் பொருட்கு விலையாகச் சேரர்க்குரிய வஞ்சிமா நகரையும் தருவான் (புறம். 32:1,2). நலங்கிள்ளி பாசறைக்கண் இருந்த காலத்தும் இலையிட்டு முல்லை யரும்புகளால் தொடுத்த பூப்பந்து போன்ற தசையோடு கூடிய பெருஞ்சோற்றுத் திரளையைப் பாண் கடும்பு உண்ண வழங்குவான் (புறம். 33:11-14). உடும்புரித்தாற் போன்ற எலும்பெழுந்த விலாப்புடையை யுடைய கடும்பின் கடும் பசி தீர்ப்பாரைக் காணாமையின் சிலரால் மட்டும் அறியப்படும் யாழைப் பாணன் வெறுத்துக் கூறினான் (புறம். 68:1-4). 'நாஞ்சில் மலைத் தலைவனே, வேண்டியவாறே நினக்கு உவந்தளிக்கும் வேந்தன் பொருட்டு நீ சாதல் அஞ்சாய்; ஒருநாள் போர் வரின் பசித்துன்பத்தையுடைய என் கடும்பு வருந்துதலு முண்டு; ஆதலின் பரிசிலை இன்னே தருவாயாக' என நாஞ்சில் வள்ளுவனை மருதனிள நாகனார் வேண்டினார் (புறம். 139:11-15). வல்வில் ஓரியால் வறுமை நீங்கிப் பெருஞ்செல்வம் பெற்ற தம் கிணையுளங் கடும்பு (கூத்தர் சுற்றம்) ஆடலும் பாடலும் மறந்ததாக வன்பரணர் சுட்டுவர் (புறம். 153:4-12). குமணன் 'பாடுநர் கடும்பு கேடின்றாக' எனக் கூறி, அரிதுபெறு பொலங்கலத்தை எளிதின் வழங்கினான் (புறம். 160: 10-12). குமணனிடம் பெற்ற பரிசிலை மனையோடுக் கொடுத்து 'நம் கடும்பின் கடும்பசி தீரக் குறியெதிர்ப்பை நல்கியோர்க்கும் பிறர்க்கும் வழங்குவாயாக' எனப் பெருஞ்சித்திரனார் கூறினார் (புறம். 163:3-7) காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக் கண்ணனார், பிட்டங் கொற்றனிடம் 'பெரும, நின்னைக் காணும் செவ்வி அரிது; என் கடும்பின திடும்பை பெரிது; ஆதலால் இன்னே பரிசில் தருவாயாக' என வேண்டினார் (புறம். 169:6-8). பிட்டங் கொற்றன் முத்துக்களை விறலி

யர்க்கு ஈந்து நார்பிழிக் கொண்ட தேறலைப் பாண் கடும்புக்கு அளித்தான் (புறம். 170:11-13). சிறுகுடிகிழான் பண்ணனிடம் பரிசில் பெற்று வரும் பாணரிடம் பரிசில் பெற விரும்பும் பாணன், 'என் கடும்பினது இடும்பை காண்மின்; பசிப்பிணி மருத்துவனாகிய பண்ணனின் இல்லம் அணித்தோ, சேய்த்தோ கூறுமின்' என வேண்டினான் (புறம். 173:2,11-12). பண்ணன் வல்லார் என்னும் ஊரி லுள்ளான்; நின் உணணா வறுங்கடும்பு உய்தல் வேண்டின், விரைந்து அவனிடம் செல்வாயாக' எனப் பாணனிடம் சோணாட்டு முகையலூர் சிறுகருந் தும்பியார் கூறினார் (புறம். 181:6 - 10). கடலிடத்துச் சென்ற முகில் நீரின்றிப் பெயராத வாறு போலக் கடிய நெடுவேட்டுவனிடம் சென்ற பரிசிலர் கடும்பு தேரும களிறும் பெறாமல் மீளாது (புறம். 205:11-14). கரிகாற் பெருவளத்தான் பாண் சுற்றமாய கடும்பினைப் புரந்தான் (புறம். 224: 3). வெளிமான் இறந்துபட்டமையால், அவனு டைய வளை கழிக்கப்பட்ட உரிமை மகளிரைப் போலப பாடுநர் கடும்பும் பழைய அழகிழந்து ஒளிமழுங்கியது (புறம். 238:5-7). கனறொடு கறவை தந்து பகைவரைப் புறங்கண்டு பட்ட நெடுந் தகைக்கு நடுகல் அமைத்தமை அறியாது பாணரின் கடும்பு இனறும் வருமோ என இளம்பொன் வாணிகனார் வருந்தினார் (புறம். 264.4-7). நட் பெதிர்ந்தோர்க்கு உதவுபவன் நாஞ்சில வள்ளுவன் ஆதலின இந்நிலம் வறுமையுற்று வருந்தும் காலத் தும மகிழும தன் கடும்பு வருந்தாது எனக் கரு வூர்க் கதப்பிள்ளை கூறுவர் (புறம். 380:11-16). இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன பகைவீரர் இறந்துபடவும் தனககுரிய இடத்தைக் கவர்ந்த அமைசசர் முதலிய கடும்புடைய பகையரசர் நடுங் கவும் போர் செய்து, அவரின கடும்பினைத் தடிந் தான் (பதி. 12:1-3). தொண்டைமான் இளந்திரை யனுடைய பாணச் சாதியேம் என்று எயிற்றியரி டம் கூறுவீராயின், நீவிர் தெய்வங்களுககுச சேர இட்டுவைத்த பலிபோலப் புழுக்கலையும் வாடு னையும் நும் வாடிய கடும்புடன பதமமிகப் பெறு குவீர்' எனப் பெரும் பாணர் ஆற்றுப்படுத்தப் பெற்றனர் (பெரு. 100-105). சேரனின நாளோ லக்க இருக்கையில் கொடும்பறைக் கோடியர் அவ னைக் கடும்புடன் வாழ்த்துவர் (மது. 523-525). உயர் குலத்திற் பிறந்த உயர்ந்தோர் தம் கடும்பு டன் உண்ணப் பைநநிணம் ஒழுகிய நெய்ம்மலி அடிசிலை விருந்திட்டுப் பின் எஞ்சியதைத் தலைவி இடத் தலைவன் உண்ணுதல் இல்லறத்திற்குரிய தாம் (குறி. 204-207). கானவர் குடியிருப்பில் தங்கி, இளைப்பாறிப் பூங்கொத்துக்களைக் கடும்பொடு சூடி, அசோகமர முடைய செவ்விய வழியைக் கடந்து சிற்றூர் செல்லுமாறு கூத்தர் ஆற்றுப் படுத்தப் பெறுகிறார் (மலை. 158-161). 'செல்லும் நெறி மயங்கி நீவிர் அல்லலுறுமபோது ஓரிடத்தில் குழுமி இசைக் கருவிகளை இயககினால் அவ் வோசை கேட்டு ஆணடுக காவல புரியும கானவர் விரைந்து வந்து இனிய பழங்களையும் நறிய மலர் களையும் தந்து செம்மையான நெறியில் அழைத் துச் செல்வராதலால நீவிர் நும் இசைபயில் கடும் புடன் இனபுறுவீர்' எனக் கூத்தர் ஆற்றுப்படுத்தப் படுகின்றனர் (மலை. 275-286). 'நீவிர் மலையின கண் ஏகும்போது பஞ்சி போலப் பரந்திருக்கும முகிற்கூட்டம் நீர்த்துளிகளைத் தூவும் ஆதலின திசை தெரியாத விரைந்து செல்லும் கடுமபுடன் காவிக் கொண்ட நும வாச்சியங்கள் நனைநது தொய்படாமல் கிணறுகள் போன்ற முழைஞ்சுக ளிடத்தே புகுமின்' எனக் கூத்தர் அறிவுறுத்தப் பெறுகின்றனர் (மலை. 361-366). நனனன் உண்ணு தற்கும் ஏற்ற உணவாகும என்று கண்டோர் மரு ளும்படியான முளளை நீக்கி வெள்ளிய தடிகளைக் கொண்டாககிய வெண்சோற்றைக் களமர் இட, நின் கடும்புடன் அருந்தி உழவரோசையுடன கூடும படி நல்ல யாழில் மருதப்பண் வாசித்து அங்கு இளைப பாறிச் செல்வீர் எனக் கூத்தரை ஆற்றுப்படுத் தினர் (மலை. 465-470). கான்யாற்று உயர்கரையில கலைமான் ஆட்டு வருடையின் கடும்பொடு தாவிக் குதிக்கும் (நற. 119:6,7). கடுமபு சூழ ஓமபுகினற தலைச் சூலுடைய தலைவி மகவீனறு குடிககு உதவிபுரிநதாள் (நற். 370.2). தம் அறிவு மயகக மின்றி மெய்யுணாவு பெறுக எனக் கீரந்தையார் திருமாலைத் தலையுற வணங்கிப பலமுறை ஏத்தி வாழத்திக் கடுமபொடு பரவுகினறார் (பரி. 2.72-76).

**கடுமா** - 1. குதிரை. கடுமாவினை - குதிரையினை - விரையச் செலுததுவதறகாகக காலில இடபபெற்ற பரிவடிம்பு எனனும அணியுடையவன சோழன செருப்பாழி யெறிநத இளஞ்சேட் சென்னி (புறம். 378:4,5). களிறுகள் பரநது செல்லவும் கடுமா தம் மேலுள்ள மறவரால அடககிச் செலுத்தப பெறவும் தேர்கள் சுழனறு திரியவும் பகைப்படை வருதல் (பதி: 49:4-6,81:6-8). 'நம் பிரிவுத் துன்பத்தினால் தலைவியின மனச்சுழற்சி நீங்க மாலைக் காலம் வருதற்குள் காற்றின் விரைவினையுடைய கடுமாக் களைத் தூண்டிச் செலுத்துவாயாக' எனறு மீளுந் தலைவன பாகனிடம் கூறினான் (குறு. 250:3-6). கடுமா பூட்டப்பட்ட நெடுந்தேரின சக்கரம் ஏறிய நெய்தல் மலரைப் போலத் தலைவனைப் பிரிந்த

தலைவி வருந்தினாள் (குறு. 336:4-6). மணிகள் பிணைத்த மாலையை யணிந்த கடுமாக்கள் பூட்டப் பெற்ற நெடிய தேரினனான சேர்ப்பன் பகற் பொழுதிலே பலரும் காணத் தலைவியின் சிறுகுடி வந்தனன் (நற். 91:9-12). இயல்பிலேயே கடுகிச் செல்லும் கடுமாவைப் பின்னும் விரையச் செலுத் தும் தாற்றுக் கோல் கொடுமை யுடையது (கலி. 50: 19,20). வையையில் புதுப்புனல் வரவு கேட்ட மதுரை நகர ஆடவருட் சிலர், கடுமாக்களின் மேலேறி விரைந்து புனலணி காணச் சென்றனர் (பரி. 12:28).

2. யானை. உலகம் பொதுவாதலன்றித் தமக்கே யுரித்தாக ஆளும் அரசருக்கும் இடையாமத்திலும் நண்பகலிலும் துயிலானாய் அவ்வரசருடைய கடு மாவை - யானையை - காக்கும் பாகனுக்கும் உண் ணப்படும் பொருள் நாழி; உடுக்கப்படும் உடை இரண்டே (புறம். 189:1-5). தலைவன் மலைப் பக்கத்தில் வழிப்போவார் யாருமில்லாத நீர்மிக்க சிறுநெறியிலே கடுமா இயங்குதலை யறிந்தும் நள்ளிரவில் வருவது குறித்துத் தோழி வருந்தினாள் (கடுமா - கொடிய சிங்கம் முதலிய விலங்குகள் என்பர் பி.நா). (நற். 257:8-10). 'நாடனே, எம்மைக் காண நடு நாளாகிய இரவிலும் வருகின்றாய்; இவ்வாறு வரும் நின்னைக் கடுமா தாக்குமாயின் அதன் விளைவை யான் அறியேன்' என்று தோழி தலை வனுக்கு ஆற்றருமை கூறி இரவுக்குறி மறுத்தாள் (ஐங். 296:3,4). அருவிகள் அடித்து வரும் பலவகை மலர்களை அலைகளால் தள்ளிக் கொண்டு சுருங் கையின் நடுவழியிலே வரும் புனலை மதுரை மதில் சொரியும் பொழுது, அப்புனல் கடுமாவாகிய களிறுகள் கையைத் தூக்கி விடும் நீரை ஒத்தது (பரி. 20:98-107).

**கடுமா மறவர் - யானை வீரர்.** பகைவரது யானைப் படை வரிசை அழியுமாறு வலிமையினால் அம் பெறிந்த கறையடிக் கழற்காலுடைய கடுமா மறவர் – யானை வீரர் - அம்புதொடுத்தலை மறக் கும்படி போரின்றி நாடு காவலை இனிது செய் தான் (பதி. 28:1-5).

**கடுமான் - குதிரை.** 'கடுமான் கைவண் தோன்றல்' என மாவளத்தான் சுட்டப் பெறுதல் (புறம். 43: 11,12) 'களங்கொள் யானைக் கடுமான் பொறை யன்' என்று மாந்தரஞ்சேரலிரும்பொறையைக் குறிப்பிடல் (புறம். 53:5) சேரமான் குட்டுவன் கோதையைக் 'கடுமான் கோதை' எனல் (புறம். 54: 8). கபிலர் பேகனைக் 'கடுமான் பேக' என விளித் தல் (புறம். 143:6). இளவெளிமானைக் 'கடுமான் தோன்றல்' எனப் பெருஞ்சித்திரனார் சுட்டல் (புறம். 162:7) ஏனாதித் திருக்கிள்ளியைக் 'கழல் புனை திருந்தடிக் கடுமான் கிள்ளி' என மதுரைக் குமரனார் கூறுவர் (புறம். 167: 10). 'கடுமான் கொற்ற' என்பது பிட்டங் கொற்றனைக் குறித்த விளி (புறம். 168:7). பாண்டியன் இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறன் 'கடுமான் மாற' என விளிக்கப் பெற்றான் (புறம். 198:27). 'கடுமான் தோன்றல் நெடுமானஞ்சி' என்பது ஔவையார் கூற்று (புறம். 296:6). 'கடுமான் தோன்றல்' என ஒரு தலைவன் சுட்டப் பெறுதல் (புறம். 265:5). மகள் மறுக்கப்பட்ட கடுமான் வேந்தர் அவள் தம ரொடு போர் குறித்துக் காலைப் பொழுதிலே அவள் ஊரின் நெடுநிலை வாயில் முன் சுற்றித் திரிந்தனர் (புறம். 350: 5,6). 'கடுமான் தோன்றல்' என நலங்கிள்ளியை விளித்தல் (புறம். 382: 17). 'கடு மான் திரையன்' எனத் தொண்டைமானிளந் திரையனைக் குறிப்பிடல் (பெரு. வெ.). கடுமான் பூட்டப் பெற்ற தேரின் ஒலி கேட்டால் முல்லை வழியில் கலைமானுடன் பிணை விரும்பிக் கூடும் புணர்ச்சி ஒழியு மாகலின், குதிரையை மெல்ல நடத்துவாயாக என்று பாகனிடம் வினைமுற்றி மீளுந் தலைவன் கூறினான் (அகம். 134: 6-14). புல்லி என்னும் கள்வர் தலைவன் 'கடுமான் புல்லி' எனக் குறிப்பிடப் பெறுதல் (நற். 14:11). கடற் கரைச் சோலையிலுள்ள புதுமலரைத் தீண்டிய பூ மணம் வீசும் நல்ல நிறம் பொருந்திய பிடரிமயிரை யுடைய கடுமான்களைப் பூண்ட நெடுந்தேரைக் கடவி, நடு இரவில் வரும் கொண்கனொடு யான் செல்லுமாறு உடன்பட்டேன் என்று தலைவி தோழியிடம் கூறினாள் (நற். 149: 5-9). 'கடுமான் கிள்ளி' எனச் சோழன் குறிக்கப் பெறுதல் (ஐங். 78:1). கடுமான்கள் பூட்டப்பெற்ற தேரைக் கடவி வரும் வெம்மை மிக்க நெடுவழி அரிதாயிருந்தும் உன்னிடத்து அவாவுறுகின்ற என் நெஞ்சம் உன் தழுவலை மிக விரும்பியதால் எளிதாயமைந்தது என்று தலைவன் தலைவியிடம் கூறினான் (ஐங். 360.)

**கடுவளி – சூறாவளி.** நெடுவேள் நிலைபெற்ற திருச் செந்தூரின் அகன்ற கடற்றுறைக்கண் கடுவளி - சூறாவளி - குவித்த எக்கரிலுள்ள மணலினும் பல காலம் வாழ்கவெனப் பாண்டியன் இலவந்திகைப் பள்ளித்துஞ்சிய நன்மாறனை மதுரை மருதனிள நாகனார் வாழ்த்தினார் (புறம். 55:18-21). முருங் கையின் வெண்பூக்களைச் சூரலங் கடுவளி வீசுதலி னால் அப்பூக்கள் உடைந்த திரையின் நுரைக ளைப் போல எங்கும் பரவிக் காடு கடலின் கரை

யகம் போல் தோன்றியது (அகம். 1:16-19). மூங்கிற் காட்டில் உண்டான தீ, கடுவளியால் மிக்கெழுந்து மலைப்பக்கம் பரவுதலால் மூங்கிலின கணுக்கள் வெடிக்கும் ஒலி கலைமான் கூட்டத்தை விரட்டியது (அகம். 47:4-7). வெங்கடுவளி அலைத்தலால் புள் அசையும் மரத்தை விட்டொழிதல் போல என் உயிர் பிரிவால் வருந்தி உடலைத் துறக்கும் பொழுது இதுவோ எனப் பிரிவிடை ஆற்றாத தலைவி தோழியிடம் வருந்திக் கூறினாள் (அகம். 71: 16-18). பாலைவழிச் செல்லும் வணிகக் கூட்டத்தாரின் சோறு பொதிந்த வெள்ளிய பனை ஓலையாலாய குடையினைக் கடுவளி தூக்குதலான் எழுந்த ஒலியினைத் தம் துணையினது குரலென எண்ணி முசுக்கலை அதனை அழைக்கும் (அகம். 121: 12-15). கடுவளி எடுத்தலால் சிதறிய செம்முருக்க மலர் பரவிய பெரியகல், காட்டில் அழலால் மூடப்பெற்ற யானை போலத் தோன்றும் (அகம். 223:5-7). கடுவளி எடுத்த கம்பு ஒழிந்த தேக்கிலைகள் பருந்தினம் பறந்தது போன்று விசும்பிடம் மறைய மேலே பரவிப் பின் ஒருசேர விழுந்து பாலைவழிச் செல்வோர் சுவடறியாது மயங்குமாறு கவர்த்த நெறிகளை மறைக்கும் (அகம். 299: 5-9). கடுவளி உதிர்த்த நெல்லிக்காய் கற்களையுடைய நெறிகளில் பொற்காசு போல அழகுறப் பரவிக் கிடக்கும் (அகம். 363: 6-8). வெந்திறல் கடுவளி சீறி வீசுதலால் மலையுடை அருஞ்சுரத்தில் வாகை மரத்தின் கிளைகளிலுள்ள வளைந்த நெற்றுகள் ஒலிக்கும் (குறு. 39: 1-3).

**கடுவன்** ஆண்குரங்கு முதிர மலையில் பலாவின் முட்புற முதுகனி பெற்ற கடுவன் தன் துய்த்தலை மந்தியைக் கையாற் குறிசெய்து அழைக்கும் (புறம். 158: 23-25). விச்சிக்கோனின் மலையின்கண் பலாவினது பழத்தைக் கவர்ந்துண்ட கருவிரற் கடுவன் செம்முகமந்தியொடு பொலிந்து பக்க மலையிலுள்ள மூங்கிலிடத்துத் துஞ்சும் (புறம். 200: 1-5). நன்னனுடைய நவிர மலையில் கூத்தருடைய பிள்ளையையொத்த கடுவன் நெடிய மூங்கிலின் கவடுகளிலே பாய்ந்து ஆடும் (மலை. 236,237). வாழைக்கனியாலும் பலாச்சுளையாலும் நெடிய சுனையில் விளைந்த தேறலை நீரென்று கருதி அறியாமல் உண்ட கடுவன் பக்கத்ததாகிய சந்தனமரத்தில் ஏறமாட்டாது நறிய பூக்களாலாகிய படுக்கையிற் களிப்புற்று உறங்கும் (அகம். 2: 1-7). விறலியின் பின்செலலும் முழவன் போலப் பாறையில் ஆடுமயில் முன்னதாகக் கல்லாச் கடுவன் பெரிய பலாப்பழத்தைத் தழுவிக் கொண்டு தன் இனிய துணையை அழைக்கும் (அகம். 352: 1-7). நெடும்பெருங் குன்றில் பலாப்பழத்தினைக் கவர்ந்த கல்லாமந்தி கடுவனோடு குதித்தாடும் (அகம். 378: 20-22). தேமாவின் கனியை அருந்தும் மலையிலாடும் குட்டியின் தந்தையாகிய கடுவனும் கொழுநனாகிய தலைவனை அறியும் எனத் தோழி அறத்தொடுநிற்குங்கால் கூறினாள் (குறு. 26: 5-8) மலையில் கடுவன் மரத்தின் மீதிருந்து முதிர்ந்த இனிய பழங்களை உதிர்க்கக் குட்டிகளை யுடைய மந்தி ஏற்பனவற்றை எடுத்துண்ணும் (குறு. 278: 4-7). முதலிலே முற்றிய பெரிய தினைக் கதிர்களைக் கொய்து கொண்ட மந்தி கல்லாக் கடுவனொடு மலைமீதேறி அங்கை நிறையக் கயக்கித் தூய்மை செய்து கவுள் நிறைய உண்ணும் (நற். 22: 1-5). கடுவனால் முயங்கப் பெற்ற செம்முகமந்தி புணர்ச்சி வேறுபாட்டால் உண்டான குறியைத் தன்பெரிய சுற்றம் அறியுமென்று அஞ்சி வேங்கையின் கிளை மீதிருந்து ஆழமான சுனைநீரை நோக்கித் தலை கவிழ்ந்து புணர்ச்சியாலே குலைந்த முச்சி மயிரைத் திருத்தும் (நற். 151:5-11). முள்ளெயிற்றுக் கருமுக மந்தி, தன் சிறிய குட்டிகளுடன் கல்லாக் கடுவன் நடுங்குமாறு மலைப்பக்கத்து மேகத்தில் ஒளிக்கும் (நற். 233:1-3). மந்திக் கணவனாகிய கல்லாக் கடுவன் புலி முழக்கிற்கு அஞ்சி வரையகத்துப் பாய்ந்து ஒடுங்கும் (ஐங். 274:1-3). குரங்கின் தலைவனாகிய குருமயிர்க் கடுவன் பிரப்பங்கோலைக் கொண்டு பாறையிலுள்ள மழைநீர்க் குமிழியைப் புடைக்கும் (ஐங். 275:1-3). மந்தியின் காதலனாகிய தளிரைத் தின்னும் கடுவன் மணங்கமழும் நறைக் கொடி கொண்டு இளமுகிலைப் புடைக்கும் (ஐங். 276:1-3). குறவர் முன்றிலில் மாதீண்டு துறுகற்கண்ணே கல்லா மந்தி கடுவனோடு உகளும் (ஐங். 277:1,2). கடுவனும் புகுந்தறியாத காடு கடந்து தலைவி உடன் போயினாள் (ஐங். 374:4). கடுவன், வரைந்து கொள்ளும் நிலைமையைக் கற்றுத் திரட்சி மிக்க சுற்றத்திடத்தே சென்று மகட் பேசுவார் போல மெல்லிய விரலையுடைய மந்தியைத் தனக்குத் தர வேண்டும் என்று தன் குறைகூறும் தகைமையுடையது தலைவன் மலை (கலி. 40:15-18).

**கடுவன் மள்ளனார்** - புலவர். கடுவன் என்ற ஊரைச் சேர்ந்த மள்ளனாராகிய இவர் பெயர், மதுரைத் தமிழக் கூத்தனார் கடுவன் மள்ளனார் என்றும் காணப்படுகிறது. தமிழக் கூத்தனார் என்பதைத் தொழிலால் வந்த சிறப்புப் பெயராகக் கொண்டால் மதுரையின்கண் தமிழக் கூத்தாடுபவரான கடுவன் என்னும் ஊரைச் சேர்ந்த மள்ளனார் எனும் இயற் பெயரையுடையவர் என்றும் இயற்

பெயராகவே கொண்டால மதுரைத் தமிழக் கூத்தனார்தம் மகனாரான கடுவன மள்ளனார் என்றும் பெயர் விளக்கம் பெறலாம். மள்ளனார் என்ற பெயரைக் கொண்டு இவரை அரசியல் தொடர்புற்ற படைத்தலைவர் என்று கருதவும் இடமுண்டு என்பர் உ. வே. சா. (குறு. பாடினோர் வரலாறு). இவர் பாடியவை அகநானூற்றில் மூன்றும (70, 256, 354) குறுந்தொகையில ஒன்றும (82) ஆக நான்கு பாடல். நெய்தல, மருதம், முல்லை, குறிஞ்சி என்னும், நான்கு திணைகளிலும் அப்பாடல்கள அமைந்துள்ளமை கொண்டு இவரது பரந்துபட்ட திணைப் புலமையை உணரலாம். இலங்கை சென்று இராவணனை வென்று சீதையை மீட்க வேண்டிய இராமன் தென்கடற் கோடிக்கரை மருங்கே ஓர் ஆலமரத்தின அடியில் நண்பருடன் கூடியிருந்து சூழ்ச்சி செய்தற்காக அம்மரத்துப் பறவைகளின் ஆரவாரத்தை அடக்கினான் என்பதோர் அரிய இராமாயணக் குறிப்பு இவர் பாடலில் (அகம். 70) அமைந்துள்ளது. கள்ளூர் என்னுமூரில இளமகளொருத்தியின் அணிநலம நுகர்ந்து பின அறியேன் என்று பொய்ச்சூள செய்த அறனிலாளன் ஒருவனை அவ்வூர் அவையத்தார அறிகரியினால உணர்ந்து மரக்கிளையிற் கட்டித் தலையில் நீறு பெய்த நிகழ்ச்சி யொன்றை இவரது மற்றொரு பாடல் (அகம. 256) அறிவிக்கும்.

**கடுவனிளமள்ளனார் - புலவர்.** கடுவன் மள்ளனாரும் இவரும் ஒருவரே யென்பர் பி. நா (நற. பாடினோர் வரலாறு) உ. வே. சா. வும் இக்கருத்தினரே (குறு. பாடினோர் வரலாறு). ஆயின், இவரை வையாபுரிப் பிள்ளையின சங்க இலக்கியப் பதிப்பு வேறு புலவராகக் குறிக்கும. பல்லவாக்கு முந்தைய தமிழ்ச்சொல லடைவு, கடுவன் என்னும ஊரைச் சேர்ந்த இளமள்ளனாராகிய இவரை இளம்படைத் தலைவன் அல்லது, கடுவன மள்ளனாரக்கு இளவல் அல்லது, அவர்க்கு மகன என்று இம்முப்பொருளையும் சுட்டும. நற்றிணை (150) இவர் பாடியதாகும். மருதத் திணையுள் பரத்தை தலைவனை நெருங்கிப் பாணனுக் குரைத்த துறையில அமைந்த அப்பாடலில், 'சேரியிடத்தே தேரில் வந்து தலைவன் தாரும் கண்ணியும் காட்டித் தன் ஒருமை நெஞ்சைக் கவர்ந்து போனமை குறித்துச் சினங் கொண்டுள்ள தன தாய் அவனை எளிதில விடமாட்டாள' என்று அப்பரத்தையைப் பேசவைத்து அவளது எளிவந்த பேதைமையனைப் புலப்படுத்துகிறார். பாண்டியனகளிறு பல பரப்பி, அரண் பல கடந்த செய்தியும் அப்பாடலில கூறப்பெறும்.

**கடுவனிளவெயினனார் - புலவர்.** கடுவன் என்னும் ஊரினராகிய இவர் எயினர் குடியைச் சேர்ந்தவர். பரிபாடலில் மூன்றாவதும் நான்காவதுமாகிய திருமால் பாடல்களையும் ஐந்தாவதாகிய செவ்வேள் பாடலையும் இவர் பாடியுள்ளார். இருவேறு கடவுளரையும் ஒருநிலையில் பாடியுள்ளமையால் இவரது இறையொருமைப்பாடு விளங்கும். இவருடைய திருமால பற்றிய பாடல்களில் தத்துவக் கருத்துக்கள் இடம் பெற்றுள்ளன. இவர் நிறைந்த வேதப் பயிற்சியுடையவர் என்பது, வேதக் கருத்துக்களைக் கூறுவதால் விளங்கும். 'தீயினுள் வெம்மை நீ, பூவினுள் மணம் நீ, கல்லினுள் மணி நீ, சொல்லினுள் வாய்மை நீ, அறத்தினுள் அன்பு நீ, மறத்தினுள் மைந்து நீ, வேதத்துள் மறை நீ, பூதத்தில் வெளி நீ, கதிரினுள் ஒளி நீ, மதியினுள் அளி நீ, அனைத்தும் நீ, அனைத்தின் உட்பொருளும் நீ, நீ ஒரு பொருளில் உறைதலு மில்லை, உனக்கு ஒரு பொருள் உறைவிடமும் இலலை, அவை உனக்கு உளவாதல் மாயம், நீ பிறவாப் பிறப்பில்லை, நின்னைப் பிறப்பித்தோருமில்லை (பரி. 3:63-72). என்று திருமாலைப் பாடும் இவர் திருமாலின இத்தன்மைகளைச் சாமவேதத்தினின்று அறிந்ததாக மொழிவது (பரி. 3:62) காணலாம். இவ்விறைப் பண்புகளை 'நின் வெம்மையும் ஒளியும கதிரவனிடத்தும், நின் தண்மையும் மென்மையும் திங்களிடத்தும், நின் சுரத்தலும் வண்மையும் மாரியிடத்தும், நின தாங்குந திறனும பொறுமையும் நிலத்திடத்தும், நின் மணமும் ஒட்பமும் காயாம் பூவிடத்தும், நின் தோற்றமும் பெருமையும நீரிடத்தும், நின் உருவமும ஒலியும் ஆகாயத்திடத்தும், நின வருகையும ஒடுக்கமும் காற்றிடத்தும் உள்ளன; ஆகலின், இவையும் உவையும அவையும் பிறவுமாய் நின்னிடத்தினின்று தோன்றிக் காக்கப்பெற்றனவெல்லாம் பினனும் நின்னோடே பொருந்தின' (பரி. 4:25-35) என்று பிறிதொரு வகையில சுட்டுதல காணலாம். திருமால் தவனினும் சிறந்த தாளிணையை உடையவர் என்னும் கருத்து இவரால் அருமையாகச் கூறப்படுகிறது (பரி. 4:62). முருகப் பெருமானின் பிறப்பையும் சிறப்பையும் இவர் வரலாற்று முறையில் பாடுகிறார் (பரி. 5:25-70). 'கடப்ப மாலையை அணிந்தோய்; நின்னிடத்தே யாம் இரப்பவை பொருளும் பொன்னும் போகமும் அல்ல; அருளும் அன்பும் அறனுமே' என்னும் இவர் வேண்டுகோள் யாவராலும கொள்ளற்கு உரியதாம் (பரி. 5:78-81.

**கடை - 1. வாயில்.** 'நீ நலங்கிள்ளியிடம் செல்வாய் யின், பிறன்கடையை - வாயிலை - மறக்கும்ப அவன் உனக்கு மிகுதியாக அளிப்பான்' என்று பாணன் ஆற்றுப்படுத்தப்பெறுகிறான் (புறம். 6

18,19). கிள்ளி வளவனிடத்துப் பாணன் சென்றால் அவனது நெடுங்கடைக்கண் காலம் பார்த்து நிற்க வேண்டிய தில்லை (புறம். 69:16,17). பெருஞ்சித்திரனார் வெளிமானை 'நெடுங்காலம் வாழ்வாயாக' என்று வாழ்த்தி அவனது நெடுங்கடையை அணுகிப் பாடி நின்றார் (புறம். 237:1,2). மென்றோள் மகளிர் தம்முடைய இல்லம் தனிமையுறக் கடைகழிந்து மன்றம் செல்லார் (புறம். 373:11,12). கிணைப் பொருநன் பனியுறைக்கும் வைகறைப் பொழுதில் கோழிச் சேவலின் குரல்கேட்டெழுந்து அவியனது நெடுங்கடை நின்று கிணைகொட்டி, அவனுடைய பகடுகளை வாழ்த்திப் புகழைப் பாடினான் (புறம். 383:1-5). விடியற்காலத்தே கிணைப் பொருநன் அம்பர் கிழான் அருவந்தையின் கடைக்குச் சென்று தோன்றாத நிலையில் பிறன்கடையிற் பாடியிருக்கையிலேயே அவன் பாடிய குரல் கேட்டு அருளி அவனுக்கு வறுமை நீங்க வழங்கினான் அருவந்தை (புறம். 385:2-7). நின் மகளிர் நினது நெடுங்கடையில் நெய்தற் பறையொலியே கேளா தொழிவாராக என்று நல்லேர் முதியனைக் கள்ளில் ஆத்திரையனார் வாழ்த்தினார் (புறம். 389:12, 16,17). கிணைப்பொருநன் பல நாளின்றி ஒருநாள் வந்ததற்கும் அதியமான நெடுமானஞ்சி தன் நெடுங் கடையிடத்து நின்ற அப்பொருநன் அளிக்கத் தக்கவன் என்று ஆடைகள், ஊன்துவை அடிசில் முதலியவற்றை வழங்கினான் (புறம். 390:9-23). அதியமான் பொகுட்டெழினியது நெடுங் கடையின் கண் நின்று பொருநன் தன் ஒருகண் மாக்கிணையை ஒற்றி அவன் புகழினைப் பாடி வாழ்த்தினான் (புறம். 392:1-12). மாலைப்பொழுதில் தன் கடையில் தோன்றித் தன்னிடத்து எனக்குள்ள தொடர்பினைச் சொல்லி யான் கிணை கொட்டிப் பாடிய அளவில் சிறிதும் காலம் நீட்டாமல் சாத்தன் எனக்கு அருங்கலம் வர அருளினன் என்று பொருநன் கூற்றாகச் சோழநாட்டுப் பிடவூர்கிழான் மகன் பெருஞ்சாத்தனை மதுரை நக்கீரர் பாடினார் (புறம். 395:23-28). சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனைத் 'துயிலெழுக' எனப் பாடியவாறு பொருநன் கிணைகொட்டி அவனது நெடுங்கடைக் கண்ணே காலையில் தோன்றினான (புறம். 397:6-11). கிணையினை இசைத்துத் தன்னை வாழ்த்தியவாறு தன் கடையிடத்தே தோன்றிய பொருநனின் கிணைக் குரலை இறுதி யாமத்தில் பலருந் துஞ்சவும் தான் துஞ்சானாய்ச் சோழன் நலங்கிள்ளி கேட்டனன் (புறம். 400:4-8). கிணைமகள் உப்பின்றி வேகவைத்த குப்பைவேளைக் கீரையை மடவோர் காண்டற்கு நாணிக் கடையடைத்துப் பாணர் தம் சுற்றத்தினொடுடன் தின்றனர் (சிறு. 136-139). மகளிர் சட்டக் காலைச் சாய்த்துப் பண்டங்களுக்கு விலை கூறும் நெடுங்கடையை யடைத்துத் துயின்றனர் (மது. 621-623). ஆமான்கன்று முதலாக ஆசினிப ்லா ஈறாகப் பல கையுறைப் பொருள்கள நன்னன் வேண்மானின் நெடுங்கடையில் நிறைந்திருக்கும் (மலை. 500-529). நீ பேதைப் பருவங் கடந்து பெதும்பைப் பருவத்தினளாகிக் காவலுக்குட்பட்டனை யாதலின இனிக் கடையிடத்தும் போதற்குரியை அல்லை' எனச் செவிலி தலைவியை இற்செறித்தனள் (அகம். 7:5-8). தந்தை செல்லும் தேரின் மணியோசை கேட்டுக் காணும் விருப்போடு சிறுவன் கடை கடந்து தளர் நடையிட்டு ஓடினான் (அகம். 66:9-12). இரவிலே தன் நெடுங்கடையில் நின்று தன் குன்றத்தைப் பாடுகின்ற பாணர் பரிசிலாக வேண்டினால் அவர்க்கு ஆய் எயினன் யானைகளை ஈவான் (அகம். 208:1-5). பிடியானையைப் பரிசில் பெற வந்து அரண்மனை வாயிலிலே செவ்வி நோக்கிக் காத்து நிற்கும் பரிசிலர் போலத் தலைவன் களவுக் காலத்தில் தலைவி மனையின் கடையில் காத்து நின்று அவளைக் கூடுவான் (அகம். 311:1-5). வெண்மணல் உயர்ந்த அழகிய கடையினையுடைய நெடுமனைக்கண் இரவில் புணர்குறி வாய்த்த களவொழுக்கம் எல்லை கடந்து நீண்டது என்று தலைவன இரங்கினான் (அகம். 325:2-4). 'குற்றமற்ற தெருவிடத்தே நாயில்லாத அகன்ற கடையில செந்நெற் சோற்றுருண்டையும் வெண்ணெயும் ஆகிய ஓரிலலத்துப் பிச்சையைப் பெற்று, வயிறு நிரம்ப உண்டு விருப்பததிற்குரிய வெநநீரையும சேமச செப்பிற் பெறுவாயாக' என்று தோழி அறிவனை வாழ்த்தித் தலைவன் வரும் வாடைக் காலத்தைக் குறித்து வினவினாள் (குறு. 277). தலைவன வரைவு நீட்டிக்கவே, அன்னையின காவல் கடந்து பெருங கடையையும நீங்கி, ஊர் அம்பலத்தினை யடைநது பகலில் பலரும் காண அவன ஊர் வினவி வருவோமா எனறு தோழி தலைவியை வினவினாள (நற். 365:1-5). புதல்வனைப் பலவாறு பொய் பாராட்டி அவனை விட்டுப போகாதவனாகவும் பரத்தையர் குறிக்கொணட நிலைமையைக் கடவாதவனாகவும் உள்ள நீ இந்த நெடுஙகடையிடத்து நில்லாதே எனறு தலைவனிடத்துத் தலைவி ஊடிக் கூறினாள் (கலி. 79:20,21). பரததை நாட்காலையிலேயே தலைவியது மனைக்கடை வந்து நினறு தலைவனைப் புலந்து கடுஞ்சொல் கூறினாள (கலி. 97:3-5). தலைவன் தன்மேல் வேட்கையால எதிர்வந்து கூடிப் பின் வருந்துகின்ற பரத்தை

யாது மனைக்கடை வழியாகத் தன் காதற பரத்தையாகிய யானையைக் கொண்டு போய் அதனை அழகுற ஏறினான் (கலி. 97:24,25).

2. **கோடி.** யானைக் கோட்டினாற் கடைந்து செறிக்கப்பட்ட வெள்ளிய கடையினை – கோடியினை - இருபக்க முடையது துலாக்கோல் (புறம். 39:2,3). பாடினி கொலைவில் புருவத்துக் கொழுங்கடை மழைக்கண்ணையுடையவள் (பொரு. 26, 47). முதற் பிறை பிறந்து ஏந்தியிருந்தாற் போன்று பின்னே ஏந்தியிருக்கின்ற கவையமைந்த கடையினை யுடைய யாழைப் பெரும்பாணன் இடப்பக்கத்தே தழுவியிருந்தான் (பொரு. 11, 16). பித்திக அரும்பின் சிவந்த பின்புறத்தை யொக்கும் கொழுங்கடை மழைக் கண்ணினள் தலைவி (அகம் 42: 1-4). கடை சிவந்து வியக்கத் தக்கனவாய் ஒன்றோடொன்று போரிடுகின்ற மையுண்ட கண்களை யுடையவள் தலைவி (அகம். 237:15, 16). பித்திக மலரின் இதழை யொக்கும் அழகொழுகும் செங்கடை மழைக் கண்ணை யுடையவள் தலைவி (அகம். 295: 19-21). மாரிப் பித்திகத்து நீரொழுகும் கொழு முகையின் சிவந்த புறத்தை யொத்த கொழுங்கடை மழைக் கண்ணளாய தலைவி, நீர்விளையாட்டில் தெப்பத்தின் கடையைத்தோழி பற்றினால் தானும் அந்தக் கடையையே பற்றி ஆடுவாள் (குறு. 222: 2, 6).

3. **எல்லை.** நீரும் நிலமும் நெருப்பும் காற்றும் வானுமாகிய ஐந்தினையும் அளந்து அவற்றின் கடையினை - எல்லையினை - அறிந்தாலும் பல்யானைச் செல்கெழு குட்டுவன் பெருமையை யாராலும் அளந்தறிதற்கு இயலாது (பதி. 24: 15, 16). பயம் கடையறியாத வளம் மிக்க சிறப்பினையுடைய புதுவருவாயாகிய தானியங்கள் பெருக வாழியர் என இளஞ்சேரல் இரும்பொறையைப் பெருங்குன்றூர் கிழார் வாழ்த்தினார் (பதி. 89:6-8). படையிடத்தே கெட்டோடுதலை யறியாத வலிமை மிகுகின்ற பெரும்புகழினது கடையை மறைத்த மறக்குடிகள் பலவும் பொருந்தியது கச்சி மூதூர் (பெரு. 398, 399). பகைவர் போர்க்களத்தே விட்டுப் போன யானைகளும் மன்னர் கொடுத்த திறைப் பொருளும் பிறவும் வந்து சேர்தலால் அளந்து கடையறியாத வளம் பொருந்தியிருந்தது மதுரை (மது. 687-699). தலைவி கடையழிய நீண்டகன்ற கண்ணள் (பரி. 11: 46).

4. **இறுதி.** 'ஒன்றைப் பத்து முறையாக அடுக்கப்பட்ட கோடி என்னும் எண்ணினைக் கடை - இறுதி - எண்ணாக நிறுத்திய பேரெண்ணினை உ[illegible] நின் வாழ்நாள்' என்று பாண்டியன் நெடுஞ்செழியனைக் குடபுலவியனார் வாழ்த்தினார் (புறம். 18:5,6). கிணைகொட்டித் தன்னை முறைப்படி வாழ்த்திப் பாடியவாறு தன் வாயிலின்கண் தோன்றிய பொருநனின் கிணைக்குரலைக் கடையிரவில் பலரும் துயிலவும் தான் துயிலானாய்ச் சோழன் நலங்கிள்ளி கேட்டனன் (புறம். 400: 4-8). காவிரிப்பூம்பட்டினத்தில் இடையிரவில் பலவாறு இன்புற்றா ரனைவரும் கடையிரவில் அவற்றை யெல்லாம் மறந்து கண்ணுறங்குவர் (பட். 106-115). கடை மழைகதுப் பின்னை வாடைக் காலம் வரும் (குறு. 277:6..

5. **இறந்துபடுதல்.** 'நீ பிரிவாயாயின் தலைவியது நலம் கடையினால்- இறந்துபடும் காலத்தால்-கைக் கொள்ளப்படுதலின் நீ முயன்று செய்யும் பொருள், அவள் இன்னுயிரைத் தருமோ என்று தலைவனைத் தோழி வினவினாள் (கலி. 7:13-21). தலைவன் பிரிந்த நிலையில் முன்பனிக் காலத்து வாடையாலும் மெய்வளைதற்குக் காரணமான பின்பனியாலும் தலைவிக்கு உண்டாகிய செயலறவு அவளுக்குக் கடையை (இறந்துபாட்டை) எய்துவித்தது (கலி. 31:6,7). கடையெனக் கலங்குதற்கு ஏதுவாகிய காம நோய் கைம்மிகுதலால் வரைவிடையாற்றாத தலைவியின் தோள்கள் வாடின (கலி. 45:14,15). காம நோய், கடைக்கூட்டுகையினாலே (இறந்து பாட்டைச் சேர்த்துகையினால்) தான் உயிர் வாழும் நாளை வெறுத்த தலைவியை அருளிப் பாராய் எனத் தலைவனைச் சான்றோர் வேண்டினர் (கலி. 99: 12,13).

6. **முடிவு.** சோழன் கரிகாற் பெருவளத்தானிடம் நீவிர் பரிசில் பெற்றபின் அவனிடமிருந்து போகும் போக்கிற்கு, கடை-முடிவு-கூட்டுவீராயின், அது குறித்து அவன் பலவாறு வெறுத்து நும்மை விரைந்து போக விடுவானல்லன் என்று பொருநரை ஆற்றுப்படுத்துவோன் புகன்றான் (பொரு. 173-177). அறிவுடையோர் தம் செல்வம் கடை கொள, வறுமையுற்று அவ்வருத்தத்தைக் களையத் தக்க உறவினரிடத்தே சென்று தம் குறையை அவர்க்கு வாய்விட்டுச் சொல்லத் தொடங்கிப் பின் அதனை முழுதும் சொல்ல மாட்டாதிருப்பாரைப் போலத் தலைவன் தோழியிடத்தே குறையிரக்குங்கால் தான் கூறக் கருதியதனைக் கைவிட்டு அவளைப் பன்முறையும் பார்த்து அவள் பார்க்கும்போது தலை கவிழ்ந்து நின்றான் (கலி. 61:1-6). பிரிந்த காலத்துத் தலைவியின் மேல் தலைவனுக்குண்டான வெள்ளமனைய பெருங்காமம் அவளிடத்தே மீண்டு வருதலால் கல[illegible] (குறு. 99:4-6).

**7. நுனி.** வெள்ளிய கடை - நுனி - அமைந்த சிறு கோலையுடையவர் அகவன் மகளிர் (குறு. 298:6). தலைவி தலைவனுடன் சுவையுடைய நெல்லியஞ் சோலையில் உதிர்ந்த கடையிலே திரண்ட காயைத் தின்று நீரைப் பருகிச் சென்றாள் (நற். 271:4 - 8). முறுக்குண்ட கயிற்றின் கடையில் கட்டப்பட்ட எறியுளிகளைக் கொண்டு பரதவர் கடலில் மீன் வேட்டம் செல்வர் (நற். 388:2-5).

**8. தலைவாயில்.** ஏனையோர் சேர்தற்கரிய நல்லியக் கோடனது கடை - தலைவாயில் - பொருநர்க்கும் புலவர்க்கும் அருமறை அந்தணர்க்கும் அடையாத வாயிலை யுடையது (சிறு. 203 - 206). மாடத்திலுள்ள நெடுங்கடையிலே சென்று நெருங்கியிருந்து விருந்தினர் இடையறாது உண்டும் குறைபடாத பெருஞ்சோற்றினைக் கொண்ட அட்டிலையுடைய நல்ல இல்லங்கள் நிறைந்த பகைவர் நாடு திருமாவளவனால் பாழ்படுத்தப்பட்டது (பட். 261-263).

**9. அடிப்பாகம்.** மயிரை வெட்டுகின்ற கத்தரிகையின் மாட்சிமைப்பட்ட கடை - அடிப்பாகம் (குழைச்சு) – போன்ற காதினையுடையவள் பாடினி (பொரு. 29,30). எயினரது அரணிலுள்ள பந்தர்க் காலில் தேனிறாலை யொக்கும் கவைத்த கடையமைந்த அம்புக்கட்டுக்களோடு துடியும் தொங்கும் (பெரு. 123,124,129).

**10. காம்பு.** கருங்கடை நெடுவேல் - வலிதாகக் கடையப்பட்ட காம்பினையுடைய நெடிய வேல் - (புறம். 345:17). ஒள்வாள் மறவர் தம் கரிய கடையமைந்த வேல்களை அருங்கடி வாயிற்புதவில் சார்த்தினர் (மலை. 489-491).

**11. புறங்கடை.** சிறிதே விளைந்த வரகு வருவாயினையுடைய சீறூர்த்தலைவன் தன்னை வளைத்துக் கொண்ட கடன்காரர்க்குக் கொடுத்தது போக எஞ்சியதைப் பசித்துவந்த பாணர் உண்டு சென்றதனால் அவன் கடை - புறங்கடை - வறிதாயிற்று (புறம். 327:2-4).

**12. விற்பனைக்கூடம்.** மதுரைமாநகரில் பண்டம் விற்போர் பல்வேறு பண்டங்களையுடைய தம் கடைகளை - விற்பனைக் கூடங்களை – மெழுக வைகறை வருதல் (மது. 661,686).

**13. பிற்பகுதி.** வரிகளமைந்த கடை - பிற்பகுதி - உடையன தேனீக்கள் (மது. 717).

**கடைக்கண் – கண்ணின் கடைப்பகுதி.** பாண்டியன் நெடுஞ்செழியனது பிரிவில் பாண்டிமாதேவி தன் கரிய இமைகள் தாங்கிய மலிந்து வீழும் கண்ணீரைச் செவ்விரலைக் கடைக்கண் சேர்த்தித் தெறித்துத் தனித்து வருந்தினாள் (நெடு. 164-166). தலைவியின் ஊர்த்தெருவில் சிலரும் பலருமாகக் கூடி நின்று அவளைக் கடைக் கண்ணால் நோக்கி வியப்பவர் போலத் தம் மூக்கின் நுனியிலே சுட்டு விரலை வைத்துப் பழிச்சொற்களைக் கூறித் தூற்றினர் (நற். 149:1-3). குடிநீர் கேட்ட தலைவனுக்கு நீர் கொடுத்தபோது அவளை அவன் கைப்பிடிக்க, அவள் தெருமந்து குரலெடுத்தது கேட்டு அன்னை அலறி வந்தவுடன் அவள் உண்மையை மறைத்து அவன் விக்கினான் எனப் பொய்கூற, அன்னை அவன் முதுகைத் தடவிய நிலையில் அவன் அவளைக் கடைக்கண்ணால் கொல்வான் போல் நோக்கி நகைக்கூட்டம் செய்தான் (கலி. 51:4-16).

**கடைக்குளம்** - குளவடிவு போலும் புனர்பூசத்துக் கடையாகிய மீன் (திருவாதிரை). (குளக்கடை என்பது கடைக்குளம் எனவந்தது). சேரமான் யானைக்கட்சேய் மாந்தரஞ்சேரல் இரும்பொறையின் இறப்புக் குறித்த தீநிமித்தமாக வானிலிருந்து ஒரு மீன் விழுந்த பங்குனி மாதத்து முதற் பதினைந்தின் கார்த்திகை நாள் முதற்காலில் நின்ற பாதிரியின் கண் அனுட நாளின் அடிமீன் (கேட்டை) முதலாகக் கடைக்குளம் (குளக்கடை) - குளவடிவு போலும் புனர் பூசத்துக் கடையாகிய மீன் (திருவாதிரை)- முதலாக பதின்மூன்று விண்மீன்கள் விளங்கிக் காய்ந்தன (புறம். 229:1-12).

**கடைக்கொள்ளி - கொள்ளிக்கட்டை.** பறம்பு மலையின் குறத்தி மடுத்தெரிக்கும் வற்றிய கடைக்கொள்ளி - கொள்ளிக்கட்டை - சந்தன மாதலால் அதன் அழகிய புகை அயலிலுள்ள வேங்கைப் பூங்கொம்பில் தவழும் (புறம். 108:1-4).

**கடைகோல் - தீக்கடையும் கோல்.** கார்ப் பருவ நள்ளிரவில் தன் காவலிலுள்ள செம்மறியாட்டின் கூட்டம் பாதுகாவலுறும்படி இடையன் கடைகோலினால்-தீக்கடையும் கோலால்-உண்டாக்கிய சிறு தீயினைக் கொள்ளிக் கட்டையில் கொளுத்திக் கொண்டு நிற்பான் (அகம். 274:3-5).

**கடைசியர் - உழத்தியர்.** கொன்னையாகிய மயிரையும் குளிர்ந்த தழையாடையையும் உடைய கடைசியர்- உழத்தியர்-வயல்களில் நெய்தலை ஆம்பலுடனே களைவர் (புறம். 61:1-3).

**கடைத்தலை - வாயிலிடம்.** சோழன் நலங்கிள்ளி வாழ்ந்த காலத்துஅவன் காதுபட ஒலித்தலையுடைய அரசர் மனைகளில் தொங்கிக் கொண்டிருந்த வலம்புரிச் சங்கங்கள் அவன் இறந்துபட்ட காலத்து அவ்வரசர் கடைத்தலைகளில் – வாயில்களில்-

பள்ளியெழுச்சி குறித்து ஒலிப்பினும் யான் நோகின் றேனே என்று ஆலத்தூர் கிழார் தாம் பாடிய கையறுநிலைப்பாடலிற் குறித்துள்ளார் (புறம். 225: 9-14). ஓய்மான் வில்லியாதன மிகுதியான பரிசில் வழங்கியமையால் இனித் தன் சிறு கிணைக் குரல் இரவலரை நீக்காத வள்ளியோர் கடைத் தலை களில் தோன்றாது எனப் பொருநன் செருக்கொடு புகன்றான் (புறம். 376:16-23).

**கடைநர் - கடைசலிடுவோர்.** சங்குகளை யறுத்து வளை முதலியவற்றைக் கடைநர் - கடைசலிடுவோர் - முதலாகக் கண்ணுள் வினைஞர் ஈறாக உள்ள வரும் பிறரும் கூடி நிற்றலால் எழும் ஓசை மற்றைய ஓசைகளுடன் கலந்து பல்வேறு பண்டம் வந்திறங்கும் துறைமுகப் பட்டினத்து ஓசை போல மதுரை அல்லங்காடியில் ஒலிக்கும் (மது. 511-518).

**கடைநாள் - 1. கடைசி நாள்.** தைஇ நின்ற தண் பெயற் கடைநாளில் - கடைசி நாளில் - பகன்றை அரும் புகள் முகில் சிதறும் நுண் துளிகளால் மலர்ந்தன (அகம். 24:3-5). மழை பெய்த கார்ப் பருவத்தின் கடைநாளில் உலகிற்குப் பயன் விளைத்துத் தமக் குரிய காலங் கழிந்து போன வெண்முகில்கள் வான்தோய் மலையுச்சியில் அசைநதன (அகம். 139:5-7). தண்மழை பெய்து தணிந்த கூதிர்ப் பரு வக் கடைநாளில் தலைவி தமியளாய்ப் பிரிவுத் துனபம் எய்தத் தலைவன் பொருள்வயிற் பிரிந் தான் (அகம். 163:2-4). தண் பெயற் கடைநாளில் கொம்பு முழங்கத் தமது வண்டற் பாவையை நீருண்ணும் துறையிடத்தே கொணர்ந்து மகளிர் குரவைக் கூத்தாடினர் (அகம். 269:14-20). சிறுமழை பெய்யும் கார்ப் பருவத்தின் கடைநாள் சேற்றில் நிற்றலை வெறுத்த செங்கட் காரான் நள்ளிரவில் ஐயெனறு ஒலிக்கும் (குறு. 261:2-4). வாடை வந்த சில பெயலையுடைய கடைநாளில் நின் துன்பந் தீர நீ கூறத் தகுவனவற்றைத் தலைவனிடம் கூறி னாலென்ன என்று தோழி தலைவன் கேட்பத் தலைவிக்குக் கூறினாள் (குறு. 332: 1-3). மேகம் மிக்க மழை பெய்தொழிந்த கார்ப் பருவக் கடை நாளில் அன்பற்ற வாடைக் காற்று உழுந்தின் இலைகளெல்லாம் சிதையும்படி வீசித் தலைவியை விட்டு நீங்காது நாள்தோறும் வருத்தும் (நற். 89: 3-7). காட்டில் மழை பொழிநத கடைநாளில் பால் விலை கூறி ஏகும் இடையன், மழைததுளி ஒருபக் கம் நனைப்பக் கையின் கோலையூன்றி அதனமேல் கால் வைத்து ஒடுங்கி நின்று வாய் குவித்து ஊதும் சீழ்க்கை ஒலி யறிந்து, யாட்டின் தொகுதி பிற புலம் புகாது வந்து தங்கும் (நற். 142:1-8).

2. கடையாமம். அரிவையின தனிமைத் துன்பம் நீங் குமாறு தலைவனின் தேர் அச்சிரக் காலத்தில பின் பனியையுடைய கடைநாளில் - கடையாமத்தில - வந்து சேர்ந்தது (குறு. 338:5-8).

3. இறக்கும் நாள். கடைநாள் - இறக்கும் நாள் - இதுவென்று உலகத்திலே அறிந்தவருமில்லை (கலி. 12:15).

**கடைமணி - கடைக்கண்.** வெட்சி மறவர் விடியலிலே ஆனிரையைக் கவர்ந்து வெஞ்சுரத்து நெடுந் தொலைவு சென்றமையால் தாய்ப்பசுக்களைப் பிரிந்த கன்றுகள் அவற்றை நினைந்து, கடைமணி- கடைக்கண்-வழியாக உகுதத துன்பக் கணணீரைக் கரந்தை வீரர் அவவானிரையை மீட்டுத துடைத் தனர் (அகம். 131:6-9). புலியைக் குத்தி வீழத்தியத னால் புலவு நாறும் களிற்றின் மருப்பைப் போன்று தலைவியின் கடைமணி சிவந்தது (நற். 39:5-7).

**கடைமுகம் - புறக்கடை.** மன்னர் பெருமனையின் கடைமுகத்தில் - புறக்கடையில் - பலியாகிய வெண் சோற்றினை எறிவர் (புறம். 331:11,12).

**கடைமுறை - இறுதி.** உலகில முதனமுறை, இடை முறை, கடைமுறையினும் - இறுதியினும்-படைப்பு, அளிப்பு, அழிபபு என்னும் தொழில் வேற்றுமை பற்றித் திருமால் பிறவாத பிறப்பில்லை; அவரைப் பிறப்பித்தோரு மில்லை (பரி. 3:71,72).

**கடையத்தார் -வெண்ணாகனின் தந்தை.** இவர் குறுந் தொகை 223-ஆம் பாடலைப் பாடிய வெணணா கனாரின் தந்தை என்றும் மதுரைக கடையததார் என்று அழைக்கப் பெற்றார் என்றும் அறிகிறோம் (குறு. 223 - அடிக்குறிப்பு).

**கடையல் - கடைதல்.** கடையல் (தயிர்) கடைதல் - போனற குரலையுடைய வேங்கை தன் பிணவின் மிகுபசி பொறாது காட்டில் பன்றி வரும் நெறி யினைப் பார்த்திருக்கும் (அகம். 277:5-9).

**கடையோர் - பின் செல்வோர்.** நலங்கிள்ளியது படை யின் முன் செல்வோர் பனையின் நுங்கினை யுண்ண, இடைச் செல்வோர் அதன் கனியை யுண்ண, கடையோர் - பின் செல்வோர் - சுடப் பட்ட பனையின் கிழங்கினை உணண இவ்வாறு ஒழுங்குடையதாய் அபபடை உலகததை வலமுறச் சூழந்தது (புறம். 225:1-4).

**கண் - 1. விழி.** சிறுதலை நவ்விப் பெருங்கண் மாப்பிணை (புறம். 2:21). மறவர் கையாற் கவிக் கப்பட்ட கண்ணால் குறித்துப் பார்க்கும் பார்வையினை உடையவர் (புறம். 3:19,20). சிறு கண் யானை (புறம். 6: 13; 170: 10; 316: 12; 395: 18; சிறு. 142; முல்லை. 31; அகம். 24: 13;

159:16;179.4; நற். 232:1; ஐங். 314:3;327:2;355:4; 362: 2). முக்கட் செல்வர் (சிவபெருமான) (புறம். 6: 18). கண்ணிற்கு விளங்கும் அழகிய விலலையுடை யவன் கரிகாற் பெருவளத்தான் (புறம். 7:4). நீ பகைப்புலத்தில் தங்கிக் கீழ்க்கடல் பின்னதாக மேற் கடலின் அலை நின் குதிரைக் குளம்பை அலைக்கு மாறு வலமாக முறையே வருதலுமுண்டாம் என மனஞ்சுழன்று நெஞ்சு நடுங்கும் அவலம் பரவ, வடநாட்டு அரசுகள் துயிலாத கண்ணையுடைய வாயின என்று சோழன் நலங்கிள்ளியின் மறத்தைக் கோவூர்கிழார் பாராட்டுவர் (புறம். 31:12-17). கிள்ளி வளவனது வெண்கொற்றக் குடை கண்ணைக் குத்துமாறு ஒளிவிட்டு விளங்குவது (புறம். 35:19). கண்ணார் கண்ணி (கணணுக்கு நிறைவு தரும் தலைமாலை) (புறம். 39:12; பொரு. 148; சிறு. 65). புதல்வர் பூங் கண் (புறம். 41:14). விளங்கில் என்னும் ஊர் கதிர் விடும் மணிகளால் கண்ணைக் குத்துகின்ற மாடத் துறையும் மகளிர் வேதிகையிடதது விளையாடும் சிறப்புடையது (புறம். 53:2-4). 'முப்புரங்களை எரித் துத் தேவர்க்கு வெற்றியைத் தந்த கறைமிடற்றண் ணலின் நெற்றியில் விளங்கும் ஒப்பற்ற கண் போல ஏனை வேந்தரினும் மேம்பட்ட மாறனே' எனப் பாண்டியன் இலவந்திகைப் பள்ளித் துஞ் சிய நன்மாறனை மருதனிளநாகனார் பாராட் டினார் (புறம். 55:1-6). சேரமான குடககோ நெடுஞ்சேரலாதனும் சோழன் வேற்பல தடக் கைப் பெருவிறற கிள்ளியும் பொருத களத்திற்குத் தேரேறி வந்த இருதிறத்து மறவரும் தாம் பிடித் திருநத கேடகம் தம் கணணை மறைத்துக் கிடக்க ஒருஙகே மடிந்தனர் (புறம். 63:5,6). 'பகைவேந்த ரைப் புறககொடை காணேனாயின், மையுணட கண்ணினையுடைய என் சிறந்த மனைவியாய இவ ளினினறும் யான் பிரிவேனாக; என கணபோலும் நணபினையுடைய கேளிரொடு கூடிய இனகளி மகிழ்நகையை யான் இழந்தேனாகுக' எனறு ஒல லையூர் தந்த பூதப்பாண்டியன் வஞ்சினங் கூறி னான (புறம். 71:3-6,15,16). உண்கண (புறம். 89:2; பதி. 16:18). பொகுட்டெழினிக்குத் தோன்றிய பகைகள இரண்டனுள் தன்னைப் பார்த்த மகளி ரின் பூப்போலும வடிவினையுடைய மையுணட கண் பசப்பத் தோள் மெலிய நெஞ்சு பிணிதது அவர் துனிகூர்தலால் உளதாய பகை ஒன்று (புறம். 96:2-5). பகைவரை வெகுண்டு நோககிய அதிய மானின கண் தன தவமகன பிறந்தானைக் கண்ட விடத்தும் சினசசிவப்பு மாறவிலலை எனறு ஔவை யார் அவனது வீரத்தைப் பாராட்டினார் (புறம். 100:10,11). கிணைமகள் நீலத்தினது இணைந்த மலரை ஒக்கும் மையுண்ட கண்ணை யுடையவள் (புறம். 111:3,4). 'பெரும்புகழையுடைய பறம்பே, பாரி மாய்நது விட்டதனால யாம் கலங்கிச செய லற்று நீரொழுகும் கண்ணுடன் நின்னைத் தொழுது வாழ்த்திச் செலகினறேம்' எனறு கபிலர் பாரி மகளிரை அழைத்துக் கொண்டு பறம்பை விடுத்துப் போகையில இரங்கிக் கூறினார் (புறம். 113.5-7). மிக அழகிய குளிர்ந்த கண்ணினையுடை யவர் பாரி மகளிர் (புறம். 116:3). அமர்க்கண் ஆமா (புறம். 117:4,5) பாணனுடைய சுறறம் உண்ணாமை யால் உடம்பு வாடிக் கண் தெளிந்த நீரால் நிறைந்து வியர்ப்புற்று வருந்தியது (புறம். 136:6-9). நாஞ்சில் மலையில் மழையால் சொரியபபட்ட நீர் கோடை காயினும் மகளிர் கண்போன்ற குவளை முதலிய மலர்களைப் பூக்கும் (புறம. 137:7,8). பேகன மனைவி கண்ணகியின் நீல நறு நெய்தல் மலர் போன்று பொலிந்த மையுண்ட கண் தன் கணவன் துறந்தமையால் கலஙகிச சிந்திய துளிகள அவள் மார்பை நனைத்தன (புறம். 144:4,5). பேகன மனைவி 'அரி பரந்த மதர்தத குளிர்நத கணணை யுடையவள் (புறம. 147:5). பெருஞ்சிததிரனாரின் தாய் கண்மறைந்து முற்றத்திடததினினறும் புறப் பட மாட்டாத மூப்பையுடையவள (புறம். 159:4,5). 'அன்பின்றிப் பிரிநது சென்றவாக்கு இனறுடன ஓராண்டு கழிக' எனச் சொலலிக் கணணொளி மழுஙகிய இரக்கத்துடனே என் மனைவி வலிமை குனறித் துனபுறுவாள்' என்று பெருஞ்சித்திரனார் தம் மனைவி நிலையைக கூறிக் குமணனிடம பரிசில வேணடினாா (புறம். 161:10-14). 'சமைத தலை மறநத அடுப்பினிடததே காளான பூக்க உடமபு மெலியும் பசியால வருந்திப பாலின மையால் தோலொடு சுருஙகித் துளை தூாநத வறுமுலையை வறிதே சுவைககுநதோறும் அழு கினற தன் பிள்ளையின முகததைப் பார்தது, நீரால நிரம்பிய ஈரமான இமையும மழைக் கண்ணும் கொண்ட என மனைவியின் வருத் ததைப பார்த்து அதனைத் தீர்த்தற்குரியவன நீயென நினைந்து நின்பால் வநதேன' எனறு குமணனிடம் பெருநதலைச் சாததனார் கூறினார் (புறம். 164:1-8). 'நீதான போரைக காணின் அப் போரை வென்று பகைவரது படையை விலககி எதிர்நிற்றலால் வாள்பட்ட வடுவழுந்திய உடம பொடு கேளவிப்படும் செவிக்கு இனியனாகவும காணும் கண்ணுக்கு இன்னாதவனாகவும் இருக் கின்றாய்; நின பகைவரோ நின்னைக் காணின் புறந்தருதலால் புண்ணறியாத உடமபாகிய வடி

அ இ.பொ.க.தொ 2-4.அ

வொடு கண்ணுக்கு இனியராகவும் செவிக்கு இன்னாதவராகவும் இருக்கின்றார்; நீயும் நின்பகைவரும் இனிமைஇன்னாமைகளில் இவ்வாறு ஒத்திருந்தும் இவ்வுலகம் நின்னையே வியக்கின்றது; அதன் காரணம் என்னோ' என்று வினவுவார் போல ஏனாதி திருக்கிள்ளி மறத்தினைக் கோனாட்டு எறிச்சிலூர் மாடலன் மதுரைக் குமரனார் பாராட்டினார் (புறம. 167). அவுணர் கூட்டம் ஞாயிற்றைக் கொண்டு போய் ஒளித்தபோது இருள் உலகத்தாரின் கண்ணை மறைத்தது (புறம். 174:1-3). வேந்தரது உயர்ந்த கோயிலிடத்தே பரிசிலர் தம் கண்ணொளி கெடுமாறு பலநாள் நின்றலர்ந்து பாடி யானைப் பரிசிலைப் பெறுதல் (புறம். 177: 1-3). செங்கண் ஆடவர் (புறம்: 177:8: அகம். 157: 4;239: 3). கடுங்கண் எயிற்றி (புறம். 181:2). காதலரைப் புணர்ந்த மகளிர் பூவணி அணியவும் பிரிந்த மகளிரின் வருத்தத்தை யுடைய மையுண்கண் நீர்வார்ந்து துளிப்பவும் உலகைப் படைத்தோனைப் பண்பிலாளன் என்பர் பக்குடுக்கை நன்கணியார் (புறம். 194: 3-5). அதியமான் நெடுமானஞ்சியின் மார்பகத்தில் தைத்த வேல் அவனால் புரக்கப்படும் சுற்றத்தாரது புல்லிய கண்ணின் பாவை ஒளிமழுங்கப் புலவர் நாவிற் போய் வீழ்ந்தது (புறம். 235: 12-15). 'மாரி இரவில் மரக்கலம் கவிழ்ந்த காலத்துத் துன்புற்ற நெஞ்சுடனே கண்ணில்லாத ஊமன் கடலில் அழுந்தினாற் போலத் துன்பமாகிய மறுசுழியிற்பட்டுச் சுழலுவதை விடவும் இறந்துபடுதலே நன்று' எனப் பெருஞ்சித்திரனார் வெளிமான் துஞ்சிய நிலையில் வருந்திக் கூறினார் (புறம். 238: 14-19). தன் தலைவன் விண்ணுலகடைந்தானாக அவன் கற்புடைய மனைவி அவனுக்கு, உணவு கொடுத்தல் வேண்டிச் சிறிய இடத்தைத் துடைத்து அழுதலமையாத கண்ணையுடையளாய்த் தன் கண் கலுழ்கின்ற நீராலே சாணாகத்தைக் கொண்டு மெழுகினாள் (புறம். 249: 10-14). பசிய கண்ணினையுடைய மறவனொருவன் கரந்தையாரால் கவர்ந்து செல்லப் பட்ட ஆனிரையைத் தானொருவனே தனித்து நின்று மீட்டான் (புறம். 257: 2-10). தலைவனொருவனது பெரிய இல்லம் அவன் மாள்வதற்கு முன்னாட்களில் புதுமாந்தருடைய ஒளிமழுங்கிய கண் நிறையுமாறு ஆட்டிறைச்சிப் பொறியலை உண்டாககியது (புறம். 261:8-10). புதிய அகலிடத்தே கொண்ட புலியினது கண்போன்ற நிறத்தை யுடைய வெம்மையான கள்ளுணவை வீரர் ஒரு முறைக்கு இருமுறை உண்டனர் (புறம். 269:4,5). கண்ணுக்கு நிறைவு தரும் நொச்சியினது அழகிய நிறமுடைய தழையை மகளிர் இடையில் தொடலையாக அணிந்தனர் (புறம். 271:2-4). போர்ப்புண் பட்டு இறுதிநிலையில் இருந்த மறவனொருவனின் இறப்புறுதியைக் காட்டுவனபோல் நிகழ்ந்த குறிகளுள் ஒன்றாக அவன் மனைவியது துஞ்சாத கண் துயில் விரும்பியது சுட்டப்படுகிறது (புறம். 280:1-4). மறவனொருவன் முதனாட் போரில் தன் தமையனை வீழ்த்திய பகைமறவனைக் கொல்லுதற்கு அகலில் பெய்த குன்றிமணியைப் போலச் சினத்தால் சுழலுங் கண்ணையுடையனாய் அவனைத் தேடினான் (புறம். 300:3-6). தலைவனொருவன போரில் ஒருவரும் தனக்குத் துணையிலலாத தனிமை நிலையில, பகைமறவர் பலரும் தாக்கியதற்கெதிராகச் சிறப்புடைய செங்கண் சினத்தால் புகையத் தானே தன் கேடகத்தைக் கொண்டு தன்னைக் காத்து நின்றனன் (புறம். 311:4-7). சிறுவர் வில்லெடுத்து ஆர்ப்பின் பெருங்கட் குறுமுயல் கருங்கலன் உடைய மன்றிற் பாயும் (புறம். 325: 4-6). தலைவி குவளைப் பூப்போலும் மையுண்ட கண்ணுடையவள் (புறம். 348:6). அரிபரந்து மதர்த்துக் குளிர்ந்த கண்ணையுடையவள் அரிவை (புறம். 349: 5; அகம். 114:14,15). இளையோள் வடித்த வேலின் இலைபோலச் சிவந்தனவும் மையுண்டனவுமாகிய கண்ணினள் (புறம். 350:9,10). தேரூர்ந்து சென்ற தலைவனொருவன, வழியிடையே மறவன் மகளொருத்தியது சாயலை நோககித் தேரை நிறுத்தியவனாய் வெளுத்த கண்ணையுடையவனாய் அவள் யார்மகள் என்று பிறரை வினவி நின்றான் (புறம். 353:4-7). நிலமகள் விசும்பினை முகமாகவும் ஞாயிறும் திங்களுமாகிய இருசுடரைக் கண்ணாகவும் கொண்டவள் (புறம். 365: 1,2,10). செங்கண் மகளிரொடு சிறுதுனி கலந்து கட்டேறல் பருகி அறவோன் மகன் கெடலருந் திருவொடு விளங்கினான் (புறம். 366:14-16). மடக்கண் மயில் நடந்தது போல மகளிர் நடத்தல் (புறம். 373:10-12). போரில் எறியுங்கால் உண்டாகும் புண்ணைக் கண்டு ஆற்றாராய்ச் சிலர் கண் கலுழ்நதனர் (புறம். 373: 22,23). மான்கண் மகளிர் (புறம. 374:10). கண்ணன்ன மலர் (புறம. 396:2). இருங்கண் எருமை (பதி. 13:4). கண்ணின் முன்னர் உவபபினை வெளிப்படுத்தி நெஞ்சக் கருத்தை வெளிப்படுத்தலை யறியாத பகைவரிடத்தும் இமைய வரம்பன் நெடுஞ்சேரலாதன் பொயத்தலை யறியான் (பதி. 20:8,9). கூந்தலினின்றும் நீங்கிய மலர்களைப் போலத் திருமுகத் தலமரும் பெருமதர் மழைக்கண்ணை யுடையவள் சேரமாதேவி (பதி. 21:33-37). கழல்கண் கூகை (பதி. 22 :36; முரு. 49). கருங்கண் பேயமகள்

(பதி. 22:37; 30:36). பல்யானைச் செல்கெழு குட்டு
வனின் பகைவர் நாட்டில் மழையின்மையால் அந்
நாட்டு மக்கள் கண்ணில பனிக்கின்ற நிறைந்த நீரை
அடக்கியவாறு கைபுடைத்து வருந்தினர் (பதி. 26:
6-9,14). பைங்கண் யானை (பதி. 28:2; அகம். 85:7;
91:5; 187:18; குறு. 333:2; நற். 41:1; 43:9; 287:2).
கருங்கண் காக்கை (பதி. 30:39; ஐங். 314:2). கண்
ணைக் குத்தும் ஒளியினை யுடைய திகிரிப் படை
யேந்தியவர் திருமால் (பதி. 31:8,9). பகைவரது
கொடுமையினால் பாசறையில் பலநாள் தங்கித்
தூங்குதல் அரிதாகச் சிறுதுயிலும் இயலாமல் சங்கு
முதலியவற்றின முழக்கம் எழுப்பும் பெருமை
பொருநதிய படைச் செல்வத்திற் பழகிய கடல்
பிறக்கோட்டிய செங்குட்டுவனின் கண் மகளிர்
கூந்தல் மெல்லணை வதிந்து புணர்ச்சியாலுண்
டான சிறுதுயில் நீங்க எவ்வளவு நாளாகுமோ எனப்
பரணர் அவ்வேந்தனின் போர் வேட்கையைப்
புலப்படுத்துவர் (பதி. 50:18-26). கண்போல் நெய்
தல் (பதி. 51:17; அகம். 170:4; நற். 8:8; ஐங். 151:3).
ஈரிதழ் மழைக்கண் பேரியல் அரிவை (பதி. 52:18).
ஏந்தெழில் மழைக்கண் விறலியர் (பதி. 54:4,6).
ஊடலாற் சினந்து நோக்கும் மகளிருடைய கண்
ணுக்கு அஞ்சுவதினும் மிகுதியாக இரவலருடைய
துன்பத்திற்கு அஞ்சுபவன் ஆடுகோட்பாட்டுச்
சேரலாதன் (பதி. 57:13-15). இருங்கண் மூரி (பதி.
67:15). தன்னைப் பத்துப் பாடல்களால் பாடிய
கபிலர்க்குப் பரிசிலாகச் சிறுபுறமென நூறாயிரம்
காணம் கொடுத்த செல்வக் கடுங்கோ வாழியாதன்
பின்னும் நன்றாவென்னும் குன்றேறி நின்று தன்
கண்ணிற் கண்ட நாடெல்லாவற்றையும் காட்டிக்
கொடுத்தான் (பதி. ப. 7 - அடிக்குறிப்பு). இருங்கண்
யானை (பதி. தி. 1:1). சினத்தாற் சுழலும் விழி
யமைந்த பசுங்கண்ணையும் கழல்கண் கூகை
தொங்கும் காதினையு முடைய பேய்மகள் குருதி
யளைந்த கூருகிர்க் கொடுவிரலால் கண்ணைத்
தோண்டி உண்ட முடை நாற்றத்தை யுடைய
கருந்தலையைக் கையிலே ஏந்தித் துணங்கைக்
கூத்தாடுமாறு முருகன் அவுணரைக் கொன்று சூர்
மாவை வெட்டினான் (முரு. 48-61). கண்போல்
மலர்ந்த காமரு சுனைமலர் (முரு. 75). 'நெஞ்சே,
திருப்பரங்குனறில் பன்னிருகைக் கோமானின்
பாதத்தைக் கரங்கூப்பியவாறே கண்குளிரக் கண்டு
ஆசையால் முருகாற்றுப்படையினைப் பூசையாக்
கொண்டே புகல' எனப் புலவர் பாடுவர் (முரு.
வெ. 9). பாலை யாழின் துளைவாய் தூர்ந்த முடுக்
குதல் அமைந்த ஆணி நணடின் கண் போனறது
(பொரு. 9,10,22). கொழுங்கடை மழைக்கண் (பொரு.
26). கரிகாற் பெருவளத்தான தன்னை நாடி
வந்த பொருநனைத் தன் கண்ணிற் காணத்தகும்
அணிமையிடத்தே இருக்கச் செயது அருளினன்
(பொரு. 76,77). திறககாத கண்ணையுடைய குட்டி
முலையிடத்துப் பாலகுடித்தலைத் தன் பசிமிகுதி
யால் பொறுககமாட்டாது ஈனறணிமையுடைய
நாய் குரைததல (சிறு. 130-132). கொங்கு கவர் நீலச்
செங்கண் சேவல் (சிறு. 184). கடவுள் மால் வரை
(மேருமலை) ஒரு கண்ணை விழித்துப் பார்த்தா
லொத்தது நலலியக் கோடனின கோபுரவாயில்
(சிறு. 205,206). அரியேர் உண்கண் அரிவையர் (சிறு.
215). நல்லெழில் மழைக்கண் மடவரல் மகளிர்
(பெரு. 386,387). பூப்போல் உண்கண் புலம்பு முத்
துறைப்பப் தலைவியழுதாள் (முலலை. 22,23). வாள்
நெடுங்கண் (முலலை. வெ. 1:1). மதுரைத்தெரு உண்
டமையாத உணவு மிகும் செல்வததோடு கணடமை
யாத கண்ணுக்கினிமை வாயந்தது (மது. 16-18).
பெருங்கவின பெற்ற சிறுதலை நவ்வி மடககண
பிணையொடு துள்ளி விளையாடியது (மது. 275,276).
மகளிர் மடக்கண் செயிர்த்த நோக்குடையவர் (மது.
412). கண்ணைக் குத்துதல் செய்து சிந்தி விழுமாறு
ஒளியமைந்த பூத்தொழிலையுடைய கலிங்கம் (மது.
433). பாதியிரவில் ஒலியடங்கிய குளிாநத கடலை
யொப்பப் படுக்கையில் உறங்குவோர் இனிது கண
துயில்வர் (மது. 629–631). மதுரை ஊர்ககாபபாளர்
களிறறை இரையாகப் பார்ககும் புலிபோலக் கண
மாறாடவரின பதுஙகிடஙகளைப் பார்ததலினால
துஞ்சாக் கணணராய்த் திரிநதனர் (மது. 642-647).
கண்ணைக் குததி ஒளிவிட்டு விளஙகும் மின்னுக்
கொடி (மது. 665). பொலிவினையுடைய மகரக்
குழையிட்ட அழகிற்குப் பொருந்திய ஏந்தெழில்
மழைக்கண் மடவரல் மகளிர் (நெடு. 38,39). பாண்டி
மாதேவி பிரிவினால கலங்கிக் கரிய இமையினால்
தாங்கப்பட்டு மேனமேல் நிறைதலால் வீழும்
நிலையிலிருந்த நீர்த்துளியைக கடைககணணிலே
விரலை வைத்து ஒறறியெடுத்துச் சில துளிகளைத்
தெறித்தவாறு தனிமைத் துன்பததோடிருந்தாள்
(நெடு. 164-166). தலைவியும் தோழியும் தவிராத
வேட்கையொடு அருவியாடி உளளகம சிவந்த
கண்ணராயினர் (குறி. 55–61). தலைவனின் நாய்கள்
தமக்குப் புதியராய எதிாப்பட்ட தலைவியையும்
தோழியையும் கண்டவுடன் இமையாக கணணை
யுடையனவாய வளைத்துக் கொணடு நெருங்கின
(குறி. 131,132). மடமதர் மழைக்கண இளையர் (குறி.
141). தலைவன் வரும இரவு வழியின் ஏதம் நினைத்
துத் தலைவியின பெருமதர் மழைக்கண உகுத்த நீர்
மார்பை நனைத்தது (குறி. 248,249). கண்துயினற

கடையிரவு (பட். 115). பேய்க்கண் அன்ன முரசம்
(பட். 236). கரிகாற் பெருவளத்தான் பகைவரைத்
தன் செங்கண்ணாற் செயிர்த்து நோக்கினான்
(பட். 280). மலர்போல் மழைக்கண் மங்கையர்
(மலை. 58). சிறுகட் பன்றி (மலை. 153;அகம், 94:9;
277:8;நற்.82:7;98:2,386:1;ஐங்.266:1;267:1). அழகிய
கண்ணை யுடைய பெரும்பாம்பு (மலை. 259,261).
காண்டற் கினியவற்றைக் கண் குளிரக் காணல்
(மலை. 352). நின்று நோக்கினும் கண்ணின் ஒளி
யைத் தன்னழகாலே வாங்கிக் கொள்ளும் மலை
(மலை. 368,369). செங்கண் மரைவிடை (மலை. 406).
செங்கண் வராஅல் (மலை. 457). செங்கண் எருமை
(மலை. 472). காண்பார் விரும்பும் கண்ணுக்கினிய
சேயாற்றினது புதுப்புனல் வருவாய் (மலை. 476,477).
சிறுகண் கீரி (மலை. 504). மடக்கண் மரையான்
(மலை. 506). மடக்கண் மஞ்ஞை (மலை .509). கண்
ணுக்கினிய சேயாறு (மலை. 555). என்னைக் காட்டி
லும் என்னெஞ்சு விரைந்து சென்று தலைவியை
யடைந்து அவளைக் கண் புதைத்துத் தழுவியதோ
என்று வினைமுற்றி மீளும் தலைவன் தேர்ப்பாக
னிடம் கூறுதல் (அகம். 9: 17-26). 'தலைவியது நெய்
தற்பூவை யொத்த மையுண்ட கண் வருந்தினவாய்
அழுமாறு அவளைப் பிரிந்து செல்லக் கருதுவாயா
யின நீ பெரிதும் அரியதொன்றை மேற்கொண்
டனை யாவாய' என்று தோழி தலைவனிடம் கூறி
னாள் (அகம. 10:4-7). பொருள் வயிற் பிரிந்த
தலைவர் என்னொடும் சென்றிருப்பின் என் குற்ற
மற்ற கண் அழுதலைப் பொருந்தாமல உறக்கம்
கொண்டிருக்கும்; இப்போது அது கழிந்தது என்று
தலைவி வருந்தி மொழிந்தாள் (அகம். 11:7,12,15).
என் தாய் தன் கண்ணினும் இத்தலைவி யிடத்து
மிக்க காதலுடையவளாய் இருககின்றாள் எனத்
தோழி தலைவனிடம் கூறுதல் (அகம். 12:1). பைங்
கண் செந்நாய் ஏற்றை (அகம். 21:17,18). 'பிரிந்த
தலைவர் குறித்த பருவத்து வாராமை பற்றி
நோதலையுடைய நின் மையுண்ட கண் நீர் சொரிய
நீ வெறுத்த நெஞ்சொடு வருந்தறக' என்று தோழி
தலைவியை ஆற்றுவித்தாள் (அகம். 25:13-16). 'குவ
ளைப் பூவின் சிறந்த அழகினை வென்று அதனைக்
கெடுத்ததோடு அமையாமல், போர்வெற்றி பொருந்
திய வேல் குருதிதோய்ந்து பிறழ்வது போன்ற நின்
செவ்வரி பொருந்திய மையுண்ட கண்ணின் மாறு
பட்ட பார்வை நின்னைப் பிரியக் கருதிய தலை
வரை எங்ஙனம் போகவிடும்' என்று தலைவியின்
பிரிவு வேறுபாட்டினைத் தோழி மாற்றினாள்
(அகம்.27:11-17). கத்தியால் அறுக்கப்பெற்று இரு
பிளவாகிய வணப்பினையுடைய மாவின் நறுவடுப்
போலக் காணுந்தோறும் களிப்பு மேவுதல் குறை
யாத நோக்கமைந்த நின் மையுண்ட கண்ணை
நினையாதொழிந்த நாளில் யான் சிறிதும் உயிர்
தரித்திருக்க மாட்டேன் என்று தலைவன் தலைவி
யைத் தெளிவித்துப் பிரிந்தான் (அகம். 29:5-10).
கானத்தில் மறவர் அம்பெய்தலால் வழிதோறும்
மடிந்து கிடந்தோரது கண்ணைக்கவர்ந்து சென்று
கழுகுகள் யாமரக்கிளைகளிலிருக்கும் தம் குஞ்சுக
ளுக்கு உமிழ்ந்து கொடுக்கும் (அகம். 31:5-11). மலர்
தன் பெருமையினை இழத்தற்குக் காரணமானது
தலைவியின் மையுண்ட அழகிய மழைக்கண் (அகம்.
33:9). சுனையில் கவின்பெறு நீலப்பூ கண்போல்
மலர்ந்தது (அகம். 38:10,11). மாரிக் காலத்துப் பூப்ப
தாகிய பித்திகத்தின் எழுச்சி பெற்ற மணம் தங்
கிய அரும்பின் சிவந்த பின்புறத்தை யொக்கும்
கொழுங்கடை மழைக்கண்ணையுடையவள் தலைவி
(அகம். 42:1-4). செங்கண் காரான் (அகம். 46:1;குறு.
261:3). தலைவன் மகளிர் கண்போல் மலர்ந்த அழ
கிய ஒளிபொருந்திய செங்கழு நீர்ப் பூக்களாலாய
மாலையன் (அகம். 48:8). இயறகைப் புணர்ச்சியில்
தலைமகன் தலைமகளது மையுண்ட கணணை
நோக்கெதிர் நோக்காகப் பலமுறை நோக்கிச்
சென்றான (அகம. 48:20-22). அன்றில் மனைசேர்
பனையில் துணையொன்று பிரியினும் துஞ்சாகாண்
என்று தலைவன் பிரிந்த நிலையில் தலைவி கண்
ணில் நிறையும் நீரைக் கொண்டு தன் ஆற்றாமை
யைப் பிறரறிவதற்கு அஞ்சிஅதற்கு வேறு காரணம்
கூறினாள் (அகம். 50:10-14). பல இதழ்களையுடைய
பூப்போலும் மழைக்கண் அமைந்த மாயோள் (அகம்.
51:9). காமநோயினால் தலைவியது ஆய்மலர் உண்
கண் பசலை பூத்தல் (அகம். 52:14,15). தண் கயத்
தில் நிறைந்த வண்டுகள் மொய்க்கப் பெற்றுத்
தமக்குத் தாமே நிகரான மலர்களைப் போலும்
பேரழகினை இழந்துவிட்ட கண்ணையுடையவ
ளாய்த் தலைவி தலைவனின் பிரிவில் பெரிதும்
வருந்தினாள் (அகம். 59:1-3). குவளை மலர்களை
இணைத்து வைத்தாற் போன்ற கரிய இமையினை
யுடைய மழைக்கண அமைந்தவள் மாயோள் (அகம்.
62:4,5). மகளிர் வரிசையான இதழ்களையுடைய பூப்
போலும் மையுண்ட கண்ணினா (அகம். 65:19). பூங்
கண் புதல்வன் (அகம். 66:12; நற். 221:11). தலைவனது
பிரிவினால் தலைவி கரிய மலரின சிறந்த அழகினை
யிழந்த கண்ணள் ஆனாள் (அகம். 69:1,2). கொழுங்
கண் அயிலை (அகம். 70:4). தலைவன் தலைவியைப்
பிரிந்து செல்லக் கருதுவானாயின அவளது நீரொ
ழுகும் கண் அவன்முன் தோன்றி அருந்துயர் தரும்
(அகம். 77:12,19). பருந்தின் பேடை வெள்ளிய கண்

ணை யுடையது (அகம். 79:12). பாலை நிலத்தில காணமாட்டாது கண் கூசுமாறு ஞாயிறு காய்தல் (அகம். 81:6,7). 'அழகிய மையுண்ட கண்ணினளாய எம் தலைவி அழுமாறு அவளைப பிரிந்து செல்லு வீரோ' என்று கூறித் தோழி தலைவனைப் பிரிவு விலக்கினாள் (அகம். 81:14,15). தலைவனைக் கண் டோர் பலராகவும், அவருள் ஆரிருள் கங்குலில் அணையிடத்திருந்து நீரொழுகும் கண்ணொடு யானொருத்தியே மெலிந்து வருந்துதற்குக் கார ணம் எனன என்று வினவுவாள் போலத் தலைவி தோழிக்கு அறதமொடு நின்றாள் (அகம. 82:14-18). 'நெய்தலினது முகையவிழ்ந்த ஒளி பொருநதிய மலரையொத்த ஏநதெழில் மழைக்கண்ணை யுடை யவள் தலைவி (அகம். 83:12-14). பன்றி நெருப்பி னைப் போன்ற சிறுகண்ணை உடையது (அகம். 84: 6). உயர்ந்த மலைப் பக்கங்களில் காண்போர் கண கெடுமாறு மின்னி மழை பொழிதல் (அகம். 92:1,2). செங்கண் இரும்புலி (அகம். 92:4;குறு. 321:6; நற். 148:9). செங்கண் மழவர் (அகம். 101:5). பெரும்லைப் பக்கத்தில் தினைக்கதிரைக் கவர வந்த யானை அங்குக் கொடிச்சி குறிஞ்சிப்பண் பாடக கேட்ட நிலையிலகதிரையும் கவராமல், நின்ற நிலை யிலும் பெயராமல் அதுவரை துயிலப் பெறாத பைங்கண் துயில் வரப்பெற்று உறங்குதல் (அகம். 102:5-9). பல இதழ்களையுடைய மெலலிய மலர் போன்ற மையுண்ட கண்ணையுடையவள் தலைவி (அகம். 109:1,3). யாம் கடற்கரைச் சோலையிடத்து சிற்றில் இழைத்துச் சிறுசோறட்டு ஓய்ந்திருக்கை யில் விருநதுண்டு சிறுகுடியில் தங்கிச் செல்வேன் என்று கூறித் தன் நெடுநதேர்க் கொடிஞ்சியைப் பற்றி நின்றவன், இன்றும் என் கண்ணுக்கு முன்னே நிறபவன் போல காட்சி தருகினறான் எனத் தோழி செவிலிக்கு அறத்தொடு நின்றாள் (அகம. 110:5–25). நீதலைவியைக கூடிய களவினை அறியாத எமர் மணம் நிகழ்தத, நீ அவளை மணந்து கொள்ளும் ஒழுக்கத்தை யாம் கண்ணார நோக்கிப் புதியோர் போல அவளது புதுநாண் ஒடுக்கத்தையும் காண்போம் என்று தோழி தலை வனிடம் கூறி வரைவு கடாவினாள் (அகம. 112:15-19). ஞாயிறு மறைந்த மாலைக் காலததில் தலைவி தன் மதரெழில் மழைக்கண் கலங்க அழுதனள் (அகம். 120: 5,6). கடாம மாறிய பைங்கண் யானை பெய்து வறிதாகிய மேகத்திறகுவமை (அகம். 125: 7–9). கயல்மீனைப் போனறு ஒனறனோடொன்று போரிடுகின்ற மையுண்ட பெரிய கண்ணையுடைய வள் குறுமகள் (அகம். 126: 18-21). தலைவி கருங் குவளை மலர் போன்ற மையுண்ட கண்ணையுடை யவள் (அகம். 129:16). வண்டு வாய் திறந்த கழியி லுள்ள நெயதற்பூ புறங்கொடுததற்குக காரண மாகிய தலைவியது அழகிய மையுணட கண்ணின் மதர்தத நோக்கு தலைவனைக் கவர்நதது (அகம். 130: 12-14). கொடிச்சி அழகிய மலர் போன்ற மழைக் கண்ணையுடையவள (அகம். 132:6,7). ஓவி யத்தில் எழுதினாறபோலும் பேரழகுடைய மழைக் கண் கலங்கியழுமாறு பிரிவு நோய மிகுநது தலைவி பேதுற்றாள் (அகம். 135:4-6). திருமணத்தில் தலை வியை மஙகல நீராட்டிய மகளிர் விருபபுற்றுத் தம் மலர்க்கண இமையாமல் அவளது பேரழகை நோக் கினர் (அகம. 136:8,9). தலைவி தன குவளை மலர் போன்ற மையுண்ட கணணில் தெளிநத நீர்ததுளி கள் நிறைய வீணே வருந்திய துயரததிறகு அனனை வேறொரு காரணம் கருதி ஐயுற்றாள (அகம. 138: 2-4). உடபு விற்று வந்தபோது நாயககுரைபபுகது வெருவிய கயல்மீன் எதிர்ததுப பொருவது போனற தலைவியின் மதர்த்த கண் தலைவனுககுக காதல் நோய் தநதது (அகம. 140:7-15). தலைவனின பொருள வயிற் பிரிவை எணணிச சுனையில மழைததுளியால் மலர்ந்த நீலபபூப போனற தலைவியின கண நீரைச சொரிநதது (அகம். 143: 1,14-16). தலைவர் மீளவ தாகக குறித்த நாள் பொயததனால தலைவியின செவ்வரி பரநத அழகிய மையுணட கணணிற பெருகும் துன்பநீரும நிலலாமல் வழிநதது (அகம. 144:1,2). தன கூந்தலைப பிடிதது அருளினறி யான எறிகோல சிதைய முதுகில அடிக்கவும பொறுத்து நின்ற அமர்த்த கணணையுடைய மகளை அவ் வாறு துனபுறுத்திய என கைகள் கடுநதுனபததை அடைவனவாக எனறு செவிலி மகடபோககிய நிலையில் வருநதிக் கூறினாள் (அகம. 145:14,18-22). மடக்கண் எருமை நாகு (அகம. 146:3). மாயப பரத் தனாகிய தலைவனின வாய்மொழியை நம்பிக் காற்று வீச அசையும் மழைபெய மலரைப் போலக் கண் நீரினை மார்பிலே சொரியக கணபசநது அழகினை யிழக்கத துணிநத பரததை மிகவும இரங்கத்தககாள எனறு தலைவனது பரததைமை யைத தலைவி கூறுதல (அகம. 146:8-13). நீலததி னது புதிய மலரைச சேர்த்துத தொடுதத பிணை யலைப் போனற இவள் அரிமதா மழைககண நீரைக் கொளள யான பொருளதேட வாரேன எனத தலைவன தன நெஞ்சொடு கூறிச செல வழுங்கினான (அகம. 149:7,17-19). கணபோலும நெயதல மாமலர் (அகம். 150:8). தலைவி குவளை மலாபோலும மையுணட கணணினள (அகம. 156: 8). தலைவனது பிரிவையுணாந்து தலைவியின பல லிதழ் உணகண இளமுலை நனைய நீரைச்

சொரிந்தன (அகம். 161·8-14). மலரைப் போல ஒளி பொருந்திய முகத்தில சுழலும் அழகிய இதழினை யுடைய மழைக்கண்ணினள் தலைவி (அகம. 162:10,11). பாசறைக்குப் பிரிந்த தலைவர் நிலை யாதோ என மயங்கித் தாழும் நீரினைச் சிந்தும் கணணொடு தலைவி மனையில் வருந்தினாள் (அகம். 164:8-10). மகட்போக்கிய தாய் மணலிற் கிடந்த பாவையை யெடுத்து அதனை அம்மகள போலக் கருதி அதன் கண்ணும் நுதலும் நீவினாள் (அகம். 165:9-12). அழகிய இதழ்கஎமைந்த மலர் போலும் மையுண்ட கண்ணை யுடையவள் தலைவி (அகம். 172:16). நண்டு வேம்பின் அரும்பினையொத்த நீண்ட கண்ணையுடையது (அகம். 176:8). தலைவி மலரேர் உண்கண்ணினள் (அகம். 176:16). சிறுகண் இரும்பிடி (அகம். 177: 3,4). பன்றி தினைக்கதிரை மேய்ந்து இனிது கண்ணுறங்குதல் (அகம். 178:2,12,13). குவளையின புதுமலரை ஒக்கும் மையுண்ட கண்ணையுடையவள் தலைவி (அகம். 179:12). முக்கட் செல்வன் (சிவ பெருமான) (அகம. 181:16). இடியொடு மழைபெய்த நடுஇரவில் தலைவன் தனியே வந்த வழிவருத்தத்தை நினைந்து தலைவியின் கண எப்பொழுதும் பனியொடு கலுழும் (அகம். 182:9-12). தலைவியின குவளை மலர்போலும் மையுண்ட கண் கலங்கியழுமாறு தலைவன் அருளின்றிப் பிரிந்தான் (அகம். 183:1-3). தலைவனைத தலைவி அலமரல் கொண்ட தன் மழைக்கண்ணினால் விரும்பிப் பார்க்காதிருபபவும் அவளை அவனொடு தொடர்புறுத்தி ஊர் அலர் பாடும் (அகம. 190:3-5). யாமரததில் கழுக தன் குஞ்சுக்கு ஊட்டும்போது வழுககிய கொழுங்கண்ணாகிய ஊன்துண்டு தொல்பசி முதுநரிககு உணவாயிற்று (அகம. 193:7-10). மகளைத் தன் காதலனொடு போக்கியமையால் ஆருக வருகின்ற நீருடன் கலங்கியழும் எம் கண் கஙகுலில் இனிது துயிலுமாறு அவளை அவன் எம் மனைக்கு முதலில அழைத்து வருவானோ என்று நற்றாய வேலனை வினவினாள் (அகம். 195: 14-18). தன தந்தையது கண்ணின கவினை யழித்த தவறறிறகாகக் கோசர்களைக் கொல்வித்து அன்னி மிஞிலி முரண் தணிந்தாள் (அகம். 196.8-12). கரிய (குவளை) மலரின அழகினை யிழந்த கண்ணுடன் தொல நலமிழந்த துயரொடு தலைவி பிரிவுக் காலத்தில வருநதியிருந்தாள் (அகம். 197:1-5). தலைவியின தோளைச் சேர்ந்தாலல்லது என் கண் துயிலாவாம் என்று கூறித் தலைவன நடு யாமத்திலும் புலிதிரியும் பெருமலை வழியே இரவுக் குறியிடத்து வருதலை எளிதென எண்ணினான (அகம். 218:8-13). பிரிவிடை வேறுபட்ட தலைவியின் நிலை கண்டு தோழி பலபடியாக நீர்மலி கண்ணொடு நெடிது நினைந்து வருந்தினாள் (அகம். 227:1-5). சிலம்பில் கண்ணென மாயிதழ்க் குவளை மலர்ந்தது (அகம். 228:3,4). தலைவனின் பிரிவில் நோய் மலிந்து உகுத்த நீர் பல இதழ்களையுடைய மலர் போலும் மழைக் கண்ணின பாவையை மறைத்திடத் தலைவியின் மேனியழகு தொலைதல் நோக்கித் தோழி அவளை வருந்தாதே என்று வற்புறுத்தினாள் (அகம். 229: 11-15). செங்கண் இருங்குயில் (அகம். 229:19; நற். 118:3;224:5; ஐங். 346:3). சிறு கரு நெய்தல் கண் போல் மாமலர் (அகம். 230:2). சிற்றிலிழைத்து விளையாடியிருந்த தலைவியிடம் சென்ற தலைவன், அவளைத் தன்னொடு கூடி மனையுரிமை கொள்ளுமாறு வினவியது கேட்ட நிலையில் அவள தன் அழகுமிக்க செவ்வரி பரந்த மையுண்ட கண்ணில் உவகை நீர் வருதலை மறைத்துத் தலையைச் சிறிதே இறைஞ்சினள் (அகம். 230:6-15). பிரிவில் வேறு பட்ட தலைவியை நோககி, 'கலங்குகினற நின் மழைக்கண்ணினின்றும் நிறைந்த நீர் முலை நனைய அழாதே' எனறு தோழி தேற்றினாள் (அகம். 233:1,2). பண் அமை நெடுந்தேர் செலலும் விரைவினால் கண்ணின் நோக்கினைத் தவிர்க்கும் (அகம். 234:8). தன் காதலனை இழந்தமையின் ஆதி மந்தி கலுழ்ந்த கண்ணளானாள் (அகம். 236:19,20). தலைவர் உறந்தையினையே எய்தினும் கடை சிவநது வியக்குமாறு ஒன்றோடொன்று பொருகின்ற மையுண்ட கணணையுடைய தலைவியின கூரிய வாலெயிறூறிய நீரைப் பொருளீட்டல் காரணமாகத் தவிரலர் (அகம். 237:14-17). மடக் கண் ஆமான் (அகம். 238:6). நீரொழுகும் கண்ணை யுடையேமாக வாடைக்காற்று நமககே துன்பந்தருவதாயுள்ளது என்று தலைவனின் பிரிவில் தலைவி வருந்திக் கூறினாள் (அகம். 243:8,13,14). தலைவர் பிரிந்து சென்ற இடம் அவர்க்கு இனிது போலும் எனக் கூறித் தலைவி பல இதழ்களை யுடைய மலர்போலும் தன் மழைக் கண்ணின் உள்ளிடமெல்லாம் சிவக்க அருந்துயரை உடையளாயினள் (அகம். 244:7-10). நீரொழுகும் கணணேனாய்ப் பிரிவு நோய் வருத்தத் தனியேனாய் இருத்தலை யான் ஆறறேன் என்று தலைவி நொந்துரைத்தாள் (அகம். 252: 7,8). மையுணட அழகிய கண்ணை யுடைய பரத்தையுடன் தலைவன வையைப் புனலில் இனபம் நுகர்ந்ததனை ஊரார் அறியாமல் பரத்தையர் கூட்டம் மறைக்கவும் அலர் மிக எழுந்தது (அகம். 256: 10-13). 'நெஞ்சே, இரவுக்குறியிடததுச் சென்றும் நீ தலைவியைப் பெறாமல் புல்லென்ற

கண்ணையுடையையாய்ப் புலம்புகொண்டு அரிய துன்பத்தினை எய்துவித்தனை' என்று அல்லகுறிப் பட்டு மீண்ட தலைவன் தன்னெஞ்சொடு நொந் தான் (அகம். 258: 11-15). கோசர் அன்னி மிஞிலி யின் தந்தையை அருளாது கண் களைந்து துன்புறுத் தினர் (அகம். 262: 5, 6, 12). புதுப்புனலில் விளை யாடிய பரத்தையர் தம் ஏந்தெழில் மழைக் கண்ணால் நோக்குந்தோறும் தலைவன் விருப்பம் தவிரானாய்க் காமம் சிறத்தலால் நாணிழந்து அவருடன் ஆடினான் (அகம். 266: 5-9). அருஞ்சுரம் இறந்த தலைவர் ஒளிபொருந்திய செங்கழுநீர் மலரையொத்த தலைவியின் கண்ணினின்று வழி யும் நீரைத் துடைக்க விரைந்து மீண்டனர் (அகம். 269: 13, 24, 25). சேரியோரைக் 'கண்ணுடையீரே' என விளித்து நேற்றுத் தன் தலைவனுடன் போய் விட்ட என்மகள் நொச்சி மரத்தின்கீழ் சிறு விரல் களால் இயற்றிய வண்டற் பாவையை நீர் கண்டீரோ என்று மகட்போக்கிய தாய் வின வினாள் (அகம். 275: 15-19). தலைவனின் பரத்தை தலைவியின் பாங்காயினாரை அரிவேய் உண்கண் பெண்டிர் என்று குறித்தாள் (அகம். 276:8). நம் மேனியின் நலம் தொலையத் துயரம் செய்தோ னாகிய தலைவனின் மலையிலே தோய்ந்து வரும் அருவி நீரில் வெறுப்புத் துன்பம் நீங்கப் பனியை யொக்கும் மழைக்கண் சிவக்குமாறு நாம் மூழ்கு வமோ என்று தோழி தலைவியிடம் கூறினாள் (அகம். 278: 11-15). கானவன் யானைக் கொம் பினைக் கொண்டு மலையில் பொன்னை அகழ்ந் தெடுக்கையில் கண்ணை ஒளி மழுங்கச் செய்து விளங்கும் மணிகள் வெளிப்படுதல் (அகம். 282:2-5). நெல்லிக்காயை ஒத்த குறுவிழிக் கண்ணையுடையது குறுமுயல் (அகம். 284: 1,2). குவளை மலரையொத்த மையுண்ட கண்ணையுடைய தலைவியும் தன்னுடன் வருவாள் என்று தலைவன் உடன்போக்கு நேர்ந் தான் (அகம். 285: 13, 14). தோழி, நம் சேர்ப்பன் வந்து மணப்பதற்கு முன்னும் என் கண் நெய்தற் பூவின் நீலமணியை ஒத்த மாணலம் நீங்கிப் பொன் போலும் நிறத்தைக் கொண்டது யாது காரணத் தால் என்று தலைவி தோழியிடம் வினவினாள் (அகம். 290: 8-16). நெஞ்சே, நீ அருஞ்சுரங் கடந்து வந்து நல்லெழில் மழைக் கண்ணையுடைய நம் காதலியின் தோளழகை நினைத்துப் பயனில்லை என்று பொருள்வயிற் பிரிந்து தலைவன் தனக்குள் கூறினான் (அகம். 291: 21-25). உகாவின் காய் குயிலின் கண்போன்ற நிறமிக்கது (அகம். 293: 6, 8). காதலரைப் பிரிந்த கையறு மகளிரது நீரொழுகும் கண்ணைப்போல் கருவிளை மலர்ந்தது (அகம். 294: 4,5). மாரிக் காலத்தே பூக்கும் பித்திக மலரின் குளிர்ந்த இதழை யொக்கும் அழகொழுகும் செங் கடை மழைக்கண்ணையுடைய மடந்தையே என்று தலைவியைத் தோழி விளித்தாள் (அகம். 295:19-21). அரிமதர் மழைக்கண் மாயோள் (அகம். 296:3). தலைவன் தன் பொருள்வயிற் பிரிவை உரைத்த நிலையில் தலைவி அவலத்தோடு முகமிறைஞ்சி நீருடன் கூடிய ஈரம் வாய்ந்த இதழினையுடைய மழைக்கண் துளிகள் மார்பில் சொரியக் கலங்கி னாள் (அகம். 299:10-16). தலைவனின் பரத்தை யொருத்தி தன் சிவந்த அழகிய இதழினையுடைய மழைக்கண்ணால் அவனை வருத்தம் மிக நோக்கி அவன் மாலையை யறுத்து ஊடினாள் (அகம். 306: 10-14). மழை பெய்தலையேற்ற மலரைப் போலக் கண் நீரைச் சொரியத் தலைவி இங்கே தனித்து வருந்துவாள் என்று எண்ணாமல் தலைவன் பொரு ளீட்டப் பிரிந்து செல்லுதல் பொருந்தாது எனக் கூறித் தோழி அவன் செலவு விலக்கினாள் (அகம். 307:4-6). 'நீ பன்னாளும் வந்து பணிமொழி பயிற் றுதலால் கருங்குவளை மலர் போன்ற மையுண்ட கண் கலங்கத் தலைவியும் நின்னிடத்துப் பெரும் மயக்கத்தினை அடைந்துள்ளாள்' என்று தலைவனி டம் தோழி கூறினாள் (அகம். 310:4-6). 'பெருமலை நாடன் வரையக் கருதுவானாகலின் நாளை அவன் மார்பு புணையாக மலையருவியில் நம் செவ்வரி பரந்த மதர்த்த மழைக்கண் சிவப்ப உவந்தாடு வோம்; வா' என்று தோழி தலைவியிடம் சொன்னாள் (அகம். 312:3-8). தலைவன் பிரிந்து சென்ற வழி வருத்தத்தை நினைந்து நாள்தோறும் தலைவி நீரில் மூழ்கிப் போரிடும் கயல்மீன் போலும் கண்ணில் நீர் பெருக இரவும் பகலும் வருந்தியிருந் தாள் (அகம். 313:3-6). 'இவள்பெண்ணியல்பு சான்றனள்' என்று நேற்றும் பலமுறை என் கண்ணே துணையாக நோக்கி என் நெஞ்சம் ஐயுற்றது எனினும் அறியாமையினால் அவளை இற்செறிக் காது விட்டேன்' என்று மகட்போக்கிய தாய் நொந்து மொழிந்தாள் (அகம். 315:3-6). மலரை யொத்த மையுண்ட கண்ணையுடைய என் தோழி என்று தலைவியைக் குறித்துத் தலைவனிடம் தோழி கூறுதல் (அகம். 320:6). பசித்த யானையின் பொலி வற்ற கண் போன்றது வறிய சுனை (அகம். 321: 1,2). 'பேரமர் மழைக்கண்ணையுடைய நறுமகளா கிய பரத்தையை நோக்கியோர் திறத்து அவள் கண் தைத்தல் தப்பாது (அகம். 326:2,3,13). மைந்நிற உருவின் மணிக்கண் காக்கை (அகம். 327 : 15). தலைவனின் பிரிவில் தலைவி தன் பூங்கண் பசப்ப நோய் கூர்ந்து வருந்தினள் (அகம். 329:1, 2).

அழகிய நிறத்தினால பொலிவனவாக ஒன்றோ
டொனறு எதிரததுப் பொருகின்ற மையுண்ட
கணணை யுடைய தலைவியை இப்பொழுதே
காணபதற்குத தேரினை விரைந்து செலுத்து
வாயாக எனறு விரைவுற்றி மீளும் தலைவன
பாகனை ஏவினான (அகம. 334·15-17). பேரமர்
மழைக்கணணையுடைய தலைவி தனிமையுற்றிருக்க
நாம பிரிநதுறைதல இனிதனறு எனறு தலைவனின்
நெஞ்சம் இடைச்சுரததே எணணி மீணடது (அகம.
337:3,4,19). வெப்ப மிகக காட்டின் கவர்தத நெறி
யில வெள்ளிய பரறகறகள் கணணைப் பறிககு
மாறு மினனும (அகம. 337:16,18). கள்ளாலாகிய
மகிழவுபோல மகிழதறகேதுவாகிய அரிமதர் மழைக்
கணணை யுடையவள் தலைவி (அகம். 343:16–19).
'ஏந்தெழில் மழைககண்ணை யுடைய இததலைவி
காரணமாக எம் சிறு நல்லூர்கது வநது இன்று
தஙகிச செலவாயாக' எனறு தோழி தலைவனை
அழைத்தாள (அகம. 350:8,9,15). பொருளவயிற
பிரிநத தலைவனின் மீட்சியைக் குறிததுச் சுழிதத
வட்டஙகளைத தலைவி நாள் தோறும எணணி
அவை எழுதபபட்ட சுவர் நனைதறகேதுவாய அழு
கினற மழைக்கணணிலிருநது விலகி விழும் நீா அவ
ளது காதில் அணிநதிருககும் பொறகுழையில
தெறிககும் (அகம. 351:10-12). தலைவி மாட்சிமைப
பட்ட மலரொடு மாறுபட்ட மையுண்ட கண்ணை
யுடையவள (அகம. 354:12-14). தலைவர் உம்பற
பெருஙகாட்டைக கடநது செனறாராயினும நீலபபூ
காறறினால அசைநதாலொதத அழகிய இதழ
பொருநதிய நின மழைககணணின அமாதத
நோககினை, நினையாதிராா எனறு தலைவியைத
தோழி பிரிவுக காலத்தில வறபுறுததினாள
(அகம. 357:9-16). குவளை மலர் கணணையொதத
இதழகளை யுடையது (அகம. 358 5). தலைவனின
பிரிவுககாலததில தலைவியது நீரொழுகும மை
யுணட கண பிறரறிய வாடுதலுற, அவவாட்டத்
தினை அவரறியாதவாறு அவள மறைததிருநதாள்
(அகம. 359 1-3). தாமரைப பூவினிடததில மாயிதழக்
குவளை மலா இரணடினைப பிணைதது வைததாற
போனறு திருமுகத்தில சுழலும் பெருமதா மழைக
கணணை யுடையவள தலைவி (அகம. 361:1-4). பைங்
கண வலலியம் (அகம. 362:4). கரிய அழகிய இணை
யொதத எதிரெதிா பொருநதிய மலர்போனற
நின் மையுணட கண்ணின பெண்மானையொதத
பாாவைமககு அழகினையுறுமாறு தலைவர் மீணடு
வநதனா எனறு தோழி தலைவியிடம கூறினாள
(அகம. 363 17-19). வெருகின பைங்கண ஏறறை
(அகம. 367:8). 'சுனையிலுள்ள ஒளிபொருந்திய
மலா போலும எனத தேனை விருமபிப் பூக்களை
ஆராயும் வணடுகள விருப்புறும காதலியின கண்
பிரிநது வநத நிலையில் நீரொழுகப் பெற்று என்ன
துனபததை எய்துமோ' என்று தலைவன பிரிநது
போகுமிடை வழியில தன்னெஞ்சொடு கூறினான
(அகம. 371.10-14). நம் பிரிவில அழகிய பூவிதழ
போனற மழைக்கண வருததம மிககுத் தோளினை
நனைககுமாறு அழுதலின ஒழுகும் நீர்த்துளி
களை விரலால தெறிததுத தலைவி துயில் துறந்
தாளோ என இடைசசுரத்துத் தலைவன் எண
ணினான் (அகம. 373: 13 - 15, 19). கொடிய
சுரநெறியைக் கடநது சென்ற நம் தலைவர்
தீஙகிலராய் மீண்டு வருதலை அறியின என
கண் அழமாட்டா எனறு தலைவி தோழியிடம்
கூறினாள் (அகம. 375:16-18). குவளை மலரின்
இணைநத பூக்களைப் போலும் தன செவ்வரி பரந்த
மதர்த்த மழைக்கண நீரைககொள்ளுமாறு தலைவி
வருந்துவாளோ எனறு தலைவன இடைசசுரததே
தனனெஞசோடு கூறினான (அகம.381:18-21). தலை
வியது செவ்வரி பரநத மதர்தத மழைக்கண் கலங்கி
யழத் தலைவன பிரிநது செலலக கருதினான (அகம.
387:2). காடைப் பேடை நீலமணி போனற கண்ணை
யுடையது (அகம். 387:10). உப்பு விற்று வந்த நெய்
தல் நிலத் தலைவியைத தலைவன் சொல்லாடி
மறித்தபோது அவள் தன செவ்வரி படர்நத
மையுணட பெரிய கணணால் அவனை மாறுபட்டு
நோக்கினாள் (அகம். 390;8-13). என தலைமுடியை
யான் காணுந்தோறும் முனபு அதில் தலைவர்
புனைந்த புனைவு நினைக்கப்படுதலால் இனறோடு
இனனும் சினனாள் செனறாலும என்கண் உறங்
காது எனறு பிரிவாறறாத தலைவி தோழியிடம்
கூறினாள் (அகம. 391:7-10). குவளையின மாரிக
காலத்துக் கரிய மலர் மழைக்கு எதிர்ப்பட்டாற்
போலும் நீரொடு நிறைந்த நம் பேரமர் மழைக
கண்ணின் நீரொழுகும துனபம் நீஙகுமாறு தலை
வர் இப்போது மீணடுவரின் நனறு என்று தலைவி
தோழியிடம் கூறினள் (அகம. 395:1–5). தலைவன
வரையாது களவு நீட்டித்த கொடுமை குறித்துத்
தலைவியின் அலமரல் மழைககணணிலிருந்து நீா
பெருகியது (அகம. 398:7,8). 'மெல்லமபுலமபன பிரிந்
தானாகத தலைவியின் பல்லிதழை யுடைய மலர்
போலும் மையுணட கண் துயிலாவாயின' (குறு.
5:4,5). கழியினிடதது இலைககு மேலே உயர்நது
நிற்கும் நெய்தற்பூ, வெளளம் மிகுந்தோறும் மூழகி
யெழுதலால் குளததில் மூழ்கியெழும் மகளிரின
கணணையொககும் (குறு. 9:4-6). பிரிவில் தலைவி
நாள்தோறும் துயிலாது கலங்கியழும் கண்ணொடு

தனித்து வருந்தினாள் (குறு. 11:1-3). 'தலைவன காம நோயைத் தந்ததமையால தலைவியின் குவளை மலர் போன்ற அழகிய கண் பசலை நிறத்தை நிரம்பப் பெற்றன' (குறு. 13:3-5). 'துயரத்தினால நீரொழுகும் கண்ணை உடையையாய நீ இங்கே தனித்திருக்க நின்னைத் தலைவர் பிரிந்து செலலார்' எனறு தோழி தலைவியை வற்புறுததினாள் (குறு. 22;1,2). நாடன் இவளுக்கு உரியனாகும தகுதியிலலான் என்பது போல் கட்டுவிச்சி இவளைத தெய்வத்தோடு தொடர்புறுத்திக் கூறினும் அவனையொரு கடுவனும் அறியுமாதலின், அது தன் கண்ணாற் கண்ட நிகழ்ச்சியை மறைத்துப் பொய்ககாது எனறு தோழி செவிலிக்கு அறததொடு நின்றாள் (குறு. 26:3-8). 'வாடை வீசும் இக்கூதிர்க்காலத்திலும் பிரிந்துறையும் தலைவர் பொருட்டு அழுதலால் என் கண் உறுதியாக நாணில்லாதனவே' என்று தலைவி கூறுதல் (குறு. 35:1,5). தலைவனுடன் சென்ற தலைவியைத் தேடிப் போன செவிலி இணைந்து எதிர் வருவாரை நோக்கிநோக்கித் தன் கண் ஒளியிழந்தன என்று நொந்து கூறினாள் (குறு.44:1,2). ஞாயிறு காயும வெம்மையுடைய பாறையிடத்தே கையிலலாத ஊமன் கண்ணாலேயே காக்க முயலும் வெண்ணெயின் உருகலைப் போலத் தலைவனது காமநோய அவனுடலில் பரந்தது (குறு. 58:3-6). ஆனின் மடக்கண் குழவி தாயை மாலையில் மன்றம நோக்கித் தலைநிமிர்ந்து வருந்தியது (குறு. 64·1-3). கருங்கண் தாக்கலை (குறு. 69:1). தலைவியது பெருமழைக்கண அழகினால பூவினை யொத்துச் சுழலுந தன்மையவாயிருந்து பின அம்பினை யொத்து எலலோரும் அறியும்படி நோய செயதன எனறு தலைவன் பாஙகனிடம் கூறினான (குறு. 72). அழாதே யெனறு நம் அழுத கணணைத் துடைத்த தலைவர் பிரிந்து இபபனிக்காலத்தும் வாராமையின அவர் நமக்கு யாராகுவரோ எனறு கூறித் தலைவி நொந்தனள் (குறு. 82.2-6). சிறுகண் பெருங்களிறு (குறு. 88.2). கொலலிக் கருங்கண தெயவம (குறு. 89: 4,5). பூபபோலும் மையுண்ட கணணை யுடையவள தலைவி (குறு. 101:4). நாடனது கேணமை நீர் மலிந்த கணணோடு நினைநது துனபுறுதற்கே ஏதுவானது என்று தலைவி இரங்கினள (குறு. 105.5,6). பைங்கண் செநநாய் (குறு. 141:6; நற. 103:6). துயிறகண் மாக்கள் (குறு. 145.5). பேய்கள் அடிக்கடி கண் கொட்டி நடுஙகும்படி மழை ஒழிவினறிப் பெய்தது (குறு. 161:1,2). புதுமணத் தலைவி தன கணவனுக்காக இனிய புளிக்குழம்பைக் குவளை மலரைப் போலும் தன் மையுணட கண்ணில் தாளிப்புப் புகைபடத் தானே துழாவிச சமைததாள் (குறு. 167:3,4). 'பரதவா மகளாய தலைவியின் கண வலையிற் படுகின்ற கானலிடத்தே எனனெஞ்சமும் ஆராயாது அவ்வலையிற்பட்டு அங்கேயே தங்கியது' எனறு தலைவன பாங்கனிடம கூறினன (குறு. 184.3-7). 'நாடன பொருட்டுத தலைவியின கண் துயில் துறநதன' (குறு. 186:3,4). நெருஞ்சியின் புதுமலர் கண்ணுகசினியது (குறு. 202:2,3). கண்ணாலே காண விரைவில் வருதற்குரிய அணிமையிடத்திலிருநதும் தலைவன் தலைவியை நீங்கி ஒழுகினன (குறு. 203.3,5). மாரிக்காலததுப பிததிகத்தின் நீரொழுகும கொழுமுகையது சிவந்த புறத்தையொத்த கொழுங்கடை மழைககண்ணை யுடையவள தலைவி (குறு. 222: 5-7). தலைவியது கண் (தாமரைப்) பூவொடு புரைவது (குறு. 226:1). 'நாம் நம் காமநோயைப பொறுதது ஆற்றியிருப்பவும் நாடனை முதலில கண்ட கண் தமககு நம் பாலுள்ள உரிமையினால் தாமே தலைவரின பிரிவை யெண்ணி அழுதன' எனறு தோழியிடம் தலைவி உரைத்தாள் (குறு. 241. 1, 2, 7). 'யான் சேர்பபனை இனி நினையேனாதலின என் கண துயிலக' எனறு தலைவி தோழியிடம வனபுறை எதிரழிந்து மொழிநதாள் (குறு. 243:4,5). ஒனறையொனறு எதிர்நத கயல்களிரணடினை யொதத மையுணட கண்ணையுடைய தலைவி பிரிவுத் துனபத்தால சுழலுதலின்னறும நீங்குகறதத் தேரின குதிரைகளை விரைநது செலுததுவாயாக' எனறு வினைமுற்றி மீளும தலைவன பாகனை ஏவினான (குறு. 250 4-6). சிறுகண (யானைப) பெருநிரை (குறு. 255:4). தலைவன பிரிவையுணாத்தா முனனரே தலைவியின கண பழைய நிலையில நில்லாமல அழுதல ஒழியாது அவனது தேரை விலககியது (குறு. 256:6-8). 'பலலிதழ மழைக்கண மாஅயோயே' எனறு தோழி தலைவியை விளித்தாள (குறு. 259:4). 'தோழி, தலைவனைக குறித்து வருநதி நெஞசு புண்ணுற்ற துனபங் காரணமாக எனகண நளளென யாமததும துஞசாவாயின' எனறு தலைவி வருநதிக கூறினாள (குறு. 261 4-8). குருதியொடு பறித்த சிவநது திரணட அம்புகள எதிரெதிர அமைநதாலொதத மையுணட கணணையுடையவள தலைவி (குறு. 272:6-8). பேரமர் மழைக்கண கொடிச்சி (குறு. 286·4). தினைப்புனங்காதது நினற தலைவி கையிற கொணடு இசைத்த கிளிகடியும் குளிரின் ஓசையை அவள் குரலென மயஙகிக கிளிகள் புனத்தை விட்டுப் போகாமையால புலந்து அழுத அவள் கண, இதழகள் கலைநது மழைத துளிகளை ஏறற சுனைக் குவளைமலர் போன்றன

(குறு. 291). 'கூடியபோது தலைவனைக் கண்ட கண்
கூடாத போது வாளாவிருப்பத் தோள் மட்டும்
நெகிழ்வது ஏனோ' என்று தலைவி தோழியை
வினவினாள் (குறு. 299:4-8). 'தலைவரது தேர் இர
வுக் காலங்களில வாராதாயினும் வருவது போலச்
செவியினிடதது ஒலிக்கும ஒலியினால் தன் கண்
துயில் துறநதன' என்றாள் தலைவி (குறு. 301:4-8).
கண்தரவந்தது காமஒள்ளெரி (குறு. 305 : 1).
அமர்க்கண் ஆமான (குறு. 322:1,நற். 165:1). அருஞ்
சுரம் கடந்துபோன தலைவரை நினைந்து இரவில்
துயிலரிதாய நீரிடத்துள்ள ஒளியுடைய மலரை
ஒக்கும் என் மழைககணணிற்கு நீர்த்துளிகளைத்
தோற்றுவிபபது எளிதாயிருக்கின்றதுஎன்று தலைவி
தன் அழுகைக்குக் காரணங் கூறினாள் (குறு. 329:
4-7). கரிய இதழையுடைய குவளை மலரைப்
போனற மையுண்ட கண் கலுழுமாறு பசலை
யுண்டாகாத முன்னர்த் தலைவிக்குத் தலைவனது
நன்மார்பை முயங்குதல மிக இனிதாயிருந்தது
(குறு. 339.4-7). இராககாலங்களில் தலைவிக்குத் தன்
இமைகள் பொருந்தாத கணணோடு அனனையின
அணைப்புக்குள் அகப்பட்டுத் துயிலுதல் இன்னாத
தாயிருநதது (குறு. 353:4-7). நீரில நெடிது விளை
யாடினால கண்ணும் சிவக்கும் (குறு. 354:1) வெறுத்
தற்குரிய துனபததில உழநத துயிலற்ற மையுண்ட
கண்ணிலிருந்து வழியும் துளி பாயநது தலைவியின்
தோள் மெலிநதன (குறு. 357:1-3). 'அணிகள்
நெகிழும்படி விமமி நீர்த்துளிகளைச் சிநதும கண்
ணோடு நீ இவ்வாறு மயங்காதே' எனறு தலைவன்
தலைவியை வற்புறுத்திப் பிரிநதான் (குறு. 358:1,2).
மடக்கண் வரையா (குறு. 363:3). துணங்கை விழா
நாளில் மளளரும் மகளிரும் எதிரெதிர் நின்று
ஒருவரோடொருவர் கண மாறுகொள்ளக் கூத்
தாடுவர் (குறு. 364:5-8). தலைவன் விரும்பிய தலை
வியின் கண் நாள்தோறும் துயிலுதல் இன்றிக்
கலங்கி நீர்துளித்தலை நீஙகாவாயின (குறு. 365: 1,
2, 6). தான் நாடனொடு கொணட சிறு நன்னட்பு
பூவினை யொத்த மையுண்ட கண்ணின மாணலம்
தொலைத்தும் அத்துன்பத்திறகு மாற்றாகியுள்ளது
என்று தலைவி தோழியிடம் கூறினாள் (குறு. 377).
போழகண மஞ்ஞை (குறு. 391:7). 'தலைவரது பிரி
வில ஆறறியிருததல வேண்டுமென என்னை வற்
புறுத்துவோர் என்துயரைக் களையா ராயினும்
தாம் இனிதே கண் துயிலகினறனர்' என்று தலைவி
குறிப்பாகத் தோழியைச் சுட்டிநொந்துரைத்தாள்
(குறு. 395.3-5). கயலேர் உணகண் கனங்குழை மக
ளிர் (குறு. 398:3). 'மாலைக் காலத்தே காதலர்
மீண்டு வந்தாரென விருநது செய்து உவகையினால்
எனனை யணுகி என கண் சிந்தும் நீர்த்துளியைத்
துடைப்போரை யான் அறியேன்' என்று தலைவி
தோழியைக் குறித்து வருந்திக் கூறினாள் (குறு.
398:1,5-8). திகிரியோனை (திருமாலை) திங்களொடு
ஞாயிற்றையும் கண்ணாகக் கொண்ட வேத முதல்
வன் என்ப (நற். க. வா. 4-7). தலைவனின் 1பிரிவுக்
குறிப்பறிந்து தலைவியின் மயங்கிதழ் மழைக்கண்
அவனுக்குக் குறிப்பிலே தூது விடுத்தது (நற். 5:9).
குவளை மலரை யொதத ஏந்தெழில மழைக்
கண்ணையுடைய குறுமகள் தலைவி (நற். 6:3,4). அரி
மதர் மழைக்கண் மடவோள் என்று தலைவியைக்
குறித்தல் (நற். 8:1,3). கண்போல் நெய்தல் நெற்
போரில் மலரும் (நற். 8:8). சிதைவில்லாத செயல்
களில் முயலகின்ற ஆர்வமுடையோர் அவை முற்று
மாறு தாம் வழிபடும் தெய்வத்தைக் கண்கூடாகக்
கண்டாற்போலத் தலைவன் நெடுங்காலம் பெற
முயன்றதனாலான அலமரல் வருத்தம் தீரும்படி
தலைவியின் நலமென் பணைத்தோளை எய்தி
னான் (நற். 9:1-4). தலைவி நும்மொடு வருதலைத்
தான் மேற்கொண்டாளாயினும் ஆயத்தாரைப் பிரி
தல் குறித்து அவள் கண் அவளையும் மீறி அழு
கின்றன எனறு தோழி தலைவனிடம் கூறி உடன்
போக்கு விலக்கினாள் (நற். 12:8-10). தினைக்காவ
லர் விலங்குகளை வீழத்தி அவற்றின் உடலினின்று
பறித்த பகழிபோன்ற செவ்வரி படர்ந்த மழைக்
கண்ணையுடையவள் தலைவி (நற். 13:3-5). தலை
வியின் செவ்வரி பரநத மழைக்கண் விரும்பி இனிது
நோககிய நோக்கத்தால் யான் ஆற்றலழிக்கப்
பட்டே னாதலால விழுநிதி பெறுவதாயினும் நின்
னொடு வாரேன் என்று தலைவன் பொருள்கடைக்
கூட்டிய நெஞ்சினை மறுத்தான (நற். 16:8-11).
மழைபெய்த மலையிலிருநது இழிந்து வந்த அருவி
காட்டினிடத்தே தங்கியோடிய அழகை நோக்கி
அங்கே தலைவனை யெதிர்ப்பட்ட முன்னிகழ்ச்
சியை நினைந்து அடக்கவும் அடங்காமல் தன ஏந்
தெழில் மழைக்கண் அழுததாகத் தலைவி முன்னி
லைப் புறமொழியாகத் தோழியிடம் கட்டுரைத்
தாள் (நற். 17:1-5). 'நின் காதற்பரத்தை பூபபோ
லும் தன் மையுணடகண் நிலை பெயர்நது சுழ
லும்படி நோக்கி எம் தெருவிற் சென்றதை யாம்
கணடோம' என்று தலைவி தலைவனிடம் கூறி
னள் (நற். 20:1,5-7). 'அன்னை காக்கும் தொன்ன
லம் சிதைததலைக் காணுந்தோறும் கலங்கியழுவதே
யன்றியும் நெய்தல் மலரைப் போலக் கண் அழகும்
தொலைந்தது; ஆதலால் தலைவியின் காமநோய்
மறைத்தற்கரியது (நற். 23:4-9). கழிசேர்ந்த பகுதி
களில் நெய்தல் மலர்கள் கண்போல் பூததன (நற்.
27: 9-11). தலைவன் தலைவியது கையையெடுத்துத்

தம் கண்ணில் ஒற்றி அவளிடம் அன்பு பாராட்டினன் (நற். 28: 1). படுக்கையிடத்துத் தன்னை அணைத்திருந்த தாய் சிறிதே கையை நெகிழ்ப்பினும் தலைவி தன் பேரமர் மழைக்கண் நீர் வடிப்பக் கலங்கியழும் இயல்பினள் (நற். 29:6–11). தலைவர் பிரியக் கருதுவரெனின் அதனை யாம மறுத்தல் வல்லமோ என்று விம்மும் சொறகளையுடையளாய்த் தலைவி என்முகம் நோக்கிய அளவிலேயே அவளுடைய மலர்போலும் கண்ணிலிருந்து மல்கிய கண்ணீர் மார்பில் விழுந்து பரந்தது என்று தோழி தலைவனிடம் கூறினள் (நற். 33: 8-12). களவுக் காலத்தில் தலைவன விலகாமலிருந்து அருள செய்தும் தலைவியின கண் பசந்தது (நற். 35: 9, 12). தலைவி கலக்கமுற்றுக் குவளையின் நீர் நிறைநத கருமலர் போலும் கண் அழுது வடிய அவளிடத்து அன்பின்றி நீர் பிரிவீராயின கார்ப் பருவத்து மாலைப் பொழுதில அவள் படும அவலம் என னால் தாங்கப்படுவதன்று எனத் தோழி தலைவனிடம் சொனனாள் (நற் 37: 4-11). புலி நடுஙக அதன முதுகிலே குத்தி வீழததி விளையாடிய புலவு நாறு களிறறின் மருப்புநுனி போலக் கடைமணி சிவநத நின கண் மட்டுமல்ல எனமேல சினமுடையன; நின் தோளும் என்னை வருத்துவனவே என்று தலைவன தலைவியிடத்துக் கூறினன (நற். 39: 4-11). தலைவி தன் ஆயத்தாருடன அருவியாடி நீரலைததலால சிவந்த தனது பேரமா மழைக் கண்ணின குறியா நோக்கததோடு முறுவலையும் தலைவனுக்கு நல்கி மனைக்குச் சென்றாள (நற். 44: 1-4). முன்னர் நீர் தலைவியை உடனகொண்டு வருநெறியில் எம் ஐயனமார் பினதொடர்ந்து வருதலால் நீர் எம்மைக் கைவிட்டு ஒளிந்த காடு இன்றும் எம் கண்ணெதிரில் இருப்பதுபோல் தோன்றிச் சுழல்கினறது என்று தோழி தலைவனிடம் கூறிப் பிரிவு மறுத்தாள் (நற். 48). கான்யாற்றில் வருகின்ற புதுவரவாகிய இனிய நீரினைத் தண்ணெனப் பருகிக கண்ணால் நோக்கி அதில வெறுக்காமல ஆடினால் அஃது இவள் நோயைத தீர்க்கும் மருந்துமாகும என்று தாய் கூறியதாகத தோழி தலைவன கேட்பத் தலைவியிடம் கூறினள் (நற். 53: 6-10). இரவுக் குறியில் தலைவன் வந்து தலைவியின் ஆகத்தைப புல்லிச் சென்றதனால உண்டான மணங்கருதி வண்டுகள் அவன தோளை மொய்த்தமையின் அவளை அன்னை தன கண்ணாற் கொல்பவளைப் போல நோக்கி நீ பண்டும் இத்தன்மையையோ என வினவினாள (நற். 55.3-7). குராமரத்தின் நறுமலரில் வண்டுகள் விழுதலால எழும் மணத்தைத் தென்றல் கலந்து வீச அதனைக் காணும கண்மகிழவுற்றது (நற். 56:1-3). கருங்கணா வராஅல் (நற். 60:4). 'துஞ்சாயோ என குறுமகளே' என வினவிய அன்னையிடத்து மெல்லிய குரலில, 'நாடனைக் கருதி யிருப்போர்க்குக் கண்ணும் துஞ்சுமோ' என்று எதிர்மொழிந்தேன எனத தோழி தலைவன கேட்குமாறு படைத்து மொழிந்தாள (நற். 61: 4-10). தலைவனுடன் போன தலைவியைக் குறித்து என அழகிய இளம் புதல்வியின் மலர் போன்ற கண் வெம்மை மிகக சுரத்திற் செலலும் கடுமையால சிவநது ஒளிமழுங்கிக கலக்கமடைநதனவோ எனத் தாய மருணடுரைத்தாள் (நற். 66: 5–11). தலைவியின முன்னின்று நீர் அவளுடைய கண்ணையும் நெற்றியையும் நீவிப பிரிதற்கு வன்மை யுடையீரோ என்று தோழி தலைவனை வினவிச் செலவழுங்குவித்தாள (நற். 71: 5, 6). கானவன் பன்றியைக கொன்று அதன தசையிற பாயச சியதனாலே சிவநத அமபைப போலச செவ்வரி பரந்த தலைவியின மழைககண்ணின கடைப பார்வையுற்றுத் தலைவனது நெஞ்சம வருநதியது (நற். 75: 6-10). தலைவியின குவளை மலரைப போலும் மையுண்ட கண்ணின மகிழமட நோககு தலைவனைத் தோழியின்பால இரநது பின்னிறகுமாறு செலுத்தியது (நற். 77: 4, 11, 12). 'நின வடிவின ஒளி கண்ணில வீசுதலான யான நின்னை நோக்கல் ஆற்றேனாயினேன' என்று தலைவன தலைவியைப புகழநதான (நற். 82 4, 5). தெளிநத கண்ணையுடையது கூகை (நற். 83 3, 4). 'தலைவர் என் கண்ணையும தோளையும கதுபபையும் அலகுலையும பலபடப பாராட்டி நேற்றைப் பொழுதும் இங்கிருந்தார்' என்று தலைவி அவன பிரிவிடையாற்றாமல தோழியிடத்துக கூறினாள (நற். 84: 1-3). அழகிய (குவளை) மலாபோன்ற தலைவியின மழைககண்ணினின்று நீர் வடிய அது கண்டு ஊர் அலர்தூற்றுமாயினும் ஆரிருளில அச்சம் மிக்க நெறியில் தலைவன அவள மேலுள்ள விருப்பினால வாராதொழிக என்று தோழி அவன கேட்குமாறு தலைவிககுக கூறினள் (நற். 85: 1-7, 11). பூஙகண ஆயம (நற். 90 7; 293: 5). பெடையோடு கூடிக கடலில் துழவி இரைதேடும நாரை மெலலிய சிறு கண்ணின சிவநத கடைபபகுதியினையுடைய சிறு மீனைப பற்றியெடுததுப போயப பிள்ளையின வாயிற சொரியும (நற். 91: 3-7). தலைவன இரவுக குறி வருதல குறிததுத தலைவியின கண் நாள தோறும பொருநதித துயிலாவாயின (நற். 98: 10-12). தலைவன பொருளவயிற பிரிவேன என்ற நிலையில நெயதல மலரையொதத மையுண்டகண வருத்தம மிகப பெரிதும கலஙகித துன்புற்ற

தலைவியின தனிமைநோக்கு அவன் பெருங்காடு கடநது போகும்போதும் அவனமுன தோனறியது (நற். 113: 4-12). பொய்கையில மலர்கொய்து வந்த துவட்சியால் வருந்திய தோழியர் குழாம் தம் மெய்ந்நோ வொழிந்து கண் இனிது படுவதற்கு (உறங்குதற்கு) அனனையும் சிறிது சினந்தணிந்து உயிர்ப்புடையளானாள் எனறு தோழி தலைவிக்குச் சொனனாள் (நற். 115: 1-3). தலைவன் வரைவிடை வைத்துப பொருள்வயிற் பிரிந்திருந்த நிலையில் ஆற்றாத தலைவியின் கண் வாளாற் பிளக்கப் பட்ட மாவடுப் போன்ற தம் வடிவை யிழந்தன (நற். 133: 1, 2). முன்பு தலைவன் நினக்கு நெய்தல் மாலை சூட்டியதனைக் கண்ணாலறிந்ததன்றி இம் மூதூர் பிறிதொன்றையும் அறிந்தில தாதலின் அதற்கு நீ ஆற்றாத தென்னோ என்று தோழி தலைவிக்குரைப்பாள் போலத் தலைவனுக்கு அலர் அறிவுறுத்தினாள் (நற். 138: 5-11). பெருங்கண் ஆயம் (நற். 140:5). தலைவனுடன் மகளைப் போக்கிய தாய் ஓரை யாடுகின்ற தோழியர் கூட்டத்தையும் ஆடிடமாகிய நொச்சிவேலியை யும் காணுந்தோறும் விரைந்து நீர்வடிகின்ற கண்ணையுடையவளாய்க் கலங்கினாள் (நற். 143: 1-4). இரவுக்குறியிடத்திற்குத் தலைவன் வரும் வழியில் பெரிய களிற்றினைப் புலி தாக்குதலால் கரிய பிடி மேகம் போல் முழங்குதலைக் கேட்டு நடுங்கித் தலைவியின் (நீல) மலர்போன்ற மையுண்ட கண அழ அவள் நெஞ்சமும் கவலைகொண்டது (நற். 144:1-4). தனிதது நின்ற தலைவியை அணஙகு போற் கொண்டு தலைவன் பாராட்டிச் சொல்லா டிய வழி அவள் பற்களினினறு முறுவல் தோனறிப் பல்லிதழ் உணகண்ணினினறு நீர் பரந்தது (நற். 155). 'தலைவர் இரவிலே வருகின்ற வழியை யான் கண்டதில்லை யாயினும் அதுதான் மிக்க இருள் வடிவமாய என்முன நின்று இதுவே அவர்வரும் இருட்பொழுதென்று என் கண்ணைக் கொல்லும்' எனத் தலைவி தோழியிடத்துக் கூறினாள் (நற். 158:1-4,9). குவளை மலரை ஒன்றோடொன்று எதிரெதிர் வைத்துப் பிணைத்த பிணையல் போனற தலைவியின செவ்வரி பரந்து மதர்த்த மழைக் கண்ணைக் காணுமுன் யான நயன், நண்பு, நாண் முதலான பண்புகளையும் ஒழுக்கத்தையும் நின்னினும் சிறப்பாகக் கொண்டிருநதேன் எனத் தலைவன் பாங்கனிடம் கூறினன் (நற். 160). கண் போல் நீலம் (நற். 161:2;273:8). மனையுறை புறவின பெடையோடு சேவல் சேர அவற்றை நோக்கி மாலைப் பொழுதில் யான் தனியே யிருத்தல் ஆற் றேன் என்று தலைவனிடம் கூறித் தலைவி நீரொழு கும் தன் மையுண்ட கண் துன்புற்றனவாய்க் கலுழ நின்றாள (நற். 162:1-5). தலைவியின் விருப்ப மூட்டும் (குவளை) போதினைப் போலும மையுண்ட கண்ணைக் காண்டொறும் தலைவன் அறநிலை நின்றோர் அடையும் பயனை எய்தினான் (நற். 166: 3-5). மடப்பம் மிகக கணணையுடையவள் வீறலி (நற். 170:1-3). தலைவர் பிரிவாராயின் முன்பு அவரது மார்பிலே கிடந்து துயின்ற கண் இனி எவ்வாறு உறங்கவல்லன என்று தோழி பிரிவறிந்து தலைவியிடம் நொநது கூறினாள் (நற். 171:5-11). நீயுற்ற காமநோயினை அறியாது நின மேனி வேறுபாட்டினைத் தீர்ப்பது வெறியே யென உணாந்து அயரும் அனனைக்கு முருகன் கண்ணி லும் கனவிலும உண்மையைக் காட்டி 'இவள் நோய் என்னால் வந்ததன்று; அம்மலைகிழவோனே இவளுக்கு இந்நோய செய்தனன' என்று கூறினால் அம்முருகனுககு அதனால் ஏத முணடோ என்று தோழி தலைவியை வினவுவாள் போலத் தலைவ னுக்கு வெறியறிவித்தாள் (நற். 173:4-9). ஓவியர் எழுதத் தகுநத எழிலையுடைய என மையுண்ட கண்ணில் பாவை தோன்றாதபடி வெள்ளம் போலும் நீர் வடிய யான் அவ்வெள்ளத்திலே விழுந்து நீந்தி யுழலும் நாள் வநதது போலும் என்று தலைவனின் பிரிவுக் குறிப்புணர்ந்து தலைவி நொந்தனள் (நற். 177:8-10). காதலனான துறை வன் ஊர்ந்துவரும் தேரினை இப்போது கண் ணால் காணவும் கூடவில்லை என்று தோழி தலைவியிடம் கூறுவாள் போல் சிறைப்புறத் தலைவன் கேட்ப அவனுக்குச் செறிப்பறி வித்தாள் (நற். 178:6,7). மையுணட கண்ணின் மணியூடு வாழும் பாவை வெளிவநது நடை பயின்றாற் போலும அழகிய சாயலையுடைய என் குறுமகள் விளையாடிய நொசசியையும திண்ணை யையும் நோக்கி நினைந்தால் அவ்வாறு நினையும் உள்ளமும் வெந்தழியும் என்று மகட்போக்கிய தாய் மனையில மருண்டுரைத்தாள் (நற். 184:6-9). வலை யிலகப்பட்ட மானினது மருட்சிமிக்க விழிபோலும் மழைக்கண்ணையுடைய குறுமகள் தலைவி (நற். 109:8). நெல்லறுக்கும் உழவரின் அரிவாளால் அறு பட்டுப் பல இதழ்கள் விளங்கும் கூம்பாத நெய் தல் மலர் நீரில் மூழ்கி அலைகினற தோற்றத்தைப் போலத் தலைவியின் கண் ஈரமுடையனவாய்க் கலுழும் (நற். 195:6-9). வரைபொருட்குப் பிரிந்த தலைவனின பிரிவாற்றாத தலைவியின் கண்கள் நீரைப் பெருககின (நற். 197:3). தலைவியைத் தலை வனுடன் போக்கிப் பின தேடிச் சென்ற செவிலி கானிடையிட்ட சுரவழியில் தன்மகள் போலக் கண்

ணில்பட்ட வேறொரு தலைவியைக் கண்டு கலங்கினாள் (நற். 198:2-4). குவளை மலரைப் போலும் மையுண்ட கண்ணையுடைய தலைவி தனித்திருக்கத் தலைவன் ஆள்வினைக்கு அகல்வானாயின் அவளது மாமைக்கவின் அழியும் (நற். 205:5-11). தலைவனது பிரிவுக் குறிப்பினை யறிந்து தலைவி தன் இடை முலை நனையுமாறு இடையீடின்றிக் கலங்கியழும் கண்ணோடு பெரிதும் மனமழிந்து வாட்டமுற்றாள் (நற். 208:2-4). கண்ணுக்கு நேருகின்ற துன்பத்தைத் துடைக்கும் கைபோல் உதவித் தனக்கு நேரும் துயரினைக் களையாராயினும் தலைவரில்லாத ஊர் இன்னாததே என்று பரத்தை கூறினாள் (நற். 216:3-5). 'என் கண் பழைய அழகு கெட்டுப் பசலை படர இன்னுயிர் பிரிவதாயினும் வரைவிடை வைத்துப் பிரிந்து நீட்டிக்கும் தலைவரொடு யான் புலவேன்' என்று தலைவி தன் ஆற்றாமையை உள்ளடக்கித் தோழியிடம் கூறினாள் (நற். 219:1-4). தலைவியாகிய குறுமகள் கயல்போன்ற மையுண்ட கண்ணையுடையவள் (நற். 220:9). அதிர் குரலையுடைய மேகம் தான் சூல்முதிர்ந்த கடன் தீருமாறு மழைபெய்தற்குக் கண் மறையும்படி நடுயாமம் செறிந்த இருளைப் பரப்பியது (நற். 228: 2,3). தலைவனது பிரிவாற்றாமையால் தலைவியின் நீர்வடியும் கண் முன்போலின்றி வேறுபாடு கொண்டது (நற். 237:2). தலைவியின் பல்விதழ் உண்கண் கலங்கியழத் தலைவன் பொருள்வயிற் பிரிந்தான் (நற். 241:11,12). பிணைமான் மருண்டு விழிக்கின்ற கண்ணையுடைய குட்டியோடு கூட்டத்திலிருந்து இரிந்தோட ஆண்மான் விருப்புடன் அதனைத் தேடியது (நற். 242:7-10). பூங்கண் இருங்குயில் (நற். 243:4). மைதீட்டப்பட்டு (நீல) மலரை எதிரெதிர் வைத்துப் பிணைத்தாற் போலும் கரிய இமைகளையுடைய மழைக் கண்ணையுடையவள் தலைவி (நற். 252:8,9). கார் காலத்தில் காட்டினிடத்தே பிணையைத் தழுவிய கலைமான் வேல மரத்தின் கண்கவர் வரிநிழலில் தங்கியிருக்கும் (நற். 256:7-10). பசுங்கண் காக்கை (நற். 258:8). வானடைக்காற்று வீசுதலால் கண்போன்ற கருவிளை மாமலர் ஆடுகின்ற மயிலின் பீலி போல் அசையும் (நற். 262:1,2). தலைவனைக் கண்டு தலைவி பலகால் மறைக்கவும் அவள் மையுண்ட கண் நீர் நிலை கொள்ளாமல் அளவு கடந்து வெளிப்பட்டு அவனுக்கு ஆற்றாமைத் துயரை உரைத்துவிட்டன (நற். 263:8-10). நண்டின்கண் நொச்சியின் கரிய அரும்புபோன்றது (நற். 267:1,2). தலைவியது திருமுகத்தே அலமருகின்ற கண் துன்ப முற்றுப் பெருமரத்தைச் சுற்றிய வள்ளிக்கொடி போல் நம்மைப் பிணிக்குமென்று கருதானாய்த் தலைவன் பிரிந்து போவான் (நற். 269:5-8). மகளிரது கண்ணை நேர்பட ஒத்தது நெய்தற்பூ (நற். 283:2). பெரிய சுனையில் பூத்த (நீல) மலர்களை எதிரெதிர் வைத்துப்பிணைத்தாற்போலும் கரிய இமைகளைக் கொண்ட மழைக்கண்ணை யுடையவள் தலைவி (நற். 301:2,3). தலைவனது செலவுக்குறிப்பினை யுணர்ந்து தலைவி மலர்போலும் மையுண்ட கண்ணில் நீரொழுகக் கலங்கினாள் (நற். 308:1,2). 'கயல் போன்ற மையுண்ட கண்ணையுடையவள் தலைவி (நற். 316:3). 'நாடனே, நின் காதலியொடு நீ கொண்ட கேண்மையினை அன்னை அறிவளாயின் குவளையின் கரிய இதழை யுடைய சிறந்த மலரை யொத்த இவள் கண் நீர் வடியப் பெற்று என்னாகும்' எனத் தோழி தலைவனை வினவி வரைவு கடாவினாள் (நற். 317:5-10). 'பாவையன்ன குறுமகளின் சுணங்கணி வனமுலையை முயங்கல் கருதி மீன் கண் துயிலும் இராப்பொழுதின் நடுயாமத்தும் யான் கண் துயிலகில்லேன்' என்று தலைவியைக் காப்பு மிகுதியால் காணப் பெறாத தலைவன் ஆற்றாது கவன்றான் (நற். 319:6-11). 'பெரும, இவளது பூப்போலும் மையுண்ட கண் புதுநலம் சிதையும்படி மிக்க நீரைச் சிந்தக் கண்டும் நீ பிரிந்து செல்லுதல் தகுமோ' என்று தோழி தலைவனைச் செலவழுங்குவித்தாள் (நற். 325 : 6 - 9). 'நாடனே, நீ பன்னாளும் இவளிருக்கும் புனத்திற்கு வந்து போயினும் இன்ன காரணம் என்று உணர முடியாதவாறு (நீல) மலரைப் போலும் இவள் கண்ணில் பீர்க்கம் பூவைப் போலப் பசலை ஊர்கின்றது' எனத் தலைவனைத் தோழி வரைவு கடாவினள் (நற். 326:4-10). நம்மை விரும்பிக் களவொழுக்கத்தில் வந்து கூடும் சான்றோராகிய தலைவரை நாம் விரும்பி யொழுகுதல் பழியுடையதாமெனில் உறங்காதனவாய் அழுகின்ற கண்ணொடு ஏக்கத்தால் இளைத்து இறந்து படுதலும் இனிதேயாகும்' என்று தலைவி தோழியிடத்துரைத்தாள் (நற். 327:1-3). 'நீ இருக்கின்ற சேரியைச் சார வரும் தலைவர்க்கு எக்காலத்தும் அருள் செய்ய வேண்டும்' என்று தலைவியிடத்துத் தோழி கண்ணினால் இனிய குறிப்புத் தோன்றக் குறை நயப்பித்துக் கூறியும் அவள் அச் சொற்களைத் தெளிந்திலள் (நற். 342:3-6.) பூங்கண் மடந்தை (நற். 355:1). கொடுங்கண் காக்கை (நற்.367:1). தலைவி, புதல்வனைப் பெற்ற காலத்துத் தலைவன் அவளை அணுகி முதுபெண் டெனச் சொல்லாடி நிற்ப, அவள் மெல்ல முறுவலித்துச்சிறந்த நீலமலர் போன்ற தனது மையுண்ட கண்ணைக் கையால் புதைத்து [illegible] [illegible]

டாள் (நற். 370 4-11). தன் கையிலிருந்த தேன் கலந்த தீம்பாலைக் கலத்தோடு குரங்குக் குட்டி கைப்பற்றிச் சென்றமையால் ஒலியா எழுதத் தகுந்த அழகெல்லாம் சிதையுமாறு அழுத தலைவியின் கண் அகழியில் தண்ணியவாய மலர்ந்த மழை நீரையேற்ற நீலமலர் போன்றன (நற். 379:1-8). 'குவளையின் நீரொழுகும் ஒளிமிக்க மலரைப் போன்ற நின் பேர மர் மழைக்கண் நீர் வடிய நின்னைவிட்டு நன்னன் நாட்டு ஏழிற் குன்றம் பெறினும் தலைவர் பொருள் வயிற் பிரியார்' எனத் தோழி தலைவியை வற்புறுத் தினாள் (நற் 391:6-10). பிரிந்து குறித்த பருவத்து மீளாத தலைவன் வருதற்கரிய வழியினை நெடிது நோக்கி ஒளியறுத் தலைவியின் கண் காட்சிப் பொலிவையிழந்தன (நற். 397.1-3). மாலைப் பொழு தில மனைக்குச் செல்லத் தோழி அழைக்கத் தலைவி தலைவனொடு கூடிய அக்கானலகத்தே தன்மார் பின் இளமுலை நனைய மாணெழில மலர்க்கண் நீரைப் பெருக்க அழுது எதிர்மொழி கூறாது நின்றி ருந்தாள் (நற். 398:6-10). 'தன்னை யொத்த ஆய மகளிர்க்குக் கண்ணாற காணத்தகும் ஓர் கடவுள்' என்று தலைவியைக் குறித்துத் தோழி தலைவனிடம் கூறினள் (நற். தி 1:6,7). தலைவனை நினைந்து தலை வியின் பூப்போலும் மையுண்ட கண்கள் பொன் போலும் பசலையைப் போர்த்தன (ஐங். 16:3,4). யான் பிரியேன் என்று கூறித் தலைவன் தலைவியின் மணம் பொருந்திய மலர் போன்ற கண் அழுமாறு பரத்தையிற் பிரிந்தான (ஐங். 18:2-4). புறத்தொழுக் கம் தனக்கு இல்லையென்று தலைவன் தெளிப்ப வும் அஃது அவனுக்கு உண்டென்ற எண்ணத்தில் தலைவியின் மையுண்ட கண் பசந்தது (ஐங். 21:3,4). வேம்பின் அரும்பு போன்ற நீண்ட கண்ணையுடை யது நண்டு (ஐங். 30:1). ஏதிலாளராகிய தலைவர் பொருட்டுப் பசந்த தலைவியின் கண்கள் ஆம்பலந் தாதினை ஒத்த வண்ணங் கொண்டன (ஐங். 34.2-4). கயலபோன்ற நம் கண் பசலைக்குத் தளரா திருந்தலைப் பெறுமாயின் நம்மை மறந்துறையும் தலைவனை நாமும் மறந்து நினையாதிருக்கலாம் என்று தலைமகள் நொந்து கூறினாள் (ஐங். 36). 'மகிழ்நன் தன்னை விரும்பிய மகளிரின் மையுண்ட கண் பசந்து பனி மல்குமாறு சூள் பொய்த்தல் வல்லன' என்று காதற்பரத்தை கூறினள் (ஐங். 37). தலைவனது பரத்தையிற் பிரிவினால் தலைவியின் கண் பசப்பணிந்தன (ஐங். 45:4). செவ்வரி பரந்த மழைக்கண்ணையுடையவள் தலைவி (ஐங். 52:2,3). பலரும் ஆடும் பெருந் துறையில் தான் இழைத்த சிற்றிலைப் புனல் கொண்டு சென்றதெனத் தன் மையுண்ட கண் சிவக்குமாறு அழுது நின்றாள்

தலைவனின் இளம்பரத்தை (ஐங் 69) தலைவிகுவளை மலர் போன்ற மையுண்ட கண்ணை யுடையவள் (ஐங். 72:3). பரத்தையரின் தோளுக்குத் தெப்பமாகிப் புதுப்புனலாடியதனால் தலைவனின் கண் மிகச் சிவந்தன (ஐங். 80:2-4). 'நின் பரத்தைமை பற்றிச் செவியிற் கேள்விப் பட்டாலே சொல்லுக் கடங்காத சினங்கொள்வோளாய தலைவி, நீ பரத்தையர் மனையில் தங்கிப் புணர்ச்சிக் குறிகளமைந்த மார் பினனாய் வருதலைக் கண்ணிற் கண்டாளாயின் என்னாகுவள்' என்று தோழி தலைவனை வினவி னாள் (ஐங். 84). கருங்கோட்டெருமைச் செங்கண் புனிற்றா (ஐங். 92:1). 'அன்னையே, நின் மகளது பூப்போலும் மையுண்ட கண்ணிற் பொருந்திய நோய்க்கு மருந்தாகிய கொண்கனின் தேர் வந்தது காண்' எனத் தோழி செவிலியிடம் தலைவன் வரைவுக்கு உவந்தமை கூறினள் (ஐங். 101: 3-5) தலைவனின் இளம் பரத்தை கடற்கரையில் தான் இழைத்து விளையாடிய மணற் பாவையை அலை யழித்துப் போகக் கண்டு தன் மையுண்ட கண் சிவக்குமாறு அழுது நின்றாள் (ஐங். 125). தன் மையுண்ட கண்ணை மலரெனக் கருதி வண்டினம் மொய்த்ததை ஓட்டாமல் இளம்பரத்தை கடலலை யில் பாய்ந்து மூழ்கினாள் (ஐங். 126). தலைவனை யான் நினையேனாகலின் என கண் உறங்குவதாக என்று தலைவி வரைவு நீட்டிக்கும் தலைவன் கேட்குமாறு தோழியிடம் மொழிந்தாள் (ஐங். 142). தலைவனை நம்பித தலைவியின் கண் பசந்தன (ஐங். 166:3,4). 'தலைவர் நெஞ்சிலே உறைவதை யறிந்தும் என கண் எதற்காகப் பசக்கின்றது' என்று தலைவி தோழியை வினவினாள் (ஐங். 169: 3-5). தலைவன் நல்லவன் என்று நீ கூறுதல் உண்மை யாயின் பல இதழ்களையுடைய மலர் போன்ற என் மையுண்ட கண் பசப்பதற்குக் காரணமென்ன என்று தோழியைத் தலைவி வினவினாள் (ஐங். 170). மிக்க அரிபரந்த மையுண்ட கண்ணை யுடைய தலைவி பொழிற்குறி நல்கினள் என்று தலைவன் உவந்தான் (ஐங். 174). நெய்தல் மலரைப் போன்ற மையுண்ட கண்ணையுடைய மகளிர் பொய்தலாடி வெறுப்பின் மணற்குவியலில் ஏறிக் குரவையாடுவர் (ஐங். 181: 1-3). தலைவியின் கண் கள் வைகறையிலே மலரும் நெய்தல் மலரைப் போலப் பேரழகுடையன (ஐங். 188:3,4). தலைவன் வரைதற்கு வந்ததால் தலைவியின் கண்கள் மலர்ச்சி யுடையன வாயின (ஐங். 189:3,4). பல இதழ்களை யுடைய மலரைப் போலும் எம் மையுண்ட கண் ணில நீர் துளிக்கச் செய்தோன் மெல்லம் புலம் பனே என்று தோழி செவிலிக்கு அறத்தொடு

நின்றாள் (ஐங். 190: 3,4). 'குறுக்கிட்டுப் படர்ந்த செவ்வரியையுடைய நின் நெடுங்கண்ணை நெகிழ்ப் பாயாக' எனத்தோழி தலைவியைத் தலைவனுடன் போக்குதற்குத் துயிலெழுப்பினாள் (ஐங். 200). தலைவன் நாட்டு மணிநிற மலை மாலைப் பொழுது களில் மறையுந்தோறும் களவுக்காலத் தலைவியின் மலர்போலும் நெடுங்கண் நீர்த்துளிகளால் நிரம் பின (ஐங். 208: 3-5). தலைவியின் பேரமர் மழைக் கண் கலங்கியழத் தலைவன் தன் நாட்டிற்குச் செல்வான் (ஐங். 214:3-5). நுண்ணிய அழகிய புருவத் தையுடைய கண் இடந்துடிக்கின்றதாகலின் தலை வன் வரைதற்கு வருகின்றானோ எனத் தோழி தனக்கு உண்டாகும் நற்குறியைத் தலைவி யிடம் கூறினாள் (ஐங். 218: 1, 5). 'நாடனது மார்பைத் தழுவாது கழியும் நாளில் தலைவி யின் மயங்கிய இமைகளை யுடைய மழைக் கண் கலங்கி யழும்' எனறு தோழி செவிலி யிடத்து அறத்தொடு நின்றாள் (ஐங். 220). தலைவீ இரங்குமாறு தலைவன் ஒருவழித் தணந்ததற்கு அவள் அணிகள் நனையுமாறு கண் நீர் பெய்தலை நீங்காவாயின (ஐங். 232). 'நின்னுடைய நிரல்பட்ட இதழமைந்த அழகிய மலர்போலும் மையுண்ட கண் பசக்க மலைநாடன் செய்த காமநோயை அன்னை அறியாதவாறு நாம் மறைத்திருத்தல் கொடிது' என்று தலைவியிடம் தோழி கூறினாள் (ஐங். 242). 'நின்மகளது புதுமலர் போலும் மழைக்கண் புலம் பிய நோயக்கு அறியாமையுடைய வேலன் கடவு ளைப் பேணி வெறியென்று கூறும் காரணத்தை நீ மனங்கொள்கின்றாயே' எனத் தாயின் அறியா மையைத் தோழி எடுத்துக் கூறி வெறிவிலக்கி னாள் (ஐங். 243). 'தலைவியது அழகிய செவ்வரி பரந்த நெடுங்கண் கலங்கியழ நீ பிரியும் நாடு மிகத் தொலைவிலுள்ளது எனத் தோழி தலைவ னிடம் கூறிப் பிரிவு மறுத்தாள் (ஐங். 257). வரைவு முடிதற்கு மலையுறை கடவுளாய குலமுதலை வேங்கை மலர்கொண்டு வழுத்தி மலர்ப்பலி செய்த தலைவி புதுவதாக மலர்ந்த காந்தட் பூவினது மணங்கமழ்ந்து கலங்கிய கணணளாய இருந்தாள் (ஐங். 259). 'சிலம்பனே, நீ விரும்பிய தலைவியது கண் பசலை பூத்தன' எனத் தலைவனிடம் கூறித் தோழி வரைவு முடுக்கினாள் (ஐங். 264:3,4). 'நாடன் விரும்பிய தலைமகளின் கண் நொதுமலர் வரைய வந்தபோது நீர்த்துளியை அரும்பின (ஐங். 266:4). 'நாடனே, குவளை மலரைப் போலும் தலைவியின் அமர்த்த கள் பசலை போர்க்க நீ வரையாது ஒழுகுதற்குக் காரணம் என்ன' என்று கேட்டுத் தோழி தலைவனை வரைவு கடாவினாள்

(ஐங். 277:3-5). பேரமர் மழைக்கண்ணை யுடைய கொடிச்சி கடிந் தோட்டவும் ஓடாது கிளிகள் தினைக்கதிரைக் கவர்தல் (ஐங். 282:1-3). தலைவ னது நெஞ்சையறியத் தலைவி அவன்பின் வந்து அவனைக் கண்புதைத்தாள் (ஐங். 293). தலைவி யது கண்போல் மலர்தல் சுனைபூத்த குவளை மலர்க்கும் அரிது எனத் தலைவன தனகுள மகிழ்ந் தான் (ஐங். 299:2-4). தலைவன் பிரிகின்ற காலத் துத் துயில கொண்டிருநத தன் குளிர்சசிமிக்க மலர் போலும் நெடுங்கணணொடு தலைவி புலந்து கூறும் சொற்களைக் கேளாத அளவு தலைவர் காடு கடந்து நெடுந்தொலைவு சென்று விட்டார் (ஐங். 315). கண்ணைக் குத்துமாறு விளங்குகினற ஞாயிறு காயும் வைப்பினையுடைய காட்டின் வழி யைத் தலைவன் கடநது சென்றான (ஐங். 319·1-3). நம் பிரிவால அழுத கண்ணளாயிருக்கும் நம் காத லியின் தனிமை வருத்தம் நாம வநத இவ் வெஞ்சுரத்தை நினைக்கச் செய்யும் எனறு தலைவன் இடைவழியில் தன நெஞ்சிறகுக கூறி னான் (ஐங். 330:3-5). பல இதழ்களை யுடைய மலர்போலும் மையுண்ட கணகள அழுமாறு தனனைப் பிரிநத காதலர் கல்லினும் வனமை யுடையவர் என்று தலைவி தோழியிடம் சொன் னாள் (ஐங். 334: 4,5). பல இதழகளையுடைய மலர் போலும் மையுண்ட கணணையுடைய மடநதை எனத் தலைவியைத் தோழி விளித்தாள் (ஐங். 351:4). நீ இடையறாது தலைவரை நினைககினறமையால கலஙகித் துடைக்குந்தோறும் உடைத்துக கொணடு பெருகும் வெள்ளம போனற நீர் நிறைந்த கண் அவர் பல மலைகளைக் கடந்து செனறிருந்தாலும் அங்கே அவரை நீட்டிததிருகக விடாது எனத தோழி தலைவியை ஆற்றுவித்தாள் (ஐங். 358). புணர்ந்துடன் போகின்ற தலைமகன் இடைச் சுரத்தே தலைமகளை நோக்கி 'நின் கண்ணினும் முலை சினமுடையன' எனப பாராட்டினான (ஐங். 361:4). தலைவி மிகவும் பசந்தமைக்குக் கார ணம் யாது எனச் செவிலி சினத்தினால் சிவந்த கண்ணையுடையவளாயத் தோழியை வினவினாள (ஐங். 366: 1-3). 'பூவையொத்த மையுணட கண்ணை யுடைய மடவரலை உடனபோக்கு நேரப பொருந திய அறனில்லாத விதி காடுபடு தீயிற கொதித திடுக' என நறறாய விதியை வெகுண்டுரைத்தாள் (ஐங். 376). 'தலைவனுடன போன தலைவிககன்றித் துணையைப் பிரிந்தவளாயக் கலங்கும் நெஞ்சினை யுடைய இணையான அழகிய மையுணட கண்ணை யுடைய தோழியின் நிலைமைககே யான் பெரிதும வருந்துகின்றேன்' என்று நறறாள் புலம்பினாய்

(ஐங். 378: 3-5). தான் முன்பு கேட்டறியாத பறவைகளின் ஒலிகளுக்கு அஞ்சி மருண்ட கண்ணையுடையவளாயத தலைவி தலைவனுடன் அருஞ் சுரங கடந்து சென்றாள (ஐங. 382:1,2). 'பேரமர் மலர்க்கண மடநதை' என்று அண்மை விளியாகத் தலைவியைத தலைவன் விளித்தான் (ஐங். 427: 1). காலம கார்பபருவததைத் தொடங்கியும் பிரிந்த தலைவா மீண்டு வாராமையால தலைவியின் நெடுங்கண் ஆற்றாமல் நீரையுகுக்கத் தொடங்கின (ஐங. 453: 3-4). தலைவர் பிரிநதமையின் மாணலம் இழநது பசநத தலைவியின் நீர்த்துளி நிறைந்த கணகள மழைத் துளியை ஏற்ற கொனறை மலர்கள் போனறன (ஐங். 458). முன்பனிக் காலத்தில் கருவிளைப் பூக்கள் கண்ணைப் போல மலரும் (ஐங். 464: 1,3). தலைவனின் பிரிவாற்றாது மாவடுப் போலும் அழகையிழந்த தலைவியது கண்ணை நோககிப் பாணன் பெரிதும் புலம்பினன் (ஐங். 475: 2, 3). குளிர்ந்த மலர்போலும தன் நெடிய கண் பசலை பாயத் தலைவனின் பிரிவால் தலைவி துனிமலிநத துயரொடு அரும்படர் உழந்தாள் (ஐங். 477: 1,2). தலைவி, தன மனையிடததே தனிமையுற்று ஈரமான இமைகளையுடைய மையுண்ட கண நீரைச சிந்திய வருத்தத்தைக் கேள்விபபட்டும் அவளுக்கு அருளாதவனாய்த் தலைவன் பாசறையிடததே இருந்தான் (ஐங். 480: 3-5). பிரிந்த தலைவன குறித்த பருவத்து வந்தமையால் தலைவியின் நீண்ட செவ்வரி பரந்த நெடுங்கண் ஒளிமிக்க அழகைப் பெற்றன (ஐங். 498:2,5). தலைவன் பிரிநதமையால் கொன்றைப் பூவைப் போல பசநத தலைவியின மையுண்ட கண்கள் அவன் வநதவுடன குவளை மலரைப் போலத் தன் பழைய அழகை யடைந்தன (ஐங். 500). தலைவர் தலைவியின மார்பினைத் தம் கண்ணொடு எதிராக வைத்துக் கட்டியது என்று கூறும்படி இமையாமற் பார்த்தும வேட்கை தணியாது ஒணணுதல் நீவுவர் (கலி. 4:17-19). தலைவன் கைச் சரட்டை இறுகக் கட்டி அம்புகளைத் தெரிந்தெடுக்கையிலேயே வருந்தும் பார்வையினையுடைய தலைவியின் மையுணட கண்கள் நீலமலர் மழையை எதிர்கொள்ளும்போது நீர்சொரிபவை போல நீரை நிறுத்தாமல உதிர்க்கும் (கலி. 7:9-12). 'பொருள் காரணமாகத் தலைவன் பிரிந்து போவானென்று கூறக் கேட்பின் நீரையுடைய கனை மிகவும் உறங்குதலைப் பொருந்தாவாய்த் தலைவி நினைவுத் துன்பம் மிகமாட்டாள்; இறந்து படுவாள்' எனக் கூறித் தோழி தலைவனைச் செலவு விலக்கினாள் (கலி. 10:12, 13). நல்ல எழிலையுடைய தன் மையுண்ட கண் இடப்புறம் துடிககினறதாகலின் பிரிந்த தலைவர் விரைவில் வருவர் எனத் தலைவி தோழியிடம் உரைத்தாள் (கலி. 11:19-22). பிரிவு கருதிய தலைவன தலைவியை எழுச்சி மிக்க நீலததின் உயரிய அழகமைந்த இரண்டாகிய மலர்போலும் அகன்ற மையுண்ட கண்ணையுடைய செய்யோள் எனப் புகழ்ந்தான் (கலி. 14:2,6). தலைவன பிரிவில் தலைவியின் முறுக்கவிழந்த நறுநீலத்தை யொக்கும் மையுண்ட கண ஓயாமல் அழுது, எரிகின்ற திரி வடியவிட்ட நெய்போலச் சுடும்படி நீரைத் துளிக்கும் (கலி. 15:20,21). தலைவியின துயிலின்றிப பசநத கண் வருத்தத்தை யுடையவாய நீர் மலகத் தலைவன் பொருள்வயிற் பிரிநது சென்றான் (கலி. 16:1,3). தலைவன் தலைவியைக் கூடியிருக்குங் காலத்துச் செவ்வியைத் தோற்றுவிதது மலரையொத்த தகையவாய்ப பின சிறிதுபொழுது பிரியுங்காலத்து அவன் பழியைத தூற்றி அழுதலடங்காத அவள் கண பிரியக் கருதுகின்ற அவனுக்கு ஒரு பகையாம என்று கூறித தோழி அவனைச் செலவு விலக்கினாள் (கலி. 25: 13,14). தலைவா எம்மை மயலாக்கிக் கரிய அழகிய நீலமலர்போலும் மையுண்ட கண்ணை மகிழசசி கொள்ளும்படி தம்மோடு மருவுதலூட்டித் தாம் செய்த பொய்யினால எம் மனம் தம்மிடத்தே விருப்பததைச் செய்யத் தாம் பிரிந்து எம்மை மறந்தார் என்று தலைவி வருநதி மொழிந்தாள் (கலி. 27:17,18). இவ்விளவேனிற் காலததில் பூப்போலும் அழகையிழந்த தன் கண் உறக்கங்கொண்டு ஆற்றியிராமல் தனிமை நோய் மிகுமாயின் பிரிந்து மறந்த தலைவர் தம்மிடததுச் செய்யும் அருள் என்ன பயனதரும் என்று தலைவி தோழியிடத்து நொந்துரைத்தாள் (கலி. 28:16-19). 'ஆறுகள் கண்ணை விழித்துப் பார்த்தன போலக் குளங்கள் நீர்நிறைந்து பூக்களால் அழகுபெற இளவேனில் வந்ததாயினும், பூப்போலும் அழகை யுடைய தன் மையுண்ட கண்கள் வருநதுமாறு கைவிட்டுப் போன தலைவர் இனனும் வந்திலர்' எனத் தலைவி வன்பொறை எதிரழிந்து ஆற்றாது கூறினாள் (கலி. 33:2,8,9). 'என் கண்போன்று அறுதலையுடைய நீர் இற்றொழுகும் இளவேனிற் காலத்தும் தலைவர் மீண்டு வந்திலர்' என்பது தலைவியின் ஆற்றாமையுரை (கலி. 33:19,20). நீலப்பூப் போலும் மையுண்ட கண்ணையுடையவள் தலைவி (கலி. 33: 28). குறித்த பருவததில் தலைவன் வரக் காணாத் தலைவியின் கண, நாடாளும் முறைமை தளர்ந்த அரசன் கீழ் இருந்த குடிமக்களைப் போலக் கலங்

கிப் பொறுத்தலாற்றாமல் நீரொழுகின (கலி. 34:14, 15). 'பிரிந்து சென்ற காதலர் நாம் எண்ணியிருந்த நாள் கடவாமல் கண் உறுகின்ற வருத்தத்தைக் கை நீக்கினாற்போல் வந்தார்' எனத் தோழி தலைவியிடம்உவந்து கூறினாள் (கலி. 34:21-24). நிறுத்திய அளவில நில்லாதனவாய்க் கண் நீரைப் பெருக்கத் தலைவி பிரியும் தலைவனைத் தழுவி விடுததாள் (கலி. 35:11). தலைவர் மீள்வதாகக் குறித்த இவ்விளவேனிற் காலம் மிகவும் அறலொழுகுமென்று கருதி அதற்கெதிரே என கண் வெம்மையான நீரைச் சொரியும் என்று தோழி தலைவியின் நிலையில் தன்னை வைத்துக் கூறினாள் (கலி. 36.14,15). தோழியரோடு கடும்புனலில் ஆடுகையில் கால்தளர்நது அஞ்சித் தாமரைபோலும் கண்ணைப் புதைத்து அப்புனலோடு சென்ற தலைவியை அருளினால் தழுவிக் காப்பாற்றியவனுக்கு அவள் கறபுக் கடம்பூணடாள் (கலி. 39:1-6). காநதள மணம் கமழும் கரிய மலை பார்ப்பவர் கண்ணைத் தன்னிடததே வாங்கிக கொள்ளும் அழகுடையது (கலி. 39:15). தோழி அறததொடு நினறதை ஐயன்மார்க்குத் தாய் அறிவித்தவுடன் சினத்தினால் அவர் கண்சிவந்து ஒருபகல் முழுதும் நெஞ்சழன்று பின் இருவரிடத்தும் குற்றமில்லை என உணாநது ஆறினர் (கலி. 39:20-25). தலைவியும் தோழியும் குரவையாடிக் கொண்டுநிலை பாடுகையில் 'தலைவனின் மணவணியைக் காணாமல் நாணிக் கையினால் புதைபெறும கண்களும் கண்களோ' என்று தோழி நகையாடக் கேட்ட தலைவி 'யான் நின் கண்ணாலே மிகவும் காண்பேன்' எனக் கூறியவுடன, தோழி 'நெய்தல் இதழ்போலும் மையுண்ட கண்ணாகிய நின்கண் என்கண்ணாகுக' என்றாள் (கலி. 39:41-44). 'தலைவன் வரைவு கருதி வந்தானாகலின் பூபபோலும் அழகையுடைய நின் மையுணட கண் இனிப் பொலிக' எனத் தோழி தலைவியிடம் கூறினாள் (கலி. 39:50,51). முகத்திற்குப் பொருநதிய கண்ணையுடைய மகளிர் நாணி இறைஞ்சுதல போலத் தினைக்கதிர் முறறித் தாழந்தன (கலி. 40.1-3). 'கூட்டம் பெறாமையால் வருந்திய தலைவியின பல இதழகளையுடைய மலர் போலும் மையுண்ட கண் பசக்கும்படி நீ கெடுததற்குக் காரணம் அது நின்மலையின் சுனைபபூவை யொக்குமென்னும் பொறாமையோ' எனத் தோழி தலைவனை வினவினாள் (கலி. 45:8-11). தலைவியைத் தலைவன கலந்த நோய் அவள ஒழுக்கததை மிகுததலினால் அதுகண்டு தோழி கண்துயிலாதவளானாள் (கலி. 46:23). 'நின சுனையிடத்து மழையேற்ற நீலப்பூப்போலத் தலைவியின் கண் அயலார் முன் நீர் சொரிகினறதற்கு நின் வரவை விரும்பி வருந்துகின்ற அவளுடைய துயிலில்லாத கணணிடத்து அவை நினக்குச் செய்த பழி ஏதுமுணடோ என்று தலைவனிடம் வினவினாள் தோழி (கலி. 48: 12-15). 'தலைவியின துயிலிடை எழும் வருந்தத்தக்க கனவினால் வரும் கேடு மலையினும் பெரிதாதல் கண்டு அவள் பூப்போலும கண் துயிலுதற்கும் யான் அஞ்சுகின்றேன்' என்று தோழி தலைவனிடம் சொன்னாள் (கலி. 48: 21-23). 'அலர்கினற பருவத்ததாய் அழகமைநத மலர்போலும் மையுண்ட கண்ணை யுடைய தலைவியிடததுத் தலைவன் இனறியமையாத காதலைக் கொணடிருந்தான் எனனும் சொல இனிதாயினும், மினனலே கணணாக இடியென்றும மழையெனறும் எண்ணாமல் அரிய வழியிலே தலைவன வருவது இன்னாதது' எனத் தோழி தலைவனிடத்துக கூறி இரவுக்குறி மறுத்தாள் (கலி. 49: 10-13). அயலிலுளளாா அலர் தூற்றத தலைவியின் அழகிய நலனிழநத கணகள் கயலுமிழ்கினற நீர்போல நீரைச் சொரிநதன (கலி. 53: 8-11). களவினில தலைவியது மெனவிரற் போதினை எடுத்துத தலைவன் அருளையுடைய தன் செங்கண் மறையுமபடி ஒற்றிக கொணடு பெருமூச்சு விட்டான (கலி. 54: 9-11). தலைவியை நிறுததி வந்த தலைவன அவளது கணணை நோக்கிப் பின உவமை கூற நினைநது, 'இதுதான பூவின தனமையைக கொணடிருக்கின்றதாயினும் இது பிறககு மிடமான சுனையிலலையே' எனப பாராட்டினான (கலி. 55: 6-8, 12). 'கொடியெனறும் மினனெனறும் அணங்கெனறும யாதொன்றும் தெரியாத நின் இடையினிடததே என கண விரும்பியோடப் பந்துடன தளர்நது ஒதுங்கிப புறபபடுபவளே, நீலமலரை வென்ற போரையுடைய நின் உண்கண், பாண்டியனின வேல் பகைவரை வருததுமாறு போலச் சிவந்து என்னை வருத்தம செய்ய நீ இப்படி வருவது நின இளமைக்குத் தககதோ' எனக் கைக்கிளைத் தலைவன காமஞ்சாலா இளமையோளிடம வினவினான (கலி. 57: 4-11). 'பேரெழிலை யுடைய மலாபோலும் மையுணட கணணை யுடையவளோ' எனபது காமஞ்சாலா இளமையோள ஒருத்தியைக குறிநத கைக்கிளைத் தலைவனின விளி (கலி. 58.2). 'உலகில் கணடோர்க்கு நிறைநத நலத்தினை யுடைய மகளிரைக் கணடவர்க்கு உளநினற காமநோய மிகும்படி கடுக உண்ணாப் போகும் துயரைச செய்தல் அவாகளுப பெண்மைத் தன்மையன்று' எனக் கூறிக கணணும் [illegible] நின்று நடுங்கித தன்னிடததுத் தலைவன [illegible] யிரநதான் எனத் தோழி தலைவி[illegible] கூறினாள

(கலி. 60: 5-8). 'பெரிய அமர்த்த மையுண்ட கண்ணையுடைய நின தோழி உறுத்திய பொறுத் தற்கரிய மனககவலையைச் செய்யும வருத்தம கது மென எனது உயிரை வாஙகும்' எனறு தோழி யிடத்துத் தலைவன கூறிக் குறையிரந்தான (கலி. 60: 15-17). இருமபினால பிளக்கபபட்ட வடுவின் வகிரை யொதத தலைவியின மையுண்ட கண் தலைவன அருமை செய்து அயர்த்தமையால் மலர்நத செவவி குலைநது முற்றிய அழகினை யுடைய நீலமலரென்று பிறர் கூறும்படியாக வருத்த முற்றுப பசநதன (கலி. 64.20-22). எழிலையுடைய மையுண்ட கண்ணையுடையவர் பரததையர் (கலி. 67:6). 'நீ எமமை நலம் போக நீங்கிப பின அருளா மல கைவிடுதலால பலநாளுமம துயிலாத எம் கண் ஒருநாள் உறக்கததைக் கொள்ளவும கூடும்; ஆயி னும், பரததையர் பாராட்ட நீ நாடோறும் மணஞ் செய்யும முழவோசை வந்து அவ்வுறக்கததைப் போககும். நீ எமமை நீஙகத் தாம் துயிலைத் துறந்தமையால அழுது மாறாத மையுண்ட எம் கண் புதலவனைத தீண்டுகையினால பொருந்து தலும் கூடும, ஆயினும் நினக் கொத்த இளம பரததையரைக் கொணடு வந்து நின் சுற்றமாகிய பரததையர் நின்று பாடும் துணங்கை யாரவாரம் வநது அவ்வுறககத்தைப் போக்கும்; நீ இங்கே வாராமையின் யாம் துயிலைத் துறந்தமையால் வருந்திய எமக்கு நீர் விழும் இதழபோலும் நீர் மாறாத கண் பாயலில இமை பொருந்துதலும் கூடும்; ஆயினும், பரத்தையரைக் கொணடு வரும் நின தேர்க்குதிரையின மணியோசை வந்து அவ் வுறக்கத்தைப போக்கும்' (கலி. 70:7-18). கணவனி டததே துனி மிகுதலால பெருக்கு மாறாது வீழ் கின்ற கணணின நீர காமத்தீயினால் வற்றி இடை யிட்டு ஒழுக அவ்வருத்தத்தைக் கணடு அக்கணவன் அளிததலால் காதலி மகிழநது நகுதல (கலி. 71:4-6). கணணைக குத்தும்படி ஒளிவிடும் வெள்ளிவள்ளத் தில பெண களளுண்டல (கலி. 73:3,4). தம் வயத்த ராதற்குரியாரைத தேடிச் சுழல்கின்ற மையுண்ட கணணை யுடையவர் பரததையர் (கலி. 73.12). அமர்தத கண்ணையுடைய ஓரை மகளிர் வயலில் நெயதற்பூவோடு ஆம்பற்பூவையும் பறிக்க ஓடும் ஆரவாரததிற்கு அவ்வயலில மீனுண்ணும் பறவைத் திரள் அஞசி எழுநது உயர்நத மரக்கிளையில் தஙகி ஒலியெழுப்பும் (கலி. 75:1-8). பூங்கண் மகளிர் (கலி. 75:31). செவ்வரியினையும் செருக்கினையும் கொணட மழைக் கண்ணின் நீர் மார்பகத்தே வீழக் காதலி தன் காதலனைக் குறித்து முகங் கவிழ்ந்து அழுதாள் (கலி. 77:3,4). 'பூப்போலும் அழகையுடைய நலம் போகும்படியாக என் கண் பொனபோலப் பசந்தனவாயினும, நின் பரத்தை யர் நீ செயயும் கொடுமைகளை என்னிடத்தே வநது நொந்து கூறாமையை யான் பெறுவேனா யின இயற்கை நலத்தையுமிழந்த அக்கண் துயில் பெறுதலை யான விரும்பேன்' எனத் தலைவி பரததைமைத் தலைவனிடம் கூறினாள் (கலி. 77: 12-15). பூங்கண் புதல்வன (கலி:79:20). 'நின்னைப் பெற்ற எம் கண நிறையுமாறு அன்பு மாறாத யான நின் வரவைக் காணும்படி அருளி வட்டப் பலகை சுமப்ப நின்ற கைபுனை வேழததைப் பைய இழுத்து வருவாயாக' எனத் தலைவி தன மகனை அழைததாள (கலி. 80:3-9). 'மகளிருடைய செவ் வரியினையும் செருக்கினையுமுடைய மையுண்கண் பசக்குமபடி அவர்க்கு நோவைக் கொடுக்கும் நின் தந்தையரது பரத்தைமைக் குணமொன்றையும் நீ ஒவ்வாதே' எனத் தலைவனுடைய புதல்வனிடததே அவன் வழிமுறைத் தாய் கூறினாள் (கலி. 82:20,21). தலைவன் புதல்வன் தெருவிலே விளையாடி மீள் கையில் அவன வேற்றுததாயர் நீலததின் முறுக்கு நெகிழநது வரிசைபபட்ட பூககள் மிகுகாற்றுக்கு அசைவனபோலே சாளரஙகளில் ஒதுங்கிப பார்த்த கண்ணையுடையராய் அவனை நோக்கிப் பின் நெருங்கி வந்து, 'நின் கண்ணால நீ நின் தந்தைக்குச் செய்யும் சிறப்புகளைப் போலே எமக்கும் செய்து இவ்விரவு எம்மோடே தங்கிப் போ' என்றனர் (கலி. 83:10-20). நண்டின் கண் தன்மை யமைய நெருக்கமாய்ப் பல அருப்புத் தொழில சூழப்பட்ட சில தொடிகளைப் புதல்வன் கைகளில அணிந்திருந்தான் (கலி. 85:6,7). 'நின் தந்தை வாய்ப் பொய்ச்சூளை மெய்யெனத் தெளிநது பூப்போலும் அழகையுடைய மையுண்ட கண் நீர் பரக்க மயங்கும் நோய் மிகுதலால் கண் துயிலாத நின் தாய்மார்க்குரிய பகுதியாய்ச சில கவளங் களை உண்பாயாக' எனத தலைவி தன் புதல்வ னுக்கு உணவூட்டினாள் (கலி. 85:26-28). 'நின் அணிகளை நனைதத தொழுகும் அழகிய வாயினை எம் கண கலந்து கண்டு களிக்க நீ இங்தே வருவா யாக' எனத் தலைவி தன் மகனை அழைத்தாள் (கலி. 86:4,5,10). நீர் விழுதல நீங்காத துயிலாத கண் துயில் கொள்ளுமாறு தலைவி தோழியின் சொல்லை நினைத்துத் தலைவனொடு ஊடல் தீர்ந் தாள் (கலி. 87:14-16). 'சேரியிலிருநத செவ்வரியி னையும் செருக்கையுமுடைய மையுண்ட கண்ணா ரது ஆராத முயக்கத்தால் பாடழிந்துசிதறிய சந்த னத்தையுடைய நின் மேனியைக் கண்டு யான்நின னோடு ஊடுதலைத் தவிர்ந்தேன்; இனி, நீ அப்

பரததையரிடத்தே செலவாயாக' என்று காமக்
கிழத்தி தலைவனிடம கூறினாள் (கலி. 91:12:15).
பரத்தையிற் பிரிநது தங்கிவநத கடவுளரைக் கண்டு
அவரிடததுத தங்கி வநததாகக் கூறியவுடன தலைவி
அவனிடம், 'பார்வையாலே பிணிக்கும் கண்
வருததுதலால நீ முதல்நாள் பூவினைப பலியாக
விட்ட கடவுளரைக கணடாயோ' என இகழநது
வினவினாள (கலி. 93:23,24). பரததையொடு தங்கி
வந்த தலைவன புதிய யானையைக் கணடு தாழதது
வநததாகக் கூறக் கேட்ட தலைவி அப்பரத்தையா
கிய யானையைச் சீாமைப்பட நுகர்ந்த சிறுகளிப
பினையுடைய அழகிய மையுண்ட கண் நீர் விட
ஊர்ந்தாய போலும எனக் குறிப்பிற் கூறினாள்
(கலி.97:26,27). 'மாட்சிமைபபட்ட அழகினையுடைய
மையுணட'கணணையே கயலாகக கொண்ட புனல்'
என்று பரததையைத் தலைவி புனலாக உருவகித்
தாள (கலி. 98:15,18). கண் நெடுநதொலைவில் நீங்
கின பொருள்களைக் காணினும் தனனிடத்தே
உற்ற வடுவைப் பிறர் கண்டு காட்டவும் தான
காணாத தன்மையுடையது (கலி. 99:18,19). 'நீ
தலைவியிடததுப் பிரியேன என்று தெளிவித்த
சொல்லைத் தெளிந்த அவளுடைய பல இதழை
யுடைய மலர்போலும் மையுண்ட கண் நீர் நிறை
யக் காணுமிடத்து உலகம் பொய்கூறாய் என நின்
னைப் புகழும் தன்மை நினக்குக் கெடாதோ'
என்று தலைவனைச் சான்றோர் வினவினார் (கலி.
100:7-10). தலைவனைக் கண்டபோது தோழியின்
கண்கள் நன்னிமித்தமாக இடந்துடித்தும் வலந்
துடியாமலும் வேளாண்மை செயதன (கலி. 101:45,
46). ஆயன் விழாவில் ஏறு தழுவினமை கணட
சுற்றத்தார், பெடையை யொத்த மகளிர் தம் கண்
பொலிந்து இவ்வழகைப பார்க்குமிடமெல்லாம்
நின்று பாாக்கும் பரணைப் பெறுவாராயின் அது
தகைமை யுடையது எனறனர் (கலி. 102.15,16).
பொதுவர் ஏறுதழுவித் தொழுவை விட்டுப் போன
வுடன நெருங்கிய இதழ்களையுடைய மலர்போலும
மையுண்ட கண்ணையுடைய மகளிரும் அவர் கண
வரும தாதெரு மனறததிலே குரவைக கூததாடுவர்
(கலி. 103.57-62). ஏறுகோள விழாவில, 'குரால்
நிறத்தவாகிய கண்ணையுடைய இநத ஏறறைத
தழுவுமவன் இந் நல்லாளைக் கூடுவான்' எனச
சொலலி நல்லாயர் அவ்விடத்திட்ட பரண்மேலே
தம் மகளிரை நிறுத்தினர் (கலி. 104:23-28). 'நெற்றி
யிலே சிவநத சுட்டியினையுடைய ஏற்றைத் தழுவி
அடக்கிய தலைவனது நீண்ட மார்பிலே அலர்
கூறும் மகளிர் நமமை இகழ்ந்து பார்ககும் கண்
அவ்வாறு பாராதிருக்கும்படி யான் சாராமல்
அமைநதிரேன்' என்று தலைவி கூறினாள் (கலி. 104:
65-68). 'ஆயததோடு நாம் ஆடும குரவைக் கூத்தி
னுள ஆயாமகன் நமமை அருமை செய்தான்போல்
நோக்கி நமககு நோயினைச செய்தல், நிறம்
பொருந்திய கண்ணை யுடைய கொலையேற்றை
யான கொணடேன் எனனும் மனச செருககனறோ'
எனத் தலைவி தோழியிடம சொன்னாள (கலி. 104:
69-72). ஏறுகோள் கருதிய ஆயர் வசசிரபபடையை
யுடையோனின் (இநதிரனின) ஆயிரங் கண்ணை
யொக்கும் திரண்ட பலவான புள்ளிகளையும் கடிய
சினத்தையு முடைய புகாநிற ஏற்றையும பிற ஏறு
களையும் சுழனறு திரியுமபடி தொழுவினுள புக
விட்டனர் (கலி. 105:15–22). நலல ஏறறினைத்
தழுவிய பொதுவன் முகம நோககி ஆயமகள கண்
இமையாதிருந்தன (கலி. 105.51,52). 'கோட்டினத்து
ஆயர் மகனோடு யாம கூடியதறகுப பொறாத
அயலார் தம கண் எம கண்ணை நோககித் தீயந்து
போவது என்ன பயனையுடையது' எனத தோழி
தலைவன ஏறு தழுவிய மகிழசசியில தலைவியிடத்
துக் கூறினாள் (கலி. 105.58-60). அலகுல, தோள்,
கண என்னும் மூன்றிடமும பெருதத அழகோடு
முலைத் தலைவி ஊரிடததே மோா விறறு மீண
டாள் (கலி. 108 2-5). 'பெரிய அமா செயயும் மை
யுணட கண்ணால் யான் சிறபபுடையேன' எனத்
தலைவி தன தகுதியைத் தானே நச்சியிருபபவள
எனத் தலைவன் அவளிடம் கூறினான (கலி.
108:16-18). இளைய மாவடுவைப் பிளநதாலொதத
கண்ணாலே என் நெஞ்சை நினக்கு இருப்பிடமாக
வாங்கிக் கொண்டு என்னை அடிமைத தொழில
கொணடாய்; நீ ஒரு கள்வி எனத் தலைவன்
தலைவியிடம் உரைததான (கலி. 108:28,29). 'கண்
நினனை விட்டு வேறொரு வடிவை நோககுதலைத
தவிாககும அழகைப பெறுகினற பெணடனமை
உடையவளே' எனபது தலைவியைக குறிதத
தலைவனின விளி (கலி. 108.37,38). மான மருணடு
நோககினாலொதத மழைககணணை யுடையவர்
சிறிய ஆயச்சியா (கலி. 108:46). 'கொலைத
தொழில் கொண்ட மையுண்ட கணணையுடைய
மாயோளே' என்று தலைவியைத் தலைவன்
விளித்தான (கலி. 108 52,53). வேட்கை செலுத்திய
கணணால் மனததைக் கலககின காமநோயை
உண்டாக்கும மகளிரைக கண்டாயாயின போக
விடாமல தடுத்து அவாசெயத நோயை அவரைக
கொண்டே நீககிக் கொள எனறு எம் சுறறததாா
கூறினார் எனத் தலைவன தலைவியிடதது நகை
யாடி அவளைத தடுதது நிறுத்தினான; அவன அவ்
வாறு கூறியது கேட்ட தலைவி, 'நலல மகளிரைக்

காணின் போகாமல் தடுத்துப் பல இதழகளை யுடைய பூபபோலும் அவர்தம் மையுண்ட கண்ணைப் புகழபாடுமபடி நும்சுறறத்தார் நுமக்கு நல்லதொரு தொழிலே கறபித்தார்' எனறு தானும் அவனை நகையாடினாள் (கலி. 112:5-10). 'மாயம் வல்ல பொதுவன் கூறியனவெலலாம் பொய்யா யின், பினனர் நின் அழகிய இதழ்போலும் மையுண்ட கண் பசலைநிறங்கொளளத் தோள் மெலியினும் நின மேனி இபபோது அழகைப் பெறுகினறது காண்' எனத தலைவி தன்னெஞ் சொடு கூறித் தலைவனொடு கூட்டததிறகு உடன் பட்டாள் (கலி. 112:21-25). 'சுழலுதலுடையதும் முகத்தொடு பொருந்தியதுமான மையுண்ட கணணையுடைய அழகிய நல்லாய்' என்று தலை வியைத் தலைவன் விளித்தான (கலி.113: 2). கண வரைக்கூடித் துயிலைப் பெற்ற மகளிரின் கண் போல் தாமரை முதலிய பூக்கள் குவிநதன (கலி. 119'5). தலைவன வரையாமல் பொருள்வயிற் பிரிநது ஊர் அலர் தூற்றத் தலைவியைத் துறந்தத னால அவள் நெடும பெருஙகண் வேல்முனையை ஒக்கும வெற்றிமிக்க நலததையிழந்து நீர் நினறு வழியும்படியாக அழுதன (கலி. 124: 13-16). 'தலை வியின மையுண்ட கண் தோற்றுவித்த நீர் துளித்து விழககணடும் அவள் தொடர்பை நலகாது விடு கின்ற கொண்கன மிகக் கொடியன்' என்று தோழி கூறினாள் (கலி. 125:8-11). முன்னர்க் கடிதாகிய நீர் பின்னர் வற்றுதலால் அறுதியுடையதாய் விழு கின்ற கயலையொத்த கண் நீரறறு மல்குமளவாய் நிறகத் தலைவியைத் தலைவன துறநதான் (கலி. 127:8,9). பிரிவிடை ஆற்றாத தலைவி, 'இம்மாலைப் பொழுதிலே கோவலருடைய இனிய குழலால நெஞ்சு வருநதப பூபபோலும் அழகையுடைய என் மையுண்ட கண தனிமை கொண்டு வருந்தும் என்றனள் (கலி. 130:13–16). 'நோககுங்காலத்து அப்பார்வையாலே பிறர்கசு வருததமுண்டாக்கு வனவும் தம்மில் இணையொத்துப் பூப்போலும் அழகைக் கொண்டனவுமான புகழசசியமைந்த அழகிய கண்ணினை யுடையவளே' என்று தலைவி யைத தோழி விளித்தாள் (கலி. 131'4,5). மதர்த்த நோக்கினது அழகமைநத கண்ணையுடையவள் தலைவி (கலி. 131.21). கண்கவர் புளளினம் (கலி. 131.31). 'பூபபோலும் கண்ணை யுடையவளான தலைவி எனக்குச் செய்த இக்காமநோயின் வருத் தத்தை யறிந்தும் இவ்வூரிலுள்ளார் அதனைத் தீர்ப்பதோர் வழியை யறிநதிலர்' என்று தலை வன் மடலேறும்போது கூறினான் (கலி. 140:22-24). முனனா ஆயத்தாரொடு கூடி விளையாடு கையில் பல்முனை தோன்றாமல் முறுவலையடக்கித் தன் கண்ணினாலும் முகத்தினாலும் நகுபவ ளான தலைவி தலைவனின் பிரிவை யாறறாத பெருந்திணைக் காதலில் பெருகச் சிரித்துப் பூ மலர்ந்த தன்மையை யொத்த புகழ்சான்ற அழகிய மையுண்ட கணணின அழகமைந்த இமைகள் நீர் மல்க அழுதனள் (கலி. 142:5-12). 'என் னுள்ளததிலே உரன் இருந்திருக்குமாயின நெய்தல் மலரையொத்த என் கண் பிரிவினால இங்ஙனம் வருத்தத்தை உடையனவாகி மிகப் பசக்குமோ' எனறு தலைவனைப பிரிநது கலங்கிய தலைவி பேதுற்றுப பேசினள் (கலி. 142: 21-23). 'நீரில் மலர்ந்த நீலப்பூ என்று தலைவர் புகழ அவர்க்கு முனனாளில பெரிய வருத்தத்தைச் செய்த என் கண இந்நாளில் பீர்க்கம்பூப போலப் பெரிதும் பசந்தன' என்று பெருந்திணைத் தலைவி கலங்கி யுரைத்தாள (கலி. 143: 49-51). 'அறனிலலாதவனா கிய தலைவன் தெளிவாய் என கண்ணுள்ளே வநது தோன்றுதலால இமையை விழித்துப் பிடித் துக் கொள்வேன எனறு யான் விழிக்க, அவன் உடனே ஓடிப்போய் என்னெஞ்சத்துக்குள்ளே மறைந்து நின்று எனக்குத் துயிலாத காமநோயைத் தருகினறான' எனத தலைவி கடலை நோக்கிக் கலங்கி மொழிந்தாள் (கலி. 144:55-58). தலைவி யொருத்தி தன் பண்புகளை யெலலாம் நுகர்ந்து தன்னைக் கைவிட்ட தலைவனை நினைத்துக் கயல்மீனை யொக்கும் தன் மையுணட கண்ணி னின்றும் விழுகின்ற நீர் முகத்தில வடிய அதனால் அம்முகம் பெயகின்ற மேகததைச் சேர்ந்த மதி போலத தோனற ஓயாது அழுதனள (கலி. 145: 3-8). தலைவியது கணணுறக்கத்தைக் கைக் கொண்டு தலைவன் அவளை நினையாது விட்ட னன் (கலி.145:24). பிரிந்த தலைவனைத் தலைவி நினைக்குமிடத்து அவன் அவளது நெஞ்சில தோன்றுதலினும கண்ணுள்ளே மிகவும் தோன்று வான் (கலி. 145'52,53). தலைவியைத் தலைவன் பிரிந்த மையால் அவளுடைய பெரிய அமர்த்த மையுணட கண்ணினில நீா நிறைநது அநநீர் அவளது குவிந்த முலைமேல வழிந்தது (கலி. 146:7,8). 'தலைவனோடு தலைவியின் கண் கலந்தது (கலி. 147:18). எனக்குச் செயலறவை ஏற்படுத்திய தலைவனை யான் சிறிது துயிலேற்றுக் கலங்கிய கண்ணால் கனவில் கண்டே னாயின் அவனை மெத்தெனப் பார்த்து அவன் தப் பிப் போகாதவாறு துகிலைப் பற்றிக் கொள்வேன்' என்பது பெருந்திணைத் தலைவியின் பேதுற்ற மொழி (கலி. 147:48,49). தலைவன் தன் பிரிவி னால் தலைவியின் மையுண் கண்களைத் துயிலாமற்

செய்தான் (கலி. 147:55,56). பிரிந்த தலைவனைக் கனவில கண்டு ஆற்ற விரும்பிய தலைவிக்குக் காமன்கணை செய்யும் கொடுமையினால் கண் துயிலாவாயின (கலி. 147:57-60). தலைவனது பிரி விடைப் பேதுற்ற தலைவி வருந்திக் கண் கலங்கி அழுதாள் (கலி. 147:62). உலகின் பல உயிர்களும் தம கண்ணால் கொள்ளும் பயன் கெடுமபடி ஞாயிறு மேற்கு மலையைச் சேர்ந்து மறைந்தது (கலி. 148:1-3). திருமாலின் கண புகழமைந்த தாமரை மலர்கள் இரண்டினைப் பிணைத்த பிணையலை ஒக்கும் (பரி. 2:53). ஆயிரந்தலைப பாம்பை வாயிற் கொண்ட ஊர்தியாகிய கருடச் சேவலும் திருமாலின் கைவிரற் பாரமும தாங்க இயலாமல் நொநது செங்கண் மாலே, ஓ' என அலறியது (பரி. 3:59-61). செங்கட்காரி (சிவந்த கண்ணையுடைய வாசுதேவன) என று திருமாலைக் கடுவனிள வெயினனார் குறிபபிடுவர் (பரி. 3:81). சினத்தினா லன்றி இயல்பாகவே சிவந்த கண்ணை யுடையவர் திருமால (பரி. 4.10;13:57). பைங்கட் பார்ப்பான் என று சிவபெருமான் குறிக்கப் பெறுகிறார் (பரி. 5:27). யமன கரிய கண்ணையுடைய வெளளாட்டுக் குட்டியை முருகனுக்குப் பரிசாக அளித்தான (பரி. 5: 61, 62). முனனர்த் தலைவன் சேராமையால அனற்றிய துன்பம் கெடுமாறு பின்னர் அவன் வந்து சேர்நதபோதும் மகளிர் கசிந்து நீரொழுகும் கண்ணையுடையவர் (பரி. 6:84,85). 'நின் மையுண்ட கண்ணின சினச்சிவப்பிற்கு அஞ்சும் தலைவனிடத்து நீ கொண்ட துனி நீங்கி இனி அவனொடு விளையாடலைத் தொடங்குக' எனக் காதற்பரத்தையிடம் முதுபெணடிர் கூறினர் (பரி. 6:96,97). வையைப் புனல் விளையாட்டில் பாய்ந்த ஒருத்தியின வாளால பிளக்கப்பட்ட மாவடுவை யொதது மைவிளங்கும் கணணின ஒளியினால செம்மையுடைய புதுபபுனல அநநிறம மாறி இருள நிறமாயிறறு (பரி. 7:57-60). வையைப புனலாட்டினிடையே தன் மெயயீரம் மாறி வெமமை கொள ளுதறகாகத் தலைவியொருத்தி அருநத நறவை ஏந்தினபோது அவள் கண நெயதறபூவை யொத தன; அந்நறவை அருந்தியபோது அவள் கண் காணபோர்ககு மிக்க மகிழ்ச்சியை யூட்டும் பெரிய நறவம்பூவை யொததன; அககண்ணின இயலபைக் கண்டு பாராட்டி அவற்றின் காரிகைததனமை உடைய நோககினை ஆதரித்துத் தலைவன பலவகையால் பாடிய பாட்டைக கேட்டு வேறொருத்தி அவனொடு கூடுதற்குத் துடித்தாள்; அது கண்டு தலைவி ஊடுவாளென அஞ்சி, அவன் நடுங்க முன்னமே நறவுணடு சிவநத அத்தலைவியின கண்கள், இத னாலும் குறை கிடந்த ஊடலில் மேலும் சிவந்தன (பரி.7:61-70). மாவடுவின பிளப்பினைவென்ற கண்ணையுடைய மகளிரது காமவின்பத்தைத் தலைவரொடு கூட்டும் களவுப் புணர்ச்சியைத் தரும் சிறப்பினையுடையது திருப்பரங்குன்று (பரி.8:38-46). பரத்தையர் பனி மலர்க்கணணை யுடையவர் (பரி. 8:48). 'மலர்போலும் மையுண்ட கணணையுடையவளே' எனத் தலைவியை விளிததுத் தலைவன் பேசினன் (பரி. 8:53). 'இருண்ட மையுணட குளிர்ந்த கணணையுடைய இத்தலைவி தன்னை ஈனறாளுக்கு அருமையானவளோ' எனறு தலைவன் தோழியிடத்து நகையாடினான (பரி. 8:59,60). நெயதற பூவையும் நறவம்பூவின் இதழையும ஒதத மதர்தத மையுண்ட கண்ணையுடையவள் தலைவி (பரி. 8:74, 75). திருப்பரங்குனறத்துச சுனையில நீராடிய மகளிர் தம் அழகிய இதழகளமைந்த மையுணட கண்ணாகிய தாமரை மலாகள் அசசுனைத தாமரைகளோடு வேறுபாடின்றித் தோன்றின (பரி. 8:112,113,117). மையணிந்த இமைக்கும கணணை யுடைய வள்ளியை முருகன களவில மணநத அனறு தேவசேனையின் மலர்போலும மையுணடகண நீரைப் பொழிந்தது போலப் பரங்குனறில் மழை பெயதது (பரி. 9:8-11). வானவன மகளாகிய தேவசேனையின் பாங்கியர் மாட்சிமைப்பட்ட எழிலையுடைய மலர்போலும் மையுணட கணணை யுடையவர் (பரி. 9:58-60). வையைப புனலாட்டினிடையே காமம் மிகுந்து எழ அதனால உண்டாகிய கண்ணின களிபபுப் புறததார்ககுப் புலபபடவும் ஊராரை அஞ்சி அதனைச சிலர் ஒளிததனர் (பரி. 10:63,64). வையையில காதலருடன நெடுமபொழுது நீர்விளையாடிய பின்னும் அப்புனல்மேற் செல கின்ற மகளிர் கண் காமககணையின கூரமையிடப பட்ட வாயபோல தோனறின (பரி. 10.96-99). கணணுககு நிறைவைததரும் அழகையுடைய மூஙகிற கழியால் நீரைத் தெறிபபோரமேல அரககு நீரை அடககிய வட்டினால் எறிந்து வையைப புனலாட்டில மகளிரும் மைந்தரும விளையாடினர் (பரி. 11: 54,55). வையையில நீராடறகமைந்த ஆடவரும் மகளிரும் தமக்குள் ஒருவர்ககொருவர் அழகாகிய மதுவைக் கண்ணாலே பருகுவா (பரி. 11 68). வையையுள் வாழைத் தணடினைத தழுவி நீநதிய ஒருவனது நெஞ்சததை வாஙகிக் கொணடு நிறகும நேரிழை ஒருததியிடததே அவன கண நிறப அவனை அவளிடததே செலுததாமல வையை நீர் தனபோககில் செலுததியது (பரி. 11:106-110). வையையாறறில தைந்நீராட்டின் போது, ஒருத்தியின் கண காமனுடைய பண்டாரமும் படையுமாய இருநததனை

ஒருவன் உவந்து பிறர்க்குக் காட்டினான் (பரி. 11:123). வையைப் புனலவிளையாட்டில் தலைவி யொருத்தி புலவிகொண்டு அரக்குநீர் நிறைந்த வட்டினை ஊடலுணர்த்தும் தலைவன் மார்பில் எறிய அந்நீர் அவளது அழகிய மையுண்ட கண்ணின வேலேறு போலும் நோக்கம்பட்ட புண்ணில் குருதி சோர்வது போல் வழிந்தது (பரி. 12:66-70). திருமாலின கண தாமரைமலரை ஒக்கும் (பரி. 13:50,51). ஒளிகிளரும மையுண்ட கண்ணாகிய கெண்டைமீன், கள், புனலாட்டு, புலவி என்னும் இம்மூன்றினாலும் ஒள்ளிய நிறம் சிவக்கப் பரத்தையர் வையையாற்றில் ஆடுவர் (பரி. 16: 39-43). மின்னற்கொடி காண்போரின் கண்ணைக் குத்திச் சுடர்விட்டு நெருங்கி இருளைப் பிளக்கும் (பரி. 18:24,25). பரத்தை தனக்குப் பொருள் கொடுப்பாரை வெளியே போகவிடாமல் தடுத்துத் தன் மடப்பமுடைய மதர்த்த மையுண்ட கண்ணையே கயிறாகக் கொண்டு தோளாகிய தறியிலே கட்டுவள் (பரி. 20:55,56). 'முன்னே கெட்டுப்போன எம் எருதினை யாம் தேடித்திரிந்து இவ்விளையாட்டு மகளிர் கண் காண வையைத் தொழுவத்து வணக்குவோம்' என்று தலைவனை எருதாகக் கொண்டு தலைவியின் ஆயத்தார் பரத்தையிடம் கூறினர் (பரி. 20:58-62). காண்போர் கண்ணுக்கு மின்னற்கொடி போல் ஒளிவீசித் திகழும் பொற்றகட்டின் இடையிடையே இழைத்துச் செய்த தலைக்கோலம் அசையத் திருப்பரங்குன்றத்தில் துடியினது தாள ஓசைக் கேற்ப முறையாகத் தோளையசைப்பவளது கண் பிறழ்தல் அம்பு புடைபெயர்தலை ஒத்தது (பரி. 21:54-56,64,65). பாண்டியன் ஏந்திய, கண்ணுககு ஒளிரும் வேலைப் போல வானம் கடிதாக மின்னி மழை பெய்தது (பரி. 22: 7,8). மைந்தரொடு கயல்மீன் போலும் கண்ணையுடைய மகளிர் செய்த தவப்பயன் பெரிதென்று கண்டோர் கூற இருபாலாரும் வையைப் புனலாட்டிற்கு வந்து கூடிய போது மகளிரால் வையை அழகு பெற்றதோ, வையை வெள்ளத்தால் அவர் அழகு பெற்றனரோ என்பது தேர்தற்கரிதா யிருந்தது (பரி. 22:27-34). பூமுடி நாகர் (ஆதிசேடன) திருக்கோயிலில் அரிபடர்ந்த மையுணட கணணையுடைய மகளிரொடு ஆடவரும் கூடி இயற்றும பாடலும் ஆடலும் தோனறும் (பரி. தி. 1:53,54,59). இருநதையூரில வரைவாய் தழுவிய கலசேர் கிடககைக குளவாயமர்ந்தான (ஆதிசேடன) திருககோயிலைக் களளுண்டு களித்த அரிபடர்நத மலர்போன்ற மையுணட கண்ணையுடைய மகளிர் தத்தம் காதலரொடு வந்து வணங்குவர் (பரி. தி. 1:61-63).

2. இடம். கண்ணகன் - இடமகன்ற - வைப்பு (புறம். 18:24,25 ; பதி. 15:8 ; பதி. ப. 3:5; நற். 377:2). குண்டு கண் அகழி (புறம். 21:2;37:7; பதி. 45:7;53:8;71:12). கண்ணகன் பறந்தலை (புறம். 35:23;64:3). கண்ணகன் ஞாலம் (புறம. 35:29). அங்கண் விசும்பு (புறம். 56:22; அகம். 208:10). அங்கண் மால்விசும்பு (மது. 384). உழவருடைய சிறுவர் தெங்கம் பழத்தைத் தின்று வெறுத்தால் தந்தையர் தலைகுவிக்காமல் இட்ட குறைக்கண் நெடும்போரில் ஏறித் தாவிப் பனம்பழங்களைப் பறிக்க முயல்வர் (புறம். 61:8-11). வியன்கண் பாசறை (புறம். 62:11). இருங்கண் குழிசி (புறம். 65:2). பாரியின் பறம்புமலை தன அகல நீள உயரத்தால் வான்கண்ணை ஒக்கும் (புறம். 109:9). பருஉக்கண் மண்டை (புறம். 125:3). அகன்கண் கொல்லை (புறம். 159:16). மலைக்கண் பொடியு மாறு கோடை நீடுதல் (புறம். 174:24,26). கண்ணகன் தாழி (புறம். 228:12). கழைக்கண் நெடுவரை (புறம். 251:4). செம்மண் நிலத்து மடுவின் நீர் நிலையைத் தோண்டியதனால் உண்டாகிய செங்கண் சின்னீரைச் சாடியில் முகந்து முன்றிலில் வைத்திருத்தல் (புறம். 319:1-3). பன்றிகளால் புழுதியாக்கப்பட்ட விடுநிலத்தில் புதுமழை பெய்து நீங்கப் பள்ளங்களில் தங்கிய சிறிது நீரைக் குரால் உண்டமையின் சேற்றைக் கிளைத்ததனால் கலங்கலாகிய கண்ணில் ஊறிய நீரை அங்கு வாழும் மக்கள் முறையே உண்பர் (புறம். 325:1-6). கடல் கண்டன்ன கண்ணகன் தானை (புறம். 351:4). காடு (சுடுகாடு) கண்மறைத்த கல்லென் சுற்றம் (புறம். 362:19). இருங்கடல்உடுத்த இப்பெருங்கண் மாநிலம் (புறம். 363:1). கண்ணகன் கிடக்கை (புறம். 369:9). கண்ணகன் பாசறை (புறம். 373:4). மலையொடு மாறுபட எடுத்த கொடுங்கண் இஞ்சி (பதி. 16:1). நெடுஞ்சேரலாதன் அழித்த பகைவர் நாடுகளில் உழுவாரின்றிக் கலப்பைகள் வெறுக்கப்பட்டதனால் நிலம் கண் வாடிக் கிடந்தது (பதி,19:17). விருந்தினர் கண் மாறிச் செல்லாது உண்ணுமாறு பல்யானைச் செல்கெழுகுட்டுவனது செல்வமனையில் ஊனுணவு சமைக்கப் பெற்றது (பதி. 21:9-11). அகன்கண் வைப்பு (பதி. 29:10;58:19;66:20;76:15). தெண்கண வறிது கூட்டரியல் (பதி.40:17,18). அமர்க்கண் அமைந்த அவிர்நிணப் பரப்பில கூட்டமாகிய பருந்துகள குருதியை நிரம்ப உணணும் (பதி.67:8,9). அகன்கண் செறு (பதி. 71:1). கணணகன செறு (பெரு. 210). கணணகன் பொய்கை (மது. 171; பட். 243). வியன்கண முதுபொழில் (மது. 190). அங்கண அகலவயல் (நெடு. 21). கசசினால நடுவெளியான

கண் மறையும்படி கோக்கப்பட்ட கச்சுக்கட்டி லென்னும் பெயரையுடைய பாண்டில் (நெடு. 123, 127). வியன்கண் கானம் (நெடு. 129). மழைபெய்து கண்ணைக் கழுவித் தூய்மை செய்த பாறை (குறி. 98). மாக்கண் அகலறை (பட். 238). கண்ணகன் சிலம்பு (மலை. 14). வியன்கண் இரும்புனம் (மலை. 99). மேட்டுநிலம் தன் கண்ணுடைந்து விண்ட பர லையுடைய பள்ளநிலத்தில் வெடிப்பிலே உள்ள குழிகளில் பாம்பு மறைந்து கிடக்கும் (மலை. 198, 199). ஆழ்ந்த குளங்களுக்கருகே கண்ணை மறைத்த நுண்ணிய நீர்ப்பாசி அடியை வழுக்கச் செய்யும் (மலை. 220-222). அகன்கண் பாறை (மலை. 276;அகம். 393:7). சுரபுன்னையோடு வாழை ஓங்கி வளர்ந்த தாழ்கண் அசும்பில் களிறு விழுந்தது (அகம். 8:8,9). மண்கண் குளிர்ப்ப மேகம் மழையைப் பெய்து ஒலி அடங்கிற்று (அகம். 23:1,2). அருவிகளை உச்சி யிற் கொண்ட உயர்ந்த மலையில் கூப்பிடும் கண்ண தாகிய அதுவே எம்மூரென யான் தலைவனுக்கு அறிவிக்க மறந்தேன் எனறு தோழி கூறினாள் (அகம். 38:16-18). பிறர் நாடுகளை வென்று தன் நாட்டின் கண்ணை விரிவுபடுத்தியவன உதியஞ் சேரல் (அகம். 65:5). கண்ணகன் விசும்பு (அகம். 108: 6; நற். 316.5). அங்கண் இருவிசும்பு (அகம். 136:4). காற்றடித்தலால் புதிய கோங்கமலர் கழன்று விழுந்த கண் மணம் கமழும் (அகம். 153:16,17). குரூஉக்கண் நெடுமதில் (அகம். 159:18). யானை நீரைப் பருகி உயிர்ப்பது போன்ற கண்மறைய வீசும் பனித்துளி (அகம். 163:7). வியன்கண் மாநிலம் (அகம். 164:3). அம்பலத்தில் ஈன்றணிமையுடைய நாய் தங்கியிருக்கும் பதிநத கண்ணையுடைய சிற் றில் உள்ளது (அகம். 167:17,20). கடல்கண்டன்ன கண்ணகன் பரப்பு (அகம. 176:1). கணணகன் பரப்பு (அகம். 179:6). பூங்கண் வேங்கை (அகம்.182:1). தெண் கண் உவரி (அகம். 207:11). பசுங்கன வானம் (அகம். 283:12). சீறூரின் அம்பலத்தில நிற்கும் ஆலமரத் தருகே வெண்மையான கண்ணையுடைய பலி மேடை அமைக்கப்பட்டது (அகம். 287:5-7). அங்கண பெண்ணை (அகம். 290:7). காட்டில் கடுங்காற்றி னால் பறிக்கப்பட்ட காம்பொழிந்த தேக்கிலைகள் விசும்புகண மறையப் பரவும் (அகம். 299:5-7). வான் கண அகலறை (அகம. 309.6). களர்கால்யாத்த கண் ணகனபரப்பு (அகம். 327:11). கானம் கண பொரிந்த கவர்தத நெறி'களையுடையது (அகம். 343:9). காற்றி னால அசைகின்ற இற்றிமரத்தின நெடிய விழுது கீழேயுள்ள கல்லின கண்ணைத் துடைககும (அகம். 345:18-20). போரழித்துக் கடாவிட்ட உழவர் கடுங கா றறுல நெலலினைத தூற்றப பறநதுபோன துரும் புகள் உப்பளத்தின் சிறுபாததிகளில் கண் மறையப் பரவின (அகம. 366:2-5). 'என் பெணமைநலம் என்னைவிட்டுத் தண்ணந்துறைவனொடு கண் மாறி யது' என்று தலைவி தோழியிடம் கூறினாள் (குறு.125: 4,7). இருங்கண் ஞாலம் (குறு. 267:1;நற்.157:1). மழை எங்கும் பரந்து கண் மறைத்தலின் தலைவர் வானத்தைக் காணலர் (பெயல கால் மறைததலின என் றும் பாடமுணடு) (குறு. 355:1). கண்ணகன் தூமணி (குறு. 379:3). விசும்பின் கண் மறையும்படி பரந்து முழங்கி மேகம் மழையினைப் பெயதது (குறு. 380: 1-3). தலைவனின் தேர்ப்பாகன் பருககைக கற்களை யுடைய மேட்டுநிலம் கண் உடையுமாறு விரைந்து தேரைச் செலுத்திக் கரமபைப் நிலத்திலே புதுவழி இயற்றினான் (குறு. 400:4,5). அகனகண கேணி (நற். 92:5) நேரிய கண்ணையுடையது உப்புப பாத்தி (நற். 254:10). தலைவியின் சீறூர் பனைமரவேலியை யும் அகன்ற கணணையும் உடையது (நற். 392.6). நெல் விளை கழனி நேர்கண் செறு (நற. 400:2). அகன்கண் அருவி (ஐங. 220.1). யானைகள பூவொடு கூடிய நீரை மேலே சொரிய முறுக்கு நெகிழநத தாமரை மலரினது அழகிய கணணிலே திருமகள வீறுபெற்று விருமபியிருத்தல (கலி. 44:5-7). கணண கன இருவிசும்பு (கலி. 102:1). அகனகண வரைபபு (கலி. 115.18,19). அங்கண வானம (பரி 1.44).

3. **தோற்கருவியின் அடிக்குமிடம்.** போாககளததில மயிர் சீவாது போர்க்கப்பட்ட கணணை – அடிககு மிடத்தை – உடைய முரசமெல்லாம தம்மைததாங குவார் மடிநதமையின தாமும் கெட்டன (புறம. 63:7,8). தெணகண மாககிணை (புறம. 70.3,374.6, 382:18;387:4;397:10). ஊாப்பொது மனறததுப் பலாமரக கிளையில வாழும மநதி அககிளையில பரிசிலர் தூக்கிவைத்த மததளத்தினது ஓசையினிய தெளிந்த கண்ணைப பலாப்பழமெனறு கருதிந தட்டும (புறம. 128:1-3). வன்பரணர் பாணன் [illegible] றாக விறலியரை விளிததுப், 'பதலையில [illegible] கண்ணை மெல்லென இயககுமின்' எனறார் ([illegible] 152:17). முரசம கணகிழிநது உருள யானைக்கட் சேய மாநதரஞ்சேரல இருமபொறை மேலுலகம அடைந்தான (புறம. 229:19,22). வெளிமான [illegible] யதனால தொகுதி கொணட முரசங்களும கண் கிழிந்தன (புறம. 238:5,8). பூதபாணடியனது காடி யுடைய வியன நகரில முழவினது கண மார்ச்சனை யுலராது இடையறாது முழங்கும் (புறம. 247.7,8). இரவலனது ஒருகண இருமபறை பெரிய களிற்றின அடிபோலத தோனறும (புறம்.263:1,2). இரவலா பரிசு பெறத் தடாரிப் பறையின் தெளிநத ஓசையுடைய கண ஒலிகக இசைததுப புரவலரைப பாடுவா

(புறம். 368:15-18). அகன்கண் தடாரி (புறம். 370: 18,385.4). போர்க்களத்தில பொருநன் தன் தடாரிப பறையினை அதன அகன்கண் அதிர முழக்கிய வாறு யானைப் பரிசிலுக்குச் சென்றான் (புறம்.371: 16-21). ஈயாத மன்னரது முற்றத்தில் தோன்றித் தடாரியின தெளிந்த ஓசையுடைய கண்ணை முழக்கிப் பாடும் பாடலால் இரவலர்தம வறுமையை அகறறல இயலாது (புறம. 381:11-15). தெளிந்த ஓசையையுடைய கணணமைந்த பெரிய கிணையினது கணணகத்தே அதனை அடித்தற்குரிய நுணணரிச் சிறுகோல் கட்டப்பட்டிருத்தல் (புறம 382:19, 20). ஒருகண மாககிணை (புறம். 392:5,394:7). நீராட்டப் பெற்ற வீர முரசத்தினது கண்ணைத் திறந்து இயவர் குறுந்தடி கொண்டு அடித்தல் (பதி. 19:7,8). மயிர் செறிந்ததோல் போர்க்கப்பட்ட முரசினது கரிய கண கடுமையுடன முழங்கப் போர் புரிதல் (பதி. 29:12,13). படைக் கலன்களை வீரர்களுக்கு எடுததெறிதற்காகக் குறுந்தடியால் அடிக்கப்படுதலை யுடைய அகன்ற கண்ணை யுடைய முரசம் (பதி. 41:23). படுகண் முரசம் (பதி. 49:14,54·13, மது. 232). மாக்கண் தண்ணுமை (பதி. 51:33). பெருஞ்சேரல இரும்பொறை தன்வழி ஒழுகாத வேந்தரின் வில நாணையறுத்து முரசின கண்ணைக கிழித்து, யானைகசோட்டை அறுத்தனன (பதி. 79:9-13). குறுந்தடி புடைத்தலால் ஒலிக்கும் தோலால் போர்க்கபபட்ட முரசம் கண்ணதிர்ந்தாற் போலக் கார்மேகம முழங்கும் (பதி. 84:1-3). இடி சினந்து முழங்குவதனால் வான் அதிர்வதுபோலக் கடுங்குரல் முரசம கணணதிர்நது முழங்கும் (பதி. இ. 1.4,5). கண்ணமைந்த முரசங்களின் கண்ணில் அடித்தலால் எழும் ஓசை கதித்தெழு மாதிரங்களில் செனறு கலலென ஒலித்தல் (பதி. இ. 2:8,9). கணணகன் தடாரி (பொரு. 70). துடியினது கண்போல் துணிக்கபபட்ட மீன துணடங்கள் (மது. 320,மலை. 458; அகம். 196:2,3). விரலூன்றி அடிக்கின்ற படுகண் ஆகுளி (மலை. 140). 'பின்னி வைத்தாற போனற கொடி பிணங்கிய சிறுகாட்டின வழியிற் போகுமபோது முனசெல்பவன தனது முகத்தில் அடிககாமல வளைதது விட்ட கடுவிசைக் கணைக்கோல பினசெல்லும் நும் மததளததின் கண்ணைக் குத்திக் கிழிககாதவாறு பாதுகாதது மெல்லப போவீராக' எனறு கூததர் விழிப்புடன ஆற்றுப்படுததப் பெற்றனா (மலை. 379-383). மழைமுழக்கிற்கு எதிராக முழங்கும் கண்ணையுடைய முழவின கண் ஒலித்தல (மலை. 532). வாரினை இழுத்துக் கட்டிய கடுமையான ஓசையை எழுப்பும கணணையுடைய ஏறுகோட் பறையினை வேட்டக்களவர் முழக்குவர் (அகம். 63: 17,18). இமிழகண முழவு (அகம். 66:22). கடுங்கண் மறவர்தம் தணணுமையின் அகன்ற கண்ணினின்று எழும் ஒலி அருஞ்சுரம் செல்வோரின் நெஞ்சம் நடுககுறச செய்யும் (அகம். 87:7-10). பாணன அடிக்கும தண்ணுமையின கணபோல வருநதுமாறு மகளிர் வயிற்றில அடித்துக் கொண்டு வருந்துதல் (அகம. 106:12,13). கோவலர் கூவலில தோண்டிய சிறுகுழி நீர் வற்றிச் சேறாயிருக்க; அதில் நீருண்ண வநத யானை மிதிதத அடியகத்தே மேலும பதிந்த புலியடி முழவினது கண்ணகத்தே வயிரியர் விரலூன்றி அடித்த வடுப்போலத் தோன்றும் (அகம். 155:8-15). பறைககண அன்ன நிறைசசுனை (அகம். 178:3;324:6). அதியன் இறந்தபின் சிறந்த ஒலியினை யுடைய பெரிய கிணை ஒலித்தலினறிக கண்ணவிநதது (அகம். 325:8,9). பண்ணமை நலயாழப் பாணனொடு மார்ச்சனையமைநத முழவின கண அதிர்ந்து இயம்பத் தலைவன தன மகிழ்துணைச் சுற்றமொடு கள்ளுணடான் (அகம. 346: 13-15). தலைவியது மூதூரில் பழிதூற்றும் சேரிப்பெண்டிருடைய அம்பலும் அலரும பணணமைந்த முரசின் கண அதிர்ந்தாற போனறு ஆரவாரம் மிக்கன (அகம். 347: 5-7). நீர்த்துறையில கள்ளிருநத கலத்தைக் கழுவிய நீரினை அருநதிய யாமை தெளிந்த ஓசையினை யெழுப்பும் கண்ணையுடைய கிணை போலப் பிறழுந்தது (அகம். 356: 1-4). தழங்கு குரல மயிர்க் கண் முரசு (நற். 93: 10, 11). தேர்வண் மலையனின் திருவோலக்கத்திற்கு வேற்று நாட்டிலிருந்து வந்த பேரிசை வயிரியரது முழவின மார்ச்சனை யமைந்த கண் மிக அதிர்வது போலத் தலைவன் நடுங்கினான் (நற். 100: 9–12). தெளிந்த ஓசையினை யுடைய கணணமைநத தோலை மடித்துப் போர்த்த தணணுமை நடுவே யொலிககத தலைவன் தேரில் வினைவயிற் பிரிந்து செனறான (நற். 130:1-3). முழவினது மார்ச்சனை யமைநத கணபோல இம்மென முழஙகுகின்ற இடியுடனே இரவில் மழை பெய்தது (நற. 139: 5-10). திருவிழாவினை யுடைய ஊரில் முழவினது கண் ஓயாது முழங்கும் (நற். 220:6). இசையெழுதற் கிடமான முழவு முதலிய இசைக் கருவிகளின கண்ணில எழும ஒலியையும் பாட்டினையும் பயினற ஆடல்மகளிர் அரங்கினில் ஆடுவர் (பரி. 16.12, 13). வையைப்புனலாட்டின்போது மார்ச்சனையமைந்த முழவின் இனிய கணணின் முழக்கதற்கு எதிராக விணணில இடி முழங்கியது (பரி. 22: 36, 37).

**4. கணு.** தொகுதிகொண்ட வேலின் தோற்றம் போல, கண்-கணு–அமைந்த கரும்பின் வெண்பூ

அசையும் (புறம். 35: 9, 10). பெருஞ்சித்திரனாரின் மனைவி வறுமையினால் குப்பைக் கீரையினது முன்பு கொய்யப்பட்ட கண்ணிலே கிளைத்த இளந் தளிரைப் பறித்து உப்பின்றியே நீருலையில் வேக வைத்தாள் (புறம். 159: 9-11). தோட்டத்தில் ஆடு மேய்ந்து எஞ்சிநின்ற முன்னைச் செடியின் கொழுத்த கண்ணில் கிளைத்த குறிய இலையை வரகின் சோற்றுடன் பெறும் சீறூர் மன்னரா யினும் தம்மிடத்துச் செய்யும் முறைமையை யறிந்து நடக்கும் பண்புடையவரையே தாம் மதிப்பதாக மாடலன் மதுரைக் குமரனார் கூறுகிறார் (புறம். 197: 9-14). குயச்சேரியினர் நெல்லறுப்போர் முழக் கும் முழவோசைக்கு வெருவிக் கண்ணிடத்தே கிளைத்த மடலில் கட்டப்பட்டிருந்த தேன் கூட்டி லிருந்து ஈக்கள் நீங்கியதனால் அத்தேனை வடித் துக் கொள்வர் (புறம். 348:1-3). மூங்கிலின் கண்ணை அறுத்து இயற்றப்படுவது பெருவங்கியம் (பதி.41:4). மூங்கிலிற் பிறந்த நெருப்பு பசுந்தூறுகளை எரித் தலால் கண்திறக்கப்பட்டு உடைந்து தட்டைகள் அழகழிந்தன (மது. 302, 305). கண்களின் நடுவே வெளியாகத் திறந்த நெடுவங்கியம் யானையின் கைபோலும் (மலை. 6). மூங்கிலின் கண்ணிடைப் பகுதி தலைவியின் தோளுக்கு உவமை (அகம். 18: 17, 18; 152: 14, 23; 271: 13-15). சூறாவளி மூங்கிலை ஒலியுண்டாகத் தாக்கி வெப்பமூட்டி எழுப்பிய மிக்க தீ மலைப் பக்கங்களில் பரத்த லால் அம் மூங்கிலின் கண் வெடித்து எழும் ஒலி கலைமான் கூட்டத்தைத் துரத்தும் (அகம். 47: 4-7). மூங்கில்களின் கண் பிளந்த வெயில் விளங்கும் அகன்ற பாலை (அகம். 91:7). விறலியர் மூங்கிற்காட் டில் ஆய்ந்து அறுத்த நுண்ணிய கண்ணைக் கொண்ட சிறுகோலினையுடையவர் (அகம். 97:9,10). வேனிற்காலத்து வெப்பமிக்க காட்டிலே விரைந்து வீசும் பெருங் காற்று மூங்கிலின் கண்களைப் பொருந்தித் தாக்குதலால் தீப்பொறி தோன்றியது (அகம்.153:8-10). கோடை நீடியதால் வற்றிய மூங்கி லின்கண் பிளக்கத் தெறித்த முத்துக்கள் கழங்கு போல் தோன்றும் (அகம். 173:12-15). வெப்பத்தால் கரிந்த மரங்களின் கண்ணில் தளிர்க்கின்ற இளந் தளிர்கள் அவற்றின் அடிமுதல் தழைத்து அழகுறும் படி வானம் மழைபொழிந்தது (அகம். 283:9-12). இருப்பைப் பூக்களைப் பழையர் மகளிர் கண் திரண்ட நீண்ட மூங்கிற் குழாயில் தொகுத்துக் குன்றகச் சிறுகுடியின் தெருக்கள்தோறும் சென்று விற்பர் (அகம்.331:1-7). கண்ணிடங்களில் தீப்பற்றி யெரிதலால் இருதலையும் கொள்ளியினை யுடைய புழல்தட்டையின் உள்ளிருந்து ஒரு பக்கத்தும் செல்ல இயலாது எறும்பு இடைநின்று வருந்தியது (அகம். 339:8-10). மூங்கிலின் நீண்ட கண்ணிடையே அமைந்த குழாயில் நெடிதிருந்து முற்றிக் கடுப் பேறிய தோப்பிக் கள்ளினைத் தெய்வமுறையும் மலைக்குப்படைத்துப் பின் மகளிர் மடுப்பக் குறவர் மாந்தினர் (அகம். 348:6-9). மயில் வருடைக் கடாக் களின் ஒலிகேட்டு அஞ்சிப் பறந்து சென்று நீண்ட கண்ணையுடைய மூங்கிலின்மேல் தங்கியிருக்கும் (அகம். 378:5-10). தலைவன் கடந்து சென்ற மலை வெம்மை மிகுதியால் கவின் அழிந்த பாறையினை யும் கண்ணுடைந்த மூங்கில்கள் நிறைந்த சிமையங் களையு முடையது (அகம். 399:16-18). சுரநெறியில் வாட்டமுற்ற ஒற்றைமூங்கில் யானையால் துகைப் புண்டழிந்த கரும்பின் கண்ணிடையளவே வளர்ந் திருந்தது (குறு. 180:2-4). பக்கமலையில் ஆடுகழை நிவந்த பைங்கண் மூங்கில் விண்தவழும் முகிலைக் கிழிக்கும் (நற். 28:6,8). அன்னை தன் மகளது நெஞ் சைக் கவர்ந்து கொண்ட தலைவனிடத்துச் சினம் பெரிதுடையளாய்க்கண்ணுடைச் சிறுகோலை ஏந்தி யிருந்தாள் (நற். 150:9-11). மூங்கிலின் கண் தோற்று வித்த கோலினின்று குரங்குக்குட்டி வேற்றுக் கிளைக்குத் தாவியவுடன் அம் மூங்கிற்கோல் குளத் தில் மீனை எறிகின்ற தூண்டிலைப்போல நிமிர்ந் தது (ஐங். 278:1-3). தான் விரும்பிய பெண்யானை யின் சூலால் உண்டான வயாநோய்க்காக ஆண் யானை இனிய கண்ணிடத்தே கிளைத்த நெடிய கிளைகளையுடைய கருப்பங்கோலை முறிக்கும் (கலி. 40:26-28). மானின் செவிபோல் மூங்கில் முளையின் கண்ணைப் பொதிந்த பாளை கழன்று விழும் (கலி. 43:16, 17). 'கண்ணையுடைய கோலை ஏந்திய வளாய் அன்னை என்னை அலைத்தற்கு இவ்வூர் எனக்குப் பொதுவனோடு கூட்டம் உண்டென எண்ணி அலரை உண்டாக்கி விட்டது' என்று தலைவி தோழியிடம் கூறினாள் (கலி. 105:62-...). செவ்வேளின் திருப்பரங்குன்றத்தில் ஒருபக்கம் கணுப் பொருந்திய வேய்ங்குழலின் இசையெழ அதற்கெதிராக மற்றொரு பக்கம் பண்ணார் தும்பி இசையூதும் (பரி. 17:11,12).

5. **உடலிடம்.** வாளை மீனினது பருமை மிக்க கண்ணை – உடலிடத்தை - உடைய துண்டத்தைப் புதுநெற் சோற்றிற்கு மேலீடாக வைத்து உழவர் மிகுதியும் உண்டனர் (புறம். 61:4-6). தொண்டை மானின் படைக்கலக் கொட்டிலைப் பார்த்த ஔவையார் அக்கலங்களைக் குறித்து, 'இவைதாம் பீலியணிந்து மாலை சூட்டிக் கண் திரண்ட வலிய காம்பு அழகுபடத் திருத்தி நெய்யணிந்து காவலையுடைய கோயிலிடத்தே யுள்ளன' என்று

புகழ்வதுபோல் பழித்தார் (புறம்.95:1-3). கண்ண கன் கொழுங்குறை (புறம். 364:5). பன்றியின் கொழுத்த கண்ணையுடைய வெள்ளூனை நெய்யில் பொரித்துக் கிணைஞனுக்கு விடியலில் ஓய்மான் வில்லியாதன் சோறளிப்பான் (புறம். 379:8-10). நீர் நிறைந்து மெலிதாயுள்ள பனை நுங்கின் கண் வற்றி வலிதாகுமாறு கோடை வருதல் (புறம். 389: 1,3). நெற்சோற்றைப் பசுங்கண் பொரிக்கறியுடன் மாந்துதல் (புறம். 395:36,37). கண்ணகன்ற வலிய தோளினையுடைய வம்பலர் (பெரு. 74,76). வாளரம் சீறியறுத்த கண் நேரிதான வளையல் (மது. 316). பிரிவில் பாண்டிமாதேவி பெரிய மகரக் குழையைக் களைந்தமையால் குறுங்கண் தாளுருவி அழுத்திய சிறிதே தாழ்ந்த காதினையுடையளாக இருந்தாள் (நெடு. 137-140). பருத்த கண்ணையுடைய தசை யுணவு (மலை. 252). பலநிறம் பொருந்திய கண்ணை யுடைய பிணையல் (மலை. 349). வெள்ளாட் டினை அரிந்து அதன் தசையோடே சேர்த்துச் சமைத்த கரிய கண்ணையுடைய சோற்றுணவு (மலை. 441). தேனைக் கண்ணிலே உடைய இறால் (மலை. 525). நீர்நிறைந்த நுங்கின் கண் சிதறி விழுந்தவை போல் ஆலியோடு மழை பெய்தது (அகம். 304:1-4). காட்டுநெறியில் கோடைக்காற்று உதிர்த்த குளிந்த கண்ணையுடைய நெல்லிக்காய் பளிங்குக் காசுகளைப் போல வறுநிலத்தில் சிதறிக் கிடக்கும் (அகம். 315:10-13). கருங்கண் கருனைப் பொரியல் (நற். 367:3). பரதவச் சிறுவர் முயன்று தேடிய இனிய கண்ணை யுடைய நுங்கினைப் பெற்று மகிழ்வர் (நற். 392:3-5). பாறை யிடத்தன வாகிய குறுஞ் சுனைகள் நுங்கினது வெட்டப்பட்ட கண்ணையொத்து நீர்நிறைந்திருக்கும் (கலி. 108:40, 41).

**6. முலைக்கண்.** மாற்றார் படை முழுவதையும் கெட்டோடச் செய்த இளமறவனின் தாய் இரவ மரத்தின் விதைபோலத் திரங்கிய கண்-முலைக்கண் -கொண்ட வறிய நகிலினள் (புறம். 276:2-6). கரிய கண்ணையுடைய நெருங்கிய விருப்பத்தையுண்டாக் கும் முலைகளையும் கண்டார்க்கு மயக்கத்தை விளைக்கும் பார்வையினையு முடைய தையலை விரும்பிப் போருக்கெழுந்த வேந்தர் அளியர் (புறம். 345:10-12). தலைவி கரிய கண் மலர்ந்த முலையள் (புறம். 352:14). யானை மருப்பிற்கு இடப்பட்ட பூண் போன்ற அழகுடைய தலைவியது முலையின் கரிய கண் முழுவதும் தன் மார்பகத்துள் அடங்கத் தான் முயங்குதலை விலக்கற்க என்று தலைவன் அவளி டம் கூறினான் (அகம். 26:6-9). இரவுக்குறியில் தலைவி வட்டமான முலைக்கண் பதிந்து வடுச் செய்யத் தன்னை முயங்கினள் என்று தலைவன் உவந்தான் (அகம். 142:25). மார்பிலணிந்த கச்சு மூட்டறுமாறு கண் சினந்து விம்மி யெழுகின்ற தலைவியின் முலையை நோக்கிச் செவிலி அவளை இற்செறித்தனள் (அகம். 150: 2-6). 'கரிய கண்ணை யுடைய விருப்பமிகு முலைகளை நெருங்க அணைத்த படியே எமக்குக் கங்குல் கழிவதாக' எனத் தலைவி யிடத்துக் கூறிய மொழியிற் பொய்த்துத் தலைவன் பிரிந்து சென்றான் (நற். 314: 6-8). வையைப் புன லாட்டினால் மகளிரது நிறம் ஒளி பெற்று நீரால் ஏறுண்ட அவர்தம் முகமும் முலைக்கண்ணும் மிகச் சிவந்தன (பரி. 10.94-96).

**7. கண்ணோட்டம்.** காலனென்னும் கண்ணிலி - கண்ணோட்டமில்லாதவன் - கொண்டுபோக ஆய் அண்டிரன் மேலுலகடைந்தனன் (புறம். 240:3-6). செல்வக் கடுங்கோ வாழியாதன் தன்னொடு நட் புக் கொண்டோர்க்கல்லது பிறர்க்குக் கண்ணஞ்ச மாட்டான் (பதி. 63:3). விசும்பு கண்ணழிய வேனில் நீடியது (அகம். 189:2). கண்ணில்லாத வாடைக் காற்று கல்லென்ற ஒலியொடு விரைந்து வந்து தங்கியது (அகம். 243:7,8). நாடனே, 'என் தோழி யது தோளிலே துயில்வதனை நீ நெஞ்சினால் இன்புறாயாயிலும் என்பால் உள்ள கண் காரண மாக வேணும் நீ அவளிடம் சென்று அருள்வாயாக; ஏனெனில், அவள் நின் கண்ணல்லது வேறொரு பாதுகாப்பும் இல்லாதவள்' என்று தோழி தலை வனிடம் வேண்டினாள் (நற். 355:8-11).

**8. தேனடைக்கண்.** வேங்கைமரக் கிளையில் தொடுக் கப்பட்ட கொழுத்த கண்ணையுடைய தேனடை யில் ஈக்கள் மொய்த்ததனால் கசிந்து கல்லின் குழி களில் வடிந்த தேனில் குறச் சிறுவர் உண்ட மிச்சி லைக் குரங்குக் குட்டிகள் நக்கும் (நற். 168:1-5). கொல்லிமலையின் மேல்பக்கத்தில் காந்தளின் பூங் குலையி லிருந்து தேனீக்கள் தேனைக் கொண்டு வந்து பல கண்ணையுடைய தேனிறாலை இழைக் கும் (நற். 185:7-10). தலைவனது குன்றின் பக்க மலைகளின் மேலே தொடுக்கப்பட்ட தேன் நிறைந்த கண்ணையுடைய இறால் மேகத்தில் நுழையும் திங்களைப்போல் தோன்றும் (கலி.42:22,23).

**9. ஊற்றுக்கண்.** கானம் வெம்ப வேனில் நீடுதலால் சுனைகளின் கண் - ஊற்றுக்கண் - நீரற்றன (அகம். 189:1-3). வேனிற்காலத்தில் சுனைகளில் கண்ணும் வற்றிப் போகும்படி ஞாயிறு தன் வெப்பத்தைப் பரப்பியது (அகம். 263: 2-4). ஆனிரைகள் பருகுதற் குக் கோவலர் வறிய நிலத்தில் கற்களை யுடைத்து தோற்றிய ஊறுகின்ற கண்ணினையுடைய கூவலைக்

கன்றுடைய பிடியானை களிற்றுடன் தடவிப் பார்க்கும் (அகம. 321:7-9). குளங்கள் நீர் வற்றும் படி கண்ணழிந்து உலர்ந்த நெடுநெறிகளை யுடைய வெம்முனை அருஞ்சுரத்தில் தலைவன வினைவயிற் சென்றனன் (நற். 224:8-11).

**10. பீலிக்கண்.** பறைபோன்ற வட்டமான கண் - பீலிக்கண்–நிறைந்த தோகைகளையுடையது மயில் (அகம். 15:4,5). பரதவர் மடமகள் மயிலின பீலிக் கண் போனற மாட்சிமைப்பட்ட முடியை யுடைய பாவை போல்பவள் (குறு. 184'5,6).

**11. உடம்பு.** ஊழி முடிவில் பசுங்கண் கடவுள்- பசிய உடம்பை இடப்பக்கததே யுடைய கடவுள் (உருத்திரன்) - எருமையை ஏறுகினற கூற்றுவனது நெஞ்சைப பிளநதார் (கலி. 101:24,25). பொன் போலும் சிவந்த கண்ணையுடைய பச்சை (காமன்) பசிய கண்ணையுடைய மாஅல் (அநிருத்தன) முதலிய வராகவும் திருமால விளங்குகிறார் (பரி. 3:82).

**12. வடிவு.** நிறம் பொருந்திய கண்ணை-வடிவை- உடையது தினைச்சோறு (மலை. 169). தலைவியின் தந்தையாகிய பரதவன கடலில், கண திரண்ட முத்துக்களைக குளித்தெடுததுக் கொணர்நது கரை யிடத்தே பகுத்துக் கொளளும் துறையினை யுடை யவன (அகம். 280:11-14).

**13. மீன்** (உவமையாகுபெயர்). திருமால் எழுந்தருளி யிருக்கும் இருந்தையூரின் ஒரு பக்கத்தே, பெரிய மீன்கள் தங்கியிருக்கும் வானம் விரிந்து விளங்கு மாறுபோல் கண்-(கண்போலும) மீன-வாழும் கயம் விளங்கியது (பரி.தி. 1'12,13).

**14. அறிவுக்கண்.** ஒனறையும் கலலாமல் மூத்தவ னுடைய கண-அறிவுககண–இல்லாத நெஞ்சு போலே மாலைக காலத்தில் இருள் உலகிற் பரவும் (கலி. 130:6,7).

**15. நோக்கம்.** பசி வருத்த வருந்திய தன் பெரிய சுற்றத்தார்கது நிறைநத உணவு பெற வேண்டு மெனபதில் கண-நோக்கம்-இருப்பதை யறிநத இர வலன் நாற்றிசையும் புரவலரைத்தேடித திரிநதான் (புறம். 370:3,4).

**16. அன்பு.** தலைவி, தனக்குப் பகைவராய பரத் தையர் தலைவனுக்கு அணிவித்த கோதையை, அப் பரத்தையர்மேல தலைவனின கண்-அன்பு-தேயு மாறு அறுத்து விளையாடும் புதல்வனை உவந்து தலையில தாஙகிக் கொள்ளுவாள் (கலி. 80:23-26).

**17. அருள்நோக்கம்.** தலைவன் தலைவியின் ஊட லைத் தீர்த்தற்கு அவளிடம், 'நின் கண்ணை-அருள் நோக்கத்தை-பெற்றாலன்றி இன்னுயிர் வாழமாட் டாத என்னிடத்துத் தவறு யாது' எனப் பணிநது வினவினான (கலி. 88'8,9).

**18. கண்மணி.** 'போரில் மாய்நது நடுகலலான மன்னவனது இலலததில வரையாமல வழஙகும மிகக சோற்றையுடைய முறறம நீரறற ஆறறினது ஓடத்தின தன்மையதாகக கண்டு தன கண-கண மணி-சோர்ந்து வீழவனவாக' எனறு ஆவூா மூலங் கிழார் ஆற்றாது வருநதிக கூறினார் (புறம. 261: 3-6).

**19. ஒளி.** 'யானுற்ற வெவ்வியகாம நோயைக கூறினால் என்னை வ(?)த்துகினற மதியம தன் கதிர் கண் - ஒளி - மழுங்கி நடுங்குவது போல ஓடிச் சுழனறு திரியும்' எனத் தலைவி தலைவன பிரிந்த கலக்கத்தில் கூறினாள (கலி. 146.39-41). ('கதிர்கண மழுஙகி' எனற இததொடராகக நசசி னார்ககினியர் எழுதியுள்ள உரை, 'கதிா கண மழுங்கி' எனவும் 'கதிாகள் மழுஙகி' எனவும பிரிததுக் காணுமாறு உள்ளது 'கதிா கணமழுஙகி', என இங்கே கொளளப்படடது, கதிர்கள மழுஙகி' எனறு வையாபுரிபபிள்ளை சஙக இலககியப பதிப புக் கொள்ளும்).

**20. ஒலி** (ஆகுபெயா). அதியமான நெடுமானஞசி மன்றினிடததே தொங்கும முழவினது காற றெறிந்த தெளிநத ஓசையையுடைய - கணணினை (அடிககுமிடததே எழும) ஒலியினை - கேடபானாயின அதனைப் போரப பறையோசையென மகிழவான (புறம. 89.7-9).

**21. பொருத்துமிடம்.** கமுகின பாளையாகிய பூவிரி யாமல் கருவாயிருநதாற போனற இரணடு கணணும் - பொருதது மிடமும - கூடின செறிநத துளையமைநத போரவையினை யுடைய யாழைப பெருமபாணன் இடததோள பககததே அணைத திருநதான (பெரு. 7–9,16).

**22. வலைக்கண்.** குறுகிய கணணையுடைய அழகிய வலை (அகம. 30:1,70:3).

**கண்கள் - விழிகள்.** வெற்பனுடைய மணககோலம் காணாமல் கையால புதைபெறும கணகளும - விழிகளும் - கணகள எனறு கூறபபடுமோ எனத தோழி தலைவன் வரைய வருகினறமையைத தலைவிக்குக கூறினாள (கலி. 39 41,42). பாணடிய னின் வையையில நீராடும மகளிர் சிலா சிவிறியி னின்றும் நீரைப் பிறமகளிர்மேல செலுத்திச சிதற அந்நீரை அவர்தம் தூமலாக் கணகள ஏறறுக் கொணடன (பரி. 7:51–53).

**கண்கூடுதல்** - ஒருங்கு கூடுதல். போர் மறவர் கண்கூடி -ஒருங்கு கூடி-தங்கியிருப்பது பாசறை (புறம். 294:2; 372:4). பொருநன் ஏந்தியிருந்த பாலையாழ் கண் கூடிய இருப்புப் பொருந்திய திண்பிணித் திவ வினை யுடையது (பொரு. 15,22) களிறுகள் தம்மில் சேர்ந்து மலைந்தாற் போன்று கண்கூடிய துறு கற்கள் காணப்பெற்றன (மலை. 384). வாள் மயங்கு போர்க் களத்தில் களிறுகள் கண்கூடின (அகம். 322:7). ஞாழற் பூவைப் பறித்துப் பூவும் மயிரும் மயங்க முடித்து வாரிமுடிக்கும்படி கண்கூடிய மயிர் தோளில் காதோடு சிறிது குலைந்து வீழத் தலைவி நடந்தாள் (கலி. 56:2-6).

**கண்டம்** - 1. கண்டத்திரை (ஆகுபெயர்). பாசறையில் ஓரிடத்தில் நெடிய குத்துக் கோலுடனே பண்ணிய கண்டத்தை - கண்டத்திரையை - வளைத்து அரச னுக்குக் கோயிலமைத்தனர் (முல்லை. 43,44).

2. **துண்டு.** பரங்குன்றத்திலுள்ள செவ்வேளை வழி படச் சென்றோரில் சிலர் யானைகளை வழியினின் றும் அகற்றி மரங்களில் கட்டி அவற்றிற்கு உண வாகக் கண்டமாக - துண்டாக - முறித்த கரும் பைத் தருவர் (பரி. 19:30-34).

**கண்டல்** - தாழை. கண்டல் - தாழை - நிறைந்த கடற் கரைச் சோலையில் குருகினம் ஒலித்தது (அகம். 260:3). கொக்கின் பார்வைக்கஞ்சிய நண்டு கண் டல் வேரிடத்தே யுள்ள வளையுட் புகுந்தது (குறு. 117:1-3). கடற்கரையில் நின்ற மலர் நிறைந்த கண் டல் கழிநீர் பெருகும் இடத்தில் தளர்ந்து வெள் ளம் பெயரும் பொழுது தானும் பெயர்ந்தது (குறு. 340:4-6). தழை உடுப்பவர் கொய்யும் குழை அரும் பிய ஞாழல் தெளிந்த அலையின் புறத்தைத் தட வும் கண்டல் மரவேலியை யுடைய கடற்றுறைக் குரி யவன் தலைவன் (நற். 54:8-11). ஊர் கடற்கரையி லுள்ள கண்டல் மரங்களை வேலியாக வுடையது (நற். 74:[illegible] 10). புலால் நாற்றம் வீசும் அலைமோதிய வளைந்த அடியையுடைய கண்டல் மரத்து வேரின் கீழ் இரட்டையாக நெருங்கியிருக்கும் நண்டுகள் செல்லும் (நற். 123:9,10). கண்டல் மரங்களாகிய வேலி சூழ்ந்த சிறுகுடித் தெருவிடத்து நேற்றிரவு ஒரு தேர்வந்தது எனச் சொல்லி ஊர் முழுவதும் அலர் எழுந்தது (நற். 191:5-7). கழிசூழ்ந்த கண் டல் மர வேலியை யுடைய கொல்லையில் முள்ளிச் செடிகளால் வேய்ந்த சிறு குடில்களையுடைய பர தவர் உறைகின்ற பாக்க மெங்கும் கல்லென்னும் ஓசை உண்டாகும்படி நெடுந்தேரில் நம் தலைவர் வருவது நிறுத்தப்படுவதொன்றன்று எனத்தோழி செவிலிக்குக் கூறி அறத்தொடு நின்றாள் (நற். 207: 1-4). பெருங்காற்று வீசியதால் கடற்கரைச் சோலையிலுள்ள கண்டல் மரத்திலிருந்து கழன்று உதிர்ந்த பைங்காய் நீல நிறத்தை உடைய கழியின் உட்பக்கம் வீழ ஆங்குள்ள ஆம்பற் போது மலர்ந் தது (நற். 345:1-5). கண்டல் மரங்களை வேலியாக உடைய கழிசூழ்ந்த கொல்லைகளை உடையவன் நல்ல கடல் நாட்டுத் தலைவன் (நற். 363: 1,2). கண்டல் மரத்தை வேலியாகவுடைய கழிசூழ்ந்த நல்லூரில் வீட்டிலிருந்து மகளிர் கழியிடத்து மீனைத் தேடுகின்ற பரதவருடைய படகுகளில் இருக்கும் விளக்குகளை எண்ணுவர் (நற். 372:10-13). வையையாற்றில் நீராடிய மைந்தரிற் சிலர் நீரின் அலை மேலும் நுரை மேலும் கண்டல் தாதைத் தூவினர் (பரி. 10:101).

**கண்டிகை** - கழுத்தணி. இனமொத்த மணிகளாற் செய்த தன்னிலொத்த முக்கண்டன் கட்டுவடமா கிய பலபல நிறத்தை யுடைய கண்டிகை - கழுத் தணி - அணிந்த (பரத்தையாகிய) குதிரையைத் தலை வன் ஊர்ந்தான் (கலி. 96:14-21).

**கண்டி நுண்கோல்** - துணிக்கப்பெற்ற நுண்ணியகோல். கண்டி நுண்கோலை - துணிக்கப்பெற்ற நுண்ணிய கோலை - கையிலேந்தி ஊர் மன்றத்தேயிருந்து தலைவன் புகழ்களைக் கூறி வாழ்த்தும் அகவலன் (பாணன்) குதிரைகளைப் பெறுவான் (பதி. 43:26-28).

**கண்டீரக்கோப்பெருநள்ளி** - ஏழு வள்ளல்களுள் ஒருவன். இவன் கண்டீரக்கோ எனவும், கண்டீரக்கோப் பெருநள்ளி எனவும் கூறப்படுவன். இளங்கண்டீரக் கோவும் உண்மையின், இவன் பெருநள்ளி எனப்பட் டான். இவன் இரவலர் வறுமைத் துயர்போக்கும் வீரனாய் விளங்கினான். தோட்டி என்னும் மலையைத் தன்னகத்தே கொண்ட கண்டீர நாட்டிற் குரியவன் (ஔவை. து. புறம். 148 முன்னுரை). இது மலை நாடாதலின் இவன் நளிமலைநாடன் நள்ளி எனப் பாராட்டப் பெற்றான். நள்ளி பெருஞ்செல்வம் நல்கியதால் தம் இனத்தார் ஆடல் பாடல்களை அடியோடு மறந்தனர் என்பதைப் புறம் 149, 153-ஆம் பாக்களில் வன்பரணர் புலப்படுத்துவர். இவ் வள்ளல் தன்னை யாரென்று காட்டிக் கொள்ளா மல் உணவு, அணிகலன் முதலியவற்றைக் கொடுத் தோம்பிய வண்மையையும் புகழ்வேண்டாப் பெற்றி மையையும் இப்புலவர் சிறப்பித்துள்ளார். சிறு பாணாற்றுப்படை நள்ளியை 'நட்டோர் உவப்ப நடைப் பரிகாரம் முட்டாது கொடுத்த நளிமலை நாடன்' என்று சிறப்பிக்கும் (103 - 107).

**கண்டீரக்கோன்** - ஓர் அரசன். கண்டீரக்கோப்பெரு நள்ளிக்கு இளையோனாதலின் இவன் இளங்

கண்டீரக்கோ எனவும் அழைக்கப் பெற்றான். இவனும் இளவிச்சிக்கோவும் ஒருங்கிருக்கையில் ஆங்கு வந்த பெருந்தலைச் சாத்தனார் இளங் கண்டீரக்கோவைப் புல்லி இளவிச்சிக் கோவைப் புல்ல வில்லை. 'என்னை ஏன் புல்லவில்லை' என்று அவன் வினவியதற்குக் கணவன்மார் நெடுந்தொலை விற் செல்லின் அவர்தம் பெண்டிரும் தம் தரத் திற்கேற்பப் பிடியை இழையணிவித்துப் பரிசில் கொடுக்கும் நாட்டின் வண்புகழுடையவன் கண் டீரக்கோ; நீ பெண் கொலைபுரிந்த நன்னன் மர பினன் எனப் புலவர் விடை இறுத்தார். இதனால் கண்டீரக்கோனது கொடைமை புலனாகும் (புறம். 151).

**கண்ணகம் - தோற்கருவிகளின் அடிபடுமிடம்.** தெண்கண் மாக்கிணையின் கண்ணகம் - அடிபடுமிடம் - சிறு கோல் எறியுந்தோறும் நடுங்குமாறு நின் மேம் பாட்டினைக் கேட்குந்தோறும் நின் பகைஞர் நடுங்க அவர்தம் வேத்தவையில் யான் நின்னை ஏத்திப் பாடுவேன் என்று சோழன் நலங்கிள்ளி யிடத்துக் கிணைப் பொருநன் கூற்றாகக் கோவூர் கிழார் பாடியுள்ளார் (புறம். 382:18-22). பாழ் நாட் டில் கோவலர் ஆனிரைக்கு நீராட்டத் தோண்டிய கூவலில் நீரற்றுச் சேறு மட்டும் இருந்த நிலையில் நீருண்ண வந்த களிறுகள் மிதித்துச் சென்ற அடிச் சுவட்டில் பின்வந்த புலிகளின் அடிச்சுவடுகள் பதிந்து, கூத்தரது மார்ச்சனை யமைந்த முழவின் கண்ணகத்தே விரலால் எறிந்த வடுக்களைப் போலத் தோன்றும் (அகம். 155:7-15). பெருமுது செல் வருடைய புதல்வர்தம் சிறுதோளுக்கொத்த அள வில் மாட்டி இசைக்கும் செவ்வரியுடைய சிறு பறை யின் கண்ணகத்தே எழுதப்பட்ட குருவி அடிபடுதல், நெய்தல் தலைவனது தேரிற் பூட்டப்பட்ட குதிரை கள் அடிபடுவதற்கு உவமையாக வந்துள்ளது (நற். 58:1-4, 10,11).

**கண்ணகனார் - ஒரு புலவர்.** இவர் கோப்பெருஞ் சோழனின் அவைக்களப் புலவர். அச் சோழன் வடக்கிருந்த காலை கேள்வி மாத்திரையே நட்புக் கொண்டிருந்த பிசிராந்தையார் ஆங்கு வந்ததையும் உடன் வடக்கிருந்து உயிர் நீத்ததையும் நேரில் கண்டு வியந்த இப்புலவர் 'என்றும் சான்றோர் சான்றோர் பாலராப; சாலார் சாலார் பாலர் ஆகுபவே' என்று பாடினார் (புறம். 218). நற்றிணை பாடினோர் வரலாற்றில் இவர் இயற் பெயர் நாகன் என்றும் கண்ணனுடைய மகனா தலின் கண்ணனாகனார் என்று அழைக்கப்பட்டார் என்றும் காணப்படுகிறது. சில ஏடுகளில் கண்ண கனார் என்று எழுதியிருந்தமையால் அப்படியே பதிப்பிக்கப்பட்டது. இவர் கோப்பெருஞ்சோழன் பிசிராந்தையார் காலத்தவர் எனக் கூறப் பட்டுள்ளது. ஈங்கை மலர், மகளிர் மணலிடத்து விளையாடுதற் கிட்ட கழங்கு போலப் பாறைமீது உதிரும் என நற்றிணை (79) இல் குறிப்பிட்டுள் ளார். இவர் பாடியனவாக நற்றிணைப்பாடல் ஒன்றும் (79) புறநானூற்றுப் பாடல் ஒன்றும் (218) ஆக இரு பாடல்கள் கிடைத்துள்ளன.

**கண்ணகாரன் கொற்றனார் - புலவர்.** இவரது இயற் பெயர் கொற்றனார். இவர் கண்ணகாரன் மகனா தலின் கண்ணகாரன் கொற்றனார் எனப்பட்டார். இவர் நற்றிணை 143-ஆம் பாடலைப் பாடி யுள்ளார். இப்பாடலில் தலைவி தலைவனோடு உடன் போயினள் என்று செவிலி கூறக் கேட்ட தாய் தன் மகள் ஆயமும் பயிலிடமும் கிளி கூவு தலும் கண்டு துயர் தாங்ககில்லாளாய் 'என் மகள் வழுவிலள், அவள் கொண்ட காமம் வியப்புடை யதே, அவள் காரணமாக முன்னமே அயலார் கூறும் பழிமொழியை அறிந்திருந்தும் அறியாதேன் போல இருந்தொழிந்தேனாதலால் யானே வழு வுடையேன்' என வருந்திக் கூறுகிறாள் (நற். 143).

**கண்ணகி - வையாவிக்கோப்பெரும் பேகனின் மனைவி.** திண்ணிய கற்பினள். இவள் கணவன் பேகன் பரத்தையின் தொடர்பால் கண்ணகியைப் பிரிந்து வாழ்ந்தான். கண்ணகி பெரிதும் கலக்க முற்றாள். இவள் பொருட்டுக் கபிலர், பரணர், அரிசில் கிழார், பெருங்குன்றூர்கிழார் முதலியோர் பேகன் பாற்சென்று தகுவன கூறி அவனை நல்லாற்றுப் படுத்தினர். இவள் சிலப்பதிகாரக் கண்ண கியினும் வேறானவள் (புறம். 143-147 - அடிக்குறிப்பு)

**கண்ணங்கொற்றனார் - புலவர்.** இவர் இயற் பெயர் கொற்றனார். கண்ணன் என்னும் தந்தை பெய ரோடு சேர்த்துக் கண்ணங்கொற்றனார் என்று அழைக்கப்பெற்றார். இவர் குறிஞ்சியைப் புனைந்து பாடியுள்ளார். தலைவன் இரவுக் குறி வருகின்றதன அருமையும் தலைவி அவன்பால் வைத்துள்ள அன்பும் தோழி கூற்றாக விளங்கக் கூறுகின்றார். இவர் நற்றிணையின் 156-ஆம் பாடலைப் பாடி யவர்.

**கண்ணஞ்சாமை - தறுகண்மை.** மதத்தையுடைய களிற் றினைக் காட்டிலும் கண்ணஞ்சாத - தறுகண் மையை யுடைய - ஏற்றினைத் தலைவன் கைநெகிழ விடாது அடக்கிக் கொள்வான் (கலி. 101:36,37).

**கண்ணடி - கண்ணாடி.** வையையில் நீர்வரக் கண்ட

மதுரை நகர மக்களுட்சிலர் கண்ணடி - கண்ணாடி- அழுக்கு நீங்குமாறு நறுமண நெயயைப் பூசி வெள் ளிய கற்பொடியிட்டுத துலக்கி அக்கண்ணாடியின் கண தமது இயற்கையழகும் செயற்கையழகும் கலவியாலே பெறற நிறமும கண்டு களித்தனர் (பரி. 12:19-21).

**கண்ணம்புலலனார்** - புலவர். கருவூர்க் கண்ணம் புல்ல னார் எனபவரும் இவரே. இவரது ஊர் கருவூர். புல்லன என்பது இயற்பெயா. கணணன் எனபது இவர் தந்தையின பெயர். நற்றிணை 159-இல் நெயதல திணை குறித்தும் அகம் 63-இல் பாலைத் திணை குறித்தும் பாடியுள்ளார். இவர் பாடியவை இவ்விரு பாடலகளே. சுரதநிடை மறவர் நிரை கொணர முழங்கும தணணுமை ஒலிகேட்டு உடன் போக்கிற் சென ற தலைவி எங்ஙனம் வருந்துமோ என்று செவிலி புலம்புவதாகக் கூறியுள்ளார் (அகம். 63). 'மணிதுணிந்தனன மாயிரும் பரப்பு' என்றும் 'நிலவுக் குவித்தன்ன மோட்டு மணல் இடிகரை' என்றும் 'கோடுதுணர்நதன்ன குருகொழுக்கு' என் றும் (நற். 159) இவர் கூறியிருப்பது உவமைச் சிறப்பு வாய்நததாகும்.

**கண்ணவர் – கண்போன்றவர்** (அமைச்சர்). பாண்டியன் தன் மயில் போலும் சாயல் மனைவியரோடும் கடனறி காரியக் கண்ணவர் - கண் போன்றவர் (அமைச்சர்) - முதலியவரோடும் கூடித் திருப்பரங் குன்றின் மீது ஏறி வலம் வந்தான் (பரி. 19:20-24).

**கண்ணழி – தடை.** கண்ணழி - தடை - முழுவதையும் அழித்து வந்து நம் கூந்தலில் வேங்கை நாண்மலரை அணி பெறப் புனைந்து காணும் விருப்பத்தை மறந்திருக்கினற தலைவனை இனி நாம் எவ்வாறு கண்டு கூடுவோம் என்று தோழி தினைப்புனம் முதிர்ந்த நிலையில் சிறைபபுறத்தலைவன் கேட்பக் கூறிச செறிப்பறிவுறுததினாள் (நற். 313.1-6).

**கண்ணன்எழினி - குறுநில மன்னன்.** பொருதற்கெழுந் தோரைப புறங்கண்ட முரண்மிகு திருவினையும் மறமிகு தானையையும் உடையவன். முதுகுன்றம் இவனுக்குரியது (அகம். 197:5-8).

**கண்ணனாகனார் - இசைப்புலவர்.** செவ்வேளைப் பற்றிய கடுவனிள வெயினனார் தம் ஐந்தாம் பரிபாட லுக்கு இவர் இசை அமைததுளளாா. அப்பாடலுக் குரிய பண் பாலை யாழ என்பது.

**கண்ணனார் - புலவர்.** வையாபுரிப் பிளளையின் சங்க விலக்கியப பதிபபுப்படி குறுந்தொகையின 107, 244 பாடல்களிரண்டும் இவருடையனவாம். ஆயி னும், அவற்றுள் முதற்பாடலைப் பாடியவர் பெயர் மதுரைக் கண்ணனார் என்று உ. வே. சா. குறுநதொகைப் பதிப்பில் காணப்படுகின்றது. மருதத்திணை பற்றிய பாடலில (107) வினைமுற்றி வந்த தலைவனொடு பள்ளியிடத்திருக்கும் தலைவி வைகறையில துயிலெடுத்துக் கூவிய கோழிச் சேவ லைக் கடிந்து பூனைக்கு இரையாகுமாறு கடுஞ் சொல் கூறும் காமமிக்க கழிபடர் கிளவி உணர்ச்சி மிக்கது. குறிஞ்சித் திணையில் இரவுக் குறிக்கு ஏலாத இற்செறிப்புணர்த்தித தோழி தலைவனை வரைவு கடாவுவதாக உள்ளது மற்றொரு பாடல் (244). அது தலைவன வலிய களிறுபோல் இரவில் வந்து தலைவியின இலலக கதவைத் திறகக முயல் கையில அவ்வோசை கேட்டும் எழுந்து அவனிடம் சேர வியலாதபடி தலைவி அன்னையின அணைப் புக்குள் ஒடுங்கிப படுததிருத்தலைக் குறிப்பிடும்.

**கண்ணி - 1. தலைமாலை.** தாழசடைப் பொலிந்த அருந்தவத்தோனுக்குத் திருமுடியில் சூட்டப்படும கண்ணி - தலைமாலை - கார்காலத்து மலரும் நறிய கொன்றைப் பூவாகும் (புறம. 1 1,13). 'நினது கண்ணி நின பகைவர் நாட்டைச் சுடும் மணங்கமழ புகை எறிததலான வாடுக' எனக் காரிகிழார் பாண் டியன் பல்யாக சாலை முதுகுடுமிப் பெருவழுதியை வாழ்த்துகிறார் (புறம். 6.21,22). புன்னையின மெல லிணர்க் கண்ணி சூடிய ஆடவர் எல்வளை மகளிர்க்கு முதற்கை கொடுப்பர் (புறம். 24:7-9). 'கண்ணார்கண்ணிக் கலிமான் வளவ' என்பது சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவ னைக் குறித்த விளி (புறம். 39:12). நின்னுடைய கண்ணியும் ஆத்தியால் கட்டப்பட்டுள்ளது; நின்னு டன பொருவார் கண்ணியும் ஆத்தியால் கட்டப பட்டுள்ளது எனச சோழன் நலங்கிள்ளி உறையூர் முற்றியிருந்தானையும் அடைத்திருந்த நெடுங்கிள்ளி யையும் நோக்கிக கோவூர்கிழார் கூறினார் (புறம். 45·3,4). பசிய இலையால தொடுக்கப்பட்ட தழைக் கண்ணியை யுடையவன் இடையன் (புறம. 54:10,11). வேம்பின் தளிரை உழிஞைக் கொடியுடன் விரவித் தொடுத்த தேம்பாய் கணணியை வளையமாலை யொடு சூடிப் போர்ப்பறை ஒலிப்ப ஒருதானாகிப் பொருது பகைவரை வெனறான தலையாலஙகானத் துச் செருவென்ற நெடுஞ்செழியன் (புறம. 76:4-13). குறுநதொடி கழித்த கையில வில்லைப பிடிததுத் தேரினது கொடுஞ்சி பொலியப் பொர நினற நெடுஞ்செழியனை 'வாழுக அவன கண்ணி' என இடைக் குன்றூர் கிழார் வாழத்தினார் (புறம். 77: 4-6). நாரினால் பயிலத் தொடுக்கப் பெற்ற ஆத் திக கண்ணியையும் இடக் கவிந்த கையினையு முடைய வீரனது கையகப்பட்டவர் இரங்கத்தக்க

வரே எனக் கூறிச் சோழன் போர்வைக்கோப் பெருநற்கிள்ளியின் வீரத்தைச் சாத்தந்தையார் பாராட்டுகிறார் (புறம். 81:3-5). சுரபுன்னைப் பூவால் தொடுக்கப்பட்ட கண்ணியினையும் வாய்த்த வாளினையும் உடையவன் அண்டிரன் (புறம். 131:2). ஆதன் ஓரியைக் காணச் சென்ற கூத்தச்சுற்றம் நீரிற்பூவாத மணிமிடைந்த குவளைப் பூவை வெள்ளிய நாரால் தொடுக்கப் பெற்ற கண்ணியையும் கலனையும் யானை இனத்தொடு பெற்றது (புறம். 153:4-9). ஏறைக்கோன் காந்தட் பூவால் செய்த கண்ணியினை உடைய குறவர் பெருமகன் ஆவான் (புறம். 157:7,13). குதிரைமலையையும் கூரிய வேலையும் கூவிளங் கண்ணியையும் வளைந்த ஆரத்தையுமுடையவன் எழினி (அதியமான்) (புறம். 158: 8,9). கூரிய வேலையும் நறைக்கொடியின் நாரால் தொடுக்கப் பெற்ற வேங்கையங் கண்ணியையும் உடைய வில்லோர் தலைவன் பிட்டங்கொற்றன் (புறம். 163:14–16). சுரும்பார்க்கும் கண்ணியையும் பெரும் புகழையும் உடையவன் மலையமான்சோழிய ஏனாதி திருக்கண்ணனின் தந்தை (புறம். 174: 17,18). ஆலமர் கடவுள் போலும் நின்செல்வத்தையெல்லாம் கண்டேனாதலின் விடைகொண்டேன்; வாழ்க நின்கண்ணி எனப் பரிசில் நீட்டித்த பாண்டியன் இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறனை வடமவண்ணக்கன் பேரிசாத்தனார் குறிப்பு மொழியில் வாழ்த்துகிறார் (புறம். 198: 9-11). தழைத்த கண்ணியையுடைய புலிகடிமால் என இருங்கோவேள் கபிலரால் விளிக்கப்படுகிறான் (புறம். 201: 15; 202: 10). 'கிள்ளிவளவன் என்று சொல்லப்படும் வண்டுகள் மொய்க்கும் கண்ணியை உடையவனை நீ கொண்டனையாயின் இனி நின் பசி தீர்ப்போர் யார்' எனச் சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் இறந்த ஞான்று கூற்றத்தைப் பார்த்து ஆவடுதுறை மாசாத்தனார் வினவினார் (புறம். 227:9-11). சுற்றப்பட்ட கண்ணியையுடைய இளையோர் விளையாடினர் (புறம். 253:2). கறவைதந்து பகைவர் ஓட்டிய மறவனுக்குப் பருக்கைகளையுடைய இடத்துத் திட்டையைச் சேர்த்தி மரலைக் கீறித் தொடுக்கப் பெற்ற சிவந்த பூவையுடைய கண்ணியுடனே மயிற் பீலி சூட்டிப் பெயர் பொறித்துக் கல்லும் நட்டனர் (புறம். 264: 1-6). பசிய தழை விரவித் தொடுத்த கண்ணியை உடையவன் துடியன் (புறம். 269:6). நீலக்கச்சையினையும் பூத்தொழில் செய்யப்பட்ட ஆடையினையும் மயில் பீலியால் தொடுக்கப்பட்ட கண்ணியினையும் உடையவன் பெருந்தகை மறவன் (புறம். 274:1,2). வளையத் தொடுத்த கண்ணி சூடுதலும் வளைந்து திரைந்த ஆடை உடுத்தலும் வேந்தன் விரும்பியதைத் தானும் விரும்பிச் சொல்லி அவனை வளைத்தலும் வீரனுக்குப் பொருந்தியுள்ளன (புறம். 275:1-3). கானகக் காக்கையின் தழைத்த சிறகை ஒத்த இருவாட்சியால் தொடுக்கப்பட்ட கண்ணியையும் பெரிய தோளையும் உடையவள் மறக்குடி மகள் (புறம். 342:1,2). காஞ்சியின் குளிர்ந்த தளிருடனே ஆத்திப் பூவை விரவித் தொடுத்த கண்ணி அணியப் பெற்றது (புறம். [illegible]:3). தொல்குடி மன்னன் மகள் பொன்[illegible] பல்காசு அணிந்த மேகலையும் பொன்னாற் செய்த கண்ணியும் இலங்க ஒப்பனை செய்து கொண்டாள் (புறம். 353: 2-4). தென் பரதவர் வலிகெட வடவடுகர் வாட்படையைக் கெடுத்தழித்த நன்கு தொடுக்கப்பட்ட கண்ணியையும் திருந்துவேல் தடக்கையையும் குதிரையைச் செலுத்தற் கென்று காலில் இடப்பெற்ற பரிவடிம்பு என்னும் காலணியையும் நல்ல தாரினையும் கள்ளினையும் உடையவன் சோழன் செருப்பாழி யெறிந்த இளஞ்சேட்சென்னி (புறம். 378:1-5). கடல் தீவில் வாழ்ந்த பகைவரின் காவல்மரமாகிய கடம்பினைத் தடிந்த கடுஞ்சினமும் மெய்வன்மையும் உடைய நெடுஞ்சேரலாதனின் கண்ணி வாழ்க என்று வாழ்த்துகிறார் குமட்டூர்க் கண்ணனார் (பதி. 20:2-5). கோவலர் முல்லைப் பூவால் தொடுக்கப்பெற்ற கண்ணியையணிந்தனர் (பதி. 21:20). பலவகைப் போர்க் கண்ணியெல்லாம் குவியச் சூடிய மழவர்க்குக் கவசம் போன்றவன் பல்யானைச் செல்கெழுகுட்டுவன் (பதி. 21:24). மகளிர் சுரிந்த தலைமயிரில் பூவாற் செய்த கண்ணி யணிந்தனர் (பதி. 27:4). கொலைவில் வேட்டுவர் காந்தள் மலர்க்கண்ணி அணிந்தனர் (பதி. 30:9). வளங்கள் கலந்த நாட்டைத் திருத்தியவன் களங்காயால் தொடுக்கப் பெற்ற கண்ணியையும் நாரால் செய்யப்பட்ட முடியினையும் உடைய சேரன் ஆவான் (பதி. 38:3,4). வேலைப்பாடு அமையத் தொடுக்கப்பட்ட கண்ணியை அணிந்தவன் களங்காய்க்கண்ணி நார்முடிச் சேரல் (பதி. 38:8). நன்னன் பொன்னாற் செய்த கண்ணியை உடையவன் (பதி. 40:14). வீரர் அணிந்த பனந்தோடுகளாற் செய்யப்பட்ட கண்ணி பகைவரின் குருதிபட்டு நிறம் வேறுபட்டமையான் பருந்துகள் ஊன் துண்டம் எனப் பிறழ உணர்ந்தன (பதி. 51:31,32). பகை வேந்தரின் மதில்களைக் கவர்ந்த திறம் வியந்து 'வாழ்க நின் கண்ணி' என ஆடுகோட்பாட்டுச் சேரலாதனைக் காக்கைபாடினியார் நச்செள்ளையார் வாழ்த்துகிறார் (பதி. 52:26-31). 'வாழ்க நின் கண்ணி' என ஆடு

கோடபாட்டுச் சேரலாதன் வாழததப் பெறுதல் (பதி. 54:2;56:3;59.13). இனறு இனிது நுகர்நதன மாயினும நாளை மண்புனை மதிலகளைக் கடநத பினலலலது உண்ணோம் என வஞ்சினம் கூறித் தாம் சூடிய போர்ககண்ணிககு ஒபபப் போர் செயயக் கருதிய வீரரை உடையவன் ஆடுகோட் பாட்டுச் சேரலாதன (பதி. 58:5-8). வீரா மணங் கமழும கொககறைப பூவின கொத்துக்களை விர விதொடுதத வெளளிய பனநதோட்டா லாகிய கண்ணியை உடையவர் (பதி. 67:13,18). காநதள் பூவால் தொடுதத கணணி சூடிய செழுங்குடிச் செல்வர் பலாபபழததை யுணடு தீமபிழி மாநதி மகிழ்ந்து இரவலர்க் கீந்தனா (பதி. 81:19-23). வணடுகளும மொய்த்தலிலலாத நெருபபுப் போலும் பூவினை யுடைய செங்காநதளினது பெருந்தண் கணணியைச சூடிய திருமுடியை உடையவன் முருகன் (முரு. 43, 44). வெறியாட்டயரும் வேலன் காட்டு மலலிகையுடனே வெண் கூதாளம் கட்டின கணணியனாய்க் கள் தெளிவைத் தம் சுறறத தோடே உணடு மகிழ்ந்து தொணடகச சிறுபறைக் கேறபக குரவை யாடினான் (முரு. 190-197). விரல் அலைப்பால மலர்நத வேறுபடு மணத்தை யுடைய ஆழ்ந்த சுனையிற பூதத மலராலே புனையப்பட்ட வண்டுகள் மொய்க்கும் கண் ணியை உடையவா மலைமகளிர் (முரு. 198,199). முருகன செசசைக் கண்ணியன் (முரு. 208). கண்ணுக்கினிய ஆத்தி மலரால தொடுக்கப்பட்ட கணணியை உடையவன் கரிகாற் சோழன் (பொரு. 148). நெய்தல நறும் பூஙகணணியைக் குறவர் சூடினர் (பொரு. 218, 219). நுணாக் கட்டையால் செயத மணிமாலையினை யுடைய மார்பினையும் நெட்டியாற செயத பூவினையுடைய கணணியைக் கட்டிய செவியடியினையும கொண்டது மநதி (சிறு. 51-56). செழியன கணணுக்கு அழகு நிறைநத கணணியினை உடையவன (சிறு. 65). நலலியக் கோடன தளிர விரவின கணணி அணிநதவன் (சிறு. 267-269) பிரிவால வருநதும தலைவிககு நல்லியக் கோடன் சூடிய கணணி வருததததைத தரும் (சிறு. வெ. 2.3,4). தழை விரவின கணணியையும அழகும வலியும கொணட தோளினையும் முறுககுணட உடமபினையும் மெயவலியினையும் கொணட உமணர் சகட ஒழுங்கினைப பக்கததே காத்துச் சென்றனர் (பெரு. 60-63). கொமபுகளில உளளன வும கொடிகளில உளளனவுமாகிய பலவேறு பூக் களையும் கலநது கட்டிய படலைக் கண்ணியை உடையவன இடைமகன் (பெரு. 173-175). கருங்கை வினைஞரின இளைஞசிறார் பஞசாயக் கோரையைப் பல்லாலே கிழித்து நாராற் கட்டின புனைதற்கினிய கண்ணியை ஈருடைய கரிய தலை நிறையுமபடி சூடிக் கொள்வர் (பெரு. 217-219). கான்பயந்த கணணியையுடைய தொணடையான இளந்திரை யனை யான் பெறறேன என்னும் செருக்கினால் பெருங்கடல கங்குலும் நண்பகலும துஞசா தியம் பினதாய ஆர்ப்பரிககும் (பெரு. வெ.). தான அணிந்த தேன் நிறைநத கணணிககு வெறறியை உண் டாக்கிச் செஞசோறறுக் கடனாற்றி இறநதுபட்ட வீரரை நினைததுப் பாசறையில மனனன வருந்தி னான் (முலலை. 71, 72). மனனன எக்காலமும் விளககம்தரும கணணிககு வெறறியை நிலை பெறச செய்து பகையரசர் இருநது நடுங்குதறகுக் காரணமான பாசறையில் துயினறான (முலலை. 78-80). வண்டடைநத கண்ணியுடைய ஆய்ச்சியின கண்கள் திருமால் குனறெடுத்த நிலையை எனறு காணபபெறுமோ? (முலலை. வெ. 1). மானதோலா கிய படுக்கையினையும் தழை விரவின கணணி யினையும் கடிய சொல்லினையும உடைய இளை யோர் வில்லேந்திப் பல வழிகள் கூடுமிடத்தே ஆறலைகள்வர் வாராமல காத்தனர் (மது. 310-312). போரினகண் கொமபு அழுநதின தழும் பினைக் கொணட நெற்றியையும் வண்டுகள் நிறைநத கண்ணியையும் போரில் பெருவிருபபத் தையுமுடையவா மறவர் (மது. 595,596). கோவலர் ஏறுஉடைய இனநிரையை முலலை நிலத்தே மேயவிட்டுக் காநதள் மலரின் நீண்ட இதழாற் கட்டிய கணணி நீர் அலைத்தலால் கலக்கமெய்தக் குளிர் வருததுதலினாலே கையிலே நெருப்பினை உடையராயப பற்பறை கொட்டி நடுஙகினர் (நெடு. 3-8). தழை விரவின கண்ணியையும பருத்த அழகிய வலிய தோள்களையும் முறுக்குணட உடம்பினையும் நிரமபின மெயவலிமையும் உடைய மிலேசசா தெருவில தேறல மாநதி மகிழ்வுடன் மழையைப் பொருட்படுத்தாது திரிநதனா (நெடு.31, 32). வெணதாழை மடலால இயனற கணணியைக் கணடோர் அசசமுறுமபடி தலையில சூடிககொண டான தலைவன (குறி. 115,116). காவிரிப்பூம்பட்டி னததில களவர் சூடிய கணணியை மகளிர் சூட் டிக கொளளவும் மகளிர் அணிநத கோதையை மைநதர் அணிநது கொள்ளவும் இரவின கடையா மம் கழிநதது (பட். 109,110). தேன சொரிகினற கண்ணியினையும் தோவீசும் கவிந்த கையினையும் உடைய வள்ளல நனனன (மலை. 399,400). மரா மலர், யாமலா ஆகியவறறைத தளிரொடு மரல் நாரினால கட்டிய காமருகணணியை அழகுபெறச் சூடிககொணடு கூததன சென்றான் (மலை. 428-

433). பகன்றைப் பூவாற் செய்த கண்ணியை உடைய கள் விற்கும் மகளிர் கழனிகள் அருகே மலையை ஒத்த வைககோற் போரைத் தள்ளிக் கடாவிட்டனர் (மலை. 459-461). நன்னன் வண்டுகள் படியும்படி மணங்கமழும் தேனைச் சொரியும் கண்ணியினையும் திண்ணிய தேரினையும் உடைய வன் (மலை. 466,467). மணிமிடற் றநதணனாகிய சிவன் கொன்றை மலரையே தாராகவும் மாலை யாகவும் கண்ணியாகவும் அணிநதுள்ளார் (அகம்.க. வா.1,2). வண்டுகள் மொய்க்கும் செறிந்த மலர் களையுடைய கண்ணியையும் வீரக்கழலையும் அசச முண்டாக்கும குதிரைகளையும் உடைய மழநாடடு மழவரைப் புறங்கொடுத்தோடச செயதவன் நெடு வேள் அவி (அகம. 1:1-3). வேலமகன் முருக வேளுக்கு வெறியாடற்குரிய களத்தை நன்றாக அணி செய்திற்றி வேல் நட்டுக் கண்ணியையும் சூட்டி வளநகர் சிலமபப பாடினான் (அகம. 22:8,9). முருகனின வேறுபடுத்தற்காகக் கடம்பமலர் சூடா மல தேன சொரியும மலர்க்கணணியை வேடர் குலத் தோன்றலாகிய தலைவன தலையிற் சூடி னான் (அகம். 28:6-8). முலலை நிலத்தில பிடவஞ் செடியாகிய குறிய புதா தலையில் சூட்டிக் கொள் ளும் கண்ணியாகவே மலரும் (அகம். 34:1,2). வெற் பன் வேங்கையின் நாண் மலரால் புனைந்த வண்டு படும் கண்ணியன் (அகம். 38:1,5). பிணை யலில் கண்ணி சூடியவன் பெரும்பூட்சென்னி (அகம். 44:14). தலைவன் செங்கழுநீர் மாலையணிந் தவனாய்ச் சிவநத மலராற் புனைந்த கண்ணி யைச் சூடியவனாய் மார்பில் சந்தனம் பூசித் தலைவியின் முன் தோன்றினான் (அகம் 48:8-12). ஆத்திமலரால் கட்டப்பட்ட கண்ணியைச் சூடிய வர் சோழர் (அகம் 93:4). இடையன் நறுமணங் கமழும் முலலைப் பூக்களைத தோன்றிப பூவொடு விரவி வணடு படத் தொடுதத நீரொழுகும் கண் ணியை அணிந்திருந்தான் (அகம். 94:4-6). தலைவன சநதனம பூசிய மார்பில் வணடுகள் ஆர்பபரிக்க மாலையனாயும கண்ணியனாயும ஒருநாள இரவில வந்து தலைவியை முயஙகிச சென்றான (அகம. 102: 9-15). அன்னை தனமகள் நோய தணியத் துறை நிலைக் கடவுட்குக் கையுறையாகக் கள்ளும் கண் ணியும் வெள்யாட்டுக் கிடாயும செலுத்தினாள் (அகம். 156:13-16). கவர்த்த வழியில் ஆனிரை கவர்ந்த மறவர் உவலைக் கண்ணியராய ஊன புழுக்கு அயர்வர் (அகம் 159:6-10). தலைவன தனது தேரில் விரைந்து வந்து குளத்திலே வளர்ந்த குவளை அரும்புகளை வைத்துத் தொடுத்த சுரும்பார் கண்ணியைத் தலைவி விரும்பாதிருககவும் அவளது முதுகிலே தாழநதத நெடிய பினனிய கூந்தலில சூட்டிச் சென்றான (அகம். 180:4-7). உமணர் பாதிரிபபுதுமலரை அலரியோடு கலந்து வெணதாழை மலருடன் கட்டிய வணடுபடுகண்ணியை அணிந்த னர் (அகம். 191:1-4). கடலாடு மகளிர் கொய்த ஞாழற்பூவையும் உழவர் கொயத குவளைப பூவை யும் காட்டிலே மலாநத முலலைப்பூவையும ஒருஙகு கூட்டிப் பலஇளங்கோசர் கணணிதொடுதது விளை யாடுவர் (அகம. 216:8-11). தோழியோடு மணல மேட்டில் விளையாடிய போது ஒருவன தாரனாய, கண்ணியனாய்த தான ஏறிவந்த தேரையும சூழ வந்த பணியாளரையும் தொலைவில் நிறுத்திவிட டுத் தனியனாயத தலைவியிடம் பேசி மறுமொழி பெறாது மீணடான (அகம். 250:4-9). வெணகாந தளை மிகுதியாகச் சூடிய இடையர் பகறபொழு தில் பெய்த மழையால் வருநதிய பல்லான நிரை யொடு மழைநீர் திகழும் கண்ணியராய் ஊர நோக்கி மீணடனர் (அகம. 264:4-6). விழுபபுண பட்டு மாய்நத கரந்தை மறவர்ககாக நட்ட நடுகல லுககு அம்பு கொண்டறுதத ஆத்திமர நாரால் உரிவையால் செம்பூங்கரநதைப பூவினால கடடப பட்ட கண்ணியை வரிவணடு ஆர்பபச சூட்டினர் (அகம். 269:5-12). காட்டு மல்லிகையொடு கூடிய கூதளங் கண்ணியின நறுமணததைக காற்று யாணடும பரப்பத் தோட்டததினகண உள்ள தலைவி யின் இல்லத்திற்குத் தலைவன தனியனாய வநதான (அகம். 272:6-11). நறைக் கொடியாய நாரினால் தொடுத்த வேங்கை மலர்க கணணியனாய மலையி னின்று இறஙகிவரும் தலைவனுககுத தந்தையும தன் மகளை மணஞ்செயது கொடுக்க இசைந்தான (அகம். 282:9-12). காணபோர்ககுக காட்சி இனபம் தோனறுமபடி எருக்கின செறிநத பூவால தொடுதத கணணிகளைக் கூத்தர் தலையில அழகுறச் சூடுவர் (அகம. 301:10-12,23). தலைவியின மையல் நெஞ்சின துன்பம் தீர மீணடு வநது தலைவன இனிய செயலைச செயததால் 'வாழக நினகணணி' எனத தோழி அவனை வாழததினாள (அகம். 314:16-18). காட்டில் கவர்த்த வழியில காணபபெறும நடுகல லிற்குச் சூட்டப்பெறற கணணி வாடியிருந்தது (அகம். 343:5,6). சிற்றூரில் மூங்கில் குழாயில ஊற்றி வைதது முதிர்ந்த இனிய கள் தெளிவை வணடுகள மொயககும கண்ணி யணிநதவா பருகி மகிழ்வர் (அகம். 368:14,15). வண்டுகள் மொயககும ஞாழல மலரால் நெருஙகக் கட்டிய கண்ணியும நெய்தற் பூவால புனைந்த மாலையும் அசையுமபடி அநதிப பொழுதில கடல்கெழு செல்வி கரையில நின்றாள (அகம். 370:10-12). அன்னை முதலியோா கடபப

மரத்தின்கண் கொடியினைக் கட்டிச் கண்ணிசூட்டி இனிய இசைக் கருவிகளோடு முருகனுக்குப் பாடும் பண்ணிற்கேற்ப வியன்களம் பொலிய வெறியாட்டயர்ந்தனர் (அகம். 382:3-7). வடுகர் குவளைக் கண்ணியை அணிந்தனர் (குறு. 11:5). காமக்காழ்ப்புடையார் மடலேறும் போது குவிமுகிழ் எருக்கங்கண்ணியைப் பூவெனத் தலையிற் சூடுவர் (குறு. 17). தலைவன் சுனையில் மலர்ந்த குவளை மலரால் ஆகிய சுரும்பு ஆர்க்கும் கண்ணியனாய் நள்ளிரவில் தலைவியின் இல்லம் வந்து மீள்வான் (குறு. 321:2,3). முல்லையின் மெல்லரும்புகள் மாலைக் காலத்தில் இடையர் சூடிய கண்ணியிடத்தே யிருந்து தலைவன் வரும் கார்ப் பருவத்தைச் சொல்வதைப் போன்றன (குறு. 358·5-7). கண்ணி யணிந்த கொம்பை யுடைய அண்ணல் நல்லேறு அறுகம்புல்லைத் தின்னும் மலைப் பசுவைப் பார்த்துப் பெருமூச்சு விட்டு உகாய் மர நிழலில் தங்கும் (குறு. 363:1-4). 'முருகே, தலைவனது மார்பு தர வந்த தலைவியின் காம நோயானது நின்னால் வந்ததன்று என்பதை நன்றாக நீ அறிந்து வைத்தும் கடம்பின் கண்ணியைச் சூடிப் படிமத்தான் வேண்டுகையால் வெறிமனை வந்தனை, நீ கடவுளாயினும் ஆக; திண்ணமாக அறியாமை உடையை காண்' எனத் தோழி தெய்வத்துக் குரைப்பாளாய் வெறி விலக்கினாள் (நற். 34.5-11). தலைவன் குளவி மலருடன் கூவிள மலரை இடையிட்டுக் கட்டிய கண்ணியன் (நற். 119·8,9). நம் அரசன் நேற்றிரவு தான் போரை முடித்து நின்னைச் செல்லுமாறு விடை கொடுத்தான் என்று கூறி வருந்தாதே; நின கண்ணி வாழ்க என விளைமுறையில் மறுத்தும் தலைமகற்குத் தோழி... (நற். 121 6,7). வேங்கைக் கண்ணி யணிந்த குறவர் கற் பாறையில் தினையைக் காயவிட்டுத் தங்கு வைகறையில் துஞ்சும் களிற்றை எழுப்பினர் (நற். 125:9-12). தினைப்புனத்தில் காவல் செய்யும் போது கண்ணியனும் கழலனும் தாரனுமாய ஒருவன் வந்து உள்ளம் குளிருமபடி தலைவியின் முதுகைப் புல்லினான் (நற். 128 7-9). விலைக்கு விற்றற்கியலாத பூளை, உழிஞை முதலிய பூக்களால் கட்டிய கண்ணி சூடிப் பெருந்தகையைத் தலைவன் பனை மடலாலே கட்டிய குதிரை ஏறிச் செலுத்தல் (நற். 146·1-3). தலைவன் சேரியின்கண் குதிரையைச் செலுத்தி வந்து நாரும் கண்ணியும் காட்டித் தனது ஒருதலை நெஞ்சத்தைக் கவர்ந்ததாகப் பரத்தை தலைவியின் பாணற்குக் கூறினாள் (நற். 150:7-9). மலர்கள் கொய்தும் அவற்றை மாலையாகத் தொடுத்தும் மலையிலுள்ள செங்காந்தள் மலர் கொய்து கண்ணியாக அமைத்தும் முருகனை வழிபட்டனர் மலை வாழுநர் (நற். 173:1-3). பனைமடலால் ஒரு குதிரையைச் செய்து அதற்குச் சிறிய மணிகளைக் கட்டிப் பெரிய கச்சையைப் பூட்டி எருக்கங்கண்ணியைச் சூடி தலைவன் அதில் ஏறி இருப்ப அக்குதிரையை ஈர்த்துக் கொண்டு மறுகில் சிறுகுறுமாக்கள் திரிவர் (நற். 220:1-4). நீராடும்போது அந்நீர் அலைத்தலான் குலைந்த கண்ணியை உடையவன் சாரல் நாடன் (நற். 357: 9,10). குல்லை, குளவி, கூதளம், குவளை, இல்லம் ஆகிய மலர்களால் தொடுத்த ஈர்ந்தண்கண்ணியன் தலைவன் (நற். 376 5,6). சிறிய கண்களையும் பெருஞ்சினத்தையும் கொண்ட ஆண்பன்றி நிரம்பிய கண்ணி யணிந்த கானவர் உழுது விளைத்த தினைக்கதிரை உண்டு பக்கத்திலுள்ள மலைக் குகையில் உள்ள வேங்கைக்கு அஞ்சாது கழைவளர் சாரலில் உறங்கும் (நற். 386:1-5). கல்லா மழவர் ஆராய்ந்து செலுத்தப் படாத அம்பினையும் வெறுத்தொழித்த கண்ணியையு முடையவர் (நற். 387:3,4). இடையர் பகன்றை மலரலாய கண்ணியையும் பல ஆன்களையும் உடையவர் (ஐங். 87. 1). தலைவர் சென்ற நெறி குருந்த மலர் கண்ணியைத் தலையிற் சூடும் கோவலர் குடியிருக்கும் சிற்றூர்களை இடையிடையே கொண்டது (ஐங். 439). இதழ் விரிகின்ற கமழும் கண்ணியைக் கட்டிச் சூடும் மகளிரிடத்தே தாழ்ந்து கொடுத்துத் துறைதொறும் துறைதொறும் மரங்கள் அழகு பெற்றன (கலி. 28: 3, 4). நீண்ட கூந்தலின் நடுவே பல அணிகளுக் கிடையே இட்ட பொன்னாற் செய்த கண்ணிபோல மணலில் பல பூக்களிடையே வேங்கையின் பொன்னிறப்பூக்கள் உதிர்ந்து கிடந்தன (கலி. 32: 3-5). தலைவன் யானையின் அடியைத் தேர்வான் போலத் தொடுத்தல் மாட்சிமைப்பட்ட கண்ணியனாகவும் வில்லனாகவும் வந்து தலைவியை நோக்கிச் சென்றான் (கலி. 37: 1-3). தாமரைக் கண்ணியை அணிந்து நறிய சந்தனத்தை உடையனாய்த் தலைவன் தலைவி செய்த குறியிடத்தே வருவனாயின் அவனைச் சிறுகுடியோர் மலைநின்று பலி பெறும் அணங்கென்று கருதி அஞ்சுவர் (கலி. 52· 7-10). பரத்தையரின் முலையிடையே கிடந்து முயங்கியமையான் தாதுகள் உதிர்ந்து அழகிழந்த தலைமையுடைய கண்ணி அவனது பரத்தைமை ஒழுக்கத்தைத் தலைவிக்கு உணர்த்தியது (கலி. 73: 8, 9). இதழ்கள் வாடி உதிருமாறு பரத்தையரைப் புணர்ந்தமையைச் சான்றாகக் கூறும் கண்ணியை உடைய தலைவன் காமக் கிழத்தியின் இல்லம் சென்றான் (கலி. 78· 13, 14). 'எம் புதல்வனை நீ

எடாதே; எடுத்தால் அவன நின் தலையிலுள்ள பூக்களை அறுபபான்; அது செயதால் நினனை முயங்கினவரை அறிவிப்பது இக்கண்ணி என்று கூறி, கமழும் நின் கண்ணியால் பிறர் முயக்கததை மனத்தாற காணபவள் சினங்கொள்வாள் எனத தலைவி பரத்தை வீடு சென்று வந்த தலைவனிடம் கூறினாள் (கலி. 79: 15-18). 'ஏடா, பணைத்தோளு டைய நும் தாய்மார் சூடிய கணணியோடே எம் இல்லில் நீ வருவையோ, வாராயோ' என விளை யாடச சென்று மீளும் போது பரத்தைவீடு சென்று காலநதாழத்து வந்த மகனைத தலைவி கேட்டாள் (கலி. 83: 26, 27). தலைவியுடைய மகன மேனியின் கடல் முததும் மணியும பிறவும் சேரக் கோத்து உருட்சியமைந்த மூன்று வடத்தினமேல சுரும்புகள் ஆரப்பரிக்கும் கண்ணிக்குப் பொருந்தும்படியாக நீல மணியாற செய்த மாலை கிடநதது (கலி. 85: 12-16). நீரருகே நடையால உண்டாய வடுப்போலப் பெரிய உகிராற பிளந்த வடுககளும எயிறழுந்தின வடுககளும் ஒளளிதழ வாடிய நின் கண்ணியும் பரத்தையர் நினனோடு வேறாகிக் கனன்று அடிக் கச் சிவநத நின மார்பும தப்பாதலுக்கு அமை யாவோ எனப் பரத்தை வீடு சென்று வநத தலை வனிடம் மனைவி சினநது கூறினாள் (கலி 88.10-14). நீலம், அனிசசம், முலலை, நறவு ஆகியவறறின மலர்களால் அமைநத தெரிமலர்க கணணியும் தாரும் பரத்தையர் ஊடிப் பறறியதால் சிதைந்து தலைவன் அழகு நேற்றைக் காட்டிலும் இன்று மிகுந்தது எனப் பரத்தையர் வீடு சென்று வநத கணவனைப் பாாதது மனைவி கூறினாள் (கலி. 91: 1-5). பிடவமும செஙகாந்தளும காயாவும் பிறவு மாகிய பூககள் அழகு கொளளும்படி சூடிய கணணியையுடைய ஆயர் ஒன்று கூடித் தம் மைந் தினை நிலைநாட்ட ஏறுகளைத் தொழுவிடத்தே புகுத்தனர் (கலி. 101: 2-9). சுட்டியை நெற்றியி லணிந்த கரிய காளை மலையில் பூத்த அழகிய பூவால் செய்த கண்ணியை உடைய பொது வனைக் குடர் சாயும்படி குத்தியது (கலி. 101:21-23). பகற்பொழுதிலே அலர்நத கண்ணியை உடையவன; குழலினையுடையவன; தோளின மீது கோலை யுடையவன் ஆகிய வினைவல பாங்கினோர்க்குத தலைவியைப் பெறுதல் அரிதா யிருக்கும்; கொல்லேற்றினைச் சாட இருந்தார்க்கே எம் கருங்குழலாள் உரியள் எனச் சுற்றத்தார் கூறிய கூற்றைத் தோழி எடுத்துக் கூறினாள் (கலி. 101: 39-42). சிறு குடியின மன்றத்தில ஆடுகின்ற பண்ண மைந்த குரவைக் கூத்தில விளங்கிய கணணியையும் திணணிய தோளையும் உடைய பொதுவனொடு தலைவியின் மெனதோளையும் கொண்டாடி ஏறு தழுவின புகழ் பரநதது (கலி. 102:35-39). கலவிடத தனவும் காட்டிடததனவுமாகிய கொன்றை, காயா, வெட்சி, பிடவு, முல்லை, கஞ்சஙகுலலை, குருந்து, காந்தள், பாங்கர் முதலிய பலவகை மலர்களாலான கமழும் கணணியை ஆயா குல இளைஞர் சூடினர் (கலி. 103.1-5). மிகக சினததுடன தனமேல வேகத தோடு வந்த சிவநத ஏறறின கொமபுகளைப பிடித் துக் காயாம் பூங்கணணி யணிந்த பொதுவன மீட் டுந தழுவினான் (கலி. 103:50-52). யாய தன கண் களையே கோலாகக கொணடு என்னை வருததிய தறகு எனனை மலரணிந்த கணணியையுடைய பொதுவனோடே கூட்டம் உணடெனறு இவ்வூர் அலரை உண்டாக்கி விட்டது எனத தலைவி தோழியிடம கூறினாள (கலி. 105.62-65). ஏறு தழு வினவனுடைய முலலைக் கண்ணியை ஏறு கோட்டி னாலே எடுததுத துள்ளுகையினாலே அககண்ணி தலைவியது கூநதலிலே வநது வீழநதது (கலி. 107.6-13). முடிககும பூ இதுவெனறறியாத தன கூநதலில ஏதிலான கையால புனைநத கணணியை முடித தாள என்று தாய கேடகில் அதறகு அவள வெகுள வாள என்று தலைவி தோழியிடம கூறினாள (கலி. 107 14-16). தலைவியின கூநதலில ஏறு ஒருவன கணணியைத தநததெனறு பிறா சொலலக கேட்டுந தநதையோடே தமையனமாரும கூடியிருநது தெயவ மால் இவளுக்கு இவனைக காட்டிறறென மகிழநது அப்பொதுவனுககு அவளை மணஞ செயது தர முடிவு செயதனர் (கலி. 107:30-34). ஆயன் காயாம பூவாற செயத கணணியையும கருநதுவராடையை யும அணிநதிருந்தான (கலி. 108 10). சுறறததாா கட்டிக் கொணடு வநது மயிர் முடியில ஒருபுறததே செருகி வைத்த கணணியைச சுமக்க மாட்டாத அகனற அல்குலை யுடையவள ஆயா மகள (கலி. 109:9,10). குருந்தம் பூவாற் செயத கணணியை யுடைய இடையன தலைவியை நோக்கி, 'முறுவலை ஏர் மடநல்லாய், நீ இழைதது விளையாடும சிறு றிலை யானும் சிறிது புனையட்டுமா' என்று வின வினான் (கலி. 111.7-9). ஆயமகன சூடிவநத முலலை மலராற செயததோர் கண்ணியைக கூநதலிலே யிட்டுத தலைவி முடிகக, செவிலிததாய வெண் ணெய தேயககச அவள கூநதலை விலககி விட்டி லிருநத அனனை நாணுமாறு அபபூ அவள முன வீழநதது (கலி. 115.4-9). 'தலைவன கணணியை நீ சூடினாயாயின அதறகேறப நம சுறறத தாரும் நின்னை அவனுககுத் தரச சூழந்த னர், அஞசாதே' எனத தோழி தலைவியிடம கூறினாள (கலி. 115 17,18). 'ஒருகுறி நன்னாகால

என்னைக் கவர்ந்தாள்; அன்று முதல் யான் துயின் றறியேன்; ஆவிரை மலரோடு இணைத்துக் கட்டிய எருக்கங் கண்ணியை யணிநது பனைமடலால் செய்த குதிரையை மணிகள் ஆர்ப்பரிப்ப ஏறினேன்' என்று மடலேறுகினற தலைவன் சான்றோர்க்குக் கூறினான் (கலி. 139:5-10). யான் கையில் கொண் டது மடனமா அன்று; ஏறுவார் ஏறப்படும் குதிரை யென்றும் தலையினும் மார்பினும் கிடக்கின்ற இவை பொன்னை ஒக்கும் ஆவிரம் பூவாற் செய்த கண்ணியும் உழிஞைப் பூவோடே பூளைப்பூவும் மயிற்பீலியும் விளங்குகின்ற தாரு மல்ல; என் மனத்தாலே நன்றென்று கருதி யான் கட்டின பூந்தார் என்றும் உணர்வீராக என மட லேறும் தலைவன் கண்டார்க்குக் கூறினான் (கலி. 140:3-7). திருமால நீலமணி போன்ற திருமேனியில் கட்டவிழ்ந்து அலர்ந்த மணங்கமழும் துழாயினது இணரால் தொடுதத கண்ணியை உடையவர் (பரி. 4:57,58). வையையாறு தன்னிடத்தே நீராடிய மக ளிரின் செவியில் தளிரைச் செருகியும் மைந்தரது கண்ணியைப் பறித்தும் சென்றது (பரி. 7:44,45). முருகவேள் ஊடிச் சென்ற தேவ சேனையின் அடி யில தன் தலைக்கண்ணி தோய வணக்கமாகிய திறைப் பொருளைக் கொடுததார் (பரி. 9:36,37). தேவசேனையின தோழியர் வள்ளியின் தோழியர் தம மாலைகளோடு தம மாலையை வீசிப் பினனு வர்; தம் கணணியை எறிந்து மனந்தடுமாறுவர் (பரி. 9:45). குளிரிப் பூவால் கண்ணி தொடுத்த ஒருத்தியை மற்றொருத்தி தடுப்பாள் போன்று மல்லிகையொடு நெய்தற்பூவை விரவித் தொடுத் தாள (பரி. 11:103-105). ஒருவன் இடடுச் சென்ற அடிச் சுவட்டின் மேல் அடியிட்டு நடந்து சென்ற ஒருத்தி ஒருபால் ஒதுங்கித் தன முனகையால் தன் கூநதலின கண்ணியை அழகுறத் திருத்தினாள் (பரி. 12:90,91). கண்ணியணிந்த மைந்தரும் தார ணிந்த மகளிரும் பொருள்களைத தானம் பண்ணி அதன் பயனாகிய போகத்தை நுகர நாள்தோறும் வையையில நீராடுவர் (பரி. 16:50-52). உச்சிச் சூட் டும் கண்ணியும் பெரிய வலையமும் ஆகிய அணி களை அணிநது வையை நீராட மககள் வந்து கூடி னர் (பரி. 20.30-32). வேலைப்பாடமைந்து பொலிந்த செம்மலர்க் கணணியை அணிநதவரும் வெட்சி மல ரால் தொடுக்கப்பட்ட கோதை யணிந்தவரும் பிறரும் குதிரை, யானை போனற ஊர்திகளில ஏறி வையை அடைநதனர் (பரி. 22:21-25). வையை யில் புதுநீர் வருகையைக் கேட்ட மதுரை மக்கள் தாரினராய, கணணியராய், நறுமணப் புகையின ராய, ஆடையினராய் ஊர்திகளில் ஏறிப் புனலா டச் சென்றனர் (பரி. தி. 2:11-17). புனலாட்டினி டையே இறபரத்தையைக் கண்ட தலைவன் தன்னு டன் ஆடும் காதற்பரததையறி யாவாறு தன மாலையை அந்த இறபரத்தைக்குக் கணணியாகும் படி நீரிலே விடுத்தான் (பரி. தி. 2:44).

2. **கண்ணை உடையவள்.** மூங்கிலை ஒதத அழகை யும் பருத்த தோளையும் உடைய பேரமர்க் கணணி- கண்ணை உடையவள் - இருந்த ஊர் நெடுந் தொலைவிலுள்ளது (குறு. 131:1-3). மலர்போலும் கண்ணி எனத் தலைவி விளிக்கப் பெறுதல் (நற். 122:11). பரத்தை நெய்தலங கண்ணி எனச் சுட்டப்படுகிறாள் (ஐங். 135:3). பேரமர்க்கண்ணி எனத் தலைவியை விளித்து, 'முல்லை நிலம் கார்ப் பருவ வருகையாலே பூவணிகொண்டு திகழ்தலால் இனிது ஆடுவோம் வா' எனத் தலைவன் அவளை அழைத்தான் (ஐங். 412). வருத்தும் நள்ளிரவில் பனி மலர்க் கண்ணி கூறியதை எமக்குச் சொல்லுக எனப் பாசறைக்கண் இருந்த தலைவன் தலைவியின் தூதனாக வந்த பாணனிடம் கேட்டான் (ஐங். 479). 'பேரமர்க் கண்ணி, நின்னைப் பிரிந்துறைந்த தலை வர் நின் மெலிந்த தோளுக்குத் துணையாக வந்த னர்; இனி நீ நின கூந்தலில் மலர்களை அணிக' எனத் தோழி தலைவியை விளித்துக் கூறினாள் (ஐங். 496:3-5).

**கண்ணிடம் - 1. துளையிடம்.** மூங்கிலாகிய இசை வளரும் பெருவங்கியத்தின திறநத கணணிடம் - துளை யிடம் - ஒலிக்க, யாழோசையுடன் ஒட்டிப் பாடும் விறலியர் முதலில கடவுளை வாழததினர் (மலை. 533-538).

2. **அகலிடம் (வான்).** தனித்திருக்கும் தலைவி வருந்து மாறு கண்ணிடத்தே - அகலிடத்தே (வானத்தே) - பர வித் தண்ணென இயங்கும் வெண்மேகத்தின் பின்னே வாடைக் காற்று வந்தது (நற். 229:8-11).

**கண்ணியர் - கண்ணை உடையவர்.** மைந்தர் தம் மார் பில் பூசிய சாநதம் கமழும் காற்றும் கயல்மீனைப் போனற கண்ணியர் - கணணை உடையவர் - ஆகிய மகளிர் தம் கமழ் தாதுதிர்ந்த கூந்தலின் இடையே புககு அசைத்த மணக் காற்றும் கொண்டது செவ் வேளின் திருப்பரங்குன்றம் (பரி. 21:46-53).

**கண்ணிலி - கண்ணோட்டமில்லாதவன்.** பாடுவார்க்குக் குறையறக் கொடுதத ஆய அணடிரன் தன உரிமை மகளிரொடு கால னென்னும் கண்ணிலி - கண் ணோட்டமில்லாதவன் - கொண்டுபோகத்தேவருல கத்தை யடைந்தனன் (புறம். 240:3-6).

**கண்ணீர்-விழிநீர்.** 'பகை வேந்தரைப் போரில் சிதறப்

பொருது முரசததோடு கைபபற்றே னாயின, என் குடை நிழல் வாழும் குடிமக்கள தாம் சென்ற டையும் நிழலைக் காணாராய்க் கொடியன் எம் வேந்தன் என்று கண்ணீர் பரப்பிப் பழிதூறறும் கொடுங்கோலேனாகுக' எனத் தலையாலங்கானத் துச் செருவெனற நெடுஞ்செழியன் வஞ்சினங் கூறினான (புறம். 72:7-12). கபிலா பேகனது வாயி விடததே அவனை வாழததிப பாடி நிற்கையில், அவனால துறககப் பெற்ற கண்ணகி துயர்மிக்குச் சொரிநத கண்ணீரை அடககவியலாது மார்பகம் நனையப பொருமி யழுதனள (புறம். 143.10-15). பரணர் மாலைப் பொழுதில் பேகனது வாயி லில சென்று அவன் காட்டைப் பாடுங்காலை, அங்கே அழுது நின்ற கணணகியைப் பேக னுக்கு உறவினளோ என வினவியதும் தன் கைவிர லால கணணீரைத துடைததுக கொண்டு எதிர் மறையில விடை கூறினாள (புறம். 144:3-10). தலைவனொருவன உயிருடன வாழநத காலத்து அவனது செல்வமிக்க அழகிய மனை அவனால் பாதுகாக்கபபட்டோரது கண்ணீரை மாற்றிய தணணறும் பநதரினை யுடையதாய்ப் பொலிந் திருந்தது (புறம். 250: 2-6). தனமகன் போரில் களி றெறிந்து பட்டான் என்னும் உவகையை அவனை ஈனற பொழுதினும் பெரிதாக எய்திய தாயின் உவகைக் கண்ணீா மூஙகிலசையும் மலையில் மழை பொழிய வீழ்ந்த துளிகளினும் பலவாகும் (புறம். 277:2-6). இறநதுபட்டோரைக் குறிதது அன்புடை யார் சுடுகாட்டில் அழுத கண்ணீர் அவ்விறந்தோ ரின் எலும்புகள வெநத சுடலைச் சாம்பலை அவித்தது (புறம். 356:4-6). இமைகளைத் தீய்ப்பது போனற வெம்மையுடைய என் கண்ணீரைத துடைத்து எனனோடு கூடிக் குலவுதற்குரிய தலை வர் இபபொழுது கூடாராய்ப பிரிநதிருத்தலை எண்ணி என நெஞ்சம் நோகின்றது எனத் தலைவி பிரிவிடை யாற்றாது பேசினாள் (குறு. 4). நம்மிடத்துத தலைவன் புரிந்த கொடுமையை நினைந்து அவனுடைய குனறுகள் நம்பால் பெரி தும் அனபுடைமையால் தம் வருத்ததகதைத் தாங்க மாட்டாமல கண்ணீரே அருவியாகப் பெருகும்படி அழுகினறனவற்றைப பாராய் என்று தோழி தலைவிககுக காட்டினாள் (நற். 88.5-9). காட்டில் ஆறலைகள்வராகிய மறவர் செலுத்திய அம்புகள் தம் முடம்பினில அழுந்துகையினாலே விழுநது கிடக்கும் வழிப போககரின வறண்டு வாடும் நாவிற்குத் தண்ணீர் பெறாத தடுமாற்றத்தை யுடைய வருத்தத்தை அவர்தம் கண்ணீர் வீழ்ந்து அந் நாவினை நனைததுப் போக்கும் (கலி. 6:2-6). காதலனைக குறித்து அழகிய முகங் கவிழநது அழுகினறவளுடைய கணணீர் அவள் முலைமேல் வீழுவன போலப் பழனத்தில பறவைகள தாக்கச் சாய்நது நிறகும் அகவிதழிலுள்ள நீர்ததுளிகள அருகில நின்ற முகைகளின மேல சிந்தும் (கலி. 77: 1-7). இளையபரத்தை தனனிடம் போந்த தலைவியின புதல்வனுககு இடப இலசசினையைக் கையுறையாக அணிநது அவன நகைமுகததை முத்தங் கோடறகு காடடு எனறு கூறியபோது, அவள் சொரிநத கணணீர்ததுளிகள முததுவடங் களிலிருநது கழனறு விழும முததுககள போலே யிருநதன (கலி. 82 10-14) பிரிநது சென்ற தலைவ னைக காலத்தாற கூடப பெறாத தலைவி தனக் குரிய நாணினைக கைவிடடுத தன மனததே ஒன்றை நினைத்து நெடடுயிாதது வீழுகினற கண் ணீரைத் துடைததுப பிறரை நோககாது கவிழ்ந்து நிலததை நோககித் தனனை உற்றது வினவிய வாக்குக கனவில் வாயவெருவியவரைப போல வீடையலலாதவறறைச் செபபிப பலகாலும் நகைத தாள் (கலி. 144 1-8). 'வளியாகிய தெயவமே, என னுளளத்தில் கெடாத காமநோயைச செயது கை விட்டுப போன அனபில்லாதவனை எனக்குக காட்டுவாயாக; காட்டாயாகில என கண்ணீரைத தெளித்து அதனிடத்திலிருநது எழும அழலாலே நின் மேனியை எலலாம் சுடுவேன' எனறு பெருந திணைத தலைவி கலஙகி மொழிநதாள் (கலி. 144: 37-44). வெண்மேகமே, நீ நின இனததோடே கூடி என கண்ணீர்க் கடலின நீரை முகந்து என்னைத் துறந்து தொடி நெகிழ்ததவன் சென்ற காட்டி னைச் சூடு நீககுமாறு செறிநத துளிகளை வீசாயோ' எனறு தலைவனால பிரிவு நீட்டிககப் பட்ட தலைவி பேதுறறுப பேசினாள (கலி. 145: 18-22).

**கண்ணுடைத்தல் - சாறுபிழிதல்.** கருமபின் கோலைக் கண்ணுடைக்கும - சாறு பிழியும் - ஆலையின ஓசை திசைகளிலெல்லாம் ஒலிககும (மலை. 341,348).

**கண்ணுள் – தொழில்.** நணடின கண்போல நெருங்கப் பல கண்ணுள் - தொழில - சூழபபட்ட சில கோற் றொழில விளஙகும் இணையான தொடிகளைத் தலைவியின் மகன கைகளில அணிநதிருந்தான் (கலி. 85:6,7).

**கண்ணுள் வினைஞர் - சித்திரகாரிகள்.** அறுத்த சங் கினை வளையாகக் கடைவார் முதலாக எவ் வகைச் செயதியும் உவமங் காட்டி நுணணிதின் உணர்ந்த கூரிய அறிவினையுடைய கணணுள்வினை ஞர் - சித்திரகாரிகள் - ஏறாகவுளளாரும பிறரும்

கூடிக கம்மியரும குழுமி நிறக எழுந்த ஓசை யும் பிற ஓசைகளும கலநது துறைமுகப் பட்டினத்து ஓசை போல மதுரை அலலஙகாடியில ஒலிககும (மது.511-544).

கண்ணுளங் கடும்பு - கூத்தர் சுற்றத்தினர். ஆதனோரியது கொடையைக காணடறகு மிகவும் விருமபிச் சென்ற கணணுளங் கடும்பு - கூத்தா சுறறததினர் - அவன அளிதத பரிசிலகளைப் பெற்றுப பசியாதவராளமையால இன்னிய மொலிக்கப் பாடுதலை மறநது ஆடுதலும் மாட்டாராயினார் (புறம். 153:4-12).

கண்ணுளர் - கூத்தர். இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன குதிரை, களிறு, தோ ஆகியவற்றைத் தனக்கென்று காத்து வைக்காமல வயிரியர், கணணுளா - கூததர் -ஆகியோர்க்கு வழங்கினான் (பதி. 20:15,16). 'வழிவநத வருத்ததததைக கைவிட்டிருந்த அறிவினை யுடைய பேரணிகலன்களைப பெறும் கணணுளர சுற்றததிறகுத தலைவனே' என்று ஆற்றுப்படுத்தப் பெறும் கூத்தன் விளிக்கப் பெறுதல் (மலை. 49,50).

கண்ணுறுதல் - 1. அடித்தல். இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனது வெற்றி பொருநதிய பெரிய முரசத்தினை யணுகி அதற்கு அரிய பலிப்பொருள் தூவி வணஙகிக குறுந்தடி கொண்டு கணணுறும - அடிக்கும் - இயவா அச்சேரலாதனது வெணகுடையின் அருட் சிறப்பைச் சொல்லுவர் (பதி. 17:5-13).

2. இடித்தல். உருமேறு கண்ணுறுதலால் - இடித்தலால் - எழுந்த உயர்ந்த ஓசை பரந்து சாரலில் ஒலிக்கையினால சிறுகுடியிலுள்ளார் விரைந்து துயிலெழுவர் (கலி. 45:5-7).

3. எதிர்ப்படல். ஏறுகளும் இடையரும் தம்மில் மாறுபடுதலால ஏறுகோடல் களமாகிய தொழு இருபெரு வேந்தர் மாறுபட்டுக் கண்ணுற்ற - எதிர்ப்பட்ட - பொருகளத்தை ஒத்தது (கலி. 105:47-49).

கண்ணுறை - 1. மேலீடு. பாண்டியன் பல்யாக சாலை முதுகுடுமிப் பெருவழுதி சமிதையும் பொரியும் முதலாகிய பெரிய கண்ணுறையோடு - மேலீட்டோடு - நெய் மிக்க புகை மேனமேற் கிளரப் பல மாட்சிமைப் பட்ட வேள்விகளைச செய்து முடித்தான் (புறம். 15:18-20). உழவர் வாளைமீன துண்டத்தைப் புது நெலலரிசியின் வெண்சோற்றுக்குக் கண்ணுறையாகக் கொண்டு விலாப் புடைக்க உண்டு கதிரையுடைய நெற் சூட்டினைக் கழனியிடத்தே இடுமிடமறியாது தடுமாறுவர் (புறம். 61:4-8). கீரையுணவிற்குக் கண்ணுறையாக ஔவையார் சில அரிசி வேண்டினராக நாஞ்சிற் பொருநன் அவர்க்குத் தன் மேமபாட்டையும் சீர்தூக்கிப் பெரிய யானையைய அளிததான் (புறம். 140 1-8).

2. கணணாற் கணடு அஞ்சும் அச்சம். சுட்டியெனனும் அணியையே கணணுறை - கண்ணாற கணடு அஞசும் அசசம்-தரும் மத்திகையாக அணிநத குதிரை எனறு பரத்தை குறிககப் பெறுகிறாள் (கலி. 96.12).

கண்ணோட்டம் - அருள. கடலினது ஆழமும் உலகத்துப பரப்பும் காற்றியங்கும திசையும வடிவின்றி நிலைபெற்ற ஆகாயமும எனற அவற்றை வரையறுத்தறியினும் நின் அறிவும் அன்பும் பெருங்கண்ணோட்டமும்-அருளும்-என்ற இவற்றைப் பிறர் வரையறுத்தறிதற்கு நீ அரியை என்று யானைக்கட்சேய் மாந்தரஞ்சேரலிரும்பொறையைக் குறுங்கோழியூர் கிழார் பாராட்டுவர் (புறம். 20:1 6). 'நின் மைந்தர் எந்நாளும் பகைவர் தேய அவருடைய அணிகலன்களைக் கொணடு வந்து நும் பொன்னுடை நெடுநகரில் பொலிய வைதத நின முன்னோரைப் போலும் பெருங்கண்ணோட்டம் உடையராகுக' எனக் குறிப்புமொழியாக இலவந்திகைப் பள்ளித்துஞ்சிய நன்மாறனை வடமவண்ணக்கன் பேரி சாததனார் இகழ்ந்தார் (புறம். 198:14-17). சினம், காமம், கழி கண்ணோட்டம், அச்சம், பொய்சசொல், அன்பு மிகவுடைமை, கடுந்தெறல் ஆகிய இவையும் இவைபோனற பிறவும் இவ்வுலகததில் அறத்தைத் தெரிநது செலுததும் ஆணைச் சக்கரத்திறகுத் தடையாகும் (பதி.22:1-4). பின்முறை வதுவை அயர்தற்குத தேரில புறப்பட்ட தலைவனைக காண ஓடிய புதலவனின் செயலும் முன்னர்க களவுக் காலத்தே கழஙகாடும் ஆயத்தாரிடம் சென்று அவன் தலைவிககு அருளிய பழங்கண்ணோட்டமும் நலிய அவ்வதுவை செய்தலை அவன் நிறுத்தி விட்டான (அகம. 66:7-26).

கண்படல் - துயிலல். தலைவி தோழியிடம் யாமமும் நெடும் பொழுதுடையதாய்க கழிகின்றது; என் காமமும் என்னைக் கண் படல்-துயிலல்-கொள்ள ஒட்டாது பெருககினறது என்று மொழிந்தாள் (நற். 378:1,2). தலைவியின காதல் நோய மிகுதலைக் கண்டு தோழி கண்படாதிருந்தாள் (கலி.46:23). நுந்தை வாயின் பொய்ச்சூளை மெய்யெனறு தெளிந்து கண்ணில் நீர் பரக்க மயங்குகினற நோய் கைகடத்தலால கணபடாத நின் தாய் மார்க்குப்பட்ட சில பங்கை உணபாய் என்று கூறித் தலைவி தன் மகனுக்குப் பாலூட்டினாள் (கலி. 85:26-28). கணபடுத்தல், கண்படுதல, கண் படை காண்க.

கண்படுத்தல்-துயிலுதல். பாறையிடத்துச் சுனை நீரிலே

வாழைப் பழங்களும் பலாவின் சுளைகளும் கலந்து விளைந்த தேறலை அறியாதுண்ட ஆண் குரங்கு அததேறல் மயககத்தினால் அயலிலே நிற்கும் சநதன மரத்தில் ஏற மாட்டாமல நறுமண மலர்களை யுடைய பக்க மலையிடததே மகிழ்ந்து கண்படுக்கும் - துயிலும் - (அகம். 2:1-7). மறவர் கணை எய்ததனால் இறந்த காதற் பிணையினை எண்ணி வருந்திய இரலைமான் மேயும் உணவினை வெறுத்த துன்பத்தோடு நோய் மிக்குச் சிறிது நீரும் அருந்தாமல் துயருற்றுத் தன்னை மறந்து பாலை நிலத்தில் கண்படுக்கும் (அகம். 371:2-9). வாழைக் குருத்தினை நீவியதனால் தலையில் அதன் சாறு பட்டு மதனழிந்து மயங்கு துயருற்ற வேழம் தன் முதுகினைப் பிடியானை வருடப பக்க மலையில் அரிதாகக் கண்படுக்கும் (குறு. 308:1-5). சேரலனது பாசறைக்கண் ஒரு கோட்டதாகிய களிறு மதங் கொண்டதனால் நெஞ்சு நடுக்குற்றுத் துஞ்சா திருநத மறவரெல்லாம் பின்னர் அது சினந் தணியவே அலையோய்ந்த கடல் போல இனிது கண்படுத்தனர் (நற். 18:5-9). எரி கவர்ந்துண்ட வெயில்மிக்க நீண்ட பாலை வழியில் தான் சிறிது கண்படுப்பினும் மாயோளாகிய தலைவியைக் கனவிற் காண்பதாகத் தலைவன் கூறினான் (ஐங். 324). கண்படல், கண்படுதல், கண்படை காண்க.

**கண்படுதல் - துயிலல்.** நிழலில்லாத ஓமை மரங்களை யுடைய நீரில்லாத நீள் வழியைக் கடந்து சென்றன ராயினும் காதலர் அங்கே தலைவியை மறந்து கண் படுதல் - துயிலல் - இயலாதென்று தோழி கூறினாள் (அகம்.223:8-10). துயிலிடை நினைந்து வருந்தத்தக்க கனவினால் ஏற்படும் அரிய வருத்தத்தால் உற்ற கேட்டினைத் தூக்கிப் பார்ககில் அது மலையினும் பெரிதாய் இருககுமாதலின், தலைவியின துயிலா மையை மாறறி அவள் பூங்கண்படுதலையும் யான் அஞ்சுவேன் என்று தோழி தலைவியது ஆற்றா மையைக் கூறித் தலைவனை வரைவு கடாயினாள் (கலி. 48:21-24). கண்படல், கண்படுத்தல், கண்படை காண்க.

**கண்படு பாயல் - துயிலுமிடம்.** யானை கண்படு பாயலில் - துயிலுமிடத்தில் - காலைப் பொழுதிலே கையை யொடுக்கிக் கொண்டு செயலின்றி அசைந்து கொண்டிருக்கும் (அகம். 187:18-20).

**கண்படை - உறக்கம்.** மருதநிலத்து ஊர்களை ஆட்சி செய்யும் அரசர்க்குக் கண்படை - உறக்கம் - வாரா மைக்கு ஏதுவாகிய அச்சத்தைத் தரும் வேலையுடை யவன ஊர் வன்புலத்தில் உள்ளது (புறம். 322:6-10). பாசறையில் தலைவன் பகைவர் மனமறியாமல் மிக்குச் செல்கின்ற போரை நச்சுதலாலே கண் படை பெறாதிருந்தான் (முல்லை. 67). 'யான் என மகளைப பிரிநது வெயதுயிாத்து உளமெலிந்து வேவதுபோலும் வெவ்விய நெஞசமொடு கண் படை பெறாதிருநதேன்' என மகடபோககிய தாய் கூறினாள் (அகம. 55.6-9). பாசறையிடத்தே வேந்த னும் பகைவரொடு மாறுபட்டு அவரை வெல்லுத லால் எய்தும் புகழினை விரும்பிக கண்படையில னாய் இருந்தனன் (அகம. 214:5-7). உழவன் பின்னிர வில் கண்படை பெறாதிருந்து வைகறைப் பொழு திலே வரால்மீன் ஆணத்தொடு மிகக சோற்றுத திரளை மயக்கமேற உண்டு வயலில் நாற்று நடுதற்கு உழத்தியரொடு செல்வான் (நற். 60: 3-8). தலை வனது தேரையும் காண முடியாதாயிற்று; அன்னை யின் இற்செறித்தலுக்கு நாணமுற்று யானும் நள்ளிரவிலும் கண்படை பெற்றிலேன என்று தலைவியின் நிலையில் தோழி சிறைப்புறத் தலை வனுக்குச் செறிப்பறிவுறுததினாள (நற். 178: 6-8). நிலவு பலகதிா பரப்புகின்றது; ஊர் விழா அயர் கின்றது; கானம் பூம்பொழில்தோறும துணை யொடு வண்டொலி செயயும; இவவிரவில் யான அணிகலன் நெகிழத்த அவலததோடு கண்படை பெற்றிலேன் என்று தலைவி ஆற்றாது கூறினாள (நற். 348: 1-8). கணபடல, கணபடுத்தல, கண் படுதல் காண்க.

**கண்பனி - கண்ணீர்.** பலயானைச செலகெழுகுட்டு வனின் மறவர் சீறிப் படையெடுத்த நாடு தன பழைய வளமெல்லாம் பாழ்பட்டு மழையுமின்றி வறனுற அநநாட்டு மக்கள் கண்பனி - கண் ணீர் - ததும்பக் கைபுடைத்துத் துன்புற்றனர் (பதி. 26:6-9). தலைவர் பிரிந்திருக்குங காலத்தில் குயில்களின இனபககுரலைக் கேட்போர்க்குத் தம் கண்பனியை அடக்குதல் எளிதோ என்று தலைவி தோழியின் வற்புறுத்தலுக்கு எதிாமொழிந்தாள (அகம். 97:16-23). மாயப பரத்தனாகிய தலைவனின வாய்மொழிகளை நம்பிக் காற்றலைத்தலாலே அசையும் துளியைப பொழியும் மலர் போன்று தன கண்பனி ஆகத்தை நனைக்கக் கண்கள் பசந்து தலைவி அழகிழந்தாள் (அகம். 146:9-11). பிரிவால் கயல்மீன் உமிழும் நீர்போல் கண்பனி ஒழுகத் தோள் நெகிழ்ந்து தலைவி வருந்தினாள் (அகம். 169:12-14). 'துன்பத்துடன கண்பனி கலுழ்ந்து யாம் இங்கே தனித்திருக்கத் தலைவர் வேஙகட மலையைப் பொருந்திய வெம்முனை அருஞ்சுரத்தினைக் கடநது சென்றாா என்று தலைவி பிரிவிடை யாற்றாது தோழியிடம் கூறி னாள் (அகம். 265:10,11,21,22). தனிமைத் துன்

பத்தோடு நாட்களை யெண்ணிச் கோடிட்ட சுவ ரினை நோக்கிய பிரிவை நினைந்து நூலற்று உதி ரும் முத்துக்களைப் போல் கண்பனி மார்பில் வீழத் தலைவி வருந்தினாள் (அகம்.289:9-11). தலைவர் தலைவியைப் பிரிந்து தாம் மட்டுமே செல்வாரா யின் அவளின் இமைகளைக் கடந்து ஊறும் கண் பனி பூணணிந்த வனமுலையை நனைத்தலை அவர் காணாரோ என்று தோழி பிரிவுக் குறிப்பறிந்து வேறுபட்ட தலைவியை வற்புறுத்தினாள் (குறு. 348). ஊரனின் புறத்தொழுக்கத்தால் மழையிறபட்ட மலரினின்று நீர்த்துளிகள் விழுமாறு தலைவி கண் ணிலிருந்து கண்பனி விழுந்தது (ஐங். 19.5). அய லார் அலர் தூற்றுகையினால் நலனிழந்த இவள் கண்கள் கயலுமிழும் நீரைப் போலக் கண்பனி யைச் சிந்தாமலிருப்பின் நீ களவிற் கூடிப் பிரிந்த தனால் நேர்ந்த முன்கையில் வளை நெகிழ்ச்சியை யும் தாங்கவியலும் என்று தோழி தலைவியின்ஆற் றாமையைத் தலைவனிடம் கூறினாள் (கலி. 53:8-11).

**கண்பாயல்** - கண்ணுறக்கம். என் கண்பாயலை — கண் ணுறக்கத்தை - கைக்கொண்டு என்னை நினையாத காதலையுடையவன் தந்த இடையறாத நோயினால் உண்டாகும் குளிரை வேதுகொள்வது போல் இக் கடும்பகல் இருக்கின்றது எனத் தலைவி பிரிவில் கலங்கி மொழிந்தாள் (கலி. 145:23-26).

**கண்பாவை** - கண்மணி. தலைவனின் பிரிவுக்குறிப் பறிந்த தலைவி 'யான் நொந்து நொந்து ஓவியர் எழுதத் தகுந்த அழகிய மையுண்ட கண்பாவை - கண்மணி - மறையும்படி ஊறும் கண்ணீர் வெள் ளத்தில் நீந்தும் நாள் வந்தது போலும்' என்று தோழியிடம் உரைத்தாள் (நற். 177:8-10).

**கண்பு** - சண்பங்கோரை. முயல் பழனத்தில் வளரும் கண்பின் - சண்பங்கோரையின் — கதிர் போன்ற தூய மயிரடர்ந்த குறுந்தாள்களையுடையது (புறம். 334:1,2). கருங்கை வினைஞர்தம் காதலஞ்சிறுவர் கண்பினது புல்லிய காயில் தோன்றின தாதை மார்பிலே அப்பிக் கொள்வர் (பெரு. 220-223). பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் பகைவரின் நாடுகளை அழித்த மையால் செங்கழுநீர் பொலிந்த பொய்கைக ளிடத்தே களிறு மறையும் செருந்தியொடு கண்பு நெருங்கி வளர்ந்தன (மது. 152,171,172). வலையர் கண்பு நெருங்கின மருத நிலம் கமழ வளைத்து ஆராய்ந்து வாளைமீனைக் கொணர்வர் (மலை. 454,455).

**கண்மாறல்** - நீங்கல். பாண்டியன் கூடகாரத்துத் துஞ் சிய மாறன்வழுதி படையெடுத்துச் செல்லும் நாடு களில் முழவு முதலாகிய ஒலிபொருந்திய தெய்வங் கள் தாமுறையும் தூணத்தைக் கைவிடுமளவு பலி கண்மாறியதால் - நீங்கியதால் - அம்பலங்கள் பாழ் பட்டன (புறம். 52:12,13). மழை வந்து மலையைச் சூழ்க என்று முதலில் பலிதூவி அம்மழை மிகப் பெய்தலால் அப்பெயல் நின்று முகில் மேலே போவ தாக எனப் பின்னர்த் தெய்வத்தைப் போற்றிய குறமாக்கள் மழை கண்மாறியது கண்டு உவகை எய்தினர் (புறம். 143:1-4). கடந்த காலம் பெய் தேனென மழை கண்மாறினால் எல்லாவுயிர்க்கும் உயிர்வாழ்க்கை இல்லை (புறம். 203:1-3). 'உயிர் களைக் காக்கும் நினது உயர்ச்சியைப் பாராது அன்பு கண்மாறிய பார்வையுடனே நும்போல் வார் அருள் மாறுவாராயின் எம்போல்வார் இவ் வுலகத்துப் பிறவா தொழிவாராக' என்று பெருங் குன்றூர் கிழார் சேரமான் குடக்கோச் சேரல் இரும்பொறை பரிசில் நீட்டித்தபோது கூறினார் (புறம். 210:1-4). 'யான் கிணைகொட்டிச் சிறுகுடி கிழான் பண்ணனின் உழவுத் துணைகளான பகடு, ஏற்றம், மேழி ஆகியவற்றை நாள்தோறும் பாடே னாயின், என் பெருங்கிளையைக் காத்து வரும் பாண்டியன் அக் காப்பிற்கு வேண்டிய அருளைக் கண்மாறுவானாக' என்று மதுரை அளக்கர் ஞாழார் மகனார் மள்ளனார் குறித்துள்ளார் (புறம். 388:10-16). பல்யானைச் செல்கெழு குட்டுவனின் செழுநகரில் விருந்தினர் கண்மாறாமல் உண் ணும் பொருட்டு நிணத்தொடுங் கூடிய இறைச்சி யைச் சமைப்பர் (பதி. 21:9-11). 'தலைவர் தாம் வருவதற்குக் குறித்த நாளும் பொய்த் தன; என் கண்களினின்று நீரும் நில்லாமல் ஒழுகு கின்றது; அவர் என் அழகிழந்த கூந்தலையும் நினையார்; இவ்வாறெல்லாம் அருளினின்று கண் மாறல் செய்யினும் அவர் தமக்குரிய அறத்தினின் றும் பிழைத்தற்கும் அஞ்சாராயினரே' என்று தலைவி வருந்துவாளெனத் தலைவன் தானே கருதிக் கூறினான் (அகம். 144:1-7). மழை கண் மாறிய வெப்பமிக்க காட்டு நெறியிற் சென்ற தலைவனைத் தனியே விடுத்து அவனது நெஞ்சம் அவனை வருந்தும்படி செய்தது (அகம். 337:18,19). 'எனது நலம் தண்ணந் துறைவனொடு கண் மாறியது; அங்ஙனமாகவும் யான் இன்னும் உயிரு டன் இருக்கின்றேன்' என்று தலைவி தோழியிடம் நொந்துரைத்தாள் (குறு. 125). மழையினையுடைய நள்ளிரவிலே அல்லகுறிப்பட்டு யான் கண்மாறி யதனால் குறியிடத்து என்னைக் கூடப் பெறாத தலைவர் என் பழியை உன்னிடத்துக் கூறுகின்றாரே எனத் தலைவி தோழியிடத்துச் சொல்லி வருந்தி

னாள் (கலி. 46:18,19). 'பலரும் சிரித்து இகழப்படும் மடன்மாவினை யான் ஏறும்படி நறிய நுதலினை யுடைய தலைவி அருளாளாய்க் கண்மாறி விடின், அவளோடு என்னிடை நிகழ்ந்த களவு ஊரிடத்தே வெளிப்பட்டு அலராகுமே' என்ற குறிப்போடு தலைவன் போனான் எனத் தோழி தலைவியிடத் துக் கூறிக் குறை நயப்பித்தாள் (கலி. 61:22-24).

**கண்மாறாடவர்** – விழித்தகண் இமைக்குமளவிலே மறைகின்ற கள்வர். மதுரை ஊர்காப்பாளர் இரவினில் கண்மாறாடவரின் - விழித்தகண் இமைக்குமளவிலே மறைகின்ற கள்வரின் - ஒடுங்கிடங்களை ஒற்றாடித் துஞ்சாக் கண்ணராய்க் காவல் புரிவர் (மது. 642-647).

**கண்விடுதூம்பு** - கண்திறக்கப்பட்ட தூம்பு (பெரு வங்கியம்). 'வல்வில்லோரியை யான் பாடுவேன்; நீவிரும் கண் விடுதூம்பாகிய களிற்றினது கைபோலும் வடிவை யுடைய பெருவங்கியத்தை இசைமின்' என்று வன் பரணர் விறலியரிடத்துக் கூறினார் (புறம். 152: 12–15).

**கண்விழித்தல்** – மலர்தல். பொய்கையில் குவிந்திருந்த (தாமரை) போதுகள் கண் விழித்தன – மலர்ந்தன - (புறம். 397:3).

**கணக்காயன் தத்தனார்** - புலவர். தத்தன் என்ற இயற் பெயரையுடைய இவர், தமிழ் அரிச்சுவடியாகிய கணக்கினை மாணவர் கூட்டத்திற்குக் கற்பிக்கும் கணக்காயராய் இருந்தமையின் கணக்காயன் தத்த னார் என்று குறிக்கப் பெற்றார். குறுந்தொகை 304–ஆம் பாடல் இவருடையது. கொடுந்திமிற் பரதவர் எறியுளி வீசிக் கோட்டு மீனை வேட்டை யாடுதல் இவர் பாடலில் சிறப்பாகப் புனைவு பெறுகின்றது. தலைவனொடு தான் கொண்ட நட் பினைப் பகைதரு நட்பு என்று தலைவி கூறுவதாக இவர் குறித்தது நயமுடைத்து.

**கணக்கு** – கணிதம். நாழிகைக் கணக்கர் இரவில் வானோக்கிக் காலக் கணக்கை - கணிதத்தை - ஆராய்வர் (குறு. 261:6,7).

**கணந்துள்** - பறவை வகை. மலையுடைக் கானத்து வழி யின் அயலிலிருந்த அழகிய சிறகுகளையும் நெடிய கால்களையும் உடைய பெருந்தொகுதியாகிய கணந் துட் பறவைகள் ஊறுவிளைக்கும் ஆறலை கள் வரின் வரவினை யறிவித்து ஆறுசெல் வம்பலரை இடத்தினின்று நீங்கி ஓடியச் செய்யும் (குறு. 350: 4-7). அருஞ்சுர நெறியில் வேட்டுவன் அமைத்த வலையைக் கண்டு வெருவிய நெடுங்காலையுடைய கணந்துட் பறவை தனித்து எழுப்பும் தெளிந்த ஓசை அச்சுரத்தின்கண் செல்லும் கூத்தர்தம் வழி வருத்தம் நீங்க இசைக்கும் யாழோசையோடு சேர்ந்து ஒலிக்கும் (நற். 212:1–4).

**கணம்**- 1. கூட்டம். 'போர்க்களத்தில் பனையின் துண்டம் போல வேறுவேறு கிடக்குமாறு களிற்றுக் கணத்தை -கூட்டத்தை - படைவீரர் வெட்டிச் சாய்ப்பர் (புறம். 35:22-25). களிற்றுக்கணம் போரிட்ட பாச றையில் விசும்பிற் பறக்கும் எருவையைப் பசிய ஊன் துண்டங்கள் தடுப்ப, மாற்றார் தேயத்தில் தங்கியிருப்பான் பாண்டியன் பல்யாக சாலை முது குடுமிப் பெருவழுதி (புறம். 64:3-6). மலைச் சார லிடத்தே மறப்புலி சீறி யெழுந்தால், அதனை மான்கணம் எதிர்த்து நிற்க முடியாது (புறம். 90:3). முகிற்கணம் சென்று தங்கும் உயர்ந்த மலைக்குத் தலைவன் ஆய் அண்டிரன் (புறம். 131:1,2). மான் கணந் தொலைத்த குருதி தோய்ந்த அழகிய வீரக் கழலணிந்த காலினை யுடையவன் நள்ளி (புறம். 150:5). ஞாயிற்றை அவுணர்கணம் கொண்டுபோய் மறைக்கவே இருள் மூடிய உலகத்தின் துன்பந்தீர அஞ்சன வுருவன் (கண்ணன்) அதனை மீட்டுக் கொணர்ந்து ஆகாயத்தே நிறுத்தினான் (புறம். 174: 1-5). சிறியனவும் பெரியனவுமாகிய புழைகளைப் போக்கற விலக்கிய மான்கணத்தைத் தொலைத்த கடுவிசைக் கதநாய்களை உடையவன் கடிய நெடு வேட்டுவன் (புறம். 205:7-9). புலிக்கணம் போன்றது தறுகண்மை யுடைய வீரர் சுற்றம் (புறம். 341:7). அணங்கு உருத்து வந்தாற் போன்று கணங் கொண்ட தானை போருக்கெழுந்தது (புறம். 362:6). போர்க்களத்தில் பேய் மகளிர் மொய்த்துச் சூழும் பிணக்குவியலைக் கண நரிகளோடு கழுதுகள் ஈர்த்துண்ணும் (புறம். 369:15,16). போர்க்களத்தில் பேயோடு கணநரிகள் ஊனுண்டு திரியும் (புறம். 373:36,37). அதியமான் நெடுமானஞ்சியின் மலைத் கணத்தன்ன மாடங்கள் எதிரொலிக்குமாறு பொரு நன் தடாரிப்பறையை அறைந்து பாடினான் (புறம். 390:7-9). நீர் நிறைந்து விளங்கும் இடி, மின்னல் முதலியவற்றின் தொகுதியினையுடைய கணமுகில் மழை பொழியக் கடிய காற்று சுழன்று வீசும் பெரும்பரப்பினையுடையது விசும்பு (பதி. 17:11-13). பகைவரைத் தேய்த்து மணிகளை மாறி மாறி ஒலிக் கும் மதம் மிக்க யானைக் கணநிரை அலறுமாறு பகைவர் நாடுகளை வென்றவன் இமையவரம்பன நெடுஞ்சேரலாதன் (பதி. 20:11-13). வேலமரத் தின் உலர்ந்த கிளைகளில் சிலந்திகள் பின்னிய வலைகளைக் கண்டு புறவின் கணநிரை அஞ்சியல றும் (பதி. 39:9-13). இடியோசையால் மான்கணம் நடுங்கும்படி பெரிய மலையிடத்து மழை பொழியும்

(பதி. 50:1,2). களிற்றியானைகள் பெரிய மலைக ளைப போலக கணஙகொணடு நினறன (பதி. 80: 1,2). திருபபரங் குனறில அழகிய சிறகுகளையுடைய வணடினகணம இராககாலததே வயலில் வாய் அவிழநத தாமரைப பூககளில துயில் கொண்டு வைகறையில தேன கமழும நெய்தற் பூக்களை ஊதி ஞாயிறு தோனறின காலததே சுனைப் பூககளில் சென்று ஒலிககும் (முரு. 72-77). நல்லியக்கோடன தன்னை நாடி இரபபோாககுப் பிடிக்கணம் வழங் கும் கையினை யுடையவன (சிறு. 124-126). கிணை மகளது அட்டில கணசசிதல் தின்ற காழ் சோர்நத பழைய சுவரை யுடையது (சிறு. 132,133). முல்லை சானறு கார்காலததில கரிய அரும்பினை யுடைய காயா கலாமயிலின் கழுத்துப் போலப் பூத்தன (சிறு. 165,169). சீறூர் முனறிலில் பிடிக்கணத்தன்ன குதிர்கள நிறகும (பெரு. 186,191). மருத நிலத்துக் களஙகளில உளள சிலநதியின் நூல பின்னப்பட்ட நெறகதிர்ப் போர்கள் கணஙகொள் சுற்றமொடு கைகோததுத துணஙகைக கூத்தாடும் பூதங்கள் துகிலுடுததவை போலிருக்கும் (பெரு. 233-237). மலைபபகககததே யாளி தாககுதலினால கணஞ்சால வேழஙகள கலஙகிப் பிளிறின (பெரு. 257-259). பாச றையிற பிரிநதிருக்கும் தலைவனாகிய அரசனின் பகைவர் எறிந்த வேலினால புண்பட்ட களிறுகள் பிடிக்கணத்தை மறந்தன (முல்லை. 68,69). மாயோன கணங்கொள் அவுணரைக் கடந்தவன (மது. 590,591). போரில் பகைவரின உயர்ந்த யானைக் கணநிரை யைக் கவர்ந்த பெருஞ்செய் ஆடவராகிய மண்ட லங்களை ஆள்வோரைப பரிசுபெற அழைமின் என்று பாணடியன் நெடுஞ்செழியன ஆணையிட் டான் (மது. 744-746). மான்கணம மரத்தடிகளிலே அசையிடவும் ஆன்கணம் கன்றுகளை யழைக்கும் குரலையுடையவாய மன்றுகளில் புகவும் மாலைப் போது வந்தது (குறி. 216-218). விறலியர் கணங் கொள் மயிலகளைப் போலக் கூந்தலைத் தாழ்த் துக் கூத்தர் தலைவனைச் சூழ்நதனர் (மலை. 44-46). தெய்வமுடைய நீணட மலையுசசியினின்று விழு கினற கணங்கொள் அருவிகளையுடைய காடுகள் பொருந்திய மலைநாடன தலைவன (அகம. 22.1,2). பக்கமலையிடத்தே மூஙகிலகளை ஒலியுணடாகத் தாககிச சூறாவளி ஏறபடுததிய மிக்க தீ பரததலால் அம மூஙகிலகளின கணுககள் வெடித்து எழுப பும ஒலி கலைககலை மானகளைத் துரத்தும் (அகம. 47:4-7). காட்டு வழியில் இளைய மரைமான் கண நிரை இனிய புளிப்பினையுடைய நெல்லிக் காய்க ளைத் தின்னும் (அகம.69:7-9). கணக்கலை மான்கள் தாழ ஒலிககும கடுங்குரல் பெருவங்கியத்தின் ஒலி போலுதல (அகம். 82.5). கணக்கலை மான்கள் தாழ ஒலிக்கும் மலைச் சாரலில் தலைவியைத் தலைவன களவிற கூடினான் (அகம். 112:14,15). புலிக் கணத் தன்ன நாய்கள் தொடர்ந்து வருவதற்குக் காரண மான வேட்டையாடுதலை விடுததுத் தநதை இலலி டத்தேயிருக்கும் இரவுக காலஙகளில் தலைவி படப் பைக்கண் தனியே சென்று வருதற்கு அஞசுவள் என்று தோழி கூறினாள் (அகம. 158:15-18). பாலை நிலததில புலிகொன்று தின்று விட்டுப்போன களிற் றில ஊனில் மறவர் தம் கோலில் கோத்தெடுத்தது போக எஞ்சியதனை அவ்வழியே போகும் கணஞ சால் உமணர் எடுத்துச் சோற்றுலையில கூட்டியாக் குவர் (அகம். 169:3-8). காட்டில் கணங்கொள் வண் டின் தொகுதி மணங்கமழும் முல்லை மலரில் மாலைக் காலததே ஆர்த்தது (அகம். 204.5-7). மலையில் வேங்கை நறுமலா உதிரப் பெருங்கிளையில் ஏறிக் குரங்கின் கணக்கலைகள் தம மந்திகளைக் கூப்பிட் டுத் தாவும் (அகம். 205:20-22). காட்டில துளளு நடையுடைய மரைக்கணம் அஞ்சியோடுமாறு தலை வன் தேராழி மணலைப் போழ்ந்து ஒலியெழுப்பி வரும் (அகம். 224:10-14). புன்னைப் பூக்கள் பரந்த மணற்பரப்பில் தலைவி கணங்கொள் ஆயத்துடன் சிறறிலிழைத்து விளையாடினாள் (அகம. 250:2-5). கணஞசால் கோவலரது நெடிய கூப்பீட்டொலியை அறிந்து ஏறுகள் பசுவினங்களைத் தம்மோடு கூட் டிக் கொண்டு ஒருங்கு சேரும் (அகம். 253:12,13). கணஞ்சால் உமணர் கற்கள் பொருந்திய நெறி களையுடைய காட்டினைக் கடந்து போகையில் உப்புப் பொதிகளைச் சுமந்தேகும தம் எருதுகள் இளைப்பாறுதற்குத் தங்குவர் (அகம். 295:8-10). பாலை நிலத்தில வற்றல் மரத்தைப பொருந்திய சிள்வீடு எனும் வண்டுகள் பலவும் ஒருஙகு சேர்நது உமணரின கணநிரை (எருதின கூட்டம்) மணியொலி போல ஒலிக்கும் (அகம். 303:16-18). பாறைகள் உமணர்தம் கணநிரை யாகிய கழுதைகளைப் போலுதல் (அகம. 337:6). வழிப்போகும் வம்பலர் அணிகலன் ஏதுமில ராயினும் அவரை ஆறலை கள்வர் தமது அமபுவிடு தொழிற் சிறபபைக் காணும்பொருட்டுக் கொனறு வீழ்த்திப் பறவைக ளுக்கு உணவாக விட்டுப் போக, அவர் நிணத்தைக் கணநரிகள இனததொடு கூடி அருந்தும் (அகம. 375:3-6). உபபு விற்று வநத தலைவியிடதது நெஞசைப் பறிகொடுத்த தலைவன் உப்புவிற்கச் சேட்புலஞ் செல்லும் உமணர் போகும் நெடுநெறி களில் கூடிச செலலும் கணநிரை வாழக்கையே சிறநதது போலும் எனக் கூறினான (அகம். 390:1-4,17). கல்லெனக கணமழை பொழிந்த

கானமெல்லாம் அடங்கிய இரவில் தினையினை மேயும் யானையின் இனம் நிலைகெட்டு ஓடச் சேணோன் கவண்கல் எறிவான் (அகம். 392:11-15). பாறைகள் பிளவுபடுமாறு கனமழை பெய்யா தொழிந்த காட்டுப்பரப்பு தலைவி நடத்தற்கு எளிய வாகும்படி அவளை உடன் கொண்டு போனானே என மகட்போக்கிய செவிலி வருந்திக் கூறினாள் (அகம். 397:4-9). 'செங்காந்தளினது பூங்கொத்துப் போன்ற சிவந்த கொண்டையினை யுடைய கணங் கொண்ட சேவலே, தலைவனொடு யான் பள்ளி யிடத்தே துயின்ற ஏம இன்துயிலை எடுப்பித்த நீ, காட்டுப் பூனைக்கு இரையாகிக் கடுநவை யுறு வாயாக' என்று தலைவி வெகுண்டுரைத்தாள் (குறு. 107). கடற்கரையிடத்தே பனையின் உச்சியிலுள்ள கருக்குடை நெடுமடல் குருத்தோடு மறையும்படி கடுங்காற்று நீண்ட வெணமணற் குப்பையாகிய கணங்கொள் சிகரங்களைத் தொகுக்கும் (குறு. 372:1-3). உமணர் உப்பு விற்றவாறு கணநிரை களை உரப்பி நெடிய நெறியிற் செலுத்தும் வண் டிச் சக்கரம் மணலிற் போழ்ந்து செல்லும் ஓசை கேட்டு அருகிலுள்ள கழனிகளில் இருக்கும் குருகு கள் வெருவும் (நற். 4:7-11). பாக்கத்தில் பரதவர் இறாமீனின் கணங்கொள் குவியலைக் காயவிடும் வகையினை யெண்ணிப் புன்னை நிழலுக்கு முன் னுள்ள வெயிலில் பரப்புவர் (நற். 101:2-5). வேட் டுவச் சிறுவர் மரங்கள் மேலேறி மான்கணங்களை அகப்படுத்தும் பொருட்டு வேட்டைக்கு விரும்பி யெழுவர் (நற். 111:4,5). உவர்நிலத்து விளைகின்ற உப்புக்குவியலை மலை நிலத்தே கொண்டு சென்று விற்கும் நிலையா வாழ்க்கையுடைய கணங்கொள் உமணர் தம் வண்டியை முறிந்தவிடத்தே விட்டுச் செல்ல, அதன் பழைய பாரினிடத்தே வெண்குருகு முட்டையிடும் (நற். 138:1-4). மேகம் கணங்கொள் இன்னிசை முரசுகளைப் போல முழங்கித் தலைவ னது மலைநாட்டின்கண்ணே தவழும் (நற். 197: 9-12). குளத்தின்கண் இருக்கும் கணக்கொக்கு களைப் போல் கூட்டமான கூம்பிய ஆம்பல் முகை கள் தோனறின (நற். 230:2,3). பொய்கையில் கயல் மீன்கணம் கலித்தெழும் (நற். 230:5). தலைவியிடம் அன்பின்றிப் பண்பில்லாத முறையில் பொய்யாக இடிகதும் மேகத்தின் அதிர்குரலை மெய்யாக நினைத்து மயிலினத்தின் மடக்கணம் ஆடியது (நற். 248:6-8). தலைவன் மலரின் கணம் மணம் வீசும் பெரிய மாலை புரளும் மார்பினன் (நற். 254:7,8). கொடுமுடிகள் உயர்ந்த நெடிய மலையிடத்து நுண்ணிய பஞ்சுபோலக் கணங்கொளக் காற்றால் அலைக்கப் பெறும் மேகங்கள் தவழும் (நற். 353: 2,3). 'பிரியேன்' என்று சூளுரைத்துப் பொய்த்த தலைவனை, நீ சிறிதும் வருத்தாதே என்று கணங்கெழு கடவுளை வாழத்தி அதற்கு உயர்ந்த பலிகளையிட்டுப் பரவி வருவோம் வா' என்று தோழி தலைவியை அழைத்தாள் (நற் 358: 4-7). பொன் போன்ற பூக்களை யுடைய வேங்கைக் கிளையிலிருநது அளாவிக் கமழ்தாது அளைந்த அழகிய தோகைமயில் கறபாறையின மேல கணத தோடு கூடி ஞாயிற்றின் இளவெயிலைத் துய்க்கும (நற். 396:3-7). கணஙகொள் அருவிக் கான்கெழு நாடனென்று தலைவனைத் தலைவி குறிககினறாள (ஐங். 183.1). பிரிந்து சென்ற தலைவரை நோக்கி, 'ஐயனே, காதலியைப் பிரிதல் கொடிதாகலின் பிரிந்து செலலாதீர்' எனக் கூறித தடுககாத குனறு கெழு கானத்தினகண வாழும பண்பிலலாத விலங கின் கணங்கள் சற்றும் அறனிலலாதன எனறு தலைவி கூறினாள் (ஐங. 332). எயிறறி தன தமை யன்மார் கணமாக்களை வேட்டையாடித தநத நிணமுடைய இறைச்சிகளை உலர்ததி அவற்றைக கவரவரும் பறவைகளை ஓட்டினாள (ஐங. 365:1-3). கடுவன் களவொழுககமொழிநது வரைநது கொள ளும் நிலைமையைக் கறறுத தன் காதல மந்தியி னது கணமலி சுற்றததிடத்தே சென்று மகட்பேசு வார் போல அம்மநதியைத் தனககுத் தரவேணடு மென்று தன் குறையைச் சொல்லும் தலைமையினை யுடையது தலைவனின் மலை (கலி. 40:15-18). மக ளிர் பூக்கொய்ய வளைத்த பூங்கொமபிலிருநது எழுந்த வண்டினங்கள் கணங்கொண்டு மொயதத போது அவருள் ஒருத்தி அவற்றைக கையால் கடிய மாட்டாளாய்த் தான் அணிந்திருநத மணங்கமழ மாலையை அறுத்து அது கொணடு ஓட்டி அதற்கும போகாமை கணடு ஓடத்திறகுள புகுவாள (கலி. 92: 45-47). திருப்பரஙகுனறததிறகு முருகவேளை வணங்கச சென்றோருள சிலா, அஙகுளள கருமுக முசுக்கணத்திற்குக் கருமபையளிததனா (பரி. 19:39). 'திருமாலே, ஆயிரம் திருமுடிகளை விரிதத கணங் கொள் சுற்றத்து அண்ணலை (ஆதிசேடனை) வணங்கி, எம் சுற்றத்தோடு யாமெல்லோரும் நின திருவடி நிழலைப் பிரியாதிருபபோமாக என்று நின நலலடி களை யேத்தி நினனைப பரவுகினறோம; அருளக' என்று புலவர் வேண்டுகிறார் (பரி. தி. 1 79-82).

2. திரட்சி. கணங்குழை - திரட்சியுடைய காதணி - அணிநத பரததையருடைய புணாசசியாற்குலைந்து வீழ்ந்த கூநதலணையில தலைவளா துயினறதனால அவன மார்பு தெய்வம் போல மணநதது (கலி. 71: 19,20). ஆயர் ஏறு தழுவுதறகாக ஏறுகளை ஆரா யந்து வசசிரத்தோனின (இநதிரனின) ஆயிரங் கண

களை யொக்கும் கணங்கொள் பல்பொறிகளையும் கடுஞ்சினத்தையுமுடைய ஏற்றையும் பிறவற்றையும் சுழன்று திரியும்படி தொழுவிடத்தே புகுத்தினர் (கலி. 105:15-22). ஏறு தழுவுகையில் அவ்வேறு கொம்பு களால் குத்தி மேனோக்குதலால் சிந்திய குருதியால் நனைந்து அசையும் கணமணிகள், நறவம்பூவினது மலர்பதம் நோக்கிச் சூழ்ந்து திரியும் தும்பிகளைப் போலும் (கலி. 105.39-42). தலைவனது துறையி டத்துக் கணங்கொள் இடுமணலால் மூடப்பட்டுக் காவி வருந்த அலைகள் வந்து அம்மணலைக் கரைத்து அக்காவிக்கு அருள் செய்யும் (கலி. 131: 37-40).

3. மிகுதி. கடற்கரையில் முழங்குகினற அலை கொழித்த பெரிய எக்கர் மணலைத் துகிலின் நுடக் கம் போலாகக் கணங்கொள-மிகுதிபட-காற்றுத் தூற்றும் (நற். 15:1-3).

**கணவ** - கொழுந (கணவன் என்னும் சொல்லின் அண்மை விளி). செயிர்தீர் கற்பிற் சேயிழை கணவ (புறம். 3:6). ஆயிழை கணவ (புறம். 34:7). ஒடுங்கீ ரோதிக் கொடுங்குழை கணவ (பதி. 14:15). திருந் திய இயன்மொழித் திருந்திழை கணவ (பதி. 24:11). வாணுதல் கணவ (பதி. 38:10). நன்னுதல் கணவ (பதி. 42:7). ஆன்றோள் கணவ (பதி. 55:1). காமர் கடவுளும் ஆளும் கற்பின், சேணாறு நறுநுதற் சேயிழை கணவ (பதி. 65: 9,10). கற்பு இறை கொண்ட கமழும் சுடர்நுதல், புரையோள் கணவ (பதி. 70: 15,16). சேணாறு நல்லிசைச் சேயிழை கணவ (பதி. 88:36). ஆறிய கற்பின் தேறிய நல் லிசை, வண்டார் கூந்தல ஒண்டொடி கணவ (பதி. 90: 49,50). மங்கையர் கணவ (முரு. 294). திருவின் கணவ (பரி. 3:90).

**கணவர்** - கொழுநர். வளமனை மகளிர் தம்கணவர்-கொழுநர் - உவப்பப பிளளைகளைப் பெறுதல் (மது. 600,603). முகைப்பருவதது மகளிர் பூவை நாடி வநதடையும் வண்டைப் போலத் தம் காதற் கணவர் தம்மை வநது எதிர்ப்பட்டு இன்புறும்படி பாட்டியரைத் தப்பித் தடை கடந்து வையைக்குப் புனலாடச் சென்றனர் (பரி. 10:35-40).

**கணவன்** - கொழுநன். தழைத்த கரிய கூந்தலை யுடைய ஆயிழைக்குக் கணவன - கொழுநன் - ஆகிய நாஞ்சில் வள்ளுவன் பரிசிலர்க்குக் கிளிகள் பொருந்திய புனத்தில் மரப்பொதும்பில் வைத்த பெரிய கதிரை யொப்பான் என்று பாராட்டுவர் மருதனிள நாகனார் (புறம். 138:8-10). எமக்கு எம் முடைய பெருந்தோட் கணவன் மாய்ந்தானாகத் தாமரை மிக்க பெரும் பொய்கையும் தீயும் ஒரு தன்மையனவே எனப் பூதப்பாண்டியன் தேவி பெருங்கோப் பெண்டு சான்றோர்டம் கூறித் தீப் பாய்ந்தாள் (புறம். 246:12-15). மனைக்கு விளக்க மாகிய வாணுதல் கணவன், போரில் தன் படைக் கெல்லையாய் நின்று காக்கும் வெற்றி வேலை யுடைய தலைவனென்று ஒருவனை ஐயூர் முட வனார் சிறப்பிப்பர் (புறம். 314:1,2). வேட்டுவ னொருவன் தன்னில்லத்தில் ஆழ்நது உறங்குகையில் அவ்வில்லத்து முன்வாசலில கட்டப்பட்டிருந்த பார்வை மானாகிய இளைய பிணையினைத் தழுவிப் பிறிதோர் கலைமான் திளைத்து விளை யாட, அவற்றின் இன்புறு புணர்நிலையைக் கண்ட மனையோள் தன கணவன் உறக்கம் நீங்கி எழுதலை யஞ்சியும் அக்கலைமான் பிணைமானை விட்டு ஓடுதலை யஞ்சியும் மனையிடத்தே நட மாடாமல் ஒதுங்கி அமைந்தாள (புறம். 320: 3-9). ஓவத்தனன தொழில் புனைநத நன்மனையின்கண் உள்ள பாவை போனற நல்லாளின் கணவன் பாரி (நலலாளின் கணவன் செல்வக் கடுங்கோ வாழியாதன் என்பர் வ. சுப. மாணிக்கனார்) (பதி. 61:2,3). குற்ற மற்ற கற்பினையும் ஒளிபொருந்திய நுதலையும் உடைய வளுக்கு (தெய்வயானைக்கு) கணவன முருகன் (முரு. 6). வனைபுனை எழில் முலையினையும் மூங்கிலை ஒத்த திரண்ட தோளினையும் மலர்போலும் மழைக் கண்ணையு முடைய மங்கையர் கணவன நன்னன் (மலை. 57,58). கன்று வயிற்றில் உண்டான கயந் தலை மடப்பிடியை வலிமைக்கு வரம்பாகிய கணவன் (களிறு) காத்தது (மலை. 307,308). நன்னன் தன்னை வணங்காதாரை அழித்த பணிவில்லாத ஆண்மை உடையவனும் பூங்கொடி போல்வாளின் கணவனும் ஆவன் (மலை. 423,424). நிறைசூல் கொண்ட பெணயாமை வெண்மணல் குவியலின் பக்கத்தே ஈனறு மறைத்துப் புதைதது வைத்த புலவு நாறு முட்டையிலிருநது குஞ்சு வெளியாகும் வரை அநத யாமையின் கணவன காக்கும் (அகம். 160:4-8). மறுகிலுள்ள பலர் இந்நல்லாளுடைய கணவன் இவன் என்று சொலல யாம் சிறிது நாணுவோம் என மடல் ஏறும் தலைவன் கூறினான் (குறு. 14:4-6). 'இப்பிறப்பு மாறி மறு பிறப்புவரினும் என் கணவன் நீயே யாகுக; நின்நெஞ்சிற் கொத் தவள் யானே ஆகுக' எனப் பரத்தையிற் பிரிந்து மீண்டுவந்த தலைவனிடம் தலைவி உரைத்தாள் (குறு. 49:3-5). ஆண்வங்காப் பறவை நீங்கியதால் தனித்த பேடை புல்லூறு இரையாகக் கொள் ளத் தன்மீது வீழத் தன்னுடைய கணவனைக்

காணாமல் வேய்ங்குழலின் இசை போன்ற குரலால் பலமுறை அழைக்கும் (குறு. 151: 1 ). தானே துழாவிச் சமைத்த தீம்புளிப் பாகரைத் தன் கணவன் இனிதென்று உண்டதனால் தலைவியின் முகம் நுண்ணிதின் மகிழ்ந்தது (குறு. 167:4-6). பசி வருத்துதலான் முடங்கிக் கிடந்த செந்நாய்ப்பிணவின் வேட்டைமேற் சென்ற கணவன் தன் பிணவைக் கருதிக் காட்டு வழியில் வருந்தும் (நற். 103: 6-9). மந்திக்குக் கணவனாகிய கலவாக் கடுவன் புலி முழங்குதலானே அஞ்சிப் பக்க மலையிலுள்ள உயர்ந்த குன்றின் உச்சியிலே விரைந்து ஏறிக் கொள்ளும் (ஐங். 274:1-3).

**கணவிரம் - செவ்வலரி.** சீறூரில் வாழும் ஆறலைகள்வர் பொலிவற்ற வழிதோறும் அம்புகளை ஏவுதலாலே நிணவரியும் புண்ணுமிழ் குருதியும் சூழக் கணவிரமாலை - செவ்வலரிமாலை - இடப்பட்டு இறந்து கிடப்பது போல வழிப்போக்கர் மாய்ந்து கிடந்தனர் (அகம். 31:7-10). கணவிரி, கணவீரம், காண்க.

**கணவிரி - செவ்வலரி.** வேங்கை, கணவிரி-செவ்வலரி - காந்தள், தோன்றி, நீலம் முதலிய மலர்களைச் சாரலின் சோலைக்கண்ணே அருவி கொண்டு வந்து சொரிந்தது (பரி. 11:20-23). கணவிரம், கணவீரம் காண்க.

**கணவீரம் - செவ்வலரி.** மலைவாழுநர் பலவேறு நிலையிலுள்ள முருகனைச் சிறுபசு மஞ்சளொடு சந்தனம் முதலியவற்றைத் தெளித்துப் பெரிய குளிர்ந்த கணவீரம் - செவ்வலரி - கொண்டு கட்டிய மாலைகளையும் ஏனைய நறுந்தண் மாலைகளையும் அசையும்படி தொங்கவிட்டு நலநகர் வாழ்த்தி வழிபட்டனர் (முரு. 235-238). கணவிரம், கணவிரி, காண்க.

**கணன் - 1. கூட்டம்.** தாழ்சடைப் பொலிந்த அருந்தவத்தோனுக்கு (சிவனுக்கு) பிறைமதி திருநுதலுக்கு அழகாயது; அப்பிறைமதிதான் பெரியோன் சூடுதலால் பதினெண்கணனும் - கூட்டமும் - புகழவும் படும் (புறம். 1: 9-13). சிறிய யாழைக்கொண்டு பாடும் பாணர் களிறுகளைப் பரிசில் பெற்றுக் கொண்டு சென்றமையின், களிறுகளின்றிப் பொலிவிழந்த நெடிய தறியின்கண் காட்டு மயில்கள் தத்தம் கணனுடன் தங்கின (புறம். 127:1-4).

**கணி - 1. சோதிடம்.** பல்லி மேல் உறுவது கூறுகின்ற சிறுசெந்நாவையும் மணி ஓசையைக் கேட்டாற் போன்ற தெளிந்த குரலையும் கணி - சோதிடம் - கூறும் வாயினையும் உடையது (அகம். 151: 13-15). காரரும்பு அவிழ்ந்த கணிவாய் வேங்கையில் (சோதிடம் வல்லார் போன்ற வேங்கை மரத்தில்) கட்டிய பரண்மீதேறித் தினைப் புனத்தின்கண் வரும் கிளிகளைத் தலைவி ஓட்டுவாள் (தினை முற்றும் காலத்தை வேங்கை அரும்பு தோன்றி முன் உணர்த்துதலின் வேங்கை கணியெனப்பட்டது) (நற். 373.6-8).

2. வேங்கைத்தாது. கணியை - வேங்கைத்தாதினை - மகளிர் விரும்பித் தம் மேனியில் அப்பிக் கொள்வர் (புறம். 344:9).

**கணிகாரம் - கோங்கு.** தலைவன் பிரிந்த பின்பு பசிய பொன்னொளி கொல்லோ, மா ஈன்ற கொழுந்தின் மேல் கணிகாரம் - கோங்கு - மலரின் தாது பரந்த ஒளி கொல்லோ என்று பிறர் கூறும் தன்னணி போம்படி தன் மேனியை மறைத்த பசலையளாய தலைவி காணப்பட்டாள் (கலி. 143.4-6).

**கணிகை - பொது மகள்.** தலைவனோடு கூடிய பரத்தையை, விரும்பப்படும் காம இன்பத்தைப் பொய்யோடு கலந்து அதனைக் கொள்ளவரும் காமுகரை மயக்கும் வலைத் தொழிலையுடைய கணிகை - பொதுமகள் - எனத் தோழி ஒருத்தி இகழ்ந்தாள் (பரி. 20:48,49).

**கணிச்சி - 1. மழுப்படை.** 'நீயோ பரிகாரம் இல்லாத கணிச்சி - மழுப்படை - என்னும் படைக்கலத்தை உயிர் வருந்துமாறு சுழற்றிக் கூற்றம் சினந்தாற் போலும் வலிமையுடன் நினக்கு மாறுபட்ட இரு வேந்தரின் நிலத்தைக் கொள்ள நோக்கினாய்' எனச் சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் மறத்தை இடைக்காடனார் பாராட்டுகிறார் (புறம். 42.22-24). மணிமிடற்றோன் (சிவன்) ஆனேற்றை வெற்றிக் கொடியாக உயர்த்தியவனும் அழல் போலும் சடையொடு விலக்குதற்கரிய கணிச்சிப் படையை உடையவனுமாவான் (புறம். 56:1-2). பயனில்லாத முதுமையை உடைய பலசான்றீரே, நீர் கணிச்சிக் கூர்ம்படைக் கடுந்திறல் ஒருவன் (கூற்றுவன்) பாசத்தால் பிணிக்கும்காலை இரங்குவீர்; நல்லது செய்தல் ஆற்றீராயினும் அல்லது செய்தல் ஓம்புமின் என நரிவெரூஉத்தலையார் அறமுரைக்கின்றார் (புறம். 195.3-7).

2. குந்தாலி. இரும்பினாற் செய்த கணிச்சி - குந்தாலி - கொண்டு குழிந்த பள்ளத்தை உடைத்துத் தோண்டியதால் சில்லூற்றாக ஊறிய குழியில் நருணா ஆக்கள் சூழ்ந்தன (பதி. 22.12-15). மணிமிடற்றந்தணனாய சிவனுக்குக் கையில் கணிச்சியொடு மழுப்படை உள்ளது (அகம். க. வா. 5,15). கிணறு அகழ்வோர் தம் வல்வாயக் கணிச்சியால்

உடைத்தும் நீர் ஊறாமையால் கைவிட்டுச் சென்ற தழை மூடிய கிணறுகளைக் கானவர் தம்மைப் பிடிக்க அகழ்ந்த குழி எனக் கருதிக் களிற்றினம் தூரக்கும் (அகம். 21.21-26). மலைக்காட்டின் பக்கத்தில் கணிச்சியால் தோண்டின குழியிடத்தே ஆனிரை ஊறறு நீரை யுண்டது (அகம். 399.6-8). காட்டில் வெப்பமுற்ற பரலமிக்க பள்ளத்தின் ஒரு புறத்தில் கணிச்சியால் குழித்த கிணற்றை யடைந்து ஆநிரை காக்கும் ஆயர் தோண்டிய சிறு குழியிலுள்ள நீரை யானை இனம் உண்ணும் (நற். 240: 6-10). ஆயர் இறைவனுடைய கணிச்சிப்படையைப் போலே கொம்புகளைச் சீவி ஏறுகளைத் தொழுவிடத்தே புகுத்தனர் (கலி.101:6-9). பல்லுயிர்களை உண்ண வேண்டிய ஊழித்தீயும் கணிச்சியும் காலனும் கூற்றுவனும் அவ்வுயிர்களை விடாமற் செல்கின்ற ஊழிமுடிவில் சுழன்று திரியுமாறு போல, ஆயர் ஏறுகளைச் சுழன்று திரியும்படி தொழுவிடத்தே புகுத்த விட்டனர் (கலி. 105:20-22). ஈட்டி, குடாரி, கணிச்சி, மழு முதலான படைகளைச் செவ்வேள் தன் ஆறிரு கைகளில் கொண்டுள்ளார் (பரி. 5:66-68). வையை நீரணி காண்போருட் சிலர் காமம் என்னும் கணிச்சிப்படை தமது நிறை என்னும் கதவினை உடைத்தொழிந்தமையானே மேலும் ஊடற்கு வலி இலராய்த் தமது ஊடலைச் சுழற்றி எறிந்துவிட்டுத் தம் காவலரை எதிர் கொண்டு காவலாகிய திரையை விடுத்து உட்சென்று அமளி சேர்வர் (பரி. 10:27,33,34).

**கணிச்சிக் கூர்ம்படைக் கடுந்திறல் ஒருவன் - கூற்றுவன்.** 'பயனில் மூப்பில் பலசான்றீரே, நீவிர் கணிச்சிக் கூர்ம்படைக் கடுந்திறல் ஒருவன்-கூற்றுவன்-பாசத்தால் கட்டிக் கொண்டு போம் காலத்து இரங்குவீர்; ஆகவே, நல்வினையைச் செய்ய மாட்டீராயினும் தீவினை செய்தலை விலக்குமின்' என நரிவெரூஉத் தலையார் அறிவுரை பகர்வர் (புறம். 195.3-7).

**கணிச்சியோன் - மழுப்படை ஏந்தியோன் (சிவன்).** பிறரால் சீறுதற்கரிய கணிச்சியோன் - மழுப்படை ஏந்தியோன் (சிவன்) - சினக்கையினாலே முப்புரம் அழிந்து உதிர்வன போலக் கதிரவன் தெறுதலால் மலை பிளந்து வீழ்ந்து போவார்க்கு வழியில்லையாகக் குறுககிட்டது (கலி. 2:4-8). எரிதிகழ் கணிச்சியோன் சூடிய பிறையின்கண் கிடந்த சிவந்தமாலை போல ஏற்றினங்களின் குருதிதோய்ந்த கொம்புகளுடனே குடர்கள் சுற்றிப் பிணித்தன (கலி. 103 25-27). கூரால் நிறமுடைய ஏறு பெருமபெயர்க் கணிச்சியோன் மணிமிடற்றின் அழகுபோலக் கரிய [illegible] சரையுடைய கழுத்தினையும் ஏந்தின திமிலையும் கொண்டது (கலி. 105:13,14).

**கணியன் - சோதிடன்.** புறம் (192) பாடிய கணியன் பூங்குன்றனாரும் நற்றிணை (226) பாடிய கணிபுன் குன்றனாரும் சோதிடக் கலையில் வலனுநர் என்பது அவர்தம் பெயருக்கு முன்வரும் அடையால் பெறப்படும். புறநானூறு (194) பாடிய பக்குடுக்கை நன் கணியாரும் இச்சோதிடக் கலையில் வல்லுநர் (ப. மூ. பக். 517).

**கணியன் பூங்குன்றனார் - புலவர்.** இராமநாதபுரம் மாவட்டத்திலுள்ள மகிபாலன்பட்டிக்கு அருகிலுள்ள கல்வெட்டுக்களில், 'பூங்குன்றம் என்பது பூங்குன்ற நாட்டுப் பூங்குன்றம்' எனக் குறிக்கப்பட்டுள்ளது. அதனால் அவ்வூரே இப்புலவர்க்குரிய ஊர் என்பர் (ஔவை. து. புறம். 192-ஆம் பாடலின் முன்னுரை). இவருக்கு இப்பெயர் தொழிலாலும் இடத்தாலும் வந்தது போலும். இவர் பாடியனவாகப் புறநானூற்றில் ஒன்றும் (192) நற்றிணையில் ஒன்றும் (226) ஆக இரு பாடல்கள் உள்ளன. நற்றிணையில் இவர் பெயர் கணிபுன்குன்றனார் எனக் காணப்படுகிறது. அரிய பொருள்களமைந்த 'யாதுமூரே' என்னும் இவரது புறப்பாடல் எக்காலத்துக்கும் எந்நாட்டிற்கும் ஏற்ற உயர் அறம் கூறுவதாகும். 'யாதும் ஊரே யாவரும் கேளிர், தீதும் நன்றும் பிறர் தர வாரா, நீர் வழிப்படூஉம் புணை போல் ஆருயிர் முறைவழிப் படூஉம், பெரியோரை வியத்தலு மிலமே, சிறியோரை இகழ்தல் அதனினும் இலமே' என்பன [illegible] உலகில் போற்றப்படும் அறத் தொடர்களாகும். அவ்வாறே பாலைத் திணையிலமைந்த நற்றிணைப்பாடலில் வரும் 'மரஞ்சா மருந்தும் கொள்ளார்; மாந்தர் உரஞ்சாச் செய்யார் உயர்தவம்; வளம் கெடப் பொன்னும் கொள்ளார் மன்னர்' என்னும் அடிகளும் அறம் தழுவியனவேயாம்.

**கணை - 1. அம்பு.** கணை-அம்பு-கொண்டு பொருது இடக்கவிந்த வளரிய கையுடன் கணையணிந்து விளங்கும் அழகிய வில்லையும் உடையவன் சோழன் கரிகாற்பெருவளத்தான் (புறம். 7:3,4). புலித்தோற் கவசத்தின் இணைப்பு அறுமாறு கணையால் போழப்பட்ட பரந்துயர்ந்த மார்பினை உடையவன் சோழன் முடித்தலைக் கோப்பெருநற்கிள்ளி (புறம். 13: 2,3). உயர்ந்த மலையை வில்லாகவும் பாம்பை நாணாகவும் கொண்டு ஒரு கணையால் மூவெயிலை அழித்து அமரர்க்கு வெற்றி தந்தவன் கறைமிடற்றண்ணல் (புறம். 55: 1-4). அதியமான் நெடுமானஞ்சி கடல் போன்ற பெரும்படையுடன் பொன்னாலியன்ற தும்பைக் கண்ணியையுடைய கழல் வடிவாகவும் கிண்ணி வடிவாகவும் செய்து செறிக்கப்பட்டுக் கணை பொருதலான துளைபட்ட

பரிசையுடையவன் (புறம். 97: 14-16). ஊர்முன் செய்யப்பட்ட பூசலில் தோன்றி மிக்க நிரையைக் கொண்ட பகைவரின் கணை வெள்ளத்தைத் தன் துடியே புணையாகக் கொண்டு அவரைக் கொன்று நிரையை மீட்டான் வீரன் ஒருவன் (புறம். 260: 12-15). ஒருவீரன், போர்த் தொழிலை யுடைய மறவர் இரிந்தோடத் தான் மட்டும் நீங்கானாய் வில் உமிழ்ந்த கடுங்கணையில் மூழ்கப் புனலின் கண் அணைபோல எதிர்நின்று தடுத்தான் (புறம். 263:6-8). வீரனொருவன் பகைவர் விடுத்த கணை மொய்த்த திண்தோளை யுடையவன் (புறம். 285: 8,9). வலிய மன்றத்தில் இரத்தி மரநிழலில் மென தலைச் சிறுவர் கணை விளையாடுவர் (புறம். 325: 10-12). மழைமுகிலைத் தடுக்கும் குன்றம் போலக் களிறெல்லாம் கணைபட்டு இறந்தன (புறம். 368:2,3). வில்லின் நாண் செலுத்திய கணைகளா கிய மழை பொழிந்த போர்க்கள வயலில் தேரை ஏராகக் கொண்டு போர்க்கருவிகள் மிளிர்த்த படைச்சாலில் வேல், கணையம் முதலியவற்றை விதைத்துப் பிணங்களாகிய பயிர் விளைத்தான் சேரமான் கடலோட்டிய வேல்கெழு குட்டுவன் (புறம். 369:8-14). வருகணை வாளி (புறம். 371: 11). கணைகளாகிய மழை பொழிந்த பாசறையில் பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் மறக்கள வேள்வி செய்தான் (புறம். 372: 4,12). முரசம் இடியென முழங்கக் களிறு முகில் போற் செல்லத் தேர்களும் குதிரை களும் மழைத் தாரை போலப் பாய்ந்தோட எறிந்த கணைகள் காற்றைப் போற் சென்று மோதக் கொங்கு நாட்டவரைப் புறந்தந் தோடச் செய்தான் சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் (புறம். 373:1-8). இமைய வரம்பன் நெடுஞ்சேரலாதனின் பகைவர் மதில் நாட்டைக் கண்டாற் போன்ற பேரிடத்தைக் கொண்ட கணைக்கட்டுகள் பொருந்திய மலை போன்ற இடைமதிலைக் கொண்டது (பதி. 16:2,4). கடல் பிறக்கோட்டிய செங்குட்டுவன கடவுட் பத்தினிக்கு (கணணகிக்கு) படிவம் அமைத்தற்குக் கலகொள்ளு தலை விரும்பிக் காட்டில் கணையைப் போல விரைந்து சென்று ஆரிய அண்ணலைத் தோற்கச் செய்தான் (பதி. ப. 5:4-6). பகைவர் எய்யும் புலவுக் கணையால் கிழிக்கப்பட்ட மாக்கண் தன்னுமை கைவல் இளையரால் அறையப்படுத லின்றி ஒலி ஒழிந்தது (பதி. 51:33,34). காவை (காண்டவ வனத்தை) எரியூட்டிய கணையைக் கொண்ட அம்பறாத் தூணியையும் பூத்தொழில் கொண்ட கச்சையினையும் உடைய புகழோன் (அருச்சுனன்) (சிறு. 238,239). வம்பலர் ஆறலைப் போர் எய்த கணைகளின வலியைத தொலைத்த அவ்வம்புபட்ட புண்கள் தீர்நத மார்பினை உடை யவர் (பெரு. 70,76). எயினரின் வீடு தலையில முடித்த நாணையுடைய விலலைச் சார்ததி வைத்த கணை தங்கும் பெற்றியது (பெரு.120,121). தலையாலங் கானத்துச் செருவென்ற பாணடியன நெடுஞ் செழியன கடல் போனற தானையொடு பகை வரின் இடம் சென்று அகலவிசும்பில ஆரவாரம் ஒலிப்ப மழையோடு மாறுபடுமபடி கணை சிதறி னான (மது. 180-183). ஊர்காப்பாளர் தபபக் கருதி முயல்வாரக்கும் தப்புதற்கரிய கணையினை உடை யராயத தெருவில பெருமழை பொழிநத இரவிலும காவலபூண்டனர் (மது. 647-650). விலலை வளைத தேவுதலால் மிக்கவிசையுடன வரும் கணை தாங்கும மாாபினையும் குதிரையை விரையச செலுததி வேணடுமிடததே நிறுததும் வலிய தோளையும உடைய மறவரைப் பரிசில் தருதறகு நெடுஞ் செழியன் அழைத்து வருமாறு கூறினான (மது. 728, 729). வேலும கணையும புகுநது அலைததலின் தம் கவசம சிதைவுபட்டு ஊன் சாய்நத மார்போடு மேலும் பொர முயலும ஊக்கமுடையாரை அழை யுங்கள என்று கூறி அவரை வரவேற்றான நெடுஞ செழியன் (மது. 739-743). யானை தினையை உருவி உண்டு அழிகக அது பொறாது கானவர் விலலை நாண ஏற்றி உடல சினம செருககிக் கணையை எய்து தட்டையைப புடைதது அதனை விரட்டினர் (குறி. 156-161). தமமுகம மறையும்படி பகைவரின வில பொழிநத கடுங்கணையை ஏற்றும் பிறக் கிடாது தூசிப்படையோடு பொருது பொலிவு பெற்றது நனனனின யானை (மலை. 225-227). யானைகளில கட்டப்பட்ட மணியின ஒலியும கிடு கினகண பகைவா பொழியும கணைகள தாககு கினற ஒலியும போர் முரசின முழககமும் பாசறை யில நள்ளிரவில் கேட்கும (அகம. 24:13-15). விற படை தோளின் இடப்பக்கமாகக கணையை வலக் கையிற் கொண்டு வேட்டம மேறகொண்டு தலைவியை எணணியபடி வெற்பன் வருதல உறுதி எனத் தோழி கூறினாள் (அகம். 38:3-5). புலிபுலி என்னும் பூசல் தோனறவே, தலைவன வரிநது புனைந்த வில்லையுடையனாய் ஒரு கணையைத தெரிந்து கொண்டு அவ்விலஙகு சென்ற வழியாது எனத் தலைவியை வினவினான (அகம். 48:7-14). பாலைவழி விடுதற்கியனற செஙகணைகளையும் கொடுவிலலையும் கொணடு பொருது போரில் வீழநத ஆடவரின் பெயரும பீடும பொறிதது நடப்பட்ட நடுகற்களைக் கொணடது (அகம. 179:

7-10). கொடுவில கானவர் தமது கணையை விடு தலால இறநதுபட்டோர் விழுநது கிடக்கும் களத்தில் உயர்ததிய மயிர்த் தலைகளைக் கொண்ட பதுககைகள நிறைந்து காணப்பட்டன (அகம. 231: 5-7). மயிறபீலியின பிளப்பைச் சுற்றிய வலிய வில்லின விளிமபிற்கு ஏற்ற பிற உயிர்கட்குத் துனபத்தைச செயயும மிக்க ஒலியுடன விரைந்து செலலும கடுங்கணைகளை உடையவர் முரண்மிகு வடுகர் (அகம. 281 4-8). ஆறலைகள்வர் வில்லில் தொடுத்த கணைபட்டு வீழநதிறநத வழிப போககரின் பிணததை மறைததறகுக் கற்களால் உயாதத பதுக்கையின மேல அதிரற்கொடி படர்ந்தது (அகம். 289 1,2). மலையில் கானவன பரண்மீதிருநது கவணால எறிநத சிறுகல இறகமைநத கணைபோல விரைந்து சென்று வேஙகை யிணரைச சிதறித தேனடையைச் சிதைத்துப பலாப்பழததுள தஙகியது (அகம். 292:10-14). வறண்ட காட்டில் ஆறலைப் போர் கணை எய்தலால இறந்துபட்ட புதியோரது புண்ணினின்று ஒழியும் செநநீரைக காககை குடிக்கும (அகம. 313:12-16). செயிர்நோககாடவா கணை எயதலால இறநத தன காதலமிகு துணையினை எண்ணித திரிமருப்பு இரலை மேயாமலும நீர் பருகாமலும வருநதும (அகம. 371:2-8). தலைவனது குதிரைபூட்டிய திணணிய தேர் கணை பாய்ந்தாற போனறு விரைநது சென்று வெணமணலில் வாயக் காலைக் கணடாற் போனற சுவட்டை உணடாக்கியது (அகம. 400:13-16). நாணததை அழிதது நலலறிவையும் இழக்கச செயயும காமம் விலஉமிழ் கணையைப போல நெடுநதூரம் சென்றது (குறு. 231:4-6). ஆறலை கள்வர் விடுகின்ற கணையை விலலுடன் பறறிக கொண்டு உயர்ந்த உகாய் மரக்கிளையில் ஏறி வருபவரைப் பார்த்துக் கொண்டிருப்பர் (குறு. 274:1-4). இவ்வுலகதது வைகல் தோறும் வில்லினினறு எயயப்படும் கணை சென்று குறியிலே தைக்கப்படு மளவையின், அக் கணை செல்லும நிழல எவ்வண்ணம விரைவிற சென்றழியுமோ அவ்வணணமே இனபமும் இளமையும கழியும (நற். 46.1,2). கடுங்கணயானை தினைப புனம் அழைநதததைக் கண்ட குறவர் கணை உடையவரும் கிணைப்பறை உடையவரும் கவணை உடையவருமாய் ஒன்று கூடி ஆரவாரிததனர் (நற். 108:1-5). பெருஙகை வேழம் விலலினின்று வரும் கணைககுஞ்சி மலைப் பிளப்பின ஆழத்தே சென்று ஓசை மோதுமாறு பிளிறும் (நற. 228:6-8). வனகைக் கானவன் தனது விலலை வளைதது வலிய கணையை நெஞ்சிலே பாய்சசி முள்ளம்பனறி ஏறறைக கொனறான (நற். 285:2-4). வம்பமாக்கள் வரும்திறம் நோக்கிச் செங்கணை செலுத்திய ஆறலைகள்வரின் தண்ணுமை ஒலிகேட்டு எருவைச் சேவல் சுற்றத்திடம செலலும் (நற். 298:1-4). பருந்தின் புலலிய இறகைச் செங்கணையிற் செறித்த வன் கண ஆடவர் தாம்வெறறிகொள்ளும் நோக்குடன மலைநெறியில் வழிபார்த்துத் தங்குவர் (நற். 329: 4-8). அரசர் வந்து போர் செய்யினும் வலிய வில்லினது நாணில் எழுநத ஒலியாலே அவரைப் புறங் காண்டலன்றிக் கணை தொடுபபதை நாணுபவர் ஆறலைகள்வர் (கலி. 15:1-4). கல்லின் நெருக்கததால் எய்த கணை ஓடாத அரிய வழியிடதது ஏற்றின் பின் பிரியாமல பிணைதிரியும் (கலி. 20:21-23). தோழி நற்றாய்க்கு அறத்தொடு நிற்க, அவள் தமையன் மார்க்கு அறததொடு நிற்க, அவரும் ஒருபகல் எலலாம் கணையையும் சிலையையும் நோககிக் கண் சிவந்து, பின்பு இருவரிடத்தும் குற்றமில்லை என்று சினம ஆறினா (கலி. 39:20-25). பாண்டியனாற செறப்பட்டவர் மருமத்த்த தைதத கணையினும் எனக்கு நோவைச செயதல கொடுமையின் மிக்க கொடுமை யனறோ எனக காமம் சாலா இளமையோள்வயின ஏமஞ்சாலா இடும்பை எய்தியோன் வினவினான் (கலி. 57 : 14,15). 'மாலைப் பொழுதே, என நெஞ்சைத தம்மிடததே கொணடு நீஙகினவர் எனககுத துணையாம் தனமையைத தாராத காலத்திலே, வெள்ளத்தில் அகப்பட்டுக்கரை யேற மாட்டாத மானின மருமததைப் பார்த்துக கணை தொடுககும் கொடியவனைப போல அலலலிலே அழுநதியிருநத என்னைக கையற வெயது விக்க வநதாயோ' என மாலைபபொழுது கண்டு ஆற்றாளாய தலைவி கூறினாள (கலி. 120:10-12). ஞாயிறே, நீ என தலைவனைக் காட்டாயாகில், பனையின்ற குதிரை ஏறி அவன என்பால் தானே வருமபடி காமனை காலைக் கட்டிக் கொணடு 'நின் கணைகளை எனக்குத தரவேணடும்' என்று அக் காமனை இரப்பேன எனப பிரிவு ஆறறாளாய தலைவி கலங்கி மொழிந்தாள் (கலி. 147:58-60). பாணடியன் தன் பகைபபடை மீது விலலினினறும விசையாக விடும் கணையைப் போல, முகில மழைத் துளிகளைச் சிதறியது (பரி. 22:5,6).

2. திரட்சி. பொயகையில் கணை-திரட்சி-கொண்ட கோட்டினையுடைய வாளை மீனகள் நீர்மேல் பிறழுந்தன (புறம. 249.2,3). வெட்சிமறவன் கணைக் காலையும் அழகிய வயிற்றையும் அகனற மாரபையுமுடையவன (புறம். 257:1,2). சூரரமகளிர் கணைக காலையும் பளைநது நுடஙகிய இடையினையும் பணைத்த தோளையும் கொண்டவர் (முரு. 11,41). பூவை தலையில் கட்டப்பட்ட கணைககாலினை

புடைய உளிவாய்ச் சுரையினால் (பாரைகளால்) எயிற் றியர் கரிய கரம்பை நிலத்தினைப் புழுதியாக்கினர் (பெரு. 91-94). எயினரின் குறும்பு கடியஓசையுடைய துடி தூங்கும் கணைக்காலைக் கொண்டபந்தரினை யுடையது (பெரு. 124,129). நாற்று நட்ட வயலில் களைபறிப்போர் பறித்து ஏறட்ட கணைக்கால் நெய்தற் பூவை உழவர் சூடுவர் (பெரு. 212–214). பின்னி வைத்தாற் போன்ற கொடி பிணங்கின சிறுகாட்டின் வழியே போங்கால் முன்னர்ச் செல் பவன் தன்முகத்தி லடியாமல் வளைத்துவிட்ட கடிய விசையையுடைய கணைக்கோல் யாழின் பத்தரை யும் முழவின் கண்ணையும் கெடாதபடி காததுச் செல்க எனக் கூத்தர் அறிவுறுத்தப் பெறுகின்றனர் (மலை. 379-383). கடற்கரைச் சோலை மருங்கமைந்த கழனிகளில் உள்ள பசிய இலைகளை யுடைய தழைத்த கணைக்கால் நெய்தற பூக்களை விழா வுக்கு ஒப்பனை செய்யும் மகளிர் தம் தழை ஆடைககு அழகு செய்யப் பறித்துச் சேர்ப்பர் (அகம். 70:10-12). தன் அண்ணன்மார் நள்ளிரவில் சென்று வலைவீசிப் பிடித்து வநத கணைககோட்டு வாளைக்கு விலை யாகப் பாண்மகள் செந்நெல்லைக் கொள்ளாமல் முத்தும் நன்கலமும் பெறுவாள் (அகம. 126:7-12). கலைமான்களுடன் கணைக்காலையுடைய பெண் மான்கள் கூடும் கூட்டம் விரைந்து செல்லும் குதிரை பூட்டிய தேரொலியைக் கேட்டால் நிகழாதாகலின் தேரை மெல்லச் செலுத்துக என வினைமுற்றி மீண்ட தலைவன் தேர்ப்பாகனுக்குக் கூறினான் (அகம்.134:7-14). அகன்றவயலில் நீடுகழைக் கரும்பின் கணைக்காலை உடைய வெள்ளிய பூக்கள் வாடைக் காற்றால் அசைந்தன (அகம். 217:3-5). வயலில் கிளைத்து விரிந்த கரும்பின் கணைக்கால வான்பூ மழைக்காலத்து நனைந்த குருகினைப் போல ஈரத துடன் வளைநது தோன்றியது (அகம. 235:11–13). கணைக்கால்களைக் கொணட பிணைமான முதுகி னைக் கலைமான் நக்கியது (அகம். 287:10). பாணடிய னின் மாடமூதூ ராகிய மதுரையின் மதில்புறத் தைத் தழுவிககொண்டு நீடு வெயிலால் வருந்திய கணைக்காலைக் கொண்ட கழுகு நிற்கும் (அகம். 335:10-12). கொடுநுகத்தில் நுழைந்த கணைக் காலை யுடைய கோவேறு கழுதையை வடிமணி நெடுந்தேரில் பூண ஏவாதே இரவில் தங்கிச் செல்க எனத் தோழி பகற்குறி வந்து நீங்கும் தலை வனிடம் கூறினாள் (அகம். 350:6-9). கழியிலுள்ள சேற்றில் பொருந்திய கணைக்கால் நெய்தல் மலரின் நுண்தாதை உண்டு வண்டினம் நீங்கும் (அகம். 360: 3-5). கணைகொண்ட அடிப்பகுதியையும் சிறிய இலையினையும் உடைய நெல்லியின் பசிய காய்

ச இ பொ க தொ 2-7அ

களை மலைவழியின் பககத்தே வீசும் கடுங்காற்று உதிர்க்கும் (அகம். 363:5-7). இலைக்குமேல உயர்நது தோன்றும் கணைக்கால் நெய்தறபூ கரிய கழியின் கண வெள்ளம் மிகுந்தோறும் குளத்தில மூழ்கும் மகளிர் கண்களை ஒக்கும் (குறு. 9:4–6). கணைக் கோட்டு வாளைமீனின் நிறைசூல் கொண்ட பெண மீன தேமாவின் இனிய பழத்தைக் கவவும் (குறு. 164: 1,2). சுறாமிகுந்த கழிசோநத இடத்து நெய தல், கணைக்கால நீண்டு கண்களைப் போலப் பூததது (நற. 27.8-11). கணைக்கால நெய்தலமலர் மறையும்படி நீர் பெருகும் கழியின்கண சுறாமீன துணையுடன் இயஙகும் (நற: 67:6,7). துறைவன கணைக்கால் நெயதல் மலருடன் இலையை இடை யிட்டுத தொடுதத மாலையைத் தலைவிககுச் சூட்டி னான (நற். 138:5-7). ஆம்பல் பிடியானையின செவிபோன்ற பசிய இலையையும் குளத்தினகண் உள்ள கொககுப போன்ற கூம்பிய முகையையும் கணைக்காலையு முடையது (நற. 230:1-3). கழிக கரையிலுள்ள சேறுபட்ட கணைக்காலை யுடைய கோவேறு கழுதையின் குளம்பிலெஙகும் சிவநத இறாமீன்கள் ஒடுங்கப்பட்டு அழிந்தன (நற். 278: 7,8). ஆணபன்றி தன் பிணவுடன சென்று கணைக் கால் தினைக் கதிரை அளவின்றித தின்றழிததது (நற். 336:1,2). செழியன் பெயரால செயத பெரிய குளத்துநீர் மடை திறந்து கொணடு ஓடியதனால கால்வாயையடைந்து சென்று திரும்பிய கணைக் கோட்டுவாளை சேறு நிறைந்த வயலுட்புகுந்து உழவர் கோலாற் புடைத்ததற்கு அஞ்சாது வரப் படியிற் புரளும் (நற. 340:2-8). இருள நனகு புல ராத விடியற காலத்தில கணைககால ஆம்பல கனனி விடியலில் தாமரை மலரைப போல மலரும (ஐங். 68:1,2). துயிலைபபெறற கணகளைப போலே கணைககாலையுடைய தாமரை முதலிய மலர்கள் கூமபின (கலி. 119:5). மணகமைஉ முழவின் இனிய கண்ணிற் பிறக்கும் மூழக்கத்திறகு எதிராக விண்ணில் உருமேறு முழஙகியது (பரி. 22:36,37).

**கணையம் – கணையமரம்.** சேரமான கடலோட்டிய வேல்கெழு குட்டுவன போர்ககள வயலில வேல, கணையம - கணையமரம் - முதலியவறறை விதைத துப் பிணங்களாகிய பயிர் விளைததான (புறம. 369: 13,14).

**கணையன் - 1.** சேரன் படைத்தலைவன். சோழன் படைத் தலைவனான பழையன் சேரன்படைத்தலைவ ரோடு பாசறையிற் பொருது மாயந்தானாக, அது கணடு பொறாத சோழன பெரும்பூட்சென்னி சேரன் படைத்தலைவனாகிய திண்டேர்க் கணையனை

வெனறு கழுமலம் என்னும் ஊரையும் கைப் பற்றினான் (அகம. 44.7-14).

2. **ஆரியப் பொருநனின் நண்பன்.** பாணன் என்பா னின மறபோர் வன்மையால் எதிர்த்து வந்த ஆரி யப் பொருநன பொருதற்காற்றாது அவன் கைய கபபட்டு மாய்ந்து கிடந்த கிடக்கையைப் பார்த்து நற்போர்க் கணையன் நாணினான (அகம். 386:3-8).

**கணையோர் - அம்பினையுடையோர்** (ஆறலை கள்வர்). மகட் போக்கிய செவிலிததாய், 'தன்மகள இரவில் தன் துணைவனுடன் சீறூரினகண்ணே தங்கியிருப் பாளோ, கணையோரை - ஆறலைகள்வரை - அஞ் சாத தறுகண்மையுடைய தன காளையுடன முன்னே நடந்து செலவாளோ எனறெணணி வருந்தினாள் (அகம். 321:10-14).

**கதக்கண்ணனார் - புலவர்.** இவர் பாடியனவாகக் குறுந் தொகையில் இருபாடலகள் (88,94) உள்ளன. 88-ஆம் பாடலைப பாடியவர் மதுரைக் கதக் கண்ணன என்றும் 94-ஆம பாடலைப பாடியவர் கந்தக்கண்ணன் எனறும உ. வே. சா. குறிபபிடு வார் (குறு. உ. வே. சா. பாடினோர் வரலாறு). 94-ஆம் பாடலைப பாடியவர் கதக்கண்ணன என்று மர்ரே பதிப்பு குறிக்கும். குறிஞ்சித திணைப் பாடலான 88-ஆம் பாடலில் சிறுகட் பெருங்களிறு வயப்புலி யைத் தாக்கிய நிகழசசியும் முல்லைத் திணைப் பாடலான 94-ஆம் பாடலில் மாரிக் காலத்தில் மலர வேண்டிய பிசசியின் அரும்புகள் தாம் சிவக்க வேண்டிய காலத்திற்கு முனபே சிவந்து தலைவியை மயங்க வைத்த நிகழ்ச்சியும புனையபபட்டுள்ளன.

**கதப்பிள்ளையார் - புலவர்.** புறநானூற்றில் ஒரு பாட லும் (380) நற்றிணையில் ஒரு பாடலும் (135) குறுநதொகையில் மூன்று பாடல்களும் (64,265, 380) ஆக ஐந்து பாடல்கள் இவர் பாடியவை. நற் றிணைப் பாடலைத் தவிர ஏனைய நானகு பாடல களையும் கருவூர்க் கதப்பிள்ளை பாடினாரென மர்ரே பதிப்புக் கூறும். இவர் பெயர் கருவூர்க் கந்தப்பிளளை என்று வழங்கப்படுவதாக உ. வே. சா. குறிபபிடுவர் (குறு. பாடினோர் வரலாறு. பக். 135). [இவா கருவூர்க் கதப்பிளளைச் சாததனார் எனவும கதபபிளளை எனவும் கருவூர்க் கதப்பிளளை என வும் பலவாறாகக் கூறப்படுவர் (நற். பாடினோர் வரலாறு. பி. நா. உரை. பக. 28, 29) ]. இவரால் பாடப் பட்டவன் நாஞ்சில் வள்ளுவன் (புறம. 380). இப்புறப் பாடலால் நாஞ்சில் வளளுவனின வண்மையும வீரமும் நாஞ்சில் மலையின வளனும புலனாகினறன. 'துப்பெதிர்ந் தோர்க்கே யுள்ளாச் சேய்மையன, நட்பெதிரந் தோர்க்கே யஙகை நண் மையன்' என்பது இவர் இவனைப் பாராட்டிய பகுதியாகும். இவரது நெய்தல் திணையிலமைந்த நற்றிணைப் பாடல் (135) வரையா உணவுப் பொருளைக் கொண்டு வருவிருந்தயரும் சிறுகுடியி னரின் பண்பினைப் புலப்படுத்தும். பசுக்கள் பிரிந்து செல்ல மடக்கண் கன்றுகள் புன்றலை மனறம் நோக்கி வருந்தி நிற்றல் (குறு. 64). காந்த ளினது கொழுவிய அரும்பைத் தானாக மலரும் வரையில் காத்திராத வண்டுகள் மூடிய இதழ் களைத் திறத்தல் (குறு. 265). வேந்தர் பகைவரை வென்று அறைகின்ற முரசததைப் போல முழக்கத் தோடு மழைபெய்தல் (குறு. 380) ஆகிய பகுதிகள் இவர்தம் இயற்கைப் புனைவிற்குச் சான்றுகளாகும்.

**கதம் - சினம்.** வேட்டுவன் கானுறை வாழ்க்கையை யும் கதம்-சினம் - மிக்க நாயையும் உடையவன் (புறம். 33:1). பிட்டஙகொற்றன் இனமாகிய மிக்க கதம் கொண்ட ஏறுகளைத் தொழுவத்தோடு வேண்டினும் வேண்டியாங்கு அறஞ்செயயும தன மையாளன் (புறம். 171.8,11). 'கடுவிசைக் கதநாய் நோன்சிலை வேட்டுவ' எனக் கடிய நெடுவேட்டு வன் விளிக்கப் பெறுகிறான (புறம. 205:8,9). காவ லர் கடுகுதல், கதநாய் குரைத்தல், தாய்துயிலாமை, நிலவு வெளிப்படல் முதலிய இடையூறுகளால் தலைவன் தலைவியின் தோளிற் பெறும் இனறுயி லைப் பெறவியலவிலலை (குறி. 240-243). தூண்டி லிற் கோத்த இரையை விழுங்கிய வரால்மீன தூண் டில் வேட்டுவன வாங்கவும் வாராது கதமுடைய எருது போன்று செருககுற்று நீரைக் கலக்கியது (அகம். 36:1-8). வடுகா போர்த தொழிலையன்றிப பிறிதொன்றும் கல்லாத நெடுமொழியையும் கதம மிக்க நாயையு முடையவர் (அகம். 107:11). கார் கதம் கொண்ட விசும்பின்கண் நள்ளிரவில் பொறி விடு கொள்ளிக் கட்டைகளைப் போல மினனல மின்னி மழை பொழிந்தது (அகம். 108: 6-8). ஞாயிற்றுக் கதிரின் கதம் (வெம்மை) காண்டற்கினிய மூங்கில் நிறைந்த பக்க மலையிலுள்ள சுரபுன்னை யின் உசசியை வாடும்படி செயதது (அகம். 177: 6-8). வடுகர் கன்றின தோலாலாகிய கூட்டினை யும் கதம் பொருநதிய நாயினையும் உடையவர் (அகம். 381:7). வாயில் வேண்டி வந்த பாணனிடம் பரத்தை, 'பாணனே, நீ அஞ்சுமாறு எம் அன்னை மூஙகிற்கோலைக் கையிலேநதிக் கதம் பெரிதுடை யள்; ஆதலின் நீ இங்கு வராதே' என்று கூறினாள் (நற். 150:9-11). கடிய ஒலியை யுடைய பம்பையை யும் கதம் கொண்ட நாயையும் உடையவர் வடுகர் (நற். 212:5). முயல் வேட்டெழுந்த முடுகு விசைக் கதநாயின் சிவந்த நாவினை யொத்த சிறு அடி

களையுடையவள் தலைவி (நற். 252: 10,11). தன்னாற் கொள்ளப்பட்ட களிறு பிழைத்ததால் கதஞ் சிறந்த புலி மேகத்தைப் போல முழங்கியது (ஐங். 218:3,4). நறுநுதலாய், நாம் நம் கூந்தலை ஆற்ற அது முல்லைப் பூவின் நாற்றம் கமழக் கண்டதற்கு நம் சுற்றத்தார் மனம் மாறுபட்டுத் தலைவன் தழுவிய கொல்லேற்றினைப் போலக் கதங் கொண்டனர் என்று தோழி தலைவியிடம் கூறினாள் (கலி. 105:53-56). 'தன் கன்றினிடத்துச் செல்வார் மீது கதங்கொண்ட புனிற்றா பாய்ந்தாற் போன்று என்னை அடுத்து நிற்கும் உனைக் காணின் யாய் கடுஞ்சினங் கொளவாள்' எனத் தலைவி தலைவனிடம் கூறினாள் (கலி. 116:8,9). 'திங்களுள் தோன்றிய குறுமுயலே, என கேள்வன் இருக்குமிடத்தைக் காட்டாயாயின், கதம் மிக்க நாயை நின்னைப் பற்றுமாறு ஏவுவேன்' எனத் தலைவனைப் பிரிந்திருந்த தலைவி கலங்கி மொழிந்தாள் (கலி. 114:18-20).

**கதவம் - கதவு.** சோழன் நலங்கிள்ளி தென்னவனது நல்ல நாட்டுள்ளும் ஏழெயில் கதவத்தை - கதவை - அழித்துக் கைக்கொண்டு புலியைப் பொறிக்கும் வலியுடையவன் (புறம். 33: 7-9). அதியமான் நெடுமானஞ்சியின் இனக்களிறுகள் செலக்கண்ட பகைமன்னர் தம் மதில்வாயிற் கதவங்களும் கணைய மரங்களும் புதியனவாக இடுதற்குப் பழையனவற்றைப் போக்குவர் (புறம். 98: 1-4). அவுணர் தேவர்க்கு அஞ்சி வானத்தில் இழைத்த அரணத்தின் கதவத்தைக் காக்கின்ற கணையமரம் போன்ற பருத்த வலிய தோள்களையுடையவன களங்காய்க்கண்ணி நார்முடிச் சேரல் (பதி. 31: 18-20). கடல்பிறக் கோட்டிய செங்குட்டுவனின் தோள்கள் அரணின் கதவங்காக்கும் கணையமரத்தை ஒப்பன (பதி. 45: 9-11). கதவததையுடைய மதிலினிடத்து உருமேறு தன் கழுததைத் தேய்க்குமாறு உயர்நது விளங்கிய பகைவரது தூங்கெயிலை அழித்தவன் தொடித்தோட் செம்பியன் (சிறு. 80-82). மகளிர் வைகறைப் போதின்கண் துயிலுணர்ந்து இல்லத்தே செய்தற்குரிய கடமைகளைச செய்ய விரும்பி நலலில் கதவங்களை ஒலியெழத் திறந்தனர் (மது. 664-667). வானத்தைத் தீண்டுமாறு உயர்ந்து விளங்கிய மேல் நிலத்திடத்துள்ள (மேல்மாடி) திண்ணிய நிலையினையுடைய கதவங்கள் தாழிட்டுக் கிடக்குமாறு மழை பெய்தது (நெடு. 60-64). கைவல் கம்மியனால் செய்யப்பட்ட நெடுநிலை, இரண்டாய் மாட்சிமைப்பட்ட தாழ்பொருந்திய கதவங்களைக் கொண்டது (நெடு. 81, 85). காவலையுடைய மதிலினது கதவத்தை மோதியதால் களிற்றினது தொடி பிளந்து வெண்கோடு முனை மழுங்கியது (அகம். 24: 11-13). தலைவன் காவலர் அறியாது வந்து தாழிடப்பெறாத கதவத்தின் அருகே தங்கி மெல்ல உட்புகுந்து தலைவியைக் கூடினான் (அகம். 102: 12-14). அருங்காவலுடைய வீட்டின் ஒரு பக்கத்தே ஓவியம் எழுதினாற் போன்ற செறிநத நிலையினையுடைய கதவத்தைப் பேய் வழங்கும் நள்ளிரவில், காவலர் சோர்நத நிலையில் திறந்து தலைவன் தலைவியை முயஙகினான் (அகம. 311: 2-5). ஊரிலுள்ளார் துஞ்சும் நள்ளென் யாமத்தில் களிறுபோல் வந்த தலைவன் தலைவியைக் கூடுதற்குத் தாழிட்ட கதவத்தைத் திறக்க முயன்றான (குறு. 244: 1, 2). தெருவில் மழை பெய்யக் காற்று, ஒன்றோடொன்று பொருநதுதலமைந்த வாயிற் கதவத்திலுள்ள துளைதோறும் அம் மழைநீரைக் கொணர்ந்து தூவ வீட்டிலுள்ள நாய் நடுங்கும் (நற். 132: 3-5). பரததையர் சேரியினினறும் வந்த தலைவனோடு காமக்கிழத்தி, 'நின் குறியிடததே சென்று நின்னைக் காணாது, எம்மிடததே வந்து எம் கதவத்தைத் தட்டிக் கை வளையினாலே தம் வரவினைக் கூறும் பரத்தையரை நாங்கள் நோவோமா' என்று கூறி ஊடினாள் (கலி. 68:8,9). காற் சிலம்பொலிக்க வந்து பரத்தைசினங் கொண்டு நின் பலகை பொருத தலைமை நிறைந்த கதவத்தைத் தட்டியது தவறாகுமோ எனக் காமக்கிழததி தலைவனை நோக்கி ஊடிக் கூறினாள் (கலி. 90:11, 12). புத்தியானையாக வண்ணிக்கப்பட்ட பரத்தை மனைவாசலிற் கதவமாகிய கம்பத்தைச் சேர்ந்து நின்று தன்னழகைக் காட்டி ஒருவரும் போகாத படி காலைத் தடுத்து வீழ்க்கும் (கலி. 97:16,17). வரைகெழு செல்வன நகரில மகளிர்தம் கூந்தலில் சூடியிருநத கதவம் இல்லாத இதழகளையுடைய மலர்களில் தேனையருந்த வண்டுகள் மொயத்தன (பரி. தி. 1:31,32). கதவு 1. காணக.

**கதவு - 1. கதவம்.** பெருங்கையானை தன் கொம்பினைப் படைக்கலமாகக் கொண்டு பகைவர் மதிலினது கதவைக் குத்தியது (புறம். 3:9-11). களிறுகள், பகைவர் மதிலின் கதவை எறிந்து முனை மழுங்கிய கோட்டையுடைமையான உயிருண்ணும் கூற்றத்தை யொத்தன (புறம். 4:10-12). சோழன் நலங்கிள்ளி ஆவூரை முற்றியிருந்த காலத்து அடைத்திருநத நெடுங்கிளளியிடம் கோவூர்கிழார் 'பகைவர் முற்றியிருக்கும் காலத்துத் திறவாது அடைத்த திண்ணிலைக் கதவினையுடைய நெடிய மதிலின் ஒருபுறத்தே ஒடுங்கியிருப்பது நாணுத தகவுடைத்து' என்று கூறினார் (புறம். 44:14-16). கணைய மரத்தால் தடுக்கப்பட்ட கதவினைப் பொருது அரணை

அழித்தலால் களிற்றின் கிம்புரிகள் கழன்றன (புறம். 97:8-10) பாடுநர்க்கு ஈயாது அடைத்த கதவு காரணமாக இளவிச்சிக்கோவின் மலையைப் புலவர் பாடாது நீக்கினர் (புறம். 151:10-12). கணைய மரத்தைக் குறுக்கிட்டு அமைந்த திண்ணிய நிலையையுடைய கதவையுடையது மதில் (புறம். 341:4,5). ஆடுகோட்பாட்டுச் சேரலாதனின் களிறுகள் கணைய மரத்தால் பாதுகாக்கப்பட்டு இரும்பினால் பிணித்த பலகையாற் செய்யப்பட்ட பல நிலைகளையுடைய கோபுர வாயிலிலுள்ள கதவைக் காணின் மதஞ்செருக்கித் தோட்டியைக் கடந்து சினத்தால் அடங்காமல் கொம்பாற் குத்தும் (பதி. 53:15-21). குடில், சிறுதூற்றையுடைய வாயிலையும் கழிகளாற் செறித்துக் கட்டப்பட்ட கதவினையும் உடையது (பெரு. 148,149). வையையன்ன வழக்குடைய மதுரை நகரத்தின் வாயில், பலகால் நெய்யிடுவதால் கருநிறம் வாய்ந்த திண்ணிய, பொருந்திய கதவினை யுடையது (மது. 354,356). அறம் நிலைபெற்ற அட்டிற் சாலைகளின் மதில்கள், புலிப் பொறியினையும் பலகைகள் தம்முட் பொருந்திய கதவினையும் உடையன (பட். 40-43). திருமாவளவனின் போர் யானைகள் பகைவரது காவலுடைய அரண்களை அழித்து அவர்தம் கோபுர வாயிற் கதவுகளை முறிக்கும் கொம்புகளை உடையன (பட். 229-231). பெரிய மதிற் கதவினைப் பொருத களிற்றியானையது மருப்பிலுள்ள இரும்பாற் செய்த பூண் (கிம்புரி) போன்றது தலைவியின் கரிய முலைக்கண் (அகம். 26:6-8). யானை வேட்டைக்கு எழினி வர மறுத்தமையால் கடுஞ் சினங் கொண்ட வேந்தன் மத்தியை ஏவ, அவன் அவ்வெழினியின் பல்லைப் பறித்து வந்து வெண்மணி என்னும் ஊரினது வாயிற் கதவிலே பதித்தான் (அகம். 211:9-15). தொண்டிப் பொருநனான பொறையன் தன் பகைவனான மூவனைப் போரில் வென்று அவன் பற்களைப் பிடுங்கி வந்து தன் வாயிற் கதவில் பதித்தான் (நற். 18:2-5). பெருஞ்செல்வம் நிலைபெற்ற, மிகுகின்ற சோற்றையுடைய அகன்ற மனையின் பலகைகள் தம்மிற் பொருந்தின கதவைத் தீண்டி நின்று தலைவி தனித்து வருந்தினாள் (கலி. 83:1,2). வேற்படைகளைத் தைத்துச் செறித்து ஆக்கிய நெடிய கதவினை இட்டு வாயிலை அடைத்து அழகு கொண்ட எயிலைக் களிறு குத்தி அழித்தது (கலி. 135:3,4). கதவம் காண்க.

2. மறை. இரவுக்குறி வந்து மீளும் தலைவன் செல்நெறி, மரையாவினைக் கொன்று புலிமுழங்கும் தீமையுடைத்து; ஆதலின் நம் களவொழுக்கத்தை மறைக்கும் காலம் இதுவன்று; எனவே கதவை - மறையை - வெளிப்படுத்துவேன் என்று தோழி தலைவியிடம் கூறினாள் (குறு. 321).

**கதழ்** - விரைவு. வேற்படைத்தலைவர் கதழ் - விரைவு - புகழ், வன்கண்மை ஆகியவற்றைக் கொண்டவர் (புறம். 377:27). கதழ் சிறகினை யுடைய பறவை போலத் தேர் விரைந்தது (பதி. 25:12,13).

**கதழ்வு** – அலறல். யாளி தாக்குகையினால் யானைக் கூட்டம் கதழ்வு - அலறல் - செய்தாற் போன்று ஆலை ஆரவாரிக்கும் (பெரு. 258-260).

**கதன்** - சினம். களிற்றியானைகளின் கதன் - சினம் - அடக்கிய வெளிறில்லாத கட்டும் தறிகளைக் கொண்டது தொண்டைமான் இளந்திரையனின் கோபுரவாயில் (பெரு. 396). மதநீர் ஒழிந்த கதன் அடங்கிய யானையின் ஒரு மருப்புப் போன்று குன்றில் அருவி இலங்கியது (நற். 18:8-10). வெள்ளை எருத்தின் கதன் அஞ்சாது பாய்ந்த பொதுவனைச் சாடி அது நுனைக் கோட்டால் குத்திக் குலைத்தது (கலி. 101:27-29). கூர்மருப்புடைய காரி ஏற்றின் கதன் அஞ்சாது தழுவுபவன் ஒள்ளிழை அணிந்த ஆய்ச்சியின் கூந்தலில் துயில்பெறுவான் (கலி. 104:20,21). கொள்ளுதற்கரிய கொலை ஏற்றுக் காரியின் கதன் அஞ்சாது தழுவின ஆயனுக்கே சுற்றத்தார் தலைவியைக் கொடை நேர்ந்தனர் (கலி. 104:73-75).

**கதி** - 1. ஓட்டம். யானைக்கட் சேய் மாந்தரஞ்சேரலிரும்பொறை இறந்ததால் காற்றுப் போல் விரைந்து செல்லும் இயல்புடைய மனம் செருக்கிய குதிரைகள் கதி - ஓட்டம் – இன்றிக் கிடந்தன (புறம். 229:20,21).

2. நெறி. நெறியல்லாத கதி - நெறி - சென்று பெரும் பொருளை இழந்தவன் துன்புறுவான் (கலி. 136:11, 12).

3. இயல்பு. செவ்வேளின் ஊர்தியாகிய யானையின் பிளிற்றொலி முழக்கம் மூகிலினது இடிக்குரலைக் கேட்ட கதியிற்று - இயலபினை உடையது - (பரி. 8:17, 18).

**கதிர்** - 1. சுடர். 'நீ தண்கதிர் மதியம் போலவும் தெறுகின்ற ஒண்கதிர் ஞாயிறு போலவும் இவ்வுலகில் நிலைபெற்று வாழ்க' என முதுகுடுமிப்பெருவழுதியைக் காரிகிழார் வாழ்த்துகிறார் (புறம். 6:26-29). விரைந்து செல்லும் கதிரவனே, நீ பகற்காலத்தில் மட்டுமே பலகதிர்களையும் விரித்து விளங்குகிறாய்; ஆகவே நீ இரவும் பகலும் விளங்கும் எம் தலைவனுக்கு ஒப்பாக மாட்டாய் எனக் கபிலர் சேரமான் கடுங்கோவாழியாதனை அஞ் ஞாயிற்

றினும் உயர்த்துக் கூறுகிறார் (புறம். 8:6,10). கானப் பேரெயில் கதிர் நுழையாத மரம் செறிந்த காவற் காட்டினைக் கொண்டது (புறம். 21:5,6). பக்கத்தே நின்று கதிர் விடும் வானுறையும் மதி போலும் வெண்குடை உடையவன் யானைக்கட் சேய் மாந்தரஞ் சேரலிரும்பொறை (புறம். 22:10-12). 'எங்கோன் வளவன் வாழ்க' என்று நினது பெருமை பொருந்திய வலிய தாளைப் பாடேனாயின் வாழ்நாட்கலகாகிய பல் கதிர்ச் செல்வன் யான் இருக்குமிடத்தில் தோன்றுதலறியான் என ஆலத்தூர் கிழார் சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனை நன்றியறிதலோடு பாடுகிறார் (புறம். 34:16-18). விளங்குகதிர் ஞாயிறு நான்கு திக்கினும் தோன்றினாலும் வெள்ளி தென்திசைச் செல்லினும் காவிரியாறு பல கால்களாய் ஓடி உலகை உண்பிக்கும் (புறம். 35:6-8). சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனைச் சினப்பித்தோருடைய நாடு வெங்கதிர் ஞாயிறு பல விடத்தும் செறிந்து தோன்றும் தீ நிமித்தம் கண்டு பெருங்கலக்க மடைந்துள்ளது என்று கோவூர் கிழார் குறிப்பிடுகிறார் (புறம். 41:6,16-18). சுடுகின்ற கதிரையுடைய ஞாயிற்றின் வெப்பத்தைத் தாம் பொறுத்துக் காற்றை உணவாக ஏற்று அச் சுடரோடு சூழ வருபவர் அவிர் சடைமுனிவர் (புறம். 43:2-4). கதிர்வீசும் மணிகளாற் கணனைப் பொருகின்ற மாடத்திலுள்ள இலங்குவளை மகளிர் முத்துப் போன்ற வெண்மணலில் வேதிகைக்கண் விளையாடுவர் (புறம். 53:1-3). விசும்பில் இருளகற்றும் வெங்கதிர்ச் செல்வன் போலவும் தண்கதிர் மதியம் போலவும் இவ்வுலகத்துடன் நின்று நிலை பெறுவாயாக என இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய பாண்டியன் நன்மாறனை மதுரைக் கணக்காயனார் மகனார் நக்கீரனார் வாழ்த்துகிறார் (புறம். 56:21-25). அதியமான நெடுமானஞ்சி கதிர் விடுகின்ற நுண்பூணணிந்த அழகிய வலிய மார்பினை உடையவன் (புறம். 88:4). மான் கணத்தைத் தொலைத்த குருதி தோய்ந்த வீரக்கழலையும் கதிர் மணி விளங்கும் சென்னியையும் கொண்ட வல்வில் வேட்டுவன் கண்டீரக்கோப் பெருநள்ளி ஆவான் (புறம். 150:5-7). உருகெழு ஞாயிற்றின் ஒண் கதிரால் தின்னப்பட்ட முளிந்த புற்காடு தழைக்க மழைபொழிந்தது (புறம். 160:1-3). புலவர் புகழ்ந்த பொய்யா நல்லிசையையும் விரிகதிர் ஞாயிறு வானத்தின்கண் பரந்தாலொத்த சேய்மைக்கண் விளங்கும் தலைமையையும் உடைய செம்பியர் மரபினன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் (புறம். 228:7-10). பசுங்கதிர்த் திங்களைப் போலும் வெண்கொற்றக்குடையை உடைய ஒளி வீசும் ஞாயிறுபோன்ற அதியமான் (நடுமானஞ்சியின் புகழ் மாயா என அவன் இறந்த ஞான்று ஔவையார் குறிப்பிட்டார் (புறம். 231:4-6). விசும்பின்கண்ணை தாகிய நீத்தத்தைக் கடந்து சென்ற ஞாயிற்றின பசுங்கதிர் மங்கிய அந்திமாலைப்போதில் மிகச் சிறுபொழுது கழிந்த பின்னர்க் கிணைஞன நலலியக் கோடனின நெற் கூட்டின் அடியில் தடாரி தழுவிப் பாடினான் (புறம். 376:1-6). இராசசூயம் வேட்டபெருநற்கிள்ளி மலை பயந்த மணியும் காடு பயந்த பொன்னும் கடல் பயந்த கதிர் முத்தும் பிறவும் தான கனவிற் கண்டாங்கு நனவில நல்கினான என உலோசசனார் கூறுகிறார் (புறம். 377:16-20). முன்னாள் நண்பகலில் பாலைவழி நடந்து வருந்தி ஞாயிறறின் கதிர்மறைந்த இருள்பரவிய மாலைப் போதில் உன்னுடைய மனைமுன்றில் நின்று யான் வந்ததை அறிவித்தேன் எனப் பிடவூர் கிழான் மகன் பெருஞ்சாத்தனிடம் கிணைஞன கூற்றாக மதுரை நக்கீரர் கூறுகிறார் (புறம். 395:21-24). மாரிக் காலத்து விசும்பின்கண் தோன்றும் விண்மீன்களின் நடுவே விளங்கும் விரிந்த கதிர்களை யுடைய வெண்டிங்களைப் போல நினபுகழ் விளங்கித் தோன்றுக என வாட்டாற் றெழினியாதனை மாங்குடி கிழார் வாழ்த்துகிறார் (புறம். 396:26-28). வேல் கைக்கொண்டு அரும் போர்களைக் கடக்கும் ஆற்றலுடைய கிள்ளிவளவனின் தண்ணிழலில் உள்ளோமாகையால் பெருங்கடல் முடிவெய்தும் ஊழிக்காலமே வரினும் தெறும் கதிரையுடைய ஞாயிறு கீழ்த்திசை மாறித் தென்திசைத் தோன் றினும் யாம் அஞ்சுவே மல்லேம் எனறு எருக் காட்டூர்த் தாயங்கண்ணனார் கூறுகிறாா (புறம். 397:23-27). இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன மணிகள் இழைத்த பசும்பொனனாரம் தன்னிடை அழுத்தின கதிமிக்க வயிரமுடன் மாறுபட்டு விளங்கும் மார்பை உடையவன (பதி. 16.15-17). செருப்பென்னும் மலையில் கோவலர் புல்லுடைய நிலத்தில் ஆநிரைகளை மேயவிட்டுக் கற்கள உயர்ந்த காட்டிடத்தே கதிர்மணிபெறுவர் (பதி. 21: 20-23). அகன்ற வானத்தின்கண் பகற்பொழுது உண்டாதற் பொருட்டுச் சுடுகின்ற கதிர்கள திகழும் அச்சம் பொருந்திய ஞாயிற்றின் நிறம் விளங்கிய தன்மையைக் கொண்டு சினந்து வந்த வேந்தர்தம் எயில்களை ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் கைக்கொண்டான் (பதி. 52:26-31). ஆடு கோட்பாட்டுச் சேரலாதனின் நாட்டகத்துள்ள ஊர்களில் புன்புலம வித்தும் கலப்பையின் கொழுச்

சென்ற படைச்சாலின் பக்கத்தே கதிர்மணிகளைப் பெறுவர் (பதி. 58:15-19). புல்லிய இருள் விடிய வருத்தும் நெடிதகன் றொழிய உலகெங்கும் ப ந்த இருள் நீங்க ஞாயிறு பல்கதிர் பரப்பிக் கொண்டு கிழ்த்திசையில் தோன்றியது (பதி. 59:4-6). செல்வக் கடுங்கோ வாழியாதன் நாட்டகத்துள்ள ஊர்களில் பளிங்குடன் செம்பரல் விரவிக் கிடக்கும் மேட்டு நிலத்தில் இலங்குகதிர்த் திருமணிகளைப் பெறுவர் (பதி. 66:18-20). படைத்தலைவர் படைகளை ஆரா யவும் வெற்றிக் கொடி அசையவும் விளங்கும் கதிர்வீசும் மணி பதித்த கொம்பென்னும் வாச்சி யத்தோடு வலம்புரிச் சங்குகள் முழங்கவும் சென்று செல்வக்கடுங்கோ வாழியாதன் பல போர்களில் பகைவர்களை வென்றழித்தான் (பதி. 67:5,6,12). நான்காக வேறுபட்ட திசையிடமெல்லாம் ஒன்று போலப் பகையின்றி ஆக்கம் எய்தச் செல்வக் கடுங்கோவின் முன்னோர் இலங்கு கதிர்த்திகிரியைச் செலுத்தினர் (பதி. 69:16,17). பெருஞ்சேர லிரும் பொறையின் நாட்டிலுள்ள ஊர்களில் உழவர் பகன்றைப் பூவால் தொடுத்த மாலையை வெள் ளாடை போலச் சூடிக்கொண்டு உழும் படைச் சாலிடத்தே இலங்கு கதிர்த் திருமணி பெறுவர் (பதி. 76:11-15). முருகனின் ஆறுமுகங்களுள் ஒன்று மாயிருள் ஞாலம் மறுவின்றி விளங்கப் பல கதிர் களையும் விரித்தது (முரு. 91,92). விரியும் கதிர்களை யுடைய வெள்ளி முளைத்த நள்ளிருள் விடியலில் கிணைஞன் கரிகாற் பெருவளத்தானிடம் சென்று தான் விரும்பிய பாடலொன்றைப் பாடத் தொடங்கி னான் (பொரு. 71-73). கடல்மீது பகலைச் செய்யும் கதிர்களைப் பரப்பி எழுந்து விண்ணிடத்தே மெல் லச் செல்லும் ஞாயிறு போல, பிறந்து தவழ்தலைக் கற்ற நாள் தொடங்கிச் சிறந்து தன் நாட்டைத் தோளில் தாங்கி நாளும் வளர்த்தவன் கரிகால் வளவன் (பொரு. 135-138). பகற்பொழுதைத் தரு கின்ற ஞாயிறு பல கதிர்களைப் பரப்புதலால் குல்லை கரிய, மரக்கிளைகள் தீயுண்ண, மலையில் அருவி இல்லையாக, மேகம் கடல்நீரை முகக்க மறந்து போக, நாட்டில் வற்கடம் தோன்றியது (பொரு. 233-237). வேனிற்பருவத்தின்கண் ஞாயிற்றின் கதிர் மிகவும் வெம்மையைச் செலுத்தியதால் எங்கும் பாலைத்தன்மை நிலைபெற்றது (சிறு. 9-11). முதற் சூலையுடைய கழிமுள்ளி கதிர்வீசும் நீலமணியைப் போலப் பூத்தன (சிறு. 148). நன்றாகச் சமைக்கப் பெற்ற பல்வேறு அடிசிலைக் கோள்களால் சூழப் பட்ட இளங்கதிர் ஞாயிற்று மண்டிலத்தை இகழும் தோற்றம் உடைய பொனகலத்தில் ஓய்மாநாட்டு நல்லியக் கோடன் தானே நினறு பாணர்க்கு விரும் பும் உணவை ஊட்டுவான் (சிறு. 241-245). கூதிர்க் காலத்தில் வானிடத்து வெண்டிங்கள் பால்போலும் கதிரைப் பரப்பி ஊர்ந்து நிற்கும் (சிறு. 250,251). அகலிரு வானத்தில் பரந்த இருளைப் பருகிப் பகற் பொழுதை உலகில் உண்டாக்கும் பல்கதிர்ப் பரிதி வேனிற்காலத்தே மிகுந்த சினத்தோடு தோன்று வான் (பெரு. 1-3). ஒலிக்கும் கடல் தந்த கதிர்முத்தம் வைகல்தோறும் சிறந்து விளங்கியது (மது. 315,324). அங்கண்விசும்பு மறையும்படி காற்றைப் பிளந்து கொண்டு ஒண்கதிர் ஞாயிற்றைத் தாம் சேர்தலை நெஞ்சாலே கருதிக் கொண்டு பறக்கும் செங்கால் அன்னச் சேவலைப் போல வெண்ணிற மயிரினை உடைய குதிரைகள் ஓடும் (மது. 384-387). வெயிற் கதிர் மங்கிய ஞாயிற்றையுடைய செக்கர் வானத் தைப் போன்று சிவந்து நுண்ணிய வடிவாலே கண் களை வெறியோடப் பண்ணிச் சிந்தி விழுமாறு போன்ற ஒள்ளிய பூத்தொழிலை யுடைய ஆடை களைப் பொன்புனை உடைவாளோடு பாண்டியன் தலையாலங் கானத்துச் செருவென்ற நெடுஞ் செழியன் அழகுபெறக் கட்டினான் (மது. 431-434). சிறு பிள்ளைகள் திண்ணிய கதிரையுடைய மதாணி என்னும் அணியை அணிந்திருந்தனர் (மது. 461). விளங்குகதிர் ஞாயிற்றின் இலங்குகதிர் இள வெயில் தோன்றினாற் போலப் பொன்னின் ஒளி சூழ்ந்து குற்றமற்றுப் பேரணிகலன்கள் விளங் கும் (மது. 702-704). தலையாலங்கானத்துச் செரு வென்ற பாண்டியன் நெடுஞ்செழியன் வைகறை யில் எழுந்து திண்ணிய வயிரத்தை யுடைய சந்தனத்தைப் பூசிக் கொண்டு கதிர்விடும் ஒள்ளிய வடமாகிய முத்தணிந்த மார்பில் வண்டுகள் மொய்க்கக் கழுத்தில் தாழ்ந்த மாலையை அணிந்து கொண்டான் (மது. 715-718). திசைகளில் விரிந்த கதிரைப் பரப்பிய அகன்ற இடத்தை யுடைய ஞாயிறு மேற்றிசைச் செல்ல எழுந்தது (நெடு. 72-74). ஞாயிற்றின்கதிர் சுடும் வெப்பம் விளங்கும் உச்சிப் போதின்கண் விண்ணிற் பறக்கும் பறவைகளெல் லாம் தாம் விரும்பி உறையும் கூடுகளிலே சென்று அடங்கின (குறி. 45,46). பகற்பொழுது நீங்க ஏழு குதிரைகள் பூண்ட தேரைச் செலுத்திப் பல கதிர் களைக் கொண்ட ஞாயிறு மேலை மலையிடத்துச் சென்று மறைந்தது (குறி. 215, 216). அரசன் பொருளைக் காக்கும் பழம்புகழையுடைய சுங்கம் காப்போர் கதிர்ச்செல்வனின் தேரில் பூட்டப் பெற்ற குதிரைகள் போன்று மடிந்திராமல் நாள் தோறும் சுங்கம் கொண்டனர் (பட். 120-125). காவிரிப்பூம்பட்டினத்தில் பல்வேறு வடிவமும் வண் ணமும் உடைய கொடிகள் வானகத்தே செறிதலின்

செல்கின்ற கதிரவனின் கதிர்புகாது (பட். 182,183). வளப்பத்தை உண்டாக்கும் உழவர் நெல்லை முகந்து கொடுக்க மிடாவினின்றும் வார்த்த பசிய முளையா லாக்கின கள்தெளிவை இளங்கதிர்களை யுடைய ஞாயிறு எழும் நாட்காலத்தே களங்கள் தோறும் பெறுகுவிர் எனக் கூத்தர் ஆற்றுப் படுத்தப் பெறுகிறார் (மலை. 462-464). இருளற விசும்புடன் விளங்கும் விரைந்து செல்லும் செல வினையுடைய ஞாயிற்றின் கடுங்கதிர் எறித்தமை யால் உண்டாய பிளவிடங்களை முருங்கை வெண் பூக்கள் பரவி மறைத்தன (அகம். 53:1-4). தலைவி யின் சிறுநுதல் நிலவொளி பரந்த பல்கதிர்களைக் கொண்ட திங்களை ஒத்த அழகு நீங்கப் பெற்றுப் பீர்க்கம் பூவின் நிறத்தைக் கொண்டதோ எனப் பொருள்வயிற் பிரிந்த தலைவன் தலைவியை நினைந்து கூறுகிறான் (அகம். 57:11-13,19). அச்சம் தரும் நல்ல பாம்பு கதிர் உண்டாக உமிழ்ந்த மணி விளக்கில் களிற்றி யானையைக் கொன்ற புலி அதனைப் புலர இழுத்துச் செல்லும் (அகம்.72:13-15). காட்டுப்பூனை இருளிடத்தில் விழித்துப் பார்த்தாற் போன்று கதிர்விடும் முத்துக்களால் இயன்ற ஒற்றைவடம் தலைவியின் முலையிடைக் கிடந்து விளங்கியது (அகம். 73:3,4). பாலைநிலப் பரப்பு தெறுகதிர் ஞாயிறு வானத்துச்சியில் நின்று காய் தலின் மழைநீர் வற்றிப்போன பேய்த்தேரையுடை யது (அகம். 89:1,2). உயிர்களுக்கு எல்லாப் பொரு ளும் விளங்குதற்குக் காரணமான பகற்பொழுதை வழங்கிய பல்கதிர் ஞாயிறு வளம்கெழு மாமலை களெல்லாம் தம் பயன்கள் கெடும்படி காய்ந்ததால் அருவிகள் நீரற்றுப் போயின (அகம். 91:1-3). வான மாகிய கடலிற்குத் தோணிபோலப் பகற்பொழு திலே பலகதிர்களை உடைய கதிரவன் தோன்றி னான் (அகம். 101:12,13). மலையில் சென்று மறையும் வலிய கதிர் மழுங்கிய கதிரவன் அரவம் விழுங்கும் மதியைப்போலக் காட்சியளித்தான் (அகம். 114:4,5). பகற்பொழுதை மெல்ல மெல்லக் கழித்துப் பல்கதிர் ஞாயிறு மேலைத் திசைக்கண் உள்ள மலையைச் சென்றடைந்தது (அகம்.120:4,5). வழுதியின்கொற்கை முன்றுறையில் கடலினின்றும் தவழ்ந்து வரும் அலை கள் கொணரும் ஈர்ங்கதிர் முத்துக்கள் கவர்நடைக் குதிரையின் காலை வடுப்படுத்தும் (அகம். 130:9-11). முதுவேனில் பருவத்தில் ஞாயிறு தன் கதிர்களையே கைகளாகக் கொண்டு ஈரத்தைக் கவர்ந்து பசுமை அற்றுப் போம்படி வெதுப்புதலின் நிலம் பிளவு பட்டது (அகம். 164: 1-3). அசைகின்ற ஞாயிற்றின் கதிர்கள் சூழ்ந்த வெம்மைவிளங்கும் நிலம் மரங்கள் தலைகருகி வளம் குன்றியது (அகம். 169: 1, 2).

கதிர்கள் பல ஒழுங்குற வமைந்த நேமியினைக் கொண்ட செல்வன் (திருமால்) மார்பில் பொருந்திய மாலை போன்று பல்வேறு நிறம் பொருந்திய வானவில் விண்ணில் தோன்றியது (அகம். 175: 14-16). போரில் மாய்ந்த எயினனை ஞாயிற்று ஒண்கதிரின் வெப்பம் தாக்காதவாறு புதிய பறவை களின் பெருங்கூட்டம் வானவெளி மறையும்படி ஒருங்கு சேர்ந்தது (அகம். 181: 7-10). வானத்தின் மேற்றிசையில் சென்று வீழ்கின்ற கதிர் மழுங்கிய ஞாயிற்று மண்டிலத்தால் உண்டான செவ்வான மும் கரைந்து போன இம்மாலைக் காலத்தில் நின்தேரின் மாலையாகிய மணிகள் பலவும் ஒரு சேர ஒலிக்கும்படி நீ குறித்த பருவம் தப்பாமல முன்றிலில் வந்து நின்றது இனிதாயிருந்தது எனத் தோழி தலைவனுக்குக் கூறினாள் (அகம். 184: 15-19). ஞாயிற்றின் வெயில முதிராது இளங் கதிராக இருக்கின்ற விடியற்காலையில் பைங்கண யானை உணவு பெறாமையால் பனையின வெளிற் றைத் தின்னும் (அகம். 187: 18, 19). கொற்கைத் துறைமுகத்தில் அவிர்கதிர் முத்துக்களோடு வலம் புரிச் சங்குகளையும் சொரிந்து பனித்துறைக்கண் தெய்வத்தினை நெய்தல் மகளிர் வழிபாடு செய் தனர் (அகம். 201: 4-7). ஆஅய் எயினன் என்பான மிஞிலி என்பானொடு செய்த பாழிப் போரில் விழுப்புண்பட்டு இறந்தானாக அவனைக் கதிர வனுடைய ஒண்கதிர் சுடாமல் பறவைகள் பலவும் ஒருங்கு கூடித் தம் சிறகுகளால் பந்தலிட்டு நிழல செய்தன (அகம். 208: 5-12). பகற்பொழுது கழியப் பல்கதிர்களைச் சுருக்கிக் கொண்ட ஞாயிறு மறை கின்ற அந்திப் பொழுதின்கண் அகன்ற புனங் களில் எரிபோன்ற கதிரையுடைய திருமணி ஒளிரும் (அகம். 213: 11-14). அகலிரு வானம் முழுவதும் மறையப் பரந்து பலகதிர்களையுடைய ஞாயிற்றை மறைத்த மேகம் களிற்றினம் குளிரப் பெரும் பெயல் பொழிந்தது (அகம். 214: 1-4). வேந்தன் தன் பகைவருடன் மாறுபட்டுக் கதிர்வீசும் நெடு வேல் ஒளிரும் பாசறையில் அடு புகழை விரும்பி உறங்கா னாயினன் (அகம். 214: 5-7). நீர்வற்றிப் போன நெடிய வழிகள் பகலைத் தோற்று விக்கும் பலகதிர்களையுடைய பருதியஞ் செல்வன அகன்ற இடத்தை யுடைய வானத்தினின்றும் தனது ஆணையாகிய ஆழியினால பிளந்து விட்டாற் போன்ற பிளவுகளை உடையன (அகம். 229: 1-3). பெருங்கடலினின்றும் தனனை உலகு தொழும்படி தோன்றி விளங்கும் கதிர் விரி யப் பெற்ற ஞாயிற்று மண்டிலம் குளங்களிலுள்ள ஊற்றுக் கண்களினும் நீர்வறந்து போகும்படி தன்

வெப்பத்தைப் பரப்பியது (அகம். 263:1-3). உயிர் களுக்கு உணவு முதலிய பயன்களைத் தரும் பல் கதிர் ஞாயிறு, அவ்வுயிர்களுக்கு விளக்கமான தொழில்களையும் தருவதற்கு நிலத்தின் வலமாக எழுநது விளங்கிக் கடலில் தோன்றும் (அகம். 298: 1,2). பாலைநிலத்தில ஞாயிற்றின் மிக்க கதிரால் தோன்றும் ஆவியாய அலைகளை நீர் என்று விரும்பி விலங்குகள் மிகவும் ஓடி அலையும் (அகம். 327:8-11). மலையினிடத்து நெடிய சோலையினூடே துளிகள் அசைகின்ற குளிர்ச்சியோடு விளங்கும் வெள்ளிய அருவிநீர் போலத் திங்களுடைய அழகிய கதிர்கள் நிலத்தில் வீழ்ந்து பரவின (அகம். 362:13-15). இலங்கு சுடர் மண்டிலம் (ஞாயிறு) விண்ணனி டத்தே விட்டு நீங்கிப் பல்கதிர் மழுங்க மேற்கு மலையை எய்தும்போது பிணையைக கலைமான் தனது ஆண்குரலால் அழைக்கும் (அகம். 367:1-3). தலைவி பனிக்காலத்தில் சூரியனுடைய கதிர்கள் சுருங்கி மறையக் குவிந்து அழகிதாக அசைகின்ற வெயிலை உள்பொதிந்த தாமரை மலரின் உள்ளி டத்தைப் போன்ற சிறுவெம்மையள் (குறு. 376:3-6). பசுங்கதிர் மதியமும் சுடரும் திகிரியோனுக்கு (திருமாலுக்கு) கண்களாகும் (நற். க. வா. 4,7). தேன் கலநத வெண்சுவைத் தீம்பாலை விரிகதிர்ப் பொன் கலததில் இட்டு, அதனை ஒருகையில் ஏந்திச் செவிலி சிறுகோலோச்சித் தலைவி சிறு விளையாட்டியாய் இருந்தபோது உண் என்று அதட்டினாள் (நற். 110: 1-4). எல்லாம் விரும்புதலைச் செய்யும் ஆதித்த மண்டிலம் தன் ஒளி விசும்பிற்செல்ல இலங்கும் கதிர்கள் மழுக்கமடைந்து மடல் வலித்த தலை வனுக்குத் துனபத்தைத் தந்தது (நற். 152:3,4). கட லருகுள்ள புன்னையின் பக்கத்துள்ள தாழைமடல் நெடுஞ்சுடர்க்கதிரால் இருளைப் போக்கி எழுந்து உள்ளே கொதித்து ஆகாயத்தில் சென்ற வயங் கொளி ஞாயிற்றின பாடு சாய்கின்ற அழகுபோலத் தோன்றும் (நற். 163:7-11). மழைபெயயா தொழிந்த பாலைநிலத்தில் அந்நிலத் தெய்வமாகிய செங்கதிர்ச் செல்வன் காய்தலானே நிலம் பிளவுபட உலகம் மிகவும் வருநதித் துன்புற்றது (நற். 164:1-3). பல கூறுகள் ஒன்றாகச் செறிநதாற் போன்ற பலகதிர் களின் இடைஇடையே பாலை முகந்து வைத்தாற் போன்ற பசுவெண்ணிலவினை யுடைய மேகத்தின் பிடர்மேல் கலைகள் நிறையுறு மதியம் காணப் பட்டது (நற். 196:1-3). அரும்புகட்டிய கதிர்போன்ற ஒள்ளிய பூங்கொத்தையுடைய நொச்சிமாலை சூடித் தெருவில் திருவிழா எனக் குயவன் அறிவிப்பான் (நற். 200:1-4). குணகடலினின் றெழுந்து நன்னிறக் கதிர்களைப் பரப்பிப் பகற்பொழுதைச் செய்யும் செல்வன் (ஞாயிறு) குடமலை சென்று மறைந்தான் (நற். 215: 1,2). ஞாயிறு மேலைத் திசையில் இறங்கிக் கதிர்மழுக்கம் அடைந்தது (நற். 218: 1). கடலிற் பெருமீனைப் பிடிக்கும் சிறுகுடிப் பரதவர் மரக்கலங்களுக்குத் தெரியுமாறு இரவி லிட்ட செறிந்த கதிர்களையுடைய ஒள்ளிய விளக் கம் முதிராத இளஞாயிற்றின் எதிரே தோன்றிய ஒளியை ஒக்கும் (நற். 219:5-8). ஆடுகள் தொழுவம் திரும்பப் பார்ப்பன மகளிர் முல்லைமல ரணிய ஆதித்தமண்டிலம் மலையை அடையும் கதிர் மழுங் கிய மாலைப்பொழுதில், தலைவன் இல்லாமையால் புல்லென்ற வறுமனை நோக்கித் தலைவி மெல்ல வருந்துவளோ என வினைமுற்றி மீள்வான் தன் தேர்ப்பாகற்குக் கூறினான் (நற். 321:1-7). கடுங்கதிர் ஞாயிறு மலையில் மறைந்தது (நற். 338:1). நிலவு நீலநிற விசும்பில் பல்கதிர் பரப்பிப் பால் நிரம்பிய கடல் போலப் பரந்துபட்டது (நற். 348:1,2). அகலிரு விசும்பில் அரவினால் விழுங்கப் பெற்ற பசுங்கதிர் மதியத்தின் விரிந்த நிலாவைப் போலக் கூந்தல் சேர்ந்த சிறுநெற்றி யுடையவள் தலைவி (நற். 377:6-9). வேங்கைப் பூஞ்சினை துழாவிக் கமழ்தாது ஆடிய மயில் பசிய கற்பாறையின உச்சிமீது தன் கூட்டத்தோடு கூடி ஞாயிற்றின் மிக்க கதிராகிய இளவெயிலைத் துய்க்கும் (நற். 396:3-7). விரிகதிர் ஞாயிறு மேலைத் திசையில் சென்று மறையும் (நற். 398: 2). ஞாயிற்று மண்டிலம் போன்று தோன்றும் பல்கதிர்களையுடைய வேள்வித்தீயினை உடையது தேனூர் (ஐங். 57: 1, 2). கிள்ளி கதிர் இலை போன்ற நெடுவேலை உடையவன் (ஐங். 78: 1). வலம்புரிச் சங்குகள் உழுத மணல்மிக்க அடை கரையில் அவை ஈன்ற இலங்கு கதிர் முத்துக்கள் இராப்பொழுதில் இருள்கெட இமைக்கும் (ஐங். 193: 1, 2). பாலைவழிகள் நெடிய மூங்கில்கள் கரிந்து சாய, மலைகளும் பிளக்க, வேனிற் பருவம் நீண்டு கடுங்கதிர் ஞாயிறு தெறுதலினாலே வெப்ப முடையவாயின (ஐங். 322: 13). கதிரவன் தன்னு டைய கதிர்களையும் சுருக்கிக் கொண்டு மறைந் தான் (ஐங். இ. 5:2). நடுவுநிலை நீங்கி அருளில்லாத அமைச்சன் தன் மனத்திற் கிடநத செயலைக் கூற அது கேட்டுச் சூழ்ந்த அரசனது கொடுங்கோல சுடுமாறு போல, ஞாயிறு கடுகிக் காய்கின்ற கதிர் களை மூட்டிச் சினத்தாற் சுட்டது (கலி. 8: 1-3). உறியில் தங்கிய கமண்டலத்தையும் உரைசான்ற முக்கோலையும் கொண்டு எறித்தலைச் செய்யும் ஞாயிற்றின் கதிர்களைத் தாங்குகையினாலே எடுக் கப்பட்ட குடைநிழலில் அந்தணர் காட்டிற் சென்ற னர் (கலி. 9: 1-3). மலையின் மேலுள்ள மூங்கில்கள்

வாடும்படி ஞாயிற்றின் கதிர்கள் காய்ந்தன (கலி. 11 : 14). தலைவியின் திருமுகம் இனிய கதிர்களை யுடைய திங்களை ஒக்கும் (கலி. 15 : 16). புனை யிழாய், காதலர் நாம் தனிமையுறும்படி பொருளை விரும்பிப் பகைப்புலம் என்று கருதாராய்ப் போதற்கு நினைந்த அரிய வழியிடத்தில் செறிந்த கதிரையுடைய ஞாயிற்றை 'நின் சினம் தணிக' என நாம் வேண்டிக் கோடல் நம் கற்பிற்கு இயைவதொரு காரியமோ' என்று தலைவி தோழி யிடம் மொழிந்தாள் (கலி. 16:9-12). காவல் மேற் கொண்டு பகைவர் நாட்டை விளக்கத் துணிந்த தலைவனை நோக்கி, 'நீண்ட கதிரினையுடைய திங் களின் நிறைவு பின் தேயுமாறு போல நிலை நில்லாமல் நாள்தோறும் கெடும் அழகு தலைவி யுடன் நிலையுமோ' எனத் தோழி வினவினாள் (கலி. 17: 5-8). பல உணவுகளையும் விளைந்து கொடுத்து நுகர்விக்கும் நிலம் ஈரம் அறும்படி செல்க[illegible] ஞாயிறு மிகவும் சினததைச் சொரியும் (க[illegible] 1,2). வீழ்கினற ஞாயிற்றின கதிர் அலர்த் தின பூவின தேனை உண்ணும் துமடியின் யாழோ சை[illegible] ஒத்த முழங்குகின்ற ஓசையுடைய மாலைக் காலம் தலைவியை வருத்தும் (கலி. 29: 16,17). உலகிற்கு உணவுகளை வீளைத்தற்குக் காரண மான மதியத்தின் பல்கதிர் பாலை ஒத்து விளங்கும் இராப்பொழுதுடன் அணிகள் குளிரும்படி வாடைக் காற்று வந்தது (கலி. 31:11,12). நிறைமதி இனிய கதிர்களை விட்டது போல முகம் ஒளி பொருந்தி வருபவளை இவள் யாரோ எனத் தலைவன வியந்து கூறினான் (கலி. 56:4-6). விரி கதிரையுடைய ஞாயிறு விசும்பில் பரவ, விடியற் காலத்தே பொய்கையில் முறுக்கற மலர்ந்த மலர் களின் தேனை வண்டுகள் கூடி நுகர்ந்தன (கலி. 71 : 1-3). சிறுவனின் மென்மையான தலையில தாயர் மின்னுவதும் கதிர் விடுவதுமாகிய மூன்று வடங்கொண்ட அணியை அணிந்தனர் (கலி. 80:2). ஞாயிற்றின் கதிர் விரிகினற விடியற்காலையில கையிற்கொண்ட அலகால் உன மேனியில கீறியது நீ ஊர்ந்து வநத குதிரையோ எனத் தலைவி பரத்தையரைக் குதிரையாககித் தலைவனிடம் கூறினாள் (கலி. 96: 22-24). அரசன தனனைச் சேர்ந்தவர்க்குக் கதிரைச் சொரியும் மதியை ஒதத குளிர்ச்சியை உடையவன் (கலி. 100:3,4). இவ்வுலகு ஒருசேரப் பாண்டியனது ஒருமொழியைக கேட்ப தாக வென்று தொல் கதிரையுடைய சக்கரப்படை உடையானை வாழ்த்துவோம்; நீயும் வருக எனத் தோழி தலைவியிடம் கூறினாள் (கலி. 104: 78-80). பல்கதிர் ஞாயிறு பகற்பொழுதை முறைமையாற் செலுத்தி மலையிற்சென்று சேர்ந்தது (கலி. 118:4). அகன்ற உலகத்தை விளக்கும் தன பல்கதிரையும் தனக்கு வாயாகக் கொண்டு கான்ற பகற்காலத்தை மீண்டும் அவ்வாயால் விழுங்கினாற் போல அவற் றைச் சுருக்கிக் கொண்டு படுசுடருடைய ஞாயிறு மலையைச் சேர்ந்தது (கலி. 119:1,2). தெளிந்த கடற் பரப்பில் திரையை நீக்கித் தோன்றும் தண்கதிர் மதியம் தன் அழகு நிலவை மிகுதலைச் செய்தது (கலி. 121: 2, 3). பகற்பொழுது வந்து சேர்வ தற்குக் காரணமான தன் தெறுகின்ற கதிர்களைக் கதிரவன் தன்னிடத்தே மீட்டுக்கொண்டு மறைய இருள் உலகத்தே பரவியது (கலி. 129: 3, 6). நிரைத்த கதிரையுடைய ஞாயிறு மறைதலோடு சேர்ந்து பகற்காலமும் போகப் புலம்புகொள் மருள்மாலை உலகில் இருள் பரவுதலைத் தரும் (கலி. 130:5,7). ஞாயிறு தான் பரப்பிய கதிர் களைத் தன்னிடத்தே குவித்துக்கொண்டு மலையிற் சென்று மறைந்தது (கலி. 134:4). 'கதிர்களைப் பிறருக்குப் பகுத்துக் கொடாத ஞாயிறே, நீ மலையைச் சேருவாயாயின் என் தலைவரை நினைத்துத் தேடிப் பிடித்துக் கொண்டு வந்து தருவாயாயின், என் காமத்தீ அவியும்' எனக் கதிரவனை நோக்கித் தலைவி கூறினாள் (கலி. 142: 37-40). 'மறு நீங்கிய ஞாயிறே, நீ மலையிற் செனறு மறைவாயாயின், கடலின் நீரிடத்தே மீண்டுவந்து தோன்றிப் பகற்பொழுதை உண்டாக்குமளவும் தொய்யிலை எழுதாமல் கெடுத்தவனை யான் தேடுதற்குக் கைவிளக்காக நின் சில கதிர்களை எனக்குத் தருக' எனப் பிரிவாற்றாத தலைவி ஞாயிற்றைப் பார்த்துக் கேட்டாள் (கலி. 142:41-44). வளியே, பலகதிர்களையுடைய ஞாயிற்றின் ஒளி வீசும் இடமெல்லாம் சென்று நாடுதற்குரிய நீ, என் இயற்கை நலனை உண்டு ஒளித்தவனைக் காட்டுக எனப் பிரிவாற்றாத தலைவி அவ்வளியை நோக்கிக் கேட்டாள் (கலி. 144:40-42). ஞாயிறே, நீ உன எல்லாக் கதிர்களையும் பரப்பிவிட்டு இப்பகற காலத்தோடு மறைந்து போகாதிருபபதை நான வேண்டுவேன்; நீ சென்றால் மாலைப்பொழுது வந்து என்னைக் கொல்லும் என மாலைக்காலத திற் கஞ்சிய தலைவி கூறுகிறாள் (கலி. 145: 26-30). நிரைத்த கதிர்களை உடைய ஞாயிற்றை நோக்கிக கடல் சூழ்ந்த உலகமெல்லாம் சென்று தலைவனைத தேடிவரும்படி தலைவி கூறினாள் (கலி. 146: 27-29). யான் துயிலாமல் என்மேல் வந்து வளைத்த மதி யும் யானுற்ற வெவ்விய நோயை முறைபபட்டுக் கூறின் தன் கதிர்கள் ஒளி மழுங்கி நடுங்குவது போலே ஓடி மிகவும் சுழன்று திரியும எனப்

பிரிவாற்றாத தலைவி கூறினாள் (கலி. 146:39-41). ஞாயிறே, நீ எம் கேள்வன் யாங்குள னாயினும் கொண்டு வந்து காட்டுக; அவ்வாறு காட்டா யாயின யான் நின் கதிர்களைப் பற்றிக் கொண்டு விசும்பில் ஏறி அவனைப் பார்ப்பேன் எனபது பிரி வாற்றாத தலைவி கூற்று (கலி. 147:26-28). செல் கதிர் ஞாயிறே, எனக்கு அருள் செய்யாதவனை நாடி யான் பிடித்துக் கொள்ளுமளவும் நீ குவிந்து செலலும பலகதிா பகற்காவத்தோடே இங்கே நிற்கச சிலகதிர்களோடு மட்டும் படுவாயாக எனப் பிரிவாற்றாத தலைவி அதனை வேண்டினாள் (கலி. 147: 33-35). ஞாயிறு தன்கதிர்களாலே உல கிடத்துப் பழைய இயல்பினை உடையதாய்த் தான் செய்யும் பொருள்களை விளங்குந் தொழிலிலே ஊனறி நடத்திப் பின் வல்லவன் (காமன்) கூறிய வினையைத் தலையிலே ஏறட்டுக் கொண்டு போவான் போலக் கண்களின் பயன்கெடும் படி மலையிற் சென்று மறைந்தான் (கலி. 148:1-3). அங்கண் வானத்தில் அழகிய நிலவொளியோடு விளங்கும் திங்களாகவும் தெறுகதிர் ஞாயிறாகவும் திருமால் திகழ்கிறார் (பரி. 1:41,42). உலகை அழிக் கும் ஊழித்தீயும் இயமனும் அவன் ஏவலனாகிய கூற்றுவனும் மாசில்லாத ஆயிரம் கதிர்களை யுடைய ஞாயிறும் ஆகியவை கூடும் ஊழி முடிவில் ஆழிக்கண் அழுந்தும் நிலமகளைக் கேழலாகி மருப்பாற் பெயர்த்தெடுத்தவர் திருமால் (பரி. 3: 21-24). அழகிய குளிர்ச்சியோடு விளங்கும் ஒளியு டைய பதினாறு இனிய கதிர்களையுடைய பிறை யாய் வளர்ந்த நிறைமதியை உணவாகவுடைய அமரர்க்கு முதல்வர் திருமால் (பரி. 3:51-53). வேள்விகளைச் செயத விண்ணோர் முதல்வன் (இந்திரன்) விரிகதிர் மணிப்பூண்களை அணிந்த வன் (பரி. 5: 31, 32). தெறுகதிர்க்கனலியும் (மழுவுறு) மாலையும் மணியும் முதலிய வேறுவேறு வடிவினையுடைய படைகளைச் செவ்வேள் தம் பன்னிரு கைகளில் கொண்டுள்ளார் (பரி. 5:67, 68). வையைக்குப் புனலாடச் சென்ற மகளிர் அணிந்த கதிர்வீசும் ஆணி திரண்ட முத்தினாகிய வடம், சந்தனம் முதலியன பூசப்பட்டமையாலே கலங்கி நிறம் மழுங்கியது (பரி. 6:16). அகன்ற விசும்பிலுள்ள நாண்மீன்களைக் கீழதாகிய விரிகதிர் மதியம் புணர்தல் (பரி. 11:1). பொதியின் முனிவன் (அகத்தியன்) என்னும் மீன் உயர்ந்த தன் இடத்தைக் கடந்து மிதுனத்தை அடைய விரிகதிர் வேனில் பருவத்துப்பின்வரும் கார்காலத்தில் சைய மலையில் மழைபொழிந்தது (பரி. 11:11-14). செவ் வேளின் திருமுகம் விரிகதிர்முற்றாத விரிசுடரை (ஆதித்தன் மண்டிலத்தை) ஒக்கும் (பரி. 19:99,100). மதியின் கதிரைப் போல முழுதும் நரைத் தோரும் வரைகெழு செல்வன் நகர் (ஆதிசேடன் கோயில்) வழிபடச் சென்றனர் (பரி.தி. 1:43-49).

2. தானியக்கொத்து. செந்நெற் கதிரால் - தானியக் கொத்தால் - வேயப்பட்ட மெல்லிய கரும்பால் கட்டப்பட்ட ஒழுங்குபட்ட கூரை விழா எடுத்துக் கொள்ளப்பட்ட இடம் போல் வேறுவேறாகப் பொலிந்து தோன்றியது (புறம். 22:14-17). புனவர் கிளிகடி கருவியாம் தட்டையைப் புடைப்பின் அப்புனத்திற் கயலதாகிய வளைநத கதிர் சுழலும் வயலின்கண்ணும் கடற்கரையின கண்ணும் உள்ள புட்கள் ஒருசேர எழும் (புறம். 49:4-6). நீ பிறர் நாடு கொள்ளுங்கால் அவர் நாட்டு வளைந்த கதிரையுடைய வயலை நின் வீரர் கொள்ளை கொள்க; அவ்வூரைத் தீ இடினும் இடுக; பகைவரை அழிக்கினும் அழிக்க; ஆனால, காவல் மரத்தை வெட்டுதலை மட்டும் தவிர்க என இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய பாண்டியன் நன்மாறனைக் காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக்கண்ணனார் வேண் டுகிறார் (புறம். 57:5-10). உழவர், பழனவாளை யின் தடியைப் புதுநெல் வெண்சோற்றிறகு மேலீ டாகக் கொண்டு விலாப்புடைக்க உண்டதனால் நீடுகதிர்க் கழனியில் சூட்டை இடும் இடமறியாது தடுமாறுவர் (புறம். 61:4-8). பெரிய தாளினையும் ஒன்றோடொன்று பின்னிக் கிடக்கும் நெற்கதிரினை யும் கொண்ட மூதூர் நுமக்கு உரியதாக வேண் டில், நீங்கள் சென்று அதியமானுக்குத் திறை கொடுத்தல் வேண்டும் என்று பகை மன்னரை நோக்கி ஔவையார் கூறுகிறார் (புறம. 97:17-20). வரப்பை அணைந்து வளையும் நெற்கதிர் சுழலும் கழனியொடு மிக்க நீர்ப்பக்கத்தையுடைய பகைவரின் பெரியநாடு அதியமான் நெடுமானஞ்சி யின் படைஎடுப்பால் கெடும் என்று ஔவையார் பாடியுள்ளார் (புறம். 98:17-20). உணவைக் கொண்டு தன் வளையில் நிறைத்து வைக்கும் எலி முயன் றாற்போலும் சிறுமுயற்சியராகித தம் செல்வத்தை இறுகப் பிடிக்கும் ஊக்கமிலாதவர் நட்பு எனக்கு இல்லையாகுக எனச் சோழன் நல்லுருத்திரன் கூறு கிறான் (புறம். 190:1-5). கவர்த்த கதிரையுடைய வர கின் குற்றி வடிக்கப்பட்ட சோற்றையும் தாதாக உதிர்ந்த எருவையுடைய தெருவிடத்துப் போதொடு தழைத்த வேளையின் வெள்ளிய பூவையும் தயிரின் கண் பெய்து ஆய்மகள் அட்ட புளிங்கூழையும் அவரை கொய்வார் நிறைய உண்பர் (புறம். 215: 1-5). பின்னிய கதிர்கள் அசையும் கழனிகளையு டைய மருத நிலத்தூர்களை முன்னே இரவலர்க்குக்

கொடுத்தொழிந்ததனால் தலைவ னொருவன் வறுமையுற்ற இரவலராகிய சுற்றத்தின் தலைவ னுக்கு எஞ்சி நின்றதொரு கரம்பைச் சீறூரை நல் கினான் (புறம். 285:14-17). கருங்கால் வரகு, பெருங் கதிர்த் தினை, சிறுகொடிக் கொள், பொறிகிளர் அவரை ஆகிய இந்நான் கல்லது உணவுமில்லை (புறம். 335:4-6). தம்மிற் பின்னிக் கிடக்கும் கதிர் களையுடைய கழனிகட்கு நடுவேயுள்ள ஒற்றை மதில் சூழ்ந்த நகரம் கரையிற் பிணிக்கப்பட்டு உலர்ந்து தோன்றும் மரக்கலமும் கடலும் போலக் காட்சியளிக்கும் (புறம். 338:10-12). அசைகின்ற கதிர்கள் நிரம்பிக் கலங்கிக் கிடக்கும் நீர்நிலை போல நிலை தளர்ந்து பாழ்பட்ட வெடித்துச் சீர ழிந்த தரையையும் பலகால்களையும் உடைய மன றத்தின் ஒருபக்கத்தைக் கிணைஞன, படுக்கையிட மாகக் கொண்டான (புறம். 375:1-3). தழைத்த கதிர் நிறைந்த கழனிகளால் சூழபபட்ட வெண் குடை என்னும ஊர்க்குரியவன் சோழிய ஏனாதி திருக்குட்டுவன் (புறம். 394:2,3). முல்லைநிலத்துக் காட்டுக் கோழிகள் மருதநிலத்து நெற்கதிரைத் தின்றன (பொரு. 222). குடிலின் முற்றத்தில் அவல் குற்றும் உலக்கை ஒலிகேட்டு அயலிலுள்ள கிளிகள் தமது பகையெனக் கருதி அஞ்சுதற்குக் காரண மானது புதுவருவாயினையுடைய வளைந்த கதிர் களைக் கொண்ட கழனி (பெரு. 225-228). யானை கரும்புகளுடன் (நெற்) கதிர்களை நெருங்கப் பொதிந்துகட்டிய சாவியையும் அதிமதுரத் தழை யையும் தின்னாமல் அவற்றாலே தன்நெற்றியைத் துடைத்துக் கூரிய முனைகளையுடைய தன் கொம் பிடத்தே ஏறட்ட கைகளிடத்தே கொண்டு நின்றது (முல்லை. 31-34). முல்லை நிலத்தின் செந்நிலப்பெரு வழியில் பருவத்தே மழை பெய்யப் பெற்ற வளைந்த கதிரையுடைய வரகிடத்தே திரிமருப் புடைய கலைமான்களுடன் மடமான்கள் துள்ளின (முல்லை. 97 - 99). களிறுகளை மறைககும்படி வளைநத கதிரையுடைய கழனிகள் மருத நிலத் திருநதன (மது. 247,270). நறுமணம் வீசும் அகி லையும் சந்தனத்தையும் வெட்டி விதைத்த மேட்டு நிலத்தில் குறுங் கதிர்களை யுடைய தோரை நெல்லும் நீண்ட தாளை யுடைய வெண்சிறு கடுகும் ஐவன வெண்ணெல்லுடன் பிணக்கங் கொண்டுவளர்ந்தன (மது. 286-288). வயலில் நிறை மழையாலே செழித்த வளவிய இலையினையுடைய நெல்லினின்றும் தோன்றிய கதிர் முற்றி வளைந் தது (நெடு. 21,22). மருத நிலத்து விளைந்த செந் நெல் கதிரைத் தின்ற எருமை ஈன்ற கன்றுகள் நெற் கூடுகளின் நிழலிலே உறங்கும் (பட். 12-15).

னத்தின்கண் வரகுகள் வாதிடுவோன் கையைப் பாலக் கவர்த்த கதிர்களையுடையனவாய் முற்றித் ாழ்ந்தன (மலை. 112,113). வாய்மொழிக் கபிலன் சூழ்ந்தவாறு கிளிகளைக் கொண்டு சேய்மைககண் டள்ள கழனிகளிலிருந்து தழைதத நெல்லின் விளை கதிர் பறம்பு மலையிலுள்ளவர்க்கு உணவுக்காகக் கொண்டுவரப்பட்டன (அகம். 78:16-19). கழனியி லுள்ள நெல்லின் வளைந்த கதிரைக் கொயது மகளிர் அவல இடிக்கின்ற உலக்கை ஓசைககு நிறைசூல் கொண்ட வெண்குருகு அஞ்சும (அகம். 41:16-19). வளமிக்க கழனியில் விளைந்த நெல் லரியின் இளங்கதிரை முதிய பசு தினனுதலுக் கஞ்சிக் காவலர் கரும்பினை அருததிக காஞ்சி மரத்தில் கட்டினர் (அகம். 156:3-6). பெருமபுனவர ின் கவைத்த கதிரின் கரிய புறததைப் பற்றி உண்ட மயில் தோகை விரிதது இனபமுறக் குருநத மரக் கிளையிலிருந்து அகவும (அகம். 194:9-15). நெடிய கதிர்களைக் கொண்ட கழனிகளை உடையது சாய்க்கானம் என்னும் ஊர் (அகம். 220: 8). களத்தின்கண் உளள நெடிய கதிாகளால ஓயன்ற கட்டுக்களில் கழனியின் வரப்பின மேல உள்ள மாமரக் கிளையிலிருந்து புதிய பூக்கள் உதிரும் (அகம். 236:5-8). பெருங்கதிர்கள் சுழலும் கழனியில் வளர்ந்த கரும்பின் தணடினைப் பிழிநது பெற்ற இனிய பாகினோடு பசுவின் பால பெயயப் பெற்ற சிவந்த நெல்லால் இடிககப்பட்ட அவலைத தன சுற்றததார்ககுப் பகுததுக் கொடுதது உண்ணு கினற வளமுடையது உறையூராகும் (அகம். 237:11-14). கருவிரிந்து வளைந்த விளங்கும கதிர்களை உடைய வயலகளில நெற்கள் ஒலிககின்ற பசிய பள்ளங்களைத துழாவி வாடைக்காற்று விரைந்து வீசியது (அகம். 243:6-8). வளைநத கதிராகிய நெல்லினையும் புதிய வருவாயினையும் உடைய குளிர்ந்த மருதப் பரப்பில செங்கழுநீர் மலாந்தது அகம். 269:22-24). அகன்ற வயலகளில கதிாகள நீணடு நனகு காய்த்த நெற்கள கணணுககினிதாக இறைஞ்சிக் காட்சி யளிததன (அகம. 294 9,10). அட்டவாயில எனனும் ஊரின பெரிய கதிர்களை புடைய வயலகளின அழகு போனற அழகை புடையவள் பரத்தை (அகம். 326.5-7). வலலம என்னும் ஊா நீண்ட கதிாகளை ஈனும நெற பயிர் மிக்க வளம் உடையது (அகம. 356:13). மாவண் புல்லியின பழைய மேட்டு நிலம கவைத்த கதிர்களை யுடைய வரகின் அழகிய பசுந தட்டைகளை உடையது (அகம. 359.12-14). மருத மரங்கள் உயர்ந்த தோட்டங்களையும தழைதத கதிரை உடைய வயல்களையும் உடையது கழாஅர்

என்னும் ஊர் (அகம்: 376:3,4). தாவித் தாவி முயற் குட்டிகள் துள்ளும் முல்லை நிலப்பரப்பில் கவைத்த கதிர்களை உடைய வரகுப் பயிர் மிகுந்த சீறூர் உள்ளது (அகம். 384:4-6). வழிப்போக்கராகிய புதிய வர் தம்மை வருத்துகின்ற பசியைத் தீர்க்கத் தாயர் புதுக்கொல்லையில் தழைத்த தினைப்புனத்தில் கவைத்த கதிரையுடைய வரகினைச் சமைத்துப் பாலொடு தருவர் (அகம். 393:3-17). தொண்டிப் பட்டினத்தில் பச்சை அவலை இடித்த உலக்கையை அழகிய கதிரையுடைய நெற்பயிர் விளைந்துள்ள வயலின் வரப்பிலே படுக்க வைத்து மகளிர் வண் டல் அயர்வர் (குறு. 238:1-4). புன்னைக் கிளையி லிருந்த நாரை கழியிடத்துள்ள சிறுமீனை வெறுக் கின் வயலிலுள்ள கள் மணக்கும் நெய்தற்பூவை நெற்கதிரோடு விரும்பும் (குறு.296:1-4). சாய்க்காட் டுப் பூக்கெழு படப்பையில் செவ்விய மென்மையாகிய மயிரை நிரைத்து வைத்தாற்போன்ற நீண்ட திரட் சியை உடையனவாய் வளைந்த செந்நெற் கதிர் களையுடைய வயல்களில் அன்னப்பறவை துஞ்சும் (நற். 73:6-9). காட்டில் வரகின் கவைத்த கதிர்களைத் தின்ற இளைய பிணைமான் கலைமானோடு மகிழ்ந்து விளையாடும் (நற். 121:2-5). செந்நெல் அறுப்பவர் தம் கூர்வாளால் அறியாது நெய்தல் பூவையும் அறுத்ததனால் அப்பூ கதிரொடும் கலந்து அரிக்கிடையில் படுக்கையாகக் கிடக்கும் (நற். 275: 1-3). மூதூர் மழைபெய்யின் மான் கூட்டங்கள் எங்கும் மிகுந்து தோன்றப் பெரிய கதிர்களை யுடைய நெல்லின் புதுவருவாயினைப் பெறும் (நற். 311:1, 2). நண்டு செந்நெல் வயலில் கதிரைக் கொய்து குளிர்ந்த மண்வளைக்குள் புகும் (ஐங்.27: 1, 2). கருங்கொம்புடைய எருமை கயிற்றை அறுத்துக்கொண்டு நெடுங்கதிர் நெல்லை விடியலில் மேயும் (ஐங். 95:1, 2). பழனத்தில் படர்ந்த பாகற் கொடியில் முயிற்றெறும்புகள் மொய்த்தியற்றிய கூட்டினை எருமை ஆண்டுள்ள நெற்கதிரோடு ஒரு சேரக கெடுக்கும் (ஐங். 99:1, 2). வயலிடத்துச் செந் நெல் இடையே பூத்த தாமரை மலரில் கிடந்து விளங்கும் நெற்கதிர், அரங்கில் ஆடுகின்றவளின் நுதலில் தாழும்படி செருகிய வயந்தகம் என்னும் அணிபோலத் தோன்றும் (கலி. 79:1-5).

3. கதிரவன். விளங்குகின்ற கதிர்–கதிரவன்-வான மெங்கும் பரந்து விளங்க வடதிசைக்கண் சிறிதே சாய்ந்து தோனறும் வெள்ளியாகிய கோள் பயன பொருந்திய மறறைக் கோள்களோடு தனக்குரிய நாளில நிறக மழைபெய்யும் (பதி. 24:23-28). வேல் காய்ந்தாற் போன்ற வெப்பம் மிக்க கூர்ங்கற் பாறையின் இன்னாமை செய்யும் வழியிடத்தே போகும்பொழுது கதிர் சினந் தணிந்த அந்திப் பொழுதில் செல்லுங்கள் எனக் கூத்தர் ஆற்றுப் படுத்தப் படுகின்றனர் (மலை. 373-375). அழல் போல் வெங்கதிர் நிலம் பிளவுபடவும் பசுமை யற்றுப் போகவும் சுட்டது (அகம். 1:9,10). நெல்லிக் காய் உதிர்ந்து கிடக்கும் கதிர் தெறும் மலைப்பக் கத்தில் கூர்த்த நுனியுடைய பரற்கற்கள் ஆறு செல்வோரின் விரல் நுனியைச் சிதைக்கும் (அகம். 5:9-14). கடுங்கதிர் முறுகிய மூங்கில் மிக்க பக்க மலையில் பெருங்களிற்றியானை உரிஞ்சுதலால் மண்ணுடன் கூடிய அடிப்பகுதியைக் கொண்ட யாஅ மரங்கள் நிறைந்திருந்தன (அகம். 17:15,16). தைமாதத்தின் மழை நின்ற கடைநாளில் விடியற் காலத்தே திகழும் கதிரை மறைத்துள்ள முகில்கள் வாடைக்காற்றால் உந்தப்பட்டு வானத்தின் தோல் உரிவதுபோல் புரண்டியங்கித் தென்திசை செல் லும் (அகம். 24:5-8). யாவரும் கதிர் இயங்கும் இட மறியாமல் இஃது ஊழிபெயருங் காலமோ, என்று அச்சம் உண்டாகும்படி முகில் திசை எல்லாம் பரவி மழை பெய்தது (அகம். 43:7,8). மாந்தரின் இயக்கமற்ற கடும்பாலை நில வழியில் கதிர் மிக வும் காய்தலான் நெடிய வெப்பம் பரவியது (அகம். 51:1,2). நிலம் வெடிக்கும்படி வறட்சியுற்ற பாலை நிலத்தில் கண்ணால் வெயிலைப் பார்க்க முடியாத வாறு கதிர் தெறுகையினால் வெண்கடம்பு வாடித் தாழ்ந்தது (அகம். 81:6–8). காய்கின்ற கதிர் வெதுப்புவதனால் காற்று மிகுந்து விரைந்து வீசுத லாலே இருப்பையின் வெண்பூக்கள் கற்பாறையின் மேல் உதிர்ந்து கிடக்கும் (அகம். 135:7-9). கடுங்கதிர் காடுகளின் அழகு கெட்டொழியும்படி சுடுதலால் பக்கமலையின்கண் உள்ள தேக்கு மரங்களின் சினைகள் வறியவாயின (அகம். 143:2-5). வேனிற் காலத்தே சுடுகின்ற கதிர் கெடுத்த வெங்காட்டில் காற்று மூங்கில்களின் கணுக்களைப் பொருந்தி வீசுதலின் அவை உராய்ந்து உண்டாய தீப்பொறி சிதறி நெருப்புப் பொங்கி எழுந்தது (அகம். 153: 8-10). மறையும் கதிர் மங்கிய தனிமை கொண்ட மாலையில் தலைவி பசலை படர்ந்து விரலை நுத லிற் சேர்த்திக் கண்பனிவாரத் தோள் நெகிழ்ந்து வருந்தினாள் (அகம். 169:9-14). மூங்கில் செறிந்த பக்கமலையில் சுரபுன்னை தலை கரிந்து வாடும்படி கதிர் சினங் கொண்டது (அகம். 177:7,8). செந்நாய் தாக்குதலின் அலறி நிலை கெட்டோடிய பிணை மான் கூட்டங்களை அழைத்தற்பொருட்டுக் கலை மான்கள் கதிர் மாய்கின்ற மாலைப் பொழுதில் ஆண் குரலாலே அழைக்கும் (அகம். 199:9-12). கடுங் கதிர்தெறுதலினால் நிலம் நீரற்று நெடிய சுனைகள்

வறண்டு மலைகளின் குவடுகள் பொடிந்து உதிர்ந்தன (அகம். 295:1,2). கூந்தலை ஒத்த முகில்கள் வானத்தின்கண் விளங்குகின்ற கதிர் மழுங்கும் படி யாண்டும் பரவிப் பாம்பின் படம் சிதையும் படி இடிக்கும் (அகம். 323:9-13). கதிர் தெறுத லினால் காம்பு கழன்று வீழும் இலைகளை உதிர்த்த காற்று தாக்கிய தாழ்ந்த கிளையில தீ தழைததாற் போன்று தளிர்கள் தோன்றின (அகம். 351:5-7). மழை பெய்யாது ஒழிந்தமையால் நெருப்பை வீசித் திரியும் அசைகின்ற ஒளியை உடைய கதிர் மண்டிலம் நிழலினை அகழ்ந் துண்டது (அகம. 381: 4-6). தெறுகதிர் ஈரமின்றிக் காயச் செய்த நீரற்ற பாலைப் பரப்பின்கண் காட்டுத் தீ பற்றிச் சாம்பலாக்கிய நிழலற்ற நெறி யில் கலைமான் பேய்த்தேரை நாடி ஓடித் தனித்து வருந்திய உள்ளத்தோடு பிணையை அழைக்கும் (அகம. 395: 5-11). காயும் கதிர் முடுகிய அழகு ஒழிந்த பாறைகளையும் மூங்கில கணுக்கள் உடைந்த சிகரங்களையும் உடையது மலை (அகம். 399: 16-18). பகல் கழிய முல்லை மலரக் கதிரின் சினம் தணிந்த கையறு மாலைப் பொழுதை நாம் நீந்தினும் பினவரும கங்குல் வெள்ளம கடலினும பெரிதாதலால் மாலையை நீந்தினும பயனொன்று மில்லை எனத் தலைவி தோழிக்குக் கூறினாள (குறு. 387). சேயமைக்கண் விண்ணில் ஏறி வந்த செழுங்கதிர் மண்டிலம் பெரிய மலையில சென்று மறைந்தமையாலே கடற்றுறை தனிமையாய் இருந் தது (நற். 67:1,2). பல்கதிர் மண்டிலம் பகற்பொழு தைச் செய்து முடித்து விட்டு மிகவுயர்ந்த பெரு மலையிற் சென்று மறைந்தது (நற். 69 : 1,2). கொல்லி மலையினுள் முனபு தெய்வத்தால் செய்து வைக்கப்பட்ட புதிய நடை கொண்டியங்கும் பாவை விரிந்த கதிரின் இள வெயிலிலே தோன்றி நின்றாலொத்த அழகிய மேனி ஒளிநலம வாய்ந் தவள் தலைவி (நற். 192:8-11). கதிர் எறித்தலான் மக்கள முதலாயினோர் கால்கள வெம்பும்படி கீழ்த்திசை மலையில தோன்றிய ஞாயிறு காய்ந்தது (நற். 258:3). உழவரால் நெல்லோடு சேர்த்து அரியப் பெற்ற நெய்தற்பூ தான உற்ற துனபத்தை அறியாமல மெல்லமெல்லத் தெறுகதிர் காண்டலும துயில் நீங்கி வாயைத் திறக்கும் (நற். 275. 3-6). கணடோர் கண கூசும்படி ஒளிர்கின்ற கதிர் சுட் டெரித்த பாழிடங்களைக் கொண்ட மரங்கள் உலர்ந்த காட்டைத் தலைவர் கடந்து சென்றார் (ஐங். 319: 1-3). தலைவி அழுத கண்ணளாய்ப் பிரிவில் தன நலம் சிதையக் கதிர்தெறும் வெஞ் சுரத்தை நினைந்து வருந்துவாள் (ஐங். 330: 3-5).

முக்கண்ணான் மூன்றெயிலையும் சினக்க அவன் முகம் தெறுமாறு போல, ஒளிய கதிர் சுட்டது (கலி. 2:4,5). யாவரிடத்தும் உலகியலைக் கடந்து தீமை செய்ததனால் புகழ் கெட்டவன கெடுவது போல, ஞாயிற்றின் கதிர் தெறுதலினால மரம் சினையே யன்றி வேரோடே நின்று வெம்பியது (கலி. 10:3,4). எதிர்எதிர் ஓங்கிய பெரிய மலைச் சாரல் கதிரினின்றும் விரிகின்ற செறிந்த சுடரின் அழகைக் கொண்டது (கலி. 44. 1,2). [illegible] காலத்தே வெங்கதிர் காயும் மூங்கில் நெருங்கிய அகன்ற பாறையிடத்து மணம் வீசும [illegible] காந்தள் மலர்ந்துள்ளது (கலி. 45 1,2). பல்கதிர் சுடுமென எண்ணிக் கடலலை விரைந்து சென்று கரையில படர்ந்துள்ள அடும்பங்கொடியை நீர் தந்து காத்தது (கலி. 127: 20,21). பகற்பொழுது வந்து சோவதற்குக் காரணமான தன தெறு கின்ற கதிர்களைக் கதிர் தனனிடத்தே மீட்டுக் கொண்டு மறைய இருள உலகத்தே பரவி யது (கலி. 129.3,6). கொன்றை மாலை யணிந்த இறைவன இயங்கெயிலை (திரிபுரத்தை) அழிக்க, அம்பு எய்யும்போது தோன்றிய எரியைப் போலக் கனைகதிர் எவ்விடமும காய்ந்தது (கலி. 150 1-3).

**4. ஆரக்கால்.** கொடித் தேரையுடைய மோரியரின் திண்ணிய கதிர் - ஆரக்கால - கொண்ட சக்கரம் இயங்குவதற்கு மலையைக் குறைத்தனர் (புறம். 175: 6-8). அரிசிபெய்து கையால சுற்றும் திரிகை மரத்தி னின்றெழும் ஓசைபோல அசைகின்ற கதிரையுடைய வட்டமாகிய தேராழி மணலைப் போழ்ந்து ஒலி எழுப்பிச் சென்றது (அகம 224.12-14). குதிரைகளின் கடிவாள வார்களைப் பிடித்துப் பலவாய கதிர்களை யுடைய ஆழிகள் வழியை அறுத்தியங்கும்படி தேரை விரைந்து செலுத்துக எனத் தலைமகன தேர்ப் பாகற்குக் கூறினான் (அகம். 234 4-9). மோரியர் தென்திசை நாடுகளைக் கைப்பற்ற விண்ணுற ஓங் கிய மலைப்பகுதியில தம தேர்களின் கதிர்த்திகிரி தடையின்றி உருளும பொருட்டுக் கற்பாறை களைக் குறைத்தனர் (அகம. 281:8-11). கலைமான உதிர்ந்து கிடக்கும் இருப்பை வெண்பூவை உண் ணாமல கதிர்போல மெலிந்து நீண்ட காலை யுடைய தன பெடையை ஆண குரலால விளிக்கும (அகம். 321:4-6). குதிரைகள பூட்டப்பெற்ற மிக்க விசையையுடைய நெடுந்தேரின வலிய கதிர்களைக் கொண்ட உருளை ஆழ்ந்து கிழித்துச் செல்லும சுவட்டில பாம்பு போல விரைந்து நீர் ஓடும (அகம. 339:1-3).

**5. கூர்ங்கம்பி.** கதிர் - கூர்ங்கம்பி - போலும முள்ளை யுடைய ஆரல்மீன சேற்றின் கீழே புதைந்து கிடக்கும

(புறம். 249:1). நீர்திகழ் கழனி நாட்டில் ஆம்பல் இலையின நிழலில் கதிர் போலும கோட்டையுடைய நத்தை ஏற்றை இளைய பெண்சங்குடன் பகற்காலத்தே மணங்கூடும் (புறம். 266:3-6).

6. திங்கள். தண்கதிர் – திங்கள் - மண்டிலம் ஒளி அற்று மழுங்கிப் பகற்பொழுதில் மறைதல் போல என் நெற்றியின் ஒளி தலைவர் பிரிவார் என்று அறிந்த துணையானே மெல்ல மழுங்கி மறைந்தது எனத் தலைவி தோழிக்குக் கூறினாள் (அகம். 277: 1-3).

7. கயிறுமுறுக்கும் கருவி. திருத்தமாகச் செய்யப் பட்ட கதிர் - கயிறு முறுக்கும் கருவி - இட்டு முறுக்கிய வலிய கயிற்றால பின்னிய பெரிய வலையைக் கடலில் இடும்பொருட்டுப் பரதவர் தோணியிலேற்றிச் செலுத்துவர் (நற். 74:1-4).

8. கூர்மை. ஆண்சங்கு கதிர் - கூர்மை - உடைய மூக்கினைக் கொண்ட ஆரல் மீனைச் சான்றாக வைத்துப் பொய்கையின்கண் தன் துணையாகிய பெண் சங்கினோடு மணம் புணரும் (அகம். 246:1-3).

**கதிர்ச்செல்வன்** - ஞாயிறு. நல்லிறைவன் பொருள் காக்கும் தொழில்மாக்கள் (சுங்கம் கொள்வோர்) காயும் சினத்தையுடைய கதிர்ச்செல்வன் - ஞாயிறு - இவரும் தேரில் பூட்டிய குதிரைகளைப் போனறு நாடோறும் அசைவின்றி உல்கு செய்வர் (பட். 120-125). எங்கோன் வளவன் வாழ்க என்று நின் பெருமை பொருந்திய வலிய தாளைப் பாடேனாயின் பல்கதிர்ச் செல்வன் தோன்றுத லறியான் என ஆலத்தூர் கிழார் நன்றியுணர்வுடன் சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவனைப் பாடுகிறார் (புறம். 34:16-18).

**கதிர்வேலன்** – முருகன். ‘கடம்பா, முருகா, கதிர் வேலா, இதுவே நல்ல சமயம்; எனக்கு நீ அருள் செய்க’ என முருகனைப் புலவர் வேணடுகிறார் (முரு. வெ. 8: 3,4).

**கதிரோன்** – கதிரவன். மேகம் காலையில் கடல்படிந்து காய்கதிரோன் - கதிரவன்-போன வழியே மேலைத் திசையில் போய் மாலைப்பொழுதில் மலையை அடைந்து இம்மண்ணுலகத் துயிாகள் உறங்கும் இராப்பொழுதெல்லாம் மழை பெய்தது (பரி. 20: 6-8).

**கதுப்பகம்** - கூந்தலிடம். கையாற் புனையப்பட்ட கரிய கதுப்பகம் - கூந்தலிடம் - பொலியப் பொன்னாற் செயத மாலையை விறலியர் சூடினர் (பெரு. 485,486). மகளிரின கமழும் தாதை யுதிர்த்த மேகததை யொத்த கதுப்பகததை ஊடறுத்து வீசிய காற்றை யுடையது செவ்வேளின் திருப்பரங்குன்றம் (பரி. 21: 48,49,53).

**கதுப்பு** - 1. கூந்தல். தழைத்த கரிய கதுப்பினை – கூந்தலை - உடைய ஆயிழைக்குத் தலைவன் நாஞ்சில் வள்ளுவன் (புறம். 138:8). தம் தாய் நூலை விரித்தாற் போன்ற கதுப்பினளாய்க் கண் மறைந்து முற்றத்திற்குப் போக முடியாத மூப்பையுடையவளாய் இருந்தாள் எனப் பெருஞ்சித்திரனார் கூறுகிறார் (புறம். 159:4,5). நறிய பலவாகிய தழைத்த கதுப்பினையுடைய மகளிர் ஒருவரின் ஒருவர் புணர்தற்குக் காலம் பார்க்கும் பெருமலைபோலும் மார்பினையுடைய செருவெஞ் சேயை ஒப்பவன் மூவன் (புறம். 209:16-19). வளைந்த கரிய கதுப்பினையுடைய மகளிர் அணிகளை அணிந்தனர் (பதி. 12: 22, 23). விளங்கிய தலைக்கலனால் மறைப்புண்ட வண்டுகள் மொய்க்கும் கதுப்பின் ஒடுங்கீரோதியுடைய கொடுங்குழையாளுக்குக் கணவன் இமைய வரம்பன் நெடுஞ்சேரலாதன் (பதி. 14:14,15). தன்னிறம் மறைந்த வண்டுபடு கதுப்பின் ஒடுங்கீரோதியுடைய நின் தேவியைக் காண நின் குதிரைகள் தேரைப் பூண்பனவாகுக என்று இளஞ்சேரலிரும்பொறையிடம் பெருங்குன்றூர்கிழார் கூறினார் (பதி. 81:27-32). கண்டார்க்கு அச்சத்தைத் தோற்றுவிக்கும் பேய்மகள் காய்ந்த கதுப்பினையுடையவள் (முரு. 47,51). பொழிலிடத்துள்ள கருமணல்கள் குயில்கள் குடைந்துதிர்த்த புதிய பூக்களாகிய வாடலைச் சூடிப் புடைநெறித்துக் கதுப்பினை விரித்தாலொத்த தன்மையவாய்த் தோன்றின (சிறு. 4-6). மெல்லிதாய் வீழ்கின்ற மழையினது எழிலினைத் தன்னிடத்தே கொண்டு நெய்யிடப்பட்ட இருண்ட கதுப்பினையும் ஆண மயில்கள் தோகைகளை மகளிர் கதுப்பினை விரித்தாற் போன்று விரித்துப் பார்த்து இவர் சாயற்கு ஒவ்வேமென்று நாணிப் பெடைமயிலுக்குள்ளே மறைதற்குக் காரணமான மென்மையினையும் உடையவள் விறலி (சிறு. 13-16). பெருவிழாக் கழிந்த அச்சந்தரும் மன்றத்திடத்தே ஆண் பேய்களுடன் கதுப்பினைத் தாழ்த்தி ஆடிப் பிணந்தின்னும் யாக்கையையுடைய பெண்பேய்கள் நெருங்கியிருக்குமாறு பகைவர் நாட்டைப் பாழ் செய்தவன் கரிகால் வளவன் (பட். 255-260,270). பாணரோடு விறலியர் பெருமலை ஏறித் திரட்சியைக் கொண்ட மயில்போலக் கதுப்பினைத் தாழ்த்தி இளைத்தனர் (மலை. 40-44). பெண்ணையாற்றின் கருமணலை யொப்ப நெளிந்த கரிய கதுப்பினையுடையவள் தலைவி (அகம். 35:16,17). பொருள்வயிற் பிரிந்து சென்ற தலைவன் வழியில்

கண்ட கனவிடத்தே தலைவியைக் கண்டு அவளது மணம் பொருந்திய கதுப்பினைக் கோதினான் (அகம். 39:15,22). கொடிச்சியர் தேன் நாறும் கதுப்பினை யுடையவர் (அகம். 58:5). வாலிழை மகளிர் நால்வர் கூடிநின்று திருமண நாளில் 'கற்பினின் வழுவாது நிற்கணவனை விரும்பிப் பேணும் விருப்ப முடையை யாகுக' என்று வாழ்த்தி யிட்ட, நீரோடு சொரிந்த பூக்கள் நெல்லுடன் தலைவியின பல்லிருங் கதுப்பில் விளங்கின (அகம். 86:12-17). பூசிய மயிர்ச் சாந்தினையுடைய பரந்த கரிய கதுப்பினைக் காற்றுப் புகுந்து உலர்த்த அக்கூந்தலைக் கையாற் கோதிக் கொண்டு கொடிச்சி மலைப் பக்கத்தில் குறிஞ்சிப் பண்ணைப் பாடினாள் (அகம். 102:3-6). தேன் நாறும் கதுப் பினள் தலைவி (அகம். 129:15,16; கலி. 40:9). புது மணப்பெண் முற்ற உலர்ந்து மலர்கள் நெருங்கப் பெற்று, மயிர்ச் சாந்து மணக்கும் தண்ணிய நறிய கதுப்பினை யுடையவள் (அகம். 141:12-14). மலர் மாலையை அணியும் அழகினை இழந்த கதுப்பினை யும் நினையார் ஆயினர் எனத் தலைவி பிரிவில் புலம்புவாள் என்று வினைமுற்றிய தலைவன் தன் னெஞ்சிற்கு உரைத்தான் (அகம். 144:4-8). ஒப்பனை செய்யப் பெற்ற கரிய கதுப்பினையுடையாளான நின்னால் ஐயுறப் பெற்ற பரத்தையுடன் யான் புனலாடி வந்தேனாயின் என்னை உருகெழு தெய்வம் வருத்துவதாக எனத் தலைவன் தலைவி யிடம் சூளுரைத்தான் (அகம். 166:7-9). கழார்த் துறையிடத்து விழவின்கண் ஆடிய ஆட்டனத்தியின் அழகினை விரும்பித் தாழ்ந்து தொங்கும் கரிய கதுப்பினை (அறலை) உடைய காவிரி கவர்ந்து கொண்டது (அகம். 222:5-8). அரும்புகள் வாய் திறந்து மலர்ந்த ஒலி பொருந்திய முல்லை மணமகள் கதுப்பினைப் போல மணக்கும் (அகம். 244:4,5). நின் கண்ணீரைத் துடைத்து ஆற்றுவிக்கத் தலை வர் விரைந்து வந்தனர் ஆதலின் நின் வளைகள் செறிக; நின் துன்பம் தீர்க; நெளிந்த கரிய கதுப்பில் கோதையும் புனைக எனத் தோழி தலைவியிடம் கூறினாள் (அகம். 269:1,2,25). தலை வியின் அழகிய நீண்ட கதுப்பொடு பெரிய தோளினை நீவிய தலைவனை நீங்கித் தங்கியிருத் தலை அஞ்சிய தோழியினும் தலைவி விரைந்து செலவினை மேற்கொண்டாள் (அகம். 283:1-3). துகள் தீரப் பூங்கொத்துக்களோடு உதிர்த்த கதுப் பினை யுடையவள் தலைவி (அகம். 288:15-17). தலைவியின் தேமல் படர்ந்த இளமுலைகளையும் மென்மைத் தன்மையுடன் தழைத்தல் கூடிய கதுப் பினையும் தாய் பன்முறை ஐயுற்று நோக்கினாள் எனத் தோழி சிறைப்புறத் தலைவன் கேட்பக் கூறினாள் (அகம். 302:13-15). தலைவி முல்லை மாலையின் மணங்கமழும் புதுமையுறத் தழைத்த கதுப்பினை யுடையவள் (அகம். 314:19-21). மேகம் தலைவியின் கதுப்பினை யொத்தது (அகம். 323:13). தலைவி தன் கூந்தலில் அணிந்திருந்த அதிரல் மலரையும் முல்லை மலரையும் போக்கி அவளது தண்ணிய நறிய கூந்தலிடத்தே தலைவன் துயிலுதல் (அகம். 391:2-6). புனைந்த கரிய கதுப்பினை யுடைய நின் மனைவி விருந் தயரப் பால்பெய்த உணவினை உண்ணுதற்கு ஒருநாள் வந்து செல்வாயாக எனத் தோழி தலை வனிடம் கூறி வரைவுகடாயினாள (அகம. 394:10-12). பூங்கொத்துக்களை இடையிடையே வைத்துப பொன்னாற் செய்த தலையணிகளைக் கோத்துக் கட்டிய மகளிருடைய கதுப்பினைப் போலக் காட் டில் புதுப்பூங் கொனறை மரம் தோனறியது (குறு. 21:1-4). தலைவன் தலைவியின் முதுகிற் கிடக்கும் நீட்சியையுடைய வளைந்த கதுப்பினைக் கோதி அழாதே யென்று கூறித் துன்பக் காலத்து அழுத கண்ணீரைத் துடைப்பான் (குறு. 82:1,2). தலைவி யின் கதுப்பிற்கு அயலே விளங்கும் சிறுநுதல், கருங கடல் நடுவே எட்டாம் நாள் மதியம் தோனறியது போலத் தோன்றும் (குறு. 129:3-5). தலைவியின நெறிப்பை யுடைய கரிய கதுப்பினோடு தோள் களை நீவி அவள் செறிவளை நெகிழுமாறு தலைவன் பொருள்வயிற் பிரிந்து சென்றான் (குறு. 190:1,2). பானாட் கங்குலில் தலைவன் தேர் வந்து பெயர்ந்ததற்காக அன்னையால அலைபபுண்ட தலைவி 'பின்னி விடப்பட்ட கதுப்பினையுடைய மின்னிழை மகளிர் பலர் தம்மை வருத்தாத தாய ரொடு இருக்கின்றனர்; அவர் நலவினையுடையவர்' என்று தோழியிடம் கூறினாள் (குறு. 246.3-8). 'தாம் பயின்றறிந்த நறிய என் கதுப்பாகிய அணையையும் தலைவர் நினையார் ஆயினர்' எனப் பருவங்கணடு ஆற்றாளாய தலைவி தோழிக்குக் கூறினாள் (குறு. 254:5). தலைவி நளளென் கங்குலில் தலைவனோடு ஒத்தவளாயினாள்; வைகறையில கூநதலில் வேய்நத விரவு மலர்களை உதிர்த்துவிட்டு மயிர்ச்சாந்தை யிட்டுக் கோதிய நறிய கதுப்பில் எண்ணெய் தடவி அமரா முகத்தளாகித்தன் தமரோடு ஒத்தவ ளாயினாள் (குறு. 312:4-8). தலைவியின கண்ணை யும் தோளையும் தண்ணிய நறிய கதுப்பினையும் திதலை அல்குலையும் தலைவன் பாராட்டினான் (நற். 84:1,2). கானவன் எய்து கொணர்ந்த முள்ளம பன்றியின் கொழுவிய தசையைத் தேன் மணங கமழும் கதுப்பினையுடைய கொடிச்சி, சிறுகுடியி

லுள்ளார்க்குப் பகுத்துக் கொடுப்பாள் (நற். 85: 8-10). அம்பல் மூதூர் அலர்வாய்ப் பெண்டிரின் இன்னா இன்னுரையைக் கேட்ட தாய் தலைவியை நோக்கி நின்கதுப்பு பண்டை மணமின்றிப் புது மணங்கமழக் காரணமென்ன என்று வினவினாள் (நற். 143:7-10). பொன்னைப் போன்ற நல்ல மேனியையும் நீலமணியைப போன்ற நிறங்கொண்ட மணங்கமழும் கரிய கதுப்பினையும் உடையவள் தலைவி (நற். 166:1,2). தலைவியின் தாழ்ந்து தழைத்த கதுபபினைப் போல இறங்கிய காலுடன் விசும்பிலே செல்லும் மேகம் தலைவன் மலைநாட்டில் தவழும் (நற். 197:6,12). தலைவர் தலைவியை நோக்கி, நின் நீலமணிபோலும் கரிய கதுப்பில் கார்காலத்து மலரும் மலர்களை அணியும் பொருட்டு யாம் வருவோம் என்று கூறிப் பொருள் வயிற பிரிந்து சென்றார் (நற். 214:4-8). கண்ணும் தோளும் தண்ணிய நறிய கதுப்பும் பழைய அழகு கெட்டுப் பசலை பாய இன்னுயிர் நீங்குவதாயினும் தலைவனோடு புலவேன் எனத் தலைவி தோழியிடம் கூறினாள் (நற். 219:1-4). மணங்கமழும் கரிய கதுப்பினை உடையவள் தலைவி (நற். 250:8). கானவன் வில்லினால் கொன்று தந்த ஆண்பன்றியைப் புனைந்த கரிய கதுப்பினையுடைய அவன் மனைவி அறுத்துத் தன் சுற்றத்தார்க்குப் பகுத்துக் கொடுத்தனள் (நற். 336:3-6). அதிரல், பாதிரி, செங்கருங்காலி ஆகிய மலரைச் செறித்து வைத்திருந்த பூஞ் செப்பைத் திறந்து வைத்தாற் போன்று நறுமணம் கமழும் தலைவியின் நல்ல நிறம் பொருந்திய, நீலமணிபோன்ற ஐந்து பகுதியாக முடித்தற்குரிய சரிநது விழுகின்ற வண்டுகள் மெல்லென ஒலிக்கும் நறிய கதுப்பின் பெறலரும் பெரும்பயனைப் பெறாது தலைவன் பொருளீட்டப் பிரிந்தான் (நற். 337:3-10). நினது பலவாகிய கரிய கதுப்பில் சூடிய மாலை போலக் குவளை மலரோடு முல்லை மலரையும் சேர்த்துக் கட்டிய மாலையையணிந்து இளையரும் வந்தனர்; ஆதலின் தலைவரும் இன்னே வருகுவர் என்று பிரிவிடைக் கவன்ற தலைவிக்குத் தோழி தலைவன் வரவுணர்த்தினாள் (நற். 367:7-12). அருஞ் சுரம் இறந்த காதலர் விரைந்து வருகுவர்; நீ நின்னுடைய நெறித்த கரிய கதுப்பிலும் தோளிலும் உள்ள பழைய அழகினை வருநதிக் கெடுததுக் கொள்ளாதே எனப் பிரிவிடை மெலிந்த தலைவிக்குத் தோழி கூறினாள (நற். 387:1-6). கரைநின்ற மருத மரத்தின் மீது ஏறி நீரின்கண் பாய்ந்து விளையாடும் தலைவியின குளிர்நத நறிய கதுபபு வானத்திலிருந்து கீழே இறங்கும் மயிலின் தோகை போலக் காணப்பட்டது (ஐங். 74). முகம் மறைந்த கதுப்பினளாய தலைவி, தனிமை கொண்ட மாலைப் பொழுது மறைய நலங்கெழுமிய தன் ஆகததைத் தனக்கு நல்குவாள் எனத் தலைவன் தலைவியது நிலைகண்டு தன்னுள் மகிழ்ந்து கூறினான் (ஐங். 197). அதிரலின் (புனலிக் கொடியின்) புதிய மலர்கள் பரவி நிலமகளின் அறலாகிய கதுப்பு அழகு பெற்றது (ஐங். 345). தலைவன, வேங்கையின் பொன்னிற மலர்க் கொத்துக்களைக் கொய்து தலைவியின் கதுப்பின்கண் சூட்டினான (ஐங். 396:1,2). தலைவர் தலைவியின் இளமுலையை இடையீடின்றித் தழுவியும் அமையாராய் அவளுடைய தாழ்ந்த கதுப்பைக் கோலஞ் செய்வர் (கலி. 4:9-11). தண்ணியதாகிய மணல் மரத்திலிருந்து உதிர்ந்த தாதாலும் தளிராலும் காதலரைக் கூடின மகளிரின் கதுப்பினைப் போல அழகுபெற இளவேனிற் காலம் வந்தது (கலி. 27:5-8). செம்மணிகளால் ஆன தொய்யகம் (தலைக்கோலம்) என்ற அணியை யணிந்த கதுப்புப் போலச் சில இடங்களில் செம்மணல் செறிந்து காணப்படும் வையை யாற்றின் அறல் தோன்றியது (கலி. 28:6,7). 'மணம் நாறும் கதுப்பினாய்' எனத் தலைவி விளிக்கப் பெறுதல் (கலி. 43:23). சோர்ந்து வீழ் கதுப்பினளாய தலைவி செய்த குறியிடத்தே நீ வருவையாயின் தினைப்புனங் காவலர் களிறு வந்ததென ஆர்ப்பர் என்று தோழி தலைவனிடம் கூறினாள் (கலி. 52:12-14). கொழுநரைக் கூடின மகளிருடைய தேன நாறுகின்ற கதுப்பினுள்ளே மலர்ந்த முல்லைகளை நுகர்ந்த வண்டுகள் வேறு மலர்களை நுகர வேண்டுமென்ற நினைவின்றித் தாம் பயின்ற பொய்கையையும் மறந்து திரிந்தன (கலி. 66:5-8). கணங்குழை மகளிருடைய புணர்ச்சியாற் குலைந்து வீழ்ந்த அறலையுடைய கதுப்பாகிய அணையிலே தலைவன் துஞ்சினான் (கலி. 71:19). தொடி பொலிவு பெற்ற தோளையும் முலையையும் கதுப்பினையும் மகரத்தின் வடிவு நிறைந்த குழையையும் உடையவள் தலைவி (கலி. 90:7,8). நீண்ட நெறித்த கதுப்பு அறல் மணலாக, கண்கள் கயல் மீனாக, சோலை புகுந்தாடும் இடமாக, நாண் என்ற அணையை அழித்துவிட்ட பரத்தையாகிய புது வெள்ளத்தில் பாணன புணையாகத் தலைவன் புனலாடினான் (கலி. 98:14-19). செவிலித்தாய் வெண்ணெய் தேய்க்க விரித்த தலைவியின் கதுப்பிலிருந்து ஆயர்மகன் சூடிய முல்லைத் தொடையும் கண்ணியும் நற்றாயும் நாணும்படியாகச் செவிலியின் முன்னே வீழ்ந்தன (கலி. 115:4-9). தலைவி அடர்ந்த கதுப்பினை யுடைய தோழியரோடு சென்று சிறுமுல்லை கொய்தாள் (கலி. 117:10,11). தலைவியின் பொன்னாற் செய்த தலைக்கோலங்கள்

தாழ்ந்து விளங்கின கதுப்பு தலைவனது பிரிவில் அவ்வாறின்றிக் காய்ந்து கவினழிந்தது (கலி. 150:16-18). மலரணிந்த மகளிருடைய கதுப்பல் தேனைக் கொள்ளை கொள்வனவாய வண்டுகள் ஊதின (பரி. 10:120). கரைகளில் நின்ற மரங்களின் பூவும் மகளிரின் கதுப்பிலிருந்த தேன்சேர் தண் போதுகளும் மைந்தர் மார்பினின்று உதிர்ந்த மலரிதழ்களும் பரந்து விளங்க வையை யாறு விண் மீன்களாகிய முத்து விளங்கும் வானத்திலுள்ள கங்கையை ஒத்தது (பரி. 16:33-38). செவ்வேளின் தண்பரங்குன்றத்தில் ஒருத்தி பொன்னால் இடை யிடையே யிழைத்துச் செய்த கோதை கதுப்பில் அசையக் கள்ளைக் குடித்த மகிழ்ச்சி தடுப்பத் தளர்ந்து பூங்கொடிபோல அசைந்தாள் (பரி. 21: 55-59).

2. கிடுகின் இருபுறம். மறவர் ஏந்தும் வேற்படை போல விரிந்த மேற் கதுப்பாகிய தோலையுடைய பாண்டில் போலப் பகன்றை மலரும் (நற். 86:2,3).

3. குழல் (ஐவகைக் கூந்தல முடிப்புக்களுள் ஒன்று). வையை யாற்றில் நீர் விளையாடச் சென்ற மகளிருள் சிலர் மேகம போன்ற தம் கூந்தலைக் கதுப்பாக -குழலாக- முடித்தனர் (பரி. 12: 15).

4. கன்னம். பரங்குன்றத்தின்கண் செவ்வேளை வழிபடச் சென்றோரில் சிலர், மதத்தால் வண்டுகள் சூழும் கதுப்பு - கன்னம் - உடைய யானைகளை வழியினின்றும் அகற்றி மரங்களிற் கட்டினர் (பரி. 19: 30-32).

**கதுவாய்** – 1. வடு. மகட்கொடை மறுத்த தலைவியின் ஐயன்மார் கேடயத்தையும் கதுவாய்-வடு-செயயும் வாளினையும் ஏந்திப் போர் வேணடி நினறனர் (புறம். 345: 13-15). அகுதை என்பான் பகைவரை எறிந்து இலை முறிந்த கதுவாய்ப்பட்ட வாயையு டைய வேலினையும் மணங்கமழும் மார்பினையும் உடையவன் (புறம். 347: 4, 5). பகைவர் செயத அழிவால் கதுவாயப்பட்ட மூதூர் தூர்ந்த அகழி யினையும் தளர்ந்த மதிலுறுப்பினையும் இடிந்த மதிலையும் கொணடிருந்தது (புறம. 350: 1, 2). தலைவியின் தமையன்மார் போர்க்களத்தில் பகை வரைக் கொன்று அவர் குருதியை ஆறாக ஓடச் செய்து வாய் மடிந்து கதுவாய்ப்பட்ட வாளுடன் பஞ்சியும் களையாப் புண்ணுடன் அஞ்சத்தக் காராய் நின்றனர் (புறம். 353: 14-17). மறவர் களிறு களைக் கொன்று நுனி மடிந்த கதுவாயப்பட்ட வேலை யுடையவர் (பதி. 45:4,5).

2. சிதைவு. காட்டிடத்தே பாறையைச் சேர்ந்திருந்த கதுவாய் - சிதைவு - எய்திய குடிலில் தாழியிடத்தே தழைத்திருந்த பருத்தியின் இளங்காயை ஆண் பறவைகள் பேடைகட்கு ஊட்டின (அகம். 129:5-8). காட்டு நெறியிலுள்ள நடுகலலை ஆள என நினைத்து உதைதத காட்டு யானையின கதுவா யுற்ற நகம் பனை நுங்கின் தோடுபோல ஒடிதல் (அகம. 365: 4-6).

**கந்தக்கண்ணன்** - புலவர். இவர் குறுந்தொகையில் 94-ஆம் பாடலைப் பாடியதாக உ. வே. சா. கூறு வர். கதக்கண்ணன் எனனும் பாடவேறுபாடு உண்டு. வையாபுரிப்பிள்ளை குறுந்தொகை 88-ஆம் பாடலைப் பாடிய மதுரைக் கதக்கண்ணனையும் குறுந்தொகை 94-ஆம் பாடலைப் பாடிய கநதக் கண்ணனையும் கதக்கண்ணன் என்றே கொணடுள் ளார். கதக்கண்ணன் காண்க.

**கந்தம்** - 1. தூண். பாண்டியன் கூடகாரத்துத துஞ்சிய மாறன் வழுதியின பகைவர் நாடு, புதுவருவாய இழக்க, தெயவங்கள் அமபலத்தின கந்ததைத்- தூணை - பலி முதலியன பெறாமையால கைவிட் டன (புறம. 52:11-13). பெருங்கல பரபபின மலை யடி வழியிலுள்ள பொதியிலிடததே கடவுள போயவிட்ட வலிய தாளினை யுடைய கநதத் நில பெரிய புறாக்கள பெட்டைகளோடு தங்கி ஒலிக் கும் (அகம. 307:11-15).

2. கழுத்து. உலகம் வெள்ளத்தில அமுந்தின காலததுத திருமால (வராகமாய) கருமையும் வனமை யுமுடைய கந்தத்தால - கழுததால - தாஙகி வெள்ளத் தினின்றும் அவ்வுலகை எடுததா (பரி. 4:22,23).

**கந்தரத்தனார்** - புலவர். இவர் பெயரில அகநானூற்றில மூனறு பாடலகளும் (23, 95, 191) குறுநதொகை யில ஒரு பாடலும் (155) நற்றிணையில் நானகு பாடலகளும (116, 146, 238, 306) காணப பெறு கின்றன. (உரோடகததுக கநதரததனார், ஊரோ டகததுக் கநதரத்தனார், ஒரோடோகததுக கநதரத தனார் எனறு பலவாறு பிரதிகளில உளளன எனறு உ.வே.சா. கூறுவா (குறு. பாடினோர் வரலாறு. பக.124). அகநானூறு 191-ஆம் பாடலுக்கு உரோடோகக கவுணியன் சேந்தன எனறும் பாடம் உள்ளது. உரோடோகத்துக் கந்தரத்தனார், ஒரோடோகத் துக் கந்தரத்தனார் காணக.

**கந்தன்** - குறுநில மன்னன். நாஞ்சில் வள்ளுவன் என் றும் குறிக்கப் பெறுவான். வலிய வேலையுடைய கந்தன் நல்ல புகழை யுடையவன், பகைவருக்கு நினைத்தற்கும் எட்டாத மிக்க சேய்மையன, நண பர்க்கு உள்ளங்கை போல நெருங்கிய அணமையன் (புறம. 380:10-12). கந்தன் என்பதற்குச் சாத்தன்

என்னும் வேறு பாடமும் உள்ளது (புறம். 380. ஔவை.து. உரை).

**கந்தாரம் - 1.** ஓரூர். முற்ற விளைந்த இனிய மதுவை யுடைய கந்தாரம் என்னும் வேற்றுப் புலத்திடத்துச் சென்று மறவனொருவன் தான் கொண்டு வந்த நிரையைக் கள் விலைக்கு நேராகக் கொடுத்தான் (புறம். 258: 2, 3).

2. குடிவகையுள் ஒன்று. நன்றாக விளைந்த இனிய கந்தாரம் - குடிவகை - இருக்குமிடம் தேடி ஆனிரை யைக் கவர்ந்து வந்தவன் உண்டான் (புறம். 258:2,3).

**கந்து - 1.** கட்டுத்தறி. வலிமைமிக்க இளங்களிறு கந் தினை - கட்டுத்தறியை - பொருந்தித் தான் நின்ற நிலையிலே அசைந்தது (புறம். 22:8,9). நின் நெடுநல் யானைக்குப் பகைவரின் காவன்மரங்கள் கந்து ஆக மாட்டா ஆதலின், நீ பகைவரது கடிமரம் தடிதல் ஓம் புக எனக் காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக் கண்ண னார் இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய பாண்டியன் நன்மாறனிடம் கூறினார் (புறம். 57:10,11). பாண் டியன் கிரஞ்சாத்தனுடைய நெடுநகர் முன்றிலில் கந் தினை வெறுத்து நெட்டுயிர்ப்புக் கொள்ளும் யானை களோடு குதிரைகளும் நின்று ஆலிக்கும் (புறம். 178:1-3). பெருஞ்சேரலிரும்பொறையின களிறுகள் கந்தினைக் கொள்ளாமல், குத்துக்கோல் பலவற்றை முறித்து மேலே பறக்கும் பருந்தினது நிலத்திடத்தே வீழும் நிழலைச் சினந்து பாயும் (பதி. 77:8,9). சேர னின் பாசறையில் கடாஅயானை கந்தினைக்காலால் வீழ்த்தி முழங்கும் (பதி. இ. 4:8-10). வயிர முள்ள கந்தினால் சினத்தை யடக்கிய களிறுகளும் பிடி களும் உண்ணுதற்கு வைத்திருந்த கவளங்களைப் பரிக்கோற்காரர் நெகிழ்ந்த நிலைகண்டு கடுஞ்சூல் மந்தி கவர்ந்துண்ணும் (பெரு. 393-396). கடாத்தை யுடைய களிற்றுயானை கந்தினைக் கைவிட்டுச் சுழன்றது (மது. 383). பகைவரது மதிற்கதவினைப் பொருதலால் பூண்சிதைந்த மருப்பினையும் கந்தினை முறிக்கும காலினையும் உடையது யானை (அகம். 164:11 - 14). பரத்தை தனது தோளைக் கந்தாகக் கொண்டு அதனகண் தலைவனைக் கூந்தலாற் கட்டி அவன மார்பினைச் சிறை செய்வேன் என வஞசின முரைத்தாள் (அகம். 276: 11,12). மூங்கில்களிலே காற்று மோது தலால் எழும் ஓசை கந்திலே கட்டப்பட்ட யானை வருந்தி நெட்டுயிர்ப்பெறிந்தாற் போன்றது (நற். 62:1,2).

2. பற்றுக்கோடு. வாளாற் படாது இறந்தாரை அக்குற்றம் நீங்கத் தருப்பைப் புல்லைப் பரபபிக் கிடததி, தம் ஆண்மையே கந்தாக - பற்றுக் கோடாக - நல்லமரில் வீழ்ந்த மறவர் செல்லும் உலகத்திற்குச் செல்க என்று வாளாற் போழ்ந்து அடக்குவர் (புறம். 93:4-11). கோப்பெருஞ்சோழன் வடக்கிருந்த காலத்து வந்த பிசிராந்தையாரைக் குறித்துப் பொத்தியார், நட்பே கந்தாக இத்தன் மைத்தாகிய ஓர் இன்னாக் காலத்தில் இவ்விடத்து வருதலை நினைக்குங்கால் வியப்பாக வுள்ளது எனக் கூறினார் (புறம். 217:1,5,6). பாரி தம் அறிவு கந்தாக இரவலர் வரின் அவருக்கு மலைபோலும் களிற்றோடு நல்ல அணிகளையும் அளிப்பான் (அகம். 303:8-10). தலைவிக்குக் கந்தாக அமைந்த தலைவன் அவள் வருத்தத்தைப் போக்காத காலத்து மாலைப்பொழுது வெந்ததோர் புண்ணில் வேல் கொண்டு நுழைப்பவன் போல வந்து அவளை வருத்தியது (கலி. 120:16-18).

3. தெய்வமுறையுந் தறி. பூக்களைச் சூடின கந்தினை - தெய்வமுறையுந் தறியினை - கொண்ட அம்ப லத்தைக் கொண்டி மகளிர் மெழுகி அங்கு நந்தா விளக்கேற்றினர் (பட். 246-249). அம்பலம், ஆண் மான் உராய்ந்தமையால் அசையும் நிலையினைப் பொருந்திய கரிய அடியையுடைய கந்தினை உடை யது (அகம். 287:3-5).

**கந்துடைநிலை** - திருவருட் குறியாக நடப்பட்ட தறி. செவ்வேள் விரும்பியுறையும் இடங்களுள் கந்துடை நிலையும் - திருவருட் குறியாக நடப்பட்ட தறியும் - ஒன்றாகும் (முரு. 226).

**கபிலம்** - செந்நிறம். அகிற்கட்டையினின்று எழுந்த நறிய புகை மெல்லச் சென்று படிதலால் கபில நிறம் - செந்நிறம் - பெற்ற நெடிய மனை மணங் கமழ்ந்தது (புறம். 337:10,11).

**கபிலர் - 1. புலவர்.** சாங்கிய நெறியை நிறுவிய கபிலரின் நினைவாக இப் புலவர்க்குக் கபிலர் எனப் பெயரிடப்பெற்றது என்றும் ஆகவே கபிலர் என் பது வடமொழிப்பெயர் என்றும் 'சங்க காலச் சிறப்புப் பெயர்கள்' என்னும் நூல் குறிபபிடுகிறது (பக். 71). அகிற்புகையின் நிறத்தைக் குறிப்பதற் குக் கபிலம் என்ற சொல் ஆட்சிப் படுத்தப்பட்டுள் ளது (புறம். 337). எனவே கபில நிறத்தையுடைய வர் கபிலர் என்று பொருள் கோடல் பொருத்த மாகும். இப்புலவர் பிறந்த ஊர் மற்றும் பெற்றோர் பற்றிய குறிப்புகள் கிடைத்தில. ஆயினும், உ. வே. சா. பத்துப்பாட்டுப் பாடினோர் வரலாற்றில் இவர் பிறந்த ஊர் பாண்டி நாட்டிலுள்ள திருவாதவூர் எனக் குறிப்பிட்டுள்ளார். இது 'காதல்கூர் பனுவல் பாடுங் கபிலனார் பிறந்த மூதூர்' என்னும் திரு விளையாடற் புராணத்திலுள்ள திருவிருத்தத்தால்

(27:3) புலனாகிறது. இப்புலவர் அந்தணர் குலத்த வர் என்பதற்குச் சான்று பலவுள. 'யானே, பரிசி லன் மன்னு மந்தணன' (புறம். 200:13) 'அந்த-ணன் புலவன் கொண்டு வநதனனே' (புறம். 201:7) என்ற கபிலர் கூற்றாலும், 'புலனமுக் கற்ற வந்த ணாளன்' (புறம். 126:11) என்ற மாறோக்கதது நப்ப சலையார் கூற்றாலும் தெளிவாகும். மேலும், தலை வன் அனுப்பிய திருமணச் செய்தியைப் பெண வீட் டார் ஏற்றுக்கொள்வதற்கு 'நெய்பெய் தீயின் எதிர் கொண்டாங்கு' (குறு. 106) என வேள்வியை உவமை கூறியிருத்தலும் இவர் பிறந்த குலத்தை உறுதி செய் யும். இப்புலவர் பெருமகனைப் பாராட்டிய புலவர் பெருமக்கள் பலர். 'உலகுடன் திரிதரும் பலர்புகழ நல்லிசை, வாய்மொழிக் கபிலன்' (அகம். 78) எனச் சீர்த்தியையும் வாய்மையையும் ஏத்தி நக்கீரரும் 'செறுத்த செய்யுட் செய் செநநாவின், வெறுத்த கேள்வி விளங்கு புகழ்க் கபிலன்' (புறம். 53) எனப் புலமை, வாய்மை, புகழமைகளை வியந்து பொருந் திலிளங்கீரனாரும், 'நனவிற் பாடிய நல்லிசைக் கபிலன்' (பதி. 85) எனப் புகழினைப் பாராட்டிப் பெருங்குன்றூர் கிழாரும் 'பொய்யா நாவிற் கபி லன்' (புறம். 174) என வாய்மை சுட்டி மாறோக் கத்து நப்பசலையாரும் இவரை வியந்து புகழ்ந் துள்ளனர். இவர் பாரியின உயிர்த் தோழராகவும் அவைக்களப் புலவராகவும் திகழ்ந்தவர். மலைய மான் திருமுடிக்காரியைக் கண்டு அவனது பெரு வண்மையைச் சிறப்பித்தவர். வையாவிக்கோப் பெரும்பேகனென்னும் வள்ளல் தன மனைவியைத் துறந்தானாகலின் அவள் காரணமாக அவனைப் பாடினார். செலவக் கடுங்கோ வாழியாதனை அடைந்து அவன் செய்த வேள்வி, கொடை, வென்றி முதலியவற்றைப் பாட அக்கோ, 'சிறு புறமென நூறாயிரங் காணங் கொடுத்து நனறா என்னும் குன்றேறி நினறு தன கணணிற கணட நாடெல்லாம் காட்டிக் கொடுத்தான்' (பதி. ப. 7). இப்பதிகச் செய்தியை 'நனவிற் பாடிய நலலிசைக் கபிலன பெற்ற ஊரினும பலவே' எனப் பெருங் குனறூர்கிழார் தம் பதிறறுப்பத்துப் பாடலில குறிப்பிட்டுள்ளார். பாரி மகட்கொடை மறுதத காரணததினால் முரணிய மூவேந்தரைக் கணடு ஆடிப் பாடிப் பரிசிலராய் வரின் குன்றையேனும் எம்மையேனும் கொள்ளலாம் என்று கூறினார். பறம்புமலை பகைவரால் கொள்ளப்பட்டுப் பாரி உயிர் நீத்தபின் அவன் மகளிரைத் தக்கா ருக்கு மணஞ் செய்விக்க உடன் அழைத்துச் செனறார். விச்சிக்கோ என்னும் குறுநில மன்ன னிடமும் இருங்கோ வேளிடமும் அமமகளிரைக் கொள்ளுமாறு வேண்டி நின்று அவர் மறுத்திடவே அம்மகளிரை அந்தணரிடத்து விடுததுப் பாரியின் பிரிவைப் பொறாது வடக்கிருநது உயிர் துறநதார். ஆனால் திருக்கோவலூர் வீரட்டானேசுரா கோயிற் கலவெட்டு இவர் பாரிமகளிரை மலையமானுக்கு ஈந்து, பாரியினறி வாழ விரும்பாமல் தீப்புகுநதாா என்று கூறும் (கலைககளஞ்சியம், தொகுதி. 3. பக். 212). இவர் பாடியவை, அகநானூறறில 18, ஐங்குறு நூற்றில் 100, கலித்தொகையில் 29, குறுநதொகை யில் 29, நற்றிணையில 20, பதிற்றுபபத்தில 10, புறநானூறறில் 28, பத்துப்பாட்டில் குறிஞ்சிப் பாட்டு ஆக 235 ஆகும். உ. வே. சா. இச்சஙகப் பாடலகளே அன்றி இனனாநாறபது, திருமுறைப் பாடல்கள் முதலியவறறை யெல்லாம் சேர்தது 279 பாடல்களைப் பாடியுள்ளார் என்பர் (பததுபபாட்டு. பாடினோர் வரலாறு. பக். 37). 'முதலிற் கூறுஞ் சினை யறி கிளவி' எனனும் தொலகாப்பிய நூற்பாவிற்கு இளம்பூரணரும் சேனாவரையரும் எழுதிய உரை யால் கபிலராற் செய்யப்பெற்ற கபிலம் என்ற ஒரு நூல் இருந்ததாகத் தெரிகிறது. இவராற் பாடப பட்டோர், பொறையன, சேரலர், செலவக் கடுங்கோ வாழியாதன், அகுதை, அந்துவன், ஆரிய வரசன் பிரகததன், இருங்கோவேள, எவ்வி, ஓரி, காரி, நள்ளி, பாரி, பாரிமகளிர், பேகன, விச்சிக் கோன், கழாத்தலையார், கண்ணகி முதலியோ ராவர் (வையாபுரிப்பிள்ளைப் பதிப்பு, சஙகஇலக்கியம். பக். 1441, 1442). அயிரைமலை, கொல்லி மலை, பறம்பு மலை, முள்ளூர் மலை, பறம்புநாடு, கிடஙகில, கொடுமணம், பந்தர், மதுரை, முளளூர்க்கானம், வாரணவாசி முதலிய இடங்கள் இவராற் பாடப் பெற்றவை. இப்புலவருடைய பாடல்களில் சிவ பெருமான, திருமால, பலதேவன, முருகன முதலி யோருடைய வாழததுகள் வநதுள்ளதால இவர் சம யப் பொறையுடையோராகக கருதப்படுவர். கண வனை இழநத மகளிர் பஞ்சினைப பன்னி நூற்றல் (நற். 353), மகளிர் உரலிற பொருளகளை இடிககும் போது தலைவனை வாழததிப பாடுதல் (கலி. 43), யானையை நீருணண விடுகையில் அதனால் வருந் துன்பததைத் தடுகக அதன வரவைப் பறையறைநது முனனறிவிததல் (கலி. 56), கடவுள் கொடியோரை ஒறுத்தல (குறு. 87), மகளிர் சிறந்த கணவனைப் பெறுதற்குத் தைந்நீராடுதல் (கலி. 59), சூளுரைககும் போது நீர்குடிததல (குறி. 210, 211), கடவுளை வேணடி மகட்பேறு அடைதல (ஐங். 257), யானைக் கோட் டைக் களளுக்கு விலையாகக் கொடுத்தல் (பதி. 68) முதலான அக்காலப் பழக்கவழக்கங்கள் பற்றிய செய்திகள் இவர் பாடல்களில் காணககிடக்கினறன.

இப்புலவர் இயற்கைப் புனைவில் வல்லவர். பாரி வாழ்ந்த காலத்தில பறமபுமலையிலும் அதன்பின் செல்வக் கடுங்கோ வாழியாதனின் மலைநாட்டிலும் வாழ்ந்தவர். மலையமானது முள்ளூர் மலையும் கொல்லி மலையும் இவர் பழகிய இடங்களாகும். ஆகவே, கபிலரது வாழ்க்கை மலைச் சூழலிலே அமைந்தமையால் குறிஞ்சித் திணையை மிகுதியும் பாடிக் 'குறிஞ்சிக் கபிலர்' என்னும் சிறப்புப் பெற்றார். குறிஞ்சித் திணையின் கருப் பொருள் களான யானை, புலி, குரங்கு, மயில் முதலிய வற்றின இயல்புகளையும் மலைவாழ் குறவர்களின் பழக்க வழக்கஙகளையும் கபிலர் தெளிவாக விளககியுள்ளார். தினை காக்கும் பரண்மீது இருப்பவன் இரவில் தினைமேய வரும் யானையைத் தீக் கொள்ளியைக் காட்டி ஓட்டுதல், அதற்கு அஞ்சி மீளும் யானை விண்ணகத்திலிருந்து வீழும் விணமீன்களின் ஒளியைக் கணடு அதுவும கொள்ளி யின ஒளியெனப் பிறழ உணர்ந்து விரைந்தோடுதல் (குறு. 357), வாழையும் சுரபுன்னையும் செறிந்த மலையில உறங்கிய பிடியை மேகம மறைக்க அதன காதறகளிறு தன துணையைக் காணாது பிளிறல் (நற். 222), பிடியீன்ற குட்டியைக் கொள்ள ஆண்புலி பலாநிழலில் பதுங்கியிருத்தல் (ஐங். 216), களிறு தப்பிப் பிழைத்தலால் புலி சினஞ்சிறந்து கார்மேகம் போல் முழங்குதல் (ஐங். 218), புலியைக் கோட்டினாற் கொனற யானை தன் செந்நிறக் கொம்பினை மழை நீரிற் கழுவுதல் (அகம். 332), வேங்கை மரத்தைப் புலியெனக் கருதி அடிமரத்தில் குத்திய மதயானை தன் கொம்பினைப் பெயர்த் தெடுக்க இயலாது மலையகம் எதிரொலிக்கப் பிளிறல (கலி. 38), புலியை வென்றதாகக் கனவு கண்ட யானை விழிததவுடன் வேங்கை மரத்தைப் புலியெனக் கருதிச் சாய்த்துப் பின் மரமெனக் கணடு நாணுதல (கலி. 49), மள்ளரை மாய்த்த மால் போல, யானைக் கூட்டத்திடையே அண்ணல் யானை பெருமிதத்துடன் உலாவுதல் (கலி. 52), புலியைத் தொலைதத யானை, தழையுணவு அருநதி மலைசசாரலில் அமைதியாக அருவி தாலாட்ட உறங்குதல் (கலி. 42) முதலியன குறிஞ் சிக் கருப்பொருள்களான யானை, புலி முதலிய வற்றைப் பற்றிய புனைவுகளாகும். வாழைக்கனி யாலும் பலாச்சுளையாலும் பாறையின் சுனையில் உண்டான தேறலை நீரென மயங்கிக் குடித்த கடுவன பக்கத்திலுள்ள சந்தன மரத்தில் ஏறாது, பூப்படுகையில் எதிர்பாரா இன்பமெய்தி உறங்கு தல் (அகம். 2), மந்தி பலாப்பழத்தைப் புணையாகக் கொண்டு அருவியைக் கடத்தல் (அகம். 382), பிரப் பஞ் சிறுகோலைக் கொண்டு குரங்கு மழைநீர்க் குமிழியைப் புடைத்தல் (ஐங். 275), மிளகிலை மேய்ந்த கடுவன் நறைக் கொடியால் பாறைமீது தவழ்ந்து செல்லும் வெண்மேகத்தைப் புடைத்தல் (ஐங். 276), மூங்கிலிற் குரங்கு பாய அது மீனெறி தூண்டில் போல விண்ணோக்கி விசைத்தெழுதல் (ஐங். 278), காட்டுமயில் பாறையிலிட்ட முட்டை யைக் குரங்குக்குட்டி வெயிலில் உருட்டி விளை யாடுதல் (குறு. 38), பலாக்கனியைக் கவர்ந்துண்ட கடுவன செம்முக மந்தியோடு பொலிந்து மகிழ்ந்து மலை உச்சியிலுள்ள மூங்கிலில் உறங்குதல் (புறம். 200), எரிபோல மலர்ந்துள்ள வேங்கை மரத்தில் மயில் அமர்ந்திருக்கும் காட்சி பொன்னணிகளை யணிந்த மகளிர் போலத் தோன்றுதல் (ஐங். 294) ஆகியன குரங்கு, மயில் பற்றிய புனைவுகளாகும். மேலும், காட்டு மூங்கிலிற் காற்றுப் புகுவதனால் உண்டாகும் இன்னொலி குழலோசையாகவும் அருவியின் ஓசை முழவொலியாகவும் மான்களின் குரல் பெருவங்கிய இசையாகவும் வண்டின் முரற்சி யாழொலியாகவும் கொண்டு மயில் விறலி போல் ஆடும் காட்சியை மந்திகள் காண்பதாகக் குறிஞ்சிக் காட்சிப் புனைவு நாடகப் பொலிவோடு அமைந்துள்ளது (அகம். 82). இந்நாடகக் காட்சியைச் சீத்தலைச் சாத்தனார், கமபர் முதலான புலவர் பெருமக்கள் தம் நூலுள் தழுவியுள்ளனர். காந்தள் செறிந்த மலையில வாழும் குறவர் வறுமையால் வாடும்போது யானைக்கோட்டை விற்றல் (குறு. 100), யானை தந்தத்தாலும் சந்தனமரத்தாலும் செய்த உலக்கையாற் குறமகளிர் ஐவன வெண் ணெல்லைக் குற்றுதல் (கலி. 43), குறத்தி அடுப் பெரிக்கச் சந்தன விறகுகளைப் பயன்படுத்தியமை யான் அடுப்பிலிருந்து எழும் சந்தனப்புகை மலைச் சாரலிலுள்ள வேங்கைப் பூஞ்சினையில் தவழ்தல் (புறம். 108), மழை வேண்டும்போது கடவுளுக்குப் பலியிட்டு மழைபெறுதல், மழை மிகுதியான பயிர் பாழாகும் போது கடவுளை வேணடி மழையை நிறுத்திக் கொளளுதல் (புறம். 143) முதலியன மலை வாழ் மக்களின் வாழக்கை நிகழ்சசியாக இவரால் புனையப்பட்டுள்ளன. கபிலர் தம உள்ளங்கவர்ந்த நிகழ்ச்சிகளையும் காட்சிகளையும் ஓரிடத்திற் குறிப் பிடுவதோடமையாது வேறிடங்களிலும் குறிப்பிடு வர். தினைமேய வந்த யானையின் இயக்கம் ஒற் றிக் கானவன் நள்ளிரவில் பரண்மீதிருந்து எறிந்த கவண்கல் அம்பென ஏகி, மலைப்பக்கத்திலிருந்த வேங்கைப்பூங்கொத்தைச் சிதறித் தேனைச் சிதைத் துப் பின்னர்ப் பலாப்பழத்தினுள் தங்கும் எனற அகநானூற்று (318) நிகழ்ச்சியைச் சற்று விரிவாகக்

கலித்தொகைப் பாடலில் (41) மழைபெய்த நள்ளி ரவில் மின்னொளியில பிடியொடு மேயும் களிற்றின் அடியொதுக்கம் கேட்டுக கானவன் ஆசினிப் பலா மரத்தின்மேல் கட்டப்பட்ட பரண்மீதேறி எறிந்த கவண்கல் வேங்கைப்பூவைச் சிதறி, ஆசினியின் கனிந்த பழத்தை வீழ்த்தி, தேனிறாலைத் துளைத்து, மாந்தளிரை மயக்கி,வாழைமடலைக் கிழிதது, இறுதி யில் பலாப்பழத்தில் தங்கியது எனச் சிததிரிககப் பட்டுள்ளது. முற்றிய வளைநத பெரிய தினைக்கதிர் யானையின கைபோல் உள்ளது எனற செய்தி குறுந்தொகையிலும் (198) நற்றிணையிலும் (376) குறிஞ்சிபபாட்டிலும் (35–38) உவமையாகக் குறிக் கப்பட்டுள்ளது. பறம்புமலை உச்சியிலிருநது இழி தரும் நீரினைக் காட்டிலும் பாரிவள்ளல் இனிய வன், மென்மையன் எனற புறநானூற்றுப் பாடற கருத்தை (105:6-8) கலிததொகையில தலைவன் பண்பியலைப் புலப்படுத்துமபோது, 'தனமலை, நீரினும் சாயல் உடையன், நயந்தோர்க்குத், தேரீ யும் வண்கை யவன்' (42:19-21) எனப் பாரியை நினைந்து பாடியது போலப் புனைவர். மலர் மேலே இடையறாது மழைபொழிவதனால் அது பொலிவு குன்றிக் காணப்படும் காட்சி கபிலர் உள்ளத்தை ஈர்த்துள்ளது. குறுந்தொகையில தலை வியின புலந்தழுத கண்ணுக்குத் தண்துளியேற்ற குவளை மலர் உவமையாகிறது (291). இக்கருத்து, குறிஞசிப்பாட்டிலும் (247,248) புறநானூற்றிலும் (105) வருகிறது. குறிஞ்சிப்பாட்டிலுள்ள கருத்து புறநானூற்றுக் கபிலர் பாட்டில் வருதலானும் குறிஞ்சிக் கலியிலுள்ள கருத்து அகநானூறு, புற நானூறு கபிலர் பாடல்களில வருதலானும் குறிஞ் சிக்கலி, குறிஞசிப்பாட்டு முதலியவறறைப்பாடிய வரும் வெவ்வேறு கபிலரல்லர், ஒருவரே என்பது போதரும். குறிஞ்சிக கருப்பொருள்களை நுனித் தாயநத கபிலரது மதி நுட்பத்தினை அவர் கை யாண்ட உவமைகளாலும் அறியலாம். யானை முதுகின் இருபுறமும் தொங்கும கயிறு மலை மேலுள்ள ஒற்றையடிப் பாதை போல் தோனறுதல் (அகம். 128), களிறு மெனறிட்ட கவளம் போலத் தேனைப் பிழிநதெறிந்த கோதுடைச் சிதறல் காணப்படுதல் (புறம. 114), பகையான்னயுடன பொருத யானையின் சிவந்த கோடு காந்தளின் புதிதாக அரும்பும் மொட்டுப் போன்றிருத்தல் (கலி. 53), யானையும் புலியும் பொருதபோது தும்பி வேங்கை மலர் பூத்த கிளை எனக் கருதிப் புலி யிடமும் வேங்கைச சினை எனக் கருதிப் புகர்முக வேழத்திடமும் மாறிமாறிச் செல்வது இருபெரு வேநதர் வாட்போர் செயயுங்காலை நட்பாக்க அவ்விருவரிடமும் மாறிமாறிச் சான்றோர் செல்வது போன்றிருத்தல் (கலி. 46), களிற்று முகததிலுள்ள புளளிபோலத் தெறுழ்க் கொடியின பூ மலர்ந் திருத்தல் (புறம். 119), மாசறக் கழுவப பெற்ற யானை போலப் பெருமழையால தூய்மை செயயப பெற்ற துறுகல் தோனறுதல (குறு. 13), வாழையின வளைந்த காய்களையுடைய குலைபோலப புலியின அடி இருத்தல் (கலி. 43), மலையை ஊடுருவிச் செல்லும இற்றியின வெள்வேர் போல மலை யினினறு ஓடிவரும அருவி தோனறுதல (குறு. 106), தலைவியின சிவந்த கண விலங்கினை வீழதது அதனுடமபினின்று பறிதத குருதிதோயநத அமபு போனறிருத்தல (நற். 13) போனற உவமைகள கபிலர்தம் குறிஞ்சிப் புலமைககுச சானறுகளாகும். கபிலர் அறநெறி போற்றும நெஞ்சினர். இவா பாக்களில் வாழக்கையறம போற்றும நீதிநெறிகள நிரம்ப உள்ளன. பிறர்உறும துனபததைக் காணின நல்லோர் வருந்தி விலககுவர்; தாம் உறற விழு மததை எளிதாகக் கருதுவர் (அகம. 382), அலலபுரிந தொழுகுவார் வாழும் மலையிடததில வளளி கிழங்கு இடாது; மலையில தேன இருககாது; கொலலையில் கதிர் தாழநது விளையா (கலி. 39), குறமகளிர் தம கேள்வரைத தொழுது எழுவதால அவர் கணவர் தாம் தொடுத்த அமபுகளின குறி பிழையார் (கலி. 39), சூள் பேணான் பொய்த்தான மலையில் அருவி நீர் இழியாது (கலி. 41), தலைவன பகையென்று கூற்றுவன் வரினும கெடான; தன னொடு நட்டார்க்குத் தோற்றலை நாணான (கலி. 43), பிறர் குற்றம் கூறுதலை அறியாதிருத்தல் (கலி. 43), பொருளின்மையுரைத்தாாகது அபபொருளைக கொடுக்க வியலாத போது தன மெய்யைத துறததல (கலி. 43), ஈதல இரநதாாகது ஒனறுஆறறாது வாழ தலின் இறததல் நனறு என்று எணணுதல (கலி. 61), தமக்கினிதாயிருககுமெனறு கருதிப பிறர்க்கு இன் னாதவற்றை வலிதிற் செயதல நனறனறு (கலி. 62), பெருநனறு ஆற்றியவரைப் பேணி ஒழுகுதல் (குறு. 115), தான் கெட்ட காலதது வநத உதவியை அரசு கட்டில் பெற்ற பின்னர் மறநத மன்னன் போலச் செய்நநன்றி கொல்லுதல கூடாது (குறு. 225), தாமரைத் தண்டாது ஊதிச் சநதனமரத் துச்சியில் தொடுத்த தீநதேன் போலப் பெரியோர் கேண்மை இனிது (நற். 1), பெரியோர், நாடி நட் பினல்லது நட்டு நாடார் (நற். 11), நட்டோாக கல்லது கண்ணஞ்சலாகாது (பதி. 63), பிரிவின் றியைநத துவரா நட்பின, இருதலைப புள்ளின் ஓருயிர் போல் வாழதல (அகம். 2), சாலபும வியப் பும இயல்பும் குனறின் மீணடும் மாசிலனைக் கழுவி

வயங்கு புகழ் நிறுத்துதல் ஆசறு காட்சி ஐயர்க்கும் அரிது (குறி. 15-17) முதலியவை அவர் பாடல் களில காணப்பெறும் அறநெறிகளாகும். சங்க இலககியத்திற் காணப்பெறும் தொல்கபிலர் இவரி னும் வேறாவர். கபிலன காண்க.

2. உருத்திரர். திருமாலாகிய மாயோனிடம் தோன் றிப் பரந்தவைகளுள் பதினொரு கபிலரும் - பதி னொரு உருத்திரரும் - அடங்குவர் (பரி. 3:7). (உருத் திரா பதினொருவர். மாதேவன, அரன், உருத் திரன், சங்கரன, நீலலோகிதன், ஈசானன், விசயன், வீமதேவன, பவோற்பவன், கபாலி, சௌமியன், பிங்கல நிகண்டு: 181).

**கபிலன் - புலவர்.** பலபொருளையும் அடக்கிச் செய் யுளைச் செய்யும் செவ்விய நாவினையும் மிக்க கேள்வியினையும் விளங்கிய புகழினையு முடைய வன் கபிலன் (புறம். 53.11,12). பொய்யா நாவிற் கபிலனாற் பாடப்பட்ட சிறப்பினை யுடையது முள்ளூர்மலை (புறம். 174:10-13). அறததை விரும்பி விளங்கிய, மறமபுரி கொளகையைச் செவ்விய நாவினாலே இழிவு மிகாத கவலை யில்லாத மனத் தால் மெய்ம்மையாற் பாடிய நல்லிசைக் கபிலன பரிசிலாகப் பெற்ற ஊர் பலவாகும் (பதி. 85:9 13). உலகெலாம் பரக்கும் பலரும் புகழும் நல்லிசை யினைக் கொணடவன் வாய்மொழிக் கபிலன் (அகம். 78:15,16). கபிலர் - 1. காண்க.

**கபிலை - குராற்பசு.** ஆடுகோட் பாட்டுச் சேரலாதன் பார்ப்பார்க்குக் கபிலையொடு - குராற்பசுவொடு - குடநாட்டிலுள்ள ஓரூரையும் கொடுத்தான் (பதி. ப. 6:4,5).

**கம்பம் - 1. தூண்.** இளம்பல்கோசர் படைக்கலங் கற்க மாறுபட்டு எறிந்த அகன்ற இலையை யுடைய முருக்க மரததாற் செய்யப்பட்ட கம்ப மாகிய - தூணாகிய - இலக்கைப் போலப் பொருபவரால் தொலைக்க முடியாதவன் பிட்டங் கொற்றன் (புறம். 169.9-12).

2. நடுக்கம். பொருத தலைவனின் உடம்பு காட் டில் சிற்றாற்றின கரையில் காலூற நின்று கம்பத் தொடு - நடுக்கத்தோடு - சாயநத இலக்கத்தை ஒப்ப அமபாற் சலிதது வீழநதது (புறம. 260: 22-24).

**கம்பல் - ஆடை.** மயிர் நீங்குதலால் தட்டையான தலை யும் கம்பலும் - ஆடையும் - கருங்குட்டத்தால் குறைவுற்ற காலினையும கையினையும் உடையவன் முடமுதிர் பார்பபான் (கலி. 65:6-8).

**கம்பலம் - தரைவிரிப்பு.** கம்பலத்தை - தரை விரிப்பை - விரித்தாற் போன்ற பசுமையான பயிர் நின்ற வயலின்கண் ஆடுதல் ஒழிந்த பந்துபோல விளவின் பழம் உதிர்ந்து பரவிக் கிடக்கும் (நற். 24:2-5).

**கம்பலை - 1. ஆரவாரம்.** பகைவரது ஊரைச் சுடுகின்ற தீயினது ஒளியில் தம் சுற்றத்தை அழைத்தலுடனே அழுகின்ற கூவுதலை யுடைய கம்பலையோடு - ஆரவாரத்தோடு - கூடிய கொள்ளையை விரும்பு பவன் கரிகாலன் (புறம். 7:7-9). சேரமான் குட்டு வன் கோதையின் கம்பலை யுடைய மூதூரிடததே யுள்ள நாளவையில் சென்று புகுதல் இரவலர்க்கு எளிது (புறம். 54:1-4). பகைவர் புறக்கொடுத்தோ டும் வீரக்கழலினது கம்பலையைக் கேட்டு நாணிப் பின் செல்லாது கண்டு நின்றவன் பாரி (புறம். 120: 19-21). சாகாட்டின் உருளை சேற்றின்கண் இறங் கிப்புதைய அச்சேற்றினின்றும் நீக்குதற் பொருட்டுச் சாகாட்டாளர் நல்லெருதுகளைத் துள்ளி யுரப்பிச் செலுத்துவதனால் கம்பலை எழுந்தது (பதி. 27:11-14). கருப்பஞ் சாற்றைக் கட்டியாகக் காய்சசு கின்ற ஆலையின் ஆரவாரிக்கின்ற மாறாத கம் பலை, யாளி தாக்குகையினாலே கலங்கிய யானை களின கதறல் போன்றிருக்கும் (பெரு. 258-261). முது வெள்ளிலை என்னும் ஊரினுள் எழும் பல்வேறு ஓதைகளுள் நெல் அரிவாரது கம்பலையும் ஒன்றா கும் (மது .110). நிரைதத படகிற் சென்று வேட்டை யாடும் மீன் வேட்டுவர் கரையை வந்தடையும் போது கம்பலை தோன்றும் (மது. 116). ஏழாம் நாள் அந்தி விழவின் ஆர்ப்பினைப் போன்று நான் மாடக் கூடல் நாளங்காடியில் கம்பலை எழுந்தது (மது. 427-430). தண்கடல் நாடனான ஒள்ளிய பனந்தாரையுடைய சேரனின் நாளோலக்க இருக் கையில் கலையினை முழுவதும் உணர்ந்த சீரியோர் கூடி விழைவுகொள் தருக்கங்களைச் செய்வதால் கம்பலை எழுந்தது (மது. 524-526). மதுரை அல்லங் காடியில எழுநத கம்பலை கடலினது ஓதம் கழி களிடத்தே நள்ளிரவில பாய்ந்து மீளுங்கால் அங்கு வாழும் பல்வேறு பறவையினம் ஆர்த்தது போன் றிருக்கும (மது. 540-544). வேலன முருகனை வழிபடு தலாலே மகளிர் ஆடும் குரவைக கூத்தும் சேரிகளி டத்தே நின்ற உரையும் பாட்டும் கூத்தும் தம்முள் கலக்கையினாலே கூடல்நகரின் முதல் யாமத்தில் வேறுவேறாகிய கம்பலை தோன்றியது (மது. 615-617). நல்லேறுகள் வளவிய இதழையுடைய குளவி யும் குறிஞ்சியும் வாடும்படி தம்மிற் பொருதலால் கம்பலை எழுந்தது (மலை. 334,335). முதிய மங்கல மகளிர் மணத்தினைச் செய்து வைக்கும்போது கம்பலை எழுந்தது (அகம். 86:9). சோழர் பருவூர்ப் பறநதலையில் இருபெரு வேநதரையும் பொருது

வென்று அவர் களிறுகளைக் கவர்ந்த ஞான்று கம்பலை எழுந்தது (அகம். 96:13-17). மடப்பிடி குழியில் அகப்பட்டதால் களிற்றியானை செய்த கம்பலைக்கு வெருவி எழுந்த அதன் கன்று மூதூரில் உள்ள எருமை நல்லானின் முலைப்பால் மாந்தும் (அகம். 165:1-5). மிஞிலியொடு பொருது வீழ்ந்த ஆய் எயினன் மீது ஞாயிற்றின் வெம்மை தாக்காமல் புதிய பறவைகளின் கம்பலை யுடைய பெரிய கூட்டம் விசும்பிடம் மறைய வட்டமிட்டது (அகம். 181:5-10). நெடுநதோச செழியன் கூடல நகரிடத்தே வெற்றிக் களிப்பால் ஆடிய போது எழுந்த கம்பலை போலத் தலைவனின் பரததைமை யொழுக்கம் பலர் வாய்ப்பட்டு அலராகியது (அகம் 296:11-14). திருப்பரங்குன்றத்தில் பாடுவாரது பாணியாகிய தாளமும் ஆடுவாரது கூத்திறகுரிய தாளமும் மலையிடத்து உணடாகும் எதிரொலியும் கலத்தலால் மிகுந்த கமபலை உண்டாயிறறு (பரி. 8:109-111).

2. அலர். மருங்கூர்ப் பட்டினத்து அங்காடியைப் போன்று கலலெனனும் கம்பலை – அலர் - எழச் செய்து தலைவன தலைவியைப் பிரிநது சென்றான் (அகம். 227:20-22). தலைவியரால் தூதாக அனுப் பபபட்டுத் தலைவரோடு மீண்ட வண்டின் கூட்டத்து ஒலி அத்தலைவியரது காதலை மூதூர்க்கண் கம்பலை ஆக்கியது (பரி. 8:36,37).

**கம்புட் சேவல் - சம்பங்கோழிச்சேவல்.** கழனியிலும் இலஞ்சியிலும் பொய்கையிலும் கம்புட் சேவலின் - சம்பங்கோழிச் சேவலின – இனிய உறக்கங் கெடும் படி வள்ளைக் கொடிகளைத் தள்ளிக் கொடுமுடி வலைஞர் மீன் பிடிப்பர் (மது. 247-256).

**கம்புள் - சம்பங்கோழி.** மருதநிலத்தே நீர்த்துறையிலிருக்கும் புதல்களைப் பொருந்திக் கம்புள் - சம்பங் கோழி – முட்டைகளை ஈனுதல் (புறம். 297:7,8). கட்கலங்களைத் துறையில் கழுவுதலின் அதன் கலங்கல நீரை அருநதிடப் பிளந்த வாயையுடைய யாமை, கம்புள இயவனாக (வாச்சியககாரனாக) கிணைபபறை போலப் பிறமும (அகம. 356:1-4). பழனததில் இருக்கும் கம்புள், காதலாலே தனனை யழைககின்ற பெடையை அகவும் (ஐங. 60:1). வெள்ளை நிறமமைந்த நுதலினையும் அரிதெழும் ஓசையினையு முடைய கமபுட்பேடை பழனததில் தனது இனததோடிருந்து மகிழ்ந்து ஆரவாரிககும் (ஐங். 85:1,2).

**கம்மியர் - 1. நெய்தற்றொழிலைச் செய்பவர்.** சிறியரும் பெரியருமான கம்மியர் - நெய்தற்றொழிலைச செய் பவர் - தெளிந்த திரையில் விளங்குகினற அறலை யொப்ப ஒள்ளிய பலவாகிய குறியவும் நெடியவுமான மடிப்புடைவைகளைக் கொண்டு வந்து கூடலநகர வீதியில் விற்றனர் (மது 519-522).

2. கருமகாரர். கம்மியர் - கருமகாரர் - செம்பினாலே செய்த பானையைக் கடைந்தாற் போல இன்குரல் மேகம் மின்னியது (நற். 153 2-4).

**கம்மியன் – 1. பொற்கொல்லன்.** குற்றமில்லாத கம்மியன் - பொற்கொலலன் - பழுதறசசெயத பொனனாலாகிய பல மணியணிநத மேகலையை யுடையவள் தலைவி (புறம். 353.1,2). கையாற் புனைதல வல்ல கம்மியன அழகுபெறப புனைநத ஆலவட்டம கூதிர்காலததில மூலையில தொங்கியது (நெடு. 57-59). கைததொழிலில வலல கம்மியன் கவின்பெறக் கழுவித் தூய்மை செயயாத முத்து தனது ஒளியை மறைததாற போலத தலைவி புணர்சசியால உண்டான நலனைப் புலபபடாமல நுண்ணிதாக மறைததாள (நற. 94:3-5). பொனனைப பணிசெயயும கம்மியனது கைவினையைப் போலக் கருங்கால வேஙகையின நாட்காலையில மலர்ந்த புதுபபூ அழகுற விளங்கியது (நற. 313: 1-3). தான செய்யும் கமமத தொழிலில சோாவு படுதலின்மையால் கெடுதலிலலாத கமமியன உருக் குப்பொறி சிதைநதவிடதது மண்ணைக் கொணடு அச்சிதைவை நீக்குவான் (நற். 363:4,5).

2. **தச்சன்.** கைததொழில் வல்ல கம்மியன் - தச்சன் - கடாவுகையினாலே புரை தீர்நது பொருததுவாய் அமைநத கூடடததினை யுடையது நெடுநிலை (நெடு. 84-86).

**கமண்டலம் - கரகம்.** பாாபபனமகன முருக்கமரத்தின் நல்ல நாரைக களைந்து அதன தணடோடு ஏநதிய கமண்டலததை - கரகததை - உடையவன (குறு. 156.2-4).

**கமலம் - ஒருபேரெண்.** ஐம்பூதங்களும முறையே தோன்றிய ஊழிகள், நெயதலும குவளையும ஆம்பலும் சஙகமும் கமலமும வெளளமும முதலிய பேரெண களால் குறிககபபடட காலஙகளைக கடநத பினனர், திருமால கேழற கோலஙகொணடு நீரினுள மூழ்கிக கிடநத நிலததை எடுததார் (பரி .2.5-16).

**கமழ் - மணம்.** வணடுகள புது மணததைத தோற்றுதற்குக் காரணமான கமழை - மணததை - உடைய ஐம்பாலைக் கொண்டவள் மடநதை (மலை. 30,31). வதுவை மகளிர்தம் கூநதல போலக கமழ பொருந்துமாறு காறறு அசைததலால வேஙகையின பொனனிற நறுநதாது உதிர்நதது (அகம. 378: 2-4). நெடுஞ்சுனையில தளைவிழ்ந்த கணணைப் போனற நீலமலா தணணிய கமழைக கொணடு

சிறந்திருந்தது (நற். 273:7,8). பாசறை அருந்தொழில் முடிந்து நாட்டிற்குப் போகுங்கால் முல்லைநாறும் நின கூந்தல் கமழ் கொள்ளுமாறு நல்லனவாகிய இன்பங்கள் பலவற்றையும் நுகர்வோம் எனப் பாசறைக்கண் நின்ற தலைவன் பருவ வரவால் தலைவியின உருவு வெளிப்பாடு கண்டுரைத்தான் (ஐங். 446). முருகவேளுக்கு விழாச் செய்ய எழுந் தோர் சாந்தமும் புகையும் அவியா விளக்கமும் நாறுகின்ற கமழையுடைய மலர்களும் பிறபொருள் களும் ஏநதிச் சென்று அவர் திருவடிகளைப் பணிந்தனர் (பரி. 8:96-102).

**கமுகு - பாக்குமரம்.** பருத்த தாளினையுடைய கமு கின - பாக்குமரத்தின் - பாளை பூ விரியாமற் கருவாயிருநததைப் போன்று இரண்டு கண்ணும் கூடின செறிந்த துளையினையுடையது யாழ் (பெரு. 7,8). பகற்பொழுதிலே பெய்தலையுடைய மழை கால்விழுந்தாலொத்த பெரிய தண்டினையுடையது கமுகு (பெரு. 362,363). கள் பெய்த நீலப்பைங்குடம், சோலையிடத்து நிற்கும் திரண்ட தண்டினையுடைய கமுகின் சூற்கொண்ட வயிற்றினைப் போன்றிருத் தல் (பெரு. 380-382). பெரிய அடியினையுடைய கமு கினது நீல மணியை யொத்த கழுத்திலுள்ள பாளை விரிந்த திரட்சியைக் கொணட குலைகளின் தெண்ணீர்ப் பசுங்காய் பக்கஙகள் திரண்டு இனிமை கொள்ளும்படி முற்றியது (நெடு. 23-26). விளைதற் றொழில் மாறாத அகன்ற கழனிகளிடத்தே காயை யுடைய கமுகு முதலாயின பெரும்பயன தந்தன (பட். 8,17).

**கயத்தூர் கிழார் - புலவர்.** இப்புலவர் கயத்தூர் என் னும் ஊரினர். குறுந்தொகையில் 354-ஆம் பாட லைப் பாடியவர். பரத்தையிற் பிரிந்து வாயில் வேண்டிச் சென்ற தலைமகற்குத் தோழி வாயில் மறுத்ததாக இப்பாடல் அமைந்துள்ளது. தோழி தலைவனிடம், 'யாம் உனக்கு இனியமாக இருந் தும் நெடுங்காலம் பழகினமையால் நின்னால் வெறுத்தற்குரியேம ஆயினேம' என்னும் செய்தியை, 'நீர்நீடாடிற் கண்ணுஞ் சிவக்கும், ஆர்ந்தோர் வாயிற் றேனும் புளிக்கும்' என்னும் அடிகளாற் குறிப்பி னுணர்த்துகின்றார்.

**கயந்தலை – யானைக் கன்று.** துடிபோலும் அடியை யுடைய கயந்தலை - யானைக்கன்று - கலக்கிய சிறி தளவாகிய நீரைக் களிறு முதற்கண் பிடிக்கு ஊட்டிய பின்பு தான் உண்டது (கலி. 11:8,9).

**கயம் - 1. குளம்.** பாண்டியன் பல்யாகசாலை முது குடுமிப் பெருவழுதி களிற்றைத் தன் பகைவரது காவலுடைய கயத்தின்கண் படிவித்துக் கலக்கி அழித்தான் (புறம். 15:9,10). களிறுகள் இரும்பிடி யினது ஈட்டத்தோடு பெரிய கயத்தின்கண் படியா மலும் கவளத்தைப் பெறாமலும் வலிய கம்பத்தைச் சாய்த்து நிலமிசைப் புரளும் கையை யுடையன வாக வெய்துயிர்த்துச் சுழன்று உருமென முழங் கின (புறம். 44:1-5). நுண்ணிய கோலாற் பிணிக்கப் பட்ட தெண்கண் மாக்கிணை, கயத்தின்கண் வாழும் யாமையை நாராசத்தின்கண்ணே கோத் தாற் போன்றுள்ளது (புறம். 70: 2,3). கிள்ளிவள வன் தை மாதத்தின்கண் குளிர்ந்த கயத்தைப் போலக் கொளக்கொளக் குறைபடாத கூழுடை யியனகரை யுடையவன் (புறம். 70:6-10). அரசு தாயத்தை விழுமியோன் பெறின் அது ஆழ்ந்த நீரையுடைய கயத்திடத்துக் கோடையால் உலர்ந்த நெட்டியினது சுள்ளியைப் போலப் பெரிதும் நொய்மை யுடையது (புறம். 75:7-10). மூதூரிலுள்ள குளிர்நத கயத்தின்கண்ணே நீராடி, மன்ற வேம் பின் தளிரை மலைந்து, கிணைப்பறை முனனாகக் களிறுபோல வெம்போர்ச் செழியன் போர்க்களம் வந்தான் (புறம். 79:1-4). மலையிடம் பொடியக் கானம் வெம்ப மிக்க நீரெல்லையையுடைய கயம் பலவும் உணங்கக் கோடை நீடிய பசுமையற்ற காலத்தில் மழை பெய்தது (புறம். 174:24-28). நாண் மீன்கள் இருபத்தேழனுள் ஒன்றாகிய புனர்பூசம் கயமாகிய குளம் போலும் வடிவினை யுடையது (புறம். 229:4). மணலிடத்துச் செய்யப்பட்ட வண்டற் பாவைக்குப் பூவைச் சூடிக் குளிர்ந்த கயத்தின் கண் விளையாடும் மகளிரோடு கைகோத்து விளையாடிய தன் இளமைக்கால நிகழ்ச்சியைத் தொடித்தலை விழுத்தணடினார் குறிப்பிட்டுள் ளார் (புறம். 243:1-4). கோடைக்காலத்தில் பெரிய முகில் பெய்யாது ஒழிந்ததால் கயங்கள் ஆழ அகழ்ந்தாலும் நீர் ஊறாது போயின (புறம். 266:1,2). செங்குரலிக் கொடி நிறைந்த தண்கயம் கலங்க வாளைமீனை நீர்நாய் தன் நாட்காலை உணவாகப் பெற்றுண்ணும் (புறம். 283.1,2). மகளிர் கடல்நீரில் விளையாடிக் கானற் சோலையிலுள்ள கயத்தில் மூழ்கிக் கழியிடத்துப் பூத்த நெயதற் பூக்களைப் பறிப்பர் (புறம். 339:6-8). மகட்கொடை மறுத்த இளையோள் தந்தை, வீரரனைவரையும் போர்ப்பூவைப் பெற்றுப் போர்க்கு ஏகுமாறு பணித்துவிட்டுத் தானும் பொருதற்காக நீராடக் கயம் புகுந்தான் (புறம். 341:3-9). மகண்மறுத்தலால் இருசாராரிடையே நிகழும் போர் காரணமாக மருதநிலத்தூர், களிறுகள் தம்முட் பொருவதால் கலங்கிச் சேறாகும் தணகயம் போலப் பெருங்கவின்

இழக்கும் (புறம்.341:17-19).சோழனது அரண்மனைக் கண்ணுள்ள புதுப்பிறை போலும் சுதையாலாகிய மாடத்தையுடைய பெருமனை பனிக்கயம் போலக் குளிர்ச்சி பொருந்தியது (புறம். 378:5-7). மிக்க நீர் நிறைந்த கயத்தின்கண் வீழ்கின்ற மழைத்துளி போல நெய்யில் துள்ளிய வறுவல்களைப் பொருநர் உண்டனர் (புறம். 386:1-3). கோடைக்காலத்தில் ஆழ்ந்த கயம் வற்றிப் பிளவுற்றுக் கிடக்கும் (புறம். 389:3). புண்களைத் தைக்கின்ற காலத்து அப்புண்ணின் குருதியிலே மறைந்தெழுகின்ற நெடு வெள்ளூசி, மீனைத்தேர்ந்து பனிக்கயத்திலே மூழ்கி எழும் மீன்கொத்தியினது வாயலகு போலுள்ளது (பதி. 42:2, 3). தூண்டிலிற் கோத்த இரையைக் கௌவிய வாளைமீன், நீர்க்கு அணித்தாய் நின்ற பிரம்பினது நிழலை நீரிற்கண்டு தூண்டிலென அஞ்சுதற் கேதுவாய நீர்நிறைந்த நெடுங்கயத்தில் தாமரை பூத்திருந்தது (பெரு. 285 - 290). அங்காடித் தெரு கயத்தைக் கையாற் குடைவது போன்ற இசைக் கருவிகளை முழக்கும் ஓசையைக் கேட்டு மகிழ்ந்தோர் ஆடும் ஆரவாரத்தினை யுடையது (மது. 363 - 365). அருகக் கடவுளின் திருக்கோயில் கயத்தைக் கண்டாலொத்த குளிர்ச்சியை யுடையது (மது. 484). ஆயதொடி மகளிர் கயத்தின்கண் மலர்ந்த தெய்வங்கட்குரிய தீபபோலும் இதழ்களை யுடைய தாமரை மலர் போன்ற ஒளிமுகத்தினர் (மது. 710 – 712). மகளிர் அகன்ற பாறையிலே பறித்துக் குவித்த மலர்களுள் குளிர்ந்த கயத்திற் பூத்த செங்கழுநீர் மலரும் ஒன்றாகும் (குறி. 63, 98). சிறுகாட்டிடத்தில், கயத்திலே புகுந்தா லொத்த பயனைத் தருகின்ற குளிர்ந்த நிழலிலே கூத்தர் சுற்றம் வழிவந்த வருத்தத்தைக் கைவிட்டுத்தங்கியது (மலை. 47 - 50). குமிழிகள் சுழன்று வருகின்ற ஆழ்ந்த நீரறாத கயங்கள் பொருந்திய முடுக்கரை யுடையது காட்டாற்று வழி (மலை. 213, 214). மலையெருக்கு நெருங்கின பக்க மலையில் வீழ்ந்தோரைக் கொல்லும் ஆழத்தையுடைய கயங்களுக்கு அருகிலுள்ள பாசி அடியூன்றி யிட்ட நிலையைத் தளர்க்கும் (மலை. 219-222). காடு கயத்தைக் கண்டாலொத்த குளிர்ச்சியும் அகன்ற பசுமையான அழகு முடையது (மலை. 259). தலைவன் பரத்தையொடு காவிரிப்பெருக்கில் வேழக் கரும்பாலாகிய தெப்பத்தினைக் கொண்டு, பூழிநாட்டாரது கயத்தினை நாடிச்சென்று விளையாடும் களிறும் பிடியும் போல முகமலர்ச்சியுற்றுப் பூந்தார் குழையப் புனலாடினான் (அகம். 6: 6-11). கயங்கள் நீரற்றுத் துகள்பட்டிருக்கும் வளம் தப்பிய காட்டில் தலைவன் தலைவியை உடன்கொண்டு ஏகினான் (அகம். 11: 6, 7). குளிர்ந்த கயங்கள் பொருந்திய பொழிலிடங்களில் காஞ்சியின் தாதுக்கள் அணிந்த மலர்மலிந்த மணல்மேடு வதுவை மணம் கமழ்ந்தது (அகம். 25:3-5). தூண்டிலிலுள்ள இரையை விழுங்கிய வரால் இரும்போதது ஆம்பலிலை கிழியக் குவளை மலர் சிதையப் பாய்ந்து வள்ளைக் கொடியை மயக்கித் தூண்டில் வேட்டுவன் இழுக்கவும் வாராமல் செருக்கு மிக்கு விடியற்காலத்தே கயங்களைக் கலக்கும் (அகம். 36: 1-8). கடாவடி விட்ட உழவர் களைப்புத்தீர மாவினது காய்களைக் கிள்ளி எடுத்து அவற்றோடு புளிப்பதனைச் சோற்றாக்கிய புதுக்குடங்களில் பெய்த சாரங்களைப் பனங்குடைகளால் கயத்தில் மண்டிய கடாக்களைப் போலக் குடித்தனர் (அகம். 37. 5-11). குடவாயில் என்னும் ஊர் யானை படியும் கயத்தினையும் காவற்காட்டினையு முடையது (அகம். 44: 17,18). எருமை பளிங்கு மணியினைக் கண்டாற்போலும் தெளிந்த கயம் கலங்க, ஆம்பல் மெல்லடை கிழிய, குவளை மலர் மாந்தி,காஞ்சியின் நுண்தாது உடம்பில் சிந்த அசையிட்டுத் தான் தங்கும் கொட்டிலிற் புகுந்தது (அகம். 56:2-7). குளிர்ந்த கயத்திலே நிறைந்த வண்டுகள் படியும் தமக்குத் தாமே நிகராய மலர்கள் போன்ற கண்களையுடைய தலைவி தலைவன் பிரிவால் அழகிழந்து வருந்தினாள் (அகம். 59: 1-3). நிழற்கண்ணுள்ள கயம் போன்ற குளிர்ந்த மாளிகையிடத்தே யுள்ள பெரிய செல்வத்தையும் நினையாளாய்த் தலைவனுடன் சென்றனள் என மகட்போக்கிய தாய் புலம்பினாள் (அகம். 105: 7,8). பாணமகளின் தமையனமார், நள்ளிரவில் காவிரியாற்றினது கருமணல் ஒழுகும் நீண்ட கயத்தின் நிலைகாண முடியாத நீர் கலங்குமாறு நள்ளிரவிற் சென்று வாளைமீனைப் பிடித்தனர் (அகம். 126: 5-9). தலைவி காவிரியின் வடபாலுள்ள நிழற் கயத்தினை யடுத்துள்ள மாந்தளிரை யொத்த மேனியள் (அகம். 177: 16-18). தலைவன் தண்ணிய கயத்தில் நிறைந்த குவளையின் ஒள்ளிய பூக்களாற் செய்த சுரும்பார்க்கும் கண்ணியினைத் தலைவியின் பின்னிய கூந்தலிற் சூட்டினான் (அகம். 180: 5-7). தழைத்த தாமரையின் அகன்ற இலை பெரிய கயம் கலங்கக் காற்று அடிக்குந் தொறும் களிற்றியானையின் காதுபோல் அசையும் (அகம். 186 3–6) கயங்கள் தம்மிடத்தே நீரற்றிருக்கும் கற்கள் உயர்ந்த இடங்களில் களிறுகள் இளைய பிடிகளைத் தழுவி வழி நடத்திச் செல்லும் (அகம். 189: 3-6). வேனிற்காலத்தில் ஞாயிற்று மண்டிலம், கயங்கள் தம்மிடத்துள்ள நீர் வற்றிடக் கதிரைப் பரப்பி நல்ல நிலங்களின் வளங்கள் கெடுமாறு செய்தது (அகம்.

263: 2-4). வேனிற்காலத்து வெவ்விய காட்டில், மடப்பிணை தழுவிய கலைமான் நீர் அற்ற கயத்தினை நோக்கி நீர்க்கு விழைந்தோடிப் பின் நீரின்மை கண்டு தளர்ந்தது (அகம். 353:10-14). இள வேனிற் காலத்தில் காதலர் யாழின் பாலைப்பண் போல வண்டினம் ஆர்க்கும் தெளிந்த கயத்தை அடுத்த சோலையிலுள்ள தூய மணல் மேட்டில் தங்கித் தம் வளவிய மனையினை மறந்திருப்பர் (அகம். 355:4-8). கரியாத பூவினை உடைய பெரியோர் (தேவர்) உண்டற் பொருட்டு அழல் ஓங்கிய வேள்விக் குண்டத்தின்கண் இடப்பெற்ற யாமை, தான் முன் பிருந்த நிழல பொருந்திய பெரிய கயத்திற்குப் போதலை விரும்பும் (அகம். 361:10-12). குளிர்ந்த கயத்திற் றோன்றிய குவளை மலர் மாரிக்காலத்தே மழையை ஏற்று நிறைந்தது போல நீரொடு, நிறைந்த மழைக்கண்ணை யுடையவள் தலைவி (அகம். 395:1-3). பசுமையான இலைக்கு மேலே தோன்றும் திரட்சி யான காம்பையுடைய நெய்தற்பூ, கரிய கழியின் கண் ஓதம் மிகுந்தோறும் கயத்தில் மூழ்கும் மகளிரது கண்ணைப் போல் தோன்றும் (குறு. 9:4-6). கயத்தில் நீராடும் யானை மலையருவி அடித்துவந்த புதிய கொத்தையுடைய கொறுக்கந் தட்டையைக் கவள மாக உண்ணும் (குறு. 170:2,3). கடும் புனலையும் அடைகரையையும் உடைய நெடுங்கயத்தி விட்ட மீனுக்குரிய வலையில் விலங்கு அகப்பட்டது (குறு. 171:2,3). நீரில்லாத வறிய கயத்தைத் துழாவிய களிறுகள் மலைப்பக்கத்தே பிடிகளைத் தழுவிப் புலியின் தாக்குதலினின்றும் காக்கும் (குறு. 215:3-6). புலத்தி (வண்ணாத்தி) கஞ்சியிலே தோய்த்து எடுத்து முதன் முறை துவைத்தபின் தண்ணிய கயத்திலே யிட்ட, அந்நீரிலே பிரியாத பருத்த ஆடையின் முறுக்கைப் போன்றது பகன்றை மலர் (குறு. 330:1-4). உலகத்துக் கயங்களெல்லாம் நீரற்றுப் போன வற்றிய கோடைக்காலத்தில் சூலொடு வாடிய நெற்பயிருக்கு நடுயாமத்தில் மழை பொழிதல (நற். 22:8-11). கயந்தோறும் குருகினம் இறாமீனைத் தின்று ஒலிக்கும் (நற். 27:7,8). தலைவி தலைவனைப் பெறுதல் வேண்டித் தான் எடுத்துக் கொண்ட நோன்பின் பயனாக விடியலில் தைத்திங்களில் தண்ணிய கயத்தில் ஆயத்தொடு நீராடினாள் (நற். 80:4-9). நெடிய கயத்தின்கண்ணே பொருந்திய நீரில்லா நீண்ட வழியிலே தலைவன் தலைவியைப் பிரிந்து சென்றான் (நற். 148:4,11). பிடியானையின் செவி போன்ற பசிய இலையையும் கயத்தின் கணுள்ள கொக்குப் போலக் கூம்பிய முகையையும் திரண்ட தண்டினையு முடைய ஆம்பலின் போது கிழக்கே தோன்றும் வெள்ளிபோல இருள் கெட விரியும் (நற். 230:1-4). யானையினம் குன்றி (மலைப் பச்சை) சுற்றிலு முடைய தண்ணிய கயத்திலே மெய் குழைய நீராடி, மலை வாழையைத் தின்னாது வெறுத்து, அயலதாகிய சிறுகுடியோர் அலற, அவ் விடத்துப் பலாவின் பழத்தைத் தின்னும் (நற். 232:1-5). எருமைக்கடா தான் காலையில் உழுத வருத்தங் கெட, நெடிய நீர் நிரம்பிய தண்ணென்ற கயத்தில், நாரையினம் வெருவி ஓடத் துடும் எனப் பாய்ந்து கிடந்தது (நற். 330:1-4). மகளிர் படிந்தாடும் தைத்திங்களின் தண்ணிய கயம் போலத் தலைவன் பலர் முயங்கி இன்பம் நுகரும் பரத்தைமையுடைய மார்பினன் (ஐங். 84: 3-5). தலைவி கயத்தில் வளரும் குவளை மலரைப் போன்ற அமர்த்த கண்ணினள் (ஐங். 277:5). யானைகள் ஊறுகின்ற நீருற்று அடங்கலின் நீர் உண்ணுதற்கு வேறோர் கயத்தைக் காணாமல் சேறு சுவைத்துத் தம் போகின்ற உயிரைக் காக்கும் (கலி. 13:6-8). வெஞ்சுரம் மலைவெம்ப, மண் பிளக்க, தெளிந்த கயங்களும் துகளுண்டாகச் செறிந்த அழலை யுடையது (கலி. 20:5,6). நெடிய கயங்களின் அயலயலே நுண்மணல் தோன்ற அம் மணலின் அறல் மறையும்படி கோலஞ் செய்வன போல் ஈங்கையின் வாடற்பூக்கள் வீழ்ந்து கிடக்கும் (கலி. 31:2,3). வீறுசான்ற உலகத்து நிலங்களின் அழகைக் காணுதற்கு யாறு கண் விழித் தாற் போல ஆற்றருகேயுள்ள கயங்கள் நீர்நிறைந்து மலர்களால் கவின் பெற்றன (கலி. 33:1,2). முருக்க மரத்தின் மலர்ந்த இதழ்கள், அழகையுடைய கயத்தில் உதிர்ந்தன (கலி. 33:4). வண்டுகள் தெளிந்த கயங்களின் நிழலிலே தமமையும் தாம் ஊதுகின்ற மலரையும் கண்டு ஆரவாரித்தன (கலி. 33:5). மலர் பரந்த பூஞ்சோலையை அடுத்துப் பளிங்கு போலும் நீர்நிறைந்த கயங்கள் காணப்பட்டன (கலி. 35:5). மலைநாடனுடைய அருளிடத்தே தலைவிக்கு அளி செய்யாத கொடியவை தோன்றுமாயின, அது நிழலையுடைய கயத்து நீரில நின்ற குவளை மலர் வெந்த தன்மையை ஒக்கும் (கலி. 41:29-31). மிகு தியை யுடைய கயத்திடத்து நின்ற தாமரை முகை கரையில நின்ற மாவினது வடு தீண்ட அலரும் (கலி. 72:7,8). மகளிர் பூங்கொடியில மலர் பறிக்க அதனைச் சூழ்ந்திருந்த வண்டினம் அவரைச் சூழ்ந்தது. அதற்கு அஞ்சிய ஒருத்தி ஆடையை ஒரு கையிலும் கூந்தலை ஒரு கையிலும் பற்றிக் கொண்டு மிகுதியையுடைய பூவேய்ந்த கயத்தில் பாய்ந்தாள் (கலி. 92:25-32, 42-44). 'மாலைப் பொழுதே, துறந்தாரை யுள்ளி நான் வருந்துதலின கயத்தில் பூத்த மலர்கள் உன்னைக் கண்டு

குவிவது போல் குவிந்த என் நலத்தைக் கண்டு நீ இகழ்கின்றாய்' எனப் பிரிவிடை ஆற்றாத தலைவி மாலைப்பொழுது கண்டு புலம்பினாள் (கலி. 118: 9,10). வையைப் புனல் வெள்ளத்தால் கயத்தி லுள்ள தண்கழுநீர் மலர்களுக்கு மேலே நீர் பெரு கியது (பரி. 7:23,24). தலைவி கயத்தின்கண்ணுள்ள நெய்தற் பூவையும் நறவம் பூவினது இதழையும் ஒதத கண்ணினள் (பரி. 8:74,75). தோளாகிய பொற்கயத்தில் மலர்ந்த கையாகிய தாமரைப் பூவை உடைய மகளிரில் மார்புப் பூணோடு அவர் கணவர் மார்பிலணிந்த பூண்களும் மயங்கின (பரி. 8:114-119). வையை வரவினால் காவிலும் கயத் திலும் ஆற்றிடைக் குறையிலும் மதுவையுண்டு வணடுகள் பாட்ப் பூ நலம் திசைதோறும் பொலிந் தது (பரி. 16:17-19). இருந்தையூரின் ஒரு பக்கத்தே கயங்கள் தம்பாலுள்ள தாமரை மலர்களின் வண் டினம் முரல, நாண்மீனகள் வானத்தில் இருத்தல் போலப் பலமீன் நிறைந்து காணப்படும் (பரி. தி. 1:10-13).

2. மென்மை. மறவன் பகைவரின் கயம் - மென்மை - பொருந்திய தலையுடைய பிடியானைகள் வருந்தக் களிறுகளைக் கொன்றான் (புறம். 303:8,9). வேட்டு வரின் சிறுவர் ஆண்காட்டுப்பூனை போன்ற வெகுண்ட பார்வையினையும் கயந்தலையினையும் ஊனைத் தின்பதால் புலால் நாறும் கயவாயினை யும் உடையவர் (புறம். 324:1-3). மன்றத்தில் நிற் கும் இரத்தி மரத்தின் நிழலில் கயந்தலைச் சிறுவர் அம்பெய்து விளையாடுவர் (புறம். 325:10-12). சூல் கொண்ட கயந்தலை மடப்பிடியைக் களிறு கவளங் கொடுத்துப் பாதுகாக்கும் (மலை. 307,308). சிறு குளத்தின் தொடுகுழியிலுள்ள கலங்கிய நீரால் களிறு கன்றினையுடைய மடப்பிடியின் கயந்தலை யைக் கழுவும் (அகம். 121:3-5). கயந்தலை மடப்பிடி குழியில் அகப்பட ஆண்யானை ஆரவாரித்தது (அகம். 165:1,2). புலிப்பகை வென்ற புண்கூர் யானை குன்றின் பக்கத்தே கயந்தலைப் பிடியினத் துடன் மகிழ்வோடிருந்தது (அகம். 202:1-3). கயந் தலைக் கன்றினையுடைய பெண் யானை தன் கன்றுண்ண வேண்டித் தான் தழை உணவை உண் ணாது மெலியும் (அகம். 229:4,5). கயந்தலை மந்தி யின் பசியினை நீக்கக் கடுவன பலாப் பழத்தின் சுளையினைத் தோண்டினும் சூரர மகளிர் அத னைத் துன்புறுத்துவர் (அகம். 288:12,13). பிடியி னது கயந்தலைக் கனறு குறமகள் பெற்ற புதல்வ ரோடு கூடி விளையாடியது (குறு. 394:1-3). களிற்றி யானை, கயந்தலை மடப்பிடியின் பசியைப் போக்க ஓமை மரத்தை முறித்தது (நற். 137:6,7). கயந்தலையுடைய யானைக்கன்று யானையுடன் செல்லாது பெண்டிர் நடுங்கும்படி ஆன்கன்றோடு சேர்ந்து சேரியிற் புகும் (நற். 171:1-5). பரத்தைய ரது மலர்மாலை தலைவன முயக்கத்தால் கயம் பெற்று மேனியிற் கிடந்தது (கலி. 72:19). புதல்வ னின் கயந்தலையிடத்தே கதிர்விடும் மூவட அணி மின்னியது (கலி. 80:2). பட்டமணிநத இளைய களிற்றின் தலையில் தொங்குகின்ற மூன்று வடம் போலப் புதல்வனின் கயந் தலையிடத்தே கையாற் புனைந்த மூவடம் தாழத் தொங்கியது (கலி. 86:1, 2). செவ்வேள் மூவிரு கயந்தலையுடனும் முந்நான்கு முழவுத் தோளுடனும் ஞாயிற்றின் எழுச்சி போலும் நிறவழகுடனும் தாமரைப் பூவினிடததுப் பிறந்த பிறப்பையுடையவர் (பரி. 5:10-12). தோட் டிப் புண்ணாலே கயம் பட்டதும் மதம் கமழ்வது மாகிய தலையினையுடையது களிறு (பரி. 9:50). அர வின் கயந்தலையால் கவிக்கப்பட்ட தம்முன (பல தேவன்) மார்பிலுள்ள வெண்கடப்ப மாலையைப் போலச் சிலம்பாறு தாழ்ந்திழிய மாலிருங் குன்றம் அழகு பெறும் (பரி. 15:19-23). வையைத துறையில் நீராடும் சிறுவரின் கயந்தலை முசசியிடத்தன வாகிய முஞ்சம் என்னும் அணியைக் கைக்கொணடு, தம் கணவரோடு நீராடும் மகளிரிடந்தோறும் நீர் ஓடி வரும் (பரி. 16:7-10).

3. பெருமை. கழுநீர்ப் பூவைத்தின்ற கயம் - பெரிய- வாயையுடைய எருமை பலாவின் நிழலில், மஞ் சள் மெல்லிலை முதுகைத் தைவரக் காட்டு மல்லிகையாகிய படுக்கையிலே துயில் கொள்ளும் (சிறு. 42-46). கயவாயினையும் நீண்ட கையினையு முடைய களிற்றியானை புலிக்குத் தப்பி மறைந்தது (அகம். 118:7-9). உறங்காத கணணினையும் பரந்த அடியினையும் கயவாயினையும் உடைய மதம் ஓய்ந்த யானைபோல நீரினைப் பெய்து வறுமை எய்திய மேகம் விசும்பினிடத்துத் திரியும் (அகம். 125:7-10). களிற்றிரை பிழைத்தலின் கயவாயினை யுடைய வேஙகை சினம் சிறநது முழங்கப் பிடி ஓடியது (அகம். 221:11-13). வேங்கையின மலர் புலியின் புள்ளிகளைப் போலத் தோனறுதலின் அதனைக் கண்டு கயவாயினை யுடைய, பெண் யானைகள் சோலையில் அஞ்சி ஓடின (அகம். 228: 10-12). கய வாயினையுடைய பேதை யானை மலையில் தேனைக் கிழிதத பசிய மூங்கிலகளின் குருத்துக்களைத் தின்று சுவைத்தது (குறு. 179:5-7). கரிய மேகம் போன்ற யானை மத்தகததையுடைய வளைந்த கவுளையும் கயவாயையும் உடையது (நற். 141:1,2). புகர்முக வேழத்தைத் தாக்கிய இரும் புலி, அதன குருதியைப் பருகிய கொழுவிய கவுளை யுடைய கயவாயை வேஙகை அடிமரத்தில உரிஞசித்

துடைத்தது (நற். 158:5-8). களிற்றியானை கயவாய்க் கன்றினை மருங்கிலுடைய பிடியானையோடு புணர்ந்து இயங்கியது (நற். 194:2-5). யானைகள் ஒன்றோடொன்று பொருதலால் இடிந்தொழிந்த கயவாய் (பெரிய பள்ளங்கள்) பொருந்திய கரையிடங் கவில் பளிங்குக் கற்களும் செம்பொன்னும் மின்னின (நற். 292:5,6). கானத்தின்கண்ணுள்ள முல்லையின் கயவாயையுடைய மலரைப் பார்ப்பன மகளிர் பறித்துச் சூடினர் (நற். 321:3, 4). பைஞ் சுனையில் நீராடும் பாவையரின் கொங்கைக் கயமுகை புனல் தாமரையுடன் வேறுபாடில்லா திருந்தது (பரி. 8:115-117).

4. பள்ளம். நாஞ்சில் வள்ளுவன் நாட்டில் நீர் நிறைந்த கயத்து - பள்ளத்தில் - விதைத்த வித்து நீரின்மையாற் சாவாது கரும்பு போலத் தழைக்கும் (புறம். 137:5,6).

**கயமலர்** - கயத்தில் பூக்கும் மலர். 'கயமலர் உண் கண்ணாய்' எனத் தலைவி விளிக்கப்படுகிறாள் (கலி. 37:1). மலர் பறிக்கச் சென்ற தலைவி அஞ்சி வறிதே மீள, தலைவன் அதுகண்டு கயமலரைப் பறித்துப் புறவிதழை யொடித்து அவளுக்குத் தந் தான் (கலி. 76:10,11). கழியிடத்துப் பூக்களினின்றும் போன வண்டுகளாலே பொலிவிழந்த துறையிடத் திரா துயில்கொள்பவன போல் கயமலர்களெல்லாம் கூம்பின (கலி. 134:6-8).

**கயமன்** - புலவர். இவர் குறுந்தொகைப் பாடல்கள் 356, 396 ஆகிய இரண்டையும் பாடினாரென மர்ரே பதிப்புக் குறிக்கும். மேலும் இந்நூல் கயமனார் என்பவர் வேறு எனக் காட்டுகிறது. குறுந்தொகை உ. வே. சா. பதிப்பில் 356-ஆம் பாடலைப் பாடியவர் கயமன் எனக் குறிப்பிட்டுப் பாட வேறுபாடாகக் கயமனார் எனபதைக் காட்டுவர். வையாபுரிப்பிள்ளையின் பதிப்பு கய மனைக் கயமனார் எனறே கொண்டுள்ளது.

**கயமனார்** - புலவர். பசிய இலையினின்றும் மேலெழுந்த நெய்தறபூ, கழியில வெள்ளம் மிகும் போதெல் லாம் கயத்தில் மூழ்கும் மகளிருடைய கண்ணை ஒக்கும என்று இவர் குறுநதொகை 9-ஆம் பாடலில் பாடியதால் கயமனார் எனச் சிறப்புப் பெயர் பெற்றார் எனறு கருதப்படுகின்றது. (குறுந் தொகை. பாடினோர் வரலாறு. உ. வே. சா. பதிபபு. பக. 134). இப்பாடலில வரும் தொடர் கயமூழ்கு மகளிர் என்பதாகும். எனவே சிறப்புப் பெயர் 'கயமூழ்கு மகளிரார்' என்று அமைவதுதான் இயல்பு; அல்லது மூழ்கு எனபதை விடுத்துக் கயமகளிரார் எனறோ கயமகளார் எனறோ வழங்கப்பட்டு இருக்க வேண்டும். கயமனார் என்று வழங்குவதால் இப் பெயர் கயமகளார் என முன்னர்த் திரிந்து பின் னர்க் கயமகனார் எனத் தவறாக ஒலிக்கப்பட் டிருக்க வேண்டும் (சங்க காலச் சிறப்புப் பெயர்கள். பக். 20). இவர் அகநானூற்றில் 12 பாடல்களையும் (7, 17, 145, 189, 195, 219, 221, 259, 275, 321, 383, 397), குறுந்தொகையில் 4 பாடல்களையும் (9, 356, 378, 396) நற்றிணையில் 6 பாடல்களையும் (12, 198, 279, 293, 305, 324) புறநானூற்றில் ஒரு பாட லும் (254) ஆக 23 பாடல்களைப் பாடியுள் ளார். புறநானூற்றில் இவர் பாடிய பாடல் புலம் பல் துறையாகிய முதுபாலையைச் சேர்ந்தது. நற்றிணை 9-ஆம் பாடலைத் தவிர ஏனைய அகப் பாடல்கள் அனைத்தும் பாலைத் திணையில் உடன்போக்குத்துறையில் அமைந்திருத்தலின் இவர் அத்துறை பாடுவதில் வல்லுநர் என்பது போதரும். நற்றிணை 12-ஆம் பாடல் உடன்போக்கினகண் அறத்தொடு நின்று போக்கினை மறுத்து அஞ்சு வித்ததாய்ப் புதுநெறியைப் புலப்படுத்துகின்றது. இத்துறையில் அமைந்த பாடல்களில மகட் போக்கிய தாயரின் மனநிலைகள் நன்கு சித்திரிக்கப் பெறுகின்றன. அகம். 145-ஆம் பாடல் அன்னி, திதியன், ஆகியோரது வரலாற்றுக் குறிப்புகளை விளக்குகின்றது. கழங்கின் குறிபார்க்கும் நெறியை இவரே தெளிவாகக் கூறியுள்ளார் (அகம். 195). மேலும் காலாற் பந்துருட்டுதல் (நற். 324). நொச்சி மாலையைச் சூடிக் குயவன் மன்றத்தில பலியிடுதல் (நற். 293), தலைவன் தலைவியரின் தாயர் ஒருவரை யொருவர் கடிந்து கூறுதல் (நற். 293), போன்ற பண்டைப் பழக்க வழக்கங்களை இவர் பாடல்கள் அறிவிக்கின்றன. கயமனார் இயற்கையை நுண்ணி தின் உணர்ந்தவர். யானையின் பொலிவற்ற கண் போனற வறுஞ்சுனையில புதந்து வரும் மேற்காற்றின் ஒலி பறைமியாலி போல மலைப் பிளப்பில் ஒலித்தல் (அகம். 321), விளாங்கனியின் ஓட்டில் தோன்றிய துளையில் மேற்காற்றுப் புகுந்து இசைத்ததைச் செந்நாயினை அஞ்சிய கலைமான் கோவலரது குழலோசை எனக் கருதிச் செல்லுதல் (அகம். 219), மயிலடி போன்று மாக்குரல் நொச்சி யிருத்தல் (நற். 305), பகன்றை மலர் பனி நிறைதல் போன்று கிண்ணத்தில் பால் நிறைதல் (அகம. 219) முதலியன இடபுலவரின் இயற்கைப் புலமையை விளக்கும்.

**கயமா** - யானை. வையைப் புதுநீர் வருகையை உணர்ந்த மதுரை நகர மாந்தர் சிலர், மறந்து கயமாவுக்கு - யானைக்கு - ஒப்பனை செய்யாது வறிதே ஏறிச் சென்றனர் (பரி. 20:19).

**கயமுனி** - யானைக்கன்று. விளையாட்டாகப் போர்

நிகழ்த்தும் கயமுனிகளின் - யானைக் கன்றுகளின் பிணைந்த கைகளைப் போன்று ஒன்றோடொன்று தினைக் கதிர்கள் பிணைந்து முற்றியிருந்தன (மலை. 107,108). நன்னன் வேண்மானின் கோபுரவாயிலில் காணப்படும் பல்வேறு வகைக் கையுறைப் பொருள் களுள் கயமுனிக் குழவியும் ஒன்றாகும் (மலை. 500).

**கயல்** - கெண்டை மீன். கழனியிடத்துக் கயலை - கெண்டைமீனை - உண்ட நாரை நெற்போரின கண்ணே தங்கும் (புறம். 24:19,20). சானறோர் கயலினதுமுட் போன்ற முதிர்ந்த நரையினையும் திரைந்த கதுப் பினையு முடையவர் (புறம். 195:1,2). வலைஞர் சினை முதிர்வராலோடு மாறுபடும் வேலபோன்ற ஒள்ளிய கயலை முகந்து சென்றனர் (புறம். 249.3-6). பொய் கையில் கயலமீனை யுண்ணும் நாரையால் துரத் தப்பட்ட வாளைமீனைப் புனலாடு மகளிர் தம் வளமனைக்குப் பிடித்துச் செல்வர் (புறம். 354:4-6). சிச்சிலிப் பறவை காஞ்சிக் கொம்பில ஏறிக் கயத் தைக் கூர்ந்து நோக்கி நெடும்பொழுது காத்திருந்து புலால் நாற்றத்தையுடைய கயலை மூழ்கி எடுத்தது (சிறு. 179-181). கொடுமுடி வலைஞர் பகழியையும் சிலையையும் ஒத்த சிவந்த வரியினையுடைய கயல் களோடு இறால் பிறழ்கின்ற குளங்களிற் பிள்ளை களோடே சென்று மீனைப் பிடித்தனர் (பெரு. 269-271). கொக்கின் கூட்டம் நாரையோடு கடும் புனல் அறலிலே எதிர்தரும் கயல்களைத் தின்றது (நெடு. 15-18). தலைவி பெரிய கயலைப் போன்று அமர்த்த மையுண்ட கண்களை யுடையவள் (அகம். 126:18,19). மதர்த்த கயலிரண்டு எதிர்த்துப் பொருவது போன்ற உமணர் மகளின் கண்கள் நாயின் குரைத்தலுக்கு அஞ்சின (அகம. 140:5-10). கயல் உமிழும் நீர்போலத் தலைவியின் கண்ணீர் ஒழுகுதல் (அகம். 169 : 12 ; கலி. 53 : 11). தலைவன் சென்ற சுரநெறியை நினைத்துத் தலைவி நீரில் குளித்துப் பொரும் கயல்களைப் போலக் கண்ணீர் பெருக வெய்தாக உயிர்த்து வருந்தினாள் (அகம். 213:3-6). கொக்கின் சேவல் வெள்ளியாலாய இதழ போனற கயலைப் பெறக் கருதி உழவர் கோலிய அணையின் மீதிருந்து கடுநீரைப் பார்த்திருக்கும் (அகம். 346:8-11). தலைவி நெடுநீரினுள் பொருத கயல்களை ஒத்த மையுண்ட கண்களையும் இனிய சொற்களையும் உடையவள் (குறு. 250:5,6). மகளிர் கயலை ஒத்த கண்ணினர் (குறு. 398:3; நற். 220: 9; 316: 3; ஐங். 36:4; கலி. 127: 8; 145: 5; பரி. 21:48;22:29). தலைவன் கயலாகிய மீன் கூட்டம் செருக்கிய பொய்கை நிறைந்த ஊரினன் (நற்.230:5). கயலை உண்ட நாரை நெற்போரில் தங்கும் (ஐங்.9:4). கழியின்கண் வாழும் சினைக் கயல்களைப் பாணன் தன் தூண்டிலால் இரைகொள்வித்துப் பிடித்தான் (ஐங். 111:1-3). கூந்தல் அறல் மணலாக, கண்கள் கயல்க, பூக்களை யுடைய சோலை யிடத்தே நாணாகிய அணையை முறித்துப் பகலில் பலருங் காணப் பரத்தையாகிய புதுவெள்ளத்தில் பாணன் வாயிலாகத் தலைவன் நீராடினான் (கலி. 98:14-19).

**கயவர்** - இழிந்தவர். வையை நீரணி கொண்டதெனறு கற்றாரும் கல்லாதாரும் கயவரும் - இழிந்தவரும் - கணவரும் கணவர் பிழையாத பெண்டிரும் பாண்டியனும் மதுரை நகரத்தாரும் நீராடறகு வையைத்துறை அடைநதனர் (பரி. தி. 2.24-27).

**கயவாய்** - புகார்முகம் (யாறு கடலோடு கலக்குமிடம). குட மலையிற் பிறநத தண்பெருங்காவிரி கடலிடத்தே கலக்கும் ஆழமான கயவாயை - புகார்முகததை - ஒப்ப, நன்னனின் தலைவாசலிலே ஆமானகுழவி முதலான கையுறைப் பொருள்கள் நிறைநதன (மலை. 527-529).

**கயன்** - 1. குளம். செழியன் ஊர்களில் வயலகள் தழைக்கக் கயன் - குளம - நீரை இறைகூடையால முகந்திறைக்கும் தொழில் செய்வோர் பாடுதலால் ஓசை எழுந்தது (மது. 89-92). கோடையால கயன் நீரற வறண்டது (அகம். 291:4). கயன் நீரற வற்றச் செவ்வியழிந்து உலர்ந்த நெடிய நெறி குறுககிடும் அருஞ் சுரத்திடத்தே தலைவன சென்றான (நற். 224:8-11). தேனினம் கயன் சூழ்ந்த இளமரக் காவிலுள்ள மணத்தையுடைய மலாகளைச் சார்ந்து இயத்தின் இசைபோன்று எவவிடததும் ஓசை உண்டாக்கியது (கலி. 36:5,6).

2. ஊற்றுக்குழி. களிறு கல்லில ஊறும் நீரைத் தன் தடக்கையை நீட்டி, கயன் - ஊறறுக்குழி - அற நீரை முகந்து கொண்டு பிடியின எதிரே ஓடும் (நற். 186:1-3).

**கயில்** - மூட்டுவாய். தலைவி வயலில மலர்ந்த ஆம்ப லால் தொடுக்கப் பட்ட கயில் - மூட்டுவாய் - பொருந்திய தழையினையணிநத திதலை அல்குலை உடையவள் (ஐங். 72:1-3). வையைப் புனலில் நீராட விரைந்த மகளிருள் சிலர் கட்டிய கயில் அழகு செய்த வடங்களைப் பூண்டனர் (பரி.12:18).

**கயிறு** - பாசம். களிறு கயிற்றால் பிணித்தலைக் கொண்ட கவிழ்ந்த மணியணிந்த மருங்கினையும் பெருங்கையையும் உடையது (புறம். 3:10, 11). கொங்கர் நாட்டில் வனனிலததை யுடைத்துத தோண்டப்பட்ட சிறிதே யூறிய நீர் பொருந்திய கிணறுகளிலுள்ள கயிறு கட்டபபட்ட முகவை களை ஆனிரை சூழநதிருக்கும் (பதி. 22:12-15; பதி.

ப. 3. அடிக்குறிப்பு). தயிர்கடையும் மத்தினிடத்தே கயிறு ஆடாத கழிதலையுடைய பொழுதுகளை நினைத்து இடையர் தலைவனான கழுவுள், தகடூ ரெறிந்த பெருஞ்சேரலிரும்பொறையைப் பணிந் தான்(பதி.71:16,17).நாடகமாடு மகளிர் ஆடுகளத்தே கொணடுவந்த முழவு வாராற் பிணித்திருத்தலைப் போன்று காடி வைத்த மிடா வண்டியில் கயிற்றால் வரிந்து கட்டப்பட்டிருந்தது (பெரு. 55-57). முடலை யாகையையுடைய் முழுவலி மாக்கள் துளையுடைய நுகத்தினகண்ணே பெரிய கயிற்றாலே எருதுகளை நெறிபட நிரைத்துக் கட்டின சகடவொழுங் கினைப பககத்தே காத்துச் சென்றனர் (பெரு. 61-63). பாசறையிடத்தே மறவர்க்குரிய அரண்கள் கூடமாகக் கால்களை நட்டுக் கயிற்றை வலித்துக் கட்டின இருக்கைகளிலே வில்லை ஊன்றி அதிலே துண்ிகளைத் தூக்கிக் குந்தக் கோல்களை நட்டுக் கிடுகுப்படைகளை நிரலாகப் பிணைத்து அமைக்கப் பட்டிருந்தன (முல்லை. 40-42). நாவாயின் இறுகும் பிணிப்பினை யுடைய வலிய பாய்கட்டின கயிற்றை அறுத்துப் பாயையும் புடைத்துப் பாய்மரம் முறி யும்படியாகக் கடுங்காற்று வீசியது (மது. 376, 379). சிற்பநூலை அறிந்த தச்சர் கூறியதாகக் கயிற்றைப் பிடித்துத் திசைகளைக் குறித்துக் கொண்டு அத் திசைகளில் நிற்கும் தெய்வங்களையும் குறைவறப் பார்த்து மனைகளை வகுப்பர் (நெடு. 76-78). கனி களால் விளைந்த தேறலை நீரெனக் கருதிப் பருகிய மயில், விழாக்களத்திலே கழாய்க் கயிற் றிலே ஆடுகின்ற ஆடுமகள் தாளந் தவற ஆடித் தளருவது போலத் தளர்ந்தது (குறி. 190–194). தலைவி கொடுங்கழியிலுள்ள தாழையினது விழு தாலாகிய கயிற்றால் புலிநகக் கொனறையின கிளையில் கட்டப்பட்ட ஊசலில் ஆடினாள் (அகம். 20: 5-6). பரதமாககள் நெடிய கயிறு கட்டப்பட்ட குறுங்கண்களையுடைய அழகிய வலையால் கடலின் பெருமை குன்றுமாறு இனமீன்களை முகந்தனர் (அகம். 30:1-3). தூண்டில் இரையைப் பற்றியுணட வரால இருமபோத்து தூணடில் வேட்டுவன் வாங் கவும் வாராது கயிறிட்டுப் பிடிக்கும் சினம் மிக்க ஏறுபோலக் கயத்தைக் கலக்கியது (அகம். 36:1-8). தலைவன் நம்மைத் தேடி வரின், அசோகமரத் தின் ஓங்கிய கிளையில் தொடுத்த, தொங்கும் கயிற்றினாலான ஊசல் இல்லாத இடத்தைப் பார்த்து வருந்துவான் எனத் தோழி தலைவியிடம் கூறினாள் (அகம். 38:5–8, 15). ஆவணமாக்கள் கயிற்றாற் பிணிப்புற்ற குடத்திலுளள ஓலையை, இலச்சினையை ஆய்ந்து நீக்கிய பின்னர் எடுப்பர் (அகம். 77:7, 8). யானையின் முதுகிலுள்ள கயிறு போன்று மலைமீதுள்ள சிறுநெறி தோன்றும் (அகம். 128:10, 11). பல புரிகளாலாய நீண்ட கயிற் றாற் பிணித்த வண்டியினைப் பகடுகளின் பிடரி யில் பூட்டி உப்பு வணிகர் ஓட்டுவர் (அகம். 173: 8-10). மழுவாள் நெடியோனாகிய பரசுராமன் முன்பு அரிதினில முயன்று முடித்த வேள்விக்களத் தில் நடப்பட்ட கயிற்றினை அரையிற் சுற்றிய காணத்தக்க வனப்பினையுடைய அரிய காவலை யுடைய நெடுந்தூண் போல யாவரும் காணுதல் இயலாத மாண்புற்ற அழகினையுடையவள் தலைவி (அகம். 220:5-9). பாகன் கடுஞ்செலவினையுடைய குதிரைகள் அடங்கிச் செல்வதற்குக் கடிவாளக் கயிற்றினைப் பூட்டினான் (அகம். 224:2,5). கொடிப் பிணக்கம் பற்றியதால் அறுந்து தலைவனின் தோளிடத்தே கிடந்த பூக்கள் உதிரப் பெற்றமாலை எருதின் திமிலின்கண் கிடக்கும் கயிற்றைப்போல அழகுபெற அசைந்தது (அகம. 248:11-13). உமண ரால் வளைந்த நுகத்திலே செவ்விய கயிற்றினால் பிணிக்கப்பட்ட பகடுகள் வண்டியை வருந்தி யிழுத்தன (அகம். 329:5-7). கிளையில் கட்டப்பட்ட பலரும் ஆடும் ஊசலின் கயிறு ஏறியும் இறங்கியும் ஆடும் (அகம். 372:7,8). ஆரியக் கூத்தர் கழையிற் கட்டிய கயிற்றின்மேல் நின்று ஆடும்பொழுது கொட்டப்படும் பறையைப் போல வாகை வெண் ணெற்று காற்றினது தாக்குதலால் ஒலித்தது (குறு. 7:3–5). கொக்கின் பார்வையை அஞ்சிய நண்டு இடையரால் பிணிக்கப்பட்ட கயிற்றை அறுத்துக் கொண்டு ஓடும் எருதைப்போலத் தாழைவேரி னிடையே உள்ள வளைக்குள் விரைந்துசெல்லும் (குறு. 117:1-4). கரிய பனை நாரினாலே திரித்த கயிற்றால் பிணித்து ஊசல் தொங்க விடப்பட்டது (நற். 90:6). குழலொலிப்பவும் பல்லியங் கறங்கவும் ஆடுமகள் நடந்த முறுக்குண்ட புரியை யுடைய வலிய கயிற்றின் மீது மந்தியின் குட்டி ஏறி விளை யாடியது (நற். 95:1-4). தலைவியை விழையும் நெஞ் சிற்கும் பொருளை விழையும் அறிவிற்கும் இடைப் பட்டு வருந்திய தலைவனின் உடல் களிற்றியானை ஒன்றோடொன்று முரணிப் பற்றி யீர்த்த தேய்ந்த புரியை யுடைய பழைய கயிறுபோல அழியும் (நற். 284). பரதவர் படகிற் சென்று நள்ளிரவில் வலிமை மிக்க புரிகளான்முறுக்குண்ட கயிற்று நுனியிலே கட் டப்பட்ட எறியுளியை எறிந்து மீன் பிடிப்பர் (நற். 388:2-6). கருங் கோட்டு எருமை தன்னைக் கட்டிய கயிற்றை அறுத்துக் கொண்டு சென்று நெடுங்கதிர் நெல்லை விடியலில் மேயும் (ஐங். 95:1,2). ஒள்ளெரி மேய்ந்த சுரம், செல்வம் மிக்கவர் தம் யானையைப் பிணித்த பொன்புனை கயிறு போல் தோன்றும்

(ஐங். 356:1-3). தலைவியின் நெஞ்சம் உவப்பக் குதிரையின் கடிவாளத்திட்ட நுண்ணிய புரியை யுடைய வலிய கயிற்றை இயக்கிக் குதிரை பூண்ட நெடுந்தேரை விரைந்து செலுத்துக என வினை முற்றிய தலைவன் பாகனிடம் கூறினான் (ஐங். 489: 3-5). புதல்வன் தன் காலிற் கட்டின செச்சைமணி ஒலிக்க, கையாற் புனைந்த வேழத்தை முப்புரியாக முறுக்கின கயிற்றினாலே வளைத்துக் கட்டி மெல்ல ஈர்த்து வந்தான் (கலி. 80:6,7). மத்தைச் சுற்றிய கயிறுபோலத் தலைவியின் நலத்தைச் சுற்றித் தன நெஞ்சு சுழன்றதாகத் தலைவன் கூறினான (கலி. 110 : 10, 11). திருப்பரங்குன்றிற்குச் செவ்வேளைத் தொழுவோர் ஏந்திச் சென்ற பொருள்களுள் கயிறும் ஒன்றாகும் (பரி. 8:100). தேவ சேனையின் பாங்கியரோடு முரணிய வள்ளியின பாங்கியர் தேரணி போல வடிககயிற்றைத் தெரிந்து கொண்டு வந்தனர் (பரி. 9:52). மரக்கலத்தைச் செலுத்தும் நீகான் பாயும் கயிறும் பாய்மரமும் காற்றால் அலைப்புண்டு சிதையும் நிலையிலுள்ள மரக்கலத்தைப் பயினாலே (ஒருவகைக் கருவியாலே) திருத்தி அதன் உள்ளே இருந்தாரது நடுக்கத்தைக் களைந்தான் (பரி. 10:53-55). திருப்பரங்குன்றத்திற்குச் செவ்வேளை வழிபட வந்தவருள் சிலர் யானைகளை வழியினின்றும் அகற்றி அவற்றின் காலின்கண் சங்கிலியை ஆட்டிக் கச்சணிந்த புரசைக் கயிற்றால் மரங்களில் கட்டினர் (பரி. 19:30, 31). பரத்தையர் பொருள் ஈபவரை வெளியே போகாமல் தடுத்துக் கணணே கயிறாகக் கொண்டு தோளாகிய தறியோடு சேர்த்துக் கட்டுவர் (பரி. 20:55,56).

**கரகம் - கமண்டலம்.** எல்லா உயிர்க்கும் ஏமமாகிய அருந்தவத்தோன் (சிவபெருமான்) நீர் தொலைவறியாக் கரகத்தானும் - கமண்டலத்தானும் - தாழ்ந்த திருச் சடையானும் பொலிவு பெற்றவர் (புறம். க. வா. 11-13). அந்தணர் உறியிலே தங்கின கரகத்தையும் உரைசான்ற முக்கோலையும் உடையவர் (கலி. 9:2). சீர்மிகு சிறப்பினோன் (தக்கண மூர்த்தி) தான் இருந்த ஆலமரத்தில் தான் இருப்பதற்கு முன்னே தூக்கி வைத்த நீர் நிறைந்த கரகம் போலப் பழந் தொங்கும் தாழை மரத்தில் பூ மலர்ந்தவை போலக் குருகினம் அத்தாழை மேலே தங்கியது (கலி.135:3-5).

**கரண்டை - கமண்டலம்.** சான்ற கொள்கையும் சாயா யாக்கையும் உடைய ஆன்றடங்கிய அறிஞர் நோன் பாற்றுதற்கு வேண்டிய கல்லைப் பொளிந்தாற் போன்ற ஒடுங்கிய வாயையுடைய கரண்டையை - கமண்டலத்தை - பலவடங்களையுடைய நூலுறியிலே தூக்கிச் செறிந்தனர் (மது. 480-483).



**கரணம் - புலம்.** கரணம் அமைந்த குற்றமற்ற செய்யுட்களை இயற்றும் பரணர் கடல்பிறக்கோட்டிய செங்குட்டுவனைப் பத்துப் பாடல்களால் பாடி உம்பற்காட்டு வாரியையும் அவன் மகன் குட்டுவன் சேரலையும் பரிசிலாகப் பெற்றார் (பதி. ப. 5. அடிக் குறிப்பு).

**கரந்தை - 1. கொடிவகை.** வெவ்வேல் மறவனுக்கு நாகு முலை போன்ற நறும்பூங் கரந்தையை அறிவுடையோர் சூட்டும் முறைமையிலே சூட்ட அவன் நிரையை மீட்டுத் தந்து நடுகல் ஆயினான் (புறம். 261:13-16). மகட்கொடை பெற விழைந்த தலைவனிடம் சான்றோர் 'இவள தந்தை இவளைக களிற்றியானைகளைக கரந்தைக கொடி படர்ந்த வயலினகண்ணே நின்று பொருது வீழ்த்தும் பெருந்தகை மன்னர்க்கென வரைந்துள்ளான' எனக் கூறினர் (புறம். 340:6-9). சேரனின் புண் தோள் வீரர் படைமுகத்து நிற்ப அவனது தானை காய்த்த கரந்தையின் பெரிய கொடி படர்ந்த விளைபுலத்தே வந்து தங்கியது (பதி 40:4-6). மலைச்சாரலில் தலைவியும் தோழியும் சுனைநீராடிப் பறித்துச் சூடிய மலர்களுள் கரந்தையும் ஒன்றாகும் (குறி. 76). குறுந்தொடி மகளிர் புனல் விளையாட்டை வெறுப்பின பொய்கையிலுள்ள பைஞ்சாய்க் கோரைகளைக் கோதிக் கரந்தை படர்ந்த கழனியாகிய வயலிலுள்ள வெண் குருகினை ஓட்டுவர் (அகம். 226:4-6). வெட்சி வீரரைத் தடுத்துப் பொருது பட்ட வீரரைக் கழற்கால் இளையர் நடுகல்லின்கண்ணே புகழ நிலைபெற நிறுத்தி, நறுமஞ்சட் பூசி, அம்பினால் அறுத்தெடுத்த ஆத்தியின பட்டையாகிய நாரினால் சிவந்த கரந்தைப் பூவைத் தொடுத்து இயற்றிய கண்ணியை வரிவண்டார்ப்பச் சூட்டினர் (அகம். 269: 5-13). தன் துணையைத் துறந்த களவனாகிய நண்டு கரந்தைக் கொடி படர்ந்த வயலிலுள்ள வள்ளையின மெல்லிய தண்டை அறுக்கும் (ஐங். 26: 1, 2).

2. **கரந்தையார்** (நிரை மீட்போர்). மறவர் தலைவன் கரந்தை - கரந்தையார் - மறைந்திருத்தலை அறிந்து சென்று போரில் அவரைக் கொன்று பருந்துகள் ஆரவாரிக்கும்படி ஆனிரைகளைக் கவர்ந்தான் (புறம். 269: 9-12).

**கரப்பவன் - மறைப்பவன்.** இரப்பவருக்குக் கொடாது கரப்பவன் - மறைப்பவன - நெஞ்சம் போல் மரத்தின் இலைகள் குவிந்தன (கலி. 120: 5,6).

**கரப்பார் - மறைப்பார்.** தம் கண்ணிற் றோன்றும் காமக் களிப்பை ஊரார் அலருக்கு அஞ்சி மறைப்பவருடைய நிலைமை, கள்ளுண்டு அதனால்

உண்டாகிய களிப்பைப புறததார்க்குப் புலனாகாத படி கரப்பார் - மறைப்பார் - நிலைமையை ஒக்கும் (பரி. 10: 63-68).

**கரம் – கை.** நெஞ்சே, பரங்குன்றிற் பன்னிருகைக் கோமானாகிய செவ்வேளின திருவடியைக் கண் குளிரக கணடு, கரம் – கை - கூபபித் தொழுது முருகாற்றுப்படையைப பூசையாகக் கொண்டு ஓது வாயாக எனப புலவர் பாடுகிறார் (முரு. வெ. 9).

**கரம்பை** - தரிசு நிலம். தலைவன் ஒருவன் தன் மருத நிலததூர்களை முன்னே இரவலர்க்குக் கொடுத் தொழிந்ததனால எஞ்சி நின்றதொரு கரம்பை - தரிசு நிலம் - உடைய சிற்றூரை வறுமையுற்ற சுற்றத்தின் தலைவனுக்குக் கொடுத்தான் எனச் சான்றோர் புகழக் கண்டு அவன் தலைபணிந்து இறைஞ்சினான் (புறம். 285: 14-17). நோக்கின வரைச் செருக்கும் காளையாகிய தலைவன் குறுகிய வழிகளையுடைய கரம்பைகள் நிறைந்த சிறறூர் களைப் பாணர்க்கு நல்கினான் (புறம். 302: 6-8). விலங்கினங்கள் புல் மேய்தல் வேண்டி விடப்பட்ட கரம்பை நிலத்தில் உண்டாகிய வெடிப்புகளில் நீர் நிறையுமாறு வறண்ட காலத்திலும் பேரியாற்று வெள்ளம் பரந்தது (பதி. 28: 7-10). பகைவர் சேரன் அடிபணிந்து ஒழுகாராயின், அவர் உழுது வித்திய வெள்வரகும் கொள்ளும் விளையும் கரம்பையாகிய வனனிலத்திலே விளைந்த வரகும் கொள்ளு மல்லது செந்நெற்சோறு பெறாது வருந்துவர் (பதி.75:8-12). எயிற்றியர் கரிய நிலமாகிய கரம்பை நிலத்தை உளி போலும் வாயை யுடைய பாரைகளாலே குத்திக் கிளறிப் புழுதியை அளைந்து புல்லரிசியை வாரி யெடுத்துச் சென்றனர் (பெரு. 92-94). தேர் வலவன் பருக்கையை யுடைய மேட்டு நிலங்கள் உடையுமாறும் கரம்பை நிலத்திலே புதுவழி உண்டாகுமாறும் தேரைச் செலுத்தினான் (குறு. 400: 4,5).

**கராஅம்** -முதலையுள் ஒருவகை. சோழன்குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன கராஅம்- முதலை - செருககிய குழிநத இடத்தையுடைய அகழியினையும் முதலை யுடைய இலஞ்சியினையும் மதிலினையு முடைய தலைமை பொருநதிய மூதூரிலுள்ளவறறை நல்ல வெனறு பாராது போரில அழிக்க வல்லவன (புறம். 37:7-14). அதியமான் நெடுமான் அஞ்சி கால் அள வான நீருக்குள்ளே களிற்றியானையைக் கொனறு வீழ்க்கும் இழுத்தலையுடைய கராஅததை யொக்கும் வலிமையை யுடையவன (புறம். 104:2-4). கரிகாலன் போர் செய்தமையால் வெண் பூக் கரும்போடு செந் நெல் வளர்ந்து குவளையும் நெய்தலும் ஒன்றோ டொன்று மயங்கிய கராஅம செருக்கித் திரிந்த பொய்கை பாழ்பட்டு அறுகும் கோரையும் அடர்ந்து வயலும வாவியும் மயங்கி நீரற்றமையால் அஙகு இரலை மானும் பிணையும் துள்ளின (பட். 239-242). நீரின் நிறம் மறையுமாறு உதிர்ந்த மலர்கள் நிறைந்த கடுவரல் கான்யாறறில் கராஅம் துஞ்சும் (அகம். 18:1-3). கற்பாறையில ஓடும் கானயாற்றின் நீர்ச்சுழியில் கராஅம் திரியும் (நற். 292:7–8). கராம் காண்க.

**கராம்** - முதலையுள் ஒருவகை. தலைவன் இரவின் கண வரும் மலைமுழைஞ்சு கரிய ஆழத்தையுடைய நீர்நிலையிலே போதற்கரிய கழியிடததே முதலை யும் இடங்கரும் கராமும் திரிதரும் இடும்பை உடைத்து (குறி. 256-261). பொருகின்ற மாறுபாட் டினையும் வலியினையும் உடைய ஏறுகள் பலவுப் புகுந்துள்ள புகை சூழ்ந்த தொழுவம் சிஙகமும் குதிரையும் களிறும் கராமும் குழுமிய பெருமலை விடரக முடைய முகில திரியும் மலையிடத்தை ஒக் கும் (கலி. 103:17-21). கராஅம் காண்க.

**கரி - 1. சான்று.** கள்ளூரில் வாழ்ந்த குறுமகளின் அணி நலம் வவ்விய அறனிலாளன் அவளை அறியேன் எனப் பின பொய்ச்சூள் மொழிந்திட, அறங்கூற வையத்தார் அச்செயதி அறிந்தவரிடம் கரி - சானறு- வினவி அவனை மரககிளையில் கட்டி வைததுச் சுண்ணாம்பு நீற்றினைத் தலையில பெய்து தண டித்தனர் (அகம. 256:15-20). பெருந்துறையிடத்துத் தேரில் வண்டற்பாவை சிதைய வந்து, தலைவியின் தோள்கள் தரும் இன்பததைப் புதிதாக நுகர்ந்த பொழுது நீ கூறிய சூள்மொழியும் பொய்யாகி விடுமோ; அதற்கு இக்கடல் தெய்வமே நேரில் கண்ட கரியாகும் எனத் தோழி தலைவனிடம் கூறி வரைவு கடாயினாள் (அகம. 320:10-14). தாம் கண் டறிந்த ஒனறை மறைத்துப் பொயக்கரி கூறும் இயல்பு ஆனறோர்க்கு இலலை (குறு. 184:1). தலை வன் இருக்கும் இடததினைக் காட்டாதொழிநத திஙகளை நோக்கித தலைவி, 'திங்களே, நீ அறிநத கரியினைக கூறாது பொயத்தலின் நற்கவின இழநத என் தோள் போல் சிறுகச்சிறுகக் குறைநது தேய வாயாக' எனக் கூறினாள் (நற். 196:5-9). கரி பொய்த்தவன் நின்ற மரம் அழகு கெடுவது போலத் தன் அழகு கெடும்படி தன்னெஞ்சு காமத்தீயைக் கொளுத்திச் சுடுகிறது எனத் தலைவி தோழியிடம் கூறினாள் (கலி. 34:10,11). எரிபோலும் நிறத்தை யுடைய இதழ்கள் வாடி உதிரப் பரத்தையரைப் புணர்ந்தமையைக் கரியாகக் கூறும் கண்ணியை யுடையவனாய்த் தலைவன் தலைவியின் இல்லிற்கு

வந்தான் (கலி. 78:13,14). உலகத்துள் இதனைக் கண்டவர் இல்லையெனக் கருதித் தகைவின்றித் தாம் நெஞ்சறிந்து செய்த கொடிய தீவினைகளைப் பிறர் அறியாமல் மறைப்பினும் அச்தீவினையை அறிவாருள் அவர் நெஞ்சைக் காட்டிலும் அறிந்து கரி கூற வல்லவர் பிறரில்லை (கலி. 125:1-4).

**2. கரிந்தபொருள்.** கரி - கரிந்தபொருள் - பரந்தா லொத்த காயாவின் வாடற்பூக்களோடு எரிபரந்தா லொத்த இலவ மலர்களையும் சுமந்து வரும் தீம் புனலையுடையது கான்யாறு (அகம். 133:8-10). மடப் பிடியின் தடக்கையை ஒத்துப் பால் நிரம்பிக் கரியை எடுக்கின்ற குறடு போல வளைந்து செறிந்த குலையைக் கொண்ட பைங்கதிர்களை உடையது செந்தினை (குறு. 198:2-4). செருமிகு சினவேந்தன் சினந்த பகைப்புலத்தை எரி சூழ்ந்து அழித்தது போல எரியுண்ட கரியினை யுடையது வறண்ட பாலைநிலம் (கலி. 13:1,2). வெந்த கரியினையுடைய, பல வழிகளையுடைய, கற்கள் காய்ந்த காட்ட கத்தை ஏதந்தரும் வழியென்று கருதாது, அவ்வழி யிடை விழுப்பொருட்காகத் தலைவன் தலைவியைப் பிரிந்து சென்றான் (கலி. 150:11,12).

**3. யானை.** மாடத்தின் அணித்தாக நின்ற வலிய கரி - யானை - மடப்பிடியைக் கண்டு மயக்கமுற்றுப் பாகன் நடத்தவும் நடவாது நிற்க, பிடியானையும் அக்கரியின் மேல் மனம் மயங்கி நின்றது (பரி. 10:41-45). மதத்தையுடைய கரி முகிலோடு இயைந்து முழங்கும் (பரி. தி. 1:51).

**கரிகால் - கரிகாற் சோழன்.** பெரிய வளத்தையுடைய கரிகால் - கரிகாற்சோழன் - முன்னிலையில் நிற்றல் ஆற்றாராய் வாகைப் பறந்தலையில் அவன் வெற்றி பெறத் தம் ஒன்பது குடைகளையும் நன்பகலில ஒழித்து ஓடிய பீடில மன்னர் போலத் தலைவியை வருத்திக் கொண்டிருந்த வாடையும் தலைவன் வர ஓடும் (அகம். 125:18-22). செலகுடி நிறுததிய பெரும் புகழையும் வெல்லும போரையும் உடைய கரிகாற் சோழனது இடையாறு நல்லிசையும் வளமும் நிறைந்தது (அகம. 141:22-24). மிக்க சினமும் வலியுமுடைய பெரும் பெயர்க் கரிகால், வெண்ணி வாயில் என்னுமிடத்து முரணி வநத பதினொரு வேளிரொடு இருபெரு வேந்தரும் சாய, அவர் இமிழ் முரசம் பொருகளத்து ஒழியுமாறு வலியைக் கெடுத்த ஞானறு அழுந்தூரிடததே (கரிகாலன தாய பிறந்த ஊரில) ஆரவாரம் எழுநதது (அகம். 246:8-14). கழாஅர் முன்றுறைககண் ஆர வாரம் பொருந்திய சுற்றத்தினருடன் கரிகால் கண்ணுற்று மகிழப் புனல்விழாவில் நயந்து ஆடிய அத்தியின் அழகினை விரும்பிய காவிரி அவனைக் கவர்நது சென்று ஒளிததது (அகம. 376:4-11). கரிகால் வளவன், கரிகாலன், கரிகாற் பெருவளத் தான், திருமாவளவன், பெருவளக்கரிகால் காண்க.

*ச இ பொ க தொ 2-9அ*

**கரிகால்வளவன் - கரிகாற் சோழன்.** 'கடலில் மரக்கலத் தையோட்டி வளியினை யழைத்து அதனை ஏவல கொண்ட உரவோன் மருக', 'மதம்பொருந்திய யானையையுடைய கரிகால் வளவ' என வெண்ணிக் குயத்தியார் கரிகாற் பெருவளத்தானை விளிததுப் பாடுவர் (புறம. 66: 1-3). இருபெரு வேந்தராகிய சேரனும் பாண்டியனும் ஒரு களததே படும்படி, வெணணிப பறநதலையில பொருத அஞ்சத தக்க வலிய முயறசியையும கண்ணுக்கு அழகு நிறைந்த ஆத்திமாலையையும் உடையவன கரிகால வளவன (பொரு. 146-148). ஒளிதங்கிய படையினை யுடைய கரிகால் வளவனோடு வெணணிப் பறந் தலையில போர் செய்து புறபபுண பட்டமைக்கு நாணின பெருஞ்சேரலாதன அப போர்ககளத்தின புறத்தே வாளொடு வடககிருநதான (அகம. 55: 9-12). கரிகால, கரிகாலன், கரிகாற் பெருவளத் தான, திருமாவளவன், பெருவளக கரிகால காணக.

**கரிகாலன் - கரிகாற் சோழன.** ஏரியினாலும் ஏற்றத் தினாலும் பிறர் நாட்டுக கழனிகள விளைவிககும் நெலலெலலாம் கரிகாலனது காவிரிசூழ நாட்டகத துள்ள வயலிடததே அரிகாலின கீழ சிநதும நெல லுக்கு ஒபபாகும (பொரு. வெ. 1). கழனியிடததுளள அரிகாலின மேல தேன தொடுககும ஆயபுனல நீா நாடனான கரிகாலன கால நெருபபுறறு இசசக கரத்தை அளநதது (பொரு. வெ. 3; பட. வெ. 1). கரி கால, கரிகால்வளவன, கரிகாறபெருவளத்தான, திருமாவளவன, பெருவளக் கரிகால காணக.

**கரிகாற்பெருவளத்தான் - சோழமன்னன்.** கரிகால, கரிகால் வளவன், கரிகாற் சோழன, கரிகாற்பெரு வளத தான், சோழன் பெரும் பெயர்ககரிகால, பெருவளக் கரிகால், திருமாவளவன் என்னுமபெயாகளால இம மன்னன குறிககப் பெறுகின்றான். கரிகாலன என்ற பெயர்க்கு இருவகையான காரணங்கள் கூறபபடு கின்றன. 1. இவன் காலில் தீபபட்டுக் கரிந்தமை (பொரு. வெ. 3). 2. பகைவர்களாகிய கரிகளுககுக காலன் போன்றவன் (கலைக்களஞ்சியம. தொகுதி. iii. பக. 245, 246). இம்மன்னனைப பாடியோர் எண்மர். கடியலூர் உருத்திரங் கண்ணனார், கருஙகுழலா தனார், கழாத்தலையார், நக்கீரர், பரணர், மாமூலனார், முடத்தாமக் கண்ணியார், வெண ணிக்குயத்தியார். இவரேயன்றிப் பிறகாலப் புலவர் சிலரும பாடியுள்ளனர். புறநானூற்றில் நானகு பாடல்களிலும் (7, 65, 66, 224). அகநானூற்றில

ஐந்து பாடல்களிலும் (55, 125, 141, 246, 376) இவனது வரலாறு இடம் பெற்றுள்ளது. பத்துப் பாட்டில பொருநராற்றுப்படைக்கும் பட்டினப் பாலைக்கும் இவனே பாட்டுடைத் தலைவன். இம் மன்னன உருவப் பஃறேரிளஞ்சேட் சென்னியின் மகன் என்பதை, 'உருவப் பஃறேரிளையோன் சிறு வன' என்ற பொருநராற்றுப் பாடல் (130) தெளி வுறுத்துகிறது. இவனுககுச் சேட்சென்னி நலங் கிள்ளி, நெடுங்கிள்ளி, மாவளத்தான் என ஆண் மக்கள் மூவரும ஆதிமந்தி எனப் பெண்மகள் ஒருத்தியும் இருநதனர் (அபிதான சிந்தாமணி. பக். 354). இவன் கருவாயிருக்கும போதே தந்தை இறந்த தால் தாய் வயிற்றிலிருந்து அரசு எய்தியமையைத் 'தாய் வயிற்றிருநது தாயமெய்தி' என்ற தொடர் (பொரு. 132) விளக்குகிறது. இளையன் என்ற தேனாக் முரணி வந்த பகைவரை இவன வெண் ணிப் பறந்தலையில் பொருது தோறறோடச் செய்த செய்தியைப் பல பாடல்கள் புலப்படுத்துகின்றன (புறம். 66; பொரு. 135-148; அகம். 55; 125; 246). இவனை இளம்பருவத்தே பகைவர் வஞ்சகமாகச் சிறையிட் டனர் என்பதைக் 'கொடுவரிக் குருளை கூட்டுள் வளர்ந்தாங்கு' என வரும் பட்டினப்பாலை அடிகள் (220-225). தெளிவுறுத்தும். ஊர்சுடு விளக்கத்தழு விளிக் கம்பலைக் கொள்ளை மேவலை' (புறம். 7) என்று இவனது மறத்தன்மை புகழப்படுகிறது. 'காடுகொன்று நாடாக்கிக் குளந்தொட்டு வளம் பெருக்கி' எனனும் பட்டினப்பாலை அடிகள் இவன் சோணாட்டில் செய்த சீர்திருத்தங்களை நனகு விளக்குகின்றன. இம்மன்னனது வள்ளன்மையை 'இரும் பாண் ஒக்கல் கடும்பு புரந்ததூஉம்' எனற புறப்பாடல் அடி (புறம். 224) புலப்படுத்தும். வேள்வி செய்து முடித்தவன் என்பதை 'வேத வேள்வித் தொழின் முடித்ததூஉம்' (புறம். 224) என்பதனால் அறியமுடிகிறது. சங்கப் பாடல்களே யன்றிப் பழமொழி, சிலப்பதிகாரம், மணிமேகலை, பெரியபுராணம, கலிங்கத்துப்பரணி, காஞ்சிப புராணம் போன்ற நூல்களும் இவன் வரலாற்றை விளக்குகினறன. 'பட்டினப்பாலை' பாடிய கடியலூர் உருததிரங்கண்ணனாாக்குப் பதினாறு நூறாயிரம் பொன் பரிசிலீந்தான என்பதைத் 'தழுவு செந்தமிழ்ப் பரிசில் வாணர்பொன், பததொடாறு நூறாயிரம பெறப் பண்டு பட்டினப் பாலை கொணடதும்' எனற கலிங்கத்துப் பரணி யின (இராசபாரமபரியம். 22) பாடல அறிவிக்கும். மேலும், இளையன எனறிகழ்ந்த முதியோர் பொருட்டுத தான் முதியனாய வநது வழக்குத தீர்ததான் எனற செய்தியும் இளமையில நெருப் பாற சுடப்பட்டு உயிர் பிழைததான் என்ற செய் தியும் யானையாற் கொண்டு வரப்பட்டு அரசு கட்டிலேறுதல், இரும்பிடர்த் தலையாரை அம்மா னாக உடையனாதல் முதலிய செய்திகளும் பழ மொழி 21, 62, 105 - ஆம் வெண்பாக்கள் மற்றும் அவற்றின் உரைகள் வாயிலாக அறியப் பெறு கின்றன. கரிகால், கரிகால்வளவன், கரிகாலன், திருமாவளவன், பெருவளக் கரிகால் காண்க.

**கரு** - கருப்பம். மாணிழை மகளிரது கரு - கருப்பம் - அழிததோர்க்குக் கழுவாய உளதெனினும் ஒருவன் செய்த நன்றியைக் கொன்றோர்க்கு ஒருகாலும் உய்தியில்லை (புறம். 34:2-6). பெருஞ்சேரல் இரும் பொறையின் தேவி கருவில திங்கள் பத்தும் நிரம்பி இருவகை அறிவும அமைந்து சால்பும் செமமையும் உள்ளிட்ட பிற நறபண்புகளும் நாடுகாத்தற்கு வேண்டும் அரசியலறிவு வகை பலவும முற்றக்கற்றுத் துறைபோகிய சிறபபும் நிறைந்த புதல்வனைப் பெற்றாள் (பதி. 74:17-21). கமுகின் பாளையாகிய பசும்பூ விரியாமல் கருவாயிருந்தாலொத்த இரண்டு கண்ணுங் கூடின செறிநத துளையையும் உருக்கி வார்த்தாற் போன்ற தோல்களின வேறுபாடு தெரி யாமல இசைத்தலுறும் போர்வையையு முடையது யாழ் (பெரு. 7-9). நீலமணி போன்ற நிறமுடைய நீர் நிரம்பிய கருவுடைய மேகம் விண்ணதிர முழங்கிப் பெய்த மழையால் நிலம் குளிர்ந்து காடு கள் தளிர்த்தன (அகம. 314:1-3). மூவெயிலெறிந்த பைங்கண் பார்ப்பானிடம் (சிவனிடம்) இருந்து இந்திரன் பெற்ற கருவை அவனிடமிருந்து ஏழு முனிவர் பெற்று வேள்வியிலிட் டவித்துத் தம் மனைவியரிடம் கொடுக்கச் சாலினி தவிரப் பிற மகளிர் அதனை ஏற்று அயின்றனர் (பரி. 5:27-45). 'எம் வயிறு கரு உருக' எனறு செவ்வேளிடத்து மகளிர் சிலர் நேர்ந்து கொண்டனர் (பரி. 8:106).

**2.** முட்டை. புறவினது கருவாகிய முட்டை போன் றது வரகரிசி (புறம். 34.9). மனையின்கண்ணுள்ள ஊர்க்குருவியின் கருவை உடைத்தாற் போன்று கடற்கரைச் சோலையில் புன்னை அரும்பு மலர்ந் தது (நற். 233:6,7).

**3.** தொடக்கம். கரு - தொடக்கத்திலே - தொன்மா இலங்கை என்னும் நன்றாகிய பெருமையுடைய இலங்கை என்னும் பெயரை வைத்தாண்ட மன்ன ருள்ளும் வலிமையொடு விளங்கியவன் நல்லியக் கோடன் (சிறு. 119-122).

**4.** கருவறை. கரு - கருவறை - அமைந்த நல்ல இல்லத்தில் கோப்பெருநதேவி தங்கியிருந்தாள் (நெடு. 114).

**5. பரமாணு.** பல ஊழிகள் முறையாகக் கழிந்த பின் கரு - பரமாணு - வளர்கின்ற வானமாகிய முதற்பூதத்தினது ஊழி தோன்றியது (பரி. 2:1-6).

**கருக்கு – கூர்மை.** வெண்மணலில் தழைத்த பசிய அடியும் கருக்கும் - கூர்மையும் - கொண்ட பனையின் குருத்தோலையில் தொடுத்த வேம்பின் மலரைத் தலைவன தலையில் அணிதல் (குறு. 281: 1-4). பனையின் உசசியிலுள்ள கருக்குடைய நெடுமடல் குருத்தோடு மறையுமாறு கடற்கரையில் கடுங்காற்று மணற் குவியலைத் தொகுத்தது (குறு. 372:1-3).

**கருங்கண்வெள்ளை - சங்கருடணன் (பலதேவன்).** திருமால், கருங்கண்வெள்ளை - (கரிய கண்ணையும் வெள்ளிய உடம்பையும் உடைய) சங்கருடணன் (பலதேவன்) - ஆகவும் திகழ்கிறார் (பரி. 3:81).

**கருங்கல் - மலைக்கல்.** எருமைபோலும் வடிவுடைய கருங்கல் - மலைக்கல் - பொருந்திய இடந்தோறும் ஆக்கள் போலப் பரக்கும் யானையை யுடைய கானக நாடன் கோப்பெருஞ்சேர லிரும்பொறை (புறம். 5:1-3). பெரும்புலி கருங்கல்லாகிய மலைப் பக்கத்தில் கொன்று தின்று எஞ்சியவற்றை விட்டுப் போன கலைமானின் உலர்ந்த தசையினைக் கண்டு அவ்வழிச் செல்லும் வம்பலர் மகிழ்ந்தனர் (அகம். 107:4-6). கருங்கல் பாறையில் ஓடுகின்ற கான் யாற்றில் நீநதுதற்கரிய நீர்ச்சுழிகளில் வாழும் முதலைகளுக்கு அஞ்சாமல் தலைவன் இரவில் வருவான் (நற். 292:7-9).

**கருங்காக்கை - கருநிறக்காக்கை.** உதிரத்தாற் சிவந்த சோற்றுப் பலியை விழுங்கின கருங்காக்கை அவ் வுணவை வெறுபபின் மனையைச் சூழ்ந்த நொச்சியின் நிழலிடத்துக் கிடந்த யாமையின் பார்ப்பைப் பசித்த காலத்துத் தின்பதற்குப் பாதுகாத்து வைக்கும் (பெரு. 183-186).

**கருங்குழலாதனார் – புலவர்.** இவர் பாடியனவாகப் புறநானூற்றில் இரண்டு பாடல்கள் (7,224) காணப் படுகின்றன. முதற்பாடல் கொற்றவள்ளைத் துறையில் அமைந்துள்ளது. 'நீ இரவும் பகலும் பகைவரைப் பொருதழிக்கக் கருதி அவர்தம் ஊர்களைச் சுட்டெரித்தலால் நாட்டுமக்கள் அழுது புலம்பும் ஆரவாரக் கொள்ளையை விரும்புகின்றாய்; அதனால் அந்நாடுகள் நலமிழந்து கெட்டன காண்' என்று கரிகாற் பெருவளத்தானிடம் போரழிவைச் சுட்டுகிறார். பிறிதொரு பாடல் கையறு நிலைத் துறையில் அமைந்தது. கரிகாலன் உயிர்நீத்தகாலை, அவனது பிரிவாற்றாது பாடியது. 'அறிவுடைய இவ்வேந்தனை இழந்த உலகம் இரங்கத்தக்கது. பெருவறங்கூர்ந்த காலத்தில் இடையர் தம் நிரை சுட்கு இரையாதல் வேண்டிப் பூத்துத் தழைத்துச் செறிந்திருந்த வேங்கைமரத்தைக கூரிய வாள் கொண்டு கழித்தவழி அம்மரம் பொலிவிழந்து நிற்பது போலக் கரிகாலன் இறந்தபின் அவனுடைய உரிமை மகளிர் தம் இழைகளைக் களைந்து பொலிவிழந்து வருந்தினர்' என இரங்கி உருக்கமாகப் பாடியுள்ளார். இபபுலவர் அப்பாடலில் கரிகாலனின் போராற்றல, விருநதோம்பும் மாண்பு, வேதவேள்வித் தொழில் முடித்த திறன் ஆகியவற்றைப் புலப்படுத்தியுள்ளார்.

**கருங்கூத்து - தண்ணிய நாடகம்.** 'தனி நிற்கும் மகளிரைக் கண்டால் தன் காம வேட்கையைக் காட்டிக் கொள்வதையே தொழிலாகக் கொண்டு திரியும் பார்ப்பான் நடத்திய கருங்கூத்து - தண்ணிய நாடகம் - நம் காதலர் நம்மைக் குறியிடத்து வந்து காணும் காட்சி கெடும்படி நமக்கு வருத்தமாய் விளைந்தது' எனத் தலைவன் சிறைப்புறத்தானாகத் தோழி தலைவியிடம் கூறி வரைவு கடாவினாள் (கலி. 65:27-29).

**கருங்கை - 1. வலியகை.** சிற்றரண்களால் சூழப்பட்ட கானப்பேரெயில் கருங்கை - வலியகை – உடைய கொல்லனால் செந்தீயில் மாட்டிய இரும்பு உண்ட நீரினும் மீட்டற் கரியதென வேங்கை மார்பன் இரங்கக் கானப்பேரெயில் கடந்த உக்கிரப் பெருவழுதி வெற்றி கொண்டான் (புறம். 21:6-10). கருங்கைக் கொல்லனின் அரத்தால் கூர்மை செய்யப்பட்ட வாயினைக் கொண்ட கோடரியால் கிள்ளிவளவன் படை பூ நாறும் கொம்புகள தனிப் பக் காக்கள் தோறும் காவல் மரங்களை வெட்டும் ஓசை கருவூர் மன்னனின் அரண்மனையில செனறொலித்தது (புறம். 36:6-10). இழிபிறப்பாளன் தன் கருங்கை சிவக்குமாறு வலி மிகுத்துக் கொட்டும் அச்சத்தைச் செய்யும் துடி, புலி கிடக்கும் நெடு மலையின்கண் உள்ள ஆந்தை அலறும் ஒலியொடு கூடி ஒலிக்கும் (புறம். 170.5-7). பிட்டங்கொற்றன் பகைவர்க்கு இரும்பைப் பயன்படுத்தும் கருங்கைக் கொல்லன் விசைத் தடிக்கப்பட்ட கூடத்தோடே ஏற்று மாறுபடும் உலைக்கல் போலும் வல்லாளன் ஆவான் (புறம். 170: 14 - 17). ஈர்நதூர் கிழான் தோயன் மாறனைப் பாணர் இரப்பின் அவன் தன்னூர்க் கருங்கைக் கொல்லனை வருவித்துப் பாணரது உணணா வயிற்றினைக் காட்டி வேல்வடித்துக் கொடு என்று இரபபான் (புறம். 180:10-13). இரும்பை வடித்தா லொத்த திரையாத மெல்லிய தோலையுடைய கருங்கையால

தொழில் செய்வாரின் காதலஞ்சிறார் பழஞ்சோற்றுக கட்டிகளை உணபா (பெரு. 222-224). பெருங்கை யானைக்கோட்டில் பூணைச சேர்சகும் கருங்கைக் கொலலன இரும்பை விசைத் தெறியும் கூடத்தெழுநத ஓசை கேட்டு வெருவி மாடத்திருந்த புறவின் சேவல இன்றுயில் நீஙகும் (பெரு. 436-440). தோளிலே தொஙகவிடும் சோற்று முடியைக் கொண்ட கருங்கை ஆடவர் தீப்பொறி உண்டாகுமாறு பாறைகளைக் கலலியெடுத்துக் கிணறு இயற்றினர் (அகம. 79:1-3). ஓங்குமலைச் சாரலில் இரும்பால் வடித்தாலொத்த கருஙகைக் கானவன் வெண்கடப்ப மரத்தைச சார்ந்து நின்று அம்பை ஆராய்ந்து யானையின் மார்பில் செலுத்தினான் (அகம. 172:5-8).

2. பெரிய கை. வடித்த கள்ளை உண்க என வேண்டியும் கொள்ளானாய் வாளைக் கொண்டு கரந்தையர் மறைந்திருததலை யறிந்து அங்குச சென்று அவர்தம் ஆனிரைகளைக் கவர்நது கொண்டு அம மறவரையும் கொனறு மாறுபாட்டினைப் போககியது இககருங்கை - பெரியகை - வாள்தான் என ஔவையார் வெட்சி மறவன் ஒருவனது மறச் செயலைப் பாராட்டுகிறார் (புறம். 269:7-12). இரும்புப பூண செறிநத கொம்பினையும் கருங்கையினையும் கொண்ட யானை முகிலாக உருவகப்படுததபபட்டுள்ளது (புறம். 369:1,2).

**கருங்கை ஒள்வாள் பெரும்பெயர் வழுதி** - அரசன். பாண்டிய நாட்டை ஆண்டதால் பாண்டியன கருங்கை ஒள்வாள் பெருமபெயர் வழுதி என அழைக்கப் பெற்றான். இவனை இரும்பிடர்த்தலையார் என்னும் புலவர் கருங்கை ஒள்வாள் பெரும்பெயர் வழுதி என்று குறிப்பிட்டுள்ளார் (புறம். 3:13). அப்பாடலினால இவன் கவுரியர் மரபில் வந்தவன் எனவும் இரவலர் குறிப்பறிந்து வேண்டுவன நல்கும் பெருங் கொடையாளன் எனவும் அறிகிறோம். 'நிலம் பெயரினும் நின் சொல் பெயரல்' எனப் புலவர் அவனுக்கு அறிவுரை கூறுகிறார்.

**கருந்தொழில்** - வலியதொழில். ஓரினச் சுற்றத்தினையும் கருந்தொழிலையும் - வலிய தொழிலையும் - கொண்ட செருககிய பரதவர் பிள்ளைகளுள் ஒரு சாரார், கடல் இறால் மீனைச் சுட்டுத தினறனா; மற்றொரு சாரார் வயலாமையைப் புழுககின இறைசசியைத் தின்றனர் (பட். 61-64).

**கருந்தொழில் வினைஞர்** - தச்சர். கருந்தொழில் வினைஞர் - தச்சர் - தம கையாற் செயயும் தொழில் எல்லாம முற்றுப் பெற்ற பினனர் ஏறிப் பார்த்து உணமையாக ஓட்டம் உண்டெனறு பெயர்பெற்ற நடையை உடைய தேருடன் எருது முதலியவற்றையும் பாணர்க்கு நலகியக் கோடன பரிசிலாகத் தருவன் (சிறு. 257-261).

**கருநரையோர்** - கருமைவிரவிய நரை உடையோர். கடலில் இடைஇடையே வரிசையாக வரும் வெள்ளலைகள் போன்று கருநரையோரும் - கருமை விரவிய நரையுடையோரும - சுடரும் திங்களின் நிலாக் கற்றை போன்று முழுதும் நரையுடையோரும் திருமாலை வழிபட்டனர் (பரி. தி. 1:42,43).

**கருப்பு** - கரும்பு (வலித்தல் விகாரம்). ஊர்க்குறுமகளிர் மெல்லிய கருபபுலக்கை - கரும்பாகிய உலககையை - கொணடு தம நுணணிடை நுடஙக மீன்சினை போனற வெணமணலை நெல்லாகக் கொணடு காஞ்சி மர நிழலில் தமர் வளம்பாடிக் குறறிளையாடுவர் (அகம். 286:1-5). கரும்பு காண்க.

**கருப்பை** - எலி. புனறலைச் சிறுவா கள்ளிமரத்தடியில் தஙகிப் புது வரகை அரிநத அரிகாலில் வந்து மேயும் கருபபை - எலியை - பிடிக்கக்காலம் பார்ப்பர் (புறம். 322:2-4). வேட்டுவரின் சிறுவர் உடைவேல் மரததின் முள்ளை ஊகம்புல்லின நுண்ணிய கோலில் செருகிச் செய்த அம்பை வில்லில வைத்து வளைததுப் பருத்திவேலியினடியில் உறையும் கருப்பையைக குறிபார்ப்பர் (புறம். 324:3-7). எயினரது குடில், அணிலோடு கருப்பையும் திரியாதபடி ஈந்தின் இலையாலே வேயப்பட்ட முகட்டையும் எய்ப்பன்றியின் முதுகு போன்ற புறத்தினையும் உடையது (பெரு. 85-88).

**கரும்பனூர் கிழான்** - குறுநிலமன்னன். இவனது ஊர் கரும்பனூர் ஆதலின் கரும்பனூர் கிழான் எனப் பெயர்பெற்றான. நன்னாகனார் இவனைப் பற்றி இருபாடல் பாடியுள்ளார் (புறம்.381,384). கரும்பனூர் என்பது தொண்டை நாட்டுத் திருவேங்கடக் கோட்டத்தி லுள்ளது (ஔவை. து. குறிப்பு. புறம். 381). ஊனும் ஊணும் உண்டலை வெறுத்தால் விருந்தினர்க்கு அவன் பாலிற்பெய்தனவும் பாகிற் கொணடனவும் அளவாகக் கலந்து இனிமை மிக நல்குவான். அறத்துறை அம்பிபோலப் பிறர்க்குதவுவான் என இவனது கொடைமையைப் புறத்திணை நன்னாகனார் சிறப்பிப்பர். விழா ஒன்றும் இன்று ஆயினும் இவன் நாட்டில் உழவர் கெடிற்று மீனுடன இஞ்சி முதலிய பூ விரவிய கள்ளினை உண்டு மகிழ்ந்திருப்பர் (புறம். 384). மண்நாணப் புகழ் வேட்டும் நீர்நாண நெய் வழங்கியும் சிறப்புப் பெற்றவன். இவனைத் தலைவனாக உடையோமாகலின் நாட்டில வறம் உண்டாதல் குறித்து, வெள்ளி எவ்விடத்து நிற்பினும் நிற்க;

இவனுடைய கரும்பனூர் இயற்கை நலம் சிறந்தது; எமக்குக் கவலை இல்லை என நாட்டுச் சிறப்பைப் புலப்படுத்துவர். மேலும், வஞ்சிக் கிளையில் தங்கிய நாரை கரும்பின்பூ அருந்துமென்றும் வரகு அரி காலில் எலியைப் பிடிக்க முயலும் குறும்பூழ்ப் பறவையின் அரவத்தால் குறுமுயல் அஞ்சியோடும் என்றும் நாட்டுவளம் நவில்வர் (புறம். 384).

**கரும்பனூரன்** - கரும்பனூர்கிழான். கரும்பனூர்கிழான் காண்க.

**கரும்பிள்ளைப்பூதனார்** - புலவர். பரிபாடலின் பத்தாம் பாடல் மட்டும் பாடியவர். இப்பாடல் வையை பற்றியது. புனல் வருகையைப் பறையறைந்து மக்களுக்குத் தெரிவித்தல், பொன்னாற் செய்த சங்கு, நண்டு, இறால் முதலியவற்றை நீரிலிட்டு 'விளைக, பொலிக' என வாழ்த்துதல் ஆகிய பண்டை வழக்கங்களைப் புலப்படுத்தி யுள்ளார். மகளிரை முகைப்பருவத்தார், அலர்வாயவிழ்ந் தன்னார் என்றும் முதியோரை விரவு நரையோர், வெறுநரையோர் என்றும் பாகுபாடு செய்துள் ளார். வணிகர் கப்பல் வரவை எதிர்நோக்குதலை வையைப் புனலை மகளிர் எதிர்நோக்கலுக்கும், பாயும் கயிறும் பாய்மரமும் நீங்கச் சிதையும நிலையி லுள்ள மரக்கலத்தைத் திருத்தி அதன் உள்ளே இருப் பவரது நடுக்கததைக் களைந்த மீகாமன் செயலைப் புலிமுக மாடத்திற் செய்து வைத்த புலிகண்டு அஞ்சிய களிற்றை அவ்விடத்தினின்றும் நீக்கிப் பிடி யிடம் சேர்த்து அவற்றின்மேல் இருந்த மகளிரின் நடுக்கம் தீர்த்த மைந்தர் செயலுக்கும், ஊடல் கொண்டவர் காமம் மிக, யார் முன் பேசுவது எனத் தடுமாறும் நிலைக்குப் போர் செய்து தளர்ந்த இரு படைகளில் யார் முன்சென்று உடன்பாடு குறித் துரைப்பது என எண்ணும் நிலையையும், வையைப் புனல் வயல்களில் பொன்னைப் பரப்புதற்கு வறிய புலவர்தம் ஏற்ற கை நிறையப் பாண்டியன் பொன் னை வழங்குதலையும் உவமையாகக் கூறியிருப்பது சிறப்பானதாகும். புனலாட்டில் ஆடவர் மகளிர்தம் செயல்களை இப்பாடல் விரித்துக் கூறுகின்றது.

**கரும்பின் எந்திரம்** - கரும்பாட்டும் ஆலை. மருத நிலத் தூர்களிலுள்ள கரும்பின் எந்திரம் ஒலிப்பின் அதன் அயலதாகிய நீர்நிலையிலுள்ள வாளைமீன் துள்ளிப் பாயும் (புறம். 322:7-9). மதுரையை அடுத்த மருத நிலத்தெழும் பல்வேறு ஓசைகளுள் கரும்பின் எந்திர ஓசையும் ஒன்றாகும் (மது. 258). கரும்பின் எந்திரம் களிற்றொலிக்கு மாறாக ஒலிக்கும் (ஐங். 55: 1).

**கரும்பு** - 1. கருப்பங்கழி. கரும்புக்காடு தவிரப் பிறகாடு அறியாத பகைவர்நாட்டு மருதநிலத்தை எரியூட்டிப் பாழ் செய்தான் இராசசூயம் வேட்ட பெருநற் கிள்ளி (புறம். 16: 15-17). யானைக்கட்சேய் மாந்த ரஞ்சேரல் இரும்பொறை ஓம்பிய நாட்டில் மெல்லிய கரும்பால் கட்டப்பட்டுச் செந்நெற் கதிரால் வேயப் பட்ட ஒழுங்குபட்ட கூரை, சாறு கொண்ட களம் போலப் பொலிந்தது (புறம். 22:14-17). கானலில், ஒண்டொடி டகளிர் பனையினது குரும்பை நீரும் கரும்பின் தீஞ்சாறும் தெங்கின் இளநீருடன் கலந்து முந்நீரையும் உண்டு முந்நீரிற் பாய்ந்து விளையாடுவர் (புறம். 24: 10-16). வேலிப் புறத்து நின்று வேண்டிய மக்கட்கு அறங்கருதி உழவர் புய்த்து எறிந்த கரும்பு வாவியகத்துத் தாமரைப் பூச்சிதற வீழ்ந்ததால் வாவியகம் கூத்தர் ஆடுகளம் போல் தோன்றியது (புறம். 28: 11-14). கதிரவன் நான்கு திசையில் தோனறினாலும் வெள்ளி தெற்கு நோக்கிச் செல்லினும் காவிரியாறு பலகாலாய் வந்து ஊட்டுதலினால் கிள்ளிவளவன் நாட்டில் தொகுதிகொண்ட வேலினது தோற் றம் போல் அசையும் கணுக்கள் பொருந்திய கரும்பின் வெண்பூ நுடங்கும் (புறம். 35:6-10). சோழ நாட்டு மென்புலத்தூரார் வன்புலக் கேளிர்க்கு விருந்தயரும்போது கரும்பிற் கொண்ட தேனும் அளித்தனர் (புறம். 42:15-18). அதியமான் நெடுமா னஞ்சியின் முன்னோர் அரிதிற் பெறுதற் குரிய கரும்பைத் தமிழகத்திற்குக் கொணர்ந்தனர் (புறம். 99:2-4). நாஞ்சில் வள்ளுவன் நாட்டில், நீர்நிறைந்த பள்ளத்தில் இட்டவித்து வளத்திற் சாவாது கழைக் கரும்பு போலத் தழைக்கும் (புறம். 137:5,6). மருத வயற்கண் தன் இனத்துடனே மேய்ந்துண்டு வஞ்சி மரக் கிளையில் உறங்கும் நாரை முற்றிய கரும்பின பூவை அருந்தும் (புறம். 384;1-3). கிள்ளிவளவன் நாட்டுவயலில் நெல்லுக்கு வேலி போல நீடிய கரும் பின் பாத்தியில் பல்வகை மலர்களும் நிறைந்திருந் தன (புறம். 386:10,11). பொகுட்டெழினி வானகத் துள்ள பெறுதற்கரிய அமுதம் போன்ற கரும்பைத் தமிழகத்திற்குக் கொண்டு வந்தோன் மரபில் தோன்றியவன் (புறம். 392:19-21). கரும்பின் பாத்தி யில் பூத்த நெய்தல் எருமைக் கூட்டத்தை மேய்ச்சலுக் குப் பிறவிடம் செல்லாவாறு தடுத்தன (பதி. 13:3,4). இமையவரம்பன் நெடுஞ்சேரலாதன் படையெடுத் தழித்தலால் பகைவரின் பேரூர்களில் உள்ள விரி பூங்கரும்பு விளையும் கழனிகள் பொலிவழிந்து பாழ பட்டன (பதி. 13:12-15). நீர்வளம் இடையறாமை யின் காலமல்லாத காலத்தும் கரும்பு முற்றி விளைந் தது (பதி. 30:14). மழைநலஞ் சிறத்தலின் கரும்பு

நெருங்கிய கழனிகளையுடைய நாடு வளம் பொழிந்தது (பதி. 50:1-3). மருதநிலக் குடியினர் அறுக்கப் பட்ட கரும்பின இனிய சாற்றை வருநர்க்கு வரையாது வழங்குவர் (பதி. 75:6,7). கரும்பை அறுக்கும் போதும் நெல்லை அரிகின்ற போதும் களமர் இனம் எழுப்பிய இசை பெருகியது (பொரு. 193,194). இனிய கரும்புடன அவலைக் கூறுபடுத்தி விற்றவர் மானதசையுடன் மதுவைப் பெற்றனர் (பொரு. 216,217). கருமபின் தீஞ்சாற்றை முன்னர்ப்பருகிப் பின்னர் அதன் கட்டியைத் தின்பாயாக எனப் பெரும்பாணன ஆற்றுப்படுத்தப் பெறுகிறான் (பெரு. 262). யானை மதம் மிக்கமையால் ஓங்கு நிலைக் கரும்பொடு கதிர் மிடைந்து யாத்த இனிய குளகும் (அதிமதுரததழையும்) உண்ணாமல் நின்றது (முலலை. 32,33). பசிய கரும்பின் பாகை அடுகின்ற கொட்டிலின் சூடுபட்டு நெய்தற்பூ அழகு வாடும் (பட்.9-12). காட்டாற்றுக் கரையில் நின்ற உருகெழு கரும்பின் ஒண்பூப் போல மேல் ஊனறிய துகிற் கொடி விளங்கியது (பட். 161,162,168). மருதநிலத்தில வெண்பூக் கரும்பொடு செந்நெல்லும் வளர்ந்தது (பட். 240). வேற்படை திரண்ட தானை புறமிட்டாற் போன்று காற்று மிக்கு வீசுகின்ற ஆரவாரத்தாலே கவிழ்ந்து ஒலிபடச் சாய்ந்து குறைதலும் அற்றொழிதலும் இன்றி வளர்ந்து வெட்டுண்டு ஆலையிற் சென்று பயன்படுதற்கு இனிய கழைக் கரும்புகள் அசைந்தன (மலை. 116-119). மழைபோல் சாறு பொழியும் ஆலைகள் தோறும் விரைவாகக் கருப்பங் கோலின் கணுக்களை உடைத்தலால் ஆரவாரம் எழுந்தது (மலை. 340,341). விளங்கும் பூக்களை யுடைய கரும்பின் தண்டின் மீதிருந்த வெண்குருகு நரலும்படி நுண் பல் துளி கொண்ட வாடைக் காற்று வீசியது (அகம். 13:21-24). நெல்லரிவோர்க்குக் கட்கொண்டு செல்லும் சாகாடு சேற்றில் பதிந்திடின் உழவர் ஆய் கரும்பை அடுக்கிச் சாகாட்டின் ஆழ்ச்சி போக்குவர் (அகம். 116:2-4). நெற்கதிர்களை முதியபசு தின்பதைக் கண்டஞ்சிய வயற்காவலர் அம்மூதாவினைக் கரும்பு அருத்திக் கொடியால் காஞ்சி மரத்தில் கட்டி வைப்பர் (அகம். 156:3-6). வயலிடத்துள்ள நீண்ட தனடினையுடைய கரும்பின் திரண்ட காம்புடைய பெரிய பூக்கள், கோடைக்காலத்துப் பூளைப் பூப்போல வாடைக் காற்றால் அசையும் (அகம். 217:3-5). கூதிர்ப் பருவத்து மேகம் துளித்தலால் வயலில் கிளைத்து விரிந்த கரும்பினது திரண்ட காம்பினை உடைய வெணபூ மழையில் நனைந்த குருகுபோல வளைந்திருந்தது (அகம். 235: 6,11-13). உறந்தையில் நெற்கதிர்கள் விளைந்த கழனியிலே வளர்ந்த கரும்பினது முதிர்ந்த தண்டினைப் பிழிந்த இனிய சாற்றை அட்ட பாகுடன் பாலினையும் பெய்து கலந்த அவலைப் பரிசிலர்க்குப் பகுத்துக் கொடுப்பர் (அகம். 237:11-14). கரும்பு மிக்க தோட்டங்கள் புகழமைந்த கள்ளூரில் இருந்தன (அகம். 256:15). குறுமகளிர் காஞ்சிமர நிழலில் தமர் வளம்பாடி மெல்லிய கரும்பாகிய உலக்கையால் வெண்மணலைக் குற்றி விளையாடினர் (அகம். 286:1-5). குறிஞ்சிமக்கள் உழுது வித்திய ஏனல், கரும்பு போலத் திரண்டு அழகுற்ற பெருங்கதிருடன் விளங்கியது (அகம். 302:9,10). நீர்வளம் பொருந்திய வயலில் விளைந்த கரும்பின் செறும்பினையுடைய புறத்தே யாமை ஊர்ந்து சென்று இளவெயிற் கொள்ளும் (அகம். 306:5-7). உழவர் காஞ்சிமரத்தின் குறிய துண்டுகளை நட்டுத் தீஞ் சுவை மென்கழைக் கரும்பின் கழிகளைக் குறுக்கே வைத்து அடைத்து நெற்பயிருடைய வயல்களில் அணை அமைத்தனர் (அகம். 346:5-9). சினைப் பசும்பாம்பின முதிர்ந்த கருப்போன்ற கூதிர்க் காலத்துச் செழித்த கரும்பின குவிநத அரும்பு மழைத்துளி பட்டு மலர்ந்தது (குறு. 35:2,3). சேவற் குருவி சூன் முதிர் பேடைக்கு ஈனில் அமைக்கத் தேன் பொதிதலைக் கொண்ட இனிய கழைக் கரும்பின் நாறா வெண்பூவைக் கோதியெடுக்கும் (குறு. 85:2-5). வெள்ளிய பூவைக் கொண்ட கரும்பின் மணலையுடைய சிறுகரை தீம்புனல் அடித்தலால் சிதைந்தது (குறு. 149:3,4). யானையால் முறிக்கப் பட்ட கரும்பின் கணுக்களுக்கு இடையேயுள்ள அளவுடையதாய்ப் பாலை நிலத்தில் ஒற்றை மூங்கில் வளர்ந்திருந்தது (குறு. 180:2-4). கரும்பைப் போன்ற அடியுடையதாய்ச் செந்தினை வளர்ந்தது (குறு. 198:2). கரும்பு நட்ட பாத்தியில் தங்கியுள்ள நீர் போன்று பெருங்களிற்றின் அடிச்சுவட்டில் நீர் தங்கியிருந்தது (குறு. 262:7,8). கரும்பின் அடிப் பகுதியில் வெட்டிய துண்டத்தை உண்டாற் போன்ற சுவையுடையது தலைவியின் வாலெயிறு ஊறிய இனிய நீர் (குறு. 267:2-5). கரும்பின் வேல் போன்ற வெணமுகை விரியுமாறு வாடைக் காறறு வீசியது (நற். 366:7-11). பூத்த கரும்பையும் காய்தத நெல்லையும் உடையது கழனி (ஐங். 4:4,5). கரையில் நின்ற வேழம் (கொறுக்கச்சி) இனிய கரும்பு போலப் பூத்திருக்கும் நீர்த்துறை உடையவன் தலைவன் (ஐங். 12:1,2). தலைவன் செருந்திப் பூவொடு வேழம் கரும்பு போல அலமரும் ஊரையுடையவன் (ஐங். 18:1,2). கரும்பு நட்ட பாத்தியில் தோன்றிய ஆம்பல் சுரும்பின் பசி தீர்த்தது (ஐங். 65: 1,2). கோவலர் கரும்பைக் குறுந்தடியாகக் கொண்டு

மாங்கனி உதிர்ப்பர் (ஐங். 87:1,2). களிறு தான் விரும்பின பிடியின் கடுஞ்சூல் வயாநோய்க்கு நெடிய கிளைகளையுடைய கருப்பங்கழியை வளைக்கும் (கலி. 40:26-28). வழுதியுடன் திருப்பரங்குன்றம சென்றோரிற் சிலர் யானைகளை வழியினின்றும் அகற்றி மரங்களில் கட்டி அவற்றிற்கு உணவாகக் கண்டக் கரும்பினைக் கொடுத்தனர் (பரி. 19.30-34). வழுதியுடன் திருப்பரங்குன்றம் சென்றோரிற் சிலர் முசுத்திரளுக்குக் கரும்பளித்தனர் (பரி. 19:39).

2. தொய்யில். பரத்தை கரும்பு எழுதப்பெற்ற தோளையுடையவள் (குறு. 384:1). கருமபு எழுதப் பெற்ற தலைவியின் தோள் தன்னை வருத்திய தாகத் தலைவன் கூறினான் (நற. 39:11). கரும் புடைப் பணைத்தோள் (நற். 298:7). தலைவனுக்குக் குறை நேர்ந்த தோழி தன தோளமேல் தலைவி கரும்பு எழுதும் குழம்பிற்கென்று தான தலைவனிடம சென்றதாகக் கூறினாள் (கலி. 63:7,8). தலைவியின் தோளிலே தான் எழுதின கரும்பின பொலிவெல்லாம் தலைவியின் மார்பு இடையீடின்றிப புணர்ந்ததனால் உண்டாய பயன எனத தலைவன கூறினான் (கலி. 64:13,14). தலைவியின் தோளில் எழுதப்பட்ட கரும்பிற்குத் தோறறப பொலிவு உணடென்று தலைவன் கூறினான் (கலி. 64:19,20). தலைவியிடம் 'தொய்யில் எழுத நீ அறியாய்' என்று கூறிய தலைவன் அவள் முன்கை பற்றி வேய்போலும் அவள் தோளில் கரும்பெழுதித் தொய்யிற் குழம்பால் மற்றும் எழுதுதற்குரியவறறை எழுதினான் (கலி. 76:14,15). 'வேட்கை செலுத்தின கண்ணாலே மனத்தைக் கலக்கிய காமநோயை உண்டாக்கும் எழுது கரும்பு நெருங்கின தோளினையுடைய மகளிரைக் கண்டாயாயின போகவிடாதே கொள்' எனத் தன் சுற்றத்தார் கூறினார் என்று கைக்கிளைத் தலைவன் அத்தகு தலைவியிடம் கூறினான் (கலி. 112:5-7). தலைவியை அன்புற்றுப் புணர்நத அந்நாளில் தான எழுதிய கரும்பின் அழகு கெடுமபடி தலைவன பிரிநது அவளது மென்றோளை மெலிவித்தான (கலி. 131: 29,30). 'என் தலைவன் நெடிதாகிய மெனறோளிலே காமன் சிலையாகிய கருமபை எழுதவும வல்லன்' என்பது கதிரவனிடம் தலைவி கூறும காமமிக்க கழிபடர் கிளவி (கலி.143:31,32). வையைப் புனலாட்டில் வென்றவள், தோற்ற ஒருததியின தொய்யிற் கரும்பினையுடைய அணை போலும் மென்றோளைத் தன் கழுத்தின் பொன்நாணாற் கட்டிச சிறைப் பிடித்தாள் (பரி. 7.51-56).

3. கருப்பம்புணை. இளஞ்சேரலிரும்பொறை நீர் வழிச் செல்லும் கரும்பினும - கருப்பம புணை யினும் - அளிததல் வலலன (பதி. 87:4,5).

கருமம் - செயல். ஆறறல் மிக்க அதியமானின நுண் பல கருமம் - செயல - நினையாது அவனை இளையன் என்றிகழவோர் வெற்றி பெறல அரிது (புறம. 104:4-6). பொருபுகலேற்றைத் தழுவுமவரே அழகிய மாந்தளிர் மேனியளாகிய இவளைச் சேர்வர் என்று கருமம் ஏதுவாகப் பலகாலும சொலலி ஆயா தம மகளைக கொணடு வநது நிறுததினா (கலி. 102: 9–12).

கருமறி - வெள்யாட்டுக்குட்டி. பேயமகள காதுகளில் கருமறி - வெளயாட்டுக்குட்டி - அணிநதிருநதாள (சிறு. 197).

கருமுகம் – முசு (ஆகுபெயர்). திருபபரங்குன்றம் செனறோரிற் சிலா கருமுகக கணததிற்குக் கரும்பை அளித்தனர். (பரி. 19:39).

கருவி - தொகுதி. (கோடை மிகுதியால) ஈனல பொருநதாத தினை தழைககுமாறு கருவி வானம - (மினனல இடி முதலாகிய) தொகுதியுடன கூடிய வானம – மழைத துளியைச சொரிநதது (புறம. 159.18,19). விரைநது செல்லும் மேகம் கடலநீரை முகநது கொண்டு வேண்டுமிடததுத் திரணடு சூல முதிாநது இடிமுதலாகிய கருவியுடனே கூடி மழை பெயதது (புறம். 161 1-4). கோடை நீடிய வறண்ட காலததுு இடி முதலிய கருவியையுடைய மழை சொரிநதாற போல மலையமான சோழியவேனாதி திருககணணன் மககள துயர் தீரத தோனறினான (புறம. 174:22-28). கருவியொடு கூடிய மழைபோல ஒரியாவர்க்கும எப்பொருளையும் வரையாது வழஙகும வண்மையுடையோன (புறம். 204.12-14). மழை, மின முதலியவற்றின கருவியையுடைய வானம நிலமகளின் முகமாக விளஙகியது (புறம. 365:1,10). மேகக் கூட்டம் நீர் முதலிய கருவிகளையுடையது (பதி. 17:11). கமஞ்சூல் மாமழை கார்காலததுக கலஙகி வரும் நீா முதலிய கருவியொடு மனனுயிா உயர வலமாக எழுநது முழஙகியது (பதி. 24.26-29). கருவி வானம் தணடளி பெயதது (பதி. 31.15,76.10). பெருவறங் கூர்ந்த கானம தழைககக கருவி வானம் மழை பொழிநதது போலத் தொணடைமான இளநதிரையன் வறிய பெரும்பாணன் சுறறததோடு மகிழுமாறு பெருஞசெலவம வழங்கினான (பெரு. 23-26). முருகனது வேல் போனற மின மயங்கும கருவியையுடைய வானம் கல்மிசை மழை பொழிநதது (குறி. 51-53). உருமேறு முழஙகுங கருவியை யுடையது பெருமலை (மலை. 357). கருவி வானம கதழுறை சிதறிக் காட்டினைக் கார்ப்பருவம் செயதது (அகம.

4 6,7). கருவியொடு கூடிய மேகம் இடிக்கும் கார்ப் பருவத்தில் மீளாடு வருவேன எனத் தலைவன் கூறிச் செனறான (அகம். 139:17-19). இடிமுழங்கும் கருவியுடன் கூடிய மழை பெய்து ஓயந்தது (அகம். 158:1,2). பெரிய வானில எழுந்த கருவியுடைய கார் மேகம் ஆலியுடன் பெருமழை பெய்தது (அகம். 304.1-4). யாமததில கருவி மாமழை பெய்தமையால் பின நாளில நீர் பெருகி அருவி ஒலித்தோடியது (குறு. 42:1-3). கருவி மாமழை முழங்கும் ஓசையைத் தலைவர் தமியராயக கேட்பின் என் ஆகுவர் எனத் தலைவி கவனறாள் (குறு. 94:4-7). ஊதைக் காற்றோடு கருவியுடன் கூடிய மழை பெய்யும் கூதிர்க்காலம் கூற்றமாக வந்து தலைவியை வருத்தியது (குறு. 197). மின்னலைச் செய்யும் கருவி மேகம் மழை பெய்தது (குறு. 205:1). புலி களிற்றினைத் தாக்கிக் கொலலுதலால் கருவி மாமழையின் முழக்கம் போன்று பிடி பிளிறியது (நற். 144:1,2). கருவி மாமழை வீழ்ந்தமையான சிவந்த நிறம் பொருந்திய கதிர்களைக் கொண்ட சிறுதினை விளைந்தது (நற்.213:8-10). கருவிமாமழை கார்ப்பருவம் செய்தது (நற். 238:5). சிறுபல் கருவியுடன் பெரியமேகம் வலமாக எழுந்து பெரும்பெயலை நம் தினைப் புனத்தில் பெய்யும் நாளில் தலைவன் மீண்டு வருவான் எனத் தோழி தலைவியிடம் கூறல் (நற். 328: 5-7). வீண்ணதிர மின்னிக் கருவிமாமழை கடல் நீரை முகந்து வநதன (நற. 329:10,11). தலைவன் மலையில் கருவி வானம் பல்நாள் பெய்யாதாயினும் அருவி நீருடன் ஆர்ப்பரித்தோடும் (நற். 365:6-8). கருவிவானம் கார் சிறந்தார்ப்பக் கார்காலம் வந்தது (ஐங். 476:1). கருவி வானம் பெயல் தொடங்கியது (ஐங். 488:1). கருவியையுடைய மினனினது அவிர்தலை ஒத்து இலங்கும் பொன்னாரத்தைத் திருமால் மார்பில் அணிந்துள்ளார் (பரி. 13:10-12). செவ்வேள் குன்றத்தில் போரின்கண மிகும் அரவம் போலத் தாள ஒலியுடன சிறந்து இயங்களின் ஒலியும கருவியும் (மேகத்தொகுதியும்) ஆர்த்தன (பரி. 18:43-45).

2. கத்திரிகை. பாடினியின் பூங்குழை அணிந்த காது மயிர்குறை கருவியின - கததிரிகையின் - கடை (குழைசசை) ஒத்து விளங்கியது (பொரு. 29,30).

3. குத்துக்கோல். கலலா இளைஞர் யானைப் பேசசான வடமொழிகளைப பலகாற் சொல்லி கவைமுட் கருவியால் - குத்துக்கோலால் - குத்தி யானையைக் கவளம் கொள்ளுமாறு செய்தனர் (முல்லை. 35,36),

4. படைக்கருவி. நீர் விளையாட்டாகிய போரை விரும்பிய மைந்தரும் மகளிரும் வையைக்குக் கருவிகளை - போர்க்கருவிகளை - கொண்டு செனறனர் (பரி. 6:31).

5. பொறி. ஐம்புலன்களும் அவற்றை நுகரும் கருவியாகிய பொறிகளுமாய் இருப்பவர் திருமாலே (பரி. 13:14-16).

6. இசைக்கருவி. செவ்வேள் குன்றத்துப் போரின் கண் மிகும் அரவம் போலத் திரளாகிய தாளமொலிக்கும் ஒலியொடு சிறந்த கருவி – இசைக்கருவி - ஆர்ப்ப மேகத் தொகுதியும் அவ்வார்ப்பொடு நின்றன (பரி. 18:43-45).

**கருவிளை** - கருங்காக்கணக்கொடி. தலைவி தோழியருடன் பறித்த பூக்களில் நீலமணி போலும் நிறமுடைய கருவிளையும் ஒன்றாம் (குறி. 68). கருவிளைப் பூவுடன் மாறுபட்ட வெண்ணிறப் பூவுடைய பகன்றைச் செடியை வாடை அலைத்தது (அகம்.255:11,15). காதலர்ப் பிரிந்த கையறு மகளிரது நீர் ஒழுகும் கண்களைப் போலக் கருவிளை மலர்ந்தது (அகம். 294:4,5). இன்னாது எறிதரும் வாடை மயிற்பீலியின் ஒள்ளிய கண்ணைப் போன்று புதலில் மலர்ந்த கருவிளை மலரை அசைத்தது (குறு. 110:3-7). நீலமணியாற் செய்து வைத்தாற் போன்ற கரிய நிறத்தையுடைய கருவிளை ஒள்ளிய காந்தளுடன் பூத்துப் புதலை அழகு செயதது (நற். 221:1,2). குளிர்ந்த புனத்திலுள்ள கருவிளையின் கண் போன்ற கரிய மலர் வாடைக்காற்று வீசுதலால் ஆடுமயிலின் பீலிபோல ஆடியது (நற். 262: 1,2). கருவிளை கண்ணென மலர்ந்தது (ஐங். 464:1).

**கருவூர்** - சேரர் தலைநகர். இதற்கு வஞ்சி என்றும் பெயர். 'தண்பொருநைப் புனல் பாயும் விண்பொரு புகழ் விறல வஞ்சி' (புறம. 11:5,6). சேரமான் கருவூர் ஏறிய ஒள்வாட் கோபபெருஞ் சேரலிரும்பொறையைக் கண்ட ஞான்று நரிவெரூஉத் தலையார் தம உடம்பு பெற்றார் (புறம். 5. அடிக்குறிப்பு). சோழன முடித்தலைக் கோப்பெரு நற்கிள்ளி ஊர்ந்த களிறு கையிகந்து கருவூரிடம் செல்லக் கண்டு அவன் நோயிலனாகிப் பெயருமாறு விழைந்த தம் எண்ணத்தை உறையூர் ஏணிசசேரி முடமோசியார் சேரமானிடம் தெரிவித்தார் (புறம். 13. அடிக்குறிப்பு). கிள்ளிவளவன் கருவூரை முற்றுகை செய்தபோது ஆலத்தூர் கிழார் அதனைத் தவிர்க்க வேண்டினார் (புறம். 36. அடிக்குறிப்பு). வினைமுற்றி மீளும் தலைவன 'சேரனுக்குரிய செல்வமிக்க வியனகராகிய கருவூரின் துறைமுன் ஆன்பொருநையாற்றுக் கரைக்கண் குவிந்துள்ள மணலினும் பலவாகத் தலைவியின் ஆகத்தை முயங்குவோம்

எனத் தன் நெஞ்சிற்குரைத்தான் (அகம். 93:15-23). கருவூர்க் கண்ணம்பாளனார், கருவூர்க் கதப் பிள்ளைச் சாத்தனார், கருவூர்க் கலிங்கத்தார், கருவூர்க் கோசனார், கருவூர் கிழார், கருவூர்ச சேரமான் சாத்தனார், கருவூர் நனமார்பனார், கருவூர்ப் பவுத்திரன், கருவூர்ப் பெருஞ்சதுக்கத்துப பூதநாதனார், கருவூர்ப் பூதன சாததனார் ஆகிய புலவர் பெருமக்கள் கருவூரினா.

**கருவூர்க் கண்ணம்பாளனார் - புலவர்.** கருவூரைச் சார்ந்தவர். இவர் பாடியனவாக அகநானூற்றில (180, 263) இருபாடலகள் உள்ளன. தலைமகற்குக் குறைநேர்நத தோழி, படைத்துமொழி கூறித் தலைமகளைக் குறைநயப்பிக்கும நுட்பம் அமைந்தது ஒரு பாடல் (180); மற்றொரு பாடலில (263) மகட்போககிய தாயின் மனநிலை சித்திரிககப் பட்டுள்ளது.

**கருவூர்க் கண்ணம்புல்லனார் - புலவர்.** கண்ணமபுல்லனார் காணக.

**கருவூர்க் கதப்பிள்ளைச் சாத்தனார் - புலவர்.** கருவூரினர். இவர் பெயர் கருவூர்க கநதப் பிளளைச சாதத னார் என்றும காணப்படுகினறது. சாதநனார் என்பது இவரது இயறபெயர். கதப்பிள்ளை என்பது இவருடைய தநதை பெயர் (உ.வே.சா. புறநானூறு. பாடினோர் வரலாறு.பக்.18). இவர் பாடியனவாகப் புறநானூற்றில் 1, அகநானூற்றில் 1, நற்றிணையில் 1 ஆக மூன்று பாடலகள் உள்ளன. ஈயா மன்னர் நாண, வீயாது பரந்த பிட்டங்கொற்றனின் பரிசிலர் பாடும் புகழையும் அவன் குதிரை மலையில வாழும் குறவர்களின் வளத்தையும் சிறப்பித்துள்ளார் (புறம். 168). மழவர் தெய்வம் சேர்ந்த வேம்பினுக்குப் பசுவின் குருதிப்பலி கொடுததனர் என்றும், கூததர் காடு பல கடந்து சேரனைக் காண விரும்பிச் சென்றனர் என்றும் கூறியுள்ளார் (அகம். 309). கடவுள் உறையும ஆலமரததிறகுப பலிச்சோறு வைத்துப் படைததலை இவர் நறறிணைப் பாடல் (343) அறிவிககும.

**கருவூர்க்கலிங்கத்தார் - புலவர்.** கருவூரினர். கலிங்க நாட்டிலிருந்து வந்தவராகலாம் எனப் ப.மு. கூறும் (பக். 229). இவர் பாடிய பாடல் ஒன்றே (அகம். 183). சூலுற்ற பெண்யானையின் கூட்டம போனறு மேகம் இடநதோறும் திரண்டது என்றும் முன பனிக் காலத்தில் பிடவம மலர்ந்து மணம் பரப்பும் என்றும் அபபாடல் உணர்ததும்.

**கருவூர் கிழார் - புலவர்.** கருவூரினர். இவர் இயற் பெயர் அறியுமாறிலலை. கிழார் என்னும் சொல கொண்டு இவர் வேளாளப் புலவர் எனப ப.மு கூறும் (பக். 229). இவர் பாடிய ஒரே பாடல குறுந தொகை 170-ஆக இடம பெறறுளளது. தலைவனது நட்பில தலைவி உறுதி கொணடிருநதாள் எனபதையும் யானை கொறுககாந தட்டையை விரும்பியுண்ணும எனபதையும இபபாடல புலப படுத்தும.

**கருவூர்க்கோசனார் - புலவர்.** இவா கோசர் மரபினைச சார்ந்தவ ராகலாம. கருவூரில வாழநதமையால கருவூர்க் கோசனார் எனப பெயர் பெறறார். நற் றிணை 214-ஆம பாடல ஒனறே இவர் பாடியது. 'சோமபலாயச செயலற்று இல்லில இருபபோர்க குப் புகழும் இனபமும் கொடையும வாயபப திலலை' என்று இவா கூறும வாழககையுணமை கறபோர்ககுக கழிபேரினபம தருவதாகும.

**கருவூர்ச் சேரமான் சாத்தனார் - புலவர்** கருவூரினா. சேர மரபினர் (உ. வே சா. குறுநதொகை பாடினோர் வரலாறு. பக. 135). இவர் பாடிய ஒரே பாடல குறுந தொகை (268) ஆகும. பிரிவசசததினால வநது வரைப போகச சொலல முடியாமலும வழியச சததினால மீண்டும வருக எனச சொலல முடியாமலும துனபுறும நிலையைத தலைவிககு உரைப பாள்போலச சிறைபபுறத தலைவனுககுச சொலலி வரைந்து, கொள்ள அறிவுறுததுகின்ற தோழியினது திறம் இப்பாடலில வெளிப்படுகினறது.

**கருவூர்நன்மார்பனார் - புலவர்.** கருவூரினர். அகநானூற்றில் 277-ஆம பாடல் இவர் பாடியதாம். பருவங்கண்டழிநத தலைவி தோழிக்குச சொலலுவ தாக அமைநத இப்பாடலில, வாளவரி உழுவை தயிர் கடைவது போனற குரலையுடையது எனபதும் சேவலின போர் புரி எருத்தம போல முருககம் பூ மலர்நதது எனபதும் நயமுடையவை.

**கருவூர்ப்பவுத்திரனார் - புலவர்.** கருவூரினர். பவுத்திரன எனபது தூயவா எனப பொருள் [illegible] பவித்திர னார் எனபதன திரிபாகலாம எனபர் உ.வே.சா. (குறுநதொகை. பாடினோர் வரலாறு. பக. 135). இவா பாடியதாகக குறுநதொகை 162-ஆம பாடல ஒனறு மட்டுமே கிடைததுள்ளது. வினைமுறறி மீளுந தலைவன முல்லை முகையை நோககித 'தமியோரிடததுப புனனகை கொணடு நீ நகுவை போலக காட்டல தகுமோ' என வினவுதல நயமுசானறது.

**கருவூர்ப்பூதன் சாத்தனார் - புலவர்.** கருவூரினர். கருவூர்ப்பூதனின மகனாவார். அகநானூறு 50-ஆம பாடல ஒனறே இவா பாடியதாம். இபபாடல தலைவனைப் பிரிநத ஆறறாமையால கணகள

அழவும் அன்றில் துணையொன்று பிரியினும் துஞ்சா காமெனச சொலலி அதன பொருட்டுக் கண்ணீர் சொரிவது போல் காட்டித் தனது ஆற்றாமையை மறைககும் தலைவியின சிறபபைக் கூறும.

**கருவூர்ப் பெருஞ்சதுக்கத்துப் பூதநாதனார் - புலவர்.** கருவூரினர். நானகு தெருககளும கூடுமிடம சதுக்கம். அஙகேயுள்ள தெய்வமாகிய ஒரு பூதத்தின பெயர் இவருககு எயதியது போலும (உ.வே.சா. புறநானூறு பாடினோர் வரலாறு. பக. 18). சோழபெருஞ்சோழன் வடக்கிருந்துழிச் சென்று இப்புலவர் வருந்திப் பாடினார (புறம. 219. அடிககுறிப்பு). 'ஆற்றிடையில் மரநிழலிலிருந்து உடம்பை வாட்டும் வீரனே, யான பிறபட்டு வந்ததனால் நின்னுடன் வடக்கிருப்போரிடம் சொல்லி எனனை வெறுத்தாயோ' என்று இவர் வருந்திப் பாடியுள்ளார் (புறம். 219).

**கருவை - வரகு வைக்கோல்.** முல்லை நிலச் சீறூர், பருவ வானத்தில் பரவிய முகிலை ஒப்பக் கருவை-வரகு வைக்கோல - வேயந்த அழகிய குடியிருப்பினைக் கொண்டது (பெரு. 190,191).

**கருனை - பொரிக்கறி.** 'உலகம் மழையின்றி வாடினும் வானகத்தே எரிமீன தோனறினும், விண்மீன் புகையினும், கொக்கின் நகம போலும் சோற்றைப் பசுந்துண்டுகளாகிய கருனையை - பொரிக்கறியை- சூட்டிறைச்சியுடன உண்டு, விளைந்த ஒன்று வெள்ளம் என்னும் அளவாக விளைக என்று சான்றோர் வாழத்த உள்ளதும் இல்லதும் பாராது வரையாது கொடுக்கும் அவனது தாளாண்மை வாழ்வதாக' எனப் பெருஞ்சாத்தனை மதுரை நக்கீரர் வாழத்துகிறார (புறம. 395.33–40). சேரமான் வஞ்சன தான உணணும் கலத்தில் துணடித்த மானிறைச்சியாகிய வறுத்த கருனையையும கொக்கின நகம போன்ற சோற்றையும் கிணைஞன் சுற்றத்தார் உணண நல்கினான் (புறம. 398:23-25). கரிகாற்பெருவளத்தானது வள மனையில பொருநர், விரல் போனற நீண்ட சோற்றையும் பரல போன்ற கருனையையும கழுத்திடம் நிரமபுமாறு உணடனர் (பொரு. 114-116). காக்கைப் பேடை நடுங்கும் சிறகைக் கொண்ட தன் பிள்ளையைத தழுவிக கொணடு சுற்றத்தை விளித்துக் கருங்கண கருனையுடன கூடிய செந்நெலலரிசியாலாகிய வெணசோற்றுத் திரளையைத் தெய்வத்துக்கிடும் பலியுடன கவாந்து கொணடது (நற 367:1.4).

**கரை - 1. நீரினகரை.** கரையை - நீர்க்கரையை - பொருகின்ற சகரரால தோண்டப்பட்ட சாகரம கிழககுத் திசையிலுள்ளது (புறம. 6.3). பாரியின் பறம்பு நாட்டுக் குளம் எட்டாம் பக்கத்துப் பிறைபோலும் வளைந்த கரையை உடையது (புறம. 118:2,3). திரை அலைககும் கடற்கரைக்கண் அணுகிச் செல்லினும், அறிந்தவரைக காணின நீர் வேட்கையைத் தணிக்க உலகமக்கள் சிறிதளவு நீர் கேட்பர் (புறம். 154:1-3). வளந்தரும் மழை நீங்கிய கோடைக் காலதது உயிர்பபனமைகளெலலாம் சென்று நீருண்டற்கு கங்கையில கரையைப பொரும வெள்ளம் நிறைந்து தோனறியது (புறம. 161.5-7). கரையைப் பொருது முழங்கும நீர்மிக்க பெரிய காவிரி, நாட்டின் துயர்தீர ஓடும் (புறம். 174:7-9). மரககொமபிலேறிக் கரையிடத்து நிற்போர் வியப்ப மடுவில துடுமெனப் பாயந்து மணலை முகந்து காட்டிய இளமை கழிநதமைக்குத் தொடித்தலை விழுத்தண்டினார் இரங்கிப் பாடியுள்ளார் (புறம. 243:7-11). ஆனிரையை மீட்ட மறவனின உடம்பு கானகத்துச சிற்றியாற்றின் கரையிடத்துக காலுற நின்று நடுக்கத்தோடு சாய்ந்த இலக்கத்தை யொப்ப அமபாற் சலிகக பெற்று வீழநதது (புறம. 260,21-24). கரையை அலைககும் கடலைப் பிளந்து செல்லும் தோணியைப் போல வீரன ஒருவன பகைவர் படையைப் பிளநது சென்று யானையை எறிந்தான் (புறம. 303:7-9). மனையிடத்தே குவிக்கப பெறற மிளகு மூடைகள் ஆரவாரத்தையுடைய கரையினின்றும் பிரித்தறிய இயலாதபடி காண்பாரை மயங்கச செய்யும் (புறம். 343.3,4). கலங்கள் கொணர்நத பொனனாகிய பொருள்கள் கழிகளில் இயங்கும் தோணிகளால் கரை சேர்க்கப்படும் (புறம். 343 5,6) கோடைநீடலால குன்றுகள பொலிவிழநது தோனற அருவிகள நீர்வறறி உலர்ந்த வறட்சிக் காலததும் பேரியாறு கரை அளவு உயர்ந்து நீர் பெருகி வழிந்தோடும் (பதி. 28:8-10). பூங்கொத்துக்கள் சிதறிக் கிடக்கும் ஞாழலகளையுடைய கரையைக் கொணடது பெரிய நீர்ததுறை (பதி. 30:1). அருவிகள் நீரறறொழிந்த வறண்ட காலததும் அரிய செலவினையுடைய பேராற்றிலே நீர்பபெருககு பெரிய கரைகளை உடைத்துக் கொணடு செல்லும் (பதி. 43:14,15). ஒலலெனனும ஓசைபடத் திரை முறிந்த கருங்கடலின கரையால சூழப்பட்டது இவவுலகம் (பொரு. 177-179). கடலிடத்தே வளையும் திரை குறுக்கே பிளவுபடுமாறு நாவாய் கடுங்காற்றாலே ஓடிக் கரை சோநதது (மது. 76-78,83). மீன்படகில் வேட்டையாடுவார் கரையைச் சேருதலால் ஆரவாரம் எழுந்தது (மது. 116). நெடுஞ்செழியனுக்குப் பணிநது திறை கொடுத்த மன்னர் கரையைப் பொருது முழங்கும கடலலை குவிககினற மணலினும் பலராவர் (மது. 230-236). கரையை

மோதி ஒலிக்குங்கடல், மேகம் முகப்பதனால் குறை யாமலும் யாறு பாய்வதனால் மிகாமலும் இருக் கும் தன்மையது (மது. 424,425). தூய மலாகள் செறிந்த கரையைப் பொருகின்றதும் மலையுச்சி யினின்றும் ஒழுகுவதுமாகிய யாறு கடலை நோக்கி விரைந்தது (மலை. 51,52). சேயாற்றின ஒருகரையை வழியாகக் கொண்டு செல்லுமாறு கூததர் ஆற்றுப் படுத்தப்படுகின்றனர் (மலை. 476,477). நீணட கரை யினைக் கொணட காட்டாற்றின நீர் அற்றொழிய, அறலாம் தன்மைகொணட மணலுடையது அகன்ற துறை (அகம். 25:1,2). 'நீளிருங் கூந்தல் மாயோள் ளின ஆகத்திலுள்ள பூண்கள் வடுக்களைச் செயயத் தண்ணிய ஆனபொருநைக் கரையிடததுக் குவிந் துள்ள மணலினும் பலவாக முயஙகுவோம்; செல்க' என வினைமுற்றி மீளும தலைமகன தன நெஞ்சிற் குக் கூறினான் (அகம். 93:11-23). ஆறலைகளவர் தாம் எறிந்த படைககலத்தைக் கழுவியதால சிவந்த நீரையுடைய மக்கள நடமாட்டமிலலாத நுண்மணல பொருந்திய கரையைத் தலைவர் கடந்து சென்றார் (அகம். 113:18-20). காவிரிப் பேரியாறு கட்றகரை யினை மெலிவிக்கும் (அகம். 126:5). மலையினின்றும வரும் நீர் மோதுதலால பேரியாற்றின் கரை இடிந்து வீழும் (அகம. 137:7). கரையைத் தாக்கும் கடல்அலை போன்று நிரல் நிரலாகக் காற்று தாக் குதல் (அகம். 199:1,2). மாலைக்காலத்தில் கரையில் விளையாடும் நண்டுகள் வளையில் புகுந்தன (அகம். 260:4). கானலம் பெருந்துறைப் பரதவன் கடலிற் சென்று முத்துக்களை வாரிக் கொணர்ந்து வண்டு முரலும் அகன்ற கரையிடததே அவற்றைப் பலருக்கும் பகுத்துக் கொடுப்பான் (அகம். 280:11-14). ஞாழற் கண்ணியும் நெய்தல் மாலையும் அசையக் கடல்வாழ் நீரரமகள் அந்திப் பொழுதில் கடற் கரையில் நினறாற் போலத் தலைவி கடற்கரைச் சோலையில் தமியளாய் நின்றாள் (அகம. 370:9-13). கரைபொரு நீத்தம் என யாறு விளிக்கப்படுதல் (அகம். 398:11). ஏறுதற்கரிய கரையில நின்ற வணடி யின் உப்பு பெருமழை பொழிந்ததனால் அழிநதது (குறு. 165:3,4). மழை பொருநதிய காட்டாறறின் கரையில நெடிய தோகை அசைய நடநது மயில அகவும் (குறு. 264:1-3). பரதவா எறியுளியாற் சுறா மீனை எறிய நெடுங்கரையிடத்திருந்த அன்னப் பறவைக் கூட்டம் இரிநதோடும் (குறு. 304:1-6). பெருங்கடல் கரையதாகிய சிறுவெண்காககை கழி யிடத்து மீனை உண்டு மலாமணம் வீசும் சோலை யிடத்துத் தங்கும் (குறு. 313: 1-3). நீர்மிக்க யாற்றின கரையிலுள்ள பெருமரம் வளம் பெறும் (குறு. 368:6-8). புன்னை பூத்த இனிய நிழலை யுடைய கடற்கரையில நாரை தன பெடை யொடு இரை தேடும் (நற். 91 2-4). தலைவன வரும் நெறியிலுள்ள மழைத்துளி பொறித்த புள்ளிகளையுடைய பழங்கரையை மோதுகின்ற உயர் அலைகளோடு வரும கானயாறறைக கருதி அஞ்சுகிறேன எனத தலைவிக் குறைபபாளாயத் தோழி சிறைப்புறமாகக கூறினாள் (நற். 111:7,8). மழை பெயதலால் பெருக்கெடுதத காட்டாறறின மணற்கரை பினனே செல்லுமபடி வினைமுற்றிய தலைவன தன வீடுநோககி விரைநதான (நற். 121: 9-12). நிலவைக குவிதது வைததாற போனற மணல் மேடு சரிநத கரையில் நினறு மகளிா சஙகு களைக் குலையாகத தொடுததாற போனற குருகு களின் வரிசையை எணணிப் பகறபொழுதைப போககினா (நற். 159:3-5). அலைமோதும கடலின கரையிடத்துப் பொருநதியுளள பாக்கததுத் தஙகிச செலலுமாறு தலைவனைத் தோழி வேணடினாள (நற். 215.6-9). கங்கை யாற்றினைக கரைகடநது அணையை உடைததுச செலலும கடும செல வுடைய பெரும புனல போன்று தன நிறையை அழிததுப் பெருகும காமவெள்ளத்தை நீநதும வழி தெரியவில்லை எனத தலைவி மனமழிநது கூறி னாள் (நற். 369:9-11). கரையை மோதி ஓடும் கான யாற்றின இடிகரையில வேர்களெலலாம அசை பட்டுத் தோனறிக் காற்றாலலையும் மாமரததின தளிர் போலப் பிரிவாறறாத் தலைவி நடுககங் கொணட நெஞ்சினள் (நற். 381:3-5). கரையில் நிற்கும் வேழம் (கொறுககச்சி) கரும்புபோலப் பூககும (ஐங். 12:1). கரை சார்நத மருத மரததின மேலே றித் தலைவி நீரில் பாயநதாள (ஐங். 74.3,4). சிறு வெண்காக்கை பெருங்கடற்கரையினகண வாழும் (ஐங். 161-170:1). உயர்கரைக் கானயாறறின அகன் துறையில் வேனிற்காலத்து மலரும பாதிரிமலரைக் கொண்டு மடவரன் மகள் மாலை புனைநதாள் (ஐங். 361:1-3). நீர் பொருகின்ற கரையில வெண் கடம்பும் செருந்தியும் காஞ்சியும் ஞாழலும் இலவ மும் பிறமரங்களும மலர்நது கவினபெறச செய தன (கலி. 26:1-7). ஈயுமபோது குறைகாட்டாது ஈந்து இல்லறததை முறை யறிநது நிகழத்திய தீவினை இலலாதானின செல்வம மிகுதல போல் ஆற்றங்கரை மரங்கள் தழைததன (கலி. 27:1,2). கயத்திலுள்ள தாமரைமுகை வண்டு நுகர அலரா மல் கரையில் நின்ற மாவினடு தீண்ட அலரும் (கலி. 72:7,8). 'வையைக் கரையை அழகு செய்யும் பொழிலில் நனவிடத்தே சென்றாற் போலக் கன விடத்தே சென்றேன்' எனத தலைவன தலைவி யிடம் கூறினான் (கலி. 92:10-13). நீர்பொரும் கரை

யுடைய வையையாறறில் வரும் புனலாடத் தங்கி னேன் எனத் தலைவன் தன் பரத்தைமை ஒழுக் கத்தை மறைத்துத் தலைவியிடம் கூறினான் (கலி. 98 10,11). உன்னை ஈர்த்துச்சென்ற வையைப்புனல் உரைசால் சிறப்பினையுடைய நின்நெஞ்சத்தையும் வாங்கிக் கொணடதனால அப்புது வெள்ளத்தின் கரையைக் காணவும் நீ விரும்பவில்லை எனத் தலைவி தலைவன பரத்தைமையைக் குறிப்பாகச் சுட்டினாள் (கலி. 98:27-29). ஞாயிறு சுடும் என்று கருதித் திரை தன கரையில் படர்நத அரும்பின் கொடியை விரைந்து அளிசெய்தது (கலி. 127:20,21). கரையை இடித்துத் தனக்காக்கிக் கொள்ளும் கழி யிடத்து வாழும் பறவையினம் அலைமோதுதலால் இறந்த மீனை இரையாகத் தின்னுமதல்லது ஒன் றன உயிரைப் போக்கி இரையாக உண்ணாது (கலி. 131·31-33). ஞாயிறு கதிர்களைக் குவித்துக் கொண்டு மலையிற் சென்று மறையக் கடலில் ஓதம் ஏறுகினற நீர் மிக்குக் கரையைச் சென்றடைந்தது (கலி. 134:4,6). கரைகாணாத நடுக்கடலில் மரக்கலம் கெட்டு அழுந்துகின்றவன் திரைகொண்டு வந்து தந்த ஒரு தெப்பத்தைப் பெற்றுப் பின்பு தீதில்லை யாய்ப் பிழைத்தாற் போலத் தலைவியின் காதலன் விரைந்து புகுதர அவள் துயரம் விரைந்து நீங்கியது (கலி. 134:24-27). கடிய நீர்ச்சுழியிலே அகப்பட்ட வனுக்கு கரைநின்றோர் சென்றெடாமல் 'அஞ் சாதே' என்று கூறினும் அவனுக்கு வருத்தம் தீரும் (கலி. 140.25,26). கடல், நிரைத்த படகுகளைக் களி றாகவும் திரை ஒலியைப் பறையாகவும கரையைச் சேர்ந்த பறவையினததைக் காலாட்படையாகவும் கொண்டுள்ளது (கலி. 149:1-3). வையை வரையை ஒத்த அணைகளை உடைப்ப, அதன திரையாகிய சிறகு கரையாகிய காவலை உடைத்தது (பரி. 6: 22,23). ஒருத்தி கரையில நிற்கத் தலைவன் ஒருதடத் துள்ளே சென்று குளித்தான் (பரி. 6:87). கடலில் நீரை முகநது இடியேறு சினந்து ஆரவாரிப்பத் தன்மேல ஏறின பாரம் தாஙகாது கரையுடைந்த குளத்துநீர் கழலுதல போல அப்பாரம் கழிய மேகம் வயிறழிந்தது (பரி. 7:2,3). வையை வெள்ளம் இடிந்த மலைகளைப போன்ற இரண்டு கரைகளாகிய காவ லுள் அடங்கிச சென்றது (பரி. 7:40,41). சந்தன மரங்களையுடைய முறையாக மெலிந்த கரையை வையைப் புனல் முறித்தது (பரி. 9:27). மதுரை நகரின பல்வேறு மக்களும் வையையாற்றின் எதிரே மெல்லச் சென்று அதன உயர்கரையை அடைந்த னர் (பரி 10:25,26). வணிகர் தம்மால் விரும்பப் பட்ட துறைமுகபபட்டினத்தை அடைந்து மீண்டும் கரையைச சேர்கும் மரக்கலததின் வருகையை எதிர்பார்ப்பர் (பரி. 10:38,39). மகளிரின் பந்தும் கழங்கும் களவாடிய மைந்தர் கரையினின்றும் வையை வெள்ளத்தில் பாய்வர் (பரி. 10:107,108). வையை யாற்று வெள்ளம் மதுரை நகர மாந்த ரெல்லாரும் தன்னைப் புகழுமாறு வந்தது; அதனைக் காண வந்த மக்கட் கூட்டம் அதன் கரையை யொப்பவநதது (பரி. 12:31-33). வையை வெள்ளம் கரைக்குமேல் உயர்ந்தது (பரி. 12:34). வையை வெள்ளம் மல்லிகை, மௌவல் முதலான எலலா மலரும் கமழ்தற கிடனான இருகரைகளிடையே சென்றது (பரி. 12:77-81). வையையாற்றின் கரை நீராடியவருடைய ஆடையினின்று ஒழுகும் நீராலே கார்காலததுத் தன்மை பெற்றது (பரி. 12:98). வையைக் கரைமீது அதன் அலைகள் மிளகு, சந்த னம் முதலிய மலைபடுபொருள்களைப் பாணடியன் ஈகை போல வாரிவாரி வீசும (பரி. 16:1-4). மலை யினின்றிழிநத அருவி கரையிடந்தோறும் உள்ள மலர் நிறைந்த மரங்களைச் சார்நது அம்மலர் களைப் பெற்று அழகு எய்தியது (பரி. 16:32,33). முகில் மலையினகண் முழங்கும் அளவில் வையைத் தீம்புனல் அலைகள் கரையில் மோதி ஆரவாரிக் கும் (பரி. 16:48,49). வையையில் வெள்ளம் வந்த போது மதுரை நகரமக்கள் அவ்வாற்றின கரை நெரியும்படி வந்து நிரம்பினர் (பரி. 22:25). வையை வெள்ளம் ஆரவாரித்து அதன் கரையும் அழியும்படி ஓடிவரும்; கரையொடு கடல்வரை வையை நீர் தரும் நுரை காணப்படும்; நுரையோடு மதகுகள்தோறும் புகுந்து செல்லும் வையை நீர் கரைபுரளுமாறு செலலும் (பரி. தி. 2: 64-66).

**2. ஆடையின் கரை.** என இடையிலிருந்த பழைய துளைகளுடன் பருத்த இழைகள் கெட்டு மெலிந்து கிழிந்த கரையை - ஆடையின் கரையை - பார்த்து, இவன் விருந்தினன்; அளிக்கத் தக்கான் என்று நலவியக்கோடன் எண்ணினான் எனப் புறத்திணை நன்னாகனார் பாடியுள்ளார் (புறம். 376:9-12). பொருட்டெழினியின மனைமுற்றத்தில் பொருநன் வாழ்த்தி நின்றபோது, அவன் பாசியின வேர் போல் கிழிந்த உடையை நீக்கி நேரிய கரையை உடைய நுண்ணூல் ஆடை தந்து அவனை உடுக்கச் செய்தான் (புறம். 392: 1, 2, 11-15). பரிக்காரர் நெடிய கரையை யுடைய நீலநிறப் புடவைகளில் வைத்துச் சிந்தின கப்பணம் பரற்கற்களைப் போல நிலத்தில் கிடந்தன (மது. 597,598). பரத்தையர் ஆடும் துணங்கைக் கூத்திடத்தே சென்று தலைவன் தலைக்கை தந்ததால் கரைகிழிந்து போன அவனது நீல ஆடை பரத்தைமை ஒழுக்கத்தைத் தலைவிக்கு உணர்த்திற்று (கலி. 73: 16, 17). தன் தாய் தந்த

பூத்தொழிலையும் கரையையும் உடைய நீல நிற ஆடையைத் தலைவி உடுத்தினாள் (கலி. 111: 2, 3). தான்சூடிய பூ அன்னைமுன் வீழநததும் மயிர்ச் சாந்திட்டு உலர்த்திய தன் கூந்தலை முடித்துக் கொண்டு நிலம்வரை தாழ்ந்த பூத்தொழிலை உடையதாகிய கரையுடைய நீல ஆடையைத் தழுவிக் கொண்டு நடை தளரப் பக்கத்துள்ள சோலைக் குட் சென்று ஒளிந்து கொண்டதாகத் தலைவி தோழியிடம் கூறினாள் (கலி. 115: 12-15).

3. எல்லை. கொன்றது போலும் கொடுமையோடு நள்ளியாமம் வருமாயின தன்காம நோய கடலினுங் காட்டில பெரிதும ஆரவாரித்துக் கரை-எலலை-கடந்து செலலுமே; என் செயவது எனத் தலைவி வருநதினாள் (அகம். 128: 2-5). விரைந்த செலவை யுடைய கானயாற்றின் கரைகாண முடியாத ஆழத்தைத் தலைவர் தமியராய் நீந்தி வந்தார் (நற். 144: 7, 8). தன்னைப்போல் கரைகாண முடியாத காம நோயில் மூழகாதவன் தன் தலைவன எனத் தலைவி கூறினாள் (கலி. 146: 25). வையைப் புனல கள்ளையும் காமத்தையும் பொருந்துதலால் கரையற்ற இன்ப வெள்ளத்தைத் தந்தது (பரி. 10:69,70).

4. விளிம்பு. ஏறி உய்தற் கரிய கரை - விளிம்பு- இடிந்து வீழுமபடி பெருங்கையானை தன கோட்டாலே குததித தன்னையகப்படுததிய குழியைத் தூர்த்துத் தன பிடியிடம் சென்றது (பட். 224, 225). யானைகள் ஒனறோடொன்று போர் செய்தலால் இடிந்த பள்ளங்கள் பொருந்திய ஆழ்ந்த கரை இட மெல்லாம் பளிங்கும் செமபொன்னும மின்னும் (நற். 292: 5, 6).

5. முனை. தலைவியின் கண்களிலிருந்து மார்பிலுள்ள முலையின் கரையில் - முனையில - படும்படி கண்ணீர் விழுதல் (நற். 33: 11, 12; 81: 6,7).

6. தடை. எல்லை கடந்து இழியும் வாலருவி தாலாட்டவும் கரை - தடை - இனறிச செலலும் தூய உருவமற்ற தென்றற காறறு பாராட்டவும இரவுக் குறிககண் தலைவியும் தலைவனும கூடினர் (பரி. 6:52-54).

**கல்** - 1. மலை. உமணர் கானற் கழியிடத்து விளைந்த உப்பை முகந்து கல் நாட்டிற்கு - மலை நாட்டிற்கு - கொண்டு செல்வர் (புறம். 60:6, 7). நள்ளி தந்த ஊனுணவால் காய்பசி நீங்கிய வன்பரணர் நறுந்தண சாரற்கண் கல் உச்சியினின்றும் வீழ்ந்த அருவி நீரைக் குடித்துக் களைப்பு நீங்கினார் (புறம். 150:9, 13-16). கல்லிடம் பொடியக் கானம் வெம்பக் கயம் வற்றக் கோடை நீடியது (புறம். 174:24-26). இருங்கோவேள பெரிய கல்லிடத்து ஊர்களையுடைய நாட்டிறகுரியவன (புறம். 202:18-21). உமணர் உபபினை எடுததுச் சென்று பெரிய கல் பொருநதிய நலல நாடுகளில விலைகூறி விற்பர் (புறம். 386.16, 17). கல்லின ஊடே இழிந்தோடும் அருவிகளை யுடையது வேஙகடம (புறம். 389:11). கலலின் மேலும கடலினகணணும பிற விடங்களிலும் மறவா அரணகளை அமைததனர் (பதி. 50:12, 13). ஆடுகோட்பாட்டுச சேரலாதனின் தொல்புகழ மூதூர் கல விளங்கும இடஙகளை யுடைய காடுகளைத் தன அரையிலே கட்டினாற் போன்று விளங்கும் (பதி. 53:4, 5). செலவக கடுங்கோ வாழியாதன கல உயாநத நேரிமலைககுத தலைவன (பதி. 67:22). கலலை அலைதத தோளினன் செல்வக் கடுங்கோ வாழியாதன (பதி. 70:4). மழையை உரிய காலததில பெயது தொழிலாற்றி மலையைச் சோநத மழைமுகில நெடுங்காலம பெயயாதிருநது பினபு கலலைச சேர்நது மிகக மழையைப பெயததால பலகுரற பறவைகளின ஒலி எழுநதது (பதி. 84:21-24). இளஞ்சேரலிரும்பொறை கடவுளால பெயர்பெறற காட்டோடு (விநதாடவி) கல உயருமபடி மலாதலை யுலகததில தம பெயர் திசைகளில் சென்ற பகைவா தேயுமாறு கடலிடத்தே வேறபடையைச் செலுததிக கடமபின் முழுமுதலைத் தடிநது கொற்றம் எயதிய பெரியோர் மரபில வநதவன (பதி. 88: 2-6, 14). கேழற் பன்றியுடன கருநிற மயிரினையுடைய யாககையையும வளைந்த அடியையுமுடைய கரடி பெருங கலலிடத்துப் பிளந்த முழைஞ்சிலே ஒடுங்கியது (முரு. 311-314). கல பொதுமபிடதது நககீரரைக காததது செவ்வேளின கைவேல (முரு.வெ. 2:3). கலலினின்றும் விழுகின்ற அருவி மலைப பொருளகளை யடித்துக கொண்டு கடலுக்குள சென்றது (பெரு 427). கல காய்வதற்குக் காரணமானது கடுவெனில (மது. 106). கடல் குறைபட முகந்து கொண்டு வானததே குழுமிய முகிலகள காறறு வீசக கலங்கி, முரசு போல முழஙகும உருமேறறோடு, செவவேள வேல போல ஒளிவிடும மினனல முதலிய தொகுதியவாயக கலமேல மழை பெய்தன (குறி. 47-53), பல்கதிர் மணடிலம ஏழு குதிரை பூணட தேரையேறிப் பகறபொழுது போமபடி தாழநது கலலைச் சேர்ந்து மறைநதது (குறி. 214-216). வினை நவில யானை உயாநிலையினை யுடையதாயப பெருமைமிக்க கல போனறது (மலை. 225-227). நல லெழில் நெடுநதேர் வழிகளில ஓடி வருதல் போலக கல்லின் மேல்வரும் யாறுகள் முழைஞ்சுகளிலே வீழ வதனால ஓசையுண்டாயிற்று (மலை. 323,324). கல்

லிடத்தே பொருந்திய சிறுகுடியை யுடைய கான வலின மகள் தலைவி (அகம. 7:22). பெரிய கல்லின் முழைஞ்சினிடத்து ஈனறு காவற்பட்ட பெண்நாய் பசிதருதெனச் செந்நாய ஏற்றைை கேழற் பன்றியைத் தாக்கும (அகம. 21:16-18). பெருங்கல வழியைக குறுக் கிடும காட்டிடத்தில களிற்றினம், வெண்கோடு விரும்பிய கானவா தம்மை அகப்படுத்த அகழ்ந்த குழிகளைத் தூர்க்கும (அகம. 21:24-27). திதியனது இன்னிசை இயம போல ஒலிக்கும் கல்லினின்று வீழும் அருவிகளையுடைய காடுகளைக் கடந்து தலைவன பொருளீட்டச் சென்றான (அகம். 25:20-22). யாமரத்தின் கிளையிலிருந்த குஞ்சுகளுக்குக் கழுகு கல் பொருந்திய சீறூரில உள்ள மறவர்தம் வில்லால் இறந்து கிடந்தோரது கண்களை உண வாகக கவர்ந்து சென்று கொடுக்கும் (அகம். 31:5-11). கதிரவன கல்லினைச் சேர்ந்து மறைய மகளிர் மனையில விளக்கேற்றினர் (அகம. 47:9,10). காய்ந்து செல்லும் ஞாயிறு கல பிளக்கத் தெறுதலின் அவ் விடத்தைக கடந்து செல்லும் பறவைகள் உருகின (அகம். 55 1,2). வாளில நடப்பதைப் போன்ற நட மாட்டமற்ற அரிய இடத்தில நினைப்பவா அஞ்சும் கற்செறிவையுடைய சிறு நெறியில் தலைவன் தலை வியைக காணவந்தான் (அகம 72:16-19). பெருமை வாய்ந்த நெடுவரை நீரறக காய்ந்த கல் நெறி யுடையது (அகம. 75:8,9). கடுங்கண் மறவர்தம் கல் பொருந்திய அரண்களில் எழுந்த தண் ணுமை ஒலி அருஞ்சுரம் செல்வோர் நெஞ்சை நடுக்குறுத்தும் (அகம். 87: 7 - 10). இரும்புலி தொலைத்த யானையின் கடாத்தில மொய்க்கும வண்டினத்தின் ஆர்ப்பினை யாழிசை யெனக் கரு திப் பெரிய கல்லின குகையிலுள்ள அசுணம் உற் றுக் கேட்கும் (அகம். 88:9-12). இரும்புலி தான் கொன்ற மானேற்றினைக் கருங்கல்லின் அகன்ற பாறையில் கிடத்தி வயிறு நிறையத் தின்றது (அகம். 107:4,5). வலிய கதிர் மழுங்கிய ஞாயிறு கல்லைச் சேர்ந்து அரவு விழுங்கிய திங்களைப் போல் மெல் லென மறையும் (அகம். 114:4,5). பகற் பொழுதைப் பையக் கழித்துப பலகதிா ஞாயிறு மேற்றிசையி லுள்ள கல்லைச் சேர்ந்தது (அகம். 120:4,5). திங்கள் கல்லினைச சேர்ந்ததால யாண்டும் இருள சூழ்ந் தது (அகம. 122:12). தித்தனது உறையூரைக் கல் பொருந்திய காவற்புறங்காடு சூழ்ந்திருந்தது (அகம். 122:21,22). கலத்துள்ள சிறுநெறி யானை முது கிலுள்ள கயிறு போல தோன்றும (அகம. 128:10, 11). கல்லிடத்துள்ள வேங்கைப் பூக்களி டையே மணமிகக நாரத்தை நாணமலா உதிரு மாறு முசுக்கலை பாய்ந்து தாவும் (அகம். 141:25-27). பெரிய கல் பொருந்திய சுரநெறியில் பக்கமலையிலுள்ள சுரபுன்னையின் உச்சி வாடும் படி ஞாயிறு காய்ந்தது (அகம. 177:7,8). பனறி சுனைநீர்ப்பருகி, சேம்பின் கொழுங்கிழங்கு மாந்தி, பெணயானை துயின்று கிடந்தாலொத்த கல்லின் மீதிருந்து இறங்கியது (அகம். 178:2-6). தலைவன் விரைந்து வந்த நறறேரின் தார்மணி கல்லிலிருந்து வீழும் அருவியைப் போல ஒலித்தது (அகம். 184: 17-19). கல்லைச் சேர்ந்திருந்த சிறுகுடிப் பாக் கத்துத் தலைவன இரவு விருந்து அயர்ந்தான் (அகம. 187:12,13). வேனில் நீடியதால் கல்உயர்ந்த இடங்களில் கயங்கள் நீரற்றன (அகம். 189:2,3), சுரநெறி கல் உயர்ந்த கொடிய பக்கமலையை உடையது (அகம.189.6,7). தலைவனின பெருங்கல்லில் உள்ள அழகு பொருந்திய சிறுகுடி, வேங்கையின் புதுமலர்களைப் புலியின் புள்ளியெனக் கருதிப் பிடியானைகள் இரிந்தோடும் சோலையினை யுடையது (அகம். 228.10-13). பெருங்கல் நாட்டில் மேகம் முழங்கும இடியொலியினைக் கேட்ட யானை, அதனைப புலியின ஒலியென வெருவிப் பெரிய கல்லின் முழைஞ்சிடம் எதிரொலிக்கக் கதறிப் பெயரும் (அகம். 232:2-5). பெருங்கல் நாட் டில் ஆண்புலி தன பிணவின் பசிபோக்கக் காட்டுப் பசு அலற அதன ஏற்றினைக் காட்டில வலப்பக் கத்தே வீழுமாறு கொன்று பெரிய கல்லையடுத்த அகன்ற பாறைகள் குருதியால் சிவப்ப இழுத் தேகும (அகம். 238:2-10). பெரிய கல பொருந்திய ஊர்களையுடைய மலையடியிலுள்ள நெறியில், வினைநயந்து நீ தலைவியைப பிரிந்து செலலுதல ஒல்லுமோ என்ப பிரிவுணர்த்தப்பட்ட தோழி தலைவனை வினவினாள் (அகம். 307:5,6,15). எம துனபம் ஒழிய நினது கல் பொருந்திய சிற்றூரை அடைந்த பின்னர் ஊதுகொம்பினைச் சிறிதே ஊதல வேண்டும எனத் தோழி தலைவனிடம் கூறினாள் (அகம். 318:10-15). வளியினால் தளரும் நிலை வாய்ந்த இறவிமரத்தின தனித்த நீண்ட விழுது கல்லின் இடத்தினைத் நுடைக்கும் (அகம.345: 18-20). களிறு தனது வரிநுதலில வைத்த வலிமை குன்றிய பெரிய கை, கல்லிலே ஏறும பாம்பு போலத் தோன்றும் (அகம். 349:11-13). கூத்தரது இயத்தின் ஒலி பெரிய கல்லினமிசை ஒலித்தாற் போலத் தன பிடியைக் காணாத யானை மலைபபக்கத்தே மழை யொடு மாறுபட முழங்கும் (அகம. 359.8-11). ஞாயிறு வானிடத்தினின்றும நீங்கித் தன பல்கதிர்களும் வெம்மை குறைந்து கல்லினைச் சேர்ந்தது (அகம. 367:1,2). தினை மேய்ந்த யானையினம் இரிந்து ஓடுமாறு கல்லிடத்தே உயர்ந்த பரணி

லிருந்து குறவன் எறிந்த கவணின் கடிய ஓசை
ஒல்லென ஒலித்தது (அகம். 392:13-15). 'மாக்கல்
வெற்பன்' (அகம். 392:18). கூட்டமாகிய மேகம்
பெய்யா தொழிந்ததால் கல் பிளவுபட்டது (அகம்.
397:4,5). தலைவர் கல் விளங்கும் பாலைநிலத்து
அருவழியைக் கடந்து சென்றார் (குறு. 66:2).
தலைவி கல் பொருந்திய கானவர் பெற்ற மகளா
வாள் (குறு. 71:4). கல்லில் படர்கின்ற இற்றிமரததின
வெள்ளிய வேர் மலையினின்றிழியும் அருவி போலத்
தோன்றும் (குறு. 106:1,2). பாலை நிலத்திற் செல
லும் யானை கல்லைக் குத்தியதால் கோடு முறிந்
தது (குறு. 169:1,2). தலைவன் கல்லினும் வலியன்
(குறு. 187:4). தலைவன் ஊர் பாம்பின் அசைகின்ற
தோலை ஒக்கும் தூய வெள்ளருவியை யுடைய
கல்லின் உச்சியிலே இருந்தது (குறு. 235:1-3). கல்
ஓங்கி உயர்ந்த அகன்ற இடத்தில் கொடுஞ்சிலை
மறவரால் இறந்த ஆறுசெல் வம்பலர் மீது இட்டு
வைத்த தழைக்குவியல்கள் ஊரைப் போலத்
தோன்றும் (குறு. 297:1-5). மகளிர் கரிய கல்லிலுள்ள
அகன்ற பாறையில் செந்தினையை உலாத்தினர்
(குறு. 335;1,2). கடவுட்டன்மை பொருந்திய கல்லி
லுள்ள சுனையில் மலர்ந்த குவளை மலரோடு செங்
காந்தளையும் பொலியச் சூடி அருவியின் ஒலியை
இன்னியமாகக் கொண்டு சூரரமகள் ஆடினாள்
(நற். 34:1-5). பாலையின் நெற்றுக்கள் கல்லினின்று
வீழும் அருவியைப் போல ஒல்லென ஒலித்தன
(நற். 107:3-5). பெருங்கல் பக்கத்திலுள்ள இருள்
செறிந்த குவட்டிலிருந்த குறிஞ்சியிலுள்ள நல்லூர்ப்
பெண்டிர் தலைவி நிமித்தமாய் அலர் கூறினர் (நற்.
116:10-12). ஞாயிற்று மண்டிலம் சிவந்து தோன்றிக்
கல்லைச் சென்றடைந்ததால் அதன் சுடர் மழுக்க
மடைந்தது (நற். 117:5,6). பெரிய கல்லின் பக்கததே
தலைவியின் தமையன்மார் உழுது வித்திய செந்
தினைக் கதிர்கள் கொய்யப்பட்டன (நற். 122:1,2).
தலைவன் பெரிய கல் பொருந்திய நாட்டினை
யுடையவன் (நற். 125:12;206:10). இரும்புலியைக்
கொன்று குருதிபடிந்த கோட்டினையுடைய களிறு
தன் கோட்டைக் கல்லினின்று வீழும் அருவியில்
கழுவும் (நற். 151:2-4). பாணர் பரிசு பெற்ற நல்ல
குதிரையின கவிந்த குளம்பு பொருத கல்லின்
மேலுள்ள சிறு நெறியில் இரவலர் மெலியாது ஏறி
னர் (நற .185:3-6). நெய்தல மலர் கூம்ப, நிழல் கீழத்
திசை சென்றடைய, மேற்றிசையிலுள்ள கல்லிடத்து
ஞாயிறு சென்று புகுந்தது (நற். 187:1,2). கல்லின்
மேலே கட்டப்பட்ட தனிநிலைப் பரண வறிதாம்படி
விடுத்துச் சென்று தலைவி தலைவனை முயங்கி
னாள் (நற். 194:5-8). கல்பொருந்திய பாக்கம்

வேங்கை மலர் உதிரும்படி அகன்ற முனறிலை
யுடையது (நற். 233:7-9). கீழ்த்திசைக் கல்லிலே
தோன்றிய ஞாயிற்றின் கதிர் மக்கள் முதலா
யினோர் கால்கள் வெம்பும்படி காய்நதது (நற்.
358:3). பெரிய கல்லிடத்து உளதாகிய சுரத்தின்
கண்ணே இரும்புலி சினங்கொண்டு மாறுபட்டு
உலவும் (நற். 274:7-9). பெரிய கல்லின் மேலே
கொன்றையின் கிளைகளில் அழகிய பூங்கொததுகள்
மலர்ந்தன (நற். 296:4,5). தண்ணிய மேகம் சுரத்[illegible]
நெறியையுடைய கலலின மேலே அதன் பக்[illegible]
மெல்லாம் மறையுமபடி கால் வீழ்த்துப் பெய்த[illegible]
(நற். 316:7-9). ஞாயிற்று மண்டிலம் கல்லைச் சேர்
கின்ற ஒளி மழுங்கிய மாலைப பொழுதில தான்
இல்லாத வறுமனையை நோக்கித் தலைவி மெல்ல
வருந்துவாள எனபது தலைவனின எண்ணம்
(நற். 321:5-7). மந்தி அருவி ஆடி, கழை ஊசல்
தூங்கி, வேங்கையினது நறுமலர் கற்சுனையிலே
உதிர அதன் கிளையிலேறிக் கடுவனோடு திளைத
தது (நற். 334:1-5). உயர்ந்த மூங்கிலையுடைய கல்
லிடத்துளள பிளபபிட மெலலாம் எதிரொலிக்க
இருமபுலி களிற்றைத் தொலைத்து முழஙகும்
ஓசையைக் கேட்டு இடி முழக்க மென்றெணணி
இனிய கல்லிலுள்ள புது வருவாயினையுடையோா
புலருமாறு இட்ட செநதினையைக் குவிப்பர் (நற்.
344:8-12). புலிக்குட்டிகள் கல்லின அயலே தழைதத
வேங்கையின மலரால் தொடுக்கப்பட்ட மாலை
யைப் போன்றன (நற். 383:1-3). தலைவியை
அவளது கல்லகத்து விளஙகிய சிறுகுடி பொலியு
மாறு தலைவன் வதுவை அயர்ந்தான் (நற். 386:
9,10). மலைச்சாரலில நின்ற பலாவின் நறும்பழம்
பெரிய கல்லின விடரளையின்கண் வீழகினற வழி
பாறையிற் கட்டப்பட்ட தேனிறாலினைச் சிதைத
தது (ஐங். 214: 1-3). கருங்கால் வேங்கையின்
ஒள்ளிய மலர்கள் பெரிய கலலின அகன்ற பாறை
யின்கண் உதிர்ந்து, பரந்து அழகு செயதன (ஐங்.
219:1,2). கல்லுடை நாடு அரிய மலைபபக்கத்தே
மணிகளைக் கவர்ந்து கொண்டு ஒலலெனனும்
ஓசையிட்டு இழிதரும் அருவிகளையுடையது (ஐங்.
233:2-4). மெல்லிய தினையை மேய்ந்த தறுகட
பனறி வலிய கல் அடுக்கத்தே உறங்கியது (ஐங்.
261:1,2). மந்தி கல்லினமேல் பரந்த இற்றியினது
வேரைப் பற்றிச் சென்று அவ்விற்றியின மேற்
பரந்த குளவித்தளிரை மேய்ந்தது (ஐங். 279:1,2).
பெருங்கல் வெற்பில் கொடிச்சி கூநதல போல்
மயில் தோகை விரிக்கும் (ஐங். 300:1,2). நீண்ட
மூங்கில்கள் உலறுமாறு வேனில் நீடுதலால் கடுங
கதிர் ஞாயிறு கல் பிளக்குமாறு காய்நதது (ஐங்.

322:1,2). கலலுடை நன்னாடு (ஐங். 333:3). நெல்லி மரங்கள் மிக்க கல் உருகக் காயும் காட்டிடையே பேதை நெஞ்சம பின்செலச் சென்றோர் கல்லினும் வலியா எனப் பிரிவு நீட ஆற்றாளாய தலைவி தோழிக்குக் கூறினாள் (ஐங். 334:1-4). கல் பொருநதிய சிறப்பினையுடைய நம்மூர்க்கு நாம் பகல் விருநதினராய்ச் செலவோம் என உடன் போய் மீளகின்ற தலைவன் தலைவியிடம் கூறினான (ஐங். 396:4,5). தலைவியைப் பிரிந்து சென்று இரநதோர்க்கு ஈயாமை இழிவெனக் கருதிக் கல் இறநது சென்று தேடும் பொருள் பொருளாகுமோ எனப பிரியக் கருதிய தலைவனைத தோழி வினவினாள (கலி. 2:15,16). ஞாயிற்றின் கனை கதிர்கள் காயதலின கலலின மேல் நின்ற மூங்கிலகள் வாடின (கலி. 11:14). கலலின நெருககத்தால் எய்த அம்பு நுழையாத அரிய வழியிடத்தே ஏற்றின பின பிணை நீங்காது. திரிந்தது (கலி. 20:21-23). கல் மேலே மயில் ஆரவாரித்து ஆடியது (கலி. 27:13). கல்லுயர்நத சாரலில் தன கோட்டால் புலியைக் குத்தி மாறுபாடு தீர்நத களிறு தன் சுற்றத்திற்கு நடுவே கூடித் திரிநதது (கலி. 52:1-6). உலகை விளக்கும் பல்கதிர்களை ,வாயாகக் கொண்டு சான்ற பகற்காலத்தை மீண்டும் அவ்வாயாலே விழுங்கினாற போலக் கதிர்களைச் சுருக்கிக் கொணடு படுசுடர் கல்லினைச் சேர்ந்தது (கலி. 119:1,2). இருள் நிறைந்து தனிமை மேலிடும்படி கனைசுடர் ஞாயிறு கலலினைச சேர்ந்து மறைந்தது (கலி. 120: 3). ஒண்சுடர் ஞாயிறு கலலினைச் சேரத் தெண்கடற் பரப்பில திரை நீககித் தண் கதிர் மதியத்து அணிநிலா எழுந்தது (கலி. 121:1-3). ஞாயிறு தான பரப்பிய கதிர்களைத் தன்னிடத்தே குவித்துக கொணடு கல்லைச் சேர்ந்து மறைந்தது (கலி. 134:4). 'கதிர்பகா ஞாயிறே, நீ கலலைச் சேர்கின்றாயாயின தலைவனைப் பிடித்து வந்து என் கையில் கொடுததால என்னெஞ்சாகிய அகலிலே உயிர் திரியாகக கொளுததிய காமத்தீ அவியும்' எனத் தலைவி ஞாயிற்றை நோக்கிக் கூறினாள் (கலி. 142.37-40). தொலலியன ஞாலத்துத் தொழிலாற்றிய ஞாயிறு வெலலவன (காமன) இட்ட வினையைத தலைமேற கொணடு போவது போலக் கலலைச் சேர நது மறைநதது (கலி. 148:1-3). நெடுந் தூரத்தைக் கடநது கலலிலே ஊர்ந்து வந்த மாட்சிமையுடைய அணிகலனகளையுடையது வையை (பரி. 11: 39). காளையூர்தியான் திரிபுரத்தை அழித்த காலததுக் கல் உயர்நத சிகரததினையுடைய இமயமலையாகிய விலலுககு நாணாகித தொல் புகழ் தநதவர் ஆதிசேடனார் (பரி. தி. 1:76-78).

2. கற்பாறை. எருமை போலும் வடிவுடையது கருங்கல் - கரிய கற்பாறை - (புறம். 5:1). சீறூரில் கல்லை யுடைத்து உவர் நீர் ஊறும் கிணறுகளை இயற்றினர் (புறம். 331: 1). வடதிசைக்கண் எல்லையாக உள்ள இமயம், தெய்வங்களின் நிலையையுடைய கல் ஓங்கிய உயர்நத பக்கமலைகளை யுடையது (பதி. 43: 6,7). நலலெயில், கல்லை இடித்து இயற்றிய ஒடுங்கிய நீர்வரும் வாயை யுடைய கிடங்கினைக் கொண்டது (மது. 730, 731). தலைவியும் தோழியும் பறித்துக குவித்த மலர்களுள் கல்லிலே படர்ந்த முல்லையும் ஒன்றாகும் (குறி. 77). நன்னனது மூதூர், இரையைத தேடியுலாவும் கொடுந்தாள் முதலையோடு திரையுண்டாக ஆழநத கல்லை அகழ்ந்த கிடங்கினையும் உயர்ந்த மதிலினையும் உடையது (மலை. 90-93). எருமை கிடநதது போன்ற கல் பெருத்த வழியிடததிலே வரகு செழித்து விளைந்திருந்தது (மலை. 111 113). 'பெரிய கல்லின திரட்சியிடத்தே முறிநது நின்ற மலையிடத்தே செல்லா தொழிமின்' எனக கூத்தர் ஆற்றுப்படுத்தப் பெறுதல் (மலை. 367). கான் யாற்று வெள்ளம் முதலை தங்கும் உயர்ந்த கலலில் மோதி மீளும் சுழிகளை யுடையது (அகம. 18: 2, 3). பக்கமலை உயர்ந்த கலலின அடுக்கை யுடைய இருண்ட குகையினை 'யுடையது (அகம். 52:5). உண்ணாது வருந்திய யானையின முதுகில் நடந்து செல்வது போன்ற கல்லில் ஏறியும் இறங்கியும் செல்லும் சிறு நெறிகளை யுடையது காடு (அகம். 65:14-16). ஓடக்கோல் மறையுமாறு பெருகிச் செல்லும் யாற்று வெள்ளம் கல்லிற் பொருது ஒலிக்கும் (அகம். 72:7,9). கொலைவில் ஆடவர் இரவில் காட்டரண்களில் உள்ளார் அலற அவரைக் கொன்று தாம் கொணட ஆனிரைகளைப் பகுத்துப் பெரிய கல முடுக்கிலே தசையினை அறுத்துத் தின்பர் (அகம். 97: 4-6). கனையெரி பரத்தலின கல காய்ந்திருக்கும் காட்டினகண் எழினியின் ஏவல் தொழில் முடிக்கும் விழுத்தொடை மறவர் கள்ளுண்ட மகிழ்வினால் முனைகடந்து ஆனினம் தருவர் (அகம். 105: 10-15). கலலைச சேர்நதிருந்த சிதைவுற்ற குடிலில் தாழியிடத்தே தழைத்த பருத்தியின் இளங்காயைச் சேவல பேடைக்கு ஊட்டும (அகம். 129: 6-8). மலைச்சாரலிலுள்ள கல் செறிந்த நெறியினகண்ணே சோலையிடத்துள்ள மூங்கிற் குருத்தினைத் தின்னும் பெருங்களிறு இயங்கும் (அகம். 148: 12-14). மலையைச் சேர்ந்த வெண் கடம்ப மலர்கள் காற்று மோதுதலின் பலவும ஒருங்கே சேர்ந்து கலலில் உதிரநதன (அகம். 199: 1-3). அரும்பு முதிர்நத முருக்க மரத்தின் கிளை

பொருந்திய பெரிய கல் கடுவளி வீசுதலின் மலரால் மூடப்பெற்று வெங்காட்டில் அழலால் மூடப்பெற்ற யானையைப் போனறு வியப்புறத் தோனறும் (அகம். 223: 5-7). பெரிய கல்லையுடைய பக்க மலையில் தலைவியின் தமையன்மார் உழுதவிடத்தே பெரிய கதிரினையுடைய தினை கருமபு போலத் திரண்டு கவின் பெற விளைந்தது (அகம். 302:9,10). தலைவர் கல் உயர்நத பக்க மலைகளை யுடைய மலையைக் கடநது சென்றார் (அகம். 313.17). கீழைக காற்றால வீழ்த்தப்பட்ட செங்காந்தளின மலர்கள கலவின மேல் கவிநது கிடந்தன (குறு. 185: 6, 7). 'ஏகல் வெற்பன' (குறு. 265.5). 'நாம கேட்கும் ஒலி நல்லான் கழுதது மணியோசையோ, செய்வினை முடிதது வரும தலைவனின தேர்மணி ஓசையோ என்பதை முல்லைக்கொடி படர்ந்த கல்லின மேல் ஏறிக் கண்டுவருவோம் வருக' எனத் தோழி தலைவியை அழைத்தாள் (குறு. 275). தலைவனைக் காணாத தலைவி செறிநத துயாமிக்க நெஞ்சத்தோடு பெரு வெள்ளததின் கல்லின மேல் மோதும் சிறு நுரை போல, மெல்ல மெல்ல உயிர் தேய்ந்தாள் (குறு. 290: 4-6). கல விளங்கிய சுரியமலை கொடுங்காற்று வீசியதால் இலையுதிர்ந்து நிழலற்ற வெறும் கொம்புகளாய் நிற்கின்ற மரங்களை யுடையது (நற். 62: 8-10). களிறு கல்லினகண்ணே ஊறுகினற நீரை அவ்வூற்றுக்குழி அற முகந்து கொண்டு தன்பிடியானையின் எதிரே ஓடும (நற். 186:1-3). கருங்கால் வேங்கையின் பொன போன்ற நறியமலர் கலலின் மேல் உதிர்ந்து பரவிக் கிடக்கும் (நற். 257:5,6). காட்டில் குருதி போலச் சிவந்த செவியினையுடைய கழுகுகள் கல்லின் மருங்கே கிடக்கும் முடை நாற்றத்தையுடைய ஊன் துண்டங்களைப பார்க்கும் (ஐங். 335:2-4). சூனமுதிர் முகில மலையைச சூழ்ந்து தன இடியேற்றினம் ஆர்ப்பக கடல் குறைபட முகந்த நீரை அம்மலையினது கல துணிபடும்படி வீசிப் பொழிந்தது (பரி. 20:1-3). மகளிர் தம் கணவரோடு தொனமையான புகழையுடைய மலையிடததைச் சார்ந்த கல சேர்நத கிடக்கைக் குளவாய் அமர்ந்தான திருக்கோயிலை வணஙகினர் (பரி. தி. 1:62,63).

3. கல். சோழன நலங்கிள்ளி கற்றவர் அறிவாலும் அறியாத அடக்கத்தை யுடையனாய யானை தன் கதுப்பின்கண் அடக்கியெறியும் கூல் போல மறைத்த வலிமையுடையவன் (புறம். 30:6-9). பண்டைச் சாகாட்டின ஆழ்ச்சியைப் போக்கப் பெருமிதப்பகடு அரி மணல் பரக்கவும் கல் பிளக்கவும் நடந்தது (புறம. 90:7-9). பாரியின் குனறில் பாணரின் கலங்கள் நிறைய ஊற்றிய கள்ளின் தேறல் வழிந்து கல்லையுருட்டிச் செல்லும் (புறம். 115:2-6). பாரியின் நெடு வரையில் அருவி கல்லை யுருட்டி யோடும் (புறம். 158:2-4). கல்லை அலைத்தொலிக்கும் பேரியாற்று நீரின் வழிப்படும் புணையைப் போல ஆருயிர் ஊழின வழிப்படும் (புறம. 192:8-10). இரவலரை விட்டு நீங்காது நிலைத்த நலகுரவு கல்லாற் செய்தாற போன்ற இயல்பினது (புறம. 196:12). பகை வரது ஆரெயிலை வருத்திய கலலைக் ககக்கினாற போல இடையறாது வீசும் கவணையும நாரால அரிக்கபபட்ட கள்ளையுமுடைய கொஙகு நாட்டினர்க்குத் தலைவன் இளஞ்சேரலிரும்பொறை (பதி. 88:18,19). கல்லைப பொளிநதாற் (குடைந்தாற்) போன்ற ஒடுங்கிய வாயையுடையது குண்டிகை (மது. 482). கண்மாறு ஆடவர் கலலையும மரததையும் அறுக்கும் கூர்மையுடைய வாளினையுடையவர் (மது. 635). பரதவர் பிள்ளைகளுடைய கல்லெறியும கவணிற்கு வெருவிப் பனையிலிருக்கும் பறவைகள இரிந்தோடும் (பட். 62,73,74). கேழற பனறி தினைப்புனத்தை உணடு அழிக்கையினாலே கானவர் அதனைக் கொலவதற்கு அது புகும வழி தோறும் பெரிய கல்லால் ஆகிய பொறியினைப பொருத்தினர் (மலை. 193-195). புனஙகாக்கும குறவா பரணஏறிக கைபுடைத்து அகனற மலையிற குறுங்காட்டில நிறைநத யானைகளின நிலையைக கெடுககக் கவணால எறிகினற கடிய கல மூங்கிலினது பசுங்கோலைக் கடந்து, கலலென ஓசையுண்டாகக் குரங்குகள் குட்டிகளுடன இரிந்தோட, உயிர் செகுக்கும் கூற்றம போல விரைநது வரும் (மலை. 203-210). வேல் காய்நதாற போன்ற கூாங் கலலையுடையது பாறை (மலை. 373). விரைநதோடும் குதிரை பூட்டபபட்ட தேரின் உருளை, கலலில மோதுதலால் எழும ஒலி கார்காலத்து மழையின இடி முழக்கினை ஒக்கும் (அகம. 14.18-21). வெதும்ப நெடுமுழும் குரலையுடைய பேராந்தைச் சேவல மலையிலுள்ள கல் உருண்டு விழும்போது எழும ஓசை போல மாறிமாறி ஒலிககும (அகம. 89 3-5). அருஞ்சுர வழிச் செல்வார் ஆறலைபபோர் கலலை எடுதது எறிதலின் பலகிழிவுகளைக கொண்ட உடையினை யணிந்திருந்தனா (அகம. 285.9, 10). இரவில மேய வரும் யானையை ஓட்டக் கானவன் மிகக விசையினை யுடைய கவணால எறிநத சிறுகல அம்பென விரைந்து சாரல் வேங்கையின பூங்கொத்துக்களைச் சிதறித் தேனை யழித்துப் பலாப பழத்தினுள் தங்கியது (அகம். 292:8-14). தலைவர் கற்களையுடைய மலையைப் போனற மார்பை உடையவர் (குறு. 76:2). கல்லை அலைத்து ஒலிகும் விரைந்து வீழும் அருவி நிலத்தில் ஊர்நது செல்லும்

4 இ பொ க தொ 2 10அ

பாம்பைப போல இழிதரும் (குறு. 134:5,6). கல்லை யுடைய மலையில் ஓமை மரததின கவட்டிருந்த துணை நீங்கிய பருநதின புலம்புகொள் ஓசை ஆறுசெல மாககளுக்கு உசாத்துணையாக அமையும் (குறு. 207.2-5). விலலுடைய வீளையர் கல்லை வீசியதால காட்டில் திரிந்த மடமான தன் இனத்தினின்றும பிரிநதது (குறு 272.2-4). கடுவரல் கான் யாற்று வெள்ளம் கல்லை அலைததுக்கொண்டு ஓடுவ நம் (நற. 7.3,4). நெடுவரையின வன்னிலத் தலைநத சிறுகுடியில பொலிவழிநத மன்றததில் கல்லையுடைய குழிகளிலுள்ள கலங்கல நீரைத் தநது, நிறைந்த மழையை அறியாத இரவில குறைநத உணவுடைய செந்தொடை மறவா வழி பார்த்திருப்பர் (நற். 33·1-7). பெருமலைப பககததில நளளிரவில் மழை பொழிந்ததனால கல நிரம்பிய காட்டினகண் ஓடும யாற்றுநீா சருகுகளோடு பூங் கொததுககளையும் அடிததுக்கொண்டு விரைந்தது (நற.53:4-8). புனசெயயிலே மேயகின றயானைகளது இயககம கேட்ட கானவன் பரண்ஏறிக் கடுவிசை யினையுடைய கவணையிற் கலலை எறிய அது வேங்கை மலரைச் சிதறி ஆசினிப் பழததை உதிரததுத் தேனடையைத துளைதது மாவின் நுணரை உழக்கி வாழை மடலைக கிழித்துப் பலாவின் பழத்துள தங்கும் (கலி. 41:7-16). கல்லினுள் மணியாகத் திருமால் திகழ்கிறார் (பரி. 3: 64). கௌதமன சினத்தால் கல்லுருவான அகலிகையின் ஓவியம் பரங்குன்றின் சித்திரச் சாலையில் எழுதப்பட்டிருந்தது (பரி. 19:50-53).

4. **பரற்கற்கள்.** விறலியா நாயின் நாக்கினை ஒத்த கல் - பரற்கல் - பொருகின்ற சிறிய அடியினை யுடையவர் (மலை. 42,43). ஞாயிற்றின் கதிர்கள் காயும் பக்க மலைகளில் பதத்து வைத்தாலொதத உச்சியினை யுடைய கூரிய கல் தீட்டப்பட்டன போன்று தேயந்த கூர்முனையைத் தோறறுவித்து வழிச்செலவார் விரல் நுதியைச் சிதைக்கும (அகம். 5·11-14). கல் விளங்கும் காட்டிடததிலுள்ள சுர நெறியில் கொடுவில் எயினர் செல்ல இரை கிடைக்கும் என்ற துணிவால் பருந்தின் பேடை தன் துணையை அழைக்கும் (அகம். 79:11-16). பெருங்காடு காழியர் (வணணார்) எடுக்கும் உவர் மண ஒழியக களர்மண் பரந்த இடத்தையும் கல்லை இடையே கொண்ட நெடுமருங் கினையும் உடையது (அகம். 89 : 7- 9, 17). பாணன என்பவன் எஞ்ஞான்றும் கல்லைப் பொருது மெலிவுறாத வலிய அடியினையுடைய வன் (அகம். 113:10). வேனிலால உழந்த கானம் பசுமையறக காயந்த கல் உறுத்தும பரபபினை யுடையது (அகம். 185:8,9). தலைவன் குன்றகச் சிறு நெறியில கல விளங்கிய அரிய இடங்கள் குறுக்கிட்ட, மொழி வேறுபட்ட தேயங்களிலுள்ள பாலையைக் கடந்து சென்றான (அகம். 205 22-24). வெஞ்சுரததின் கவர்த்த வழியில் உப்புப் பொதியினைச் சுமந்து செல்லும் கழுதையின் தேய்ந்த குளம்பு உதைததலால் கல் பிறழ்ந்து கிடக்கும் (அகம. 207:5-7). கானகம் கல் பொருநதிய நீணட கவர்த்த வழிகளையுடையது (அகம். 245 19). வள்ளைக் கொடியின் இலைச செறிவில் மடிதுயில வெறுத்த யாமை ஒலிததல செயகின்ற கலலின வழியே சென்று நீர்ததுறைக்கண்ணேயுள்ள பனங்கள ளினை அருந்துங்கால சிநதிய ஒழுககினை உண்டது (அகம். 256:1-5). யானை பிடியோடு வதியும் காடு கல பொருந்திய நெறிகளையுடையது (அகம. 295: 6-8). 'கல் படுதலாலே சிவநத நின மெலலடி வருந்தாதிருக்கக் காட்டு நெறி யகததுள்ள ஆல நிழலில் இளைப்பாறி ஏகுமதி' என உடன்போக்கினகண் தலைவன தலைவியிடம் கூறினான (நற· 76:2-9). இலநதையின களியையுடைய பசுங்காய் கல் பொருந்திய சிறு நெறியினகண உதிர்ந்து பரவிக் கிடக்கும் (நற. 113:2,3). உடன வருவல என்ற தலைவிககுத் தலைவன நீ வருவையாயின நின் சீறடித் தாமரை கலலில பட்டு அலலியைச் சேர்ந்த தாமரை இதழ்கள் அரககுத தோயந்தன போல் கறுக்குமே என்றான (கலி. 13:10-13). பொருள் நச்சித துறநதேகும் தலைவன செல்வழியில் கல்லின் மேலுண்டான வெம்மை நீங்கும்படி கனைதுளி சிதறுவாயாக எனத தலைவி மேகத்திடம் இரபபது கற்பிற்குப் பொருநதுவது அன்று (கலி. 16:5-8). வெநத கரியினைக் கொண்ட பல வழிகளையுடைத்தாயக் கல காயந்த காட்டகத்தை அஞ்சத்தகக வழியென்று கருதாது பொருளை விரும்பித தலைவன் பிரிநது சென்றான (கலி. 150: 11,12).

5. **நடுகல்.** நிரை மீட்டுப்பட்ட மறவனின் உயர்ந்த புகழையுடைய பெயர், மயிலின பீலியைச் சூட்டிய புடைவையாற் செய்யபபட்ட பந்தர்க்கீழ் உள்ள கல்மிசை - நடுகலலினமேல் - எழுதப்பட்டது (புறம. 260:25-28). செல்லும் வழியில் புனலின்கண் அணை போல எதிர்ப்படையைத் தடுத்துப் பொருது மாயந்தவனது கலலைத தொழுது செலக எனக் கிணைஞன் ஆற்றுப்படுத்தப் பெறுகின்றான (புறம. 263:2-8). கன்றொடு கறவை தந்து பகைவர் ஓட்டிப் பட்ட நெடுந்தகையைப பதுக்கை சேர்த்திச் செம்பூங்கண்ணி யுடன் மயிற பீலியைச சூட்டிப் பெயர் பொறிததுக கல நட்டனர் (புறம. 264:1-6). வேங்கையினது ஒளளி

ணர் நறும்பூவைப் போந்தைத் தோட்டிற் புனைந்து தொடுத்துக் கோவலர் இலைமாலை சூட்டி வழி படக் கல் ஆயினாயே எனப் பண்ணனைச் சோணாட்டு முகையலூர்ச் சிறுகருந தும்பியார் இரங்கிப் பாடுவர் (புறம். 265:2-5). பகைவர் முன்னே அஞ்சாது நின்று அவர் செலவைத் தடுத்துக் களிறு களை எறிந்து தாமும் வீழ்ந்த மறவரின பெயரும் பீடும் எழுதி நட்ட கல்லைப் பரவுதலன்றி நெல் லைச் சொரிந்து பரவும் கடவுள் வேறில்லை (புறம். 335:9-12). கூத்தர் செல்லுமிடத்தில் பொருதுபட்ட மறவனின்னான் என்றறிய அவன் பெயரும் பீடும அகழ்ந்து பொறிக்கப்பட்ட கடவுட் டன்மையுடைய கல் மராத்தின் நிழலில் நடபபட்டிருக்கும் (மலை. 394-396). சுரநெறி சிவந்த அம்பினையுடைய கொடு வில் ஆடவரது நல்ல வெற்றிகளை எழுதிய கல் நிலைகொண்ட வழிகளையுடையது (அகம். 179:7-10). ஆனிரையைப பெயர்த்துத்தந்து மாய்ந்த மறவரது நலவிசையை நிலைநிறுத்தக் குன்றுகளின் பக்கத்தே நட்டு வைத்தாற போன்ற இயற்கையி லெழுந்த நீண்ட கல்லின் அகன்ற இடத்தைச் செதுக்கி மண்ணி, நறுவிரை மஞ்சள் பொலியப் பூசிக் கரந தைக் கண்ணி சூட்டி இளையர் வழிபட்டனர் (அகம். 269:3-13).

6. **துறுகல்.** மறவர் கல்லுடைய – துறுகல்லுடைய - நெடிய வழிகளை வெட்டி, சுரத்தின்கண் அகன்ற வழிகளை அமைத்தனர் (பரி. 19:1,2). பல்லான் கோவலர் தம் ஆநிரைகளைப் புல்லுடை மேய்ச்சற் புலங்களில் மேயவிட்டுக் கல் உயர்ந்த காட்டிடத்தே கதிர்மணி பெறுவர் (பதி. 21:20-22).

7. **சாணைக்கல்.** ‘சிறுகாரோடன் அரக்கோடு சேர்த்து இயற்றிய கல் - சாணைக்கல் - போலப் பிரியலம் என்று தலைவர் தாம் கூறிய சொல்லை மறந்தனரோ’ என்று பிரிவிடை யாற்றாத தலைவி தோழியிடம் கூறினாள் (அகம். 1:5,6). சிறுகா ரோடன் அரக்கோடு சேர்த்து இயற்றிய கல்லினைப் போன்ற வன்மையமைந்த நாவினேன் ஆகிப் பேச வில்லை எனத் தோழி தலைவியிடம் கூறினாள் (அகம். 356:9,10).

8. **பட்டடைக்கல்.** பிட்டங்கொற்றன் தன் பகைவர்க் குக் கருங்கைக் கொல்லன் விசைத்தெறி கூடத் தோடே மாறுபடும் உலையிடத்துக் கல் - பட்டடைக் கல - போலும் வலிமை யுடையவன (புறம். 170: 14-17).

9. **நீட்டுக்கல்.** நெல்லரி களமர் தம்முடைய அரிவாள் வாய் மழுங்குமாயின் பின்னும் நெற்களை மறத் தோடு அரிய வேண்டி யாமையின் வளைந்த முது கோட்டைக் கல்லாக - தீட்டுங் கல்லாக - கருதி அவ்வரிவாளைத் தீட்டுவர் (புறம். 379:3-5).

10. **காவிக்கல்.** பார்ப்பான் துகிலைக் கலலில் - காவிக் கல்லில் - தோய்த்துடுத்த தவக் கோல முடையவன் (முல்லை. 37).

11. **நங்குரக்கல்.** கடலிடத்தே பாய்கட்டின கயிற்றை அறுத்துப பாயையும் பீறிப் பாய்மரம் முறியும்படி கடுங்காற்று காய்ந்து வீசுதலினாலே கல - நங்குரக் கல் - கயிறறுடனே நின்று உலவி நாவாய் நெடுஞ் சுழியிற்பட்டது (மது. 375-379).

12. **அம்மிக்கல்.** பெரிய மன்னையில் குற்றேவல் வினைஞர் கருங்கொள்ளின் நிறத்தையொத்தநறுங் கல்லிலே - சாந்து அம்மியிலே - கததூரி முதலிய பசுங் கலவையை அரைத்தனர் (நெடு. 49,50).

13. **வெற்றிக்கல்.** எழினியைப் பொருது வென்று அவன பல்லைப பறித்து வந்து வெணமணி என னும் ஊரினது வாயிற் கதவிலே பதித்த மத்தி அவ் வெறறிக்கு அடையாளமாக அங்குள்ள குளிர்ந்த துறைமுகத்தில் கல் - வெற்றிககல் - நாட்டினான (அகம். 211:12–15).

14. **கட்டளைக்கல்.** நறவம பூவின நறிய தாதை அளைந்த வணடு பொன்னையுரைக்கும கல் - கட் டளைக்கல - போல நனனிறததைப் பெறும (நற். 25:2-4).

15. **மலைச்சாரல்.** கல்லில் – மலைச்சாரலில் - உழு துண்டு வாழும் குறவர்தம் காதலமடமகள் பலா வின் சுளையைக் கருவிரல மந்திகரு வருவிருந்து அயர்வாள் (நற். 353:4- ).

16. **மணி.** ‘நெடும்பெருங் குன்றின்கண்ணே மயககத் தினைத் தரும் இருளுடைய குகையில் ஒளியினறி மறையும் கல் - மணி - போல ஒளியிழந்தொழிவா யாக’ என அல்லகுறிப்பட்டு மீண்ட தலைவன் தன்னெஞ்சிற்குக் கூறினான் (அகம். 258:6-8).

**கல்பொருசிறு நுரையார் - புலவர்.** இவர் குறுந்தொகை 290-ஆம் பாடலின் ஆசிரியர். இப்பாடலில வரும் ‘கல்பொரு சிறுநுரை’ என்ற உவமைச் சொற்றொ டரால் இவர் இப்பெயர் பெற்றார். இப்பாடல் வற்புறுத்துந் தோழிக்குத் தலைமகள் அழிவுற்றுச் சொல்லியது என்னும் துறையின்கண் அமைநதது. தலைவரது பிரிவு நீட்டிபபின் என் உயிர் நீங்கும் என்னும் கருத்துப்படத் தலைவி தோழியிடம், ‘எம் தலைவரைக் காணோமாயின், செறிந்த துயர் மிக்க நெஞ்சத்தோடு மிக்க வெள்ளத்தில் கல்லின் மேல் மோதும் சிறிய நுரையைப் போல மெல்ல

மெல்ல இல்லை யாவேம்' என்று கூறுவதாக இப் பாடல புனையப்பட்டுள்ளது.

**கல்லகம்** - மலையகம். கல்லகத்து - மலையகத்து - பலாவின் கனி கவர்ந்துண்ட கடுவன செம்முக மந்தியொடு பொலிந்து பக்க மலையிலுள்ள மூங் கில் உச்சியின்கண துயிலும் (புறம். 200:1-5). இளஞ் சேரலிரும்பொறை இருபெரு வேநதரும் விச்சி என் னும் குறுநில மன்னனும் வீழும்படி பகைவர் புகு தறகு அரிய காவற் காட்டையுடைய கல்லகத்து அமைந்த ஐந்து மதில்களை அழித்தான் (பதி.ப.9:4, 5). கல்லகததே தோரை நெல்லும் ஐயவியும் ஐவன நெல்லும் இஞ்சியும் மஞ்சளும் மிளகுக் கொடியும் ஒழிநத பலவேறு பண்டங்களும் குவிக்கப்பட்டிருநதன (மது. 287 - 290). களிற்றி யானை கலலகச் சிலம்பில் தன் கையை யுயர்த்திப் பெருமூசசெறிதலால் வேங்கை நறுமலர்கள் கொல் லன உலைதுலையிற் பிதிர்ந்தெழும் தீப்பொறி போலப் பொங்கி மின்மினி போலப் பெரிய புதரில் பரவின (அகம். 202:3-8). கல்லகத்தில் இரும்புலி ஏற்றை பிடி புலம்புமாறு களிற்றைத் தாககி வீழ்த்தும் (நற். 36: 1-4). கல்லக வரைப்பிலுள்ள கானகத்தே பொருந்திய சிறுகுடியின் வளமுடைய மருங்கில் மல்லிகை அரும்பின (நற். 122:3,4). தினைக்காவலன் இழைத்த பரணைக் கானமஞ்ஞை தாம் இருத்தற் குரிய பஞ்சரமாகக் கொண்டு தங்குதற்கிடனானது கலலகம் (நற். 276:5-7). தலைவியின ஊர் கல்லகத் தது (ஐங். 279:4).

**கல்லகாரம்** - நீர்க்குளிரி. கல்லகாரப் பூவினால - நீர்க் குளிரிப் பூவினால் - ஒருத்தி கண்ணி தொடுத்தாள் (பரி. 11:103).

**கல்லடாஅர்** - கற்பொறி. தினைப்புனத்து வந்து மேயும் பன்றி பட்டொழியுமாறு புனவன் சிறு பொறியாக அமைத்து வைத்த பெருங்கல்லடாஅரில் - பெரிய கற்பொறியில் - வயப்புலி அகப்பட்டது (நற். 119: 1-3). கல்லடார் காண்க.

**கல்லடார்** - கற்பொறி. பாண்டியன் தலையாலங் கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் பெரும் புலியைப் படுக்கும் வேட்டுவன் பொறியறிந்து மாட்டிய பெரிய கல்லடார் - கற்பொறி - போன்ற மார்பை உடையவன் (புறம். 19:5,6,18). கல்லடாஅர் காண்க.

**கல்லடுப்பு** - கல்லால் அமைத்த அடுப்பு. உப்பு வணிகர் கூட்டம் விட்டொழித்த கல்லடுப்பில் வில்லுடை வீரர் ஊனைப் புழுக்கி உண்பர் (அகம். 119:8,9; 159:4,5,10). சுனைநீரை முகந்த களிமண்ணால் செய்த பானையைக் கல்லடுப்பில் ஏற்றி வரகரிசி யிட்டுக் கொன்றைத் தாதுபோல அட்டித்த வரகு சோற்றைக் குடவர் (இடையர்) ஆறுசெல வம்பலர் காய்பசி நீங்க நல்லான் பாலொடு பகுத்துக் கொடுப்பர் (அகம். 393:3-17).

**கல்லதர்** - மலைவழி. கல்லதரில் - மலைவழியில் - நல லமர்க் கடந்துபட்ட தறுகணாளர் குட ரைப் பருந்து கண்டார் அஞ்சுமாறு இழுக்கும் (அகம் 7..9-11). தலைவன் ஊக்கம் குனறா உள்ளத்தொடு வேல துணையாகக் கனையிருள் பரந்த கல்லதர்ச் சிறு நெறியில தலைவியைக் காண வநதான் (அகம். 902: 12-14). நெல்லியின் வடுவற்ற பசுங்காய்கள கல லதர் மருங்கில் கடுங்காற்று உதிர்பபப் பொறகாசு போலப் பொலிவுபெறப பரவிக் கிடந்தன (அகம். 363:6-8). கல்லதர்ச் சிறுநெறி மூங்கில் செறிநதது (நற். 55:2). கல்லதரும் கானும் தன்னைக் கொல்வ தாக ஆறுபார்த்துற்ற அச்சததால் சிறைப்புறமாகத் தோழி தலைவியிடம் கூறினாள் (நற். 158:1-3). மேகம் தன்தொழில் பொய்த்தமையின் மூங்கில்கள் கவின அழிந்த கல்லதர்ச் சிறுநெறியில் பரற்கற்கள் நிரம்பிய பள்ளத்தில் ஊறும் சின்னீரை யானை யொடு புலி பொருது உண்ணும் (நற். 333:1-4). கானவன் கல்லதரில் உள்ள சிறிய புழையருகில் கரந்திருந்து தினைக்கதிரைப் பிணவொடு கவர்ந்த கேழற் பன்றியைக் கொன்றான் (நற். 336:1-4). கல்லதர்ச் சிறுநெறியில் முல்லைக் கொடி படர்ந் திருந்தது (நற். 343:1). கல்லதர் நெறியில் கல்லாக் கோவலர் தம் கைக்கோலால் தோண்டிய ஆவிற் குரிய பள்ளத்திலுள்ள நீரை யானைகள் வௌவும் (ஐங். 304:1-3). அரும்பொருள் வேட்கை யுடைய னாய்த் தலைவியைப் பிரிந்த காலத்துச் சுரத்திடை யுள்ள கல்லதர்ச் சிறுநெறிகள் தலைவனுக்கு நெடியவாய்த் தோன்றின (ஐங். 359:1-3).

**கல்லளை** - மலைக்குகை. 'நின்மகன் யாண்டையன்' என்றார்க்குக் காவற்பெண்டு 'புலிகிடந்து போகிய கல்லளை - மலைக்குகை - போல ஈனற வயிறு இதுவே, அவன் போர்க்களத்தினகண்ணே தோன் றுவன்' எனறு கூறினார் (புறம். 86). சேரமான் வஞ்சனது மூதூர், பகைவர்க்குப் புலியினம் கிடந் துறங்கும் கல்லளை போல நெருங்குதற் கரியது (புறம். 398:8-11). 'இல்லிலே புகுந்தாலொத்த கல்ல ளைகளிலே இராக்காலத்துத் தங்கிச் செல்க' எனக் கூத்தர் ஆற்றுப்படுத்தப் படுதல் (மலை. 225). தென் னனது மலையருவி வீழுமிடத்துக் கல்லளையில் மறைந்த வரையர மகளிர் போலத் தலைவி காண் டற்கு அரியள் என அல்ல குறிப்பட்ட தலைவன்

தன்னெஞ்சிற்குக் கூறினான் (அகம். 342:10-12). களிற்றுடன் பொருது புண்கூர்ந்த புலியேறு கல்லளையில ஒடுங்கியிருக்க அதனைப் பெண்புலி காவல் கொணடது (அகம. 362:3-6). புலி தனக்குரிய உணவைச் செறித்து வைத்திருந்ததால் புலால் நாற்றம் வீசும் கல்லளையிடத்து ஆறுசெல் மாக்கள் தங்குவர் (குறு. 253:6,7). சிறுகட்பன்றி தினைப்புனம் மேய வேண்டிப் பொறியமைந்த புழையிற் புகும்போது பல்லியடிபபக் கேட்டு ஏதம் அஞ்சி மீண்டு வந்து தன் கல்லளைப் பள்ளியிடத்தே தங்கியது (நற். 98:3-7). கல்லளையிலே கிடநத பெண்புலியின புனிற்றுத் துனபத்தை நீக்கப் புலியேறு சினமிகுக் களிற்றின் புகர்முகத்தே பாயும் (நற. 148:7-10). வேங்கைப பெருஞ்சினையிலிருந்த தேனடையைத் தேனீக்கள் மொய்த்ததால் கசிநது கலலளையில வடிந்த தீந்தேனைக் குறக்குறுமாக்கள உண்ட மிசசிலைக குரஙகுக குட்டி நககும (நற. 168.1-5).

**கல்லறை** - கற்பாறை. மிளைநாட்டுக கல்லறையில் - கற பாறையில் - முகை முதிர்நத வெட்சி மலர்கள் குருந்த மலர்களோடு பரந்து கிடந்தன (அகம. 133: 14-16). கல்லறையுடைய பக்க மலையிலே மூங்கிலுடன் நெல்லிமரம் உயர்ந்து விளங்கியது (அகம. 385:7,8). மலைநெறியி லுளள குமிழ மலாகள கல்லறை மீது உதிர்ந்து கோலஞ்செய்யும் (நற. 286:2,3).

**கல்லாடனார்** - புலவர். கல்லாடம் எனனும ஊரிலுள்ள வராதலின் இவா இப்பெயர் பெறறார் போலும் எனறு உ. வே. சா. கூறுவர் (புறம். பாடினோர் வரலாறு. பக். 18). திருககண்ணபப தேவர் திருமறம் அருளிய வரும் பாட்டியல நூலொன்று இயற்றியவரும் திருவள்ளுவமாலையின பாடலொனறு பாடிய வரும் இககல்லாடனாரே என்பது உ.வே.சா. கருத்து. இவர் பாடியனவாகப் புறநானூற்றில் ஐந்தும் (23, 25, 371, 385, 391) அகநானூறறில் ஏழும் (9, 83, 113, 171, 199, 209, 333) குறுந தொகையில் இரண்டும் (260, 269) ஆக14 பாடல்கள் உள்ளன. இவர், சேரலர், களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரல், தலையாலங்கானத்துச் செரு வென்ற நெடுஞ்செழியன், செழியன், தென்னர், அகுதை, அம்பர்கிழான் அருவநதை, ஓரி, காரி, நன்னன், பாணன், புல்லி, பொறையாற்று கிழான், கோசர், தொண்டையோர் ஆகியோரைப் பாடியுள்ளார். இவருடைய பாடல்களில் பகைவருடைய நீர்நிலையைக் கெடுத்தல், கடிமரந்தடிதல், அவர் முரசைக் கைக்கொள்ளுதல் (புறம். 23), போரில் கணவன்மார் இறந்தபினனர் அவர் மனைவியர் கைம்மை நோனபு மேற்கொண்டு கூநதலைக் கொய்து கொள்ளுதல் (புறம. 25), வேலி ஆயிரம் விளைக என வாழத்துதல் (புறம. 391), பாங்கர்ப் பல்லி படுதொறும பரவுதல் (அகம். 9), களிற்றுக் கனறைக் கள விலைககாகக் களவிறபோர் முறறத தில கட்டுதல (அகம். 83), உப்பைமாறி வெண்ணெல பெறுதல (குறு. 269) முதலான வழக்கஙகள் சுட்டப பெறுகின்றன. 'ஆலங்கானத தமர்கடந் தட்ட காலமுன்ப' என்றிவர் போற்றும தலையாலங கானததுச் செருவென்ற நெடுஞ்செழியனை மூனறு புறப்பாடலகளில (23, 25, 371) பாராட்டுவ தோடன்றி ஆலஙகானததுப் போரின் சிறபபினை அகப் பாடல வாயிலாகவும் (அகம. 209) உணர்த்துவர். இவர்தம் அகபபாடலகள உவமைவழி வரலாற்றுக் குறிப்புகளைத தருவதோ டன்றி இயற்கை நலஞசிறநதனவாகவும உளளன. குருகு இருவிசும்பில பறததல, வரிவணடு ஊதப போதுகள வாயநெகிழதல் முதலான கூதிரககால நிமித்தஙகள் (குறு. 260), வேனிற் காலத்தில யானையினம மேகத்தை நோககிக் கையெடுததுப பயிரல (அகம. 333), மகளிர் உலக்கையாற் குறறுமபோது உரலி னினறும் எழும ஒலி பககமலையிலுள்ள ஆநதை ஒலியொடு இரட்டுதல (அகம. 9), தலைவியின தநதை வயச்சுறா எறிநத புண தணிநது மீணடும மீன வேட்டம வேணடிக கடல புகுதல முதலான செயதிகள் இவர்தம கூர்தத இயறகைப புலமைக குச் சான்றுகளாகும். நெடுஞ்செழியன பகைவரைக கொனறவழி அவர் பெணடிா தம இளம புதல வரை ஓம்புதற்காக இறநதுபடாது உயிர் வாழ கினறனா எனனும் குறிப்புப பொருள புலபபட 'அறுமருப பெழிறகலை புலிபபாற பட்டெனச சிறுமறி தழீஇய தெறிநடை மடபபிணை பூளை நீடிய வெருவரு பறநதலை வேளை வெணபூக்கறிக கும்' எனக கூறியிருபபது நயம வாயநததாகும் (புறம். 23). நனறல காலையும நட்பிறகோடார் (அகம. 113:1), உடம்பை விட்டுத் தன உயிர் காதலர் உள்ள இடத்துச் செலல வேணடும் எனற தலைவியின கருத்துக்கு, 'அலஙகல அஞ்சினைக் குடம்பை புலலெனப் புலமபெயர் மருங்கில புளளெழுதலை' உவமையாகக கூறுதல (அகம. 113. 24-27) போனற செயதிகள இவர் பாடலகளில் இடம் பெறுகினறன. வாகைப் பெருந்துறைச் செரு வில் நன்னன போர்க்களததில் மடியக களங்காயக் கணணி நார்முடிச் சேரல தான் முனபு இழந்த நாட்டைப பெற்றான (அகம. 199), காரி ஓரியைக் கொன்று சேரலர்ககு அவர் நாட்டை மீட்டுக் கொடுத்தான (அகம். 209) எனனும் வரலாற்றுச் செய்திகளையும் இப்புலவர் குறித்துள்ளார்.

**கல்லாதவர் - கல்லா மாக்கள்.** கற்றாரும் கல்லாதவரும - கல்லா மாக்களும் - கயவரும் பெற்றோரும் பெற்றோரப பிழையாத பெணடிரும் தென்னவனும் ஏனையோரும் வையையாற்றிற்கு நீராடச் சென்றனர் (பரி. தி. 2:24-27).

**கல்லுப்பு - கல்லாக விளைநத உப்பு.** சிறுகுடிப் பரதவர் உப்பங்கழியில் உழாது விளைவித்த வெண்கல்லுப்பினை - வெள்ளிய கல உபபினை - உமணர் பிளப புககளையுடைய குனறங்களைக் கடந்து சென்று விலைகூறி விறபர் (அகம. 140: 1-5). உமணர்தம் காதன் மடமகள இலங்குவளை ஒலிக்க வீசி நெல்லுக்கு நேர் வெணகல்லுபபு என்று பணடமாற்றாகிய விலைகூறிச் சேரியின் கண்ணே விற்றாள் (அகம். 140: 5-8). உபபு வணிகர் தெளிந்த கழியின் கண் விளைநத வெணகல்லுப்பினை விலை கூறி விற்றனர் (அகம. 159: 1-4). உமணர் கூட்டம் வெண் கலலுபபின விலை கூறி நெடுநெறியிற் செலுத்தும சகடம் மணலின் மடுத்து முழங்கும ஓசையைக் கேட்டுக கழியிலுள்ள கருங்கால வெணகுருகு வெருவியது (நற். 4: 7-12). கடற்கரை யிடத்து உப்பு வணிகர் கடுவெயிலினாற் கொதித்த கல்லாக விளைந்த உபபுகளை வண்டியில் ஏற்றிக் கொண்டு நெடுநெறியிலே வரிசையாக அவறறை ஓட்டுவர் (நற். 354.7-9).

**கல்வாழை – மலைவாழை.** பிணிப்புண்ட அடியினையுடைய பெரிய கல்வாழையின் - மலை வாழையின் - கொழுத்த அழகிய கனியை மந்திகள் கவர்ந்துண்டன (நற். 251:2,3).

**கல்வி - கல்வியறிவு.** மகட்கொடை மறுக்கப்பட்ட தலைவியின் வலலாணமையுடைய இளையனாகிய தமையன் 'யானும் சிறிது கல்வியென் - கல்வியறிவு உடையேன' - எனறு கூறினான் (புறம். 346:3).

**கல்வேலி - மலைவேலி.** கல்வேலி – மலைவேலி – உடையநும் இனிய ஊர்க்குத் தலைவியை வரைந்து கொணடு செலவாயாக என்று தோழி தலைவனிடம் கூறினாள் (அகம். 132:8,14). பெருங்கல் வேலியுடைய சிற்றூரின் கண்ணே, பலவின் கொழுஞ்சுளை மாந்திய பசு அயலதாகிய மூங்கில் நெருங்கிய சிறுமலையிலுள்ள குளிர்ந்த நீரைப பருகும் (நற். 213:3-6).

**கலக்கம் – துன்பம்.** தன் நலனை யுண்ட தலைவர் வாராததால் அவரை நினைத்துத் தலைவி கையறு நெஞ்சினளாயக கலககததில் - துன்பத்தில் – ஆழநதாள் (கலி. 134:19,20). பகல் மாயநதபின கலககத்துடன் காலன் போன்று மாலைககாலம தலைவியிடம் வநதது (கலி. 143:39-41). கலக்கு - 1. காண்க.

**கலக்கு - 1. துன்பம்.** கிள்ளி வளவனைச் சினப்பித்தோர் நாடு புதல்வரைப் பூங்கண் முத்தி மனைவியர்க்குத் தம் வருத்தத்தை மறைக்கும் கவலைமிக்க ஆடவரோடு மிக்க கலக்கு - துனபம் - உற்றது (புறம். 41:14-16). நாட்டை ஆளும் அரசர் தாம் பின்பு கலக்குறும்படி அவரால் அலைககப் பெற்ற நாடு பாழ்பட்டது போலத் தலைவியின அழகு தலைவன் பிரிவால் பாழ்பட்டது (கலி. 5:12,13). தலைவர் குறிததுச் சென்ற இளவேனிற்காலம் வருநதுணையும ஆற்றியிராதபடி முன்பனிக் காலதது வாடையாலும் பின்பனியாலும உண்டாகும் கையறநிலை இறந்துபாட்டைக் கூட்டுகையினாலே தலைவியின நெஞ்சு கலக்குற்றது (கலி. 31: 6-8). வேலவலலானாகிய முருகன் பெரிய கடல கலககுற உள்ளே சென்று மாமரத்தை வெட்டினான (கலி. 104:13, 14). காதலைக் கொணட காமம் தலைவனைக் கலக்குறச் செய்தது (கலி. 113:20). அனபுமாறி அருளாது துறநத காதலன செய்த கலக்கநறு காம நோய்க்கு உன்னைத தவிர வேறு எவரும மருந்தறியார் என்று திஙகளை நோககி ஆறறாமை மிக்க தலைவி கூறினாள் (கலி. 145:47-50). கலககம் காண்க.

**2. மயக்கம்.** மனையிடத்தே குவிக்கப பெற்ற மிளகு மூடைகள் ஆரவாரத்தையுடைய கடற்கரையினின்றும் பிரித்தறிய வியலாதபடி காணபாரைக கலக்கு - மயக்கம் - அடையச் செய்யும் (புறம. 343. 3,4).

**3. குழம்புதல்.** படைக்கலங்களைக் கழுவுதலினால நீர்த்துறைகள் கலக்கு – குழமபுதல் - உற்றன (புறம். 345:4).

**கலங்கல் - 1. கலங்கிய கள்** (ஆகுபெயர்). எமக்குக் கலங்கலை – கலங்கிய கள்ளை – தந்து தான் தேறலையுண்பான் எனத் தன் வேந்தன் சிறப்பைக கரநதை மறவன் போற்றுகிறான் (புறம. 298:1-3)

**2. கலங்கிய நீர்** (ஆகுபெயர்). அசையும் கதிர்கள் நிரம்பிக் கலங்கல - கலங்கிய நீர - உடைய குளம போல நிலைதளர்ந்து பாழபட்ட பலகால்களையுடைய மன்றம் தோன்றியது (புறம். 375:1-3). நீர் குறைந்த குளிக்கும் சிறு குளத்தில் தோணடப பெற்ற குழியினகண் உள்ள உண்ணற்காகாத கலங்கலில களிறு பிடியின் மெனமையான தலையைக கழுவியது (அகம. 121:3-6).

**3. குழம்புதல்.** வலமாகச் சுழிக்கும் வையையாற்றின் கலங்கல் - குழம்புதல் - கொண்ட புனல மணி முதலியவற்றை அடிததுக் கொணடு வநதது

(பரி. 16:6-8). மஞ்சனக் குங்குமக் கலங்கல் வழிந்த நீராதலின் வையை நீர் தூயதன்றாயிற்று (பரி. தி. 2:87–89).

4. மனக்கலக்கம். தலைவன் தலைவியின் முன்கை பற்றி 'நுமர்தர நாடறி நன்மணம் விரைந்து அயர் வோம்; இடையேயுள்ள சில நாள் கலங்கல் - மனக்கலக்கம் - வேண்டா' என்று ஈர நன்மொழி கூறிச் சென்றான் (குறி. 231-234).

**கலங்கள் - அணிகள்.** தலைவனின் மகனைத் தெருவில் கண்ட பரத்தையர் அவனைத் தடுத்து எடுத்துத் தம் கலங்களுள் - அணிகளுள் -அவன் வடிவிற்கு ஒத்தன வற்றை ஆராயந்து அணிந்தனர் (கலி. 84:13-17). கலம் காண்க.

**கலஞ்செய்கோ - வேட்கோ** (குயவன்). கலஞ்செய்கோவே - வேட்கோவே- விண்ணுலகம் எய்திய கிள்ளி வளவ னின் புகழுடம்பு பெரிதாகலின் அதனைக் கவிக்கும் பெரிய தாழியை வனைய விரும்பின் இருநிலம் திகிரியாகப் பெருமலை மண்ணாக நினக்கு வனைய இயலுமோ என ஐயூர் முடவனார் வினவினார் (புறம். 228:4,10-15).

**கலந்தொடா மகளிர் - வீட்டுவிலக்குடை மகளிர்.** சீறூர் மன்னனின் உழுத்ததர் தின்ற குதிரைகள் கடலைப் பிளந்தேகும் தோணி போற் படை முகத் தைப் போழந்து போர் செய்ய, நெய்ம்மிதி யருந் திய மருதநில மன்னர் குதிரைகள் முருகன் கோட்டத்துக் கலந்தொடா மகளிர் - வீட்டுவிலக் குடை மகளிர் - போலப் போர்க்கஞ்சிப் பின்னிட்டு நின்றன (புறம். 299).

**கலப்பு - 1. கலத்தல்.** இடி (கற்கண்டின்) கலப்பை ஒத்த இனிய சாறு கொண்டது மாம்பழம் (மலை. 512, 513). வெளவால் பால் கலப்பன்ன இனிமையுடைய மாங்கனியை உண்டு நெல்லிக்கனியை மாந்தி அயலி லுள்ள மூங்கிலில் தொங்கும் (குறு. 201:2-5).

2. புணர்ச்சி. அறிவினும் வீரத்தினும் போர்செய்து தோலாத கூடலிலுள்ள மைந்தரும் மகளிரும் கலப் பொடு - புணர்ச்சியொடு - வந்த இரவு நீங்கிய வைகறையில் பரங்குன்றை நோக்கி அறம் பெரி தாற்றி அதன பயன் கொள்ளச் சிறந்தோருலகம் செல்வார் போல ஊர்திகளிற் சென்றனர் (பரி. 19: 8-15).

**கலப்பை - 1. கருவிகள் வைக்கும் பை.** அதிகமான் பரிசில் நீட்டித்த போது, 'கலங்களைக் காவினெம்; கலப்பை - (இசைக்) கருவிகளை வைக்கும் பை - சுருக் கினேம்; எத்திசைச் செலினும் அத்திசைச் சோறே' என ஔவையார் அவனிடம் கூறினார் (புறம். 206: 10-13). பொருநன் பறையொடு தகைத்த கலப்பை யினையும் சிதைந்த வாயினையுடைய சமைக்கும் பானையினையும் தூக்கிச் சென்றான் (புறம்.371:5,6). பாணர் கள்ளையுண்டமையால் சொல் தடுமாறி மழலை மொழி பேசும் நாவையும் மெல்லிய சொல் லையும் இசைக் கருவிகளைக் கொண்ட கலப்பையும் உடையவர் (பதி.15:25,26). ஒரு சேரக் கட்டிய கலப்பை யுடைய வயிரிய மாக்கள் பல்யானைச் செல்கெழு குட்டுவனின் ஊர் மன்றத்தை அணுகி ஒருபுறம் தங்கிப் பாடினர் (பதி. 23:4-6). முழவு, பதலை, தூம்பு ஆகிய இசைக்கருவிகளை ஒருங்கே சேர்த்து ஒரு பக்கத்தே கட்டின காவடியின மறுபக கத்தே பாடற்றுறைக்கு வேண்டிய கருவியெல்லாம் கூடின கலப்பையைக் கட்டி அதனைச் சுமந்து கொண்டு இளைஞர் கடவுட் பழிச்சிச் சென்றனர் (பதி. 41:3-6). முழவு, ஆகுளி, பாண்டில், கொம்பு, வங்கியம், குழல், தட்டை, எல்லரி, பதலை, முதலிய இசைக் கருவிகளைக் கட்டிக் காவின கலப்பையுடை யராய்க் கூத்தர் சென்றனர் (மலை. 3-13). சிறுவங் கியம், பெருவங்கியம, முழவு, தாளம, சில்லரி முத லாகிய சிறிய பல வாச்சியங்களுடன கூத்தியற்றிய பின் தலையினைச் சோத்துக் கட்டிய பலதொகைக் கலப்பையராய்க் கூத்தர் வேற்றூர் சென்றனர் (அகம். 301:16-23). இடையன உறியுடன தீக்கடை கோலிட்ட கலப்பையை இட்டுச் சுருக்கிய பெரிய தோற்பையைத் தாங்கி மழையில நனைந்து கொண்டு ஆட்டு மந்தையைக் காத்தான (நற. 142: 2-7).

2. ஏர். கொட்டிலின் நெடிய சுவர் குறிய சகடத்தின் உருளைகளோடே கலப்பையையும் - ஏரையும் - சார்த்திவைத்ததினாலே தேயநதது (பெரு. 188,189).

**கலம் - 1. அணிகலம்.** முதுகுடுமிப் பெருவழுதி, பகை வர் அரண்களை யழித்துக் கொண்ட சிறந்த கலங் களைப் பரிசிலர்க்கு வரிசையின நலகினான (புறம். 6:14-16). செல்வக் கடுங்கோ வாழியாதன் பரி சிலர்க்கு அரிய கலங்களை வழங்கினான (புறம். 14:10). பாண்டியன் நன்மாறன் இரவலர்க்கு அரிய கலங்களைப் பெரிதும் வழங்கினான (புறம். 56:17). 'கோப்பெருஞ் சோழனின் கோயில் புக்கு அவன கேட்குமாறு 'யான் இரும்பிசிர் ஆந்தை அடியுறை' என்று சொன்னால நினபேடை அணியத் தக்க நன கலம் நினக்கு நல்குவான' எனப பிசிராந்தையார் அன்னச் சேவலிடம் கூறினார் (புறம். 67.10-14). பேகனே, நீ அளிக்கும் அருங்கலமும் வெறுக்கையும் யாம் வேண்டேம்; நீ அருளாமையால் வாடும் நின மனைவி மகிழுமாறு அவள் கூந்தலில் கமழ்புகை கொளுத்திக் கோதை புனையச் செலக; அதுவே

யாம வேண்டும் பரிசில என அரிசில் கிழார் கூறி னார் (புறம. 146). நள்ளி தன்னைச சூழ்ந்திருக்கும் பரிசிலர்கது நாடொறும நன்கலத்தைக் களிற்றொடு தநதான (புறம. 148:1-4). வேட்டைமேற்சென்ற நள்ளி காட்டில வனபரணரைக கண்டு 'பெறுதற்கரிய வீறுசால் நனகலம் வேறொன்றும இல்லை' யெனக கூறி முததாரத்தை முனகைக் கடகமொடு ஈந்தனன் (புறம். 150.18-21). குமணன் பாடுநர் சுற்றம் துன்பம் நீஙக அரிதுபெறு பொலஙகலஙகளை எளிதாக வழங்கினான (புறம். 160:10-12). குமணன் தாணிழல் வாழவோர் நனகலம் மிகுதியும் பெற்றனர் (புறம். 161:30). பிட்டங்கொற்றன் தமககேயனறிப் பிறர்க் கும் அருஙகலம களிறறொடு வேண்டினும் தரும் அறததகையன எனக் காரிக்கணணனார் அவனைப போற்றுவா (புறம. 171.10,11). 'நினனை ஒதத நின் புதலவர், எநநாளும் பகைவர் வாடுமாறு அவரின் அருங்கலததைக கொண்டு வந்து பொன்னுடை நெடுநகர் நிறைய வைததுச் சிறபபாராக' என வடம வணணககன் பேரிசாத்தனார் பரிசில் நீட் டித்த நனமாறனைப பாடினார் (புறம். 198:14-16). பொன, முத்து, பவளம, மணி ஆகியவை ஒன்றற் கொன்று சேயவாயினும் அருவிலை நன்கலம் அமைக்குங்காலை ஒருவழித் தோனறியாங்குச் சான் றோர் ஒனறு கூடுவா (புறம. 218:1-6). நிரைமீட்டு நடுகல்லாகிய மறவன் இன்மையின அவன் மகளிர் கொய்ம்மழித்தலையொடு கலங்களை நீத்துக் கைம் மையுறக் கலங்கிப பொலிவிழந்தனர் (புறம். 261: 15-19). கணவனை இழநத மகளிர், ஆம்பலரிசியை உண்டு கழிகல மகளிராய் (அணிகலங்களை நீககிய கைம் பெணடிராய்) தம் கொழுநரை நினைத்து வாழ்வர் (புறம. 280:13-15). மணக்க விழைநத வேந்தன் உறநதையன்ன உரைசால் நன்கலம் கொடுபபவும் மகளின தந்தை கொள்ளா னாயினான் (புறம.352: 10,11). தலைவன் ஒருவன, கேள்வி முற்றிய வேள்வி யந்தணர்க்குப பொன்னாலாகிய அரிய கலங்களை நீர்வார்ததுக் கொடுத்தான் (புறம். 361: 4,5). 'நீவிர் மூவிரும பாசிழை மகளிர் பொன வள்ளததில் ஏந்திய நாரரி தேறல் மாந்தி இரவலாககு அருங்கலம் அருகாது வீசி இவண் வரைநத காலம வாழதல வேணடும்' என ஒளவை யார் மூவேநதரை வாழத்தினர் (புறம். 367: 7-9). செருப்பாழி யெறிந்த இளஞ்சேட்சென்னி கிணை ஒற்றி வஞ்சிபாடிய கிணைஞனுக்கு மேமபடு சிறப் பின அருங்கலங்களும பிற பொருள்களுமாகிய செல்வத்தை வழங்கினான (புறம். 378:8-12). நல்லேர் முதியன் தனமுனனோன ஆதனுங்கனைப போல வீறுசால் நனகலம நலகித தம சுற்றத்தின் பசி நீக்கவேண்டும் எனக் கள்ளில் ஆத்திரையனார் வேண்டினார் (புறம். 389:12-15). பெருஞ்சாத்தன் தன் மனையிற் பாடிய கிணைப்பொருநனைக் கண்டு சிறிது பொழுதும் தாழக்காது, மிகுதியாகப் பேசாது அருங்கலம் நல்கினான் (புறம். 395:24-28). கிள்ளிவளவனின் நெடுங்கடையில் தோன்றிப் பாடிய பொருநனின் வேனிலன்ன வறுமைத்துன்பம் நீங்க அருங்கலம் நல்கினான் (புறம். 397:17,18). இலங்கு மணிகள் செறிந்த பொலங்கலத் திகிரியால் நெடுஞ் சேரலாதன் இபபொழில் முழுதும் ஆண்டான் (பதி. 14:18,19). 'வருவோர்க்கு வரையாது வழங்குதற் பொருட்டு நும பொனனாலாய கலங்கள் ஒலிக்க விரைந்து சென்மப்பீராக' எனப் பாணனை கூநதல் விறலியரை ஏவினான் (பதி. 18:3-6). நெடுஞ் சேரலாதன் ஆரியரை வணக்கி யவனரைப் பிணிதது அருவிலை நன்கலம் வயிரமொடு மூதூர்க்குக் கொணர்நது பிறர்க்குதவினான் (பதி. ப. 2:7-11). பல் யானைச் செல்கெழுகுட்டுவன் பகைவர் நாட்டை வென்று முரசங்கறங்க அவரின நனகலம் தரும் ஆற்றல சான்றவன் (பதி. 21:18,19). குட்டுவன் சிறிதளவு கள்ளுண்டு மகிழ்ந்த காலத்தும் பெரிய கலங்களை வழஙகுவான் (பதி. 23:9,12). களங்காய்க் கண்ணி நார்முடிச்சேரல், பகைவர் ஆரப் பழங் கண் அருளி, நகைவர் ஆர நனகலம் சிதறினான் (பதி. 37:3,4). செங்குட்டுவன் நகைவர் ஆர நன்கலம் சிதறினான் (பதி. 43:20). கடல்பிறக்கோட்டிய செங்குட்டுவன் தான் அணிந்த கலங்களை இரவ லர்க்கு அளவின்றி வழங்கினான் (பதி. 44.5). பிற நாடுகளில் உள்ள அருங்கலங்களைத் தரும் பொருட் டுக் கடல் நீரில் உயர்ந்து செல்லும் பெரிய வங்கம் திசைகளில் திரிதல் (பதி. 52:3,4). ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் பிறநாடுகளை வென்று, அநநாட்டரச சர் திறையாகத் தரும் கலங்களைக் கொணரும் பொருட்டுத தான் வேண்டிய இடததில் படை யொடு தங்கி அவர்க்கு அருள் செய்தான் (பதி. 53: 1-3). ஆடுகோட்பாட்டுச் சேரலாதன், இரவலர் துன்பம் தீர உரைசால் நன்கலங்களைத தனக் கென்று வரைதல் இன்றிக் கொடுத்தான் (பதி. 54: 7,8). இனிய ஓசையையுடைய அலைகள் ஒலிக்கும் கடலிலே வந்த நனகலமாகிய செல்வம் சேரநாட் டுப் பண்டசாலைகளில் தங்கும் (பதி. 55:3,4). பகை வர் ஆராயும் வன்மைசான்ற பணைத்தோளை யுடைய ஆடுகோட்பாட்டுச் சேரலாதனுககுப் பாடு சால் நன்கலம் அளிக்கும் நாடுகளைக் காத்தல் கடனாகும் (பதி. 59:17-19). செல்வக் கடுங்கோ வாழியாதன் அந்தணர்க்கு அருங்கலங்களை நீர் வார்த்துக் கொடுததமையால் அந்நீரொழுகி மணல்

மலிபுற்றம் சேறாகியது (பதி. 64 5,5). செலவக் கோமானைப் பாடிச் சென்றால தெண்கடல் முதத மொடு நனகலம் பெறலாம் எனப் பாணன் ஆற் றுப்படுத்தப் பெறுகிறான் (பதி. 67:4,23). களிற்றி யானையோடு அருங்கலம் தராத பகைவர் பின்னர் உடல் நடுங்கத் தெய்வமெனப் பரவியமையால பெருஞ்சேரவிரும்பொறை திறை கொண்டு பெயர்ந் தான் (பதி. 71:20-24). கொடுமணம் என்னும் ஊரில் தொழில் மாட்சிமைப்பட்ட அரிய கலம் செய்யப பெறறன (பதி. 74:5). இளஞ்சேர விரும்பொறை பகைவர் நாடுகளை அழித்து நனகலம் பல கொணர்ந்தனன் (பதி. 83 : 7). இளஞ்சேரவிரும் பொறையிடம் நீ சென்றால நன்கலம் பெறுவாய் என விறலி ஆற்றுப்படுத்தப் பெற்றாள் (பதி. 87: 1). வயவேந்தர் இளஞ்சேரலிரும்பொறைக்குக் களிறுகளும் கலமும் தந்து தமது பழமையைச் சொலலி அவன் ஏவலகேட்டு நினறனர் (பதி.90: 6-8). இளஞ்சேரலிரும்பொறை தன்னைப் பாடிய பெருங்குன்றூர்கிழார்க்கு எண்ணறகாகா அருங்கல வெறுக்கையொடு பன்னூ றாயிரம பாற்பட வகுத்து அளித்தான (பதி. ப. 9. அடிக்குறிப்பு). பகைவர் யானை யொடு அருங்கலம் தந்து பணிந்து வழிமொழிந் தனர் (பதி. தி. 1:1,2). நெடுஞ்செழியன் பொரு நர்க்கு நலஞ்சான்ற கலங்களை அளவின்றிக் கொடுத்தான் (மது. 104). பிறநாட்டு வாணிகர் மதுரையில் கலங்களைக் கொண்டு சென்றனர் (மது. 539). புலந்த மகளிர் அறுத்தெறிந்த நன் கலங்களை மெல்லிய பூவின் வாடலொடு பெருக்கிப் போக்கினர் (மது. 685). நாடொறும் தமக்குச் செல்வம் மிகும்படியாகக் கையாற் றொழுது வாழ்த்தி நாட்காலத்தே நெடுஞ்செழியனுக்கு மனனர் திறையாகக் கொண்டு வந்து கொடுத்த சீரிய கலங்கள் பலவேறு பொருள்களுடன நிறைந் தமையால் மதுரை பெரும்புகழ் எய்தியது (மது. 694-699). முத்து, மணி, பொன முதலியன கொண்டியற்றிய சிறந்த கலம் கெட்டால் மீண்டும் திருத்தியமைத்துக்கொள்ளலாம் (குறி. 13,14). 'வழி வந்த வருத்தத்தைக் கைவிட்டிருந்த, அறிவினை யுடைய கலம்பெறு கண்ணுளர் ஒக்கல் தலைவ' எனக் கூத்தாதலைவன விளிக்கப் பெற்றான (மலை. 49,50). நன்னன பகைவர் பலரைப் புறங்கண்டு அவரிடம் திறையாகப் பெற்ற அருங்கலங்களை அறிவுடையோர்க்கு வழங்கி நல்லிசை நாட்டினான் (மலை. 70-72). இலமபடு புலவர் ஏற்ற கைந் நிறையக் கலம் சொரிகையினாலே கவிழ்ந்த தடக்கையுடையவன் நனனன (மலை. 576,577). சேய் நாட்டில் பொன்னாலான கலமாகிய செல்வத்தை ஈட்டுதற்குத தலைவர் தலைவியைப பிரிநது காடுகடந்து சென‌றார் (அகம். 1:8,9,19). கலம் தரல உள்ளமொடு காட்டுவழி கடநது வருமாறு நெஞ்சு தலைவனைத் தூண்டியது (அகம. 3:11-13). தேர வழங்குந் தெருவில் தனியனாய நிற்கும புதல வனைக் கண்ட பொலங்கலம சுமந்த பூணதாங்கும மார்பினையுடைய பரதததை தலைவன போல இருக்கும் ஒப்புமையால அவனை [illegible] அனபோடு அணைத்தாள் (அகம. 16:6-10) [illegible] அரசர் திறையாக அரிய கலங்களைக குவித்தமை யால் வேந்தன பகைதணிநதான (அகம. 54'1,2). பகைவரின் அரணபல நூறி நலல கலங்களைக கொணரும் வயவர் பெருமகன் ஆய (அகம. 69 16-18). பொறைமலி கழுதையின பினவரும் வயவரைப போர்க்களத்தில் வென‌ற மறவா அருஙகலங்களைக கவர்ந்து தமககுள் கொளள வேணடிய முறையிற் பகுத்துக கொணடனர் (அகம. 89 12-16). நனகலங களைக் கொணடு வநது களிற்றொடு திறை கொடுத்து நண்ணார் வணங்கியமையால வேநதன போரைக கைவிட்டான (அகம. 124.1-5) தன் [illegible] யன்மார் பிடித்து வநத வாளைக்கு விலையாகப பாண்மகள் நெல்லின முகவை கொளளாமல முத்தமொடு நனகலம் பெறுவாள் (அகம். 126 9-1[illegible]). சேரலாதன் மாநதை எனனும் ஊரிலுளள தன மனைமுற்றத்துப் பகைவர் பணிநது திறையாகத் தந்த பெருமை சான்ற நலல கலங்களுடன பொனசெய பாவையினையும் வயிரஙகளையும் குவித்தான (அகம. 127:3-9). சேரன் படைததலைவ னான பிட்டன் பரிசில் விருப்புடன வாழுபவருக்கு நன்கலங்களை வழங்குவான் (அகம். 143 10-12). ஏற்றார்க்கு எஞ்ஞான்றும் கலம் வழங்குதலால சோழர் கவிழ்நத கையினை உடையர் (அகம. 213: 19-21). ஆய்தொடிக் குறுமகள் நலஞ்சால விழுப பொருளும கலமும் நிறையக் கொடுபபினும் பெறுதறகரியள் எனத் தலைவன் தன நெஞ்சிறகுக கூறல் (அகம். 280:4-6). அருந்துறை முற்றிய சீறி யாழப்பாணர் ஆரவாரம் செயயுமாறு திதியன நாளவை இருந்து பலகலம் உதவினான (அகம். 331: 10-12). நனனன் மாற்றாரின அருங்குறும்பெறிநது கொண்ட பெருங்கலம் முதலாய செல்வஙகளை வறிய பாடுநர்க்குத தகுதி முதலியன ஆராயாது வழங்கினான் (அகம. 349:5-8). வேளகுடி மககள் பாழி மலையிடத்ததாகிய நகர்க்கண் அருஙகல மாகிய வெறுக்கையை மறைத்து வைததிருந் தனா (அகம். 372:3-5). கிளி வளைநத வாயிற கொண்ட வேப்பமபழம், புதுநாணில நுழைககப பொறகொல்லன நகததிற கொணட பொனனா

லாகிய கலத்திற்குரிய ஒரு காசு போன்றிருக்கும் (குறு. 67:1-4). கையிலிருந்து தவறி விழுந்து இழந்த நல்ல கலத்தை மீட்டும் கண்டெடுத்தாற் போல, இற்செறித்தலால அடையப் பெறாதிருந்த தலைவன் மாாபை மீட்டும் பெறுவோம் எனத் தோழி கூறல் (நற். 182.5,6). சந்தன மரங்கள் நிறைந்த மலைச்சாரலில் உள்ள பககமலையிடத்து நன்கலம் பெறும் விறலி எணணெயையும் வெள்ளிய கிழியையும் விரும்பிய பெறாது ஆடினாள் (நற். 328:8-11). பிரிவால் தலைவியின இடை மெலிந்தமையின் பொன்னாற் செய்யப் பெற்ற பாண்டிலாகிய கலம் பெரிதாகத் தோனறியது (ஐங். 316:1). 'பகைவர் நாட்டிடத்தே உண்டாகும் நனகலத்தை உனக்குத் தருதறகாகத் தலைவன் நீட்டித்தான்' எனத் தோழி தலைவியிடம் கூறுதல் (ஐங். 463:3-5). தாம் அணிந்த கலம் பொலிவுபெறுதற்குக் காரணமான அழகினையுடையவர் பரத்தையர் (கலி. 27:11). பரத்தையர் அணிநத கலங்களினால் உண்டான வடுக்களோடு ஏனைய வடுக்களையும் தாங்கித் தலைவன் தலைவி முன் வந்து நின்றான் (கலி. 83:28-31). தோழியுடன் கடவுட் கடிநகர் சென்ற புதல்வனைக் கண்ட பரத்தையர் அவன தலைவன் மகனென்று கருதித் தடுத்து நிறுத்தித் தத்தம் கலங்களுள் ஒத்தனவற்றை அவனுககுக் கையுறையாக அணிந்தனர் (கலி. 84:13-17). மதுரை மக்கள் தமக்குரிய மாட்சிமைப்பட்ட புனைகலமும் ஒண் துகிலும் அணிந்து செவ்வேள் குன்றத்திற்கு வழிபடச் சென்றனர் (பரி. 19:12,18).

**2. உண்கலம்.** பரிசிலர் புகழ்பாட, ஒண்டொடி மகளிர் பொலங்கலத் தேந்திய தண்கமழ் தேறல் மடுப்ப, அதனையுண்டு மகிழ்சிறந்து வாழ்கவெனத் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனை மாஙகுடி கிழார் வாழ்த்தினார் (புறம். 24: 30-33). யவனர் குப்பியிற்றந்த தண்கமழ தேறலைப் பொன்செய் புனைகலத்தில் மகளிர் மடுப்ப மகிழ்சிறந்து இனிதாக ஒழுகுமாறு பாண்டியன் நன்மாறனை நககீரர் வாழ்த்தினார் (புறம. 56:18-21). குமணன் சிறிய பொற்கலங்களை அடிசில் சூழ வைத்துப் புலவர் சுறறத்தை உண்பித்தான் (புறம். 160:9,10). பிட்டங்கொற்றன் யாம் வேண்டியாங்கு எம் வறுங் கலம் நிறைப்பான எனக் காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக்கண்ணனார் அவனைப் பாராட்டல் (புறம்.171: 5). தன் வீரர் உள்ளூரில் கள்ளுடைக் கலத்தராய்க் கூறிய நெடுமொழியை மறந்து போரில் அஞ்சி நீங்கிய போது தான் விரைந்து சென்று அரணாக நிற்கும் ஆண்மையுடையவன பாண்டியன் கீரஞ்சாத்தன (புறம். 178:7-11). அதியமான் நெடுமானஞ்சி இறந்தபின் அவனுக்கு நடுகல் அமைத்துப் பீலி. சூட்டி நாரால் அரிக்கப்பட்ட தேறலைச் சிறுகலத்தில் வைத்து வழிபட்டதை, 'நாடுடன் கொடுபபவும் கொள்ளாதோன் இத்தேறலைக் கொள்வானோ' என ஔவையார் நயமுறப்பாடியுள்ளார் (புறம்.232: 3-6). சிறு சோற்றானும் நனிபல கலத்தன், பெருஞ் சோற்றானும் நனிபல கலத்தன் என அதியமான நெடுமானஞ்சியின் விருந்தோம்பலை ஔவையார் பாராட்டுவ (புறம். 235:4,5). கள்ளுடைக் கலத்தேமாய் யாம் மகிழவும் பாடினி வயங்கிழை அணியவும் கொடுக்கும் இயல்பினன் தன் தலைவன் என மதுரைக் கள்ளிற் கடையத்தன் வெண்ணாகனார் பாணன் கூற்றாகச் சுட்டியுள்ளார் (புறம. 316:9,10). மகளிர் கலங்கலாகிய கள்ளைப் பொலங்கலத்தில் ஏந்தி அமிழ்தெனத் தம் தலைவனுக்கு அளித்தனர் (புறம். 361:16-19). உழவொழிந்த பகடு வைககோலைத் தின்றாற் போலக் கள்ளின தேறலை ஆய் கலத்தில் பெய்து தரத் தலைவன் பருகினான் (புறம. 366:14-16). வேந்தர் மூவரையும் பாசிழை மகளிர் பொலங்கலத் தேந்திய நாரரி தேறல் மாநதி மகிழ சிறந்து வாழ்தல் வேண்டும் என ஔவையார் வாழ்ததுதல் (புறம். 367:6,9). நாடு வறந்த காலதது‌ம் கரும்பனூர்கிழான் மிக்க வளமுடையான் ஆகலான் உண்ட நன்கலம் பெயது நுடக்குமாறு வழங்குவான் (புறம். 384:19-21). அதியமான தடாரி கொட்டிப் பாடிய கிணைப் பொருநனை அருகழைத்துப் புத்தாடை தந்து உடுப்பித்துக களைளயன்றி அமிழ்து போனற சுவையுடைய ஊன் துவை அடிசிவெள்ளி வெண்கலத்து வைத்து உண்பித்தான் (புறம். 390:15-18). அதியமான் பொகுட்டெழினி கிணைஞனுககுப புத்தாடை தந்து தேள்கடுப்பன்ன நாட்படு தேறலைக் கோளாகிய மீன போன்ற பொலங்கலததில் கலந்து உண்ணும் முறைப்படி அளித்தான் (புறம். 392:15-18). சேரமான் வஞ்சன் தன்னை உள்ளிவரும் பரிசிலரின் கொள்கலம் நிரப்பும் இயல்பினன் (புறம். 398:14). நீலமணியாலான கலம போன்று நெய்தற் பூ விளங்கியது (பதி. 30:2). ஒட்டமற்ற ,பொன்னாற் செய்த கலம் நிறையப் பல்கால் இழையணி வனப்பின் இன்நகை மகளிர் கள்ளைத்தரப் பொருநர் வருத்தம் நீங்க உண்டனர் (பொரு. 86-88). கரிகாற் பெருவளத்தான் பொருநர்க்குப் பூக்கமழ் தேறலைப் பெறலருங்கலத்தில் பெட்டாங்கு உண்க வென அளித்தான் (பொரு. 156-158). நல்லியக் கோடன் சிறுபாணனுக்கு அருகிருந்து இளஞாயிறு போல் விளங்கும் பொற் கலத்தில் அவன் விரும்பும் உணவினைப் பெருவிருப்புடன் ஊட்டினான்

(சிறு. 243-245). தொண்டைமான் இளந்திரையன் வானத்து மீன்பூத்தன்ன சிறிய கலங்களையும் திங் களை யொக்கும் பெரிய வெள்ளிக் கலங்களையும் பரப்பிப் பெரும்பாணரை முகனமர்ந்து மிகுந்த விருப்பத்துடன உண்பித்தான் (பெரு. 477-480). இலங்கிழை மகளிர் மணங்கமழ்தேறலைப் பொலங் கலத்தில் ஏந்தி அளிப்ப மாந்தி மகிழ்ந்தினிது வாழ்க என்று நெடுஞ்செழியனை மாங்குடி மருதனார் வாழ்த்தினார் (மது. 779-781). பரத மாக்கள் வலையால் இழுத்துக் கொணர்ந்த மீனை இரந்தோரின் வறுங்கலம் நிறைய நலகினர் (அகம். 30:1–9). மாந்தரம் பொறையன கடுங்கோ எனனும் சேரமன்னனைப் பாடிச் சென்ற குறை யோர் கொள்கலம் போலப் பெரிதும் நிறைவுற்று மகிழ்வாயாக என இரவுக்குறிக்கண் தலைவியைக் கூடிச்செல்லும் தலைவன் நெஞ்சிற்குக் கூறினான் (அகம். 142:4-7). கோசர் அருளின்றித் தன் தந்தை யின் கண்களைக் களைந்ததை அறிந்த அன்னி மிஞிலி கலத்தும் உண்ணாளாய் வாலிதும் உடுத் தாளாய் நோன்பிருந்தாள் (அகம். 262:5-8,12). தலைவியின் பிரிவுத் துன்பம் நீங்கிவிருந்து வரக் கரைந்த காக்கைக்கு நெய்கலந்த வெண்ணெலரிசிச் சோற்றை ஏழு கலத்து ஏந்தினும் அது சிறிதாகும் எனத் தோழி கூறல் (குறு. 210). செவிலி அம பொரி கலந்த பாலைச் செம்பொற் புனை கலத்து ஏந்தித் தலைவிக்கு ஊட்டும்போது அவள் மறுப் பது வழக்கம் (குறு. 356:6,7). உடன்போய தலைவியை எண்ணுந் தாய் தேன் கலந்த வெண் சுவைத் தீம்பாலுணவைப் பொன் கலத்தேந்திச் செவிலி ஊட்டும் போது உண்ணாமல் ஓடி ஒளிந்த அவளின் பிள்ளைமை விளையாட்டையும் நினைந் தாள் (நற். 110:1-8). உடன்போக்கிற்!சென்ற மகள் தலைவனுடன மீள வருமாறு கரையுமாயின காக்கைக்கு இனத்தொடு உண்ணப் பச்சூனாற் சமைத்த நலலுணவினைப் பொலம்புனை கலத்தில் தருவதாகத் தாய் கூறினாள் (ஐங். 391:2-6). தலைவனைத் தெருட்டி வரைவுகடாவும் தோழி, 'தலைவியின் நலனை நுகர்ந்து அவளைத் துறத்தல், தீம்பாலுண்பலர் பாலையுண்டு அதனைக் கொண் டிருக்கும் கலத்தைக் கவிழ்த்து விடுதல் போன்றது' எனக் கூறல் (கலி. 133:15-17).

3. மரக்கலம். பெரிய கடலில் காற்றாற்புடைக்கப் பட்ட கலம் நீரைக்கிழித்து ஓடுமாறு போலக் களிறு போர்க்களத்தில் படை பிளக்குமாறு புகுந்து போர் செய்தது (புறம. 26:1-3). கூம்பும் பாயும் களையாமல் ஏற்றிய பண்டத்தையும் குறைக்காமல் புகாரில் (ஆற்றுமுகத்தில) பெருங்கலம புகுந்தது (புறம். 30:10-12). சேரன் நாவாய் செலுத் திய மேல்கடலில பிறகலம் செல்லாதது போலக் கபிலர் மலையமான் திருமுடிக் காரியை இரநது செல்லும் மக்கட்கு இனி இடனின்றிப் பரநதிசை நிற்கப் பாடினார் (புறம். 126:11-16). கலம் தந்த பொன்னாகிய பொருள்கள் கழிகளில் இயஙகும் தோணிகளால் கரைசேர்க்கப்படும (புறம. 343:5,6). உயர்ந்த வேயாமாடத்தில் இரவில ஏற்றிய விளக்கு கடற்பரப்பில ஓடும் கலங்களை 'இது நம் துறை' யெனறு அழைககும் (பெரு. 348-351). முசிறிப பட்டினத்தில் யவனர் கொணடு வந்த தொழில் மாட்சிமைப்பட்ட நனகலம் பொனனொடு வநது மிளகொடு மீளும் (அகம. 149:9-11). கடலில ஆழ கின்ற கலம் போலத் தோன்றித தலைவா மணி நெடுங்குனறு மாலையில் மறையும் (குறு. 240:6,7). சஙகு நிலததினகண ஊர்ந்து சுறற, அலைகள ஆரவாரிககும் பனிததுறையில பரதவர் விரைந தோடும் கலத்தைச் செலுத்தினர் (ஐங. 192:1,2). தாம சென்ற இடத்துத தமககொரு கேடின்றி வினை வாயததுச் சிறப்பெயதிய கலஙகள் பாண்டிய நாட்டுத துறை முகததை அடைந்தன (கலி. 132:6,7). கரைகாணாத நடுககடலில கலம சிதைந்து அழுநதுகினறவன திரை கொணடு வநத ஒரு புணையைப் பெற்றுத் தீதின்றி உய்நதது போலப பிரிவால் கலங்கிய தலைவி, தலைவன வரத் துயர் தீர்நதாள (கலி. 134:24-27). பாயும கயிறும் மரக் கூட்டமும் சிதைந்த கலததை நீகான (மாலுமி) கருவியால திருத்திச் செம்மை செயவான (பரி. 10:53-55).

4. மட்கலம். விரைந்த செலவினையுடைய ஆறறில தோன்றும் குமிழி குயவன் வனைகலத்திகிரி - மட் கலஞ் செய்யத் துணையாகும் சக்கரம் - போலச் சுழலும் (மலை. 473,474). மலை மறையுமாறு சூழநத வெள்ளிய மேகம் கலம் சுடும் சூளையிற புகை போலத் தோன்றும (அகம். 308:5,6). செம்மண பூசப் பெறற சிற்றில் புதுக்கலம் போனறிருந்தது (அகம். 394:9). மழை நீரைத் தாங்கமாட்டாத பசுமணணா லாகிய கலம் ஆசை வெள்ளத்தைத் தாஙகமாட் டாத உள்ளத்திற்கு உவமை (குறு. 29:2,3). பிரிவறிநத தலைவி பொறியழி பாவையிற் கலங்கித தன மீது சாய்ந்தது கணட தலைவனின் நெஞ்சம் ஈரிய மண்ணாற் செயயப பெற்ற ஈரஙகாயாத கலம பெரிய மழை நீரை ஏநதவைததால நீரொடு கரையு மாப் போலத் தலைவியின நெஞ்சததுடன ஒனறு பட்டுப் பிரிவைக் கைவிட்டது (நற. 308:7-11). ஆலமரத்தின கனி புதுக்கலம் போனற சிவந்த நிற முடையது (ஐங். 303:1).

**5. பாண்டம்.** பரிசில் மாக்களின் சமைத்தற்குரிய கலம் நிறையுமாறு பெறும் உணவுப் பொருளின் விலையாக நலங்கிள்ளி வஞ்சிமாநகரைத் தருவான எனக் கோவூர் கிழார் கூறல் (புறம். 32:1,2). சோற்றையும் கூழையும் வேண்டி உள்ளே ஒன்றுமில்லாத வறுங்கலத்தைத் திறந்து பார்த்து அழும் தன் குழந்தையைத் தாய் மறப்புலி உரைத்தும் மதியங் காட்டியும் அழுகையை மாற்ற முயன்றாள் (புறம். 160:20-23) கலங்கிய நீரைத் தேற்றாவின் விதை கொண்டு கலத்தே மெல்லத் தேற்ற அது தெளிதல் போலத் தலைவி நல்லெழில் மார்பனைச் சார்ந்து நலம் பெற்றாள் (கலி. 142:64-66). ஆதிரைநாளில் விரிநூலந்தணர் விழவினைத் தொடங்கப் புரிநூலந்தணர் பொற்கலம் ஏந்த மழை வேண்டி ஆய தொடிக் கன்னியர் அம்பாவாடல் தொடங்கினர் (பரி. 11:77-81).

**6. கறவைக்கலம்.** ஆவின்பால கன்றும் உணணாமல் கலத்திலும் – கறவைக் கலத்திலும் – விழாமல நிலத்தில வீழ்ந்து வீணானது போலத் தலைவியின மாமைக்கவின அவனுக்குப் பயன்படாமலும் தலைவனுக்கு இன்பம் பயவாமலும் பசலையால் வீணாயிற்று (குறு. 27) .'நீ கூறியாங்கு நின நெஞ்சை நான் அடிமையாகக் கொண்டு ஏவல் கொள்வது எளிதாயின, நின் நெஞ்சம் பசுத்திரளிடத்தானாகிய என் தமையனுக்குக் கலங்கொண்டு செல்லுமோ' என வினைவல பாங்கின் தலைவி அத்தகு தலைவனைக் கேட்டாள் (கலி. 108:30,32). முல்லை நிலத் தலைவி தீம்பால் கறந்த கலங்களை அவ்விடத்தினின்றும் எடுத்து வைத்துக் கன்றுகளைத் தாம்பாற் கட்டித் தாய் தந்த நீலவாடை உடுத்துத் தோழியரோடு ஆடினாள (கலி. 111:1-6). 'நாணமில்லாதவனே, கலத்தொடு யாம் செல்லும பசுமேய்க்கும் இடத்தை நாடி வருவாயாக' என வினைவல பாங்கின் தலைவி அத்தகு தலைவனிடம் குறியிடம் கூறினாள் (கலி. 116:16,17).

**7. குப்பி.** யவனர் நன்கலத்தில் – குப்பியில் – தண் கமழ் தேறலைக் கொண்டு வந்தனர் (புறம். 56:18). களநிறைந்த பெருமையினையுடைய பச்சைக் கலம் வறறும்படி கள்ளையுண்டு விழுமியோரைச் சுற்றமாகக் கொண்டு மன்னர் வாழ்ந்தனர் (மது. 227, 228). சிறிய வாயினையுடைய சுனை கள்ளைப் பெய்த மணிக்கலம (நீலக்குப்பி) போன்றிருந்தது (குறு. 193:1,2).

**8. படைக்கலம்.** கலம் – படைக்கலம் – கழுவுதலினால நீர்த்துறைகள் குழம்பின (புறம.345:4). பொருதற்குச் சமைத்த போர்க்களத்தே சென்று முதுகு கொடாமல் கையாற் குத்தியும் கலத்தால் வெட்டியும் ஒருவரொடு ஒருவர் பொரும் வீரப்போரல்லது பகைப்போர் அறியாதது பாக்கம் (பட். 69-72).

**9. மூசை.** கூதிர்ப்பருவத்து மணல்மேட்டில் உதிர்ந்து கிடக்கும் சங்கை, அதிரல் மலர்களின் மீது மான்களின் குளம்பு அழுந்துகையினால் அம்மலர்களிலிருந்து நீர் குமிழியாக வடிவது உருக்குறு கொள்கலத்திலிட்டு – மூசையிலிட்டு – வெள்ளியை உருக்கிச்சாய்ப்பது போல் இருந்தது (நற். 124:4-8). கலன் காண்க.

**கலவம் –** தோகை. யாழோசை போலும் வண்டினது பாட்டைக் கேட்டு அதற்குப் பொருந்தக் கலவம் விரித்த மஞ்ஞை நிலவு போலும் மணல் மேட்டில் ஆடியது (பொரு. 211-213). வரகின் கவைக் கதிர் உண்ட மயில் அழகிய கலவம் பரப்பிக் குருந்த மரத்தின் கிளையிலிருந்து கிளிகடி மகளிர் போல ஒலியுண்டாக அகவும் (அகம். 194:9-15). வேங்கைப் பூவின் பொன்னொத்த துகள் நீலமணியைப் போன்ற கலவத்து உதிர அழகுடன் பொறி விளங்கும் மயில் சோலையில் ஆடும் (அகம். 242:1-4). கலாபம், கலாவம் காண்க.

**கலவமஞ்ஞை –** தோகையுடைய ஆண்மயில். 'மணமிகு கூந்தலில் மலைக் காற்று வீசக் கலவ மஞ்ஞை – தோகையுடைய ஆண்மயில் – போலக் காட்சி தோன்ற ஆய அண்டிரனைச் சென்று காண்க என முடமோசியார் விறலியை ஆற்றுப்படுத்துவர் (புறம். 133: 4-7). 'பலகறை யொத்த வெள்ளிய முருந்து பொருந்திய கலவ மஞ்ஞை காட்டிடத்தே ஆடியிளைத்து நிற்பதைக் கடுகப் பார்த்தால் வழி தவறுவீர்' எனக் கூத்தர் அறிவுறுத்தப் பெற்றார் (மலை. 234-241). பூத்த இலவமரத்தில் ஏறிய கலவ மயில் எரிபுகு மகளிரை ஒத்தது (ஐங். தி. 3: 2, 3).

**கலவு–** மூட்டுவாய். புலி வலம்படக் கொன்று தின்று விட்டுச் சென்ற மரையாவின் கலவு – மூட்டுவாய – கழிந்த கடுமுடை வீசும் புலாலை எருவைச் சேவல கொள்ளை யாநதரின் ஆனாது கவரும் (அகம். 3: 7-10). புலிகொன்று தின்று விடுத்த மான் தசை கலவு ஒழிந்து கடிய முடை நாற்றத்துடன கிடந்தது (அகம். 97:1-3).

**கலவை–** கலப்பு. வீரரின் மார்பை வாட்படை பிளத்தலால் உண்டான புண்ணினின்றுமிழ்ந்த குருதியால் இருங்கழியின் நீலமணி போன்ற நீர் நிற மாறிக் குங்குமக் கலவை – கலப்பு – போன்றது (பதி. 11: 7-10). ஆமூரைச் சேரின் உழவரின் தங்கை வெணசோற்றமலையை அலவன் கலவையுடன்

அளிப்பாள் எனச் சிறுபாணன் ஆற்றுப்படுத்தப் பெறுகிறான் (சிறு. 188 - 195). நூல்முறையாலே செய்யப்பெற்ற உடலில் பூசுதற்குரிய கலவை போல் வையைநீர் பொது நாற்றத்தை உள்ளே யடக்கிப் புது நாற்றம் வீசியது (பரி. 7:20-22).

**கலன்-1. அணிகலன்.** யானைக்கட் சேய் மாந்தரஞ் சேரலிரும்பொறையின நெஞ்சுறப் பெறின் பகைவர் தம் நிலமும் சிறநத கலனும் - அணிகலனும் - பெற லாம் (புறம். 17:24-26). வல்வில் ஓரியைக் கண்டு கூத் தர் சுற்றம் நீரிற் பூவாத மணிமிடை குவளையை வெள்ளிநாரால் தொடுக்கப்பட்ட கண்ணியினையும் கலன்களையும் யானை இனத்துடன் பெற்றது (புறம். 153:4-9). வாட்டாற்றெழினியாதன் தன் புகழ்பாடி வரும் பொருநர்க்கும் பிறர்க்கும் களிற்று நிரை களுடன் நன்கலன நல்கி வளஞ்சிறகக என மாங் குடிகிழார் அவனை வாழ்த்துவர் (புறம். 396:29-31). ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் தன்னைப் பாடிய காக்கை பாடினியார் நச்செள்ளையார்க்குக் கலன் அணிக என ஒன்பது காப்பொன்னும் நூறாயிரங் காணமும் பரிசிலாகத் தந்தான் (பதி.ப.6.அடிக்குறிப்பு). பரிசிலர்க்குக் களிறு கலிமான் பூட்டிய தேர்களுடன் நன்கலன் ஈயும் மகிழ்ச்சி பொருநதிய நாளோலக் கத்தைக் காண வந்தேன என்பது புலவர் கூற்று (பதி. தி. 4:1-3). மரக்கல மீகாமர் (யவனம் முதலிய) அயல் நாடுகளுக்கு நன்கலன்களைக கொணடு செல்வதற்கு மதுரையில் ஒன்று கூடினர் (மது. 321-323). மதுரை நகரத்துக் கண்மாறாடவர் (கள்வர்) கலன் விரும்பி அவற்றைக் கைப்பற்ற ஏற்ற இடம் பார்த்துச சுழன்று திரிவர் (மது. 641,642). அஃதை நாணமகிழிருக்கையில் தங்கித் தன்னை நாடிவரும் பரிசிலர்க்குக் களிற்றொடு நனகலன ஈவான் (அகம். 76:3, 4). அறங்கெழு நலலவை பொருந்திய உறந்தை யொத்த பெறலரும் நன்கலன் களை எய்திய தலைவன் வினைமுற்றி மீண்டான (அகம். 93:5-7). தம் அறிவு பற்றுக் கோடாக இரவ லர் செல்லின், பாரிவள்ளல் அவர்க்கு வரைபுரை களிற்றொடு நன்கலன் நல்குவான் (அகம் 303:8-10). வம்பலர் கலன் இலராயினும் ஆறலைப்போர் தாம் விடும அம்பின சிறபபினைக் காணும் பொருட்டு அவரைக் கொன்று பறவைகட்கு இடுவர் (அகம. 375:2-5). பொன்னாற் செய்த பிறையுட் சேர்த்த முத்துவடத்துடன் நெற்றியிற் புனைந்த வினை யினையுடைய உருண்ட கலன் (சுட்டி) விளககத் தோடே அசையும்படி தலைவியின மகன வந்தான (கலி. 81:3,4).

**2. மரக்கலன.** மகள் மறுத்த மன்னனின் பிணங்கு கதிர் நடுவில் உள்ள ஓரெயில், பிணிககப்பட்டு உலர்ந்து தோனறும கலன் - மரக்கலன் - ஆழி யிடத்து இருப்பது போலக் காட்சியளிககும் (புறம. 338:10-12). மகளிர் கடலைச் சார்ந்த கானலிலிருந்து காற்றாற் கொணரப்பட்ட கலன்களை எண்ணுவர் (புறம. 386:14,15). பெருங்கடலில கலன சிதறக காற்றடித்தமையால் முயறசி காரணமாக நெஞ சழிநதோரைப் போல வருநதுவதாகத தலை வனைச் செலவழுங்குவிககும தோழி கூறினாள (கலி. 5:6,7).

**3. உண்கலன்.** இழிபிறபபினோன நிலததைக் கல னாக - உண்கலனாக - கொணடு உபபிலலாத அவிப புழுக்கலை இறநதோர்க்குப் பலியாகப் படைப பான் (புறம. 363:12-15). கிள்ளிவளவன் தனனைப பாடிவரும் கிணைப்பொருநனுககு நெயவிட்டுப பொரித்த சூட்டிறைசசியையும மணிககலன நிறைநத மணம் நாறு தேறலையும் வழஙகினான (புறம 397: 13,14).

**4. பாண்டம்.** அதியமான நெடுமானஞ்சி பரிசில நீட்டித்த போது ஔவையார், 'அறிவும் புகழும உடையோர் மாய, உலகம் வறிதாகிவிடவில்லை; அதனால் கலனகளை - பாணடஙகளை - காவி னோம்; இசைக்கருவிகள வைககும் பையைக கட்டி னோம்' என்று கூறிப புறப்பட்டார் (புறம். 206. 8-10). உடையாமற் காக்கக கயிற்றாலே வரிநது கட்டப் பெறற காடிவைதத கலன (மிடா எனனும பாண்டம) உமணர் ஓட்டிச செலலும சகடத்தின பாரில் இருநதது (பெரு. 56,57).

**5. மட்கலன்.** விலலேருழவரின சிறுவர் காட்டெலி களை வேட்டையாடும் ஆரவாரம கேட்டுப் பெருங கண குறுமுயல் கருங்கலன - மட்கலம - உடையுமாறு மன்றிற் பாயும (புறம. 322.3-6).

**6. முடிக்கலன.** பெருஞ்சேரலிரும்பொறை அதிகமா னோடு இருபெரு வேநதரையும வெனறு அவர்தம முரசும் குடையும கலனும - முடிக்கலனும - கொண டான (பதி. ப. 8:4-6). கலம் காண்க.

**கலாஅம் - போர்.** சோழன குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் பாசறையிடததுக குருதிப பரபபில யானையைக கொன்று புலாலையுடைய போர்க களத்தை உண்டாக்கிய கலாஅம் - போர் - செய்யும் படையை உடையவன (புறம. 69 10,11).

**கலாபம் - தோகை.** நீலமணி போலும் கலாபம - தோகை - விரித்து ஆண மயிலகள், யாம் இவா சாயலை ஒவ்வேம என நாணித் தம் பெடைகட் குள்ளே மறைதற்குக் காரணமான சாயலை உடை யவள் விறலி (சிறு. 14-16). நீலமணிபோலும

மயிலின் கலாபந்திடையே தன வெண்மேகமாகிய மஞுசினைப பரப்பித தவழும் மலைக்குரியவன் நலலியக்கோடன் (சிறு. 264-269). கலவம், கலாவம் காண்க.

**கலாவம் - தோகை.** நினது அருள் பெறாமையால் மெலிந்து அருந்துயர் உழக்கும் நின் மனைவியுடைய மயிலின் கலாவம் - தோகை - காலொனறக் குவித் தாற் போன்ற கூந்தற்கண் புகையைக் கொள்ளு வித்து மாலையைச் சூடத தேரிற் செலவாயாக என அரிசில்கிழார் பேகனை வேண்டினார் (புறம். 146: 6-11). தலைவியின் கூந்தல் களிமயில் கலாவத்தை ஒக்கும் (அகம. 152:3,12-14; குறு. 225:6,7; நற். 265:8,9). காலைப பொழுதில் அழகு விளங்கும் கலாவத்தை விரித்தாடும் மயில போல நின் மலர்பெய் கூந்த லைக் காற்று விரித்துவிடச் சிறிது விரைந்து செல்க என உடன போக்கில் தலைமகன் தலைவியிடத்துக் கூறினான (நற். 264:2-6). கலவம், கலாபம் காண்க.

**கலி - 1. ஆரவாரம்.** சினமாந்தர் கலி - ஆரவாரம் - உடைய அகன்றவிடத்துப் பொன்னாற் செய்யப் பட்ட இதழையுடைய தும்பையுடன் பனந்தோட் டைச் செருகிக் குரவையாடினர் (புறம். 22:19-22). மனையிடததே குவிக்கப் பெற்ற மிளகு மூடைகள் கலிச்சும்மைக் கரையினின்றும் பிரித்தறிய வியலாத படி காண்பாரை மயங்கச செய்யும் (புறம். 343:3,4). இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனின் பெருங்கலி மகிழ்வு (திருவோலக்கத்துச் செலகின்ற மகிழ்சசி) நுகர்தற் கினிதெனக் குமட்டூர்க் கண்ணனார் குறிப்பர் (பதி. 12:25). இளைய மகளிர் கூடிக் கலிகெழு துணங்கைக் கூத்தயருமிடங்களில் அவர் தழை உடையினின்று உதிர்ந்த ஆம்பலைப் பசுக்கள் மேயந்தன (பதி. 13:5,6). தாதெரு மறுத்த கலியற்ற மனறம் அங்குச் செல்லக் கருதுவோர் மனவெழுச் சியை அழிததுப் பாழ்பட்டுக கிடந்தது (பதி. 13. 17-19). பொனனை மிகவுடைய கடைவீதிகளில் வெற்றிப் புகழ்துறித்த கலிமகிழ்ச்சியை முரசு முழங்கித் தெரிவிக்கும (பதி. 15:19,20). பல்யானைச் செலகெழு குட்டுவனின் வீரர் சீறிப் பொருத நாடுகள் முருகவேள் வெகுண்டு பொருத கலியழிந்த மூதூரைப் போன்றன (பதி. 26: 12-14). பிற நாடுகளின அரும் பொருள்களைக் கொணர் தற்குப் பெருங்கலி வங்கம் திசைதோறும் திரிந்தது (பதி. 52:3,4). வெள்ளுப்பை விற்பாரின் ஓலியோடே ஒலி நீங்காத கலியாணர் உடையது முதுவெள் ளிலை எனனும் ஊர் (மது. 117-119). பாண்டிய நாடு இனிய கலியாணர் உடைய பல்வேறு குடி களைக் கொண்டது (மது. 330). மதுரை நகரின் ஓவியத்தைக் கண்டாலொத்த இருபெரும் அங் காடித் தெரு, இசையைக் கேட்டு மகிழ்ந்தவர் ஆடும் கலிகொள சும்மை உடையது (மது. 363-365). மதுரையில நடுயாமத்துச் சங்கின் கலி அவிந் தடங்கியது (மது. 621). கலிகெழுமரத்தின் உச்சியில் சேணோன இழைத்த புலி அஞ்சும் பரண் அமைந் திருந்தது (குறி. 40,41). காாத்திகை விழவினால் கலிகொணட மகளிர் கூடி விளக்குகளை வரிசை யாக ஏந்தினர் (அகம். 11:4,5). மநதி மலைப்பூஞ் சாரலில் ஒலிக்கும பல இசைகளைக் கேட்டுக் கலி சிறந்து வியப்புற்று நோககியது (அகம். 82:6,7). கலி மகிழ ஊரனின் நெடுநதேர் பரததையர் சேரிக்குப பல நாள் சென்றது (அகம. 146.5-7). புலி தொலைத துண்டு எஞ்சிய ஊனைக் கலிகெழு மறவர் தம கோலில் கோத்தெடுத்துச் செனறனர் (அகம. 169: 3,4). கானவன் தன் கிளைஞருடன் கலி சிறந்து சந்தன விறகாற் சமைக்கப்பட்ட ஊன விரவிய சோற்றை உண்டான் (அகம. 172: 6, 12, 13). நீர் பெறாது வாடும் மூங்கில் கலிகொள மள்ளர் வில்லின விசையைப போல உடைநதது (அகம. 185: 5-7). முழவின ஒலிமாறாத கலிகொள் இடமாகிய கழார் எனனும பெருநதுறையிடத்து விழாவில ஆட்டனத்தி ஆடினான் (அகம். 222:4-7). கலிமிகக எம் சிறுகுடிக்கு வரின, எம் மனையோர் விரைய எதிர் கொண்டழைப்பர் எனப பகற்குறி வநது நீங்கும் தலைவனிடம் தோழி கூறினாள (அகம. 300'14,15). நடுக்கத்தைத் தரும் இருளில் பெருங கலிவானம மழை பெய்தது (அகம. 337:19, 20). வலம்புரிமுத்தை மூழ்கி எடுத்த பரதவர் சங்குகள் ஆர்பபக் கலிகெழு கொற்கை நகரமக்கள் எதிர் கொள்ளுமாறு படகினின்றும் இறங்குவர் (அகம். 350:11-13). கலிகொள் சுற்றத்தினை யுடைய கரி கால்வளவன் கழார் முனறுறைக்குப் புனல விழாக காணச சென்றான் (அகம். 376:4-6). தலைவி கலி மயில பீலியைப் போனற ஒலிமென் கூந்தலள் (குறு. 225: 6,7). கலிமழை பொருந்திய காட்டாற் றின் கரையில் தன் தோகை அசைய மயில நடந்து அகவும் (குறு. 264:1-3). பெருங்கலி மேகம் நீர் முகந்து கார்காலத்தில் குன்றம் நோக்கி எழும் (குறு. 287: 5-8). தலைவன் தொடர்பால் எழுநத அலர், விச்சியர் தலைவன் வேந்தரோடு பொருத போது ஆங்கு வந்த பாணரின புலிநோக் கொத்த நிலைகண்ட கலிகெழு குறும்பூர் மக்கள் செய்த ஆர்ப்பினும் பெரிதாகும (குறு. 328.3-8). அன்னை தலைவியை இற்செறித்துப் பலி பெறு கடவுளை வழிபட்டுக் கலிசிறந்து வெறியாட்டெடுத் தாள் (நற். 251: 7, 8). குருந்து மலரும் காட்டிடத்து

நெருங்குதலும் நம் பெருங்கலி மூதூரின் மரம் தோன்றும்; ஆதலின் தேரை விரைந்து செலுத்துக என வினைமுற்றி மீளும் தலைவன் தேர்ப்பாகனுக்குக் கூறினான் (நற். 321: 8-10). ஊர் மக்கள் ஒருசேரக் கூடிக் கலிகெழு தெருவெங்கும் திருவிழாக் கொண்டாடினர் (நற். 348: 3, 4). கலிகெழு கூடல் (கலி 92: 11).

2. செருக்கு. முதுகுடுமிப் பெருவழுதி தன் பகைவர் தம் விளைவயலில் வெளிய தலையாட்ட மணிந்த கலி - செருக்கு - உடைய குதிரையின குளம்புகள் தாவத் தேரைச் செலுத்தினான் (புறம். 15: 4-6). 'கண்ணார் கண்ணிக் கலிமான்வளவ' எனக் கிள்ளிவளவன் விளிக்கப் பெறுதல் (புறம். 39:12). கடும் சினத்தையுடைய கொல்களிறும் விரைநத செலவையுடைய கலிமாவும் (குதிரையும்) உடையவன் பாண்டியன் இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறன் (புறம். 55:7). தம் தந்தையின் அருமையை அறியாராய்ப் போரெதிர்ந்து வந்த அரசரது கலிமாவைப் பாரி மகளிர் எண்ணினர் (புறம் 116:16-19). பேகன் மதமிக்க யானையையும் கலிமானையும் உடையவன் (புறம். 141:12; 145:3). மாந்தரஞ்சேரலிரும்பொறை காற்றுப் போலும் இயலையுடைய கலிமா கதியின்றிக் கிடக்கும்படி மேலோர் உலகம் எய்தினான் (புறம். 229:20, 21). கடல் பிறக்கோட்டிய செங்குட்டுவன் கூத்தரது பெருஞ்சுற்றம் மகிழ வழங்கிய உளையவிர் கலிமாவை எண்ணின் கடலலைகளினும் பலவாகும் (பதி. 42:14, 15,23). தழைத்த பீலி ஒதுங்க மெல்லியல்பினையுடைய கலிமயில் சிலம்பில் அகவும் (நெடு. 98-100). பொழில் கலியாணர் உடையது (பட். 32, 33). வன் தொழில் புரியும் கலிமாககளில் சிலர் கடல் இறால் மீனின் சூட்டிறைச்சி தின்றும் வயலாமைப்புழுக்குண்டும் மகிழ்நதனர் (பட். 62-64). கல்லா இளையர் இளம்பிடி காட்டில் அலறும்படி அதன் கன்றைப் பிரித்துக் கொணர்ந்த மகிழ்ச்சியாற் கலி சிறந்தனர் (அகம். 83:3, 4). ஆண்குரங்குக் கூட்டம் கலி சிறந்து வேங்கை மலர்கள உதிர அதன் கிளையில் ஏறித் தன் இனங்களைக கூப்பிடும் (அகம. 205: 19-22). கழனி உழவர் கலிசிறந்து எடுத்த இசைக்கு அஞ்சி மயில் பறந்தோடியது (அகம.266:17,18). வடுகா கள்ளுணட மகிழசசியுடையராய்க் கலிசிறந்து ஆர்ப்பா (அகம். 295:15, 16). கள்ளுண்ட உவகையால கலி மகிழ் உழவர் கயல்மீனைப் பெறல் வேண்டிக் காஞசிமரத்தின் குறிய துண்டுகளை /நட்டு அணைகட்டினர் (அகம. 346:4-6). பெருந்துறைக்கண் வைக்கப் பெற்ற கலிமடைக் கள்சாடி போன்ற இளமையும் அழகும் உடையவள் தலைவி (நற். 295: 6-8).

ச இ பொ க தொ 2 11

இரவு நடுயாமம் ஆகலும் கலிகெழு பாக்கம் ஒலியவிந்தடங்கித துயில் மடிந்தது (நற். 303:1,2). கலிகெழ் ஊர் (கலி. 52:18). கார்காலத்தில் தம்மில் எதிர்ந்த கலிப்பினையுடைய உருமினது கடிய இடி ஒலிபோல வாச்சியங்கள் ஒலித்தன (கலி. 105:24). மதுரை நகர மக்கள் வையையாற்றில் புனலாடயானைப் பிடரின் மிசையரும் கலி மடமா மிசையருமாய்ச் சென்றனர் (பரி. 6:29,33).

3. ஒலி. கலிகெழுகடவுள் - (முழவுமுதலாகிய) ஒலி பொருந்திய தெய்வங்கள் - தூணகத்தைக் கைவிட்ட பலியிடுதல் மாறியதால் மன்றம் பாழ்பட்டது (புறம். 52:12,13). கலிகொள புள்ளினம் கடவுளாலத்தின் பல பழத்தை நேற்றும உண்டேம் எனனாவாய்ப் பின்னும் அவ்விடத்துப் போதலை விரும்பும் (புறம். 199:1-3). பெருங்கலி மேகம் யாழ் எழுப்பிய படுமலைப்பண் போன்ற ஒலியொடு மழை பெய்தது (நற். 139:3-5). பெருமலையைச் சூழ்ந்து கலிகெழு வானம் கடுமழை பொழிநதது (நற். 387:10,11). பெருங்கலி ஞாலத்துத் திருமாலிருஞ் சோலைமலை என்னும் பெயர் பரவிய மலை தொன்மையும் புகழும் வாயந்தது (பரி. 15.35,36).

4. தழைத்தல். கலி - தழைத்தல் - கொண்ட புதுவருவாயையுடையது வெண்ணி என்னும ஊர் (புறம. 66:6). பேகனின மனைவி கலிமயில் பீலியைக் காலொன்றத் தொகுத்தாற் போன்ற கூந்தலள் (புறம். 146:8,9). கொலலை வரப்பில் வாழும் எலி கலி ஆர் வரகின் தோகையிடையே சென்று மறையும் (புறம். 321:5,6). மறககுடி மகள் காட்டுககாககையின் கலிச் சிறகை ஒதத இருள்வாசிப பூவால தொடுக்கப்பட்ட கண்ணியினள (புறம. 342:1,2).

5. விழா. இன்னோசையோடு மழை பொழியும் தண்பரங்குன்றில் கலி - விழா - கொண்டாடும் ஒலி நிறைநதது (மது. 263,264).

6. மிகுதி. வைகறையில் கலி - மிகுதி - கொண்ட மகிழ்ச்சி நிறைநத உழவர் இருள் புலர்கின்ற விடியலில வைககோலைப் பிரிததுக் கடாவிடுவர் (அகம். 37:2,5).

7. துன்பம். 'நின்திருவடியினை கலி - துனபம் - இல்லாத நெஞ்சையுடைய யாங்களும் தலையுற வணஙகினேம; பனமுறை ஏததினேம; வாழததினேம' எனக் கீரநதையார் திருமாலைப பாடுவர் (பரி. 2:72-74).

**கலிங்கம்-** ஆடை. இழைகளின வரிசை யறிய இயலாத ஒள்ளிய பூவேலை செய்யப்பட்ட கலிங்கததை - ஆடையை - அவியன கிணைஞனுககு நலகி உடுககச

செய்தான் (புறம் 383:11, 12). பொருட்டெழினி தனனைப் பாடி வந்த கிணைஞனின் பாசிவேர் போல கிழிந்த உடையை நீக்கி நேரிய கரையுடைய நுண்ணூல கலிங்கம் தந்தான (புறம். 392:13-15). 'நீ என பழைய பீறிய உடையை நீக்கிப் பகன்றைப் புதுமலர் போனற அகல மடிக்கப் பெறற கலிங் கத்தைக கொடுத்து உடுக்கச் செயது செலவத்தையும் நல்குவாயாக' எனக் கிணைஞன் கூற்றில வைத்துக கிள்ளி வளவனை நல்லிறையனார் பாடுவர் (புறம். 393:16-19). கிள்ளி வளவன் சூட்டிறைச்சியையும மணங கமழும கட்டெளிவையும் பாம்பின உரி யாகிய தோல் போன்ற வான்பூங் கலிங்கமொடு கிணைஞனுக்குக் கொடுத்தான் (புறம். 397: 13-15). சோழன நலங்கிள்ளி கிணைஞனின் கிணைப்பறை யொலியைக் கேட்டவுடன அவனது பழைய பீறிய உடையை இடையினின்றும் களைந்து புதிய கலிஙகம் தநது உடுக்கச் செய்தான் (புறம். 400: 8-12). மழையால் நனைந்த பருந்தின் ஈர்ஞ்சிறகை ஒப்பக் கிழிநது மணபடிந்து மாசேறிய தன கந்தை உடையை நீக்கி நூற்கப்படாத பட்டாலியனற கலிங்கம் நல்கினான் இமையவரம்பன் நெடுஞ்சேர லாதன் எனக் குமட்டூர்க் கண்ணனார் குறிப்பிடு வர் (பதி. 12:19-21). உழவர் நீர்த்துறையில் மலர்ந்த பகன்றைப பூவால் தொடுக்கப்பட்ட மாலையை வெளுத்தலுற்ற வெள்ளிய கலிங்கம் போலத் தலையில் சூடிக் கொண்டனர் (பதி. 76: 11-13). முருகனின் ஒருகை செம்மை நிறம பெற்ற கலிங கத்தைக் கொண்ட துடையின மேல கிடந்தது (முரு. 109). மலைப்பக்கத்தே கான மயிலுக்கு ஆவி யர் குடியில் பிறந்த பெருங்கல் நாடன் பேகன் கலிங்கம் நல்கினான் (சிறு. 84-87). ஆயவள்ளல தனக்கு நாகம் தந்த கலிஙகததை ஆலமர் செல் வற்கு வழங்கினான (சிறு. 95-97). தொண்டைமான் இளநதிரையன் பாசியன்ன கிழிந்த ஆடையை நீக்கிப் பாலாவியை ஒத்த நூலாற் செய்த கலிங்கத் தைச் சுற்றத்தாரோடே உடுக்குமாறு பாணர்க்குக கொடுத்தான் (பெரு. 468-470) வளங்கெழு செல்வர் செக்கர் வானத்தை ஒக்கச் சிவந்து நுண்ணிதாகும் வடிவாலே கணகளை வெறியோடப் பண்ணும் ஒண் பூங்கலிங்கத்தைப் பொனபுனை உடைவாளு டன் கட்டினர் (மது. 432-434). மதுரை நகர்த் தெருக்களில் பொன் உரை காண்மரும் கலிங் கம் விற்பாரும் நெருங்க நினறனர் (மது. 513, 523). மதுரை மகளிர் மென்னூலாற் செய்த தம் கலிங்கததிற்கு அகிற்புகை ஊட்டினர் (மது. 554). நெடுஞ்செழியன சோறு தன்னிடத்தே பொருந்து தலுற்ற நீரையுடைய கலிங்கத்தை உடைக்கு மேல ணியும அழகிய காழ்களாலே பொலிவுறுமாறு உடுத் தான (மது. 721,722). கஞ்சியிட்டுக் கழுவிய மல ரிதழ்களை அகத்தே வைத்து மணமேற்றப்பட்ட கலிங்கத்தின் மடியினைப் படுக்கைமேல விரித்தனர் (நெடு. 134,135). கோப்பெருந்தேவியின் பூந்துகில் பொருந்திய ஏந்துகோட் டல்குலில் இப்போது அழகிய மாசேறிய அவிர் நூற்கலிங்கம் விளங்கியது (நெடு. 145,146). இழைசென்ற இடம் அறிய வாராத நுண்ணூலான் நெய்த கலிங்கத்தை நன்னன் கூத்தர்க்கிடையில அணிந்து கொள்ளக் கொடுப் பான (மலை. 561,562). ஓர் அறையில் உடன்கூடிய புணர்ச்சிக்குரிய இரவில் தலைவி முதுகினை வளைத்துக கோடிக கலிஙகத்திற்குள் ஒடுங்கிக் கிடந்தாள் (அகம். 86:20-22). தலைவி புதுமை கெடாத கலிங்கததால் உடல் முழுவதும் மூடிக் கொண்டதால் புழுக்கமெய்தி நெற்றியில் வியர் வைத் துளிகள் உண்டாயின (அகம். 136:20,21). முளிதயிர்ப் பிசைந்த காந்தள் மலர் போலும் மெல் விரலைக் கழுவாமல் துவைத்த கலிங்கத்தை உடுத்திக் கொண்டு தலைவி தீம்புளிப்பாகர் சமைத்தாள் (குறு. 167:1-4). காதற்பரத்தை தன கூந்தல் துவட்சியுடன் அசைய இடையிற் கட்டிய கலிங்கம் சரிய வளைகள் ஒலிக்கக் கைகளை வீசிக் கொண்டு மறுகிற் சென்றனள் (நற். 20:3-5). ஆடை ஒலிப்பவள் இரவிலே தோய்த்த சோற்றின் கஞ்சி யிட்டுப் புலர்த்திய புனபூங் கலிஙகமுடன பொன னரி மாலையும் அசைநதாடத் தலைவி ஓடினாள (நற். 90:3-5). தலைவியின கலிங்கம் நெயயும நறும புகையும் அளாவிப புதல்வற்றத தீட்டும் மையும கலந்து மாசுபடிந்திருநதது (நற். 380:1,2). தலைவி சில பூத்தொழிலை யுடைய கலிஙகம் அணிந்திருந் தாள் (கலி. 56:11). வதுவை நாளில் தலைவி கலிங கத்திற்குள் நாணால ஒடுஙகினாள் (கலி. 69:3,4). ஒருபெண் அடியிலே தாழந்த கலிங்கததை ஒரு கையாலே தழுவிக் கொண்டு மற்றைக் கையாலே கரிய கூந்தலைப் பற்றிக் கொண்டு குளத்தில பாய்ந்தாள் (கலி. 92:42-44).

**கலிமா** - குதிரை. கடிய சினததை யுடைய கொல் களிறும் விரைந்த செலவை யுடைய கலிமாவும் - குதிரையும் - தேரும் மறவரும் என நான்கு படை யும் மாட்சிமைப்பட்ட தாயினும் வேந்தனது வெற்றி மாட்சிமைப்பட்ட அறநெறியை முதலாக வுடைத்து (புறம். 55:7-10). பாரி மகளிர் பறம்பு மலை யேறித் தந்தை பாரியின் அருமை அறியா ராய்ப் போரேற்று வந்த வேந்தரின கலிமாவை எண்ணினர் (புறம். 116:15-19). யானைதருஞ்சேரலிரும் பொறை காற்றுப் போலும இயல்பையுடைய கலிமா

கதியின்றி வைக மேலோர் உலகம் எய்தினன் (புறம். 229:20,21). களங்காய்க்கண்ணி நார்முடிச் சேரல் சிவந்த பிடரியினையுடைய கலிமாவை உடைய சேரலர் வேந்தனாவான் (பதி. 38:7,8). கடல்பிறக் கோட்டிய செங்குட்டுவன்கோடியர்க்கீந்த உளைய விர் கலிமாவை எண்ணின், அவை கடலலைகளிலும் பலவாகும் (பதி. 42:15-23). பருமங் களையப்படாத பாய்ந்து செலலும் கலிமா சேற்றையுடைய தெரு வில் பாண்டியன் மேல் சேற்றுத் துளிகளைச் சித றின (நெடு. 179, 180). பிடரிமயி ரணிநத உலகத் தையே கடத்தல் வலலது போன்ற பறவையை ஒத்த வேகம் கொணட கலிமாவின கடிவாளத் தைப் பிடித்துச் செலுத்தும் முறைப்படிப் பாகன தேரைச் செலுத்தினான (அகம. 64:1-3). பொலம் படை யணிந்த கலிமாப்பூண்ட தேரைச் செலுத்துக எனத் தலைவன் பாகனை ஏவினான் (அகம. 114: 8,16). தேரொலி கேட்பின் கலைமானும் பிணை யும் கூடியுள்ள புணர்நிலை தடைப்படுமாகலின் தாளநடை விளங்கும்படி தாவுகினற தொழிலை யுடைய கலிமாவின கால்களினால ஆரவார முண்டாகாதபடி தேரை மெல்லச் செலுத்துக என்று வினைமுற்றி மீளும் தலைவன் பாகற குரைத்தான் (அகம. 134:7-14). கலிமாவழுதி (அகம. 204.2). நிரல்பட வானத்தில் பறக்கின்ற அனனங களைப் போன்று விரைந்த செலவினையுடைய புல்லுளைக் கலிமாவின் கடிவாளங்களை மெல்லப பற்றிக கண்டோர் காற்று என மருள விரைந்து தேரைச் செலுத்துக எனத் தலைவன பாகனிடம் கூறினான (அகம். 234:3-9). தலைவனின கலிமா தாளம் தவறாது அடியிட்டுச் செல்லும் மாட்சிமை மிக்க தொழில திறன் கொண்டது (அகம். 360:11). பொன போன்ற ஆவிரை மலர் மாலைகளை யணிந்த பனைமடலால செய்யப்பட்ட கலிமாவை அதன கழுத்தில் கட்டிய மணி கறங்க ஊர்வேன் எனத் தலைவன் மடலேறுதலைத் தோழியிடம் கூறினான (குறு. 173:1-3). கழியின்கண தேர் உரு ளின உள்வாயளவு அமுங்கப் பெறினும பறவை பறந்து சென்றாற் போனறு விரைநதேகும் பொலம்படைக கலிமா வலவனின தாறறுக் கோல் பட்டு அறியாத தாகும (நற். 78:7-10). அழகு பொருந்த விரிநத தலையாட்டத்தால் விளங்கிய விரைந்த செலவைக் கொணட கலிமா கான யாற்று மணற்கரை பிறபடப் பாகன் விரைந்து தேரை ஓட்டினான் (நற். 121:7-10). தலைவன மென்னடையுடைய கலிமாவைச செலுத்தித் தன சேரிக்கு வந்து தாருங் கண்ணியும் காட்டித் தன் நெஞ்சங் கவர்ந்தனன எனப் பாணனிடம் பரத்தை கூறுகின்றாள் (நற். 150:6-9). ஒலிக்கும் மணியணிந்த கலிமாவைச் செலுத்திச் சேர்ப்பன் வருதல் (நற். 235:9,10). விசும்பைக கடந்தா லொத்த பொன் கலனை அணிந்த கலிமா, காட்டில் மணியோசை ஒலிப்பத் தலைவனது தேரை அவனது மாளிகை வாயிலில் கொணர்நது நிறுத்தியது (நற். 361:3-7). பிரிவுத்துன்பம் நீங்கப் பறவை போலும் நிலம் தீண்டாது பறக்கும் இயலபினை உடைய கலிமாப பூண்டதேரை முட்கோலால் குததிச் செலுததுமாறு வினைமுற்றி மீண்ட தலைமகன தேர்பபாகற்குக் கூறினான் (ஐங். 481:2-4). புள்ளியற் கலிமாப்பூண்ட தேரை வார்களின வகையினைத் தேர்நது செலுத்து மாறு வினைமுற்றி மீணட தலைமகன தேர்ப பாகற்குரைத்தான் (ஐங. 486:4,5). கலிமான்காணக.

**கலிமான்** - குதிரை. முதுகுடுமிபபெருவழுதி பகைவர் நாட்டின் விளைவயலில் வெளிய தலையாட்ட மணிந்த கலிமானின் - குதிரையின - கவிநத குளம புகள் தாவத்தேரைச்செலுத்தினான (புறம. 15:4-6). 'கணணாா கண்ணிக் கலிமான வளவ' எனக்குள முறறத்துத்துஞ்சிய கிள்ளி வளவன விளிககபபடு தல் (புறம். 39:12). மதமிகக யானையினையும் கலி மானையும் உடையவன பேகன (புறம. 141 12; 145:3). களிறு, கலிமான, தோ, நனகலன ஆகிய வறறை ஈயும் நகை சால் இருகைகையைக் காண வந்தேன் எனறு சேர மனனனிடம புலவர் ஒருவர் கூறுகிறார் (பதி. தி.3:1-3). நள்ளி கலிமானை உடை யவன் (அகம். 238:14). விரியுளைக கலிமான பூணட தேரில் வநத விருநதினரை எதிர்கொள்வதால தான தலைவன் மாடடுப் புலவியை மறநது விடுவ தாகத் தலைவி தோழியிடம் கூறினாள (கலி. 75: 16,17). தலைவி இழநத நலததை மீணடும் பெறப் புரியுளைக் கலிமான் பூண்ட தேரைச செலுததித் தம மனைக்கு விரைகவெனத் தலைவனிடம் தோழி கூறினாள் (கலி. 124: 19-21). கலிமா காண்க.

**கலிழ்** – கலங்கல நீா. தலைவன் ஊரிடத்துள்ள யாறு கூதிர்ப பருவமாயின தண்ணிய கலிழ - கலங்கல் நீர் - தந்து வேனிற் காலமாயின நீலமணி நிறம் பெறும் (ஐங. 45:1-3). அந்தணர் மணம் கமழ ஓடும் வையையின மணப் பொருள்களைக கழுவின கலிழைத் தூயமை யிழந்த வேறுபட்ட புனலெனக் கருதி மருண்டனர் (பரி. 6:43-45).

**கலிழி** - கலங்கல். உடன்போய் மீண்ட தலைவி தோழியிடம் தான சென்ற நாட்டின் கண்ணுள்ள தழையையுடைய கிணற்றின கீழே மான உண் டெஞ்சிய கலிழி நீர் - கலஙகல நீர் - தேன கலந்த

பாலினும் இனிதாயிருந்தது என்று கூறினாள் (ஐங. 203).

**கலுழ் - 1. கலக்கம்.** தலைவனைப் பிரிந்துறையும் எவ்வம் களைக என்று அவன் புகழ், மானம் முதலியவற்றைத் தோழியர் எடுத்துக்காட்டி வற்புறுத்தவும் தலைவி கலுழ் - கலக்கம் - மிக்குக் கண்ணீர் சிந்தினாள் (முல்லை. 22-24). நன்னெறியான் பல்லுயிர்களையும் ஓம்பி, பின்னர்த் தான் செய்த தொல்வினையின் பயனைத் துய்க்கத் துறக்கம் வேண்டி மன்னன் சென்ற பின்பு கலுழ் கொண்ட உலகத்திடத்து அம் மன்னனுக்குப் பகைவனாகிய மன்னன் வந்து அவ்வுலகைச் சிறிதே அளிப்பான் போல் ஞாயிறு மறைய அதனாலுண்டான இருளைத் திங்கள் வந்து சிறிதே போக்கியது (கலி. 118:2-6). தனக்குக் காம நோய் செய்த தலைவனைக் காணாது தன்னெஞ்சு நினைத்தலின், இகலிடும் பனிக்காலம் அறிவை ஒழிக்கத் துன்பத்துள் ஆழ்ந்து கவலை கொண்ட நெஞ்சினளாய்த் தலைவி கலுழ கொண்டாள் (கலி. 134:11-13).

**2. கலங்கல்.** முள்ளம் பன்றியைக் கொன்ற ஆடவர் சேற்றை நீக்கித் தோண்ட ஊறிய கலுழாகிய - கலங்கலாகிய - நீரை முறையாகச் சென்று முகந்துண்ணுவர் (புறம். 325:4-6). காயாவின் வாடற்பூக்களோடு இலவம் பூக்களும் கலக்க அப்பூக்களின் கலுழை (கலங்கலாகிய தேனை) சுமந்து வரும் தீம்புனலையுடையது கானயாறு (அகம். 133:8-10). மழை பெய்த குன்றத்தின்கண் மலர் மணக்கின்ற தண்ணிய கலுழின மேலே பரவிய மலர்களைச் சுமந்து கொண்டு அருவிப்புனல் இழியும (குறு. 200:1-3). கூதிர்க்காலத்தில் யாறு, கடும்புனல் வற்றிக் கால்களாக ஓடிக கலுழ் தெளிநது கவின பெற்றது (கலி. 31:1).

**கலுழி - 1. கலங்கல் நீர்.** செங்குணக்காக ஒழுகுகின்ற கலுழியாகிய - கலங்கல் நீராகிய - நிறைநத வெள்ளததையுடையது காவிரி (பதி. 50:5,6). உடன போக்கில தலைவன் தன்னைக் காப்ப நீரில்லா அருநெறியில் விரைநது ஏகிய தலைவி, நீர் வளமற்ற சுனை மருங்கிலுள்ள உலர்நது வெம்மையைக் கொண்ட கலுழியைக் குடிததனள (குறு. 356:1-4). செந்தொடை மறவா, கல்லையுடைய குழிகளிலுள்ள கலுழியைச் சிறுகுடி மனறத்திடத்தே கொணர்ந்து கொடுபபர் (நற. 33:2-6).

**2. நீர்ப்பெருக்கு.** தலைவியும் தோழியரும் யாற்றின் நுரையை யுடைய கலுழியில - நீாபபெருககில் - பாய்நது நீராடினர் (குறி. 178). நெடிய மலையினின்று இழிதரும் பெருககு நிறைந்த அருவியின கடுவரலுடைய கலுழியை உடையது சேயாறு (மலை. 554,555).

**3. கள்ளின் கலங்கல்.** கள்விற்கும் மகளிர் சுமந்து வந்த பாளையின் முலை சுரந்த நிறமுடைய கலுழியை - கள்ளின் கலங்கலை - ஆர மாந்திய செங்கண் ஆடவர் போரினை விரும்பி ஆரவாரிப்பர் (அகம். 157:1-4).

**4. ஆறு.** தீமை யுடைய கலுழி - ஆறு - மனையிடத்துள்ள மடமகள் இதனைப் போன்ற மென்மையள், அளியள் என்று எண்ணாது மலைப்பக்கம் பொலிவழிய அங்கு வளர்ந்த வாழையைப் பெயர்த்துக் கொணர்ந்தது (குறு. 327:4-7).

**கலை - 1. ஆண்மான்.** அற்ற கோட்டையுடைய எழிற்கலை - பெரிய ஆண்மான் - புலியின்கண் பட்டதெனச் சிறுமறியைத் தழுவிய பிணைமான் பூளையோங்கிய பறந்தலையிடத்து வேளைப் பூவைத் தின்னும் (புறம். 23:18-21). களிற்றினைக் கொன்று வீழ்த்திய ஓரியின் விழுத்தொடை அம்பு, பேழ்வாயை யுடைய புலியைக் கொன்று துளை பொருந்திய கோட்டைக் கொண்ட தலையினை யுடைய புள்ளிமானின கலையை உருட்டிக் கேழற் பன்றியை வீழ்த்திப் புற்றின்கண் கிடக்கும் உடும்பில் சென்று செறிந்தது (புறம். 152:1-5). அருஞ்சுரத்தின்கண் தம்முயிர்மேல் அன்பின்றி வலிய கலை கிடந்து அசையிடும் (புறம். 161:11). சோணாட்டுப் பூஞ்சாற்றூர்ப் பார்ப்பான் கௌணியன் விண்ணந்தாயன் வேள்வித் தொழிற்காகப் போர்க்கப்பட்ட கானத்தில வாழும் புல்வாய்க் கலையினது உறுப்புததோல் தோளில் இடப்பட்ட பூணூலின மீது பொலிந்து தோன்றியது (புறம். 166:10-12). தொழில் ஒன்றுமிலலாத தனிக் கலை பார்வையாகிய இளைய பெண்மானைத் தழுவி விளையாட்டயர்நதது (புறம். 320:4,5). கானவன மனைவி, புணர்ந்து விளையாடிய கலை பிணைமானை விட்டு நீங்குமென்று அஞ்சி மனையிடத்தே நடவாது ஒருபுடை ஒதுங்கியிருந்தாள் (புறம். 320:5-9). பாணரின தெண்கண மாககிணைப் பறையின ஓசையைப் பெரிய கலை செவிசாயததுக் கேட்கும் (புறம். 374:7,8). கானத்தில் கலை புலி பாய்கையினால் பட்ட தன் பிணையை யுள்ளி வெறுத்து நிற்கும் (மலை. 404,405). மலைப் பக்கங்களில் தீ பரத்தலால் மூங்கிலின் கணுக்கள் வெடித்தெழும் ஒலி கேட்டுக் கூட்டமாகிய கலைகள் அகன்றன (அகம். 47:5-7). கூட்டமாகிய கலைகள் தாழ ஒலிக்கும் கடுங்குரல் ஒலி பெருவங்கியத்தின் இசை போனறிருககும் (அகம. 82:5). புலி களிக் காட்டி

லுள்ள புள்ளிகளாய பொறிகளையுடைய கலையை அதன் கொம்பு சிதைந்தொழிய அதன் ஓட்டத்தினை வென்று பற்றித் தின்றது (அகம். 97:1-3). மிளகின் கொடி படர்ந்த மலைச் சாரலில் கூட்டமாகிய கலைகள் தாழ ஒலித்தன (அகம். 112:14). காட்டிடத்தே, புல்லைத் தின்னுதலை மறந்த கலை நெடிய மூங்கிலினின்றும் உதிரும் நெல்லைப் பார்த்துத் தன் பிணையை அழைக்கும் (அகம். 129:3-5). முல்லைக் கொடியின் ஆர்க்குக் கழனற புதிய மலர்களை உயிர்த்து நீக்கித் தெளிந்த நீரைப் பருகிய முறுக்குண்ட கோட்டினை யுடைய எழிற்கலை தன் பிணையோடு தங்கும் (அகம். 184:9-12). செந்நாய் தாக்குதலின் கெட்டோடிக் காணாதொழிந்த தன் இனமாய கூட்டத்தைக் கலை, ஞாயிறு மறைந்த மாலைப் போதில் தனது ஆண்குரல் தோன்ற அழைக்கும் (அகம். 199:9-12). மழையின்றி அருவி நீரற்ற அஞ்சத்தக்க சுரநெறியில் தாகம்பட்ட தனித்த முதிர்ந்த பெரிய கலை, வெள்ளிய பேய்த் தேரை மழையென்று கருதி ஓடும் (அகம். 241:8-10). செந்நாய் ஏற்றை தன் பிணவின் உறுபசி களையப் பிணைமான் கதற ஓடிய கலையின் தொடையினைப் பற்றிச் சிதைத்தது (அகம். 285:4-6). கடு வெயில் முரணிய வேனிற்காலத்து வெங்காட்டில் பிணையை உடன் கொண்ட, விளங்கும் புள்ளிகளையும் அறல்பட்ட கொம்பினையும் உடைய எழிற்கலை நீர் வேட்டுத் துனபுற்றுத் தழை உண்ணலை மறந்து நீரற்ற கயம் நோக்கி உண்ணீரின்மையின் மெலிந்து தளர்ந்தது (அகம். 353:10-14). வற்றிய மரக் கொம்பினை யொத்த கவர்த்த கொம்பினை யுடைய அழகிய கலை, பேய்த்தேரினை நீரெனக் கருதி விரும்பியோடி வருந்திய உள்ளத்துடன் பிணையை அழைக்கும் (அகம். 395:8-11). கிளைத்த கொமபை யுடைய தலையைப் பெற்ற முதிய கலை பசிப்பிணியை நீக்கும் பொருட்டுத் தன் காலால் உதைத்த பெரிய மரப் பட்டையைத் தன் குட்டி உண்டபின எஞ்சினால் அதை உண்டு வழுவில் நெஞ்சமொடு தன் மறிக்கு நிழலாகி நின்று வெயிலை நீக்கும் (குறு.213:2-6). கொடிச்சி சிலைததல் மாட்சிமைப்பட்ட கடுவிசையையுடைய கலையினது மார்பில அழுத்திக் குருதியோடு பறித்த செங்கோல் அம்பு ஒன்றையொனறு மாறுபட்டாற் போன்ற மையுண்ட கண்களை யுடையவள் (குறு. 272:5-8). தலைவன் பிரிவிற்கஞ்சிய தலைவி கலையைப் பிரிந்த பெண்மான் போலக் கலக்கமுற்றுக் கண்களில் நீர்வடிய வருந்தினாள் (நற். 37:5-7). கான் யாற்று மேலுள்ள கரையின்கண் பெரிய கலை, கூட்டமாகிய மலையாட்டினத்தோடு தாவித் துள்ளிக் குதித்து விளையாடும் (நற்.119:6,7). காய்ந்த புல்லை மேய்ந்த, உதிர்ந்த கொம்பையும் புள்ளியையும் வரியையும் உடைய கலையை முதிர்ச்சியுடைய அள்ளலாகிய சேற்றில் ஓட்டி வருத்தி வீரர் அம்பெய்துவர் (நற். 265:1-3). புலியால் கொள்ளப்படுவதி லிருந்து, தப்பிய கவர்த்த கொம்பினையுடைய முதிய கலை தன் பிணைமானை அணைய வேண்டி ஆணகுரல் தோன்ற விளிக்கும் (ஐங். 373:2,3). இன்னிழல் இன்மையான் வருந்திய பிணைமானுக்குக் கலை தன் நிழலைக் கொடுத்து அளி செய்தது (கலி. 11:16,17).

**2. ஆண்குரங்கு.** பயின்ற மலையினகண்ணே கலை- ஆண்குரங்கு - தாவி விளையாடியது (புறம். 116:11). கலைகள் நுகர்ந்து வெறுத்துக் கொள்ளாமையினால் மரங்கள் தாம் விளையும் காலமன்றாகவும் பழம் முதலாயினவற்றை விளைத்துப் பயம் பகர்ந்தன (புறம். 116.12,13). கலை கிழிததுண்டதனால் கிழிந்த முழவு போன்ற பெரிய பலாப்பழம், சிலைகெழு குறவர்க்குச் சில நாட்களுககு இடம வைத்துண்ணும் உணவாகும் (புறம. 236:1,2). காட்டின்கண் கலைகள் பாய்ந்து உதிர்த்தலால் மலர்கள் சிந்திக் கிடந்தன (பெரு. 496). மரம் நெருங்கின சோலையினிடத்துக கலைகள் தாவின கொம்புகளிலே அவறறின மந்திகள் விளையாடின (மது. 332-335). கலை தொட்ட பெரிய பலாபபழம் புணகூந்து தேன் ஊறலின், அந்த மணம் மலை முழுவதும் கமழ்ந்தது (மலை. 292,293). கானவர் கலையும் ஏறமுடியா தென்று கையற்ற நெடுவரையில, நிலைபெற்ற கண்ணேணி வழியாகச் சென்று அஙகுள்ள தேனைக் கொள்ளை கொளவர் (மலை. 315-317). கல்கெழு சிறுகுடியில் கானவன் மகள் பலவினது சிறந்தசுளைகளை உண்ணும் கலைகளால் உதிர்ககபபெற்ற வெள்ளிய பலா வித்துக்களைப் பெறுவள (அகம். 7: 20-22). வேஙகையினது புள்ளிகளை யுடைய பூக்களிடையே நரந்தத்தின் நாண்மலர் உதிருமாறு கலை பாய்ந்து தாவியது (அகம். 141:25-27). அதிரும் குரலினையுடைய முதிய கலை மிளகின் தளிரை உண்டு வெறுத்து உயர்ந்த உச்சியினையுடைய நீணட சிகரங்களிலே தாவுதலால் மணம் மிகக அலரி உதிர்ந்து மலைச் சாரலில் பரவிக் கிடக்கும (அகம். 182:14-16). கூட்டமாகிய கலைகள் வேங்கை நறுமலர் உதிர, செருக்கு மிக்கு, அமமரத்தின பெரிய கிளையில் ஏறித் தம் இனங்களைக் கூப்பிட்டுத் தாவின (அகம். 205:20-22). கரிய கண்ணையும் தாவு தலையுமுடைய கலை இறந்து பட்டதெனக் கைம்மைத்துயர் உய்யாத காமர் மந்தி தன் குட்டியைச் சுற்றத்தினிடத்துச் சேர்த்து, ஓங்குவரை அடுக்கத்தில்

பாயந்து உயிரை மாய்த்துக் கொள்ளும் (குறு. 69:1-4). மிக்க மயிரையுடைய கலை தீண்டியதால் விழுந்த பலாவின் கனியை மலையினின்று இழியும் அருவி நீருண்ணுந் துறைக்கண் சேர்த்தது (குறு. 90: 3-5). பலாவின் பெருங்கிளையிடத்துக் கலை பாய்நது துள்ளினும் தலைவி அஞ்சுவாள் (குறு. 153: 2,3). மணம் கமழுகின்ற சுளைகளை யுடைய பெரிய பலாபபழத்தைக் கலை தன கையால் தோண்டியது (குறு. 342:1). பலவின கனியைத் தின்னும் இனத்தை யுடைய கலைகள் கானவனது குறிபிழையாத செமமையுடைய அம்புத் தொடைக்கு வெருவிச் செருக்களத்தை உற்ற குதிரையைப் போலத் தாவிச் சாரலிலுள்ள மூங்கிலின் நீண்ட கோல் அசையப் பாயும் (குறு. 385:1-4). கருவிரல் மந்தி மலையருவி யாடி மூங்கில் ஊசலாடி வேங்கை மலர் சுனையில் உதிர அதன கிளையிலேறிக் கலை யொடு திளைக்கும் (நற். 334:1-5).

3. முசுக்கலை. படப்பையில் இனிய முசுவின் பெரிய கலை - முசுக்கலை - நல்லுணவை உண்ணும் (நற். 119:4,5).

4. மேகலை. தலைவி கொடி போன்ற நுடக்கத் தினையும் பல்கலையையும் - எண் கோவையாகிய மேகலையையும் - பூங்கலிங்கத்தையும் உடையவள் (கலி. 56:10,11).

**கலைமான்** - ஆண்மான். வாகைமரம் புள்ளிகளையும் வரிகளையுமுடைய கலைமானின் - ஆண்மானின - தலையின அடியிடத்துக் கவர்த்த கொம்பு போனற கவட்டினை யுடையது (அகம். 151:6-8).

**கவ்வை** - 1. அலர். அன்னை கவ்வையாகிய - அலரா கிய - அணங்குற்ற, கொடுமை கூறலே அறியும் பெணடிர் கூறும் சொலலைக் கேட்டுத் தலைவியை இலலினகண் காவறபடுத்தினாள் (அகம். 20:11-13). 'சிறு தடிப் பாக்கத்தினகண, முருகனை ஒப்பாய் ஆகி வயநாய் பிற்படப் பகற்கண் நீ வருவதனால எழும கவ்வைககு அஞ்சுகினறோம்' எனத் தோழி தலைவனிடம் கூறினாள (அகம். 118:4-6). மத்தியின் கழாாத துறையின முற்றத்தே, வெணமருதத்தோடு வஞ்சியையும் சாயத்து விடியலில வந்த பெருநீர்க் காவிரியில் தொடியணிந்த முன்கையினை யுடைய பரததையோடு தலைவன புனலாடியதனால் எழுந்த கவ்வை பாணன் என்பானொடு கூடித் திததன் வெளியனொடு பொர வந்த கட்டி, அவன் நாள வையில் முழஙகிய கிணையொலி கேட்டு அஞ்சிப் பொராமல் ஓடிய ஆரவாரத்திலும் பெரியது (அகம். 226:8-17). கொடிய வாயினையுடைய பெண்டிர் தூற்றும் கவ்வையால தலைவி உளளம் கலங்கினாள் (அகம். 250:12). தலைவன் அழகிய மையுண்ட கண்ணையுடைய பரத்தையொடு வையைப் புதுப் புனலில் உரிமையுடன் இன்பம் நுகர்ந்ததைப் பரத்தை ஆயம் கரப்பவும் ஒல்லாது பெரிய கவ்வை எழுந்தது (அகம். 256: 10-13). தலை வன் பரத்தையோடு புனலாடினமையின் எழுந்த கவ்வை எவ்வி தன் ஏவலை மேவாத பகைவரது வலியை அரிமண வாயில் உறத்தூரிடத்துக் கெடுத்த ஞான்று அவன் மறவர் கள்ளுடைப் பெருஞ்சோறு உண்டு களித்த ஆரவாரத்தினும் மிக்கது (அகம். 266: 2-15). முரசின் கண் முழங்கினாற் போன்ற கவ்வையைத தூற்றும் வெவ்வாயினையுடைய சேரிப் பெண்டிரின் அம்பலும் அலருமநம்மிடத்தே தங்கியிருக்கத் தலைவன் பிரிந்து சென்றான எனத தலைவி தோழியிடம் கூறினாள் (அகம். 347: 5-8). தலைவன் பரத்தையரோடு துணங்கைக் கூத்தின் கண் உள்ளான என ஊரார் கூறுவதனால் கவ்வை எழுந்தது (கலி. 66: 17, 18). தலைவன் ஊரார் தூற் றும் கவ்வைக்கு வருந்தாதவன (கலி. 95: 14). தலை வன் பரத்தையொடு புதுப்புன லாடியதனால் வெளிப்படுகின்ற கவ்வையைத் தலைவி அறிதலை அஞ்சிக் கரந்து ஒழுகினான் (கலி. 98:20-22). பசுவை யுடைய ஆய்ச்சியர் கூறும் கவ்வைக்குப் பெரி தும் வருத்தமுறேன் எனத் தலைவி தோழியிடம் கூறினாள் (கலி. 104: 67, 68).

2. ஆரவாரம். வேலமரத்தின் முற்றிய நெறறு உதி ரச் சிள்வீடு என்னும் வண்டு ஒலிக்கும் கவ்வை- ஆரவாரம் - பொருந்திய பரப்பினை யுடையது கல்லிடையிட்ட நெடுவழி (அகம. 89:6-9). கவ்வை யாற் பொலிந்த, பரத்தையரைப் பூப்பேசிக் கொள் கின்ற வதுவையா லுண்டான நின் அழகினை யுடைய மணத்தினை விடியலில் யாம் பெற்றது, எம தோள்வாட, நின்னெஞ் சமர்ந்த பரத்தையரைக் கூடி மணமனை யிடத்தாய் எனறு பிறர் கூற நினக்குண்டான வளப்பத்திலும் மாண்புடையது எனத் தலைவி தலைவனிடம் கூறினாள் (கலி.66:9-12).

3. எள்ளிளங்காய். பாரியின பறம்பு நாடு கவ்வை- எள்ளிளங்காய் - கறுபப (முற்ற) அவற்றொடு பிற வளங்களையு முடைய புது வருவாயினை யுடையது (புறம். 129: 10, 16). முல்லை சான்ற காடு சூழ்ந்த ஒரு பக்கத்தில் கவ்வை முற்றியிருந்தது (மது. 271, 285).

4. துன்பம். நரைமூதாளார் நடுங்கும் தமது தலை யைக் கவிழ்த்துத் தமது கவ்வை - துன்பம் - பொருந் திய மனததிலே சூதினை எண்ணி வல்லுபபோர் புரிவர் (அகம். 377: 7, 8).

**கவசம்** - மெய்புகு கருவி. சோழன் முடித்தலைக் கோப் பெரு நற்கிள்ளி புலியினது தோலாற் செய்யப் பட்ட கவசம் - மெய்புகு கருவி - பொலிந்த பூம் பொறி சிதையக் கணைகளால் கிழிக்கப்பட்ட பகட்டெழில் மார்பினன் (புறம். 13: 2, 3). கவயம் காண்க.

**கவடு** - 1. கிளை. சுரத்தில் வாழும் கோட்டான்களின் துடியை ஒத்த கடுங்குரல் ஓசை, உழிஞ்சில் மரத்தின் கவடுகளில் - கிளைகளில் - இருந்த பெடையை அழைக்கும் சேவற் பருந்தின் குரலோசையோடு கலந் தொலிக்கும் (புறம். 370: 6-8). இலையின்றி உலர்ந்த தலையினையுடைய உன்னமரத்தின் கவடுகளைப் பொருந்தியிருந்து சிள்வீடு என்னும் வண்டுகள் ஒலித்தன (பதி. 23:1,2). கழுகுகள் காட்டில் யாமரத்தின் கவடுகளிலிருந்த பார்ப்பினங்கட்கு, வயவரின் அம்பு பட்டுக் குருதி பரிப்பக் கிடந் தோரது கண்களைக் கவர்ந்து சென்று உமிழ்ந்து கொடுக்கும் (அகம் 31: 5-11). தோழியும் தலை வியும் ஓங்கிய பெரிய மலையில் நறுமலர்களைக் கொண்ட வேங்கை மரத்தின் அழகிய கவட்டின் இடத்தே கட்டிய பரணில், நறுந்தாது ஊதும் தும்பி யின் இசையைச் செவிமடுத்து இருந்தனர் (அகம். 388:6-9). இரை வேட்டெழுந்த சேவலை யுள்ளிய பெடைப்புறா அருஞ்சுர நெறியில் பொரிந்த அடி யினையுடைய கள்ளியின் வெடித்த காயையுடைய கவட்டிலிருந்து தனிமை தோன்றக் கூவியது (குறு. 154:3-7). பாலை நிலத்திலுள்ள ஓமை மரத்தினது அழகிய கவட்டிலிருந்த, இனத்தினின்றும் பிரிந்து வந்த பருந்து தனிமை தோன்றும்படி விளிக்கும் (குறு. 207:2,3). கரிய அடியையுடைய வேங்கை மரத் தின் கவட்டிடத்தில் பரண் கட்டப்பட்டிருந்தது (நற். 351:5-7). காய்ந்த தலையினையுடைய பருந் தினது உளி போன்ற வாயையுடைய பேடை, விரிந்த தலையையுடைய ஓமை மரத்தினது அழகிய கவட்டில் ஏறித் தனிமை தோன்ற விளிக்கும் (ஐங். 321:1-3).

2. பிளவு. பாலையாழ் மானின் குளம்பு பதிந்த இடத்தைப் போன்ற கவடுபடு - பிளவுபட்ட - பத் தலினை உடையது (பொரு. 4). பேரியாழ் மடந் தையின் மார்பிடத்தே சென்று முடிகின்ற மயிரொ ழுங்கு கிடந்த அழகிய வயிற்றினை ஒப்ப, இரண்டு தலைப்பையும் கூட்டித் தைத்து நடுவே சேரப் பட்டுக் கட்கினிதாய்த் தனக்குக் கூறுகின்ற அளவிலே திரியாது கவடுபட அகத்திட்ட உயர்ந்து வளைந்த உந்தியினை யுடையது (மலை. 31-34). அடும்பு ஒள்ளிய பலவாயமலர்களையும் கவடுபட்ட இலைகளையும் உடையது (அகம். 80:8). வாகைமரம் மெல்லிய பூவினையும் புல்லிய புறத்தினையுடைய கவடுபட்ட இலையினையும் உடையது (அகம். 136:10). வாகை மரம் கலைமான் தலையில் அடியி டத்தே உள்ள கவர்த்த கொம்பு போன்ற கவட்டி னையும் குறுங்காலினையுமுடையது (அகம். 151:7,8). செஞ்செவி எருவை யாமரத்தின் அரிய கவட்டின் உயர்ந்த கிளையிலுள்ள தன் பிள்ளைக்கு ஊன் உணவை ஊட்டும் (அகம். 193:6-8). ஈரிய இலையின் நீண்ட இதழையுடைய வரகின் கவர்த்த கதிருடன் கூடிய தட்டைகள், மாடுகளின் கவட்டு அடியால் துவைக்கப்பட்டன (அகம். 393:4-6). அடும்பு மானின் குளம்பு போன்ற கவடு பட்ட இலைகளையுடையது (குறு. 243:1).

**கவண்** - கல்லெறியும் கருவி. புகரையுடைய பனையி லிருக்கும் பறவைகள் கல்லையெறியும் கவணுக்கு - கல்லெறியும் கருவிக்கு - அஞ்சி ஓடும் (பட். 73,74). புனங்காக்கும் குறவர் தினையழிவதற்கு வெறுத்துப் பரண் ஏறி, கையுடைத்து, காட்டிடத்தே நின்ற யானைகளின் பகல் நிலையைக் கெடுக்குமாறு வீசப் பெற்ற கவண்கற்கள் கூற்றத்தை யொப்ப, மந்திகள் பார்ப்போடு இரிய, ஓசையுடன் மூங்கிலின் பசிய கோலைக் கடந்து விசைமாறாது செல்லும் (மலை. 203-210). நடுநாளில் மேய வரும் யானையின் இயக்க மறிந்து கானவன் மிக்க விசையினை யுடைய கவணால் எறிந்த சிறுகல், அம்பென ஏகி, வேங்கை விரியிணரைச் சிதறி, தேனை யழித்து, பலவின் பழத்துள் தங்கும் (அகம். 292:8-14). உரவுச்சின வேழம் மூங்கிலின் அழகிய தண்டு உடைவதற்கு ஏதுவாகிய கவணின் கடுவி சைத் தாக்குதலுக்கு அஞ்சிப் பகற்போதில் இயங் காது இரவின்கண் புனத்தை மேயும் (அகம். 309: 12-15). மலைப் பரணிலிருந்த குறவன் வீசியெறிந்த, வலிய விசை வாய்ந்த கவணின் கடிய ஓசை தினை மேய்ந்த யானையினத்தை இரிந்தோடச் செய்தது (அகம். 392:13-15). தினைப்புனங் காப்பார் விடும் கவண் ஒலிக்கு வெருவிக் கானயானை கைவிட்ட பசிய மூங்கில், மீனெறி தூண்டிலைப் போல மேலே செல்லும் (குறு. 54:2-4). தினைப் புனத்துள் களிறு புகுந்ததைக் கண்ட அங்குடிக் குறவர் கணை யுடையவரும் கிணைப்பறை யுடையவரும் கைவிர லிலே கோத்த கவணுடையவருமாகக் குடியிருப்பின் புறமெல்லாம் சென்று ஆர்த்துச் சூழ்ந்தனர் (நற். 108:1-5). பருந்து வீழ்ந்தெடுத்த பைந்தலை அரவம் காதற்ற கவண் போன்றிருக்கும் (ஐங். தி. 1:2,3). கவணை காண்க.

**கவணை** - **கல்லெறியும் கருவி.** இளஞ்சேரலிரும் பொறை பகைவரது அரிய மதிலை வருத்திய கல் லைக் கக்கினாற போல வீசும் கவணையும் - கல லெறியும கருவியும - நாரால் அரிக்கப்பட்ட கள்ளு முடைய கொங்கு நாட்டார்க்குத் தலைவன (பதி. 88:18,19). உமணரின சகடத்திற் பூட்டிய எருதுகள் கவணை போன்ற நுகத்தின பூட்டுப் பொருதமை யால் வருநதின (குறு. 388:3,4). பால் நிறைந்து முற்றித தலை சாயநத தினைக் கதிர்களைக் கவர வநது குழுமிய செவ்வாயக் கிளியினத்தைத் தலைவி தடடை புடைத்தும் கவணை தொடுத்தும் ஓட்டி னாள் (நற் 206:1-5). யானையைக் கவணையாலே ஓட்டும் கானவர், அதனாலேயே பூஞ்சினையிலுள்ள பூக்களை உதிர்ப்பர் (கலி. 23:1,2). பிடியுடன் புன் செய்யிலே மேயும் களிற்றின இயக்கம் கேட்ட கானவன, பரண் ஏறிக் கடிய விசையினையுடைய கவணையாற் கல்லை எறிந்தான் (கலி. 41:7-10). தலைவி செய்த குறியிடத்துத் தலைவன் வரின் ஒளிதிகழ் கொள்ளி யுடையராய்க் கல்லெறியும் கவணை யுடையராய் வில்லினை யுடையராய்த் தினைப்புனங் காப்போர் களிறு வந்ததென ஆர்ப் பர் (கலி. 52:12-14). கவண காண்க.

**கவயம்** - **கவசம்.** வேலும் அமபும் நிலைகுலையச் செய்த பலவாய்ப் பிரிந்து இணைந்த பொருத்துவாய்க ளற்ற பழைய நிறம் சிதைந்த கவயத்தை - கவ சத்தை - மறவர் அணிந்திருந்தனர் (மது. 740,743).

**கவரி** - **கவரி மயிர்.** சேயிழை மகளிர் கவரி - கவரி மயிரை - அணிந்த உச்சிக் கொண்டையையும் மேகத்தைப் போனற விரிந்த கூந்தலையும் உடை யவர் (பதி. 43:1,2). குதிரை மெல்லிய மயிரையுடைய கவரியை அணிந்திருநதது (பதி. 90:36). நெற்கதிர் முரசுடைச் செல்வரது புரவியின தலையிற் சூட்டும் இணைத்துத் தைதத கவரியை நிமிர்த்து வைத்த தைப் போன்றிருக்கும் (அகம். 156:1-3). கமுகின் ஆரம் போலும் அழகு விளங்கும் புதிய பூக்கள் நீட்சி பொருந்திய கவரியைப் போல வணடு தேன் உணணுமாறு விரிந்தன (அகம். 335:18,19).

**கவல்** - **துனபம்.** தலைவனைப் பிரிந்த பரத்தையர் பிரிதலினால உணடாகிய கவல் - துனபம் - மிகுத லாலே வெயய கண்ணீரை வடித்தனர் (நற். 30:5, 6). கவல்பு காண்க.

**கவல்பு** - **கவலை.** பொருநர் அரண்மனையின் ஒரு சிறைத் தங்கி, வழிபோன வருத்தத்தை அகலநீக்கிக் கள்ளின செருககால உண்டான மெய்ந்நடுக்க மல்லது வேறு மனக கவல்பு - கவலை - சிறிது மின்றித் துயி லுணர்ந்து எழுவா (பொரு. 90-95). கவல் காண்க

**கவலை** - **1. கவர்த்த வழி.** ஊரில்லாதனவும் அரிய வருத்தத்தை உடையனவும் நீரில்லாதனவும் நீளிடை யனவுமாகிய, வன்கண் ஆடவர் அம்பு விடப் பட்டோரது உடல் மூடிய பதுக்கையின் மேலே பருந்து இருந்து வருந்தும் உன்ன மரத்தினை யுடைய அணுகுதற்கரிய கவலையிடத்தே - கவர்த்த வழியிடத்தே - இரவலர் பொருள் கேட்டு வருகு வர் (புறம். 3: 17-24). மகளிரது சிற்றில பல மொய்த்த கவலையையும் முள் மிடைந்த வேலியை யும் பஞ்சுபரநத முற்றத்தையும் உடையது (புறம. 116: 3-5). பலயானைச் செலகெழு குட்டுவன் சினந்ததால் பகைவர் தேயத்து மருதநிலங்களில ஞாயிறு கோடாது நின்ற நண்பகற்பொழுதில் கவலையிலுள்ள வெள்ளிய நரிகள் கூவின (பதி. 22: 31-[illegible]). மிளகுமூட்டைகளைச் சுமந்து கொணடு சென்ற வடு அழுந்திய முதுகினையுடைய கழுதைகள் திரளுடன செல்லும் சுஙகம் கொளளும பெருவழிகளை யுடைய கவலையை விற்படை பாதுகாக்கும் (பெரு. 78-[illegible]). வன்சொல இளையர், வில்லை யுடைய கையராயக் கவலையைக் காபபர் (மது. 311, 312). ஏணணுதல் திருமபடி பலவாய் இருக்கும் கவலைகளில், நாணுடை மற வரது கெடாத, நல்லிசையையுடைய பெயர்களை எழுதிய நடுகற்கள உள்ளன (மலை. 387-389). கூத்தர் போகும் வழியில் மறவனின் பெயரை அறியும் பொருட்டுக் கலலை அகழ்நது எழுதிய மராமரத்தின் நிழலிலே இருக்கும் கடவுட்டனமை மிக்க நடுகல்லை யுடைமையாற் பிற காடுகளை இகழும் கவலைகளில் மனத்தான் நினையினும் நடுங்கும்படியான சுரங்கள் பல உள்ளன (மலை.394-398). மூதூர் பகைவர் அஞ்சுகின்ற கவலைகளைக் கொணட குறுநதெருக்களை யுடையது (மலை. 482, 487). அரிய சுரத்திலுள்ள கவலைகள் உமணர் கடாக்களை உரபபி ஓட்டுவதனால் மலையில எதிரொலி யுண்டாக இசைக்கும் ஒலியையும் ஞாயிறு காய்ந்த மூங்கிலடர்ந்த பக்க மலையையும் களிறுகள் உரிஞ்சியதால் சேற்று மண்ணையுடைய யா மரங்களையும் உடையன (அகம். 17: 13-17). வழிப்போதற்கு இயலாத கவலைகளை யுடைய அருஞ்சுரத்தில் ஆனிரை தந்து பட்ட மறவருடைய நடுகற்களுக்கு மறவர் பீலிசூட்டித் துடியடித்துத் தோப்பிக கள்ளோடு செம்மறிக குட்டியையும் பலி கொடுப்பர் (அகம். 35: 5-10). அருஞ்சுரக் கவலையில் செந்நாய் ஏற்றை பிணவொடு நடுகல் நிழலில தஙகியிருககும (அகம. 53:6-12). அருங் கவலை கூர்ங்கற்களையுடைமையால் வாளில் நடப் பதைப் போனறிருக்கும் (அகம. 72: 16). கல்லதர்க்

கவலையில நலலமர்க் கடந்து பட்ட மறவரது குடரைச் செஞ்செவிப்பருந்து கண்டார் அஞ்சுமாறு பற்றி யிழுக்கும் (அகம. 77: 9-12). குன றினைச் சேர்ந்த கவலையையுடைய காட்டில் நடுகற்கள் பொருந்திய காட்டரண்களில எழுந்த தண்ணு மைப் பறையொலி அருஞ்சுரம் செல்வோர் நெஞ்சு நடுக்குற ஒலிக்கும் (அகம். 87:7-10). சுரங்கெழு கவலை வெள்ளிய முனையினை யுடைய அம்பின விசைபட இறநதோரின் எணணு வரம்பு அறியாத தழையிட்டு மூடிய பதுக்கைகளை யுடையது (அகம். 109:7-9). அஞ்சத்தக்க கவலையிடத்து அண்ணல் யானை சினம் மிக்க முனபினையுடைய புலிக்கு அஞ்சி இனத்தொடு மறையும் (அகம். 115:13-15). அஞ்சத்தக்க கவலையிடத்து வெண்தலைப் பருந்து கருங்கால் ஓமையின் மீதேறி இரக்கம் உண்டாகத் தன் பெடையினை அழைததது (அகம். 117:5-7). அச்சம் வரும் கவலையிடத்து வெண்கடம்பின் பூங் கொத்துக்களை முடியிற் பொலியச் சூடிய கல்லா மழவர் விலலினை இடப்பக்கத்தே தழுவிக் கொணடு வழிவருவோரைப் பார்த்திருப்பர் (அகம். 127:13-16). நெறிபடு கவலையின் தொலையாத நீண்ட காட்டிலே, பெண்புலி பசித்ததெனப் புலி யேற்றை கலைமானினது குரலினை உற்றுக் கேட் கும் (அகம். 147:5-8). கவலையிடத்துக் கொடுவில் ஆடவர், விலலினை வளைத்து ஆனிரையைக் கவர்ந்து, கல்லென் ஒலியுடன், பகைவரை அலைத்த செருக்கினையும் வெற்றியினையும் உடையராய், துடியொலிக்கொத்த தாளத்தோடு ஆடித் தழைக் கண்ணி சூடி, ஊனைப் புழுககி அயர்வர் (அகம். 159:5-11). அச்சநதோன்றும் கவலையின்கண வன் கண் ஆடவர் பகழியை முழுவதும் இழுத்து விடுத்து வழிச்செல்லும் புதியவரைக் கொல்வர் (அகம். 161: 2-4). ஆறலைப்பாராகிய வில்லேர் உழவர், காட் டின் கவலையலலது மழையைத் துணையாக வேண் டார் (அகம். 193:1,2). கொடிய பாலையினை ஊட றுத்துச் செல்லும் அச்சந்தோன்றும் கவலையில் உப்புப் பொதியைச் சுமந்து செல்லும் கழுதை களின் காற்குளம்பு உதைத்தலால் பரற்கற்கள் பிறழ்ந்து கிடந்தன (அகம். 207:5-7). கற்கள் பொருநதிய நீண்ட கவலையின்கண் பாறையில காய்நது கிடக்கும் சுள்ளி போலும் வெள்ளெலும் புகள ஒட்டகத்தின் மிக்க பசியினைப் போக்கும் (அகம். 245:17-19). இடையூறு மிக்க கவலையில் ஆளின் வருகையை எதிர்நோக்கிக கொல்லுதல் வல்ல யானை சுரநெறியைக் காவல் கொள்ளும் (அகம். 247:8-10). மேற்காறறின் ஒலியினை இரை ம்வட்டெழுந்த வயப்புலி பற்றிய மான் எழுப்பிய ஒலியெனக கருதி மானினம் வேறுவேறு கவலை களில் வருந்தி அலறி ஓடும் (அகம. 249:14-18). ஆறலை கள்வருடைய பகை மிகக கவலைகளில் வம்பலர் தாம் செல்லுதற்குரிய நெறியெது என்ப தனை யாமரத்தின் மீது சார்த்தப பெற்ற ஏணி மீது ஏறி அறிவர் (அகம. 257:12-14). அசசந்தரும் பெரிய காடு வேறுபட்ட பலவாய கவலைகளை யுடையது (அகம. 263:5). ஆறலை களவர் கவலை களில் ஆரவாரித்து அருமபொருள வவ்வலின வணிகச் சாத்தர் அந்நெறியிடையே இயஙகார் (அகம். 291:13-15). கடுங்காற்றால பறிக்கப பெற்ற தேக்கிலைகள் விசும்பிடம் மறையப் பரவி, பலவும் ஒருங்கு சேர்ந்து, பாலையிடத்தே செல்வோா சுவடு அறியாது மயங்கும்படி பரநது கவலைகளை மறைக்கும் (அகம். 299:5-9). மூஙகில் மிக்க காடு காக்கைகள் பசிய கொழுப்பினைக் கவர்ந் துண்ணும் பிணஙகள் கிடக்கும் கவலைகளை யுடையது (அகம். 327: 15-19). தூது செலலும் பார்ப்பான் கையதாகிய வெள்ளோலையைப் பொன்னாகுதலும் உணடெனக் கருதி அவனைக் கொன்று வீழததிய கடுங்கண மறவர் பின அவன் வறுமை நோககிக் கை நொடிததுப் பெயர அவனது குருதியொழுகும் குடரைக கடிதத நரியேற்றை வெண்பரல் மினனும கணணொளி யைக் கவரும் கவலையிடத்துக கள்ளி நிழலில ஊனையிட்டுத் தங்கும் (அகம். 337:7-17). உமணனது சாகாட்டு உருளை சிதைத்த நடுகல்லில் பொறிக்கப பெற்ற கோடு மறைந்த எழுத்து ஆறுசெல வம் பலர்க்கு வேறுபொருள உணர்த்தறகுக் காரண மான இடங்கள் பொரிந்து கிடக்கும் கவலைகளை யுடையது கானம் (அகம. 343:4-9). அரிய சுரத்தின கவலைகளில் தஙகிய கூத்தரது இயத்தினிசை பெரிய மலையின உசசியில் தோனறி ஒலிககும (அகம. 359:8,9). தாம் அம்பு விடுத்தலின சிறப்பினைக் காணும் பொருட்டுப் புதியராய் வருவோர் கலன இலர் ஆயினும் அவரைக கொன்று பறவைகட்கு ஊட்டும் கல்லா இளையர் செருக்கித திரியும் கவலை யிடத்துக் கணநரி தம் இனத்தோடு நிணன அருந் தும் (அகம். 375:3-6). கதநாய் வடுகர் வில சினந தணிந்த அச்சந் தரும் கவலைகளில குருதி ஆடிய ஆண் பருந்து தன் இனத்துடன் பசிய ஊன் மிகுதியைத் தெரிவித்துப பறநதெழுந்து செக்கர் வானம் போல விசும்பினை அணி செயயும் (அகம. 381:7-12). தலைவன் சென்ற வழி, கொலைவில எயினர் பாறையின் மீதேறி அம்புகளைத் தீட்டு

தற்கு இடமாகிய கவலைகளை உடையது (குறு. 12:2-4). கவலையுடைய யாமரங்களைக் கொண்ட துனபமிக்க பாலை வழியில் தலைவன் சென்றான் (குறு. 224:1,2). வனப்புப் பொருந்திய மக்கள் இயங்குதற்கரிய கவலையினகண்ணுள்ள பாறையினிடத்தே ஈங்கையின நாட்பூக்கள் குறுந்தொடி மகளிர் விளையாடுதற் கிட்ட கழங்கு போல உதிர்ந்து கிடந்தன (நற்.79:1-4). உயர்ந்த, நாக மரங்களையுடைய செல்லுதற்கியலாத கவலையில் சுருக்கு வாரில் அகப்பட்ட ஆண் பன்றியைக் கொன்று நாய் கொண்ட தசைகளைக் கானவர் கவர்நது செல்வர் (நற். 82.6-11). அருஞ்சுரக் கவலையின்கண், இலவத்தின் கிளைகள் நடுங்க வீசி, அவை முரியுமாறு கொடுங்காற்று வழங்கும் மூங்கில் நெருங்கிய இடங்களில் யானை தன்கன்றோடு நீரற்ற நிழலில் வதியும் (நற். 105:1-6). அணங்கரும் கவலையில் பெணபுலி இயங்கும் (நற். 144:6). குளங்கள் நீர் வற்றச் செவ்வியழிந்து காய்ந்த நெடுநெறியில் நெருங்கிய கவலைகள் குறுக்கிட்ட கொடிய முனையையுடைய செல்லுதற் கரிய சுரத்தின்கண்ணே தலைவன் சென‌றான் (நற். 224:8-11). பாலை நிலத்துள்ள கவலையினகண் செயிர் நோககு ஆடவரது தண்ணுமையின் ஒலி கேட்ட எருவைச்சேவல் தன் சுற்றததிடத்தே செல்லும் (நற்.298:2-5). உள்ளத்தால் நினைத்தற்குமரிய கவலையினகண், ஆண்கரடி இரை வேட்டெழுந்து இரவில் சென‌று, சிதலைக் கூட்டம் புனைந்த அரவு வாழ் புற்றில் அசசிதலை ஒழியுமாறு பெரிய நகங்களாலே பறித்து உள்ளிருக்கும் குரும்பி முதலாயவற்றை உறிஞ்சும் (நற். 325:1-6). அன்பில் ஆடவர் அலைத்தலாலே வம்பலர் பலரும் இறந்து கிடநத அருஞ்சுரக் கவலையில் கிடந்த பிணங்களைக் கழுகின் சேவல் தின்னாதவாறு வெருட்டிய முதுநரி, பச்சூன் மாநதி, வாய்வறந்து, நீர்வேட்டு நீரற்ற வறும் புலத்திற் சென்றலைந்து, நீர்பெறாது வருந்திப் பதுக்கை நிழலிலே ஒதுக்கிடம் பெறாமல் வருந்தும் அஞ்சுவரு கவலை வழியே தலைவன் பொருள் வயிற் பிரிந்து சென்றான் (நற். 252:2-9). கல்லா , அமபினை வில்லினின்றும் விடுதலானே அஞ்சி யாரும் நெருங்குதற் கரிய குறுக்கிட்ட கவலையை யுடையது அருஞ்சுரம் (நற். 387:4,5). கல நிறைந்த கவலையின்கண் கல்லாக் கோவலர் கோலால தோணடிய ஆவீர்ப் பள்ளத்தில் உள்ள நீரை யானை வௌவும (ஐங். 304:1-3). அருஞ்சுரத்துக் கவலையில் இலவமலர்கள் வெங்காற்று மோதி வானதது இடியினகண தோன்றி நிலத்தில் உதிமுற த்பமொறிகள் போல உதிர்ந்து கிடந்தன (ஐங். 320:1-4). வெஞ்சுரக் கவலையின்கண் செந்நாய் ஏற்றை தன் வயா நோயுற்ற பிணவிற்குக் கள்ளிக் காட்டிடத்தே கேழற் பன்றியின் வரவினைப் பார்த்திருக்கும் (ஐங். 323:1-3). கற்குவியல்கள் நிறைந்த போதறகரிய கவலையில் யானை திரியும் (ஐங். 362: 1,2). கற்கள் காய்ந்த கா'டகம் வெந்த கரியினையுடைய கவலைகளை யுடையது (கலி. 150:11).

2. வருத்தம். திருமுடிக்காரி இறந்ததனால் நல்ல நெறியைக் கொன்ற பக்கத்தினையுடைய திசையெங்கும் சூழவரும் கவலை - வருத்தம் - மனத்திலுள்ள துன்பங் கெட மலையமான் சோழிய வேனாதி திருக்கண்ணன் தோன்றினான் (புறம். 174: 20-23). பறந்தலையில் பசிய ஊன் துண்டங்களை வைத்த இடத்தை மறந்த கூகையை அதன் பெடையாகிய குரால் கவலை கவற்றும் (வருத்தத்தைச் செய்யும்) (பதி. 44:17–19). போர்க்களப் பரப்பில் தலை வெட்டப்பட்டு உடல்மட்டும் எஞ்சிய ஆண்மை மிக்க கவந்தத்தோடு அழகிய வடிவில்லாத பேய்மகள் கண்டார்க்குக் கவலையைச் செய்வாள் (பதி. 67:8-11). கபிலன் வேநதரின் அறத்தை விரும்பி விளங்கிய மறமபுரி கொளகையைச் செவ்விய நாவினாலும் இழிவுமிகாத கவலையில்லாத மனத்தினாலும் மெய்ம்மையாற் பாடிய நல்லிசையை உடையவன் (பதி. 85:9-12). முருகாற்றுப் படையை நாடோறும் ஓதினால் மாமுருகன் வந்து மனக் கவலையைத் தீர்த்தருளித் தான் நினைத்த எல்லாந் தருவான்(முரு. வெ. 10). பேதைமையுடைய ஊர், பூங்குழை யாளாகிய தலைவி எனன துன்பததையுடையள் ஆவளோ என்னும் அவல நெஞ்சமொடு ஏனென்று கேளாத கவலையையுடைய மாக்களை யுடையது என்று தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழி கூறினாள் (குறு. 159:5-7). இரவில தலைவன் கான்யாற்றின்கண்ணே தமியனாய் நீந்தி வருவதை யெண்ணித் தலைவியின் பேதைமையுடைய நெஞ்சம் கவலையால் கவன்றது (நற. 144:4-10). வேங்கைக் கட்டுபபரண் அருகே அயலான் ஒருவன் செய்ததனாலாய கவலை கவற்ற ஒரு முலையை அறுத்த திருமாவுண்ணியைக் கேட்டவர்களுள் அவள்பால் அன்பு வைத்தவர் அல்லது பிறர் வருந்தார் (நற். 216:6-11). தலைவி, காமனும் பிறர்க்கு மனக்கவலை செய்தலோடே தன் அம்பை விடுதற்குக் காரணமான அழகை யுடையவள் (கலி. 108:4). தலைவி தனக்குக் காமநோய் செய்த தலைவனைக் காணாது தன்னெஞ்சு நினைத்தலின் பனிக்காலம் அறிவையொழிக்கத் துன்பத்துள் ஆழ்ந்து கவலை கொண்ட நெஞ்சினளாய்க் கலக்கம் கொண்டாள் (கலி. 134: 11–13).

3. **கிழங்கு.** கவலை - கவலைக் கிழங்கு - தோண்டின குழியிலே வீழ்ந்து அருவி ஒலித்தது (மது. 241). கொழுங்கொடிக் கவலை குழிகள் தோறும் வலிய பிடியின் மடித்த முழந்தாளை ஒக்கும்படி சீர்மை யுடன் கீழே வளர்ந்தன (மலை. 127, 128). கவலை யைக் .ல்லியதனால் உண்டான அகன்ற வாயை யுடைய சிறிய குழி, கொன்றை மலர் பரவப் பெற்றுச் செல்வர்க்குரிய பொன்னை வைக்கும் பெட்டியின் மூடியைத் திறந்து வைத்தாற் போன்று தோன்றியது (குறு. 233: 1-3).

4. **ஆற்றுத்துருத்தி.** ஆற்றுக் கவலையில் - ஆற்றுத் துருத்தியில் - புள்ளிப்பட்ட மரநிழற்கண் இருந்து உடம்பாகிய முழுத் தசையை வாட்டி வடக்கிருந்த வீரன் கோப்பெருஞ் சோழன் (புறம். 219: 1, 2). மறியறுத்துத் தினைப்பலியை வைத்து வெறி யாட் டயரும்போது ஓடுகின்ற ஆற்றுக் கவலை யிலே பல்லியம் கறங்கப் பெருந் தெய்வ வழிபாடு நடைபெற்றது (குறு. 263:1-4).

5. **நாற்சந்தி.** தழையாலே வேய்ந்த கூரை ஒழுங்கு பட்ட தெருவிடத்துக் கவலை முற்றத்தே - நாற் சந்தியான முற்றத்தே – சிறுகண்யானை காவல் கொள்ளும் (முல்லை. 29-31).

6. **பிளவு.** இரலைமான் கவைக் கோலைப் போன்ற கவலை - பிளவு - கொண்ட கொம்பினையுடையது (பதி: 74:9,10).

**கவவு - முயக்கம்.** பரத்தையர் செல்வமுடையாரைக் கூடிப் பின்னர், அன்புடையார் போல முயங்கின கவவை - முயக்கத்தை - அவர் பொருள் தருமள வும் மறைத்து அவருடைய செல்வமெல்லாம் கெடும் படி பறிப்பர் (மது. 569-572). கற்புடை மகளிர் தாம் விரும்பின கணவருடைய கவவுப் பிணிப்பாலே துயில் கொண்டனர் (மது. 662, 663). 'படுக்கைக் கண் கவவு இன்பம் உறாது பனிநாள் கழியி னும் கழிக; நின் செய்பொருட்கு எக்குறையும் நேராது ஒழிக' எனப் பொருள்வயிற் பிரியலுற்ற தலைமகனுக்குத் தோழி செலவழுங்கக் கூறினாள் (அகம். 13:15-17). தலைவனின் கவவை விடாத கைகள் நெகிழ்ந்தமை கண்ட தலைவி தன் செவிலி கைப்புதல்வனை நோக்கி 'நீவிர் நும் பரத்தை மார்க்கு ஒத்தனிர் ஆவிர், யாம் இச் செல்வனுக்கு ஒத்தனம்' என்று கூறி மெல்ல அவனிடம் சென்றாள் (அகம். 26:17-21). தலைவி கச்சணிந்த முலைப் பரப்பின் கவவை ஒரு நூல் இடையே தடுப்பினும் புலந்து உறைவாள் (அகம். 361:5,6). மாயோளாகிய தலைவி கவவுவதில் விரைவுடையவள் (குறு. 132:1). தலைவியின சுணங்கணிந்த ஆகத்தை ஒருசேரத் தழுவி 'மிக்க இன்சுவையையுடைய இவள் கையின் கவவினின்றும் நீங்கேன்' எனத் தலைவன் தன் னெஞ்சிற்குக் கூறினான் (நற். 52:4,5). புதல்வன் தன்னைக் கவவுக் கொண்டு அழுகின்ற இன்குரல் கேட்குந்தோறும் தலைவி அவாக் கொள்கின்ற மனத்தினள் (நற். 212:8-10) தலைவி ஊடலில் தலைவனை விலக்கினாலும் பின் அவள் கவவுக்கை அவனை முயங்கும் (நற். 350:5-7). தலைவியின் பால் வேட்கை மிக்க நெஞ்சம் அவள் கவவுப் பெரிதும் விரும்புதலாலே தலைவன் கடுமான் திண்டேரை விரையச் செலுத்திக் கொண்டுவந்தான் (ஐங். 360:3-5). 'தலைவியை முயங்கின கவவைக் கைவிட்டுப் போகையினாலே பெறுகின்ற பொருள் மேலதான அவாவினைக் கைவிடுக; அதுவே நிலை பெறும் பொருள்' எனத் தோழி தலைவனிடம் கூறினாள் (கலி. 14: 18, 19). காதலையுடைய கணவரைக் கூடினவருடைய கவவுக் கையை நெகி ழாதே தாதையவிழ்க்கும் இளவேனில் வந்தது (கலி. 33: 7, 8). பரத்தை அமைதி பெறாத கவ வாலே அடிதளர்ந்து வந்து, தன் தலைமை நிறைந்த சிலம்பொலிப்பச் சினந்து, தலைவனின் கதவத்தை மிதித்தாள் (கலி. 90:9-12). தலைவன் சேரியிலிருந்த மையுண் கண்ணினையுடைய பரத்தையின் நிறை யாத கவவாலே பூசின பாடழிந்த, சிதறுதல்பட்ட சந்தனத்தையுடைய மேனியைக் கொண்டவன் (கலி. 91:12-14).

2. **உணவு.** செஞ்சோற்றுப் பலியருந்திய கருங் காக்கை கவவு முனையின் - உணவை வெறுத்த தாயின் - யாமையின் பார்ப்பினைப் பின்பு பசித்த காலத்துத் தின்பதற்காகப் பாதுகாத்து வைக்கும் (பொரு. 184-186).

3. **உள்ளீடு.** மோதகங்கள் (பருப்பும் தேங்காயுமாகிய) கவவொடு - உள்ளீடுகளோடு – கண்டசருக்கரை கூட்டிப் பிடித்துச் செய்யப் பெற்றவை (மது. 625, 626).

**கவழம் - வாயளவுகொண்ட உணவு.** கன்றோடு பிடியைத் தழுவிய தடக்கை வேழம், தேனைத் தொகுக்கின்ற ஈக்களெல்லாம் ஓடுமாறு வேங்கையின் பொன் போன்ற பூங்கொத்தாலாகிய கவழத்தை - வாயளவு கொண்ட உணவை - புறந்தந்து ஊட்டும் (நற். 202:3-6). பாகனாகிய மகன் கவழத்தைக் கொள்ளுத லறியாத கையாற் புனைந்த வேழத்தைத் தன் காலிற் கட்டின செச்சைமணி ஆரவாரிக்கப் பைய ஈர்த்து வந்தான் (கலி. 80: 6-9). செவ்வேளை வழிபடக் குன்றேறிச் சென்றோரில் சிலர் யானைகளை வழி யினின்றும் அகற்றி, மரங்களிற் கட்டி, அவற்றிற்குக்

கருமபூச் கவழத்தைக் கொடுத்தனர் (பரி. 19: 30-34). வழிபாட்டின்கண் செவ்வேளின் யானை யுண்ட கவழத்தின் மிச்சிலை உணணாது ஒழியின், மகளிர் தம் காதலருடைய அன்போடு கூடிய தலையளியை எய்தார்; கன்னிமகளிர் குறைவற்ற மைந்தர் தோளைக் கூடார் (பரி. 19:90-94). கவளம் காண்க.

**கவளம்** - வாயளவு கொண்ட உணவு. களிறு பிடியின் கூட்டத்தோடு நெல்லையுடைய கவளத்துடன் நெய்ம் மிதியையும் பெறாது கம்பத்தைச் சாய்த்து, வெய் தாக உயிர்த்துச் சுழன்று, உருமேறு போல முழங் கும் (புறம். 44:1-5). அதியமானிடம் பரிசில் பெறுங் காலம் நீட்டினும் நீட்டா தாயினும் அப்பரிசில் யானை தன் கோட்டிடையே வைக்கப்பட்ட கவளம் போலக் கையகத்தது; பொய்யாகாது (புறம். 101: 5-8). நறவுப் பிழிந்து இடப்பட்ட கோதுடைத்தாகிய சிதறல் களிறு மென்று இடப்பட்ட கவளத்தினது கோது போன்றிருக்கும் (புறம். 114:3,4). காய்த்த நெல்லையறுத்துக் கவளமாக இட்டால் ஒரு மாவிற் குக் குறைந்த நிலத்தின் கதிரும் யானைக்குப் பல நாளைக்கு உணவாகும்; நூறு செய்யாயினும் களிறு தனித்துப்புக்கு உண்ணுமாயின் அதனது வாயினுள் புகுந்த நெல்லினும் கால் பெரிது கெடுக்கும் (புறம். 184:1-4). வேந்தர் விளைந்த நெல்லிடத்துப் பெற்ற அரிசியா லுண்டாகிய கவளத்தை உண்பித்துக் காக்கள் தோறும் கடுங்கண் யானைகளைக் காத்த னர் (புறம். 337: 14-16). யானைகள் உண்ணும் நெய்ம்மிதி கவளங்களைக் கடுஞ்சூல் மந்தி பரிக் கோலையுடையோர் நெகிழ்ந்த செவ்வியைப் பார்த் துக் கவர்ந்து சென்று உண்ணும் (பெரு. 393-396). கல்லா இளைஞர் யானைகளை யானைப் பேச்சான வட மொழிகளைக் கற்றுப் பலகாற் சொல்லிக் கவைமுட் கருவியாலே கவளத்தைத் தின்னும்படி குத்துவர் (முல்லை. 35,36). பரிக்காரர் கடிய களிற் றிற்குக் கவளத்தை ஊட்டினர் (மது. 658, 659). இரவில் மலர்ந்த அதிரற் கொடியைக் கான யானை வைகறைப் பொழுதில் அரும்புடன் இழுத் துக் கவளமாக உணணும் (அகம். 157: 6-8). களிறு கருங்கால் வேங்கையின தீயை யொத்த பூக்களாய கவளததை உணடது (அகம். 349: 10,11). அருவி தந்த கொததையுடைய கொறுக்காந்தட்டையை யானை கவளமாக உண்ணும் (குறு. 170: 2, 3). யானைக்கன்று, பாகர் இருப்பு முள்ளாலே குத்தி அலைத்தலாலே துனபுறறுத் தன் கையிடை வைத்த கவளத்தை மெய்யின மேல் வாரி இறைத் துக் கொணடது (நற். 360: 7-9). பரத்தையாகிய புததியானை தன தோளாகிய தடக்கையாலே வாங்கிக் கொண்டு தன்னைக் கண்டாரது நல மாகிய கவளத்தைக் கொள்ளும் (கலி. 97: 19, 20). கவழம் காண்க.

**கவறு** - சூதாடு கருவி. கருங்குயில்கள் 'அறிவுடை யீரே கவறு - சூதாடு கருவி - பெயர்ந்து விழுவது போன்ற நிலையில்லாத பொருளீட்டும் வாழ்க் கையை ஏதுவாகக் கொண்டு நும் தலைவியரை அகறல் ஓம்புமின்' என்று இடித்துரைப்பன போலக் கூவின (நற். 243.4-8). கடலின் அலைகள் திரண்டு வந்து அலைக்க, இடுமணலிடத்து வளை யினின்றும் போந்து விளையாடித் திரியும் புள்ளி களையுடைய அலவன், மனவேட்கை குனறாத சூதாடு களத்தில், ஆர்வம் குன்றாது உருட்டிவிட்ட வடுவுற்ற கவற்றினைப் போன்றிருக்கும் (கலி. 136: 1-4).

**கவாஅன்** - பக்கம். விசும்பைப் பொருந்திய உச்சியை யுடைய சிறந்த மலையின் கவாஅன் - பக்கம் - கிழவன் சேட்புலம் செல்லின் இழையணிந்த மடப் பிடியைப் பரிசிலாகப் பாடுநர்க்குப் பெணடிர் நல் குவர் (புறம். 151:1-5). மழை பொய்யாது பெய்த லின உண்டான வளத்தையுடைய மலைக்கவாஅ னில் திரிந்த கான மஞ்ஞை குளிரால் கூவிற்றென்று அருள் மிகுதியாற் கலிங்கம் நல்கியவன் பேகன் (சிறு. 84-87). மழையுலவும் சிகரத்தையுடையவாகிய பெரிய மூங்கிலையும் கவாஅன் மலையினையுமுடைய மலையிடத்தே வருடைமான் உலவியது (பட். 138, 139). வானை அளாவிய உச்சியினை யுடைய சிறப்பு வாய்ந்த மலைக்கவாஅனில் புலி, மரையாவை வலம்படத் தொலைத்து உண்டது (அகம். 3:6-9). ஞாயிற்றின கதிர்கள் காயும் கவாஅனில் கூரிய கற்கள் கூர்முனையைத் தோற்றுவித்து வழிச் செல் வார் விரல்முனையைச் சிதைக்கும் (அகம். 5:11-14). மூங்கில்கள் ஒலிக்கும் தெய்வங்களையுடைய கவாஅ னில் கருவுற்றிருக்கும் பெண்புலியின் பசியினைப் போக்கக் களிற்றினைக் கொன்ற புலியேற்றை நல் லரவு மேய்தற்கு உமிழ்ந்த மணியொளியில் அதனை இழுத்துச் செலலும் (அகம். 72:11-15). குளிர்வாய்ந்த மலையினது உயாந்த வளம்பொருந்தியது கவாஅன் (அகம்.98:1). மலைக்கவாஅன் ஒலிககும் வெள்ளிய அருவிகள் விளங்கப் பெற்றது (அகம். 118:1). திண் டேர்ச் செழியனது பொதியமலைக் கவாஅனில் உள்ள அழகிய நெடிய மூங்கிலை ஒக்கும் தோளை யுடையவள் தலைவி (அகம். 137:14,15). பிட்டனது மேகந்தவழும் உயர்ந்த உச்சியினையுடைய குதிரை மலைக் கவாஅனிலுள்ள, அகனற பாறையிலுள்ள நெடுஞ்சுனையிடத்து மழைத்துவலையால மலர்ந்த நீலமலர் நீர் ஒழுகுவது போலத் தலைவி கண்கள் நீரைச் சொரிந்தன (அகம். 143:12-16). அழகு

பெற மிளிர்ந்து இழிதரும் உயர்ந்து தோன்றும் அருவிகளையுடைய நேரான நெடிய மலைக்கவாஅனில் உள்ள சூரர மகளிர் போலத் தலைவி பெறுதற்கு அரியள் (அகம். 162:22-25). நன்னனது மலை வானை அளாவிய நீண்ட மூங்கிலையுடைய கவாஅனையும் பொன் பொருந்திய இடங்களையும் உடையது (அகம். 173:16-18). வானை அளாவிய உச்சியினையுடைய பெருமை தங்கிய மலையினது கவாஅனின் கண்ணே பேய்த்தேர் ஓடும் காட்டில் யானை கைநீட்டியும் வாய்திறந்தும் புனல் பெறாது கானை வெறுத்து நீங்கும் (அகம். 179: 1-6). கற்கள் உயர்ந்த கொடிய கவாஅனைச் சார்ந்த சுரத்தின்கண்ணே தலைவி தலைவ னோடு உடன்போக்கினை மேற்கொண்டாள் (அகம். 189:6-10). ஆய் நன்னாட்டு அணங்கு உறையும் மலையில் கவிரம் என்னும் பெயருடைய அச்சம் பொருந்திய கவாஅனில் மென்மலர்களை யுடைய சுனையில் உறையும் சூர்மகள் போன்றவள் தலைவி (அகம். 198:14-17). வானில் ஓங்கிய உச்சி யினையுடைய மலைக் கவாஅன் கண்ணே கரடி யேற்றை குருளையுடைய பிணவோடு திளைக்கும் (அகம். 201:15-18). அருவியையுடைய மலைக்கவாஅன் கண்ணே மெல்லிய தலையினையுடைய இளைய பிடி இனத்துடன் இன்பமடைய யானை புலிப்பகை வென்றது (அகம். 202:1-3). பசும்பூட் பாண்டியனது தெய்வம் பொருந்திய உயர்நிலை யுடைய பொதியமலைக் கவாஅனில் உள்ள ஒளி பொருந்திய காந்தட் பூப்போல மணக்கும் நறு நுதலையுடையள் தலைவி (அகம. 338:5-8). நன்ன னது ஏழிற் குன்றத்துக் கவாஅனில், களிறு வேங்கை மலரைக் கவளமாக உண்ணும் (அகம். 349:8-11). கவாஅன் மூங்கிலுடன நெல்லிமரம் உயர்ந்த கற் பாறைகளையுடையது (அகம். 385:7,8). வானத் தைத் தொடுமபடி உயர்ந்த, குறுக்கிட்ட மலைக் கவாஅனில் உள்ள பெருங் களிற்றினது அடிச் சுவட்டின்கண் தங்கிய நீரைத் தலைவி தலைவ னோடு உண்டாள் (குறு. 262:5-8). கொடுமுடிகள் உயர்ந்த நீண்ட மலைக்கவாஅனிடத்தே தலைவன் மார்பினைத் தெப்பமாகக் கொண்டு தலைவி அருவி யாடினாள் (குறு. 353:1-3) களிற்றியானை வேனிலின் தன்மையையுடைய மலையின் வெவ்வ றைக் கவாஅனில் மேகம் முழங்குகின்ற கடுங்குரலைக் கூர்ந்து கேட்கும் (குறு. 396:4-6). மாயோன் போன்ற பெரிய மலைக் கவாஅனில் வாலியோன் (பலதேவன்) போன்ற வெள்ளருவி ஓடியது (நற். 32: 1,2). வெயில் விளங்கிய் வெப்பமிக்க கோடை நீடிய மலைக் கவாஅனில் செந்நாய் மரையாவைத தொலைத்து உண்டு, எஞ்சிய மிச்சில் அருஞ்சுரம் செல்வோர்க்கு உணவாகும் (நற். 43:2-5). வானுற உயர்ந்த பெருமலைக் கவாஅனில் மிக்க இடி யோசையையுடைய மேகம் நள்ளிரவில் மழையைப் பொழிந்தது (நற். 53:4-6). வறட்சியுற்ற குனறத்து உச்சியின் கவாஅனிலுள்ளது வேட்டச்சீறூர் (நற். 92:4,5). வேனிற்குனறத்தில் வெப்பமிக்க மலைக் கவாஅனில் நீர்வேட்கை கொண்ட யானை சென் றது (நற். 171:1,2). பலாவின் பயன்மிக்க கவாஅனில் கிளைகளில் தங்கிய கொக்கின் மீனகுடை நாற்றம் தாங்க முடியாமல் மந்தி தும்மும் (நற். 326:1-4). சேணுறத் தோனறும் மலைக்கவாஅனில் மழையில் நனைந்து உலறிய மயில் ஆடும் (நற். 357:4-6). கொடிச்சியாகிய தலைவியின் கண் போல் மலர்தல், குன்ற நாடனின் குன்றத்துக் கவாஅனில உள்ள பைஞ்சுனைக்கண் பூத்த குவளை மலருக்கும் அரிது (ஐங். 299:1-4).

2. **துடை.** தலைவியாகிய குறுமகள் வயலைக் கொடி யாலாகிய அழகிய தழையுடைய தாழ்நத கவாஅ னையும் - துடையினையும் - திதலை அல்குலையும் உடையவள் (கவாஅன் என்பதற்குக் கவர்வுற என்னும் பாடமும் உண்டு) (அகம. 189:8,9).

**கவிகண்நோக்கு** - **கையாற்கவித்துக் கண்ணால் உற்று நோக்கும் பார்வை.** வன்கணாடவர் ஆகிய ஆறலை கள்வர் பார்வல் இருக்கையி விருநது கவிகண் நோக்கினால் - கையாற் கவித்துக கணணால உற்று நோகக்கும் பார்வையால் - கணடு வம்பலர் மீது செந்தொடை பிழையாது எயவர் (புறம். 3:19-21).

**கவிதை** - **செய்யுள்.** புகழப்படும் அறிவினையுடைய புலவர் நாவாற் பாடிய நன்கவிதை பொயயாகாமல வையையில் தண்ணம்புனல் பரந்து எங்கும் வளம பெருகியது (பரி. 6:7-10).

**கவிர்** - **முள்முருங்கை.** இருளில காட்டுப்பூனைப் பகைக்கு அஞ்சும் பெட்டைக கோழி பருநதிய பெண்டின் சிறுதீ விளக்கத்துக் கவிர - முள முருங்கை - பூப் போலும் கொண்டை யுடைய சேவலைக் கண்டு அச்சம் தணியும் (புறம். 326:1-6). கவிர் மரங்கள் செறிநத மலையிடததே உறஙகும் கவரிமான்கள், பகறபொழுதில தாம் மேய்நத பகு தியில் உள்ள நரந்தம் புற்களையும் அருவியையும் கனவிற்கண்டு மகிழும் (பதி. 11:21,22). தலைவி கவிர் இதழ்போன்ற காணடற்கு இனிய சிவந்த வாயினை உடையவள் (அகம். 3:15,16). காட்டுப்பூனையின ஆண், ஊனை விரும்பிய பிணவின் பசியைப் போக் கக் கவிர்ப்பூ அன்ன நெற்றியையுடைய சேவலைப பற்ற அற்றம் பார்க்கும் (அகம். 367:8-12). நாரை

கவிர் இதழ்போன்ற தூவியையும் செவ்வாயையும் உடையது (குறு. 103:2,3). மகளிர் கவிர் போன்ற இதழை யுடையவர் (பரி. 22:29).

**கவிரம்** - குன்று. கவிரம் என்னும் பெயருடைய பக்க மலையின் சுனையில் உறையும் சூர்மகள் போன்ற வள் தலைவி (அகம். 198:15-17).

**கவின்** - 1. அழகு. கரிகாற்பெருவளத்தான் கண் ணிற்கு விளங்கும் கவின் - அழகு - வில்லையுடைய வன் (புறம்.7:4). களிறு மிகவுடைய கவின்பெறும் இக் காடு ஆய்அண்டிரன் மலையைப் பாடிப் பரிசு பெற்றதோ என வியப்பதன்வழி ஆய் அண்டிர னின் யானைக் கொடையை ஏணிச்சேரிமுடமோசி யார் பாராட்டுகின்றார் (புறம். 131:2-4). குமண னது முதிரமலையில் உள்ள கடுவன் ஆசினியொடு கவின் பெற்ற பலாப்பழத்தை விரும்பிப் பெற்று மந்தியைக் கையினாற் குறிசெய்து அழைக்கும் (புறம். 158:21-24). பிட்டங்கொற்றனுக்குரிய குதிரை மலை வாழ் குறவரின் மனைமுற்றத்துக் கவின் பெற்ற கூதாளியுடன் மலைமல்லிகை மணக்கும் (புறம். 168:12-14). வெளிமான் துஞ்சியமையால் வளை கழிக்கப் பெற்ற அவனுடைய உரிமை மக ளிர்போலப் பாடுநர் கடும்பு கவின் வாடியது (புறம். 238:5-7). மகட்கொடை மறுத்தவன் ஊர் களிறு பொரக் கலங்கிய தண்கயம் போலப் பெருங்கவின் இழக்குமோ எனப் பரணர் கலங்கிப் பாடுவர் (புறம். 341:17-19). மகட்கொடை மறுத்த தந்தையின் ஊர் கவின் இழப்பதற்கு மடந்தையின் மான் பிணையன்ன மகிழ்நோக்கம் காரணமாகும் போ லும் எனப் பரணர் இரங்குவர் (புறம். 354:7-10). இமையவரம்பன் படையெடுத்துச் சென்றமையால், புலவர் பாராட்டும் வளம்பெற்ற பகைவர்நாடு கூற்றுவனால் அடப்பட்ட யாக்கைபோலக் கவின் அழிந்து காணப்பெற்றது (பதி. 13:9-12). இமைய வரம்பன் ஒன்னார் நாட்டின்மீது படையெடுத்துச் சென்று அதனை எரித்தமையால் அப்பரந்த இடம் தொல்கவின் அழிய ஆண்டு வேளையும் சுரையும் தழைத்து வளர்ந்தன (பதி. 15:6-9). பல்யானைச் செல்கெழுகுட்டுவனைப் பகைத்தோர் நாடு புல் மிக்கு, நடமாடுவோரின்றி முட்செடிகள் மண்டித் தூர்ந்து பெருங்கவின் இழந்தது (பதி. 23:10-13). பகைவர் நாட்டு யாணர் அறாக் காமரு கவின், சேரனது சீற்றத்தால் சிதைந்தழிந்தது (பதி. 27:1, 15,16). போரடுதானைப் பொலந்தார்க் குட்டுவன் இமய முதல் குமரி வரையாண்ட அரசர்தம் புகழ் படைத்த நாட்டின் தொல்கவினை அழித்தான் (பதி. 43:7-11). பகைவர் முனைசுடு கனையெரி எரித்தலி னால், கடல்பிறக் கோட்டிய செங்குட்டுவன் அணிந்த மாலையின் பூவிதழ்கள் கவினழிந்தன (பதி. 48:10,11). சூரரமகளிர் கைபுனைந்தியற்றாக் கவின் பெறு வனப்புடையர் (முரு. 17). முருகன் உறையும் பல்வேறு இடங்களுள் கவின்பெறு துருத்தியும் ஒன்றாகும் (முரு. 223). மால்வரைச் சாரலில் விளைந்த கவினிய நெல்லிக்கனியை அதியன் ஔவைக் கீந்தான் (சிறு. 99-101). முல்லைநிலத்துச் சீறூரில் கரிய வரகு வைக்கோல் கொண்டு கவின் குடியிருப்பு அமைத்தனர் (பெரு. 191). பெருங்கவின் பெற்ற சிறுதலை நவ்வி மடக்கண் பிணையொடு சுழன்று துள்ளியது (மது. 275,276). நெருப்பு நைக் கையினாலே மூங்கிலின் கணுக்கள் திறக்கப்பட்டுத் தட்டை கவின் அழிந்தது (மது. 302,305). மதுரை யில் ஐம்பால் திணைகளும் கவின் பெற்று விளங் கின (மது. 326). கவின்பெறு தேர் காற்றெனக் கடிது சென்றது (மது. 388). காமர் கவின்பெற்ற பேரிளம் பெண்டிர் (மது. 465). கவின்பெற்ற தேமாங் கனி (மது. 528). மழை பருவத்தே பெய்து வளர்க் கையினாலே கொடிகள் விட்டுக் கவின் பெற்று இலைக் கறிகள் வளர்ந்தன (மது. 530,531). புத் தேள் உலகம் காணுதலுண்டாகத் தான் கவின் பெற்றுப் பெரும் பொருளையுடைய மதுரை மிகு புகழ் எய்தியது (மது. 698,699). செங்கேழ் ஆல வட்டம் கைவல் கம்மியனால் கவின்பெறப் புனை யப் பெற்றது (நெடு. 57,58). இயற்கைப் புணர்ச்சி யின் பின் தலைவி நற்கவின் தொலையவும் நறுந் தோள் நெகிழவும் பிரிவில் வருந்தினாள் (குறி. 9, 10). தலைவி தோழியருடன் வனப்பமை கோதை களை மெல்லிய கரியமுடி கவின்பெறச் சூடினாள் (குறி. 103,104). தலைவன் தலைவியின் ஐம்பால் ஆய்கவினை ஏத்தினான் (குறி. 139). தலைவன் வம்பு விரிகளத்தின் கவின் பெறப் பொலிந்த குன்று கெழுநாடன் (குறி. 198,199). கரும்புப்பாகு அடும் கொட்டிலின் நெருப்புப்புகை சுடுதலினால் வயலி டத்துள்ள நெய்தற்பூ கவின் வாடும் (பட். 9-12). கரிகாலன் பகைவரின் அருங்கடி வரைப்பின் ஊர் கவின் அழியப் பெரும்பாழ் செய்தனன் (பட். 269, 270). இஞ்சியின் முதல் ஒருவராற் பண்ணப்படாத பாவைகள் வளரப்பட்டுக் கவின் முற்றிக் காயம் (உறைப்பு) கொண்டன (மலை. 125,126). கார்காலம் கதழ்உறை சிதறிக் கானம் கவின்பெறச் செய்தது (அகம். 4:6,7). நீடிதழ்க்கொண்ட கவின் பெறு நீலம் சுனையில் கண்ணென மலர்ந்தது (அகம். 38:10,11). காடு கோழிணர் கொண்ட மரங்களை உடைமை யான் கவின் பெற்றது (அகம். 41:8). பல்கதிர் மதியைப் போலும் பெருநல் ஆய்கவின் நீங்கத்

தலைவியின் சிறிய நெற்றி பீர்க்கம்பூ வண்ணம் கொண்டது (அகம். 57:11-13). தலைவியைப் பிரியின் அவளது மாய்ந்த மிக்க கவினை உள்ளி இரங்க முடியுமே அன்றிப் பெயர்த்து அவ்வழ கினை யாரும் தரமுடியாது (அகம். 75:14-16). மாதிரம் புதைப்ப மழைபொழிதலின் கார்ப் பருவம் இருநிலங் கவினுற்ற ஏமுறு காலமாக விளங்கியது (அகம். 84:4,5). கனையிருள் அகன்ற கவின்பெறு விடியற்காலம் (அகம். 86:5). பாவை யைப் போலும் பலராலும் ஆராயப்பெறும் மாண்கவின் உடையவள் தலைவி (அகம். 98:12). தலைவியின் நன்னர் ஆய்கவின் தொலையத் தலை வன் சேய்நாட்டில் பொருள் தேடச் சென்றான் (அகம். 115:16-18). உண்ணாது வாடிய வயிற்றினை யுடைய ஆடாப் படிவத்து ஆன்றோர் போலக் கானயானை கவின் அழிந்தது (அகம். 123:1-4). தலை வியின் நெற்றி காமநோய் மிகுதியால் ஆய்கவின் இழந்தது (அகம். 132:1,2). வானம் மழை பொழியக் கானம் கவின் பெற்றது (அகம். 134:1). தலைவியின் தோள் தொல்கவின் தொலைந்தன (அகம். 137:12, 16). காடு கவின் அழியக் கடுங்கதிர் காய்ந்தது (அகம். 143:2). ஊர்கள் வெயிலால் கவின் இழந்தன (அகம். 145:4). தலைவன் பிரிவால் தலைவியின் தோள் தொல்கவின் இழந்தன (அகம். 147:12). தண் பதப் பெருவழியையுடைய காடு கவின் பெற்றது (அகம். 154:10). காடு கவின் பெறக் கனைபெயல் பொழிந்தது (அகம். 164:4). காடுகவின் அழியக் கோடை நிலை பெற்றது (அகம். 173:12). தலைவி யின் பணைத்தோள் கவினழியாது தலைவனுடன் புணர்ந்து இம்மையிலும் மறுமையிலும் உறையு மாறு தோழி வாழ்த்தினாள் (அகம். 178:13-16). முக்கட் செல்வன் உறையும் ஆலமுற்றம் என்னும் ஊரில் கவின்பெற இயற்றப் பெற்ற பொய்கைகள் இருந்தன (அகம். 181:16-18). தலைவியின் நல்லெழில் பணைத்தோள் பெருங்கவின் அழியத் தலைவன் பொருள் வயிற் பிரிந்தான் (அகம். 185:1-3). தன் தந்தையின் கண்கவின் அழித்த கோசர்களைக் கொலைவித்து அன்னி மிஞிலி மகிழ்ந்தாள் (அகம். 196:8-12). எருமையின் மயிர்க்கவின் கொண்ட மாத்தோல் இரும்புறம் சிறுதொழில் மகார் ஏறிச் சென்றனர் (அகம். 206:3-5). பிரிவிடை வேறுபட்ட தலைவி தோளின் தொல்கவின் தொலைந்தது (அகம். 209:1). தலைவன் தலைவியின் ஊரிலுள்ள கானலம் பெருந்துறைக் கவின் பாராட்டினான் (அகம். 210:9). தலைவியின் தொகு குரல் ஐம்பால் மிகுகவின் உடையது (அகம். 212:3). நீரில் நீளிடை நிழல்கவின் இழந்தது (அகம். 213:5). நின்ன பணைத் தோள் பெருங்கவின் சிதையத் தலைவர் நீட்டித் திரார் எனத் தோழி தலைவியை வற்புறுத்தினாள் (அகம். 213:14-19). கழைகவின் கெட்ட பாலைவழித் தலைவனுடன் தலைவி செல்லத் தோழி உடன்படல் (அகம். 221:10,14). தலைவியின் பணைத்தோள் தொல்கவின் பெறுமாறு இளமுலை மூழ்கத் தலை வன் மார்பைப் பன்முறை முயங்குதல் நக்கது என் பது தோழியின் சிறைப்புறக் கூற்று (அகம். 242:15-17,22). அறனின்று அலைக்கும் ஆனா வாடையால் தலைவியின் தோள் பெருங்கவின் சாய நிறை வளை நெகிழ்ந்தது (அகம். 255:15-18). கரிந்த மரங்களின் இளைய தளிர்கள் அடிமுதற் கிளைத்துக் கவின் பெற மழை பொழிந்தது (அகம். 283:9-12). காதலி யின் பணைத்தோள் விளங்கு மாண்கவினைத் தலை வன் நெஞ்சம் இடைச்சுரத்து எண்ணியது (அகம். 291:21-25). கடுங்கண் மறவர் இருங்கவின் இல்லாப் பொலிவுற்ற தாடியை யுடையவர் (அகம். 297:5,6). பிரிவு அறிந்த தலைவியின் நலங்கெழு திருமுகம் புலம்புகொள் அவலமொடு புதுக்கவின் இழந்தது (அகம். 299: 10-13). பெருங்குரல் ஏனல் கரும்பு போலத் திரண்டு கவின் பெற்றது (அகம். 302:10). தலைவன் 'இனிப் பிறிதுண்டோ, அஞ்சல்' எனத் தலைவியைத் தேற்றி அணிக்கவின் வளர முயங் கினான் (அகம். 313: 1,2). மலை கவின் அழிந்த காடாகிய அருஞ்சுரம் (அகம். 325:10). இருங்கதிர்க் கழனியின் பெருங்கவின் அன்ன நலம் வாய்ந்தவள் தலைவி (அகம். 326: 6,7). தலைவர் செல்லும் சுர நெறியில் வெயிலுக்காக நிழலில் தங்கிச் செல்லு மாறு காடு கவின் பெறுக எனத் தலைவி கூறல் (அகம். 345:18,21). தோள் தொல் கவின் தொலை யத் தலைவர் பொருள் தேடச் சென்றாராயினும் அவர்க்கு வினை வாய்க்க எனத் தலைவி விரும்பி னாள் (அகம். 347: 1,9). வளைசெறிந்த முன்கை பற்றி வரைந்து கொண்டதாலாய தொல்கவின் கெடத் தலைவர் என்ன பொருளைக் கருதினர் என்பது தலைவி வினா (அகம். 349: 1-3). வினை முற்றிய தலைவன் தலைவியினுடைய கண்கவின் பார்வை பெருங்கவின் கொள்ள மீண்டான் (அகம். 363: 15-19). நீடிணர்க் கொன்றை கவின் பெறக் கார் தொடங்கியது (அகம். 364: 5,9). தாழ் சினை மருதம் தகைபெறக் கவின் பெற்ற நீர் சூழ் வியன்களத்தில் கடாவடி அடித்தனர் (அகம். 366:1-3). கார்கவின் கொண்ட விரும்பத்தகுந்த காலத்தே அரிவை விருந்தெதிர் கொள்ளத் தேர் செல்க எனப் பாசறை முற்றிய தலைவன் பாகற் குக் கூறல் (அகம். 374: 15-18). அலவன் நாவற் கனியைக் கவின் சிதைய இழுத்துச் சென்று தன்

துணைகருத் தரும் (அகம். 380:4-6). ஐதகல் அல்குல் கவின்பெறப் பலகுழைத் தழையுடையை நெய்தல் மகளிர் அணிநதனர் (அகம. 390: 6,7). காய்கதிர் முடுகுதலால் பாறைகள் கவின் அழிநதன (அகம். 399.16). தன் திதலை அல்குலின் மாமைக் கவினைப் பசலை உணணுகின்றது என்று பிரிவிடை ஆறறாத் தலைவி கூறினாள் (குறு. 27: 4,5). துறைவன உடனுறை காலத்தும் தலைவியின் நன்னுதற் கவின் மாறியது (குறு. 109: 2-4). கவின ஒழுகி விளங்கும் அசைநடையுடையவள் தலைவி (குறு. 182:6). பிரிவி னால தலைவி பூச்சேர் அணையிற் கிடந்து பெருங் கவின் இழநதாள் (குறு. 255: 3,4). 'தோள் கவின் பெறும் பொருட்டுத் தலைவன மலையைக் காண் பாயாக' எனத் தோழி தலைவியை ஆற்றினாள் (குறு. 367: 1, 2, 7). துறைவனைக் கண்டு இலங்கெயிறு தோனற நக்கதன் பயன், தொல கவின தொலைந்து தோள்நலம் சாய்வது கொல்லோ எனத் தோழி தலைவியிடம் தலை மகனை இயற்பழித்தாள (குறு. 381: 1,7). தொல் கவின தொலையத தோள நலம் சாயுமாறு அருளாத தலைவன பொருள் தேடச் சென்றான் (நற. 14: 1,2). சிறிதளவு முயக்கம் கைநெகிழ்ந்த தனால் கெட்ட கவின் நலமோ, காம வேறு பாடோ இவள் கண் பசப்புக்குக் காரணம் எனத் தோழி தலைவற் குரைத்தல் (நற். 35: 9-12). குரவின் நறுமலரில் வணடு விழுதலால் எழும் நறுமணத்தைக் காற்று வீசுதல் கண்டு கண் களிபெறும் கவின் பெறு காலம் (நற். 56:1-3). தலை வியின் நுதற்கவினைப் பசலை அழிக்கும் (நற். 73:10). கவினபெறக் கழுவாத பசிய முத்து ஒளியை மறைத்துக் காட்டல், தலைவி புணர்ச்சியால் நிகழநத மிக்க நலனைப் புலப்படாமல மறைத் தலுககு உவமை (நற். 94:3-5). இடியேறு பாம்பின கவின் அழிககும் (நற். 114.9,10). யாறறின் அடை கரையில உள்ள மாமரங்கள் சிளை தழைககத் தளிரீனறு கவினஎயதின (நற. 118:1,2). தலைவனின தேர் வநதமையான தலைவியின் ஆய்நுதற கவின் உயநதது (நற். 181.12,13). நாளை முண்டக மணிப் பூவைக் கொயயேனாயின என அணிககவின் உள தாதல் அரிது எனபது செறிபபு அறிவுறுத்தும் தோழி கூற்று (நற். 191.8-10). 'திங்களே, நீ அறிகரி பொயத்தலின நறகவின இழந்த என தோளபோல் வாட்ட முறறு, நாளதோறும் சிறுகச சிறுகக் குறைநது விழிப்புலம் மறைபட்டுத தலைவ னுள்ள இடத்தைக காட்ட வியலாததாகுக' எனபது தலைவியின திங்களை நோககிக் கூறிய ஆற்றா வுரை (நற். 196:7-9).' நீ வினைவயிற பிரிவாயாயின, மழையைப் பெற்ற தளிரின் நிறம் போன்ற தலைவி யின் மாமைககவின் இன்றொடு நீங்கும்' என்று தலைவன நெஞ்சிற்குக கூறினான் (நற். 205:7-11). தலைவன் பல்பூங்கானம் பகற்குறி வந்து தலைவி யின மெய்கவின் சிதைய நலன் நுகர்ந்து பெயர்ந்து போயினான் (நற். 235:4,5). தலைவியின் தளிர் போனற மேனியின் தொலகவின அழிநதமையால் தாய் அவளை இற்செறித்து வெறியெடுத்தாள் (நற. 25: 7, 8). பாரியின பலாப தொருந்திய குன்றம் போலப் பெருங்கவின எய்தியமையால் தலைவி இறசெறிக்கப் பெறறு அரிய காவலுட் பட்டாள் (நற. 253:7-9). காடுகள் தீப்பறறிய மரங் களை யுடைமையான நிழலும் கவினும் நீங்கின (நற' 256: 3). 'வல்லோரா ஆய்ந்த தொலகவின் தொலைய நீ வரைவு நீட்டிததல் தகுமோ எனக் கூறித் தோழி தலைவனை வரைவு கடாயினாள் (நற். 283·4,5) பூத்த கொன்றைக் காடு இழையணி மகளிர் போலக கவின் மிககிருநதது (நற். 302.1-3). மழையின்மையால் கல்லதர்ச் சிறுநெறியில கழை வாடிக் கவின் இழந்தன (நற். 333:1,2). 'விரான என்னும் வள்ளலுக்குரிய இருபபையூர் போனற என் தொல்கவின் கெடுவதாயினும் நின்னை என பால் நெருங்கவிடேன' என ஊடிய தலைவி கூறி னாள் (நற்.350:4-6). பசும்பூண் வழுதியின் மருங கையூர் அன்ன அரும் பெறல ஆய்கவின கெடுமாறு தலைவன தலைவியைப் பிரிந்தான் (நற். 358:10-12). கவின் பெறு தோகை (மயில) வேங்கையின் தாதினை அளைந்து பாறை மீதிருந்து இளவெயில் உண்ணும் (நற். 396.3-7). தலைவியின் திருநுதற் கவின் மலைநாடனை நயந்து வரசசெய்யும் பெருமை யுடையது எனபது தோழி கூற்று (நற். 399:8-10). 'ஊரனுககு இவள பெருங்கவின இழப்பது என்ன காரணமோ' எனக கூறித தோழி அறத்தொடு நிற்றல் (ஐங். 30:3, 4). தன மாமைக்கவின ஆம்பல நாருரி மெலலிய தண்டின நிறததினும் ஒளிவிடுதல இபபொழுது கெட்டது எனத் தலைவி கூறினாள (ஐங, 35: 2-4). கவினபெறு சுடர்நுதலினையுடைய தலைவியின் தநதையூரில் கழனித தாமரை மலரும் (ஐங. 94:4, 5). துறைவன இவட்கு அமைந்தனன; அதனால் தலைவியின் மாமைக் கவின் அவளுக் கமைநதது என அறத்தொடு நின்ற தோழி வதுவை நிகழ்நதுழித் தாய்க்குக் காட்டி யுரைததாள் (ஐங். 103:2-4). நெடுந்தேர்க் கொண்கன் மீண்டபொழுது என் மாமைக் கவினும் மீண்டது என்பது தலைவி கூற்று (ஐங். 134:2,3). துறைவற்கு இனிப்பசந்தனறு என மாமைககவின் எனத் தலைவன வரைவு நீட்டிதத வழித தோழிக்குத் தலைவி கூறினாள் (ஐங.

144:2.3). 'நறிய கமழுந் துறைவற்கு இனிய மன்ற என் மாமைக் கவினே' என வரைவு வந்துழித் தலைவி தோழிக்குக் கூறல் (ஐங். 146:2,3). தலைவி கவின்பெறு கானல் ஞாழல் தழை ஆடை அணிந்தவள் (ஐங். 191:1,3). கொண்கன பொலந்தேரில் வந்தமையால் தலைவியின் மெலிந்த நுதல் கவின பெற்றது (ஐங். 200:1,2). பாவையன்ன தலைவியின் ஆயகவின் தொலையத் தலைவன் பொருள்தேடச் செல்வான (ஐங். 221:2,4). தலைவியின் விறற்கவின் கொண்ட அன்பிலாளனாகிய தலைவன் வரைய வந்தான் எனத் தோழி கூறல் (ஐங். 226:4,5). வரைவிடை வைத்துப் பிரிந்த தலைவன் மீண்டமையால் தலைவியின் பொன் போன்ற நுதல் விறற்கவின கொண்டது (ஐங். 229:3,4). தலைவியின் பொன் போல் விறற்கவினைத் தலைவன் தொலைததான் (ஐங். 230:4,5). வெறியாடுதற்குப் பெய்மணல் முற்றம் கவின்பெற இயற்றப் பெற்றது (ஐங். 248:1) தலைவியின் மென்றோட் கவினையும் துயிலையும நாடன் தன்னுடன் கொண்டு சென்றனன் (ஐங். 274:3-5). நன்மலைநாடன தலைவியின மாமைக்கவினைக் கவர்ந்தான் (ஐங். 286:3-5). தலைவன் பிரிதலில் வலலவன் ஆயின் தலைவி ஆயநுதற் கவின் பெறல் அரிது எனபது செலவழுங்குவிக்கும் தோழி கூற்று (ஐங். 310:3,4). யாய் நயந்தெடுத்த ஆய்நலம் மேலும் கவின் கொள்ளத் தான் உடனபோக்கு மேவியதைத் தன் ஆயத்தார்க்கு உணர்த்துமாறு எதிரிற்கண்ட அந்தணரைத் தலைவி வேண்டல் (ஐங். 384:3-5). தலைவியின் நுதல் ஆய்கவின் தொலைந்தது (ஐங். 392:2). கார்ப்பருவத்தே காடு தழைத்துப் பலவகைப் பூக்களைப் பூத்துக் கவின்கொண்டது (ஐங். 412:1-3). சுரும்பு காட்டிலுள்ள மலர்களின் நறுந்துகளால் கவின்பெற்று அரற்றும் (ஐங். 416:1-3). போர்வினை முற்றிய பின் தலைவியின் கவினபெறு சுடர்நுதல் காண்போம் எனப்பாசறையில் தலைவன் எண்ணுதல் (ஐங். 443:3-5). பிரிவினால் தலைவியின் மென்றோள் ஆய்கவின மறையப் பசலை பூத்தது (ஐங. 452:3-5). தலைவியின் மாமைக்கவின் தலைவனது தேர் நயந்துறையும் (ஐங 454:4). புதல்மிசை நறுமலரைக் கொண்டு கவின பெற மாலை புனைந்து தலைவன் தலைவி கூந்தலிற் புனைதல (ஐங. 463:1,2). சிறப்பொடு விளங்கிய தலைவியின் மாமைக் கவின்காட்சி தலைவனை மறக்கவிடாது என்பது தோழியின் தேற்றுரை (ஐங். 470:3-5). வேனில நீங்கக் கார்ப்பருவததது மழை பெற்றுக் காடு கவின் கொண்டது (ஐங். 484:1,2). வரையக நாடன் வந்தமையான் தலைவியின் தோள் கவின எய்தின (ஐங. 498:1,6). கானம் மழை பெய்தமையால் பிடவமும் தளவமும் மலரக் கவின் கொண்டது (ஐங். 499:1,2). தலைவன் வினைமுற்றி மீண்டதனால் தலைவியின் கொன்றைப் பூவின் பசந்த உணகண் குவளை போலத் தொல்கவின் பெற்றன (ஐங். 500). தலைவியின தொல்கவின் தொலைதல் அஞ்சித் தோழியின சொற்கேட்டுத் தலைவர் பிரியாமல் தங்கினார் (கலி. 2:28,29). விழா 'கல்' என்னும் ஓசையுடன் கவின் பெற்றது (கலி. 5:10). 'கிளி மொழியாய், எம்மொடு நீ வரின் தளிரன்ன நின மேனியின் கவின் வாடும்' எனத் தலைவன் தலைவியிடம் செல்லும் நெறியின் கடுமை கூறினான் (கலி. 13: 18, 19). மூங்கில் போலும கவினகொண்ட தோளினை உடையாள் தலைவி (கலி. 21: 14). வானந்துளி மாறும் போது இவ்வுலகம் கெடுமாறு போலத் தலைவன அளிமாறும் பொழுது தலைவியின் கவின் கெடும் (கலி. 25:28,29). போதவிழ மரத்தொடு பொருகரை கவினபெற இளவேனில் வநதது (கலி. 26:7,8). 'தாம் குறித்துச சென்ற பருவமாகிய இளவேனிற காலத்துத் தொல்கவின் தொலைநத என் தடமென்றோளைத் தலைவர் நினைபபர்' எனத தலைவி கூறல் (கலி. 26: 9, 10). இளவேனிற் காலத்துக் கிளைகள் தாழ்ந்து துறைதோறும் மரங்கள் கவினபெற யாறு ஓடிற்று (கலி. 28:4,7). யாறு கூதிர்க்காலத்து நீர் வற்றிக் கலக்கம் தெளிநது கவின பெற்றது (கலி. 31:2). மேகத்தின் கவின் பெற்றுக் கத்திரிகை இடையிலே தீண்டிய ஐம்பால் போல துவாமணல் விளங்கியது (கலி. 32:1,2). உலகிடத்து அழகைக் காண யாறு கண்விழிததுப பார்ததன போலப் பக்கத்தில நின்ற குளங்கள் நீாநிறைநது பூககளால் கவின பெற்றன (கலி. 33:1,2). ஆறுகள் கவினபெற இளவேனிற் பருவத்தில் மரஙகள் கொமபுகளிலிருந்து பல மலரைச சிந்தின (கலி. 34:3-7). பெரிய நீர்ததுறை கவின் பெறக் குழவி வேனில் வந்தது (கலி. 36:7,8). இரவுக்குறி வரும தலைவனை முயங்கும தலைவி கார் பெற்ற புலம்போல கவின் பெறுவாள (கலி. 38:10-12). 'நின வரவால் தலைவி பெற்ற கவின தீராமற் காககுநதிறம் உரைபபாயாக' எனத தலைவனிடம் தோழி கூறி வரைவு கடாயினாள் (கலி. 38:12,13). தன மலையைத் தலைவியும் தோழியும பாடக் கேட்ட தலைவன உவகையொடு தலைவியின் மென முலையாகம கவினபெற வரையப புகுந்தான (கலி. 40:31-34). கதிாவிரி கனைசுடரின கவின கொணடது நனஞ்சாரல (கலி. 44.1). பாறையிடத்துள்ள சுனை கவின பெறக காநதள வளர்ந்துளளது (கலி. 45:1,2). யாமததும துயில் கொள்

ளாது அலமரும் தலைவியின் கர்மரு நல்லெழில் கவின வாடத் தலைவன் அதனைச் சிதைத்தான் (கலி. 45:18,19). முன்பு நீங்காது பாராட்டிய நீ தலைவியை விட்டு நீங்குவையாயின் இழையணி யல் குலை யுடைய என் தோழியது கவினும் நீங்கும் என்று தலைவனிடம் தோழி உரைத்தாள் (கலி. 50: 23,24). தலைவனின் அளிபெறின் தலைவியது ஆய் நுதல் மழை பெற்ற சிறுதினை அழகுபெறுவது போலக் கவின் பெறும் (கலி. 53:22-24). அசோகந் தண்காவினுள் நின்ற மிக்க கவின் பொருந்திய இள மாந்தளிரை ஒத்த நிறத்தினையுடையவள் தலைவி (கலி. 57:12,13). தலைவி கவினபெறு சுடர் நுதலினள் (கலி. 58:3). தலைவி களைநர் பிறர் இல்லாத நோயைச் செய்யும் கவின் உடையவள் (கலி. 58:9). களி தட்ப வந்த கவின் (கலி. 66:20). 'எழில் நலம் செலக் கொண்டு நீ மாறிய கவின் பெறல் வேண்டேன்' என்று தலைவனின் பரத் தைமைக்கு வருந்தும் தலைவி அவனிடம் கூறினாள் (கலி. 77:8,9). இருங்கூந்தலில் மலர் சேர்ந்து வண் டார்க்கும் கவின்பெறல் வேண்டேன் எனப் பரத் தைமைத் தலைவனிடம் தலைவி கூறல் (கலி. 77:16, 17). தலைவி தலைவனின் பரத்தைமையால் காற்றுப் பொருகின்ற பூப்போலக் கவின் வாடி னாள் (கலி. 86:19,20). குதிரை கண்ணாற் கண்டு அஞ்சும்படியாகக் கவின்பெற்ற மத்திகை விட்டு வைக்கப் பெற்றது (கலி. 96:12). வேய்நலம் இழந்த தோள் கவின்வாட வருந்துகின்றவளுக்கு அருள் செய்யத் தலைவனைச் சான்றோர் வேண்டல் (கலி. 99:16). கண்ணோக்கு ஒழிக்கும் கவின்பெறு பெண் நீர்மையினள் தலைவி (கலி. 108:37). காண்வர வியன்ற கவின்பெறு பனித்துறை (கலி. 127:14). கானலஞ்சேர்ப்பனைக் கண்டாய் போலப் புதுக் கவின் பெற்றாய் என்னும் தோழிக்குத் தலைவி கனவு நிலை கூறினாள் (கலி. 128:6-9). கனவிடத்துத் தலைவி தலைவனைக் கலந்து கவின பெற முயங்கி னாள் (கலி. 128:12). தலைவி பூக்கவின் கொண்ட புகழ்சால் எழில் உண்கண் உடையவள் (கலி.131:4). பொற்பூண் தாழ்ந்த நன்கதுப்பு அவ்வாறன்றிக் காய்கின்ற கவினைத் தலைவன் காண ஒல்லான் என்பது ஆற்றுவிக்கும் தோழி கூற்று (கலி. 150:17, 18). புனலாடியவரின் உரை (வார்த்தை) மூதூர் மலிந்தது; அவர் கவின் அவ்வுரையிலும் மிக்கது (பரி. 12:94,95). வையை வரவால் ஆரவாரமிக்க மூதூரில் வாழ்வார்க்கு இன்பமும் கவினும் நன்பல உளவாயின (பரி. 12:100,101). வண்டினம் வாயைச் சூழும் கவினுடன் பரத்தையர் வையையில் நீராடினர் (பரி. 16:41,43). கார்காலத்தில் தோன்றும் காந்தளின் செறிந்த கவின், போர் தோற்றுக் கட்டுண்டார் கையை யொக்கும் (பரி. 18:34,35). தும்பி கட்டவிழ்ப்பனவாகிய காந்தளின் கவின் முகைகள் கட்டுதலை யுடைய யாழ் நரம்பினது புரியை நெகிழ்ப்பார் கையை ஒத்தன (பரி. 18:36, 37). மகளிரும் மைந்தருமாகிய அவ்விரு திறத்தாரை யும் கரையையும் வையை சேர்கின்ற கட்புலனாகிய கவின் தேர்தற்கு அரியது (பரி. 22:34,35).

2. ஒளி. உருவப்பஃறேர் இளஞ்சேட்சென்னி செஞ் ஞாயிற்றின் கவின் - ஒளி - உடையவன் (புறம். 4:16).

**கவுணியன்** – கவுண்டினிய கோத்திரத்தான் (த. பே. பக். 795). இதுகுடிப்பெயர் (ப. மு. பக். 236). பூதத் தனாரும் (அகம். 74. அடிக்குறிப்பு) விண்ணந் தாயனாரும் (புறம். 166. அடிக்குறிப்பு) கவுணியன் குடியைச் சேர்ந்தவர்.

**கவுதமன்** - முனிவன். 'இவ்வுருவம் பூனை வடிவிற் சென்ற இந்திரன்; இவள் அகலிகை; இவன் கவுத மன்; சினத்தால் கல்லுருவான அகலிகை இது' எனப் பரங்குன்றில் உள்ள எழுத்துநிலை மண்டபம் (ஓவிய மண்டபம்) கண்டு கேட்ட மனைவியர்க்குக் கணவன்மார் விளக்கமளித்தனர் (பரி. 39:50-53).

**கவுரியர்** - பாண்டியர். கருங்கை ஒள்வாட் பெரும் பெயர் வழுதி தவிரா ஈகைக் கவுரியர் மரபில் வந் தவன் (புறம். 3:5). தொன்முது கோடி (திருவணைக் கரை) வெற்றிவேலினை யுடைய கவுரியர்க்குரியது (அகம். 70:33). வெல்போர்க் கவுரியர் நன்னாடு தெற்கின்கண் உள்ளது (அகம். 343:3,4).

**கவுள்** - கன்னம். களிறு தன் கவுளில் – கன்னத்தில் – அடக்கிய எறிகல் போல நலங்கிள்ளி ஒளித்த துப் பினை உடையவன் (புறம்.30:8-13). சான்றோர் நரை முதிர்ந்த திரைந்த கவுள் உடையவர் (புறம். 195:3,8). களமர் கள்ளை ஆமையிறைச்சியுடன் உண்டு ஆரல் மீனாகிய கொழுவிய சூட்டைக் கவுளில் அடக்கி வைகுதொழில் ஒழிந்தனர் (புறம். 313:3-5). வெட்சி வீரனின குரூஉ மயிர், மோவாயையும் செவியையும் கடந்து முன்னே கவுளில் பொருந்தியிருந்தது (புறம். 357:3,4). யானை நீராடிய நறுங்கவுளையுடையது (புறம். 387:6). யானை மதம் வீழ்கின்ற கவுளையும் தறுகண் பூட்கையையும் உடையது (சிறு. 340-343). கவைத்த முலையையுடைய இரும்பிடியின் கவுள் மருப்பு, வளைந்து முற்றின வாழைப் பழத்திற்கு உவமை (பெரு. 358,359). மதம்பாயும் கவுள் உடைய சிறுகண் யானை நாற்சந்தி முற்றத்தே காவல் செய்யும் (முல்லை. 30,31). கூதிர்க்காலத்துப் பெரும் பனி வருத்துதலால் கோவலர் கைக்கொள் கொள்ளி

யராய்க் கவுள் புடைக்க (ட'ற்பறைகொட்ட) நடுங்கினர் (நெடு. 7,8). பிணைமான் அறுகினை யுண்டு வார் மணல் அடைகரையில் அசையிடும் கவுளுடன் துஞ்ச அதனை இரலை காக்கும் (அகம். 34:4-8). எருமை குவளைமலர் மாந்திக் காஞ்சி நுண்தாது உறைப்ப அசையிடும் கவுளை உடையதாய்க் கொட்டிலில் புகும் (அகம். 56:3-7). களிறு, மடப்பிடி உண்ணுமாறு யாமரத்தை வளைத்துக் கொடுத்து மதத்தால் நனையும் கவுளில் படியும் வண்டுகளை ஓட்டும் (அகம.59:7-9). பெருங் கை யானையின கவுளி லிருந்து பெருகி வழியும் மதநீரில் வண்டின் கூட்டம ஒலிக்கும் (அகம. 88:9-11). கானவர் பகழி களிற றின் மதம் பொருந்திய கவுள் உடைய முகத்தைக் கிழித்தது (அகம. 132:4,5). வேங்கை மலரை ஊதிக் காந்தள் குலையில் உறங்கும் வண்டுகள் யானை யின பெரிய கவுளில் ஒழுகும் மதத்தினை உண்ப தாகக் கனாக்காணும் (அகம். 132:10-13). வணடுகள் மொய்க்கும் கவுளை உடையது சிறுகண் யானை (அகம. 159:16). கடாஅ யானையின் கவுள் மருங்கு ஒபப மலையுச்சியி லிருந்து நீர் ஊர்நது இழிதரும (அகம்.205:16-18). களிறு வண்டு பொருநதும் மதம் கரந்தொழிந்த கவுளை யுடையது (அகம். 207:8,9). காயும் சினம் மிக்கமையால நனைந்த கவுளி னினறும் வாயிற்புகும் மதநீரை யுடையது யானை (அகம். 227:5,6). நனைகவுள கான யானை (அகம். 245:10,11). புலியேறு நனைகவுள்அண்ணல யானை யின் அணிமுகம் பாய்ந்து, வேங்கை மரத்தின வாடு பூஞ்சினை போல மாய்ந்து கிடக்கும (குறு.343). கொடிச்சி காக்கும் முற்றிய தினைககதிர்களைக் கொணட மநதி கடுவனொடு மலையேறிக் கதிர் களைக் கயக்கித் தூய்மைசெய்து திரைத்த அணலை யுடைய வளைநத கவுள் நிறைய உண்ணும் (நற. 22:1-5). கரிய மேகம் போன்ற யானை வளைந்த கவுளையும் உடையது (நற். 141:1,2). புலி யானையின் குருதி பருகிய கொழுவிய கவுளை யுடைய பெரிய வாயை வேங்கையின அடிமரத்தில துடைக்கும் (நற். 158:7). விளக்கத்தையும் மதததால் நனைந்த கவுளையும் உடையது களிறு (கலி. 48:2). தலைவனின மைந்தன் அடியிற் சிலம்பொலிபப அணுகிக கணணாலும் நுதலாலும கவுளாலும அவனைத் தழுவிய தாயாககு இனபம தந்தான் (கலி. 83:16-19).

**கவை** - 1. **பிளவு.** வரகு கவைக் கதிரினை உடையது (புறம். 251:1; அகம். 194:9,10; 359:13; 384:6; 393:5; நற். 121:2,3). கள்ளி கவை பொருந்திய முட்களை யுடையது (புறம். 322:2). அரவு கவை நாவை உடை யது (புறம்.382:13,14). பேயமகள் கவைப்பட்ட தலை முடியினை உடையவள் (பதி. 13:15). அலவன் கவை பொருந்திய காலை உடையது (சிறு. 195, பெரு. 208; அகம். 350:3,4). கவைபட்ட அடியினை உடையவள் பேய் மகள் (சிறு. 197; மது. 162,163). முதற்பிறை ஏந்தியிருந்தாற் போன்ற கவை பொருந்திய கடைப்பகுதியை யாழ் பெற்றிருந்தது (பெரு. 11). அம்பு கடையிடத்தே கவையுடையது (பெரு. 123). கவையுடைய நெடிய தாம்பில பசுவின கனறு களைக் கட்டினர் (பெரு. 243,244). தருககம் கூறு கின்றவன கையிடத்து இணைந்த விரலகளை யொத்த கவை பொருந்திய தினைககதிா முற்[illegible] விளைந்தது (மலை. 112,113). கானவன் கவை (கவைக் கோல்) சுமந்தாலொத்த இருதிரி மருபபினையுடைய அணணல இரலை, [illegible]பிணைக்கு அறுகம்புலலை அருந் தியது (அகம. 34:3-6). எழிறகலை வறறிய மரக கொம்பினை ஒத்த கவை மருப்பினை உடையது (அகம். 395:8). கள்ளி கவைப்பட்ட முளளினையு டையது (குறு. 174:2; நற். 384:2). முதிய கலைமான கவை போன்ற கொம்புடைத் தலையினது (குறு. 213:2). முதுகலை கவைக கோடுடையது (ஐங். 373. 2). ஆயிரம் தலைகளையும் கவைகொணட [illegible] னையும உடைய அரவம (ஆதிசேடன) திருமா[illegible] பாயலாகும் (பரி. 13:27,28).

2. **இரட்டை.** பெணயானை கவை - இரட்டை - முலைகளையுடையது (பெரு. 358) வெள்ளை வெ[illegible] மறி சிறாரொடு குதிதது ஓடிக கவை முலை யுடைய ஆததியின தளிரைக கடிக்கும (அகம. 104. 9-12). யாமரததின கவை ஒணடளிர், கோழி யின தாழ்நது தொங்கும தாடிபோல இருக்கும (அகம். 187: 14,15). ஆணமை முனனே இழுககக் காமம பினனே நினறு தடுகக, அவறறால கவை பட்ட நெஞசம் வருநதியது (அகம. 339 6-8). நரை மூதாளாா நடுஙகுந தலையைத தாழ்தது வெலவோ மோ தோறபோமோ எனறு கவைபட்ட மனத் தோடு பொதியிலிடததுச சூதாடினர் (அகம.377·6-8).

3. **கிளை.** யாமரத்தின் தளிர்கள இழநத கவை களில - கிளைகளில - இருநது பருநது பேடையை அழைககும் (அகம. 33:3-6). கள்வராகிய பகைமிகும கவர்த்த நடைவழியை யறிய வழிச்செலவோா மேலேறிபபாாகக ஏணி மரததை யாமரத்தில சார்த்தக் கவை முறிக்கபபடும (அகம். 257·12-14).

**கவைமக** – **இரட்டைப் பிளளை.** அனபினால வழி ஏதம் கருதாது இரவுக்குறி வரும் தலைவற்காகவும் அறியாமையினால வருநதும் தலைவிககாகவும் தோழி, கவைமக - இரட்டைபபிளளைகள் – ஈரு

சுணடவழி இருவர்திறத்தும் வருந்தும் தாய்போல் வருந்தினாள (குறு. 324:4-6).

**கவைமகனார் - புலவர்.** குறுந்தொகையில் தோழி வரைவுகடாவும் துறையில வரும் ஒரே பாடல் (324) இவர் பாடியதாகும். வழி ஏதம் கருதாது இரவில் வரும் தலைவனுக்காகவும் அவனுக்கு நேரககூடும வழிஏதம் கருதி வருந்தும் தலைவிக் காகவும் வருந்தும் தோழியின் நிலைக்கு, இரட் டைப்பிள்ளைகள் நஞ்சுண்ண அவர்க்காக வருந் தும் தாயின் நிலையை உவமை கூறியுள்ளார். இரட்டைப் பிள்ளைகளைக் 'கவைமக' எனக் கூறிய சிறபபினால் இவர் கவைமகனார் எனக் குறிக்கப் பெற்றார் என்பர் உ. வே. சா. (குறுந்தொகை. பாடி னோர் வரலாறு. பக். 137).

**கவைமரம் - கவைக்கோல்.** புள்ளிமான், கவைமரம் - கவைக்கோல் - போன்ற பிளவுபட்ட கொம்பினை யுடையது (பதி. 74:9,10).

**கவைமுட்கருவி - பரிக்கோல்** (யானையை அடக்கும் கருவி). யானைப்பாகர் கவைமுட் கருவியால் – பரிக் கோலால - யானைகளைக் குத்தி வடமொழி பயிற் றிக் கவளங் கொள்ளச் செய்தனர் (முல்லை. 35,36).

**கவைமுள் - வேலமுள்.** அதியமான்நெடுமான் அஞ்சி யின குதிரைபபடை வரக் கண்ட அவன் பகைவர் கவைமுளளால் - வேலமுள்ளால் - காட்டு வாயில் களை அடைத்தனர் (புறம. 98:7,8).

**கழகம் – சூதாடுமிடம்.** உயர்நத இடுமணலிடத்து ஆடித்திரியும் புள்ளியையுடைய அலவன், கழகத்து - சூதாடுமிடத்து - உருட்டப்பெறும் கவறறினை யொககும் (கலி. 136: 2-4).

**கழங்கு - 1. கழற்சிக்காய்.** எண்ணுதற்குக் கருவியாக வுள்ள கழங்கு - கழற்சிக்காய் - போதாவாறு பகை மன்னரை மிக்க அளவில் இமையவரம்பன நெடுஞ் சேரலாதன் வெனறான (பதி. 15:5). களங்காய்க் கணணி நார்முடிசசேரலின் சால்பும் செமமையும் வளனும் வெனறியும் ஆகியவற்றை எண்ணி னால எண்ணுதறகு இடப்படும் கழங்குகள் போதா (பதி. 33:1-8). தலைவி இளந்துணை யாய மொடு கழங்காடினாள் (அகம. 17:2). தலைவி கிளியினையும் பநதினையும் கழஙகினையும் மிக விருமபிக் கைவிடாதிருந்தாள் (அகம. 49:1). கழங் காடு ஆயம் (அகம். 66:24). கழங்கு போன்றது முதது (அகம. 126:12). கோடை மிகுதியால மூங்கிலின கணுக்கள் பிளக்கத் தெறித்து விழும் மணணாமுததம கழங்குபோல தோன்றும் (அகம். 173:12–15). துய்த்தலைமந்தி நெல்லித் திரள்காயைக் கழங்காகக் கொண்டு ஆடும் (அகம். 241:13-15). மகளிர் விரும்பியாடும் கழங்கை ஒத்த ஆலங்கட்டி சிதறி மழை பொழிந்தது (அகம். 334:7-9). ஈங்கைத் திரள்வீ, குறுநதொடி மகளிர் மணலாடு கழங்கு போலக் கற்பாறையின் மேல் பரவிக் கிடக்கும் (நற். 79:1-3). படிமத்தான், மணலைப் பரப்பிய முற்றததைச் சிறப்புச் செய்து மெய்ம்மையைக் கூறும் கழங்கிட்டுக் குறி பார்ப்பான் (நற். 268:8,9). முதுவாய் வேலன் வெறிக்களத்து முருகவேளின் முன் கழங்கிட்டு நோய்க் காரணம் அறிவான் (நற். 282:5,6). வெறியாடும் வேலன கழங்குகொண்டு மெய்யறிந்து கூறுவான் (ஐங். 245:1,2). விலங்குகள் மேயாமல தினைப்பயிரைக் காககப புலிவடிவம் செய்து கழங்கினை அதன் கண்ணாகப் பொருத் துவர் (ஐங. 246:2,3). வேலன் பெய்ம்மணல் முற்றம் கவின் பெற இயற்றிக் கழங்கினால் தலைவியின் நோய்க் காரணம் அறிகுவன் (ஐங். 248:1-3). வேலன் பெய்ம்மணல் பரப்பிய வெறியாடுமிடத்தில் கழங்கு பரப்பிக் குறி பார்த்து முருகனால் வந்தது இநநோய் என மொழிந்தான் (ஐங். 249:1,2). பொய்படுதல் அறியாதது கழங்கு (ஐங். 250:1). பந்தும் பாவையும் கழங்கும் எமககீதது எனமகள் உடன்போக்கு மேவினள் என்பது தாய்க் கூற்று (ஐங். 377:3,4). மகளிரிடமிருந்த பந்தினையும் கழங்கினையும் களவு கொண்டோடிய மைந்தர் வையை நீருட் பாய்வர் (பரி. 10:107,108).

2. **கழற்சிக்காய் வடிவிலமைந்த விளையாட்டுக் கருவி.** சிலம்பணிந்த குறுந்தொடி மகளிர் ஆன் பொருநை வெணமணல எககரிலிருநது பொன னாற் செய்யப்பெற்ற கழங்கு கொணடு ஆடுவர் (புறம். 36:3-5). மகளிர் வெண்மணலில் குறுந்தொடி யசையப் பொனனாற் செய்த கழங்கினைக் கொண்டு ஆடுவர் (பெரு. 334,335). வெள்ளிய இருப்பைப்பூ, யானைக் கோட்டாற் கடைந்து செய்த கழங்கு போனறு பாறையிற பரவிக் கிடக்கும் (அகம. 135:8,9).

3. **கழஙகினைக் கொண்டு கூறும் குறி.** 'ஆகு வதறியும் முதுவாய் வேல' என்று விளிதது நீகழங கினை - கழங்கினைக் கொண்டு கூறும் குறியினை - கூறுவாயாக என நற்றாய வேணடினாள் (அகம். 195:14,15). தெய்வத்தால் அறியப்படுகின்ற கழங் கினால் தலைவியின் வேறுபாட்டை உணர்ந்து வெறியாட்டெடுத்தல (நற். 47:7-9).

**கழஞ்சு - ஓர் எடுத்தலளவு** (ஆகுபெயராய் அந்த அள வுள்ள பொன்னைக் குறிக்கும்). பாலை பாடிய பெருங் கடுங்கோவின் மறம் பாடிய பாடினி தோற்

றப் பொலிவுடைய சிறந்த கழஞ்சினால் - கழஞ்சு அளவாகிய பொன்னினால் - செய்த அணிகலன் களைப் பெற்றாள் (புறம். 11:11-13).

**கழல்** - 1. **வீரக்கழல்.** கருங்கையொள்வாட் பெரும் பெயர் வழுதி பொன்னாலாகிய கழலணிந்த காலி னன் (புறம். 3:15). உருவப்பஃறேர் இளஞ்சேட் சென் னியின் தாள் புடைபெயர்ந்து போர் செய்தலின் அருப்புத் தொழில் பறைந்த கழல் கொல்லேற்றின் கோட்டை ஒத்தன (புறம். 4:3,4). கரிகாற் பெரு வளத்தான் கழல் உரிஞ்சிய திருந்திய அடி உடைய வன் (புறம். 7:2). புனைகழல் மறவர் போரெனில் விரும்புவர் (புறம். 31:9). கிள்ளிவளவன் அடிபொலி யக் கழலணிந்தவன் (புறம். 40:4). புனைகழல் எழு வர் நல்வலம் அடங்கப் பொருதான் தலையாலங் கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் (புறம். 76:12). நெடுஞ்செழியன் கிண்கிணி களைந்த காலில் ஒண்கழல் புனைந்து போருக்குப் புறப்பட்டான (புறம். 77:1). மையணற்காளை அடிபுனை தொடு கழல் அணிந்தவன் (புறம். 83:1). மேம்பட்ட கழலணிந்தவர் மறவர் (புறம். 93:10). அம்பு கழல் வடிவாகவும் பாண்டில் வடிவாகவும் செய்யப் பெற் றன (புறம். 97:15). அதியமான் ஈகையங்கழற் காலி னன் (புறம். 99:5). அதியமான் தவமகன் பிறந்தவ னைக் கண்டபோது அவன் கையது வேல்; காலன புனைகழல் (புறம். 100:1). பகைவர் தோற்றோடுங் கால் எழும் கழலொலி கேட்டு நாணிப் பாரி அவர் மேற் செல்லானாயினான் (புறம். 120:20, 21). கழல் புனை திருந்தடிக் காரி (புறம். 122:2). கழலணிப் பொலிந்த சேவடி யுடையவன் தேர்வண்மலையன் (புறம். 125:12). கழற்காற் பேகன் (புறம். 142:4). மான்கணந் தொலைச்சிய குருதியங் கழற்காலினன் பெருநள்ளி (புறம். 150:5). கழல் புனை திருந்தடிக் கிள்ளி (புறம். 167:10). வீரன் 'புனை கழலோய்' என விளிக்கப் பெறுதல் (புறம். 259:7). பூம்பொறிக் கழற்கால் (புறம். 281:9). நிணம் பொதி கழல் (புறம். 285:12). திருந்துகழற் சேவடி (புறம். 387:18). திருந்து கழல் நோன்தாள் (புறம். 397:27). ஒண்பொறிக் கழற்கால் (பதி. 19:3;30:40;34:2). கறையடிக் கழற் கால் (பதி.28:3). பொலங்கழல் நோன்றாள் (பதி. 31: 31). மாக்கழல் (பதி. 37:8). ஈகைவான் கழல் (பதி. 38:7;42:1;குறி. 126). வான் கழல் (பதி. 57:2). வலம் படு வான்கழல் (பதி. 70:11). கழற்கால் (பதி. 80:7). வேலன் வடிவு கொள்ளும் வேலன் கழல் அணிந்த வன் (முரு. 208). நல்லியக்கோடன் களிற்றுத் தழும் பிருந்த கழல் தயங்கு திருந்தடி உடையவன் (சிறு.123, 126). ஒண்தொழில் கழற்கால் (பெரு. 102). கழற்கால் மறவர் (மது. 395). கச்சம்தின்ற கழல் தயங்குதிருந் தடி (மது. 436). பசுமணி பொருத பரேர் எறுழ் கழற்கால் பொற்றொடிப் புதல்வர் ஓடியாடினர் (பட். 294,295). மழவர் ஒண்கழல் உடையர் (அகம். 1: 1,2). கள்வர் கோமானாகிய புல்லி கழல் புனை திருந் தடி உடையவன் (அகம். 61:11,12). தொடுகழல் மற வர் (அகம். 75:6). பொருநன் கச்சினையும் கழலினை யும் தாரினையும் அணிந்தவன (அகம். 76:7,9). புனை கழல் பிட்டன் (அகம். 143:12). கழற்கால் பண்ணன் (அகம். 177:16). வார்கழல் பொலிந்த வன்கண் மழ வர் (அகம். 187:7). கழற்காலையும் நெடுவேலையும் உடைய இளையோன் (அகம். 203:9,10). கழற்கால் இளையர் (அகம். 269:12). கழற்கால் புல்லி (அகம். 295:13). திருந்துகழற் சேவடி நற்போர் வானவன (அகம். 309:10,11). ஒண்பொறிப் புனைகழல் சேவ டிப் புரளச் சென்று அத்தி புனலாடினான (அகம். 376:7,10). வில்லோன் காலன கழல் (குறு. 7:1). ஆய் கழல்விடலை (குறு. 15:4,5). கழலோன் (குறு. 356:2). கண்ணியும் கழலும் தாரும் தலைவன் அணிதல் (நற். 128:7,8). பாசி சூழ்ந்த பெருங்கழல (ஐங். 206: 4). திருந்து கழற்காளை (ஐங். 382:2). செய்வினைப் பொலிந்த செறிகழல் நோன்தாள் மையணற் காளை (ஐங். 389:1,2). மையற விளங்கிய கழலடிப் பொய்வல் காளை (ஐங். 399:4,5). ஆய்கழல் வெஞ் சின விறல் வேற் காளை (ஐங். 400:4,5). காமர் கழலடி (கலி. 30:20). புனைகழற்காற் றென்னவன் (கலி. 98:30). புனைகழல் மைந்தர் (பரி. 22:27).

2. **கழற்சிக் கொடி.** சிறூர் கழலால் - கழற்சிக் கொடி யால் - ஆகிய முள்வேலியுடையது (புறம். 306:1,2).

3. **கழற்சிக்காய்.** மணற்குன்றை ஆடும் இடமாகக் கொண்டு ஒண்ணுதல் மகளிர் கழல் - கழறசிக்காய- ஆடுவர் (பதி. 30:27,28).

4. **கால்மோதிரம்.** வையையில் நீராடப போந்த மக ளிரிற் சிலர் கட்டுவடம், கழல் - கால்மோதிரம் - அணிந்திருந்தனர் (பரி. 12:24).

5. **தாள்** (ஆகுபெயர்). மூன்று காலங்களையும கடந்து அக்காலங்கள் தாமே பொருந்திய கழல் - தாள் - நிழலையுடையவர் திருமால் (பரி. 13:46,47).

**கழற்கனி** - **கழற்சிமணி.** மகளிர் கூந்தலைக் கழற்கனி யால் – கழற்சிமணியால - வகுத்து ஒழுங்கு படுத்தி னர் (புறம். 97:23,24).

**கழனி** - **வயல்.** வயலிடத்து மயில் உதிர்த்த பீலியைக் கழனி உழவர் நெற்சூட்டுடனே திரட்டுவர் (புறம். 13:10,11). நாரை கழனியிடத்துக் கயல்மீனைத் தின்று நெற்போரின்கண்ணே உறங்கியது (புறம். 24:19,20). நெல் விளைந்த கழனியிடத் துள்ள

புள்ளை யோட்டுவோர் பனங்கருக்காகிய விறகால் கழிமீன் சுட்டு அதனுடன் வெங்கள்ளுண்டும் அமையாராய்த் தெங்கினது இளநீரை உதிர்ப்பர் (புறம். 29:13–16). புனங்காப்போர் கிளிகடி கருவியைப் புடைப்பின், அப்புனத்திற்கு அயலதாகிய வளைந்த நெற்கதிர் சுழலும் கழனியின்கண்ணும் மிக்க நீரையுடைய கடற்கரையின்கண்ணும் உளவாகிய புட்கள் ஒருசேர எழும் (புறம். 49:4-6). நீ பிறர் நாடு கொள்ளுங்காலை அவர் நாட்டு வளைந்த கதிரையுடைய கழனியை நின் மறவரும் கொள்ளை கொள்க என இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய பாண்டியன் நன்மாறனிடத்துக் காவிரிப் பூம் பட்டினத்துக் காரிக்கண்ணனார் கூறினார் (புறம். 57:5,6). வன்கை வினைஞராகிய உழவர் பழன வாளையினது துணியலைப் புதுநெல் வெண் சோற்றிற்கு மேலீடாகக் கொண்டு விலாப்புடை மருங்கு விம்முமாறு உண்டு நெடிய கதிரையுடைய கழனியிடத்துச் சூட்டை இடுமிடம் அறியாது தடுமாறுவர் (புறம். 61:4-7). கழனியிடத்துள்ள ஆம்பல் தண்டாற் செய்த வளையணிந்த கையினை யுடைய மகளிர், செவ்வி யவலை முக்கிக் குளிர்ந்த புனற்கண்ணே பாய்வர் (புறம். 63:11-13). பகைவரது அகன்றலை நாடு, வரப்பைச் சேர்ந்து வளையும் நெற்கதிர் சுழலும் கழனியொடு பெரும் புனல் படப்பையை உடையது (புறம். 98:18-20). பொய்கைக்கண் மேய்ந்த நாரை நெற்போரின்கண்ணே உறங்கும் நெய்தலையுடைய அழகிய கழனியிடத்து விளைந்த நெல்லை உழவர் அறுப்பர் (புறம். 209: 1,2). மழை பொய்த்தலால் கயங்கள் களியாய் முளியும் கோடையினும் ஆம்பலின் அகலிலை நிழற் கண் நத்தையினது ஏற்றை நாகாகிய இளைய சங்குடன் பகற்காலத்தே மணங்கூடும் நீர் விளங்கும் கழனி நாடுடையவன் உருவப் பஃறேர் இளஞ்சேட் சென்னி (புறம். 266:1-6). கதிர்கள் தம்மிற் பின்னிக் கொண்டசையும் நெற்கழனிகளையுடையது மருத நிலத்தூர் (புறம். 285:14,15). வளவிய தோட்டினை யும் ஒன்றோடொன்று தம்மிற் பின்னிக் கிடக்கும் கதிர்களையும் உடைய கழனியின் நடுவே ஓரெயில் தோன்றியது (புறம். 338:9-12). வயல்கள் பொருந்திய கழனிகட்கு வாயிலாகிய பொய்கைக்கண் கயல் மீனை உண்ணும் நாரையால் துரத்தப்பட்ட வாளை மீனைப் புனலாடு மகளிர் தம் வளமனைக் குப் பிடித்துச் செல்வர் (புறம். 354:4-6). அம்பர் எனும் ஊர் காவிரி பாயும் தாழ்ந்த நிலப்பாங் கினையுடைய படப்பைகளையும் நெல் விளையும் கழனிகளையும் உடையது (புறம். 385:8,9). பலவாகிய ஊர்களைச் சூழவுள்ள கழனிகளெல்லாவற்றினும் விளையும் நெல்லினும் பலவாகிய ஊழிகள் வாழியர் எனச் செல்வக் கடுங்கோ வாழியா தனைக் குண்டுகட் பாலியாதனார் வாழ்த்துவர் (புறம். 387:28,36). தழைத்த கதிர்கள் பொருந் திய கழனிகள் சூழ்ந்த வெண்குடை என்னும் ஊர்க் குரியவன் சோழிய ஏனாதி திருக்குட்டுவன் (புறம். 394:2,3). கழிகால்களாற் சூழப்பட்ட நெல் விளைந்து கிடக்கும் கழனியின்கண் பறையை முழக்குவதால் கதிர் கவர வரும் புள்ளினம் வெருண் டோடும் (புறம். 396:3,4). இமையவரம்பன் நெடுஞ் சேரலாதன் சினந்து இறுத்த பகைவரது பாக்கத் திலுள்ள விரிந்த பூவையுடைய கரும்பு விளையும் கழனிகள் பொலிவிழந்து தோன்றின (பதி. 13:12, 13). பல்யானைச் செல்கெழு குட்டுவனின் பகை வரது நாடு கழனிகட்கு வாயிலாக உள்ள பொய் கையை அடுத்த விளைநிலத்தில் நெருப்பை யொத்த தாமரையும் மகளிர் பறிக்காமையான் தானே மலர்ந்த ஆம்பலும் நீங்காத புதுவருவாயும் உடையது (பதி. 23.22-25). வளைந்த கதிர்களை யுடைய நெல்லின் தாள்கள் செறிந்த கழனி யின்கண் தடந்தாள் நாரை இரை கவரும் (பதி. 32:12,13). கரும்பு தழைத்து நெருங்கிய கழனி களையுடைய நாடு வளம் மிக மழை பெய்தது (பதி. 50:2,3). கழனியிலுள்ள உழவர் தண்ணுமைப் பறையை இசைத்ததால் பழனத்திலுள்ள மயில் அதன் ஓசையை மேகத்தின் ஓசையென்று எண்ணி ஆடும் (பதி. 90: 41,42). வினைஞராகிய உழவர் இடையறாத புது வருவாயினையுடைய வளையுங் கதிரினை யுடைத்தாகிய கழனியிடத்துப் பசுமை யறும்படி முற்றின செந்நெல்லின் தாளினை அறுத் தனர் (பெரு. 228-231). யானைகள் நின்றால் அவற்றை மறைக்கும் படி கழனியில் நெற் கதிர்கள் ஓங்கி வளர்ந்தன (மது. 247). மருத நிலத்திலுண் டாகும் பல்வேறு ஓசைகளுள் தழைத்த பகன்றை யினையுடைய நெல் முற்றிய கழனியில் அந் நெல்லை வன்கையினாலே அறுப்பாருடைய அரித் தெழும் பறையோசையும் ஒன்றாகும் (மது. 261, 262). சோழநாடு விளைவறாத வியன்கழனிகளை உடையது (பட். 8). வளம் மிக்க வயலில் அழலின் கொழுந்தினை யொத்த தோடுகளை யீன்ற கழனி நெல்லின் கவை முதலிலிருந்து தோன்றிய கதிர் செறுவிடத்து வரப்புகளை அணையாகக் கொண்டு கிடந்து அலைந்தது (அகம். 13:17-20). கழனிகளில் வெண்ணெல்லை அரிவோரது பின்பு நின்றொலிக் கும் தண்ணுமைப் பறையொலியை வெருவிய நாரை, கொம்புபோல் ஒலித்துப் பனைமரத்தின் மடலகத்தே சென்று தங்கும் (அகம். 40: 12-16).

உழவர் நெடிய நெற்பயிர் நட்ட கழனியிலுள்ள ஏர்களைத் தலைகுவிந்த கட்டிகளை யுடைய தோட்டத்தில் சேர்த்து மண் பிறழ அரிதாளை யுடைய நிலத்தைப் பிளந்துழுவர் (அகம். 41: 4-6). கானலம் பெருந்துறையில் கழனிகளிலுள்ள கரிய நீரில் பசிய இலைகளை யுடைய தழைத்த கணைக் கால் நெய்தற் பூக்களை விழாவிற்கு அணி செய் யும் மகளிர் தம் தழையுடைக்கு அணிசெயச் சேர்ப்பர் (அகம். 70: 10-12). பிரப்பங்கொடி ஆம பல் இலையைச் சுற்றிக்கொள்ள, வாடைக்காற்று வீசும்போது அவ்விலை ஊதுலைத்துருத்தி போல வீங்கி நெகிழ்தற்கிடனான கழனியம் படப்பைக் குரியவன் தலைவன் (அகம். 96: 3-8). பல்லிளங் கோசர் கடலாடு மகளிர் கொய்து வந்த ஞாழற் பூவினையும் கழனி உழவர் கொய்து வந்த குவளைப் பூவினையும் காவற் காட்டினையுடைய புறவில் மலர்ந்த முல்லைப்பூவுடன் சேர்த்துக் கண்ணியாகக் கட்டி விளையாடுவர் (அகம். 216:8-11). தண்ணிய சாய்க்கானம் என்னும் ஊர் நீண்ட கதிர்களைக் கொண்ட கழனிகளை உடையது (அகம். 220 :18). குறுந்தொடி மகளிர் புனலாட்டை வெறுப்பின் பொய்கைக்கண் கோரைகளைக் கோதி, கழனி யாகிய கரந்தைமிக்க வயலிடத்து வெண்குருகு களை ஓட்டுவர் (அகம். 226:4-6). கழனியின் வரப் பில் நின்ற மாமரத்தின் கொம்புகளிலிருந்து உதிரும் புதிய பூக்கள் மழைத்துளி போலப் பரந்தன (அகம். 236: 6-8). உறந்தையிலுள்ளோர் பெரிய நெற்கதிர்கள் சுழல்கினற கழனியிடத்து முற்றிய கரும்பினைப் பிழிநத இனிய சாறு அட்ட பாகுடன் பாலினையும் பெய்து செந்நெல்லாலாகிய அவலைப் பாணர் முதலாயினார்க்குப் பகுத்துக் கொடுப்பர் (அகம். 237:11-14). கிளைத்தல் பொருந் திக் கருவிரிந்து எழுந்து வளைந்த விளங்கும் கதிர் களையுடைய கழனியின் நெல் ஒலி செய்யும் பசிய பள்ளங்களைத் துழாவிய கண்ணோட்ட மற்ற வாடைக்காற்று கல்லென்ற ஒலியுடன் விரைந்து வந்தது (அகம். 243:5-8). கள்ளூர் அழகு விளங்கத் தொல்புகழ மிக்க பலவகையான பூக்கள் நிறைந்த கழனிகளையும் கரும்பு மிக்க படப்பைகளையு முடையது (அகம். 256:13-15). கழனியில் உழுவோர் கலிசிறந்து எழுப்பிய இசைக்கு வெருவிய மயில் தெய்வத்தையுடைய குன்றிடத்தே பொலிவுற வந்து தங்கும் (அகம். 266:17-19). பொய்கையில் உள்ள யாமை, நீர் சூழ்ந்த வளம் பொருந்திய வயலிடத்தே யுள்ள கழனிக் கரும்பின் சாய்ந்த பக்கத்தே ஊர்ந்து சென்று இளவெயிற் காயும் (அகம். 306:5-7). பரத்தையாகிய குறுமகள் அட்டவாயில் என்னும் ஊரிலுள்ள நீண்ட கதிர்களை யுடைய கழனியின் பெருங்கவின் ஒத்த நலத்தினள் (அகம். 326:3,5-7). நெல்தூற்றும்போது எழுந்த துரும்பு படிந்து வெள்ளுப்புக் கெட்டமையின் பரதவர் சினந்து கழனி உழவரோடு மாறுபட்டு எதிர்த்துக் கை கலந்து சேற்றுக் குழம்பினை எறிந்து போர் செய் தனர் (அகம். 366: 3-9). கழாஅர் முன்றுறை நீர் மோதிய மருத மரங்கள் ஓங்கிய படப்பையினையும் தழைத்த கதிர்களையுடைய கழனிகளையும் உடை யது (அகம். 376: 3, 4). கழனியின் அருகிலுள்ள மா மரத்தினது கனிந்து வீழ்கின்ற இனியபழத்தைப் பொய்கையிலுள்ள வாளைமீன்கள் கதுவி உண் டன (குறு. 8:1, 2). நாரை கவர்ந்து கொள்ள அத னினின்றும் தப்பி நீருட் குளித்த கெண்டை அயலி லுள்ள தாமரையின் வெள்ளிய அருமபை வெருவும் கழனிப் பக்கங்களையுடைய காஞ்சி மரங்கள் மிக்க ஊரையுடையவன் தலைவன் (குறு. 127:1-3). தலைவி யின் தாய் உப்பை விற்று வெண்ணெல்லைக் கொள்ளும் பொருட்டு உப்பு விளைகின்ற கழனி யாகிய அளத்திற்குச் சென்றாள் (குறு. 269: 4-6). உமணரின் நெடுநெறியிற் செல்லும் உப்பு வண்டி கள் மணலின் மடுத்து முழங்கும் ஓசையைக் கேட் டுக் கழனியிலுள்ள குருகுகள் வெருவும் (நற். 4:7-11). தலைவன் ஊரிடத்துள்ள தீம்புனல் இங்கும் வநது பரக்கின்ற கழனியையுடைய நல்லவூரினன் தலைவன (நற். 70:7, 8). பழனத்தினருகே யிருக்கினற பலா மரத்திலுள்ள முயிறுகள் முட்டையிட்டு நெருங்கி உறைகினற கூடுகளைக் கழனியின் கண்ணே இரை யுண்ண வந்த நாரை உரிஞ்சுதலான் அம்முயிறு களும் முட்டைகளும் செந்நெல்லோடு கலநத அரிசி யுதிர்ந்து பரவினாற்போல உதிர்நது கிடந்தன (நற். 180:1-3). நெற்கதிர்களிடையே மலரும் நெய் தற் பூவினின்று தேன் வடியும் கழனி சூழ்நதது ஆர்க்காடு (நற். 190:5, 6). இரைவேட்டுக் கடுஞ்சூல வயாவினால நெய்தற் கழியை அடையாது கழனி யின்கண் தங்கியிருந்த பேடைக்கு நாரைப் போத்து கடல்மீனைக் கொண்டுபோய்க கொடுக்கும் (நற். 263: 4-7). பழனத்திலுளள யாமையின் பசிய கற் போன்ற முதுகிலே கழனியைக் காக்கும் மள்ளர் தாம் சுடுகின்ற நத்தையை உடைததுத் தின்பர் (நற். 280: 6,7). பெருங்குளத்து நீர் மடை திறந்து கொண்டு ஓடியதனால் அக்குளத் தினினறும் புறம்போய்க் கால்வாயை யடைந்து திரும்பிய வாளைமீன சேற்றையுடைய கழனியுள் ஓடி, உழவர் கோல்கொண்டு புடைத்தற்கும் அஞ சாது சேற்றின் வரம்படியிலே புரளும் (நற். 340: 3-8). வெண்ணெல் அறுக்கும் மள்ளர் முழங்குகின்ற

தண்ணுமைப் பறையொலிக்கு அஞ்சி பழனத்தி லுள்ள புள்ளினங்கள் இரிந்தோடிக் கழனியின மீதுள்ள மருதமரத்தில செறிதலால அம்மரத் தின பூங்கொத்துககள உதிர்ந்தன (நற்.350: 1-3). வாளைததாற்றின பூவை அசைக்கின்ற நெற் கதிர் விளைந்த கழனியிலுள்ள சேற்றில் மள்ளர் அறுத்துப் போட்ட அரிச்சூட்டின பக்கத்தே வாளைமீன் பிறழும் (நற். 400:1-4). தலைவன் பூத்துள்ள கரும்பினையும் விளைந்து முதிர்ந்து பயனதரும் நெலலினையும் ஒருங்கேயுடைய கழனி களைக கொண்ட ஊரினன் (ஐங். 4: 4,5). பஞ்சாய்க் கோரை யன்ன செருந்திக் கோரையோடு வேழம் கரும்பு போலச் சுழலுதற்குக் காரணமான கழனி கள் சூழநதது தலைவனது ஊர் (ஐங். 18: 1,2). தலைவன் பசிய காயையுடைய வயலையினது சிவந்த கொடியினை நண்டுகள அறுத்தற்கிடனான கழனிகளை யுடைய ஊரினன (ஐங். 25: 1-3). மழை மிகுதியாகப பெயயக காவலர் கடுக நண்டு உழவர் வித்திய வெணமுளையை அறுத்தற்கிடனான கழனியூரன தலைவன் (ஐங். 29:1-3). அணையை உடைததுப் பாயும் புதுநீர் பாய்நத அளவிலே கழனியிலுள்ள தாமரைகள முதலிற் கலங்கிப் பின் னர் மலர்நதன (ஐங. 53: 2,3). பழனத்திலுள்ள சம்பங்கோழி ஒலிககினற தன பெடையை அகவும் கழனியூரன தலைவன் (ஐங்.60.1,2). பழனததிலுள்ள பலவேறு மீனகளையும தின்ற நாரை கழனியி லுள்ள மருதமரததின் உசசியில சென்று தங்கும் (ஐங்.70.1,2). எருமைக்கடா மணமுடைய மலர்மிக்க நீர் நிலைககண புகுநது ஆம்பல் மலரைச் சிதைத் தறகிடனான கழனியூரனின மகள் தலைவி (ஐங். 91:1-3). கவினபெறு சுடர்நுதலளாகிய தலைவியின் தநதையூரிலுள்ள கழனியின்கண தாமரைகள் மலர்நதன (ஐங். 94:4,5). தலைவி எருமை பாய்ந்து உழககியதனால உணடான சேறறின்கண்ணே நெய்தல் ஆம்பலோடு தழைத்தறகிடனான கழனி யூரனின மகள் (ஐங.96:1–3). பழனத்திலுளள பாகறகொடியின்கண முயிறுகள் மொய்தது உறை கினற கூடடைக கழனி எருமை நெற்கதிரோடு ஒரு சேரக கெடுக்கும் (ஐங. 99:1,2). பறவைகள் ஒலிக்கும வயலிடதது ஒலிககினற செந்நெலலிடையே பூத்த தாமரையைச செந்நெல்லினது முதல சாய்க்கை யினாலே அதனுடைய வள்ளிதழை யுறும்படி வளர்நது அப்பூவிலே கிடந்து விளங்கிய ஒருகதிர், அரங்கின மேல ஆடுவாளது அணி நுதலில் செரு கப்பட்ட வயநதகம் போல தோனறும் அழகு பெறு கினற கழனியையுடையவன் தணடுறை யூரனாகிய தலைவன (கலி. 79:1-6). வையையாற்றின்கண வெள் ளம் வரக் கண்டோர் அப்பெருவெள்ளம் பாடு பவர் இருந்த பாக்கத்தைக் கொண்டதெனவும் கூத்தர் இருந்த சேரியை அடைந்தது எனவும் கழனிகளில் வெள்ளக்கால் வந்து கோத்தது என வும் கூறினர் (பரி. 7:31-33).

**கழாஅத்தலை - புலவர்.** இருங்கோவேளின் முன்னோன் ஒருவன் புகழ்ந்த செய்யுளையுடைய கழாஅத் தலையை - கழாஅத்தலையார் எனனும் புலவரை - இகழ்ந்ததன் பயனாகச் சிற்றரையம் பேரரையமென இரு கூற்றாற் பெயர் பெற்ற அச்சம் பொருநதிய அரையம் என்னும் மூதூர் அழிநதது எனறு கபிலர் குறிப்பிட்டுள்ளார் (புறம். 202:6-13).

**கழாஅர் - ஊர்.** பல வேற்படையினையுடைய மத்தி யின் கழாஅர் எனனும ஊரின்கண் தாமரைப் பூக்களையுடைய நீர்மிக்க வயலில் வள்ளையின் மென்கொடிகளை உழககி வாளை மீன்களை மேய்ந்த நீர்நாய் பிரம்பினது பழைய தூறுகளில் தங்கியிருக்கும் (அகம. 6:16-20). முழவின் ஒலி மாறாத ஆரவாரம் நிகழும் இடமாகிய கழாஅர்ப் பெருந்துறையிடதது விழாவில ஆடிய ஆட்டனத்தி யின் அழகினை நயநது வந்து காவிரி கவர்ந்து கொண்டமையின் திசையெலலாம் தேடி மதி மருணடு வாடிய ஆதிமந்திக்கு மருதி அவள் காதலனைக் காட்டிக கடலில் மறைநதாள் (அகம். 222:4-12). மகளிர் புனல்விளையாட்டை வெறுப் பின் பழனத்திலுளள கோரைகளைக் கோதி வயலில் உளள நாரையை ஓட்டும் இடமாகிய பரதவர் கோமான் பல்வேல் மத்தியின கழாஅர்த் துறை முறறததே விடியலில வந்த பெருநீர்க் காவிரியில தலைவன் பரத்தையோடு புனலாடி னான் (அகம.226:4-12). மிக்கெழும் நீர்மோதிய மருத மரஙகள உயர்ந்த தோட்டததினையும் தழைத்த கதிர்களைக் கொணட வயல்களையு முடைய கழாஅர்த துறை முற்றத்தே சுற்றத்தோடு கரிகால் வளவன் கண்ணுறறு மகிழப் புனலாடிய அத்தியின் நலன் நயநது அவனைக காவிரி கொண்டொளித் தது (அகம. 376.3-11). மாசற்ற மரத்திலுளள பலியுணவை உணணுங் காககை காற்று மோதும் நெடுங்கிளையில் மழைத் துளியுடனே அசைநது கொண்டு வெலபோர்ச் சோழரது கழாஅரில் கொள்ளப்படுகினற பலிகொடையோடு கொடுக் கும் அளவிறந்த சோற்றுடன் ஊனொடு கலந்து இடப்படும் பெருஞசோற்றை உண்ணக் கருதி யிருக்கும் (நற். 281.1-6). நறிய வடுவினையுடைய மாமரததின முதிர்ந்த தீமபழம் நெடுநீர்ப் பொய் கையினகண துடுமென விழுதற்கிடனான கை

வன்மையுடைய மத்தியின் கழாஅர் என்னும் மூதூரை ஒத்த நலங்கெழுமியவர் பரத்தையர் (ஐங். 61:1-4).

**கழாத்தலையார் - புலவர்.** கழாத்தலை என்பது ஓரூர் எனக் குறிப்பர் உ.வே.சா. (புறம். பாடினோர் வரலாறு). அக்குறிப்பின்படி இவர் ஊரால் பெயர் பெற்றவராகிறார். ஆயின், உறுப்பால் பெயர் பெற்றவர் வரிசையில் இவரை நிறுத்துவர் வையா புரிப்பிள்ளை (சங்க இலக்கியப் புலவர்களின் பெயர் வகை). அவ்வகையில் கழுவாத தலையையுடையவர் என்ற காரணம் விளங்கவில்லை. இவரைக் குறித்துப 'புகழ்ந்த செய்யுட் கழாத்தலை' (புறம். 202:12) என்று பொய்யா நாவிற் கபிலர் புகழ்வர். இருங்கோவேளின் முன்னோனொருவன் இப் புலவரை இகழ்ந்ததன் பயனாகச் சிற்றரையம் பேரரையம் என்ற இரு பகுதிகளையுடைய அரைய மெனும் அவன் மூதூர் தன் சிறந்த பொனவளங் கெட்டு அழிந்தது (புறம். 202:1-13) என்றதனால் இவருடைய ஆற்றலும் பெருமையும் அறியப்படும். இவர் பாடிய ஆறுபாடலும் (62,65, 270,288, 289, 368) புறநானூற்றில் அமைந்துள்ளன. சேரமான் குடக்கோ நெடுஞ்சேரலாதன், சோழன் வேற்பஃற டக்கைப் பெருநற் (விறற்) கிள்ளியொடு போர்ப் புறத்துப் பொருது வீழ்ந்து ஆரம் கழுத்திடத்ததாக உயிர் போகாது கிடந்தானை மறக்களவழித் துறை யிலும் (புறம். 368) அவ்வேந்தர் இருவரும் அக் களத்தே படையொடு மாய்ந்து கிடந்ததைத் தொகை நிலைத் துறையிலும் (புறம். 62) இவர் பாடியுள்ளார். சேரமான பெருஞ்சேரலாதன் சோழன் கரிகாற் பெருவளத்தானொடு பொருது புறப்புண்ணுக்கு நாணி வடக்கிருந்ததைக் கையறு நிலையில் (புறம். 65) பாடியுள்ளார். இம்மூன்று பாடல்களிலேயன்றி ஏனைய மூன்றிலும் (புறம். 270, 288, 289) போர் குறித்த செய்திகளையே இவர் தனித்தனிப் புனைகின் றார். இந்த ஆறனுள் ஐந்து பாடல்களில போரில் நேர்ந்த வீழ்ச்சியை இரக்கமும் கடுமையும் தோன்ற இவர் இயம்பக் காணலாம். வேந்தரும் மறவரும் வீழ்ந்த நிலையில் அவர்தம் பெண்டிர் கைம்மை நோனபு நோற்றுவாழ விரும்பாதவராய்த் தத்தம் கணவனமாருடனே களத்தில் இறந்தமையை (புறம். 62) இவர் காட்டுகின்றார். 'உவவுத்தலை வந்த பெருநாளமயத்து, இருசுடர் தம்முள் நோக்கியொரு சுடர், புன்கண் மாலை மலைமறைந் தாங்குத் தன்போல் வேந்தன் முன்புகுறித் தெறிந்த, புறப் புண் ணாணி மறத்தகை மன்னன், வாள்வடக் கிருந்தனன்' (புறம். 65:6-11) என்ற இவரது பாடற் பகுதி உவமையும் நயமு முடையது. 'பல்லெருத் துள்ளும் நல்லெருது நோக்கி, வீறுவீறாயும் உழவன் போல' அரசன் முதுகுடி மறவருள் சிறப்புடை யொருவனைத தேர்ந்தனன் (புறம். 289) எனவும் 'வளிவழக் கறுத்த வங்கம் போலப்' போர்பபுரவி கள் புண்பட்டு மடிந்து கிடந்தன (புறம். 368) எனவும் இவர் கூறுகினற உவமைகளும் உணரந் தக்கன.

**கழார்க்கீரனெயிற்றியனார் - புலவர்.** சோழநாட்டில காவிரிக்கரையில மயிலாடுதுறைக்குக் கிழக்கேயுளள கழார் என்ற ஊரினரான கீரனென்பவருக்கு மக ளாகிய எயிற்றியனார் என இவர் பெயருககு விளக்கம் காணலாம். இவர் வேட்டுவக்குடியின ரென்பதும் பெயரானேயே விளங்கும். இவர் பாடி யதாகக குறுநதொகையின் ஒரு பாடலே (330) உள்ளது. அபபாட்லில் வண்ணாத்தி கஞ்சியில தோய்தெடுத்து முதல் தபபலுக்குப பின் முறுககி நீரில் போட்ட நிலையில பிரியாது கிடக்கும் வெள் ளாடையைப பகன்றையின கூம்பு மலர்நத வெண மலர்க்கு இவர் உவமை கூறியுள்ள திறன உணாந்து இன்புறத்தக்கதாம். இவ்வொரு பாடலையே பாடிய இவ்வெயிற்றியனாரை வேறு பல பாடலகளை பாடிய கழார்க் கீரனெயிற்றியாரெனக கொணடு பெண்பாற்புலவர் எனறு உ.வே.சா.வும பி.நா. வும் குறிப்பர் (குறுநதொகை, நற்றிணை, பாடினோர் வரலாறு).

**கழார்க்கீரனெயிற்றியார் - புலவர்.** கழார் என்னும ஊரி னரான கீரன எனபார்க்கு மகளாகிய இவரது இயற்பெயர் எயிற்றி என்பதாம். இவரைக கீர னுக்கு மனைவி எனபா பி.நா. (நற்றிணை, பாடினோர் வரலாறு). எயினர் குலப்பெணணான இவர் பாடிய னவாய் அகநானூறறில நானகும் (163, 217, 235, 294), குறுநதொகையில் இரணடும் (35, 261), நற றிணையில் இரண்டும் (281,312) ஆக எட்டுப பாடல கள் உள்ளன. கழார்க் கீரனெயிற்றியனாரை இவ ராகக் கொணடதனால் குறுநதொகையில அவர் பாடலாகவுள்ள ஒன்றையும இவருடையதாகவே காட்டுவர் உ.வே.சா.வும் பி. நா.வும. (குறுநதொகை நற்றிணை, பாடினோர் வரலாறு). மற்றும அகநானூற றில் நான்கு பாடலகளே இவருடையனவாகவிருகக, ஐந்து பாடல்களென்று அவவிருவரும் கணககிடு வது எங்ஙனமென்று விளங்கவிலலை இவர் நெயத லொழிந்த நான்கு திணைகளைப் பாடியுள்ளார். பாலை, முல்லைத் திணைகளிற் போலவே மருதத் திணையிலும் பிரிவாற்றாமையைப் பேசுகிறார். எல்லாப் பாடல்களிலும் வாடையொடு கூடிய பனிப்பருவ நிகழ்ச்சிகளைச் சிறப்புறப் புனைவர். "களிறுயிர்த் தன்ன கண்ணழி துவலை, முளரி கரி

முன்பனிப் பானாள் குன்றுநெகிழ்ப் பன்ன குளிர் கொள் வாடை' (அகம். 163:7-9) என்ற அடிகளில் உவமை நயத்தோடு இவர் பனிப்பருவ வாடையைப் பாடுவது காணலாம். நெடுநாள் மழை பொழிந்ததனால் கார்ப்பருவக் கடைநாளில் எள்ளுக்காய்கள் உள்ளீடற்ற சிதட்டுக் காய்களாய் ஒழிவதையும் அந்நாளில் சேற்றிடத்தில் நிற்றலை வெறுத்த செங்கட் காரெருமை நள்ளிரவில் ஐயெனக் கரைதலையும் இவர் ஒருபாடலில் (குறு. 261) அழகுறப் பாடியுள்ளார். முன்பனிக் காலத்தில் காதலரைப் பிரிந்திருந்து செயலற்ற மகளிரின் நீரொழுகும் கண்ணைப் போல் கருவிளை மலருமென்று இவர் புனைவது (அகம். 394) காலத்திற் கேற்ற உவமப் புனைவாம். அக்காலத்தில் தலைவனின் பிரிவையாற்றாத தலைவி புணர்ச்சியை விரும்பிப் பற்களைத் தீப்பிறக்குமாறு கறித்து நடுங்குவதாகவும் (அகம். 217) இரவெல்லாம் விழித்திருந்து நாழிகைக் கணக்கெடுக்கும் காவலரைப் போல அவள் நெஞ்சு புண்ணுற்ற விழுமத்தினால் துஞ்சாது வருந்துவதாகவும் (குறு. 261) அவள் கூற்றில் வைத்து இவர் பாடுவன உணர்ச்சி மிக்கனவாம்.

**கழி** - 1. உப்பங்கழி. தெளிந்த கழி - உப்பங்கழி - இடத்துத் தீப்போலும் பூவினை யுடையது தொண்டி மாநகரம் (புறம். 17:12,13). நெற்கழனியில் பறவையை ஓட்டுபவர் பனங்கருக்கால் கழியிடத்து மீனைச்சுட்டு அதனுடன் மதுவையும் உண்பர் (புறம். 29:13-15). கானலையுடைய தொண்டி கரிய கழியின்கண் மலர்ந்த நெய்தற் பூவான் தேன் மணக்கும் (புறம். 48:3,4). வண்டிகள் கானற் கழி யிடத்துள்ள உப்பை முகந்து கொண்டு மலை நாட்டை நோக்கிச் செல்லும் (புறம். 60:6,7). உப்பைக் கொண்டு செல்லும் வண்டிகளை யுடைய உமணரின் காட்டிடத்த தாகிய கழிநீரால் அலைக்கப்பட்ட குன்றம் இகழுந்தன்மைய தன்று (புறம். 313:5-7). மகளிர் கடல்நீராடிக் கயத்தில் மூழ்கிக் கழியிடத்துப் பூத்த நெய்தற்பூக்களைப் பறிப்பர் (புறம். 339:6-8). கலங்கள் கொணர்ந்த பொன்னாகிய பொருள்கள் கழிகளில் இயங்கும் தோணிகளால் கரைசேர்க்கப்படும் (புறம். 343:5,6). கழிசார்ந்த பகுதியில் சிறுவெள்ளுப்பின் விலையைச் சொல்லிப் பெருமலைகள் பொருந்திய நன்னாடுகட்குக் கொண்டு சென்று விற்கும் உமணர்குடி தழைத்திருக்கும் (புறம். 386: 16,17). புதா என்னும் புள்ளினம் கரிய நீர்நிறைந்த பெரிய கழியிடத்தே துழவி மீனைப் பிடித்துண்ணும் (புறம். 391:15,16). கழிகளால் சூழப்பட்ட நெல் விளையும் வயலின்கண் பறையை முழக்கிப் புள்ளினங்களை ஓட்டுவர் (புறம்: 396:3,4). கரிய கழி வழியாகக் கடலில் செல்லும் ஓடங்கள் வந்திறங்கும் (புறம். 400:20). இமையவரம்பன் நெடுஞ்சேரலாதனின்வேற்படை பகைவர் மார்பைப் பிளக்க, அப்புண்ணினின் றொழுகும் உதிரத்தால் மணிநிற இருங்கழியிடத்துள்ள நீர் செந்நிறமாகியது (பதி. 11:7-10). நீல மணியாற் செய்த கலம்போன்ற கரிய இதழையுடைய நெய்தலின் பசிய இலையையுடைய குளிர்ந்த கழிக்கண் குருகுகள் மீனைத் துழாவிப் புன்னைமரக் கிளைகளில் தங்கும் (பதி. 30:2-4). செல்வக்கடுங்கோவாழியாதன் கருநிற முண்டாகின்ற மலர்களையுடைய கழியிடத்தே மலர்ந்த நெய்தற் பூவின் நிறத்தோடு உயர்ந்தெழுந்த மேகத்தினும் மிக்க செல்வத்தை வழங்கினான் (பதி. 64:16-18). கரிகாலனின் சோழநாட்டில் மலையிடத்து மந்திகள் கழியிடத்து மூழ்கின; கழியிடத்து நாரைகள் மலையிடத்துத் தங்கின (பொரு. 224,225). முதுவெள்ளிலை என்னும் ஊர், பெரிய கழியிடத்தே உப்புப் பாத்தியின் வெள்ளுப்பு விற்கும் அளவர் ஒலியுடையது (மது. 117-119). பாண்டி நாடு கரிய கழியிடத்துப் பாத்தியில் விற்கும் தித்திப்புக் கூட்டிப் பொரித்த புளியோடு ஆண்டு விளையும் வெள்ளிய உப்பும் கொண்டது (மது. 318). பெருங்கடலிடத்தே பெருகும் ஓதம் கரிய கழிகளிடத்தே பெருகிப்பாய்ந்து மீண்டது (மது. 540-542). காவிரிப்பூம் பட்டினம் பந்தியிலே நிரல்படக் குதிரைகளைப் பிணிக்குமாறு போல உப்பு விற்ற நெல்லினைக் கொணர்ந்த படகுகளைத் தறிகளிலே பிணிக்கும் கழிசூழ்ந்த தோட்டங்களைக் கொண்டது (பட். 29-32). ஓமைமரம் பெரிய கழியில் வாழும் முதலையின் முதுகுத் தோல் போன்ற பொருக்கமைந்த அடிப்பகுதியை யுடையது (அகம். 3:1,2). கொடுங்கழி யிடத்து உண்டான தாழையின் விழுதாலியன்ற கயிற்றால் ஞாழல் மரக்கிளையில் கட்டப்பட்ட ஊஞ்சலில் தலைவியும் தோழியும் ஆடினர் (அகம். 20:5,6). கடற்கரையை அடுத்துள்ள கழிகளிடத்தே மாலையில் மலர்கள் குவிந்தன (அகம். 40:1). நெய்தல் நிலத்துக் கரிய கழிகளில் கொடிய சுறா மீன்கள் செருக்கித் திரிந்தன (அகம். 50: 2). கடற்கழியில் முதலைகளுடன் சுறாமீனும் திரிதரும் (அகம். 80:1,2). கழியிடத்துள்ள சுறாமீன் எறிந்தமையான் தலைவனின் ஊர்தி யாகிய கோவேறு கழுதை காலிற் புண்பட்டு நடை மெலிந்தது (அகம். 120:10,11). தலைவியின் நெய்தற்பூக்களையுடைய பெரிய கழிசூழ்ந்த ஊரின்கண் பனை ஓங்கிய மணற்படப்பையில் இரவில் அன்றிற்

பறவை தன் பேடையை அழைக்கும் (அகம். 120: 14-16). தலைவியின் கண்களுக்கு, வளைந்த கழியில் வண்டு வாய்திறந்த நெய்தற்போதுகள் புறங்கொடுத்தன (அகம். 130:12,13). பரதவர் கரிய கழியாகிய வயலில் ஏராலே உழுதலின்றி வெண்கல்லுப்பு விளைத்தனர் (அகம். 140:1-3). கழியில் நெய்தல் மலர் காலையில் தேன்மணம் கமழும் குவளை மலரோடு தண்ணென மலரும் (அகம். 151:8-12). உமணர் தெண்ணீர்க் கழியிடத்தே விளைந்த வெண்கல் உப்பைப் பலருமறிய விலை கூறி விற்றனர் (அகம். 159:1,2) நிறைசூல் யாமை அடும்பின் கொடியை இழுத்து வளைந்த கழியின் கரைக்கண்ணமைந்த வெண்மணல் பக்கத்தில் சேர்த்து மறைவாக முட்டையை ஈனும் (அகம். 160:3-6). அம்பு போன்று பாயும் தொழில்பயின்ற அழகு நடைக் குதிரைகள் செழுநீர்த் தண்கழியை நீந்தி் கால் தேரின் உருளைபட்டுத் துணிப்புண்ட நெய்தலரும்புகள் பாம்பு உயர்த்திய தலைபோல் நீர்க்கு மேலே தோன்றின (அகம். 160:11-14). கடற்கரைச் சோலையும் தலைவனிடத்து என் நிலையைச் சொல்லாது; இக்கழியும் கூறாது; ஆகவே நீ சொல்லல் வேண்டும் எனத் தலைவி நண்டினை நோக்கிக் காமம் மிக்க கழிபடர் கிளவியாற் கூறினாள் (அகம். 170: 1,8). மகளிர் கண்களைப் போல் கழியின்கண் நெய்தல் மலர்ந்தது (அகம். 170:4). புலால் நாறும் கரிய கழியிடத்துத் துழாவிப் பறவைகள் தாழையில் தங்கின (அகம். 180:10-12). பெருங்கழி கடலில் கலக்குமிடத்தில் தலைவன் தேரிற்பூட்டிய குதிரைகளைக் காலின்கண் சுறாமீன் தாக்கியதால் அவை விரைந்த நடையைத் தவிர்ந்தன (அகம். 190:11-14). மலர்கள் விரிந்துள்ள நெடுங்கழியிடையே பெரும் புகழுடைய காவிரிப் படப்பைப் பட்டினம் இருந்தது (அகம். 205: 11,12). பெருங்கழியைத் துழாவி முகந்த வலை இறாமீனுடன் இனமீன்களையும் குவிக்கும் (அகம். 220: 16,17). மருங்கூர்ப் பட்டினம் பெரிய கழியையும் தோட்டத்தையுமுடையது (அகம். 227:20). பெருங்கழியின் பக்கத்தில் கடல் ஓதத்தினால் மலர்ந்த நெய்தல் மலர் கண்ணைப் போன்று காட்சியளித்தது (அகம். 230:1,2). நாரை நீலமணி போலும் நெய்தற் பூக்களையுடைய கரிய கழியினின்றும் மேல் எழுந்து பறந்ததால் கடற்கரைச் சோலை தனித்துள்ளது (அகம். 240:2-4). கழியிடத்துள்ள மலர்கள் இதழ் குவியவும் பொழில் சூழ்ந்த மனைக்கண் உள்ள புன்னையின் நறுமலர் பொன்னிறங் கொண்டு விரியவும் மாலைப்பொழுது வந்தது (அகம். 260: 8-10). சிறுகுடிப் பாக்கத்திலுள்ள இனமீன் வேட்டுவர் பெருங்கழியில் மலர்ந்த நீலப் பூக்களைப் புலிநகக் கொன்றைப் பூக்களுடன் சூடுவர் (அகம். 270:1-3). கழியிடத்துள்ள புன்னையின் மிக்க மலர்களை யுடையது கடற்கரைச் சோலை (அகம். 290:9). நீண்ட கழியைத் துழாவிய அன்னம், அடும்பின் கொடி பொருந்திய மணல் மேட்டிலிருந்து தனது அழகிய சிறகினைக் கோதி உலர்த்தும் (அகம். 320:8,9). நெய்தல் நிலத்தலைவன் கழியின்கண் பூப்பறித்தும் கடற்கரைச் சோலையில் தங்கியும் வரிமணலால் வண்டற் பாவை செய்து விளையாடியும் மகிழ்ந்தான் (அகம். 330:1,2). ஒல்லென்று ஆரவாரிக்கும் முழக்கத்துடன் கழியிடத்து நீர்ப் பெருக்கு மிக்கது (அகம். 340:8,9). கழியினிடத்துச் சிறிய பூங்கொத்துக்களை யுடைய நெய்தற்பூவும் காவியும் குவிய வீசும் அலைகளோடு நீர்ப்பெருக்கு எப்பொழுதும் மிகுந்தது (அகம். 350: 1,2). வளைந்த கழியிலுள்ள சேற்றில் மலர்ந்த நெய்தற்பூவின் நுண்தாதுக்களை உண்டு வண்டின் கூட்டம் அதனை விட்டு நீங்கியது (அகம். 360:3-5). பூக்கள் நிறைந்த கரிய கழியிடத்தில் இருந்த இலையோடு நெய்தல் மலரையும் அதன்வழி வந்த தேராழி கொணர்ந்தன (அகம். 400:20,21). இலைக்கு மேல் உயர்ந்த நெய்தற்பூ கரிய கழியின்கண் ஓதம் மிகுந்தோறும் குளத்தில் மூழ்கும் மகளிரது கண்ணை ஒக்கும் (குறு. 9:4-6). கருங்கழியினிடத்துள்ள நீலமணி போன்ற பூக்கள் குவியும்படி வாடைக் காற்று வந்தது (குறு. 55:1-3). தலைவி ஆயத்தோடு கழியிடத்துள்ள காவிமலர் கொய்தும் கடலலையில் ஆடியும் விளையாட்டயர்ந்தாள் (குறு. 144:1-3). கடலொலி அடங்க இருளினால் கடற்கரைச் சோலை மயங்க இருங்கழியின் துறையிலுள்ள நீர் பொலிவழிந்தது (குறு. 177:1,2). கடற்கரையிலுள்ள சிறு வெண் காக்கை நள்ளிரவில் களிற்றின் செவியைப் போன்ற பசிய இலையைக் கலக்கிக் குளிர்ந்த கழி நீரை இரையின் பொருட்டுத் துழாவும் (குறு. 246:1-3). புன்னைக் கிளையில் இருந்த நாரை கழியிடத்துள்ள சிறுமீன் உணவை வெறுத்தால் வயலிலுள்ள தேன் மணக்கும் நெய்தற் பூவை நெற்கதிரோடு விரும்பும் (குறு. 296:1-4). கருங்கால் வெண் குருகு மீனுணவின் பொருட்டுக் கழியின் நீரை ஆராய்ந்து உணவுண்டு அடைகரைத் தாழையில் தங்கும் (குறு. 303:1,2). பெருங்கடற்கரையிலுள்ள சிறுவெண் காக்கை கரிய கழியிடத்து இரையைத் தேர்ந்துண்டு பூச்சோலையில் தங்கும் (குறு. 313:1-3). கடலிடத்துப் பரதவர் கொண்ட மீனின் வற்றலும் கழியிடத்து அவர்கொண்ட இறாமீனின் வற்றலும் வெண்மணற் பரப்பில் புலால் நாற்றம் வீசச் செய்யும் (குறு. 320:1-3) கடற்றுறையின்கண் இன மீன்

[illegible] கொண்ட கருங்கழியை நீந்தித் தலைவன் வந்தான் (குறு. 324:2,3). விரையும் குதிரை பூண்ட நெடிய தேரின் உருளை ஏறியதால் நலிந்த கருங் கழியிலுள்ள நெய்தல் போலத் தலைவி வருந் தினாள் (குறு. 336:4-6). கடற்கரைப் பரப்பில் நின்ற தாழை கழியில் ஓதம் மிகும்போது கழிநீர் ஓடிய பக்கத்தே தளர்ந்து ஓதம் மீளும்போது தானும் மீண்டது (குறு. 340:4-6). தாழை பொருந்திய விளங் கும் அலைகளைக் கொண்ட கொடுங்கழி கடலை எல்லையாக வுடைய சிறு நல்லூரில் இழுமென ஒலிக்கும் (குறு. 345:5–7). தலைவனின் உறைவிடம், மணலில் உமணர் செலுத்தும் உப்பு வண்டிகள் மடுத்து முழங்கும் ஓசையைக் கேட்டு வயலிலுள்ள நாரைகள் வெருவும்படியான கழிசூழ்ந்த நெய்தல் நிலத்தின்கண் உள்ளது (நற். 4:7-12). பூவில் வண்டி னம் ஒப்பியும் கழிசூழ் கானல் ஆடியும் தலைவி தோழியுடன் விளையாட்டயர்ந்தாள் (நற். 27:1-4). கழியைச் சேர்ந்த இடத்தில் நெய்தல் மலர் தண்டு நீண்டு கண்களைப் போலப் பூத்தன (நற். 27:9,10). சிறுவெண்காக்கை கரிய பெரிய குளிர்ந்த கழியிடத் தைத் துழாவி இறாமீனை எடுத்துத் தன் பெடையை அழைத்துக் கொடுக்கும் (நற். 31:2-4). கான்டவாயில் என்னும் ஊர் கலங்கிய நீரையுடைய கடற்கழி சூழ்ந்த தோட்டங்களை யுடையது (நற். 38:6,7). பறவைகள் வந்திருத்தலால் உதிர்ந்த பூக் கலந்த சேற்றினையுடைய கழியிடத்து ஓடும் தேரின் குதிரையை அலைநீர் கழுவும் (நற். 63:8–10). திரண்ட தண்டினையுடைய நெய்தல் மலர் மறையும் படி நீர்பெருகும் கழியில் துணையோடு சுறாமீன் இயங்குதலும் செய்யும் (நற். 67:6,7). கொல்லும் தன்மையுள்ள சுறா இயங்கும் ஒள்ளிய நிறத்தை யுடைய பெரிய கழியில் நீலமணி போன்ற நெய்தல் மலர் நிறைந்திருந்தன (நற். 78:1,2). தெளிந்த கழி யின்கண் உள்ள நீரிடத்துத் தேருருளின் உள்வா யளவு அழுந்தினும் பறவை போற் பறக்கும் குதிரை வலவன் தாற்றுக் கோல் படாமலே தேரை இழுத் தோடும் (நற். 78:7-11). பரதவர் கழியிடத்துக் கொண்ட இறாமீனின் கூட்டத்தைக் கடற்பரப்பில் காய வைப்பர் (நற். 101:2,3). பெரிய கழி சூழ்ந்த பாக்கம் கல்லென ஒலிக்குமாறு தலைவனின் தேர் வரும் (நற். 111:9,10). கரியகழியின் ஓதநீர் மனை எல்லையைக் கடந்து நிறைந்தது (நற். 117:2). கரிய கழியின்கண் இரையுண்ணும் குருகுக் கூட்டம் இரவில் பனைமடலில் கட்டிய குடம்பையில் தங்கும் (நற். 123:1–4). கரிய கழியில் இரைதேடிய நாரை தன் சிறகை உதறும் நீர்த்திவலையாலே பாக்கம் குளிர்ந்து நடுங்கும் (நற். 127:1,2). இருங்கழியிலுள்ள அலை மோதுதலான் வெண்மணல் ஈரமாகியது (நற். 145:1). இடந்தலைப்பாட்டின்கண் தலை வியைக் கண்ட தலைவன் இவள் கருங்கழி யருகில் நிலைபெற்றுறையும் மாதோ என ஐயுற்றான் (நற். 155:7). நாரையால் இன்பம் நுகரப் பெற்ற பேடை கழிக்கரையில் பெயருமிடங்களில் பெயர்ந்து சிறு மீன் உண்ணாது தாழைக் கிளையில் வருத்தத் துடன் தூங்கும் (நற்.178:2-5). நீலமணி போலும் கருங்கழியிடத்துள்ள சோலையில் தலைவன் வந்து தலைவியை அணையாது செல்வது தலைவியை இற்செறிப்பதை விடக் கொடியது (நற். 191:10-12). கருங்கழியிலுள்ள நீர்நாயின் குருளை கொழுமீனை மாந்தித் தில்லை மரப் பொந்துகளில் துயிலும் (நற்.195:1-3). கழி சூழ்ந்த கண்டல் மரங்களாலாகிய வேலியையுடைய படப்பைக் கிடையே பரதவரின் முள்ளிச் செடி வேய்ந்த சிறு குடில்கள் இருந்தன (நற். 207:1-3). வளைந்த கழியிடத்து இரைவேட் டெழுந்த குருகின் குத்துக்குத் தப்பி இறவின் ஏற்றை மணல்மேட்டிற்கு ஓடியது (நற். 211:3-6). பரதவர் தாம் சிறுகுடிக்குச் செல்லும் வழியில் நெய்தற்பூவை மிதிக்கும் வளப்பமுடைய கரிய கழி பொருந்திய மலிநீர்ச் சேர்ப்பன் தலைவன் (நற். 239:8). கடலங் காக்கை, நிரம்பிய சூல்கொண்ட தன் பேடைக்குக் கரிய சேற்றில் உள்ள அயிரை மீனைத் தேர்ந்தெடுக்கத் தெளிந்த கழியிடத்துப் பூவுடைக் குட்டத்தைத் துழாவும் (நற். 272:1-6). கழிக்கரையி லுள்ள சேறுபட்ட காலையுடைய கோவேறுக்ழுதையின் குளம்புகளில் இறாமீன்கள் ஒடுங்கப்பட்டு அழிந்தன (நற். 278:7,8). ஒண்ணு தல் மகளிர் உயர்ந்த கழியிடத்துக் கண்போல் மலர்ந்த நெய்தல் மலரைப் பறித்து மனையை அணி செய்தனர் (நற். 283:1-3). வளைந்த கழியின் கண் நெய்தல் மிக்க பனிநீர்ச் சேர்ப்பன் முதலை யின் பகைக்கஞ்சாது வந்தான் (நற். 287:3-7). கரிய கழிச்சேற்றிடமெங்கும் வெண்ணிற உப்பு விளை யும் (நற். 311:4). காற்று மோதுதலான் கடற் கரைச் சோலையிலுள்ள கண்டல் மரத்தின் பசுங் காய் நீல நிறமுடைய பெரிய கழியிடத்து உள்ளே சென்று வீழ ஆம்பல் வெண்ணிறத்துடன் மலரும் (நற். 345:1-5). வளைந்த கழியருகுள்ள அடும்பின் மலரைத் தலைவன் பறித்தான் (நற். 349:2). தெண்கடல் நாடு கண்டல் மரங்களை வேலியாக வுடைய கழிசூழ்ந்த கொல்லைகளை உடையது (நற். 363:1,2). கடற்கரைச் சோலையிலுள்ள பனை யிலிருந்து பழம் கழியை அடைந்து நெய்தல் மலர் வருந்துமாறு சேற்றில் வீழக் குருகினம் ஓடும் (நற். 372:1-5), கண்டல் மரத்தை வேலியாகவுடைய் கழி

சூழ்ந்த நல்லூரின் மனையிலிருந்து இருங்கழி துழவும் பரதவர் படகிலுள்ள விளக்குகளை எண்ணுவர் (நற். 372:10-13). மாலைப்பொழுதில் கடற்கரைச் சோலை சூழ்ந்த கழியிடத்து நீர் வெள்ளமாகிப் பெருக நீலநிற நெய்தலின் இதழ்கள் குவியக் கடலலை ஓயாது அலைக்கும் (நற். 382:1-3). வளைந்த கழியில் இரை தேடும் விருப்பத்தால் உண்டாகும் வருத்தம் தீர மாலைப் பொழுதில் பறவைகள் மரத்தின் மீது தம் குஞ்சுகளுடன் தங்கின (நற். 385:3-5). கழியின்கண் முள்ளி மலர்தற் கிடனான குளிர்ந்த கடலை யுடைய நெய்தல் நிலத்திற்குரியவன் தலைவன் (ஐங். 108:1,2). பாண் மகன் ஊரைச் சூழ்ந்துள்ள கழியின் பக்கத்தே இருந்து தூண்டிற் கயிற்றில் இரையை மாட்டி வைத்துக் கருக்கொண்ட கயல்மீனைக் கொன்றான் (ஐங். 111:1-3). சேர்ப்பன் செருந்திமரங்கள் பரவிய கரிய கழிக் கரையை உடையவன் (ஐங். 112:1,2). நீலநிறமுடைய பெரிய கழியிடத்துள்ள நீல மலர் மாலைக் காலத்தில் குவியும் (ஐங். 116:2,3). வள மிக்க கரியகழியிடத்துப் பூக்கள் மலரும் (ஐங். 120: 3). கரியகழியில் பாய்ந்தோடும் குதிரை பூட்டப் பெற்ற நெடுந்தேரினன் தலைவன் (ஐங். 134:1,2). நாரையின் உடலினின்றும் நீங்கிய செந் நிறத்தை யுடைய தூவி தெளிந்த கழியிடத்துப் பரக்கும் (ஐங். 156:2-4). கடற்கரையி லுள்ள சிறுவெண் காக்கை மிக்க ஆழமான நீரையுடைய கரியகழியின்கண் இரை தேர்ந்துண்டு பூக்கமழ் சோலையில் தங்கும் (ஐங். 162:1-3). கடற்கரை யிலுள்ள சிறுவெண் காக்கை பெரிய கழியின் கண் எழும் துவலையின் பேரொலியில் உறங் கும் (ஐங். 163: 1, 2). கடற்கரையிலுள்ள சிறு வெண் காக்கை கரிய கழியிடத்தே அயிரைமீனை இரையாகத் தேர்ந்துண்ணும் (ஐங். 164:1,2). கடற் கரையில் வாழும் சிறுவெண்காக்கை நீரற்ற கழி யின்கண்ணுள்ள சிறிய மீன்களைத் தன் வயிறார உண்ணும் (ஐங். 165:1,2). கடற்கரையிலுள்ள சிறு வெண்காக்கை கரிய கழியிடத்தே கூட்டமான கெடிற்று மீன்களைப் பற்றித் தின்னும் (ஐங். 167: 1,2). கடற்கரையில் வாழும் சிறுவெண் காக்கை கரிய கழியிடத்தேயுள்ள நெய்தற்பூக்களைச் சிதைக் கும் (ஐங். 170:1,2). பிரிவாற்றாத தலைவி மாலைப் பொழுதைப் பார்த்து வளைந்த கழியிடத்துள்ள நெய்தல் மலர்கள் தாம் மலரும் பொழுதிலேயே கூம்பும்படி நீ காலைப் பொழுதிலே வந்தாலும் வருவாய்; நின்னைத் தடுப்பார் யார் எனக் கூறினாள் (ஐங். 183:4-6). மீனுண்குருகு நெய்தல் நிலத்தில் கழியின்கண்ணுள்ள நெய்தல் மலரில் தங்குதலை விட்டுக் கரைக்கண்ணுள்ள இளந் சோலையில் தங்கும் (ஐங். 184:1,2). தலைவனின் தேர், நீர் பெருகும் கழிமருங்குள்ள நெய்தல் மலர் தனது உருளையில்பட்டுத் தேன் துளிக்கும்படி பன்முறையும் வந்தது (ஐங். 186:3,4). கருங்கழியில் பறவைகளின் கூட்டம் சிவந்த இறாமீனை வயிறு நிரம்பத் தின்னும் (ஐங். 188:1). தலைவி கடலிற் பிறந்த சங்கினாலியன்ற வெள்வளை செறிக்கப் பட்ட முன்கையினையும் கடற்கழியில் மலர்ந்த மலர் சூட்டப்பட்ட கூந்தலையும் உடையவள் (ஐங். 191:1,2). பரதவர் தெளிந்த கழியின்கண் இறா மீனைப் படுப்பர் (ஐங். 196:3). பொய்கை மலரின் புதிய தேனை உண்ட வரிவண்டு கழியிடத்துப் பூத்த நெய்தற் பூவின் தாதை நுகர்ந்து வயல்பூத்த தாமரையை நோக்கிச் சென்றது (கலி. 74:1-4). கதிரவன் மறைதலானும் மதியம் நிலவொளியைப் பரப்புதலானும் பறவைகள் இரையைத் தின்று தாம் தங்கும் புகலிடம் சேர்தலால் ஆரவாரம் அடங்கி மலர்கள் குவிந்து நீலமணியொத்த பெருங் கழி துயில் கொண்ட தன்மையை ஒக்கும் (கலி. 121:1-6). கரியகழியில் ஓதம் போவதும் வருவது மாய்த் தடுமாறும் (கலி. 123:18). மலர்மணக்கு மிடத்து, இது தலைவன் மார்பிற்கிடக்கும் மாலை யின் மணம் எனத் தெளிந்த தலைவி, பின் அதனைக் கழியிடத்துப் பூத்த மலர் மணமே என உணர்ந்து மயக்கம் கொண்டு வருந்தினாள் (கலி. 126:10-13). கொடுங்கழி சூழ்ந்த குன்று போல் உயர்ந்த வெண்மணலிடத்துத் தலைவன் செய்த குறி தப்பாது தலைவி வந்தாள் (கலி. 127:6,7). மாலைப்பொழுதில் கரிய கழியில் மலர்கள் குவியத் தலைவியின் நெஞ்சமும் தலைவனை உள்ளுதலால் செயலிழந்து கூம்பியது (கலி. 130:11-13). கரைகவர் கொடுங்கழியிடத்துப் பறவைக் கூட்டம், அலை மோதுவதால் இறந்த மீனை இரையாகத் தின்ப தல்லது, ஒன்றன் உயிரைப் போக்கி உண்ணாது (கலி. 131:31-33). தலைவனையே எண்ணிக் குவியும் தலைவியின் உள்ளம் போன்று நெடுங்கழியி டத்துள்ள மலர்கள்குவிந்தன (கலி. 143:36). கருங்கழி யிலுள்ள நெய்தல்மலர் இதழ் குவிய வெண்ணிலா வீசியது (கலி. 145:39,40). பொருளில்லார் ஆற்றும் இல்லறம் போலக் கருங்கழியின்கண் மலர்கள் கூம்பின (கலி. 148:6).

2. கோல். தலைவியின் அண்ணன்மார் குடிமை முதலியவற்றால் ஒவ்வார்தாருக்கு அவளைத் தருவ தில்லை யென்று அவர் தரும் செல்வம் வேண்டா ராய்ப் போரை விரும்பிக் கழிப்பிணி - கோலால் பின்னிக்கட்டப்பட்ட - கேடயத்தை ஏந்தினர் (புறம்.

...12-14). கோவலரின் குடில் சிறு தூற்றை யுடைய வாயிலையும் செறிக்கப்பட்ட கழிகளை யுடைய கதவினையும் கொண்டது (பெரு. 148,149). குடில் கழிகளால் தெற்றிப் பண்ணின புல்லான் வேயப்பட்டது (மலை. 438,439). கழியோடு பிணிக் கப்பட்ட தோலால் இயன்ற கிடுகின்கண் பகை வர் பொழியும் அம்புகள் தாக்கின (அகம். 24:14).

3. காம்பு. அதியமான் நெடுமானஞ்சியின் வேலைக் கண்ட பகைவர் தம் கிடுகைக் கழியொடு - காம் பொடு - பிடித்துக் கொண்டனர் (புறம். 98:10,11).

4. மூங்கில். வையையாற்றில் மகளிர் கண்ணுக்கு நிறைந்த அழகையுடைய கழியால் - மூங்கிற் கழி யால் - நீரை வாங்கித் தம் மேல் செலுத்துகின்ற வனை அரக்கு நீரை அடக்கிய வட்டாலே எறிந்து ஆடினர் (பரி. 11:54,55).

**கழிகலமகடூஉ - கைம்பெண்.** மல்லிநாட்டுத் தலைவ னாம் காரியாதியின் அடையாத பெரிய இல்லம் அவன் இறந்தமையால் புலம்பிக் கொய்யப்பட்ட மழித்த தலையுடன் கைம்மை நோன்பால் கலக்க முற்ற அவனது அணிகலத்தை நீக்கிய கழிகலமகடூஉ - கைம்பெண் - போலப் பொலிவிழந்து காணப் பட்டது (புறம். 261:1,16-19).

**கழிகலமகளிர் - கைம்பெண்டிர்.** தலைவன் இறந்த பின்பு கழுவுகின்ற மழித்த தலையிலிருந்து நீரொழுக ஆம்பலரிசியை உண்ணும் கழிகலமகளிர் - கைம் பெண்டிர் - போல வாழும் திறம் நினைந்து யான் உயிர் வாழ்ந்திருப்பது அரிது எனத் தன் கொழு நன் சாவ இருக்கும் நிலையில் வீரன் ஒருவனின் மனைவி கூறினாள் (புறம். 280:10-15).

**கழு - 1. கழுமரம்.** எயினர் அரண் செம்மையாக திற் கின்ற நெடிய முனையினையுடைய வலிய கழு - கழுமரம் - நிரைத்த ஊர் வாயிலைக் கொண்டது (பெரு. 127-129). கழு உயர்ந்து நின்றாற் போன்று கொழுவிய தாமரை மொட்டுகள் உயர்ந்து நின்றன (அகம். 176:5).

2. கறத்தற்கரிய பசுக்களைக் கறத்தற்கு இரண்டு தலையும் சீவி மாலையாகக் கட்டிக் கழுத்திலிடுவது. கோவலர் கறவைக் கலங்கள் வைத்த உறியோடு தோற்பையிடத்துக் கழுவோடே சூட்டுக் கோலை யும் இட்டுச் சுருக்கிய பைகளையும் தூக்கிக் கொண்டு கொன்றைத் தீங்குழல் இசைத்துச் சென் றனர் (கலி. 106:1-4).

**கழுகு - பறவை வகை.** கண்டார்க்கு அச்சம் பயக்கும் இடத்தையுடைய போர்க்களத்தில் கழுகுகளும் சிவந்த செவியையுடைய பருந்துகளும் வட்டமிட் டுத் திரியும் (புறம். 370:25-27). காலத்தில் மறவர் வில்லிடப் புண் சொரியும் குருதி சூழக் கிடந்தோ ரது கண்ணைக் கழுகுகள் கவர்ந்து சென்று தம் பார்ப்புகளுக்குக் கொடுக்கும் (அகம். 31: 6-11). தலைவன் சென்ற நெறியில் கருங்கண் காக்கையு டன் கழுகுகள் வானத்தில் பறக்க யானை ஆளைக் கொன்று திரியும் (ஐங். 314:2-5).

**கழுத்து - கண்டம்.** இறந்துபடுவோரது ஊனைத் தின்ன விரும்பிப் பறக்கும் நெடுங்கழுத்தினை யுடைய பருந்து கோடுயர்ந்த பக்கமலையிலுள்ள மரக்கிளை களில் தங்கியிருக்கும் (அகம். 247:11-13). தலைவி மெய்க்கண் பூண்டன வன்றிக் கழுத்திடத்திலும் அழகையுடைய மகரக்குழை யாடுதலால் உண்டான அழகை யுடையவள் (கலி. 109: 14, 15). வையை யாற்றில் மகளிர் புனல் தூவி விளையாடுகையில் ஒருத்தி தோற்றுத் தன் கண்களைக் கையால் மூடிக் கொண்டாள்; உடனே ஒருத்தி வெற்றியால் இறுமாந்த தன் கழுத்திலிருந்த பொன் நாணால் அவளது தோளைக் கட்டிச் சிறையாகப் பிடித்தாள் (பரி. 7:51-56). நீராடும் மகளிருட்சிலர் வையையிடம் எம் காதலரின் கழுத்தில் அமைந்த கை நீங்கா வண்ணம் யாம் அவரைப் புல்லும் வீறு பெறுக என வேண்டினர் (பரி. 11:116,117).

**கழுது - 1. பேய்வகை.** பிணக்குவியலைக் கணநரி யொடு கழுதும் இழுத்துண்டன (புறம். 369:15,16). கவைத்தலைப் பேய்மகள் கழுதினை ஊர்ந்து இயங்குமாறு பகைவர் நாட்டைப் பாழாக்கினான் இமையவரம்பன் நெடுஞ்சேரலாதன் (பதி. 13:15,19). நடுக்கங்குலில் மதுரையிலே பேய்களும் அணங்கு களும் வடிவம் பெற்றுக் கூற்றுவன் கொலை செய் தற்கு ஊரும் தேராகிய கழுதுடன் சுழன்று திரிந்தன (மது. 631-633). கழுது வழங்கும் யாமத்தில் இல் லெலியை இரையாகக் கொள்ள வரும் வல்வாய்க் கூகை குழறும் (அகம். 122:13,14). கழுது நடமாடும் நள்ளிரவில் முதுமரத் துறையும் முதுபுள் (பேராந்தை) கதுமெனக் குழறும் (அகம். 260:12,13). கழுதுலாவும அரைநாளில் காவலர் சோர்ந்திருக்கும் அற்றம் பார்த்துக் கதவு திறந்து வந்து தலைவன் தலைவி யைக் கூடினான் (அகம். 311:3-5). கழுது அடிக்கடிக் கண்ணைக் கொட்டி நடுங்குமாறு மழை ஓவாது வீசியது (குறு. 161:1,2). மணிகளைக் களையப்பட்ட வேற்படை யொப்ப கழுது கால்கொள்ளும் பானாள் (நற். 171:8,9). ஊர் முழுதும் துயில் கொள் ளும் இராப்பொழுதில் கழுது விளக்குமுற இயங்கும் (நற். 255:1). விளங்கும் தொடியணிந்த பேய்மகள் இரையை விரும்பிச் சுழலவும் அவள் ஊர்தியாகிய கழுது உணவைத் தின்னவும் சுரநெறியில் சிறுகண்

யானை ஆள்வீழ்த்துத் திரிதரும் (ஐங். 314:1-4).

**2. பரண்.** கழுதின் - பரணின் - மேலிருந்த சேணோன் எய்த அம்பு மருமத்திற் பாயப் பன்றி நெறி கெடக் கிடந்தது (மலை. 243-247). கானவன் புருவைப் பன்றி வருதிறம் நோக்கிக் கழுது மிசைக் கொளுத்தி வைத்த விளக்குத் துணையாகத் தலைவன் வந்து தலைவியைக் கூடினான் (அகம். 88: 4-7). ஓங்குதினைப் பெரும் புனத்துக் கழுதில் இருந்த கானவன் கள்ளுண்டு களித்திருந்தான் (அகம். 102:1,2). மலையிடத் தமைந்த கழுதின் மிசையுள்ள கானவன் இரவில் மேயவரும் யானை மீது எறிந்த கவண்கல் வேங்கை மலரை உதிர்த்துத் தேனடையைச் சிதைத்துப் பலவின் பழத்துள் தங்கும் (அகம். 292:8-14). மலையிடத்தே உயர்ந்த கழுதில் உள்ள சேணோன் இரவில் தினைமேய் யானையினம் இரிந்தோடுமாறு எறிந்த கவண்கல் ஒலிகேட்டு மலையிடத்துயிர்கள் அஞ்சும் (அகம். 392: 12-18). மலையிடத்துச் சேணோன் இழைத்த நெடுங் காலுடைய கழுதில் கானமஞ்ஞை தன் சேக்கை யெனக் கருதிச் சென்று தங்கும் (நற். 276:5-7).

**கழுதை - விலங்குவகை.** பல்யாக சாலை முதுகுடுமிப் பெருவழுதி பகைவர் நாட்டில் தேர்குழித்த தெருவின்கண் வெள்வாய்க் கழுதையின் புல்லினத்தைப் பூட்டி உழுது அவரின் நல்லெயிலை அழித்தான் (புறம். 15:1-3). அதியமான் பொகுட்டெழினி இருங்களந்தோறும் வெள்வாய்க் கழுதைப் புல்லினம் பூட்டி உழுது வெள்ளைவரகும் கொள்ளும் விதைத்தான் (புறம். 392:8-10). பல்யானைச் செல்கெழு குட்டுவனின் படைஞர் சேர்ந்த பகைநாட்டு மன்றம் கழுதையால் உழப் பெற்றது (பதி. 25:4). மிளகுப் பொதி சுமந்து சாத்தொடு செல்லும் கழுதை வடுவழுந்தின வலிய முதுகினையும் மேனோக்கிய செவியையும் உடையது (பெரு. 78-80). திருந்துவாள் வயவர் (வணிகவீரர்) பொதி சுமக்கும் கழுதைக் கூட்டத்தின் பின் வருவர் (அகம். 89:12, 13). சுரநெறியில் அடுக்கிய உப்புப் பொதி சுமந்த வெள்ளிய புறத்தினையுடைய கழுதைகளின் தேய்ந்த குளம்புபட்டுப் பரற்கற்கள் பிறழ்ந்தன (அகம். 207: 5-7). பண்ட வாணிகர் சுரநெறியில் நெடுஞ் செவியினையும் குறுங்காலினையும் உடைய ஆண் கழுதைக்கு முதுகிற் சுமந்த பண்டத்துப் பாரத்தால் உண்டான தளர்வினைப் போக்குவர் (அகம். 343:12-14).

**கழுந்து – தடியின் திரண்ட நுனி.** பரத்தையரின் பணைத்தோள் உழுத்தங்காயை அடித்தற்குரிய கழுந்துள்ள தடி போன்றது (குறு. 384:1,2).

**கழுநீர் - நீர்ப்பூ வகை.** கயவாய் எருமை கொழுமீன் துணிபட நடந்து வள்ளிதழ்க் கழுநீரை மேய்ந்தது (சிறு. 41,42). கண்ணகன் பொய்கையில் கழுநீர் பொலிந்தது (மது.171). காதற் கணவரைக் கூடுதற்கு மகளிர் அழகிய இதழையுடைய தண்ணறுங் கழுநீரால் மாலை கட்டினர் (மது. 550,551). மலையில் உள்ள சுனையில் பூத்த கழுநீர்ப் பூவுடன் ஒப்பனையாற் பொலிவு பெற்ற கூந்தலசையும் முதுகினள் தலைவி (அகம். 59:12-14). கழுநீர், ஆம்பல் ஆகியவற்றின் இதழ் ஒடியாத பூக்களுடன் கூடிய பசிய தழையுடையைத் தலைவியும் தோழியும் அணிந்தனர் (அகம். 156:8-10). கருந்தாள் எருமை கழுநீரை மேய்ந்தது (நற். 260:1). வையை வெள்ளம் ஓடையிலுள்ள கழுநீர் மலர்கள் மீது பாய்ந்தது (பரி. 7:23, 24). வையையின் இருசார் கரையிலும் மல்லிகை, மௌவல், சண்பகம், அல்லி, கழுநீர் முதலிய பல மலர்கள் கமழ்ந்தன (பரி. 12:77-81). செங்கழுநீர் காண்க.

**கழுமலம் – சேரநாட்டு ஊர்.** பெரும்பூட்சென்னி கணையனை வென்று கழுமலத்தைக் கைப்பற்றினான் (அகம். 44:13,14). நல்தேர்க் குட்டுவனுக்குரிய கழுமலம் என்னும் ஊரினைப் போன்ற அழகுடையவள் தலைவி (அகம். 270:9,10). நற்றேர்ச் செம்பியன் கழுமலத்தை வென்றான் (நற். 234:6).

**கழுவாய் - உய்தி.** ஆன்முலை யறுத்தோர்க்கும் மகளிர் கருச்சிதைத்தோர்க்கும் பார்ப்பார்த் தப்பியோர்க்கும் கழுவாய் - உய்தி - உள; ஆனால் நன்றி கொன்றோர்க்கு உய்தி இல்லை (புறம். 34:1-6).

**கழுவுள் - 1. இடையர் தலைவன்.** பெருஞ்சேரல் இரும் பொறை கழுவுளை - இடையர் தலைவனை - வெற்றி கொண்டான் (பதி. 71:17). போர்செய்தற் கேற்ற வன்மையுடைய கழுவுள் என்பான் இளஞ் சேரலிரும்பொறைக்குத் தோற்றோடினான் (பதி. 88:7).

**2. குறுநில மன்னன்.** காமூரின் தலைவன்; கழுவுள் அடுபோர்த் திறனும் வீயா விழுப்புகழும் விண்தோய் வியன் குடையும் உடையவன்; இவனது காமூரைப் பதினான்கு வேளிர் ஒன்று கூடித் தாக்கிய போது அவ்வூர் கலங்கியது (அகம். 135:10-14). வென்றி வேலினையும் சிறந்த வன்மையினையும் உடைய கழுவுளுக்கு உரியது காமூர் (அகம். 365:11, 12). [இடையர் தலைவனான கழுவுளும் குறுநில மன்னனாகிய கழுவுளும் வேறாவர் என்பர் சுப்பிரமணியம் (ப. மு. பக். 241). இவ்விருவரையும் ஒருவராகக் கருதுவர் இராமச்சந்திரன் (வ.பி.அ. பக். 50).]

கழை - மூங்கில். வலிமையுடைய கழையை - மூங்கிலை- தின்னும் யானையின் காலகப்பட்ட நீள்முளை சிதையுமாறு போலப் பகைவர் வருந்தப் பொரு தழிப்பேன் எனச் சோழன் நலங்கிள்ளி உரைத் தான் (புறம்: 73:8-11). வேள்பாரியின் மலையில் ஆடுகழை நரலும் (புறம். 120:18). சிலம்பில் விசும் புறக் கழை வளரும் (புறம். 158:20,21). கழைவளர் இமயம் (புறம். 166:33). அருவியார்க்கும் கழை பயில் நனந்தலை (புறம். 168-1). கடுவன் செம்முக மந்தியொடு பொலிந்து மால்வரை அடுக்கத்துக் கழையிசைத் துஞ்சும் (புறம். 200:2-5). கழைக்கண் நெடுவரை (புறம். 251: 4). கணவனை இழந்த பெண்ணின் வளையல் இல்லாத வறுங்கைக்கு நெல் எழாத பைங்கழையின் பட்டை நீங்கிய நிலை உவமை (புறம். 253:3-5). சிறுவன் களிறெறிந்து பட்டனன் என்றறிந்து மகிழும் வீரத்தாயின் உவகைக் கண்ணீர் வலிய கழை அசையும் வெதிரம் என்னும் மலையில் மழை பெய்தவழித் துளிக்கும் நீர்த்துளியினும் பலவாகும் (புறம். 277:2-6). வறங் கூர்ந்த நீளிடையில் கழைகாய்ந்து உலறியது (புறம். 370: 9). கழையின் உட்புறத்தே யுள்ள தோல் போன்றது இழை தெரியாத ஒண் பூங்கலிங்கம் (புறம். 383: 10, 11). கிணைமகள் நெடுங்கழைத் தூண்டிலால் பிடித்த மீனை விற்றுப் புளிங்கூழ் அட்டாள் (புறம். 399: 15, 16). மழைபெயல் மாறிய கழை திரங்கு அத்தத்தில் களிறு காடு சிலம்பப் பிளிறும் (பதி. 41:14). கொல்லிமலை கழைவிரிந் தெழுதரும் மழைதவழ் நெடுங்கோட்டினை யுடை யது (பதி. 73: 14, 15). மழை தவழும் துயல் கழை நெடுங்கோடு (சிறு. 265). மழைவிளையாடுங் கழை வளர் அடுக்கம் (பெரு. 257). பாண்மகன் நெடுங் கழையாற் செய்த தூண்டிலின் முள்ளில் வைத்த இரையை வாளை கதுவியது (பெரு. 284-287). கழை வளர் சாரல் (மது. 242). அலங்கு கழை நரலும் சிலம்பு (மலை. 161, 162). கழைவளர் நெல்லின் அரிசியை உலையிலிட்டனர் (மலை. 180). கூத்த ருடைய பிள்ளைகளை யொத்த கடுவன் நெடுங் கழைக் கொம்பரில் உகளும் (மலை. 236, 237). உலர்ந்த கழை தம்மில் இழைந்ததனால் பிறந்த தீ காடெங்கும் பரவியது (மலை. 248). மகளிர் ஒலிக்கும் கழையாற் செய்த தட்டையால் புனத்தில் கிளியை ஓட்டினர் (மலை. 328, 329). கழையில் இசைவளர் தூம்பு (பெருவங்கியம்) அமைத்தல் (மலை. 533). வளம் முற்றிய நவிரம் என்னும் மலையில் கழை வளர்ந்தது (மலை. 578, 579). கழை நரல் சிலம்பு (அகம். 8:8). வேங்கை மலர்கள் உதிர்ந்து பரவிய குறவரின் குரம்பையைக் கண்ட வேழம் புலி எனக் கருதி மழைபடு சிலம்பிற் கழைபடப் பெயரும் (அகம். 12:9-12). த்ழைத்த கழை ஒன்றோ டொன்று உராய்ந்ததால் ஒண்பொறி பிறக்கும் (அகம்.39:6). கடுவளி வெப்பமுறச் செய்த கொடி விடு கூர்எரி அலங்கு கழையை நரலத் தாக்கிப் பக்க மலையிற் பரவியது (அகம். 47:4-5). மலை தொறும் பெரிய கழை உராய்தலால் எழுந்து காற் றால் மிகுந்து தோன்றும் எரி மீன்கொள் பரத வரின் படகிடை தோன்றும் மிக்க சுடரெனத் தோன் றும் (அகம். 65: 9-13). அணங்குடைய பக்கமலை யில் மஞ்சு சுமந்து ஆடுகழை நரலும் (அகம். 72:10, 11). கழைவளர் அடுக்கத்து ஆடும் மயில் விறலி போல் தோன்றும் (அகம். 82: 9,10). அகவன் மகளிர் இருங்கழையுடைய சிறுகாட்டில் ஆய்ந்து கொண்டறுத்த சிறிய கணுக்களை யுடைய நுண் கோலையுடையவர் (அகம். 97:9-11). ஒலிகழை நெல் லின் அரிசியொடு உலர்ந்த மான் தசையை ஆயர் சேரியிலுள்ள தயிர்பெய்து அட்டு வழிச் செல் லும் வம்பலர் உண்பர் (அகம். 107:5-10). ஒன்றை யொன்று விழையும் அணில்கள் சோலையிலுள்ள கழையில் விளையாடும் (அகம். 109:5,6). புல்மறந்து அசையும் வான்கழை உதிர்நெல் நோக்கிக் கலை தன் பிணையை விளிக்கும் (அகம். 129:3-5). உறுவளி ஒலிக்கின்ற கழையின் கணுக்களைப் பொருந்தித் தாக்குதலினால் கூர்எரி எழுந்தது (அகம். 153:9,10). கழை கண்டன்ன துளையுடைய திரண்ட தண்டி னையுடையது தாமரை (அகம். 176:3,7). சிலம்பில் காண்டற்கினிய கழை நெருங்கியிருந்தது (அகம். 177: 6,7). கழைகவின் போகிய மழையுயர் நனந்தலை (அகம். 221:10). யானை கழை தின்னும் (அகம். 232: 2,3). மழை பெயல் மறந்த கழை திரங்கு இயவு (அகம். 245:5). கழையால் மறையும் உயர்ந்த தோற்ற முடைய மலையைக் கடந்து தலைவன் பொருள் தேடச் சென்றான் (அகம். 249:19). கரிய முகமுடைய முசுக்கலை பசுமையற்ற நெடுங்கழை பாய்தலின் வெதிர்படு வெண்ணெல் வெப்பம் மிக்க பாறையில் விழுந்து உகிர்நெரி ஓசையிற் பொரியும் (அகம். 267: 9-12). மலையில் கடுஞ்சூல் ஈன்று கழை தின்ற பிடியானையைக் களிறு தடவ அது துயிலும் (அகம். 328:11-14). மழை வாயாது கரந்தமையின் அடுக் கத்துள்ள கழை திரங்கின (அகம். 347:9,10). விழை தக ஓங்கிய கழை துஞ்சு மருங்கு (அகம். 392:26). ஏனல் காவலர் விடும் கவண் கல்லின் ஒலிக்கு அஞ்சிய கான யானை கைவிட்ட பசுங்கழை மீனைக் கவர்ந்து கொண்ட தூண்டிலைப் போல மேலே செல்லும் (குறு. 54:2-4). அவிழ்த்து விடப் பட்ட குதிரை துள்ளியெழும் எழுச்சியைப் போன்று

வளைத்துப் பின் விட்டமையால் வானத்தைத் தோயும் பசுங்கழைகளை உடையது குன்று (குறு. 74:1,2). உயர்ந்த மலைப்பக்கத்தில் இனிய தேனி றாலைக் கிழித்த கூட்டமாகிய பசுங்கழையை யானை தின்றது (குறு. 179:4-6). இருங்களிற்று இன நிரையின் ஏந்தலால முறிக்கப்பட்ட கரும்பினது கணுக்களின் இடையேயுள்ள பகுதியளவு உள்ள பைதல் ஒரு கழை சுரத்தில் வளர்ந்திருந்தது (குறு. 120:2-4). மலைச்சாரலில் ஒன்றோடொன்று உராய்ந்து ஒலிக்கின்ற கழை நிவந்திருந்தது (குறு. 253:5). நீரற்ற கடத்தற்கரிய பாலையில் நெடுங் கழை திரங்கியிருந்தது (குறு. 331:1). கழைதிரங்கிய அரிய வழியிலே தலைவி தலைவனுடன சென்றனள் (குறு. 396:7). கூத்தி நடந்த நோன்கயிற்றில் குரங்குக் குட்டி ஆடுதலைக் கண்ட குறக்குறு மாக்கள், இரும்பொறையி லுள்ள கழைக்கண் விசைத் தெழுந்து ஏறித் தாளங்கொட்டுவர் (நற். 95:2-6). தலைவனைக் கூடிய தலைவி மிகுதியான கழை உயர்ந்து தோன்றும் தன் சீறூர்ககண் சென்றாள். (நற். 204:10, 11). வானுயர் நெடுங்கோட்டில் கழை நெருங்கி உயர்ந்து வளர்ந்திருந்தது (நற். 257:3). மழையின்மையால் கல்லதர்ச் சிறுநெறி யில் கழைகள் கவின் இழந்தன (நற். 333:1,2). மந்தி பெருவரையடுக்கத்து அருவியாடி, உயர்ந்த கழையில் ஏறி அதன் நுனியை ஊசலாகக் கொண்டு ஆடும் (நற். 334:1-3). ஆண்பன்றி ஏனல் மாந்திப் புலிக்கஞ்சாது கழை வளர் சாரலில் துஞ் சும் (நற். 386:1-5). நெடுங்கழை நிவந்த நிழல்படு சிலம்பில் பிடி கன்றீன்று வருந்தும் (நற். 393:1,2). ஆடுகழை அடுக்கத்து அகனகண் அருவி இழிதரும் (ஐங். 220:1,2). மலையின்கண் உள்ள மூங்கிலின் கணுக்கள் தோற்றுவித்த கழைக்கோல் தன் மீதி ருநத வலிய குரங்குக்குட்டி வேறு கோலிற் பாய்ந்த அளவில் குளததின மீன எறி தூண்டில் போல நிமிர்ந்தெழும் (ஐங். 278:1-3). ஒன்றோடொன்று உராய்நது கொண்ட கழையில் முழங்கும் அழல் கண்டு வயமா வெருவும் (ஐங். 307:1). கழை முதிர் சோலைக் காடு கடந்து தலைவர் சென்றா (ஐங். 315:4). நெடுங்கழை முளிய வேனில் நீடியது (ஐங். 322:1). முளிந்த கழையுடைய உயர்மலையைக் களிறு அகத்திருப்பத் தீ வளைத்துக் கொண்டது (கலி. 25:5,6). வள்ளைப் பாட்டுப் பாடும் பெண் டிர் களிற்றுக் கொம்பு உலக்கையாகவும் சேம்பின் இலை சுளகாகவும் கொண்டு கழை நெல்லைப் பாறையாகிய உரலிலிட்டுக் குற்றுவர் (கலி. 41:1-3).

**2.** தண்டு. கயத்திட்ட வித்து வறட்சியால் சாவாது கழைக்கரும்பு - தண்டினையுடைய கரும்பு-போலத் தழைக்கும் (புறம். 137:5,6). கதிர்க் கனத்தின் மிகு தியால் வளைந்த நெல்லின் கழை செறிந்த வய லின் பிழையா விளையுளைக் கொண்ட பகைவர் நாடுகளைக் களங்காய்க் கண்ணி நார்முடிச்சேரல் கைப்படுத்தினான் (பதி. 32: 13, 14). தீங்கழைக் கரும்பு ஆலைக்கு அலமலரும் (மலை. 119). மலை யிடத்தெழுந்த ஓசைகளுள் கரும்பின் கழையை ஆலைதோறும் சாறு கொள்ளும் ஓசையும் ஒன்றா கும் (மலை. 340,341). நீண்ட மலையில் அசையும் கழையுடைய பெரிய மூங்கில மேல் காற்றினா[illegible] வளையும் (அகம். 27:1,2). வாடுதலுற்ற ஒலிக்கின்ற மேல் நோக்கி எழுந்த கழையினையும் நெற்களை யும் உடைய நெடுவெதிர் உடையுமாறு கானம் வெம்பியது (அகம். 185:5-8). அகன்ற வயலிலுள்ள நீடுகழைக் கரும்பின் கணைக்கால் வான்பூ கோடைக் காலத்துப் பூளைப்பூப் போல வாடை யால் அசைந்தது (அகம்: 217:3-5). கழனிக கரும்பின விளை கழை பிழிந்த சாறு அட்ட பாகினோடு பால்பெயது அளைந்த பாசவலினை உறந்தையில் உள்ளோர் பிறர்க்குப் பகுததுக் கொடுப்பர் (அகம். 237:11-14). மழை மறந்தமையின் மூங்கிலின இள முளை திரங்க அதன் கழை ஒலிக்கும் வியலகம் வெம்பியது (அகம். 241: 6,7). மலையிற் பெய்த மழை யால் அருவி ஓடிப் பெரிய வெதிரின அழகிய கழை முரியும்படி தாக்கும் (அகம். 278:5-8). மூங்கிலின் அழகிய கழை உடைதற்கு ஏதுவாய கவண் கல்லின் வேகம் தங்கிய கடிய தாக்குதலை யுடைய வெப்பம் மிக்க பகற்பொழுதில் யானை மேயச்செல்லாது (அகம்.309:12-15). உழவர் காஞ்சி மரத்தின் குறிய துண்டுகளை நட்டு இனிய சுவையுடைய மெலலிய கழையுடைய கரும்பினைக் குறுக்கே வைத்து அணைகட்டி நீரைத் தேக்கினர் (அகம். 346:5-7). எரிவாய்க் கோடைக் காற்று மூங்கிலின் அங்கழை தீண்டியது (அகம். 353:7,8). குன்றில் அசையும் கழையினையுடைய மூங்கில் ஒலிக்கும் (அகம். 395:13,14). சேவற்குருவி சூல் முதிர் பேடைக்கு ஈனில் அமைக்கும் பொருட்டு இனிய கழையினையுடைய கரும்பின நாறா வெண்பூவைக் கோதி யெடுக்கும் (குறு. 85:2-5). மலைப்பககத்து ஆடுகழை உயர்ந்த பைங்கண் மூங்கில் ஓடும் மேகத்தைக் கிழிக்கும் (நற். 28:6-8). விடரகமெங்கும் ஓங்கு கழையினையுடைய மூங்கில் நிறைந்திருந்தது (நற். 51:1, 2). வளைந்த கழையுயர்ந்த நீண்ட காம் பினையுடைய நெய்தல் தழையைத் தலைவி அணிந்தாள் (நற். 96:7,8). அறிவு மிக்க தூக்கணங் குருவி முயன்று செயத கூட்டினையுடைய மூங் கிலின் அங்கழை அசையுமாறு வாடை வீசியது

(நற். 366:9-11). எழில் வேழம் தன் பிடிக்குற்ற கடுஞ்சூல் வயாவிற்கு நெடுஞ்சினையுடைய கரும் பின் கழையை முறிக்கும் (கலி. 40:26-28).

3. கோல். வேலிப்புறத்து நின்று வேண்டிய மாக் கட்கு அறங்கருதி அகத்தோர் பிடுங்கி யெறியும் கரும்பாகிய கழை - கோல் - தாமரைப் பூம்போது சிதைய வீழ்ந்தது (புறம். 28:11-13). குறவர் பரண் மீதேறித் தினைப் பயிரை அழிக்க வரும் யானை மீது எறியுங் கவண்கல், கருவிரல் ஊகம் பார்ப் பொடு இரியுமாறு பெரிய மூங்கிலினது பசிய கழை கடந்து வருகின்ற விசை மாறாது வரும் (மலை. 203-210). இலங்கு பூங்கரும்பின் ஏர் கழையிருந்த வெண்குருகு நரல வாடை வீசும் (அகம். 13:21-23). நீலமென்சிறை வள்ளுகிர்ப்பறவை (வௌவால்) மாம் பழத்தையும் நெல்லிக்காயையும் உண்டு மூங்கிற் கிளையில் தொங்கும் சோலையில் கழை உயர்ந்து வளர்ந்துள்ளன (குறு. 201:3-6). மந்தியின் குட்டி பெரிய மூங்கிலின் ஈரமுடைய கழையேறி அசைந் தாடும் போது அது சிறுகோல் கொண்டு மதியைப் புடைப்பது போல் தோன்றும் (ஐங். 280:1-3).

4. ஓடக்கோல். இளஞ்சேரலிரும்பொறைக் குரிய வானியாறு கழை - ஓடக்கோல் - நிலைபெறாத ஆழத்தையுடையது (பதி. 86:9,12). காவிரிப் பேரி யாறு கழைநிலை பெறாத நீர்ப்பெருக்கு உடையது (அகம். 6:6). யாறு கழை மறையும் வெள்ளம் கல் லிற் பொருது ஒலிக்க அச்சந்தரும் முதலைகளை யுடையது (அகம். 72:7-9). கழைமாய் காவிரி கடலில் மண்டும் பெருந்துறையில் பெருங்கடல் ஓதம் இற வொடு வந்து கோதையொடு பெயரும் (அகம். 123: 11-13). கழையால் அளந்தறிய முடியாத வெள்ள முடையது காவிரி (அகம. 326:10). கழை யழி நீத்தம் (அகம். 341:5). கல்லலைத்து இழிதரும் கான் யாற் றின் கழைமாய் நீத்தம் காடலைத்து ஆர்ப்பரித்தது (நற். 7:3,4).

5. குழல் (ஆகுபெயர்). ஆடுமகள் பக்கத்திலே கழை - குழல் - ஒலிப்ப பல்லியங்களும் முழங்க நோன் கயிற்றின மீதேறி நடந்தாள் (நற். 95:1,2).

6. கரும்பு. முன்பனிப் பருவ மழை நீண்ட கழை யில் - கரும்பில் - ஓங்கின பூவை நிறங்கெடும்படி காற்றால் தூற்றியது (கலி. 31:15,16).

7. தூம்பு (ஆகுபெயர்). புலிதாக்கிய புண் மிகுந்து வலி குன்றிய களிறு, வருந்தும் பெண் யானை யால் தழுவப் பெற்று வளைந்த மூங்கிலாலாய கழையின - தூம்புபோல - ஒலிக்கும் (அகம். 398: 22-24).

8. மூங்கிற்குழாய். காட்டிலுள்ள எருமையின் கழை யில் தோய்த்த தீந்தயிரும் தேனிறாலும் பிறவும் நன்னன் தலைவாயிலில் நிறைந்தன (மலை. 523, 529).

**கழைதின்யானையார் - புலவர்.** இவர் இயற்பெயர் அறியுமாறில்லை. இவர் பாடிய பாடலில் அமைந் திருந்த கழைதின் யானை என்ற சிறப்புத் தொட ரால் இவர் பெயர் பெற்றிருக்கலாம் என ப. மு. கூறும் (பக். 242). எழுவள்ளல்களுள் ஒருவனாகிய வல்விலோரியின் வள்ளன்மையை இவர் பாடியுள் ளார் (புறம். 204. அடிக்குறிப்பு). 'ஈயென விரத்தல் இழிந்தன்று; அதனெதிர், ஈயேன் என்றல் அதனி னும் இழிந்தன்று; கொள்ளெனக் கொடுத்தல் உயர்ந்தன்று; அதனெதிர், கொள்ளேன் என்றல் அதனினும் உயர்ந்தன்று' என்ற சிறந்த கோட் பாடுகளை இவர் பாடிய ஒரே பாடலான புறம் (204) உணர்த்தும்.

**கள் – 1. மது.** சோழன் முடித்தலைக் கோப்பெருநற் கிள்ளி, கொழுவிய மீனையும் விளைந்த கள்ளை யும் - மதுவையும் - உடைய நாட்டிற் குரியவன் (புறம். 13:12,13). நெற்கழனியில் புள் ஓட்டுவார் பனங்கருக்கால் கழிமீனைச் சுட்டு அதனுடனே வெங்கள்ளையும் உண்டு அமையாராய்த் தெங் கினது இளநீரை உதிர்ப்பர் (புறம். 29:13-16). உறந் தையில் கடுங்கள் பருகுநர் தம் நடுங்கு கையான் உகுத்த நறுஞ்சேற்றில் ஆடிய வறுந்தலை யானை நெடுநகர் வரைப்பின் முழவொலியைக் கேட்கும் (புறம். 68:15-18). இனிய அழனற கள்ளினை உடை யது ஆமூர் (புறம். 80:1). அதியமான் நெடுமான் அஞ்சியின் வேல் பகைவரது நறிய கள்ளினை யுடைய நாட்டை யழித்தலால் சுரையோடு பொருந் திய கரிய காம்புடனே ஆணி கலங்கி நிலை கெட் டது (புறம. 97:4-7). நாட்காலையே கள்ளையுண்டு நாளோலக்கத்து மகிழ்ச்சியை மகிழின் தேர் வழங்கு தல் யார்க்கும் எளிது (புறம். 123:1,2). பிட்டங் கொற்றன் தந்த பெருவளத்தால மகிழ்வுற்ற பாணன் உலையை ஏற்றுக; சோற்றை ஆக்குக; கள்ளையும் நிறைய உண்டாக்குக; விறலியர் கோதையும் புனைக; பிறவுஞ் செய்க; சிறிதும் வருந் தல் வேண்டா என்று கூறி அவனை வாழ்த்து கிறான் (புறம். 172:1-5). குறும்பில் இருந்த செங் கண் ஆடவர் கள்ளை யொருவர்க்கொருவர் மாறு மாறாக நீட்டிட நிரம்ப உண்டனர் (புறம். 177:6-8). பாண்டியன் கீரஞ்சாத்தன் தன் வீரர் கள்ளுடைய கலத்தினராய் உள்ளூரில கூறிய நெடுமொழியை மறந்து போர்க்களத்தே அஞ்சி நீங்குங்காலை அவர் க்கு அரணாகத் தான் முந்துறுவான் (புறம்.178:8-11).

களமர்அரிக்கப்பட்ட முதிர்ந்த விரும்பத்தக்க கள்ளை ஆமையிறைச்சியுடனே வேட்கைதீர உண்பர் (புறம். 212:2,3), சிறிய அளவினையுடைய கள்ளைப் பெற் றானாயின் எமக்கே தருவன்; பெரிய அளவினை யுடைய கள்ளைப் பெற்றானாயின் யாம் உண்டு ப்பாட எஞ்சியவற்றைத் தான் மகிழ்ந்து உண்பன்; அது கழிந்ததே என்று அதியமானைக் குறித்துத் தம் கையறு நிலைப் பாடலில் ஔவையார் இரங் கிக் கூறுவர் (புறம். 235:1-3). வெளிமான் கள்ளைக் காமுறுபவன் (புறம். 238:5). ஆனிரையைக் கவர்ந்து வரச் சென்ற கள்ளை விரும்பும் மறவன் விடாய்த் தலும் உண்டு; எனவே, மூதிர்ந்த கள்ளையுடைய சாடியைப் பாதுகாத்து வைப்பாயாக என உலோச் சனா்ர் கள் விறபோனிடம் கூறுவது போலப் பாடி யுள்ளார் (புறம். 258:9-11). நிரை கோடற்கு எழுந்த மறவனை வடித்த தேறலை யுண்க என வேண்டியும் அவன் அக்கள்ளினை வாழ்த்திக் கொள்ளானாய் வாளைக் கொண்டனன் (புறம். 269:7,8). நின்னைக் குறித்து எறியும் வேலைத் தான் இடைநின்று ஏற் றுத் தாங்குவனாதலால் கள்ளை முன்னர் இவ னுக்குத் தந்து பின்னர் நீ உண்பாயாக என ஔவையார் வேந்தனிடம் மறவனின் குடிநிலைச் சிறப்பினை எடுத்தோதினார் (புறம். 290:1,8). பேரூ ரின்கண் காய்ச்சிய கள்ளைப் பெறும் பொருட்டு மனைக்குட் புகுந்து கட்கலயத்தைத் தேடுவது போல மறவனொருவன் தன் தமையனைக் கொன் றவனைத் தேடினான் (புறம். 300:3-6). வேந்தன் கள்ளினை வாழ்த்திச் செத்தைகளால நிறைந்து தூசி துடைக்காத முற்றத்தில் விடியற்காலத்தே குடித்த மயக்கத்தால் உறங்கினான் (புறம். 316:1-3). பாணர் கள்ளைக் கொண்ட கலங்களையுடையவர் (புறம். 316:10). இல்லங்களில் அடப்படும் கள்ளினை யுடையது சிலகுடிச் சீறூர் (புறம். 329:1). புனலைப் போன்று மிகுதியான கள்ளையுடையது குட்டுவ னது முசிறி நகர் (புறம். 343:9,10). நறிய கள்ளை யுண்பவன் அதற்குத் துணையாகச் சில வெஞ்ச ணங்களை இட்டு உண்ணுகையில் பற்களில் இடையே ஒட்டிக் கொண்டவற்றை நாவினால் தேர்ந்து பலவினால் அரைபடுமாறு செலுத்துவ தால் நாச் சிவப்பேறியது (புறம். 347:1,2). பிணஞ் சுடுகளத்தின்கண் பாடையை நிறுத்திய பின்பு பரப்பிய தருப்பைப் புல்லினமேல் கள்ளுடனே படைக்கப்பட்ட உணவைப் புலையன் பிணத்திற் குப் படைப்பான் (புறம். 360:16-19). சோழன் நல்ல தாரினையும் கள்ளினையும் உடையவன் (புறம். 378: 5). விழா இல்லாவிடிலும் உழவரது உண்கலத்தில் பெரிய கெடிற்று மீனாகிய உணவுடனே இஞ்சி

முதலிய பூவிரவிய கள் நிறைந்திருக்கும் (புறம். 384: 8,9). சேரலாதன் விரும்பிய பரிசிற்பொருளைத் தரு தலிற் பொய்த்தல் செய்யான் ஆதலின் நீயிர் கள் ளினை உண்மின்; உண்டற்குச் சோற்றை அடுமின் என்று பாணன் தன் சுற்றத்திடம் கூறினான் (பதி. 18:1,12). பல்யானைச் செல்கெழு குட்டுவன் மழை போன்ற மிக்க கள்ளினையுடையவன் (பதி. 21:17). நிரம்புதலையும் அகலுதலையும் அறியாத கோக்காலி யினிடத்தே நிறைந்து நெடிது இராத பாணைக ளில் உள்ள குறைவுபடாத கள்ளைக் கூத்தர் உண் டனர் (பதி. 43:33-35). மறவர் பகைவேந்தர் ஏறிச் சென்ற யானையின் வெணகோட்டை.க் கொண்டு கொடி அசையும கள்விற்கும் கடைத் தெருவிலே புக்குப் பெறுதற்கு அரிய கள்ளிற்கு விலையாகக் கொடுத்து உண்டு மகிழ்வா (பதி. 68:9-11). அரிய பறையுடைய தொழில செயவோர் போரிலே பகைவரைத் தோல்வியடையச் செய்து பெற்ற பொருள்களைக் கள்விற்கும் கடைத்தெரு வில் விலையாகக் கொடுப்பர் (பதி. 75:9,10). புலி யனைய மறவன பகைமன்னர் நாடுசெனறு ஆனிரை கவர்ந்து வந்து நறவு விலை கொடுததுத் தன் இல்லிலே சமைத்த கள்ளில் இனிதாகிய தோப பியைப் பருகினான் (பெரு. 138-142). கள் அடுகினற மகளிர் வட்டில் கழுவின நீர் பல்கால் வடிதலின் நிறைந்து வழிந்த குழம்பிடத்துப் பல குட்டிகளை யுடைய பெண் பன்றி ஈரச்சேற்றை அளையும (பெரு. 339-342). கள்ளாகிய உணவினைக் கொண்ட குடிகள் மிக்க சீறூர்களை உடையது கொற்கை (மது. 137,138). மனனர் கள்ளினைக கொணட பெருமையுடைய பச்சைக்குப்பிகள் வற்றும்படியாக மதுவை உண்ணுவர் (மது. 228). சேறறிலே வலியற் றுத் தங்கிய எருதுற்ற வருத்ததைத் கள்ளை உண ணும் களமர் பெயர்ப்பதால் ஆரவாரம் எழுந்தது (மது. 259,260). அங்காடித் தெருவிடத்துக் காணப படும் பல்வேறு கொடிகளுள் கள்ளினது களிபபு மிகுதியைச் சாற்றுகின்ற கொடியும் ஒன்றாகும் (மது. 372,373). அச்சந் தோன்றுகினற யானையை யொத்த போக்கினையுடைய கள்ளினையுண்ணும் வீரர் தம்மிற் பெரும்போரைச் செய்தனர் (மது. 392,393). களளை விற்போர் களிப்பினையுடைய மது விற்கு விலை கூறினர் (மது. 662). மதுரை நகரத்து வியன் நகரில் இடங்கள் தோறும் கள அரிக்கப் பட்டது (மது. 753,758). அஃதை இனிய கடிய கள் ளினை யுடையவன் (அகம். 76:3). நெல்லறுப்போர் கட்டியநெற்கட்டினைக் கள்ளினை உண்ட களமர் களந்தோறும் கொண்டு செல்வர் (அகம்.84:12,13). மறவர் பிழிந்த தேனாற்சமைந்த நறிய கள்ளுண்ட

மகிழ்ச்சியினால் பகைவர் போர் முனையைக் கடந்து ஏறுகளோடு கூடிய ஆனிரை கொணர்வர் (அகம். 105 13-15). புதிய கள கமழும் நெய்தலஞ் செறுவின் வளங்கெழுவிய நன்னாடு கோசாக்குரியது (அகம். 117.5-7). செநநெல் அரியுநர் தங்கட்குக் கள்ளைக் கொண்டு பலகாலும் திரியும் சாகாடு சேற்றிற் பதிந் திடின அதனைப் போக்கக் கரும்பினை அடுக்கி இடைமடுபபர் (அகம். 116:2-4). உறையூர் இனிய கடுப்பு மிக்க கள்ளினை யுடையது (அகம். 137:6). தலைவியின் தாய் துறையினிடத்துறையும் கடவு ளுக்குக் கையுறையாகக் கள்ளும் கண்ணியும் வெள் ளாட்டுக்கிடாயும் செலுததினாள் (அகம். 156:13-16) யாமை தன் பிளந்த வாய நிறைந்திடப் பனங்கள் ளின் ஒழுககினை உண்டு களிநடையோடு சென்று வயலினை உழக்கி அயலிலுள்ள ஆம்பலிலையில் ஒடுங்கும் (அகம். 256:2-7). எவ்வி தன் பகைவரது வலியைக் கெடுத்த அரிமணவாயில் உறத்தூரிடத்தே அவன் படையாளர்க் களித்த கள்ளுடன கூடிய பெருஞ்சோற்றினால் பகலில் ஆரவாரம் எழுந்தது (அகம். 266:11-14). தினையாலாக்கிய கள்ளினை யுண்ட மறவர் விசைத்த வில்லினராய் வேட்டை யாடி முல்லை நிலத்தோட்டத்தே மானை யறுத் துணணுவர் (அகம் 284:8-10). தலைவியின் தந்தை மழை போன்ற கள்ளையும் விரையும் தேரினையும் உடையவன் (அகம். 298:15). கள்ளால் ஆகிய மகிழ்வு போல மகிழ்தற்கு ஏதுவாகிய செவ்வரி படாந்த மதர்த்த குளிர்நத கண்களை யுடையவள் தலைவி (அகம். 343:16-19). உழவர் கள்ளினையுண்ட மகிழவாலாகிய மிக்க செருக்கினைக் கொண்டவர் (அகம. 346:5). களம் பொலிய நெறபோரினை அழித்துக் கடாவிட்டுக் கள்ளுண்ட உழவர் கடாக் களைப பூட்டவிழ்த்து விட்டுக் கடுங்காறறில் நெல் தூற்றுவா (அகம. 366:2-4). களளைக்குடிகதம் விருப் பதனையுடையோர் அதனை உணணக கடைககுச் செனறு பெறாமல், ஊரின் அகத்துளள பனையினது நுஙகைக் கைக்கொண்டு மீள்வர் (குறு. 293:1-3). அகுதை இனிய கடுமையை யுடைய கள்ளை யுடையவன (குறு. 298:5). பெரிய இலையையுடைய பகன்றையினது மலர்நத வெண்மலர் இனிய கடுமை யாகிய கள்ளைப் போல நறுமணம் இல்லாதன வாகிக் கமழும் (குறு. 330:4,5). சோழர் இனிய கடுப் புடைய களளையும் இழையணிந்த நெடுந்தேர்க ளையும் உடையவர் (நற் 10.5,6). களளுண்டு மகிழ் வோர்க்குக் கள் அறுகினற காலத்து வேறுபாடு தோனறும் (நற். 35:10,11). வேட்டுவன இரவிடைத் தோளில் சுமந்து வந்த பல்வேறு பண்டப் பொதி களை ஏனைய கருவிகளுடன மனையகத்தே விடுத்து மறந்து அங்கு மிகுதியாகப் பருகிய கள்ளின் இனிய மயக்கத்தால் செருக்குண்டு கிடப்பான் (நற்.59:3-5). பெரியனின் களளின் மணங்கமழும் பொறையாறு என்னும் ஊர் போன்ற நல்ல தோள்களை உடை யவள் தலைவி (நற். 131:7-9). தலைவன் தலை விக்குச் செய்த தலையளியால் சோழரது ஆர்க் காட்டில் கள்ளுடைய சாடியில் வண்டுகள் ஒலித்து நீங்காத் தேர்கள் இயங்கும் தெருவின் ஆரவாரம் போன்று கவ்வை எழுந்தது (நற். 227:5-9). பனங் குடையில் இட்டு உணணும் கள்ளினாலாய பேரு ணவை உடையவன பாரி (நற். 253:7). பல்வேறு நாடுகளிலிருந்து வநத கலங்கள் தோன்றும் பெருந் துறைக்கண்ணே செருக்கு மிகுகின்ற கள்ளின் சாடி போன்ற தலைவியின இளமையும் அழகும் இல்லி டத்தே தங்கிக் கெடும் எனத் தோழி தலைவனிடம் கூறினாள் (நற். 295:5-8). நல்லோள் தநதையின் சிறு குடிப்பாக்கம் ஓங்கித் தோன்றும் இனிய கள் வடித லையுடைய பனைகளின் நடுவணது (நற். 323:1,2,6). தலைவியின எயிற்றிடத்து ஊறும் அமிழ்து போலும் இனிய நீர் கள்ளைக் காட்டினும் மகிழ்ச்சி தரும் (கலி. 4: 13,14). பூவாய் அழகிய கள்ளைப் பொதிதலைச் செய்யாத முகைபோலும் வெளளிய பல்லின் நுனிகள் தம்மிற பொரும்படி (பற்பறை கொட்ட) கடும்பனி வந்தது (கலி. 31:19,20). பிறர் காணாமல் உண்ட கள்ளின களிப்பு மெய்யின் கண் தோன்றி மிகுதலினால் பின் நாணாமற் சென்று பிறர் நடுங்கும்படி அக்கள்ளினைத் தாம் உண்டபடியை உரைத்தல் போலத் தலை வியின் களவொழுக்கம் வெளிப்பட்டது (கலி. 115:1-3). அற நெறியில்லாத தீ மொழிகளைத் தோற்றுவித்து அறச் செயலகளைத் தம்மிடம் தோன்றாமல் கலக்க வேண்டித் தெளியுங் கள்ளை யும் நறவையும் உண்டவரது உலகியல் கெட்ட மயக்கம் போல நன்மக்கள் ஆற்றுகின்ற காமம் உலகியல் தப்பி வேறோர் பகுதியாய் விட்டதோ எனத் தலைவி தோழியை வினவினாள் (கலி. 147:1-3). காமம் மிகுதலினால் உண்டாகிய கண் ணின் களிப்பை ஊரிலுள்ளவர்க்கு அஞ்சிக் கரத் தல், கள்ளை உண்டதனால் உண்டாய மயக்கத்தின் மதர்ப்பை ஊராரது பழிக்கு அஞ்சி மறைத்தலைப் போலும் (பரி. 10:63-68). வையைப்புனல கள்ளை யும் காமத்தையும் பொருந்தியதனால் எல்லையற்ற இன்ப வெள்ளத்தைத் தந்தது (பரி. 10:69,70). அருவி தந்த பலவகை மலர்களைத் திரை தள்ளிக் கொண்டு வந்து திருமருதத் துறைக்கண்ணே தருதலான் அத்துறை கள்ளை வாய்க்கொண்டு பருகும் நில மகளின் மிடறு போல விளங்கியது (பரி. 11:23-29). காதற் பரத்தையின் கெண்டையைப் போன்ற

கண்ணின் ஒள்ளிய நிறம் கள்ளாலும் புனலாட்டா லும் புலவியாலும் சிவந்தது (பரி. 16:39,40). மயக் கமும் புணர்தலும் பிரிதலுமாகிய காமத்தையும் கள்ளையும் உடன் விரவி, மகளிர் யாவரும் பாராட்ட அவர் தாம் விரும்பின காதலரொடு புனலாடுமாறு முன் பிரிந்தவரைக் கொண்டு வந்து கூட்டுதல் வையைக்கு இயல்பு (பரி. 20:108-111).

2. தேன். கோக்கோதை மார்பனது மார்பிற் கணிந்த கோதையானும் அக் கோக் கோதையைப் புணர்ந்த மகளிர் சூடிய கோதையானும் கழியின் கண் மலர்ந்த நெய்தற்பூவானும் கள் - தேன் - நாறும் கானலையுடையது தொண்டி (புறம். 48:1-4). வெண்ணெல் அரிபுநர் தண்ணுமை யோசையைக் கேட்டு அஞ்சிக் கணுவிடத்தே தோன்றும் மடலில் கட்டப்பட்டிருந்த இனிய தேன் கூட்டினின்றும் தேனீக்கள் நீங்கியதனால் குயவர் அத்தேனடையி லுள்ள களளை வடித்தெடுப்பர் (புறம். 348:1-3). கோசர் மலர்களிடத்திற் பெற்ற கள் நிறைந்த மனைகளை யுடையவர் (புறம்.396:7). பாணர் சுற்றத் தார் நிணத்தோடு சேர்ந்த கொழுவிய துண்டாகிய ஆட்டிறைச்சி பெய்த வெண்ணெல் வெண்சோற் றினையும் மலரரும்பு பெய்து பக்குவம் செய்யப்பட்ட கள்ளினது தெளிவுடன் உண்டனர் (பதி. 12:14-18) திருப்பரங்குன்றில் வண்டினம, தாமரையில் இராப பொழுது துயின்று, வைகறையில் கள் நாறுகின்ற நெய்தற் பூவை ஊதி, ஞாயிறு தோன்றின காலத்துச் சுனைப் பூக்களிலே செனறு ஆரவாரிக் கும் (முரு. 73-77). கழுநீர் மேய்ந்த எருமை பலாவின் நிழலில் மஞ்சளின் மெல்லிலை தன முதுகைத் தடவ மு.்றாத இளைய கள் நாற மென்று அசை யிட்டுக் ஃாட்டு மல்லிகையாகிய படுக்கையிலே துயிலும் (சிறு. 42-45). உழவர் வயலில் களை பறிப் போர் பறித்து எறிந்த நெய்தலின் கள் கமழும் புதிய பூக்களைச் சூடுவர் (பெரு. 211-214). வண்டு தங்கிய கமழ்பூம் பொய்கை கள் நாறும் நறிய நெய்தற் பூவினை யுடையது (மது. 250,253). தலைவியும் தோழியும் பறித்துக் குவிதத மலர்க ளுள் நீலமணிபோலும் கொததுக்களை உடைய கள் நாறும் நெய்தலும் (கருங்குவளையும்) ஒன்றாகும் (குறி. 84). கள் நாறும் குவளை (அகம. 150:11). தேன் பரந்து வண்டுகள் ஆர்க்கும் கோங்கின் கள் கமழும் புதுமலர் காற்று வீச உதிர்ந்தது (அகம. 153:16,17). தலைவனின் தேராழி உப்பங்கழி வழியே வந்ததால் நெய்தலின் முதிராத இளங்கள் நாறும்படி பல வற்றுடன் கட்டவிழ்ந்த தண்ணிய மலர்களைக் கொண்டு வந்தது (அகம். 400:21-23). புன்னைக் கிளையிலிருந்த நாரை கழியிடத்துள்ள மீனை வறுத்ததாயின் வயலிலுள்ள கள் மணககினற நெய்தற்பூவை நெற்கதிரோடு விரும்பும் (குறு 296: 2-4). தலைவி கானலிடத்து ஆயத்தாரோடு காலை யில் சென்று கொய்து கொணர்ந்த கள் நாறும் மலரையுடைய காவியின் (நெய்தலின்) தழையை அணி பெற உடுத்தினாள் (நற். 123:5-7) தலைவி புனல் விளையாட்டயர்ந்ததால் பெருந்துறைப் புனல் கள் பொருந்திய நறிய குவளையின மணங் கமழ்ந்து தண்ணியதாயிற்று (ஐங். 73:2-4). நாரை தன் காலால் மிதித்ததனால் இதழவிரிநத கண்ணைப் போலும் நெய்தல் மலர் கள் மணம கமழ்ந்தது (ஐங். 151:2-4). கதிரவன் தோனறிய போது பொய்கை யில் மலர்ந்த செவ்விய பூவிடத்துளள அழகிய கள்ளை வண்டுகள் கூடி நுகர்ந்தன (கலி. 71:1-3). கள் நிறைந்த பசுந்துழாய் மாலை யுடையவர் திருமால் (பரி. 15.54).

3. வண்டு. வயல் நெயதல இடையறாது பூக்கும் மரபினையும் நிரைத்த களளினையும - வணடினை யும் - உடையது (பதி. 27:10). கள் படரும் கூநதலை யுடையவள் தலைவி (அகம். 39:14).

**கள்வர்** - பொருளைக் கவர்வோர். அருஞசுரத்துக் களவர் பசுக்களைத் தொழுவிலிருந்து கொணடகனறிட அவர் பின்னே தொடர்ந்து சென்று செயயும போரி னைப் போலச் செல்லுமிடங்களில எல்லாம் ஓடியும தலைவியை அணுகப் பெற்றிலேன என மகட் போக்கிய செவிலித்தாய் புலம்பினாள் (அகம. 7:14-16). உடனபோகும் தலைவி தலைவன தன தோள் துணையாகத் துயிற்றவும் துயிலாதவளாய் வேட் டைக் கள்வர் ஏறுகோட் பறையினை யடிக்கும் பறையொலி கேட்டு வருநதுவளோ எனச் செவிலி அழுதாள் (அகம். 63: 16-19). கள்வருடைய பகை மிக்க கவர்த்த நெறிகளில வம்பலா தாம செல்லு வதற்குரிய நெறி எது என்பதைக காண யாமரத தின் மேல் ஏணியைச சாாததுவர் (அகம்.257:12-14). களவர் இரும்பினாற் புனையபபட்ட தம அம்பைச் செப்பஞ் செய்யும்பொருட்டு அதன நுனியை நகத்தினால் வருடுவர் (குறு. 16:1-3). நின் பாணன ஒருவன் பொய்யன் ஆனமையான் மற்றுமுள்ள பாணர் யாவரும் நீ அகனறதனால தனிததிருககும் மகளிர்க்குக் கள்வர் போலத் தோற்றுவர் எனத தோழி தலைவனிடம் கூறினாள (குறு. 127.4-6). தலைவன் முன்பு என் கையை எடுத்துத தன் கண்களில் ஒற்றியும் தன் கையால் என்நுதல் நீவி யும் அன்னை போல இன்சொல் கூறியும் தலையளி செய்து இன்று கள்வர் போலக் கொடியனானான எனத தலைவி தோழியிடம் கூறினாள் (நற். 28:1-4).

கள்வர் தாம் குறித்த பொருளை நோக்காது நோக்குமாறு போலத் தலைவன் தலைவியை நோக்கினான் (கலி. 61:26). மதிலையுடைய ஊரின் காவல் செய்வோர் கள்வரைக் கண்ணாற் காணா திருக்கவும் அவரால் வரும் குற்றத்தைக் கருதிக் கள்வரை இங்கே கண்டேம் என்று கூறுவர் (கலி. 81: 25, 26).

**கள்வர்கோமான் - புல்லி.** இடியென முழங்கும் ஊக்க மொடு வல்வில்லில் நாணைப் பூட்டிப் பகைவர் மார்பிற் செலுத்தும் அம்பினையுடைய இளையர் பலருடன யானையது வெண்கோடு கொண்டு அக்கோட்டுடன் கள்ளினை விற்றுக் கொண்ட நெலலால் நாளோலக்கச் சிறப்புச் செய்யும் கழலினை யணிந்த திருந்திய அடியினையுடைய கள்வர் கோமானாகிய புல்லி மழபுலம் வணக்கினான் விழவுடை விழுச்சீர் பெற்ற வேங்கடம் அவனுக் குரியது (அகம். 61:6-13).

**கள்வர் பெருமகன் - தென்னன்.** தெற்கேயுள்ள கவுரியர் நாட்டின மண்ணாலாய புற்றினையுடைய காட் டரணின் இடத்தைத் திறத்தலோடு பகைவர் ஆக்களைக் கவர்ந்து கொள்ளும் மூதூர்க் கள்வர் பெருமகனும் ஏவலிளையர் தலைவனும் பல போரினை வென்ற நல்லிசையுடையவனும் தென் னன் ஆவான் (அகம். 342:5-10).

**கள்வன் -** பொருளைக் கவர்வோன். பொய்கையில் இரை வேட்டெழுந்த வாளை மீனை உண்ணும் பொருட்டு நாரை தன் அடியொலியை அம்மீன் உணராவண்ணம் அஞ்சி மெலலெனக் காவல் பொருந்திய வீட்டிற் புகும் கள்வனைப் போலத் தளர்ந்து நடக்கும் (அகம். 276:1-5). 'தலைவன என்னைக்களவில மணந்த ஞான்று சான்றாவார் எவரும இலர்; தலைவனாகிய கள்வன் ஒருவன் தான் இருந்தனன்; அவன் அப்பொழுதுரைத்த சூளுறவு பொய்த்தால் யான் யாது செய்யவலலேன்' எனத் தலைவி தோழியிடம் கூறினாள் (குறு. 25). என தோளை அணைந்த நாளில் பிழையாமை யைப் புலப்படுத்தும் சூளைச் செய்த கள்வனும் கடப்பாடுடையவனும் புணைபோன்றிருப்பவனும் தலைவனே என்று தலைவி தோழிக்குக் கூறினாள் (குறு. 318:6-8), தன் சிறந்த தந்தையின் பெயர னாகிய மகன் பிறந்ததனால் இடையாமத்து இருளிலே கள்வனைப் போலத் தலைவன் வந்தனன எனப் பரத்தை தலைமகட்குப் பாங்காயினார் கேட்பக் கூறினாள் (நற். 40:10-12). தன்னைக்கடைக் கணணால கொல்வான் போல் நோக்கி நகைக் கூட்டஞ் செய்தான அக் கள்வனாகிய தலைமகன் எனத் தலைவி தோழியிடம் கூறினாள் (கலி. 51:14-16). மகனை விளையாடுவித்துக் கொண்டு வருதற்கு அழைத்துச் சென்ற நீ காலந்தாழ்த்தி வந்தமைக்குக் காரணம் என்ன என்று தோழியைத் தலைவி வினவ, அதற்கு அவள் வேற்றுத் தாயர் எதிர் கொள்ள அதனை மாற்றாத இக்கள்வனாலே காலந்தாழ்க்க நேர்ந்தது என்று பதிலிறுத் தாள் (கலி. 83:4-6, 23,24). தலைவி கள்வனா கிய தலைவன் மறைந்திருக்கக் கடவனோ என நீளிலைத் தாழையிருக்கின்ற சிவந்த மணலை யுடைய கானற்பொழில்கள் தோறும் சென்று பார்த்தாள் (கலி. 144:27-29). தலைவியின் ஒள்ளிய வளை கழலும்படி அவளைத் துறந்து வருத்தம் செய்த கள்வன் தலைவன் (கலி. 145:36,37). தலை வன் என் மேனி வேறுபாட்டினைக் கண்டு நம் தலைவியோ என ஐயங்கொண்டு அறியாது கை விடுவானாயின் நான் என் நலனைக் கைக்கொண்டு போன கள்வன் என்று எல்லோரும் கேட்கும்படி கூவுவேன் எனத் தலைவி காமனை நோக்கிக் கூறினாள் (கலி. 147: 50 52). வையைக் கரையின் கண்ணே நின்ற ஆயத்தார் தலைவியின் ஆரத்தை யும் வளையையும் பரத்தைக்குத் தந்த கள்வனா கிய தலைவனுடைய நாணும் முகத்தைக் காணுங் கள் என்றனர் (பரி. 20:32-36). நீ அன்பு பூண்ட தலைவன் என்பால் அனபுடையவனாதலின் இவ் வளையும் ஆரமும் புணர்தற்கு விலையாகத் தந்தான்; இவையேயன்றி நின காற்சிலம்பையும் கழற்றும் தன்மையான்; அதனால யான் கள்வி யல் லேன்; அவன்றான் கள்வன்; அவனைப் பற்றுவா யாக எனப் பரத்தை தலைவியிடம் கூறினாள் (பரி. 20:79-82).

**கள்வி - கள்ளத் தன்மையுடையவள்.** நம் தலைவி இரு வேறுபட்ட ஒழுகலாற்றை அறிந்த கள்வி - கள்ளத் தன்மையுடையவள் - எனத் தலைவன் தன்னெஞ் சிற்குக் கூறினான் (குறு. 312:1). இளைய மாவடு வைப் பிளந்தாலொத்த கண்ணாலே என்னெஞ்சை நினக்குக் களமாகக் கொண்டா யல்லையோ, நீயோர் கள்வியை எனத் தலைவன் தலைவியிடம் கூறினான் (கலி. 108:28,29). நீ அன்பு கொண்ட தலைவன் என்பால் அன்புடையவனாதலின் இவ் வளையும் ஆரமும் புணர்தற்கு விலையாகத் தந்தான்; இவையே யன்றி நிற்காற்சிலம்பையும் கழற்றுவான்; அதனால் யான் கள்வி யல்லேன்; தலைவனதான் கள்வன்; அவனைப் பற்றுக எனப் பரத்தை தலைவியிடம் கூறினாள் (பரி. 20:79-82).

**கள்ளம்பாளனார் - புலவர்.** கருவூர்க் கண்ணம்பாள னார் காண்க.

**கள்வர் - கள்வர்.** பகைவரை நினைத்து அவரிடத்தே படைக்கலன்களை விடுதற்குக் கள்வர் - கள்வர்- வருவது போலத் தலைவர் இங்கு எம்மை இகழ் வதற்கே வந்தார்; நம்மேல் அன்பாக வந்தாரல்லர் எனத் தலைவன் கேட்பத் தலைவி தோழியிடம் கூறினாள் (கலி. 81:22-24).

**கள்ளி - செடிவகை.** கள்ளி போகிய களரியம் பறந் தலை (புறம். 225:7; 237:13). கள்ளியம் பறந்தலை (புறம். 240:9; அகம். 231:7). கள்ளி போகிய களரி மருங்கு (புறம். 245:3; 360:6). பாணர் களர்நிலத் துள்ள கள்ளி மரத்தின் நிழற்கண் உள்ள தெய் வத்தை வாழ்த்தி ஏத்தினர் (புறம்.260:4-8). நிலத்தை உழுது ஓய்ந்த நடையையுடைய காளையின் தலையில் முளைத்த கொம்பு போலக் கவைத்த முட்களையுடையது கள்ளி மரம் (புறம். 322:1,2). களரி படர்ந்து கள்ளி மிகுந்து பகலிலும் கூவும் கூகையோடு ஈமவிளக்காலும் பேய்மகளிரா லும் புகைதவழும் சுடுகாடு அச்சத்தைத் தரும் (புறம். 356:1-4). கள்ளி வேய்ந்த முள்ளியம் புறங் காடு (புறம். 363:10). கள்ளியங்காடு (அகம். 53:7;97: 1). கணிவாய்ப் பல்லி பதுக்கையின் குறைந்த நிழ லையுடைய கள்ளியின் முட்பொருந்திய அடியில் தங்கி வழிச்செலவார்க்கு வரப்போகும் நிகழ்ச்சி களைக் கூறும் (அகம். 151:11-15). குறிய கிளைகளை யும் குறிய முட்களையு முடைய கள்ளியின் உச்சி யினை முல்லைக் கொடி படர்ந்து மூடியது (அகம். 184:8,9). ஆண்நரி வெள்ளிய பரற்கற்கள் மின்னும் கண்ணொளியைக் கவரும் கவர்த்த நெறியில் கள்ளி நிழற் கண்ணே கதறித் தங்கும் (அகம். 337:15,17). அழகிய அடியையுடைய கள்ளியங் காட்டில் செங் காற் பல்லி தன் துணையை அழைக்கும் (குறு. 16: 4,5). நிலங்கரிந்துள்ள கள்ளியையுடைய காட்டி னைத் தலைவர் கடந்து சென்றார் (குறு. 67:5). அருஞ்சுர நெறியில் இரைவேட்டெழுந்த சேவலை உள்ளிப் பெண்புறா பொரிந்த அடியையுடைய கள் ளியின் வெடித்த காயையுடைய அழகிய கிளையில் தங்கித் தனிமை தோன்றக் கூவும் (குறு. 154:3-6). மழை பொய்த்த பாலைநிலத்தில் கவைத்த முள் ளையுடைய கள்ளியினது காய் வெடிக்கும் போது எழும் கடிய ஒலி ஆணும் பெண்ணுமாகிய துணைப் புறாக்களை நீக்கும் (குறு. 174:1-3). பரல் மிக்க பாலை நிலத்தின்கண் வளர்ந்தோங்கிய சிச்சிலிப் பறவை போன்ற தலையையுடைய கள்ளியின் மேலே நறுவீ முல்லை படர்ந்தது (நற். 169:4,5). நொடித்து விட்டாற் போன்ற ஒலியெழக் காய்கள் தெறிக்கின்ற கள்ளியின் அசைகின்ற பாவை போன்ற கிளைகளிலே ஏறிப் புலம்புகொள் புறா தன் பெடையை அழைக்கும் (நற். 314:9-11). களரி யில் உயர்ந்து வளர்ந்த கவையாகிய முள்ளை யுடைய கள்ளியின் தலையிலே சுள்ளிகளை யடுக்கி அமைத்த கூட்டில் புறவுப் பெடை முட்டை ஈன்றது (நற். 384:2-4). கள்ளியங்கடம் (ஐங். 323:2). தீதுறு கள்ளியங்காடு (ஐங். தி. 1:4). அகில்படு கள்ளியங் காடு (ஐங். தி. 2:4) அரில்படு கள்ளியங்காடு (ஐங். தி. 3:4). மாலுறு கள்ளியங்காடு (ஐங். தி.4.5).

**கள்ளிக்குடிப் பூதம்புல்லனார் - புலவர்.** கள்ளிக்குடி என் னும் ஊரினராகிய பூதன் என்பார்க்கு மகனாகிய புல்லனார் என இவர் பெயர்க்கு விளக்கம் காண லாம். கள்ளிக்குடி என்ற பெயரில் பல பகுதிகளி லும் பல ஊர்கள் இருத்தலால் இவரது கள்ளிக்குடி எதுவென்று தெரியக் கூடவில்லை. நற்றிணையில் 333-ஆம் எண்ணிலமைந்த ஒரு பாடலே இவர் பெயரோடு உள்ளது. குறுந்தொகையில் 190-ஆம் பாடலைப் பாடிய பூதம் புல்லனாரும் இவரும் ஒரு வரேயென்பர் பி. நா. (நற்றிணை. பாடினோர் வரலாறு). ஆயினும், வையாபுரிப் பிள்ளையின் சங்க இலக்கி யப் பதிப்பு இருவரையும் வேறுபடுத்தும். மழையின் மையால் கழைகவின் அழிந்த கலத்தாச் சிறுநெறி யில் பருக்கைப் பள்ளத்தில் ஊறியிருக்கும் சிறிது நீரினை யானையொடு போரிட்டுப் புலி உண்ணு கின்ற செய்தியை இவர் தம் பாலைத்திணைப் பாட லில் (நற். 333) புனைகின்றார். அப்பாடல் தன்னிடம் வந்து இரப்போர்க்கு வழங்கும் வண்மை வேண் டியே தலைவன் பொருள்வயிற் பிரிந்தானென்ற குறிப்பையும் அவன் வருகை குறித்து நினையும் போதெல்லாம் தோழிக்குப் பல்லி நன்குரல் கொடுக்கின்ற நிமித்தத்தையும் காட்டுகின்றது

**கள்ளில் - 1.** ஓர் ஊர். கள்ளுண்ட மகிழ்ச்சி மிகுதற் கிடனான கள்ளில் என்னும் ஊர் நல்ல தேரை யுடைய அவியனுக்குரியது (அகம. 271.12). மதுரைக் கள்ளிற் கடையத்தன் வெண்ணாகனார் என்ற புலவர் இவ்வூரினர் (புறம். 316.அடிக்குறிப்பு). கள்ளில் ஆத்திரையனார் இவ்வூரில் வாழ்ந்தவர் (புறம். 175: 389). அடிக்குறிப்பு, குறு. 293. அடிக்குறிப்பு).

**2.** கள்விற்கும் கடை. ஆதிஅருமனின் ஊரிலுள்ளோர் கள்ளில் - கள்விற்கும் கடையில் - கள்ளைப் பருகும் விருப்பமுடன் சென்று அதனைப் பெறாது நுங் கைக் கைக்கொண்டு திரும்புவர் (குறு. 293:1-4).

**கள்ளில் ஆத்திரையனார் - புலவர்.** கள்ளில் என்ற ஊரினர். இவ்வூர் தொண்டை நாட்டில் திருஞான சம்பந்தர் தேவாரம் பெற்றதும் கல்வெட்டில் குறிக் கப் பெற்றதுமானதோர் சிவத்தலம். இது கள்ளூர் என்றும் கல்வெட்டினுள் குறிக்கப் பெறுதலால

'தொலபுகழ் நிறைந்த பலபூங் கழனிக், கரும்பமல் படப்பைப பெரும் பெயர்க் கள்ளூர்' (அகம். 256: 14, 15) என்று கடுவன் மள்ளனாரால் புனையப் பெறுகின்ற கள்ளூரும் இதுவும் ஒன்றேயென்று கருதுவோரும் உண்டெனத் தெரிகிறது (புறம். 389. ஔவை. து. குறிப்பு). இதற்கு இப்போது மடவிளாகம் என்பது பெயர் என்பர் ஔவை. து. இனி, கள்ளில் என்ற சொல்லைத் தம் பாடலில் (குறு. 293) ஆண்டிருப்பதனால் இப்புலவர் கள்ளில் ஆததிரையனார் எனப் பெயர் பெற்றிருக்கலாம் எனவும் அவ்வாறாயின், இவர் கள்ளில் என்னும் ஊரின ராகாமல், வேங்கட நாட்டுத் தலைவரையே பாடியிருத்தலின் அந்நாட்டினராகலாம் எனவும் கருதப் பெறும் (ப. மு. பக். 244). மற்று, ஆத்திரையனார் என்ற பெயரை ஆத்திரேயனார் என்பதன் மரூஉவாகக் கொண்டு அததிரி கோத்திரத்தவர் எனப் பொருள் கூறுவர் உ. வே. சா. (புறம். குறு. பாடினோர் வரலாறு). அம்முறையில் அந்தணராகும் இவர்க்கு இப்பெயர் குடிப்பெயராம். வையாபுரிப் பிள்ளையும் கோத்திரத்தாற் பெயர் பெற்ற புலவர் வரிசையில் இவரை நிறுத்துவர் (சங்க இலக்கியம் புலவர்களின் பெயர் வகை). ஆயின், ஆத்திரையனார் என்பதை ஆதிரையனார் என்பதன் மரூஉவாகக் கொள்ளுதற்கும் இடனுண்டு என்பர் ஔவை. து. (புறம். 175. ஔவை. து. குறிப்பு). அவ்வாறாயின் ஆதிரையன் என்பது திருவாதிரை நாளுக்குரிய சிவபெருமானைக் குறிக்குமாதலால் இப்புலவர்க்கு அப்பெயர் இயற்பெயராக இடப்பெற்றதெனக் கொள்ளலாம். இவர் பாடல்கள் புறநானூற்றில் இரண்டும் (175, 389) குறுந்தொகையில் ஒன்றும் (293) ஆக மூன்றுள்ளன. புறப்பாடல்களிரண்டும் ஆதனுங்கனைப் பாடியனவாய்க் குறிப்புகள் காணப்படுகின்றன. ஆயினும், 'நல்லேர் முதியன். ஆதனுங்கன் போல நீயும்......வீறுசால் நன்கலம் நல்குமதி' என்று அவனைப் படர்கையில் குறித்து வேறொருவனை முன்னிலைப்படுத்தும் ஒரு பாடல் (புறம். 389) அவனைப் பாடியதன்று என்னுமாறுள்ளது. அதில் 'நல்லேர் முதியன்' என்ற பெயரை இயல்பு விளியாகக் கொண்டால் அப்பாடல் அம்முதியனைப் பாடியதாகலாம். 'நல்லேர் முதிய' என விளியேற்ற பெயராகவே பாடங் கொண்டு அப்பாடலுக்கு அவனையே தலைவனாக்கி யுரைப்பர் ஔவை. து. இப்புலவர் ஆதனுங்கனை விளித்து, 'என் நெஞ்சந் திறப்போர் நிற்காண் குவரே' (புறம். 175) என்று அவனிடத்துத் தமக்குள்ள கெழுதகு நட்பினை அழகுறக் கூறிப் பின்னும் தாம் அவனை மறத்தற்கரிய நிலையையும் திறம்படக் கிளப்பர். ஆதனுங்கன் இறந்தபின் அவன் மரபினனான நல்லேர் முதியனிடம் சென்று இவர் தமக்கு அவன் ஈந்தமை சொல்லிச் சுற்றத்தினர்க்காகப் பரிசில் வேண்டுகின்றார் (புறம். 389). இவர் பாடல்களில் மோரியரது ஆட்சிக்குறிப்பும் (புறம். 175) ஆதியருமனின் மூதூர்ச் சிறப்பும் (குறு. 293) புனைவு பெற்றுள்ளன.

**கள்ளூர்** - ஓர் ஊர். மிக்க சிறப்பு வாய்ந்த கள்ளூர் நிறைந்த கழனிகளையும் கருமபுத் தோட்டங்களையும் உடையது; இவ்வூரைச் சார்நத அறனிலாளன் ஒருவன குறுமகள ஒருத்தியின நலம் நுகர்ந்து பின்பு அவளை அறியேன் என்று கூறிய சூளினை அவ்வூர்ச் சான்றோர் அவர்தம் கூட்டம் உணர்ந்த சான்றாவாரை வினவிப் பொயயென உணர்ந்து அவனை மரக்கிளையில் செறியப்பறறி நீற்றினைத் தலையிற் பெய்து ஒறுததனர் (அகம். 256:14-21).

**கள** – 1. களாச்செடி. 'எம் சிறு நல்லூரில் களவும் - களாச்செடியின் பழங்களும் – புளித்தன; விளா மரங்களும் பழுத்தன' எனத் தோழி கூறினாள் (அகம். 394:1).

2. களவொழுக்கம். மறையிற் புணர்ந்த மைந்தரும் மாமயிலன்னாரும் காமம் சிறப்புடைய கள - கள வொழுக்கத்தை - விட்டுக் கற்பொழுக்கத்தை மேற்கொண்டனர் (பரி. 11:41,42).

**களங்கள்** - நெற்களங்கள். ஞாயிற்றினது இளங்கதிர் எறிக்கும் காலத்தில் களங்கள் தொறும் அசையும் யானையினின்றும் வார்த்த பசிய முளையாலாகிய தேறலைப் பெறுகுவீர் எனக் கூத்தனிடம் ஆற்றுப் படுத்தும் கூத்தன் கூறினான் (மலை. 463,464).

**களங்கனி** - களாப்பழம். சீறியாழ் களங்கனி போலும் கரிய கோட்டையுடையது (புறம். 127:1;145:5). நிறத தால் களங்கனியை ஒவ்வாத கருநிறம் பொருந்திய கண்டத்தையுடையவன் சிவபெருமான் (பதி. க. வா. 9, 10). பேரியாழ் கரிய நிறத்தால் களங்கனியன்ன விளங்கித் தோன்றும் வளைந்து ஏந்தின கோட்டையுடையது (மலை. 36,37). இளம்பிறையன்ன கோட்டினையுடைய ஆண்பன்றி களங்கனியன்ன நிறமுடைய பிணவைப் புணரும் (ஐங். 264:1,2).

**களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரல்.** சேரவேந்தன். இமையவரமபன் நெடுஞ்சேரலாதனுக்கு வேளாவிக் கோமானாகிய பதுமனின் மகள் வயிற்றிற் பிறந்தவன். தான் முடிசூடுகின்ற காலத்து ஒரு காரணத்தால் முடித்தற்குத தக்க கணணியும முடியும் உதவாமையின, களங்காயால் கண்ணியும் நாரால்முடியும் செய்து சூடிக்கொண்டான் என்று களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரல் எனும் இவன்

பெயர்க்கு விளக்கம் கூறுவர் பதிற்றுப்பத்தின் பழையவுரையாசிரியர் (பதி. 38:4). இவனுக்கு இப் பெயர் வந்தபின் இயற்பெயர் விளங்கவில்லை போலும். பதிற்றுப்பத்திலும் (38:4) அகநானூற்றிலும் (199:22) இப்பெயர் முழுதுமாகப் பயின்று வந்துள்ளது. நார்முடிச்சேரல் என்ற அளவிலும் (பதி. 39:17;40:16) இது வழங்குகின்றது. விளிம்பில் மணிகள் அழுத்தப்பட்ட பொற்றகட்டாலான கூட்டின் மேல் சிலந்தி வலைபோல் நாரால் பின்னி அதன்மேல் நூலிற் கோத்த முத்துவடங்களைத் தொடுத்து அமைக்கப்பட்டதாக இவனது நார் முடியின் அமைப்பும் பாடப்படுகிறது (பதி. 39:13-17). இவனைக் காப்பியாற்றுக் காப்பியனார் பாடிய பத்துப் பாட்டுக்கள் பதிற்றுப்பத்தில் நான்காம் பத்தாக அமைந்துள்ளன. தன்னை அப்பாடல் களால் பாடியதற்குப் பரிசிலாக இவன் அவர்க்கு நாற்பது நூறாயிரம் பொன் ஒருங்கு கொடுத்துத் தான் ஆள்வதில் பாகமும் கொடுத்தான் (பதி. ப.4). தன் நாட்டில் வறுமையால் தளர்ந்திருந்த குடி மக்களைச் சிறந்த ஒழுக்கத்துடன் வாழும்வண்ணம் இவன் நிலை நிறுத்திய செயலை (பதி. 31:13;32:7; 37:7; பதி. ப.4:12) இவனது ஆட்சியின் குறிப்பிடத் தக்க சிறப்புகளில் தலையாயதாய்க் கொள்ளலாம். நெடுமிடல் என்பான் வீழவும் அவனது வலிமிக்க போர் அழியவும் அவனொடு பொருது அவனாட் டினை அகப்படுத்திக் கொண்டதும் (பதி. 32:10-14). நன்னன் இடைவிடாது செய்த போரின் வலியை யழித்து அவனது காவல்மரமாகிய வாகையின் அடிமரத்தை வெட்டியதும் (பதி. 40:14-16; பதி.ப. 4: 7-9). பூழிநாட்டின் மீது படையெடுத்து வென்று அதனைத் தன்னாட்டோடு சேர்த்துக் கொண்ட தும் (பதி. ப.4:6) இவன் வெற்றிச் செயல்களாம். நன்னனொடு செய்த போரில் அவன் அழிய, அவனிடத்து இழந்திருந்த நாட்டினை இவன் மீட்டெய்தினன் என்ற குறிப்பு அகநானூற்றுப் பாடலால் (199:18-23) அறியப்படுகிறது. அப்பாடல் இப்போரினை 'வாகைப் பெருந்துறைச் செரு' எனக் குறிப்பிடும். பகைவர்க்கு நிறைந்த துன்பத்தை ஈந்தும் பாணர் முதலிய நகைவர்க்கு நன்கலன் களை வழங்கியும் (பதி. 37:3,4) விளங்கிய இவன் பண்பிற்கேற்ப இவன் தானையும் நகைவர்க்கு அரணமாகிப் பகைவர்க்குத் துன்பத்தைச் செய்தது (பதி. 31:34,35). அவ்வகையில் 'காலன் அனைய கடுஞ்சின முன்ப' (பதி. 39:8) என விளிக்கப்படும் இவன், 'ஆன்றவிந்தடங்கிய செயிர்தீர் செம்மால்' (பதி. 37:5) எனவும் விளிக்கப்படுகிறான். மற்றும், 'செயலமை கண்ணிச் சேரலர் வேந்தே, பரி சிலர் வெறுக்கை பாணர் நாளவை, வாணுதல் கணவ, மள்ளர் ஏறே, மையற விளங்கிய வடுவாழ் மார்பின், வசையில் செல்வ வான வரம்ப' (பதி. 38:8-12) என வரும் விளிகளாலும் இவன் சிறப் பியல்புகள் புலனாகும்.

**களம் - 1.** போர்க்களம். அலங்குளைப புரவி ஐவ ரொடு (பாண்டவரொடு) சினந்து ஈரைம்பதின்மரும் பொருது களத்து - போர்க்களத்தில் - ஒழிந்தனா (புறம். 2:13-15). வீரர் கால் புடைபெயர்நது களத் தைத் தமதாக்கிக் கொள்ளுதலினால கழல தேய்ந் தன (புறம். 4.3). எம புதல்வர் யானையை எறிநது களம்படுத்த வாள் வெற்றியை யுடையோராய் எம் தலைவனொடு கிடந்தார் என மூதிற்பெண்டிர் உவகைக் கண்ணீர் சிந்தினர் (புறம். 19:9-15). தலை யாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் பகைவேந்தரை வென்று அவர் முடித்தலை அடுப பாகக் கொண்டு குருதிப் புனலாகிய உலையின கண் மூளை முதலியன பெய்து தோளாகிய துடுப் பால் அட்ட உணவால் அடுகளத்தில் வேள்வி செய்தான் (புறம். 26:8-11). விளங்கில் என்னும் ஊர்க்குப் பகைவரால் வந்த துன்பம் தீர்தத மாந தரஞ்சேரலிரும்பொறை களததைத் தமதாக்கிக கொண்ட யானையையும் குதிரையையும உடைய வன் (புறம். 53:4,5). பெருந்திருமாவளவனும் பெரு வழுதியும் ஒருங்கிருந்தவழிக் கண்ட காவிரிப்பூம் பட்டினத்துக் காரிககண்ணனார் 'இன்றே போலக நும் புணர்ச்சி; வென்று அடுகளத்து உயர்க நும் வேல்' என வாழ்த்தினார் (புறம. 58:28,29). இடம் இலலையாம்படி கூடிய பாடி வீட்டில் களங் கொளற்குரியோர் ஒருவரும் இனறி மடிந்தனர் (புறம். 62:11-13). மார்பில நெடுவேல் பாயந்து வேந்தரும் பொருகளத்து ஒழிந்தனர் (புறம. 63:9,10). குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவன குருதிப பரபபில் யானையைத் தொலைச்சிப புலால் வீசும் களத்தையுண்டாக்கிய போர் செயயும் படையை யுடையவன் (புறம். 69:10,11). எழுவர் நலவலம அடங்கத் தான ஒருவனாய் நின்று பொருது களத துக் கொனறான தலையாலங்கானத்துச் செரு வென்ற நெடுஞ்செழியன (புறம். 76:12,13). போர் வைக்கோப்பெருநற்கிள்ளி களம்புகுந்த முக்காவ னாட்டு ஆமூர் மல்லனைக் கடந்தட்டான் (புறம. 80:9). போர்வைக்கோப் பெருநற்கிள்ளி போர்க் களம் புகின், தோள்வலி பேசி இனபுறறு வந்த மள்ளர்க்கு உமணர் அஞ்சும் துறை போல்பவன (புறம். 84:3-6). நின் மகன் யாணடுளன் எனக் கேட்டவளுக்கு என் மகன் போர்க்களத்தில தோன்றுவன் எனத் தாய் கூறல் (புறம். 86:1-6).

தெவ்விர், எங்களுள்ளும் பெருவீரன் ஒருவன் உளன் ஆதலால் களம் புகுதலைத் தவிர்மின்' என ஔவையார் நெடுமானஞ்சியின் பகைவரை நோக்கிக் கூறினார் (புறம். 87:1,2).. அதியமான் நெடுமானஞ்சி களம் புகின அவனை எதிர்க்கும் பொருநர் இலர் (புறம். 90:12,13). அதியமான் நெடுமான் அஞ்சி வலம்படு வாய்வாளேந்தி ஒன்னார் களம் பட வென்றவன் (புறம். 91:1-3). அதியமான் நெடுமான் அஞ்சி அண்ணல் யானை அடுகளத் தொழிய அமரில் சிதற வெட்டி விழுப்புண் பட்டான (புறம். 93:13-15). மலையமான திருமுடிக்காரி, அண்ணல் யானையொடு பகைவேந்தர் களததொழிய அருஞ்சமரில் சிதறத் தாக்கினான் (புறம். 126:20,21). விசசிக்கோ களங்கொண்டு கனலுங் கடுங்கண் யானை உடையவன் (புறம். 200: 7,8). குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் நாளும் குருதிப் புனல் மிக்க பொருகளத்தில் மறவரும் களிறும் மாவும் அழியப் பொருதான் (புறம். 227:4-6). பொய்யா எழினி பொருது களம் வீழ்ந்தமையால் ஈன்றோள் நீத்த குழவிபோல அவன் சுற்றத்தார் இடந்தோறும் வருந்தினர் (புறம். 230:6-8). 'கூற்றமே எழினியின் ஆருயிரை நீ உண்ணாதிருப்பின் அவன் போர் செய்யுங் களத்தே பகைவரின் பல்லுயிரைப் பருகுவாய்; அது கழிந்ததே' என அரிசில் கிழார் இரங்கிக் கூறுவர் (புறம். 230:14-16). என் மகன் போரில் பிறக்கிட்டிருப்பா னாயின் அவன் பால் உண்ட என் முலையை அறுத்திடுவேன் என்று கூறி வாளொடு சென்று செங்களம் துழவிய வீரத்தாய், சிதைந்து வேறாகிய படுமகன் கிடக்கை கண்டு ஈன்ற ஞான்றினும் பெரிதுவந்தாள் (புறம். 278:4-9). மூதின மகளின் தந்தை முன்னாள் நிகழ்ந்த போரில் யானை எறிந்து களத்தில் இறந்தான் (புறம். 279.3,4). வீரன் ஒருவன் களத்து ஒழியாமல் நல்ல புகழை நிலைநாட்டி நாநவில் புலவர் பாடும் செய்யுளில் நிலைபெற்றான் (புறம். 282: 9-11). முடம்பட்டதனால் உமணரால் கைவிடப் பட்ட எருதுபோல இயங்காநிலையிலும் பகைவர் பேருயிர் கொள்ளும் வீரன் செய்கை கண்ட வேந்தன், இக்களத்தில் இறபபதே சிறப்பெனக் கருதிப் பொருது மாய்ந்தான (புறம். 307: 7-14). போர்க் களத்தில் பரிசு காணப் பெறாமையின் மகிழ்ச்சி இனறி அஃது இரப்போர் இரங்கும் இன்னாமையுடையதாயிற்று (புறம். 368:11,12). களததில் பிணக் குவியலைக் கூடடமான நரிகளும் பேய்களும் ஈர்த்து உண்டன (புறம். 369:15,16). சேரமான் கடலோட்டிய வேல்கெழு குட்டுவன், பூதங்காப்பப் பொலிகளம் பொருநதிப பாடுநர்க்காகத் தங்கியிருந்த பீடுடையாளன் (புறம். 369:17,18). தடாரிப் பொருநன் 'வெந்திறல் வியன்களம் பொலிக' என்று ஏத்தி யானைப் பரிசிலை வேண்டினான் (புறம். 370:18-21). பேய்மகள் அழுகுரலெடுத்துப் பாடிக் கூத்தாடக் கழுகும் பருந்தும் வட்டமிட்டுத் திரியும் அச்சம் பொருந்திய இடத்தையுடைய களத்திற்கு உரியவன் செருப்பாழியெறிந்த இளஞ்சேட் சென்னி (புறம். 370: 25-27). தலையாலங்கானத்துச் செரு வென்ற நெடுஞ்செழியன், உருகெழு பேய்மகள் பாடிக் கூத்தயரும் குருதியுலர்ந்து துகள்பட்ட களத்திற்கு உரியவன் (புறம். 371:27,28). தலையாலங் கானத்துச் செருவெனற நெடுஞ்செழியன் புலால் நாறும் களம் பொலிய மறக்கள வேள்வி செய்தான் (புறம். 372:12). குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவன் வஞ்சி முற்றத்தை வயக்களமாக்கி வென்றான் (புறம். 373: 24-26). பொருநன் விளங்குதிணை வேந்தர் களந்தொறும் சென்று 'முரசு முழங்கு வியன்களம் பொலிக' என்று ஏத்தி யானைப் பரிசில் பெறுவான் (புறம். 373:27-30). அஞ்சத்தகும் இடத்தையுடைய களத்தில் பேயொடு கண நரி திரிதரும்; ஊன் தின்னும் செஞ்செவி எருவை (கழுகு) குழூமியிருக்கும் (புறம். 373:36-39). பொகுட்டெழினி, அணங்குடை மரபின் இருங்களந்தோறும் கழுதை ஏர் பூட்டி வெள்ளை வரகும் கொள்ளும் விதைக்கும் போராகிய உழவைச் செய்யும் வேந்தனாவான் (புறம். 392: 8-11). இமையவரம்பன் நெடுஞ்சேரலாதனின் படைவீரர் படைக் கருவிகளைப் புலியுறையினின்றும் எடுத்து இரத்தத்தால் சிவந்த களம் செல்லும் விருப்பினராய் உருவச் செந்தினை குருதியொடு தூவிப் பலியிட்டு முரசத்தை வழிபட்டனர் (பதி. 19:3-7). யானை மருப்பும் தேர்த்திகிரியும் சிதறிப் பரந்து கிடக்கும் பெரிய களத்தில் பெடையொடு கூடிய சேவற் பருந்தினம் தசையாகிய இரையையுண்ணத் தலை துமிந்து எஞ்சிய கவந்தம் எழுந்தாடியது (பதி. 35:3-6). விறலியர் இழையணிந்து சிறக்கவும் பாணர் பைம்பூ மலையவும் ஏவல் இளையர் இனிய களிப்பு வழுவாத மென் சொல்லை விரும்பி நெஞ்சுமலி உவகையராய் வியன்களம் வாழ்த்தினர் (பதி. 40:23-26). களங் காய்க்கண்ணி நார்முடிச் சேரல் செருப்பல செய்து செங்களம் வேட்டுத் துளங்கு குடி திருத்திய வளம்படு வென்றியுடையவன் (பதி. ப. 4:11,12). கணுக்களையுடைய நுண்கோலேந்தி ஊர் மன்றத்தே இருந்து, பாடுதற்குரிய தலைவன் புகழ்களையெண்ணித் தெருக்களின் இரு மருங்கும் சென்று களம் வாழ்த்தும அகவலனுக்கு (பாணனுக்கு) கடல்

பிறக்கோட்டிய செங்குட்டுவன் குதிரைகளை வழங்குவான் (பதி. 43:26-28). ஆடு கோட்பாட்டுச் சேரலாதன், அறியாமை மிகுதலால் படையெடுத்து வந்த பகை வேந்தர் தம் உடம்பை மறந்த வாழ்வு (வெற்றிச்செலவம்) வீழ்ந்துகும் போர்க்களத்தில் இனிது ஆடுதல் வல்லவன் (பதி. 56:6-8). துணங்கை ஆடிய வலம்படு கோமானாகிய ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் ஓடாப்பூட்கைப் பகை மறவரைப் பொருதழித்து அவர் குருதியால் தன் மாலையும் கழலும் சிவப்பப் புலவுநாறும் களத்திருந்தான் (பதி. 57:1-4). பகைப் படையிலுள்ள வீரர் அழிந்தோடவும் பகையரசர் போர்க்களத்தே பட்டு வீழவும் கொன்று வென்ற வீரர் துணங்கையாடுவர் (பதி. 77:3,4). பெருஞ்சேரலிரும்பொறை இருபெரு வேந்தரையும் வென்று முரசும் குடையும் கலனும் கொண்டு உரைசால் சிறப்பின் களத்தில் வேள்வி செய்தான் (பதி. ப. 8:5-7). இளஞ்சேரலிரும்பொறை நிலத்தில் சிந்தும் குருதியால களம் புலால் நாற்றம் வீசும்படி பகைவர் சேனையைக் கொன்று அமர்கடந்தவன் (பதி. 86:1-3). அஞ்சுவரு பேய் மகள், அவுணர்க்கு அச்சந் தோன்ற வஞ்சியாது எதிர்நின்று கொன்ற முருகனது வெற்றிக் களத்தைப் பாடிக் கூத்தாடினாள் (முரு. 51,55). முருகனின் ஆறுமுகங்களுள் ஒரு முகம் செல்சமம் முருக்கிக் கறுவுதல் கொண்ட உள்ளததோடே அசுரர் முதலிய பகைவரைக் கெடுத்துக் களம் வேட்டது (முரு. 98-100). கரிகாற் சோழன் இருபெரு வேந்தரும் (சேரனும பாண்டியனும) ஒருகளததே அவியுமாறு வெண்ணிப் பறந்தலையில வென்றான் (பொரு. 145-148). யானைப் பிணத்தைக் குருதியாறு இழுததுப் போகும்படி ஈரைம்பதின்மரும களத்து அவிய ஐவர் (பாண்டவர்) பேரமரில் வென்றனர் (பெரு. 414-417). பேய்மகளின் துணங்கைக் கூத்தின் சீர்க்கு ஒப்பச் செறிந்த குறைத்தலைப் பிணம் எழுந்து ஆடுதலினால் போர்க்களம் அச்சம் தருவதாயிற்று (மது. 25-28). பாண்டியன் நெடுஞ்செழியன் ஆலங்கானத்தில் நெடுநில மன்னர் இருவரும் குறுநில மன்னர் ஐவரும் படும்படி போரிலே வென்று அவர் முரசைக் கைக்கொண்டு களவேள்வி வேட்டான் (மது. 127-130). பெருஞ்செய் ஆடவர், நீள்திரள் தடக்கை நிலமிசைப் புரளுமாறு களிறறைக் களத்திற் கொனறனர் (நெடு. 170, 171). நெடுஞ்செழியன் எழுவர் நல்வலம் அடங்க ஒரு பகலில் அவரைக் கொன்று களம் வேட்டான் (அகம். 36:13-22). சேரலாதன் கரிகால் வளவனொடு வெண்ணிப் பறந்தலையிற் பொருது புறப்புண் பட்டமைக்கு நாணி அழிகளம் மருங்கின் வாளொடுவடக்கிருந்தான் (அகம். 55:10-12). சோழர் பருவூர்ப் பறந்தலையில் பொருத இருபெரு வேந்தரும் களத்து ஒழியுமாறு வாட்போர் செய்து வென்றார் (அகம். 96:13-16). 'உன் தந்தை பகைவரை அடும் களத்துப் பாய்ந்து போர் செய்தலால் பூண்சிதைநத கோட்டினை யுடையவும் பிடிகள் சூழப் பெற்றவுமாகிய களிறுகள் போல் தோன்றும் குறுநெடுங்குனறம் காண்பாயாக' என உடன்போகிய தலைவியிடம் தலைவன் கூறினான் (அகம். 99:11-14). மறபபோர்ச் செழியன கூடற் போர்க்களத்தில் உடனியைநது எழுந்த இருபெரு வேந்தரையும் ஓடுபுறம் கணட ஞான்று அவன் வெற்றி கொணட வியன்களதது ஆர்ப்பு எழுந்தது (அகம்.116:13-19). ஆய் எயினன் மிஞிலியோடு பொருது களததிற் பட்டனன் (அகம. 148:7,8). இரு பெரு வேந்தர் மாறுகொள் வியன களத்தில் ஒருபடை கொணடு வருபடையைப புறங காட்டச் செயயும் மறச்செல்வ முடையாரகதே வெற்றி நிலைபெறும் (அகம. 174:1-3). ஆய எயினன முருகனை ஒதத வலியுடன மிஞிலியொடு பொருது களம் சிவபப வீழ்நதனன (அகம். 181:5-7). விலலேர் உழவர் பெருநாள் வேட்டையில பொருத களத்தில உக்க குருதியை எருவை உணடது (அகம். 193 2-6). களங்காயக்கண்ணி நார்முடிச் சேரல செயத வாகைப் பெருந்துறைச் செருவில நனனன பொருது களத்து வீழ்நதான் (அகம. 199:19-22). ஆய எயினன மிஞிலியொடு பொருது வீழநத படுகளம காணாது நனனன் சினமிகுநது அருளினறி மறைநதனன (அகம். 208:5-14). மதம பொருநதிய யானை புலியின் நிறததினைக் கொணட வேஙகை மரததினை அடியிற குததிச் செருமலைந்து களம் கொள மள்ளரின் முழஙகும் (அகம. 227:5-11). கரிகாலன வெண்ணிவாயில எனனுமிடத்தில தன்னொடு மாறுபட்டெழுநத போரில பதினொரு வேளிரொடு வேநதரும் இமிழிசை முரசம் பொருகளததே கிடபப வலிமையை ஒழித்தான (அகம். 246 8-13). இடியென முழங்கும் வென்றி முரசம் பொருகளததே ஒலிகக வேநதன போர் வெனறு கொடியை உயர்ததினான (அகம். 354:2,3). களம இரத்தத்தால் செநநிறமடையுமாறு முருகன அவுணரைக் கொன்றான் (குறு. 1.1, 3). உதியன் பொருத ஒலிக்கும் இடததையுடைய பெருஙகளத்தில் இயவர் ஆம்பல என்னும் பண்ணினைக் குழலில இசைத்தனர் (நற். 113:9-11). கடும் பகட்டியானை நெடுநதேர்க்குட்டுவன் பகைவேந்தரை அட்ட களத்தில் முரசு அதிர்நததைப் போனறு கடல் ஒலிக்கும் (நற். 395:4-6). மாறுபட்ட பகைவரை வென்று களங்கொள்ளும் வெற்றிக் குணத்தால நீ நின் தந்தையை ஒத்திருப்பாயாக எனத் தலைவி

தன் மகனிடம் கூறினாள் (கலி. 86:13,14). போரை விரும்பி மேலெழுந்த நூற்றுவர் படும்படி வலிய வில்லையுடைய ஐவர் அட்ட பொருகளம் போன்று பொதுவர் ஏறுதழுவும தொழு காணப்பட்டது (கலி. 104:57-59). ஏறும பொதுவரும் மாறுபடுகையி னாலே தொழு, வேந்த ரிருவர் மாறுபட்டுப் பொரும் களத்தை ஒக்கும் (கலி. 105:47-49). ஏற்றி னம பல களம்புகு வீரரின் அழகை யொத்தன (கலி. 106:9,10). மைநதர் வேலாலும் வாளாலும் மாறுபட்டு உழக்கக் களிறுகள் தம்மிற் பொருத லுற்ற களம் போன்றமையான் வையைப் புனல் தெளிவிலதாயிற்று (பரி. 10:108-111). மகளிர் தத்தம் அன்பரொடு நீர் விளையாட்டில் நாளும் திளைக் கும் தோற்றத்தால் வையை பொருகளம் போன்று காட்சியளித்தது (பரி.11:58-60).

2. வெறியாடுகளம். காவுதோறும் அமைத்த வெறி யயரும் களத்தின்கண் இடமின்றித் தொகுக்கப் பெற்ற ஆடுகளைப் போல் உயிர்கள் மடிவது உறுதி என்பது கோதமனார் தெளிவுரை (புறம். 366:22-24). குறமகள் முருகாற்றுப்படுத்த உருகெழு வியனகரில் ஆடுகளம் சிலம்பப் பாடினாள் (முரு. 244, 245). தெளிந்த நீரையுடைய நெகிழ்ந்த பள்ளத் தில நீலமணி போன்ற நெய்தல் தொய்யிற் கொடி யுடன் மலர்ந்த காட்சிக்கு வல்லோன இழைத்த வெறிக்களம் உவமை (மது. 282-284). அணங்குறு மகளிர்க்கு மறியறுத்தாடுங் களத்தில் குருதி குதிக்கு மாறு போலத் தலைவனின் பகழிபட்ட யானையின் முகத்திலிருந்து குருதி கொட்டியது (குறி. 171-175). மழையாலே செழித்த காந்தட் புதுமுகையை ஊன் எனக் கருதி எடுத்த பருநது ஊன் அன்மையின் உண்ணாது பாறைகள்தோறும் சிந்தியமையால் அவ்விடம் நெருப்பினை ஒத்த பல இதழ்கள் பரந்து வெறிக்களம் ஒக்கும் (மலை. 145-150). தலைவி வீட்டினர் களம நன்கு இழைத்துக் கண்ணி சூட்டி வளநகர் சிலம்பப் பாடிப பலி கொடுத்துக் குருதிச் செந்தினை தூவி முருகனை ஆற்றுப் படுததினர் (அகம்.22:8-11). கள்ன அமைத்து இனனியம் கறங்கப் பந்தர்கீழ், வெண்போழ கடம்பொடு சூடித் தாளத்தொடு பொருநதி முருகனின் பெரும்புகழ ஏத்தி வெறியாடும் வேலன் வியன்களம் பொற்ப ஆடினான (அகம். 98:14-20). வேலன் வெறியயர் களததில சிறிய பலவாகிய கலந்த பூககள் பரவிக் கிடநதன (அகம். 114:1-3). பரல்மிகக வனனிலத்தில் வெள்ளொலி கிளறிப்போட்ட புழுதியில் வேங்கைப் பூக்கள உதிர்நது கிடப்பது களம் போல அழகு செய்தது (அகம. 133.2-4). அதிர்குரல் முதுகலை மிளகின தளிரை உண்டு வெறுத்து உயர்சிமை நெடுங்கோடு தாவுதலால் உதிர்ந்த பூக்கள் பரந் துள்ள மலைப்பகுதி வேலன் வெறி அயர் வியன் களம் ஒக்கும் (அகம். 182:14-18). தாய் தன் மகள் துயர்க்குக் காரணம் அறிய வேண்டி, உண்மை யறியா வேலனை அழைத்து வெறியயர் வியன் களம் பொலியுமாறு ஏத்தினாள் (அகம். 242: 8-11). நமர் வெறியாட்டுச் செய்யும் பெரிய களம் பொலியுமாறு மெல்ல ஆடுதலை விரும்பினர் என்பதைத் தலைவற்குத் தோழி உணர்த்தல் வேண்டும் எனத் தலைவி கருதினாள் (அகம. 382: 6-8). எக்கர் பொருந்திய நீர்த் துறையில் புன்க மரப் பூக்கள் பரவிக்கிடபபது வேலன புனைந்த வெறி யயர் களந்தொறும் செந்நெல் வான்பொரி சிதறிக் கிடப்பது போனறுள்ளது (குறு. 53.1-5). கடற்கரைப் பரப்பில் நறிய ஞாழற பூவோடு புன்னை மலரும் பரவி வெறியயர் களம போலத் தோன்றும் (குறு. 318:1-3).

3. விழாக்களம். செந்நெற் கதிரால் வேயப்பட்ட மெல்லிய கரும்பால் கட்டப்பட்ட ஒழுஙகுபட்ட கூரை விழாக் கொண்ட களம் போல வேறு வேறாகப் பொலிவுடன் தோன்றின (புறம். 22: 14-17). முருகன் புகழ்பாடி நின்னடி உள்ளி வந்த னென் என்று அனபன் சொன்ன அளவில் கூளியர் விழாவெடுத்த களத்து வீறு பெறத் தோன்றி முருகன்பால் கொணடுய்ப்பர் (முரு. 277-286). விழாக்கொள்ளும் இடங்களையுடைய பெரிய ஊர் களில் விழவுக் களததில் ஆடுமகள் இன்னியம் கறங்கத் தாளத்திற் காற்றாது தளருதல் போல மலைச்சாரலில் நீரெனக் கருதித் தேறலையுண்ட மயில் தளரும் (குறி. 191-194). குறவர் மனைமுதிர் மகளிரொடு குரவை யாடும் ஆரவாரம் மிக்க விழவுக்களம் போல விரவிய பலவகைப் பூக்களா கிய பலிகொணடு வேலன் வெறியாட்டெடுத்தான் (அகம. 232:9-14). கடற்கரையிலுள்ள தாழையரும்பு மலர்ந்து விழவுக் களமெல்லாம் கமழும் (நற். 19: 2-5). தலைவனது தூதாக வந்த விறலி மடக் கண்ணும் தகரக் கூந்தலும் பணைத்தோளும் வால்எயிறும் செறிந்த குறங்கும் உடையவளாய்த் தழையாடை யுடுத்து விழாக் களம் பொலிய வந்தாள் (நற். 170:1-4). முற்றிய கதிர்கொய் யப் பெற்ற கொம்பாகிய தலையை யுடைய தினைத்தாள் விழவொழிந்த வியன்களம் போலப் பொலிவற் றிருந்தது (நற். 360: 5-7). முழவின் மார்சசனை பறந்து போகுமாறு முறையே கூத்துக் களை ஆடிய விழவு ஒழி களத்தில் உள்ள பாவை போன்ற அழகுடையவர் கூத்தியர் (நற். 360:1,2).

**4. இடம்.** களநதோறும் கள் அரித்தலின் மதுரை புகழெய்தியது (மது. 753,758). கச்சுப் பரந்த களம் போலே காந்தள் மலர் பரவி அழகுறப் பொலிவு பெற்ற மலைநாடன் தலைவன் (குறி. 198-199). கொடுவிற் கானவர் கணைவிடத் தொலைந்தோர் விழுந்து கிடக்கும் களத்தில் அமையும் மயிர்த்தலைப் பதுக்கைகள் கள்ளிப் பறந்தலைக் களர் தோறும் குவிந்திருந்தன (அகம். 231:5-7). மழவர் இளைய பசுவினைக் கொன்று தசையைத் தின்றதால் புலால் வீசும் களத்தைத் துழவி மேல் காற்று வீசியது (அகம்.249:12-14). யானையொடு புலி பொருதமை யால குருதியால் குழைவுற்ற சிவந்த 'களததின் புலால் நாற்றத்தை வேங்கைமலர், காட்டு மல்லிகை மலர்களின் மணம் போக்கியது (அகம். 268:2-4). கல்லென்னும் ஓசை உண்டாகக் கவின்பெற்ற விழா ஆற்றுப்படுத்த பிற்றை நாளில் பொலிவழிந்த களம் போலத் தலைவி தனிமை பெற்று ஆற்றியிராள் (கலி. 5:10,11). காற்றின் விசைபோல ஓடிவந்த ஏறா கிய காரியைப் பலரும் கூடும் களத்தே பொதுவன் அடக்கி வென்றி கொண்டு அதனமேல் தோன்றி நின்றான் (கலி. 103:40-42). 'கானச் சிற்றாற்றின் அயலே, மாவடுவைப் பிளந்தாற் போனற கண் ணால் என் நெஞ்சை நீ இருத்தற்குரிய களமாகக் கொண்டாய்' எனத் தலைவன் தலைவியிடம் கூறி னான் (கலி. 108:27-29).

**5. நெற்களம்.** தென்னம் பொருப்பன் நன்னாட்டில் உள்ள மகளிர் குளத்துக்கீழ் விளைந்து களத்தின் கண் கொள்ளப்பட்ட வெண்ணெல்லை வேட்டுவன் மான்தசை சொரிந்த வட்டியும் ஆய்மகள் தயிர் கொண்டு வந்த கடகமும் நிறையக் கொடுப்பர் (புறம். 33:1-6). திருந்து வேல் பிட்டங்கொற்றன் களம் மலி நெல்லின் குப்பை வேண்டினும் அருங் கலம் களிற்றொடு வேண்டினும் நமக்கேயன்றிப் பிறர்க்கும் வழங்கும் தன்மையுடையவன் என அவ னைக் காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக் கண்ண னார் பாராட்டுவர் (புறம். 171:7-11). அதியமான் எழினியின் பகை கடிந்த செவ்விய ஆட்சியில் களம் நிறைந்த நெற்பொலி காவலின்றிக் கிடந்தது (புறம். 230:3,4). சிக்கற் பள்ளித் துஞ்சிய செல்வக் கடுங்கோ வாழியாதன், பொருநனுக்குக் களிறு, குதிரை, ஆனிரை, மனைக்கண் பணிபுரியும் களமர், களம் ஆகியவற்றை அளித்தான் (புறம். 387:22-25). உழவர் மருதமர நிழலில் தெய்வங்கள் பலிபெறு கின்ற அகன்ற களங்களில் செந்நெல் தாளையறுத் துப் போராக அமைத்தனர் (பெரு. 230-233). பெருங் களத்தில் உழவர் (நெல்லைத்) தொகுத்தனர் (அகம். 30:8). நெல்லரிஞர் கட்டிய நெற்கட்டினைக் கள்ளுண்ட களமர் களந்தொறும் கொண்டு செல்வர் (அகம். 84:12,13). களமர் மருதமரம் அழகு பெற்ற நீர் சூழ்ந்த வியன்களம் பொலியப் போரி னைப் பிரித்துக் கடாவிட்டனர் (அகம். 366:2,3).

**6. கூத்தாடுகளம்.** வயலகத்தோர் அறங்குறித்து வேலிப் புறத்தே நின்றவர்க்குப் பிடுங்கி யெறிந்த கரும்பின் கழைபட்டுத தாமரைப் போது சிதைந்து வீழ்ந்ததாக, அது கூத்தர் ஆடுகளத்தை ஒதததது (புறம். 28:11-14). நாடக மகளிர் ஆடுகளத்தே வாராற் பிணித்தல் இறுகிய இன்னியத்தை (முழவை) கொண்டிருந்தனர் (பெரு. 55,56). உழுஞ சிலின் (வாகையின) நெற்றுக்களைக் கொணட கொத்து ஆடுகளப் பறை போல விட்டு விட்டு ஒலிக்கும் (அகம். 45:1,2). பெருமழை பொழிநத போழ்து பள்ளந்தோறும் இருநத வரிபொருநதிய நுணல் (தேரை) ஆடுகளப் பறைபோல ஒலித்தன (அகம். 364:1-3). மயில் மலைவாழ வருடையின முழக்கத்திற்கஞ்சி ஆடுகளததில் ஒலிககும கொமபு போல் ஒலிததுப் பறந்து சென்று மூங்கிலில் தங்கி யது (அகம். 378.5-10).

**7. வேள்விக்களம்.** நினக்குத் தோற்று வசைபட வாழ்ந்தோர் பலரோ, வீயாச் சிறப்பின் வேள்வி முற்றி யூபம் நட்ட வியன்களம் பலவோ, யாபல எனப் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதியை நெட்டிமையார் வினவுவார் போலப் பாராட்டி னார் (புறம. 15:13-16, 20-22).

**களமர் – 1.** உழவர், சேரமான் சிககற் பள்ளித்துஞ்சிய செல்வக் கடுங்கோ வாழியாதன் தனனைப் பாடி வந்த குண்டுகட் பாலியாதனாருக்கு மனைக்க ணிருந்து பணிபுரியும களமரொடு - உழவரொடு - களத்தையும் நல்கினான் (புறம் 387·25-27). கரும்பு நெற் கழனிகளிடத்தே தொழில் செய்யும் களமரின் இசையொலி மிகுவதால் நாரைகள் அகனறு போயின (பொரு. 193, 194,204). சேற்றில் தங்கிய எருதினைக் கரைசேர்க்கும கள்ளுண்ட களமரின் ஆரவாரத்தைக் கொண்டது மருதநிலம் (மது. 259,260). எருதை அடிககின்ற களமர்பாடும் ஏர் மங்கலப் பாட்டிற் கிசைய யாழிடததே மருதப் பண்ணை எழுப்பித் தங்கிச் செலக எனக் கூததர் ஆற்றுப்படுத்தப் பெற்றனர் (மலை. 469,470). களத் தில் வைககோற் போரினைப் பிரித்துக் கடாவிட்ட பின்னர்க் கள்ளைப்பருகிய களமர் கடாககளைப் பூட்டவிழ்த்து விட்டனர் (அகம். 366:2,3). எருதை ஓட்டிக் கதிர்ப் போரடிக்கும் களமர் கற்பாறை யில் தினையைத் துவைத்துப் போராக விடுதற்குத் துயிலும் களிற்றை எழுபபுவர் (நற். 125.9-12). திரு

விருந்தையூர் என்னும் திருப்பதியில் மருதமும் நெய் தலுமாகிய மென்புலத்திலும் குறிஞ்சியும் முல்லையு மாகிய வன்புலத்திலும் தொழில் செய்வோராகிய களமர் தெருக்கள் இருந்தன (பரி. தி. 1:26,27).

2. வீரர். களமர் - வீரர் - அரிக்கப்பட்ட கள்ளை யாமை இறைச்சியுடன் வேட்கை தீர உண்டு ஆரல் மீன் சூட்டைக் கதுப்பினுள் அடக்கி மது மயக்கத்தால் தொழில் செய்யாது மடிந்திருப்பர் (புறம். 212:2-5). யானை போன்ற அச்சம் வருவ தற்குக் காரணமான போக்கினை யுடையவர் கள்ளை உண்ணும் களமர் (மது. 392,393).

**களர்** - உவர் நிலம். நெடுவெண்களர் - உவர்நிலம் - தோலைப் புடைத்து வைத்தாற் போன்றது (புறம். 193:1). புலத்தி களர் நிலத்துண்டாகிய கூவலைத் தோண்டி ஆடையைத் துவைத்து வெளுத்தாள் (புறம். 311:1,2). சிறுவெள்ளெலும்புகள் கிடக்கும் நெடு வெண்களரில் காக்கையும் கூகையும் பகற்போதி லும் கூவும் (புறம். 362:16-18). களரிடத்து வளர்ந்த ஈந்தினது விதையைக் கண்டாற் போலுறது மேட்டு நிலத்தே விளைந்த நெல்லின் சிவந்த அவிழாகிய சோறு (பெரு. 130,131). தண்கமழ் புறவில் வெள் ளிய களரிடத்தே மணலின் மேல் படர்ந்த முல்லைப் போதை வண்டு மலர்விக்கும் (அகம். 74:6-8). கான வர் அம்பு எய்தலால் இறந்து வீழ்ந்த பிணங் களைக் கொண்ட பதுக்கைகள் கள்ளியங்காட் டோடு கூடிய பாழ்பட்ட களர்தோறும் குவிந்து கிடந்தன (அகம. 231:5-7). களர் நிலமாகிய பாலை நிலப் பரப்பில் கானல் நீரை நீரெனக் கருதி விலங்குகள் அலையும் (அகம். 327:8-11). செறிந்த மணலால உயர்ந்துள்ள களர் தோன்றும் வழியில் இந்திரகோபப் பூச்சிகள் ஓடிக் காயாமலரில் மறைந் தன (அகம.374:11-14). களரில் பிணைமான் மருண்டு விழித்தலையுடைய தன் குட்டியோடு கூட்டத்தி னின்று இரிநதோட அதனை விருப்புடைய நெஞ் சுடன் ஆணமான தேடும் (நற். 242:7-10).

**களரி** - 1. உவர்நிலம். நலங்கிள்ளியின் ஆற்றல் என்று சொல்லப்பட்டதன் விளைவு கள்ளியோங்கிய களரி -உவர்நிலம்-ஆகிய பாழ்பட்ட இடத்தின் முள்ளு டைய வியன் காட்டதாயிற்று என அவன் இறந்த காலை ஆலத்தூர்கிழார் வருந்திக் கூறுகிறார் (புறம். 225:6-8). முதிய வாக்கினை உடைய சுற்றத்தோடு கூடிய பரிசிலர் இரங்க, கள்ளி ஓங்கிய களரியம் பறந்தலையில் வீரன் இறந்துபட்டான் என வெளி மான் இறந்ததைப் பெருஞ்சித்திரனார் கூறுகிறார் (புறம். 237:13,14). கள்ளி வளர்ந்துள்ள களரியம் பறந்தலையில தீயை விளைக்கும் விறகையுடைய ஈமத்து அழலாகிய பாயலின்கண் பொருந்தித் தன் மனைவி மாய்ந்தாளெனச் சேரமான் கோட் டம் பலத்துத் துஞ்சிய மாக்கோதை கூறுகிறான் (புறம். 245:3-6). களரி பரந்து கள்ளி மிகுந்து பகற் காலத்தும் கூவும் கூகைகளைக் கொண்டது முது காடு (புறம். 356:1-4). பேய் மகளிர் பிணங்களைத் தழுவிக் கொண்டு ஊன் தின்ற புலால் மெய்யொடு களரி மருங்கில் காலைப் பெயர்த்து வைத்துக் கூத் தாடுவர் (புறம். 359:4-6). களரிநிலம் அச்சம் தரத் தக்கதாய்க் கேடு பொருந்தியதாய் மாறுபட்ட இடத்திற்கேற்பக் கள்ளி ஓங்கியிருந்தது (புறம். 360: 14-16). கல்நெடு மருங்கு காழியரின் (வண்ணாரின்) உவர்ப்பு மண் ஒழியக் களரி பரந்தது (அகம். 89: 7-9). மழை பெய்த வெண்ணிறக் களரியில் குளிர் காற்றுப் படுந்தோறும் பிடவஞ் செடிகள் மலர்ந் தன (அகம். 344:1-3). வெப்பத்தைக் கொண்ட மேல்காற்று நெடிய வெள்ளிய களரியிடத்துள்ள துகளை முகந்து சுற்றியது (அகம். 353:8,9). யானை தனது காலால் உதைத்தலால் களரி யின் பொடி வெண்ணிற மேலிடத்தைச் சூழ்ந்தது (நற். 41:1,2). தயிர்த் தாழியில் மத்தாற் கலக்கிய காலத்து உண்டாகும் வெண்ணெய் சிதறிக் கிடந் தாற் போன்று களரியில் உப்புப் பூத்தது (நற். 84:6,8). வெண்புறக்களரியில் கனிகளையுடைய ஈத்த மரங்கள் இருந்தன (நற். 126:2). உமண் குடிமக்கள் களரியில் விளைந்த புளியின் கனியைச் சுவைத்துப் பசியைப் போக்கினர் (நற். 374:2,3). புறவின் சேவல் களரியில் உயர்ந்து வளர்ந்த கள்ளியின் தலையில் சுள்ளிகளை அடுக்கிக் கூடு கட்டும் (நற். 384:1-3).

2. காடு. வெயில் மிகுந்த வெவ்விய களரியில் - காட்டின்கண் - உகாமரத்தின் கிளைகளிலிருந்து குயிலின் கண்ணைப் போன்ற காய்கள் முதிர்ந்து பொற்காசு போன்ற கனிகள் உதிரும் (அகம். 293:5-8). களரியிடத் துள்ள ஆவிரை மலராலே தொடுத்த மாலைகள் மகளிரின் மார்பில் கிடந்து அசைந்தன (அகம். 301:14,15).

3. போர்க்களம். முதுமரத்தினை யுடைய முரண்களரி யின் - போர்க்களத்தின் - மணல் திட்டையில் போர் மறவர் சுற்றத்துடன் கூடியிருந்தனர் (பட். 59-61).

**களவன்**- 1. நண்டு. களவன் - நண்டு - தன் மண் வளையுட் செறிந்தது (களவன் என்ற பாடமும் உண்டு) (அகம். 235:11). புள்ளியை உடைய களவன் சென்ற நடையா லுண்டான வடு நீரருகைச் சேர்ந்து கிடந்தது (கலி. 88:10).

2. சான்றாளன். ஆண்சங்கு ஆரல்மீனைக் களவ

னாக - சான்றாளனாக - வைத்துப் பொய்கையின் கண் தன் துணையுடன் புணரும் (கள்வன் என்ற பாடமும் உண்டு) (அகம். 346:1-8).

**களவு - 1. களவொழுக்கம்.** தித்தனின் உறையூரைச் சூழ்ந்த புறங்காடு போல நம் களவும் – களவொழுக்கமும் - பல இடையூறுகளைக் கொண்டது எனத் தலைவி தோழியிடம் கூறினாள் (அகம். 122:21-23). நள்ளிரவில் தலைவனுடன் புணர்குறி வாய்த்த களவும் எல்லை கடந்து நீண்டு விட்டது எனத் தலைவி தோழியிடம் உரைத்தாள் (அகம். 325:3,4). கடற்கரைச் சோலையில் பிறர் யாரும் அறியா வண்ணம் தலைவனுடன் தங்கிய களவு நீங்கித் திருமணம் நிகழப் பல செயல்கள் புரிந்தோம் எனத் தோழி தலைவியிடம் கூறினாள் (அகம். 400:3,4). இரவின்கண் வரும் தலைவனின் களவிற்கு நெடுவெண்ணிலவே, நீ நல்லை யல்லை எனத் தோழி நிலவை நோக்கிக் கூறினாள் (குறு. 47:3,4). மிளகுக் கொடி படர்ந்த மலைப் பக்கத்தில் களவினில் புணர்ந்ததைத் தன் சுற்றம் அறிதல் அஞ்சி மந்தி தனது குலைந்த மயிரைத் திருத்தும் (நற். 151:6-11). தலைவனின் பரத்தைமை களவாதல் கண்டேன் எனக் காமக் கிழத்தி கூறினாள் (கலி. 90:1).

2. திருட்டு. கொலைத் தொழிலை நீக்கியும் களவை - திருட்டை - நீக்கியும் உழவு வாழ்க்கையை விரும்பிய வேளாண்மாந்தர் வாழ்ந்தனர் (பட். 199,205). தன் மகனை அணைத்த பரத்தையைக் கண்டு தலைவி நீயும் தாயை இவற்கெனக் கூறியதும் அவள் களவுக் குற்றத்தை உடன்பட்டு நிற்கும் கள்வரே போன்று நிலத்தைக் கால்பெருவிரலால் கீறி நின்றாள் (அகம். 16:5-16). களவாகிய உழவினைச் செய்யும் கடுங்கண் மழவர் தம் தொழிலுக்கு ஒடுங்காடு செல்வர் (அகம்.91:11,12). களவு இல்லாமல் ஆட்சி சிறக்க என வாழ்த்துதல் (ஐங். 8:2). வாடிய தழையைத் தலைவன் கொணர்ந்தமையால் காதற் பரத்தை நின் களவு எனக்குப் புலப்பட்டது என அவனிடம் கூறினாள் (பரி. 6:63-65). வையை வெள்ளம் பந்தையும் கழங்கையும் உரிய மகளிர் அறியாதவாறு களவு கொண்டு ஓடியது (பரி. 10:106,107). தலைவியின சாயலைக் களவு கொள்ள எண்ணி அஃதியலாமையால் மயில் பெரிதும் வருந்தியது எனத் தலைவன் தலைவியிடம் கூறினான் (பரி. 18: 11,12). எந்தை எமக்கு வழங்கிய கைவளையும் முத்துமாலையும் நின்னிடத்திற்கு வந்த வழி வஞ்சனையுடைய களவு வழியே எனத் தலைவி பரத்தையைப் பார்த்துக் கூறினாள் (பரி. 20:76,77).

3. களாச்செடி. களவு – களாவினது பழத்தின் – புளிப்புப்போல விளைந்த கள் புளிப்பேறியிருந்தது (புறம். 328:8). கள்வும் பழுத்து நைந்து புளிப்பேறின; விளாமரங்களும் காய்த்து முதிர்ந்தன எனத்தோழி தலைவனிடம் கூறி வரைவு கடாயினாள் (அகம். 394:1). கூரிய நுனியை உடைய களவு மணம் கமழப பிடவு கட்டவிழக் கார்ப் பருவம் மழை பெய்யத் தொடங்கியது (நற். 256.5-7).

**களவேர்வாழ்க்கை** – களவையே உழவு போலும் தொழிலாகக் கொண்டு வாழும் வாழ்க்கை. வழிச செல்வோரை அலறும்படி தாக்கி அவர்களின் கைப பொருளைக் கைக்கொள்ளும் களவேர் வாழ்க்கை - களவையே உழவு போலும் தொழிலாகக் கொண்டு வாழும் வாழ்க்கை - உடையாரைத் தனபால் கொள்ளாதது தொணடைமான் நாடு (பெரு.40,41).

**களன் - 1. போர்க்களம்.** களிறு சென்று களன - போர்க்களத்தை – இடமகலச செயதது (புறம. 26 3). யானையால் களம அகற்றப்பட்ட பரநத இடத்தில் பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் ஒளிவீசும் வேலை யேநதினான (புறம. 26:4,5). அதியமானின் குதிரை களனிடத்துப பொருதமையால் குருதியான் மறுப்பட்ட குளம்பை யுடைய வாயின (புறம. 97:11,13). இறந்துபட்டோரது பிணம உருவழியக் களன உழக்கிச் செலலுதலால் அதியமானின் குதிரைகள குருதிக்கறைபடிந்த குளம்பை யுடையவாயின (புறம. 98 5, 6). கிள்ளிவளவன வஞ்சிமா நகரின முற்றம் வெற்றியுடைய களனாக மாற அஞசாத இயல்பினரான வீரர்களின் பிணப் போரை அழிததுக் குடநாட்டின்கண கடாவிட்டான எனப் போற்றப் படுதல (புறம. 373:24-26). போர்பபயிற்சியுடைய யானை வெகுளி மிக்குக் களன் உழககியது (மது. 47,48).

2. வெறியாடுகளம். படிமத்தான இழைதத வெறியர்களனும் - வெறியாடுகளனும் - முருகன உறைவிடமாகும் (முரு. 222). தமமுள் இசை முதலிய வற்றால் இயைகின்ற கேட்டற்கினிய இசைக கருவிகள் பலவும் முழங்க வேலன களனிழைத்துக் கடம்பு சூடி முருகனை ஏத்தி வெறியயர் வியன களம் பொற்ப ஆடினான (அகம். 98:14-20).

3. தொழுவம். பிட்டங்கொற்றன இனமாகிய மிகக சேக்கனைக் களனொடு - தொழுவத்தொடு - வேணடினும் தருவன் (புறம். 171:8).

4. நெற்களம். வயலில் விளைந்த கதிரினின்றும் உதிர்ந்த களன் - நெற்களத்தில் - சேர்த்துத் தூற

றபபடுதலிலலாத நெல்மணிக் குவியலைக் காஞ்சி மரத்தினடியில கள்ளுண்ட உழவர் தொகுத்தனர் (பதி. 62:14-16).

5. இடம். தலைவன் தலைவியின நெஞ்சு களனாக - இடனாக - இருநது பிரியேன் என்று அவளது தோளைக கூடியபோது வஞ்சினம் உரைத்தான் (குறு. 36:2-5).

**களா** - களாப்பழம். புளிசசுவை வேட்ட செங்கண் ஆடவர் இனிய புளிப்பையுடைய களாவுடனே மூடரிப் பழத்தைத் தின்றனர் (புறம். 177:8,9). களா காணக.

**களி** - 1. மகிழ்ச்சி. வாடுன கொழுங்குறையைத் தினை யரிசியுடன் நெய்பெய்து சமைக்கும் களிகொள - மகிழ்சசியைக கொண்ட - வெணசோறறினைத் துடுப்பால் துழவினர் (புறம். 328:9-11). இளைய பாணர் இன்களி வழுவாத மெனசொல்லை விரும்பி உவகையுடன் களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரலின் வியன்களம் வாழத்தினர் (பதி. 40:24-26). களி மயில் யானை பிளிறுவது போனற குரலு டைய குருகொடு (யானையங் குருகொடு) ஒலிக்கும் (அகம். 145:14,15). இரவுக்குறிக்கண் வந்து கூடிச் செல்லும் தலைவியின வணர்சுரி ஐம்பால, களி மயில் கலாவம் போனறது எனத் தலைவன் பாராட்டல் (அகம். 152:1-3,14). கரிய கழியில் மலாந்த நெய்தல நாற்றத்தினை அமுதம் என்று விரும்பிச் சென்று தண் தாதூதிய வண்டினம் களி சிறந்து பறத்தற் கியலாது தளரும் (அகம். 170:4-7). இன்களிநறவின் இயலதேர் நன்னன (அகம். 173:16). களி மலிந்த கள்ளில என்ற ஊரினையும் நல்ல தேரினையும் உடையவன் அவியன் (அகம். 271:12). குரவம்பூவில் வண்டு விழுதலால் எழும் மணத்தைக காற்று கலநது வீசக் கண் களிபெறும் கவினபெறு பொழுதில தலைவியின் நெஞ்சம் தலைவனை எண்ணியது (நற். 56:1-5). மலையில கடுஞ்சூல் வயப் பிடி கன்றீன்று வருநத, அதன் வருத்தம் தீர்க்க வேண்டிக் களி சிறந்து களிறு வளைந்த தினைக் கதிரைக் கொய்து செல்லும் (கலி. 393:1-4). கடுங்களிறுகள் களிதிகழ் கடாஅத்தை யுடையன (கலி. 25 5). கூட்டத்தால் களிபட்ட பரத்தையரின் கமழ்கின்ற மாலை முயக்கத்தான் தலைவன மார்பு மெனமையுற்றது (கலி. 72:19,20). நினனை மிகாமல சீரமைப்பட நுகர்நத சிறிய களியுடன அழகினை யுடையவாகிய மையுண்கண் அழும்படி சிலநாள் விட்டுப் பினனாக கூடியவளும் நீயே எனத் தலைவி தலைவனைக் குறிப்பு மொழிபேசி இடித்துரைத் தாள (கலி. 97:26,27). உழவர் களி தூங்க வையை யில் நீர் பெருகியது (பரி.7'16,22). நெஞ்சத்துக்காமம் மிகுதலால் கண்ணின் வழி அக்களி தோன்ற அதனை ஊர் அஞ்சி ஒளிப்பார்நிலை, கள்ளின் களியே புறத் தார்க்குப புலப்படுத்தவும் ஊரார் பழிதூற்றலை அஞ்சி அதனை மறைப்பார் நிலையை ஒத்தது (பரி. 10:63-68). வையையில் நீராடிய ஆடவரும் பெண் டிரும் நாகரைப்போல் இடைவிடாது இறுகப் புண ரப் பாகு தங்கிய இளங்கள்ளைப் பருகிக் களி பரந்து பாடலின்பத்தால் தம் செவியை நிறைத்தனர் (பரி. 11:65-69). விடுமலர் சுமந்து பூ நீர்நிறைதலால் வயல் ஆடனமகளிர் இசையுடன கூத்தாடுகின்ற களிநாளில் இயற்றிய அரங்கின அணிநலததை ஒத் தது (பரி. 16:11-13). தலைவன் காதற் பரத்தையின் இல்லத்திற்கு விரைந்து சென்று களி பொருந்திய பழத்தேனாற் செய்த தேறலையும பருகானாய் அவளை மருவினான் (பரி. 16:27-29). தனது களி மகிழ்வால் தலைவியின் சாயலைக் களவுகொள்ள எணணி அதனைப் பெற இயலாது மயில பெரிதும் வருந்தியதாகத் தலைவன் புனைநதுரைததான (பரி. 18:11,12).

2. கள்ளின் களிப்பு. வைக்கோல்களிற் பொழுதெல் லாம் உழைக்கும் களமர் தாம் உண்ட களியில - கள் ளின் களிப்பால் - மடிந்திருநதனர் (புறம. 399:10). கள் அருந்தியமையால களியுடைய சுரும்பு மகளி ரின் முலையில் அமைந்த சுணஙகினை ஓதியில் சூடுகின்ற வேங்கையின் நாண்மலரெனறு கருதிஆர வாரித்தது (சிறு. 22-26). மதுரை அங்காடியில் எடுக் கப் பெற்ற கொடிகளில் கள்ளின களிநவில் கொடி யும் ஒனறாகும் (மது. 372,373). சீறூரில் வாழும் வில்லினையுடைய கானவர் களி பட்டு வல்வாய்க் கடுந்துடி முழக்குவர் (அகம.261:13-15). முயலெறிந்த வேட்டுவன தான் வேட்டையாடிக கொணர்ந்த வற்றை இல்லத்திட்டு மறந்து மிகுதியாக அருந்திய கள்ளின் இன்களியால் செருக்குண்டு கிடப்பான் (நற். 59:3-5). கருங்கோட்டுப் புன்னை மலரின் தாது அருந்திய இருங்களி வண்டு தலைவியின் முன் வந்து ஊதியது அவளுக்கு நன்னிமித்தமாயிற்று (நற். 311: 9,10). புறவில் மலர்ந்த பூக்களின் தேனுண்ட களிச் சுரும்புகள் புதரிடையே அரற்றும் (ஐங். 416:1-3). ஒருத்தி அறிவுபோதற்குக் காரணமான களியால் இமை கூடுதலினால் பார்வை மறைந்த கண்ணை யுடையளாயத தன்மீது பறக்கும் வண்டுகளை ஓட்டு கிறைவள் ஓட்டுமிடம அறியாளாய்க கை சோர்ந தாள் (கலி.92:48-50).மழை பெய்தவுடன கோடல (செங் காந்தள்) களிபட்டான் நிலைபோல அசைந்து துடுப் புப் போலும் முகையை முன ஈன்று, பின்னர்த் தீப் போனற இதழையுடையபூவை ஈனறது (கலி.101:3 4).

3. வண்டல். மழை பெய்யாது மாறினமையால் கோடையில் நீர் நிலைகள் களியாய் - வண்டலாய் - முளியும் (புறம். 266:1,2). பனைநுங்கு நீரின்றி வற்றவும் கான வேம்பின் காய் உலரவும் காய்ந்த கோடையில் நீர்நிலைகள் வற்றிக்களியாயின (புறம். 389:1-3). கரிய களி பரந்த ஈர வெண் மணலிலிருந்து கொக்கின் கூட்டம் நாரையொடு கயல் மீனைக் கவர்ந்தன (நெடு. 15-18).

4. செருக்கு. பகைவரைப் புறங்காணேனாயின் கண் போலும் நண்பினையுடைய நட்டாரொடு கூடிய இன் களி - இனிய செருக்கினையுடைய - மகிழ நகையை இழப்பேனாக எனப் பூதப்பாண்டியன் வஞ்சினம் உரைத்தான் (புறம். 71:5,15,16). பொலிவு பெற்ற நுதலினையுடைய பரத்தையரை முயங்கியமையால் உண்டான பூண் வடுக்களுடன் பொலிந்த தலைவனின் களி நிலையைக் கண்ட தலைவி ஊடினாள் (கலி. 66:19,20).

5. களிமண். குடவர் களிபடு - களிமண்ணாற் செய்த - பானையைக் கல்லடுப்பில் ஏற்றிக் கொன்றையின் பூந்தாது போலச் சோறாக்கினர் (அகம். 393:14-16).

6. குழைதல். திருமண வீட்டில் உழுத்தம் பருப்புடன் கூட்டிச் சமைத்த செல்வீய களி - குழைதலுடைய - பொங்கலோடு பெருஞ் சோற்றுத் திரளையை இடையறாது உண்டனர் (அகம். 86:1,2). ஈத்த மரத்தின் பசுங்காய் நிறமாறிச் செங்காயாகிப் பின்னர்க் கருநிறமுடைய களியுடைய பழமாய் உதிர்ந்தது (நற். 126:1,2).

7. கள். (ஆகுபெயர்). மதுரையில் கள்ளோர் களி - கள் - விலை கூறி விற்றனர் (மது. 662).

8. வெறி. தலைவியின் ஆயத்தார் பரத்தையைக் 'காரிகை நீர்மையையுடைய வனப்பாகிய வயலிலே காமமாகிய களி - வெறி - மிக்க நாஞ்சிலால் உழும் பழைய சாலே' என இகழ்ந்து கூறினர் (பரி. 20: 53,54).

9. கூழ். நெய்தனில மகளிர் குற்றாத கொழியலரிசி கொண்டு அழகினை யுடைய களியாக - கூழாக - துழாவி யட்டதைத் தட்டுப்பபிழாவில உலரும்படி ஆற்றுவர் (பெரு. 275,276).

10. மதம். கரிகால் வளவன் களி இயல் - மதம் பொருந்திய - யானையுடையவன் (புறம். 66:3).

**களியாளன் - கள் உண்டு களித்தவன்.** வந்து முன்றிற் கிடக்கும் பெருங்களியாளற்குத் தோல் இருக்குமாயினும் பாய் இருக்குமாயினும் யாதிருக்குமாயினும் விரைந்து கொடுமின் எனப் பாணர் கூறினர் (புறம். 317:1-4).

**களிற்றியானை - ஆண்யானை.** சினந்து செய்யும் போரினையும் இனமான களிற்றியானைகளையும் - ஆண யானைகளையும் - செயயப்பட்ட தோகளையும் உடைய குருசில், இவன் வழிவழி வநத மறவனாதலின் இவறகு ஈதது உணமதி களளே என ஔவையார் பாடியுள்ளார் (புறம். 290.1-3). அகனற போர்க்களத்தின்கண்ணே இருஙகளிறறியானைகளின் வெள்ளிய மருபபுககளுடன நெடுநதேர் திகிரிகளும் சிதறிப் பரந்து கிடநதன (பதி. 35.3,4). பல்யானைச் செல்கெழு குட்டுவன கருஙகளிறறு யானைகள் பொருந்திய வரிசையை நிறுத்தி இரு கடல நீரையும ஒரு பகலில் தருவித்து நீராடினான (பதி. ப. 3: 6,7). செங்குட்டுவன பல போரகளை வஞ்சியாது எதிர்நினறு வெனற, கொல்லுகினற களிற்றியானைகளை யுடையவன் (பதி. 46:10). தாஙகுதற்கு அரிய போரில் அரிய நிலையைத் தடுத்த, புள்ளிகள் பொருநதிய நெறறியையுடைய பெருங களிற்றியானைகளோடு அருஙகலனகளைப் பெருஞ சேரலிரும்பொறைக்குத் திறையாகச் செலுத்தாத பகைவர் உடல் நடுககம் மிகுநது அவனை அணுங கெனப பரவுவர் (பதி. 71:20-22).பெருஞசேரலிரும பொறை, தனனோடு இசைநது வருதலிலராகித தம் நாடுகளில் தங்கியிருநது பின போாக்களததே தன் வனமையைக் கணடும் பொர வருபவரின கொல்லுகின்ற களிற்றியானையின எருத்தம பொலிவழிய வில்லின நாணை யறுத்து முரசின கண்ணைப் போழ்வான் (பதி. 79.9-12). வெளளிய கொம்பையுடைய களிறறியானைகள் பெரிய மலையைப் போலக் கூட்டமாகத் திரண்டு நினறன (பதி. 80: 1, 2). பாகன நெடுங்காலம உயிருடன வாழ்தற்குக் காரணம் மிகக சினததினையுடைய கொல்லும களிறறியானை அவனைக் கொல்லாது அருள செய்தலேயாம் (அகம். 336:13, 14).

**களிற்றுயிர் - பெருவங்கியம்** (ஆகுபெயா). கண திறக்கப பட்ட தூம்பாகிய களிற்றுயிரை - களிற்றினது கை போலும வடிவை யுடைய பெருவஙகியததை - இசைமின் என வன்பரணர் விறலியிடம் கூறினார் (புறம். 152: 15). களிற்றுயிர்த்தூமபு காண்க.

**களிற்றுயிர்த்தூம்பு - பெருவங்கியம்.** கூத்தர், கணகளின நடுவே வெளியாகத் துறநத களிற்றுயிர்த் தூம் பொடு - களிறறின் கைபோலும் பெருவஙகியத் தோடு - பிற இசைக் கருவிகளையும் சேர்த்துக கட்டிய கலப் பையை உடையவர் (மலை. 6, 13). களிற்றுயிர் காண்க.

**களிற்றொருத்தல் - ஆண்யானை.** புலி கடுங்கட் கேழற் பன்றி இடப்பககத்தே வீழ்ந்ததென உண்ணா தாகிப் பிறறை நாள் மலையின் முழைவிடம் புலம்ப வேட்டெழுந்து பெரிய களிற்றொருத்தலை - ஆண் யானையை - வலப்பக்கத்தே படுமாறு வீழ்த்தியது (புறம். 190· 6-10). தன் இனத்தைத் தன்னிடத்தே கூட்டிக் கொள்ளும் மிக்க வலியினையும் வண்டுகள் ஒலிகரும் வாயிறபுகும் மதத்தினையும் உடைய, புள்ளிகள் பொருநதிய நெற்றியாற் பொலிந்த, வலிய களிற்றொருத்தல் தன கரிய சருச்சரையுடைய பெரிய கையால் ஏமுறத் தழுவவும் கடுஞ்சூல் மடப்பிடி ஆளிக்கு அஞ்சி நடுஙகியது (அகம். 78: 1-6). பகலில் வநது திணைப்புனத்தில எம்மொடு கிளி ஓப்பிக் கூநதல மெல்லணைத் துஞ்சிப் பொழுது பட நும் ஊாக்குக் காவல் கொணட புனதநை வளைத்துண்ட பெருங்களிற்றொருத்தலைப் போலச் செல்க எனத் தோழி தலைவனிடம இரவுக் குறி மறுத்துப் பகற்குறி நேர்ந்தனள் (அகம். 308: 7-16). கொல்லும தொழிலையுடைய களிற் றொருத்தல் ஆனிரை உணணுதற்கு எடுத்து வைத்த நீர்ப்பததரில் புன்றலை மடப்பிடி தன் கன்றோடு நீர் உண்ண வேண்டி அதன் வாயை மூடிய விற்பொறியை முறித்து நீரை ஊட்டும் (நற். 92: 6-9). பரிக்கோலாற் குத்தவும் தன்னெறி யில் நில்லாத கடுங்களிற் றொருத்தல் மெல்லிய யாழின் இசையிலே கட்டுணடு நினறது (கலி. 2: 26,27).

**களிறு - 1. ஆண்யானை.** களிறுகள் - ஆண்யானைகள்- கதவை முறித்து வெகுண்டு உலாவி நுனை தேய்நத வெண்கோட்டை உடைமையான் உயிரை யுண்ணும் கூற்றை யொத்தன (புறம். 4: 10-12). சோழன கரிகாற பெருவளத்தான் தாளால் களிற் றைச செலுதநினான் (புறம்.7:1). முதுகுடுமிப் பெரு வழுதியின கொல்களிறறின் மேலே எடுக்கப்பட்ட கொடிகள விணணிடததை நிழல் செய்தன (புறம். 9:7,8). சோழன் முடிததலைக கோப் பெருநற்கிள்ளி கூற்றம் போனற களிற்று மிசையோன் (புறம். 13:4). சோழன முடி ததலைக் கோப் பெருநற்கிள்ளி ஏறிச சென்ற களிறு கடலின்கண் இயங்கும் நாவாய் போலவும் பல மீனினது நடுவே செலலும் திங்களைப் போலவும் சுறவினததை யொத்த வாளோர் சூழத் தனனை மருவிய பாகரை யறியாது மதம் பட்டது (புறம். 13·5-8). வன்கண் மையுடைய கொலகளிற்றாலே காவலை யுடைய கணைய மரத்தை முறிததுத் தோட்டியால் முன னர்க் கடாவி அது செய்யும் வினையைப் பின் வேண்டுமளவும் பிடித்தது செல்வக் கடுங்கோ வாழியாதனின் கைகள் வன்மை பெற்றமைக்கு ஒரு காரணமாகும் (புறம். 14: 1-4). முதுகுடுமிப் பெருவழுதி அசைந்த தன்மையோடு பெரிய கழுத் தினையும் பரந்த அடியோடு செறல் நோக்கினை யும் விளங்கிய கோட்டினையும் உடைய களிற்றைப் பகைவர் நாட்டிலுள்ள காவலையுடைய கயத்தின் கண் படிவித்தான் (புறம. 15.6-10). சோழன் இராச சூயம் வேட்ட பெருநற்கிள்ளி பகைவரது காவற் பொய்கைகளின நீரிலே களிற்றைப் படிவித்தான (புறம். 16:6). இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளி யின் களிறுகள பகைவரது ஏம நன்னாட்டை ஒள் ளெரியூட்டி அஞ்சததக்க நலல போரைச் செய்ய அவன் கருததிற கேற்ப ஒரு பெற்றிப்படப் பொருதன (புறம். 16:17-19). யானைகளைப் படுக்கும் பள்ளத்தின்மேல் பரபபிய பாவைத் தன் செருக்கால் போற்றாது நெடுங்குழியில அகப் பட்ட பீடுடைய மிகக வலிமையுடைய கோடு முதிர்ந்த கொல்களிறு அதன நிலைசரியக் குழி யைத் தூர்த்துத தன்னினததைச் சென்று சேர்ந்தது போல யானைக்கட்சேய் மாநதரஞ்சேர விரும் பொறை சிறையினின்று மீண்டு அரசுகட்டி லெய்தி னான் (புறம. 17:14-19). அசைந்த பெருங்கையுடன் உயர்நத நடையையும் மாறுபட ஒலிகரும மணி யுடன உயர்ந்த கோட்டினையும பிறை நுதலுடன் செறல் நோககினையும பரந்த அடியுடன பரிய கழுததையும் தேன் சிதைநத மலை போலத் தேனீ ஒலிக்கும் கமழும் மதததையும் புண வழலை வடி யும் பெரிய தலையையும் உடைய வலிமை மிக்க இளங்களிறு கம்பததைப் பொருந்தித் தான் நினற நிலையிலே அசைந்தது (புறம். 22:1-9). வயிரக் கம் பத்தையுடைய கூடததில் நிற்றலை வெறுத்துச சென்ற களிறு நீருண்டதால் துறை கலக்கமுற்றது (புறம். 23:1,2). பெரிய கடலின் ஆழத்திடத்து வளி யாற் புடைக்கப்பட்ட கலம் நீரைக கிழித்து ஓடு மாறு போலக் களிறு சென்று போர்க்களத்தை இடமகலச் செயதது (புறம். 26:1-3). சோழன் நலங் கிள்ளி களிறு தன கதுப்பினகண அடக்கி எறியும் கல்லைப்போல மறைதத வலிமையுடையவன் (புறம். 30·8,9). சோழன நலங்கிள்ளியின் களிறுகள் கோட்டினது நுனைமுகம் மழுங்க மடுத்துப் பகை வரது கடிமதிலைக் குததி அடங்காவாயின (புறம். 31:7,8). இளைய பனையினது துண்டம் போல வேறு வேறு கிடப்பக் களிறறுக் கணம் பொருத இடமகன்ற பறந்தலையில் வருபடை தாங்கிப புறங்காட்டி ஓடச் செய்து பெறும் வெற்றியும் உழும் கலப்பை நிலத்தில விளைக்கும் நெலலின் பயனேயாகும் (புறம். 35:22-26). மலையை யொக்கும்

இளங்களிற்றின்மேல் வானத்தைத் தடவும் கூறு பாட்டை யுடையன போலப் பல நிறத்தையுடைய கொடிகள் அசைந்து தோன்றும் படையையுடைய வெற்றி வேந்தன் கிள்ளிவளவன் (புறம். 38:1-4). கிள்ளிவளவன் ஒருபிடி கிடக்கும் சிறிய இடம் ஏழு களிறுகளைப் பாதுகாக்கும் நாட்டையுடையவன் (புறம். 40:10,11). மலையமான் மக்கள் தம்மைக் கொல்ல வரும் களிற்றினைக் கண்டு தம் இளமை யால் வெருவி யழுகின்ற அழுகையை மறந்தனர் (புறம். 46:5,6). கடுஞ்சினத்தை யுடைய கொல்களி றும் குதிரையும் தேரும் மறவரும் என நான்கு படையுடன் மாட்சிமைப்பட்டதாயினும் அரசின் கொற்றம் மாட்சிமைப்பட்ட அறநெறியை முதலாக உடையது (புறம். 55:7-10). களிற்றுக் கூட்டம் பொருத கண்ணகன் பறந்தலையில் பசிய ஊன் தடி விண்ணில் பறக்கும் எருவையைத் தடுத்தது (புறம். 64:3,4). சோழன் போரவைக் கோப்பெரு நற்கிள்ளியின் களிறு கார்காலத்து மழையின் இடி போன்று முழங்கும் (புறம். 81:1,2). ஊர்க்குறு மாக்கள் வெண்கோட்டைக் கழுவுதல் காரணமாக நீர்த்துறைக்கண் படியும் பெருங்களிறு போல அதியமான் நெடுமானஞ்சி இரவலர்க்கு இனியன்; அந்த யானையின் நெருங்குதற்கரிய மதம்பட்ட நிலை போலப் பகைவர்க்கு இன்னாதவன் (புறம். 94). அதியமான் நெடுமானஞ்சியின் களிறுகள் கணைய மரத்தால் தடுக்கப்பட்ட கதவைப் பொருது பகைவரது திரண்ட களிற்றினையுடைய அரணை அழித்தலால் அவற்றின் கிம்புரிகள் கழன்றன (புறம். 97 : 8 - 10). போர்முனைக்கண் பகைவரது முரண் அவியப் பொருதலால் தேய்ந்து குறைந்த நுனையுடைத்தாகிய கோட்டையுடைய அதியமானின் இனக்களிறுகள் செலக்கண்ட பகை வர் தமது மதில்வாயிற் கதவங்களும் கணைய மரங்களும் புதியனவாக இடுதற்குப் பழையனவற் றைப் போக்குவர் (புறம். 98:1-4). அதியமான் நெடு மானஞ்சி, புலியொடு பொருத வயக்களிறு போல நீங்காச் சினத்தை யுடையவன் (புறம். 100 : 7,8). முனைப்புலத்தைச் சுடுதலான் எழுந்த கரிய புகை மலையைச் சூழும் முகில் போல இளங்களிற்றைச் சூழும் (புறம். 103:6,7). ஊர்க்குறு மாக்கள் ஆடக் கலங்குகின்ற காலளவான சின்னீருள் முதலை களிற் றைக் கொன்று வீழ்க்கும் (புறம். 104:2-4). பறம்பு மலையிடத்துள்ள மரந்தோறும் கட்டப்பட்ட களிற்றைப் பகைவர் உடையவ ராயினும் அம் மலை அவர் கொள்ளற் கரியது (புறம். 109:11,12). பாரியின் பறம்பு மலையில் களிறு மென்றிட்ட கவளம் போன்ற கள் பிழிந்திடப்பட்ட கோது



டைச் சிதறல் கிடந்தது (புறம். 114:3-6). களிற்று முகத்திடத்துள்ள புள்ளி போலத் தெறுழ் மலர்கள் பூத்தன (புறம். 119:2). போரில் மலைபோலும் களிறுபட எதிர்நின்று கொன்று வென்றவனும் நம்மை வெல்வித்தவன் தேர்வணமலையனே என அவனைப் புகழ்வான் (புறம். 125:9-11). பாணர் பரி சில பெற்றமையால் களிறுகள் இல்லையாகிய புல்லிய பக்கத்தையுடைய நெடிய தறியின்கண் காட்டு மயிலகள் தத்தம் இனத்தோடு தங்கின (புறம். 127:2-4). களிறுகளை மிகவும் உடைய கவின பெறு காடு ஆய்அண்டிரன் குன்றம் பாடி அக் களிறுகளைப் பரிசாகப் பெற்றதோ என்று ஏணிச் சேரி முடமோசியார் அண்டிரனது யானைக் கொடையை வியப்பர் (புறம். 131:2-4). 'மாவேள் ஆய் யான் வந்தது களிறு பெறுதற்காக அன்று; நின்னைக் காணல வேண்டிய அளவே' என அண்டி ரனிடம் ஏணிச்சேரி முடமோசியார் கூறினார் (புறம். 135:14,15,20). நாஞ்சில் வள்ளுவன ஔவை யாருக்குப் பெரிய சுரஞ்சூழ்ந்த குன்றம் போலவ தொரு பெரிய களிறறை அளித்தான் (புறம்.140:7,8). கண்டீரக்கோப் பெருநள்ளி நல்ல அணிகலத்தைக் களிற்றோடே கொணர்ந்து அவற்றை வியனகரின கண் இருந்து பரிசிலர்க்கு ஈந்தான (புறம். 148:3,4). பெருஞ்சித்திரனார் குமணனிடம் உயர்ந்தேந்தும் கோட்டையுடைய கொல் களிற்றைப் பெறினும முகம் மாறித் தரும் பரிசிலைக் கொள்ளேன என்று கூறினார் (புறம். 159:22,23). பிட்டங் கொற்றன பெறுதற்கரிய அணிகலன்களைக் களிற்றுடனே வேண்டினும் வேண்டியாங்கு ஈயும் பெருந்தகை யாளன (புறம். 171:10,11). வேந்தர் கடல்கண்டன்ன படைத்தானையொடு மலையொடு மாறுபட்டுப பொரும் களிறுடையர் என்று வியக்கமாட்டோம் என்று மாடலன் மதுரைக் குமரனார் கூறுவர் (புறம். 197:3,4). முகில் நீரின்றி மீளாதவாறு போலக் கடிய நெடுவேட்டுவனை நாடிய பரிசிலர் சுற்றம் தேருடன் கோடுயர்ந்த தலைமையையுடைய களிற் றையின்றி மீளாது (புறம். 205:11-14). பெருஞ்சோற் றைக் கொடுத்துப பல்யாண்டு பாதுகாத்த பெருங் களிற்றை யிழந்த பாகன் அவ்வியானை சேர்ந்து தங்கிய கம்பம் வறிதே நிற்பதைக் கண்டு கலங்கி னான் (புறம். 220:1-4). சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் மறவரும் களிறும் மாவும் போர்க் களத்தின்கண் மாய எதிர்நின்று கொன்று கூற்றத்தின் வாடு பசியைப் போக்கினான் (புறம். 227:4-7). புலிபார்த்து வீழ்த்திய களிறாகிய இரை தப்பின் அதற்காகத் தனக்கு இரையாதறகுப் போதாத எலியைப் பார்த்து வீழ்த்தாது (புறம். 237:

16,17). நம்பி நெடுஞ்செழியன் உயர்ந்த இயல்பை யுடைய களிற்றைச் செலுத்தினான் (புறம். 239:15). ஆய அண்டிரன் புரவியும் களிறும் தேரும் வள மிக்க நாடும் ஊரும் பாடுநர்க்குக் குறையறக் கொடுத்தவன் (புறம். 240:1-3). ஒருகண் இரும்பறை, பெருங்களிற்றின் அடிபோலத் தோன்றும் (புறம். 263:1,2). பெருந்தகை மறவன் தன்மேல கொலை குறித்து வரும் களிற்றின் நெற்றியில் வேலைச் செலுத்தினான் (புறம். 274:2,3). முதியவளுடைய சிறுவன் போரில் தன்மேல் வந்த களிற்றைக் கொன்று தானும் பட்டனன் என்ற செய்தியைக் கேட்ட அம்முதியவள் ஈன்ற பொழுதினும் பேரு வகை கொணடனள் (புறம். 277:2-4). விளங்குகின்ற உயர்ந்த கொம்புகளை உடைய நும் களிறும் போற்றுமின் எனப் பகை வீரரிடம் தானைத் தலைவன் கூறுதல் (புறம். 301:6). தலைவன் தன் வேலாற் கொன்ற களிறுகளை எண்ணின் அவை விணமீன்களினும் மழைத் துளிகளினும் பலவாயி ருந்தன (புறம். 302:8-11). களிறு படிந்து உழக்கக் கலங்கிச் சேறாகும் நீர்நிலையை யுடையது சீறூர் (புறம். 306:1,2). மறவன் மலைபோன்ற களிற்றை யெறிந்து அதனோடு தானும் பட்டான (புறம. 307: 2). மறவன் புள்ளி பொருந்திய நுதலையுடைய களிற் றைக் கொனறான் (புறம. 310:4). ஒளிறுவாள் ஏந்தி அரும்போரைச் செயது பகைவர் களிறுகளைக் கொன்று வெற்றியோடு பெயர்தல் காளை போன்ற வீரனது கடமையாகும் (புறம். 313:5,6). இரவலர் களிற்றோடு நெடுந்தேரை வேண்டின ராயினும் பகைவர்பால் உள்ளவற்றைக் கவர்ந்து வந்து நல் கும் கடப்பாடுடையவன தலைவன (புறம். 313:3,4). மறவனின் பெருந்தகைமை யுடைய வேல் வேந்த ரின் பெரிய களிற்றின் முகத்தில் சென்று பாய்தலில் தப்பாதது (புறம். 332:2,10). பகைவரைத் தடுத்து விளங்குகின்ற உயர்ந்த கோட்டினையுடைய களிறு களைக் கொனறு தாமும் பட்ட மறவரது நடுகல் லைப் பரவுதல் அல்லது வேறு வழிபடும் கடவுள் இல்லை (புறம. 335:9-13). விளங்குகின்ற முகத்தின் கண் உயர்ந்துள்ள பெரிய தொடியணிந்த கோட்டி னையுடைய களிறுகள் கடிமரததைச் சேர்ந்து நில் லாவாயின (புறம். 336:3,4). நீராடும் களிறுகள் தம் முள் பொருவதால் தண்கயம கலங்கிக் கவினிழந் தது (புறம். 341:17,18). தலைவியின் தமையன் மார் போரிற் பட்டோரது பிணக்குவியலை வைக் கோற் போராகவும் களிறுகளை அப்போரை யழிக் கும் எருதாகவும கொணடு நாளும் வாளுழவு செய் யும் மாட்சியர் (புறம்.342:13-15). களிறுகளைக் கட்டு வதால காவிலுள்ள மரங்கள் நிலை கலஙகின (புறம். 345:1). வெண்ணிறக் கொம்புகளையுடைய பல களிற்றோடு குதிரை, தேர் ஆகியவற்றை இர வலர்க்குக் குறையாது நலகின நீ மேலுலகு பெயர்ந்த பின்னரும் நின் புகழ் ஈண்டு நீடும் என அந்துவன் கீரனிடம் காவட்டனார் கூறுவர் (புறம். 359:13-18). தலைவன் தன் அருள்நிலை பாடும் பொருநர்க்குத் தெருண்ட நடையினை யுடைய குதிரையைக் களிற்றோடு நல்கினான் (புறம். 361:7,8). களிறுகளைத் தரப் பெற்றுப் பெயர்குவம் எனின் அவை குனறம்போல் அம்புபட்டு இறந்தன எனக் கழாத்தலையார் போர்க் களத்தில பொருது கிடந்த சேரமான குடக்கோ நெடுஞ்சேரலாதனைக் கண்டு பாடினார் (புறம, 368:1-3). இறந்த பிணங் களாகிய போர்கள் அழியும்படி களிறுகளை எரு தாகக் கொண்டு வாளாமல ஓச்சிக் கடா விடப் பட்டது (புறம். 370:15-17). செல்வக் கடுங்கோ வாழியாதன் மலை போனற களிறு, குதிரை, நிரை, களமர், களம் ஆகியவற்றைக் கனவென மருளுமபடி இரவலர்க்கு நனவில் நல்கினான (புறம. 387:22-27). பொருகளிறறின் அடிச்சுவடு போல 1வட்டமானது ஒருகண் மாக்கிணை (புறம். 392:4,5). சோழிய ஏனாதி திருக்குட்டுவன நல்கிய வெவ்விய சினததை யுடைய வேழததை அஞ்சிக் கிணைஞன மீட்டும் அவனிடம் செல்ல அதுகண்ட குட்டுவன கிணைஞன் வரிசைக்கு அது சிறிதென உணர்ந்து நாணிப் பிறிதும் ஒரு பெருங்களிறறை நலகினான (புறம். 394:12-15). பேரிசைக் கடுஞ்சினச் செவ்வேள் களிறு ஊர்ந்து சென்றது போல நெடுஞ்சேரலாதன யானை மீதேறிப் பொரச் சென்றான் (பதி. 11:5-10). உதிராத பசிய மயிரினையும் இளமைத தன்மைக் கொத்த அசைந்த நடையினையு முடைய பெருமை பொருந்திய இளங்களிறு கனறுபுணர் பிடியை மொயககும் வண்டுகளை ஓட்டும் (பதி. 12:11-13). இமையவரம்பன் நெடுஞசேரலாதன் பலவாகிய களிற்றுக் கூட்டத்தோடு வெல்கொடி உயர்ந்து அசையும் படையினை ஏராக உடைய உழவனா வான் (பதி. 14:16,17). நிரை களிறுகள் பகைவரது மதின்மரத்தை (கணையமரத்தை) அழித்தன (பதி. 15: 3,4). மதிலினுடைய நெடுங்கதவுகளைத் தாக்கிச் சிதைத்தலால மருப்பின் நுனை முரிந்து பன்றி யைப் போலத் தோன்றும இளங்களிறுகள கடாம் சொரிந்து கடுஞ்சினங் கொண்டு கணையமரம், காவல்மரம் முதலியவற்றை அழிததுப் பாசறைக் கண்ணே முழங்கின (பதி. 16:4-8). இமையவரம்பன் நெடுஞசேரலாதன் வயிரியர், கணணுளர் எனற இருவகைக் கூத்தர்ககுக் குதிரைகளையும களிறு களையும் தேர்களையும் தனக்கெனப் பாது

காவாது மிகுதியாக வழங்கினான் (பதி. 20:15,16). களிறு பட்டம் முதலிய அணிகளாற் பொலிவு பெறறது (பதி. 22:18). முத்தைக் கொண்டமருப்பினை யுடைய இளங்களிறுகள் பிளிறின (பதி. 32:3). களங் காய்க்கண்ணி நார்முடிச்சேரல் திருந்திய மணி யைப் பக்கத்திலே கொண்ட துடியை யொத்த வலிய தாளையுடைய களிற்றைப் பகைவரது கடிமரத்தில் கட்டினான் (பதி. 33:2,3). இனையர் கடவுளை வாழ்த்தும் ஒலியினை மறப் புலிக் கூட்டத்தின் குரலாகக் கருதிய வயக்களிறு மலையில் எழுந்த சுடர் வீ வேங்கைக் கிளையை வளைத்துப் பிளந்து தனது தலையிலே பொலிவு பெறச் சூடிப் படைமறவர் தண்டேந்திப் போரெ திர்ந்து ஆர்த்தாற் போன்று சுரபுன்னை நெருங் கிய சாட்டகம் எதிரொலிக்கப் பிளிறும் (பதி. 41: 6-13). செங்குட்டுவன் விளங்குகின்ற நிலையினை யுடைய உயர்ந்த கொம்புகளைக் கொண்ட களிறு ஊர்ந்து வந்தான் (பதி. 42:18). பகைப்புலத்தே கொள்ளும் கொள்ளையை யுடைய படைமறவர் கொல்களிறுகளைப் பெற்றனர் (பதி. 43:25). கடல் பிறக்கோட்டிய செங்குட்டுவன் மோகூர் மன்னனை வென்று அவன் காவன்மரமான வேம்பினைத் தடிந்து அதனை முரசு செய்யச் சிறு துண்டு களாக்கி வண்டியிலேற்றிக் களிறுகளை அதனை ஈர்க்கும் பகடுகளாகப் பூட்டிச் செலுத்தினான் (பதி. 44:14-17). மறவர் களிறுகளைக் குத்தி வளைந்த வடுக்களைப் பெற்ற வேலை உடையவர் (பதி. 45:4,5). குட்டுவன் பகைவரை அடுதோறும் பரிசிலர் களிறுகளைப் பெற்றனர் (பதி. 47:1,2). கடல் பிறக்கோட்டிய செங்குட்டுவனின் படையி லுள்ள களிறுகள் பரந்து இயன்றன (பதி. 49:4). கொல்லுகின்ற களிறாகிய உலாவுதலை யுடைய அலைகள் தம்மில் மாறுபட்டுப் புடைபெயர்ந்தன எனப் படையிலுள்ள யானை அலையாக உருவகஞ் செய்யப்படுகிறது (பதி. 50:8). கடலின் மேல் மிதந்து செல்லும் கப்பல்கள் திசையில் திரிவது போலக் கொடிகள் அசையும் நிலையுடைய கொல்களிறுகள செறிந்து திரிந்தன (பதி. 52:1-4). தேனீக்கள் பரவிய மதத்தால் குத்துக் கோலைக் கடந்து, வேங்கை மலரை வென்ற புள்ளிகள் விளங்கப் பெற்ற நுதலினிடத்தே ஏந்திய கையைச் சுருட்டி, அங்குசத்தைக் கடந்து, வெல்கொடி அசையச் செல்லும் சேரனின் களிறுகள் பகைவரது மதிற் கதவினைக் காணின் தாங்கலாற்றாது சென்று குத்துதலைச் செய்யும் (பதி. 53:16-21). புலால் நாற்றம் வீசும் பாசறை ஒள்வாளால் வெட்டப் பட்ட வன்மையையுடைய களிறுகளை உடையது (பதி. 61:14,15). ஓடை, பொன்னரிமாலை முதலிய இழையணிந்து எழுதரும் பல்களிற்றுத் தொகுதி பகைவர் மதிலை வளைக்கும் (பதி. 62:1-4). செல்வக் கடுங்கோ அந்தணர்க்கு அருங்கலன்களை நீர் வார்த்துக் கொடுத்தலான் அந்நீர் ஒழுகிக் கருஞ் சேறு உண்டான மணல் முற்றத்தி னிடத்தே களிறுகள் தாம் நிற்றலை வெறுத்தன (பதி. 64:5-7). வாழியாதன் பகைவரை அழித்து அவர் போர்க் களத்தில் திறையாகத் தந்த களிறுகளை இர வலர்க்கு அளித்தான் (பதி. 66:4-9). பல களிறாகிய இனத்தின் வரிசை போரை விரும்பித் தம் இருப் பிடத்தை விட்டுத் திரிந்தது (பதி. 67:7). போர்க் களத்தே களிறுகளைச் செலுத்திய தாளையுடைய வயவர் பெரும எனச் செல்வக் கடுங்கோ வாழியாதன் விளிக்கப் பெறுகிறான் (பதி. 70:1,11). பெருஞ்சேரலிரும்பொறை இரும்புலியைக் கொன்று பெருங்களிற்றை வீழ்த்தும் சிங்கத்தைப் போன்ற வன் (பதி. 75:1,2). பெருஞ்சேரலிரும்பொறை களிறு களையுடைய பெரிய போர் சிதையுமாறு வேலை யுயர்த்து ஒளிறுவாள் மன்னரது ஒனறு கூடிய நிலையை அழித்தவன் (பதி. 76:1,2). களிறுகள் பாசறை யெல்லையில் பரந்து இயங்கின (பதி. 81:6). கொல்களிறு செறிந்த கிடுகுத் தொகுதியோடு நெடுந்தேரில் நுடங்கும் கொடிகள் பொலிவுபெறச் செல்லும் சேரனின் செலவு காண்பார்க்கு இன்பம் தரும் (பதி. 83:3-5). நீண்ட மேகத்தின் முழக்கத் தைப் போல மழகளிறு வன்மைமிக்குத் தன்காற் கீழ் அகப்படுத்திய இளைய மூங்கிலின் கிளை யாகிய முளைபோலச் சேரனை உடன்ற பகைவர் உய்யார் (பதி. 84:11-13). போர்க்களத்தில், இடி வீழ்த்திய மலை போலக் களிறுகள் கொலையுண்டு நிலத்தில் வீழப் போர்புரிந்தவன் இளஞ்சேரலிரும் பொறை (பதி. 84:18,19). உலாவுதலையுடைய களிற் றிடத்தே வெல்கொடி அசையும் (பதி. 88:17). ஒளிறு வாள் வயவேந்தர் இளஞ்சேரலிரும்பொறைக்குக் களிறுகளோடு அணிகலன்களைத் திறையாகக் கொடுத்தனர் (பதி. 90:6,7). சேரனின் நகைசால் இருக்கை இரவலர்க்குக் களிற்றையும் குதிரையை யும் தேரோடு சுரந்து நன்கலம் ஈயும் தன்மையது (பதி. தி. 4:2,3). பழமுதிர் சோலையில் இழிதரும் அருவி பெருங்களிற்றின் முத்தையுடையவெள்ளிய கோடுகளைத் தழுவி விரையும் (முரு. 304,305,316, 317). கானம் களிறு உலாவும் வழியையுடையது (பொரு. 48). ஆளிநன்மானினது குருளை முலை யுண்டலைக் கைவிடாத இளமபருவத்தில், இரை யைக் கோடற்குக் காரணமான முதல் வேட்டை யில் களிற்றைக் கொன்றது போல் கரிகாலன்

இளமையில் இருபெரு வேந்தரை வென்றான் (பொரு. 139-148). நலலியக் கோடன் களிறுகளைச் செலுத்துவதனால் உண்டாகிய தழும்பு கிடந்த கழல் கிடந்து அசையும் பிறக்கிடாத அடியினை யுடையவன் (சிறு. 123). தொண்டைமான் இளந் திரையனிடமிருந்து பரிசிற் பெற்று மீளும் பாணன் 'புரவியொடு வயக்களிற்றையும் முகந்து கொண்டு அவன் ஊரினின்றும் வருதும்' எனப் பரிசிற் பெறாத பாணனிடம் கூறினான் (பெரு. 27,28). திரிகை மரம் களிற்றினது காலைப் போன்று காணப்படும் (பெரு. 187). காந்தளையுடைய அழகிய பக்கமலையில் களிறு கிடந்தாற் போலப் பாம் பணையாகிய படுக்கையிலே துயில் கொண்டவர் (திருமால்) (பெரு. 371-373). கந்தினால் சினத்தை யடக்கிய களிறுகளும் நெடுங்கை யானைகளும் தின்னும் நெய்ம்மிதி கவளங்களைப் பரிக்கோற் காரர் நெகிழ்ந்த சமயம் பார்த்துக் கடுஞ்சூல்மந்தி கவரும் (பெரு. 393-396). செந்தீப் பேணிய முனிவர் வெள்ளிய கோட்டினையுடைய களிறுகள் முறித்துக் கொணர்ந்த விறகாலே வேள்வியைச் செய்வர் (பெரு. 498,499). பொலிவு பெற்ற உலகத்தைத் தாங்குமாறு உயர்ந்த நிலையையுடைய வலிமிக்க களிறுகள் (திசையானைகள்) தமது பொறை நீங்கி வருத்தமற்று மேம்படுமாறு உலகாண்ட உயர்ந் தோர் குடியில் தோன்றியவன் தலையாலங்கானத் துச் செருவென்ற நெடுஞ்செழியன் (மது. 13-15,23). பேய்மகளிர், பிணங்களைக் கொண்ட கொம்பு களையுடையனவாய்ப் பட்ட களிற்றுத் திரளின் நிணத்தைத் தின்றனர் (மது. 24,25). தலையாலங் கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன தடாரிப் பொருநர்க்கு, அச்சம் பொருந்திய பெரிய தலை மையையுடைய கன்றும் பிடியுமென்னும் இரண்டு பெயரையுடைய பெரிய திரளுடனே விளங்குகின்ற கொம்பினை யுடைய களிறுகளை வழங்கினான் (மது. 99-102). கழுநீர்ப் பொலிந்த பொய்கை யில் களிறு நினறால் மறையும்படி செருந் தியோடு சண்பங்கோரை நெருங்கி வளர்ந்திருந் தன (மது. 171,172). நெடுஞ்செழியன் முழங்குகின்ற ஓசையையும் பெருமையை யுடைய கால்களையும் உயர்ந்த கொம்புகளையும் கடுஞ்சினத்தையும் உடைய களிறுகளைப் பரப்பிப் பெருந்தானை யுடன பகையிடம் சென்று கணை சிதறி வென்று நாடழிய மதிலைக் கைப்பற்றினான் (மது. 177,187). மன்னர் பாணர் மகிழும்படி களிறுகள் பலவற் றையும் கொடுத்தனர் (மது. 219,234). மூங்கில் வளர்ந்த மலைப்பக்கத்தில் களிற்றுத்திரள் நடுங்கு மாறு உருமேறு ஒலித்தது (மது. 242,243). களிறுகள் நின்றால் அவற்றையும் மறைக்கு ம்படி விளைந்த கதிரையுடையது கழனி (மது. 247). மாயோன் பிறந்த ஓண நன்னாளில் மறவர், தோட்டி வெட் டின வடு அழுந்தின முகத்தை யுடையவாய்ப் போர்யானை பலகாலமெடுத்தலால் தழும்பிருந்த போரைத் தாங்கும் பெரிய கையினையுடைய கடுங் களிறுகளை ஒன்றனோடு ஒன்று போரிடுமாறு செலுத்துவர் (மது. 591-597). ஊர்காப்பாளர் வயக் களிறறை இரையாகப் பார்க்கும் வயப்புலி போலக் கள்வர் ஒதுங்கியிருக்கின்ற இடத்தை ஒற்றி அறிவர் (மது. 642-647). பரிக்கோற்காரர் கடுங்களிற்றிற்குக் கவளம் ஊட்டினர் (மது. 658,659). பிடியொடு கூடின பெருங்களிறு முழங்கியது (மது. 676). தலை யாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் இருங்கிளை ஓம்பும் இரவலர்க்கெல்லாம் கொடுஞ் சியையுடைய நெடுந்தேர்களைக் களிற்றோடும் நல் கினான் (மது. 751,752). பெருஞ்செய் ஆடவர் ஓடை பொலிந்த வினைநவில யானையினுடைய தடக்கை அற்று நிலத்தே புரளும்படி களிற்றைக் கொனறனர் (நெடு. 169-171). ஓடை பொலிநத மழ களிற்றானாகிய தலைவன் தலைவியின் தோண லத்தை நச்சாது பகையோடு பாசறையின்கண் இருந்தான் (நெடு. வெ ). தலைவன் தலைவியிடத்து மொய்த்த வணடினத்தைப் பூங்கொம்பால் தன் னைச் செலுத்துகின்ற பரிககோலைக் கைகடந்த மதக்களிறு போல வெற்றியுண்டாக ஓட்டினான் (குறி. 148-150). தலைவன் இராக்காலததே வரு கின்ற குழுமலை விடரகம் களிறு முதலியவற்றால் இடும்பைதரும் தன்மையுடையது எனத் தலைவி கலுழ்ந்தாள் (குறி. 251-261). பட்டினத்தின் அட் டிற் சாலையில் சோறு வடித்த கொழுங்கஞ்சி யாறு போலப் பரந்து, ஏறுகள் பொரச் சேறாகி, தேரோ டத் துகள் பொருந்தி, வெண்கோயிலின் ஓவியம் புழுதியை மேலே பூசிக்கொண்ட களிற்றைப் போல மாசு படிந்தது (பட். 43-50). புகாரின் துறையி டத்து அசைகின்ற நாவாய், அசையாத கம்பத் தினை அசைக்கும் களிற்றைப் போன்றது (பட். 172-174). வேல் களிற்றைக் குத்தினாற் போன்று வாழையினது ஊழ்மலர் ஒழிந்த முகை துறுகல்லைப் பொருந்தியது (மலை. 129-131). இருள்செறிந்த காவற்காடு வலிய களிறுகளை விழுங்கும் முதலைகள் உறையும் ஆழமான நீர் நிலைகளை உடையது (மலை. 211-213). வலிமிகுகின்ற சினமுடைய களிற்றினது வலி யைக் கெடுத்து விழுங்கும் பாம்புகள் காட்டின் கண்ணே பெருமரங்கள் வீழ்ந்து கிடப்பதைப் போல் வீழ்ந்து கிடக்கும் (மலை. 259-261). களிறுகள்

தம்மிற் கூடிப் பொருதாற் போன்று ஒன்றி னோடு ஒன்று பொருந்திய துறுகல்லை யுடையது கானம் (மலை. 384,385). மலையிடத்துக் குழியில் அகப்பட்ட கடுங்களிற்றின் வருத்தத்தை நீக்கப பிடியானை அக்குழியினின்றும் ஏறுதற்குப் படி யாகப் பெருமரத்தினை முறித்திட்ட ஓசை மலை முழைக்கண் சென்றொலிக்கும் (அகம். 8:8-12). அருஞ் சுரத்திலுள்ள யாமரம் பெருங்களிறு உரிஞ்சியதால் சேற்று மண்ணைப் பொருந்திய அடியினையுடைய தாயிற்று (அகம். 17: 16, 17). கோவலர் தோண்டிய ஊறாத உவலைக் கூவலைப் பெருங்களிற்று இனநிரை தம் வெண்கோடு விரும்பிய கான வர் தம்மை அகப்படுத்தக் காட்டில் அகழ்நத குழியெனக கருதித் தூர்க்கும் (அகம். 21:22-26). வயப்புலி, களிறாகிய இரையைத தெரிதற் பொருட்டு ஒதுங்கிய பார்வையோடு மறைநது இயங்கும் இயல்பினை உடையது (அகம். 22:14,15). புலி பட்டினிகிடந்து உயிர் வருந்துவதாயினும் தான் வீழ்த்திய களிறு இடப்பக்கம் வீழின அதனை உண்ணாத தாழ்வற்ற ஊக்கமுடையது (அகம். 29:2-4). தலைவியிடமிருந்து சொல்லெதிர் பெறா னாகிய தலைவன் வருததமுற்றுத் தன் இனத்தினின் றும் நீங்கும் களிற்றைப் போல் பெயாந்து சென் றான் (அகம. 32:15,16). ஞாயிற்றின் வெம்மையால் உழந்த புன்றலை மடப்பிடி மேலே உயர்த்திய தன் கையும் மறையத் தக்க ஆழநத வெள்ளததில் களிற் றுடன் படிந்து விளையாடியது (அகம. 43:3,4). கோடை நீடிய பெருங்குன்றினிடத்து நீரற்ற அருஞ சுரத்தில் ஓங்கின களிற்றைக் கொன்று மக்கள் நட மாட்டமற்ற பாலைவழியில் புலி திரியும் (அகம். 45:3-5). கொற்றச் செழியன் பகைவரது களிறு களைக் கொண்ட அரிய போரினைச் சிதையக கொல்லும் ஒளிறுவாள் தானையை உடையவன் (அகம். 46:11-13). கானத்தில் வயக்களிற்றன்ன தலை வன தன் மகளொடு உடன்போக்கு மேவியதை நினைந்து தாய் இரங்கினாள் (அகம். 55:4-6). செழி யன் முசிறியை வளைத்துக் களிறுகள் மடியக் கொனற போரில் விழுப்புண்பட்டவர் போலத் தலைவி பெரிதும் அழிந்து வருநதினாள் (அகம். 57:14-17). தொழுநை யாற்றின துறையில் ஆயர் மகளிர் தழையை உடுத்திக கொள்ள மரத்தை வளைய மிதித்துத் தந்த மால் போலக் களிறு தன் புன்றலை மடப்பிடி தளிர்களை உண்ணற்கு யாமரத்தை வளைத்துத் தந்து மதத்தால் நனைந்த அதன் கன்னத்தில் படியும் வண்டுகளை ஓட்டும் (அகம். 59:4-9). பொறையன் களிறுகள் மிக்க படை யினையுடையவன் (அகம். 62:13). அஃதை களிறு களோடு நலல அணிகளை நாளோலக்கததில் பரி சிலர்க்கு வழங்கி மகிழ்வான் (அகம். 76.3,4). கடலன் பகைவரது ஒளிர்கின்ற வேலினையுடைய போர்க் களத்தில் களிறுகள் மடிய வென்றான (அகம். 81: 11-13). கல்லா இளையர் உரல போனற அடி யினையுடைய மடபபிடி காட்டில அலறக களிற்றுக் கன்றினைப் பிரித்துக கொண்ட உவகையராயக கலி சிறந்து கடம்பினைப பிளநது அதன வெண ணார்க் கயிற்றினால அக்கன்றினைப பிணித்துக கொணர்ந்து நியமம் என்னும் மூதூரில கள விற்கும் இல்லத்தின வாயிலிடததே கட்டுவர் (அகம. 83 3 ). சோழர் பருவூர்ப போரககளததே இருபெரு வேந தரும பொருது களத்தில் பட்டொழியுமாறு நலல போரினை வெனற காலதது அவரது களிறுகளைக கவர்நத போது ஆரவாரம எழுநதது (அகம. 96: 13-17). சிறியவும் பெரியவுமாகிய அளவினையுடைய குனறங்கள, தலைவியின தநதையுடைய போர்க் களத்துப பாய்நது போர செயதலால பூண சிதைநத கோட்டினையுடையவும பிடிகள சூழப பெற்றவுமாகிய களிறுகளைப போலத தோனறின (அகம. 99:11-14) கொடிச்சி பெருவரை மருங்கில குறிஞ்சிப்பண் பாட, தான கொணட தினைககதி ரையும் கொள்ளாது, நினற நிலையினினறும பெய ராது, துயிலாப் பைங்கண் துயிலவரப பெற்று மறத்தினை விரும்பிய மழகளிறு உறங்கியது (அகம. 102:5-9). செழியன போரில அடுநதோறும களி றாகிய உணவினைப பெறும் பாணன தனணுமை எறிவான (அகம். 106..10-13). தம கொமபினால பகையாயவற்றைக் குத்தி உழும் களிறுகளின கூட்டம் சோலையில கூடியது (அகம. 109'4,5). அற னில வேந்தன் சுரநெறியில அறியாது வநதோர கையிற் பொருள இலலையாயினும அவரைக கொலலாது விட்டு வந்த பிழைககாகத் தன ஏவல ரிடம் பெரிய களிற்றின மருபபோடு புலியின தோலைக் கொணடு வருமாறு தண்டனை வழஙகு வான (அகம். 109:10-14). ஞெமை மரததின மீதுளள சிலம்பின்கூடு மேலகாற்றால அசைய அதனை மழையென மருண்ட மயக்கத்தினை யுடைய இளைத்த களிறுகள் தூககிய நீண்ட கைகள கூத் தரது தூம்பினைப போலத தோனறி ஒலிக்கும் (அகம். 111:5-9). ஈனறணிமை கொண்ட வேட்கை யுடைய பெணபுலி பசிததெனை மறபபுலி ஒளி வீசுகினற ஏநதிய கோட்டினையுடைய களிற்றைக் கொன்று சோலையில் முழங்கியது (அகம. 112.5-7). சிறுகுளத்தில் தோண்டப்பெற்ற குழியின்கண் ணுள்ள கலங்கிய நீரால் கனறினை உடைய மடப் பிடியின மெல்லிய தலையை முதலிற் கழுவி

எஞ்சிய சேறுகொண்டு அளைந்து நிறம் வேறுபட்ட வயககளிறு வெண்கடம்பின் வெள்ளிய கொத்துக் கள அசையத் தினவு கொண்ட தன் முதுகினைச் சொரியும் (அகம். 121:3-8). பகைவர் வேந்தனுக்கு நலல அணிகளைக் களிறறோடு திறையாகக் கொடுத்து வணஙகினர் (அகம். 124:1,2). கானவர் களிறறின மதம் பொருந்திய கனனத்தையுடைய முகத்தைக் கிழித்த அம்பினையுடையவர் (அகம். 132: 4,5). சுரநெறியிற செலலும புதியவர் சேற்றைக் கிணடி ஊறிய நீரை உண்ட சிறிய பலவாய கேணி களைத் தன பிடியின அடிசசுவடென விருமபிக் களிறுகள் தொட்டுப்பார்த்துக் காட்டாற்றுவழி யைக் கடந்து சென்றன (அகம். 137:1-3). (கட்டு விச்சியும் வேலனும) அச்சந தோன்றும் தலைமையை யுடைய முருகனை மனைக்கண வருவிதது இனனியங் கறங் கக் கைதொழுது அவனது கடம்பினையும களிற்றி னையும் பாடினர் (அகம். 138:9-11). பெருங்களிறு சோலையின்கண்ணுளள மூஙகிற் குருததினைத் தினனும் (அகம. 148:12,13). நனனன் புகழ் மேவிய நலல ஈகையினையும் களிறுகளை வழங்கும வணமை யினையும் உடையவன (அகம. 152:11,12). ஆநிரை களுக்கு நீரூட்டக் கோவலர் தோணடிய கிணற்றி னின்றும் முகந்த பத்தலினின்று நீர் வடிந்து செல்லும் சிறிய குழி நீரினறிக் காயநததனாலாய வருததத்துடன் சேரத்தக்க வேறிடம் பெறாது பெருங்களிறு மிதித்தேகிய அடிச்சுவட்டில் இரும் புலிகள் அடிவைத்து நடந்து சென்றன (அகம். 155: 7-12). உயர்நது தோனறும் அருவிகள பசும்பூட் பாணடியனது களிற்றின மீது எடுத்த வெல் கொடியை ஒப்ப அழகுபெற ஒளிறுவனவாய் மலையினின்று இழிதரும (அகம். 162:22-24). களிறு நீரைப்பருகி உயிர்பபது போன்று முன்பனிக் காலம் பனித்துளிகளை நள்ளிரவில் இடம் மறைய வீசும் (அகம. 163:7,8). மடப்பிடி குழியில் அகப் பட்டதெனக் களிறு பிளிறிய ஆரவாரத்திற்கு வெருவி விரைந்தோடிய அதன கன்று மூதூரிடத்து எருமை நலலானின் முலைபபாலை மாந்தும் (அகம. 165:1-5) பரத்தை காவிரிப் புதுவெள்ளத்தில் தார ணிந்த களிற்றினைப் போனற புணையின் தலை யிடத்தை (தலைவனை) தழுவி வதுவை ஈரணிப் பொலி யப் புனலாடினாள் (அகம். 166:12-15). பெருவரை யினது பக்கமலையில களிறு ஈன்றணிமையுடைய பெரிய பிடியினைத் தழுவிக் கொண்டு தனது அசைந்த நடையினையுடைய குழவி உறங்குகினற இடத்தைக் காத்திருக்கும் (அகம். 168: 8-10). புலி கொன்று தின்ற பெருங்களிற்றினது எஞ்சிக் கிடந்த ஊனில ஆறலைபபோர் கோலிற் கோததது போக எஞ்சியதை உமணர் சிறு தீயில் வதக்கிச் சுனைநீராலாய சோற்றின உலையில கூட்டி ஆக்கு வர் (அகம். 169:3-7). தாமரையிலை களிற்றின செவி போன்றிருக்கும (அகம். 176:4,7; நற். 310.1,2). தாமரையின் அகன்ற இலை பெரிய குளம் அலை யக் காற்று அடிக்குந்தோறும் பெருங்களிற்றின காது போல அசையும் (அகம். 186:3-6). கற்கள் உயர்ந்த இடஙகளில இளைய பிடியைத் தழுவிக் களிறுகள் தம் முழவுகளை எடுதது உயர்ததுக் கொண்டு வேற்று நாட்டில் நிகழும் விழாவினை நினைத்துச் செலலும மள்ளரைப் போலச் சென்றன (அகம. 189:3-6). பறையினை யொத்த வட்டமாகிய பரந்த அடியினையுடைய வலிய தாளினையும் திண்ணிய நிலைவாயநத கோட்டினையும் உடைய வயககளிறு வெணகடப்ப மரத்தை உரிஞ்சு தோறும் அதன் மலாகள பாறையின மீது உதிர்ந்து பரவிக் காய்நது கிடக்கும (அகம. 211: 2-6). தலைவன் தெய்வத்தின இயலபினை யுடைய தலைவியை விரும்பிப பெருங்களிறறினது கூட்டம் படிநது கலககிய நீரைப போலக் கலககமுற்று வருநதினான (அகம். 212:8,9). மேகம பெருங்களிற றின பிடியுடன கூடிய தொகுதி குளிாநதிடப பெரும பெயலாகிய மிக்க துளிகளை வீசிப் பொழிந் தது (அகம. 214:2-4). ஆதன எழினி வெள்வேலால் பெருங்களிற்றின் அரிய மாாபில அழுத்த அது துன்பமுற்றது (அகம். 216.13-15). தன் இனங்கள் பாராட்டும கடிய செலவினையுடைய வயக்களிறு அவறறுக்கு 'மூஙகில முளைகளைத தந்து ஊட்டி வேணடும் தழைகளையும அருத்தியது (அகம. 218: 1,2). களிறாகிய இரை பிழைததலின கயவாய் வேங்கை சினம் மிக்கு முழங்கும் முழக்கத்தினை அஞ்சிய பிடிகள காட்டின்கண் இரிந்தோடின (அகம். 221:11-13). நள்ளி இரவலர்க்கு மழை சுரந் தளிப்பது போனறு எனறும் அணிகள் அணிந்த நெடுநதேரைக் களிற்றுடன தரும் ஈகையினையுடை யவன் (அகம். 238:11-14). முசுண்டை பாணர் இரநது வேண்டின் இமிலேறு, உணவு, தேர் ஆகியவறறி னைக் களிற்றோடு நலகும் வண்மையன் (அகம். 249: 4-9). களிறு சுவைத்திட்ட யாமரத்தின கோதாகிய சக்கைகள் உமணர் தீ மூட்டுதற்கு உதவும் (அகம. 257:14-17). இரும்புலி களிறறைக் கொனறு முழங் கியது (அகம். 261:12,13). தலைவன் புதுநீர்ப் பெருக் கில் வலிமை மிக்க கயிற்றினைப் போல் புணையின் தலைப்புறத்தினைத் தழுவிப் பரத்தையரோடு புன லாடிக் காமம் சிறததலின நாணிழந்து ஆடினான் (அகம். 266:2-9). ஆரியர் பழக்கி வைத்துள்ள பிடி யானை தான் பழகிப் பெருங்களிற்றினைக்

கொண்டு வந்து தரும் (அகம். 276:9,10). புலியுடன்
சினஞ்சிறந்து பொருது செருக்குடன் வலிய களிறு
நடந்த இடங்களில் பரிய பரற்கற்கள் மின்மினிப்
பூச்சிகளைப் போல் எவ்விடத்தும் இமைத்தன
(அகம். 291:6-9). பெரிய களிறு தன் பகையினைக்
கொனறு சினந்தணியாது அதனை வென்றோட்டி
மாறுபாட்டினை மெலிவிக்காது பிடியானைகளின்
கூட்டமாகிய இனத்துடன் கலவாது பெருமழை
போலும் மதததால செருக்குற்றுப் பெருங்காட்டு
நெறியில இயங்கும் (அகம். 298:7-10). செறிந்த நடை
யினையுடைய பெணயானையின உயிர்ப்பு ஒலி
யுடன் களிறறின உயிர்ப்பொலி கூடினாற் போன்ற
சிறுவங்கியம் பெருவஙகியங்களின் ஒலியொடு முழ
வின் ஓசை பொருந்தி ஒலிததது (அகம. 301:16,17).
பாரி அறிவே பறறுகேோடாகக கொண்டு இரவ
லர் வரின் அவர்கு வரைபோலும் களிறுகளுடன
நனகலன்களையும் நல்குவான் (அகம். 303:8-10).
களிறு நிமிர்ந்து பற்றலாகாத மலைக்குகையின்
மேல பரண் அமைக்கப்பட்டது (அகம். 308:9). இலவ
மரததில் களிறு தன் புறததினை உரச அதன் விதை
காட்டில ஆலஙகட்டி போல பரவிக்கிடந்தது (அகம்.
309:7-9). ஆனிரை உண்ணுதற்குக் கோவலர் தரிசு
நிலத்தை உடைத்து இயறறிய கிணற்றினைக் கன்
றுடை மடப்பிடி தன் களிற்றுடன் தடவிப் பார்க்
கும் (அகம. 321:7-9). இடிபோன்ற முழக்கத்தினை
யுடைய களிறு போர்க்களததே பொருதது (அகம்.
322:6,7). முதற்சூலினை ஈன்று மலையில் மூங்கி
லைத் தினனும் மடப் பிடியை விருப்பம் மிக்க களிறு
தடவிக் கொடுக்க அது வாழையஞ் சிலம்பில் துயி
லும் (அகம். 328:11-14). மேகம் கடல்நீரை முகந்
தெழுந்த முழக்கினோடு இரும்பிடியின கூட்டம்
போனறு சேர்ந்து திரண்டு பெருங்களிற்றின்
பருத்த கை போலக் கால் இறககி மகளிராடும்
கழங்கு போன்ற பனிக்கட்டியுடன் துளிகளைச்
சிதறிப் பெய்தலைத் தொடங்கியது (அகம். 334:4-9).
கிள்ளிவளவன பழையன மாறனைக் கூடலில்
போரின்கண் சாய்த்துக் குதிரைகளுடன் பல
களிறுகளையும் பற்றினான (அகம. 346:19-23).
வேஙகையின பூக்களால ஆகிய கவளத்தை உண்ட
களிறு தனது வரிகள தஙகிய நெற்றியில் வைத்த
வலிமை குனறிய பெரிய கை குன்றததே ஏறும்
பாம்பு போலத் தோன்றும் (அகம். 349:10-13).
பெருங்களிற்றின் இனநிரை புலிகள் திரியும்
கானம் செல்லாது பலாவின் இனிய சுளை
களைத் தம் கைகளால் தோண்டித் தின்னும் (அகம்.
357:6-9). நின் தேரினைச் சேய்மையின் நீக்கி
மெல்லெனக் குன்றில் இழிந்து செல்லும் களிறு

போல் மணல்மேட்டினைக் கடந்து நம் குறியிடத்
திற்கு இரவில் வருவாயாக எனத் தோழி தலைவ
னிடம் கூறினாள் (அகம். 360: 13-15). பிடியுடன
கூடிய களிறுபோலத் தலைவன் தலைவியுடன் கூடிச்
சுனைநீர் ஆடினான் (அகம். 368:10,11). ஆறுசெல்
வம்பலர் வேறு வேறாகப் பிரிந்து போய் அலறக
கொலலும கொடுமை நோக்கித் தன் நிலையை
விட்டு வேறிடத்துத் தங்கிய பெருஙகளிற்றினைப
புலியேறு கொனறு வென்றியோடு சிலமபகம் எதி
ரொலிகக இடியென முழங்கும் (அகம. 389 18-23).
துறுகலலின் அயலதாகிய மாணைக கொடி துஞ்சு
கினற களிற்றின் மேல் படரும (குறு. 36:1,2). களிறு
மிதிததமையான் உண்டாகிய பள்ளத்தில நீர்
தஙகியது (குறு. 52:1). மலையிலுள்ள அசைகினற
சேம்பின இலை பெருங்களிற்றினது செவியை ஒப்
பத் தோனறும்படி வாடைககாறறு வீசும (குறு.
76:3-5). நெருங்குதற்கரிய மலைச்சாரலில் சிறுகட்
பெருங்களிறு வயப்புலியை எதிர்ததுப் பொருது
தனது பழைய வலிசோரும் (குறு. 88:2,3). தலைவன
நுகர்ந்த தலைவியின் பெண்மை நலம பெருங
களிறு உண்ணும் பொருட்டு வளைகக வளைநது
நிலத்திற் படாத நாருடைய ஒடிந்த கிளையைப்
போன்றது (குறு. 112: 3-5). பேயின் பறகளைப
போன்ற பருத்த நகங்களை யுடைய பரவிய அடிக
ளைப் பெற்ற பெருஙகளிற்று இனத்தின தலைவனை
கைக்கொள்வதினால் கரும்புகள் அழிந்து பாததி
யின்கண் வீழ்ந்தன (குறு. 180:1-3). குனறத்தில ஒன்
றோடொன்று பொருத களிறுகளால மிதிககப்பட்ட
வேங்கைமரம் குறமகளிா தம் கூந்தலில அணிந்து
கொள்ள நின்றபடியே மலர்களைக் கொயயுமாறு
தாழ்ந்து மலர்நதது (குறு. 208:1-4). தலைவன தலை
வியை முயங்க நளளென யாமத்தில வலியையுடைய
களிற்றைப போல் வந்து கதவைத் திறக்க முயன்
றான் (குறு. 244:1,2). கடற்கரையிலுள்ள காககை
களிற்றினது காதைப் போன்ற பசிய இலையைக்
கலக்கிக் கழிநீரை நள்ளிரவில் இரையின பொருட்
டுத் துழாவும (குறு. 246:1-3). மலையடி வாரத்தி
லுள்ள கரும்பு நட்ட பாத்தியைப் போன்ற பெருங்
களிற்றினது அடிச்சுவட்டின்கண் தங்கிய நீரைத்
தலைவி தலைவனொடு உண்டாள் (குறு. 262:5-8).
நன்னன் புனலாடச் சென்ற பெணணொருத்தி
அப்புனல தந்த பசுங்காயைத் தினறதன குறறத்
திற்காக எண்பத்தொரு களிறுகளோடு அவள்
நிறையையுடைய பொனனாற் செய்த பாவையைக்
கொடுப்பவும் கொள்ளானாய் அப்பெண்ணைக்
கொலை செய்தான் (குறு. 292:1-5). களிறு தன்
வருந்திய நடையை உடைய மடப்பிடியினது வருத்

ததனதப் பொறாது யாமரம் அழியும்படி கொம்பாற் குததி அதன வெண்ணாரைக் கைக்கொண்டு வறுங்கையைச் சுவைதது மேல்நோக்கி அழுங்கல நெஞசமொடு முழஙகியது (குறு. 307:4-8). களிறு நடமாடும் சிறிய வழி புதையுமாறு காற்று வீசியதால் இருபபைபபூ உதிர்ந்து பரவியது (குறு. 329: 1-3). இளம்பிடியை விரும்பிய மூங்கில முளையைப போன்ற கொம்பை யுடைய இளங்களிறு மலையிடத்தே பொருந்தி அங்குளள குறவர் ஆர்ப்பதனால் ஊரிடத்துள்ள மனறததைப போழ்ந்து செல்லும் (குறு. 346:1-3). வாகைப பறந்தலையில பசும்பூட் பாணடியனது ஏவல் வலல அதிகன தனது களிறொடு பட்ட காலத்தில் கொங்கா ஆர்த்தனர் (குறு. 393:3-6). மலர் கவிழ்ந்து மடலவிழ்நத காந்தள் மிக்க மலைச சாரலில் இருந்த இனத்தொடு கூடிய வலிய களிற்றைப பாமபின வாய் சிக்கியதென்று கருதித் துயரொடு அஞ்சிய பிடியானை பிளிறியது (நற். 14: 6-10). தாழையரும்பு பெருங் களிற்றின் மருப்பினைப் போனறது (நற். 19:1,3). புலியேறு பொலிநத நுதலையுடைய இரும்பிடி புலம்பப் பெருங்களிற்றைத் தாக்கிக் கொனறது (நற். 36:1-3). புலி பெருஙகளிற்றைக் கொல்லப் பிடியானை வாடிய துனபத்தோடு இயங்காது நெய்தலிலை போலும் அழகிய செவியினைக் கொண்ட தன் கன்றினைத் தழுவிக் கொண்டு அரும்புண் உற்றாரைப் போல வருநதியது (நற். 47:1-5). பச்சிலை மரத்தை முரித்து உழக்கின பரந்த அடிகளையும் கரிய சேறறையப்பிய நுதலையும் உடைய கொல் களிறு அறியாமையால் ஆசினியை முரித்து மலருதிர்ந்து பரவிய வேங்கையின் கீழ் தங்கும் (நற். 51: 8-11). பரதவர் வலையேற்றப் பட்ட தோணியைப் பரிககோறகாரர் பிணித்துச் செலுத்துகின்ற அடக்குதற்கரிய களிற்றைப் போலக கடலிற் செலுத்துவா (நற. 74:1-4). வேபப மரத்தின் பெருங்கிளையை முரித்த மதத்தாற் செருக்குண்ட கடிய சினமும் வலிமையும் உடைய களிறு நின்று சென்ற நீரல்லாத ஈரமான இடத்தில் செந்நாய் தன் வயிற்றைப் பொருததி முடஙகிக் கிடந்தது (நற். 103:2-6). புலியேற்றை மலைப்பக்கததே களிற்றோடு போர் செய்தால் குறக குறுமாக்கள் தொணடகச சிறு பறை எறிவா (நற. 104:1-5). சிஙகம் அடுக்கம் அஞசும்படியாகக் களிற்றைக் கொன்று இயங்கும் (நற். 112:3,4). இடியேறு கரிய நிறத்தையுடைய இளம்பிடி வருநதுமாறு தன கையை ஊன்றி இறங்குகினற களிற்றின் மேலே பாய்ந்து அதனைக் கொனறொழித்தது (நற். 114:9-12). குறவர் தினையைத் துவைத்து அதன் தாளைப் போரடிப்பதற்காகக் கற்பாறையில் துயிலும் களிற்றை வைகறையில எழுபபுவர் (நற். 125:9-12). நீரற்ற நெடுவழியில் பிடியின் கடும்பசியைப் போக்குவதற்குப் பெருங்களிறு முரித்துத் தள்ளிய ஓமை மரம் அருஞ்சுரம் செல்பவருக்குத் தங்கு நிழலாகும் (நற். 137: 5-8). புலி பெருங்களிற்றைத் தாக்கிக் கொல்லுதலின கரிய பிடியானை கருமேகம முழஙகுவது போலப் பிளிறியது (நற். 144:1,2). வழுதி காவலரண் சிதையும்படி பலவாய களிறுகளைப் பரப்பிச் சென்று அரண்பல கொண்ட வலிமை மிக்க தானையை உடையவன (நற். 150-2-4). மேகந்தவழும குறுங்காட்டிடததே களிற்றை வலத்தே வீழக் கொனற வெஞ்சினப் புலியேறு யாவரும் அஞ்சுமாறு முழங்கியது (நற. 154:4-6). தறியிலே பிணித்துக் காபபவரும் மீதேறி நடத்துபவரும் ஒழிந்து வறுந்தலைப் பெருஙகளிறுபோலத் தலைவன தமியனாகத் தலைவியைக காண வநதான் (நற். 182:8-10). பக்க மலையில் ஆளி புலியைத் தொலைத்த கூரிய நுனியைக் கொணட வெணகோட்டினையுடைய வயக் களிற்றை இரையாகக கொண்டு இழுததேகும் (நற். 205:1-4). மலையில துஞ்சுகினற பிடியானையை மேகம் மறைத்தலின அதனைக் காணாத பெருங் களிறு பிளிறியது (நற். 222:7-9). வயக்களிற்றைப் பொருத புலி கன்முகைச் சிலம்பில் முழங்கும் (நற். 255:4,5). நள்ளிரவில் மலைக்குகையில களிறறைப் பற்றிச் சுற்றிக் கொண்ட பெரும்பாம்பு அதனை மரத்துடனே சேரப பிணித்துப் புரட்டும் (நற். 261: 5-8). தலைவியை விழையும் உள்ளத்திற்கும் பொருளை விழையும் அறிவிறகும் இடைப்பட்ட தலைவனின் உடல இலங்கும் கொம்பினையுடைய களிறு ஒன்றோடொனறு மாறாகப் பற்றி யீர்த்த தேய்நத புரியையுடைய பழைய கயிறு இற்றொழிவது போல அழியும் (நற். 284:3-11). களிறுகள் ஒன்றோடொன்று பொருதலாலே இடிந்தொழிந்த கருங்கற் கான்யாற்றின் பள்ளங்கள் பொருந்திய கரையிடமெல்லாம வெண்பளிங்கும் செம்பொன்னும் மின்னின (நற். 292:5-7). தழும்பனது ஊணூரிடத்துப் பிச்சைக்கு வந்த பெருங்களிறு நிற்றல் போலப் பாணன் காமககிழத்தியின் அட்டிற்சாலைக் கூரையின் பனையோலையைத் தொட்டு நின்றான் (நற். 300:10-12). களிறு காலால் உதைத்தலால் எழுந்த புழுதி வேலமரங்கள் நெருங்கிய செல்வோர்க்குத் துனபஞ்செய்தலை யுடைய அரிய முதுநெறியை மறைக்கும் (நற. 302:7-10). களிறு பெறு வல்சிப் பாணன் (நற். 310:9). மலையகத்தின் பிளப்பிடம் எதிரொலிக்க இரும்புலி களிற்றைத் தொலைத்து

முழங்கும் (நற். 344:9,10). விளங்குகின்ற படைக் கடலிலே களிறு படப் பொருது பெரும்புண் உற்றுக் கிடந்தோரைப் பேய் காத்து நின்றது (நற். 349:7,8). கட்டுப்பரண் களிற்றின் வலிமைக்கு அஞ்சாத புலித்தோலால் வேயப்பட்டிருந்தது (நற். 351: 7). இளைய களிறு வேங்கை மரத்தின் பருத்த அடியில் உராய்ந்தது (நற். 362:7). புனிற்று வயா நோயையுடைய பெண்புலி பசித்ததென வயப்புலி நள்ளிரவில புள்ளிகளையுடைய முகம் பிளவுபடுமாறு களிற்றைக் கொன்று இடிமுழக்கம் செய்யும் (நற். 383:3-5). கொலைத் தொழிலன்றிப் பிறவற்றைக் கல்லாத ஏவல் இளையர், களிற்றின் முகத்தைப் பிளந்த சிறந்த அம்பையுடையவர் (நற். 389: 4,5). மணி விளக்கதில் கன்றையீன்ற பிடியானை தன்னைக் களிறு அயலிலே காத்து நிற்ப மலையில் தன் கன்றொடு வதியும் (நற். 389:5-7). தேனூரின் கண் கரும்பினை அடும் எந்திரம் களிறு பிளிறுவதற்கு எதிராக ஒலிக்கும் (ஐங. 55:1,2). களிற்றினைக் கொள்ளுவதினின்றும் வழுவிய புலி கதஞ் சிறந்து மேகத்தைப் போல் முழங்கும (ஐங். 218:3, 4). பிடியினைத் தழுவிய களிறு வேற்றிடம் செல்லாது பசிநோய் வருத்த வருந்தும் (ஐங். 305:1,2). பனி வரையின்கண் இனக்களிறுகள் இயங்கும் சோலையின் வழியே தலைவி தலைவனோடு உடன் போயினள் (ஐங. 379:2-4). வேனிற் பருவத்து வெம்மையால் வருந்தி உடல் தளர்ந்த ஓய்ந்த களிறுகள் காட்டில் மழை நீங்குதற்குக் காரணமாக கொடுமையை யுடைய ஊர்களிலே நீருண்டற்குப் பேய்த்தேரை நீரென அவாவும் (கலி. 7:1-3). களிறு துடிபோலும் அடியையுடைய யானைக்கன்றுகள் இழிந்து கலக்கிய சினனீரை முதற்கண் பிடிக்கு ஊட்டிப் பினபு தானும் உண்ணும் (கலி. 11:8,9).வெற்றியையுடைய மலை குளிர்ச்சியை விரும்பித் திரட்சி கொள்ளும் பசிப்பிணியாற் சுடுதலையுடைய வருத்தத்தினை யுடையவாகிய பெருங்களிற்றினத்தைத் தாங்கும் (கலி. 20: 3-5). களிபபு விளங்குகின்ற மதத்தவாகிய கடிய களிறுகள் உள்ளே அகப்பட்டுக் கொள்ள மூங்கில்களை உடைய மலையைச் சூழ்ந்து கொணட பெருந் தீயைத் தீப்பற்றி யெரியும அரக்கு மாளிகையை வளிமகன் (வீமன்) அழித்துத் தன் உடன்பிறந்தாரோடு பிழைத்துப் போதலைப் போன்று அவ்வியானைகளின் தலைவனாகிய வேழம் அதர்பட மிதித்துத் தன் இனத்தோடு வெளியேறியது (கலி. 25:5-11). போரின் கண் பகைவனைக் கொன்று அவன் நாட்டைக் கைக்கொண்டு களிற்றின் மேலே வரும் தலைவனுடைய வீரத்தாற் பொலிவுற்ற அழகை நாம்காண அதுகாறும் வாடைக்காற்று நம்மை உயிரோடு விட்டு வைக்குமோ எனத் தலைவி வருந்தினாள் (கலி. 31.9-12). மகளிர் மூங்கில் நெல்லைப் பாறையாகிய உரலிலே பெய்து வயக்களிற்றின் கொமபினை உலக்கையாகக் கொண்டு குற்றிச் சேமபிலைச் சுளகால புடைப்பர் (கலி. 41:1-3). மலையடுக்கத்தின்கண் புகாமுகக் களிற்றோடு புலி பொருது உழக்கித் திரிந்தது (கலி. 45: 12, 13). எண்டிசையும் காத்தல தொழிலை மேற்கோடற்குப் பொருந்தினவாயப பகைததவை எதிர்க்க லாற்றாத மிகக வலியினையும விளக்கத்தைத் தருகின்ற கமழுகின்ற கடாத்தால நனைந்த கவுளினையும் வேங்கை மரத்தினது அழகு போல வண்டுகள் மொய்க்கும் புகரினையுடைய முகத்தினையும் கொணட பெருங்களிற்றினத்தோடு இரும்புலி மாறுபட்டுப் போர் செய்யும் (கலி. 48: 1-7). தலைவன் தலைவியைக் காண வேலைக் கையிலேந்தித் தனியனாய்க் களிறுகள இயங்கும அரிய வழியில் வந்தான் (கலி. 49: 20, 21). தலைவன தன்பால் வந்த புலவர்க்குத் தேரையும் களிற்றையும் கொடுத்துக் கையொழியானாய் மழையினும் அருள் சிறந்தான (கலி. 50: 15-17). தலைவி செய்த குறியிடத்துத் தலைவன் வருவானாயின் தினைப புனங்காப்போர் கொள்ளியும் கவணையும விலலும் உடையராய்க் களிறு வந்ததென ஆரப்பர (கலி. 52: 12-14). தலைவன மதத்தான அறிவிழந்து பரிக்கோலெல்லையில் நில்லாத கடுங்களிற்றை யொத்தவன (கலி. 55 20). தலைவன தன்னிடத்துப் பொருகின்ற களிற்றை யொத்த தன்மை கெட்டு மனமுடைந்து உள்ளே உருகுவான போல் நின்றான எனத் தோழி தலைவியிடம் கூறினாள (கலி. 60: 10, 11). மிக்குச் செலகின்ற போரில பகைவரைக் கொன்ற களிற்றைப போன்றவன் தலைவன் (கலி. 61:18). பட்டத்தை யுடைய இளைய களிற்றினது கருமை யுண்டாகின்ற தலையில் தொங்குகின்ற மூன்று வடம போலக் கையாற் புனைந்த மூன்று வடம் புதலவனின தலையிடத்தே தாழத் தொங்கின (கலி. 86.1,2). மதத்தை யுடைய களிற்றைக் காட்டினும் தறுகண்மை உடைய ஏற்றை ஆயமகன் கொளவான (கலி. 101:36,37.) ஏறுகள் பலவற்றையும தொழுவினுள்ளே விடுகையினாலே புகை சூழ்ந்த அத்தொழு, சிங்கமும் குதிரையும் களிறும் முதலையும மலை முழையிடத்திலே சேரக் குழுமிப் படுமழை ஒருங்கு திரியும் மலையிடத்தை ஒக்கும் (கலி. 103.17-21). பெரிய புலித் திரளும் பெரிய களிற்றுத் திரளும் தம்முள் மாறுபட்டுப் பொருதாற் போன்று பொதுவர்

ஏறுகளோடு பொருதனர் (கலி. 103:56 - 58). கொல்லேறு வெருவுதல் வருதற்குக் காரண மான மருந்தினாற் புகைக்க அதற்கு வெகுண்டு திரி தரும் கொல்களிற்றைப் போன்று திரிந்தது (கலி.104: 42-44). முரசு மூன்று ஆள்பவர் (பாண்டியர்) தம் பகைவரது மாறுபாடு கெடும்படி நிரைத்த களிறு களை ஏனைய படைக்கு நடுவே நிற்கும்படி நெறி யுண்டாகக் கம்பத்தோடு கட்டுவர் (கலி. 132:4,5). வேற்படைகளை வைத்து அடித்து ஆக்கிய பெரிய கதவினையிட்டு வாயிலை அடைத்து அழகு செய்த எயிலைக் களிறு குத்தியது (கலி. 135:3,4). வரிசை யாக மிதக்கும் திமில்கள் களிறாகத் திரையொலி பறையாகப் புள்ளினம் காலாட் படையாக அரசன், படைமேற் சென்றாலொத்த செலவினை-யுடையது போல் கடல காட்சியளித்தது (கலி. 149: 1-3). (தேவசேனையின்) தோழியர் போரை மேற்கொண் டமை கண்ட (வள்ளியின) தோழியராகிய மென்சீர் மயிலியலவர் தோட்டிப் புண்ணால் மென்மைபட் டதும் மதமணம் கமழ்வது மாகிய தலையினை யுடைய களிற்றினது தன்மையைத் தம்பால் கொள் ளுவர் (பரி. 9:50,56). மகளிரின் பந்தும் கழங்கும் கவர்ந்து கொண்டு மைந்தர் கரையிலிருந்து வையை யாற்றில் பாய்ந்தனர்; வீரர் வேலாலும் வாளாலும் போர் செய்யக் களிறுகள் தம்முள் பொருதலுற்ற களம் போன்றமையின் அவ் வையைப் புனல் தெளிவின்றாயிற்று (பரி. 10:106-111). கூடல் நகரதது ஆடவருள் சிலர் வையைப் புனலணி காணக் களிற்றின் மேல் ஏறிச் சென்றனர் (பரி. 12:28). மழை முழங்கிய மலையும் அதன்கண் தோன்றும் கொடி மின்னலும் செவ்வேளினது ஓடையை யுடைய களிறறை யொக்கும் (பரி. 18: 23-27). வையையாறு மலர்கள் பலவற்றையும தன அலை களாலே தள்ளிக் கொண்டு கூடல் நகரக் கடிமதிலி லுள்ள பெரிய சுருங்கையினூடே வந்து மிக்க நீரைச் சொரியும்போது, அந்நீர் கடுமாவாகிய களிறு தன் கையை உயர்தது விடும் நீரினை ஒத்துத் தோன்றும் (பரி. 20:102-107). ஒளிறுவாட் பொருப்பன் (பாண்டியன்) போரின்கண களிறுகளை வரிசையாக நிறுத்தினாற் போல மேகங்கள் வானத்தில நெருங்கின (பரி. 22: 1,2). மதுரை நகரதது மைந்தரும் மகளிரும் குதிரையும் களிறும் கோவேறு கழுதையும் ஆகிய ஊர்திகளில் ஏறி, வையைக் கரை நெரியும் படி சென்று சோலையை நிறைத்தனர் (பரி. 22: 21-25). ஊர்ந்து செல்லும் களிற்றை ஒத்த செம்ம லோரும் வரைகெழு செல்வன் நகர் சென்ற னர் (பரி. தி. 1:35,49). மகளிர், விளங்குகின்ற கடிய மரத்தினையுடைய களிற்றைப் போன்ற தலைமைத் தன்மையுடைய தத்தம் கணவரோடு கூடிக் குளவாய் அமர்ந்தானை வழிபட்டனர் (பரி. தி. 1:61-63).

2. ஆண்பன்றி. தீ நிமித்தமாகக் கொள்ளப்படுவன வற்றுள் கனவின்கண் களிற்றின - ஆண் பன்றியின்-மீது ஏறிச் செல்லுதலும் ஒன்றாகும் (புறம். 41.9). களிறுகளால் புழுதியாக்கப்பட்ட விடுநிலத்தின் கண் வம்பப் பெருமழை சொரிந்து நீங்கிடக் குழி களில் தங்கிய சின்னீரைக் குரால (பசு) உண்டது (புறம். 325:1-3). பேய்மகளின் வெள்ளிய பற்கள் களிற்றின் கோடு போன்றன (புறம். 371:21,26). பகைவர் தேயத்தின்கண் உள்ள வயல்களைக் களிறுகள் உழுதமையால் அவை பின நாஞ்சில களால் உழுதல வேணடாதனவாயின (பதி. 26:2). கருவுற்றிருக்கும் பெண்புலியின் வயவுப் பசி யினைக் களையப் பெருஞ்சினப் புலியேறு பெரிய களிற்றைக் கொன்று, பாம்பு மேய்தற்குச் செல்ல ஒளியுண்டாக உமிழ்ந்து வைத்த மணியாகிய விளக்கில் குருதி புலர இழுத்துச் செல்லும் (களிறு - யானை எனவும் கொள்ளலாம்) (அகம். 72:12-15). வளரு கின்ற அலைகளையுடைய கடலிலே மூழ்கி எடுத்த லாலே அவ்வலைகளால் கழுவப்பட்ட புள்ளிகளை யுடைய கூர்த்த வெள்ளிய தன் கொம்புகளானே நிலமகளைக் களிறாகிய ஆதி வராகம் மணம் அயர்தலாற் புள்ளியளவேனும் அந்நிலம் வெள்ளத் தால் வருந்த வில்லை யென்ற புகழோடு திருமாலின திருமார்பு விளங்கியது (பரி. 2:31-35). நானிலத் துயிர்களின் நடுக்கம் தீர அதனை நீரினின்றும் மேலே எடுத்தற்குப பரிய அடிப்பகுதி வரை பொருந்தக் கவித்த பொன்னாலாகிய மலரானே அழகிய மணிகளைப் பெற்ற மடலைக் கொண்ட பெரிய கிம்புரியை யணிந்த இலங்கொளி மருப் பினை யுடைய களிறாகத் திருமால் திருவுருவங் கொண்டார் (பரி. 13:34-36).

**களிறுதருபுணர்ச்சி** - களிறு ஏதுவாக நிகழ்ந்த கூட்டம். தலைவன் அரிய முழைஞ்சுகளி னிடத்தே பொருந்திய வானவர் விழையும் பூமலி சோலையில் களிறுதரு புணர்ச்சியால் தலைவியைக் கூடிப் பகலைக் கழித்து மாலைப் பொழுது நெருங்குதல கணடு, 'இலங்கிழையீர், நுமர் நும் முனகை பற்றித்தர நன்மணம் அயர்கம்; கலங்கல் ஓம்புமின்' என ஈர நன்மொழி கூறித் தலைவியைப் பிரிந்து சென்றான் (குறி. 212-214,230-234).

**களை** - பயிர் வளர்ச்சிக்குத் தடையாக முளைக்கும் பூடு. பயிரினிடையே விளைந்த களையை நீக்கிய மையான வரகு தழைத்துச் செழித்தது (புறம். 120:5). ஓலைக் குடையைத் தலையிற் சூடிய உழவர் பறை

யொலியுடன் பயிர்கள் வளையும்படி ஒதுக்கி வா கின் களையைப் பறித்தனர் (அகம். 194:7-9).

**களைஞர் - 1. களைபறிப்போர்.** நாற்று நட்ட செறுவில் முளைத்த, தேன் நாறும் நெய்தற்பூவைக் களைஞர் பறித்து எறிந்தனர் (பெரு. 212-214). சிறுதினையி டத்தே களையெடுக்கும் களைஞரின் தங்கையாகிய தலைவி இன்னும் தமரின் நீராள் என்பதைத் தலை வற்கு உணர்த்துமாறு தோழி தும்பியை விளித்துக் கூறினாள் (குறு. 392:1-6).

2. நீக்குவோர். 'நீ இன்னாசெயினும் இனிதாகத் தலையளி செய்தாலும நின் வரைபபினள தலைவி; அவள் துன்பத்தைக் களைஞர் நின்னையன்றிப் பிறர் இலர்' என்று பிரியும் தலைவனிடம தோழி உரைத்தாள் (குறு. 397:6-8). காமம் பெரிது; களை ஞர் இலர் என்பது தலைவியின் காமம் மிக்க கழி படர் கிளவி (நற். 335:11). 'மாலைக்காலமே, சேர்ப பன் பிரிந்தமையான் நீ கடும்பகல் வருகின்றாய்; காலையே வரினும் நின்னைக் களைஞர் இலர்' என் பது ஆற்றாத தலைவியின கூற்று (ஐங். 183:3-6).

3. காப்பாற்றுவோர். மலர் சூடிய மாயப் புதுப்புன லில் நீ பலமுறை ஆடுங்கால களைஞர் - காப்பாற்று வோர் – இல்லாத இடத்தில் அகப்பட்டுக் கால் சோர்ந்து போகாமல் விழிப்பாயிருப்பாயாக என்று கூறிப் பரத்தைமைத் தலைவனைத் தலைவி நகை யாடினாள் (கலி. 98:35-37).

**களைந்தோள் - நீக்கியவள்.** 'அலவனே, இருள்செறிந்த நள்ளிரவில் வநது பலநாளும் நின் துனபங் களைந் தோள்–நீககியவள் நின்பிரிவால் தனனுறு விழுமம் நீந்துமோ எனத் தலைவற்கு நீயே சொல்ல வேண் டும்' எனத் தலைவி காமமிக்க நிலையில் அதனிடம் கூறினாள (அகம். 170:8,12-14).

**களைந்தோன்-நீக்கியவன்.** தன் மனை வருதற்குப பிறன் மனையில் நின்று பாடுகின்ற பொழுதே அருள் கூர்ந்து வெள்ளிய ஆடை உடுப்பித்து என் பசி களைந்தோன அம்பர் கிழவோன நலலருவநதை ஆவான எனக் கல்லாடனார் பாராட்டல் (புறம். 385:3-10).

**களைநர் - நீக்குநர்.** காமஞ்சாலா இளமையோளிடத் துக் 'களைநர் பிறர் இல்லாத நோய செய்யும் அழ குடைய நினனை மேலும் அழகு செய்து, தம் வள மையால் வெளியே அனுப்பிவைத்த நின் சுற்றத் தார் தவறுடையர்' என்பதுபடக் கைக்கிளைத் தலை வன் கூறல் (கலி. 58:9,10). நம் துயரத்தைக் களை நர் (களங்காய்க்கண்ணி நார்முடிச் சேரலை அனறி) பிறர் யாரெனக் கருதி மன்னெயில மறவர் விரும்பி வந்து ஆரவாரம் குறைந்து பணிந்தனர் (பதி. 40:7,8).

**களையுநர் - நீக்குபவர்.** தன சுற்றத்தின் கடும்பசி களையுநரை - நீககுபவரை - காணாது யாழ்ப்பா ணன் மிகவும் வருந்தினன் (புறம். 68:2,3). குறும்பர் செய்யும் பூசல களையுநரைக காணமுடியாத அரிய சுரநெறியைக் கடந்து செலலத் தலைவன் விரும்பி னான (அகம். 179:9,10). கடுங்கண ஆடவர் அம பெய்யப் பதுங்கியிருக்கும் இடத்தில வருநர் இன மையின் தம் வறுமை களையுநரைக காணாது வெஞ்சுரத்தில் வருந்துவர் (அகம். 365.7-9). துணை யாக நின்ற அரசன கைவிட்டானாக, யானைப படையுடைய பகைவேந்தன் மதிற்புறத்து வந்து தங்கவும் களையுநர்க் காணாது சிதைநத ஒரு மதிலை யுடைய மன்னன் அழிவெய்தினாற போலப் பிரிவுணர்நத தலைவி அழிவெய்தினாள் (நற். 43:8-12).

**களைவார் - நீக்குவார்.** 'கடலே, யான் உற்ற வருத தத்தைக் களைவார் - நீககுவார் - நினனை ஒழியப பிறரை உடையே னலலேன' எனத தலைவி கடலை விளித்துக் கூறிப புலமபினாள (கலி. 144.53-55).

**களைவோர் – நீக்குவோர்.** 'யானுறற காமநோயைக் களைவோர் - நீக்குவோர் - இல்லை' என்று ஆற றாமை தோன்றத தலைவி கூறினாள் (குறு. 305.8). எல்லா உலகத்திலும் வெளிப்பட்டு அவ்விடதது உயிர்க் கூட்டங்களின் பிறவித் துன்பததைக் களைவோ னாகிய திருமால் இருங்குன்றததில் அனபு கொண்டு தங்கியுள்ளார் (பரி. 15 51-53).

**களைவோன் - நீக்குவோன்.** களைவோர் காணக.

**கற்கோள் - படிமம் அமைத்தற்குரிய கல்லைத நெரிந் தெடுத்தல்.** கடலபிறகோட்டிய செஙகுட்டுவன கடவுட் பததினிக்குக் கறகோள - படிமம அமைத தற்குரிய கல்லைத் தெரிந்தெடுததல் - விரும்பி இமயஞ்சென்று, எதிரதத ஆரிய வணணனலை அழிததுக் கலலெடுத்துக் கங்கையில நீராட்டிக் கொணர்நதான் (பதி. ப. 5:4-7).

**கற்சிறை - கல்லணை.** தலையாலஙகானத்துச செரு வென்ற நெடுஞ்செழியனின படைத்தலைவா, மிக்கு வருகின்ற யாற்று நீரைத தாஙகும் கறசிறை - கலலணை - போலத தம படையைக கெடுதது மிக்கு வருகின்ற பகைவா படையைத் தடுதது நிறுத்தினர் (மது. 725,726).

**கற்சுனை - மலைச்சுனை.** கடவுட்டன்மை பொருநதிய கற்சுனையில - மலைச்சுனையில - மலர்ந்த குவளை மலரோடு செங்காந்தளையும் பொலியச சூடி அருவியின ஒலியை இன்னியமாகக் கொணடு

சூரரமகள் ஆடினாள் (நற். 34:1-5). மந்தி அருவி ஆடி, கழை ஊசல் தூங்கி, வேங்கையினது நறு மலர் கற்சுனையிலே உதிர அதன் கிளையிலேறிக் கடுவனோடு திளைத்தது (நற். 334:1-5).

**கற்பன் - கல்வியன்.** கடல்பிறக்கோட்டிய செங்குட்டு வன் பகைவராலும் போற்றப் பெறும் அழியாத கற்ப - கல்வியை உடையவ - எனப் போற்றப் பெறுகிறான (பதி. 43: 29-31). பெருஞ்சேரலிரும் பொறை 'தொலையாக் கற்ப' என விளிக்கப் பெறுகிறான் (கற்பன் என்னும் பெயர் விளியேற்றுக் 'கற்ப' என வந்தது) (பதி. 80:17).

**கற்பித்தான் - ஆசிரியன்.** தனக்கு நூல் கற்பித்தான் – ஆசிரியன - நெஞ்சம் வருந்துமாறு கைப்பொருள் கொடுத்து உதவானாய்த் தான் கற்ற கல்வியிடத்துத் தப்புச் செய்தவனது கல்விப் பொருள் நாடொறும் தேயும் (கலி. 149:4,5).

**கற்பினாள் - இல்லற ஒழுக்கம் உடையவள்.** நிலைத்த கற் பினாள் ஆகிய தலைவி தலைவனைப் பிரிந்துஉயிர் வாழமாட்டாள் (கலி.2:13). தலைவிவடமீன் (அருந்ததி) போல் தொழுதேத்தும் வயங்கிய கற்பினாள் (கலி. 2:21). உடன்போக்கிற் சென்ற மகளைத் தேடிவந்த செவிலித்தாயை இடைச்சுரத்துக் கண்ட முக்கோற் பகவர் அவளிடம் சிறந்தானை வழிபட்டுச் சென்ற மையால் மிக்க கற்பினாளாகிய நின் மகளுக்குத் துன்பம் செய்யற்க எனக் கூறினர் (கலி. 9:22,23). வற்கடமான காலத்தே வைத்து மழையைப் பெய் விக்கும் கற்பினாள் தலைவி (கலி. 16:20).

**கற்பு - 1. இல்லறஒழுக்கம்.** கருங்கையொள்வாட் பெரும் பெயர் வழுதி செயிர்தீர் கற்பினை - இல்லற ஒழுக் கத்தை - உடைய சேயிழையின் கணவன் (புறம். 3:6). மலையமான திருமுடிக்காரி வடமீன் (அருந்ததி) போன்ற கற்பும் மடமொழியும் உடைய தன்மனைவி தோள்மட்டுமே தனக்குரியன;மற்றவற்றையெல்லாம் பிறர்க்கு அளிப்பன் (புறம். 122:8-10). பெருஞ்சித்திர னார் குமணனைப் பாடிப் பெற்று வந்த பொரு ளைத் தம் மனைவியிடம் தந்து 'பலகுணங்களும் மாட்சிமைப்பட்ட கற்பினையுடைய நின் சுற்றத்து மூத்த மகளிர்க்கும் கொடுப்பாயாக' எனக் கூறி னார் (புறம். 163:2,7). சோணாட்டுப் பூஞ்சாற்றூர்ப் பார்ப்பான் கவுணியன் விண்ணந்தாயனின் துணை வியர் மறங்கடிந்த அருங்கற்பினையுடையவர் (புறம். 166:13,17). நாணல்லது இல்லாக் கற்பின்வாணுதல் குறுமகளை எண்ணிச் செல்வதாக ஆலூர் மூலங் கிழார் குறிப்பிடுவர் (புறம். 196:13-15). பாண்டியன் இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறனின் மனைவி கடவுள் சான்ற கற்பினையும் சிவந்த இழைகளையும் உடைய மடவோள் (புறம். 198:3,4). அடங்கிய கற்பின் ஆய்நுதல் மடந்தை, உயர் நிலையுலகம் புக்க கணவற்குப் படைத்தல்வேண்டி ஆப்பி கொண்டு கண்ணீரால் மெழுகினாள் (புறம். 249:10-14). வளைந்த இடையினையும் அழகுறச் சுழிந்த உந்தியையும் உடைய கற்புடை மடந்தை தன் கணவனின் புறம் புல்லிக் கிடந்தாள் (புறம். 383:12-14). இமையவரம்பன் நெடுஞ்சேரலாதனின் மனைவி ஆறிய கற்பும் (அறகற்பும) அடங்கிய சாய லும் உடையவள் (பதி. 16:10). களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரலின் தேவி தழைத்த கூந்தலையும் அறஞ்சால் கற்பினையும் உடையவள் (பதி. 31:24). மூங்கில் போன்ற பெருத்த தோள்களையும் விரும் பத்தக்க கடவுளை (அருந்ததியை) வென்ற கற்பினை யும் உடைய சேயிழையின் கணவன் செல்வக் கடுங்கோ வாழியாதன் (பதி. 65:8-10). செல்வக் கடுங்கோ வாழியாதன் அமைதி மிக்குப் பெரிய மடம் என்னும் குணம் நிலைபெற்றவளும் கற்பி னைத் தாங்கியவளும் மணங் கமழும் சுடர் நெற் றியை யுடையவளுமான உயர்ந்தவளின் கணவன் (பதி. 70:14-16). இளஞ்சேரலிரும்பொறையின் தேவி மீனொடு (அருந்ததி) புரையும் கற்பினையுடைய வாணுதல் அரிவையாவாள் (பதி. 89:19,20). இளஞ் சேரலிரும்பொறையின் தேவி ஆறிய கற்பினையும் தேறிய நல்ல புகழையும் வண்டார் கூந்தலுடன் ஒண்டொடியையும் உடையவள் (பதி. 90:49,50). மறுவில் கற்பினையும் வாள் நுதலையும் உடையவ ளின் கணவன் முருகன் (முரு. 6). விறலியர் கஞ்சங் குல்லையுடைய அழகிய காட்டகத்தே, குவிந்த அரும்பு எயிறு எனும்படி மலர்ந்த முல்லை சூடுதற் கமைந்த கற்பினையுடைய மெல்லியலார் (சிறு. 28-30). மறைகாப்பாளர் உறைபதியில் வாழும் வளைக்கை மகடூஉ, வானத்து வடதிசையில் விளங் கும் சிறுமீன் (அருந்ததி) போலும் கற்பினை உடை யவள் (பெரு. 301-304). மாசில் கற்பின் புதல்வன் தாய் எனத் தலைவன் தலைவியிடம் மாயப் பன்மொழி கூறினான் (அகம். 6:13,14). நாணொடு மிடைந்த கற்பினையும் வாள் நுதலையும் அந்தீங் கிளவியையும் உடைய இளையோள் எனத் தலை வன் தலைவியைப் பாராட்டல் (அகம். 9:24,25). தலைவி மனைமாண் கற்பின் வாணுதல் ஆவாள் (அகம். 33:2). வணங்கத் தக்க கற்போடு தலைவி மடங்கொள வருந்தினாள் (அகம். 73:5). வதுவை நாளில் புதல்வற் பயந்த மகளிர் நால்வர் கூடி நின்று 'கற்பினின் வழாஅது நற்பல உதவிக் கொழு நனை விழையும் பிணையை யாகுக' என்று மண மகளை வாழ்த்தினர் (அகம். 86:11-14). தலைவன்

தலைவியை 'மாசில் கற்பினையும் அரிமதர் மழைக் கண்ணினையும் மூங்கில் போன்ற பணைத் தோளையு முடைய அரிவை' எனப் பாராட்டல் (அகம். 114:13-15). என் உயிர்க்கு உடம்பாக அடுத்தவள் வெறுப்பு நீங்கிய கற்பினையுடையவள் எனத் தலைவன் தலைவியைப் பாராட்டல் (அகம். 136:19). தலைவி கடவுட் கற்பினையும் குடிக்கு விளக்காகிய புதல்வற் பயந்த புகழ்மிகு சிறப்பினையும் உடைய நன்னராட்டி (அகம். 184:1-3). தன்னை முயங்கிச் செல்லும் தலைவி ஆன்ற கற்பினால் உயர்ந்த பெருமையுற்ற அழகிய மாமை நிறமுடைய பெண் அல்லள்; சூர்மகள் எனத் தலைவன் பாராட்டல் (அகம். 198:11-17). முல்லை சான்ற கற்பின் மெல்லியல் குறுமகள் (அகம். 274:13,14). தலைவி கடவுள் கற்பின் மடவோள் (அகம். 314:15). கற்பு மேம்படுவி எனத் தோழி தலைவியை விளித்தாள் (அகம். 323:7). 'தலைவன் பரத்தையர் வீட்டினின்று வருங்காலத்து இன்முகந் திரியாது கடவுட் கற்பினால் அவனை எதிர்பேணி மடவை மன்ற நீ என வினவி வருந்தாதே' எனத் தலைவி தோழிக் குரைத்தாள் (குறு. 252:2-6). விளங்கும் இல்லத்தினுள்ள அடங்கிய கற்பின் நலங்கேழ் அரிவையின் தனிமைத் துன்பம் நீங்குமாறு தலைவன் தேர் வந்தது (குறு. 338:6-8). தலைவி மாசில்கற்பின் மடவோள் (நற். 15:7). இரவாயினும் விருந்துவரின் உவக்கும் முல்லை சான்ற கற்பின் மெல்லியல் தலைவி (நற். 142: 9-11). நீ விழையும் பரத்தை மகளிரொடு சிறுவரைப் பெற்று நன்றி சான்ற கற்பொடு எம் பக்கத்து அமர்தல் மிக அரிது எனத் தலைவி தலைவனிடம் கூறினாள் (நற். 330:8-11). உயர்நிலை யுலகத்துள்ள அருந்ததி யனைய கற்பின் புதல்வன் தாய் தலைவி (ஐங். 442:3-5). மாதவர் மனைவியர் மறுவறு கற்பினர் (பரி. 5:46). புலத்தலினால் கற்புச் சிறந்தது (பரி. 9:16). செவ்வேள் கற்புப் பொருந்திய நெறியுடைய தேவியரது அன்பு பொருந்திய ஊடலுரிமையை நயத்தற்கேற்ற பண்பினையுடையவர் (பரி. 9:81,82). மறையிற் புணர்ந்த மைந்தரும் மாமயிலன்னாரும் காமம் சிறப்புடைய களவொழுக்கத்தைக் கைவிட்டுக் கற்பொழுக்கத்தை மேற்கொண்டனர் (பரி. 11:41,42).

2. கல்வி. ஆடுகோட் பாட்டுச் சேரலாதன் இரவல் மாக்களின் சிறுகுடிகள் பெருகுமாறு உலகத்தைத் தாங்கிய மேம்படு கற்பினை – கல்வியை - யுடைய வில்லோர் மெய்ம்மறை யாவான் (பதி. 59: 7-9). எழுதாக் கற்பாகிய வேதத்தை அறிந்த நின் சொல்லுள் பிரிந்தோரைப் புணர்க்கும் பண்பின் மருந்தும் உண்டோ எனத் தலைவன், கழறிய பார்ப்பனப் பாங்கனை வினவினான் (குறு. 156:4-7).

3. பயிற்சி. ஒளிறுவாள் தானைக் கொற்றச் செழியன் குற்றமற்ற கற்பின் - பயிற்சியினால்-நெருங்கிய போரில் வெற்றி பெற்றான் (அகம். 106: 10,11). ஆய்எயினன் நன்னனிடம் உரைத்தவாறு போர் வெல்லும் கற்பினையுடைய மிஞிலியுடன் பொருது தன்னுயிர் கொடுத்தனன் (அகம். 396:4-6).

**கற்றார் - கற்றவர்.** வையை நோக்கிச் செல்வாரே அல்லது ஊருக்குத் திரும்பிப் போவார் ஒருவரும் இலராய்க் கற்றாரும் கல்லாதவரும் கயவரும் கள்ளவரும் கணவரின் சொற்கடவாத பெண்டிரும் பாண்டியனும் மதுரை நகரத்தினரும் வையையை அடைந்தனர் (பரி.தி. 2:23-27).

**கற்றை - திரட்சி.** கற்றை வேய்ந்த - வரகுக் கற்றையாகிய திரட்சியால் வேயப்பட்ட - கழிகளைத் தலையில் கொண்ட குடிலின்கண் தோற்பாயலில் கோவலர் தங்கினர் (பெரு .149,151). ஈந்தின் கற்றையான முற்றிய குலை போன்றது தாளிப்பனையின் குலை (நற். 174:1-3). பரதவர் கடலில் மீனை பிடிக்கும் படகில் காற்று மோதுதலால் எரிகின்ற கற்றை சாய்ந்து பரவிய விளக்கு ஆகாயத்தில் ஒளிரும் மீன்களைப் போல மெல்ல ஒளி வீசும் (நற். 199:5-10).

**கற்றோர் – படித்தோர்.** திருவாவினன்குடியில் முனிவர், பல நூல்களையும், கற்றோரானும் - படித்தோரானும் - சிறிதும் அறியப்படாத இயற்கை யறிவு உடையவரும் பல நூல்களைக் கற்றோர்க்கும் தாம் எல்லையாகிய தலைமை உடையவருமாய் விளங்கினர் (முரு. 132-134).

**கறவை – பசு.** கன்றொடு கறவை - பசு - மீட்டுப் பகைவரைப் புறங்கண்டு மாய்ந்த நெடுந்தகைக்குக் கல் நட்டனர் (புறம். 264:4-6). மறவன் ஒருவன் கன்றை விரும்பும் கறவை ஒப்ப முன்னணிப் போரில் பகைவருடன் போர் புரியும் தன் தோழனுக்குத் துணையாக விரைந்து வந்தான் (புறம். 275:8,9). நெல்லைப் பெறுவதற்கு உழுகின்ற எருதுகளுடன் கறவைகளும் நெருங்காவாய் மேழகக் கிடாயோடு நாயும் சுழன்று திரியும் வீடுகளையுடையது பட்டினம் (பெரு. 325-327). கறவை குளிரின் மிகுதியால் கன்று பால் குடித்த போது விரைய உதைத்தது (நெடு. 10,11). மரத்திற் கட்டப் பெற்ற தன் கன்றை ஆவலுடன் விரைந்து பார்க்கும் கறவையைப் போலச் செவிலி தலைவியின் சிறுபுறம் நோக்கினாள் (அகம். 49:4,5). கன்று காணாது புன்கண்ணவாய்ச் செவி சாய்த்து வருந்தும் கறவை பலவற்றையும் கவர்ந்து வந்தனர் வெட்சிமறவர் (அகம். 63:10-12). கன்றோடு கறவைப்

பலலினம் முல்லை நிலத்தில மேயந்து திரிதலால் கோவலர் வேயந்தழல் ஊதினர் (அகம். 354:3-5). மலையைச சார்ந்த சிற்றூரிடத்தில் கறவை தம் கன்றுக ளிடதடுதே சென்றன (குறு. 108: 1, 2). கறவைகள் தாம் தங்குகின்ற ஊரிடத்துள்ள கன்று களை விரும்பி மன்றுகள் நிறையப் புகுமாறு மாலைக் காலம் வந்தது (கலி. 119:9-11).

**கறாஅஎருமை** - கறக்கப்படாத காட்டெருமை. தலைவி தன முனையில் கிடந்து சுழலும் வளையிடத்தைப் பிடிததுத் தெளிவித்துக் கூடின தலைவன கறாஅ எருமை - கறக்கப்படாத காட்டெருமை - வாழும் காட்டைக் கடநது போயினானோ என வருந்தி னாள் (கலி.147:36-55).

**கறி - 1.** இறைசசி. புலால் நாறும் பைந்தடியைக் கொளுததி அமைத்த ஊனையும் துவையையும் கறியையும் - இறைச்சியையும் - சோற்றையும் உண்டு வருந்தும் தொழிலல்லது வேறு தொழிலறியாவாக வின என கைகள் மெல்லியவாயின எனக் கபிலர் செலவக் கடுங்கோ வாழியாதனிடம் கூறினார் (புறம். 14:12-16).

**2. மிளகு.** கறி - மிளகு - வளரும் மலைச்சாரலில் காந்தள் மலர்ந்தது (புறம். 168:2). மனையிடத்தே குவிக்கப் பெற்ற கறிமூடைகளால் கடற்கரையி னின்றும் பிரித்தறிய இயலாதபடி காண்பாரை மயங்கச் செயயும் (புறம. 343:3,4). கறிக்கொடியின கருங் கொதகுகள சாயப் பழமுதிர்சோலையில் மலையினினறும் அருவி இழியும் (முரு. 309,316,317). எருமை பைஙகறி படர்ந்த பலாமரததின் நிழலில், மஞசள் இலை தன்முதுகைத் தடவப்படுத்திருக்கும் (சிறு. 42-46). அந்தணர் வீடுசெல்லின் கறிப்பொடி கலந்து கஞ்சக நறிய இலை அளாவப்பட்டுச் செய்த மாவடுவின் ஊறுகாயைப் பெறுவீர் எனப் பெரும் பாணா ஆற்றுப்படுத்தப் பெறுகிறார் (பெரு. 307 - 310). இஞசியும் மஞ்சளும் பசுமையான கறியும் பலவேறுபட்ட பண்டஙகளுடன கற்றரை யில குவிக்கபபட்டிருந்தன (மது. 289,290). சகடங் களில வநத கருஙகறி மூடைகளும் மணியும் பொன்னும் ஆரமும அகிலும் முத்தும் பவழமும் பிறவும திரணடு மயங்கிக கிடநத தெருக்களை யுடையது காவிரிபபூம்பட்டினம் (பட். 186-193). கருங்கொடி மிளகின கொத்தாகவுள்ள பசிய கறியும் பிற பொருள்களும் நன்னனின் தலைவா யிலில நிறைந்தன (மலை. 521,529). பாறை நெடுஞ் சுனையில விளைந்த தேறலை அறியாதுண்ட கடுவன் அயலிலுள்ள கறிக்கொடி வளர்ந்துள்ள சநதனமரத்தில் ஏற இயலாது நறுமலர்ப்படுக்கை யில் கண்வளரும் (அகம். 2:4-7). கலைமான்கள் தாழ ஒலித்தற் கிடமான கறிக்கொடி படர்ந்த மலைச்சாரலில் தலைவனும தலைவியும் இயற்கைப் புணர்ச்சியால ஒன்று கூடினர் (அகம். 112:14,15). யவனர் கொணர்ந்த வினைமாண் நனகலம் பொன்னுடன வந்து கறியொடு பெயரும் (அகம். 149:9,10). முசுக்கலை கறியின் தளிரைத தினறு வெறுப்புற்று உயர்நத சிகரங்களையுடைய மலை யில் திரியும் (அகம். 182:14,15). கறிகொடி படர்ந்த தோட்டத்திலுள்ள தலைவியின் சிறுகுடிலிடத்துத் தலைவன் வநதான (அகம். 272:10,11). கறி வளர்ந்த மலைப்பக்கததில் மேகம சூல் முற்றி முழங்கியது (குறு. 90:1,2). கறிககொடி வளர்கின்ற மலைப் பக்கத்தில தளிரை அருந்தும் குரங்குகள் ஒருங்கு கூடியிருந்தன (குறு. 288:1,2). கறிக்கொடி படர் கின்ற மலைபபக்கத்தில் கடுவனைப பெண்குரங்கு களவினில் கூடியது (நற. 151:5-8). மலரும் பருவத் தினையுடைய பூவை வெறுத்த கோழி ஒனறுட னொன்று பினனிக் கிடககும் கறிககொடியில துயிலும் (நற். 297:7,8). வேலன கறிவளரும் சிலம் பின்கண் உறையும் கடவுளைப் பேணினான் (ஐங். 243:1,2). கறிக்கொடி படரும் கல்முழைஞ்சினுள் வயபபுலி தங்கும் (ஐங். 246:1,2). தலைவன குறி யிடம் வருதல் கண்டு விலஙகு முதலியன வெருவி ஓடும் ஓசையால், கறிவளர்ந்த மலையில் உலாவு கின்ற புலி எனறு ஊர் மக்கள் எண்ணினர் (கலி. 52:16-18). வையை யாறறு வெள்ளம் மலைபடு பொருளாம் கறியையும் சந்தனத்தையும் அதன கரை மேல் வீசும் (பரி. 16:2-4).

**கறுத்தோர்** - வெகுண்டோர். சேரமான் குடக்கோச் சேரலிரும்பொறையைக் கறுத்தோரின் - வெகுண டோரின் - அரிய காவலை யுடைய முனையிடத் துள்ள அரண செயலற்று அழியும் (புறம். 210:13,14). கறுத்தோரது வலியைத் தடுததற் குரியதும் அவரால் அழித்தற்கரியதுமாகிய படைவகுபபினையுடையவர் மள்ளர் (பதி. 66:9,10). பெருஞ்சேரலிரும்பொறை யைக் கறுத்தோர் தம் பகைமை பெரிதாகையினால் அஞ்சாராய்ப் படை கொண்டு பொருதாலும் தம் நாட்டைச் சிறிது காலமும் காததுக் கொளள இய லாது (பதி.72:1-3). கடலன் எனனும் குறுநிலமன்னன தனனொடு கறுத்தோரின் ஒளிர்கினற வேலு டைய போர்க்களத்தை யானைகள் மடியப பொருது வெல்வான் (அகம். 81:11-13). தன்னைக் கறுத்தோர் இகழும் நெஞ்சத்தோடு கூறும் அம்புபோலும் சொல்லிற்கு நாணித் தலைவன் பொருளீட்டச் சென்றான் (அகம். 111:1,2,15). கடும்பரிப் புரவி யுடைய வன்கண் மழவர் கறுத்தோரின் போர்

முனையைச் சிதைத்தனர் (அகம். 187:5-7). கறுத்தோரது இழி சொல்லாகிய துன்பம் பாழ்படவும் தன்பால் புகழை நிறுத்தவும் தலைவன் பொருளீட்டச் சென்றான் (அகம். 389:13-15). கறுத்தோரின் அரண்களைச் செருமிகுதானை சிதைத்தது (ஐங். 474:1,2).

**கறுவு - சினம்.** முருகனின் ஒருமுகம் மேற்சென்ற போரின்கண் கறுவு - சினம் - கொண்ட நெஞ்சுடன அழிதற்குரிய அசுரர் முதலியோரை அழித்துக் களவேள்வி செய்தது (முரு. 98-100). புலி வடிவையொப்பப் பூத்த வேங்கை மரததைப் புலியெனக கறுவுகொணடு அதன் அடியிலே குத்திய மதயானை தன் கோட்டினைப் பறிததெடுக்க வியலாது மலையகம் சிலம்பப் பிளிறி வருந்தியது (கலி. 38:6-9).

**கறுழ் – கடிவாளம்.** எதிரியை எறியும் காலமறிந்தவன் குதிரைகளுக்கு இடவாய் வலவாய் ஆகிய இடத்தைக் காட்ட அவை கறுழ் – கடிவாளம - பொருத செவ்வாயை யுடைமையான் விலங்கினைக் கவ்விய புலிபோன்றன (புறம். 4:7-9).

**கறை - 1. கறுப்பு.** அருந்தவத்தோனுக்கு (சிவனுக்கு) கறை - (நஞ்சினது) கறுபபு - மிடற்றை அழகு செய்தது; அக்கறைதான் மறை பயிலும் அந்தணரால் புகழவும் படும் (புறம்.1:5,6,13). கறைமிடற்றண்ணலாகிய இறைவனது நெற்றியில் ஒரு கண் விளங்கும் (புறம். 55:4,5). மனை உறை குருவியின் கறையணற் சேவல் தான் இழைத்த கூட்டில் நெல்லரிசியுண்டு தன் பேடையொடு தங்கும் (புறம். 318:4-8). இளங் குஞ்சுகளைத் தழுவிக் கொண்டு குறுங்காலையும் கறை அணலையுமுடைய குறும்பூழ் காட்டிலே தங்கும் (பெரு. 204,205). கழிகளுடன பிணிக்கப்பட்ட கறைத் தோலாகிய கேடகத்தில் அம்புகள் தைத்தன (அகம். 24:14). கழியால பிணிக்கப்பட்ட கறைத் தோல் நிரையினைக் கண்டாற் போன்று இறந்தவரை யிட்டுத் தழைகளால் மூடிய பதுக்கை காணப்படும் (அகம். 67: 13,14). கடிய பல்லையும கறை விரலையுமுடையது ஆண் கருங்குரங்கு (குறு. 373:4). செவ்வேள கறை இலலாத கார்காலதது வெண் மேகம் கிளர்ந்தெழுந்தாற் போன்ற நறிய அகில் முதலியவற்றால் புகைத்த நறுமணப் புகையை விரும்புவாா (பரி. 14:19,20).

2. அழுக்கு. (குருதிக்) கறை - அழுக்கு - படிந்த கழற்காலையும் கடுமாப் போலும் விரைந்த செலவையும் உடையவர் வீரர் (பதி. 28:3,4). கறை பொருந்திய கூரிய நகத்தினையும் கஞ்சிப் பசை கொண்ட விரலையு முடையவள் புலைத்தி (அகம். 387:5,6). புலியைக் குத்திப் பிளந்ததால் கோட்டின்கண் உண்டான குருதியாகிய கறையை யானை மழைநீரில் கழுவிறறு (பரி. 20.3-5).

3. உரல. கறை - உரல் - போன்ற அடியையுடைய யானை (புறம. 39:1,2, 135:12;323:6; பெரு. 351,352; அகம. 142:9). கறையடி மடபபிடி (அகம. 83:3).

4. குற்றம். வையைப் புனலுக்கு விருந்தயரும் கூடலிடத்து அருங்கறை - குற்றமின்றி - இசைக்கும் இசைப்பாடலுக்கு உரிமையுடைய பாணரும் கூத் தரும் ஒருங்கு சென்று தொழுதேத்தினர் (பரி. 10 129-131).

**கறைமிடற்றண்ணல் – கருநிறமிடற்றையுடைய சிவன்** கறைமிடற்றண்ணல் - கருநிற மிடற்றை யுடைய சிவன் - மலையாகிய விலலில் பாம்பாகிய நாணைப் பொருத்தி ஒரு கணை கொண்டு மூவெயிலையும் எய்து அமரர்க்கு வெற்றியைத் தநதான (புறம. 55: 1-4).

**கன்முழை - மலைக்குகை.** மலைச்சாரலில தேனொடு கலந்த வெள்ளிய அருவிகள் இசைக்கருவி போல இம்மென்று கன்முழை - மலைக்குகை - எதிரொலிக்க இழிதரும் (அகம. 172.2-5). நம் காதலர் கன முழையில் உளள சுனையின்கண நம்மொடு நீராடிப் பகற்பொழுதை இனிது கழித்து இரவு செல்வாராயின் நன்று எனத் தலைவன் சிறைப்புறத்தானாகத் தோழி தலைவியிடம கூறினாள் (அகம. 228:5-7). உயரிய கனமுழை மேல் பரண் அமைக கப்பட்டது (அகம. 308:9). யானை புலியைக் குத்திய செருக்குடன் கன்முழையுடன் கூடிய மலையில் மெலல மெல்லச சென்று தன பிடியைப புணர்ந்து வாழையஞ்சிலம்பில் துஞ்சும் (அகம. 332:2-9). பெருமலையினின்று வீழும் அருவி கனமுழையில முழங்கும் (குறு. 95:1,2). களிற்றியானையோடு பொருத வேங்கைப்புலி கன்முழையுடன கூடிய மலையடியில் முழங்கும் (நற். 255:4,5). மிளகுக் கொடியையுடைய கனமுழையினகண் உறையும் ஆணபுலி கழற்சிக் காயைக் கண்ணாகக் கொண்டு பொய்யாகச் செய்து வைத்த பெண்புலியைப புணர்ந்து துன்பம் தீரும் (ஐங். 246.1-5). கன்முழை மீது வேங்கை மலரும் (ஐங். 276:5).

**கன்முழை - மலைக்குகை.** கன்முழையில - மலைக்குகையில் - வீழும் அருவிகளையுடைய பல மலைகளைக் கடந்து பேகனைக் காணப் பெருங்குன்றூர் கிழார் சென்றார் (புறம். 147:1). வயப்புலி தான் உறைகின்ற இடம் தனித்தொழியச் சென்று கன்முழையில் முழங்கியது (அகம். 168:11,12).

**கன்று - விலங்கின் குட்டி.** ஆய்வள்ளல் மன்றத்தில்

பரிசிலரைக் காணின் அவர்க்குக் கன்றுகளுடன் யானைகளை அணி அணியாகச் சாய்த்துக் கொடுப் பான (புறம். 135:11-13). மன்றைச் சார்ந்த மனை யின் முன்றிலில் வீழந்த விளாங்கனிகளை எயிற்றி யின் மகனொடு காட்டில வாழும் பிடியின் கன்றும் எடுக்கும் (புறம .181:1-3). கன்றை மேவிய ஆனிரை மேய்ந்த காட்டிடத்தே பிறிதொன்றால் ஏதமின் றிக் கிடக்குமாறு எழினி ஆட்சி புரிந்தான் (புறம். 230:1–6). மறவரின் கையினின்றும் வீர னொருவன் கன்றுகளுடன் பல ஆனிரைகளை மீட்டு வந்தான் (புறம். 260:17-19). ஒரு நெடுந்தகை கன்றுடனே கறவையையும் மீட்டுக் கொண்டு வந்து பகைவரை ஓட்டிப் புகழுடன் மாய்ந்தான் (புறம். 264:4-6). மறவன் ஒருவன் கன்றை விரும்பும் கறவைப் பசுப்போல முனனணிப் போரில் பொருத தன் தோழனிடம் விருப்புடன் உதவ விரைந்தான் (புறம். 275:8,9). சீறூரில் மரை ஆன் துஞ்சும் (புறம். 297:4). சீறூரில் ஆமானின் இளங்குழவியைப் புன் தலைச் சிறுவர் தம்முடைய சிறுதேருக்குக் கன்றெ னப் பூட்டுவர் (புறம். 319: 10–12). புலியிடத்தகப் பட்ட மானின் குழவிக்குச் சினமற்ற முதிய கற வைப்பசு தன்கன்றென நினைத்துப் பால் கொடுக் கும் (புறம். 323:1,2). அகழியில் நீர் இல்லாமையால் கன்றுகள் மேய்ந்து திரியும் (புறம். 355:1,2). வேங்க டம் கிழவோனாகிய நல்லேர் முதியன் பிடியானை வருந்த அதன் கன்றைக் கொணர்ந்து ஊரின் மன் றத்தே பிணித்து வைத்தான் (புறம். 389: 9-12). பாணன் கன்றோடு கூடிய பிடிகளையுடைய குன் றங்கள் பலவற்றைக் கடந்து வந்தான் (பதி. 12: 13,14). செங்குட்டுவன் நல்ல இனம் என்று தேர்ந்த பல பசுக்களைக் கன்றுகளொடு கைக்கொண்டு வந்து இடும்பாத வனத்தில் தங்கினான் (பதி. ப. 5: 8,9). பெருஞ்சேரலிரும்பொறை ஏறுகளுடன் கன்று களையுடைய ஆநிரைகளைக் கொணர்ந்து புலவு வில் இளையர்க்குக் கொடுத்தான் (பதி. 71:13-15). செழுங்கன்றுகளைக் கட்டின சிறிய கால்களையு டைய பந்தரினைக் கொண்டது அந்தணர் இலலம் (பெரு. 297-301). சிறுதாம்பால் கட்டப் பெற்ற இளங்கன்றின பாலுண்ணாமையா லுற்ற துய ராலே தாய் வருமெனறு சுழல்கின்ற தன்மையைப் பார்த்து ஆயர்மகள் குளிரால் நடுங்கும் தன் தோளின் மேல் கட்டிய கையளாய் உன் தாய் விரைவில் வருமென்றாள் (முலலை. 12-16). கூதிர்க் காலத்தில கறவைப்பசு, கன்று பால் குடித்தபோது விரைநது உதைத்தது (நெடு. 10-12). மாலைக்காலத் தில் ஆனினங்கள் தம் கன்றுகளை அழைக்கும் குரலை யுடையவாய் மன்றுகள் நிறையுமாறு புகுந்தன (குறி. 216-218). கன்றை வயிற்றில் கொண்ட. பிடியை வலிமைக்கு வரம்பாகிய களிறு பாதுகாத் துச் செல்கையில் புலி பாயப் பிடி தன் இனத் தொடு மலையில் பிளிறும் (மலை. 307-310). பலாப் பழத்தை உண்டு எஞ்சிக் கிடந்ததை, விதைகளைப் பிரித்துப் பயன் கோடற்குப் பிள்ளைகள் கன்றுக ளைப் பிணைத்துக் கடாவிட்டனர் (மலை. 337-339). ஆன்கன்றுகள் மாலைக் காலத்தே இலலிற்குத் திரும் பும் (அகம். 9:20). அறுகம்புல்லைத் தின்ற நல்லான் கள் பாலைச் சொரியக் கன்றை நினைந்தழைக்கும் குரலினவாய் மாலையில் மன்றுகளிற் புகும் (அகம். 14:9-11). வெட்சி மறவர் கன்றுகளைக் காணாமை யின் பொலிவற்ற கண்ணினவாய்ச் செவிகளைச் சாய்த்து வருந்திய கறவையினங்களைக் கொணர் ந்து மன்றில் அடைத்தனர் (அகம். 63:10-13). ஏறு தன் பசுவைத் தழுவிக் கொண்டு மாலையில் ஊரி டத்து வரும்போது அவை கனறுகளை அழைக்கும் குரலினவாய்த் தொழுவில் புகும் (அகம். 64:11-14). மேகங்கள் மழைபெய்தமையால் இடந்தொறும் மிகுந்த வெள்ளம் யானைக் கன்றின் கால்களை இழுத்துச் செல்லப் பிடி பிளிறியது (அகம். 68:15-18). கல்லா இளையர் (வேடர்) காட்டில் பெ'ண் யானை பிரிந்தலற அதன் கன்றைப் பிரித்து வெண்கடம்ப நாரினாற் கட்டியிழுத்து வநது மூதூரில் கள் விற்கும் வீட்டில் கட்டினர் (அகம். 83:3-9). ஈன்றணி மை கழிந்த பெண்யானைக்கும் அதன் கன்றுக்கும் பசியைப் போக்கக் களிற்றியானை மூங்கிலின் முற்றாத முளையைக் கொணர்ந்து ஊட்டும் (அகம். 85:5-8). தீந்தயிரைக் கடைந்த மத்து பசுங்கன்று தன் வாயால் சுவைப்ப முற்றத்தே தொங்கும் (அகம். 87:1,2). மழவர் ஆனிரைகள் உள்ளவிடத்துச் சென்று கன்றுகளுடன கூடிய ஆன் இனத்தைக் கவர்ந்து செல்வர் (அகம்.101:5-11). கரிய பிடியோடும் கன்றோடும் கூடிய களிறு புலி கோட்படாது பிழைக்க, அக்களிறு பகைமையுடன் காட்டில் மறைந்திருக்கும் (அகம். 118:6–9). குழியிற் கிடந்த கலங்கல்நீரை முகந்து கன்றையுடைய தன் பெண் யானையின் தலையைக் கழுவி எஞ்சிய சேற்றைத் தன்மேல் முகந்து சொரிந்து கொண்ட களிறு நிறம் வேறுபட்டது (அகம். 121:4-6). வெட்சிமறவரால் கவரப்பட்டுப் பாலை வழியில் நெடுந்தொலைவு சென்றமையால் நடைத்தொழில் குறைந்து தம் தாய்களைப் பிரிந்துவிட்ட ஆன்கன்றுகள் கடைக் கண்ணால் உகுத்த துன்பக் கண்ணீரைக் கரந்தை யார் துடைத்தனர் (அகம். 131:7-9). பழங்கன்று பள்ள நிலத்தில் தோன்றிய அறுகம்புல்லைக் கறித் தது (அகம். 136:11). களிற்றியானை தன்மேல் தன

கன்று ஏறி இறங்கும்படி பள்ளிகொள்ளும் (அகம். 197:14,15). அகழ்ந்த குழிகளில் கன்றுகளையுடைய பெண்யானைகளை அகப்படுக்கின்ற பூசலின்கண் எழினி வாராதொழியச் சோழ மன்னன் சினந்தான் (அகம். 211:9-13). வடுகர் பெருமகன் கோவலரின் தொழுவத்திலுள்ள கன்றுகளைக் கொண்ட ஆனிரையைக் கவர்ந்து தனது ஊர் மன்றம் நிறையும் படி செய்தான் (அகம். 253:16-18). கோவலர் வறுநிலத்தின்கண் கற்களை உடைத்து ஆனிரை நீருண்ணத் தோண்டிய ஊற்றுக்கணகளை யுடைய கிணற்றினைக் கன்றுகளை யுடைய பிடியானை களிற்றியானையொடு கையால தடவும் (அகம். 321:7-9). மலைச்சாரலில் வயபபுலி பாய்நத தாகக் களிற்றியானை பிளிறிய ஒலியைக் கேட்டஞ்சிப் பெண்யானை தன் கன்றைத் தனியே விட்டு ஓடியது (அகம். 347:10-13). காட்டிடத்தே கன்றுக ளோடு கூடிய ஆநிரைகள் புல்லருந்தித் திரிதலால் ஆயர் வேய்ங்குழ லிசைத்தனர் (அகம். 354:3-5). நல்ல பசுவின் தீம்பால் கன்றாலும் உண்ணப் படாமல் கறக்கும் பாத்திரத்திலும் வீழாமல் தரையில சிநதி வீணாயிற்று (குறு. 27:1,2). முகில தவழும் குனறு சேர்ந்த சிற்றூரிடத்து மேயச் சென்ற பசுக்கள் தம் கன்றுகளை நினைநது அவையிருக்குமிடம் சென்றன (குறு. 108:1,2). கன்று தன்னிடம பால்குடித்து நிற்ப வீட்டின முன்னிடத்துள்ள தினைப் பயிரைப் பெண்யானை உண்ணும் (குறு. 225:1,2). கன்றுகளை மேயுமிடத்திற் செலுத்திய சிறுவர் வேங்கை மலரும் செவ்வியைப் பார்தது ஆரவாரித்தனர் (குறு. 241:3-5). பாலை நிலம கன்றிலலாத ஒற்றைப் பசுவை நிழலினால் தம்பால் வரச்செயது வேறிடம் செல்லாமல தடுக்கும் ஓமை மரங்களைக கொண்டது (குறு. 260:7,8). மலையின்கண்ணுள்ள வேங்கை மரத்தின் கீழ் ஆமான் தன்கனறொடு தங்கியது (நற். 57:1,2). கரிய எருமைகளின் பாலைக் கறநது கொள்ளும் பொருட்டுத் தொழுவத்தில் அவற்றின் கன்றுகளை நிறுததிவிட்டு இளஞசிறார் பிறவற்றை ஓட்டிச செலவர் (நற். 80:1-3). புலிக்கு அச்சமுற்று விரைநது செல்லவியலாத குறுநடையுடைய தன கன்றைப் பிடியானை ஆரிருளில காத்து நிற்கும் (நற். 85:3-5). ஆனிரை உணணுதற்கு எடுததுவைத்த நீரை இளம் பிடி தன் கன்றுடன உணடது (நற். 92:6,7). நெடு நீரற்ற நிழலில்லாத அருஞ்சுரததில பிடிகள் தத்தம் கனறுகளுடன் வருந்தின (நற். 105:4-6). யானைக் குட்டி சேரிப்பெண்டிர் அஞ்சுமாறு பசுவின் கன்றொடு சேர்ந்து அச்சேரிக்குட் புகுந்தது (நற். 171: 3-5). பெரிய வாயையுடைய கனறினை மருங்கிற் கொண்ட பிடியைக் களிறு புணர்ந்து செல்லும் (நற். 194:3-5). களிற்றியானை வேங்கை மரத்தின் அடியை முறித்துக் கன்றுடன் பிடியைத் தழுவி வேங்கைப் பூவைக் கவழமாக ஊட்டும் (நற். 202: 3-6). பலாமரத்தில் ஆவின்கன்றைக் காலில் கயிறிட்டுப் பிணித்தனர் (நற். 213:2). கன்றை ஈனற பசு ஆம்பல் மலரைத் தின்று எஞ்சிய மிசசிலைப் பகடு உண்ணும் (நற். 290:1-3). பாணன் கன்றை உணவிற்காகப் பெறுவான் (நற். 310:9). மலையில மேய்ந்த பசு காந்தளைத் தீண்ட அதன் தாதுக்கள் தன்மேல உதிரப்பெற்றதால நிறம் வேறுபட்டமை நோக்கி அதன் கன்று தாயெனறறியாமல் மயஙகும் (நற். 359:1-3). மூங்கிலுயர்நத மலையில கடுஞசூல் கொண்ட பெண்யானை தன கனறை ஈனறு வருந தியது (நற். 393:1,2) பனறி நிலததைக கிளறியதால வெளிப்பட்ட மணி ஒளியில ஈனற மடபபிடி களிறு புறங்காப்பக் கனறொடு வதியும் (நற். 399. 4-7). தாய் எருமையின பகனறை மலர் செறிந்த கோட்டைக் கண்டு அதன் கன்று அஞசும் (ஐங். 97: 1,2) தன் கன்றைக் கட்டின இடத்தே கெடாத விருப்பத்தோடு பசு செல்லும் (கலி. 81:36,37). 'நின் நெஞ்சு தினை அரிநத தாளிடத்தே யாய மேய விட்ட கன்றை மேய்ககுமோ' எனத தலைவி தலைவனைக் கேட்டாள (கலி. 108:30,33). முதற் சூல கொண்ட பசு பகற்காலத்தும் வீட்டை விட்டு மேயப் போகாது தொழுவினுள் கட்டி வைககப் பெற்ற தன் கனறைச் சூழ்நது திரியும (கலி. 110: 12-14). 'இன்றேயனறி நாளையும் புலததிலே கனறு மேய்த்தற்குப போவேம், ஆணடு வருக' எனத் தலைவி தலைவனிடம கூறினாள் (கலி. 110:22,23). ஆயர் பாலைக் கறநத கலங்களை எடுதது வைதது கன்றுகளை யெல்லாம தாம்பாற கட்டி மனைக்கணணே நிறுத்தினர் (கலி. 111:1,2). ஆயர் குலமகள் ஒருவரும நடமாடாத வெயில் மிக்க உச்சிப் பொழுதில் கனறு மேயபபாள் போலத திரிந்தாள் (கலி. 112:12,13). மனைப் பககததில பயிர் செய்யும் தோட்டத்திடத்தே தலைவி கனறொடு சென்றபோது தலைவன் விலக்கினான் (கலி. 116:1-3). தன்னுடைய கனறைச சேர்ந்தார் மேல் புனிற்றிளம் பசு சீற்றத்துடன் விரைந்து செல்லும் (கலி. 116:8). மாலைபபோதில் கறவைகள் தாம் தங்கும் ஊர்களிடத்தில் கன்றின் மேல அமர்ந்த விருப்பத்தோடே மன்றிற் புகுநதன (கலி. 119:9-11).

**கன்னம் - 1.** சிறுபடிமம் (தாயத்து). வேலன் கழஙகுகளால் ஆராய்ந்து உண்மைகண்டு கன்னம்-சிறு படிமம் (தாயதது) - தூக்கித்தலைவி உற்றநோயககுக

* இ பொ க தொ 2-15அ

காரணம் முருகன் என்று கூறினான் (ஐங். 245:1-3).வேலன் தலைவியின வீட்டில் வெறியாடல் நிகழ்த்தி இறுதியாகக் கன்னத்தைத் தூக்கித் தலைவி உற்ற நோய முருகனால் வந்தது என்றான் (ஐங். 247:1-3).

2. **துலாக்கோலின் தட்டு.** பொற்கொல்லனது பொன்னால் செய்யப்பட்ட கனனம் - துலாககோலின் தட்டு - பொலிவுறும்படி வெள்ளி நுண்கோலை அறுத்த துணுக்குகள் அதனிடத்து உதிர்ந்தன போல வணடினம் ஊதுநதோறும் குரவமலர் கோங்குமலரில உதிர்ந்தன (அகம். 317:8-11).

**கன்னல் - 1. சிறுகுடம்.** சிறுதுவலையை வாடைக்காற்று எங்கும் வீசுதலின் யாவரும் குவிந்த வாயையுடைய கன்னலில் - சிறுகுடத்தில - உள்ள தண்ணீரைப் பருகவில்லை (நெடு. 64,65).

2. **நாழிகைவட்டில்.** நாழிகைக் கணக்கர் மன்னனை வாழ்த்தி, நீரைக் கொண்ட கன்னலில் - நாழிகை வட்டிலில் - நாழிகையை அறிந்து அதனை அவனுக்கறிவித்தனர் (முல்லை. 55-58).

**கன்னல் எண்ணுநர் - நாழிகை வட்டிலால் பொழுதறிந்து கூறுவார்.** நிலத்தினும் வானினும் மழைக்கால் நீர் பொருந்திச் சோதலான குறுநீர்க் கன்னல் எண்ணுநர் - நாழிகைவட்டிலால் பொழுதறிநது கூறுவார்- கூறலன்றி யாவர்க்கும் ஞாயிறு உள்ள இடம் இதுவென அறியப்படாததால் காலம் அறிய இயலாது போயிற்று (அகம. 43:5-7).

**கன்னாடு - மலைநாடு.** சாகாடு (வண்டி) கானற்கழியில் விளைந்த உப்பை முகநது கொண்டு கன்னாடு - மலைநாடு - செல்லும் (புறம். 60:6-8).

**கன்னிமை - கன்னித்தன்மை.** முருகவேளின் திருப்பரங்குன்றத்தை அடைந்து செய்யும் பூசைக்கண் யானைக்கிடும் கவழத்தில் அஃதுண்டெஞ்சிய மிச்சிலை மணமாகாத கன்னிமை - கன்னித்தன்மை - முதிர்ந்த பருவத்தை யுடைய மகளிர் உண்ணா தொழியின குற்றமறற காதலரை எய்தார் (பரி. 19:90-94).

**கன்னியர் - மணமாகா மகளிர்.** உலகம் மழையாற் குளிர்வதாக எனறு அம்பாவாடலை (தைநநீராடலை) மேற்கொள்ளும் கன்னியர் - மணமாகா மகளிர் - முனித்துறை முதல்வியர் (சடங்கறிநத முதிய அந்தண மகளிர்) நோன்பு செயயும் முறைமையைக் காட்டப் பனியை யுடைய விடியற் காலத்தே நீராடி, குளிர் வாடை வீசுதலான் கரையினகண் அந்தணரது வேத நெறியான் வளர்ந்த அழற்கண் சென்று தம ஈரவணியைப் புலர்த்துவர் (பரி. 11:80-86).

**கன்னிவிடியல் - மிக்க இளமையான காலைப் பொழுது.** கன்னி விடியலில் - மிக்க இளமையான காலைப் பொழுதில் - திரண்ட காலையுடைய ஆம்பல் தாமரையைப் போல மலரும் (ஐங். 68:1,2).

**கனல் - நெருப்பு.** நிணத்தைச் சுடுதலால உண்டான புகையோடு கனல் - நெருப்பு - வெம்மை நீங்காது (பதி. 43:32). தினையைக் காக்கும் பரணமேலுள்ள வன் கையிலுள்ள கனல் பொருநதிய கொள்ளி விடும் சுடர்ப் பொறிகளைப் போல மின்னி மழை பெய்தது (அகம. 73: 14-17). இலவததின ஒளி பொருந்திய கொத்தான பெரிய மலர்கள் காற்று வீசுதலின இடியிற் பட்ட கனல் போல நிலததின் கண் உதிர்ந்தன (ஐங. 320: 1-3). வேள்விக்கண் மறைமுறைப்படி கனலைப் பெருக்குங்கால் ஆண்டுத்தோனறும் ஒளிச்சுடர் திருமாலின வெளிபபாடு எனக் கீரநதையார் குறிபபிடுவர் (பரி. 2: 63-68). புனலாடிய மகளிர், கனல் சுட்ட அகிலின புகை காவின்கண் எழ அதனான் உடம்பின ஈரத்தைப் புலர்த்தித் தம் முலைமுகட்டில் கலவைக் குழம்பைப் பூசினர் (பரி. 10: 71-73). மூலப் பகுதியும் அறமும் முதன்மை கடந்த காலமும் விசும்பும காற்றும் கனலும் கூடிய இம்மூவேழ் உலகத்து உயிர்களெல்லாம் திருமாலிடத்தில் உளவாயின என நல்லெழுநியார் உரைப்பர் (பரி. 13:23-25).

**கனலி - 1. ஞாயிறு.** விளங்கிய சுடரையுடைய கனலி - ஞாயிறு-நான்கு திசைகளில் தோன்றினும் இலங்கு கதிர் வெள்ளி தென்றிசைப் படரினும் அநதண் காவிரி பலகாலாய் ஓடி நீரை ஊட்டும் (புறம். 35: 6-8). நனவின்கண் தோன்றும தீ நிமித்தங்களாகக கூறப்படுவனவற்றுள், வெய்ய சுடரையுடைய கனலி பலவிடத்துச் செறிந்து தோன்றுதலும் ஒனறாகும் (புறம். 41: 6). முனிவர் நிலமிசை வாழ்நர்க்கு வெம்மையான் உளதாகிய துன்பம் நீங்கச் சுடுகின்ற கதிரையுடைய கனலியின் வெம்மையைத் தாமபொறுத்துக் காற்றை உணவாகக் கொண்டு அச்சுடருடனே தாமும் சூழத் திரிவர் (புறம். 43:1-4). கிள்ளியின் திருந்து கழல் அடியின் தணணிழற்கீழ் உள்ளேமாதலால் எறிதிரைப் பெருங்கடல் முடி வெய்தும் ஊழிக் காலமே வரினும் வெதுபபுகின்ற கதிர்களையுடைய கனலி தென்றிசைககண் தோனறினும் யாம் அஞ்சேம் எனக் கிணைப்பொருநன் கூற்றில் வைத்துக் கிள்ளிவளவனைத் தாயங் கண்ணனார் போற்றுவர் (புறம.397:23-27). கடல் சூழ்ந்த உலகினை வெய்ய தெறுதல் தொழிலையுடைய கனலியோடு திங்களும் வலமாகச் சுற்றும் (பெரு. 17,18). வெப்பம் மிக்க நீண்ட வழியிடத்தே வெம்மையுற்

றுச் செல்லுதலையுடைய கனலி மலை பிளககக் காய்வதனால் அவ்வழியைக் கடந்து செல்லும் பற வைகள் உருகின (அகம். 55:1,2). மடந்தையுடன் தலைவன் முன்னிய சுரத்தை, நெருப்பு விளங்கும் கனலியின் வெப்பம் தணியுமளவும் யாமரத்தின நிழலில் தங்கிச் சிறுமலைகளைக் கடபபின் காண் குவை எனச் செவிலியிடம் இடைச்சுரத்திலுள் ளார் கூறினர் (ஐங். 388). ‘காதலா சென்ற அரிய வழியிடத்தே மரச்சினைகள் வாடச் சிறக்கும் நின சினந் தணிக என்று பரவிச் செறிந்த கதிரையுடைய கனலியை நாம வேண்டிக் கோடல் நங்கற்பிற்கு இயையுமோ’ எனத் தலைவி தோழியை வினவினாள் (கலி.16:9-12). கலந்த உறவும் வாய்மையும் நனமையுடைய நடுவுநிலையும் இனி விளக்கமின்றிப் போயின என்று உலகத்தார் இரங்கும்படி இனிது ஆண்ட அரசனோடு கெட்ட நலனூழிச் செல்வம் போல் நிரைத்த கதிரையுடைய கனலி படுதலாலே பகற்காலம மறைந்தது (கலி. 130:1-5). திருமால் வானத்தின்கண அழகிய நில வொளியோடே விளங்கும திங்களும் சுடுகின்ற கதிர்களையுடைய கனலியுமாவார் (பரி. 1:44,45).

2. நெருப்பு. எல்லாம் தீகின்ற செங்கனலியும் - செந்நெருப்பும் - கூற்றுவனும் யமனும் ஞாயிறும் கூடும் ஊழி முடிவில் கடலிலே அழுநதுகின்ற நிலமகளைத் திருமால் கேழலாய் (வராகமாகி) கொம் பினால் எடுத்தார் (பரி. 3:21-24). குழவிப் பருவத் தில் விளையாட்டாகச் செய்த போரின்கண் செவ் வேள் இந்திரனை வென்றிட அங்கி முதலானோர் ‘இவனே இனி நம் படைக்குத் தலைவன’ எனக் கருதிக் கொடுதத படைக் கருவிகளுள் தெறுகதிர்க் கனலியும் ஒன்றாகும் (பரி. 5:55-67).

**கனவு - கனா.** சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன கனவினும் மெய்ம்மையினும் பொறுத்தற்கரிய தீநிமித்தங்களைக் கண்டும் போர் செய்யும் வலிமையை யுடையவன (புறம. 41:11,12). சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவன் குளிாந்த நீராலுள்ளதாகிய பூசலல்லது வருத்த முற்று, ‘எவ்வம் களைவாய்; வாழி வளவ’ என்று சொல்லி அவனது முந்துற்றுச் செல்லும் படை யுண்டாக்கும் பூசலைக கனவின்கண்ணும் அறியான் (புறம். 42:7-9). நினனைப் பாராட்டி அனபுமிகுதி யால் கனவின்கண்ணும நின் புகழையே கூறும் எனது காமர் நெஞ்சம் உவப்ப ஆலமர் கடவு ளன்ன நின செல்வத்தைக் கண்டேன்; வாழ்க நின கணணி என்று வடமவண்ணக்கன் பேரிசாததனார் இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நனமாறனிடம் கூறினார் (புறம். 198.6-11). மணியும பொன்னும் முத்தும் உடையும் கட்குடங்களும் யான் இனி வறுமையுறறு வருந்தாமல இருக்க இராச சூயம் வேட்ட பெருநற்கிள்ளி கனவில் கண்டது போல நனவிலே தந்தான் என அமமன்னனை உலோச் சனார் போற்றுவர் (புறம. 377.16-20). செலவக் கடுங்கோ வாழியாதன இரவலர்க்குக் களிறு, குதிரை முதலானவற்றைக கனவென்று மயஙகு மாறு நனவின்கண் நலகினான (புறம. 387:22-27). அதியமானின வியனகரை ஆாவலர் நெருங்கலாமே யன்றிப் பகைவர் கனவின்கணணும் சென்று சேர் தற்கியலாத காவலை யுடையது (புறம். 390.5,6). மலையிடததே துஞசும் கவரிமான் பகற்பொழுதில் தான் மேய்ந்த நரநதம் புற்களையும் அவை வளாநதிருககும் பரநது விளஙகும் அருவிகளையும கனவிற்கணடு மகிழ்ந்தது (பதி. 11:21,22). சேரன மாதேவி பகலில் (சேரனின்) பிரிவை ஆறறியிருநது இரவில் அரிதிற பெற்ற துயிலின்கண் உணடாகும் சிறுமகிழ்சசிக காலததும் கனவு கண்டனள (பதி. 19.11-13). இமையவரமபன நெடுஞசேரலாதன் கனவின்கண்ணும் பொய கூறுதலை அறியாதவன (பதி. 20:9,10). கடலபிறக்கோட்டிய செஙகுட்டுவன கனவிலும் பிறரை இரந்து எனக்குறற இடுக கணைக் களைக என வேணடியறியாத கசடு இல்லாத நெஞசத்தினன (பதி. 44:5,6). பெருஞசேர லிருமபொறையிடமிருந்து பிரிந்து பல திசைகளிற் சென்ற அவன நல்லிசைகள் கனவிலும் பிறரை விருமபுதலை அறியா (பதி. 79:4,5). ‘கனவிலும் பிரிதலை யறியாது உறைதலையுடைய வாணுதல அரிவையோடு அழகுறப் பொலிந்து நோயின்றி வாழவாயாக’ என்று இளஞ்சேரலிருமபொறை யைப் பெருங்குன்றூர்கிழார், வாழ்த்துவர் (பதி. 89: 13-20). கரிகாலனிடம் பெரும பொருள்களைப் பரிசில் பெற்ற பொருநனின நெஞ்சம இது கனவோ என்று மருண்டது (பொரு. 98). தலைவன அருஞ்சுரத்திடையே கொண்ட துயிலினகண ஊடிய தலைவியைக் கண்டு புருவமொடு நுதலை நீவி நறுமணம் பொருந்திய கூநதலைக கோதிய பொழுதிலே வெறுங்கை யாககிய அப்பொய்க் கனவினால் வருத்த முற்றான் (அகம. 39:15-24). வண்டு வேங்கையின் மலரினை ஊதிக் காந்தட் குலையில் துஞ்சி யானையின் கன்னத்தில் ஒழுகும் மததநினை உண்ணாக கனவு காணும் (அகம. 132: 10-13). கங்குல் தோறும் கனவு மிகவும் இனிய; நனவிலும் மனையிலே புள் நிமிததஙகள் நலல வாயின; எனவே தலைவர் மதிநிறைந்து கார்த்திகையைச சேரும நடுநாள் விழவினை நம்

மோடு அயர விரைகுவர் எனத் தலைவி தோழியி டம் கூறினாள் (அகம். 141:1-3,7-11). நம் மலையில் படப்பையின்கண் சுடர்ப்பூ வேய்ந்து அணங் கொன்று வேண்டுருவம் கொண்டு வரும் நனவினது உண்மைத் தோற்றம்போலவே துயில்வோரிடத்துக் கனவு தோன்றி மருட்டலும் உண்டு; எனவே, நடு நாள் இரவில் தலைவி பரணில் ஏறி இறங்கி வரக் கண்டேன்என அவளை அலைக்காதே எனத்தோழி செவிலியிடம் கூறினாள் (அகம். 158:6-11). தாழைச் சுனையின்கண் பெடையோடு வருத்தமுடன் தளர்ந்திருக்கும் கடற்காக்கை சுறாமீன இயங்கும் வேட்டம் மடிந்த இடத்திலுள்ள இறாமீனைப் பற்றி யுண்பதாக நள்ளிரவில் கனவு காணும் (அகம். 170: 9-12). தலைவன் தணபனி அற்சிரம் தமியோர்க்கு அரிது எனத் தலைவியைக் கனவிலும் பிரிதலை அறியாதவன் (அகம். 178:19,20). தம்மிடை நிகழ்ந் தவற்றைப் பிறர் அறிதலை அஞ்சிப் பேய் தாம் கண்ட கனவினைக் கூறாதது போன்று மறை யினைக் கரத்தலால் நுண்ணிதின் இயைநத காமம் அலராகி வெளிப்பட்டது (அகம். 303:1-3,7). கன வின்கண்ணே பொருள்கள் தோன்றி விரைந்து மறைவது போன்று நனவின்கண்ணே நாளினது செலவும் மூப்பினது வரவும் காமத்தியற்கையும் விரைந்து செல்லும் (அகம். 353:3-6). திகிரி உருட் டும் உலகம் முழுதாளும் செல்வம் பொதுமையின்றி நனவில் கைகூடியதாயினும் அதன் கழிவு இரவில் கனவில் தோன்றி மறையும் தன்மையுடையது (அகம். 379:6-9). 'கனவே, அழகு ஒழுகும் மாமையையும் நுண்பூணினையும் உடைய தலைவியைத் தந்தோய் போல இனிய துயிலினின்றும் எழுப்புகின்றாய்; தம் துணையைப் பிரிந்தோர் நின்னை எள்ளார்' எனத் தலைவன் பிரிவிடத்துக் கனாக்கண்டு கூறி னான் (குறு. 147). பொன்னாற் செய்யப்பட்ட கிண்கிணிக் காசைப் போன்ற பேரரும்பை வெளிப் படுத்தும் கொன்றை குருந்த மரத்தோடு சுழலும் பெருநதண் பருவத்தைக் கார்காலம் அன்றெனறு நீ கூறுவாயாயின இங்ஙனம் தோன்றுவது கனவோ எனத் தலைவி தோழியை வினவினாள் (குறு. 148: 2-6). உள்ளூர் மாமரத்தின் ஓங்கிய கிளையில் தொங்கித் துயிலுற்ற வெளவால் வெல்போர்ச் சோழரது குடியிற் பிறந்த அழிசியின் பெருங்காட் டிடத்துள்ள நெல்லிப் பழத்தின் புளிச்சுவையை நுகர்தற்குக் கனவு காணும் (நற். 87:1-4). யாமுற்ற காமநோய் முருகு அணங்கியதனான வநதது என வெறியயர்ந்த நம் அன்னைக்குக் கணணாலே குறிப்பாகக் காட்டுவதோடு கனவின் கண்ணும் தோன்றி இந்நோய் என்னால் எய்தியதன்று; தலை வனால் வந்தது என்று கூறுவது முருகவேளுக்கு ஏதம் உடைத்தோ என்று தோழி தலைவிக்குரைப் பாளாய்ச் சிறைப்புறமாகக் கூறினாள் (நற். 173:4-9). தலைவி துயில் கொள்ளுங்கால் தோன்றும் கனவின்கண் தலைவனுடைய மார்பினைப் பொருந் தியவள் நனவிற் காண்கின்றிலள் (ஐங். 234:2-4). தலைவியின் தோளிடத்தே துயில் கொண்டு கனவு காணும் தலைவர் 'தொடிநிரை முனகைய ளாகிய தலைவி நாம் பொருள் வயிற் சென்று மீளும் அளவும் கையாறு கொள்ளாமல் கடிமனை யைக் காத்தோம்ப வலலவளோ' என்று மொழிந் தார் (கலி. 24: 7-12). காதலரைப் பிரிவின்றிப் பெற்று நனவிற் புணர்ச்சி நடக்குமாதலின் இனிக் கனவிடத்தே உண்டாகும் புணர்சசியைப் போக்கி விடுவோ மல்லவோ எனத் தலைவி தோழியிடம் கேட்டாள் (கலி.39:35,36). புலியைத் தாக்கி வென ற வருத்தத்தோடு மலைப்பக்கத்தில் துயிலும் யானை நனவிற் செய்தது மனத்திலிருநதமையின் கன விடததே புலியைக் கண்டு வெருவி எழுந்து புதுவ தாக மலர்ந்த வேங்கையைப் புலியாகக் கருதி அதன் அணிநலம் சிதைததது (கலி. 49:1-6). 'நனவின்கண் தலைவியின் நலங்கெடும்படி வருத்திய துனபம் கங்குலில் கனவின்கண் வந்து அவளை வருத்தா திருக்குமானால் அஞ்சலென்று கூறி நீ அருளாது துறத்தலின் நெஞ்சழியும்படியான வருத்தத்தால் அவள் இறந்துபாடு எய்தாமல் காக்கவும் இயலும் என்று தோழி தலைவனிடம் கூறினாள் (கலி. 53: 16-19). 'ஐயனே, கனவினகண் வரப்பெற்ற செல் வத்தைப் போன்றது எமக்கு நின் மார்பு' எனக் காமக்கிழத்தி தலைவனிடம் கூறினாள் (கலி. 68: 24,25). பரத்தையரிடத்து ஒழுகி வந்த தலைவனைக் காமக்கிழத்தி பல கூறி ஊடிச் சினந்திட, தலைவன் யான் தவறுடையேன் அல்லேன; இராக்காலத்து நீ கண்டது தான் கனவு போல இருநதது என்றான; அதனைக் கேட்ட அவள தணபெயல் பொழிந்த இராக்காலததே ஒருவன செய்த குறியிடத்தே வந்தவளைக் கண்டதனான் வந்த கனவு இது; நீ உண்மையை மாற்றிக் கூறுகினறாய் எனக் கூறி அவள் மேலும் சினநதாள (கலி. 90:20-23). கன வென்று சொல்லப்பட்டது ஓர் அழகிய இயல் பினை யுடையது (கலி. 92:2). 'வையை யாறறங் கரையை அழகு பெறுத்தின பொழிலினிடத்தே நனவிடத்தே சென றாற்போல இராப்பொழுதிலே கனவிடத்தே சென்றேன' எனத் தலைவன் தலைவி யிடம் கூறினான் (கலி. 92: 10-13). 'நின்னை நின் னுடைய பெண்டிா ஊடினவற்றையும் நீ அவரு டைய அடிமுன்னே வணங்கி ஊடல் தீர்த்தன

வற்றையும் பலபடியாகக் கனவின் மேலிட்டுக் கூறாதே எனத் தலைவி தலைவனிடம் சினந்து கூறினாள் (கலி. 92: 55-58). ஊடிய தலைவியிடம் தலைவன், 'வேனிற்காலம் வரக்கண்டு கூடல் நகரத்து மகளிரும் மைந்தரும் காமனுக்கு விழாக் கொண்டாடிச் சோலையிலே விளையாடத் தம்மை அழகு செய்து கொள்வர்; ஆதலால் நான் கண்ட கனவு நனவாகுமாறு நீ அருள் புரிவாயாக' என்று கூறினான் (கலி. 92: 59-68). தலைவி துயின்ற விடத்துத் தன் தோள் மேலுள்ள தலைவனை மெய்யென்று கருதித் தழுவுமிடத்து அவனைக் காணாளாய்த் தான் கண்டது கனவென்பதை யறிந்து செயலற்றுக் கலங்கினாள் (கலி. 126:14-17). நனவில் வாராத நயனற்ற தலைவனைக் கனவிற் கண்டு தலைவி அவனைப் பற்றிக்கொண்டு என் நலந் தாராயோ என வளைப்பது போலவும் அவன் கவின்பெற முயங்கி வருந்தாதே என அருள் செய்வான் போலவும் முலையிடைத் துயிலும் மறந்தாயோ எனக் கூறி நிலையழிந்த நெஞ்சத்தோடு நான் அழுவது போலவும் என் அடியிலே அவன் தலை படும்படி வணங்குவான் போலவும் மாலையைக் கோலாக் கொண்டு வணங் கியவனை நான் அடிப்பது போலவும் அவன் யான் செய்த பிழை யாது எனக் கேட்டு நடுங்கித் தன்னை ஊடல் உணர்த்துவான் போலவும் பல கனவுச் செய்திகளைத் தோழிக்குக் கூறினாள் (கலி. 128:8-21). 'தலைவனைக் கனவிடத்தே கண்டேன்; கனவிலே வந்த கானலஞ்சேர்ப்பன் நனவில் வருத லும் உண்டென்ற நம்பிக்கையில் என் அரும்பெறல் உயிர் நிற்கின்றது' எனத் தலைவி தோழியிடம் கூறினாள் (கலி. 128:23-26). தலைவனின் அறிவும் அடக்கமும் நாணும் அவனை விட்டு நீங்கப் பிறர் எள்ளி நகும்படி தலைவி மின்னவிர் நுடக்கமும் கனவும் போலே தன் மெய்யைக் காட்டி அவன் நெஞ்சினை மிகவும் கவர்ந்தாள் (கலி. 138.3-6). ஊர்க்காவலர் காவல் கொண்ட நள்ளிரவில் கன விலே யான் உள்ளியவாறே தலைவன் வந்து தோன்றினனாக யான் அவனை வளைத்துப் பிடித்துக் காண்பதற்கு மெல்ல விழிக்க யான் பிடித்த கையுள்ளே மறைந்து தோன்றானாயினான் எனப் பிரிவாற்றாத தலைவி கலங்கி மொழிந்தாள் (கலி. 142:32-36). நீ உற்றது என்னென்பார்க்குப் பிரிவு நோயுற்ற தலைவி கனவின்கண் வாய் வெருவிக் கூறுவாரைப் போல விடை அல்லாதன சில சொல்லிப் பலகாலும் நகுதலைச் செய்து தெளிவும் மயக்கமுமாய் மயங்கி நிற்பாள் (கலி. 144:5-7). மக்கள் விரைந்து விரும்பும் தலைமை போல் தோன் றும் காமம் நள்ளிருளில் கண்டவர்க்கு நனவில் உதவாது வேறுபடும் கனவைக் காட்டிலும் நிலை யற்றது (கலி. 145:1-3). இராக்காலத்தே கனவின் கண் தலைவனைக் கண்டு ஆற்றுதற்குக் காமன் கணை செய்கின்ற கொடுமையாலே கண்கள் துயிலா வாயின எனத் தலைவி வருந்தினாள் (கலி. 147.57-60). தலைவி ஊடல் கொண்டு கூறியது நனவுமன்று; கனவுமன்று; பொய்யே எனத் தலைவன் கூறி னான் (பரி. 8:75-77). யாம் எம் காதலரொடு அளவ ளாவியதாகக் கண்ட கனவு பொய்யாகாமல் அவர் நனவில் எய்தி நீராடும் பொருட்டு நினக்குரிய வையை புதுவெள்ளத்தைப் பெறுகவென்று மகளிர் செவ்வேளிடம் வரம் வேண்டினர் (பரி. 8.103-105).

**கனவுவார் - கனாக்காண்பவர்.** மாசில்லாத வண்மை யுடைய படுக்கையில் புணர்ந்த புணர்ச்சியில் தலைவியின் தோளில் துயில் கொண்டு கனவுவார் - கனாக் காண்பவர் - தலைவர் (கலி. 24 6,7)

**கனா - கனவு.** தலைவன் தன் உடம்புடன் அணைந்த மெய்போலும் தன்மையுடைய பொய்யாகிய கனா - கனவு - தன்னை மருட்ட எழுந்து படுக்கையைத் தடவியதாகத் தலைவி தோழியிடம் உரைத்தாள் (குறு. 30:2-4). 'ஓர்த்தது இசைக்கும் பறையைப் போல நீ நெஞ்சத்து விரும்பியதனையே கன வாகக் கண்டாய்' எனத் தலைவனிடம் தலைவி கூறி னாள் (கலி. 92:21,22).

**கனி - பழம்.** குளிர்ச்சியுடைய பகன்றையையும் கனி - பழம் - உடைய பாகலையும் கொண்ட கரும் பல்லது பிறிது காடறியாத பெரிய மருதநிலம் பாழாகுமாறு இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளி பகைவர் நாட்டை ஒள்ளெரி யூட்டினான் (புறம். 16· 14-17). ஔவைக்குப் பெரிய மலைவிடரின்கண் உச்சியிலிருந்த நெல்லிக்கனியைச் சாதல் நீங்க அதிய மான் அளித்தான் (புறம். 91.8-11). மகளிர் கழற் கனியால் வகுத்த துணைச்சில் ஓதியினை உடைய வர் (புறம். 97:23, 24). களங்கனி போலும் கரிய கோட்டையுடையது சிறிய யாழ் (புறம். 127.1,145:5). ஊர்ப் பொதுவில் உள்ள பலாமரத்தில் வாழும் மந்தி பரிசிலர் தொங்கவிட்ட மத்தளத்தின் கண் ணைப் பலாக்கனி என்று அடிக்க அன்னச்சேவல் அவ்வொலிக்கு மாறாக ஆடியது (புறம் 128:1-3). முதிர மலையில் முள்ளைப் புறத்தே யுடைய முதிர்ந்த பலாக்கனியைப் பெற்ற கடுவன் தன் மந்தியைக் கையால் குறி செய்தழைக்கும் (புறம். 158:23-25). புளிச்சுவை விரும்பிய செங்கண் ஆடவர் களாப்பழத்துடன் துடரிப்பழத்தைத் தின்று வெறுப் பின் மன்றல மேட்டிலேறிக் கரிய நாவற்கனியைப்

பறித்து இருந்துண்பர் (புறம். 177:8-11). பனிவரையின் மீதுள்ள பலாக்கனியைக் கருவிரல் கடுவன கவர்ந்துணடது (புறம். 200:1,2). வாயாத வன் கனிககு உலமருவோர் ஒருவருமிலர் (புறம். 207:11). பறவையினம் பலகனிகளையும் விரும்பி விசும்பிற் பறந்து மலைக்குச் செனறு மரத்தில் பழந்தீர்ந்ததால் பெறாது வருந்தித் திரும்பியது (புறம். 209: 7-10). தூசிபபடையோர் நுங்கின் தீஞ்சேற்றை உண்ண, இடைச் செலவோர் பழத்தின் பைங் கனியை மாநதினர் (புறம். 225:1,2). தீவிய கனிகளைத் தரும் இரல மரத்தின தழையுடன் வேப்பிலையும் சேர்த்து மனையிறப்பில் செருகினர் (புறம். 281:1). ஒளிவீசும் படைக்கருவிகளாகிய மழைமுகில் விரும்பிய தலைகளாகிய கனிகளைப் பெய்தது (புறம். 370:12). மாமரத்தின் தீவிய கனிகளைப் பிசைந்து நறிய புளிக்குழம்பு செயயப்பட்டது (புறம். 399:4). வண்டுகள் மொய்க்கவும் இனிய சுவை திரியாத அரிவாளாலும் பிளக்கவியலாத சாறு நிரம்பிய முட்டை போன்ற முதிர்ந்த பலாக் கனிகள் வழிச்செல்வோர்க்கு உணவாகி அவர்தம் வழிநடந்த களைப்பைப் போக்கும் (பதி. 60:4-7). மயிலகள் பசிய பாகற் பழத்தையும் செஞ்சுளைகளை உடைய பலாக்கனியையும் தின்று ஆரவாரித்தன (பொரு. 190-192). அதிகமான் மலையின் கமழ்பூஞ் சாரலிலுள்ள அழகிய அமிழ்து விளை நெலலித் தீங் கனியை ஔவைக்குக் கொடுத்தான் (சிறு. 99-101). காட்டிடத்துள்ள குமிழின் கனி நிறத்தை ஒப்பத் துவரூட்டின கைத்தொழிலால் பொலிவு பெற்ற போர்வையைக் கொண்டது யாழ் (சிறு. 225,226). சாற்றானும் மணத்தானும் ஒன்றற்கொன்று வேறுபட்ட அழகிய பலாவின் சுளையும் தேமாஙகனியும் பிறர்க்கு வழங்கப்பட்டன (மது. 527,528). பாறையிலுள்ள நெடுஞ்சுனையில் மாவின் தீங்கனிகள் உதிர்ந்தன (குறி. 187,188). களங்கனி போன்று கடுகித்தோன்றும் நிறத்தையுடையது வளைந்து ஏந்தின கோட்டினைக் கொண்ட பேரியாழ் (மலை. 36,37). பறவைக் கூட்டம் கனிகளைப் பொழியும் காட்டிடத்தே சுற்றத்தோடு விரையும் (மலை. 54,55). நாவல் மரங்களின் கரிய கனிகள் காற்றால் உதிர்ந்தன (மலை. 135). வாழைக் குலையினின்று முதிர்ந்த இனிய கனிகள் பலாச்சுளையோடு பாறையிலுள்ள நெடுஞ்சுனையில் தேறலை விளைத்தன (அகம். 2:1-4). வாவல்பேடை வானத்தின்கண் பறந்து மிகத் தொலையை வெயிலின் வெம்மையிற் கடந்து வந்து கனிகள் பெறாமல் வருந்தின (அகம். 57:1-4). காட்டில் வாழும் சூல்கொண்ட மயிற்பேடை பாகற் கனியைத் தின்ன விரும்பி அயிரியாற்றின் கரையிலிருந்து கொம்புபோல் அகவும் (அகம். 177:9-11). பாண்மகளிர் தம் கணவன்மார்க்கு வைகறைப் பொழுதில் ஆம்பல் இலையில சோற்றுடன் பிரம்பின் கனியால இயற்றிய புளிங்கறியை இட்டனர் (அகம். 196:4-7). கனிகள் முதிர்நதுள்ள பககமலையின் சாரலில் தலைவன் தலைவியின் தனிமை கண்டான் (அகம். 288:7). உகாமரக் கிளையிலிருநது குயிலின் கண்ணைப் போனற நிறமிக்க காயகள முதிர்ந்து பொற்காசு போனற நிறமுடைய கனிகள் உதிரும் (அகம். 293:6-8). முற்றத்தில் நிறகின்ற மாமரத்தில் கோடைப் பருவதத்ல காயத்து முதிர்ந்த கமழநறுந் தீங்கனியைப பலாசசுளையுடனும தேனுடனும் சேர்த்து அரியல (கள்) செய்தனர் (அகம். 348: 1-5). பலாக்கனியைக் கவரும் கல்லாமந்தி நெடும பெருங் குனறில கடுவனொடு திரியும் (அகம்.378:20-22). நீர் உண்ணும் துறையில் நாவலமரம் உதிர்த்த கனி ஒனறைக் கவர்ந்து சென்று நணடு தாழை வேர்பபக்கதத்தி லுளள வளையிலிருக்கும் தன பெடைக்கு நல்கும் (அகம். 380:4-7). ஆண்குரஙகு தீண்டியதனால் நழுவிய பூ நாறும் பலாககனியை மலைப்பக்கத்தில் வீழும் அருவி நீருண்ணும துறையிடத்துச் சேர்ககும் (குறு. 90:4,5). பிரபபங் கொடியின் வரிப்புற விளைகனியை ஆழமான குளத்திலுள்ள கெணடை மீன கவ்வும் (குறு. 91:1,2). புறாவினது முதுகைப் போன்ற புல்லிய அடியை உடைய உகாய் மரத்தின மணியைப் போன்ற செறிந்த கனிகள் உதிர ஆறலைகள்வர் அம்பு விட்டனர் (குறு. 274:1-4). ஆண்குரங்கு முதிர்நத இனிய கனிகளை மரத்தின் மேலிருநது உதிர்க்க அம்மரத்தின் கீழிருந்து குட்டிகளையுடைய பெண்குரங்கு ஏற்பவற்றைத் தினனும் (குறு. 278:4-7). ஆண் கருங் குரங்கு பககத்தில் தோண்டியதனால உடைந்த பூ நாறு பலவுக்கனி காந்தள் மலர் மிகக சிறுகுடியில் மணங்கமழும் (குறு. 373:5-7). சுரத்திலுள்ள குமிழ மரத்தின வளைந்த மூக்கினையுடைய முற்றிய கனி கீழே உதிர்ந்து ஆங்குள்ள இளமானுக்கு உணவாகும் (நற். 6:7,8). அடைகரையின்கண உதிர்நத நாவற்கனியைத தம்மினமென்று கருதி மொய்த்த தும்பியைப் பழமெனக் கருதி அலவன் பற்றியது (நற். 35:1-4). கொனறையந் தீங்கனிகள் பாணர் ஐயம் கொள்ளும்படி அவர்தம் பறையை முழக்கும் குறுந்தடி போலக் காணப்பட்டன (நற். 46:5-7). மந்தி இனிய அத்திக்கனி போன்று சிவநத முகத்தையும் பஞ்சு போனற தலையையும் உடையது (நற். 95:3,4). மலையிடத்துண்டாகிய வாழையின் கொழுவிய கனியை மந்திகள் கவர்ந்துண்ணும் (நற். 251: 2,3). கோவலர் கரும்பை முரிதது குறுந்தடியாகக்

கொண்டு மாங்கனியை உதிர்ப்பார் (ஐங். 87:1,2). இளம்பிறை போன்ற மருப்பினை யுடைய ஆண் பன்றி களங்கனி போன்ற தன் பெண்பன்றியைப் புணரும் (ஐங். 264:1,2). புதிய மட்கலம் போன்ற சிவந்தநிறமுடைய கனிகளையுடைய ஆலமரம்இரை தேடிச் செல்லும் பறவையைத் தடுக்கும் (ஐங். 303:1, 2).பல குலைகளையுடைய பலாவின் பிசினையுடைய இனிய கனி பாறையிடத்தே வீழ்ந்து கிடக்கும் (கலி. 50:12,13). தலைவன் தன் மீது காணும் நாற்றம், திருப்பரங்குன்றத்திலுள்ள கனியினுமமலரினும் பயி னறு வந்த காற்று தனமீது அடித்தமையால் உண்டா கியது எனத் தலைவியிடம் கூறி ஊடல்கொள்ளற்க என வேண்டினான (பரி. 8:53-55). திருமாலிருஞ் சோலை மலையில சுனையிடமெல்லாம் நீலம மலர அச்சுனைகளைச் சுற்றி நிற்கும் அசோக மரத்தின் கிளைகளில் எல்லாம பூக்கள் மலர ஆண்டுள்ள காய் கனிகளுடன் நிறம் மாறுபட வேங்கை மலர்ந் தது (பரி. 15:30-32). காடுகள் தரும் வெங்கார் மணமும் மரக்கொம்புகள் உதிர்த்த கனிகளின மணமும் ஒருசேரக் கலந்து கொண்டு ஓடிய வையை அம் மணததைப் பிறர்க்கு நல்கியது (பரி. 20:10,11).

# கா

**கா - 1. சோலை.** தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் பகைவர்தம் ஊர்தோறும்சென்று காவன் மரங்களை நவியத்தால் வெட்டுதலான் அவை இருநத கா-சோலை - கலங்கின (புறம்.23:8,9). காம இருவரல்லது யாமத்துப் பனிமலர்க் காவிற்குத் தனிமகன் செல்ல வியலாது (புறம். 33:18,19). பொற்பூப் பொருந்திய கா (கற்பகக்கா) விண்ணகத் திருந்தது (புறம். 38:12). பூவார் காவை யுடையவன் அதியமான் நெடுமானஞ்சி (புறம்.99:6). நம்பி நெடுஞ் செழியன் கடிகாவின் பூக்களைச் சூடினான் (புறம். 239:2). நெடுவேளாதன் படுவண்டார்க்கும் பன் மலர்க் காவினை யுடையவன் (புறம். 338:3,4). வயல் சூழ்ந்த காவினிலுள்ள மயில்களை மகளிர் ஓட்டு தற்கு ஒலியெழுப்பினால் பாட்டெனக் கருதி அவை மருண்டு ஆடின (பதி. 27:7,8). செவ்வேள் உறையும் இடங்களுள கா ஒன்றாகும் (முரு. 223). இனக்கள மரின் இசை மிகுதலால் வெருவி நீங்கிய நாரைகள் அடும்பும் பகன்றையும் புனகும் தாழ்ந்த காவு முடைய ஞாழலொடு ஏனைய மரங்கள நிறைந்த நாட்டைச் சென்றடைந்தன (பொரு. 194-198). கா (காண்டவ வனத்தை) எரியூட்டி அழித்த புகழையுடை யோன் (அருச்சுனன்) (சிறு. 238,239). காவில் கடுஞ் சூல் மந்தி காழோர் இகழ்பதம் நோக்கி யானைக கிடும் நெய்ம்மிதி கவளத்தைக் கவரும் (பெரு. 393 - 395). தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ் செழியன் பகைவர் புலம் புக்கு அவர் கடிகாவின் நிலை தொலைத்தான் (மது. 152,153). மரம் பயில் காவில் கலை தாய கொம்புகளிலே அவற்றின மந்தி ஆடின (மது. 332,335). காவில பிண்டியின கிளைகளில் செந்தீப்போலும் பூக்கள் மலர்ந்தன (மது. 700,701). உயர்நத வியன்காவில பல நிற மலர்கள் விரவிபபூததன (நெடு. 27). தாழ்நத காவில அவிர்சடை முனிவர் அங்கி வேட்டனர் (பட். 53, 54). நன்னனின் தண்பணை நாடு காவும பள்ளியும கொண்டது (மலை. 451,453). நன்னனின மூதூர் துனிதீர் காதலின இனிதமர்ந்துறைதற குரிய பல வண்டு இமிரும் குளிரநத நெடிய காவினை யுடையது (மலை. 485-487). துளுநாடு மயிலகள் பொருந்திய காவினையுடையது (அகம.15 5). வையை யின் மணல் மிக்க அகன்ற துறையைச் சார்நத மருதமர மோங்கிய விரிமலர்க காவில் தலைவன பரத்தையை வதுவை அயர்ந்தான (அகம. 36:9-12). ஊரும் சேரியும ஓராங்கு அலர் எழக காடும் காவும் தலைவனுடன செல்லத துணிநது தலைவி பலநாடும தேயமும் கடந்து சென்றாள் (அகம். 383:2-4). நல லெருது நடைவளம் குறையின் தொழில் செய்யாத படி உழவர் அதனைப் புலவுடைக் காவில விட்டொழிவர் (நற்.315:4,5). வெயிலொளி யறியாத விரிமலர்த் தண்காவிற குயில் கூவுங்காலம இள வேனில் (கலி. 30:7,8). மழைபோலும் கொடை யாளனின் (பாண்டியனின்) அசோக மரம் பொருநதிய தண்காவிலுள்ள மிகக அழகுடைய இளமாவின தளிர் போன்றவள் தலைவி (கலி. 57:12,13). பூங் கொத்து மிக்க தண்காவினைக குறியிடமாகக் கொண்டு தலைவி வந்தாள் (கலி. 89:16). வையைக கரை சூழ்ந்த காவிடத்துத் தலைவன் சென்றான (கலி. 92: 12, 13). காவில காற்றடிக்க ஒதுங்கி வளைந்து கொடியும் கொடியும் தம்மிற் பிணங் கின போல மகளிர் தம் அணிகள் ஆரவாரிபபத் தம்மில் மயங்கி வண்டுகளுககுக் கெட்டோடினர் (கலி. 92:51-54). நான்மாடக் கூடல் மகளிரும் மைந் தரும் தேனினும் ஒலிக்கும் காவில் விருப்பத்துடன கூடி விளையாட அணிகளை அணிவர் (கலி. 92:65-67). குறளனிடம் கூனி 'கோயிலுட் கண்டார் எள்ளி நகாமை வேணடுவல; காவின் கீழ்ப் போத ருக; புல்லுவேம்' என்று கூறினாள் (கலி. 94:39-41). முத்துமாலையினை அழகுற அணிந்து தன் பககல வரும் முருகனைத்தொழுது தேவசேனை 'ஐயனே

பிரிவால எம் போல் நிறங்கெட்ட மகளிர் திறம் இனி மழை பெயய உழக்கும் காவின் திறம் ஒப்ப தாகும்' என்றாள (பரி. 9:31-34). வையைப் புன லாடு மகளிா கனல் சுட்ட அகிலின் புகை காவின் கண எழ அதனால ஈரம் புலர்த்தித் தம் முலை முகட்டில கலவைக் குழம்பை மெழுகினர் (பரி. 10: 72,73). கா தனக்கு விருந்தளித்த இனிய வையைக்கு எதிர்விருந்து அயர்வதுபோல் சுரும்பு இமிர் தாதொடு நரந்தம் போலக் கமழும் நறுமலர் நன் களிக்கும் (பரி. 16·14-16). வையை வரவினகண் மணத்தையுடைய காவினும கயங்களினும் ஆற்றி டைக குறையினும் தேனையுண்டு வண்டுகள் பாடப் பூவினாகிய அழகு திசை தோறும் பொலிநதது (பரி. 16:17-19). செவ்வேள் குன்றத் தினகண சூர் நிறைந்த காவும நீர் நிறைந்த சுனை யும் தம்பால் நிரம்பிய மலர்களை உடைமையால் அவை அசசெவ்வேளின அம்புநிறை நாழி (அமபறாத் தூணி) ஒக்கும் (பரி. 18:30-33). நீராடும் விருப்புடன் மதுரையில உள்ள பலதிறத்து ஆடவரும் மகளிரும் குதிரை, யானை, கோவேறு கழுதையாகிய ஊர்தி களில் ஏறி வையைக் கரை நெரியும்படி வந்து காவினை நிறைத்தனர் (பரி. 22:21-25). நல்யாழில் பாலைக்கோவை இசைக்க அதனெதிரே காவிடத் துள்ள புகர்வரி வண்டினம் பூஞ்சினைக்கண் இமிர்ந்தது (பரி. 22:38,39). காஅ காண்க.

2. காவுத்தண்டு. பாணர் காவில் – காவுத்தண்டில் - கட்டிய, ஆடற்றுறைக்கு வேண்டுவன வெல்லாம் கூடின முட்டுக்களை யுடையவர் (பதி.41:5). இரண்டு தலைகளிலும உறியினையுடைய காககளைத் தோளி னில சுமநததால இடையனது தோட்கட்டு தழும் புடன் காணப்பட்டது (பெரு. 171,175). 'நலியும் காமமும் கௌவையும எனறு சொல்லப்படும் இரண்டு விழுமம் உயிரைக் காவாகக் கொணடு இரணடு புறமும் தொங்கி என்னை வருத்தும்' எனச் சானறோரிடம் நாணுவரை யிறந்த தலைவி கலங்கி மொழிநதாள் (கலி. 142:55-58).

3. நிறுத்தலளவு (100 பலம் கொணடது). ஆடுகோட் பாட்டுச சேரலாதன் தன்னை ஆறாம் பத்தாற் பாடிய காககைபாடினியார் நசசெள்ளையார்க்கு ஒனபது காபபொனனும் நூறாயிரம் காணமும் கொடுத்தான் (பதி. ப. 6. அடிக்குறிப்பு).

**காஅ** - சோலை. மறவர் பகைவர்நாட்டுக் காஅவி னில் - சோலையினில் - களிறுகளைக் கட்டியமை யால அவை நிலைகுலைந்தன (புறம் 345:1). கா-1. காணக.

**காஅய் கடவுட் சேஎய்** - முருகன். காஅய் கடவுட் சேய் - உலகை அழிக்கும் கடவுளாகிய சிவனின் மகன் - எனக் கடுவனிளவெயினனார் முருகனை விளிக்கின்றார் (பரி. 5:13).

**காக்கை** - 1. காகம். இடுகாட்டில் வாய்வலிய காக்கை யும் கோட்டானும் கூடிப் பேயினத்துடன் தாம் விரும்பிய வழியே இயங்கும் (புறம். 238:3-5). மயிலை யால் (இருவாட்சிப்பூவால) தொடுக்கப்பட்ட கண் ணிக்குக் கானக் காக்கையின் கலிச் சிறகு உவமை (புறம். 342:1,2). இடுகாட்டில் வாய்வன் காக்கை கூகையொடு கூடிப் பகற்பொழுதிலும் கூவும் (புறம். 362:16-18). முரசுறை கடவுளுககுப் பலியாக ஒச்சிய பிணடத்தை அச்சததால் பேய்மகளும் எறும்பு முதலியனவும் பெறாமல் இருப்பக் கருங்கண் காக்கையும் பருந்தும உண்டன (பதி. 30:34-39). மருதநிலத்தில் சிவந்த சோற்றை யுடையவாகிய பலியை விழுங்கின கரிய காக்கை அதனை வெறுத் தால் மனைநொச்சி நிழலில் உள்ள யாமையின் பார்ப்பைப் பசிதத காலத்துத தினனப் பாதுகாத்து வைக்கும் (பொரு. 182-186). தாழைமரத்தின தாழ் நத கிளையில் பெடையொடு தங்கும் கடற்சிறு காக்கை சுறாமீன இயங்கும் வேட்டையாடுதல் நீங்கிய இடத்திலுள்ள வெள்ளிய இறாமீனைப் பற்றி உண்பதாக நள்ளிரவில் கனாக்காணும் (அகம். 170:9-12). ஆறலைகள்வரால் மாய்ந்தோரின் வசிபடு புண்ணின் குருதி பருகிய காக்கை, ஒற்றுச் செல் மாக்களின் ஒடுங்கிய குரலவாய் மனையிடத்து வந்து தங்கும் (அகம். 313:13-16). மணிவாய்க் காக்கையின் மாநிறப் பெருங்கிளை, ஆலமரக் கிளையிலேறி மறவரின் அம்புபட்டு வீழ்நதோரின் பிணங்களைக் கவர்ந்துண்ணும் (அகம. 319:1-5). மேகம் போன்ற உருவினையும் நீலமணிபோலும் கண்ணினையும் உடைய காக்கை பிணங்களின பைந்நிணம் கவரும் சுரவழியே தலைவன பொருள் தேடச் செனறான் (அகம். 327:15-17). விருந்துவரக கரைந்த காககைக் குப் பலியாக நள்ளியின கானத்துள்ள ஆயர்தம் பசுக்கள் பயந்த நெய்யும் தொண்டியில் விளைந்த வெண்ணெற் சோறும் எழுகலத்திலிட்டுக் கொடுத் தாலும் சிறிதாகும் எனத் தோழி கூறினாள (குறு. 210). கடற்கரையிலுள்ள சிறுவெண்காக்கை நள்ளி ரவில் இரையின் பொருட்டுப் பசிய இலையைக் கலக்கி உப்பங்கழி நீரைத் துழவும் (குறு. 246:1-3). கடற்கரையிலுள்ள சிறுவெணகாக்கை வெள்ள மாகிய நீரையுடைய கரிய கழியிடத்து மீனாகிய இரையைத் தேடியுண்டு பூக்கமழ் சோலையில் தங் கும் (குறு. 313:1-3). சிறுவெண் காக்கையின் செவ் வாய்ப் பெருந்தொகுதி, அலைகளின் நீர்த்துளிகள் தம் ஈரமாகிய புறத்தை நனைப்ப அக்குளிரை

வெறுத்துக் கடற்கரைச் சோலையில் தங்கும் (குறு. 334:1-3). சிவந்த இறாமீனைப் பிடிக்கப் பாய்ந்த சிறுவெண்காக்கை பாயிரும் பனிக்கழி துழாவி யெடுத்துத் தான் விரும்பும் பெடையை அழைத்து அதற்கு அதனைக் கொடுக்கும் (நற். 31:2-4). மாசற விளங்கிய நீலமணி போன்ற நிறத்தையுடைய விசும்பில் கைதொழு மரபின் (முனிவரின் தோற்ற மாகிய) எழு மீன்களைப போலப் பெரிய கடற் பரப்பின கண்ணே இரும்புறம நனையும்படி சிறு வெண் காக்கை பலவும் ஒரு சேரக் குடைந்தாடும் (நற். 231:1-4). பொற்றொடி மகளிர் முற்றததிலே உகுத்த சோற்றைத தினறு பொழுதுபடும் அளவில் அகனற மீன் கடையில அசைகினற நிழலிலே குவி த்த பசிய இறாமீனைக் கவாந்துண்ட பசுங்கண் காக்கை ஆங்கு வினையின்றிக் காற்றாலசைகினற தோணியிலே பிணித்த பாயமரத்திற சென்று தங் கும் (நற். 258:5-9). மரத்தில் தங்கி மக்கள் இடும் பலியை யுணணும் காககை காற்றால் அசையும் கிளையில் மழைத்துளியுடனே தங்கிச சோழரது கழார் என்னும பதியில் இடப்படும் பலியாகிய ஊன்கலநத சோற்றை உணணக் கருதியிருக்கும் (நற். 281:1-6). கடவுள உறையும் ஆலமரததில் கடவுளுக்கு இடப்படும பலிச் சோற்றைத் தினற, சேர்நத விரலகளை யுடைய காககை மாலைப் பொழுதில் தம் சுற்றமிருககும் இடத்தை யடையும் (நற் 343:4-7). கழியின்கண வீழும் கண்டற்காய் மோதி ஆமபலின அரும்பு சாய்நது வெணமையாக மலர்தலுககுச் சிறுவெணகாககை ஆவித்தல (கொட் டாவி விடுதல) உவமை (நற். 345:1-5). பஞ்சுபோன்ற தலையையுடைய சிவநத இறாவின முடங்கலைச சிறுவெணகாககை பசும்பூண வழுதியின் மருங்கை யில நாளிரையாகப் பெறும் (நற். 358:8-10). வட்ட மாகிய கண்களையும் கூரிய வாயையுமுடைய காக் கைப் பேடை, நடுங்குகினற சிறகையுடைய தன் பிள்ளையைத் தழுவிக் கொணடு, சுற்றததை விளித் துக் கரிய கண்ணையுடைய கருணைக் கிழங்கின் பொரிக்கறியோடு சோற்றுத் திரளையைத தெய் வத்திற் கிடும் பலியுடன உண்ண மனையின் கண்ணே சூழ்நதிருககும (நற். 367:1-5). பெரிய கடற் கரைககணணதாகிய சிறுவெண காககை கருங் கோட்டுப் புனனை மரத்தில் தங்கும; இருங்கழி நீரில் நீந்தி இரைதேர்நதுண்டு பூக்கமழ சோலை யில் உறையும்; கருங்கழியின் எழும் துவலையொலி கேட்டுத் துஞ்சும்; இருங்கழிக்கண இருந்து அயிரை மீனை உண்ணும்; நீர் அற்ற கழியில வாழும் சிறு மீன்களை நிரம்ப உண்ணும்; வரிபொருந்திய வெள்ளிய பலகறைகளை வலையெனக் கருதி அஞ் சும்; கரியகழியிலுள்ள கெடிற்று மீனை அருநதும்; துறையிடத்துத் தங்கும் தோணியினகத்தே கூடு அமைத்து முட்டையிட்டு வாழும்; பொனபோலும் பூங்கொத்துக்களையுடைய ஞாழலை வெறுபபின் பொதியவிழ் புன்னையின் பூஞ்சினையில் தங்கும், இருஙகழி நெயதலைச சிதைக்கும் (ஐங். 161-170). அருஞ்சுர நெறியில் நிணத்தை யுணணும கருங்கண காக்கையுடன் கழுகு விசும்பின்கண அகவியது (ஐங. 314: 2,4). மறுவறற சிறகினை யுடைய சிறுகருங காக்கைக்குச் சுற்றத்தோடுணண ஊன சோறறைப் பொலங்கலததில தருவதாகக கூறித தாய உடன் போகிய தலைமகள . மீளுதறகுக கரையுமாறு அதனை வேணடுகிறாள (ஐங. 391).

**2. காத்தல்.** வையை நீராடடின்கண் தன தலைவனுக குரிய பரத்தையிடம சினநத தலைவியை மகளிர், 'புணர்ச்சி இனிமை மிககுடைய பரததையரிடததே செலவானைச செலலாமல காக்கை - காததல - மனையாளாற் கூடுமோ; கூடா' எனக கூறித தெருட்டினர் (பரி. 20:86,87).

**காக்கைபாடினியார் நச்செளளையார்** - பெணபாற புலவர செள்ளை எனற இயறபெயர் உடைய இவர், தம பெயருககு முனனும பின்னும் சிறபபுணாதநும இடைச் சொறகளைப் பெறறு, காககையைப பாடியவர் எனனும் பொருளையுடைய சிறபபுப பெயரொடும் சேர்நது காக்கைபாடினியார் நச செள்ளையார் எனறழைக்கப பெற்றார். பிரிந்த தலைவனின் மீட்சியை யெண்ணி வருந்தியிருநத தலைவிககு அவன வருகையைக கரைநது காட்டிய காக்கையைக் குறிதது இவர் பாடிய பாடல் குறுந்தொகையில (210) சேர்க்கப்பட்டுள ளது. இவர் பாடியனவாக இககுறுநதொகைப பாடல ஒனறும் புறநானூறறுப பாடல ஒனறும் (278) பதிற்றுப்பததில ஆறாம பததும் (51-60) ஆகப் பன்னிரு பாடல்கள உள்ளன. மறககுடி முதுமகளின உவகைக் கலுழசசியாக இவர் பாடி யுள்ள புறப்பாடல் பொருட்சிறபபு மிககது. தன மகன் போரில் புறங்காட்டினனாகப பலரும கூறக் கேட்ட தாய், 'அவவாறு புறங்காட்டினனாயின அவன் பாலுண்ட என முலையை அறுததிடு வேன்' எனச சினநது கையில வாளோடு சென்று 'செங்களந்துழவுவோள சிதைந்து வேறாகிய, படு மகன் கிடககை காணூஉ, ஈனற ஞான்றினும பெரிதுவந்தனளே' என இவர் அபபாடலை முடித் துள்ளார். ஆடுகோட்பாட்டுச் சேரலாதனை இவர் பாடிய பத்துப் பாடல்களுககுப பரிசிலாக அணி கலன் அணிக என அவன் கொடுத்த ஒனபது கா

(துலாம்) பொன்னும் நூறாயிரம் காணமும் (பொற் காசும்) பெற்று அவனது அவைக்களத்திலும் பொறுப்பேற்று அமர்ந்தார் (பதி. ப. 6). அடும்பமல் அடைகரையில் அலவன் ஆடிய வடுவை ஊதைக் காற்று நுண்மணல் கொண்டு மறைப்பதைப் பட் டாங்கு புனைந்துள்ளார் (பதி. 51:7,8). சேரலாதனது கொடை யியல்பை, 'வாராராயினும் இரவலர் வேண்டித் தேரின் தந்து அவர்க்கு ஆர்பதம் நல்கு வான்' (பதி. 55.10,11) என்றும் 'ஒண்ணுதல் மகளிர் துனித்த கண்ணினும் இரவலர் புன்கண் அஞ்சு வான்' (பதி. 57.13,14) என்றும் புலப்படுத்துவர். அவன் வீரத்தைச் செருக்களத்தில் கூற்றம் வலை விரித்தன்ன நோக்க முடையான் எனக் கூறிச் சிறப்பிப்பர் (பதி. 51 35-37). இன்பத் துறையில் மெல்லியனாய் அவன் ஈடுபட்ட காலங்களில் இப் புலவர் குறிப்பாக அறிவுறுத்திப் பாடிய பகுதி (பதி. 51.19-24) நயமிக்கது. நள்ளியின் கானத்து நெய்ச்சிறப்பையும் தொண்டிப் பட்டினத்து நெற் சிறப்பையும் இவர் விதந்து கூறியுள்ளார் (குறு. 210).

**காசிபன் கீரனார் -** புலவர். காசிப கோத்திரத்து அந் தணராகிய இவரது இயற்பெயர் கீரன் என்பதாம். இக்கீரனார் பாடியதாக நற்றிணையில் 248-ஆம் பாட லொன்றே காணப்படுகின்றது. முல்லைத் திணைப் பாடலாகிய அது பருவங்கண்டு ஆற்றா ளாகிய தலைமகளைத் தோழி மழைமேல் வைத்துப் பருவம் மறுத்ததாக அமைந்துள்ளது. பிரிவினா லாகிய பெருந்துயர் பொருந்திய தலைவியின் உள்ளம் நடுங்குவதைக் காணும் பொருட்டு அவளி டத்து அன்பிலலாமையால் முகில் பொய்யிடி பயிற்று வதாகவும் அதனை மெய்யிடியென மருண்டு மயி லின் மடக்கணம் தோகை விரித்தாடுவதாகவும் கூறு கின்ற தோழி, கார்ப்பருவத்தைக் குறித்துப் பிரிந்த தலைவன் மீளாதது கொண்டு தான் அப்பருவத் திற்கு மருளாமை கூறித் தலைவியை ஆற்றுவிக்கும் முறையில் அப்பாடலை இவர் பாடியுள்ளார். புதர்களிலெல்லாம் யானையின் புகர்முகம் போல் முல்லை அழகுற மலருமாறு கார்ப்பருவம் வருத லையும் இவரது பாடல் புனைகின்றது.

**காசு - 1.** பொன் முதலியவற்றால் செய்யப் பெற்ற காசு. பலகாசுகள் கோத்தமைந்தது சிலகாழ் (ஏழு வடம் கொண்ட மேகலை) (முரு. 16). வேனிற் காலத்தே உகாஅ மரக் கிளையினின்று அழகிய காசு போன்ற அதன் கனி உதிரும் (அகம். 293:7-9). மேற்காற்று வீசுதலினால் உதிர்ந்த நெல்லிக் காய்கள் நூலற்று உதிர்ந்த துளையுடைய பளிங்குக் காசுகளை ஒப்ப வறுநிலத்தில் வீழ்ந்தன (அகம். 315:10-13). நெல்லிப பசுங்காய் கடுவளியுதிர்த்தலால் கல்லதர் மருங்கில் பொலஞ்செய காசுபோல அழகுறப் பரவிக் கிடக் கும் (அகம். 363. 6-8). கிளி வளைந்த வாயிற் கொண்ட வேப்பம் பழம் பொற்கொல்லன் கூரிய கைநநகத்திற கொண்ட பொலங்கலத்திற் குரிய ஒரு காசை ஒக்கும் (குறு. 67:1-4). தவளை வாயைப் போன்ற வாயினையுடைய பொன்னாற் செய்யப் பெற்ற செல்வச் சிறாரின் சீறடிப் பொலிந்த கிண கிணிக் காசு போன்று கொன்றையின் பேரரும்பு விளங்கும் (குறு. 148:1-3). உகாய் மரத்தின் கனி காசு போன்ற தோற்றமுடையது (குறு. 274' 1,2). குமிழ மரத்தை மான் உராயதலால் வீழ்ந்த அதன் பழங்கள் இழையணிந்த மகளின் பொன்னாற் செய்த காசினைப் பரப்பினாற் போன்று காட்சி யளித்தன (நற். 274: 3-5). கைதொழிலாலே பொலிவு பெற்ற காசு இடையிடையே அமைந்த பொன்மணிகளையுடைய வடம் அலகுலின் மேல் அணியப் பெற்றது (கலி. 85:3,4).

**2. அணிகலன்** (ஆகுபெயர்). குற்றமற்ற பொற்கொல் லன் பழுதறச் செய்த பொலஞ்செய பலகாசு (மேகலை) அணிந்த அல்குலை யுடையவள் தலைவி (புறம். 353: 1, 2). தலைவி பல்காசுகளா லாய மேகலையணிந்த கோடேந்து அலகுலையுடையவள் (அகம். 75:10,20, 269:15). உடன்போக்கில் சென்ற தன் மகள் காஞ்சி யணிந்த அலகுலின் மேல் தொங்குகின்ற காசு முறை பிறழ்ந்து கிடந்தாலும் அதனைத் திருத்த அறியாள் எனத் தாய் கவன்றாள் (நற். 66: 9-11). பொன்னாலான பாண்டிற்காசு கொண்டு செய்யப் பெற்ற அணி பொருந்திய அல் குலையுடையவள் தலைவி (ஐங். 310:1).

**3** குற்றம். புலன் அமைந்த காசு - குற்றம் - அற்ற செய்யுள் பாடும் பரணர் கடலபிறக்கோட்டிய செங்குட்டுவனைப் பத்துப் பாட்டாற் பாடினார் (பதி. ப. 5. அடிக்குறிப்பு).

**காஞ்சி - 1.** மரம் நீரின்கண்ணே யுறத்தாழ்ந்த குறிய காஞ்சியின் பூவை வாளைமீனம் சுவரும் (புறம். 18: 7,8). காஞ்சியின் தளிருடனே ஆததிப் பூவையும் விரவிக் கண்ணி தொடுக்கப் பெற்றது (புறம். 344:8). பொய்கை மேய்ந்த செவ்வரி நாரை தேன் பொருந்திய பூவினையுடைய மருதக் கிளையில் தங்குதலை வெறுப்பின், காஞ்சி மரத்தில் உறங்கும் (புறம். 351: 9-11). மணல்மலி பெருந்துறைக்கண் விளையாட்டு மகளிர் பலரும் தளிரும முறியும் தாதும் பூவும் பறித்தலால் சிதைவுபட்டுக் கிடக்கின்ற காஞ்சியும் செம்முருக்கையும் நிறைந்

திருந்தன (பதி. 23:19, 20). உழவர் வளமுடைய செறுவின்கண் விளைந்த கதிரினின்று உதிர்ந்த, களத்தில் தூற்றப்படாத நெல்மணியின் குவிய 'லைக் காஞ்சி மரத்தினடியில் தொகுத்தனர் (பதி. 62:14-16). வளைவை யுடைய காஞ்சியிலும் செவ்விய மருத மரத்திலும் ஏறி இளைய மயில் கள் ஆரவாரித்தன (பொரு. 189, 190). நாட் காலத்தே மாலை கட்டினாற்போல இடையறா மற் றொடுத்த நறிய பூக்களைக் கொண்ட குறிய தாளினையுடைய காஞ்சியின் கிளையிலேறிச் சிரல் குட்டத்திலிருந்த கயலை எடுத்தது (சிறு. 178-181). பொதும்பரிலுள்ள குறுங்காற் காஞ்சியில் குருக் கத்தி படர்ந்தது (பெரு. 374-376). தலைவியும் தோழி யும் பறித்த குறிஞ்சி நிலப் பூக்களுள் காஞ்சிப்பூவும் ஒன்றாம் (குறி. 84). புற்கென்ற அரையினை யுடையது காஞ்சி (மலை. 449). பொழில்தொறும் காஞ்சியின் பைந்தாது கொண்ட பூக்கள் மிக உதிர்ந்துள்ள எக்கர் புதியமணம் வீசியது (அகம். 25: 3-5). காஞ்சி நுண்தாது கருங்கோட்டெருமையின் ஈர்ம் புறத்துச் சிந்தியது (அகம். 56:3,6). தலைவன் கழனியம் படப்பைக் காஞ்சி ஊரன் (அகம். 96:8; குறு. 127:3). வயற் காவலர் புனிற்றுக் கதிரை மூதா தின்றல் அஞ்சி, பாகற் கொடி பகனறைக் கொடி களால் அதனைக் காஞ்சிமரததிடத்துப் பிணிப்பர் (அகம். 156:3-6). தலைவன தான் விரும்பிய பரத்தை யுடன், பூக்கள் நிறைந்த குளிர்ந்த காஞ்சிப் பொழில் சூழ்ந்த அகன்ற ஆற்றின்கண்ணே நேற்று நீராடி னான் என அலர் எழுந்தது (அகம் .246:5-7). ஊர்க் குறு மகளிர் காஞ்சி நிழலில் கருப்புலக்கையால் வெண்மணற் குவித்துத தமர் வளம் பாடிக் குற்று வர் (அகம. 286:1-5). மாயோள் மாலை போன்ற பூங் கொத்துக்களையும் குறுங்காலையும் உடைய காஞ் சியின் போதவிழ் நறுந்தாது அணிந்த கூந்தலை யுடையவள் (அகம். 296:1-3). மகளிர் மகிழ்நன் பரததைமை பாடி அவிழ் இணர்க்காஞ்சி நிழலில் குரவை அயர்வர் (அகம். 336:6-9.) அறுகம்புல மேய்ந்த ஏறு நீர் பருகிக் குறுங்காற் காஞ்சியின் மாலைபோன்ற மெல்லிய இணரிலிருந்து உதிரும் நுண்தாது உறைப்ப மணல்மேட்டில உறங்கும் (அகம். 341:6-11). உழவர் காஞ்சிக் குறுந்தறி நட்டுக் கரும்பின் நல்லகழிகளைக் குறுக்கே வைத்து மிடைந்து அணை கட்டிப் பள்ளத்தில் நீரைத் தேக்குவர் (அகம். 346:5-8). காஞ்சிப் பூங்கொத்தி லுள்ள பைந்தாது தம்மேல் படும்படி உழவர் அதன் கமழ் மென்சினைகளை வளைத்தனர் (குறு. 10:2-4). அரும்புகளையுடைய காஞ்சி (ஐங். 1:4). மிஞிறுகள் ஆரவாரிக்கும் காஞ்சிமலர் மீனேற றுக்கொடியோன் (காமன்) போன்ற நிறமுடையது (கலி. 26:3). காஞ்சித் தாது ஆடி இருங்குயில் கூவின (கலி. 34:8). மகளிர் கொய்யுநதழை தளிர்க்கின்ற காஞ்சித் துறையணிந்த நல்ல ஊரையுடையவன் தலைவன் (கலி. 74:5). மன்றம் காஞ்சித்தாது உதிர்ந்தன போன்ற தாதாகிய எருவையுடையது (கலி. 108:60). 'எம்முடைய படப்பையில உள்ள காஞ்சிக்கீழ்க் குறியிடம் செயதோம்; நீயும் ஆம்பற் குழலால் குறி செய்து வருவாயாக' எனத் தலைவி தலைவனுக்குக் கூறினாள் (கலி. 108:62,63).

**2. நிலையாமை.** போர்வலிமையுடைய முன்னோர் செல்லவும் தான் செல்லாது இருப்பதாகக் கூறி நில மகள் புலம்புவதை 'நிலமகள் அழுத காஞ்சி' - நிலையாமை - என்று கூறுவர் எனபர் மார்ககண் டேயனார் (புறம். 365:8-10). செல்வக் கடுங்கோ வாழியாதன, தம்மொடு மாறுபட்ட பகைவரது வீரம் கெடும்படி வஞ்சியாது எதிர்நின்று வென்ற வரும் தம் நெஞ்சில் காஞ்சி நிலைபெறறவருமா கிய வீரரின தலைவனாவான (பதி. 65:3,4). இளஞ் சேரலிரும்பொறையின் வீரர் குழாம் காஞ்சி தம் நெஞ்சில் அமைந்த போர் பல செய்தது (பதி. 84: 19). இளஞ்சேரலிரும்பொறை வேலெறிந்து பகை வர்க்குத் துன்பம் செய்தலை விரும்பும் நீங்காத ஆண்மையுடைய காஞ்சி தம் நெஞ்சிலே மிகக வீரர்க்குத் தலைவன் (பதி. 90.37-39).

**3. காஞ்சிப்பண்.** நெடுந்தகையின் புண்ணைப் பேய தொடாமல் காக்க, அவன் மனைவி இசைமணி எறிந்து காஞ்சி - காஞ்சிப்பண் - பாடினாள் (புறம். 281:5). போருக்குச் சென்று புண்பட்டு மீண்ட வீர ரின் இல்லம் வேம்பின் சினையொடிக்கவும் காஞ்சி பாடவும் நெய்யுடைக் கையராய் ஐயவி புகைப் பவும் ஆரவாரமாயிருந்தது (புறம். 296:1-3).

**4. ஆறு** (நொய்யலாறு). மக்களின தொகுதி ஆடு கின்ற இனிய புனலையுடைய காஞ்சி எனனும் ஆற்றின் அழகிய பெரிய துறையிடத்தே உளள மணலைக் காட்டிலும பலகாலம வாழுமாறு கடல் பிறக்கோட்டிய செங்குட்டுவனைப் பரணர் வாழத் தினார் (பதி. 48:17,18).

**5. அணிவகை** (எண்வடமாய் ஆடையின் மேலணியும் அணி கலன்). வையையாற்று வெள்ளம் நீராட வந்தோ ரின் ஆடை, மேகலை, காஞ்சி - அணிவகை – வாகு வலயம் முதலிய பொருள்களைக் கவர்ந்து சென றது (பரி. 7:46-50).

**காஞ்சிப்புலவனார் - புலவர்.** மாங்குடி மருதனார் காண்க.

**காட்சி - 1.** அறிவு. சீறூரில் வாழும் கல்வியில்லாத காட்சியை - அறிவை - உடைய வில்லுழுதுண்பவர் வேட்டையாடிக் காலங் கழித்தனர் (புறம். 170: 2-4). கோப்பெருஞ்சோழனிடம் அமர் விரும்பிய காட்சியுடன் மாறு கொண்டு எழுந்தவர் வலிமை கொண்ட பகைவரல்லர்; அவன் மக்களேயாவர் (புறம். 213:4-6). கோப்பெருஞ் சோழனின் மக்கள் சூழ்ச்சியில்லாத காட்சியையுடைய இளையோராவர் (புறம். 213:15). அழுக்குச் செறிந்த காட்சி நீங்காத உள்ளத்தை உடைய தெளிவில்லாதவர் நல்வினையைச் செய்வேமோ அல்லேமோ என்று கருதி ஐயம் நீங்கார் (புறம். 214:1-3). திருவாவிநன்குடி உறையும் முருகனைக் காண ஒருவருடனும் வெறுப்பில்லாத நல்ல காட்சியையுடைய முனிவர் முன்னே சென்றனர் (முரு. 137). நால்வேறு இயற்கையினையுடைய பதினொரு மூவரும் (முப்பத்து மூன்று தேவரும்) ஒருபொருள் பலவாமாறு பகுத்துக் காண்டற்கண் வேறுபடத் தோன்றும் தம்முள் மாறுபாடில்லாத காட்சியினர் (முரு. 166). தொண்டைமான் இளந்திரையன் நடுவு நிலையை ஆராய்ந்தறியும் இருள் தீர்ந்த காட்சியையுடையவன் (பெரு. 445). சால்பும் வியப்பும் குன்றின் அதனால் உண்டாய அழுக்கைப் போக்கிப் புகழை முன்பு போல் நிலைநிறுத்துதல் ஆசறு காட்சி ஐயர்க்கும் எளிதன்றாம் என்பர் சான்றோர் (குறி. 15-18). வழி வந்த வருத்தத்தைக் கைவிட்டுக் காட்சியுடனும் பேரணிகலங்களைப் பெறும் சிறப்புடனும் இருந்தவன் கூத்தர்சுற்றத் தலைவன் (மலை. 49,50). தலைவியும் தோழியும ஒருவர் செய்வது நெறியன்று என்று மற்றவர் எண்ணாத வேற்றுமையற்ற காட்சியை உடையவர் (அகம். 73:8-10). அருள் அன்றாக, ஆள்வினையே யாகுமெனப் பொருள்தேடத் துணிந்த பொருளல் காட்சியினை உடைய ஆடவர் துஞ்சல் செல்லாது கல்நெறிப்படர்குவர் (அகம். 75:1-3). மறவர், குறித்த இலக்குத் தப்புவதாயின் அம்பினைத் தொடுத்த கைவிரலை வாயாற் கவ்விக் கொள்ளும் கல்லாக் காட்சியினர் (அகம். 215:7-10). நன்மையை விரும்பும் காட்சியினையுடைய தலைவர் உயிரினும் சிறநத ஒண் பொருள் தருதற்குப் பிரிந்தனர் (அகம். 245:1,2). 'தலைவர் குறித்துச் சென்ற அற்சிரப் போழ்தின்கண் நினையாராயினும் பெருமையுடன் விளங்குதற்கேதுவாகிய அவர் காட்சிதானும் நின் மாமைக் கவினை மறக்கவிடாது' எனத் தோழி தலைவியைத் தேற்றினாள் (ஐங். 470). துகளறுகின்ற காட்சியினையுடைய அவையத்தார் ஓலையின் தலையைக் கட்டி அதன் தலையில் அரக்கிலச்சினை இடுவர் (கலி. 94:42,43). அருளற்ற காட்சியுடையான் அறம் செய்தல் இருமைக்கும் பயன்தரும் என்று கருதானாய், நன்மை செய்யானாய்த் தனக்குள்ள நாளைப் பயன்படாமற் செய்பவன் நெஞ்சு இருண்டிருக்கும் (கலி. 120:1-3). 'புகரறு காட்சியை அளிக்கும் புலமும் (வேதமும்) பூவனும் (நான்முகனும்) அவனால் செய்யப் பெறும் படைப்பும் திருமாலே' (பரி. 1:45,46).

**2.** காணுதல். 'இப்பிறப்பின்கண் நீயும் நானும் கூடி இன்புற்றிருந்தவாறு போலக் காட்டி, மறு பிறப்பினும் இடைவிடாத காட்சி – காணுதல் - உடைய நின்னொடு கூடி வாழதலை உயாந்த பால் (விதி) கூட்டுவதாக' என வடக்கிருந்த கபிலர் பாரியை எண்ணிக் கூறினார் (புறம். 236:10–12). கிணைமகள் குப்பை வேளைக்கீரை உப்பின்றி வெந்ததை மடவோர் காட்சி நாணிக் கடைஅடைத்து ஒக்கலொடு உண்டாள் (சிறு. 136-139). 'குறித்த பருவத்துத் தலைவன் வாராமையால் தோள் வாட்டம் அடைந்தன; நீண்ட சுர நெறியை நோக்கி நோககி ஒளியற்று என் கண்களும் காட்சிக்குரிய பொலிவழிந்தன' எனத் தலைவி வருந்தினாள் (நற். 397: 1–3). 'முது பார்ப்பானின் வீழ்க்கைப் பெருங்கருங்கூத்து, நம்மைக் குறியிடத்து வந்து காணும் காதலன் காட்சி கெடும்படியாக நமக்கு வருத்தமாய் விளைந்தது' எனத் தோழி சிறைப்புறத் தலைவன் கேட்குமாறு தலைவிக்கு உரைத்தாள் (கலி. 65:25–29).

**3.** அழகு. தெய்வம் தன்னிடத்தே நின்ற இலக்கணம் பொருந்தி வரும் காட்சி – அழகு - உடையது யாழ் (பொரு. 20). செறுநரும் விழையும் செயிர்தீர் காட்சியையுடைய சிறுவரைப் பெற்ற செம்மலோர் இம்மையுலகத்து இசையொடு விளங்கி மறுமை உலக இன்பமும் எய்துவர் (அகம். 66: 1 – 6). தேனை உண்ணும் வேட்கையாலே நறுமல ரின்ன தென ஆராயாது யாண்டும் போய் வீழுகின்ற வண்டின் தன்மையை யொத்த தலைவனது தண்டாக் காட்சியைக் கண்டும் கழன்ற தொடியை மீண்டு செறித்த எனது பண்பில்லாத செய்கையை நினைக்கின்றது என்னுள்ளம் எனத்தோழி தலைவியைக் குறைநயப்புக் கூறினாள் (நற். 25: 9-12). தலைவி புனைசுவரில் வரையப் பெற்ற பாவை போனற குற்றம் தீர்ந்த காட்சியள் (நற். 252:6,7).

**4.** தோற்றம். மன்பதை காக்கும் நின் உயர்ச்சியைப் பாராது காதல் கண்மாறிய, அறமில்லாத காட்சியொடு – தோற்றத்தொடு - நும்போல்வாரும் அருள் மாறுவாராயின் எம்போல்வர் இவண் பிறவாதொழியக்கடவர்' எனப் பரிசில் நீட்டித்த

குடக்கோச் சேரல் இரும்பொறையிடம் பெருங் குன்றூர்கிழார் கூறினார் (புறம். 210:1-4).

**5.** நூல். யாற்றுநீர் வழியே போம் மிதவைபோல அரியவுயிர் ஊழின்வழியே படுமென்பது திறவோர் காட்சியால் - நூலால் - தெளிந்தனம் என்பது கணியன் பூங்குன்றன் கூற்று (புறம். 192:8-11).

**காட்டகம் - காட்டிடம்.** மரத்தைத் துணிக்கும் தச்சன் பயந்த மழுவையுடைய கைத் தொழிலில் வல்ல மகாஅர் காட்டகம் - காட்டிடம் - செலலின் அக் காடு அவர்க்குத் தவறாமற் பயன்படும் (புறம். 206: 11, 12). ஆரிருள் பெருகியமையாலும் கோட் டுமா வழங்குவதாலும் காட்டக நெறியில் வாரற்க என்று தலைவனிடம் தோழி வேண்டினாள் (ஐங். 282: 4,5). கரிகாய்ந்த கவர்த்த வழிகளையுடைய கல்காய்ந்த காட்டகத்தின் வழியே தலைவன பொருள்தேடச் சென்றான் (கலி. 150:11,12).

**காட்டாறு - காட்டுவழி.** தலைவன் செய்வினை முடித்த செம்மல் உள்ளமொடு இளையர் பக்கம் போற்றத் தேரேறி ஈர்மணல் காட்டாறு - காட்டு வழியே - வருவான் (குறு. 275:5-7).

**காட்டு - செத்தை.** வெற்றி பெற்ற வேந்தனொருவன் காட்டொடு - செத்தைகளால் - மிடையப் பெற்ற சீயா முன்றிலில் விடியற்காலத்திலே உண்ட கள் மயக்கத்தால் உறங்கினான் (புறம். 316:2-4).

**காட்டுமா - காட்டு விலங்கு.** தொண்டைமானிளந் திரையன் ஆட்சிக்குட்பட்ட நிலத்து உருமேறும் இடியாது; பாம்புகளும் கொல்லுதலைச் செய்யா; காட்டுமாவும் - காட்டு விலங்கும் - வருத்தம் செய்யா (பெரு. 41-43). காட்டுமான் காண்க.

**காட்டுமான் - காட்டு விலங்கு.** 'என்நோய் முருகனால் வந்ததென்று கூறும் வேலனிடம் நும் இறைவ னாய முருகவேள் ஊன் பொருந்திய அம்பினுடன் காட்டுமான் - காட்டு விலங்கு - சென்ற வழி ஒற்றி வேட்டம் செல்லுமோ என வினவின என்னா கும்' எனச் சிறைப்புறத் தலைவன் கேட்குமாறு தலைமகள் தோழியிடம் கூறினாள் (அகம. 388: 19-26). காட்டுமா காண்க.

**காட்டுநாடு - காட்டினகத்துள்ள குடிவாழ்பகுதி.** கண்டீ ரக்கோப்பெருநள்ளி வன்பரணரிடம் 'யாம் காட்டு நாட்டேம் ஆதலின் பெறுதற்கரிய வீறுசால் நன் கலம் எம்மிடம் இல்லை' என்று கூறி மார்பிற் பூண்ட வயங்கு காழாரத்தை முன்கைக் கடகமொடு அவர்க்கு ஈந்தான் (புறம். 150:18-21). தலைவியின ஊர், வன்புலக் காட்டு நாட்டில் உள்ளது (அகம். 94:12-14). தலைவியின் ஊர், உடும்பைப் பிடித்து நுணலை அகழ்ந்து ஈயல் கெண்டி முயலெறிந்த வேட்டுவன் வேட்டையாற் பெற்ற பண்டங்களை யும் கருவிகளையும் இல்லத்திலே விடுத்து இரும டைக் கள்ளின் இன்களி செருக்கும் வன்புலக காட்டு நாட்டிலுள்ளது (நற். 59.1-8).

**காட்டூர் கிழார் மகனார் கண்ணனார் - புலவர்.** காட்டூர எனும் ஊரால் பெயர் பெற்ற வேளாளர் ஒரு வர்க்கு மகனாரான கண்ணனார் என இவரது பெயர் விளககம் பெறும். இவர் பாடியதாக அக நானூறு 85-ஆம் பாடல் ஒனறே உள்ளது. தலை வனின் பிரிவாற்றாத தலைவியைத தோழி பருவங காட்டி ஆற்றுவிககும முறையில அப்பாடலைப பாடியுள்ளார். திரையன் எனபானுககுரிய வேங கட மலையில் ஈன்றணிமை கழிநத மெனனடை மடபபிடிககும் அதன் கன்றிற்கும முறறாத மூஙகில முளையினைக் கொணர்நது ஊட்டும களிறறின அன்புச் செயலை அழகுறப புனைநதுளளார். கார்ப பருவத்தில வேங்கைப பூவின தாதினை யாடிய மயில் குருந்த மரக் கிளையிலிருநது துணையை யழைபபதையும் இவர் பாடல குறிபபிடுகிறது.

**காடி - 1. ஊறுகறி.** (ஊற வைத்த புளியங்காய நெல லிக்காய் முதலியவற்றா லாய) காடியை - ஊறுக றியை - உடைய மிடாவைப் பாரில வைததுக் கயிற றால் வரிந்து கட்டி உமணர் சகடத்தைச் செலுததி னர் (பெரு. 56,57). பெருமபாணன மறைகாபபாள ரின உறைபதி சேரின சிறநத உணவுடன மாவினது பசிய வடுவினைப பலவாக இட்ட காடியும் பெறு வான் எனறு ஆற்றுப்படுத்தப பெறுகிறான (பெரு. 308, 310). மோருககு மாறாக மாஙகாயை நறிய காடியாகக கூட்டி ஆயர் உணபர் (கலி. 109 23).

**2. கழுத்து.** கரிகாற்பெருவளத்தான வேணட, முனை முரியாத அரிசிச் சோற்றையும் விததுககளைப பொரித்துச் செய்த பொரிககறிகளையும காடி - கழுத்து - இடத்தே வநது நிரமபுமாறு பொருநர் உண்டனர் (பொரு. 112-116). கயிறறாலே வரிநத மிடாவைச் சகடததிலுள்ள பாரின காடியில வைத துக் கட்டி உமணர் அதனைச் செலுத்தினர் (பெரு. 56,57).

**3. புளித்தநீர்.** அடுகினற மகள உலக்கையால் குற் றிய வெண்ணெல் அரிசியைக் கொண்டு காடி - புளித்தநீர் - வெள்ளுலையில் சோறு சமைத்தாள் (புறம். 399:1-3).

**4. நெய்.** காடி - நெய் - வைத்த மிடாவைப் பாரின தலையில் வரிந்து கட்டி உமணர் சகடத்தைச்

செலுத்தினர் (காடி நெய் பெய்பளருமுனர் என நச்சினார்க்கினியர் உரைப்பர்) (பெரு. 56,57).

5. கஞ்சி. கட்டிற் படுக்கை மேம்பட அன்னச் சேவலின தூய நிறத்தையுடைய சூட்டாகிய மயிரைப் பரப்பி அணையிட்டு அதனமீது காடி - கஞ்சி - இட்ட வெளுத்த ஆடை விரிக்கப்பட்டது (நெடு. 131-135).

காடு - கானகம். கரும்பல்லது பிற காடு - கானகம் - அறியாத மருதநிலம் பாழாகப் பகைவர் நாட்டை இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளி எரியூட்டினான் (புறம். 16:15 17). யானைக்கட் சேய்மாந்தரஞ் சேரலிரும்பொறையைக் குன்றும் மலையும் காடும் நாடும் என இவற்றை யுடையோர் ஒரு பெற்றிப் பட்டு வழிமொழிந்தனர் (புறம். 17:3,4). தலையாலங் கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனால் அழிக்கப் பெற்ற அவன் பகைவர் நாடு கலைமான் புலிப் பாற் பட்டெனப் பிணைமான் சிறுமறியைத் தழுவிக் கொண்டு வேளை வெண்பூவைக் கறிக்கும் ஆளில்லாத அருஞ்சுரத்தையுடைய காடு ஆயிற்று (புறம். 23:18-22). சோழன் நலங்கிள்ளியின் மறவர் பொருதற்குக் காடிடைக் கிடந்த நாடு தொலைவிலுள்ளதாதலின் செல்லேம் எனக் கூறார் (புறம். 31:9-11). கூடகாரத்துத் துஞ்சிய மாறன் வழுதியின் பகைவர் நாடு வருவாயிழந்து கடவுள் கந்து விட்டு நீங்கிப் பலிகண் மாறிய பாழ்படு பொதியில் நரை மூதாளர் நாய் (சூதாடுங்கருவி) இடுதலாற் குழிந்த இடத்தில் கானவாரணம் முட்டையிடும் காடாகி அழிந்தது (புறம். 52:11-17). களிறு மிகவுடைய கவின் பெறு காடுகளைப் பார்த்த ஏணிச்சேரி முடமோசியார், இவை ஆய்அண்டிரனின் குன்றைப் பாடிப் பரிசு பெற்றனவோ என அவன் யானைக் கொடையை வியந்து பாராட்டுவர் (புறம். 131:2-4). தம்பியால் நாடு கொள்ளப்பட்டுக் காடு பற்றியிருந்த குமணனைப் பெருந்தலைச் சாத்தனார் பாடினார் (புறம். 164,165. அடிக்குறிப்பு). சோணாட்டுப் பூஞ்சாற்றுப் பார்ப்பான் கௌணியன் விண்ணநதாயன் காடு, நாடு என்னும் இரண்டிடத்தும் ஈரேழு பசுக்களான் வேள்வி பல செய்தான் (புறம். 166.19-22). நாடாயினும் காடாயினும் மேடாயினும் பள்ளமாயினும் அவ்விடத்து வாழும் ஆடவா தன்மை கொணடு நிலத்தின் தன்மை சுட்டப் பெறும் (புறம. 187). வெட்சிவீரன் தனக்கு அரணாகக் காட்டையும் கைககொள்ளாமல் எதிர்த்த கரநதையாரை வெனறு ஆனிரை கவர்ந்து வந்தான் (புறம். 257:6-10). நிரைகவர்ந்து செனற வெட்சி மறவர் ஆனிரைபின செல்லாது இலைபுதை பெருங் காட்டுத் தலைகரந்திருத்தலால் அவரை வென்று செல்க எனக் கரந்தை மறவன் அறிவுறுத்தப் பெறுகிறான (புறம். 259:1-4). இமையவரம்பன் நெடுஞ் சேரலாதனின் ஆளுகைக்குட்பட்ட காடுகள் கடவுள் (முனிவர்) உறையும் இடமாயின (பதி. 13:20). பல்யானைச் செல்கெழுகுட்டுவனின் மைந்துமலி பெரும்புகழ் அறியாது எதிர்ந்த பகைவர் தோற்று ஓடுதலால் அவர் நாடு நடமாட்டமறறுப் பெருங்கவின் அழிந்த வழிகளை யுடையவாய் ஏறு புணர்ந்து அண்ணல் மரையா அமர்ந்தினிதுறையும் காடாயிற்று (பதி. 23:10-15,25). பல்யானைச் செல்கெழு குட்டுவனின் வயவர் சீறியதால் அவன் பகைவர் நாடு முன்பிருந்த வளங்கெட்டுப் பீர்க்குப் படர்ந்த வேலியையுடைய பாழ்மனை நெருஞ்சி முட்கள் காடுபோல் செறிநத வழிகளையுடையதாயிற்று (பதி. 26:10-14). பலபூஞ் செம்மற் காடு பயன் மாறிச் செவ்வரக்குப் போன்ற நுண்ணிய மணல் பொருந்திய கோடு கொண்டு காட்சியளித்தது (பதி. 30:26,27). கடலிலும் காட்டிலும் அரண்களைப் பெற்றிருக்கும் பகைவர் பல்யானைச் செல்கெழு குட்டுவனின் போர் முழக்கங் கேட்டு அவ்வரண்களால் நன்மை பெறாராய் நடுங்குவர் (பதி: 30:31,44). தன் புரோகிதராகிய நெடும்பாரதாயனார் தனக்கு முனனே துறந்து காடுபோக அது கண்டு பல்யானைச் செல் கெழு குட்டுவனும் துறவுள்ளம் பிறந்து (காடு) சென்றான் (பதி. ப. 3:10,11). காட்டின்கண் தோன்றியதும் நாட்டில் உள்ளோரெல்லாம் காணத்தக்கதுமாகிய சுடரைப் போன்ற சினத்தை யானை கைவிட்டது (பதி. 40:29-31). இசையில் வல்ல இளைஞர் யாழ் வாசித்துக் கடவுளர்ப் பரவ, வயக்களிறு அதனைப் புலிக் குரலாகக் கருதிப் பூத்த வேங்கை மரத்தின் பெருஞ்சினையை வளைத்துப் பிளந்து தன சென்னியில மிலைச்சிச் சுரபுன்னை செறிநத வியனகாடு சிலம்பப் பிளிறும் (பதி. 41:5-13). வாடைப் பாசறையில் உள்ள வீரர் காட்டிலுள்ள விறகையெல்லாம் வெட்டிக் குளிர் காய்ந்து அங்கு நெடுநாள் தங்கினர் (பதி. 82:9). முருகன் உறையும் இடங்களுள் காடும் ஒன்றாகும் (முரு. 223). தொண்டைமான் இளந்திரையனின் ஆட்சிக்குட்பட்ட நிலத்தில் வழிப்பறி செய்வோரிலர்; உருமேறும் இடியாது; அரவும் கொல்லுதலைச் செய்யா; காட்டிடத்துப் புலி முதலியனவும் வருத்தம் செய்யா (பெரு. 37-43). கழுதைச் சாத்தொடு வம்பலர் வழங்கும் உல்குடைப் பெரிய வழியில கவர்த்த வழிகளைக் காத்திருக்கும் விற்படை இருக்கின்ற ஊர்களில் வியன் காட்டு வழியில் இலவு காய்த்திருந்தது

(பெரு. 75-84). இடையன் காட்டிடத்தனவாகிய கொம்புகளிலும் கொடிகளிலும் உள்ள பல பூக்களைக் கலந்து கட்டிய படலை (கலம்பகமாகிய) மாலையை அணிந்திருந்தான் (பெரு. 172-175). ஊர்களில் முள்ளுடைய மரங்கள் ஓங்கிய காடுகள் சூழ வளர்ந்த தொழுக்கள் இருந்தன (பெரு. 184,185). வள்ளியங்காடு பிற்படத் தலைவன் தேரிற் பூட்டிய குதிரை விரைந்தது (முல்லை. 101-103). பாண்டியன் நெடுஞ்செழியன் ஒன்னார் நாட்டின் மீது படையெடுத்தமையால் அது நாடெனும் பெயர் நீங்கிக் காடெனும் பெயர் பெற்றது (மது. 156). காட்டில் உலர்ந்த ஊகம்புல், வைக்கோலைக் கண்டாற் போன்று தோன்றியது (மது. 307). கரிகாற் பெருவளத்தான் சோழமண்டலத்திற் காடு கொன்று நாடாக்கினான் (பட். 284). உலர்ந்த மூங்கில் தம்மில் இழைந்ததனால் காட்டில் தீ உண்டாகியது (மலை. 248). நன்னன் ஆட்சிக்குரிய குறிஞ்சிநிலத்தில் ஓசை இனிதாகிய அருவியின் பயன் பொருந்திய காடு காத்து உறையும் கானவர் இருந்தனர் (மலை. 278,279). கல்லைக் கொணர்ந்து அதனிடத்தே பெயரை அறிதற்கு எழுதிய கடவுள் ஓங்கிய காடு தன் கொடுமையாற் பிற காடுகளை இகழும் இயல்பினது (மலை. 394-396). நிலம் பிளக்குமாறு தீயைப் போன்று ஞாயிறு காய்தலின் வற்றிய மரங்களையும் உகும் மூங்கில்நெற் பொரியும் பாறைகளையும் நீர் வற்றிய சுனைகளையும் வழிச் செல்வோர் இன்மையின் வறுமையான் மெலியும் ஆறலைப் போர் பொருந்திய சுரநெறிகளையும் வெள்ளிய முருங்கைப் பூ கடுவளியால் பரந்து கிடக்கும் இடத்தையும் உடைய காட்டு வழியே தலைவன் பொருள் தேடச் சென்றான் (அகம். 1:9-19). காய்ந்த ஓமை மரங்களை யுடைய முதிய காட்டில் பளிங்கு போன்ற நெல்லிக் காய்கள் பெரிய பாறைகளில் சிறார் விளையாடற்கு ஈட்டி வைத்திருக்கும் வட்டுக்கள் போல் உதிர்ந்து கிடக்கும் (அகம். 5:8-11). ஞாயிற்று மண்டிலம் நெருப்பெனச் சிவந்த வெப்பமிக்க கயம் துகளாகிய பயனகெட்ட காட்டில் இலையிலவாய் மலர்ந்துள்ள அரும்பில்லாத இலவம் பூக்கள் மகளிர் கூட்டம் மகிழ்ந்து எடுத்த அம் சுடர் (கார்த்திகை விளக்கின்) நெடிய வரிசை போலத் தோன்றும் (அகம். 11:1-6). குன்றம் சூழ்ந்த காட்டில் உள்ள செந்நிலப் பெருவழியில் காயாவின் வாடிய பூக்கள் பரவிக் கிடப்ப, ஈயல் மூதாய் (இந்திரகோபம்) ஒருங்கே வரிவரியாக ஊர்ந்து செல்லுதல் பவளத்தொடு நீலமணி நெருங்கி இருப்பதை ஒக்கும் (அகம். 14:1-5). பருந்து ஈன்று காவற்படும் ஓமைமரங்கள் பொருந்திய மலைமுழைஞ்சிலிடத்து ஈன்றணிமை யுடைய பிணவு பசித்ததெனச் செந்நாய் ஏறு, ஆண்பன்றியினைத் தாக்க அதுகண்டு ஓடும் பெண் பன்றி ஈந்தினை மோதிச் செல்லுதலின் வீழ்ந்து கிடக்கும் செங்காய் வித்துக்களுடன் கூடிய வன்னிலத்தைக் கூவலர் குந்தாலியால் உடைத்து, நீர் ஊறாமையால் விட்டேகிய உவலைக் கிணறுகளைக் கண்ட பெரிய களிற்றினம் தங்களை அகப்படுத்த வேடர் அமைத்த குழியெனக் கருதி அவற்றைத் தூர்க்கும் இயல்புடையது காடு (அகம். 21:15-27). மண் குளிர்ப்பத் தண் பெயல் பொழிந்தமையான், புதரின் மீது படர்ந்துள்ள செம்முல்லையின் சிவல் முள்ளைப் போன்ற சிவந்த அரும்பு, நெருங்கிய குலையினையுடைய பிடவமொடு மலரக் காடு கம் என்று மணம் வீசியது (அகம். 23:1-5). திதியனின் இனிய வெற்றி முரசு போல ஒலிக்கும் மலையுச்சியினின்று வீழும் அருவிகளையுடைய காடுகளைத் தாண்டித் தலைவர் பொருள் தேடச் செனறார் (அகம். 25:20-22). தழைத்த மூங்கில் உராய்வதால் எழுந்த தீபபொறி நெடுந்தூரம் கடந்து சருகுகள் மறையும்படி மூள, நெடிய இடத்துள்ள உலர்ந்த ஊகம்புல் மீது காற்று சுழற்றிப் பரவச் செய்யக் காட்டைப் பெருந்தீ கவர்நதமையின் வலி கெட்டு அலறிய சாத்தொடு புலிக்கஞ்சிய யானைக் கூட்டம் மயங்குதற்குக் காரணமாகியது காடு (அகம். 39:6-12). 'அழகுற்றுச் செழித்த பூங்கொத்துக்கள் தோன்றிய மரங்களையுடைய காடு அழகு பெற்ற காட்சி பொருந்திய இக்காலத்தில் இயற்கையழகு கெட வருந்தினளோ' எனப் பொருள்வயிற பிரிந்தவிடத்துத் தலைவன் கிழத்தியை நினைந்து கூறினான் (அகம். 41:8-12). வாகையின் முதிர்ந்த நெற்றுக்களைக் கொண்ட கொத்து ஆடுகளப் பறையின் விட்டு விட்டு ஒலிக்கக் கோடை நீடிய அகன் பெருங்குன்றத்து நீரிலலா அரிய சுரநெறியில் களிற்றினைக் கொன்று, மக்கள் இயங்குதல் அற்ற சுரத்தே புலி திரியும் காட்டினைக கடந்து தலைவர் பொருள் தேடச்சென்றார் (அகம். 45:1-6). மேகத்தை வெறுத்து வருந்திய மடமான கூட்டம் வற்றிய மரற் செடியினைச் சுவைக்கும் காட்டு வழியே தலைவன் தலைவியை உடன்கொண்டு சென்றான் (அகம். 49:11-13). கடுங்கதிர் எறித்தலால் உண்டாய பிளவிடங்களில் முருங்கைப்பூ நிறைந்து பரவ, நீரற வறந்த நிரம்பா நீளிடையுடைய கள்ளியங்காட்டில் வள்ளெயிற்றுச் செந்நாய் வருந்து பசிப் பிணவொடு தங்கும்; அக் காட்டிலுள்ள வாகைமரத்தின் அடியைச் சுரிமூக்கு நொள்ளை (நத்தை) மூடியிருக்கும் (அகம். 53:3-9). கூதிர்க் காலத்தில் இடியுடன் மிக்க மழை பெய்ய,

மன்னுயிர் உறங்கிய நள்ளிரவில் குறத்தியரின் தந்தைமார் காட்டில் விலங்குகளை ஆராயும் வேட்டையினால் துயிலிடம் பெறாமல் இல்லம் வந்து புலித் தோலினை விரித்துப் படுப்பர் (அகம். 58:1-6). திமிர்ந்த கோட்டினையுடைய களிறுடைமையான் சிறப்புறும் காடு பாறையில் ஏறியும் இறங்கியும் செல்லும் மூங்கில் சாய்ந்த சிறுநெறியை யுடையது (அகம். 65:15,16). புள்ளிகளையுடைய கலைமானை அதன் வறட்சியுற்ற அழகிய கொம்பு சிதர்ந்தொழிய அதன் ஓட்டத்தினை வென்று பற்றித் தின்ற புலி, கள்ளிக்காட்டில் விட்டுச் சென்ற ஊன்தசை முடை நாற்றம் வீசியது (அகம். 97:1-3). பகைவர் காவல் புரியும் இடத்திலே கன்றினைக் கவர்ந்த கொள்ளையர் அவ்வினத்தினை அவ்விடத்தினின்று கொண்டு போகும் நனந்தலைப் பெருங்காட்டில் வெப்பம் விளங்கிப் பரக்கச் சுழன்றுவரும் கோடைக் காற்றினால் முருங்கை மலர் ஆலங்கட்டி போல உதிர்ந்து பரவிக் கிடக்கும் (அகம். 101:10-16). காட்டில் தம் கொம்பினால் பகையாயவற்றைக் குத்தி உழும் களிற்றியானையின் கூட்டம் தங்கும் நீடுமரச் சோலை இருந்தது (அகம். 109:4,5). ஈரமுடைய மேட்டுநிலத்தே தழைத்த வரிமரலைக் கறித்துண்ணும் மடப்பிணையுடன் கூடிய திரிமருப்பு இரலை (ஆண்மான்கள்) உள்ள காடு கடந்து தலைவர் பொருள் தேடச் சென்றார் (அகம். 133: 16-18). காயும் கதிர்தாக்குதலினாலும் காற்றுக் கடுகி வீசுதலினாலும் இருப்பைப்பூ யானை மருப்பினாற் கடைந்த கழங்கு போன்று பாறைமீது பரவிக் கிடக்கும் காட்டைத் தலைவர் கடந்து சென்றார் (அகம். 135:7-10). கடுங்கதிர் தெறுதலின் காடு கவின் அழிந்தது (அகம். 143:2). வெள்ளிய ஞெமை மரங்களுடைய வியன் காட்டில் வற்றல் என்னும் மரத்தில் உள்ள பொன் தலை ஓந்தி வெயிலால் அழகொழிந்த ஊர்களில் வருத்தங் கொள்ளுதலின் மெல்லெனத்தாவும் (அகம். 145:3-5). மிக்க காற்று வீசுந்தோறும் குறுங்கால் வாகை மரத்தின் நெற்றுக்குலை ஆடுமகள் அரிக்கோற் பறையின் ஒலிக்கும் காட்டில் பதுக்கையை அடுத்த குறைந்த நிழலுடைய கள்ளியின் முட்பொருந்திய அடியில் தங்கிப் பல்லி தன் சிறுசெந் நாவால் வழிச்செல்பவர்க்கு உறுவது கூறும் (அகம். 151: 6-15). கடுங்காற்று தழைத்த மூங்கிலின் கணுக்களைப் பொருந்தித் தாக்கியதால் எழுந்த கூரெரியால், ஞாயிற்றின் கதிர் கெடுத்த வெங்காடு பசுமையற்ற அரிய வழியுடையதாயிற்று (அகம். 153: 8 - 11). படுமழை பொழிந்த பயன் மிக்க காட்டில் பள்ளத்திலுள்ள தேரை சிறு பல்லியம் போல் ஒலிக்கவும் பிடவ மலர்கள் நுண்ணிய செம்மணலைக் கோலம் செய்யவும் காந்தட் பூவின் தாது கட்டவிழ்ந்து விரியவும் இரலை தெள்ளறல் பருகிக் காமர் துணையொடு வதியவும் காடு கவின் பெற்றது (அகம். 154:1-10). ஞாயிறு தெறுதலின் பயன் மாறிய மாநிலத்துக் காடு அழகுபெற மழை பொழிந்தமையின் வண்டினம் ஆர்ப்ப முல்லையும் தோன்றியும் மலரக் கானம் கமழ்ந்தது (அகம். 164:1-7). காடு கவின் அழியுமாறு கோடை நீடியதால் மூங்கிலின் கணுவிலிருந்து தெறித்த முத்து குழியிடைப் பரவிக் கிடந்தது (அகம். 173:13-15). ஞாயிற்றின் சினம் மிக்க, கற்கள் பொருந்திய சுரநெறியில் பாகற் கனியை விரும்பி அயிர்யாற்று அடைகரையில் கானமயிலின் கமஞ்சூல் பெடை வயிரின் நரலும் காடு கடந்து தலைவன் பொருள் தேடச் சென்றான் (அகம். 177: 8-12). விரைந்த எரி பரந்த வியன் காட்டில் யானை பக்கமலையில் ஓடும் வெண்தேரை (பேய்த் தேரை) நீரென நினைந்து அதன்பால் தன் நெடுங்கை நீட்டி வான் வாய் திறந்தும் நீர் பெறாது கான புலந்து செல்லும் (அகம். 179:1-6). வேட்டம் போகிய குறவன், காட்டில் உள்ள குளவிப்புதர் குருதியொடு துயல்வர முள்ளம் பன்றியைக் கொன்றான் (அகம். 182:6-8). உமணரின் வண்டியில் பூட்டிய எருதுகளின் கழுத்துமணியோசை, அவர்கள் வாயினை மடித்து எழுப்பும் சீழ்க்கை ஒலியொடு விரைந்து எதிரே சென்று, ஓமையம் பெருங்காட்டில் வரும் வம்பலர்க்கு ஏமம் செப்பும் (அகம். 191:4-10). காய்சினக் கடுவளி வீசுதலால் வீழும் செந்நிற முருக்கமலர்கள் சூழப்பெற்ற பெருங்கல் அழலினால் மூடப்பெற்ற யானை போல வியப்புறத் தோன்றும் வெங்காட்டின் நிழலற்ற ஓமையுள்ள நீரற்ற நெடுவழியே தலைவன் கடந்து போயினான் (அகம். 223:5-9). மூங்கில் இள முளை திரங்க, காம்பின் கழை வெம்ப, மழை மறந்து அருவி இல்லையாகிய அஞ்சத்தகும் பரந்தவிடத்தே தோன்றிய பேய் வெண்தேரை மழையென்று கருதி ஓடித் தாகம்பட்ட பெரிய கலைமான் வேற்றுப் புலம் செல்லாது அவ்வெங் காட்டின்கண்ணே வருந்தித் தங்கும் (அகம். 241:6-12). பழமை பொருந்திய பசிய காட்டிலே பின்னிய கொடிகளை உழக்கிப் பல ஏரால் உழுது, இடுவென இட்டுப் பொருந்திய வினை செயதமையின் பாசிலை அமன்ற பயறு விளைந்தது (அகம். 262:1-4). வேறுபட்ட பலவாய கவர்த்த நெறிகளையுடைய வெருவரு வியன்காட்டகத்தே வழிச்செல்லும் வம்பலரைக் காணும் பொருட்டு வல்வில் ஆடவர் (ஆறலைகள்வர்)

நீடுநிலை யாமரத்தின் கிளை மேலிருப்பர் (அகம்.
263:5-8). செந்நாய் ஏற்றை பெண் நாயின் மிக்க
பசியைப் போக்கும் பொருட்டுக் காட்டிலுள்ள
மடப்பிணை அலற அதன் கலையைச் சிதைக்கும்
(அகம். 285: 4-6). பெருங்காட்டு நெறியில் தன்
பகையினைக் கொன்று சினத்தைத் தணித்துக்
கொள்ளாமலும் அன்றி அதனை வென்றோட்டி
மாறுபாட்டினை மெலிவிக்காமலும் பெண்யானை
களின் கூட்டமாகிய இனத்துடன் கலவாமலும்
மழைபோலும் மதத்தால் செருக்குற்றுப் பெரிய
களிறு இயங்கும் (அகம். 298: 7–10). அகன்ற காட்
டில் கடுங்காற்றால் பறிக்கப் பெற்ற காம்பு
ஒழிந்த தேக்கிலைகள், பருந்தின் வட்டம் எழுந்தது
போன்று விசும்பிடம் மறையப் பரவி அவ்வழிச்
செல்லுநர் அறிவு (சுவடு அறியாது) மயங்கும்படி,
கவர்த்த நெறிகளை யெல்லாம் மறைக்கும் (அகம்.
299:5-9). காட்டிடத்தே ஆனிரை கவர்ந்த மழவர்
தெய்வம் சேர்ந்த வேம்பில் பசுவினைக் கொன்று
குருதி தூவிப் புலவுப் புழுக்குண்ட அகன்ற பாறை
யில், களிறு தன் புறத்தினை உரசிக் கொண்ட
கரிய அடியினையுடைய இலவ மரத்தின் வெள்ளிய
விதை ஆலங்கட்டி போலப் பரவிக் கிடக்கும்
(அகம். 309: 1-10). மழை மாறிய வெங்காட்டில்
தூதுசெல்லும் பார்ப்பானின் கையிலுள்ள ஓலைச்
சுருளைப் பொன்னெனக் கருதி அவனை வீணே
வீழ்த்திய மழவர், அவன் வறுமை கண்டு கை
நொடித்துச் செல்ல ஆங்குள்ள நரியேற்றை குருதி
யுடன் கூடிய குடலைக் கடித்துக் கள்ளி நீழலில்
ஊளையிட்டுத் தங்கும் (அகம். 337:7-18). தலைவரும்
அவருடன் செல்லும் திருந்துவேல் இளையரும்
வெயிற் காலத்து நீழலில் தங்கினர்; அவர்கள்
வண்டுகள் உண்ணுமாறு மலர் அணிதற்கு ஏற்ற
வாறு மழையால் கருங்கால் நுணவின் வெள்ளிய
பூக்கள் சிறுநெறிகளில் மணம் பரப்பக் காடு
கவின் பெறுக எனத் தலைவி தோழியிடம் கூறி
னாள் (அகம். 345: 12-21). காட்டில் கதிரவன்
வெதுப்பக் காற்றால் இலை உதிர்ந்த கிளைகளில்
தீ கப்பு விட்டாலொத்த அழகிய தளிர்களையுடைய
மரச் செறிவில் உள் துளை பொருந்திய பூக்களை
யுடைய பொலிவற்ற இருப்பை மரங்கள் நிறைந்
திருந்தன (அகம். 351: 5-8). மூங்கிலைத் தாக்கி
ஞெமை மரங்களில் இலைகளை உதிர்த்த வெப்பம்
பொருந்திய கோடைக்காற்று, நெடுவெண் களரில்
உள்ள புழுதியை முகந்து சுழன்றடிப்பதால்
வேனில் வெப்பம் நிறைந்த காட்டில் பிணை
தழுவிய கலைமான் நீர் வேட்கையால் தழை தின்னு
தலை மறந்து சூல் வேட்கையுடன் கயத்தில் நீரின்

° இ பொ க தொ 2-16 அ

மையின் வாடியது (அகம். 353:7-14). ஈங்கையும்
சூரலும் நிறைந்த குறுங்காட்டில் கருவேட்கை
யால் உண்ணாதிருந்த பெண் புலியின் வருத்தம்
தீர யானையைக் கொன்று அகன்ற பாறைகள்
குருதியாற் சிவக்கும்படி இழுத்து வந்து புலால்
நாறும் புலி கிடந்து புரண்டதால் புற்கள் சாய்நது
கிடக்கும் சிறு நெறிகளை யுடைய கானததிலே
யானைக் கூட்டம் நடமாடாமல் உம்பற் பெருங்
காட்டிலுள்ள பலாமரங்களின் பழங்களைக்
கையால் தோண்டித் தின்னும் (அகம். 357:1-10).
திசைகளெல்லாம் மறையப் பரவி மேகம் கால்
வீழ்த்து மழை பொழிந்தமையான்,காட்டின் பள்ளங்
கள்தோறும் தேரைகள் ஒலித்தன; நீடிணர்க் கொன
றை தோன்றி, முல்லை, இல்லம் முதலிய எல்லாம்
மலர்ந்தன (அகம்.364:1-7). பொருள் தேடச் செல்லும்
தலைவன்,காற்றினால் மிக்கெழும் தீ பரவிய இலை
யற்ற காட்டில் மானின் புறத்துள்ள புள்ளிபோன்ற
புள்ளிகளையுடைய மரநிழலில் தங்கிச்சென்றான்
(அகம். 379:18-21). குறிஞ்சி நில மக்கள், கடம்பின்
கட் கொடியினைக் கட்டிக் கண்ணி சூட்டி இனிய
வாச்சியங்களைக் கொண்டு காடுகெழு நெடு
வேளைப் பாடும் பாட்டிறகேற்ப வெறியாட்டயாந்
தனர் (அகம். 382:3-7). எடுத்து வளர்த்த தாயைத்
துறந்து, ஊரும் சேரியும் அலரெழத் தலைவனொடு
காடும் காவும போகத் துணிந்து நாடும் தேயமும்
நணிபல கடந்து சென்ற தலைவியை எண்ணி
மகட்போக்கிய தாய் இரங்கல் (அகம். 383:1–4).
காடுறை இடையன் தன் யாட்டினத்தை ஒருவழிக்
கூட்டும் பொருட்டு எழுப்பும் சீழ்க்கையொலி
கேட்டுக் குறுமுயல் மன்றத்திலுள்ள பெரும்புதரில்
மறையும் (அகம். 394:13–15). யானை குத்திப் புண்
படுத்திய ஓமையின் பட்டை யுரிந்த சிவந்த அடி
மரத்தினை ஊன் என்று கருதி யாமரததுப்
பருந்து வந்து தங்கும், மூங்கிலின் நெல்விளை
யும் காட்டு வழியே தலைவன் தலைவியை
உடன் கொண்டு செல்லத் துணிந்தான் (அகம்.
397: 8 - 16). செங்காற் பல்லி தன் துணையை
அழைத்தற் கிடமான கள்ளிக் காட்டைக் கடந்து
தலைவன் பொருள்வயிற் பிரிந்தான் (குறு. 16:4,5).
காட்டினிடத்தே வேங்கை மலர்கள் உதிர்ந்த துறு
கல், பெரிய புலிக்குட்டி போலத் தோனறும் (குறு.
47:1,2). நிலம் கரிந்த கள்ளியங் காட்டில் கிளி
வேப்பங்கனி தின்னும் (குறு. 67). உமணர் சேர்ந்து
கழிந்த பக்கத்தையும் விரிந்த இடத்தையும் பாழ்த்த
தோற்றத்தையும் உடையது ஓமை மரங்கள் பொருந
திய பெருங்காடு (குறு.124:1,2). கேடில்லாத விழுப
பொருள் கொணரும் பொருட்டுப் பாசிலைகளை

யுடைய வாடாத வள்ளிக்கொடி படர்ந்த காட்டைத் தலைவர் கடந்து சென்றார் (குறு. 216:1,2). இரவில் தாதையுடைய அரும்பு விளங்கப் பெரிய காட்டில் வீசும் அசைகின்ற காற்றைப் போலத் தணணிய மணங்கமழும் நெற்றியை யுடையவள் தலைவி (குறு. 273:1-3). செய்வினை முடித்த செம்மல் உள்ளமொடு இளைய வீரர் பக்கம் போற்ற ஈர மாகிய மணலையுடைய காட்டு வழியே தலைவன் வந்தான் (குறு.275.5-7). ஆழ்ந்துபடக் கிடந்த பெரிய குளிர்ச்சியையுடைய குன்றத்துத் தழைத்த வலிய ஈததமரங்களை யுடைய காட்டில் காற்றுச் சுழன்று வீசும் (நற்.2:1,2). பக்கமலையில் அருவி யார்ப்பக் கல் லலைத்திழிதரும் கடுவரற் கான்யாற்று வெள்ளம் காட்டிற் சென்று அலை மோதவும் வானம் இடித்து மழை பெய்ய மின்னியது (நற். 7:2-6). சந்தன மரம் மிக்க வாடிய பெருங்காட்டில் வெண்ணெல் அருந்திய யானை தண்ணறுஞ் சிலம்பில் துஞ்சும் (நற். 7:7-9). புல்லி என்பானின் காட்டில், காந்தளஞ் சாரலில் களிறு பெரும்பாம்பின் வாய்ப்பட்டதாக அதன் பிடி மிக்க துயரத்துடன் பிளிறும் பூசல் மலையின் பிளப்பிடங்களில் எதிரொலிக்கும் (நற். 14:7 - 11). தலைவியை உடன்கொண்டு சென்ற காலை கானத்தில் இடைப்பட்ட ஆறலை கள்வரை வென்ற தலைவன், தலைவியின் சுற்றம் பின் தொடர்ந்து வருதலைக் கண்டு, தலைவியைத் தனியே விடுத்துக் காட்டில் மறைந்தனன் (நற். 48: 5-9). விசும்பின் நுண்துளி மாறிய உலவையங் காட்டில் ஆலமரத்து நிழலில் தங்கிக் களைப்பாறிச் செல்லுமாறு தலைவிக்கு உடன்போகும் தலைவன் இடைச்சுரத்துக் கூறினான் (நற். 76:1-5). பேய்த் தேரை நீரென விரும்பிச் செல்லும் மான்கள் நிறைந்ததும் உப்புப் பூத்த களரை உடையதும் ஓமை மரங்கள் நிறைந்ததும் ஆகிய காட்டு வழியே தலைவர் பிரிநது சென்றார் (நற். 84:4-10). உள்ளூர் மாமரக் கிளையில் தொங்கித் துயிலும் வாவல், சோழர் குடியிற் பிறந்த அழிசிக்குரிய பெருங் காட்டில் இருக்கும் நெல்லியின் இனிய புளிச்சுவை யைத் தான பெற்றதாகக் கனவு காணும் (நற். 87: 1-4). களிறு நின்று கழித்தகனற சிறுநீரின் ஈரத்துப் பால் வற்றிய முலையை யுடைய வயிற்றைப் பொருத்திப பசியினால் வருந்திக் கிடக்கும் பெண் நாயினுக்காக வேட்டை மேற் சென்ற ஏற்றை அதன துயர்நினைந்து வருந்துதற் கிடனாகியது புதிய காடு (நற். 103:4-9). பெருங்காட்டில் மானி னம் நிமிர்ந்து தழை யுண்ணுதலினாலே சிறிது வளைந்த உயர்ந்த கிளையையும் புல்லிய அடியையு முடைய இலந்தை மரத்தின மேலே கனியையுடைய பசிய காய், பரல் பொருந்திய வழியில் உதிர்ந்து பரவிக் கிடக்கும் (நற். 113:1-4). விதைப்பவர் பலபடியாக உழுது விதைத்த வரகின் கவைத்த கதிர்களைத் தின்ற காமர் மடப்பிணை மரல் வித்துக்கள் உதிர்ந்து கிடக்கும் அழகிய காட்டில் கலையொடு மகிழ்ந்து விளையாடும் (நற். 121:1-4). காட்டின்கண் உள்ள சிறிய மலையின் பக்கத்தவா கிய வேங்கையின் அழகிய பூந்தாது உதிர்ந்தது போன்ற சுணங்கு பரந்த மாமை நிறத்தினள் தலைவி (நற். 157:7-10). பரந்துபட்ட மிக்க தீ, கானம் முழுவதும் எரித்து நைத்தலினால் மரங்க ளெல்லாம் தீயுற்று மகிழ்ச்சி நீங்கிய காட்டகத்து நிழலற்ற வழியைத் தலைவன் கடந்து சென்றான் (நற். 177:1-3). கொலைவல் வேட்டுவனது வலையை யறுத்து விட்டோடிய கானப் புறாவின் சேவல் சிலம்பி தன் வாய் நூலால் கட்டிய வலையைக் கண்டஞ்சும் சூறைக காற்று சுழன்றடிக்கும் காட்டைக் கடந்து தலைவன் பொருள் தேடச் சென் றான் (நற். 189:7-10). 'குறுமகளே, கரிய மலைப் பிளப்பிடங்களைச் சூழ்ந்து, அழகு மிக அறுமீன் பயந்த (கார்த்திகை நாளின் பெயராலே பெற்ற) அறஞ் செய்தற்குரிய திங்களில் (கார்த்திகை மாதத்தில்) எடுக் கப்பட்ட விசும்பிலே செல்லுகின்ற ஒளியையுடைய நீண்ட விளக்குகளின் வரிசைபோலப் பல பூக்கள் நிரம்பிய கோங்கங்கள் அழகு செய்யும் நின் தந்தைக்குரிய காட்டினைக் காண்பாயாக' என உடன்போக்கில் தலைவிக்குத் தலைவன் கூறல் (நற். 202:7-11). அழல் பற்றி எரிந்தமையான் நிழலும் அழகும் ஒழிந்த மரங்களை யுடைய காட்டில் தனிமை மிக்கு நன்மைக ளெல்லாம் ஒருங்கே சிதைவுற்றன (நற். 256:3,4). வேட்டுவர் கொம்பை யூதி ஒலிப்பித்துக் கௌவிக் கொள்ளும் நாயுடன் காட்டின்கண் ஆராயும் விருப்பமும் மான் வேட்டையாடும் இயல்பும் உடையவர் (நற்.276:1-3). கார்காலத்தில் இழையணி மகளிர் போல யாவரும் விரும்பும் வண்ணம் மலர்விரிநத நீணட சுரிநத பூங்கொத்தில் விளங்கும் பூவையுடைய கொன்றைக் காடு அழகுடன் விளங்கியது (நற். 302:1-3). கோடு முற்றிய யானைகள் காட்டில் நிறைநதிருந்தன (நற். 314:1-3). காட்டில் வேங்கைப் பூவைக் கொய் யும் மகளிர் பஞ்சுரம் என்னும் பாலைப் பண்ணைப் பாடுவாராயினும் அரிய வழியி்ல செல்வோர் அப் பண்ணைக் கேட்டு அஞ்சுவர் (ஐங். 311:1-3). நாடு களின் குறுக்கே கிடக்கும் இடமுடைய காட் டைக் கடந்து தலைவனுடன தலைவீ உடனபோக்கு மேற்கொண்டாள் (ஐங். 313:4,5). கழைமுதிர் சோலைக் காடு (ஐங். 315:4). பாழ்பட்டுப் [illegible]கற

வெந்த பாலை வெங்காடு (ஐங். 317:1,2). கட முதிர் சோலைய காடு (ஐங். 328:4). குருதி போலச் சிவந்த செவியினையுடைய எருவை, கற்களினிடையே கடு முடை வீசிக் கிடக்கும் ஊன் துண்டங்களைப் பார்க்கும் காடுகள் மிகவும் கடியன (ஐங். 325:2-4). அருஞ்சுரம் செல்வோர் வழியில் உள்ள பலவின் சிறுகாயை வெயிலில் அருந்திச் செல்லுதற் கிடனா னது காடு (ஐங். 351:1-3). கடுவனுமறியாக் காடு (ஐங். 374:4). காடு படுதீ (ஐங். 376:2). மாலை முன்றில் குறுங் காட் டின்னகை மனையோள் (குறுங்காற் கட்டில் மனையோள் என்றும் பாடம்) (ஐங். 410: 1, 2). 'வேனிலநீங்கக் கார்ப்பருவத்து மழை பெய்தமையின் காடு கவின் கொணடது (ஐங். 484:1,2). தீதறு கள்ளியங் காட்டில் பருந்து வீழ்ந்தெடுத்த பைந்தலை யரவம் காதற்ற கவண் போலத் தோன்றும் (ஐங். தி. 1:2-4). அகில்படு கள்ளியங் காட்டில் சிலம்பியின் நூலால் மூடப் பெற்ற ஈந்தின் சிவந்த காய் துகிலால் மூடப் பெற்ற பவளத்தை ஒக்கும் (ஐங். தி. 2:2-4). தூறு மிக்க கள்ளியங் காட்டில் பூத்த இலவமரத்தில் ஏறிய மயில் எரிபுகுமகளிரை ஒக்கும் (ஐங். தி. 3:2-4). மாலுறு கள்ளியங் காட்டில் நுண்குழிப்புற்றின் மண்காலீயல் கோல்பிடி குருடரை ஒக்கும் (ஐங். தி. 4:3-5). மரையா மரலைக் கவர, மாரி வறப்ப, அரியவழியிடைச் செல்வோர் நா வறண்டு தண் ணீர் பெறாத் தடுமாற்றருந் துயரைக் குற்றத்தை யுடைய மறவோர் அவர் மீது அம்பு எய்தமையால் கண்ணீர் பெருகிவந்து அவர் நாவினை நனைத்துப் போக்கும் கடுமையுடையது காடு (கலி. 6:1-6). காடு கள் அழலன்ன வெம்மையால் அடிபொறுக்கும் அளவின்றிக் கடியவாய் இருக்கும் எனறும் அக்காட் டில் யானைக் கன்றுகள் அறியாமற் கலககிய சிறிய நீரை முதலிற் பிடியை ஊட்டிப் பின் களிறு உண் ணும் என்றும் தனக்குத் தலைவன் கூறியதாகத் தலைவி கூறினாள் (கலி. 11:6-9). காடுகள் இலை தீந்த கொம்புகளாலே இன்பத்தினின்றும் நீங்கிச் சென்றாரைத் துன்புறுததும் தகைமை யுடையன என்றும் அக் காட்டில் புறவுகள் தாம் அன்பு கொண்ட மடப்பெடைகள் வெம்மையால் இளைத்த வருத்தத்தைத் தம் சிறகை விரித்து மென் நிழலாலே தீர்க்கும் என்றும் தனக்குத் தலைவன் கூறியதாகத் தலைவி கூறினாள் (கலி. 11:10-13). ஞாயிற்றின் செறிந்த கதிர்கள் மலைமிசை நின்ற வேய் வாடும் படிசுடுதலாலே காடுகள் நெருங்குதற்கரிய தகையன என்றும் அக்காட்டில் நிழலின்மையால் வருந்தும் மடப்பிணைக்குக் கலை தன்நிழலைக் கொடுத்துஉயி ரைக்காக்கும் என்றும் தலைவன் தன்னிடம் கூறிய தாகததலைவி கூறினாள் (கலி. 11:15-17). தலைவியின் மெய்ந்நடுக்கம் காணுதற்குத் தலைவன் காடு கடிய அருமைய என்று கூறினான் எனக் கூறித் தோழி தலைவியைத் தேற்றல் (கலி. 13:25-27). மழைத்துளி விழுதலை யறியாத காடு தலைவி நடத்தற்கு எளி தாய் இராது என்று தலைவன் கூறல் (கலி 20:7,8). காடு அணைதற் கரிய வெம்மையை உடையது (கலி. 20:20). பெருங்காட்டில் உளள கொற்றிக்குப் பேய் நொடித்தல் (கலி. 89:8). பனங்குருத்தின் வகி ராற் பொத்தின புட்டிலுள் காட்டுச் சார்க் கொய்த சிறுமுல்லை இருபபதாக முல்லைநிலத் தலைவி கூறினாள் (கலி. 117:8-11). 'எனனைத் தெளிவித்துக் கூடின தலைவன் கறக்கப்படாத காட்டெருமைகளை யுடையவாகிய காட்டைக கடந்து போயினனோ' என நெய்தல் தலைவி புலம் பல் (கலி. 147:37,38). சீற்றத்தவையாய்ச் செருச செய்த அம்புகளை யொத்த கண்ணாரது கூட்டம மறையுங் காடாக ஓடியொளித்து ஆயத்தார் தன னைக் காணாதவாறு பரத்தை தபபினாள் (பரி. 20:37-39).

2. இடுகாடு. பிணமிட்டுப் புதைக்கப்பட்ட கவி செந் தாழியின் புறத்திருந்த கழுகின் சேவலும் பொரு வல் என்னும் புள்ளும் காக்கையும் கூகையும் கூடிய பேய் ஆயமொடு காட்டில் - இடுகாட்டில் - திரியும் காடு சேர்ந்தான் கட்காமுறுநனாய வெளிமான் (புறம். 238:1-5). கணவனை இழந்தவள், நீர்வார் கூந்தல் இரும்புறம் தாழப் பேரஞர்க் கணணளாய்ப் பெருங்காடு நோக்கிச் சுழலும் (புறம். 247:5-7). வளங்கெழு திருநகர், புதல்வர் தந்தை தனித்தலைப் பெருங்காடு முனனியமையான பொலிவழிந்தது (புறம். 250:6-9). பெருகிய சுற்றம் நிலையாமையை யுணர்த்தும் காட்டின் உண்மையை நினையாவாறு அறிவுக் கண்ணை மறைப்பவும், வீரர் நிலையாமை நிலவும் நெஞ்சினராய் உயர்ந்தோர் நாட்டு உடம் பொடும் செல்லப் பொருதனர் (புறம். 362:19-22). கள்ளி யேய்ந்த முள்ளியம் புறங்காடு (புறம். 363:10). முதுமரப் பொந்திலிருந்து கதுமெனக கூவும்பேராந் தைகளையும் தாழிகளையும் உடையது பெருங் காடு (புறம். 364:11-13). பரணர், கடலபிறக் கோட் டிய செங்குட்டுவனது நோய் நீங்கிய யாக்கையாகிய நோன்றொடையைப பாடுமகள் காண்பாளாக; வன்னிமன்றத்து விளங்கிய காட்டில் உள்ள வேந் தரை இட்டுப் புதைக்கும் தாழி காணா தொழிக என அவனை வாழ்த்துவர் (பதி. 44:7-9,22,23).

3. சுடுகாடு. முட்கள் பொருந்திய வியனகாடு - சுடு காடு - கள்ளி யோங்கிய களர்நிலமாகிய பாழபட்ட

இடத்திலுள்ளது (புறம். 225:7,8). பெருங்காட்டில் கரிய முருட்டால் பிணப்படுக்கை அடுக்கப் பெற்றது (புறம். 246:11). பல நாடுகளையும் வெற்றி கொண்ட வேந்தரும் தேய்ந்தழிந்த முட்கள் கிடக்கின்ற பக்கத்தில் கூகையும் குறுநரியும் பிணங்களைத் தின்ன, பேய்மகளிர் பிணத்தைப் பற்றிக் கொண்டு ஊன் தின்ற புலால் நாறும் மெய்யுடன் களரியில் கால்பெயர்த்தாடி ஈம விளக்கில் காண்போர்க்கு அச்சம் உண்டாக்கிச் செல்லும் காட்டை அடைந்தனர் (புறம். 359:1-8). மாநிலம் முழுதும் தமதுடைமையாய்க் கொண்டு வாழ்ந்த வேந்தர் பலரும் தம் நாட்டைப் பிறர்கொள்ளப் பிணஞ்சுடும் காடு தமக்கு இடமாகச் சென்று மாய்ந்தனர் (புறம். 363: 1-6). பயில் இருளில் காடு அமர்ந்து ஆடிய ஆடலன் சிவபெருமான் (பதி. க. வா. 3,4).

**காடுறைகடவுள்** - காட்டின்கண் தங்கும் தெய்வம். பொருநன், பாடினி பாடின பாணிக்கு ஏற்ப, காடுறை கடவுளுக்குச் செய்யும் முறையைச் செய்த பின்னர் யாழுடன் கூடிய மிடற்றுப் பாடலை எழுப்பினான் (பொரு. 52,55).

**காண்டவாயில்** - ஓர் ஊர். கலங்கிய நீரையுடைய கடற்கழி சூழ்ந்த தோட்டங்களை யுடையது காண்டவாயில் என்னும் ஊர் (நற். 38:7,8).

**காணம்** - பொற்காசு. ஆடுகோட்பாட்டுச்சேரலாதன் தன்னைப் பாடிய காக்கைபாடினியார் நச்செள்ளையாருக்கு ஒன்பது காப்பொன்னும் நூறாயிரம் காணமும் - பொற்காசும் - பரிசிலாகக் கொடுத்தான (பதி. ப. 6. அடிக்குறிப்பு). செல்வக்கடுங்கோ வாழியாதன் தன்னைப் பாடிய கபிலருக்குச் சிறுபுறமென நூறாயிரம் காணம் பரிசு கொடுத்தான் (பதி. ப. 7. அடிக்குறிப்பு). பெருஞ்சேரலிரும்பொறை தன்னைப் பாடிய அரிசில் கிழாருக்குக் காணம் ஒன்பது நூறாயிரம் பரிசிலாகக் கொடுத்தான் (பதி. ப. 8. அடிக்குறிப்பு). இளஞ்சேரலிரும்பொறை தன்னைப் பாடிய பெருங்குன்றூர் கிழாருக்கு முப்பத்தீராயிரம் காணம் பரிசிலாகக் கொடுத்தான் (பதி. ப. 9. அடிக்குறிப்பு).

**காதல்** - அன்பு. சோழன் குராப்பள்ளித் துஞ்சிய பெருந்திருமாவளவனும் பாண்டியன் வெள்ளியம்பலத்துத்துஞ்சிய பெருவழுதியும் ஒருங்கிருந்தாரைக் கண்ட காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக் கண்ணனார் 'காதல் - அன்பு - பொருந்திய நெஞ்சை யுடைய நும்மிடையே புகுந்து நும்மைப் பிரித்தற்கு அலமரும் அயலாருடைய பொதுமொழியைக் கேளாது இன்றே போல்க நும் புணர்ச்சி' என வாழ்த்தினார் (புறம். 58:26-29). சோழன் நலங்கிள்ளி 'பகைவர் வருந்தப் பொரேனாயின், தீதில்லாத நெஞ்சத்துடன் காதல் கொள்ளாத பெண்டிரது பொருந்தாத புணர்ச்சியிடையே என் மாலை துவள்வதாக' என வஞ்சினம் மொழிந்தான் (புறம். 73:11-14). போர்க்களத்தில் விழுப்புண்பட்டு இறவாது நோயால் விளிந்த மன்னரின் யாக்கையைக் காதல் மறந்து வாள் போழ்ந்தடக்குவர் (புறம். 93:4-6,11). மனையிடத்து வீழ்ந்த விளாம் பழத்தை எயிற்றியின் காதல் மகனுடன் பிடியின் கன்றும் வந்து எடுக்கும் (புறம். 181:1-3). பாண்டியன் இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறனிடம் காதல் பெரிதாகலின், கனவின் கண்ணும் அவன புகழையே அரற்றுவதாக வடமவண்ணக்கன் பேரிசாத்தனார் கூறுகிறார் (புறம். 198:7). பிசிராந்தை தன் பெயர் கூறும் பொழுது 'என்பெயர் பேதைச் சோழன்' என்று கூறும் சிறந்த காதற் கிழமையும் உடையன் எனக் கோப்பெருஞ்சோழன் வடக்கிருந்த பொழுது கூறினான் (புறம். 216: 8-10). நொச்சிமரத்தைப் பூக்களையுடைய பல மரங்களுள்ளும் சிறந்த காதல் மரம் என மோசிசாத்தனார் கூறுகிறார் (புறம். 272:1-3). செம்முது பெண்டின் காதலஞ்சிறுவன் பகைவர் படைத்திரள் உடைந்து கெடுவதற்குத் தான் ஒருவனே காரணனாயினான் (புறம்:276:3,6). 'காதலம் தோழியே, வேந்தனின் இடுக்கணைத் தானேற்றுக் காத்த நெடுந்தகையாகிய தலைவற்குண்டாகிய புண்களைக் காக்க வருக' எனத் தலைவி தன் தோழியை அழைத்தாள் (புறம். 281: 7-9). முதுகுடி மறவருள்ளும் வேந்தன் தனக்கு முகந்தேந்திய கள்ளைக் காதலால் தன்னருகுள்ள வீரனுக்குத் தருக எனக் கூறி அவனைச் சிறப்பித்தான் (புறம். 289:4-7). கருவூரெறிந்த கிள்ளிவளவனைக் காதலின் ஏத்திப் பகைமன்னரிடத்துக் கொண்ட பொருள்களைப் பரிசிலாகப் பெறும் பொருட்டு வந்ததாகக் கோவூர் கிழார் கிணைஞன கூற்றில் கூறுவர் (புறம்.373:32-34). பொறையாற்றுக் கிழான் தன் வளமனையின்கண் நெஞ்சமர்ந்த காதலையுடைய மனைவியுடன் கூடி வாழ்வானாக எனக் கல்லாடனார் வாழ்த்துகிறார் (புறம். 391: 17-19). செவ்வேளின் ஒருமுகம் ஆர்வலர் ஏத்த அமர்ந்தினிது ஒழுகிக் காதலாலே மகிழ்ந்து வரம் கொடுத்தது (முரு. 93-94). கருங்கை வினைஞராகிய உழவரின் காதல்அஞ் சிறார் இரும்பினைத் தகடாக்கினாலொத்த திரையாத மென்தோலை உடையவர் (பெரு. 222,223). பகல் போனற ஒளியையுடைய இரவு வர மகளிர் தம் காதற் கொழுநரோடு கூடி இன்புறுதலை விழைந்தனர் (மது. 549,

650). புகார் நகர மக்கள் நீங்காத காதலுடன் பகற்பொழுதெல்லாம் விளையாடினர் (பட். 103). நன்னன் மூதூரில் வாழ்பவர் வெறுப்பில்லாத காதலுடன் இனிதமர்ந்துறைவர் (மலை. 485, 487). தலைவிமீது தாய் கண்ணினும் மிகவும் காதலுடையவள் (அகம். 13:1). தலைவனிடம் ஊடல் கொண்ட தலைவி 'யாம் எம் மகனுக்கு ஒத்தனம' எனக் கூறி அவனிடம் செல்லத் தலைவனும், 'யாமும் அவனுக்குக் காதல் உடையேம்' எனறு கூறித் தலைவியின முதுகைத தைவந்தான் (அகம். 26: 22,23). காதலர் நம்மினும் பொருள் மீதே காதலுடையவர்; ஆனால் நீயோ அவர் நம்பால அருளுதவில் காதலர் என்கிறாய் எனத் தலைவி தோழியிடம் கூறினாள் (அகம. 53:14-16). மகளது உடன் போக்குக் கண்டு வருந்திய தாய் தான் உடனே சாகவில்லையே, இவ்வுலகில் வாழக் காதல்கொண்டு உயிருடன வாழ்கின்றேனே என உயிரொடு புலந்து நொந்து கூறினாள் (அகம். 55: 15-17). காதலந் தோழியே, நம்மிருவரது துன்பமும் ஒருங்கு தீரத் தலைவன் வருதற்குரிய அறிகுறியைக் காணுவோம் வா எனத் தோழி தலைவியிடம் கூறினாள் (அகம். 78: 10,11). ஆரம் தாங்கிய மார்பிடத்தே ஆராக்காதலுடன் தலைவன் தார் குழைய முயங்கல் (அகம். 75: 11-13;296:8-10). 'காதலந்தோழி' எனத் தலைவி தோழியை விளித்தல் (அகம். 135:6; 138:1; நற். 327:3). உமணர்தம் காதல் மகள் சேரியில் வெண்கல்லுப்பும் நெல்லும் சமம் என விலை கூறி விற்பாள் (அகம். 140: 5-8). காதலந் தோழி எனத் தலைவியைத் தோழி விளித்தல் (அகம். 159:12;302:8;நற்.25:8). நாள்தோறும் பிரியாக் காதலோடு தலைவி பக்கலில் இருப்பவர் தலைவர் (அகம். 241:3-5). மலைநாடனொடு காமங்கலந்த காதல் உண்டெனின் அது மிகவும் நன்றெனத் தலைவியிடத்துத் தோழி கூறினாள் (அகம். 268:5-7). ஊரோர் எடுத்த அம்பலாகிய கிளையில் காதல் என்னுந் தளிர் உண்டாயிற்று (அகம். 273:13,14). தலைவி தன் இல்லத்தின நீங்கி ஏதிலாளன் காதலை நம்பி அருஞ்சுரம் சென்றதாக மகட்போக்கிய தாய் கூறினாள் (அகம். 275:9-13). நம் காதலர் செய்த காதல் நினைவுகள் நீள்வதன்றி மறத்தல் கூடுமோ எனப் பிரிவிடை வேறுபட்ட தலைவி வற்புறுத்தும் தோழிக்குக் கூறினாள் (அகம். 301:27, 28). பனிமிகுந்த நள்ளிரவில் ஒருவரை ஒருவர் பருகிவிடுவார் போன்ற காதலன்போடு இறுக முயங்குபவரும் வருந்துவர் (அகம். 305:4-8). தலைவி தாயின் இல்லத்தில் பிறந்தநாள் தொடங்கிச் சுற்றத்தார் பாராட்டக் காதலின் வளர்ந்தவள் (அகம. 310:7,8). தலைவர் பலநாளும், இரவில் வந்து தலைவியைக் கூடி 'நம்மின் சிறநதோர் இம்மை உலகததிலலை' எனக் கூறிக் காதலொடு கூந்தலைத் தடவினார் (அகம். 311:4-7). காதலம் தோழியே மலைநாடனின் மார்பே புணையாக மலையிலிருந்து இழியும் வெள்ளத்தில் ஆடுவோம் வா எனத் தோழி தலைவியிடம் கூறினாள் (அகம். 312:7,8). தலைவனது மார்பை இறுகத் தழுவிய முயக்கமும் அழியாத காதலும் அவனைக் கண்ணுற்ற முதலநாள் இருந்தவாறே இருப்பதாகத் தலைவி கூறினாள (அகம். 332:13-15). யாக்கைக்கு உயிர்பொருந்தினாற் போன்ற நட்பினையும் அவ்வுயிர் வாழவது போனற காதலையும உடையவள் தலைவி எனத தலைவன் தன் நெஞ்சிற்குக் கூறினான (அகம். 339:11-13). காதல் அம் தோழியே, நீ வல்ல கூறித் தலைவனைக் கூட்டுவிததால் எனக்கு நல்லை காண் என வரைந்தெய்திய பின் தலைவி தோழியிடத்துக் கூறினாள் (அகம். 352:10,11). தலைவியை விரும்பிய காதலுடன யான் தேரில் ஏறியதை அறிநத தல்லால வநத வழியை அறிந்திலேன எனத தலைவன தேர்ப் பாகனிடம் கூறினான (அகம். 384:2-4). இனபம் உறுதற்குக் காரணமாக நின மேனியைப பருகுவது போன்ற காதலுள்ளத்தோடு முயஙகுதலினறித் தலைவர் பிரிநது நீட்டித்திரார் எனத் தோழி தலைவியை வற்புறுத்தினாள் (அகம. 399:3-5). தலைவனை நீ மணநதுகொள்ள யானும காதலுடையேன்; யாயும் மிகவும விரும்பினள் எனத் தோழி தலைவியிடம் கூறினாள் (குறு. 51:4). இப்பொழுது தலைவனும் தலைவியுமாக உளள இவர்கள் முன இளமைக்காலத்துக் காதற செவிலியர் இடைமறித்து விலககவும் விலகாமல் சிறுபோர் செய்தனர் என இடைசசுரததுக கண்டார் தம்முட் கூறினா (குறு. 229:1-4). தலைவி நல்ல மலை நாடனின் காதலமகளாவாள (நற். 44:12). கடிய செலவினை யுடைய தேரைக் கொண்ட செல்வனின காதலமகன் தலைவன (நற். 45:5). தலைவர் விரைய வருகுவர்; நாமுறு துயரம் செயய மாட்டார் என்று தோழி தலைவியிடம் கூறும் காதற்சொல் கொல்லனின உலையில் தெளிதத நீர் போல அவளது நோய்மலி நெஞ்சிற்குச் சிறிது ஏமமாகியது (நற். 133:7-11). தலைவியைக் காதலகெழுமிய நலத்தள் எனத் தலைவன் குறிப்பிடுகினறான் (நற். 161:10). 'மடந்தை நின்பால் எனக்குணடாகிய காதல் கடலினும் பெரியது' எனத் தலைவன் தலைவியிடம் கூறுகிறான (நற். 166: 9,10). தலைவிபால் பரத்தை மிக்க காதலையுடைய

வள் (நற். 176:3,4). மலையின்கண் உறைகின்ற குறவனின் காதல்மடமகள் அரிய காவலையுடையவள் (நற். 201:1,2). நீராக் காதலுடன் என்னைத் தேற்றிய தலைவர் கூறிய பருவமும் மெல்லச் சென்றது எனத் தலைவி கூறி வருந்தினாள் (நற். 218:5,6). கொண்கன தந்த காதல் நம்மை விட்டு நீங்கவில்லை எனத் தோழி தலைவன் சிறைப்புறமாகத் தலைவிக்குக் கூறினாள் (நற். 231:8,9). தலைமகனுக்குப் பல படியாகக் காதலை உண்டாக்கியிருந்தும் அவனால் காதலிக்கப்படாத காரணம் என்னை எனத் தோழி தலைவியை வினவினாள் (நற். 268:5-7). காண வேண்டுமென்ற காதல் மிகுதலால், கைவிட்டிருக்கும் தலைவனை எவ்வாறு சென்று சேர்வது எனத் தோழி தலைவியைக் கேட்டாள் (நற். 313:5,6). பலாப்பழத்தை மலைவாழ் குறவரின் காதல்மகள் கருவிரல மந்திக்கு விருந்தயர்ந்தாள் (நற். 353:4-6). ஈன்றணிமை யுடைய எருமைஆன் தனது காதல் கன்றுக்குப் பால் கொடுக்கும் (ஐங். 92:1,2). நெய்தல் நிலத் தலைவனின் காதல் மடமகள் கெடலரும் துன்பம் தந்து துயில்வதைக் கவர்ந்து கொண்டாள் எனப் பொருளீட்டச் சென்ற தலைவன் கூறினான் (ஐங். 195:2-4). குன்றக் குறவனின் காதல் மடமகள் வரையர மகளிரை ஒத்த சாயலள்; அழகினள்; அரும்பிய முலையள்; சிவந்த வாயினள்; சுணங்குடை மார்பினள் எனத் தலைவன் பாங்கனிடம் கூறினான் (ஐங். 255). தலைவி குன்றக் குறவனின் காதல் மடமகளாவாள் (ஐங். 256:1; 258: 1; 259: 1; 260:1). நம்மிடம் காதல் கொண்டு தலைவி தலைவனுடன் இன்று வருவாள் எனச் செவிலி கேட்டு நற்றாய்க்குக் கூறினாள் (ஐங். 400: 4-6). காடுகளான கவின் பெற்ற நாடனின் காதல் மகளின் நுதல் பசப்பத் தலைவன் பிரிந்தால் அவனது காதலம் புதல்வன் பாலுக்கு அழுவான் (ஐங். 424). காதலுக்குரிய நம் நல்ல நாட்டிற்குச் செல்லும்போது நின் கூந்தல் மலர்மணம் கமழும் படி மலர் கொய்து அணிந்து செல்வோம் எனத் தலைவன் தலைவியிடம் கூறினான் (ஐங். 446). எம் விருப்பமிக்க காதலுடன எம்மை நீத்துச் சென்ற தலைவன் மிகவும் பேரன்பினன் எனத் தலைவி தோழிக்குரைத்தாள் (ஐங். 475: 4, 5). மறத்தற்கரிய காதலுடைய தலைவி இறந்துபடும்படி தலைவன் பொருள்வயிற் பிரிய எண்ணினான் (கலி. 2:9,10). பொருள் புரிவமர் காதலின புணர்ச்சியுந் தருமென்று காதலர் பொருள்வயிற் பிரிந்தார் (கலி. 11:34). இளவேனிற் செவ்வியும் வந்தது; ஆனால் நம் காதலோர் மட்டும் வரவில்லை எனத் தலைவியிடம் தோழி கூறினாள் (கலி. 36: 10, 11). காதலர் நம்மிடத்துக் காதல் இல்லாததனால் பிரிந்தாரோ எனத் தலைவி தோழியை வினவினாள் (கலி. 36:18). பிரிந்து சென்ற காதலர் மீண்டுவந்து நம்மிடத்து நிகழ்த்தும் காதலை நாம் இறந்து படாமலிருந்து காண்போமா எனத் தலைவியிடம் தோழி வினவினாள் (கலி. 36:20). 'மையுண்ட கண்களையுடைய தலைவி மாட்டு நீ காதலையுடையை என்னும் சொல் இனிமையாகவுள்ளது' எனத் தோழி தலைவனிடம் கூறினாள் (கலி. 49:10,11). தலைவியின் தந்தை இரப்பார் மீதுள்ள காதலால் அவருக்குச் சீரிய பொருள்களைக் கொடுக்கும்; நீ வேண்டியது யாது எனத் தோழி தலைவனிடம் கேட்டாள் (கலி. 61: 13,14). காதலைக் கொண்ட வதுவை நாளில் கலிங்கத்துள் ஒடுங்கிய மான்போலும் நோககினையுடையவள் தலைவி (கலி. 69:3,4). அமர்ந்த காதலொடு புனலாடுதலால் வெளிப்படும் அலரை யான் அறிதலை அஞ்சி மறைநது நடந்தா யென்று பிறர் சொல்லவும் கேட்டேன் எனப் பரத்தை மாட்டுச் சென்று வந்த தலைவனிடம் தலைவி கூறினாள் (கலி. 98:20-22). 'காதல்கொண்ட காமம் கலக்குவதால் என் நெஞ்சு ஏவலைச் செய்யாதெனச் சொல்லி நின்ற உனக்கு ஏதிலாரின் பொய்ம் மொழியைத் தெளிவது எவ்வாறு' எனத் தலைவி தலைவனைக் கேட்டாள் (கலி. 113:19-21). தலைவியிடத்து மிக்க காதலை நிகழ்த்திப் பினனர் அருளாது தலைவன் ஒரு காரணமுமின்றித் துறந்தான் (கலி. 122:3). தலைவி கடலைப் பார்த்து 'என்னைப் போலவே நீயும் முனபு காதல் செய்து பின்பு நீங்கினாரை உடையையாய வருந்துகின றாயோ' எனக் கேட்டாள் (கலி. 129:8-11). சான்றோர் திங்களைப் பாம்பு மறைக்குங்கால் அதன் வருத்தத்தைத் தீர்க்க மாட்டாராயினும் அதன்மேல் தமக்குள்ள காதலைக் காட்டித் துன்புறுவர் (கலி. 140:17,18). தலைவியரானே தூதாக விடப்பட்டுத் தலைவர்களோடே மீண்ட வண்டுக்கூட்டத்தின் இசை, அத்தலைவியரின் காதல் பெருக்கத்தை மதுரை நகரத்துள்ளார் அறிய ஏதுவாயிற்று (பரி. 8:36,37). திருப்பரங்குன்று வரைந்து வாழும் மகளிர் தம் கணவரைப் பிரியாமல் காதலோடு ஒழியாத இன்பநுகர்ச்சியைத் தரும் சிறபபினது (பரி. 8:42-46). காதற்காமம் காமத்திலும் சிறந்தது (பரி. 9-14). முனகப்பருவத்து மகளிர் தாம் விரும்பும் காதற் கணவர் தம்மை விரும்பி வந்து புணரும் பொருட்டுத் தமககுக் காவலாகிய பாட்டியரைத் தப்பி அவர் தடுத்தலையும் கடந்து சென்று அவர் வருகையை எதிர்கொண்டனர் (பரி. 10:35-40). வையையில வெள்ளம் கரைக்குமேல் பெருகிய

தன்மை, தன்னைக் காணவந்த மக்களின் கா தல் வெள்ளத்தையும் கவர்ந்து கொண்டு பெருகியது போலிருந்தது (பரி. 12:32-35).

**காதலங்காமம் – காதலையுடைய காமம்.** காதலங் காமம் - காதலையுடைய காமம் - ஒருமிக்க ஒரே தன்மை யுடையதாய இருப்பதில்லை எனச் சொல் லப்பெறுதல் (பரி. 6:71,72). காதற்காமம் காண்க.

**காதலர் – அன்புடையவர்.** மனம் பொருந்திய காதலர் - அன்புடையவர் - அழுத கண்ணீர் எலும்பு கிடக்கும் சுடலைக்கண் ணுள்ள சாம்பலை அவிக்க முது காடு எல்லோரையும் முதுகு காணும் தன்மை யுடையது (புறம். 356.4-7). (வீடுபேற்றின் மீது) காதலர் இல்வாழ்வில் பற்றுவிட்டனர் (புறம். 358:5). கற் புடை மகளிர் தாம் விரும்பிய காதலரின் முயக்கத் தின் பிணிப்பால் இனிது துயில் கொண்டனர் (மது 662, 663) காதலரைப் பிரிந்த மகளிர் வருந்தின (நெடு. 71). பிரிவாற்றாமை எனனும் பிணியைத் தீர்த்தற்குரிய காதலர் இரவுக்குறியிடத்தே வந்தா (அகம். 22:20). களிற்றைக் கொன்று புலி திரியும் ஆ நடமாட்டமற்ற பாலைநில வழியை யுடைய கா கனைக் கடந்து காதலர் சென்றார் (அகம். 45:4-6 'தோழியே, நம் காதலரால் காதலிக்கப்படுவ அருளே என்றாய்; அஃதன்று; நம் காதலரால் கா லிக்கப்படுவது பொருளே' எனத் தலைவி தோ யிடம் வருந்திக் கூறினாள் (அகம்.53:15,16); பிரிந் சென்ற நம் காதலர் வருவாராயின் அதற்குரி பருவம் இதுவே எனத் தோழி தலைமட்குக் கூ னாள் (அகம். 68:10,11). முன்பே தலைவி காத ரைப் பிரிந்து வருந்தியிருக்கத் துன்பம் உறுபவரி மார்பில் வேலை எறிபவர் போல் மாலைக்கால அவளை மேலும் துன்புறுத்தியது (அகம். 71:9-1 சான்றோர் மிகவும் காதலர் ஆகியவிடத்தும் ப யொடு வருவதாயின் அக்காதலால் வரும் இ பத்தை விரும்புவதிலர் (அகம். 112:11,12). காத பழைய ஊர் அலரினை மிகுத்துக் கூறத் தலைவிை அருளாது விட்டுப் பிரிந்தார் (அகம். 113:8,9). 'என நலம் அழியினும் அழிக; காதலர் நோயினறி வ வாராக' எனத் தலைமகள் தோழியிடம் கூறின (அகம். 115.6,7). பழிதீர் காதலர் தாம் செ நாட்டில் வழிநாள் தங்காது வந்துவிடுவர் எ தோழி தலைமகளை வற்புறுத்தினாள் (அ 127:11,12,18). காதலர் பிரியேன என்னும் உள்ளக்கருத்தை வாய்விட்டு மொழிந்தனர் எ தோழி பிரிவிடை வேறுபட்ட தலைமகட்குக் க னாள் (அகம். 129:17,18). காதலர் காடு கட சென்றார் (அகம். 135:10). கூறிய சார்ப்பரு வந்துற்றும் நம் காதலர் வந்திலரேல் அவரது நிலை தான் என்னையோ எனத் தலைவி தோழியிடத்துக் கவன்றுரைத்தாள் (அகம். 139: 16, 17). 'காதலந் தோழியே, கவர்த்த நெறியில் நம்காதலர் பிரிந்து சென்றனர் என்று அவலம் கொள்ளற்க' எனத் தோழி தலைவியை வற்புறுத்தினாள் (அகம். 159: 11,12). கொடுஞ்சுர நெறியைக் கடந்து சென்ற காதலர் வஞ்சினம் கூறியும் தெரிவளை முன்கை பற்றியும் வினை முடித்து வருதும் என்று தலைவி யிடம் கூறிச் சென்றார் (அகம். 175:6-9). காதலர் நம்மைத் துறந்து இரும்பினால் இயன்ற உயிரை உடையவரைப் போலத் தமது நெஞ்சத்தை வன்மை செய்து கொண்டு காலந்தாழ்ந்திருத்தலில பெரிதும் வல்லவராயினர் எனத் தலைமகள் தோழியிடத்து உரைத்தாள் (அகம். 185.3-5). காதலர் நம் உயர்வை எண்ணி அரிய பொருளை ஈட்டத் துணிந்த நெஞ் சத்துடன் சேய்நாடு சென்றார் எனப்படுதல் (அகம். 187:3-5). அற்சிரக் காலத்தே அருளாத காதலர் பிரியின் தலைவி நோய் மிக்க நெஞ் சொடு முயக்கத்தை விரும்பிக் கடும் பனியால் வருந்திப் பல்பறை கொட்ட நடுங்குவாள் (அகம். 217: 16-20). ஆரவாரிக்கின்ற அலர்மொழியை உண்டாக்கிப் பாலைவழி பல கடந்து சென்ற காதலர் நோயின்றி வாழ்வாராக எனத் தலைவி வாழ்த்தினாள் (அகம். 227: 11-13,22). காதலர் பொருளையே விரும்பி நம்மை நினையாராயி னாரோ, சிறந்த செய்தியின் மறந்தனரோ எனத் தோழியைத் தலைமகள் கேட்டாள் (அகம். 235:1-3). காதலர் தம் கடமையாகிய பொருள் ஈட்டுகின்ற ஆண்மைத்தொழில் காரணமாகப் பிரிந்து சென றார் (அகம். 255:7). காதலர் நம் நிலை அறியாராயி னும் தம் நிலையையேனும் அறிந்தனரோ எனத் தலைவி தோழியிடம் கேட்டல் (அகம். 264:10-12). தலைவியும் எம்மொடு வருவாள் என்று காதலர் கூறினார்; ஆகவே நாமிருவரும் பனமுறை தழுவிக் கொள்வோம் வா எனத் தோழி தலைவியிடம் கூறல் (அகம். 285:13-15). தம் காதலரைப பிரிந்த பெருந்துன்பத்தையுடைய மகளிரின் நீர் ஒழுகும் கண்களைப் போலக் கருவிளை மலர்ந்தன (அகம். 294:4,5). காதலர் செய்த காதல் நினைவுகள் நீள் வதன்றி நம்மால் மறத்தல் கூடுமோ எனத் தலைவி தோழியிடம் கூறினாள் (அகம. 301: 27,28). ஒரு பொருளை விரும்பி நினைத்தவுடன் நெஞ்சம் நினைக்கப்பட்ட அப்பொருளினபாற் சென்று நிற் பது போல நம் காதலரும நம்பால வந்து நின்ற னர் எனத் தோழி தலைமகளிடம் கூறினாள் (அகம. 317:19-21). நம்பால் யாண்டும் அலரெழச் செய்

வோரின் செருக்குச்சொல் வாடும்படி நம் காதலர் இன்னே வருவர் எனத் தோழி தலைமகளை வற்புறுத்தினாள் (அகம். 323: 1-3). நம் காதலருடன் இரவின்கண் புணருமிடமாகிய இரவுக்குறியில் வாய்த்துள்ள களவொழுக்கம் எல்லை கடந்து நீண்டு விட்டது எனத் தலைவி தோழியிடம் கூறினாள் (அகம். 325:1-4). கண்ணும் நுதலும் பசந்து யான் வருந்தவும் காதலர் என்னை விட்டு நீங்கித் துணிந்து வாழ்தலில் வல்லவராயினர் எனத் தலைவி தோழியிடம் கூறினாள் (அகம். 329:1-3). பிரிந்து சென்ற நம் காதலர் குறித்த காலத்து வருவராயின் நன்று; அவ்வாறு வாராது அவ்விடத்தே உறைவாராயினும் உறைக எனத் தலைவி வற்புறுக்கும் தோழிக்குக் கூறுதல் (அகம். 333.17,18). மணல்மேட்டிலுள்ள தண்பொழிலில் தங்கிக் காதலர் தமது செழுமனையை மறககும் வேனிற்பருவம் வந்தது (அகம். 355:6-9). கண்களும் தோள்களும் பிறர் அறியும்படி வாட, நாளும் அவற்றை மறைத்து வாழும் நம் இயல்பினை அறியாராய்க் காதலர் வாராது காலம் தாழ்த்தனர் எனத் தலைவி தோழியிடம் கையற்றுக் கூறினாள் (அகம். 359:1-5). கார்ப்பருவம் தொடங்கியும் காதலர் வேந்தனின் பாசறைக்கண்ணே பகைவரை வென்றி கொள்ளும் வேட்கையொடு நம்மை நினைத்தலும் செய்திலர்; நாம் என் செய்வோம் எனத் தலைவி தோழியிடம் கூறினாள் (அகம். 364:9-12). எனது கண்ணீரைத் தாம் துடைத்து அமைதற் கமைந்த நம் காதலர் இப்போது மனம் பொருந்தாராய்ப் பிரிந்திருத்தலால் எனது நெஞ்சம் வருந்தும் எனத் தலைவி தோழியிடம் கூறினாள் (குறு. 4:2-4). என் காதலர் என்னை விட்டுச் செல்ல, ஏழு நண்டுகளால் மிதிக்கப்பட்ட ஓர் அத்திப் பழத்தைப் போலக் குழைந்து வருந்தினேன் எனத் தலைவி கூறுதல் (குறு. 24: 3-6). காதலர் பக்கத் திருப்ப மிக மகிழ்ச்சியுற்று விழாக் கொண்ட ஊரினரைப் போல மகிழ்வேன் எனத் தலைவி கூறினாள் (குறு. 41:1,2). தலைவியின் பசலை நீங்கும்படி காதலரிடத்து விருப்பம் தரும் இயல்புடைய ஒருசொல் உண்டாகாதோ எனத் தோழி கூறினாள் (குறு. 48: 5-7). காதலர் தண்ணளி செய்யினும் செய்யாவிடினும் அவரைப் பலமுறை பார்ப்பது உள்ளத்திற்கினிது எனத் தலைவி கூறினாள் (குறு. 60:4-6). காதலரது வரவை நீ யார்வாய்க் கேட்டனை எனத் தலைவி பாணனை வினவினாள் (குறு. 75:5). துயர் கூரும் வாடைக்காற்று வீசும் கூதிர்க்காலத்திலும் பிரிந்து சென்ற நம் காதலர் வாரார் போல்வர்; ஆகவே யானும் வாழேன் போல்வன் எனத் தலைவி தோழியிடம் கூறினாள் (குறு. 103:4-6). காதலர் பனி வீழ்கின்ற காலத்திலே என்னை விட்டுப் பிரிந்து சென்றார் எனத் தலைவி கூறுதல் (குறு. 104: 1,4). காதலர் பாலை நிலத்திற் பிரிந்து சென்றார்; அதனால் வலிமை கெட்டு யான் பொறுத்துக் கொண்டிருக்கும் துன்பத்தை இவ்வூர் எப்படி அறிந்தது எனத் தலைவி வருந்திக் கூறினாள் (குறு. 140: 3-5). காதலரைப் பல்கால் காண்டலால் வளரும் காமம், அவர் கைவிடின் உள்ளத்துள்ளே கிடந்து மெலியும் எனத் தலைவி கூறினாள் (குறு. 152:2-5). எனது தோளை மணந்த காதலரைப் பிரியச் செய்யும் வாள் போன்ற வைகறை வந்தது எனத்தலைவி வருந்தினாள் (குறு. 157:3,4). மிகவும் தண்மையுடைய வாடைக்காற்று வீசும் கூதிர்க் காலத்திலும் வந்தாரிலர்; காதலர் மணந்து கொள்ள வருவது இதுதானோ எனத் தலைவி ஆற்றாதுரைத்தாள் (குறு. 160:5,6). ஊதையம் குளிரொடு பேதுற்று மயங்கிய கூதிர் உருவினையுடைய கூற்றம், காதலரைப் பிரிநதிருக்கும் என்னைக் கொல்லுதல் குறித்து வரும் எனத் தலைவி வருந்திக் கூறினாள் (குறு. 197:3-5). முன்பு நமக்கு இனியவற்றைச் செய்த காதலர் இப்பொழுது இன்னாதனவற்றைச் செய்தலால் என் நெஞ்சு நோகின்றது எனத் தலைவி கூறினாள் (குறு. 202:4,5). காதலர் தம் கடமையை நிறைவேற்றும் பொருட்டுப் பொருள்மீதுள்ள விருப்பத்தால் இடங்கள்தோறும் சென்றார் (குறு. 255:6-8). பெருமுழக்கத்தைச் செய்யும் மேகங்கள் எழுகின்ற கார்ப்பருவத்தைப் பார்த்த பின்னும் கூட நம் காதலர் நம்மைப் பிரிந்து வாராமல் இருப்பாரோ எனத் தோழி கூறுதல் (குறு. 287:1,2,8). என் காதலரை யான் காணேனாயின் துயர்மிக்க நெஞ்சுடன் பாறையை மோதும் சிறுநுரை போல மெல்ல மெல்ல இல்லையாவேன் எனத் தலைவி கூறினாள் (குறு. 290:3-6). காதலர் இருந்த தலைவி நெஞ்சம் காமம் மிகின் அக்காதலரிடத்துச் சென்றும் அவர் வரும் வழி குறித்து வருந்தின் அவளுடன் சேர்ந்தும் ஒருபாற்படாது வருந்தியது (குறு. 340:1-3,7). கார்ப்பருவத்திலும் வாராது காதலர் காவாராயினும் யான் எனது தறுகண்மையால் வாழ்கிறேன் எனத் தலைவி கூறினாள் (குறு. 341:3,4,7). பொருள்வயிற் பிரிந்துறைந்த காதலரை மீண்டுவரக் காணும் மகளிர் உறுதியாக நோற்றோரே யாவர் எனத் தலைவி கூறினாள் (குறு. 344:1,7,8). வானம் மழை பொழிதலை நீங்காத இக்கார்ப்பருவத்தில் நம் காதலர் நனிசேய் நாட்டிலுள்ளார்; நம்மை நினைந்திலர்; என் செய்வாம் எனத் தலைவி வருந்தல் (குறு. 380:3-5). துன்பமிகும் மாலைக்காலத்து

அரும்பெறற் காதலர் வர விருந்தயர்ந்து மெய்ம் மலி உவகையினால் உகும் கண்ணீரை அரக்குப வரை அறியோம் எனத் தலைவிஆற்றாமை மீதூரக் கூறினாள் (குறு. 398:1,5-8). பசலைநோய் காதலர் தொடுவுழி நீங்கியும் விடுவுழிப் பரந்தும் நிற்கின் றது எனத் தலைவி கூறினாள் (குறு. 399:2-4). பெரு மழை பொழிந்த மேகம் தென்திசை செல்லும் முன் பனிக்காலத்தும் நீ நின் காதலரைப் பிரிந்துறைதல் அரிது எனத் தோழி தலைவியிடம் உரைத்தாள் (நற். 5:5-7). காதலர் இனி இங்கு வந்தாலும் என் நோய்க்குரிய மருந்தாகார் ஆகலின், வாராது அங்கேயே உறைவாராக எனத்தலைவி தோழியிடம் கூறல் (நற். 64:9-11). காதலர் பிரிந்து செல்வதை எத்தகைய சூழ்ச்சியால் தவிர்க்கலாம்; நீ ஆராய்ந்து காண் எனத் தலைவி தோழியிடம் கூறினாள் (நற். 79:9, 10). 'கூகையே, எம் காதலர் வருதலை விரும் பித் துஞ்சாது வருந்தும் பொழுது யாவரும் அஞ்சும் படி நின்கடிய குரலாற் குழறி எம்மை வருத்தாதே' எனத் தோழி உரைத்தாள் (நற். 83:4, 7-9). ஓமை மரமுடைய புலி இயங்கு சுரத்திற் சென்ற காதலர் பால் படர்ந்த என் நெஞ்சு நல்வினை உடையது எனத் தலைவி தோழிக்குக் கூறினாள் (நற். 107: 6-8). எப்போதும் ஒன்றியிருப்பேம் எனக் கூறிய பழைய நட்பினின்றும் காதலர் தலைவியைப் பிரிந் தமையான் வருந்திய அவளது நிலை கண்டு தோழி கலங்கிப் பேதுற்றாள் (நற். 109:1-4). காதலர் மிகச் சேய்மையிலுள்ள நாட்டினராயினும் நம்பால் மிகப் பேரன்பினராதலின், குறித்த பருவத்தில் வருவர் எனத் தோழி தலைவியை வற்புறுத்தினாள் (நற். 115:7-10). காதலர் குறித்த காலத்தினும் ஒரு நாள் கழிந்து வரினும் தலைவி உயிர் வேறுபடுவள் (நற். 129:1-3). காதலர் மலையிடத்துள்ள சிறிய தினைப்புனத்தே தாம் வருதற்குரிய குறி செய்தார் எனத் தோழி கூறல் (நற். 134:2,3). புலி உலாவும் கோடைக்காற்று வீசுகின்ற அரிய நெறியிற் சென்ற காதலர் வந்து இனிது முயங்கிப் பிரியாது உடன் உறைந்தாலும் தலைவி வருந்தினாள் எனத் தோழி கூறினாள் (நற். 174:4-7). பிறர்க்கென முயலும் பேரருள் நெஞ்சத்தோடு பொருளீட்டக் காதலர் சென்றார் (நற். 186: 8 - 10). பணைத்தோளில் அணிந்த வளைநெகிழும்படி செய்த காதலர் அரும் பொருளீட்டுதற்காகத் தன்னைப் பிரிந்து சென் றார் எனத் தலைவி கூறினாள் (நற். 193:6,7). 'காதலர் நின்னைப் பிரிந்து செல்பவ ரல்லர்; அவ்வாறு செல்லினும் சென்றவிடத்தில் தமக்குண் டாய காமநோயைப் பொறுப்பவ ரல்லர்; அவர் பேரன்பினர்; நம்மினும் இரங்கிப் பொருள் முடியாதாயினும் வருவர்' எனத் தோழி ஆற்றா ளாய தலைவிக்குக் கூறினாள் (நற். 208: 5-10). பொருளுக்காக அகன்ற காதலர் எனது வளையை நெகிழ்த்த துன்பத்தை எள்ளி நகுவது போல மின்னி ஆரவாரம் செய்வது போன்ற மேகத்தின் முழக்கத்தைக் கேளாரோ எனத் தலைவி பருவங் கண்டு வருந்திக் கூறினாள் (நற். 214:8-12). தாம் ஈட்டும் பொருளளவு அறியாராய்ப் பெரிதும் ஈட்டச் சுரநெறியில தலைவியைப் பிரிந்து சென்ற வர் காதலர் (நற். 226:5-7). இன்னுயிர் போன்ற பிரிதற்கரிய காதலர் தலைவியை விட்டுப் பிரிந்து நெடுந்தூரம் சென்றார் (நற். 237:3,4). நிலம் தன் நிலை பெயர்வதாயிருந்தாலும் காதலர் தாம் கூறிய சொல்லினின்றும் பிறழமாட்டார் (நற். 289: 1-3). பிரிந்தோர் வருந்தும் கார்காலத்திலும் காதலர் தாம் செய்யும் வினையையே நினைத்த உள்ளத்தோடு பிரிந்து செல்வார் (நற். 296 6-8). வண்மை வேண்டிய அரும் பொருளுக்காக அகன்ற காதலர் நின்னை முயங்குதல் எண்ணி இன்று வந்து நின் தோளைக் கூடுவர்; துன்பம் தவிர்க எனத் தோழி தலைவிக்குக் கூறி வற்புறுத்தினாள் (நற். 333:6-9). பகைப்புலத்துத் தோல்வியே காணாத காதலர் நம்மைத் துறந்து பின் அருள் செய்பவ ரல்லர் எனத் தோழி தலைவியிடம் கூறினாள் (நற். 339.1). பிரிந்தாரை வருத்தும் மாலைப்பொழுது, நம்மைத் துறந்து பொருளீட்டக் கருதிப் பிரிந் துறையும் நம் காதலர் சென்ற நாட்டில் இல்லையோ எனத் தலைவி கூறல் (நற். 343.7-10). காதலர் இரவில் வரும் துன்பத்தினின்று நாம் உய்ய அவர் புதியராய் வரும் வருகையும் வதுவைக்காக நீ நாணி ஒடுங்கும் ஒடுக்கமும் கண்டால் வரைவதற்கு வந்த வாய்மைக் கேற்ப நம் சுற்றத்தார் மகட் கொடைக்குடன்படுவர் போலும் எனத் தோழி தலைவியிடம் கூறினாள் (நற். 393:7-13). காதலர் தம் மலைகெழு நாட்டிற்குச் செல்வேன் என்பர்; அதனால் என் கவின் தொலையும்; மேனி பசக்கும்; யான் என் செய்வேன் எனத் தலைவி தோழியிடம் கூறல் (ஐங். 221). பனியையும் வாடைக் காற்றையும் தன்பாற் கொண்ட அச்சிரப்பொழுது தத்தம் காத லரைப் பிரிந்த மகளிர் கையறத் துன்புறுத்தும் (ஐங். 223:3,4). நம் காதலர் வந்து நிற்கும் இப் பொழுது, முகில்கள் ஒரு சிறிதுமில்லாத தூய வானத்தோடு கூடிய அரிய பொழுதாகவுள்ளது எனத் தோழி கூறினாள் (ஐங். 235:1,2). கொடுங் காடுகளைக் கடந்து சென்ற காதலர் ஆங்குத் தங்கி நீட்டிப்பரோ என எண்ணித் தன் நெஞ்சு வருந்து வதாகத் தலைவி கூறுகிறாள் (ஐங். 311.3,4). காதலர்

கொடும் பாலைக் காட்டைக் கடந்து போயினரோ; தம்மை மறவாத நம்மை மறந்து போயினரோ எனத் தலைவி தோழியிடம் கூறி வருந்தினாள் (ஐங். 319:2-4). ஊரில் அலரெழக் காதலர் நம்மை வீட்டுச் சென்றார்; அவர் குறித்துச் சென்ற காலத்தை நினையாரோ; நாம் மருள் உற்றனம் எனத் தலைவி தோழியிடம் கூறல் (ஐங். 340:1-4). காதலர் சென்ற வழி பெரிய மலையுச்சியில் நீலமணி போனறஅழகுமிக்க தோகைகளைக் கொண்ட மயில் களை உடையது (ஐங். 431). பகையை விரும்பும் காதலர் அதனை வெல்லுதற்குச் செய்த முயற்சி தலைவியின் அழகை மறைத்துப் பசலை படரச் செய்தது (ஐங்.452:3-5). பனி வருத்துவதால் குருகினம் ஆரவாரிக்கும் கூதிர்ப்பருவத்தில் காதலர் தலைவி யைக் கைவிட்டுப் பாசறைக்கண் தங்கார் (ஐங். 457: 1-3). காதலர் கொடிய அற்சிரப் பொழுதை மறப் பினும் தலைவியின் மாமைக் கவினை மறக்கவிய லாது (ஐங. 470:2-5). கார்காலத்துக் கவின் பெற்ற கானத்தைக் கண்டால் தலைவி பெரிதும் வருந்து வள் எனக் காதலர் அவளது ஆய்நலம் கொண்டு வந்தார் எனத் தோழி தலைவியிடம் கூறுதல் (ஐங். 499:2-5). காதலர் தலைவியின் மார்பை இறுக முயங் கியும் அமையாராய் அவளது கூட்டத்தால் தாழ்ந்த மயிரைக் கோலஞ் செய்வர் (கலி.4:9-11). தலைவியின் எயிற்று நீரைக் கள்ளினும் மகிழ் செய்யும் என உரைத்தும் அமையாராய்க் காதலர் அவளது ஒளி வீசும் பூண்களைப் பழைய நிலையிலிருக்கும்படி திருத்துவர் (கலி. 4:13-15). காதலர் தலைவியின் சுணங்கணிந்த ஆகத்தை விடாமல் நோக்கியும் அமையாராய் அவளது ஒளிபொருந்திய நுதலைத் தடவுவர் (கலி. 4:17-19). பொருள்வயிற் பிரிவை நன் றென் றெண்ணிச் சென்ற காதலர் வருவர் போலத் தோன்றுகிறது எனத் தலைவி கூறுதல் (கலி. 11: 4,5). சுரநெறியின் கொடுமை கூறித் தலைவி உடன் வருதலை மறுத்ததால காதலர் வினையிடத்துப் பிரிவர் என்று வருநதாதே எனத் தோழி தலைவி யிடம் கூறினாள் (கலி. 13:23-25). காதலர் தலைவி இயற்கை நலங்கெட்டு வருந்துமாறு பிரிநது சென் றார் (கலி. 16:5,6). தான தனியே கிடந்து வருந்தக் காதலா பொருள் மீது கொண்ட ஆசையால் பகைப் புல மென்றும் பாராது பிரிந்து சென்றார் எனத் தலைவி கூறினாள் (கலி. 16:9,10). காதலர் தலைவி இஙகே துயருறும்படி அனபைக் கைவிட்டுப் பொருள் மேல் வேட்கை கொண்டு பிரிந்து சென்றார் (கலி. 16:13,14). காதலர் பகைவரை வென்ற வெற்றி யோடு வருவார் எனத் தூது வந்தது என்று தோழி தலைவிக்குக் கூறல் (கலி. 26:22-25). தண்மை கொண்ட மணல், தாதாலும் தளிராலும் காத லரை முயங்கியவரின் மயிர்போல அழகு பெற்றது (கலி. 27:5,6). தலைவி பிரிவில் பெரிதும் கலங்குவாள் என்று கருதிக் காதலர் திண்ணிய தேரைச் செலுத் திக் கொண்டு அவளுக்குத் துணையாக விரைந்து வந்தார் (கலி. 27:25,26). தாம் காதலித்த காதலரைப் புணர்ந்த மகளிரின் முகம் போலப் பொய்கை தாமரை மலரைப் புதிதாகப் பூத்தது (கலி. 31:4,5). இளவேனிற்பருவம் காதலரின தூதாக வந்தது; நாம் துயரறு கிளவியோடு விருந்தயர்வோம் எனத் தோழி தலைவியிடம் கூறல் (கலி. 32:16-19). காதல ரைக் கூடினவருடைய கவவுக்கை நெகிழாது தாதை அவிழ்க்கும் இளவேனில வந்தது (கலி. 33.7,8). காத லர் வருவர் என நாம் எண்ணியிருந்த நாள் எல்லை கடவாமல் குதிரை ஊர்ந்து வந்தார் எனத் தோழி தலைவியிடம் கூறல் (கலி. 34:21-23). நினைக்கும் போதெல்லாம் நெஞ்சழியும் தலைவியின் காம நோய்க்கு இளைப்பாறுதலாகிக் காதலர் வந்தார் (கலி. 35:22,23). பிரிவாற்றாத தலைவி காதலரின் காதலையும் நாம் இறந்துபடாம லிருந்து காண் போமோ எனத் தோழியை வருந்தி வின வினாள் (கலி. 36: 20). ஆய்ச்சியர் அன்புறு காதலரின் கைகோத்து இன்பமுற்றுக் குரவை யாடுவர் (கலி. 106: 32, 33). ஏற்றையும் நம் காதலரையும் பேணிச் சுரும்பினம் ஒலிக்கும் கானத்தை நாம் பாடிப் பரவுவோம் என ஆய்ச்சி யர் கூறினர் (கலி. 106: 47,48). மாலைப்பொழுது காதலரைக் கூடியிருக்கும் மகளிருடைய அழகைப் போக்கவில்லையெனப் பிரிவிடை ஆற்றாத தலைவி கூறி வருந்தினாள் (கலி. 118: 9, 12). அருளிலலாத காதலர் எனனைவிட்டு நீங்கிய காலம் பார்த்துப் பொறுத்தற்கரிய துன்பமுற்ற என்னை வருத்த வந்தாயோ எனப் பிரிவிடை ஆற்றாத தலைவி மாலைப்பொழுது கண்டு வினவினாள் (கலி. 120: 13-15). தலைவியின் வெறுப்புக் கொண்ட வருத் தம் தீரும்படி காதலர் விரைந்து வநதார் (கலி. 120:21). நடுக்கடலில் மரக்கலம் சிதைந்து அழுந்து கின்றவன் ஒரு தெப்பத்தைப் பெற்றுப் பிழைத் தாற் போலத் தலைவியின் காதலர் விரைந்து புக அவளது துயரம் நீங்கிற்று (கலி. 134: 24-27). பிரிந்த தலைவர் உறுத்திய நோய் பொறுத்தற்கரி தாய் உயிரைப் போக்கும்; அக்காதலர் உயிர் மீட்கும் மருத்துவராயின் அந்நிலை அவர்க்கு எப் பொழுதுண்டாகும் எனத் தோழியிடம் தலைவி வன்புறை எதிரழிந்து கூறினாள் (கலி. 137: 24-28). கடலோடு வருந்திக் கூறிய தலைவியின் வருத்தம் தீரும்படி காதலர் வந்தார் (கலி. 144: 68,69).

'ஞாயிறே! நீ எம் காதலரை விரையக் கொண்டு கடலில் ஊர்ந்து நாட்காலையில் வரின் யான் அவரைக் காண்பேன்' எனத் தலைவி உரைத்தாள் (கலி. 145: 32,33). செய்மையில் தங்கிய காதலர் போர்முடித்து அவர் மண்ணைக் கைக்கொண்டு தலைவியின் வருத்தம் நீங்க வந்தார் (கலி. 148:21-24). வையையில் வெள்ளம் வந்தவிடத்து மகளிர் புகை, பூ, அவி, ஆராதனை, அழல பல ஏந்திப் புனலாட்டு விழாவுக்குரிய அணியைத் தம் காதலரை அணியச் செய்தனர் (பரி. 6: 11-13). திருப்பரங்குன்றத்தில் காதலரும் அல்லாரும் கூடி மணிமிடற்றண்ணலுக்கு மாசிலோள் தந்த கடம்பமர் செல்வன் திருக்கோயிலை வழிபட்டனர் (பரி. 8: 125-127). வையையில் நீராடச் சென்ற மகளிருட் சிலர் தம் காதலரைத் தழுவும் வீறு பெறுக என வேண்டி நின்றனர் (பரி. 11:116,117). தாம் விரும்பின காதலருடன் புனலாடுமாறு பிரிந்தவரைக் கொண்டு வந்து கூட்டுதல் வையைக்கு இயல்பாகும் (பரி. 20: 110,111). வையைத் துறையில் ஆடும் காதலரின் தோள்களையே தெப்பமாகக் கொண்டு பரத்தையர் மறைவாக நீராடினர் (பரி.தி. 2:28, 29).

**காதலவர்** - அன்புடையவர். காதலவர் – அன்புடையவர்- சென்ற நாட்டில் வேப்பம் பழங்களைத் தின்ன வௌவால்கள் ஏறப் பறக்கின்ற மாலைக்காலம் இல்லையோ எனத் தலைவி தோழியைக் கேட்டாள் (ஐங். 339). திருமாலிருங்குன்றத்தை மகளிரொடும் ஆடவரொடும கைம்மகவொடும் காதலவரொடும் அம்மலை நிற்கும் திசை நோக்கித் தொழுது செல்லுமின் என இளம் பெருவழுதியார் பாடுவர் (பரி. 15:46-48).

**காதலவன்** – அன்புடையவன். கடும்பகல் எமக்கு எம் கண்ணுறக்கத்தைக் கைக் கொண்டு எமமை நினையாத காதலவன் - அன்புடையவன் - செய்த பண்பு தரவந்த இடையறாத நோயால் வந்த கடுங்குளிரை வேதுகொளவது போல் உள்ளது எனப் பிரிவு நோயால் வருததமுற்ற தலைவி ஊரிலுள்ளாரைப் பார்த்துக் கூறினாள் (கலி. 145:23-26).

**காதலன்** - அன்புடையன். அச்சம் பொருந்திய நோயொடு துயிலேனாகி ஆதிமந்தியைப் போலக் காதலனை – அன்புடையனை - காணா தொழிந்த சிறுமையால் துன்பம் மிகுநது மயங்கித் தேடித் திரிவேனோ எனத் தலைவனைப் பிரிந்த தலைவி தோழியிடம் கூறி வருத்தமுற்றாள் (அகம். 45:13-15). தன்னையே ஒத்த தகைமையையும் விருப்பத்தையுமுடைய காதலன் (தலைவன்) மணங்கமழும் பல மலர்களை வைத்து அணி செய்தற்குப் பின்னிவிடத் தலைவியின் கூந்தல் கான்யாற்று அறல் போன்று சிறுபுறம் மறைய நெறிநது தொங்கியதோ என மகட்போக்கிய செவிலிததாய் கூறினாள் (அகம். 117:12-14,19). ஆட்டனத்தியின் நலன் நயந்து காவிரி கவர்ந்து கொண்டமையின் மதி மருணடு வாடிய ஆதிமந்திக்கு மருதி என்பாள் அவளுடைய காதலனைக் காட்டிக் கடலிற் புக்கு மறைந்து பாடுபுக ழெய்தினாள (அகம். 222:7-12). தனகாதலனை இழநத ஆதிமந்தி கலுழ்நத கண்ணினளாய 'ஆட்டனததியைக காணீரோ' என நாடுதோறும ஊர்தோறும சென்று கடல் கொண்டதோ புனல ஒளிததுதோ எனத் துன்பந் தரும் சொற்களைக் கூறிப பெரிதும மயங்கினாள் (அகம. 236:16-21). தலைவி வெபப மான புழுதி மிகக வழியில் தன்னை விருமபிய காதலனைக் கூடிச் சென்றாள் (நற்.66.5,6). தலைவியின் துன்பமிக்க காமநோய் காதலனாலே வந்தது என்பதை அறியாத அன்னை வெறியாட்டயர்ந் தாள் (நற். 282:3,4). இறபபதற்கு அஞ்சேன்; இறநது அடுத்து வரும் பிறபபு மககட் பிறப்பனறி வேறு பிறப்பாக மாறிவிடின் என காதலனை மறப் பேனோ என்றுதான அஞ்சுகிறேன் எனத தலைவி தோழியிடம் கூறினாள் (நற. 397:7-9). மநதியின காதலனாகிய தளிரை மேயும கடுவன கற்பாறையின் மீது பொங்குகின்ற இளமுகிலை நறைக்கொடி கொண்டு புடைககும் (ஐங 276:1-3) தலைவி, தன்னை நயந்த காதலனைக கூடி யானைகளோடு புலிகள் திரியும் பாலை நெறியிலே சென்றாள் (ஐங 386:1,2). தனித்து நிற்கும் மகளிரைக கண்டால காமவேட்கையால் மேல் விழுதலாகக் கொண்ட முதுபார்ப பானுடைய நாடகம் காதலன நம்மைக குறியிடத்து வந்து காணுங் காட்சி கெட நமககு வருத தமாய் விளைநதது எனறு தோழி தலைவன கேட்பத் தலைவியிடம் கூறினாள் (கலி. 65.25–29). தலைவிக்கு ஊடல் மிகுதலாலே ஒழுகும் கணணீர் காமத் தீயால் வறண்டு துளித் துளியாக வீழ அவ்வருத் ததைக் கண்டு காதலன் அவள் அடியைச சேர்நது இறைஞ்சி அளித்தலாலே அவள் சிறிது மகிழ்நதாள் (கலி. 71:4-6). புலவியால் புலலாதிருந்த தலைவி வண்டினம் மொய்த்து ஆர்ப்பதனால் வருத்தமுற்று அப்புலவியைக் கைவிட்டுக காதலனது மார்பைத தழுவினாள் (கலி. 92: 39-41). அருள் செயயாதே கைவிட்ட காதலன செயத கலக்குறு நோயககு ஏதிலார் ஒரு மருநதைத் தெளிவித்துக கூறார் ஆத லான் ஊரவாக்கெலலாம் பெரியதோர் இகழ்ச்சி உண்டாம்படி என ஆருயிர் போகும், இநநிலை

நோக்கித் திங்களே, நீ தலைவனிடம் சென்று என குறை முடிப்பபாயாக எனத் தலைவி கூறினாள் (கலி. 145 45-50). பிரிவால வருததமுற்ற தலைவி தன காதலன் வர அவனைக் கண்டு தான் அழுநதின துயரமெல்லாம் அறுதியாக மறந்தாள் (கலி. 147: 66-68). ஊடல கொண்ட தலைவி அரக்கு நீரால் நிறைநத வட்டைத தலைவன் மார்பில் எறிய, அவன நெஞ்சு சோர்ந்து கீழே விழுந்து வணங்கி னமை கணடு தலைவி வட்டெறிந்தமையான் வீழ்ந் தான என அஞ்சி மயங்கி முனபுள்ள ஊடல் நீங் கித் தன காதலன ஆகததைச் சேர்ந்தாள் (பரி. 12:67-74).

**காதலார் - அன்புடையார்.** பொருளில்லாதவருக்குக் காத லார-அன்புடையார்-என்ன காரியத்தைச செயவர் என்று உறவு போல இருநது உறுதியல்லன கூறு வார் கூறும் மொழிகளை நினக்குப் பொருளாக மதித்தாயோ எனத் தோழி தலைவனை வினவி னாள (கலி. 14.12,13).

**காதலான் – அன்புடையான்.** காதலான – அன்புடை யான் - தன மார்பில் கமழ்கினற மாலையைப புனலில் இட அம்மாலையை ஏதிலாளாகிய இற்பரத் தைப் புனலினின்றும் எடுத்துத் தன கூநதலில சூடிக் கொண்டாள் (பரி. தி. 2:34,35).

**காதலி - அன்புடையவள்.** 'குற்றந் தீர்ந்த கற்பினை யுடையளாய எம்மை விரும்பிய காதலி - அன்புடை யவள் - இறந்துபடாது உயிர் வாழவாளாயின். எம்மை நினையாதிருததல் அரிது; அதனால் அற னில கூற்றம் திறனின்று துணிய மாய்ந்தானோ; என்னுயிர் கெடுக எனத் துன்புடன் பல புலந்து உறையும மனைவியின் இடுக்கண் தீரச் செல்கி றேன' எனறு பரிசில் நீட்டித்த குடககோச்சேரலி ரும்பொறையிடம் பெருங்குனறூர்கிழார் கூறினார் (புறம். 210:5-12) உலகத்தார் யாவரும் புகும்படி திறநத வாயிலையுடைய பலரோடும் கூடி உண் டலை மருவியோனாகிய வேள் எவ்வி, சிறிய இடத் தினை மெழுகித் தன்னை விருமபிய காதலி புல் மேல் வைதத இனிய சிறிய பிண்டததை எவ்வாறு உணடானோ என வெள்ளெருககிலையார் கையறு நிலை தோன்றப பாடுவர் (புறம். 234). குவளை யிதழை யொககும்நீர் மிகுந்த கண்களின் இமை நற வத்தின சிறநத இதழ் அனையவாகி உள்ளம் கனல, நினையுந்தோறும வறறி விழும் அறல்நீர் வெப் பங் கொண்டவாய்ச் சொரிய அஞ்சி, சில வளை கள் சொரிநத மெலலிய முனகை யுடையவளும் பூ வொழிந்த கொடி போலப் பொலிவறச் சென்று அகலிடததுத தான் எற்றிய விளககே துணையாக எங்கும் இயங்காது வலிமற்று ஒரிடத்தே தங்கிய நம் காதலியின் வருந்தி மெலிந்த சிறுபுறத்தைத் தழுவியபின் எம்மை மறத்தலை நீக்குவாயாக எனறு தலைவன் தன்னெஞ்சிற்குக் கூறினான் (அகம். 19:9-19). 'என் மகனை நினைந்து இவண் வருதியாயின் நினககுப் பால் தருகுவன் என இனமொழி கூறி ஒருக்கணித்து நோககும் அமரிய கணணினளாய், விரலால் அழைத்துப் புதல் வனைப் பொய்க்கும் தேமல் அணிநத அல்குலினை யுடைய காதலியாகிய பூங்கொடி நிலையினைக் காண்குவம்' என வினைமுற்றிய தலைவன் தேர்ப் பாகனிடம் கூறினான் (அகம். 54: 18-22). நெய்தல் மலரை யொத்த அழகினை ஏநதிய குளிர்ந்த கண்ணினளாகிய நம் காதலியின குணஙகள சேய் மையர் என்றெணணாது அன்பு செலுத்திட நம் பால் அணுக வந்தன எனத தலைவன் இடைச் சுரத்துக்கண தன்னெஞ்சிற்குக் கூறினான் (அகம். 83: 11-14). பெரிய மாளிகையினகண் தாழிருங் கூந்தலையுடைய நம் காதலியின் சுணங்கணிந்த வனமுலையின நலம் பாராட்டி, தோளையும் அணைநது, மகிழவாயாக என்று வினைமுற்றி மீளுந் தலைவன் இடைச்சுரத்துத் தனனெஞ சிறகுக் கூறினான் (அகம். 87: 12-16). மாடங்களால் மாணபுற்ற நமது மாளிகையில் பெருமையமைந்த சேக்கையிடத்துள்ள வெறுப்பற்ற கொள்கையினை யுடைய நம் காதலி இனிமை உறவும் நமக்குப் பாசறை வருததம் ஒழியவும் நீ புரவியை விரைந்து செலுததுவாயாக எனத் தலைவன் தேர்ப்பாக னிடம கூறினான் (அகம். 124: 6-13). 'நெஞ்சே, நம் காதலி பலரும் அறிந்து அலர்கூறுதலை அஞ்சி, வளைகள செறிந்த முன்கையளாய், இரும்பல் கூநதல சிறுபுறதது அணியோடு துயல்வரக் கடல மீன துஞ்சும நள்ளிரவில அழகிய பாவை நடை கற்றாற் போனறு மெலல வந்து இனிய மொழிந்து, முலைக்கண் வடுக்கொள முயங்கினாள்; இனி நீ உவப்பாயாக' எனறு இரவுக்குறி வந்து நீங்கும் தலைவன் தன்னெஞ்சிற்குக் கூறினான (அகம். 142: 7,15-26). 'விழவாடு மகளிரொடு நீ தழுவி யாடியபோது நின் காதலியாகிய பரத்தையின் கையை விடுத்தறகு அவள் சினந்தனள் போலும்; அப்பரததை எமமைப் போல் புதல்வனைப் பெறறு, நெடுமனையில் நின்னைப் பிரிந்து தங்க என்ன கடப்பாடு உடையவளோ' எனத் தோழி தலைவனை வினவினாள (அகம். 176:18-21). இன்று இவ்விடததே ஒரு பெற்றியே தழுவி, நாளை அருஞ் சுரத்துச் சீறூரின்கண்ணே பூவாற் புனையப் பெற்ற மேகம் போலத தழைத்த கரிய கூந்தலினை

யும் செறிதொடி முன்கையினையும் உடைய நம் காதலியின் அறிவு கலங்கிய பார்வையினையும் புலவியினையும் நினைத்துத் தங்கியிருப்பமோ என்று பொருள்கடைக் கூட்டிய நெஞ்சினைத் தலைவன வினவினான் (அகம். 225:3,4,13-17). மலரென இடமெல்லாம் கமழும் நாற்றத்தினையுடைய கரிய கூந்தலையும் நல்லெழில் மழைக்கண்ணையும் உடைய நம் காதலியின் மெல்லிய இறையினை யுடைய பருத்த தோளின் விளங்கும் மாண்புற்ற அழகினை அரியசுரநெறியைக் கடந்து வந்து உள்ளினை எனத் தலைவன் இடைச்சுரத்துக்கண் தன்னெஞ்சிடம் உரைத்தான் (அகம். 291:21-25). பசலை உற்ற துன்பம் வருத்த வருந்திய அன்பு மிக்க காதலியின் நகையுடன் கூடிய முகத்தினைப் பெறத் தேரினை இயக்குக என வினைமுற்றிய தலைவன் தேர்ப் பாகனிடம் கூறினான் (அகம். 344:11-13). வண்டு விழையும் மலர்கள் நிறைந்த கூந்தலையுடைய நம் காதலியின் கண்கள், பாழ்பட்ட சுரநெறியினைத் தனியே கடந்து செல்லும் நம்மைக் காட்டிலும் நீர் ஒழுகப் பெற்று எத்தன்மையான துன்பத்தினை எய்தினவோ எனத் தலைவன் தன்னெஞ்சிற்குக் கூறினான் (அகம். 371:9-14). நம் காதலி நல்லள் ஆதலை அறிந்தது போல நாம் நினைக்கும் போதெல்லாம் எளியளாய் வருவதன்றி அவள் பெறுதற்கு அரியள் ஆதலை அறியாயாயினை என அல்லகுறிப்பட்ட தலைவன் தன்னெஞ்சிற்குக் கூறினான் (குறு. 120:2-4). 'நெஞ்சே, குன்றுகெழு சிறுநெறி அரிய என்னாது மறத்தற்கரிய காதலி இங்கே தங்க நான் செல்வேன் என்று துணிவது நம் இளமைப்பருவத்துக்கு முடிவாகும்' எனத் தலைவன் தன்னெஞ்சிற் குரைத்தான் (குறு. 151:4-6). பிறைத் திங்களைப் போன்ற அழகு பொருந்திய மாசற்ற சிறப்புடைய நெற்றியையும் மணங்கமழும் கரிய கூந்தலையு முடைய காதலி, புதல்வனிடம் தழுவல் விருப்போடு சென்ற எனைக் கண்டு வெருவி, யாரையோ நீ என்று வினவி இகழ்ந்து நின்றாள் எனத் தலைவன் பாணனிடம் கூறினான் (நற். 250:6-10). அழகிய எயிற்றினின்றும் ஒழுகிய நகையையும் குற்றமற்ற கோட்பாட்டினையு முடைய நம்முயிர் போன்ற விருப்பம் மிக்க காதலியினது முகத்தில் அலமரும் கண்கள் துன்பமெய்தி நம்மைப் பிணிக்குமே என்று எண்ணாராய்க் குன்றம் இறப்போர் (தலைவர்) கருதியதை அறிய வல்லார் யாவர் என்று தோழி வாயின மறுத்துரைத்தாள் (நற். 269:4-9). கீழ்த்திசையில் விடியற்பொழுதில் தோன்றும் வெள்ளி போல நம் காதலி ஒருநாள் நம் அருகில் வைகுமாறு நமக்குக் கிடைப்பாளோ என்று வரைவு மறுக்கப்பட்டு ஆற்றானாகிய தலைவன் தன்னெஞ்சிற்குக் கூறினான் (நற். 356:8-10). நல்லோர் அஞ்சுதற்குக் காரணமான நடையினையும் குறுந்தொடியினையும் உடைய நின்னுடைய விருப்பத்திற் கேற்ற காதலியை (காதற்பரத்தையை) தழுவிக் கொண்டு நேற்று நீ புனலாடினை என்று பலரும் கூறினர்; அதனா லெழுந்த அலரை மறைக்க இயலுமோ என்று தலைவி தலைவனிடம் புலந்து மொழிந்தாள் (ஐங். 71:1-4). காதலியின் கண்கள் கொற்கைப் பெருந்துறையிடத்து வைகறைப் பொழுதில் மலரும் நெய்தல் போலத் தகைமை பெரிதுடையன எனத் தலைவன் தலைவியைப் புகழ்ந்துரைத்தான் (ஐங். 188:2-4). மூங்கில் போன்ற தோளையும் ஆய்தழை நுடங்கும் அல்குலினையும் உடைய காதலி உறையும் நல்லூர் பக்கமலையிடத்துள்ளது (ஐங். 291:2-4). எம்மால் விரும்பப்படும் காதலியின் பண்புகளைத் துணையாகப் பெற்றனமையானே அருஞ்சுர நெறிகள் வருத்தாவாயின என்று பிரிந்து வந்த தலைவன் தோழியிடம் கூறினான் (ஐங். 325: 3,4). காதலியைப் பிரிந்து போதல கொடிதே என்று பிரிந்து செல்லும் தலைவனிடம் கூறாத குன்றுகெழு கானத்திலுள்ள பண்பற்ற விலங்கினங்கள் சிறிதும் அறமில்லாதன என்று தலைவி தோழியிடம் கூறினாள் (ஐங். 332). புணர்ந்த காதலியினும் தலைவன நெஞ்சம் தன புதல்வன முறுவலொடு இன்னகை பயிற்றிச் சிறுதேர் உருட்டும் தளர்நடையைக் கண்டு பெரிதும் விரும்பியது எனச் செவிலி நற்றாயிடம் கூறினாள (ஐங். 403). மைந்தன, தன் முன் விளையாட அதனைக் கண்டு தலைவன காதலியைத் தழுவி இனிது இருந்தனன் (ஐங். 406). தலைவன் தன்னை நயந்த காதலியைத் தழுவிக் கொண்டு பாணரது இசையின் பயன்தெரிந்து இனபுறு புணர்ச்சியை நுகர்ந்தான (ஐங். 407). புகழ்சால் சிறப்பினையுடைய காதலி புலம்பத் துறந்து வந்தனையே என்று பாசறைக்கண் இருந்த தலைவன் பருவவரவின்கண் தலைவியை நினைத்து நெஞ்சோடு புலந்து கூறினான் (ஐங். 445:1,2). பாணனே, யாம் விரும்புங் காதலி, காலம் நீட்டித்தோம என்று கொடுமை தூற்றி, வாடிய நுதலள் ஆகி எம்மை மாறுபட உணர்ந்து நோய்மிக, உடம்பு நனி சுருங்கி, நின்பாற் கூறி விடுத்த செய்தியை உரைப்பாயாக எனத் தலைவி தூதாய் விடுத்த பாணனைத் தலைவன் வினவினான் (ஐங். 478). நின் விருப்பத்திற்கிடனான காதலி தன் மனைக்கண் தனிமையுற்றிருந்து ஈரிதழ் உண்கண் சொரிந்த கண்ணீரின பூசலைக் கேட்டும் அவளுக்கு

அருளாதோய்; நினக்கு யாம் பாணரும் அல்லேம்; நீயும் எமக்குக் குருசிலை யல்லை என்று தலைவியின் தூதாய்ச் சென்ற பாணன தலைவனிடம் கூறினான் (ஐங்.480). வானம் மழை பெய்யத் தொடங்கி விட்டது; கற்பினால் உண்டான வெற்றியை யுடைய காதலியின் துன்பந் தீரும்படி தேரை விரைந்து செலுத்துக எனத் தலைவன் தேர்ப்பாகனிடம் கூறினான் (ஐங். 488).

**காதலோர் -** அன்புடையோர். இளவேனிற் காலம் வந்தது; நம் காதலோர் - அன்புடையோர் - இன்னும் வநதிலர் எனறு பருவங்கண்டழிந்த தலைவி தோழியிடம் கூறினாள் (அகம். 277:18-20). நம் காதலோர் வெஞ்சுரத்தில் தமியராய்ச் செல்வர் என ஊரார் கூறுவர்; அவ்வூராரே, பண்பில்லாத கோவலர் தாயைப் பிரித்துக் கட்டி வைத்த கன்று போல யாம் மிக நொந்து இன்னாதவற்றை மொழிதும் என்றும் கூறுவர்; அவர் இவ்வாறு மயங்கியது என்னையோ எனத் தலைவி தோழியை வினவினாள் (அகம். 293:9-14). மாலைக் காலத்தில் பலரும் புகுதற்குரிய வீட்டுவாயிலை அடைக்க எண்ணி வினவுவார் 'உள்ளே வருவீர் உளீரோ' என்று கேட்கவும் நம் காதலோர் வாரா ராயினர் எனறு தலைவி தோழியிடம் கூறினாள் (குறு. 118:2-5). நம் காதலோர் நிலத்தைத் தோண்டி உள்ளே புகார்; வானத்தின்கண் ஏறார்; பெருங்கடல் மீது காலினால் நடந்து செல்லார்;நாடுகள் தோறும் ஊர்கள் தோறும் குடிகள் தோறும் உள்ளாரை ஆராய்ந்து வினவின் அகப்படாது காணாமற் போவாரோ என்று கூறித் தோழி தலைவியை ஆற்றுவித்தாள் (குறு. 130). மின்னலிடையுடைய தலைவி நடுங்குதற்குக் காரணமான இறுதியிற் பெய்யும் மழைக்குப் பின் வரும் வாடை எபபொழுது வரும் என்பாயோ அப்பொழுது எம் காதலோர் வருவர் என்று, தோழி அறிவரைக் கண்டு தலைவன் குறித்த பருவ வரவு பறறி வினவினாள் (குறு. 277:5-8). முல்லை முகை மலர்ந்தமணம் செம்முல்லையோடு தேன் மணக்கும் வண்ணம் நெருங்கித் தோன்ற மேகம் காலமல்லாக் காலத்துப் பெய்யும் மழையை வம்ப மாரியன்று, கார்ப்பருவ மழை என்று கூறின், நம் காதலோர் வாராரோ என்று பருவவரவினால் துயருற்ற தலைவியைத் தோழி பருவமன்று என்று கூறித் தெளிவித்தாள் (குறு. 382). நம் காதலோர் மழை பெய்தலையுற்ற இருளின் நடுயாமத்தில் அவர் நம்மை முயங்கியிருப்பவும் நாம் குளிரின் கடுமையால் பெரிதும் வருந்தித் துயிலாதிருந்ததை அறிந்தும் கைவிட்டு அகன்றனர்; ஆதலின அவர் நம் மீது அன்பிலர் என்று தலைவி தோழியிடம் கூறினாள் (நற். 281: 7-11). சீறூரிலுள்ள நம் மனையகத்தைத் தலைவர் அறியின் நல்லதேயாம்; நம் காதலோர் நம்பால் நனிபேரன்பினர்; நடுயாமத்தில் நம்மை வருத்தும் துன்பத்தைக் களையினும் களைவர்; அவர் தாம் முன்பு வந்து நின்னை முயங்கி அகன்ற கானலிடத்துள்ள குறியை இப்பொழுது வந்து கண்டு நின்று அழிகின்றனர் போலும் என்று இரவுக்குறி உடன் பட்ட தோழி தலைவியிடம் குறிப்பாகக் கூறினாள் (நற். 392:6-11). கணவரைப் பிரிந்த மகளிரை வருத்தும் தண்பனியையும் வாடையையும உடைய அற்சிரப் பருவத்திற்கு முன்னரே காதலோர் வந்தனர் எனத் தோழி தலைவியிடம் மகிழ்ந்து கூறினாள் (ஐங். 223:3-5). நம் காதலோர் குவளையின் நறுமணம் கமழும் கூந்தலையுடைய தலைவியின் அழகு விளங்கும் நுதல் பசத்தலை அறியார் என்று தோழி தலைவியிடம் கூறினாள் (ஐங். 225: 2-5). புலம்புகொள் நெடுவரையைத் தலைவி காணின் கண் கலங்கி நீருகுத்தற்குக் காரணமான துன்பத்தைக் கருதிக் காதலோர் வந்தனர் (ஐங். 270:25). நம் காதலோர் மலைச்சாரற்கண் இலையுதிர்ந்து மலர்ந்த இலவம் அம்மலையில் தோனறுந தீயைப் போல் சுரத்திடத்துத் தோன்றும் பிரிதற்கரிய காலத்தினும் அரிதிற் பிரிதலில் வல்லுநராயினார் எனத் தலைவி தோழியிடம் கூறினாள் (ஐங். 338). காதலோர் யானை சினமிகுகின்ற வெஞ்சுரம் கடத்தற்கு அரிய என்றெண்ணாது விரைந்து வந்தனர் (ஐங். 352:3-5). குரவமும் கடம்பும் மலர்ந்து சுரனணி கொண்ட கானத்தைக் கண்டு செய்பொருட் செலவு அழுங்குக என உட்கொண்டு நின் அழகொழுகும் மாமை நிறம் ஒளிபெறக் காதலோர் வந்தெய்தினர் எனத் தோழி தலைவியிடம் கூறினாள் (ஐங். 357). நெல்லிக் காயைப் பலவின் கனியோடு உண்டு, செங்கடம்பின் நிழலில் தங்கிய மகன்றிற் பறவை போன்ற உடன்புணர் கொள்கையுடைய காதலோர் யார் கொல்; அவர் அளித்தக்கார் என உடன்போக்கின் கண் இடைச்சுரத்துக் கண்டோர் கூறினர் (ஐங். 381). நறுமலர்களைக் கவின்பெறத் தொடுத்து நின் கூந்தல் தகைகொளப் புனைய நம் காதலோர் வாராதிரார்; பகைவர் தேயத்து நன்கலன்களைக் கொணர்தல் வேண்டிக் காலம் நீட்டித்தார் என்று தோழி தலைவியிடம் கூறினாள் (ஐங். 463). நுணல் கறங்கத் தேரை தெவிட்டக் கார்காலம் தொடங்கியது; நின் பணைத் தோள்களைப் பொருந்தி விருந்தாதலை வேண்டிக் காதலோர் நெடுந்தேரைச் செலுத்தி இன்றே வருகுவர் எனத் தோழி தலைவி

யிடம் கூறினாள் (ஐங். 468). நின் தொல்கவின் அழிதற்கு அஞ்சிய காதலோர் நீ துன்பங் கொண்டு வருந்தப் பொருள்வயிற் பிரிதல் அன்பன்று எனக் கூறிய என சொல்லுககுக் கட்டுப்பட்டுப பிரியா தொழிந்தார் எனத் தோழி தலைவியிடம் கூறி னாள (கலி. 2:23-29). வேனில் விழாவை எதிர் கொள்ளும் இளவேனிற் செவ்வியும் வந்தது; ஆனால் நம் காதலோர் வந்திலர் என்று காலங் கண்டு ஆற்றாத தலைவியிடம் தோழி தானும் ஆறறாளாய்க் கூறினாள் (கலி. 36:9-11).

**காதலோள்** - அன்புடையோள். நம் காதலோள் - அன் புடையோள் - இருவேறு ஒழுகலாற்றை யறிந்த கள்ளத் தன்மை உடையவள்; நள்ளென் கங்குலில் மலையனது முள்ளூர்க் கானததின் நறுமணத்தைப் போனறு மணக்க வந்து நம்மோடு ஒத்தவளா யினாள்; வைகறைப் பொழுதில் யான் கூந்தலில் அணிந்த விரவு மலர்களை உதிர்த்துச் சாந்துளர் கூந்தலில் எண்ணெய் நீவிப் பொருந்தா முகத்த ளாகித் தமரோடு ஒத்தவளாயினாள் என இரவுக் குறி வந்து மீளும் தலைவன் தன்னெஞ்சிற்குக் கூறி னான் (குறு. 312). உறுதுயர் அவலத்தோடு உயிர் செல்ல மெலிந்து பாழ்படு நெஞ்சம் பிரிவு நோயால் கலங்கக் காதலோள் காடிறந்தனள்; நும் மகள் மேல் வைத்த விருப்பு தெறுகின்றது என்று தலைவி புணர்ந்துடன் போகியவழிச் செவிலியிடம் நற்றாய் கூறினாள (ஐங். 313).

**காதலோன்** - அன்புடையோன். காதலோனாகிய - அன் புடையோனாகிய - என் புதல்வன் தெண்கடற் சேர்ப்பனாகிய தன் தநதையோடு வாராது தனித்து வந்தனன் என்று வாயில வேண்டி ஒழுகும் தலைவன புதல்வன் வாயிலாக வருமெனக் கேட்டு அஞ்சிய தலைவி புதல்வன் விளையாடித் தனித்து வநதவழி மகிழ்ந்து கூறினாள் (ஐங். 157:4,5).

**காதற்காமம்** - காதலையுடைய காமம். காமத்திற் சிறந் தது காதற்காமம் - காதலையுடைய காமம் - ; அது தான் மெய்யுற்று அறியார் இருவர் அன்பொத்து ஊழ்வகையினாலே தாமே மெயயுற்றுப் புணரும் புணர்ச்சியாகும் (பரி. 9:14,15).

**காதற்கிழமை** – அன்புரிமை. 'தனது பெயரைப் பிறர்க் குச் சொல்லும்போது, என்னுடையபெயர் பேதை மையுடைய சோழன் என்று எனது பெயரைத் தனக்குப் பெயராகக் கூறும் சிறந்த காதற்கிழமை – அன்புரிமை - உடையவன்' என்று வடக்கிருந்த கோப்பெருஞ்சோழன் பிசிராந்தையார் குறித்துப் புகழ்ந்து கூறினான் (புறம். 216:8-10).

**காது** – 1. செவி. சூரரமகளிர் தம் வளப்பமான காதிலே - செவியிலே - தம்மில் ஒத்தற்குப் பொருந்த இட்டு நிறைந்த பிண்டியின் ஒண்டளிர் அவர் நுண் பூண் மார்பகத்தே அசைந்தது (முரு. 30-32,41). பேய்மகள் பிதுங்கிய கண்ணை யுடைய கூகை யோடே கடிய பாம்பு தூங்குதையினாலே பெரு முலையிடத்தே வீழந்து வருநதுகினற காதினை உடையவள (முரு. 49-51). வேலன் அசோகினது குளிர்ந்த தளிர் அசையும் காதினன் (முரு. 207). பாடினி மயிரை வெட்டுகின்ற கத்தரிக் கோல் னுடைய குழைசசை யொத்ததும் பொலிவினை யுடைய மகரக் குழையினுடைய அசைவினைப் பொறுத்த லமைந்ததுமாகிய காதினை உடையவள் (பொரு. 29,39). பேய்மகள் வெள்யாட்டுமறிகளை அணிந்த காதினை உடையவள் (சிறு. 197). ஆய் மகள் சிறுகுழை அசையும் காதினை உடையவள் (பெரு. 161,162). ஆய்தொடி மகளிர் ஒள்ளிய மகரக் குழை பொருந்திய வளவிய தாழ்நத காதினை உடையவர் (மது. 709,712). துணை துறந்து புலம் பொடு வதியும் அரிவை ஒளிமிக்க மகரக்குழையைக் களைந்ததால் சிறிதே தாழநது குறுங்கன் தாளு ருவி அழுத்திய காதினை உடையவள் (நெடு. 137-140). தலைவன தோளிலே வீழநது அலைககும்படி செந்தீப் போனற ஒளிமிக்க பூவினையுடைய அசோ கினது அழகிய தளிரைத தோளிலே கிடந்து அலைக்கும்படி ஒரு காதிலே செருகிவந்தான் (குறி. 118-120). சிவந்த மணிகள் பதிதத ஒணகுழை வள விய காதில் அசைய அகமலி உவகையளாய்த் தலைவி தலை தாழ்ந்தாள (அகம். 86:27-29).எம்முடைய காதில உள்ள பொன்னாற் செய்த குழையை அசைநது சென்று மீளுநதோறும் எம்முடைய பூவில்லாத வறுஙகூநதலில நின்னை வைத்துக்கொள்வது, நுந்தையின மார்பிலுள்ள கோதையைப் பரத்தையா வருந்தும்படி நீ அறுத்து விளையாடுவதறகேயாம் எனத் தலைவி புதல்வனிடம் கூறினாள் (கலி. 80:22 26). இணர் களில் மொயத்த வணடுகள மகளிரைச சூழ்ந்து மொய்த்தலானே ஏற்பட்ட பூசலில் ஒருத்தியின் நெற்றியில் கிடந்த முததுவடம வேறொருத்தியின் அழகிய விளங்கும் காதிற் கிடந்த மகரக்குழையில் சிக்கிககொண்டது (கலி. 92.35,36). பரத்தையாகிய குதிரை மெல்லிய காதிற் கிடக்கும் புல்லிகை (கன்னப்பூ) என்னும் பூணாகிய கீழே தொங்கும் இயல்புடைய கன்னசாமரை (குதிரை காதிலணியும் சாமரை எனும் அணி) உடையது என்று பரத்தை குதிரையாக உருவகிக்கப் பட்டுள்ளாள் (கலி. 96: 11,12). ஆயர்மகளிர் விளங்கும் பொன்னாற்

செய்த மகரக்குழை யணிந்த காதினை உடையவர் (கலி. 103.8). வையைப புதுப்புனல் தன்பால ஆடிய மகளிரின காதினகண தளிரைச் செருகியது (பரி. 7: 43-45). தைந்நீராடும்போது தன் செவியில் நீல மலரை அணிந்து கொண்ட ஒருத்தி அசோகந்தளி ரைக் காதில செருகிக கொணடிருந்த மற்றொருத் தியை நோக்கினாள, அவ்வசோகந்தளிரின் ஒளி யால அவளணிநத நீலமலர் இளவெயிலைப் போல் ஆனதைக் கணடு அம்மற்றொருத்தி அவளது குழைக் காதினையுடைய கோலச் செவியில் நீல மலரைச் செருகி நான்கு விழிபடைத்தாள என்று கூறினாள் (பரி. 11.93-98). சிவந்த பொன்னாலான குழைபோல் தொங்கும்படி ஒரு பெண் அசோகினது சிவநத புதுமலரைத் தன காதிலே செருகிக் கொண்டு பூங்கொடிபோல அசைநதாடினாள (பரி. 12·87-92). கடிப்பு என்னும் அணியிட்டுத் தாழ வளர்தத காதில் கனங்குழை அணியும் பொருட்டு, மகளிா வளையணிந்த கையினை மேலே உயர்த் துதலான எழும் வளையொலிக்கு அஞ்சி மாலையை மொயத்த வணடினங்கள் பறந்தோடின (பரி. தி. 1:30-33). மதுரை, கொடித் தேரானது (பாண்டி யனது) தமிழமொழி உளதாகும் காலமளவும், கார்த் திகை மகளிரின காதிலிடபபட்ட கன மகர குண்ட லம் விளஙகுதல போல் சிறந்து விளஙகிச் செல்வத் தாற் பொலியும் (பரி. தி. 10).

2. கவண்காது. பருந்து வீழந்தெடுத்த பைந்தலை அரவம் காதறற கவண போன்று காணபபட்டது (ஐங. தி. 1:2,3).

காந்தள் – கொடிவகை. உடைந்த வளையை ஒப்ப மலா்ந்த வெணகாந்தள் காட்டு மல்லிகையுடன் சேர்ந்து மலைசசாரலில் மணம் பரப்பியது (புறம். 90:1,2). பேகன மனைவி காந்தள் மொட்டுப் போலும் விரலாலே தன கண்ணீரைத் துடைத்தாள் (புறம். 144 8,9). மலைச்சாரலிடத்து மலர்ந்த காந்த ளினது கொழுங்கிழங்கு பிறழக கிளறிக கேழற் பனறி தன இனத்துடன உழுத புழுதிக்கணணே குறவர் சிறுதினை விதைத்தனர் (புறம. 168:2-6). இமையவரம்பன் நெடுஞ்சேரலாதனின பகைவர் நாட்டில் வேளைக் கொடியும சுரைக் கொடியும் தழைத்து வளரப பீர்க்கங் கொடியேறிப் படர்ந்த நீரறற உழுசாலகளில சிவந்த காநதட் கிழங்கு சிதைந்தது (பதி. 15:8-11). அசைகினற காந்தள் மலர் விளங்கும் நீர்ப்பரப்பில் முளைத்த மூங்கிலை யொத்த தோளையுடையவள் சேரமான்தேவி (பதி. 31: 36 - 38). கொலைவில் வேட்டுவர் காந்தளங் கண்ணி சூடினர் (பதி. 30:9). மலையில் மலர்ந்த காந்தள் மலரை இது தெய்வத்திற்கு உரிய தென்று அறிந்தும் அதனிடத்தினின்றும் நீங்கா மல் ஊதிய விரைந்து பறக்கும் தும்பி (அம் மலரின் தெயவத் தன்மையால) பறத்தல் இயல்பு கெட்டது (பதி. 67: 19 - 21). செழுங்குடிச் செல்வர் காந்தட் பூவாலாகிய கண்ணியை அணிந் தனர் (பதி. 81:22). செவ்வேள் சுரும்பினம் மொய் யாத நெருப்புப்போலும் பூவினையுடைய காந்த ளினது பெரிய குளிர்ந்த கண்ணியைச் சூடிய திருமுடியை யுடையவர் (முரு. 43,44). பாடினி நெடிய மலையின் உச்சியிடத்திலுள்ள காந்தள் போலும் மெல்லிய விரலினள் (பொரு. 33,47). பாக்கம், காயினையுடைய தென்னை, குலையினை யுடைய வாழை, கொழுவிய காந்தள் முதலான வற்றை யுடையது (பொரு. 208-210). செழுங்குலை யினையுடைய காந்தள கைவிரல் போலப் பூத்தது (சிறு. 167). நீண்ட பூஙகொத்துக்களையுடைய காந்தள் மிக்க பக்கமலையில் களிறு கிடந்தாற் போன்று பாம்பணையாகிய படுக்கையிலே துயில் கொண்டவர் (திருமால) (பெரு. 371-373). தலைவியும் தோழியரும் பறித்துக் குவித்த குறிஞ்சி நில மலர் களுள பெரிய இதழையுடைய ஒள்ளிய சிவந்த காந்தட் பூவும் ஒனறாகும் (குறி. 61,62). விண்ணைத் தீண்டுகினற சிகரங்களிலே கிளைத்த காந்தளி னுடைய குளிர்ந்த மணக்கின்ற பூக்கள் வரையர மகளிர் பரந்து விளையாடுதலின் தன்நலம் சிறிது கெட்டுக் கீழே வந்து பரந்து கச்சுப்பரந்த களம் போல அழகுபெறப் பொலிவுறுத்தும் (குறி. 195-198). மகளிர் மலைப்பக்கத்தே மெல்லிய தேன் துளிக்கும் காந்தளினது அழகிய கணணிடத்து இணைந்த குலையை யொத்த செறிநத தொடி யினையுடைய முன கையினைக் குவிதது வணங்கி னர் (பட். 150–154). நெருப்பினை யொத்த ஒள்ளிய செங்காந்தளின் மழையாலே செருக்கி வளர்ந்த புதிய முகையைத் தசையாகக கருதி எடுத்த பருந்து ஊன் அன்மையின உண்ணாது பாறைகள்மீது உகுத்ததனால் அவை நெருப்பினை யொத்த பல இதழ்கள் பரந்து வெறியாடுகின்ற களத்தை யொத்தன (மலை. 145-150). கானவரின் சிறார் உண்டு கழித்த பலாப்பழத்தின் விதையைப் பயன் கோடற்குக கன்றுகளைப பிணைத்துக் காந்தளின் துடுப்புப் போலும் கமழுகின்ற மடலாலே யடித்துக் கடாவிடுவர் (மலை. 336-339). நன்னன் வேண் மானின அரண்மனை வாயிலில் காணப்படும் பல்வேறு வகைக் கையுறைப் பொருள்களுள் வளை யுடைந்தாற் போன்ற வளவிய இதழையுடைய வெண் காந்தட் பூவும் ஒன்றாகும (மலை. 519).

தலைவி உறையூர்க்குக் கீழ்பாலுள்ள நெடும் பெருங்குன்றத்தினகண்ணே நெருங்கிய காந்தளின் போது விரிநத மலரென மணக்கும் சிறந்த அழகினை உடையவள் (அகம்.4:14-17). தலைவியின் தடமென்தோளை எம் படப்பையை அடுத்துள்ள தேன் இழைத்த உயர்ந்த மலையிடத்துப் பழங்கள் தொங்குகின்ற மரச்செறிவினுள் காந்தள் மிக்க புதரிடத்துப் பகற்காலத்தில் நீ வரினும முயங்கு வாய் எனத் தோழி தலைவனிடம் இரவுக்குறி மறுததுப் பகற்குறி நேர்ந்தனள் (அகம். 18:13-18). முனபனிக் காலத்தில் மூங்கிலின அழகிய மலர்கள் உதிரவும் காந்தளின் நீண்ட இதழையுடைய பெரிய மலர் முறியவும் வாடைக்காறறு தணணென வீசி யது (அகம. 78:8-10). நாளைப் பகற்கண மநதியும் அறியா மரமபயில் கானத்தில் ஒளளிய செங்காந் தள மலர்ந்த அவ்விடத்தே அருவிகள் இழிதரும் சுனையின ஒருபுறம் தலைவியின் மென்கூநதல கத்து இன்பத் துயிலை அடைவாய் எனத் தோழி தலைவனிடம் கூறினாள் (அகம். 92:7-13). மயிலைக் கண்டஞ்சிப் பாமபு படத்தை விரிப்பது போல் காயாவின் மெனசினைக்கு அயலே நீண்டு தூக்கிய பல துடுபபுகள் போலும் அசையும் குலைகளை யுடைய காந்தள் விரிந்து மலர்நதன (அகம. 108:12-16). சுனையில் குவிந்த அரும்பினை விரித்த வண்டு வேங்கை மலரின தாதினை ஊதி, காந்தளின் தேன் பொருந்திய குவிந்த குலையில் உறங்கி, யானையின் கன்னத்தில் தோனறும் மதத்தினை உண்பதாகக் கனவு காணும் (அகம. 132:9-13). காந் தளின் கொழுவிய மடலையுடைய புதிய பூவினைத் தும்பி ஊதும் (அகம். 138:17,18). தலைவியின் தோள் நள்ளியின் சோலை அடுக்கத்தே வண்டுகள் உண்ண விரிந்த கடவுள் சூடுதற்குரிய காந்தட் பூவுள்ளும் வியபபு மிக்க அழகிய மலர் பலவும் ஒருங்கு கமழுவது போல மணக்கும் (அகம். 152:15-18). நள்ளியின் பக்கமலைகளில் பனையின் அடிப் பக்கததே நிலைபெற்றுள்ள காந்தளின் மெல்லிய பிணிக்கப்பெற்ற அரும்புகள் இதழ் விரிந்து மலர்ந்த தண்கமழ் புதுமலர் போலத் தலைவியின் நறுநுதல் மணங்கமழும் (அகம். 238:14-18). சீறூர் காந்தட் பூக்களையுடையது (அகம். 312:5). பசும்பூட் பாண்டி யனது அணங்குடை பொதியிலின் பக்க மலையி லுள்ள கிளைத்த ஒளி பொருந்திய காந்தட் பூப் போல மணக்கும் நறுநுதலை உடையவள் தலைவி (அகம். 338:5-7). மலைப்பக்கத்தே காந்தளையுடைய அழகிய சோலை உள்ளது (அகம். 368:8). சேய் (முருகன்) குன்றம் குருதி போன்ற சிவப்பாகிய பூங் கொத்துள்ள காந்தளை உடையது (குறு. 1.3-4).

தலைவர் காநதளை வேலியாக வுடைய ஓங்கு மலை நன்னாட்டிடத்து எனனைப் பிரிந்து போவா ரெனறு கூறுகின்றனர் எனத தலைவி தோழியிடம் கூறினாள் (குறு. 76:1,2). தலைவி ஆயினது பொதி யின மலையிலுள்ள வேங்கை மலரினது மணத்தை யும் காந்தள் மலரினது மணத்தையும் வீசி ஆமபல மலரினும் தணணியள் (குறு. 84:3-5). சிறுகுடி காந்த ளையே இயற்கை வேலியாக உடையது (குறு. 100:3). தலைவி காந்தள் மலரைப போனற மெல்லிய விரலை உடையவள் (குறு. 167:1). பாமபினது படம் ஒடுங்கியதைப் போலக் குவிநது கொண்டற் காற றால் வீழ்த்தப்பட்ட ஒள்ளிய செஙகாந்தள் மலர்கள் பாறையின்மீது கவிநது கிடந்தன (குறு. 185.5-7). பக்கமலை முழுவதும் மணம வீசும் அசைகினற கொததுக்களில உளள காந்தட் பூவின நறுநதா தைத் தும்பி ஊதும் (குறு. 239.3,4). மாரிக் குனறத் திலுள்ள அருவிககு அருகில் பொருந்திய தணணிய நறிய காநதளரும்புகள விரிநது அமையாதனவாய மணம் வீசுகினற நறுநுதலையுடையவள தலைவி (குறு. 259:1-3). காந்தளின அழகிய கொழுவிய அரும் பைத் தானாக மலரும் வரையில காதது நிலலாத வண்டுகள் அதன் மூடிய இதழகளைத திறக்கும சமயத்தில் முன்பு தாம் அறிந்த நடுநிலைமை யுடைய சான்றோரைக கண்ட கடனறிமாககள போல இடங்கொடுதது அவ்விதழ்கள பிணிபப விழ்ந்தன (குறு. 265:1-5). போர் செய்த யானையி னது புகர் முகத்தை யொப்ப மன்றத்திலுள்ள துறு கல்லின் மீது பல ஒள்ளிய செஙகாந்தள் மலர் ஒருங்கே மலர்நதன (குறு. 284: 1-3). தலைவரது மலையில் மாலைப் பொழுதில பெய்த மழையி னால் உண்டாகிய நறுமணங கமழும் ஆற்றோடு காலையில வந்த காந்தளினது முழுச் செடியினை அதன் மெல்லிய இலை குழைய முயங்குதலையும் வீட்டிற் கொணாநது அதன கிழங்கை நடுதலையும் விலக்காத அனனைக்குக் கைம்மாறாகக் கருது மிடத்து உயர்நிலை யுலகமும் சிறிதாகும் எனத தலைவி தோழியிடம் கூறினாள் (குறு. 361). ஆண் கருங்குரங்கு தோண்டியதனால உடைநத பூநாறு பலவினது பழம் காந்தளஞ் சிறுகுடியிடத்தே மணக் கும் (குறு. 373:5-7). சாரல் மலர் தலைகவிழ்ந்து பெரிய இதழ் விரிந்த காந்தளை யுடையது (நற். 14:6,7). சாரலில் காந்தளின் தேனையுண்ட நீலமணி போலும் நிறத்தையுடைய தும்பி யாழிற் கட்டிய இனிய நரம்பு போல ஒலிக்கும் (நற். 17:9-11). அழல் வீசும் நெடுவழியில வேனில் நிலைபெற்றி ருந்தமையான் காந்தள் காய்ந்து வாடியது (நற். 29:1,2). சூரரமகள் கடவுட் கற்சுனையில் மலர்ந்த

குவளை மலரொடு குருதி போன்ற காந்தளின் ஒள்ளிய மலர்களை வடிவு விளங்கக் கட்டிச் சூடிப் பெருவரை யடுக்கம் பொலிய அருவியின் இன்னிய ஓசையில ஆடினாள் (நற். 34:1-5). கானவன் எய்து கொணர்ந்த பனறியின இறைச்சியைக் கொடிச்சி காந்தளஞ் சிறுகுடியில் உள்ளார் பலர்க்கும் பகுத்துக் கொடுத்தனள் (நற். 85:8-10). காந்தளின் வளவிய இதழ்கள் சங்கு உடைநது கிடந்தாற் போலக் கிடக்குமாறு குதிரையின் கவிந்த குளம்பு மிதித்து அறுத்தது (நற். 161:6,7). நெடுவேளுக்கு மலையிலுளள செங்காந்தள் மலரைக் கொய்து கண்ணியாக அமைத்து அன்னை சூட்டினாள் (நற். 173: 2,9). யானையின் முகத்திலுள்ள கோடு போலப் போது மலர்ந்த ஒள்ளிய செங்காந்தள் வாழையஞ் சிலமபை மணங் கமழச் செய்யும் (நற். 176:5-7). வண்டுகள் அகன்ற இலையையுடைய காந்தளின் அசையும் குலையிலே பாய்ந்து தேனைக் கொண்டு வந்து மலையில தேன்கூடு கட்டின (நற். 185:8-10). மலைப்பக்கததில் செழிதத வாழையின் கொடு மடலினின்று வெளிவந்த கூர்வாய்க் குவிமுகை; ஒள்ளிழை மகளிரின் இலங்கு வளையோடு பிணிபபுற்ற மென்விரலில் அணிந்த மோசை (அணி) போலக் காநதளின வளவிய இதழிலே தோயந்தது (நற் 188 1-5) வலிமையுடன் முரண் மிகச் சினந்து புலியைக் கொன்ற யானையின சிவந்த கொம்பைப் போல மலையில் செவ்விய புறத்தையுடைய கொழுவிய அரும்பவிழ்நத காந்தள் தோன்றியது (நற். 294:5-8). மலைச் சாரலின் கண் காந்தளின் கமழ்கின்ற குலை மலர்ந்தது (நற். 313:6,7). புதல்வனை ஈன்ற மடந்தை முலையைத் தன் கையினால் பிடித்துப் புதல்வன் வாயில் வைத்துப் பாலூட்ட அக்குழந்தை பால் குடிப்பது போலக் காநதளின் பூங்கொததோடு பொருந்திய கொழுமடல் உள்ள வாழைப்பூவின மடலினின்று இழிதரும் இனிய நீரைச் செம்முக மந்தி பருகும் (நற். 355.1-5). மலையில் மேய்ந்த சிவந்த பசு, அசைகினற குலையையுடைய காநதளைத் தீண்டித் தாதுககள உதிரப் பெற்று நிறம் வேறுபாடுற்ற மையின அதன கனறு அதனைத் தன் தாயென்றறியாது மருணடது (நற். 359:1-3). குரங்குக் குட்டி வேங்கைக கிளையிலிருந்து தலைவியின் கையகத் திருநத தீம்பாலைக் கவர்ந்து கொண்டமையின் அழுது ஆற்றாது அழகிய வயிற்றிலே அடித்துக் கொணடதனால் அவளுடைய விரல்கள் பொதியின் மலையிலுள்ள பூத்த காந்தளங் கொழுமுகை போன்று சிவநதன (நற். 379). அருவி ஆர்க்கும் நெடுவரை அடுக்கத்தில் குருதி போன்ற கமழ்கின்ற காந்தள் மலர்கள் வண்டுகள் உண்ணும்படி மலர்ந்தன (நற். 399:1-3). தலைவியின் கவினைக் கவர்ந்து கொண்ட தலைவன் மணக்கும் காந்தட் பூங்கொத்தில் தேனுண்ட வண்டு போன்று பிரிந்து போய், புறம் மாறி, மீண்டும் வந்தனன் (ஐங். 226). தலைவி காந்தள் நாறும் வண்டுகள் இசைக்கும் சுடர் நுதலை உடையவள் (ஐங். 254:2,3). தலைவி மலர்ந்த காந்தட் பூவினது மணங் கமழ்ந்து கலங்கிய கண்ணையுடையவள் (ஐங். 259:5,6). மலையிட மெங்கும் மணங்கமழ்கின்ற காந்தளினது நறிய பூங்கொத்தைப் போன்ற நலம்பெறு கையினள் தலைவி (ஐங். 293:1,2). கண்டவர் கண்ணைக் கவரும் கரிய மலையிடத்துக் காந்தள் மணம் கமழும் (கலி. 39:15). கொடிச்சியர் மலையைத் தொழக் கூப்பிய கை போல உயர்ந்த நறவினை யுடைய கொத்துக்கள் அசையுங் காந்தளிடத்துத் தொடுத்த தேன் ஒழுகியது (கலி. 40:11-13). தும்பி மகளிர் கையிலிட்ட தாள் கூட்டாகிய நீலக்கடைச் செறி என்னும் அணி போலக் காந்தளின் முகை மேலிருந்து அது அலரும் காலத்தைப் பார்த்திருக்கும் (கலி. 43:8,9). பாறையின் சுனையிடத்தே அழகு பெற்று வளர்ந்த காந்தளின் அழகிய குலையினைப் பாம்பு நீருண்டலாகக் கருதி உருமேறு இடித்தது (கலி. 45:1-5). தன் பகையானையின் நுதலைக் குத்திப் புண் செய்த வேழத்தின் குருதி படிந்த கோடு போன்ற உயர்ந்த முகையினையுடைய நறிய காந்தள் நாடோறும் புதிய அரும்புகளை ஈன்றது (கலி. 53:3-5). பகக மலையெல்லாம் மணக்கும் கூரிய அழகினை யுடைய அலர்களைக் கொண்ட காந்தளின் குளிர்ந்த எழுச்சியுடைய வடிவினைக் கொண்ட துடுப்பென்று கூறும்படியாகத் திரண்ட இணையொத்த முன்கையினை யுடையவள் தலைவி (கலி. 59:3,4). பரங்குன்றிற்கும் கூடலுக்கும் இடைபபட்ட வழியெல்லாம் மலர்ந்த காந்தட் பூவால் மணம் கமழ்ந்தது (பரி. 8:25,28). வேங்கை, கூட்டமாக மலர்ந்த காந்தள் முதலான மலர்களை அருவி கொண்டு வந்து திருமருதத் துறைக்கண்ணே சேர்த்தது (பரி. 11:20-30). நீர்நிலையின் பக்கத்தே தழைத்த நெரிப்புடைய அரும்புகளைக் கொண்ட காந்தளின் அவிழ்ந்த வள்ளிதழ தோறும் தோன்றியின் (செங்காந்தளின்) சிவந்த மலர் பரநது பரங்குன்றம் காாகாலத்தன்மை மிக்கது (பரி. 14:13-17). கார் காலம் தோற்றுவிக்கும் காந்தட் குலைகள் போரில் தோற்றுக் கட்டுண்டார் கையை ஒக்கும்; தும்பி கட்டவிழ்ப்பனவாகிய கவினையுடைய காந்தள் முகைகள் யாழ் நரம்பினது புரியை நெகிழ்ப்பார் கையை

ஒத்தன (பரி. 18:34-37). கமழ்குலைக் காந்தள் மகளிரின் கை போல் மலர்ந்தது (பரி. 19:76)

**காப்பாள் - காவலாள்.** 'மழைக்காலத்தில் நீர் நிறைந்த குளத்தைக் கரையுடையாமற் பாதுகாக்கும் காப்பாள் - காவலாள் - போன்றவனாய் இரவுக் குறியில் நிற்கும் தலைவனைக் காண்பாயாக' என்று தோழி தலைவியிடம் கூறினாள் ('மாரிக் குளத்துக் காப்பாள்' என்றும் பாடம் உண்டு) (ஐங். 206:1,2).

**காப்பாள - காவலாள** (காப்பாளன் என்பதன் அண்மை விளி). படைப்பெருமை காரணமாகப் பகைவர் அஞ்சும் படியான மதிப்புடைமையால் இடத்தைக் காக்க வேண்டாது பரந்து கிடக்கின்ற அகன்ற பாசறையின் காப்பாள - காவலாள - என்று சேரமான் யானைக்கட்சேய் மாந்தரஞ்சேரலிரும்பொறையைக் குறுங்கோழியூர் கிழார் விளித்துப் பாடினார் (புறம். 22:24,25).

**காப்பியஞ் சேந்தனார் - புலவர்.** காப்பியக் குடி மரபில் வந்த சேந்தனார் என இவரது பெயர்க்கு விளக்கங் காண்பர். இவரைக் காப்பியன் என்பார்க்கு மகனாராகிய சேந்தனார் என்றும் கொள்ளலாம் என்பர் பி. நா. (நற்றிணை, பாடினோர் வரலாறு). இவர் பாடியது நற்றிணையில் 246-ஆம் பாடலொன்றே யாகும். தலைவனது பிரிவிடை மெலிந்த தலைவியைத் தோழி வற்புறுத்தியதாக அப்பாடல் அமைந்துள்ளது. 'உரம்புரி உள்ளமொடு சுரம்பல நீந்திச் செய்பொருட்கு அகன்றனர்' என்ற அடிகளால் தலைவனின ஆள்வினையுடைமையினை இவர் சிறப்பித்துக் கூறுவர். 'பொன்வீக் கொன்றையொடு பிடவுத்தளை யவிழ, இன்னிசை வானம இரங்கும்' என அவன மீளுதற்குரிய பருவ வரவினைத் தலைவிக்குத் தோழி காட்டுவது இவரது இனிய புனைவாகும். நெடுஞ்சுவர்ப் பல்லி பாங்கில் இசைத் தலையும் இப்பாடல் குறிக்கும்.

**காப்பியாற்றுக் காப்பியனார் - புலவர்.** இவர் காப்பியாறு என்னும் ஊரினர் எனச் சங்க இலக்கியம் வை.பி. பதிப்புக் கூறும். காப்பியன் என்னும் பெயர் கொண்டு இவர் காப்பியக் குடியினராகக் கருதப்படுகிறார் (ப. மு.). காப்பியன் என்பது இவரது இயற்பெயராகவும் இருக்கலாம். இவர் பாடியனவாய்ப் பதிற்றுப் பத்தின் நான்காம் பத்துப் பாடல்கள் உளளன. இவர் களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரலைப பாடி நாற்பது நூறாயிரம் பொன்னும் அவன் ஆள்வதில் பாகமும் பரிசிலாகப் பெற்றார். இவர் தம் பாடல்களை அந்தாதித் தொடையும் அழகிய நடையும் அமையப பாடியுள்ளார். வறுமையால் தளர்ந்த குடிகளின் தேய்ந்த ஒழுக்கம் நிறைவுற்றதற்குக் கலைகள் தேய்ந்த மூன்றாம் பிறை நிறைவுற்று முழுமதியானதையும் (பதி. 31: 12,13) குருதிபரந்த போர்க்களத்துக்கு அந்தி மாலையின செக்கர் வானத்தையும் (பதி. 35: 7, 8) இவர் உவமை கூறியுள்ள பகுதிகள் நயமானவை. சேரனது நார் முடியில் தொடுக்கப்பட்ட முத்து வடங்களுக்குச் சிலந்தி வலையை உவமை கூறும்போது வறிதே சிலந்தி வலை யென்னாமல் புறாக்கணம் தம்மை அகப் படுக்கும் வலையென்று மருண்டு அலறுதற்கேதுவாக வேல மரத்தின் உலவைக் கிளைகளில பின்னபபட்ட சிலந்திவலை எனக் கூறுவது (பதி. 39: 11-17) இவர்தம் புனைவாற்றலைப புலபபடுத்தும். இவர் பாடல்களில் களஙகாய்க் கண்ணி நார் முடிச்சேரலை யன றியும் கடவுளஞ்சி (பதி. 31: 18), வண்டன் (பதி. 31: 23), நெடுமிடல அஞ்சி (பதி. 32: 10), நன்னன் (பதி. 40:14) ஆகியோரைப் பற்றிய குறிப்புக்களும் உள்ளன.

**காப்பு - காவல்.** 'பகைவரது காப்புடைய - காவலுடைய - கணைய மரத்தைக் கொல்களிற்றினால் முறித்து அங்குசத்தால் அக்களிற்றினை 'முன்னர்க் கடாவி அது செய்யும் வினையைப் பினவேண்டுமளவில் பிடிக்க நின் பெரிய கைகள் வலிமையுடையனவாம்' என்று கபிலர் சேரமான் செல்வக் கடுங்கோ வாழியாதனது கைவலிமையைக் கூறினார் (புறம். 14:1-4,11). பாண்டியன் பலயாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி தன் களிறுகளைப் பகைவரின் காப்புடைய கயங்களில் படிவித்தான் (புறம். 15:9,10). புதிய பறவைகள் தன்னாட்டிற்கு வரினும் பழைய பறவைகள் தன்னாட்டை விட்டுப போகினும் அவற்றால் நடுக்கமுறாத ஏமக் காப்புடையவன சேரமான் யானைக்கட் சேய் மாந்தரஞ் சேரலிரும் பொறை (புறம. 20:18,19). சேரமான் யானைககட்சேய் மாந்தரஞ்சேர லிரும் பொறை தங்கியிருந்த பாசறையில் அவனது வானமதி போலும் வெண்கொற்றக்குடை நிழலில் தம்பக்கத்து வாளில்லாத வீரர் அக்குடையே காப்பாக உறங்குவர் (புறம். 22:11-13). அதியமான் நெடுமானஞ்சி போர் செய்தற்கு உறையினின்று கழித்த வாள்கள் பகைவரது காப்புடைய மதிலை யழித்தலால் அப்பகைவர் தசையில் பொருந்தப் பாய்ந்து கதுவாய் மிக்கு வடிவிழந்தன (புறம். 97: 1-3). களததின்கண் நிறைந்த நெற்பொலிகள் காப்பிலவாய்க் கிடக்குமாறு பகையைக் கடிந் தோட்டிய செவ்விய ஆட்சியினை யுடையவன் அதியமான் தகடூர் பொருது வீழ்ந்த எழினி (புறம். 230:3-6). 'நொச்சியே, காப்புடைய எயிலிடத்து

நின்று பகையையழித்தலால் நகர்ப்புறத்தைக் கை விடாது காக்கும் நெடுந்தகையினது பெருமை பொருந்திய தலையி லணியப்படும் உரிமையும் நினதே' என்று மோசி சாத்தனார் பாடியுள்ளார் (புறம். 272:1,6-8). நெடிய மதில்களையும் அவற்றின் மேல் வரிசைப்பட அமைந்த ஞாயிலகளையும் மிக்க காவலமைந்த காவற்காடுகளையும் ஆழ்ந்த அகழி களையும் கொண்டு உயர்ந்த அரிய அரண்களால் காப்புடைய நாடுகளில் பகை மன்னர் நடுங்குமாறு சேரனது படைகள எழுந்தன (பதி. 8. 2:11-16). கோவலரது முல்லை நிலத்து ஊரிலுள்ள குடில், ஆட்டுக்கிடாயின தோல்களைப் பாயலாக இட்டு முதியோன் துயில் கொள்ளும் காப்பினையுடையது (பெரு. 148-151, 166). அமரர் காப்பினால் கடலில் கலங்களில் வந்த குதிரைகள் முதலான பலபொருள் களும் காவிரிப்பூம் பட்டினத் தெருக்களில் நிறைந் திருக்கும் (பட். 184-193). காட்டிலே தம் கணவர் மார்பில் புலி பாய்ந்ததனால் பட்ட நெடிய பிளப் பினையுடைய விழுப்புண்ணை ஆற்றுதற்குக் காப் பெனக் கருதிக் கொடிச்சியர் பாடுவர் (மலை. 302-304). 'நீ காப்பும் பூண்டனை; இனி, நம் வாயி லகத்தும் போதலாகாது, நீ பேதை அல்லை; பெதும் பைப் பருவமும் கடந்து விட்டாய் எனச் செவிலி தலைவிக்கு அறிவுறுததினாள் (அகம். 7:5). காவல் மிகக தந்தையது பெரிய மனையின் செறிந்த காப் பினைக் கடந்து தலைவி தலைவனுடன் போனாள் (அகம். 15:11,12). தலைவியது மனையெல்லை காப் புடையது (அகம். 34:13). அஃதை யென்பானுக்குத் துன்பம் நேர்ந்த காலத்தும் அவன்பால் நட்பிற் கோடாத கோசர் அவனைப் போற்றிக் காப்பு மிக்க இடததிலே நிலை நிறுத்தினர் (அகம். 113: 1-5). அணுகுதற்கரிய மிக்க காப்பினை யுடையது தலைவியின மூதூர் (அகம். 114:12). தன் பிடிப் பினின்று தப்பிய வயப்புலியை நிலங்குழியுமாறு குத்திக்கொன்ற அண்ணல் யானை செருக்குடன் சென்று தேக்கமரச் சோலைக் காப்பில் தங்கி யிருக்கும் ('காப்பில வைகும்' எனபதற்குக் 'காப்பில வைகும்' என்னும் பாடமுண்டு) (அகம். 251:15-18). 'தலைவியின் தந்தையது காப்பு மகளிரே உறையும் மாங்காட்டின் (தெய்வக்) காவலையொத்தது' என்று தோழி தலைவனுக்குச் செறிப்பறிவுறுத்தி வரைவு கடாவினாள் (அகம். 288:15-17). 'பகைவேந்தரது மாறுபாடு தணிதற்குக் காரணமான மதில்போலக் காப்புமிகுந்து நம் காதலி நம்மால் எய்துதற் கரி யள்' என்று அல்லகுறிப்பட்டு மீளும் தலைவன் தன்னெஞ்சொடு கூறினான் (அகம். 372:14-16). யாமந்தோறும் காவல்செய்தலை மேற்கொள்ளும் பேரூர்க் காவலர், 'காப்புடைவாயில்களைப் பாது காத்துக் கொள்ளுங்கள்' என்று மணியொலி செய் வர் (நற். 132:8-10), 'மலையுறை குறவனின் காதல் மடமகள் அரிய பெரிய காப்பினையுடையவளா கலின் நின்னால் பெறுதற் கரியவள்; அவளை உள்ளல் கூடாது' எனத் தலைவியின் அருமை கூறிப் பாங்கன் தலைவனைக் கழறினான் (நற். 201:1-4). தலைவி பாரியின் பலவுமிக்க குன்றம் போலப் பெருங்கவின் எய்திய அருங்காப்பினள் என்று தோழி அவளது இற்செறிப்பினைத் தலை வனுக்கு அறிவித்து வரைவு கடாவினாள் (நற். 253: 5-9). 'தலைவியின் களவொழுக்கத்தை யாயும் அறிந்தனளாய் அவளை இல்வயிற் செறித்து அரிய பெரிய காப்பினைச் செய்தனள்' என்பது தலை வனிடத்துத் தோழியின் கூற்று (நற். 295:3,4). 'என் தோழி தான் இழந்த நலத்தினை மீண்டும் தினைப் புனங் காப்பினால் பெறுவாள்' எனத் தோழி தலைவியின் களவொழுக்கத்தைக் குறிப்பினால் செவிலிக்கு அறிவித்தாள் (நற். 351:8,9). 'தாழிட்டு அடைத்தாற் போலும் கடுங்காப்பினையுடைய தாய் முனனே தலைவியின் வளைகள் கோடற் பூக்கள் உதிருமாறு போல் உதிர்கின்றன' என்று தோழி அவளது ஆற்றாமையினைத் தலைவனிடம் கூறி னாள் (கலி. 48:10,11).

2. மதில். புலிப் பொறியும் பொருத்தமுள்ள கதவும் அமைந்த திருமகள் தங்கும் திண்ணிய காப்பினை – மதிலினை – உடையது காவிரிப்பூம்பட்டினம் (பட். 40,41). களவுக் காலத்துத் தலைவன் தலைவியது மனைவாயிலில் நெடும்பொழுது நின்றிருந்து அரிய காவல் மிக்க காப்பினையுடைய அகன்ற மனையின் கதவினை நள்ளிரவில் காவலர் சோர்ந்திருக்கும் சமயம் பார்த்துத் திறந்து தலைவியைக் கூடிப் பாராட்டிச் சென்றான் (அகம். 311:1-5).

3. பண்டசாலை. காவிரிப்பூம்பட்டினத்தில் அரிய காவலையுடைய பெரிய காப்பின் – பண்டசாலை யின்கண் – அளந்தறியாப் பலபண்டம் வரம்பறியா மல் வந்து நெருங்குவனவற்றை அச்சடையாள மாகிய புலியினைப் பொறித்து வெளியிற் போக்கு வர் (பட். 131-135).

4. சிறை. திருமாவளவன் தன் தாயத்தாராகிய பகைவர் தன்னைப் பிணித்திருந்த நெருங்கிய திண்ணிய காப்பினை – சிறையினை – ஏறிக் கடந்து தாயத்தினை முறையால் எய்தினான் (பட். 225-227).

5. அரக்கிலச்சினை. 'கோயிலுக்குப் புறத்தேயுள்ள காவின் கீழே நீ வருவாயாயின், ஆசறுகின்ற அறி

வினையுடைய அவையோர் திரட்சி பொருந்திய ஓலையின் தலையைக் கட்டி அதன் தலையில் காப்பு – அரக்கிலச்சினை – இட்டு விட்டாற் போல நாம் உடலுறு முயக்கம் பெற்று இறுகப் புல்லிக் கூடுவோம்' என அடியோர் பாங்கின் தலைவி அவ் வகைத் தலைவனுக்கு இசைந்து குறியிடங் கூறி னாள் (கலி. 94:40-43).

6. குறும்பு (முல்லைநிலத்து ஊர்). 'வரைவு கொண்ட பெரிய காப்பில் - குறும்பில் - இருக்கின்ற ஆட் டிடைய ருடைய குடிதோறு முள்ள மகளிரை நீ விரும்புகின்றாய்' என வினைவல பாங்கின் தலைவி அவ்வகைத் தலைவனொடு உறழ்ந்து கூறினாள் (கலி. 110:1,2).

**காப்புமறம்** - காவற்படை. இளஞ்சேரலிரும்பொறை தன்னைப் பத்துப் பாடல்களால் பாடிய பெருங் குன்றூர் கிழார்க்குப் பரிசிலாக உவகையுடன் முப்பத்தீராயிரம் காணம் (பொற்காசு) கொடுத்து அவரறியாமை ஊரும் மனையும் வளமிகப படைத்து, ஏரும் இன்பமும் இயல்வரப் பரப்பி எண்ணறற்காகா அருங்கல வெறுக்கையொடு பன் னூறாயிரம பாற்பட வகுத்துக் காப்புமறம் - காவற்படை - விட்டான் - (பதி. ப. 9. அடிக்குறிப்பு).

**காப்போர்** - காவல் செய்வோர். காட்டுக்கோழியின் சேவல் கானத்தே தினைப்புனங் காப்போரை - காவல் செய்வோரை - துயிலுணர்த்துவதுபோல் கூவும் (புறம். 28:8-10). சேம்பையும் மஞ்சளையும் விதைத்து அவை வளர்ந்தபின் அவற்றின் கிழங்கு களைப் பன்றிகள் அகழாமல் காபபோர் பறை முழக்குவர் (மலை. 343,344). 'பணைத் தோளை யுடைய குறுமகளாகிய என காதலியின உருத் தெழு வனமுலையில் ஒளி பெறுமாறு யான் எழுதிய தொய்யிலை அவளைக் காப்போர் அறியா திருக்கின்றனர்' என்று தலைவன் தோழி கேட்கு மாறு முன்னிலைப் புறமொழியாய்க் கூறினான் (குறு. 276:1-4). தறியில் பிணித்தும் மேலேறி நடத் தியும் காப்போர் இல்லாத களிற்றியானை போலத் தலைவன தனியனாய்க் குறியிடத்தே வந்தான் (நற். 182:8-10). திசைகள் காப்போர் உள்ளிட்ட அமரரும் அவுணரும் முனிவரும் பிறருமெல்லாம் முருகனைக் காண்டல் காரணமாக மண்ணில் வந்து உறையுமிடமாகத் திருப்பரங்குன்றம் ஆயின மையின் அஃது இமயக் குன்றத்தை நிகர்க்கும் (பரி. 8:7-11).

**காபாலம்** - கபாலத்தைக் கையிலேந்திச் சிவபெருமான் ஆடியதோர் கூத்து. 'புலித்தோலை யுடுத்துக் கொன்றை மாலை தோளிலசைய (அயனது) தலையை (கபாலத்தை) அகங்கையிலே கொண்டு நீ காபால மென்று பெயர்பெற்ற கூத்தினை ஆடுங்காலத்து அங்கே பிறரில்லாமையால் முல்லையை யொத்த எயிற்றினையுடையாளோ (உமையவளோ) தாளத் தின் முதற்பாணியைத் தருவாள்' என வினவுவார் போலச் சிவபெருமானின ஈறின்மையை நலலந்து வனார் தம் கடவுள் வாழ்த்தில் சுட்டுவர் (கலி. 1:11-13).

**காம்பு** - 1. மூங்கில். அவியன் விடியற்காலத்துத் தன் நெடுங்கடையில் நின்று கிணை கொட்டிப் புகழ் பாடிய பொருநனுக்குப் பாம்பின் உரிபோனறவும் காம்பின் - மூங்கிலின் – கோலுக்குள் இருந்து பெயர்த்தெடுக்கப்பட்ட வெள்ளிய தோல் போனற வுமான ஒண்பூங் கலிங்கங்களைக கொடுத்தான (புறம். 383:1-12). 'நீ நல்லியக் கோடனிடம் சென்று அவனைப் புகழ்ந்து சில சொல்லுமுனபே அவன காம்பின் உள்ளாடையை உரித்தாற் போன்ற மாசில்லாத உடையினைக் கொடுத்து உன்னை உடுக்கச் செய்வான்' என்று சிறுபாணன ஆற்றுப் படுத்தப் பெறுகின்றான (சிறு. 235,236). காம்பு நெருங்கி வளர்ந்த காடு (அகம். 88:13). காம்பு தலை மணந்த ஓங்குமலைச் சாரல் (அகம். 172.5). காம் புடை நெடுவரை வேங்கடம (அகம். 209:9). மலை யுச்சியில் மூங்கில இளமுளை திரங்கக காமபின தண்டுகள் ஒலிக்கும் பெரிய பாறையிடங்கள் வெம்பு மாறு மழை பெய்யாது மறந்தது (அகம். 241:5-7). அவியனது மலையிலே வளாநத காம்பின கணுக்க ளுக்கிடைப்பட்ட பகுதியை யொக்கும் நெடுமென் பணைத்தோளை யுடையவள் தலைவி (அகம். 271: 12-15). காம்பின் அழகிய தண்டு உடையும்படியாகத் தினைப்புனககாப்போர் கவணகல்லை விசையுடன் எறியும் பகறபொழுதில் இயங்காத யானை இர விலே சென்று புனததை மேயும் (அகம். 309:12-15). காம்பொடு நெல்லிமரங்கள் கறபாறைகளையுடைய மலைபபக்கதது ஓஙகி வளர்ந்திருந்தன (அகம். 385:7, 8). உயர்ந்த தண்டினையுடைய காம்பு வளர்ந்தவிட ரகம் எதிரொலிக்குமாறு வானம் இடியுடன் மழை பெய்யத் தொடங்கியது (நற். 51:1-5). காம்புதலை மணந்த கல்லதர்ச் சிறுநெறி (நற். 55:2). காம்பி னைக் கண்டா லொத்த உள்துளையினையுடையது கொறுக்காந்தட்டை (ஐங். 20:3). கதிரவன் எப்பக்க மும் சுடுதலினால் காய்ந்த காம்பு தம்மில் இழைய அதனிடத்தே கடுததெழுந்த காட்டுத்தீ மலையிடத் தைக் கொண்டு வானுற ஓங்கிக் காட்டிலே வெம் மையைச் செய்தது (கலி. 150:2-6).

2. குடைக்காம்பு. மகளிர் திருப்பரங்குன்றத்தை அணுகிச் செவ்வேளின் யானையைப் புனைந்து பூநீ

ரூட்டிக் கவரி சார்த்திப் பொலிவான பவழத்தூற் செய்த நல்ல காம்பினை யுடைய பொற்குடையை ஏற்றி உவகையுள்ளத்தொடு பூசை செய்வர் (பரி. 19:85-88).

**காம - காமன்.** (அண்மைவிளி) 'காம, நின்னுடைய அமபு தனக்குரித்தாகிய நெஞ்சினைத் தன்மேல் அன்பில்லாத ஒருவன் பொருட்டு வருந்தச் செய்யும் தனமை யுடையவோ' என நாணுவரை யிறந்த தலைவி காமனைக் கேட்டாள் (கலி. 147:46,47).

**காமக்கடவுள் - வழிபடு தெய்வம்.** 'இருங்குன்றம் தொன்மையான பெரும் புகழினது; அது தன்னைக் கண்டாரின் மயர் அறுக்கும் காமக் கடவுள் - வழிபடு தெய்வம் - ஆகும்; அதனால் அங்குச் சென்று திருமாலைத் தொழமாட்டாதவர் அம்மலையைக் கண்டேனும் பணிமின்' எனக் கூறி இளம்பெருவழுதியார் தம் ஆழ்ந்த திருமால் பற்றைப் புலப்படுத்துவர் (பரி.15:34-37).

**காமக்கணிப் பசலையார் - புலவர்.** 'நப்பசலையார்' காண்க.

**காமஞ்சேர்குளத்தார் - புலவர்.** 'காமஞ்சேர் குளம்' என்ற தொடரைச் செய்யுளில் பயன்படுத்தி இவர் இப்பெயரைப் பெற்றிருக்கக் கூடும் என்பர் துரை. அரங்கசாமி (ச. சி. பெ. பக். 99). குறுந்தொகையில் நான்காம் பாடல் ஒன்றே இவரால் பாடப்பட்டுள்ளது. பிரிவிடை ஆற்றாளெனக் கவன்ற தோழிக்குத் தலைவி உரைத்த அப்பாடலில் இவர் அவளது ஆற்றாமையைச் சிறப்புற வெளிப்படுத்தியுள்ளார். இமையைத் தீய்ப்பது போன்ற வெம்மையுடையது கண்ணீர் என்பதும் அக்கண்ணீரைத் துடைத்து அளவளாவுதற் குரிய தலைவன் பிரிந்திருத்தலால் தலைவியின் நெஞ்சு வருந்துகின்றது என்பதும் இவர் பாடல் தரும் செய்திகளாகும்.

**காமநோய் - காமத்தால் உண்டாகும் துன்பம்.** 'தோழி, நம் யாக்கையினின்றும் இனிய உயிர் பிரிவதாயினும் கண்ணிடத்துத் தோன்றிய பசலை காமநோயால் - காமத்தால் உண்டாகும் துன்பத்தால் - உண்டாயது என விளங்கக் கூறாதே (குறிப்பினாற் கூறுக) எனத் தலைவி தோழியிடம் செவிலிக்கு அறத்தொடு நிற்குமாறு உணர்த்தினாள் (அகம். 52: 13-15). மெல்லம்புலம்பன் பிரிந்தானாகத் தாமரை மலரைப் போன்ற என் கண்கள் இமை பொருந்து தலைச் செய்யாவாயின; காமநோய் என்பது அத்தன்மைத்தோ என வினவுவாளாய்த் தலைவி அந்நோயின் கொடுமையை வியந்தாள் (குறு. 5). காம நோய் இறுத்தலைச் சேர்த்துகையினாலே தான் உயிர் வாழும் நாளை வெறுத்த தலைவியை அருளிப் பாராய் என்ச் சான்றோர் அரசத் தலைவற்கு எடுத்துக் கூறினர் (கலி. 99:12, 13). காம நோயாலே மிக்க நெஞ்சந்தான், நடுநாள் யாமத்தில் நாம் கொள்ளும் துயிலை வாங்கிக்கொண்டு ஒளித்தவர்பாற் சென்று பொருந்தி விடுமாயின் நாம் உயிர்வாழ்தல் பிறர் நகைப்பதற்கு இடமாகும் என்பது தலைவி கூற்று (கலி. 121: 21-24). என்னுயிர் பொறுத்தல் என்னும் எல்லையைக் கடந்து, நிறை என்னும் குணம் அழிதற்குக் காரணமான பூநுதலாள் தந்த காமநோயை நீந்தி அதிலே கரைந்து விட்டது என்பது தலைவன் கூற்று (கலி. 138:14-17). 'ஊரீரே, நும்முடையதோர் தொழிலாகக் கொண்டு எனது காமநோயை நீக்குங்கள்' என நாணுவறை யிறந்த தலைவி முறையிட்டாள் (கலி. 145:51).

**காமம் - 1. காதல்.** இயங்குதற் கினிய செறிந்த மணலையும் புதிய பூவையும் உடைய பனிமலர்க்காவில் காமம் - காதல் - உடைய இருவர் செல்லுதலல்லது தனிமகன் செல்லுதல் துன்பந்தரும் (புறம். 33:18-20). 'ஒருவர் மெய்யினின்றும் ஒருவர் மெய்நீங்காதவாறு பொருந்திய காமத்தால் உணரா யாயினும் அதனால் வரும் துன்பத்தினை நான் உரைப்பேன்' எனத் தோழி தலைமகட்கு உரைத்தாள் (அகம். 28: 1, 2). 'மிளகுக்கொடி படர்ந்த மலைச்சாரலில் எய்துதற்கரிய காமத்தால் நீர் கூடிய களவொழுக்கத்தினை அறியாத எமர் தொன்றுதொட்டு வரும் முறைப்படி வதுவை நிகழ்த்திட நீ வரைய வருவாயாக' எனத் தோழி இரவுக்குறி வந்து மீளும் தலைவனிடம் கூறினாள் (அகம். 112:14-17). கொன்றாலொத்த கொடுமையுடன் இன்று நடுயாமம் பொருந்தவரின் காமம் செறிந்து, கடலைக் காட்டிலும் பரவிக் கரைகடந்து செல்லும் எனச் சிறைப்புறத் தலைவன் கேட்கத் தோழியிடம் தலைவி கூறினாள் (அகம்.128:2-4). தன்னுள் மறைந்துறையும் காமத்தினைத் தலைவியிடம் சொல்லுவோமோ, சொல்லாது விடுவோமோ என எண்ணி முடிவில் அடக்க இயலாது தலைவன் வெளியிட்டான் (அகம். 198:1-3). உப்பு அணையினால் தடைபட்டு நில்லாத மழை மிகுந்தோடி வரும் வெள்ளம் போல நாணத்தின எல்லையில் அடங்காது தலைவியின் காமம் பெருகிற்று (அகம். 208:18-20). ஊரனாகிய தலைவனின் காமம், பெருமை ஆகிய இவற்றினை அறியேன் எனத் தலைவி கூறல் (அகம். 236:8,9). காமம் அளவு கடந்து மிகலான் தலைவன் அருந்துயரடைந்தான் (அகம். 258:14,15). 'மகிழ்நனே

புதுப்புனலாட்டில் இளந்துணை மகளிரின் ஏந்தெழில் மழைக்கண் நின்னைக் காணுந்தோறும் நீ விருப்பம் தவிராயாகிக் காமம் அளவு கடந்து மிகுதலினால் நாணிழந்து ஆடினமை அலராயிற்று' எனத் தலைவி தலைவனுக்கு உரைத்தாள் (அகம். 266:5-9). 'காமத்தால் நம்மைக் காட்டினும் மிக்க மயக்கமுற்ற அழகிய மாமை நிறமுடைய தலைவி உறையும் இனிய ஊர் அழகிய காட்டிடத்தது' என வினைமுற்றிய தலைவன் தேர்ப்பாகற்குக் கூறினான் (அகம். 284:11-13). தன் களவொழுக்கத்தைத் தாய் அறிதலஞ்சிக் கரவல் நெஞ்சமொடு தனது காமம் செப்பாது தலைவன் கொடுமையைத் தலைவி தோழியிடம் மெல்லக் கூறினாள் (அகம். 298: 17-19). நம்மிடை நிகழ்நதனவற்றைப் பிறர் அறிதல் அஞ்சி மறையினை வெளிப்படுத்தாது அடக்குதலால் பலமாணபுடன் கூடி நுட்பமாகப் பொருநதிய காமம் அலராகும்படி தலைவர் பிரிந்து சென்றார் எனத் தலைவி தன நெஞ்சிற்கு உரைத்தாள் (அகம். 303: 1-3,7). 'நடு இரவில் ஆராக் காமம் வருத்தி அலைக்கப் பாம்பெறி கோல்போல் தனித்திருநது வாடுவையோ' என அல்லகுறிப்பட்ட தலைவன் தன் நெஞ்சினை வினவினான் (அகம் .322: 2-6). 'நம் அன்பு பெறாமையின் சோர்ந்த நெஞ்சுடன் செல்லும் தலைவனின் முன்நின்று செல்லற்க எனக் கூறச்சென்ற என் உறுதியற்ற நெஞ்சம் தலைவனைச் சார்ந்ததோ; சார்ந்தும் நம் காமத்தினைக் கூற நாணியதோ' எனத் தோழி தலைமகளிடம் குறைநயப்பக கூறினாள் (அகம். 330:5-10). நாளும் கனவில் கண்ட பொருள தோன்றி மறைவதுபோல நாளின் செலவும் மூப்பினது வரவும அரிதாகப் பெறும் சிறப்பினையுடைய காமத்தின தன்மையும் நனவில் விரைந்து மறையும் எனபது மீண்டும் பொருள் வலித்த நெஞ்சிற்குத் தலைவன் கூறிய அறிவுரை (அகம். 353:2-5). தலைவியின் முலைப் பரப்பின் முயக்கத்தினை ஒரு நூல் இடையே தடுப்பினும் புலநதுறையும் மிகப் பெரிய காமத்துடன் இனபம் துய்க்கும் நுகர்ச்சியைக் காட்டினும் சிறந்தது ஒன்று இலலை' என்பது தலைவன நெஞ்சுக் குரைத்த பொருளுரை (அகம். 361:4-7). காமம் முதிர்வுற்றவர் மடலும் ஊர்வர்; எருக்கங் கண்ணியும் சூடுவர்; தெருவில் பிறரால் ஆரவாரிக்கவும் படுவர்; பிறிதும் ஆவர் (குறு.17). தலைவியின் உயிர்தவச் சிறிது; காமம் தவப்பெரிது; ஆதலால் அவளை விரைந்து மணந்துகொள் என இரவுக்குறி வந்து மீளும் தலைவற்குத் தோழி கூறினாள் (குறு. 18:2, 5). 'காலை, பகல், மாலை, யாமம், விடியல் என்ற இச்சிறுபொழுது இடையே தோனறுமாயின் காமம் பொய்யே' என்பது இரந்து பின்னிற்கும் தலைவன் கூற்று (குறு. 32:1-3). 'வெற்பனே, காமம், நன்மையென உணரும் அறிவில்லாதவரிடத்தும் சென்று நிற்கும் பெரும் பேதைமையுடையது; ஆதலால் அது வெறுக்கத் தக்கது' எனப் பாங்கன் தலைவனை இடித்துரைத்தான் (குறு. 78:3-6). நீண்ட மரத்தின் கிளையைத் தொட்டுச் சென்ற வெள்ளம் நெடுந்தூரம் வந்து, இறைத்துண்ணும்படி சிறுகிப் பினபு அற்றதுபோலக் காமவெள்ளம மிகப பெரியதாயிருந்து தலைவன் பொருளீட்டி மீண்டு வரும்போது வரவரக் குறைந்து, தலைவியொடு அளவளாவிய பின் அற்றது (குறு. 99:4-6). பிரிவாற்றாமை மிக்க தலைவி, 'தலைவரை நினைத்தால் உள்ளம் வேகும், நினையாதிருத்தலும் முடிவதில்லை; காமம் என்னை வருத்தி வானளவு பெருகியது; எனனால மருவப் பெற்ற தலைவர் சானறோரலலா' எனக் கூறிக கலன்றாள் (குறு. 102). 'ஊரார் கூறும் கௌவையை (பழிமொழியை) அஞசினால் காமம மெலிவடையும' என்பது தலைவி கூற்று (குறு. 112:1). 'காமம காமம என்று உலகினர் அதனைக் குறை கூறுவர்; அக காமம் புதிதாகத் தோற்றும் வருத்தமும நோயும் அன்று; அது மிகுவதும் குறைவது மனறு; தான தோன்றுதற்குக் காரணமாவாரைக் காணப் பெற்றால் அதுவெளிப்படும் செவ்வியுடையதுஎனத் தலைமகன பாஙகற்குரைத்தான் (குறு. 136). நமமொடு மிகநெடுங்காலம் உடனிருந்து வருந்திய நாணும், தடுக்கும் வரையில தடுத்துக காமம் மென்மேலும நெருக்குதலால் நம்பால நில்லாது போயவிட்டது என உடன்போக்குணர்ததிய தோழிககுத் தலைவி இரங்கிக் கூறினாள் (குறு. 149). தாய்முகம நோக்கி வளரும் தனமையுடைய யாமையின பார்ப்பைப் போலத் தலைவரைப் பல்காற் காண்டலால் வளரும் தன்மையுடைய காமம், காதலர் பிரியின தாயிலலாத முட்டைபோல உள்ளத்துள்ளே கிடநது மெலியும் எனபது தோழியிடம கூறிய தலைவி கூற்று (குறு. 152). காமம காமம் எனறு கூறுவர், அக காமம் வருத்தமும் நோயும் அன்று; முதிய பசு முதிரா இளம்புல்லை மென்று இனபுறாது தடவி இன்புற்றாற் போலக் காமம் நினைக்குங் காலததுப் புதிய இன்பத்தை உடையதாகும் எனறு கூறித் தலைவனைப் பாங்கன் இடித்துரைத்தான (குறு. 204). 'அமிழ்தம் அன்ன கிளவியும் இனிமையும் உடையாளின குணம் அரிய துன்பத்தைத் தருமாயின் காமமுடையவர் பிரிவின்றி உடனுறைதல் அரிதாகும்; ஆதலால், அறிவுடையோர் காமத்தை அணுகுதலை ஓம்புக என்று கூறித் தலைவன், கழறிய பாங்கற்குத் தன் இயலாமையை உணர்த்

நினான் (குறு. 206). கொண்கன் நெடுந்தேர் ஊர்ந்து நம்மைக் காணவந்து பின்பு நாம் நாணும் படி மீண்டு செல்கின்றான்; காமம் இரங்கத்தக் கது; உறுதியாக அழியற்பாலது' எனக் குறை நேர்ந்த தோழி தலைமகளுக்குக் கூறினாள் (குறு. 212). 'பகற்குறியும் இரவுக்குறியும் இப்பொழுது பொருந்தா; என செய்வேம்' எனத் தோழி கவன்ற போது தலைவன் உடன்போக்கை எண்ணி வெய் துயிர்த்தான்; அதுகண்ட தோழி, காமம் மிக நுண்ணியது என்றாள் (குறு. 217:1-6). காமம் நாணத்தை அழித்து நல்லறிவையும் இழக்கச் செயயும் (குறு. 231:4,5) 'யாம எம் காமந் தாங்க வும குன்ற நாடனைக் கண்ட எம்கண் எம்பால் உள்ள உரிமையால் அழுதன' எனத் தான் ஆற்ற கிலலா நிலையைத் தலைவி தோழிகதுரைத்தாள் (குறு. 241:1,2,7). 'நம்மிடத்துள்ள காமமாகிய பகை வெற்பன் வருந்தோறும் வெளிப்படும்; அவன் அகலினும் அகலாதாகி மாறுபடும்' எனத் தலைவி அக்காமததின் இயல்பை வியநது கூறினாள் (குறு. 257:4-6). 'காமத்தைப் பொறுத்து ஆற்றுவாயாக என வற்புறுத்துவோர் அக்காமத்தின் தனமையை அறிந்திலரோ அல்லது அத்துணை வலிமையுடை யரோ' எனத் தலைவி அழிவுற்றுக் கூறினாள் (குறு. 290:1,2). தலைவனைக் கண்ட கண் தர தலைவிக்கு வந்த காம ஒள்ளெரி அவளது எலும்பைப் பொருந் திச் சுட்டு வருத்தியது (குறு. 305:1,2). எப்பொழுதும் பிரியாது தலைவர் வீற்றிருககும் என் நெஞ்சு காமம் வருத்துமிடத்து அவர் பிரிந்து சென்ற இடம் ஏகும் (குறு. 340:1,7). 'யான ஆற்றியிருப்பினும் காமம் பெரிதாகலின் வளைநெகிழ்தலும் மெய் பசப்பூர்தலும் என் வரைத்தின்றி நிகழ்ந்துள்ளன' எனத் தலைவி கூறல (குறு. 371). 'நெடுந்தூரமாகிய வழியைக் கடந்து செல்வோமாயின் தலைவியின காமததை நீக்க மாட்டோம' என்று தலைவன் கருத்தறிந்து புதுவழிப்படுதது விரைந்து தேரைச் செலுத்தியமைககாகத தேர்வலவனைத் தலைவன் பாராட்டினான் (குறு. 400:1-5). தலைவியின அழகு தொலைநத கணகள் காமததை மறைத்தற்கரிய வாயின (நற். 23:8,9). காமத்தால் தலைவியின் கணகள பசநதனவோ எனறு தோழி ஐயுறுவது போலக் கூறினாள் (நற். 35:12). காமம் கைம்மிகின் தாங்குதல எளிதனறு எனபது தலைவன் கருத்து (நற். 39:3). 'காமமும் அதனாலுண்டா கிய நினைவும நம்மை யொறுத்தலாலே வருநதிய நோயமிக்க ஏதபபாட்டினை நமது சுற்றததார் காணாது ஒழிவாராக' எனத் தலைவி தோழியிடம் கூறினாள (நற். 64.11-13). 'இளமையிற் சிறந்த வளமையுமில்லை; இளமைக் காலம் கழிந்தபிறகு வளமை காமம் தருதலுமின்று' என்பது தலைவன் நெஞ்சுக்குச் சொல்லும் தெளிவுரை (நற். 126:8-10). காமம் வியப்புடையது (நற். 143:1). தலைவன் கொண்ட காமம் மடன்மாவைத் தந்தது (நற். 152: 1). காமம் கைம்மிகுதலான் தான் கையறு துயரம் கொண்டதாகத் தலைவன் பாங்கற்குக் கூறினான் (நற். 185:2,3). உடம்பில் மலியப் பெற்ற காமத்தை யுடைய யாம் பினனே நின்று தொழும்படி பொழுதுபடத் தேரேறித் தலைவன் மறைந் தான் என்பது தலைவி கூற்று (நற். 187:4-6). காம மிகுதியால தலைவனின் தலையளியைக் கருதிய தலைவியை அளிசெயய வேண்டித் தலை வன் பகலிலும் (பகற்குறியிலும) வர இசைந்தான் (நற் 223:1-3). பனிநீர்ச் சேர்ப்பன் அசசநதரும் முதலை யால் வரும் பகைக்கு அஞ்சானாய்க காம மிகுதி யால் தலைவியிருக்கும் இடம் அடைந்தான் (நற் 287:5-7). திங்கள் விளக்கத்தாலும் கடல்ஓசையா லும் அன்றில் ஒலியாலும் யாழின் இசையாலும் என் காமம் பெரிதாயிற்று; அதனை நீக்கும் காதலர் இலரே எனக் காமத்தால் கழிபடர் உறும் தலைவி கூறினாள் (நற். 335). 'வெற்பனே, எம்பால் நீ கொண்ட காமம் கனிவதாயினும் அஞ்சத்தக்க சிறுநெறி வருதல் நின் சால்புடைமைக்கு ஏற்ற தாகாது' எனத தோழி ஆற்ற தருமை அஞ்சித் தான் ஆற்றாளாய்க் கூறினாள் (நற். 353:7-11). 'அணையை உடைத்துச்செல்லும் கடிய செலவினை யுடைய வெள்ளம் போல் என் நிறையை யழித்துப் பெருகும் காம வெள்ளத்தை நீந்தும் வழி தெரிந் திலேன்' என வன்பொறை எதிரழிந்த தலைவி கூறினாள் (நற். 369:10,11). நடுயாமமும் நெடும் பொழுதுடையதாய்க் கழியும்; இரவில் எமக்குள தாகிய காமமும் கண்ணுறங்க வொட்டாது பெரு கிடும் எனத் தலைவி அழிந்துகூறல் (நற். 378:1,2). அன்புறு காமம் காரணமாகத் தலைவிக்கு நாட னொடு தொடர்பு உண்டாயிற்று (நற். 389:10,11). காமம் செலுத்துதலினாலே தலைவியின உள்ளம், தலைவன்பாற செல்க என வருத்துவ தாயிற்று (ஐங. 237:1). தலைவன் பொருள் தேடி வரக் குறித்த காலத்தளவும் இளமையும் காமமும அவன் கையிடத்து நில்லாவாய் நாடொறும் கழியும் என்பது செலவழுங்குவிக்கும் தோழியின் தெளி வுரை (கலி. 12:12). 'காமம் குற்றப்படும்படி அத னொடு வேறுபாடு கொண்டு பொருளிடத்தே வேட்கை கொண்டு போகின்றவனே' எனத் தலை வனைத் தோழி விளித்தாள் (கலி. 12:16,17). இளமையையும் இருதலையும் ஒத்த காமத்தையும்

சேரப் பெற்றவர் விரும்பத்தக்கதொரு நன்மை செல்வத்திற் கில்லை என்பது செல்வமுழுங்குவிக் கும் தோழி கூற்று (கலி.18:7,8). ஆராக்கனை காமம் (கலி. 93:27). தாங்கருங் காமத்தைத் தணந்து தலைவன பிரிந்தமையால் தலைவி வருந்தியழுதாள் (கலி. 121:7-10). காமம் பெரிதாக வும் அதனாற்றேய்ந்த உயிர் சிறிதாகவும் இருத்தலி னால் நாணைத் தன்னிடம் நிறுத்துதல் தலைவிக்கு அரிதாயிற்று (கலி. 137:1,2). 'தேமொழி மாதர் தாம் காமுறாதே என்னைக் காமுறுத்திய காமமா கிய கடலிலே அகப்பட்டு மடன்மாவைத் தெப்பமா கக் கொண்டு அக்கடலை நீந்துவேன' என மட லேறுகின்ற தலைவன் சான்றோரிடம் கூறினான் (கலி. 139:15-17). 'காமக் கடும்பகையால் மடலே றும் வடிவு கொண்டு தோன்றிய எனக்கு எழில் நுதலாள் தந்த இம்மடன்மா பரிகாரமாயிற்று என் பது மடலேறும் தலைவன் கூற்று (கலி. 139:24,25). காமமாகிய பொறுத்தற்கரிய வெம்மையிலகப்பட்ட எனக்கு நேரிழையீந்த இம் மடன்மா நிழலாயிற்று என மடலேறும் தலைவன் கூறினான் (கலி. 139: 30,31). 'பூப்போலும் கண்ணையும் கடைகுழன்று தழைக்கின்ற ஐம்பாலினையும் உடையாள் எனக் குச் செய்த காமநோயின் வருத்தத்தை அறிந்திருந் தும் இவ்வூரிலுள்ளார் தீர்ப்பதோர் வழியை அறி கின்றிலர்' என மடலேறும் தலைவன் கூறினான் (கலி. 140:22-24). 'அழகிய முறுவலை யுடையாள் செய்த காமநோயை அறிந்துவைத்தும் இவ்வூரிலுள் ளார் அதனைத் தீர்ப்பதற்கு வழி அறிகின்றிலர்' என்பது மடலேறும் தலைவன் கூற்று (கலி. 140:26-28). தலைவன் தலைவியிடை எழுந்த காமம் பண் ணிசைக்குங் காலத்து அறுந்துபோகும் நரம்பைப் போல் இடையறவு பட்டுப் பயனினறிக் கழியும் என்பது கண்டோர் கூற்று (கலி. 142:3-5). 'நலியும் காமமும் கௌவையும் என்று சொல்லப்படும் இரண்டு துன்பம் உயிர் காத்தண்டாக இரண்டு புறத்தும் தொங்கி என்னை நலியும்' என நாணு வரையிறந்த தலைவி கலங்கி மொழிந்தாள் (கலி. 142: 56-58). கனலும் கடுந்தீயுள் நீர்பெய்தால் சினந் தணியும்; ஆனால் அருளற்ற கேள்வன் உறுவித்த காமமாகிய தீ நீருட் புகுந்தாலும் சுடும்' எனத் தலைவி புலம்பினாள் (கலி. 144:59-62). நள்ளிருளில் கண்டவருக்கு நனவின்கண் உதவாதே வேறுபட்டுப் போங் கனவைப் போல் காமம் நிலையில்லாதது (கலி. 145:1-3). பிரிவாற்ற இயலாது அறிவழிந்த தலைவி, தனக்குச் சிறந்த தன் நாணையும் மற்று முள்ள நன்மைக் குணங்களையும் நிலைபெற நினை யாதே காமம் ஒன்றையுமே நினைந்து அலமந்தாள் (கலி. 145.10,11). தனககுப் புகழ உணடாகுமாறு செயலாற்றியவரை (அமைச்சரை) நடுக்கமுறச செய்து கொல்லும் அரசனைக காட்டிலும் அனபறறது காமம் (கலி. 146:1-3). கள்ளையும நறவையும உண டவருடைய உலகியல் கெட்ட மயககம்போல நன் மக்கள் ஆற்றுகினற காமம் உலகியல தபபி வேறொரு பகுதியாய விட்டதோ எனப் பிரிவினால அறிவிழந்த தலைவி கூறினாள் (கலி. 147.2,3). தேறு தல் ஒழிந்த காமத்து மிகுதிறமும ஒரு காமம என்று நூல்கள் கூறும (கலி. 147:14). மாலைககாலம மகளிரைக் கூடிய கணவருடைய காமததைக் கலைச செய்யும் (கலி.148.12,13). நின உன்கண் சிவபபிறகு அஞ்சுவாளொடு துனி நீங்கி விளையாடுக; துனியின கண மிகுவை யாயின அவன் காமவின்பம கெடும என்று முதுபெணடிா காதற்பரததையை இடித்துக் கூறினாள் (பரி. 6:96-98). ஊடல் தணிநத பினனாத் தலைமகனும் பரததையும் கூடி மதுவாற் களித்து, வையையுட் குளிததுக காமம் செழிககக கலபபா (பரி. 6:102-104). 'வையையே, நினகட் புனலாடுவாா நெஞ்சத்து மிககுப பொருநதிய காமததை உணடாக குந் தன்மை நினக்கு எஞ்ஞான்றும குறையா தொழிக' எனத் தலைவி வாழ்ததினாள (பரி 6 105, 106). மகளிரது ஆராககாம இன்பததைப பொழிற பாயற்கண் தலைவரொடு கூடும் களவிற் புணாச சியைத் தண்பரங்குனறு தரும் (பரி. 8 39-41). நீராட வையையை அடைநத மகளிரிறசிலா காமமாகிய (மழு) கணிச்சி உடைப்பதனால் ஊடலைச சுழற்றி எறிநது விட்டுத்திரையை வீழ்த்துப படுக்கையிற் சேர்நதனர் (பரி.10:33,34). நீராடுவோர் காமம் மிககெழ அதனா னாகிய களிப்பு கண்ணிற் புலபபடவும் ஊரிலுள ளாரை மிகவும் அஞ்சி அதனை மறைக்க முயனறனர் (பரி. 10:63,64). வையைபபுனல் கள்ளொடு காமம பொருந்தியதனாற் கரையற்ற இனப வெள்ளத்தைத தந்தது (பரி. 10·69,70). மறையிற புணர்நத மைந் தரும் மாமயிலன்னாரும் காமம சிறபபுடைய களவொழுக்கத்தை விட்டு இளிவந்த கறபொழுக்கததை மேற்கொள்ளல் வையை மலையின நீங்கிக் கடலுக் குச செல்லுதலுக்கு உவமையாக வந்துள்ளது (பரி. 11:41-44). 'இசை பரிபாடலை யுடைய வையையே, கன்னிமை முதிராத கைக்கிளைக் காமததைத தரு கின்ற நின்னிடத்துத் தைந்நீராடலை முற்பிறப்பில செய்த தவததாற் பெற்றோம்' எனத் தலைவி கூறி னாள் (பரி. 11:134-138). திருமாலிருஞ் சோலை மலை மகளிரும் மைந்தரும் தாம விரும்பும் காமத்தை விதைத்து விளைக்கும் யாமத்தியல்பை யுடையது (பரி. 15:23-26). தலைவியின ஆயத்தில் ஒருத்தி பரத்தையை, 'விரும்பப் பெறும் காமத்தை

மாயப் பொய்யொடுங் கூட்டி மயக்கும் விலைக் கணிகை' எனப் பழித்தாள் (பரி. 20:48,49). பொருள் ஈபவர்களை வெளியே போகாமல் தடுத்துக் கணணே கயிறாகக் கொண்டு தோளாகிய தறி யோடு கட்டிக் காமம் மிகும் பொருட்டு யாழிசை நுகர்ச்செய்யும் இன்பத்துறைப் பொதுவியென ஆய மகளிருள் ஒருத்தி பரத்தையை இகழ்ந்தாள் (பரி. 20:55-58). 'பரத்தையரைச் சார்ந்தொழுகும் மைந் தரின் மார்பைத் தோயோம் என்றிருத்தல் மங்கை யர் யார்க்கும் முடியும் பொருளன்று; ஆதலின் நீ சினவாதே; காமம் தகுதியான இடத்தில் நிற்குமோ' என வினவி மகளிர் சிலர் தலைவிக்கு அறிவுரை கூறினர் (பரி. 20:91-94). மயக்கமும் புணர்தலும் பிரிதலுமாகிய காமத்தையும் இதற்குச் செருக்கினை விளைக்கும் கள்ளையும் உடன்விரவி மகளிர் யாவரும் பாராட்ட அவர்கள தாம் விரும்பின காதலரொடு புனலாடுமாறு முன் பிரிந்த தலைவ ரைக் கொண்டு வந்து கூட்டுதல் வையைக் கியல்பு (பரி. 20: 108,111). பூமுடிநாகர் நகரின் ஒரு சார், சூடுதற் குரிய நறவ மொட்டோடே அதனைச் சூடிய மைந்தர் மகளிரின் காமப் பண்பும் விரிந்தது; அமமைந்தரும் மகளிரும் சூடா நறவமொடு (கள் ளொடு) காமம் விரும்பினர் (பரி. தி. 1:55-59). தலை வன் காம நுகர்ச்சிக்கு உரிமையுடைய நயத்தகு நல்லாளைச் சேருமாறு தன் மாலையை ஆற்றில் போக்கினன் (பரி. தி. 2:41-44).

2. விருப்பம். களமர் அரிக்கப்பட்ட முதிர்ந்த விரும் பத்தக்க மதுவை யாமை இறைச்சியுடன் காமம் - விருப்பம் - தீர உண்டு தம் தொழில ஒழிந்தனர் (புறம். 212:2-5). திருவாவிநன் குடியில் உள்ள முரு கனைக் காண முன்னே செல்லும் முனிவர், காம மொடு கடிய சினத்தையும் போக்கிய அறிவினை யுடையவர் (முரு. 134,135). எம் காமம் கை கூடுவ தாயின என மகள் சென்ற வழி பொருளினறி வரும் வம்பலரைப் புரக்கும் தலைமை வாய்ந்த மூதூரில் முகமறிந்த மக்களை உடையதாகுக என மகட்போகிய தாய் விரும்பினாள் (அகம். 15:1,6-8, 19). களவுக் காலத்துக் கூடுதற்கரிய காமம் நீங்குத லால் தாம் சென்றிருக்கும் இடத்தைக் கடந்து வாராது நீங்குபவர் நமக்கு என்ன உறவினர் என்று கருதாமல் தலைவி கண்ணில் நிறையும் நீரைப் பிறர் அறியாமல் மறைத்தாள் (அகம். 50: 7-14). தாளாண்மை பற்றி எழுநத தலைவனின் தளர் வில்லாத நெஞ்சத்தை ஆண்மை முன்னே இழுக்க வும் காமம் பினனே நினறு தடுக்கவும் இருதலைக் கொளளியின் இடைநின்ற எறும்பு போல் அவன் வருந்தினான் (அகம். 339:6-10). இயற்கைப் புணர்ச் சிக்கண் தலைவியின் நலம் பாராட்டும் தலைவன் தும்பியை நோக்கி, 'நீ பயின்ற பூக்களில் அரிவை யின் கூந்தலைப் போல நறுமணம் உடைய பூக் களும் உளவோ, காமம் செப்பாது, நீ கண்கூடாக அறிந்ததைச் சொல்வாயாக' எனக் கேட்டான் (குறு. 2). 'எம்முடன் கூடியிருந்த நீவிர் பிரிந்து போதற்கு நினைப்பதினும் கொடுமையுண்டோ' என்று நாம் தலைவன்பாற் சென்று கூறி நம் காமத்தைச் சொல்லிப் பிரிவைத் தவிர்ப்போம் எனத் தலைவி தோழிக்குக் கூறினாள் (நற். 79: 5-7,10). (காம) நோயால் கலக்கமுற்று வலியழிந்த பொழுதில் காமம் செப்புதல் ஆண்மகற்குப் பொருந்தும் (நற். 94:1,2). தலைவனுடன் உறைநத சீறூரின்கண்ணே இருத்தலைப் பெற்றுள்ளோம்; அதுவே எம் காமத்திற்குப் பொருந்துவதாகும் எனச் செலவுடன் பட்டதைத் தலைவனிடம் தோழி கூறுதல் (நற். 266:4,5). தலைவன் காமம் (விருப்பம்) வாய்ந்த குதிரையாகிய பரத்தையைக் காதலித்து ஊர்ந்தான் எனத் தலைவி கூறல் (கலி. 96:18). 'திருமாலே, முற்பிறப்பில் யாம் செய்த தவப் பயனால் நின் திருவடியைப் பலமுறை இறைஞ்சி வாழ்த்தும் பேறு பெற்றோம்; மேலும் மேலும் எம் காமம் இதுவே' என நல்லெழுநியார் வேண்டு கின்றார் (பரி. 13:61-64).

3. புணர்ச்சி. 'மாமலை நாடனொடு குற்றமில்லை யாகத் தோன்றிய காமம் - புணர்ச்சி - கலந்தகாதல் உண்டெனில் அது மிக நன்றாகும்; அதனை நீ ஆரா யாமற் கூறுகினறாய்' எனக்குறைநேர்ந்த தோழி தலைமகட்குக் குறை நயப்பக் கூறினாள் (அகம். 258:5-7). 'காமம் ஒழிவதாயினும் நின்னிடத்து எமக் குள்ள தொடர்பு தேயுமோ' என்று தலைவனிடம் தோழிஉரைத்தாள் (குறு. 42:1,4). காப்பு மிகுதிககண் ஆற்றாளாய தலைமகள், 'பிரிவுத்துன்பத்தினின்றும் உய்தற்கு, பூ இடையுறினும் பல யாண்டு கழிந்தாற் போன்ற துன்பத்தை அடையும் நீருறை மகன்றி லின் புணர்ச்சியைப் போலப் பிரிவு அரிதாகிய நீங் காத காமத்துடன் உயிர்போவதாக' எனத் தோழி யிடம் கூறினாள் (குறு.57). 'மாமலை நாடன் கேண் மை காமம் தருவதொரு செயலிலே தங்கியது' எனக் கூறி வரைவிடைப் பிரிவில் வேறுபட்ட தலைவி யைத் தோழி ஆற்றினாள் (குறு. 308:6,7). 'காதல் கொண்ட காமம் கலக்குதலினால் நின்வழிப்படா நெஞ்சத்திற்கு ஏதிலார் கூறிய பொய்ம்மொழியைத் தெளியும் தன்மை எவ்வாறு உண்டாயிற்று' என வினவல பாங்கனை அத்தகு தலைவி வினவினாள் (கலி. 113:19-21). வையை வரவு காமர் (அழகிய) பெருக்கன்றோ என்று தலைவன் கூறக் காமர்

பெருக்கும் (காமப்பெருக்கம்) வையை வரவொக்கும்
என்று அவள் கூறியதாக உட்கொண்ட காதற்
பர்த்தை, 'காதலையுடைய காமம் எப்பொழுதும்
ஒரு தன்மையில் நில்லாது; சிலர்பால் விரையச்
சுருங்கும், சிலர்பால் விரையப் பெருகும்; ஆதலால்
வையைப் பெருக்கினை ஒக்கும் என்று கூறியது
பொருத்தமே' என்றாள் (பரி. 6:69-74). காமத்தினும்
காதலையுடைய காமம் சிறந்தது (பரி. 9:14).

4. இன்பம் - இம்மை மறுமை இரண்டிலும் உள
தாகிய காமம் - இன்பம் - நல்கும் இணையேரி
காவிரிப்பூம்பட்டினத்து இருந்தது (பட். 39). தலைவி
தன்னைப் புலந்தாலும் பிரிதலை அஞ்சி, நீங்குதற்
கரிய காமத்தை வறபுறுத்திய பெற்றவர் தலைவர்
ஆதலின் அவர் வருவர் எனத் தோழி கூறுதல்
(குறு. 177:4-7).

5. அளவிறந்தகாதல். சினன், காமம் - அளவிறந்த
காதல் - கழிகண்ணோட்டம், அச்சம், பொய்ச்சொல்,
அன்பு மிக உடைமை, தெறல் கடுமை முதலியன
அறத்துடன கூடிய ஆட்சிக்குத் தடையாகும் (பதி.
22:1-4).

**காமர்** - 1. அழகு. சிவபெருமானின் காமர் - அழகு -
நிறத்தையுடைய மார்பின் மாலை கொன்றைப்
பூவால் ஆயது (புறம். க. வா. 1, 2). கறைமிடற்றண்
ணலின் (சிவபெருமானின்) காமர் சென்னியின் பக்கத்
தணிந்த பிறை சேர்ந்த நெற்றியில் ஒருகண் விளங்கு
கின்றது (புறம். 55:4,5). வெண்டலைப் புணரி
அலைக்கும் திருச்செந்திலின் காமர் வியன்துறை
யில் நெடுவேள் (முருகன்) நிலைபெற்றுள்ளார் (புறம்.
55:18,19). வேந்தர்நாடு ஆம்பல் தண்டாற் செய்த
வளைக்கை மகளிர் பசிய அவலை முக்கித் தண்
புனற்கண்ணே பாயும் புதுவருவாய அறாத
ஊர்களையுடைய காமர் கிடக்கை (இடம்) உடையது
(புறம். 63.12-15). மாண்புற்ற நலத்தினைத் துய்க்கும்
துணையினைப் பிரியாதார்க்குக் காமர் வேனில்
ஏற்றதாகும்; அது கழிந்ததே என வன்புறைக்கு
எதிரழிந்து தலைவி தோழியிடம் கூறினாள் (அகம்.
37:17,18). மாலைப்பொழுதில் பிரிந்தோர் வருந்து
மாறு வந்த கீழைக்காற்றால் துனபமுற்ற தலை
வியின் காமர் நெஞ்சம் கையற்று வருந்தியது (அகம்.
40:6-8). தலைவன், முல்லை நிலத்தில கருங்கோட்டு
இரலையுடன் கூடிய காமர் மடப்பிணையின்
மருண்ட நோக்கத்தைக் காணுந்தோறும் தலைவியை
நினைந்து பாகனைத் தேரை விரைந்து செலுத்துக
எனக் கூறினான் (அகம். 74: 8 - 11). குனறத்து
இரும்புலி தொலைத்த பெருங்கை யானையின்
கன்னத்திலிருந்து இழிதரும் காமர் மதநீரில் வண்
டின கூட்டம் ஒலிக்க அதனை யாழிசை யெனக்
கருதி அசுணம் உற்றுக்கேட்கும் (அகம் 88 8-12).
காமர் (குறும்பூழ்) சேவல் பெரிய தலையினையும்
நுணுகிய சிவந்த நாவினையும் தெளித்தன போலும்
அழகிய சிறிய பலவாய புள்ளிகளையும் உடையது
(அகம். 103:2-4). கார்காலத்தில், திரிமருப்பினை
யுடைய மானேறு காமர் துணையொடு பிடவமரத்
தின் கொழு நிழலில் இனபமுறத் தங்கும் (அகம்.
139:10-12). பெரும்புனத்து விளைநத வரகின கவைக்
கதிரையுண்ட, தலையில் உசசிக்கொண்டையை
யுடைய மயில் காமர் தோகையினைப் பரப்பிக்
குருந்தமரத்தின் வளைந்த கிளையிலிருந்து கிளி
யோட்டும் மகளிர்போல் ஒலியுண்டாக அகவும்(அகம்.
194:9-15). மழைபோலப் பனிபெய்யும் முனபனிப
பருவத்து, மூங்கில் நிழல பொருந்திய பக்கமலையின்
காமர் சென்னி உசசியிலிருநது நீர் ஊர்நது இறங
கும் (அகம். 205:15-18). மனையுறை கோழியின மற
னுடைச் சேவல், கூரிய வாயினையும் அழல்
கொழுந்து வீட்டெரிந்தாற் போனற காமர் (அழகிய)
செறிந்த மயிர்ச் சிறகினையும் உடையது (அகம. 277:
13-15). காமத்தால் நம்மினும் மிக்க மயசகமுறற
தலைவி உறையும் இனிய ஊர் காமா காட்டின
கண் உள்ளது என வினைமுற்றிய தலைவன பாகற
குரைத்தான் (அகம். 284:11-13). காமர் வேனிலில
மானினங்கள் இன்பமுறும் (அகம். 317:14). மயில்
நீலமணியை யொத்த நிறம் விளங்கும் கழுத்தினை
யும் காமர் பீலியாகிய சிறந்த தோகையையும் உடை
யன (அகம். 358:1,2). முருகனின் காமர் சேவடி தாம
ரை மலரை ஒக்கும் (குறு. க. வா. 1). காமர் மாமரத்
தின் தாது பொருந்திய பூவில் வணடு பல ஒருங்கே
வீழந்து மயஙகும் (குறு. 306:4-6). கடறகரைச
சோலையிற் பொருநதிய காமர் சிறுகுடிககண
உள்ள, நீலநிறப் பெருங்கடல் கலங்குமாறு அதன
மேற்சென்று வலைவீசி மீனைப் பிடிககினற பரதவர்
மகள் தலைவி (நற. 45:1,3). வரகின் கவைதத கதிர
களைத் தின்ற காமர் மடப்பிணை மரல விதைதுககள்
உதிர்ந்து கிடக்கும் அழகிய காட்டில கலையொடு
மகிழ்ந்து விளையாடும (நற். 121: 2-4). மனை
யிடத்து உறைகின்ற புறாவின் பேடையாகிய
காமர் துணையொடு அதன சேவல் கூடிப்
புணரப் பிரிந்தார்க்குத துன்பம் செயயும் மாலைப்
பொழுது வந்தது (நற். 162:1-3). பிறர்கசென முயல
லும் பேரருள் நெஞசமொடு காமர் பொருளாசை
பிணித்தலால் தலைவன அச்சமுடைய வழியே
சென்றான் (நற். 186:8-10). களாவும் பிடவமும
மலர மேகம் மழை பெய்யத் தொடங்கும காமர்
காலை (கார்ப்பருவத்தில) பிணைமானைப புணர்நத

கலைமான் வேலமரத்தின் கவ்கவர் வரி நிழலில் வதியும் (நற். 256:6-10). கடற்காக்கைச் சேவல், வெளமணற் பரப்பின் ஒருபக்கம் நிரம்பிய சூலுடன தங்கிய காமர் பேடைக்கு அயிரை மீனைத் தேர்ந்தெடுக்கக் கழியின்கண் பூவுதிரப் பெற்ற ஆழமான இடததைத துழவும (நற். 272:1-6). மேல் காற்று மோதுதலாலே நுண்ணிய தாழைமலரில் உள்ள தாதுக்கள் உதிர்ந்து பரவிக் கிடக்கும் அழகிய கடற்கரையின்கண காமர் சிறுகுடி உள்ளது (நற். 299:2-5). பருவங்கண்டழிநத தலைவி, 'அதிரல்கொடி நிலமகளின் அறலாகிய கூந்தலைத் தன் புதுப்பூக்களால் அழகு செய்யும் காமர் பொழுது (இளவேனிற்காலம்) வந்தது; தலைவரோ வந்திலர்' எனறு கலன்றாள் (ஐங். 345). காமர் புறவில் ஆர்குரல் எழிலி மிக்க மழையைப் பொழிநது கார்ப்பருவத்தைச் செய்தது; புதுப் புனலாட வருக வெனத் தலைவன் தலைவியை அழைத்தான (ஐங். 411). வண்டுகள் முல்லைப் பரப்பில் போதார் நறுந்துகளாடியமையால் பொனனிறம் பெற்றுப் புததழகுடன் அரற்றுதற்கிடமான காமர் புதர்களிடையே யானைகள் முயங்கின (ஐங். 416:1-4). தேமொழியினையுடைய அரிவை பெண்ணிற்கரிய நல்லியல்புகளையும் காமர் சுடர் நுதலையும் உடையவள் (ஐங். 464:3-5). 'மீளாத காமநோயால் வருநதிய தலைவி நின் காமர் கழலடி சேராத் தெவ்வரைப் போலப் பெரிதும் நடுங்கினள்; அவள் அழகைப் பெறும்படி அணிகிளர் திண்டேரைச் செலுததுவாயாக' எனப் பாணன் பாசறைக்கண் உள்ள தலைவனிடம் கூறினான் (கலி. 30:18-21). வையையில் நீர்வருதல் காமர் பெருக்கமாகும் என நீராடுந் தலைவன் காதற் பரத்தையிடம் கூறினான் (பரி. 6:69,70).

2. விருப்பம். வடம வண்ணக்கன் பேரிசாத்தனார் காமர் - விருப்பம் - மிக்க நெஞ்சம் இன்புற்று மகிழத் திருமால் போலும் நின் செல்வததையெல்லாம் கண்டேன்; நீ வாழ்க எனக் கூறி இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறனை வாழத்தினார் (புறம். 198:8-11) செல்வக்கடுங்கோ வாழியாதனின் பெருந்தேவி காமர் மேவும் கடவுளை (அருந்ததியை) வென்ற கற்பினையுடையவள் (பதி. 65:9,10). தொய்யிற் கொடியோடு மாறுபட்டுக் காமர் தரும் தெளிந்த நீர் மிக்க பள்ளத்தில் நீலமணி போனற நெய்தல் மலர்நதது (மது. 282,283). காமர் கவினிய பேரிளம் பெண்டிர் பூவும் புகையுங் கொண்டு கடவுட் பள்ளி சென்று தொழுதனர் (மது: 465-467). யானையங் குருகின் சேவல்களோடே காமர் அன்னச்சேவல்களும் தமக்குரிய பேடைகளை அழைத்தன (மது. 674:676). வினை முற்றி மீளுந தலைமகன், திரிமருப்புடைய மானேற்றுடன் திரண்ட காலினையுடைய அழகிய பெண் மானினது காமர் புணர்நிலை கெடாதவாறு மெல்ல நடக்கும்படி குதிரையைச் செலுத்துவாயாக' எனப் பாகற் குரைத்தான் (அகம். 134:7-14). படுமழை பொழிந்த பயன்மிக்க முல்லைநிலத்தில், திரிமருப்புடைய மானேறு தெளிந்த நீர் பருகிக் காமர் துணையொடு இன்பம் பெருகத் தங்கியது (அகம். 154: 1, 8, 9). தாழைமரத்தின் தாழ்ந்த கிளையில், காமர் பெடையொடு வருத்தமுடன் தளர்ந்திருக்கும் கடற்சிறுகாக்கை, சுறாமீன் வேட்டையாடுதல் நீங்கிய இடத்திலுள்ள வெள்ளிய இறாமீனைப் பற்றியுண்பதாகக் கனவு காணும் (அகம். 170: 9-12). ஒனறையொன்று பிரிந்திருத்தலைப் பொறாத பறவை (மகன்றில) போல ஒருவர் நெஞ்சிலே ஒருவர் பொருந்திக் காதல் நீங்காத காமர் புணர்ச்சியால் தலைவியின் பணைத்தோள் எழில் நலம் சிதையாது அமையும் என்பது தோழி கூற்று (அகம். 220: 14, 15, 20, 21). பாசறை முற்றிய தலைவன் பாகனை நோக்கிக் கார்ப்பருவம் அழகு பெற்ற காமர் காலைத் தலைவி நம்மை விருந்தாக எதிர்கொள்ளுமாறு விரைந்து தேரைச் செலுத்துக எனக் கூறி விரைவுபடுத்தினான் (அகம். 374: 15-18). காற்று அசைத்தலால் வேங்கையின் நறுந்தாது உதிரக் காமர் பீலியை உடைய மயில், வருடைகளின் ஒலியைக்கேட்டஞ்சி நீண்ட கணுக்களையுடைய மூங்கிலின் புறம் வளையுமாறு அதன்கண் தங்கும் (அகம். 378: 3-10). ஆண் குரங்கு இறந்துபடக் கைம்மைத் துன்பத்தைப் போக்க மாட்டாத காமர் மந்தி தன் குட்டிகளைச் சுற்றத்திடம் ஒப்படைத்து மலையிலிருந்து வீழ்ந்து உயிர் விட்டது (குறு. 69:1-4). தலைவி தழுவுவதில் விரைவுடையவள்; காமர் வனப்பினள்; குவவு மென் முலையள்; நீண்ட கூந்தலையுடையவள் எனத் தலைவன் பாங்கனிடம் கூறினான் (குறு. 132: 1, 2). தலைவன் தனது கடமையை நிறைவேற்றும் பொருட்டு இடங்கள்தோறும் காமர் பொருள் முயற்சிக்கண் உள்ளப் பிணிப்பினாற் சென்றான் (குறு. 255:6-8). பனைமரத்தில் கட்டிய கூட்டிலுள்ள கருங்கால் அன்றிலினது காமர் கடுஞ்சூல் வயவுப் பெடை நள்ளிரவில் அகவும் (குறு. 301: 1-3). காமர் தலைவனது கேண்மை இப்பொழுதில்லாதிருந்தும் அன்னை உண்டெனக் கூறுகிறாள் எனத் தோழி தலைமகன் சிறைப்புறத்தானாகத் தலைவியிடம் கூறினாள் (நற். 145:4-7). அழிசியின் ஆர்க்காடு போன்ற காமர் பணைத்தோளினள் தலைவி

(நற். 190:4-8). காமர் சிறுகுடி கண்டல் மரவேலியை யுடையது (நற். 191:5). காமர் சிறுகுடி நண்டு விளை யாடிய புலவு நாற்றத்தையுடைய மணல் பரந்த முன்றிலை யுடையது (நற். 239:4, 5). களர் நிலத் திலே சென்ற பிணைமான் மருண்டு விழித்தலை யுடைய தன் குட்டியொடு கூட்டத்தினின்று நீங்கி ஓட இரலை (ஆண்மான்) காமர் நெஞ்சமொடு அவற்றைத் தேடும் (நற். 242:7-10). காமர் நெஞ்சம் செலுத்துதலினால், புதல்வனின் பூநாறு செவ் வாயிலிருநது ஒழுகிய நீர் தன் மார்புச் சநதனப் பூச்சைச் சிதைக்கத் தலைவன் முயங்கல் விருப் பொடு தலைவியைக் குறுகினான் (நற். 250:2-6). தலைவியைத் தலைவன், குறிஞ்சி மலர் போனற மேனியையும் பெருஞ்சுனைக் குவளைமலரன்ன கண்ணிணையையும் மயில்போன்ற சாயலினையும் கிளி அன்ன கிளவியையும் பணைத் தோளையும் பாவை அன்ன வனப்பினையும் உடையவள் எனக் காமர் நெஞ்சமொடு பல பாராட்டினான (நற். 301:1-7). பன்னாளும் காமர் விளைக்கும் இனிய சொற்கள் பலவும் சொல்லிய தலைவன், தலைவிக்குக் காபபாகும் எனறு வரைந்து கொண்டு அருளாமல களவுநீட்டித்தான (நற். 396:9-11). 'காமர் மெலலியற் கொடிச்சி காத்தற்குக் காரணமாகும்படி தினைப் புனத்தில் கிளிகள் பரவி நமககு நனமை செய்தன' என்று தலைவன் நெஞ்சிறகுக் கூறி மகிழ்ந்தான (ஐங். 288:2-4). மலைக்குரிய பாண்டியன் காமர் திண் டேர் உடையவன் (கலி. 35:24). காமர் கடும்புன லில் நீராடிய தலைவி கால தளர்ந்து அஞ்சிப் புன லொடு செல்லத் தலைவன் நீரிற் குதிதது மார்போ டணைத்து மீட்டமையின் அவனையே விரும்பும் தலைவியின் கற்புடைமையைத தோழி பாராட்டி னாள் (கலி. 39:1-6). உயர்நத இடுமணலிடத்து அளையினின்றும் போந்து விளையாடித் திரியும் புள்ளிகளையுடைய அலவன, பொருநதிய காமர் பூங்கடற் சேர்ப்பன தலைவன் (கலி. 136:1-4).

3. **காமனார்.** 'யாமையை எடுத்து நிறுத்தினாற் போல நெடியனாய்த் தோளிரணடையும விலாவுக குள்ளே வீசி, யாம் நினனைவிரும்பேம எனறு விலக் கவும எமமை விரும்பி வருகினற காமர் - காமனார் - நடக்கும் நடையை நெஞசே நீ காண்' எனக் கூனி குறளனைப் பறறித் தன நெஞசிடம் கூறினாள் (கலி. 94:31-33).

**காமரம் - ஒருவகைப்பண்.** மருதநிலத்துச் சிவந்த தாமரைப்பூவில் உள்ள செம்பொன்னாற் செய்தா லொத்த கொட்டையில், தன்னுயிர்க்குக் காவலாகிய இனிய பெடையைத் தழுவித் துயில்கொண்டு, அத் துயிலெழுந்து விருப்பம் மருவிய தும்பி காமரம் (சீகாமரம்) என்னும் பண்ணைப் பாடும் (சிறு. 73-76).

**காமவதுவை - காமத்தை நுகரும் வதுவை.** மூவகையு டைய அரிய மதில்களை அமபினால் எரிதது அமரர்க குச் செய்யும் வேள்வியில் அவிப்பாகத்தை யுணட பைங்கண் பார்ப்பான் (சிவன) உமையொடு புணர்நத காம வதுவையுள - காமத்தை நுகாகினற வதுவை நாளில் - அமையாத புணாச்சி அமைந தனன (பரி. 5:25-29).

**காமவேள் - மன்மதன்.** திருபபரங் குனறத்தின்கண உள்ள எழுதெழிலம்பலம (சிததிரசாலை) காமவேளின - மன்மதனின் - படைபயிலுமிடததை ஒககும் (பரி. 18:27,29).

**காமவேள் விழவு - மன்மதனுக்குச் செயயும விழா.** பிரிந தாககு நடுக்கஞ செய்யும் இளவேனிற காலதது ஊரிலுள்ளார் எடுககும் காமவேள விழவு - மனமதனுககுச் செயயும் விழா - கணடு தலைவி பெரிதும கலங்குவள் எனறு கருதித தலைவன விரைநது மீண்டான எனக கூறித தோழி தலை வியைத் தேற்றினாள (கலி. 27:23-26).

**காமன் - மன்மதன்.** இளவேனிறபொழுதில காமறகு- மன்மதனுககு - விருந்திடுதலை எதிாகொணடு நாண மாடக கூடலின மகளிரும அவா கணவரும பொழிலில் கூடியிருந்து ஆனா விருபபுடன் அணி அணிவர் (கலி. 92.65-68). மோா விறறுச செலலும முல்லை நிலத தலைவி பிறர்க்கு மனக்கவலை செயத லோடு காமனும் தன அம்பையும் விடுதறகுக் காரண மான அழகுடையவள் (கலி. 108:4,5). தெய்வத திறகுப பலியாகச சமைக்கும பாலோட காமன கோவிலுககு இவள செலலின அககாமனும் நெஞ சழிந்து தன படைககலங்களைக கைவிடுவான எனத் தலைவன் கூறினான (கலி. 109:19,20). மாணிழை மாதராளின அழகால வநத வருதத மெனனுமபடி காமன் ஏவலாலே வநத காம நோ யாகிய படை எனனைக கணடார் இகழுமபடி கலக் குறுததது எனபது மடலேறும் தலைவன கூறறு (கலி. 139:22,23). 'நீ என தலைவனைக் காட்டாயா கில காமன காலைக கட்டிக்கொண்டு, தலைவன மடலேறி எனபால் வரச்செயயுமாறும் காமன் அம்பு களை எனககுத தருமாறும வேணடுவேன' என நெய்தல தலைவி ஞாயிறனை நோக்கிக கலங்கி மொழிநதாள (கலி. 147:57-60). நீராடும் மகளிருள் ஒருததியைக் கண்டு, 'இவள் கண் காமனுக்குரிய கருவூலமும படையுமாயிருக்கும்' எனச சிலா கூறி னர் (பரி. 11.123). திருப்பரங்குனறததுச சிததிர

சாலைகளில் உள்ள சித்திரங்களைச் சுட்டிக்கேட்ட மனைவியர்க்குக் கணவன்மார் 'இவள் இரதி; இவன் காமன' என விடையிறுத்தனர் (பரி. 19: 48,49).

**காமன்கொடி** - மகரம் (ஆகுபெயர்). தலைவனின் மகனுக் குப் பரத்தை காமன் கொடி - மகரம் - அழுத்திய மோதிரத்தை அணிவித்து அதன் வாயிலாக இவன் தந்தை தனக்கு அடிமை என்பதை உணர்த்தக் கருதினாள் எனத் தலைவி புலந்து கூறினாள் (கலி. 84:23-27).

**காமுறுநன்** - விரும்புநன். 'கள்ளைக் காமுறுநனாகிய - விரும்புநனாகிய—வெளிமான் சுடுகாட்டை அடைந் தான்; அவன் துணையினறித் துன்புறுதலினும் இறத்தல் நன்று' எனப் பெருஞ்சித்திரனார் கையற் றுக் கூறினார் (புறம். 238:5,18,19).

**காமூர்** - ஓரூர். பதினான்கு வேளிர் ஒருங்கு கூடித் தாக்கியபோது கழுவுள் என்பானின் காமூர் கலங் கியது போலத் தலைவர் பிரியார் என்று தெளிந்த தன் நெஞ்சம் கலங்கியதெனத் தலைவி தோழிக்குக் கூறினாள் (அகம். 135:12-14). வண்மைமிக்க கழுவு ளுக்குரிய காமூரிடத்தே பூதத்தால் தரப்பட்ட வேங்கையது புதுமலரின் மணம் போலத் தலை வியின் கூந்தல் மணம் கமழ்ந்தது (அகம். 365:12-15).

**காய் – 1. கனிக்கு** முந்தியது. குலை தாழ்ந்த, காய் நிறைந்த தெங்கினை யுடையது தொண்டி நகர் (காய் என்பதற்குக் 'கோள்' என்றும் பாடமுண்டு) (புறம். 17: 9,13). பாரியின் நாடு அவரைக் கொழுங்கொடி யின் வெள்ளைக்காய் அறுக்கும் செவ்வியாகப் புது வருவாயினை யுடையது (புறம். 120: 10, 11, 16). கோடையில் காட்டிலுள்ள வேம்பின் காய் முற்றா மலே உலர்ந்தொழிந்தது (புறம். 389: 2,3). முறுக் குண்ட காயினையுடையது விடத்தரென்னும் முள் மரம் (பதி. 13: 14). இலவங்காயின் முதுதவிரிந்து பஞ்சு தோன்றினாற் போன்ற வரியை முதுகிலேயு டையது அணில் (பெரு. 83-85). கழனிகளில் தொழில் செயவோருடைய காதலஞ்சிறுவர் சண்பங்கோரை யின புல்லிய காயில தோன்றிய தாதினை மார்பில் அடித்துக் கொள்வதனால் அம்மார்பு பொன்னை யுரைத்து யாற்றுக்காணும் உரைகல்லை யொத்துக் காணபபெற்றது (பெரு. 220-223). வலைஞர் தம் குடியிருப்பின் முற்றத்தில் புன்னைக் கிளைகளை வெட்டியிட்ட பைங்காய் தொங்கும் பந்தரில் சுற் றத்துடன நிறைந்திருப்பர் (பெரு. 266-268, 274). பாணன் தன் சுற்றத்துடனே தொண்டைமான் இளந்திரையனைக் காணச் செலலுங்கால் அவனது நாட்டில் மறைகாப்பாளர் உறைபதியில் தங்கின் கொம்மட்டி மாதுளையின் பசுங்காய் மிளகுப் பொடி கலக்கப்பட்டுக் கருவேம்பின் நறிய இலை அளாவப்பட்டுப் பசுவினது வெண்ணெயில் கிடந்து வெந்த வகிரோடே நெல்லரிசிச் சோற்றைப் பெறு வான் (பெரு. 301-310). தெங்கினது திரண்ட காய் மூன்று புடைப்பினையுடையது (பெரு. 364). கண் ணன் தான் நிரைமேய்த்த காலத்தில் பசுவின் கன் றையே எடுத்து வீசி விளவின் காயினை உதிர்த் தான் (முல்லை. வெ. 1). மதுரை அல்லங்காடியில் பல்வேறு வடிவினையுடைய காய்களையும் பழங்க ளையும் பிறவற்றையும் பலவிடங்களிலும் நுகர் வோர்க்கு இடுவோரிடத்து எழுந்த ஓசை மற்ற ஓசைகளுடன் சேர்ந்து ஒரு துறைமுகப் பட்டினத் தின் முழக்கத்தை ஒத்தது (மது. 529-544). கமுகினது மடலிடதுப் பாளை விரிந்த தாறுகளில் தெளிந்த நீரை உள்ளேயுடைய பசுங்காய் நுண்ணிய நீர் திர ளும்படி வீங்கிப் பக்கம திரண்டு இனிமை கொள்ளு மாறு முற்றக் கால மழை செறிந்து கூதிர்க்கா லம் நிலைபெற்றது (நெடு. 23-26, 71,72). காயையு டைய கமுகினையும் பிறவறறையுமுடைய விளை வறா வியன் கழனிகள் நிறைந்தது காவிரி பாயும் சோணாடு (பட். 6-8,17,28). கார்காலத்தில் பகுத் தலை யுடைய பலாவின் காய்கள் நிறையக் காய்க் கும் (மலை. 12). அரக்குப் பாயாமல் மிக்க மழை பெய்ததனால் கொல்லைகளில் இளம்பிஞ்சாகிய தன்மை போன எள்ளின் கரிய காய ஒரு பிடிக்கு ஏழாக நெய்கொண்டு வளர்ந்தன (மலை. 102-106). அரிவாளை யொத்த வளைந்த காயை யுடையது அவரை (மலை. 110). பளிங்கை ஒத்த நெல்லிக்காய் பாறைகளில் ஈட்டி வைக்கப் பெற்ற வட்டுக்களைப் போல் உதிர்ந்து கிடந்தன (அகம். 5:9-11). திரண்ட அழகிய பசுங்காயினது நுனி முதிர்ந்து பழுத்த பாகற் கனியைத் தோகை மயில் தின்னும் (அகம். 15: 3-5). ஆணபன்றியைச் செந்நாய் தாக்கியது கண்டு அஞ்சி ஓடிய பெண்பன்றி மோதியதனால் ஈந்தினது பைங்குலையிலிருந்து அதன் செங்காய் பலவும் உதிர்ந்தன (அகம். 21: 18-21). கிளி போலும் வடிவுடைய காய்களை மாங்கிளையிலிருந்து பறித்து அவற்றோடு புளிப் பதன் சேர்த்து அமைத்த சாரங்களை உழவர் பருகினர் (அகம். 37:7-11). நெல்லியின் பைங்கா யைத் தின்றவர் நீரைக் குடிக்கையில் இனிய சுவை தோன்றும் (அகம். 54: 15, 16). வெம்மை மிக்க காட்டு வழிகளில் நெல்லியின் இனிய புளிப்பினை யுடைய திரண்ட காயினை இளைய மான் கூட்டம் தின்னும் (அகம். 69:7-9). பாலை நிலச் சீறூரில் தாழியின்கண் தழைத்த பருத்தியின் பஞ்சுபொதிந்த

வயிற்றையுடைய இளங்காயை ஆண்பறவைகள் பிளந்து தம் பெடைகளுக்கு ஊட்டிவிட்டுப் போன மிகுதியான வெள்ளிய கொட்டைகளை வறிய எயினமகளிர் உணவுக்காகத் தொகுப்பர் (அகம். 129: 7–11). முருக்க மரத்தின் ஆர்க்கினையுடைய நெடும்பெருங்காய் பன்றியின் வளைந்த கொம் பினை ஒத்திருக்கும் (அகம். 223:3–5). வெம்மை மிக்க பாலைநிலப் பெருவழியி லுள்ள நெல்லி மரத்தின் தீஞ்சுவைத்திரள் காயினை வட்டக் கழங்கு போற் கொணடு மந்திகள் தாவி விளை யாடும் (அகம். 241:13-15). பாகலின் பசும்பழம் பலாக்காயினைப் போலும் புறத்தையுடையது (அகம். 255:13). பாலைநிலததைக் கடந்து நெடுந் தூரம் வந்த நீர்வேட்கை மிக்க வம்பலரின் செல் லுயிரைச் செலலாது நிறுத்தும் சுவைக் காயினை யுடைய நெல்லி மரக்கிளை பல காயினால் பொலிவு பெற்றிருக்கும் (அகம். 271:5-8). நெல்லிக்காயைக் கண்டாற்போன்ற குறுவிழிக் கண்ணையுடையது முயல் (அகம். 284:1,2). உயர்ந்த மலைசார்ந்த காட்டு நெறிகளில் நெல்லியின் தீஞ்சுவைத் திரள்காய் பல உதிர்ந்து பரந்து கிடக்கும் (அகம். 291:15-17). வெப்பம் மிக்க காட்டிடத்தே குயிலின் கண்ணைப் போனற விளக்கமுடைய உகாக் காய் முற்றி மணிக்காசு போன்ற நிறம் பொருந்திய கனியாகிக் கிளைகளினின்று உதிர்ந்து கிடக்கும் (அகம். 293:5-8). புறாக்கள் துளைத்து உண்ட புல்லிய காயினையுடைய நெல்லி மரங்களிலிருந்து கோடைக்காற்று உதிர்த்த குவிந்த உடற்பகுதி கொண்ட பசுங்காய் பலவும் அறுந்த நூலிலிருந்து உதிர்ந்த துளையினையுடைய பளிங்குக் காசு களைப் போல் வறுநிலத்தே உதிர்ந்து கிடக்கும் (அகம். 315: 10-13). கமுகின் பூவொடு வளர்ந்த மூவாப் பசுங்காய் நீர் இனிமையுடையது (அகம். 335:23,24). கூம்பிப் பிரியும் விரல் போலப் பயற் றங்காய் பனிக்காலத்தில் முற்றும் (அகம். 339:3-5). கற்கள் நிறைந்த காட்டு வழிகளில் நெல்லியின் வடுவற்ற பசுங்காய் கடுங்காற்று உதிர்த்தலால் பொற்காசு போல் பரவிக்கிடக்கும் (அகம். 363:6-9). காட்டில் குற்றமற்ற பளிங்கு போன்ற தோற்றத் தையுடைய பலவாகக்காய்த்த நெல்லியின் பைங் காயினைத் தின்று மானகள் அசையிடும் (அகம். 399: 13-15). முன்பனிக்காலத்தில் முறைப்பட முற்றிய உழுந்தின் முதுகாயை மான் கூட்டம் மேயும் (குறு. 68:1-3). கள்ளியின் காய் வெடிக்கும் இயல்புடையது (குறு. 154:5). மழைதுறந்த காட்டு வழிகளில் கள்ளிக்காய் வெடிக்கும் கடிய ஒலி அக் கள்ளியினிடத்தே உறையும் துணைப்புறாக்களை அஞ்சியோடச் செய்யும் (குறு. 174:1-4). தலைவி யிடத்து அன்புகுறையாத களவுக்காலத்தில் வேம் பின் பைங்காயை அவள் தந்தாலும் அதனைத் தேம்பூங்கட்டி என்று தலைவன் பாராட்டினான் (குறு. 196:1,2). பாலை வழியிற் போவாரது நீர் வேட்கையினால் நீங்குதற்குரிய உயிரை நீங்க விடாது வேட்கை தணித்துக் காத்தலின் நெல்லிக் காய் அறந்தலைப்பட்டது எனப் போற்றப்பட்டது (குறு. 209:1). நெடுநாள் மழை பொழிவதனால பதனழிந்து கார்ப்பருவக் கடைநாட்களில் எள்ளுச் செடிகள் சிதட்டுக் காயுடையனவாய் இருக்கும (குறு. 261:1,2). நன்னன ஆற்றங்கரையிலிருநத தன் தோட்டத்தின் மாமரத்திலிருந்து ஆற்றில் விழுந்து அடித்துச் செல்லப்பட்ட பசுங்காயினை அங்கு நீராடச சென்ற பெண்ணொருத்தி அறி யாது எடுத்துத் தின்ற தப்பிற்காக எணபத்தொரு களிறுகளையும் அவளது எடையளவு பொற் பாவையையும் அவளைப் பெற்றோர் கொடுப்பவும் கொள்ளானாய் அவளைக் கொன்று நிரயஞ் சென்றான் (குறு. 292:1-6). ஆதி அருமன் மூதூரில உள்ளோர் கடையில் கள் கிடைக்காதபோது பாளை ஈன்ற பஞ்சு போன்ற நாரையுடைய பனை யின் காயாகிய நுங்கைப் பெற்று மீள்வர் (குறு. 293:1–4). ஆதித்த மண்டிலம் தன் வெயிலை முற் றும் வீசுதலால் பலாவின செழுங்காய திரங்கும் (நற். 26:5,6). ஆசினிப் பலாவின் காய் குடம் போன்றது (நற். 44:9). உகாயினது புல்லிய காய் மிளகினை இட்டு வைத்தாற் போன்ற சுவையினை யுடையது (நற். 66:1,2). மழை கழிந்த கார்ப்பருவக் கடை நாட்களைத் தொடர்ந்த பனிப்பருவத்திலே உழுந்து மயிர்களமைந்த காயினைக் காய்க்கும் (நற். 89:4,5). வெண்பூங் கொத்துககளையுடைய பாலையின் காய் பற்றுக்குறடு போன்றது (நற். 107:3). இரத்தியின் (இலந்தையின்) பொதிப்புறப் பசுங்காய் மலை வழியில் உதிர்ந்து பரவிக் கிடக் கும் (நற். 113:2,3). ஈந்தினது பைங்காய் நல்ல மேலிட மெல்லாம் நிறம் மாறிச் செங்காயாகிப் பின் கருங்களியையுடைய கனியாகும் (நற். 126:1,2). கொன்றையின் காய் உள்துளையுடையது (நற். 141: 3;296:4). தலைவனுடன் அவனது நாட்டிற்குச் செல்லும் தலைவி, சுவைக் காயினையுடைய நெல வியஞ்சோலையில் உதிர்ந்த கடைதிரண்ட காயி னைத் தின்று சுனைநீரைக் குடித்துச் சென்றாள (நற். 271:4-8). சூடுவோர் கொய்து தொடுத்தவை போக எஞ்சிய புன்னைப் பூக்கள் நெய்மிக்க பசுங் காயாக முதிர்ந்து கிளைகள்தோறும் தொங்கும் (நற். 278:1-5). நொடித்து விட்டாற் போன்ற ஒலி

யுடன் கள்ளிக்காய் வெடிக்கும் (நற். 314:9). மிக்க காற்று மோதுதலால் கானலிலுள்ள கண்டல் மரத்திலிருந்து கழன்றுவிழும் பைங்காய் கழியினுள வீழ்ந்து ஆம்பலருமபினை மலர்க்கும் (நற். 345: 1-5). கழனிகளில் பைங்காயையுடைய வயலைச் செங்கொடியை நண்டு அறுக்கும் (ஐங். 25:1-3). புளியங்காயை நினைவார்க்கு வாயில் நீரூறிச் சிறிது வேட்கை தணியுமாறு போலத் தலைவனது மலர்நத மார்பு நினைக்கபபடுமளவிலே தலைவிககு இனபந்தரும் தன்மையது (ஐங். 51:3,4). பாலையாகிய அருஞ்சுரத்தைக் கடநது செல்வோர் அவவழியிலுள்ள பலா மரத்தின வெயிலால் வெதுப்பப்பட்ட சிறுகாயைத் தினபர் (ஐங். 351:1,2). உடன் போகும் தலைவனும் தலைவியும நெல்லியின் பைங்காய் பலவற்றை ஒருங்கு தின்று மராமரத்து வரி நிழலிலே தங்கியிருந்தனர் (ஐங். 381˙1,2). கொனறையின் கொத்தான காய் முதிர்ந்து குழலபோல் பழமாயின (ஐங். 458:1). தலைவனது மலையிலே புலியின் அடியினைப் போல வாழையின் வளைநத காய் குலைகள்தோறும் தொங்கும் (கலி. 43:24-27). வையைக் கரையிலிருந்த மரங்களி னுடையவும் கொடிகளி னுடையவுமான பல காய்களையும் கிழங்குகளையும அவ்வாறறு நீர் அடித்துச்செல்லும் (பரி. 6:47,51). திருமாலிருஞசோலை மலையில வேங்கை மரங்கள் தம் காய் கனிகளொடு நிறம் மாறுபட மலர்ந்து மாயோனின் மணிமுடிக்கு ஒப்பாகத் தோன்றும் (பரி. 15.31-33).

2. **பாக்கு.** உடம்பிற்கு அழகைக் கொடுக்கும் இனிய களிககலநத இனிய நீரினையுடையது பசிய காய் - பாககு - (மது. 400). மணலமுற்றத்திலே வண்டுகளும் மிஞிறுகளும ஆரவாரிககுமாறு அழகிய மெத்தெனற இளைய . காயும் (பச்சைப்பாககும்) பிறவும சிநதிக்கிடககும் (மது. 683,684).

**காய்தல் - 1.** சினத்தல. எம்முலைகள் பாலாலே விம்முதற்கேதுவாக மகனைக கூட்டிக்கொண்டு காலந்தாழ்ப்பச சென்று வந்த இடததையெலலாம சொல் எனற தலைவிககு விடைகூறும் தோழி 'அவ்விடங்களையெல்லாம் கூறுவேன்; அதுகேட்டு நீ என்னைக் காயாமை - சினவாமை - வேணடும் எனறு வேணட, அதனபடியே தலைவியும், 'யாம் காயேம்' என்று மேலே சொல்லும்படி பணித்தாள் (கலி. 82.2-8). 'நமமொடு ஒப்பாளாகத் தலைமைபபாடு கொணடு நமமைக் காய்ந்திருக்கும் புலக்குந தகைமையினையுடைய புதியவளிலலம் தலைவன சென்றான என்று தலைவியிடம அவன் பரத்தைமை குறித்துத் தோழி கூறினாள் (கலி. 82: 23,24). 'நீ காயதறகுக் காரணமாவதோர் தவறுடையேனல்லேன் யான், என்று பரத்தைமைத் தலைவன் தனனொடு ஊடிய தலைவியிடம் கூறினான் (கலி. 87:10). 'பரததையொருத்தி இரவிலே வநது நின இல்லக் கதவைத் தட்டி ஆர்ப்பரித்ததையும் அதுகேட்டு அவளிடத்தே நீ எழுந்து வந்ததையும் நினனிடத்தே அவள சினநது மார்பின் மாலையறுத்து ஊடியதையும் பின் ஊடல் தணிக்க நீ பணிநததையும் யாம் கண்டேமாகலின் நின்னைக் காயாமோ' என்று கூறிக் காமக்கிழத்தி தலைவனுடன் ஊடினாள் (கலி. 90:5-19).

2. **விடாய்த்தல்.** 'ஆநிரை கவர்ந்து வருதற்கு வேற்று நாட்டிற்குச் சென்றிருபபோனாகிய மதுவை விருமபுவோன் காயதலும் - விடாய்த்தலும் - உண்டாகலின் அவனுக்காக முதுகட்சாடியொன்றைப் பாதுகாதது வைப்பாயாக' என உண்டாட்டினிடையே கள்வழங்குவோனிடம் மறவனொருவன் கூறினான் (புறம. 258:6-11).

3. **எரித்தல்.** யாவறறையும் அழிககும் கதிர்களையுடைய ஞாயிறு முதுவேனிற காலத்து இடைநாட்களில நினறு காயதலால - எரித்தலால் - மழைநீர் வறணடு கானலநீர் பரநது தோனறும (அகம. 89:1,2).

4. **கெடுத்தல்.** அகன்ற மாணிக்கப் பாறையிடத்து நெருங்கி வளர்நத மூங்கில விடியற்காலதது விருபபம் மிகக ஞாயிற்றின ஒளியைக காயும் - கெடுககும் - (கலி. 45:1).

**காயம் - 1.** ஆகாயம். வடிவினறி நிலைபெறற காயம் - ஆகாயம் - அளநதறிதறகு அரியது (புறம. 20:4,5; 30:5,6).

2. **உறைப்பு.** கரிய ஆட்டுககிடாயை வீழ்த்து அதன ஊனைச் செநதீயிலிட்டுச சுட்டுக் காயம - உறைபபு - பெயது சமைதத உடலிடம் அகனற கொழுதத ஊனுணவைக களளுடன் உண்ணுதல் (புறம். 364:4-7). ஒருவரால் செயயபபடாத பாவைகளாகிய இஞ்சிக கிழங்குகள் வளாநது அழகு முதிாநது காயஙகொணடன (மலை. 125,126).

3. **கறி.** நெய் ஊறிய காடைப பறவையின ஊன் காயமாக - கறியாக - உண்ணும் உணவு சிறப்பாகக கருதப் பெறறது (குறு. 389:1,2).

**காயல் - 1.** உப்பளம். களத்தில நெறபோரினைப் பிரித்துக கடாவிட்டபின கள்ளுண்டு வநத உழவர் கூடிய காற்றின நெலலைத் தூற்றப் பறநது போன துருமபுகள முழுதும காயலின - உப்பளததின -

சிறுசிறு பாத்திகளில் இடமெங்கும் பரவியது (அகம் 366:2-5).

2. **காய்ந்த புல் (ஆகுபெயர்).** தலைவியின் தந்தையது வளங்குன்றாத நல்ல இல்லம் காயல் - காய்நத புல் - வேயப்பெற்றது (அகம், 370:5,6).

**காயா – மரவகை.** நீலமணிபோலும் பூவினையுடையது காயா (பொரு. 201). கரிய அருமபுகளை யுடைய காயா மயிலின் கழுத்துப் போலப் பூக்கும் (சிறு. 165). நெருங்கிய இலைகளையுடைய காயா அஞ் சனம் போல் மலரும் (முலலை. 93). காயாவின பூ பல கொத்துக்களையுடையது (குறி. 70). செந்நிலப் பெருவழியில் காயாவின் வாடிய பூக்கள் பரவிக் கிடக்க அவற்றிடையே தம்பலப் பூசசிகள் பலவும் ஊர்ந்து செல்வது நீல மணிகளோடு பவளங்கள் நெருங்கியிருப்பது போல் தோன்றும் (அகம். 14:1-4; 304:13-16;374:12–14). மயிலைக் கண்டு அஞ்சிப் பாம்பு படம் விரிப்பது போல் பூக்களை யுடைய காயாவின் கிளைகளுக்கருகே காந்தள் மலர்ந்திருந் தன (அகம்.108:12-16). கரி பரந்தாற் போன்ற காயா வின் வாடிய பூக்களுடன் இலவமலர் சிறிய மலைப் பக்கத்தே உதிர்ந்து கிடக்கும் (அகம். 133:7-9). காட் டில் மழை பெய்வதற்கு முன் பொலிவற்றிருந்த காயாவின் மலர்கள்பொருந்திய கிளை மழைபெய்த பின் மயிலின் கழுத்துப்போல் பொலிந்து தோன்றும் (குறு. 183:5-7). நீலமணி போலப் பலவாய மலர்களை யுடைய காயாவின் குறுங்கிளைகள் விளங்கக் கார்ப் பருவம் தொடங்கியது (நற்.242:3-5). நிறைய மலர்ந் திருக்கின்ற காயா மரங்களையுடைய மலையின் இடையே சரக்கொன்றை மலர்ந்தாற்போல மேகங் கள் மின்னிப் பரந்து மழை பெய்யத் தொடங்கின (நற். 371:1-5). முலலைநிலம் கார்ப்பருவ வருகை யால் காயா, கொன்றை, நெய்தல், முல்லை மூத லிய பலவும் மலர்ந்து அழகுற்று முழுதும் பூவணி கொண்டு திகழ்ந்தது (ஐங். 412:1-3). கார்ப்பருவத்தி னால் பொன்னென மலர்ந்த கொனறையொடும் மணியென மலர்ந்த தேன்மிக்க மலர்களையுடைய காயாவொடும் மலர்ச்சி கொண்ட தோன்றி யொடும் முல்லைநிலம் நன்னலமெய்தியது (ஐங். 420:1-3). நீலமணியை யொக்கும் நிறத்தினை யுடைய காயாம்பூக்களும் பிறவும் அழகு கொள்ளும் படி சூடிய கணணிகளை யுடையவர் ஆயர் (கலி. 101:5,6). பொதுவர் மெல்லிணர்க் கொன்றை, காயாம்பூ முதலிய பூக்களாற் செய்த கண்ணி களைச் சூடி ஏறு தழுவினர் (கலி. 103:1-5). மிக்க சினத்துடன் வெம்மையுடையதாய்த் தன்மேல் தாவி வந்த சிவந்த ஏற்றின் கொம்புகளைப் பிடித்துக் காயாம்பூங் கண்ணிப் பொதுவன் தழுவினான் (கலி. 103:50-52). முல்லைத தலைவன் காயாம்பூங் கண்ணி யணிந்திருந்தான் (கலி. 108:10). 'சுனை யாடி, தளவமொடு முலலை பறித்துக காயாம்பூவை யுடைய குளிர்ந்த பொழிலிடத்தில் எனனொடு தங்கிப் பொழுது குளிர்ச்சியுண்டாக நீ நுமமூர்க் குச் செல்வாயாக' என்று தலைவன தலைவியை வேண்டினான (கலி. 108:41-44).

**கார் – 1. கார்காலம்.** தாழசடைப் பொலிந்த அருந் தவத்தோனுக்கு (சிவபெருமானுக்கு) திருமுடிமேல் சூடப்படும் கண்ணி கார் - கார்காலதது - மலருப நறுங்கொனறைப பூவாம் (புறம. 1:1,13). கார் நறுங் கடம்பினது பசிய இலையோடு விரவிய மாலையையணிந்தவன் சூர்நவை முருகன் (சூரபன் மனைக் கொனற முருகன) (புறம். 23:3,4). சோழன போர்வைக் கோபபெருநற்கிளளியின களிறு கார் மழையுடன் கூடிய இடியினும முழக்கம மிககன (புறம். 81:1,2). கார்மழை பெயது மாறிய காட்சிக் கினிய காலத்தில தெறுழமலர் பூததது (புறம். 119: 1,2). கார்மழையால மிகுந்த பெரிய பட்டதை யுடைய ஈரத்தில் புழுதி கலககப பலசால்பட உழுது வரகு விதைத்தனர் (புறம 120.2,3). பேகனால் துறக்கப்பட்ட கணணகி காாமழையினது இனிய துளி வீழ்கினற ஓசையைத் தமியளாகக் கேட்டு ஒரு பக்கத்தே வருநதி அழுது கொண்டிருந தாள் (புறம். 147:3-5). கார் காலத்தில தோன் றும் இடிபோல விரைந்து தோனறி நிறைநத உயிர் களையுண்டற் பொருட்டுக் கூற்றம் திரியும (புறம். 361.1,2). சேரன மாதேவியின தாழிருங் கூந்தல் கார்காலத்து மலரும் பூ (முலலை) மணம் கமழும் (பதி. 21:33). நிறைநத சூலகொணட பெரிய மேகம் கார்ப்பருவத்து மழை பொழியாது மறந்தாலும் பல்யானைச் செல்கெழுகுட்டுவனது வளம நீங்காப் புதுமையுடையது (பதி. 24 28-30). கார்காலத்தில் இடிககினற இடியேற்றினை யொதது முரசு ஒலிக் கும் (பதி. 33:10;80:3,4). கொக்குகளின வரிசை கார் காலத்து மேகக் கூட்டத்தின் முன்னே ஒழுங்கு குலைநது பறக்கும் (பதி. 83:1,2). போர் முரசம் கண்ணதிர்ந்தாற் போன்று கார்காலத்து மேகம் முழக்கததைச் செய்தாலும் அதனையும் போர்முர சொலியெனக் கருதித் தறியினின்றும் கட்டவிழ்த் துக் கொண்டு களிறு நுதல் நிமிர்ததுப் போருக்குப் புறப்படும் (பதி. 84:2-4). கார்காலத்து மலாவது குறிஞ்சி (மது. 613). யானை தினைப்புனத்தை மேய்ந்தது பொறாத கானவர் அம்பெய்து தட்டை யைப் புடைத்துச் சீழ்க்கையொலியுடன் ஓட்டுகை யினால் சினந்திகழ் மதம் மிகுந்து மனம்செருக்கிய

யைலையுடைய அவ்வேழம் மரத்தை முறித்துக் கார்மழையின இடியேறு போல முழங்கிக் கூறறுவனைப் போல் தலைவி தோழியரை எதிர்நோககி வந்தது (குறி. 156-165). கார்காலத்தில் பழுத்தலையுடையது பலாககாய (மலை. 12). மணிமிடற்று அந்தணனாகிய இறைவன் கார்விரி கொனறையின் பொன்னை யொத்த புதிய மலர்களாலான தாரினையும் மாலையினையும் கண்ணியினையும் உடையவன் (அகம். க. வா. 1,2,15). முலலையின் கூரிய நுனியையுடைய அரும்புகள் தோன்றவும் தேற்றா மரத்தின் முகையொடு கொனறை முகைகளமெல்லிய கட்டவிழந்து விரியவும் இரலை மானகள பள்ளங்களிலெல்லாம் துள்ளிக் குதிக்கவும் உலகம நீரில்லாத வருத்தத்தை விட்டொழியவும் மேகம் மழைகளைத் தூவி அழகிய காட்டினைக் கார் செய்தது (அகம். 4:1-7). தலைவன் வரும்வழியில தேரின் உருளை கற்களில மோதி ஒலிக்கும் ஒலி கார் மழையின இடிமுழக்கினை ஒக்கும் (அகம. 14:19-21). வேங்கைமரததின பூந்துகளை அளைநத மயில குருந்த மரத்தின் கிளையிலிருந்து தன் துணையை அழைக்கும் துணையைத் தருகின்ற குளிர்ந்த கார்காலத்தேயான மீணடு வருவேனென்று தலைவன தேற்றிச் சென்ற பருவம் வநதது எனத் தோழி தலைவியை வற்புறுத்தினாள் (அகம. 85'10-15). முருங்கையின் முதிர்நத பூக்கள வெப்பம்மிக்க கோடைக்காற்றினால குளிர்ந்த காாகாலத்து ஆலங்கட்டிபோல் உதிரும் (அகம். 101:14-16). கார்காலம் கூடியதால் பசிய புதர்களையுடைய முல்லைநிலத்தே வெண் மேகம் தவழும் (அகம. 133.5,6). நிறைநத சூலினையுடைய கரிய மேகங்கள கார்காலததைத தந்து தங்கியதனால் மழை பெய்து கானம் கவின பெற்றது (அகம. 134:1,2). குளிர்நத கார்காலம் வநதமையால் அரும்பிய முலலைககொடியின கூரிய முனைவாயந்த வெள்ளிய அரும்புகளும் மலர்நதன (அகம். 144.3,4). மேகககூட்டம் கடலிலே சென்று நீரைபபருகி மேலெழுநது சூலுற்ற பிடியானைக் கூட்டமபோல இடநதோறும் பரநது ஒலிசெயது பெய்தற்கு ஒருஙகு நெருங்கக கார் வநதது (அகம். 183:6-10). வரகுக் கதிாகளைப பறறியுணட மயில தோகையினை விரிததுக குருநதமரக கிளையிலிருநது இனபுறத் துணையினை அழைக்கும் கார்ப பருவமே தலைவர் மீணடுவருவதாகக குறிதத பொழுது எனறு தலைவி ஆற்றாது கூறினாள (அகம. 194:9-19). தலைவி கார் காலத்து (முலலை) மணம் கமழும கூநதலையுடையவள (அகம. 198:5,208:23, 24). கார்மழையை ஏற்றுததழைத்த காண்டற்கினிய காட்டில வண்டின தொகுதிகள் மணங்கமழும் முல்லை மலரில் மாலைக் காலத்தே ஆரவாரிக்க நாம் குறித்த பருவம் வந்துவிட்டது என்று வினை முற்றிய தலைவன் தேர்ப்பாகனுக்குரைத்தான் (அகம். 204:5-8). கார் தோன்றிய பொழுதில் காட்டு நிலம் அழகுபெறும் (அகம். 304:16). மேகம் நீல மணியை யொத்த நீர்பொதிநத சூலினைக் கொண்டு கரிய வானில் அதிர இடித்துப்பெய்த நீரினால் நிலம் தட்பமுற்றுக் காடு தழைகக, உழவர் இன் குரல் இயம்ப, காட்டில குட்டியையுடைய பிணை மானைத் தழுவிக்கொண்டு கலைமான் பசிய பயிரிலே துள்ளிததிரிய மிக்க மழையைத் தந்த காலம் கார்செயதது(அகம.314:1-7).காரினை எதிர்கொண்ட பெரிய முல்லை நிலத்தே கூட்டமான மயில்கள் அகவும் (அகம். 334.13). திசையெல்லாம மறையுமாறு பரவிக் காலவீழ்த்து இடியேற்றினையுடைய பெருமழை பொழிந்ததாகப் பள்ளங்கள் தோறும் தேரைகள் ஒலிக்க, நீணட பூங்கொததுக்களை யுடைய கொன்றை அழகுபெற, காடுமுழுதும தோனறிச் செடி விளககுப் போன்ற பூககளைக் கொள்ள, தேற்றாவொடுமுல்லைகள் மலர, விலங்குகள் நீருணணுமாறு சுனைகள் நிறையக் காலம கார்தொடங்கியது (அகம. 364:1-9). கடல்நீரை முகநது திசைகளில் சென்று இருண்டு உலகம் மறையுமாறு வலமாக எழுநது சென்று பொறையால் வருநதுதல கொண்ட வளமிக்க பல மேகங்கள வானைப் பிளநதன போல ஒருங்கே மினனி இறஙகுவன போல நெருங்க வநது கவிழ்நதன போல மிகுப் பொழிநது இடிததலும குமுறலுமினறிப் பாணர் யாழிசைததது போல இனிய குரலுடன் மிக்க துளிகளைப் பொருநதி மழைபெய்து கழிநத பூமணம் மிக்க விடியலில் களர்மண வழியில தம்பலபபூச்சிகள் குறுகக் குறுக ஓடிக் காயாவின வாடறபூக்களில ஒளிந்து மறையக் கார கவின கொண்டது (அகம. 374:1-15). 'வண்டுகள் விழும்படி செறிநது மலர்நத நீண்ட பூங்கொததுககளைத தழைகளின இடையே கொண்ட புதுபபூஙகொனறை மரங்கள் நிறைநத கானம் இப்பருவததைக் கார என்று மலர்ந்து தெரிவிப்பினும் பொய கூறாத தலைவா இன்னும் மீளாமையால் அவர் வருவதாகக் குறித்த காரப பருவமாக யான் இதனைத தெளியேன' என்று தலைவி கூறினாள் (குறு. 21). பருக்கைக் கற்களினிடத்தே உள்ள தெளிநத நீரைககுடித்த இரலை மான் தன் இன்புறு துணையொடு களிப்பினால துள்ளி விளையாடுமாறு மழைத்துளியைத் தரும் குளிர்நத கார் வந்தது (குறு. 65:1-3). பிரிநது சென்ற தலைவர் தாம் மீள்வதற்குக் குறித்த பருவம வராத அளவிலேயே வம்பமாரியைக் கார்

மழையென மதித்துக் கொம்புகளிடத்தே பூங்கொத்துககளை மலர்விததனவாதலான் இக் கொன்றை மரங்கள் அறியாமையுடையனவே என்று தோழி பருவமன்மை கூறித் தலைவியை ஆற்றுவித்தாள் (குறு. 66). நறுமணமுடைய குளிர்ந்த கார் தன் மழையாலே வளர்த்த பூங்கொடி முல்லையின் அரும்புகளே பற்களாகத் தோன்றப் பிரிவில வருந்தும் என்னை நோக்கி, 'பொருளை விரும்பிச் சென்ற தலைவர் நின இளமையினையும் கருதிலர்; இப்பருவத்தும் வந்திலர்; எங்கேயிருக்கின்றாரோ; நீ இரங்கத்தக்காய்' என்று நகைக்கின்றது' எனத் தலைவி தோழியிடம் நொநதுரைத்தாள் (குறு. 126). 'அரும்புகளையுடைய கொனறை மரங்கள் குருந்த மரங்களோடு சுழன்றசையும் மிகக குளிர்ச்சியை யுடைய இப்பருவத்தையும் கார் அன்று என, நீ துணிநது மறுப்பாயாயின இக்காட்சிகள் கனவோ' என்று தலைவி தோழியிடம் கேட்டனள் (குறு. 148: 3-6). குளிர்ந்த காரினை யேற்ற முல்லை நிலங்கள் 'முல்லையரும்புகளோடு அழகுமுதிர்ந்தன (குறு. 188: 1,2). நீரை ஏற்றுக்கொண்ட மின் முதலிய தொகுதி கொணட கார் காலத்தை ஏற்றுக்கொண்ட மழை ஊதைக் காற்றோடு வந்தது (குறு 197: 2-5). காரினை ஏற்றுக் கொண்ட முல்லை நிலத்தில கவலைகூ கிழஙகைக் கல்லியதனால் உண்டான குழியில் கொன்றைமலர் பரவிக்கிடக்கும் (குறு. 233:1-4). முந்தைய மழைக்காலத்தில் பெய்யாது எஞ்சியிருந்த பழைய நீரைப் புதுநீரைக் கொள்ள வேண்டிப் பொழியும் அயன்மையுடைய மேகத்தின ஓசையைக் கேட்டுக் காலமாரி பெய்ததெனக் கருதி அதற்கெதிரே மயிலினங்கள் ஆலினவே யொழிய உண்மையில இது காரனறு' எனத் தோழி தலைவியிடம் பருவமன்மை கூறி வறபுறுத்தினாள் (குறு. 251). காரெதிர் தண்புனத்தில் பருவம் வாய்தத வரகு நாற்றின் கரிய இலையை நாட்காலத்தே மான குட்டி மேயும் (குறு. 282:1-4). தணணிய மழைத் துளியை எதிர்கொண்ட முல்லையின் அருமபு மலர்ந்த மணம் செம்முல்லையொடு தேன் மணக்கும் வண்ணம் நெருங்கித் தோனறும்படி மேகம் காலமல்லாத காலத்தில் பெய்கிறது; இக்காலம் கார்காலமாயின் பிரிந்துசென்ற காதலர் வாராரோ என்று தோழி தலைவியிடம் வினவிப் பருவமனமை சுட்டி ஆற்றுவித்தாள் (குறு. 382). கார்காலதது மலர்வது கடம்பு (நற். 34:8). அனபில்லாது நீயிர் தலைவியைப் பிரிந்து செல்லின் பாம்பின் தலை துணிந்து விழும்படி சினந்து இடியேறு குமுறித் திரியும் முகில் சூழ்ந்துலாவும் கார்பபருவ மாலைக் காலம் வரும்போது இவள் படும் அவலம் என்னாலே தாங்கப்படுவதன்று எனத்தோழி தலைவனிடம கூறினாள் (நற. 37:7-11). அறிவிலலாது பருவ காலத்தை மறந்து கடலநீரை உணடு நிறைநத சூலைககொணட கரிய மேகம் தாங்க மாட்டாமல் பெய்தொழிந்த வளவிய மழையை நோககி இது காரெனறு மறதியுறற உள்ளததுடனே அறியாதனவாய்ப பிடவும கொனறையும கோடலும் பிறவும் மலர்ந்தன எனத் தோழி பருவத்தை மறுத்துத் தலைவியை வறபுறுத்தினாள (நற். 99.5-10). பெரிய கடலில எஞசியிருக்கும் நீர் சிறிதேயென்னு மாறு மேகம் வாயினாலுணடு நொசசியும முலலையும் மலருமாறு பெயயக காலம் காரினை எதிர் கொணடது (நற. 115:4-7). 'என தோளிலுள்ள வளைகளை நெகிழத்த துன்பததை நோககி இகழநது நகைபபதுபோல மினனி ஆர்பபது போலகினற இக்கார்ப் பெயலின இடியோசையைப பொருள் வயிற் பிரிந்த காதலர் கேளாரோ எனத் தலைமகள பருவங்கணடு நொந்தனள் (நற். 214:8-12). இலைகளிலலாத பிடாவெலலாம் அரும்ப, முலலையும் கொன்றையும் மலர மலாகளையுடைய காயாவின குறுஞ்சினைகள் விளஙகக காலம கார் தொடங்கியது (நற. 242.1-5). சிறிய பூவையுடைய முலலையின பசிய மலரெலலாம் புதாகளில் அழகுற மலரப பெருமழை பொழியும் கார்காலமே யாம் மீணடு வரும காலம எனத தலைவன தலைவியை வறபுறுததிப பிரிநதான் (நற. 248:1-4). மேகம் கடலநீரை முகநது இருணடு மிகக மழையைப் பெயது கடிய இடிக குரலைக காட்டிக் காரினைச் செயது துனபுறுத்து தற்கு எனனிடம் வநதுள்ளதெனத தலைவி பிரிவிடைப் பருவங்கணடு ஆறறாது கூறினாள் (நற். 289: 3-6). முல்லை நிலத்தில நிறைந்த முழககத்தை யுடைய முகிலகள் மிகக மழைததுளிகளைப பொழியக் கார் தொடங்கியது (ஐங. 411:1,2). நின நுதல போனறு மணங்கமழும நறுநதண புறவிலே நின்னைப் போலவே மயிலகள் களித்துக கூத்தாடவும் நாமிருவரும விரும்பி இனபுறவும் கார் தொடங்கியது எனத் தலைவன தலைவியிடத்துக் கூறினான் (ஐங். 418). முல்லை நிலத்தில அதறகு இயைநத கார் கலந்ததனால் அதன புனம் தழைத்து மலர்ந்து அழகு பெற்றது (ஐங. 417:1,2). கார் எதிரும் காலமெனபதனால தலைவன பிரிதற்குத் தலைவி இசைந்திலள்; பகையரசன் பாசறைக்கு வாரானென்று போருடை வேநதனும படையெடுப்பைத் தவிர்த்தனன (ஐங. 427). மிக்க இடியோசையுடைய மேகம் இந்திரவிலலைக் கோலி என் தேர்ச்செலவைத் தடுக்குமாறு கார் தொடங்கியதனால் யானும் வேந்தனுக்குத் துணையாகச் செல்லும் விழுமிய போர்த்

தொழிலை யொழித்து உன்னைப் பாதுகாக்கத் தொடங்கினேன் என்று தலைவர் தலைவியின் ஐயந்தீரக் கூறினான் ('கார் தொடங்கின்றே' என்பதற்குச் 'சோர் தொடங்கின்றே' என்றும் பாடமுண்டு) (ஐங். 428). நீர் மிகுமாறு மேகம் பெய்கின்ற கார்ப் பெயலை ஏற்றுக் கொண்ட கானத்தையுடையதாய் நம்மை நினைந்து மீளுதற்கு ஏதுவானதாகலின் காதலர் பிரிந்து போன வழி நனமையுடையதே எனத் தோழி தலைவியை ஆற்றுவித்தாள் (ஐங்.433). காதலியை யான் கையறப் பிரிந்த இந்நிலையில் அவள் கூறிவிடுத்த தூது மொழி இக்கார் நாள் இடியோடு சேர்ந்து எனக்கு மிக்க துன்பத்தைத் தந்தன என்று தலைவன் வினைமுற்றாத நிலையில் வந்த தூதரிடத்துக் கூறினான் (ஐங். 441:1-3). பள்ளங்களின் பக்கத்தே படர்ந்துள்ள முல்லைக் கொடிகள் மலரும்படி கார் ஆரவாரமுடைய மழையை ஏற்றுக்கொண்டது (ஐங். 448:3,4). தலைவியைப் பிரிந்த தலைவன் காரினைச் செய்கினற காலத்தின்கண் அவள் கையற்றிருக்கும்படி பிரிவு நீட்டித்தனன் (ஐங். 451:1,2). வறண்ட உலகம் செழிக்கும்படி மழைத்துளியை வீசி முழங்குகின்ற ஒலியையுடைய முகில கார் செய்தது (ஐங். 452:1,2). முல்லைநிலப் பள்ளங்கள் தோறும் நீர் நிறைந்தமையால் அவற்றிலுள்ள தேரைகள் தெவிட்டவும் மேட்டுநிலங்களிலெல்லாம் பல்வேறு பறவைகள் ஒலிக்கவும் காலம் காரினைத் தொடங்கியது (ஐங். 453:1-3). முல்லைக் கொடிகள் தம் பக்கத்தே படர்ந்த செம்முல்லைக் கொடிகளோடு பிணைந்து மெல்லத் தம் அரும்புகளைப் பேணிக் காரினை நயந்திருநதன (ஐங். 454:1-3). நிறைந்த இடிமுழக்கத்தையுடைய முகில் முரசுபோல் முழங்கிப போர் மேற்சென்ற வேந்தர் பகை தணியக் காரினைத் தொடஙகியது (ஐங். 455:1,2). மேகம் சிதறிய நீர்த்துளிகளின் தொகுதியாலே பிடாவின் மொட்டுக்கள் அழகுற்றுத தோன்றவும் காட்டகத்து மரங்கள் துவலை தூவுதலைக் கற்கவும் கார் தொடங்கியது (ஐங. 461:1,2). அயன்மை யுடையதாய்ப் பெய்யும் வம்பமாரியைக் கார் மழையென மயங்கி மலர்ந்த அறியாமை மிக்க கொன்றையின மாலை வடிவான பூஙகொத்தை நோக்கி நீ ஏன் கலங்குகின்றாய் என வினவித் தோழி தலைவியை வற்புறுத்தினாள் (ஐங். 462:1-3). கார் தொடங்கப்பெற்ற கானம் பிறபடுமாறு மிக்க செலவினையுடைய தேரினைச் செலுத்தித் தலைவர் மீண்டு வருவாரெனத் தோழி தலைவியிடம் கூறினாள் (ஐங். 465:1-4). தவளைகள் ஆரவாரிக்கவும் தேரைகள் ஒலிக்கவும் கார் தொடங்கியது (ஐங். 468:1,2). கார் சிறப்புறுதலால் மின் இடிமுதலான தொகுதிகளையுடைய முகில்கள் முழங்கப் பைங்கொடி முல்லை பருவஞ் செய்தன (ஐங். 476:1,2). வேனிற்பருவம் நீங்கக் கார்மழை பெய்தலால் காடு கவின் கொண்டது (ஐங். 484:1,2). ஆமா நல்லேறுகள் மாறுபாடு மிக்குச் சிலைக்க அவற்றிற்கெதிராக இடியேறுகள் முழங்கக் காதலையுடைய பிணைமான்கள் குட்டிகளுடன் திரியக் கார் தொடங்கியது (ஐங். 493). குறுகிய பல மாலைகளைப் போல் கொன்றை மலரவும் புற்றுக்கள் ஈயல்களை வெளிப்படுத்தவும் விலங்கினஙகள பசிதீர மேய்தலை மறுக்கவும் கார் தொடங்கியது (ஐங். 497:1-3). பிடவம் மலரவும் செம்முல்லை அரும்பவும் கானம காரினால் கவின் கொண்டது (ஐங். 499:1,2). கார் முதிர்தலினால் பூங்கொத்துக்கள் அலர்ந்தன (கலி. 67:1). ஆயர் ஏறுகோள் நிகழ்ச்சியில் கார்காலத்துத் தம்மில் எதிர்ந்த கலிப்பினையுடைய இடியினது கடிய ஒலிபோல இயங்கள் ஒலித்தன (கலி. 105:24). காதற்பரத்தையது இருப்பிடம் தலைவனது இடத்திற்கு அருகிலிருக்கவும் வானம் பொழியும் காரில் வையை வெள்ளம மிகுதலின் அவன் அவளிடம் செல்வதில் புணை காரணமாகக் காலம் தாழ்ந்தது (பரி.6:75-77). முருகன் மான்மறி (வள்ளி) தோளை மணந்த போது ஐயிரு நூற்று மெய்ந்நயனத்தவன் மகளுடைய (இந்திரன் மகள் தேவசேனையுடைய) கண் முது வேனிற்காலம் காரின் தன்மை பெறும்படி நீல மணி போலும் நிறமுடைய முகில்கள் மழை பெய்தாற் போன்று திருப்பரங்குன்றத்தின்கண் கண்ணீராகிய தணிந்த மழையைப் பெய்தது (பரி. 9:8-11). 'வையையே, காாகாலத்துக் கலங்கி வேனிற் காலத்துத் தெளிதலால் உன் நீர்மை எப்பொழுதும் ஒருபடியாயிருப்பதில்லை எனத் தோழி தலைவன கேட்பக் கூறினாள் (பரி. 11:72,73). பனிமிகுதியின் குளிரால் நடுங்குதலையுடைய முன்பனிப்பருவத்தில் கார்முகில்கள் அதிர்குரல் ஒழியும் (பரி. 11:74, 75). வையையுள் ஒருவன் வாழைத் தண்டைத் தழுவிப் புனலாடும்போது ஒருத்தியைக் கண்ட பொழுதிலே அவன நெஞ்சை அவள் வாங்கிக்கொளள, அவன் கையைப் புனல் வலிக்க, அவனைப் புணை நெடுநதூரம் இழுக்க, அவன விரும்பின அவளிடத்துக கொணடு செல்லாமல் வெள்ளம் தன் போக்கில் அவனைக் கொண்டு போக, அதனைக் கண்ட அவள் அவன்பின தொடர, அவ்வன்புடைமையை யறியாத தாய் அவளைத் தடுதது, ஆயத்திற் சேர்க எனறு அரற்றச் சிவப்புறற கார்காலத்து நீர்வரவு கரையைப் பொருது வந்தது (பரி. 11: 106-114). வையை

யில் நீர்விளையாடியோரின் ஈரத் துகிலிலிருந்து வடிந்த நீரால் கரைகள் காரின் தன்மையைப் பெற்றன (பரி. 12: 98). கார் மழை பெய்தலால் நீர் நிறைந்த சுனையின் பூக்களும் கடம்பு முதலிய மலர்களும் மலரப்பெற்ற திருப்பரங்குன்றம் கார் காலத்தன்மை மிக்கது (பரி. 14:1-17). கார்காலத்து வெண்மேகம் கிளர்ந்தாலன்ன நறுமணமிக்க அகிற் புகை முதலியவற்றைச் செவ்வேள் மிகவும் விரும்பு வார் (பரி. 14: 19, 20). விசும்பின்கண் பரந்து கார் காலத்தை எதிர்ந்த நிறைசூல் மேகம் போல் இருண்டு கடற்பரப்பு நீரைப் பரந்து ஏற்றது (பரி. 18: 2,3). திருப்பரங்குன்றத்தில் கார்காலம் தோற்று விக்கும் காந்தட் குலைகள் தம் நெருங்கிய அழகி னால் போரில் தோற்றுக் கட்டுண்டார் கையை ஒக்கும் (பரி. 18: 34, 35).

2. மேகம். ஊசலாடும் மகளிர் கார் - மேகம்-போலும் கரிய விரிந்த கூந்தலையுடையவர் (பதி. 43: 1, 2). பகைவரது போர்முனைக்குச் சென்ற தலைவர் மீண்டு வருமுன்னமே கார் கடல்நீரை முகந்து கொண்டு மழை பெய்தலைக் குறித்து வந்தது (முல்லை. வெ. 2). திருவிழா என்னும்படி பழங்குடியினர் பொருந்திக் கடலெனக் காரென ஒலிக்கும் ஆரவாரத்தோடு திரிவதற்கு அகன்ற இடம் பெறாத பெரிய அங்காடித் தெருவினை உடையது நன்னனின் மூதூர் (மலை. 479-483). இனிய முதலமழை பெய்யும் காரும் ஆரவாரத் தோடு பெய்யத் தொடங்கியது என்று வினை முற்றி மீளும் தலைவன் பாகனிடம் கூறினான் (அகம். 54: 2, 3). கார் சினந்தெழுந்த வானில் கொள்ளிபோல் மின்னி நள்ளிரவில் மழைபெய்தது (அகம். 108: 6-8). காதலர் மீண்டு வருவதாகக் குறித்தது தொகுதிகளையுடைய கார் இடிகளைக் கொண்ட இப்பருவமன்றோ எனப் பிரிவிடை மெலிந்த தலைவி தோழியை வினவினாள் (அகம். 139: 17-19). மின்னலால வானைப் பிளந்து வலிமை யுடன் எழுகின்ற காரினை யொப்ப மறப்போர்க் குட்டுவன் பகைத்து வலிமை கொண்டு பாசறை யைத் தான் வேண்டும் இடங்களில் அமைத்துப் பெருந்தானையுடன் போரிட்டான (அகம். 212: 12-16). கார் நீரைப் பொழிந்ததனால் வெள் ளம் மிக்க காலத்தில் நுண்மணல் பரவிய நீர் நிலையிடத்து அன்னங்கள் வரிசை வரிசைகளாய்ப் பறக்கும் (அகம். 234:1-3). பசும்பூட் பொறை யனது கொல்லிமலை கார் விரும்பி மழை யினைப் பெய்தமையால் வளம்பெற்றது (அகம். 303: 4-6). காரினால் காக்கப் பெற்ற நீர்வளம் மிக்கது முல்லைநிலம் (குறு. 162:1), பெரு முழக்கத்தையுடைய இடியேற்றோடே கார்மழைபெய்து கலந்த முல்லை நிலத்தில முல்லைக்கொடி அரும்பும் (குறு. 186:1-3). களாவின் மலர் மணங்கமழவும் பிடாவின் மலர் முறுக்குவாய் நெகிழவும் மழைக்காலத்தில் கார் தன் செயலாகிய பெயலைச் செய்தது (நற். 256:6,7). நீர்த் துளியைப் பெய்யும் தண்ணிய கார், பிரிந்த தலைவர் மீண்டு வாராத அளவிலே மலையின் மேற்பக்க மெல்லாம் மறையுமாறு காலிறங்கி மழையைப் பெய்து விண்ணில் இடித்தலையும் செய்தது எனத் தோழி அம்மேகத்தைப் பழித்தனள் (நற். 316:6-10). பாம்பு உறைகின்ற புற்றினைக் கரடியினம கார் போலச் சூழ்ந்து இரை தேர்ந்து அகழும (நற். 336: 8-10). கீழைக்கடலிலே நீரை முகந்து மேலைத் திசைக்கண் எழுந்து சென்று இருண்டு தண்ணிய கார் மழை பெய்ததனால நிலத்தின் வெப்பம் தணிந்தது (நற்.346:1,2). கார் முழங்குகின்ற காலத்து நின் நினைவு இடையீடின்றி என்னை வருத்த யான ஆற்றாது மிக நொந்து வருந்தும் உள்ளத்தோடு நின் பேரழகை மீண்டும் தருதற்கு விரைந்து வந் தேன் என்று தலைவன தலைவியிடத்துக் கூறினான (ஐங். 491). நின்போன்ற மயில் ஆடவும் நின நுதல போல் மணக்கும் முல்லை மலரவும் நின்போல மான் மருண்டுநோக்கவும் யான் நின்னை நினைந்து காரினும் விரைந்து வந்தேன் எனத் தலைவன தலைவியிடம் கூறினான (ஐங். 492). விலங்கினங்கள புதர்களை அடையவும் வரகு தன கதிர்க கொத்துக களாலசிறப்பெய்தவும் மலைகள் தமமிடத்துப் பயில வாரின்மையால் தனிமை எய்தவும் கார் ஆரவாரித் துப் பெய்து வருத்துதலால் மெலிந்த தலைவியின தோளுக்குத் துணையாகத் தலைவன் வினை முற்றி மீண்டனன (ஐங். 496:1-4). காரினது கவினைப் பெற்ற கூந்தல் போல் இளவேனிற் காலத்தில் புலர்ந்த மணல விளங்கியது (கலி. 32:1,2). வானத் திலுள்ள கார் ஓட்டையாயிற்று என ஒருசார் மக் கள கூறுமாறு வையை வெள்ளம் பெருகியது (பரி. 7:30). திருப்பரங்குன்றத்தில் இடிக்கும் காரின் குரல் முருகனின யானையது முழக்கத்தைக் கேட் டாற் போன்றிருந்தது (பரி. 8:17,18). திருமால் காரினை யொக்கும் திருமேனியை உடையவர் (பரி. 13:42,43). திருப்பரங்குன்றத்தில் கார் மிக்க மழை யைப் பெய்தலால் அதனை யேற்ற நீர் நிறைந்த சுனைகள் பூ மலர்ந்தன (பரி. 14:1,2). நீரை முகக் கும் கார் போலும் திருமேனியுடையவர் திருமால் (பரி. 15:50). பரங்குன்றத்தில் காரினால சுனைகள் நீர் நிறைந்து துளும்பும் (பரி. 18:32). மகளிர் காரினது அழகைக் கொண்ட கூந்தலையுடையவர் (பரி. 22:29).

3. கருமை. இமையவரம்பன் படையெடுத்துச் சென்று தங்கிய பகைநாட்டு வயல்களில் விடத்தேரை என்னும் மரங்களோடு கார் - கருமை - உடைய வேல மரங்களும் ஓங்கி வளர்ந்தன (பதி.13:12-14). காரினைப் பொருந்திய அழகிய மூங்கிற் குழாயினிடத்தே கள்ளை முதிரவைப்பர் (பதி. 81:20,21). காரேறுகள் தம்மில் பொருத வயலில் உழாமலே நுண்ணிய சேற்றை ஒக்க மிதித்த உழவர் நாற்று நடுதல் (பெரு. 210-212). அப்ப வாணிகர் காரகலில் பாகுடனே வேண்டுவனவற்றைக் கூட்டி அப்பம் செய்வர் (பெரு. 377,378). விறலியர் நறுங்கார் அடுக்கத்திலே குறிஞ்சிப் பண்ணைப்பாட நீவிரும் ஆண்டுறையும் தெய்வங்களைத் தொழுது வாழ்த்தி நன்னனது மலை பிற்படுமாறு போமின் எனக்கூத்தர் ஆற்றுப் படுத்தப் படுகின்றனர் (மலை. 357-360). சூல் முதிர்வதற்கு முனபு பஞ்சு போல் பொங்கிச் சென்று மழைககாலம் வருமளவும் மேகம் கிடக்கும் பெரிய மலையிடத்தில் கார்மேகத்திரள் கையினால் பிடிக்குமளவு தாழந்திருக்கும் (மலை. 361,362). நள்ளியின நறுஙகார் அடுககத்தில் பனையின் அடிப்பக்கத்தே காந்தள் மொட்டு மலர்ந்தன (அகம். 238:14-16). கார்மேகம் இடிக்குங்கால் நீரின்கண் தேரை ஒலிக்கும் (அகம. 301:18,19). மழைக்காலத்தே ஏற்றுக் கொண்ட கொல்லையில் பருவம் வாய்த்த வரகு நாற்றின் தழைத்த கார் இருள் நிறமுடைய இலையை விடியலில் மான்மறி மேயும் (குறு.282:1-4). மனையகத்து இறப்பில் உறைகின்ற குருவிச் சேவல் கார் அணலை (தாழவாயை) உடையது (நற். 181:1). நெறிப்பமைந்ததும கார் முதிர்நததுமாகிய கூந்தலையுடையவள் தலைவி (நற. 368:5). வேங்கைமரம் கார் அரும்பு அவிழ்ந்தது (நற். 373:6) கார் பரந்த கமழ்கின்ற பூக்களையுடைய சோலையிடத்தே வந்த பரததையைப பாணன் வாயிலாக ஊடல் தீர்த்துத் தலைவன் கூடினான் (கலி. 98:16-19). வையைப் புனலாட மகளிர் கார் கொண்ட தத்தம் கூந்தலைக் கதுபபமைதது முடித்தனர் (பரி. 12:15).

4. மழை. பேகனது காரெதிர் - மழையை ஏற்றுக் கொண்ட - காட்டைப் பரணர் பாட அவனால் துறக்கபபட்ட கண்ணகி அப்பாடலைக் கேட்டு அழுது நினறனள் (புறம். 144:3-6). நெடிய மலைப் பககததில கார மிக வாயத்துப் பலா மரங்கள் கூத்தருடைய முழவு போல காயத்துத் தாழ்ந்தன (மலை. 141-144). கார் வாயத்து ஒழிநத ஈரமான வாயினையுடைய புறறிலிருந்து ஈயல்கள் வெளிப் படும (அகம். 394: 4,5). தலைவன் பிரியக் கைச் சாட்டை இறுகக் கட்டி அம்புகளைத் தேர்ந்தெடுக் கையில தலைவிக்குச் சுனையிடததவான நீலமலர் காரினை எதிர்கொள்ளுபவை நீரைச் சொரியுமாறு போலக் கண் நீரைச் சிந்தும் (கலி. 7: 9-12). நின் அருளைப் பெறாமல் நீரற்ற நிலத்துப் பயிர் போலப் பொலிவழிந்திருந்தவள் நீ இரவுக் குறி வந்ததனால் விடியற் காலததே கார் பெற்ற நிலத்துப பயிரபோல அழகு பெறுவாள் எனத் தலைவி நிலை குறித்துத தோழி தலைவனிடம் கூறினாள் (கலி. 38:10-13). தலைவி காரினை ஏற்றுக் கொண்ட தளிர்போலும் நிறத்தினை யுடையவள் (கலி. 58:3). தம் ஆனிரைகள் மேயும்படியான காராலே நனைநத அகன்ற நிலத்திடத்தே கோவலர் சென்றனர் (கலி. 106:4,5). கார் நிறையப் பெய்த அகனற நிலததே சென்று ஆனினம் அறுகம புல்லை மேய்நதது (கலி. 109:1,2). 'என் மெய்க்கண் நின்று எரியும் காமநோய் காரெல்லாம் என்னிடத்தே நினறு பெய்யினுமஆறுவது போல் இல்லை; நீரைச் செறுத்து என்னுயிர் ஓம்புமின' எனத தலைவனின பிரிவு நீட்டிப்பைப் பொறாத பெருந்திணைத் தலைவி சானறோரிடம் கூறினாள் (கலி. 146:42-45).

5. பசுமை. கார் - பசுமை - உடைய கரும்பின் சாற்றினைக் காய்ச்சுகினற ஆலையின் நெருப்புப் புகை சுடுதலால் வயலகளின நெய்தறபூ அழகழிந்து வாடும் (பட். 9-12).

6. இருள். மாலைப் பொழுதில் தெளிந்து சென்று அணைகளால் தேங்கி நினறு துறக்கவுலகின் எழிலைத் தன் நீரிலே காட்டும் வையையாறு கார் அடு காலை - இருளை - அழிககின்ற காலைப் பொழுதில கலங்கிய செங்குருதியை ஒத்தது (பரி. 12:82-86).

7. கருங்குட்டம். 'காராலே - கருங்குட்டத்தாலே - காலும் கையும் குறைநது கடமைத்துறைப்பட்டு வந்து நம் தெருவினின்றும் போகாமல ஒளித்துத் திரியும் முடமுதிர் பார்ப்பானை நீ பேணுவாயாக' என்று தோழியிடம் தலைவி கூறியிருந்தாள் (கலி. 65:7-9).

8. பொலிவின்மை. காரென் - பொலிவில்லாத - சுற்றத்தையுடையவன் இரவலன் (புறம். 141:6).

**கார்கோள்** - கடல் (ஆகுபெயர்). கார்கோளிலே - கடலிலே - முகந்ததனால் நிறை சூல் கொண்ட கரிய மேகம் வானில் துளியை முற்படச் சிதறித் தண்ணறுங கானத்தில் கார் காலத்து முதற்பெயலைச் சொரிந்தது (முரு. 7-9).

**கார்த்திகை** - கார்த்திகை மகளிர். பாண்டியனுடைய தமிழ்மொழி உளதாகும காலமளவும் மதுரை நகரம் கார்த்திகையின் - கார்த்திகை மகளிரின் - காதில

டப்பட்ட கனமகர குண்டலம்போல் சிறந்து விளங்கிச் செல்வம் பெருகுதலல்லது குறைவு படாது (பரி. தி 10).

**கார் நாற்றம் - வெங்கார் மணம்** (மழை மணம்). காலையில் கடலை முகந்து மாலையில் மேற்கு மலையைச் சேர்ந்து கங்குலில் மேகம் மழையைப் பெய்தலால் வையையாறு மலர் நாற்றத்துடன் வெயிலையும் காற்றையுமுடைய காடுகள் தரும் கார் நாற்றத்தையும்- வெங்கார் மணத்தையும் - கனிநாற்றத்தையும் கலந்து கொண்டு வந்து பிறர்க்குக் கொடுத்தது (பரி. 20:6-11).

**காரணம் - ஏது.** 'நம்மால தமக்கு நிகழ்ந்ததோர் காரணம் - ஏது - இன்றியே தெருவில் கலங்குவார் சிறைக் கண்டு நினக்கு ஏதிலவாயிருப்பனவற்றை நீ நின்மேல் ஏறட்டுக் கொள்ளும் தன்மை என்னே' என்று தலைவி தலைவனுக்காகக் குறை நேர்ந்த தோழியைக் கடிந்தனள் (கலி. 60:12-14). 'தெருவிலே பிள்ளையை விளையாடுவித்துக் கொண்டு வருதற்குப் போன நீ, யான் பிள்ளைக்குப் பாலூட்டாமல் அப்பால் பெருகச் சுரக்குமளவு பிள்ளை பாலுண்ணாதிருத்தற்கு நின் மனத்திலே வருத்தமின்றிக் காலம் தாழ்த்தக் காரணம் யாது' என்று தலைவி தோழியை வினவினாள் (கலி.83:3-6). முக்கடவுளரும் அமரரும் அவுணரும் முனிவரும் பிறரும் முருகனைக் காண்டல் காரணமாக மண்மிசை வந்து உறையும் இடமாயினமையின் பரங்குன்று அவரது பழைய இடமாகிய இமயக் குன்றை ஒக்கும் (பரி. 8:1-11).

**காரான் - எருமை.** கட்டுத்தறியிடத்துச் சேற்றில் நிற்றலை வெறுத்த சிவந்த கண்ணையுடைய காரான்- எருமை - இரவில் கயிற்றை அறுத்துக் கொண்டு முள் வேலியைத் தனது கொம்பினால் அகற்றி வயலில் மீன்களெல்லாம் கலங்கியோடச் சென்று வள்ளைக் கொடியை உழக்கித் தாமரை மலர்களை நிறையத் தின்னும் (அகம்.46:1-6). பெரிய கொம்பினை யுடைய ஈன்றணிமையமைந்த எருமையாகிய காரான உழவன் கட்டிய கன்றினின் நகலாமல் பக்கததேயுள்ள பயிர்களை மேயும் (குறு. 181:3-5). சிறுமழை பெய்யும் கார்ப்பருவக் கடைநாட்களில் கட்டுத் தறியிடத்துச் சேற்றின்கண் நிறறலை வெறுத்த சிவந்த கண்ணையுடைய காரான் நள்ளிரவில் ஐயென றொலிக்கும் (குறு. 261:2-4). தொழுவத்திலுள்ள அகன்ற தலையையுடைய எருமையாகிய காரானிடத் திருந்து பாலை மிகுதியும் கறக்கும் பொருட்டு மாடு மேயக்கும் இளஞ்சிறுவர் விடியற்காலத்தே கன்றுகளை நிறுததிவிட்டு அவ்வெருமைகளின் மேலேறிக் கொண்டு அவற்றை மேயத்துவரச் செல்வர் (நற்.80:1-4). நனனனது கொம்மையான நன் னாட்டில் பொதும்பரினிடையே படர்நத கொடியை மேயந்த நெடிய கரிய கொம்பையும் பருதத தலையையுமுடைய காரான கழித்த மலைப்பசையின் இலைகளை மகளிர் தம் அணிகலனகளுக்கு அழகுண்டாகுமாறு சேர்த்தணிவர் (நற். 391:2-6).

**காரி - 1. கடையெழு வள்ளல்களுள் ஒருவன்.** இவனைக், 'கழல்புனை திருந்தடிக்காரி' என்று கபிலா குறிப்பர் (புறம. 122:2). ஒலிககும மணியினையும வெள்ளிய தலையாட்டத்தினையுமுடைய குதிரைகளோடு தனது நாட்டினையும அருளினை யுடைய நன்மொழி யினையும ஏனையோர் கேட்டு வியக்கும்படி இரவலாககுக கொடுத்தவனான இக காரி அச்சம் தோனறும நெடிய வேலினையும கழலும் தொடியணிநத தடககையினையும உடையவன் (சிறு. 91-95). இவன் முழவொலி யறாத திருககோவலூர்க்குத் தலைவன; நெடிய தேரினன்; பெண்ணையாறு பாயவதான முனறுறையமைந்த கொடுங்கால எனனும் ஊரினன (அகம். 35:14-16). காரியென்னும் பெயரமைநத குதிரையுடைய காரியொடு ஓரிக் குதிரையுடைய ஓரியெனனும் வள்ளல போரிட்டனன (சிறு. 110, 111). சிவநத வேலினையும் கழல் தொடியினையுமுடைய முள்ளூர் மனனனாகிய காரி வலவில ஓரியைக் கொன்று, அவனுடைய கொலலி மலையைச் சேரர்க்கு ஈநதனன் (அகம். 209:11-15). ஓரியைக் கொன்ற காரி அவனது தெருவிலே புகுநத போது தன பகைவராகிய அவ்வோரியைச சார்நதோர் யாவரும ஒருசேர நினறு எதிர்பபுககுரல எழுபபி ஆரப்பரிததனர் (நற. 320:5-7). இவனைக் குறித்த இசசெய்திகளைப் பாடியோர் அம்மூவனார் (அகம. 35), இடைக்கழி நாட்டு நலலூர் நததததனார் (சிறு. 91-95,110,111), கபிலர் (புறம். 122; நற். 320), கலலாடனார் (அகம்.209), என நாலவருமாவர். 'தேர்வண் மலையன', 'மலையமான திருமுடிககாரி', 'மலையன்', முள்ளூர் மனனன' காணக.

**2. காரெருது.** 'சுட்டியை நெற்றியிலேயுடைய காரி- காரெருது - தன்னைத் தழுவியடக்க வந்தபொது வனைச் சாடிக் குடர் சரியுமபடி குத்திக் கோட்டிடையே கொணடு குலைப்பதன் தோற்றம் ஊழி முடிவில் பசுங்கட்கடவுள் எருமை ஊர்தியுடைய கூற்றுவனது நெஞ்சைப் பிளநது அவன குடரைக் கூளிக்கிட்டு அவற்றின் வயிறறை நிறைவிக்கும் தோற்றத்தை ஒத்தது (கலி. 101:21-26). நீல மணிகளை யுடைய மலையிடத்தினின்றும் வீழ்கின்ற

அருவிகள போல அழகின் எல்லையைப் போக்கிய வெண்காற் காரியினையும் பிற ஏறுகளையும் தழுவுதற்காக ஆயர் அவற்றைத் தொழுவினுள் விடுதலினால் அத்தொழு சிங்கமும் குதிரையும் களிறும் கராமும் ஒருங்கு திரியும் மலையிடத்தை யொத்தது (கலி. 103:11-21). 'காற்றின் விசைபோல ஓடிவந்த காரியைக் களத்தில் வலியடங்கத் தழுவி வருத்தி அதன்மேலே தோன்றி நின்ற பொது வனது அழகு, ஏற்றெருமையை ஊர்ந்து வரும் கூற்றுவனது நெஞ்சை வடிம்பாலே பிளந்து சினத் தோடே ஆருயிரை வாங்கியபோது இறைவன் இததன்மையனோ என்று கூறுமாறிருந்தது (கலி. 103:40-45). நல்லினத்தாயர் ஒருங்கு கூடிச் சக்கரப் படையையுடைய திருமறு மார்பனைப் போல் அமைந்த காரியையும் பிற ஏறுகளையும் மேகங் கள் திரண்டவைபோல் முழங்கும்படி தொழுவி னுள்ளே தழுவுதற்பொருட்டு விட்டனர் (கலி. 104: 6-17). 'கூரிய கொம்பினை யுடைய காரியது சீற்றத்தை யஞ்சாது அதனைத் தழுவுமவன் இந்த ஒள்ளிழையாளது நெடுங்கூந்தலிலே துயில் பெறு வான்' என்று ஏறுகோள் நிகழச்சியில் ஆயர் கூறி னர் (கலி. 104:20,21). 'ஏறுதழுவும் தொழுவினுள் வெள்ளிய ஏற்றினது கழுத்திலே பாய்ந்தானைப் பொறாது மேற்சென்று குத்தும் இளங்காரியின் தோற்றம் பால்போலும் மதியைச் சேர்ந்து மறைத்த பாம்பினை அது மறைத்த தன்மையை விடுவிக்தம் நீல்நிற வண்ணனை ஒத்தது (கலி. 104: 35-38). 'கொளளுதல் அரிதாக நம சுற்றத்தார் நிறுத்திய கொலையேறாகிய காரியது சினத்திற்கு அஞசானாய்த தழுவின பொதுவனுக்கே நம்சுற்றத் தார் மகிழ்ந்து நின்னைக் கொடுக்க நேர்ந்தனர்' எனக் கூறித் தலைவியைத தோழி ஆற்றுவித்தாள் (கலி. 104:73-75). ஏறு தழுவுங்கால் பிறர்க்குத் துன்பம நிகழுமென்னும் வருத்தமில்லாத உள்ளத் தோடே ஆயர் ஒருங்கு கூடி நேமியான் ஊதிய சங்குபோலத் தெள்ளிதாக விளங்கும் சுட்டியணிந்த நெறறியுடைய காரியையும் பிற ஏறுகளையும் தொழுவிடத்தே புகவிட்டனர் (கலி.105:7-22). கொம் புகள் மார்பிலே படுதலை ஏற்றவரைச் செங்காரி தன் கொம்புகள் படக் குதத மேலே தூககிய போது வீழந்த குருதியால் நனைந்த மணித்திரள் நறவ மலரைச் சூழும் துமபிபோல் தோன்றியது (கலி. 105:39-42). தனமேல் சினந்து வந்து செங்காரியைத் தழுவிய தலைவன் அதன் கோட்டிடைப் புகுந்த போதே தன நெஞ்சமும் உடன்புகுந்தது எனத் தலைவி தோழியிடம் கூறினாள் (கலி. 105:67-69)

3. மலையமான் திருமுடிக்காரியது குதிரையின் பெயர். காரியென்னும் பெயரையுடைய குதிரையைச் செலுத்திப் பெரிய பூசலை வென்றவன் மலையன் (புறம். 158:6,7).

**காரிக்குதிரை** - மலையமான் திருமுடிக்காரியின் பெயர் கொண்ட குதிரை. காரிககுதிரைக் காரியோடு ஓரிக் குதிரை ஓரி போரிட்டான் (சிறு. 110, 111).

**காரி கிழார்** - புலவர். காரியென்பது தொண்டை நாட்டில் இக்காலத்து இராமகிரியென வழங்கும் ஓரூர் என்பர் உ. வே. சா. (புறம். பாடினோர் வரலாறு). அவ்வூரைச் சேர்ந்த வேளாள மரபினரானதால் இவர் காரிகிழார் எனப் பெயர் பெற்றார். பாண் டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதியின் மேல் பாடப்பட்ட இவரது பாடலொன்று புறநா னூற்றில் ஆறாவதாக அமைந்துள்ளது. அப்பாட லில் முதுகுடுமியின் கொற்றக்குடை முக்கட்செல்வர் (சிவபெருமான்) கோயிலை வலம் வருவதற்குப் பணிவ தாக என்றமையால் இவரது சிவப்பற்றும் தன்னை வாழ்த்துகின்ற நான்மறை முனிவர் ஏந்துகை எதிரே அவன்முடி வணங்குவதாக என்றமையால் இவரது வைதிகப் பற்றும் விளங்குகின்றன. 'தண் கதிர் மதியம் போலவும் தெறுசுடர், ஒண்கதிர் ஞாயிறு போலவும், மன்னிய பெருமநீ நிலமிசை யானே' என இவர் அவனை வாழ்த்தியுள்ளார்.

**காரிகை** - 1. அழகு. காதலர் நம்மை மறந்தாலும் மறக்கட்டும்; தாம் அணிந்த கலங்கள் பொலிவு பெறுவதற்குக் காரணமான அழகினைப் பெற்ற பரத்தையருடைய காரிகை - அழகு - தம்மை மகிழ்ச்சி யூட்டத் தம் அறிவு விளக்கம் பெற்று அவரைப் புகழ்தல் நிறைந்த கூடலையும் நினையாரோ எனத் தோழியிடம் தலைவி ஆற்றாது கூறினாள் (கலி. 27: 10,11). கனவென்று சொல்லப்பட்டது ஓர் காரிகை உடைத்தாகிய நீர்மையை யுடையது (கலி. 92:2). இணர்களிலே மொய்த்த வண்டுகள் அவ்விடத்து நின்ற காரிகையினையுடைய மகளிர் நலத்தைக் கைக்கொண்டு நுகர்வன போல ஒருபடிப்பட மொய்த்தன (கலி. 92: 30,31). ஆயர் கொல்லேற் றின் கரிய தலையை அஞ்சுதலும் ஆய்ச்சியர் ஏறு தழுவாதவருடைய காரிகைத் தோளைக் காமுறுத லும் ஆகிய இரண்டு நிலையும் ஆயர் குடியில் பிறந் தார்க்கு ஆகாதனவாகும் (கலி. 106:40-42). துறந் தாரை நினைக்கையினாலே கயம்பூத்த மலர்போல் மணம் குவிந்த என் எழில் நலத்தை எள்ளுகின்ற நீ, வண்டொலிக்கச் சினைப்பூப் போல் மனமகிழ்ந்த காதலரைக் கூடியிருக்கின்ற மகளிருடைய காரிகை யைப் போக்காய் என்று பிரிவிடை யாற்றாத தலைவி மாலைப் பொழுது கண்டு புல

மொழிந்தாள் (கலி. 118:9-12). தலைவன் பிரிந்தமையான் காரிகை பெற்ற தன் வனப்புக் கெடும்படி தலைவி மனம் கலங்குவதனாலே அவளது பிறை நுதல் பீர்க்கம் பூவின் அழகைப் பெற்றது (கலி. 124:5-8). கடிமலர்ப் புன்னையின்கீழ் நின்னைக் கூடினமையான் தன் காரிகை இழந்தவளைத் தன் தோள்வளை இழந்து தளரும்படி கைவிடுவது நின் குடிமைக்குக் குற்றமாகாதா எனத் தோழி தலைவனை வினவினாள் (கலி. 135:6-8). மதுவுண்டு நறவமலரைப் போல் சிவந்த தலைவியின் கண்ணியல்பினைக் கண்டு தலைவன் புகழ்ந்து அவற்றின் காரிகையைப் பாராட்டிப் பாணரைப் போலப் பலவகையாகப் பாடினான் (பரி. 7:63-66). காதலர் தம் காரிகையாகிய மதுவை ஒருவரினொருவர் கண்ணால் உண்டனர் (பரி. 11:68). மங்கை நல்லாள் ஒருத்தி தன் காதில் அசோகமலரைச் செருகிக் கொண்டு, பூங்கொடி போல நுடங்கி, அடிமேல் அடிவைத்து நடந்து, முன் கையாலே தன் கூந்தலின் கண்ணியைக் காரிகையாகத் திருத்தினாள் (பரி. 12:88-91). பரத்தை, காரிகை நீர்மையையுடைய வனப்பாகிய வயலிலே கள்ளாகிய புனலை விட்டுக் காமமாகிய கலப்பையால் தலைவனாகிய எருது மூரி தவிர உழும் பழைய சால் போன்றவள் (பரி. 20:52-54).

2. பெண். 'கண்டாரைத் தீண்டி வருத்தும் தெய்வம் போன்ற இக்காரிகையை - பெண்ணை - காண்மின்' என வையையில் நீராட வந்த மகளை ஆடவர் சுட்டிக் காட்டினர் (பரி. 11:122). மத்தளத்தை ஒத்த தோளினையுடைய விரும்புதற்குக் காரணமான காரிகையைக் கண்டோர்க்குத் தம் நெஞ்சம் அவர்பால் செல்லாது தம்மொடு நிற்குமோ? (பரி. தி. 4).

**காரியக்கண்ணவர் - அமைச்சர்.** வழுதி மடமயிலனைய மகளிரோடும் கடனறி காரியக் கண்ணவரோடும் - அமைச்சரோடும் - கூடிப் பரங்குன்றின் மேலேறிச் செவ்வேள் மேவிய கடிநகரை வலம் வந்தான் (பரி. 19:20-24).

**காரியாற்றுத் துஞ்சிய நெடுங்கிள்ளி – சோழவேந்தன்.** நெடுங்கிள்ளி என்ற இயற் பெயரையுடையவன் காரியாறு என்னுமிடத்தில் இறந்தமை பற்றிக் காரியாற்றுத்துஞ்சிய நெடுங்கிள்ளி எனப் பின்னர் வழங்கப்பெற்றான். உறையூரைத் தலைநகராகக் கொண்டு ஆட்சிபுரிந்த இவன் ஒருகால் ஆவூரில் இருந்தபோது இவனுக்குப் பகைவனான நலங்கிள்ளி அவ்வூரை முற்றுகையிட்டனன். அவனை எதிர்க்காமல் இவன் அறமும் மறமுமின்றிக் கோயிலையடைத்து உள்ளேயிருந்ததனால் அது நாணுத்தகவுடைத்து எனக் கோவூர் கிழாரால் அறிவுறுத்த வேண்டியவனானான். பின்னர் இவன் ஆவூரிலிருந்து தப்பிச்சென்று உறையூரிலிருந்தானாக அங்கும் சென்று நலங்கிள்ளி முற்றுகையிட, அப்போதும் இவன் அடைபட்டுக் கிடந்தது கண்டு கோவூர்கிழாரே இருவரையும் அணுகிச் சந்து செய்வாராயினர். மற்றொருகால் நலங்கிள்ளியிடம் பரிசில் பெற்று இவனிடம் பரிசில் பெறவந்த இளந்தத்தனென்னும் புலவனை ஒற்றுவந்தானென்று கருதி இவன் கொல்லப் புகுந்த நிலையிலும் கோவூர்கிழார் இவனுக்கு உண்மையுணர்த்தி அப்புலவனை உய்யச் செய்தார். இந்நிகழ்ச்சிகளால் இவன் அரசியற் பண்புகளில் அத்துணைச் செவ்வியனல்லன் என்பது வெளிப்படும்.

**காரிருண்டிக் கடவுள் - நஞ்சை ஊணாகவுடைய இறைவன் (சிவன்).** காரியுண்டிக் கடவுள் - நஞ்சை ஊணாகவுடைய இறைவன் (சிவன்) - கடல் சூழ்ந்த உலகு நடுங்கும் அச்சந்தோன்றும் கடுந்திறலினையும் பேரிசையினையும் பெற்ற நவிர மலையில் உறைவர் (மலை. 81–83).

**காருகம் - நெய்தல் தொழில்.** இருந்தையூரின் ஒருபக்கத்தே உண்பன, பூசுவன, பூண்பன, உடுப்பன, நீராடுவன ஆகியவற்றுக்குரிய பொருள்களும் மணி, பொன் முதலிய மலைபடுபொருள்களும் கடல்படு பொருள்களும் ஆகிய பயன்படு பொருள்களைக் கொணர்ந்து தரும் காருகம் - நெய்தல் தொழில் - செய்யும் அறவினை வணிகர் வாழும் தெருக்கள் இருந்தன (பரி. தி. 1:22-25).

**காரேறு - கரிய கடா (எருமைக்கடா).** அலவனது சேற்றிலுள்ள வளை சிதையக் கோரையை அடியிலே குத்தியெடுத்த மண்படு மருப்பினையுடைய காரேறு - கரிய கடாக்கள் - தம்மிற் பொருத வயலில் உழாமல் நுண்ணிய சேற்றை மிதித்து நிரவி உழு நாற்றை நடுவர் (பெரு. 208-212).

**காரை - முட்செடி.** கள் வகையினதான கந்தாரம், முட்பொருந்திய தாளை யுடைய காரையின் முதிர்ந்த பழத்தையொப்ப முற்ற விளைந்திருந்தது (புறம். 258:1,2).

**காரோடன் - சாணைக்கல் செய்வோன்.** காரோடன் - சாணைக்கல் செய்வோன் - அரக்கோடு சேர்த்து இயற்றிய கல்லைப் போலப் பிரியேம் என்று கூறிய சொல்லைத் தலைவர் மறந்தாரோ எனப்பிரிவிடையாற்றாத தலைவி தோழியிடம் கூறினாள் (அகம். 1: 5-7). நன்னனது பறம்பு மலையில் சிறு காரோடன்

அரக்கோடு சேர்த்து இயற்றிய சாணைக்கல்லினைப் போலும் வன்மையுடைய நாவினேன் ஆகித் தலைவன் தெருவில் என்னைக் கதுமெனக் கண்டு முன்கை பற்றிய நிகழ்ச்சியை நம் தாய்க்குக் கூறினேன் அல்லேன் எனக் குறைநேர்ந்த தோழி தலைவியைக் குறைநயப்பக் கூறினாள் (அகம். 356: 5-11).

**கால் - 1. உறுப்புவகை.** பாண்டியன் கருங்கையொள் வாட் பெரும்பெயர் வழுதி பொன்னாற் செய்யப் பட்ட வீரக்கழல் புனைந்த காலினன் (புறம். 3:15). மூங்கிலைத் தின்னும் யானையின் காலில் அகப் பட்ட மூங்கில் முளையைப் போலப் பகைவர் வருந்தும்படி பொருவேன் என்று நலங்கிள்ளி கூறினான் (புறம். 73:9-11). தலையாலங்கானத்துச் செரு வென்ற நெடுஞ்செழியன் கிண்கிணி களைந்த காலிலே ஒள்ளிய வீரக்கழலினை அணிந்தான் (புறம். 77:1). சோழன் போரவைக் கோப்பெரு நற்கிள்ளி ஆமூர் மல்லனது மதவலி கெடுத்து ஒரு காலை அவன் மார்பிலே மடித்து வைத்து ஒரு காலால் வரும் படையைத் தடுத்து முதுகை வளைத்து இருபக்கம் முரியும்படி மோதினான் (புறம். 80). அதியமான் நெடுமான் அஞ்சியின் முன்னோர் தம் காலில் பொன்னாற் செய்யப்பட்ட வீரக்கழல் புனைந்திருந்தனர் (புறம். 99:4,5). அதியமான் நெடுமான் அஞ்சி தன் காலில் வீரக்கழல்களை அணிந்திருந்தான் (புறம். 100:1). பேகன் கழற்காலினன் (புறம். 142:4). கண்டீரக்கோப் பெருநள்ளி மான்கணம் தொலைத்ததால் அவன் காலில் அணிந்த கழலில் குருதி தோய்ந்தது (புறம். 150:5). பெருஞ்சித்திரனாரின் தாய், பிடித்த ஊன்றுகோலே காலாக மெல்ல நடந்தாள் (புறம். 159:3). காய்த்த நெல்லை யறுத்துக் கவளமாக உண்ணின் ஒரு மாவிற்குக் குறைந்த நிலத்தின் கதிரும் யானைக்குப் பல நாட்களுக்கு உணவாகும்; நூறு செய்யாயினும் யானை தனித்துப் புக்கு உண்ணுமாயின் அதன் வாயிற் புகும் நெல்லினும் கால் கெடுக்கும் நெல் பலவாகும் (புறம். 184:1-4). வெண்களரின்கண் ஒருவனால் அலைப்புண்ட புல்வாய் எளிதில் ஓடிப் பிழைக்குமாறு போல யானும் நன்னெறியான் ஒழுகிப் பிழைக்கவும் கூடும்; ஆனால் ஒக்கல் வாழ்க்கை அதன்கண் செல்லவொட்டாது காலைத் தளைத்து நிற்கிறது என ஓரேருழவர் கூறினார் (புறம். 193). வெம்மையுற்ற காலினையுடைய வழிப் போக்கர் தாம் வேண்டுமிடங்களில் துன்பின்றித் தங்குமாறு எழினி செங்கோலாட்சி புரிந்தான் (புறம். 230:2-5). பகைவர் நிரைகொளார்ந்த வெட்சித் தலைவன் திரண்ட காலை உடையவன் (புறம். 257:1). மறவனொருவன் சங்கிலியாகிய தளை பூண்டு செல்லும் யானை போலக் கொலையுண்டு வீழ்ந்த மறவரது குடர் தன் காலைத் தளைக்கவும் கன்றை விரும்பும் கறவைப் பசுப் போலே பகைவரால் வளைப்புண்டிருந்த தன் தோழன்பால் வந்தான் (புறம். 275:7-9). நெடுந்தகையாகிய மறவன் காலில் பூத்தொழில் பொறித்த கழலையணிந்திருந்தான் (புறம். 281:9). நூலரி மாலை சூடிக் காலால் தனியனாய் வந்த மறக்குடி மறவன் அருஞ்சமர் புரிந்தான் (புறம். 284:3-5). எருதுகளைப் பிணித்து அவற்றின் காலின் கீழ்ப்பெய்து கடாவிடுதலின்றி இளைஞர் மிதித்தெடுத்த வரகின் குப்பையைக் கடன்காரர் கொண்டது போக எஞ்சியதைப் பசித்த பாணர் உண்டு சென்றனர் (புறம். 327:1-4). பைங்காற் கொக்கு (புறம். 342:7). பேய்மகளிர் பிணங்களைத் தழுவிப் பற்றிக் கொண்டு ஊனைத் தின்று புலால் நாறும் மெய்யுடன் களர்நிலை மருங்கில் கால் பெயர்த்துக் கூத்தாடுவர் (புறம். 359:4-6). தெடாரிப் பறையின் தெளிந்த கண் மதமுடைய யானையின் கால் சுவட்டைப் போன்றது (புறம். 368:14,15). கூளியர் வழிப்பறித்த பொருள்களையும் மேற் செலவை விரும்பின கால்களையும் உடையவர் (பதி. 19:1). வீரத்தில் மாறுபடாத வயவர் தம் காலில் ஒன்பொறிக் கழலினைப் பூண்டனர் (பதி. 19:3;30:40,41;34:2). மறவர் குருதிக் கறைபடிந்த கழற் காலும் கடுமாப் போலும் விரைந்த செலவும் உடையவர் (பதி. 28:3,4). பெருங்கை மதமாவாகிய யானையின் பெரிய கால் உரல் போன்றது (பதி. 43:3,4). சேரனின் பகைவர் கழலணிந்த காலினர் (பதி. 80:7). மழகளிறு வன்மை மிக்குக் காலால் அகப்படுத்தப்பட்ட முளைத்த மூங்கிலினது கவர்கிளையைப் போல இளஞ்சேரலிரும் பொறையின் பகைவர் அழிவர் (பதி. 84:11-13). இடையர், காலால் விரைந்து செல்லுதலில் வல்ல குதிரைகளை உடையவர் (பதி.88:9). சூரர மகளிர் கிண்கிணி சூழ்ந்த ஒள்ளிய சிவந்த சிறு அடியினையும் திரண்ட காலினையும் உடையவர் (முரு. 13,14). முருகனை முற்படக் கண்டவழி முகனமர்ந்து ஏத்திக் கைதொழுது பரவிக் காலுற வணங்கவேண்டும் (முரு. 251,252). முருகனை நெஞ்சில் ஒருமுறை நினைப்பின் அவனது இரு கால்களும் (திருவடிகளும்) தோன்றும் (முரு. வெ. 6:2,3). ஒருகைமுகன் (விநாயகன்) தம்பியே, நினது தண்டையணிந்த காலை எப்பொழுதும் நம்பியே கைதொழுவேன் (முரு. வெ. 7:2-4). கரிகாற் பெருவளத்தான் பொருநர்க்குப் பரிசில் நல்கி, பின்னர்த்தன் காலாலே ஏழடி தொடர்ந்து பின்னே சென்று

வழியனுப்பினான் (பொரு. 166). பழுத்த மரத்தைத் தேரும் பறவை போலப் பாணன் சுற்றமொடு ஓரிடத்திராமற் காலால் ஓடித்திரிந்தான் (பெரு. 20-22). வரைநாடன் தன்காலில் ஒள்ளிய தொழில்களை யுடைத்தாகிய வீரக்கழ லணிந்தவன் (பெரு. 102,103). வில்லாகிய யாழ் இசைக்கும் குறிஞ்சிப் பண்ணைப் பல கால்களையுடைய வண்டுகள் தம் சுற்றத்தின் ஓசையாகக் கருதி ஓர்க்கும் (பெரு. 182, 183). குறிய காலினையும் கருமையான கழுத்தினையும் உடைய குறும்பூழ் காட்டில் தங்கும் (பெரு. 204, 205). மகளிர் கால்களில் அணிந்த பொன்னாற் செய்த சிலம்புகள் ஆரவாரிப்ப மாடத்தில் வரிப் பந்து விளையாடி இளைத்தனர் (பெரு. 331-333). மாடத்தின் இறப்பில் தங்கிய புறாவின் செங்காற் சேவல் கொல்லனது கூடத்தெழுந்த ஒலிகேட்டு வெருவித் துயில் கெடும் (பெரு. 437-440). செங்கால் அன்னச்சேவல் ஒண்கதிர் ஞாயிற்றைச் சேர்தலை நினைத்து விரைந்து பறக்கும் (மது. 385,386). மழவர் வீரக்கழலணிந்த காலினர் (மது.395). சிறியரும் பெரியருமான நெய்தல் தொழிலைச் செய்வோர் திரண்டு நால்வேறு தெருக்கள் தோறும் ஒருவரோடு ஒருவர் கால் உற நெருங்கி நின்றனர் (மது. 521,522). பைங்கால் கொக்கின் கூட்டம் நாரையோடு இரையைக் கவர்ந்துண்டன (நெடு. 15-17). மனையின்கண் உறையும் புறவினது செங்காற் சேவல் தன் பெடையோடு மன்றிலே சென்று இரை தேடி யுண்ணாது இரவும் பகலும் மயங்கிக் கையற்று மதலைப் பள்ளியில் மாறிமாறி இருக்கும் (நெடு. 45-48). திருநகர் முற்றத்தில் ஆண் அன்னம் குறுங்கால் அன்னத்தோடு உலவும் (நெடு. 90-92). பொற்காற் புதல்வர் புரவியின்றி முக்காற் சிறுதேர் உருட்டுவர் (பட். 24,25). திருமாவளவன் பகைவேந்தரின் மணிமுடி சூடிய பருத்த அழகிய வலிய அடிகளில் வீரக் கழல் அணிந்திருந்தான் (பட். 293,294). இடரைச் செய்யும் குழிகளிடத்துண்டாகும் ஊறுகளைக் கடக்க முழவிடத்திற் காமரத்தை நுமக்குக் காலாகக் கொண்டு தளர்தல் ஓம்ப அத்தண்டாகிய கோலை ஊன்றிச் செல்வீர் எனக் கூத்தர் அவ்வழியில் ஆற்றுப் படுத்தப் பெற்றனர் (மலை. 368-372). குறுநடைப்புறவின் செங்காற் சேவல் பெரிய மனையின்கண் தம்பால் அன்பு கொண்ட பெடையை அழைக்கும் (அகம். 47:11, 12). பாற்பசுக்கள் தம்கன்றுகளுக்குப் பெருத்த மடியிலிருந்து பால்கொடுக்கக் கனைத்துக் கொண்டு காலால் விரைந்து நடந்து மனைபுகும் (அகம். 54: 7-9). வாவற் பேடை சிறிய மெல்லிய சிறகினையும் சிவந்த காலினையும் உடையது (அகம். 57:1,2). கடுங்கால் மறவர் ஆனிரை கவர்ந்தனர் (அகம். 63:12). மழைபெய்து மிக்குவரும் கடுஞ்சுழியினையுடைய வெள்ளம் யானைக்கன்றின் கால்களை இழுத்துச் சென்றது (அகம். 68:15-17). தலைவி சிற்றில் கட்டிச் சிறுசோறு சமைத்த காலத்தில் அவற்றைக் காலால் சிதைத்த இளைஞர் பலர் (அகம். 110:19,20). மீனை அருந்தும் பசிய காலையுடைய கொக்கின் இனம் செவ்வானத்தின்கண் வரிசையாகப் பறந்தது (அகம். 120:2,3). கடல்திரை தந்த முத்துக்கள் கொற்கை முன்றுறையில் கவர் நடைக்குதிரையது காலினை வடுச்செய்து அதன் செலவினைக் கெடுக்கும் (அகம். 130:9-11). ஆண்மானோடு திரண்ட காலினை உடைய அழகிய பெண்மான் கூடிய புணர்ச்சிநிலை கெடுமென்று தேரொலி தவிர்க்கப்பட்டது (அகம். 134:11-14). யானை கட்டுத்தறியைக் காலால் சிதைக்கும் (அகம். 164:13). பண்ணன் வீரக்கழல் தரித்த காலினன் (அகம். 177:16). இளையோனாகிய தலைவன் கழலினைக் காலில் அணிந்திருந்தான் (அகம். 203:9,10). பாறையிடத்தே காய்ந்து கிடக்கும் வெள்ளெலும்புகள் விரைந்து நடக்கும் கால்களை உடைய ஒட்டகத்தின் மிக்க பசியினைப் போக்கும் (அகம். 245:17,18). மனையில் உறையும் புறவின் செங்காற் சேவல் தன்பெடையோடு குறுகப் பறக்கும் (அகம். 254:5,6). இருப்பைப் பூக்களை மயிர் அடர்ந்த காலினையுடைய கரடியினம் கவர்ந்துண்ணும் (அகம். 267:6-8). இளையர் காலில் கழலினைத் தரித்திருந்தனர் (அகம். 269: 12,13). ஆண்புறாவின் கால்கள் செந்நிறமாக இருக்கும் (அகம். 271:1). பசுங்காலையுடைய வெண்குருகு தாவிப் பறந்தது (அகம். 273:3). இடையன் கோலினைக் காலுடன் சார்த்தி ஊன்றிக்கொண்டு மழைபெய்யும் போது தனித்து நின்றான் (அகம். 274: 7,8). கணைக்காலினை உடைய அழகிய பிணைமானின் முதுகை ஆண்மான் நக்கியது (அகம். 287: 10). கொக்கின் பைங்காற் பேடை தன் சேவல் வலையிற் சிக்கியதாகக் கருதி இரை தின்னாமல் இருந்தது (அகம். 290: [illegible]). இரவில் மேய வரும் யானையின் கால் ஊன்றி நடக்கும் வலிய நடையைக் கூர்த்தறிந்த கானவன் பரணிலிருந்து அதன்மேல் கவண்கல்லெறிந்தான் (அகம். 292:8-11). புல்லி என்பான் ஒலிக்கின்ற வீரக் கழலணிந்த காலினன் (அகம். 295: 13). தலைவன் பொருள்வயிற் பிரிவதை யறிவிக்கத் தலைவி கால் ஓரிடத்தில் நிற்றல் ஆற்றாது துன்பத்தால் கலக்கமுற்றாள் (அகம். 299: 10 - 16). குறுங்கால் அன்னம் நெடுங்கழியைத் துழாவி மணல்மேட்டில் சிறகுலர்த்தியது (அகம். 320:8,9). கதிர்போன்ற மெலிந்த நீண்ட காலை உடைய

பிணை உண்பதற்காக ஆண்மான் இருப்பைவெண் பூவை உண்ணாமல் அதனைத் தன் குரலால் விளிக் கும் (அகம. 321:4-6). அறுகாற் பறவையாகிய வண்டு யாழிசை போல் ஒலித்தது (அகம். 332:7,8). குறுங் காற் கழுதையேற்றை பண்டம் சுமந்து சென்றது (அகம். 343:12,13). வெள்ளிய காலினையும் பலபடை யினையும் உடைய குதிரை புலவனுக்குப் பரிசிலாக அளிக்கப் பெற்றது (அகம். 345.4-6). கணைக்கால் அத்திரி (கோவேறு கழுதை) தேரில் பூட்டப்பெற்றது (அகம். 350:6,7). வேட்டுவரின் ஒலிககு அஞ்சிக் கூரிய முள்போன்ற விரலைக் கொண்ட சிவந்த காலை யுடைய காடைச்சேவலை அதன் பேடையழைக்கும் (அகம். 387:9-12). பெருங்களிற்றைத் தொலைத்த புலியேறு செம்புல மருங்கில் தன் காலை வளைத் துத் தாவி வெற்றிக் களிப்பினால வெற்பிடம் சிலம்ப முழங்கும் (அகம. 389:20-23). வில்லோனாகிய தலைவனின் காலில் வீரக்கழல்கள உள்ளன; தொடி யோளாகிய தலைவியின் மெல்லடியில சிலம்புகள் உள்ளன; மூங்கில் செறிந்த பாலைவழியில் செல் லும் இக்காதலர் அளியர் என்று கணடோர் இரங் கிக் கூறினர் (குறு. 7:1-3,6). தலைவன் எம் இலலில் பெருமொழி கூறித் தனது இல்லில் கையையும் காலையும் தூக்கத் தூக்கும் ஆடிப்பாவை போலத் தன் மனைவிக்கு அவள் விருமபியவற்றைச் செய்கி றான் எனக் காதற்பரத்தை அவனைக் குறை கூறி னாள் (குறு. 8:2-6). செங்காற்பல்லி கள்ளியங்காட் டில் தன் துணையை யழைக்கும் (குறு. 16:4,5). குருகு தினையின் தாளைப் போன்ற சிறிய பசிய கால களை உடையது (குறு. 25:3,5). என காலகள் நடந்து நடந்து நடை ஓய்ந்தன; என் கண்கள் நோககி நோககி ஒளியிழந்தன என உடனபோக்கினை மேற் கொண்ட தலைவியைத் தேடிசசென்ற செவிலி கையற்றுக் கூறினாள (குறு. 44:1,2). சிவந்த தாளி னையுடைய உழுந்து குறுமபூழ்ப பறவையின் காலைப் போன்றிருககும் (குறு. 68:1). இறாமீன முள்ளைப்போன்ற காலை உடையது (குறு. 109.1). கொக்கு பசிய கால்களை உடையது (குறு: 122:1). நம காதலர் நிலத்தைத் தோணடி உள்ளே புகார்; வானத்தினகண ஏறார்; கடலினமேல் காலினால் நடநது செல்லார்; ஆதலின நாடுகள் தோறும் ஊாகள தோறும் ஆராயின அவர் அகப்படாது போவாரோ என த தோழி தலைவியிடம கேட்டாள் (குறு. 130). இலலினகண் உறைகினற கோழியின பேடை குறிய கால்களை உடையது (குறு. 139:1). வங்காப் பறவையின பேடை சிவநத கால்களை உடையது (குறு. 151:1). முதிய ஆணமான தன் பசி நோயைத தீர்ததுக கொள்ளப பெரிய மரப்பட்டை யைக் காலால் உதைத்துத் தன் குட்டிக்கு உரித்துக் கொடுத்து அது உண்ட பின் எஞ்சியதைத் தானுண் ணும் (குறு. 213:2-4). யானை உரல்போன்ற காலை உடையது (குறு. 232:4). அன்னப் பறவை குறிய கால்களை உடையது (குறு. 300: 6; 304: 5). கரிய காலையுடையது அன்றில் (குறு. 301:3). கருங்கால் வெணகுருகு (குறு. 303:1;325:5; நற். 4:?1; 54:4;67.3). கொடுங்கால் முதலை (குறு. 324:1). நெடுங்கால் கணந்துள் பறவை ஆறுசெல் வம் பலர்க்கு ஆள் அறிவுறுத்தும (குறு.350:4-6). தலைவ னுடன் செல்ல முதலில் இசைநது பின் மறுக்கும் தலைவியின் நிலைகண்டு தோழி கையும் காலும் ஒய்வனவாகி வருநத நெருப்பில் வீழநத தளிரைப் போல நடுங்கினாள் (குறு.383:1-5). தலைவி தன்மெய் பிறர்க்குத் தோன்றாதபடி மறைத்துத் தன் காலில் அணிந்த சிலம்பைக் கழற்றி வரிப்பந்தோடு வைக் கச் செல்பவள், எனதோழிமார் இவற்றைக் காணுந் தோறும் நோவா எனத் தோழி தலைவனிடம் கூறிச் செலவழுங்குவித்தாள் (நற். 12:4-7). சிறுவெண் காக்கை தன் பைங்கால் பேடைக்குப் பனிக்கழி துழாவிப் பிடித்த இறாமீனைக் கொடுக்கும் (நற். 31:2-4). பலகால் அலவன (நற். 35:4). வீட்டின் இறப்பில் தங்கியுள்ள செங்காற் சேவற்புறா தன் துணைப்புறாவை அழைக்கும் (நற். 71:7-9). மழை ஒரு புறம் நனைப்ப இடையன, கையின் கோலை ஊன்றி அதன்மேல் ஒருகாலை வைதது ஒடுஙகிய நிலையில் யாட்டின் தொகுதியைக் காததிருந்தான் (நற். 142:4-7). மனையுறை புறவின் சிவநத கால் களையுடைய பேடைத்துணையோடு சேவல் சேர்ந் தது (நற. 162:1,2). கருஙகால் குருகு (நற். 211:4). ஆவினது இளஙகனறின காலில் இட்ட கயிறு பலா மரத்தில பிணிக்கப்பட்டிருந்தது (நற். 213:2). சிறு கால அலவன் (நற். 219.4,5). ஞாயிற்றின கதிர் எறித்தலான் மக்கள் முதலானோர் காலகள் வெம் பின (நற். 258:3). கழிசசேறு ஆடிய கணைககால் அததிரியின குளம்பில சிவநத இறாமீன் ஒடுஙகின (நற. 278:7,8). சிதர்கால் வாரணம் (நற். 297:7;389:8). கடுநதேரிலேறிச் சென்றும் பின்பு காலால் நடந்து சென்றும் கழியில் அடுமபு மலர்கொய்தும் கைதை தூககியும் நெயதல் பறித்தும் தலைவன தலைவிககு நாளும் உதவினான (நற். 349:1-5). செங்கால அன் னம் (நற். 356 2). புறவின சேவல பசிய புறததையும் சிவந்த காலையும் உடையது (நற். 384.1). அஞ் சிறைததும்பி ஆறு சிறு கால்களை உடையது (ஐங். 20:1). தோலுறையும் காலையுடையது அனனச் சேவல் (ஐங். 106:2). மலையாடு குறிய கால்களை உடையது (ஐங். 287:1). வார்சிறைக் குறுங்கால்

மகன்றில் (ஐங். 381:3,4). சிறுபட்டியாகிய தலைவன் தலைவி விளையாடும் மணற்சிற்றிலைக் காலால் சிதைத்து மாலையை அறுத்து வரிப்பந்தைக் கொண்டு ஓடினான் (கலி.51:1-4). புதல்வனின் காலில் பொன்னாலாய கிண்கிணி அணியப்பட்டிருந்தது (கலி. 85:1,2). புது யானையாகிய பரத்தை தன நலத்தைக் காட்டி அவ்வழகாலே ஒருவரும் போகாத படி காலைத் தடுதது வீழ்க்கும் (கலி. 97:17). தென் னவன் புனைந்த கழறகாலினன் (கலி. 98:30). 'புதுப்புனலாடப் பலமுறையும் செல்லுமிடத்துக் கரையேறவிடுவார் இலலாத காலதது இளமகளிர் நகைக்க இளமணலினுள்ளே கால் நிலை தளர்ந்து அகப்பட்டுக கொளளாது காப்பீராக' எனத் தலைவி தலைவனிடம் கூறினாள் (கலி. 98:34-38). காரியாகிய ஏறு வெள்ளிய கால்களை உடையது (கலி. 103:12). சிவந்த ஏறு வெள்ளிய கால்களை உடையது (கலி. 105:18). பனையீனற குதிரையேறித் தலைவன என்பால் வருமாறு காமன் காலைக் கட்டிக்கொண்டு அம்புகளை எனக்குத் தரவேண்டு மென இரப்பேன எனத் தலைவி கலங்கிக் கூறினாள் (கலி. 147:59,60). தலைவன நின் காலிலுள்ள சிலம்பு களையும் எனக்குக் கழற்றித் தருவான் எனப் பரததை தலைவியிடம் கூறினாள் (பரி. 20:79,80).

2. காற்று. அவிர்சடை முனிவர் நிலமிசை வாழ்நர் துன்பம் தீரும்படி ஞாயிற்றினது வெம்மையைப் பொறுத்துக காலை - காற்றை - உணவாகக் கொண்டு அச்சுடரோடு சூழ வருவர் (புறம். 43:1-4). கம்பத்தை வெறுத்து நெட்டுயிர்ப்புக் கொள்ளுமயானைகளோடு வரிசையாக நிற்றலை முனிநது கால போலும் இயல்புடைய குதிரைகள ஒலிததன (புறம். 178: 1, 2). கீழததிசையிற செலலாது வட திசையிற் போகாது கடலாற் சூழபபட்ட பூமிக்கு விளக்காகத் தீப்பரக்கக் காலால பிதிர்ந்து கிளர்நது ஒரு மீன வானததினின்றும வீழந்ததைக கணட சானறோர் யானைக்கட்சேஎய் மாநதரஞ்சேரல இரும்பொறைக்கு ஊறு நேருமே என அஞ்சினா (புறம். 229: 9-15). யானைககட்சேஎய மாநதரஞ் சேரலிரும்பொறை கால் போலும் இயல்பையுடைய குதிரைகள் கதியின்றிக் கிடககத் தேவருலகததை அடைந்தான் (புறம். 229: 21, 22). கடல்சார்ந்த நெய்தற பகுதியிலுள்ளவர் கால் தரவநத மரக் கலங்களை எணணுவர் (புறம். 386:14). குளிர்ந்த கால் நீர்மிக்க கடற்கரைக்கண் குவியும் மணலை யள்ளித் தூவுதலின் புள்ளினங்கள் பறந்தோடின (புறம். 396:5,6). பகைவர் நாட்டினைச் சேரன எரித்தபோது கால் பொருதலின் கொடி விட்டு எழும் நிறம் அமைந்த புகை பிசிராக வுடைந்து கெட்டது (பதி. 15:6-8). நீர் நிரமபக் கொண்டு திரண்டெழும் முகிற்கூட்டம் பெய்யுமாறு கடுங் கால் சுழனறு அடிததது (பதி. 17:11,12). காட்டு வழியில் கடுங்கால் மோதுதலின சுடர் சிறந் தெழுந்த பசிய பொறிகளை யுடைய ஒள்ளிய காட்டுத்தீ பரவியது (பதி. 25:6-8). கால் வழங்கு ஆரெயில் (பதி. 33: 11). கால் ஒலித்தலால் மிக்க பிசிராக உடையப் புரவி ஊர்நது அலைகளுடைய பனிககடலில் செங்குட்டுவனின தாள் உழந்தது (பதி. 41:25-27). பெரிய மலையின்கண்ணே இடி யோசையால் விலங்கின் கூட்டங்கள் நடுங்கக் காலோடு மயங்கிய விரைந்த துளிகளை மேகம் ஆலங்கட்டியோடு சிதறியது (பதி. 50:1,2). கடற பரப்புக் கலங்குமபடி கால பொருதலான அங்கெ ழும் பெரிய அலைகள் இடியோசை போல முழங் கின (பதி. 51:1,2). நனநதலை உலகம கால் உண டாக்கும் அலைகள் முழங்கும ஓசையுடைய கடலை எல்லையாக உடையது (பதி. 63:17,18). கால குறுந் தடியாக அமையக் கடல ஒலித்தாற்போலப் பாசறை நடுவே முரசம் விண்ணதிர முழங்கியது (பதி. 68:1-4). கடல் போற் பரந்த சேனையிடத்தே கூடிய குரல் முரசம் கால் பொருந்திய கடலபோலக கூடிய வாய் முழங்கின (பதி. 69.3,4). குதிரைகள் கால் எழுந்தாற் போனற விரைந்த செலவை உடையன (பதி. 80:13). கடலில உறுகால எழுபபிய ஓங்கி யெழும் அலைகள நுண்மணல அடைகரையை மோதி உடையும் (பதி. 88'40-42). கால கிளர்நதனன ஊர்தி (பதி.தி.1.6). குதிரை கால் கிளர்ந்தன்ன கடுஞ் செலவை உடையது (பதி.தி 2:4). கால கிளர்நதனன வேழம் (முரு 82). ஆடியற பெருநாவாய் கரியகடலி டத்துக் கடுங்காலாலே எழுகினற திரைகளைக் குறுககே பிளந்தோடுமபடி பாய விரித்துக் கரை யைச்சேர்ந்தது (மது. 76-79,83). தலையாலஙகானத் துச செருவென்ற நெடுஞ்செழியன் கால எனனும் படி கடிதாகப் பரநது சென்று பகைவா நாடு கெடும்படி நெருப்பைப் பரபபி ஆலஙகானத்திலே பகைவர் நடுங்கும்படி தங்கினான (மது. 125-127). சூறாவளியை முழைஞ்சிடங்கள முகந்து கொளகை யினாலே கால் மிகுநத கடல் போல ஒலிக்கும் ஆரவாரத்தை உடையது வேனிற்குன்றம் (மது. 308, 309). மரம் பயில் காவில முழங்குகினற கால பொருதது (மது. 335). முரசு முழங்கும ஓசை பெரு மையையுடைய கால் எடுத்த கடலொலியை ஒததது (மது. 361,362). குதிரைகள் இழுத்துக்கொண்டு ஓடு தலின் அழகிய தேர் காலெனக் கடிதின் ஓடும் (மது. 387,388). வளங்கெழுசெல்வர் திண்ணிய தேரிற் பூண்ட காலினுடைய செலவினையொத்த விரைந்த

குதிரைகளைச் செலுத்திக் காலாட்கள் சூழ்ந்து காப்பக் கால் என்னும்படி கடிதிற் செல்வர் (மது. 440-442). கரிய மிளகு மூடைகள் கடலிலே காலி னால் (காற்றின் துணையால் வரும் திமிலால்) வந்தன (கால என்பதற்குச் சகடம் எனப் பொ. வே. சோமசுந்தரனார் கூறுவர்) (பட். 185,186). வேற்படை திரண்ட தானை கெட்டோடுவது போலக் கரும்பு கால் மிக்கு வீசு கின்ற ஆரவாரத்தாலே கவிழ்ந்திறைஞ்சியது (மலை. 116-119). நாவலின கருங்கனிகள் காலினால உதிர்ந் தன (மலை. 135). இருப்பையின் பூக்கள் ஆர்க்குக் கழன்று வானினின்று வீழும் பனிக்கட்டி போலக் காலால சிதறுண்டு சிவந்த மேட்டு நிலத்தில் பரவிக் கிடக்கும் (அகம். 9:3-9). விழவு தலைக்கொண்ட மூதூரிடத்தே நெய்யைப் பெய்த விளக்கின் சுடர் விழுவது போல இலவ மலர்கள் கால பொருதலால் விழுந்தன (அகம். 17:18-20). கொய்யப்படும் தழைத்த முல்லை காலொடு மயங்குதலின் கரிய கானம் மணம் கமழ்ந்தது (அகம். 43:9,10). மலைதொறும் மூங்கில்கள் உரசிக் கொள்வதனால் உண்டாகிக் கால வீசுவதால் மிகுந்து தோன்றும் தீச்சுடர்கள் கடலமீது மீன் பிடிக்கச் செல்லும் பரதவரின் பட கில தோன்றும் சுடர்போல் காணப்படும் (அகம். 65:9-13). காய்கதிர் வெதுப்புதலால கால் மிகுந்து விரைந்து வீசுதலால் இருப்பையின் மலர்கள் பாறை யின மீது உதிர்ந்து பரவிக் கிடந்தன (அகம். 135: 7-9). கால வீசுதலினால உதிர்ந்த கோங்கமலர் கைவிடு சுடர்போல் தோன்றும் (அகம். 153:16-18). தலைவி கால் வீசப்பெற்ற தளிரென நடுங்கினாள் (அகம. 162:15). நெடுஞ்செழியன கால் போலக் கடி தின இயங்கும் நெடுந்தேரினையும் கைவண்மை யினையும உடையவன் (அகம. 175:10). பொய்கை யில நீர்க்குமேல் உயர்ந்த தாமரையிலை கால் வீசுந்தோறும் களிற்றியானையின் காதுபோல அசையும் (அகம். 186:3-6). வெண்கடம்பின் முதிர்ந்த மலர்கள், கரையின்கண்ணே மோதும் வெண்டி ரையை ஒப்ப வரிசையாக வந்து கால் வீசுதலால் பலவும ஒருங்கே சேர்ந்து பாறையில் உதிரும் (அகம. 199. 1-3). வியன புனத்துக்கண் பெரு மரங்களை வெட்டியதால கால தடையின்றி வீசியது (அகம. 213:13). குதிரைகள் காலின் வேகத்தை யொத்து விரைந்து ஓடும் (அகம். 224: 4,5). குதிரைகள் பூட்டப்பெற்ற நெடுந்தேர் நோக் குவார் கண்ணிற் படாமல் விரைந்தோடும் (அகம். 234: 7,8). கோசர் விரைந்து வீசும் கால்போன்ற புனை தேரினர் (அகம். 251:7). குதிரை புரவிநூல் கூறும முறைப்படி நுண்ணறிவின் அமைந்த வேகத் தால் கால் பகைக் கூறும தகுதியுடையது (அகம். 314:8). கால் நவிலபுரவி நான்கு பூட்டிய தேரில் தலைவன் சென்றான் (அகம். 334.11,12). இருப்பை யின் தாழ் சினைகளை அலைத்து அதிலுள்ள இலைகளைக் கால் வீசி உதிர்த்தது (அகம. 351.6-8). பொய்கையில் இலைகளுக்கு மேலெழுந்து விரிந்த தண் கமழ் நீல மலரைக் கால் அசைத்தால் ஒத்த ஆயிதழ் மழைக்கண்ணை உடையவள் தலைவி (அகம். 357:13-16). இலை உதிர்ந்த உலர்ந்த காடு காலொடு தீப்பற்றி எரிந்தது (அகம். 379: 18, 19). வாகை வெண்ணெற்றுக்கள் கால் பொருதலான் நிலை கலங்கி ஒலித்தன (குறு. 7:4,5). முண்டகத் தின் கரிய மலர் நூலற்று உதிர்ந்த முத்துக்களைப் போலக் காலால சிதறுண்டு நீர்த்துறை தோறும் பரவிக்கிடக்கும் (குறு. 51:1-3). காலொடு கமஞ் சூல் மாமழை பெய்தது (குறு. 158: 3). தேரினது சக்கரம் வானினின்று வீழ்கின்ற கொள்ளியைப் போலப் பசும்பயிர் துமிப்பக் கால் போன்று விரைந்தேகும் இயல்பினது (குறு. 189:3-5). காலியற் கடுமா (குறு. 250: 3, 4). காலொடு கலந்து மழை பெய்யுங் காலத்தில் இடி பெரிய துறுகற்கள் புரண்டு விழுமாறு மோதும் (நற். 2:9,10). கடலில கால் வீசிச் சுழற்றுதலின துன்புற்ற காலத்தில் மரக்கலம் கவிழ்ந்தால் கலங்குவர் (நற் 30: 7,8). வேறுபல நாட்டினின்று கால் தரக் கலங்கள் கொணர்ந்த பல்வகைப் பண்டங்கள் மணலின் மீது இறக்கி வைக்கப்பட்டன (நற். 31: 8, 9). மூங்கில் களிலே கால் பொருதலான் ஓசை எழுந்தது (நற். 62:1). தெய்வங் காக்கும் கொல்லி மலைச்சாரலில் உள்ள பாவைக்குக் கால் பொருது இடித்தல் முத லான ஊறு பல தோன்றினும் அதன் நல்ல வடிவம் கெடாது (நற். 201: 5-11). பெருங்கால் வீசுதலின கடலின்கண் அலையெழுந்தது (நற். 207:10,11). இரவில் பேயினங்கள் கால போல் இயங்க ஊர் முழுதும் துயின்றது (நற். 255:1). தலைவியின் தந்தையினுடைய பெருந்துறைக்கண் பல்வேறு நாடுகளினின்றும் கால தரவந்த கலங்கள் பொலிவு பெறத் தோன்றும் (நற். 295:4-6). மிகுதியான கால் மோதுதலின் ஆம்பல் தளர்ந்து தாமரை மலரிடத் தில் வந்து சாய்ந்து வணங்கி நிற்கும் (நற். 300: 3,4). மிகுதியான கால் மோதுதலின கானலிடத் துள்ள கண்டல் மரத்தின் பசுங்காய்கள் கழன்று நீலநிறக் கழியில் வீழ அங்குள்ள ஆம்பல் மலரும் (நற். 345: 1-5). தலைவி வருந்த யமனைப் போன்ற காலை (தென்றல்) முந்துறுத்து மாலைக் காலம் வந்தது (ஐங். 116:3,4). காலுறழ கடுந்திண்டேர் (கலி. 33:31). தலைவனின் கறங்கிசை யருவியுடைய மால்வரை கால பொரவும் தன பெருமை

யால் அசையாமல் நிற்கும் (கலி. 45:8,9). சாளரங்களிலே இருந்து ஒதுங்கிப் பார்க்கும் மகளிரின் கண்கள் நீலத்தினுடைய முறுக்கு நெகிழ்ந்த நிரைத்த பூக்கள் உறுகாலுக்கு அசைவன போலத் தோன்றின (கலி.83:12,13). காலபொருகின்ற பூப்போலத் தலைவியின் கவின் வாடும்படி தலைவன் பரத்தைமைமேற் கொண்டான் (கலி. 86:19,20). மணமுள்ளகாவில் கால் வீசுதலான் பூங்கொடிகள் ஒதுங்கி வளைந்து தம்மிற் பின்னிக் கொண்டன (கலி. 92: 51,52). தளராத மனவெழுச்சியோடு வெகுண்டு உடனியைந்து காலை யொத்து எதிர்ந்த அவுணர் கலங்கி நிலை தளருமாறு திருமாலின் சங்கு இடியோசை போல் முழங்கியது (பரி. 2:36-40). பரங்குன்று கால் வீசாத திணிந்த நிலையை யுடையது (பரி. 4:68). பரங்குன்றிலிடத்து அருவி தாலாட்டவும் கரையின்றிச் செல்லும் உருவிலதாகிய கால் தாலாட்டவும் தலைவர் மகளிரோடு இன்புற்றுத் துயின்றார் (பரி. 6:52-55). காலொடு மயங்கிய புடைபெயர் கடலென முரசு ஆர்த்தது (பரி. 8:30, 31). நின்மேல் அயல்மகளிர் நாற்றம் கமழ்கின்றதென்று ஊடலுற்ற தலைவியிடம் தலைவன் இந்நாற்றம் பரங்குன்றத்துக் கனியினும் மலரினும் பயின்ற கால் வீசியதனால் வந்தது என மொழிந்தான் (பரி. 8:47,53-55). மணிமாடத்து அகத்திருந்த மகளிர் தூவிய பனிநீர் மணத்தோடு கலந்து கால் திரிய அதனோடு மாடத்திலிருந்து புறப்பட்டுப் பரக்கும் அகிற்புகையானது மலையிற் பூங்கொடிக்கண் தங்கி அங்குள்ள கால் சார்பாக மேல் மண்டியேறுகின்ற பனியாவி போலும் (பரி. 10:121-125).

3. அடிமரம். கருங்கால் வே'ங்கை (புறம். 137:9;202: 18; மது. 296; அகம். 345: 8; 349: 10; 367: 6; குறு. 26: 1; 47: 1; 343: 5; நற். 112: 2; 168: 1; 217: 4; 222: 1; 313: 1; 368: 2; 383: 1; ஐங். 219: 1). புன்கால் உன்னம் (பதி. 40: 17;61:6). செங்கால் மராஅம் (முரு. 202; நற். 148: 5; ஐங். 381:2). நெடுங்காற் புன்னை (சிறு. 149). குறுங்காற் காஞ்சி (சிறு. 179; பெரு. 375; அகம். 296: 1; 341: 9). கொடுங்கால் புன்னை (பெரு. 266). சோலையிடத்து நிற்கின்ற கமுகு திரண்ட காலையுடையது (பெரு. 380, 381). நெடுங்கால் ஐயவி (மது. 287). கருங்கால் ஓமை (அகம். 3: 2; 117: 6). பைங்காற் கொன்றை (அகம். 4:2). நெடுங்கால் முருங்கை (அகம். 53:4). குறுங்கால் இற்றி' (அகம். 57:6). கருங்கால் மராஅம் (அகம். 83: 5; 127: 13; ஐங். 331: 2). நெடுங்கால் ஆசினி (அகம். 91: 12). இருப்பை பொரிந்த 'காலை உடையது (அகம். 95:5, 6). புன்கால் முருங்கை (அகம். 101:15). நெடுங்கால் மா (அகம். 117: 15; 141: 21; 177: 17). வற்றல் மரம் வேர் முழுதும் வற்றி நின்ற துளைபட்ட காலை உடையது (அகம். 145:1,4). குறுங்கால் உழிஞ்சில் (அகம். 151:8). கருங்கால் யா (அகம். 187:15;397:13; ஐங். 388:2). புன்காற் பாதிரி (அகம். 237:1). கரிந்த மரங்கள் தம்மிடத்தே கிளைக்கப்பெறும் இளந்தளிர்கள் கால் முதற்கிளைத்து அழகு பெற்றன (அகம்.283: 9,10). கருங்கால் இலவம் (அகம். 309:7). குதிர்கால் இருப்பை (அகம். 321:5). கமுகு திரண்ட காலினை உடையது (அகம். 335:12). கருங்கால் நுணவு (அகம். 345:16;ஐங்.342:3). அங்காற் கள்ளி (குறு. 16:5). கருங்கால் வேம்பு (குறு. 24:1). பொரிகாற் கள்ளி (குறு. 154:5). புன்கால் உகாஅ (குறு. 274:1). திரட்சியை உடைய பனை பசிய காலையும் கருக்கையும் உடையது (குறு. 281:1,2). பைங்கால் மா (குறு. 331:6). புன்கால் நாவல் (நற். 35:2). வேங்கை கரிய காலையும் பொன் போனற பூங்கொத்தினையு முடையது (நற். 151:8,9). செங்கால பலவு (நற். 232:5). குறுங்காற் குரவு (நற். 266:2). கருஙகால் நுணவம் (ஐங். 342:3). பொரிகால் மா (ஐங். 349:2). நெடுங்கால் மராஅம் (ஐங். 383:2). குறுங்காற் கொன்றை (ஐங். 430:1).

4. தண்டு. முட்காற் காரை (புறம். 258:1). புழற்கால் ஆம்பல் (புறம். 266:3). செருந்தியின மலர் நெடிய காலை உடையது (புறம். 390:3). கருங்காற் குறிஞசி (மது. 300; நற்.268:3). கொழுங்காற் புதவம (பட். 243). திரள் கால் குவளை (அகம். 27:13). முண்டகம் நுண்ணிய பூந்துகளால் மூடபபட்ட சிவந்த காலையும் கொழு முகையையும் உடையது (அகம். 130: 3,4). முல்லையின் நேர் கால் முதுகொடி தழைப்ப மழைபெய்தது (அகம. 174:5-7). தாமரை மூஙகிலைக் கண்டாலொத்த துளையுடைய திரண்ட காலை உடையது (அகம். 176.3,7). குழற்காற் சேம்பு (அகம். 336:1). முடக்காற் பிடவு (அகம். 344:3). வணகாற் குவளை (அகம். 395:1). செங்கால் உழுந்து (குறு. 68:1). ஆம்பல் உள்ளே துளையையுடைய திரணட காலை உடையது (குறு. 178:2,3). தலைவி நீரில வளர்ந்த ஆம்பலில் உள்ளிற் புழையுடைய திரண்ட காலை நாருரித்தாற் போன்ற அழகு குறைந்த மாமை யுடையவள் (நற். 6:1,2). நெயதல் கணைக்கால் நீடிக் கண்போல் பூத்தது (நற்.27:9,11). நெடுங்கால் நெய்தல் (நற். 96:7). கணைக்கால் ஆம்பல் (நற். 230:3; ஐங் 68:1). வேழத்தின் உட்டுளையுடைய திரள்காலில் மகளிர் அஞ்சனத்தைப் பெய்து வைப்பர் (ஐங்.16:1,2). கரந்தையஞ் செறுவில் துணை துறந்த நண்டு வள்ளையின் மெனகாலை அறுக்கும் (ஐங். 26:1,2). புழைக்கால் ஆம்பல் (ஐங். 34:2). தலைவியின் மாமைக் கவின் முன்பு பொயகை

நாருரித்த மென் காலின் நிறத்தைக் காட்டிலும் ஒளி வீசுவதா யிருநதது; இப்பொழுது தலைவனைப் பிரிநததால் பசநதது (ஐங. 35). கண் பாயல் பெற்றது போல் கணைக்காலை யுடைய தாமரை முதலிய மலர்கள குவிந்தன (கலி.119:5).

5. காம்பு. செங்கால வெட்சி (முரு. 21). கணைக் கால் நெய்தல (பெரு. 213;அகம். 70:11;360:4; குறு. 9:4;நற். 138.6). முளளி வளைநத காலையுடைய பூக் களை உடையது (பெரு. 216). பைங்காற் பித்திகம் (நெடு. 40;குறி.117). பெருமரக் குழாம் நீண்ட காலை உடைய பூக்களை உடையது (மலை. 265). மீன் முள் அனன வெண்கால் மாமலர் (அகம். 26:2). குறும்புதல் பிடவின நெடுங்கால் அலரி (அகம். 154:4). கரும்பின் கணைக்கால் வானபூ (அகம். 217:4;235:12). கடுவளி பறித்தலான் கால் ஒழிந்த தேக்கிலை மேலே பறந்தது (அகம். 299:5–7). திரண்ட காலையுடைய நெய்தல் மலர் மறையும்படி கழியின்கண் நீர் பெரு கியது (நற். 67:6). புல்லிய காலையுடைய சிறிய இலையை உடையது வேம்பு (நற். 103:1,2). முல்லை குறுங்கால் மலர்களை உடையது (நற். 366:5). எறுழின் விரியிணாக் கால் ஒள்வீ (ஐங. 308: 2,3).

6. தாள். கருங்கால் வரகு (புறம். 335:4;384:4; மது. 272). செறு வெள்ளிய கால்களை உடையது (மலை. 123). நெலலரிவோர் செநநெல்லினது காலை அரிந்து அரியாகக் கிடத்தினர்(அகம. 116:2). உழவர் வரகின பயிாகள் வளையும்படி ஒதுககிக் களையைப் பறித் துக காலைத் தூய்மை செய்தனர் (அகம். 194:8,9). கவைக் கதிர் வரகின் தொகுத்த காலகள மாடுகளின் கவர்த்த குளம்பால் துவைக்கப்பட்டன (அகம். 393: 5,6). முற்றிய கதிரைத் தாஙகாது சாயநத தினை யின் வளைநத கால நிமிர்நது நிற்குமாறு அதன் கொழுங்கதிர்கள் கொய்யபபட்டன (நற. 44:6,7). கருங்காற் செந்தினை (நற். 122:2). கணைக்கால் ஏனல் (நற. 336:2). புனம் குன்றக்குறவர் கொய்து விட்ட தினையினது பைஙகாலை யுடைய வறுந்தட் டைகள் மட்டும் நீண்டு நிற்றறகு இடனானது (ஐங. 284:2,3). சிறிய தினைக கதிரைக கொய்து விட்ட இருவியாகிய வெணகாலின மேல படாந்து காய்த்துளள அவரையின் மீது கிளிகள் வீழந்தன (ஐங. 286:1,2). 'நின்னெஞ்சு தினையரிந்த காலி டததே யாய் மேயவிட்ட கனறை மேய்க்குமோ' எனத தலைவி தலைவனை வினவினாள் (கலி. 108: 30,33).

7. முறை.நெஞ்சில் முருகனை ஒருகால் - ஒருமுறை - நினைப்பின் அவனது இருதிருவடிகளும் தோன்றும் (முரு.வெ. 6:2,3). இழையணிந்த மகளிர் பொலங் கலம் நிறையக் கள்ளைப் பல்கால் வார்த்துத் தரப் பொருநர் உண்டு வழிவந்த துன்பம் தீர்ந்தனர் (பொரு. 85-88). தலைவி செவிலியைப் பல்கால் தழு வினாள் (அகம்.49:9). தலைவி பல்காலும் தலைவனது துயரினை நீககினாள் (அகம். 170:8,13). தலைவி தன இன்னுயிராகிய தலைவன வருவானோ எனப் பல் கால் மனையின் புறததே வந்து பார்த்து வருந்தி னாள் (அகம. 224:15-18). நற்றாய் தலைவியின் வீங்கிள முலைகளையும் ஒலிவரும் கதுப்பினையும் பல்கால் நோக்கினாள் (அகம. 302:13-15). உமணர் கூட்டமாகச செல்லும பாறைகளின வழியே பார்ப்பான பல்காலும் தூது சென்றான (அகம். 337:5-7). தலைவனைப் பல்கால் காண்டலும் உள் ளத்துக்கு இனிது எனத் தலைவி தோழியிடம் கூறி னாள் (குறு. 160:6). கடற்றுறையின்கண் தேரொனறு பல்கால வநது போகினறது எனத் தாய் தலைவியை இறசெறித்தாள் (ஐங். 186:3-5). தலைவி பல்கால் கானயாற்றினது அவிர் மணலிலுள்ள தண்பொழிலிடத்து ஆயத்தோடு விளையாடித் தங் கினாள் (கலி. 113:23,24).

8. மழைக்கால். புதுப்பெயலைத் தருதற்குக் கால் - மழைக்கால் - வீழ்த்துக் கடலிடத்தே நீரை முகக்கச் சென்ற முகில நீரை முகவாமல் பெயராது (புறம். 205:10-12). கால்கொண்டு மின் முதலிய தொகுதி யையுடைய மேகம் தண்துளி சொரிந்தது (பதி. 76: 9,10). ஓங்குகின்ற துளி கால் வீழ்தல் தவிர்ந்த உயர்ச் சியை உடைய அகன்ற பெரிய வானத்திடத்து இநதிரவில் தோன்றியது (பெரு. 291,292). மேகம் அரவினை எறியும் இடியுடன கூடிக் கால் வீழ்த்து நீரினைச் சொரிநதது (அகம். 182:9,10). பககமலை மறைபக் கால் வீழ்த்து இடித்து மின்னி மழை பெய்தது (அகம். 312:9-14). மேகம் வானினகண் கதிர்மழுங்கப் பரவி இடியேற்றுடன மிக்க துளி களைப் பெய்து கால் வீழத்தது (அகம். 323:9-13). வானம் பெருங்களிற்றின் பருத்த கைபோலக கால் வீழ்த்து மழை பெய்யத் தொடங்கியது (அகம். 334: 5,9). இடியேற்றினையுடைய பெருமழை திசையெல் லாம் மறையப் பரவிக் கால் வீழததுப் பெய்தது (அகம். 364.1,2). தலைவியின தாழ்ந்து தழைத்த கூநதல் போல மேகம் இறங்கிய காலுடன் தலை வனின நன்மலை நாட்டின் கண்ணே தவழும் (நற். 197:6,12). மலைப்பக்கம் மறையுமாறு கால் வீழ்ததுத தணகார் மழை பெய்தது (நற். 316:8,9).

8. வாய்க்கால். மழை பெய்யினும் பெய்யாதொழியி னும் கொள்ளிற்கு உழுத பரந்த நிலத்திடையே

காலாக - வாய்க்காலாக - அருவி நெடுவரையின் உச்சியினின்று இழிதரும் (புறம். 105:4-6). புனல் காலிடத்து நுண்மணலிட்ட மேடு கரைந்தது (அகம். 163:10,11). மழைபெய்து கழிந்தாலொத்த பெரிய கால்களில் தங்கிய நீரினை அறுகம்புல்லினை மேய்ந்த நல்லேறுகள் தளர்ச்சி நீங்கக் குடிக்கும் (அகம்.341:6-8). திண்டேரின் அம்பு பாய்ந்தாற் போன்ற வலிய உருளையின் விரைந்த செலவு வெண்மணலிடத்துக் காலைக் கண்டாற் போன்ற சுவட்டினை உண்டாக்கும் (அகம். 400:13-16). தலைவியின் துன்பமுழந்த துயிலற்ற கண் வடித்த நீர் கால்போல் பிளந்து சென்று தோள் வழியே ஓடியது (குறு. 357:1,2). செழியன் பெயராலே உண்டாக்கிய பெருங்குளத்து நீர் மடைதிறந்துகொண்டோடியதனால் அங்கிருந்த வாளைமீன் புறம்போந்து காலை அடைந்து பின் எதிர்ந்தோடியது (நற். 340:2-4). யாறு கூதிர்க் காலத்தில் பெருகுதலிற் கடிதாகிய நீர்வற்றிக் கால்களாக ஓடிக் கலக்கம் தெளிந்து கவின் பெற்றது (கலி. 31:1). ஊரிடத்தே வளர்ந்த இள மரக்காவினுள் நீரோடுகின்ற காலிடத்தே நின்ற ஞாழலினது முதிர்ந்த கொத்துக்களைப் பறித்துத் தலைவி கூந்தலில் முடித்தாள் (கலி. 56:1-3).

9. தூண். நிலைதளர்ந்து பாழ்பட்ட வெடித்துச் சீரழிந்த தரையையும் பல கால்களையும் - தூண்களையும் - உடைய மன்றத்தின் ஒரு பக்கத்தில் கிணைப்பொருநன் படுத்திருந்தான் (புறம். 375:2,3). குரம்பை ஆட்டுமறிகள் நின்று தின்னும் தன்மையையுடைய தழைகளைத் தம்மிடத்தே கட்டின குறிய கால்களை உடையது (பெரு. 147, 148). குறுங்காற் குரம்பை தினையரிந்த தாளால் வேயப் பெற்றது (குறி. 153). நெடுங்கால் மாடம் (பட்.111). கொடுங்கால் மாடம் (பட். 261). குடில் சோர்ந்த காலினை உடையது (அகம். 63:14). அம்பலம் பழைய விட்டம் வீழ்ந்த முது கால்களை உடையது (அகம். 373:4). கூழுடை நன்மனை குறிய கால்களை உடையது (நற். 367:4,5).

10. உருள். வேட்கோச் சிறார் கலம் வனைதற்குத் தேர்க்காலில் — உருளில் - வைத்த பசுமண் திரள் போலத் தண்பணை நாடு சோழன் நலங்கிள்ளியின் கருத்திற் கொண்ட முடிவை யுடைத்து (புறம். 32: 8-10). அதியமான் நெடுமானஞ்சி நாளொன்றுக்கு எட்டுத் தேரைச் செய்யும் தச்சன் ஒரு திங்கள் கூடிக் கருதிச் செய்யப்பட்ட காலை ஒப்பவன் (புறம். 87: 2-4). காலும் பாரும் கோத்து உலகிற் செலுத்தப் படும் காவற் சாகாடு அதனைச் செலுத்துவோன் மாட்சிமைப்படின் ஊறின்றாகி இனிதாகச் செல்லும் (புறம். 185: 1-3). முக்கால் சிறுதேரைப் புதல்வர் புரவியின்றி உருட்டினர் (பட். 24, 25). பருதியஞ் செல்வன் ஒருகால் ஊர்தியை உடையவன் (அகம். 360:2). அம்பு பாய்ந்தாற் போன்ற தேரின் வலிய காலின் விரைந்த செலவு வெண்மணலிடத்து வாய்க்காலைக் கண்டாற் போன்ற சுவட்டினை உண்டாக்கும் (அகம். 400: 13-16). நெடுந்தேரின் காலை ஓட்டுதலில் வல்ல குதிரை முல்லையொடு தளவ மலர் உதிர விரையும் (ஐங். 422:1-3). கால் ஓடுதல் வல்ல தேரைக் கையாலே செலுத்திப் புதலவ நடைபயின்றான் (கலி. 81:8).

11. இடம். பெருகிய புனல் பொழில்கள் தோறும் காலை - இடத்தை - தூய்மையாக்கிச் சென்றது (பெரு. 380). மூதூர் பண்டங்களை விற்றலும் கொள்ளலும் பொருந்திக் கால் நெருங்கின பல குடிகளையுடைய கடையினையுடையது (பெரு. 399, 400). உத்திரக் கவியின் காலில் புதிய போதாய் அவிழ்ந்த குவளைப் பூவோடு பிடி அமைக்கப் பட்டிருந்தது (நெடு. 82,83). வானவரம்பன் கடலின் காலினைப் புடைபெயரச் செய்த வென்றியினை உடையவன் (அகம். 45:16,17). கால் எல்லாம் விரிந்து மிக்க காற்று வீசியது (அகம். 151:5,6). பைங்கால் செறு (நற். 340:8). மண்கால் ஈயல் (ஐங். தி. 4:3). பாணன் தலைவனது கொடைப் பெருமையைப் பாடித் தலைவனது காலிற் பிரியாது இருந்தான் (கலி. 95:9,10).

12. பந்தற்கால். கூவை யிலையால் வேயப்பட்ட நான்கு காலையுடையது பந்தராகிய சிறுமனை (புறம். 29:19,20). பசிய தழையாலே வேயப்பட்ட புல்லிய காலையுடைய பந்தரின் கீழ் புதுமணல் பரப்பப் பெற்றது (புறம். 262:2,3). வெள்ளாடுகளின் பிழுக்கை பரவிக் கிடக்கின்ற வண்காற் பந்தரின் கீழ் இடையன் கொளுத்திய சுடரொளியில் பாணரொடு தலைவன் தங்கியிருந்தான் (புறம். 324:9-12). பந்தர் வரைத்தேன் புரையும் குதையினை யுடைத்தாகிய அடியினையுடைய அம்புக்கட்டுடனே ஓசை கடிய துடி தூங்கும் திரண்ட காலை யுடையது (பெரு. 123,124). தண்பெரும் பந்தர் வரிசையாகிய கால்களை உடையது (அகம். 86:2,3). முடக்காற் பந்தர் (அகம். 394:8).

13. அடிப்பகுதி. கண்ணகி தழைத்த மயிலினது பீலியைக் கால் - அடிப்பகுதி - ஒன்றக் குவித்தாற் போன்ற தழைத்த மெல்லிய கூந்தலை உடையவள் (புறம். 146:8,9). குருதி வெள்ளம் நிலத்திற் பரவ விளைந்த செழுங்கதிராகிய கழுத்தை யறுத்துக் கால் ஒன்றக் குவித்துப் படுபிணப் பல்போர் அழித்துக் களிறு எருதாக வாள்மடல் ஓச்சிக் கடா விடப்பட்டது (புறம். 370:13-17). கடாஅயானை

வலிமை மிக்க ஊக்கத்தால் கட்டுத் தறியின் காலைப் பிளந்து முழங்கியது (பதி. தி. 3:8,9). தலைவியின் வாலெயிறு ஊறிய நீர் கரும்பின் காலில வெட்டிய துண்டத்தை அயினறாற் போன்ற சுவையுடையது (குறு. 267:2-4). நீரைத் தனனுடைய காலிலே கட்டப் பெற்ற நிரையிதழ்க் குவளை மேலைக் காற்று தாக்கினும் வாடாது (குறு. 388:1,2).

**14. கட்டிற்கால்.** சாதிலிங்கம் பூசிய வலிய நிலையினையுடைய மேற்கட்டியின் (விதானத்தின்) கால்களைக் கட்டிற் கால்களுக்கு அருகே நிற்கும்படி செயதனர் (நெடு. 157,158). குறுங்காற் கட்டில் (குறு. 359:3). முன்றிலில் குறுங்காற் கட்டிலில் மனையோள் துணைவியாகப் புதல்வனொடு தலைவனிருந்தான (ஐங். 410:1-3).

**15. மத்தின் தண்டு.** மனைமுற்றத்தில் தொங்கிய தீந்தயிர் கடைந்த திரண்ட காலினை - தண்டினை - உடைய மத்தைக் கன்று தன் வாயாற் சுவைத்தது (அகம். 87:1, 2). சுற்றப்பட்ட கயிறு தயிர் கடையும் போது சுழனறு தேயத்தலால் மததின கால் தேய்நதது (நற். 12:2).

**16. உறிக்கால்.** இடையன திண்கால் உறியன் (அகம். 274: 6, 8). இடையன் கையில் பல்கால் மெல்லுறியும் தோற்பையும் இருந்தன (நற். 142: 2-4).

**17. வேர்.** வரகுடன் செழித்திருந்த களை காலுடன - வேருடன் - களையபபட்டது ( புறம். 120:5).

**18. குடைக்காம்பு.** யானைக்கட் சேஎய் மாந்தரஞ் சேரலிரும்பொறை உலகிற்குக் காவலாகிய வெண் கொற்றக் குடையின் கால் - குடைக்காம்பு - துணிநது உலற மேலோருலகம் அடைந்தான் (புறம். 229: 20,22).

**19. கதிர்.** அந்திக்காலத்தில் கதிரவன் மலையில் மறையும் போது கால் - கதிர் - மாறும (சிறு. 170,171).

**20. சட்டம்.** கொற்றக்குடை நூலாலே காலில் - சட்டத்தில் - கட்டின முத்து மாலையினை உடையது (நெடு. 184).

**21. சுற்று.** மகளிர் கொடுங்கால் - வளைந்த சுற்றினையுடைய - பொன்னாற் செயத மகரக் குழையால் உலர வைத்த நெலலைத் தினனும் கோழியை எறிவர் (பட். 22, 23).

**22. முதல்.** தினையின கதிர் முற்றிக் கொய்யாத முன்னரும் நீரற்ற பசிய கால் - முதல் - தோறும் கிளி கவர்ந்தமையின தட்டைகள் தோன்றின (அகம். 28: 3-5).

**23. கடைப்பகுதி.** பசிய காலும் - கடைப்பகுதியும் - மாண்புறும் வரியும் உடைய வலிய வில்லில் நாணினைக் கொளுத்தினர். (அகம். 61:6,7).

**24. தொடர்பு.** தீய கோள்களின் கால் - தொடர்பு - நீங்கப் பெற்ற திங்களை உரோகிணி எனும் நாள் அடைந்த காலத்தில் திருமணம நடைபெற்றது (அகம. 86: 6, 7).

**25. துறை.** இடிந்து விழும் மண்ணின் இடையூற்றினை அஞ்சும் ஒரு கால் - துறை - உடைய ஓடையில் இன்னாத ஏற்றங் கொண்ட நெறியில் வழுக்கி விழுந்து எருது முடம்பட்டது (அகம். 107: 13-15).

**26. காலம்.** மழை கால் - காலம் - நீங்கிய மாக விசும்பு (அகம். 141: 6).

**27. பெய்தல்.** இரவு நடு யாமத்தில் மழைகால் - பெய்தல் - மயங்கி நின்றது (நற. 255:9).

**28. பரண்கால்.** சேணோன் அமைத்த நெடுங்காற் கட்டுப் பரணில் காட்டு மயில் தங்கும் (நற். 276:5,6).

**29. யமன்.** தலைவி வருந்தக் காலை யன்ன - யமனைப் போன்ற - தென்றற காற்றை முநதுறுத்து மாலைக்காலம் வந்தது (ஐங். 116).

**30. ஐம்பெரும்பூதம்.** திருமால் கால் - ஐம்பெரும் பூதங்கள் - முதலான தததுவங்களாலே எக்காலத்தும் ஆராயப பெறும் பெருமை உடையவர் (பரி. 3: 77,80).

**31. வெள்ளக்கால்.** வையையில் வெள்ளம் பெருகியதால் கழனியைக் கால் - வெள்ளக்கால் - வந்து சூழ்ந்தது (பரி. 7:33).

**கால்கழிகட்டில் - பாடை.** இளையவீரர் பலர்க்கும் மேலாகத் தன மகனுக்குத் தலைவனால் தரப்பட்ட கள் அவனைக் கால்கழி கட்டிலில் - பாடையில - கிடத்தி அவன்மீது தூய வெள்ளாடை போர்ப்பித்திலதே என்று மறக்குடி மகள் வருந்தினாள் (புறம். 286:3-5).

**கால்கழுவுதல் - தூய்மை செய்தல்.** மழைநீர் கால்கழுவிய - தூய்மை செய்த - பொழில்கள தோறும் தங்கிச் செல்வீராக எனப் பாணர் ஆற்றுப் படுத்தப் பெறுகின்றார் (பெரு. 380,392). புனல் கால்கழுவிய மணல் ஒழுங்குபட்ட புறவில் கூத்தர் தங்கினர் (மலை. 48-50).

**கால்கிளர்தல் 1. இயங்குதல்.** பொலிவற்ற யாக்கையுடைய பாணன வளளலை நாடி ஆரவாரமிக்க சுற்றத்துடன் கால்கிளர்ந்து - இயங்கி - திரிந்தான் (பெரு. 21). பேயினங்கள் கால்கிளர ஊர் முழுதும்

துயின்றது (நற். 255:1). மிக்க இருள் செறிந்த நள்ளி ரவில் அணங்கு கால் கிளரும் (நற். 319:6).

2. படையெடுத்தல். அரசு கால்கிளர்தல் - படை யெடுத்தல் - போலத் திமில் களிறாகவும் அலை யொலி பறையொலியாகவும் கரையிலுள்ள புள்ளி னம் காலாட் படையாகவும் கொண்டு கடல் ஆர வாரித்தது (கலி. 149:1-3).

**கால்கொளல்** – நிலைகொள்ளல். மணிகள் களையப் பட்ட வேற்படையை ஒப்பக் கழுது கால் கொள் ளும் - நிலைகொள்ளும் - நடுயாமத்தில் தலைவ னைப் பிரிந்த தலைவியின் கண்கள் உறங்கா வாயின (நற். 171:7-10). கதிரவன் மறைந்த மாலைப் பொழுது நீங்கிய பனிக் கால் கொண்ட துன்பந் தரும் யாமத்தில் தலைவி அழத் தலைவர் பொருள் வயிற் பிரிந்தார் (நற். 241:7-12).

**கால்கோள்** - தொடக்கம். பனங்குரும்பையைக் கொடி யாற் கட்டிப் பின்னிய பின்னலை இழுத்துக் களைப் புடன் செல்லும் சிறார் நடுவே தலைவரின் மகன் செல்ல, ஆலமர் செல்வனாகிய சிவபெருமானின் மகனாய முருகனுடைய விழாவுக்குக் கால்கோள் - தொடக்கம் - செய்கின்ற நாளென்று கருதிப் பரத் தையர் விரைந்து சென்று அம் மகனைத் தழுவினர் (கலி. 83:8-17).

**கால்சீத்தல்** - போக்குதல். திங்கள் மாலைக் காலத்தே தோன்றி மயக்கத்தைச் செய்யும் இருளைக் கால் சீத்தது - போக்கியது - (பரி. 10:112).

**கால்யாத்தல்** - 1. நெருங்குதல். பண்டங்களை விற்ற லும் வாங்குதலும் பொருந்தி அவ்விடத்தே கால் யாத்த - நெருங்கிய – பலகுடிகளமைந்த கடை யினையும் உடையது கச்சி மூதூர் (பெரு. 399, 400, 411). காடு கால் யாத்த நீடுமரச் சோலையினை யுடையது சுரவழி (அகம். 109: 5, 9). பெருமலை விடரகம் தேனிறால்கள் கால்யாத்த குளிர்ந்த முழைஞ்சுகளை யுடையது (அகம். 242:18,19). களர் கால்யாத்த கண்ணகன் பரப்பினை யுடையது காடு (அகம். 327:11,19). அகன்ற வாயையுடைய சுனை யில் நீர் நிறைதலால் அங்கு முளைத்தெழுந்த குள நெல் முதலிய பயிர்கள் கால்யாத்து வளருமாறு மேகம் மழையைப் பொழிந்தது (நற். 5:2,5).

2. மறைத்தல். 'அருஞ்சுரம் கடந்து குறும்பில் தங்கின் நாய் கொணர்ந்த உடும்பின் பொரியலால் கால்யாத்த - மறைத்த - உணவினை மனைதொ றும் பெறுகுவீர்' எனப் பெரும்பாணர் ஆற்றுப் படுத்தப் பெறுவர் (பெரு. 117,129-133).

**கால்வழி** – அடிச்சுவடு. யானையின் கால்வழி - அடிச் சுவடு – போன்ற தடாரிப்பறையைப் பொருநன் முழக்கினான் (புறம். 368: 14,15).

**கால்வீழ்த்தல்** - காலிறங்குதல். 'புதுப்பெயலைத் தர வேண்டிக் கடலிடத்துக் கால்வீழ்த்த - காலிறங் கிய - மேகம் நீரின்றி மீளாதவாறு போலப் பரிசிலர் சுற்றம் பரிசில் பெறாது மீளுவதில்லை' எனப் பரிசில் நீட்டித்த கடிய நெடுவேட்டுவனுக் குப் பெருந்தலைச் சாத்தனார் அறிவுறுத்தினார் (புறம். 205:10-14). உரவு மழை இடியுடன கூடிக் கால்வீழ்த்துப் பானாள் கங்குலில் நீரைச் சொரிந் தது (அகம். 182: 9,10). தலைவர் பொருள் முற்றி வருவதற்கு முன கன்மிசை அடுக்கம் புதையக் கால் வீழ்த்து இடியுடன் மழை பெய்த இம்மேகம் அறி யாமையுடையது எனக் கூறித் தோழி தலைவியை ஆற்றுவித்தாள் (நற். 316: 1,6-10).

**காலக்கடவுள்** - சிவன். சூலமும் வேறுபல படைகளும் உடைய காலக்கடவுட்கு - சிவனுக்கு - வென்றி மிகுவதாக எனக் கூறிப் புலவர் கடவுளை வாழ்த் துகிறார் (பதி. க. வா. 11,12).

**காலம்** - 1. பொழுது. காலன் தன்னால் உயிர் கொள் ளலாங் காலம் – பொழுது - பார்த்து உயிர்கொள் வான் (புறம். 41:1). இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறன், தன்னை யெதிர்ந்தோர்க்குத் தான நினைந்தபொழுதே முடிவு காலத்தைச் செய்யும் காலமுன்பினை யுடைய கடவுளர் நால்வருள் கூற்றம் (சிவன்) போனறவன் (புறம். 56: 9-11). 'அதியமான் பரிசில் தரும் காலம நீட்டிப்பினும் நீட்டியா தொழியினும், யானை தன கொம் பினிடையே வைத்த கவளம் அதன் வாயகத்துத் தப்பாதவாறு போலத் தவறாமல் பரிசில் கிடைக் கும்' என ஔவையார் கூறினார் (புறம். 101: 5-8). விலங்கும் பறவையும் உண்ணுமாறு பாரியின் பறம்புமலையில காலம் அல்லாக் காலத்தும் மரங்கள் பயனதரும் (புறம். 116:12-14). வெளிமான் தன்னை வந்தடைந்தோர்க்குக் கோடைக் காலத்துக் குளிர் நிழலையொத்து இன்பம் செய்வான (புறம். 237:3). பல்யானைச் செல்கெழு குட்டுவனின நாட்டில், கரும்பு மூற்றி விளையும் காலத்தல்லாது எப்போதும் அறுத்து முடியாமல் விளையும் (பதி.30:14). சென்ற காலத்தையும் வருகின்ற காலத்தையும் இன்று இவ் வுலகில் தோன்றி நடக்கின்ற ஒழுக்கத்தோடே மிக வுணர்ந்து உரைப்பதற் கேற்றவாறு வானமும் நில மும் பற்றிய செய்திகளைத் தம் நெஞ்சால் அறிந்து கூறும் அறிஞர் மதுரையில் இருந்தனர் (மது. 477-481). நன்னன் மலையிடத்துள்ள மரங்கள் கால மன்றியும் பயன் கொடுத்தலின் நாவலின் கரிய

பழம் அகன்ற பாறையில் உதிர்ந்து கிடந்தன (மலை. 133-135). வெஞ்சின வேந்தன் போரினை முடிப் பானாயின், மனையின்கண் வருந்தி இன்னாமை யுடன் உறையும் தலைவி தொன்னலம் பெறுதற்கு ஏற்ற காலம் இதுவாகும் எனத் தலைவன் நெஞ்சிற் குரைத்தான் (அகம். 164: 10-14). உரிய காலத்தில் மகனுக்குப் பால் ஊட்டாத தாயின் முலை, வற் கடம் நீங்கும்படி பெய்தற்குக் கிழக்கே எழுந்து (கூடிக்) காலத்தே தோன்றிய மேகம் போலப் பாலாலே விம்மி நின்றன (கலி. 82: 1-5). உலகைக் குடையால் நிழல்செய்து ஆண்ட அரசனுக்கும் அவ் வுலகை ஆளவரும் அரசனுக்கும் நடுவுநின்ற வருத் தந் தருகின்ற காலம் போலக் கதிரவன் பகலாற்றி மலைசேரத் திங்கள் இருள் நீக்க எழும் இடைக் காலத்தே மாலைப்பொழுது வந்ததெனப் பிரிவிடை யாற்றாத தலைவி புலம்பினாள் (கலி. 118: 4-8). மூலப்பகுதியும் அறனும் முதன்மை நீங்கிய காலமும் விசும்பும் காற்றொடு கனலும் கூடிய மூவேழுல கத்து உயிர்களும் திருமாலிடத்து உளவாயின (பரி.13:23-25). மலையைக் கடலில் நட்டு அவுணரும் அமரரு மாகிய இருதிறத்தினரும், அமுது கடைவ தற்குக் கெடாத வல்லமையுடன் ஒரு தோழங்காலம் (மிகப்பெருங்காலம்) ஆதிசேடன் உதவினான் (பரி. தி. 1:64-71).

2. இயமன். தலையாலங் கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் காலம் - இயமன் - போன்ற வலிமை படைத்தவன் (புறம். 23: 16, 17). ஏறுதழுவு வதற்குத் தொழுவத்தில் விடப்பட்ட ஏறுகள் காலம் ஒத்த வலிமையுடையவா யிருந்தன (கலி. 105: 19).

**காலமாரி** - கார்காலமழை. காலமாரி – கார்காலமழை - போல அம்புகள் நிரைந்து விரைந்து வந்து தைப் பினும் பிறக்கிடாத பீடுடையவர் வீரர் (புறம். 287: 3,7). காலமாரியையுடைய மாலைக்காலத்து வரும் கரிய மேகங்கள் இன்னிசை இடியேற்றை உடையன வாய் முழங்கும் (குறு. 200: 5,6). 'மயில்களாகிய கரிய கூட்டங்கள் பருவமல்லாத காலத்துப் பெய்த மழையைக் காலமாரி பெய்ததாகக் கொண்டு அம் மழைக்கு எதிர் ஆடுதலைச் செய்தன வாதலின் அவை அறியாமையுடையன என்று கூறித் தோழி தலைவியை ஆற்றுவித்தாள் (குறு. 251:1-4).

**காலமுதல்வன்** - காலத்திற்கு முதல்வனான திருமால். ஆயிரந் தலையுடைய அரவை வாயிற் கொண்ட ஊர்தியாகிய சேவல் (கருடன்) இடருற்ற போது வருந்திச் செங்கண் மாலே என்று அலறும் கால முதல்வன் திருமாலாவான் (பரி. 3:59-61).

**காலன்** – இயமன். காலனும் - இயமனும் - உயிரைக் கைப்பற்ற அதற்குரிய காலம் வரும்வரை எதிர் பார்த்திருப்பான் (புறம். 41:1). காலன் என்னும் கண்ணிலி, ஆய் அண்டிரனொடு அவன் உரிமை மகளிரையும் கவர்ந்ததால் அவன் மேலோருலகம் சென்றான் (புறம். 240:3-6). களங்காய்க் கண்ணி நார்முடிச்சேரல், காலன் அனைய மிக்க சினத்தை யும் வன்மையையும் உடையவன் (பதி. 39.8). ஊழி முடியும் அமையத்துக் காலனும் கூற்றுவனும் பல் உயிர்களையும் உண்ண வேண்டி அவற்றின் பின் விடாமல் சுழல்வர் (கலி. 105:20-22). பகல்மாய்ந்த தும் மாலைக்காலம் கலக்கத்தோடே வந்த கால னைப் போலத் தலைவியிடம் வந்தது (கலி. 143: 39-41).

**காலுறுதல்** - நிலைத்தல். நிரைமீட்டுப் பட்ட மற வனின் உடல் கானச் சிற்றியாற்றினது கரையிடத் துக் காலுற்று - நிலைத்து - பின் நடுக்கத்தோடு சாய்ந்த இலக்கத்தைப் போல அம்பு சலித்து வீழ்ந்தது (புறம். 260:21-24).

**காலெறி கடிகையார்** - புலவர். 'கரும்பின், காலெறி கடிகைக் கண்ணயின் றன்ன, வாலெயி றூறிய வசையில் தீநீர்' (குறு. 267) என்று தலைவியின் வாய்நீரைச் சிறப்பித்துப் பாடிய தொடரினால் இவர் காலெறி கடிகையார் எனக் குறிக்கப் பெற் றார். இவரது இயற்பெயர் இன்னதென்று அறிதற் கின்றி மறைந்தது. இவர் பாடியதாக மேற்குறித்த குறுந்தொகைப் பாட லொன்றே உள்ளது. கூற்றுவனது கொலைத் தொழிலை அறிந்தோர் பெருஞ்செல்வம் ஒருங்கே பொருந்துவதாயினும் இனிமை மிக்க எயிற்று நீரையுடைய தலைவி தனித் திருக்குமாறு தாம் ஆள்வினைக்கு அகலார் என்று தலைவன் நாளது சின்மையும் இளமையது அருமை யும் கூறிச் செலவழுங்குவதாக இவர் அப்பாடலை இயற்றியுள்ளார்.

**காலை**- 1. காலம். அதியமான் நெடுமானஞ்சி உல கம் வறுமையுறும் காலை - காலம் - ஆயினும் புரத்தல் வல்லன் (புறம். 103:11,12). கார்காலத்து மழை பெய்து மாறிய காட்சிக் கினிய காலையில தெறுழ் மலர் பூத்தது (புறம். 119:1,2). எனது வறுமையுற்று நிற்கும் நிலைமை, நீ மனம் கனிந்து நல்கும் காலையை நோக்கி யிருத்தற் கேற்றதன்று என நாஞ்சில் வள்ளுவனிடம் பரிசில் வேண்டிச் சென்ற மருதனிள நாகனார் கூறுகிறார் (புறம். 139: 10). வளம்தரும் மழை நீங்கிய கோடைக்காலையில் உயிர்க் கூட்டங்களெல்லாம் சென்று நீருண்ணும் படி கங்கையில் வெள்ளம் பெருகியது (புறம். 161: 5-7). 'சோணாட்டுப் பூஞ்சாற்றூர்ப் பார்ப்பான

கௌணியன் விண்ணந்தாயன் நீர் நாண நெய் வழங்கியும் எண்நாணப் பல வேட்டும் மண் நாணப் புகழ் பரப்பியும் வேள்வி செய்த காலையில் விருந்தளித்த மேம்பட்ட நிலையை எந்நாளும் காண்போமாக' என ஆவூர் மூலங் கிழார் அவனை வாழ்த்தினார் (புறம். 166:21-26). நாஞ்சில் வள்ளுவன் உளனாக இலம்படு காலை ஆயினும் என் சுற்றத்தார் வருந்துதலிலர் எனக் கருவூர்க் கதப்பிள்ளை கூறுகிறார் (புறம். 380:14-16). விளைவயல்களும் நீர்நிலைகளும் வற்றிய காலையில் தடாரியை இசைக்கும் கிணைஞன் பண்ணனைச் சென்றுபாட அவன் வறுமையைக் களைந்தான் (புறம். 388:1-6). வெள்ளியாகிய மீன் தென்திசைக்கண் சென்று வறம் செய்யும் காலை ஆயினும் எமமையும் நினைப்பாயாக எனச் சொல்லி நல்லேர் முதியன் பொருநனுக்குப் பெருவளமீந்தான் (புறம். 389:4-6). அருவிகள் வற்றியுலர்ந்த வறட்சிக் காலையிலும் பேரியாறு கரையளவு உயர்ந்து நீர் பெருகியது (பதி. 28:9,10;43:14,15). நிலம் தன்னியல்பில் திரிந்து கெடுங்காலையாயினும் சொல்லிய சொல் பொய்படுவதை அறியாதவன் செல்வக் கடுங்கோ வாழியாதன் (பதி. 63: 6,7). மழையை உரிய காலையில் பெய்து உழவுத் தொழிலை இனிது நிகழப் பண்ணி மலையுச்சியை அடைந்த மழைமுகில், நெடுங்காலை பெய்யாதிருந்து மலையை அடைந்து மிக்க மழையைப் பெய்தது (பதி. 84:21-23). காவிரி வறகடம் உண்டான காலையும், நறையும் நரந்தமும் அகிலும் ஆரமும் துறைதோறும் ஒதுக்கி நடந்து சென்றது (பொரு. 237-239). நெடுஞ்செழியனின் அரண்மனையில் யவனர் இயற்றிய பாவைவிளக்கில் நெய்வற்றி ஒளி மழுங்கின காலைதோறும் நெய்வார்த்துத் திரியைத் தூண்டினர் (நெடு. 101-104). ‘தலைவர் இந்த மாலைப்பொழுதினும் எம்மை நினைந்து வாராராயின், எதிர்வரும் காலையில் எந்நிலையை எய்துவமோ' எனத் தலைவி கூறி வருந்தினாள் (அகம். 14:12,13). கோடை நீண்ட பசுமையற்ற காலையில் பெருமழை பெய்தது போன்று தலைவர் வரைவு மலிந்தமை கேட்டுத் தான் மகிழ்ந்ததாகத் தோழி கூறுகிறாள் (அகம். 42:6-14). தலைவியின் சிறுபுறம் பாராட்டிய காலையில் கூறிய சூள்மொழியையும் எண்ணாராய்ப் பொருளீட்டும் பொருட்டுத் தலைவர் பிரிந்தார் எனத் தோழி கூறுதல் (அகம். 59: 14-18). நன்மை அல்லாத துன்பம் வந்த காலையும் தமது நட்புப் பண்பினின்றும் தலைவர் மாறுபடார் எனத் தலைவி கூறுதல் (அகம். 113:1). வாடைக்காற்று பனிநலிகின்ற நடு இரவின் இருளில் தனிமை எய்தியவர் பொறுக்கும் வலியளவை ஆராயாது மாறுபாடு இல்லாத காலையும் வெறுக்கும்படி வீசியது (அகம். 125: 11-13). புதல்கள் ஒளியாற் சிறந்த காண்டற்கினிய காலையில் அறுகம் புல்லை மேயும் திரிமருப்பிரலை நீரருந்திக் கொழுநிழலில் துணையொடு இன்பமுறத் தங்கும் (அகம. 139:8-12). கார்ப்பருவம் அழகு பெற்ற காலையில் தலைவி விருந்தாக ஏற்றுக்கொள்ள நம் தேர் விரைந்து செல்வதாக எனத் தலைவன் தேர்ப்பாகற்குக் கூறினான (அகம். 374: 15-18). கொன்றை மரம் குருந்த மரத்தோடு சுழலும் மிக்க தனமையுடைய காலையையும் கார்கால மன்று என நீ கூறுவாயாயின், இங்ஙனம் தோறறுவது கனவோ கூறுக எனத் தலைவி தோழியை வினவினாள் (குறு.148:3-6). யாம் நுமக்கு அரியம் ஆகிய களவுக்காலையில் நீர் மிகவும் பொறுத்திருந்தீர் எனத் தோழி தலைவனிடம் கூறுதல் (குறு. 178:5-7). கொன்றை மலர்கள் நம்மைப் போலப் பசலைநிறத்தையடையும் காலையில் பெண்மானிடததினின்றும் நீங்கிய ஆணமானை நம் தலைவர் காண்பரோ எனத தலைவி தோழியை வினவினாள் (குறு. 183:1-4). பரத்தையர் வீட்டிலிருந்து தலைவன் வருங் காலை தலைவி இன்முகம் திரியாது அவனை எதிரேற்றுப் பேணினாள் (குறு. 252:2-4). நம் களவொழுககத்தை மறைக்கும் காலை இஃதனறு எனத் தோழி தலைவியிடம் கூறல் (குறு. 321:7). குராமரம் புன்க மரத்துடன் அழகுகொண்டு கண்ணுககு இனிதாகத் தோற்றிய காலையும், தலைவர் நமமைப் பேணாராயினும் என் வனகண்மையால் வாழவேன் எனத் தலைவி தோழியிடம் கூறினாள் (குறு. 341: 1-4). தாய் சினந்து வருந்திய காலையும் குழவி வாய்விட்டு அன்னையே என்றழும் (குறு. 397:4,5). பெருமழை பொழிந்த மேகம தென்திசை எழுதலால் பிரிநதோர் இரங்கும் முன்பனிக்காலையும் நீ நின் காதலரைப் பிரிநது வாழ்தல் அரிதாகும் எனத் தோழி தலைவியிடம் கூறினாள் (நற். 5:5-7). சேவலுடன் கூடிய குயில எதிரெதிர் இருநது ஆரவாரிக்கும் பூக்கள் மலியும் காலையும் (இளவேனிலும்) பிரிந்த காதலர் வாராது நம்மை மறந்தனர் எனத் தலைவி கூறினாள் (நற். 118:3-5). ஒன்று பிரிந்த காலை மற்றோர் அனறில் பறவை ஆற்றாதிறத்தல போலத் தலைவி தனிமையுற்றுறையும் வாழ்க்கையை ஆற்றாது யானும் இறப்பேன் எனத் தலைவனிடம் தோழி கூறுதல் (நற். 124:1-3). இனனாமையைத் தருவதாகிய இளவேனிற் காலையில் பொருள்வயிற பிரிவது ஆடவர்க்கு இயல்பாம் எனில், அடைந்தாரைப் பாதுகாககும் அறத்தை

விடப் பொருள் அரியது போலும் எனத் தலைவி கூறினாள் (நற். 243:9-11). தலைவன் வேற்று நாட்டுக்குச் செல்லக் கருதித் தலைவியை இல்லின்கண் இருத்திய காலை அவள் வருந்தினாள்; பெரியவர் நிலை பெரிய அல்ல எனத் தோழி கூறுதல் (நற். 266:7,8). தலைவியின அழகு தலைவன் வருங்காலை வந்து அவன் செல்லுங்கால் செல்லும் எனத் தோழி கூறினாள் (ஐங். 238:4,5). தலைவர் தாம் குறித்துச் சென்ற இக்காரப்பருவத்தைச் செய்யும் காலையில் யாம செயலற்றுக் கிடக்கும்படி வாராதிருப்பது எத்தன்மைத்து எனத் தலைவி வருந்திக் கூறினாள் (ஐங். 451:1,2). காலையே கார்ப்பருவமாதலைத் தொடங்கி விட்டது (ஐங். 453:3;468:2;493:3). கார்ப்பருவம் தொடங்கும் இக்காலை நின்நினைவு என்னை வருத்துதலான் நொந்து வருந்தும் உள்ளத்தோடு நின் பேரழகை நினக்கு மீண்டும் தருதற்கு விரைந்து வந்தேன் என வினைமுற்றிப் புகுந்த தலைமகன் தலைவியிடத்துக் கூறினான் (ஐங். 491). மகளிர் உயிரை உடலினின்றும் பிரிக்கும் காலை என அதன் இயல்பறியாராய் மயங்கியோர் மாலைக்காலமென்று அதையும் ஒரு காலமாகக் கூறுவர் எனத் தலைவி ஆற்றாளாய்த் தோழிக்குரைத்தாள் (கலி. 119:14-16). நாற்றிசையும் நடுங்கச் செய்யும் ஊழி முடிவாகிய காலையில் கூற்றுவன் பிறையைத் தனக்கு எயிறாகக் கொண்டு பல்லுயிரையும் கோடற்கு நககது போல அஞ்சுதலை யுடைய கடிய மாலைப பொழுது தோனறியது (கலி. 120:7-9). தலைவரின்மையால பகலையும் முனிவேன்; பகற்பொழுது போய் இரவு வந்த காலை அவவிராக் காலத்தையும் அபபொழுதே முனிவேன் எனத் தலைவி கூறினாள் (கலி. 144:52,53).

2. **விடியற்காலம்.** பாணர் மாலை மருதப் பண்ணையும் காலை - விடியற்காலம் - செவ்வழிப் பண்ணையும் மாறிப் பாடியதன் காரணம் கண்டீரக்கோப் பெருநள்ளியின கைவண்மையே என வன்பரணர் குறிப்பிட்டுள்ளார் (புறம். 149:2-5). முன்பு தூக்கணாங்குருவியின் கூட்டையொப்ப ஒருபக்கத்தில் தொங்கிய வலம்புரிச்சங்கு இப்பொழுது அரசர் வாயிலிடத்தே காலை தோன்றினும் யான் நோவேன் எனச் சோழன் நெடுங்கிள்ளி இறந்த காலதது ஆலததூர் கிழார் சுட்டியுள்ளார் (புறம். 225:11-14). வெட்சி வீரன் ஒருவன் காலையே பகைவரின் இனநிரை போகும் இடத்தைப் பார்த்து அவர் செய்யும் பூசலை மாற்றினான் (புறம். 257: ·-10). மறக்குடி மகளை மணக்கும் பொருட்டு இனறுகாலை வேந்தர் வந்து நெடுநிலை வாயிலில் சுற்றித் திரிகுவர் (புறம். 350:5,6). கரிகால் பெருவளத்தானைக் கண்டு பரிசில் பெற்ற பொருநனை மறு நாட்காலை பார்த்தவர் 'இவன் நெருநல் வந்தவனல்லன்' என்று மருண்டனர் (பொரு. 96,97). வேனிற் காலத்தில் காலையிலேயே ஞாயிற்றின் கதிர் வெம்மையை உண்டாக்கிற்று (சிறு. 9,10). நெடுஞ்செழியனின் பாசறையில முரசம் காலையிலேயே இயம்பியது (மது. 231,232). காலையில் பசிய கொத்தினின்றும் நறுமலர்கள் பரற் கற்கள் மீது உதிர்நதன (அகம். 107:19,20). பாண்மகள் தன் தமையன் மார் நடுஇரவிற் சென்று காலை கொணர்ந்த வாளை மீனுக்கு விலையாகச் செந்நெல்லைக் கொள்ளாது முத்துக்களுடன் அணிகலன்களையும் பெறுவாள் (அகம். 126:7-12). கார் காலம் காலையே வந்தது (அகம். 183:10). முழங்கும் கடலின் திரைகள் காலையில் அலையும் (அகம். 220:12). பாரியின் பறம்பு அரணில் குருவியின் கூட்டம் காலையில் புறம் போய் நெற்கதிர்களைக் கொண்டு மாலையில் மீளும் (அகம். 303:10-14). சுனைகள் 'நீர்நிறையுமாறு காலையே கார்ப்பருவம் தொடங்கியது (அகம். 364:8,9). காலையும் பகலும் மாலையும் யாமமும் விடியலும் என்ற இப்பொழுதுகள் ஒருவருக்கு இடையே தோற்றுமாயின் அவரது காமம் பொயயே ஆகும் (குறு. 32: 1-3). தலைவன காலை எழுந்து தேரை ஒப்பனை செய்து பரத்தையரைத் தழுவும் பொருட்டுச் சென்றான் · (குறு. 45:1-3). விளையாட்டுப்பாவை காலையில் வருந்துதலாற் பிறந்த செயலறுதலை ஓம்புக என்று தலைவியிடம் தோழியர் கூறினர் (குறு. 48:1 - 3). தலைவன காலைவந்து சுனையில் மலர்ந்த குவளை மலர் மாலையைத் தலைவிக்குத் தந்தான் (குறு. 346:4-6). தலைவனின் மலையிலிருந்து காலை வந்த காந்தளின மெல்லிலை குழையுமபடி யான் தழுவுதலை அன்னை கடியவில்லை எனத் தலைவி கூறல (குறு.361:4-6). நொச்சியும், மனை நடுவில் உள்ள முல்லையும் அருமபவிழநது மலருமாறு இன்று காலை கார்ப்பருவம் வந்தது (நற். 115:5-7). தலைவி கானலிடத்துத் தன் ஆயத்துடன் காலையில் சென்று மலர்களைக் கொய்து கொணர்ந்தாள் (நற். 123:5,6). தலைவர் குதிரைகள் பூட்டிய தேரைச் செலுத்திக் காலையில் புறத்தே சென்றார் (நற். 130'3). இன்று காலைப் பொழுதிலேயே மேகம் தன் மழைபெய்யும் தொழிலைத தொடங்கியது எனத் தலைவன் கூறினான் (நற். 242:5). மேகம் மழை பொழிந்த இனிய காட்சியையுடைய காலையில் மயில் தன் தோகை விரித்து ஆடியது (நற்.264: 2-4). வெள்ளைக் கொக்கின் பார்ப்பு இறந்துபட்டதாக, அதன் பொருட்டு அக்கொக்கைக் கண்டு

அளவேளாவச சென்ற நாரை காலையிலிருந்தே அதனுடனிருந்தும் அமையாது மாலையிலும் அங் கேயே தங்கியது (ஐங. 157:1-3). மாலைப்பொழுது இனி காலையிலேயே வரினும தடுதது நிறுத்துவார் ஒருவருமிலர் எனப் பிரிவாறறாத தலைவி கூறி வருநதினாள் (ஐங். 183:4-6). காலையிலேயே முழங் கும் குரலையுடைய போர்முரசம் இயம்பியது (ஐங். 448:1). மெய்யினின்றும் வடிகின்ற குருதியை யுடைய ஏறுகளெலலாம் காலை பெய்யும் மேகநிரை யை ஒததன (கலி. 106:13,14). என காதலரை நீ காலை கொண்டு வருவாயாயின யான என உயி ரோடு சென்று அவரைக் காண்பேன எனக் கதிர வனைப் பார்த்துப் பிரிவாற்றாத தலைவி கூறி னாள் (கலி. 145:32,33). தலைவி தன் கணவனைப பார்த்து 'நீ பரத்தையரொடு ஆடும பொருட்டே காலையில் பிரிநது சென்று மாலை வருகிறாய்' என்றுரைத்தாள் (பரி. 8: 48-50). மலையிடத்து மாலைப் பொழுது பெய்த மழையால் மறுநாள் காலையில் வையையாற்றில் நீர் பெருகியது (பரி. 10:1,8). போரில் பகைவரை வெலலும் படையி னையுடைய பாண்டியனின வையையாறு காலைப பொழுதில் கலஙகிச் சிவந்த குருதி போன்றிருக்கும் (பரி. 12:85,86). மேகம காலைப் பொழுதில் கடலில் படிநது முகந்த நீரோடு ஞாயிறு சென்ற வழியே மேலைத்திசை சென்று மலையை அடைந்து மண் ணுலகம் உறங்கும் போது தானுறங்காது மழை பொழியும் (பரி. 20:6-8).

3. பருவம். மேகங்கள் சினம் சிறந்து இடித்து விசும் பில் தவழ்ந்து காரென்னும் காலை - பருவத்தை - அறிவிக்கும் பொழுதில மக்கள் வருந்தினர் (பதி. 81:2-5). குளிர்ந்த செவ்வியுடைய கார் காலையில் தலைவர் வரினும் வாராராயினும் அவர் சென்ற இடம் அவருக்கு இனியது போலும் எனத் தலைவி கூறினாள் (அகம். 244:6-8). மேகம் மழை பொழிதலைச் செய்யத் தொடங்கிய காலையில மடப்பிணையைக் கலைமான தழுவியது (நற். 256:7, 8). பிரிநதோர் வருந்தும் அரும்பெறற் காலையும காதலர் தாம் செய்ய வேண்டிய செயலையே கரு திய உள்ளத்துடன் விரைந்து செலவாராயினர் (நற். 296:6-8). தலைவர் பிரிநதுறைதற் கியலாத காலை யும் பிரிந்துபோதலில வல்லுநர் எனத் தலைவி கூறினாள் (ஐங். 338:4,5). பெய்பனி நலியக் குருகி னம் வருந்தி நரலும் பிரிவருங்காலையில் (கூதிர்ப்பரு வததில) தலைவர் நம்மைக் கைவிட்டு உறைவா ரல் லர் எனத் தலைவி தோழிக்குக் கூறினாள் (ஐங். 457: 1-3). இருநிலம் குளிர்ப்ப நாளும் அருமபனி கலந்து வீசும் அறசிரக் காலை நின்னை நினையாராயினும் நின் மாமைக்கவின நின்னை மறக்க விடுமோ எனத் தோழி தலைவியிடம கூறினாள (ஐங். 470).

4. பகல். 'அதியமான் நெடுமானஞ்சியை இன்றிக் கழிகினற காலையும் - பகலும - மாலையும் எனக்கு இல்லையாகுக' என அவன இறநதகாலதது ஔவை யார் கையறுப் பாடுகிறார் (புறம். 232 1). தலைவி தன காமமிகுதியால இது காலை எனறும் கருதாது தலைவனால செயயப்படும அன்பைப் பெரிதும் பாராட்டிப் பகற்குறி வநதாள் (நற். 223:1-3).

5. வாழநாள். பாரிமகளிரைப பாாப்பாற படுத்திய கபிலர் யான நோவேன' எனது காலை - வாழ நாள - கெடுவதாகுக' என் வருநதிக கூறினார் (புறம. 116:9). வேள எவவி இறநததை எணணி 'நோகோ யானே, தேயகமா காலை' என வெள ளெருககிலையார் கையறுப பாடினார் (புறம. 234:1).

6. ஞாயிறு. காலை - ஞாயிறு - போனற தபபாத வாயமையன பலயானைச் செல்கெழு குட்டுவன (பதி. 21:4). பல்யானைச் செலகெழு குட்டுவனின பகைவர் நாடு மழையினறி அழிநது விளைபொரு ளின்றிக கெட்டு வெம்மை மிகுநதமையான அந நாட்டு மக்கள 'காலையது வெமமை நனமையு டையதனறு' எனக் கூறி வருந்தினர் (பதி. 26:6-8).

7. கீழ்த்திசை. காலை - கீழ்த்திசை - வானத்தெழுந்த கடுங்குரல் மேகம் முல்லைககொடி தளிர்ப்ப மழை பெயதது (அகம். 174:5-7)

8. பள்ளி எழுச்சி முரசம். படைவலி குறைநதவனின் செவியில் படைஎடுத்து மேல வந்தவனின காலை - பள்ளியெழுசசி முரசம - ஒலிததுப பெருநதுயர் செய்து துயில போக்கும் (கலி. 70:20,21).

**காலைஅந்தி - காலையை அடுத்த அந்திப்பொழுது.** சோழன குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனை காலை அநதியும் - காலையை அடுத்த அந்திப்பொழு தும் - மாலை அநதியும் அவனுடைய தாளை வள வன் வாழக என வாழத்திப் பாடுவேன என ஆலத்தூர்கிழார் கூறுகிறார் (புறம். 34: 8, 17).

**காலோர் - காலாண்மறவர்.** வளஙகெழு செலவர் காலோர் - காலாணமறவர் - சூழந்து காப்பக் காற றின செலவை ஒதத விரைந்த தேர்கருதிரைகளைக கடிதிற் செலுததினர் (மது. 440-442).

**காவட்டனார் - புலவர்.** இவரது பெயர்விளக்கம் புரிய வில்லை. கல்வெட்டுக்களில் காவிட்டனாரெனறு வேறு சிலர் பெயர்கள் காணப்படுதல் கொணடு இவர் பெயரையும் அவ்வாறே கொளவர் ஔவை. து. இவா பாடியனவாய்ப புறநானூறறில் (359)

ஒன்றும அகநானூற்றில் (378) ஒன்றுமாக இரு பாடல்கள் உள்ளன. அந்துவன் கீரனைப் பாடிய புறப்பாடலில் நிலையாமை, கொடை இரண்டையும் அவனுக்கு நன்கு அறிவுறுத்தியுள்ளார். 'காடு முன்னினரே நாடு கொண்டோரும்' என்று பொதுப்பட நிலையாமையைக் கூறியதோடல்லாமல, 'நினக்கும் வருதல் வைகல் அற்றே' என்று கேட்போனுக்கும் செவி கைப்பக் கூறுவதில் தனிப் பண்பை வெளிப்படுத்துகிறார். 'வசையும் நிற்கும் இசையும் நிற்கும், அதனால், வசை நீக்கி இசை வேண்டி' ஈவாயாயின் நீ எய்திய புகழ் நீ பெயர்ந்த பின்னும் நீடு விளங்கும்' என்று இவர் அவனைத் தெளிவுபட அறிவுறுத்துகிறார். தலைவன் பிரிந்தத னாலான தனிமைத் துன்பமும் அன்னையின் அமரா நோக்கமும் ஞாயிறு மறைந்த துன்பமிக்க மாலையும் ஆகிய அனைத்தும் வருத்துகின்ற நிலையில் தலைவி தலைவனின் மலையைக் கண்டவாறே உயிர்தாங்கி யிருக்கும் வன்மையை அகப்பாடலில் காட்டுகின்றார்.

**காவல் - 1.** காத்தல். 'யான் என் பகைவரைப் புறங் காணேனாயின் பாண்டி நாட்டைக் காவல் - காத்தல் - செய்வதினின்றும் நீங்கிப் பிறர்தம் வன் புலங்களைக் காவல் செய்வேனாக' என ஒல்லையூர் தந்த பூதப் பாண்டியன் வஞ்சினம் கூறினான் (புறம். 71:5,18,19). காவலாகிய வெண்கொற்றக் குடை கால் துணிந்து உலறும்படி கோச்சேரமான் யானைக்கட் சேஎய் மாந்தரஞ்சேரலிரும்பொறை மேலோர் உலகம் எய்தினான் (புறம். 229:20,22). நாடுகாவல் செய்யும் வேந்தரின் பெருமனையின் புறக்கடையில் எறியப்படும் பலியாகிய வெண் சோற்றைப் போல, சீறூர்த் தலைவன் செல்வக் காலத்தில் நிறைய வழங்கவும் வல்லன (புறம். 331: 11-13). தகடூர் எறிந்த பெருஞ்சேரல் இரும்பொறை நாடு காவற்கமைந்த அரசு துறை போகிய வீறு சால் நன்மகனைப் பெற்றான் (பதி. 74:20,21). தழையால் வேயப்பட்ட கூரை ஒழுங்குபட்ட தெரு விடத்தே நாற்சந்தியான முற்றத்தே யானை காவலாக நின்றது (முல்லை. 29-31). தலைவியும் யானும் தினைப்புனம் காவல் செய்யக் கருதியுள் ளோம் எனத் தோழி தலைவனிடம் கூறல் (அகம். 92:6,7). தலைவியின் வேறுபாடு முருகக் கடவுளால் ஆயது என்று கருதி அவளது தாய் தனது இல்லத் தைத் தெய்வத்தால் தீங்கு நேராவண்ணம் காவல் செய்யக் கருதினாள் (அகம. 232:12-14). 'காவல் நெஞ்சமுடன் என காமத்தைச் செப்பாதிருந்தேன' என இரவுக்குறி வந்த தலைவனிடம் தலைவி கூறல் (அகம. 298:18). காந்தளின் கொழுவிய அரும் பைத் தானாக மலரும் வரை காவல் செய்யாது வண்டுகள் மூடிய இதழ்களைத் திறக்கும் (குறு. 265: 1,2). குரங்கு பலாப்பழத்தைக் கவர்ந்தது கண்ட காவல மறந்த கானவன் பலாமரந்தோறும் வலையை மாட்டிவைத்தான் குறு. 342:1-3). முனபு தலைவன் பரத்தையிற் சென்றபோது அவனைப் பாணர் சூழ்ந்து காவலை மேற்கொண்டு நின்றாற் போல இப்பொழுது இழையணிமகளிர் விரிச்சி கேட்ப நின்றனர் (நற். 40:3,4). குறவரின் இளமகள் முன்போலவே தினைக் கொல்லைக்குக் காவல் அமைந்தாள் எனச் சொல்வாயாக என்று தலைவி தினையை உண்ண வந்த கிள்ளைகளிடத்துக் கூறித் தலைவரிடம் தூதனுப்பினாள (நற். 102:7-9). அடி யறிந்து ஒதுங்கா ஆரிருள் வந்து எம் அகன்ற மாளிகையின் காவலையும கடந்து என்னுடன் கூடிப் பேரன்புடையவனாக இருந்தாய் எனத் தலைவி தலைவனிடம் கூறினாள். (நற. 156: 1-3). 'கொய்யததக்க இத்தினைப் புனங்காவலும் நும் முடையது தானோ' எனத் தலைவன தலைவியை வினவினான் (நற். 213: 9-11). இளைய பரத்தை ஒருத்தி தெருவிற் சென்றபோது குல மாதர்கள் தத்தம் கொழுநரைக் காவல செய்து கொண்டனர் (நற். 320:3,10). பரதவர் கானலில காவல் கொண்ட உப்புக்குவட்டில் ஏறி நின்று மீன்வேட்டைக்குச் சென்ற தம்கிளைஞரின் கடலில் வரும படகுகளை எண்ணுவர் (நற். 331: 1-8). மலைப் பக்கத்தில் வளர்ந்த தினைக்கதிர் வளைந்துள்ள பெரும்புனத் தைக் காவல் செய்யக் கருதினோம் ஆயின் தலை வன நமநிலை உணரான் எனத் தோழி தலைவி யிடம் கூறினாள (நற். 344. 1-5). அன்னையின காவலைக் கடந்து அம்பலத்தை எய்திப் பகலில் பல ரும் காண நாணை விடுத்துத தலைவனின் ஊர் எவ்விடததுளளது என வினவிக் கொண்டு செல் வோமா எனத் தோழி தலைவியைக் கேட்டாள் (நற். 365 : 1-5). அறனில்லாத தாய் தினைப் புனத்தைக காவல் செய்யவிடாது வீட்டுககுள் வைத்திருப்பதனை நீவிர் அறிநதீரோ எனக் கிளியினதைக் கேட்பது போலச் சிறைப்புறத் தலைவனுக்குத் தோழி இற்செறிப்பறிவுறுத்தி னாள் (நற். 376: 10-12). தந்தை வேட்டை மேற் சென்றதனால தினைப்புனத்திற்கு இனி நீயே காவல் எனத் தலைவியிடம தாய் கூறினாள் (நற். 389: 5-7). தலைவி புனங் காவலை மேற்கொண்டமை கண்டு தலைவன் மகிழ்ந்தான் (ஐங். 281:3,4). தலைவியைத் தினைப்புனம் காவல் செய்தலைத் தமர் நீக்குவர் எனத் தோழி கூறுதல் (ஐங். 289: 3). யானை மதநீரால் நனைந்த கன்னங்களையும்

எட்டுத்திசைகளையும் காவல் செய்யும் வல்லமையையும் கொண்டது (கலி. 48: 1-3). உயிரைக் காற்று என அறியாது அரிய பொருள் என மதித்துக் காவல் செய்வார்க்கு ஆயர்மகள் தோளைத் தழுவுதல் அரிதாகும் (கலி. 103: 68-70). அறங்காவற் பெண்டிர் தம் உரிமை மைந்தரொடு வையையில் புனலாடினர் (பரி. தி. 2: 48-50).

2. **காக்கப்படும் நாடு.** 'நீ நரகம் செல்பவரோடு பொருந்தாது காவலைக் - காக்கப்படும் நாட்டை - குழவியை வளர்ப்பாரைப் போலக் காப்பாயாக' எனச் சேரமான் கருவூரேறிய ஒள்வாள் கோப்பெருஞ்சேரலிரும் பொறைக்கு நரிவெரூஉத்தலையார் அறிவுரை கூறினார் (புறம். 5:6,7).

**காவலர் – 1. காக்கும் அரசர்.** உலகம் காவலர் – காக்கும் அரசர் - வழிமொழிந்து நடக்கும் பெருமை உடையவன செல்வக் கடுங்கோ வாழியாதன் (புறம். 8:1). உலகம் காவலரது தோள் வலியைக் கெடுத்து நீ ஒருவனே தலைவனாதலை விரும்பின், அதற்கு நீ செய்ய வேண்டுவனவற்றைக் கேட்பாயாக எனக் கூறிப் பாண்டியன் நெடுஞ்செழியனிடம் குடபுலவியனார் அறிவுரை வழங்கினார் (புறம். 18:14-17). மழை பெய்யும் காலத்துப் பெய்யாதொழியினும் விளைவு குறையினும் இயற்கை அல்லாதன செயற்கையில் தோனறினும் இவ்வுலகம் காவலரைப் பழிக்கும் என்பது வெள்ளைக்குடி நாகனார் கூற்று (புறம. 35:27-29). வலம்புரிச்சங்கம் ஞாலம் காவலரது வாயிலிடத்தே பள்ளி எழுச்சிக் காலததே தோன்றினும் யான் நோவேன் எனச் சோழன நலங்கிள்ளி இறந்தகாலை ஆலததூர் கிழார் வருந்திக் கூறினார் (புறம். 225:12-14). வையம காவலரின வளம் பொருந்திய திருநகர் வெண்வேல் விடலை மாய்ந்தமையின் இப்பொழுது தனித்துப் பல அணி இன்றிப் பொலிவழிந்தது (புறம். 261:6,16-19). இவ்வுலகைத் தாமே தமக்குரியதாக ஆண்ட இனபக் காவலர், கடற்றிரைகள் கொழித் தொதுக்கும் நுண் மணலினும் பலராவர் (புறம். 363:1-4). அன்புடையார்க்கன்றி மாறு கொணட காவலர் கனவிலும சென்று சேரஇயலாத தனமையுடையது அதியமான் நெடுமானஞ்சியின் கடியுடை வியனநகர் (புறம்.390: 5,6). சேரன செங்குட்டுவன் மேற்றிசைக்கண்ணுள்ள நிலத்தைக் காக்கும் காவலர் மருமானும் பகைவருடைய இமயமலைமிசை வில் எழுதியவனும் ஆவான் (சிறு. 47-49). செழியன் கொற்கை என்னும் ஊருக்கு அரசனும் தெற்கின்கண்ணதாகிய நிலததை ஆளும் காவலரின் மருமானும் ஆவான் (சிறு. 62-65). மருத நிலம் சூழ்ந்த குடியிருப்பை உடையவனும் கிழககின்கண்ணதாகிய நிலத்தை ஆளும் காவலரின் மருமானும் ஆவான் தூஙகெயில் எறிந்த தொடித்தோட் செம்பியன் (சிறு. 78-82).

2. **காவல் செய்யும் ஆள்.** ஐவன நெல்லைக் காவலர் - காவல் செய்யும் ஆள் - காவலுக்காக இடப்பட்ட தீ கெட்ட காலத்து ஒளி விளங்கும் மாணிக்கம அங்குள்ள இருளைத துரததும் (புறம. 172:6,7). புனத்தை யானை தின்னாது காக்கும காவலரின் குடிலை ஒப்பக் கோழிக்குக் கட்டிய கூடு காட்சியளிக்கும் (பெரு. 51,52). தலைவியின் தந்தையின் காவலர் சோர்வுற்றிருப்பதை மறைய உணர்ந்து தலைவன் இரவில் வருதற்கும உரியன (அகம். 2:13-15). தினைப்புனம் காககும் காவலர் ஓயாது ஆர்க்கும் தோறும் கிளிகள் தம் இனத்தை அழைககும் (அகம். 12:6,7). தலைவியின் மனையின்கண்ணுளள காவலரும் அறியா வண்ணம தலைவன் வநது தலைவியை முயங்கினான் (அகம். 22:16-18). தினைப் புனத்தைக் காக்கும் காவலர் பனறியின கூட்டத்தை ஓட்டுவதற்குப் பெரிய கொம்பை எடுத்து ஊதுவர் (அகம். 94:9-11). தலைவியின் மனையிலுள்ள காவலர் அறிதலைத் தவிர்த்துத் தலைவன் அம் மனையினுள் புகுந்தான (அகம். 102.12,13). வயலிலுள்ள நெற்பயிரின இளங்கதிரை முதிய பசு தினபதற கஞ்சிய காவலர் அப்பசுவைக் கொடிகளால காஞ்சி மரத்தில் கட்டிக் கரும்பை அருத்துவர் (அகம். 156: 3-6). மழைபொழியும் நள்ளிரவில் காவலர் நெகிழ்ந்திருக்கும் பதம் நோககித் தலைவன் தலைவியின் மாளிகையின்ஒரு புறத்தே நினறு கொண்டிருந்தான (அகம். 162:6-9). காவலருக்கு மறைந்து புனததை வளைத்துக் கொண்ட பெரிய களிறறியானையைப போல நும ஊருக்குப் பெயர்நது செல்வாய் எனத் தலைவனிடம் தோழிகூறல் (அகம். 308:14,15). பேய வழங்கும் நள்ளிரவில் தலைவன் காவலர் சோர்ந்திருக்கும் சமயம பார்த்துத் தலைவியின மனைக் கதவைத் திறந்து வந்து அவளைக் கூடினான் (அகம். 311.3-5). தினைப்புனம காவலர் விடும கவண்கல்லின் ஒலிக்கு அஞ்சிக் காட்டுயானை பசிய மூங்கிலைக் கைவிடும் (குறு. 54:2,3). ஏனல் காவலா ஆண்டுத்தின்றழிக்க வநத பன்றி முதலாய விலங்குகளை அம்பெய்து கொல்வர் (நற். 13:3). கழனி காவலர் நத்தையை உடைத்துத் தினபா (நற். 280:7). காவலர் மாலையில் தாம் கையிற் கொண்ட வெளை தடியை எறியக் காட்டில் ஒடுங்கிய முயல் விரைந்தோடும் (ஐங். 421:1). நீ இரவு வரின் ஏனல் காவலர் களிறு வந்ததென ஆர்ப்பரிப்பர் எனத் தலைவனிடம் தலைவி கூறினாள் (கலி. 52:12,14).

3. **ஊர்க்காப்பாளர்.** தலைவன் இரவுக்குறியிடத்து

வரும் போதெல்லாம் காவலர் கடுகுதலானும் நாய் குரைத்தலானும் இடையூறுற்று வறிதே மீள்வன் (குறி. 239-243). உறங்காத அன்னை உறங்கினும் துயிலாத கண்களையுடைய காவலர் துஞ்சார் (அகம். 122:5,6). தொண்டகச் சிறுபறை யாமம் காவலர் தூங்காமையால் நள்ளிரவிலும் ஒலிக்கும் (குறு. 375:4-6). காப்பு நிறைந்த நகரத்தைத் துஞ் சாது காக்கும் காவலர் அயர்ந்திருக்கும் பதம் நோக்கித் தலைவன் தலைவியை முயங்க இரவில் வருதல் மிகக் கொடிதாகும் (நற். 98:8-10). மழை மிகுதியாகப் பெய்யவும் காவலர் கடுகவும் கழனி யில் நண்டு உழவர் வீத்திய வெண்முளையை அறுக்கும் (ஐங். 29:1,2).

4. நாழிகைக் கணக்கர். காவலர் - நாழிகைக் கணக் கர் - இரவில கண் விழித்திருந்து காலக்கணக்கை ஆராய்வர் (குறு. 261:6,7).

**காவலன் - 1. காக்கும் அரசன்.** ஒளிவீசும் சக்கரத்தால் நிலம் முழுதையும் ஆண்டோரது மரபைக் காவல - காக்கும் அரச - எனச் சேரமான் யானைக் கட்சேய் மாந்தரஞ்சேரலிரும்பொறை விளிக்கப் படுதல் (புறம். 17: 7, 8). பகைவரால் தடுத்தற்கரிய காவலன என்னை எவ்வாறறிந்தானோ என அதிய மான் காணாது பரிசளித்த போது அதனைக் கொள்ளாது பெருஞ்சித்திரனார் வருந்திக் கூறினார் (புறம். 208: 4, 5). திருமால் 'காவல' என விளிக்கப் பெறுதல் (பரி. 3: 83).

2. காவல் செய்யும் ஆள். பெருங்குளம் காவலன் - காவல்செய்யும் ஆள் - போல நம் தாயும் துயில் மறந்தாள் எனத் தலைவி தோழியிடம் கூறினாள் (அகம். 252: 13, 14). தலைவன தானுமொரு தினைப் புனக் காவலன் ஆகித் தலைவியின் மெனதோளை நெகிழ்த்தான் (ஐங். 230:2, 3).

**காவற்சாகாடு - காவலாகிய சகடம்.** உலகின்கண் செலுத் தும் காவற்சாகாடு - காவலாகிய சகடம் - அதனைச் செலுத்துவோன மாட்சிமைப்படின் ஊறுபாடில் லையாய் வழியில் இனிதாகச் செல்வான் எனத் தொண்டைமான் இளந்திரையன் கூறினான் (புறம். 185: 1-3).

**காவற் பெண்டு – பெண்பாற்புலவர்.** பெயரைக் கொண்டு இவரை ஒரு செவிலித்தாய் என்னலாம். இவர் சோழன போர்வைக்கோப் பெருநற்கிள்ளி யின செவிலித்தாயென்று தெரிகிறது என்பார் உ. வே. சா. (புறம்.பாடினோர் வரலாறு). புறநானூற்றில் அவனைப் பற்றிய (புறம். 80-85) பாடல்களையடுத்து இவர் பாடல் (புறம். 86) அமைந்துள்ளதனால் இவர் அவ்வாறு கருதப்படுகிறார் போலும். இவர் பெயர் காதற்பெண்டு என்றும் காணப்படுகிறது. தாம் பாடிய ஒரே பாடலில் (புறம். 86) 'புலி சேர்ந்து போகிய கல்லளை போல, ஈன்ற வயிறோ இதுவே, தோன்றுவன் மாதோ போர்க்களத் தானே' என்று மறக்குடித் தாயொருத்தி தன் மகன் சென்ற இடம் குறித்து வினவியவட்குக் கூறியதாகக் குறிப் பிட்டுள்ளார். அப்பாடலால் இப்புலவரை ஒரு மறக் குடித் தாயாகவும் கொள்ளலாம்.

**காவன்முல்லைப் பூதனார் – புலவர்.** பூதனார் எனபது இவருக்குத் தெய்வப் பெயராக இடப பெற்ற இயற் பெயர். காவன் முல்லை யென்பது ஒரு புறத்துறை யாகலின் அத்துறையைப் பாடினமையின் இவர் காவன் முல்லைப் பூதனார் எனப் பெயர் பெற்றார் என்று பி.நா.வும் (நற்றிணை, பாடினோர் வரலாறு) இவர் அத்துறையைப் பாடும் வல்லமையுடையார்போலும் என்று உ.வே.சா.வும (குறுந்தொகை. பாடினோர் வரலாறு) கூறுவர். இவர் அத்துறையே யன்றி வேறெத்துறை யிலும் புறப்பாடல் பாடியதாகச் சான்றில்லை. மற்று, காவன் முல்லை யெனபது இவரது ஊராகவும் இருக்கலாம் என்று ப. மு. (பக். 267) கூறும். பூதனார் எனற இவர் பெயர் பூதத்த னார் என்ற பாட வேறுபாட்டோடும் (அகம். 391) காணப்படுகிறது. அகம் 151-ஆம் பாடலின் கீழ் பூதனார் என்னும் பெயரன்றிப் பூதரத்தனார், பூக்கரத்தனார், பூச்சாத்தனார், மழுககாத்தனார் என்றெல்லாம் காணப்படுகின்றன. வாயினும் காவன்முல்லை என்ற அடையினால் அப்பாடலும் பூதனாருடையதாகவே சங்க இலககிய வை. பி. பதிப்பில அடக்கப்பட்டுள்ளது. அதனைச் சேர்த்து அகநானூற்றில ஐந்தும் (21, 151, 241, 293, 391) குறுந்தொகையில் இரண்டும் (104, 211) நற்றி ணையில் ஒன்றும் (274) ஆக எட்டுப் பாடல்கள் இவருடையனவாய்க் காணப்படுகினறன. அவை யெட்டும் பாலைத் திணையாகவே உள்ளன. அவற்றில் பாலைப்புனைவுகள் அழகுற அமைந் துள. ஈன்று காவற்பட்ட பெண் நாயின் பசியி னைப் போக்குதற்குச் செந்நாய் ஏற்றை ஆண்பன் றியைத் தாக்குவதையும் கூழுண்பதற்குக் கூவலர் தோண்டி நீரினமையால் விட்டுச் சென்ற தழைகள் படிந்த கிணறுகளை யானைகள் தம்மை அகப் படுத்தற்கு வேடர்கள் அகழ்ந்து தழையிட்டு மூடிய குழிகளாகக் கருதித் தூர்ப்பதையும் (அகம். 21) நெல்லிக்காயினைக் கொண்டு செம்முக மந்தி கழங் காடுதலையும் (அகம். 241) இவர் பாக்களில் காண லாம். மூங்கில் இளமுளை வதங்கவும் மலையிடங்கள் வெம்பவும் மழை பெய்யாது மறத்தலால் அருவி

யற்ற அகலிடத்தே தோன்றிய கானல் நீரை மழையெனக் கருதியோடித் தாகம் பட்ட தனிமான் அங்கிருந்து மீளவும் மாட்டாமல் வருந்திக் கிடக்கும் என்று பாலையின் வெம்மை மிகுதியை இவர் காட்டுகின்றார் (அகம். 241). வாகையின் கிளைகளுக்குக் கலைமான் கொம்புகளையும் வாகை நெற்றின் ஒலிக்கு ஆடுமகள் பறையொலியையும் (அகம். 151) உகாவின் காய்க்குக் குயிலின் கண்ணையும் அதன் கனிக்கு மணிக்காசினையும் தலைவனைப் பிரிந்த தலைவியின் வருத்தத்திற்குத் தாயைப் பிரிந்த கன்றின் வருத்தத்தையும் (அகம். 293) அதிரல் முகைகளுக்கு வெருகின் பற்களையும் (அகம். 391) சிதறி விழும் மழைத்துளிகளுக்கு முத்துவடத்திலிருந்து நூலற்று உதிரும் தனிமுத்துக்களையும் (குறு. 104) குமிழம் பழங்களுக்குப் பொற்காசுகளையும் (நற். 274) இவர் நயமுற உவமித்துள்ளார். மண்ணில் ஊன்றிய கொம்பினைப் பெயர்க்க மாட்டாத நிலையில் மதயானை தன் வாயில் புகுத்தியிருக்கும் பெரிய கை மலைமுழைஞ்சினுள் நுழையும் பாம்புபோல் தோன்றும் எனக் கூறுவது சிறப்பாக உள்ளது (அகம். 391).

**காவி - குவளை மலர்.** நாட்காலையில் தேன்மணம் கமழும் காவி - குவளை மலர் - கண்ணென மலரும் (அகம். 150:10,11). உப்பங்கழி தன்பாலுள்ள நெய்தல் மலரும் காவியும் கூம்பி முழுகும்படி நீர்ப் பெருக்கைக் கொண்டது (அகம். 350:1,2). ஆயத்தார் கழியிடத்து மலர்ந்த காவி மலர்களைப் பறித்தும் கடலில் விளையாடியும் தத்தமக்கு உரியதொன்றைச் செய்தனர் (குறு. 144: 1–3). கானலிடத்து ஆயத்தாரோடு பறித்த தேன் மணம் கமழும் காவியின் ஒன்றோடொன்று மாறுபட்ட நெறித்தழையைத் தலைவி அணிபெற உடுத்தனள் (நற். 123: 5-7). திரட்சிகொண்ட இடுமணல் படிதலால் காவி வருந்த, அம்மணலைக் கடல் திரைகள் வந்து கரைத்து அருள் செய்தன (கலி. 131:37,38).

**காவிதிமாக்கள் - காவிதிப்பட்டம் பெற்ற அமைச்சர்.** மதுரையில் இருந்த காவிதி மாக்கள் - காவிதிப்பட்டம் பெற்ற அமைச்சர் - அன்பும் அறமும் நீங்காது காத்துப் பழிப்பன விலக்கிப் புகழான் நிறைந்த செம்மை சான்றவர் (மது. 497-499).

**காவிரி - ஓர்யாறு.** ஞாயிறு நான்கு திக்கினும் தோன்றினும் வெள்ளிமீன் தென்திசைக்கண் செல்லினும் வற்றாத காவிரி பல கால்களாகப் பிரிந்தோடி உலகை உண்பிக்கும் (புறம். 35:6-8). பெருகிவரும் இனிய நீரையுடைய காவிரி கொழிக்கும் மணலினும் பலவாக நின்வாழ் நாள் சிறப்பதாக என்று சோழன் மாவளத்தானைத் தாமப் பல் கண்ணனார் வாழ்த்துகிறார் (புறம். 43:21-23). 'நீயே குளிர்ந்த நீரையுடைய காவிரிக்குத் தலைவன்' என்று சோழன் குராப் பள்ளித்துஞ்சிய திருமாவளவனைக் காரிக் கண்ணனார் குறிப்பிடுகிறார் (புறம். 58:1). நீர்மிகுந்த காவிரியின் கரையிலுள்ள மரத்தைச் சாய்க்கும் மிக்க வெள்ளம் குழந்தைக்குப் பாலூட்டச் சுரக்கும் முலை போல உலகத்து உயிர்ப் பன்மையைப் பாதுகாக்கும் (புறம். 68:8-10). கௌணியன் விண்ணந்தாயன் வேட்ட வேள்வியைக் கண்டு மகிழ்ந்த ஆலூர் மூலங்கிழார், 'பூவிரி புதுநீர்க் காவிரி புரக்கும் தண்புனற் படப்பையுடைய எம்மூரில் உண்டும் தின்றும் ஊர்ந்தும் கொண்டாடுவோம்' எனக் கூறினார் (புறம். 169:28-30). கரையைப் பொருது முழங்கும் நீர் மிகு பெருங் காவிரி சோழநாட்டை வளம்பெறச் செய்யும் (புறம். 174:7-9). அம்பர் என்னும் ஊர்க்குரியோனாகிய அருவந்தை காவிரி பாயும் தாழ்ந்த நிலப் பாங்கையுடைய, தோட்டங்களையும் நெல்விளையும் கழனிகளையும் உடையவன் (புறம். 385:8-10). கோடைக்காலம் வந்த போதும் தப்பாது நீர் ஒழுகு தலையுடைய காவிரியாறு பாயும் நல்ல நாட்டுக்குத் தலைவன் சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவன் (புறம். 393:22-24). கிள்ளிவளவன் முழங்கு நீர்ப் படப்பைக் காவிரிக் கிழவன் எனச் சுட்டப் பெறுகிறான் (புறம்.399:11-13). காவிரி வளம் பொருந்திய நிலவுலகைப் புரந்து நேர்கிழக்காக ஓடும் கலங்கலாகிய வெள்ளத்தைக் கொண்டது (பதி. 50:4-6). தகடூர் எறிந்த பெருஞ்சேரல் இரும் பொறையைக் 'காவிரியாற்றின் நீர் மிக்குள்ள நெடுந்தொலைவிலேயே விரிந்து தோன்றும் அழகினை யுடைய புகார் நகரத்தையுடைய செல்வனே' என அரிசில் கிழார் விளிக்கிறார் (பதி. 73:8,9). காவிரிப்படப்பை நன்னாடு, செழுமையான பல ஊர்களையுடைய வளமிக்க தண்பணைகளைக் கொண்டது (பதி. 90:46,47). சோழன் கரிகாற் பெருவளத்தான் வேலிநிலம் ஆயிரம் கலம் நெல்விளையுமாறு காவிரியால் பாதுகாக்கப்படும் நாட்டிற்கு உரிமையுடையவன் (பொரு. 246–248). பிற நாடுகளில் ஏரியாலும் ஏற்றத்தாலும் விளைகின்ற வளமெல்லாம், கரிகாலனின் காவிரி சூழ்ந்த நாட்டில் நெல்லரியும் போது கீழே சிந்துகின்ற நெல்லிற்கே சமமாகும் (பொரு. வெ. 1). வெள்ளி திசை திரிந்து தெற்கேகினும் வானம்பாடி வருந்தப் புயல் மாறி வான் பொய்ப்பினும் (குடக) மலையில் தோன்றிக் கடலிற் புகும் காவிரி தான் பொய்யாது புனல் பரந்து பொன் கொழிக்கும் (பட். 1-7). சுங்கம் கொள்வோர் பெருங் காவிரியாறு மணம் கூட்டும் எக்கர் மணலில் கடை

யாமத்தில் சிறிது துயில் கொள்வர் (பட். 115–117). புகார் நகரத் தெருக்களில் கங்கையாற்றுப் பொருளும் காவிரியாற்றுப் பொருளும் ஈழத் துணவும் காழகத்தாக்கமும் நிலம் நெளியும்படி மயங்கிக் கிடக்கும் (பட். 190–193). குடமலையிற் பிறந்த தண்பெருங் காவிரி கடலிற் கலக்கும் புகார் முகத்தில் காணப்படும் பொருள்கள் போன்று நன்னனின் தலைவாயிலில் மிகுதியாகப் பொருள்கள் காணப்பட்டன (மலை. 527–529). ஓடக்கோல் நிலைபெறாத ஆழமுடையது காவிரி (அகம். 6:6;123:11;326:10). காவிரிப் பேரியாற்றின் கடும்புனல் மிக்க நெடுஞ்சுழி வெள்ளத்தில் திளைத் தாடுபவள் போன்று தலைவி தலைவனைத் துன்பந் தீர முயங்கினாள் (அகம். 62:9–11). அணையை அழித்துக் கரைகளை உராய்ந்து நேர்கிழக்காகப் பாயும் அந்தண் காவிரி ஆதிமந்தி பேதுற்று வருந்த ஆட்டனத்தியைக் கைக்கொண்டு சென்றது (அகம். 76:10–13). மலையிலிருந்து வந்த வெள்ளம் கொணர்ந்த தலைநாள் மாமலர் துறையில் விளங்க காவிரிப் பேரியாறு கடற்கரையை மெலிவிக்கும் தன்மையது (அகம். 126:3–5). புதிதாக வந்த காவிரி வெள்ளத்தில் நேற்றுப் புணையினைத் தழுவி வதுவை ஈரணிப் பொலிந்து புனலாடினோர் யார் எனப் பரத்தை தன் பாங்காயினார் கேட்ப வின வினாள் (அகம். 116:11–15). பண்ணனது காவிரியின் வடபாலுள்ள குளத்தையடுத்த மாமரத்தின் தளிரை ஒத்த ஆகத்தினள் தலைவி (அகம். 177:16–18). காவிரிப் பேரியாற்றில் கடுகிவரும் நீர் கொணர்ந்த மணல் திரண்டு மணல் மேடாகியது (அகம். 181:11–13). பழையனின் காவிரி நாட்டின்கண் போஒர் என்னும் ஊர் திகழ்ந்தது (அகம்.186:15,16). காவிரிப் படப்பைப் பட்டினத்தை ஒத்த இல்லத்தில் நல்விருந் தாற்றுவதற்குத் தலைவன் சென்ற தேயத்தில் விழுந்தி எய்துக எனத் தலைவி வாழ்த்தினாள் (அகம். 205:12–14). சோழரது இலங்குநீர்க் காவிரி யின் வடிநத நீர் வரிவரியாகச் செய்திட்ட கருமணல் போன்ற வளைந்த கூந்தலை யுடையவள் தலைவி (அகம். 213.21–23). தாழ்ந்து தொங்கும் கரிய கூந்தலையுடைய காவிரிப்பெண ஆட்டனத்தியின் அழகினை விரும்பிப் பரநது வந்து அவ னைக் கவர்ந்து கொண்டாள் (அகம் 222: 7, 8). விடியலில் வெள்ளத்துடன் வந்த காவிரியிடத்தே தான் விரும்பிய பரத்தையுடன் தலைவன் புனலாடி னான் (அகம். 226:10–12). நாட்டின் உயிரினங்கள் எல்லாம் உண்ணுதற்குக் காரணமான காவிரியில் கரையின் விளிம்பு தோயும் அளவிற்கு வெள்ளம் செனறது (அகம். 341:4,5). புனலாடலை விரும்பி ஆடிய அத்தியின் அழகை விரும்பிக் காவிரி அவ னைக் கவர்ந்து சென்றொளித்தது (அகம். 376:10, 11;396:11–14). சோழ மன்னர்க்குரிய காவிரியாற் றின் மருங்குள்ள உறையூர் போன்ற செல்வ வள மிக்கது தலைவியின் தந்தையூர் (அகம். 385:4,5). காவிரியாற்றின் பலராடும் நீர்த்துறையின்கண் உள்ள மருதமரத்தில் ஏந்து கோட்டியானைகள் கட்டப்பட்டிருந்தன (குறு. 258:2–4). தலைவனின் மார்பு காவிரியாற்றின் பெருக்கைப் போல் விரிந் தது (ஐங். 42:3,4).

**காவிரிக்கிழவன்** – காவிரியாற்றுக்குரியவன். சோழன் குராப்பள்ளித் துஞ்சிய பெருந்திருமாவளவனை நீயே தண்புனற் காவிரிக் கிழவன் - காவிரியாற் றுக்குரியவன் - எனறு காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக்கண்ணனார் பாடியுள்ளார் (புறம். 58:1). நீர்வளம் மிக்க படப்பைகளை யுடைய காவிரிக் கிழவனாகிய மாயா நல்லிசைக் கிள்ளிவளவனை நினைந்து யாம் அவனிடம் போகின்றோம் என்று கிணைப் பொருநன் கூற்றில் ஐயூர் முடவனார் பாடியுள்ளார் (புறம். 399:11–13).

**காவிரிப்படப்பை நன்னாடு** - காவிரிப் பக்க நல்ல நாடு (சோழநாடு). வயலிலுள்ள உழவர் தண்ணுமைப் பறையை வாசித்தால் பழனத்திலுள்ள மயில் அவ் வோசையை மேகமுழக்கமென எண்ணி யாடவும் குளிர்ந்த நீரில் ஆடுவோரது முழக்கத்துடன் கலந்து போர்வீரரின் தடாரிப்பறை ஒலிக்கவும் உணவுமிக்க நல்ல வீடுகளில் ஏறுகள் ஒன்றோ டொன்று எதிரெதிர் முழங்கவும் கூடிய செழுமை யான பல கொழுத்த குளிர்ந்த வயல்களை யுடையது காவிரிப்படப்பை நன்னாடு (சோழநாடு) (பதி. 90:41–47).

**காவிரிப்படப்பைப் பட்டினம்** - காவிரிப்பூம்பட்டினம். கிள்ளியினுடையதும் பூக்கள் மலர்ந்த நெடுங்கழி களுக்கிடையே அமைந்ததுமான பெரும் புகழ் வாய்ந்த காவிரிப் படப்பைப் பட்டினம் - காவிரிப் பூம்பட்டினம் – போன்ற செழுமையுடையது தலை வியின் இல்லம் (அகம். 205:10–13).

**காவிரிப்பூம் பட்டினத்துக் கந்தரத்தனார்** - புலவர். காவிரிப்பூம்பட்டினத்தைச் சேர்ந்தவர். கந்தரத்த னார் என்பது இவரது இயற்பெயர். குறுந்தொகை யில் 342-ஆம் பாடல் ஒன்றே இவருடையது. அப் பாடல் தோழி தலைமகனை நெருங்கி வரைவுகடா வுதல் என்னுந் துறை அமைந்தது. தலைவனது களவொழுக்கத்தை அலரினாலறிநத தலைவியின் தமர் அவளை அவன் மறுமுறை எய்தவொண்

ணாதவாறு இற்செறித்தன ரென்ற கருத்தினை அவனுககுணர்தத வநத தோழி, 'பலாப்பழத்தைக் குரஙகு கையால தோணடியதை மணததினா லறிந்த கானவன் மீணடும் அக்குரங்குககுக் கிட்டா தவாறு பழத்திற்கு வலையிட்டுக் காககும் குனற நாடனே' என அவனை விளிப்பதன் வாயிலாய் உணர்த்துவதாக இவர் அப்பாடலில் உளளுறை யுவமை அமைததுளளார். இவர் பாடலால பலாப பழத்தினை வலைமாட்டிக காக்கும் பழககத்தை யறியலாம.

**காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக் கண்ணனார் - புலவர்.** காவிரிபபூம் பட்டினததைச சேர்நதவர். வணிகா (தொல. பொருள மரபு 74. பேரா. உரை). கணணனா ரென்பதே இவரது இயற்பெயரெனத தோனறு கின்றது. ஊர்ப்பெயர் இனறிக் காரிககண்ணனார் எனவும் இவர் பெயர் காணப்படுகினறது (நற். 237). இவர் இயற்றியனவாய்ப் புறநானூற்றில் ஐந்தும் (57, 58, 169, 171, 353) அகநானூற்றில் மூன்றும் (107,123,285) குறுந்தொகையில் ஒன்றும் (297) நற்றிணையில ஒனறும் (237) ஆகப் பத்துப் பாடல்கள் உள. புறநானூற்றுப் பாடல்களால் பாண்டியன இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறன் (57), சோழன் குராபபள்ளித் துஞ்சிய பெருந்திருமாவளவன் (58), பாண்டியன் வெள்ளி யம்பலத்துத் துஞ்சிய பெருவழுதி (58), பிட்டங் கொற்றன (169,171) ஆகியோரை இவர் சிறப் பித்துப் பாடியுள்ளார். பாண்டியன நனமாறனுக்கு மாயோனையும (57), பெருநதிருமாவளவனும் பெருவழுதியும் ஒருங்கிருநதார்க்குப் பனைக் கொடியோனும (பலதேவனும) நேமியோனும் (மாயோனும்) ஒருங்கிருந்தாரையும் (58) உவமித் திருக்கும ஈடுபாடு பறறி இவரைத் திருமாலடியவ ரா்கக் கருதுவர் உ. வே. சா. (புறம். குறு. பாடினோர் வரலாறு). 'பிறர் நாடுகளைக் கைபபற்றுங்கால் அவர்தம் காவல் மரஙகளை வெட்டுதலைத தவிர் வாயாக' என்று நன்மாறனுக்கு இவர் கூறும் அறிவுரை (57) சிறபபினது. 'நலல போலவும் நயவ போலவும் தொல்லோர் சென்ற நெறிய போலவும் கூறும் ஏதில மாககள் பொதுமொழி கொள்ளாது 'இனறே போல்க நும் புணர்ச்சி; வென்றுவென்று, அடுகளத்து உயர்கநும் வேலே' (58) எனறு சோழ பாண்டியரின் கூட்டுறவு நிலைகக அறிவுரை கூறி வாழத்தியிருப்பது இவரது அரசியற் சால்பினை யுணர்த்தும. இளம்பல் கோசர், படைப்பயிற்சி பெற்றமையை (169) இவர் குறிப்பிட்டுள்ளார். பிட்டங்கொற்றனது வள்ளன்மையைச் சிறப்புறக் கூறிய இவர், 'ஈவோர் அரிய இவ்வுலகத்து, வாழ் வோர் வாழ அவன் தாள் வாழியவே' (171) என்று அவனை வாழத்தியுள்ளார். மகட்பாற் காஞ்சித துறையில் இவர் பாடியுள்ளதொரு பாடலும் (353) பொருளழகுடன் பொலிகினறது. இவருடைய அகத் துறைப்பாடல்களில தலைவி, தலைவனுடன போதற்குறிபபுப பரவலாக வருகின்றது (அகம. 107, 285, குறு. 297). பாலைத்திணைப பாடல்களாகிய அவறறுள் அத்திணைப புனைவுகளைச சிறபபுற அமைததுள்ளார். பிணவின பசியினைப் போககு தற்குச் செந்நாய் ஏற்றை, பிணைமான அலறுமாறு கலைமானின் தொடையினைக் கவவி யறுககு மெனற புனைவு (அகம. 285) குறிபபிடத்தககது. பாலைநிலததில ஆறுசெல வமபலா அடைகினற துயாநிலைகளை இவர் நன்கு காட்டுகினறார் (அகம. 107, 285, குறு. 297). 'கல்லா நீளமொழிக கத நாய் வடுகா' (அகம. 107) என்று வடுகரையும 'நிலவென நெயகனி நெடுவேல எஃகிலை இமைக கும், மழை மருள பலதோல் மாவண சோழா (அகம். 123) என்று சோழரையும் குறிபபா. அப பாடலில் 'கழைமாய் காவிரிக கடல்மண்டு பெருந துறை கடல் ஓதம் இறவொடு வநது கோதையொடு பெயரும்' எனத தம் காவிரிப்பூமபட்டினத் துறை முகததைச் சொலலோவியப படுததுவா. உணவின்மையால் வாடிய வயிற்றினையும நீராடாத விரதந் தினையுமுடைய தவத்தினர் போலக் கூட்டமாகச செல்லும் காட்டு யானைகளையுடைய கவினழிநத குன்றம் தோன்றும் எனறும் (அகம. 123) ஆய அண டிரன் பரிசிலர்க்குக் கொடுககத தொகுதது வைதத யானைத்திரள் போல வான முகிலகள ஓங்கித தோனறும் என்றும (நற். 237) அருஞ்செய்திகளை உவமைப்படுத்துவா. இவர் நற்றிணை அகபபாட லில் அண்டிரன் யானைக் கொடையை உவமை வாயிலாகக் கூறுவது அவ்வளளல்பா லுளள ஈடு பாட்டினைக் காட்டுவதாகும்.

**காவிரிப்பூம்பட்டினத்துச் செங்கண்ணனார் -** காவிரிபபூம்பட்டினத்தவர். செங்கணணனா பது இவரது இயற்பெயர். அகநானூற்றில் இரண் டும (103,271) நற்றிணையில ஒன்றும் (389) ஆக மூன்று பாடல்கள் இவர் பாடியவை. அவை பாலைத்திணையும் குறிஞசித் திணையும் பற்றியன. புல்லூற்றினால எற்றுதல் குறிககப்பட்ட குறும பூழ்ச் சேவல் தானுறையும்சிறுதூறு தனித்தொழியு மாறு அப்புல்லூறறின பார்வையிலிருந்து தபபிச சென்று சிறுகுடி மனையிறப்பில் தங்கிப பெருமூசசு விடுவதாகச செய்யும் பாலைப்புனைவு (அகம.103) நயமானது. பாலை வழியில் நெடுந்தொலைவு நடந்து வந்து நீர்வேட்கையுற்ற வம்பலரின செல்லு

யிரை நிறுத்துகின்ற சுவைமிக்க காய்களை யுடைய தாக இவர் நெல்லி மரத்தைக்குறிப்பர் (அகம். 271). இவர்தம் மூன்று பாடல்களிலும் பறவைச் செய்திகளைப் புனைவதனால் அவற்றிடத்து இவர்க்குள்ள ஈடுபாட்டினையும் அம் மூன்றனுள் இரண்டு புனைவுகளில் சேவலும் பெடையுமாகவே அவற்றைக் காட்டுவதனால் இவரது வாழ்வியற் பாங்கினையும் உணரலாம். அகநானூற்றுப் பாட லில (271) 'களி மலி கள்ளில் நற்றேர் அவியன்' என்று அவியன் பற்றிய குறிப்பு காணப்பெறுகிறது.

**காவிரிப்பூம்பட்டினத்துச் சேந்தங்கண்ணனார் - புலவர்.** காவிரிப்பூம்பட்டினத்தைச் சேர்ந்த சேந்தன் என் பார்க்கு மகனாகிய கண்ணன் என இவர் பெயர் விரியும். ஊர்ப்பெயரும் தந்தை பெயரும் சேர்த்தும பெயர் அமையும் வழக்கத்தை இவர் பெயரானும் அறியலாம். குறுந்தொகை 347-ஆம் பாடலொன்றே இவருடையது. பாலைத்திணையில் அமைந்த அப்பாடலில் தலைவியும் உடன்வரு வாளாயின பொருள்வயிற் பிரிவு நன்றாமெனத் தலைவன் பொருள்வலித்த நெஞ்சிற்குக் கூறிச் செலவழுங்குவதாக இவர் பாடியுள்ளார். இளம் வாகை மரத்தினைக் 'குமரி வாகை' என்று குறித்திருப்பதும் அதன் பூ மயிலின் குடுமிபோல் தோன்றுமென உவமித்திருப்பதும் இவர் பாடலில் நயமான பகுதிகளாம்.

**காவிரிப்பூம் பட்டினத்துப் பொன்வாணிகனார் மகனார் நப்பூதனார் - புலவர்.** காவிரிப்பூம் பட்டினத்தில் சிறப்புறப் பொன்வாணிகம் செய்து பெயர் பெற்ற வணிகர் ஒருவர்க்கு மகனாரான இவரது இயற் பெயர் பூதனார் என்பதே. இப்பெயர் 'ந' என் னும் சிறப்பு முன்னடை பெற்று நப்பூதனார் என்றாயது. பொன்வாணிகனார் மகனார் என்ற தனால இவரைப் பொற்கொல்லர் என்று ப. மு. குறிக்கும் (பக். 269). இவர் பாடிய முல்லைப்பாட்டு பத்துப்பாட்டினுள் ஐந்தா வதாயுள்ளது. அதனைத் தவிர வேறொன்றும் இவர் பாடியதாகக் காணப்படவில்லை. எனினும், நற்றிணையில் 29-ஆம் பாடலைப் பாடிய பூத னார் இவரே போலும் என்பர் உ. வே. சா. (பத்துப்பாட்டு. பாடினோர் வரலாறு). அகத்திணைப் பாடலான முல்லைப்பாட்டினை 103 அடியளவில் முதல், கரு, உரிப்பொருட் சிறப்புக்களோடு இவர் நயம்படப் பாடியுள்ளார். இவர் பாடலின் எடுப் பும் தொடுப்பும் முடிப்பும் திறம்படவுள்ளன. தலைவியின் இல்லிருத்தற் பண்பும் தலைவனின் பாசறை நிலையும் இவரால் அழகுறப் புலப்படுத் தப் பெறுகின்றன. தலைவன் மீள்வதாகக் குறித்த கார் காலத்து மாலைப்பொழுதிலே பெருமுது பெண்டிர் நெல்லும் முல்லையும் தூவி ஊர்ப் புறத்தே நற்சொல் கேட்டு நிற்பதும் தாய்ப்பசுக் களால் பிரியப்பட்ட நிலையில் தொழுவிலே கட் டுண்டு துயருற்று அலமரும் கன்றுகளிடத்து ஓர் ஆய் மகள், 'இப்பொழுதே வருகுவர் தாயர்' என மொழிவது அம்முதுபெண்டிர்க்கு நற்சொல்லா வதும் அதுகொண்டு அவர் தலைவி யிடத்தே சென்று தலைவனின் வருகையைத் தெரிவித்து ஆற்றுவதும் (முல்லை. 6-21) இவருடைய இனிய புனைவுகளாம். பாசறை யமைப்பும் பாசறையில் அரசன் நிலை காட்டும் புனைவும் இப்பாட்டில் நன்கு காட்டப் பெற்றுள்ளன இப்புலவர் செய் துள்ள பாசறைப் புனைவுகளைக் கொண்டு, 'இவர் வீரம் பொருந்திய அரசரோடு பழகியவரென்று தோன்றுகின்றது' என்பர் உ. வே. சா (பத்துப்பாட்டு. பாடினோர் வரலாறு). மாவலி வார்த்த நீர் தன கையில் சென்ற அளவிலே விண்ணில் ஓங்கி வளர்ந்த திரு மால போல முகில்கள் கடல்நீரைக் குடித்து உல கினை வளைத்தெழும் என்பது இவர்தம் உவமப் புனைவுகளில் குறிப்பிடத்தக்கது. 'அரசிருந்து பணிக் கும் முரசு முழங்கு பாசறை, இன்துயில் வதியுநற் காணாள் துயருழந்து, நெஞ்சாற்றுப் படுத்த நிறை தபு புலம்பொடு, நீடு நினைந்து தேற்றியும் ஒடு வளை திருத்தியும், மையல் கொண்டு மொய்யென வுயிர்த்தும், ஏவுறு மஞ்ஞையின் நடுங்கி யிழை நெகிழ்ந்து' (முல்லை. 79-84) கிடந்த தலைவியின் செவி நிறையுமாறு தலைவனின் தேரிற் பூட்டப் பெற்று வரும் குதிரைகள் ஆரவாரித்தன என்று முல்லைப் பொருண்மையை இவர் முற்றக் காட்டும் பண்பு பாராட்டத்தகும்.

**காவிரி வைப்பு - காவிரி நாடு.** காவிரி வைப்பில் - காவிரி நாட்டில் - உள்ள பழையன் என்பானுக்குரிய போர் என்னும் ஊரினையொத்த நலனமைந்தவள் இற்பரத்தை (அகம். 186:15,16).

**காவு - சோலை.** காவுதோறும் - சோலைகள் தோறும் - காவல் மரங்களை வெட்டும் ஓசை தன்னுடை ஊரின் நெடுமதில் எல்லையிலுள்ள அரண்மனை யில் சென்றொலிப்ப அங்கு இனிதாக இருந்த வேந் தனோடு பொருதாய் என்பது நாணுத்தக்கவுடைத்து என ஆலத்தூர் கிழார் கருவூர் முற்றியிருந்த கிள்ளி வளவனிடம் கூறினார் (புறம். 36:8-13). வேந் தர் காய் நெற் கவளத்தைக் கடுங்கண் யானைக் குக் காவுதொறும் கவளமாகக் கொடுத்துக் காத்த னர் (புறம். 337:14-16). நீர்நிலையிடத்தே பெருகி

புள்ள மணல்பரந்த அடைகரையில் நிற்கும் காவு தோறும் அமைக்கப்பட்ட வெறியாட்டிடங்களில் தொகுத்து நிறுத்தப்பட்ட ஆடுகளைப் போல இறத்தல் உண்மையே; பொய்யன்று (புறம். 366:21-24). நீராடும் விருப்புடன் மதுரையில் உள்ள பல திறத்து ஆடவரும் மகளிரும் குதிரை, யானை, கோவேறு கழுதையாகிய ஊர்திகளில் ஏறி வையைக் கரை நெரியும்படி வந்து காவினை நிறைத்தனர் (பரி. 22:21-25). கா - 1. காண்க.

**காவெரியூட்டிய ...... புகழோன் தம்முன்** - காவை (காண்டவ வனத்தை) எரித்த ...... புகழோன் (அருச்சுனனின) தமையன் (வீமன்). காவினை எரியூட்டிய அம்புகளை உள்ளடக்கிய தூணியினையும் பூத்தொழிலமைந்த கச்சையினையுமுடைய புகழோனின் (அருச்சுனனின்) தமையனாகிய இமயமலை போலும் மார்பினனான வீமன் கண்ட நுண்பொருளமைந்த மடைநூல் நெறியில் தப்பாத பல்வேறு அடிசிலை நல்லியக் கோடன் சிறுபாணர்க்கு வழங்கினான (சிறு. 238-241).

**காவோலை** - முற்றியவோலை. காண்ட வாயில் என்னும் ஊரில் உள்ள தோட்டங்களுக்குத் தழைத்த காவோலையுடன் - முற்றிய வோலையுடன் - முட்களைச் சேர்த்து வேலி கட்டினர் (நற். 38:7,8). கரிய பனையினின்று காவோலை கொணர்ந்து வெயில் மறையும்படி கட்டிய வேலியையுடைய கடற்கரைச் சோலையை யடுத்த வெண் மணல் முன்றிலில் உள்ள புன்னை மரத்தில் தோணி பிணிக்கப்பட்டிருந்தது (நற். 354:2-7).

**காழ்** - 1. விதை. நல்ல வெண்ணிறம் பொருந்திய நறுநெய் வெள்ளரிக்காயின் காழ் - விதை - போன்றிருக்கும் (புறம். 246:4,5) செம்முதுபெண்டு இரமரத்தின் காழ்போன்ற கண்திரங்கிய வறுமுலையினள் (புறம். 276:2,3). சீறூர் புல்லிய காழையுடைய நெல்லிக்காய் நிரம்பிய மரங்கள் நிற்கும் புன்செய் நிலங்களையுடையது (புறம்.314:4). சீறூரில் பந்தரின் கீழ்க் குமிழம் பழத்தை யுண்ட வெள்ளாடுகள் எருவாய் வழியாக வெளிப்படுத்திய வெண்காழ்கள் பிழுக்கையுடன் கலந்து கிடந்தன (புறம். 324:8-10). எயினரின் குறும்பிற் சென்று தங்கினால் ஈந்தின் காழைக் கண்டது போன்ற சிவந்த அவிழாகிய சோற்றை உடும்பின் பொரியலுடன் மனைதோறும் பெறலாம் எனப் பெரும்பாணன் ஆற்றுப்படுத்தப் பெறுகிறான் (பெரு. 129-133). குறமகள் அருவி கொண்டு வந்த செவ்வியழிந்த பலாப்பழத்தின் காழ் மாவுடன் இறைச்சியைக் கலந்து புளிப்பையும் மோரையும் அளவாகச் சேர்த்து மூங்கிலரிசி கொண்டு சமைத்த உணவின் மணம் மலைச்சாரலெல்லாம் கமழ்ந்தது (மலை. 174-183). நன்னன் நாட்டில் வளமான பலாப்பழத்தை விரும்பினோரெல்லாம் தின்று கீழே வீழ்த்திய மிகையான பழத்தின் காழ் கொள்ளற்குச் சிறுவர் கன்றுகளைப் பிணைத்துக் கடாவிடும் ஓசை கேட்டது (மலை. 337-339). கல்கெழு சிறுகுடியிடத்தே கானவன் மகள் பலாவின் சிறந்த சுளைகளை உண்ணும் முசுக்கலைகள் உதிர்த்த தலையில் ஆர்க்கினைக் கொண்ட வெண்காழினைப் பெறுவாள் (அகம். 20-22). பண்ணனின் சிறுகுடியைச் சார்ந்த தோட்டத்தில் உள்ள புல்லிய காழினைக் கொண்ட நெல்லிக்காய்களைத் தின்றவர் நீரருந்திய காலை எழும் சுவை போலத் தலைவி இன மொழி இயம்புவாள் (அகம். 54:13-16). ஈங்கையின் முதிர்ந்த அரும்பு இரவத்தின் காழை ஒக்கும் (அகம். 125:3). தாழியிடத்துச் செழித்த பருத்தியின் இளங்காயை ஆண்பறவைகள் தம் பெடைகட்கு அருத்திப் பிளந்து போகட்ட பஞ்சினையுடைய வெண் காழை வறுமையுற்ற மகளிர் உண்பதற்காகத் தொகுத்து வைப்பர் (அகம். 129:7-10). களிறு தன் புறத்தினை உராய்ந்ததால் இலவமரத்திலிருந்து வீழ்நத வெண் காழ் ஆலங்கட்டி போலப் பாறையில் பரவிக் கிடக்கும் (அகம். 309:6-8). தலைவி ஆயத்தோடு விளையாடும் நாளில் வெணமணலில் அழுத்தி மறந்தொழிந்த புன்னைக் காழ் முளைத்தது கண்டு அதற்கு நெய்பெய் தீம்பால் பெய்து வளர்த்தாள் (நற். 172:1-3). குடி சிறக்கப் புதல்வனைப் பெற்ற தலைவி நெய்யுடன் கலந்து ஒளிருகின்ற ஐயவியாகிய திரண்ட காழினை மாளிகை எங்கும் பூசிப் பாயலிலே கிடந்தாள் (நற். 370:1-4). பிரிவிற் கலங்கிய தலைவி, நல்லெழில் மார்பனைப் புணர்ந்து இல்லமரத்தின் (தேற்றாமரத்தின) காழ்கொணடு தேற்றிய நீர் சிதைவு நீங்கித் தெளிதல் போலச் சிதைவு நீங்கித் தெளிந்து பழைய நலத்தைப் பெற்றாள் (கலி. 142:64-66).

2. வடம். வெட்சிப் போருக்குச் செல்லும் வீரன் பல காழால் - வடத்தால் - அமைந்த அதிரற் பூமாலையைத் தலைமயிர் பொலிவு பெறச் சூடினான் (புறம். 269:1-3). நிரை மீட்கச் செல்லும் கரந்தை வீரனுக்கு வேந்தன் தன் மார்பில் அணிந்திருந்த மணிமருள் மாலையை அணிவித்து, வீரன் மார்பிலிருந்த ஒற்றைக் காழ் மாலையை எடுத்துத் தான் அணிந்து கொண்டான் (புறம். 291:5-8). நரந்தம் பூவால் பல்காழாகத் தொடுக்கப்பட்ட கோதை சுற்றிய வளைந்த கோட்டுச் சீறியாழைப் பாணர் பெற்றிருந்தனர் (புறம். 302:4-6). மகளிர்

தம் திருந்திய அல்குலிற் காழ் அசையும்படி உடுத்தினர் (முரு. 204,205). மகளிர் கொன்றையின் மெல்லரும்புள்ள கொம்புகளிலே பனிமாசு கிடந்து தவழ்கின்றவை போலப் பசிய மணிகள் கோத்த காழ் உடைய அல்குலில் மெல்லிய துகில் அசைய மயில் போல உலவினர் (பெரு. 327-331). மாணிழை மகளிர் மதுவையுணடு தம் கணவரோடு புலந்து பருமையுடைய காழ் பொருந்திய மாலையை அறுத்து முத்துக்களைச் சிந்தினர் (மது. 679-681). பிச்சியின் அழகிய இதழ்களை யுடைய பூவைத் தொடுத்த அழகான தொடையாகிய ஒரு காழைத் தோழியர் தலைவியின் சென்னியில் சுற்றிக் கட்டினர் (குறி. 117,118). வெருக்குப் பூனை இருளிலே நோக்கினாற் போன்ற முத்தினைக் கோத்தமைத்த ஒரு காழ் தலைவியின் முலையிடையே கதிர்விட்டு விளங்கியது (அகம். 73:3,4). தலைவி காழ் இயல் வன முலையினள் (அகம். 116:8). தலைவி பல கிளையினவாய் நெருங்கிய பெரிய மாலையாய பசுங் காழகொண்ட மேகலை அணிந்த அல்குலையுடையவள (அகம், 385:12,13). வண்ணாததி நெடிது பிசைந்து கஞ்சி ஊட்டிய அழகிய ஆடை ஒளிரும் பொனகாழ் அணிந்த அல்குலை யுடையவள் தலைவி (அகம். 387:6,7) காழ் (முத்து வடங்கள்) விரித்த, கலத்தை அகத்திட்டுக் கிடக்கின்ற, ஆரம் மீதே கிடந்தசையும் இளைய முலையைத் தலைவன் இடைவிடாமற் புல்லியும் அமையானாய்த் தலைவியின் கூந்தலை அழகு செய்தான் (கலி. 4:9-11). 'காழ் கொண்ட தலைவியின் இள முலைகள், பாண்டியனின் மதங் கொணட யானையின் கோடுகளினும் சினமுடையவாய இருந்தன (கலி. 57:18,19). 'மென்மையுடைய தலையிடததே கிடந்து மினனும் ஒளிவிடுகினற மூனறு காழ (முத்துவடம) பாகனாகிய மகன் அணிந்துள்ளான் (கலி. 80.2,9). தலைவியின் மகனை நோக்கி 'நின் முகத்தை யான் முத்தங் கோடற்குக் காட்டெனறு பரததை கூறிச சொரியும் கண்ணீர்த் துளிகள காழிலிருந்து (முத்து வடததிலிருந்து) கழன்று விழும் முத்துக்கள போலிருநதன (கலி. 82:13,14). தலைவியின மகன அலதுவில கைததொழிலாலே பொலிவு பெறற மணிகள இடையிடையே அமைநத பொனமணிகளை யுடைய காழ் அணிநதிருந்தான் (கலி.85:3). தலைவியின் மகன் கரிய கடலின முத்தும் அதனுடனே பல மணிகள் பிறவும் சேரக் கோதத உருட்சியமைந்த முக்காழ் (மூன்றுவடம்) அணிந்திருந்தான் (கலி. 85:12,13). பட்டத்தையுடைய இளைய களிற்றினது கரிய தலையில் நாலுகின்ற ஓடை போலக் கையாற் புனைந்த முக்காழ் சிறுவன் சென்னியில் தாழந்து விளங்கியது (கலி. 86.1,2). தலைவி குதிரையாக்கிக் கூறும் பரத்தை, தெய்வவுத்தியென்னும் பூணினருகே துவக்கி ஒருகாழ் அணியையும் இனமொத்த மணிகளாற் செய்த தம்மிலொத்த முக்காழாலான கட்டுவடமாகிய பல நிறத்தையுடைய கண்டிகையினையும் அணிந்திருந்தாள் (கலி.96:13,14). ஆயர் மகனான தலைவன் முல்லைக் காழினையும் கண்ணியையும் சூடி வந்தான் (கலி. 115: 4, 5). எழுதின தொய்யிற் கொடிகள் ஒன்றோடொன்று கலந்து அழிய, மேகலை அற்று உதிர்ந்து காழ் (நூலாகிய வடம்) தோன்ற விருப்பு ஒன்றுபட்ட மகளிரும் மைந்தரும் தம்முட் புணர்ந்தனர் (பரி. 6:15-20). வையையில் நீராட வந்த மகளிர் கட்டிய கொக்குவாய் அழகு செய்த காழ் பூண்டனர் (பரி.12:18). வையை வெள்ளம் முத்துச் சேர்ந்த காழ் தலைக்கோல முத்து பொன்னணி முதலியவற்றை மைந்தரும் மகளிரும் நீராடும் துறைக் கண் கொணர்ந்து சேர்த்தது (பரி. 16:5-10).

3. **காம்பு.** 'தொண்டைமானின் படைக்கலக கொட்டிலிலிருந்த படைக் கருவிகள் உடலிடம் திரண்ட வலிய காழ் - காம்பு - அழகுபொருந்தச் செய்யப் பெற்று நெய்பூசப் பெற்றுக் காவலையுடைய இடத்தில் உள்ளன' என ஔவையார் தொண்டைமானைப் புகழ்வது போன்று குறிப்பால் இகழ்ந்து பாடியுள்ளார் (புறம். 95:1-3). பகைவர் நாட்டை யழித்தலால் அதியமானெடுமானஞ்சியின் வேற்படைகள் காழொடு மடை (ஆணி) கலங்கி நிலைகெட்டன (புறம். 97:4-7). நிரைத்த காழ் அணிந்த வேலை நீர்ப்படை செய்தற் பொருட்டு வீரர் ஒனறு கூடினர் (புறம். 354:2,3). கிடையின் (நெட்டியின்) காழ் போன்றது தெண்கண் மாககிணை (புறம். 382:18). இளஞ்சேரலிரும்பொறையின் மறவர் காழ் உடைய எஃகம் பிடித்தெறிந்து பகைவர்க்குத் துன்பம் செய்தலில் விருப்பம் நீங்காத ஆண்மையும் நிலையாமை உணரும் நெஞ்சமும் உடையவர் (பதி. 90:37- 39). வேந்தன் நள்ளிரவிலும் பள்ளி கொள்ளானாய்க் குதிரை மீதிவர்ந்து சென்று வேப்பந்தாரைத் தலையிலே கட்டின வலிய காழுடைய வேலோடே முன்னே செல்கினற படைததலைவன் புண்பட்ட வீரரை முறைமுறை காட்டக கணடு வந்தான் (நெடு.176,177, 186,187). பரதவர், நெடிய தூண்டிற் காழினைக குறுகிய கூரைக் குடியிருப்பில் சார்த்தினர் (பட். 80, 81). முறைப்பட மலர்தலை யொழிந்த வாழை முகைகளினுடைய உயர்ந்த முகங்கள் துறுகல்லைத் தீணடும் நிலைக்குக் காழிலே பொருந்திய வேல் யானையைக் குத்தும் நிலை உவமை (மலை. 129-131). இளைஞர் ஏந்திய வேல் அழகுற விளங்கும் இலையினையும நெய் கனியப் பெற்ற வலிய காழினையு

முடையது (அகம். 64:5,6). பாணன் ஏனபாணின் கையிலுள்ள வேல் பூணினையும் நெய்கனிந்த காழினையுமுடையது (அகம். 113:15-17). துணிவுள்ளத்துடன் தலைவன், மணிகள் பதித்த பரிசையினையும் சிறந்த காழ் பொருந்திய நீண்ட வேலினையும் துணையாகக் கொண்டு பொருள் தேடச் சுரவழியே சென்றான் (அகம். 369:18-20). கொடுந்திமில் பரதவர் உலர்ந்த மூங்கிலின் நோன் காழில் எறிஉளி பொருத்திக் கோட்டுமீன் (சுறாமீன்) எறிந்தனர் (குறு. 304:1-4). நெய் பூசினாலொத்த வலிய காழ் செருகிய வேற்படை ஏந்திய செல்வத் தந்தையின் மகள் தன் காதலனொடு சுரத்தே உடன் சென்றனள் (நற். 324:5-9).

4. வயிரம். சூரர மகளிர் திண்ணிய காழ் - வயிரம் - பொருந்திய நறிய சந்தனத்தை யுரைத்த குழம்பைத் தம் குவி முலையில் அப்பினர் (முரு. 32-35). திருச்சீரலைவாயிலில் ஒலிக்கும் இன்னியங்களுடன் திண்ணிய காழ்பொருந்திய கொம்பு மிக்கொலித்தது (முரு. 119,120). உழவர் தங்கை கரிய காழ் பொருநதிய உலக்கையின் பூணினையுடைய முகத்தால் குற்றி அரிசியை மாட்சிமையுறச் செய்தாள் (சிறு. 193,194). பூண் தலையிலே அழுத்தின நன்றாகிய திரட்சியையும் வலியையும் காழினையும் உடைய சீரிய கோல் செருகிய உளி போன்ற வாயையுடைய பாரைகளாலே எயிற்றியர் கட்டிகளைப் பெயர்த்துப் புல்லரிசியைத் திரட்டினர் (பெரு. 90-94). எயிற்றியர், விளாமரத்தின் நிழலுடைய முன்றிலில் நிலவுரலில் புல்லரிசியை இட்டுக் குறிய காழ் பொருந்திய உலக்கையாற் குற்றிச் செம்மை செய்து உணவு சமைத்தனர் (பெரு. 94-100). படைத் தலைவர் திண்ணிய காழ் பொருந்திய சந்தனம் பூசிய மார்பினர் (மது. 715). மகளிர் மயிர்ச் சந்தனமாகிய விறகிலே நெருப்பை யுண்டாக்கி அதிலே கரிதாகிய காழ் பொருந்திய அகிலோடே அயிரையும் (கண்டசருக்கரையையும்) கூட்டிப் புகைத்துக் கூந்தலை உலர்த்தினர் (நெடு. 55,56). குன்றுகெழுநாடன் தன் குஞ்சியை உலர்த்த நறிய காழுடைய அகிலினது அழகிய புகையூட்டினன் (குறி. 109,110). திருமாவளவன் பகைவரின் காவலிடத்தே இருந்து தனக்குரிய பெருமை காழாக முற்றி நண்ணார் காப்பரண் கடந்து தன் அரசுரிமையை எய்தினான் (பட். 223-228). நன்னனின் அரண்மனைத் தலைவாசலில் குவிநதிருந்த பொருள்களுள் நறிய காழ் பொருந்திய சந்தனமும் ஒன்றாகும் (மலை. 520). மகளிர் நெல்லின் வளைந்த கதிரினை முறித்துக் கரிய காழ் பொருந்திய உலக்கையால் அவல் இடிப்பர் (அகம். 141:16-18). மகளிர் பச்சை அவலை இடித்த கரிய காழ் உலக்கையை நெற்பயிரையுடைய வயலின் வரப்பாகிய அணையிலே படுக்க வைத்து வினையாடுவர் (குறு. 238:1-3). பாலை வழியிலுள்ள புரையற்ற காழபொருந்திய யாமரத்தின் பொரிந்த அடியைத் தன் கோட்டினால் யானை குத்தியது (குறு. 255: 1-3). நறைக்கொடி தழைத்து மணங் கமழும் காழ்முற்றிய சந்தன மரத்தின் மீது படரு மாறு மழை பொழிந்தது (நற். 5:3-5). கார்ப்பருவத்தில் மடப்பிணையைத் தழுவிய கலைமான காழ் பொருந்திய வேலமரத்தின வரி நிழலிலே தங்கும் (நற். 256:7-10). களிற்றியானையைப் பற்றிச் சுற்றிச் கொண்ட மிக்க சினமுடைய மாசுணம் வெண்மையில்லாது முற்றிய, காழ் பொருந்திய சந்தன மரத்துடனே சேரப் பிணித்துப் புரட்டும் (நற். 261;6-8). காழினையும் பருத்த அடியினையுமுடைய புன்னை அரும்பீன்று மலர்ந்தது (நற். 278:1,2). கானம் காழ் பொருந்திய வேல மரங்கள் செறிந்து செலவோர்க்குத் துன்பம் தரும் வழிகளை யுடையது (நற். 302:8-10). தலைவன் நறிய காழ் பொருநதிய சந்தனமும் பித்திக மலர் மாலையும அணிநத மார்பினன் (நற். 314:2,3). புனல் தந்த காழ பொருந்திய சந்தனத்தின் புகைசூழ்ந்த மாலை யணிந்த மார்பினையுடையவன முருகன் (பரி. 9 27-29).

5. மேகலை (ஆகுபெயர்). சூரரம்களிர் பல மணிகள் கோத்தமைத்த சில்காழ - ஏழுவடமாகிய மேகலை - அணிந்த அல்குலினை யுடையவர் (முரு. 16). பாடினி பல வண்டினங்களின் இருப்பை யொதத பலகாழ அணிந்த அல்குலையுடையவள் (பொரு. 39). பளிங்கு மணியினை யொத்த கூறுபாடமைந்த அழகினையுடைய பசுங்காழ அணிநத அல்குலினை உடையவள் தலைவி (அகம். 167:1,2). 'காழ் அணிநத அல்குலின் மேல் நாலுகினற பொறகாசினம் முறை பிறழ்ந்து கிடநதாலும் அவற்றைத் திருத்துதறகுத் தெரிந்திலளாய்த் தன் அழகு கெட அழும் இயல்பினள் தலைவி என நற்றாய் கூறினாள (நற். 66: 9-11). தித்தியின் சிலவாய புள்ளிகளமைந்த பலவாய காழ் (காழாவாகிய மேகலை) அணிந்த அல்குலையும் நீலமணி போன்ற கூந்தலையும உடையவள் தலைவி (நற். 133:3-5). 'தலைவனின் சேணெடுங குனறம் நீ காணுமாறு வேங்கை மரத்திற கட்டிய ஊசலில் நினனை ஏற்றி வைத்துப் பசிய காழ அணிந்த அல்குலைப் பற்றி நின்னை ஆட்டுகோ' என இற்செறிப்புண்ட தலைவியைத் தோழி கேட்டாள் (நற். 222). பலவாகக் கலந்த காழ அணிநததும் நடத்தலால் ஒதுக்கம் அமைந்த நுண்ணிய துகிலினுள் தோன்றி விளங்குவதுமாகிய தலைவி

யின் அல்குல் அரவு சீறி யெழுந்தாற் போன்று காணப்பெறும் (நற். 366.1-3) தலைவன பிரிவானா யின் பலகாழ் - காழால் ஆகிய மேகலை - அணிந்த அல்குலையுடைய தலைவி குழல ஒலிப்பது போல மிகவும் அழுவாள் (ஐங். 306).

6. **குத்துக்கோல்.** ஆடுகோட்பாட்டுச் சேரலாத னின் களிறு பகைவர் மதிற் கதவங் காணில், மதத் தால் காழ் - குத்துக்கோலை - கை நீவிச் சென்று அவற்றைப பிளககும (பதி. 53:17-21). பெருஞ்சேர லிரும்பொறையின் தானையிடத்துள்ள யானைகள் கட்டுத்தறியைக் கொள்ளாமல காழ பல முருக்கி, மேலே பறக்கும் பருந்தின நிழலை நிலததிடத்தே காணின வெருண்டு பாயும் (பதி. 77:8-12). மொழி வேறுபட்ட பலவாகிய பெரிய படைக்கு நடுவே அமைத்த கூடாரத்தில வேற்றாரிடத்தை அரசனுக குக கோயிலாக எலலாரும உடனபட்டு நெடிய காழுடனே பண்ணின பல நிறத்தாற் கூறுபட்ட மதில் திரையை வளைததுக் கட்டினர் (முல்லை. 43, 44). பாகர் காழினாற் குத்தி அலைத்தலாலே துன புற்ற யானைக கன்று தன கையிடை வைத்த கவளத்தைத் தன மெய்யின மேல வாரி இறைத்துக கொண்டது (நற். 360:7-9). காழாற குத்தவும் நெறி யில் நிலலாத கடிய செலவினையுடைய களிற்றொ ருததல யாழோசை கேட்டு அடங்கி நினறது (கலி. 2:26,27). தலைவன் காழ எல்லையில் நில்லாத கடிய களிற்றை யொப்பான (கலி. 55:20).

7. **தண்டு.** திண்ணிய கொடிககாழில் - கொடித் தண்டுகளில - கட்டபபெற்ற பெருங்கொடிகளைக் கடலலை போல எழுந்து விழுமபடி காற்று வீசி யது (மது. 449, 450). வேல் நெயதற் பூப்போலும் உருவினையுடைய அழகிதாக விளங்கும் அகன்ற இலையினையும் தொடுத்த லமைந்த மயிற்றோ கையால விளக்கமுற்ற காம்பினையும் மூட்டுவா யமைந்த திண் சுரையையும் கரிய காழினையும் உடையது (அகம். 119: 11-13) வணடினம் தனமீது மொயககையினாலே கையாற் கடிய மாட்டாளாய ஒருத்தி மணம் நாறும மாலையை அறுத்து அதனைக் கொண்டு ஓட்டியும், போகாமை கண்டு வளைந்த காழ பூண்ட ஓடத்தில் புகுநதாள் (கலி. 92:48-50).

8. **கட்டுத்தறி.** வெண்மையில்லாத வலிய காழில்-கட்டுத்தறியில் - யானை கட்டப் பெற்றது (புறம். 23:1). உழவரின் இல்லங்கள், எருதுகளோடு கூடிய பசுக்கள ஈன்ற கனறுகளைக் கட்டின தாமணி யாகிய நெடிய தாமபுகள் கட்டிக்கிடக்கின்ற காழ் நடட பககங்களை யுடையன (பெரு. 242-244). மதம் கொண்ட யானை சினம் மிக்குப் பரிக்கோற்கார ரைக் கொன்று பாகரை வீசி எறிந்து காலிற்கட்டும் சங்கிலியை நடமுக் காவலென்று பேணாதே அது கட்டின காழைச் சாய்த்தது (மது. 380-383).

9. **இருப்புக்கம்பி.** நுண்ணிய கோலாற் பிணிக்கப் பட்ட மாக்கிணைக்குக் காழில் - இருப்புக்கம்பியில் - கோக்கப்பட்ட கயத்து வாழ் யாமை உவமை (புறம. 70: 2,3). புலி கொன்று உண்ட பெருங்களிற் றின் எஞ்சிக் கிடநத ஊனில் கலிகெழு மறவர் காழில் சேர்த்துககொண்டு சென்றது போக எஞ்சிய ஊனை உமணர் சமைத்துண்டனர் (அகம். 169: 3-7).

10. **கழி.** முள்ளம் பனறியைக் கொன்ற மறவர் ஓடுமரத்தின் காழ - கழி - கொண்டு அமைத்த பாடல் கட்டிய சிறுமனை முறறத்தில, அதன் தசையைக் கூறிடுவர் (புறம. 325: 6-8). கிணைமகளின வீட்டு அடுககளையில உள்ள காழ் சிதல் அரித்தமையின் கட்டுக்குலைநதுளளன (சிறு. 132, 133).

11. **மரம்** (ஆகுபெயர்). மணம்பொருநதிய காழ்-மரததை - அகில, சந்தனம் ஆகியவற்றை வெட்டிய மேட்டு நிலத்தே குறுஙகதிர்த் தோரை நெல் முதலியவறறை விதைப்பர் (மது. 286, 287).

12. **முத்து.** மாணிழை மகளிர், மதுவையுண்டு தம் கணவரோடு புலந்து பருமையுடைய காழ-முத்து - ஆரமாகிய மாலையை அறுத்து முத்துக் களைச் சிநதினர் (மது.679-681). படைத்தலைவர் ஒளி பொருநதிய காழ்மாலை பொருந்திய மார்பினை யுடையவர் (மது. 716). அழகிய நிறம் பொருந்த காழ (முத்து) முதலியன கொணடு புனைநது செய்த, அழகமைந்த வலிய சுவரின் கண்ணுளள பாவைகளும் நின் பிரிவால பலி என எதனையும் கொள்ளில எனக கூறி மகட்போக்கிய தாய் வருந் தினள் (அகம். 369.6-8).

13. **முதிர்ச்சி.** காமநோய் காழ்க் கொள்ளுமாயின்-முதிரச்சி பெறுமாயின - மடல் ஊர்வர்; எருக்கங் கண்ணி சூடுவர்; வீதியில் பிறர் தம்மைக்கணடு ஆரவாரிக்கவும் படுவா; தம் கருத்து முற்றாதாயின சாதலுக குரிய பிறவற்றையும் செய்வர் என்பது தலைவன் கூற்று (குறு. 17). 'நின் அறிவு காழ்க் கொளளும் பருவத்தில் நீ எம்முடைய வீட்டிற்கு இல்லறம் நடத்த வருவாய் என்று கூறிக் கூந்த லைத் தடவியவன் இன்று எவ்விடத்தில் உள் ளானோ' எனத் தலைவியிடம் தோழி கூறினாள் (குறு. 379:3-6).

14. **வலிமை.** பொருநன் சீர்குலைந்த தெண்கண்

மாக்கிணையைப் புதுவார் கொண்டு விசித்துக் கட்டி இசைக்குரிய புதிய காழ் - வலிமை - பொருந்திய போர்வை (தோலைப்) பொருத்தினான் (புறம். 399:23,24).

15. சட்டக்கால். முற்பட்ட யாமம் சென்றபின் மகளிர் காழை - சட்டக்காலை - எடுத்துவிட்டு, பண்டங்களுக்கு விலை கூறும் நெடிய கடையை யடைத்துத் துயின்றனர் (மது. 621-623).

16. கட்டை. கல்லில் தேய்த்து அரைக்கப்படும் வெள்ளிய சந்தனக் காழ் - கட்டை - போன்றது தடாரி (புறம். 369:19-21).

17. தூண். அரசமாதேவி உறையும் நல்லில் நீலமணியைக் கண்டாற் போன்ற கருமையினையும் திரட்சியினையு முடைய திண் காழ்களை - தூண்களை - உடையது (நெடு. 111,114).

18. கருமை. குன்றுகெழுநாடன் எண்ணெய் நீவிக் கடைகுழன்று வளர்ந்த தன் குஞ்சியில் நறிய, காழ் - கருமை - பொருந்திய மயிர்ச் சந்தனத்தை மணம் கமழத் தடவினான் (குறி. 107,108). காழினைத் தன்னிடத்தே கொண்ட நுண்மையுடைய அறல்மீது குயில்கள் அலகால் குடைந்துதிர்த்த பூக்கள் பரவிக் கிடந்தன (சிறு. 4-6).

19. கால். காவிரிப்பூம் பட்டினத்தில் புதுமெழுக்கினையுடைய மஞ்சிகையில் அரிசிப் பலி தூவி, காழ்-கால்கள் - ஊன்றிய கவிந்த சட்டங்களின் மேல் வெள்ளிய துகிற் கொடிகளை நட்டு வைத்தனர் (பட். 163-168).

20. மிகுதி. கோவலர் நல்லேற்றின் கழுத்தில், தாழப் பூட்டியுள்ள அழகிய துளையுள்ள மூங்கிற் குழாயில் பெய்து வைத்த செறிந்த காழ் - மிகுதியான - வல்சியுடன் ஆநிரைகளை ஓட்டிச் செல்வர் (அகம். 253:12-17).

21. விட்டம். மனைகள் பாழ்பட்டுப் போன, மன்றத்தில் உள்ள பணைத்தாள் யானையின் முதுகு உராய்ந்தமையாற் சோர்ந்த காழ் - விட்டம் - வீழ்ந்த முதிய தூண்களை யுடையது அம்பலம் (அகம். 373:2-4).

22. வரகரிசி. மாடுகளின் குளம்பால் துவைக்கப் பட்ட உதிர்ந்த வரகினை அகன்ற பாறையில் குவித்துத் தாயர் பன்னை வெண்பழத்தின் அரிசி ஒப்பத் திரிமரத்தால் தேய்த்துச் சுளகினால் கொழிக்கப் பெற்ற வெண்காழை - வெள்ளிய வரகரிசியை - உரலிற் பெய்து உலக்கையால் தீட்டினர் (அகம். 393:5-12).

23. பிணிப்பு. வருத்தமிக்க வெண்குருகைப் பார்வைப் பறவையாக்கிய வேட்டுவன் அதன் காழ் - பிணிப்பு - களைந்து மேயவிட்டான் (நற். 212:4,5).

24. தடி. புனங்காவலர் மாலைக்காலத்தே காழை - தடியை - எறியப் புறவில் ஒடுங்கியிருக்கும் முயல் அஞ்சி ஓடியது (ஐங். 421:1,2).

25. மாலை. தலைவன் தலைவியின முடியிற் கட்டப் பட்டிருந்த பற்றமைந்த ஒரு காழினை - மாலையை - விரலாலே முறையாகச் சுற்றி அதனை மோந்தனன் (கலி. 54:7,8).

26. கண்ணி. செவி மறையாயிருக்கின்ற ஏற்றைத் தழுவினவனுடைய சென்னியிற் கிடந்த குவிந்த முல்லைப் பூவாற் கட்டின வளைவினையுடைய காழினை - கண்ணியை - கொம்பாலே எடுத்துக் கொண்டு அலைத்த புகரேறு துன்னுகையினாலே அக்கண்ணி தலைவியின் கூந்தலில் வந்து வீழ்ந்தது (கலி. 107:6-9).

27. கைம்மரம். இயற்றப்பட்ட காழ் - கைம்மரம் - சிதையுமாறு கறையான் பரவி மூடிக் கொள்ளுதலின் அம்பலம் கூரை மடிந்த இறப்பினை யுடையதாயிற்று (அகம். 167:18-20).

காழ்வை – அகில். தலைவி தன் ஆயத்துடன் குறிஞ்சி நிலத்துப் பறித்த மலர்களுள் காழ்வை - அகில - மலரும் ஒன்றாகும் (குறி. 93).

காழகம் - 1. ஆடை. கனவில் காணப்படும் தீக் குறிகளுள் காழகம் - ஆடை - நீத்தலும் ஒன்று (புறம். 41:9). இருபிறப்பாளர் (பார்ப்பார்) நீராடுங்கால் தோய்த்த காழகத்தை உடம்பிலே கிடந்து புலருமாறு உடுத்தித் தலை மேலே கூப்பிய கையுடன் செவ்வேளை வணங்கினர் (முரு. 182-185). பரத்தையர் ஆடும் துணங்கைக் கூத்திடத்தே சென்று தலைக்கை கொடுத்தலினாலே அவர் சிலம்பு தொடக்கிக் கரையிடத்தே கிழிந்த காழகம் தலைவனுக்கு உட்பகையாய் அவன் பரத்தைமையைத் தலைவிக்குரைத்தது (கலி. 73: 16, 17). ஒருத்தியின் அல்குலிற் கிடந்த காழகத்தை வேறொருத்தியின் சிலம்பிற் கிடந்த சுறா வடிவாகிய மூட்டுவாயிரும் புகள் தளைத்துக் கொண்டன (கலி. 92:37,38).

2. நீலநிறப்புடவை. யானையின் வேகத்தைக் காணும் பரிக்காரர் அதனைப் பிடித்துக் கொள்ளுங்காலத்து அது மேல்வாராது அஞ்சி மீள நெடிய கரையுடைய காழகத்தில் - நீலநிறப்புடவைகளில் – வைத்த கப்பணத்தை அவற்றின் கால்களைத் துளைக்க நிலத்தில் சிந்தினர் (மது. 597,598).

3. கடாரம். புகாரின் செழுநகர் வரைப்பில் காழ

கத்தில் - கடாரத்தில் - ட்ண்டான நுகரும் பொருள் கள முதலானவை நிறைந்திருந்தன (பட். 183,191,192).

4. கைச்சரடு. தலைவன் மாட்சிமைப்பட்ட காழ கத்தை - கைச்சரட்டை - இறுகக்கட்டி அம்புகளை ஆராய்ந் தெடுத்தபோது தலைவியின் மையுண் கண்கள் நீரைச் சொரிந்தன (கலி. 7:9-12).

**காழாரம்** - முத்துமாலை. கண்டீரக்கோப் பெருநள்ளி காட்டகத்தே தன்னைக் கண்ட வன்பரணர்க்குத் தன் மார்பிற் பூண்ட விளங்கும் காழாரத்தை - முத்து மாலையை - முன்கைக் கடகமொடு ஈத்தனன் (புறம். 150:20,21). மாணிழை மகளிர் கணவரோடே புலந்து அறுத்த பருத்த காழாரம் சொரிந்த முத்தத் தோடே சிந்திய பிற அணிகளும் விரவிக் கிடந்தன (மது. 680-682). படைத்தலைவர் சந்தனம் பூசிய தம் மார்பில் ஒளிவிடும் காழாரம் பூண்டிருந்தனர் (மது. 715,716).

**காழியர்** - வண்ணார். காழியர் - வண்ணார் - எடுக் கும் வெவ்விய உவர்மண் ஒழியக் களர்மண் பரந் தது பெருங்காடு (அகம். 89:7-9,17).

**காழோர்** - பரிக்கோற்காரர். யானைகள் தின்கின்ற நெய்ம்மிதி கவளங்களைக் கடுஞ்சூல் மந்தி காழோர் - பரிக்கோற்காரர் - நெகிழ்ந்த செவ்வியைப் பார்த் துக் கவர்ந்துண்டது (பெரு. 393-395). காழோர் களிற்றுக்குக் கவளத்தை ஊட்டினர் (மது. 658, 659). காழோர் அடக்குதற் கரிய களிற்றியானை யைப் பிணித்துச் செலுத்துவது போலப் பரதவர் வலை ஏற்றப்பட்ட தோணியைச் செலுத்துவர் (நற். 74:1-4).

**காளாம்பி** - காளான். அட்டிலில் உள்ள நனைந்த புழுதி காளாம்பியை - காளானை - பூத்தது (சிறு. 132,134).

**காளை** - இளையோன். 'அடியின்கண் புனைந்த வீரக் கழலினையும் மை போன்ற தாடியினையு முடைய காளை - இளையோன் - பொருட்டு என் வளைகள் கழலுதலால் யான் யாயை அஞ்சுவேன்; அவன் தோளை முயங்க அவைக்கு நாணுவேன் எனச் சோழன் போர்வைக்கோப் பெருநற்கிள்ளிபால் அன்பு கொண்ட நக்கண்ணையார் பாடியுள்ளார் (புறம். 83:1,2). புல்லிய தாடியையுடைய காளை வேற்றுப் புலத்துத் தான் கொண்டுவந்து நிறுத்திய ஆனிரையைக் கள்விலைக்கு நேராகக் கொடுத்துக் கள்ளுண்டு பச்சை ஊனைத் தின்று நிணமிக்க எச்சில் ஈரக்கையை விற்புறத்தில் தடவியவாறே வேற்று நாட்டின்கண் மறுபடியும் ஆனிரை கவரச் சென்றான (புறம். 258:2-6). தன்னைச் சினந்து நோக்கும் பகைவரைக் கொல்லும் ஆற்றலுடையோ னாகிய காளை போரில் ஊக்கம் கிளர்ந்து மேற் சென்று வேலாற் கொன்ற களிறுகளை எண்ணின் அவற்றிற்கு விண்மீன்களும் மழைத்துளிகளும் உறையிடவும் போதா (புறம். 302:8-11). 'நேற்றைய போரில் பகைவேந்தர் முன்னே அவர் படையைப் பிளந்து பிடி புலம்ப யானையைக் கொன்று வென்ற என்னோடு போரிட்டுக் காண்பதற்கு இன்று தன்னை இகழ்வோரைக் கொல்லும் ஆற்ற லுடைய காளையாகிய பகைவீரன விரைநது குதிரையைச் செலுத்தி நெஞ்சில் வடு விளைக்க வேலினை யாட்டி வருகின்றான எனப் போர்க் களத்தில் ஒரு வீரன் புகன்றான் (புறம். 303). ஒளிறு வாளைக் கையில் ஏந்திச் சென்று தடுத்தறகரிய போரைச் செய்து பகைவரின் களிற்றியானை களைக் கொன்று வெற்றியொடு மீளுவது காளைக் குக் கடன் (புறம். 312:5,6). 'வேலையுடைய காளை பரிசிலர்க்குப் பரிசில் ஈயக் கை ஓய்ந்திலன்' என்று ஒரு தலைவன் பாராட்டப் பெறுகினறான் (புறம். 334:10,11). மறம்பூண்ட வாழ்க்கையினையும் தம் வலிமையால் கொள்ளை கொண்டுண்ணும் உண வினையும் உடைய வாட்டொழிலே செய்யும் குடி யிற் பிறந்த புலிப்போத்துப் போன்ற புல்லிய தாடியமைந்த காளை காவலாளருடனே பகை வரின் காவலமைந்த நிலத்தே சென்று விடியற் காலத்தே அவர்கள் ஆனிரையைக் கவர்ந்து கொணர்ந்து அவற்றைக் கள்விலையாகக் கொடுத் துப் பின் இல்லிலே சமைத்த இனிய தோப்பிக் கள்ளை யுண்டு மன்றத்தில் ஏற்றை அறுத்துத் தின்று நடுவே மத்தளம் முழங்க விற்பயின்ற வலி மிக்க இடத்தோளை உயர்த்தி வலப்பக்கத்தில் வளைந்து பகலில் மகிழ்ச்சியோடே ஆடுகின்ற குடி யிருப்பினை யுடையது குறிஞ்சி நிலம் (பெரு. 136-146). வாளைத் தோளிலே கோத்த தறுகண்மையை யுடைய காளையாகிய பாண்டியன் தலையாலங் கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் தோளில் வைத்த வலக்கையை யுடையனாய் மழை பெய்யும் நள்ளிரவில் பள்ளி கொள்ளானாய்ப் பாசறை யிடத்தே புண்பட்டுக் கிடந்த போர்வீரரைப் பார்வையிட்டுத் திரிந்தனன் (நெடு. 182-188). வலிய களிற்றியானை போன்ற காளையோடு தலைவி மூங்கில்களும் கரிந்து போதற் கிடனான வெவ் விய கானத்தைக் கடந்து சென்றனள் (அகம். 55:4-6). 'புதிதாகப் புனையப்பட்ட செவ்விய இலை பொருந்திய வெள்ளிய வேலினையும் உடன்போக்கிற் கிசைந்த மதியினையு முடைய மைபோன்ற தாடியமைந்த காளையாகிய தலைவன்

வெண்கடம்பின் பூங்கொத்துக்களைத் தளிருடன் கொண்டு நின் கூந்தலிற் சூடுமாறு நீ அவனுடன் சுரநெறியிற் செல்லுதலை யான் உடன்பட்டேன்' எனத் தோழி தலைவியைப் போக்குடன்படுத்திக் கூறினாள் (அகம். 221:5 -9, 14). 'அருஞ்சுர நெறியிலே என் மகளை உடன்கொண்டு போன வன்கண்மையுடைய காளையிடத்தே அவள் கொண்ட அன்பின் உறுதியை யான் முன்னமே அறிந்திருந்தேனாயின் அவளது முலைப்பரப்பிலே அவன் இன்புற்றுத் துயிலும் துயிலினை யான் வெறுப்பின்றி என் வளநகர் விளங்க வதுவை முறையில் கூட்டி வைத்திருப்பேன்' என்று மகட்போக்கிய தாய் புலம்பிக் கூறினாள் (அகம். 263: 8-15). அம்பினை எய்வோராகிய ஆறலை கள்வர்க்கு அஞ்சாத தறுகண்மையினையுடைய காளையாகிய தலைவனுடன் தலைவி போயினள் (அகம் 321: 12, 13). தினைக்கதிர்களைக் கவர்ந்த கிளிகளையோட்டித் தலைவியும் தோழியும் பரண்மேல் இருக்கையில், 'மடநல்லீரே, அம்பு பாய்ந்தமையால் புண்பட்டு வருத்தத்தொடு வந்த களிறு நும் புனத்தின் வழிப் போனதோ' என வினவிச் சென்ற வலிய வில்லையுடைய காளையாகிய தலைவனின் சாந்துபூசப்பட்ட மார்பினையும் அழகினையும் மிக விரும்பித் தலைவி வருந்தியிருந்தாள் (அகம். 388: 4-17). விரைதலையுடைய வெவ்விய காளையாகிய தலைவன் என் மகளை மணமுறையிற் கொள்ளாமலும் அவளுக்கு எளிய தணிந்த பருவத்தே செல்லாமலும் மழை துறந்த வெவ்விய கோடைப்பருவத்தில் அவளை உடன்கொண்டு போகத் துணிந்தனனே என மகட்போக்கிய தாய் இரங்கிக் கூறினாள் (அகம். 397: 4-9). தலைவி தமரைப் பிரிந்து ஒளிபொருந்திய நெடிய வேலையுடைய காளையாகிய தலைவனொடு சுரநெறியிற் சென்றாள் (குறு. 378: 3-5). 'நேற்று வரையில் யானும் தன் நற்றாயும் தேனொடு தீம் பாலை ஊட்டவும் உண்ணாளாய் விம்மியழுத என் மகள் இன்று மைபோலும் தாடியினை யுடைய காளையாகிய தன் தலைவனின் பொய்ம்மொழிகளையே தனக்குப் பற்றுக்கோடாகக் கொண்டு அவனோடு அருஞ்சுரம் கடந்து போயினள்' என்று மகட்போக்கிய செவிலி கூறினாள் (நற். 179: 5-10). 'என்னுடைய ஒரே மகளும் போரின்கண் மிகுகின்ற வலிமை யுடைய கூரிய வேலினைக் கொண்ட காளையாகிய தன் தலைவனுடன் பெருமலை அருஞ்சுரத்தில் நேற்றுச் சென்று விட்டனள்' என்று ஒரு தாய் இரங்கினள் (நற். 184: 1-3). செழுமைமிக்க குளிர்ந்த மனையோடு தமரையும் பிரிந்து தன்னை உடன்கொண்டு செல்லும் பெரிய காளையாகிய தலைவனின பொய்ம்மொழிகளில் மயங்கித் தலைவி நெல்லிக்காயைத் தின்று நீரைக் குடித்தவாறே அவனொடு நெடுந்தூரம் சென்றனள் (நற்.271:3-7). 'எம மகளைத் தன் மயககு மொழிகளால் ஆட்படுத்தி உடன்கொண்டு போக நெஞ்சுறுதி கொண்ட வன்கண்மையுடைய காளையை ஈன்ற தாயும் எம்போல் பெருவிதுப்புறுக' என்றாள் மனைமருண்ட ஒரு தாய் (நற். 293: 5-9). தன்னை நெஞ்சு கொள்ளத் தேற்றிய வஞ்சினக் காளையாகிய தலைவனொடு தலைவி ஊரில் அலரெழுமாறு பல குன்றங்களைக் கடந்து சென்றாள (ஐங். 372). முடித்தற்கும் போதாத நீட்சியற்ற கூந்தலை யுடைய பேதைப் பருவத்தளாகிய தலைவி கூற்றுவனையொத்த வலிமைகொண்ட காளையாகிய தலைவன் புறங்காத்துவரக் கடுவனுமறியாத அடர்ந்த காட்டினைக் கடந்து சென்றாள் (ஐங். 374). பறவைகளின் ஓசைக்கும் அஞ்சி விழிக்கும் கண்ணளாய்த தலைவி வெள்ளிய வேலினையும் திருத்தமான கழலினையுமுடைய காளையொடு அருஞ்சுரங் கடந்தாள் (ஐங். 382: 1, 2). 'கடுங்கண காளையொடு நெடுந்தேரில் ஏறி வேங்கைப் புலிகள் நின்றந்த மலை பிற்பட்டு ஒழியுமாறு பல்வேறுபட்ட அரிய சுரங்களைக் கடந்து சென்றனள் நின் மகள் என்று என் தாய்க்குக் கூறுமின்' எனத் தலைவி இடைச்சுரத்தே எதிர்ப்பட்ட வழிப்போக்கரிடம் வேண்டினாள் (ஐங். 385). 'வேலைப்பாடுகளால் பொலிவு பெற்ற செறிவுடைக் கழலணிந்த வலிய தாளையும் மைபோலும் தாடியையுமுடைய காளையாகிய தன் தலைவனொடு நின் மகளாகிய பாவை யன்ன ஆய்தொடி மடந்தை மெல்ல நடந்து சென்றனள் எனக் கண்டோர் தம்மை வினவிய செவிலியிடம் கூறினர் (ஐங்.389:1-4). 'திண்ணிய தோளையும் வலிய வில்லையுமுடைய காளையொடு நின் மகளைச் சுரத்திடையே யாம் கண்டனம்' என்று செவிலியின் வினாவிற்குக் கண்டோர் எதிர் மொழிந்தனர் (ஐங். 390:3,4). 'வெஞ்சினத்தையும் வெற்றி வேலையுமுடைய காளையாகிய தன் தலைவனோடே என் மகள் வருமாறு கரைக; உன் சுற்றம் நிறைய உண்ணப் பச்சூன் பெய்த பைந்திண வல்சியைப் பொற்கலத்தில் தருவேன்' எனத் தாய் காக்கைக்குப் பராய்க்கடன் உரைத்தாள் (ஐங். 391). தன் மகளை உடன்கொண்டு போன தலைவனை 'வெற்றி வேலையும் மையற விளங்கிய கழலணிந்த அடியினையுமுடைய பொய்ம்மொழியில் வல்ல காளை' என்று நற்றாய் குறிப்பிடுகிறாள் (ஐங். 399:3-5). ஆராய்ந் தணியப்பட்ட கழலையும் வெஞ்சினத்தையும் வெற்றிவேலையுமுடைய காளையுடனே

மணம்புணர்ந்தனளாய் நம் மகள் இன்று மீண்டு வருவாளென தூது வந்துள்ளது' எனச் செவிலி நற்றாய்க்கு உரைத்தாள் (ஐங். 400: 4-6). முருகன் கூற்றினது மிக்க ஆணையையும இகழும் ஆற்ற லுடைய காளை எனக் குறிக்கப்படுகின்றார் (பரி. 8:86). எல்லையற்ற நீண்டகன்ற கண்ணையுடைய தலைவியை உடன்கொண்டு படையொடும் பெயர்ந்த காளையாகிய தலைவனை அவளது சுற்றம் இடைச்சுரத்துச் சென்று பொருதது (பரி. 11.46-48).

2. எருது. கள்ளி நிலத்தை உழுது செல்லும் காளை யின் - எருதின் - முதிர்ந்த கொம்பு போன்ற அடி யினையுடையது (புறம். 322:1,2).

**காற்று** - வளி. குளமுற்றத்துத்துஞ்சிய கிள்ளிவளவன் காற்றொடு - வளியுடன் - தீ சேர்ந்தாற் போன்ற செலவையுடைய போராற்றல் மிக்கவன் (புறம். 41: 16-18). கிள்ளிவளவன் போர் செய்யும் இடமகன்ற பாசறையில முரசம் இடி முழக்கென முழங்க, களிறு முகில்போல் திரள, தேரும் குதிரைகளும் மழைத்துளி போற சிதற, அம்பு காற்றெனச் சென் றன (புறம. 373:1-4). வைக்கோலும் துரும்பும் நீக்கிக் குட காற்றாலே கையால் காவித் தூற்றின நெற் பொலி வடதிசைசகண் உள்ளசெம்பொன்மலை (மேருமலை) போலச சிறப்பத தோன்றும் (பெரு. 239-241). பாண்டியன நெடுஞ்செழியன தலையாலங் கானத்தில தாவும் குதிரைகளையுடைய செலவு கடிய திண்தேரைக் காற்றெனக் கடிது செலுத்தி இருபெரு வேந்தரையும வேளிரையும் வென்றான் (மது. 51-56). மதுரையில் உள்ள வானமளாவிய சிறந்த இல்லங்கள் சில் காற்று (தென்றற்காற்று) இசைக்கும பல சாளரங்களை உடையன (மது. 357, 358). கடிய காற்று நாற்றிசையினும் சேரச் சினந்தெழுந்தமையால சிதைந்த மரக்கலம் நெடிய சுழியில அகப்பட்டுச் சுழல்வது கந்து நீத்துக் களிறு சுழல்வதற்கு உவமை (மது. 377-379, 383). குளிர்ந்த மேகங்கள தவழும் அருவி நீரோடும் அகன்ற இடத் தினையுடைய கடிய காற்றுச் சுழலும் நீண்ட பெருங்குன்றினகணணே மயக்கத்தினைத் தரும் இருட்குகையில உள்ள கல் அழிவது போல நீ அழிவாயாக என அல்ல குறிப்பட்டு மீளுந் தலை வன தன் நெஞ்சிற்குரைத்தான் (அகம். 258: 5-8). உழவர் போரினைப் பிரித்துக் கடாவிட்டுக் கடுங் காற்றில நெல் தூற்றப் பறந்து போன துரும்புகள் முழுவதும உப்பளத்திலுள்ள சிறிய பாத்திகளில் எங்கும் வீழ்ந்து பரவின (அகம். 366:2-5). பாறையில் சுனையிடத்து மலர்ந்துள்ள காந்தட் குலையினைப் பாம்பு நீர் உண்டலாகக் கருதி மலையைப் புரட்டு வது போன்ற காற்றினையுடைய செறிந்த மேகத் தின உருமேறு இடித்தலால எழுந்த ஓசை மலைச் சாரலில் எதிரொலித்தமையின சிறுகுடியிலுள் ளார் விரைவாகத் துயிலெழுந்தனர் (கலி. 45:1-7). 'காற்றின விசையைப் போல ஓடிவந்த விரைந்த ஏறாகிய காரியதனைக் களத்தே வலியடங்கத் தழுவி வருத்தி அதன் மேலே தோன்றி நின்ற பொதுவனது அழகைப் பாராய்' என்று தோழி தலைவிக்குக் காட்டினாள் (கலி. 103:40-42). மூலப் பகுதியும் அறனும் முதன்மையின இகந்த (அநாதி யான) காலமும் விசும்பும் காற்றொடு கனலுங் கூடிய இம்மூவேழ் உலகத்து உயிர்களெல்லாம் திருமாலிடத்தவாயின (பரி. 13: 23-25).

**கான்** - 1. காடு. கதநாய் வேட்டுவன் கானுறை - காட்டில் உறையும் - வாழக்கை உடையவன் (புறம். 33:1). கானிடத்தே திரிந்த முள்ளம்பன்றியை வேட்டு வர் விலலாற் கொலல அதன் கொழுங்குறையைக் கிணைஞர்க்கு மானகண் மகளிர் விருந்திறையாக நல்கும் நாட்டிற்குத் தலைவன் ஆய அண்டிரன் (புறம்.374:10-16). கடுந்தேர் அவியன் குறுமுலையுண் டற்குத் தாயைச் சுற்றித் திரியும் வெண்மறி குரங் குக் குட்டியுடன் உகளும் மூங்கில்கள் நிறைந்த குன்றுகள்பல பொருந்திய கான் கெழு நாட்டினன் (புறம். 383: 18-22). ஆண்டலை என்னும் புள் வழங்கும் கான் உணங்கு கடுநெறி (பதி. 25:8). கடல் பிறக்கோட்டிய செங்குட்டுவன் கடவுட் பத்தினிக்குக் கற்கோள வேண்டிக் கான் நவில் கானததே கணை போல் விரைந்து ஆரியர் தலை வனை வென்று கலலையெடுத்துக் கங்கையில் நீர்ப் படுத்தினான் (பதி.ப.5:4-7). கான் பயந்த கண்ணியை யுடைய திரையனை 'யான் பயந்தேன' என்னும் செருக்கால் கடல் கங்குலும் நனபகலும் துஞ்சா வியல்பினதாய் ஆர்ப்பரிககும் (பெரு.வெ). 'இரவில் தங்கிக் களைப்பாறி விடியலில் எழுந்து கானிடத் துள்ள செவ்விய நெறியைப் போகும் வழியாகக் கொண்மின்' எனக கூத்தர் ஆற்றுப்படுத்தப்பட்ட னர் (மலை. 256-258). நன்னனது அரண்மனை வாயிலில் காணப்பட்ட பல்வேறு திறைப் பொருள் களுள் கானிடத்து நிற்கும் எருமையின் மூங்கிற் குழாயிலே தோய்த்த தீந்தயிரும் ஒன்றாகும் (மலை. 523). தலைவன அணங்குடைய நெடுவரையின் உச் சியினின்று வீழும் அருவிகளையுடைய கான கெழு நாட்டையுடையவன் (அகம். 22:1,2). தலைவன் கான் கெழு நாட்டினன (அகம. 98:29). மலைப்பக்கத்தில் பேய்த் தேர் ஓடும் காட்டிடத்தே யானை கை நீட்டியும் வாய திறந்தும் புனல பெறாது கானை

வெறுத்துக் கழியும் (அகம். 179:1-6). வில்லேர் உழவ ராகிய ஆறலைப்போர் கானிடத்தேயுள்ள கவர்த்த நெறிகளையன்றி மழையை வேண்டாதவர் (அகம். 193:1,2). தறுகண் பனறி, வய நாயை விலக்கி வேட்டுவரைத் தடுத்து வலிய குட்டியைத் தழுவிப் பெண்பன்றி கிளையுடன் பெயரக் கானிலிருந்து வெளிவந்து அரும்புழை முடுக்கரில் ஆள் குறித்து நிற்கும் (அகம். 248:2-6). தனமகள் தலைவனோடு விரைந்து சென்று கானில் பொருந்தி வாழ்பவ ருடைய சிறுகுடியில் தங்கி இருப்பாளோ என மகட் போக்கிய தாய் புலம்பினாள் (அகம். 315:14-18). வரகின் தாள்களையுடைய பழங் கொல்லையாகிய மேட்டு நிலத்தைச்சுற்றியுள்ள கானைச் சுடுவதால் எழும் புகை அருவியின் துவலையோடு விரவித் தோன்றும் (அகம். 359:13-15). கனமழை பொழிந்த கான் அடங்கிய இரவில் தினை மேய வந்த யானை யினம் இரிந்தோடுமாறு கானவன் கவணாற் கல் லெறிந்தான் (அகம். 392:12-15). நன்னன், கண்டார் விரும்புமாறு உயர்ந்த மூங்கில்கள் செறிந்த மலைப் பக்கத்துள்ள கானில் தங்கியிருந்து இழந்த தன் அரணை மீண்டும் கைக்கொண்டு பழைய புகழை நிலை நிறுத்தினான் (அகம். 392:25-28). பாறைகள் பிளவுபட மேகம் பெய்யாதொழிந்த உயர்ந்தகொடி படர்ந்த கான் மயங்கிய பரப்புக்கள் மாயோளா கிய தலைவிக்கு எளிமை யுடையனவாக வென்று தணிந்த பருவததில் செல்லாது தலைவியை உடன் கொண்டு செல்ல ஒருதலையாகத் துணிந்தான் என மகட்போக்கிய செவிலி தலைவனைக் குறித்துப் புலந்து மொழிந்தாள் (அகம். 397:4-9). பெண்புலி கானில் குட்டிகளை ஈன்று காவல் கொண்டிருந்தது (நற். 29:3). தலைவன் படுமழை பொழிந்த பாறை மருங்கில் மலர்ந்த முல்லையும் பரல்கள் நிரம்பிய பள்ளங்களும் உடைய கான கெழு நாட்டினன் (61:7-9). மலைசூழ்ந்த இடத்திலிருக்கின்ற கான் கெழு சிறுகுடியின பள்ளமான இடங்களிலுள்ள மல்லிகை அரும்பியது (நற். 122:3,4). கான் இடை யிட்ட சுர நெறியில் யாமரங்கள் உயர்ந்தும் ஓமை மரங்கள் நீடியும் காணப்பட்டன (நற். 198:1,2). குறவர் மலைச் சார்பிடத்தில் அகலப்படுத்தி வளைத்த கொல்லையாகிய மழை பெய்யும் பதம் பெற்ற கானை உழுது தினை விதைத்தனர் (நற். 209:1-4). கானிடத்தில மலர்ந்த பூ விளங்கிய சோலை யின் இடங்கள் தோறும் துணையொடு ஆண் வண்டுகள் கூடி ஒலித்தன (நற். 348:5,6). தலைவன் திரட்சியையுடைய அருவிகளைக் கொண்ட கான் கெழு நாட்டினன் (ஐங். 183:1). தலைவி நெடிய மலையின் மேலுள்ள கொன்றையின் பொன்னா லாகிய தகடு போன்ற சுடர் விடும மலர்களைக் கொடுக்கும் கான் கெழு நாடனின் மகள் (ஐங். 430: 1-3). முகில் சிதறின நீரத் தொகுதியாலே பிடவம் அரும்பவும் கானிலுள்ள மரங்கள் துளிக்கவும் கார் காலம் தொடங்கியது (ஐங். 461:1,2). மேகம் மழை பெய்தலான் வையை யாறு, செறுகின்ற வெயிலை யும் மிக்க காற்றையும் உடைய கான தரும் வெங் கார் நாற்றம், கனிநாற்றம் முதலான நாற்றங்களை உடன் கலந்து தழுவிக் கொண்டு வநது பிறர்கருக் கொடுத்தது (பரி. 20:8-11).

2. மணம். காட்டுமல்லிகை கான் - மணம் - மிக்கது (பதி. 30:23). நறுங்கான் மிக்க சுனையிற பூதத வண்டுபடு கண்ணி (முரு. 198,199). மணறகுன றிடத்துள்ள பொழில் கான்மிக்கது (மது. 336,337). தலைவன் தலைவியின் தலையிற் சூடிய கான்மிக்க மலர்களை முல்லையோடு போக்கி நறுங்கதுபபில் துயினறான் (அகம். 391:4-6). கானை உடைய காவின்கண் வணடுகள் மதுவையுணடு பாடின (பரி. 16:17,18).

**கான்முளை** - வழித்தோன்றல். சேரரது கானமுளை - வழிததோன்றல் – காற்று கிளர்நதது போன்ற ஊர்தியில் ஏறிச் சீற்றத்துடன் கரிய கடலை நெருங்கிப் பகைவரோடு பொருதான் (பதி. 1:5-10).

**கான்யாறு** – காட்டாறு. மாநில மடந்தையின் முலையிற் கிடந்தசையும் ஆரம் போல மலை உச்சியினின்றும வரும் கரையைக் குத்துகினற கான்யாற்றிடதது - காட்டாற்றிடத்து - ஓடுகின்ற புனலாலே நறும பொழில் வருந்தியது (சிறு. 1-4). கானயாறு சூழ்ந்த அகன்ற நெடிய காட்டிடத்தே பாசறை அமைககப பட்டது (முல்லை. 24,28). வருபுனல தநத வெண் மணலை யுடைய கான்யாற்றுக் கரையில நின்ற கரும்பின் ஒண்பூப் போல அங்காடித தெருவின் இரு புறங்களிலும் துகிற் கொடிகள் விளங்கின (பட். 161,162,168). யானைகளை விழுங்கும் முத லைகள் தங்கும் இருள் செறிந்த மிளைகளையும குமிழிகள் சுழலும் ஆழந்த நீர் அறாத மடுககளை யுடைய முடுக்கரையும் கொண்ட அகழியிலே இழிந் தாற் போன்ற கான்யாற்று வழி காலகளை வழுக்கி விழும் இடங்களை உடையது (மலை. 211-215). கச்சினை விரித்தாற் போனறு விளங்கும் மணல மிக்க கான்யாற்று எக்கரில் மெயகள் ஒனறில் ஒன்று புதவது போன்ற முயக்கத்தைத் தலைவர் முன பெற்றார் (அகம். 11.8-11). நீர் நிறம் மறைய முதிர்ந்து உதிர்ந்த மலர்கள் நெருங்கிய விரைநது

வரும் கான்யாற்றில் முதலை தங்கும் கல்லில் மோதி மீளும் சுழிகளையுடையதும் களிறுகளை மதங்கெட மோதி இழுததுச் செல்லுதலின் அச்சம் தோன்று வதுமாகிய வெள்ளத்தினைத் தலைவன் கடுங்கண் பனறியைப் போனறு நடுங்காது கடந்து வந்தான் (அகம். 18:1-6). நீண்ட கரையினைக் கொண்ட கான் யாற்றின் கடும்புனல் அற்றொழிய அறல்கொண்ட விரவு மணல் மிக்க அகன்ற துறையிடத்துள்ள மடுககள் பொருநதிய பொழில் தோறும் காஞ்சி யின் மலர்கள் உதிர்ந்த மணல் மேடுகள் புது மணம் கொண்டன (அகம். 25:1-5). தலைவன் தலைவியின் கூந்தலில் மலர்களை வைத்துப் பின்னு தலைச் செய்ய அக்கூந்தல் வாணன் சிறுகுடியின் வடக்கிலுள்ள இனிய நீரினையுடைய கான்யாற் றின் விளங்கும் அறல் போனறு பிடர் மறைய நெறிந்து தாழ்ந்தது (அகம். 117.12-19). காயாவின் வாடற்பூக்களோடு இலவமலரைச் சுமந்து வரும் இனிய புனலையுடைய கான்யாற்றில் காற்று எழுப் புதலின மேலே எழும் துளிகளை உண்பேம் எம் மோடு உடுதல் வல்லையோ எனத் தலைவன தலை வியை வினவினான் (அகம். 133: 8-13). கான்யாற் றினையுடைய சுரநெறியிற் செல்லும் புதியர் சேற் றைக் கிண்டி ஊறிய நீரை உண்ட கேணிகளைப் பிடியின் அடிச்சுவடு எனக் களிறுகள் விரும்பித் தொட்டுப் பார்த்துச் செல்லும் (அகம். 137:1-3). பொய்கை ஊர்க்கு அருகிலுள்ளது; சிறு கான் யாறு அப்பொய்கைக்குச் சேய்த்துமன்று; அங் குள்ள சோலையில இரைதேர் குருகல்லது வேறு எவ்வுயிரும் நெருங்கிச் செல்லாது; யானும் தலைவியும் கூந்தலுக்கு எருமண் கொணர அங்கே செல்வோம் எனத் தோழி தலைவனிடம் குறிப்பினாற் குறியிடம் குறித்தாள் (குறு. 113). ஆரவாரத்தை யுடைய மழை பொருந்திய கான்யாற் றினது தாழ்ந்த கரையில் ஆடுமயில்கள் தோகை அசைய நடந்து அகவின (குறு. 264:1-3). கற்களை அலைத்து விரைந்தோடி வரும் கான்யாற்றில் பற்றுக்கோடாகிய மூங்கிலும் முழுகுமாறு பெருகிய வெள்ளத்தின் அலை காட்டிற் சென்று மோதுமாறு இடி முழங்கி மழை பெயய மினனியது (நற். 7:3-6). விட்டு விட்டுக் கரைத்துச் செல்லுதலை யுடைய கான்யாற்றில் கலங்கும் பாசிகளை நீர் அலைத் தலான் அவை எங்கும் சென்று கலந்தன (நற். 65: 2,3). முசுக்கலை நல்லுணவை உண்ணும் பலவாய மலரையுடைய கான்யாற்றின மேலுள்ள கரையில் கலைமான மலையாட்டினத்தோடு தாவித் துள்ளிக் குதிக்கும் (நற். 119:4-7). தணபெயல் பொழிதலான் பெருகிய கான்யாறு கொழிதத மணற்கரை பின்னே செல்லும்படி தலைவன் தலைவியைக் காணப் பாகன தேரினை விரைவாகச் செலுத்தினான (நற். 21:8-12). விளங்கிய விரைந்த செலவையுடைய நீரோடுகின்ற கரைகாண்பது அரிதாகிய கான் யாற்றின் ஆழமுடைய புனலின்கண் தலைவன் தலைவியைக் காணத் தமியனாய் இரவில் நீந்தி வந்தான் (நற். 144:7-10). கரிய கற்பாறையில் ஓடு கினற கான்யாற்றின் நீந்துதற்கரிய நீர்ச் சுழியை யுடைய இடங்கள்தோறும் முதலைகள் இயங்கின (நற். 292:7,8). கரையை மோதி யோடுகின்ற கான் யாற்றின் இடிகரையில் வேர்கள் அலைக்கப் பெற்றுக் காற்றாலசையும் மாந்தளிர் போல நடுங்கும் நெஞ்சோடு இடும்பையை எவ்வாறு தாங்குவேன் எனப் பிரிவிடை ஆற்றாத தலைவி பருவ வரவின்கண் புலம்பினாள் (நற்.381:3-6). உயர் ந்த கரைகளையுடைய கான்யாற்றின் மணற்பரப் பையுடைய அகன்ற துறையிடத்து நின்ற பாதிரி மலரைக் கொயது தலைவி மாலை புனைந்தாள் (ஐங். 361:1-3). இளவேனிற் பருவத்தே பல்வேறு மலர்களை அணிந்து கொண்ட வெள்ளம் பெருகிய கான்யாற்றில் தலைவி நீராடிக் கால்தளர்ந்த வழித் தலைவன் தேரோடு குறுக வந்து காத்தான் (ஐங். 367). எம்மூர் அல்லது அணித்தாகிய ஊரில்லை; ஞாயிறும் மறைந்தது; மடந்தையாகிய தலைவி இளையள்; மெல்லியள்; பெருங் கான்யாறோ கடத் தற்கு அருமையுடையது; சேய்மையி லுள்ளது; எனவே, இங்கே தங்கிச் செல்வாயாக என இடைச் சுரத்தார் தலைவனிடம் கூறினர் (ஐங். தி. 5). தலைவி முல்லையைக் குருந்த மலரோடு முடியிலே சூடிக் கான்யாற்றின் விளங்குகின்ற மணலையுடைய தண் பொழிலிடத்து அகனற பாறையிலே பன்முறை ஆயத்தோடு விளையாடினாள் (கலி. 113:23-25). மகளிர் சிலர் நறு மணமிக்க பூக்களை உடைய கான்யாற்றுத் துருத்தி (ஆற்றிடைக்குறை) சென்று தம்மால் விருமபப் பெறும் கணவரைத் தழுவினர் (பரி. 10:30,31).

**கானக்காக்கை** - காட்டுக்காக்கை. பெருந்தோட் குறு மகள் கானக் காக்கையின் - காட்டுக்காக்கையின் - தழைத்த சிறகை யொத்த இருள்வாசிப் பூவால் தொடுக்கப்பட்ட கண்ணியை யணிந்திருந்தாள் (புறம். 342:1,2).

**கானக்கோழி** - காட்டுக்கோழி. மான் தோலின் மீது பரப்பி உலர வைத்த தினையரிசியைக் கானக் கோழியும் - காட்டுக்கோழியும் - இதற் பறவையும் கவர்ந்துண்டன (புறம். 320:10,11). மனைக்கோழி கூடியதால் கானக்கோழியும் நீர்க்கோழியும் தம்

குரலெடுத்துக் கூவின (புறம். 395: 9-11). கானக் கோழி நெற்கதிரைத் தின்றது (பொரு. 222). நன்னனது அரண்மனை வாயிலில் காணப்பட்ட பல் வேறு திறைப் பொருள்களில் கானக்கோழியின் கவர் குரற்சேவலும் ஒன்றாகும் (மலை. 510).

**கானகநாடன்** - **காட்டு நாட்டிற்குரியவன்.** சேரமான் கரு வூரேறிய ஒள்வாட் கோப்பெருஞ்சேரலிரும்பொறை, எருமை போலும் வடிவையுடைய கரிய கற்பொருந்திய இடங்கள் தோறும் பெற்றம் போலப் பரக்கும் யானைகளை உடைய வலிமை மிக்க கானகநாடன் - காட்டுநாட்டிற்குரியவன - ஆவான் (புறம். 5:1-3). 'யான் இவ்விடத்திலுள்ளேன்; என் நலன தினைக் காவலர் கவண் ஒலிக்கு வெருவிக் காட்டுயானை கைவிட்ட மூங்கில், மீனைக் கவர்ந்த தூண்டில் செல்வது போல மேலே செல்வதற்கு இடமாகிய கானக நாடனோடு அவ்விடத்தே ஒழிந்தது' எனத் தலைவி தோழியிடம் கூறினாள் (குறு. 54). புலி களிற்றியானையைக் கொன்றதெனப் பிடியானை வாடிய துனபத்தோடும் வருத்தத்தோடும் இயங் காது தன் கன்றினைத் தழுவிக் கொண்டு தீர்த்தற் கரிய புண்ணுற்றாரைப் போல வருந்துதற்கு இட னாய கானக நாடன் தலைவன் (நற். 47:1-6). வேங் கையின்பொன் போன்ற நறுமலர்களை மானினம் தமக்குரிய உணவாக மேய்தற்கு இடனான கானக நாடனாகிய தலைவன் வரைவோடு வரவும் நின் மேனி பசப்பதற்குக் காரணம் என்ன எனத் தோழி தலைவியை வினவினாள் (ஐங். 217). குன்றக்குறவன் சந்தன மரத்தைச் சுடுதலான் எழுந்த நறும்புகை மலையிடமெல்லாம் பரவி மணத்தலைச் செய்கின்ற கானக நாடனாகிய தலைவன் என்னை மணந்து கொள்ளின் யாய் மகிழ்ச்சி கொள்வளோ எனத் தலைவி தோழியை வினவினாள் (ஐங். 253). தலைவன் தினைப்புனப் பரணிடத்து எழுந்த அகிற் புகையால் ஒளிமழுங்கித் திரியும் மதியம மலையிலே தங்கின் அதனை மலையில் வைத்த தேனிறால என்று கருதி அதனை அழிக்கக் கண்ணேணி வைக் கும் கானக நாடனின் மகன் (கலி. 39:7-10).

**கானங்கிழவோன்** - **காட்டிற்கு உரிமையுடைய தலைவன்.** நீலமணி போலும் நிறமுடைய மலைகளமைந்த காட்டினூடே இளமயில்கள் களித்துக் கூத்தாடுதற் கிடனான வள்ளிக் கொடி படர்ந்த கானங்கிழ வோன் - காட்டிற்கு உரிமையுடைய தலைவன் - தலைவியை வருத்தினான் (ஐங். 250:2-5).

**கானங்கோழி** - **காட்டுக்கோழி.** கானங்கோழியின்- காட்டுக்கோழியின்- கவர்த்த குரலையுடைய சேவ லினது ஒள்ளிய புள்ளிகளையுடைய கழுத்தில் தண் ணிய நீர்த்துளி துளிக்கும்படி புதலில் நீர் ஒழுகியது (குறு. 242: 1-3).

**கானத்தோர்** - **காட்டிலுள்ளோர்.** கோழிச்சேவல் தினைப் புனங் காப்போரைத் துயிலுணர்த்தக் கூவும் கானத்தோர் - காட்டிலுள்ளோர் -சோழன நலங் கிள்ளியின் பகைவராவர் (புறம். 28: 8-10).

**கானதர்** - **காட்டுவழி.** நள்ளி நெய்யிழுது போனற நிணத்தை யுடைய கொழுந்தடியைக் கானதரில - காட்டு வழியில் - வழி மயங்கிப் போகிய இளையர் தம்மை விரைய வந்து சேர்வதற்கு முனனே தீயால விரைந்து சுட்டு 'நின ஒக்கலோடு தின்மின' என வன்பரணருக்குத் தந்தான் (புறம். 150: 9-13).

**கானநாடன்** - **காட்டு நாட்டினையுடைய தலைவன்.** தலைவியின் நெஞ்சம், சுனையிற் பூத்த குவளைப் பூவினை வண்டு மொயததிடச் சூடிக் கானநாடன- காட்டு நாட்டினையுடைய தலைவன் - வருகின்ற மலை மீதுள்ள சிறிய வழியாகிய படுகுழிகளைக் கொண்ட நெறியில் இருளில் மிதிக்குமிடதது அவ னது தளரும் அடியைத் தாங்கும பொருட்டு அங் குச் சென்றது (அகம். 128: 6-15). வானுற உயர்ந்த நீலநிறப் பெருமலையினை அடுத்துள்ள கான நாட னாகிய தலைவன் அடைவித்த நோயால தலைவி மேனியின் அழகிய நலம் தொலைந்தது (அகம. 222: 1-3).

**கானப்பேர்** - **ஓர் அரண்.** அணைதற்கரிய சிற்றரண் களால் சூழப்பட்ட கானப்பேர் என்னும் அரண், கருங்கைக் கொல்லனால் செந்தீயின்கண மாட்டப பட்ட இரும்புண்ட நீரினும மீட்டற்கரிதென அவ் வரணுக்குரிய வேங்கை மார்பன வருந்த அதனை உக்கிரப்பெருவழுதி கைக்கொணடான (புறம். 21; 6-11).

**கானப்பேரெயில் கடந்த உக்கிரப்பெருவழுதி** - **பாண்டிய வேந்தன்.** உககிரப்பெருவழுதி யென்பது இவன இயற்பெயர். இக்காலத்துக் காளையார் கோயில என வழங்கும் முறகாலக் கானப்பேரெயிலை வென்று கைக்கொணடதனால் இவன் கானப் பேரெயில கடந்த உக்கிரப்பெருவழுதி எனக் குறிக்கப் பெற் றான் (புறம். 21). இப்பெயர் பாண்டியன கானப பேர் தந்த உக்கிரப் பெருவழுதி எனவும் (புறம். 367) பாண்டியன் கானப்பேரெயில் தந்த உக்கிரப் பெரு வழுதி எனவும் (அகம். 26) உக்கிரப்பெருவழுதி என வும் (நற். 98) காணப்பெறுகிறது. பாண்டியன உக்கி ரப்பெருவழுதி என அகநானூற்றின் இறுதியில அமைந்துள்ள பாயிரத்தில் குறிப்பிடபபட்டுள்ளது. இவனை ஐயூர் மூலங்கிழாரும் (புறம். 21) ஔவை

யாரும் (புறம். 367) பாடியுள்ளனர். கொல்லனால் செநதியினகண் மாட்டப்பட்ட இரும்புண்ட நீரி னும மீட்டற்கரிதெனக் கருதி வேங்கைமார்பன் வருநதுமாறு இவன கானப்பேர் என்னும் எயிலைக கைபபற்றினான் என்ற குறிப்பு ஐயூர் மூலங்கிழார் பாடலால அறியப்படுகின்றது. 'பாடுவாரது அறிவின் எல்லையைக் கடந்த புகழமைந்த தலைவ' எனவும் 'புலவரால் பாடப் படும் துறைகளை முடித்த வெற்றியினை யுடைய வேந்தே' எனவும் இவன் அப்புலவரால் புகழ்ந்து விளிக்கப் பெறுகின்றான. சேரமான் மாரிவெண் கோவும் சோழன் இராசசூயம் வேட்ட பெருநற் கிள்ளியும் இவனும கூடி ஒருங்கிருந்த நிலையினை ஔவையாா உவகையோடு வாழ்ததிப் பாடியுள்ளது கொண்டு ஏனையிருவரும் இவனுக்கு நண்பரென அறியலாம். இறையனார் களவியலுரையில் கூறப் பட்டுள்ள முச்சங்க வரலாற்றினால இவன் கடைச் சங்கத்தை இருத்திய பாண்டியர் நாற்பத்தொன் பதின்மருள் இறுதி வேந்தன் என்பது புலனாம். இவன் தானும புலத்துறை முற்றி அச்சங்கப் புலவ ரோடு ஒபபப் பாடிய பாக்கள் அகநானூற்றில் ஒன்றும் (26) நற்றிணையில் ஒன்றும் (98) ஆக இரண்டுள்ளன. தலைவியிடத்துத் தலைவன் கொணடிருந்த காதல் அவள் மகப் பெற்றபின் குறைந்ததையும் அதனால் ஊடல் கொண்ட அவளி டதது ஆற்றாமையே வாயிலாக அவன் வந்து தழு விய நிலையில் அவள் அவனோடு ஒன்றிச் சேர்ந்த தையும் இவன் அகப்பாட்டில் அழகுறப் பாடுகின் றான. அநநிகழ்ச்சியில் அவளது நெஞ்சின் நெகிழ் வினுக்குப் பலமுறை உழுது பண்படுத்தப்பட்டு மழையையேற்ற மண்ணின நெகிழ்வினை இவன் உவமை கூறியுள்ளதும் நயம் மிக்கதாம். தினைப் புனததிற் சென்று மேய விரும்பிய பன்றி இயந்திரம் அமைநத புழைவழியே புகும்பொழுது பல்லியடித் தலைக் கேட்டு அங்கே சென்றால் ஊறுநேருமென அஞ்சிப் பின்வாங்கித் தன் முழைப் பள்ளியிடத்தே மீணடுபோய்த் தங்குவதாகத் தன் நற்றிணைப் பாடலில விலங்கிறகும் நிமித்தம் பார்ததற பண் பினை ஏறறிப புனைநதுளளான. மதுரை உப்பூரி குடிகிழாா மகனான உருத்திர சனமனைக கொணடு அகநானூற்றைத் தொகுததவனும் இவனேயென்ப தால தமிழிலும் அதன் வாழ்விலும் இவன வைத்த ஈடுபாடு விளங்கும.

**கானம** - காடு. மாலைக்காலம் வந்த அளவில் சிறிய யாழை இரஙகற் பணணாகிய செவ்வழி என்னும் பணணிலே வாசித்துப் பேகனின் கானததை - காட்டை-பரணர் பாடினார் (புறம். 144:1-3). ஞாயிற் றின் சுடர் தின்று உலர்ந்த புல்லையுடைய கானம் தளிர்பப அதிரும் இடியோசையுடன் மழை பொழிந் தது (புறம். 160:1-3). மலையிடம் பொடியவும் கானம் வெம்பவும் கயங்கள் பலவும் உணங்கவும் கோடை நீடியது (புறம். 174:24-26). மனையிடத்து வீழ்ந்த விளாம்பழத்தை எயிற்றியின் மகனுடன் கானத்தில் வாழும் பிடியின் கன்றும் வந்து எடுக்கும் (புறம். 181:1-3). வெட்சியை யுடைய கானத்தில் வேட்டுவர் அலைத்தலால் கடமாவின் நல்லேறு புகலிடம் காணாது ஓடும் (புறம். 202:1,2). எழினி யின் செங்கோலாட்சியால் கன்றைமேவிய ஆனிரை கானத்தில் பிறிதொன்றால் ஏதமின்றித் தங்கியது (புறம். 230:1,4-6). போரின்கண் வீரன் ஒருவனுடைய உடம்பு கானத்தில் ஓடும் சிற்றியாற்றினது கரையி டத்துக் காலுற நின்று நடுக்கத்தோடு சாய்ந்த இலக் கத்தை ஒப்ப அம்பாற் சலிக்கப் பெற்று வீழ்நதது (புறம். 260:21-24). கானத்திலுள்ள ஊகம்பூ வரி களையுடைய அணிலின் வாலைப் போன்றது (புறம். 307:4,5). பறவைகள் வரிமரல் வற்றித் திரங்கிக் கிடக் கும் கானம் பிற்பட்டொழியப் பழுத்த மரங்களை நினைந்து செல்லும் (புறம். 370:10,11). கோடைக் காலத்தில் கானத்திலுள்ள வேம்பின் காய்கள் முற் றாது உலர்ந்து கெட்டன (புறம். 389:2,3). கடலும் கானமும் தம்மிடத்தே உண்டாகும் பல பொருள் களை உதவப் பிறரை நலியாது வேற்றுப் பொருள் விழையாது அரசியலை முறையே செலுத்திய பேர ரசர் வழித்தோன்றல் பல்யானைச் செல்கெழுகுட்டு வன் (பதி. 22:6-11). கானத்தில் வேல மரத்தின் பொரியரையில் பொருந்திச் சிதடிகள் ஒலிக்கும் (பதி. 58:12-14). கடவுளின் பெயரைக் கொண்ட கானம் என்று விநதாடவி குறிக்கப் பெறுகிறது (பதி. 88:2). மழை பொழுதொடு பொழியக் கானத் தில் பிணை மான் கூட்டங்கள் தத்தம் ஆணொடு கூடி இனிது சென்றன (பதி. 89:1,2). கடலிலே நீரை முகந்து சூல கொண்ட மேகங்களின் தலைப்பெய லைப் பெற்ற தண்ணறுங் கானத்திலுள்ள வெண் கடம்பின பூவாலாய மாலை புரளும மார்பினர் முருகன் (முரு. 7-11). யானை உலாவரும வழியை உடைய கானத்தில் பாடினி தங்கி வழிநடை வருத் தம் தீர்ந்து சென்றாள் (பொரு. 47-49). கானத்தி லுள்ள குமிழம் பழத்தின் நிறத்தை ஒப்பத் துவ ருட்டின கைததொழிலால் பொலிவு பெற்ற போர் வையையுடையது யாழ் (சிறு. 225,226). வெம்மை மிக்க கானத்தில் வாழும் உயிர்கள் மகிழுமாறு வானம் மழை பொழிந்தது (பெரு. 23,24). இடையன் கன்றுகளை விரும்பும் ஆனிரைகளுடன் கானத்தில் தங்கினான் (பெரு. 175,176). கானம் செழித்த செந்

நிலப் பெருவழியில் வேண்டும் பருவத்தே மழை பெய்த வரகிடத்தே இரலைமான் பிணையொடு துள்ளி விளையாடியது (முல்லை. 97-99). நெடுஞ் செழியன் பனி ஒழுகும் மலையிடத்துள்ள கானம் கடந்து பகைவரின் உள் நாடுகளில் புகுந்து அவரது அரண்களைக் கைக்கொண்டான் (மது. 148,149). நெடுஞ்செழியனின் தேவி உறங்கும் வட்டக்கட்டிலில் அகன்ற இடத்தையுடைய கானத்தில் மலர்ந்த முல்லைப் போதுடன் ஏனைய பூக்களையும் நிரைத்தனர் (நெடு. 129-131). இளைஞர் சினம் கொண்டு செருக்கி அம்பை எய்து தட்டையைப் புடைத்துக் கானமெல்லாம் கல்லென்னும் ஓசை உண்டாகும் படி ஆரவாரம் செய்தனர் (குறி. 159-161). கானத்திலுள்ள விலங்குகள் ஒலி எழுப்பவும் பறவை இனங்கள் ஆரவாரிக்கவும் மாலைக்காலம் வந்தது (குறி. 227-230). தலைவன் பொருளீட்டச் செல்லக் கருதிய கானம் திருமாவளவன் தன் பகைவர் மேல் ஓச்சிய வேலினும் வெப்பமுடையது (பட்.299, 300). பறவையினம் பழங்களைச் சொரிகின்ற கானத்திடத்தே சுற்றத்தோடு சென்று அவற்றைத் தின்ன விரையும் (மலை. 54,55). நன்னன் நாட்டின்கண்ணுள்ள மலையும் சோலையும் விலங்குகள் புகும் கானமும் உலகம் உள்ளவரை புகழுடன் அழியாமல் நிற்கும் (மலை. 69,70). மலைசார்ந்த கானத்து வழியே செல்லின், கானவன் அம்பெய்து வீழ்த்திய பன்றியைக் காணலாம் எனக் கூத்தருக்குப் பரிசில் பெற்று வந்த கூத்தன் கூறினான் (மலை. 242-247). 'களிறுகள் தம்மில் மலைந்தாற்போன்றுகாணப் படும் துறுகல்லும் மழை பெய்யும் கானமும் மிகப் பல உள' எனக் கூத்தர் அறிவுறுத்தப் பெறுகின்றனர் (மலை 384,385). கானத்தில் புலிக்கஞ்சி ஓடிய பிணையை நினைந்து கலை மான் விளிக்கும் (மலை. 404,405). மின் முதலியவற்றின் தொகுதியை உடைய மேகம் மழைத் துளிகளைச் சிதறிக் கானத்தைக் கார்ப்பருவம் செய்தது (அகம். 4:6,7). கானம் பரற் கற்களையுடைய மேட்டு நிலமாகிய வளமறாத் தன்மையுடையது (அகம். 5:15). குளங்கள் நீரறறுத் துகள்பட்டிருக்கும் வளம் தப்பிய கானத்தே தலைவர் நம்மையும் உடன் கொண்டு செல்வராயின் கை விரும்பும் முயக்கத்தை அவரும் பெறுகுவர் எனத் தலைவி தோழியிடம் கூறினாள் (அகம். 11:6, 7,10,11). பெரிய புலி வெளிப்பட்டுத் தோன்றக் கானத்தே மேலைக்காற்றினால் மூங்கில் தளர்ந்து வளைந்தது (அகம். 27:2,3). புண்ணுமிழ் குருதி சூழ இறந்து கிடந்தவரின் கண்ணைப் பறித்துக் கழுகு கானத்தில் தன் பார்ப்பினங்கட்கு உணவாகக் கொடுக்கும் (அகம். 31:6,11). முல்லை மலரின் மணத்தைக் கொண்டு காற்று வீசுதலால் கரிய கானம் கமழ்ந்தது (அகம். 43:9,10). மூங்கில் கரிந்தொழியும் கானத்தே களிற்றினை ஒத்த காளையுடன் தலைவி உடனபோக்கு மேவினாள் (அகம். 55:4-6). அச்சமுறத் தகுவதாகிய கானம் கடநது தலைவி தலைவனுடன் சென்றாள் (அகம்.63:9). நெலலியின் புளித்த காயினைக் கானத்திலுள்ள மரைமானின் கூட்டம் தின்னும் (அகம். 69:7,8). ஆய் எனபானது கானத்தின் அன்றலர்நத மலரென மணககும் நின பரந்த முலையினையுடைய மார்பினகண் துயிலும் துயிலை மறந்து தலைவன் தாழ்த்திரான என்று பிரிவாற்றாது வருந்தும் தலைவிக்குத தோழி கூறி ஆற்றுவித்தாள் (அகம். 69.18-20). எரியும் தீபரந்த பெருங் காட்டில் புகுமிடத்தே இலைகரிந்து உதிரப் பெற்ற மரமுடைய கானத்து வாழும் வாழ்க்கையையும் புலிபோலும் வலியையும் உடையவர் தொடு கழல் மறவர் (அகம். 75:4 – 6). தலைவியின் நெற்றி பசப்ப முயற்சியால் பொருள் ஈட்டுதற்கு அடைதற்கரிய கான நெறியில செல்லுதல் நன்றென எண்ணிச் சூழ்ந்தனையாயின், நீ மிகவும் கொடியை எனத் தலைவன பொருள வயிற் பிரியக் கருதிய தன் நெஞ்சிற்குக் கூறினான் (அகம். 77:1-4). வலிய களிறு கானததில் ஆளிககு அஞ்சித் தன் இனத்தைத் தன் இடத்தே கூட்டிக கொள்ளும் (அகம். 78:1-4). வேடர், இளைய பெண் யானை கானத்தில் பிளிறி யலற அதன் கன்றைப் பிரித்துக் கொண்டுவந்து மூதூரில் கள் விறகும் இடத்தில் கட்டுவர் (அகம். 83:3,4). பரவுக் கடன் பூண்ட தெய்வம் உறையும் கோயிலின்கண் கலந்து கிடக்கும் பல பூக்களைப் போலக் கானம் பெரிதும விரும்பத்தககதா யிருந்தது (அகம். 99: 8 - 10). எழினி ஏவிய தொழிலை முடிககும பொருட்டு, மிக்க எரிபரத்தலான் பாறைகள் காயநதிருக்கும் கானத்தில் போர்த்திறம் வாயந வீரர் மூனைகடந்து ஆனுடன கூடிய ஏற்றின... கொ...ர விரைந்தேகுவா (அகம. 105.10-15). தோ... உ...லை...னைக கணடு காலையில நறும... பா...ரீயித்து உதிரநது கிடததலால மணம் ... ம...னை போன்று கமழும் கானததில ந... ...லைவி வருவாள் எனக் கூறினாள (அகம.107·20-2..). கானததில சாத்தரது சோறு பொதிந்த வெளவிய பனை ஓலையாலாய குடையினைச சூறாவளி தூக்கலின் எழுந்த ஒலியினைத தன் துணையினது குரலெனக் கருதி ஆண் குரங்கு அதனை அழைக்கும் (அகம். 121: 12-15). கானத்திடத்தே மூங்கில் நெல் உதிர்வது கண்டு கலைமான் புல்லுண்டலை மறந்து தன் பிணையினை அழைக்கும் (அகம். 129:

3-5). பீலி சூட்டிய பிறங்கு நிலை நடுகல் முன் ஊன்றிய வேலும் சார்த்திய கேடகமும் அமைந்த அஞ்சத்தக்க கானம் பகைவர் போர்முனை போல் தோன்றும் (அகம். 131:11-13). நிறைசூல் கொண்ட மேகங்கள் கார் காலத்தைத் தந்து மழை தப்பாது பெய்தலால், கானம் அழகு பெற்றது (அகம். 134: 1,2). பெரிய யானைகளை உடைய ஆய்வள்ளலின் கானத்தில் தலையாறு என்னுமிடத்துள்ள மலையின் மூங்கில் போனற தோளினள் தலைவி (அகம். 152:14,21-23). அச்சம் தோன்றும் கானத்தின்கண் வன்கணாடவர் அம்பெய்திக் கொன்ற வம்பலரின் தசையை உண்ணப் பருந்தின் சேவல் தன் சுற்றத்தை அழைக்கும் (அகம். 161:2-7). மிக்க மழை பொழிந்தமையால் இன வண்டு ஆரவாரம் செய்ய முல்லை, காந்தள் முதலிய பூக்கள் மலரக் கானம் மலர் மணம் கமழ்ந்தது (அகம். 164:4-7). கானத்தி லுள்ள சூல் கொண்ட பெடை மயில் பாகற் கொடியின சிவந்த பழத்தை விரும்பி அயிர்யாற்று அடைகரையில் ஊது கொம்பென ஒலிக்கும் (அகம். 177:9-11). செல்லுதற்கரிய கானத்தைக் கடக்கத் துணியாமல் தலைவன் நெஞ்சம் தடுமாறியது (அகம். 181:1-3). தலைவன் வண்டுகள் ஒலிக்கும் மலர்களையுடைய கானம் பிற்பட அருந்தொழில் முடித்த செம்மல் உள்ளத்துடன் மனைவந்து சேர்ந்தான் (அகம். 184:5,6). யாமரங்களையுடைய வேனில் வெப்பம் வாய்ந்த மலையை யடுத்த கானம் காய்ந்தது (அகம்.187:15,16). பழங்களைக் கொண்ட பலா மரம் செறிந்த கானம் வெதும்ப, மேகம் வானிடத்திலிருந்து நீங்க வேனில் நீடியது (அகம். 189:1,2). கடல போன்ற விரிந்த கானத்தில் மாலைப் போழ்தில் கலைமான் தன் இனத்தை ஆண்குரல் தோன்ற அழைக்கும் (அகம். 199:11-13). தன் பிணவுக்காக இரைவேட்டெழுந்த ஆண் புலி அகன்ற இடத்தையுடைய கானத்தில் காட்டுப் பசு அலற அதன ஏற்றினை வலப் பக்கம் வீழக் கொன்று பாறை சிவப்ப அதன்மேல் இழுத்தேகும் (அகம். 238:2-9). 'உலர்ந்த வெள்ளெலும்பு ஒட்டகத்தின் பசியைப் போக்குதற்கு இடனான கவர்த்த வழிகளையுடைய கானத்தைக் கடந்து நீ செல்க; தலைவி தனித்திருக்க யான் வாரேன்' எனப் பொருள் கடைக்கூட்டிய தன் நெஞ்சிற்குத் தலைவன் கூறினான் (அகம். 245:17-21) அரிய கானத்தில் ஆண கரடி இருப்பையின் வெள்ளிய பூவை வெறுத்தால் செம்மண புற்றின் உச்சியைப் பெயர்க்கும் (அகம. 247:4-7). மழவர் பல பூக்களையுடைய கானத்தில நிழலில தங்கி இளைய பசுவினைக் கொன்று தினபர் (அகம். 249:11-13). மழை பெய்ததால் மரங்கள் தளிரீன்று தழைத்தன; பொழிலின்கண் நறுமலர்கள் புனையப்பட்டன போலத் தோன்றித் தேன்படச் செறிந்ததனால் கானமும் மிகவும் நல்லன ஆயின (அகம். 259:4-8). கானத்தில் இளவேனிற் பருவத்தில் பாதிரியின் ஒளி பொருந்திய மலர்கள் பூத்திருக்கும் (அகம். 261: 1, 2). இன்னாமையுடைய கானத்தின்கண் இருப்பை மரத்தின் துளையுடைய வெள்ளிய பூக்களைக் கரடிக் குட்டிகளின் பெரிய கூட்டம் கவர்ந்துண்ணும் (அகம். 275:11-14). மழை பெய்து புல் குருத்து விடும் நல்ல நெடிய கானத்தில் செந்நிறம் ஊட்டிய பஞ்சின் பிதிர் பரவியது போலச் செந்நிறமுடைய தம்பலப்பூச்சிகள் அழகுறுத்தும் (அகம். 283:12-15). மேகம் பெயலாகிய வளத்தை மறைப்பக் கானம் காய்ந்து இலைகள் இல்லாதொழிய ஏறுடை ஆனிரை பசியால் வருந்தின (அகம். 291:1-3). கற்களையுடைய நெறிகளைக் கொண்ட கானத்தில் வேங்கையை வெனற மலைபோன்ற யானை வருந்தித் தன் கொம்பில் பெரிய கையை அணைத்துக்கொண்டு ஒரு பக்கத்தே தன்பிடியோடு வதியும் (அகம். 295:4-8). தலைவன் பொருளீட்டப் புல்லி என்பானது குன்றத்தைச் சார்ந்த செல்லற்கரிய கானம் கடந்து சென்றான் (அகம். 295:13, 14). அச்சம் தரும் கானத்தில் சிறுகுடி மறவரின் ஏறுகோட் பறையொலி கேட்டு ஆண் பருந்து தன் பெரிய சிறகினை எழுப்பிப் பறந்தேகும் (அகம். 297:17-19). நீலமணிபோன்று நீர் பொதிந்த சூல் கொண்டு வானம் அதிர இடித்துப் பெய்த நீரினால் நிலம் தட்பமுற்றுக் கானம் தழைத்தது (அகம். 314:1-3). கானத்திலுள்ள விலங்குகள் செல்லும் நெறியில் யானைகளும் இயங்கும் (அகம். 318:1). வென்வேற் சேரனது கொல்லிமலை அகலிருங் கானத்தே உள்ளது (அகம். 338:13,14). கண் பொரியும் கவர்த்த நெறிகளையுடைய கானத்தில் வலிய பாறையிலுள்ள உமணர் சகடத்தின் உருளையைச் சிதைத்த நடுகல்லில் கூரிய உளியால் இயற்றப் பெற்ற கீற்றுக்கள் மறைந்த எழுத்துகள் அவ்வழியில் செல்லும் புதியவர்க்கு வேறு பொருளினவாகப் பிறழ்ந்து காணப்படும்; அங்குளள யாமர நிழலில் வெயில் களைப்பு நீங்கக் கழுதை மீதுள்ள சுமையை இறக்கி வழிப்போக்கர் தங்கிச் செல்வர் (அகம். 343: 4-14). மரங்கள் அடர்ந்த கானத்தில் மயில் கூட்டம் ஆடும் (அகம். 344:6). புற்கள் சாய்ந்து கிடக்கும் சிறு நெறி மிக்க பெருங்கானததில் தன் பிணவுக்காக யானையை வலப்பக்கத்தே வீழக் கொன்ற புலி மூரி நிமிர்ந்து புரளும்; அங்குக் களிற்றினம் நட

மாடாது (அகம். 357:4-7). நடுகற் பொருந்தி இரை
விரும்பிக் கிடந்த பல்லி ஒலித்தால் நெற்றிப்
பட்டம் அணிந்த யானையிற் செல்லும் உயர்ந்
தோராயினும் மேற்செல்லாது மீளும்படியான
கானத்திடத்தே தலைவன் சென்றான் (அகம். 387:
15-20). கானத்தில் தன்னால் விரும்பப்படும் பெண்
யானையை இழந்த களிறு உண்ணும் தழையை
மறுத்து வாடியது (அகம். 392:1-3). தலைவனின்
மலை நாட்டினின்றும் வரும் யாற்றைப் பார்த்து
'எம் தந்தையின் பல பூக்களையுடைய கானத்தில்
தங்கி இற்றைப் பொழுது இவ்விடத்தே சேர்ந்
திருந்து செல்லின், நின் செயல் ஏதேனும் கெடு
வது உண்டோ' எனத் தலைவி கேட்டாள் (அகம்.
398:19-21). மயிர்ச் சாந்தினைக் கொண்டு இருண்டு
இமைய மலையிலுள்ள கானம் போல மணம்
மிக்க கூந்தலையுடையவள் தலைவி (அகம். 399:1-3).
பொய்யாத தலைவர் தாம் குறித்த கார்ப்பருவத்து
வாராமையின் புதுப்பூங்கொன்றை மரங்களைக்
கொண்ட கானம், இதுகார்ப் பருவமென்று மலர்
களால் தெரிவிப்பினும் யான் தெளியேன் எனத்
தலைவி கூறினாள் (குறு. 21:3-5). இறந்த வழிப்
போக்கரைத் தழையால் மூடிய பதுக்கை
யானைக்கு நிழலாதற் கிடனான அரிய கானம்
கடந்து சென்ற நம் தலைவரை எண்ணி என்
தோள்கள் மெலிந்தன என்று தலைவி தோழியிடம்
கூறினாள் (குறு. 77:3-6). பெண்புறா கள்ளியின்
கிளையில் இருந்து தனிமைத் துன்பம் மிகச் சேவ
லைக் கூவும் கடத்தற்கரிய கானத்தைக் கடந்து
நெடுந்தொலைவில் தங்கும் வன்மையுடைய தலை
வர் அவ்வன்மையை எவ்வாறு அறிந்தாரோ
எனப் பிரிவாற்றாது வருந்தும் தலைவி தோழி
யிடம் கூறினாள் (குறு. 154:3-8). தலைவன் மிக்க
ஆரவாரத்தை யுடைய கானத்தில் கடமாவை
அலைத்ததால் பகற்பொழுது மங்கியது (குறு. 179:
1,2). மழை பெய்யுமுன் பொலிவற்றிருந்த காயா
மழை பெய்த பின் மயிலின் கழுத்தைப் போலப்
பொலிவுடன மலர்ந்து தோன்றும் புன்புல வைப்
பினைக் கொண்ட கானத்தில் பிணையின் நீங்கிய
இரலை மானைத் தலைவர் காண்பரோ எனத்
தலைவி தோழியை வினவினாள் (குறு. 183: 3-7).
மலையனது கானத்தில் வளர்ந்த சந்தனம் மணக்
கின்ற மார்பினை உடையவன் தலைவன் (குறு. 198:
6,7). ஓரியின் கானத்தைத் தீண்டி வீசும் காற்றுப்
போலக் கமழும் நெறிபடு கூநதலை யுடையவள்
தலைவி (குறு. 199:3-5). நள்ளியின கானத்தில்
வாழ்நத கோவலரின் பசுக்கள் பயந்த நெய் சிறப்
பானது (குறு. 210;1,2). மயிலினம் அகவும் மரங்கள்
செறிந்த கானத்தில வெள்ளை முகத்தை உடைய
கருங்குரங்கு தன் குட்டிகளுடன குளிரால் நடுங்கப்
பெருமழை பொழிந்தது (குறு. 249:1-3). அறுகம்
புல்லைப் பிணையுடன் உண்ட கலைமான் துளளும்
கானம் பிற்படும்படி தலைவன் பொருளீட்டச் சென்
றான் (குறு.256:1-4). அகன்ற இடத்தையுடைய கா
னத்தில் தன் இனத்தைப் பிரிந்த பெண்மான் காணு
மாறு கொடிச்சியின் தமையனமார் ஆண்மானை
அம்பெய்து கொனறனர் (குறு. 272:3-6). பொன்
னாலும் மணியாலும் இயன்ற அணிகளை அணிநத
தலைவியின் மார்பை நினைந்து செனறால், உகாஅ
மரக்கிளையிலேறி வழிப்போக்கரை எதிர்பார்க்கும்
வன்கண் ஆடவர்தம் நீர் வேட்கையை நார்மென்று
தணிக்கும் இன்னாத கானமும் இனியவாகும் என்று
பொருள்வயிற் பிரியக் கருதிய தலைவன் தன் நெஞ்
சிற்குக் கூறினான் (குறு. 274). தலையிற் பூச்சூடித்
தலைவர் மலைகளோடு கூடிய கானத்தைக் கடந்து
சென்றனரோ எனத் தோழியிடம் தலைவி வருந்தி
வினவினாள (குறு. 281:4-6). தலைவி மலையனது
முள்ளூர்க் கானத்தின் நறுமணம் போன்ற மணம
கமழ வந்து நள்ளிரவில் நம்மோடு ஒததவளாயி
னாள் எனத் தலைவன் தன் நெஞ்சிறகுக கூறி
னான் (குறு. 312:2-4). ஆண்மான் மடப்பிணையைத்
தழுவி மயக்கம் மிக்குக் கானத்தில பொருநதிய
புதலில் மறைந்து ஒடுங்கியது (குறு. 319:1,2). காட்
டுப்பசுவின் கன்று, வேட்டுவர் எடுப்ப அஞ்சித் தன
இனத்தினின்றும் பிரிந்து சென்று கானத்திலுள்ள
சிற்றூரில் அகப்பட்டது (குறு. 322:1-3). கானத்தில்
வளர்த்த இருப்பையின் வேனிற்காலத்து மலர்ந்த
வெள்ளிய பூக்கள் காற்று அலைக்க உதிர்நது வழி
மறையப் பரவின (குறு. 329:1-3). மூங்கில் வற்றிய
நீரில்லாத அரிய வழியில் வழிப்போக்கரைக்
கொள்ளையடித் துண்ணும் கடுங்கண் யானை
யுடைய கானத்தைக் கடந்து தலைவர் செலவாரோ
எனத் தோழி தலைவியைக் கேட்டாள் (குறு. 331:
1-5). கானவழியிலுள்ள வாகை நறுமலர் மயிலின
உச்சிக் கொண்டை போலத் தோனறும் (குறு. 347:
2-4). தலைவர் பிரிந்து செலவாராயின், கானத்தில
யானையின் கோட்டிடை முல்லைக் கொம்பிலிருநது
உதிரும் மலர்போல நின் கண்ணீர்த் துளி விழுநது
பூணக வன முலையை நனைத்தலையும் காணாரோ
எனத் தோழி தலைவியை வினவினாள் (குறு. 348).
மலையுடைக்கானத்தில் கணந்துட் பறவைகள் ஊறு
விளைக்கும் வேட்டுவ மக்களுண்மையை வழிப்
போவார்க்கு அறிவுறுத்தி அவர்தம் போக்கைத
தடுத்து மீளச் செய்யும் (குறு. 350:5-7). 'வாகையின்
நெற்று ஆரவாரிக்க மேல்காற்று அலைக்கும் கானத

தில் நாம் செல்வோமாக' எனத் தோழி தலைவிக்கு உடன் போக்கு உணர்த்தினாள் (குறு. 369). உலர்ந்த மரக்கிளைகளை முரிக்கும் வன்மையின்றி யானை தன் கையை மடித்து வருந்தும் கானமும் தலைவனொடு வரின் தலைவிக்கு இனியவாம் எனத் தோழி தலைவனிடம் கூறினாள் (குறு. 388:5-7). வல்வில் ஓரியின் மணமிக்க கானத்தில் குமிழ மரத்திலிருந்து கீழே உதிர்ந்த கனிகள் ஆங்குக் குதித்து விளையாட்டயர்கின்ற இளமானுக்கு உணவாகும் (நற். 6:7-9). யாம் செல்லும் நெறியிலுள்ள கானமெல்லாம் மாமரத்தின் அரும்பைக் கோதி மகிழும் குயில் கூவி விளையாடும் நறுந்தண் பொழிலை உடையன எனத் தலைவன் தன்னுடன் வந்த தலைவியிடம் கூறினான் (நற். 9:10-12). விடியற்காலத்து மழை பெய்த மலையினின்று கடலின் அலைபோல இழிகின்ற அருவி கானத்திடத்துச் செல்லும் (நற். 17:1 3). வானம் மிகவும் மழை பொழிந்தமையால், கற்கள் நிரமபிய கானத்தில் இலைச்சருகுகளுடன் பூங்கொத்துக்களையும் அடித்துக்கொண்டு ஓடும் யாற்றுநீர் தலைவிக்கு மருந்துமாகும் (நற். 53:6-8). குன்றங்களை இடைஇடையே கொண்ட கானத்தில் மடப்பிடியின் பசியைப் போக்கக் களிறு தொலைத்த ஓமை மரம் அருஞ்சுரம் செல்வோர்க்குத் தங்குநிழல் தந்துதவும் (நற். 137:6-9). கானம் கம்மென்று ஒலியடங்குவதாயிற்று (நற். 154:1). கானம் முழுவதையும் தீ எரிப்ப அதனிடை உள்ள மரங்களெல்லாம் அழிந்த நிழலில்லாத கொடிய சுரத்தின்கண் தலைவர் சென்றார் (நற். 177:1-3). கானம் முழுதும் வெப்பமடைந்த வறன் மிக்க கற்சுரத்தில் ஊற்றுக் குழியிலுள்ள நீரை அறமுகந்து கொண்ட களிற்றி யானை தன் பிடியை நோககி ஓடும் (நற். 186:1-4). பெருமலைப்பக்கத்தில் உள்ள கானத்தில் ஆளி என்னும் விலங்கு, புலியால் கொலலப்பட்ட களிற்றி யானையை இரையாக இழுத்துச்செல்லும் (நற்.205: 1-5). கோடை தெறுதலால் பட்டுப்போன கானத்தில் மழை பருவம் செய்தமையின் மலர்ந்த பிடவம் பூவணிந்த கூந்தலையுடைய மகளிர் கூட்டம் போன்றிருந்தது (நற். 238:1-5). கானத்திலுள்ள பள்ளமான இடத்தில் கணிச்சியால் ஆயர் குழித்த நீரை யானைக் கூட்டம் சென்று உண்ணும் (நற். 240:6-9). களாவின மணம் கமழப் பிடவம் மலர மேகம் மழை பொழிந்த போது மடப்பிணையைத் தழுவிய இரலை வேலமரத்தின் வரிநிழலில் தங்குதறகிடனானது கானம் (நற். 256:6-10). சந்தன மரக்கிளையில் பின்னிக் கிடந்த தமாலக் கொடியைத் தேன் எடுக்கும் வேடர் அறுத்துக் கொண்டு செல்லும் புது வருவாய் மிக்கது கானம் (நற். 292:1-4). களிறு உதைத்தலால் எழுந்த நீறு வேல மரம் உள்ள பழைய வழியை மறைக்கும் நடமாட்டமற்றது கானம் (நற். 302:7-10). தலைவன் தலைவியைக் காணுதற்காக அவள் வரும் கானத்திற்குப் பல நாள் சென்றான் (நற். 326:7,8). மேகம் முதற்பெயலைத் தொடங்கிய அணிமிகு கானத்தின் புறத்தே சிவந்த இந்திரகோபம் பரந்து கிடந்தன (நற். 362: 3-5). மரங்கள் நெருங்கிய இடமகன்ற கானத்தின் கண் ஞெமையின் மீதிருந்த பேராந்தை பொற் கொல்லன் தொழில் செய்வதின் எழுகின்ற ஒலி போல அலறும் (நற். 394:1,3). புலியின் ஏற்றை நெடிய புதரையுடைய கானத்தில் பிடியானை ஈன்ற கன்றினைக் கொள்ளுதற்குப் பலாமர நிழலில் பதுங்கிக் கிடக்கும் (ஐங். 216:1-4). தலைவனின் வள்ளிக் கொடி படர்ந்த அழகிய கானத்தில் மயில்கள் மகிழ்ந்தாடும் (ஐங். 250:2,3). மலைகளையும் பொலிவற்ற ஓமை மரங்களையும் புலிகள் திரிகின்ற கொடிய நெறிகளையும் உடையது கானம் (ஐங். 316:3-5). காதலர் ஞாயிற்றின் கதிர் சுட்டெரித்த பாழ்நிலத்தையுடைய மரங்கள் கரிந்து வீழும் கொடிய கானத்தைக் கடந்து போயினரோ எனத் தலைமகள் வருந்தினாள் (ஐங். 319:1-3). நிலம் காயும் கானத்தில் பருந்தின் பேடை வற்றிய தலையை யுடைய ஓமை மரத்திலிருந்து தனிமை வருத்தத்துடன் தன் சேவலை அழைக்கும் (ஐங். 321:1-3). மலை பொருந்திய கானத்தில் வாழும் பண்பு இல்லாத விலங்கினங்கள் காதலியைப் பிரிதல் கொடிது; செல்லற்க எனக் கூறித் தலைவன் செல்லுதலைத் தடுக்காமையால் அவற்றை அறனில எனத் தலைவி கூறினாள் (ஐங். 332:2-5). கானம் யானைகள் திரியும் கவர்த்த வழிகளை யுடையது (ஐங். 355:4,5). குரவம் மலர்ந்தமையாலும் மரவம் பூத்தமையாலும் கானம் அழகுற்றது (ஐங். 357:1,2). கானத்தில பொலிவற்ற முதுகுடைய (மயில) பேடை தன் சேவலை அழைத்துக் கூடி இன்புறும் பொருட்டு வேந்தனுடைய இசைக் கருவியாளர் போன்று ஒலிக்கும் (ஐங். 425:1,2). காதலர் சென்ற நெறி நீர்நிலைகள் நிரமபும்படி மேகம் மழை பொழியும் கார்ப்பருவத்து மழையை எதிர்கொள்ளும் கானமும் உடையது (ஐங். 433). கார்ப்பருவத்தைக் கொண்ட கானம் பிற்படுமாறு தேரைச் செலுத்தித் தலைவியின் மார்பை முயங்கத் தலைவர் விரைவின் வருவர் எனத் தோழி தலைவியிடம் கூறினாள் (ஐங். 465:1-4). பிடவம் மலரவும் முல்லை அரும்பவும் கார்ப்பருவத்தால் அழகு கொண்ட கானத்தைத் தலைவி கண்டால் வருந்துவள் என எண்ணிய காதலர் தாம் மேற்கொண்ட போர்ச் செயலுக்கு மேலும் செல்லாது மீண்டு

வந்தார் (ஐங். 499:1-4). உறுதிபயக்கும் உண்மை களை இடித்துக்கூறும் நண்பரைப்போல, நீ செல் லும் கானவழிகளே உனக்கு அறிவுரைகளைக் கூறா மல் கூறித்தடுக்கும் எனப் பிரிவு உணர்த்தப்பட்ட தோழி தலைவனுக்குக் கூறினாள் (கலி. 3:20-22). வேனில் வெம்மையால் உழந்து மெலிந்த களிறு கானததில பேய்ததேரை நீரெனக் கருதி ஓடி அலையும் (கலி. 7:1-3). பிடியூட்டிப் பின்னுண்ணும களிறு, மென்சிறகால் பெடை வருத்தம் போக்கும் புறவு, பிணைக்குத் தன நிழலைக் கொடுத்தளிக்கும் கலைமான உடைய கானம் சென்ற காதலர் என் நலத்தை வாட்டுநர் அல்லர் எனத் தலைவி தோழி யிடம் கூறினாள் (கலி. 11:8-20). ஏற்றையும் அவ் வேற்றை அடக்கிய காதலரையும் பாராட்டிச் சுரும் பினம் ஒலிக்கின்ற கானத்தை நாம் பாடினமாய் (திருமாலை) பரவுவோம் என ஆய்ச்சியர் கூறினர் (கலி. 106:47,48). தலைவன தலைவியைப் பார்த்து, 'அந்நாளில் மோர்விற்று மீள்கின்ற நீ செம்முல்லை நெருங்கினதோர் கானத்துச் சிற்றாற்றின அயலே நின் மாவடுப் போன்ற கண்ணால் என் நெஞ்சை நினக்கு இருப்பிடமாகக் கொண்டு என்னை அடிமைத் தொழில் கொண்டாய்; நீ கள்வி அல்லை யோ' என வினவினான் (கலி. 108:26-29). தலைவி தோழியைப் பார்த்து 'நேற்றுச் செவிலித்தாய என் கூந்தலை விரித்தாளாக, அதில் இருந்த தலைவர் தந்த பூ தாய் முன் அவள் பார்க்க வீழ்ந்து விட்டது; அவள் தீயைக் கையால் தொட்ட வரைப் போலப் புறங்கடைச் சென்றாள்; யானும் அச்சத்தால் அருகிருந்த அருங்கானத்தில் ஒளிந்து கொண்டேன்' எனக் கூறினாள் (கலி. 115:6-15). 'வானமே, என் தொடியை நெகிழ்த்த தலைவன் பிரிந்துசென்ற கானத்தை நெருப்புச் சுடாதவாறு என் கண்ணீர்க் கடலிலே நீரை மேகமாக முகந்து கொண்டு சென்று அங்கு மழையைப் பொழியா யோ' எனப் பிரிவாற்றாத தலைவி வானத்தை நோக்கி வேண்டினாள (கலி. 145:18-22). மழை வெள்ளம் பாண்டியன் தானை போல எவ்விடத் தும் சென்று வயலிற் புகுந்து கான மலைத்தரையை அழித்தது (பரி. 22:9-13).

**கானமர் செல்வி** - கொற்றவை. மேகக்கூட்டம் தவழும் ஏழிற் குன்றத்தைப் பாடிய தொல்லிசை வாய்ந்த நுண்ணிய செய்யுட்களை இயற்றிய புலவன் புகழ் மிக்க கானமர் செல்வி – கொற்றவை - அருளிய மையான் வெண்காற் புரவி எயதினான் (அகம். 345:3-7).

**கானல்** - 1. கடற்கரைச்சோலை. வண்டுகள் மொய்ப்ப மலர்ந்த தண்ணறுங் கானலிடத்து - கடற்கரைச சோலையிடத்து - முள்ளிப் பூவாற் செய்த மாலை யணிந்த மகளிர், பனை நுங்கின நீரும் கரும்பின் தீஞ் சாறும் இளநீருடன் கலநது உணடு கடலில் பாய்நது விளையாடுவர் (புறம். 24: 10-16). கானலையுடைய தொண்டி சேரனின மார்பில் அணிந்த கோதை யாலும் அசசேரனைப் புணர்ந்த மகளிர் சூடிய கோதையாலும் கழியிடத்து மலர்ந்த நெய்தற் பூவா லும் தேன் மணம் கமழும் (புறம். 48:1-4). காற்றால் கொணரப்பட்ட மரக்கலங்களை வெண்ணும் மகளிர் தங்கும் கானலில் உள்ள புன்னைப் பூ கிளைகள் கடலலையால் அலைப்புண்டன (புறம். 386:14,15). குருகு பனிக்கழியில் இரையைத துழா விக் கானலின புன்னையது கிளையில தங்கும் (பதி. 30:3-5). கடற்பரபபுக கலங்குமாறு காற்று அடித்தலால பெரிய அலைகள் இடியோசை போல முழங்குகின்ற கடலைச சேர்ந்த கானலை உடை யது குடபுலம் (பதி. 51:1-3). வயலுக்கு நீர் இறைப் பார் பாடும் ஓசைமுதலியன நீலமணி போலும் பூககள் நிறைந்த கழிமுள்ளி மிக்க மணற்குன்று களையுடைய கானலில் இருக்கும் பரதவர் மகளி ரின் குரவை ஒலியோடு கூடி ஒலித்தன (மது. 89,90, 96,97). கானல புலால் நாற்றத்தையும் மணலிடததே பூக்களையும் உடையது (பட். 94). தலைவி தலைவ னொடு பல பூக்களையுடைய கானலிடத்தே தங்கி வருதலான் ஊரில் அலர் எழுந்தது (அகம். 20:10,11). 'தூய்மை செய்யப் பெறாத முத்துககள் அரும்பி யிருக்கும் புன்னை மரஙகளையுடைய தண்ணறுங் கானலிடத்து வநது நுங்கள் மேனியின வண்ணம் எத்தகையதோ என்று வினவிச செல்லின் நின் பெருமைககுக் கேடாமோ' எனத் தோழி தலை வனை வினவினாள் (அகம். 30.12-15). மாலைப் பொழுதில் கானலை அடுத்துள்ள கழியிலுள்ள பூக்கள குவிந்தன (அகம. 40:1). இலையொடு பொலிந்த பூங்கொத்துக்கள் தண்ணறுந் தாதுக் களைச் சொரியும் புன்னை மரங்களை யுடைய அழகிய கானலிடத்தே பகலில் வருவாயாக எனத் தோழி தலைவனிடம கூறினாள் (அகம். 80:11-13). புறையாற்றின கடற்றுறை, புன்னை மரங்களை யுடைய அழகிய கானலால சூழப் பெற்றது (அகம். 100.13). தலைவியும் ஆயத்தாரும் கானலிடத்தே சிற்றில இழைத்தும் சிறுசோறு சமைத்தும் விளையாடினர் (அகம. 110:5-7). நெய் தல் மலர் மாலைப்பொழுதில் இதழ குவிய, விடிய லில் செந்தியின் இதழ விரியக் கள் நாறும் குவ ளையுடன் தட்பம் உற மலருகின்ற கழியையும் கானலையும காணுநதோறும் தலைவி பலவும்

புலந்து தலைவர் வாராரோ எனக் கூறி வருந்தி னாள் (அகம். 150:8-13). கானலில், நிறைசூலுற்ற யாமை அடுப்பங் கொடியை இழுத்து மண ' மேட் டின பக்கததே சேர்த்து அதனகண் மறைய ஈன்று புதைத்த புலால் நாறும் முட்டையை ஆண் யாமை அம்முட்டையினின்று குஞ்சு வெளிப்படும் வரை பாதுகாததிருக்கும் (அகம். 160: 3-8). கானலும் சென்று தூது கூறாது; கழியும் இயம்பாது; புன் னையும் மொழியாது; யானுற்ற துயரினை நீயே தலைவன்பாற் சென்று சொல்லல வேண்டும் எனத் தலைவி நண்டிடம் புலந்து கூறினாள் (அகம். 170: 1,2,7,8). தலைவி ஆயத்தாரோடு திரண்ட மணல் மேட்டில் ஏறி மலர் நெருங்கிய கானலில் வண்டல் அயர்ந்தனள் (அகம். 180:2,3). இழும் எனனும் ஒலி யையுடைய கானலிடத்தே தலைவன் தன் புரவி யோடு வந்து மயங்கிய மாலைப்பொழுதில் தங்கி யதும் இலன; தலைவியும் அவனைத் தன் மழைக் கண்ணால் நோக்கினாளும் அல்லள்; அங்ஙனமிருப் பவும் ஊர் அலர் கூறியது (அகம். 190:3-5,15-17). சாய்க்கானத்திலுள்ள அழகிய குளிர்நத மூங்கிலை ஒக்கும் எனக் கானலிடத்தே ஆயத்தார் தலைவி யின் தோளைப் பாராட்டினர் (அகம். 220: 18-20). நாரை, நீலமணி போலும் நெய்தற் பூக்களை யுடைய கழியினின்று பறந்ததால கானல் தனிமை யுற்றது (அகம். 240:2-4). அழகிய வலைகளை யுடைய பரதவரது கானலஞ் சிறுகுடியிலுள்ள பெண்டிர் அலர் தூற்றுகையினாலே தலைவி உள்ளம் கலங் கினாள (அகம. 250: 11,12). தாழைகளை யுடைய கானலில் நாரையினங்கள் ஒலித்தன (அகம். 260:3). மகளிர் வண்டற் பாவையை நீர் உண்ணும் துறை யில் கொணர்ந்து வைத்துக் குரவைக் கூத்தாடும் கடற்கரைக் கானல் சூழ்ந்தது வாணனது சிறுகுடி (அகம். 269:19-22). கழியைச் சார்நத புன்னையின் மிக்க பூக்களையுடைய கானலின் தலைவன தமிய னாய் வந்து தலைவியைக் கூடுதற்கு முன்னும் அவள் கண்கள் அழகிய நிறத்தினை நீங்கிப் பொன் போலும் பசலை நிறங்கொண்டன (அகம். 290.8-16). தமையன் கொணடு வந்த மீனகளைச் செல்வத் தங்கையர் தெருக்களில விலை கூறி விற்கும் கானல சூழநத சீறூர்களையுடைய கடற்கரைக் குரியவன் தலைவன (அகம. 320:2-5). தலைவன் தலைவியோடு கழியிலுள்ள பூக்களைப் பறித்தும் கானலில தங்கியும் வண்டறபாவை செய்தும் விளையாடினான (அகம். 330: 1.2). பவத்திரி என் னும் ஊர் பல பூக்களையுடைய கானலிடத்தது (அகம். 340:7). கடல்கெழு செல்வி கரையில் தனித்து நிற்பது போல நீ இக்கானலில் நிற்க, யான் வெறி யாட்டம் மேவிய மகள் போல என் பொலிந்த அழகினைத் துறந்து ஆடுமகள் போலப் பெயர் தல் ஆற்றேன்; இவ்வூர் அலர் கூறினும் கூறுக எனத் தோழி தலைவியிடம் கூறினாள் (அகம். 370: 12-16). தலைவனுடன விரும்பிக் கானலில் சென று தங்கிய நம் களவொழுக்கம் நீங்கும்படி நல்வினை யால் தலைவன் மலர் சூடி வருதலைக் கண்ட அழுங்கல் ஊர் அலரினை விடுத்துப் புதிய தன்மை யினை உடையது ஆகினறது; இது பெரிதும் நகை யினை விளைவிபபதாகும என்று தோழி தலைவி யிடம் கூறினாள் (அகம். 400:1-4,22-26). நிலவும் அதனோடு சேர்ந்த இருளும் போலப் புலால் நாற்றத்தையுடைய கடலும் அதன் கரையிலுள்ள கானலும தோனறின (குறு 81:5,6). யான இவ்வி டத்துளளேன்; என நலன அமையாத வருத்தத தோடு கானலிடத்தது; தலைவன் தன ஊரிடத் துள்ளான் ; எம் நட்பு அலராகிப் பொதுவிடததில பரவியுள்ளது எனத் தலைவி தோழியிடம் கூறி னாள் (குறு. 97). சிற்றூர், கானலஞ் சேர்ப்பனது கொடுமையை நினைத்து வருந்தி நடுயாமத்தில துஞ்சாது உறைவாரை ஏனெனறு வினவாத துயில கின்ற மக்களை உடையது எனத் தலைவி தோழி யிடம் கூறினாள (குறு. 145). (இரவு வர) கானல் மயங்கியது (குறு. 177:1). பரதவர் மகளது கண் வலை ஆணடுச் செல்வோரை அகப்படுக்கும் கானலிடதது என் நெஞ்சம் இதற்கு இது மாட்சியுடையது என்று ஆராயாமல் அக்கண் வலையில் பட்டு அவ்விடததே தங்கியது எனத் தலைவன் பாங்கனிடம் கூறினான் (குறு. 184:3-7). தேரில்வந்த தலைவன மீண்டு சென்ற கானலி லுள்ள இடம் தேருருளையின் வாள்முகம் துணித் தலினால் இதழ் துணிக்கப்பட்ட கூழை நெய்தலை உடையது எனத் தோழி தலைவியிடம் கூறினாள் (குறு. 227). தாழையின் அரும்பு நாரைகள் கோது கின்ற சிறகைப் போல விரிந்து மலர்கின்ற கான லைப் பொருந்திய சிற்றூரின் முனறிலில் கடல் அலைகள் வந்து மீளும் (குறு. 228:1-4). தலைவனின் கொடுமை பலலோர் அறியப் பரந்து வெளிப் படின் அது கடற்கரைக் கானலில் விளையாடும் ஆயத்தார் பாராட்டிய என் நலத்தை நான் இழந் ததைக் காட்டிலும் இன்னாமையைத் தரும் எனத் தலைவி தோழியிடம் கூறினாள் (குறு.245). கான லில் உள்ள அடியிடம் புதையும்படி மேல்காற்றுக் கொணர்ந்து இட்ட மணற்குவியல் பரவுதலின் நெடிய பனைமரங்கள் குறியவாயின (குறு. 248: 3-6). தலைவன தலைவியொடு கடலாடியும் கான லில் தங்கியும் ஆயமொடு குரவை அயர்ந்தும் அய

லாரைப் போல விரைந்து வந்து தலைவியைத் தழுவீச் சென்றதால் அலரெழுந்தது (குறு. 294:1-4). கடலின் அலை அளவளாவுகினறு, பறவைகள் ஒலிக்கின்ற கானலில் பூங்கொத்துக்கள் மலர்ந்த புன்னை வளர்ந்த மணல் மேட்டிலுள்ள நிழலில் தலைவி தலைவனைத் தலைப்பெய்தாள் (குறு. 299:1-4). மலர்கள் நெருங்கிய கானலில் பரதவர் சுறாவினை எறியக் கரையி லிருந்த அன்னங்களின் கூட்டம் இரிந்தோடியது (குறு. 304:4-6). மா மரத்தின் தாதுகள் பொருந்திய மலரினிடத்து வண்டுகள் பல ஒருங்கே வீழதலைச் செய்யும் கானலை உடையவன் தண்கடற் சேர்ப்பன் (குறு. 306:4-6). பகல் நீங்கப் புள்ளும் புலம்பின; பூவும் கூம்பின; கானலும் தனிமைத் துன்பமுடையது (குறு. 310:1,2). கடலாடு மகளிர் கானலில் இழைத்த சிற்றிலில் தலைவி தலைவனைக் கூடினாள் (குறு. 326:2,3). அலைகளின் நீர்த்துளிகள் காக்கைக் கூட்டத்தின் ஈரமாகிய புறத்தை நனைக்க அவை அக்குளிரை வெறுத்து உறையும் பல மலர்களை யுடைய கானலை உடையவன் விரிநீர்ச் சேர்ப்பன் (குறு.334: 1-4). தண்ணந்துறைவனாகிய தலைவன் வெண் மணல் பரவிய மலர்கள் செறிந்த கானலை உடையவன் (குறு. 386:1,2). கானலஞ் சிறுகுடியிலுள்ள பரதவர் புன்னை நிழற் கீழிருந்து, கடலிற் செல்லுதற்குப் பதம் நோக்கி வலையைப் புலத்துவர் (நற். 4:1-4). பூ மணல் அடைகரையில் தேருருளையில் நண்டு அகப்படாதவாறு வலவன் ஓம்பித் தேரைச் செலுத்துமாறு இரவில கானலிடத்தே நிலவு வெளிப்பட்டது (நற். 11:6-9). பொறையன், மூவனை வென்று அவன பற்களைப் பிடுங்கிக் கொணர்ந்து வைத்து இழைத்த வாயிற்கதவினையுடைய கானல் பொருந்திய தொண்டி நகர்க்குத் தலைவன் (நற். 18:2-5). தலைவியும் தோழியும் வண்டினம் ஒப்பித் திரை கொழித்த வெண் மண லடுத்த கழிகரை சூழ்ந்த கானலில் விளையாடினர் (நற். 27:2-4). தலைவி கானலிற் பொருந்திய சிறுகுடியில் இருக்கின்ற கடலும் கலங்குமாறு அதன மேற்சென்று வலைவீசி மீன் பிடிக்கும் பரதவர்க்கு மகள் (நற். 45:1-3). களவொழுக்கம் கானலில் விளையாட்டயர்கின்ற தோழியர் கூட்டம் அறியினும் என்ன ஏதம் வருமோ எனத் தலைவன் அஞ்சுவான் (நற். 72:8, 9). போது அவிழ்கின்ற புதிய மணற்பரப்பை யுடைய கானலில் உள்ள புன்னையின் தாது கீழைக் காற்று வந்து மோதுந்தோறும் குருகின் முதுகில் உதிர்ந்து அதனை மறைக்கும் (நற்.74:6-9). புன்னையின் மலர் உதிர்ந்ததனாலே தேன் மணம் கமழும் புலவினையுடைய கானலில் உள்ள மணலில நடந்து கல்லுறச் சிவந்த நின் மெல்லடிகள் வருந்தா வண்ணம், ஆலமர நிழலில் தங்கி இளைப்பாறி வருந்தாது செல்க எனத் தலைவன் தலைவியிடம் கூறினான் (நற். 76:3-9). பொன் போன்ற தாதினைப் புன்னை தூவத் தாழையின் மணம் கமழக் கானல் திகழும் (நற். 78:3,4). தலைவனின் சிறுகுடியிலுள்ள பரதவர் மகிழும் மகிழ்ச்சியையும் பெருந்தண் கானலையும் நினைத்த பொழுதிலே தலைவிக்குத் தலைவனுடன் தான் இனபுற்றதாகக் கண்ட கனவு மறைந்தது (நற். 87:8,9). நாரை சிறுமீன்களைப் பிடித்துத் தன் பிள்ளையின் வாயிற்படக் கொடுக்கும் கானலம் படப்பையையுடைய சிறுகுடி பொலியத் தலைவன் பகற் பொழுதில் (வரைவு வேண்டி) தேரில் வந்தான் (நற். 91:4-12). நெய்தலின் ஒன்றோடொன்று மாறுபடத் தொடுத்த நெறிப்பையுடைய தழையை அழகுபெற எனக்கு அணிவித்துத் தமியராய்ச் சென்றுவிட்ட கானல் இதுவே எனத் தலைவி தோழியிடம் கூறினாள் (நற். 96:7-9). பெருங்கடல் முழங்கக் கானல மலர மாலைப்பொழுது வந்தது (நற். 117:1,7). கழி மீன் அருந்திய குருகினம் பனைமடலில் கட்டிய குடம்பைகளில் நெருங்கி யுறையும் பனைமரஙகள் உயர்ந்த வெண்மணற் கொல்லையைச சூழ்ந்த கானலிடத்துத் தலைவி ஆயத்தோடு சென்று காலையில் கொணர்ந்த நெய்தல் தழையை அணிபெறச் சூடினாள் (நற். 123:1-7). தலைவி ஆயத்தோடு முன் விளையாடிய பாவை விளையாட்டு அயர்தற்குத் தலைவன் அல்லாமலும் கானலில் விளையாடச் செல்வோம் என்றாள் எனப் பாணனிடம் தோழி வாயில் மறுத்துக் கூறினாள் (நற். 127:6-9). கானலில் உள்ள புதுமலரைத் தீண்டிய, பிடரி மயிரையுடைய குதிரை பூண்ட நெடுந்தேரைச் செலுத்தி நடுஇரவில் வரும் தலைவனொடு தலைவி உடன் போக்கினை மேற்கொண்டாள் (நற். 149:5-9). விரிந்த பூவையுடைய கானலில் ஒரு பக்கத்தே நின்றோய்; நின்னைத் தொழுது வினவுகின்றேம்; நீதான் ஒரு தெய்வமகளோ; பிறளொரு மடந்தையோ; கூறுக எனத் தலைவன் தலைவியை வினவினான் (நற். 155:3-8). பெருங்கடல் பக்கத்ததாகிய கானலில் புன்னையின் அருகேயுள்ள தாழைமடல் ஞாயிற்றினது பாடு சாயகின்ற அலகு போலத் தோன்றும் (நற். 163:7-12). கானல் புதிய ஞாழல் மலரோடு புன்னை மலரும் உதிர்ந்து பரவிய மணத்தையுடையது (நற். 167:8,9). பலவாய மலர்களையுடைய கானல் மாலைப்பொழுதில் தன் தோற்றப் பொலிவு அழிந்து காணப்பட்டது (நற். 187:3). நீலமணி போன்ற கரிய கழியிடத்துள்ள

நறும் பூங் கானலில தலைவன் வந்து அணையாது வறிதே பெயர்தல தலைவிக்கு இல்வயிற் செறித்தலி லும் துன்பமுடையதாகும் (நற்.191:10-12). தொண்டி கல்லென ஒலிக்கின்ற புள்ளினங்களுடைய கானல் சூழப்பெற்றது (நற். 195:5). பூவையுடைய தாழை எறிகின்ற அலை மோதுதலால் பொங்கித் தாது உதிர்நது சிறுகுடிப பாக்கததுத் தெருவில் எழு கின்ற புலவு நாறறததைப் போக்கும் மணம் கமழ் கின்ற கானலில இனியநத காதலரது கேண்மை ஒருநாள் பிரியினும் தலைவிக்கு உயிருய்தல் அரிதா கும் (நற். 203:4-8). தலைவிக்குத் தலையளி செய்தல் வேண்டித் தலைவன் பகற்பொழுதில் பலவாய மலர் களையுடைய கானலுக்கு வந்தான் (நற். 223:2,3). புன்னையங் கானலிடத்துத் தலைவன் குறித்த குறிவயின வந்த தலைவிக்கு அவன் செய்த தலையளி அலராகியது (நற். 227:3,4,9). தலை வன், ஊக்குருவியின் முட்டையை உடைத்தாற் போன்ற பெரிய அரும்பு மலர்ந்த கருந்தாள் புன்னையுடைய கானலை உடையவன் (நற். 231: 6-8). தாழைப்பூ புன்னை மலரொடு சேர்ந்து மணங்கமழும பலவாகிய மலர்களை உடைய கான லிடததே தலைவன குறியிடத்தில் பகற் பொழுதில் வந்து தலைவியின் நலம் நுகர்ந்து பின அவள் மேனியின அழகு சிதையப் பெயர்ந்தான் (நற். 235: 2-5). தலைவன் தலைவியால் தான் அணங்குற்ற மையைக கூறிக் கானலில் வண்டுகள் சூழ்ந்தொலிக் கின்ற தலைவியின் ஒண்ணுதலை நோககித் தொழுது நின்றான் (நற. 245: 10-12). உப்புப் பாத்தியிலே கடலின் நீரைக் கொணர்ந்து பாய்ச்சி விளைவிததுக் கொள்வதன்றி மழையை விரும்பாத வேளாண்மையுடையது கானலஞ் சிறுகுடி (நற்.254: 10-12). தலைவியின் இற்செறிததலைத தலைவனுக்கு உணர்த்தத் தோழி பலவாய மலர்களை யுடைய கானலிடததே பகறபொழுதில் குறியிடம் வந்தாள் (நற. 258:1,2). தலைவனோடு கூட்டிய இனிய விருப்பத்தை யுடைய கானலில் தலைவியினறித் தனியே வருதல் தனக்கு மிகவும் துன்பமுடைத்து எனத தோழி கூறினாள் (நற.267: 5-7). நள்ளிரவில் மலர்விரிநத கானலில் நாம் புணர்கின்ற குறியிடத்து வந்து நறும பொழிற்கணணே நம்மைக காணாது தலைவன படும் அலலலை நாம் சிறிது காணப் புன்னை மரத்தடியில் மறைவோம்; வருக எனத் தோழி தலைவியை அழைததாள் (நற்.307:6-10). நம் மூர் எல்லா வளனும் உடையது; துறையும் இனிமை யுடையது; ஆனால காதலரின தேரொலி கேட்டல் அரிதானமையின நம்மூர்க்கானலுக்கு அஃது ஒன்றே பழியுடையதாயிருக்கின்றது எனத் தோழி தலைவி யிடம் கூறினாள் (நற். 311). நடுஇரவில், ஊதைக் காற்று மகரந்தத்தைக் கிண்டுகின்ற கானல் பொலி விழந்து காணப்பட்டது (நற். 319:2, 6). தண்ணந் துறைவன் அரும்புகள் மலர்கின்ற புன்னை மரங்கள் ஓங்கிய கானலையுடையவன் (நற். 327:7-9). பரதவர் உவர்நிலத்து விளைகின்ற உப்பினை உமணர் வரு கின்ற காலம் நோக்கிக் கானலிலே குவடாகக குவித்து வைத்திருப்பர் (நற்.331:1-3). கழிநீர் சூழ்ந்த பலவாய அழகிய கானலில் உள்ள தாழையின் கூம் பிய அரும்புகள் மலர்ந்து மணம் பரப்பும் (நற். 335: 3-6). வேலி சூழ்ந்த கானலிடத்தே வண்டுகள் உண் ணுகின்ற நறுமலர் உதிர்ந்து நுண்ணியதாகக் கோ லஞ் செய்தது (நற். 342.7,8). மிக்க காற்று வீசுதலி னால் கானலில் உள்ள கண்டல் மரத்திலிருந்து கழன்று வீழுகின்ற காய கழியின உள்ளே விழுநது மோதுதலின ஆம்பலின் அரும்பு மலர்ந்தது (நற்.345: 1-5). கானலிடத்துள்ள பனையினின்றும் வீழ்ந்த வற்றிய ஓலையை வேலியாக மறைபடக் கட்டிய கானலை அடுத்த வெண்மணலைஉடையது முன்றில் (நற்.354:1-4).கானலில் உள்ள பனையின் தேனுடைய பழம் மூக்கு இற்றுக கழியிலுள்ள நெய்தல் வருந்தச் சேற்றில் புதையும்படி வீழ்ந்ததனால் எழுந்த ஓசைக்கஞ்சி நாரையினம் இரிநதோடியது (நற். 372: 2-5). புன்னையினது நறுநதாது உதிரும்படி அதன் கிளைமீது வைகிய நாரையினம் இரைவேண் டிப் பெயர்ந்து உலாவுதற் கிடனாயது பலமலர் களையுடைய கானல் (நற்.375:1-3). மாலைப்பொழு தில் கானல் சூழ்ந்த கழியிடத்து நீர் வெள்ளமாகிப பெருகியது! (நற். 382.1). பரதவர் கடலிலே பிடித்த மீன்களை விடியற்காலையில் கொண்டு வந்து கான லில் குவித்துப் புன்னை நிழலில் தங்கித் தேறலைச் சுற்றத்துடன மாந்தி மகிழ்வர் (நற். 388:4-9). தலை வர் செம்மாப்புற்ற உள்ளத்துடனே முன்பு வந்து நின்னை முயங்கி அகன்ற கானலிடத்துள்ள குறியை இப்பொழுது வந்து கண்டு நின்று அழிகின்றனர் போலும் என்று தோழி தலைவியிடம் கூறினாள் (நற். 392:8,9). அரும்பு நிறைந்த புன்னை மரங்களை யுடையது கானல் (ஐங். 132:1,2). தலைவன கானலந் துறைவன் (ஐங. 136.3). தலைவன் கானலையுடைய அழகிய கடற்றுறையினை யுடையவன் (ஐங். 152: 3,4). வெள்ளாங்குருகின் பார்ப்பு இறந்ததென்று அதனைக் காண்பதற்குச் சென்ற மெல்லிய நடை யினையுடைய நாரை கானலில் தங்கியது (ஐங். 154: 1-3). மீனைத் தின்னும் கொக்கு நெயதல நிலத் தின் கழியிலுள்ள நெய்தலில் தங்குதலை ஒழித்துக் கானலில் சென்று தங்கியது (ஐங. 184:1,2). தலைவி கானலில உள்ள ஞாழல் மரத்தினது அழகுடைய

இளந்தளிரை அணிந்திருந்தாள் (ஐங். 191:3). ஆய மகளிர் விளையாடும் மலர்கள் கட்டவிழ்ந்து மலர்ந்த கானலிடத்தே தலைவன் வந்து, 'இறங்கி ஆடுதற்குரிய குறுந்துறை எது' எனத் தலைவி தோழியரிடம் வினவினான் (ஐங். 198). புன்னையின் நறுமலர் தோறும் சுரும்பினம் ஆர்க்கும் ஓசை யோடு தும்பிகளும் ஒருங்கியைந்து பாட இரண்டும் சேர்நது இமமெனும ஓசைபட ஒலிக்க, பெரிய கடலும் ஒலியவிந்து உறக்கத்தைக் கொள்ளும் கங் குலில் வண்டு ஒலிக்கின்ற கானலிடத்தே தலைவ னைத் தேடிச் சென்ற மடநெஞ்சே, அவனைக் காணவும் பெற்றாயோ எனத் தலைவி தன்னெஞ் சினை நோக்கி அழிந்து கூறினாள் (கலி. 123: 1-8). தலைவி இராப்பொழுதில் குருகுகள் ஒலிக்கு மிடத்து அவ்வோசையைத் தலைவனின் திண்டேர் மணியோசை எனத் துணிவாள்; பின்பு அவ் வோசை அடங்கி ஆரவாரியாதிருக்கக் கண்டு அவ் வொலி கானலிடத்துள்ள பறவைகள் ஒலியென்று உணர்ந்து தனிமையால் வருந்துவாள் (கலி. 126: 6-9). தலைவி எறிகின்ற திரையொலிக்கின்ற கான லில் தலைவனின் திண்டேர் இன்ன காலத்தே வரும் என்னும் குறிப்பின்றிப் பலநாளும் வருங் காலத்தை மனத்தாலே நோக்கி எதிர்கொண்டாள் (கலி. 127: 10,11). வாடைக்காற்று அசைக்கையி னாலே வளைந்த தாழையின் கொம்பிலிருந்து நாரை தலைவியின் தோள்துறந்து அருளாத தலை வனைப் போலத் தலைவியின் துயரை அறியாது, அளிக்காது, வருநதாது இரவில் கூவும் கானலை உடையவன் தலைவன் (கலி. 128:1-6). கனவில் வந்த கானலஞ் சேர்ப்பன் நனவில் வருதலும் உண் டென்று கருதி எனது அரும்பெறல் உயிர் போகாது நினறது எனத் தலைவி தோழி யிடம் கூறினாள் (கலி. 128: 24 - 26). கான லிடத்துக் கமழ்கின்ற ஞாழற்பூவின் நிறத்தைப் போலத் தலைவியின மேனி பசபபுற்றது (கலி. 131: 19,20). கழிமுள்ளி தில்லையோடே சேரச் சூழ்நத கானலிடத்துத் திரையிட்ட மணல் மேட்டில் தாழைப்பூ மலர்ந்தவை போல் பறவைகள் தங்கின (கலி. 133:1-5). நீண்ட இலையினை யுடைய தாழை நிற்கின்ற சிவந்த மணலையுடைய கானல தோறும் ஓடிச்சென்று தேடுவேன் எனத் தலைவன் பிரிவால வருத்தமுற்ற தலைவி புலம்பிக் கூறினாள் (கலி. 144: 27,28). மாலைப்பொழுதில் கானல், பறவைகள் முதலியவின்றித் தனிமையுற்றது (கலி. 145:38). குல வரைகள் சிலவற்றில், கடலும் கானலும் போல வேறாகிய நிறத்தினையும் சொல்லும் பொருளும் போல வேறுபடாத தொழிலினையு முடைய மாயோனும் பலதேவனும் தங்கியுள்ள இருங்குன்றம் சிறந்தது (பரி. 15:10-14).

2. கடறகரை. தொண்டி நிலாப்போன்ற மணலை யுடைய அகனற கானலை - கடறகரையை - உடை யது (புறம. 17:11,13). கானலிடத் துள்ள கழியின் நீரால் விளைந்த உப்பை முகந்து கொண்டு சகடம மலைநாட்டை நோக்கிச் செல்லும் (புறம. 60:6-8). கடல் பரந்து எற்றிப் பொருதலான் அலைநீரை யுடைய கானல் வெண்மணலிடதது நினற தாழை அன்னம் போலப் பூத்தது (சிறு. 146,150). இளா மரக்கா நிலவுபோலும் மணலையுடைய கானலில் குடமுழாப போலும காயையுடைய தாழையை வேலியாகவுடையது (மது. 114,115). கானலில் உளள வண்டாழ்ங்குருகின பெருநதொகுதி பகைவரைக கொன்ற வீரரது முழக்கததினைக் கேட்டஞ்சும் (குறு. 34:4,5). பனையின உச்சியிலுள்ள மடல குருத்தோடு மறையக் காற்றுக் கூட்டிய வெண்மணற் குவியலாகிய தொகுதியைக் கொணட சிகரத்தை உடைய வருத்து கினற கானலில கடல்வீசிய கருமணற் சேறறை யுடைய அருவியால் கூநதலிடததே பெய்யப்பட்ட எக்கராகிய குவியல் உலரும முன்பே இவ்வூரில அலர் எழுநதது எனத் தோழி தலைவியிடம கூறினாள் (குறு. 372). நாரைகள் ஒலிககினற தண்கமழ் கான லில உள்ள மலர் நிறைநத சோலையிலுள்ள மலர் களைக கலங்கசசெய்து கடல அலைகள உடைநது செல்லும் (குறு. 381:4-6). இரை விரும்பிக கடுஞ்சூலி னால் இயங்காது வருந்திக கானலை அடையாமல கழனியில தஙகிய நாரைப பேடைக்கு ஆணநாரை கடல்மீனைக கொணடு போயக கொடுககும் (நற். 263:4-7).

**கானலம் பெருந்துறை** - சோலை சூழ்ந்த கடற்றுறை. ஆடுகோட்பாட்டுச் சேரலாதன மணம் வீசுகின்ற தாழைகள் பொருநதிய கானலம் பெருந்துறையை- சோலைசூழ்ந்த கடற்றுறையை - உடைய தண்ணிய கடற்பக்கததைக் கொண்ட நன்னாட்டுக்குப்பொரு நன் (பதி. 55:5,6). பொனவீ ஞாழலொடு புனனைப பூக்கள் உதிர்ந்து அழகு செயயும் கானலம் பெருந் துறைகளில் விழாவிற்கு அணி செய்யும் மகளிர் கழ னியிலுள்ள நெய்தற்பூக்களைத் தங்கள தழையுடை அழகு பெறச் சோப்பர் (அகம். 70:9-12). வெள்ளிய தலையை யுடைய கடல் மகளிர் விளையாடும் வண் டல் மனையினை அழிக்கும் கானலம் பெருநதுறை யிடத்துச் சிலராலே அறியப்பட்ட காதற்புணர்ச்சி அலராகி எங்கும் பரவத் தாய் தலைவியை இற் செறித்தாள் (அகம். 90: 1-5). திததன் வெளியனின ஒலிக்கும் நீர்ப்பரப்பினையுடைய கானலம் பெருந

துறையிடத்தே பொன்னைக் கொண்டு வரும் மரக் கலத்தை இறாமீன் கூட்டம் சிதையுமாறு தாக்கும் (அகம். 152: 5-8). நடுநாள் இரவில் தலைவியின் பணைத்தோளை நினைத்துத் திமிலில் வந்த தலைவன் அவனூர்க் கானலம் பெருந்துறையின் அழகினைப் பாராட்டி அமையாது புகழ்ந்தனன் (அகம். 210: 6–10). சிவந்த இறாமீன் கலக்கிய நுரையுடன் கூடிய் திவலை பொருந்திய அலைகள் புன்னையின் வளைந்த கிளைகளில் பொருந்தும் கானலம் பெருந்துறைய நோக்கிய தலைவி குட்டுவன் கழுமலத் தன்ன தன் மேனியின் அழகு கெடத் துஞ்சாக் கண்ணளாகி மனம் கலங்கினாள் (அகம். 270:5-11). பரதவன் விரிகடலில் கொண்ட திரள் முத்துக்களை வண்டுகள் ஒலிக்கும் அகன்ற கரையிடத்தே பகுத்துக் கொள்ளும் கானலம் பெருந்துறையினையுடையவன் (அகம். 280:11-14). நாட்காலையில் மீன்களை முகந்து கொண்ட பரதவர் பறியால் கொண்ட மீனினை யுடையராகி அவற்றை மணலிடத்தே புலரும்படி பரப்ப அம்மீன்களைத் தின்னும் குருகுகளை உடைய கானலம் பெருந்துறை தண பொழிலுடையது (அகம். 300: 1-5). மீனை உண்ணும் கொக்குகளை யுடைய கானலம் பெருந்துறையிடத்துள்ள தாழையைக் கடல் அலைகள் அலைத்தன (குறு. 163: 3, 4). முதலையேற்றை வழியினிடத்தே பிறர் செல்லுவதை நீக்கும் கானலம் பெருந்துறையிடத்தே திரளாகிய மீன்களையுடைய கரிய கழியை நீந்திக் கடந்து தலைவியைக் காண்பதற்குத் தலைவன் வந்தான் (குறு. 324:1-4). நண்டுகளோடு பெயர்ந்தேகும் அலைகள் நெருங்கிய கடலில் பெரிய மீனைப் பிடிக்கும் சிறுகுடிப் பரதவர் மரக்கலங்களில் ஒளிகாட்ட இரவில் இடப்பட்ட விளக்கம் முதிராத இளஞாயிற்றின் எதிரே தோன்றிய ஒளிக்கு ஒப்பாகும் கானலம் பெருந்துறையினை யுடையவன் தலைவன் (நற். 219: 5-9). வெள்ளாங்குருகின் பார்ப்பு இறந்ததெனக் காணச் சென்ற நாரை மீண்டும் வந்து கானலம் பெருந்துறையிடத்துத் தன் துணையொடு சுற்றித் திரியும் (ஐங். 158: 1-3). கானலம் பெருந்துறையின் அலைகள் பாயும் வானுயர் நெடுமணற் குன்றில் ஏறி நின்று செறிவளை நெகிழ்த்த தலைவனது எறிகடல் நாட்டினைக் காண்குவம்; வருவாயாக எனத் தோழி தலைவியை அழைத்தாள் (ஐங். 199).

**கானவர்** – காட்டு நில மக்கள். சுடப்பட்டுக் கரிந்த புனத்தை மயங்க உழுத கொல்லைக்கண் கானவர் ஐவன நெல்லோடு தினையை வித்துவர் (புறம். 159: 15-18). யானை கொணர்ந்த உலர்ந்த மரத்து விறகினால் கானவர் மூட்டிய எரியாகிய விளக்கின ஒளியையுடைய அணங்குடைய முற்றத்தில் பூதபாண்டியன்தேவி பெருங்கோப் பெண்டு தீப்பாய்ந்தனள் (புறம். 247: 1-7). கொடிய தொழிலையுடைய வலிய வில்லால் கொல்லுதலைச் செய்த கானவர் மூங்கிலிடத்தே யிருந்து முற்றிய தேனாற் செய்த கள்ளின் தெளிவைத் தம் குன்றகச் சிறுகுடியிலிருக்கும் சுற்றத்தினருடன் உண்டு மகிழ்ந்து தொண்டகச் சிறுபறையின் தாளத்திற்கேற்பக் குரவையாடுவர் (முரு. 194-197). முல்லை நிலத்து வாழும் கானவர் மருதப்பண் பாடினர் (பொரு.220). அரிய பாலை நிலத்தில் கடுங்கண் கானவர் இராவேட்டை ஒழிந்தனராயின் மறுநாள் பகலில் நாய்களுடனே சென்று காட்டிலே வலைகளை மாட்டிப் பசுந் தூறுகளினின்றும் குறுமுயல்களை ஓட்டிவளைத்துப் பிடித்து உண்பர் (பெரு. 111-117). நெடுஞ்செழியனது பாண்டி நாட்டில் ஒருபக்கத்தே எழும் அவரையின தளிரை மேயும் ஆமாவை ஓட்டும் கானவருடைய பூசல் உட்படப் பல ஆரவாரங்களும் சிலம்பகத்தில் மாறி மாறி ஒலிக்கும் குறிஞ்சி சான்ற மலை தழுவப்பட்டிருந்தது (மது. 292-301). விண்ணைத் தீண்டுகின்ற பரணின் மேலே கானவர் தீக்கடை கோலினால் நெருப்பைப் பிறப்பித்து எரிக்குமாறு மாலைப்பொழுது வந்தது (குறி. 225,226,230). தொடுத்த அம்பினை யுடையராய்த் தம் மனைவியரோடு கூடியிருக்கும் கானவர் வழிப்போவாரை வருத்தாது போக்கும் மலையிடத்து உயர்ந்த வழியைக் கடந்து கூத்தர் தலைவன் தன் சுற்றத்தோடு சென்றான (மலை. 17-20). மலைப்பக்கத்துச் சிறுகுடியில் தேனையும் கிழங்கையும் ஊன் நிறைந்த வட்டிகளையும் யானைக் கொம்புகளே காவுமரமாகக் கட்டிக் கொண்டு வரும் கானவர் அங்கு வரும் கூத்தச் சுற்றத்திற்கு உணவளிப்பர் (மலை. 151-157). குறவரும் மருளும் குன்றத்தே நீவிர் செலல நேர்ந்தால் அவ்வழியில் போதலைத் தவிர்த்து நும் வாச்சியங்களை இயக்குவீராயின் உச்சிமலையில் காடுகாத்து உறையும் கானவர் விரைந்து வந்து நுமக்கு வழிகாட்டி முன்னே போக நீவிர் மனமகிழ்வீர் எனக் கூத்தர் ஆற்றுப்படுத்தப்படுகின்றனர் (மலை. 275-286). நன்னன்சேய் நன்னனிடம் போதற்குரிய நெறியாகக் கூத்தர் ஆற்றுப்படுத்தப் பெறும் மலைவழிகளில் தலைமைத் தன்மையுடைய யானை பரணிடத்தே இருக்கும் கானவருடைய தினைப்புனம் புக்கு உண்ண அதனைப் பிடிக்க விரும்பி அவர் வளைத தலால் உண்டாகிய பூசலும் நெடிய முழையினில் உறையும் கூர்முள்ளை யுடைய எய்ப்பன்றி தனக்குத் தவறு செய்த கானவரை வருத்த எழும்

அழுகையொலியும் நன்னனுக்கு இறைப்பொருள்
களைக் கொடுத்தற்காக அழித்தற்கரிய பகைவரின்
சிற்றரண்களை அழித்த கானவரின மகிழ்ச்சியார
வாரமும் கேட்கும் (மலை. 297-301,318,319). யானை
களின் வெண்கோடுகளைக் கவர விரும்பிய அன்
பில்லாத கானவர் அவை தீங்கில்லை யென
நினைததுக் கருத்தின்றிச் செல்லும் நெறிகளில்
அவற்றை அகப்படுத்தக் குழிகளை யகழ்நது தழை
களையிட்டு மறைத்து வைப்பர் (அகம. 21:23-25).
களிற்றியானையின் மதம் பொருந்திய கன்னத்தை
யுடைய முகததைக் கிழித்த அம்பினையும நிணத்
துடன கூடிய உணவினையு முடைய கானவர்
தஙகை என்று தலைவியைத் தோழி குறிப்
பிட்டாள் (அகம். 132:4,5). கானவரும் துயினற
நள்ளிரவில் விலங்குகள் செல்லும் வழியாகிய சிறு
நெறியில் நீ வருதலை இனித் தவிர்தல வேண்டும்
என்று தோழி தலைவனை இரவுக்குறி விலக்கி
வரைவு கடாவினாள் (அகம. 168:2,3,13,14). கொடிய
வில்லையுடைய கானவர் தம் அம்பினை விடுதலால்
இறந்துபட்ட வழிப்போககர் வீழநது கிடக்கும்
களததில் அவர் மயிர்த்தலை புறந்தோன்றுமாறு
உயர்ததிய கற்குவியல்கள் கள்ளியம் பறந்தலைக்
களர்நிலநதோறும் நிறைந்து நினைப்போரையும்
நடுங்கச் செய்யும் காட்டிடைச் சுரத்தைக் கடந்து
தலைவன் பொருளீட்டச் சென்றான் (அகம். 231:
5-9). கானவர் தம் அம்பினைச் செபபஞ் செய்தற்
பொருட்டுத தமது விரலின நக நுனியிலே புரட்
டும் ஓசைபோலக் கள்ளியங் காட்டில் பல்லி தன்
துணையை யழைக்கும் ('கானவர்' என்பதற்குக் 'களவர்'
எனற பாடமும் உண்டு) (குறு. 16). கல்கெழு கானவர்
நலகுறு மகள் எனறு தலைவியைத் தலைவன் குறிப்
பிட்டான் (குறு. 71:4). காட்டுப்பசுவின கனறு கான
வர் எடுப்ப அஞ்சித் தன் இனத்தினின்றும் பிரிந்து
சென்று கானகச சிறுகுடிககண் அகப்பட்ட நிலை
யில் அங்குள்ள இளையோர் பாதுகாப்ப அவரு
டன் கலந்து அவ்விடத்தை விருமபி மனையுறை
வாழ்க்கையில் வன்மை பெற்றது (குறு 322:1-5).
நீண்ட அம்பையும் வலிய வில்லையும உடைய
கானவர் தங்கை என்று தலைவியைத் தோழி குறித்
தல் (குறு. 335:5,6). புலியொடு பொருத புணமிகக
யானையின் நலல கோட்டினை நயநத அன்பில்
லாத கானவர் வில்லை வளைத்து விட்ட அம்பு
பட்டு அச்சம் நிறைநத அவ்வியானை பிளிறும் ஒலி
இடிமுழக்கத்தை ஒத்தது (நற். 65:5-8). சிறுகட் பன்
றியின பெருஞ்சின ஒருத்தலை வெற்றுப் பிளப்
பிடத்தே வீழத்த நாய கொண்டு வளைத்து வலை
யில் அகப்படுத்திக் கானவர் தம் சிறுகுடி பெயர்
வர் (நற். 82:7-11). தலைவியின் காவல் மிக்க பெரிய
ஊரைக் கானவர் இரவில குறிஞ்சிப் பண்ணைப
பாடியவாறே துயிலாது காத்தனர் (நற். 255:2,3).
'கிளிகடி கருவி பொருந்திய கையையுடைய கொடிச்
சியே, நீ மனைக்குச் செலவாயாக' எனத் தலைவிக்கு
நல்ல இனிய மொழிகளைக் கூறிக் கானவர்
தினைக் கதிரைக கொயயத் தொடங்கினர் (நற்.
306:3-5). மாலையணிந்த கானவர் உழுது விளைத்த
தினைக்கதிரைத் தின்று சிறுகட் பன்றியின் பெருஞ்
சின ஒருத்தல் பக்கததே யுள்ள மலைப்பிளபபில
உறையும் புலிககும் அஞசாமல கழை வளர் சார
லிடததே உறங்கும (நற். 386:1-5). தலைவனது நாட்
டின் மணிநிற மால்வரையில் கானவர் கிழஙகினை
அகழ்ந்து கொண்ட நெடுங்குழி நிறைய வேங்கை
யின் புதுப் பூக்கள் உதிர்ந்து பரவும (ஐங். 208.1-4).
தலைவனது மலைநாட்டில தாயை யிழந்த குட்டி
யோடே ஆண்பன்றி இரவுப்போதில் தினைக்
கதிரை மேயக் கருதிப் பகற்போதில் கானவர்
வாழும் மலையுச்சியில் உறங்கும் (ஐங். 268:1-4).
தலைவனது மலையில் கிழங்கை அகழும் பனறி
உழுத புழுதிக்கண்ணே வித்தி விளைநத விளை
வைக் கானவர் கொய்து போவர் (ஐங. 270·1-3).

**கானவன் - காட்டுநில மகன்.** 'பலாவின் சிறநத சுளை
களை உண்ணும் முசுக்கலைகளால உதிரககப
பெற்ற பலா விதைகள எங்கணும கிடககினற
மலையிலுள்ள சிறுகுடியினையுடைய கானவனின -
காட்டுநில மகனின - மகள் எனத் தலைவியைத தாய்
குறித்தாள் (அகம. 7:20-22). பெரிய முறுககுண்ட
மருப்பினையுடைய தலைமை பொருநதிய இரலை
மான் செருப்பணிந்த கானவன் கவைக கோலைச்
சுமநதாலொத்த தோறறமுடையது (அகம். 34:3,4).
செந்தினைககதிரை மேய பல்லியின் சொறகேட்டு
வரும் பன்றியைப் பார்த்தறிய வலிய கையினை
யுடைய கானவன பரண மீது கொளுததிய நெடுஞ
சுடர் விளக்கத்தை நோககியவாறே தலைவன்
இரவுக்குறியிடை வந்து தலைவியின் நடுங்கு துய
ரினைக் களைந்தான (அகம. 88:1-7). பெரிய தினைப்
புனத்தின ஓங்கிய பரணில் இருநது காப்போ
னாகிய சிங்கம போலும் வலிமையினை யுடைய
கானவன் கள்ளுண்டு களித்துக் காவலை மறந்திருந
தனன் (அகம். 102:1,2). இருமபினை வார்த்துச்
செய்தாற் போன்ற வலிய கையினை யுடைய
கானவன வெண்கடப்ப மரத்தினைச் சார்ந்து
நின்று அம்பினை யாராய்ந்து களிற்றின் மார்பிற்
செலுத்தி அதன் வெணகொம்பைக் கொணர்ந்து
தன் குடிசையில் ஊன்றி விட்டு முன்றிலில
உயர்ந்த பலாமரத்தின கனியிலிருந்து பிழிந்

தெடுத்த மதுவையுண்ட களிப்பினனாய்ச் சுற்றத் தினருடன் ஆரவாரம் மிக்குச் சந்தன விறகின் தீயில் ஊன்சோற்றை அட்டுண்ணும் குன்ற நாட் டையுடையவன் தலைவன் (அகம். 172:6–14). தலை வனின் மலை நாட்டில் அரும்புழை முடுக்கரில் வேட்டை ஆட்களை எதிர்நோக்கி நின்ற அஞ்சா மையினையுடைய பன்றியைக் கானவன் அணிமை யிற் சென்று நோக்கி, இது தன் படை பெயரவும் தான் பெயராது நின்று பகைவர் வரும் அருவழியில் அவரைத் தடுத்து நிற்கும் எம் பெருவல்லாளனை யொக்கும் என வியந்து தான் வில்நாணில் தொடுத்த அம்பினை அதனமீது எய்யாது பெயர் வான் (அகம். 248:5-10). பெருமலைப்பக்கத்தே வேட் டைக்குச் சென்ற அம்பினையும் வில்லினையுமுடைய கானவன் தன்னுடன் போர் செய்து பட்ட யானை யின் வெண்கொம்பினால் மலையில் சிறந்த பொன்னை அகழ்ந்தெடுக்குங்கால் திண்ணிய மணி கள் பொன்னுடன் மேல்வந்து விளங்க அவற்றை யானைக் கொம்பு ஒடிந்துதிர்ந்த முத்துக்களோடு கூட்டியெடுத்து அம்மூன்று பணடங்களையும் சந் தனமரமே காவு மரமாகக் காவிக் கொண்டு நறைக் கொடியாகிய நாரினால் வேங்கை மலரைத் தொடுதத கண்ணியணிந்து மலையினின்றும இழி வான் (அகம்.282:1-10). மலை நாட்டில வேற்றுப்புலம் சென்று இரவில் மேய்நத யானையின் காலோ சையைக் கூர்த்தறிந்து நள்ளிரவில் மலையிடத்துப் பரண மீதுள்ள வனகைக் கானவன் மிக்க விசை கொண்ட கவணால் எறிநத சிறுகல் அம்புபோல் விரைந்து சென்று பக்கமலையில் வேங்கைப் பூங் கொததுக்களைச் சிதறித் தேனை அழித்துப் பலாப் பழததினுள் தஙகும் (அகம். 292:7-14). காலிலே செருப்பினை யணிநத கானவன கொல்லையிலே வேங்கை மரக்கிளைகளைத் தழைகளோடு வெட்டிப் போகட்டுச் சுட்டெரிப்பான (அகம். 368:1,5,6). மரங்களை வெட்டிய கானவன கொல்லையை உழுது விளைத்த தினையைக் காக்கும் கொடிசசி என்று தலைவியைத் தோழி குறிததனள் (குறு. 214:1-3). குறுமபடையாகிய அம்பையும் வளைந்த விலலையும் உடைய கானவன தன் தினைப் புனததை உணட பைங்கண் யானையை விலக்கி னான (குறு. 333:1,2). குரஙகு தன் கையால் தோண்டிய மணங்கமழும் சுளைகளையுடைய பெரிய பலாப்பழத்தைக் காத்தல் மறந்த கானவன அதனபின மரந்தோறும் குரங்குகளை அகப்படுத்த வலையை மாட்டி வைத்தான் (குறு. 342:1-3). தலை வனது மலையில பழைய குழியைத் தோண்டிய கானவன கிழங்கினொடு மணியைப் பெறுவான் (குறு. 379:1-3). பலாமரத்தில் பழத்தை யுண்ட குரங்குகள் சிலைமரத்தாற் செய்த வில்லையுடைய கானவனின் செவ்விய அம்புத் தொடைக்கு அஞ்சிப் போர்க்குதிரை போல் தாவிச் சாரலிலுள்ள மூங்கிற் கோல் அசையுமாறு பாயும் (குறு. 385:1-4). மலைச் சாரலிலே வளைந்த வில்லையுடைய கானவன் கொன்ற பன்றியின் தசையினை ஊடுருவிய சிவந்த அம்பினைப் போலத் தலைவியின் செவ்வரி பரந்த கண்கள் தோன்றின (நற். 75:5-8). சாரலிடததுக் கானவன் எய்து கொணர்ந்த முள்ளம் பன்றியின் கொழுவிய தசைத்துண்டத்தை அவன் மனைவி சிறு குடியிலுள்ளார் பலர்க்கும் பகுத்துக் கொடுத் தாள் (நற். 85:7-10). ஆமானின் நெஞ்சில் பாய்ந்து தங்காது குறிதவறிப் போன அம்பின் போக்கினைக் கருதிக் கானவன், 'இம் மலையில் தெய்வம் வெளிப்பட்டு நின்றது; மழை பெய்தால் அதன் வீறு தணியுமாதலின மலையை மேகம் சூழ்வதாக' என்று அம் மலை மேலுள்ள கடவுளை வழிபட எழுந்து சுற்றத்தினருடன் போய்ப் பலியிட்டு மகிழ்வான் (நற். 165:1-5). கானவனது சிறுபுறம் போன்ற பெரிய கையை யுடையது களிற்றியானை (நற். 228:5,6). மலைச் சாரலிடத்தே அகிலைத் தீயிட்டுக் கொளுத்தும் கானவன் அங்குள்ள சருகுகளை முதலில் தீயிடுதலாலே எழும் நறுமணம் வீசும் புகை இயங்குகின்ற மழைமேகம் போல் சென்று மறைக்கும் (நற். 282:6-8). வன்கைக் கானவன் தன் கொடிய வில்லை வளைத்து வலிய கணையை எய்து கொன்ற முள்ளம்பன்றி யேற்றை யைக் கைக்கொண்டு வேட்டை வெற்றியாலான உவகையனாய் மனையகத்தி லுள்ள நாய்கள் ஒருங்கே சூழ்ந்து விளையாடி வரக் காட்டகத்தே நட்ட காலில் கட்டிய தன் குடிசையுள்ள சேரிக்குத் திரும்புவான் (நற். 285:2-7). ஆண்பன்றி தன் துணையுடனே வந்து தினைக்கதிர்களை அளவின்றி மேய்ந்து அழித்தமையால் கானவன் மலை வழியி லுள்ள சிறு புழையிலே பதுங்கியிருந்து வில்லினால் கொன்று கொணர்நத அவ்வாண் பன்றியை அவன் மனையோள் அறுத்துத் தன் சுற்றமாகிய குடிகள் இருக்கும் இடந்தோறும் சென்று பகுத்துக் கொடுப்பாள் (நற். 336:1-6). பிடியானை கன்றை யீன்று வருந்தியிருக்கையில் பால்மடி சுரந்த ஈன்ற ணிமையினாலுண்டான அதன் பசிநோயைத தீர்க்க வேண்டிக் களிற்றி யானை தினைக்கதிரைக் கவர்ந்தமையின் கானவன் எறிந்த எரிகொள்ளி மலைப் பக்கமெங்கும் விளங்கும்படி மின்னி விசும் பிடத்து நிலை கிளர்ந்து வீழும் மீன்போலத் தோன் றும் (மீனின் என்பதற்கு மின்னின் என்றும் பாடமுண்டு) (நற்.

293:2-7). புன்செய் நிலத்தே உழுது வித்திய தினைப் புனத்தில் படிந்துண்ணும் பைம்புறக் கிளிகளை வன்கண்மையுடைய கானவனின் மென்சொல் மடமகள் ஓட்டுவாள் (ஐங். 283:1-3). இடித்து மழை பெய்து இருண்ட நள்ளிரவில் மின்னொளியின் விளக்கத்தில் பிடியுடன் வந்து புன்செய் நிலத்தில் மேயும் யானைகளின் அடியோசை கேட்ட கானவன் உயர்ந்த மலையில் ஆசினிப் பலாவின்மேல இடப்பட்ட பரணில் ஏறிக் கடுவிசைக் கவணையின் கலலை, எறிய, அக்கல் வேங்கை மரத்தின் பூக்களைச் சிதறி ஆசினிப் பலாவின் அளிந்த மென் பழத்தையுதிர்த்துத் தேனிறாலைத் துளைத்துருவிப் போய் மாமரத்தின் பசியகாய்க் கொத்துக்களை யுழக்கிக் குலையுடை வாழையின கொழு மடலைக் கிழித்துப் பலாவினது பழத்துள் சென்று தங்கியது (கலி. 41:5-16).

**கானவாரணம்** - காட்டுக்கோழி. பாண்டியன் கூடகாரத்துத் துஞ்சிய மாறன வழுதி போரைக் கருதுவானாயின, அவன் பகைவர் நாடு நல்ல புது வருவாயினின்று நீங்கிக் கடவுள் நீங்கியதால் பலியிடுதல் மாறிய பாழ்பட்ட அம்பலத்தில் முனபு முதியோர் சூதாடுங் கருவியை இடுதலால் குழிந்த அச்சூதுக் கருவியின் நல்லகம் நிறையுமாறு பல பொறிகளை யுடைய கானவாரணம் - காட்டுக்கோழி - முட்டையிடும் காடாய்க் கெட்டொழியும் (புறம். 52:6-17).

# கி

**கிடக்கை** - 1. கிடத்தல். ஈன்றெடுத்த முதியோள் தன் மகன செங்களத்தில் விழுப்புண் பட்டுச் சிதைந்து வேறுவேறாகத் துணிபட்டுக் கிடக்கின்ற கிடக்கை - கிடத்தல - கண்டு அவனை ஈனற ஞானறினும் பெரிதுவந்தாள் (புறம். 278:2,7-9). தலைவி தன் அணை மீதிருந்து கிடக்கை பொருந்திப் பிரிவால் வருந்தும் அவளது தோளின் மெலிவைத் தீர்க்கும் மருந்தாகத் தன் வரவைப் பல்லி அவளது செவியிற் சொல்லுமோ எனப் பொருளீட்டி வரும் தலைவன் இடைவழியில தலைவியை நினைந்து கூறினுன் (அகம். 351:14-17). பாணன் என்ற மல்லனுடன் எதிர்ந்த ஆரியமல்லன் உயிர் நீங்கிப் பிணமாகிக் கிடக்கும் கிடக்கையைப் பார்த்து நல்ல போர்த்தொழிலைச் செய்யும் கணையன் நாணினான் (அகம். 386:3-8). புதல்வன் நடுவண் விளங்கத் தலைவனும் தலைவியும் இருபக்கமும் கிடந்த கிடக்கை இவ்வுலகத்தும் மேலுலகத்தும் பெறுதற்கரிய இன்பத்தைத் தருவதாகும் என்பது செவிலி கூற்று (ஐங். 401:3,5). தன் புதல்வனை அனைத்துக் கொண்ட தாயின் புறத்தைத் தழுவி அவள் கணவன் கிடக்கை பாணர் யாழின் நரம்பிடை எழும் இசை போல இனிமையுடையது; பணபும் சான்றது (ஐங். 402). த நதை தன் புதல்வனைப் புல்லிக் கொள்ள, அபபுதல்வனின் தாய் அவ்விருவரையும் தழுவிக் கிடக்கை இன்பத்திற்கு இவ்வுலகு முற்றுமே ஒப்பாதாகும (ஐங். 409). சுற்றத்தார் கண்டு வருந்தும்படி மகவீனற நங்கை குலத்தைக் காக்கப பிறநத குழநதையோடு கிடந்த கிடக்கை போல், தன்னை உழுது விளைவித்த உழவர் கண்டு வருந்தும்படி நோய் கண்ட ஞாலம அவ்வருநதமெல்லாம நீங்கும்படி தன்னிடம் விளைந்த பொருள்களால் உயிர்களைக் காப பாற்றிப் புதுநலம் பெற்றுக் கிடந்தது (கலி. 29:1-3).

2. உலகம். தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன், கடலாற் சூழப்பட்ட அகனற கிடக்கையில - உலகின்கண் - தமிழ்ப் படை கைகலந்த தலையாலங் கானத்தில் உயிர்களது பன்மையையும் கூற்றின தொருமையையும் சீர்தூக்கிக் காட்டினான (புறம். 19:1-4). கடல எலலையாகக் காற்று ஊடுபோகாத வானததைச் சூடிய மண செறிந்த கிடக்கையில் தண்தமிழ் நாட்டிறகுரியவர் முரசு முழங்கு தானை மூவராவர் (புறம். 35.1-4). ஒருவனுககு விரிதிரைக கடலாற் சூழப்பட்ட மண் திணிந்த கிடக்கை பிறருககும் பொது என்பதின்றித் தனக்கே உரியதாயக் கைகூடி வந்த தாயினும் அஃது அவன் கையை விட்டுப் போவது கனவிற கணட பொருள பொயயாயப போவது போலும் (அகம். 379:6-9).

3. பரபபு. கடலின் கரைகளால சூழப்பட்ட அகனற கிடககைக்கண - (நிலப்) பரபபின்கண - ஒவ்வொ... மாநிலததிலும உளள திடாதோறும் தொ... சோலை நிறைநதிருநதது (பொரு. 178-181). ம... பொருந்திய பூக்கள நிறத்தால தம்முள் மாறுப... கிடககையால் பொய்கை பன்னிற ஒளியுடன் விளங்கியது (பட். 37,38). நீடிய வெண்மையுடைய நீர்க்கிடககை விளங்கும் நீர்மையுடையவன சேர்ப்பன் (கலி. 131:42,43).

4. இடம். சேரமான்குடக்கோ நெடுஞ்சேரலாதனும் சோழன் வேற்பஃறடககைப் பெருவிறறகிள்ளியும் பொருது வீழ்ந்தாரைக் கண்ட பரணர் 'புது வருவாயறாத ஊர்களைக் கொண்ட அழகிய கிடக்கையை - இடத்தை - உடைய அவரது அகன்றநாடு இனி என்னாகுமோ' என வருந்தினார் (புறம். 63.11-15). வெம்மை மிக்க பாலை நிலத்து ஆறலை கள்வர்

கொளளை கொள்ளுதற்கு முயலும் கிடக்கைக்கண் வழிப்போககா எவரும் செலலார் (அகம். 365:7-9).

5. போர்க்களம். இடமகனற கிடக்கை - போர்க் களத்தில் - விசைத்துக் கட்டபபட்ட வலிய வில்லின நாண் செலுத்திய அம்புகளாகிய மழை பொழிந் தது (புறம். 369:8,9). செந்நிறச் செவியை யுடைய கழுகுகள் திரியும் அச்சம தோனறும்படியான கிடகையினையுடைய இடத்துககுரியவன சோழன செருபபாழி எறிநத இளஞ்சேட் செனனி (புறம். 370:26,27).

**கிடங்கில் - 1. ஓர் ஊர்.** கொத்தான மலர்களைக் கொண்ட தோட்டங்களையுடைய கிடங்கில என் னும் ஊருக்கரசன் நலலியக் கோடன (சிறு. 160).

2. அகழி. கிடங்கில் – அகழி - போன்ற குறுகிய கரைகளையுடையது கானயாறு (நற். 65:2).

**கிடங்கிற் காவிதி கீரங்கண்ணனார் - புலவர்.** கிடங்கில் என்னும் ஊரினராய்க் காவிதிப்பட்டம் பெற்ற கீரன் என்பார்க்கு மகனாரான கண்ணனார் எனறு இவர் பெயர்விளக்கம் பெறுவார். காவிதி என்பது வழககியல துறையில் சால்புடைய அமைச்சர்கடு வழங்கப்படுவதோர் சிறப்புப்பட்டம் (மது. 496-499). இப்பட்டத்தைப் பெறுவார் முடியுடைய வேந்தர்கடு மகட்கொடை நேரும் வேளாளர் என்பர் நச்சினார்ககினியர் (தொல. பொருள. சூ. 30. உரை). அவரது விளககத்தினாற் போலும இவரை அம்மரபினராகக கருதுவர் பி. நா. (நற். பாடினோர் வரலாறு). நற்றிணையில் 218-ஆம் பாட லொன்றே இவர் பாடியதாகவுள்ளது. வரைவிடை மெலிந்த தலைமகள வன்பொறை எதிர்மொழியும் துறையிலமைநத நெயதல திணைப் பாடலான அதனுள் அவளது இரக்கத்தை இவர் அழகுற வெளிப்படுததியுளளார். ஞாயிறு பட்டுக் கதிர் மழுஙகுதல், இரவு தனிததுப் பொலிவிழததல, வெளவால பறத்தல், ஆநதை அலறுதல், கூகை குழறுதல், அனறில கூவுதல் ஆகிய மாலைக் காலத்துத் துன்ப நிகழ்ச்சிகளைக் கண்டு தலைவி நெஞ்சழிவதாக இவர் அப்பாடலை முடித்துள்ள நயம காணததகும.

**கிடங்கிற் காவிதிப் பெருங்கொற்றனார் – புலவர்.** கிடங் கில் எனற ஊரினர்; திறனமைநத அமைச்சர்க்கு வழங்கபபடுவதான காவிதி (மது. 496-499) என னும் பட்டத்தினர்; பெருஙகொறறன் எனற இயற் பெயரினர். இவரது பாடல நற்றிணையில 364 ஆவதாக அமைந்துள்ளது. அப்பாடல் முல்லைத திணையில தலைமகள் வரைவிடை மெலிந்த துறையின் பாற்படும். வரைவிடை வைத்துப் பொருள் வயிற் பிரிந்த தலைவன மீண்டு வருவ தாகச் சொல்லிய பருவம் கழிந்த அளவில் மாரிக் காலத்து மாலைப்பொழுதுக்கு ஆற்றாத தலைவி யின் மெலிவினை அபபாடலில் இவர் புனைந்துள் ளார். 'உருமிசை யறியாச் சிறு செந்நாவின், ஈர் மணி இன்குரல்' என்று மாலையில் ஊர்திரும்பும் ஆனிரையின மணியோசையை இவர் குறித்துள்ள அழகு பாராட்டத் தகுவதாம்.

**கிடங்கிற் குலபதி நக்கண்ணனார் - புலவர்.** கண்ணன் என்பது இவரது இயற்பெயர். சிறப்புக் குறித்த 'ந', 'ஆர்' எனற முன்பின் ஒட்டுக்கள் சேர்ந்து இவர் பெயர் நககண்ணனார் எனறாயிற்று. ஆயி ரம் மாணவர்களை வைத்துக் கற்பிக்கும் ஆசிரியர்க் குரிய குலபதி என்ற பட்டமும் (உ. வே. சா. குறுந் தொகை. பாடினோர் வரலாறு) அதன் முன கிடங்கில் என்ற ஊர்ப்பெயரும் நினறு கிடஙகிற் குலபதி நக் கணணனார் எனறு இப்புலவர் வழஙகப் பெற் றார். இவர் சிறநத ஆசிரியரென்பதை இவரது பட்டத்தைக் கொணடே உணரலாம். இவர் பாடிய ஒரே பாடல் குறுநதொகையில் 252 ஆக அமைந துளளது. நெடிய திரணட தோள்வளை நெகிழு மாறு தலைவியை விட்டுப் பரததையிற் பிரிந்த கொடியனாகிய தலைவன மீளும்போது அவனை இன்முகம் திரியாது எதிாகொணடு ஏற்கும் அவளது பணபினைக் கடவுட் கற்பு எனத தோழி கூற்றில் வைத்து இவர் பாராட்டும் திறன் உணரத்தகும். புகழும முனனரே நாணுவோராகிய சானறோர் பழியை எங்ஙனம் பொறுப்பர் என்பதனால் தலைவி தலைவனிடத்துப் பழி கூற முற்படவில்லை எனற பணபினையும் இவர் தம் பாடல் காட்டும்.

**கிடங்கிற கோமான் - கிடங்கில் என்னும் ஊர்க்கு அரசன்** (ஓய்மானாட்டு நலலியக கோடன்). கொத்தில் மலர்ந்த பூக்கள் நிறைநத தோட்டங்களையுடைய கிடங்கில் என்னும் ஊர்கடு அரசன் என ஓய்மானாட்டு நலலியக்கோடன் குறிக்கப் பெறுகினறான் (சிறு.160). இககாலத்துத திண்டிவனம் என வழங்கும் நகரமும் அதனைச் சார்நத இடஙகளும் அடங்கிய பெரு நகராக முற்காலதது்க் கிடஙகிலகிடந்தது. இது கிடங் கால் எனவும் வழஙகும். இதனகண சிதைந்த அக ழியும் இடிநத கோட்டையும அணமைக்காலம் வரை காணபபட்டு இக்காலத்துத் தெருக்களும் வீடுகளு மாக மாற்றம் பெற்றன. (உ. வே. சா. பத்துப்பாட்டு. பாடப்பட்டோர் வரலாறு; ஔவை. து. நற்றிணை. 218.முன் னுரை). ஓய்மானாட்டு நல்லியக்கோடன் காண்க.

**கிடங்கு - அகழி.** தூர்ந்து போன கிடங்கினையும்

அகழியினையும் - தளர்ந்த மதிலுறுப்பினையும் இடிந்த மதிலையுமுடையது மூதூர் (புறம். 350:1,2). கிடங்கில் நீர் இன்மையால் கன்றுகள் மேய்ந்து திரிந்தன (புறம். 355:1,2) பகைவருடைய காவற் காடும் ஆழ்ந்த கிடங்கும் நெடிய மதிலும் நிலைத்த ஞாயிலும் அம்புக்கட்டுகளும கொண்ட அகநகரை அழித்தவன் இமயவரம்பன் நெடுஞ் சேரலா தன் (பதி. 20:17-19). பல்யானைச் செல்கெழு குட்டுவன் காவற்காட்டையும் ஆழ்ந்த கிடங்கையும நெடிய மதிலிடத்தே நிரல்பட வமைந்த பதணத தையும் கொண்ட பகைவருடைய பெருமை பொருந் திய அகப்பா என்னும் அரணை எறிந்து வென்றி கொண்டான் (பதி. 22:24-27). செல்வக் கடுங்கோ வாழியாதனின் பகைவர் நீர்மிக்கு மதிலைப் பொரு கின்ற கிடங்கையும் மலைபோலும் மதிலையும் கொண்டவர் (பதி. 62:10-12). காவற்காடும் ஆழ்ந்த கிடங்கும் அரிய அரணும் கொண்ட தேயம் நெஞ் சழிந்து நிலைதளருமபடி பகை மன்னர் நடுங்கச் சேரமன்னன் ஒருவன் போர் மேறசென்றான் (பதி. தி. 2: 12-16). ஓய்மா நாட்டு நல்லியக் கோட னின் ஆமூர் அந்தணர் நிறைந்த சிறப்பையும் அரிய காவலைக் கொண்ட பெரிய கோயிலை யும் அழகிய குளிர்ந்த அகழியையும் கொண்டது (சிறு. 187, 188). நெடுஞ்செழியனால் வெல்லப்பட்ட பகைவர் அரிய காவற்காட்டையும் ஆழமுடைய கிடங்கையும் உயர்ந்தோங்கிய மதிலையும் உடை யவர் (மது. 64-66). நெடுஞ்செழியன் மண்ணுற ஆழ்ந்த நீலமணி போலும் நீரையுடைய கிடங்கினன் (மது. 351). ‘கற்றரையைப் பொளிந்து பண்ணின இட்டிதாகிய நீர்வரும்வாயையுடைய கிடங்கினைக் கொண்ட நல்லமதின்மீது பொருதுழந்த வீரச்செல்வ முடையாரைக் கொணர்மின்’ எனப் பரிசிலளிக்கப் பாண்டியன் நெடுஞ்செழியன் பணித்தான் (மது. 730, 731). அலைகள் மோதக் குழிந்த கல்லை அகழ்ந் தியற்றிய நன்னனின் கிடங்கில் முதலைகள் இரை தேடித் திரியும் (மலை. 90,91). தலைவியின் அழுத கண்கள், இரவலருக்குத் தேர் வழங்கும் சோழரின குடந்தை வாயிலில் உள்ள கிடங்கின் மாரிக்காலத்து மலர்ந்த நீல மலரைப் போன்றன (நற். 379:6-9).

**கிடந்தோர் - கிடந்தவர்.** காட்டில் ஆறலைகள்வர் அம்புகளை ஏவுதலால் குருதி சூழ வீழ்ந்து கிடந் தோர் - கிடந்தவர் - கண்களைப் பறித்துக் கொணர்ந்து கழுகு யாமரக் கிளையிலிருந்த தன் பார்ப்பினங்களுக்கு இரையாகக் கொடுக்கும் (அகம். 31:5-11).

**கிடந்தோள் - கிடந்தவள்.** எழுநிலை மாடத்தில் அருவி யின் இனிய ஓசையைக் கேட்டுத் தலைவன் வரு கையை எதிர்நோக்கிக் கிடந்தோள் - கிடந்தவள் - செவியில் தலைவன் வரும் தேரில் பூட்டப்பட்ட குதிரையின் ஒலிகள் ஆரவாரித்தன (முல்லை. 86-89, 103). மகவீனறு குடிக்குதவிய தலைவி நெயயொடு கலந்து சிறுவெண்கடுகாகிய விதைகளை மாளிகை யெங்கும் பூசிப் பாயலில் கிடநதோளைத் தலைவன் குறுகினான (நற். 370.1-4).

**கிடாஅய் - ஆட்டுக்கிடாய்.** அன்னை, மலையுறை கடவுட் குக் கையுறையாகக் கள்ளையும் கண்ணியையும கொடுத்து வெள்ளாட்டுக் கிடாஅய் - ஆட்டுக் கிடாய் - பலி கொடுத்தும் தன் மகளுக்கு உற்ற நோய் தணியும் பெற்றி அறியாளாய்க் கலங்கினாள் (அகம். 156:13-16).

**கிடுகு — கேடகம்.** போர் வீரர் பாசறையின்கண் குந்தங்கோல்களை ஊன்றிக் கிடுகுகளை - கேட கங்களை - நிரலாகப் பிணைத்து விலலரண்களை அமைத்தனர் (முல்லை. 41,42). கிடுகை நிரலபட வைத்து வேலை ஊன்றி மறவரின நடுகல்லிற்கிட்ட அரண்போன்று நெடுந் தூண்டிற் கோலைச் சார்த் திய பரதவரின் குறுங்கூரை காட்சியளித்தது (பட். 78 81). சந்தனக் குழம்பினைக் கொட்டி மெழுகிய பசிய மெழுக்கு நிலத்தின் மேலே வேலின காம் பைக் கால்களாக ஊன்றிக் கவித்த கிடுகின் மேல துகிற்கொடி நாட்டப்பட்டிருந்தது (பட். 166-168).

**கிடை - நெட்டி.** அரசுமுறையை வலியுடைய விழுமி யோன் பெறுகுவனாயின், அவனுக்கு அது நீரற்ற கயத்திடத்தே உலர்ந்த கிடை - நெட்டி - போல நொய்தாம் எனச் சோழன நலங்கிள்ளி கூறினான (புறம். 75:6-10). தெளிநத கணணையுடைய பெரிய கிணைப்பறை கிடையின் கரம்பு போனறது (புறம். 382:18). வையையில் வெள்ளம் வந்த போது மதுரை நகரத்து ஆடவரும் மகளிரும தூ... யையும் பனிநீர் அடைத்த கொம்புகளையும் ... ளிய கிடையால் செய்யப்பட்ட தெப்பங்களையும் நல்ல கிடையாற் செய்யப்பட்ட தேர்களையும் கொண்டு சென்றனர் (பரி. 6:34,35).

**கிண்கிணி - சதங்கை.** நெடுஞ்செழியன் தலையாலங் கானத்துப் போரின் போது கிணகிணி - சதங்கை - வாங்கப்பட்ட காலிலே ஒள்ளிய வீரக் கழலைச் செறித்துச் சென்றான் (புறம். 77:1). புதல்வர் கிண் கிணி அணிந்தனர் (புறம். 198:5). ஆடுகோட்பாட் டுச் சேரலாதனின் தேவியது சிறிய அடியில்அணிந் துள்ள பல மணிகள் கோத்த கிண்கிணி சிறிய பரட்டின்கண் கிடந்து ஒலித்தது (பதி. 52:18-20.)

சூரரமகளிர் கிண்கிணி சூழ்ந்த ஒளிவீசும் சிறிய அடியையுடையவர் (முரு. 13). செவிலியர் பாராட்டத் தலைவி பொன்னால் செய்யப்பட்ட கிண்கிணி அணிந்த அழகிய அடியால் மணல் பரந்த முற்றத்தில் நிலம் வடுக்கொள விளையாடுவாள் (அகம். 254:2-4). தவளையின் வாயைப் போன்ற பொன்னாலான கிண்கிணி செல்வச் சிறுவரின் சிறிய அடியில் பொலிந்து கிடந்தது (குறு. 148:1,2). தலைவனின் புதல்வன், பகுத்த வாய்வழியே உள்ளே பரலிடப்பட்ட கிண்கிணி ஒலிக்குமாறு தெருவில் தேரைப் பற்றிக் கொண்டு நடை பயின்றான (நற். 250:1-3). தலைவனின் புதல்வன் குரும்பை போன்ற மணியையுடைய பெருத்த சிவந்த கிண்கிணியை அணிந்திருந்தான் (நற். 269:1,2). பரத்தை கிண்கிணி, தண்டை, சிறுமணிகள் கோத்த தாருடனே ஒலியெழுந்து ஆரவாரிப்பச் சென்று தன் கண் வலையில் பிறரை அகப்படுத்துவள் (கலி. 74:13,14). உடுத்துதல் கழன்ற துகில், கிண்கிணி ஒலிக்கும் அடியைத் தடுக்கத் தலைவனின் புதல்வன் முலைமறந்து தேரைச் செலுத்தி நடை கற்றான் (கலி. 81:5-8). சுடும் பொன்னால் வளைத்த இரண்டாய் அமைந்த சுற்றோடு செய்யப் பெற்ற கிண்கிணி புதல்வன் காலிற் கிடந்தன (கலி.85:1,2). 'மகளிர் இழைத்த வண்டலிடத்தே கையாற் புனைந்த வேழப் பாவையை விட்டு உழக்கித் தேரை வாய போலும் வாயையுடைய கிண்கிணி அடியிடத்து ஒலிப்ப ஈர்த்துத் திரியும் என போர் யானையே வருக' எனத் தலைவி தன் புதல்வனை அழைத்தாள் (கலி. 86:7-10). 'அடியிடத்தே கட்டிய ஒழுகிய பொன்னாற் செய்த கிண்கிணியும் சிலம்பாகிய கெச்சையும் ஆரவாரிக்கச் செலுத்திக் காதலித்து, நீ காமக் குதிரை மீதேறினாய்' எனத் தலைவி தலைவனிடம் பரத்தையைக் குதிரையாக்கிக் கூறினாள் (கலி. 96:16 18).

**கிணறு** - கேணி. ஆய் அண்டிரனின் புகழன்றிப் பிறர் புகழைக் கூறக் கேட்ட என் செவி பாழ்பட்ட ஊரிலுள்ள கிணறு - கேணி – போலத் தூர்வதாக என உறையூர் ஏணிச்சேரி முடமோசியார் கூறியுள்ளார் (புறம். 132:3). எயிற்றியர் நிலவுரலிலே புல்லரிசியைச் சொரிந்து உலக்கையால் குத்தி, நெடிய ஆழ்ந்த கிணற்றில் உள்ள சில்லூற்றாகிய நீரை முகந்து பானையில் வார்த்த உலையை அடுப்பில் ஏற்றிச் சமைப்பர் (பெரு. 94-100). புறச்சேரி குட்டிகளையுடைய பன்றிகளையும் பலகோழிகளையும் உறைவைத்த கிணறுகளையும் உடையது (பட். 75, 76).

**கிணை** - 1. தடாரிப் பறை. அழகிய கண்ணையுடைய பெரிய கிணை – தடாரிப்பறை-அதிரும்படி அறைந்து அன்புடன் பரவி 'நின்னை ஒப்பவர் உலகில் இன்மையான் நீ பகைவர் எயிலிடத்துப் பெற்ற பொருள்களைப் பரிசில் பெற வந்தேன்' எனப் பொருநன் கிள்ளிவளவனிடம் கூறினான் (புறம். 373:31-34). தெளிந்த கண்ணையுடைய பெரிய கிணையைக் கலைமானினம் செவிசாய்த்துக் கேட்ப நன்கு இசைத்து, அழகுண்டாகக் குறிஞ்சி நெருங்கிய மலையைப் பாடுவோர்க்குக் குறமகளிர் முள்ளம் பன்றித் தசையையும் சந்தனக் கட்டையையும் களிற்றுக் கோட்டையும் விருந்திறையாகப் புலித்தோலில் குவித்துக் கொடுப்பர் (புறம். 374:6-15). பாழான மன்றத்தின் ஒரு பக்கத்தைப் படுக்கையிடமாகக் கொண்டு, பனைமடல் நாரையும் பனங்குருத்தையும் கிணையோடு சேர்த்துக் கட்டி உழவர் மனைக்குச் சென்று அவர் நல்கும் உணவை இரந்துண்ணும் வருத்தம் மிக்க வாழ்க்கையுடையவர் பரிசிலர் (புறம். 375:2-7). எனது சிறுகிணை ஒரு நாளும் இரவலர்க்கு அருளும் வள்ளன்மையுடையார் தலைவாயிற் சென்று அவர் நெடும்புகழைப் பரவி, ஒன்று வேண்டி இசையாதாயிற்று என ஓய்மான் நல்லியாதனிடம் பெரும்பொருள் பெற்ற பொருநன் அவன் கொடைநலத்தைப் பாராட்டினான் (புறம். 376:20-22). பொருநன் தன் வறுமை வருத்தம் நீங்கக் கிணையை இசைத்துச் சென்று அவியுணவை உண்ணுவோர் (தேவர்) புறங்காப்ப அறநெஞ்சினனாகிய வேந்தன் பன்னாள் வாழ்வானாக என இராச சூயம் வேட்ட பெருநற்கிள்ளியை வாழ்த்தினான் (புறம். 377:4-6). பொருநன் இளஞ்சேட் சென்னியின் கோயிலது முற்றத்தே நின்று தன் அரித்த ஓசையைச் செய்யும் பெரிய கிணை கிழியுமாறு முழக்கி வஞ்சித்துறைப் பாடல்களை இசைத்துப் பாடினான் (புறம். 378:5-9). ஓய்மான் வில்லியாதனுக்கு யாம் கிணையேம் (கிணைப் பொருநராவேம்) எனப் பரிசில் பெற்ற பொருநன் பெறாத பொருநனிடம் கூறினான் (புறம். 379:7). வியனுலகு பலரும் அறிய நின்னதேயாகும்; அவ்வாறே நெட்டியின் காம்பு போன்ற தெளிந்த கண்ணையுடைய பெரிய கிணையும் என்தாகும்; இப்பறை சிறுகோலால் அடிக்குந் தோறும் நடுங்குவது போல நின் பகைவர் கேட்டொறும் நடுங்குமாறு அவர் அவையில் நீ வென்ற தேர்களை ஏத்துவேன் எனக் கோவூர் கிழார் கிணைஞன் கூற்றில் நலங்கிள்ளியைப் பாராட்டுவர் (புறம். 382:17-22). பொருநன், சேவல் துயிலெடுப்ப எழுந்து தண்பனி துளிக்கும் வைகறையில் நுண்ணிய கோல் கட்டப்பட்ட சிறுகிணையைக் கொட்டி

நெடுமனை முற்றத்தில் நின்று உழவெருதுகளை வாழத்தி அவியன் புகழ்களைச் சொல்லி ஏத்தி னான் (புறம். 383:1–5). 'யாம் கரும்பனூர் கிழானு டைய கிணையேம்' எனக் கிணைஞர் கூறினர் (புறம். 384:10). வயலாமையின் வெண்மையான வயிற்றைக் கண்டாற் போன்ற பெரிதாய் வலித்துக் கட்டப்பட்ட புதிய தோல் போர்த்த தெளிநத கண்ணையுடைய பெரிய கிணையை அறைந்து நின் திருவடி பொலிக என்று பொருநன் கூற்றில் குண்டு கட் பாலியாதனார் செலவக் கடுங்கோ வாழி யாதனை வாழ்த்துவர் (நற். 387:1-4,14). பண்ண னது உழவுவினைக்குரிய எருதுகளையும் ஏற்றத்தை யும் யாழிலிட்டு இசைத்துக் கிணையைக் கொட்டி நாடோறும் பாடேனாயின் என் சுற்றத்தை வழுதி அருள் செய்யாதொழிவானாக என்று மதுரை அளக் கர் ஞாழலார் மகனார் மள்ளனார் பண்ணனைப் பாடுவர் (புறம். 388:10-16). ஒருகண் மாக்கிணை (புறம். 392:5;394:7). பொருநன் குறைவில்லாத முழு மதியத்தை யொக்கும் பெரிய கிணையை ஒலிக்க இசைதது்க் கிள்ளிவளவனின் பீடுகெழு நோன் தாளைப் பாடி வாழ்த்தினான் (புறம். 393:19-25). 'யாம் வாட்டாற் றெழினியாதனின் கிணையேம்' எனக் கிணைஞர் கூறினர் (புறம். 396:13,14). பொரு நன் கிள்ளிவளவனின் நெடிய வாயிலில் தோன்றி நின்று தெளிந்த கண்ணையுடைய பெரிய கிணையை ஒலிப்ப இசைதது, 'நீ துயில் எழுமதி' எனப் பாடி னான் (புறம. 397:9-11). பொருநனின் தெளிந்த கிணைக்குரலைக் கடைக்கங்குலில் கேட்ட நலங் கிள்ளி அவன்பால் அருள் கொண்டு பழைய ஆடையை அகற்றிப் புதிய கலிங்கத்தை உடுப் பித்து உயர்ந்த கலன்களை நல்கினான் (புறம். 400: 8-13). தித்தன வெளியனின் உறையூரில் உள்ள நாளோலக்கத்தில் எழுந்த ஓசையினிய தெளிந்த கிணையினது ஒலியைக் கேட்டு அவனது பெருமை களை உணர்நத கட்டி அஞ்சிப் போர் செயயாது ஓடினான (அகம். 226:14-17). பாணர், வளம் பொருந் திய வாரினால் இறுகப் பிணித்துக் கட்டிய இழுத்து அடிக்கும் கோலினையுடைய தெளிந்த ஒலியின தாகிய கிணையின் இனிய குரலை எழுப்பிப் பாடி இரந்து பரிசில் பெறுவர் (அகம். 249:2-7). கூத்தர் சுரத்திடத்தே வந்த வெம்மையாலாய வருத்தத்தை மரததடியில் போக்கி இனிய ஒலியினையுடைய தெள்ளிய கிணையை ஒலிப்பர் (அகம். 301.9,10,23). அதியன் துஞ்சிய பின்பு சிறந்த ஒலியினை யுடைய பெரிய கிணையானது ஒலி அடங்கினாற் போல மலையின் அழகு ஒழிந்த காடாகிய பாலைவழிகள் ஒருதலையாகக் கொடியன (அகம். 325:8-11). மேலைத் துறையில் கட்கலங்களைக் கழுவுதலின் கீழைத் துறையில் ஒழுகும் கள்ளின் தாரையை அருந்திட யாமை, சமபங்கோழி வாச்சியக்காரனாக இறுகப் பிணித்த தெளிந்த கண்ணினையுடைய கிணை போலப் பிறழும் (அகம். 356:1-4). களிறறியானை தினைப்புனம புகுவதை நோக்கிய குறவர் கணையுடையவரும் கிணையுடையவரும் கவணு டையவரும் கூச்சலிடுபவருமாகக் குடியிருப்பின புறமெல்லாம் சென்று ஆரவாரிததனா (நற். 108:1-5). பரங்குன்றிற்குச் சென்று மலரைத் தூவுவோம்; அவியை ஊட்டுவோம்; தாளத்தோடு இசைப் பாட்டைப் பாடுவோம்; கிணையை முழககு வோம் எனறு தலைவன் இளையரிடம் கூறினான (பரி. 8:80-82).

**2. போர்ப்பறை.** தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் வேம்பின தளிரை உழிஞையுடன சேர்த்துக் கட்டித் தொடுக்கப்பட்ட கண்ணியை வளைய மாலையுடன் சிறக்கச் சூடி ஓசையினிய தெளிந்த கிணை – போர்ப்பறை – முழங்கப் புனை கழல் எழுவரோடு பொருதான் (புறம். 76:4-13). நெடுஞ்செழியன் தன்னை இகழந்து வந்த பகை வரைப் போர்க்களத்தில் கொனறிடுதலும் உடம் படானாய அவ்விடத்து அவர் மகளிர் நாணி இறந்துபடத் தந்தையருடையவாகிய தம்மூரிடததுத் தெளிந்த கிணை முழங்கச் சென்று அவ்விடத்தே கொன்றான் (புறம. 78:7-12). நெடுஞ்செழியன் பொய்கையில் நீராடி வேம்பின தளிரைசசூடித தெளிந்த ஓசையையுடைய கிணை முனனாகக் களிறு போலப் பெருமிதத்தோடு போர் புரிய வந்தான் (புறம். 79:1-4). குளிநத நீரில ஆடுவாரது முழக்கத்தோடு கலந்து கொடிய போரைச செய்யும மறவரது தெளிந்த கிணையும் ஒலித்தது (பதி. 90: 43,44).

**3. உடுக்கை.** கயத்தில் வாழும யாமையை இரு... கம்பியில் கோத்தாற் போனற நுண்ணிய கோ... பிணிக்கப்பட்ட தெளிந்த கண்ணையுடைய பெ... கிணையை - உடுக்கையை - இசைக்கும் பாண... கிள்ளிவளவனிடம் ஆற்றுப்படுத்தப் பெற... (புறம். 70:1-3).

**கிணைஞன் - கிணைப்பொருநன்.** ஏனைய வேந்தர்க்குந் தான் உவமமாவானே யன்றித தனக்குப பிறர் உவமமாகார் என்ற சானறோரின் பாராட்டினைப் பெற்ற கிள்ளியின் புகழினைக் கேட்டு மதி மயஙகி நின்றானைச் சோழன் இராசசூயம வேட்ட பெரு நற்கிள்ளி 'புரவலரை நாடிச் சேய்மையிலுள்ள நாடு கட்குச் செல்லும் கிணைஞனே - கிணைப பொரு நனே - நீயும் எம்மால் புரக்கப்படுதலை யுடையை

என்று கூறினான் (புறம். 377:10-15).

**கிணைத்தல் - கிணைப்பறை முழக்குதல்.** 'கிணைத்து - கிணைப்பறை முழக்கி - பரவுதற் கேற்பப் புரப் போர் பிறர் இன்மையால் யான் நின்னை உள்ளி வந்தேன்' என ஏணிச்சேரி முடமோசியார் ஆய் அண்டிரனிடம் கூறினார் (புறம். 375:12-14).

**கிணைமகள் - விறலி.** பறம்பு மலையை வேலினால் வெல்லுதல் வேந்தர்க்கும் அரிது; ஆனால் நீலத்தி னது இணைந்த மலரை யொக்கும் மையுண்ட கண் ணையுடைய கிணைமகள் பாடினளாய் வரின் அம் மலையைப் பெறுதல் அவளுக்கு எளிது (புறம். 111). நெடிய மூங்கிலாலாகிய தூணடிலாற் பிடித்த மீனை விறலுக் கிணைமகள் சமைத்த புளிங்கூழைக் கால மல்லாத காலத்தில் உண்ணும் வறுமையுடையவன் பொருநன் (புறம். 399:15-17). பசியாலே வருந்தி நுடங்கும் நுணணிய இடையினையும் வளையலை யணிந்த கையினையு முடைய கிணைமகள் நகத் தாற் கிள்ளிக் குறைதத குப்பை வேளையை உப்பில லாமல் வேக வைத்து மடவோர் காட்சிக்கு நாணி வாயிலை யடைததுத் தன் பெருஞ் சுற்றத்துடன் உண்ணும் (சிறு. 135-139).

**கிணைமகன் - கிணைப்பொருநன்.** வெள்ளி தென்திசை யில் நிற்க, விளை வயல்களும் நீர்நிலைகளும் வற் றிய பயனில்லாத காலத்தில் பெரிய பறையாகிய தடாரியை இசைக்கும் கிணைமகன் - கிணைப்பொரு நன - பண்ணனை அடைநது தன் நிலையை அறி விக்க அவன் துனபம் நீங்கப பெரும் பொருள நல கினான் (புறம. 388:1-7).

**கிணைவன் - கிணைப்பொருநன்.** 'வில்லியாதன் பன்றி யின ஊன துணடங்களைச் சோற்றுணவோடு நல கிப பசி தீர்கக வல்லவனாவான் என்று விடியற் காலததே வநது பாடும் மரபினையுடைய நின் கிணைவன - கிணைப்பொருநன் - சொல்லக் கேட்டு நினனைக் காண வேண்டுமென்ற வேட்கையால் வந்தேன' எனப புறத்திணை நனனாகனார் ஓய் மான வில்லியாதனிடம கூறினார் (புறம். 379:8-14). 'ஈயா வேநதரைப் பாடி வறுமையைப் போக்குவது இயலாது, வட ]தத்தோடு வளளியோரைச் சூழந்து திரியும் துன்பததை யாம் போககுவோம்; கிணைவ, வாழவாயாக; வேனில் மிகக வறற்காலத்தில நெடுநதொலைவில இருப்பினும இந்நாட்டே இருப் பினும் கவலையுறாது வருக' எனக் கரும்பனூர் கிழான் பொருநனிடம் கூறினான (புறம. 381:11-21).

**கிம்புரி - மகரவாய் வடிவிலமைந்த தூம்பு.** நிலா வின் பயனை நுகரும் நெடு முற்றத்தில் உள்ள கிம்புரியின் - மகரவாய் வடிவிலமைந்த தூம்பின் - பகுத்த வாயினை யுடைய அம்பணம் நிறைகையி னால் கலங்கி விழும் அருவியின் ஓசையும் மயில்கள் ஆரவாரிக்கும் இனிய வோசையும் செறிந்து மலை யில தோன்றும் ஆரவாரம் போல அரண்மனை யிடத்தே எழும் (நெடு. 94-100).

**கிலுகிலி - கிலுகிலுப்பை.** மந்தி, மகளிரது எயிற்றினை யொத்த முத்தைக் கிளிஞ்சிலின் வயிற்றிடத்தே இட்டு உப்பு வாணிக மகளிர் பெற்ற புதல்வரோடு கிலுகிலி - கிலுகிலுப்பை - விளையாடும் (சிறு. 56-61).

**கிழக்கு - கீழ்.** விலங்குகளும் வீரரும் பட்ட பிணத்தை உண்ணும் பொருட்டு எருவைச் சேவல் புல்லூறு என்னும் பறவையோடு கிழக்கே - கீழே - இறங்கும் (பதி. 36: 7-10). தலைவியின் தலையில கிளைத்த மெல்லிய மயிர்க் கொத்துக்கள் கிழக்கே தாழ்ந்தன (குறு. 337: 1, 2). 'பொற்கிண்ணத்துள் வைத்த பால நின்னால் உண்ணப்படாமல் கிழககே வைத்திருக் கின்றமையைக் காணாய்' எனத் தோழி தலைவி யிடம் கூறினாள் (நற். 297:1).

**கிழங்கு - செடி கொடி முதலியவற்றின் மூலம்.** பாரி யின் பறம்பு மலையில் உழவரால் உழுது விளைக்கப் படாது விளையும் நானகு பொருள்களில் கொழு விய கொடியையுடைய வள்ளிக்கிழங்கும் ஒனறாகும (புறம். 109:3,6). மிளகுக் கொடி வளரும் மலைச் சாரலிடத்துக் காந்தட் கொழுங்கிழங்கு மிளிருமாறு கடுங்கட்பன்றி கிளையொடு உழுத பூழிக்கண் குற வர் தினையை விதைத்தனர் (புறம். 168:2-6). விளை யாடும் மகளிர் பெருமாவிலங்கையில் பன்றி உழுத கரிய சேற்றைக் கிளைபபின புலால் நாறும் யாமை முட்டையினைத் தேன நாறும் ஆம்பற் கிழங்கொடு பெறுவர் (புறம். 176:1-6). சோழன் நலங்கிள்ளியின படை செல்லுங்கால் முன்னே செல்லும் தூசிப் படையினர் பனையின் நுங்கினைத் தின்னுங் கால மாயின் இடைப்படையிலுள்ளோர் அப்பனை இருக் கும் இடம் சேரும்போது நுங்கு முற்றிக் கனிந்த பனமபழம் தின்பர்; படையின் கடையிற் செல் வோர் அங்கு வருமபோது பிசிருடனே கூடிய சுடப் பட்ட பனங்கிழங்கு உணபர் எனச் சோழன் நலங் கிள்ளியின் படைப்பெருக்கை ஆலத்தூர் கிழார் புனைவர் (புறம. 225:1-3). இரும்பொறையே, பழங் களும் கிழஙகுகளும் உண்ணுதல் அற்றுப் போகா வாறு இடையறாது எக்காலத்திலும் கிடைக்கும்படி வளம் பொருநதிப் பல்லூழி வாழ்க என இளஞ் சேரலிரும்பொறையைப் பெருங்குன்றூர் கிழார்

வாழ்த்தினார் (பதி.19:4-9). தேனாகிய நெய்யோடே கிழங்கையும் விற்றவர் பண்டமாற்றாக மீனினது நெய்யோடே நறவையும் பெற்றுச் சென்றனர் (பொரு. 214, 215). தொண்டைமானிளந்திரையன் நாட்டில் உழவர் மனையில் தங்கின் பலாப்பழம் இளநீர், வாழைப்பழம், பனைநுங்கு, சேம்பின முதிர்கிழங்கு முதலியவற்றை உண்ணலாம் எனப் பெரும்பாணன் ஆற்றுப்படுத்தப் பெற்றான் (பெரு. 355-362). மதுரையில் சோறிடுஞ்சாலையில் கண்ட சருக்கரைத் தெளிவையும் ஊன்சோற்றையும் மண்ணின் கீழ் வீழ்ந்த கிடங்குடனே பாற்சோறு முதலியவற்றையும் அயின்றனர் (மது. 533-535). கானவர் தேனினையும் கிழங்கினையும் தசை நிறைந்த கடகத்தையும் பன்றி இறைச்சியையும் பிற இறைசசிகள் நிறைந்த வட்டியையும் யானைக் கொம்பினையும்கொண்டு வந்தனர் (மலை. 153-155). நன்னனின் நாடு காக்கும் வேடர் திரளைக் கண்டு, 'நாங்கள் நன்னனைக் காணச் செலகின்றோம்' என்று கூறுவீராயின், அவ்வேடர் தசைகளையும் கிழங்குகளையும் தந்து ஓம்புவர் எனக் கூத்தர் ஆற்றுப்படுத்தப் பெற்றனர் (மலை. 422-426). நிலம் பிளக்குமாறு இறங்கிய வேரில் முதிர்ந்த கிழங்கினையும் மூங்கிலொத்த திரண்ட தண்டினையும் களிற்றுச் செவி போன்ற இலையிடையே கழு நிவந்தன்ன முகைகளின் நடுவில் நகை முகம் போன்ற மலர்கள் விளங்கத்தாமரை மருத நீர்ப் பரப்பில் படர்ந்திருந்தது (அகம் 176:1-7). வயிரம் போன்ற கோட்டினையும் மூங்கில் வேர் போன்ற மயிரினையும் உடைய பன்றி சுனை நீரைக் குடித்துப் பிண்டம் போன்ற சேம்பின் கொழுங்கிழங்கை நிறையத் தின்றது (அகம். 178:1-5). கிளைத்த தூறாகிய நாணற் கிழங்கு மணலிடத்தே ஈன்ற முளையை ஒத்த கூரிய பற்களை உடையவள் தலைவி (அகம். 212:4,5). குன்றினிடத்தே பழங் குழியைத் தோண்டிய வேட்டுவன் கிழங்கினொடு தூய மணியைப் பெறுவான் (குறு. 379:1-3). கானவன் எய்து கொணர்ந்த முள்ளம் பன்றியின் கொழுந்தசைத் துண்டத்தைக் கிழங்கொடு சிறு குடியில் உள்ளார் பலர்க்கும் கொடிச்சி பகுத்துக் கொடுத்தாள் (நற். 85:8-10). கிழங்குகள் கீழிறங்குதலும் தேனடைகள் மிகுதியாக மேலே தொங்குதலும் சிலவாய தினைகளை விதைத்து மிகுதியாகப் பயன் பெறுதலும் தலைவனின் மலைச் சிறப்புகளாகும் (நற். 328:1-3). கானவர் கிழங்ககழ்ந்த நெடுங்குழி மல்குமாறு வேங்கைப் மலர் பரவிக் கிடக்கும் (ஐங். 208:1-3). கிழங்[illegible] அகழ்ந்துண்டற் பொருட்டுப் பன்றிகள் உ[illegible] குறிஞ்சிக் கொல்லைக்கண் கானவர் தாம் வித்திய தினையினது முதல் விளைச்சலைக் கொய்தனர் (ஐங்.270: 1,2). சூடிக் கழித்த மென்மலரும் தாரும் கோதையும் கரைக்கண் உள்ள மரங்கொடிகளின வேரும் தூரும் காயும் கிழங்கும் பரக்க அதன்மேல் பூரிய மாக்கள் உண்டு எஞ்சிய நறவத்தை உகுத்தலான் வையை நீர் நலனழிந்து வேறாகியது (பரி 6:46-50).

**கிழமை** - 1. உரிமை. சோழன் நலங்கிள்ளியின் பழைய நிலக் கிழமை - உரிமை - குறிப்பின் இத்தண்பணை நாடு திகிரிக்கண் பிசைந்து வைத்த மண் குயவன் கருத்துப்படி உருப்பெறுதல் போல அவன் கருத்திற் கொண்ட முடிபை உடையது (புறம். 32:7-10) கோப்பெருஞ்சோழன தன் இனிய நணபன் பிசிராந்தையைக் குறிபபிடுகையில, 'தன் பெயரைப் பிறர்க்குச் சொல்லும் பொழுது என பெயர் பேதைச் சோழன் என்று என் பெயரைத் தனக்குப் பெயராகச் சொல்லும் சிறந்த காதற் கிழமையும் உடையவன்' எனக் கூறினான் (புறம். 216: 8-10). 'உடம்பொடு இனிய உயிர் விரும்புமாறு போல விழையும் கிழமையும் கூடிய தொனனட்புடையவரிடம்செல்லின் நடுகல்லாகியவிடத்தும் இடஙகொடுத்தளிப்பர் என்பது உறுதி' எனக் கலலாகியும் இடங கொடுத்த கோப்பெருஞ் சோழனை வடகிருந்த பொத்தியார் பாராட்டினார் (புறம். 223:3-6). மகளிரின் அல்குலினிடத்தே தழையாகக் கிடப்பதாலும் நகர்ப்புறத்தைக் கைவிடாது காக்கும் நெடுந்தகையின் சென்னியில் அணியபபடும் கிழமையுடைய தாய் இருப்பதாலும் நொச்சி பனமரத்தினுள்ளும் சிறந்த நன்மரமாகும் (புறம். 2[illegible]2). தலைவன தலைவியின் பணைத்தோட் கிழமை தனக்கே உடைமையை அறியாது வருநதினான் (அகம். 32:18-20). தலைமகளைக் கண்ணுற்று நீங்கும் தலைமகன அவளை நோக்கி வெண்மணலில் புனனை உதிர்த்த பொடியினைப் பொன்னாகக் கொண்டு இல[illegible] நடத்துவாயாயின், இந்த மனைக்கிழமை எம்[illegible] சிறிதேனும் பொருநதுமாயின் தீதும் உண்[illegible] என வினவினான் (அகம். 230:6-10). குரவைக[illegible] தாடி மரபினாற் பாடிப் பழைய நிலத்தை யாளும் கிழமையுடைய கோவாகிய பாணடியன் இமமலர் தலையுலகில் வாழ்வானாக என்று தெய்வத்தைப் பரவுவோம்; வருக எனத் தோழி தலைவியை அழைத்தாள் (கலி. 103: 75-79). கற்புப் பொருநதிய நெறியையுடைய மனைவியரது அன்பு பொருநதிய ஊடற் கிழமையை நயத்தற் கேற்ற பண்பினை உடையவர் குமரன் (பரி. 9: 81, 82). காம நுகர்ச்சிக்குக் கிழமையுடைய நயத்தகு நல்லாளை (இற்பரத்தையை) கூடும் எண்ணத்துடன் தான் அணிந

திருந்த மாலையைத் தலைவன் வையை நீரில் அவளைச சென்றடையுமாறு விடுத்தான எனபது பரததை கூற்று (பரி. தி. 2. 41-44).

2. ஆளத்திவகை. முருகவேளின் திருப்பரங்குன்றத் தொரு பக்கம், பாடினி பாலைப்பண்ணுடன் கூடிய அழகிய மிடற்றுப் பாடற்கண் நாலுதாக்குடைய கிழமையும் - ஆளததிவகையும் - நிறையும் குறையும் தோனறப் பாடினாள் (பரி. 17: 17, 18).

**கிழமையர் - உரிமையுடையர்.** 'வேந்தே, பிசிராந்தையார் நின்னைக் கேட்டிருக்கின்றரே யன்றி நேரிற் கண்டிலர்; பல யாண்டுகளாக வழுவினறிப் பழகிய கிழமையர் - உரிமையுடையர் - ஆயினும் நேரில் வருதல் அரிது' என்று கோப்பெருஞ்சோழன் வடக்கிருக்குங்கால் உடனிருந்த சானறோர் அவனிடம் கூறினர் (புறம். 216: 1-4).

**கிழமையோன் - உரிமையுடையோன்.** பெருந்தலைச் சாத்தனார் காடு பற்றியிருநத குமணனைக் கண்டு அவன் வாள் கொடுப்பக் கொணடு வந்து இளங் குமணனுக்குக் காட்டித் 'தன்னிற் சிறந்தது பிறிதொன்று இன்மையால் தன் தலையைத் தருதற் பொருட்டு வாள் தந்த பின்னிடாத கொள்கையினையுடைய நின் கிழமையோனாகிய - உரிமையுடையோனாகிய - தமையனைக் கண்டு வெற்றி மிக்க உவகையுடன் வந்தேன்' என்று கூறினார் (புறம். 165:12-15).

**கிழவ - உரியவ.** அணுகுதற்கரிய வலிமையையுடைய, பொன உண்டாகும் பெரிய மலைக்குரிய இருங்கோவேள், பொன்படு மால்வரைக் கிழவ - உரியவ - என்று விளிக்கப் பெற்றான் (புறம். 201:17,18). முருகவேள், 'விண்பொரு நெடுவரைக் குறிஞ்சிக் கிழவ' என விளிக்கப் பெறுகிறார் (முரு. 267). ஏழநரம்பின் கண்ணும் உரிமையுடைய பொருநன், 'ஏழின் கிழவ' என வீளிக்கப் பெற்றான் (பொரு. 63). குமணனைப் பெருஞ்சித்திரனார் 'தளராத புதுவருவாயை யுடைய முதிரத்துக் கிழவ' என விளித்துள்ளார் (புறம். 158:25,26). 'ஊரப்படாத குதிரை (குதிரைமலையின்) கிழவ' எனப்பிட்டங் கொற்றனைக் கருவூர் கதப்பிள்ளைச் சாத்தனார் விளித்துள்ளார் (புறம். 168:14).

**கிழவர் - 1. உரியவர்.** 'பெருமானே, மண் செறிந்த உலகத்தின்கண் தமிழ் நாட்டுக்குக் கிழவர் - உரியவர் - ஆகிய மூவேந்தருள்ளும் அரசென்று சிறப்பித்துச் சொல்லப்படுவது நின்னுடைய அரசே' எனக் கிள்ளிவளவனை வெள்ளைக் குடி நாகனார் பாராட்டினார் (புறம். 35:3-5). பாரி மாய்ந்தானாகக் கையற்று வருந்திய கபிலர் பறம்பு மலையைத் தொழுது வழிபட்டு, முன்கையிற் குறுந்தொடியணிந்த பாரிமகளிரின கூநதற்கிழவரை நாடிச் சென்றார் (புறம். 113:5-9). முள்ளூர் மன்னனாகிய மலையமான் திருமுடிக்காரி குதிரை ஊர்ந்து சென்று இராப்பொழுதில் அடித்துக்கொணர்ந்த பலவான இனநிரைக்குக் கிழவர் அவனொடு எதிர்ந்து அழிந்தனர் (நற். 291:7-9). பிரிவுணர்த்திய தலைவனைத் தோழி நெருங்கி, 'நீ தேடுகின்ற பொருள், இத் தனமையோர் நமக்குக் கிழவர் எனறு கருதாது, பிறரிடத்து நின்ற நல்வினையானே மீண்டு மீண்டு சென்று தங்கும்நிலையில்லாத் தன்மையுடையது' என்று கூறிப் பொருளின நிலையாமையை விளக்கினாள் (கலி. 21:10-12). கிழவன - 1. காண்க.

2. முதிய ஆடவர். வையையில் நீராடிய பெண்டிருட் சிலர், 'எம் கணவரும் யாமும் கிழவர் - முதிய ஆடவர் - கிழவியர் எனப்படாமல நிலையுறும் இளமையை இத்தவம் தரச் செல்வததோடும் சுற்றத் தோடும் யாம் நிலைபெறுக' என வேண்டினர் (பரி. 11:120,121).

**கிழவன் - 1. உரியவன்.** பெருந்திருமாவளவன் குளிர்ந்த நீரையுடைய காவிரிக் கிழவன் - உரியவன் - ஆவான் (புறம். 58:1). ஆய்அண்டிரன், குறவர் தேறல் மகிழ்ந்து வேங்கை மரத்தையுடைய முற்றத்தில் குரவை அயரும் மலைக்குக் கிழவன் (புறம். 129:1-5). அண்டிரன் முகிலினம் சென்று தங்கும் உயர்ந்த (பொதியின்) மலைக்குக் கிழவன் (புறம். 131: 1). சாரற்கண்ணே அருவியை யுடைய, பயன்படு (கொல்லி) மலைக்குக் கிழவன சந்தனம் பூசிப் புலர்ந்த பரந்த மார்பினையுடைய வல்விலோரி (புறம். 152:10-12). இழையணிந்த யானையை யிரப்போர்க்கு ஈயும் ஆதனோரி முகில் சூழ்ந்த (கொல்லி) மலைக்குக் கிழவனாவான் (புறம். 153:1-4). வறுமையுற்ற யாழ்ப்புலவரின் ஏற்கும் மண்டை புகழ்மிக்க கொண்கானத்துக் கிழவனின் தண்தா ரகலத்தை மலர்ந்து நோக்கின (புறம். 155: 6-8). குமணன் பழந்தூங்கும் முதிரத்துக் கிழவன் (புறம். 163:8,9). ஆண்மைக் கூறுபாடு பொருந்திய ஊக்கத்தினையும் தோலாத நல்லிசையினையும் உடைய நாகன் நாலையூரின் கிழவன் (புறம். 179: 9,10). வேந்தன் வரிபெறும் முறை அறியாமைக்குக் கிழவனாகி, உறுதி கூறாத அரசியற் சுற்றத்துடன் கூடி வரிப் பொருள் கொள்வானாயின் அவன் வறுமையுறுவான்; உலகமும் கெடும் (புறம்.184:7-11). வேந்தர்க்கு மகட்கொடை மறுத்த தந்தை தண்பணைக் கிழவனாவன் (புறம். 342:11). மாயா நல்லிசைக் கிள்ளி

வளவன் முழங்குநீர்ப் படப்பைக் காவிரிக் கிழவன் ஆவான் (புறம். 399: 11-13). குட்டுவன் மரந்தை யன்ன குழைவிளங்கும் அழகிய நுதலையுடைய தலைவிக்குக் கிழவன் வரைவொடு வருவானெனத் தோழி தலைவிக்குணர்த்தினாள் (குறு. 34: 6, 7). பெரிய மலைப்பக்கத்துக் கிழவன், என்றும் அன்றை யன்ன நட்பினனாகவே இருந்தான் (குறு. 385:5,6). மழை பன்னாள் பெய்யாதாயினும் அருவி இடையறா தொழுகும் வான தோய் மாமலைக் கிழவனைக் கண்டு, 'எம்மைக்கைவிடுதலினால் நீ சான்றோயல்லை என்று சொல்லிவருவோம்; வா' எனத் தலைவீ தோழியை அழைத்தாள் (நற். 365: 5-9). 'வள்ளைப் பாட்டிடத்தே நாம் பொருந்திப் பாட, நம் மெனறோளின் கிழவனும் மறைந்து நின்று கேட்டு அருள்பண்ணி வரைவு வேண்டி வந்தனன்' எனத் தோழி தலைவிக் குரைத்தாள் (கலி. 41:40-42). நின் கையிடத்து யாதுளது எனத் தலைவியைக் கேட்ட ஆற்றிடைத் தலைவனுக்கு அவள், 'யான் இச்சேரிக் கிழவன் மகள்; என் கையிலிருப்பது புலத்தி விற்பதற்காகப் பனையோலையால் முடைந்த புட்டில்' எனறாள் (கலி. 117:5,8).

2. **கணவன்.** கண்டீரக்கோனின் பெண்டிர் தம் கிழவன் - கணவன் - சேட்புலம் செல்லின், பாடுநர் உவக்குமாறு இழையணித்த புன்றலை மடப் பிடியைப் பரிசிலாக நல்குவர் (புறம். 151:3-6). மறக்குடி மகள் பாணர்க்கு வருவிருந்து அயரும் விருப்பினள்; அவள் கிழவனும் போரில் யானைகளை வென்று அவற்றின் பொன்னாலான ஓடை முதலிய வற்றைப் பரிசிலாக வழங்கும் இயல்பினன் (புறம். 326:7-15).

**கிழவியர் – முதிய பெண்டிர்.** வையையில் நீராடிய பெண்டிருட் சிலர், 'எம் கணவரும் யாமும் கிழவர் கிழவியர் - முதிய பெண்டிர் - எனப் படாமல் ஏழ் பிறப்பும் நிலைத்த இளமையுடனும் செல்வத்துடனும் சுற்றத்துடனும் யாம் நிலைபெறுக' என வேண்டினர் (பரி. 11:120,121).

**கிழவிர் - உரிமை உடையிர்.** 'நன்னனின் கூத்தரேம் என்று கூறி, நும்முடைய மனைபோலத் தடையின்றிச் சென்று கிழவிர் - உரிமை உடையிர் - போலக் கேளாதே உறவு கொள்ளின் நெயயில் பொரித்த தசையுடன் தினைச் சோற்றைப் பெறுவீர்' எனக் கூத்தர் ஆற்றுப்படுத்தப் பெற்றனர் (மலை. 164-169).

**கிழவோய் - உரியோய்.** 'கடலால் வரும் பல பண்டத்தையுடைய நாடு கிழவோய் - உரியோய் -' எனச் சோழன் நலங்கிள்ளி விளிக்கப் பெறுகிறான் (புறம். 30:15). 'ஒரு பெண் யானை படியும் சிறிய இடம் ஏழு களிற்றினைப் புரக்கும் நாடு கிழவோய்' எனக் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் விளிக்கப் பெறறான் (புறம். 40:10,11). 'பெண்ணையாற்றுப் பக்கத்தையுடைய நாடு கிழவோய்' என மலையமான திருமுடிக்காரி விளிக்கப் பெறுகிறான (புறம். 126:23). 'யாவரும் ஒப்பப் புகழும் நாடு கிழவோய்' என ஆய்வள்ளல் விளிககப பெற்றான் (புறம். 135:22). பெருஞ்சித்திரனார் தம மனைவியை 'மனைகிழவோய்' என விளித்துக் குமணன நல்கி[illegible] வளனை எல்லோர்க்கும் கொடுப்பாயாக எ[illegible] உரைததாா (புறம. 163:7-9). 'போரில் அடங்கா [illegible]னரை அடக்கும் நிறைந்த விளையுளை யுடைய நாடு கிழவோய்' என விச்சிக்கோன் விளிக்கப் பெற்றான (புறம். 200:15-17). 'இருங்கோவேள் பகைவர் அஞ்சும் தானையுடைய கேடில்லாத நாடுகிழவோய்' என விளிக்கப் பெற்றான் (புறம். 201:19,20). பெருங்கல் வைப்பின் நாடு கிழவோய்' எனபது இருங்கோவேளைக் குறித்த விளி (புறம். 202:21). 'கண்டார்க்கு அச்சம் பயக்கும் களஙகிழவோய்' எனச் செருப்பாழி யெறிந்த இளஞ்சேட் சென்னியை ஊனபொதி பசுங்குடையார் விளிப்பர் (புறம். 370:27). 'குருதியுலர்ந்து துகள்பட்ட களங் கிழவோய' என்பது தலையாலங்கானத்துச் செரு வென்ற நெடுஞ்செழியனைக் குறிதத விளியாகும (புறம். 371:27). 'கண்டார்க்கு அச்சம் தரும் இடமாகிய களங்கிழவோய' எனக் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவன் விளிக்கப் பெற்றான் (புறம். 373:39). 'பகைவரது யானைப படையைக் கண்டால் நிலலாமல் அதனமேற் செலலும் தானையையுடைய இறைகிழவோயே' என ஆடுகோட் பாட்டுச் சேரலாதன விளிக்கப் பெற்றான (பதி. 54: 16, 17). பெருஞ்சேர லிரும்பொறை, 'அகன்ற இடத்தையுடைய ஊர்களைக கொணட நாடு கிழவோய' என விளிக்கப பெற்றான் (பதி. 76:15). 'குளிர்ந்த கடற்பக்கத்தையுடைய நாடு கிழவோய்' என்பது இளஞ்சேரலிரும பொறையைக் குறித்த விளி (பதி. 88:42). இளஞ்சேர லிருமபொறைக்குப் 'பெருநல் யானைகளை யுடைய இறைகிழவோய்' என்பதும் விளியாக அமைந்துள்ளது (பதி. 90:57).

**கிழவோர் – உரியோர்.** 'தும்பி, நீ சென்று தேனடைகள் தொங்கும மலை கிழவோரிடம் - உரியோரிடம் - களையெடுப்பாரின் தங்கையாகிய தலைவி தமரின நீங்காளாய் வருந்துகின்றாள எனபதைச சொல்வாயாக' எனத் தோழி கூறினாள் (குறு. 392:1,5-8). தலைவி, செவ்வாய்ப் பைங்கிளியை நோக்கிப பலா மரங்கள் நிறைந்த சாரலையுடைய தலைவர் நாட்டு மலைப்பக்கம் நின் கிளையைக் காணச்

செல்வாயாயின, 'இம்மலைக் கானக்குறவர் மட மகள ஏனல் காவல ஆயினள்' என அம்மலைகிழ வோற்குச் சொல்லுக என வேண்டினள் (நற. 102: 1, 5-9).

**கிழவோன் – உரியோன்.** நெல்லரியும் தொழுவர் தம் கூர்வாள மழுங்குமாயின் பின்னும் திறமபட அரிதல் வேண்டிக கலமெனக கருதி யாமையின் முது கோட்டில அதனைத தீட்டும் மாவிலங்கைக் கிழ வோன் - உரியோன் - ஓய்மான் வில்லியாதன் (புறம. 379:3-7). காவிரி பாயும் தோட்டங்களையும் நெலவிளையும் கழனிகளையும் உடைய அம்பர் எனனும் ஊருக்குக் கிழவோன நல் அருவந்தை (புறம. 385:8-10). புல்லிய தலையை யுடைய பிடி யானை வருந்த, அதன் கன்றைக் கொணர்ந்து குனறக நல்லூரின மன்றத்தே பிணித்து வைக்கும் அருவி பாயும வேங்கடங்கிழவோன், தன் மனம் செல்லுமிட மெல்லாம சேறற் கெழாத நல்லேர் முதியன ஆவான (புறம். 389: 9-12). வன்மை பொருந்திய தடககையினையும் வாய் வாளினையும் விற்பயிற்சியால் உயர்ந்தகனற சந்தனம் பூசிய மார்பினையும் உடைய சோழிய ஏனாதி திருக் குட்டுவன் தழைத்த கதிர்களையுடைய கழனிகள் சூழந்த வெண்குடை எனனும் ஊர்க்குக் கிழவோன் ஆவான் (புறம. 394:1-3). சோழன நலங்கிள்ளி கடலிற் செலலும் வங்கங்களைத துறைதோறும் பிணிக்கும் நல்லவூர்களையும் உறைதற்கினிய புது வருவாயையு முடைய நாடு கிழவோன் ஆவான் (புறம. 400:20-23). ஆடுகோட்பாட்டுச் சேரலாதன உழவர் பல கடாக்களைப் பூட்டி உழுத கலபபைக் கொழுவின் பக்கத்தே அழகிய மணியைப் பெறு வதற் கிடமான சிறந்த ஊர்களைக் கொண்ட நாட்டிற்குக் கிழவோன (பதி. 58:15-19). செலவக் கடுங்கோ வாழியாதன் பளிங்கு விரவிய செம்பரல் முரம்பில் கதிர்த்திருமணி பெறும் அகன்ற இடத் தையுடைய ஊர்களுடன் கூடிய நாடு கிழவோன் ஆவான (பதி. 66: 18-20). பழமுதிர்சோலை மலை கிழவோன (முருகன) பெறலரும் பரிசில் நல்குவான் என அனபன ஆற்றுப்படுத்தப் பெறுகிறான (முரு. 295,317). காவிரிபுரக்கும் நாடு கிழவோன எனக் கரிகால வளவன சுட்டப் பெறுகிறான (பொரு. 248). செந்தீப் பேணும் முனிவர் களிறு தரும விறகினால வேள்வி செயயும் இலங்கும் அருவி யுடைய மலை கிழவோன தொண்டைமான் இளந் திரையன் (பெரு. 498-500). மலையினின்றும் வீழும் அருவிகள் வென்றுயர்கின்ற கொடிகள் போலத தோனறும் குனறுசூழ பரப்பினையுடைய நாடு கிழவோன நன்னன (மலை. 581-583). குன்று கிழ வோனாய தலைவன் தலைவியின் மையுண்ட கண் களைப் பலமுறை நோககிச் சென்றான்; மாலைப் போதில் அவன் மறைந்திடும் திசை நோக்கித் 'தோழி இவன் மகனே' எனறு தலைவி தன்னிடம் கூறியதைத் தோழி செவிலித் தாய்க்குக் கூறி அறத்தொடு நின் றாள் (அகம். 48:21-26). மேகம் தழுவும் சிமையங் களை உடைய மலைகிழவோன், படுமழை பொழிநத நள்ளிரவில் கொல்லுநதொழிலையுடைய விலங்குகள் திரியும் இருளிடையே நாடோறும் தமியனாய்த் தலைவியைக் காண வந்தான் (அகம் 108:8-11,18). எவ்வி யாழொலிக்கும் மறுகினையுடைய நீடூர்க்குக் கிழவோனாவான் (அகம. 266:10,11). காவிரிப்படப் பையையும் நீர் நிறைந்தோடும் புதவங்களையும் உடைய போர் எனனும ஊரின கிழவோன் பழையன் (அகம். 324:10-12). நெற்கதிர்களையுடைய வல்லம் என்னும் ஊரின் கிழவோனாகிய நல்லடி என்பான நல்ல தேரினையும் கடிய களிறறியானைகளையு முடைய சோழரின வழித்தோன்றல் ஆவான் (அகம். 356:11-14). 'மூங்கில் வேலியை யுடைய மலைகிழ வோனாகிய தலைவன் பொருட்டுத தலைவிககுத் தொடி நெகிழ்ந்தன; தோள் மெலிநதன (குறு. 239: 1,6). யானை மடப பிடி தழுவிக் குன்றச் சிறுகுடி இறங்கிச் செல்லும் மன்றங்கள் பொருந்திய மலை கிழவோனுக்கு நின் பொறுத்தற்கரிய துன்பம் தீரும் வண்ணம் கூறத் தகுவனவற்றைக் கூறினால் எனன எனத் தலைவியைத தோழி வினவினாள் (குறு. 332). வலிமிக்க சோழ மனனர் கொங்கரை யடக்கும் பொருட்டுப் போர் எனனும் ஊரின் கிழ வோன் பழையனிடம் தபபாத வேற்படையைப் பெற்று வைததிருந்தார் (நற். 10:6-8). தொடுமுடிகள் உயர்ந்து விளங்கும் மலைகிழவோ னாகிய தலைவன் முனபு எம் கைககொண்டு தன்கண் ஒற்றியும் தனகைக கொண்டு என் நனனுதல் நீவியும் அன்னைபோல இனிய கூறினான எனப் பிரிவாற்றாத தலைவிககுத் தோழி கூறினாள (நற். 28:1-4,9). கரிய மலைபபககததையும வெள்ளிய அருவியையும் உடைய மலைகிழவோன என்றும் நம் நயந்து வருநதினான எனனும் 'என்னுடைய வாயமொழியைத் தெளிந்தாய் அலலை' எனக் குறை நயநத தோழி தலைவிக்குக் கூறினாள் (நற. 32:1-4). தலைவன் வரும ஆறறது ஏதம் அஞ்சி நிறம் வேறுபட்ட தலைவி வெறியாடல உற்ற விடத்து, 'மலர் உதிர்நது பரவிய வேங்கை மரத் தின் கீழே தங்கியிருககும மலை கிழவோனுக்கு நாம் எனன செய்ய வல்லோம்' எனச் சிறைப்புறத் தலைவன் கேட்குமாறு தோழிக்குரைத்தாள (நற். 51:1,11). கண்டல் மர வேலிகளை யுடைய நும்

துறைகிழவோனிடம், என் குறை இத்தன்மையது என உணர உரைக்குமாறு தலைவி வெண்குருகிடம் வேண்டினாள் (நற்.54:4-11). தலைவியின் மேனிவேறு பாடு முருகனாலும் வேறுள்ள அணங்குகளாலும் எய்திய தொன்றன்று; மணிபோலத் தோன்றும்மலை கிழவோன் இதனைச் செய்வித்தான் என்று நெடுவேள் கூறின், அதனால் அவனுக்குக் குற்றமுண்டோ என்று தோழி தலைவிக்கு உரைப்பாளாய்ச் சிறைப்புறத்தலைவனுக்கு வெறியயரும் செய்தியை உணர்த்தினாள் (நற். 173:5-10). குதித்து விழுகின்ற அருவியையுடைய மலைகிழவோன் மேகம் பரத்தலினால் செறிந்த இருளுடைய நடு யாமத்தில் அரிய வழியில் வந்து அருளுதல் செய்யானோ எனச் சிறைப்புறமாகத் தலைவன் கேட்பத்தோழி தலைவியிடம் கூறினாள் (நற். 228:2-5,9). ஊர் கிழவோன் தன் சொல்லை நம்பிய பேதை மகளின் மேனியைப் பசலை மூழ்கச் செய்யும் கொடுமையுடையவன் (ஐங். 41:3,4). வரையர மகளிர் குழுவுடன கூடிச் செல்லுமிடமெல்லாம் நீங்காது நோக்கி நல்லள் என்று என்னைப் பாராட்டுவர்; ஆனால் மலை கிழவோர்க்கு நான் தீயேன் ஆதல் யாங்ஙனம் எனச் சிறைப்புறத் தலைவன் கேட்கத் தலைவி தோழியிடம் கூறினாள் (ஐங். 204:2-5). முல்லை நிலம் அழகுசெய்யும் சிறுமலைகள் பொருந்திய நாடு கிழவோன், தலைவி மகனுக்கு முலைப்பாலூட்டும்போது அவளது சிறுபுறந்தழுவுதல் கண்டு அவன் பேரன்பினைத் தலைவியின் தாய் பாராட்டினாள் (ஐங். 404). வண்டூதும் பூக்கள் நிறைந்த முல்லை நிலப் பரப்பினையுடைய நாடு கிழவோன் மகன் விளையாடுதலைக் கண்டு காதலியைத் தழுவிக் களித்து இனிதிருந்தனன் (ஐங். 406). மென்புல வைப்பின் நாடு கிழவோன் நயந்த காதலியைத் தழுவிப் பாணர் யாத்த பாவின் பயன் தெரிநது இனபுற் றிருந்தான் (ஐங். 407). நாம் தன்னுடைய மலையைப் பாட அதுகேட்ட மலை கிழவோன், மெய்ம்மலி யுவகையனாய் நின் மென் முலை ஆகம் அழகுபெற வரைவொடு புகுந்தான் எனத் தோழி தலைவிக்குரைத்தாள் (கலி. 40:31-34). 'நாம் பாடிய வள்ளைப் பாட்டினைச் சிறைப்புறமாக நின்று கேட்ட தலைவன் வரைவு வேண்டி வந்தனன்; உன்னுடைய தந்தையும் மணத்தையுடைய வேங்கைக்கீழிருந்து அம்மலைகிழவோனுக்கு மணஞ்செய்தலை விரும்பிக் கூறினான; ஆதலால் நமக்கு நனமை உண்டாகின்றது; வருந்தாதே' எனத் தோழி தலைவியைத் தேற்றினாள் (கலி. 41:40-44).

**கிழாஅர்** - பூட்டைப்பொறி. தலையாலங்கானத்துச் செரு வென்ற பாண்டியன் நெடுஞ்செழியனுடைய ஊர்களில் மெத்தெனற கட்டுக்களையுடைய வலிய கிழாஅர் - பூட்டைப்பொறி - ஓசை கேட்டது (மது. 93).

**கிழி** - ஆடை. எள்ளைப் பிழிந்தெடுக்கும் நெய்யும் வெள்ளிய கிழியும் - ஆடையும் - பெறாது நனகலம் பெறும் விறலி ஊரில் கூத்தயர்வாள் (நற். 328:8,11).

**கிழிப்பு** - குகை. வானம், மலைகிழிப்பு - குகை - போன்று கரிய இருளைப் பரப்பிப் பலவாய ஓசையொலியுடைய மேகம் முழங்குவதும் நீங்கவில்லை (நற். 154:1,3).

**கிள்ளி** - சோழ அரசன். 'பகைவரை வென்ற மாறுபாட்டான் மிக்க செல்வத்தையுடைய தேர்வண் கிள்ளியின் (நலங்கிள்ளியின்) தம்பியே' எனச் சோழன் மாவளத்தான் விளிக்கப்படுகிறான் (புறம். 43:9,10). பிசிராந்தையார் 'அன்னச் சேவலே, நீ சோழ நாடு செல்லின் உறையூரின்கண் உள்ள அரண்மனைக்குள் சென்று எம் பேரரசன கிள்ளி (கோப்பெருஞ்சோழன்) கேட்குமாறு பிசிர் என்னும் ஊரின்கண் ஆநதையுடைய அடிக் கீழ் என்று சொல்லின் நின் பேடை அணிய நன்கலம் நல்குவான் என்று அதனை விளித்துக் கூறினார் (புறம். 67:1,8-14). வெல்லும் போரினைச் செய்யும் வீரக்கழ லணிந்த திருந்திய அடியினையும் கடிய செலவினையுமுடைய குதிரையைக் கொண்ட கிள்ளி என ஏனாதி திருக்கிள்ளி விளிக்கப் படுதல் (புறம். 167:9,10). பொன்னாற் செய்த மாலையை யுடைய தேர்வண்மையைச் செய்யும் கிள்ளி (கோப்பெருஞ்சோழன்) இல்லாத பேரிசை மூதூர் மன்றம் கண்டு வருந்தினேன் எனப் பொத்தியார் கூறுகின்றார் (புறம. 220:5-7). கடுமான் கிள்ளி, கண்ணுக்கு அழகு நிறைந்த ஆததி மாலையையும் விரைந்து செல்லும் குதிரைகளையு முடையவன் (புறம். 355:5). கோசரது படையை அழித்து நாட்டைக் கைக்கொள்ள விரும்பிய பொலம்பூண் கிள்ளிக்கு மலர்கள் விரிந்துள்ள நெடிய கழியின் இடையே அமைந்த பெரிய புகழையும் தோட்டங்களையும் உடைய காவிரிப்பூம்பட்டினம் உரியதாகும் (அகம். 205:9-12). யானைகளைக் கொண்ட இசைவிரும்பிய கிள்ளி அரிசிலாற்றுக் குரியவன (நற். 141:9-11). கைவண்மையுடைய கிள்ளிககு வெண்ணி என்னும் ஊர் உரியது (நற்.390:3). ஒளிவீசும் இலை போன்ற வேற்படையையும் விரைந்து செல்லும் குதிரையையும் உடைய கிள்ளியின் மதில்கொல் யானை போல விரைந்து அணையை அழிக்கும் புதுப்புனல் வந்தது (ஐங். 78:1-3).

**கிள்ளிமங்கலங் கிழார்** - புலவர். கிளிமங்கலங்கிழார்,

கிழிமங்கலங் கிழார், கழிமங்கலங்கிழார், கிள்ளி கிழார்என்ற வேறு நான்கு பாடங்களோடும் இவர் பெயர் காணப்படும். கிள்ளிமங்கல மென்பதே ஏற் புடைய பாடமாயின், இப்புலவர் பாண்டிநாட்டி லுள்ள கிள்ளிமங்கலமென்னும் ஊரினராவர். கிளிமங்கல மென்ற பெயரில் சோழ நாட்டில் திருச்சிராப்பள்ளி மாவட்டம் அரியலூர்க்கருகில் ஓரூர் உள்ளதெனபதும் கருதத்தகும். கிழிமங்கலம், கழிமங்கலம் என்ற பாடத் தொடர்கள் ஆய்விற் குரியன. கிள்ளிகிழார் என்ற பாடத்தை நோக்கின் இவர் சோழமன்னர் குடியுடன தொடர்புடையவர் எனக் கருத இடனுண்டு. கிழார் என்பதனால் வேளாளர் என்பது போதரும். ஊரொடு தொடர்ந்த மரபுப் பெயராலேயே குறிக்கப்படு மளவு புகழமைந்தமையால் இவர்க்கு இயற்பெயர் வேண்டப்படாது மறைந்தது போலும். இவர் பாடியனவாகக் குறுந்தொகையில் மட்டும் நான்கு பாடல்கள் (76, 110, 152, 181) உள்ளன. குறிஞ்சி, முல்லை, மருதம் எனற முத்திணைகளை இவர் பாடி யுள்ளார். மலைப்பக்கத்தின் சேம்பின் அகன்ற இலையை யானையின செவியசைப்பைப் போல் வாடைக்காற்று அசைக்குமென்றும (குறு. 76) நீலத் தின பேரரும்பை மலர்த்திப் புதரில் கருவிளை மலரை யாட்டி ஈங்கை மலர்கள் உதிருமாறு வாடைக் காற்று வீசுமென்றும் (குறு.110) இருபாடல் களில் இவரால் வாடை புனைவு பெறுகின்றது. தாயமுகம் நோக்கி வளரும் யாமைப்பார்ப்பினைப் போலத் தலைவரைப் பலகால் காண்டலால் தலை வியர் காமம் வளரும் எனவும் தலைவரால் பிரியப் படும் நிலையில் தலைவியர் காமம் தாயில்லாத முட்டை அடைகாக்கப்படாது கிடந்தபடியே அழிவதுபோல உள்ளத்துக்குள்ளே கிடந்து மெலி யும் எனவும் (குறு. 152) தலைவி கூற்றில் இவர் தரும் உவமைக் குறிப்புகள் சிறப்புநயங் கொண் டன. ஈன்றணிமையுடைய காரான், உழவனால் கட்டப்பட்ட கன்றின அருகிலிருந்து அகன்று செல் லாமல் பக்கத்திலேயே உள்ள பசும் பயிர்களை மேயும் என்பதனால் தலைவன் இல்லின்கண் உறை யும தலைவிபால் கொண்ட அன்பு குறையாம லேயே தனக்கு வேண்டும் இன்பத்தை அருகிலுள்ள பரத்தையர்பால் பெறுகின்றான் என்ற குறிப்புப் பொருளை யமைத்து இவர் மருதத்திணைப் பாடலை (குறு. 181) யாத்துள்ளார்.

**கிள்ளிமங்கலங்கிழார் மகனார் சேர கோவனார்** - புலவர். பாண்டி நாட்டிலுள்ள கிள்ளிமங்கலமென்ற ஊரி னராய்ப் புகழமைந்த வேளாளர்க்கு மகனாரான சேர கோவனார் என்று இவர் பெயர் விளக்கம் பெறுவார். இவர் தந்தையாரான கிள்ளிமங்கலங் கிழார் குறுந்தொகையில் நான்கு பாடல்களைப் பாடிய புலவராவார். அவர் மகனாரான இவர் பாடிய பாடலொன்று நற்றிணையில் 365-ஆம பாடலாக அமைந்துள்ளது. ஒன்றேயாயினும் நன்றாய் இயன்றுள்ள இவர் பாடலில் தலைவ னைப் பலநாள் மழை பெய்யாதொழியினும் அருவி ஆரவாரிக்கும் நீர்வளம் மிக்க மலைநாடனாகக் குறிப்பிட்டுக் களவு நீட்டிக்கும் நிலையில் அவனைச் 'சான்றோய் அல்லை' எனச் சொல்லி விட்டு வரு தற்குத் தோழி தலைவியை அழைக்கின்றாள். அருமையிற் காக்கின்ற அன்னையின் காவலை மீறிப் பெருவாயிலைக் கடந்துபோய் ஊர்ப்பொது மன்றத்தினை யடைந்து பகலிலேயே பலரும் காணு மாறு அவனூரை வினவிச் செல்வோமோ என்று அவன் சிறைப்புறத்தானாய் நிற்கையில் அவள் தலை வியை அழைப்பது நயமுறவுள்ளது. இவர் பெயர் சோகோவனார் எனறு நற்றிணை பி.நா. உரையில் காணப்படுகின்றது. அவ்வுரையாசிரியர் கோவன் என்பதை இவரது இயற்பெயராகவும் சோ என்பதை அடைமொழியாகவும் காட்டி, அவ்வடை மொழியைப் பலர் பெற்றிருக்கின்றனர் என்றும் இன்ன காரணத்தால் அவ்வடைமொழி கொடுக் கப்படுவ தென்பதும் அதன் பொருள் இன்ன தென்பதும் விளங்கவில்லை என்றும் கூறுவர் (பி.நா. நற்றிணை. பாடினோர் வரலாறு). ஆயின், வையா புரிப் பிள்ளையின் சங்க இலக்கியப் பதிப்பில் இவர் பெயர் சேரகோவனார் என்று கொள்ளப் பட்டுள்ளது. இவை இரண்டினுக்கும் மாறாக, மதுரைத் தமிழ்ச் சங்கதது ஏட்டில் இவர் பெயர் சொகிரனார் என்று காணப்படுவதாகக் காட்டி அது சங்ககாலப் பெயர் வகையென்றும் கணித் தொழிலடியாக அப்பெயர் அமையு மென்றும் கூறுவர் ஔவை. து.

**கிள்ளிவளவன்** – சோழ மன்னன். நீ கிள்ளிவளவனிடம் செல்குவையாயின் அவனது நெடுங்கடைவாயிலில் நிற்றலும் இலை; அவனது தேர்வீசு இருக்கையில் அவனைக் கண்டால் வண்டு ஒலிக்காத பொற்றா மரைப் பூவினைச் சூடாயாதல் அதனினும் இலை' என்று ஆலத்தூர் கிழார் கிள்ளி வளவனிடம் பாணனை ஆற்றுப்படுத்துவர் (புறம். 69: 4, 16, 17). கிள்ளிவளவனது கொள்ளக்கொள்ளக் குறைபடாத கூழ் உடைய வியன் நகர் அடு நெருப்பல்லது சுடு நெருப்பறியாது; அவன் சோற்றையும் தண்ணீரை யும் விளைக்கும் நல்ல நாட்டுக்கு வேந்தன்; அவனது நல்லிசையை உள்ளிச் சென்றால் செல்வனாகலாம்; பிறகு தேடும் மாக்களுக்குப் பொன் கிடைத்தாற்

போன்றதன்று அவன ஈகை என்று கிள்ளிவளவன் சிறப்புக்களைக் கோவூர்கிழார் பாடுவர் (புறம். 70: 7-18). நாங்கள் அசையும் தலையாட்டம் அணிந்த குதிரைகளையுடைய நலங்கிள்ளியின் விருப்பத்திற் குரிய பொருநராவேம்; பிறரைப் பாடிப் பரிசிலைப் பெற விரும்பேம்; அவனையே பாடுவேம் எனப் பொருநர் கூற்றில் நலங்கிள்ளியைக் கோவூர் கிழார் பாடுவர் (புறம். 382:4,7). காவிரி பாயும் நாட்டிற்குரிய கெடாத நல்ல புகழையுடையவன் கிள்ளிவளவன் (புறம். 399: 12, 13). பழையன் மாறனைக் கடலிற் சென்று கிள்ளிவளவன் பொருது வென்றான். (அகம். 346: 19-22).

**கிள்ளை - கிளி.** வைக்கோல் வேய்ந்த குடிலின் முற்றத்தே அவல் இடிக்கும் உலக்கை ஓசையை அயலிடத்துள்ள கிள்ளை - கிளி - தமக்குண்டாய பகையாகக் கருதி அஞ்சும் (பெரு. 225-227). மனைகளில் தங்கும் கோழிகளுடனே நாயும் சேராத தம் பதியில் வளைந்த வாயுடைய கிள்ளைக்கு மறையினை அந்தணர் பயிற்றுவர் (பெரு. 299 - 301). பறவைகள் நிறைந்த வழிகளையுடைய மலைப் பக்கத்திலுள்ள புனத்தில் தெளித்த சொற்களை இடையிடையே கூறித் தலைவி தோழியுடன் கிள்ளைகளை ஓட்டினாள் (குறி. 99-101). 'நீ பூமாலை அசைய ஓடிக் கிள்ளையைத் தெள்விளி பயிற்றி ஓட்டாயாயின கிளிகடியத் தெரிந்திலள் என அன்னை பிறரைக் காவலாக வைத்தால் பின் தலைவன் மார்பினைப் பொருந்துதல் அரிதாகி விடும்' எனத் தலைவன் சிறைபுறத்தானாகத் தலைவியிடம் தோழி கூறினாள் (அகம். 28: 9,10). செந்தினைப்புனத்தில் தலைவன தலைவியோடு சிவந்த கழுத்தையுடைய கிள்ளைகளை ஓட்டினான் (அகம். 242:5,6). மழையால் வளர்க்கப்பட்ட பசும் பயிர்கள் தளிரியல் கிள்ளையின் சிறு குஞ்சின் தூவியைப் போன்று காட்சியளித்தன (அகம். 324: 3-5). தலைவியால் வளர்க்கப்பட்ட செந்தார்க் கிள்ளைகள் அவளது பிரிவாற்றாது மங்கையர் பாலூட்டவும் உண்ணவில்லை (அகம். 369: 3,4). கிள்ளை தன் வளைந்த வாயிலே கொண்டுள்ள வேம்பின ஒண்பழம், புது நூலில் நுழைத்தற்குத் தன் வளைந்த உகிர்களிடையே கொண்ட ஒற்றைப் பொற்காசினை ஒக்கும் (குறு. 67:1-4). நறுந்தழை உடையணிந்த மகளிரால் கடியப் பட்ட கிள்ளை குறிய பொற்றைமலையின உச்சியைச் சேரும் (குறு. 333:3,4). நீர்வடிகின்ற கண்ணையுடையேனாகி அழுகின்ற எனனை விடத் தலைவி வளர்த்த கிள்ளையும் 'அன்னாய், துயிலுணர்தி' எனக் கூவும் எனத் தலைவி தலைவனுடன் கூடி உடன் போயினள் எனக் கேட்ட தாய் வருந்திக் கூறினாள் (நற். 143: 4,5). தினைப்புனங் காவலுக்குக் காரணமாயிருந் தமையின் வெள்ளம் எனனும் பேரெண்ணை எல்லையாக வுடைய ஊழிகள் பற்பல கழிவன வாகியும் கிள்ளைகள் பலவும் இவ்வுலகில் நிலை பெற்று வாழ்வனவாக எனத் தலைவன் வாழ்த் தினான (ஐங். 281). நெடிய மலையின்கண் ணுள்ள குறுங்கால்களைக் கொண்ட வருடையாடடை கண்டு, தினையிற் பாய்ந்து கதிர் கொய்யும் கிள்ளை அஞ்சும் (ஐங். 287:1,2). நல்லறமே நாளும் செய்து வரும் செங்கோல் மன்னனைப் போலவே கிளளைகளும் நனி சிறந்தன என்பது தோழி கூற்று (ஐங். 290:1,2). கிளி காண்க.

**கிளவி - 1. சொல்.** தலைவி அழகிய இனிய கிளவியினை - சொல்லினை - உடையவள் (அகம். 3:16;9: 25). தலைவி காதலுடையாரை விட்டுப் பிரிதல் அறநெறி அன்றெனக் கூறிய தொன்மை பொருந்திய கிளவி அவ்வாறு சொல்லிய அளவில கழிக என்று கூறுவாள் போல அக்குறிப்பினை முகக் குறிப்பான உரைத்துக் காட்டினாள (அகம. 5:16-19). தலைவி யாழின் நரம்பு ஒலிப்பது போனற மிக இனிய கிளவியை உடையவள் (அகம. 109.1,2). ஆயத்தார் அழகிய இனிய கிளவியர் (அகம். 153.2). யாழ் வல்லோன் இயக்கும் நல்ல யாழினது செவ்வழிப் பண்ணின் இசையைக் கேட்டாற் போலும் மிக இனிய கிளவியை உடையவள் தலைவி (அகம். 212:6-8). அன்பும் மடனும சாயலும இயல்பும் என்பை நெகிழ வைக்கும் கிளவியும உடையவள தலைவி (அகம். 225:1,2) தலைவி இயற்றிய வண்டல் மனையைப் புகழந்த கிளவியை உடையனாகிய தலைவன் அவளிடமிருந்து மறுமொழி பெறாது மீணடு சென்றனன் (அகம. 250: 8,9). தலைவன வினைவயிற் பிரிவினை உணர்ந்த தலைவி மிக்க துன்பத்தாற் கலக்கமுற்று விரிந்த கூந்தலில மறைந்து, நாவானது நடுக்கமுற்ற திருந்தாத கிளவியால் நும் செலவு மாட்சியுற்றுச் செப்பமுறுக என வெய்துயிர்த்துக் கூறினாள் (அகம். 299:16-19). இரப்போர்க்கு ஈநது மகிழும் அரும்பொருளை ஈட்டி வருதலை விரும்பிப் பகைவரது சிறிய புல்லிய கிளவியாலாகிய துனபம் அழியவும் தம்பால் நல்ல புகழினை நிறுத்தவும் தலைவர் மலைவழிகளைக் கடந்து சென்றார் (அகம். 389:11-15, 24). தலைவியின் கிளவி சின்மையையும் மென்மையையும் உடையது (குறு. 70:4). தலைவன் குற்றமற்ற நெஞ்சினால் நினைந்து கூறிய கிளவிகளை உரைக்கும்

தூது தலைவியிடம் வந்தது (குறு. 106:2-4). புலவிக் காலத்தினிடையே தலைவர் இத்தகையரென்னும இனிமையிலலாத கிளவியாகிய இயற்பழித்தலால் என்ன பயன் எனத தலைவி தோழியை வினவினாள் (குறு. 181:1,2). அமிழதத்தைப் போனற அழகிய இனிய கிளவியினை யுடையவள் தலைவி (குறு. 206 1). தலைவர் பொருள்வயிற் பிரியக் கருதுவர் எனின் யாம் மறுக்க வல்லேமோ என்னும் விம்மிய கிளவியை உடையளாய்த் தோழியின் முகத்தை நோக்கித் தலைவி கண்ணீர் வடித்தாள் (நற். 33:8-12). பெண்டிர் அலர் தூற்ற, நம் காதலர் அச்சம் மிகுகின்ற துனபத்தை நமக்குச் செய்குவரல்லர் என்று நீ கூறும் அன்பு மிக்க அழகிய கிளவி கொல்லன உலையில தெளித்த நீர் போல நோய் மலிந்த என் நெஞ்சிற்குச சிறிது ஏமமாகியது என்று தலைவி தோழியிடம் கூறினாள் (நற். 133:6-11). ஆர்வ மாக்கள் நெருங்கிக் கூறும் மீக்கூற்றால் 'யாம் நல்லேம்' என்னும் கிளவியை அடையப் பெற்ற ஓவியம் வல்லோன் எழுதி வைத்ததைப் போனற வனப்பினை உடையவள தலைவி (நற். 146:7-10). புதல்வன் 'எநதாய் வருக' எனறு அழைக்கினற அழகிய இனிய கிளவியை நாம் கேட்கத் தேரினை விரையச் செலுத்துவாயாக என்று தலைவன் பாகனிடம கூறினான் (நற். 221:7,11-13). 'தெளிந்த இனிய கிளவியை உடையாய், எனது ஆருயிரைக் கைக்கொண்ட நீ யாரையோ' எனத் தலைவன் தலைவியை வினவினான (நற். 245:6,7). தலைவியின் அருநோய் செவ்வேளின முன்பு இடப்பட்ட கழங்கினைக் கொண்டு ஆராயந்த வேலன் கிளவியால் தணியுமாயின் நன்று (நற். 282:3-6). தலைவி கிளியின் ஒரு தனமை யொத்த கிளவியள் (நற். 301:5). தலைவி பாணர் இசைக்கும் யாழ் நரம்பினும் இனிய கிளவியள் (ஐங். 100:4). இசை நரம்பு ஆர்த்தாற் போன்ற தீங்கிளவியள் தலைவி (ஐங். 185:4). தலைவன் தேம்படு கிளவியால் தலைவியைத் தெளிவு பெறச செயயும் இளவேனிற் பொழுது வந்தது (ஐங். 350:1-3). தலைவியின அழகையுடைய கிளவிகள் கார் காலதது இடியோடு கூடித் தலைவனுக்கு நோயைச் செய்தன (ஐங். 441:1-3). என் பொருட்டுத் தலைவர் காாப்பருவம் வந்ததை உணராராயினும் 'வருவேன' என்று கூறிச் சென்ற கிளவி பொய்படு மொழியாதற்கு அவர் நாணவும் அறியாது உள்ளமைக்கு யான வருந்துகின்றேன என்று தலைவி பாணனிடம் கூறினாள (ஐங். 472). தலைவி கிளியினது மொழியை ஒக்கும் கிளவியாள (கலி. 13:18; 20:7). தலைவி இன்றீங் கிளவியாள் (கலி. 24:3). குற்றம் நீங்கிய கிளவியினை யுடையவள் தலைவி (கலி. 29:19). வேனிற்காலம் தலைவியின் உயிரை உண்டாக்கும் உயிராகவும் அவள் துயர் அறுதற்குக் காரணமான கிளவியோடு காதலனுடைய தூதாகவும் வந்தது (கலி. 32:15-19). என்னுடைய கிளவியைக் கேட்டு என் நெஞ்சம் அறியாமையிலே புகுந்து எனக்கு ஏவலைச் செய்யுமாயின் நின் மொழியை உணமையாகக் கொண்டு நின்னைப் போகவும் விடுவேன்; ஆனால், என் நெஞ்சு யான் ஏவியதைச் செய்யாதாயிற்று என்று தலைவன் தலைவியிடம் கூறினான் (கலி. 113:15-18). மகளிர் செவ்வழியென்னும் பண்ணையுடைய யாழினது நரம்போசை போன்ற கிளவியர் (கலி. 118:15). தலைவி அன்புறு கிளவியாள் (கலி. 138:27). தலைவன் மடன்மா ஊர்ந்து மறுகிற் பாடத் தலைவியைப் பெறுதற்குப் பொருந்தின கிளவிகளை அவன் கூறக் கேட்ட தமர் வழுதிக்குப் பகைவர் திறை கொடுக்குமாறு போல அவனுக்கு மகட்கொடை நேர்ந்தனர் (கலி. 141:22-25). தலைவியின் அலைவு பெற்ற கிளவி போல யாழின் செவ்வழிப்பண் ஒலித்தது (கலி. 143:38).

2. தலைவி. பேகனது மேகம் தவழும் மலைபோலும் மணம் உடையளாய் அழகிய இனிய கிளவி - சொல்லையுடைய தலைவி - வந்து கூடியமையின் தலைவன் உவகை கொண்டான் (அகம். 262:13,16-18). அநதீங்கிளவி தந்தையது காவல், மாங்காடு என்னும் ஊரின் காவலை ஒத்தது (அகம். 288:15-17). மாலைக் காலம் வருதற்கு முன்னே, கயல்களை ஒத்த மையுண்ட கணகளையுடைய தெரிதீங் கிளவியின துன்பம் நீங்கக் குதிரைகளை விரைநது செலுத்துவாயாக எனத் தலைவன் பாகனிடம் கூறினான் (குறு. 250:3-6). தலைவன் வந்தனன்; அவனுக்கு நமர் மகட்கொடை நேர்ந்தனர்; அந்தீங்கிளவி நின் சிறப்புப் பொலிக எனத் தோழி தலைவியிடம் கூறினாள் (ஐங். 300:2-4). அந்தீங்கிளவியை எம்மிடம் தரக் கார்ப்பருவம் வந்தது; தேரை விரைந்து செலுத்துக எனத் தலைவன் பாகனிடம் கூறினான் (ஐங். 490). காரால் கவின் கொண்ட கானத்தைக் காணின் வருந்துவள் எனக் காதலர் அந்தீங்கிளவியின் நலத்தைக் கொண்டு வந்தனர் (ஐங். 499:2-5).

**கிளி** - கிள்ளை. நாஞ்சில் வள்ளுவன், கிளி மருவிய அகன்ற புனத்தின்கண் மரப் பொதும்பில் வைத்த பெரிய கதிர்த்தொகுதிக்கு ஒப்பானவன் (புறம். 138: 9,10). மகளிர் புனததிற் படியும் கிளிகளை ஓப்புவாராயின் சேற்றிடத்தே நின்ற புள்ளினங்கள் அவ்விடத்தை விட்டு இரிந்தோடும் (புறம். 395:13-15). மகளிர் காட்டிலுள்ள புனத்திற் படியும் கிளிகளைக்

கடிதல் வேண்டி அதற்குரிய பாட்டைப் பாடினர் (பதி. 78:5,6). பாடினி கிளியினது வாயோடு ஒப்புமையுடைய ஒளிவிடுகின்ற பெருமையுடைய உகிரினை உடையவள் (பொரு. 34,47). குறிஞ்சி நிலத்தில் தினை விளைகின்ற மலைப்பக்கத்திற் படியும் கிளியை ஓட்டுவதனால் ஆரவாரம் உண்டாயிற்று (மது. 291). மகளிர் மலைப்பகக்த்திலுள்ள பரண மீது ஏறித் தழலும் தட்டையும் குளிரும் பிறவுமாகிய கிளியோட்டும் முறைமையினையுடையவற்றை முறைமுறையே கையிலே வாங்கி ஓட்டினர் (குறி. 41-44). மகளிர் கிளி போலும் மெல்லிய மழலை மொழி பேசுவர் (பட். 150). ஒளிமிக்க சுவர்களையுடைய நல்லில்லின உயர்ந்த திண்ணைகளிலிருந்து பைங்கிளி மிழற்றும் (பட். 263,264). மகளிர் ஒலிக்கும மூங்கிலாற் செய்த தட்டையைப் புடைத்துப் புனங்கள்தோறும் படியும் கிளிகளை ஓட்டுவதனால் ஆரவாரம் எழுந்தது (மலை. 328,329). தினைப்புனங்காக்கும் மகளிர் ஓயாது ஆர்க்குந்தோறும் கிளிகள் தம் இனத்தை அழைக்கும் (அகம். 12:6,7). தலைவி சிறுகிளி கடிதலை அறியாள் என்றெண்ணி அன்னை தினைகாத்தற்குப் பிறரைக் கொணர்ந்து நிறுத்தினால் அவளுக்குத் தலைவனைக் கூடுதல அரிதாகும் (அகம். 28:11-14). தலைவி சிறுதினையிற் படியும் கிளிகளைக் கடியக் குளிருடன் கூடிய தட்டையாய கருவிகள் கொண்டு பலமுறையும் புடைத்துச் சூரரமகளிர் போல நின்றாள் (அகம். 32:5-7). தலைவி, சிவந்த மாலை யணிந்தது போன்ற கழுத்தினை யுடைய பைங்கிளியை முன்கையில ஏந்தி, 'இலலில் உள்ளவர் அறிதலை அஞ்சி மெல்லெனச் சென்ற தலைவர் இன்றுவர உரைப்பாய்' எனறு அதற்கு மழலை இனசொல் பயிற்றினாள் (அகம். 34:14-18). மாமரம் கிளி போன்ற வடிவினையுடைய காய்களை உடையது (அகம். 37:7,8). அழகிய சிறகினையுடைய இளங்கிளி எடுததுச் செல்ல இயலாதவாறு பெருங் கதிர்களை யுடையது தினை (அகம. 38:12,13). கிளி, பந்து, கழங்கு எனனும் இவற்றைத் தலைவி பெரிதும் விரும்பினாள (அகம்.49:1). தலைவி பலநாளும் புணரும் பகற்குறியாகக் கொண்ட தினைப் புனத்திலே கிளியை ஓட்டுவதற்குப் பாடும் பாடலும் நீங்கினாள் (அகம். 118:11-13). தலைவி கிளிபோல மெனசொற்களைக் கூறும் சிவந்த வாயினையுடையவள் (அகம். 126:17,18). வானவிலலை ஒத்த பசிய மாலையினையும் சிவந்த வாயினையும் உடைய சிறுகிளி, தினை சிதையும்படி கொய்து சுமக்கலாற்றாது இட்ட பெரிய கதிரினைக் கானங்கோழி தன் இனத்துடன் கவர்ந்துண்ணும் (அகம். 192:3-7).

வரகினைப் பற்றியுண்ட மயில் தோகையினை விரித்து இன்பம் உற, குருந்த மரத்தின் கிளையிலிருந்து கிளிகளை ஓட்டும் மகளிர்போல ஒலியுண்டாக அகவும் (அகம். 194:9-15). கரும்பு போலத் திரண்டு அழகுற்ற பெருங்கதிரையுடைய தினை, கிளிகள் வந்து வீழ நன்கு விளைந்ததை அறிந்தும் அறனில்லாத யாய் நம்மைச் செல்க எனப் போக்குவள் அல்லள் எனத் தோழி தலைவியிடம் கூறினாள் (அகம். 302:10-12,15). நீ பகற்கண் வரின் பரணில் எம்முடனிருந்து சிறுதினையிற் படியும் கிளிகளை ஓட்டித் தலைவியின் குவளை மலர் அணிந்த கூந்தலணையில் துயின்று, பகறபொழுது கழியச் செல்லலாம் எனத் தோழி தலைவனிடம் கூறினாள் (அகம். 308:7-15). சிறுதினையினது கதிரைக் கிளி ஒடித்துணடமையால் கூழையாகிய தாளில் பெருமழை பொழிய இலைகள் தழைத்தன (குறு. 133:1-3). விளைந்த தினையிற் படியும் வளைந்த அலகையுடைய சிறுகிளிகளைக் கடியும் பொருட்டுத் தாய், தலைவி தோழியரைச் செல்கவென விடுத்தாள் (குறு. 141:1,2). புனத்தில் படியும் கிளிகளைத் தலைவி ஓட்டினாள் (குறு. 142:2). யாமரத்தை வெட்டி மரங்களைச் சுட்ட வழியிலுள்ள செந்தினையின் பசிய கதிர்களில் வீழ்கினற கிளிகளை ஓட்டுதற்குச் செல்வோம் எனக் குறியிடம் பெயர்த்துத் தோழி தலைவனிடம் உரைத்தாள் (குறு. 198:1-5). தினையில படியும் கிளிகளை ஓட்டுவீர்களாக வென்று எந்தாய் எம்மைப்போக விடின் பகற்காலம் நினனோடு அளவளாவுதற்குப் பொருந்தும் எனத் தோழி தலைவனிடம் கூறினாள் (குறு. 217:1). அவரைக் கொடியிற் பூத்த ஒளிமிக்க மலர்கள் கிளி மூக்கினை ஒக்கும் (குறு. 240:1,2). தினையிடத்தே வீழ்கின்ற கிளிகளை ஓட்டுகின்ற கொடிச்சியின கையிலுள்ள குளிர் என்னும் கருவியின் இசையினை அக்கொடிச்சியின் பாடலென்று கருதிய கிளிகள் தினையினின்றும் பறந்து செல்லாது படிந்திருந்தன (குறு. 291:1-4). தலைவன தலைவி தோழியரோடு தினைப்புனத்தில் படியும் கிளிகளை ஓட்டினான் (குறு. 346:5). தினையை உண்ணுகின்ற கிளிகளை ஓட்டும் கொடிச்சியின் கையிலுள்ள குளிர் என்னும் கருவி சிலம்பைப் போல ஒலித்தது (குறு. 360:5-7). மயில்கள் தாம் அறிதலைப் பசிய புறத்தையுடைய கிளிகள் அறியாதனவாய் நெருங்கிய தினைக் கதிர்களைக் கவர்ந்து சென்றன (நற். 13:8,9). தலைவன் நேற்றைப் பொழுது நம்மோடு தினையில் விழும் கிளிகளைக் கடிந்து அங்குத் தங்கியிருந்தும் தன் குறையைக் கூறுமிடம் பெறானாகிப் பெயர்ந்து சென றான் எனத் தோழி தலைவியிடம்

கூறினாள் (நற். 25:5-7). 'வளைந்த தினைக்கதிர்
களைக் கொய்த சிவந்த வாயையுடைய பைங்
கிளியே, நீ அஞ்சாது வேண்டிய உணவைக் கொண்டு
நின் குறையை முடித்த பின்பு என் குறையைச்
செய்து முடிக்கக் கைதொழுது வேண்டுவன்; தலை
வன் நாட்டிலுள்ள நின் சுற்றத்தினிடத்துச் செல்லு
வையாயின் அத்தலைவர்க்கு இம்மலை நாட்டின்
குறமகள் தினைபபுனததிற்குக் காவல் ஆயினாள்
என்பதை உரைப்பாயாக' என்று தலைவி கிள்ளை
யிடம் கூறினாள் (நற். 102). புலியேற்றை களிற்
றோடு போர் செய்கையில், குறவர் மாக்கள் பாறை
யுச்சியேறித் தொண்டகப் பறையை முழங்கும் ஓசை
தினைக் கதிர்களைக் கொய்ய வந்திறங்கும் கிளி
களை அச்சுறுத்தி வெருட்டும் (நற். 204:1-6). சிறு
தினையின் பெருங்கதிரைச் சிவந்த வாயையுடைய
பைங்கிளி கவர்ந்து போகின்ற அளவும் நீ அதனைக்
காவாது எங்குச் சென்றாய் எனத் தாய் தலைவி
யைக் கழறினாள் (நற். 147:2-5). தலைவனோடு
முயங்கி விளையாடிய பொழுது தினைக்கதிரைக்
கொண்டு போகாதொழிந்த சிறுபசுங்கிளிக்கு நாம்
என்ன கைமமாறு செய்வோம் எனத்தோழி தலைவி
யிடம் கூறினாள் (நற். 194:1,2,8-10). தினைப்
புனத்தில் உள்ள மழலை மாறாத தலைவி பேசு
கின்ற இனிய குரலைக் கிளிகளும் அறிந்திருந்தன
(நற். 209:4-6). தலைவி பெருமலை நாடனோடு
தினைப்புனத்தில் தங்கிச் சிவநத வாயையுடைய
பைங்கிளிகளை ஓட்டினாள் (நற். 259:3,4). மலையில்
நாம் தினைக்கதிர்களைக் கொய்து கொண்டு
போகும் சிறு கிளிகளை வெருட்டுதற்குச் செனறி
ருந்தும் அதனையறியாத கட்டுக்குறியானது முருக
வேள அணங்கியதென்று கூறுமோ எனத் தோழி
தலைவியை வினவினாள (நற். 288:7-10). தலைவி,
கழுத்திலிட்ட சிவந்த வரையுடைய கிளியின் ஒரு
தனமையொத்த சொல்லை யுடையவள் (நற். 301:4,
5). கிளிகள் சாரல் பொருந்திய மலையிலுள்ள
தம் இனத்தோடு சேர்ந்து தினைக்கதிரைக்
கொய்து தின்று காற்றினால் ஒலியெழுப்பும்
கொம்பு வாசசியம் போல விளி பயிற்றும் (நற்.
304:1-3). 'கொடிச்சியே, நீ மனையகம் புகுகவென
இனிய கூறிக கானவர் தினைக்கதிரைக் கொய்யத்
தொடங்கினர்; ஆதலின் மென்தினையைக் கொய்து
கொண்டு போகுமாறு மெல்ல வருகின்ற சிறு
கிளியை வெருட்டுதல் இனி எபபடியாகும்' எனத்
தோழி தலைவியை வினவினாள் (நற். 306:1-5). பவ
ளம் போலச் சிவநத வாயையுடைய பசிய கிளிகள்
தினைககதிரைக் கவர்ந்து சென்றன (நற். 317:3,4).
தினைக்கதிர்களைக் கிளி கொய்து போகாதபடி
காக்கும் பெருமலை நாட்டினன் தலைவன் (நற்.
328:3). தலைவி பெரிய புனத்திலுள்ள தினைக்கதிர்
களைக் கவரும் சிறுகிளிகளை வெருட்டி வேங்கை
மரத்தில் ஊசலாடித் தழையணிந்து தலைவனொடு
அருவி ஆடினாள் (நற். 368:1-4). நுந்தை வேட்டை
மேற் சென றதனால் சிறுகிளிகள் கொய்தழிககின்ற
தினைப்புனத்தைக் காவல் கொள்க எனத் தாய்
தலைவியை ஏவினாள் (நற். 389:5-7). தினை
விளைந்து முற்றியதால் இனிப் புனத்தில் வீழ்கின்ற
கிளிகளைத் தலைவி கடிய மாட்டாள் எனத் தோழி
தலைவனிடம் கூறினாள் (ஐங். 260:3,4). கொடிச்சி
கடிந்து வெருட்டவும் சோலைச் சிறுகிளி மலைச்சரி
விலுள்ள சிறுதினையை உண்டது (ஐங் 282:1-3).
கானவன் மடமகள் தினையில் வீழும் பசிய முது
கினையுடைய சிறு கிளிகளை ஓட்டினாள் (ஐங்.
283:1-3). சிவநத வாயையும் பசிய நிறத்தையும்
உடைய கிளிகள், தினையரிந்து வறுந்தட்டைகள்
மட்டும் நீண்டு நிற்கும் தினைப்புனத்தைக் கண்டு,
அதனைப் பிரிந்து செல்ல விருமபாத பேரன்பின
(ஐங். 284). குறமகள் தினைமாவினைத் தின்று பசி
தீர்நதபின் மலை நெல்லைக் கொய்தற்கு வரும்
சிறுகிளிகளைத் தட்டையாற் கடிந்தாள் (ஐங். 285:
1-3). தினைக்கதிரைக் கொய்து விடப்பட்ட தாளின்
மேல்படர்ந்து காய்த்துள்ள அவரையில் விழும் கிளி
களை ஓட்டுகின்ற புதுவருவாயையுடைய மலை
நாட்டினன் தலைவன் (ஐங். 286:1-3). தலைவி காத்
தற்கு ஏதுவாகும்படி தினைப்புனத்தின மேல் பரவி
விழுகின்ற கிளிகளின் உதவிக்கு யான் என்ன கைம்
மாறு செய்ய வல்லேன் எனத் தலைவன் நெஞ்சிற்
குக் கூறினான் (ஐங். 288). தலைவியின் இனிய குர
லோசையைக் கிளியின் ஓசையென்று கருதிப பக்க
மலையில் வாழும் கிளிகள் எல்லாம அவளிருக்கும்
தினைப்புனத்தில வநது படிந்தன (ஐங். 289:1,2).
இது, பசுமையான கிளிபோனற என் மகள் வீரும்
பித் தன கையில் ஏநதிய பைங்கிளியாகும் என்று
மகட்போக்கிய தாய் புலம்பினாள் (ஐங். 375:2).
தலைவி கிளியையொக்கு மொழியினள் (கலி. 13:18;
20:7). தலைவியும் தோழியும புனத்தில் படியும் இன
மாகிய கிளிகளைக் கடிந்தனர் (கலி. 37:12,13). படி
கின்ற கிளிகள், பரக்கும் பசிய கதிரையுடைய
தினைப்புனத்தில் தலைவி அவற்றைக் கடிநதோம்பு
தலைத் தலைவன் மறக்கும்படி செய்தான் (கலி.50:9,
10).மெல்ல நடக்கும்; மயிலுமன்று; சொல்லுச் சொல்
லத் தளரும்; கிளியுமன்று எனத் தலைவன் தலை
வியை நலம் பாராட்டினான் (கலி.55:13,14). தலைவி

படுக்கையிடத்துக் கிடந்த மெல்லணையைச் சார்ந் திருந்து, வட்டிலிலே வார்த்த பாலைச் சிறிது காட்டி அப்பாலை யுண்ணாது வெறுத்திருந்த கிளி அதனை உண்டற்கு வேண்டும் மொழிகளைக் கூறி உண்பித்தாள் (கலி. 72:1-4). (வள்ளி, தேவசேனை) இருவரின் வான் கிளிகளும் தம்முள் மழலைப் பேச்சுப்பேசி எதிர்த்தன (பரி. 9:42). கிள்ளை காண்க.

**கிளிஞ்சில்** - சிப்பி. பரதவர் கடலில் தாம் பிடித்து வந்த மீன்களை மணற்பரப்பிலே குவித்து, மீன் கொழுப்பாலாகிய நெய்யைக் கிளிஞ்சிலில் - சிப்பி யில் - வார்த்து ஏற்றிய சுடர் விளக்கொளியில் துஞ்சுவர் (நற். 175:1-4).

**கிளை** - 1. சுற்றம். புலனழுக்கற்ற அந்தணாளனாகிய கபிலன் மலையமான் திருமுடிக்காரியை அவனது அழித்தற்கரிய தன்மையை யுடைய கிளையொடும் - சுற்றத்தொடும் - பொலியவும் இரந்து செல்லும் புலவர் இனிப் புகழ்தற்கு இடமில்லையாகப் பரந்து புகழ் நிற்கப் பாடினன் (புறம். 126:9-13). உண் ணாமையின் உடம்பு வாடித் தெளிந்த நீரால் கண் நிறைந்து வியர்ப்புற்ற பல கிளையொடு பசிநோய் வருத்துவதனைத் தமக்கொரு பகையாகத் துறையூர் ஓடைகிழார் ஆய் அண்டிரனிடம் கூறினார் (புறம். 136:6-9). குமணன் நல்கிய வளனைக் கொணர்ந்து தம் மனைவியிடம் கொடுத்த பெருஞ்சித்திரனார் அவளை விளித்துப் 'பல குணங்களும் மாட்சிமைப் பட்ட கற்பினையுடைய நின் கிளையின்கண் மூத்த மகளிர்க்கும் மற்றெல்லோர்க்கும் வழங்குவாயாக' என்றார் (புறம். 163). மழை பெய்யுங் காலத்தைப் பார்த்துத் தம் முட்டைகளைக் கொண்டு மேட்டு நிலத்தை யடைகின்ற எறும்பின் ஒழுங்கினை யொப்பப் பெரிய கிளையோடும் கூடிய பிள்ளைகள் சோறுடைக் கையினராய்ப் பசிப்பிணி மருத்துவ னாகிய பண்ணனது மனையினின்றும் தனித்தனியே சென்றனர் (புறம். 173:5-9). நின்னைப் பிரிந்தபின் இறந்து படினல்லது என் வளையில்லாத வறிய கையைத் தலைமேலே வைத்துக் கொண்டு நின் இறந்து பாட்டினைக் கிளையினரிடத்தே சென்று சொல்லக் கடவேனோ எனப் போர்க்களத்தில் கணவனை யிழந்த பெண்ணொருத்தி புலம் பினாள் (புறம். 253:3-6). 'சுரத்திடை மேம்படப் பொருது வீழ்ந்த இளையோனே, வளையில்லாத வெளுத்த வறுங்கையைத் தலைமேல் வைத்து யான் கிளையுள் சென்று இத்தன்மையனாயி னான் இளையனெனச் சொல்லுமாறு நின் இறப் புக் குறித்த சொல் செல்லுமாயின் நின்னை நாள் தோறும் அமையாது புகழும் நின் அன்னை எவ்வா றாவாள்' என்பது சுரத்திடைக் கணவனையிழந்த தனிமகளொருத்தியின் புலம்பல் (புறம். 254). பெரிய கிளைக்குத் தலைமை யெய்திப்பொருநன் அரும்பட ரெவ்வம் உழந்ததன் மாறாகச் சோழன் செருப் பாழியெறிந்த இளஞ்சேட் சென்னி நல்கிய பரிசி லாகிய அணிகலன்களை அவனுடைய இரும்பே ரொக்கல், அணியும் முறைமை யறியாது மாற்றி அணிந்து பெருமகிழ்ச்சி அடைந்தது (புறம். 378:10-24). 'யான் சிறுகுடிகிழான் பண்ணனை நாடோறும் பாடேனாயின், செய்ந்நன்றி மறந்த அக்குற்றம் பற்றிப் பாண்டியன் என் பெருங்கிளையினைப் புரந்து வரும் அருளினின்றும் மாறுவானாக' என மதுரை அளக்கர் ஞாழார் மகனார் மள்ளனார் குறித்துள்ளார் (புறம். 388:10-16). 'பிடவூரிலுள்ள அறத்தாலுண்டாகிய புகழமைந்த பெருஞ்சாத்த னுடைய கிளையேம் யாம்' எனக் கிணைப்பொரு நன் கூற்றில் நக்கீரர் பாடியுள்ளார் (புறம். 395:20, 21). பாணர் முதலிய பெருங்கிளை உவக்குமாறு ஈதல் அமைந்து குறையாத செல்வ வளம் உடைய வன் களங்காய்க் கண்ணி நார்முடிச்சேரல் (பதி. 32: 5,6). கடல்பிறக்கோட்டிய செங்குட்டுவன் கூத்தரது பெருங்கிளை வாழுமாறு இனிய சுவைமுதிர்ந்த மணிநிறக் கள்ளையும் மகிழ்ச்சியையும் அளித்துத் தலையாட்டம் விளங்குகின்ற மனஞ்செருக்கிய குதிரைகளைக் கடலலைகளினும் பலவாகக் கொடுத் தான் (பதி. 42:12-15,23). விறலியரே, இசையில் வல்ல நும் கிளை இனிது உண்ணும் பொருட்டுச் செங்குட்டுவனைக் கண்டு வருதற்கு நீயிரும் வம் மின், யாமும் செல்கின்றோம் என விறலியின் கூற் றில் பரணர் பாடியுள்ளார் (பதி. 49:1-3,17). நெடிய மூங்கிலில் முற்றிய தேக்கள் தேறலைக் கானவர் தம் குன்றகச் சிறுகுடிக்கண் வாழும் கிளையுடன் உண்டு மகிழ்ந்து தொண்டகச் சிறுபறைக் [illegible] குரவை யாடுவர் (முரு. 194-197). ஆய்மகள் [illegible] விற்றதனா லுண்டான முதலைக் கொண்டு கிளை யினரை யெல்லாம் உண்ணச் செய்தாள் (பெரு. 162, 163). வலைஞர் தம் குடியிருப்பின்கண் பகலிலே இளையரும் முதியருமாய்க் கிளையுடனே நிறைந் திருந்து பின்பு குளங்களைக் கலக்கி மீன்பிடித்து அக்குளக்கரைகளைக் காத்திருப்பர் (பெரு. 267,274). தம் பெரிய கிளையைப் புரக்கும் இரவலர்க்கெல் லாம் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ் செழியன் கொடுஞ்சி நெடுந்தேர்களைக் களிறுகளு டனே வழங்கினான் (மது. 751,752). காவிரிப்பூம் பட்டினத்துப் புறஞ்சேரியிலுள்ள மணல்திட்டுக் களில் பெரிய கிளையினரும் ஓரின உறவினருமாகிய

பரதவப் பிள்ளைகள் கடலிறா மீனின் சூட்டினைத் தின்றும வயலாமைப் புழுககினையுண்டும் அடும்பின மலரை மலைநதும் ஆம்பற பூவைச் சூடியும் மன்றங்களில குழுமித் தம் வலிமையை அளக்கும் பொருட்டுக் கைகளாலும் கருவிகளாலும ஒருவரையொருவர் தாக்கிப புறங்கொடாது போர் செய்தும ஒருவருக்கொருவர் தோலாமையால் பனை மரங்களில இலககு வைத்துக் கவண கற்களையெறிநதும் விளையாடினர் (பட். 60-76). பரத மாக்கள் வலையினால கடல் மீன்களை முகந்து துணையுடன கூடிய மகிழ்ச்சியை யுடையவராய் இளையரும் முதியருமான கிளையுடன குழுமி அம்மீனகளை ஆரவாரத்தோடு கரைக்கு இழுத்து வந்து தம்மிடம் இரப்போரின வறுங்கலங்கள் நிறையுமாறு கொடுதது எஞ்சியவற்றைப் பல கூறுகளாககி விறறுவிட்டு மணற்பரப்பிலே துயிலுவர் (அகம். 30:1-11). தலைவனது மலைநாட்டில் கானவன் அம்பினை ஆயந்து களிறறின் மார்பிற் செலுத்தி, அதன கொம்பினைக் கொணர்ந்து தன் குடிசையில ஊனறிவிட்டுப் பலாக் கனியிலிருந்து பிழிநதெடுத்த மதுவினையுண்ட களிப்பினனாய்க் கிளையொடு ஆரவாரம் மிக்குச் சந்தன விறகினால் ஊனசோற்றை அட்டுண்பான் (அகம். 172: 6-14). ஆறலை களவராகிய விலலேர் உழவர் தம் கிளையுடன எழுநது நன்னாளில் வேட்டைக்குச் செலவர் (அகம. 193: 2,3). முளைகளால் அழகு பெற்று விளங்குகின்ற மூங்கிலைப் போலக் கிளைகளால பொலிவுறற பெரும்புகழை யுடையவன் தலைவியின தந்தை (அகம். 268: 11,12). தினைப் புனங் காக்கும் குறவர் தம் மகளிர் கொடுத்த தோப்பிக் கள்ளினை மாந்திக் காவலை மறந்த போது தினைக்கதிர்களை யானை மேய்ந்ததாக, அதனைப் பொறாமல் அக்குறவர் இளையரும் முதியருமான கிளையுடன் கூடி வில்லை ஆயந்தெடுத்துக் கொண்டு திரிவர் (அகம்.348:7-13). 'தலைவன எம்முடன வந்து புனலாடுதலைத் தலைவி அஞசுவாளாயின அவள் தனக்குப் பாங்கான கிளையொடும் கூடித தன் கொழுநரைக் காத்துக் கொளவாளாக' எனறு பரததை கூறினாள (குறு. 80). திறமையுள்ளோர் செயல் அறததொடு பொருநதுவதன்றியும் கிளையுடைய மாநதர்க்குப் பற்றுககோடுமாம (குறு. 247:2,3). மலை நாட்டில் செழுமைமிகக பல கிளைகளையுடைய குறவர் புனததில் விளைந்த தினைககதிரைக் கொய்யக் கருதி இரவில் மினமினி விளக்கததினால் வானில் செல்லும் முகிலியககத்தைக காணபர் (நற். 44:5-12). ஆமானின் நெஞ்சில் பாயாது குறிதவறிப் போன அம்பின் போக்கினைக் கருதிக் கானவன் தன்னுள்ளத்தே, 'இம்மலை அணங்கொடு நின்றது; மழை பெயதால் அதனது வீறு தணியுமாகலின் மலையை மேகம் வந்து சூழ்க' எனக் கடவுளை அம்மலை மேல் வழிபடும் பொருட்டு விரும்பியெழுந்து தன் கிளையொடும் போய்ப் பலியிட்டு மகிழவான் (நற்.165:1-5). வலை வீசிப் பிடிக்கையில் சுறாமீன் கிழித்ததனால் சுருங்கிய நாம்புகளைக் கொண்டு அவ்வலையைப் பரதவர் இளையரும் முதியருமான கிளையுடன் குழுமியிருந்து இரவுப்பொழுதில் முடிவர் (நற். 207:6-9). படகினையுடைய பரதவர் விளக்குகளைக் கொளுத்திக் கொண்டு நள்ளிரவில் மீன் வேட்டைக்குச் சென்று கடலிற் பிடித்த மீன்களை வைகறையிற் கொணர்ந்து கானற்சோலையிற் குவித்துப் புன்னையின் நிழலிலிருந்து தேங்கமழ் தேறலைக் கிளையோடு மாந்திப் பெரிதும் மகிழ்வர் (நற். 388:4-9). அரக்கு மாளிகையை எரி சூழ்ந்தபோது அதனுள்ளே அகப்பட்ட ஐவருள் வளிமகன் (வீமன்) அதனை உடைத்துத் தன்னுள்ளத்திற்குப் பொருந்திய கிளைகளாகிய தாயோடும் துணைவரோடும் தப்பிச் சென்றான் (கலி. 25:3-8). கிளையழிய வாழ்பவனுடைய ஆக்கம் பொலிவழியும் (கலி. 34:18). காமஞ்சாலா இளமையோளைக் கண்ட ஊர்ப்பெண்டிர் இவள் தன்னை நோக்கினார்க்கெல்லாம் வருத்தமாதல் அமைந்தவளென்று கருதி, 'நீ (மோர் விற்றுத் திரியும்) நின் கிளையோடே போவாயாக' எனக் கூறித் தம் கணவரைப் புறத்துப் போகாமற் பாதுகாத்துக் கொண்டனர் (கலி. 109:22-25). அன்பெனப்படுவது தன் கிளை செறாமை (கலி. 133:9). வையை வெள்ளம் விரைந்து வருகையில் உழவர் கிளையொடும் கூடித் தம் தொழில் செய்ய வாளைமீன்களைப் போலப் பாய்புனலில் பரந்து சென்றனர் (பரி. 7: 38, 39).

2. இனம். யானையை அகப்படுத்தும் குறிமேற் பரப்பிய தழை முதலாயவற்றைத் தன் மனச்செருக்கினால் போற்றாது ஆழத்தால் நெடிய குழியின் கண் அகப்பட்ட கொல்களிறு அக்குழியை நிலைசரியத் தூர்ததுத் தன் கிளை - இனம் - விரும்பச் சென்று கூடியது (புறம். 17:14-19). பொறுத்தற்கரிய வெள்ளிய உருமேறு தான் சிறிதேயாயினும் கிளையுடனே பாம்பைக் கொல்லும் (புறம். 58:6,7). மலைச்சாரலில் மலர்ந்த காந்தளினது கொழுங்கிழங்கு பிறழுமாறு கிளறித் தன் கிளையோடு தறுகணமையுடைய கேழல் உழுத புழுதிக்கண் நல்ல நாளில் குறவர் தாம் வேறு உழாதே தினையை வித்துவர் (புறம். 168:2-6). இராமன் மனைவியான சீதையை

அரக்கன் வெளவிச் சென்றபோது அவளால் இடப்பட்டு நிலத்தில் விழுந்த அணிகளைக் கண்ட குரங்குகளின் செம்முகப் பெருங்கிளை அவற்றை அணியும் முறைமையின்றி அணிந்து பொலிந்தது (புறம். 378:18-21). போர்க்களத்தில் பெடையையுடைய பருந்துச் சேவலின் கிளை தசையாகிய இரையை உண்ணும் (பதி. 35: 4, 5). கடுமையாகக் கொட்டும் குளவியின மிகுந்த கிளை நெல்லளவைக்குக் குவித்து வைத்த உறை நெல போலக் கூட்டின்கண் மொய்த்துத் துஞ்சும் (பதி. 71:4-7). தகடூரெறிந்த பெருஞ்சேரலிரும்பொறை தன பெருந்தேவியைக் கொணடு குலவழியை நிலைபெறுத்தறகாகச் செய்த வேள்வியில் வட்டமாயறுத்து இயற்றிய புள்ளிமான தோலின் விளிம்பிலே கொடுமணம் என்னும் ஊரிலுண்டான அருங்கலங்களையும் பந்தர் என்னும் ஊரில் விளைநத முத்துக்களையும் கிளையாகக் கட்டி வேள்வி வல்லோனால் அவள் தோளிலே அணிவித்தான் (பதி. 74:4-16). ஆய்மகள் மோர் விற்றதனாலுண்டான முதலைக் கொண்டு கிளையினரையெல்லாம் உண்ணச் செய்தாள் (பெரு. 162, 163). பசுநதினை யரிசியால் ஆக்கப்பட்ட சிலுத்த சோறு பெரிய கிளையுடைய நண்டின் பார்ப்பினை ஒத்திருக்கும் (பெரு. 167,168). இடையன் ஆனிரையோடு கானத்திலே தங்கி வாசிக்கும் குறிஞ்சிப் பண்ணைப் பல்காற் பறவைகளாகிய வண்டுகள் தம் கிளையினது ஓசையெனக் கருதிச் செவிகொடுத்துக் கேட்கும் (பெரு. 175—183). பலா மரத்தின் கொம்புகளில் இழுமென்னும் ஓசையுடைய பறவைகளின் கிளையாகிய கூட்டம் திரண்டிருக்கும் (பெரு. 406-408). மீன்களும் விலங்குகளும் முறையே நீரிலும் நிலத்திலும் இனிது துயின்று தம் கிளை பெருகித் தம்மைக் கொல்லும் பகையாவார் இவரெனக் கருதாது வலைஞர் முன்றிலில் மீன்கள் பிறழவும் இறைச்சி விற்போர் குடிலில் விலங்குகள் நெருங்கவும் இங்ஙனமாகக் காவிரிப்பூம்பட்டினத்து வேளாண் மாந்தர் கொலை கடிந்து வாழ்ந்தனர் (பட். 194-199). கனிபொழி கானததிலே பழங்களைக் கிளையோடு தினபதற்கு விரைந்து பறக்கும் புள்ளினம் போல நன்னனிடததுப் பரிசில் பெறச் செல்வதற்குக் கூத்தர் ஆற்றுப்படுத்தப் பெற்றனர் (மலை. 54,55). வயிற்றிலே கனறுண்டான மடப்பிடியைக் களிறு ஓம்பிச் செல்லும் போக்கினைக் குறித்து ஒளித்திருந்த புலி அப்பிடியின் மேல் பாய்ந்ததாக அது தன கிளையொடு நெடிய மலையிடத்தே அலறும் குரலும் தன் குட்டியைத் தழுவிக் கொள்ளுதலை மறந்த மந்தி ஆழ்ந்த முழையில் வீழ்ந்த அக் குட்டியைக் கருதிக் கிளையோடு நெருங்கி நோய் கூர்ந்து இடுகின்ற ஆரவாரமும் கூத்தர் ஆற்றுப்படுத்தப் பெறும் மலைவழியில் கேட்கும் (மலை. 307-314). பல கிளைகளை யுடைய கறையான் ஒருங்கு கூடி ஈரமுடைய வாயினால் முயன்று கட்டிய புல்லிய வளைகளையுடைய புற்றின் நெடிய உச்சியினைக் கரடி பெயர்த்து இரை தேடும் (அகம். 81:1-5). சுரநெறியில் செல்லும் புதியவர் கணடு அஞ்சிப் போககினைத் தவிருமாறு குட்டிகளை யீன்ற கரடிகளின இருஙகிளை இருப்பையின் உதிர்ந்த பூக்களைக் கவர்ந்துண்ணும் (அகம். 95:6-10). பாலை வழியில் பெரிய கையினை யுடைய கரடிகளின் இருங்கிளை கறையானின புற்றாம் பழஞ் சோற்றைத் தின்று வெறுத்தால இருப்பை மரத்தின் பூக்களைக் கவர்ந்துண்ணும் (அகம். 149:1-5). வெம்மை மிக்க சுரநெறியில் மறவர் எய்யும் அம்பு வழிப்போகும் வம்பலரின் உயிரைப் போக்குதலால் அங்குள்ள பருந்து தன் கிளையினை யழைத்துப் புலாலை யுண்ணும் (அகம்.175:2—6). பெரிய கிளையினை யுடைய மேகங்கள் கடலிலே சென்று நீர் பருகி மேலெழுநது சூலுற்ற பிடியானையின் இனம்போல இடந்தோறும தோன்றி ஒலித்து நெருங்குமாறு கார் காலம் வந்தது (அகம்.183·6-10). பெருங்கடலை முகந்து பருகிய இருங்கிளை மேகம் இருண்டு விசும்பிலே வலமாயெழுநது முரசுபோல் முழங்கி வாள்போல் விளங்கும் மின்தொகுதியை யுடையதாய் நாள்தோறும் ஆரவாரிக்கும் (அகம். 188: 1 - 8). சிறுகிளி தினைப்புனத்தி லிருந்து கவர்ந்து சுமந்தெடுத்துப் போகமாட்டாது நிலத்திலே விழ விடுத்த கதிரைக் கானவாரணம் தன் கிளையோடிருநது தினனும் (அகம். 192:5—8). தன் கிளையினைப் பாராட்டும் வலிய களிற்றியானை அதற்கு மூங்கில் முளைகளைக் கொணர்ந்து ஊட்டி வேண்டும தழைகளையும் உணபிக்கும் (அகம். [illegible]: 1,2). மலைச்சிலம்பில் தேனையுண்ணும் பல [illegible] டின கிளை ஆரவாரிக்க மலையிலிருந் [illegible] அருவி சந்தனமரத்தை நனைக்கும (அகம். 228:1-3). கானத்தின்கண பெரிய கிளையினை யுடைய கரடியேறறை இருப்பை மரத்தின் வெண்பூக்களைத் தின்று வெறுத்தால் பெருஞ்செம் புற்றினைத் தோண்டி அதனுள்ளிருக்கும புறறாம பழஞ் சோற்றைத் தினபதற்கு அதன் உச்சியைப் பெயாக்கும் (அகம். 247:4-7). மலைவழியில இறந்துபடுவோரின் ஊனைத் தின்ன விரும்பிப் பறககும் பருந்துகளின் கிளை தங்கியிருக்கும் (அகம். 247.11-13). வலிய குட்டிகளைத் தழுவிக் கொண்டு தன் கிளையொடு பிணவுப்பன்றி பெயர்வதற்குத துணையாகத் தறுகண்மையுடைய பன்றியேற்றை

வேட்டை 'நாய்களை விலக்கி வேட்டுவனரயும்
தடுத்து அரும்புழை முடுக்கரிலே ஆட்களை எதிர்
நோக்கி நின்றது (அகம். 248:2-6). வெம்மலை யருஞ்
சுரத்தில் கரடிக் குட்டிகளின இருங்கிளை இருப்
பைப் பூக்களைக் கவர்ந்துண்ணும் ('இருங்கிளை' என்ப
தற்கு 'ஈரினம்' என்றும் பாடமுணடு) (அகம். 275: 11-13).
பாழ்பட்ட அகன்ற பாலைநிலத்தில் கடுவினை
மறவர் வில்லால் எய்ய வீழ்ந்தோருடைய பிணங்
களைக் காக்கைப் பெருங்கிளை கவர்ந்துண்ணும்
(அகம். 319:1-5). நிறம் விளங்கிய யானை தன்
கிளையுடன் கூடி முளைகள் வளரும் தூறுகளி
லுள்ள மூங்கில்களை ஒடித்து மேய்நதது (அகம். 332:
1,2). தலைவனது மலைநாட்டில் பல குரங்குகளின்
கிளைக்குத் தலைவனாகிய கல்லாக் கடுவன் கற்
பாறையிடத்தே பலாப்பழத்தைத் தழுவிக கொண்டு
தன் இன்றுணை மந்தியை யழைக்கும் (அகம். 352:
1-7). அருஞ்சுரத்தின் கவர்த்த நெறியில் குருதி
படிந்த புலாலநாறும் பெரிய சிறகினை யுடைய
பருந்துச் சேவலின் கிளையுடன் கூடிய கூட்டம்
பசிய ஊனின மிகுதியைத் தெரிவிப்பதுபோல் பறந்
தெழுந்து விசும்பினைச் செவ்வானம் போல் அழ
குறுத்தும் (அகம். 381:8-13). ஆண்குரங்கு இறந்து
பட்டதனால் ஏற்பட்ட கைமமைத் துன்பத்தைத்
தாங்கமாட்டாத காதலையுடைய மந்தி மரமேறுதல்
முதலிய தம் தொழிலைக் கல்லாத குட்டியைக்
கிளையினிடத்தே கையடையாக ஒப்படைத்து
விட்டு ஓங்கிய மலைச்சாரலில் பாய்ந்து உயிரை
மாய்த்துக் கொள்ளும் மலைநாடன் தலைவன் (குறு.
69:1-5). இறாமீனின் பெருங்கிளையைக் கடலலை
கொணர்ந்து தருதற்கிடமான துறையினை யுடைய
வன் தலைவன் (குறு. 109:1,2). வேலிக்குஅயலிலுள்ள
வெருகுப் பூனையின் இனம் மாலைக்காலத்தே
வெளிப்படுமளவில் மனையுறை கோழிப்பெடை
அஞ்சிப் புகுதற்குரிய காப்பிடத்தை யறியாமல்
தன் குஞ்சுகளாகிய கிளையை ஒருங்கே கூடும்
பொருட்டுக் கூவியழைக்கும் (குறு. 139:1-4). அடை
கரையில் வீழ்ந்து கிடந்த கரிய நாவற்கனியைத்
தன கிளையெனக் கருதித் தும்பி மொய்த்தது (நற்.
35:1-3). மழைபொழிநத புதுநீர் நிறைந்த பள்ளங்
களில் நாவினால் ஒலிக்கின்ற பலவான தவளை
களின் கிளை ஆரவாரித்தலாலே வினைமுற்றி
மீளும் தலைவனது தேரிற்பூட்டிய நாவுடைய மணி
களின் ஒலியைத் தலைவி கேட்டிலள் (நற். 42:3-5).
'கருங்கால் வெண்குருகே, நீ நின் கிளை முதலாய
வற்றோடு சென்று இரையை மேய்ந்து தாவிப்
பறத்தலை விரும்பினை யாயினும் புலாலருந்தும்
நின் கிளையோடே சிறிது பொழுது தங்கி என்
குறையைக் கேட்பாயாக' என்று தலைவி காம
மிக்குத் துன்பமுழந்து குருகிடத்துப் பேசினாள்
(நற். 54:1-4). 'செவ்வாய்ப் பைங்கிளியே, நீ தலை
வரது மலை நாட்டிலுள்ள நின் கிளையிடத்தே
செல்வாயாயின் இம்மலைக் குறவர் மடமகள்
ஏனல் காவலுக்கு வந்துள்ளாள் என்று அவர்க்குக்
கூறுவாயாக' எனபது தலைவியின் வேண்டுகோள்
(நற். 102:1,5-9). தலைவனது குன்ற நாட்டில்
மலைச்சாரலில் கடுவனொடு களவினிற் புணர்ந்த
செம்முக மந்தி அப்புணர்ச்சியால் தன்னுடலில்
நேர்ந்த குறிகளைத் தன் பெருங்கிளை அறியுமென்
றஞ்சி வேங்கைமரத்தில் ஏறிக் கீழேயுள்ள சுனையை
நோக்கிக் கலைந்த தலைமயிரைத் திருத்தும் (நற்.
151:5-12). மலர் உதிர்ந்து பரவிய வேங்கை மரங்
களையுடைய காட்டின்கண் இம்மென ஒலிக்கின்ற
வண்டுகளின் மிகுதியான கிளை இரிந்தோடுமாறு
வினைமுற்றி மீளும் தலைவனது தேர் வந்தது (நற்.
161:3-8). கன்றுடனே மடப்பிடியைத் தழுவிய
தடக்கை வேழம் வேங்கை மரத்தின் அடியை
முறித்துத் தேனைத் தொகுக்கின்ற ஈக்களின
பெருங்கிளை இரியுமாறு அவ்வேங்கைமரக் கொத்
துக்களாகிய கவழததை அக்கன்றினுக்கும் பிடிக்கும்
ஊட்டிப் பாதுகாக்கும் (நற். 202:3-6). எக்கா மண
லிடத்து நண்டுகளின் இருஙகிளைத் தொகுதி
ஞாழல் மரத்தின மணங்கமழும் உதிர்ந்த மலர்
களைக் கால்களால் வரித்துக் கோலஞ்செய்யும் (நற்.
267:2-5). அருஞ்சுரத்தின் கவர்த்த வழியில் வம்
பலர் வருகையைநோககிச் செங்கணை தொடுத்த
செயிர் நோக்காடவராகிய ஆறலை கள்வரின் தண்
ணுமையொலி கேட்டு அஞ்சிய பருந்துச் சேவல்
கிளையினிடத்தே செல்லும் (நற். 298:1-5). மலை
நாட்டில் கிளிகள் கிளையுடன சேர்ந்து தினைக்
கதிர்களைத் தின்று ஒன்றையொன்று விளிக்கும்
(நற். 304:1-4). மலைநாட்டில் கரிய விரலையும்
சிவந்த முகத்தையுமுடைய மந்திப் பெருங்கிளை
மலைச்சாரலில் அருவியாடி மூங்கிலின் நுனியிலேறி
அதனையே ஊசலாகக் கொண்டு தொங்கி
விளையாடி வேங்கை மரத்தின் பூக்கள் கீழே
யுள்ள சுனையில் உதிருமாறு அதன் கொம்புகளி
லேறிக் கடுவனொடு புணரும் (நற். 334: 1-5).
சீறூரினகண் கடவுள் உறையும் ஆலமரத்தி
னிடத்தே படைததிட்ட பலிசசோற்றை யருந்திய
காக்கை அந்திப்பொழுதில் தன் கிளையிடத்துச்
செல்லுமாறு மாலை வந்தது (நற். 343:2-7). அரு
மன் என்பானது சிறுகுடியெனும் ஊரில் காக்கைப்
பேடை தன் பிள்ளையைத் தழுவிக் கொண்டு கிளை
யினையும் அழைத்துக் கருனைக் கிழங்கின பொரி

யலொடு கூடிய செந்நெல் வெண்சோற்றைத் தெய்வத்துக்கிடும் பலியுடனே பெறுதற்கு மனையின் கண் கூடியிருக்கும் (நற். 367:1-6). கானற் சோலையிலுள்ள பனையின் அளிநத பழம் மூக்கற்று நெய்தல் மலர் வருந்தச் சேற்றிலே ஆழப்புதைய வீழ்ந்த தற்கஞ்சிக் கிளைக்குருகுகள் இரிநதோடும் (நற். 372: 2-5). செந்தினைக் கதிர்களைப் பசிய கிளிகள் பலவும் கிளையோடு தின்றன (நற். 376:2-4). மருத மரங்களில் கிளைக்குருகுகள் தங்கும் தண்ணிய துறையினை யுடையவன் தலைவன (ஐங். 7:4-5). தலைவனது ஊரிலுள்ள தண்ணறும் பழனத்தில் சம்பங்கோழிப் பேடை தன கிளையோடே மகிழ்ந்து கூவும் (ஐங். 85:1-3). வேங்கையின் பொன் போலும் நறுமண மிக்க பூக்களை மான் கூட்டமாகிய பெருஙகிளை மேயும் கானக நாட்டையுடையவன் தலைவன் (ஐங். 217.1-3). கோஙகமலராலான மணமிக்க மாலையை வண்டின் பெருங்கிளை மொய்க்குமாறு தலைவன் தன காதற் பரத்தைக்கு நயந்து சூட்டினான் (ஐங். 370:1-3). 'சிறுகருங் காக்கையே, நீ நின் அன்புடை மரபின் கிளையோடு கூடி நிரம்ப வுண்ணுமாறு பச்சூன் பெய்து பசிய நிணத்தாற் சமைத்த உணவினைப் பொற்கலத்திலே இட்டுத் தருவேன்; அதற்கீடாக நீ தலைவனோடே என் மகளை இங்கு வரும்படி கரைந்தருள்வாய்' என்று மகட் போக்கிய தாய் காக்கைக்குப் பராய்க்கடன் உரைத்தாள் (ஐங். 391). தன் மேற் பாய்ந்து மாறுபாடு செய்த புலியைச் சினந்து கோட்டினாலே குத்தி அப்புலியின் நெஞ்சைப் பிளந்து முரண்தீர்நத யானை மலைச்சாரலில் தன் கிளை நடுவே கூடித் திரியும் (கலி. 52:1-6). வண்டின் கிளை வீழும்படி கட்டிய கோதையைத் தலைவன் மார்பில பரத்தையர் அணிந்து விட, அதனை அவன் புதல்வன் அறுத்து விளையாடுவது தலைவிக்கு உவகையாம் (கலி. 80:24-26). இசை நரம்புகளில் குரல்நரம்பு கொண்ட கிளையாகிய இளி நரம்பிற்குப் பொருந்தியது உழை நரம்பு (பரி. 11:126,127). காற்றினால் பொரப்பட்ட வானம் மின்னையும் இருளையும் பரப்பிக் கிளையோடு மேற்கு மலையை முற்றி இடைவிடாது மழை பெய்தது (பரி. 12:1-3).

3. **பயிரினத்தின் கப்பு.** பலமுறை உழுது விதைத்துத் தாளியடிக்கப்பட்ட பல கிளைகளை யுடைய பருவத்தில் களைபறிததலால் வரகுப் பயிர் இலை தழைத்துச் செழித்தது (புறம். 120: 3-5). 'நின்னோடு மாறுபட்டுப் போர் செய்ய வந்த பகைவர், களிறு வன்மை மிக்குத் தன் காலால் அகப்படுத்த, அதனுட்பட்ட முளைத்த மூங்கிலின் கவர்த்த கிளை போல அழிவதல்லாமல் தப்புதல் எங்கேயுள்ளது என இளஞ்சேரலிரும்பொறை மறத்தைப பெருங்குன்றூர் கிழார் சிறப்பிப்பர் (பதி. 84.11-13). கிளையினின்றும் அழகுறத் தோன்றி வளரும் நீர்க்கீழ்ச் செவ்வரும்புகளைக் கட்டிய மாலையை வளைய வைத்துச் சூரர மகளிரின் கொண்டையைத் தோழியர் அணிசெய்தனர் (முரு. 29,30). மாமரத்தின் கிளைக்கொத்துக்கள் கிளி போன்ற காய்களையுடையவை (அகம் 37:7,8). மலைநாட்டில் கிளைசெறிந்த சிறுதினையின் விளை கதிர்களை மேய்ந்து பன்றி இனிது கண்ணுறங்கும் (அகம். 178:2,12,13). கிளையை யுடைய தூறாகிய நாணலினது கிழங்கு மணலிடத்தே ஈன்ற முளையினை யொத்த கூரிய பற்களமைநத சிவநத வாயினையுடையவள் தலைவி (அகம். 212:4,5). வயலில கிளை விரிநத கரும்பின் வெண்பூக்கள் மழையின நனைந்த நாரைகளைப்போல ஈரங் கொண்டன வாய் வளைந்திருக்குமாறு வாடைக்காலத்தில் பனி தங்கிப் பெயதது (அகம. 235:11-15). கள ஞரில இளையாளொருத்தியின் நலததைக் கவர்நதுணட அறனிலாளனொருவன, பினனர் அவளையறியேன எனக் கூறிய கொடுஞ் சூளினைக் கேட்டவுடன அறங்கூறவையத்தார் அசசெயலுக்குச் சானறாரை வினவி யுணர்நது அவனைத் தளிர்கள் பொருந்திய மரத்தின பெருங்கிளையில் இறுகப் பிணிததுச் சுணணாம்பு நீற்றினைத் தலையிற் பெய்தனர் (அகம். 256:15-20). பல கிளைகளாக ஒழுகிய கொம்புகள் பாரந தாங்காமற் சுழலுமாறு மலர்ந்த வயலைக் கொடி, தனக்குத் தழைபுடை கூட்டும் அழகிய தளிர்களைத் தந்துதவத் தலைவி அதற்கு நாளதோறும நீருட்டி வளர்த்தாள (அகம. 383:6-13). கிளைகள செறிநத பெரிய மூங்கில்களை யுடையது மலைச்சாரல (அகம. 388:4,5). தம்மிலலத்திலேயிருநது தம் முயறசியாலுண்டான உணவைப் பகுத்துண்டாற் போனற இனிய பழங்கள் கி[illegible] தொறும் தொங்குகினற பலாமரங்களையுடை[illegible] தலைவனின மலைநாடு ('கிளை' எனபதறகுச் '[illegible] எனற பாடமும் உணடு) (குறு. 83:3-5). வளம[illegible] நாடனாகிய தலைவன் தலைவியோடும தோழியோடும கிளைகள் செறிநத தினைககதிர்களில படியும் கிளிகளைக் கடிநது தஙகியிருநதும் அவவிருவரிடமும் தன குறையினைச சொல்லுதறகுரிய செவ்வி பெறாமல மீண்டனன (நற். 25 5-7).

4. **உறவு.** மாலைக்காலத்தே யாழைப் பண்ணிப் பேகனது கானத்தைப் பாடி நினற பரணர்முன் அப்பேகன மனைவியாய கணணகி அழுது நிறப, அவர் அவளை நோக்கி, 'எம் கேண்மையை விரும்பும் பேகனுககு நீ கிளை – உறவு - உடையையேஃ'

என வினவினார் (புறம். 144:2-3). தலைவி தலைவனுடன் சென்ற நிலையில் அவளால் வளர்க்கப் பட்ட கிளி அவளைக் காணாமல 'கிளையே' என அழைத்தது (நற். 143.5).

5. காதல் துணை. அச்சந்தோன்றும் கானத்தில் ஆறலைகள்வர் அம்பினை விடுத்து வழிச்செல்லு வோரைக் கொன்ற கவர்த்த நெறியில் முடை நாறும் புலாலை விரும்பி யுண்ணும் வாழக்கை யினையுடைய பருந்தின் சேவல் நெருங்கிய தன் கிளையை - காதல் துணையை - அழைக்கும் (அகம். 161:2-7). காட்டினையடைந்து அங்கே வழிப் போவாரைப் பார்த்திருந்த கொடுந்தொழில மறவர் ஆறுசெல் மாக்களின் அரிய மார்பிலே யெறிந்த வேலால் வீழந்தோரை எய்திய பருந்தின் சேவல் ஊனுண்பதற்குத் தனது கிளையை அழைக்கும் தெளிந்த குரலை யெழுப்பும் (அகம். 363:9-14).

6. கொத்து. கிளையின்கண் - கொத்தின்கண் - எழுந்த மலர்கள் நிறைந்த தோட்டங்களையுடைய கிடங்கி லெனனும் ஊர்க்கு அரசன ஓயமானாட்டு நல்லியக்கோடன (சிறு. 160).

7. மூங்கில். கிளை - மூங்கில் - நெருங்கி வளர்ந்த பெருவரையடுக்கத்துத் தலைவி சிறுதினை கவர்ந்த குருவியை ஓப்பினள (அகம். 388.4,5).

**கிளைகள் - சுற்றத்தினர்.** அரக்கில்லத்தை வளிமகன் (வீமன) அழித்துத் தன் உளததிறகுப் பொருநதின கிளைகளோடு - சுற்றத்தினரோடு - தப்பிச் சென்றான் (கலி. 25:7,8).

**கிளைஞர் - உறவினர்.** கலுழ்ந்த கண்ணளாய் இருந்த கண்ணகியைக் கண்டு பேகனுக்கு நீ உறவோ எனப பரணர் கேட்க, அவள் காந்தள் மலர் போலும் விரலாலே தன கண்ணீரைத் துடைத்துக் கொண்டு நாங்கள அவனுடைய கிளைஞரேம் - உறவினரேம் - அலலேம் எனக் கூறினாள் (புறம். 144:5-10). உறவினர்களைத் தாங் கவும் கிளைஞர் பெருகவும் சுற்றத்தார் அல்லாதார் சுற்றத்தார் போலப் பொருந்தி நடக்கவும் ஊக்கத் தோடு சென்று பெறலரும் நன்கலம் எய்தத் தலைவன சென்றான (அகம். 93:1-7). பரதவ மகளிர் உப்புக் குவட்டில் ஏறிநின்று இஃது எந்தையின் படகு; அது நுந்தையின் படகு என்று கடல்நீரில் வேட்டை மேறசென்ற கிளைஞரின படகுகளை எண்ணுவர் (நற். 331:5-8).

**கிளைஞன் - உறவினன்.** அலல குறிப்பட்ட தலைமகன் தன நெஞ்சைப பார்த்து, 'யான நின்னை இடித்துக் கூறினும் தலைவியை நினைத்தலை ஒழியாய்; தடுப்பினும் அவள்பால் செல்லாது நிற்கின்றாய் இல்லை; நினக்கு யான கிளைஞன் - உறவினன் - அல்லனோ' எனக் கூறினான் (அகம். 342:1 3).

**கிளைமை - உறவு.** தலைவன்பால் மயக்கமுற்ற நட்பால் தன் மாணநலத்தையும் நீக்கிவிட்டு அவனது கிளைமை - உறவு - கொண்டவள் தலைவி (நற். 323:4-6).

**கிளையிதழ் - புறவிதழ்.** 'நாங்கள் கிளிகளை ஓட்டியும் கிளையிதழ் - புறவிதழ் - களைந்து எமது அல்குலுக் கேற்ற தழையினைக் கட்டி உடுத்தியும் இருந்தோம்' எனத் தோழி தன் தாயிடம் கூறினாள் (குறி. 101, 102).

**கின்னரம் - இசை எழுப்பும் பறவை.** தெய்வங்கள் உறையும் சாரலில் இனிய தாளத்தில் கின்னரம்- இசை எழுப்பும் பறவை - முரலும் (பெரு. 494, 495).

# கீ

**கீரங்கீரனார் - புலவர்.** கீரன் என்பார்க்கு மகனாகிய கீரனார், கீரங்கீரனார் என்று அழைக்கப் பெறு வராதலின் இவரது பெயரும் இவர் தந்தை பெயரும் கீரன் எனபதே என அறியலாம். இவர் பாடியதாக நற்றிணையில 78-ஆம் பாடலொன்றே உள்ளது. அப்பாடலின்கண் வரைவுமலிவினை நெயதல் திணையில வைத்துத் தோழி கூற்றாக இவர் அமைத்துள்ளார். வரைவிடை வைதது்ப் பொருள் வயிற் பிரிந்த தலைவன் மீண்டுவரும் தேர்மணிக் குரலைக் கேட்டே தோழி அவன் வரைவுமலிந்து வருகின்றான் என்று நுண்ணிதின் உணர்ந்து தலைவிக்குக் கூறும் தெளிவினை இவர் பாடல் கொண்டுள்ளது குறிப்பிடத் தக்க சிறப்பாகும். கழியின்கண் நெய்தலமலர் நிறையுமாறு புன்னை நுண்தாது பரப்பும் என்பதனால், தலைவியின தமர் கையகம் நிறையத் தலைவன பொற்குவியலை வரைதற் பொருளாகத் தருவான் என்றும் தாழம்பூ மணம் கானலெங்கும் கமழும் எனபதனால தலைவியின வரைவு நாடெங்கும் மாட்சிமைப்படும் என்றும் இரு குறிப்புப் பொருள்களை இவரதம் பாடல் உணர்த்தும்.

**கீரத்தனார் - புலவர்.** 'குடவாயிற் கீரத்தனார்' காண்க.

**கீரந்தையார் - புலவர்.** கீரன் தந்தையார் கீரந்தையார் என்று மரூஉ முடிபாக அமைந்துள்ளது. இவர் பாடிய பாடலொன்று பரிபாடல் தொகையில்

இரண்டாவதாக இடம் பெற்றுள்ளது. திருமால் வாழ்த்தான அப்பாடலில ஐமபூத வூழிகளை அடுக்கிக் கூறிய இவர், அவை கழிந்த காலத்தை நெய்தலும் குவளையும் ஆம்பலும் சங்கமும் கமலமும் வெள்ளமும் எனற பேரெண்களால் அளநதறியப் படாததாகச் சொல்லுகின்றார். திருமாலின அவதார நிலைகளைக் கூறும்போது பலதேவனாகவும் கண்ணனாகவும் அவர் தோன றிய அவதாரங்களைக் காட்டிக் கண்ண னைப் பிறப்பு முறையால் பல தேவனுககு இளையவனாகவும் சிறப்புமுறையால் அவனுககு முதியவனாகவும் குறிப்பிடுவார். திருமாலின திரு மார்பையும் அம்மார்பிலுறையும் திருமகளையும் அதனகண் அணியப்பட்ட அணிகளையும உவமை களின் வாயிலாக இவர் நன்கு சிறப்பித்துள்ளார். அவர் ஏந்திய சக்கரப் படையின ஆற்றலையும் அதன் பண்புகளையும் இவர் பாடல் புனைகின்றது. 'நின் திருமேனி யொளி நீலமணியையும் நின் கண்கள் இணைத்தாமரைகளையும நின் வாய்மை தப்பாது வருகின்ற நாளையும் நின்பொறை நிலத் தையும் நின அருள சூல்மேகத்தையும் ஒக்கும் என வேதம் கூறும; நீ அப்பொருள்களையும் பிற வற்றையும் பண்புகளாலும் தொழிலகளாலும் ஒத்தனை' என்று இவர் திருமாலைப போற்றும் பகுதி சிறப்புடையதாம். வேள்வியோடு தொடர் புறுத்தியும் இவர் திருமாலை வாழ்ததுகினறார். திருமால தேவாகளுக்கு அமிழ்தம் அளித்த அருளும் இவர் பாடலில் போற்றப்படுகினறது. முடிபாக, 'எம் அறிவு கொடும்பாடறியாமல் எமக்கு மெய் யுணர்வே உண்டாகுக' என்று திருமாலிடதது இவர் வேணடுவர்.

**கீரை** – இலைக்கறி. குமணனிடம் செனற பெருஞ்சித திரனார் தம் மனைவி குபபையின்கண முளைதத கீரையின் - இலைக்கறியின – இளைய தளிரைப பறிததுக்கொணடு உப்பினறி உலையில ஏறறி மோர் இன்றி அவிழாகிய உணவை மறநது பசிய இலையைத் தின்று மாசு படிந்த உடையளாய் உள்ளாள் எனக் கூறித் தம் வறுமையைப் புலப் படுததுவர் (புறம். 159:9-13).

**கீழ்** - கீழிடம். கீழதாகிய - கீழிடத்ததாகிய - நிலமும் ஆகாயமும் சுவாககமும் என மூன்றும் கூடிய புணர்ச்சியாக அடுககப் பட்ட அடைவினகண் முதற்கட்டாகிய நிலததின் கீழும் மேலுலகத்திலும் நின் ஆட்சிகுறித்த அசசமும புகழும் நிகழவன வாகுக எனப் பாண்டியன் பல்யாகசாலை முது குடுமிப பெருவழுதியைக் காரிகிழார் பாடுகிறார் (புறம். 6:5-8). மான் தசையைக் கொணர்ந்து கொடுதத வேட்டுவனின கடகமும் தயிர் கொணர்ந்து கொடுத்த இடைமகளது மிடாவும் நிறையுமாறு உழுதுணடு வாழ்வாரது மனையி லுள்ள மகளிர் குளத்துக்கீழ் விளைநத வெண் ணெல்லை முகநது கொடுப்பர் (புறம். 33:1-6). புது வரகு கதிரின கீழும் மேலும் ஒழியாமல் மிகக காய்த்துச் சீரிதாக விளைநதது (புறம. 120: 8,9). முருகனின் ஒருகை கீழ் நோககி வீழும் தொடி யோடே மேலே சுழனறு களவேள்விக்கு முத்திரை கொடுப்பப் பிறிதொரு கை ஓசை இனிதாக ஒலிக கும் மணியை இரட்டச் செயதது (முரு. 113–115). பிறர் நாடுகளில ஏரியாலும் ஏறறததாலும சுரக கின்ற வளமெல்லாம் காவிரி சூழ்ந்த கரிகாலன் நாட்டில் அரிகாலின கீழ் உகுகினற நெல் வளத் திற்கே ஒப்பாகும் (பெரு. வெ. 1). பரிககோலை யுடையோர் நெகிழ்ந்த செவ்வியைப் பார்த்துக கீழ் வைக்கப்பட்ட யானைககிடும் நெய்வார்தது மிதித்த கவளங்களைத் தலைசசூலையுடைய மந்தி கவர்நது செலலும் (பெரு. 393-395). மதுரையில கீழ் செலவீழ்ந்த கிழங்கோடு பிற உண்டிகளையும கொடுக்கப் பெற்றோர் அவற்றைப பலவிடஙகளில் நுகர்நதனர் (மது. 534,535). கரடி கீழ உதிாந்து கிடக்கும பொருள்களை உணணாமல் மேலே கிளைகளிடத்துள்ள கனிகள போன்று சாறுமிக் குள்ள துளைகொண்ட மலர்களைத தினனும பொருட்டு இருப்பை மரஙகளின மீது ஏறும (அகம். 171: 12-15). என மகளின அலகுலுககுத தழை அணிதற்குக் கொயத நொசசியின கீழ அம் மகள் தன சிறுவிரலால் கோலிய மணல வீட்டைக காண்பீராக என மகட்போககிய தாய் கூறினாள (அகம். 275. 16–19). மலையிடததுப பெருந தேனிறாலைக கணட காலமுடவன உள்ளங் கையைக் குவித்துக் கொணடு அம்மலையின கீழ் இருந்து அத்தேனிறாலைச சுட்டிக காட்டி வெருங் கையை நககினான் (குறு. 60.1–4). பலாமரஙகளில கீழ் விழுந்து விடுதல் போனறு வீழச்சியை யுடைய காய்கள் மிகுந்திருநதன (குறு. 257:3). ஆண்குரஙகு முதிர்ச்சியுறற இனிய பழஙகளை மரததின மேலி ருந்து உதிர்ப்பக் கீழ இருநது குட்டிகளை யுடைய பெண்குரங்கு ஏற்பனவற்றை உணணும (குறு. 278: 4-7). கைததொழில செயயும உழவர் தம செய தொழிலை முடிபபாராகி வண்டு உண்ணும்படி மலர்ந்த மலரின மணம கீழே படுமாறு நீணட வரபபில் நெய்தலை வாடுமாறு விடினும் அவை மீண்டும் மலர்நதன (குறு. 309.1-6). கீழே தறியில பிணித்துக் காப்பவரும் மேலே ஏறி நடத்துபவரும

நீங்கிய களிற்றியானை போலத் தலைவன் தமிய னாய வந்தான (நற். 182 8-10) கிழங்குகள் கீழிறங் கித தேனடைகள் மிகுதியாக மேலே தொங்கி மிகச் சிலவாய தினைகளை விதைதது, அவை மிகப் பல வாக விளைநது தினைப்புனத்திலிருந்து கிளி கொய்து போகாதபடி கடிநது காக்கும மலைநாட் டையுடையவன் தலைவன (நற். 328:1-3). சான்று பொயததவன கீழ வந்து தஙகியிருககும் மரம் கவின வாடும் (கலி. 34:10). ஈர்ஞ்சடை அநதணன (சிவன்) உமையோடு உயர்மலையில இருந்தபோது, அம்மலையை ஐயிருதலையின அரககர் கோமான (இராவணன) தன தடககையின கீழ்ச்செருகி எடுக்க லாற்றாது வருந்தினான (கலி. 38.1-5). மலைவாழ் மக்கள தலைவியைத் தலைவனுக்குக கொடுக்க நினையாது நொதுமலருககுக கொடுகக நினைப் பதால், இவ்விடத்து வளளியும் கிழங்கு கீழ் வீழா; மலைமிசைத தேனும் தொடா; கொல்லை யில தினைகளும் கதிர் வாங்கி ஈனா எனத தோழி தலைவியிடம் கூறினாள் (கலி. 39:11-14). குதிரை யூர்ந்து வந்தேன் என்ற தலைவனிடம 'மெலலிய காதிற கிடக்கும புல்லிகை எனனும் பூணாகிய கீழ் ஞாலும் இயல்புடைய கனனசாமரை யணிந்த அக் குதிரையை யான அறிவேன' எனத தலைவி பரத் தையைக் குதிரையாககிக கூறினாள் (கலி. 96:10,11). எங்கள் தோட்டத்துக் காஞ்சி மரத்துக கீழ நான் வரக்கூறிய குறியிடம் என அகப்புறத்தலைவி தலை வனிடம கூறினாள் (கலி. 108.62,63). மணம்வீசும் மலர் கொணட புனனைக்கீழ நினனைக் கூடிய தால் தன்னழகைத் தோற்றவள தலைவி எனத் தோழி தலைவனிடம் கூறல் (கலி. 135:6,9,12). நறும் பூவையுடைய புனனைக்கீழ நீ விருமபித் தலைவியைக் கூட அவள் மகிழந்தாள எனத் தோழி தலைவனி டம் கூறினாள (கலி. 136:13,14). விசும்பு மதியத் தோடு புணாபபனவாகிய எரியும் சடையும வேழமு முதலாக அவற்றின கீழ இருநது வீதியால் வேறு படுக்கபபட்ட ஒரொனறு ஒனபது நாளாகிய மூவகை இராசிகள் என வகுக்கபபடும் (பரி. 11:1-3). குருகு எறிநத வேலுடைய செவ்வேளின் பரங் குனறின கீழக் கிடந்த இடைநிலபபரப்பு பாண்டி யன பாசறையின இயல்பினது (பரி. 19.35-37).

**கீழ்நீர்** – நீரின் கீழ்ப்பகுதி. கீழநீரில் – நீரின கீழ்ப் பகுதியில – மீனகள் சென்றுலவ, நீரின் மேல்பரப பில குவளையும் தாமரையுமாகிய பூக்கள் மலர்ந் திருககும் (புறம். 396:1,2), கிளையினின்றும் தோன்றி அழகுற்று வளர்ந்த கீழநீர் நினற சிவந்த அரும் பைக் கட்டிய மாலையைச் சூரரமகளிரின் கொண் டையில் தோழியர் வளையச் சுற்றினர் (முரு. 29,30).

**கீழ்ப்பணிதல்** - அடங்கியொழுகுதல். வேந்தரும் வேளிரும் பிறரும் பெருஞ்சேரல இரும்பொறையைக் கீழ்ப் பணிந்து - அடங்கியொழுகி - வழிபடுவர் (பரி. 75: 4,5).

**கீழ்ப்பால்** – கீழ்க்குலம். வேறுபாடு தெரியப்பட்ட நாற் குலத்துள்ளும் கீழப்பால் - கீழக்குலம் - சார்ந்த ஒரு வன் கற்பானாயின் மேற்குலத்துள் ஒருவனும் அவ னிடத்தே சென்று வழிபடுவான் எனபது ஆரியப் படை கடந்த நெடுஞ்செழியனின் கூற்று (புறம். 183: 8-10).

**கீழ்மடை** - கடைமடை. நெல்லறுப்பார் கீழ்மடையில் - கடைமடையில் - கொண்ட வாளையையும் உழு வார் படைவாளால் மறிக்கப்பட்ட ஆமையையும் கரும்பறுப்பார் கரும்பினின்றும் வாங்கப்பட்ட தேனையும் பெண்டிர் பறித்த செங்கழுநீரையும் வனபுலத்தினினறும வந்த சுற்றத்தார்க்கு விருந்தா கக் கொடுக்கும மென்புல வைப்பின் நாட்டிறகுத் தலைவன் கிள்ளிவளவன் (புறம். 42.12-18).

**கீழ்மரம்** – அச்சுமரம். உமணர் சகடத்தில் கீழ்மரம் - அச்சுமரம் – பககததே சேம அச்சு ஒன்றை யும் அடுத்துக் கட்டியிருப்பர் (புறம். 102:4,5).

**கீழேழுலகம்** - கீழேயுள்ள ஏழுலகங்கள். வாமனனாய்த் தோன்றித் திருமால் தன் திருவடியால் கீழேழுலக மும் - கீழே உள்ள ஏழுலகங்களையும் - அளக்கினற காலத்துச் சிறிதும் எஞ்சாமல பொருந்திய ஒரு திருவடியை உடையவர் (பரி. 3:20).

**கீழோர்** – உழவர் (கீழிடத்துள்ளவர்). மலையிடத்து வெள் ளிய அருவி இடையறாது ஒழுகிக் கீழோர் - உழவர்- வயல்களிற் பரவும் (பரி. 17: 40).

# கு

**குங்குமம்** - செந்நிறப்பொடி. வையைப் புனலாடி இளைத்த மகளிரிற் சிலர் சிவந்த குங்குமத்தாலாய சேற்றுடன் அகிற்சாந்து, கருப்பூரம் இவை தம்முள் கலக்குமாறு சாநதம்மிக்கண் குழவியால் அழலென நிறம பெற அரைத்தனர் (பரி. 10: 81-84). மகளிர் செவ்வேள் குனறத்தையடைந்து அவனது கோழிக் கொடி ஏற்றப்படும யானையின் கும்பத்தைக் குங்கு மத்தால் புனைந்து பூவுடன் கூடிய நீரைத் தெளித் துச் செவிக்கவரி சார்த்திப் பொற்கொடையை மேலே கவித்து வழிபாடு செய்தனர் (பரி. 19: 85-88). நீராடுதற்கேற்ற தன்மையுடைய மஞ்சனப்பொருள்

களும் குங்குமச் சேறு முதலியனவும் கலந்தமை யால் கலங்கலாகிய வையை நீர் தூய்தன்றாயிற்று (பரி. தி. 2: 88,89).

**குச்சு** - குச்சுப்புல். வெட்சிவீரன் திரண்ட காலினை யும் அழகிய வயிற்றினையும் பரந்தமார்பினை யும் பசியகண்ணினையும் குச்சு - குச்சுப்புல் - நிரைத்தாற் போன்ற நிறம் பொருந்திய தாடியி னையும் முன்னே தாழ்ந்த கதுப்பினையும் உடை யவன் (புறம். 257 : 1-4).

**குஞ்சரக்குரல குருகு** - யானையங்குருகு. களிமயிலும் குஞ்சரக்குரல குருகும் - யானையங் குருகும் - இடைய றாது முழங்கும் முழவொலியைக காரொலி எனக்கருதி ஒலிக்கும் (அகம். 145 : 14-16).

**குஞ்சரம்** - யானை. பெருவேந்தன் எறிநதவேல் சீறூர் மன்னனின் சாந்தாரகலத்தை ஊடுருவ அவன் அவ்வேலைப் பறித்து எறிந்த காலத்து, அப்பெரு வேந்தனின குஞ்சரம் - யானை - எல்லாம் புன்றலை மடப்பிடி நாணுமாறு புறங்கொடுதேதோடின (புறம். 308: 6-11). களங்காயக் கண்ணி நார் முடிச்சேரல் குருதிச் செம்புனல் குஞ்சரத்தை இழுத்துச் செல்லு மாறு செருப்பல செயது, சிவந்த போர்க்களத்தில் களவேள்வி செய்தான் (பதி. ப. 4: 10, 11). இலங்கு தொடி யணிந்த மருப்பினையும் சிந்தும் மதத் தினையும் உடைய வலம்படு குஞ்சரம் நிலத் தைக் கையாற் புடைத்து எழும் (பதி. தி. 2:1,2). மிக்க மழைபொழிந்த நள்ளிரவில் குஞ்சரம் நடுங்கும்படி தாக்கி மலைச் சாரலில் புலி முழங் கும (அகம். 92:2-4).

**குஞ்சரவொழுகை** - யானை கட்டியசகடம். கடல் பிறக் கோட்டிய செங்குட்டுவன பழையனை வென்று, அவன் காவல் மரமாகிய வேம்பினைத் துணித்து, அவன் பெணடிரின கூந்தலைக் கயிறாகக் கொண்டு குஞ்சர ஒழுகையில் - யானை கட்டிய சகடத்தில் - பூட்டி அவ்வேம்பினை ஏற்றிக் கொணர்நதான (பதி. ப. 5:13-17).

**குஞ்சி** - ஆடவர் தலைமயிர். தலைவன் மணிநிறங் கொண்ட தன மாயிருங் குஞ்சியில் மலை, நிலம, சினை, சுனை ஆகிய இடங்களில் மலர்ந்த பல் வகை மலர்கொணடு கட்டிய கண்ணியை அணிந் தான் (குறி. 112-116). மதுரைக்கும் திருப்பரங் குனறத்திறகும் இடையே உள்ள நிலத்தில் நெருங்கி விளையாடுதலால, மகளிர் கூந்தலினின்றும் மைந் தர் குஞ்சியினின்றும் வீழ்ந்து அவிழ்ந்த மாலை களால் செல்லும் வழி இல்லையாயிற்று (பரி. 17: 22-27).



**குட்டம்** - 1. ஆழம். கடலினது குட்டமும் - ஆழமும் - உலகத்துப்பரப்பும் காற்றியங்கு திசையும ஆகாய மும் எனனுமவற்றை அளந்தறியினும் யானைக்கட் சேய் மாநதரஞ்சேரல் இரும்பொறையின் அறிவும் அன்பும் கண்ணோட்டமும அளத்தற்கரியன (புறம். 20:1-6). கடலின்கண் பெரிய குட்டத்துக் காற்றாற் புடைக்கப்பட்ட மரககலம் நீரைக் கிழிதது ஓடு மாறு போலத் தலையாலங்கானத்துச் செருவென்ற பாணடியன் நெடுஞ்செழியன களிறுசென றுபோர்க் களத்தை இடமகலச் செய்தது (புறம. 26:1-3. அகழியின் நீர் மிக்க மடுவினில உள்ள முதலை இடம் கரிதாகிய குட்டத்தின்கண் சேரத் திரண் டோடி இடையாமதது ஊர்காப்பாரின விளககு நிழலைக் கவரும் (புறம. 37:7-9). இளஞ்சேரலிரும பொறை கழை நிலைபெறாக் குட்டததையுடைய சந்தன மரங்கள் மிதந்து வரும் வானி யாறறினும் இனிய தணணிய மென்மையையுடையவன் (பதி.86: 9-13). பொனனிறம் போலும் வாயையுடைய நீல மணி போன்ற சிரல் (சிச்சிலிப் பறவை) காஞ்சிக கிளையில ஏறி நிலைகாண முடியாத குட்டததில திரியும் மீன்களை எடுக்கும் காலஙகருதி நெடும் பொழுது இருந்து கயலை எடுத்தது (சிறு. 179-181). இரவுக் குறிக்கண் தலைவன் வரும் வழியிலுளள ஒடுங்கிய கரிய குட்டத்தில், போதற்கரிய சுழி யிடத்தே கொடுந்தாள் முதலையும் இடங்கரும் கராமும் திரியும் (குறி. 256,257). கடல் கொளக் குறைபடாமல் சங்கு வளரும் குட்டததினை யுடை யதாய் அளப்பரியதாய்க் கரிய தோற்றத்தினை உடையது (அகம்.162:1-3). 'தலைவியின தநதையுடன் கூடி, செறுவில் உப்புக் குவித்துழந்தும் கடலின் குட் டததில புணையின்கட் சென்றும் மீன பிடித்தும் அவனுககுப் பணிநது சார்ந்து நடப்பின அறம் தெரிந்து அவளை நமக்குத் தருவானோ' எனத் தலைவன தன நெஞ்சினிடம் வினவினான் (அகம. 280:6-11). விரைநது செல்லும் கரைகாண முடியாத கானயாற்றுக் குட்டம் தனியனாக நீந்தி இரவில வரும் தலைவனின வழியருமை நினைநது தலைவி வருந்தினாள் (நற. 144:7-10).

2. ஆழமான நீரநிலை. இளஞ்சேரலாதனின் முன் னோர் தம ஒனனாராய கடம்பர் அழியுமாறு துளங்கும் இருங்குட்டத்து - ஆழமான நீர் நிலையில வேற்படையைச செலுத்தி வெனறனர் (பதி. 88:4,5). கொடுமுடி வலைஞர் செவ்வரிக் கயல்களோடே இறாப்பிறழும் கரிய குட்டத்தில் பிள்ளைகளோடு உலாவி மீனபிடித்தனர் (பெரு. 270-274). காற்றுக் கொணரும் மரககலம் பெருங்கடலின குட்டத் தினின்று ஓத ஏற்றத்தினால கழியிலே வந்து

நள்ளிரவில் பலவேறு பண்டங்களையும் இறக்கிச் செல்லும் (மது. 539-542). கடலில் இயங்கும் சேவற் காக்கை தான் விரும்பும் சூலகொண்ட பேடைக்குக் கரிய சேற்றிலுள்ள அயிரை மீனைத் தேர்ந் தெடுக்கக் கழியிடத்துப் பூவுதிரப் பெற்ற குட்டத் தினைத் துழாவும் (நற். 272:1-6). கொக்கு தங்கிய தால் உதிர்நத மாங்கனி ஆம்பல் நிறைநத தூங்கு நீர்க் குட்டத்துத் துடுமெல' வீழ்ந்தது (நற. 280:1-3).

3. மடு. இளைஞருடன் நீருக்கு அண்மையிலுள்ள மரத்திலேறிக் கரையிலுள்ளோர் மருளும்படி நெடு நீர்க் குட்டத்து – மடுவில் - துடும் என்று ஒலிக்கு மாறு குதித்து மூழ்கி மணலைமுகந்து காட்டிய தம் இளமைக் காலச் செயலை நினைந்து தொடித்தலை விழுத்தண்டினார் இரங்கினார் (புறம். 243:5-11).

**குட்டி** - விலங்கின் இளமைப்பெயர். கள்ளைச் சமைக் கின்ற மகளிர் வட்டில் கழுவின நீர் நிறைந்து வழிந்த குழம்பிடத்துள்ள ஈரச் சேற்றை யளைந்த பல குட்டிகளுடன் பெணபன்றிகள் இருந்தன (பெரு. 339-342).

**குட்டுவ** - குட்டுவன் என்பதன் விளி. 'பகைவரின் அண்ணலம் பெருங்கோட்டு அகப்பாவை வென்று, பொனனாற் செய்த உழிஞைமாலை யணிந்த குட்டுவ' எனப் பல்யானைச் செலகெழு குட்டுவன் விளிக்கப்பெற்றான் (பதி. 22:26,27). 'சிறுமகிழானும் பெருங் கலம் வீசும் போரடு தானைப் பொலந் தார்க் குட்டுவ' என்பது பல்யானைச் செல்கெழு குட்டுவனைக் குறித்த விளி (பதி. 23:9,10). 'அண்ணல் யானை அடுபோர்க் குட்டுவ' எனக் கடல்பிறக்கோட்டிய செங்குட்டுவன் விளிக்கப் பெற்றான் (பதி. 42:8). கடல் பிறக்கோட்டிய செங்குட்டுவனைப் 'பகைவர் நாட்டின் நலனழித்த, போரடு தானைப் பொலந்தார்க்குட்டுவ' எனப் பரணர் விளிததார் (பதி. 43:10,11).

**குட்டுவர்** - குட்டநாட்டினர். இளஞ்சேரலிரும் பொறை களளாகிய உணவினையுடைய குட்டுவரின் - குட்ட நாட்டினரின - தலைவன (பதி. 90:26). தலையாலங் கானததுச் செருவெனற பாணடியன் நெடுஞ் செழியன குட்டுவர் பலரை வென்ற வேந்தனா வான (மது. 105).

**குட்டுவன்** - 1. குட்டநாட்டையுடைய சேரவேந்தன். ஒடுங்காடு எனனும் ஊர்க்கு அப்பாலுள்ள குட நாடு இறுகப் பிணித்த முழவினையுடைய குட்டு வன் காத்தலால் பசியென வறியாத மருதவளம் மிக்க ஊர்களைக் கொண்டிருநதது (அகம். 91:12-17). கழுமலமெனனும ஊர் குதிரைகளையும் நல்ல தேர்களையுமுடைய கைவண்மை மிக்க கோமா னாகிய குட்டுவனுக் குரியது (அகம். 270:8,9). தெளிந்த அலைகள் பொருந்திய கடற்பரப்பினை யுடைய தொண்டி முன்றுறை, வெண்கோட்டு யானைகளையும் வெற்றிமிகும் போர்த்தொழிலை யுமுடைய குட்டுவனுக் குரியது (அகம். 290:12,13). அழகிய குதிரைகளையுடைய குட்டுவனுக்குரியது மரந்தையெனனும் ஊர் (அகம. 376:16-18). 'குட்டு வனுடைய மரந்தையூர் போன்ற அழகினள் தலைவி (குறு. 34:6,7). குட்டுவனுக்குரிய குடமலைச் சுனை யில் மலர்ந்த குவளை மலரின் மணங்கமழும் கூந்த லையுடையவள் தலைவி (நற்.105:7-10). கடிய பகட்டி யானைகளையும் நெடிய தேர்களையுமுடைய குட்டுவன் தன் பகைவேந்தரைக் கொன்ற போர்க் களத்தில் அவனது போர் முரசு மிகவும் அதிர்ந்தது (நற். 395:4,5). செங்கோலனான குட்டுவனுக்குரியது தொண்டிப்பட்டினம் (ஐங். 178:2,3).

2. கடல்பிறக்கோட்டிய செங்குட்டுவன். மலைபடு பொருளையும் கடல்படு பொருளையும் கலந்து இரவலராய் வருவார்க்கு ஈவோனும் மிகுந்த கள்ளையுடையவனும் பொன்மாலை யணிந்தோனு மாகிய குட்டுவனுக்கு - கடல்பிறக்கோட்டிய செங் குட்டுவனுக்கு - உரியது முசிறி நகரம் (புறம். 34:3, 7-10). பல போர்களை வஞ்சியாது எதிர்நின்று பொருது வென்றவனும் கொல்லும் களிற்றியானை களையுடையவனும் கடல் கலங்குமாறு வேலினைச் செலுத்திப் படு கடலோட்டிய வெல்லும் புகழமைந் தவனுமாகிய குட்டுவனைக் கண்டோர், அவனைப் பாடியவுடன் செல்வோமென்று கூறார் (பதி 46:10-14). குட்டுவன் தன்பகைவரைக் கொன்று அச் செயல் போதுமென்று அமையான் (பதி. 47:1). மோகூர் மனனனின் படைவீரராகிய செங்கை மறவர்தம் குருதி நிலத்தில் படர்நதோடிப் பள்ளங் களில் பாயவும் இறந்த பிணங்கள் மலைபோல உயர்ந்து தோனறவும் பாழ் பல செய்து படை நடுவே முரசம் ஒலிக்க அம்மோகூரின் வளனழியவும் அங்கே விளங்கி வாழ்வார் பலர் இறப்பவும் காவல மரமாகிய வேம்பினை வெட்டிய பெருஞ் சினத்தையுடைய குட்டுவனைக் கண்டு வருதற்கு யாமும் செலகினறோம்; விறலியரே, நீயிரும் வம் மின்' எனறு பரணர் பாடியுள்ளார் (பதி. 49). மின் னலால் வானைப் பிளந்து வலிமை கொண்டெழும் மேகத்தை யொப்பப் பகைத்து வலிமை கொண் டெழுநது பாசறையைத் தான் வேண்டுமிடங்களில் அமைததுப் படைக்கலன்களை யுடைய கடல் போன்ற தானையுடையவனும் தேனொழுகும்

மாலையணிந்தவனுமான தறுகண்மையுடன் போர் செய்தல் வல்ல குட்டுவன், தன்னுடன் பொரும் பகையை நிலவெல்லைக்குள் காணாமையால் சினம் மிகுந்து, போர்புரியும் வலிமையோடு கடலை வளைத்து உயர்ந்த அலைகளையுடைய அக்கடல் பிறக்கிடும்படி தனது மாண்புற்ற வேலினைச் செலுத்தினான் (அகம். 212:12-20).

3. **சோழிய ஏனாதி திருக்குட்டுவன்.** 'விற்பயிற்சியால் உயர்ந்தகன்ற சாந்து பூசப்பட்ட மார்பினையும் வலிமை நிலைபெற்ற பெரிய கையினையும் வாய்த்த வாளினையு முடையோனாய் ஒலிக்கின்ற புனல் பரந்த கழனிகளைக் கொண்ட வெண்குடையெனும் ஊர்க்குத் தலைவனாகிய குட்டுவன் - சோழிய ஏனாதி திருக்குட்டுவன் - வள்ளன்மையுடையனா தலை இவ்வையகமெல்லாம் புகழினும் உயர் மொழிப் புலவீர், நீவிர் அவனை நினைதலைத் தவிர் வீராக' என்று கோனாட்டு எறிச்சிலூர் மாடலன் மதுரைக் குமரனார் குறிப்பிடுவர் (புறம். 394:1-5).

4. **இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன்.** 'குடபுலங்காவல ராகிய சேரர் மரபினனாய்ப் பகைவருடைய வடபுல இமயத்தில் வளையும் வில்லைப் பொறித்த திண்ணிய தோளினையும் இயல்தேரினையுமுடைய குட்டுவனுக்கு - இமய வரம்பன நெடுஞ்சேரலாதனுக்கு - உரியது வஞ்சியெனும் ஊர் (சிறு. 47-50).

5. **பல்யானைச் செல்கெழு குட்டுவன்.** குட்டுவன் - பல்யானைச் செல்கெழு குட்டுவன் - தன பகை வருக்குரிய அகப்பா என்னும் நகரை யழித்துத் தீயிட்டனன் (நற். 14:3-5).

**குட்டுவன் இரும்பொறை** - தகடூர் எறிந்த பெருஞ்சேரல் இரும்பொறை. குட்டுவன் இரும்பொறைக்கு மையூர் கிழானாகிய வேளின மகள் அந்துவஞ்செள்ளை யென்பாள ஈன்ற மகன் இளஞ்சேரல இரும்பொறை (பதி. ப. 9:1,2,17).

**குட்டுவன் கண்ணனார்** - புலவர். குட்டுவன் என்னும் குடிப்பெயரைக் கொண்ட கண்ணனார் என இவர் பெயர்க்கு விளக்கம் காணலாம். குட்டுவன் என்பது குட்ட நாட்டையுடைய சேரர்க்குரிய குடிப்பெயரா தலின் இப்புலவரையும் சேரர் மரபினராகக் கருத இடமுண்டு. இவர் பாடியதாகக் குறுந்தொகை 179-ஆம் பாடலொன்றே காணப்படுகின்றது. தலைவன் நாயுடன் வந்து வேட்டை யாடிப் பொழுது போனதையும் நாய் இளைத்ததையும் தோழி அவனிடம் கூறி, அவனைத் தம்மூர்க்கு வந்து தம்மில்லத்தில தங்கி இரவைக் கழித்துச் செல்லு மாறு வேண்டும் முறையில் இரவுக்குறி நேர்ந்தாள் போன்று பகல்வருவானை விலக்கி வரைவு கடாவும் துறையை இவர் அப்பாடலில நயமுற இயைத் துள்ளார்.

**குட்டுவன்கீரனார்** - புலவர். குட்டுவன் என்பது குடிப் பெயர். கீரனார் என்பது சிறப்பு விகுதி சேர்க்கப் பெற்ற இயற்பெயர். குட்ட நாட்டையுடைய சேரரே குட்டுவராதலின அக்குடிப்பெயரைக் கொண்டுள்ள இவரையும் சேரர் குடியினராகக் கொள்ளலாம். இவர் பாடலொன்றுபுறநானூற்றில் (240) உள்ளது. ஆய்அண்டிரன் தன் உரிமை மகளிரோடு இறந்த நிலையில் அவனால் புரக்கப்படுதலை யொழிந்த புலவ ரெல்லோரும் மேலே தம்மைப் புரப்பாரை நாடிப் புல்லென கண்ணராய்ப் போகத் தலைப் பட்டமை கண்ட கையறு நிலையாக இவர் அப் பாடலைப் பாடியுள்ளார். அதனுள், 'ஆடுநடைப் புரவியும் களிறும் தேரும், வாடா யாணர் நாடும் ஊரும் பாடுநாக் கருகா ஆஅய் அண்டிரன்' என்று அவன் கொடையையும் 'காலன் என்னும் கண்ணிலி உய்ப்ப, மேலோர் உலகம் எய்தினன்' என்று அவ னது இறப்பையும் இவர் குறிக்கும் பகுதிகள் சிறப் பாகப் பாராட்டத் தக்கன. புறங்காட்டுள் பேராந்தை, 'சுட்டுக்குவி' என்று செத்தோரை அழைப்பது போலக் கூவும் என இவர் தற்குறிப்பேற்றிக கூறுவர்.

**குட்டுவன் சேரல்** - சேர இளவரசன். கடல்பிறக்கோட்டிய செங்குட்டுவன் தன்னைப் பததுப பாடல் களால் பாடிய கரணம் அமைந்த காசறு செயயுட் பரணர்க்குப் பரிசிலாக உம்பற்காடு என்னும் தன்னாட்டுப் பகுதியின் வருவாயையும் தன மகன குட்டுவன் சேரலையும் கொடுததான (பதி. ப. 5, அடிக்குறிப்பு).

**குட** - குடத்தையுடையோய். திருமாலை (கூத்தாடத் கெடுத்த) குட - குடத்தையுடையோய் - எனக் கடுவ னிளவெயினனார் விளிபபர் (குடவ எனபது குட என வந்துள்ளது) (பரி. 3:83).

**குடக்கு** - மேற்கு. 'பனிமலை வடக்கும் குமரியின் தெற்கும் கடலில் கிழக்கும் பழையதாய் முதிர்ந்த கடலின குடக்கும் - மேற்கும் - கீழும் மேலும் நினக்கு உருவும் புகழும் உண்டாகுக' எனப் பல்யாக சாலை முதுகுடுமிப் பெருவழுதியைக் காரி கிழார் வாழ்த்துகிறார் (புறம். 6:1-8). திசைகளில் விரிந்த கதிர்களைப் பரப்பிய அகன்ற இடத்தை யுடைய ஞாயிறு குடக்குத் திசைககண் சேறற்கு எழுந்தது (நெடு. 72-74). பெருங்கூட்டமாய் மேகங் கள் கடலில் சென்று நீரைப் பருகிக் குடக்குத்திசை

நோக்கி எழுந்து பிடியினம் போல் தோன்றின (அகம். 183: 6-9). நீரை முகந்து கொண்ட கரிய மேகம் குடக்குத திசையிலுள்ள மலையில் எழுநது மழை பெயதது (நற். 140:1). மேகம கீழ்க்கடலில் நீரை முகநது குடக்கு நோக்கி எழுந்தது (நற்.153: 1-4; 346:1,2). புனனைமரத்தின் குடக்கு நோக்கி வளைநத பெருங்கிளையில புதுவதாக வந்து தங்கிய வெண குருகு ஆரவாரிததது (நற். 167:1,2). விரிகதிர் ஞாயிறு குடக்குத் திசை சென்று மறையும் (நற். 398:2).

**குடக்கோ இளஞ்சேரலிரும்பொறை** - சேர வேந்தன். இவன் சேரமான் குடக்கோச் சேரலிரும்பொறை எனவும் குறிக்கப் பெறுகின்றான் (புறம். 210. அடிக் குறிப்பு). குட்டுவன் இரும்பொறையாகிய தகடூர் எறிந்த பெருஞ்சேரலிரும்பொறைக்கு மையூர் கிழானாகிய வேளின் மகள அநதுவஞ்செள்ளை ஈனறெடுத்த மகன் இவனென்று பதிற்றுப் பத்தினுள் இவனைப் பற்றிய ஒன்பதாம் பத்தின் பதிகம் கூறும். இவனைச் சிறப்பிதது அப்பததுப் பாடல்களைப் பாடிய பெருங்குனறூர் கிழாரே மேலும் இவனைக் குறிததுப் பாடியனவாய் இரு பாடல்கள புறநானூற்றில் (210,211) இடம பெற்றுள்ளன. சோழ பாண்டியராகிய இரு பெரு வேந்தரும் அவருடன கூடி வந்த விசசிக கோவும வீழுமாறு அரிய காவற்காட்டையுடைய மலையகத்தே யமைந்த ஐந்தெயில்களை யெறிந்து இவன கோப்பெருஞ்சோழனையும் இளம்பழையன மாறனையும் வஞசினம் வாயபப வெனறான் என்று பதிற்றுப்பததின் அப்பதிகம் கூறுகின்றது. ஆயினும், இவனுடைய இவ்வெற்றிச் செயல்கள் இவனைப பற்றிய பாடலகளில் குறிப்பிட்டுப் பாடப் பெறவிலலை. யாரோ ஒரு சோழனை வெனறு பிடிததுக கொணருமாறு இவன் தன் படைஞரை ஏவ அப்படைஞருக்கு முன அச் சோழன படைஞர் தோற்று வேலகளைக் கீழே விடுததுப் போயினர் என்ற குறிப்பொனறே (பதி. 85) காணபபடுகின்றது. மறறும், இவன மநதிர மரபின வழித தெய்வத்தைப பேணியதும் அமைசசியல மையூர்கிழானைப் புரோகிதனிலும் அறநெறியறிவானாகப் பணணியதும் சதுககப் பூதரைக கொணர்ந்து நிறுததியதும் சாந்தி வேள்வி செயததும் பதிகவழிச செய்திகளாகவே அறியப் படுகினறன. 'பூழியர் கோவே' (பதி.84:6), 'பூழியர் மெய்மமறை' (பதி. 90:27), 'கொங்கர் கோவே' (பதி. 88.19, 90:25) எனப பாடல்களில் இவன் விளிக்கப பெறுதல கொண்டு பூழி நாடு, கொங்கு நாடுகளை இவன் தன் ஆட்சிககுள கொணடிருந தமை அறியலாம். 'நீ அன்புடைமையால் நீரை யொத்தனை; சூழ்ச்சியில் பிறர்க்கு அளப்பருமையால் ஆகாயத்தை யொத்தனை; வறியோர் தாமே கொள்ளக் கொள்ளக் குறையாத செல்வம் படைத்தமையால், மேகம் முகந்து கொள்ளக் குறைவு படாத கடலை யொத்தனை; பொலிவு பெற்ற சுற்றததோடு விளங்குதலால் விண்மீன்களுக்கு நடுவே விளங்கித் தோன்றும் திங்களை யொத்தனை' என்று பாராட்டப் பெறும் இவன், 'நின் வாழ்நாட்கள் திங்களைப் போன்றும் திங்கள்கள் ஆண்டுகளைப் போனறும் ஆண்டுகள் ஊழிகளைப் போன்றும் ஊழிகள் வெள்ளமெனும் பேரெண்ணின் எல்லையுடையனவாகவும் வாழ்க' என்று வாழ்த்தவும் பெறுகின்றான் (பதி. 90). இவன் தன்னைப் பாடிய பெருங்குன்றூர் கிழார்க்கு முப்பத்தீராயிரம் பொற்காசுகளைக் கொடுத்து அவரறியாமலே ஊரும் மனையும வளமிகப் படைதது எண்ணறகாகா அருங்கல வெறுக்கை யொடு பன்னூறாயிரம் பாற்பட வகுத்துக் காப்பு மறமாகிய காவற்படையினையும் விட்டுப் பதினாறாண்டு அரசு வீற்றிருந்தான் (பதி. ப. 9).

**குடக்கோ நெடுஞ்சேரலாதன்** - சேரவேந்தன். பதிற்றுப் பத்து ஆறாம் பதிகத்தில குடக்கோ நெடுஞ்சேரலாதன் எனக் குறிக்கப்பெறும் இவனே சேரமான் குடக்கோ நெடுஞ்சேரலாதன் (புறம. 62,63,368. அடிக் குறிப்பு) எனவும் குடவர்கோமான் நெடுஞ்சேரலாதன் (பதி. ப. 5) எனவும் இமையவரம்பன் நெடுஞ்சேரலாதன் (பதி. ப. 2) எனவும் இமையவரம்பன் (பதி.ப.3) எனவும் சேரலாதன் (பதி. ப. 4) எனவும் பலவாறு குறிக்கப்பெறுகின்றான். உதியஞ்சேரல என்பானுக்கு வெளியன் வேளின் மகள் நல்லினி ஈன்றமகனாகிய இவன் தம்பியே பல்யானைச் செல் கெழுகுட்டுவன (பதி. ப. 2; ப. 3). இந்நெடுஞ்சேரலாதனுக்கு வேளாவிக் கோமான பதுமன்தேவியும் சோழன மகள் மணக்கிள்ளியும் மனைவியர். அவருள் பதுமனதேவி ஈனற மக்கள் களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரலும் ஆடுகோட்பாட்டுச் சேரலாதனும் ஆவர் (பதி. ப. 4. ப. 6). மணககிள்ளி ஈன்ற மகன் கடல்பிறக்கோட்டிய செங்குட்டுவன் (பதி. ப. 5). இச்சேரமான் குடக்கோ நெடுஞ்சேரலாதனும் சோழன் வேற்பஃறடக்கைப் பெருவிறற் கிள்ளியும் போர்ப்புறத்துப் பொருது இருவரும் படையொடு வீழ்ந்து மாண்டனர். அந்நிலையில் கழாத்தலையாரும் பரணரும் தொகைநிலைத் துறையில் இருவர் வீழ்ச்சியையும் இரக்கம் மிகப் பாடியுளளனர் (புறம்.62;63). இவன் போர்க்களத்தில் வீழந்து ஆரம் கழுத்திலேயிருக்க உயிர்போகாது கிடந்தபோது

கழாத்தலையார் மறக்களவழித்துறையிற் பாடியுள் ளார் (புறம். 368). 'வாளேருழவ, யாம் நின்னிடத்தே களிறுகளைப் பரிசிலாகப் பெறுவோமென்றால் அவை அம்புபட்டுத் தொலைந்தன; கொடுஞ்சி நெடுந்தேர்களைப் பெறலா மென்றால் அவை பீடழிந்து சிதைந்து நிலத்தே கிடக்கின்றன; குதிரை களையோ என்றால் அவை வாளாற் பிளக்கப் பட்ட வடுக்களோடு மாய்ந்து வளிவழக்கறுத்த வங்கம் போலக் குருதிப் பெரும் புனலில் கிடக்கின் றன. இதனால பெறற்குரிய பெரும் பரிசில் பெறா மையின் இரவலர் இரங்கும் இந்நிலையில் யாம் தடாரிப் பறையை அறைந்து நின்னைப் பாடிவந்த தெல்லாம் 'நின் தோளிடத்தே அரவுபோற் சுற்றிக் கிடக்கும் மணி மிடைந்த ஆரத்தைப் பெறுதற் பொருட்டே போலும்' என்ற பொருளமைந்த அப் பாடலில் இவன் வீழ்ச்சியின் இரக்கம் காணலாம். இமையவரம்பன், இமைய வரம்பன் நெடுஞ்சேர லாதன், குடவர் கோமான் நெடுஞ்சேரலாதன் சேரமான் குடக்கோ நெடுஞ்சேரலாதன், சேரலா தன் காண்க.

**குடகடல்** - மேலைக்கடல். சேரமான் பெருஞ்சோற்றுதி யன் சேரலாதனை 'நின் குண கடலில் தோன்றிய ஞாயிறு பெயர்த்தும் நின் வெள்ளிய தலையை யுடைய அலைகளைக் கொண்ட - குடகடலில் - மேலைக்கடலில் - மூழ்கும் யாணர் வைப்பின் நல் நாட்டுப் பொருந' என முரஞ்சியூர் முடிநாகனார் பாராட்டுகிறார் (புறம். 2:9,10). தென் திசைக்கண் குமரியும், வடதிசைக்கண் இமயமும் கிழக்கிலும் மேற்கிலும் குணகடலும் குடகடலும் எல்லை யாகக் கொண்ட, நடுவிலுள்ள குன்றமும் மலையும் காடும் நாடும் உள்ள பகுதியிலுள்ளார் ஒன்றுபட்டு வழிமொழியச் சேரவேந்தர் ஆண்டனர் (புறம். 17: 1-8). கீழ்க்கடல் பின்னதாகக் குடகடலின் திரை நின் குதிரையின குளம்பை அலைப்ப வலமாக வரு தலுமுண்டாமென்று நெஞ்சம நடுங்கி வடபுலத்தர சர் உறங்காராயினர் எனச் சோழன் நலங்கிள்ளி யின் மறத்தைக் கோவூர்கிழார் பாராட்டுகிறார் (புறம். 31:13-17). சினமிகு சேனையைக் கொண்ட சேரன் குடகடலில் நாவாய் ஓட்டிய பின்பு அவ் விடத்து வேறு எவரும் கலம் செலுத்த இயலாது (புறம். 126:14-16). ஆய் அண்டிரன் தன்னையும் தன மலையையும் பாடிவருநர்க்கு உவந்தளித்த யானை யை எண்ணின், அவன் கொங்கரைக் குடகடலின் கண் தோற்றோடச் செய்த நாளில், அவர் தம்மிடத் தினின்றும் எறிந்து சென்ற வேலினும் பல வாகும் என உறையூர் ஏணிச்சேரி முடமோசியார் கூறு கிறார் (புறம். 130:3-7). பெரிய இமயமாகிய மலையும் குளிர்ந்த தென்கடலும், கீழ்க்கடலும், குடகடலும் ஆகிய நான்கு எல்லைக்கு இடைப்பட்ட நிலத்தில் அரசரும் சான்றோரும் பந்தரின்கண் கூடியிருந்த னர் (பதி. 51: 12-16). தலையாலங்கானத்துச்செரு வென்ற பாண்டியன் நெடுஞ்செழியன் தெனதிசை யில் குமரியும் வடதிசையில் இமயமும், கீழ்த்திசையில் குணகடலும் மேல்திசையில்குடகடலும் எல்லையாக அமைந்த இவ்விடத்துள்ள வேநதரெலலாம் ஏவல கேட்கும்படி விளங்கினான் (மது. 70-74). முகிலகள் குணகடலிடத்தே நீரை முகந்து குடகடலிடத்தே யுள்ள மலையிடத்தை வளைத்து இரவு பகல் எல்லை அறியாதபடி பெருமழை பொழிந்தன (மது. 238, 239, 244). வாடைககாறறு வீசும் பனிக் காலத்தே ஞாயிறு, ஒளிபெறும் தனது மண்டிலம் மழுங்க மாலைக் காலததில் குடகடலிற் செனறு மறையும் (அகம். 378: 13-15).

**குடகாற்று** - மேலைக்காற்று. குடகாற்றால் - மேலைக் காற்றால் - தூவித் தூற்றின நெற்பொலி வடதிசைக் கண் உளதாகிய செம்பொன மலை (மேருமலை) போலச் சிறப்பத் தோனறும் (பெரு. 240, 241). தலைவி வில்லினைப் போலும் வகையமைந்த வளை வினையுடைய குடச்சூலாகிய அழகிய சிலம்பை ஒலியாது அடக்கி அசசத்துடன வநது ஊர் முழு வதும் துயிலும் யாமத்தில தலைவனைத் தழுவி னாள் (அகம். 198: 9-11). குடைசசூல காணக.

**குடசம்** - வெட்பாலை. வெள்ளைநிறம் பொருநதிய குடசம் - வெட்பாலை - தலைவி தோழியர் விளை யாடப் பறித்த பூக்களுள ஒனறு (குறி. 67).

**குடஞ்சுட்டவர்** - குடப்பால் தரும் பசு இடையர். கோ இனத்தையுடைய நம் சுற்றததார் குறுமபிடததே பரந்திருக்கின்ற ஆட்டிடையாககும் குடஞ்சுட்ட வர்க்கும் - குடப்பால தரும பசு இடையர்ககும் - கொலலும் ஏற்றைத் தழுவுதலே காரியம் என்று தொழுவில் ஏறுகளைப் புகுத விட்டனர் (கலி. 107: 1-4).

**குடஞ்சுட்டு** - குடப்பால் தரும் பசு. கார்காலத்தில் மழை பெயத நிலத்தில் சென்று அறுகம்புல்லை நிறையத் தின்று நீர்நிறைந்த நிழலடியிலுளள குடஞ்சுட்டின் - குடப்பால் தரும் பசுவின் - இனத் துள்ள இளமபசு போர்த்தொழில் புரியும் ஏற்றினுக் கின்ற இளைய எருது கொல்லர் வணடியை இறு மாந்து ஈர்த்துச செல்லும் (கலி. 109:1-5). 'நீ ஆட்டினத்தையுடைய ஆயனாயின், எம் சுற்றததார் குடஞ்சுட்டு இனததையுடைய இடையரே' எனத் தலைவி தலைவனிடம கூறினாள் (கலி. 113:9,10).

**குடதிசை** – மேற்குத்திசை. இலவநதிகைப் பள்ளித்

துஞ்சிய நன்மாறன் வெங்கதிர் ஞாயிறு போலவும் குடதிசை - மேற்குத்திசை - தோன்றும் தண்கதிர் மதியம் போலவும் நின்று நிலைபெறுவானாக என நக்கீரர் வாழ்த்துகிறார் (புறம். 56:23-25). வெள்ளி யாகிய மீன் குணதிசையிலிருந்து குடதிசைக்கும் குடதிசையிலிருந்து குணதிசைக்கும் செல்லினும் வடக்கிலிருந்து தெற்கே குமாயினும் தெற்கில் சின்னாள் இராது பன்னாள் நிற்குமாயினும் எங்கு நிற்பினும் நிற்க; யாம் வேண்டுவனவற்றை எம் குறிப்பறிந்து நல்கும் கிள்ளிவளவனின் தாள்வாழ்க எனக் கோவூர் கிழார் வாழ்த்துகிறார் (புறம். 386: 20-25). ஞாயிறு மாலையில் குடதிசையில் மறைந்து காலையில் கீழ்த் திசையில் தோன்றி நிலவுலகத்திற் பரந்த இருளைப் போக்கும் (பதி. 22:32-34).

**குடந்தம்படுதல்** - வழிபாடு செய்தல். குறமகள் கோழிக் கொடியுடன் உருகெழு வியன்கரை (வெறியாடு களத்தை) அமைவரப் பண்ணி, நெய்யோடு வெண்சிறு கடுகையும் அப்பி வழிபடுதற் குரிய மந்திரத்தை மெல்லச் சொல்லிக் குடந்தம்பட்டு – வழிபாடு செய்து - கொழுமலர் தூவி முருகாற்றுப்படுத் தினாள் (முரு. 227–229,244).

**குடந்தை** - 1. சோழர்க்குரிய நகர். வெல்லும் வேலினை யுடைய கொற்றச் சோழர், பகைவர் திறையாகக் கொடுத்த நிதியைக் குடந்தையில் வைத்துக் காத்தனர் (அகம். 60:12-15). (உறையூரின் மேற்கு வாயிலாகிய குடவாசல் குடந்தையெனத் திரிந்தது) (அகம். 60.வே.வி; ப மு பக.282).

2. வளைவு. குறுமபூழ்ப் பறவையினது சேவல் முற்றத்தில் உலாதத்ப் பெற்ற வெள்ளெள்ளை உண்டு, கோங்கின் பூவிடத்துள்ள கொட்டையைப் போன்ற குடந்தை - வளைவு - பொருந்திய காது களையுடைய கோட்டெலியை அலைக்கும் (புறம். 321:1-5). குறுவிழி பொருந்திய கண்களையும் கூரிய மயிரினையும் உடைய குறுமுயல் முடம்பட்ட வரகின் பருத்த குருத்தினைத் தின்று குடந்தையஞ் செவியவாய்க் கொடிகளுட் புகுந்து ஒடுங்கிக் கிடந்து துயிலெழுந்து துணையொடு சென்று முன்றிலில் நீர் தோநதுண்ணும் (அகம். 284:2-6).

**குடந்தைவாயில்** - சோழர்க்குரிய நகர். இரவலர்க்குப் பரிசாகத் தேர்களைக் கொடுக்கின்ற வண்மை யுடைய சோழமன்னர்க்குரியது குடந்தை வாயில் (கும்பகோணத்திற்கு அருகிலுள்ள இவ்வூர் குடவாசல் என்று இப்பொழுது வழங்குகின்றது) (நற். 379:7).

**குடநாடு** - சேரநாடு. புகழ வாய்ந்த ஆதி என்பானுக் குரிய குடநாட்டில் - சேரநாட்டில் - மறவர் தாம எய்து கொணர்ந்த பன்றித் தசையுடன் கூடிய நிணமிக்க வெண் சோற்றுக் கட்டியை வருவார்க் கெல்லாம் ஒப்ப வழங்குவர் (புறம். 177:12-15). ஆடு கோட்பாட்டுச் சேரலாதன் பார்ப்பார்க்குக் கபிலை யொடு தன் நாட்டைச் சேர்ந்த குடநாட்டிலுள்ள ஓரூரைக் கொடுத்தான் (பதி. ப. 6:4,5,11). ஒடுங்காடு என்னும் ஊர்க்கு அப்பால் உள்ளது குடநாடு; அந்நாடு குட்டுவன் காத்தலால் பசியறியாத தண் பணை மிக்க இருக்கையைக் கொண்டிருந்தது. அங் குத் தடமருப்பெருமை தாமரையைத் தின்றலை வெறுத்தால் பலா மரத்தின் கொழு நிழலில் தங் கும் (அகம். 91:12-17). நுண் பூணணிந்த எருமை என்பானுக்குக் குடநாடு உரியது (அகம். 115:5).

**குடபுலங்காவலர்** - சேரர். பகைவரது வடபுல இமயத்து விற்பொறித்த குட்டுவன் குடபுலங்காவலர் - சேரர் - மரபில் வந்தவன் (சிறு. 47-49).

**குடபுலம்**- 1. மேற்கிடம். கிள்ளிவளவன் வஞ்சியை வென்று அதன் குடபுலத்தின்கண் வீரரின் பிணக் குவியலை அழித்துக் சுடாவிட்டான் (புறம். 373:24-26). பள்ளங்களில் இரையின் பொருட்டுத் துழாவிய நாரை, கடலைச் சேர்ந்த சோலையையுடைய குட புலம் செல்லக் கருதி ஞாழல் மரத்தின் பெரிய கிளையில் தங்கும் (பதி. 51:3-5). உப்பு வயலில் விளைந்த உப்பினை வணிகர் குடபுல மருங்கிற் கொண்டு போக நிமித்தம் பார்ப்பர் (அகம். 207: 1-4).

2. பொதியமலை (ஆகுபெயர்). வட நாட்டார் கொணர்ந்த வெள்ளிய நிறத்தையுடைய வட்டக் கல்லில் குடபுலம் – பொதியமலையில் - விளைந்த சந்தனக் கட்டையால் பிறமணப் பொருள்களும் கூட்டி அரைத்து நறுஞ்சாந்து அமைப்பர் (அகம். 340:16-18).

**குடபுலவியனார்** - புலவர். புலவியன் என்பது இவர்தம் இயற்பெயரென்றும் விரிந்த அறிவுப் பரப்பினை யுடையவர் என்பது அதன் பொருளென்றும் விளக் கிக் குடநாட்டினராகலின் குடபுலவியனார் என வழங்கப் பெற்றார் என்று இவர்க்குப் பெயர்க் காரணம் கூறுவர் ஔவை.து. (புறம். 18. முன்னுரை). இப்புலவர் பாண்டியன் நெடுஞ்செழியனைப் பாடிய இரு பாடல்கள் மட்டும் புறநானூற்றில் (18,19). இடம்பெற்றுள்ளன. அவற்றுள் முதற் பாடலில் நாட்டுவளம் கருதி நீர்நிலைகளை யமைக்குமாறு அவனுக்கு அறிவுறுத்தி மறுபாட லில் அடைந்த வென்றிச் சிறப்பை இங்கு இவர் விரித்தோதுகின்றார். நீர்நிலை யமைக்க வேண்டு

மென அரசனுக்கு அறிவுறுத்தப் புகும் இவர் நேரடி யாக அதனைத் தொடங்கிக் கூறாமல் எடுத்த எடுப்பில் அவன் முன்னோர சிறப்பைக் கூறி, 'அவர் வழித்தோன்றினோய்' என அவனை விளித்து, அவன் வாழ்நாளை வாழ்த்தி, அவனூரைப் பாராட்டிப் பின்னரே மறுக்க வொண்ணாத ஏதுக் களோடு தம் கருத்தினை இசைக்கின்ற இவரது சொலவன்மை, 'விரைந்து தொழில் கேட்கும் ஞாலம் நிரந்தினிது, சொல்லுதல் வல்லார்ப் பெறின்' (648) என்ற அருமைத் திருக்குறளை நினைவூட்டுகின்றது. 'நீரின் றமையா யாக்கைக் கெலலாம், உணடி கொடுததோ ருயிர்கொடுத் தோரே, உண்டி முதறறே யுணவின் பிண்டம், உணவெனப் படுவது நிலததொடு நீரே, நீரும் நிலனும் புணரி யோரீண்டு, உடம்பு முயிரும் படைத்திசி னோரே' (புறம். 18:18-23) என்றும் 'நிலனெளி மருங்கின் நீர்நிலை பெருகத், தட்டோர் அம்ம இவண்தட் டோரே, தள்ளா தோர்இவண் தள்ளாதோரே' (புறம்.18:28-30) என்றும் வருகின்ற இவர்தம் பாடலடிகள் அழுத்தமும் தெளிவும் உடையன. பாண்டியனின் வெற்றிச் சிறப்புக்குறித்த பாடலில் (புறம். 19) போர்க்களப் புனைவும் மூதிற் பெண்டிரின் மறமாண்பும் அம்மாண்பு கண்டு நாணிக் கூற்றுக் கணணோடியதாகக் கூறப்படும் நயமும் சிறப்புற அமைந்துள்ளன. நெடுஞ்செழிய னது மார்பினைப் புலிவேட்டுவன் எந்திரமறிந்து கொளுத்திய பெருங்கல்லடார் போலுமெனக் கருதி விருப்பத்துடன இபபுலவர் முயங்கியதாகக் கூறும உவமை நயம் உய்த்துணர்ந்து இனபுறத் தகுவதாம்.

**குடம்** - 1. கலத்தின் வகை. செம்முது பெண்டின் சிறு வன், ஆய்மகள் நகத்தால் தெறித்த சிறிய மோர்த் துளி குடத்திலுள்ள - கலததிலுள்ள - பால் முற் றும் கலங்கிக் கெடுதற்குக் காரணமானாற் போலப் படைத்திரள் கலங்கக் காரணமானான் (புறம். 276: 3-6). விடியற்காலத்தே கடாவடி யிட்டு வைக் கோலை உதறிய உழவர் மாங்காயுடன் புளிப் பதன் சேர்த்துப் புதுக்குடங்களில் அமைத்த மலிர் நிறையை (சாரத்தை) கயம் மண்டும் பகடுபோலப் பருகினர் (அகம். 37:5-11). முதுசெம்பெண்டிர் மண நாளனறு விடியலில் நீர் நிறைந்த குடத்தினை உச்சியில் உடையராகவும் கையினில் புதிய அகன்ற மணடை எனும் கலத்தினை உடையராகவும் வந்து மணவினை செய்தனர் (அகம். 86:8-10). நீரற்ற கூவலைத் தலைவன் தோண்டுதலால் சிறிதளவு ஊறிய உவர் நீரைக் குறைக் குடமாக முகந்து தரத் தேன் கலந்த பாலை நயமொழி கூறிக் கொடுத்தும் உண்ணாத என் மகள் அந்நீரை உண்டாளோ என மகட் போக்கிய தாய் வருந்திக் கூறினாள் (அகம. 207:10-17). இரைவேட்ட நீர் நாய் வாளையைப் பற்றிப் போர் செய்துழக்க, நீர்த்துறை கலங்கினமையால் நீரை எடுக்க வந்த மகளிர் தேறல் மாந்தி நுண்ணிய தொழில் நலம் வாய்ந்த குடத்தினைக் கரையில் வைததுவிட்டுத் தம் கணவரது பரத்தைமையைப் பாடிக் காஞ்சி மரத்தின் நீழலில் குரவை அயர்ந்தனர் (அகம். 336:4-9). பலாமரத்தின பெரும்பழம் குடம் போன்றிருந்தது (அகம். 352:1; நற். 353:4). ஆசினிப் பலாவின் காய் குடம் ஒததது (நற். 44:9). கானல்... உள்ள முள்ளிலைத் தாழையின சோறறைச சொரி கின்ற குடம்போலப் பருத்த உள்ளீட்டினையுடைய கூம்பிய அரும்பு மலர்ந்தது (நற். 335:4,5). சிறுவர் குடம் போலத் திரண்ட பனங் குரும்பையைக் கொடியாற் கட்டிப் பினனிய பின்னலை ஈர்த்து விளையாடினமையால் தளர்ந்தனர் (கலி. 83.8,9).

2. குப்பி. கமுகினை உடைய சூல்கொண்ட வயிற்றை யொத்த நீலப் பைங் குடததில் - குப்பியில் - உள்ள கள்ளை முழுதும் குடித்து மகிழலாம் எனப் பெரும்பாணன் ஆற்றுபபடுததப் பெற்றான (பெரு. 380-382).

3. கட்டிற்கால். அரசமாதேவியது பாண்டிலின (கச்சக் கட்டிலின்) கால்கள், சூலமுற்றி அசைந்த இயல்பினை யுடையராகிய மகளிரது பால்கட்டி வீங்கின முலை யை யொப்பப் பக்கம் உருண்டிருந்த குடத்தை - கட்டிற்காலை - உடையவாய் விளங்கின (நெடு. 120-123).

**குடம்பை** - 1. கூடு. ஊர்க்குருவியின் கரிய கழுத்தை யுடைய சேவல் பாணர் யாழ் நரமபின் கோதுகளு டன் சிங்கத்தின் மயிரையும் கொண்டு இழைத்த குடம்பையுள் - கூட்டில் - தன் பெடையொடு நெல் லின் அரிசி ஆர்ந்து வதியும் (புறம். 318:4-8). விடியற் காலையில் புள்ளும் மரத்தின் உயர்ந்த கிளையில் கட்டிய குடம்பையிலிருந்து குரல் எழுப்பின (புறம். 397:1, 2). மாலைப்பொழுதில மீனை யுண்ணும் மெல்லிய சிறகினை யுடைய பறவைககூட்டம் புன்னை மரத்திலுள்ள குடம்பையிற் சேர்ந்தன (அகம. 40:3,4). பருத்த அரையிற் கிளைத்த கிளை யிற் கட்டிய குடமபை பொலிவற்றுப் போகத் தான் விரும்பிய இடத்திற்குப் பறவை சென்றாறபோல மெய் இவண தனித் தொழிய அவர் வினைசெய்யு மிடத்திற்கு என உயிர் செல்வதாக எனப் பிரி வாற்றாத தலைவி தோழிக்குக் கூறினாள் (அகம். 113:23-27). கடவுள் மரத்தின்கண் முள்ளால் மிடையப்பெற்ற குடம்பையில் தன் சேவலொடு

கூடப்பெறாத சிறுகரும் பேடை (அன்றில்) துன்ப முற்று வருந்தும் இரவிலும், நின் ஊர்க்குச் செல்ல எண்ணுகின்றாய் யான நோவேன் எனக் கூறிப் பகற்குறிக்கண் வந்து போகும் தலைவனைத் தோழி வரைவு கடாயினாள் (அகம். 270:12-15). பனையின கொழுமடலில் சிறிய சுள்ளிகளாலமைந்த குடம்பை யிலுள்ள முதற்சூல் கொண்ட அன்றிற்பெடை பானாட் கங்குலில் ஆண்பறவையை அழைக்கும் (குறு. 301:1-4). தன பெடையுடன சென்று கடலில் இரைதேடும் நாரை சிறுமீனகளைப பிடித்துக் கிளையின் மேலுள்ள குடமபையிலிருந்து தாயைக் கூவி யழைக்கினற தன் பிள்ளைக்கு அவற்றைக் கொடுக்கும் (நற். 91:3-7). கரிய கழியின்கணுள்ள மீனிரை தினற குருகின கூட்டம் வளைந்த பனை மடலிற் கட்டிய குடம்பைகளில் மிக்க இருட்பொழு தில் நெருங்கி யுறையும (நற். 123: 1-3). வாடைக் காற்று மெலலெனப் பனித்துளியைத் தூவுதலாலே குடமபையில் தன பெடையைப் பிரியாது புணர்ந் திருககும் அனறிற் பறவையின் குரல் கேட்டுத தலைவன நெஞ்சழிந்தான (நற். 152:5-8). வயலரு கில் இருககினற பலாமரததின் இலைகளைக் கூடாக்கி முயிறுகள் முட்டையிட்டு நெருங்கியுறை கினற குடம்பையினைக் கழனி நாரை இரை வேணடி உரிஞ்சுதலானே அம்முயிறுகளும் முட்டை களும் செந்நெலலோடு கலந்த அரிசி போல உதிரும் (நற். 180:1-3). தன் சேவல் வேற்றுப புலம செனறு வேறொரு குருவிப்பெடையுடன் தஙகிப் புணர்ந்து வந்ததை அறிந்த ஊர்க் குருவிப்பெடை தன சிறு பல் பிளளையொடு சேர, நினறு சேவல் குடம்பையுள் புகாவாறு தடுத்தது (நற். 181:1-5). பனை மடலிற் கட்டிய குடமபையில தங்கிப் பிரிவால் வருந்தும் நாரை நள்ளிரவில நரலுந்தொறும் தலைவனைப் பிரிந்த தலைவி வருநதினாள் (நற். 199:1-5). கடவுள் உறை யும மன்றப பனையின் மடலிடத்துக் கட்டிய குடம்பையி லிருந்து தன துணையைக் கூடும் அன்றிற் பறவையின வருத்தந் தரும் குரலைக் கேட்குநதோறும் துஞ்சாக் கணணளாகிய தலைவி வருநதினாள (நற்.303:3-6). குருகு சிறுகுடி மன்றத் தோஙகிய பனையின் மடலில் ஏறியிருந்து யான் கேட்டு உயிர் விடும் வண்ணம் பெடை தன குடம்பை யில்வந்து தனனொடு புணருமாறு அதுதன்னை வநதணையுமளவும் கூவும் எனப் பிரிவாற்றாத தலைவி கூறினாள் (நற்.338:8-12). அறிவு மிக்க தூக் கணாங் குருவி முயனறு செய்த குடம்பையை மூங்கில் சென்று மோதுமாறு வாடைக்காற்று வீசியது(நற்.366.9-11). கடலகத்து மீன்களைத் தின்று பறவையினம் மாலைப்பொழுதில் கானலின்கண் இருக்கும் தம் குடம்பையில் ஒருசேரச் சென்று புகும் (நற். 382:3,4). சேவற் புறா கள்ளியின் தலையிலே சுள்ளிகளை யடுக்கி அமைத்த குடம்பையில் பிள்ளைகளை யீன்று அவற்றைக் காவல் செய்யும் பெடை உண்ணும் பொருட்டுப் பாழ்நிலத்துத் தானே விளைந்துதிர்ந்த நெற்கதிர்களைக் கொண்டு வந்து தரும் (நற். 384:1,2). பழனத்தில் படர்ந்த பாகற் கொடிக்கண் முயிற்றெறும்பு மொய்த் தியற்றிய குடம்பையினைக் கழனி எருமை நெற் கதிரோடு ஒருசேரக் கெடுக்கும் (ஐங். 99:1,2).

2. தோற்கூடு. சுரத்திடத்தே உள்ள வடுகர் கன்றின் தோலாலாய குடம்பையினையும் - தோற்கூட்டி னையும் - சினமிக்க நாயினையும் உடையவர் (அகம். 381:6,7).

3. வீடு. தலைவன பிரிந்தமையால் தாழைப் புதரி னாலே கட்டப்பட்ட குடம்பையில் - வீட்டில் - இருத்தலைப் பொறாது சோலை சென்று மலர் முடித்தலால் வண்டுகள் மொய்க்கும் கரிய கூந்த லையுடைய தலைவி வருந்தி அழகழிந்தாள் (நற். 270:1-4).

குடமலை - மேற்குமலை. புகாரின் துறைமுகத்தில் நிலத்தின் முதுகு நெளியும்படி திரண்ட பொருள் களுள் குடமலையில் - மேற்குமலையில் - (பொதியி லில) பிறந்த சந்தனமும் அகிலும் இடம்பெறும் (பட். 188). குடமலைப் பிறந்த காவிரி கடலில் மிக்குச் செல்லும் புகார்த்துறை முகத்தையொப்ப நன்னனின் அரண்மனைத் தலைவாசல் பொருள்கள் நிறைந்து விளங்கியது (மலை. 527-529). கீழ்க் கடலில் தோன்றி ஒளிபரப்பிப் பகற்பொழுதை உண்டாக்கிய ஞாயிறு குடமலை மறையத் துனபம் செய்யும் மாலைக்காலம் வந்தது (நற். 215: 1-3). சாய்ந்து விழுகின்ற ஞாயிறு குடமலை மறையும் மாலைப்பொழுதில கட்குடித்து மகிழ்ந்த பரதவர் தாம் வருந்தாது பெற்ற பெரிய மீனை எளிதாக விற்றுச் சென்றனர் (நற். 239:1-3).

குடர் - குடல். பசியால் தின்னப்பட்டு உலர்ந்த வியர்வை மிக்க யாக்கை யுடைய இரவலரின் சோறுண்ணாமையால் வாடிய பலவரியையும் உடைய குடர் குளிப்பத் தாளிப்புச் சேர்ந்த கொழுந்துவையுடன கூடிய நெய்யுடை அடி சிலைக் குமணன் அவர்க்கு அளித்தான (புறம். 160: 4 - 7). சங்கிலியாகிய தளைபூண்டு செல்லும் யானைபோலக் கொலையுண்டு வீழ்ந்த மறவரின் குடர் தன் காலைத் தளைக்கவும் கன்றைக் காதலிக் கும் கறவைப் பசுபோல வீரன், முன்னணிப்

போரில் உள்ள தன் தோழன்பால் வருவானாயி னான் (புறம். 275:7-9). போர்க்களத்தில் துணி பட்டுக் கிடந்த கையொன்றை எடுத்து மேலே உயர்த்தித் தன் கால்களைச் சுற்றிக் கொள்ளும் வரிபொருந்திய குடரை ஒருங்கு சேர்த்துப் பேய் மகள் தன் அழுகுரலை எடுத்துப் பாடிக் கூத்தாடு வாள் (புறம். 370:23-25). பேய்மகள் தன் பற்களால் கடித்தீர்த்து வெள்ளிய கொழுப்பைத் தின்று சுவை காண்பவளாய்க் குடர்களைத் தன் தலை யில் மாலையாகச் சூடிக்கொண்டு, பிணங்களாகிய உணவளித்த வேந்தன் நெடுஞ்செழியனை வாழ்த் திக் குரவைக் கூத்தாடினாள் (புறம். 371: 22-27). ஆவண மாக்கள் குடத்தின் மேலிட்ட இலச் சினையை ஆய்ந்து நீக்கி அதனுள் இருக்கும் ஓலையை வெளியே ஈர்தெடுத்தல் போலச செஞ் செவி எருவை போர் செய்து மாய்ந்த மறவரின் குடரைப் பற்றியிழுக்கும் (அகம். 77:7-11). தூது செல்லும் பார்ப்பான் கையகத்துள்ள ஓலையைப் பொனனென்று கருதிக் கடுங்கண் மழவர் அவனை வீழ்த்திப் பொருளின்மையால் விடுத்துச் செல்ல, நீள ஒழுகிய குருதியுடன் தொங்கிக் கிடந்த அவனது குடரைக கடித்துத் தின்ற ஆண்நரி கள்ளி நிழற்கண் தங்கியது (அகம். 337: 10-17). காரி விடரியங்கண்ணிப் பொதுவனைக் குடர்சொரி யக் குத்திக் குலைத்தது (கலி. 101: 21-23). கார் பொதுவனைக் குடல்சொரியக் குத்திக் கொன்ற தோற்றம், ஊழி முடிவில் பசுங்கட் கடவுள் (உருத் திரன்) கூற்றுவன் நெஞ்சைப் பிளந்து அவன் குடரைக் கூளிக்கிட்ட தோற்றம் போலும் (கலி. 101:21-26). கணிச்சியோன் (சிவன்) சூடிய பிறை யிடத்துக் கிடக்கின்ற சிவந்த மலைபோலப் பகை ஏறுகளை விரும்பிப் போக்கும் ஏற்றினங்களின் குருதி தோய்நத கொம்புகளில் குடர் சுற்றிக் கிடந்தன (கலி. 103: 25-27). ‘கொம்புகளோடே சுற்றித் தன் குடரைப் பிணித்த ஏற்றின் முன்னே சென்று ஆடி அக்குடரை இரண்டு கையாலும் வாங்கி வயிற்றிலே இடுகின்றவனின் பெருமையைப் பாராய்’ என்று தோழி தலைவிக்குக் காட்டினாள் (கலி.103:28,29). பலரும் எழுந்து அதிர்ந்து கெட்டுச் சேர நீங்குமாறு எலும்பு முறிந்து குடர்களற்றுக் கவிழும்படி குத்திய வெகுளியுடைய ஏறு தன் வலியழியத் தழுவியவனை அலைத்துத் துகைக்கும் (கலி. 104:39-42). ஏறுகள் கொம்பினால் தோண்டிக் குடர்களைப் பருந்துகள் எடுத்துச் செல்லுங்கால் அவற்றின் வாயிலிருந்து தப்பி ஆலமரத்தின மீதும் கடப்ப மரத்தின் மீதும் வீழ்நது அவை அம்மரங்களில் உறையும் தெய்வங்கட் கிட்ட மாலைபோல் கிளைகள் தோறும் தொங்கின (கலி. 106:26-29).

**குடவர்** - 1. குடநாட்டவர் (சேரர்). கரிகாற் பெருவளத் தான் குடவர் - குடநாட்டவர் - மன எழுச்சி குன்றப் பொருது வெற்றி கண்டான் (பட்.276).

2. இடையர். குடவர் - இடையர் - தம் தாயர் தீட் டிய வரகரிசியைப் புழுக்கிய அவிழாகிய சோற்றை மதர்த்த நல்லாவின பாலுடன் ஆறுசெல் வம்ப லர்க்குப் பசிதீர அளிப்பர் (அகம். 393:3,16,17).

**குடவர்கோ** - குடநாட்டாரின் அரசன். இடியென முழங் கும் முரசும் வரையாத ஈகைக் குணமும் உடைய வன் குடவர் கோவாகிய யானைக்கட் சேய் மாந் தரஞ் சேரல் இரும்பொறை (புறம். 17: 39, 40). குடவர் கோவாகிய ஆடு கோட்பாட்டுச் சேரலா தன் மழவர்க்கு மெய்புகு கவசம் போன்றவன் (பதி. 55:8, 9).

**குடவர்கோமான்** - குடநாட்டாரின் அரசன். வடவரும் அஞ்சும் போர்த்திறனுடைய குடவர் கோமானா கிய நெடுஞ்சேரலாதனுக்கும் மணக்கிள்ளிககும் பிறந்தவன் கடல பிறககோட்டிய செங்குட்டுவன (பதி. ப. 5:1-3).

**குடவர்கோமான் நெடுஞ்சேரலாதன்** - சேரவேந்தன். வட நாட்டு வேந்தர் கண்டு அஞ்சும்படியான வான ளாவிய வெற்றிக் கொடியினையுடைய குடவர் கோமான் நெடுஞ்சேரலாதனுககுப் பெருநதேவி யான சோழன மணககிளளி ஈனற மகன கடல் பிறக்கோட்டிய செங்குட்டுவன் (பதி. ப. 5: 1-3,22). இமையவரம்பன், இமையவரம்பன் நெடுஞ்சேர லாதன், குடக்கோ நெடுஞ்சேரலாதன, சேரமான குடக்கோ நெடுஞ்சேரலாதன். சேரலாதன காண்க.

**குடவரை** – 1. மேற்குப்புறம். வெல்லும் போரினை யுடைய சேரனது கொல்லிமலையின் குடவரை - மேற்குப்புறம் - உள்ள மூங்கிலின் நேரிய பகுதியை ஒத்த வளைந்த முன்கையுடன கூடிய பருத்த தோளையுடையவள் தலைவி (அகம். 213: 15, 16). சேரனுக்குரிய அச்சந்தரும் கொலலி மலையிலுள்ள கருங்கட்டெய்வம் அம்மலையின குடவரை எழுதிய பாவையை ஒத்த மெல்லிய இயல்பினள் தலைவி (குறு. 89:4-7). வல்வில் ஓரியது கொல்லி மலையின் குடவரையுள்ள பாவை போன்ற மடப்பம் வரப் பெற்றவள் தலைவி எனத் தலைவன் பாங்கனுக் குரைத்தான் (குறு. 100:5-7). பயன்மிக்க பலாமரங் களையுடைய கொல்லிமலையின் குடவரையில் முன்பு தெய்வத்தாலே செய்து வைக்கப்பட்ட புது வதான நடை கொண்டியங்குகின்ற பாவை விரிந்த

ஞாயிற்றின் இளவெயிலிலே தோன்றி நின்றா லொத்த அழகிய நலமுடையவள் தலைவி (நற். 192: 8-11). பலா மரங்கள் நிறைந்த, தெய்வத்தாலே காக்கப்பட்டு வருகின்ற கொல்லிமலையின் குட வரையில் காற்று, மழை, இடி, இன்ன பிறவற்றால் ஊறுபாடுகள் தோன்றினாலும் இவ்வுலகமே அழிகைத் தொடங்கினாலும் தனது நலவடிவங் கெடாத இயல்புடன் இருக்கும் பாவை போன்ற வள் தலைவி (நற். 201:5-12).

2. மேற்குமலை. 'குட்டுவனுக்குரிய குடவரையின் - மேற்கு மலையின் - சுனையிலுள்ள வண்டு மொய்க் கும் பெரிய குவளை மலரைச் சூடுதலால் மணங் கமழும் அழகிய சிலவாய கூந்தலை யுடையவள் தலைவி (நற். 105:7-10).

குடவாயில் - ஓர் ஊர். நீங்காத புதுவருவாயுடையதும் மிக்க பழைய நெல்லினையுடைய பல குடிப்பரப் பினை யுடையதும் யானை படியும் குளத்தினையும் நெருங்கிய காவற் காடுகளையும் உடையதுமாகிய குளிர்ந்த குடவாயில் அன்ன சிறப்பினள் தலைவி (அகம். 44:15-18). கீரத்தனார் இவ்வூரினர் [தொகைப் பாடல்களின் அடிக்குறிப்புக்கள் பலவும் 'குடவாயில்' மேற்குப்புற வாயிலை உணர்த்த அகநானூறுப் பாடல் 44 மட்டுமே இதனை நகரம் எனக் குறிக்கின்றது; குடவாயில் கும்பகோணத்தின் அருகில் இருப்பதால் 'குடந்தை வாயில்' என்பது 'குடவாயில்' என மாறியது என்றும் கொள்ளலாம் ப. மு. பக். 284].

குடவாயிற்கோட்டம் - சிறைச்சாலை. சோழன் செங்க ணான் சேரமான் கணைக்காலிரும்பொறையொடு திருப்போர்ப்புறத்துப் பொருது வென்று அவனைக் குடவாயிற் கோட்டத்துச் சிறைப்படுத்தினான் (புறம். 74. அடிக்குறிப்பு).

குடவாயிற் கீரத்தனார் - புலவர். குடவாயில் என்ற ஊரி னராகிய கீரத்தனார் என்று இவர்தம் பெயர் விளக்கம் பெறும். ஊர்ப் பெயரின்றிக் கீரத்தனார் என்றும் இவர் குறிக்கப் பெற்றுள்ளார் (நற். 42). குடவாயில் என்பது குடந்தைவாயில் என்பதன் மரூஉவாகும். 'தண்குடவாயில்' (அகம். 44:18) என வும், 'தோலா நல்லிசைச் சோழர் குடந்தை வாயில்' (நற். 379.7) எனவும் இப்புலவர் தம்மூரின் இரு பெயர்களையும் பாடல்களில் சுட்டியுள்ளார். இவர் பாடியனவாகப் பதினெட்டுப் பாடல் களை (புறம். 242; அகம். 44, 60, 79, 119, 129, 287, 315, 345, 366, 385; குறு. 79, 281, 369; நற். 27, 42, 212, 379) வையாபுரிப் பிள்ளையின் சங்க இலக்கியப் பதிப்பு அடக்கிக் காட்டுகின்றது. அவற் றுள், புறம். 242-ஆம் பாடலின்கீழ்க் குடவாயில் நல்லாதனார் என்று உ.வே.சா. பதிப்பிலும் அகம். 44-ஆம் பாடற்கீழ் உறையூர்ச் சல்லியங்குமரனார் என்று வேங்கட விளக்கு உரையிலும் குறு. 79-ஆம் பாடலின் கீழ்க் குடவாயிற் கீரனக்கன் என்று உ.வே.சா. பதிப்பிலும் வேறு பெயர்கள் பாட வேறுபாடுகளாகக் காணப்படுகின்றன வாயினும் இவர் பெயரையும் கொண்டுள்ள அப்பாடல்கள் சொல்லாலும் பொருளாலும் நடையாலும் இவரு டையனவே என்பதில் ஐயமில்லை. மற்று, வையா புரிப்பிள்ளையின் பதிப்பிலும் அகநானூறு வேங்கட விளக்கு உரையிலும் அம்மூவனார் பாடலாகவுள்ள அகம். 35-ஆம் பாடலின் கீழ்க் குடவாயிற் கீரத்த னார் பெயரைப் பாடமாகக் கொண்டு அம்மூவனார் பெயரைப் பாடபேதமாகப் பெருமழைப் புலவர் உரை காட்டுகின்றது. ப. மு. தமிழ் அட்டவணை யும் இதனை உடன்படுகின்றது. பாடலின் சொற் பொருள் நடைகளும் கீரத்தனாருடையனவாகவே காணப்படுகின்றன வாதலின் அப்பாடலையும் அடக்கிய பத்தொன்பது பாடல்களை இவருடைய னவாகக் கொள்ளலாம். 'ஒல்லையூர்கிழான் மகன் பெருஞ்சாத்தன் இறந்து விட்ட நிலையில் இளை யோர் சூடார்; வளையோர் கொய்யார்; பாணன் சூடான்; பாடினி அணியாள்; இதனை உணராமல் முல்லையும் பூத்தியோ ஒல்லையூர் நாட்டே' என்று வினவுவதாக அமைந்த இவரது புறப்பாட லின் (புறம். 242) அவல நயம் அறியத்தகும். இவர் ஐந்திணையிலும் அகப்பாடல்களைப் பாடியுள்ளா ராயினும் மூன்றில் இரு பங்கிற்கு மேல் பாலைத் திணையையே சிறப்பித்துள்ளார். மகட்போக்கிய தாயின் கூற்றில் மூன்று பாடல்களை (அகம். 35, 315, 385) நயம்படப் பாடியுள்ளார். 'என் பேதை மகள் அருஞ்சுரம் செல்லுதலைத் துணிந்து எனக் குப் பிறளாயினள்; ஆயினும் அவளை அறியாத் தேயத்திலே கொண்டு செல்லும் துணைவன் அவளி டத்தே ஆர்வ நெஞ்சமொடு அவளை அணிந் தணிந்து நுகர்ந்தவனாய்த் தன் மார்பே அவளுக் குத் துயிலுமிடமாக அவளைத் துயிற்றுக' என்று ஒரு தாயின பிரிவினை இவர் சிறப்புறப் புனைந் துள்ளமை (அகம். 35) காணலாம். இவர் பாடல் களில் அரசர் பலரைப் பற்றிய வரலாற்றுக் குறிப்புக்களும் பல்வேறு இடக் குறிப்புக்களும் காணப்படுகின்றன. சோழன் பெரும்பூட் சென் னியின் படைத் தலைவனான பழையன் என் பான் சேரமன்னனுக்குத் துணையான நன்னன், ஏற்றை, அத்தி, கங்கன், கட்டி, புன்றுறை என்ற படைத்தலைவர் அறுவரும் குழுமியிருந்த பாசறை யைப் படைகொண்டு தாக்கி அவருள் பெரும் பாலோரைக் கொன்று பின்னர்ப் பகைவரால்

விழுப்புண்பட்டு மாய்ந்தானாக, அது கண்டு பொறாதவனாய் அச்சோழன் போர்க்கெழுந்து போய்ச் சேரன் படைத்தலைவனான கணையனை அகப்படுத்திக்கொண்டு சேரனூரான கழுமலத்தை யும கைபபறறினன் என்னும் வரலாற்றினை ஒரு பாடலில் (அகம. 44). தந்துள்ளார். பெரும்பூட்சென னியின அழும்பில் (அகம. 44:14,15), 'திணடேர்ப் பொறையனின தொணடி (அகம். 60:7), பெரும் பெயர் வழுதியின் கூடல் (அகம். 315:7), பொலம் பூண் எவ்வியின் நீழல் (அகம. 366:12), 'கைவல் யானைக் கடுநதேர்ச் சோழர், காவிரிப் படப்பை உறநதை' (அகம. 385: 3,4), கடுங்குரற் பம்பைக் கதநாய் வடுகர், நெடும்பெருங்குன்றம்' (நற். 212: 5,6) என்று அரசர் பலரின் பெயர்களோடு அவர் தம் இடங்களையும் இவர் எடுத்துக கூறியுள்ளார். 'கீரததனார்' காண்க.

**குடவாயிற் கீரனக்கன் - புலவர்.** குடவாயிற் கீரத்த னார் காண்க.

**குடாரி - மழுப்படை.** உமையொடு கூடிய காம நுகர்ச்சி யால் உணடான கருவை இந்திரன் வேண்டிய வண் ணம் இறைவன் குடாரி - மழுப்படை - கொண்டு சேதித்தான் (பரி. 5:34,35). குழவிப் பருவத்திலேயே இந்திரனை முருகன் வென்றமையைப் பாராட்டித் தேவரும் பிறரும் அளிதத படைக்கருவிகளில் குடா ரியும் ஒன்றாகும (பரி. 5:66). பரங்குன்றத்திற்குச் செல்லும் மகளிர் செவ்வேளுக்கு உவந்தனவாக எடுத்துச் செல்லும் பல்வேறு பொருள்களுள் குடா ரியும் ஒன்றாகும் (பரி. 8:100).

**குடாவடி - வளைந்த அடி.** பழமுதிர் சோலைகளை யுடைய குன்றிலிருந்து அருவி இழிந்து வரும் ஒலி கேட்டுக் குடாவடி - வளைந்த அடி - உடைய கரடி அஞ்சிய பெருமலையிலுள்ள குகையை அடைநதது (முரு. 313-316). நன்னனின் அரண்மனை வாயிலில நிறைந்திருந்த பொருள்களில் கரடியின் குடாவடிக் குருளையும் ஒன்றாகும் (மலை. 501).

**குடி - 1. குடிமக்கள.** மன்னரது வெண்கொற்றக் குடை வெயிலை மறைத்தற்குக் கொண்டதன்று; வருத்தமுற்ற குடியின் - குடிமக்களின - துன்பந துடைததறகாகக் கொள்ளப்பட்டது என்று கிள்ளி வளவனுக்கு வெள்ளைக்குடி நாகனார் அறிவுறுத் தினார் (புறம். 35:19-21). கிளளிவளவனிடம் ஏரைப் பாதுகாப்பாருடைய குடும்பத்தை ஓம்பி அககாவ லாலே ஏனைய குடிகளையும் பாதுகாத்தால் நின் பகைவர் நினக்கடங்குவர் என வெள்ளைக்குடிநாக னார் கூறினார் (புறம். 35:32-34). தலையாலங் கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன், 'சிறு சொல சொல்லிய பகைவரை வெலலேனாயின, என்குடை நிழலில் வாழவார் தாம சென்றடையும் நிழலைக் காணாது எம்மிறைவன கொடியன என்று கண்ணீா வடிததுக் குடி பழிதூற்றும் கொடுங் கோலை உடையேன ஆகுக' என்று வஞ்சினங் கூறினான் (புறம. 72: 7 - 12). குடியை இறை வேண்டி இரக்கும் மிகுதியில்லாத ஆண்மை யுடைய சிறியோன் அரசுரிமையைப பெற்றால அது பொறுததற்கரிய சுமையாயச் சிறப்பில லாது தோன்றும் (புறம். 75:2-5). நிலத்தில் புதைக் கபபட்டு முற்றிய மதுவாகிய தேறல் சிறுமனையில குடியுள்ள இடநதோறும நுகரக் கொடுக்கபபட் டது (புறம். 120:12,13). சீறூரில் வாழும் குடிகளுள் ஒருவனாக இருந்த நெடுநதகை, தன மன்னன் துன் பமுறுங்காலத்தில் பகைவர் படை மேறசெலலாத வாறு தடுத்துக காக்கும அணையாய் நினறான் (புறம். 314:2 7). களஙகாய்க் கணணி நார்முடிச் சேரல் வறுமையால் தளர்ந்த குடிகளை முனபு போல் நிலை நிறுத்தினான (பதி.31:13). களங்காயக கண்ணி நார்முடிச்சேரல் நடுக்கமுறற தன குடியை மேம்படுத்திய வலம்படு வெனறியை உடையவன (பதி. 32:7,37:7; ப. 4:12). ஆடுகோட்பாட்டுச் சேர லாதன், குழந்தையைப் பாதுகாப்பாரைப் போலக் குடிகளைக் காப்பாற்றினான (பதி. ப. 6.9). செல்வக் கடுங்கோ வாழியாதன பகைவரோடு பொருது பிணம் உயரும்படி கொனறு பகைவருடைய கெட்ட குடிகளை மீண்டும் அவர் நாட்டிலேயே வாழச் செய தான (பதி. 69.9,10). கருங்காககை தாழநத தெங்கி னையுடைய குளிர்நத மரசசோலைகளிடத்தே நெற் கூடு இருககினற குடியிடததில் செஞ்சோறறை யுடையவாகிய பலியைப் பெறறு விழுஙகும் (பொரு. 182-184). உழவு, வணிகம் எனகிற இருகூற்றாலே சீரிய செலவத்தால புகழ் நிறைந்த குடிகள பொருந தின நான்கு நிலத்து வாழுநர் நெடுஞ்செழியனிடம பழமை கூறி நினறு ஏவல கேட்டனர் (மது. [illegible]-124). பாண்டியன நெடுஞசெழியன் தனனுடன நட்புக் கொணடவருடைய குடியை உயர்த்தினான் (மது. 131). நெடுஞசெழியனைப பகைதத பகைவர் நாட்டிலுள்ள ஊர்களிடத்தனவாகிய குடிகளெல் லாம் பசியால் துனபுறறு வேற்றுநாட்டிலுள்ள தம் சுற்றத்தாரைத் தமக்குக் காவலாகக கொண்டனர் (மது. 167,168). அழுமபில எனனும் ஊரையொத்த நாடுகளை இழந்தவரும் செல்வததினையுடைய பல ஊர்களிடததிலுள்ள குடிகளை இழந்தவருமாகிய செற்றம் கொணடு வந்த வேந்தனின மாறுபாட்டி னைப் போக்கி, அவர் முரசம் போர்க்கு இடையே

கிடக்க, 'அவர் புறமுதுகினைக் காணும் சிறப்புடையது செழியனின் கிடங்கு (மது. 345-351). 'அரிய பொருள்களைத் தந்து, நாட்டில் வாழும் குடிகளைப் பெருக்கி, நற்பொருள் நூலகளைக் கற்றுப் புகழை நிறுத்திக் கடல் நடுவண் ஞாயிறு போலவும் விண மீன் நடுவண் திங்கள் போலவும் சுற்றத்தாரோடு பொலிந்து இனிது விளங்குக' என மாங்குடி மருதனார் நெடுஞ்செழியனை வாழ்த்தினார் (மது. 766-770). மனங்கலங்குவதற்குக் காரணமான பகையை யறியாத வளமான பலவாகிய குடிகளை உடையது பாக்கம் (பட். 26,27). திருமாவளவன கோயில் களோடே பழைய குடிகளையும் முன்பு போல நிலை நிறுத்தினான் (பட். 286). நனனனின் மூதூர் ஊரி னின்றும் பெயர்தலை யறியாத பழைய குடிகள் நிறைநது திரிதறகு அகனறதாயினும் இடம் பெறாத பெரிய அஙகாடித் தெருக்களை உடையது (மலை. 479,480,487). இடிகளை இடிக்கும் மேகம் வெம்மை மிக்குப் பெய்யாது நீங்குதலான் எவ் விடத்துமுள்ள குடிகள தத்தம் பதிகளினின றும் பெயர்நது போயின (அகம. 77:4-6). கரிகாற் சோழன் கெட்ட குடிகளைத் தாங்கிய பெரும் புகழை யுடையவன (அகம். 141:22). பெருவில்லை யுடைய மறவர் பன்முறை புகுந்து பாற்பசுக் கூட் டங்களைக் கவர்ந்தமையான வளமுற்ற குடிகள் பெயர்ந்து போய் மன்றம் பாழ்பட்டது (அகம். 377: 4-6). வருத்தமுற்றுக் குடிகள் கூவும்படி கொலைத் தொழிலுககு அஞ்சாத அமைச்சரால‌ே நெறி யன்றிப் பொருளை வாங்கிக் கொண்டு செங்கோல் வளைந்த மனனனுடைய குடைநிழலில் தங்கிய உலகம் போல ஞாயிற்று வெமமையால உலறின மரங்களை உடையது காடு (கலி. 10:4-7). நாடாளும் முறைமை தளர்ந்த மன்னன் கீழிருநத குடிகளைப் போலக் கலங்கித் தலைவியின் கண்கள் பொறுத்த லாற்றாமல் நீரைச் சிந்தின (கலி. 34:14,15). தாமரை மலரை ஆரவாரிததுச் சூழும் வண் டினம், பெருகி வநத நீர் சாய்த்ததனால் அம் மலரின இருததலை வெறுத்து, நல்ல நாட்டைப் பகைவர் வந்து சூழ்ந்தனர் என்று அங்கு இருத்த லைக் கைவிட்டுக காககினற வேறு மன்னனுடைய ஊர்களை இருப்பாகக் கொளள நினைக்கும் குடி களைப் போல வேறொரு பொய்கையைத் தனக்கு இருப்பிடமாக நினைத்து அலமரும் பொழுதில் மனனன் வந்த பகையின வலியைக் கெடுததிட அக் குடிகள் மீண்டும் பதியிடததே மீணடாற் போலப் பெரும்புனல் நீங்கியதால் அவ்வண்டினம் மீணடும் அததாமரை மலரைச சென்றூதியது (கலி. 78:1-10).

2. மனை. மரையாவால் பிரித்துண்ணப்பட்ட நெல்லியாகிய வேலியை யுடைய அதன் விதையாகிய பரல் பரந்த முற்றத்தினைக் கொண்ட அழகிய குடியை - மனையை – உடையது சீறூர் (புறம். 170: 1,2). களிறு பொரக் கலங்கிச் சேறாகும் உண்ணும் நீர் அரிதாகிய நீர்நிலையைக் கொண்ட முள்ளை யுடைய கழற் கொடியாலாகிய வேலி சூழ்ந்த குடி களையுடையது சீறூர் (புறம். 306:1,2). சிற்றூர் புன்செய்கள் சூழ்நதுள்ள அழகிய குடிகளை உடையது (புறம். 324:8). வேட்டுவரது குடி (புறம். 333:14). பொருநன் பனைமடல் நாரையும் பனங்குருத்தை யும கிணையோடு சேர்ததுக் கட்டி ஏரால் உழு துண்டு வாழ்வோரது குடியினகண் சென்று அவர் நல்கும் உணவை இரந்துண்ணும் வருத்தம் பொருந் திய வாழ்வையுடையவன (புறம். 375:4-7). கிணைப் பொருநன் துன்ப வாழ்க்கையில் மனைவியுடனே மதிநுட்பம் கெடுதலான் குடிதோறும் முறையே சென்று பாடி ஈவோரின்மையின் வருநதினான் (புறம். 393:1-3). குலை கொண்ட தெங்கினையும் குலையினையுடைய வாழையினையும் கொழுங் காந்தளினையும் மலர்ந்த சுரபுன்னையினையும் துடியோசை போன்ற ஒலியினைச் செய்யும் பேராந் தையினையும் உடைய குடியினை உடையது பாக் கம் (பொரு. 208-210). இடையர் குடியில் தங்குவீரா யின் தினையரிசிச் சோற்றைப் பாலுடன் பெறுகு விர் எனறு பாணர் ஆற்றுப்படுத்தப் பட்டனர் (பெரு. 166-168). மாரிக்காலத்தில் வானத்தில் பரந்த மேகத்தை யொப்ப வரகு வைக்கோலால வேய்ந்த அழகிய குடியினை யுடையது சீறூர் (பெரு.190,191). உழவர் குடி நிறைந்த உணவினை யுடையவர் (பெரு. 197).பாணா வலைஞரது குடியிலே தங்குவாராயின கொழியலரிசியால் களியாகத துழாவி அட்ட கூழை நறுங்கள்ளுடனும் மீன் சூட்டுடனும் பெறுவர் (பெரு. 274-282). கொற்கையில பணடங்களை விற்றலும கொள்ளலும் நிகழ்தலின் அங்குள்ள பாக்கம் நெருங்கின பல குடிகளையுடையது (மது. 137,138). குடிநெடிய தூண்டில்ல் காம்புகள் சார்த்தி வைதத குறிய இறப்பினை உடையது (பட்.80,81). சுரத்திலே பொருநதிய சீறூர் அழகிய குடிகளையுடையது (அகம். 9:10). குடவாயில் மிக்க பழைய நெலலினையுடைய பல்குடிப் பரப்பினை யுடையது (அகம். 44:16,18). தலைவன் மலையைச் சார்ந்திருந்த சில குடிகளை யுடைய பாக்கத்தே இரவில் விருநது அயரத் தங்கினான் (அகம. 187:12,13). இருப்பையின் குவி யிணர் முத்துப் போலச் செநநிலத் துதிர்ந்து கிடக்க, மழைபெய்ய மறந்த இடமாகிய அழகிய குடிகளை உடையது சீறூர் (அகம். 225:11-13). சீறூர் அழகிய குடிகளை உடையது (அகம். 287:5;

321:10; 367:5; குறு. 41:3;79:5; நற். 343:2). தலை கூம்பிய குடிசைகளாகிய அழகிய குடிகளை உடையது சீறூர் (அகம். 329:4). நம் காதலர் நிலத்தைத் தோண்டி உள்ளே புகார்; வானத்தின்கண் ஏறார்; கடல்மீது காலினால் ஏறிச் செல்லார்; நாடுகள் தோறும் ஊர்கள் தோறும் குடிமுறை குடிமுறை யாகத் தேடின் அகப்படாது தப்புவாரும் உளரோ எனத் தோழி தலைவியிடம் கூறினாள் (குறு. 130). தினைப்புனத்துள் களிறு புகுந்ததைக் கண்ட அழகிய குடியில் உள்ள குறவர், கணையும் கிணைப் பறையும் கவணும் உடையராய்க் கூவிப் பேரிரைச் சலிட்டுக் குடியின் புறமெல்லாம் சென்று ஆரவாரித் தனர் (நற். 108:1-5). பனையினது கரிய அடிமரம் புதைபடுமாறு மூடப்பட்ட மணல் மிக்க முற்றத் திலிருந்து அளவிடப்படாத உணவுப் பொருளை விருந்தினர்க்குப் பகுத்துக் கொடுக்கும் குடும்ப வாழ்க்கையினையுடையாரது அழகிய குடிகளைக் கொண்டது சீறூர் (நற். 135:1-4). நள்ளிரவில் முரிந்து விழுகின்ற அலையின் ஒலியைக் கேட்டுத் துயிலும் சிலவாகிய குடிகளை யுடையது கடற் கரைப் பாக்கம் (நற். 159:9-11). வேலியை யுடைய அழகிய குடிகள் அழிந்த சிற்றூரில் மன்றம் ஆளற் றிருந்தது (நற். 346:4,5). 'வழிச் செல்லும் புதியவர் பரல் நிரம்பிய சென்று தேர்தற்கியலாத நெறியில் உயர்ந்து தோன்றும் சிறுகுடி பெருங்குறும்பிடத்தே யுள்ள ஆட்டிடையருடைய குடிதோறு முள்ள மகளிரை விரும்பி நின்றாய்; இடுதேள் மருந்தோ நின் காம வேட்கை' எனத் தலைவி தலைவனை வினவினாள் (கலி. 110:1-3).

**3. குலம்.** நின்னோடு பழையதாய் முதிர்ந்த உயிரி னும், உயிரோடு நின்று மூத்த உடம்பு போன்ற நின் வெற்றிக் குடியோடு - குலத்தோடு - மூத்த சீரிய குலத்தில் தோன்றியமறவர் நினது முயற்சியை வாழ்த்த, மதுவை யுண்டு மகிழ்ச்சி மிக்கு ஒழுகு வாயாக என்று மாங்குடி கிழார் நெடுஞ்செழியனை வாழ்த்துவர் (புறம். 24:26-33). தம்மைத் தப்பிய வரைப் பொறுக்கும் தலைமை சோழர்குடியில் பிறந் தோர்க்கு எளிமை யுடைத்து எனத் தாமப்பல் கண்ணனார் சோழன் மாவளத்தானிடம் கூறினார் (புறம். 43:18,19). 'நும்முள் ஒருவர் தோற்பினும் தோற்பது நும் குடியே; இருவரும் வெல்லுதல் இயல்பன்று; நுமது செய்கை நும் குடிக்குத் தக்க தன்று' எனக் கோவூர் கிழார் நலங்கிள்ளியும் நெடுங்கிள்ளியும் போருடற்றியவழி, சந்து செய் வான் வேண்டி நெடுங்கிள்ளியிடம் கூறினார் (புறம். 45:5-9). பாண்டியன் வெள்ளியம்பலத்துத் துஞ்சிய பெருவழுதி, அடிமாய்ந்த ஆலமரத்தின் நெடுங் கிளையை விழுது தாங்கினாற் போலத் தனக்கு முன்னுள்ளோர் இறந்துபட, தான் தளராது, நல்ல புகழை யுடைய தன் முதுகுடியை நடுக்கமற அணைத்துக் காத்தான் (புறம். 58:1-5). 'பகைவரைப் புறங்காணேனாயின், பல வுயிரையும் பாதுகாக்கும் நீள் குடியில் சிறந்த, தென்புலத்தைக் காக்கும் காவலினின்று நீங்கிப் பிறருடைய வன்புலத்தைக் காக்கும் காவற்கண்ணே மாறிப் பிறப்பேனாக' என்று ஒல்லையூர் தந்த பூதபாண்டியன் வஞ்சினங் கூறினான் (புறம். 71:19). 'மூவேந்தருள் ஒருவனுக்கு வலியாக வேண்டுமென்று அம்மூவரிடத்தினின்றும் வந்தோர் தனித்தனியாகப் புகழ்ந்து நினக்குத் தரும் பொருள் நுமது குடியை வாழ்த்தினராய் வரும் பரிசிலர்க் குரியதாகும்' என்று காரியின் கை வண்மையைக் கபிலர் பாராட்டுகிறார் (புறம். 164: 12, 13). 'இவர் கைவண் பாரி மகளிர்; எவ்வியினு டைய பழைய குடியிலே படுவாராக' என்று உன் னிடம் கூறிய என் தேற்றாப் புன் சொல்லைப் பொறுப்பாயாக என்று கபிலர் இருங்கோவேளிடம் கூறினார் (புறம். 202: 14-16). துடியன், பாணன், பறையன், கடம்பன் என்ற இந்நான்கல்லது வேறு குடிகள் இல்லை (புறம். 335:7,8). தலைவி நெற் போர்களை அழித்துக் கடாவிடப்பட்ட இடத்தில் குவிந்த நெல்லை வலிய வில் வீரர்களுக்கு நாளுண வாக நல்குவதில் மாறுதல் இல்லாத, தொன்மை யான குடியில் தோன்றிய மன்னனின் மகள் ஆவாள் (புறம். 353: 8-11). பொறையாற்று கிழான் பண்புடைய முதுகுடியிற் றோன்றியவன் (புறம்.391: 9). இமையவரம்பன் நெடுஞ்சேரலாதன் நிலத்தே விளையும் எண்வகைக் கூலங்களை விற்கும் வணி கர் குடியைப் பேணிக் காத்தான் (பதி.13:23). கடல் பிறக்கோட்டிய செங்குட்டுவன் அமையாத போ[illegible] யுடைய சோழரது குடியில் அரசுக்கு உரியோ[illegible] ஒன்பது பேரைப் போரில் வீழ்த்தினான் (பதி. [illegible] 18,19). மறவர் தாம் பிறந்த கெடாத நல்ல புகழை யுடைய குடியின் பெருமையை நிலை நிறுத்தும் பொருட்டுப் போர்ப் பாசறைக்கண்ணே சுழன்று திரிவர் (பதி. 81:13,14). இருபிறப்பாளராகிய அந்த ணர் தாயும் தந்தையுமாகிய இருவர் குலத்தையும் உலகத்தார் நன்றென்று மதித்த, பலவாய் வேறு பட்ட பழைய குடியிற் பிறந்தவர் (முரு. 178, 182). தமது வலியாற் கொள்ளை கொண்டுண்ணும் உணவினை யுடைய புலிபோன்ற வீரன் வாட் டொழில் செய்யும் குடியிற் பிறந்தவன் (பெரு. 137, 138). குடி ஒத்தல் உடைமையையும் குணத்தையும் துணையையும் ஒப்பிட்டுப் பார்த்துப் பின் பலரு டன் உசாவாது தமியோமாய் யாங்களே

துணிந்த அருவினையை (களவு மணத்தை) நிகழ்ந்த வண்ணம் கூறுவேன்; சினவா திருப்பாயாக' எனத் தோழி செவிலியிடம் கூறி அறத்தொடு நின்றாள (குறி. 30-34). தலைவி தெய்வக் கற்புடன குடிக்கு விளக்கம் ஆகிய புதல்வனைப் பெற்ற புகழ மிக்க சிறப்பினையுடையவள் (அகம். 184:1-3). தலைவன் அரிய பலவாய பழைய குடிகளைக் கொண்ட கடற்கரையை உடையவன் (அகம். 290.8). தலைவன உயர்ந்த குடியினன் (அகம.352:8). தலைவி, சுற்றத்தார் சூழ ஓம்புகின்ற சிறந்த சூல் உடையளாய மகவு ஈன்று தலைவன குடிக்கு உதவினாள் (நற். 370:1,2). தன் நாட்டைக் கடல வெளவலின் தன நாடு இடமுண்டாகும்படி பகை வரை வென்று அவர் புலிப்பொறியையும் விற் பொறியையும் போக்கிக் கயலை அவ்விடத்தே பொறித்த தென்னவனின் தொனமையான புகழை நிலைநிறுத்திய குடியோடு ஒக்கத் தோன் றியவர் பசுவினத்தாயர் (கலி. 104:1-6). 'அரசுகள் படக்கொனறு, நெறியிலே கொணடு வந்த சீர்மிகு சிறப்பினை யுடையவனுடைய பழைய குடிக்கு உரிததெனறு கூறிய, தென்னாடு பயநத விளைவு களும் கடல் பயந்த பொருள்களும் முரசுகெழு முதுகுடியிற் பிறந்த செல்வனுக்குத் தீதின்றிப பொலிக' வென்று அவன் கேடிலலாத குடியின் பின்பு தோன்றிய பெருங்குடியிற் பிறந்த ஆயர் தெயவத்திற்குச் சிறப்புக்களைச் செய்தனர் (கலி. 105:1-7).

4. குடும்பம். ஒரு குடியில - குடும்பத்தில் - பிறந்த பலருள்ளும் மூத்தோன வழியிற் செலலாது அவருள் அறிவுடையோன் சென்ற நெறியே மன்னனும் செல்வான் (புறம். 183:5-7). வாழ்தற் கேதுவாகிய வயலிடத்து விளையும் வருவாயை யறியானாய்த் தளர்ந்த குடியை யுடைய உழவன் விதையை உண் டாற் போல, எழினியின் பெறுதற்கரிய உயிரை உண்டிலையாயின பகைவரது பல உயிரையும் பருகி நிறைகுவை என அரிசில் கிழார் கூறறத்தை விளித் துப் பாடுவர் (புறம். 230:11-16). சீறூர் இல்லங் களில அடப்படும் கள்ளினை உடைய சிலவாகிய குடிகளை உடையது (புறம். 329:31). ஆடுகோட் பாட்டுச் சேரலாதன் இரத்தலை யுடைய பரிசில ரது சிறுகுடிகள் வளர்சசியடையும்படி செய்தான் (பதி. 59: 7). செழுங்குடியிற் பிறந்த செல்வர் ஆர வாரத்தையுடைய மகிழச்சியினராய்த் தம்பால் வநது இரப்போர்க்கு வேண்டுமவற்றைக் கொடுப் பா (பதி. 81: 22,23). சிறிய குடிகளாய்ப் பெரிய தொழில்களைச் செய்வாருடைய ஆரவாரம் முது வெள்ளிலை என்னும் ஊரில் எழுந்தது (மது. 113-122). வளமான குடியில தோன்றிய பிற செல்வரும் அவரால் தோன்றிய பிற செல்வரும் பொருந்தி வாழ்வதற் கிடனாகியது அணங்குடை நல்லில (மது. 577,578). அகன்ற ஊரிடத்துக் கழி களால் மிடைந்து செய்த புல்லால் வேய்ந்த குடில்கள் இருக்கும் குடிதோறும் நெல்லரிசி விரவி அவரை விதையினாற் சமைத்த புளிங்கூழ் பெறுகுவீர் எனக் கூத்தர் ஆற்றுப்படுத்தப் பெற்றனர் (மலை. 436-439). தலைவி தன் கொழுநனின் குடி வறுமையுற்ற தென்று, தன் தந்தையின செல்வமிக்க உண வினையும் நினையாளாகி ஒரு பொழுதின்றி யொரு பொழுதுண்ணும் வன்மையுடைய ளானாள் (நற். 110:10-13). பனையின் அடிமரம் புதைபடுமாறு மூடப்பட்ட மணல் மிக்க முற்றத்திலிருந்து அளவி டப்படாத உணவுப் பொருள் விருந்தினர்க்குப் பகுத்துக் கொடுக்கும் தண்ணிய குடியை யுடை யாரது இல்லங்களையுடையது சீறூர் (நற். 135:1-4). தினையைத் தின்றழித்த பன்றியேற்றைக் கானவன் வில்லாற்கொனறு கொணர்ந்து கொடுப்ப அவன் மனைவி அப்பன்றியை அறுத்துத் தன் சுற்றமாகிய குடிகளுக்குப் பகுத்துக் கொடுத்தாள் (நற். 336:1-6). என்னுடைய குடியின் பகுதியைச் சாராத விடத்தி னின்றும் (தலைவனிடத்தினின்றும்) வந்த பாராட்டி னைக் கேட்டு மகிழ்ந்தவனே; என் பங்காகிய பாலைப் பருகுவாயாக என ஊடல் கொண்ட தலைவி தன மகனை நோக்கிக் கூறினாள் (கலி. 85: 32,33). தன் சுற்றத்தாரது நெஞ்சு வருந்தும்படி தன்னோடே கெழுமுதலுற்ற செல்வத்தை மேன் மேலும் வளர்க்கும் முயற்சியில்லாதவனுடைய குடி நாடோறும் தேயும் (கலி. 149:8,9).

5. ஊர். கானவன தான் வில்லால் கொன்ற முள் ளம் பன்றியைக் கைக்கொணடு வெனறி உவகை யனாய் நாய்கள் புடைசூழத் தான் இருக்கும் குடி சைகளையுடைய குடியிடதுச் சென்றான் (நற.285: 3-7).

**குடிக்கடன்** - குடிமக்கட்காற்றும் கடமை. வெற்றி நீங் காத திணிதோளையுடைய சோழன் இளம் பெருஞ் சென்னி தனது குடிக்கடன் - குடிமககட் காற்றும் கடமை - ஆகலின் போர் வினையை மேறகொண்டு முடித்தான் (அகம். 375:9-12).

**குடிகள்** - குடிமக்கள். திருமாலின் உந்தித் தாமரைப் பூப் போனற மதுரை நகரின் தண் தமிழ்க் குடிகள்- குடிமக்கள் - அம்மலரின தாதுக்கள் போல்வர் (பரி. தி. 7:1-5).

**குடிஞை - பேராந்தை.** இழி பிறப்பாளன் தன்கை சிவப்பக் கொட்டும் வலிய கண்ணையுடைய துடி புலிகிடக்கும் மலையின்கண் குடிஞையோடு-பேராந்தையோடு - கூடி ஒலிக்கும் (புறம். 170:5-7). சுரத்தின்கண் வாழும் குடிஞையின் துடியோசை போலும் கடிய குரலோசை உழுஞ்சில் மரக் கவட்டிலிருந்த பெடைப் பருந்தை யழைக்கும் சேவற் பருந்தின் குரலோடு சேர்ந்தொலிக்கும் (புறம். 370: 6-8). மருவூர்ப்பாக்கம் குலைத்தெங்கையும் குலை வாழையையும் கொழுவிய காந்தளையும் மலர்ந்த சுரபுன்னையையும் உடையது (பொரு. 208-210). நெடிய மலைப்பக்கத்தில் ஆகுளியின் (சிறு பறையின்) ஒலி போன்று குடிஞை குழறும் (மலை. 140,141). மகளிர் மலைநெல் குற்றுதற்குப் பாடுகின்ற வள்ளைப்பாட்டு பக்கத்து மலையிடத்தனவாய குடிஞை ஒலியோடு இரட்டும் (அகம். 9:11-13). நெடும் பெருங்குன்றம் இழுகுபறையின் ஓசையைப் போல ஒலிக்கும் கடுங்குரல் குடிஞைகளை உடையது (அகம். 19:4,5). வெகுண்டெழும் குரலையுடைய குடிஞைச் சேவல் புற்கள் ஒழிந்த வெடிப்பிடங்கள் தனித்திடச் சென்று மலையிலுள்ள கற்கள் உருண்டு விழும்போது எழும் ஓசை போல மாறி ஒலிக்கும் (அகம். 89:3-5). சேய்மை இடத்திலிருந்து ஒலிக்கும் குடிஞையின் வருத்தம் தரும் குரல் மென்மையாக வந்து ஒலிக்குந் தோறும் வழிப் போவோர் கேட்டு வருந்துவர் (அகம். 283:6-8). கானத்தில் ஞெமை மரத்திருந்த குடிஞை பொன் செய் கொல்லன் வேலை செய்யும் போதெழும் ஒலிபோல இனிதாய் ஒலிக்கும் (நற். 394:1-3). எம் காதலி உறையும் நல்லூர், மயில்கள் ஆடக் குடிஞை இரட்டும்படியான துறுகற்கள் நிறைந்த மலைப்பக்கத்திலுள்ளது எனத் தலைவன் கூறினான் (ஐங். 291).

**குடிப்பாடு - குடிப்பிறந்தாரிடத்து வழி வழி வரும் நற்பண்பு.** பெருமை பெற்ற பழைய குடிப்பாடு - குடிப் பிறந்தாரிடத்து வழி வழி வரும் நற்பண்பு - பல வற்றையும் கர்த்து வரும் மறவருள்ளும் ஒரு மறவனைச் சுட்டிக் காட்டி அன்புடன் இவ்வீரனுக்குத் தனக்குத் தர ஏந்திய கள்ளைத் தருக என வேந்தன் கூறினான் (புறம். 289:4-7).

**குடிபுறங்காத்தல் - குடிமக்களைப் பாதுகாத்தல்.** குடி புறங்காத்து - குடிமக்களைப் பாதுகாத்து - பின்பு தன்னைப் பாதுகாக்கும் பாண்டியனுடைய படையை விட விடப் பகைவர் நீங்கினாற் போலப் பிரிந்தவர் வந்து தீண்டத் தீண்டத் தலைவியின் பசப்பு நீங்கிற்று (கலி. 130:19-21).

**குடிபுறந்தருநர் - வேளாளர்.** இமையவரம்பன் நெடுஞ் சேரலாதன் எண்வகைக் கூலங்களையும் விற்கும் வணிகர் குடியையும், குடிபுறந்தருநர் - (குடிமக்களைப் பாதுகாக்கும்) வேளாளர் - சுற்றத்தையும் ஓம்பினான் (பதி. 13:23,24).

**குடிமை - குடிச்சிறப்பு.** மகள் பேசும் பொருட்டு வந்த சான்றோரின் வழிநடை வருத்தத்தையும், நுமது வானளவு உயர்ந்த குடிமையையும் – குடிச்சிறப்பையும் - எண்ணிப் பார்த்து நம் மகளின் முலைக்கு விலையாகத் தலைவனது குன்றத்தை ஏற்றுக் கொண்டு இவளை அவனுக்குக் கொடுத்தால் பெரிதும் நன்று என நற்றாய் தன் தந்தைக்கும் தமையன்மாருக்கும் கூறி அறத்தொடு நின்றாள் (நற். 234:1-4). வரையாது வந்தொழுகும் தலைவனைக் கண்ட தோழி 'புன்னையின் கீழ் நின்னைப் புணர்ந்ததனால் தன்னழகு தோற்றவளைத் தொடி நெகிழும் தோளளாம்படி கைவிடுவது நின் குடிமைக்கண் தங்கும் பெருங் குற்ற மாகாதோ' எனக் கேட்டாள் (கலி. 135:6-8).

**குடில் - குடிசை.** கவிந்த குடில் - குடிசை - புதிய வைக் கோலால் வேயப் பெற்றிருந்தது (பெரு. 225).

**குடுமி - 1. உச்சிக்கொண்டை.** இருதிறத்து வாட்படைகளும் கலந்து போருடற்றும் போர்க்களத்தில் பிணத்தை உண்ணும் பொருட்டு வந்த குடுமி - உச்சிக்கொண்டை - உடைய கழுகையும் உடன் அலைத்துக் கொண்டு பள்ளம் நோக்கிப் பிணக் குவியல்கள் பலவற்றையும் சுமந்து கொண்டு குருதிச் செம்புனல் பெருக்கெடுத் தோடியது (பதி. 36:6-13). நெடுஞ்செழியன் படையெடுத்துச் சென்ற பகைவர் நாட்டில் பெரிய மாளிகைகளில் வெந்து வீழ்ந்த கரிந்த குதிரிடங்களில் குடுமியைக் கொண்ட கூகைக் சேவல் பெடையுடன் இருந்து [illegible] (மது. 169,170). தலைவன் இரவில் சீறூரில் [illegible] நெடுமரத்திலிருக்கும் குடுமி பொருந்திய [illegible] யுடைய சேவலின் முதற் குரல் எழுந்த [illegible] காலத்தில் புறப்பட்டுச் சென்றான் (அகம். 37:4-6). குடுமி பொருந்திய தலையுடைய நீண்ட கரிய மயில் பெரிய கொல்லையில் விளைந்த வரகின் தலைவைத்த கதிரையுண்டு தோகை பரப்பிக் குருந்த மரத்தில் தங்கி அகவும் (அகம். 194:9–15). குடுமியைக் கொண்ட கோட்டான் இடையறாது விட்டுவிட்டுக் கூவும் (அகம். 265:19). பரதவச் சிறுவர் கட்டிய நுண்கயிற்று வலையில் கொக்கின் சேவல் அகப்பட்டதாக, குடுமியுடைய அதன் பேடை இரை தின்னாது தன் குஞ்சைத் தழுவிக்கொண்டு பனை மரத்திலிருந்து அன்பு தோன்ற நரலும் (அகம்.

290:1-7). கிளைகளை ஒழித்த பூக்கள் நிறைந்த வேங்கை மரம் இளைய மயிலின் குடுமியைப் போலத் தோன்றும் (அகம். 368:5-7). 'காதலரைப் பிரிந்தோர்க்கு முல்லை மலரும் மாலைப் பொழுது மாத்திர மன்றிக் குடுமியைக் கொண்ட சேவற் கோழி கூவும் விடியற் பொழுதும் நண்பகற் பொழுதும் மாலைப் பொழுதே' எனத் தலைவி தோழியிடம் கூறினாள் (குறு. 234.2-6). வாகை மரத்தின் நறிய பூக்கள் கரிய மயிலின் குடுமியைப் போலத் தோன்றும் (குறு. 347:2,3). குன்றத்தின் பக்கத்துச் சோலையில் நீலமணி போன்ற புள்ளிகளையுடைய குடுமியையும் பீலியையு முடைய மயில் ஆடும் (நற். 357:4-6).

2. தலைமயிர். புல்லிய உளைமயிர் போலும் குடுமியை யுடைய என் புதல்வன் தன் தாயிடம் பாலில்லாத வறுமுலையைப் பலமுறையும் சுவைத்துப் பால் பெறானாய் வருந்தினான் எனப் பெருஞ்சித்திரனார் குமணனிடம் கூறினார் (புறம். 160:18,19). களம் சென்ற ஏனை மறவர்தம் குதிரைகளெல்லாம் வந்து சேர்ந்தன; ஆனால் எம் மனையிலுள்ள புல்லிய உளை போலும் குடுமியை உடைய புதல்வனைப் பெற்ற செல்வனாகிய என் கொழுநன் ஊர்ந்து சென்ற குதிரை வந்திலதே என அவனது மனையோள் கையற்றுக் கூறினாள் (புறம். 273:1-4). ஒரு மகனையன்றி வேறுமகன் இல்லாத மறக்குடி மகள் ஒருத்தி போர்க்கெழு மாறு வீரரை அழைக்கும் பகையரசரின் பறை ஒலி கேட்டு மறப்புகழில் விருப்புற்று அறிவு மயங்கித் தன் மகன் கையில் வேலைக் கொடுத்து வெள்ளாடையை விரித்துடுத்தி உலறிய குடுமியில் எண்ணெயைத் தடவிச் சீவிச் செருமுகம் நோக்கிச் செல்கென விடுத்தாள் (புறம். 279:7-11). புல்லிய தாடியை யுடைய வீரன் குதிரையின் உளைமயிர் போலும் குடுமியுடனே போர்க் களத்தில் கேடகம் கீழ்ப்பட அம்புபட்டு அதன் மேல் வீழ்ந்து கிடந்தான் (புறம். 310 : 6-8). பரத்தையிடமிருந்து வந்த தலைவனைக் கண்ட தோழி 'நின் காதலி புல்லிய உளை போலும் குடுமியை உடைய புதல்வனைப் பெற்று நீண்ட மனையில் நின்னைப் பிரிந்து தங்க என்ன கடப்பாடு உடையவள்' எனக் கேட்டாள் (அகம். 176:18-21). வருங்காலத்தை யறிந்து கூறும் முதுவாய் வேலன் ஆடை சுற்றிய குடுமியையும் சிறுபையைத் தொங்கவிட்ட வளைந்த கோலையும் கொண்டிருந்தான் (அகம். 195:12-14). தலைவன் ஊர்ந்து வருகின்ற தேரிற் பூட்டிய குதிரைகள் பார்ப்பன இளஞ்சிறாரைப் போல முனகுடுமி அமைந்த தலையை யுடையன (ஐங். 202).

3. முதுகுடுமிப்பெருவழுதி. காரிகிழார் பாண்டியன் பல்யாக சாலை முதுகுடுமிப் பெருவழுதியை நோக்கி, 'பெற்ற வெற்றி முழுவதையும் வியவாது நினமனத்தே அடக்கிய தணியாத வண்மையை உடைய தகை சிறந்த குடுமி - முதுகுடுமிப் பெருவழுதி - நீ தண்கதிர் மதியம் போலவும் ஒண்கதிர் ஞாயிறு போலவும் இந்நிலமிசை மன்னி வாழ்க' என வாழ்த்துகிறார் (புறம். 6:25-29). அறத்தாறு நுவலும் மேற்கோளும் யானைமீது எடுக்கப்பட்ட கொடிகள் விண்ணை நிழற்றும்படி செய்யும் மறத்திறனும் உடைய எங்கோ குடுமி பஃறுளியாற்று மணலினும் பலவாக வாழ்வானாக என நெட்டிமையார் பல்யாக சாலை முதுகுடுமிப் பெருவழுதியை வாழ்த்துகிறார் (புறம். 9:8-11). 'வெற்றியும் மாண்பும் உள்ள குடுமியே, நீ வேற்றரசரின் நிலத்தை அவர்க்கு இன்னாவாகக் கொண்டு பாணர் பொற்றாமரையைச் சூடவும் புலவர் யானையையும் தேரையும் பரிசாகப் பெறவும் நின் ஆர்வலரிடம் இனிய செய்வது அறனோ' எனப் பாண்டியன் பல்யாக சாலை முதுகுடுமிப் பெருவழுதியை நெட்டிமையார் வினவுகிறார் (புறம். 12).

4. நுனி. ஞாயிற்றின் கதிர்கள் காயும் பக்க மலைகளில் பகுத்து வைத்தாலொத்த குடுமி - நுனி - உடைய கூரிய கற்கள் தீட்டப்பட்டன போலத் தோற்றுவித்து வழிச் செல்வாரின் விரல் நுனியைச் சிதைக்கும் (அகம். 5:11-14). பறையின் கண் போன்ற புள்ளிகளை உடைய தோகையைக் கொண்ட மயில்கள் திரண்ட பசுங்காய்க்குடுமியில் பழுத்த பாகற்கனியைக் கோதித் தின்னும் (அகம். 15:3-5). எருதுகளைக் கொண்ட உழவர், ஏர்களைப் புகுவித்துக் குடுமி குவிந்த கட்டிகளையுடைய வயல்களில் அரிதாளைப் பிளந்து உழுதனர் (அகம். 41:4-6). பனைமரத்தின் குடுமியில் உள்ள வெண்மடலில் வைத்த வேம்பின் பூவைத் தலையிற் பொலியச் சூடித் தலைவன் மலைகள் நிறைந்த காட்டிடத்தே சென்றான் (குறு. 281:2-6).

5. சிகரம். 'பிறருடைய குன்றுகெழு நாடுகள் வளைந்த வரியை யுடைய புலி வடிவாகச் செய்யப்பட்ட இலாஞ்சனையை நீரில் வாழும் கயலுடன் பொறித்த குடுமி - சிகரங்களை - உடையவாகுக' எனச் சோழன் குராப் பள்ளித் துஞ்சிய பெருந்திருமாவளவனும் பாண்டியன் வெள்ளியம்பலத்துத் துஞ்சிய பெருவழுதியும் ஒருங்கிருந்தாரைக் கண்ட காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக்கண்ணனார்வாழ்த்துவர் (புறம். 58:29-33). உலகத்திலுள்ள மலைகளுள் பயன் தரும் மலைகள் சில; அவற்றினும் தெய்வங்கள்

விரும்பும் மேகங்கள் படியும் குடுமிகளையுடைய குலமலைகள் சிலவே ஆகும் (பரி. 15:4-10).

**குடுமிக்கோமான்** - முதுகுடுமிப் பெருவழுதி. சில்வளை விறலியை நோக்கிப் பெருஞ்செல்வத்தை யுடைய குடுமிக் கோமானை - முதுகுடுமிப் பெருவழுதியை - கண்டு நீரான் அடப்பட்ட புற்கையைக் கைவிட்டு வருதற்குப் போகலாம் அல்லமோ; செல்லுவாயாக' என நெடும்பல்லியத்தனார் அவன் கொடையை விறலியாற்றுப் படைத்துறையில் பாராட்டுகிறார் (புறம். 64:5-7).

**குடுமிகளைதல்** - முடியெடுத்தல் (பிள்ளைப் பருவத்தே முதன் முறையாக மயிர் களையும் சடங்கு). 'குடுமி களையப்பட்ட தலையில் வேப்பந் தளிரை உழிஞைக் கொடியோடு சூடி வில்லேந்தித் தேரினது கொடுஞ்சி பொலியு மாறு நின்றவன யார்கொல்' என்று இளம்பருவத திலேயே பகைவரை யெதிர்த்துப் போர்க்குப் புறப் பட்ட பாண்டியன் நெடுஞ்செழியனை வியநது இடைக்குன்றூர் கிழார் பாடியுள்ளார் (புறம. 77: 2-6).

**குடுமி கொள்ளுதல்** - முடிக்கலனைக் கைப்பற்றி வெல்லு தல். தொணடைமான் இளந்திரையன பகைவரின் கடிமதில் எறிந்து ஆணடிருநத அரசரின குடுமி கொண்டு - முடிக்கலனைக் கைப்பற்றி வென்று - வீரமுடி புனைய விரும்புவ தல்லது, அம் மதிலரசர் சந்து செய்தற்கு உடம்பட்டாராயினும் மனம் பொருந்தான் (பெரு. 450-453).

**குடை** - 1. வெண்கொற்றக்குடை. 'நின் குடை முக்கட் செல்வரது கோயிலை வலம் வருவதற்குத் தாழக' என்று முதுகுடுமிப் பெருவழுதியிடம் காரிகிழார் கூறினார் (புறம்.6:11-18). எவ்வியின மிழலைக் கூற் றத்தையும் வேளிரது முத்தூற்றுக் கூற்றத்தையும் கொணட வெற்றி பொருநதிய உயர்ந்த குடையினை யும் கொடித்தேரினையும உடையவன் தலையாலங கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் (புறம. 24: 18-23). பொருளும் இனபமும் அறததின வழித தோனறும காட்சி போலச் சேர பாணடியரின் குடை பினனாகச் சோழன் நலங்கிள்ளியின் ஓங்கிய ஒருகுடை முன்னே உருகெழு மதிபோல் மேம்பட்டு விளஙகியது (புறம். 31: 1-4). 'கனணொளியோடு மாறுபட விளங்குகின்ற வானளவு உயர்நத வியன் குடை வெயிலை மறைப்பதற்காக நீ கொண்டதோ வெனின் அன்று; வருத்தமுற்ற குடியை நிழல் செய்தல் காரணத்தால கொள்ளப்பட்டது' என வெள்ளைக்குடி நாகனார் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவனைச் செவியறிவுறுததினார் (புறம். 35: 19-21). தானையுடன போரில் வெகுண்டு அறத் தான் அடர்த்துச் செய்த வலிய போரையுடைய சோழன் சேரனாகிய இருவரும் பட்டனர்; அவர் குடையும் தளர்நதன (புறம். 62: 6-8). மோரியர் விசும்பு தோய் நெடுங்குடையும் கொடியணிந்த தேரும் உடையவர் (புறம். 175:6). வானத்தைப் பொருந்தும் நீள் குடையையும் வலிய குதிரை யினையும் உடையவன் உருவப் பஃறேர் இளஞ்சேட் சென்னி (புறம். 266:7). செல்வக் கடுங்கோ வாழி யாதனைக் காணச் செல்லும் பரிசிலர் வழியிடையே எதிர்ப்படும் வேந்தரிடம் 'யாம் செல்வக் கடுங்கோ வாழியாதனால் புரக்கப்படும் இரவலர் எனில அப்பகை வேநதர் தம் உயர்குடையைப் பணித்து வணஙகிச் சிறபபுச் செய்து உடன் போகுமாறு செய்வர்' என அவன் வென்றிச் சிறப்பைக் குண்டு கட் பாலியாதனார் பாராட்டினார் (புறம். 387: 30-32). பெருஞ்சேரலிரும்பொறை, அதிகமானோடு சோழன் பாண்டியனாகிய இருபெரு வேந்தரையும் வென்று அவர்தம் முரசும குடையும் முடியும் கொணடு களவேள்வி செய்தான (பதி. ப. 8:4-7). கரிகாற் பெருவளத்தான் மறுவற்ற அறததுடன் கூடிய செங்கோலனாகவும் தண்ணளி செயதற் கேற்ற ஒரு குடையனாகவும விளங்கித் தன் ஆணையை உலகங்கூற நெடுங்காலம் உலகை யாணட தலைவனாவான (பொரு. 227 - 231). விண்ணை அளாவும் நீண்ட குடையையும் சிறந்த தேரினையும் உடைய மோரியர் தங்கள தேர் தடை யின்றிச் செல்லுதறகேற்பக் குன்றுகளை வெட்டி வழி உண்டாக்கினர் (அகம. 69:10-12). தானையோடு சென்று வாகைப் பறநதலையில் தங்கிய கரிகால் வளவனின முனனிறறலை யாறறாத பீடில மனனர் தம் ஒன்பது குடையையும் பகலில களததே விடுத்து ஓடினர் (அகம். 125: 17-22). காரூரின தலைவனாகிய கழுவுள் விண்டோய வியனகுடையினை உடையவன் (அகம. 135: 11-13). முறை தெரிந்து உலகைக காக்கும் மனனரின குடைநிழல் போல மரநிழல் மிக்க குளிர்சசியாக விருந்தது (நற். 146: 4, 5). செழியன் கழுமலப போரில் மாற்றாரை அவர்தம குடையோடே அகப்படுததி வென்றான் (நற. 234: 6,7). பணபுடைய நாட்டில பகைவா படை புகக் குடிமக்கள் அநநாட்டைக கைவிட்டுத் திறமபடக் காக்க வல்ல அரசன் குடைநிழல உள்ள ஊருக்குச் சென்று தஙகுவர் (கலி. 78: 4 - 6). 'நின் அழகிய குடைநிழல் அறத்தைச் செய்யுமென்று எடுத்தாய்; அக்குடையினது நிழலின் புறததே இவள் அகப்பட்டாளோ, அதில பட்டவளல்லள இவளுக்கு அருள் செய்க' எனச சானறோர் அரச னாகிய தலைவனிடம் கூறினர் (கலி. 99 8-10).

ஒழுக்கத்தால் ஞாயிறு போன்று விளங்கும் அரசன பகைவா அஞ்சத்தகக கொடுந்தொழில செய்ப வனும் நீண்டுயர்ந்த அவன் குடையை நிழலென அடைந்தவர்க்கு மதியை யொத்த குளிர்ச்சியைத் தருபவனும் ஆவான (கலி. 100:1-5). குடையால் நிழல் செய்து ஆண்ட அரசனுக்கும் அவ்வுலகை ஆளவரும் அரசனுக்கும் நடுவு நின்ற வருத்தம் தருகின்ற காலம் போல மாலைபபொழுது வநதது எனத் தலைவி அதனொடு புலந்து கூறினாள் (கலி. 118:7,8). திருமால அருளைக் குடையாகவும் அறத் தைக் காம்பாகவும் கொண்டு மூவேழ உலகத்தையும் பொதுககடிந்து தனியே காக்கும் காவலை உடை யவா (பரி. 3:74-76). வெண்குடை காண்க.

2. பனையோலையானியன்ற குடை. மாங்காய்களை வடித்துப புளிப்பதன் அமைத்த புதுக்குடத் திலுள்ள சாரங்களை உழவர், வெயிலில் பின்புறம் தோன்ற உலர வைத்துப பதத்திலெடுத்த இதழ களை யுடைய பசிய குடையால் - பனையோலை யானியன்ற குடையால் - பருகினர் (அகம். 37:7-11). தலைவி சிறுமியாக இருந்த நாளில் ஓங்கி நிலைத் தாழியில் நீரை நிரப்பிக் குடையால் முகந்த நீரினை வயலைக் கொடிக்கு வார்த்து வளர்த்தாள் (அகம். 275:1-3). மலையில் தேனடையைக் கண்ட இருக்கை முடவன் அம்மலையின் கீழிருந்து தன் உள்ளங் கையைச் சிறுகுடையாக, (பனையோலையாலான சிறு குடைபோல) கோலி அத்தேனடையைப் பலமுறை சுட்டி நக்கினான் (குறு. 60:1-4). மாரிக் காலத்து மலரும் பிததிகத்தின பெரிய அரும்புகளைக் கரிய பனையின பசுங்குடையில் பொதிநது வைப்பர் (குறு. 168:1-3). பலகுடையில் இட்டுண்ணும் கள்ளி னையுடைய பாரியின குன்றம போலத் தலைவி அரிய காவலுக் குட்பட்டவளானாள (நற். 253:7-9). தோளின் நலத்தை நுகர்ந்து கணவரால துறக்கப் பட்ட மகளிர், தண்ணீர் வேட்கையாலே கோலித் தண்ணீர் குடிக்கபபட்ட, எச்சிலாற் பயன்படாத குடையை ஒபபர் (கலி. 23.8,9).

3. கவிகை. ஆறலைப்போர் கல்லெறிதலின் பல கிழிவுகளைக் கொண்ட உடையினையும் உலறிய குடையினையும் - கவிகையினையும் - கொண்ட வம்பலர் உயர் மரமேறிக் காட்டில செல்லுதற்குச் செவ்வி நோக்குவர் (அகம். 285:9-12). காட்டில் கோங்க மலர்கள் குடைபோல் மலர்ந்து வைகறை யில் விண்ணில் தோன்றும் மீன்களெனக் கருது மாறு காட்சியளிக்கும் (நற். 48:3,4). உயர்ந்த குடை யை யுடைய வம்பலர், உமணர் வாழும் சிறுகுடி யில களர் நிலத்து விளைந்த புளியின் கனியைத் தின்று தம் பசி மாறினர் (நற். 374:2-4). அந்தணர் உரியிலே தங்கின கரகத்தையும் முக்கோலையும் தோளில்கொண்டு, ஞாயிற்றின் கதிர்களைத் தாங்குதற்கு ஏந்திய குடை நிழலில் பாலைவழிச் சென்றனர் (கலி. 9:1-5). குடையின் நிழற்கீழ்த் தோன்றும் மகனைத் தம் தலைவன் மகன் என்று கருதிப் பரத்தையர் தழுவி எடுத்தனர் (கலி. 84:11-15). செவ்வேளின் பரங்குன்றத்தை யடைந்து, சேவற் கொடி ஏற்றப்படும் யானையின் கும்பத்தைக் குங்கு மத்தால் ஒபபனை செய்து பூவும் நீரும் தெளித்துச் செவிக்கவரிகளைச் சார்ததிப் பவளக காம்புடைய பொற்குடையை மேலே கவித்துக் கன்னியரும் மணந்த மகளிரும் வழிபாடு செய்தனர் (பரி. 19:85-90). மகளிர் கைபோற் குவிந்த காந்தள் முகையும் பாம்பு ஒன்றோடொன்று சினந்து படமெடுத்தாற் போன்றனவும் குடைவிரிந்தது போன்றனவுமாகிய காந்தள் மலர்களும் பிறமலர்களும் ஆகியவற்றை அருவிகள் சொரிநதன (பரி. 20:98-103). இருந்தை யூரில் வரைகெழு செல்வன் (ஆதிசேடன்) திருக் கோயிலை மக்கள் அவிப் பொருளும் குடையும் நறுமணப் புகையும் பூவும் ஏந்திச் சென்று வழி படுவர் (பரி. தி.1:44-46).

4. குடலை. மகளிர் பள்ளமுண்டாகச் செய்யப்பட்ட பசிய குடையில் - குடலையில் - புதலிடத்தே மலர்ந்த முல்லைப் பூக்களைப் பறிப்பர் (புறம். 352:3-5). தொடுத்த லமைந்த பல மலர்களின் தொகுதியை மூடிக் கட்டிய குடை போன்றது கமுகம் பாளை (அகம். 335:13-15).

5. கீற்றுக்கூடு. மழைக்குத் தடையாகக் கோட்டினை யுடைய தலைக்குடையை - கீற்றுக்கூட்டினை - அணிந்து களை பறிக்கும் உழவரின தோற்றம் கலைமானினம் பரந்தது போன்று காணப்பட்டது (அகம். 194:6-9).

**குடைச்சூல்** – சிலம்பு. ஆடுகோட்பாட்டுச் சேரலாத னின் காதன்மகளிர் வளங்கெழு குடைச்சூல் - சிலம்பு - அணிந்த அடங்கிய ஒழுக்கமும் ஆன்ற அறிவினால் உண்டாய சிறந்த புகழு முடையவர் (பதி. 57:11-13). செவ்விரல்களையும் அழகிய வரிக ளையுடைய குடைச்சூலையும் நோக்கினாரை வருத் தும் அழகினையும் உடைய மகளிரைப் பிணிக்கும் மார்பினன் செல்வக்கடுங்கோ வாழியாதன் (பதி. 68:18-20). தொழில் வளம் பொருந்திய குடைச் சூலினையும் அடங்கிய கொள்கையையும் அறக்கற் பினையும் நல்ல புகழையும் உடையவளின் கணவன் இளஞ்சேரலிரும்பொறை (பதி. 90:48-50).

**குண்டு** - 1. ஆழம். வன்னிலத்தை இடித்துச் செய்த

குண்டு - ஆழம் - உடைய கிடங்கில் பாயாதிருக்க வாழியாதன் குதிரையின் குசையை இழுத்துப் பிடித்தான் (புறம். 14:5-7). மதிற்புறத் தமைந்த குண்டு அகழியில் வாளை, ஆரல, வரால், கெடிறு முதலிய மீனகள் இருந்தன (புறம். 18:8-10). கானப் பேரெனனும் அரண் நிலவெல்லையைக் கடந்த குண்டுகண் அகழியை யுடையது (புறம். 21:2-6). குண்டுகண்ணகழியில் கராஅம் செருக்கித் திரிந்தது (புறம. 37:7). இனிய நீரையுடைய பெரிய குண்டு சுனைக்கண் குவளை மலர் பூத்தது (புறம. 116:1). அகுதையின் கூடல் குண்டுநீர் நிலைகளை யுடையது (புறம். 347: 5,6). வில்லி யாதனின் ஊர் அரணை யடுத்த குண்டு அகழினையும் நீண்ட மதிலையும் உடையது (புறம். 379:7,18). இமைய வரம்பன நெடுஞ்சேரலாதன், காவற் காட்டையும் குண்டு கிடங்கினையும் உயர்ந்த புற மதிலையும் நிலையான மதில உச்சியையும் அம்புக் கட்டுகளையும் உடைய அழித்தற்கரிய பகைவர் மதிலை உட்புகுந்து அழித்தான (பதி. 20: 17-19). பல்யானைச் செலகெழு குட்டுவன், காவற் காட்டையும் குண்டு அகழியையும் நெடு மதிலையும் மதிலுள் மேடையையும் உடைய 'அகப்பா' என னும் அரணை வெனறான (பதி. 22: 24-27). கடல் பிறக்கோட்டிய செங்குட்டுவன், பகை மன்னரின் குண்டுகண் அகழியையுடைய மதிலகள் பலவற் றைப் பொருது வென்றான் (பதி. 45:7). நீநதிச் செல்ல முயல்வாரைக் கொள்ளுதல் வல்ல முதலையை உடையது குண்டுகண் ணகழி (பதி. 53:8). பெருஞ்சேரலிரும் பொறை, வெளித்தோன றாமல் மதிற்குள்ளே யிருநது தம குற்றத்தால் பழி செய்து கொள்ளும் பகைவருடைய குண்டுகன் அகழியையும் குறுந்தாள் ஞாயிலையும் உடைய மதிற்காவலை யழித்துக் கவர்ந்து கொண்டான் (பதி. 71:11-13). அரண் நெடு மதிலையும் வரிசை யான ஞாயிலையும காவற்காட்டையும் குண்டு கிடங்கினையும் உடையது (பதி. இ. 2:11-13). குண்டு சுனையிற் பூத்த பூவாற் செய்த கண்ணியை மட நடை மகளிர் அணிந்தனர் (முரு. 199,205). நெடுஞ் செழியன் அரிய காவற்காட்டினையும் குண்டு கிடங்கினையும் வாயில்களையும் உடைய பகைவர் அரண்களை வெனறான (மது. 64-67). நெல்லூர் தெளிந்த கடலாகிய குண்டு அகழியை உடையது (மது. 86-88). வரைவின மகளிர் குண்டு நீர்ப் பனித் துறையின் குவிந்த மணலில் ஆடினர் (மது. 583-586). கான்யாற்று வழி, இராக்காலத்தை யொத்த இருள் செறியும் மிளைகளையும் குமிழி சுழன்று வரும் குண்டு கயம் பொருந்திய முடுக்கரையும் உடையது (மலை. 212-214). மலையெருக்கு நெருங் கிய மலைச்சாரலில் விழுந்தவரை மறைக்கும் குண்டு கயத்தின் அருகே பாசி படர்ந்திருந்தது (மலை. 219-221). தலைவியும் தோழியும் சிவநத நண்டின் குண்டு அளை கெண்டி விளையாடினர் (அகம். 20:4). நெடியோனின (முருகனின) பரங்குன் றத்தே குண்டு சுனையிற் பூத்த புதிய மலர் இரண டின் சேர்க்கை போன்று தலைவியின் அரிமதர் மழைக்கண் விளங்கின (அகம். 149.16-19). அரலைக் குன்றத்தின் அகன்ற வாயுடைய குண்டு சுனையிற் பூத்த குவளை மலர்களோடு சேர்த்துக் கட்டிய காட்டு மல்லிகையின் மணங்கமழும் நறுநெற்றி யினள் தலைவி (குறு. 59:2-4). பிரப்பங் கொடியில் விளைந்த பழத்தைக் குணடு நீர் இலஞ்சியிலுள்ள கெண்டைமீன் கவ்வும (குறு. 91: 1, 2). மாலைப் பொழுதில, குண்டு நீர்நிலையில் மலர்ந்த ஆமபல கூம்பின (குறு. 122: 2,3). தலைவியின அழுத கண்கள் குண்டுநீர்ப் பைஞ்சுனை பூதத மழைத் துளியை ஏற்றுக்கொண்ட குவளைமலர் போன்று இருந்தன (குறு. 291:5-8). தலைவி குண்டு நீரில வளர்ந்த தாமரைப் பூநதாதைப் போனற நுண் ணிய பல தேமற் புள்ளியை உடையவள் (குறு. 300: 3,4). கொக்கின் கூரிய மூக்குபபோன்று குண்டு நீரில் முளைத்த ஆம்பற் பூ காட்சியளித்தது (நற். 100: 2, 3). கடுவனொடு களவிற் புணர்நத செம் முக மந்தி சுற்றம் அறிதல அஞசி, வேஙகை மரத் தின் கிளைமீது சென்று குணடுநீர் நெடுஞ்சுனை நோக்கிப் புணர்ச்சியாற குலைநத தலை மயிரைத் திருத்தும் (நற. 151:5-11). களிறு பொருதமையால் இடிந்தொழிநத கானயாற்றின பெரிய பள்ளங்கள் பொருந்திய குணடு கரையிடமெல்லாம் வெண் பளிங்கும் செமபொனனும் மினனும் (நற். 292.5-7). தாமரை இலை அலைபடவும் நீர் பருகும் துறைக் கண் இறஙகிய மகளிர் அஞ்சியோடவும் குண்டு நீரில் வாளை மீன பிறழந்தது (நற். 310:1-4).

2. பள்ளம். மூதூர் திண்டேர் பலமுறை ஓடிக் குழித்த குண்டு – பள்ளம் - பொருந்திய நெடிய தெருக்களை யுடையது (பெரு. 397).

**குண்டுகட்பாலியாதனார்** - புலவர். ஆதன என்பது இவ ரது இயற்பெயர். பாலி எனபது ஊர். ஆழ்நத கண்ணையுடைமையால் 'குண்டுகண' என்ற அடை யுடன இவர் வழங்கப் பெற்றார். இன்றும் குண்டு கண்ணன என்னும் பெயர் வழக்கிலுணமை ஈண்டுணரத்தகும. உ.வே.சா., பி.நா, இருவரும் இம்முறையிலேயே இவர் பெயர்க்கு விளககம் கூறி யுள்ளனர் (புறம், நற். பாடினோர் வரலாறுகள்). வையா

புரிப் பிள்ளையின் சங்க இலக்கியப் பதிப்பும் இவரை உறுப்பாற பெயர் பெற்றவர் வரிசையில் நிறுத்தக் காணலாம் (ச. இ. புலவர்களின் பெயர் வகை). மாறாகக் குன்றின்கட் பாலியாதனார் என்ற பெயர் குன்றுகட் பாலியாதனார் என்று சுருங்கி, அதுவே குண்டுகட் பாலியாதனார் எனத் திரிந்த தாய் ஔவை. து. கூறுவர் (புறம். 387, முன்னுரை). இவர் பாடியனவாய்ப புறநானூற்றில் ஒரு பாடலும் (387) நற்றிணையில் ஒரு பாடலும் (220) உள்ளன. புறப்பாட்டில இவர் சேரமான் சிக்கற் பள்ளித் துஞ்சிய செல்வக் கடுங்கோ வாழியாதனைச் சிறப்பித்தும் வாழ்த்தியும் பாடியுள்ளார். தன்னால் வெல்லப்பட்ட பகைப்புல மன்னர் பணிந்து செலுத்திய திறைப் பொருளைக் கொணர்ந்து அச்சேரமான் பாணர் புலவர் முதலியவர் தம் வறுமையை அகற்றுவான் என்ற செய்தி இவரால் பாராட்டப்படுகின்றது. 'என் சிறுமையால் என்னை இழித்து நோக்காமல் தன் பெருமையின் தகுதியை நோக்கிக் களிறுகளையும் குதிரைகளையும் ஆனிரைகளையும பணியாளருடனே நெற்போர்களையும் யான் கனவென மருளும் வண்ணம் அவன் எனக்கு நனவிலே நல்கினான்' என்று கிணைப் பொருநன் கூற்றில் இவர் அவனைச் சிறப்பித்துள்ளார். முடிவாகப் பொருநை யாற்று மணலினும் அந்த ஆறு பாயும் பலவூர்களைச் சுற்றிய கழனிகளின் விளையுளாகிய நெல்லினும் பல காலம் வாழ்க என்று அவனை இவர் வாழ்த்தும் அழகும் உணர்ந்து இன்புறத்தகும். தலைவனுக்குக் குறைநேர்ந்த தோழி அததலைவன் மடலூர்ந்து வநதான் போலத் தலைவியிடத்து முகம்புக்கு மொழிவதாக இவரது நற்றிணைப் பாடல் அமைந்துள்ளது.

**குண்டை** - குறுமை. முல்லை நிலத்திலுள்ள குண்டை-குறுமை - வாய்ந்த கிளைகளையும் குறிய முட்களையுமுடைய கள்ளியின் உச்சி மறையுமாறு அதனமீது முல்லைக்கொடி படர்ந்திருந்தது (அகம். 164:7-9).

**குணக்கு** - கிழக்கு. முதுகுடுமிப் பெருவழுதியின புகழ் பனிபடு நெடுவரைக்கு வடக்கும் குமரியாற்றிற்குத் தெற்கும் கிழக்கிலுள்ள கடலுக்குக் குணக்கும் - கிழக்கும் - மேற்கிலுள்ள முதிர்ந்த கடலுக்குக் குடக்கு மாகிய எல்லை வரை பரவியது (புறம். 6:1-4). குணக்கே எழுகின்ற திங்கள் கனையிருளை நீக்கிய பொழுதில் ஓயமான நல்லியக் கோடன் தானியக் கூட்டின அடியில நின்ற பாணனை வரவேற்று வறுமை தீர நல்கின [illegible] (புறம். 376.6,8,15). மாமலையினகண மிக்க மழை பெய்தமையான நிறைந்த வெள்ளத்தையுடைய காவிரி, கழனிகளையுடைய நாடு வளம் பெருகிச் சுரக்க, நிலவுலகைப் புரந்து செங்குணக்கு ஒழுகும் (பதி.50:1-6). ஆதிமந்தி மயக்கமுற்று வருந்தக் கரையினை மோதிப் பரவி நேர் குணக்காக ஓடும் காவிரி ஆட்டனத்தியைக் கைக் கொண்டது (அகம்.76:10-13). மேற்றிசையிலுள்ள மலையை ஞாயிற்று மண்டிலம் சென்றடைந்த போது, நெய்தலின் மலர் குவிய நிழல் குணக்குத் திசையைச் சென்றடைந்தது (நற். 187:1,2). பொய்கையில ஆம்பலின் மெலலிய போது குணக்குத் தோன்றும வெள்ளியைப் போல இருள் கெடமலரும் (நற். 230:3-5). 'இனியொரு நாள் காதலியாகிய தலைவி பக்கத்திருப்ப விடியலில் குணக்குத் தோன்றும் வெள்ளிபோல எம்பால் வருகுவள்; வருந்தற்க எனத் தலைவன் நெஞ்சிற்குக் கூறித் தேற்றினான் (நற். 356:7-9). புத்தேளிர் கோட்டம் வலம் செய்விக்க வெளியே சென்ற மகன் வரக் காலந்தாழ்த்தமையின் உலகம் வறகடம நீங்கும்படி பெயதற்குக் குணக்கே எழுந்த கூதிர்க்காலத்தே தோன்றிய மேகம் போலத் தாய்முலை பாலாலே விம்மியது (கலி. 82:1-3).

**குணகடல்** - கீழ்க்கடல். யானைக்கட் சேஎய் மாந்தரஞ் சேரலிரும்பொறை தென் திசைக்கண் குமரியும் வடதிசைக்கண் பெருங்கல்லும் (இமயமும்) கீழ்த்திசைக்கண் குணகடலும் - கீழ்க்கடலும் - மேற்றிசைக்கண் குடகடலும் ஆகிய நான்கு எல்லைக்குட்பட்ட இடத்தை முழுதும் ஆண்ட மன்னர் மரபில் வந்தவன் (புறம். 17:1-8). நலங்கிள்ளி விழவினையுடைய பகைப்புலத்தில் தங்கி விட்டுக் குணகடல் பின்னதாக மேல்கடல் அலை, அவன் குதிரையின் குளம்பை அலைப்ப வலமாக முறையே வருவான் என்று அஞ்சி, வடபுலத்தரசு துஞ்சாக் கண்ணைவாயின (புறம். 31:12-17). தொண்டைமானிளந்திரையன் குணகடலாகிய எல்லையிடத்துக் கடல் நடுவே ஞாயிறு கதிர்பரப்பித தோன்றினாற் போல, மயக்கம் தீர்ந்த அறிவால் நடுநிலைமையுடன் முறை வேண்டுநர்க்கும் குறை வேண்டுநர்க்கும் வேண்டிய வாறு அருளினான் (பெரு.441-444). மேகம் குணகடலிடத்தே நீரை முகந்து மேற்றிசைக் கடலருகின் மலையிடத்தே தங்கி, இரவும் பகலும் ஒழிவிடனின்றிப் பெருமழை பெய்தது (மது. 238-240). பெரும்பெயல் சிறத்தலின் யாறுகள் தாங்காமல் யாற்றிடைக் குறையில் ஓங்கிச் செல்கின்ற வெள்ளம் குளங்களை நிறைத்துக் குணகடற்குப் பரந்து சென்றது (மது. 244-246). காவிரிப்பூம் பட்டினத்துக் கடற்றுறையில் தென்கடலிற் பிறநத முத்துக்களும் குணகடலிற் பிறந்த பவளமும் குவிந்திருந்தன (மது. 189). குண

கடலின் நீரை முகந்த மிகுதியான மேகங்கள் மேலே எழுந்து மினனி இடித்து நள்ளிரவில பெரிய மலை உச்சியைச் சூழ்ந்தன (அகம். 278:1-6). குணகடல் அலைக்கு அருகில் முதிய நாரை தங்கியது (குறு. 128:1). குணகடல் நீரை முகநது மேகம் மேற்றிசை சென்று இருண்டு மின்னி மழை பெய்தது (நற். 153:1-4). கதிரவன் குணகடலினினறு எழுந்து கதிர்களைப் பரப்பிக் குடமலை மறைய மாலை வந்தது (நற். 215:1-3). மேகம் குணகடல் நீரை முகந்து மேலைத் திசைக்கண் எழுந்து சென்று இருண்டு மழை பெயத பின்னர் நிலததின் வெப்பம் தணிந்தது (நற். 346:1,2).

**குணங்கள் - பண்புகள்.** *'நின தீய குணங்களை - பண்புகளை - உணர்ந்திருக்கின்ற எம்மிடம் நின் தவறுகளை ஓராதே நினக்கு நற்குணங்கள் உளவாகக் கொண்டாடுந்தோழன், பரத்தையரின் கதுப்பாகிய அணையிலே துஞ்சுகையினாலே தெய்வம் போல மணக்கும் நின் மார்பைக் காண்டற்கு வாரானோ' எனக் காமக் கிழத்தி தலைவனுடன் ஊடிக் கூறினாள்* (கலி. 71:17-20). குணம், குணன் காண்க.

**குணதிசை - கிழக்குத் திசை.** 'வெள்ளியாகிய மீன் குணதிசை கிழக்குத் திசை - நின்று குடமுதற் செல்லினும் குடதிசை நின்று குணமுதற் செல்லினும வடதிசை நின்று வறனுண்டாகத் தென்வயிற் செலலினும் தென்திசை நின்று குறுகாது நீடினும் எங்கு நிற்பினும் என் உள்ளம் உணர்ந்து கிளளிவளவன வேணடுவன நல்குவான்; அவன் தாள் வாழ்க' எனப் பொருநர் கூற்றாகக் கோவூர் கிழார் வாழ்த்துவர் (புறம். 386:20-25).

**குணபுலங்காவலர் - சோழர்.** பகைவரின் தூங்கெயில் எறிந்த தொடித்தோட் செம்பியன் குணபுலங் காவலர் - சோழர் - மரபில் வந்தவன (சிறு. 79-82).

**குணம் - பண்பு.** நாற்படையுடைய அரசர்க்கும் வெற்றி அறநெறியைப் பின்பறறும் முறையினாலே தோன்றும்; அதனால் இவர் நம்முடையவர் எனக் கோல் கோடாமலும் இவர் நமக்கு அயலார் என்று அவரின் குணஙகளைக் கொல்லாமலும் அரசாண்டு பல்லூழி வாழ்க என இலவநதிகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறனுக்கு மருதனிள நாகனார் அறிவுரை வழங்கினார் (புறம். 55:9-17). அகன ஐந்திணைச் சிறப்பைக் கூறும் குறிஞ்சிப் பாட்டின் குணம் அறம் பொருள் இன்பத்தைப் போற்றிப் புனைந்த பொருளினதேயாம் (குறி. வெ. 2). பொருள்தேடச் சென்ற தலைவன் காட்டின் மரநிழலில தங்கியபோது தலைவியின் மறத்தற்கரிய பல்குணம் நெஞ்சத்தே வந்து புக அவளை நினைந்து வருந்தினான் (அகம். 379:19-23). மகிழ்நனின மாண்புற்ற குணத்தை (நாளும் புதிய புதிய மகளிரைக் கூடும் குணத்தை) வண்டுகொண்டனவோ; வண்டின் மாண் குணத்தை (எலலாப் பூவினும் சென்று தேனுண்ணும் குணத்தை) மகிழ்நன் அடைந்தனனோ; அச்செயல் அவனுக்கு இயல்பாதலைத தலைவி அறியாளாய் யாம அவனைத தன மனைக்கு ஏகா வண்ணம் தடுக்கினறேம் என்று எமமொடு புலத்தல் அறியாமையே எனக் காதற பரத்தை தலைவிககுப் பாங்காயினார் கேட்பக் கூறினாள் (ஐங். 90). செவ்வேளின் குணத்தை ஏறறுக் கொணடோராகிய அறங்கொண்டோரும் வீடு பெறும் குணமுடையோராகிய மாதவரால் வணங்கபபட்டோரும் அசசெவ்வேளின் தாள் நிழலடைவா (பரி. 5:71-78). குணஙகள், குணன காணக.

**குணன் - பண்பு.** புல்லியின் வேங்கட மலையைக கடந்து செலலினும தலைவியின குணன - பண்பு - சேயமைக்கண் சென்றவர் எனனாது அனபினைச் செலுத்தி நமமிடம் அணுக வநதன' எனத் தலைமகன இடைச்சுரததுத தன நெஞ்சிற்குக கூறினான் (அகம. 83:9-14). மீண்டும் பொருளவயிற் பிரியக கருதிய நெஞ்சினை நோக்கித் தலைவன, 'நெஞ்சே, பொருள் தேட எண்ணி நிழலறற பாலைவழியைக கடந்து செலலும் போது தலைவியின் விருந்தோமபும் சிறபபையும் பினனி முடித்த கூந்தலுடன் கூடிய அவளது மேனி யழகினையும் இன்பச சேக்கையில நனமொழி நவினற குணனையும் நினைத்து வருநதுவாய அல்லையோ' என வினவினான் (அகம். 353:16-23). அமிழதம் போனற இனிய சொற்களும் அது போனற இனிமையும் உடையாளது குணனும் காமததின தொடர்பால இன்னா அரும்படர் செயயுமாயின அதனொடு ஒருங்கு வாழதலரிது எனத் தலைவன கழறிய பாங்கற் குரைததான (குறு. 206). தலைவியின குணன பொருள்வேட்டுப் பிரியும் தலைவனைச் செலலாமல் தடுககாமையான் இனி ஆற்றியிருக்கற் பாலதன்றிச் செயக் கடவதோன றிலலை எனத தோழி தலைவியைத் தேறறினாள் (நற். 253:6,12). பருநதின் பேடை ஓமை மரககிளையிலிருநது துயருற்று விளிக்கும் கானத்தையும் வேற்றுமொழியினர் வாழும் பல மலைகளையும கடந்து செல்லினும தலைவியின் குணன் நினைவில் தோனறி வருததுகின்றது என இடைச்சுரததுத் தலைவன் இரஙகிக் கூறினான் (ஐங். 321). 'ஒள்ளிய நெருப்புத் தொடர்ந்து பற்றிய பாலை வழியில் வினைமேற் சென்ற நெஞ்சினை மீளும் வகை செயத ... குணன் நினைத்தற் கினியவாயின' என வினை

முற்றி மீண்ட தலைவன் தலைவியிடம் உரைத்தான் (ஐங். 356). மனம் விரும்பிக் கூடின கணவரால் தம் குணன நுகர்ந்து விடப்பட்ட மகளிர் சூடியவர் சூடிக்கழித்த பூவை ஒப்பர் (கலி. 28:12,13). 'இவன் எந்தையின் உள்ளங் குறைபடாவாறு வேண்டுவன கொடுத்துத் தான் குறித்தடுதான்றைக் கைப்பற்றா மற் போகாக் குனன் உடையவன்' எனத் தோழி தலைவனைப் பற்றித் தலைவியிடம் கூறிக் குறை நயப்பித்தாள் (கலி. 61:26-28). குணங்கள், குணம் காண்க.

**குணில்** - கடிப்பு. குணிலால் - கடிப்பால் - அறையப் பட்ட முரசு போல அருவி ஒலிக்கும் (புறம். 143:9). முழாவை எறிகின்ற குணில் அதன் கண்ணை விதிர்ப்புறச் செய்தது (அகம். 186:11). கடலலைகள் குணில தாக்கிய முரசுபோல முழங்கும் (குறு. 328: 2,3). இடையர் கரும்பைக் குணிலாகக் கொண்டு மாவின கனியை உதிர்ப்பர் (ஐங. 87:1,2).

**குதிர்** - நெற்கூடு. முல்லை நில மக்களின் முன்றிலில் பெண் யானைக்கூட்டம் நின்றாற் போன்று குதிர் - நெற்கூடு - காட்சியளிக்கும் (பெரு. 185,186). பெரு மாளிகைகளில் வெந்து வீழ்ந்த கரிந்த குதிர்களில் கூகைச் சேவல் பேட்டுடன் கதறியது (மது. 169,170). குதிர் போன்ற அடிமரத்தையுடைய இருப்பைப் பூவைத் தான் உண்ணாது கலைமான தன் பிணையை அழைக்கும் (அகம். 321:4-6).

**குதிரை** - 1. பரி. மழவர் அஞ்சத்தக்க குதிரைகளை - பரிகளை - உடையவர் (அகம். 1:2). தலைவன் வேகம் கொண்ட குதிரையை மேலும் முடுக்கக் கல்பொருது விரைந்தேகும் தேர் இடிமுழக்கென ஒலித்தது (அகம். 14:18-21). எழினி பந்து புடைத்தெழுவ தொத்த தாளத்துடன் கூடிய பல அடியீட்டினையும் சில வகைச் செலவினையும் உடைய குதிரைகளை உடையவன் (அகம். 105:9,10). கடும் செலவுடைய குதிரையைக் கொண்டவன் ஆய் எயினன் (அகம். 148:7). வீரம் மிக்க மறவரோடும் குதிரைகளோடும் சென்று புறங்கொடாத வலிமையுடன் பொருது துறக்கத்தை அடைந்த நல்ல புகழை உடையவர் உதியஞ்சேரலின் முன்னோர் (அகம் 233:6-8). சேரன் பெரும்படைகளையும் குதிரைகளையும் கொண்டு நற்போர் செய்தான் (அகம். 309:10). அவிழ்த்து விடப்பட்ட குதிரை துள்ளி எழும் எழுச்சியைப் போன்று வளைத்துப் பின் விட்ட மூங்கில விசும்பிற் சென்று பட்டது (குறு. 74:1,2). பலாப்பழமுண்ட குரங்கினம் வேட்டுவனின அம்புத்தொடைக் கஞ்சிப் போர்க்களக் குதிரை போல மேலெழுந்து மூங்கிற் கோல் அசையப பாயும் (குறு. 385:1-4). யாங்குச் சென்று வந்தாய் எனக் கேட்ட தலைவிக்குத் தலைவன் குதிரை ஊர்ந்து வந்தேன் எனப் பதிலுரைத்தான் (கலி. 96:4-6). 'நீ காதலித்தூர்ந்த காமக் குதிரையை மாடத்து முற்றத்தில் ஆதிகதியைக் கொள்ளச்செய்து இளைப்பாறுவாய்; வாதுவன் நீ வாழிய' எனத் தலைவி பரத்தைமைத் தலைவனிடம் கூறினாள் (கலி. 96:18-21). 'நின் மெய்க்கண் கீறியது குதிரையோ அக்குதிரை மாட்சிமைப் பட்ட கூர்உகிர்க் குளம்பையுடையது; வாழி குதிரை' எனப் பரத்தைமைத் தலைவனிடம் தலைவி கூறினாள் (கலி. 96:23-26). குதிரை உடலிற் பக்கரைபோல நின்மெய்க்கண் கவ்வியது குதிரையோ; இக்குதிரை பயமின்றிக்கடித்தது வியப்பிற்குரிய தொன்றோ எனப் பரத்தை வீடு சென்று குதிரையூர்ந்து வந்ததாகப் பொய்த்த தலைவனிடம் தலைவி கூறினாள் (கலி. 96: 28-31). பரத்தை வீடு சென்று குதிரையூர்ந்து வந்ததாகப் பொய்த்த தலைவனிடம் 'நீ ஊர்ந்த குதிரையை நான் நன்கறிவேன்; அது முறையாக மணஞ் செய்து அறத்தினிற் கொண்ட காமக்கிழத்தியாகிய குதிரையும் அன்று; அது பாணன் தூது போக வந்த பரத்தை என்னும் குதிரையாகும்; உன் உருவை அழிக்கும் அக்குதிரையை ஊராதே; ஊர்ந்து திரியவே விரும்பினால் பரத்தை பரியாக நீ வாதுவனாய் இப்பொழுதே அக்குதிரையை ஊர்வதற்குச் செல்க' எனத் தலைவி கூறினாள் (கலி. 96: 32-35). பகைவர் விடுத்த கூந்தற் குதிரையை (கேசியை) மாயோன் வாயைப் பிளந்து கையால் அடித்துக் கொன்றான் (கலி. 103: 53-55).

2. குதிரை மலை. கூவிளங்கண்ணி அணிந்த எழினி செலுத்தப்படாது உயர்ந்த குதிரைக்கு - குதிரை மலைக்கு - உரியவன் (புறம். 158: 8, 9). ஊரப்படாத குதிரைக்குத் தலைவன் எனப் பிட்டங்கொற்றன் குறிப்பிடப் பெறுகின்றான் (புறம். 168:14). பிட்டனது மேகம் தவழும் உச்சியையுடைய குதிரையின் பக்கத்துள்ள பாறையின் நெடுஞ்சுனையில் துவலையினால் நீலம் மலர்ந்தது (அகம். 143: 12-15). நெடிய நெறியினையுடைய குதிரைக் குரியவன் கூர்வேல் அஞ்சி (அகம். 372: 9).

**குதிரைத் தறியனார்** - புலவர். குதிரைத் தறியென்பது ஓரூர் போலும் என்பர் பி. நா. (நற்றிணை, பாடினோர் வரலாறு). குதிரைத் துறையனார் என்று பாடங் கொண்டு குதிரைத் துறை யென்பதனைத் தென் கன்னட மாவட்டத்துக் கடற்கரைச் சிறூர்களில் ஒன்றெனக் காட்டுவர் ஔவை. து. (நற். 296. முன்னுரை). இவ்வூர் மேலை நாட்டினின்றும் கலத்தின் வந்த குதிரை வாணிகத்தால் இப்பெயர் பெற்றிருக்கலாம் என்பது அவர் விளக்கம். இப்புலவரது

இயற்பெயர் இன்னதெனத் தெரியவில்லை. இவர் பாடல் ஒன்று நற்றிணையில் (296) உள்ளது. தோழியால் பிரிவுணர்த்தப் பட்ட தலைமகள் கூற்றான அப்பாடலில், தலைவன் வினையே நினைந்த உள்ளத்தனாய் விரைந்து செல்லத் தனிமைத் துன்பமுற்றுத் தலைமகள் வருந்திக் கூறு கின்றாள். யானையின் நெற்றிப்பட்டம் போலக் கொன்றை கார்காலத்தே மலருமென்ற உவமப் புனைவினுள் தலைவி, தான் தலைவனுக்கு உரிமை பூண்டொழுகும் இல்லறக் கிழத்தி போல அவனை நோக்கி மகிழ்ந்துறைந்ததனையும் கார்கால நீக் கத்தின்கண் அம்மலர் உதிர்ந்தொழிதல் போல அவன் பிரிவினால் தான் இறந்தொழிதல் திண்ண மென்பதனையும் குறிப்பாக உணர்த்துகின்ற போக்கில் இவர் அப்பாடலைப் பாடியுள்ள திறன் பாராட்டத் தகும்.

**குந்தம்** – எறிகோல். மறவர் பாசறையின்கண் கூட மாகக் கால்களை நட்டுக் கயிற்றை வலித்துக் கட்டின இருப்பிடத்தில் பூந் தொழிலைக் கொண்ட குந்தம் - எறிகோல் - ஊன்றிக் கிடுகு களை நிரலாகப் பிணைத்து இயற்றப்பட்ட அர ணத்தில் தங்கினர் (முல்லை. 40-42). வையை நீராடு வாருள் சிலர் நெட்டியாலாய வாளைச் சுழற்றியும் சிலர் அதனாலாய குந்தத்தை ஏந்தியும் புனலாட் டயர்ந்தனர் (பரி. 11:50).

**குப்பை** - 1. குவியல். முதுவேளிர்க் குரிய குப்பை - குவியல் - உடைய நெல்லைக் கொண்ட மூத்தூற் றுக் கூற்றத்தை வென்றவன் நெடுஞ்செழியன் (புறம். 24:21-23). பாரி மறைந்தபின் பறம்பு நாட் டில் உள்ள மகளிர் ஈத்திலைக் குப்பையின் மீது ஏறி நின்று உமணர் உப்புச் செலுத்தும் சகடத்தை எண்ணினர் (புறம். 116:3,7,8). பிட்டங்கொற்றன் களத்தின்கண் மலிந்த நெல்லின் குப்பையை வேண்டினும் கொடுக்கும் அறத்தகையன் (புறம். 171: 8-10). களத்தின்கண் நிறைந்த (நெல்) குப்பை காவலின்றிக் கிடக்கத் தடுக்கும் பகையைத் துரந்த நிலம் கலங்காச் செங்கோலாட்சி புரிந்தவன் எழினி (புறம். 230:3-6). நெடுந்தகை ஒருவன் சிலவாக விளைந்த வரகின் குப்பையில் தன்னை வளைத்த கடவர்க்குக் கொடுத்தது போக எஞ்சியதைப் பசித்த பாணர் உண்டு வெளியேகினர் (புறம். 327: 2-4,7). தொல்குடி மன்னன் ஒருவன் மலையைக் கண்டாற்போன்ற நிலையினையுடைய நெற்போர் களை நாள்காலையில் அழித்துக் கடாவிட்ட நெற் குப்பையை வில் வீரர்களுக்கு நாளுணவாக நல்கி னான் (புறம். 353:8-11). வன்கை வினைஞராகிய உழவர் வயலின்கண் விளைந்த கதிரினின்றும் உதிர்ந்த தூற்றாத நெற்குப்பையைக் களத்தில் காஞ்சிமரத்தினடியில் சேர்த்தனர் (பதி. 62:14-16). உழவர் குனிந்துநின்று அரிவாளால் நெல்லை அறுத்து நாள்தோறும் கடாவிட்டு மலையென நெல்லைக் குப்பையாகக் குவித்தனர் (பொரு. 242-244). போரை விரித்துக் கடாவிட்ட பின்பு குற்ற மறும்படி வைக்கோலையும் கூளத்தையும் நீக்கி ஈரம் புலரும்படி மேல் காற்றால் தூற்றின நெற் குப்பை வடதிசைக்கண் உள்ள செம்பொன் மலை போலச் சிறப்பத் தோன்றும் (பெரு. 237-241). உழவர் மருதமர நிழலில் குவித்துவைத்த வட்ட மான நெற்குப்பையைச் சூழ்ந்து தம் எருதுகளு டன் வேனிற்காலத்துத் தங்கினர் (அகம்.37:15-17). நிறைந்த சூல்கொண்ட யாமை அடும்பின் கொடி சிதையும்படி இழுத்து உப்பங்கழிக் கரைக்கண் அமைந்த வெண்மணல் குப்பையின் பக்கத்தே சேர்த்து மறைத்து முட்டை ஈனும் (அகம். 160.3-6). தலைவனைப் பிரிந்த தலைவி வாடையால்நீரோ டும் காலிடத்துள்ள நுண்மணல் குப்பை கரைவது போல, நெஞ்சம் கரைந்து வருந்தினாள் (அகம். 163: 9-11). காவிரிப்பேரியாற்றில் கடுகி வரும் நீர் நுண் மணலைக் கொண்டு வெண்மணல் குப்பையைச் சேர்த்தது (அகம். 181:11-13). கடல் நீராடி உழந்தமை யால் தளர்ச்சியுற்ற மகளிர்கூட்டத்துடன் மைந்தர் உப்பின் குப்பை மீதேறி மாலையில் கரைக்கு மீண்டுவரும் படகுகளை எண்ணுவர் (அகம். 190: 1-3). நீண்ட வெள்ளை உப்பின் குப்பை, மிக்க மழையால் உருகினாற் போலத் தலைவியின் மெல்லிய தோள்கள் மெலிந்து நெகிழ்ந்தன (அகம். 206:14-16). தலைவன் ஊர்ந்துசென்ற தேர் வெண் மணல் குப்பைத்திரட்சி மீது ஏறித் தாழை மலரிடத்தும் அடும்பின் கொடி மீதும் சிதைய ஊர்ந்து இறங்கித் தன் தோற்றம் மறையும் (அகம். 330:11-17). அறுகம் புல்லைத் தின்று நீரைப் பருகிய நல்லேறு காஞ்சிப் பொன்தாது தன் மீது உதிர ஒன்று கூடி மணலின் குப்பையாகிய மேட்டில் துஞ்சும் (அகம். 341:6-11). கடற் கரையில் பனை மரத்தின் உச்சியிலுள்ள மடல்கள் குருத்தோடு மறையும்படி கடுங்காற்று வெண்மணல் குப்பை யைக் கொண்டு வந்து தொகுத்தது (குறு. 372:1-3). பரதவர் கழியில் வாழும் இறாமீன்களைக் கூட்டமாகக் குவித்த குப்பை வெயிலில் உலரும் வகையை எண்ணிப் புன்னைமர நிழலில் முன் கொண்டு சென்று பின் வெயில் வந்தவுடன் அதனைப் பரப்பி உலர்த்துவர் (நற். 101:2-4). உமணர் உவர் நிலத்து விளையும் உப்பின் குன்று

போன்ற குப்பையை மலைநாட்டகத்தே கொண்டு போய விலை கூறி விற்பர் (நற். 138:1-3). குருகினம் நீர் வற்றிய சேற்றிலுள்ள கொழுமீனை அருந்த வெண்மணல் குப்பை மீதேறிக் காத்திருக்கும் (நற். 291:1-4). பரதவர் உவர் நிலத்து விளைகின்ற உப்பை உமணர் வரும் காலம் நோக்கிச் சோலை யருகில் காவலையுடைய குப்பையாகக் குவித்த அவ்வுப்புக் குவட்டில் ஏறிநின்று புலவும் மீனை உண்ணவரும் பறவைகளை ஓப்புவர் (நற். 331:1-4). விளையாட்டு மகளிர் வெண்மணல் குப்பை மீது குரவைக் கூத்தாடுவர் (ஐங். 181:2,3).

2. கூட்டம். தித்தன் வெளியனின் நீர்ப்பரப்பினை யுடைய கானலம் பெருந்துறையில் சிறிய வெள்ளிய இறாமீனின் குப்பை - கூட்டம் - பொன்னைக் கொண்டு வரும் மரக்கலம் சிதையுமாறு தாக்கும் (அகம். 152:5-8).

3. குப்பைமேடு. யான் கொண்டுள்ள காமநோய் குப்பையில் - குப்பை மேட்டில் - உள்ள கோழிகள் செய்யும் தொடர்ந்த தனிப்போர் போன்று தானே அழியுங்காலத் தழிவதன்றி அதனை இடையே நீக்கித் துணை செய்வார் யாருமிலர் எனத் தலைவி தனக்குள் கூறினாள் (குறு. 305:6-8).

**குப்பைக்கீரை** - குப்பையில் முளைத்த கீரை. குமணனிடம் பெருஞ்சித்திரனார் தம் மனைவி குப்பைக்கீரையில் - குப்பையில் முளைத்த கீரையில் - முன்பு கொய்யப் பட்ட கண்ணில் கிளைத்த தளிரைப் பறித்து உப் பின்றியே நீரை உலையாக ஏற்றி மோரின்றிச் சமைத்த உணவை உண்டு வருந்தினாளெனக் கூறினார் (புறம். 159:9,10).

**குப்பைக்கோழியார்** - புலவர். தம் பாடலில் குப்பைக் கோழிகளின் தனிப்போரினை உவமை கூறியுள்ள திறத்தினால் இவர் இப்பெயர் பெற்றார். அதன் பின் இவரது இயற்பெயரே இன்னதென்று விளங் காமல் ஒழிந்தது. இவர் தம் ஒரே பாடலான குறுந் தொகையில் (305) அவ்வுவமை அமைந்துள்ளது. காப்பு மிகுதிக்கண் தோழி அறத்தொடு நிற்க வேண்டித் தலைமகள் தனது ஆற்றாமை தோன்றத் தன்னுள்ளே கூறியதாக இவர் அப்பாடலை இயற்றி யுள்ளார். 'தலைவரைக் கண்ட நம் கண்கள் தந்த மையால் உண்டான காமமாகிய ஒள்ளிய தீ நம்மை எலும்புற வருத்துகின்ற தாயினும் அவரிடத்தே விரும்பிப் போயத் தழுவுதற்கியலாவாறு நாமும் அரிய காவலிற் பட்டோம்; நாமிருக்கு மிடத்தில் வந்து நம் துன்பத்தை அவரும் களைந்தாரல்லர் இந் நிலையில் யானுற்ற இக்காமநோய், பிறரால் ஏவப்படாமலும் இடையே பிரித்து நீக்கப் பெறா மலும் தாமே முனைந்து போரிடுகின்ற குப்பைக் கோழிகளின் தனிப்போர் போலத் தானே அழியும் வழி அழிந்தாலன்றி இதனை நீக்குவார் யாருமிலர்' என்று தலைவியின் கூற்றில் குப்பைக்கோழிப் போரினை இவர் பொருத்தமுறப் புனைந்துள்ளார்.

**குப்பைவேளை** - குப்பைக்கீரை. பசியால் இளைத்த கிணைமகள் தன் உகிரால் கிள்ளின குப்பைவேளை - குப்பைக்கீரை - உப்பின்றி வெந்ததை மடவோர் காண்டற்கு நாணித் தலைவாயிலை அடைத்து விட்டுத் தன் சுற்றத்தோடு உடனிருந்துண்டாள் (சிறு. 136-139).

**குமட்டூர்க் கண்ணனார்** - புலவர். கண்ணனாரென்ற இயற்பெயரையுடைய இவர், அப்பெயரே யமைந்த மற்றொரு புலவரினின்று வேறு பிரித்தறியப்படுதற் காகக் குமட்டூரென்ற ஊர்ப்பெயரோடு சேர்த்து வழங்கப் பெற்றார். குமட்டூர் எனப் பெயரிய ஊரொன்றும் இக்காலத்துக் காணப்படவில்லை. ஆயினும், கல்வெட்டுக் காலங்களில் அப்பெயரில் ஓங்கேரு மார்க்கத்துக் குமட்டூர் (இக்காலத்து ஆந்திர நாட்டுக் குண்டூர்) என்றும் ஓய்மானாட்டுக் குமட்டூர் என்றும் ஈரூர்கள் இருந்தன என்பதை எடுத்துக் காட்டி, அவற்றுள் இக்கண்ணனாருடைய ஊர் ஓய் மானாட்டுக் குமட்டூராம் எனக் கருத வாய்ப்புண்டு என்பர் ஔவை. து. (பதி. பாடினோர் வரலாறு). இக்குமட்டூரைக் குறித்த கல்வெட்டு கி. மு. இரண்டு அல்லது மூன்றாம் நூற்றாண்டினதாகக் கருதப்படு கின்றது என்பதனாலும் அது யோமிநாடு எனக் குறிப்பிடும் ஓய்மானாடு சங்க காலத்ததே என்பது சிறுபாணாற்றுப்படைத் தலைவன் ஓய்மானாட்டு நல்லியக் கோடன் எனப்படுதலால் புலனா கின்றமையாலும் இக்கல்வெட்டிற் காணப்படும் குமட்டூரைக் கண்ணனார் ஊராகக் கருதுதற்குத் தடையில்லை. பழைய ஓய்மானாடாகிய இக்காலத் துத் திண்டிவனம் பகுதியில் அவ்வூர்க்கு மேற்கே யுள்ள இன்றைய முட்டூர் என்னும் ஊர்ப் பெயர் அன் றைய குமட்டூர் என்ற பெயரினது சிதைவேயெனக் கொண்டால் அவ்வூரே இப்புலவரின் ஊராகலாம். இமையவரம்பன் நெடுஞ்சேரலாதனைப் பத்துப் பாடல்களால் பாடிய இவர்க்கு அவன் உம்பற் காட்டு ஐந்நூறு ஊர்களைப் பிரமதாயமாகக் கொடுத்தான் எனப் பதிற்றுப்பத்தின் இரண்டாம் பதிகம் கூறுதலால் இவரை அந்தணப் புலவரென அறியலாம். இவர் அவனைப் பாடியதற்குப் பரிசி லாக அப்பிரமதாயத்துடனே முப்பத்தெட்டு

ஆண்டுகள் தென்னாட்டு வருவாயினிற் பாகமும் பெற்றார். கடல் கலங்குமாறு அதனுட் சென்று சூர்மாவினைத் தடிந்து முருகவேள் களிறூர்ந்தாற் போல இமையவரம்பனும் கடலிற் சென்று அங்கே குறும்பு செய்திருந்த கடம்பரை அழித்து அவரது காவல்மரமாகிய கடம்பினையறுத்து யானைமேற் பொலிந்திருந்தமையை இவர் அழகுபடப் புனைந் துள்ளார் (பதி. 11). இமையவரம்பனின் பகைவர் நாடுகள் அவனால் அழிக்கப்படுதற்கு முன்னிருந்த வளமிகு நிலைகளையும் அழிக்கப்பட்ட பின் எய்திய பாழ்நிலைகளையும் இவர் சொல்லோவியப் படுத்துந் திறன் பாராட்டத்தகும் (பதி. 13, 15, 19). 'அரிமான் வழங்கும் சாரற் பிறமான், தோடுகொள் இனநிரை நெஞ்சதிர்ந்தாங்கு' (பதி.12:5,6) எனவும், கூற்றுடூஉ நின்ற யாக்கை போல' (பதி. 13:11) என வும் பொருள்நயம் மிக்க உவமைகளை இவர் ஆண்டுள்ளார். 'ஆறிய கற்பின் அடங்கிய சாயல், ஊடினும் இனிய கூறும் இன்னகை' (பதி. 16:10,11) என இமையவரம்பன் பெருந்தேவியின் பெண்டன் மைகளை இவர் நுண்ணிதின் புலப்படுத்துவர். 'மாரி பொய்க்குவ தாயினும், சேரலாதன் பொய்ய லன் நசையே' (பதி. 18:11,12) என்று இவர் இமைய வரம்பனைப் பாராட்டி, 'அவனை ஈன்ற தாய் வயிறு விளங்குவாளாக' (பதி. 20:27) என வாழ்த்தி முடித்துள்ளார். இப்பத்துப் பாடல்களே இவரு டையனவாக உள்ளன.

**குமண** - குமணன் என்ற பெயரின் அண்மை விளி. இயல்தேர்க் குமண (புறம். 158:26). கூர்வேற் குமண (புறம். 159:25). நற்போர்க் குமண (புறம். 164:8).

**குமணன்** - வள்ளல். முதிர மலைத் தலைவனான இவன் கடையெழு வள்ளல்களுக்குக் காலத்தாற் பிற்பட்டவன் (புறம். 158). பெருஞ்சித்திரனார், பெருந்தலைச் சாத்தனார் என்ற இருவராலும் இவன் சிறப்பித்துப் பாடப் பெற்றுள்ளான். 'கூர்வேற் குமண' (புறம். 159: 25), திருந்துவேற் குமணன் (புறம். 163:9), விறன் மிகு குரிசில் (புறம். 161: 20), நற்போர்க் குமண (புறம். 164:8), என் பனவற்றால் இவனது போர் வன்மையும், 'நட் டோர் நட்ட நல்லிசைக் குமணன்' (புறம். 160:12), இன்மை தீர்க்கும் குடிப்பிறந்தோயே' (புறம். 164: 13), 'ஆடியல் யானை பாடுநர்க் கருகாக், கேடில் நல்லிசை வயமான் தோன்றல்' (புறம். 165:7,8) என்பனவற்றால் இவனது கைவண்மையும் விளங்கு கின்றன. பகடு முதலிய பரிசில்களால் இவன பெருஞ்சித்திரனாரை மிகவும் சிறப்பித்தனன். அவர்க்கு இவன் அளித்த பரிசில் மிகுதியை, 'எல் லோர்க்கும் கொடுமதி மனைகிழவோயே, பழந் தூங்கு முதிரத்துக் கிழவன், திருந்துவேற் குமணன நல்கிய வளனே' (புறம். 163:7-9) என்று அவர் தம் மனைவிக்குக் காட்டிக் கூறுவதனால் நன்குணர லாம். எவ்வாறோ இவன், தன் தம்பியால் நாடு கைப்பற்றப்பட்டுக் காடு பற்றியிருந்த காலத்துப் பெருந்தலைச் சாத்தனார் இவனைப் பாடித் தமது வறுமையுணர்த்திப் பரிசில் வேண்ட, அந்நிலையில் இவனது தலையைக் கொணர்ந்து கொடுப்பார்க் குப் பரிசில் தருவதாக இளங்குமணன அறிவித் திருந்த செய்திகேற்பத் தன தலையைக் கொண்டு போய்க் கொடுத்துப் பரிசில் பெறுமாறு இவன் அப்புலவர்க்கு இசைவோடு வாளினை யெடுத்து நீட்டினன் (புறம். 164,165) என்பதனால் இவனது உயிரினும் மேம்பட்ட வண்மைச் சிறப்புப் புல னாகும்.

**குமர** - முருக. கற்புப் பொருந்திய நெறியையுடைய தேவியரது அன்பு பொருநதிய ஊடலுரிமையை விரும்புகின்ற பண்பை யுடைய குமர - முருக - எனச் செவ்வேள் விளிக்கப் பெற்றார் (பரி. 9: 81,82).

**குமரவேள்** - முருகன். குமரவேளைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டு நக்கீரனார் திருமுருகாற றுப்படையைப் பாடினார் (முரு. அடிககுறிபபு).

**குமரி** - 1. யாறு. அச்சம் பொருந்திய குமரி - குமரி யாறு - தமிழகத்தின் தெற்கெல்லையாகும் (புறம். 6:2). தென்றிசைக்கண் குமரியும் வடதிசைககண் இமயமும் கீழும் மேலும் கடலும் எல்லையாக வுடைய நடுவுபட்ட நிலமாகிய குன்றும் மலையும் காடும் நாடும என இவற்றையுடையோர் யானைக கட்சேய் மாநதரஞ்சேரலிரும பொறையிடம் ஒனறு பட்டு வழி மொழிநதனர் (புறம். 17:1-4). இமைய வரமபன் நெடுஞ்சேரலா'தன, பெரிய புகழை யுடைய இமயமும் தெற்கினகண்ணுள்ள குமரியும ஆகிய இவறறிற் கிடைப்பட்ட நாட்டிலுளள செருக்குற்று மீககூறும் மன்னர்களின மறம் கெட் டழியுமாறு அவரை வஞ்சியாது பொருது வென றான் (பதி. 11:23-25). குட்டுவன இமயம் வடக் கெல்லையாக, குமரி தெற்கெல்லையாக இவற்றி டையேயுளள மனனர் செய்யும் பெருமபோரைக் கெடுத்து, ஆரவாரம் எழ அவர் நாட்டின் தொல் கவினை அழித்தான் (பதி. 43: 7-11). தென்றிசைக் கண் குமரியும வடதிசைக்கண இமயமும் கிழக்கும மேற்கும் கடலும் எல்லையாக இடையில் வாழ் வோரெல்லாம் நெடுஞ்செழியனிடம தொனறு மொழிந்து ஏவல் கேட்டனர் (மது. 70-72).

2. அழியாத்தன்மை. குமரி - அழியாத்தன்மை - (வாய்ந்த) படையைக் கொண்ட மறவர், போர்க் களத்தில் 'நும்மில் வாழ்நாள் முறை முடிந்தவர் போர ஈங்கு வருக' எனக் கூறிப் போர் மலைந்து நின்றனர் (புறம். 294:3-7). தலையைத் திறந்து உள்ளே சொரியப்பட்ட பழைய நெல்லினையுடைய குமரி முதிர்ந்த நெற்கூடுகளை உடையது இல்லம் (பெரு. 246,247).

3. இளமை. பாலை நிலத்தில் வளர்ந்த குமரியை - இளமையை - உடைய வாகை மரத்தின் கொம்பில் உள்ள நறுமலர் மயிலின் உச்சிக்கொண்டையைப் போலத் தோன்றும் (குறு. 347:1-3). தழையுடுப்பவர் கொய்தற்குரிய குழை தழைத்த குமரி ஞாழல் திரையின் புறத்தைத் தடவி நிற்கும் (நற். 54:8-10).

**குமரி மகளிர்** - கன்னி மகளிர். குமரி மகளிரின் - கன்னி மகளிரின - கூந்தல் போன்ற போர்கருதி நடப்பட்ட நெருங்குதற் கரிய முள்வேலியுடையது பாசறை (புறம். 301:2-4).

**குமரியம் பெருந்துறை** - குமரியாற்றின் பெருந்துறை. 'அன்னச் சேவலே, குமரியம் பெருந்துறையிடத்து அயிரைமீனை உண்டு வடமலைக்குப் பெயர்குவையாயின் இடைப்பட்ட சோழநாட்டின் உறையூரில் உள்ள அரண்மனைக்கண் தங்கி எம் பெருங்கோக் கிள்ளி கேட்ப ஆந்தையுடைய அடிக்கீழ் என்று சொல்லின நின் இனபுறு பேடை அணிய நன்கலம் நல்குவன' என்று பிசிராந்தையார் அன்னச் சேவலை விளித்துக் கூறினார் (புறம். 67: 1,6-14).

**குமிழ்** - மரவகை. குமிழை - குமிழம்பழத்தை - உண்ணும் வெள்ளாடுகள் எருவாய வழியாகப் பிழுக்கையுடன் வெளிப்படுத்திய வெள்ளிய கொட்டைகள் பந்தரின் கீழ்ப் பரவிக் கிடந்தன (புறம். 324: 9,10). புகழப்படும் வினையாற் பொலிவு பெற்ற யாழின் போர்வை காட்டிலுள்ள குமிழம் பழத்தின் நிறத்தினை ஒத்தது (சிறு. 225-226). குமிழினது உள்துளையாகிய கொம்பிடத்தே வளைத்துக் கட்டின மரற்கயிறாகிய நரம்பினையுடைய வில்யாழில் இடையன குறிஞ்சிப் பண்ணை இசைத்தான் (பெரு. 180-182). சுரத்திலுள்ள குமிழ மரத்தின் வளைந்த மூக்கினையுடைய முற்றிய கனிகள் கீழே உதிர்ந்து அங்கு விளையாட்டயரும் இளமான்களுக்கு உணவாகும (நற். 6:7,8). பிணைமான் உராய்தலின் மடநதையின் பொற்காசு போன்ற பழங்கள் உதிரப் பெற்ற குமிழ மரங்கள சுரநெறியில் நிறைந்திருந்தன (நற். 274:3 5). குமிழ மரத்தின அழகிய இதழையுடைய மலர் கற்பாறையில் கோலஞ் செய்தாற போல உதிர்ந்து கிடக்கும் (நற். 286:2,3).

**குமிழி** - நீர்க்குமிழி. கான்யாறு குமிழிகள் - நீர்க் குமிழிகள் - சுழன்று வரும் ஆழ்ந்த நீரறாத மடுக்களையுடைய முடுக்கரை உடையது (மலை. 213,214). குயவன் வனைகின்ற மட்கலத்தின் சக்கரம் போலக் குமிழி சுழன்று தோன்றும் விரைந்த செலவினையுடைய வாய்த்தலையில் (தலைமடையில்) ஒழிவின்றி ஓடும் காண்போர் விரும்பும் கட்கு இனியது சேயாறு (மலை. 474-476). ஈங்கை அரும்பும் அதிரல் மலரும் மணல் எக்கரில் உதிர்ந்து மான்களின் வலிய குளம்பினால் மிதிபட்டு அழுந்துகையினாலே வெள்ளியைக் குகையிலிட்டுச் சாய்த்தாற் போல அவற்றினின்றும் நீர்க் குமிழியாக வடியும் தண்ணீரை உடையது கூதிர்ப்பருவம் (நற். 124:4-9).

**குமுழிஞாழலார் நப்பசலையார்** - புலவர். நப்பசலையார் என்ற இயற்பெயரையுடைமையால் இவர் பெண்பாற் புலவர் என்பது போதரும். குமுழிஞாழல் என்பதை இவரது ஊர்ப்பெயராகப் ப. மு. தமிழ் அட்டவணை (பக். 292) கூறும். இவருடைய பாடலொன்று அகநானூற்றில் (160) உள்ளது. 'இது காறும் இரவின்கண் வந்த தலைவனது தேர் இன்று ஆரவாரமிக்க இளையரொடு அலரெழுப்பும் ஊர்ப் பெண்டிர் பலரும் காணுமாறு மறைவின்றிப் பகலிலேயே வந்தது கண்டு என்னெஞ்சு நடுங்குகின்றது; தோழி, உனக்கும் இந்நடுக்கம் உள்ளதோ' என்று தலைவியிடத்து வினவுவாள் போலத் தோழி தலைவனது வரைவு மலிவினை உணர்த்தும் நயத்தினை இவரது பாடலிற் காணலாம். பெடையாமை மறைவிடத்திலே முட்டையிட்டு அதனை மறைத்துப் போவதும் அதன் கணவன் அம்முட்டையைக் குஞ்சு வெளிப்படுமளவு பாதுகாப்பதும் ஆகிய உயிரியலுண்மையை இவர் அழகுறப் புனைநது அப்புனைவினுள் ஓர் உள்ளுறைப் பொருளை யுணர்த்தும் திறன் சிறப்பாக உணரத்தகும்.

**குய்** - தாளிப்பு. மகளிர், அமிழ்தத்தைத் தன் சுவையால் வென்று உண்ண உண்ண அமையாத மணங்கமழும் குய்யுடைய - தாளிப்பையுடைய - அடிசிலை விருந்தினர்க்கு வழங்கும் வகையில் வாழ்க்கையினையுடையவர் (புறம். 10.7-9). செல்வர் நுகர்தற்கு இனிதாகிய குய்யுடை அடிசிலைப் பிறர்க்குக் கொடுக்காமல் தாமே உண்டு புகழெய்தார் (புறம். 127:7-10). வாடிய வரிக்குடர் குளிருமாறு குய் சேரப்பட்ட கொழுவிய சுவையோடு கூடிய நெய்யுடைய அடிசிலைக் குமணன் பாணர்க்கு வழங்கினான் (புறம். 160:5-7). குய் ஓசை மிக்க கொழுவிய துவையோடு கூடிய அடிசிலால் இரவலரைத் தன்னிடத்தே தகைக்குந் தன்மை வாய்நத வாயிலினையுடையது இல்லம்

(புறம். 250.1-2). கனிந்த குய்யோடு கூடிய கொழு வீய துவையலைப் பிறர்க்கு அளிக்கும் ஈகை முதலான பண்புகளை யுடையோருமாய்ப் பலர்க்கும் பயனுண்டாகத் தக்க செயல்களைச் செய்து இந்நிலவுலகம் இன்பம் எய்துமாறு ஆண்ட வேந்தர் சிலரே யாவர் (புறம். 360:5-6). நெய்யால் குய் செய்யப்பட்ட ஊன்கலந்த பல வகையான சோற்றுடன் இனிய சுவையுடைய பிற பொருள் களையும் சோழன் நலங்கிள்ளி பாணரின் பசித் துன்பம் கெடுமாறு வழங்கினான் (புறம். 382:8-10). கிள்ளிவளவன் பாணர்க்கு, நெய் மிகச் சொரிந்து பொரித்த குய்யுடைய நெடிய சூட்டிறைச்சியும் மணங்கமழும் கட்டெளிவும் பூங்கலிங்கமும் நல்கினான் (புறம். 397:13-16). பாசவர் ஊனை வெட்டும் மனைமேல் வைத்துக் கொத்தித் துண்டித்த நிணம் பொருந்திய இறைச்சி, வேகவைத்துக் குய்யிடுந்தோறும் கடலொலி போல அமையாது ஆர்க்கும் (பதி. 21:9-12). நிணத்தையுடைய தசைகள் சுடுதலால் அந்நிணம் உருகி நெய் நிறையப் பெற்றுப் பொரிக் கறிகள் ஆரவாரிப்ப, நிறத்தையுடைய குய்யில் எழுந்த புகை முகில் போலப் பரந்தது (மது. 756-758). தலைவி தயிர் பிசைந்த மென்விரல்களைத் துடைத்துக் கொண்ட ஆடையைத் துவையாது உடுத்திக் குவளை போன்ற உண்கண்ணில் குய்யினது புகை மணப்பத் தலைவனுக்காகத் தீம்புளிக் குழம்பு அட்டாள் (குறு. 167:1-4). நெய்யும் குய்யினால் எழுந்த புகையும் பட்டுத் தலைவியின் புதல்வனுக்கு உடம்பும் ஆடையும் மாசு பட்டன (நற். 380:1,2).

**குயம்** - 1. குயவர். உழவரது தண்ணுமை யோசை கேட்டஞ்சித் தேன் கூட்டினின்றும் தேனீக்கள் பறந்தமையின் தேனடையிலுள்ள தேனை வடித்துக் கொள்ளும் குயம் - குயவர் - வாழும் சேரியினை யுடையது ஊணூர் (புறம். 348:1-5).

2. அரிவாள். களமர் வளைந்து நின்று குயத்தின் - அரிவாளின் - வாயாலே நெல்லையறுத்து நெற் சூட்டை மலையாக அடுக்குவர் (பொரு. 242,243).

3. முலை. தலைவன் மகளிரின் குயம் - முலைகள் - தோய்தற்குரிய மார்பில் செஞ்சாந்து பூசியிருந்தான் (அகம். 48:11).

**குயவ** - குலால. 'நொச்சி மாலையைச் சூடி, அகன்ற நெடுந்தெருவில் நடக்கப் போகும் விழாவினை ஊரார்க்கு அறிவுறுத்துச் செல்லும் அறிவு வாய்ந்த குயவ - குலால' - நீ, வயலும் பொய்கையுமுடைய ஊரினிடத்துச் செல்வையாயின் அங்குள்ள மகளிரைக் கூவிப் பாணன் செய்த துன்பங்கள் பலவாகி வளர்வன ஆதலின் இவன் பொய்பொதிந்த கொடுஞ் சொல்லினின்றும் நும்மைப் பாதுகாத்துக் கொள்மின்' என்று அவ்விடத்துள்ளார்க்கு உரைப்பாயாக என வாயிலாகப் புக்க பாணன் கேட்பத் தோழி குயவனிடம் கூறினாள் (நற். 200).

**குயவரி** - புலி. குயவரி - புலி - பொருதலான் புண் மிகுந்து வருந்தும் பிடியானையால் தழுவப்படும் களிற்றியானை மூங்கிலாற் செய்த தூம்பு போல முழங்கும் (அகம். 398:22-24).

**குயவன்** - குலாலன். திருவிழாச் செய்தலை மேற் கொண்ட மூதூரிடத்திலுள்ள மன்றத்தின்கண் கள் ளுண்ணும் முதிய குயவனை - குலாலனை - நொச்சி மாலை சூடித் தனனால் இடப்படும் பலியை உண்ணுதற்கு அணங்குகளையும் காகைகளையும் அழைப்பான் (நற். 293:1-4).

**குயில்** - பறவையினம். அதிரலின் கூரிய அரும்பு குயிலலகு போன்றது (புறம். 269: 1). நறும்பொழிலில் குயில்கள் அலகாலுளர்ந்து உதிர்த்த புதிய பூக்களாகிய வாடலைக் கான்யாற்றுக் கரிய நுரை நறல் சூடி மயிரை விரித்ததைப் போன்று காணப்பட்டது (சிறு. 4-8). இளமரக்கா, ஞாயிற்றின் கதிர் செலவு தலறியாத குயில்கள் நுழைந்து செல்லும் தன்மையினையுடையது (பெரு. 347). முனிவர் தீயின்கண் வேட்கும் ஆவுதி நறும்புகையை வெறுத்துக் குயில்கள் தம் பேடைகளுடன் நீங்கிப்போய், பூதங்காக்கும் அருங்கடி நகரிலுள்ள தூதுணம் புறவுகளுடன் துச்சிலில் தங்கின (பட். 54-58). மாவின தாதினைக் கோதிய நீலமணி நிறத்தினை யொத்த கரிய குயில், ஒலிக்கும் தனது நாவின் கூவுதலால் நடுநிலை மேவி நாள்தோறும் சில கூறுவன போல முறைகொண்டு கூவியது (அகம். 25:6-8). இளவேனிற் காலத்தே (இன்பத்தை) நுகரும் குயில்கள் பாடும் குரலினைக் கேட்போருக்குக் கண்ணீரை நிறுத்துதல் எளிதாகுமோ என்று தலைவி தோழியிடம் உரைத்தாள் (அகம். 97:15,16,23). இளவேனிற் காலத்தில் முருக்க மலர்களைக் கிண்டி, அதன் தாதுக்களை உண்டு, மாமரத்தின் கிளை உச்சியிலிருக்கும் சிவந்த கண்ணினையுடைய கரிய குயில் இனிமை தோன்றக் கூவும் (அகம். 229: 16-20). வேனிற் காலத்தில் குயில கூவுதலைப் பயின்றது (அகம். 237:5). சீறியாழின் இசை பூங்கொம்பிலிருந்து மகிழ்ந்து கூவும் குயிலின் ஓசையோடு கூடிப் புணர்துயிலை எழுப்பும் (அகம். 279: 11-13). உகாவின் காய் குயிலின்கண் போன்றது (அகம். 293:6,8). 'மராமரத்திலிருந்து குயில் செய்யும் ஆரவாரத்தினை நும்முடனிருந்து கேட்க யான் வருவேன்'

என்றூ தலைவர் குறித்த இளவேனிற் பருவம்
அவா சென்றவிடதகில இல்லையோ எனத் தோழி
தலைவியை வினவினாள் (அகம். 317:15-18). குயில்
தேனை பெருகும் மாமரத்தின் உயர்ந்த கிளையி
லிருந்து கூவும் (அகம. 341:2,3). குயில் மாமரத்தின்
கொம்புகளிலிருந்து மிக இனிய குரலால் பலகாலும்
கூவியது (அகம். 355;1,2). மினனுகின்ற இனிய சிறகு
களையுடைய கரிய குயில், தன் மேனி பொன்னை
உரைத்த பொடி விளங்குகின்ற உரைகல்லை
யொபப மாறும்படி மாஞ்சினையிலுள்ள நறுந்
தாதைக் கோதும் (குறு. 192: 3-5). நறுந்தண்
பொழிலில் மாமரததின் அரும்பைக் கோதி மகிழ்
கினற குயீல் கூவி விளையாடும் (நற். 9: 10,11).
வீழுப்புண காயாத மார்பிடத்தில் வேற்படை
யைப பாய்ச்சினாற் போலக் குயில்கள் தலைவியின்
அருகிலிருநது பிரியாதனவாய் வருந்திக் கூவின
(நற். 97: 1-3). மாமரம் தளிர்த்துக் கவினெய்திய
தண்ணறும பொழிலில் சேவலுடன் பொருந்
திய சிவந்த கண்ணை யுடைய கரிய குயில்
ஒன்றனை யொன்று விரும்பி எதிரெதிர் இருந்து
ஆரவாரிக்கும் (நற். 118:1-4). இளவேனிற் பருவத்
தில பூங்கொத்துக்கள் நிரம்பிய மாமரத்திலுள்ள
பெடையோடு புணர்கின்ற குயில் கூவுந்தோறும்
கேட்டுத் தலைவி நமமை நினைத்த நெஞ்சத்துடன்
செயலற்றுப் பெரிதும் அழுவளோ எனத் தலை
வன் தன்னெஞ்சிற் குரைத்தான் (நற். 157:4-7).
மாவின பூங்கொத்து மீது சிவந்த கண்களை
யுடைய கரிய குயிலின் சேவலும் பெடையும் எதி
ரெதிரிருந்து 'தலைவனும் தலைவியுமாய்ப் புணர்ந்
தீர் பிரியாதீர்' எனறு கூறுவதுபோல இளவேனிற்
காலததில் இன்குரல் பயிற்றும் (நற். 224:4-6).
மாமரம மிகக சோலைதோறும் தங்கும் சிவந்த
கண்ணுடைய கரிய குயிலகள், 'சூதாடு கருவி
பெயர்நது விழுமாறு போன்ற நிலையில்லாத
பொருளீட்டும் வாழ்க்கையை ஏதுவாக உடையீர்;
நும் காதலியை அகறல் ஓம்புமின' என்று துறந்து
செல்வோரை இடித்துரைப்பன போலக் கூவின
(நற். 243:3-8). மனையகத்துள்ள நொச்சிவேலி
யிலுயர்ந்த மாமரத்தின் கிளையிலிருந்து கூவுந்
தொழிலிலே மாட்சிமைப்பட்ட கரிய குயில கூவியது
(நற். 246:3,4). இளவேனிற் பருவத்தில் குயிலின்
பேடு தன இன்றுணையைக கூவி அழைக்கும் (ஐங்.
341:2,3). பாதிரி மலா அலரும் இளவேனிற காலத்
தில் சிவநத கணணினையுடைய கரிய குயில் கூவும்
(ஐங். 346:2,3). குரவ மரத்தின் நீள் கிளையில்
உறையும கரிய குயிலினத்தின் ஆரவாரத்திலும்
பெரிதாக அலரெழுந்தது (ஐங். 369:3-5). நிலம்
பொலிவு பெறுதற்குக் காரணமான மரத்தின்
மேலேயிருந்து மனஞ்செருக்கும் குயில்கள் தம்மை
இகழவும் தம் நன்னிறம் கெடவும் தலைவர் தம்மை
மறந்தார் எனத் தலைவி தோழியிடம் கூறினாள்
(கலி. 27:9,10). மலர்கள் மலர்ந்து அமையாவாயின்,
குயில்கள் தம் பெடையை அழைத்துக் கூவுமாயின்,
தலைவர் நம்மைப் பிரிந்து நினையாராயின், இள
வேனில் மயககமுறுத்துமாயின், தலைவர் செய்யும்
அளிதான் என்ன பயனைத் தரும் என்று தலைவி
தோழியை வினவினாள் (கலி. 28:8-11). இளவேனிற்
காலத்தில் வெயில் ஒளியை அறியாத, விரிந்த
மலரையுடைய குளிர்ந்த பொழிலில் குயில்கள்
கூவின (கலி. 30:7,8). 'நமக்கு நோய்தரும்படி கரிய
குயில்கள் கூவி நிற்கவும் ஒரு தூதினையும் விடாத
நம் தலைவர் நம்மைத் துறப்பரோ, துறவாரோ'
என்று தலைவி வினவ அதற்குத் தோழி 'நீ நம்மை
இகழும் குயிலையும் தலைவரையும் புலவாதே;
தலைவர் தாம்கூறிய சொல் பொய்க்காமல் தேரை
விரைந்து செலுத்தி வந்தார் என்று கூறினாள்
(கலி. 33:24-31). காஞ்சிப்பூவின் தாதை அளைந்து
கரிய குயில்கள் கூவின (கலி. 34:8). மிக இகழும்
குயிலைப் பார்த்துத் துன்புற்றுக் கெடுகின்ற நெஞ்
சத்தோடே தலைவா நம்மைத் துறந்து இனி
நினையார் எனறு வெறுப்புக் கொள்ளாதே
எனத் தோழி தலைவனிடம் கூறினாள் (கலி. 35:
7, 8). கரிய குயில்கள் கூவ, பெருந்துறை கவின்
பெற, விழாவினை எதிர்கொள்ளும் இளவேனில்
வந்தது (கலி. 36:8-10). இளவேனிற் காலத்தில்
அருமபவிழ்ந்த பூஞ்சினைதோறும் இருந்த கரிய
குயில்கள் 'பலமுறையும் கூடிப் புணர்நதீர், பிரியன்
மின்; நீடிப் பிரிநதீர், புணர்தர வம்மின்' என்று
கூறுவன போலக் கூவின (கலி. 92:60-64). மயில்கள்
அகவ, குருக்கததி இலையுதிர, அதனகண்ணிருந்து
குயிலினம் கூவக் குழலொலிக்கப் பல ஒலி எழுத
லால திருமாலிருங் குனறத்தின குகைக்குள் தோன்
றும் எதிரொலி ஒழியாது (பரி. 15:40-45).

**குயினர் – துளையிடுவார்.** சங்கை யறுத்து வளை
முதலியனவாகக் கடைவாரும் அழகிய மணிகளைக்
குயினரும - துளையிடுவாரும் - பிறரும் கூடி
நான்காய் வேறுபட்ட தெருக்கள் தோறும் ஒருவர்
காலொடு ஒருவர் கால் நெருங்குமாறு நின்றனர்
(மது. 511,522).

**குரங்கு - 1.** விலங்குவகை ஓடைகிழார் தமக்கமைந்த
பகைகளுள் ஒன்றாக அவர்தம் கைப்பொருளைத்
தாவெனறு சொல்லி அவா நிலை தளருமாறு
மரங்கள் செறிந்த மலையிற் குரங்குபோலப் பறித்

துக்கொள்ளும் குறுங்கூளியரைக் குறிப்பிட்டுள்ளார் (புறம். 136: 11-14). இராமனின் மனைவி சீதையை அரக்கன் (இராவணன்) வௌவிய பொழுது அவள் நிலத்தில் கழற்றி எறிநத தன் அணிகலன்களைக் கண்டெடுத்த குரங்கினம் அணியும் முறை அறியாது இட மாற்றி அணிந்து கொண்டது போலச் செருப்பாழி யெறிந்த இளஞ்சேட் சென்னியின் பாற் பெற்ற அணிகலன்களை அணியும் முறை யறியாது கிணைஞரின் வறிய சுற்றம் இடம் மாற்றி அணிந்தது (புறம். 378: 10-21). காடு குரங்குகளும் ஏறியறிதல இல்லாத நீண்ட மரங்கள் செறிநதது (அகம். 368:9). மிளகுக் கொடி வளரும் மலைப்பக் கத்தே தளிரை உண்ணுகின்ற குரங்குகள் ஒன்றாகத் திரண்டிருக்கும் (குறு. 288: 1, 2). குரங்கின் தலைவனாகிய நிறம் பொருந்திய மயிரையுடைய கடுவன் பிரப்பஞ் சிறுகோல் கொண்டு பாறையிற் பெய்த மழைநீர்க் குமிழியைப் புடைக்கும் (ஐங். 275:1-3). மலையின்கண்ணதாகிய மூங்கிற் கோல் குரங்குக்குட்டி தன் மேலிருந்துழி வளைந்து அது பாய்ந்து செல்வுழி மீனெறி தூண்டில் போல் நிமிர்ந்தது (ஐங். 278:1-3). வழுதியுடன் செவ்வேள் பரங்குன்றுக்குச் சென்றவருட் சிலர் அங்குள்ள குரங்கு அருந்துமாறு பண்டங்களைக் கொடுத்தனர் (பரி. 19:38).

2. வளைவு. குதிரை குரங்கு - வளைவு - பொருந்திய தலையாட்டத்தாற் பொலிந்த கொய்யப் பெற்ற பிடரிமயிரினை உடையது (அகம். 4:8). அகன்ற வயலில் கிளைத்து வளர்ந்த கரும்பின் பெரிய பூ மழையில் நனைந்த நாரையைப் போல ஈரங் கொண்டனவாயக் குரங்க (வளைந்திருக்க) பனியொடு வாடைக்காற்று வீசியது (அகம். 235:11-15). அழகிய குரங்கு பொருந்திய பிடரிமயிர் வாய்ந்த குதிரை யையுடைய குட்டுவனுக்குரியது மரநதை என்னும் ஊர் (அகம். 376:16-18).

குரம்பை - சிறிய மனை. பறம்பு நாட்டினர் நிலத்திற் புதைக்கபபட்டு முற்றிய மதுவாகிய தேறலைப் புல வேய்நத குரம்பையில் - சிறிய மனையில் – குடியுள்ள இடந்தொறும் நுகரக் கொடுப்பர் (புறம். 120:12,13). குறிய இறப்பையுடைய குரம்பைக் கண் உள்ள குறவர் விளைந்த மதுவை உண்டு மகிழ்ந்து வேங்கை முன்றிலிற் குரவையாடுவர் (புறம். 129:1-3). மறவன் வேல் இலைப்பக்கம் புழுதி படிந்து குரம்பைக் கூரையில் செருகப்பட்டு அதனோடு ஒன்றாய்க் கலந்து கிடப்பினும் கிடக்கும் (புறம். 332:1-4). 'வேலூரைச் சேரின் உள்ளுறைவோர் வருந்துதற்குக் காரணமான வெப்பமிக்க குரம்பையிலுள்ள எயிற்றியர் அட்ட ஆமான் சூட்டொடு கூடிய இனபுளிசசோற்றை நும் ஆயத்தொடு பெறுவீர்' எனச் சிறுபாணன ஆற்றுப் படுத்தப் பெற்றான் (சிறு. 174-177). புனத்தில யானை தின்னாமற் காப்போர் பரண்மேல் கட்டிய குரம்பை போலக் கோழி தங்கும் கூடு இருநதது (பெரு. 51,52). அணிலும் எலியும் திரியாதபடி வேலின் முனையை யொத்த கூர்த்த முனையினை யுடைய ஈந்தின இலையாலே வேயபபட்ட எய்ப் பன்றியின் முதுகு போல் காணப்பட்ட குரமபை யில் எயிற்றியா மானதோற் பளளியில் தம மக வொடு முடஙகிக் கிடந்தனர் (பெரு. 85-89). கோவலர்தம குரம்பை ஆட்டுமறிகள நின்று தினனும் பொருட்டுத் தழைகள் கட்டின குறிய காலகளையும் சிறு தூற்றையுடைய வாயிலையும கழியாற் செறிததுக் கட்டப்பட்ட கதவினையும் வரகுக் கற்றையாலே வேயப்பட்ட கழிகளைத் தலையிலே யுடைய சாம்பினையும் உடையது (பெரு. 147-150). வலைஞரின் குறியிறைக் குரமபை வெள்ளிய மரககொம்புகளைப் பக்கத்தில இடையிடையே கலந்து வேழககோலை வரிசசாக நிரைத்துத் தாழை நாராற் கட்டித் தருபபைப புல் வேய்ந்தது (பெரு. 263-265). குரமபை இலையால வேயப்பட்டது (மது. 310). குரமபை தினையரிநத தாளால் வேயபபெற்றது; குறிய காலகளை யுடையது (குறி. 153). விலங்குகளைக் கொனறு இறைசசி விற்போரின குரமபையில் விலங்குகள கிடநதன (பட். 198). அகனற ஊரிடத்துக கழிகளை வைநதுக் கட்டிப் புல் வேயந்து குரம்பை அமைத்தனா (மலை. 438,439). பலாமரததின் பழமாய பயனைக கொள்ளுதற்குக் காவல செயயக் குறவர் ஊனறிய குரம்பை மறையுமாறு வேங்கை மலர் பரநத அதன் தோற்றததைக் கண்டு புலியெனறு களிறு யானைகள் அஞ்சின (அகம. 12:8-11). 'பலா ரந துடன் செனற தலைவி, கலலென் சீறூரில இரவிலே தங்கி முதுமை வாயநத பெண்டின சோர்ந்த காலினை உடைய குரம்பையில தலைவன தோளில அணைத்துத் துயிற்றத் துயிலாதவளாய ஏறுகோட் பறையின் ஒலியினைக் கேட்டு அழுவாளோ எனத் தன் நெஞ்சு வருந்துவதாகத் தன் மகளிடம் செவிலி கூறினாள் (அகம். 63:13-19). வறிய சீறூா தயிர் கடையும் மத்து கன்று வாயினாற் சுவைககத் தொங்கும் முனறிலையும் புல்வேயந்த குரமபை களையுமுடையது (அகம். 87:1-4). காட்டிடததுப் பாறைக்குப் பக்கத்தே சிதைவுற்ற குரமபை இருநதது (அகம். 129:6). கானவன அம்பினால யானையைக் கொன்று அதன் வெணகோடடினை ஊகம்

புலலால் வேய்ந்த குரம்பையில் ஊன்றிப் பலாப் பழத்தின் பிழிவை உண்டு மகிழ்ந்தான் (அகம். 172: 6-12). புலால நாறும் சேரியில் நிலாப்போல வெண் மணல் மலிந்த தெருவில் புல்லால் வேயப்பெற்ற குரமபை இருந்தது (அகம். 200:1,2). பரதவரின் குரம்பை குறிய இறப்பினை யுடையது (அகம். 210: 1). தன் கன்றுணண வேண்டித் தழை உண்ணாது வாடி வருநதிய மருங்குலினையுடைய மடப்பிடி பாழ்பட்ட ஊரிலுள்ள குரம்பை போலத் தோன் றும் (அகம். 229:4-6). தலைவியின் குறியிறைக் குரம் பைக்கண் தலைவன் உவந்து புகுந்தான் (அகம். 272: 11,12). கானவர் புதல்போல் குரம்பையின் முனறி லில தேக்கிலையில ஊனாகிய புழுக்கப்பட்ட உண வினை அயர்வர் (அகம். 315:15-18). அங்குடிச் சீறூ ரில் குவிந்த குரம்பைகள் இருந்தன (அகம். 329:4). வறுமையுற்ற பெண்டினது சீறூரிலுள்ள புல்வேய் குரம்பையது முன்றிலின தூணில் ஒரு பசு கட்டப் பெற்றிருந்தது (அகம். 369:22-24). புல்வேய் குரம் பையின் முனறிலில் மரையின இனம் நெல்லிக் காயை உண்ணும் (குறு. 235:3-5). மலையிலிருந்து வீழும் வெள்ளருவி இலையால் வேய்ந்த குரம்பை யிடத்து இறங்கி ஓடும் (குறு. 284:6,7). முள்ளிச் செடி வேய்நத குறுகிய இறப்பினையுடைய குரம்பை கண் டல மரங்களாலாகிய வேலியையுடைய படப்பை யிலமைந்தது (நற். 207:1,2). வனகைக் கானவன் முள்ளம பன்றியைக் கொன்று வேட்டம் படுத்த உவகையனாயக் காட்டகத்துள்ள நட்ட காலிலே கைசேர்த்துப் பிணிதத குரம்பைக்கு மீண்டான் (நற். 285:3-7). குன்றக் குறவனது புல்வேய் குரம் பையின் பொலலாங்கினை இளமழை மறைக்கும் (ஐங். 252:1,2).

குரல் - ஓசை. கீழ்ககாற்றால் வரும் பெரிய முகில் இமயமலையின்கண திரண்டு இனிய குரல் - ஓசை - பயிற்றி மழை பொழிந்தது (புறம். 34:21,22). நாட் டிற்குக கேடு தரும் நிகழ்ச்சிகளுள் அஞ்சத்தகுவன வாகிய பறவைகள் குரல் இசைததலும் ஒன்றாகும் (புறம். 41:7). இமிழ்குரல் முரசம் மூனறு (புறம். 58: 12). இமிழ் குரல் முரசின் எழுவர் (புறம். 99:9). ஞாயிற்றின ஒணசுடரால் உலாந்த காடு தளிர்க்க மேகம நடுக்கத்தைச் செய்யும் குரலையுடைய உரு மேற்றுடன் கூடி மழை பொழிந்தது (புறம். 160:1-3). தடாரி அரிக்குரலையுடையது (புறம். 249:4;369: 21;390:8). தாளிப்புக்குரல் மிகுந்த கொழுவிய துவை யோடு கூடிய அடிசில (புறம். 250:1). உழைக்குரல் கூகை (புறம். 261:11). அரிக்குரல் தண்ணுமை (புறம். 270:8). அச்சத்தைத் தரும் கூகையும் தனகுழறுகுரல் எடுத்து ஒலிததது (புறம். 280:5). 'பாசறையில் போர் மறவர்க்குப் பூவைத் தரும்பொழுது இது எனத் தெரிவிக்கப் புலையன் முழக்கிய தண்ணுமையின் குரலைக் கேட்பாயாக' என வேந்தன் பாணனிடம் உரைத்தான் (புறம். 289:8-10). மங்கல மகளிரின் இனிய குரல் யாழிசையுடன கலந்திசைத்தது (புறம். 332:5,6). இடுகாட்டில் வேறுபட்ட குரலினையும் வெவ்விய வாயையும் கொண்டது கூகை (புறம். 359: 2). ஆக்குரல் காண்பின் அந்தணாளர் (புறம். 362:8). பெரிய குறுந்தடியால் அடிக்கப்பட்ட பெருங்குரல் முரசம், வீரரிடம் சென்று அரசாணை என்ற ஒரு குறிப்புத் தோனறப் பாம்பை எறியும் இடி முழங்கு வது போல முழங்கியது (புறம். 366:1-3). சுரத்தில் வாழும் கோட்டான்களின் துடியோசை போலும் கடுங்குரல் உழுஞ்சில் மரத்தின கிளைகளிலிருந்த பெட்டைப் பருந்தை அழைககும் சேவற் பருந்தின குரலோடு கலந்தொலிக்கும் (புறம். 370:6-8). பேய் மகள் தன் அழுகுரலை எடுத்துப பாடிக் கூத்தாடக் கழுகுகளும் சிவநத செவியுடைய பருநதுகளும் போர்க்களத்தில் வட்டமிட்டுத் திரியும் (புறம். 370: 25-27). ஓய்மான் நல்லியக்கோடனிடத்துப் பரிசில் பெற்ற பின்பு வள்ளியோர் பிறர் தலைவாயிலில் நின்று தம் சிறுகிணைக்குரல் ஒலிககாது என்பர் புறததிணை நன்னாகனார் (புறம். 376:21-23). விடிய லில் புள்ளினங்களின குரல இயம்பின (புறம். 385:1). காட்டுக்கோழி தனது கவர் குரலை எடுத்தும் நீரில வாழும நீர்ககோழி தன் குரலை எடுத்தும் கூவும் (புறம். 395:10,11). அரிக்குரல தடாரி (புறம். 395:25; 398:12). வெள்ளிமீன் வானத்து எழும்போது பற வைகள் மரத்தின உயர்ந்த கிளையில் கட்டியிருந்த கூட்டிலிருந்து தம் குரலை எழுபபின (புறம. 397:1,2). வைகறைப போதில முழங்கும குரலையுடைய முர சமும் வலம்புரிச் சங்கும் ஆர்ததன (புறம். 397:5). சோழன நலங்கிள்ளி கடையாமமாகிய விடியற் காலததில் தன நெடுமனை முறறத்தில் தெண் கிணைப்பறையின குரலைக்கேட்டான (புறம். 400:8). பல்யானைச் செலகெழுகுட்டுவனின் பகைவர் நாடு நண்பகற் காலத்தும் வெணணரிகள கூவுதலைச் செய்ய, கூகையது குழறு குரலின் தாளத்திற் கேற் பக் கருங்கண் பேய் மகள் கூத்தாடுமாறு பாழாகி யது (பதி. 22:34-38). முரணமிகுநத போரைப் புலப் படுத்தும் முரசின் கடியகுரல விசும்பக மெல்லாம் சென்று எதிரொலித்தது (பதி. 30-32). பலயானைச் செலகெழுகுட்டுவனின வீரர்களது இடிமுழக்கம் போலும் குரலுடன, பெருஞ்சோறு உணபித்தற் காக முழங்கும குரலையுடைய முரசமும் சேர்ந்து ஒலித்தது (பதி. 30:41-44). யாழ்வாசிததலில் வல்ல இளையர் கடவுளை வாழ்த்த அவரது குரலோசை

யைப் புலிக்குழுவின் குரலாகக் கருதிக் களிற்றி யானை அப்புலி போன்ற மலர்ந்த பூக்களையுடைய வேங்கைக் கிளையை வளைத்துப் பிளந்தது (பதி. 41:6-9). ஆடுகின்ற சிறகையுடைய கின்னரப் பறவையை இசையால் வென்ற யாழ் நரம்பின் இசையுடன் ஒன்றாய் இயைந்து செல்லும் குரலையுடைய விறலியர் பல பிடிகளைப் பரிசிலாகப் பெற்றனர் (பதி. 43: 21,22). 'பேரியாழில் பாலைப்பண்ணை அமைத்து மிடற்றுக் குரலுடன் ஒன்றுபட்ட இனிய இசையில் தழிஞ்சித்துறை அமைந்த பாடலைப் பாடி ஆடுகோட்பாட்டுச் சேரலாதனைக் கண்டு வரற்குச் செல்வோமா' எனப் பாணன் விறலியைக் கேட்டான் (பதி. 57: 6-9,15). மிக்க முழக்கத்தைச் செய்யும் குரலையுடைய முரசம் வானத்திடத்தே முழங்கியது (பதி. 68: 3,4). கடல்போல் பரந்த சேனையிடத்துக் கடுங்குரல் முரசம் காற்று வீசும் கடலைப் போலக் கடுமையாக முழங்கியது (பதி. 69: 3,4). அயிரை மலையின் கோடுதோறும் பறை போல் ஒலிக்கும் குரலுடைய அருவிகள் இழிந்தோடின (பதி. 70:24-26). மலையுச்சியை யடைந்த மழை முகில் நெடுங்காலம் பெய்யாதிருந்து மிக்க மழையைப் பெய்ததால் பல்வேறு குரலையுடைய பறவைகளின ஒலி எழுந்தது (பதி. 84:22-24). கடுங்குரல் முரசம் வானத்தில் இடி முழங்கியதைப் போல அதிர்ந்து முழங்கும் (பதி. ப. 1:4,5). திருவாவினன் குடியில் முருகனிடம் இடி இடித்தாற் போன்ற குரலினராய்த் தம் குறைகளை முடித்துக் கொள்ள ஒன்று கூடினர் (முரு. 172-174). சிறியயாழ் பொற் கம்பியைப் போன்ற முறுக்கடங்கின நரம்பின் இனிய குரலை யுடையது (சிறு. 34,35). ஆயர் மகள் விடியற்காலத்தே பறவைகள் எழும்போது எழுந்து, புலியின் குரல் போலும் முழக்கத்தையுடைய மத்து ஒலிக்கக் கயிற்றை வலித்துத் தயிர் கடைந்தனர் (பெரு. 155-158). இனிய குரலையுடைய துளிகளைக் கொண்ட மேகங்கள் பெய்யும் திருப்பரங்குன்றில் விழாக் கொண்டாடும் ஆரவாரம் மிக்கிருந்தது (மது. 262-264). மதுரையில் கள்ளையுண்டு களிப்பினைத் தம்மிடத்தே தடுத்துக் கொண்ட மழலை பேசும் நாவையுடைய பழைய களிப்பினையுடையாரின் முழங்கும் குரல் கேட்டது (மது. 668, 669). குதிரை புல்லாகிய உணவைக் குதட்டும் தனிமை தோற்றுவிக்கின்ற குரல் அரண்மனையில் ஒலித்தது (நெடு. 94,100). முகில் கடல் குறைபட நீரை முகந்து கொண்டு வானத்தில் முரசம் முழங்கினாற் போன்ற இனிய குரலையுடைய உருமேற்றோடு நிரலாக இயங்கும் (குறி. 47-50). தலைவன் பூங் கொம்பு ஒன்றனை முறித்து ஓச்சித் தன் நாய்களின் கடுங்குரலை அடக்கினான் (குறி. 149-151). ஆன் கணம் தம் கன்றுகளை அழைக்கும் குரலினவாய் மாலைப்பொழுதில மன்றுகள் நிறையப் புகுந்தன (குறி. 216-218). திருமாவளவனின பகைவர் நாட்டு மன்றங்களில் அழுகுரற் கூகைகளோடு ஆண்டலைப் புட்கள் கூவின (பட். 255,258). அரிகுரல் தட்டை (மலை. 9). யாழ் வெணசிறு கடுகளவும் இசை இன்பத்தில் தவறுதல இலலாமல் குரலைச் செவியால் ஓர்ந்து பார்த்துக் கட்டின வடித்து முறுக்கின நரம்பை யுடையது (மலை. 22, 23). பழம நிறைநத ஆலமரத்தில் பல இயங்களை ஒதத பலவேறு குரல்கள் பொருந்திய பறவைக்கூட்டம் கூடிறறு (மலை. 268,269). களிற்றியானையின் மீது புலி பாய்ந்ததாக அதன்பிடி தன் சுற்றத்துடன முழங்கும் குரல இடியோசை போலக் கேட்டது (மலை. 308-310). கானக்கோழிச் சேவல் தன் குரலால் பெடையை அழைக்கும் (மலை. 510). கடுங்குரலைக் கொண்ட குடிஞைகள் குன்றத்தில் உருள் துடி மகுளியின பொருள் தெரிந்து கொள்ளுமாறு ஒலிககும (அகம். 19:4,5). பறைக்குரல் எழிலி (அகம். 23:2). தழங்கு குரல் முரசம் (அகம. 24:15). அரிய சுரநெறியில பருந்தின் சேவல் தன் பேடை தனனிடம் வருமாறு இளி என்னும் இசை போனற இனிய குரலால இசைக்கும் (அகம். 33:5-7). தண குரல எழிலி (அகம. 43:8) மனையிடத்தே கட்டப்பட்டிருக்கும தம் கன்றுகளை நினைந்து கனைக்கும் குரலையுடைய பசுக்கள் விரைந்தன (அகம். 54: 6 - 9). பசுககள் தத்தம் கன்றுகளை அழைக்கும் குரலையுடையன வாய் ஊர்மன்றம் நிறையுமபடி புகும் (அகம். 64. 14,15). அருவியின் குளிர்நத நீர் வீழ்சசியினால் எழுகின்ற இனிய ஓசை கூட்டமான மத்தளஙகளின செறிந்த குரலாக ஒலித்தது (அகம். 82:3,4). வினை முற்றி மீளும் தலைமகன சிற்றூரில் இரவிலே தங்கிச் சேவலின முதற் குரல கேட்கும் விடியற் காலத்தில் எழுந்து சென்றான் (அகம். 87: 4-6). குயில்கள் கூவும் இனிய குரலைக் கேட்கும் துணை வரைப் பிரிந்த மகளிருக்குக் கண்பனி நிறுததுதல் எளிய செயலன்று (அகம். 97:16,23). மனையிறறங்கிய கோழிச்சேவல் தன் மாண்புற்ற குரலை எழுப்பும் (அகம். 122:16). தழங்கு குரல் வான (அகம். 136:12). புலியேறு கவர்த்த வழியில உழைமானின் ஆண்குரலை உற்றுக் கேட்கும் (அகம். 147: 6-8). மணியொலி கேட்டாற்போலும் தெளிந்த குரலைக் கொண்ட கணிவாய்ப் பல்லி காட்டில் நிறைந் திருக்கும் (அகம். 151:14,15). கனைகுரற் கடுந்துடி (அகம். 159:9). கடுங்குரற் கொண்மூ (அகம். 174:7). அதிரும் குரலையுடைய முதிய முசுக்கலை மிளகின்

தளிரை உண்டு வெறுத்து நீண்ட குவடுகளில் தாவும் (அகம். 182:14,15). கலைமான் காணாதொழிந்த தன் இனமாகிய மானகூட்டத்தைக் கூட்டற்கு ஞாயிறு மறைந்த மாலைப் போழ்தில் தனது ஆண் குரல் தோன்ற அழைக்கும் (அகம். 199:11,12). மனையோள் உலர்ந்த கூலத்தைப் பெய்து சுற்றுகின்ற திரிகை மரத்தினின்று எழும் குரலிசை ஒப்பத் தலைவனது தேர் மணலைப் பிளந்து கொண்டு சென்றது (அகம். 224:11-14). தலைவனின் பிரிவால் தலைவிக்குக் குயில குரல் கற்ற இளவேனிற் பருவத்தினும் துயில் துறந்தமையான் கங்குல் இன்னாததாய்க் கழியும் (அகம். 237:5-7). பாணர் தெளிந்த ஒளியினதாகிய கிணைப் பறையின் இனிய குரலை எழுப்பிப் பாடுவர் (அகம். 249:3,4). தலைவி குழலோசை போன்ற இனிய குரலையுடையவள் (அகம். 265:9). புலி தயிர் கடைவது போன்ற குரலையுடையது (அகம. 277:5). மேகக் கூட்டம் இடி இடிக்கும் மிகுந்த குரலைப் பொருந்தி நடு இரவில் பெரிய மலையின் உச்சியில் சூழ்ந்தது (அகம். 278:1, 5,6). விளரி என்னும் நரம்பினது சிறிய யாழின் இசை, குயிலின் குரலுடன் துயிலெழுப்பும் (அகம். 279:11,12). மிகுநத குரல்ஒலிக்கும் விரைந்த செலவுடைய கடிய அம்புகளைக் கொண்டவர் வடுகர் (அகம். 281:7,8). சுரநெறியிற் செல்வோர் சேய்மையிடத்திருந் தொலிக்கும் பேராந்தையின் துன்பந் தரும் மெல்லிய குரல் வந்து ஒலிக்குந் தோறும் கேட்டு வருந்துவர் (அகம். 283:6-8). பனைமரத்தில் தனியே தங்கியிருக்கும் அன்றிலின் உயவுக்குரல் தலைவியின் உளளததைக் கனற்றியது (அகம். 305: 12-14). காக்கைகள் ஆறலைப்போரால் அம்பெய்து கொல்லப்பட்ட புதியோரது புண்ணின் செந்நீரைக் குடித்து ஒற்றராகச் செல்லும் மக்களைப் போல உள்ளடங்கிய குரலினவாய் மனையிடத்தே வந்து தங்கும் (அகம். 313:13-16). வானம் மழை பொழிந்ததால் உழவர் இன்குரல் இயம்பினர் (அகம. 314: 4-7). கலை மான இருப்பையது வெண்பூவினைத் தான் உண்ணாது தனது பெண்மான் உணணும் பொருட்டு ஆண்குரல் தோன்ற அதனை அழைக்கும் (அகம். 321:3-5). பாம்பின் படம் அழிய இடிக்கும் கடுங்குரல் இடியுடன் மேகம மழை பொழிந்து கால் வீழ்ததது (அகம். 323:9-13). குயிலும் மாமரக் கொம்புகளிலிருந்து மிக இனிய குரலால் பலகாலும் கூவும் (அகம். 355:2). மயில் இனிய குரலினை யுடையவாய் நெருங்கி மெல்லிய தாள அறுதி கொணடு ஆடின (அகம். 358·2-4). மாலைப்போழ்தில் கலக்கமுற்ற முதிய ஏறு தனது துணையை ஆண்குரலால அழைத்தது (அகம்.367:2,3). மேகங்கள் பூ நாறும் வைகறைப் போதில் இனிய குரலுடன் மிக்க துளிபொருந்திய மழை பொழிந்து கழிந்தன (அகம். 374:3,9,10). தலைவியின் சுற்றத்தார் ஒரு தூக்கின்பாற்பட்ட பல்வேறு குரலையுடைய இனிய இசைக் கருவிகளோடு குறிஞ்சிநிலக் கடவுளாகிய முருகனுக்குப் பாடுகின்ற பண்ணிற்குப் பொருந்த வெறியாட விரும்பினர் (அகம். 382: 4 – 7). கலைமான் பேய்த்தேரினை நீரென விரும்பி ஓடிக் கலங்கிய உள்ளத்துடன் தன் பெண்மானை அழைக்கும் மிகுந்த துன்பம் தரும் குரலை அருஞ்சுரஞ் செல்வோர் ஆளின் குரலெனக் கருதுவர் (அகம். 395:8-12). ஆண் புறாக்கள் ஓமை மரத்தின் உலர்ந்த கொம்பில் ஏறித் தனிமையையும் வருத்தத்தையும் வெளிப்படுத்தும் குரலையுடையவாய்ப் பெண் புறாக்களை அழைக்கும் (குறு. 79:2–4). அருவி பெரிய மலையிலே தத்தி வீழும்படி பெய்யும் மேகத்தின் முழங்கும் குரலை நடு இரவில் கேட்டால் தலைவனைப் பிரிநத தலைவி வருந்துவாள் (குறு. 94.5-7). மலைப்பக்கத்திலுள்ள பாம்புகள் இறந்துபடும்படி பெருமழை இடியேற்றின் இடிக்கும குரலோடு கலந்து வந்தது (குறு. 158:1–3). 'கடலே, நடுஇரவிலும் நின் குரல் கேட்கும்; நீ யாரால் வருதத முற்றனை' எனப் பிரிவினால் வருநதுந் தலைவி கடலை நோக்கி வினவினாள் (குறு. 163:1,5). நடு இரவின்கண் பல பசுக்கள் உள்ள தொழுவத்தில் நலல ஆனேறு இயங்குந்தோறும் ஒற்றை மணிக்குரல் ஒலிக்கும் (குறு. 190:5-7). பறவைக் கூட்டஙகள் தாம் துணைகளோடு சேர்ந்தமையால் துணைவரைப் பிரிந்தாருடைய துன்பத்தை எணணாதனவாய் இனிய குரலால் அழைக்கும் (குறு. 191:2-4) கானங்கோழிச் சேவல் கவர்கின்ற குரலையுடையது (குறு. 242:1). அயன்மையை யுடைய மேகததின் முழங்கும் குரலைக் கேட்டு மயிலினம் பருவமழை பெய்ததென்று பிறழ உணர்ந்து ஆடின (குறு. 251). நீர் நிறைந்த சூலுடைய தண்குரல் மேகம் மின்னல் இமைப்ப மழை பெய்து இருண்டது (குறு.314:1-3). ஆறலைப்போரது தண்ணுமைக் குரல் காவற் காட்டிடத்தே வந்து பெயரும் (குறு. 390:4,5). ஓமை மரத்தைக் குத்திய களிறு மலையடிவாரத்தில் மேகம் முழங்கும் கடுங்குரலைக் கூர்நது கேட்கும் (குறு. 396:4–6). தழங்கு குரல் இடியேற்றுடன முழக்கம் செய்து முகில்கள் இப்பொழுதே மழை பெய்ய மின்னும் (நற. 7: 5–6). கானஙகோழி அரிக்குரல் மிடறறினை யுடையது (நற். 21: 7). கடுங்குரல் கொண்ட இடியேற்றுடன் வானம் பெருமழை பொழிந்தது (நற். 51:4,5). முழங்கும குரலையுடைய

கொடுங்காற்று வீசுதலால் இலையுதிர்ந்து வெறுங் கொம்புகளாய் மலையில் மரங்கள் நின்றன (நற். 62:8-10). செல்வர் வீட்டின் இறப்பிலிருக்கும் சேவற் புறா தான் விரும்பிய பெண் புறாவை அழைக்கும் செயலறவு கொண்டு ஒலிக்கின்ற குரலைத் தலைவனைப் பிரிந்த தலைவி தனித்துக் கேட்குந்தோறும் வருந்துவாள் (நற். 71: 6-11). பரதவர் வலிய கயிற்றாற் பின்னிய பெரிய வலையை இடிபோன்ற குரலையுடைய அலையோடு கூடிய கடலில் இடுதற்குத் தோணியைச் செலுத்தினர் (நற். 74: 1-4). 'தேர்ப்பாகனின் கோல் பட்டறியாத குதிரைகள் பூட்டப்பெற்ற தேரின் மணிக்குரலைக் கேட்பாயாக' எனத் தோழி தலைவியிடம் கூறினாள் (நற். 78: 9-11). தலைவி கூகையைப் பார்த்து, 'எம் காதலர் வருதலை விரும்பி யாம் இரவில் துயிலாது அலமரும் பொழுதில் நீ கடிய குரலை எடுத்துக் குழறி வருத்தாதே' என வேண்டினாள் (நற். 83:7-9). தழங்கு குரல் மயிர்க்கண் முரசு (நற். 93: 10, 11). ஈர்ங்குரலைக் கொண்ட இடியேறு பாம்பின் அழகைக் கெடுக்கும் (நற். 114: 9, 10). அரவினது தலை நடுங்கும்படி இடியின் முழங்கும் குரல் நடுநாள் யாமத்தும் கேட்கும் (நற். 129:7-9). தலைவனின் தேர்மணிக் குரல் இரவின் நடுயாமத்திடையிலும் ஒலிக்கும் (நற். 145: 10, 11). தன் பெடையைப் பிரியாது புணர்ந்திருக்கும் அன்றிலின் உயங்கு குரலை அளாவிக் கொண்டு இராப்பொழுதும் கையறவைத் தந்தது என மடல்வலித்த தலைவன் கூறினான் (நற். 152:7,8). எங்கும் தனது பெய்யும் தொழிலை மேற்கொண்ட இன்குரல் எழிலி தன் தொழில் முடிந்தவுடன் தென்பாலேகியது (நற். 153:3-5). வானம் கரிய இருளைப் பரப்பிப் பல்குரல் மேகம் முழங்குவதும் நீங்கவில்லை (நற். 154:1-3). தாளிப்பனையின் நெடிய மடலிலிருந்து ஆண்பறவை தன் துணையைக் குரல் கொடுத்து அழைத்த ஒலியைக் கேட்ட புலி எதிரோசை எழும்படி முழங்கும் (நற். 174:2-4). மலைச் சாரலில் யாழ் ஓசையைக் கேட்டாலொத்த இன்குரல் இனவண்டு அருவியாகிய முழவொலியோடு ஒருதன்மைப்பட மெல்ல மெல்ல ஒலிக்கும் (நற். 176:7-10). சீறியாழின் நரம்பிசைத் தன்ன இன்குரலுடையது குருகு (நற். 189:2,4). மேகத்தின் குரல் துணையைப் பிரிந்தோரை நாடித் தருவது போன்று தோன்றுதல் (நற். 208:11,12). தினைக் கொல்லையில் உள்ள மழலை மாறாத தலைவியின் இனிய குரலைக் கிளிகளும் அறியும் (நற். 209:4-6). வடுகர் கடுங்குரல் பம்பையையும் சினம் கொண்ட நாயையும் உடையவர் (நற். 212:5). 'செம்பொற் கழல் தொடி நோக்கி நம் புதல்வன் நம்மை அணைத்துக் கொண்டு அழும் இனிய குரலைக் கேட்குந்தோறும் ஆசை கொண்டோம்' எனத் தோழி தலைவியிடம் கூறல் (நற். 212:8-10). 'கார்ப் பெயல் குரல் என் தோள் வளை நெகிழும்படி தலைவன் செய்த துன்பத்தை நோக்கி ஆர்ப்பது போலும்' என்பது தலைவி கூற்று (நற். 214:9-12). 'பனை மடலில் இருக்கும் அன்றிலின் குரலையும் தமியளாய்க் கேட்டு வருந்துவேனோ' எனத் தலைவி கூறினாள் (நற். 218:9-11). செங்கட் கருங்குயில் சேவலும் பேடையும் எதிர்எதிர் இருந்து 'புணர்ந்தீர் புணர்மினோ' என்று தம் இனிய குரலெடுத்து இன்ப வேனிலில் இசைக்கும (நற். 224: 4-6). மின்னலால் இருளைப் பிளந்து கொண்டு அதிர்குரல் மேகம் சூல முதிர்ந்து நள்ளிரவில் கண்ணொளி மறையும்படி பரநதது (நற். 228:1-3). 'பொருள்வயிற் பிரிந்த தலைவரது நெஞ்சம் கனியும்படி செய்வனவல்ல ஆதலால் மேகம இடித்து முழங்கும் குரல் தனக்கு இனிமை செய்வன அல்ல' எனப் பருவங்கண்டழிநத தலைவி கூறினாள் (நற். 238:9-11). வண்டின் விரும்பத்தக்க இனிய குரலை யாழோசை போலுமென்று கருதி மலை முழையிலிருக்கின்ற அசுணமா செவி கொடுத்துக் கேட்கும் (நற். 244:3,4). இனிய குரலையுடைய மேகம் புலியைக் கொன்ற யானையின் செங்கோடு கழுவும்படி மழை பெய்யும் (நற். 247: 2, 3). மேகத்தின் பொய்ம்மையாக இடிக்கின்ற அதிர்ச்சியையுடைய குரலை மயிலினம் கார்காலமென மெய்ம்மையாகக் கொண்டு ஆரவாரிக்கும் (நற். 248:7-9). தலைவனது தேரின் மணி ஓசை போலும் மீனைத் தின்னுதற்கு வந்து கூடும் புள் ஒலிக்கும் குரலைக் கேட்டு இவ்வொலி தலைவனது தேரொலி எனச் சொல்வதற்கு முன் அவன் வந்து நின்றான் (நற். 267:10-12). மேகம் கடல்நீரை முகந்து இருண்டு மிக்க மழையைப் பெய்து கடுங்குரலைக் காட்டி இடித்துக் கார் காலத்தைச் செய்தது (நற். 289:3-6). மறவர் தண்ணுமையை முழக்கும தழங்கு குரலைக் கேட்ட பருந்தின் சேவல் அச்சமுற்றுத் தன் இனத்திடம் செல்லும் (நற். 298: 2-4). ஊர்ப்பொதுவிலுள்ள பனையின் மடலிடத்துக் கட்டிய குடம்பையில்தங்கித் தன் பெடையைப் புணர்கின்ற மகன்றிலின் வருத்தந்தரும் குரலைத் தலைவி கேட்குந்தோறும் கண்ணுறங்கவில்லை (நற். 303:4-6). மடப்பிடி புலம்பிய குரல் மலைப்பிளப்பிட மெல்லாம் சென்று எதிரொலித்தது (நற். 318: 8,9). நடுயாமத்தில் காதலரை நினைக்குந்தோறும் இனிமையான குரலையுடைய பல்லி வீட்டின்

சுவரைப் பொருந்தி நன்மையான சொற்களைக் குறிப்பாற் கூறும் எனத் தோழி தலைவியிடம் கூறினாள் (நற். 333:10-12). சிறு செந்நாவினையுடைய மணியின் குளிர்ந்த இனிய குரல் ஊரின்கண் புகுந்து மிகவும் ஒலித்தது (நற். 364·7,8). கோவலர் இரவில தழங்கு குரல் இடிஓசை போலப் புல்லாங்குழலை ஊதத் தொடங்கினர் (நற். 371:8,9). சிறிய யாழ் பொன் போன்ற நரம்பின் இனிய குரலையுடையது (நற். 380:7). வெண்ணுதலையும் அரிக்குரலையுமுடைய கமபுட் பெடை பழனத்தில் தன் இனத்தோடு ஆரவாரிக்கும் (ஐங். 85:1,2). வெண்தலைக் குருகின் பார்ப்புகள் கூவி அழைக்கும் குரல் நெடிய கழனிகளில் சென்று ஒலிக்கும் (ஐங். 86:1,2). தலைவன் ஊர்ந்து வரும் தேர்மணிக்குரல், துன்புறு துயரம் நீங்க நீலநிறப் பெருங்கடற் பறவைகளின் ஒலிபோன்று இன்புற ஒலிக்கும் (ஐங்.102:2-4). கொடிச்சியின் இனிய குரலைக் கிளியின் ஓசையென்று கருதிப் பக்கமலையில் வாழும் கிளிகளெல்லாம் பசிய கதிர்களையுடைய தினைப்புனத்தில் வந்து படியும் (ஐங். 289:1,2). குயிற்பேடு தன் இனிய குரலால் தனது காதல் துணையாகிய சேவலைக் கூவி அழைத்தது (ஐங். 341:2). புலியினின்றும் தப்பிய கலைமான், தன் பிணைமான் தன்னை வந்து சேரும் பொருட்டு ஆண் குரலால் அழைக்கும் (ஐங். 373:2,3). அழகிய முலலை நிலத்தில் ஆர்குரல் மேகம் மிக்க மழைத்துளிகளைப் பெய்தது (ஐங். 411:1,2). நாட்காலையிலேயே முழங்கும் குரலையுடைய போர் முரசம் இயம்பியது (ஐங். 448:1). முழங்கும் குரலையுடைய மேகம் முதுவேனிலான் நீர் வறந்து பசுமை மாறி நல்கூர்ந்த உலகம் நனகு செழிக்கும்படி மழை நீரைச் சொரிந்து கார்ப்பருவத்தைச் செய்தது (ஐங். 452:1,2). பள்ளங்கள் தோறும் நீர் நிரம்பியமையால் தேரைகள் ஆரவாரிக்கவும் மேட்டு நிலங்களிலெல்லாம் விரும்பத்தக்க குரலையுடைய பல்வேறு பறவை ஆரவாரிக்கவும் கார்ப்பருவம தொடஙகியது (ஐங். 453:1-3). போர்மேற் சென்ற வேநதன் பகைவர்மீது கொண்ட இகல்தணி முரசு போல் ஒலிக்கும் ஆர்குரல் எழிலி கார் தொடங்கியது (ஐங். 455:1,2). 'நீ எம்முடன வரின், காட்டிடத்தில் விலங்காகிய சிங்கத்தின குரலைக் கேட்பின் அஞ்சுவை யல்லையோ' எனத் தலைவன் தம்முடன் வருவதாகக் கூறிய தலைவியைக் கேட்டான் (கலி. 13:14,17). மிக்க மழையில் உருமேறு இடித்தலால் உயர்ந்த குரலாகிய ஓசை மலைச்சாரலில் எதிரொலித்துச் சிறுகுடியிலுள்ளவரைத் துயிலெழுப்பியது (கலி. 45: 4-7). பறவைக் கூட்டம் மரக்கொம்பில் ஏறியிருந்து தம்மை மகளிர் அலைத்த நோயை அவர்தம் சுற்றத்தார்க்குக் கூறுவன போலப் பல குரலால் ஆரவாரம் செய்தது (கலி. 75:5-8). இடியின அதிரும் குரல் போல் பொருகின்ற நல்லேறு நாகுடன் கூடி நின்றன (கலி. 113:27,28). புன்னை மரத்தின் கிளையில் உள்ள மலர்தோறும் மலரும் செவ்வி பார்த்து நுகரும் சுரும்பினம் ஆரவாரிக்கும் குரலுடன் கரிய தும்பிகளும் ஒருங்கியைந்து ஊதின (கலி. 123:1,2). இராக்காலத்தில இனக்குருகு ஒலிக்குங்கால், தலைவி தலைவனுடைய தேர்மணியின் குரலென்று துணிவாள் (கலி. 126:6,7). முன்பு நகு தலைப் பிறரறியாதவாறு அடக்கிக் கண்ணாலும் முகத்தாலும் நகும் தலைவி இப்பொழுது பெண் தன்மையின்றித் தன் குரலை எலலோரும் கேட்கும் படி பெருகச் சிரிக்கிறாள் (கலி. 142:7-10). செவ்வேளின ஊர்தியாகிய யானையின் பிளிற்றொலி முழக்கத்தைப் போல முகிலின் இடிக்குரல் கேட்டது (பரி. 8:17,18). இடியின் குரல கேட்ட கோழிச் சேவல் வெருவிக் குன்றம் அதிரும்படி கூவியது (பரி. 8:19). மதுரையில் மண முரசம் காற்றால் ஏறுண்ட கடல் போலவும் அக்கடல் நீரைப் பருகும் முகிலின் குரல் போலவும் அதிர்ந்தது (பரி. 8:29-32). வித்தகர் ஆக்கிய தாளவிதியாற் கூட்டப்பட்ட அதிர்குரலையுடைய பல்வேறு இசைக்கருவிகள் மென்னடைய வாய் ஒலித்தன (பரி. 10:24,25). மகளிரின் கூந்தலில் தேனைக் கொள்ளை கொள்ளும் வண்டுகள் இனிய குரலுடன் ஊதின (பரி. 10:120). கார்ப்பருவத்து முகில்கள் கனைக்கும் அதிர்குரல் நீங்கின (பரி. 11: 74). மயில்களின் அகவற் குரல் மணந்து தணந்தோரை 'நீடன்மின், வம்மின்' எனபவர் சொல் போன்றன (பரி. 14:8,9). திருப்பரங்குன்றத்தின் ஒருசார் மயிலின் அரிக்குரல் தோன்றியது (பரி. 17: 19). மதுரை மக்கள் வைகறைப் பொழுதில் அந்தணர் நான்மறை நவிலும் குரல் எடுப்ப ஏம இன் துயில் எழுந்தனர் (பரி. தி. 7:8-11).

2. கதிர். நாஞ்சில் வள்ளுவன் கிளி மருவிய அகன்ற புனத்து மரப்பொதுமபினகண் வைதத பெருங் குரல் - கதிர் - ஒப்பவன (புறம். 138:9,10). வெநது வாடிய தசையாகிய கொழுவிய துண்டங்களைக் கொயகுரல் அரிசியொடு நெய் கலநது சமைத்துப் பாணர்க்கு வழங்கினர் (புறம். 328:9,10). மனை வாழும் பெண் ஒருத்தி வரகும் தினையும் இரவலர்க்கு நல்கியமையால் தீர்நதமையின் குறியெதிர்ப்பை கொள்ளாது குரலிடத்து முற்றிய விதைததினையை உரலிடத்துக் குற்றி உண்பிப்பாள் (புறம்.333:8-12). சோழன் செருப்பாழி எறிந்த இளஞ்சேட்சென்னி வில்லும் வாளுமாகிய மேகம் தலைகளாகிய கனிகளைப் பெய்யக் குருதியாகிய

வெள்ளம் பரவிச் செல்லக் குரல்களாகிய கழுத்தை அறுத்துக் குவித்துப் பிணங்களாகிய போர்கள் அழியும்படி யானையாகிய எருதைக் கொண்டு அதரி திரித்தான் (புறம். 370: 12 - 17). கருங்கால் வரகின் பெருங்குரல் முற்றி ஈரம் புலர்ந்தது (மது. 272). - தினையின் துய்த்தலையுடைய வளைந்த ஈனறணிமை தீர்ந்த பெருங்குரல் யானையது மருப் பிற் கிடந்த வளைந்த கை போன்றது (குறி. 37,38). பேரியாழில் வரகின் குரல் ஒழுகிய தன்மைத்தாக நெருங்கிய நுண்ணிய துளைகள் காணப்பட்டன (மலை. 24,25). தம்மில் பிணைந்த குரல்களையுடைய தினைமுற்றிக் கொய்பதம் உற்றன (மலை. 108). அருவிநீர் அற்ற பசிய கால்வாய இடந்தோறும் தினைக்குரல் முதிரப் பெற்றுக் கொய்வதன் முன் னும் பலவும் தட்டைகளாகத் தோன்றின (அகம். 28:3-5). இளைய கிளி தூக்கிச் செல்ல இயலாத பெரிய குரலாகிய வளைந்த பாரத்தைக் கொண்டது தினை (அகம். 38: 12,13). யானை சென்ற வழி வினவித் தலைவன் புலர்குரல் தினைக்கொல்லை யின் பக்கத்து நின்றான் (அகம். 82:12–14). புருவைப் பன்றி மேட்டுககொல்லையில் தழைத்த செநதினை யின் வளைந்த பெருங்குரலைத் தின்னப் பல்லியின் சொல்லைக் கூர்ந்து கேட்கும் (அகம். 88:1-4). மலைப்பக்கத்தில் கொடிச்சி குறிஞ்சிப் பண்ணைப் பாட, தினைப்புனம் மேய்ந்த மழகளிறு தான் கொண்ட குரலும் உட்கொள்ளாது நின்ற நிலை யினின்றும் பெயராது உறங்கும (அகம். 102:1,5-9). தலைவி பல நாளும் புணரும் பகற் குறியாகக் கொண்ட முற்றிய குரலையுடைய தினைப்புனத் தில் கிளியை ஓட்டுதற்குப் பாடும் பாடலும் நீங்கி னாள் (அகம். 118:12,13). 'தினையும் முதிர்ந்து தலை கவிழ்ந்த குரல் அறுக்கப்பெற்றது' (அகம் 132:1). பன்றி சிறுதினை விளைகுரல் மேய்ந்து இனிது கண்ணுறங்கும் (அகம். 178:2,12,13). சிறுகிளி தினை சிதையும்படி கொய்து சுமக்கலாற்றாது போகட்ட புன்புறப் பெருங்குரலை வளைசிறை வாரணம் தன் இனத்துடன் கவர்ந்துண்ணும் (அகம். 192:5-8). செந்தினையின் வளைந்த குரலையுடைய பெரும் புனத்தில் தலைவியுடனிருந்து கிளிகளை ஓட்டி னான் (அகம். 242:5,6). கரும்பெனத் திரண்டு அழகுற்ற பெருங்குரலைக் கொண்ட தினை கிளிகள் வந்து வீழும்படி விளைந்தது (அகம். 302:10,11). ஒண்தொடி மகளிர் தோடு வளர் பைந்தினையின் நீடு குரல்களைக் காத்திருப்பர் (அகம். 368:3,4). தலைவியும் தோழியும் நறுமணம் கமழும் சந்தன மரத்தைக் களைந்து விளைவித்த குரலையுடைய சிறுதினையை உணணவரும் குருவிகளைப் பக்க

ச இ பொ க தொ 2 25அ

மலையின்கண் இருந்து தட்டையினாலே ஓப்பினர் (அகம். 388:2-5). செந்தினைக் குரல் நீண்டு வளைந் தாற் போன்ற வளைந்த தலையை உடையது குதிரை (அகம். 400:8,9,13). குறவனது தோட்டத் தில் விளைந்த பொன்போற் சிறுதினையில் கடி யுண் கடவுளுக்கிட்ட செழுங்குரலை அறியாதுண்ட மயில் வெய்துற்று நடுங்கும் (குறு. 105:1-4). செந் தினையின் பிடியது கை போன்று பால் நிரம்பி உலைக்கரியை எடுக்கும் குறடு போல் வளைந்த செறிந்த குலையையுடைய பசிய குரல்களில் கிளிகள் வீழும் (குறு. 198 : 2 - 5). கொடிச்சி குறவன் கொல்லையை உழுது வித்திய பிறங்கும் குரலை யுடைய தினையைக் காப்பாள் (குறு. 214:1-3). கிளிகள் நெருங்கிய தினைக்குரல்களைக் கவரும் (நற். 13: 9). மலைப்பக்கத்தில் கொடிசசி காக்கும தினைப்பயிரில் முதலில் விளைந்த பெருங்குரல் களைக் கொய்து கொண்ட மந்தி கடுவனொடு வரை மீதேறிக் கையால் கயக்கிக் கவுள் நிறைய உணணும் (நற். 22: 1-5). கொல்லையிலுள்ள விளைந்த தினை யின் முற்றிய குரலை அதனதாள் நிமிர்ந்து நிற்கக் குறவர் கொய்யக் கருதினர் (நற். 44: 5-8). சிவந்த தாளையும் வளைந்த குரலையுமுடைய சிறு தினை யின் பெரிய கொல்லை முற்றும் கதிர் கொய்யும பதம் எய்தியது (நற்.57:8,9). வளைந்த தினைகுரல் களைக் கொய்து கொண்டு போகும் செவ்வாயப் பசுங்கிளியை விளித்துத் தலைவி அதனைத் தன குறை முடிக்க வேண்டுகிறாள் (நற்.102:1-4). தழைத் துள்ள குரலையுடைய தினைப்புனத்தே தலைவி காவல் செய்யுங்கால் தலைவன கண்ணி சூடிக் கழலணிந்து மாலை வேயந்து வந்து அவள் சிறுபுறம் தழுவினன் (நற். 128: 6–9). மலைச் சாரலிலுள்ள சிறுதினைப் பெருங்குரலைச் செவ்வாய்ப் பைங்கிளி கள் கவர்ந்து செனறன (நற். 147: 2, 3). தலைவ னுடன் முயங்கி விளையாட்டயர்ந்த காலதது விருப்பங்கொண்ட ஏனற் பெருங்குரலைக் கவர்ந்து செல்லாத பசுங்கிளிகளுக்கு யாது கைமமாறு செய் வோம் எனத் தோழி தலைவியிடம் கூறினாள் (நற். 194 : 1,2,8-10). பஞ்சு நுனிபோன்ற தலையை யுடைய அப்பொழுதீன்ற தினைக்குரல்களெல்லாம் பால் நிறைந்து முற்றித் தலைசாயந்தன என்று தந்தை தன மகளைக் கிளியோட்டச் செல்லுமாறு உரைத்தனன் (நற். 206: 1-6). குறவர் உழுது சில வாக விதைத்த தினை ஒருசேரப் பலவாக விளைந்து குரல சாய்ந்து விளங்கின (நற். 209:2-4). 'செந்நிறம் பொருந்திய செழுங்குரல்களை யுடைய கொய்யத்தக்க சிறுதினைப்புனம் காவலும் நும் முடையது தானோ' எனத் தலைவன் தலைவியை

யும் தோழியையும் வினவினான் (நற். 213: 9-11). தலைவி தலைவனமீதுள்ள அளிபேரன்பால் திணைக் குரல்களைக் கிளிகள் கொயயாதபடி ஓப்பிக் காத் தாள் (நற். 251:4-6). பறவைகள ஒரு சேரத் திணைக் குரலைக் கவரும்; ஆதலால் இப்பொழுது தோட்டி னிடம் தலைசாயாது நின்று பின கதிரீன்று விளைக எனத் திணை நோககித தோழி கூறினாள் (நற். 251. 9-11). திணையின் குரல் எல்லாம் கடல்வற்றி னாற் போலப் புலாபதம் கொண்டன (நற். 259: 8-10). மலையிடத்துள்ள செநதிணையின் பால் நிறைநத கொழுங்குரலைக் கொய்து கொண்டு போகும் கிளிகளை வெருட்டுவேமாகிச் சென றிருந் தோம் எனத தோழி கூறுதல் (நற். 288: 8, 9). கிளிகள மலைசசாரலிலுள்ள தம் சுற்றத்தோடு சேர்ந்து மெல்லிய திணையின் மணம் நிரம்பிய குரலைக கொய்து தின்னும் (நற். 304: 1, 2). வளைநத குரல்களாகிய பொறையைக் கொய் தொழிநத தலையுடைய திணைத்தாளகள் திரு விழாச செய்தொழிநத விழாககளம் போலப் பொலிவழிநது காணப்படும் (நற்.306:5-7). வளைந்த குரலையுடைய சிறுதிணைப் புனம் வரும் பசிய கிளியினத்தைக கடிநது போக்குமாறு இன்று போல நாளையும் நமககுப் பொருந்துமோ எனத் தலைவி தோழியிடத்துக் கேட்டாள் (373:7-9). யானையின் கைபோல வளைநது தலைசாய்ந்த குரலகளையும் பசிய அடித்தண்டினையுமுடைய செந்திணையை வரையாது கொடுப்பவனது கைவண்மைக்கு ஈண்டும் பரிசிலர் போலக் கிளியின் கூட்டம் நெருங்கி வநது உணடது (நற். 376.1-4). சிறுகணனும் பெருஞசினமும் கொண்ட ஆண் பனறிகள் கானவர் உழுது விளைத்த வளைநத திணைககுரலகளைத் தினறன (நற. 386:1-3). தலை வியை நோககி அவள அன்னை 'சிறிய கிளிகள் கொயதழிககினற பெரிய குரல்களை யுடைய திணைபபுனத்தை இனிக் காவல செய்வாயாக' எனறனள (நற. 389.6,7). பிடியானை கனறை ஈன்று வருநத, அதன ஈனறணிமையினால் உணடாகிய பசிநோயைத் தீரககக களிறறியானை வளைந்த திணைக் குரலைக் கவர்நதது (நற். 393:1-4). கொடிச்சி வெருட்டி ஓட்டவும், மலைச்சாரலிலுள்ள பெருஙகுரற் சிறுதிணையைச சோலைச் சிறுகிளி உணணும் (ஐங். 282:1 3). தலைவி 'காத்தற்கு ஏது வாகுமபடி பலவாகிய குரலகளையுடைய திணைப புனத்தில கிளிகள பரவி வருதலைச செயயும் (ஐங். 288.3,4). கொடிசசியின இனிய குரலோசையைக் கிளியின குரலோசையெனக கருதிப் பக்க மலை யில வாழும கிளிகளெல்லாம் பசிய குரலகளை யுடைய திணைப்புனத்தில் வந்து படியும் (ஐங். 289:1,2). கொடிச்சி காக்கும் பெருங்குரல் ஏனலை மலைப்பக்கத்திலுள்ள மயில் கவரும் (ஐங். 296:1,2). 'சிறுகுடி வாழ் மக்கள் தலைவியை நொதுமலர்க்குக் கொடுக்க நினைந்து அறமல்லவற்றைச் செய் வதனால், இனி இவ்விடத்து வள்ளியும் கிழங்கு கீழ்வீழா; மலைமிசைத் தேனும் தொடா; கொல் லையில் திணைகளும் குரல் வாங்கி ஈனா' எனத் தோழி கூறினாள் (கலி 39:11-14). திணைப்புனத் தில் முற்றித் தாழ்ந்த குரல்கள் நல்ல மகளிர் நாணி இறைஞ்சும் நிலைபோல் திணைப்புனத்தின் குரல்கள் முற்றித் தாழ்ந்தன (கலி. 40:2,3). தலை வனைக் கண்ட தோழி 'படிகின்ற கிளிகள் பரவி யிருக்கும் பசிய குரலையுடைய புனத்தில் தலைவி கிளிகடிதலை ஒருபடிப்பட மறப்பித்து அவளை நின்வயத்தளாக்கி விட்டாய்' என அவனிடம் கூறி னாள (கலி. 50:9-10). பரங்குன்றத்தில் திணைப் பயிர்கள் குருவி ஆர்ப்பக் குரல் குவிந்தன (பரி. 18: 47).

3. கொத்து. கரிய குரல் - கொத்து - உடைய நொச் சித் தழை மகளிர் ஆடைக் குதவியது (புறம். 271: 2-4). மணிகள் கொத்துக் கொததாய் அமைந்தாற் போன்ற கரிய குரலையுடையது நொச்சி (புறம். 272:1). இளையோள் இடையில் அணிநத அழகிய தழையுடை அசைய ஓடிச் செம்மணி போன்ற நிறமும் பொறியும் கொணட குன்றிமணிக் குரல் களைத் தொகுப்பாள் (புறம். 340:1-3). மணம் கமழும் குரலால் தொடுத்த துளசிமாலை யணிந்த செல்வன (திருமால்) சேவடியை மன்பதை பரவியது (பதி. 31:6-9). சிறுகுரல நெய்தல் (பதி. ப. 5:11; அகம். 120:16). 'மழையால நனைந்த நம் கூந்தலைக் குர் லாக வாரிபபிழிநது நீயிர் இசசுரம் அறிதிரோ என்று முகமன் கூறுவாரிலலையே' எனத் தலைவி தோழியிடம் கூறினாள் (அகம். 8:15-18). ஆணமான் நெருஙகிய இலைகளையுடைய அறுகின சிவந்த தணடினோடு மெலலிய குரலைத் தன இளைய பெண்மான அருந்துமாறு செயயும் (அகம். 34:4-6). தலைவனது பிரிவால் மாலைக்காலத்தே நீரவடியும கணணினளாய்ப் பலவற்றையும வெறுத்த தலைவி அணிநது கொளளுமாறு அவளுடைய குரலாகிய கூநதலில் மலரைச சூட்டினான (அகம. 104:15-17). மாக்குரல நொசசி (அகம். 117: 1; குறு. 138.3; நற். 115.5;305:2). மேகம் எனனும்படி முதுகில தாழந்து இருணட, விளஙகும் குரலாய ஐநது பகுப்பை யுடைய கூந்தலைக் கொண்டவள் தலைவி (அகம. 126:19-21). தலைவி தொககுரல ஐம்பாலையுடைய வள் (அகம. 212:3). உடனபோக்கு நேர்நத தோழி

தலைவியை நோக்கி, 'நொச்சியின் கிளைகளிலுள்ள வளைந்த குரல் வாடிச் சாயினும் கலங்கா மனத்துடன் இருப்பாயாக' எனக் கூறினாள் (அகம். 259: 11,14). பொற்காசினைத் தொடுத்தணிந்த பக்கம் உயர்ந்த அல்குலிடத்தே மகளிர் நன்னிறம் வாய்ந்த மாக்குரல் (பூங்கொத்து) தழையுடன் கூடி அசையச் சென்றனர் (அகம். 269:15,16). இள்வேனிற் காலத்தில் தீயைப்போலும் நிறமுள்ள செம்முருக்கின் ஒள்ளிய குரலிலுள்ள மதுவை உண்டு வண்டுகள் அத்தேன் சிதறுமாறு உகுத்தன (அகம். 277:17-19). கழியிடத்துச் சிறுகுரல் நெய்தற் பூவும் கருங்குவளைப்பூவும் குவிந்தன (அகம். 350:1). தலைவன் தலைவியின் அறல்பட்டுக் குரலாக அமைந்த மயிர்ச் சாந்தம் பூசப்பெற்ற கூந்தலை அனபினால் கோதினான் (அகம். 389:1,2). தலைவி, உச்சியிலுள்ள பூங்குரல்களைப் பெற்று மயிர்ச்சாநதினைக் கொண்டு இருண்டு மணம்வீசும் கூந்தலையும் நன்னுதலையும் உடையவள் (அகம். 399:1-3). அருவி தந்த நாட்குரல் எருவையை (கொறுககாந்தட்டையை) யானை கவளமாக உண்ணும் (குறு. 170:2,3). கருங்குயில் மாவின் நறுந்தாதைக் கோதும் இளவேனிற் காலத்திலும் தலைவர் வாராமையால் புனையப் பெறாத வறிய குரலாகிய கூநதலைத் தடவுவேன் எனத் தலைவி வருந்திக் கூறினாள் (குறு. 192:3-6). பெருங்குரல் ஏனல் பெண்யானையின் கையை ஒத்தது (குறு. 360:5). அண்ணல் நல்லேறு அறுகின நீணட குரலைக் கறிககும் (குறு. 363:1,2). ஒண்குரல் நொச்சி (நற். 200: 2). மணிக்குரல் நொச்சி (நற். 293:1). குரல்நொச்சி (கலி. 46:12). தலைவன தலைவியின் மணமிகு கூந்தலை எஞ்சாது பற்றி அதில கட்டின குரலமைந்த ஒருமாலையை விரலால் சுற்றி மோநது பார்த்தான் (கலி. 54 : 5 - 8). தலைவன் தலைவியின் குரற் கூந்தலை வகிர்ந்து கைசெய்து முடிததான் (கலி. 72:20). பரததைவீடு சென்று, கடவுளைக் கண்டு வந்தேன எனப் பொய்த்த தலைவனைப் பாாத்து 'மயிர்ச் சாந்தும் புழுகும் நாறும் செறிந்த குரலையுடைத்தாகிய கூந்தலுக்கு நாட்காலத் தணியும் அணிக்குப் பொருந்த நீ முதல் நாள் பூவைப் பலியாகப் போக விட்ட கடவுளரைக் கண்டாயோ' எனத் தலைவி வினவினள் (கலி. 93:21-24). 'குரற் கூந்தல்' எனத் தலைவியை விளித்து, 'எனகுற்ற வருத்தத்தை யான நினக்கு வந்துரைக்குமளவும என் இனனுயிர் போகாமல தங்கிறறு' எனக் கூறினான் (கலி. 144: 11-13). மரககொமபில் தோன்றி அசைகினற பூங்குரல்களாலே பொலிந்து தழைதத அசைகின்ற கூந்தல் (பரி. 22:46).

4. குரல். ஏழுஇசை வகையுள் முதலிடம். பாண்மகன் குரலில் - ஏழுஇசை வகையுள் முதலிடத்தில் - வந்து பொருந்தும் அளவையுடைய பாடல் வல்லவன் (புறம். 11:15). குரல் என்னும் நரம்பு கூடின நல்ல யாழுடன் முழவும் பொருந்தி மெல்லிய நீர்மையுடைய ஆகுளி (சிறுபறை) இரட்டியது (மது. 605,606). ஆடல்மகளிர் தாம் பாடுகினற பாட்டினை யாழ் தன்னிடத்தே கொள்ளும்படி நரம்பைக் கூட்டுதற்குக் குளிர்ச்சியால் நிலைகுலைந்த இனிய குரலாகிய நரம்பைத தம் முலையின வெப்பத்தே தடவினர் (நெடு. 67-69). வையையின் நீர்வளம் காணசசென்ற மைந்தர் 'குரல்கொணட கிளையாகிய இளிக்கும் கிளையாகப் பொருந்தின உழைகுரலான அருமபாலையிற் றோன்றிய மருதப் பண்ணாகிய சுரும்பின் இசையைக் கேண்மின' என ஒருவர்க்கொருவர் சுட்டிக்காட்டினர் (பரி. 11:126, 127). திருப்பரங் குனறத்தில் சிலர் யாழின்கண் இளிவாய்ப் பாலையையும் குரலவாய்ப் பாலையையும் வலியவும் மெலியவுமாகத் தாக்காது சமனாகத் தாக்கி அதன இனபத்தை நுகாவர் (பரி. 19.42). திருப்பரங்குன்றத்தில் வேறு சிலர் யாழினது நரம்பின் குரல கொம்மென்று ஒலித்த அளவில அததாளத்தோடு பொருந்த முரசின் ஒலியை எழுபபினர் (பரி. 19:44,45).

5. தலைமயிர். தலைவன் தலைவியின சாந்து பூசிய வளைநத குரலை - தலைமயிரை - வாரி வகை செய்தான (அகம். 117:9,10). செவிலி தலைவியைப் பார்த்து, 'இன்றுநின தழைத்த குரலைப் புனைக' என்றனள் (அகம். 369:11). தலைவியின் தலையில் கிளைத்த மெனகுரல் கீழே தாழ்நது வீழநதன (குறு. 337:1,2). வினைமுற்றி மீணட தலைவனின் வரவறிந்த தலைவி அதுகாறும் மண்ணாத கூநதலின் மாசுபோகத தூநீராடிச் சிலவாய மலரைக் கொண்டு பலவாய குரலில் முடித்தாள் (நற். 42:8, 9). கடலில் தலைவன தலைவியுடன நீராடியபோது அவள் முதுகில் தாழநதிருணடு விளங்கிய ஐம்பாலாக வகுக்கப்பட்ட குரலைப் பிழிநது துவட்டினான் (நற். 96:4-6). பருவம் கண்டு ஆற்றாளாய தலைவியைப் பார்த்து 'இவ்விளவேனில், அருவியின் அருகே நின்ற முல்லைபபூக்களை நும் கமழகின்ற குரலுக்கு நிறையக் கொயது கொணமின எனறு கூறிக் காதலர் விட்ட தூதாக வநதுள்ளது' எனத் தோழி கூறினாள் (கலி. 32:16–18). பரத்தையரின் குரலினினறும் உதிர்ந்த பூந்தாதுகள் தலைவனின தோளில் கிடந்தன (கலி. 88:1,2). வையை வெள்ளம காணச்செனற மகளிா சிலருடைய நீலமணி போனற நிறமுடைய குரல்மீது

வண்டுகள் ஆரவாரம் செய்தன (பரி. 10:89).

6. இசை. பாணனது பொன் கம்பியை ஒத்த முறுக் கடங்கின நரம்பினையும் மின்னலைப் போலும் தோலினையும் வண்டிசை போலும் குரலினையும் - இசையினையும் – உடையது பாணனது சீறியாழ் (புறம். 308:1-3). நரம்பிலிருந்து எழும் இனிய குர லைத் தானத்திலே நிறுத்தும் குழல் போல ஒலிக்கும் ஓசையுடைய தேனீக்களோடு தும்பிகளும் ஒன்று கூடி ஒலிக்கும் (கலி. 33:22,23). கடப்ப மலரில் தாதினை ஊதும வண்டுகள் முரலும் குரல் பண்கள் போன்றன (பரி. 14: 3, 4). திருப்பரங்குன்றத்தில் ஒருபக்கம் பாணரது யாழின் இனிய குரல் எழும் (பரி. 17;9). திருப்பரங்குன்றத்தில் முரலும் குரலை யுடைய தும்பிகள் விரலைச் செறித்தும் விட்டும் வங்கியத்தின் துளையினின்று எழுப்பும் இசைக்குப் பொருந்த மலர்ந்த மலரிடத்துப் பாடின (பரி. 21: 33,34).

7. மிடற்றுப்பாடல். மருதம் பண்ணிய சீறியாழின் நரம்போசைக்கு மேறபோகாது அவ்வோசையுடன் கூடி ஓரோசையாய் இனிதாகிய குரலை - மிடற்றுப் பாடலை - உடைய விறலியர் தொல்லியல் மரபின் தம்முறை வழாது கடவுட் பழிச்சினர் (மலை. 534-538). திருப்பரங்குன்றததில் ஒருசார் பாண்மகள் பாடும் பாலைப்பண்ணாகிய அழகிய குரலின்கண் கிளர்ச்சியுடைய கிழமை நிறை குறைகள் தோன் றின (பரி. 17:17,18).

8. மிடறு. மகளிர் கூட்டத்தினர் நரம்பு ஆர வாரித்தா லொத்த இனிய குரலை - மிடற்றை - உடையவர் (முரு. 212).

9. கடல் (ஆகுபெயர்). காற்று எழுப்பிய அலைகள் முழங்கும் குரல் - ஒலியுடைய கடல் - வேலியாகச் சூழப்பெற்றது உலகம் (பதி. 63:17,18).

10. தோகை. குறவர் நிலத்தை உழாதே வித்திய பரிய குரல் - தோகை - உடைய சிறுதினை முற்பட விளைநதிருந்தது (புறம். 169:5,6).

11. சொல். 'வேள எவ்வியின் மார்பில் வேல் தைத்த விழுபபுண் பல என்று விடியற்காலத்துச் சொல்லிய குரல - சொல - பொய்யாகுக' என்று வெள்ளெருக் கிலையார் பாடுவர் (புறம். 233:4-8).

12. யாழ் (ஆகுபெயர்). வியப்புமிக்க இனிய குரலை - யாழை – உடைய விறலியர் பக்கமலையில் குறிஞ் சிப்பண் பாடினர் (மலை. 358,359).

13. கழுத்து (ஆகுபெயர்). களவொழுக்கத்தில் ஈடு பட்ட தன பெணணின் வேறுபாட்டைக் கண்ட தாய் அவள் பேய்க்கோட்பட்டாள் எனத் தவறாக எண்ணி ஆட்டின் குரலை - கழுத்தை – அறுத்துத் தினைப்பிரப்பை வைத்து வெறியாட் டெடுத் தாள் (குறு. 263:1-5).

குரல்குரல் - செம்பாலை. சீறியாழில் இசைநூல் கூறு கின்ற முறைப்படி குரல்குரலாக - செம்பாலையாக- வாசித்து நல்லியக்கோடனின் பண்பியல்புகளைப் பலவாறாகப் பாணன் பாராட்டினான் (சிறு. 228-235).

குரலி - ஒருவகைக் கொடி. நீர் நாய் ஒள்ளிய செங் குரலிக் கொடியுடைய தண்கயம் கலங்க வாளை மீனை நாளிரையாகப் பெறும் (புறம். 283:1,2).

குரவம் - ஒருவகை மரம். தலைவி குறிஞ்சி நிலத்தில் பறித்த மலர்களுள் குரவமரத்தின் பல இதழ்களை யுடைய மலரும் ஒன்றாகும் (குறி. 69). வண்டினம் ஊதுந்தோறும் குரவத்தின் கிளையிலுள்ள நறு மலர்கள் கோங்கு மலரிடத்தே உதிர்ந்தன (அகம். 317:10,11). பல மலர்களைக் கொண்ட பசிய அரும்புகளை யுடைய குரவம் சோலையில் அழகு பெற்றது (குறு. 341:1,2). குரவம் ஈன்ற பாவை போன்ற மலரைப் பேதை மகளிர் மகவாகக் கொண்டு விளையாடுதற்கு இளவேனிற் பருவத் தில் கொய்வர் (ஐங். 344:2,3). பொருள்வயிற் பிரிந்த தலைவன் குரவமும் மரவமும் மலரும் இள வேனிற் காலங்கண்டு மீண்டான் (ஐங். 357:1,5). இளவேனிற் பருவத்தே குரவத்தின் நீண்ட கிளை யிலிருந்து கருங்குயில ஆர்ப்பரிக்கும் (ஐங். 369:4,5). குரவு, குரா காண்க.

குரவு - குராமரம். முன்பனிக்காலம் நீங்கப் பெற்ற அரிய செவ்வியை யுடைய இளவேனிற் காலத்துக் குரவு - குராமரம் – மலர்ந்தது (அகம். 97:16, 17). பாம்பின் பல்போன்ற முதிர்ந்த அரும்புகளை யுடைய குரவின் நறுங்கிளையைத் தென்றல் ஊட றுத்துச் சென்றது (அகம். 237:3,4). குறுமை பொருந் திய குரவின் சிறிய அரும்புகள் முதிர்ந்த நறிய மலரில் வண்டு விழுதலால் எழுந்த மணத்தைத் தென்றற் காற்றுப் புகுந்து கலநது வீசியது (நற். 56:1,2). பின்பனிக் காலம் வருமெனறு முன்பனி யின் கொழுந்தை முற்படவிட்டு அறிவுறுத்தற்கு அடையாளமாகக் குரவு அரும்பின (நற். 224:2,3). குறும்புனத்தைச் சேர்ந்த குறுகிய காலையுடைய குரவின் குவியிணர் வான்பூ ஆடுடைய இடை மகன் சூடப் பூக்கும் (நற். 266:1,3). குரவம், குரா காண்க.

குரவை – குரவைக்கூத்து. யானைச்சுட் சேய் மாந்தரஞ்

சேரலிரும்பொறையின் சின மிக்க வீரர், பொன்னாற் செய்யப்பெற்ற பைந்தும்பையுடன் பனந் தோட்டைச் செருகிக் குரவை - குரவைக்கூத்து - ஆடுதலினால் எழும் ஒலி கடலொலி போல் கிளர்நது பொங்கியது (புறம். 22:20-23). பரதவர் வெப்புடைய மதுவையுண்டு மெல்லிய குரவைக்கு அமைந்த தாளத்திற்கேற்ப ஆடுவர் (புறம். 24:4-6). குறவர் மாக்கள் வளைந்த மூஙகிற் குழாயில் விளைந்த தேறலை நுகர்ந்து, வேங்கை மரமுடைய முற்றிலில குரவை அயர்வர் (புறம். 129:1-3). மலர் களிடத்தில் பெற்ற கள் நிறைநத மனைகளை யுடைய கோசர் தீவிய கள்ளின தெளிவையுண்டு களிப்பேறி இனிய குரவையாடுமிடத்து இசை எழுப்புவர் (புறம். 376:7-9). பெருஞ்சேரவிரும் பொறையின் ஆட்சிககுட்பட்ட புகாரில் வாழும் உழவர் மகளிர் இரவும பகலும் தாமணிநத பொன்னிழைகளைக களையாராய் வளமிகக பல விடங்களில் குரவையாடி மகிழவர் (பதி. 73:4-9). குறவர் தம் சுற்றத்துடன் மூங்கிலில் விளைநத தேனாற் செய்த கட்டெளிவை உணடு மகிழநது தொண்டகம் என்னும் சிறுபறையின் ஒலிககேற் பக் குரவை அயர்வர் (முரு. 194-197). மணற்குன றுகள் மிக்க கடற்கரையி விருக்கும் பரதவ மகளிர் ஆடும் குரவையொலியுடன் பிற ஒலி களும் கலந்து ஒலித்தன (மது. 96, 97). வேலன் கார்காலத்து மலராகிய குறிஞ்சியணிந்து கடமபு சூடுதலால் அழகு மிகுகின்ற முருகனைத் தன் மெயக்கணணே நிறுத்த மகளிர் தம்முள் தழுவிக் கைகோத்துச் சேரிதோறும குரவையாடினர் (மது. 612-615). நாட்காலததே நறவைப் பருகிய குறவர் தம் பெண்டிருடன மலையுச்சியிற் கூடிச் சிறுபறை ஒலிககக் குரவை அயர்ந்தனர் (மலை. 320-322). ஞாழல மரததின கிளையில தாழை விழுது கொண்டு அமைத்த ஊசலில் ஆடிக கீழைக் காற்றுக் குவித்த மணலில் குரவை யாடுதலை வெறுத்தால தலைவி ஆயததோடு கடலாடு வாள (அகம். 20:5-8). வேஙகையின் பொன் போனற பூக்கள் பரநது பாறைகளை அழகுறுத் தும் முற்றததில் குறவர் மனைக்கணுள்ள மூத்த மகளிரொடு குரவை ஆடுவர் (அகம். 232: 7-10). மகளிர் பொலங் காசுகளைத் தொடுத்தணிநத தம் அலகுலிடத்தே பூக்களோடு தளிர் விரவித் தொடுத்த ஆடை அசையக கொம்பினினறு எழும் தெள்ளோசை முழஙகத் தம் விளையாட்டுப் பாவையை உணதுறை யிடத்தே கொணர்ந்து குரவை அயர்வர் (அகம். 269:15-20). மகளிர் தம் கணவரது நற்பண்பில்லாத பரததைமைகளைப் பாடிக் காஞ்சி மரத்து நீழலில் குரவை ஆடுவர் (அகம்.336:6-9). வேங்கை மரத்தையுடைய முன்றிலில் குறவர் மகளிர் குரவை அயர்வர் (நற்.276:10). நெய் தல் நில மகளிர் விளையாடுதலை வெறுத்தால் குவிந்த வெண்மணற் பரப்பின மேல குரவையாடு வர் (ஐங்.181:1-3). 'நீயும் நின காதலனும புணர இம் மலையுறை தெய்வம் மனமகிழும்படி யாம மகிழநது குரவையைக் கைகோத்தாடுதற்கு அக்குரவைக கூத்தினிற் கொண்டுநிலைச் செயயுளை நீ பாடுக' என்று தோழி தலைவியிடம் கூறினாள் (கலி. 39: 26-28). சிறுகுடியின் மனறத்தில் ஆடும் பணண மைந்த இனிய தாளததையுடைய குரவையில ஏறு தழுவிய பொதுவன தோளையும ஏறு தழுவு வதற்குக், காரணமானவளது மென்றோளையும் கொண்டாடிப் பாடினர் (கலி. 102.34 – 39). நம் சுற்றத்தார் கூறும் முறைமையைப் பாடிக குரவைக் கூததாடி 'எங்கோ வாழ்க' எனத் தெய்வத்தைப் பரவுவோம் எனத தோழி தலைவிக குரைத்தாள் (கலி. 103:75-79). தலைவி ஆயததோடு ஆடுங் குரவையுள் தலைவன அருமை செய்தான போல நோககித் தலைவிக்கு வருத்தத்தைத் தரும் நோயைச் செயதல் கொலையேற்றைத் தான அடக்கித் தழுவிய மனசெருககினாலேயாம் எனத தலைவி தோழிக் குரைத்தாள் (கலி. 104.69-72). காஞசிப் பூவின் தாது உதிர்நதாற் போனற தாதாகிய எருவையுடைய மன்றத்திடதது மகளிர் குரவையயாவர் (கலி. 108.60,61).

**குராஅல் - 1.** கூகை. பல்வேறு தீ நிமிததங்களுள அச்சத்தைத் தரும் குராஅல - கூகை - தன குழறு குரலெடுத்து ஒலித்தலும் ஒனறு (புறம். 280:5). வேம்பின் பெரிய கிளையிலிருந்து குராஅலாகிய கூகை இரவு முழுதும் குழறியது (நற். 218:7,8).

2. பசு. பனறிகளால புழுதியாககபபட்ட விடுநிலத் தினகண புதிதாக வநத பெரு மழை பெய்து நீஙக அவவிடததிலுளள பளளங்களில தங்கிய நீரைக குராஅல் - பசு - உணடது (புறம். 325: 1-3).

**குரால் – 1.** கூகைபபேடு. பசிய இறைச்சித் துணடங் களை வைதத இடததை மறநத கூகைச சேவலை இடுகாட்டில அதன குரால - கூகைப்பேடு - வருத தும் (பதி. 44: 17-19). பெரிய மாளிகையிலே வெநது வீழ்ந்த கரிந்த குதிரிடங்களில் சூட்டினையுடைய கூகைச் சேவல் குராலோடு இருநது குழறும் (மது. 169, 170). ஆடவர் எருதினைக் கொனறு அதன தசையைத் தீயிற் சுட்டுத தின்ற வேட்கை நீங்கத தோப்பிக்கள் பருகிப் புலால் நீங்காத கையினராயக் கழுவாத வாயினராய் இடையறாது விட்டு விட்டு

ஒலிக்கும் குடுமியினையுடைய குராலின் ஒலியோடு கூடிச் சீறூர் மருங்கில் கூத்தாடுவர் (அகம். 265: 12-20). மூதூரிடத்திலுள்ள அகல்நெடுந் தெருவில் கூகைச் சேவல் தன் குராலோடு கூடி, மக்கள் இயங் காத பெரிய நாற்சந்தி கூடுமிடத்தில் யாவர்க்கும் அச்சம உண்டாகும்படி குழறும (நற். 319: 3-5).

2. சிவப்புஏறு. மாறுபாடு மிக்க குரால் - சிவப்பு ஏறு- தாழந்த சடையினையும் ஒரு பக்கத்தே பிறைநுதலி னையுடையாளையும் கொண்ட மூன்று கண்ணை யுடையோனது (சிவனது) நிறத்தைப் பெற்றிருந்தது (கலி. 104: 11, 12). குரால் கணிசசிப் படையினை உடைய சிவனின் நீலமணிபோலும் திருமிடற்றின் அழகு போலக் கரிய சருச்சரையுடைய கழுத் தினையும் ஏந்தின குட்டேற்றினையும் உடையது (கலி. 105:13, 14).

3. செந்நிறம். 'கிணற்றில் வீழ்ந்த குரால் - செந்நிறம்- கொண்ட பசு படுந்துன்பத்தை இரவில் கண்ட ஊமனைப் போல, என் பொருட்டு நீ படும் வருத் தத்தினால் துயரைப் பொறுக்கும் ஆற்றல் இலன் ஆயினேன்' என்று தலைவி தோழியிடம் கூறினாள் (குறு. 224: 3-6).

குரிசில் - தலைவன். செல்வக் கடுங்கோ வாழியாத னைக் கபிலர் குரிசில் - தலைவ - என விளிதது அவன் தடக்கைகள் வலியவாயினமைக்குரிய கார ணங்களைக் கூறினார் (புறம். 14:1-11). 'குரிசில், நீ அருளாமையாற் கண்டார் இரங்க மெலிந்து வருந் தும் நின திருந்திழை அரிவையின் கூந்தல் மாலை யைச் சூட நின் குதிரைகள் தேரைப் பூண்பன வாகுக' எனப் பேகனை நோக்கி அரிசில கிழார் கூறினார் (புறம. 146: 5-11). தன்பால் வருவோர்க் குக் குரிசிலாகிய தலைவன் நல்கும் பரிசில் பகை வரை வெனறு பெற்ற பொருளாகும் (புறம். 333: 19). 'போர்மிகு பொருந, குரிசில்' எனச் செவ்வேள் விளிக்கப் பெறுதல் (முரு. 276). 'சீர்மிகு குரிசில்' எனத் தலைவன விளிக்கப் பெறுதல் (அகம். 184: 19). என் கையிலுளள வளையலகளை நெகிழச் செயத பெருமை பொருநதிய குரிசிலும் ஆடுகள மகனே; யானும் ஆடுகள மகளே எனத் தலைவி தோழி யிடம் கூறினாள் (குறு. 31:4-6). குருசில் காண்க.

குரிசிலர் - தலைவர். பாண்டியன் நெடுஞ்செழியன் நெருப்பு நடந்தாற் போன்ற பகைவர் படைக்கு நடுவே சென்று யானைகளைப் போர்க்களத்தே பட வெட்டிச சீரிய புணணினால் வீழ்ந்த குரி சிலரை - தலைவரை - கொணர்மின எனக கூவி அவர்க்குப் பொன்னாலாகிய தும்பைப் பூவினைச் சூட்டினான் (மது. 734-736).

குரீஇ - குருவி. பகைவர் விடுத்த அம்புகள் யானை மீது ஊடுருவித் தங்கியிருந்த தோற்றம், மலை யிடத்தே தங்கிய குரீஇ - குருவி - இனம் போன்று காணப்பட்டது (புறம். 19:7-9). வலம்புரிச் சங்கம் தூக்கணங் குரீஇயின் தொங்கும் கூட்டையொப்ப இல்லத்தின் ஒரு பக்கத்தே தொங்கியது (புறம். 225: 11,12). மனையில் வாழும் குரீஇயின் கரிய கழுத்தை யுடைய சேவல், பாணரது யாழ நரம்பின் கோது களுடன பீலியைக் கொண்டு செய்த கூட்டிடத்தே நெல்லரிசியை யுண்டு தன் பெடையோடு தங்கும் (புறம். 318:4-8). பாரியின் பறம்பு மலையில் வரிசை யாகப் பறக்கும் குரீஇயினம் காலையில் புறம் போய் நெற்கதிர்களைக் கொண்டு வருதற்கு அந் நெற்கதிருள்ள இடங்களைத் தேடித் திரிந்து பொழுது சாயும் வேளையில் மீளும் (அகம். 303:10-14). தலைவியும் தோழியரும் மலைச்சாரலில் மூங்கிலை யறுத்து இயற்றிய தட்டையால் தினைக் கதிர்களைக் கவரும் குரீஇ ஓட்டுவர் (அகம். 388:2-5). ஆம்பல் மலரின் வாடலையொத்த குவிந்த சிற கினையுடைய வீட்டில் வாழும் குரீஇ, முற்றத்தில் உலரும் தானியங்களைத் தினறு, மன்றத்திலுள்ள எருவின் நுண்தாதைக் குடைந்து, மனையிறப்பில் தன் குஞ்சுகளோடு மாலைக் காலத்துத் தங்கும் (குறு. 46:1-6). தலைவி புனத்தின்கண் தினையை உண்ண வரும் குரீஇயை ஓட்டுவாள் (குறு. 72:4,5). ஊரினுள் இருக்கும் குரீஇயின துள்ளு நடையை யுடைய சேவல், சூல் முதிர்ந்த பேடைக்குப் பொறை உயிர்த்தற்குரிய இடத்தை யமைக்கும் பொருட்டுக் கரும்பின் வெணபூவைக் கோதி யெடுககும் (குறு. 85:2-5). எந்தையும் யாயும் உண ரும்படி களவொழுக்கத்தைக் கூறிய பிறகு தலை வன் வந்து வரைவினை இரப்ப, இதுகாறும், வளைந்த சிறகையுடைய தூக்கணங் குரீஇ பனை யிடத்தேயமைத்த கூட்டைக் காட்டிலும் மயக்கம் அடைந்திருந்த இவ்வூர் இப்பொழுது நம்மொடு ஒன்றுபட்டது எனத தோழி தலைவியிடம் கூறி னாள் (குறு. 374). புதல்வரின சிறுதோளில் மாட்டிய செவ்வரிப் பறையின் கண்ணகத்து எழுதிய குரீஇ அடிபடுதல் போலத் தலைவன் நெடுநதேரில் பூட்டிய குதிரைகள் கோல் கொண்டு அலைக்கப் பெறுவனவாகுக என்று தோழி கூறி னாள் (நற். 58:1-4,11). மனையகத்து உறைகின்ற குரீஇயின கரிய தாழ்வாயையுடைய சேவல் வேற் றுப்புலத்துப் பெடையோடு புணர்ந்து தங்கி வர, அதன் புணர்குறியைக் கண்ட பேடை தன் பிள்ளைகளோடு சேர நின்று கூட்டினுள்ளே புகாத படி தடுத்தலினால் சேவல் மழையிலே நனைந்து

நடுக்கமுறப் பின்னர் அதனை நோக்கி நெடிது நினைந்த பேடை இரக்கமுற்றுத் தன்பால் வருமாறு அழைத்தது (நற். 181:1-9). மனைவாழ் ஊர்க்குரீஇயின முட்டையை உடைத்தாற்போன்று புன்னையின் பெரிய போது மலரும் (நற். 231:6,7). அறிவுமிக்க குரீஇ தான் முயன்று செய்த கூடு மூங்கில் அடித்தண்டுடன் அசையுமாறு வாடைக்காற்று மோதும (நற். 366:9-11).

**குரீஇப்பூளை** - சிறுபூளை. தலைவியும் தோழியரும் பறிதது்க் குவித்த மலர்களுள் குரீஇப்பூளையும் - சிறுபூளையும் - ஒன்றாகும் (குறி. 72).

**குரு** - 1. நிறம். குரு மயிர்ப் புருவை (பெண் ஆடு) (ஐங். 238:2). குருமயிர்க் கடுவன (ஐங். 275:1). குருமணி யானை (பரி. தி. 2:71).

2. நிறமுடைய ஏறு (ஆகுபெயர்). உலண்டினது (பட்டுப் பூச்சியினது) நிறம்போன்ற புல்லிய குருவை - நிறமுடைய ஏற்றினை - அஞ்சாது பாய்ந்த பொதுவனை அது சாவக் குத்திக் கோட்டினைக் கொண்டு குலைத்தது (கலி. 101: 15-17).

**குருக்கத்தி** - மரவகை. தலைவியும் தோழியரும் பறித்துக் குவித்த மலர்களுள் பசிய குருக்கத்திப் பூவும் ஒன்றாகும் (குறி. 92). உழவர் மடமகள் அழகுடைய பஞ்சு போன்ற மேலே புறவிதழையுடைய பசிய குருக்கத்தி மலருடனே பித்திகை மலரையும் விரவி. விலைக்குக் கொள்ளீரோ என்று கூவி அம்மலர்களிட்ட கடகப் பெட்டியுடன் திரிநதனள் (நற். 97:5-9). குருக்கத்தி, பாதிரி முதலான பல மலர்களும் வையை யாற்றின் இருகரைகளிலும் மணம் பரப்பும் (பரி. 12:79 81).

**குருகிலை** - முருக்கிலை. தலைவியும் ஆயமும் பறித்துக் குவிததனவற்றுள் குருகிலையும் - முருக்கிலையும் – ஒனறாகும் (குறி. 73).

**குருகு** - 1. நாரை, கொக்கு ஆகியவற்றைக் குறிக்கும் பறவைப் பெயர். அயிரையாகிய கொழுமீனகளை உண்ணும் பொருட்டு மரந்தோறும் குழுமியுள்ள வெண் குருகுகளை மகளிர் ஓப்பினர் (பதி. 29:4-6). கழியிடததே இரையைத் துழாவிய குருகுகள் பூங்கொத்தையுடைய புனனைக் கிளையில தங்கின (பதி. 30:3,4). கார்காலத்து மேகக் கூட்டத்தின் முன்னே ஒரொருகால் ஒழுங்கு குலைந்து செலலும் சிறந்த பறத்தலை யுடைய குருகின நீண்ட வரிசையை யொப்ப, கொல்களிறுகள் நெருங்கிய பல கேடகங்களின் தொகுதியோடு நெடுநதேரில் அசைகின்ற கொடிகள் விளங்கின (பதி. 83:1-4). குருகுகள் ஒலித்தன (மது. 268). கரும்பின் ஓங்கின தண்டின் மீதிருந்த வெண்குருகு ஒலிக்கும்படி வாடைக்காற்று வீசி··து (அகம். 13:21-23). மீனையுணணும் மெல்லிய சிறகினையுடைய குருகின் கூட்டம புனனை மரத்திலுள்ள கூடுகளைச் சேர்ந்தது (அகம். 40:3,4). வெம்மையுற்றுச் செல்லும் ஞாயிறு மலை பிளக்கக் காய்ந்திடலால் அவ்விடத்தைக் கடந்து செல்லும குருகுகள் உருகி வருந்தின (அகம். 55:1,2). நெற கதிரினைப் பசிய அவலாகக் குற்றும் உலக்கையின் விரைந்த இடிக்கு அஞ்சிய, நிறைந்த சூலினையுடைய வெண் குருகு வாழையின உயாநத மடலில் இராது மாமரததின்கண் குறுகப பறக்கும (அகம். 141:17-21). இரைதேடும வெணகுருகினைக கணடு அஞ்சிய நணடு அயலிலுள்ள சேறறுப் பிழம்பில் வரியுண்டாக ஓடிச் சென று தன மண் அளையுள் பதுங்கும் (அகம். 176:8-12). பசும்புதரிலுள்ள செறிநத கிளைகளில குருகு இருந்ததைப போன்று வெண் கூதளத்தின முகை விரிநத மலர்கள் தோனறின (அகம. 178:8-10). புலங்கள் தோறும் குருகுகளின் கூட்டம் கல்லென்று ஒலித்தது (அகம். 217:11). மகளிர் பொயகையிலுளள கோரைகளைக் கோதி, கழனியாகிய கரநதைச் செறுவிலுள்ள வெண்குருகுகளை ஓட்டுவர் (அகம். 226:4-6). வயலிலுளள கருமபின திரணட காம்பினையுடைய பெரும்பூ மழையில் நனைந்த குருகினைப் போல ஈரஙகொண்டு வளைநதிருந்தது (அகம். 235:11–13). தாழைகளையுடைய சோலையின் மேலேயிருந்து குருகினம ஒலித்தது (அகம். 260:2,3). வானில் வேகங கொனடெறிநத கூதாளி மாலை போலப் பசிய காலினையுடைய வெண் குருகுகள் தாவும சிறகினை வளைததுக கடற பககததே நாட்காலையில் பரவி அமர்நதன (அகம. 273:1-3). பரதவர் மணலிடததே புலரும்படி பெயத மீனகளைத் தின்னும குருகுகளை உடையது கானலம் பெருந்துறை (அகம. 300:1-4). ஈங்கையின புது மலரும் மாவின் இளந்தளிரும் தன்னை வருட, மீனையுணட குருகு துயினறது (அகம. 306:3-5). இனிய நிழலை யுடைய புனனையில குருகுகள் உறங்கும் (குறு. 5:2). தலைவன எனனைக் களவில மணந்த காலத்தில் சான்றாவார் ஒருவரும் இலர் ஆயினும், உணணும் பொருட்டு, ஓடுகின்ற நீரில் ஆரல மீனின வரவைப் பார்த்து நிறகும, தினையின அடியைப் போன்ற சிறிய பசிய காலகளை யுடைய குருகு அவ்விடத்து இருந்தது எனத் தலைவி தோழியிடம் கூறினாள் (குறு. 25). ஊர்கரு அணித்தாகிய கான்யாற்றிலும் பொய்கையிலும வெணகுருகு இரை தேர்ந்துண்ணும் (குறு. 113:1-3). குருகு கவர்ந்து கொளள அதன் வாயினினறு தப்பி

நீருள் குளித்த கெண்டைமீன் அயலதாகிய தாமரையின் வெள்ளரும்பைக் கண்டு (குருகெனக் கருதி) வெருவும் (குறு. 127:1,2). பூழியரது கானலம் பெருந்துறை சிறிய தலையையுடைய வெள்ளாட்டின தொகுதி பரவினாற் போன்ற மீனையுண்ணும் குருகுகளை யுடையது (குறு. 163:1–3). கடல லைகள தாக்கிய தாழையின் வெண்பூ குருகினைப் போல மலரும் (குறு. 226:5,6). தாழையின் முதிர்ந்த கொழுமுகை, குருகு கோதுகின்ற சிறகைப் போல விரிநது மடல் அவிழநதது (குறு 228:1,2). குருகு வானத்தின்கண் உயரப் பறத்தல நன்னிமித்தமாகக் கருதப பெற்றது (குறு.260:1-4). உப்பங்கழியில் இரை தேர்ந்துண்ட கரிய காலையுடைய வெண்குருகுகள் அடைகரையிலுள்ள தாழையிடத்தே கூடிப் பெருங் கடல் திரையொலியினால் துஞ்சும் (குறு. 303:1-3). தலைவி முலைகளின இடையிலுள்ள இடம், தலைவன பிரிவால் அழுத கண்ணீரால் நிறைந்து கரிய காலையுடைய வெணகுருகு மேயும் பெரிய குளம் போல ஆயிற்று (குறு. 325·5,6). தண்கமழ் கானலில் வெண்குருகுகள ஒலிததன (குறு. 381:4). உமணர் கல்லுபபின விலை கூறி ஆனிரையை எழுப்புகினற, நெடுநெறியிற் செலுத்தும சகடம் மணலின் மடுத்து முழங்கும ஓசையைக கேட்டுக் கழனியிலுள்ள கருங் கால் வெணகுருகுகள் வெருவின (நற். 4:7-11). பொய்கைதோறும் இறா மீனைத தின்னும் குருகினம் ஒலித்தது (நற். 27:7,8). புனனையின் நெடுஞ் சினையில இருக்கினற முதிர்நத சூலையுடைய வெணகுருகு அலையோசையைˎ வெருவும் (நற். 31: 10,11). கருஙகால வெணகுருகே, நீ நின் சுற்றத் தோடு சென்று நீர்ப்பரப்பிலுள்ள இரையை உண்டு, தாவிப் பறநது வருதலை விரும்பினையாயினும நின் கிளையோடு சிறிது இஙகுத் தங்கியிருந்து என் சொறகளைக் கேட்பாயாக; இம் மாலைப்பொழுது எனக்குப் பெருநதுன்பத்தைச் செய்கினறது; அதனை நீ அறியின் என குறையை நுங்கடற்றுறைச சோப்பனிடஞ் சென்று அவன் உணருமாறு உரைப்பாயாக' எனத தலைவி அதனை (குருகை) விளித்துப் புலம்பிக கூறினாள் (நற். 54). இறா மீனைத தினறெழுநத கருங்கால வெண்குருகுகள் உப்புக குவட்டின மேலாகச் சிறகை வீசிப் பறந்து கரையிலுளள புனனை மரஙகளிலே தஙகின (நற். 67:3–5). சோலையிலுள்ள புனனையின் நுண்தாது, கீழ்க்காற்று வநது மோதுந்தோறும் குருகின் வெளிய முதுகில உதிர்ந்து மறைககும (நற். 74:7-9). கழியிடத்துளள மீனாகிய இரையை உண்ணும் குருகுகளின நிரையாகிய பறவைக கூட்டம் பனைமடலிற கட்டிய குடம்பையிடத்தே இருட்பொழுதில் நெருங்கி யுறையும் (நற். 123:1-3). தாழையின் மடல் முறிந்து சாயும்படி இறாமீனைத் தின்ற குருகினம் அங்குத் தங்கி வீற்றிருக்கும் (நற். 131:4-6). உமணர், தம் வண்டி முறிந்த விடத்திலே போட்டொழிந்த இயல்பழிநத பழைய பாரின்கண் வெண்குருகு சினையை ஈனும் (நற். 138:3,4). தலைவியும் தோழியும் மணல்மேட்டின் இடிந்து சரிந்த கரைக்கண்ணே நின்று, சங்குகளைக் குலையாகத் தொடுத்தாற் போன்ற குருகுகளின் வரிசையை எண்ணிப் பகற்பொழுதைத் தலைவனோடு போக்கினர் (நற். 159:3-5). புன்னையின் பெரிய கிளையிலே புதுவதாக வந்து தங்கிய வெண் குருகுகளின நரலோசை, ஆய்அண்டிரனது நாளோலக்கத்தில் இரவலர் பரிசிலாகப் பெற்ற நெடுந்தேரின் ஓசைபோன்றிருக்கும் (நற். 167:1-4). 'நீ பிரியின், மீன் இனத்தைத் தின்ற வெண்குருகு மிதித்த நீர்வற்றிய குளத்து நெய்தன் மலர் போல இவள் ஒரு நொடிப் பொழுதும் உயிர் வாழாள்' என வரைவிடை வைத்துப் பிரியும் தலைவனிடம் தோழி தலைவியின் நிலையை எடுத்துக் கூறினாள் (நற். 183:9-11). பாணர், தெறுகினற சினம் தணிதற்கரிய தெய்வத்தின் முன்சென்று அதன்சினம் அடங்குமாறு யாழின் நரம்பினோசையை எழுப்பிப் பாடினாலொத்த இனிய குரலையுடைய குருகுகள நிரம்பப் பெற்றது கங்கையாறு (நற். 189:2-5). பனைமடலிற் கட்டிய குடம்பையில் தங்கிப் பிரிவால் வருந்தும் வெணகுருகு நடுயாமத்தில் நரலும் (நற். 199:1-3). கழியிடததில இரையை விரும்பி எழுந்த கருங்கால் குருகின் குததுக்குத் தப்பியோடிய இறவின் ஏறறை தாழைப் பூவினைக் கண்டு (குருகென) அஞ்சும் (நற். 211:3-8). கழனியிடத்துக் குருகுகள் ஆரவாரித்தன (நற். 216: 7). கொழுமீனை அருந்தக் குருகினம் மணல் மேட்டில் ஏறியிருந்து அரசரது காலாட் படைக் கூட்டம் போலக் காட்சியளித்தது (நற். 291:2-4). புதரிலுள்ள இணடின் குழை முதுகைத் தடவிக் கொடுப்பத் தன் சிறகு குவிநதிருநத வருத்த மிக்க வெண்குருகைப் பார்வையாககிய வேட்டுவன அதன் காற்கட்டை அவிழ்த்து விட்டான் (நற். 312: 2-4). துன்பத்தைச் செய்யும் குருகு, கழனியின்கண் இரையுண்டு பின் சிறுகுடியிலுளள பனைமடலில் ஏறியிருந்து, தன பேடையைக குடமபையில வந்து புணருமாறு அமையாது கூவும (நற். 338:7–12). மாலைப்பொழுதில் நிறைந்த சிறகுடைய குருகின் கூட்டம் வானததில் நெருங்கிச் சென்றது (நற்.369:2). கடற்கரைச் சோலையிலுள்ள பனையின் முதிர்ந்த பழம் கழியின் கருஞ்சேற்றில் புதையும்படி வீழ்ந்ததனால் சுற்றத்தையுடைய குருகுகள இனத்தோடு

இரிந்தோடின (நற். 272:2-5). புன்னையின் நறுந் தாது உதிரும்படி அதன்கிளை மீது அணிசெய்தாற் போன்று வைகிய குருகின் கூட்டம் இரை வேண்டிப் பெயர்ந்து உலவியது (நற். 375:1,2). மருதமரத்தில் இனத்துடன் குருகு தங்கும் (ஐங். 7:4). புதர்மீது அசைகின்ற வேழத்தின் வெண்பூ, வானத்தில் பறக் கும் குருகு போலத் தோன்றும் (ஐங். 17:1,2). குருகு உடைத்துண்ட யாமையின் மிச்சிலாகிய இறைச்சி யைப் பறைத்தொழில் வினைஞர் இட்டு வைத்து உண்ணும் உணவோடு சேர்த்து வைப்பர் (ஐங். 81: 1,2). வெள்ளிய தலையையுடைய குருகின் பார்ப்புக் கள் அழைக்குங் குரல் நெடுங்கழனியில் ஒலிக்கும் (ஐங். 86:1,2). பொழிலின்கண் தனிக்குருகு உறங்கி யது (ஐங். 144:2). பறக்கும் ஆற்றல் கெட்ட முது குருகு கடலில் வலைஞர் தந்த கொழுமீனாகிய உணவினைத் தின்னக் கருதி வாய்ப்பினை எதிர் பார்த்திருக்கும் (ஐங். 180:2,3). கழியிலுள்ள நெய் தலை நீக்கி மீனையுண்ட குருகு இளங்கானலில் தங்கியது (ஐங். 184:1,2). மிகுதியாகப் பெய்கின்ற பனி வருத்துதலானே உய்தற்கு வழியின்றிக் குருகி னம் ஆரவாரித்தது (ஐங். 457:1,2). இன்றுணையா கிய தலைவன் பிரிந்ததனால் நலங்கெட்ட தலை விக்கு, இராக் காலத்தே தன் சேவலைப் பிரிந்து வருந்தும் தனிக்குருகு துணையாகி உசாவும் (கலி. 121:15-18). அழகிய சிறகினையுடைய இனக்குருகு இராக்காலத்தே ஒருகால் ஒலிக்குமிடத்து அது தலைவனது தேர் ஒலி என்று தலைவி துணிவாள் (கலி. 126:6,7). இளவேனிற் காலத்தில் குருகுகள் இரை தேரும் வண்ணம் வையையில் நீர் சுருங்கிக் கிடக்கும் (பரி. 6:76,77).

**2. துருத்தி.** மகட்போக்கிய தாய் உலைக்கண் ஊதும் குருகு - துருத்தி - போல வெய்துயிர்த்து, உள் மெலிந்து, வேவது போன்ற வெவ்விய நெஞ்ச மொடு கண் துயிலாது புலம்பினாள் (அகம். 55:7-9). கரடி இருப்பையின இனிய பழத்தை வெறுப்பின் கறையான் புற்றினை, கொல்லன் உலையில் ஊதும் குருகு போன்று உயிர்த்துப் பெயர்த்து இரைதேடும் (அகம். 81:1-5). களிற்றியானை கல்லகச் சிலம்பில் கையை உயர்த்திப் பெருமூச்செறிதலான் வேங்கை யின் நறு மலர்கள், கொல்லன் குருகை மிதித்து ஊதும் உலையிற் பிதிர்ந்து எழும் தீப்பொறி போலப் பொங்கி, மின்மினிப் பூச்சிகளைப் போலப் புதரில் வீழ்ந்து பரவின (அகம். 202:3-8). இரைதேடும் கரடியேற்றை வரிகளையுடைய புற்றுக் கிடைத்தலும் அதனைப் பெயர்த்து அதனிடத்தே உறை கின்ற நல்ல அரா நடுங்குமாறு முழங்கி, இரும்பு செய் கொல்லன் ஊதுகின்ற உலைக்குருகு போலப் பெருமூச்செறிந்து அகழும் (நற். 125:1-4). தலைவன் தலைவியின் மென்விரற் போது கொண்டு அருளை யுடைய தன் சிவந்த கண் மறையும்படி வைத்துப் பறாஅக் குருகின் (கொல்லன் உலைக்களத்துருத்தி போல) ( வய்துயிர்த்தான் (கலி. 54:9-11).

**3. குருக்கத்தி.** காஞ்சி மரத்தைச் சூழ்ந்த நெடிய கொடியினையும் பசிய இலையினையுமுடைய குரு கின் - குருக்கத்தியின் - புற்கென்ற புறத்தினையும் வரிகளையுமுடைய பூக்கள், இடியப்பம் பாலிலே கிடந்தது போல மணலிடத்துக் குழிகளில் நின்ற நீரில் வீழ்ந்து கிடந்தன (பெரு. 375-379). குருகின் இலையுதிர அதன்கண்ணிருந்து குயிலினம் கூவி யது (பரி. 15:41).

**4. குருத்து.** வேரும் தூரும் மடலும் குருகும் - குருத் தும் - பறியாத நீண்ட கரிய பனைமீதுள்ள குலை கள் அதன் தலையினீங்கித் தரையில் உதிர்வன போலத் திருமால் ஏந்திய ஆழிப்படை அவுணர் தலைகளை உதிர்த்தது (பரி. 2:42-49).

**5. கிரௌஞ்சமலை** (ஆகுபெயர்). குருகு - கிரௌஞ்ச மலை - எறிந்த வேலோய் எனச் செவ்வேள் விளிக் கப் பெறுதல் (பரி. 19:36).

**குருகொடு பெயர்பெற்ற மால்வரை** – அன்றிலது பெய ரைப் பெற்ற மலை (கிரௌஞ்ச மலை). 'நாவலந் தீவினுள் வடபாலுள்ள குருகொடு பெயர்பெற்ற மால்வரையை - கிரௌஞ்ச மலையை - உடைத்து அதனை வழிப்படுத்திய ஆறு மென் தலைகளை யுடையவர் முருகன் (பரி. 5:8-10).

**குருசில் - தலைவன்.** முருகனது வெகுட்சிபோலும் வெகுட்சியினையுடைய அச்சம் பொருந்திய குரு சில் - தலைவன் - என்று சோழன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளி சுட்டப் பெறுகின்றான். (புறம். 16:12). 'வெற்றி பொருந்திய குருசில்' என் பது சேரமான் தகடூரெறிந்த பெருஞ்சேரலிரும் பொறையைக் குறித்த மோசிகீரனாரின் அண்மை விளி (புறம். 50:17). 'உறந்தையிடத்தே இருப்போ னாகிய குருசில்பால் செல்வையாயின் நீ பிறன் வாயிலை நினையாதபடி அவன் நினக்கு மிக்க பரி சிலை நல்குவான் என்று பாணனைச் சோழன் நலங்கிள்ளியிடத்தே கோவூர் கிழார் ஆற்றுப் படுத்துவர் (புறம். 68:18,19). 'வெற்றி மிக்க குருசில்' என்று விளித்துக் குமணனிடத்தே பெருஞ்சித்திரனார் யானைப் பரிசில்வேண்டினார் (புறம். 161: 20). தமக்குப் பரிசில் வழங்காத பாண்டியன் இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறனை, 'வேல்கெழு குருசில்' எனக் குறிப்பு மொழியாக விளித்தார் வடமவண்ணக்கன் பேரி

சாத்தனார் (புறம். 198: 10). சேரமான் குடக்கோச் சேரலிரும்பொறை பரிசில் நீட்டித்தது பொறாத பெருங்குனறூர் கிழார், 'குருசில், நான் இப்பொழுதே விடைகொண்டேன்; நீ வாழ்வாயாக' என்று கூறி அவனை விடுத்துப் புறப்பட்டார் (புறம். 210: 11,12). போர்க்களத்தில் பகைவரது வேல்பட்டு வீழ்ந்த குருசிலொருவன் பக்கத்திலுள்ள படையினரெல்லாம் தன்னைப் புகழத் தலை பணிந்து இறைஞ்சினான் (புறம். 285: 11-14). 'சினந்து செய்யும் போரினையும் இனக்களிற்றியானைகளையும் இயன்றதேர்களையுமுடைய குருசிலே, கள்ளினை இவனுக்கு முன்னர்க் கொடுத்து அதன்பின் நீ உண்பாயாக' என்று கரந்தைப்போரின் உண்டாட்டினில் வேந்தனிடத்தே வீரனொருவனைக் காட்டி அவனது குடிநிலைச் சிறப்பை வேறொருவீரன் உரைத்தான் (புறம். 290:1,2). போரில் பட்ட வாள் வடுக்கள் விளங்கியதலையினையுடைய செருவெங்குருசில் காக்கும் ஊர் வனபுல வைப்பில் உள்ளது (புறம்.331:7-10). குருசில் தன பகைவரை வென்று கொண்ட பொருளே அவனிடத்துச் செல்லும் இரவலர்க்குரிய பரிசிலாகும் (புறம. 333:19). தான் விரும்பிய அவளொடு நாளை மணம் பெறுதல் அல்லது அவளைக் கொடுக்க மறுக்கும் அவள் தமருடனே ஆரமர் செய்து வாள்பட்ட உடம்பொடு மீளாவுலகம் புகுதல் என்ற இவ்விரண்டினுள் ஒன்றேயாக என்ற வஞ்சினத்தோடு குருசில் பொருதற்கு வாளினைத் தொட்டான (புறம். 341:11-16). 'கடலொலி கொண்ட தானையினையுடைய அடல்வெங்குருசில் நெடிது நிலைத்து வாழ்வானாக' என்று சோழன் இராசசூயம வேட்ட பெருநற்கிள்ளியைக் கிணைப் பொருநன கூற்றில் உலோச்சனார் வாழ்த்துவர் (புறம். 377:29,30). 'அளவிடப்படாத எல்லையினையும் இயல்பினையுமுடைய பாசறைக்கண் தங்கும் குருசில' என்று பல்யானைச் செல்கெழு குட்டுவனைப் பாலைக் கௌதமனார் சுட்டுவர் (பதி. 24: 14). 'போர்மிகு குருசில், நீ பலவற்றாலும் மாட்சிமைப் பட்டனை' என்பது களஙகாய்க் கண்ணி நார்முடிச் சேரலைக் குறிதத காப்பியாற்றுக் காப்பியனாரின பாராட்டாகும (பதி. 31:36;32:1). 'சினங்கெழு குருசில்' எனறு ஆடுகோட்பாட்டுச் சேரலாதனும் தகடூ ரெறிந்த பெருஞ்சேரலிரும்பொறையும் தனிததனியாக விளிக்கப் பெறுதல் (பதி. 53:14;72:16). 'ஊக்கத்தையுடைய குருசில, நின் வாழநாள் மழை பெய்து காக்கும் கார்மேகத்தையொத்தும் பயனின்றிக் கழியும வெண் மேகத்தையொவ்வாதும் சிறக்க' எனறு ஆடுகோட்பாட்டுச் சேரலாதனைக் காககை பாடினியார் நச்செள்ளையார் வாழ்த்துவர் (பதி. 55:14-16,21). 'மறங்கெழு குருசில்' என்றும் 'பொலந்தேர்க் குருசில்' என்றும் இளஞ்சேரலிரும்பொறை சுட்டப் பெறுகிறான் (பதி. 88: 15, 30). 'முருகனது சீற்றம் போலும் சீற்றத்தை யுடைய அச்சம் பொருந்திய குருசில்' எனவும் 'வென்வேற் குருசில்' எனவும் சோழன் கரிகாற் பெருவளத்தான் குறிக்கப் பெற்றுள்ளான் (பொரு. 131,231). 'வெல்போர்க் குருசில்' என்று விளித்துப் பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனுக்கு மாங்குடி மருதனார் நிலையாமை யுணர்த்தினார் (மது. 151). 'போரைச் செய்கின்ற வலிமையுடைய குருசில்' என நன்னன் குறிக்கப் பெற்றான் (மலை. 186). 'சீர்மிகு குருசில், நீ அருந்தொழில் முடித்த செம்மல் உள்ளமொடு கானம் பிற்படத் தேர்மணி இயம்ப வந்து நின்றது தலைவிக்கேயன்றி எனக்கும் இனிதானது' என்று தோழி வினைமுடித்து மீண்ட தலைவனிடம் உவந்து கூறினாள் (அகம். 184). 'வெல்போர்க் குருசில், நீ பிரிந்து சுர நெறியிற் சென்றால் தலைவி பெரிதும் வருந்துவாள்' என்று தோழி தலைவனிடம் கூறினாள் (ஐங். 306). 'செருவெங்குருசிலாகிய வேந்தன் பகை தணிந்தனனாகலின் போர்வயிற் பிரிந்த நம் தலைவர் விரைவில வருவர்' எனபது தலைவிக்குத் தோழி கூறிய ஆறுதல் மொழியாகும் (ஐங். 465: 4,5). 'வளை நெகிழவும் மேனி வாடவும் கண் கலங்கவும் மறங்கெழு குருசிலாகிய தலைவர் தலைவியைத் துறந்தனர் (ஐங். 471:1-3). 'பலரும் புகழ்தற்குக் காரணமாகிய சிறப்புக்களையுடைய நும் குருசிலை நினைந்து அவரிடம் செல்வையாயின் எமக்கு இன்னா அரும்படரைச் செய்த பொய் வல்லாளராகிய அவரைப்போல் நீ எம்மை மறந்து விடாதே' என்று தலைவி பாணனிடம் வேண்டினாள் (ஐங். 473). 'நின் விருப்பத்திற்குரிய காதலி தன் மனைக்கண்ணே தனிமையுற்றுக் கண்ணீர் உகுத்த வருத்தத்தை எம் வாயிலாய்க் கேட்டும் அவளுக்கு அருள் செய்யாத நினக்கு யாமும் பாணரல்லேம்; எமக்கு நீயும் குருசிலல்லை' என்று பாசறைக்கண் தலைமகனைப் பாணன் நெருங்கிக் கூறினான் (ஐங். 480). 'பேரியல் அரிவையே, நின்னை நினைந்து போர் வெங் குருசிலாகிய தலைவர் வந்தமையால் இப்போது கார்காலம் தொடங்கிற்றெனக் கருதுவாயாக' என்று தோழி தலைவன் வரவைத் தலைவிக்கு அறிவித்தனள் (ஐங். 497:3-5). 'போரடு குருசில்' நீ ஏந்திய ஆழிப் படை பனங்குலைகள் உதிருமாறு பகைவர் தலைகளை உருட்டி அவர் இன்னுயிரைச் செகுக்கும்

என்று திருமாலின் மறத்தைக் கீரந்தையார் போற்றுவர் (பரி. 2:43-49). குரிசில் காண்க.

**குருடர்** - பார்வையிழந்தோர். புழுங்கல் நெல்லின் பொரி சிந்தினாற் போன்ற புற்றீயல், கோல் பிடித்து நடக்கும் குருடரை யொத்துச் செல்லும் (ஐங். தி. 4:2-4).

**குருத்து** – வளர்முனை. வேனிற் காலத்தில் கோடைக் காற்றினால் குருத்து - வளர்முனை - இற்றுதிர்ந்த பனை உசசி கூம்பி வற்றும் (அகம். 333:8-11). யானைத் தலைவனான களிறு புலம்புமாறு அதன் நிமிர்ந்த வெண்கோட்டினைப் பறித்துக் குருத்தினை ஆளி தினனும் (அகம். 381:1-3). கடற்கரையில் பனையின் உச்சியிலுள்ள கருக்கினை யுடைய நெடுமடல் குருத்தோடு மறையுமாறு கடுவளி மணலைக் குவிககும் (குறு. 372:1-3).

**குருதி** - செந்நீர். தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் போர்க்களத்தில் வேலேந்திப் பகை வேந்தரைக் கொன்று அவர் முடித்தலையே அடுப்பாக புனறகுருதி - புனலாகிய செந்நீர் - உலையில் தசையும் மூளையும் முதலானவற்றைப் பெய்து தோளாகிய துடுப்பினால துழாவி அடப்பட்ட உண வால் களவேள்வி செய்தனன் (புறம். 26:4-11). குருதிப் பலிகொள்ளும் விருப்பத்தையுடையதும் அச்சம் பொருந்தியதுமான சேரமான் தகடூர் எறிந்த பெருஞ்சேரவிரும்பொறையின் வீரமுரசம் நீராடி வருவதன் முன்னே அம்முரசத்தினது கட்டிலில் மோசிகீரனார் அறியாது ஏறித் துயின்றார் (புறம். 50:5-8). போர்க்களத்தில் பொருதுபட்ட வீரரது புண்ணைத் தோண்டிக் குருதி தோய்ந்த செங்கையால் தம் மயிரைக் கோதி நிறம் மிக்க வடிவையுடைய பேய் மகளிர் மேன்மேலும் கொட்டும் ஓசையினையுடைய பறையின் சீருககேற்ப மறவர் ஆடுவர் (புறம். 62: 2-5). பகைவேநதரது கொல் யானை புண்பட்டு வருந்தும் பாசறையின்கண் குருதிப் பரப்பிலே யானையைக் கொன்று போர்க்களத்தை யுண்டாக்கிய படையையுடையவன் சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் (புறம். 69: 8-11). வாள் வாய்க்கத் தைத்த வடுப்பரநத மேனி யுடையவரான அதியமானின் மற மைந்தரது வலிமை கண்டு அவன் பகைவர் புண்பட்ட குருதியையுடைய அம்புகளைத் தூணியகத்தே அடக்கிக் கொள்வர் (புறம். 98: 12-14). 'மான்கணத்தைத் தொலைத்த குருதி தோய்ந்த அழகிய கழற்காலினை யுடைய வல்வில வேட்டுவன்' என்று வனபரணர் நள்ளியைக் குறிப்பர் (புறம். 150:5-7). ஒளிறுவாள் மறவரும் களிறும் குதிரையும் குருதியாகிய நிற முடைய அழகிய நீர்மிக்க போர்க்களத்தின்கண் மாயுமாறு பகைவரை நாள்தோறும் அமையாது கொன்று கூற்றத்தின் வாடுபசி தீர்த்தான் கிள்ளி வளவன் (புறம். 227:4-6). செருவிடை வீழ்ந்த மறம் புகல் மைந்தனொருவனது நொச்சிமாலை அச்சந் தரத்தக்க குருதியொடு கலந்து உருமாறிக் கிடக்க அதனை ஊனென்று கருதிப் பருந்து எடுத்துச சென்றது (புறம். 271:5-8). மாற்றார் செற்றங்கொண டெறிந்த நெடுவேல் தன் மார்பை ஊடுருவி உள்ளே . புதையச் செம்மலொருவன களததைச் சேறுபடுக்கும் குருதியைச் சொரிந்து நிலத்தில வீழ்ந்தனன (புறம். 285: 10-12). போர்க்களத்தில் மாற்றார் எறிநத நெடுவேல் வநது பாயந்ததனால் நாணுண்டாகிய நெஞ்சுடனே வீழ்நத மறவனது குருதி சோர்வதனோடு அசையும மார்பினை இடை விடாது பருந்துகள் மொயததன (புறம. 288: 5-9). வேந்தரால் மகட்கொடை வேணடபபடும் மங்கை யொருத்தியின தமையனமார் வஞ்சியாது பொருது வென்ற நெடுவேலையும பகைவரை யெறிதலால் குருதி தோய்நத கணடார்கக அசசந் தரும் தலையையும் உடையவர் (புறம். 337:16-18). தையலொருததியின் தமையன்மார் அவளை நிரலல் லோர்க்குத் தரலில்லையெனறு கூட்டஙகொணடு குருதி நாறும் புலால் நாற்றத்துடனே கழுவாத தலையுடையராய் வேலேநதிப் பொர நினறனர் (புறம. 345:11-17). தலைவனொருவனால விரும்பப் பட்ட தையலொருத்தியின் தமையனமார் அவள் காரணமான போரில் பகைவரைக் கொனறு குருதியை ஆறாகவோட்டி வாய மடிந்து வடுபபட்ட வாளோடு பஞ்சியும் களையாப் புணணராயப பிறரால் அஞ்சத் தககவராயிருநதனர் (புறம. 353:14-17). சேரமான குடக்கோ நெடுஞ்சேரலாதன சோழன வேற்பஃறடக்கைப் பெருநறகிள்ளியொடு பொருது வீழ்ந்த களத்தில் கொய்சுவற் புரவியெல்லாம மெய்நிறைந்த வடுவொடு மடிநது வளி வழக்கறுத்த வங்கம் போலக் குருதியம் பெரும்புனலில மிதந் தன (புறம். 368:7-10). சேரமான கடலோட்டிய வேல்கெழு குட்டுவன போர்க்களத்திலே குறுந்தடி கொண்டு 'அடிக்கப்படுவதும் குருதிப்பலி யூட்டப் பெறுவதுமான முரசினொலியே இடிமுழக்கமாகப பகையரசராகிய அரவுகளை நடுஙகச் செயதான (புறம். 369:4-6). ஒளிபொருந்திய படைக்கலனகளா கிய மழைமுகில பகைவர் தலைகளாகிய கணிக ளைப் பெயதளவாக முழங்கி வரும குருதி வெள ளம் நிலத்தின மேல் பரவிச் செலலுமாறு சோழன செருப்பாழி யெறிநத இளஞ்சேட் சென்னி போர் புரிந்தான் (புறம். 370:12,13). அச்சம் பொருந்திய

பேய்மகள் வாழ்த்திக் குரவையாடுமாறு குருதியுலர்ந்து துகள்பட்ட களத்தைத் தனக்கு உரிமையாக்கிக் கொண்டவன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் (புறம். 371:25-27). 'சொரிகின்ற குருதியோடே கையிலேந்திய வாட்படையால் மறவர் போருடற்றும் பெருந்தானையைக் கொண்டு கொங்க நாட்டினைப் புறங்கண்ட கொற்ற வேந்தன் சோழன குராப்பள்ளித் துஞ்சிய கிளளி வளவன் (புறம். 373:5-8). பகை மன்னரின் கரிய எயில்களைக் கடந்து அவர்தம் நிணந் தோயந்த குருதிப் பெருக்கினாலுண்டான பெரும் பாட்டீரததிலேயே போர்க்களநதோறும் கழுதையேர் பூட்டி உழுது வரகும் கொள்ளும் வைகலும் விதைக்கும் உழவனை அதியமான் பொகுட்டெழினி (புறம். 392: 6-11). இமையவரம்பனின் கூர் வாள் எதிர்த்துப் போரிடும் பகைவரை அறுக்க அவரது அரிய மார்பகம் பிளத்தலால் உண்டாகிய புண்ணினின்றொழுகும் குருதியால் நீலமணி போலும் நிறமுடைய கடலநீர் நிறம் மாறிக் குங்குமக் குழம்பினை நிகர்த்தது (பதி. 11:7-10). செந்தினையைக் குருதியொடு பலியாகத் தூவி, நீராட்டிய முரசின் கணணைத் திறந்து இயவர் குறுந்தடி யேந்திய கையராய் அதனை முழக்குமாறு நெடுஞ்சேரலாதன் போர்த்தொழில் மேற்கொண்டான் (பதி, 19: 6-10). கலந்த பல்வேறு கூலங்களோடு குருதியைப் பலியாக விரும்பிய முரசின்கண் கடிது முழங்குமாறு போரை விரும்பி மேற்கொள்வதில் ஒப்பற்றுப் பகைவரின கடத்தற்கரிய மதில்களைக் கைக்கொணடான் பல்யானைச் செல்கெழு குட்டுவன் (பதி. 29:11-14). பகைவரின் தலை வெட்டப்பட்டு எஞ்சி நினற உடம்பு எழுநதாடுகின்ற போர்க்களத்தில் அநதிமாலையின செவ்வானத்தைப் போனற செஞ்சுடர் கொண்ட குருதி மன்றத்தே பேய்கள் குரவையாடும் போர்ச் செல்வம் மிக்கவன் களங்காய்க்கணணி நார்முடிச் சேரல் (பதி. 35: 6-10). பகைவரின் குருதிச் செம்புனல் ஒழுகுமாறு களங்காய்க்கண்ணி நார்முடிச சேரல் போர் பல புரிவான் (பதி 36:13,14). குருதிச செம்புனல் குஞ்சரங்களை ஈர்ததுச் செலலுமாறு போர் பல புரிநது களவேளவி செய்த வெற்றியுடையவன் களஙகாய்க கணணி நார்முடிச் சேரல் (பதி. ப. 4:10-13). மோகூர் மன்னனுடைய செங்கை மறவர் தம் மார்பைப் பிளத்தலால் ஒழுகிய குருதி நிலத்திலே படர்ந்தோடி மழைநீரைப் போலப் பள்ளங்களில் பாயுமாறு கொன்று படுபிணம் பிறங்கப் பாழ செய்தான கடல் பிறககோட்டிய செங்குட்டுவன (பதி. 49:10-13). ஆடுகோட் பாட்டுச் சேரலாதன் தன் பனந்தோடாகிய மாலையோடு வீரக் கழல் சிவக்கும்படி பகைவரின் உடம்பு குருதியைத் தூவுகின்ற புலால் நாறும் போர்க்களத்திலே தங்கியிருந்தான் (பதி. 57:2,3). போர்க்களத்தில் பருந்தின் கூட்டம் குருதியை நிரம்பப் பருகுமாறு பல போர்களில் பகைவரைக் கொன்று விழுப்புண்பட்ட சான்றோரின் பெருமகன் செல்வக் கடுங்கோ வாழியாதன் (பதி. 67: 8-18). தும்பை சூடியதற் கேற்ப நின்று பொருகின்ற ஆற்றலுடைய போர்மறவரின் மார்பைத் திறந்து விட்ட குருதியை யன்றி வேறு பலியைக் கொள்ளாத அஞ்சுவரு மரபினை யுடையது அயிரைமலைக் கடவுள் (பதி. 79:15-18). குருதி மிக்க போர்க்களம் புலால் நாற்றம் வீசப் பகைவரைக் கொன்று வென்ற வெந்திறலை யுடைய தடக்கை அமைந்தவன் இளஞ்சேரலிரும்பொறை (பதி. 86:1-3). பகைவரின் குருதியைத் தெளித்துத் திரட்சியையுடைய சோற்றுக் குன்றுடன் அயிரை மலைக் கடவுளான கொற்றவையை இளஞ்சேரல் இரும்பொறை வழிபட்டான் (பதி. 88: 11, 12). பேய்மகள் குருதியினை அளைந்த கூருகிர்க் கொடு விரலால் கணகளைத் தோண்டியுண்ட கருந்தலையைக் கையிலேந்தி வெற்றிக்களம் பாடித் தோளையசைத்துத் துணங்கையாடுமாறு முருகன் அவுணரைக் கொன்றான் (முரு. 51-61). கொழுங்கிடாயின் குருதியொடு பிசைந்த தூவெள்ளரிசியைச் சிறுபலியாக இட்டும் அச்சம் வரும்படி குருதியளைந்த செந்தினையைப் பரப்பியும் குறமகள் முருகனை வரவழைத்தாள் (முரு. 232-244). யானைப் பிணத்தைக் குருதியாகிய ஆறு ஈர்த்துக் கொண்டு செல்லுமாறும் நூற்றுவரும் (துரியோதனன முதலானவரும்) போர்க்களத்திலே மடியுமாறும் ஐவரும் (பாண்டவரும்) பெரிய போரை வென்றனர் (பெரு. 414-417). திரட்சி கொண்ட தோன்றி, குருதி போலப் பூத்தது (முல்லை. 96). ஆண்மக்களின் தலைகளாகிய அடுப்பில் பகைவேந்தரின் குருதியாகிய உலை தமது சினமாகிய தீயினால் மறுகிப் பொங்குமாறு பாண்டிய வேந்தர் போருடற்றி வென்றனர் (மது. 29-40). மையல் வேழம் மடங்கல்போல் எதிர்வரக் கண்டு தலைவியும் தோழியும் நடுங்கிய நிலையில் தலைவன் அம்பினையெடுத்து அந்த அண்ணல் யானையின் அணிமுகத்தில் எய்தமையால் பட்ட புண்ணிலிருந்து வழிந்த குருதி அவ்வியானையின் முகத்தில் ஒழுகியது (குறி. 165-172). மலைச்சாரலில் புலி மரையாவை வலப்பக்கத்தே விழுமாறு கொன்று வீழ்த்தி அதன் ஒள்ளிய சிவந்த குருதியைப் பருகியது (அகம். 3:6 9). வெறியாடு களம் அமைத்துக் கண்ணி சூட்டி, வளநகர் சிலம்பப் பாடி, பலி

கொடுத்துச் செந்தினையைக் குருதியோடு கலந்து தூவி முருகனை ஆற்றுப்படுத்தினர் (அகம்.22: 8-11). பருந்துகள் வந்து சூழ மன்னர்தம் போர்களை வென்ற வெற்றி பொருந்திய நல்வேல் குருதி தோய்ந்து பிறழ்வது போன்ற செவ்வரி பொருந்திய மையுண்ட கண்களை உடையவள் தலைவி (அகம். 27:14-17). மறவர் அம்பெய்தலால் செவ்வலரி மாலை இடப்பட்டு இறந்து கிடந்தாலொட்ப நிண ஒழுங்கும் புண் சொரியும் குருதியும் தம்மைச் சூழக் கிடந்தோரது கண்களைக் கழுகு தன் பார்ப்பினங்கட்கு உணவாகக் கவர்ந்து சென்று கொடுக்கும் (அகம். 31:7-11). தம்பலப்பூச்சி குருதியைப் போன்ற சிவந்த நிறத்தினை உடையது (அகம். 74:4). கேழற் பன்றியைக் கொன்ற செந்நாய் ஏற்றை விரைவாக அதனை இழுக்க ஒழுகிய குருதியைப் பருந்து பருகும் (அகம். 111:10-12). போர் வேட்டெழுந்த மறவர் தம் கூர்வாளின் முனை சிதைந்திட மாற்றார் படையை வீசிக் கொன்று மான் அடிபதிந்த பள்ளங்களிலே பாய்ச்சிய குருதி, வானிடத்துள்ள மீன் போல இடந்தோறும் மின்னியது (அகம். 144:14-17). புலியுடன் பொருத புண்கூர் யானை, புள்ளிகள் சிதைந்த முகத்தையுடையதாய்க் குருதி ஒழுக, இடிபோல் முழங்கும் (அம். 145:7-9). வேட்டைக்குச் சென்ற குறவன் காட்டிலுள்ள மலலிகையாகிய தண்புதர் குருதியொடு அசைந்திட அங்குள்ள முள்ளம்பன்றியைக் கொன்று வீழ்த்தினான் (அகம். 182:6-8). ஆறலைப்போரால் போர்க்களத்து ஒழிந்தோரது உடம்பினின்றும் உக்க குருதியை உண்டமையால் கழுகின்வாய் செந்நிறமாயிற்று (அகம். 193:4,6). பரதவர் எறியுளி தாக்கிய பெருமீன், வான வில்லைப் போலத் தாவிச் சென்று, தன் புண்ணினின்றும் வெளிப்படுத்திய குருதியால் கடல்நீரின் நிறம் மாறுபட்டது (அகம். 210:1-4). யானையோடு புலி பொருதலின் குருதியால் குழைவுற்ற செங்களத்தின் புலால் நாற்றத்தை வேங்கை மலர் காட்டு மல்லிகையோடு சேர்ந்து மணம் கமழ்ந்து மாற்றும் (அகம். 268:2-4). மழவர் தெய்வம் தங்கிய வேப்ப மரத்தடியில் கொழுப்பு மிக்க பசுவினைத் தடிந்து குருதியைத் தூவிப் பலியிட்டு அதன் புலாலைப் புழுக்கி உண்பர் (அகம். 309:2-6). ஆறலைப்போர் அம்பு எய்தலால் இறந்த புதியோரது புண்ணினின்றிழியும் குருதியை மாந்திய காக்கைகள் ஒற்றுச் செல்லும் மாக்களைப் போல ஒடுங்கிய குரலினவாய் மனையிடததே வந்து தங்கின (அகம். 313:13-16). புலியைப் பொருது கொன்ற களிற்றின் குருதி தோய்ந்த சிவந்த கொம்பினைப் பெரு மழை கழுவியது (அகம். 332: 2-4). ஆறலைப்போரால் கொல்லப்பட்ட, தூது செல்லும் பார்ப்பானின், நீள ஒழுகிய குருதியுடன் தொங்கிக் கிடந்த குடலை நரி கடித்துத் தின்னும் (அகம். 337:[illegible]-15). எருவைச் சேவல் குருதி படிந்த புலால் நாறும் பெரிய சிறகினையுடையது (அகம். 381:9,10). செவ்வேளின் குன்றம் குருதி போன்ற நிறமுடைய பூங்கொத்துள்ள காந்தளை உடையது (குறு. 1:2,4). கலைமானின் மருமததிலே செலுத்திக குருதியோடு பறித்த சிவந்த அம்புகள் ஒன்றையொன்று மாறுபட்டாற் போன்ற மையுண்ட கண்களை யுடையவள் தலைவி (குறு. 272:5-8). குவளை மலரோடு குருதி போன்ற காநதளின மலர்களை விளங்கக் கட்டிச் சூடிப் பெருவரையடுக்கம் பொலிய, அருவியோசை இன்னிசையாகச் சூரர மகளிர் ஆடுவர் (நற். 34:1-5). இரும்புலி யானையை வருநதும்படி மோதி அதன் குருதி பருகிய பெரிய வாயை வேங்கையின அடிமரததில துடைத்தது (நற். 158:5-8). குருதி வேட்கை கொண்ட புலி தன் எதிரே இளங்களிறு வருதலை நோககி நிற்கும (நற்.192:1,2). குருதி போனற நிறததையுடைய கமழ்கின்ற காந்தள மலர்கள் வணடுகள உண்ணும்படி மலர்ந்தன (நற். 399:2,3). கணிச்சிப் படையையுடைய இறைவன் சூடிய பிறையிடததுக் கிடந்த செம்மாலையைப் போல ஏறறினஙகளின குருதி தோய்ந்த கொம்புகளில குடர்கள சுற்றிப் பிணித்திருந்தன (கலி. 103:24-27). ஒனறோடொனறு தாக்கிக் கொம்பாலே மாறாமல் எவ்விடத்தும் குத்துகையினாலே மெய்யினினறும வடிகினற குருதியையுடைய ஏறுகள் நாட்காலைப பெயயும் மேக நிரையை யொத்தன (கலி. 106:11-14). பொதுவர் ஏறு துளைத்த தம்முடைய புண்களினினறும் சோருகினற குருதி வழுக்குதலாலே மணலை அள்ளிக் கையைப் பிசைந்து கடலுக்குள்ளே பரதவர் தெப்பத்தில் ஏறினாற் போல ஏறறைத தழுவினர் (கலி. 106:23-25). தயிரைக் கடைதலினால் பாய்ந்த புள்ளிகளின் மேல் கொல்லேற்றைத தழுவினவருடைய குருதி மயங்கும்படி தழுவுதல எம்முடைய தோளிற்கு அழகு செய்யுமோ எனறு தலைவி தோழியை வினவினாள் (கலி. 106.37-39). தலைவி புலவி மீக்கூர்ந்து அரக்குநீர் நிறைந்த வட்டைத் தலைவன் மார்பில் எறிய, அநநீர் அவள் உண்கண்ணின வேலேறு போலும் நோக்கம்பட்ட புண்ணிலிருந்து பாயும் குருதி சோர்வது போலச் சோர்ந்தது (பரி. 12:67-70). வையையாறு இருளையடும் காலைப் பொழுதின்கண கலங்கின செங்குருதியைப் போனறு காணப்பட்டது (பரி. 12:

85,86). தலைவன் காதற்பரத்தையை அணுகி அவள் குரும்பை முலைமேற்பட்ட குருதி நிறம் அமைந்த அரக்குநீரைத் துடைத்தான் (பரி. 16:21,29). சூல் முதிர்நத முகில் மலையொழுங்கைச் சூழ்ந்து உரு மேற்றினம் ஆர்ப்பப் பெய்த நீர் தனனோடு முர ணிப் பொருத புலியைப் போழ்ந்த யானையின் குருதிக் கோட்டிலுள்ள கறையைக் கழுவியது (பரி. 20:1-5).

**குருந்து** - ஒருவகை மரம். குரவம், தளவு, குருந்தம், முல்லை என்று சொல்லப்பட்ட இந்த நால்வகைப் பூவல்லது வேறு சிறந்த பூக்கள் இல்லை (புறம்.335: 2,3). தலைவியும் தோழியரும் பறித்துக் குவித்த மலர்களுள் கரிய பெரிய குருந்தம்பூவும் ஒன்றாகும் (குறி. 95). மயில் தேனையுடைய பசிய குருந்த மரத்தின் நறுமணம் வீசும் கிளையிலிருந்து தன் துணையை அழைத்துக் கூவியது (அகம். 85:11-13). அரும்பு முதிர்ந்த வெட்சி மலர்கள் புனத்திலுள்ள குருந்த மலர்களோடு கற்பாறையிலே பரவிக் கிடந்தன (அகம். 133:14,15). கார்காலத்தில் மயில் அழகிய தோகையினை விரித்து இன்பமுறக் கொல்லையை உழும் உழவர் கூழ உண்டற்கு நிழலாக விட்டு வைத்த, வலிய இலையினை யுடைய குருந்த மரத்தின வளைந்த கிளையிலிருந்து கிளிகளை ஓட்டும் மகளிர் போல ஒலியுண்டாக அகவும் (அகம். 194:11-16). குட்டியைத் தழுவிய பிணைமான் இரலையோடு அசையும் கிளையினை யுடைய குருந்த மரத்தின் நிழலில் தங்கியது (அகம். 304:8-10). மிக்க தண்மையுடைய பருவக் காலத்தில் கொன்றை மரம் குருந்த மரத்தோடு அசையும் (குறு. 148:4,5). காட்டில குருநது மலர்ந்தது (நற். 321:9). காதலர் சென்ற நெறி கொன்றையோடு நன்கு மலர்ந்த குருந்த மரங்களை உடையது (ஐங்.436;3). தலைவன் சென்ற நெறியில் குருந்தங் கண்ணியைச் சூடிய கோவலர் வாழும் சிற்றூர்கள் இருந்தன (ஐங். 439). பொதுவர் குருந்து, கோடல் முதலான வேறுவேறு மலர்களால் செய்த கமழும் கண் ணியைச் சூடி ஏறு தழுவினர் (கலி. 103:3-5). பொது வன குருந்தம் பூவாற செய்த கண்ணியைச் சூடி னான (கலி. 111:7). தலைவனும் தலைவியும் முலலைப் பூவைக குருந்தம் பூவோடு முடியிலே சூடிக் கான்யாற்றில் விளங்குகினற பொழிலிடத் துள்ள அகன்ற பாறையில் ஆயத்தோடு விளை யாடினர் (கலி. 113:23-25).

**குரும்பி** - புற்றாம்பழச் சோறு. வலைஞர் பாணருக்குக் கொழியலரிசியைக் களியாக அட்ட கூழைத் தட்டுப் பிழாவிலே உலரவாற்றிப் பாம்பு கிடக்கின்ற புற்றினிடத்துக் கிடக்கும் குரும்பியை - புற்றாம் பழசசோற்றை - ஒக்கும் நல்ல முளையை யிடித்து அதில் கலந்து தருவர் (பெரு.274-278). கரடியேற்றை, ஈயல்களை யுடைய புற்றின் குளிர்ந்த மேற் புறத்தே தங்கிய குரும்பியாகிய இரையினை யுண் ணும் (அகம். 8:1,2). கரடியேற்றை மின்மினிகள் மொய்த்திருக்கும் புற்றினை, இரும்பினைக் காய்ச்சி யடிக்குங்கால் சிதறும் பிதிர்போல அம்மின்மினிகள் ஒளிவிடப் பெயரச் செய்து குரும்பியைத் தோண்டி யெடுத்து, இரும்பு செய் கொல்லன் போலத் தோன்றும் (அகம். 72:3-6). அகன்ற காட்டிடத்தே பெருங்கைக் கரடியினம் குரும்பியைத் தேரும் (அகம். 307:9,10).

**குரும்பை** - இளங்காய். மகளிர் பெரிய பனையினது குரும்பை நீரையும் கரும்பினது இனிய சாற்றையும் தெங்கின் இளநீருடன கலந்து இம்மூன்று நீரை யும் உண்டு முந்நீரையுடைய கடலிற் பாய்ந்து விளையாடுவர் (புறம். 24:11-16). மகளிர் கணவ ரோடு புலந்தனராய் அறுத்த வடமாகிய ஆரஞ் சொரிந்த முத்துக்களோடு அழகிய மென்மை யான குரும்பைக் காய்களும (பச்சைப் பாக்கு களும்) பிறவும் முற்றத்திடததே சிந்திக் கிடந் தன (மது. 680-684). தலைவி குரும்பை போன்ற மெல்லிய முலையினை யுடையவள் (அகம். 253:22). குரும்பை போன்ற மணியையுடைய பூணாகிய பெரிய செங்கிண்கிணியைப் புதலவன் அணிநதிருந் தான் (நற். 269:1). புதல்வன் குரும்பை மணிப்பூணி னன் (ஐங். 442:5). முகம் செய்த குரும்பை போன்ற நின் இளமுலைகள் நின்னைக் கண்டோர் உயிரை வாங்கும் என்பதை உணர்தியோ, உணராயோ எனத் தலைவன் தலைவியை வினவினான் (கலி. 56: 23-26). சிறுபிள்ளைகள், பனையினுடைய குடம் போலத் திரண்ட இடத்தை யுடைத்தாகிய சருச் சரையுடைய முகிழையுடைய பசிய குரும்பையைக் கொடியாற் கட்டிப் பின்னின பின்னலை இழுத்து அதனால் இளைப்பர் (கலி. 83:8-10). வேயினால் ஆயத்தார் சுற்றி நின்று எறியத் தன் குரும்பை போனற முலைக்கண் பட்ட அரக்கு நீரைக் காதற்பரத்தை துடையாளாய்த் துகிலினால் ஒற்றி நின்றாள் (பரி. 16:20-23).

**குருவி** - பறவை வகை. குறவர் மூட்டிய தீக்கு வெரு வித் தன் புகலிடத்திற்கு விரையும் மயில, தினை யரிந்த தாளின் மீதிருந்த குருவிகள் வருந்தும்படி செல்லும் (ஐங். 295:3-5). தினைகள், குருவிகள் ஆர்க்குமாறு கதிர்களை விளைவித்தன (பரி. 18:47).

**குருளை** - குட்டி. சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் புலி பாதுகாக்கும் குருளை - குட்டி - போலக் குறைவில்லாத செங்கோலால தன் குடியைப்

புறங்காத்தான் (புறம். 42: 10, 11). ஆளியின் அணங்குடைய குருளை முலையுண்டலைக் கை விடாத இளைய பருவத்தே முதல் வேட்டையில் மிகுந்த வலிமையுடன் செருக்கிக் களிற்றைக் கொன்றாற் போலக் கரிகால் வளவன் சேர பாண்டியராகிய இருபெரு வேந்தரும் களத்தே படும்படி வெண்ணிப் பறந்தலையில் பொருதான் (பொரு. 139-148). கண் திறவாத வளைந்த செவி யினையுடைய தன் குருளை முலையுண்ணுதலைத் தன் பசி மிகுதியாற் பொறுத்தலாற்றாது புனிற்று நாய் குரைக்கும் (சிறு. 130-132). களிற்றியானை யைத் தாக்கிய வலியுடைய சிங்கத்தின் வளைந்த வரியினையுடைய குருளை அவ்வியானையின் மத்த கத்தைக் கொள்ள வேட்டாற் போன்று, தொண் டைமான் இளந்திரையன் பகைவரது கடிமதிலை எறிந்து அவர் முடிகளைக் கைப்பற்றி வென்றி கொள்வதல்லது சந்து செய்வதற்கு உடன்படான் (பெரு. 448-453). கூரிய உகிரினையும் வளைந்த வரி களையும் உடைய புலிக்குருளை கூட்டிடத்தே அடையுண்டு வளர்ந்தாற்போலக் கரிகால வளவன் பகைவர் காவலிடத்தே யிருந்து பெருமை வளர அக் காவலை ஒட்டித் தாயம் எய்தினான் (பட்.220-228). நன்னன் அரண்மனை வாயிலில் காணப்பட்ட பல் வேறு கையுறைப் பொருள்களுள் வளைந்த அடி யினையுடைய வாய்திறவாத கரடிக் குருளையும் ஒன்றாகும் (மலை. 501). பிணவுப்புலி பிடவுடன் சேர மலர்ந்த வேங்கையின் பூவுடன் கூடிய தழையை வேறு வேறாக வகுத்து வைத்தாற் போன்ற, தசையின் மறைப்பு நீங்காத வளைந்த நகத்தினை யுடைய மூன்று குருளைகளை ஒருசேர மலைக் குகையில் ஈன்றது (அகம். 147:1-5). மலைச்சாரலில் கரடியேற்றை இருளைத் துணித்து வைத்தாற் போன்ற திரண்ட மயிரினையுடைய குருளையோ டும் தோல்முலைப் பிணவோடும் மகிழ்ந்திருக்கும் (அகம். 201:15-18). சுரநெறியில் இருப்பையின் வெள்ளிய பூக்களைக் கரடிக குருளையின் பெரிய கூட்டம் கவர்ந்துண்ணும் (அகம். 275:11-13). புலி ஈன்ற வறுஞ்சுனையில பாய்தல் கொண்டு, நேர்மை பொருந்திய முதுகினை நெளிக்கும் சிறு வரிகளை யுடைய புலிககுருளை நீர்வேட்டுச் சுனையிலிட்ட யானையின் கையைக் கடித்து முழங்கும் (அகம். 329: 9-12). கானமயில் பாறையில் ஈன்ற முட்டைகளை முசுவின் குருளை வெயிலில் உருட்டி விளையாடியது (குறு. 38:1,2). வேங்கையின்மலர்கள் உதிர்ந்த துறு கல் பெரிய புலிக்குருளை போன்று தோன்றும் (குறு. 47:1,2). பாம்பின் அழகிய கோடுகளையுடைய குருளை காட்டுயானையை வருத்தினாற் போலத் தலைவி தலைவனை வருத்தினாள் (குறு. 119). சுர நெறியிலுள்ள நெல்லியின் பசுங்காய்கள், வலியை யுடைய புலிக்குருளைகள் கொள்ளற்குரிய இடத் தில் உதிர்ந்து கிடந்தன (குறு. 209:1,2). ஆறுசெல் மாக்களின தலையைத் தாக்கியதால் குருதி படிந்த சிவந்த மாறுபட்ட தலையை யுடையனவும் குருதி பூசிய வாயை யுடையனவுமாகிய பெரிய தலையை யுடைய புலிக்குருளைகள் மாலைப்பொழுதில் மர லின் தூறுகளை நிமிர்ந்து நோக்கும் (நற். 2:3-6). கழியிலுள்ள நீர்நாயின் குருளைகள் கொழுமீனை மாந்தித் தில்லை மரப்பொந்துகளில் துயிலும் (நற். 195:1-3). வேங்கை மலர்மாலை போன்ற குருளை களை ஈன்ற பிணவுப்புலி பசித்ததாக, நள்ளிரவில் வயப்புலி களிற்றின் புகர்முகம் சிதையத் தாக்கி இடிபோல் முழங்கியது (நற். 383:1-5). புலியால் கொல்லப்பட்ட பிணவுப் பனறியின் பூவரிக் குரு ளைகளைக் கேழற் பன்றி பாதுகாத்தது (ஐங். 265: 1,2). கேழற்பன்றி தாயிழந்த வரிகளையுடைய குருளையோடு மலைச் சாரலில் உள்ள சிறுதினை யைத தின்று மலையுச்சியில் துயிலும் (ஐங். 268:1-3). சுரநெறியில செநநாய் ஏற்றை குருளைப் பன்றி யைக் கொள்ளாது கழிந்தது (ஐங். 397:1-3).

**குரூஉ** - 1. நிறம். அகழி குரூஉ - நிறம் - பொருந்திய கெடிற்றினை யுடையது (புறம். 18:10). குருதியங் குரூஉப் புனலையுடைய போர்க்களத்தில் மறவரும் களிறும் மாவும் பட்டொழிநதன (புறம். 227:4,5). சூளையினின்று எழும் இருள் நீங்கி ஓரிடத்தே செறிந்து நின்றாற் போனற திரட்சி மிக்க குரூஉப் புகை விசும்பிடத்தே சென்று தங்கும் (புறம். 228: 2,3). மறவன் குச்சுப்புல் நிரைத்தாற் போன்ற குரூஉப் பொருநதிய மயிரினையுடைய தாடி யினன (புறம். 257:3). பருந்து வளைந்த சிற கினையும் குரூஉவினையும் உடையது (புறம. 269:11). நொச்சியினது கண்ணுக்கு நிறைந்த அழகிய குரூஉத் தழையை மெல்லிழை மகளிர் அல்குலிடத்தே ஆடையாக அணிந்தனர் (புறம். 271: 2-4). காறறு மோதுதலின் கொடிவிட்டெழும் குரூஉப்புகை பிசிராக உடைந்தது (பதி. 15:6). திரைகளையுடைய கடற்பரப்பில் வெள்ளிய நுரை யாகிய தலையுடைய குரூஉப் பொருநதிய சிறுசிறு திவலைகளாக வுடைந்து கெட அலைகள் மேன் மேலும் வநதன (பதி. 42:21-23). கரடி பனையின் செறும்பையொத்த குரூஉ மயிரினைக் கொண்ட உடம்பினையுடையது (முருகு. 312,313). குதிரைத் திரள் செலலுதலால் உண்டான குரூஉத் துகள் வானத்திடததே வெயிலை மறைத்தது (மது. 49,50). பெரிய மருத நிலங்களைக் குரூஉவுடைய கொடிய

எரி யுண்டது (மது. 154,155). மழை மிகுந்தமையின் குரூஉபபுனல கடற்கு ஓடியது (மது. 244,245). மணி போலும் பூவினை யுடைய அவரையின் குரூஉத் தளிரை ஆமா மேய்ந்தது (மது. 292,293). குரூஉ மயிர்ப் புரவி (மது. 387). தாளிப்பில் எழுந்த குரூஉப் புகை மழையையுடைய திசைகள் போலப் பரந்து தோன்றியது (மது. 757,758). பொழில்களிடத்தே யுள்ள குளிர்ச்சியுடைய கொம்புகளில் மழையின குரூஉத் துளிகள் மாறாமல் வீழ்ந்தன (நெடு. 27,28). யவனர் இயற்றிய பாவை தன் கையிலே ஏந்தி யிருக்கின்ற அகல் விளக்கு நிறையும்படி நெய் வார்த்துப் பருத்த திரிகளைக் கொளுத்தி வைத்த குரூஉவுடைய தலை நிமிர்ந்தெரிய விளக்கினை நெய் வற்றின காலந்தோறும் நெய் வார்த்துத் தூண்டுவர் (நெடு. 101-104). பரதவர் நெடுங்கால் மாடத்திலுள்ள ஒள்ளெரியை நோக்கிக் குரூஉச் சுடர் எண்ணுவர் (பட். 111,112). தினைச்சோறு குரூஉப் பொருந்திய வடிவினையுடையது (மலை 169). மகளிர் குரூஉக்கண் பிணையற் கோதையை யணிந் தனர் (மலை. 349). குரூஉப் புலி யானையொடு பொருதது (மலை.517). செநநிறப் பசுக்கள் எழுப்பிய செம்மண்ணாகிய குரூஉத்துகள் வானிடத்து மிக் குத தோனறும் (அகம். 79:7,8). வெள்ளெலியேற்றை குரூஉ மயிரை யுடையது (அகம். 133:1,2). ஆம்பற் பூவின் முறிக்கப்பட்ட இதழ்களாலாய பருத்த குரூஉப் பொருந்திய மாலையை நீவித் தலைவி கூந்தலில் சுரும்பிமிர் ஆய்மலர் வேய்ந்திருந்தாள் (அகம்.136:27-29). குரூஉக் கொடிப் பகன்றை (அகம. 316:6). குதிரை குரூஉப் பொருந்திய பிடரி மயிரை யுடையது (நற். 149:6,7). கீழககடலில் எழுந்து, குரூஉக் கதிர் பரப்பிப் பகலைச செய்த ஞாயிறு குட மலையில மறைந்தது (நற. 215:1,2). புலியின புள்ளி யைக் கொண்ட அழகு விளங்கிய குரூஉச சுவலை யுடையது வரிவண்டு (நற். 249:5,6). குரூஉக கண் கொலையேறு (கலி. 104:23,71). சிவந்த ஏறு குரூஉ வுடையது (கலி. 105:36).

2. விளக்கம் (ஒளி). கடலலை குரூஉ - விளக்கம்- உடையது (அகம. 10: 9). குரூஉக்கண் நெடுமதில் (அகம. 159: 18). குரூஉப பூம் பைந்தார் (அகம. 208: 16). மகளிர் குரூஉப் புனல் விளையாட்டை வெறுப் பின் கோரைகளைக் கொண்டு கழனியிலுள்ள நாரையை ஓட்டுவர் (அகம. 226: 4-6). உகாவின் குரூஉக்காய குயிலின கண போன்றது (அகம். 293: 6, 8). மாமழை குரூஉத் துளிகளைப் பொழிந்தது (அகம. 304: 1 ,5). காட்டைச் சுடுவதால் எழும் குரூஉப் புகை அருவித் துவலையோடு மயங்கியது (அகம. 359: 14, 15).

3. கனம். குயக்குலத்து இளையோர் கலம் வனை தற்குத் திகிரிக்கண்ணே வைத்த பசுமண்ணாகிய குரூஉ - கனம் - மிக்க திரள் போலச் சோழன் நலங் கிள்ளி கருத்திற் கொண்ட முடியை யுடைத்து தன் பணை நாடு (புறம். 32: 8-10).

**குரை** - ஒலித்தல் (ஆரவாரம்). உலக்கையின் குரை- ஒலித்தல் - உடைய, பூண்மழுங்கியது (பதி. 24: 19). இளஞ்சேரல் இரும்பொறை, பல்வேறு குரலோசை யுடைய பறவைகளின் ஒலி எழுந்தது போன்று திரணட குரையுடைய படையிருப்பை உடையவன் (பதி. 84: 20, 24). செவ்வேள் குரை கடலிற் சூர் தடிந்தார் (முரு. வெ. 1: 1). நுரையைத் தலையிலே யுடைய குரைபுனல் குளத்துள் புகுந்தோறும் மகளிர் விரையக் குடைந்து புனலாடுவர் (பொரு. 240, 241).

**குரையிலை** - ஒலிக்கும் ஓலை (பனையோலை, தென்னை யோலை ஆகியன). பநதர், குரையிலையால் - ஒலிகக்கும் ஓலையால் - மிடையப் பெற்றது (நற். 40: 2).

**குல்லை** - கஞ்சங் குல்லை. இலையைத் தலையிலே யணிந்த குல்லையினையும் - கஞ்சங் குல்லையினை யும் - நறுமபூங் கொத்துக்களையும் மராமரத்து மலர்க்கொத்துககளோடு இடையிட்டுத் தொடுக்கப் பட்ட தழையை மகளிர் அல்குலிடத்தே ஆடையாக உடுத்தினர் (முரு. 201-204). ஞாயிறு பல்கதிர்களைப் பரப்பிக் காயதலினால் குல்லை கரிநதது (பொரு.233, 234). விறலியின எயிறு போலக் குல்லையை யுடைய அழகிய காட்டிடத்தே குவிந்த அரும்பு மலர்ந்தன (சிறு. 28, 29). தலைவியும் தோழியரும பாறையிற் பறித்துக் குவித்த மலாகளுள் குல்லை மலரும் ஒன் றாகும் (குறி. 78). வடுகர் குலலைக் கண்ணியை யுடையவர் (குறு. 11: 5). தலைவன், குல்லை, குளவி, கூதளம், குவளை, தேற்றா முதலியவற்றின் மலராற் புனைந்த ஈர்ந்தண் கணணியன (நற. 376: 5, 6). பல ஆககளையுடைய பொதுவர் குலலை, குருந்து முதலான பல்வேறு மலர்களால் செய்த கமழுங் கண்ணியைச் சூடி ஏறு தழுவினர் (கலி. 103: 1-5). குல்லை, வகுளம முதலான பல மலர்கள் வையை யாற்றின் இரு கரைகளிலும் மணம் பரப்பும் (பரி. 12: 79-81).

**குலம்** - 1. குடி. குறவன் மடமகள் வேங்கை மலர் கொண்டு மலையுறை கடவுளாகிய குல முதலை - குடித்தெய்வத்தை - வழிபாடு செய்து தேனாகிய பலி சொரிந்தாள் (ஐங். 259:1-4).

2. உயர்வு. உயிர்களின் பசி போக்கி நிறைபயன் நல்கும் மலை சிலவற்றுள்ளும் தெய்வம் தாமாக விரும்பியுறையும் குலவரை - உயர்வுடைய மலை - சிலவாகும், அக்குலவரை சிலவற்றுள்ளும் பலதேவ

னும் கண்ணனுமாகிய இருவர் தங்கும் இருங் குன்றம் சிறந்தது (பரி. 15:5-14).

**குலமுதல்** - குடித்தெய்வம். குன்றக் குறவன் காதன் மடமகள், விரைவில் மணம் நிகழ வேண்டி வேங்கை மலர்கொண்டு மலையுறை கடவுளாகிய தம் குலமுதலை - குடித்தெய்வத்தை - வழிபட்டுத் தேன் பலி சொரிந்தாள் (ஐங்.259:1-4).

**குலவரை** - உயர்ந்த மலை. புலவர்கள் ஆய்ந்து பாராட்டிய நெடுங்குன்றம் பலவற்றுள்ளும் உயிர்களின் பசிபோக்கி நிறைபயன் நல்கும் குன்றுகள் சிலவே; அச்சிலவற்றுள்ளும் தெய்வம் விரும்பி உறையும் குலவரை - உயர்ந்த மலை - சிலவாகும்; அக்குல வரை சிலவற்றுளளும் பலதேவனும் கண்ணனும் எழுந்தருளியுள்ள இருங்குன்றம் சிறந்ததாகும் (பரி. 15:1-14).

**குலவு** - 1. வளைவு. பேதை மகளிர் சிற்றிற்கண் செய்த பாவைக்குக் குலவு வளைவு - பொருந்திய கோட்டுப் பூவைப் பறிப்பர் (புறம். 11:2-4). இளைய கிளி தூக்கிச் செல்ல முடியாத பெரிய குலவுப் பொறையாகிய கதிர் முறித்த தட்டை பொருந்திய தினையின் வறும்புனம் நோக்கி நெடிது நினைந்து துன்புற்றுத் தலைவன் பெயர்வான் (அகம்.38:12-15). செந்தினையின் கதிர்நீண்டு வளைந்தாற் போன்ற குலவு பொருந்திய தலையையுடைய நான்கு குதிரைகள் தேரில் பூட்டப்பெற்றன (அகம். 400:8-11). வளைந்த கதிர்களாகிய குலவுப் பொறையைக் கானவர் கொய்தொழித்த பின் உள்ள தினைத் தாள்கள் திருவிழாச் செய்தொழிந்த களம்போலத் தோன்றின (நற். 306:5-7). ஆண் பன்றி கானவர் உழுது விளைத்த குலவுக்குரல் ஏனலைத் தின்றது (நற். 386:1-3). குலா, குலாஅ காண்க.

2. பிணைவு. குலவு - பிணைவு - பொருந்திய குரல் ஏனல் முற்றிக் கொய்பதம் உற்றன (மலை. 108).

**குலா** - வளைவு. வேட்டுவச் சிறுவர் உடைவேல மரத்தின முள்ளை ஊகம் புல்லின் நுண்கோலிற் செருகிய அம்பை, வளாரால் செயயப் பெற்ற வில்லில் வைத்துக் குலா - வளைவு - உண்டாக வலித்துப் பருத்தியால் ஆகிய வேலியடியில் உறையும் காட்டெலியை வீழத்தற்குக் குறிபார்ப்பர் (புறம். 324:3-7). குலவு - 1, குலாஅ காணக.

**குலாஅ** - வளைவு. கொடிய பார்வையினையுடைய மறவர் குலாஅ - வளைவு - பொருந்திய வலிய வில்லினர் (அகம். 265:17). குலவு - 1, குலா காண்க

**குலை** - 1. கொத்து. காயுடைய தென்னைக்குலை - கொத்து - தாழந்திருந்தது (புறம். 17:9). முல்லைப் புதரிடத்தே மொய்க்கும் வண்டினம், காட்டில் உள்ள பிடவின் தொடுத்தது போலப் பூக்கும் குலையில் தங்கும் (பதி 66:16-18). பழமுதிர்சோலையில் இழிதரும் அருவி தெங்கின் இளநீரையுடைய குலை உதிர மோதியது (முரு. 307,308). செழுங் குலைக் காந்தள் கைவிரல் போலப் பூத்தது (சிறு. 167). நீண்ட குலையுடைய காந்தள் பக்கமலையில் மலர்ந்திருந்தன (பெரு. 371,372). மகளிர் நீலமணி போலும் குலையினை யுடைய தேன் நாறும் நெய்தல் மலரைப் பிற மலர்களுடன் பறித்துப் பாறையில் குவித்தனர் (குறி. 84). மலைப்பக்கத்தே யுள்ள மெல்லிய தேன் துளிக்கும் செங்காந்தளின் அழகிய கண்ணிடத்து இணைந்த குலை போன்ற முன் கைகளை மகளிர் கூப்பினர் (பட். 152-154). செந்நாய் ஏறு ஆண் பன்றியினைத் தாக்க அதுகண்டு ஓடும் பெண் பன்றி ஈந்தின் மீது மோதியதால் பசிய குலைகளினின்று செங்காய்கள் உதிர்ந்தன (அகம். 21:18-20). செம்முல்லையின் அரும்பு நெருங்கிய குலையையுடைய பிடவமொடு ஒருஙகு மலரக் காடு கம்மென்று மணம் வீசியது (அகம். 23.3-5). வளைந்த முள்ளினையுடைய நீர்முள்ளியின் குவிந்த குலைகளினின்று வீழ்ந்த வெண்காம்பு மீன் முள் போன்றிருந்தது (அகம். 26:1,2). இருப்பை மரத்தின குவிந்த குலையினின்றும் கழன்ற உள்துளையுடைய திரண்ட பூ பனிக்கட்டி போல் சிதறிக் கிடந்தது (அகம்.95:6,7). நீண்டு தூககிய பல துடுப்புக்கள் போலும் அசையும் குலைகளையுடையது காந்தள் (அகம். 108:14,15). வண்டு வேங்கை மலரில் தாதினை ஊதிக் காந்தளின் தேன பொருநதிய குவிந்த குலையில் உறங்கியது (அகம. 132:10-12). வெள்ளிய கூதளஞ் செடியின அசையும் குலையில் உள்ள மலரைத் தீண்டியதால் அதன் தாதுகப் பெற்ற பன்றி கட்டளைக்கல போல் தோனறியது (அகம். 178:9-11). கோவலர் வரி பொருந்திய வெண் காந்தளின் வளைநத குலையில உள்ள சிறந்த பூக் களைச் சூடினர் (அகம். 264.3,4), சேஎய் (முருகன) குனறம் செந்நிறம் பொருந்திய பூவாகிய குலைக் காந்தளை யுடையது (குறு. 1:3,4). அலங்கு குலைக் காநதள் பக்கமலை முழுதும் மணம் வீசியது (குறு. 239:3). ஈந்தினது திரட்சியை யுடைய முற்றிய குலை போலத் தாளிப்பனையின் குலை விளங்கியது (நற். 174.1-3). அகனற இலையையுடைய காநதளின அலங்கு குலையிற் பாய்ந்து வண்டு பல கணகளை யுடைய தேன்கூடு அமைத்தது (நற். 185:8,9). நய வருஞ் சாரலில் காந்தள் கமழ்குலை அவிழ்ந்தன (நற். 313:6,7). மகவீன்ற தாய் தன் முலையைக் கையாலே பிடித்துத் தன் புதல்வன வாயில் வைப்

பது போலக் காந்தட்குலை வாயில் கொழுமடல் வாழைப்பூ பொருந்தியிருந்தது (நற. 355:1-3). சேதா அலங்குகுலைக் காநதளைத் தீண்டியது (நற்.359:1,2). சிலம்பில் நாறு தலைக் காநதள் இருந்தன (ஐங்.226:2). சிலம்பு கமழ் காந்தளின் நறுங்குலையை ஒத்தது தலைவியின கை (ஐங். 293: 1,2). அலங்கு குலை ஈந்து (ஐங். தி. 2:2). கை கூப்பி மலையைத் தொழும் கொடிச்சியர் கைபோலச் சிறந்த தேன் பொருந்திய, எடுத்த காந்தட் குலை காணபபெற்றது (கலி. 40.11,12). சுனையிடத்தே அழகு பெற்று வளர்ந்த காந்தளினது குலை, மணி விளங்கும் பொறியினை யுடைய அரவு நீர் உண்பது போலக் காணப் பெற்றது (கலி. 45:2,3). பிரிவுத் துன்பத்தால் வருந்தும் தலைவியின் கையிலிருந்து முறைமையுற்ற இதழ்கள் வீழும் குலையினையுடைய காந்தள் மலர் போல வளை கழன்றன (கலி. 121:13,14). திரு மாலின் ஆழிப்படை, பனையின் பல பதினாயிரங் குலை தரையில் உதிர்வன போல அவுணர் தலை களை நிலத்தில் வீழ்த்தியது (பரி. 2:43-49). நீர்நிலையின் பக்கத்தே தழைத்த நெருங்கிய முகை யை யுடைய வெண் காந்தளின் நெடிய குலை மலர்ந்த இதழ தோறும் பவழம் போன்ற சிவந்த தோன்றி மலர்கள் பரந்தன (பரி. 14:13-16). கமழ் குலைக் காநதள் கைபோல் பூத்தன (பரி. 19:76). அரவு சினந்து படம் விரித்தவற்றைப் போன்று (காந்தள) குலைவிரிந்தன (பரி. 20:99).

2. தாறு. பரதவர் பாக்கத்தில் கோள் தொங்கும் குலை - தாறு - கொண்ட வாழையும் இருந்தன (பொரு. 208). குலையின் பெருமையாலே நிலதநே தாழ வளைநது முற்றின வாழையின் வெண் பழத்தினைப் பெரும் பாணர் செலலும் நெறியில் பெறுவர் (பெரு. 359). கமுகின் கொழுமடலிடத்து அவிழநத பெருங்குலையில் உள்ள பசுங்காய் சேறு கொள முற்றின (நெடு. 23-26). சோழநாட்டுக் குறுமபல்லூரில கோள்தெங்கும் குலைவாழையும் நிறைநதிருந்தன (பட். 16, 28). வாழையின் காய் நெருங்கின குலை மிகவும் நெகிழும்படி பழுத்தன (மலை. 131,132). வாழையின் காய்த்தல மிக்க பெரிய குலையில் உள்ள முதிர்சசியுற்ற இனிய கனியாலும் முதிர்ச்சியுற்ற பலாவின சுளையாலும் உண்டான தேறல் பாறையின் நெடுஞ்சுனையிற் கலநதது (அகம. 2:1-4). வாழையின் பெரிய பூமடல்கள முறையாக முற்றி உதிர, எஞ்சிய குவிந்த மொட்டும் ஒழிநத குலையை ஒதது மானேற்றின் திரிமருப்புகள் காணப்பட்டன (அகம். 134:10,11). அவல் இடிக்கும் மகளிரின உலககை ஒலிக்கு அஞ்சிய வெணகுருகு தீங்குலை வாழையின் ஓங்கு மடலில் தங்காது மாமரத்தின் கண் குறுகப் பரந்து செல்லும் (அகம். 141:16-21). கானவன் பரண்மீதேறி எறிந்த கவண்கல் குலை யுடை வாழையின் கொழுமடலைக் கிழித்தது (கலி. 41:8-15). புலியின் அடியைப் போல வாழையின் வளைந்த காய் குலைதொறும் தொங்கியது (கலி. 43:24,25).

3. நாண். வீரர் குலையை - நாணை - வளைத் தலினின்றும் இறக்குதலையறியாத வில்லினராயிருந் தனர் (பதி. 24:12). பெருஞ்சேரலிரும்பொறை வில்லின் குலையை யறுத்துத் தனது செங்கோலின் கீழ் அடங்கி வாராப் பகையரசருடைய முரசின் கண்ணைக் கிழித்தான் (பதி. 79:11,12).

குவடு - உச்சி. 'பேதை யானை தின்றதனால் கூழை யாகிய மூங்கிலையுடைய குவட்டின் - உச்சியின் - இடையே தலைவியின் ஊர் உள்ளது (குறு. 179: 3-7). இறாமீனைத் தின்றெழுந்த குருகு வெள்ளிய உப்புக்குவட்டின் மேலாகச் சிறகை வீசிப் பறந்து கரையிடததுள்ள புன்னையில் தங்கியது (நற். 67: 3-5).

குவவு - திரட்சி. மிழலைக் கூற்றத்து மகளிர் நுங்கின் நீரும் கரும்பின் சாறும் உயர்ந்த மணலிடத்துள்ள குவவு - திரட்சி - உடைய தெங்கின் இளநீரும் ஆகிய முநநீர் கலந்துண்பர் (புறம். 24:11-16). பகை வரது குருதி தெளித்துக் கலந்த குவவுச் சோற்றின் பிண்டங்களால் அயிரை மலையிலுள்ள கொற்ற வையை வீரர் வழிபட்டனர் (பதி. 88:11,12). இளஞ் சேரலிரும்பொறை நீண்டு ஒப்பனை செய்தா லொத்த ஏந்திய குவவுத் தோளினை யுடையவன் (பதி. 90:34). உயர்ந்த மலை உச்சியினின்றும் வீழ்ந் தோடுகின்ற நீர் கொழித்து ஏறட்ட வெள்ளிய தலையினை யுடைய குவவுமணல் பொருந்தியது கான்பொழில் (மது. 336, 337). கொண்டி மகளிர் ஆழ்ந்த நீரினையுடைய குளிர்ந்த துறையிடத்துக் குவவு மணலில் ஆடினர் (மது. 586). ஒள்ளிய பூக்களையுடைய அசோகந் தளிரை ஒரு காதிலே செருகி அத்தளிர் குவவு மொய்ம்பு அலைப்பத் தலைவன் மார்பில் சந்தனம் பூசினான் (குறி. 119-121). தலைவி ஆயத்தாரோடு குவவு மணல் ஏறிச் சோலையில் வண்டலயர்ந்தாள் (அகம். 180:2,3). கரடிக்குட்டி இருளைத் துணித்து வைத்தாற் போன்ற குவவுமயிரை உடையது (அகம். 201:17). அழகாற் பொலிவுற்ற நிமிர்ந்த குவவு மொய்ம் பினை உடையவன் ஆட்டனத்தி (அகம். 222: 6,7). தலைவனது ஏந்து குவவு மொய்ம்பில் பூக்கள் உதிர்ந்த மாலை கிடந்தது (அகம். 248:12). குன்றிற்

றோன்றும் குவவு மணல் சேர்ப்பன் (அகம். 310: 10). யானை குவவு அடியினையும் வெண்கோட்டினையும் உடையது (அகம். 347: 11,12). முத்தினை மூழ்கி யெடுக்கும் பரதவர் கொற்கையோர் எதிர் கொள்ளுமாறு படகினின்று இறங்கும் குவவு மணல் பொருந்திய நீண்ட கரையிடத்தே தலைவியின் ஊர் இருந்தது (அகம். 350:11-15). தேரினைச் சேய்மையில் நிறுத்தி மெல்லெனக் குன்றிழி களிறு போலக் குவவு மணல் கடந்து குறியிடத்திற்கு இரவில் வருமாறு தலைவனைத் தோழி வேண்டினாள் (அகம். 360:13-15). தலைவி குவவு மென் முலையள் (குறு. 132: 2). குன்றத்தன்ன குவவு மணல் அடைகரையில் புன்னை நின்றது (குறு. 236: 3,4). அன்னம் குவவு மணலில் தங்கும் (குறு. 300:6). குன்றத்தன்ன குவவு மணல் நீந்தித் தலைவன் தலைவியைக் காண வந்தான் (நற். 207:5,6). குன்று போலத் தோன்றும் குவவு மணல் ஏறி நின்று தலைவனைக் கண்டு வருவோம், வா எனத் தோழி தலைவியை அழைத்தாள் (நற். 235: 6,7). வலிமையுடைய குவவு முலையினாலே சாடப்பட்ட சந்தனத்தை யுடையவன் தலைவன் (நற். 350: 7,8). நாரை தனது சிறகைக் கோதுதலானே உதிர்ந்த இறகு குவவு மணல் மேட்டில் கிடக்கும் (ஐங். 153: 4-4).

2. வளைவு. தலைவியின் கோடேந்து புருவத்துடன் குவவு - வளைவு - பொருந்திய நெற்றியினையும் தடவி நறிய கூந்தலைக் கோதுவதாகத் தலைவன் கனவு கண்டான் (அகம். 39:21-23). செவிலி தன் மகளின் அண்மையில் வந்து அவளின் குவ்வு நுதலை நீவி மெல்லத் தழுவினாள் (அகம். 49:6,7). மேகங்கள் குவவுத் திரையினையும் பனித்துறையினையும் உடைய பெருங்கடலில் படிந்து நீர் பருகிச் சூலுற்ற பெண்யானைக் கூட்டம் போல் சென்றன (அகம். 183:6-9).

3. படைக்குழாம் (ஆகுபெயர்). மேகம் நெடுங்காலம் பெய்யாதிருந்து பின்னர் மழை பெய்தமை கண்ட பல்குரற் புள்ளின் ஆரவாரம் போல, போரை விரும்பும் குவவு - படைக்குழாம் - ஆரவாரம் எழுப்பியது (பதி. 84:20-24).

குவளை - 1. செங்கழுநீர் (செங்குவளை, நீலம், நீலோற்பலம் எனவும் இதனைக் குறிப்பர்). பெரிய துறையிடத்தே நீரை முகந்து கொள்ளும் பெண்டிர் பறித்த குவளை - செங்கழுநீர் - முதலானவற்றை வன்புலத்தினின்றும் வந்த சுற்றத்தார்க்குக் கொடுத்தோம்பும் மென்புலத்தூர்களையுடைய நன்னாட்டுக்குப் பொருநன் சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவன் (புறம். 42:15-18). சுனையின்கண் தழைத்த கரிய இதழையுடைய குவளையின் வண்டு மொய்க்கும் புதுமலரிடத்தே தண் துளி கலக்குமாறு மழை பெய்தது (புறம். 105:2-4). மகளிர் சுனையிடத்தே பூத்த குவளையின் முகை யவிழ்ந்த புறவிதழ் ஒடித்த முழுப்பூவாற் செய்யப்பட்ட தழையாடையை இடையில் அணிந்திருந்தனர் (புறம். 116:1-3). நரந்தை நறும்புல்லை மேய்ந்த கவரிமான் குவளைப் பூவையுடைய பைஞ்சுனையில் நீரைப் பருகியது (புறம். 132: 4,5). ஆதன் ஓரியின் கொடைவளம் காணச் சென்ற கூத்தச் சுற்றத்தார் குளிர்நத நீரின் கண் பூவாத மணிமிடைந்த குவளைப்பூவை வெள்ளிய நாரினால் தொடுத்த கண்ணியைப் பெற்றனர் (புறம். 153:4-9). குவளையுண்கண் (புறம். 348: 6; அகம். 129:16; 138:2; 156:8; 183:1;285: 13; 310:5; குறு. 167:3;339:6; நற். 77:12; 205:6; 271:8; ஐங். 72:3). மகளிர் இடையறாது மலரும் குவளையின் புறவிதழ் ஒடித்த மலரைக் கூந்தலிற் செருகினர் (பதி. 27:2,7). மறவர் வெள்ளிய பனந்தோட்டிலே தொடுத்துக் கட்டிய ஒள்ளிய பொலிவு பெற்ற குவளைப் பூவைச் சூடினர் (பதி. 58:2). சூரரமகளிர் தம் கூந்தலில் வெட்சி மலர்களை விடுபூவாகத் தூவி அதற்கு நடுவே பசிய தண்டினை யுடைய் குவளையின் தூய இதழ்களைக் கிள்ளியிட்டு அணிசெய்தனர் (முரு. 20-22, 41). சாதிலிங்கம் போன்ற இதழையுடைய குவளையோடு நீலப்பூவும் ஒன்றுக்கொன்று நிறம் மாறுபடுதலையுடைய ஏனைப் பூக்களும் மலிந்தது பொய்கை (பெரு. 293, 294). பரத்தையர், அலர்கின்ற பருவத்தே கையால் அலர்த்தி மோந்து பார்த்தா லொத்த பெரிதும் கமழ்கின்ற நாற்றததினை யுடைய பல குவளை மலர்களுள் சுரும்புகளுக்கு அலர்கின்ற பல பூக்களையும் சூடினர் (மது. 566-568). பரத்தையர், மென் தளிர்களைக் கிளைகளிலே பறித்துக் குவளையை நீர்க்கீழ் அரும்புகளோடு பொருத்தமுறக் கட்டின நெடிய தொடர்சசியை வடிம்பிலே வீழும்படி உடுத்து மணங்கமழ் மனைதோறும் சென்று விளையாடினர் (மது. 586-589). இணைதல் மாட்சிமைப் பட்டுப் புதிய போதாய் அவிழ்ந்த குவளைப் பூவோடு பிடிகளையும் வகுத்து உத்தரமென்னும் நாளின் பெயர் பெற்ற உத்தரக் கற்கவியிலே அமைக்கப்பெற்றது நெடுநிலை (நெடு. 81-86). தலைவியும் ஆயமும் பறித்துக் குவித்த மலர்களுள் குளிர்ந்த கயத்தில் மலர்ந்த குவளையும் ஒன்றாகும் (குறி. 62). பொய்கையில் கரும்புகளுடன் செந்நெல் செழிக்கக் குவளையோடு நெய்தல் மயங்க முதலைகள் செருக்கித் திரிந்தன (பட். 240-242). மலைநாட்

டிடத்தே நிரைத்த இதழையுடைய குவளையில் தெயவம் விரும்புதலின் கடியவாகிய பூக்களை நீயிர் அறியாது தொடுவீராயின் நும்முயிர் போம் படி நடுங்குதலை அடைவீர் எனக் கூததர் அறிவு றுத்தப் பெற்றனர் (மலை. 189-191). குவளையால் சுனை அழகிய பசிய நிறத்தினைப் பெற்றது (மலை. 251). தலைவியின் நீர் மிகுந்த குளிர்ந்த கண் களின் இமை குவளையினது கரிய இதழை யொக் கும் (அகம். 19:10,11). தலைவியின் மையுண்ட கண் ணின் நோக்கு, தேன உண்டாகத் தெளிந்த நீரினை ஏற்ற திரண்ட தண்டினையுடைய குவ ளைப் பூவின சிறந்த அழகினை வென்று கெடுக் கும் (அகம. 27:12-17). வராற் போத்து தூண்டிலி லுள்ள இரையை விழுங்கி ஆம்பல் இலை கிழிய மேலெழுந்து குவளையின் அரும்பு மலர்ந்த பன் மலர்களும் சிதையும்படி பாய்நதது (அகம். 36:1-4). தலைவன் ஆய்நதெடுத்த இதழ்களையுடைய குவ ளைப் பூவினாலாய தேன் பாயும் தாரையுடையவன் (அகம். 38:2,5). எருமை ஆம்பல் மெல்லிலை கிழியச் சென்று குவளையின் குவிதல் நீங்கிய பல மலர்க ளையும் தின்றன (அகம். 56:3-5). தலைவி கரிய தண் டினையுடைய குவளை மலர்களை இணைத்து வைத்தாற் போன்ற கரிய இமையினை யுடைய மழைக் கண்களை உடையவள் (அகம். 62:4,5). ஓந் தியின கரிய தாடியை யொப்பத் தாதுமிக்க குவ ளையின் போது பிணிப்பு நெகிழ்நதது (அகம். 125: 5,6). தலைவன் குறுஞசுனையிற் பூத்த குவளைப் பூவினை வண்டு மொய்த்திடச் சூடி வந்தான் (அகம. 128:9,10). மணலிற் கிடந்த பாவையை எடுத் துத் தாழியில உள்ள குவளையின வாடிய மலரைச் சூட்டி என் அருமை மகளே, நினது இன்தோளைத் தருவாயாக எனறு மகட்போககிய தாய பாவை யைத் தழுவி அழுது வருந்தினாள் (அகம். 165:8-13). குவளையின புதிய மலரை யொக்கும் மையுண்ட கணணினள் தலைவி (அகம். 179: 12). தலைவண, தண்கயத்தே நிறைநத ஒள்ளிய பூக்களையுடைய குவளையின அரும்பினை விரித்துக் கட்டிய வண்டு மொய்ககினற கண்ணியினைத் தலைவிக்குப் புறநதாழநத பின்னலிற சூட்டினான் (அகம். 180: 5-7). இளங்கோசர், கடலாடு மகளிர் கொய்து வந்த ஞாழலையும் உழவர் பறித்து வந்த குவ ளைப் பூவினையும் காட்டில் பூத்த முல்லையோடு சேர்த்துக் கண்ணியாகக் கட்டி விளையாடுவர் (அகம். 216:8-11). காட்டு மல்லிகை மலரோடு தண் ணிய நறிய குவளை மலரை வைத்துத் தொடுத்த கமழ் மாலையைச் சூடிய தலைவியின் கூந்தலிற் பெறும் துயிலை மறந்து தலைவர் தங்கார் (அகம். 223: 9-16). நெடுஞ்சுனை கண்போல் மலர்ந்த கரிய இத ழினையுடைய குவளை மலர்களையுடையது (அகம். 228:4,5). சுனையிலுள்ள குவளையின் தேன்பாயும் ஒள்ளிய நறிய பல பூக்களைச் சூடிய தலைவியின் கூந்தல் மெல்லணையில் துயின்று பகற்பொழுதை இனிது கழித்துப் பொழுதுபடச் செல்க எனத் தோழி தலைவனிடம் கூறினாள் (அகம். 308:11-16). கணணையொத்த இதழ்களை யுடையது குளிர்ந்த நறுங்குவளை மலர் (அகம். 358:5). தாமரைப் பூவி டத்தே கரிய இதழ்களையுடைய குவளை மலர் இரண்டினைப் பிணைத்து வைத்தாற் போன்று அழகிய முகத்திடத்தே சுழலும் மதர்த்த மழைக்கண் களை உடையவள் தலைவி (அகம். 361:1-4). வண்டு தேனைப் பருகும்படி நெடுநீர் பயந்த நிரை யிதழ்க் குவளையின் இரு புதுமலர்களை இணைத்து வைத்தது போன்ற செவ்வரி பரந்த மதர்த்த மழைக்கண்களை உடையவள் தலைவி (அகம். 381: 18-21). தலைவர் நின் தண்ணறுங் கூந்தலில் குற்ற மில்லாத குவளைப் போதோடு காட்டு மல்லிகைப் பூவினைச் சூடிய நினது இன்பம் வாய்ந்த கூட்ட மாகிய இன்றுயிலை மறவார் எனத் தோழி தலை வியை ஆற்றுவித்தாள் (அகம். 393:20-26). தண்கயத் திடத்தில் தோனறிய வளவிய காம்பினை யுடைய குவளையின் மழைக்காலத்தே மலர்ந்த கரிய மலர் மழைக்கு எதிர்ப்பட்டாற் போனறு நீரால நிறைந்த கண்களினின்று நீர் ஒழுகும் துன்பம் நீங்கத் தலை வன் இப்பொழுது வரின நன்றாகும் எனத் தலைவி தோழியிடம் கூறினாள் (அகம். 395:1-5). தலைவன் காம நோயைத் தந்ததனால் குவளை மலரைப் போன்றிருந்த தலைவியின் அழகிய கண்கள் பசலை படர்ந்தன (குறு. 13:3-5). தலைவி வணடுகள் வீழ்ந்து உழக்கிய குவளை மலரைப் போலத் தலை வன பிரிவால் தமியளாய் மெலிந்து இரங்கத தக்கவ ளாயினாள் (குறு. 30:4-6). அரலைக் குனறத்தில் உள்ள சுனையினகண் பூதத குவளை மலர்களோடு சேர்த்துக் கட்டிய காட்டு மல்லிகையின் மணம் வீசும் நறுநுதலை யுடையவள் தலைவி (குறு. 59:2, 3). காந்தள மலரையும் முல்லை மலரையும் மணக் கின்ற இதழ்களையுடைய குவளை மலரோடு இடை யிடையே கலந்து தொடுக்கப்பட்ட மாலைபோல நறு நாற்றத்தை யுடையவள் தலைவி (குறு.62:1-4). குவளையின் குறுங்காம்பை யுடைய நாள்மலர் மணக்கின்ற தலைவியின் கூந்தலாகிய பாயலின் கண்ணே இருந்தேம் எனத் தலைவன் கூறுதல் (குறு. 270:6-8). தினைப்புனத்திற் படிந்த கிளிகளை ஓட்டவும் அவை எழாததனால் புலந்து அழுத தலைவியின் கண்கள், சாரலில் சுனையிடத்தே

பூத்த குவளையின் வண்டுகள் பயின்றதால் கலைந்த இதழ்கள் மழைத்துளிகளை ஏற்றுக் கொண்டன போன்று காணப்பட்டன (குறு. 291:4-8). தலைவி குவளை மலரின் மணங்கமழும் கரிய கூந்தலை உடையவள் (குறு. 300:1). தலைவன் சுனையில் மலர்ந்த குவளையினாலாகிய வண்டுகள் ஆர்க்கும் கண்ணியினன் (குறு. 321:2). தலைவி பைஞ்சுனையிடத்தே மலர்ந்த குவளை மலர்களை இடையிட்டுக் கட்டிய தழையுடையினள் (குறு. 342:4,5). தலைவன், சுனையிற் பூத்த குவளை மலர்மாலையைத் தலைவிக்குத் தந்தான் (குறு. 346:4). நீரைத் தன் அடியிலே கட்டப்பெற்ற மலர் வரிசையாகிய இதழ்களையுடைய குவளை மேல் காற்று வீசினும் வாடாது (குறு. 398: 1,2). தலைவி குவளை போன்ற ஏந்தெழில் மழைக் கண்ணினள் (நற். 6:3). கடவுட்டன்மை பொருந்திய மலையிலுள்ள சுனையில் இலைகளுக்கு மேலெழுந்து மலர்ந்த, கொய்யாமல் விட்டிருந்த குவளை மலரோடு காந்தட் பூவினையும் சேர்த்துச் சூரர மகளிர் சூடினர் (நற். 34:1-4). தலைவி கலக்கமுற்றுக் குவளையின் நீர் நிரம்பிய மாமலர் போலக் கண்ணீர் வடித்தாள் (நற். 37:4,5). குட்டுவனது குடமலைச் சுனையிலுள்ள பெரிய இதழையுடைய குவளையின் வண்டு மொய்க்கும் மலரைச் சூடிய மையான் தலைவியின் கூந்தல் மணம் கமழ்ந்தது (நற். 105:7-10). பொய்கையில் மலர்ந்த குவளை மலரை ஒன்றோடொன்று எதிரெதிர் வைத்துத் தொடுத்தாற் போன்ற மழைக்கண்களை உடையவள் தலைவி (நற். 160:8-10). குறுஞ்சுனைக் குவளை மலரைச் சூடி முன்பு புணர்நத நறுந்தண் சாரலில் விளையாட வரலாமோ எனத் தலைவன் தலைவியை வினவினான் (நற். 204:3,4). தலைவி திரண்ட தண்டினையுடைய குவளை மலர் மணம வீசும் கூந்தலை உடையவள் (நற். 262:6,7). களவொழுக்கத்தை அன்னை அறியின், தோழியரோடு சாரலிற் சென்று சுனை நீராடி அங்குப் பறித்த குவளையின் கரிய இதழ்களையுடைய மலரை யொத்த தலைவியின் கணகள் நீர் வடியப் · பெற்று இனி என்னாகுமோ எனத் தோழி கலங்கினாள் (நற். 317:5-10). நீரிலிறங்கி நின்று குவளை மலரைக் கொய்பவர் நீர் வேட்கையால் வெய்துற்றாற் போலத் தலைவியின் தோள்கள் நாள்தோறும் தலைவனைத் தழுவினும் அவள் தொடிகள் கழன்றன (நற். 332:2-4). தலைவியின் கூந்தலிற் சூடிய குவளை மலரோடு முல்லையை இடையிட்டுத தொடுத்த கோதையை இளையர் சூடி வந்தனர் (நற. 367:7-10). புதல்வனை ஈன்று பாயலில் படுத்திருந்த தலைவியின் பலவாகிய மாட்சிமைப்பட்ட வயிற்றிடத்தே தலைவன் தன் கையிலுள்ள குவளை மலரால ஒற்றி உறங்குகின்றாயோ என வினவினான் (நற். 370:8). குவளை, இல்லம் முதலான பல மலர்களால் புனையப் பெற்ற குளிர்ந்த கண்ணியை உடையவன் தலைவன் (நற். 376:5,6). குவளையின் நீர் வடிகின்ற ஒளி பொருந்திய மலர் போன்ற நின் கண்ணில் நீர் வடியுமாறு அழாதே; தலைவர் செலவழுங்குவர் எனத் தோழி தலைவியைத் தேற்றினாள் (நற். 391: 1,8-10). தலைவி பாய்ந்து விளையாடியதால் பெருந்துறைப்புனல் தேன்மிக்க நறுங்குவளை மலராய் மணந்து தண்ணியதாயிற்று (ஐங். 73:2-4). தலைவி சுனையின்கண் பசிய இலைக்கு மேலே உயர்ந்து தோன்றும் குளிர்ந்த குவளை மலரின நறுமணம் போனறு தன்னகத்தே கமழும் மணமிகக கூந்தலை உடையவள் (ஐங. 225:1-3). 'கயததில வளரும் குவளை மலர் போனற தலைவியின் அமர்த்த கண்கள் பசக்கும்படி நீ பிரிந்து செல்லற்குக் காரணம் என்னை' என்று தோழி தலைவனை வினவினாள் (ஐங். 277:3-5). கொடிச்சியின் கண்களைப் போல மலர்தல் குன்றநாடனது மலைப்பக்கத் துள்ள சுனையிற் பூதத அகனற வாயையுடைய குவளை மலர்க்கும அரியதாகும (ஐங். 299:1-4). பாசறைக்கண் நீடிய தலைவன் வந்த தனால் கொன்றைப்பூப் போனறு பசந்த தலைவியின் கண்கள் சுனையிற் பூத்த குவளை மலர் போலத் தொல்கவினைப் பெற்றன (ஐங். 500). தலைவனுடைய அருளிடத்தே வாரா தமைதல் போன்ற கொடியவை தோன்றுமாயின் "அவை நிழலையுடைய குளத்துள் நினற குவளை வெந்த தன்மையை யொக்கும் (கலி. 41:28-31). நின முகம் குவளையோடு இகலிப் புணர்ச்சிதோறும் பொலிவு பெறும்படி பூத்த கண்களின் தோற்றப் பொலிவு நீ இடைவிடாமற் புணர்ந்ததனால் உண்டான பயன் அல்லவோ எனத் தலைவன் தலைவியை வினவினான் (கலி. 64:15-17). வையையில் நீராடிய மகளிருள் ஒருத்தி தன் காதுகளில குவளை மலர் களைச செருகி நான்கு விழிபடைத்தாள் (பரி. 11: 97,98). பவள வளையைக் கையிற் செறித்த ஒருத்தியைக் கணடு வேறொருத்தி குவளைப் பூவினது மரகதம் போலும் பச்சைத் தண்டை வளையலாகத தன் கையில் அணிந்து கொண்டாள் (பரி. 11:101, 102).

2. ஒரு பேரெண். ஐம்பூதங்களும் முறையே தோன்றிய ஊழிகள் நெய்தலும் குவளையும் ஆம்பலும் சங்கமும் கமலமும் வெள்ளமும் முதலிய பேரெண்களால் குறிக்கப்பட்ட காலஙகளைக் கடந்த பின்னர், திருமால் கேழற் கோலங் கொண்டு

நீரினுள் மூழ்கிக் கிடந்த நிலத்தை எடுத்தார் (பரி. 2.5-16).

குவை - 1. திரள். வல்விலோரி தன் மலையிற் பிறந்த பொன்னைப் பன்மணிக் குவையோடு - திரளோடு- பாணர்க்குக் கொடுத்தான் (புறம். 152:38,39). குவை- யிரும் புன்னை (அகம். 40:4). குவையிலை முசுண்டை (அகம். 94:2). குவையிமில் விடை (அகம். 113:14). கடல குவையிரும் தோற்றத்தினை உடையது (அகம். 162:2,3). குவையுடைப் பசுங் கழை (குறு. 179:5).

2. குவிதல் குவையிருங் கூந்தல் (புறம். 25:14,347:7; அகம். 197:10,266:4;குறு.52:3;300:1).

குழ - குழவிப்பருவம் 'பொருந்தாத சொற்களைக் கூறிப் பின்னும் மனம் மயங்குதலை யுடைய குழக்கு - குழவிப்பருவத்துக்கு – உரிய அறியாமையைக் காட்டுகிறது உன் செயல்' எனத் தலைவி தலைவ னிடம் கூறினாள் (கலி. 108:21).

குழம்பு - குழி. கள்ளைச் சமைக்கின்ற மகளிர் வட்டில் கழுவின வடிந்த சிந்தும் நீர் பன்முறை வடிதலின் நிறைந்து வழியும் குழமபிடத்தே - குழியிடத்தே – ஈரத்தையுடைய சேறறில் பெண் பன்றிகள் குட்டி களுடன புரண்டன (பெரு. 339-342).

குழல் - 1. புல்லாங்குழல். பேகனால் துறக்கப்பட்ட கண்ணகி, கபிலர் பேகனையும் அவன் மலையை யும் பாடியபோது கண்ணீர் முலையகத்தை நனைப்ப, விம்மிக குழல் - புல்லாங்குழல் - இரங்கி ஒலிப்பது போல் அழுதனள் (புறம. 143.11-14). வேலன் குழலினையுடையவன் (முரு. 209). பாணர் எயிற்பட்டினம் செல்லின, கிடங்கிற் கோமானா கிய தகையோனைப பாடித தாள அறுதியை யுடைய குழலோசையின் தாளத்திற்கொப்ப ஆடின மகளிரோடு பரதவரிடம் தேறலும் சூட்டு மீனும் பெறுவர் (சிறு. 152-163). தீக்கடை கோலாலே அழகிய நுண்ணிதாய் விளங்கும் புகை கமழக் கையாலே கடைந்து கொண்ட செந்தீயினையுடைய கடைக கொள்ளியால் துளையிட்ட கரிய துளை யினையுடைய குழலால இடையன் பாலைப் பண்ணை எழுப்புவான (பொரு. 175-180). கோவ லர் பல இடங்களிலும் நின்று ஆம்பலந் தீங்குழலி டததுத் தெளிநத ஓசையைப பனமுறை எழுப் பினா (குறி. 221,222). குழல இசையுண்டாக்க, யாழமுரல, முழவு அதிர, முரசு ஒலிப்ப அங்காடித் தெருவில விழா எப்பொழுதும நீங்காது (பட்.156- 158). தீஙகுழல் பாட்டைச சுருதி குனறாமற் கைக் கொணடு நிற்கும் (மலை. 8). கரடியினம கொன்றை யினது அழகிய கிளைகளில் உள்ள குழல் போலும் பழங்களைக் கொழுதியது (அகம். 15:15,16). இடை யர் கொன்றையந் தீங்குழலராய்ப் பின்னே நடந்து வரப பசுவினம், பெருத்த மடி கரைய வேணடிக் கனைக்கின்ற குரலவாய் இளங்கனறு களிடத்தே மாலைபபொழுதில் மனைக்கு விரைந் தேகும் (அகம். 54:7-12). கோவலர் ஊதும் வலிய வாயினை யுடைய சிறுகுழல் மாலைப்பொழுதுடன் சேர்ந்து தலைவியை வருத்தியது (அகம. 74:15-17). மூங்கிலில் துளைக்கப் பெற்ற துளையிடத்தே மேல் காற்றினால் எழும் ஒலி குழலோசை போன்று இருந்தது (அகம. 82:1,2). நீரறற நெடுவழியில் விள வுக் கனியின் புல்லிய ஓட்டில் தோன்றிய துளை யில மேல்காற்று நுழைநது இசைத்தலின அதனைக் கோவலரது குழலோசை என்று கலைமான் நினைக் கும் (அகம. 219:13-16). மூங்கிலிடத்துத் தும்பி துளைத்த குறுகிய அழகிய துளைவழியே மேலைக் காற்றுப் புகுந்து வருதலின் எழும ஒலி நீர்பருகச் செல்லும ஆனிரைக்குப் பினனே வரும் கோவலரது குழலின் இசை போனறு கேட்கும (அகம். 225:5-8). இலவமரத்தின கிளையிலுள்ள ஒண்பூக்களில் குழல் போலும் இசையையுடைய வண்டுகள் ஒலித்தன (அகம். 245:14-16). தலைவி குழல் போன்ற இனிய குரலினை யுடையவள் (அகம. 265:9). சூழ்ச்சியில்லா மாககள் என் உள்ளத்தில் கனை யெரி தோன்ற ஊதும் தீங்குழல் ஓசை கேட்டு யான் எங்ஙனம் ஆற்றி யிருப்பேன் எனறு பிரிவுணர்நத தலைவி தோழியை வினவினாள் (அகம். 305:11-16). கறவை யினம் கன்றோடு காடுதோறும் துள்ளிவரக் கோவலர் தம வாயிற் குழல்வைத்து ஊதினர் (அகம். 354:3-5). கோவலர் கலலாது ஊதும், சிறிய மூங்கி லாற் செய்த இனிய குழலினின் றெழும் தனிமை கொணட தெளிந்த ஓசையினை மரைமான் கூர்ந்து கேட்கும் (அகம. 399.11-15). வங்காப் பேடை, புல் லூறு தனமேல வீழநததெனச் சேவலைக் காணாது குழலினது இசையைப் போன்ற குரலையுடைய தாய,குறிய பல ஒலிகளால் அதனை அழைக்கும் (குறு. 151:1-3). பசுவினது குற்றமற்ற மணியின் தெளிநத ஓசை கோவலரது குழலோசையோடு சேர்ந்து மாலைப்பொழுதில மெல்லிதாக ஒலிக்கும் (நற. 69: 7-9). ஒளிமிகக பெருங்களத்தில இயம் வாசிபபோர் ஊதும ஆம்பலங் குழல் போல் ஏங்கித் தலைவி புலமபி வருத்தமுற்றாள் (நற். 113:10-12). கோவல ருடைய கொனறைப்பழத்தாற் செய்த இனிய குழல் மனறுதோறும் இனிதாக ஒலித்தது (நற்.364: 9,10). பெய்யா வானம பெய்யத் தொடங்கியதும் தலைவி பிரிவுக்கு வருந்தி அழத் தொடங்கினள்; அவள் அழுகைக்கு எதிரே இராப்பொழுதில முழங்கு கின்ற இடியோசை போலக் கோவலர் குழலை

வாசிக்கத் தொடங்கினர் (நற். 371:5-9). இயவு துறையிடத்தே முழக்கும் தட்டையும் தண்ணுமையு மாகிய இசையின பின்னிடத்தே தும்பிகள், இனிமை யுடைய ஆம்பற் குழலின இசைபோல இனிமை யாக இசைத்தன (ஐங். 215:1-4). 'நீ பொருள்வயிற் பிரியின, தலைவி குழல் போன்று பெரிதும் வருந்தி யழுவள்' என்று தோழி தலைவனிடம் கூறினாள் (ஐங். 306). கொத்தான காய்களை யுடைய கொன் றையின் குழல் போன்ற பழங்கள் முதிர்ந்தன (ஐங். 458:1). நரம்பினது இனிய இசையைத் தாளத் திலே நிறுத்தும் குழலபோல, ஒலிக்கும் ஓசையை யுடைய மிஞிறோடு தும்பிகள் தாதை ஊதின (கலி. 33: 22, 23). ஆயர் ஊதுகின்ற குழல் தலைவனைத் தலைவிக்குத் தருதற்கு நன்னிமித்தமாக இசைத் தது (கலி.101:34,35). வினைவல பாங்கன கணணி யையும குழலையும கோலையும் உடையவன் (கலி. 101:39,40). கோவலர் நீள வளர்ந்த கொன்றைக் காயைத் திறந்து செய்த இனிய குழலில் உண்டான ஓசையினை யுடையவர் (கலி. 106:3). மன்றத்தில் ஆடும் குரவைக் கூத்திடத்து வந்த நின்னுடைய பெணடிர் கேளாமல, ஆம்பல் என்னும பண்ணை யுடைய குழலாலே குறிசெய்து வருவாயாக எனத் தலைவி தலைவனிடம் கூறினாள் (கலி. 108:60-63). கோவலருடைய தனித்த குழலோசை கேட்டுத் தலைவியின் நெஞ்சம் அழிநதது (கலி. 118:13,14). சிறிய மூங்கிலாகிய குழல் போலச் சுரும்புகள் ஆர்த் தன (கலி. 119:8). 'வருத்தத்தினையும் அழகினை யும் உடைய சிறு குழலே, இனி வரின் பழி போ மென்று கருதிப் பனியோடு இருள் சூழ்ந்து வருத லைக் கண்டு கலங்கின தனிததவருடைய வருத்தத் தைக கண்டு வருநதுகின்றாயோ; அன்றி, இனிய செய்து அகன்றாரை எம்மைப்போல் நீயும் உடை யையாய் வருந்துகின்றாயோ' எனத் தலைவி குழலை விளித்துக கலங்கி மொழிந்தாள (கலி. 129:16-19). மாலைப்பொழுதில் கோவலருடைய இனிய குழ லாலே நெஞ்சு வருந்தத் தலைவியின் உண்கண தனிமைகொண்டுவருந்தும் (கலி.130:14-16).இரங்கும் தலைவியின் நெஞ்சு போலக் கோவலர் குழலோசை தோன்றியது (கலி. 143: 37). யாழும் மிடற்றுப் பாடலும் இசைந்து நிற்பக் குழல் அவறறின சுரு தியை அளநது நிற்ப முழவு ஆர்ப்ப, அரங் கேறிய தலைக்கோல் பெற்ற மகளிரும் பாணரும் ஆடலைத தொடங்கினர் (பரி. 7: 78-80). பொருந் திய குழலின் இசையெழ முழவு முதலானவற்றின் ஓசையையுடைய தாளத்தை அளந்து அழகுதக நிருத் தத்தின்கண் ஒக்கத் திகழும் அரிவையர் தம் நேரிறை முனகையால் அத்தாளததைத் தூக்கி அளந்தனர் (பரி.12:40-44). இருங்குன்றத்தில்,சுருதியை உணர்த்து கின்ற குழலும் தாளமும் இயமப அவற்றைப பாடுவார மிடற்றுப் பாடலும் முழவோசையும் எதிர்நதாற் போன்ற முழைக்கண் சிலம்புகின்ற எதிரொலி குறையாது (பரி. 15: 42-45). திருப்பரங் குன்றத்தின் ஒருபக்கம் குழலின ஒலியெழ, அதனெ திர் தும்பி முரலும் (பரி. 17: 11, 12). திருபபரங் குன்றில் செவ்வேளை வழிபடச் சென்றாருள சிலர், கைவைத்து ஊதிக் குழலின இசையை அளநதனர் (பரி. 19: 41). ஊதபபடுகின்ற இனிய இசையை யுடைய தீங்குழல் ஒலிப்ப அதறகு மாறாக மலரில தாதை ஊதும தும்பிகள் ஒலிததன (பரி. 22 40,41).

2. கூந்தல (மயிர). களிற்றை எறிநது, அதனோடு பட்ட மறவனது குழலின - கூநதலின - சுருளில காட்டிடததிலுள்ள ஊகம் புலலினின்றும உதிர்நத பழைய பூ தங்கியதால் அவன அயலான போலத் தோன்றினான் (புறம். 307. 2-6). தலைவி பினனு தலோடு முடித்த வேறு ஒபபனை செயயாத முசசி யில் நெய் தடவப்பெறற தாழும குழலினைச சேரக் கட்டினாள் (அகம. 73: 1, 2). குட்டுவனது மரநதை போனற தலைவியின குழல விளஙகுகின்ற ஆயநு தலுக்கு உரிமையுடையவன தலைவன (குறு. 34: 6, 7). வையையில் புனலாடிய மகளிருள சிலர், பூத தொழிலையுடைய வெணதுகிலைக் குழலமேற சுற்றி அதனை முறுக்கினர் (பரி. 10: 79, 80). மொயகுழல (அன்மொழித்தொகை) (பரி. தி. 5. 1).

3. மீன். பாணர் ஆடல மகளிரோடு எயிற்பட்டினம் சென்று கிடங்கிற கோமானாகிய தகையோனைப பாடின், உலர்தலையுடைய குழலும் - (குழல) மீனும- தேறலும் ஆகிய இவற்றை மனைகள்தோறும் பெறு வர் (சிறு. 152-163).

4. துளை. சேம்பின் தண்டு குழல் - துளை - உடை யது (அகம. 336. 1).

குழவி - 1. விலங்கின் இளமைப் பெயர். ஆமானின் அசை கினற தலையையுடைய குழவியைச சிறுவர், தம் தேர்க்குக் கன்றெனப் பூட்டி ஓட்டுவர் (புறம். 319: 10, 11). புலிப்பாற்பட்ட ஆமானின குழவிக்குப் பசு தன் கனறெனச் சேர்ததுப் பாலையூட்டும (புறம. 323: 1, 2). துடி போனற அடியுடைய குழவியைக் கொண்ட பிடி யானைகள் இடையிடையே செறிநத களிறுகளாகிய பரிசிலை நலகுவாயாக எனப் பொருநன் சேரமான கடலோட்டிய வேல கெழு குட்டுவனை வேண்டினான (புறம. 369: 26-28). கரிகாற் பெருவளத்தான தன நிலைக் கேற்பப் பிடியோடு புணர்ந்த களிறுகளைத துடி

போன்ற அடியினையும் அசைந்த நடையினையும் உடைய குழவிகளோடு கொள்க எனப் பொருநர்க்கு வழங்கினான் (பொரு. 125-127). பழைய கூலங்கள கொண்ட கூடு, பசுக்கள் ஈன்ற வளைந்த அடியை யுடைய குழவிகளைப் பிணித்த தாமபுகள் கட்டிக் கிடக்கின்ற தறிகள் நட்ட பக்கத்தினை யுடையது (பெரு. 243-247). செந்நெற் கதிரைத தின்ற வயிறறை யுடைய எருமையின் குழவி நெடுங்கூட்டின நிழலில துயில் கொள்ளும் (பட். 13-15). நன்னனது அரண்மனை வாயிலில் காணப்பட்ட பல்வேறு கையுறைப் பொருள் களுள் கயமுனிக் குழவியும் (யானைக் கன்றும்) ஒன்றாகும் (மலை. 500). வளைந்த தொடையினை யுடைய குழவியோடு மரத்திடத்தே கட்டப்பெற்ற, விரைந்து பார்க்கும் கண்ணை யுடைய பசுப் போலச் செவிலி தலைவியின் முதுகினை நோக்கிக் குறுக வந்து நுதல் நீவி மெல்லெனத் தழுவினாள் (அகம். 49.4-7). கோவலர் பின்னே நடந்து வர, செருக்கிய நடையினை யுடைய தாம்பிற் பிணிக்கப் பட்ட குழவிகளிடத்தே பசுவினம் பெருத்த மடி கரைய வேண்டிக் கனைக்கின்ற குரலவாய் விரைந்து செல்லும் (அகம். 54:6-11). பிடியானை குழியில் வீழக் களிறு செய்த ஆரவாரத்திற்கு அஞ்சி விரைந்தெழுந்த சிவந்த வாயினை யுடைய குழவி, மூதூரிடத்தே சென்று எருமை நல்லானின் முலைப்பால் மாந்தும் (அகம். 165:1-5). மலைப்பக் கத்தில் களிறு, ஈன்றணிமையுடைய பிடியானை யைத் தழுவிக் கொண்டு, தனது அசைந்த நடை யினை யுடைய குழவி உறங்குகின்ற இடத்தைக் காத்தது (அகம். 168:8-10). மென்தலைக் குழவியை யுடைய மடப்பிடி தன் கன்றுணை வேண்டித் தழை யுணவை உண்ணாது மறுத்தமையின் வாடிய உறுப்புக்களோடு பாழபட்ட ஊரிலுள்ள குடிசை போலத் தோன்றும் (அகம். 229:4-6). இரக்கம் இல்லாத கோவலர் தாயினின்றும் பிரித்துக் கட்டிய, நெஞசத்தில் அதனை விரும்பும் குழவி போல, யாம் மிக நொந்து இன்னா மொழிதும் என்று ஊரார் புறங்கூறுகின்றனர் எனத் தலைவி தோழியிடம் கூறினாள் (அகம். 293.11-13). பசுககள நெடுநெறிக்கண நீங்கிச் சென்றதனால் அவை தங்கியிருநத மன்றத்தைப் பார்த்து, மாலைப பொழுதில், மடபபம் பொருந்திய கணணையுடைய குழவிகள் வருந்தின (குறு. 64: 1-3). மிகக சுரப்பை யுடைய நல்லானின நடுங்குந் தலையை யுடைய குழவி, மேயச் சென்ற தாயைக் காணவேணடும என்ற விருப்பத்தோடு இருநதாற் போனறு, விருபபததை வெளிபபடுததும் மெலிந்த நோக்கினள் தலைவி (குறு. 132.4-6). ஈன்றணிமை யுடைய எருமை, உழவனாற் கட்டப்பட்ட குழவி யின் பக்கத்தினின்றும் அகன்று செல்லாது, பக்கத் திலுள்ள பசும்பயிர்களை மேயும் (குறு. 181:3-5). காட்டுப்பசுவின் அழகிய காதுகளை யுடைய குழவி கானவர் எடுத்தற்கு அஞ்சித் தன் இனத்தினின் றும் பிரிந்து சென்று கானச் சிறுகுடியில் அகப் பட்டு, அங்குள்ள இளையர் ஓம்பக் கலந்து, மனை யுறை வாழ்க்கையில வன்மை பெற்றது (குறு. 322: 1-5). ஏற்றொடு மேயச் சென்ற பருத்த மடியை யுடைய பசுக்கள் பாலை ஒழுக விட்டுத் தம் குழவி களை நினைத்துத் தம்மோடு ஒருங்கு மேயும் ஏனைய நிரைகளை நீங்கி ஊரினிடத்தே மாலை யில் திரும்பி வரும் (குறு. 344:3-6). பிடியின் மெல் லிய தலையை யுடைய குழவி, மலையகச் சிற்றூரில் குறமகள் பெற்ற சிறுவரோடு விளையாடி முற் காலத்தில் இனிமை தருவதாகிப் பிற்காலத்தில் அவருடைய தினைப்புனத்தை மேய்ந்து துன்பம் தந்தது போலத் தலைவன் தலைவியுடன் நகைத்து விளையாடியது இப்பொழுது பகையாகின்றது எனத் தோழி கூறுகின்றாள (குறு. 394). புலி, களிற்றைக் கொன்றதற்குப் பிடியானை வருநதி, இயங்காது, நெய்தலின பசிய இலையை ஒக்கும் அழகிய செவியை யுடைய துன்புற்ற தன் அழகிய குழவியை அணைத்துக் கொணடு தீர்த்தற்கரிய புண்ணுற்றாரைப் போன்று வருந்தியிருக்கும் (நற். 47:1-5). எருமையின் இளநடை யுடைய குழவிகள் இல்லததின் தூண்கள் தோறும் கட்டப்பட் டிருந்தன (நற். 120:1,2). நீர் வேட்கையால வருந்திய பிடியானை மலைப்பக்கத்தில் செல்லுதலும் அதனு டன் செல்லாத மெல்லிய தலையை யுடைய குழவி சேரியிலுள்ள மகளிர் திடுககிடும்படி ஊர்ப்பசுவின் கன்றோடு சேர்ந்து சேரிக்கண் புகுநதது (நற். 171: 1-5). கன்றினைக் கட்டியுள்ள பலா மரத்தின் வேரில் காய்த்துத் தொங்கும் பெரும்பழத்தைக் குழவியை யுடைய பசு தின்று, அயலதாகிய சிறு மலையிலுள்ள குளிர்ந்த நீரைப் பருகும் (நற். 213: 2-5). அண்மையில் ஈன்ற எருமையின் பெரிய செவியை யுடைய குழவி தொழுவத்திடத்தே துயிலும் (நற். 271: 1, 2). ஈனறணிமை யுடைய எருமை, தன் காதற் குழவிக்கு முலைப் பாலை உண்பிக்கும் (ஐங். 92: 1,2). புலியேற்றை, கானத் திடத்தே மடப்பிடி யீன்ற நடுங்கும் நடையை யுடைய குழவியைக் கொள்ளுதற்குப் பலாவின் கொழு நிழலில் ஒளிகும் (ஐங். 216:1-4). வருடை மானின குழவி பாறையிலிருந்த கருங்குரங்கை வெருண்டு நோக்கிப் பகக மலையில் ஏறி இறங்கி

விளையாடும் (கலி. 43: 12-14). மலைச்சாரலில் திரியும் வருடை நன்மானின் குழவியை வளர்ப்பாரைப் போன்று முன்னர்ப் பாராட்டிப் பின் பிரிவையாயின் தலைவியது எழில் நீங்கும் என்று தோழி தலைவனிடம் கூறினாள் (கலி. 50:21-24).

2. குழந்தை. உருவப் பஃறேர் இளஞ்சேட் சென்னியைப் பகைப்பித்தோர் நாடு, தாயில்லாத, உண்ணாத குழவி - குழந்தை - போல மாறாது கூவி வருந்தும் (புறம். 4:18,19). அன்பையும் அருளையும் நீக்கி நரகத்தைத் தமக்கிடமாகக் கொள்வாரோடு பொருந்தாது குழவியை வளர்ப்பார் போன்று நின் நாட்டைக் காப்பாயாக என்று நரிவெரூஉத் தலையார் கோப்பெருஞ் , சேரலிரும்பொறைக்கு அறிவுறுத்தினார் (புறம். 5: 5-7). பாலில்லாத குழவிகள் அழுவதைக் கேட்டு நாணாது இனிதாகத் தங்கியிருத்தல் இன்னாது என்று சோழன் நலங்கிள்ளி ஆவூரை முற்றியிருந்த காலத்து அடைத்திருந்த நெடுங்கிள்ளியிடம் கோவூர்கிழார் கூறினார் (புறம்.44:6-9). ஈன்றணிமை பொருந்தி அது தீர்ந்த குழவிக்குச் சுரக்கும் முலைபோலச் சுரந்த நீர்மிக்க காவிரியினது மிக்க வெள்ளம் உலகத் துயிரைப் பாதுகாக்கும் (புறம். 68:8-10). குழவி இறந்து பிறப்பினும் தசைத்தடி பிறப்பினும் அவற்றையும் ஆளல்ல வென்று கருதாது வாளாற் போழ்ந்து அடக்கஞ் செய்வர் (புறம். 74:1,2). பெற்ற தாயால் கைவிடப்பட்ட உண்ணாத குழவியை யொப்பத் தன்னைப் பொருந்திய சுற்றம் இடந்தோறும் வருந்துமாறு எழினி பொருது வீழ்ந்தான் (புறம். 230:7,8). தாயில குழவி போல நின்பாற் பெறலாகும் பரிசிலை யுள்ளி நசைதர வந்தேன் என்று பொருநன் ஓய்மான் வில்லியாதனிடம் கூறினான் (புறம். 379:14,15). ஆடுகோட்பாட்டுச் சேரலாதன குழவியைக் காத்தற் போலத் தன் குடிமக்களைக் காத்தான் (பதி. ப.6.9). பூணணிந்த தலைமையினை யுடைய பழையோளின் (காடுகிழாளின) குழவி செவ்வேள் (முரு. 259). கரிய மலையைச் சேர்ந்த செக்கர் மேகம் போலவும் தாயுடைய முலையைத் தழுவிய குழவி போலவும் காவிரியாறு கடல் அலையோடு கலக்கும் (பட்.95-97). தாய் சினந்து வருத்திய பொழுதும் வாய்திறந்து அன்னையே என்று அழும் குழவி போல, நீ இன்னா செயினும் இனி தாய்த் தலையளி செயினும் தலைவி நின்னாற் புரக்கப்படும் எல்லைக்குட்பட்டவள் எனத் தோழி தலைவனிடம் கூறினாள் (குறு. 397:4-8). குற்றமற்ற கற்பினள் தன் குழவியைப் பலிகொடுப்பப் பேய் வாங்குதலும் தான அதனைக் கைவிட்டாற் போல முன்னாள் முதற்கொண்டு எம்மோடு வளர்ந்த நாணும் கைவிட்டோம் என்று தோழி தலைவனிடம் கூறினாள் (நற். 15:7-10). குழவியைப் பார்த்து இன்புறும் தாய் அதற்கு முலை சுரந்து கொடுக்குமாறு போல மழை வேண்டுங் காலத்தே பெய்து உலகை அளித்துக் காக்கும் (கலி. 99:4,5).

3. அம்மிக்குழவி. குங்குமச்சேறு, அகிற்சாந்து, முதலியவற்றைச் சாந்தம்மியில் குற்றமற்ற குழவியின் - அம்மிக்குழவியால் - அழலின நிறம் பெற அரைப்பர் (பரி. 10:81-84).

**குழவித்திங்கள் – இளம்பிறை.** மகளிர் சிறிய கோட்டையுடைய குழவித திங்களை - இளம்பிறையை - செம்பாம்பு தீண்டினாற் போன்ற மகரவாயாகிய தலைக்கோலத்தைச் சேர்த்தின சுடர் நுதலை உடையவர் (பெரு. 383-387). செவ்வேறு, கொலைத் தொழிலை யுடைய இறைவன் சூடிய குழவித் திங்களைப் போல வளைந்து நிறைந்த கொம்பை யுடையது (கலி. 103:15,16).

**குழவித்தீநீர் - தெங்கிள நீர்.** பாணர் உழவரது மனைகளிலே தங்கின், பலவின் பழம் விழுதிலலாத தாழையாகிய குழவித் தீநீர் - தெஙகிள நீர் - வாழைப்பழம் முதலியன பெறுவர் (பெரு. 355-362).

**குழவி வேனில் - இளவேனிற் பருவம்.** நாஞ்சிலான போன்ற கடம்ப மரததின் உயர்ந்த இடததே மயில்கள் ஆரவாரித்துத் தங்க, அதில வணடும சுரும்பும் யாழ் போன்று இசைபப, விறலியர் பாடல் போலத் தும்பிகள் ஒலிக்க, இள மரக்காவிலுள்ள மலர்களை இயங்கள எழுபபின ஓசை போலத் தேனினம் இம்மென ஊத, மரங்கள் அணிதற்கு உரியாரை மணந்து அழைப்பன போல மலர்களை மலர்விக்க, கருஙகுயில கூவ, நீர்த்துறைகள் கவின பெற, காமனுக்கு விழாவை எதிர்கொள்ளும குழவி வேனில - இளவேனிற்பருவம - வந்தது (கலி. 36:1-10).

**குழற்றத்தனார் - புலவர்.** தத்தனார் என்னும் இவரது இயறபெயருக்கு முனனடையாக வுள்ள 'குழல' எனபது எக்காரணம் பற்றி இணைந்ததோ தெரியவில்லை. ஆயினும் அதனைத் தொழில் பற்றிய அடையாக மொ. அ. துரை அரங்கசாமி (ச. சி. பெ. பக். 171) குறிப்பதனாலும், 'புலலாஙகுழலைக் குறிக்கும் சொல்லாக இருததல் கூடுமோ' என்று உ. வே. சா. (குறு. பாடினோர் வரலாறு) கருதுவதனாலும் இப்புலவரைக் குழலூதும் தொழிலினராகக் கொள்ளலாம். குறுந்தொகை 242- ஆம் பாடலொன்றே இவருடையதாகக் காணபபடுகின்றது. முல்லைத் திணைப் பாடலான அதனைக் கற்புக்

காலத்துத் தலைவியின் கடிநகர்க்குச் சென்று வந்த செவிலித்தாய் அத்தலைவியும் தலைவனும் பிரி வின்றி இணைந்து வாழும் சிறப்பினை நற்றாய்க்கு உவந்துரைப்பதாகப் பாடியுள்ளார். 'சீறூரோளே மடந்தை வேறூர், வேந்துவிடு தொழிலொடு செலி னும், சேநது வரல் அறியாது செம்மல் தேரே' என்று தலைவி இலலிருததலையும் தலைவன் பிரிந்து தங்காமையினையும் பாடியமை உளங் கொளத் தக்கதாம்.

குழாஅம் - கூட்டம். தமையன்மார் தலைவியைத் தகுதி யிலார்க்குத் தருதவில்லை என்ற நோக்கொடு பொரக் கருதி வடுவினைச் செய்யும் கூரிய வாயை யுடைய வாளேந்திக் குழாஅம் - கூட்டம் - கொண்ட, குருதிநாறும் புலால் நாற்றத்துடன் கழுவாத தலை யினை யுடையவரா யிருந்தனர் (புறம். 345: 12-17). கணையமரக் குழாஅம் செறிந்து துலாமரங்கள் தூக்கிய மதிலினுடைய நெடுங்கதவுகளைக் களிற்றி யானை தாக்கிச் சிதைக்கும் (பதி. 16:3-8). யாறு கிடந்தாற் போன்ற அகனெடுந் தெருவி லுள்ள நாளங்காடியில் பண்டங்களைக் கொள்ளும் பல் வேறு குழாஅத்தினுடைய ஓசை மிக்கொலித்தது (மது. 359, 360).

குழாஅய் - மூங்கிற்குழாய். ஆயர் எருதுகளின் கழுத்தில் பூட்டிய குழாஅயின் - மூங்கிற் குழாயிலுள்ள - இனிய புளிசசோற்றைப் புதிய வழிப்போக்கருக்குக் காதடைப்பு நீங்கத் தேக்கிலையில் பகுத்தளித் தோம்புவர் (அகம். 311:9-11).

குழாத்தர் - படை மறவர். 'நீ பிறர்க்கென வாழ்தியாக லான், நின்னுடைய வீரத்தை எடுத்துக் கூறும் குழாத்தர் - படைமறவர் - தம்பால் இரப்பார்க்கு இல்லையென்று கூறார்' என்று களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரலைக் காப்பியாற்றுக் காப்பியனார் போற்றுவர் (பதி. 39:1,2).

குழாம் — திரள். தன் உடையிலுள்ள இழை சூழ்ந்த தையலினது இடையே உளவாகிய புரைகளைப் பற்றி ஒனறோடொன்று பிணிப்பு விடாது கிடக் கினற ஈரினது குழாததோடு - திரளோடு - கூடித தங்கிய பேனாகிய பகையை ஒரு பகையாகப் பாணன் கருதினான் (புறம். 136: 2-5). பெருமரக் குழாம் நீளும் காம்பையுடைய பூக்களையும் பழத் தையும் குளத்தைக் கண்டாற் போலும் குளிர்ச்சி யையும் உடையது (மலை. 259-265).

குழி - பள்ளம். ஆழத்தால் நெடிய குழியில் - பள்ளத் தில - அகபபட்ட கொல்களிறு அதன் நிலை சரியக் குழியைத் தூர்த்துத் தன் சுற்றம விரும்பத் தன்னினத் தைச் சென்று பொருநதியது (புறம். 17: 15-19). பன்றி களால் புழுதி யாக்கப்பட்ட விடுநிலத்தின்கண் புதுமழை பெய்து நீங்கக் குழிகளில் தங்கிய சிறி தாகிய நீரைக் குராற்பசு உண்டொழிந்த பின, மறவர் சேற்றை நீக்கித் தோண்ட ஊறிய கலங்கல் நீரை முறையாக முகந்துண்ணுவர் (புறம். 325:1-6). நெல் மாவாகிய உணவினை ஊட்டிப் பலநாள் குழியிலே நிறுத்திப் பாதுகாத்த பன்றியேற்றையின் கொழுவிய நிணத் தசையோடு கள்ளையும் பாணர்க்கு நல்கி விருந்தோம்பப் பெற்றது (பெரு. 343-345). யானை தன்னை அகப்படச் செய்த பள் ளத்தின் ஏறுதற்கரிய கரைகளை இடியும்படி கோட் டாலே குத்திக் குழியைத் தூர்த்துப் பிடியிடத்தே சென்றாற் போலக் கரிகாற் பெருவளத்தான் பகைவர் காவலினின்றும் மீண்டு தன் அரசுரி மையை எய்தினான் (பட். 224-228). கொழுங் கொடியினை யுடைய கவலை, குழிகள் தோறும் பிடியின் முழந்தாளை யொக்கும்படி சீரிதாகக் கீழே வளர்ந்தன (மலை. 127,128). குழியில் பிடித்த பழகாத யானைகளுக்கு உரிய மொழிகளால் தொழிலைப் பழக்குவர் (அகம். 13:7,8). கோவலர் தோண்டிய தழை மூடிய கூவலைப் பெருங் களிற்றினம், வெண்கோடு கவர வீரும்பிய கானவர் தம்மை அகப்படுத்த அகழ்ந்து மறைத்த குழிகளாகக் கருதித் தூர்க்கும் (அகம். 21:22-26). சிறு குளத்தில் தோண்டப் பெற்ற குழியின் கண்ணுள்ள உண்ணற் காகாத கலங்கல் நீரான் முதற்கண் பிடியின் மென்தலையைக் கழுவிய களிறு பின் எஞ்சிய சேறு கொண்டு ஆடித் தன் உருவம் வேறுபடும் (அகம். 121:3-6). மேகம் மழை பெய்தலால், செல்லற்கரிய சிறு இடங்களிலுள்ள படுகுழிகளைக் கொண்ட நெறியில் வரும் தலைவன் இருளில் மிதிக்குமிடத்துப் பார்த்துத் தளரும் அவன் அடியைத் தாங்கும் பொருட்டுத் தலைவியின் நெஞ்சம் சென்றது (அகம். 128:6,12-15). ஆய் அண்டிரன், தன்பால் பரிசில் கருதி வந்தார் வல்லாராயினும் அல்லாராயினும் வேறுபாடு கருதாது அவர்க்கு மிடாச்சோறறை மண்டையின் நெடுங்குழி நிறைய அளித்தான் (அகம். 152:19-21). கோவலர் தோண்டிய கிணற்றினின்றும் முகந்த பத்தலிலிருந்து நீர் வடிந்து செல்லும் சிறுகுழி நீரின்றிக் காய்ந்ததனாலாய வருத்தமொடு பெருங் களிறு மிதித்தேகிய அடிச்சுவட்டில் இரும்புலிகள் அடிவைத்து நடந்து செல்லும் (அகம். 155:8-12). மூங்கிலின் கணுக்கள் பிளக்கத் தெறித்து விழும் முத்துக்கள் கழங்கினை யொத்த தோற்றம் உடையனவாகிப் பழங் குழியிலே வீழ்ந்தன (அகம். 173:13-15). வேந்தன் ஏவலிற் சென்ற மத்தி,

குழியில் அகப்படுத்திய யானை யினங்களைப் பிடிக்கும் பூசற்கண்ணே வாரா தொழிந்த எழினியின் பல்லைப் பறித்து வந்து வெண்மணி வாயிலிடத்தே யுள்ள கதவில் பதித்தான் (அகம். 211:9-14). கவலைக் கிழங்கைக் கெல்லியதனால் உண்டான அகன்ற வாயையுடைய சிறுகுழி, கொன்றை மலர் பரவப் பெற்றுச் செல்வரது பொன்னையிட்டு வைக்கும் பெட்டியின் மூடியைத் திறந்து வைத்தாற் போன்ற தோற்றத்தைத் தரும் (குறு. 233:1-3) குன்றத்திடத்தே பழைய குழியைத் தோண்டிய கானவன் கிழங்கினோடு மணியையும் பெறுவான் (குறு. 379:1-3). கானவர் கிழங்கு எடுக்கத் தோண்டிய நெடுங்குழி நிறையுமாறு வேங்கையின் புதுமலர்கள் பரவிக் கிடக்கும் (ஐங். 208:1-3). நுண்குழிப் புற்றில் ஈயல் தங்கும் (ஐங். தி. 4:3).

**குழிசி** - 1. பானை. பெரிய இடத்தை யுடைய குழிசி- பானை - பாலின்மையின் கவிழ்ந்து நெய் கடைதலை மறந்தது (புறம். 65:2). குறவர் உழாது வித்திய சிறு தினையை நலல நாளில புதிதுண்ண வேண்டி, மான்தடி புழுக்கப்பட்ட புலால் நாறும் குழிசியினது நிணந்தோய்ந்த வெண்ணிறத் தினை யுடைய பெரிய புறத்தைக் கழுவாது அதில் மரையாவின் பாலை உலைநீராக வார்த்துச் சந்தன வீறகான் அவிக்கப் பெற்ற தினைச் சோற்றைப் பலருடன் பகுத்துண்ணுவர் (புறம். 168:5-13). பரி சிலை விரும்பியிருந்த இரவலரது விருப்பம் பழுதா கும்படி, அடப்பட்ட குழிசியினின்றும் சோறின்றி எரி புறப்பட்டாற் போல அறனில் கூற்றம் வெளி மான் உயிரைக் கொண்டது (புறம். 237:6-9). மற வன் தான் கவர்ந்து வந்த ஆனிரை மிகப் பலவா யினும், பால் முதலியன பெய்யப்படாமையின் சிறிதும் வெள்ளிய முகந்தோன்றாத குழிசியோடு நாட்காலத்தில் உறைதெறிப்பக் கடையும் மததொ லியும் கேளாதவாறு அவ்வானிரையைப் பிறர்க்குக் கொடுப்பதில வல்ல னாயினான் (புறம். 257:8-13). பொருநன் சிதைந்த வாயை யுடைய சமைத்தற் கமைந்த குழிசியை யுடையவன் (புறம். 371:5,6). கிணைப் பொருநன், குடிமுறை தோறும் சென்று பாடிச் சோறு சமைப்பதில் உள்ள விருப்பத்தை மறந்த குழிசியை நிமிர்த்திச் சமைக்கச் செய்யும் கடனறியாளர் இன்மையின் வருந்தினான் (புறம். 393:3-5). எயிற்றியர் நிலவுரலிலே பெய்த புலலரி சியை உலக்கையால் ஓச்சிக் கிணற்றில் முகந்த நீரை பழைய ஒறுவாய் போன குழிசியில் உலையாக வார்த்து, அடுப்பில் ஏற்றி ஆக்கின சோற்றைப் பாணர் உப்புக்கண்டத்தோடு பெற்றனர் (பெரு. 94-105). ஆய்மகள், தயிர் புள்ளியாகத் தெறித்த வாயை யுடைய குழிசியைப் பூவாற்செய்த சுமட்டின மேல் வைத்துச் சுமந்து சென்று நாட்காலையில் மோரை விற்பாள் (பெரு. 159-162). வழிச்செல்கின்ற புதியவர் தமது காய்பசி தீரும்படி சோற்றை ஆக்கு கின்ற குழிசி அடுப்பினின்றும் அசைந்து விழும்படி தெங்கின் காய் நிலத்தே வீழும் (பெரு. 364-366). இடையர் வரகரிசியைச் சுனைநீரோடு முகந்து மண்ணாற் செய்த குழிசியில் இட்டுக் கல்லடுப்பில் ஏற்றிச் சமைத்த அவிழ் சோற்றை ஆறுசெல் புதிய வருக்குப் பாலொடு பகுததுக் கொடுப்பர் (அகம். 393:4-6,13-17). விளம்பழம் இட்டு வைத்தலால் மணம் கமழ்கின்ற நிறைந்த குழிசியில தேயந்த தண்டினை யுடைய மத்திட்டு வெணணெய் தோன றக் கடைதலின் விடியலில் ஓசை எழும் (நற். 12: 1-3).

2. குடம். ஆவண மாக்கள, கயிற்றால் பிணித்தலை யுற்ற குழிசியில் - குடத்தில் - உள்ள ஓலையை எடுத்துக் கொள்வதற்கு அக்குடததின மேலிட்ட இலச்சினையை ஆயநது நீககுவர் (அகம். 77:7,8).

**குழூ** - தொகுதி. பகைவர் சேர்தற்கரிய குழூவை - தொகுதியை - உடையது காவற்காடு (மது. 64). குன்று குறிய பலவாகிய குழூவினை உடையது (மது. 501). நானமொழிக் கோசர் வஞ்சின மொழியாலே விளங்கினாற போல நாற்பெருஙகுழூ தம்மொழியால் மேலோங்கி விளஙகியது (மது. 508-510). தலைவனது குழூவை உடைய மலையின முழைஞ்சிடம் பல்வேறு இடுமபைகளைத் தருவது (குறி. 260,261). சிற்றூர் குழூவுடைய காவற்காடு சூழப்பெற்றது (நற். 95:7). நெருப்புச் சூழநத காட் டகத்து அகபபட்ட களிறறின ததை இனஙகாக்கும வேழம் அத்தீயை அதாபடுமபடி மிதிததுத் தன குழூவோடு கூடி வெளியேறியது (கலி. 25:5-11).

**குழும்பு** - 1. குழி. அருவி பளளமும் மேடுமாகிய பல நிலத்துண்டாகிய நீரினாலே திரணடுசேரக் குவிந்து கவலைக கிழங்கு தோண்டின அழகிய குழும்பிலே - குழியிலே - வீழ்நது ஒலித்தது (மது. 240, 241). காடு சூழ்நத ஒரு பக்கத்தே ஆழ்நத குழும்பில் திருவினை யுடைய மணி கிடநது விளங்கியது (மது. 273,285).

2. திரள். பிணங்களைக் கொண்ட கொமபுகளை யுடையனவாய்ப் பட்ட களிறறுக் குழும்பின - திரளின் - நிணத்தைத் தினற பேயமகளிர் துணங்கைக் கூத்தின் சீர்க்குக் குறைத்தலைப் பிணம் எழுந்து நின்று ஆடும் (மது. 24-27).

**குழூஉர்** - ஓரூர். பல்லான் குன்றில் பொருந்தும் நிழ

வினகண் சேர்ந்த ஆனிரையின் பரப்பினைக் கொண்ட குழுமுரிடத்தே உதியனது அடுக்களை போல ஒலிமிககு அருவிகள் ஆரவாரித்து இழியும் பெருவரையின் பககமலையில் பிடியைத் தழுவிய களிறு தன குழவி உறங்குகின்ற இடத்தைக் காக்கும் (அகம். 168:4-10).

**குழுவினர்** – படைத்தலைவர். யானைப் படைத்தலை வரும் குதிரைப்படைத்தலைவரும் மணியினையும் உருளைகளையும் கொடியினையு முடைய நல்ல தேரை யுடைய குழுவினரும் - படைத்தலைவரும் - விறபடை வேற்படைத் தலைவரும் மறவர் தலை வரும் ஆர்வத்தோடு கூடியிருத்தலின தானை கடலி னது முழக்கம் கொண்டது (புறம். 377:23-29).

**குழூஉ** - கூட்டம். அதியமான் நெடுமானஞ்சியின் களிறு கணைய மரத்தால் தடுக்கப்பெற்ற கதவைப் பொருது பகைவரது குழூஉக் களிறு - கூட்டமான யானைகள் - நிறைந்த அரணை யழித்தலான் அதன் கிம்புரிகள் கழன்றன (புறம். 97:8-10). யாழ் வாசித் தலில வல்ல இளையர் கடவுளை வாழத்த அவ் வாழ்த்தொலியை மறப்புலிக் குழூஉவின் குரலா கக் கருதிய வயக்களிறு பக்க மலையில் உள்ள பூத்த வேங்கையின் பெருஞ்சினையைப் பிளக் கும் (பதி. 41:6-9). கடல் பிறக்கோட்டிய செங் குட்டுவன் வலிமிகுதியால் மனஞ் செருக்கி வந்த மோகூர் மன்னனது வெற்றி பெறுவதற்குக் காரண மான குழூஉவின் நிலை கலங்கும்படி அதிரப் பொருதான (பதி. 49:8,9). குழூஉ நிலைப் புத வின் கதவு (பதி. 53:16). மறவர் நாட்காலையில் மழைக் குழூஉ தங்கிய மலையுச்சியை யொக்கும் தோற்றத்தை யுடைய பரிசையினை மேலே தாங்கி எழுகின்ற வேற்படையினை யுடையவர் (பதி. 66: 11-14). பருந்து குழூஉவாகிய சிறகுகளை யுடையது (பதி. 67:9). குழூஉப புதவு (மது. 165). பல குடிகளின் குழூஉ நெருங்கப் பெற்றது நாடு (மது. 330,331). மதுரை நகரில் பல்வகைக் கொடிகளோடு நன்பல பல்வேறு குழூஉக் கொடிப்பதாகையும் அசைந்தன (மது. 366-374). குழூஉவினைக் கொண்ட பெருங் குலையினை யுடையது கமுகு (நெடு. 23,24). மழுவாள் நெடியோன் (பரசுராமன) மதம் பொருந்திய யானைக்குழூஉ போர்முனையில் அழியுமாறு மன் னர் வழியை அழித்தான (அகம். 220.4,5).

2. திரளுதல். குழூஉக் கடல் (பல பொருள்களும் திரளுதலை உடைய கடல்) (பதி. 31:1). செல்வக்கடுங்கோ வாழி யாதன் பகைவரது வேலுடைக் குழூஉச் சமம் (போர்) கெடும்படி அழித்தான் (பதி. 66:4,5). கோடை தெறுதலான் பட்டுப்போன காட்டில் பூவணிந்த கூந்தலை யுடைய மகளிர் குழூஉ நிரை போல வண்டுகள் வாய்திறப்பப் பிடவுகள் மலர்ந்தன (நற். 238:1-3).

**குழை** – 1. காதணி. மகளிர் வளைந்த குழையினை - காதணியை - உடையவர் (புறம். 304:1). சேரமா தேவி குழைக்கு விளக்காகிய ஒண்ணுதலினள் (பதி. 31:25). இழையினையும் குழையினையும் நறுந்தண் மாலையினையும் உடையவர் பாண்மகளிர் (பதி. 46: 1,4). சேரன் தேவி கொடுங் குழையோடு பொருத நோக்கினள் (பதி. 81:29). வானியாறு ஓடக்கோல் நிற்கமாட்டாத ஆழ முடைத்தாயினும் புனல்விளை யாட்டயரும் மகளிர் பாய்ந்தாடுதலால் கழன்ற பொன்னாற் செய்த பூங்குழை நீரின்மேல் தெளி வாகத் தெரியும் தன்மைத்து (பதி. 86:9-12). செவ் வேளின் ஒளிதங்கி அசையும் தொழிற் கூறமைந்த பொலங்குழைகள் சேய்நிலத்தே விளங்கும் மதி யைச் சூழ்ந்து நீங்காத மீன்கள் போல விளங்குவன வாய் ஒளி செய்தன (முரு. 86-88). பாடினி பூங்குழை யினுடைய அசைவினைப் பொறுத்தல் அமைந்த காதினை உடையவள் (பொரு. 30). ஆய்மகள் சிறு குழை அசையும் காதினள் (பெரு. 161,162). நீருண் ணுநதுறையில் நீராடிய மகளிர் விட்டுச் சென்ற பொலங்குழையினை இரைதேடும் சிச்சிலிப் பறவை இரையாகத் துணிந்து எடுக்கும் (பெரு. 311-313). மகளிர் ஒணகுழை திகழும் ஒளி பொருந்திய திரு முகத்தினர் (மது.448). ஆய்தொடி மகளிர் ஒணகுழை பொருந்திய வளவிய தாழ்நத காதினையுடையவர் (மது. 709,712). மகளிர் பொலிவினையுடைய குழை யிட்ட அழகிற்குப் பொருந்தின ஏந்தெழில் மழைக் கண்ணினர் (நெடு. 38,39). பெரிய ஒளி பொருந்திய குழையைக் களைநததால் சிறிதே தாழ்ந்து தாளு ருவி அழுத்தப் பெற்ற காதினை யுடையவர் மகளிர் (நெடு. 139,140). உலருகினற நெலலைத் தின்னும் கோழியை வெருட்ட மகளிர் எறிந்த கொடுங்காற் கனஙகுழை, புதல்வர் உருட்டும் சிறுதேரின் வழியை விலக்கும் (பட். 21 - 25). தலைவியின் கொடுங்குழையோடு மாறுபட்ட நோக்கம் நெடுஞ் சுரத்திடையே தோன்றித தலைவன் செலவைத் தடுக்கும் (அகம். 3:16-18). பரத்தை குழை முதலா கிய மாண்புறுஉ ஒளிபொருநதிய அணிகளையுடை யவள் (அகம். 6:7). சிவந்தமணிகள் பதித்த ஒள்ளிய குழை தலைவியின் காதிடததே அசையும (அகம். 86:27). மின்னல் நிமிர்ந்தாற் போல் கனங்குழைகள் ஒளிவிடக் கூந்தலளாகிய தலைவி, நள்ளிரவில் பரணில் ஏறி இறங்கி வரக் கண்டேன் என அவளை வருத்தாதே என்று தோழி செவிலியிடம்

கூறினாள் (அகம். 158:2-7). அன்னி மிஞிலி கொடுங் குழையினை யுடையவள் (அகம். 96:11,12). கொடுங் குழை மகளிர் (அகம. 236:12). தலைவி திங்களன்ன திருமுகத்தில் ஒள்ளிய மத்தக மணி அமைந்து விளங்குகின்ற குழையோடு பொருத பார்வையினை யுடையவள் (அகம். 253:25,26). தலைவி பிரிவு வருத்த அழுதலால குளிர்ந்த கணகளிலிருந்து விழும் கண்ணீர் பொற்குழையிற் பட்டுத் தெறித்து விழும் (அகம்.351:11,12). குட்டுவனது மரந்தை நகரைப் போன்ற, குழை விளங்குகின்ற தலைவி யின் நுதலுக்கு உரிமையுடையவன் தலைவன் (குறு. 34:6,7). பூங்குழையோய், காடு பிற்படச் சென்று வினைமுடித்து மீண்டு வருமளவும் நின்னாற் பொறுத்திருத்தல் ஒல்லுமோ எனத் தலைவன தலைவியிடம் கூறுமுன் கலுழ்ந்து அவன் போக் கினைத் தடுத்தாள் (குறு. 256:3-5). கனங்குழை மகளிர் (குறு. 398:3). தலைவியின் கனங்குழைக்கு மாறுபட்ட மழைககண்ணின் நோக்கால் தலை வன செகுக்கப்பட்டான் (நற். 16:9,10). தலைவன் மார்பில் உற்ற முயக்கத்தால் நெரிந்து சோர்கின்ற குழையை யுடையவள் பரத்தை (நற். 20:9). தலை வன் குழையும் கோதையும் தொடியும் அணிந்து விழாக்காலத்துத் துணங்கை ஆடினான் (நற். 50:2, 3). தலைவி கொடுங்குழையினை உடையவள் (நற். 120:3). உடை மரங்கள் மிக்க நெறியில் மகளிரின் ஒண்குழையிற் கொளுவிய ஊசல் போன்ற குமிழ மரத்தின் மலர்கள் கோலஞ் செய்தாற் போல உதிர்ந்து கிடக்கும (நற. 286:1-3). ஒரு குழையொரு வன (பலதேவன்) போல் இணர் சேர்நத வெண் கடம்பு காட்சியளித்தது (கலி. 26:1). கனஙகுழை நல்லவர் (கலி. 71:19). எம்முடைய காதிலுள்ள கனங்குழையை வாங்கிக் கொணடு போய் எம்மி டத்து மீணடு வருந்தோறும் பூவில்லாத வறுங்கூந் தலில நின்னை யாங்கள் வைத்துக் கொள்வது நுந்தை மார்பிலுள்ள கோதையை நீ அறுத்து விளையாடுவதற்காம் என்று தலைவி புதல்வனிடம் கூறினாள் (கலி. 80:22-26). பரத்தை மகரத்தின் வடிவு நிறைந்த குழையினள் (கலி. 90:8). பொய்கை யிலுள்ள இணர்களில் மொய்த்த வண்டுகள் அவ் விடதது நினற மகளிர் நலத்தைக் கைக்கொள்வன போல மொய்க்கையினால் ஏற்பட்ட பூசலில் ஒருத் தியின் தலையிற் கிடந்த முத்து வடமும் வேறொ ருத்தியின் அழகினையுடைய காதிற் கிடந்த அழகு மாட்சிமைப்பட்டு விளங்குகின்ற குழையும் சிககிக் கொண்டன (கலி. 92:35,36). பரத்தையாகிய புத்தி யானை தாழந்த குழையாகிய வடித்த மணிகளை உடையது (கலி. 97:13). பொதுவரது ஏறுதழுவு தலைக் காணவேண்டி விளங்கும் பொன்னாற் செய்த குழையணிநத காதினரான ஆய மகளிர் விரைந்து பரணைக் கைககொண்டனர் (கலி. 103: 5-9). தலைவி அழகையுடைய குழை ஆடுதலினால் உணடான அழகினள் (கலி. 109:14,15). ஒரு குழை யொருவன நாஞ்சிற் படையுடையவன் (பரி. 1.5). குழையணிந்த காதினையுடைய தலைவி தன செவி களில் நீலமலரை அணிந்து நான்கு விழிகளை யுடையவ ளாயினாள் (பரி. 11: 97,98). தலைவி தீயிலிட்டுச் சிவக்கச் சுட்ட நீர்மையுடைய வினைக் குழைபோலச் சிவந்த பிண்டிப் புது மலரைத் தன் காதிற் செருகினாள் (பரி. 12:87,88). ஒரு குழை யவை (பலராமன்) (பரி. 15.55). மகளிர் தஞ்செவிக் கண் கனஙகுழையை அணியும் பொருட்டுக் கையை மேலேயுயர்ததும் பொழுது கையிலுள்ள வளை யல் ஒலித்தலால், அவாதம் மலா மாலைகளை மொய்த்த வணடுகள் கலைந்தோடின (பரி.தி.1:30-34).

2. தளிர். வீரமுரசத்தின் பக்கம் பொலியுமாறு மயிற்பீலியால் தொடுககபபட்ட தார் பொனனா லான குழையை - தளிரை - உடைய உழிஞையுடன சூட்டப்பட்டது (புறம். 50:3-5). செழியன பொய கையில மூழகி, வேம்பின ஒணகுழையைச் சூடிப பறை முனனாகக் களிறு போலப பெருமிததகதோடு பொரச் சென்றான் (புறம. 79:1-4). வேமபினது வாளரத்தின் வாய்போலும் விளிம்பினையுடைய அழகிய குழையாற் செயயபபட்ட மாலை பாணடி யரது அடையாள மாலையாகும் (பொரு. 144). அசோகு நெருப்புப் போல விளஙகும நிறத்தை யுடைய அழகிய குழையை யுடையது (குறி. 105). கானவன்மகள், தழைத்த அசோகினது குழையால ஆகிய தழையுடையை அணிநதிருநதாள் (அகம. 7:19,22). இருப்பை செப்புத் தகட்டை யொத்த சிவந்த குழைகளை யுடையது (அகம. 9.3,4). மடப் பிடி அழகிய குழைகளை உணண வேணடிக் களிறு யாமரத்தின் கிளைகளை வளைதது்க் கொடுக்கும (அகம். 59:7,8). வெள்ளாட்டுமறி சிறுவரோடு குதித துச் சென்று மன்றினகணணே யுள்ள ஆததியின அழகிய குழைகளைக் கடிககும் (அகம். 104:9-12). அழகிய குழையினை யுடையது இருப்பை (அகம. 107: 16). வடுகர் கொய்யப் பெற்ற குழைகளையுடைய காட்டு மலலிகையின பூவினைச் சுருணட கரிய மயிரில் வணடு மொய்ககச் சூடுவர் (அகம். 213: 4, 5, 8). இருப்பையின குழைகள் பொதியப பெற்ற குவிநத துளையுடைய பூங்கொத் துக்கள் நூலினினறு கழனறு விழும் முத்துக்கள போலச் செந்நிலத்தே உதிர்ந்தன (அகம.225: 11,12).

மேகம் இலலாத வானம் விண்மீன்களை அணிந்து விளங்கினாற் போலக் குழை நிறைந்த முசுண் டையில் பூககள் வெள்ளியவாக மலர்ந்தன (அகம். 264: 1, 2). மகளிர் அல்குலிடத்தே நன்னிறம் வாய்ந்த சிறந்த பூங்கொததுக்கள் குழையுடன் கூடி அசையக் குரவைக் கூத்தாடுவர் (அகம். 269: 15, 16, 20). கரிந்த மரங்கள் தம்மிடத்தே கிளைக்கப் பெறும் இளைய குழைகள் அடிமுதற் கிளைத்துக் கவின் பெறுமாறு வானம் மழையைச் சொரிந்தது (அகம். 283: 9-12). தலைவி கொய்யப்பட்ட குழையாகிய தளிரினை யொத்த, பிரிதல் துன்பத்தைத் தாங்கு தற்தரிய வலியில்லாதவள் (அகம். 319:12, 13). இருப் பை மரங்கள் நீண்ட நிலையாகிய அடிமரத்தினை யும் சிவநத குழைகளையும் உடையன (அகம். 331: 1). எயினர் மகளிர் பசிய குழையாலாகிய தழையை யுடையவர் (அகம். 331:5). கோங்கு, மெல்ல மெல்லக் கொய்யப்படும் குழைகளை எய்தியது (அகம். 341:2). பொதும்பு தீ கப்பு விட்டாற் போன்ற அழகிய குழைகளை யுடையது (அகம்.351:7). காற்று அசைத் தலால அழகிய குழைகளை யுடைய வேங்கையின் நறுநதாது உதிர்ந்தது (அகம். 378:3,4). வயலைக் கொடி தலைவி ஒவ்வொரு நாளும் அல்குலில் கூட்டும் தழையுடைக்குக் குழைகளைத் தந்துதவியது (அகம். 383:6-8). தலைவி மெலலிய அகன்ற அல்குல் கவின் பெறுமாறு பல குழைகளுடன கூடிய தழை யுடையைப் புனைந்தாள் (அகம். 390:6,7). தலைவி வளையை நெகிழச் செய்த துன்பத்தைத் தரும் காமநோயினால் குழையைக் கசக்கினாற் போன்ற நிலையை அடைந்தாள் (குறு. 289:2,3). தலைவன் தலைவியின் அல்குலிடத்தே அணிகள் அசைகின்ற பக்கத்தினகண கட்டிய பசிய குழையாற் செய்த தழையாடையினும் அணிமையிலிருந்து போகாத காரணததினால் தாய தலைவியை இற்செறித்துக் காவலை மேற்கொணடாள் (குறு. 294:5-8). தழை யுடுப்பவர் கொய்தற்குரிய குழை தழைத்த ஞாழல் கடல திரையின் புறத்தைத் தடவும் (நற். 54:8-10). தலைவன மகளிர் கொய்யுங் குழை தளிர்க்கின்ற காஞ்சி மரத்தினை யுடைய துறையணிந்த நல்லூரி னன (கலி. 74.5). ஆல் தீயையொக்கும் குழையையும் நிழலைத் தரும் பல கிளையையும் உடையது (பரி. 4:66,67). மலர், குழை, துகில், வேல் என்னும் இவற்றைச் சுமந்து வந்து முருகக் கடவுள் உறை யும கடப்ப மரத்தைப் போறறி இறைஞ்சித் திருப் பரங்குன்றில் உறைகின்றவர் தேவருலகத்தில் உறைவதை விரும்பார் (பரி. 17:1-8).

3. குழையணிந்த பெண். இமையவரம்பன் நெடுஞ் சேரலாதன் ஒடுங்கீரோதிக் கொடுங்குழையின்- குழையணிந்த பெண்ணின - கணவ என விளிக்கப் பெற்றான் (பதி. 14:15). 'நுண்ணிடைக்குத் துன்பம் உண்டாகும்படி மார்பகம் பெருத்துச் செப்போடு மாறுபட்டது; இனிப் பூங்குழை என்ன துன்பத்தை யுடையவள் ஆவளோ' என்றெண்ணி அவல நெஞ் சோடு ஏனென்று கேளாத கவலையுடைய மாக்களை உடையது பேதை யூர் (குறு. 159). 'மையுண்ட கண்ணையுடைய கனங்குழையே, முல்லை மலாகள் நின் பற்கள் போன்ற அரும்பை ஈனும் காலத்தில் நின்னை வந்தடைவேம்' எனத் தலைவன் தலைவி யிடம் கூறிப் பிரிந்து சென்றான் (நற். 316: 2-4). செவ்வேற்றின் சினத்தை அஞ்சானாய் அதனைத் தழுவுபவன் வரிக்குழையின் மூங்கிலை யொத்த மென்றோளில் துயிலுதலைப் பெறுவான் (கலி. 104: 23-25). தலைவனைப் பிரிந்து வருந்தும் கனங் குழையின துயர்நிலை தம்மைத் துனபுறுத்தும் எனறு கருதாது அவள் செயல்களை ஊரார் நின்று கண்டனர் (கலி. 142:13,14). பாய் குழை அணிந் திருந்த நீலமலர், வேறொருத்தி அணிந்த அசோகந் தளிரின் செம்மையால் இளவெயில் படாந்தாற் போன்ற நிறத்தினைப் பெற்றது (பரி. 11: 95,96).

குழைவு – நெகிழ்வு. 'யாம் எம் விருப்பத்தைக் கூறித் தன பின்னே செல்லவும் அதற்கு மனம் பொருந் தாத கூனி அப்பாற் சென்று குழையும் குழைவினை -நெகிழ்வை - நெஞ்சே, காண்பாயாக' எனறு குறளன் கூறினான் (கலி. 94:28-30).

குளக்கீழ் - குளத்துக் கீழிடம். பாண்டியனது நாட்டில் வேட்டுவன் மானின் தசையைக் கொணர்ந்து சொரிந்த கடகமும் ஆய்மகள் தயிர் கொணர்ந்த மிடாவும் நிறையுமாறு உழவரது பெருமனைப் பெண்டிர் குளகீழ் - குளத்துக் கீழிடத்தே - விளைந்த வெண்ணெல்லை முகந்து கொடுப்பர் (புறம். 33:1-7).

குளகு - தழை. கோவலர் குடியிருப்பு ஆட்டுமறிகள் நின்று தின்னும் குளகினை - தழையினை - தம் மிடததே கட்டின கால்களமைந்த இல்லங்களை யுடையது (பெரு. 147, 148, 166). தலைவன் தங்கி யிருந்த பாசறையில முற்றத்தே காவலாக நின்ற மதயானைகள் கரும்புகளையும் நெற்கதிர் நெருங் கக் கட்டிய இனிய குளகினையும் தின்னாமல் அவற்றால தம் நெற்றியைத் துடைத்துக் கொம் பினிடத்தே ஏற்றிய கையில் கொண்டு நின்றன (முல்லை. 28-34). தன் இனங்களைப் பாராட்டும் வயக்களிறு மூங்கில் முளைகளை அவற்றிற்கு ஊட்டி வேணடும் குளகுகளையும் உண்பிக்கும் (அகம். 218:1,2). நீரின்றி வறண்ட பாலைவழிகளில்

கன்றினையுடைய இளைய பிடியானை அக்கன்று உண்ணவேண்டித் தான குளகினை யுண்ணாமையால் வாடிய விலாப்புறங்களோடு பாழூர்க் குடிலைப் போல் தோன்றும் (அகம். 229:3-6). மெல்லிய தளிர்களான சிறிய குளகினைத் தின்னுவதும் தாய்ப்பாலைப் பெறாததுமான யாட்டுக்குட்டியினைப் பலியிட விரும்பி வேலன வெறியாடுவனாயின் யான் அதற்கும் நாணுகின்றேன் என்று தலைமகள் தோழியிடம் கூறினாள் (அகம். 292:2-6). காட்டிலே விருப்பத்திற்குரிய பிடியானையை யிழந்த களிற்றியானை உணணத்தக்க குளகினை உண்ணாது மறுத்த வாட்டத்தைப் போல் வாடிய உடம்பினனாய்த் தலைவன் இருந்தான் (அகம். 392:1-4). யானை குளகினை மென்று தின்று அதனாற் கொள்கின்ற மததைதைப் போலக் காமம் கண்டு மகிழ்வாரைப் பெறுமிடத்து வெளிப்படும் செவ்வியை யுடையது (குறு. 136). மறங்கொண்ட பெரும்புலியின மாறுபாட்டைத் தொலைத்த யானை தனக்கு முன்னின்ற குளகினைத் தின்று அருவி நீரைப் பருகி அவ்வருவி ஒலுறுததுதலால துயில் கொள்ளும் (கலி. 42:1-3). தலைவனது மலைநாடு புதலினது குளகினை மனம் பொருநதித் தின்ற யானைகளை யுடையது (கலி. 43:20-22).

குளத்துக்கயம் - கயமாகிய குளம்போலும் வடிவினை யுடைய புனர்பூச நட்சத்திரம் (ஆகுபெயர்). பங்குனி மாதத்து முதறபதினைந்து நாட்களில் கார்த்திகை நாளின் முதறகாலில், நிறைந்த இருளை யுடைய பாதியிரவில், முடப்பனை போலும் வடிவை யுடைய அனுட நட்சத்திரத்தின் அடிநட்சத்திரமான கேட்டை முதலாகக் குளத்துக் கயம் - கயமாகிய குளம் போலும் வடிவினை யுடைய புனர்பூச நட்சத்திரத்தின் - கடை நட்சத்திரமான திருவாதிரை ஈறாக நின்று பதின் மூன்று நட்சத்திரங்களும் காய்ந்திருக்கையில் வானத்தினின்றும் ஒரு மீன் யானைக்கட்சேய் மாந்தரஞ்சேர விரும்பொறையின் இறப்புக் குறிதத தீநிமித்தமாக வீழ்நதது (புறம். 229:1-12).

குளப்பு - குளம்பு (வலித்தல் விகாரம்). மானின் குளப்பு- குளம்பு - அழுத்திய இடத்தை யொத்த இரண்டருகும் தாழ்ந்து நடுவுயர்ந்த பத்தலினை யுடையது பாலை யாழ் (பொரு. 4,22).

குளம் - பொய்கை. 'பாரியது பறம்பு நாட்டில் பாறையும் சிறுகுவடும் கூடிய தலையை யுடையவாகிய எட்டாம் நாள் பிறைபோலும் வளைந்த கரைகளையுடையதும் தெளிந்த நீர்நிறைந்ததுமான சிறுகுளம் - பொய்கை - பாதுகாப்பாரின்மையின் உடைவது போலும்' என்று அவன் இறப்புக்குப் பின் கபிலர் இரங்கினார் (புறம். 118). வற்றிய குளத்தின் கண்ணே பெய்தும் அகன்ற விளைநிலத்தின் கண்ணே சொரிநதும் அவற்றிற்கு மாறாகக் களர்நிலத்தை நிறைத்தும் இவ்வாறாக எவ்விடத்தும் வரையாத மரபினை யுடையது மழை (புறம். 142:1-3). ஒய்மான் நல்லியாதன் ஈந்த பெரும் பரிசிலை ஏற்ற புறத்திணை நன்னாகனார் நீர் நிறைந்த குளத்தின் புதவு போல மகிழச்சியைத் தாங்க மாட்டாதவ ரானார் (புறம். 376:16,30). கோடைக் காலம் நீட்டிப்பினும் நீர் வற்றாதனவும் கைகளை மேலே கூப்பி முழுகி நீர்நிலை காண முடியாதனவுமான குளங்களின கரைகளில் மீன் பிடிக்க வலைஞர் காத்திருப்பர் (பெரு. 272-274). பெருமழை மிகுதலால் ஆறுகள் தாஙகாமல் ஓங்கிச் செல்லும் நீர்ப்பெருக்குக் குளங்கள கொள்ளும்படி நிறைதல் (மது. 244-246). கணவர் மகிழுமாறு பிள்ளைகளைப் பெற்று இளமுலை பாலசுரக்கும்படி புலால் நாறறத்தை யுடைய ஈன்றணிமை நீஙகிச சுற்றத்துடன வளமனை மகளிர் குளநீராடுவர் (மது. 600-603). சோழன் கரிகாற பெருவளததான தூர்ந்த குளங்களைக் கல்லி வளம பெருக்கினான (பட். 284). தலைவன் பொருள்வயிற் பிரிநத காலத்துத் தலைவியின கணகள நீரற்ற குளத்தினை ஒழிவின்றி நிறைக்கும் காலவாய போல நாளும் அழுதன (அகம். 11:12-15). கோடைக்காலம் நீண்ட பசுமையறற காலததில குனறங்களைக கண்டாற்போலும் பெரிய கரைகளை யுடையனவும் நீரின்மையால் பறவைகள் வந்து தங்குத லிலலாதனவும் உள்ளே நீரில்லாதனவும் வெப்பம் மிக்கனவுமாகிய பெரிய குளங்களெல்லாம் நிறையுமாறு பெருமழை பொழிந்த வைகறைப் பொழுதில் பலரும் மிகமகிழ்வர் (அகம். 42:6-11). வேனில் நீடிய வழியில குளிக்கும் நீர் கிடந்த சிறுகுளத்தில் தோண்டப் பெற்ற குழியினகண் உணணற்காகாத கலங்கல் நீரினால இளைய பிடியானையின் தலையை முதலிற் கழுவிப் பின் எஞ்சிய சேற்றினைக களிற்றியானை தனனுடம்பில் பூசிக் கொள்ளும் (அகம். 121:2-6). 'பெருமழை பொழிந்த பாதியிரவில் வீசும் அலைகளின் துளிகள் பரக்கும சிறு கரையினை யுடைய பெருங்குளத்தைக் காவல செய்திருப்பவன் போல அனனை நம்மைக் காவல் செய்து இவ்விரவுப பொழுதிலும் துயிலமறந்து விழித்திருக்கின்றாளே' எனறு தலைவி சிறைப்புறத் தலைவன் கேட்குமாறு தோழிக்குச் சொன்னாள் (அகம். 252:11-14). 'தலைவனது பிரிவினால் யான் அழுத கண்ணீர் வாாந்து என்முலை

யிடைப் பரப்பு நாரை உணவு கொள்ளும் பெருங் குளம் போல் ஆயிற்று' என்று தலைவி உரைத் தாள (குறு. 325:5,6). செழியன தன் பெயராலே படைத்த மாட்சிமைப் பட்ட பெருங்குளத்தின் மடை திறக்கப்பட்டு நீரை வெளிவிட்ட போது வாளைமீன் புறம் போந்தது (நற். 340:2-4). மழைக் காலத்தில் குளத்தைக் காத்திருப்பவன் போலத் தலைவன மழைத்துளியினால் நனைந்தவனாய் இரவுக்குறியிடததே நின்றிருந்தான் (இதனுள் குளம் எனபதற்குக் குன்றம் எனபதும் பாடம்) (ஐங். 206). கரை யுடைந்த குளம்போலச் சூல்மேகம் மழைபொழிந் தது (பரி. 7:3). மழைநீரற்று வற்றிய குளத்தில் மக்கள் வாய்பூசி நீராடியதாலும் மஞ்சனப் பொருள்களும் குங்குமக் குழம்பும் முதலியன கலந் தமையாலும் நீர் கலங்கியதைப் போன்று வையை யாற்று நீரும் தன்னிடத்தே பலரும் ஆடியதனால் கலங்கிக் காணப்பட்டது (பரி. தி. 2:87-90).

2. மார்கழி மாதம். ஞாயிறு காயாத கடைமாரியை யுடைய குளத்து - மார்கழி மாதத்து - நிறைமதி யொடு கூடிய திருவாதிரை நாளின்கண் விரிநூலந் தணர் அத்திருவாதிரைக்குத் தெய்வமாகிய இறை வனுக்கு விழாவெடுப்பர் (திருவாதிரை நிறைமதி யொடு கூடுங்கால் ஆதித்தன் பூத்தடமாகிய புனர் பூசத்தின்கண் நிற்பானாகலின் அப் பூத்தடத்தை யுடைய மார்கழி மாதம் குளமெனப்பட்டது) (பரி. 11:76-78).

**குளம்பனார்** - புலவர். இவரைக் குளம்பு என்னும் ஊரால் பெயர் பெற்றவர் என்பர் பி. நா. (நற். பாடினோர் வரலாறு). குளம்பன் என்பதை இயற் பெயராகவே காட்டுவர் ஔவை. து. (புறம். 253. முன்னுரை). இவர் பாடலொன்று நற்றிணையில் (288) அமைந்துள்ளது. தலைமகன் சிறைப்புறத் தானாய் நிறகையில் தோழி தலைமகளிடம் பேசு வோள் போல வெறியாட்டினை அறிவுறுத்தி அவனை வரைவுகடாவும் துறையில் இவர் அத னைப் பாடியுள்ளார். காலை இளவெயிலிற் காய வேண்டி மயில தன பெடையுடனே மலையுச்சியின் பக்கத்திலே சென்று ஆடுதற்கிடனான மலைநாடன எனறு தலைவனது மலைநாட்டைப் புனையும் வாயிலாகக் காமவின்பந் துய்த்து இல்லறம் நிகழ்த்த வேண்டித் தலைவன தலைவியுடனே சென்று மணந்து தங்குவானாக என்ற உள்ளுறை யைத் தோழி கூற்றாக இவர் புலப்படுத்தியுள்ளார்.

**குளம்பாதாயனார்** - புலவர். தாயனாரென்பது இவர்தம் இயற்பெயரெனத தெரிகின்றது. ஆயினும் முன் னுள்ள அடைமொழியின் பொருள் தெரியவில்லை. இந்நிலையில் இவர் முழுப்பெயரைக் குளம்பந்தாய னார் எனக் கொண்டு, 'குளம்பன் மகன் தாயனார் என்பது குளம்பந்தாயனார் என வந்தது; குளம்பன் என்னும் இயற்பெயர் மக்கள் முறையில் தாயனார் என்ற பெயர் வரவே, ஈற்று அன்சாரியை கெட்டு அம்மென்னும் சாரியை பெற்றுக் குளம்பந்தாயனா ரென வரும்' என்று விதி காட்டி விளக்கிக், 'குளம் பனார்' என்ற மற்றொரு புலவர் பெயரையும் எடுத்துக் காட்டுவர் ஔவை. து. (புறம். 253. முன் னுரை). இப்புலவர் பாடியதாகப் புற நானூற்றில் 253-ஆம் பாடலொன்றே உள்ளது. போர்க்குச் சென்ற களத்தே மாய்ந்த மறவனொருவன் மனை வியின் புலம்பலான அப்பாடலில், வளையிழந்த அவளது வறுங்கையின் விளர்ப்பிற்குப் பச்சை மூங் கிலின் பட்டை கழன்ற நிலையை இவர் உவமை கூறியுள்ள நுண்ணயம் பாராட்டற்பாலதாம்.

**குளம்பு** – விலங்கின் கால் நகம். பாண்டியன் பல்யாக சாலை முதுகுடுமிப் பெருவழுதி தன் பகைவர் நாட்டு விளைவயல்களில் குதிரைகளின் கவிந்த குளம்பு - கால்நகம் - தாவுமாறு தேரைச் செலுத்தி னான் (புறம். 15: 4-6). சோழன் நலங்கிள்ளி தன் பகைப்புலத்தில் தங்கிவிட்டுக் கீழ்கடல் பின்னதாக மேற்கடலின் வெள்ளலைகள் தன் குதிரையின் குளம்பை யலைக்குமாறு வலமாக முறையே வருதலு முண்டென வடநாட்டு வேந்தர் நெஞ்சு நடுங் கும் அவலத்தினால் துஞ்சாக் கண்ணராயினர் (புறம். 31: 12-17). அதியமான் நெடுமானஞ்சியின் குதிரைகள் போர்க்களத்திலே பரவி வந்து பொருத மறவர் மார்பிலணிந்த பொலம்பைந்தார் சிதையப் பாய்ந்து ஓடுதலால் குருதிபட்டு மறுப்பட்ட குளம்பை உடையவாயின (புறம். 97:11-13). போரில் பட்டோரது பிணம் உருவழியப் போர்க்களத்தை உழக்கிச் செல்லுதலால் குருதிக் கறை பொருந்திய குளம்பையுடைய அதியமானின் குதிரைகள் போகக் கண்ட பகைவர் கவைமுள்ளினால் காட்டுவாயிலை யடைத்தனர் (புறம. 98: 5-8). நிலம் பின்னிடுவது போலக் கால்களின் குளம்பை யூன்றி உள்ளத்தின் வேகத்தையும் தோற்பிக்கும் விரைவுடன் வருகின்ற குதிரைமேல் பகை மறவனொருவன் வந்தனன் (புறம். 303:1-5). போரில் எறியப்பட்ட பகை வீர ரின் பிணங்களை இடறிச் சென்றதனால் குதிரை யின் குளம்பில் குருதிக் கறை படிந்தது (பதி. 65:1,2). வெஞ்சுர நெறியில் உப்புப் பொதிகளைச் சுமந்து செல்லும் கழுதைகளின் தேய்நத குளம்பு உதைத் தலால் பரற்கற்கள் பிறழ்ந்து கிடக்கும் (அகம். 207: 5-7). கூதிர்ப்பருவத்து மணல் திடரின்கண் உதிர்ந்து கிடக்கும் ஈங்கையரும்பும் காட்டுமல்லிகை மலரும்

மான்களின் வலிய குளம்பினால் மிதிபட்டு அழுந் துகையில் அவற்றினின்று பனிநீர் வடியும் (நற். 124: 4-9). தனது தேர்க்குதிரையின் கவிந்த குளம்புகள் காந்தள் மலர்களின் வளவிய இதழ்களை வளை களைப் போல் அறுத்தெறியுமாறு தலைவன் வினை முற்றி மீண்டனன் (நற். 161:6-8). பொறையனது கொல்லி மலையில் பாணர் பரிசிலாகப் பெற்ற குதிரைகளின் கவிந்த குளம்பு மோதுதலாலே செப்பமாகிய மலைமேல் உள்ள சிறுநெறியில் இர வலர் மெலியாமல் ஏறிச் செல்வர் (நற். 185:3-7). கழிச்சேறு படிந்த அத்திரியின் குளம்பெங்கும் இறாமீன்கள் ஒடுங்கி யழிந்தன (நற். 278:7,8). 'நீ ஏறுகின்ற குதிரை கூரிய உகிரால் மாட்சிமைப்பட்ட குளம்பினை யுடையதாகலின் அது மிகவும் கொடிதே என்று பரத்தையைக் குதிரையாக்கித் தலைவி தலைவனிடம் கூறினாள் (கலி. 96:25,26).

**குளமீன்** - குளம்போலும் வடிவையுடைய புனர்பூச நட்சத்திரம். அகன்ற நிலவுலகம் மழையின்றி வெம் மையுற்றாலும் வானுள் எரிமீன் தோன்றினாலும் குளமீனொடு - குளம் போலும் வடிவுடைய புனர் பூச நட்சத்திரத்தொடு - தாள்மீன் புகைந்தாலும் பிடவூர் கிழார் மகன் பெருஞ்சாத்தனது நாட்டில் சான்றோர் நெற்சோற்றுடன் கறி முதலியன உண்டு அவனது விளைவை வாழ்த்துவர் (புறம். 395: 33-38).

**குளவாய்** - பூமுடி நாகர் கோயில் கொண்ட ஊர். வரை வாய் தழுவிய கல்சேர் கிடக்கைக் குளவாய் அமர்ந் தான் திருக்கோயிலில் மகளிர் மைந்தரோடு வந் திறைஞ்ச இருளும் பிணியும் நீங்க அவர்க்கு நல் லவை யெல்லாம் பொருந்தும் (பரி. தி. 1:61-63).

**குளவி** - 1. மலைமல்லிகை (காட்டு மல்லிகை). மலைச் சாரலில் வெண்காந்தட்பூ இலை தழைத்த குளவி யொடு - மலைமல்லிகையொடு - மணங்கமழும் (புறம். 90: 1,3). குறவர் புதுவருவாயாக வந்த தினையின் சோற்றைக் கூதாளி கவின்பெற்ற குளவி மணங் கமழும் முற்றத்திலே வாழையிலையில் வைத்துப் பலருடனே பகுத்துண்பர் (புறம். 168:5-13). மணங் கமழும் இதழ்களையுடைய குளவியொடு கூதாளி தழைத்து விளங்குதல் (புறம். 380:7). இரவலரது இரும்பேரொக்கல் இமையவரம்பன் நெடுஞ்சேர லாதனின் இனிய செல்வ நிலையைக் கேட்குந் தொறும் அவனைக் காண்டல் விருப்பொடு மணங் கமழும் குளவி பூத்த குன்றுகள் பலவற்றைக் கடந்து வந்து அவனிடத்தே தங்கியது (பதி. 13:9-14). குறிஞ்சி நிலத்திலே தினைக்கொல்லையை உழு வோர் வரகின்மேல் இட்ட நறுமணம் மிக்க குளவியையுடைய இருப்பிடங்களில் தினைமாவை விருந்தினர்க்கு முறையே பகுத்தளிப்பர் (பதி. 30: 22-25). வேலன் பச்சிலைக் கொடியாலே புட்டிற் காயை விரவி நறைக்காயை இடையிட்டுக் குளவி யொடு வெண்கூதாளத்தையும் தொடுத்த கண்ணி யன் (முரு. 190-192). குடபுலத்திலே செங்கழுநீர்ப் பூவை மேய்ந்த எருமை பலாமர நிழலில் அசை யிட்டவாறே குளவியாகிய படுக்கையில் துயில் கொள்ளும் (சிறு. 42-47). தலைவியும் தோழியும் பறித்துப் பாறையிலே குவித்த மலர்களுள் குளவி யும் அடங்கும் (குறி. 76). வளவிய இதழையுடைய குளவியும் குறிஞ்சியும் குழைய நல்லேறுகள் தம்மில் பொருகின்ற ஆரவாரம் மலையின் திசையெலலாம் ஒலிக்கும் (மலை. 334,335). தலைவனது மலைநாட் டில் வேட்டைக்குச் சென்ற குறவன் காட்டகததுக் குளவித் தண்புதர் குருதியொடு அசையுமாறு முள்ளம் பன்றியைக் கொன்று வீழ்த்தினான (அகம். 182:6-8). யானையொடு புலி பொருதலால் சிந்திய குருதிபட்டுக் குழைந்த செங்களத்தின் புலால் நாற்றத்தை வேங்கைப்பூ மணமும் குளவி யின் மணமும் போக்கின (அகம். 268:2-4). அருவி நீரொழுகும் பக்கத்தினை யுடைய அரிய இடததே நெருங்கி வளர்ந்த குளவியொடு தொடுத்த கூதளங் கண்ணியின் மணத்தைக் காற்று வெளிப்படுத்து மாறு தலைவன அதனை யணிநது உவகையுடைய னாய் இரவுக்குறியிடத்தே புகுந்தான (அகம். 272: 7-12). 'வேட்டச் செந்நாய் தோண்டி உண்டு எஞ் சியதாகிய குளவி படிந்து மூடிய அழுகற் சினனீரை எம்மொடு சேர்ந்து உணணுதற்குத் தலைவியும் இப்பாலை வழியில் வருவளாயின் அவள் மிக இரங்கத் தக்காள்' எனப் பிரிந்து போகும் தலை வன் இடைச்சுரததே கருதினான் (குறு. 56). தலைவி யின் நறுநுதல அரலைக் குன்றத்துச் சுனைக் குவளையொடு சேரத்தொடுதத குளவியின் மணம் கமழும் (குறு. 59: 2-4). காந்தளஞ் சிலம்பில சிறு குடிககண் வாழ்வோர் அருவிபபரபபிலே ஐவன நெல்லை விதைத்து அவற்றிற்கிடையே களையாக முளைத்த பருத்த இலைகளையுடைய குளவிகளு டனே மரலையும் களைவர் (குறு. 100:1-3). தலைவ னது மலைநாட்டில் பெரிய குளிர்ச்சியுடைய குளவி யைக் களிறு குழைய மிதித்தது (நற். 51:8-11). தலைவன குளவியொடு கூவிளததை நெருங்கக் கட்டிய கண்ணி யணிந்திருந்தான் (நற். 119: 8,9). யானையினம் குளிர்ந்த குளக்கரையில் வளர்ந்த குளவியைக் குழையுமாறு தீண்டுதல் (நற். 232:1,2). கொல்லிமலையிலுள்ள சிறுபசுங் குளவியின் மணம் செவ்விதிற் கமழும் கூந்தலையுடையவள் தலைவி

ச இ பொ க தொ 2 27.ஙு

(நற். 346:9-11). தலைவன் குல்லை, குளவி, கூதாளம், குவளை ஆகிய மலர்களை இல்ல மலரொடு மிடைந்த குளிர்நத கண்ணியை அணிந்தவன் (நற். 376:5,6). மலைநாட்டில் இற்றி மரத்தின் மேலேறி அதிற் படர்ந்துள்ள குளவியை மந்தி மேய்ந்தது (ஐங. 279:1,2).

**குளன்** - குளம். முருகன யாறும் குளனும் - குளமும் - வேறுபட்ட பல ஊர்களும் உள்ளிட்ட எல்லா இடங்களிலும் உறைதலு முரியன (முரு. 224,249). குளன அழகு பெறுதற்குக் காரணமானது தாமரை (கலி. 22.15).

**குளிர்** - 1. குளிர்ச்சி. சோழன் கரிகாற் பெருவளத்தான தனனிடம் வந்த பொருநனை உருகும் மெழுகுப் பாவை போல என்பு குழையக் குளிர் - குளிர்ச்சி - கொளுத்தி நோக்கினான் (பொரு. 77, 78). கடலினது நீர்த் திவலைகள் குளிர்கொள பொதும்பரின்கண் வந்து செறியும் ஓசையுள்ளிட்ட ஆரவாரம் பலவும் ஒழியாதது முதுவெள்ளிலை எனனும் ஊர் (மது. 113-119). அகனற பொழில்கள் குளிர்கொள் கிளைகளையுடையனவாய் அவற்றில் தங்கியிருந்த மழைத் துளிகள் மாறாது விழுமாறு கூதிர்க்காலம் நிலைபெற்றது (நெடு. 27,28,72). முன்பனிக்காலத்துப் பாதியிரவில மலையையும் நடுங்கச் செய்வது போன்ற குளிர்கொள் வாடை வீசுதல் (அகம்.163:8-10). குளிர்கொள் பிடவினது கூர்முக அரும்பினை மாலையில் வண்டு வாய்திறக்கும் (அகம். 183:10-12). பொருள்வயிற் பிரிந்த தலைவனது நெஞ்சு, தலைவி இருங் குளிர் வாடையொடு வருநதுவள் எனக் கருதி அவளிடததே செனறது (அகம. 337:19-21). மழையையுடைய ஊதைக காற்றினது குளிரொடு கலந்த கூதிர்ப்பருவததின உருவிலே கூற்றம் காதலனைப் பிரிந்த தலைவியைக் குறித்து வநதது (குறு. 197). 'மடந்தையே, நுநதையின் குளிர் வாய்தத தினைப் புனத்தினகண் நீ கிளி கடிந்திருககையில யான் நினனைக் கூடுதறகு வரலாமா' எனத தலைவன் தலைவியை வினவினான (நற். 204:1,2). குளிர்பொய்கைகள் நீரால நிறைந்து சிறப்புறறன (பரி. 8:93).

2. கிளிகடி கருவி. தலைவியும் தோழியும் தினைப் புனததில் பரணமீதேறியிருந்து தழலும் தட்டையும் குளிரும் பிறவுமான கிளிகடி கருவிகளை முறை முறையே கொணடு ஒலியெழுப்பிக் கிளியோப்பினர் (குறி. 40-44). அவரைக் கொடிகள தினையரி தாள்தோறும பூக்களை உதிர்த்து அடியிலே குளிரை யொக்கும வளைநத காயைக் கொணடன (மலை. 109, 110). 'தினைப்புனததில் படியும் கிளிகளைக் கடிதற்குக் குளிரும தட்டையும் ஒலித்துச் சூரர மகளிர்போல நின்ற நீ யாரையோ' என்று தலைவியைத் தலைவன வினவினான் (அகம். 32: 5-8) தினைப்புனத்தில் படியும் கிளிகளைக் கடிந்தோப்பும் கொடிச்சியாகிய தலைவியின் கையிலுள்ள குளிர் இசையோடு பொருந்தி இனிய தாளத்தை உடையது (குறு. 291:1-3). தினைப்புனத்தை உண்கின்ற கிளிகளைக் கடிந்தோப்பும் கொடிச்சியாகிய தலைவியின கையிலுள்ள குளிர் சிலம்பு போல ஒலிக்கும் (குறு. 360:5-7). 'குளிர் பொருந்திய கையினளான கொடிச்சியே, நீ இனி இல்லத்திற்குச் செல்வாயாக' எனறு தலைவியிடத்து இனிது கூறிவிட்டுக் கானவர் மெல்லத் தினைககதிர்களைக் கொய்யத் தொடங்கினர் (நற். 306:3-5).

3. அரிவாள். வானம் மழை பொழிந்தமையால் அவரைக்கொடிகள் தினையரி தாளதோறும் பூக்களை உதிர்த்து அடியிலே குளிரை - அரிவாளை - ஒக்கும் வளைநத காயைக கொண்டன (மலை. 97, 109,110).

**குளிறு** - நண்டு. ஆற்றங் கரையில் வளர்ந்த அத்தி மரத்திலிருந்து வீழ்ந்த தொரு பழததை ஏழு குளிறு - நண்டு - மிதித்த நிலையில் அபபழம் குழைவதுபோலத் தலைவி தலைவனது பிரிவில் மனங் குழைந்து வருநத, அயலோரின கொடிய நா அப் பிரிவு குறித்து அலரெழுப்பி முழங்கின ('குளிறு' என்பதற்குக் 'களிறு' எனறும பாடமுணடு) (குறு. 24:3-6).

**குற்றம்** - பிழை. தோழி நற்றாயைப் பார்த்து 'அன்னாய், தலைவியின வருத்த நிலை கண்டாற்றாது வெறியாட்டயரும் நின் மீதும் குற்றம் - பிழை - இல்லை; இனித தலைவியும் கற்புக்கடம் பூணடு தலைவனைக் காணாது மெலிகினறாளாதலின் அவளும் தவறுடையள அல்லள; என் பாதுகாவலில் தவறவில்லையாதலின என மீதும் குறறமில்லை' எனக் கூறினாள் (குறி. வெ. 1:1,2). தாய தலைவியின தமையன்மாருககு அறததொடு நிறக அவரும் ஒரு பகலெல்லாம நெஞசழனறு கண் சிவந்து தெரிநத அமபுகளையும் பார்தது வில்லையும் பார்த்து எழுநது அலமநது இருவரிடததும் குற்றமில்லையாயிருந்ததென்று சினம ஆறித் தலை சாய்த்திருந்தார் (கலி. 39:20-25). பிறர் குற்றம் கூறுதலை அறியாதவன தலைவன் (கலி. 43.18,19). தோழி தலைவனைப் பார்தது 'நீ தலைவியைத் தொடி நெகிழும் தோளளாகக கைவிடுவது நின குடிமையிடத்துப் பெரியதொரு குறறமாயத் தஙகாதோ' எனக் கூறி வரைவு கடாவினாள் (கலி. 135:7 8).

**குற்றில்** - கொட்டில். அதியமானின படைக்கலங்கள் பகைவரைக் குத்துதலால் கங்கும் நுனியும்

சிதைந்து கொல்லனின் பணிக்களரியாகிய குற்றி லில் - கொட்டிலில் - கிடந்தன (புறம். 95:3-5).

**குற்றுநர்** - பறிப்போர். 'ஆம்பலைக் குற்றுநர் - பறிப் போர் - புனல் வேட்கையை அடைந்தாற் போலத் தலைவியின் நகிலிடையே துயிலப் பெற்றும் நடுங் கல் ஆனீர்' எனத் தோழி தலைவனிடம் அவனது புணர்ச்சி விதும்பல் கண்டு கூறினாள் (குறுநர் எனவும் பாடம்) (குறு. 178:3,4).

**குறங்கு** - துடை. சூலம் பிடித்த சுடர்ப்படைக் காலக் கடவுள் வெள்ளிய மணிகள் குறங்கின் - துடையின் - புடையே இயக்கப் பெற்று ஒலிக்கும் விழாவினை யுடையவர் (பதி. க. வா. 5-12). முருகனின் செந்நிற ஆடையை உடைய குறங்கின் மேல் அவனது ஒருகை கிடந்தது (முரு. 109). பாடினி பெரிய பிடி யானையின் தடக்கை போலத் தம்மில் நெருங்கி ஒன்றித் திரண்ட குறங்கினை யுடையவள் (பொரு.40). நிலத்தில் பொருந்தும் பெண்யானையின் கையைப் போலத் தாழும் அடியோடு தொடர்பு பட்டுப் பருத்துத் திரண்டு உடன் செறிந்த குறங்கினைக் கொண்டவள் விறலி (சிறு. 18-20). விறலியின் குறங்கென மலையிடத்தே வாழை ஓங்கியி ருந்தது (சிறு. 20, 21). மதுரை நகரத்திலிருந்த கள்வர் தம் குறங்கிடைப் பதித்த கூரிய மூனை யினை யுடைய குறுகிய பிடி அமைந்த உடை வாளை உடையவர் (மது. 637). காவிரிப்பூம் பட்டி னத்திலுள்ள முகில் தவழும் மேல்மாடத்தில சிவந்த அடியினையும் செறிந்த குறங்கினையும் மென் சாய லினையும் கொண்ட மகளிர் காணப்பட்டனர் (பட். 145-150). அஃதை எனபவள் செம்பொன்னாற் செய்த சிலம்பையும் செறிந்த குறங்கையும் அழ கொழுகும் மாமை நிறத்தையு முடையவள் (அகம். 96:11,12). செந்நாய் ஏற்றை பிணைமான் அலறும் படி அஞ்சி ஓடும் ஆண்மானின் குறங்கைக் கவ்வித் துணித்தது (அகம். 285:5,6). ஆலமரத்தின் நெடிய விழுது தித்தி படர்ந்த குறங்கில் உராயவும் கூந்தல் மயில்தோகை போன்று மேலெழவும் தலைவி யைத் தலைவன் ஊசலில் வைத்து ஆட்டினான் (அகம. 385:9-15). வெள்ளாம்பலினது தழையுடை தேமலை யுடைய குறங்கில மாறி மாறி அசையச் சேயிழையாகிய பரத்தை கொழுநனைக் காண வந்தனள (குறு. 293:5-8). விறலி, திரண்டு செறிந்த குறங்கையுடையவள் (நற். 170:2). மறத்தைத் தம் மிடததே கொண்ட நூற்றுவர் தலைவனை (துரியோ தனனை) குறங்கினை யறுத்து உயிரைப் போக்கிய வன் (வீமன) (கலி. 52:2,3).

**குறடு** - 1. அச்சுக்கோக்கும் குடம். வீரன் ஒருவன் ஆர்க் கால்க்ள் சூழச் செருகப்பட்டுத் தோன்றும் குறடு - அச்சுக் கோக்கும் குடம் - போல, வேல்கள் மார்பிடைப் பாய்ந்தழுந்த வீழ்ந்து கிடந்தான் (புறம். 283: 8). வீரனொருவன் தச்சனால் ஆர்க் காலைச் சேர்த்து எறியப்பட்ட குறட்டைப் போலப் பகைவர் எறிந்த படைகளைத் தானேற்று மாய்ந் தான் (புறம. 290:4,5). வயிரத்தாற் செய்யப்பட்ட குறட்டின்கண் செறிந்து விளங்குகின்ற மணிகளா லாகிய ஆர்க்காலை யுடையது ஆழிப் படை (புறம். 365:4,5). கூரிய சிற்றுளிகள் செத்தின உருக்கள் அழுந்தின குறட்டிடத்தே தைத்த ஆர்களைச் சூழ்ந்த சூட்டினை யுடையது உருளை (சிறு. 252, 253). நெடுஞ்செழியன் சகடத்தின் வலிய குறட்டை ஒத்த ஊன்கெட்ட மார்போடு உயர்ந்த உதவியை மேலும் முயலுதல் உடையாரைப் பரிசில நல்கக் கொணர்மின் என்றுரைத்தான் (மது. 742,743).

2. கட்டை. நறுமணம் வீசும் குறடு - (சந்தனக்) கட்டை - உரைத்த பொலிவுடைய நிறம் கொணட குழம்பினை மகளிர் இளமுலையில் அப்பினர் (முரு. 33-35).

3. கம்மியரின் பற்றுக்குறடு. செந்தினை, பிடியின வளைந்த கையைப் போனறு பால் நிரம்பிக் கரியை எடுக்கும் குறடு - கம்மியரின் பற்றுக்குறடு - போன்று வளைந்திருந்தது (குறு. 198:2-4).

**குறத்தி** – குறிஞ்சி நிலப்பெண். குறத்தி - குறிஞ்சி நிலப்பெண் - சந்தனமரத்தால் அடுப்பெரிததாள் (புறம். 108:1,2).

**குறப்பிணாக்கொடி** - குறப்பெண்ணாகிய பூங்கொடி போன்றவள் (வள்ளி). 'குறப்பிணாக் கொடியை - வள்ளியை - மணநதவனே எனச் செவ்வேள் விளிக் கப் பெறுவர் (பரி. 19:95).

**குறம்** – குறவினம். குறம் – குறவினம் - சேர்ந்த இளஞ் சிறார் பெரிய பாறையிலுள்ள மூங்கிலினமேல் ஏறித் தாளங்கொட்டுவர் (நற்.95:5,6). புலியேறறை மலையில் களிற்றியானையுடன போர் செய்கையில் அதற்கஞ்சாத குறககுறு மாக்கள் ஆண்டுள்ள பெரும்பாறையி லேறித தொண்டகச் சிறுபறை முழக்குவர் (நற. 104:1-5). தேனீக்கள் மொயத்த லால் கல்லின் குழிகளில் கசிந்து வடிநத இனிய தேனைக் குறக்குறு மாக்கள் வழித்துண்டனர் (நற். 168:3,4).

**குறமகள்**-குறவினப்பெண். குறமகள் - குறவினப்பெண்– முருகன் உவக்கும் இசைக்கருவிகளை ஒலிக்கச் செய்து முரண்பாடுடையார் அஞ்ச முருகனை வரு மாறு வழிப்படுத்தினாள் (முரு. 242–244). கடமான்

தசையையும் முள்ளம் பன்றியின் , தசையையும் உடும்பின தடியோடு கலந்து செய்த கறியோடு இன் புளிக் கலநது மோர் உலையில் மூங்கிலரிசியிட்டு மலைசசாரல கமழச் சமைதத வெண்சோற்றுணவை நறுமல ரணிந்த நாறிரும் முசசியினை யுடைய குறமகள் மனைதொறும் கூத்தர் பெறுவர் (மலை. 175-185). குறமகள் வேங்கைப் புதுமலர் வேண்டிப் புலிபுலி என்னும் பூசல் பயிற்ற மலைகெழு சீறூரி னர் ஆகொள் வயப்புலி எனக் கருதி அட ஆர்த் தெழுநதனர் (அகம். 52:2-8). ஆயமொடு இயன்று குறமகள் தினைப்புனத்தைத் தழலை வாங்கியும் தட்டை ஒப்பியும் செயலையந் தழையை அசைத்தும் காத்தாள (அகம். 188:10-13). பிடியின் கன்று மலைப் பக்கத்தூரில் குறமகள் பெற்ற பிள்ளைகளுடன் சுற்றி ஓடும் (குறு. 394:1-3). பின்னிவிடப்பட்ட கரிய கூந்தலையும் நல்ல நுதலையும் உடைய குற மகள் தினைமாவை உண்டு தட்டையினால் ஐவனச் சிறுகிளி கடிவாள் (ஐங். 285:1-3).

**குறமகள் இளவெயினி** - பெண்பாற் புலவர். இளவெயின னார் என்பது போல இளவெயினியெனபது இவர் தம் இயற்பெயர். குறமகள் குறியெயினி யென்ற பெயருடன் காணப்படுகின்ற வேறொரு புலவரே இளமைக் காலத்திலேயே பாடத் தொடங்கியத னால் குறமகள் இளவெயினி யெனப்பட்டார் எனறு ஊகிக்கலாம என்று பி. நா. உரைப்பர் (நற். பாடினோர் வரலாறு). இளவெயினியாரையும குறி யெயினியாரையும் வேறு வேறாக வையாபுரிப் பிளளையின் சங்க இலககியப் பதிப்புக் கொண்டுள் ளது. இவர் பாடலொன்று புறநானூற்றில் (157) இடம் பெற்றுள்ளது. அப்பாடலால் ஏறைக்கோன் என்னும் குறவர் பெருமகனைச் சிறப்பித்துப் பாடி யுள்ளார். அதனுள் அவனை 'எம்மோன' என்று இவர் குறிப்பிடுதலின அவனபால் கொண்ட ஈடு பாட்டினை யறியலாம். தமர் பிழையைப் பொறுத் தலும் பிறர் வறுமைக்கு நாணுதலும் படையி டத்தே பிறரால் பழிக்கப் படாத வலிமையுடைய னாதலும் வேந்துடை அவையத்தே பெருமிதமாக நடத்தலும் ஏனையோாக்கன றி ஏறைக்கோனுக்கே தக்க பண்புகளெனக் குறிப்பிட்டு அவனைப் பாராட்டுவர்.

**குறமகள் குறியெயினி** - பெண்பாற் புலவர். எயினி யென்பது இவரது இயற்பெயர். குறவரினத்தில் குறி கூறிச் சிறப்பெயதிய குடியிற் பிறந்தமை பற்றி இவர் குறமகள் குறியெயினி எனப் பெற்றார் என் பர் ஔவை. து. (நற். 357.முன்னுரை). இவர் குற மகள் இளவெயினியின வேறாவர். நற்றிணையில் 357-ஆம் எண்ணிலமைந்த ஒரு பாடலே இவரு டையது. களவின்கண் வந்தொழுகும் தலைவன வரையாது களவை நீட்டித்தவிடத்தும் அவனிடத் துக் கொண்ட தெளிவினால் வருந்தாத தலைவி தோழியிடத்தே, 'என்னுள்ளம் அவனோடு ஆடிய நாளை யெண்ணி வருத்த மறியாது ஆற்றியிருக் கின்றது' என்று கூறுவதாக அப்பாடலைப் பாடி யுள்ளார். மழையில் நனைந்து உலறிய குடுமியி னையும் பீலியினையு முடையதாயினும் மயில் அம் மழை முகிலையே நினைந்து ஆலுதற் கிடனான மலை என்று புனையும் முகமாகத் தலைவன் வரை யாது நீட்டித்தலால் மேனி வேறுபட்டு வருந்தியும் அவனோடு ஆடிய நாளை நினைந்து ஆற்றியிருத் தலே தகுமென்ற தன் கருத்தினைத் தலைவி உள் ளுறுத்துரைக்கும் நயத்தை இப்பாடலிற் காண லாம்.

**குறவர்** - குறவினத்தார். குறிய இறப்பையுடைய சிறிய மனையினகண் குறவர் - குறவினத்தார் - மூங்கிற் குழாயில் வார்த்திருந்த முதிர்ந்த தேறலை நுகர்ந்து வேங்கை முனறிலில் குரவையயர்வர் (புறம். 129: 1-3). மலையை மழை வந்து சூழ்க எனறு பலி யைத் தூவி, அம்மழை மிகப்பெய்தலான் பெயல் அமைந்து முகில் மேலே போவதாக எனக் கட வுளைப் பேணிய குறவர் மழை மாறிய உவகை யுடன் மலைச்சாரற் புனததினையை உண்பர் (புறம். 143:1-5). பன்றி உழுத புழுதியின் உழாது அதுவே உழவாக .வித்திய சிறுதினை புதியதாக விளைந்ததை மரையான் பாலிலிட்டுச் சநதன விற காற் சமைத்து முன்றிலில் குறவர் பகுத்துண்பர் (புறம். 168: 4- 13). முசுக்கலை கிழித்துண்டலால் பீறிய முழவு போலும் பெரிய பலாப்பழம் சிலை கெழு குறவர்க்கு இட்டு வைத்துண்ணும் உணவா கும் (புறம். 236:1,2). செவ்வேளின ஒருமுகம் குற வர் மடமகளாகிய வள்ளியோடு மகிழ்ச்சியைப் பொருந்திற்று (முரு. 100-103). குறவர் நெய்தல் எனனும் நறிய பூவால் புனைந்த கண்ணியைச் சூடினர் (பெரு. 218,219). தினைப் புனத்தைக காத் தற்குச் சூழ்ந்த குறவர் உயர்ந்த பரணில் ஏறி எறிந்த யானையைக் குலைக்கும் கவண்கல் மூங்கி லில் இருந்த கருவிரற்குரங்கும குட்டியும் ஓடச் செய்தது (மலை. 203-208). குன்றம் குறவரும் மரு ளும் இயல்பினது (மலை. 275). நாட்காலத்தே நற வைக் குடித்த குறவர் தம் பெண்டிரொடு கூடிச் சிறுபறை முழங்க மலையுச்சியில் குரவையாடினர் (மலை. 320-322). ஆனேறும் மரையேறுமாகிய நல் லேறுகள் ஆற்றலொடு போர் செய்ததைக் கண்ட கோவலரும் குறவரும் கூடி ஆரவாரித்தனர்

(மலை.330-333) குறவர் பலாவின் கனியைக் கொள்ளும் பொருட்டு ஆங்குக் குடிசையை நாட்டியிருந்தனர் (அகம். 12:8,9). குறவர் தந்த சந்தின் ஆரத்தினைத் தென்னவன் எழில்பெற அணிந்தான் (அகம். 13:4,6). தேனிற் பிழிந்தெடுத்த நறவினையுடைய குறவர் முற்றத்தில் மூங்கிற் பூக்கள் உதிர்ந்து கிடந்தன (அகம். 78:7,8). வேங்கைமலர் பரவி அழகுபடுத்தும் முன்றிலில் குறவர் தம் இல்லத்திலுள்ள முதிய மக ளிருடன் குரவைக் கூத்தாடுவர் (அகம். 232:7,10). மலைச்சாரலில் பாறையிடத்தே இழைக்கப்பட்ட இனிய தேன் இறாலைக் குறவருள் அறுத்தெடுக்க முயலுபவரின் முயற்சி முடிவுறாமைக்குக் காரண மான நெடிய குவடுகளை யுடையது பொதியில் (அகம். 322: 11-14). மகளிர் கொடுத்த தோப்பிக் கள்ளைப் பருகிய மயக்கத்தால் குறவர் தம் கடமை யாகிய தினைப்புனக் காவலை மறந்தனர் (அகம். 348:7-10). பொருகளிறு மிதித்த வேங்கைமரம் குற வர் மகளிர் கூந்தலிற்கூட நின்றபடியே கொய்யும் படி மலர்ந்தது (குறு. 208: 2-4). புனத்திலெழுந்த அகிற்புகை வெண்மேகத்தைப் போலச் சென்று மலைச்சாரலிலுள்ள குறவரின் ஊரில் இறங்கும் (குறு. 339:1-3). இளம்பிடியை விரும்பிய மழகளிறு மலையிடத்தே சென்று அங்குள்ள குறவர் ஆரவா ரிக்க ஊரிடத்துள்ள மன்றத்தைப் போழ்ந்து செல் லும் (குறு. 346:1-3). கொல்லையில் குறவர் வெட்டி அழித்தலால் குறைபட்ட நறைக்கொடி சந்தன மரத்தைச் சுற்றி மீண்டும் தளிர்த்தது (நற். 5:3,4). தினைக்கதிர் கொள்ளக்கருதிக் குறவர் முன்றிலில் தங்கி மின்மினியை விளக்காகக் கொண்டு மழை இயக்கத்தை நோக்குவர் (நற். 44:6-11). மரல்பட்டை யின் நாரால் பின்னிய உடையினை உடைய மலை யுறை குறவர் அறியாது சந்தன மரத்தின் மேற்பட் டையைச் சீவ நீர்வடிந்து அம்மரம் வறிதாய்ச் சோர்ந்தது (நற். 64:4-7). காட்டின்கண்ணுள்ள குற வர் இளமகள் தினைக்கொல்லைக் காவலுக் கமைந் தாள் (நற். 102: 8,9). தினைப்புனத்தில் களிற்றி யானை புகுந்ததைக் கண்ட குறவர் கணையையும் கிணைப்பறையையும் கவணையும் உடையராய் ஆர்ப்பரித்தனர் (நற். 108:1-5). மழைபெய்யும் பதம் பெற்ற காட்டினை உழுத தினையைச் சிலவாக வித்திப் பலவாக விளைத்தனர் (நற். 209:2-4). 'யாம் குறவர் மகளிரேம்; குன றுகெழு கொடிச்சியேம்' எனத் தோழி தலைவனிடம் கூறினாள் (நற்.276:4). மலைச்சாரலில் உழுதுண்டு வாழும் குறவரின் காதல் மடமகள் பலவின் பெரும் பழத்தைக் கருவிரல் மந்திக்கு விருந்தயர்வாள் (நற்.353:3-6). குன்றக் குற வரின் சிறுகுடில் முற்றத்தே யுள்ள பொற்றைக்கல் லின் மீதேறிக் கல்லாமந்தி தன் கடுவனுடன் உகளும் (ஐங். 277:1,2). செவ்வாய்ப் பைங்கிளிகள் குன்றக் குறவரால அரிந்து விடப்பட்ட தினையின் வறுந் தட்டைகளை யுடைய புனத்தைக் கண்டும் பிரிதல் தேற்றாப் பேரன்பினவாயின (ஐங்.284). குறவரின் மடமகளிர் தத்தம் கணவரை அவரே தெய்வ மென்று வணங்கி எழுதலால் அவர்தம் ஐயன்மார் தாம் தொடுத்த அம்பு பிழையார் (கலி. 39:16-18).

**குறவர் பெருமகன்** - குறவர்க்குத் தலைவன் (ஏறைக் கோன்). குறவர்பெருமகன் - ஏறைக்கோன் - வில்லை வலித்தலான் அகன்ற மார்பினையும் கொல்லும் வேலினையும் காந்தட் பூவாற் செய்த கண்ணி யினையுமுடையவன் (புறம். 157:6,7).

**குறவன்** - குறமகன். ஈமத்தில் அடுக்கப்பட்ட கரிபுற விறகு குறவன் '- குறமகன - வெட்டிச் சுட்ட கொல்லைநிலத்துத் தறித்த மரத்துண்டம் போன் றது (புறம். 231:1,2). வேங்கைப்பூ மிலைந்து இளை யரொடு தேறல் மாந்தி வயநாய் பிற்பட வேட்டம் போகிய குறவன் முள்ளம்பனறியை எய்து கொன் றான் (அகம். 182:1-8). குறவனின் பெரும்புனத்தி லுள்ள சிறுதினை அரிந்த மறுகாலிடத்தில் கொழுவிய அவரைக்கொடி பனிக்காலத்தில் பூக் கும் (குறு. 82:4-6). சிறுகுடிக் குறவனின பெருந் தோட் குறுமகளுடைய நீரை ஒத்த சாயல், தீயை ஒத்த என் மனவலிமையைக் கெடச்செய்தது எனத் தலைமகன் பாங்கற் குரைத்தான் (குறு. 95:2-5). மலையுறை குறவனின் காதல் மடமகள் பெறற் கரியள்; அரிய காப்பினள் (நற். 201:1,2). மடந்தை குன்றக்குறவனொடு குறுநொடி பயிற்றும் நல்ல துணையாயிருந்தாள் (நற்.341:5,6). குன்றக் குறவன் தான் விளைக்கும் தினை முதலியவற்றிற்கு நீர் வேண்டிக் கடவுளை வாழ்த்தி ஆர்ப்பரித்தால் மேகம் மழை பொழியும் (ஐங். 251:1,2). குன்றக் குறவனின் புல்லால் வேயப்பட்ட சிறுகுடியின் பொல்லாங்கை வானவெளியில் அசையும் வெண் முகில் மறைக்கும் (ஐங். 252:1,2). குன்றக்குறவன் சந்தன மரத்தைத் தடிந்து சுடுதலான் எழுந்த நறும்புகை தேன்மணம் கமழும் மலையிட மெல் லாம் பரவும் (ஐங். 253:1,2). குன்றக்குறவன் சந்தன மரத்தை அறுத்துச் சுட்டமையால் எழுந்த நறு மணப்புகை காந்தள் மலர் மணத்தோடு விரவிக் கமழும் (ஐங். 254:1,2). குன்றக் குறவனின் காதல் மடமகள் வரையர மகளிரை ஒத்த சாயலையுடைய வள்; ஐயள்; அரும்பிய முலையள்; சிவந்த வாயி னள்; சுணங்கணி மார்பினள் (ஐங். 255). குனறக் குறவனின் காதல் மடமகள் வண்டுகள் மொய்க்கும்

நறுமணம் வீசும் கூந்தலை யுடையவள்; வளையள்; முளைவாள் எயிற்றள்; இளைய ளாயினும் பிறரை வருத்தும் இயல்பினள் (ஐங். 256). குன்றக் குறவன் கடவுளை (முருகவேளை) வழிபாடு செய்து வரமிருந்து தன் மகளைப் பெற்றான் (ஐங். 257:1,2). குன்றக் குறவனின் காதல் மடமகள் அழகிய மயில் போன்ற சாயலையும் அசைநடையையும் உடையவள் (ஐங். 258:1,2). குன்றக்குறவனின காதல் மடமகள் மன்றத்தின்கண நின்ற வேங்கைமலரைக் கொண்டு மலையுறை கடவுள் குலமுதல் வழுத்தித் தேம்பலிச் செய்த ஈர்நறுங்கையினள் (ஐங். 259:1-4). குன்றக்குறவனின் காதல் மட மகளாகிய கொடிச்சி தினை விளைந்தமையின் இனிக் கிளி ஓப்ப வர மாட்டாள்; ஆகவே அவள் பெறுதற்கரியள் எனத் தோழி தலைவனிடம் கூறினாள் (ஐங். 260).

குறவன்மகள் - குறமகள் (வள்ளி). 'குறவன்மகள் - வள்ளி - மீது ஆணை கூறாதே' எனத் தலைவனிடம் தோழி கூறினாள் (பரி. 8:69).

குறள் - 1. குறளன். 'கண்ணாற் பார்க்கும் தன்மை இல்லாத குறள - குறளன - உருவில் பிறத்தற்கு ஏதுவாகிய நாழிகையின் முகூர்த்தத்தே ஆண்டலைப் புள்ளுக்குத் தன் பெடையை ஈன்ற பறழாய மகனே, நீ என்னை விரும்பினேன் என்று கூறித் தடுத்தாய்; நின் போன்ற குறளர் என்னைத் தீண்டப் பெறுவரோ' எனக் குறளனிடம் கூனி கூறினாள் (கலி. 94:5-8).

2. குட்டை. மக்கள் பிறப்பிலே குருடு, வடிவில்லாத தசைத்திரள், கூன், குறள் - குட்டை - ஊமை செவிடு, விலங்குவடிவம், மருள் ஆகிய எண்வகை எச்சம் என்று கூறப்படுபவை எல்லாம் பேதைமைத் தன்மையுடைய பிறப்பாவனவாம் (புறம். 28:1-5).

3. குறுமை. வரகின் குறள் - குறுமை - கொண்ட அவிழாகிய சோறு பூளைப்பூப் போன்றது (பெரு. 192,193).

குறள - குட்டைவடிவ. 'வல்லுப் பலகையை எடுத்து நிறுத்தாற் போன்ற கல்லாக் குறள' எனக் கூனி குறளனை விளித்துக் 'கடும்பகல் வந்து எம்மை இலலதது வா எனறு சொல்லுதற்கு நின பெணடிர் சிலர் உளரோ, கூறுக' எனக் கேட்டாள் (கலி. 94: 13-16).

குறி - 1. குறியிடம். தலைவன் தலைவியைக் கூடுதற்குக் குறி — குறியிடம் - ஆகக் காட்டிய தினைப் புனத்தில் தினைமுதிர்ந்து கதிரும் கொய்யப்பட்டமையால் தலைவி கிளியை ஓட்டும் பாடலையும் கைவிட்டாள் (அகம். 118:12,13) நன்மலை நாடன் குன்றத்துக்கு நள்ளிரவில் குறி வருதல் (அகம். 138: 14,15). நள்ளிருளில் குறி வாய்த்த களவொழுக்கம் எல்லை கடந்து நீண்டுவிட்டது எனத்தலைவி தோழியிடம் கூறினாள் (அகம். 325:3,4). 'புன்னை நறும் பொழிலிற் செய்த நம் குறிக்கு இரவில் வருக' எனத் தோழி பகற்குறி வந்த தலைவனிடம் கூறினாள் (அகம்.360:15,19). தலைவியைக் குறியிடத்தில் நிறுத்தி வந்த தோழி தலைவனைப் பார்த்து 'நெய்தல் நிலத்தின்கண் எனது பாவையைக் கிடத்திவிட்டு நின்குறி வந்தேன்' எனக் கூறினாள் (குறு. 114:1,2). தலைவனுடன் புணர்குறி வாய்த்தபோது தன் கண்கள் அவனைக் கண்டும் செவிகள் அவனது சொற் கேட்டும் மகிழ்ந்தன' எனத் தலைவி தோழியிடம் கூறினாள் (குறு. 299:4,5). தோழி தலைவியிடம் 'நீ உடன்போக்கு இயைந்தமையை நான் கூறியதால் தலைவன் குறி வநது நின்றான்' எனக் கூறினாள் (குறு. 383: 1,2). தலைவர் வருதற்குக் குறிசெய்த மலையிலுள்ள தினைப்புனத்தில் கிளிகளைக் கடிய அங்குச் செல்க என மகளை அன்னை ஏவினள் (நற். 134:2-6). தோழி தான் முன்பு செய்த குறியில் தலைவியை அழைத்துச் சென்றுவிட்டுத் தலைவனிடம் இனியன கூறினாள் (நற். 204: 7,8). புன்னையஞ் சோலையிடத்துப் புணர்தற்குத் தலைவன் குறித்த குறியில் தலைவி வந்து நின்றாள் (நற். 227: 3,4). தலைவன் நடுயாமத்து மலர்விரிந்த சோலையில் புணர்கின்ற குறிவந்து நம்மைக் காணாது படும் அல்லல் அரும்படரைக் காணப் புன்னை மரத்தின் பின் மறைவோம்; வா எனத் தோழி தலைவியிடம் கூறினாள் (நற். 307: 6-10). தலைவியின் கண்ணாலும் மேனியாலும் நோயுற்று மெலிந்த எமக்கு இயற்கைப் புணர்ச்சி எய்திய பொழிலையே குறியாகத் தந்தாள் எனத் தலைவன் கூறினான் (ஐங். 174:3-4). தலைவி செய்த குறியில் தலைவன் வந்தால் அவனைச் சிறு குடியிலுள்ளார் மலையிலிருந்து பலிபெறும் அணங்கென்று கருதி அஞ்சுவர் (கலி. 52:8-10). தலைவி செயத குறியில் தலைவன் வந்தால் ஏனல் காவலர் களிறு வந்ததென்று கருதி ஞெகிழி, கணை, வில் முதலிய கொண்டு ஆரவாரஞ் செய்வர் (கலி. 52: 12-14). தலைவி செய்த குறியில் தலைவன் வரின் ஊர் மக்கள் புலி வந்ததென்று அஞ்சுவர் (கலி. 52:16-18). பரத்தையர் சேரியினின்றும் வந்த தலைவனிடம் தலைவி, 'நீ செய்த குறியில் வந்து பார்த்த பரத்தை ஆங்கு நின்னைக் காணாமையின் ஈங்கு வந்தனள்' எனக் கூறினாள் (கலி. 68:8). பூங்கொத்து நெருங்கின குளிர்ந்த பொழிலில் தலைவன்

செய்த குறியில் பரத்தை வந்தாள் (கலி. 69: 16). தலைவனால் குறிபெற்றாரின் கூந்தலை அவன் வகிர்ந்து கைசெய்து முடித்ததால் பூந்துகள் அவன் மேல் பொருந்திக் கிடந்தது (கலி. 72: 20). பெரு மழை ஓயாது பெய்யும் நள்ளிரவில் தலைவன் செய்த குறியில் பரத்தை வந்தாள் (கலி. 90:22). பரத்தை ஒருத்தியின் தொடி செய்த வடுவையும் அவள் விரும்பபடி செய்த குறியில் காணாமையால் கூருகிரால் மார்பில் செய்த புண்ணையும் கண்ட தாகத் தலைவி தலைவனிடம் கூறினாள் (கலி. 91: 10,11). 'நின்னைப் பெறுதலை நச்சின ஆசையால் நீ செய்த குறியில்' தப்பாமல் வந்த கடவுளைக் கண்டாயோ, எனப் பரத்தை வீடு சென்று வந்த கணவனைத் தலைவி வினவினாள் (கலி. 93: 17-20). அழகுமிகு கழி சூழ்ந்த வெண்மணல் எக்கரில் தலைவன் செய்த குறியில் தலைவி தவறாது வந்தாள் (கலி. 127:6,7). பனித்துறையில் நடு யாமத்தில் தலைவன் வந்து தன் வரவுணர்த்திய குறியில் தலைவி தப்பாமல் வந்தாள் (கலி. 127:14, 15).

2. அடையாளம். இடப்பக்கமும் வலப்பக்கமும் விழிப்புடன் நோக்கிக் கூறப்பெற்ற குறி - அடையாளம் - அறிந்து விலகிச் செல்லுங்கள் எனக் கூத்தர் ஆற்றுப்படுத்தப் பெறுகின்றனர் (மலை. 265 - 267). பிரிந்து சென்ற தலைவர் மீள் தற்குத் தலைவியிடம் இளவேனிற் பருவத்தின் தொடக்கத்தைக் குறியாகச் சொல்லிச் சென்றார் (அகம். 25: 12,13). வினைமுற்றி மீளும் தலைவன் இடைவழியில் 'நம் காதலி செய்த குறி ஆகிய வட்டத்தை அழுதுகொண்டு ஒவ்வொரு நாளும் எண்ணிப் பார்ப்பாள்' என நினைத்தான் (அகம். 351:10,11). புலவர் பெருமக்களால் புகழப் பெற்ற விழுப்புண்களின் குறியைத் தன் பொலந்தார் மார்பிற் கொண்டவன தலைவன் (அகம். 354:8,9). கடுவனுடன் களவுப் புணர்ச்சியில் ஈடுபட்ட செம்முகமந்தி புணர்ச்சி வேறுபாட்டால் உண்டாய குறியைத் தன சுற்றம் அறியுமென் றஞ்சி வேங்கைக் கிளையிலேறிச் சுனைநீரை நோக்கிக் கலைந்த மயிரைத் திருத்தியது (நற். 151:5-12). பரத்தை வீடு சென்று வந்த தலைவனைக் கண்ட தலைவி 'நின் பரத்தை நின்கண் செய்த குறியோடு என்மனைக் கண் நீ வருவதை யான் விரும்பேன' எனக் கூறினாள் (ஐங். 48: 4, 5). தலைவன் நறும்பொழில் ஒன்றில் பரத்தை ஒருத்தியுடன் புணர்குறி செய்த தால் அலர், குயிலின் கௌவையைக் காட்டிலும் பெரிதாய் எழுந்தது (ஐங். 369). காதலனைக் கூடி மகிழ வேண்டுமென்ற வேட்கையால் அவன் செய்யும் இரவுக்குறியை எதிர்நோக்கி வருந்தியிருந்த தாகத் தலைவி கூறினாள் (கலி. 46:12,13). மழை பெய்யும் இடையாமத்தில் குறியிடம் மாறியதால் தலைவன் குறிபெறாது வருந்தினான் (கலி. 46:18). போர்த்த போர்வையை உடுத்திக் கொண்டு இரவில் தலைவன் செய்யும் குறியைத் தலைவி எதிர்நோக்கி நின்றாள் (கலி. 65:3-5). பரத்தை வீடு சென்று வந்த தலைவன் தம் குழந்தையை ஏந்தி வந்ததைக் கண்ட தலைவி 'எம் புதலவனை எடாதே; அவன் வாய் நீரால் நீ மார்பில் பூசிய சந்தனம கலைந்து விடும்; அக்குறியைக் கொண்டு நின்னை முயங்கினாரை யானறிவேன என்று அப்பரத்தை வருந்துவாள்' எனக் கூறினாள் (கலி. 79:7-10). பரத்தை வீடு சென்று தன குழந்தையை ஏந்தியவ னாய் வந்த கணவனைக் கண்ட தலைவி, 'எம் புதல்வனை எடாதே; அவன நின மார்பிலுள்ள மணியாரத்தை அறுத்துவிடுவான்; அக்குறியைக் கொண்டு நின்னை முயங்கினாரை யானறிவேன் என்று அப்பரத்தை வருந்துவாள்' எனக் கூறினாள (கலி. 79:11-14). பரத்தை வீடு சென்று தன குழந்தையை ஏந்தியவனாய் வநத கணவனைக் கண்ட தலைவி 'எம் புதல்வனை எடாதே, அவன் நின தலைமாலையை அறுத்து விடுவான, அக்குறியைக் கொண்டு நின்னை முயங்கினாரை யானறிவேன என்று அப்பரத்தை வருநதுவாள' எனக கூறினாள (கலி. 79:15-18). பரத்தை வீடு சென்று வந்த கணவன் கடவுளைக் கண்டு வந்தேன என்று சொல்ல 'நீ கண்ட கடவுளர் தம்முள் நின் மார்பைப பிறர் முயங்காதபடி குறி செய்தார் யார்? சொல்லுக' எனத் தலைவி கேட்டாள் (கலி. 93: 29 - 31). பொதுவனின் கொலைத் தொழில் கொண்ட ஏற்றினது கொம்புகள் குறிசெய்த மார்பைப பாடுவோம்; வாரும் எனத் தோழி தலைவியையும் ஆயத்தையும் அழைத்தாள் (கலி. 104:63,64). 'மன்றத்திடத்தே ஆடும் குரவைக் கூத்திடத்து வந்த நின பெண்டிர் கேளாமல் ஆம்பல என்னும் பண்ணையுடைய குழலால் குறியிடமாகிய காஞ்சி மரத்தின் கீழ் குறிசெய்து வருக' எனத் தலைவி தலைவனிடம் கூறினாள் (கலி. 108:60-63).

3. குறிப்பு. தோழி இரவுக்குறி வந்த தலைவனைப் பார்த்து, 'நீ நின்னூரை அடைந்தபின் உன நாயை அழைக்கின்ற குறி - குறிப்பு - கொண்ட ஊதுகொம்பை ஊதுதல் வேண்டும்' என வேண்டினாள் (அகம். 318:12-15). தலைவன் முன் செய்த குறி வாய்க்காத தவற்றினால் தன்தோள்கள் பசலை அடைந்தன எனத் தலைவி தோழியிடம் கூறினாள் (குறு. 121:4-6). நின்னிடம் கூறிச் சென்ற

குறி (குறிப்பை) வாய்க்கச் செய்தனம்; இனிப்படர் தீர்க' எனத் தலைவியிடம் வினைமுற்றிப் புகுந்த தலைவன உரைத்தான் (ஐங். 494:4). தன் மகனுக்குப் பரத்தையர் அணிவித்த மோதிரத்தைக் கண்டு 'இம்மோதிரத்தை இட்டனுப்பியவளின் மனக்குறியை நான் அறிந்து கொண்டேன்' எனத் தலைவி கூறினாள் (கலி. 84:24). கடற்கரையில் தலைவனின் தேர் இன்ன காலத்து வரும் என்னும் குறி இன்றிப் பலநாளும வருங் காலத்தை மனத் தாலே நோக்கி எதிர்கொண்டாள் தலைவி (கலி. 127:10,11).

4. முகூர்த்தம். நூல் நெறியால் அறிந்த இருவரும் கூடுவதற் கேதுவாகிய குறி – முகூர்த்தம் - வேறு பட்டுத் தப்புதலை ஒருகாலத்தும் அறியாதவன் அறிவன் (கணி) (கலி. 39:46).

5. குறிக்கப்படும் குணம். தன் கணவன் பரத்தையர் வீட்டிலிருந்து வந்ததை அறிந்த தலைவி மகனுக்கு அறிவுரை கூறுவாள் போல, 'செம்மலே அழகில் நீ நுந்தையை ஒத்திருப்பினும் நுந்தை நிற்கும் நிலைகளின் கூற்றில் உனக்கொத்த குறி - குறிக்கப் படும் குணத்தை - யான கூறக்கேட்டு அதன்வழி நடப்பாயாக' என உரைத்தாள் (கலி. 86:11,12).

6. குறித்தல். 'நீவிர் செல்லும் நெறியில் பாம்புகள் ஒடுங்கி யிருக்கும் குழிகளும் உள; அவற்றை மனத்தில் குறி - குறித்தல் - கொண்டு செல்லுங்கள்' என்று கூத்தர் ஆற்றுப்படுத்தப் பெற்றனர் (மலை. 199,200). பரத்தை தலைவனைப் பார்த்து, 'யான் புணர்தற்கு நீ குறி செய்த இடத்தில் என்றும் உன்னைக் காணேன்; எவ்வழிப்பட்டாய்' என்று வினவினாள் (கலி. 97:3-5).

**குறிஞ்சி** – 1. குறிஞ்சிப்பண். மக்கள் முருகனுக்கு நறு மணப்புகை கொடுத்து அந் நிலத்துக்குரிய குறிஞ்சி - குறிஞ்சிப்பண் – பாடி இன்னியங் கறங்க இறைஞ் சினர் (முரு. 239,240) பரதவர் குறிஞ்சி பாடினர் (பொரு. 218). இடைமகன் குழலால் எழுப்பும் பாலைப்பண்ணை வெறுப்பின் வில்லாகிய யாழில் குறிஞ்சியை விரலால் எழுப்புவான் (பெரு. 175-182). இனிய யாழை உடைய விறலியர் பக்கமலையில் குறிஞ்சி பாடினர் (மலை. 358,359). கொடிச்சி பெரிய மலைச்சாரலில் தன் கூந்தலைக் கோதிக்கொண்டு குறிஞ்சி பாடத் தினைப்புனம் மேய்ந்த யானை கதிரையும் கொள்ளாது நிலையினும் பெயராது கண்பாடு பெற்று உறங்கியது (அகம். 102:5-9). ஊர் காக்கும் கானவர் கேட்போர் அச்சங் கொள் ளும் தன்மையில் குறிஞ்சி பாடிக்கொண்டு இரவில் துஞ்சார் (நற். 255:1-3).

2. ஒருவகைச்செடி. கிணைஞன் விடியற்காலையில் பலாமரத்தி னடியில் நின்று கிணைப்பறையைக் கொட்டி மானினம் செவிசாய்த்துக் கேட்கக் கருங் கோற் குறிஞ்சி நிறைந்த அண்டிரனின் மலைப் பக்கத்தைப் பாடினான் (புறம். 374:4-8). வேலன் இன்னியங்கள் கறங்கக் கார்மலர்க் குறிஞ்சி சூடி நெடுவேளை வழிபட்டான் (மது. 611-614). தலைவி தோழியருடன் கொய்த மலர்களுள் குறிஞ்சியும் ஒன்று (குறி. 63). நல்லேறுகள் வள்ளிதழ்க் குளவி யும் குறிஞ்சியும் குழையத் தம்மிற் பொருதன (மலை. 334,335). தலைவன் ஊர் கருங்கோற் குறிஞ்சி மிக்கது (அகம். 308:16). மலைப்பக்கத்தி லுள்ள கருங்கோற் குறிஞ்சியின் மலர்களைக் கொண்டு தேனிழைக்கும் நாடனொடு தலைவி கொண்ட நட்பு நிலத்தினும் பெரிது; வானினும் உயர்ந்தது; கடலினும் ஆழமானது (குறு. 3). குன்றத்திலுள்ள கருங்காற் குறிஞ்சியின் வன்மையில்லாத வெளியபூ, வேட்டுவர் இல்லங்களில் இழைக்கப்பட்ட தேன டைக்கு வேண்டியஅளவு தேனூறும் (நற். 268:2-5). தலைவி மலையில் தழைத்த பெருங்கோற் குறிஞ்சி யின் நாண்மலர் ஒத்த மேனியினள் (நற். 301:1,2).

3. குறிஞ்சி நிலம். - குறிஞ்சியில் - குறிஞ்சி நிலத்து - வாழும் குன்றவர் பெற்ற கொடிச்சியர் இந்திரன் மகளுடைய பாங்கியர் அஞ்சுமாறு பொருதனர் (பரி. 9:67,68).

4. குறிஞ்சிப்பாட்டு. அந்தணர்களின் மணம் எட்ட னுள் குறிஞ்சி - குறிஞ்சிப்பாட்டு - ஐந்தாம் மணத் தைச் சார்ந்தது (குறி. வெ. 2:3,4).

5. புணர்ச்சியாகிய உரிப்பொருள். கருங்காற் குறிஞ்சி – புணர்ச்சியாகிய உரிப்பொருள் - அமைந்த பக்க மலைகளாற் சூழப்பட்ட அருஞ் சிறப்பினை யுடை யது பெருமலை (மது. 300,301).

**குறிஞ்சிக் கிழவ** - குறிஞ்சி நிலத்துக் குரியவ (முருகன்). 'குன்றங் கொன்ற குன்றாக் கொற்றத்து விண் பொரு நெடுவரை குறிஞ்சிக் கிழவ' என முருகன் விளிக்கப் படுதல் (முரு. 266,267).

**குறிஞ்சிக்கோமான்** - மலைநிலத்தலைவன் (நல்லியக்கோ டன்). மேகம் தவழும் மூங்கில நிறைந்த இடியேறு இடித்துச் செல்கின்ற உயர்ந்த முடியையுடைய குறிஞ்சிக் கோமான் – மலைநிலத்தலைவன (நல்லி யக்கோடன்) - கொய்தளிர் கண்ணியையும் இசை நிலைத்தற் குரிய பண்புகளையும் உடையவன் (சிறு. 265-269).

**குறித்துமாறெதிர்ப்பை** - குறியெதிர்ப்பை (அளவுகுறித்து வாங்கி அவ்வளவே திருப்பிக் கொடுத்தற் குரிய கடன்).

வேளாண் பெருமகன் ஒருவனின் மனையோள் தன் னில்லத்தே வரகும் தினையும் இருந்தவற்றை யெல் லாம் இரவலர் உண்டு தீர்ந்த நிலையில் விருந்து காண்பாளாயின் பிறரிடத்தே குறித்துமாறெ திர்ப்பை - குறியெதிர்ப்பை - பெறாமையினால் விதைத்தினைக் கதிரே யாயினும் குற்றிச் சமைத்து விருந்தினரைப் புறந்தருவாள் (புறம். 333:8-13).

குறித்தோர் - கருதினோர். எப்பொருளும் நிலையாத இவ்வுலகத்தின்கண் நிலை பெறுதலைக் குறித் தோர் - கருதினோர் - தம் புகழை நிலத்திடத்தே நிறுத்தித் தாம் மாய்ந்தனர் (புறம். 165:1,2).

குறிநிலை - குறித்துக்கொள்ளும் தன்மை. இரண்டி டத்து நாட்டின இரண்டு கோலிடத்தும் சாயா நிழலால் தாரை போக ஓடுகின்ற குறிநிலை - குறித் துக் கொள்ளும் தன்மை – தப்பாதபடி ஞாயிறு மேற்கே சேர எழுந்து ஒருபக்கத்தைச் சாரப் போகாத சித்திரைத் திங்களின் நடுவில் பத்தில் நின்றதொரு நாளில் பதினைந்தாம் நாழிகையிலே திருமுளைச் சார்த்துச் செய்து நூலறி புலவர் (தச்சர்) நூலை நேரே பிடித்துத் திசைகளைக் குறித் துக் கொண்டு மன்னர்க் கொப்ப மனை வகுத்தனர் (நெடு. 72-78).

குறிப்பு - 1. உள்ளக்கருத்து. 'என் மகளை உடன் கொண்டு சென்ற விடலை அவளை எம்மனைக்கு முதற்கண் கொணர்வானோ, அன்றித் தம் மனைக்குக் கூட்டிச்செல்வானோ, இதுபற்றி அவன் குறிப்பு - உள்ளக்கருத்து - யாதோ' என்று தலைவி யின் நற்றாய் இரங்கினாள் (அகம். 195:1,2,18,19). 'ஊரன் இடைநெடுந் தெருவிலே என்கையைப் பற்றினனாக யான் அலறியவுடன் கைவிட்ட அவனது செயலை யான் யாய்க்கும் அறிவிக்க வில்லை யாதலின் இது தொடர்பாக நின் குறிப்பு என்னவோ' எனத் தோழி தலைவனைப் பற்றி வேறாகத் தலைமகளிடத்துக் கூறி அவள் கருத்தை யறிய முயன்றாள் (அகம். 356). 'என் குறிப்பு என் னோடே பொருந்தாதாயினும் நாடனொடு ஆடிய நாளை நினைந்து என்றும் நெஞ்சைப் புண்படுத் திக் கொண்டு கெட்டொழிய அறியாததாய் இருக் கிறது; அது குறித்து நின குறிப்பு எவ்வாறுளது' எனத் தலைவி தோழியை வினவினாள் (நற். 357: 1-3,10). 'நின் மார்பினை நயந்த நன்னுதல் அரிவை (பரத்தை) வேண்டிய குறிப்பை யுடையை யாய் நீ எம்மை இங்கு வந்து அருளாது அவளிடத்தே அங்குத் தங்கியிருத்தல் நினக்கேயன்றி எமக்கும் இனிதே' என்று தோழி பரத்தைமைத் தலைவனைப் புலந்து கூறினாள் (ஐங். 46).

'ஊரனே, நின் பரத்தைமையை எமக்குக் கூறும் கண்ணியையுடையனாய் நீ எம்மில்லத்தில் யாமிருக் கும் இடத்திற்கு வருகின்ற நிலைமை, 'இத்தலை வியது நலம் யாம் பிரியுங்காலத்து நிறங்கெட்டுப் புடைருங்காலத்துப் பொலிவுற்று நம் மனத்திற் கொண்ட குறிப்பாகவே யிருக்கும் என்று நீ கருதியிருக்கும் தகைமையோ' எனத் தோழி தலை வனை வினவினாள் (கலி. 78:11-14). 'எனக்குப் பொறுக்க மாட்டாத காமநோய் செய்தவளே, யான் ஆற்றி நிறுக்க மாட்டேன்; நீ அருளுவா யாயின் என்னுயிர் நிலைக்கும்; இனி நின் நினை வைக் கூறுவாயாக' என வேண்டிய குறளனது மொழிகேட்ட கூனி, 'இவன் குறிப்பைக் காண' என்று தன்னெஞ்சொடு கூறினாள் (கலி. 94:10-13). 'நின் குறிப்பினை நின் முகமே காட்டிக்கொடுக் கின்றது' என்று தலைவனது பரத்தைமை கண்டு அவனிடம் கூறினாள் தலைவி (கலி. 95:21,22). ஏறுகள் போர்செய்யாமல் பிரிதலைக் கருதி அவை இருகூறாக நீங்கும்படி நடுவே வேறுசில ஏறுகளைச் செலுத்தி விலக்கிப் பின்னர்ப பசுத்திரளோடு மேய்புலத்திலே ஏற்றித் தத்தம் ஏற்றினங்களைப் பிரிக்கும் இடையர், பழைய வடிவுகள எல்லாம் நெருங்கும்படி நிலத்தைப் படைக்க அகனற குறிப் பினைக் கொண்டு அந்நிலத்தை மறைத்துக் கிடந்த கடலைப் போக்குவானை (நான்முகனை) ஒததார் (கலி. 106:15-19). திருப்பரங் குனறத்தின மேல ஆடுவா ளொருத்தியைத் தன் கணவனுடனிருந்து கண்டு, இவளினும் எனக்கு அழகுண்டான வழி என் கணவன இவளை நோக்கான எனக் கருதிக் கண்ணாடியை நோககித தன் அணியிழையைத் திருத்துவாளொருத்தியின குறிப்பு உள்ளிட்ட பல மகளிர் நிலை ஓவியததின அழகுபோல தோனறும் (பரி. 21:20-29).

2. குறிப்புச்செய்கை. வில்லேர் வாழ்க்கையையுடைய சீறூர்த் தலைவன் மிகவும் வறியனாயினும வழங்க வேண்டிய காலத்துத் தன் மனையில இல்லாததைக் குறிப்பினால் - குறிப்புச் செய்கையினால் - அறிநது அதனைப் படைக்கவும் வல்லன் (புறம். 331:2-6). 'தலைவர் நம்மைப் பிரிந்து வெஞ்சுர நெறியில் திண்ணமாகச் செல்வர் எனபதை அவர்தம குறிப் பினாலே யான் கண்டேன' என்று தலைவி தோழியிடம் நொந்து கூறினாள் (நற். 177:3,4). பாலைப் பருகாமலும் நடவாமலும் படுக்காமலும் இருந்த தலைவியைக் கண்டு 'நின்னிடம் தோனறு கின்ற குறிப்பு மிகவும் பெரிதா யிருக்கின்றது' எனத் தோழி தலைவியின் நிலைகண் டுரைத்தாள் (நற். 297:1-6).

3. ஐம்பொறிகள் (ஆகுபெயர்). மகளைத் தேடிச்சென்ற செவிலி இடைச்சுரத்தே கண்ட முக்கோற் பகவரை யணுகி, குறிப்பு - ஐம்பொறிகள் - நுமக்கு ஏவல் செய்தலை இயல்பாகக் கொண்ட கோட்பாட்டையும் ஒழுக்கத்தை யுமுடைய அந்தணீர், என விளித்து அவரிடம் தன மகளையும் அவள் தலைவனையும் குறித்து வினவினாள் (கலி. 9:4-8).

**குறிபிழைத்தல்** - குறியிடம் தவறுதல். தலைவர் செய்த குறி பிழைத்தலால் - குறியிடம் தவறுதலால் - தலைவி மெய் வாடினாள் (நற். 11:2).

**குறியிருந்தோர்** – குறிப்பிற்கேற்ப உடனிருந்தோர். கோப்பெருஞ்சோழன் வடக்கிருக்கையில் அவனது குறியிருநதோர் - குறிப்பிற் கேற்ப உடனிருந்தோர் - பலர் (புறம். 219:4).

**குறியிறையார்** – புலவர். குறுகிய முன்கைகளை யுடைய பிள்ளைகளைக் 'குறியிறைப் புதல்வர்' எனக் குறித்த தொடரழகினால் இவர் இப்பெயர் பெற்றார். அதன்பின் இவரது இயற்பெயர் மறைந்தது போலும். இவர் பாடலொன்று குறுந்தொகையில் (394) அமைந்துள்ளது. யானைக்கன்று மலைப் பக்கத்து ஊரில் உள்ள குறமகள் பெற்ற குறியிறைப் புதல்வரோடு முன்னாளில் சுற்றித் திரிந்து இனிது பழகிப் பின்னாளில் அவருடைய தினைப் புனத்தை மேய்ந்தாற் போலத் தலைவனது நகை விளையாட்டு முன்னே உறவைத் தந்து பின்னே பகையாய் அமைந்தது என்று உவமை நயத்தோடு தோழி தலைவனை இயற்பழிக்கின்றாள். சொல் லழகும் பொருளழகும் அமைந்த அப்பாடலில், 'முழந்தாள் இரும்பிடிக் கயந்தலைக் குழவி' என்று யானைக் கன்றையும், 'நகை விளையாட்டு' என்று தலைவனது தொடர்பையும் இவர் குறிப்பிடும் பகுதிகள் நயமுடையனவாம்.

**குறியெதிர்ப்பை** – குறித்துமாறெதிர்ப்பை (அளவு குறித்து வாங்கி அவ்வளவே திருப்பிக் கொடுத்தற்குரிய கடன்) 'கும ணன் நல்கிய செல்வத்தை, முன்பு நம் சுற்றத்தினது மிக்க பசி நீங்க நினக்கு நெடுநாள் குறியெதிர்ப்பை – குறித்து மாறெதிர்ப்பை - தந்தோர்க்கும் மறறும் எலலோர்க்கும் வழங்குவாயாக' என்று பெருஞ்சித்திரனார் தம மனையோளிடம் கூறினார் (புறம். 163:3-9). 'களவு நீட்டிக்கும் நின்னை இடையீடின்றிக் கூடப்பெறாமையால் தலைவியின் மெய் முன்னமே துன்பங்கொண்ட மாமை யடைந்ததாகலின் இனி நின் மணமுரசின் ஒலி கேட்பதனால் அவளது உயிராகிய குறியெதிர்ப்பையை மீண்டும் பெறுவது அரிது' எனத் தோழி தலைவனை நெருங்கி வரைவு முடுக்கினாள் (நற்.93:8-12).

**குறுக்கைப் பறந்தலை** - குறுக்கையென்னும் ஊரிலமைந்த போர்க்களம். அன்னி குறுக்கைப் பறந்தலையில் - குறுக்கையென்னும் ஊரிலமைந்த போர்க்களத்தில்- பகைவனான திதியனது தொன்மை நிலையுடைய புன்னைமரத்தின் அடியைத் துணித்தபோது கூத்தர் பெரிதாக இன்னிசைப் புகழ் முழக்கம் செய்தனர் (அகம். 45:9-12). பெரும்புக ழமைந்த அன்னி குறுக்கைப் பறந்தலையில் பகைவனான திதியனது தொன்னிலைப் புன்னையின் அடியைத் துணித்தனன் (அகம். 145:10-13).

**குறுங்கீரனார்** - புலவர். கீரனார் என்பது இவர்தம் இயற்பெயர். குறுகிய உடம்பினர் என்னும் காரணம் பற்றிக் குறுமுனி குறுவழுதி, என்றாற் போல இவரும் குறுங்கீரனார் எனப் பெயர் பெற்றார் போலும். குறுந்தொகையில் 382 - ஆம் பாடலொன்றே இவருடையதாகக் காணப்படுகின்றது. பிரிந்த தலைவன் குறித்துச் சென்ற பருவ வரவின் கண் அவன் மீளாமையால் நெஞ்சு வேறுபட்ட தலைவியிடத்துத் தோழி இது பருவமன்றெனக் காட்டி வற்புறுத்தும் முறையில் அப்பாடலுள்ளது. தண்ணிய துளிகளை ஏற்றுக்கொண்ட பசுங்கொடி முல்லையின் அரும்புகள் மலர்ந்த மணம் புதரினிடத்தே பூக்கள் நிறைந்த செம் முல்லையோடு கலந்து தேன் மணக்கும் வண்ணம் நெருங்க மேகம் வம்பமாரியைப் பெய்கின்றது எனப் புனைவதும் இது வம்பமாரியல்லாமல் கார்ப்பருவ மாரியாயின் இப்பருவத்தே வருவதாகக் குறித்த காதலர் வாராரோ என வினவுவதும் தோழியின கற்பனை யாற்றலையும் சொல்வன்மையையும் புலப்படுத்தும்.

**குறுங்குடி மருதனார்** - புலவர். பாண்டி நாட்டிலுள்ள குறுங்குடியென்னும் ஊரினராகிய மருதனார் என்று இவரது பெயர்க்கு விளக்கம் காணலாம். இவர் பாடல்கள் அகநானூற்றில் (4) ஒன்றும் குறுந்தொகையில் (344) ஒன்றுமாக இரண்டுள்ளன. இரு பாடல்களிலும் இவர் முல்லைத்திணையையே சிறப்பித்துள்ளார். முல்லையின் கூர்நுனி யரும்புகள் தோன்றவும் இல்லமரத்தின் முகையொடு கொன்றை முகைகள் கட்டவிழ்ந்து மலரவும் இரலைமான்கள் பள்ளங்களி லெல்லாம் துள்ளிக்குதிக்கவும் காடுறை யுலகில் நீரற்ற வருத்தம் நீங்கவும் மின் முதலிய வற்றின் தொகுதியை யுடைய மேகம் மழைத்துளிகளைச் சிதறி அழகிய காட்டினைக் கார்ப்பருவம் செய்தது என்று முல்லைக்குரிய பெரும்பொழுதை இவர் அழகுறப் புனைவர் (அகம். 4). அண்ணல் ஏற்றொடு மேய்ந்திருந்த பசுமடியில் பால் நிறைந்த நிலையில் கன்றினை நினைந்து பால் சோர, மந்தையினின்று நீங்கிக் கன்றுள்ள ஊரினிடத்தே மீளு

-தினற துன்பம் மிக்க மாலைக்காலம் என்று அத்திணைக்குரிய சிறுபொழுதையும் இவர் புனைந்துள்ளார் (குறு. 344). 'பூத்த பொங்கர்த் துணையொடு வதிந்த, தாதுண் பறவை பேதுறல் அஞ்சி, மணிநா ஆர்த்த மாண்வினைத் தேரன்' (அகம். 4:10-12) என வினைமுற்றி மீளும் தலைவனை இவர் குறிப்பிடும் நயம் குறிக்கொண்டு உணரத்தகும். தோழி தலைவியைப் பருவங்காட்டி வற்புறுத்தியமை கூறும் இவர்தம் அகநானூற்றுப்பாடலை நோக்கென்னும் செயயுளுறுப்பிற்குச் சிறந்த காட்டாகக் கொண்டு விளக்குவர் பேராசிரியர் (தொல். செய்யுளியல்.104-உரை).

**குறுங்கோழியூர் கிழார் - புலவர்.** குறுங்கோழியூர் என்னும் ஊரினராகிய இவ்வேளாளப் புலவர் தம் ஊர்ப்பெயராலும் குடிப்பெயராலுமே அழைக்கப் படுமளவு சிறப்புப் பெற்றிருந்தமையால் இவரது இயற்பெயர் வழங்கப்படாதொழிந்தது போலும். சேரமான் யானைக்கட்சேய் மாந்தரஞ் சேரல் இரும்பொறையைப் பற்றிப்பாடிய புறநானூற்றுப் பாடல்கள் மூன்றே (17, 20, 22) இவருடையன. பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனால் சிறைப்பட் டிருந்த சேர மான தானே வலிதில் தப்பிப்போய் அரசு கட்டிலெய்திய ஆற்றலுக்குத் தான் அகப்படுத்தப்பட்ட குழியின் கரையைக் குத்தித் தூர்த்து அக்குழியினின்றும் தப்பிப்போய்த் தன்னினத்தொடு கூடிய யானையின் ஆற்றலை இவர் உவமை கூறியுள்ள நயம் உணர்ந் தின்புறத்தகும். சேரனுடைய முனனோரின் ஆட்சிச்சிறப்பையும் (17) அவனுடைய குடைநிழற் சிறப்பு காவற் சிறப்புக்களையும் (20,22) இவர் ஏற்றமிக எடுத்துப் பாராட்டியுள்ளார். 'சோறு படுக்கும் தீயோடு, செஞ்ஞாயிற்றுத் தெறலலலது, பிறிதுதெறல் அறியார்நின னிழலவாழ் வோரே, திருவி லல்லது கொலைவில லறியார், நாஞ்சி லல்லது படையும் அறியார்' (20) என்ற அடிகள் இவரது அருட்புலமையைப் புலபபடுத்தும். யானைக்கட் சேய மாந்தரஞ சேரல இருமபொறை எனனும் பெயரை 'வேழ நோககின விறல் வெஞ்சேய்' என்றும் 'மாநதரஞ்சேரலிரும்பொறை' எனறும தம் பாடலில (22) குறிப்பிட்டுள் ளார். அவனது கைவணமையை, 'நிற்பாடிய வயங்குசெந்நா, பின பிறர் இசை நுவலாமை, ஓம்பாது ஈயும் ஆற்றல எஙகோ' (22) எனறு சிறப்பிககும் அடிகள் நயஞ சானறவை.

**குறுநர் – பறிப்போர்.** 'பொய்கையிடத்தே குறுநர் - பறிப்போர் - இட்ட குவிதல் நெகிழநத பல பூக்களையும் நாட்காலத்தே சூடிப போமின்' எனப் பாணர் ஆற்றுப் படுத்தப் பெற்றனர் (பெரு. 294-296). பொய்கையினிடத்து ஆம்பலைக் குறுநர் புனல் வேட்கையை அடைந்தாற் போன்று தலைவன் தலைவியின் மார்பிடத்தே துயிலப் பெறறும் நடுங்கி வருத்தமுற்றான (குறு. 178:1-4). குவளை மலரைக் குறுநர் நீர் வேட்கையை அடைந்தாற் போலத் தலைவியின் தோள நாளும் தலைவனைத் தழுவவும் அவள் கைவளைகள் கழன்றன (நற. 332: 3-4).

**குறுநரி - நரிவகை.** சுடுகாட்டிடத்தே கூகையோடு கூடிப் பிணங்களைத் தின்னும் குறுநரிகள் நிணம் திகழும் பற்களையுடையனவாய்த் தின்று கொண டிருககப் பேய் மகளிர் பிணங்களைத் தழுவி நின்று ஆடுவர் (புறம். 359:2-8). ஆட்டிடையன மிக்க இருளில் குறுநரிகளை அலைத்தோட்டும் நீணட ஒலி, தினைப்புனங் காப்போர் பனறிப் பெரு நிரையை ஓட்டற்கு ஊதும் கொம்பொலியோடு ஒருசேர வநதொலிக்கும் (அகம். 94:4-11). துள்ளி விளையாடும் குட்டியினைக் கவரப் பார்த்திருக்கும் குறுநரி, ஆட்டிடையன் சீழ்க்கையொலியை அஞ்சிக் குறுந்தூறு இரிய ஓடும் (அகம். 274:8-11). நெறியின் கண் ஆறலைகள்வரால கொல்லப்பட்டுத் தழையால் மூடப்பெற்ற முடைநாற்றம் மிக்க பிணங் களைத் தினன வந்த பசிமிக்க குறுநரிகள் அந் நாற்றம் பொறாமையான் மீணடு செனறன (நற். 164:6-10). புலியைக் கொள்ளற்கு விரித்த வலையில ஏதில் குறுநரி பட்டது (கலி. 65:24,25).

**குறுநறுங்கண்ணி - குன்றிப்பூ.** தலைவியும் ஆயமும் பறித்துக் குவித்த மலாகளுள குறுநறுங்கண்ணியும் - குன்றிப்பூவும - ஒன்றாகும் (குறி. 72).

**குறுநிலமன்னர் - சிற்றரசர்.** மறம மிக்க சிறபபுடைய குறுநில மனனரும-சிற்றரசரும-பிறரும் கூடிய புகழமைந்த அவை தலையாலங்கானதது செருவெனற நெடுஞ்செழியனைப் புகழ்ந்தேத்தியது (மது.774-776)

**குறும்படை - கோட்டை.** குறும்படை - கோட்டை- மழவர் நெடுவேலையுடையவர் (அகம. 35:4).

**குறும்பர் - பகைவர்.** வள்ளுவன யானை மேலிருநது குறும்பர் - பகைவர் - பொருட்டு முழக்கும் பூக் கொள்ளுமாறு ஏவும் தண்ணுமையொலி, போாப் பறை கேட்ட துணையானே புறப்படாத நாண மில்லா மறவா விரைநது செனறு போர்பபூவைப பெறுமாறு ஒலிக்கும் (புறம். 293:1-3). குறும்பு - 3 காண்க.

**குறும்பரந்தூம்பு - குறுந்தூம்பு.** கூத்தர் இளியெனனும் நரம்பினது ஓசையை ஒலிக்கும் குறும்பரந்தூம்

போடு - குறுந்தூம்போடு (வங்கியம்) - ஏனைய இசைக் கருவிகளையும் சேர்த்துக் கட்டிய பையினை யுடையவர் (மலை. 7,13).

**குறும்பறை** - பேடை. 'அன்னச் சேவலே, நீ வடமலை ஏகுங்காலை இடையிலுள்ள சோழ நன்னாட்டுப் படின், உறையூரிலுள்ள உயர்நிலை மாடத்தின் கண் நின குறும் பறையோடு - பேடையோடு - தங்கிக் கோப்பெருஞ்சோழனின கோயில் புக்கு அவன் கேட்க இரும்பிசிர் ஆந்தை அடியுறை எனின் நின் பேடையணிய நன்கலம் நல்குவன்' எனப் பிசிராந்தையார் அன்னச் சேவலை நோக்கிக் கூறினார் (புறம். 67:7-14).

**குறும்பி** - புற்றாஞ்சோறு. சுரடியேற்றை ஈயல்களை யுடைய புற்றின் குளிர்ந்த மேற்புறத்தே தங்கிய குறும்பியை - புற்றாஞ் சோற்றை - இரையாக உண்ணும் (குறும்பி, வே. வி. பாடம். பிறர் குரும்பி எனக் கொள்வர்) (அகம். 8:1,2). குரும்பி காண்க.

**குறும்பிடி** - உடைவாள். கள்வர் துடை தெரியாமற் கிடக்கும்படி அழுத்தின கூரிய முனையினையுடைய குறும்பிடியினை - உடைவாளினை - உடையவர் (மது. 637,642).

**குறும்பியன்** - அரணுடையவன் (திதியன்). தன் தந்தையின் கண்களைப் பயற்றங் கொல்லையைப் பசு மேய்ந்ததற்காகப் பிடுங்கிய கோசரை அன்னி மிஞிலி சினந்து, வீரம் பொருந்திய படையினைக் கொண்ட வெற்றி பொருந்திய குறும்பியன் - அரணுடையவன - ஆகிய போர்த்திறம் வாய்ந்த நல்ல குதிரைகளை யுடைய திதியனிடம் கூறி அககோசரது இனனுயிர்களை அவன் போக்கக் கண்டு சினம் ஒழிந்தாள் (அகம். 262:5-13).

**குறும்பு** - அரண். கானப்பேர் என்னும் எயில் அணைதற்கரிய குறும்புகளால் - அரண்களால் - சூழப்பெற்றது (புறம. 21:8). கணைய மரத்தால் தடுக்கப்பட்ட கதவைப் பொருது களிறுகள் நிறையப் பெற்ற பகைவர் குறும்பினை அழித்தலால் அதியமானுடைய களிறுகளின கிம்புரிகள் கழன்றன (புறம். 97:8-10). திங்களாலும் நுழையப்படாத பொறிகளைப் பொருந்திய அருகருகே யிருந்த குறிய பலவாகிய குறும்பின்கண்ணிருந்து கள்ளை ஒருவர்கொருவர் மாறு மாறாக நீட்டச் செங்கண் ஆடவர் அதனைப் பெற்றுணடனர் (புறம். 177: 5-8). பண்ணனின் வலாஅர் என்னும் ஊர், பெரிய குறும்பு சூழந்த வன்புல இருக்கையை உடையது (புறம். 181:4-6). குறும்பினை யடுதத ஆழ்ந்த அகழியையும் நீண்ட மதிலினையும் உடைய ஓய்மான வில்லியாதனின் ஊரில் மனைக்கண் எழும் நறும்புகை மழைமுகில் படிந்து மறைப்பது போலத் தெருவெல்லாம் ஒருங்கு மறைக்கும் (புறம். 379:16-18). முல்லைக்காடு புல்மேயும் பலவாய ஆனிரைகளுடன் வில்வீரர் காவலிருந்த வெவ்விய குறும்பினையுடையது (புறம். 388:12,13). வில்லைச் சார்த்தி வைத்த கணை தங்கும் அகற்சியையுடைய வீடுகளையும் ஊகம் புல்லால் வேயப்பட்ட உயர்நிலை மதிலையும் அம்புக்கட்டுகளுடன் துடி தூங்கும் பந்தரினையும் நாய்கள் கட்டப்பட்ட கிட்டுதற்கரிய வீடுகளையும் உயிர்வாழ் முள்வேலியையும் அதனைச் சூழ்ந்த காவற் காட்டினையுடைய பக்கத்தினையும் கணையமரம் தழுவிய கதவையும் செவ்விதின் நிற்கின்ற நெடுமுனையுடைய வலிய கழுக்களை நிரைத்த வாசலினையும் உடைய எயினரது குறும்பில் தங்கின், நெல்லினது சோற்றை உடும்புப் பொரியலோடு பெறுகுவீர் எனப் பாணர் ஆற்றுப்படுத்தப்பட்டனர் (பெரு. 121-133). அழித்தற்கரிய குறும்புகளை யழித்ததனால் கானவர் மகிழ்ந்து ஆரவாரித்தனர் (மலை. 318). மறவரது கற்கள் பொருந்திய குறும்புகளில் எழுந்த தண்ணுமைப் பறையொலி அருஞ்சுரம் செல்வோர் நெஞ்சு நடுங்குமாறு ஒலிக்கும் (அகம். 87:7-10). மறவர் கழுதை நிரைகளைப் பின்பற்றி வரும் வீரராய வணிகர்களைக் கொன்று, தலையைத் துணித்த போர்க்களத்தில் துடிகொட்டித் திறையாகப் பெற்ற அருங்கலன்களை விற்கள் பொருந்திய குறும்பிலே உள்ளார்க்குக் கொள்முறையின் பகுப்பர் (அகம். 89:10-16). பாணன் எனபான் பகைவர் ஆவினைக் காத்து உறையும் உணவு மிக்க குறும்புகளிற் சென்று விடைகளுடன் கூடிய பகைப் புலத்து ஆக்களைக் கைப்பற்றினான் (அகம். 113:12-17). காக்கையினம் ஆலங்கிளையிலேறி, எயினர் குறும்பினின்றும் ஊக்கத்துடன் எழும் மறவர் வில்லால் இறந்துபட்டோருடைய பிணங்களைக் கவர்ந்துண்ணும் (அகம். 319:1-5). வல்லம் விற்படை நெருங்கிய குறும்பினையுடையது (அகம். 336:21). தென்னன் பகைவரது அரிய குறும்புகளை அழிதத ஆற்றலுடன் பல போரையும் வென்ற தடக்கையினன (அகம். 342:8-10). பாணர் உலைந்த சுற்றத்தோடு செல்லின் நன்னன் உரன்மலி உள்ளமொடு மாற்றார் போர் முனை பாழ்பட, அவர் அரிய குறும்பைத் தொலைத்துக் கொண்ட பெருங்கலனகளை அவர்க்கு அளிப்பான் (அகம். 349:5-8). தலைவன் யானை மீதேறிப் பெருந்துடி ஒலிக்க வேற்று நாட்டிற் புகுந்து பகைவரது கடத்தற்கரிய குறும்பினை யழித்து அயாவுயிர்ததான் (நற். 77:1-3).

2. சிற்றூர். கற்களையுடைய குறும்பில் - சிற்றூரில் - உள்ள மறவர் அம்பெய்தலால் குருதி ஒழுகக் கிடந்தவரது கண்களைக் கழுகு தன் பார்ப்புக் களுக்குக் கவர்ந்து சென்று கொடுக்கும் (அகம். 31: 6-11). வில்லினையுடைய கானவரது குறும்பில் கடுந்துடியின் ஒலியெழும் (அகம். 261:14,15). குறும் பிடத்தே பரந்திருக்கின்ற ஆட்டிடையர்க்கும் பசு விடையர்க்குமாகக் கோவினத்தார் கொல்லேறு கோடலே பொருள் என ஏறுகளைத் தொழுவிலே புகவிட்டனர் (கலி. 107:1-4).

3. குறும்பர் (பகைவர்; ஆகுபெயர்). அதியமான் நெடுமானஞ்சியின் வேல்கள் குறும்பு - குறும்பர் - சேர்ந்த அரண்களை வென்று அவர் நாட்டை யழித்தலாற் சுரையோடு பொருந்திய காம்புடன் ஆணி கலங்கி நிலைகெட்டன (புறம். 97:4-7). கொலைவில் ஆடவர் இரவில் குறும்பு அவற அவரைக் கொன்று தாம் கொண்ட நிரைகளைப் பகுத்துக் கொள்வர் (அகம். 97: 4-6). குறும்பர் காண்க.

4. வலிமை. பாம்பினது குறும்பை - வலிமையை - அழித்த சிறு கண்ணினையுடைய கீரி நன்னனுக்குத் திறைப்பொருளாக அளிக்கப்பெற்றது (மலை. 504).

குறும்பூர் - ஓரூர். விச்சியர் பெருமகன் பகைவேந்த ரொடு பொருத காலத்தில் பாணரது புலிநோக் கினை யொத்த பார்வையின் நிலைமையினைக் கண்ட ஆரவாரம் மிக்க குறும்பூரிலுள்ளோர் முழக்கம் செய்தனர் (குறும்பர் வாழுமூர் குறும்பூர் என்பர் பெருமழைப் புலவர்) (குறு.328:5-8).

குறும்பூழ் - காடை. யானை வேட்டைக்குப் போவோன் யானையையும் எளிதாகப் பெறுவான்; குறும்பூழ் - காடை - வேட்டைக்குச் செல்வோன் வறுங்கைய னாகி வருதலுமுண்டு (புறம். 214:4,5). வயலிலுள்ள பயிர்களை அறுக்கும் பருவம் வருங் காலத்தே அங்குத் தங்கியிருக்கும குறுங்காலினையும் கருமை யையுடைய கழுத்தினையும் உடைய குறும்பூழ் தன் வண்ணக் கடம்பின் நறுமலரன்ன இளம்பிள்ளை களைக் கூட்டிக்கொண்டு உழவர் ஆரவாரத்தை யஞ்சிக் காட்டிற் சென்று தங்கும் (பெரு. 202-205). 'தலைவன வரைவுக்குரிய முயற்சிகளை மேற் கொண்டமையை அறிவித்த குற்றேவல் மகன, நெய் மிக ஊறிய குறும்பூழ்க் குழம்போடு கூடிய கறியாக உணவைப் பெறுவானாக' எனத் தோழி தலைவிக்குக் கூறினாள் (குறு. 389). பரத்தைமை யொழுக்கம் பூண்டு வந்ததனால் சினந்த தலைவி யிடம் தலைவன், 'யாம் புதிதாக வந்து பொருந் தின குறும்பூழ்ப்போர் கண்டதல்லது நீ தீங்காகக் கருதும் ஒழுக்கம் சிறிதும் யாமறிந்தோமில்லை' என்று கூறத் தலைவியும் 'நீ குறும்பூழ்ப் போரைக் கண்டபடியை யான் கேட்டேன்' என மேலும் ஊடிச் சினந்தாள் (கலி. 95:6-8).

குறும்பொறி - 1. கச்சை. வேலன் இடையிலே இறுகக் கட்டிய குறும்பொறியின் - கச்சையின - மேலே நிலந்தோயுமாறு பொருந்திக் குளிர்ந்த மென்மையை உடைத்தாகிய துகிலினை யுடுத்தினான் (முரு. 213, 214).

2. குறும்புள்ளி. குறும்பொறி - குறும்புள்ளி - அமைந்த இளைய அழகிய நிறத்தையுடையது கருங் கண் வெம்முலை (நற். 314:5,6). தலைவன் தன மார்பில் குறும்பொறிகளாகப் பூசிய சாந்தத்தினும் நறுந்தண்ணியன் (நற். 394:7-9).

குறும்பொறை - 1. சிறுமலை. பெருமலையிடத்தும் குறும்பொறையிடத்தும் - சிறுமலையிடத்தும்-தேடி மாசற்ற அறிவினையுடையோர் கொண்ட பைம் பொறிகளைக் கொண்ட ஆண்மானின தோலிற் பதித்துச் செய்த திருமணியைச் சேரன்தேவி அணிந் திருந்தாள் (பதி. 74:7-16). நறும்பூக்கள் நெருங்கின சுரபுன்னையையும் குறும்பொறைகளையு முடைய நன்னாடுகளை ஓரி கூத்தர்க்குக் கொடுத்தான் (சிறு. 107-111). தலைவன குறும்பொறை நாடன் என்று குறிக்கப் பெறுதல் (அகம். 4:13). ஆனினங் களை முல்லை நிலத்தில் மேயவிட்ட கோவலர் குறும்பொறைகளிடத்தே நறும்பூக்களை மாலை யாகக் கட்டி மகிழவர் (அகம். 14:7,8). பைம்புதல் களை யுடைய முல்லை நிலத்தே வெண்மேகம் தவழும் கொல்லைகளை யுடைய குறும்பொறைப் பக்கலில், காயாவின் வாடற் பூக்களோடு இலவ மலர் கலந்து கான்யாறு ஓடிவரும் (அகம்.133:5-10). கழுகு, குறும்பொறையிடத்தே வளர்ந்த யாமரத் தின் கிளைகளிலுள்ள தன் குஞ்சுகளுக்கு ஊனினை ஊட்டும் (அகம்.193:6-8). அஞ்சாமையுடைய கரந்தை மறவரது புகழ் நிலைக்குமாறு, பிடியானைகள் கிடந்தாற் போன்ற குறும்பொறையின பக்கத்தே நடுகல் நிறுவி மண்ணி மஞ்சள் பூசிக கரந்தைக் கண்ணி சூட்டி வழிபடுவர் (அகம். 269:5-13). புறாச் சேவல தன் பெடையோடு சேயமையாய இடத் திற்குச் சென்று பரற்கற்களை உண்டு மரற்செடி வாடியுள்ள மழை பொய்த்த அகன்ற இடத்தை யுடைய குறும்பொறை பக்கலில் உள்ள சுரததினைக் கடந்து நெல்லிக்கிளையில் அமர்ந்து ஒலிக்கும் (அகம். 271:1-8). உப்பு வணிகரது கூட்டமாகச் செல்லும் (கழுதை) நிரை போன்ற குறுமபொறை களின வழியே தூது செல்லும் பார்ப்பானின் மடி

யிலுள்ள வெள்ளோலை பொன்னாதலும் கூடு மென்று கருதி அவனை ஆறலைக் கள்வர் கொன்று வீழ்த்தினர் (அகம். 337: 5-11). குறும் பொறையின் பக்கததிலுள்ள வேங்கை மரக் கிளையின் பூங்கொத்து மயிலின் உச்சியிலுள்ள குடுமி போலத் தோனறும் (அகம். 368:5-7). குறும் பொறையி னிடத்தே வளர்ந்த வேங்கையின் கிளைகள் பூக்களை உதிர்த்துப் புலம்பத் தாக்கிக் கற்களை அலைதது அருவி ஒலித்து வீழும் (குறு. 134: 3-5). குறும் பொறையின் பககத்தே களிற்று யானைகள் தம் பிடிகளைத் தழுவிப் புலியினது தாக்குதலினின்று அவற்றைக் காக்கும் (குறு. 215: 4-6). குறும்பொறையின் அயலதாகிய வேங்கை மரத்தின் பூந்தாது உதிர்ந்தாற் போன்ற நுண்பல் தித்தியுடையவள் மாயோள் (நற். 157:8-10). தலை வன் குறும்பொறை நாட்டினன் (ஐங். 183:3).

2. காடு. 'அழகிய குருந்து மலர்கின்ற குறும்பொறை யினை - காட்டினை - நெருங்கவே ஆரவாரத்தை யுடைய நம்மூரின் மரங்கள் தோன்றும்; எனவே நம் தேரை விரைந்து செலுத்துவாயாக' எனறு தலைவன் தேர்ப்பாகனிடம் கூறினான் (நற். 321: 8-10).

3. ஒருமலையின் பெயர். வானிடத்தே இடியொலிக் கும் நெடிய உச்சியை யுடையதும் நறும்பூக்களை யுடைய சாரல்களையுடையதுமான குறும்பொறை என்னும் மலைக்குக் கிழககின் கண்ணது ஆமூர் (அகம். 159:13-19).

**குறுமக்கள்** – சிறுவர். பனைக் குரும்பையைக் கொடி யாற் கட்டிப் பின்னிய பினனலை இழுத்து அத னால் தளரும குறுமக்களுக்கு - சிறுவருககு - நடுவே புதல்வன் பெருமணியினை யுடைய திண்டேரி லிருந்து தன் மனையை நோக்கி மீண்டான் (கலி. 83:8-11).

**குறுமக** – சிறுவன். மலைநாடனாகிய தலைவன் ஊர்ந்த குதிரை பார்ப்பனக் குறுமக - சிறுவன் - போலக் குடுமியைத் தலையிலுடையது (ஐங். 202: 2-4).

**குறுமாக்கள்** - சிறுவர். ஊரிலுள்ள குறுமாக்கள் - சிறு வர் - வெண்கோட்டைக் கழுவுதலின நீர்த்துறை யில் படியும் பெருங்களிறு அச்சிறுவர்க்கு எவ்வாறு இனியதோ, அவ்வாறே அதியமான் இரவலர்க்கு இனியன் (புறம். 94:1-3). ஊரிலுளள குறுமாக்கள் ஆடக் கலங்குகின்ற காலளவான நீருள்ளே முதலை யானையைக் கொனறு வீழ்க்கும் (புறம். 104:2-4). பெருஞ்சித்திரனாரின் மனைவி வறுமையால் வருந் திப் பசந்த மேனியுடன் குறுமாக்கள் பிசைந் துண்ணுதலால் வாடிய முலையினள் (புறம். 159: 6-8). இளம்பெண்டிர் தம் கணவரோடு, செந் தாமரைப் பூவைப் பிடித்தாற் போல் திண்கதிர் மதாணியணிநத ஒண் குறுமாக்களை அழைத்துச் சென்று பௌத்தப் பள்ளியை வழிபட்டனர் (மது. 461-467). ஊர்க்குறுமாக்கள் காரெருமையினபாலை நிரம்பக் கறக்க, அவற்றின் கன்றுகளைத் தொழு வத்தே நிறுத்திவிட்டு அவ்வெருமைகளின் மீதேறிச் சென்று விடியலில் மேய்த்து வருவர் (நற். 80:1-3). கழைக் கூத்தி நடந்த கயிற்றினைக் குரங்குக்குட்டி பற்றித் தொங்கிட, குறக் குறுமாக்கள் பெரும் பாறையிலுள்ள மூங்கிலின் மேல் விசைத்தெழுந்து ஏறிநின்று தாளங்கொட்டுவர் (நற். 95:2-6). மலை யிடத்தே புலியேறு களிற்றோடு போர் செய்கையி னாலே உண்டான துனபத்திற்கு அஞ்சாத குறக் குறுமாக்கள் அங்குள்ள பெரும்பாறையின் உச்சி யில் மனச் செருக்கோடு ஏறிநின்று அடித்த தொண் டகப்பறையின் ஒலி தினைக்கதிர்களைக் கொய்ய வந்த கிளிகளை அச்சுறுத்தி ஓட்டும (நற். 104:1-6). வேங்கைக் கிளையில் தொடுதத தேனடையினின்று தேனீக்கள் மொய்த்தலாலே கசிநது கற்குழியிலே விழுந்த தேனில் குறக்குறுமாக்கள் வழித்துண்டெஞ் சியதை மநதியின் குட்டி உண்ணும் (நற். 168:1-5). பனை மடலாற் செய்த குதிரைமீது தலைவன ஏறி யிருப்ப அக்குதிரையைத் தெருவில் ஈர்த்துத் திரி யும் சிறுகுறுமாக்கள் சானறோராவர் (நற். 220:1-4). பரத்தை மடப்பத்தையுடைய குறுமாக்களோடு (குறுமகளிர்) ஓரைப் பாவை கொண்டு விளையாடி னாள் (கலி. 82:9).

**குறுமொழி** - தாழ்வுச்சொல். 'தலைவனுக்கு மகட் கொடை எதிர்ந்த விறலியே, மெய்ம்மையே கல் லாத நின் நாவினால் நிலை குலைந்த குறுமொ ழிக்கு - தாழ்வுச் சொல்லுக்கு – உடன்பட்ட பரத் தையரின் தாயரோடு உடன் எயதிப் பொய்ச் சொற்களைச் சொல்லுகின்றிலையோ' எனத் தோழி வாயிற்புக்க விறலியை வினவினாள் (நற். 310:5-11).

**குறை** - 1. துண்டு. பருத்தி நூற்கும் பெண்டிரது பஞ்சு போன்ற நெருப்பின வெம்மை நீங்கிய நிணம்பொருந்திய கொழுவிய குறைகளை - துண்டு களை - கள் வார்த்த மண்டையோடு இரவலர் முறைமுறையாக உண்டனர் (புறம். 125:1-4). கண் டீரக்கோப் பெருநள்ளி நெய்யிழுது போன்ற வெள் ளிய நிணத்தையுடைய கொழுவிய குறைகளைச்

சுட்டு 'நின் பெருஞ்சுற்றத்தோடு உண்க' என்று வணபரணர்க்குத் தந்தான் (புறம்.150:9-13). பாணர் வெந்து வாடிய கொழுவிய குறைகளையும் அரிசியோடு நெய் கலந்து சமைத்த வெண்சோற்றையும் பசிதீர உண்டனர் (புறம்.328:9-12). பாணர் ஆட்டுக்கிடாயின் ஊனைத் தீயிட்டுச் சுட்டுக் காயம் பெய்தட்ட இடமகன்ற கொழுவிய குறையைக் கள்ளுண்ணும் செவ்வாயிலிட்டு நாக்கு இருபுறமும் புரட்டிக் கொடுப்ப உண்டும் தின்றும் இரப்போர்க்கு ஈந்தும் மகிழ்வர் (புறம். 364:4-8). ஆய் அண்டிரன் முள்ளம்பன்றியின் கொழுவிய குறையும் சந்தனக் கட்டையும் யானைக்கோடும் ஆகிய மூன்றினையும் புலித்தோலின் மேல் குவித்து விருந்திறையாகக் கொடுக்கும் நாட்டினர்க்குத் தலைவன் (புறம். 374:11-15). கோட்டுமீனினது கொழுங்குறை வரால்மீனோடு சேர்த்துச் சமைக்கப் பெற்றது (புறம். 399:5). இரவலர் சுற்றம் அரிவாளால் பிளந்து அறுத்த வெள்ளிய நிணத்தோடு சேர்ந்த கொழுங்குறையாகிய ஆட்டிறைச்சியைப் பெய்த வெண்சோற்றைக் கட்டேறலோடு மாந்தியது (பதி. 12: 14-18). வருநர் ஆரவேண்டியும் விருந்தினர் உண்ண வேண்டியும் ஆட்டு வணிகர் ஊனை வெட்டும் மணைமேல் வைத்துக் கொத்தித் துண்டித்த கொழுங்குறை தாளிதம் செய்யுந் தோறும் ஆனாது ஆர்க்கும் (பதி. 21; 8-11). பொருநர் இரும்புக் கம்பியிடத்தே கொழுத்த இறைச்சியைக் கோத்துச் சுட்ட கொழுங் குறைகளின வெம்மையை வாயிடத்தே இடமாகவும் வலமாகவும் சேர்த்து ஆற்றி உண்டனர் (பொரு. 105, 106). கரும்போடு அவலைக் கூறுபடுத்தி விற்போர் மானினது தசைக் குறையோடு மதுவையும் மாறுகொள்வர் (பொரு. 216, 217). பாணர் வல்லோன் அட்ட இறைச்சியின் கொழுங்குறைகளும் செந்நெல் அரிசிப் புழுக்கலும் பிறவும உண்டனர் (பெரு.472-474). தென்றிசைக்கண் வாழும் பரதவர் கொழுத்த ஊன்குறையினையுடைய சோற்றினை உண்பர் (மது. 141). கூத்தர் மலையைச் சேர்ந்த சிற்றூரை யணுகி 'யாம் நன்னனுடைய கூத்தரேம்' என்று கூறுவாராயின் நெய்யிடத்தே பருத்த தசைக்குறை கிடந்து வெந்த பொரியலோடு தினைச் சோற்றையும் பெறுவர் (மலை. 162-169). கூத்தர் உடும்பின் தடிகளோடு கடமானின் கொழுங்குறையையும் பன்றித் தசையையும் கலந்துண்பர் (மலை. 175-177). கூத்தர் வாளைமீனோடு தூண்டிலிற் பட்ட பிடியின் கையை யொத்த சிவந்த கண்ணையுடைய வராலினது துடியின் கண்ணை யொத்த குறையைக் களங்கள் தோறும் பெற்றுண்பர் (மலை. 456-464). பாண்மகளிர் தம் கொழுநர், நாட்காலை வேட்டத்துத் துறைக்கண் அகப்பட்ட வரால்மீனின் துடியின் கண்போன்ற கொழுங்குறையை விற்றுக் கள்ளினை உண்டு ஆடுவர் (அகம். 196: 2,3). வெண்ணெல் அரியுநர் மடுவிற் கவர்ந்த பெருமீனின வரிகள் பொருந்திய நிறத்தினை யுடைய கொழுங்குறையை உண்பர் (அகம். 236:3-4). உறந்தையிலுள்ளோர் செந்தீயிற் சுட்ட செழுநிணக் கொழுங்குறையைத் தினைச்சோறு சொரிந்த கலத்தோடு கரும்பின தீஞ்சாறு அட்ட பாகுடன் பாலினைப் பெய்து அளைந்த செநநெல் அவலைப் பாணர்க்குப் பகுத்துக் கொடுப்பர் (அகம். 237:9-14). பக்கமலையின்கண் புலிகள் பனறியின் குறையை ஆர்ந்து முழங்கும் (அகம். 322: 10, 11). கானவன் கொணர்நத முட்பனறியின் கொழுங்குறையைக் கொடிச்சி சிறுகுடியிலுள்ளார் பலர்க்கும் பகுத்துக் கொடுத்தாள் (நற். 85:8-10).

2. குறைவு. வியனகர் தைத்திங்கள் காலத்துக் குளிர்ந்த பொய்கை போலக் கொள்ளக் கொள்ளக் குறைபடாத சோற்றை உடையது (புறம. 70.6,7). முகில் நீண்டொலிககினற பரப்பினையுடைய கடல குறைபடுமாறு நீரை முகக்கும் (புறம். 161:1,2). கள்ளைக் குறைபடாது ஓம்புக எனப் பாணன் கூறினான் (புறம். 172:2). தமக்கு இயலாததனை இயலுமென்றலும் இயலுவதனை இல்லை யெனறலுமாகிய இரண்டும் ஈவோர் புகழைக் குறை செய்யும் (புறம். 196: 4 - 7). பகைவர் ஆடுகோட்பாட்டுச் சேரலாதனின் வலிமை அறியாது எதிர்த்துத் தம் வலிமை குறையுற்றுப் பணிநது திறை தந்தனர் (பதி. 59.11,12). இளஞ்சேரலிரும்பொறை இரவலர் கொளககொளக் குறைபடாத செல்வத்தை யுடைமையின் கடலை ஒததான (பதி. 90:16). குளம் கோடை நீட்டித்து நின்றதாயினும் குறை படுதலை யறியாதது (பெரு. 272, 273). நிறைந்த கருங்கடல் குறைபட மேகம நீரை முகந்தது (குறி. 47,50). சுஙகங் கொள்வோர் கதிரவன தேரைப் பூண்ட குதிரைகள் போல நாள்தோறும் மடிந்திராது குறை படாமற் சுங்கம் கொள்வர் (பட். 121-125). வணிகர் தாம் கொள்வதும் மிகை கொளாது கொடுப்பதும் குறை கொடாது பண்டஙகளை விற்கும இயல்பினர் (பட். 210-212). கரும்பு பாத்தியிற் குறைபடாமல் வளர்ந்தோங்கியது (மலை. 118,119). கடல் கொள்ளக் கொள்ளக் குறை படாதது (அகம். 162:1,3). கூவலில் குறைக் குடமாக முகக்கப்பட்ட நீர் உவர்ப்பு வாய்ந்தது (அகம். 207:11). தலைவனது வினை நிறைவேறாமல் குறை உண்டாகியதனால் தோன்றும் வருத்தம் நீங்கும்படி நம் மறையைத் தாய்க்குத் தெரிவிப்பின்

குற்றம் உளதாகுமோ எனத் தோழி தலைவியை வினவினாள் (குறு. 333: 4-6). குறவர் வெட்டி அழித்தலான் நறைக்கொடி குறை பட்டது (நற். 5:3). வானத்திலுள்ள திங்களை அரவு விழுங்கிய தால் அது குறைபட்டது (நற். 377: 6,7). 'நின் தோழி செய்த வருத்தம் களையாயோ என்னும் நின் சொற்கள் எம்மால் நிறைவு செய்யவியலாத குறை உடையனவாகும்' என்று தோழி தலைவனிடம் கூறினாள் (நற். இ. 1:3-6). இத்துணைக் காலம் இருவென விதித்த காலம் குறைபடுதற்குக் காரணமான வாழ்நாட்களும் தலைவியுடன் நிலையுமோ எனப் பிரியக் கருதிய தலைவனைத் தோழி வினவினாள் (கலி. 16: 12). ஈதலில் குறையில்லாது கொடுத்து அறனறிந்து ஒழுகிய தீமையில்லாதவன் செல்வம் போலக் கரைதோறும் மரங்கள் தழைத்தன (கலி. 27:1,2). நம் தந்தையின் உள்ளம் குறைபடாதபடி வேண்டுவன நல்கித் தான் குறித்ததைக் கைக்கொள்ளாது போகாக் குணத்தை உடையவன் எனத் தலைவனது குணத்தைப் பற்றித் தோழி கூறினாள் (கலி. 61:26-28). வையை நீர் வற்றிய காலத்திலும் எட்டாம் நாள் மதிபோல ஒரு பகுதி குன்றுவதல்லாது இருண்மதி (அமாவாசை) போல முற்றும் குறைபடுதலைக் காண்பாரில்லை (பரி. 11: 36-38). கடல் குறைபடுமாறு நீரை முகந்த மேகம் மலை குறைபட எறிந்து உருமேற்றினம் ஆர்ப்ப மழை பெய்தது (பரி. 20:1-3).

3. இன்றியமையாத செயல். மலர்தார் அணிந்த தலைவன் பலர்க்கும் குறைகளை - இன்றியமையாத செயல்களை - செய்துதவியவன் (புறம். 311:4). பொருநன் குறையுடைய வேறு எச்செயலையும் செய்ய விரும்பாது பொருள் நசையே கொண்ட இருக்கையினையுடையவன் (புறம். 371:8). தொண்டைமான் இளந்திரையன் முறைவேண்டுவோர்க்கும் குறைவேண்டுவோர்க்கும் அவரவர் விரும்புவனவற்றை அருளினான் (பெரு. 443,444). 'தலைவன் வருந்தி என்னால் அடையலாகும் குறைக்கு என்னை இரந்து பின்னிற்றற்கு முயன்றான்' எனத் தோழி தலைவியிடம் கூறினாள (அகம். 32:19,20). எமர் குறையிரந்து வேண்ட நீ இன்பமுறத் தங்கிச் செல்லின் நாங்கள் விருந்தயர்தல் இயலும் என்று தோழி தலைவனிடம் கூறினாள் (அகம். 300:19-21). 'அழகு பொருந்திய குளிர்ந்த கண்களையுடைய தலைவியின குறையாக இன்றிரவு இவ்வூரில் தங்கிச் செல்வாயாக' எனத் தோழி தலைவனை வேண்டினாள் (அகம். 350:8,9). தலைவன் குறை வினையைச் செய்து முடித்தமையான உண்டான நிறைவுடன் கூடிய இனிய செலவினை மேற்கொண்டான (அகம். 351:4 இளம்பெருஞ்சென்னி தனது குடிக்கு ஆற்றும் கடனாகலின் குறைவினையை முடித்தற்குப் பாழியென்னும் அரணை யழித்தான் (அகம். 375:11-13). 'இடிக்குங் கேளிரே, நும் குறையாகக் காம நோயை நிறுத்தலைச் செய்தால் மிகவும் நன்றாகும்' எனத் தலைவன் பாங்களை நோக்கிக் கூறினான் (குறு. 58:1,2). 'செவ்வாய்ப் பைங்கிளியே, உனக்கு வேண்டிய கதிராகிய உணவைக் கொண்டு நின் குறையை முடித்த பின்பு என் மனக்குறையைச் செய்து முடித்தல் வேண்டும்' எனத் தலைவனிடம் தூது விடும் தலைவி கிளியை விளித்துக் கூறினாள் (நற். 102:1-4). தலைவன் இரந்து தன் குறையுறாது செல்லின் நம் இன்னுயிர் என்னாவதுகொல் எனத் தோழி தலைவியை வினவினாள் (ஐங். 228:2-4). கோவினத்தார் ஆட்டிடையர்க்கும் பசுவிடையர்க்குமாகக் கொல்லேறு தழுவுதலே குறையென்று தொழுவிலே ஏறுகளைப் புகுதவிட்டனர் (கலி. 107: 1-4). யாற்றிடைக் குறையில் தாம் விழைவார் ஆகம் தழுவுபவர் தழுவுதலைச் செய்யாது யாமத்தில் ஊடற் குறையாகிய கலவி நசையைத் தரும் தேனை நுகர்ந்தனர் (பரி. 10:31,32).

4. மனக்குறை. இளையோளின் தந்தையிடம் வேந்தன் தானே வந்து குறையுற்று நின்று மகட்பெற வேண்டினும் அவன் கொடாத தன்மையன் (புறம். 341:1,3). கருங்கால் வெண்குருகினை விளித்து, 'என் குறை இத்தன்மையது என்று நின்கடற்றுறைச் சேர்ப்பனிடம் சென்று அவன் உணருமாறு உரைப்பாயாக' எனத் தலைவி அதனைத் தூது விடுத்தாள் (நற். 54:4-11). பைங்கிளியே, உனக்கு வேண்டிய கதிராகிய உணவினை உண்டு உன் தேவையை முடித்த பின்பு கானக் குறவர் மடமகள் ஏனல் காவல் ஆயினள் என்று கூறி என் குறையைச் செய்து முடிப்பாயாக' எனத் தலைவி கிளியிடம் தொழுது வேண்டினாள் (நற். 102:1-4). 'நின் தோழி செய்தஆருயிர் வருத்தத்தைக் களையாயோ' எனத் தலைவன தன் குறையைத் தோழியிடம் கூறினான் (நற். இ. 1:3-5). கடுவன் சுற்றத்திடத்தே சென்று மந்தியைத் தனக்குத் தரவேண்டித் தன் குறையைக் கூறும் (கலி. 40:15,16). வைகறைப் பொழுதில் வந்து நின் குறையை எமரிடம் கூறி வதுவை அயர்தல் வேண்டும் எனத் தோழி தலைவனிடம் கூறினான் (கலி. 52: 22,23). தலைவன் தன்னெஞ்சை அகப்படுத்திக் கொண்டு பின கைவிட்டவளைத் தன் குறையைக் கூறி அழைத்துக் கொள்ள நின்றான் (கலி. 69:8, 9). நின் தீமையைப் பொறுத்தல் ஆற்றேம் 'எனக் கூற வியலாத நெஞ்சினையுடைய என்னிடம், 'நீ என்னை ஏற்றுக்கொள் என்று

குறை கூறி நிற்காதே' எனத் தலைவி தலைவனிடம் கூறினாள் (கலி. 90:27-29).

5. என்பு. கொல்லேறுகள் அறுத்துச் செறுத்துப் பொருதிட ஏறுதழுவுவோரும் மேலும் மேலும் வந்து தழுவுதலினால் அவர் தம் குறை - என்பு - முறிந்து முறிந்து தசைகளற்றுக் களங்களில் பரவிக் கிடந்தன (கலி. 104:51-53).

6. ஒரு தாக்குடையது (ஆளத்தியின் பாகுபாடு). பாடினி பாடும் பாலைப்பண்ணுடைய மிடற்றுப்பாடற்கண் நாலு தாக்குடைய கிழமையும் இரண்டு தாக்குடைய நிறையும் ஒருதாக்குடைய குறையும் தோன்றின (பரி. 17:17,18).

குறையல் - துண்டம். குறவனால் தறிக்கப்பட்ட குறையல் - துண்டம் - போன்ற விறகால் அடுக்கப்பட்ட ஈம ஒள்ளழலினகண் உடல் கடச் சென்று அணுகினும் அணுகாது விசும்புற நீளினும் அதியமான் நெடுமானஞ்சியின புகழ் மாயாது (புறம். 231).

குறையோர் - வறியோர். தலைவி நள்ளென் யாமத்து வந்து இனிய மொழிந்து முலைக்கண் வடுக்கொளத் தலைவனை முயங்கியமையான் பொறையன் கடுங்கோனைப பாடிச் செனற குறையோர் - வறியோர் - பிச்சையேற்கும் கலம் நிறைதல் போல அவன் நெஞ்சம் நிறைவுற்று மகிழ்ந்தது (அகம். 142:4-7,20-26).

குறைவில் - இந்திரவில். 'அரக்குப் போன்ற இதழையுடைய குவளையோடு நீலப் பூவும் வளர்ந்து மழைத்துளி வீழ்தல் மாறிய வானத்துக் குறைவில் - இந்திரவில் - போன்று ஒன்றற்கொன்று நிறம் மாறுபடுதலை யுடைய ஏனைப்பூக்களும் பொய்கைகளிடத்தே நிறைந்திருந்தன (பெரு. 291-294).

குறைவு - தாழ்வு. உடைக்குமேல் அணியும் அணிகலன்களால் துகில் பொலிவு பெறும்படி அதனைக் குறைவு - தாழ்வு - இல்லாது வேந்தன் உடுத்தல் (மது. 721, 722). 'மூங்கிற் குழாய்க்குள் பெய்தலையுடைய முற்றிய தேனால் செய்த கள்ளின தெளிவைக் குறைவின்றாக நிரம்பவுண்டு பின்னர் நறவையும் உண்டு மகிழ்ந்து வைகறையில் நும் அனந்தல் தீரும்படி பலாவின விதை, பல்வகை இறைச்சி, மூங்கிலரிசிச் சோறு முதலியவற்றைப் பெறுகுவிர்' என்று கூத்தர் ஆற்றுப்படுத்தப் பெற்றனர் (மலை. 171-185). நங்கையொருத்தி நாணுக் குறைவிலளாகிய குலமகளாயிருந்தும் தன் கணவன் பரத்தையிற் பிரிந்துவந்த நிலையில் தன் ஊடலையும் மறந்து நீர் விளையாட்டு வேட்கையில் அவனுடன் வையைப் புதுவெள்ளத்தில் யானைமேல் ஏறினாள் (பரி. 12:45-49).

குன்றகம் - மலையிடம். மடப்பிடி வருந்துமாறு அதன கன்றினைப் பிரித்துக் கொணர்நது குன்றகத்து - மலையிடத்து - நல்லூரின் மன்றததே பிணித்தற்கு இடனாயது வேங்கடம் (புறம். 389:9-11). கானவர் மூங்கிலிலே யிருந்து முற்றிய தேனாற் செய்த கள்ளின் தெளிவைக் குன்றகச் சிறுகுடியிலே யிருக்கின்ற தமது சுற்றத்தோடு உணடு மகிழந்து தொண்டகச் சிறுபறையின் தாளத்திற் கேறபக் குரவையாடுவர் (முரு. 194-197). வானர மகளிர் அருவியாடும் இன்னிசை முதலான பல ஒலிகளும் அவற்றால் குன்றகத்து எழுகினற எதிரொலியும் ஒருங்கியைந்து மலைகளாகிய யானைகளுக் குண்டாகும் ஒலி மாதிரநதோறும் இயம்பும (மலை. 294-348). மலையுச்சியில் புலியின் வரித்தோலையொப்ப வேஙகைப் பூக்கள் உதிருமாறு வேங்கையின கிளைகளிலேறிக் கூட்டமான ஆண்குரங்குகள் தம்மினங்களைக் கூப்பிட்டுத் தாவுகின்ற குனறகச் சிறுநெறியாகிய மொழிபெயர் தேயததுச் சுரங் கடந்து தலைவன் பொருளதேடச செனறான் (அகம். 205:18-24). களிறு தன மடப்பிடியைத் தழுவிக் கொண்டு குனறகச் சிறுகுடியினகண இறஙகிச் செல்லும் மனறங்கள பொருந்திய மலைகளையுடையவன் தலைவன் ('குன்றகம்' எனபதற்குக் 'குனறம்' என வேறு பாடமும் உண்டு) (குறு. 332:4-6). ஆடுமகள் நடந்த கழைக் கயிற்றில மந்தியின் குட்டி ஆடக்கண்டு குனறகத்துச் சீறூரில் குறக்குறுமாக்கள் தாளங்கொட்டுவர் (நற. 95:1-7). 'பாசறையிற் பிரிவு நீட்டிததிருந்த நீ மீணடு வநதவுடன முன்னர்க் கொனறைபபூவைப் போல் பசநதிருந்த இத்தலைவியின் மையுண்ட கண்கள் குன்றக நெடுஞ்சுனைக் குவளைபோலத் தொல்கவின பெற றன என்று தோழி தலைவனிடத்து உவநது மொழிந்தாள் (ஐங். 500).

குன்றநாட - மலைநாட. கூதிர்க்காலத்தில் இடியுடன மிக்க மழை பெய்திட உயிர்களெல்லாம் துயினற பாதியிரவில் கொடிச்சியர் தந்தைமாரான 'குறவர் காடுதேர் வேட்டத்துத் துயிலிடம் பெறாது வந்து இல்லத்தில் புலித்தோற் படுக்கையில் உறஙகுதற்கு இடனான குனற நாட - மலை நாட - எனபது தலைவனைக் குறித்த தலைவியின விளி (அகம். 58: 1-6). பக்கமலையில் அருவி இம்மெனும் ஒலியுடன் குகைகளும் பிளப்பிடங்களும எதிரொலிக்குமபடி வீழும் மூங்கில் நெருங்கிய மலைச்சாரலில் கானவன் மராமரத்தினைப் பொருநதி நின்று களிற்றி

யானையின் மார்பகத்தே அம்பெய்து கொன்று அதன் வெண்கொம்பினைக் கொணர்ந்து தன் குடிசையில் புலால் நாற்றம் வீச ஊன்றிப் பலாச்சுளையின் பிழியினை உண்ட உவகையனாய்ச் சுற்றத்துடன ஆரவாரம் மிகுந்து, சந்தன விறகாலான தீயில் ஊன் சோற்றை அட்டுண்ணும் இடமாகிய குன்ற நாட என விளித்துத் தோழி தலைவனை வரைவு முடுக்கினாள் (அகம். 172:1-14). 'வேட்டம் போகிய குறவன் காட்டகத்தே மலைமல்லிகையின் குளிர்ந்த புதர் குருதியோடு அசையுமாறு முள்ளம் பன்றியைக் கொன்று வீழ்த்தும் குன்ற நாட' என்று தலைவனைத் தோழி விளித்தாள் (அகம். 182:6-8). 'ஆண்குரங்கு தன் கையால் தோண்டிய பலாப் பழத்தை முன்னரே காத்தலை மறந்த கானவன் பின்னர்ப் பழத்தினால் மணமுடைய மரந்தோறும் குரங்குகள் படுதற்குரிய வலையை மாட்டி வைத்தற்கிடமான குன்றநாட' என்பது தலைவனைக் குறித்த தோழியின விளி (குறு. 342:1-4). 'குறவரது முன்றிலில் அமைந்த மாதீண்டு துறுகல்லில் மந்தி கடுவனோடு ஆடுதற் கிடனான குன்ற நாட' எனத் தோழி தலைவனை விளித்தனள் (ஐங். 277: 1-3).

**குன்ற நாடன்** - 1. மலைநாடன் (தலைவன்). வலிய வேட்டை நாய்களை எறிந்து வேட்டுவரையும் விலக்கிக் குட்டிகளைத் தழுவிக் கொண்டு பெண் பன்றி பெயருமாறு காட்டினின்றும் வெளிவந்து, அரும்புழை முடுககரிலே ஆட்களை எதிர்நோக்கி நின்ற அஞ்சாமையினையுடைய பன்றியைக் கண்டு அதனருகிற சென்று வில்லில் அம்பினைத் தொடுத்த வேட்டுவன தன் படைத்தலைவனைப் போலுமெனக் கருதி அதனை எய்யாது பெயருதற்கிடமான குன்ற நாடன் - மலை நாடன் (தலைவன்) - (அகம். 248 : 2-10). அருவியையுடைய கற்பாறையிடத்தே ஆடுமயில் ஒன்று முன்னே நிற்க அதன் பின் நிற்கும கடுவன் விறலியின பின்னிற்கும் முழவன போலக் குடம்போலும் பெரிய பலாப் பழத்தினைத் தன்னகததே பொருந்தத் தழுவிக் கொண்டு தனக்கினிய துணையாய மந்தியை யழைக்கும் குன்றநாடன் எனத் தலைவி தலைவனைக் குறித்தனள் (அகம. 352:1-7). 'துறுகல்லின் அயலிலே வளர்ந்த மாணை மாக்கொடி அருகே துயிலுகின்ற களிற்றினமேல் படரும் குன்ற நாடனாகிய தலைவன் என் தோளை மணநத பொழுது அவன் பிரியேனென வஞ்சினமுரைத்தது நின திறத்து நோயாகுமோ' எனத் தலைவி தோழியை வினவினாள் (குறு. 36). 'கானமயில பாறையிடத்தே ஈனற முட்டைகளை வெயிலில் விளையாடும் முசுவின் குட்டி உருட்டுதற்கிடனான குன்ற நாடனது நட்பு அதனை ஆற்றல் வல்லுவோர்க்கு என்றும் நன்றே யாம்' என்று தலைமகள் தலைமகனது பிரிவினை யாற்றாது பேசினாள் (குறு. 38). 'வளைத்து விட்ட நிலையில், அவிழ்த்து விடப்பட்ட குதிரை விசைத்தெழும் எழுச்சியைப்போல் நிமிர்ந்து வானைத் தோய்ந்த பச்சை மூங்கிலையுடைய குன்ற நாடன் யாம் தன்னை நினைநது மெலிதலையறியானாய்த் தானும் நமது நலத்தை நயந்து மெலிந்தனன்' என்று தோழி தலைமகனது குறையைத் தலைமகள் மறுக்காத முறையில் அவளிடம் கூறினள் (குறு. 74). 'மிளகுக்கொடி வளரும் மலைப் பக்கத்தில் இரவுப் பொழுதிலே முழங்கிய மேகத்தின் மழைக்கால் வீழ்ந்ததாக ஆணகுரங்கு தீண்டியதனால் நழுவிய பலாப்பழத்தை அருவி மாந்தர் நீருண்ணும் துறையின்கண் கொணர்கின்ற குன்ற நாடனது நட்பு நின் மெல்லிய தோள்களை மெலிவித்தும் சால்பினையே தந்தது' எனத் தோழி தலைவன் சிறைப்புறமாகத் தலைவியிடம் உரைத்தாள் (குறு. 90). 'கன்றுகளை வழிகளில் செலுத்திய சிறுவர், மன்ற வேங்கையின் மலர் பதத்தை நோக்கி அம்மரத்தின்மேல் ஏறாமலே இட்ட இனிய ஆரவாரம் வானளாகிய மலைமுழையிடத்தே எதிரொலியை ஏற்படுத்தும் குன்ற நாடனைக் கண்ட எம் கண்கள் யாம் எம் காமத்தைத் தாங்கி யிருக்கவும் தாம் எம்பால் தமக்குள்ள உரிமையினால் அழுதன' என்று தலைவனது பிரிவாற்றாத தலைவி மொழிந்தாள் (குறு. 241). 'தான் தண்ணளி செய்வதனாலேயே வாழ்கின்ற வறியோரிடத்து அன்பிலராகுதல் நன்றெனக் கொண்ட குன்ற நாடனைக் காட்டிலும் நீ வரும் வழியிலே வளர்ந்த வாழையைப் பெயர்த்துக் கொணர்ந்த அருவியே, நின் நிலை மிகவும் கொடிது' எனத் தலைவி தலைவனது மலையிலிருந்து வந்த அருவியிடத்துக் கூறினாள் (குறு. 327). 'தினைப்புனத்தையுண்டமையின் கானவனால் கடியப்பட்ட யானை மகளிரால் ஓப்பப்பட்ட கிளிகளோடு குறுகிய பொற்றைக் கல்லினிடத்தே செல்ல மேல நோக்குதற்கிடமான குன்ற நாடன் நம்மை வரைய வந்து நிறைவேறாத வருத்தம் நீங்குமாறு நாம் நம் களவொழுக்கத்தை அன்னைககு அறிவித்தாலென்ன' என்று தோழி தலைவியை வினவினாள் (குறு. 333). 'உடன் போதற்கு நீ உடனபடுதலால் நான் வர வழைக்கக் குனற நாடன் குறியிடத்தே வந்து நின்றனன்' எனத் தலைவிக்குத் தோழி அறிவித்தாள் (குறு. 383:1,2). குன்ற நாடன் இரவுக்குறியிடத்து வந்தனன் (நற். 114:5,6). 'மிளகுக் கொடி

படர்கின்ற மலைப்பக்கத்தில் களவுப் புணர்ச்சியில் கடுவனால் புணரப்பட்ட மந்தி தனக்குப் புணர்ச்சி வேறுபாட்டினா லுண்டாகிய குறியைத் தன் பெருஞ்சுற்றம் அறிவதற்கஞ்சி வேங்கைக் கிளை மீது ஏறிக் கீழேயுள்ள ஆழ்ந்த சுனைநீரை நோக்கித் தன் தலை மயிர்க்குலைவினைத் திருத்துதற்கிடமான குன்றநாடன் இரவில் சாரலிடத்தே வாரற்க' எனத் தோழி ஆறஞ்சிக் கூறினள் (நற். 151:4-12). ஆமானின் மார்பகத்தில் பாயாது தன் அம்பு பிழைத்துப் போன போக்கினைக் கருதிக் கானவன், 'இம்மலை அணங்கொடு நின்றது; மழை பெய்தால் அதன் வீறு தணியுமாகலின் மலையை மேகம் சூழ்க' என்று அம்மலையில் கடவுளை வழிபட விரும்பித் தன் சுற்றத்தோடும் போய் வழிபட்டு மகிழுமிடமான குன்றநாடன் தலைவன் (நற். 165:1-5). 'களிற்றி யானை வயப்புலியைக் கண்டு வெருவிச் செல்கையில் அயலே எதிர்ப்பட்ட வேங்கை மரத்தையும் புலியெனக் கருதி மாறு கொண்டு அம்மரத்தை ஊறுபடக் குத்தித் தன் பெருஞ்சினம் தணியுமிடமான குன்றநாடன் பெரிதும் இனியனாயினும் அவன் புலவியுணர்த்தும் வண்மை காரணமாக யான் விரும்பி அவனிடத்தே ஊடலுறுவேன்' என்று தலைமகள் தோழி கேட்கச் சொன்னாள் (நற். 217). 'நிறம் மிக்க அண்ணல் யானை நீர் பருகும்படியான நெடுஞ்சுனையிலே அமைந்து நீலமலர் மணஞ்சிறக்கும் குனற நாடனை நினைக்குந்தோறும் அவனுடைய பண்புகள் தருகினற வருத்தத்தினால் நெஞ்சு நடுங்குகின்றது' என்றாள் தோழி (நற். 273:6-10). 'கானவன் வில்லை வளைத்து அம்புதொடுத்து வீழ்த்திய முள்ளம்பன்றியேற்றையொடு வேட்டை வென்றிபட்ட உவகையினால மனை நாய்கள் மருங்கு விளையாடக் காட்டகத்தேயுள்ள தனது குடிசைக்கு மீளும் குன்ற நாடன நட்பு நமக்கு நல்லதாயுள்ளது' எனத் தோழி குறிப்பு மொழியினால் தலைவனது தொடர்பைக் குறை கூறினாள் (நற். 285: 2-9). அருவி ஆரவாரிக்கும் அச்சமுடைய நெடிய கொடுமுடியின் பக்கத்திலே பீலிமஞ்ஞை இளவெயில் காய விரும்பித் தன பெடையுடனே உயர்ந்த மரக்கிளையிலிருந்து ஆடுதற்கிடமான குன்ற நாடன் பிரிவினில் தலைவியின் நெற்றியிலே பசலை பரந்தது (நற். 288:1-5). மலையில் மேய்ந்த செந்நிறப் பசு காந்தளைத் தீண்டி அம்மலர்களின் தாது தன் மேல் உதிரப் பெற்றமையால் நிறம் வேறுபட்டுச் சென்றபோது அதன் கன்று தனது தாயென்றுணராது மருளுதற்கிடமான குனற நாடன் உடுக்கும் தழையுடை தந்தனன் என்று தோழி தலைவியிடம் குறைநயப்பக் கூறினாள் (நற். 359: 1-4). 'தோழி, நம்மொடு தினைக்காவலனாயிருந்து நின் மென் தோள் நெகிழவும் திருநுதல் பசப்பவும் காமநோய் செய்து அழகழித்தவனான குன்ற நாடனுக்கே நமர் நின்னை மணம் நேர்ந்தனர்' எனத் தோழி தலைவியிடம் உவந்துரைத்தாள் (ஐங். 230). பயிர் விளைப்பவர் அப்பயிரை விலங்குகள் அழிக்காதிருக்கக் கழலினைக் கண்ணாகப் பொருத்தி மெய்ம்மை போலப் பொய்ம்மை வகையாற் செய்து வைத்த பெண்பாற் புலியைப் புணர்ந்து ஆண்பாற் புலி படப்பை நடுவே துயரம் தீருதற்கிடமாகிய குன்ற நாடனான தலைவன் தலைவிக்குக் காம நோயுறுத்தினன் (ஐங். 246). பனறியொருத்தல் துறுகல நிறைந்த மலைப் பக்கத்திலே காவலர்க்குப் போக்குக் காட்டி மாற்றிவிட்டு ஐவன நெல்லைக் கவருமிடமான குன்றநாடனாகிய தலைவன் தலைவியை மயக்கித் தான் சொல்லும் சொற்களை அவள் மெய்யாகக் கொள்ளும்படி பொய்ம்மொழிகளைப் புகல்வான் (ஐங். 267).

2. முருகன். 'குன்ற நாடனின் - முருகனின் - குன்றத்தினது பக்கமலையிலே சுனையிடத்துப் பூத்த குவளை மலர் என் காதலியாகிய கொடிச்சியின் கண்போல் மலர்தலரிது' எனத் தலைவன் தனக்குள் உவந்துரைத்தனன (ஐங். 299).

**குன்றம் - மலை.** குனறத்தின்கண் - மலையின்கண் - தங்கிய குருவியினம் போல அமபு சென்று தைத்துத் தங்கிய புண்ணையுடைய யானைகளின் பெருங் கைகள் வாய்களுடனே துணிந்து வீழ்ந்து கலப்பைகளைப் போல் நிலத்திற் புரளுமாறு அவற்றைப் போர்க்களத்தில் மறவர் வாளால் வெட்டி வீழ்த்தினர் (புறம். 19:8-12). பாரியின் பறம்பு மலையில் அணிநிற ஓரி பாய்தலால் கனத்த நெடிய குன்றம் தேனைப் பொழியும் (புறம். 109:7,8). 'குன்றத்தன்ன களிறுகள் படுமாறு போரில் வென்றவனும் நம்மை வெலவித்தோன் இவனென நின்னையே மகிழ்ந்து சொல்வான்' என்று சேரமான் மாந்தரஞ்சேரலிரும்பொறையொடு நேர்ந்த போரில் வெற்றி பெற்ற சோழன இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளிக்குத் துணையான தேர்வண் மலையனை வடமவண்ணககன பெருந்சாத்தனார் சிறப்பிப்பர் (புறம். 125:9-11). 'களிறுகளை மிகவுமுடைய இக்கவின பெறு காடுகள ஆய்அண்டிரனது குனறத்தைப் பாடிப் பரிசில் பெறறனவோ' என்று வியந்துரைத்தார் உறையூர் ஏணிச்சேரி முடமோசியார் (புறம். 131). 'கீரையுணவிற்கு மேலீடாக யாம் சில அரிசி வேண்டியதற்குத் தான் பரிசிலர்க் குதவும் வரிசை

யறிதலால் எம் வறுமையைப் பார்த்தலே யன்றித் தனது மேம்பாட்டையும் சீர்தூக்கிப் பெரிய சுரம் சூழ்ந்த குன்றம் போல்வதொரு பெரிய யானையை யளித்தான்' என நாஞ்சில் வள்ளுவனது கொடையைப் புகழ்ந்தார் ஔவையார் (புறம். 140:1-8). முகில் சூழ்ந்த குன்றத்திற்குத் தலைவன் ஆதன் ஓரி (புறம். 153.1-4). வண்மையும் வலிமையும் என்ற நன்மைகளிரண்டினுள் ஒன்றையே உடையன பிறர் தம் குன்றம்; கொண்பெருங் கானமோ அவ்விரு நன்மைகளையு முடையது (புறம். 156:1,2). போர்க் களத்தின்கண் மறவனொருவன் குன்றம் போலும் பெரிய களிற்றினை எறிந்து அதனோடே தானும் பட்டான் (புறம். 307:2). தன்னிடத்து நச்சி வந்த இரவலர் களிற்றொடு நெடுந்தேர் வேண்டினும் அவற்றைக் கொடுப்பதற்குக் கைப்பொருள் யாதொன்று மில்லாத நிலையிலும் தன்பகைவர் பால் உள்ளவற்றைக் கருதிய தலைவ னொருவனது பொருள், உப்புவண்டிகளைச் செலுத்தும் உமணரது வழியாகிய காட்டிடத்துக் கழிநீரால் அலைக் கப்பட்ட குன்றம் போன்றதாய் இகழப்படும் பான் மையுடையதன்று (புறம். 313). சேரமான் குடக்கோ நெடுஞ்சேரலாதன் சோழன் வேற்பல் தடக்கைப் பெருநற்கிள்ளியொடு பொருது வீழ்ந்த போர்ப் புறத்தில் களிறுகளெல்லாம் மழைமுகிலைத் தடுக் கும் குன்றம் போல அம்புகள் பட்டு இறந்தன (புறம். 368:2,3). ஓய்மான் வில்லியாதனது ஈதற் சிறப்பினைக் கிணைவன் கூறக் கேட்டது முதல் வேட்கையின் அமையாது வானளாவிய சிமையங் களையுடைய குன்றம் பிற்படுமாறு அவனிருப்பிடம் நாடி வந்ததாகப் புறத்திணை நன்னாகனார் பாடி யுள்ளார் (புறம். 379:7-14). பாண்டியர்தம் வலிமை மிக்க மறவனாகிய நாஞ்சில் வள்ளுவன் தெனகடல் முத்தைபபூண்டு வடகுன்றத்துச் சநதனத்தை யணிந் திருந்தான் (புறம். 380:1-5). கோடை நீடுகையினால் குன்றம் புல்லென்னும்படி அருவியற்று வறட்சி தோன்றியது (பதி.28:8,9). மேகம் தவழும் பெருங் குன்றத்தின்கண் கடுஞ்சினத்தை யுடையனவாய்க் குற்றமுடைய அரவுகளை யெறிந்து பெருஞ்சினப் புயலேறு அவற்றின் வன்மையை யழிக்கும் (பதி. 51: 25-28). குருகினால் பெயர்பெற்ற குன்றத்தைப் பிளந்த குன்றாத வெற்றியை யுடைய குறிஞ்சிக்கிழ வன் முருகன (முரு. 266,267). 'குன்றம் எறிந்தாய்' என முருகனைச் சுட்டல் (முரு. வெ. 1:1).குன்றத்தை எறிந்ததுவும் குன்றப்போர் செய்ததுவும் மெய் விடா வீரனான முருகனது கைவேலாகும் (முரு. வெ. 2). 'நின் ஆற்றலினது பெருமையைப் பேசு கின்ற வேலாலே சூர்தடிந்த கொற்றவா, முன்னம் பனிமூடிய நெடுங்குன்றம் பட்டுருவுமாறு தொட்ட தனி வேலினை நீ இன்ன மொருகால் என் இடும்பைக் குன்றினைப் பிளப்பதற்கும் கையிலே எடுத்தல் வேண்டும்' என்று முருகனிடம் வேண்டுதல் (முரு. வெ. 4). பெரும்பாணன் கடல் சூழந்த இவ்வுலகில் தன்னைப் பாதுகாப்பாரைக் காணாமல், மழை துறத்தலால் நிலத்தின்கண் எழுந்த ஆவி சூழ்ந்த குன்றத்தே பழுத்த மரத்தைத் தேடித் திரியும் பறவைகளைப் போலச் சுற்றத் துடனே ஓரிடத்தும் தங்காமல் திரிந்தான் (பெரு. 18-22). குன்றம் மாரிக்காலத்து மேகத்தைச் சுமந்து நின்றாற்போன்று தொத்துளிப்பாயினால் வேயப் பட்ட சகடம் தோன்றியது (பெரு. 49, 50). சூறா வளியை 'முழைஞ்சிடங்கள் முகந்து கொள்கையி னாலே மிகுந்த கடல்போல் காற்று ஒலிக்கும் ஆர வாரத்தை யுடையது, நிழல் தன் வடிவினையிழத் தற்குக் காரணமான முதுவேனிற் காலத்தையுடைய குன்றம் (மது. 308-313). ஞாயிறு பகற்பொழுதைச் சேரக்கொண்டு குடமுதற் குன்றத்தைச் சேர்தலால் இரவு வருதல் (மது. 546-549). பெரிய நிழலுண் டான மரம் நெருங்கிய குறுங்காட்டினால் ஞாயிறு சுடாத அகன்ற இடத்தை யுடையது குறவரும் மருளும் குன்றம் (மலை. 271-275). 'உறையூர்க்குக் கீழ்பால் உள்ள நெடும் பெருங்குன்றத்தின்கண்ணே நெருங்கிய காந்தளின்போது விரிந்த மலர் போல் மணங்கமழும் தலைவியின் மாணலம் நினைந்து தலைவர் தேரூர்ந்து வருவர் (அகம். 4:12-17). செவ் வரக்கினை யொத்த சிவந்த நிலத்திற் செல்லும் பெருவழியிலே காயாவின் வாடிய பூக்கள் பரவிக் கிடக்க அவற்றிடையே தம்பலப் பூச்சிகள் பலவும் வரிவரியாய் ஊர்ந்து செல்வது குன்றத்தில் பவளத் தோடு நீலமணி நெருங்கிக் கிடந்தாற்போல் காணப் பட்டது (அகம். 14: 1-4). தலைவனோடு உடன் போக்கு மேவிய தலைவியைக் குன்றத்து மூங்கில் போலத் திரண்ட மெல்லிய தோளையுடைய என் அன்னை எனத் தாய் குறிப்பிட்டாள் (அகம். 15: 18, 19). நீரிலலாத காட்டின் அருவழிகளிற் செல் லும் உப்புவாணிகர் எருதுகளை உரப்பியோட்டும் தெள்ளிய ஒலிகள் ஆங்குள்ள நெடும் பெருங் குன றத்தினகன் எதிரொலிக்கும் (அகம். 17: 12-14). பருந்துகள் தங்கி யிருந்து வழிச்செல்வோர்க்கு வருத்தத்தை யுண்டாக்குமாறு ஒலியெழுப்பும் யா மரங்கள் உயர்ந்த அகனற இடங்களில் துடியின் ஓசைபோலப் பொருள் தெரிய ஒலிக்கும் கடுங் குரலையுடைய பேராந்தைகள் உள்ள நெடும் பெருங் குன்றத்தைக் கடந்து தலைவன் பொருள் தேடிச் சென்றான் (அகம். 19:2-6). 'வாடிய வாகையின்

முதிர்ந்த நெற்றுக்கள் கூத்தர் ஆடுங்களத்தில் ஒலிக்கப்படும் பறை போல இடையிட்டு ஒலிக்கு மாறு கோடை நீடிய அகன்பெருங் குன்றத்தினகண் காட்டில் நீரற்ற அரிய வழியில் எதிர்ப்பட்ட களிற் றினைக் கொன்று புலி திரியும் (அகம். 45: 1-6). வாவற் பேடை வெயில் வெம்மையொடு வானிற் பறந்து வந்து கனி பெறாமல் தான் முனபு கனி பெற்ற நாளின வளத்தை நினைந்து துன்புற்று ஏங்குதற் கிடமானதும் உலர்ந்த இற்றி மரத்தின் நீண்ட விழுது கீழிருக்கும் துறுகல்லைத் தீண்டிக் காற்றடித்தலால் யானையின் கைபோல் அசைதற்கு இடமானதுமாகிய குன்ற வைப்புக்களை யுடைய வெம்மை மிக்க நெடிய காட்டில் தலைவன் தனியே பிரிந்து சென்றான் (அகம். 57:1-10). குன்றத்தின் கண் புலியைக் கொன்ற யானையின் கன்னத்தில் பெருகி வழியும் மதநீரில் வண்டின் கூட்டம் ஒலிக்க அதனை யாழிசையெனக் கருதி அசுணங்கள் உற்றுக் கேட்கும் (அகம். 88:8-12). 'குறுமகளே, நுந்தை பகைவரைக் கொல்லும் போர்க்களத்தே பூண் சிதைந்த கோட்டினை யுடையனவும் பிடியானை கள் சூழப் பெற்றனவுமான களிறுகளைப் போலத் தோன்றும் சிறியவும் பெரியவுமான குன்றங்களை யும் உடைய இக்கானம் நன்கு விருமபத்தக்கதாய் இருக்கின்றது காண்' என்று தலைவன் தலைவிக் குக் காட்டி அவளை உடன கொண்டு போனான் (அகம். 99 : 10-14), 'நெஞ்சே, நம் காதலி இருக்கும் ஊருக்கு இடையே அறனில் வேந்தன் ஆளுகின்ற வறட்சியுற்ற குன்றம் பலவும் நினறு குறுக்கிட்டன வாதலால் நீ அவளை நினைந்து மீளுதற்கெண்ணி வருநதாதே' என்று தலைவன் பிரிநது போகும் இடைச்சுரத்தே தன்னெஞ்சிற்குக் கூறினான் (அகம். 109:3,14,15). 'கான யானைகள் கவினழியுமிடமான குன்றத்தினைக் கடந்து போய்ப் பொருள் ஈட்டி வருதற்கும் ஆற்றாயாகின்றனை' எனறு தலைவன் இடைச்சுரத்தினகண் நெஞ்சொடு கூறினான் (அகம். 123:4,5). நடு இரவில் குன்றத்து உச்சியின் கண் மிக்க இருளிலே தன் மணியை உமிழ்ந்து வைத்த நாகம் காந்தட்பூவினை ஊதுகின்ற தும்பி யின் நிறத்தைக் கணடு மருளும் (அகம். 138:15-19). உமணர் கல்லுப்பின் விலை கூறியவாறு ஞாயிற் றின் வெம்மையாலாய பிளப்புக்களையுடைய குன் றங்களைக் கடந்து போவர் (அகம். 140:3-5). கூடல் நகர்க்குக் குடக்கே யுள்ள மயிற்கொடியினை உயர்த்திய நெடியோனாகிய முருகனது குன்றத் தின்கண் நீண்ட ஆழமான சுனையில் வண்டுகள் படுமாறு நீலம் பூததன (அகம். 149:14-18). வெம்மை மிக்க பாலை நிலததில் பழையதாய் வானளாவிய உச்சியினை யுடைய குன்றத்தின் பக்கமலையில் எண்கின் ஏற்றை, குட்டியுடனும் பிணவுடனும் மகிழ்ந்திருக்கும் (அகம். 201 : 14-19). அருவிகளை யுடைய குன்றத்தின் பக்கமலையிடத்தே இளைய பிடியானை இனத்துடன் இன்புறுமாறு புலியை வென்ற களிற்றியானை கையை உயர்த்திப் பெரு மூச்செறிதலால் வேங்கைப் பூக்கள் புதரில் உதிர்ந்து பரவும் (அகம். 202:1-8). யாம இரவில் கடைவாயி லில் நின்று தேன் நிறைநத சிமையங்களை யுடைய தனது குன்றத்தைப் பாடுகின்ற பாணர் விரும்பி னால் அவர்க்கு அண்ணல் யானைகளை ஈயும் அளியியல் வாழ்க்கை அமைந்தவன வெளியன் வேண்மான் ஆஅய் எயினன (அகம். 208 : 1-6). குறுக்கே கிடக்கும் பெரிய உச்சியினை யுடைய குன்றத்திற்கு அப்பாலுள்ள வேறுபட்ட பல மொழிகள் வழங்கும் தேயத்தைக் கருதிப் போர்த் தொழிலை விரும்பிச் செலுத்தும் உள்ளத்துடன் வேலினை வலக்கையிலேந்தித் தலைவன் ஏகினான் (அகம். 215:1-5). 'நெடிய சேய்மையிலுள்ள குன்றங் களைக் கடந்து செனற பொயவலாளராகிய தலை வர் முயன்று ஈட்டும் பெரும்பொருள் நம்மை யில் லாமலும் அவர்க்கு விரைந்து கைகூடுக' என்று தலைவி வெறுப்புற்றுக் கூறினாள் (அகம். 229: 7-10). குன்றவேலினை யுடையது தலைவியின் சிறு குடி (அகம். 232:6). கடுங்காற்றுச் சுழன்றடிக்கும் நெடும் பெருங்குன்றத்தின்கண் மயக்கத்தினைத் தருகின்ற இருட்குகையில் மணிகள் ஒளியின்றி மறையும் (அகம். 258: 6,7). மோரியர் தென்றிசை நாடுகளைப் பற்ற எண்ணி வந்த வருகைக்கு இடை யூறாய் நின்ற விண்ணுற ஓங்கிய பனிமிக்க பெருங் குன்றத்தினைத் தம் ஒண்கதிர் ஆழி தடையின்றிச் செல்லுமாறு போழ்ந்து பாறைகளில் வழியுண் டாக்கினர் (அகம். 281: 8-12). கொடியோராகிய ஆறலை கள்வர் பொருந்தி நெருங்கியிருக்கும் நெடும் பெருங் குனறத்தின் குறுகிய நெறியில் அருவி இழிதல் (அகம். 288:8-11). புல்லி யென்பானது குன்றத்துக் கானம் நடத்தற்கரியது (அகம். 295:13, 14). 'தலைவரது நாட்டில பலாப்பழத்தினைக் கவர்ந்தெடுத்த மந்தி தன் கடுவனொடு துள்ளித் திரிதற்கிடமான தெய்வத்தையுடைய நெடும்பெருங் குனறத்து அருவியைக் கொண்டு வானளாவிய உச்சி மலை காணப்பெறுதலின் யான் ஆற்றி உயிர் வாழ்ந்திருக்கின்றேன்' என்று தலைவி உரைத்தாள் (அகம். 378: 19-24). செவ்விய அடி பொருந்திய ஞெமை மரங்களையுடைய பெரிய புனங்களமைந்த குனறத்தின்கண் பெரிய மூங்கில்கள் ஒலிக்கும் (அகம். 395:13,14). 'முருகனுக்குரிய குன்றம் சிவந்த பூக்க

ளை யுடைய காந்தள் நிறைந்தது' எனத் தோழி கூறித் தலைவனது கையுறையை மறுத்தாள் (குறு. 1:3,4). 'அகவன மகளே, தலைவரது நன்னெடுங் குன்றத்தை நீ பாடிய பாட்டினை இன்னும் பாடுக' என்று தோழி கட்டுக்காணும் அகவன்மகளிடத்துக் கூறுவாளாய்ச் செவிலியிடம் அறத்தொடு நின்றாள் (குறு. 23:3-5). குன்றத்தின்கண் உறையும் கூகை குழறினாலும் தலைவியது நெஞ்சம் அஞ்சும் (குறு. 153: 1-3). கதிரவன் வெம்மை நீங்கிக் குன்றத்தை யடைய துன்பந்தரும் மாலைக்காலம்' எழுதரும் (குறு. 195: 1,2). மழைபெய்த குனறத்தின்கண புதிய பூக்களின் மணம் நாறுகின்ற கலங்கலின் மேல் பரவிய பழைய மலர்களைச் சுமந்து காற்றுடன் கலந்து அருவிப் புனல் இழியும் (குறு. 200:1-3). குனறத்தின் கண போரிடுகின்ற களிறுகள் மிதித்தலால நெரிந்த தாளினையுடைய வேங்கைமரம் குறமகளிர் தம் கூந்தலில் அணிந்துகொள்ள நின்றவாறே கொய் தற் கேற்ப மலரும் (குறு. 208:1-4). வழிப்போவாரது உயிரைக் காக்கும் அறத்தைச் செய்யும் நெல்லியின் பசுங்காய்கள் புலிக்குட்டிகள் கொள்ளுதற்குரிய இடத்தில் உதிர்ந்து உருளுகின்ற கடத்தற்கரிய குன்றங்களைக் கடந்து தலைவன் பொருளீட்டச் சென்றான் (குறு. 209: 1-3). குன்றம் போன்று மணல் குவிந்திருத்தல் (குறு. 236:3; நற். 207:5). மலைச்சாரலையுடைய தலைவனது நாட்டுக் குன்றத்தை நோக்கியவாறே தலைவி பிரிவாற்றியிருந்தாள் (குறு. 249:3,4). மேகங்கள் சேர்ந்தெழுந்த மழையை யுடைய குன்றத்தே அருவிக்கருகில் பொருந்திய காந்தளரும்புகள விரிந்து மணம் வீசுவது போல் நறுமணம் பரப்பும் நெற்றியை யுடையவள் தலைவி (குறு. 259:1-4). மழை கழுவுதலை மறந்த பொற்றைக்கல் புழுதி படிந்த யானையைப் போலத் தோனறுகின்ற பெரிய பல குன்றங்களைத் தலைவன் கடந்து சென்றான் (குறு. 279:5-7). 'செழுமை மிக்க பல குன்றங்களை நோக்கி நீர் சுமந்த மேகங்கள் எழுகின்ற பொழுதாகிய இக்கார்ப் பருவத்தைக் கணடு இனியும் தலைவர் பிரிவு நீட்டித்திரார்' எனத தோழி தலைவியை ஆற்றுவித்தாள் (குறு. 287). இளைய பிடியானையை விரும்பிய இளங் களிறு குன்றத்தைப் பொருந்தி அங்குள்ள குறவர் ஆரவாரம் செய்தமையால் அங்கிருநது பெயர்ந்து ஊர்மனறத்தைப் போழ்ந்து செல்லும் (குறு. 346:1-3). குன்றத்தில் பழங்குழியைத் தோண்டிய கானவன் கிழங்கினொடு மணியைப் பெறுவான் (குறு. 379:1-3). ஓமை மரத்தினைக் குத்திய களிறு வேனிலின் தன்மையையுடைய குன்றத்தின் பக்க மலையிடத்தே மேகமுழக்கததைக் கூர்ந்து கேட்கும் (குறு. 396:4-6). ஆழ்ந்து படக் கிடந்த பெருந்தண் குன்றத்தே ஈத்த மரங்களை யுடைய காட்டினூடே ஆறுசெல் மாக்களைக் கொன்ற குருதி தோய்ந்த வாயினையுடைய புலிக்குட்டிகள் தாம் பதுங்கியிருக்கும் தூறுகளை நிமிர்ந்து நோக்கும் சுரத்து வழியே தலைவன் தலைவியை உடன்கொண்டு சென்றான் (நற். 2:1-8). குன்றம் தன்னிடத்தே யமைந்த மரம் முதலாயினவற்றால் தழைக்குமாறு மேகம் மழைபொழிந்தது (நற். 5:1,5). விடியற் காலத்தே மழைபெய்த நன்னெடுங் குன்றத்தினின்று அருவி யிழியும் (நற். 17:1,2). வெள்ளாடையை விரித்தாற் போன்ற வெயில் விளங்கிய வெப்பத்தையுடைய கோடை நீடிய குனறத்தின் பக்கத்தே செந்நாய் மரையாவைக் கொன்று தின்றொழிந்த மிச்சில் வேற்று நாட்டினின்று அப்பாலை நிலத்தின் வழியே செல்வோர்க்கு உணவாகும் (நற். 43:1-5). குன்றத்தின்கண் உள்ள வேங்கை மரத்தின்கீழ் ஆமான் தன் கன்றோடு தங்கியது (நற். 57:1,2). வறட்சியுற்ற குன்றத்தின் உச்சிப் பக்கத்தில் வேட்டச்சீறூர் இருந்தது (நற். 92:4,5). செவ்விய மலையருவியின்கண் நீரில்லாத நீண்ட நெறியிடத்தில் பிடி யானையின் பசியைப் போக்கக் களிற்றியானை முறித்துத் தள்ளிய ஓமை மரம் சுரத்தின் வழியே செல்வோர்க்குத் தங்கும் நிழலாகும் குன்ற வைப்பினை யுடைய கானத்தைக் கடந்து செனறு பொருள் தேடுதற்குத் தலைவனது நெஞ்சு கருதியது (நற்.137:4-10). நீருண்ணும் விருப்பத்தைக் கொண்ட வேட்கைமிக்க யானை வேனிலையுடைய குன்றத்தின் வெப்பமிக்க பக்கமலையிடத்தேயுள்ள நிலத்திற்குச் சென்றது (நற். 171:1-3). மலர்ந்த ஒண் செங்காந்தள் வாழையை யுடைய பக்கமலையில் மணங்கமழ அவற்றிடையே திரண்டு வண்டுகள் அருவியொலியுடனே இசைக்கின்ற சாரலிலே குன்ற வேலிகளையுடையது, தலைவனின் உறைதற்கினிய ஊர் (நற். 176:6-11). குன்றத்ததாகிய தேன் முற்றிய பக்கமலையில் முளைத்து வளைந்த மூங்கிலபோலும் பருத்த தோள்களை யுடையவள் தலைவி (நற். 188:7-9). 'பொருள்வயிற் பிரிந்த தலைவர் பொருளை முடித்துக் கொண்டு வடுகரது நெடும் பெருங்குன்றத்தை நீந்தி நம்மிடத்தே வந்தனர்' எனத் தோழி தலைவிக்குத் தலைவனது வரவை யறிவித்தாள் (நற்.212:5-7). 'தோழி, நீ தலைவரது உயர்ந்த நெடிய குன்றத்தைக் காணுமாறு யான் நின்னை ஊசலில் வைத்து ஆட்டி விடுவேனோ' என்று தலைவியிடம் தோழி வினவினாள் (நற்.222).'அழகிய மணிகள் அருவி நீரால் அடித்துக் கொணரப்படும் தலைவனது குன்றத்தை நம்மகளது

முலையின் விலையாக ஏற்றுக்கொண்டு இவளை அவனுக்கே வழங்கினால் நன்றாகும்' என நற்றாய் தந்தை தன்னையர்க்கு அறத்தொடு நின்றாள் (நற். 234:3,4). 'என் வளைகளை நெகிழ்த்தோன் குன்றத்து நெடுவரைகளில் பரவிக் குளிர்ச்சியுறும்படி அகன்ற பாறையில் அளாவிய காற்று எனது ஆகத்தில் சிறிதே தீண்டுதற்கு என்னை முன்றிலிடத்தே கிடத்தினால் யான் நோய் நீங்கப் பெறுவேன் என்பதை அனனைக்கு உரைப்பாயாக' என்பது தோழியிடம் தலைவி கூறிய கூற்றாகும் (நற். 236). 'தலைவி பாரியின் பலாமரங்கள் நிறைந்த பறம்பு மலையாகிய குன்றம்போலப் பேரழகு எய்திய அருங்காப்பினள்' என்று இற்செறிப்பறிவித்துத் தோழி தலைவனை வரைவு கடாவினாள் (நற். 253: 5-9). சூல் கொண்ட மேகம் யாமத்தில் நெடும் பெருங்குன்றத்தின்கண் பெரும்பெயல் பொழிந்தது (நற். 261:3-5). சுனையில் நீர் நிறைய மழை பெய்த மிக நெடிய குன்றத்தில் குறிஞ்சிப்பூ அம்மலையிலமைந்த இல்லங்களில் இழைக்கப்பட்ட தேனடைக்கு வேண்டுமளவு மணங்கொண்ட தேனையூறும் (நற். 268:1-5). தலைவியின் கண்கள் பிணித்தலைக் கருதாதவனாய்த் தலைவன் சிறிய பலவான குன்றம் கடந்து பிரிந்து செல்வான் (நற். 269:5-8). நெடிய மேகம் மின்னி மிக்க மழையைப் பெய்த பிளப்புக்களை யுடைய குன்றத்தின் நெறிகளில் மான்பிணை உராய்தலால் குமிழமரத்தின் பழங்கள் உதிர்ந்து பரவும் (நற். 274:1-5). உடை மரங்கள் மிக்க நெறியின்கண் குமிழ மலர்கள் கோலஞ் செய்தாற் போல உதிர்ந்து பரவுகின்ற பொலி வழிந்த குன்றத்தைக் கடந்து தலைவன் பொருள் வயிற் பிரிந்தான் (நற்.286:1-4). வழிச்செல்லும் புதியோர் வருதிறம் நோக்கிக் கணைதொடுத்த ஆறலை களவரின் தண்ணுமைக்குரல் கேட்ட எருவைச் சேவல அச்சமுற்றுத் தன் இனத்திடத்தே செல்லும் அருஞ்சுரத்தின்கண் கவர்த்த வழிகளையுடைய அச்சந்தோன்றும் அகன்ற இடங்கொண்ட பெரும் பல் குனறத்தே பிரிந்து செலலுதலைக் கருதியும் தலைவியின் தோளைத் தழுவிப் பிரியாதிருத்தலைக் கருதியும் தலைவனது நெஞ்சம் ஒரு திறம் பற்றாமல் தடுமாறியது (நற். 298:1-8). மேகம் திசையிடமெல்லாம் மறையும்படி பரவி உயர்ந்த கொடு முடிகள் புரண்டு விழுமாறு செய்து பாம்பினை எறிந்து வானளாவிய முடியையுடைய குன்றத்தைச் சூழ்ந்து மழை பெய்தது (நற். 347:1-5). மிகவுயர்ந்து தோன்றும் குன்றத்தின் பக்கத்தே மழையில நனைந்து உலறிய மயில் சோலையிற் சென்று ஆலும் (நற். 357:4-6). கதிரவன் தன் வெம்மை தணிந்து மேல்திசையில் குன்றத்தைச் சேரப் பகற்பொழுதைக் கழித்து மாலைப்பொழுது வரும் (நற்.369:1-5).காயாமரங்கள் மலர்ந்திருககினற குன்றத்தின்கண் இடையே கொனறை மரங்கள் மலர்ந்தவை போல மேகம் மலைமுழைஞ்சுகள் விளங்குமாறு மினனி வானகம் மறையப் பரந்து மழைபெய்யத் தொடங்கியது (நற். 371:1-5). ஆரவாரம் பொருந்திய வானம நெடும் பெருங்குனறத்தை முற்றிக் கடும்பெயல பொழியும் (நற். 387:10, 11). மழைத்துளியில நனைநததும் தோளில கட்டித தொங்கவிடப்பட்டதுமான ஒளவாளையும் நீாப பாசி சூழ்ந்த பசுங்கழலையும் தணணிய நீர்த்துளி தங்கிய வரிக்கச்சினையும் உடையனாய்த தலைவன மழைக்காலத்துக் குன்றததைக காததிருப்பவன போல் இரவுக்குறியிடை நினறிருந்தான (ஐங். 206). 'அன்னையே, நம் தோட்டத்துத துறுகல்லிலே ஏறி நின்று தலைவர் நாட்டுப பூககள் கெழுமிய குனறத்தை நோக்கித் தலைவி தானுறற நோய தணிதற்கும் உரியள்' எனத் தோழி செவிலியிடம அறததொடு நின்றாள் (ஐங். 210). 'தோழி, நம் தலைவரது குன்றத்தைப் பாடானாயின வேலனுககுத தான் எடுக்கும் வெறியாட்டு எனன பயனைத தரும்' எனத் தோழி செவிலி கேட்குமாறு தலைமகளிடம் கூறினள் (ஐங். 244). குனறக்குறவன (ஐங். 251-260:1). கிழங்குகளை யகழநத கேழல் உழுத புழுதிக்கண் வித்தியதனால் விளைநத பயிரைக கானவர் கொயயும் சிறப்பினைக் குனறம் உடைய தேனும் தலைவன் வரைவு காரணமாகப பொருள வயிற் பிரிந்து சென்றமையால அது புலவெனறு பொலிவழிநதது; அக குன்றத்தின் தனிமை கொணட நெடுவரையைக் காணினும் தலைவி நோயுறறழுவாள் (ஐங். 270:1-4). குன்றக்குறவர் (ஐங். 284:2). 'குன்றநாடனது (முருகனது) குனறததின் பககமலையில் சுனையில பூத்த குவளையும கொடிசசியது கண்போல் மலர்தலரிது' எனத் தலைவன தலைவியின் கண்ணழகை நினைந்து உவநதான (ஐங். 299: 1-4). 'தலைவீ வருந்த நீ அவளைப பிரிந்து, களிறு பிடியானையைத் தழுவிப் பிறபுலம் செலலாமல பசியினால் வருந்துதற்கிடமான பசுமையற்ற குனறத்து வழியிற் செல்லுதல் நினக்கு எனன பயனைத தரும்' எனத் தோழி தலைவனைப பிரிவு விலககிப் பேசினள் (ஐங். 305). 'தோழி, நினைத்தோர் நெஞ்சு பனித்தற்குக் காரணமான பெரிய குன்றத்தைக கடந்து சென்ற தலைவர்க்கு அவர் தேடும் பொருள நம் முயக்கினும் இனியது' எனத் தலைவி தோழியிடம் இரங்கி மொழிநதாள் (ஐங். 337). 'அறநெறி இதுவெனத் தெளிந்த என குறுமகள் தன் தலைவ

னுடன் போன சுரநெறியில் மள்ளர் பறைகொட்டினால் மயில் தோகை விரித்து ஆடுகின்ற உயர் நெடுங்குன்றத்தில் மழைபெய்து வழிமிக இனியதாகுக' எனத் தாய் இரங்கி வேண்டினள் (ஐங். 371). அழுங்கல் மூதூரில் அலரெழுமாறு தலைவி தலைவனுடன் செழும்பல் குன்றம் கடந்து சென்றாள் (ஐங். 372). தலைவியிடத்தே இருந்த மகன் தலைவனைக் கண்டவுடன் குன்றத்திடத்து அடிவரையில் புலி பாய்ந்தாற்போல அவனது மார்பிலே தாவினான் (கலி. 86:32-34). 'ஆராக் கனைகாமத்தால் குன்றத்திடத்தே மாரிக்காலத்தில் நின்னோடு பல நாளும் தங்கின கடவுளரைக் கண்டாயோ' என்று தலைவி பரத்தையைக் குறித்துத் தலைவனை வினவினாள் (கலி. 93:26-28). 'ஆலமும் கடம்பும் யாற்றிடைக் குறையும் காற்றின் செலவு தடையுறுதற்குக் காரணமான உயர்ந்த நிலையுடைய குன்றமும் பிறவுமாகிய இடங்களைப் பொருந்திய பல தெய்வங்களாக வகுத்துச் சொல்லப்படும் பெயரையுடையோய்' என்று திருமால் போற்றப் பெறுவர் (பரி. 4:67-69). 'இத்தளிர்கள் வையை நீர் காரணமாகவே துவண்டன; முருகனது குன்றத்தின் (திருப்பரங்குன்றத்தின்) மேல் ஆணை' எனத் தலைவன் காதற் பரத்தையிடம் கூறினான் (பரி. 6:68,69). மூவரும் தேவரும் பிறரு மெல்லாம் முருகனை வணங்கும் பொருட்டு வந்து உறையும் இடமானமையால் அவனது பரங்குன்று இமயக்குன்றம் ஒக்கும் (பரி.8:1-11). முருகனது குன்றத்தொடு (திருப்பரங்குன்றத்தொடு) கூடல்நகர்க்கு இடைப்பட்டவழி, தும்பியும் வண்டும் மிஞிறும் ஆர்ப்ப, மலர்கள் பலவும் மலர்ந்து மணம் பரப்பத் தென்றல் அசையும் தலைமையுடையது (பரி. 8:23-28). 'குன்றத்தையுடைத்த ஒளிர்வேலோய்' என்று செவ்வேள் ஏத்தப் பெறுகின்றார் (பரி. 8:29). கூடல் நகரத்தில் மணம் பொருந்திய மணி நிற முரசின ஆர்ப்பெழுந்ததனால் அதற்கு மாறுமாறாக முருகனது குன்றம் காற்றால் ஏறுண்ட கடலெனவும் கடலைக் குடிக்கும் மேககுரலெனவும் பெரிய இடிக்குரலெனவும் முழங்கும் (பரி. 8:29-35). 'மலருண்கண்ணாய், முருகனது குன்றத்துச் சாரலின்மேல் ஆணை; என் மீது வீசும் இம்மணம் பரங்குன்றின் கனியினும் மலரினும பயின்ற காற்று மோதியதனால் வந்தது' எனத் தலைவன தலைவியிடத்துச் சூளுற்றான் (பரி. 8:51-55). 'மணத்தைத் தருகின்ற செவ்வேளின் தணபரங்குன்றத்து அடியைத் தொட்டேன்' என்பது தலைவனின் சூள்மொழி (பரி. 8:61,62). 'தண்பரங்குன்றமே, உடம்புணர் காதலரும் அல்லாரும் கூடிக் கடம்பமர் செல்வன கடிநகரை வழிபட, மண்வருந்த மழை வறந்ததாயினும் நெறி நீரருவி அசும்பு மிகும் செல்வம் நினக்கு மன்னுவதாக' என்று ஆசிரியர் நல்லந்துவனார் அக்குனறத்தை வாழ்த்துவர் (பரி. 8:125-130). செவ்வேள் காரணமாகத் தேவசேனை தமர்க்கும் வள்ளிதமர்க்கும் இடையே நிகழ்ந்த பூசலில் வெறியாட்டினை விரும்பியோனின் (செவ்வேளின்) குன்றத்து வள்ளியின் வண்டு தேவசேனையின் கொணடையிற் செறிந்த வண்டின் மேற்சென்று பாய்ந்தது (பரி. 9:43,44). அறிவெல்லையால் அறியப் படாத புகழுடனே பொலிந்து நிலவெல்லையைத் தாங்கிய நிலைமை நீங்காத நேமி (சக்கரவாளம்) முதலாகத் தொல்லிசைப் புலவர் ஆராய்ந்துரைத்த கொண்டாடப் படும் நெடுங்குன்றங்களைப் பொதுவகையால் கணக்கிட்டால் அவை பலவாம் (பரி. 15:1-5). 'விரிமலர் மதுவால் மரங்கள் நனையும் குன்றத்து (திருப்பரங்குன்றத்து) அடியின்கண் உறைதலை விரும்புவோர் மேலோர் உலகத்து உறைதலை வேண்டார் என நல்லழிசியார் நவில்வர் (பரி. 17:5-8). முருகனது குன்றம் கல்விகளால் வெற்றிபெற எண்ணியவர்கள் மாறு மாறாக எழுந்தாற்போல் ஓசைகளால் மாறெதிர் கொள்ளுதலையுடையது (பரி. 17:20,21). 'பிணிமுகம் ஊர்ந்த வெல்போர் இறைவ, யாமும் எம் சுற்றமும் பிறவித் துன்பம் சாராத வைகலைப் பெறுக வென்று நின் அணிநெடுங்குன்றத்தைப் பாடித் தொழுகின்றோம்' என்று நல்லழிசியார் திருப்பரங்குன்றத்து முருகனைப் பாடுவர் (பரி. 17: 49 - 53). மகளிர் ஊடலைத் தக்க பணிமொழிகளால் மைந்தர் உணர்ப்பித்தல் முருகனது குன்றத்தின் இயல்பாகும் (பரி. 18:13,14). 'நின் குன்றத்தின்கண் எழுதிய அழகையுடைய அம்பலம் காமவேளின கணைபயில் கூடத்தை (சிரமச்சாலையை) ஒக்கும்' என்று குன்றம்பூதனார் முருகனின் திருப்பரங்குனறினைப் பாராட்டுவா (பரி. 18:27-29). முருகனது மலையின்கண் அவன் கோட்டமும் அதனைச் சூழ்ந்த இடமுமான குன்றத்திடத்தே போா ஆரவாரம் போலத் தாளவொலியோடு இயங்கள் ஆரவாரிக்க மேகதொகுதியும் அவ்வாரவாரத்துடனே நினறொலித்தது (பரி. 18:42-45). 'நின் குன்றத்தின கீழ்நின்ற இடைநிலம் பாண்டியனின் பாசறை நீர்மையினை யுடையது' என்று முருகனது பரங்குன்றினைப் பாடுவார் நப்பண்ணனார் (பரி.19:35-37). முருகனது குன்றத்தைக் குறுகி அவனுடைய யானைக்குச் செய்யும் பூசைக்கண் அவ்வியானை கவழங்கொண்ட மிச்சிலைச் சிறப்புடனே உண்ணா தொழியின் மணம் பெற்ற மகளிர் தம் காதலரின் தலையளியை எய்தார்

கன்னியர் மறுவற்ற மைந்தர் தோளைக் கூடார் (பரி. 19:85–94). பகைமை பொருந்திய உருகு பெயர்க் குன்றத்தின்கண் வேலைச் செலுத்தி அம்மலையை உடைத்தவர் முருகவேள் (பரி. 19: 102,103). 'வெற்றியினால் கொடியை அணிசெய்த செல்வ, நீ அமர்ந்தது தண்பரங்குன்றம்; இக்குன்றத்து அடியின்கண் உறைதல் எமக்கு மறுபிறப்பினும் இயைக' என்று நல்லச்சுதனார் முருகவேளை வேண்டுவர் (பரி. 21:12-17). இடையறாதொழுகும் அருவி அரிய விடரின்கண்ணே பரந்த முருகனது குன்றம் மைந்தர் பூசிய சந்தனத்தைத் தடவிப் புலர்த்தும் காற்றையும் மகளிர் பூந்தாதை உதிர்த்த கூந்தலினூடு புகுந்தசைத்த காற்றையும் தனக்குரிய பூசையிற் காட்டிய தூபப் புகையூடு நுழைந்த காற்றையும் உடையது (பரி. 21:46-53). பாண்டியனது பொதியிலாகிய குன்றம் இருக்குமளவும் மதுரை நின்று நிலைத்துத் தமிழ்மொழி வழங்கும் பரப்பினையே எல்லையாக வுடைய தமிழ்நாடெங்கும் புகழ்பூத்தலல்லது குன்றுதலில்லை (பரி. தி. 8).

**குன்றம்பூதனார் – புலவர்.** பூதன் என்பது இவர்தம் இயற்பெயர். 'ஆர்' சிறப்பு விகுதி. பொதுப்பட மலையைக் குறிக்கும் குன்றம் எனும் சொல் சிறப்பாகத் திருப்பரங்குன்றததைக் குறிக்குமாதலால் இவர் அவ்வூரைச் சேர்ந்தவராகலாம். அன்றியும் இவர் அக்குன்றத்தையும் அதன்கண் அமர்ந்துறையும் செவ்வேளையும் சிறப்பித்துப் பாடியுள்ளமையாலும் தம் பெயர்முன் குன்றமெனும் அடை பெற்றிருக்க வாய்ப்புண்டு என்பர் (உ. வே. சா. பதிப்பு. பரிபாடல் பாடினோர் வரலாறு; ப. மு. பக். 308). பரிபாடலில் இவர் பாடல்கள் இரண்டு (9,18) உள்ளன. அவ்விரு பாடல்களாலும் இவர் திருப்பரங்குன்றத்துச் செவ்வேளையே போற்றியுள்ளமையால் இவர்க்கு அச்செவ்வேளிட முள்ள ஈடுபாட்டினை உணரலாம். நான்மறை விரித்து நல்லிசை விளக்கும் வாய்மொழிப் புலவரை விளித்து அவர்கருத் தமிழ் அகத்திணைக் களவு நெறியின் சிறப்பினை இவர் ஒன்பதாம் பரிபாடலில் கூறும் பகுதி சிறப்புடையதாம். அதனுள் கற்பு வாழ்வின் துனிக்கும் தவற்றினைக்காட்டி அத்தவறு படாத களவினை இவர் வேறுபடுத்திப் பாராட்டுவர். 'காதற் காமம் காமத்துச் சிறந்தது' என்று கூறி அத்தொடரினை 'விருப்போரொத்த மெய்யுறு புணர்ச்சி' என்று விளக்குவது அரிய செய்தியைப் புலப்படுத்துவதாகும். களவு கற்பு வாழ்க்கைத் திறன்களை முருகன மனைவியரான வள்ளி, தேவசேனையரிடத்துப் பொருத்தி இவர் நாடகப் பாங்கில் நடத்திக் காட்டும் நயமும் பாராட்டற்பாலது. அப்பாடலில் திருப்பரங்குன்றத்தின் கவலவனத்தையும் இவர் சுட்டுரைப்பர். பதினெட்டாம் பரிபாடலில் மயிலின் அழகை நோக்கி நின்ற கானவனொருவனிடத்து அவன் காதலி ஊடுவதையும் அவளுடலைத் தக்க பணிமொழியால் அவன் உணர்த்துவதையும் இவர் அழகுறப் புனைந்து அதனைத் திருப்பரங்குன்றத்து இயல்பாக எடுத்துரைக்கின்றார். இருபாடல்களிலும் செவ்வேளின் அடியுறையின்பத்தையே தமக்கும் தம் சுற்றத்தினர்க்கும் அருளுமாறு இவர் அவ்வேளை வேண்டி முடிப்பதில் இவரது ஈடுபாடு புலப்படும்.

**குன்றவர் - குறவர்.** குறிஞ்சி நிலத்து மக்களாகிய குன்றவர் - குறவர் - பெற்ற மறங்கெழு வள்ளி தமராகிய கொடிச்சியர் வானவன மகள் (தேவசேனை) பாங்கியரோடு போர் புரிந்தனர் (பரி. 9: 67, 68).

**குன்ற வெற்பன் - மலைநாடன்.** தினைப்புனங் காத்திருந்த தலைவி மந்தியும் அறியாத மரங்கள் செறிந்த ஒரு பக்கத்தே குன்ற வெற்பனொடு – குறிஞ்சித் தலைவனொடு – விளையாடினள் (நற். 194: 7-9).

**குன்றி - குன்றிச்செடி.** கொல்களிற்றைப் பெறினும முகம் மாறித் தரும் பரிசிலைக் கொள்ளேன; மாறாக உவந்து இன்புற விரையத் தருவராயின் சிறிதாகிய குன்றிமணி அளவையுடைய பொருளையும் பரிசிலாகக் கொள்வேன் என்றும் குமணனிடம் பெருஞ்சித்திரனார் கூறினார் (புறம். 159: 22-25). மறவன, அகலின்கண் பெய்த குன்றி மணி உருளுதல் போலச் சுழலுகின்ற கண்ணினன் (புறம். 300: 4). இளையோள் தழையுடை யசைய்ச் சென்று செம்மணி போல நிறமும் பொறியுமுடைய குன்றியின் கொத்துக்களைத் தொகுத்தனள (புறம். 340: 1, 2). வெள்ளெலியேற்றை குன்றிமணி போன்ற கண்களை யுடையது (அகம். 133: 1, 2). செவ்வேள் குன்றியை ஒக்கும் சிவந்த ஆடையினன் (குறு. க. வா. 3).

**குன்றியனார் – புலவர்.** இவரது பெயர்க்காரணம் புலப்படவில்லை. ஆயினும் குன்றிமணியை இவர் சிறப்பித்துப் பாடி அதனால் இப்பெயர் பெற்றிருக்கலாம் என்று நினைத்தற்கு இடமுண்டு. இவர் பெயர் குன்றியான், குன்றியாள் எனவும் காணப்படுகின்றது. அகநானூற்றில் இரண்டும் (40, 41) குறுந்தொகையில் ஆறும (50,51,117,238,301,336) நற்றிணையில் இரண்டும் (117, 239) ஆகப் பத்துப் பாடல்கள் இவருடையனவாக உள்ளன. இவற்றுள் அகம். 41-ஆம் பாடலின்கீழ் இவர் பெயர்க்குப் பாட வேறுபாடாகச் சேரமானந்தையார் என்ற வேறுபெயர் உள்ளது. கார்காலத்து மீள்வதாகப் பருவங் குறித்துப் பொருள்வயிற்

பிரிந்த தலைவன் அப்பருவ வரவின்கண்ணும் தான் மீளவியலாத நிலையில் தலைவியின் வருத்தத்தை யெண்ணி நொந்து மொழிவதை இவர் ஒரு பாடலில் (அகம். 41) அருமையாகப் புனைந்துள்ளார். வரைவிடை வைத்துப் பிரிந்த தலைவனை மீண்டு வரக் காணாத தலைவி தன் ஆற்றாமையைத் தோழியிடம் கூறும் போது, 'அவரது நெடுந்தேர் வாராதாயினும் வருவதுபோல இரவுப்பொழுதில் என் செவியில் இசைக்கின்றவதனால் யான் துயில் மறந்தேன்' என உரைத்தாள் என்று பாடியுள்ள குறுந்தொகைப் பாடலின் (301) நயம் காணத்தக்கும். கார் காலத்தில் காடு அணிகொள்வதையும் (அகம். 41) மாலைக்கால நிகழ்ச்சிகளையும் (அகம். 40;நற். 117) இவர் அழகுறப் பாடுவர். மேலைக் கடற்கரைத் தொண்டி நகரைச் சிறப்பித்துள்ளமையால் (குறு. 128) இவரைச் சேரநாட்டவர் எனக் கருதுவர் பி. நா. (நற். பாடினோர் வரலாறு).

**குன்று** - சிறுமலை. வடக்கில் இமயமும் தெற்கில் குமரியும் மேலும் கீழுமாகிய திசைகளிற் கடலும் எல்லையாக நடுவுபட்ட குன்றும் மலையும் காடும் நாடும் என இவற்றையுடைய மன்னர் ஒரு பெற்றிப் பட்டு யானைக்கட்சேய் மாந்தரஞ் சேரல் இரும்பொறைக்கு வழிபாடுகூறினர் (புறம். 17:1-4). பகைவர் விடுத்த அம்புகள் யானைமீது ஊடுருவித் தங்கியிருந்த தோற்றம் குன்றிடத்தே தங்கிய குருவி இனம் போன்று காணப்பட்டது (புறம். 19:7-9). பிறர்தம் குன்றுகெழு நாடுகள் புலி வடிவாகச் செய்யப்பட்ட பொறியைக் கயலுடன் பொறித்த சிகரங்களை யுடையவாகுக எனப் பாண்டியன் பெருவழுதியும் சோழன் பெருந் திருமாவளவனும் ஒருங்கிருந்தவழிக் காரிக்கண்ணனார் கூறினார் (புறம். 58:20-22). பறம்புமலை வாளாற் கொள்ளற்கரியது; மாறாக யாழ்வாசித்து, விறலியர் பின்வர ஆடியும் பாடியும் பாணராய்ச் செலவின் பாரி தன் நாட்டையும் குன்றையும் பரிசிலாய்த் தருவான் (புறம். 109:13-18). 'நீவிர் மூவிரும் கூடிப் பொருதாலும் பறம்பு கொள்ளற்கு அரிது; பறம்பு நாட்டிலுள்ள முந்நூறு ஊரும் பரிசிலர் பெற்றனர்; நீவிர் பாடினிராய் வரின் யாமும் பாரியுமே உள்ளோம்; அதுவே யன்றிக் குன்றும் உண்டு எனக் கபிலர் பறம்பை முற்றியிருந்த மூவேந்தரிடம் கூறினார் (புறம். 110:4-6). பாரியின் பெரிய கரிய குன்று வேந்தர் வேலால் வெல்லுதற்கரிது; கிணைமகள் பாடினளாய் வரின் கொள்ளுதற் கெளிது (புறம். 111). 'அற்றைத் திங்கள் அவ்வெண்ணிலவில் எம் தந்தையும் உடையேம்; எம் குன்றும் பிறர் கொள்ளார்; இற்றைத் திங்கள் இவ் வெண்ணிலவில் வேந்தர் எம் குன்றையும் கொண்டார்; யாம் தந்தையையும் இழந்தேம்' எனப் பாரி மகளிர் கையற்றுப் புலம்பினர் (புறம். 112). உயர்ந்தோனாகிய பாரியின் குன்று ஈண்டு நின்றோர்க்கும் தோன்றும்; சேய்மையில் நின்று காண்குநர்க்கும் தோன்றும் (புறம். 114: 1,2,6). பகைவேந்தர்க்குக் கொடியோனாகிய இனியோன் குன்றின் ஒருபக்கத்தே அருவி ஆர்த்தொழுகும்; ஒரு பக்கத்தே வடிக்க உக்க கட்டேறல் கல்லை உருட்டி ஒழுகும் (புறம். 115). நள்ளி புகழ்மிக்க தோட்டி மலையைக் காக்கும் அழகிய நெடுங்குன்றினையும் பளிங்கு போன்ற இனிய நீரையும் உடைய பெரிய மலைநாட்டை யுடையவன் (புறம். 150:26-28). பிட்டங்கொற்றன் பகைவர் படை அடர்த்து வருங் காலத்துத் தன் படையின் அணியைத் தாங்குதற்கு ஆற்றின் குறுக்கே அணையாகத் தடுத்துக் கிடக்கும் குன்றை யொப்பப் பகைவர் படையைத் தடுத்து நிறுத்தும் தன்மையன் (புறம். 169:3-5). 'குன்றுகளும் மலைகளும் பல பின்னொழியப் பரிசில் கொண்டு செல்லுதற்கு வந்தனென்' எனப் பெருஞ்சித்திரனார் அதியமானிடம் கூறினார் (புறம். 208: 1,2). இடியேறு நீண்ட மலை பிறழக் குன்று தூவ எறியும்போது எழும் ஓசை போல முரசு முழங்கும் (புறம். 211:1-4). நெற்போர்கள் குன்றைக் கண்டாற்போன்று தோற்றமளித்தன. (புறம். 353:8). மண்ணுலகு குன்றுகளோடு கூடிய மலைகளைத் தனபாற் பிணித்துள்ளது (புறம்.357:1). குன்று போன்றன களிறுகள் (புறம். 387:22). சோழிய ஏனாதி திருக்குட்டுவன் குன்று கெழு நாட்டினன் (புறம். 394:18). காட்டுமல்லிகை கமழுகின்ற கன்றுடன் கூடிய பிடிகளை மொய்க்கும் வண்டுகளைக் களிறு ஓட்டுதற்கு இடனான குன்றுகள் பல கடந்து பரிசிலர் சென்றனர் (பதி. 12: 10-14). பாலைநிலம் குன்று தலைமணந்த புன்புல வைப்பினை உடையது (பதி. 30:13). ஞாலம், குன்றுகள் தம்மிற் கூடப்பெற்றுக் கடலை ஆடையாகக் கொண்டது (பதி. 31:1,2). பெரு வறட்சி உண்டாய போது குன்றும் வறங் கூர்ந்தது (பதி. 43:12,14). செல்வக் கடுங்கோ வாழியாதனின் சீற்றம் குன்றைத் தன் நிலையினின்றும் தளரச் செய்யும் இடியை யொக்கும் (பதி. 63:10). செல்வக் கடுங்கோ வாழியாதன் கபிலருக்கு நன்றாவென்னும் குன்றேறி நின்று தன் கண்ணிற் கண்ட நாடெல்லாம் காட்டிக் கொடுத்தான் (பதி. ப. 7. அடிக்குறிப்பு). குதிரைகளோடு யானைகளை மிகுதியாக உடைய பெருஞ்சேரலிரும்பொறையின் குன்று முரசொலியைப் போல ஒலித்து இழிதரும் வெள்ளருவியை

யுடையது (பதி. 78:1,2, 13,14). மதுரையின் மேற்றி சையிடத்தே உள்ளதும் வண்டினம் வயலில் மலர்ந்த தாமரைப்பூவில் துஞ்சி வைகறையில் நெய்தல் மலரை ஊதிப் பின் கண்போல் மலர்ந்த சுனைப் பூக்களிலே சென்று ஆரவாரிக்கும் இயல்பினது மான குன்றிலே (திருப்பரங் குன்றிலே) செவ்வேள் நெஞ்சமர்ந்து உறைதலும் உரியன் (முரு. 71-77). மகளிர் குரவையாடி அசைய வேலன் தன் தடக் கையினான் அவர்களைத் தழுவி ஏந்தி, முதற்கை கொடுத்துக் குன்றுதோறும் விளையாடுவான் (முரு. 215-217). சூரனது மார்பும் குன்றும் துளைத்த முருகனது வேல் அடியார்க்குத் துணையாகும் (முரு. வெ. 3:3,4). நெற்சூட்டைக் குவித்துக் கடா விட்டுக் குன்று எனும்படி உழவர் நெற்பொலி யைக் குவித்தனர் (பொரு. 243, 244). குன்றோடு மாறுபடும் தோற்றமுடையது யானை (பெரு. 351, 352). ஆய்ச்சியின் கண்கள் திருமால் குன்றெடுத்து நின்ற நிலையைக் காணப்பெறுவது என்று கொல்? (முல்லை. வெ. 1). அந்தணர் பள்ளி குன்றினைக் குடைந்தாற் போன்ற தோற்றமுடையது (மது. 474). குனறுகள் பலவும் திரண்டு பொலிவன போலக் கோயில் திகழ்ந்தது (மது. 487,488). குறும் பல் குழுவின் குன்றுகளைக் கண்டாற் போன்றன பல மாட்சிமைப்பட்ட நல்ல இல்லங்கள் (மது. 500, 501). குன்றைக் குளிர்ச்சி செய்யுமாறு கூதிர்க் காலம் வந்தது (நெடு. 12). குன்றை நடுவே குடைந்து திறந்தாற் போன்று கோயிலின் ஓங்கு நிலை வாயில காணப்பெற்றது (நெடு. 88, 100). பலவின் பழத் தேறலை நீரெனக் கருதி யுண்ட மயில் கயிறாடு மகளிர் போலத் தளரும் சாரலை யுடையதும் விண்ணைத் தீண்டும் சிகரங்களில் பூத்த காந்தள் மலர்கள் வரையர மகளிர் விளை யாடுதலின் கீழே பரந்து கச்சுப் பரந்த களம் போல அழகுபெறப் பொலிவு பெற்றதுமான குன்றுகெழு நாட்டினன் தலைவன் (குறி. 191-199). 'நின்று கண்ணால் நோக்கினும் கண்ணொளியைத் தன் அழகால் வாங்கிக் கொள்ளும் இடமுண்டா கிய குன்றிடத்தே வருத்தத்தைச் செய்யும் குழிகளி டத்து உண்டாகும் இடையூறுகள் பலவாகும்; அவற்றை முழவினது காமரத்தை ஊன்று காலா கக் கொண்டு தளர்தல் ஓம்பிக் கழிமின்' எனக் கூத்தர் ஆற்றுப்படுத்தப் பெற்றனர் (மலை. 368 - 372). நன்னன மலையினின்றும் இழிதரும் அருவிகள் வென்றுயர்ந்த கொடிகள போலத் தோன்று கின்ற குன்றுகள் சூழந்த பரப்பினையுடைய நாட் டிற்கு உரிமையுடையவன் (மலை. 581-583). சிற்றூ ரின்கண் மகளிர் உலக்கையாற் குற்றுதலின் உரலி னின்றும் எழுந்த ஒலி மலைப் பக்கத்திலுள்ள ஆந் தையொலியோடு மாறி மாறி ஒலிக்கும் குன்றுகள் பின்னொழியுமாறு தலைவனைக் காட்டிலும் அவன் நெஞ்சம் தலைவியைக் காண விரைந்தது (அகம். 9:10-18). உளியின் வாய் போன்ற கூரிய வெம்பரல்கள் பொருந்திய நெறிகளை யுடைய குன்றுகள் பலவற்றைக் கடந்தும், தலைவி மையுண்ட கண்களின் மயங்கிய நோக்கினை யுள்ளிய தலை வன் நெஞ்சம் அவன் தனியாய் ஒழியத் தலைவி பால் சென்றது (அகம். 33: 9-13). பெருங்குளங்கள் குன்றுகளைக் கண்டாற் போலும் பெருங்கரை களை யுடையன (அகம். 42:7,9). தலைவன குனறு கிழவோன் எனச் சுட்டப்பெறுதல (அகம். 48:22). கடுங்கண் மறவரது காட்டரணகளில் எழுந்த தண்ணுமையொலி அருஞ்சுரம் செல்வோர் நெஞ் சம் நடுக்குறக் குன்றினைச் சேர்நத கவர்தத வழிகளில் இசைக்கும் (அகம். 87:7-10). குனறிடத்துப் பொருந்தியது சீறூர் (அகம்.152:2). வாடைக்காறறு குனறை நெகிழச் செய்வது போன்ற குளிரைக் கொண்டது (அகம். 163:9). தலைவியிருநத மணங் கமழும் தெருக்களையுடைய மணற் பெருங்குனறு புகார் நாட்டின்கண்ணது (அகம். 181:22-26). உதி யஞ்சேரல் தன முன்னோர்க்குப் பலியாகப் பெருஞ் சோறு படைத்த காலத்தே அதனை உண்ணற்குப் பேய்ச் சுற்றங்கள் கூடியிருந்தாற் போலக குறியன வும் நெடியனவுமாய குன்றுகள் குழுமப் பெற்றது சுரன் (அகம. 233:8-12). குனறிலுள்ள மரததின கிளைகள் எரியுமாறு ஞாயிற்றுக கதிர்கள் காய்ந் தன (அகம். 295:2). கவண கலலின் கடிய தாககு தலையுடைய பகற்பொழுதில் இயங்காது இரவின கண் தினைப்புனத்தை மேய்நத யானை, தண் பெருந்தூற்றினைக் கண்டு அஞ்சும் குன்றுகள் குறுக்கிடும் நெறிகளையுடைய நம் தலைவர் சென்ற நாட்டின்கண நாமும் செல்லின என்னையோ எனத் தலைவி தோழியை வினவினாள் (அகம். 309: 12-17). 'குன்று போலத் தோன்றும் குவவு மணற் சேர்ப்ப' எனத் தலைவன விளிக்கப் பெற்றான (அகம். 310:10). குன்றோங்கு வைப்பின் நாடு (அகம். 338:1). தலைவன் குனறினை இழிந்து செல லும் களிறு போலத் திரண்ட மணல் மேட்டினைக் கடநது இரவில் குறியிடத்திற்கு வந்தான் (அகம். 360: 14, 19). மண்ணில் ஊன்றிய கொம்பினை அசைத்துப் பெயர்க்க இயலாது வலி குன்றிய மதக் களிறறின் தடக்கை, குன்றில நுழையும் பாம்பு போலத் தோன்றும் (அகம். 391.10-13). சிகரம் உயர்ந்த பாறைகளை யுடைய குன்றுகள் பலவற் றைக் கடந்து தலைவன் பொருள்வயிற் பிரிந்து

சென்றான் (அகம். 393:1,2). தலைவனைக் குன்று கெழுநாடன் எனக் குறித்தல் (அகம். 398:10;குறு.87:3; 252:2). முருகன் குன்றின் நடுவிடம் பிளக்கும்படி எறிந்த அழகிய ஒளியுடைய நெடுவேலினை உடையவன (குறு. க. வா. 3,4). மேகம் தவழும் குன்று சேர் சிறுகுடி (குறு. 108:1). 'வங்காச் சேவல் நீங்கப் பெற்ற பேடை, புல்லூறு வீழ்ந்ததாகக் கணவனைக் காணாது குறிய பல ஒலிகளால அழைக்கும் குன்று கெழுமிய சிறுநெறிகள் அரிய என்னாது தலைவியை மறந்து செல்வேன் என்பது நம் இளமைக்கு முடிவு எனத் தலைவன் தன்னெஞ்சிற்குக் கூறினான (குறு. 151). குன்றினின்று இழியும் அருவி போல வெண்டேர் விரைந்து சென்றது (குறு. 189:2). வாடை வந்து அலைத்த பின்பும் வருத்தம் மிகுமாறு தலைவனது மணி நெடுங்குன்று, க லில் ஆழகின்ற மரக்கலம் போலத் தோன்றி மாலைக் காலத்தில மறையும் எனத தலைவி தோழியிடம் கூறினாள் (குறு. 240:4-7). குன்றுதலை மணந்த கானம் தலைவர் சென்றனரோ எனத் தலைவி தோழியை வினவினாள் (குறு. 281:5,6). யானையின் ஒரு மருப்புப் போன்ற ஒன்றாகிய இலங்கும் அருவியையுடைய குனறினைக் கடந்து தலைவர் ஏகினார் (நற். 18:8-10). சுரத்து நெறியில் குன்றை ஊர்ந்து செல்லும் திங்களை நோக்கி நின்று நினைந்து திலகமிட்ட தேங்கமழ் திருநுதலையுடைய நாண் மதித் திங்கள் என்பது ஒன்று எம்முடையதும் உண்டு; அஃது இப்பொழுது கல்லோங்கு மாமலை மீதுள்ளது என்று உள்ளினேன் அல்லனோ என மீண்டும் பொருள் வலிக்கப்பட்ட நெஞ்சிற்குத் தலைவன் கூறினன் (நற். 62:3-10). தலைவனின் சிகரம் உயர்ந்த குன்றின்கண் வல்லிடி முழங்கும் அரையிருள் நடுயாமத்தில் மினனி யியங்கும் முகில் தஙகி மழை பெய்தது (நற். 68:8-10). தலைவர் நம் வயின செய்த கொடுமை நினைந்து, அவரது பழமுதிர் குனறுகள் நம்பாற் பெரிதும் அன்புடைமையின் தம் வருத்ததனதை அடக்கமாட்டாது கண்ணீர் அருவியாக அழுதன (நற். 88:6-9). குன்ற வைப்பின் கானம் சென்று நீங்கத் தலைவன் கருதினான் (நற். 137:9,10). உமணர் உவர் நிலதது விளைந்த உப்பினது குனறு போன்ற குவியலை மலைநாட்டகததே கொண்டுபோய் விலைபகரும் நிலையா வாழ்க்கையினர் (நற். 138:1-3). மேகமே, இம்மென முழங்கும் இடிகளோடு மாயோளாகிய தலைவியுடன அவள நலன நுகர்ந்து உறையும் நல்லூர்க்கண் மலருதிர மோதி இரவுபபெயல் பொழிநத உதவியை யுடையாய்; படுமலைப்பண் போனற ஒலியோடு பெயயும் மழையினை உடையையாகி உலகிற்கு ஆதாரமாகப் பலரும் தொழுமாறு பலவயின் நிலைநின்ற குன்றின் கொடுமுடிதோறும் பொருந்தி உலாவுவாயாக எனத் தலைவன மழையை வாழ்த்தினான் (நற். 139). யானை தீண்டியதனால் பொரியரையுடைய புழற்காய்க் கொன்றைமரம் குன்றின்கண் உறையும் தவசியர் போலப் பொலியத் தோன்றும் (நர் 141:2-6). மேகம் தான் முழங்குகின்ற இடியொலி மலைமுழையின்கண் எதிரொலித்து முழங்கும்படி, கொடுமுடி உயர்ந்த குன்றின்கண்ணே வந்து தங்கியது (நற். 156:9,10). குன்று போலத் தோன்றும் குவிந்த மணலாகிய திடர்மீது ஏறி நின்று தலைவன குதிரையைச் செலுத்தி வருநெறியைக் கண்டுவருவோம், வா எனத் தோழி தலைவியை அழைத்தாள் (நற். 235:6-10). குனறுபோல் உயர்ந்த வெண்மணலில் படர்நத கொடியடும்பின பூக்கொய்து தலைவன் தலைவிக்களித்தான (நற். 254:2). எருமை குன்றுசேர் வெணமணலில் துஞசும் (நற். 260:1-4). குன்றுகெழு கொடிச்சி (நற். 276:4). மந்திப்பறழ் குன்றினிடத்துப் பொருந்தி முன்றிலில் போகாது வேங்கை மரத்தின் கிளைமீது மறைந்திருந்து கொடிச்சியின் கையிலுள்ள தீம்பாலைக கவர்ந்தது (நற். 379:1-5). முகிலை உச்சியிலே கொண்ட மணி நெடுங்குன்று நிணத்தால் மூடப் பெற்ற ஊன்போலத் தோன்றும் (ஐங். 207:3,4). மணிநெடுங் குன்று வெண்டலை மாமழையைச் சூடிக்கொண்டு அமையாது தோன்றும் (ஐங். 209: 4,5). புகர்முகவேழம் ...துறுகல்லைப் பிடியெனப் பிறழ உணர்ந்து தழுவுதற்கிடனானது குன்றுகெழு நன்னாடு (ஐங். 239:1-3). குன்றக்குறவன் சந்தன மரத்தை யறுததுச் சுடுதலான் எழும் நறுமபுகை காந்தளோடு கமழ்தற் கிடனானது குன்று கெழு நாடு (ஐங். 254). பொன் போன்ற நிறமுடைய தினையைக் கட்டளைக்கல் போன்ற நிறமுடைய கேழற்பன்றி மாந்தும் குன்றுகெழு நாட்டினன் தலைவன் (ஐங். 263:1,3). தலைவன் புலியால் கொல்லப்பட்ட தன் பிணவின் குட்டியைக் கேழற் பன்றி காக்கும் குன்றுகெழு நாட்டினன் (ஐங் .265: 1-3). கடுவன் புலிமுழக்கிற் கஞ்சி விரைந்து குன்றுயர் அடுக்கம் பாயும் (ஐங். 274:1-3). குறவர் மூட்டிய கொள்ளிக்கு அஞ்சித் தன் புகலிடத்திற்கு விரைந்தேகும் மயில், தினைத்தாள் மீதிருந்த குருவி வருந்துமாறு பந்தாடு மகளிர் போல ஆடிச்செல்லுதற் கிடனான குன்றுகெழு நாட்டினன தலைவன் (ஐங். 295:3-6). ஒன்றோடொன்று உராய்கின்ற மூங்கிலிடத்துப் பிறந்த தீயைக் கண்டு புலி வெருவுதற்கு இடனானது குன்றுடை அருஞ்சுரம் (ஐங். 307:1,2). வனப்புற்ற

அருவிகளை உடையதாய் என் தலைவனைத் ... பாற் கரந்து காத்த குன்று அறத்தானே நின்று நிறைக; வறனுண்டாயினும் அறத்தானே நிறைக எனத் தலைவி உடன்போக்கில் உதவிய மலையை வாழ்த்தினாள் (ஐங். 312). கானம் வெற்றியுடைய உச்சியைக் கொண்ட குன்றுகள் நிறைந்தது (ஐங். 331:2,3). தலைவி இன்துணையாகிய தலைவன் தன்னை இனிது பாராட்டக் குன்றுயர் பிறங்கல் மலையைக் கடந்து சென்றனள் (ஐங். 387:5,6). மூங்கில் மிக்க உயர்ந்த மலையில் தோன்றிய அழவிடையே களிறுகள் அகப்படத் தலைமையுடைய வேழம் அதனை வழியுண்டாக மிதித்துத் தன் இனத்தோடு வெளியேறும் குன்று அழலும் வெஞ்சுரத்தைத் தலைவன் கடந்து சென்றான் (கலி. 25: 5-12). தலைவர் நம்முடைய தொன்னலம் கெடும்படி தாம் விரும்பாத நம்மையோ மறப்பாராக; வென்றி வேலையுடைய முருகன் குன்றின்மேல் பரத்தையருடன் விளையாடும் விளையாட்டையும் விரும்பாரோ' எனத் தலைவி தோழியை வினவினாள் (கலி. 27:14-16). என்முன் கைவளை நெகிழ என்னிடத்து வாராதவன் குன்றிலிருந்து இளமழை வைகலும் உலாவி நிற்கும் எனத் தோழியிடம் தலைவி கூறினாள் (கலி. 41:25-27). இழை நெகிழ்ந்து வீழும்படி நம்மை வருத்தினோன் குன்றாயிருந்தும் பக்கமலைக்கண் மேலே வைத்த தேனிறால் மழையிலே நுழைகின்ற மதியைப் போலத் தோன்றுகின்றதே எனத் தோழி தலைவனை இயற்பழித்துரைத்தனள் (கலி. 42:23-24). பகையெனக் கூற்றுவன் வரினும் கெடானாய்த் தன்னை உறவு கொண்டார்க்குத் தோற்றலை நாணாதவனுடைய குன்றின்கண், தும்பி காந்தளின் முகைமேலே அது அலருங் காலம் பார்த்திருக்கும் (கலி.43:8-11). மாறுகொண்டு ஆற்றாரெனினும் பிறர் குற்றத்தைக் கூறுதலை அறியாதவன் குன்று, மானினது செவி போல மூங்கில் முளையினது கண்ணைப்பொதிந்த பாளை கழன்று வீழும் பண்பினையுடையது (கலி.43:16-19). கொடிய கழிகள் சூழ்ந்த குன்று போல் வாலெக்கர் தோன்றும் (கலி.127:6). ஞாயிறு குன்றில் வந்து தோன்றிக் கொதித்துப் பரந்து தான் கொண்ட கோடைக்காலத்தில் போதற்கு அரிய வழியென்று கருதானாய்த் தலைவன் பொருள் தேடிச் சென்றான் (கலி. 150:15,16). உலகம் வெள்ளத்தில் அழுந்தின காலத்துத் திருமால் (வராகமாய்) தன் கழுத்தில் தாங்கி வெள்ளத்தினின்றும் எடுத்துத் திருத்திய தொழில் குன்றின் (மேருவின்) தொழிலோடு ஒக்கும் (பரி. 4:22-24). இரவில் புணர்ந்தோர் மகளிருடைய முலையிடையிலே கிடந்து இன்றுயில் கொள்ளுதற்குப் பூந்தாரினையுடைய செவ்வேளின் குன்று பொருந்துவதாகும் (பரி. 6:54,55). செவ்வேள் குன்றின் அருவி தாழும் சுனை, செவ்வேளை ஈன்ற தாமரையினது மின்போலும் இணர் உதிராத வற்றாப் பொய்கையை ஒக்கும் (பரி. 8:14-16). மழையின் இடிகுரல் கேட்ட கோழி குன்று அதிருமாறு கூவும் (பரி. 8: 18,19). 'சூளுரைத்தல் வேண்டின், வணங்கப்படும் குன்றையும் வையை மணலையும் கூறிச் சூளுரைக்காதே' என்று தோழி தலைவனிடம் கூறிச் சூள் விலக்கினாள் (பரி. 8:70,71). முருகனுக்குரிய குன்றத்தின்கண் (பரங்குன்றத்தின்கண்) ஆடல் பயின்றவரை அவ்வாடல் பயின்றார் வெல்லவும் பாடல் பயின்றாரைப் பாடல் பயின்றார் வெல்லவும் சூதாடுதல் வல்லாரைச் சூதுவல்லார் வெல்லவும் பிற கல்வியுடையார் இவ்வாறே வெற்றி பெறவும் இத்தகைய வெற்றிகளால் ஒப்பில்லாத புகழ் பரவியது (பரி. 9:71-75). மழை பெய்தலின் சுனைப் பூக்கள் மலர்ந்தன; கடப்ப மலரில் தாதூதும் வண்டினத்தின்குரல் பண் போன்றிருந்தது; மூங்கில்கள் மகளிர் தோளை ஒத்தன; மயில்கள் பிரிந்து சென்றாரை வம்மின் என்பன போல் கூவின; கொன்றை யிணர்கள் பொன்மாலை போன்றன; பாறைகளில் வேங்கை மலர் பரந்தன; நீர்ப்பக்கத்தே செழித்துள்ள காந்தள் மலர்ந்தன; அவற்றிடையே செங்காந்தள் பரந்தன; இவ்வாறு செவ்வேளின் குன்று (பரங்குன்று) கார்காலத் தன்மை மிக்கது (பரி. 14:1-17). நிலத்திலுள்ளோரது பசிவெம்மையை ஆற்றி நிறைபயன்கள் எல்லாவற்றையும் எப்பொழுதும் அவர் பெறப் பயன்படும் குன்றுகள் சிலவே (பரி. 15:6,7). திருமால் கருங்குன்றத்தை யொத்தவர் (பரி. 15:54). புகழால் திசையெங்கும் பரந்த குன்றின்கண் பொருந்தி உலகத்தார் பலவிடத்தும் செய்கின்ற பூசைக்கண் முருகன் ஆவியாகக் கொள்ளும் அகிற்புகை மேலே போதலான தேவர் இமைப்பர்; ஞாயிற்று மண்டிலம் தோன்றாமல் மறையும் (பரி. 17:29-32). செவ்வேளைப் பயந்ததனால் உண்டாகிய புகழைத் தான் பரந்து நின்று தாங்கிய குன்றோடு (இமயமலையோடு) ஒத்துச் செவ்வேள் விரும்பி எழுந்தருளிய குன்று புகழ்பெற்றது (பரி. 18:5,6). ஐந்து வளமும் மிக்குப் பொலிந்தது அணிதிகழ் குன்று (பரங்குன்று) (பரி. 18.15). மகளிரும் மைந்தரும குன்றிற்கும் (பரங்குன்று) கூடலுக்கும இடையெல்லாம் நெருங்கி யாத்திரை செல்லும் வழி, அவர்தம் மாலையை யுடைய தலைகள் இடைவெளியின்றி நிறைதலால் ஒத்த மலர்களை வைத்துக் கட்டி நில மகளுக்கு இட்ட மாலை போல் தோன்றும (பரி. 19:15-18). வழுதி மடமயிலனைய மகளிரோடும்

அமைச்சரோடும் கூடிச் செவ்வேளின் சூருறை குன்றின் தடவரை யேறிப் புகழுண்டாக வலம் வந்தான் (பரி.19:20-24). அன்பரது வாழ்த்தினை யுவப்பானது (செவ்வேளினது) குன்றின் இடவேறுபாடு சிறுவர்களுக்கு மடமை செய்தலை யுடைத்து (பரி. 19:55,66). பச்சிலை, ஆம்பல், காந்தள், எருவை, வேங்கை, தோன்றி, நறவம், கோங்கம், இலவம் ஆகிய இவற்றின் மலர்கள் தெற்றின மாலை போல் மலர் நிறைந்தும் கோத்த மாலை போல் நிறம் மாறுபட்டும் தொடுத்த மாலை போல் இடையிட்டும் தூக்கிக் கட்டின மாலைபோல் நெருங்கியும் பூத்தலால் செவ்வேளின் குன்றின் மேலுள்ள வரைமலையெங்கும் விடியற் காலத்துப் பலநிறத்து மேகமார்ந்த வானம் போலப் பொலியும் (பரி. 19:75-84). சூர்மாவைத் தடிந்திட்ட செவ்வேளின் குன்றின் மிசை மகளிரின் பல்வேறு செயல்கள் கைவல்லான் எழுதிய ஓவியத்து எழிலை ஒத்து விளங்கின (பரி. 21:27-29). மேகம் ஒலிக்கின்ற இடங்களில் மயில்கள் ஆடின; மலர்களில் தும்பிகள் குழல்போல் ஊதின; வண்டினங்கள் யாழிசை போல ஒலித்தன; அருவி நீர் முழவைப் போல ஒலித்தது; இவ் வொலிகளெல்லாம் ஒருங்கே பரந்து முழங்கும் வெற்றி முரசினையுடைய முருகவேளின் குன்றின்கண் ஒலித்தன (பரி. 21:30-33).

2. **பிண்டம்.** மறவர் பகைவரது குருதியைத் தெளித்துக் கலந்த திரட்சியை யுடைய சோற்றுக் குன்றுகளால் - பிண்டங்களால் - அச்சம் பொருந்திய இயல்பினையுடைய அயிரை மலையிலுள்ள கொற்றவையை வழிபடுவர் (பரி. 88:11,12).

3. **மணற்குன்று.** ஆம்பல் வள்ளித் தொடிக்கை மகளிர் குன்றின் - மணற்குன்றின் - மீதேறிப் புனலிடத்துப் பாய்வாராயின் புறத்தே நீர் செல்லுதற்குரிய வழியால் புனல் வழிந்தோடும் (புறம். 352:5-7).

**குன்றுபயன் - களவொழுக்கம்..** களவுப் புணர்ச்சியே சிறந்தது எனறு பாராட்டும் பொருள் இலக்கணத்தைக் கொண்ட தமிழை ஆராயாதவரே குறிஞ்சியின்கண் நிகழும் இனபமாகிய குன்று பயன்-களவொழுக்கத்தை - ஏற்றுக்கொள்ளார் (பரி. 9:24-26).

**குன்றூர் - ஓர் ஊர்.** வாளைமீனின் சூல்கொண்ட மடநாகு மாம்பழத்தைப் பற்றுதற்கு இடனான பழைய வேளிரது குன்றூருக்குக் கிழக்கே பெருங் கடல் உள்ளது (குறு. 164:1-4). பழனத்துள்ள யாமையின் முதுகில் கழனிகாவலர் நத்தையை உடைத்தற்கு இடனான பழைய வேளிருக்குரியது குன்றூர் (நற். 280:6-8).

**குன்றூர் கிழார் மகனார் - புலவர்.** 'தொன்றுமுதிர் வேளிர் குன்றூர்' என மாங்குடி மருதனாரும் (குறு. 164:3) பரணரும் (நற். 280:8) குறிப்பிடும் ஓரூர் சங்க இலக்கியங்களால் அறியப்படுகின்றது. கீழ்க் கடற் கரையதாக மாங்குடி மருதனாராலும் நன்மை மிக்கதாகப் பரணராலும் மருதவளம் சான்றதாக அவ்விருவராலும் ஒருமித்துப் பாராட்டப்படுகின்ற அக்குன்றூரே இப்புலவரின் தந்தையார்க்குரிய தாகலாம். புறநானூறு 338 - ஆம் பாடலின்கீழ் இயற்பெய ரின்றிக் குன்றூர் கிழார் மகனார் என்றே இப்புலவர் பெயர் காணப்படுகின்றது. எனவே, ஊர்ப்பெயரால் தந்தையார் சிறப்புப் பெற, தந்தையார் பெயரால் இவர் சிறப்புப் பெற்றுள்ளார். மற்று, நற்றிணையில் 332-ஆம் பாடலின்கீழ்க் குன்றூர்கிழார் மகனார் கண்ணத்தனார் எனக் காணப்படுதல் கொண்டு இவரது இயற்பெயர் கண்ணத்தனார் என்றுணரலாம். இவ்விரு பாடல்களையும், 'குன்றூர் கிழார் மகனார்' எனனும் பெயர்க்குக் கீழேயே அடக்கிப் பதிப்பித்துள்ளார் வையாபுரிப்பிள்ளை (ச.இ). இவையன்றி இவர் பாடியனவாக வேறு பாடல்களில்லை. மகட்பாற் காஞ்சித் துறையிலமைந்த இவர்தம் புறப்பாடலில் நெடுவேளாதன் என்பானுக்குரியதும் வளமிக்கதுமான போந்தை யென்னும் ஊரைக்குறித்து அதுபோன்ற சீரும் செல்வமும் அமைந்தவளென்று அப்பாடல் தலைவியை இவர் சுட்டுவர். மூவேந்தரே மகள் வேண்டி வரினும் தன்னை வணங்காதவர்க்கு மகட்கொடை நேரான் என்று அவளுடைய தந்தையின் மேம்பாட்டை இவர் கூறுகின்றார். கழனி நடுவே தோன்றுகின்ற ஓரெயிலுக்குக் கடல்நடுவே போக்கற்று நின்று உலர்ந்து தோன்றும் கலத்தை இவர் உவமித்துள்ள நயமும் உணரத்தகும். நற்றிணையில் அமைந்த அகப்பாடலை இவர் தலைவனின் பிரிவிடைத் தோழியின் வன்புறைக்கு எதிர் மொழியாகத் தலைவி கூற்றில் பாடியுள்ளார்.

# கூ

**கூஉ - கூவுதல் (அலறல்).** சோழன் நலங்கிள்ளி ஆவூர் முற்றியிருந்த காலத்து அடைத்திருந்த நெடுங்கிள்ளியை நோக்கிக் கோவூர் கிழார், 'நீரற்ற விளை மாட்சிமைப் பட்ட நல்ல மனையில் வாழும் மக்கள் வருந்திக் கூப்பிடும் கூஉ - கூவுதல் - கேட்கவும்

நாணாது ஈங்கு இனிதிருத்தல் இன்னாது எனக் கூறினார் (புறம். 44:7-9). உச்சிப் போதாகிய நண் பகலில் பசியால் வருந்தும் வெண் நரிகள் கூஉ முறை செய்தன (பதி. 22:34,35). பேதைச் சிறுமி ஒருத்தி தன் சுற்றத்தினரிடமிருந்து பிரிந்து அவ ரைக் கூவி அழைத்ததன் எதிரொலியை அவரின் குரலாய்க் கருதி ஆங்குச் சென்று காணாது மேலும் கூஉக்கூஉ மேற்கொண்டாள் (பரி. 10:58-65).

**கூஉங்கண்** - கூப்பீடு தொலைவு. அருவிகள் கொண்ட மலையிடத்து, கூஉங்கண் - கூப்பிடுதொலைவு - உள்ளது தலைவியின் ஊர் எனத் தலைவனிடம் கூறத் தோழி மறந்ததாகக் குறிப்பிட்டாள் (அகம். 38:16,17). கடலை அரணாகவுடைய எமது சிறு நல்லூர் கூஉங்கண்ணஃது எனத் தோழி தலைவ னிடம் கூறல் (அகம். 310:13,17).

**கூகை** - கோட்டான். இடுகாட்டின்கண் கழுகின் சேவ லும் பொகுவலும் கர்க்கையும் கூகையும் - கோட் டானும் - கூடிப் பேயினத்துடன் தாம் விரும்பிய வழியே இயங்கும் (புறம். 238:2-5). கள்ளியம் பறந் தலையில் தான வாழும் பொந்தில் போழ் வாய்க் கூகை 'சுட்டுக்குவி' என்று செத்தோரை அழைப் பது போலக் கூவியது (புறம். 240:6-9). காரியாதி என்பான் உழைக்குரல் கூகை தன் இனத்தை அழைக்கும்படி வலிய விற்படையை அலைதது ஆனிரையை மீட்டான், (புறம். 261 : 11 - 15). முதுகாடு, களரி பரந்து கள்ளிமிகுந்து பகற்காலத் தும் கூவும் கூகைகளைக் கொண்டது (புறம். 356: 1-4). இடுகாட்டில் வேறுபட்ட குரலினையும் வெள்ளிய வாயையு முடைய கூகையொடு கூடிக் குறுநரிகள் பிணங்களைத் தின்றன (புறம். 359:1-3). வெள்ளெலும்புகள் கிடக்கும் நெடுவெண் களர் நிலத்தில் காக்கையும் கூகையும கூடிப் பகற் போதும் கூவும் (புறம். 362:16-18). முதுமரத்தின் பொந்துகளிலிருந்து கூகைக்கோழி கதுமெனக் கூவும் (புறம். 364:11,12). பிதுங்கியன போன்ற கண் களையுடைய கூகைகளின் குழறு குரலின் தாளத் துக்கேற்பப் பேய்மகள் கூத்தாடும் (பதி. 22:36,37). பறந்தலையில் இறைச்சித் துண்டம் வைத்த இடத்தை மறந்து துய்போன்ற உச்சிக்கொண் டையை உடைய கூகைச் சேவலைப் பெடை வருத் தும் (பதி. 44:17-19). பேய்மகள் பிதுங்கிய கண்ணை யுடைய கூகையோடு கடும்பாம்பு தூங்கப் பெரிய முலையை வருத்துகின்ற செவியினள் (முரு. 49-51). நெடுஞ்செழியனின் பகைவர் நாட்டு மாளிகைகளில் வெந்து வீழ்ந்த கரிந்த குதிரிடங்களில் சூட்டினை யுடைய கூகைசசேவல் பெடையுடன் தங்கிக் கதறி யது (மது. 169,170). பாழடைந்த மன்றங்களில் அழு கின்ற குரலையுடைய கூகைகளுடன் ஆண்டலைப் புட்கள் அரற்றின (பட். 255-258). திருமாவளவன் போருழக்கியதால் பாழடைந்த பகைவர் நாட்டு நகரங்களில் நெற்கூடுகளின் உள்ளிடத்தே இருந்து வளைந்த வாயினையுடைய கூகைகள் நன்பகற் போதிலும் குழறின (பட். 267-270). பேய்கள் திரி யும் நள்ளியாமத்திலும் இல்லங்களில் வாழும் எலி களை இரையாகக் கொள்ளும் வலிய அலகுடைய கூகை கேட்போர் உள்ளம் அஞ்சுமாறு குழறும் (அகம். 122:13,14). ஆஅய் எயினன் ஞிமிலியொடு பொருது களத்திற் பட்டகாலை, கடும்பகலில் பிற புள்ளினங்க ளெல்லாம் அங்குச் சென்ற போது கூகை நாணமுற்று அவனைக் காணச் செல்லாமல் தங்கி வருந்தியது எனப் புனையப் பெற்றுள்ளது (அகம். 148:7-11). தலைவி மன்றத்தின்கண் நிற்கும் மராமரத்திலுள்ள கூகை இரவில் குழறக் கேட்ட விடத்தும் பெரிதும் அஞ்சுவாள் (அகம். 158:13,14). தலைவியின் நெஞ்சம் குன்றிலுள்ள கூகை குழறி னாலும் முற்றத்திலுள்ள பலாமரக் கிளையில் ஆண் குரங்கு தாவித் துள்ளினாலும் அஞ்சும் இயல்பினது (குறு. 153:1-3) கூகையாகிய கோழிகள் வாகைப பறந்தலையில் தங்கியிருந்தன (குறு. 393:3). கடவுள் முதுமரத்தில் உடனிருந்து பழகிய தேயாத வளைந்த வாயையும் தெளிநத கண்ணையும் கூர் உகிரையும் உடைய, வாய்ப்பறையால் பிறரை வருத்தும் கூகையே, 'நீ நான் உறங்காமல் வருந் தும் போது அஞ்சத்தக்க கடுங்குரலால் குழறாதே; யாட்டிறைச்சியுடன் நெய் வெண்சோற்றையும் வெள்ளெலியினசூட்டிறைச்சியையும் உனக்கு நிறை யத் தருவோம்' எனத் தோழி கூறினாள் (நற். 83: 2-4). கூகைப் பேடை இரவு முழுவதும் வேம்பின் கிளையிலிருந்து இசைக்கும் (நற்.218:7,8). மூதூரின் அகனெடுந்தெருவில கூகைச் சேவல் அதன் பெடை யுடன் சென்று நாற்சந்தியில் யாவர்க்கும் அச்ச முண்டாகக் குழறும் (நற். 319:3-5).

**கூகைக் கோழியார்** – புலவர். இவர்தம் ஒரேபாடல் புறநானூறு 364–ஆம் பாடலாக அமைந்துள்ளது. இது பெருங்காஞ்சித் துறைப்பாற்படும் கூகையைக் கோழியாக உருவகம் செய்து பாடியமையால் இப் புலவர் கூகைக்கோழியார் எனப்பெயர் பெற்றார். நிலம் பிளக்க வேரோடிய முதுமரப் பொந்தில் வாழும் கூகைக்கோழி காலம் கழிவதை அறிவிப் பதுபோல் கூவிக்கொண்டு இருப்பதற்கு இடனாகிப் பிணங்களைக் கவிக்கும் தாழிகள்மிக்க இடுகாட்டை அடையுங்கால் இன்பமெல்லாம் அடையமுடியா வாறு அரியனவாய் விடும் எனஇவர் அறிவுறுத்து வர். பொற்றாமரை மலரைக் 'கேணிப் பூவா எரி

மருள் தாமரைப் பெருமலர்' எனக் குறிப்பது நய முடையது.

**கூட்டம்** - 1.புணர்ச்சி. கலைமான்களுடன்பெண்மான்கள் நண்பகலில் கூடும் கூட்டம் - புணர்ச்சி - நம் குதிரை களாலும் தேராலும் உண்டாகும் பேரொலியைக் கேட்பின் நிகழமாட்டா; ஆதலின் குதிரையை மெல் லச் செலுத்துக என்று வினைமுற்றி மீளும் தலை வன் பாகற்குரைத்தான் (அகம். 134: 11-14). தலைவி யின் கூட்டத்தைத் தலைவன் விரும்புதல் (நற். 41: 7). புலவி தணித்துக் கூடுகின்ற கூட்டமொடு பொருந் தித் தலைவர் என்பால் எய்திலராயினும் அவரைக் காணும் வாய்ப்புப் பெற்றால் வாழ்தல் இனிது என் பது பரத்தை கூற்று (நற். 216 : 1, 2). தலைவன் உண்ணுநீர் வி'கியதாகத் தலைவி கூறியபோது தாய் ஓடிவந்து புறம் நீவ, அவன் அப்பொழுது தலைவியைக் கடைக்கண்ணாற் கொல்வான்போல் நோக்கி நகைத்துக் கூட்டத்திற்கு உடம்படச் செய் தான் (கலி. 51: 13-16).

2. திரள். பெருஞ்சேரலிரும்பொறை ஊழிக்காலத்தில் பன்னிரு ஞாயிறுகளும் தோற்றின பெரிய கூட் டத்தை - திரளை - உடைய வடவைத்தீ ஒத்தவன் (பதி. 72 : 10-15). போரின்கண் வெற்றி வேண்டிப் பரவப்படும் மாற்றருந் தெய்வத்துக் கூட்டம் தங்கிய அயிரை மலையிலிருந்து பேரியாறு இழிதரும் (பதி. 88: 24, 25). கடற்பரபபில் திண்ணிய திமில் விளக் கில் தன் தந்தை அண்ணன்மார்க்குப் பலவாகிய மீன் கூட்டத்தைக் காட்ட இரவில் செல்வார் எனத் தோழி தலைவனிடம் கூறினாள் (அகம். 240 ; 4-7).

3. சேர்க்கை. திங்கள் மண்டிலம் உரோகிணியைச் சேர்ந்த குற்றம் தீர்ந்த கூட்டம் - சேர்க்கை - நாளன்று திருமண இல்லம் அணி செய்யப் பெற் றது (அகம். 136 : 4-6). மனமடிந்து இருப்பார்க்குப் பொருட் கூட்டம் ஒருபோதும் இல்லை (நற். 252 : 4). தலைவர் தலைவியைப் பிரிந்து அரும்பொருள் கூட் டத்தை விரும்பிப் பிறநாடு சென்றார் (நற். 343: 8-10).

**கூட்டு** - கலவை. பெருமனைகளில் குற்றேவல் வினை ஞர் சாத்தம்மியில் (சந்தாமி முதலிய) பல கூட்டுகளை- கலவைகளை - அரைத்தனர் (நெடு. 49, 50). சந்தன மரங்களின் இடையே எழும் அகிலின் நறுமணப் புகை சந்தன மலரின மணத்தோடு கலந்து கூட்டு விரை (கலவை மணம்) கமழும் நாடன் தலைவன் (ஐங். 212: 1, 2).

**கூட்டுண்ணல்** - கொள்ளை கொண்டுண்ணல். ஆறுசெல் லும் வணிகர் கூட்டத்தைக் கொன்று அவர்தம் பொருள்களைக் கூட்டுண்ணும்- கொள்ளை கொண் டுண்ணும் - இயல்பினர் மறவர் (அகம். 167:7, 8).

**கூட்டுணவு** - கொள்ளை கொண்டுண்ணும் உணவு. வாட் டொழில் செய்யும் குடியிற் பிறந்த புலிப்போத்த னைய மறவர் கூட்டுணவு - கொள்ளை கொண்டுண் ணும் உணவு - பெற்று மறவாழ்வு மேற்கொள்வர் (பெரு. 136-138).

**கூடம்** - 1. சம்மட்டி. பிட்டங்கொற்றன் பகைவர்க்குக் கொல்லன் விசைத்தடிக்கப்பட்ட கூடத்தோடு - சம் மட்டியோடு - மாறுபடும் உலைக்கல் (பட்டடைக்கல்) போன்ற வல்லாளன் (புறம். 170 : 14-17). கருங்கைக் கொல்லன் இரும்பினை விசைத்தெறிந்த கூடத்து எழுந்த ஓசைக்கஞ்சி அரண்மனை மாடத்து இறப் பின்கண் உள்ள புறாச்சேவல் இனிய துயிலை நீத் தது (பெரு. 437-440).

2. கூடாரம். பாசறை அமைக்கும்போது வில்லை ஊன்றித் தூணிகளைத் தூக்கிக் கூடமாக - கூடார மாக - கால்களை நட்டுக் கயிற்றையும் கட்டினர் (முல்லை. 39-42).

**கூடல்** - 1. மதுரை நகரம். 'இமிழ்குரல் முரசம் மூன்று டன் ஆளும் தமிழ்கெழு கூடல் தண்கோல் வேந்தே' எனப் பாண்டியன் வெள்ளியம்பலத்துத துஞ்சிய பெருவழுதி விளிக்கப்படுகின்றான் (புறம். 58:12,13). மறப்போர் அகுதையின், ஆழ்ந்த நீர்நிலைகளை யுடைய இடமாகிய கூடல் நகரைப் போன்றவள் தலைவி (புறம். 347:5-7). மாடங்கள் மிக்க தெருக் களை உடைய கூடலின் மேற்றிசையில் உள்ளது திருப்பரங்குன்றம் (முரு. 71,77). மாடத்தால விளக்க முற்ற நிறைந்த புகழுடையது கூடல (மது. 429). கூடல் தமிழ் நானிலத்தோரால் விரும்பப்படுவது (மது. வெ. 1:3-4). பாண்டியனின் கூடலில் உள்ள தமிழ், சொல் என்னும் பூம்போது தோற்றிப் பொருளென்னும் நிநதாது நாறுதலால் மல்லிகை மாலைக் கொப்பாகும் (மது. வெ. 2:2-4). பாண்டிய னுடைய கூடலில உள்ள நாளங்காடி போல நறு மணம் கமழும் நுதலை உடையவள் தலைவி (அகம். 93:9-11). மறப்போர்ச் செழியனின் பொய்யா விழ வினைக் கொண்டது கூடல் (அகம். 116:13,14). கூட லின் மேலைத் திசையின் கண்ணது மயில்கொடி உயர்த்திய நெடியோனாகிய செவ்வேளின் திருப் பரங்குனறம் (அகம். 149:14-16). பசும்பூட்பாண்டிய னின பாடுபெறு சிறப்பினையுடைய கூடலை ஒத்த வள் தலைவி (அகம். 231:12,13). பசும்பூட் பாண்டிய னின் பொன்மிகுந்த கூடலின்கண் இன்னிசை ஆர்த்தது (அகம். 253:5-7). செழியனின் மலையை ஒத்த நெடிய மாட மாளிகைகளைக் கொண்ட

கூடலில் ஆரவாரம் மிக்கிருந்தது (அகம். 296:12). தலைவி பெரும்பெயர் வழுதியின் கூடல் போன்றவள் (அகம். 315:7). பழையன் மாறனைக் கிள்ளிவளவன் மாடமாளிகை மிக்க தெருக்களை யுடைய கூடலில் வென்றான் (அகம். 346:19-22). பாண்டியனின் பெரும்புகழுடைய கூடலை ஒத்த தலைவியின் கரும்பு எழுதப் பெற்ற தோளும் அணங்குடையன (நற். 39:9-11). பொற்றேர்ச் செழியனுக்குரியது கூடல் நகரம் (நற். 298:8,9). கூடல் ஆனாத புகழ் மிக்கது (கலி. 30:11). கூற்றுவனை ஒத்த வேற் படையை உடையவர் உயர்ந்த கூடலில் நெடிய வெற்றிக்கொடி எழப் புகுந்தார் (கலி. 31:24,25). நீள்மாடக் கூடலில் உள்ளவர், புலமைச் சான்றோர் நாவிற் பிறந்த கவிகளின் புதுமையை இளவேனிற் காலத்தில் துய்ப்பர் (கலி. 35:17,18). உயர்கூடல் தென்னவனுக் குரியது (கலி. 57:8). ஆரவாரம் பொருந்திய கூடலில் மலையை ஒத்த மதிலை வையையாறு சூழ்ந்துள்ளது (கலி. 92:11,12). நான் மாடக் கூடலில் மகளிரும் மைந்தரும் தேனினம் ஒலிக்கும் காவில் கூடி ஆட விருப்புடன் அணிகலன் பூண்டனர் (கலி. 92:65-67). திருப்பரங் குன்றத்தி லிருந்து கூடலுக்குச் செல்லும் வழி பல்வகை மலர்கள் மணங்கமழத் தேன் துளிப்பத் தென்றல் தவழும் தலைமையுடையது (பரி. 8:24-26). கூடலில் மணம் பொருந்திய மணிநிறமுரசின் ஆர்ப்பு எழுந் தது (பரி. 8:29,30). வையை யாற்றின் நீரைக் கூடல் எதிர்கொள்ளும் (பரி. 10:40). வையை நீராடிய மக்கள் மாலையில் திங்கள் மண்டிலம் தோன்றி இருளை நீக்கிய அளவிலே கூடற் கண் வதியும் இயல்பு நோக்கி மீண்டனர் (பரி. 10:112,113). வையையில் துன்பமறியாது வருகின்ற புனலுக்குக் கூடல் விருந்து செய்தது (பரி. 10:129). கூடல்வாழ் மக்கள் அனைவரும் புகழ வையை நீர் வந்தது (பரி. 12:31,32). பாடல் சான்று பல்புகழ் முற்றிய கூடலுக்கும் பரங்குன்றுக்கும் இடைநின்ற நிலம் அணித்தாயிருந்தும் மக்கள் நெருக்கத்தால் சேய்த்தாகத் தோன்றியது (பரி. 17: 22-25). பரங்குன்றில் தலைவியர் செய்யும் தெய்வ விழாவும் கூடற்கண் அவர் செய்யும் விருந்தயர்வும் தம்மிற் காரண காரியங்களாய்த் தடுமாறி வந்தன (பரி. 17:42-46). அறிவினும் வீரத்தினும நிகழும் போரில் தோலாதது கூடல் (பரி. 19:8). பரங்குன்றிற் கும் கூடலுக்கும் இடையில் கிடந்த நிலமெல்லாம் மலர் மாலையணிந்த மக்கள் தலைகள் நிறைதலால் ஒத்த பூக்களை நிறைய வைத்துக் கட்டி இருநிலத் திற்கு இட்ட மாலைபோல் தோன்றியது (பரி. 19: 15-17). கூடலில் வாழும் மக்களால் பெரிதும் விரும் புந் தன்மையது வையையாறு (பரி. 20:26). நெடு நீர் மலிபுனல் நீள்மாடக் கூடல் கடிமதி லுடையது (பரி. 20:106,107). மேகங்கள் பொழிந்த மழை மலை யினின்றும் நான்மாடக் கூடல் மக்கள் எதிர் கொள்ள இழிந்து வந்தது (பரி. தி. 1:1-3). மிகுதி யான மழையால் வையை வெள்ளத்தைப் பெற்றுப் பல மலரை அடித்துக் கொண்டு கூடலுக்கு விரைந் தது (பரி. தி. 2:1-4). பொன் தேரானாகிய பாண்டி யனும் கூடல்வாழ் மக்களும் வையைத் துறையை அடைந்தனர் (பரி. தி. 2:26,27). பிறரைப் பணிதல் இல்லாத உயர் சிறப்பினையுடைய பாண்டியனுக் குரியது கூடல் (பரி. தி. 2:46). ஈவாரைக் கொண்ண டாடி ஏற்பாரைப் பார்த்துவக்கும் சேய்மாடக் கூடலில் வாழ்வாரே வாழ்வாரெனப்படுவர்; அவர் புத்தேளுலகு செல்வர் (பரி. தி. 11).

2. சங்கமுகம். இருபெரும் யாறுகள் கூடும் ஒரு பெரிய கூடலிடத்தே - சங்கமுகத்திடத்தே – குறுக் கிட்டு நின்று தடுக்கும் பெரிய மரம் அலைப்புண்டு வீழ்வது போல மறவனைச் சுமந்து சென்ற குதிரை வீழ்ந்தது (புறம். 273 : 5-7). கடலபிறகோட்டிய செங்குட்டுவன் காவிரியும் பூவிரிந்த நீர்மிக்க ஆன் பொருநையும் குடவனாறுமென மூன்றும் கூடிய கூடலை ஒப்பவன (பதி. 50:6,7). தெளிந்த கடலு டன் காவிரி கலக்கும் ஓதத்தின் ஒலியுடைய கூடலில் மக்கள் தீது நீங்கக் கடலாடி மாசுபோகப் புனல் படிந்தனர் (பட். 97-100).

3. புணர்தல். பிரிந்து சென்ற தலைவர் பரத்தை யருடைய அழகு தன மனத்தை மகிழ்ச்சி செயகையி னாலே தம் அறிவு பொலிவு பெறறு அவரைப புகழ்தல் அமையாத கூடலையும் – புணர்தலையும - நினையாரோ எனத் தலைவி வருந்திக் கூறி னாள் (கலி. 27:11,12).

**கூடலவர்** - மதுரை நகர மக்கள். பாண்டியன் அழகு மிகு கூடலவரோடு - மதுரை நகரமக்களோடு - வையைப் புனலாடியது இந்திரன் அந்தரவானி யாற்றில் (ஆகாயகங்கையில்) நீராடியதை ஒத்தது (பரி. தி.2:90-96). கூடலார் காண்க.

**கூடலார்** – மதுரை நகர மக்கள். இளவேனிற் காலத் தில் நீள் மாடங்கள் நிறைந்த கூடலார் - மதுரை நகர மக்கள் - சான்றோர்தம் கவிகளின் புதுமை யைக் கொண்டாடுவர் (கலி. 35 : 17,18). கூடலவர் காண்க.

**கூடலூர்கிழார்** - புலவர். இவர் மலைநாட்டிலுள்ள கூடலூரை இருப்பிடமாக உடையவர் என்றும் வேளாண்மரபினர் என்றும் உ. வே. சா. கூறுவர்

(புறம். பாடினோர் வரலாறு). இவர் பாடல்கள் குறுந் தொகையில் மூன்றும் (166, 167,214) புறநானூற் றில் ஒன்றும் (229) ஆக நான்கு சங்க இலக்கியத் தில் இடம் பெற்றுள்ளன. ஒரு விண்மீன் வீழ்ச் சியைக் கண்டு யானைக்கட்சேய் மாந்தரஞ் சேர லிரும்பொறை இன்ன நாளில் இறப்பான் என்று இவர் கணித்தவாறே அவன் இறந்தது கண்டு பிரிவாற்றாது கவன்றார் என்பது புறப்பாடலால் அறியப்படும். இவர் மாந்தரஞ் சேரலிரும்பொறை யால் ஆதரிக்கப் பெற்றவர். இவ்வேந்தன் வேண்டு கோளால் இவர் ஐங்குறுநூற்றைத் தொகுத்தார். புலத்துறை முற்றிய கூடலூர் கிழார் என்றிவர் சிறப்பிக்கப் பெறுவர். இவர் காலத்துப் புலவர் குறுங்கோழியூர் கிழார், பொருந்தில் இளங்கீரனார் என்பவராவர். குறுந்தொகை 166-இல் மரந்தை சிறப்பிக்கப் பெறுகிறது. மனைவி தான் துழந்தட்ட தீம்புளிப் பாகரைக் கணவன் இனிதென உண்ட வின் முகம் மலர்ந்த செய்தியைக் குறுந்தொகை (167) நயமுற விளக்கும். மாந்தரஞ் சேரலிரும் பொறை மேலோருலகம் எய்தியதால் உற்ற அவலத் தைப் புறப்பாட்டு நன்கு சித்திரிக்கிறது. இவர் சிறந்த கணியன் என்பதனையும் அப்பாடல் உணர்த்தும்.

**கூடலூர்ப்பல்கண்ணனார்** - புலவர். நற்றிணை 200,380 என்னும் இருபாடல்களைப பாடியவர் என்று பாட்டும் தொகையும் பி.நா.பதிப்பும் கருதும். ஆனால் வையாபுரிப்பிள்ளை நற்றிணை 200-ஆம் பாடலைப் பாடியவர் கூடலூர்ப் பல் கண்ணனார் என்றும் 380-ஆம் பாடலைப் பாடியவர் கட லூர்ப் பல்கணணனார் என்றும் வேறுபடுத்திக் கூறுவர். இவர் நீர் நாட்டினகண் உள்ள கூடலூரினர் ஆக வேண்டும் என்பர் பி. நா. (நற். பாடினோர் வரலாறு). இவர் மருதத்திணையிற் பாணனை மறுத்துக் கூறும் துறையைச் சிறப் பித்துப் பாடியுள்ளார். நொசசி மாலையைச் சூடி ஊரில் நடக்கும் திருவிழாவைத் தெருவில் யாவரும் அறியத் தெரிவிப்பது குயவனது வழக்கம் எனபதை நற்றிணை 200-ஆம பாடல் உணா த்தும். 'தலைவியின் கலிங்கம் நெயயும் குய்யுமாடி மை யொடு மாசுபட்டது; திதலை மென்முலை தீம்பால் பிலிற்றப் புதல்வனைப் புல்லித் தோளும் புனிறு நாறும்; ஆதலால் நாம் தலைவர்க்கு ஒத்தனமல்லம்; ஆதலின அவனைப பரத்தையிடம் கொண்டு செலக' என்று தோழி பாணனிடம் வாயில் மறுப் பதாக 380-ஆம் பாடலை அமைத்துள்ளார்.

**கூடற்பறந்தலை** - கூடல்நகருக்கருகிலுள்ள போர்க்களம். பாணடியன இடையறாது திருவிழாக்கள் நிகழும் கூடற்பறந்தலையில் - கூடல்நகருக்கருகில் உள்ள போர்க்களத்தில் - ஒருங்கு கூடிப் படையெடுத்து வந்த இருபெரு வேந்தராகிய சேர சோழரது கடல் போன்ற படைகளைத் தாக்கி முரசம் ஒழிய அவரைப் புறங்காட்டி ஓடச் செய்த நாளில், வெற்றி கொண்ட அப்போர்க்களத்தில் பெரிதும் ஆரவாரம் எழுந்தது (அகம். 116:13-19).

**கூடு** - 1. நெற்கூடு. கண்டீரக்கோப் பெருநற்கிள்ளி கூடு - நெற்கூடு - விளங்கும் தன் நகரின்கண் ணிருந்து பரிசிலருக்கு நன்கலத்தைக் களிற்றொடு நல்கினான் (புறம். 148:3,4). பொய்கைக்கண் கிளர்ந் தெழுந்த வாளைமீன் நெடுமனையின் புறத்தே நிறுத்தப்பட்ட நெல்லுடைக் கூட்டின் அடியில் பாய்ந்து புரளும் (புறம். 287:8,9). ஓய்மான் நல்லியக்கோடனது பெருமனைக்கண் உள்ள கூட் டின் அடியில் நின்று புறத்திணை நன்னாகனார் பாடினார் (புறம். 376:6). வாட்டாற்றெழினியாதன், திறந்து பின்மூடுதற்கு மறந்தொழிந்த கூட்டிடத்து வேண்டுமளவு தாம்தாம் முகந்து கொள்ளும் உணவுப் பொருள்களைப் பரிசிலர்க்கு வழங்குவான் (புறம். 396: 19, 20). கடல் சூழ்ந்த நிலப்பரப்பில் ஒவ்வொரு மா அளவுள்ள நிலத்தின் திடர்தோறும் தென்னஞ் சோலையிடத்தே நெற்கூடு பொருந்திய வளமார்ந்த குடிமக்கள் வாழ்ந்தனர் (பொரு. 179-182). ஏணிக்கு எட்டாத நெடிய வடிவினையும் தலையைத் திறந்து நிறைத்த பழைய நெல்லைக் கொண்ட அழியாத் தன்மையையும் கொண்ட கூடு கள் இல்லங்களில் இருந்தன (பெரு. 247). எருமை ஈன்ற முதிர்ந்த கன்றுகள் கூடுகளின் நிழலில் உறங் கும் (பட். 14, 15). கொடுவில் எயினர் கொள்ளை கொண்டு உண்டமையின் உணவின்றி வறிதே கிடக்கும் நெற்கூடுகளின் உள்ளிடத்திருந்து நன்பக லிலும் கூகைகள் குழறும் (பட். 266-268). கள்ளை உண்ட கலம் கழுவப்படுதலின் அந்நீரையுண்டு வெறிகொண்ட இறாமீன செருக்கிப் பூட்டிய நாண் அற்ற வில்தெறிபபது போலத் துள்ளி நெற்கூடு களின் அடியிடததே விழும் (அகம. 96:1,2). குடி மக்களைக் கொண்ட சிற்றூரின்கண் வரகாகிய உணவுப்பொருள் நிறைந்த கூடுகளின் பக்கத்தே வெருகின் ஏற்றை, தன பிணவின் பசிநீக்கச் சேவலைப் பிடிக்கப் பதுங்கியிருக்கும் (அகம். 367:5-12). தலைவியின் தாய் மனை மலையை ஒத்த அடுக்கிய நிலையமைந்த நெடிய நெற்கூடு உடை யது (நற். 26:3,4). எருமை உழவன மலையைச் செய்து வைத்தாற் போன்ற உயர்ச்சியை யுடைய நெல்லைக் கொண்ட பல பெரிய கூடுகளைக் கொண்டவன் (நற். 60:1,2).

2. பறவைக்கூடு. வீட்டின் ஒருபுறம் தொங்கவிடப்பட்ட வலம்புரிச் சங்கம் தூக்கணங்குருவியின அசையும் கூடு - பறவைக்கூடு - போன்று தோன்றியது (புறம். 225:11,12). கடிதாகக் கொட்டி வருத்தும் மிகுதியான குளவிகள் தம்மில் நெருங்கி உறங்கும் செழுங்கூடு நெல்லின் அளவையை அறியக் குவித்து வைத்த உறை போன்றிருந்தது (பதி. 71:4-7). குடியின் வாயிலில் தினைப்புனங் காப்போர் பரண் மேல் கட்டிய குடில்போலக் கோழிக்கூடு இருந்தது (பெரு. 51,52). தூக்கணங்குருவி பனைமரத்தில் தொடுத்த கூட்டினும், தன் ஊர் மக்கள் மயங்கியிருந்ததாக அறத்தொடு நின்ற தோழி தலைவிக்கு உரைத்தாள் (குறு. 374:5-7).

3. விலங்குக்கூடு. மிக்க வலிமையுடைய கூட்டில் உறைகின்ற கரடி முதலிய வலிய விலங்குகள் புலியுடன் சேர்ந்து முழங்கும் (மது. 676,677). புலிக்குட்டி கூட்டில் அடைபட்டிருந்து வளர்ந்தாற் போன்று திருமாவளவன் பகைவர் காவலிட்டதே இருந்து வளர்ந்தான் (பட். 221,222)

4. உட்பொய். இருப்பையின் கூடு - உட்பொய் - கொண்ட குவிந்த வெள்ளியபூ, யானை மருப்பில் கடைந்தியற்றிய கழங்கு போன்றது (கூடு என்பதற்கு இதழ் என்று பொருள் கொள்ளும் வே. வி.) (அகம். 135:8,9).

**கூடுநர்** - கூடுகின்றவர். குன்ற நாடனாகிய தலைவன் உயர்குடிப் பிறப்புடையவன்; தன்னுடன் கூடுநரை - கூடுகின்றவரை - பிரியாதவன் என்று மணந்து கொண்ட தலைவீ தோழியிடத்துக் கூறினாள் (அகம். 352:7,8).

**கூத்தர்** - ஆடுநர். புறத்தே நின்றவர்க்கு வயலகத்து நின்றோர் புயுத்து எறிந்த கரும்பின் கழைபட்டுத தாமரைப்போது சிதைநததால, சோழன் நலங்கிள்ளியின் அகநாடு கூத்தரின் - ஆடுநரின் - ஆடுகளத்தை ஒத்தது (புறம். 28:11-14).

**கூத்து** - நாடகம். தனி நிற்கும் மகளிரைக் கண்டால் தன காம வேட்கையைக் காட்டிக் கொள்வதையே தொழிலாகக் கொண்ட முதுபார்ப்பான் நடத்திய பெரிய தண்ணிய கூத்து - நாடகம் - ஊர்க்கெல்லாம் வருத்தமாய் விளைந்தது எனத் தோழி தலைவியிடம் கூறினாள் (கலி. 65:27-29). தலைவியின் மகன் வெகுளக் கருதினவரை உவகையாகிய கூத்து ஆட்டுவிப்பான் (கலி. 85:34).

**கூதளம்** - ஒருவகைச்செடி. கூதளம் கவின் பெற்ற மலைமல்லிகை நாறும் தன்மை யுடையது பிட்டங்கொற்றனின முன்றில் (புறம். 168:12). நறுமணம் கமழும் மலைமல்லிகையொடு கூதளம தழைத்து விளங்கியது (புறம். 380:7). கைவண் செழியனின் வளங்கெழு சிறுமலையில் கூதளம் கமழுகின்ற பக்கமலையில் தோன்றிய மூங்கில்போலும் பணைததோள்களை உடையவன் தலைவி (அகம். 47:15-18). தோட்டத்திலுள்ள குளிர்ந்த பள்ளத்தில் தோனறிய கூதளம் குழைய இன்னிசை அருவி வீழ்நதொலித்தது (அகம். 68:1-3). பாகற்கொடிகள் கூதளத்தின முதிய இலைகளையுடைய கொடிகளின் கூட்டத்திற் கிடநதசைந்தன (அகம்.255:13,14). காட்டு மல்லிகை மலருடன கூதள மலரையும் சேரத்தொடுத்த கண்ணியைத தலைவன் அணிதல் (அகம். 272:8). வானில் விசைத்தெறிந்த கூதள மாலைபோல வெள்ளாங்குருகு கடற்பக்கத்தே நாட்காலையில் பறந்து வளைநது பரவியது (அகம். 273:1-3). மழைபெய்த பெருந்தண் சாரலில் கூதிர்க் காலத்தில் கூதள மலரின மணம் வீசும் வண்டின் இனிய குரலை அசுணம் கூர்ந்து கேட்கும் (நற். 244:1-4). காநதள் மலர்நத மலைச்சாரலின தண் கூதளம் செழித்திருந்தது (நற். 313:6-8). குல்லை, குளவி, கூதளம், குவளை, தேற்றா என்பவற்றின மலராற் புனைநத கணணியை யுடையவன் தலைவன் (நற். 376:5,6). கூதளி, கூதாளம் காணக.

**கூதளி** – ஒருவகைச்செடி. குறிய அடியையுடைய கூதளி - கூதளஞ்செடி - நெடியமலையில அசைந்தாடியது (கூதாளி எனவும் பாடம) (குறு. 60:1). கூதளம், கூதாளம் காண்க.

**கூதாளம்** - ஒருவகைச்செடி. வேலன் காட்டுமலலிகையுடன் வெண கூதாளத்தையும் சேர்த்துக் கட்டிய கண்ணியன (முரு. 190-192). பரதவர் தாழையின் அடியிடத்தே நின்ற வெண்கூதாளத்தின் தண் பூவாற் செயத மாலையை உடையவர் (பட். 84,85). வெண்கூதாளத்தின் அசையும் கொததிலுளள வளம் பொருந்திய கட்டவிழ்நத மலர் புதரிலுள்ள கிளைகளில் குருகு இருந்தாற போனறு காணப்பட்டது (அகம். 178:8-10). கூதாளததின உள்துளையுடைய புதுமலர் மலைப்பக்கததில ஒருபடித்தாக ஆர்கக்கழனறு உகுதல் கைவளை உகுதலுக்கு உவமை (குறு. 282:4-7). கூதளம், கூதளி காணக.

**கூதிர்** - கூதிர்ப்பருவம். கூதிர் - கூதிர்ப்பருவத்து - பருந்தினது கரிய சிறகு கிழிந்து தொங்கும் துணிக்கு உவமை (புறம். 150:1,2). கோவலர் குளிரால் நடுங்க, விலஙகுகள் மேயதலை மறக்க, மநதி குளிரால் நடுஙக, பறவைகள் நிலத்தே வீழ, கறவை குளிரால் தன் கன்றினை உதைக்க, குன்றினைக் குளிரச் செய்யும் கூதிர்க் கால இரவில் முசுண்டையும் பீர்க்கும் புதல்தோறும் மலர, நீரை எதிரேற்று வரும் கயல் மீனைக் கொத்கும் நாரையும் கவர்ந்துணண, வெண்மேகம்

சிறுதுவலையைத் தூவக் கற்க, நெல் கதிர்சாய்த்து வளைங்க, கமுகின் பசுங்காய் சேறுகொள முற்ற, சோலையின் கிளைகளில் மழைத்துளி வீழ, முடலை யாக்கை முழுவலி மாககள் கள்ளருந்தி மழையை யும் பொருட்படுத்தாது தெருவில் திரிய, மடவரன் மகளிர் பித்திகப்பூ கமழப் பொழுதறிந்து விளக் கேற்றி நெல்லும் மலரும் தூவிக் கைதொழுது மாலைப் பொழுதைக் கொண்டாட, மனையுறை புறவு இரையுண்ணாது மதலைப் பள்ளியில் மாறி மாறித் தங்க, ஏவலர் நறுமணைக் கலவையை அரைக்க, மகளிர் மாலை அணியாராய்ச் சின்மலர் பெய்ய, வடவர் தந்த வான்கேழ் வட்டம் தென் புலச் சந்தனத்தோடு பயன்படாது கிடப்ப, மகளிர் மயிர்ச்சந்தனமாகிய விறகிலே நெருப்பை யுண் டாக்கி அகிலோடே அயிரையும் புகைப்ப, ஆல வட்டம் உறைவிடப்பட்டுச் சிலந்தியின் நூலால் சூழப்பட்டு முளைக்கோலில் தொங்க, மக்கள் கதவடைத்துக் கன்னல் தண்ணீர் உண்ணாது நெருப்பின வெம்மையை நுகர, ஆடன்மகளிர் யாழ நரம்பினை முலையின வெப்பத்தில் தடவி யாழைப் பண்ணுமுறையில் நிறுத்தக் கணவரைப் பிரிந்த மகளிர் வருந்தக் கூதிர்ப்பருவம் வந்து நிலை பெற்றது (நெடு. 8-72). கொடிச்சியரின் தந்தையர் மழைபெய்த மன்னுயிரெல்லாம் துயினற நள்ளிர வில், காட்டில் வேட்டைக்குச் சென்றதால் துயி லிடம் பெறாது புலிததோல் படுக்கையில் கூதிர்க் காலத்தே இல்லத்தில் தங்கினர் (அகம். 58:1-6). பிடவ மலர் மணததைக கூதிர்க்காலததிலும் பனிக் காலத்திலும் வாடைககாற்று தூற்றியது (அகம்.183: 11-13). முசுண்டை வெணமலா விரிய, வெண் காந் தள மலா அணிந்த கோவலர் நீர்திகழும் கண்ணி யொடு மழையில ஆநிரையை ஓட்டிக்கொண்டு பெயர, மழை தெருவுதோறும் ஒழுககக்கூதிர்ப்பருவம் நிலைபெற்றது (அகம். 264:2-10). மழைத்துளி மிக்கு வாடைக்காறறு வீசும் கூதிர்யாமததில நுளம் பினை ஓட்ட ஆன அசைக்குந்தோறும் கழுததில் கட்டிய மணி ஒலிக்கும (குறு. 86:3-6). ஊதையம் குளிரொடு கூதிா உருவததில கூற்றம் தலைவனைப் பிரிநத தலைவி நோககி வரும (குறு. 197:4,5). கூதிரில் கூதள மலரின மணம பெருந்தண் சாரற் கண் வீசும் (நற். 244:1,2). கூதிரொடு கலந்து வேற் றுப்புலத்துள்ள வாடைக் காற்று தலைவனைப் பிரிநத தலைவியைத் துன்புறுததியது (நற். 341:8-10). கூதிர்க்காலத்து முல்லை மலரும் (நற். 366:5). தலை வன ஊரிலுள்ள யாறு கூதிர்ப்பருவத்தில் கலங்கி யும் வேனிற பருவத்தில தெளிந்தும ஓடியது (ஐங். 45:1-3). விரைந்து வரும் மழையினையும பொறுத் தற்கரிய பனியினையும் உடைய கூதிர்ப்பருவப் பெருந்தண் வாடையினும் தலைவன் முந்திவந்தான் (ஐங். 252:3-5). 'பகன்றை மலரையும் ஈங்கையையும் புதல் அணிகின்ற, பனி விரவிய கூதிர்ப்பருவத்தில் கூட நம்மொடு உறைதலைத் தலைவர் நினைக்க மாட்டாரோ' எனத் தலைவி தோழியிடம் கூறி னாள் (ஐங். 456:3-5).

**கூந்தல்** - பெண்டிர் தலைமயிர். பாண்டியன் தலையா லங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனின் பகைவர் அவனுடன் பொருது மாய்ந்தமையால் அவர்தம் மகளிர் கைம்மை நோன்பு மேற்கொண்டு மிக விளங்கும் அறலை யொக்கும் அழகிய மெல் லிய குவிந்த கரிய கூந்தலை - தலைமயிரை - கொய்து கொண்டனர் (புறம். 25:12-14). போர்க்களத்தில் பட்ட வீரரது புண்ணைத் தோண்டி அவ்வுதிரம் தோய்ந்த சிவந்த கையினால் தமது கூந்தலைக் கோதிப் பேய்மகளிர் பறைகொட்டி யாடுவர் (புறம். 62:2-5). 'என் உள்ளத்தை எள்ளிய மடவோன் வருந்துமாறு சென்று பொரேனாயின் தீதற்ற நெஞசத்தோடு காதல் கொள்ளாத பல்லிருங் கூந் தல் மகளிரது பொருந்தாப் புணர்ச்சியிடை என் மாலை குழைவதாக' எனச் சோழன் நலங்கிள்ளி வஞ்சின முரைத்தான் (புறம். 73:5-14). 'சீறியாழைப் பண்ணி வாசித்துக் கொண்டு நறுநாற்றம் அமைந்த தழைதத கூநதலையுடைய நும விறலியர் பின்வர ஆடினிர் பாடினிராய்ச் செல்வீராயின, பாரி நுமககு நாட்டையும் மலையையும ஒருங்கே ஈவான்' எனக் கபிலர் மூவேந்தரையும் எள்ளிக் கூறினார் (புறம். 109:15-18). கரிய பலவாகிய கூந்தலையுடைய மடந்தையர்க்குத் தநதை பாரி (புறம். 120:17). 'விறலி, நீ மாட்சிமைப்பட்ட நினது மணம் வளரும் கூந்த லில் மலைக்காற்று வந்தசைப்பப் பீலிமயில் போலக் காட்சியுண்டாகுமாறு நடந்து மாரியன்ன வண்மையையுடைய தேர்வேள் ஆயைக் காணச் செல்வாயாக' என்று விறலி ஆற்றுப்படுத்தப் பெற் றாள் (புறம். 133:3-7). 'பேகனே, என்னை நயந்து பரிசில நலகுவையாயின், நீ அருளாமையால் மெலிந்து அருந்துயருழக்கும் நின திருநதிழை யரி வையது மயிறபீலியைக் காலொன்றக் குவிததாற் போன்ற தழைத்த மெல்லிய கூந்தலில் மணங்கம ழும் புகையைக் கொள்ளுவித்து மாலையைச் சூடு தற்கு நின தேரினைக் குதிரைகள் பூண்பனவாக' என்றார் அரிசில்கிழார் (புறம். 146:4-11). 'தனிமை கொண்டுறையும் அரிவையது நெய்துறந்த மையி ருங் கூந்தலை மாசறக் கழுவிப் புதுமலர் அணிய இன்று நீ செல்குவையாயின், அதுவேயாகும் எம் பரிசில் என்று பெருங்குன்றூர் கிழார் பேகனிடம்

அவன் மனைவி கண்ணகி காரணமாகக் கூறினார் (புறம். 147; 4-9). சோணாட்டுப் பூஞ்சாற்றூர்ப் பார்ப்பான் கௌணியன் விண்ணந்தாயன் மனைவியர் பலவாகிய கூந்தலை யுடையவர் (புறம். 166: 16,17). பூதபாண்டியன்தேவி பெருங்கோப்பெண்டு தீப்பாயும் நிலையில் நீர் வடிந்த கூந்தல் புறத்தே வீழப் பெருந்துன்பம் மேவிய கண்ணளாய்ப் புறங் காட்டை நோககி மனம் சுழன்றாள் (புறம். 247: 5-7). கணவனை யிழந்த மகளிர் கூந்தலைக் கொய்து கொண்டு குறுந்தொடி நீககிக் கைம்மை நோன்பு நோற்றல் (புறம். 250:4,5). பாணன் தன் தலைவனைக் காணப் புறப்பட்டவளவில் மனையோள் ஒருத்தி விரித்து வருகின்ற கூந்தலை நோக்கி, அதனைத் தீநிமித்தமாகக் கொண்டு தெய்வத்தை ஏத்தித தொழுது, 'அத் தலைவனைக் காணமாட்டேனோ எனறு எதிர்வருவாரை வினவிச் சென்றான் (புறம். 260: 3-8). நறிய விரைப் பொருள்களைத் துறந்த நரைத்த வெள்ளிய கூந்தலை யுடையவள் செம்முது பெண்டு (புறம். 276:1,3). முதியோள் கொக்கினது தூவிபோன்ற வெள்ளிய நரைத்த கூந்தலினள் (புறம். 277:1,2). ஒராடவராலும் தீண்டப்பெறாத குமரிமகளிர் கூந்தலைப் போன்று யாராலும் அணுகுதற்கரிய முள் வேலியைக் கொணடது பாசறை (புறம். 301:2-4). குதிரை மறவன் போரிற் பெற்ற பொற்பூக்கள் விளங்கிழை மகளிராகிய விறலியரின கூந்தலைத் தமக்கிடமாகக் கொண்டன (புறம். 302:2,3). ஒலிமென கூந்தல் (புறம். 306:2; குறி: 2). கரிய வளைந்த தழைத்த புரியவிழ ஐம்பால் அமைந்த கூந்தலையுடையவர் விறலியா (பதி. 18: 4,6). பல்யானைச் செல்கெழு குட்டுவன் மனைவியின் தாழ்ந்த கரிய கூநதல் நீராடபபெறவில்லையாயின, இயற்கை மணம் கமழநது, நீராடபபெறுமாயின் கார்காலத்தில் மலாவதான முல்லை மலரை அணியப் பெறுதலால அம்மலர் மணம் கமழும் (பதி. 21:32,33). களங்காய்க் கண்ணி நார்முடிச்சேரலின பெருந்தேவி, வணடுகள் மொய்க்குமாறு தழைத்த கூந்தலை யுடையவள் (பதி.31:23,24,28). இமயமலைச் சாரலில ஊசலாடலை விரும்பிய சேயிழை மகளிர், உச்சிக்கொண்டையினையுடைய கவரிமயிர் போலும் கருமை பரந்த கூந்தலையுடையவர் (பதி. 43:1,2). வண்டுபடு கூந்தல் முடிபுனை மகளிர் (பதி. 46:4). கடல்பிறக்கோட்டிய செங்குட்டுவன் தன் மார்பினால் பிணிககப்பட்ட மகளிரின் விரிந்த மெல்லிய கூந்தலாகிய மெல்லணையில் தங்குவான் (பதி. 50:18,19). கடல்பிறக்கோட்டிய செங்குட்டுவன் தன்னால் போரில் கொல்லப்பட்ட பழையனுடைய உரிமைப் பெண்டிரது பலவாகிய கரிய கூந்தலைக் கொண்டு திரித்த கயிற்றினால் அப்பழையனின் யானைகளைச் சகட வொழுங்கிற் கடாக்களாகப் பூட்டி ஓட்டினன் (பதி. ப. 5:13-17). தேனீக்கள் பரந்து மொய்த்த கூந்தலையுடைய விறலியர் ஆடுகோட்பாட்டுச் சேரலாதனின் மறப்பண்புகளைப் பாடுவர் (பதி. 54:5,6). தகடூரெறிந்த பெருஞ்சேரலிரும் பொறையின் பெருந்தேவி நுண்ணிய கருமணலைப் போன்ற தாழிருங் கூந்தலை உடையவள் (பதி. 74:3,4). குளிர்ச்சியடையும்படி மயிர்ச் சாந்து தடவப்பட்ட எப்பொழுதும் ஈரம் புலராத கூந்தலையுடையவர் மணமகளிா (பதி. 89.15-17). இளஞ்சேரல் இரும்பொறையின பெருநதேவி வண்டார் கூந்தலையும் ஒண்டொடியையும் உடையவள் (பதி. 90:50). அணைதத கூநதலை யுடைய மகளிரொடு வேலன் குன்றுதோறாடல முருகன அங்கு நிலைத்து நிற்றலால ஆகிய பண்பாகும் (முரு. 200,205,217). ஆற்றறல் போலும் கூநதலை யுடையவள் பாடினி (பொரு. 25,47). மகளிர் அகிற புகை யூட்டுதற்கு விரித்த அழகிய மெலலிய கூந்தல போன்றது மயிலின் தோகை (சிறு.262-264). குறுகிய அறலைத தன்னிடத்தே கொண்ட கூந்தலை யுடையவள் ஆய்மகள (பெரு. 162). அரசனாகிய தலைவன் தங்கியிருந்த பாசறையில் கூநதல் அசைந்துகிடககும் அழகிய சிறு புறததை யுடைய மகளிர் பாவைவிளக்குகள் அவியுந்தோறும் கொளுததிவிட்டனர் (முல்லை. 45-49). தொன்முது பெண்டிர், கோதிப் பினனே முடித்துப் போகட்ட வெள்ளிய பெரிய நரைக் கூந்தலை யுடையவர் (மது. 407-409). மை ஒழுகினாற் போனற செறிநத கரிய கூந்தலையுடைய மயிலியலோரும் மடமொழியோரும் கல்லா மாந்தரொடு மகிழந்து திளைத்தனர் (மது. 417-420). காதலையுடைய துணைவரைப் புணர்தற்கு நயநத மகளிர் தம் நன்னெடுங் கூந்தலில் பூசிய மயிர்ச் சாநதினை அலைத்து நீக்கும்படியாக இரவுப் பொழுது வந்தது (மது. 549-552). மகளிர் குளிர்ச்சி மிகுதியினால் தம் கூந்தலிடத்தே மாலையிட்டு முடியாதவராய்ப் பலவாகிய கரிய அக்கூந்தலில் மங்கலமாகச் சில மலரையிட்டு முடித்தலை வேண்டி அகிலுடன் அயிரையும் (கணட சருக்கரையையும்) கூட்டிப் புகைக்குமாறு கூதிர்ப்பருவம் நிலைபெற்றது (நெடு. 53-56,72). பாண்டிமாதேவியின செவிலித் தாயர் நரை கலந்த நறுமென் கூந்தலையுடையவர் (நெடு. 152,153). தலைவியும் தோழியும் அருவியாடிச் சுனைகுடைந்து, பொனனிலே அழுத்தப் பட்ட நீலமணிபோல் சிறுபுறத்திலே தாழந்து கிடந்த பின்னுதலையுடைய கரிய கூந்தலை நீரைப்

பிழிந்து ஈரத்தைப் புலர்த்தினா (குறி. 55-60). 'முட்டாச் சிறப்பினை யுடைய பட்டினத்தையே எனக்குரியதாகப் பெறினும் நீண்ட கரிய கூந்தலை யுடைய காதலி ஈண்டுப்பிரிந்திருப்ப யான் தனித்து நின்னுடனே வாரேன' என்று தலைவன் தன்னெஞ்சொடு கூறிச் செலவழுங்கினான் (பட். 218-220). கொடிச்சியர் அறல் வீற்றிருக்கும் கூந்தலையுடையவர் (மலை. 304). தாழ்மென் கூந்தலை யுடையவள் தலைவி (அகம். 21:4,5). வையைத் துறையைச் சார்ந்த சோலையில நறும்பல் கூந்தலை யுடைய பரத்தையைத் தலைவன் மணந்தனன் (அகம். 30: 9-12). தலைவி பல்லிருங் கூந்தலையுடைய மெல்லியல் மடந்தையாவாள் (அகம். 43:11). நீண்டு மழைக் காலையும் தன் ஒளியினால் கடந்து ஒளிரும் தாழிருங் கூந்தலையுடைய பரத்தை யொருத்தியைத் தலைவன் தன் மனையிற் கொணர்ந்து மணந்தனன் (அகம். 46:7-10), 'விரும்பி ஐவகையாக வகுத்த கூந்தலினையுடைய மையீரோதி மடவீர்' எனத் தலைவன் தலைவியையும் தோழியையும் விளித்தான் (அகம். 48:16-18). மகளிர் மணம் நாறும்படியான ஐவகைக் கூறுபாடமைநத கூந்தலினையுடையவர் (அகம். 65:18,19). தலைவி தாழிருங்கூந்தலை யுடையவள் (அகம். 87:15). 'நாளை, காட்டினில் காந்தள் மலர்ந்தவிடத்தே தலைவியது இருள்மென் கூந்தலில் இன்புறும் துயிலைப் பெறுவாய்' என்று தோழி தலைவனுக்குப் பகற்குறி நேர்ந்தாள் (அகம். 92:7-13). 'நீளிருங் கூந்தல் மாயோள (அகம். 93:11). 'இரும்பல் கூந்தல் திருந்திழை (அகம். 94:14). வினை முற்றி மீண்ட தலைவன் தலைவியது கொத்தாகிய கூந்தல் அணிபெறுமாறு மலர்சூட்டினான் (அகம். 104:16,17). நறுமலர் வேய்ந்து காண்டற்கினிய குறும்பல் கூந்தலை யுடைய பரத்தை யொருத்தியுடன் தலைவன் புனலாட்டயர்ந்தான் (அகம். 116:7-10). இகணை மரத்தின் பசிய மெல்லிய இலைகளை நெருங்கச் செறித்து வைத்தாலொத்த, வண்டுகள் மொய்த்து இருண்ட தாழிருங் கூந்தலையுடையவள் தலைவி (அகம. 131:1-5). தலைநாள் இரவில் தலைவி புத்துடையால் உடல்முழுதும் போர்த்திக்கொண்டு புழுக்க மெய்தியபோது வியர்வையைக் காற்று ஆற்றுமாறு தலைவன் அப்போர்வையினைக் கவர்ந்தானாக, அவள் தம் உருவம் வெளிப்பட்டு விளங்க மறையும் வகையறியாதவளாய் ஆம்பற்பூமாலையை நீக்கி வண்டுகள் ஒலிக்கும் ஆய்மலர் வேய்ந்த இரும்பல் கூந்தலின் இருளால தன்னுடம்பினை ஒளித்து நாணி இறைஞ்சினாள் (அகம். 136:18-29). கூழைக கூந்தல் குறுநதொடி மகளிர் (அகம். 141:16). 'நீர் குறைந்த அறலை யொத்த இரும்பல் கூந்தல் அகற்சியில்லாத பிடரியின்பாலுள்ள அணியுடன் கூடி அசையுமாறு காதலி நள்ளிரவில் மெல்ல வந்து இன்மொழி பேசித் தொடிக்கண் வடுக்கொள முயங்கினள்' என்று தலைவன் உவந்தனன் (அகம். 142:18-26). தலைவியது ஐம்பாலாகிய சிறுபல் கூந்தலை அதனிடத்து வேயப்பெற்ற மாலையுடன் கையாற் பற்றி அருளாது செவிலி அவளது முதுகில் அடித்தனள் (அகம். 145:18-20). தலைவியின் பின்னும்படி வளர்ந்து நெளிந்த கூந்தலையும் பிற வனப்புக்களையும் நோக்கி நீடு நினைந்து அன்னை அவளை அருங்கடிப்படுத்தினள் (அகம். 150:1-6). தலைவியின் கூந்தல் பின்னல் நெகிழ்ந்தமையால் நெறிப்புடன் பிதிர்ந்திருந்தது (அகம். 158:4). 'சூடியுள்ள மலர்களில் வண்டுகள் தேனை உண்ணுமாறு தோளில் தாழ்ந்து தழைத்த இரும்பல் கூந்தலையுடைய குறுமகள்' எனத் தலைவியைத் தோழி குறித்தாள் (அகம். 161: 9-11) தலைவி அறலென விளங்கும் கூந்தலையுடையவள் (அகம். 162:10). தலைவியைப் பன்னாளும் கூந்தல் வாரி நலம்புனைந்த உதவியையுடையவள் நற்றாய் (அகம். 195: 8-10). தலைவி தோளில் தாழ்ந்து இருண்ட குவையிருங் கூநதல் உடையவள் (அகம். 197:10,11). தலைவி கார்காலத்து மணங்கமழும் கூந்தலுடையவள் (அகம். 198:5). 'வாணன் சிறுகுடியிலுள்ள சோலை போல் மணங்கமழும் கூந்தலை யுடையவள் தலைவி (அகம். 204:12-14). 'சோழரின் காவிரியின் வடிந்த நீர் வரிவரியாகச் செய்த அறல் போல நெறிந்த கூந்தலையுடையவள் தலைவி (அகம். 213:21-23). 'தோழி, புறத்திலே தாழ்ந்து தோளில் படிந்து, தும்பி, வண்டு ஆகியவற்றின் கூட்டத்தை யொக்கும் சுரிந்து வளைந்த நுண்ணிய கருநிறம் வாய்ந்த ஐம்பாலை முழுதும் வாரிக் காட்டுமல்லிகையொடு குவளை மலரைத் தொடுத்த மாலையைச் சூட்டப்பெற்ற நின் மண்ணுதலமைந்த கூந்தலிற் பொருந்திய துயிலைக் காதலர் தாம் பிரிந்தவிடத்து மறந்து கண்படுதல் எங்ஙனம் இயலும்' என்று தலைவியிடத்துத் தோழி கூறினாள் (அகம். 223: 9-16). பூவால் புனையப்பெற்ற புயலெனத் தழைத்த தாழிருங் கூந்தலை யுடையவள் எனத் தலைவியைத் தலைவன் கருதினன் (அகம். 225:14-16). 'நினது அசையும் வண்டொலிக்கும் உச்சியையுடைய பூவிதழ் பொருந்திய கூந்தலின்கண் பொருந்தித் துயின்றோராகிய தலைவர் அதனை நினைந்துதம் நெஞ்சுருகுதலால் விரைந்து வருவர்' என்று தோழி தலைவியை ஆற்றுவித்தாள் (அகம். 231:9-15). 'தலைவர் நினது கரிய ஐம்பகுப்பான கூந்தலிற் பெறும் இனிய துயிலை மறந்து பொருள்வயின் பிரிவு நீட்டித் திரார்' எனத் தோழி தலைவியை

ஆற்றுவித்தாள் (அகம். 233:14,15) பூக்கள் நிறைந்த கூந்தலை யுடைய பரத்தையொடு தலைவன ஆற்றின்கண் புனலாடினான் (அகம். 246:5-7). இடையினைக் கடந்து தழைத்து வளர்ந்த தாழிருங் கூந்தலை யுடையவள் தலைவி (அகம். 253:23). நரை விராவுற்ற நறுமென் கூந்தலினர் செம்முது செவி லியர் (அகம். 254:1,2). தலைவி தனது பொலிவுற்ற ஓதியை நெருங்க வாரி மராம்பூக்களைத் தொடுத் தணிந்த தேம் பாய் கூந்தலில் பலவாக மொய்க்கும் வண்டுகளைக் கடிந்து பாதுகாத்தலையும் தேற்றா தவளாய்த் தலைவனுடன் ஏகினாள் (அகம். 257: 4-9). பாதிரிமலர்களை அதிரலொடு கலந்து அழகு பொருந்தத் தலைவி தன் சிலவாகிய ஐம் பகுப்பை யுடைய கூந்தலில் செருகி,மராம்பூவையும் சூடி, அணி மாண் சிறு புறங்காண்டற்கு முனனே நடந்து செல் லுமாறு தலைவியை உடன்போக்கினில் தலைவன் வேண்டினான் (அகம். 261:1-8) விளங்குகின்ற ஒளி வாய்ந்த நிழலிடத்துள்ள அறல்போலக் குழன்ற கூந் தலினை யுடையவள் தோழி (அகம். 265:7-9). நரந்தம் மணக்கின்ற குவையிருங் கூந்தலையுடைய இளந் துணை மகளிரொடு தலைவன் தலைப்புணை தழு விப் புனலாடினான் (அகம்.266:1-9). 'எனது தோளே கட்டுந் தறியாக, என் கூந்தலால் தலைவனைப் பிணித்து அவன் மார்பினைச் சிறைப்படுத்துவேன்' எனப் பரத்தை சூளுரைத்தாள் (அகம். 276:11,12). பொருள்வயிற் பிரிந்துபோகும் தலைவனது நெஞ்சு இடைச்சுரத்தே மலரெனப் புலமெலாம் கமழும் மணத்தினை யுடைய கரிய பலவாய கூந்தலமைந்த தலைவியின் தோளழகை நினைந்தது (அகம். 291:21-25). காஞ்சியின் மலர் விரிந்துதிர்ந்த நறுந்தாதினை அணிந்த கூந்தலையுடைய பரத்தையொடு தலைவன் பொழிலில் துயின்று வையையில் புனலாடி வந் தான் (அகம். 296:1-6). தலைவன் பிரிவுணர்த்திய நிலையில் தலைவி கலங்கி அறலை யொத்த கூந்த லில் மறைந்து நின்று வெய்துயிர்த்துப் பருவரல் எவ்வமொடு அழிந்து பெருவிதுப்புற்றாள் (அகம். 299:10,16-21). 'நாடனே, நீ பகலில் வருவையா யின், தினைப்புனத்தில் எம்மொடு கிளி கடிந்திருந் தும் சுனைக்குவளையின் தேம்பாய் பூக்களைச் சூடியதலைவியது கூந்தல் மெல்லணையில் துயின்றும் பெயர்குவை' என்று தோழி தலைவனிடம் கூறினள் (அகம். 308:6-15). வண்டு மொய்க்கும் கூந்தலை யுடையவள் எனத் தலைவியைக் குறித்தனள் தோழி (அகம். 319:10). தலைவி தழைத்த பல வாகிய கூந்தலை யுடையவள் (அகம். 334:17). தலைவி தண்ணெனத் தாழையின் தாதாகிய துகளை அப்பிய கூந்தலின் மெல்லகத்தில் விரும் பப்படும் பூவிதழைச் சேர்த்துப் பின்னி மகிழ்ச்சி யினை அணிபெறக் கொண்ட முறுவலுடன பள்ளியிடத்தேயிருந்து தலைவனொடு நன்மொழி நவின்றாள் (அகம் 353:18-23). தழைத்த பலவாய கூந்தலையுடையவள் தலைவி (அகம். 356:16). 'மலர் நிறைந்த கூந்தலையுடைய காதலி' என்று தலை வன் தலைவியைக் குறிப்பிட்டான் (அகம். 371:14). இரும்பல் கூந்தற் சேயிழை மடந்தை (அகம். 373:10). மனையகத்தில் வதுவை மகளிரின் கூந்தல் போல மணம் கமழுமாறு காற்று வேங்கைப் பூந்தாதுக் களை உதிர்க்கும் (அகம். 378:1-4). தலைவன் பெரி தும் ஊக்கமுறுதத ஊக்கங்கொண்டு, தலைவி தன கூந்தல் ஆடும் மயிலின் தோகைபோல் பொஙகிப் பரக்க அவனுடன் போனாள் (அகம். 385:13-17). பரத்தை தலைவியின் இல்லத்திற்கு மெல்ல வந்து அவளிடத்து நல்ல மொழிகளைக் கூறித் தன் மணி யாழி யணிந்த மெல்விரலால் தண்ணென அவளது நுதலையும்கூந்தலையும் நீவிச் சென்றாள் (அகம். 386. 9-15). தலைவன் தலைவியது நெறிநத கொத்தாக வுள்ள மயிர்ச்சாந்தணிந்த கூந்தலை ஆற்றி மல ரணிந்தான் (அகம். 389:1,2). 'உச்சியிலுள்ள பூங் கொத்துக்களைப் பெற்று மயிர்சசாநதினைக் கொண்டு இருண்டு இமைய மலைக் கானமபோல மணங்கமழும் கூந்தலையுடைய அரிவையே' எனத் தலைவியைத் தோழி விளித்தாள் (அகம 399 1-3). 'தும்பியே நீ அறியும் பூக்களுள் இவ்வரிவையின கூந்தலைப்போல் நறுமணமுடையனவும் உளள னவோ' எனத் தும்பியை வினவுவோனாய்த் தலை வன் தலைவியை நலம் பாராட்டினன் (குறு. 2). சங்குமணிக் கோவை போன்ற வெள்ளிய நனெடுங் கூந்தலை யுடையவள் அகவன் மகள் (குறு. 23. 2,3). 'நரநதம் பூவின் மணம் கமழ்கினற குவை யிருங் கூந்தலையுடைய மடந்தையே' என்று தலைவி யைத் தோழி விளித்தாள் (குறு. 52:3,4). 'யாம எம் கூந்தலிடத்து ஆம்பலின புறவிதழை யொடித்த முழுப்பூவைச் செருகிப் பெரும்புனல் வந்த நீர்த துறையிலே புனலாட்டயரத தலைவனொடு செல வோம்' என்று பரத்தை தலைவிககுப் பாங்காயினோா கேட்பக் கூறினாள் (குறு. 80:1-3). 'எனனால விரும பப்பெற் றிருப்போளாகிய காதலியின் தேம்பாய கூந்தல் உறையூர் நீர்த்துறை நுண்மணலாகிய அறல் நீண்டு படிந்தாற் போன்ற நனெறிபவை யும் நறுமணத்தையும் தண்மையையும் உடையன' எனத் தலைவன் தன் நெஞ்சிற்குக் கூறி உவந்தான் (குறு. 116). 'என் காதலி நீண்ட கூந்தலையுடைய

வள்; அவளை யான் எவ்வாறு மறந்துறைவேன்' எனத் தலைவன் பாங்கன் கழறியதை மறுத்துரைத் தான (குறு.132:2,3). 'காதலியது கரிய பலவாகிய கூந்தலின இயற்கையழகைக் கண்டு, உப்புவண்டி பெருமழைக்குக் கரைநது வீழ்ந்தாற்போலக் காமத் தால் நாணழிந்து, விழைந்ததன் பின்னும் விழைந் தனை' எனத தலைவன் தனனெஞ்சிற்குக் கூறி னான (குறு. 165). 'இவ்விளவேனிற் காலத்தினும் தலைவர் மீளாமையால புனையப் பெறாமலுள்ள எனது வறிய கொத்தாகிய கூந்தலை யான் வறிதே தடவுகின்றேன' எனத் தலைவி தலைவனின் பிரிவிடையே தோழியிடத்து வன்புறை எதிர ழிந்துமொழிந்தாள் (குறு. 192:5,6). ஓரியின கானத் தைத் தீண்டி வீசுகினற காற்றைப் போலக் கமழும் நெறிப்பமைந்த கூந்தலாகிய மைபோலும் தண்ணிய ஓதியையுடைய மாயோள் எனத் தலைவியைத் தலைவன் குறித்தான் (குறு. 199: 3-5). குனறத்தில் போரிடும் களிறுகளால் மிதி பட்ட நெரிந்த அடியையுடைய வேங்கைமரம் குற மகளிர் தாம் கூந்தலின்கண் அணிந்து கொள்ளு தற்கு நினறபடியே கொய்யும்படி மலரும் (குறு.208: 1-4). தலைவி வெட்சியின் முறுக்கவிழ்ந்த பல போதுகள் இருந்து கமழும் மையிருங் கூந்தலை யுடைய மடநதையாவாள் (குறு. 209:5-7). 'நாடனே, நினக்கு யாம் செய்த நன்றியை மறந்து விடாதிருப் பாயாயின் இத்தலைவியது மயிற்பீலியை யொத்த தழைத்த மெலலிய கூந்தல நினக்கே யுரியவாம்' எனத தோழி வரைவிடை வைத்துப் பிரியும் தலைவனிடம் கூறினாள் (குறு. 225:2,5-7). 'யாம் வினைமுடித்த உள்ளத்தோடு இத்தலைவியை யெய்திக குவளை மலர் மணக்கும் இவளது நறு மென கூநதலாகிய மெலலணையிலே இருக்கின றேம்' எனத் தலைவன் உவந்தான் (குறு. 270:4-8). 'மணம் கமழ்கின்ற கரிய கூந்தலையுடைய கொடிச் சியின தோளைத் தீணடலும இயைவதோ' எனறு தலைவன தலைவியின் அருமையைப் பாங்கனிடம் கூறினான் (குறு. 272:1,8). 'மணம் கமழும் அகிற் புகையும் சநதனப்புகையும் மணக்கினற, அறல் போலும கூந்தலையுடைய கொடிச்சியின முறுவ லொடு செருககிய பார்வையை யான நினைத்துப் பார்பபேன' என்பது தலைவியைக் குறித்த தலை வன் கூற்று (குறு. 286). 'குவளை மணம் கமழ்கின்ற குவையிருங கூநதலையுடைய மாயோயே' எனத் தலைவன தலைவியை விளித்தான (குறு. 300:1,4). மலையனது முள்ளூர்க் கானம் போல மணம்கமழ வநது இரவில் தனக்கேற்ப நடந்து கொண்ட தலைவி, கூந்தலில் அணிந்த பல்வகை மலர்களை யும் பிறரறியாமல் உதிர்த்துவிட்டு மயிர்ச்சாந் திட்டுக் கோதிய நறுங்கதுப்பில் எண்ணெயைத் தடவித் தன்னொடு பொருந்தாத முகத்தையுடைய வளாய் வைகறையில் தமரொடு ஒத்து ஒழுகியமை கணட தலைவன் அவளை, 'இரணடறி கள்வி' என உவநது குறிப்பிட்டான (குறு.312). நெடும்பல் கூந்தற் குறுநதொடி மகளிர் (குறு. 384:2). விளை யாட்டு மகளிர் அடும்பின் மலரைக் கலந்து தொடுத்த நெயதல் மலராலாகிய நெடிய மாலை யைத் தம் நீரொழுகும் கூந்தலில அணிந்திருந்தனர் (குறு. 401:1-3). 'ஊரனே, நின பிழையாத நன் மொழியைத் தேறிய இத்தலைவியின பொன் போன்ற மேனியில் கருமணி போலத் தாழந்த நன்னெடுங் கூந்தல் நரையுடனே முடிக்கப் பெற் றாலும் அக்காலத்தும் இவளை முதியள் என்று நீ கைவிடாது பாதுகாப்பாயாக' எனறு தோழி தலைவனிடம் தலைவியைக் கையடைப்படுத்தாள் (நற். 10). வண்டுகள் மொய்க்கும் மராம்பூக் கமழும் கூநதலை யுடையவள பரத்தை (நற். 20:2,3,7). வினைமுறறி மீளும் தலைவனது வரவை இளையர் முன்சென்று அறிவித்தவுடன் தலைவி மெலலென அதுகாறும நீராட்டப் பெறாத கூந்தலை மாசறக் கழுவிக கைபுனைநது சில மலர்களைக் கொண்டு பலவாகிய அம்முடியிலே அணிநத நிலையில் அவன வர அவள் மெய் துவள வந்து அவிழநது குலையும் முடியினளாய் அவனை அணைத்துக் கொணடாள் (நற. 42:5-11). 'நெஞ்சே, அதிரற் பூவுடனே பாதிரி மலரையும் சேர்த்துக் கட்டிய ணிநத தலைவியது கூந்தலின் மணங்கமழும் நறு நாற்றத்தை நுகர்ந்து அவளது ஆகத்தை முயங்கிப் பிரியமாட்டேம்' எனறு தலைவன தன்னெஞ்சொடு கூறிச செலவழுங்கினான (நற. 52:1-5). மாயிருங கூநதல் மடந்தை (நற். 60:10). அரிநரைக் கூந்தல் செம்முது செவிலியா (நற. 110:6). தலைவன செலவு ணர்ததிய நிலையில தலைவி தன் பின்னிருங் கூந் தல் விரிய அதனுள் மறைந்தவளாய்ப் பெரிதும் நெஞ்சழிந்தாள் (நற்.113:5-8). தணணியவாய்க் கமழ் கின்ற தாழிருங் கூநதலையுடையவள் தலைவி (நற். 137:1,2). 'கடைகுழனறு தழைத்த கூந்தலையுடைய மாயோள்' எனத தலைவன தலைவியைக் குறித் தான (நற். 139.7). 'அரிசிலாற்றின் தெள்ளிய கரு மணல் போன்ற இததலைவியது விரிந்த தழைத்த கூந்தலிடத்துத் துயிலுவதனை விட்டு யான் சிறு பொழுதும் அமையேன' என்று தலைவன் செல வழுங்கினான் (நற்.141:11,12). மகளிர் தம் கூந்தலில்

அணியும் கோதைக்கு - அடும்பின் அலர்களைக் கூட்டுவர் (நற். 145:2,3). ஐம்பாலாகப் பகுக்கப் பெற்று நெற்றி மேல் பொலிந்த தேன் பரவிய கூந்தலாகிய ஓதியையுடையவள் தலைவி (நற். 160: 4,5). விறலி, மயிர்ச்சாந்தணிந்த கூந்தலையுடையவள் (நற். 170:1). 'தலைவி சில்வளைப் பல்கூந்தலள்' (நற். 198:8). "என் தழைத்த பலவாகிய கூந்தல் நலம் பெறுமாறு புனைந்த கோதையை வாடும்படி செய்த பகைவனல்லையோ நீ' எனத் தலைவி பரத்தமைத் தலைவனிடம் புலந்துரைத்தாள் (நற். 250: 9-10). தலைவி குவளைமலர் மணக்கும் கூந்தலையுடையவள் (நற். 262:7). 'அழகு விளங்கும் கலாபத்தை வியக்கும்படி விரித்து ஆடுகின்ற மயில் போல, மலரணிந்த நின் கூந்தலைக் காற்று விரித்துவிட, நீ சிறிதே விரைந்து நடப்பாயாக' என்று உடன்போக்கில் தலைவன் தலைவியிடம் உரைத்தான் (நற். 264:3-6). தலைவி சோலை மலர்களை முடித்தலால் அம்மலர் மணம் கமழும் வண்டுகள் மொய்க்கும் நறுநாற்றத்தை யுடைய இருள்புரை கூந்தலையுடையவள் (நற். 270:2,3). நன்னன் தன் பகையரசைப் போரில் கொன்று அவர்தம் உரிமை மகளிரைப் பற்றி வந்து அவர் கூந்தலைக் கொண்டு கயிறு திரித்து அக்கயிற்றால் அப்பகைவரின் யானைகளைப் பிணித்துக் கொணர்ந்த செயல் கொடியது (நற். 270:9,10). புறத்தே தாழ்ந்து இருண்ட கூந்தலை யுடையவள் தலைவி (நற். 284:1). தலைவியின் தோழியர் முதலொடு கரிந்த வள்ளிக்கொடி போலப் புறத்தழகெல்லாம் அழிந்து தழைத்த தாழிருங் கூந்தலை யுடையராயினர் (நற். 295:1-3). தலைவி அகிலினது நெய்பூசி நீவுதலொழியாத மணங்கமழ் கூந்தலள் (நற். 301:9). தலைவியும் தோழியும் தம் தழைத்த பலவாய கூந்தலிலே வேங்கைப் புதுப்பூக்களை அணிபெறப் புனைந்துகொண்டு தலைவனைக் காணச் செல்வர் (நற். 313:1-5). கொல்லிமலையிற் பூத்த சிறுபசுங்குளவியின் செவ்வி மணங் கமழ்கின்ற கூந்தலையுடைய அரிவையின் தோள்களைத் தலைவனது நெஞ்சு பிரிந்தவிடத்து நினைந்து மகிழ்ந்தது (நற். 346:7-11). 'விரும்புதற்குரிய கருமணியின் நிறம் அமைந்த புனைநெடுங் கூந்தலையுடைய அரிவை' என்று வினைமுற்றி மீளும் தலைவன் தலைவியைக் குறித்துப் பேசினன் (நற். 374:6,9). 'அசைகின்ற கூந்தலையுடையவள் தலைவி (ஐங். 72: 2,3). பைஞ்சாய்க் கோரை போலும் கூந்தலையுடையவள் பரத்தை (ஐங். 78: 1-3). தலைவனின் மார்பிலணியப்பட்ட மாலையில் தாதினையுண்ணும் வண்டு தலைவியின் மலர் பொருந்திய கூந்தலில் வந்து மொய்த்தது பொறாமல் காதற் பரத்தை தலைவனை வெகுண்டாள் (ஐங். 91). 'நீ எமக்கு நல்காக்கால் யாம் தலைவியின் தோளையும் கூந்தலையும் பலபடப் பாராட்டியவாறே வாழ்தல் இயலுமோ' எனத் தலைவன் தோழியிடம் இரந்து குறையுற்றான் (ஐங். 178). தலைவனது துறையிடத்தே மகளிர் நாரையினம் போல, நீரொழுகும் கூந்தலை விரித்துலர்த்துவர் (ஐங். 186: 1,2). 'எனது நிறையரு நெஞ்சத்தைக் கவர்ந்து கொண்டு ஒளித்தவள், கடற்கழியின்கண் மலர்ந்த நெய்தற் பூக்கள் சூடப்பட்ட கரிய பலவாய கூந்தலையுடையவள்' எனத் தலைவன் பாங்கனிடம் கூறினான் (ஐங். 191). தலைவி கொழும்பல் கூந்தலையுடைய மடவரல் ஆவள் (ஐங். 195: 1,2). தலைவி குவளை மலரின் உள்ளகம் போலும் கமழும் கூந்தலையுடைய மெல்லியலாவள் (ஐங். 215: 2,3). இரும்பல் கூந்தல் திருநுதல் அரிவை (ஐங். 231:2). 'சந்தனம் மணக்கும் நின் மார்பு இப்போது நறுமணம் கொண்டவளாகிய பரத்தையது கூந்தல் மணத்தை பெற்று வண்டினம் மொய்க்கும்படி மணக்கின்றமையால், யாம் நினது புறத்தொழுக்கத்தை யறிந்தோம்' என்று தோழி தலைவனிடம் கூறினாள் (ஐங். 240). 'குன்றக்குறவன் காதல் மடமகளாகிய வண்டுபடு கூந்தலையுடைய கொடிச்சி இளையளாயினும் ஆரணங்கினள்' எனத் தலைவன் தலைவியைப் பற்றித் தோழியிடம் சொன்னான் (ஐங். 256). 'இரும்பல கூந்தலையுடையவள் கொடிச்சி (ஐங். 281:3). பின்னிருங் கூந்தல நன்னுதற் குறமகள் (ஐங். 285:1). பூக்கமழ் கூந்தற் கொடிச்சி (ஐங். 290: 3). 'நாடனே, மங்கல மனைக்கண் இத்தலைவியை நீ இவ்வாறு வதுவை அயர்தற்கேதுவாக இவளது பின்னிருங் கூந்தலில் பண்டு களவுக்காலத்திலேயே மலரணிந்த நீ இன்று இவ்வதுவையிலும் இவட்கு மலரணிந்து இனிது செய்தனை' எனத் தோழி தலைவனைப் பாராட்டினள் (ஐங். 294). கொடிச்சி கூந்தல் போலத் தோகைமயில் அழகிய சிறகை விரிக்கும் (ஐங். 300:1,2). விழாவைப் போலும் நறுமணம் கமழும் தழைத்த கூந்தலையுடைய மாயோள் தலைவி (ஐங். 306:4). தலைவி பல்லிருங் கூந்தல் மெல்லியலோள் (ஐங். 308:1). தேம்பாய் கூந்தல் மாஅயோள் (ஐங். 324:5). 'முடிப்பதற்குரிய நீட்சியையும் அடையாத கூந்தலையுடைய என் மகள் தன் தலைவனான காளை காப்பக் கடுவனும் அறியாத காட்டினைக் கடந்து சென்றாளே' எனத் தலைவனுடன் போன தலைவியை நினைந்து தாய் இரங்கினாள் (ஐங். 374). 'மாஅயோயே, யாம் வேந்தனுக்குப் பாசறைத் தொழிலில் வெற்றியை யுதவி நம் நாட்டிற்குப் போதரும் பொழுது நின் முல்லை

புணைக்கும் கூந்தல் கமழ் கொள்ளுமாறு நல்ல புல இனபங்களைக் காண்போம்' என்று பாசறைக்கண் தலைவியின உருவு வெளிப்பாடு கண்டு தலைவன் கூறினான் (ஐங். 446). 'புதாமிசைப் பூத்த நறுமலர் களைக கவின பெறத் தொடுத்து நின நலமிகு கூநதலில் தகைகொளப் புனையுமாறு தலைவர் விரைநது வாராது பிரிவு நீட்டித்திரார்' எனறு தோழி தலைவியை வற்புறுததினாள். (ஐங. 463:1-3). 'அரிவையே, நினனை நினையுநதோறும் கலிழும நெஞ்சமொடு யாம் நினது பினனிருங் கூந்தலின் நன்னலத்தைப் புனையக கருதி வந்தேம்' என வினைமுறறி மீண்ட தலைவன தலைவியிடம் உரைததான் (ஐங்: 495:3-5). 'பேரமர்க் கண்ணியே, நினனைப் பிரிநதுறைந்த தலைவர் நினக்குத் தோள்துணையாக வநதனராதலால் இனி, நின் போதவிழ கூநதலும் பூவணிதலை விரும்புவதாக' எனத் தோழி தலைவிக்கு அவரது வரவு கூறினான் (ஐங். 496: 3-5). 'நீ பாண்டரங்கமென்னும் பெயர் பெற்ற கூத்தினை ஆடுங்கால் வண்டுகள் ஒலிக்கும் கூந்தலாளோ (உமையமமையோ) தாளத்தினிடை நிக ழும் காலத்தையுடைய தூக்கினைத தருவாள்' என்று வினவும் முறையில சிவபெருமானை வாழ்த் துப் பெறுகினறார் (கலி. 1:9,10). 'மழை விரும்பு கினற கரிய கூநதலையுடையவளே' எனத் தலைவி விளிக்கப் பெறுதல் (கலி. 14:4;60:2;131:21). நீலமணி ஒளி விட்டாற போன்ற தலைவியது கூநதலில் புழுகுநெய் பூசித் தாயர் ஐவகையாக முடித்த இள மைச செவ்வியைத தலைவன் களவொழுககததே பாராட்டினான (கலி. 22:12,13). 'மையுண் கண் ணினை யுடையாய், நமது நெறித்த கூந்தலைப் பிணிய பின்னல் விடும்படியாகத் தலைவர் விரைந்து வநதார' என்று தோழி தலைவியிடத்துத் தலைவனது வரவுரைததாள் (கலி. 33:28-31). 'அழக மைநத கூநதலையும பூமணம் வீசும் கதுப்பினையும் உடையவளே' எனத்தோழி தலைவியை விளித்தாள் (கலி. 40:8-9). தாழிருங கூநதலையுடையவள எனத் தலைவி தோழியைக குறிததாள் (கலி. 42:29). 'இரு ளோடே மாறுபடுகின்ற கரிய கூந்தலையுடையவள் தலைவி (கலி. 49:18). 'பொனனாற் செய்த மகரவா யாகச் சமைநத தலைக்கோலம விழுங்கிக் கிடந்த, நரந்தமபூ மணம் கமழும் என கரிய கூந்தலின் முடியைத தலைவன எஞ்சாது மிகப்பிடித்து, அதிலே நலம்பெறக் கட்டியிருநத மாலையை விர லால முறையாகச் சுற்றி அதனை மோந்து பார்த் தான' எனறு தலைவி தோழிக்குரைத்தாள் (கலி. 54:5-8). 'கணடவரை அவ்விடததே அரும்படர் செய்து போகினற பரநது தழைதத கூந்தலை யுடையவளே' எனத் தலைவியை விளித்தான் தலை வன (கலி. 64:5,6). தன்னால் குறியிடம் பெற்ற பரத் தையருடைய குரலமைந்த கூந்தலின் முடியைத் தலை வன் வகிர்ந்து கைசெய்து முடித்தலால் அம் முடியி லிருந்த பூந்துகள அவன்மேல் வீழ்ந்து கிடந்தது (கலி. 72:19,20). 'நின பாணன் நோதிறப்பண் பாடியவாறு எம்மனைக்கண் நீ சென்று சேர்ந்த பரத்தையர் மனையைக் கேட்டு வாராதிருத்தலை யான் பெறுவேனாயின மாசறக் கழுவுதலுற்ற நீல மணியை, 'நீ எனக்கொவ்வாய' எனறு ஏசும் என் கரிய கூந்தல் பூவணிந்து வணடுகள் ஆரவாரிக்கும் அழகைப் பெறுதலையும் யான் விருமபேன்' எனத் தலைவி தலைவனிடம் ஊடலொடு கூறினாள் (கலி. 77: 16-19), பரத்தையர் கூந்தலின் மணம் நாறுகின்ற மார்பினை யுடையனாயத் தலைவன் காமக் கிழத்தியிடத்தே வந்தான் (கலி. 78. 17,18). தலைவன் பரத்தையிற் பிரிதலால் தலைவி பூவில் லாத வறுங்கூந்தலோடு இருந்தாள் (கலி. 80:22). பரத்தைமைத் தலைவனிடத்து ஊடல கொணட தலைவி அவனிடம், 'யாம் நின்னைக் காணுமிடத்து வெருவுவோம்; ஆதலால் நீ எம் கூந்தலைத் தீண் டாதே நீங்குவாயாக' என்றாள் (கலி. 87:1,2). பரத் தையிற் பிரிந்து வந்த தலைவன தொட்டவுடன் தலைவி, 'யார் இவன்; எம் கூந்தலைத் தொடுதற்கு இவன என்ன தொடர்புடையன்' எனத் தன்னெஞ் சொடு கூறினாள் (கலி. 89;1). தலைவன் தலைவி யிடத்துக் கற்பிததுச் சொனன கனவினுள், பூக்கொய்யுமிடத்து வண்டுகளால மொய்க்கப்பட்ட மகளிருளொருத்தி துகிலை ஒருகையாலே தழுவிக் கொண்டு மறறைக் கையினால் முடி குலைந்த கரிய கூந்தலைப் பிடித்துக்கொண்டு குளத்தில் பாய்ந்தனள் (கலி. 92:42-44). பரத்தையரிடத்தே தங்கி வந்த தலைவன் கடவுளரைக் கண்டு தஙகி வந்தேன் என்று தலைவியிடம் கூறியதற்கு அவள், 'நறுமணம் கொண்ட குளிர்ந்த மயிர்ச்சாந்தமும் புழுகும் மணககும அறல்பட்ட குரலமைந்த கூந்த லுககு நாட்காலததே அணியும் அணிக்கேற்ப நீ முதனாள் பூவைப் பலியாகக் கொடுத்துவிட்ட கடவுளரைக் கண்டாயோ ஆயின், நீ அவரிடத்தே செல்; இனி, அவ்வாறு செல்லாதொழியின் நின் னொடு மேவிய நெட்டிருங் கூந்தலையுடைய அக்கடவுளரெல்லார்க்கும் நீயில்லாமையால் முட்டுப் பாடு ஆதலும் உண்டு' என்று பரத்தையரையே கடவுளராக்கிக் கூறினாள் (கலி. 93: 21-24,33-36). பரத்தையைக் கூடிவந்த தலைவன் குதிரையேறி வந்ததாகக் கூறக்கேட்ட தலைவி, நீ ஏறிய குதிரை தான். ஐம்பால் பகுதி பிரியாத ஐவகை யமைந்த

கூந்தலாகிய பல மயிர்களைப் பலகாலும் கத்தூரி கையிடும் சுவலினையும் மயிர்முடியின் மேலே விரித்து நிலைபெறுத்திய துஞ்சாகிய தலையாட்டத்தினையும் உடைய காமக்குதிரை' என்று பரத்தையைக் குறித்தே கூறினாள் (கலி. 96: 7-9,18). தலைவனுடைய பரத்தையரை, 'நெறிதாழ் இருங் கூந்தல் நினபெண்டிர்' எனத் தலைவி குறித்தாள் (கலி. 97:28). இடைமகளிர் நாறிருங் கூந்தலையுடையவர் (கலி. 101:48). இந்தக் கூரிய கொம்பையுடைய கரிய ஏற்றின் சீற்றத்தை அஞ்சாது இதனைத் தழுவுவோன் இவ்வொள்ளிழையாளின் வாருதலுற்ற கூந்தலிலே துயில் பெறுவான்' என்பது ஏறுதழுவலின்கண் ஆயர் அறிவிப்பு (கலி. 104:20,21). களவுத் தலைவி தனது ஐவகைப்பட்ட கூந்தலை ஆற்றும்போது அது தலைவனால் சூடப்பட்ட சிறு முல்லைப் பூவின் மணம் கமழ்ந்ததற்குச் சுற்றத்தார் மனஞ்சுழன்று மாறுபட்டுச் சினந்தனர் (கலி. 105: 53-56). 'நெட்டிருங் கூந்தலாய்' என்று தோழி தலைவியை விளித்தாள் (கலி. 105-57). 'முற்றிழாய், நின் தாது சூழ் கூந்தலிலே யான் கோதையை அழகு பெறப் புனைகேனோ' எனத் தலைவியிடத்துத் தலைவன் வினவினான் (கலி. 111:11-13). தலைவன் சூடிவந்ததொரு முல்லைத் தொடையினையும் அதனாற் செய்ததோர் கண்ணியையும் தலைவி தன கூந்தலில் இட்டு முடித்தாள் (கலி. 115: 4-6). இருளோடே மாறுபடுகின்ற கரிய கூந்தலையுடைய மகளிர் எனத் தலைவனுக்குரிய வேற்று மகளிரைக் குறித்தாள் தலைவி (கலி. 122:12). 'இருளுறு கூந்தலாள்' என்று மடலேறுந் தலைவன் தலைவியைக் குறித்தான் (கலி. 140:33). பலவாய்த் தழைகின்ற கூந்தலாளாகிய தலைவி யொருத்தி தன்பண்புகளை யெல்லாம் நுகர்ந்து தனனைக் கைவிட்டவனை நினைந்து அழுதாள் (கலி. 145:7,8). 'தலைவனோடே கலந்த, சில மழை போல் நீண்டு இருண்ட கூந்தலின அழகைப் பெறும் விலைவளத்தை யறிந்து அதனை மாற வறியாது அவன் கூறிய பொய்ம்மொழி யாகிய வலையிலே என்னெஞ்சு பட்டது' எனப் பிரிவாற்றாது கலக்கமுற்ற பெருந்திணைத் தலைவி பேசினாள் (கலி. 147:18-21). வையையாற்றின் புதுப்புனல் வரவு அறிந்த மதுரை மகளிருள் சிலர் புனலாடச் செல்லுதற்காகத் தம் கார்கொள் கூந்தலைக் குழலாக முடித்தனர் (பரி. 12:15). மதுரைக்கும பரஙகுன்றத்திறகும் உள்ள இடைவழி நெருங்கி விளையாடும் மகளிரது கூந்தலினின்றும் மைந்தரது குஞ்சியினின்றும் வீழ்நத மாலைகளால் தடைபட்டு இயங்கும் வழி இலலாதாயிற்று (பரி. 17:26,27). செவ்வேளின திருபபரங்குன்றத்தினகண் அவரது யானைக்குச் செய்யும் பூசையில் அவ்வியானை கவழங்கொண்ட மிச்சிலை உண்ணாதொழியின் பல மணமும் நிலைபெற்ற பின்னிருங் கூந்தலராகிய மகளிர் தம் காதலரது முறுவலொடு கூடிய தலையளியை எய்தார் (பரி. 19: 88-94). காரணி கூந்தல் மகளிர் சீரணி வையைக்கு அணிகொல்லோ, வையையின் நீரணி நீத்தம் இவர்க்கு அணிகொல்லோ என்று தேர்தற்கு அரிய தாய் இருந்தது (பரி 22:29-34). பூங்கொத்துக்களால் பொலிநது தழைத்து அசைகின்ற கரிய கூநதல (பரி. 22:46). நீலமணி போன்ற நிறத்தினையும் அழகினையும் கூறுகூறாக அறல்பட்டுச் செறிநது தழைத்துப் பொலிவுற்று விளங்கும் எழுச்சியினையும் கண்டோரால் புகழபபடுதலையுமுடைய கூந்தலமைந்த மகளிர் தத்தம் காதல் மைநதரொடு குளவா யென்னும் திருப்பதியில எழுநதருளிய பூமுடி நாகரை (ஆதிசேடனாரை) வணஙக, அவர்க்கு நல்லவை எல்லாம் இயையும (பரி. தி. 1:60-63). நெயயணி கூந்தலர் (பரி. தி. 2·13). காதற் பரத்தையொடு புனலாடி யிருநத தலைவன புனல வழியே விடுத்த மணங்கமழும தாரினை வாங்கி இற்பரத்தை தன் கூந்தலில் சூட்டிககொணடாள (பரி. தி.2:34,35). வையையாறு தன்னிடததே புனலாடும் மகளிருடைய கூந்தலினின்று சோாநது வீழ்நத மலர்களால் நீர்நிறம் தோனறாது (பரி. தி. 2 85-87).

2. கூந்தலையுடையவள (ஆகுபெயா). மணம பேச வந்தோர்க்கு மகள் மறுககப்பட்டுப போர்ககுக் காரணமான தலைவி யொருததி, கூடல நகரை யொத்த குவிந்த கரிய கூநதல - கூந்தலையுடையவள் - (புறம. 347:6,7). 'சிறபபுறற சிலவாகிய ஐம் பகுதிகளையுடைய கூநதலது (தலைவியது) நலலகம் பொருந்தி மனையில தஙகிவிடின நீ வறுமையை அஞ்சுகிறாய' எனத் தலைவன தன் நெஞ்சு நோக்கிக் கூறினான் (அகம. 123:5-7). 'நிரைத்த முலலை யரும்புகளைச் சூடி மெலலியவாய அறலென விரிநத ஒலியிருங கூந்தல் (தலைவி) தெளிந்திருப்பாளென்று பிரிவுணர்த்தும் வலிய சொறகளைக் கூறவும் வனமை யுடையையோ' எனத தலைவன தன்னெஞ்சொடு வினவிச செலவழுங்கினான (அகம. 191:13-17). 'முலலை மலர்கள் மணம் கமழும் பல்லிருங் கூந்தல நமக்கு எனன உறவுடையவளோ' என்று தலைவன உணர்ப்புவயின வாரா ஊடற கண் தலைவியைக் குறித்து நெஞ்சொடு கூறினான (குறு. 19:3-5). 'வலவில ஓரியின கானம் போல் நறுமணமுடையவாகி, கரிய பலவாய்த தழைத்த கூநதல் யாம் வந்தனம் என்பதைக கேடபளாயின களிப்பினால பெரிதும் மயகக மெய்துவாள' என

இரவுக்குறியில தலைவியைக் காணாத தலைவன் தோழி கேட்பத தனனெஞ்சொடு கூறினான (நற். 6:9-11). 'கொல்லிமலையில் இருக்கின்ற கலிதத மயிலின கலாவம் போன்ற ஒலிமென் கூந்தல் நமமைச சேர்ந்தவளே' எனத் தலைவன் தோழி யிடத்து இரநது பினனின்ற நிலையில தன்னெஞ் சிற்குக் கூறினான் (நற். 265:7-9). 'யாம் பொருள் வயிற் பிரிந்து மலைநெறியிற் செல்லுமிடத்து அருமபு மலர்நத மலரின மணங்கமழும் கூந்தலை (தலைவியை) நோக்குதல் இயையுமோ' என று நெஞ்சை வினவித் தலைவன் தலைவியைப் பிரி யாது செலவழுங்கினான் (நற். 298:8-12). 'நன் னெடுங் கூந்தல இனித் தலைவனுடனான கேண் மையை நாடாள்' எனறு தோழி வாயில்மறுத்தாள் (ஐங். 153:4,5). 'தொண்டிப் பட்டினத்தில் மலர்ந்த குளிர்ந்த நறுமணம் மிக்க நெய்தல மலர் போன்று மணங்கமழும் பின்னிருங் கூந்தலால் (தலைவியால்) காதல் நோயுறுத்தப் பெற்றோர் இரவிலும் துயி லறியாது அரவுறு துயரமெய்துவர்' என்பது பாங் கனது தெளிவு (ஐங. 173). மலர்பொருந்திய கூந் தல் தன இயலும் அணியும் கெட்டொழியும்படி தலைவன் அவளைப் பிரிந்தான் (ஐங.232:1,2). தான சொலலும் சொற்களை இவள் மெய்யாகக் கொள் வாள் எனக் கருதி வண்டுபடு கூந்தலைப் பேணித் தலைவன அவளிடத்துப் பொய்மமொழிகளைச் சொல்லித் தேற்றுவான் (ஐங. 267:3-5). 'வயமான் தோன்றல, நீ பிரிநது செல்வாயாயின மெலலியலை யுடைய புயனெடுங் கூந்தல புலம்புறுவாள' என்று தோழி தலைவனைப பிரிவு விலக்கிப் பேசினாள் (ஐங்.304:3-5). உடன்போக்கில் தலைமகன் வளைத்த கொம்பினினறு பூககொய்த, ஐநது வகையாக ஆய்ந்து புனையபபட்ட கூந்தல் அப்பூக்களைத தன பஞ்சாய்ப் பாவைக்கும் தனக்குமாக வகுத்தது கணடு அத்தலைவன் உள்ளம் மகிழநதது (ஐங. 383). 'தாழிருங் கூநதலே, விருப்பந தருகின்ற புதுப புனலில ஆடுவோம், விரைந்து வா' எனத் தலைவன் தலைவியை அழைத்தான் (ஐங். 411:3,4). 'மலர்பொருந்திய கூந்தல் தேனுண்ணும் வண்டு மொய்க்க எம்மை முயங்கினள' எனத் தலைவன உவந்து மொழிநதான (ஐங. 417:3,4). 'பல்லிருங் கூந்தல, நீ என பிரிவினை யெண்ணிப் பசத் தலைவிட்டு, என செலவிற் கிசைநதனை யாயின் யான வேநதுபகை வெல்லுதற்குச் செல்வேன்' எனத் தலைவன தலைவியைத தெளிவிததான் (ஐங. 429). 'இகலகொல்லேறறினைச் சாடித் தழுவ இருந் தோர்ககு யாம் எம் பலவாய கரிய கூந்தலைக் கூடுமாறு கொடுப்பேம்' என்று தலைவியின தமர் அறிவித்தனர் (கலி. 101 : 41,42).

3. கூந்தலையுடைய குதிரை (ஆகுபெயர்). 'கூந்தல் - கூந்தலையுடைய குதிரை - என்று கண்டார் சொல் லும் வடிவொடு வந்த கூந்தல் (கேசி) எனபானது கனல்கின்ற சினததை அழிததோய்' எனத் திருமால் போற்றப்படுகினறார் (பரி. 3:31,32).

4. அசுரன். கூந்தலை யுடைய குதிரை என்று கண் டார் சொல்லும் வடிவொடு வந்த கூந்தல் (கேசி) என்னும் அசுரனது கனல்கின்ற சினத்தை அழித் தவர் திருமால் (பரி. 3:31,32).

**கூந்தலர்** - கூந்தலையுடையவர். தொன்முது பெண்டிர், கோதிப் பினனே முடித்த வெள்ளிய பெரிய நரைக் கூந்தலர் - கூந்தலை யுடையவர் - (மது. 407-409). செவ்வேளின் திருப்பரங்குன்றத்தினகண் அவரது யானைக்குச் செய்யும் பூசையில் அவ்வியானை கவழங் கொண்ட மிசசிலை உண்ணாதொழியின் பலமணமும் நிலை பெற்ற பினனிருங் கூந்தலராகிய மகளிர் தம் காதலரது முறுவலொடு கூடிய தலை யளியை எய்தார் (பரி. 19: 88-94). வையைப் புனல் விழாவிற்கு நெய்யணி கூந்தலராகிய மதுரை மகளிர் சிலர் யானைமேற் சென்றனர் (பரி. தி. 2: 13-15).

**கூந்தலள்** - கூந்தலையுடையவள். அகிலினது நெய்ப்பூசி நீவுதல் ஒழியாத மணங்கமழ கூந்தலள - கூநதலை யுடையவள - ஆகிய தலைவி குறிஞ்சிமலர் புரை யும் மேனியையும் சுனைமலரைப் பிணைத்து வைத் தாற் போனற கண்களையும் மயிலோரன்ன சாய லையும் கிளியோரனன மொழிகளையும் பாவை போனற வனப்பினையும் உடையவள் என நெஞ்சு விழையப் பல பாராட்டி, யாய் மறப்பறியா மடந் தையா யிருக்கிறாள் எனத் தோழி கூறினாள் (நற். 301). 'முடிப்பதற்குரிய நீட்சியையும் அடையாத கூந்தலளாகிய எனமகள் தன் தலைவனான காளை காப்பக் கடுவனுமறியாத காட்டினைக் கடநது சென்றாளே' எனத தலைவனுடன சென்ற தலை வியை நினைந்து தாய் இரஙகினாள் (ஐங. 374).

**கூந்தலாய்** - கூந்தலையுடையாய் (விளி). கண்டாரை அவ்விடத்தே அரும்படர் செய்து போகினற பரந்து தழைத்த கூநதலாய் - கூந்தலையுடையாய் - எனத் தலைவன் தலைவியை விளித்தான (கலி. 64: 5, 6). 'நெட்டிருங் கூநதலாய்' என்று தலைவியைத் தோழி விளித்தாள் (கலி. 105: 57).

**கூந்தலார்** - கூந்தலையுடையார். தலைவனை நோக்கித் தலைவி 'நறிய கரிய கூந்தலாரது - கூந்தலையுடை யாரது (பரத்தையரது) - இல்லத்திற்குச் செல்கின்ற நீ வழி தவறி இங்கு வந்துள்ளாய்; இங்குப்

பாராதே. அவரில்லத்துக்கே செல்' என்றாள் (கலி. 95: 1-4).

**கூந்தலாள்** - கூந்தலை யுடையாள். நீ பாண்டரங்கம் என்னும் பெயர் பெற்ற கூத்தினை ஆடுங்கால் வண்டுகள் ஒலிக்கும் கூந்தலாளோ - கூந்தலையுடையாளோ (உமையம்மையோ) - தாளத்தினிடை நிகழும் காலத்தையுடைய தூக்கினைத் தருவாள்' என்று வினவும் முறையில் சிவபெருமானை வாழ்த்தப் பெறுகின்றார் (கலி. 1: 9, 10). 'இருளுறு கூந்தலாள் என்னை அருளும்படி செய்வீராயின் அது நுமக்கு அறனும் புகழுமாகும்' என்று மடலேறும் தலைவன் கண்டாரிடம் கூறினான் (கலி. 140: 33, 34). பல வாய்த் தழைகின்ற கூந்தலாளாகிய தலைவி யொருத்தி தன் பண்புகளை யெல்லாம் நுகர்ந்து தன்னைக் கைவிட்டவனை நினைந்து அழுதாள் (கலி. 145:7,8).

**கூந்தற்கிழவர்** - கூந்தலைத் தீண்டுதற்குரிய கணவர். 'பறம்பே, பாரி இறந்து விட்டமையால் கலங்கிச் செயலற்று நீர்வார் கண்ணை யுடையோமாய்த் தொழுது நின்னை வாழ்த்திவிட்டு, அவன் மகளிரது மணங்கமழும் கரிய கூந்தற்கிழவரை - கூந்தலைத் தீண்டுதற்குரிய கணவரை - நினைந்து செல்லுகின்றோம்' எனக் கபிலர் நொந்துரைத்துச் சென்றார் (புறம். 113:5-9).

**கூந்தற் குதிரை** - கூந்தலையுடைய குதிரை (கேசி என்னும் அசுரன்). மாயோன், பகைவர் ஏவிய கூந்தற் குதிரையை - (கழுதையின் மயிராகிய) கூந்தலையுடைய குதிரையை (கேசியை) - வாயைப் பிளந்து போகட்டுக் கையால் அடித்துக் கொன்றார் (கலி. 103:53-55).

**கூந்தற்கை நீட்டியான்** - கூந்தலிலே கையை நீட்டியவன் (துச்சாதனன்). அழகிய சீருடைய அசையியலினது (துரோபதையினது) துய்ய கூந்தற் கை நீட்டியானின் - கூந்தலிலே கையை நீட்டியவனின் (துச்சாதனனின்) - நெஞ்சைப் பிளந்து பகைவர் நடுவே தான் சொன்ன வஞ்சினத்தை வாய்க்கச் செய்தானை (வீமசேனனை) ஒப்ப ஏறு தழுவலினிடையே ஓர் எருது தன்மேலே அஞ்சாது பாய்ந்த பொதுவனைச் சாவக் குத்திக் கொம்பிலே எடுத்துக் கொண்டு அவனுடலைக் குலைத்தது (கலி. 101; 15-20).

**கூந்தால்** - கூந்தலையுடையாய் (விளி). கரிய கூந்தால்- கூந்தலையுடையாய் - என விளித்து வினைவல பாங்கின் தலைவன் அவ்வகைத் தலைவியை மறித்தான (கலி. 112:16). 'கொத்தான கூந்தால், எனக் குற்ற வருத்தத்தை யான நின்னிடத்தே வந்து உரைக்குமளவும் என்னுயிர் போகாமல் தங்கிற்றுக் காண்' என்று தலைவன் தலைவியிடம் கூறினான் (கலி. 144:11-13).

**கூம்பல்** - குவிதல். 'என் நலன் உண்டார் வாராமையை நினைத்தலின் கையறு நெஞ்சினேனாய்க் கலக்கத்துள் யான் அழுந்த, மரம் அதனை நோக்கி வருத்த முற்றாற் போன்று மயக்கங் கொண்ட நெஞ்சோடே இலைகள் கூம்பலுக்கு - குவிதலுக்கு - காரணந்தான் யாதோ' எனத் தலைவி தோழியை வினவினாள் (கலி. 134:16-23).

**கூம்பு** - 1. முகை. மகளிர் சுனையிற் பூத்த குவளையின் கூம்பு - முகை - அவிழ்ந்த புறவிதழ ஒடித்த பூவாற் செய்யப்பட்ட தழையை யணிந்த அலகுலினர் (புறம். 116:1-3). உழவர் கூம்பு அவிழ்கின்ற மெல்லிதழ் நெகிழ்ந்த ஆம்பலின் அகன்ற இலையினால் மதுவை மாந்துவர் (புறம். 209.2-4). கூம்பு அவிழ்ந்த மெல்லிதழ் மலர்ந்த ஆம்பற் பூவைப் போன்ற மடாரில் தேன்பரந்துள்ள கட்டெளிவைப் பெய்து பருகுவது வழக்கம் (புறம். 333: 7,8). பறிப்பவர் உங்களுக் கிட்ட கூம்பு நெகிழ்ந்த பல மலர்களையும் நாட்காலத்தே சூடிப் போமின எனப் பாணர் ஆற்றுப்படுத்தப் பட்டனர் (பெரு. 295, 296). தூண்டிலுள்ள இரையை விழுங்கிய வரால் போத்து, ஆம்பலிலை கிழிய மேலெழுந்து குவளையின் கூம்பு அலர்ந்த பன மலர்களும் சிதையும்படி பாய்ந்தது (அகம். 36.1-4). கருங்கோட்டெருமை குவளையின் கூம்புவிடு பன்மலரை மாந்தியது (அகம். 56:2-5). தலைவி நெய்தலின் கூம்பு அவிழ்ந்த ஒளிபொருந்திய மலரையொத்த ஏந்தெழில் மழைக கண்ணினள் (அகம். 83:12-14).

2. பாய்மரம். கூம்புடனே - பாய்மரத்துடனே - மேற் கட்டப்பட்ட பாயை மாற்றாமல் அதன் மேற் பாரத்தையும் நீக்காமல் ஆற்றுமுகத்துப் புகுந்த பெருங்கலத்திலுள்ள கடலதரும் பல பண்டத்தைப் பரதவர் தம் புலத்திற்கு இடையே யுள்ள பெருவழிக் கண்ணே சொரிவர் (புறம். 30:10-14). கடலிடத்தே பாய்கட்டின கயிற்றை யறுத்துப் பாயையும் கிழித்துக் கூம்பு அடியிலே முறியும்படி கடுங்காற்று காய்ந்து வீசுதலின் நாவாய் நங்கூரக்கல்லோடு நின்று பொருது உலாவி நெடுஞ் சுழியிற் பட்டது (மது. 375-379). புகார் நகரத்துள் காணப்படும் பல்வேறு கொடிகளுள் புகார்த்துறை முகத்தின் கண் அசைகின்ற நாவாயின்மேல் நடப்பட்ட கூம்பின் மேலெடுத்த கொடியும் ஒன்றாகும் (பட். 173-175). பொற்றொடி மகளிர் இட்ட பலிச்சோற்றினை மாந்திப் பொழுதுபடும் மாலையில் அங்காடியில்

குவித்த பசிய இறாமீனைக் கவர்ந்துண்ட காக்கை அசைகின்ற வங்கத்திலுள்ள கூம்பிற் சென்று தங் கும் (நற். 258.5-9).

3. தளை. ஆம்பலினது அழகிய இதழ்கள் கூம்பு - தளை - அவிழ்ந்தன (குறி. 223).

**கூமை** - வறுமை. கிணைப் பொருநனைத் தொடக்க முதலே பழகி யறியாத துன்பமான வாழ்க்கையில் இளைய நெடிய துணையாகிய மனைவியொடு கூமை - வறுமை - கெடுத்தலின் அவன் குடிதோறும் முறையே சென்று பாடி ஈவோரின்மையின் நைந்து வருநதினான் (புறம். 393:1-3).

**கூர்மை** - கூரிய தன்மை. கண்மாறு ஆடவர் கல்லையும் மரத்தையும் அறுக்கும் கூர்மை - கூரிய தன்மை - உடைய நிலத்தை யகழும் உளியினை உடையவர் (மது. 635,641,642).

**கூரம்** – யாழ். கூரத்தின் - யாழின் - நாண்குரல் கொம் மென ஒலித்த அளவிலே அத்தாளத்திற்கு ஏற்ப முரசொலி எழுந்தது (பரி. 19:44,45).

**கூரல்** - 1. மயிர். குறுமுயல்கள் நெல்லிக்காயைக் கண் டாற் போன்ற குறுவிழிகளையும் கூரிய கூரலையும் - மயிரினையும் - உடையன (அகம். 284:1,2).

2. சிறகு. கொக்கு மாரிக்காலத்தே இறப்பின் மேலுள்ள சுதை பூசிய குளிர்ந்த மேலிடத்தை யொத்த கூரலை - சிறகை - உடையது (அகம். 346: 1-3).

3. நடுக்கம். குருவிச் சேவல் வேற்றுப் புலத்துச் சென்று அங்குள்ள துணையோடு புணர்ந்து தங்கி வநததனால் பேடை தன் சிறுபல் பிள்ளைகளோடு சேரநின்று கூட்டினுள் புகாதபடி தடுத்தலின மழை யின் நனைநத புறத்தினதாகி, பக்கத்தில் கூரலோடு - நடுககததோடு - இருப்பதை நோக்கி இரக்கமுற் றுத் தன்பால் வருமாறு அழைபப அது கையற்று வந்தது (நற். 181:1-9).

**கூரை** - 1. குடிசை (ஆகுபெயர்). செந்நெற் கதிர் வேய்ந்த மெல்லிய கரும்பினால் கட்டப்பெற்ற ஒழுங்குபட்ட கூரை - குடிசை - விழாக்கொண்ட களம் போலப் பொலிந்து தோன்றும் (புறம். 22: 14-17). தழை யாலே வேயப்பட்ட கூரை ஒழுங்குபட்ட தெரு வின் முற்றததிடத்தே யானை காவலாக நின் றது (முல்லை. 29-31). நெடுந்தூண்டிற் காம்புகள் சார்த்தி வைத்த குறுங் கூரையினை உடைய குடி யிருபபு நடுவில் வலை உலர்த்தப் பெற்றது (பட். 80-83). கூரையையுடைய நன்மனையிலுள்ள மகளிர் மணலிடத்து விளையாடுதற்கிட்ட கழங்கு போலக் கற்பாறையில் ஈங்கைமலர் பரந்து கிடக்கும் (நற். 79:1-3).

2. இறப்பு. மறவனது வேல் புறத்தே புழுதிபடிந்து குடிலின் கூரையில் - இறப்பில் – செருகப்பட்டு அதனோடு ஒன்றாய்க் கலந்து கிடப்பினுங் கிடக் கும் (புறம். 332:2-4).

**கூலம்** - பண்டம் (தானியம்). வேனில் வெம்மை மிக்க வறற் காலத்தில் பெரிய நிலவுலகம் கூலம் - பண் டம் - இன்றிக் கெட்டது (புறம். 381:17). இமைய வரம்பன் நெடுஞ்சேரலாதன் கூலம் விற்கும் வணி கர் குடியைக் காத்தனன் (பதி. 13:23). கூலங்களுள் ஒன்றாக நிறைந்த செந்தினையைக் குருதியோடு கலந்து தூவி முரசுக்குப் பலியிடுதல் மரபு (பதி. 19: 5-7). வேறுவேறாக விரவிய பல கூலங்களுடன் குருதிப் பலியூட்டிய மாக்கண் முழவு அச்சமுண் டாகுமாறு முழங்கும் (பதி. 29:11,12). இரும் பொறையின் செங்கோல் செம்மையின வளங்கெழு சிறப்பினையுடைய பெரிய பலவாகிய புதுக் கூலங்கள பெருகியிருந்தன (பதி. 89: 6-9). பரதர் (செட்டிகள்) கொண்டு வந்த பல்வேறு வகையான கூலங்கள் முதலான பல பொருள்களும் மரக்கலத்தில் ஏற்றப் பெற்றன (மது. 317-321). சாரலிலுள்ள கொல்லைகள் தோறும் எல்லாவகைக் கூலங்களும் விதைக்கப் பட்டுப் பொலிந்தன (நற். 93.3,4).

**கூலி** - பரிசில். கொடையாளர் எஞ்சாது கொடுத்த கூலி - பரிசில் - ஆகிய சிறு உணவைக் கூத்தர் உண்டனர் (அகம். 301:4,5).

**கூவல்** - 1. கிணறு. புலைத்தி களர் நிலத்துண்டாகிய கூவலை - கிணற்றை – தோண்டி நாளதோறும் ஆடை வெளுப்பாள் (புறம். 311:1,2). செம்மண் நிலத்து மடுவில உளள கூவலைத் தோண்ட அச்சிவந்த இடத்தே சிறிதாக நீர் ஊறியது (புறம். 319:1, 2). வலிய உவர்நீர் ஊறும் கூவல்கள் கல்லை உடைத்து இயற்றப் பெற்றவை (புறம். 331:1). 'காவிக் கொணட நும் இசைக்கருவிகள் மழையில்நனையாதபடி கூவலைப் போன்ற முழைஞ் சுகளில் புகுமின்' எனக் கூத்தர் ஆற்றுப் படுததப் பெற்றனர் (மலை. 365,366). கூவலர் குந்தாலியால் அகழ்ந்த நீர் ஊறாத கைவிட்டுச் சென்ற கூவல் களைத் தம்மை அகப்படுத்தக் கானவர் தோண்டிய குழிகளெனக் கருதிக் களிற்றினம் தூர்த்தது (அகம். 21:22-26). கோவலர் கூவலை, நீர் வறந்தமையால் பின்னும் தோண்டிய குழியில் பெருங்களிறு மிதித்த அடியகத்துப் புலியும் நடந்து சென்றது (அகம்.155:8). வெயிலால் வருந்திய யானைகள் கூவலைக் கையால்

துழாவின (அகம். 207:9,10). உமணர் வன்னிலத்தை இடித்துத் தோண்டிய கூவலில் வழிப்போக்க ராகிய புதியவர் இளைப்பாறுதற்கு நீர் ஊறும் (அகம். 295:9-12). ஆனிரை உண்பதற்குக் கோவலர் வறுநிலத்தில் கற்களை உடைத்துத் தோண்டிய கூவலைக் கன்றுகளையுடைய பிடியானை களிற்றி யானையொடு தடவும் (அகம். 321:7-9). உயர்திணை ஊமன் இரவில் கூவலில் வீழ்ந்த குராற்பசு படும் துன்பத்தைக் கண்டு பொறுக்க இயல வில்லை (குறு. 224:3-6). பைங்கண் யானை சுரத்தின்கண் வருந்திய வருத்தத்தைச் சிறிய கூவலில் சென்று தணித்துக் கொள்ளும் (நற். 41.1-4). பரல்மிக்க பள் ளத்தின் ஒருபுறத்தில் குந்தாலியால் குழிக்கப்பட்ட கூவலில் கோவலர் தோண்டிய பத்தலை யானை இனநிரை வௌவும் (நற். 240:6-9) தலைவனுடைய நாட்டின்கண் உள்ள தழையுதிர்ந்து மூடப்பட்ட கூவலின் மான் உண்டு எஞ்சிய கலங்கற் சின்னீர் தேன் கலந்த பாலினும் இனியது எனத் தலைவி கூறினாள் (ஐங. 203).

2. நீர்நிலை. சிறூரிலுள்ள உண்ணும் நீர் அரிதா கிய கூவல் - நீர்நிலை - களிறு படிந்துழக்கியதால் கலங்கியது (புறம். 306.1,2). கூவலில் மீனாகிய இரை யைத் தேடிய நாரை ஞாழல மரக்கிளையில் தங்கும் (பதி. 51:3,4).

**கூவலர் - கிணறு அகழ்வோர்.** கூவலர் - கிணறு அகழ் வோர் - குந்தாலியால் அகழ்ந்த கூவலை நீர் ஊறா மையால் கைவிட்டுச் சென்றனர் (அகம். 21:22,23).

**கூவன்மைந்தன் - புலவர்.** இவர் பாடிய ஒரே பாடல் குறுந்தொகை 224-ஆம் பாடலாக உள்ளது. மைந் தன் என்பது இவரது இயற்பெயராதல் வேண்டு மென்றும் கூவல் என்ற சொல் இவர் பெயர்க்கு அடைமொழியாக வந்துள்ளது என்றும் ச. சி. பெ. கருதும் (பக. 137). தான் படுந்துன்பத்தைப் பிறர்க் குச் சொல்லும் ஆற்றலின்றி மிக வருந்தும் தலை விக்கு இராக்காலத்தில் கூவலில் விழுந்துவிட்ட குராற்பசுவின் துயரத்தைக் கண்ட உயர்திணை ஊமனை இவர் உவமையாகக் கூறியுள்ளார். ஊமன் என்பது கோட்டானைக் குறிக்குமாதலின் அதனை விலக்க ஆசிரியர் உயர்திணை ஊமன் என்று இப்பாடலில் ஆட்சி செய்துள்ளார்.

**கூவியர் - அப்பவாணிகர்.** கூவியர் — அப்பவாணிகர் - பாகோடு பிறவும் கலந்து பிடித்த இடியப்பம் கார கலிற் பாலிற் கிடந்தது (பெரு. 377,378). பாகிலே செய்த மெல்லிய அடையையும் மோதகத்தையும் இனிய பாகோடு சேர்த்துக் கரைத்த மாவையு முடைய கூவியர் மதுரையில் நள்ளிரவில் உறங்கி னர் (மது. 624-627).

**கூவிரம் - ஒருவகை மரம்.** கூவிரம், வாகை முதலிய பூக்களைத் தோழியோடு தலைவி பறித்துப் பாறை யில் குவித்து விளையாடினாள் (குறி. 66,98).

**கூவிளம் — விலவம்.** குதிரை மலையையும் கூவிளத் தால - விலவத்தால - கட்டப்பட்ட கண்ணியையும் வளைந்த ஆரத்தையும உடையவன எழினி (புறம். 158:8,9). பகைவர் உடலினின்றும் வெட்டப்பெற்ற தலைகளால் செய்த அடுப்பில் கூவிள விறகிட்டெரித் துக் கூழ அட்டுக் களவேள்வி செய்யப் பெற்றது (புறம். 372:5—12). கூவிளம், எறுழம் முதலிய மலர் களைத் தலைவி தோழியோடு பறித்து விளை யாடினாள் (குறி. 65,66). தலைவன குளவியுடன கூவிளமலர் இடையிட்டுக் கட்டிய நெருங்கிய மாலையை யுடையவன் (கூவிளம் என்பதற்குக் கூதளம் என்றும பாடம்) (நற். 119:8,9).

**கூவுநர் - கூவுகின்றவர்.** பரங்குன்றில வள்ளியின தமர் பொருதகாலை தேவசேனையின தோழியர் மயி லாகி ஆடுநரும குயிலாகிக் கூவுநரும் - கூவுகின்ற வரும் - ஆக மாறி நின்றனர் (பரி. 9 64-69).

**கூவை - 1. செடி வகை.** கூவையிலையால் நாறகால் பந்தர் வேயப்பட்டது (புறம். 29:19). புலால நாற் றம வீசும் விலலையும பொலிவுடைய கூவைக் கிழங்கினையும் உடையவர் தெனபரதவர் (மது. 142,144). கூவைககிழங்குகள் நீறாந் தன்மையோடே முற்றித் திரண்டன (மலை. 137).

2. திரட்சி. கூத்தர், கூர்நல அம்பையும் கொடிய வில்லையும் கொண்ட நாடு காக்கும வேடர் கூவையை — திரளை - கண்டு நன்னனை நினைத் துச் செலகின்றோம என்றால அவர் தீமை செய் யாது ஓம்புவர் (மலை. 421-426).

**கூழ் — 1. சோறு.** கொள்ளக் கொள்ளக் குறையாத கூழை - சோற்றை - உடையது அகன்ற நகரம (புறம். 70.7). கூழுடைய நலல இலலத்தில மேழகக் கிடாயோடு நாயும் சுழன்று திரியும் (பெரு. 326,327). பாணன எனபான, பகைவர் ஆவினைப பாது காத்து உறையும் கூழமிக்க அரணகளிற சென்று விடைகளுடன கூடிய ஆக்களைக் கவர்ந்து வந் தான் (அகம. 113:12-17). குறிய கால நாட்டிக் கட் டிய நலமனை கூழுடையது (நற். 367:4,5).

2. குழையச் சமைத்த உணவு வகை. குமண வள்ள லிடம் சென்ற பெருஞ்சித்திரனார் தன புதல்வன பாலில்லாத வறுமுலையைச் சுவைத்துப் பால்

பெறானாய்க் கூழையும் சோற்றையும் வேண்டி வறுங்கலத்தைத் திறந்து பார்த்து அழுதான் எனக் கூறுகிறார் (புறம். 160:18-21). 'கிணைமகள் சமைத்த புளிங்கூழைப் பொழுது மறுத்துண்ணும் உண்டி யேன்' என ஐயூர் முடவனார் தாமான் தோன்றிக் கோனிடம் உரைத்தார் (புறம். 399:16,17). ஓராடை யணிந்த இடையன கூழினை உண்பான் (பெரு. 175). கிணறு அகழும் தொழிலினர் கூழ் உண்ணும் இயல்பின ராவர் (அகம். 21:22,23). கொல்லையை உழுத உழவர் தாம் கூழ் உண்டற்கு நிழலாகும்படி குருந்த மரத்தை வெட்டாது விட்டிருந்தனர் (அகம். 194:13,14). இடையன் தன் வீட்டிற்குப பாலொடு வந்து கூழொடு பெயர்வான (குறு. 221:3,4).

3. **பண்டம்.** மூவேந்தருள் ஒருவன் தனக்குத் துணை யாதல் வேண்டி நினக்குத் தரும் கூழ் – பண்டம்- இரவலர்க் குரியதாகும் எனத் திருமுடிக்காரியைக் கபிலர் பாராட்டுகிறார் (புறம். 122:5–7). தானைத் தலைவன் ஒருவன் தனக்குப் பகைவேந்தர் திறை யாகத் தந்தனவும் தன் வேந்தன் சிறப்பாகத் தந்தனவுமாகிய கூழைப் பரிசிலர்க்கு என்றும் அரு காது வழங்கும் வண்மையுடையோனாவான் (புறம். 320:15-18). கூழுடைய மனைகளிலுள்ள ஆனே றுகள் தம்மின் மாறுபட்டு முழங்கும் (பதி. 90:45). கூழ் நிறைந்த கூடைப் பெட்டியிலுள்ள வெள்ளிய அரிசியைப் பலியாகச் சிதறித் தெய்வங்கட்குப் படைத்தனர் (பட்.163). துய்த்தற்கேற்ற கூழ் உடைய தன் தந்தையின் இடனகன்ற இலலத்தில் மெல்ல நடப்பினும் தலைவி வருந்தும் இயல்பினள் (அகம். 145:16-18).

**கூழை** – 1. கூந்தல். கடைசியர் கொண்டையாகிய கூழையையும் - கூந்தலையும் - குளிர்ந்த தழை யாடையையும் உடையவர் (புறம். 61:1). கூழைக் கூந்தல் குறுந்தொடி மகளிர் (அகம். 141:16). தேன் கலந்த தீம்பாலை ஏந்திக் கூழையைக் கோதி நய மொழி கூறவும் மறுத்து உணணாதோளாகிய என் மகள் அருஞ்சுர வழியில் அறனிலாளனாகிய தன் தலைவன் கிணற்றைத் தோண்ட ஊறிய உவர் நீரை வெய்துயிர்த்து நுதல் வியர்ப்ப உண்ட னளோ என மகட்போககிய தாய் வருந்திக் கூறி னாள் (அகம். 207:10-17). கூழையும் குறுகிய நெறிப் பினைக் கொண்டது; முலையும் செப்புடன் மாறு பட்டது; இவள் பெண்துணை சான்றனள் என நோக்கி அறிந்து நேற்றும் என்னெஞ்சு ஐயுற்றது; இதனை அறிநதும் இறசெறியாதொழிந்தேன என மகட்போக்கிய தாய் வருந்தினாள் (அகம். 315:1-6). 'குவளைக் குறுமாலையினைச் செருகிய நறிய பல வாய கூழை பரக்க நெடுஞ்சுனையில் ஆயமொடு ஆடாது வருந்திய மனத்தையுடையையாகித் தனிமை கொண்டு இத்தன்மையையாகிய நின்மேனி நிறங் கண்டு அன்னை வினவின் யான் என்னென உரைப் பேன்' எனத் தோழி தலைவியை வினவினாள் (அகம். 358:5-11). யாம் எம் கூழைக்கு இட்டுப் பிசை யும் பொருட்டு எருமண் கொணரப் பொய்கைப் பக்கம் செல்வேம்; பெரும்பேதையாகிய தலைவி ஆண்டும் வருகுவள் என்று தோழி தலைவனுக்குக் குறிப்பாற் குறியிடம் பெயர்த்துக் கூறினாள (குறு. 113). கானலில் கடல்வீசிய கருமணற் சேற்றை யுடைய அருவியால் கூழையிடத்தே பெய்யப்படு கின்ற எக்கராகக் குவிக்கப்பட்ட குவியல் உலரும் செவ்வியை அடைவதற்குள் அழுங்கல் ஊரில் அலர் எழுந்தது எனத் தோழி தலைவன் கேட்பக் கூறி னாள் (குறு. 372:3-7). சந்தனக் குறையோடு பல வாய பொருள்களையும் சேர்த்து அமைக்கப்பெற்ற சாந்தம் பூசிய கூநதலை, அழகுபெற வாரி, அச்சாந் தம் காய்ந்தவழி உதிர்த்த துகள் பொருந்திய கூழையையும் பெருங்கணணையும் உடையது ஆயம் (நற். 140:2-5). தலைவியின் நெறிப்பமைந்த கருமை யான கூழையில் நறுமணங் கமழும் புதுநாற்றத்தை யும் பசலை பாய்ந்த நுதலையும் நோக்கி அன்னை பிறிதொனறனைச் சுட்டிப் பெருமூச்செறிந்தாள் (நற். 368:5-9). ஓரையாடிய மகளிர் நீர் அலைத்த லாலே கலைந்த கூழையைப் பிழிந்து வடித்துத் துவட்சியுற்றுத் தம் அழகிய வயிற்றில் அலைத துப் புலர்த்தி ஒருசேரக் கூடித் தம்மூர்க்குத் திரும் பினர் (நற். 398 : 3-5). ஞாழற்பூவும் கூந்தலும் தம்முள் மயங்கும்படி முடிததுத் தலைகூடின கூழை தோட்கட்டிலே தாதோடு சிறிது குலைநது வீழ, நிறைமதி தீங்கதிர் விட்டாற் போல முகம் ஒளி பொருந்தி இஙகே வருவாள் யார்கொல் எனக கைக் கிளைத் தலைவன் தலைவியைக் கண்டு தன்னுள்ளே சொல்லி யினபுற்றான் (கலி. 56:2-6). ஏறு தழுவின வனுடைய சென்னியிற் கிடந்த கண்ணியைக் கொம் பிலே எடுத்து அலைதத புகரேறு துள்ளுதலினால அக்கண்ணி தலைவியின் கூழைக்குள்ளே வந்து வீழந் தது (கலி.107:6-9). முடிக்கும் பூ இதுவெனறறியாத தன்னுடைய கூழையில் ஏதிலான் புனைந்த கண்ணியை மகள் முடித்தாள் என்று தாய் கேட்டுப் பின்னை அவள் வெகுளாமற் செய்வ தொரு காரியம் இல்லாமலிருக்குமோ எனத் தலைவி தோழியை வினவினாள் (கலி. 107:14-16). தலைவியின் மண்ணி மாசற்ற கூழையிடத்தேயேற 'இவன் கண்ணியைத் தந்ததென்று கேட்டுத் தந்தையோடு தமையன்மா ரெல்லாம் கூடித்

தெய்வமால் இவளுக்கு இவனைக் காட்டிற்றெனப் பொதுவனுக்கு மகட்கொடை நேர்ந்தனர் (107:30-34). தலைவியின் கூந்தலில் வெண்ணெய் தேய்க்க விரித்த மயிரிலிருந்து ஆயர்மகன் சூடிய முல்லைத் தொடையும் கண்ணியும் வீழ்வது கண்டு நெருப்புக் கைதொட்டவர் போல விதிர்ப்புற்ற அன்னை புறங்கடையிற் போகத் தன் மயிர்ச்சந்தனம் பூசி உலர்த்தின கூழையை முடித்து நிலத்தே தாழ்ந்த நீலஆடையினைக் கையாலே சிறிதேறத் தழுவிக் கொண்டு அவள் தளர்ந்து நடந்து அயலிலுள்ள கானத்தே சென்று ஒளித்தனள் (கலி. 115:4-15).

2. குறைவு. என்மகள் அல்குலுக்குத் தழையணியக் கொய்யும் கூழை - குறைவு - உள்ள நொச்சியின் கீழதாய் அவளது சிறு விரல்களால் இயற்றப் பெற்ற வண்டலையும் கண்டீரோ என மகட்போக்கிய தாய் சேரியோரை வினவினாள் (அகம். 275:16-19). கிளி ஒடித்துண்ட சிறுதினையின் கூழையிருவி பெருமழை பெய்தமையால் இலை தழைத்தது (குறு. 133:1-3). பேதை யானை சுவைத்த கூழை மூங்கிலை யுடைய மலையுச்சியின் இடையே உள்ளது எம்மூர் எனத் தோழி தலைவனிடம் கூறினாள் (குறு. 179:3-7). தேரில் வந்த தலைவன் மீண்டு சென்ற கானல் நேமியின் வாள்முகம் துணித்தலினால் வள்ளிதழ் ஒடிக்கப்பட்ட கூழை நெய்தலையும் உடையது (குறு. 227).

3. குறுமை. கூழையிரும்பிடி கையை மறைத்தாற் போனறு கேழிருந துறுகல் தோன்றும் (குறு. 111:4, 5). இநள் மிக்க இராப்பொழுதில் தொழுவத்தி னின்று வேற்றிடத்தில் கட்ட வேண்டிய காலத்து, நின்ற நிலையிலே நிற்குமாறு தலைக்கயிற்றை யிழுத்து உச்சியிலே தூக்கிப் பிணித்த கூழைப் பசுவினது நிலைமையைப் போல இவ்வாடை வீசும் மாலைப்பொழுது யான ஒருததியாகி உள்ளம் அலமரக் கழியும எனத தலைவி உரைத்தாள் (நற். 109:6-10).

4. பின்னணிப்படை. 'எப்பெற்றியை உடையீராயினும் கூழையும் - பின்னணிப்படையும் - தூசிப்படையும் கொண்டு யாம் அதியமானோடு பொருவேம் என்று சொலலுதலை ஓம்புமின்' என ஔவையார் பகைவரை நோக்கிக் கூறினார் (புறம். 88:1,2). பிட்டங்கொற்றன் பகைப்படை அடர்த்து வருங் காலத்து ஆற்றின்கண் குறுக்கே தடுத்துக் கிடக்கின்ற குனறினை யொப்பத் தன படையின் கூழையைத் தாங்கி நிறுத்துவான் (புறம். 169:3-5).

5. தலைவி (ஆகுபெயர்). வாரிமுடித்த கூழை - கூந்தலையுடைய தலைவி - தன்னைப் பிறர்கூறும் பழிச்சொற்களுக்கு அஞ்சி வளை கழலாது செறித்து மறைத்தலாலே தோள்கள் வாடாது உய்ந்தன (நற். 23:1,2).

கூழையாய் - கூந்தலையுடையாய். 'முற்றிய கூழையாய்' எனத் தலைவியைத் தலைவன் விளித்தல் (கலி. 117:12).

கூளி - ஆண் பேய். அச்சந்தரும் மன்றத்திடத்தே கணங் கொண்ட கூளியோடு - ஆண் பேயோடு - கதுப்பினைத் தாழ்த்தி யசைத்துப் பிணத்தைத் தின்னும் பேய்மகள் துவன்றினாள் (பட். 255-261). உதியஞ் சேரல் தன் முன்னோர்க்குப் பலியாகப் பெருஞ் சோறு படைத்த ஞான்று அதனை உண்பதற்குக் கரிய பலவாய கூளிச் சுற்றம் கூடியிருந்தாற் போன்று குறியவும் நெடியவுமான குனறுகள் தோன்றின (அகம். 233:8-11). இறைவன் கூறாமல் மனத்தாற் குறித்த அப்பொருள் மேற்சென்று கடுங் கூளி மாறாப் போர் செயயும் (கலி. க. வா. 3,4). அநதிப் பசுங்கட் கடவுள் (சிவன்) வருத்தத்தைச் செய்கின்ற ஏறாகிய எருமை ஏறுகினற கூற்றுவனின் நெஞ்சினைப் பிளந்து அவன் குடரைக் கூளிக்கு இட்டு அவற்றின் வயிற்றை நிறைத்தார் (கலி. 101:24-26).

கூளியர் - 1. மறவர். சூரனைக் கொன்ற முருகனது சுற்றத்தை ஒக்கும் கூரிய நல்ல அம்பினையும் வளைந்த வில்லினையும் உடைய நெடுஞ்செழியனின் கூளியர் - மறவர் - தம்மால கொள்வதனைக் கொண்டு கொள்ளா மிச்சிலை மாற்றார் முகந்து கொள்ளப்படும் உணவாக்காது ஒழித்துப் புலனகளை அழித்தனர் (புறம். 23:4-7). வழிப் பறித்த பொருள்களை உணவாகவுடைய செலவை விரும்பின காலினரான கூளியர் கல்லுடை நெடுநெறியைப் போழ்ந்து அருவழியை அமைத்தனர் (பதி. 19:1,2).

2 வேட்டுவர். காய்சின முன்பினையும் தறுகண்மையினையும் உடைய கூளியர் - வேட்டுவர் - பகைவர் ஊரினைச் சுடுகின்ற விளக்கிலே நிரை காக்கும் மறவரை மாள வெட்டி வேலே கோலாகப் பசுத் திரளைக் கவர்ந்து கொணர்ந்தனர் (மது. 690-692). கூரிய நல்ல அம்பினையும் கொடிய வில்லினையுமுடைய கூளியர்க் கூட்டத்தைக் கண்டீராயின அவரிடம் யாம் நன்னனை நினைத்துப் போகினறோம் எனக் கூறின் அவர் தசையும் கிழங்கும் தந்து ஓம்புதல் அல்லது வருத்துதல செய்யார் எனக் கூத்தர் ஆற்றுப்படுத்தப் பெற்றனர் (மலை.421-426).

**3. ஆறலைகள்வர்.** பசிநோய் வருத்தும் எனது இயல்பையும் அறியாராய் நின்கைப் பொருளைத் தாவென்று கூறி எம் நிலை தளர, மரங்கள் செறிந்த குளிர்ந்த மலையிலுள்ள குரங்கு போன்று பறித்துக் கொள்ளும் இயல்பையுடைய புல்லிய குறிய கூளியர் - ஆறலைகள்வர் - பரந்து வந்து அலைக்கும் பகையையும் ஆய்வள்ளல் அறிவான் என்று ஒடைகிழார் கூறுவர் (புறம். 136:9-14).

**4. பேய்கள்.** நிலம் பாரத்தால் தாழ்வதற்குக் காரண மான உயர்ச்சியையுடைய நீண்ட பிணவரிசைகள் பலவற்றைச் சுமந்து உருகெழு கூளியர் - பேய்கள்- ஊனை உண்டு களித்தாடினர் (பதி. 36:11,12).

**5. ஏவல் செய்வோர்.** வேறுவேறாகிய பல வடிவினை யுடைய சிறிய பலராகிய கூளியர் - ஏவல் செய் வோர் - விழாக்களத்தில் பொலிவு பெறத் தோன்று மாறு தோன்றி 'முதுவாய் இரவலன் அளிக்கத் தக்கவன், நின் புகழ் நயந்து வந்து இனியவும் நல்லவு மான மிக்க பலவற்றை ஏத்தி வந்தனன்' எனச் செவ்வேளிடம் கூறுவர் (முரு. 282-286).

**கூற்றங்குமரனார் - புலவர்.** இவர் இயற்பெயர் குமரன். இவரது தந்தை பெயர் கூற்றனாதலின் இவர் கூற்றங்குமரனார் என அழைக்கப்பட்டார் என்பர் பி. நா. (நற்றிணை, பாடினோர் வரலாறு). இவரது ஒரே பாடல் நற்றிணை 244-ஆம் பாடல் ஆகும். குறிஞ்சித் திணையில் அறத்தொடு நிலை வலித்த தோழியைத் தலைவி முகம் புக்கது என்னும் துறையில் பாடியுள்ளார். மலைச்சாரலில் கூதிர்க் காலத்துக் கூதள மலரின் மணம் கமழும் வண்டின் யாழோசை போன்ற இனிய குரலை அசுணமா கூர்ந்து கேட்கும் என்றும் தலைவியின் பசலை நிறத்தைச் செயலையந்தளிர் போன்றது என்றும் கூறுதல் சிறப்பினது.

**கூற்றம் - 1. யமன்.** யானையினது பெரிய கழுத்தி னிடத்தே இருந்து மருந்திலலாத கூற்றத்தினது- யமனது - பொறுததற்கரிய கொலைத் தொழிலுக்கு இளையாத வலிய கையின்கண்ணே ஒள்வாளினை யுடையவன் பெரும்பெயர் வழுதி (புறம். 3:11-13). தலையாலங்கானததிடத்து நிலைபெற்ற உயிரினது பனமையையும் கூற்றத்தினது ஒருமையையும் தன்னுடனே சீர்தூககிக் காட்டிய வெற்றிவேலை யுடையவன் நெடுஞ்செழியன் (புறம். 19:2-4). குடியின் மூத்தோர் மூத்தோரைக் கூற்றம் கொண்டு போக, விதி தர வந்த பழைய வெற்றியால் உணடாகிய தாயததைக் குடிமக்கள் இறை வேண்டி யிரக்கும் கூரில் ஆணமையுடைய சிறி[illegible]ான பெறின் அது சிறந்ததன்று; அதனை விழுமியோன் பெறுவ தாயின் வற்றிய கயத்திடத்துள்ள நெட்டியின் கோடைக்காலத்தில் உலர்ந்த சுள்ளியைப் போல அது நொய்தாம் தன்மையுடையது (புறம். 75:1-10). அதியமான் நெடுமானஞ்சி வென்சிறுகடுகைக் காவலாகப் புகைப்பவும் தரியாது விரைய வந்து பொருந்தும் முறைமையையுடைய, புறத்து நின்று உயிரைக் கொண்டு போகும் கூற்றத்தை ஒப்பவன் (புறம். 98:15-17). 'அறனில்லாத கூற்றம் திறப் பாடின்றி உயிர்கொளத் துணிய இறந்து பட்ட னனோ, என்னுயிர் கெடுவதாக' எனறு சொல்லு தலுற்ற நோயை யுடையளாய்ப் பலபடப் புலந் துறையும் மனையோளினது இடுக்கண் தீர்க்க வேண்டி இப்பொழுதே விடை கொண்டேன் எனப் பெருங்குன்றூர் கிழார் குடக்கோச் சேர லிரும் பொறையிடம் கூறினார் (புறம். 210:8-12). 'பாடுநர்க்கு ஈதல் முதலான பலபுகழினை யுடை யோனின் தகுதியைக் கருதாத கூற்றம் அவனது இன்னுயிரைக் கொண்டு போயிற்று; அதனால் பைதலுற்ற நம் சுற்றத்தோடு அதனை வைவோம்; வாரீர்' எனக் கோப்பெருஞ் சோழனின் நடு கல்லைக் கண்ட பொத்தியார் வாய்மொழிப் புலவரை அழைத்தார் (புறம். 221:1-10). மிக்க பேதைமை யுடைய ஈரமில்லாத கூற்றமே, விர கில்லாமையினரின் விததினைக் குற்றியுண்டாய்; மறவரும் களிறும் குதிரையும் போர்க்களத்தின் கண் மாயக் கடந்தட்டு நினது வாடுபசியைத் தீர்த்தற்கு ஊட்டிய வளவனை நீ கொண் டாயாயின், இனி நின் பசியைத் தீர்ப்போர் யார் எனக் கிள்ளிவளவன் இறந்த ஞான்று ஆடுதுறை மாசாத்தனார் காலனை விளித்துப் பாடினார் (புறம். 227). எழினி பொருது களஞ்சேர, தன்னமர் சுற்றம் வருந்தக கடும்பசி கலக்கிய இடும்பைகூர் நெஞ்சமொடு வருத்தமுற்றுக் கிடக்கும் உலகத்தைக் காட்டிலும் மிகப் பெரிதாக நீ இழந்தனை, அறனில் லாத கூற்றமே, வாழ்தற் கேதுவாக வயலிடத்து விளையும் வருவாயை அறியானாய் உழவன் விதையை உண்டது போல இவ்வொருவனது உயிரை உண்டிலை யாயின் அவனது போர்க் களத்தின்கண் பகைவரது பல்லுயிரையும் பருகி நிறைகுவை என்று எழினி இறந்த ஞான்று அரிசிலகிழார் கையறு நிலை தோன்றப் பாடினார் (புறம். 230: 6-16). பரிசிலை விரும்பி யிருந்த விருப்பம் பயனிலலையாக, அடப்பட்ட பானையி னின்றும் சோறின்றி எரி· புறப்பட்டாற் போல அளிககத்தக்கார் உணபாராக என்று கருதாத அறனில்லாத கூற்றம் கூறுபாடின்றி இளவெளி மான் உயிரைக் கொள்ளத் துணிய, வெய்தாக

மார்பில் அறைந்து கொண்ட மகளிர் கைவளை சிதற, முதுவாய ஒக்கல் பரிசிலர் இரங்க, களரியம் பறந்தலைக்கண் வெள்வேல் விடலையாகிய அவன் இறந்து பட்டனன்; அககூற்றம் நோயின்றி யிருப் பதாக என்று அவ்விள வெளிமான் இறந்தபோது பெருஞ்சித்திரனார் வருந்திப் பாடினார் (புறம். 237: 6-15). 'வெந்திறல் கூற்றம இறந்துபாட்டை எய்து விக்க என் இறைவன் பேதுறவெய்தி இறந்துபடு தலை அறியேனாய் அளியேன் வநதனென்; இனி என்னாகுவர் கொல்லோ என சுற்றத்தார்; நான் துனபப்படுதலினும் இறத்தல் நனறு' என்று கூறி வெளிமான் இறந்தபோது பெருஞ்சித்திரனார் வருந் தினார் (புறம். 238: 10-19). கார்காலத்தில் தோன் றும் இடிபோல் தோன்றிக் கல்லென ஆருயிர்களை உண்ணும் பொருட்டுத் திரியும் ஆராக் கூற்றத்தின் வரவினைக் கண்டு தோன்றலாகிய தலைவன அஞ்சு தல் இல்லான்; ஏனெனில் அவன உலகத்து நிலையா மையை முன்பே யறிநது மறவாதொழுகும் உணரத் தகுவனவற்றை முற்றவுணர்ந்த கேள்வியினை உடையவன என்று புலவர் கூறியுள்ளார் (புறம். 361. 1-3,20-22). தலைவன் கூறறத்தன்ன மாற்றரு முன் பினை உடையவன் (புறம். 362:7). பல்யானைச்செல் கெழு குட்டுவனின் மறவர் பிறிதொனறால் நலிவு பட்டு மனக கொதிப்படையாத கூற்றம ஒத்தவர் (பதி.26:13,14). ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் மாற் றருஞ் சீற்றத்தையுடைய கரிய பெருங் கூற்றம் தன் வலையை விரித்தாற் போலக் களத்தில் எதிர்ந்த மாற்றார் படையை எல்லாம் ஒன்றாகக் கொல்லக் கருதி நோக்கின நோக்கை உடையவன (பதி.51:35-37). இளஞ்சேரல் இரும்பொறை பகைவரை உருவ மழித்த கூறறத்தைப போன்ற வன்மை யுடையவன (பதி. 84:7). கூற்றத்தன்ன மாற்றரும் வலியினை யுடையது களிறு (முரு. 81,82). பேயும் அணங்கும் உயிர்களின் வாழநாளை ஆராய்தலையுடைய செங் கோன்மை பிறழாத கூற்றம் கொலை செய்தற்கு ஊரும் தேராகிய கழுதோடு சுழன்று திரிநதன (மது. 632,633). கவண உமிழகின்ற கடிய கற்கள் உயிர்களைப் போக்கும் முறைமையாலே கூற்றத்தை யொத்தன (மலை. 206,209). கூற்றம் கொள்ள வறிதே இறக்காமல் பிறர் தம் கைப்பொருளைப் பயன் கொள்ள இறந்தோர் உறுதியாக நோற்றோ ராவர் (அகம். 61:1,2). ஊதையம் குளிரொடு கூதிர்க் காலமாகிய உருவத்தையுடைய கூற்றம் காதலரைப் பிரிந்திருக்கும் என்னைக் கொல்லக் கருதி வருமே; யாது செய்வோம் எனப் பருவ வரவின்கண் தலைவி தோழியை வினவினாள் (குறு. 197). நாள் தோறும் முறையாக அடைதலாகிய மரபையுடைய கூற்றத்தின் அறனில்லாத கொலைத் தொழிலை நன்கு அறிநதோர் ஞாலத்தின பெருவளமெலலாம் ஒருங்கு உடன் இயைவதாயினும் காதலி நீங்கி யிருப்ப ஆள்வினைப் பொருட்டுத் தாம் மட்டும் தனித்துப் பிரிந்து செல்லார் (குறு. 267). கூற்றத் தன்ன கொலைவேல் மறவர் வழியில் தங்கி வழிப் போக்கரைக் கொல்வர் (குறு. 283:5,6). காமம் குற்றப்படும்படி அதனோடு வேறுபாடு கொண்டு பொருளிடத்தே வேட்கை நிகழ்ந்து போகின்ற வனே, 'நீ தமக்கு வருகின்ற கூற்றத்தையும் மூட் டையும் மறந்திருக்கின்ற அறிவில்லாதாருடனே ஒரு படிப்பட்ட மாறுபாட்டினைக் கொண்ட, நல் மக்கள் நிற்கினற வழியினை நினக்கு வழியாகப் பேணாய்" எனத் தோழி தலைவனிடம் கூறிச செலவழுங்குவித்தாள் (கலி. 12:16-19). தலைவன் பகையென்று கூறிக் கூற்றம் எதிர் வரினும் கெடான்; தன்னிடம் தொடர்பு கொண்ட நணபினர்க்குத் தோல்வியுறுதலை நாணமாட்டான் (கலி. 43:9-11). ஆடவர் மேலுள்ள வெறுப்பினால் தன்னைப் பிறர் அறியாதபடி மறைத்துப பெண்வடிவு கொணடு வந்ததோர் கூற்றமோ எனக் காமஞ்சாலா இளமை யோளைக் கணட கைககிளைத் தலைவன தருக் கிச் சொல்லி யின்புறறான (கலி. 56:8,9). ஏறு தழுவுவாரைக் கோட்டினால் சாகும்படி குத்திப் பின்பு சென்று தழுவுவாரைப் பெறாமல நினற சிவந்த நிறத்தையுடைய ஏறு, உயிர் குறைகினற நாளிடத்தே அவா பினனே செனறு குறறத்தைச் செய்து துகைத்து உயிரையுண்ணும் கூற்றத்தை யொக்கும் (கலி. 105:35-38). திருமால ஏந்திய ஆழிப் படையின் உருவம் பகைவரின உயிரையுண்ணும் கூற்றத்தை யொக்கும் (பரி. 2:49,50).

2. மடங்கல் (யமதூதன்). கனலியும் கூற்றமும் மடங் கலும் - யமனும் - ஞாயிறும் ஒருங்கு கூடும் ஊழி முடிவில, கடலிலே அழுந்துகினற நிலமகளைத் திரு மால் கேழற் கோலங்கொண்டு கொம்பினால் எடுத் தார் (பரி. 3:21-24).

**கூற்று - 1. யமன்.** களிறுகள் கதவை முறித்து வெகுண்டு உலாவி நுனைதேய்ந்த வெண்கோட்டை உடைமையான் உயிரையுண்ணும் கூற்றை -யமனை- ஒத்தன (புறம். 4:10-12). எம் தலைவனோடு பட்டுக் கிடந்தார் எம் புன்றலை மைந்தர்; இப் பெற்றிப்பட்ட வெற்றியும உளவோ நமக்கு எனறு கூறி மூதிற் பெண்டிர் உவகையால் அழ, அது கண்டு நாணிக் கூற்று இரங்கிய அஞ்சத்தக்க போர்க்களத்தினகண்ணே பாண்டியன் நெடுஞ் செழியன் எழுவரது நல்வலியை வெனறான் (புறம்.

19:13-17). புலவர் பரிசில் பெறும் பொருட்டுக் கிள்ளி வளவனை நோக்க அவன் மருந்தில்லாத கணிச்சி யென்னும் படைக்கலத்தை உயிர் வருந்தச் சுற்றிக் கூற்று சினந்தாற் போலும் வலியுடனே தனக்கு மறு தலையாகிய இருவேந்தருடைய நிலத்தைக்கொள்ள நோக்கினான் (புறம். 42:21-24). பாண்டியன் இல வந்திகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறன் விலக்குதற் கரிய வெகுட்சியாற கூற்றை யொத்தான் (புறம். 56: 11). கிள்ளிவளவனைக் கொண்டகூற்று தன மனத் துள்ளே கறுவு கொண்டதாயினும் வெகுண்டதா யினும் உற்று நின்று வருத்திற்றாயினும் அதற்கு உய்வு உண்டாகாது; பாடுநர் போலக் கைதொழுது ஏத்தி இரந்து அவன் உயிரைக் கொண்டதாகல் வேண்டும் என்று மாறோக்கத்து நப்பசலையார் கூறுவர் (புறம். 226). தலைவனை இழந்த தலைவி தன் தலைவன் இறந்துபடும்படி வந்து உற்ற அற மில்லாத கூற்று 'என போல் பெருவிதிர்ப்பு உறுவ தாக' என்று கலங்கி மொழிந்தனள் (புறம். 255:3,4). மறவர் அழியாப் படையையும் கூற்றைப் போன்ற கொலை வினையையும் உடையவர் (புறம். 294:3). இமையவரம்பன் நெடுஞ்சேரலாதன் சினந்து இறுத்த நாடு கூற்றினால் அடப்படும் யாக்கை போலக் கவினழிந்தது (பதி. 13:10-12). இமையவரம் பன் நெடுஞ்சேரலாதன் கூற்று வெகுண்டு வரினும் அதனைப் பிறக்கிடச் செய்யும் ஆற்றலை உடைய வன் (பதி. 14:10). செவ்வேள் பகைவர்க்குக் கூற்றுப் போன்றவன் (முரு. 257). காளையுடன சென்ற என் மகளை மாலைப்பொழுதில் விரிந்த நிலவிலே சென்று பினனே போய்க் காணும்படியாக விட்ட இதற்கு முனனாலே என்னைப் பெரிய தாழியி லிட்டுக் கவிக்கும்படி உயிரைக் கொண்டு போகாத கூற்று, தான் வலியழிந்து தன்னை அத்தாழியி லிட்டுக் கவிக்கும்படி இறந்தொழிவதாக என்று மகட்போக்கிய தாய் புலம்பினாள் (நற். 271:10-12). பெருமையுடைய பொய்கையில் இலையை விட்டு முற்றின தாமரை முகைக்குக் கூற்றாகிய அலர்ச்சி அதன குறைவிற்குக் காரணமாகியது (கலி. 17:11,12). பலவுயிர்களையும் உண்ண வேண்டி ஊழித்தீயும் கணிசசியும் காலனும் கூற்றும் அவ்வுயிர்களைத் தொடர்ந்து செல்கின்ற ஊழி முடிவாகிய காலத்தே அவை சேரச் சுழன்று திரியுமாறு போல, ஆயர் ஏறுகளைச் சுழனறு திரியும்படி தொழுவிடத்தே சேரப் புகவிட்டனர் (கலி.105:20-22). நாறறிசையும் நடுக்குறும்படி ஊழி முடிவாகிய காலததில கூற்று செக்கர் வானிடததே தோன்றிய பிறையைத் தனக்கு எயிறாக் கொண்டு பல்லுயிரையுஞ் சேரக் கோடற்கு நகைத்தாற் போலும் கொடுமை உடையது மாலைப்பொழுது (கலி. 120: 7-9).

2. இறைவன். ஏற்றெருமை ஏறுகின்ற யமனுடைய நெஞ்சை வடிம்பாலே பிளந்து சீற்றமொடு ஆருயி ரைக் கொண்ட ஞான்று கூற்று - இறைவன் - தோன் றினாற் போலப் பொதுவன் காரியேற்றை வலிய டங்கத் தழுவி வருத்தி அதன்மேல் தோன்றினான் (கலி. 103: 40-45).

**கூன்** - 1. வளைவு. நெல்லரியும் களமர் தம் கூர்வாள் முனை மழுங்குமாயின், மீண்டும் மறங்குன்றாது அரிய வேண்டி அவ்வாளினைச் சேற்றில் படிந்தி ருக்கும் யாமையின் கூன் - வளைவு - பொருந்திய முதுகோட்டினைத் தீட்டுங்கல்லாகக் கொண்டு தீட் டுவர் (புறம். 379: 3-5). நீர்முள்ளி கூன் பொருந்திய முள்ளினை யுடையது (அகம். 26: 1). கூன்முள் முண் டகம் (குறு. 51:1). தலைவி வேனிற்காலத்தில் மலர்ந்த பாதிரியின் கூனுடைய மலரினது துய்யைப் போன்ற மயிர் எழுந்து படர்ந்த அழகு ஒழுகும் மாமையை யுடையவள் (குறு. 147: 1, 2).

2. கூன்பிறப்பு. மக்கட்பிறப்பில் சிறப்பில்லாத குரு டும் உறுப்பில் பிண்டமும் கூனும் - கூன்பிறப்பும்- குறளும் ஊமும் செவிடும் மாவும் மருளும் உளப்பட உலகத்தில் உயிர் வாழ்நர்க்கு எண்வகைப் பேரெச் சம் என்று சொல்லப்பட்ட இவையெல்லாம் பேதை மையல்லது இவற்றால் பயனில்லையென முற்காலத் தும் அறிந்தோர் கூறினர் (புறம். 28: 1-6). 'குறு வட்டா, பலவும் கூடின உழுத்தம் பணியாரத்தைக் காட்டிலும் துயக்கபபட்டிருககின்ற என் கூன்பிறப்பு நின்னின தாழ்ந்ததோ எனக் கூனி குறளனை வின வினாள் (கலி. 94: 37, 38).

**கூனல்** - வளைவு. கூனல் - வளைவு - பொருந்திய முது கினையும் குறுநடையினையும் உடையது கரடி (அகம். 112: 1).

**கூனி** 1. வளைவு. குலைமுதிர் வாழையின் பழம் கூனி- வளைவு - உடையதாயிருக்கும் (பெரு. 359). சுரத்தின் கண்ணே பாதிரியின் தேன் பொருந்திய கூனியை யுடைய சிறந்த பூக்களின வாடல்கள் நாறின (அகம். 257: 1, 3). சுனைகள் கரையினின்றும் சாய்ந்த கொறுக்காந்தட்டையை முட்டுகின்ற பல நிறத்து மலர்களால் கூனி (வளைவெய்தி) எழிலணிந்த வான வில்லை வளைத்த வானையொப்பவாகிய வண்டூதும அழகுடையவாயின (பரி. 18: 48-50).

2. கூன்பிறப்பு. 'யாம் நின்னை விரும்புவேம் என்று கூறிப் பின் செல்லவும் அதற்கு மனம் பொருந்தாத கூனி நம் அருகினினறும் அகன்று அவ்விடத்தே போய் நுடங்கும் நுடக்கத்தைப் பாராய்' எனக்

குறளன் தனனெஞ்சிடம் கூறினான் (கலி. 94:29,30).

# கெ

**கெடிறு** - ஒருவகை மீன். அகழி இனமாகிய வாளையினையும் நுண்ணிய ஆரலினையும் பரிய வராலினையும் நிறமுடைய கெடிற்றினையும் உடையது (புறம். 18:8-10). கரும்பனூர் கிழானின் நாட்டிடததே விழவு இன்றாயினும் உழவரது உண்கலத்தில் கெடிற்று மீன் உணவோடு பூங்கள் நிறைந்திருக்கும் (புறம். 384:8,9). பாண் மகளின கெடிறு சொரிந்த வட்டி நிறையுமாறு மனையோள பெரும் பயற்றினை நிறைத்தாள் (ஐங. 47:1-3). பெருங் கடற்கரையிலுள்ள சிறுவெண்காக்கை கழியிலுளள கூட்டமான கெடிற்று மீன்களை உணணும் (ஐங். 167:1,2). கெளிறு காண்க.

**கெடு** - கேடு. கெடு - கேடு - இலலாமல் மறங்கெழு சோழரது உறையூர் அவைக்கண அறம் நின்று நிலைபெறுதலின் முறைமை செய்தல் நினக்குப் புகழும் அனறு; இயல்பேயாம் எனக் கிள்ளிவளவனை மாறோக்கதது நப்பசலையார் போற்றுவர் (புறம. 39:7-10).

**கெடுதி** - இழந்த பொருள். தலைவன், தலைவி தோழியரின் கூந்தல் முதலியவற்றின் அழகினைப் பாராட்டி 'இளையீர், இவ்விடத்தே போந்த கெடுதியும் – இழநத பொருளும் - (அம்பு பட்டுத் தப்பி வந்த களிறு முதலியனவும்) உடையேன' என்று கூறித் தலைவியின் மறுமொழி பெறாமையின, நெஞ்சழிந்து 'நீவிர் கெடுதியும் காட்டித தாரீராயின் எம்முடன் ஒருசொல் கூறுதலும் பழியோ' எனறு வினவினான் (குறி. 138–145).

**கெண்டை** - 1. ஒருவகை மீன். வயற் கெண்டை போனறு வேல் பிறழினும் யானை மருப்பாற் குத்தினும் அஞ்சிப் புறங்கொடுத்து ஓடாத பெருமைமிக்கவர் மறவர் (புறம். 287:4-7). பிரப்பங் கொடியில் விளைந்த கனியை ஆழமாகிய நீர்மிக்க குளத்திலுள்ள கெண்டை கவரும் (குறு. 91:1,2). குருகு கவர்ந்து கொளள அதன வாயினினறும் தபபி நீருள் குளிதத கெண்டை அயலில் உளள தாமரையின் வெண முகையை வெருவும் (குறு.127:1,2). கெண்டை பாய்தலினால் அவிழ்ந்து மலர்ந்த ஆம்பல் வண்டுகளைப் பிணிககும் (ஐங். 40:4,5). மகளிரின் கெண்டையைப் போன்ற ஒளிகிளர் உண்கண்கள் கள்ளாலும் புனலாட்டாலும் புலவியாலும் நிறம் சிவந்தன (பரி. 16:39,40).

2. இலாஞ்சனை. புலி வடிவாகச் செய்யப்பட்ட சேய்மைக்கண் விளங்குகின்ற இலாஞ்சனையை நெடுநீரின்கண் வாழும் கெண்டையுடனே பொறித்த உச்சிகளையுடையவாக பிறர்தம் குன்று கெழுநாடுகள் என்று சோழன் பெருந திருமாவளவனும் பாண்டியன் பெருவழுதியும ஒருங் கிருந்தவழிக் காரிக்கண்ணனார் வாழததினார் (புறம். 58:29-32). கடல் தன் நாட்டினை வௌவிக் கொள்ளலின் தனக்கு நாடு இடமுண்டாகும்படி மெலிவின்றிப் பகைவர் மேற்சென்று வலியினால் அவரது புலியோடு வில்லையும் போக்கி விளங்கு கினற கெண்டையைப் பொறித்த புகழையும தலைமையையும் உடையவன் தென்னவன் (கலி. 104:1-4).

**கெழீஇயினர்** - கெழுதகையினர். தலைவன் உறவினரது கேட்டினை நீக்கவும் கிளைஞர் உண்ணவும் நொது மலாளர் கெழீஇயினர் - கெழுதகையினர் - ஆகி ஒழுகவும் ஆளவினைக்கு ஏற்றதாய ஊக்கமொடு விருப்பம் மிக்குச் சோழன் உறந்தையன்ன நன கலன்களை எய்திச் செயவினை முடித்தனன் (அகம். 93:1-7).

**கெழுதகை** - உரிமை. 'முதுவேலன் கழங்கினாலே உண்மையை வெளிப்படுததி படிமததைக் கையில் தூக்கிக்கொண்டு இவள நோய்க்குக் காரணம் முருகென்று கூறுவானாயின, தலைவியை வருத்திய தலைவனுக்கு அக்கூற்று கெழுதகை - உரிமை - உடையதாகுமோ' எனத் தோழி தலைவன சிறைப்புறத்து நிற்பக் கூறி வரைவு கடாயினாள் (ஐங். 245).

**கெழுதகைமை** - உரிமை. குனறநாடனைக் கண்ட எம் கண்கள் தாம் தம் கெழுதகைமையினால - உரிமையினால் - தலைவர் பிரிந்தமை கருதி அழுதன எனத் தலைவி தோழியிடம் கூறினாள் (குறு. 241:1,2,7).

**கெழுவு** - நட்பு. பரத்தைமை பூணட தலைவனைத் தலைவி புலந்துரைக்க அஞ்சிய தலைவன், வையை யாற்றின் மணலைத் தொட்டேன்; முருக வேளுக் குரிய பரங்குனறின் அடியைத் தொட்டேன்' என்று சூளுரைத்து மறுக்க, அது கண்டு தோழி கேளிரை யொத்த மணலோடு உனக்குள்ள கெழுவு - நட்பு - இத்தன்மையதோ என்று வினவினாள் (பரி. 8:61-63).

**கெளிறு** - ஒருவகை மீன். 'தலைவனிடம் சென்று என் இழை நெகிழும் துன்பத்தைக் கூறாத சிறு வெள்ளாங்குருகே, நீ எம்மூரினை யடைந்து பொய்கை

யினைத் துழவிச் சினையுள்ள கெளிற்றைத் தின்ற னையாகி அவர் ஊர்க்குச் செல்வாயாக; சென்று என் துன்பத்தை அவரிடம் கூறும் அன்பினையுடை யையோ, பெரு மறதியையோ' எனத் தலைவி அதனை விளித்து வினவினாள் (நற். 70). கெடிறு காண்க.

# கே

**கேசவனார் - புலவர்.** இவர் பாடிய ஒரே பாடல் பரி பாடலில 14- ஆம் பாடலாக உளளது. இப்பாட லுக்கு நோதிறபபண்ணில் இசை வகுத்ததும் இப் புலவரே யாவர். திருமாலின பெயரைத் தாங்கிய இவர்தம் பாடல் செவ்வேளைப் பற்றிச் சிறப்பாக அமைநதுள்ளது. இப் பாடல் பரங்குன்றத்தையும் சுனையையும் காரகாலத்தையும் புனைந்து கூறும். மயிலின உசசிக்கொண்டைககு வாகைப்பூவை உவ மையாக்கி யுள்ளார். முருகனை வழிபாடு செய்யும் வகையில 'சூர்மருங் கறுத்த சுடர்ப் படை யோயே; நறையில் நறுமபுகை நனியமர்ந் தோயே; நறுமலர் வள்ளிப் பூநயந தோயே; எழீஇப் பாடும் பாட்ட மர்ந தோயே; சிறநதோர் அஞ்சிய சீருடை யோயே; ஒருபெயர் அநதணர் அறனமர்ந் தோயே' என னும தொடர்கள் அமைநதிருத்தல் காணலாம். இசைப் புலவரு மாதலின இவர் செவ்வேளைப் 'பாட்டமர்நதோயே' எனக் கூறுதல் மிகப் பொருத் தமாகும். 'நின்னை நாங்கள் அடுத்தடுத்து வழிபடு வதன் பயன், இன்னும் இன்னும் நின புகழினும பலவாக அவ்வழிபாடுகள் தாமே யாகுக' எனச் செவ்வேள் பறறிக் கூறுதல் கொண்டு இவர்தம் ஈடுபாட்டினை அறியலாம்.

**கேட்குநர் - கேட்பவர்.** 'நெஞ்சே, பெறுதற்கரியதனை நினைந்து அவாவுறறனை; உயர் கோட்டிலுள்ள மந்தி தன குட்டியால் தழுவபபெற்று அமைவது போல, நின் குறையைக் கேட்குநரை – கேட்பவரை - நீ பெறுவா யாயின, நினது பூசல நனறும் பெரிது' என இரவுககுறி மறுக்கப்பட்ட தலைவன தனனெஞ்சிடம் கூறினான் (குறு. 29:4-7). கூதிர் யாமததில ஈ ஒலிக்குநதோறும் அலைககின்ற எருத் தின் கொடுமணி ஓசையைச சிறைபனி உடைநத சேயரி மழைக்கணணோடும் பொறுத்தற்கரிய காம நோயோடும் தனிமையால் கலங்கிக கேட்குநர் பிற ரும உளரோ எனத தலைவி தோழியை வினவி னாள் (குறு. 86). வையைத் துறைமுன் அணியாக நினறவா மொழிகின்ற மொழி ஒனறையொன்று ஒவ்வாது பலப்பலவாக ஒரு காலத்து எழுந்தது; அவற்றை யெல்லாம தெரியக் கேட்குநர் யார்; அவை கேட்டல் கூடா (பரி. 12:36-39).

**கேட்குநள் - கேட்பவள்.** இரவில் சீறூரிடத்தே குடி லில் தங்கித் தலைவன் தோள் துணையாகத் துயிற் றவும் துஞ்சாளாகி வேட்டக் கள்வரது தண்ணுமை ஒலியினையும் கேட்குநளோ - கேட்பவளோ - என மகட்போக்கிய செவிலி வருந்தினாள் (அகம். 63:13-19).

**கேட்டார் - கேட்டவர்.** தம் புகழைக் கேடடார் – கேட் டவர் - போலத் தலையைச் சாய்த்து மரங்கள் துஞ்சின (கலி. 118:6).

**கேட்போர் - கேட்பவர்.** இளவேனிற் காலத்தே குயில்கள் அகவும் குரலினைக் கேட்போர்ககு - கேட்பவருக்கு - கண்ணீரை நிறுத்துதல் எளிதாமோ எனத் தலைவி தோழியை வினவினாள் (அகம். 97:16,17,23).

**கேடு - 1.** கெடுதல். கொழுந்துவை நெய்யுடை யடிசிலைப் பொற்கலத்தில சூழ வைத்திருந்து ஊட்டிக் கேடு - கெடுதல - இனறாகுக பாடுநர் சுற்றமெனச் சொல்லிப் பொறகலங்களை அவர்க்கு எளிதாக வழங்குந் தன்மையன் குமணன (புறம்.160: 7-12). குமணன கேடில் நல்லிசை வயமான் தோன்ற லாவான் (புறம். 165:8). இருங்கோ வேளின் முன் னோருள் ஒருவன் கழாத்தலையார் என்னும் புலவரை அவமதித்ததனால் அரையம் என்னும் நகர் கேடுற்றது (புறம. 203:8,11-13). 'கேடிலவாக பெரும நின் புகழே' என அரிசில்கிழார் பெருஞ் சேரலிரும்பொறையை வாழ்த்துவர் (பதி. 79:19). திங்களைக கேடில் விழுபபுகழ உடைய நாள் (உரோகிணி) சேரநதபோது திருமணம் நிகழ்ந்தது (அகம. 86:6,7). தலைவன உறவினரது கேட்டினை நீககித் தாங்கவும கிளைஞர் உண்ணவும் நொது மலாளர் உரிமையுடன் ஒழுகவும் ஊக்கமொடு புகல்சிறந்து உறநதையன்ன நனகலன்களை எய்திச் செய்வினை முற்றினான (அகம. 93:1-7). அறத் தினின்று நீங்காது ஒழுகலும் கேளிரது பல்வகை யான கேடுகளைத் தாஙகலும் இல்லத்தில் முயற் சியின்றி மடிநதிருந்தோர்க்கு இல்லை என்று கருதிப் பொருள ஈட்டும் வினையைத் தலைவன மேறகொணடான் (அகம். 173:1-4,18). தலைவர் கேடில் விழுப்பொருளைக் கொணரும் பொருட்டு வள்ளிக்கொடி படர்ந்த காட்டினைக் கடந்து சென்றார் (குறு. 216:1,2). தலைவனொடு கொணட நட்பு உலகம் இடம் மாறினும் நீரும் தீயும் பிறழினும் பெருங்கடற்கு எலலை தோன்றினும் வெவ்வாய்ப் பெண்டிரது அலரினை அஞ்சிக் கேடு

எவ்வாறு உடையதாகும் என்று தோழி தலைவியை வினவினாள் (குறு. 373).

2. ஆற்றாமை. தலைவன் தந்த தழையை உடுத்திக் கொள்ளின் யாயின் வினாவிறகு அஞ்சுதும்; அத் தழையை மீட்டும் தலைவன்பால் கொடுத்துவிடின் அதனால் அவன் படும் கேட்டுக்கு - ஆற்றாமைக்கு- அஞ்சுதும் எனத் தோழி வருந்திக் கூறினாள் (நற். 359:3-6). தோழி, இவனது கேட்டினைப் பாராய்; அறிவுடையோர் தம் செல்வம் குறைவுற்ற காலத்துத் தம் அல்லல் களைவாரிடத்தே சென்று தம் குறை யைச் சொலலுதலுற்று அதனை முடியச் சொல்லா தவரைப் போலத் தான் கூறத் தொடங்கியதனைக் கைவிட்டுப் பன்முறை எனனைப் பார்ப்பான்; யான் அவனை நோககின மெலலத் தலை இறைஞ் சுவான் எனத் தோழி தலைவனைக குறித்துத தலைவியிடம் கூறினாள (கலி. 61·1-6).

3. குறைதல். 'என இருமபெரொககல எவ்வம் கெடுமாறு ஊன் துணடங்களை உணபிததுக் கிழிநது பிளவுபட்ட எம உடையை முற்றவும் நீககிப பகனறைப புதுமலரன்ன கலிங்கத்தை உடுப்பித்துச் செல்வததையும் கேடு - குறைதல - இனறிக் கொடுப்பாயாக' எனக் கிணைப பொரு நன கிள்ளிவளவனை வேண்டினான் (புறம. 393.10-19).

**கேண்மை - நட்பு.** கதிராகிய உணவை முழையின் கண்ணே கொண்டொளிக்கும் எலி முயனறாற் போலும் சிறிய முயற்சியராகித் தம் செல்வத்தை நுகராது இறுகப பிடிக்கும் உளளமிகுதி யில்லா தாரது இயைநத கேண்மை - நட்பு - இலலையாகுக; தான தாக்கிய கேழற் பனறி இடப்பக்கத்தே வீழ்ந்ததால் அற்றைய நாள் உண்ணாது பிற்றைய நாள் விடரகம புலம்ப வேட்டெழுந்து களிற்றினை வலப் பக்கத்தே வீழ்ததும் புலி பசிததாற் போன்ற குறைவில்லாத மேற்கோளை யுடைய உரனுடை யாளர் கேண்மை நாளும பொருநதுவதாகுக எனச் சோழன் நல்லுருத்திரனார் கூறுவா (புறம். 190). தம்மாற் கொடுக்க இயலும் பொருளை இயலு மென்று கொடுத்தலும் கொடுகக இயலாத பொருளை இலலையெனறு சொல்லி மறுத்தலு மாகிய இரணடும தாளாண்மைப் பக்கதது உள வாகிய கேணமையின் கூற்றினிடத்தே உள்ளன (புறம். 196:1-3). வேள்பாரி துஞ்சியபொழுது தன் னையும் உடன வரவிடாது இருந்து வருக என்று கூறிப் பிரிநததனால கபிலர், 'மாவண் பாரியே, நீயும் நானும கலந்த கேண்மைக்குப பொருந்த ஒழுகாயாய நீ என்னைப் புலநதனை யாகுவை' என்று கூறினார் (புறம். 236:3-7). கரிகாலன் அற னோடு கூடிய திறனறி செங்கோலாலும் தண் ணளி செய்தற்கு எடுத்த ஒரு குடையாலும் தனது ஆணையையே உலகம் கூறும்படியாகப் பெரிய கேண்மையுடனே நெடுங்காலம் உலகையாண்ட வெல்கின்ற வேலையுடைய தலைவ னாவான் (பொரு. 227-231). மிக்க துன்பம் கொண்ட அழகிய நெஞ்சம் செயலற்று வருநத நமக்குப பிரிதல துன பததினைச் செயது நம்மை அருளாராயினும் தலை வரது கேண்மை நமக்கு ஒழியாதிருப்பதாக எனறு தலைவி தோழியிடம் கூறினாள் (அகம். 40:7-10). தலைவன நம்முடன் கொண்ட காதற்கேண்மையை முனபு அலாவாய்ப் பெண்டிர் அலாதூற்றப் பல ரும் அறிவாராயினர்; இப்பொழுது வதுவை கூடிய பின இவ்வழுங்கல் ஊர் ஒலி அவிநதது எனறு தோழி தலைவியிடம் கூறினாள (அகம. 70:4-8,17). ஊரனால் எழுநத அலரோ பெரியதாகும்; ஆயினும அவன நட்போ, கொறுககங் கழியாலாய புணை யினைத் துணையாகக கொணடு புனல விளை யாடும கேணமையின அளவினதே என்று இலலி டைப பரததை தலைவியின பாஙகாயினார கேட்பக் கூறினாள் (அகம. 186·6-9). பெருஙகல நாடனது கேண்மை இனி அன்னை நாளும பூப பலியோடு பொருநதிக கடியுடை வியனநகரின கணா காத்தலைக் கருதி நம வேறுபாடு முருகனால உண்டாயதெனறு வேலனை அழைககும காலமாக நமக்கு விளைநதது எனறு தோழி தலைவியிடம கூறினாள் (அகம. 232.5,12-15). குனறநாடனது கேணமை அவன பிரிய உணகண நீரோடு, பிரிவை நினைந்து வருந்தாமல ஆறறுதல வலலோர்க்கு மட்டும் என்றும மிக நலலதாகும எனறு தலைவி தோழியிடம் குறிபபு மொழியிற கூறினாள (குறு. 38:3-6). ஊரனுடன மெயயுறறு இன்பம அடையே மாயினும அவனிடம் கேணமையை மேன மேலும பெருகச செயது இனபம அடைந்தோம; அதனால் கைவளை செறிநதன என்று கூறித் தோழி வாயில மறுத்தாள (குறு. 61.3-5). குனற நாடனது கேணமை நின மென்றோளை மெலியச செய்தும அமைதியைத் தநதது, இஃது எததனமையது எனத தோழி தலைவியை வினவி னாள் (குறு. 90:6,7). சூர்மலை நாடனது கேணமை தலைவி நீர்மலிகணணோடு நினைத்துத் துனபுறு தறகுக் காரணமாகியது (குறு. 105:5,6). மலைகெழு நாடனது கேணமை கெடாமையை நன்றாக அறிந தேன்; அதனை அறியாதோா பலரும் தமககுத தோனறியவற்றைக் கூறுக என்று தலைவி தோழி யிடம் கூறினாள் (குறு. 170). தலைவன் நயந்து

கொண்ட கேண்மை தலைவி பசலையை அடைந் தாலும் அப்பசலையோடு பொருந்தாது (குறு. 264: 4,5). மாமலை நாடனது கேண்மை மெய்யுறு புணர்ச்சியைத் தருகின்றதொரு செயலிலே தங்கி யது என்று தோழி தலைவியிடம் கூறினாள் (குறு. 308:6,7). சீரிய தலைவனது கேண்மை தாமரைத் தனதாதினையும் சந்தனத்தின தண்தாதினையும் ஊதிச் சந்தன மரத்தில வைத்த இனிய தேன போல உயர்ந்தது (நற். 1:3-5). மலைகெழு நாடனது கேண்மை பலவினது கனிந்த பெரும்பழம் விடரளை யினுள் விழுநதொழிநதாற் போலத் தொடர்ச்சி யறப் பன்னாளின முன்னே சென்றொழிந்தது; அதனையறியாது குறிஞ்சி நல்லூர்ப் பெண்டிர் என்னிமித்தமாக இன்னும் அலர் கூறுதலை ஒழிந் திலர் எனத் தலைவி தோழியிடம் கூறினாள் (நற். 116:6-12). தலைவனுடைய அச்சந்தரும் வெய்ய கேண்மை முன்பு பொருந்தியிருந்து இப்பொழுது யாதொரு தொடர்பும் இல்லாதிருந்தும் அறனில அன்னை அவன் நம்மொடு புணர்நதனன் போலக் கூறி அவன் யாங்குளன் என வினவுகின்றாள் எனத் தோழி தலைவன் சிறைப்புறத்தானாகத் தலைவியிடம் கூறுவாள் போல வரைவு கடாயி னாள் (நற். 145:4-7). கானலிடத்தே தலைவனுடன் இயைந்த கேண்மையால் ஒருநாள் இடையீடுபட்டு அவனைப் பிரிந்தாலும் உயிருய்தல் அரிது எனத் தோழி தலைவனிடம் கூறி வரைவு கடாயினாள் (நற். 203:7,8). கல்கெழு நாடனது கேண்மையை அன்னை அறிநதனளோ எனத் தோழி ஐயுற்றாள் (நற். 206:10,11). பெருங்கல் நாடனோடு தினைப் புனத்துத் தங்கிப் பைங்கிளி ஓப்பிப் பெருவரை யடுக்கத்து அருவியாடிச் சாரல் ஆரத்தை வண்டு படப் பூசிப் பெரிதும் விரும்பி இயைந்த கேண்மை மிகச் சிறுகி இல்லையாகும் போலக் காண்பேன்; தினைக்கதிர் காய்ந்து விட்டன; ஆதலின் யாம் என் செய்வாம் எனத் தோழி தலைவியை வின வினாள் (நற். 259:1-8). குன்றநாடன் நடு இரவில் வருதலன்றியும் அயலோர் தூற்றும் அம்பலுக்கு அகலானாகித தினைப்புனத்திடத்துப் பகலினும் வருவானாயினன; ஆதலின அவனது கேண்மை நமக்கு நனறோ எனத் தோழி தலைவியை வின வினாள் (நற. 285.1,2,8-11). 'பெருமலை நாடனது கேண்மை நமகக்குத் துன்பமாக இருக்கவும் அதனை அறிபவர் இலலையென்று நீ கூறுவை; அவருடைய நட்பை யான நன்றாக அறிவேன ஆதலின் ஆற்றி யிருப்பேன்' எனத் தலைவி தோழியிடம் கூறினாள் (நற். 309:6-9). 'துறைவனே, பெரிதும் விழுமியதாகக் கொண்ட கேணமையினகண் நுட்பமாகிய தவறும் வாராதபடி நன்கு அறிந்து நடத்தலை அறியாயா யின், நின்னால் விரும்பப்படுவோர் எம்மைப்போல நெகிழந்த தோளராய்க் கலுழ்ந்த கண்ணராய் மலர் மலர்ந்தவுடன தீய்ந்தாற் போலாகுவர் என்று தலைமகனிடம் பரத்தை நொந்து கூறினாள் (நற். 315:8-12). உயர்மலை நாடனே, நீ விரும்பிய தலைவி யிடத்துக் கேண்மையை அன்னை அறிகுவள் ஆயின் தலைவியின் மலர்க்கணகள நீர் கலந்து வடியப் பெற்று இனி என்னாகுமோ எனத் தோழி தலை வனிடம் மொழிந்தாள் (நற். 317:5-10). தலைவனே, எக்காலத்தும் அருள் செய்யும் பெரிய கேண்மை யுடைய நும்போல் சால்பினை எதிர்கொண்ட செம்மையோரும் தம்மை அடைந்தாரைக் காப்பே மென்று அரிய சூள் வைத்து அவர் தெளியாத நெஞ்சுடனே செயலழிந்து வாடும்படி நெடுநாள் வரை விரும்பா திருப்பாராயின், தஞ்சமென்று புகுந்தார் தாம் உயிர்வாழ்தல் எவ்வாறோ' எனத் தோழி தலைவனிடம் உரைத்தாள் (நற். 345:5-10). 'மறங்கெழு சோழரது உறந்தை அவையத்தின்கண் அறங்கெடாது நிலைபெற்றாற் போன்று நீ சிறந்த கேண்மையோடு அளாவி எனநெஞ்சினின்றும் நீங் கும் தனமையை அறிந்தாயல்லை' எனப் பரத்தை தலைவனைப் புகழ்ந்து கூறினாள் (நற். 400:7-10). 'தண்டுறை ஊரன் காதற்கேண்மை வழிவழிச் சிறக்கவென்று யாம் வேட்டேம்' எனத் தோழி தலைவனிடம் கூறினாள் (ஐங். 2). தண்டுறை ஊர னது கேண்மை அம்பல் அளவும் ஆகாதொழிக என்று பெரிதும் வேண்டியிருந்தேம் எனத் தோழி தலைவனிடம உரைத்தாள் (ஐங. 9:5,6). அருந்தவத் தினை முற்பிறப்பிலே இயற்றாத சிறியேமாகிய நாம் துறைவனது கேண்மையைப் பிரிந்து வைத்தும் வாழ்வோமோ எனத தலைவி தோழியிடம் கேட் டாள் (ஐங். 111:3-5). தலைவன் கேண்மையை இனிப் பரத்தை மகளிரே யன்றி நன்னெடுங் கூந்தலளாகிய தலைவி நாடுவளோ எனத் தோழி வாயில் மறுத்து மொழிந்தாள் (ஐங். 153: 4, 5). நாம் உறுகின்ற துயரினை நோக்கி அன்னை வேலனைத் தந்தாளாயின் அவ்வேலன் வெறி கமழ் நாடனது கேண்மையை அறியுமோ எனத் தோழி தலைவியை வினவினாள் (ஐங. 241). புறவிலுள்ள மாவினங்கள் உயிர்கலந்து ஒனறிய குற்றமற்ற காதற் கேண்மையுடைமையானே பிரிந் துறைதல் அறியாவாய் நாளும் புதுமையுறத் தழுவி நம்போல் நயவரப் புணர்ந்தன என்று தலைமகன் மாக்களைச் சுட்டிக்காட்டித் தலைவியிடம் கூறி னான் (ஐங். 419). இருவர் மனமும் பொருந்திய கேண்மையாலே ஒருவர் கூறிய மறைப்பொருளை

அறிந்து அவர் நீங்கிய பின்னர்ப் பிறர்க்கு உரைக்கும் பீடிலார் தொடர்பு போலத் தலைவியின் நுதல் தலைவன் அளிசெய்யுங் காலத்து ஒளிமிக்கு அளியாக் காலத்து அவன் குணத்தைப் பிறர்க்கு அறிவித்துப் பசந்து காட்டும் (கலி. 25:21-24). மலைநாடனும் நீயும் வதுவையிடத்துப் பண்டு கண்டறியாதீர் போல நடப்பீரோ; பண்டு கண்டறியாதீர் போல நடந்திருடைய பழங்கேணமையை யான் கண்டறியாதேன் போல மறைப்பேனோ எனத் தோழி தலைவியிடம் உரைத்தாள் (கலி. 39:37-40). 'நின் பூணாகத்தின் புணர்ச்சியை மனத்தாற் கருதி இரவும் துயில் கொள்ளானாய் நம் கேண்மையை நயந்து விருப்புற்றவனை நான் அடுகையினாலே' எதிர்நின்று மீட்ட நயப்பாடு வருதல் இன்று; அதற்குத் தக்கது அறிவாய்' எனத் தோழி தலைவியிடம் கூறினாள் (கலி. 60: 30 - 32). 'செறுநரும் விரும்புதற்குக் காரணமான தமது செறிநத கேண்மை மறுபிறப்பினும் இயைவதாக' என வையையை மக்கள் வேணடினர் (பரி. தி.3).

**கேணி** - 1. கிணறு. இரவலரது கிழிந்த ஆடை ஊரவர் உண்ணும பொருட்டு நீர்கொள்ளும் கேணியில் - கிணற்றில் - படர்ந்தபெரிய இலையை யுடைய பாசியின் வேர் போன்றது (புறம்.392:13,14). முருகன் கையில் உளள வலியினையுடைய வேலின் நுதிபோலக் கேணியில் பூத்த விறல் வேலினால் வெற்றியை யுடையது வேலூர் (சிறு. 172, 173). தண்ணிய கேணிகளை உள்ளேயடக்கின முற்றத்தில் பகட்டெருத்திற்கு வைக்கோலிடும் பல சாலை உண்டு (பட். 51,52). வறட்சியுற்ற குன்றத்து உச்சியின பக்கத்திலுள்ள வேட்டுவச் சேரியை அடுத்த அகன்ற வாயையுடைய கேணியினின்று ஆனிரை உண்ணுமாறு எடுத்து வைத்த நீர்ப்பத்தரை, மடப்பிடி கன்றோடு உணணவேண்டிக் களிறு அப் பததரின் வாயை மூடிய விற்பொறியை முறித்துப் பின் அவற்றை உண்பிக்கும (நற். 92:4-9).

2. நீர்நிலை. பாணனது சென்னி, கேணியில் - நீர் நிலையில் - பூவாத எரிபோலும் பெரிய பொற்றாமரைப் பூவணிந்து விளங்கியது (புறம். 364:2,3). சுரநெறியிற் செல்லும் புதியவர் சேற்றைக் கிண்டி ஊறிய நீரை உண்ட சிறிய பலவாய கேணிகளைத் தன் பிடியின் அடிச்சுவடென விரும்பிக் களிறு தொட்டுப்பார்த்துக் கடந்து செல்லும் (அகம். 137: 1-3). தலைவன் தொடுவுழித் தொடுவுழி நீங்கி விடுவுழி விடுவுழிப் பரவுதலால் பசலை ஊரினரால் உண்ணப்படும நீரையுடைய கேணியின் உண்ணுந் துறையிடத்தே கூடின பாசி போன்றது (குறு. 399).

**கேழ்** - 1. நிறம். தாமரை பயந்த ஒண்கேழ் - ஒள்ளிய நிறத்தையுடைய - நூற்றிதழினை யுடைய மலர் நிரை ஏற்றத்தாழ்வில்லாத சிறந்த குடிக்கு உவமை (புறம். 27:1-4). மரையாவைக் கறநத நுரைகொள் தீம்பாலை, மான் இறைச்சி புழுக்கப்பட்ட புலால் நாறும் பானையின நிணநதோய்ந்த வெளிய கேழினை உடைய பெரும்புறத்தைக் கழுவாது உலைநீராக வார்த்து ஏற்றிச் சநதன விறகான் தினைச்சோறு புழுக்குவர் (புறம். 168:8-11). இருங் கேழ் வயப்புலி (புறம். 374:14). கேழணி உத்தியை யுடைய அரா (புறம்.382:13,14). பூங்கேழ்த் தேய்வை (முரு. 33). வேலன நறுஞ்சாந்து அணிந்த கேழ்கிளர் மார்பினன் (முரு. 190,193). வயவர் தந்த வான் கேழ் நிதியம் (சிறு. 249). புரவி பால போலும் வெள்ளிய கேழினையும் வெள்ளிதாகிய தலையாட்டத்தினையு முடையது (பெரு. 319,320). வயப்புலி இருங்கேழ் ஏற்றினை அடும்(மது. 297,298). நறுஞ்சாந்து பூசபபெற்ற கேழ்கிளர் அகலம் (மது. 493;அகம். 26: 14). வெளளிய கேழினை உடையது சநதனக் கல் (நெடு. 51). ஆலவட்டம் சிவந்த கேழினை யுடையது (நெடு. 58). புலிப்பொறிக் கொண்ட பூங்கேழ்த் தட்டம் (நெடு. 126). சிவநத விரலிற கொண்ட விளக்கம் (மோதிரம்) செங்கேழினை யுடையது (நெடு. 144). ஒணகேழ் வயப்புலி (மலை. 309; அகம். 347:11; நற்.119:3;ஐங். 274:1). ஒண் கேழ் வனமுலை (அகம். 61.17). அடும்பினது செங் கேழ் மென்கொடிகளைத் தேராழி அறுக்கும் (அகம். 80:8,9). பரலுயர் பதுக்கையில இருங்கேழ் இரலை தங்கும் (அகம. 91:9,10). இகணையின பசுஙகேழ் மெல்லிலைகளை நெருங்கச செறித்து வைததாற் போன்ற வண்டுமொயத்து இருண்ட தாழிருங் கூந்தலினள் தலைவி (அகம். 131:1-3). வேங்கையில் பல பொறிகளை யுடைய, புலியின் கேழினைப் பொருந்திய பூக்களிடையே நரந்தையின் நாள்மலர் உதிருமாறு முசுக்கலை பாய்ந்து தாவும் (அகம். 141:24-27). வேங்கையின் மலர்ந்த நறுமலரை யொப்பக் கேழ் கொள்ள மேனியில் தோன்றிய மாசறு சுணங்கினள் தலைவி (அகம். 174:10-14). தலைவி சுரிவணர் ஐம்பாலின் நுண்கேழ் அடங்க வாரி மலர் வேய்ந்தனள் (அகம். 223:12-15). புலிக் கேழ் வேங்கை (அகம். 227:8). தலைவி நுண்கேழ முறி ஒத்த எழில்நல முடையவள் (அகம். 242:7,8). அருங்கேழ் வயப்புலி (அகம். 251:16). நலங்கேழ் மாக் குரல் குழை (அகம். 269:16). தலைவி நுணகேழ் மாமையள் (அகம். 319.7). கேழ்கிளர் யானை (அகம். 332:2). தலைவி அழகிய கேழினாற் பொலிவனவாய் மாறுபட்ட மையுண்ட கண்களை உடையவள் (அகம்.

334:15,16). வெளளிய கேழினையுடையது வட்டக் கல (அகம். 340:15). ஏழிற்குன்றத்தின் பக்கமலை கேழகொளக் கருங்கால வேங்கை உயர்ந்து மலர்ந் தது (அகம். 349.9,10). கேழ்கொள முத்துவடம் முதலிய புனைந்து செய்த வனப்பமைந்த, சுவரின் கண்ணுள்ள பாவைகளும் பலியென எதனையும் கொணடில என மகட்போக்கிய செவிலி வருந்தி னாள் (அகம். 369:6-8). இருங்கேழ் ஏற்றை (அகம். 389:20). மணிக்கேழனன மாநீர்ச் சேர்ப்பன் (குறு. 49:2). கேழிருந் துறுகல் செழுமலை நாடன் (குறு. 111:5). நறவம் பூவின நறுந்தாதினை அளைந்த தும்பீ பசுங்கேழ்ப் பொன்னுரை கல்லின் நன்னிறத் தைப் பெறும் (நற். 25·2-4). களிறு புலி நடுங்குமாறு அதன் வளைந்த, கேழ் பொருந்திய பெரிய முது கிலே குத்தி வீழ்த்தி விளையாட்டயர்ந்தது (நற். 39:4,5). கோட்சுறா வழங்கும் வாட்கேழ் இருங்கழி (நற். 78:1). கேழ்கிளர் உத்தியுடையது அரவு (நற். 129:7). செங்கேழ் ஆடிய செழுங்குரற் சிறுதினை (நற்.213:9). இருங்கேழ வயப்புலி (நற். 217:3). வாட் கேழ் ஏற்றை (நற். 279.5). சந்தன மரத்தின் கிளை யில சுற்றிய, பசிய கேழ் பொருந்திய இலையை யுடைய தமாலக் கொடியை நறுந்தேன் கொள்பவர் அறுத்துச் செல்வர் (நற். 292:1-3). ஏழ்துளையை யுடைய வங்கியத்திலும் ஐந்து துளையை யுடைய வங்கியத்திலும் யாழிலும் பிறந்த இசைச் சுருதியை யொத்துக் கேழினால் ஒத்த தும்பியும் வண்டும் மிஞிறும் முறையே ஆர்த்தன (பரி. 8:22,23). பகை வரைக் கொன்றவனது கேழிருங் குன்றில் எதி ரொலி ஒழியாது (பரி. 15:44,45). வரைகெழு செல வன (ஆதிசேடன்) இரண்டாகிய கேழ் உத்தி அணிந்த எருத்தினை யுடையவன (பரி. தி. 1:48,49).

2. வரி. புலி - ஒனறற்கும் கெடாத வலியினையும் வளைந்த கேழினையும - வரியினையும் - தறுகண் மையினையும் உடையது (கலி.65:23,24).

**கேழல்** – 1. ஆண்பன்றி. மலைச் சாரலினிடத்து மலர்ந்த காந்தளினது கொழுநகிழங்கைக் கிளறித் தன் இனததோடு கூடத தறுகண்மை யுடைய கேழல் - ஆண பன்றி - உழுத புழுதிக்கணணே குறவர் நலல நாள் வந்த செவ்வியைப் பார்த்துச் சிறுதினையை வித்துவர் (புறம். 168: 1-6). ஓரை ஆயத்து ஒணடொடி மகளிர கேழல உழுத கரிய சேற்றைக கிளறின அதனிடத்து யாமை யீன்ற புலவுநாறு முட்டையைத் தேன நாறும் ஆம்பற் கிழங்கோடு பெறுவர் (புறம். 176:1-4). புலி தான் தாக்கிய கடுங்கட் கேழல இடப்பக்கம் வீழ்ந்த தால், அனறு அவ்விடத்து அதனை உண்ணாதா கிப் பிற்றைநாள் பெருமலை விடரகம் புலம்புமாறு வேட்டெழுநது பெருங் களிற் றொருத்தலை வலப் பக்கம் வீழ்த்தி உணணும் (புறம். 190:6-10). கேழ லொடு கரடி மலைக்குகையில் தங்கியது (முரு. 311-314). நெடுஞ்செழியனின் பகைவர் தேயத்தே எருது உழுத விளைவயலின்கண் பன்மயிர்ப் பிண வோடு கேழல் ஓடித் திரியும் (மது.173,174). குறவன் அகழ்ந்த மூடின வாயையுடைய பொய்க்குழியிலே விழும் கேழலைக் கொனறதனால் ஆரவாரம் எழுந்தது (மது.294, 295). கேழல் தினைப்புனத்தைத் தின்று அழித்தலின அதற்கு அஞ்சிச சில்வழிகள் தோறும் கானவர் கற்பொறிகள் மாட்டி வைத்திருப் பர் ஆதலின இரவில் தங்கி விடியலிற் செனமின எனக்கூத்தர் ஆற்றுப்படுத்தப் பெற்றனர் (மலை.193-196). பெரிய கேழலினைக் கொனற புலியேறு பலா மரங்கள் செறிந்த பகக மலைகளில் புலால நாற அதனை ஈர்த்துச்செலலும் (அகம்.8:5-7). ஈன்றணிமை யுடைய பிணவு பசித்ததாகச் செந்நாய் ஏற்றை கேழலைத் தாக்குதலின அதுகண்டு அஞ்சி ஓடும் பெண்பன்றி மோதுதலால் ஈந்தின செங்காயகள் மண்மேடாகிய வன்னிலத்தே உதிர்ந்தன (அகம். 21:16-21). காட்டிலுள்ள கேழலினைக் கொன்ற, செநநாய் ஏற்றை அதனை ஈர்த்துச் செல்லும் போது வழியெங்கும் ஒழுகிய குருதியினைப் பருகிய பருந்தின் செஞ்செவிகள் மறவர் போர்க்களத்தில் இரவில கைக கொண்ட புண்களை ஆராயும் விளக் குகளைப் போலத் தோன்றும் (அகம். 111:10-14). முருக்கமரம் கேழலின வளைந்த கொம்பினை ஒதத ஆர்கினையுடைய நெடும் பெரும் காயினை யுடையது (அகம். 223:3-5). தினை மேயும் கேழல் பட்டொழியப் புனவன சிறுபொறியாக அமைதத பெருங்கலலின கீழே வயப்புலி புகுந்து பட்டது (நற். 119:1-3). கேழல் தோண்டிய நிலத்திலிருந்து வெளியிற் போந்த திருமணியின் ஒளிதிகழ விளக் கத்திலே ஈனற மடப்பிடி, களிறு தன்னைப் புறங் காத்து நிறபக் கனறோடு வதியும் (நற். 399:4-7). பொன்னைப் போனற முற்றிய தினையைக் கட்ட ளைக கல்லைப் போனற நிறமுடைய கேழல் மாந் தியது (ஐங் 263:1,3). இளம்பிறை போன்ற கொம் பினையுடைய கேழல், களாப்பழம் போன்ற நிற முடைய பிணவைப் புணரும் (ஐங். 264:1,2). புலி யால் கொல்லப்பட்ட தன பிணவின குட்டிகளை, வளைந்த வெள்ளிய மருப்பினையுடைய கேழல் காக்கும் (ஐங். 265:1,2). கேழல தாயையிழந்த குரு ளையோடு வளமலையிற் சிறுதினை மேய்ந்து கானவரது வரையோங்கு உயர்சிமையில் உறங்கும (ஐங். 268:1-3). கேழல் உழுததாகக் கிளர்ந்த பைஞ்

சாய்க்கோரை நெல்விளைந்த வயலைப் போலத் தோன்றியது (ஐங். 269:1,2). கேழல் கிழங்ககழ்ந்து உழுத புழுதிக்கண்ணே வித்தி விளைந்த முதல் விளைச்சலைக் கானவர் கொய்தனர் (ஐங். 270:1,2). செந்நாய் ஏற்றை வயா நோயுற்ற பிணவிற்காகக் கள்ளிச்செடிகள் நிறைந்த பாலைநிலத்தே கேழல் வரவினைப் பார்த்து நிற்கும் (ஐங். 323:1,2). கேழற் பன்றி காண்க.

**2. வராக அவதாரம்.** மண்ணுலகமும் விண்ணுலகமும் பாழ்பட மதியமும் ஞாயிறும் கெடுதலால்அழகிழந்த வானமும் கெட்ட ஊழிகள் முறையே கழிந்தபின் ஆகாய ஊழியும் காற்று ஊழியும் அதனினின்று செந்தீயும் அதனினின்று மழைமுதலியனவும் அவற் றினின்று நிலமும் தோன்றிய ஊழிகளுமாகிய அள விலாத காலம் கழிநதபின் உயிர்கள் உளவாதற் பொருட்டுத் திருமால் அந்நிலத்தினைக் கேழற் கோலத்தால் – வராக அவதாரத்தால் - எடுத்திட்ட செயலால் இக்கற்பம் வராக கற்பமென்னும் பெயர் பெற்றது (பரி. 2 : 1-17). கனலியும் கூற்றமும் ஞமனும் ஞாயிறும் கூடும் ஊழி முடிவினுள் ஏழும் ஒன்றாகிய ஆழிக்கண் அழுந்துகின்ற நிலமகளைத் திருமால் அழகிய கேழலாகி மருப்பால் பெயர்த் தெடுத்தார் (பரி. 3:21–24).

**கேழற்பன்றி - 1. ஆண்பன்றி.** ஓரி விடுதத வேழத்தை வீழ்த்திய விழுத்தொடைப் பகழி புலியைக் கொனறு கலைமானை உருட்டி, உரல் போலுந தலையை யுடைய கேழற் பன்றியை - ஆண் பன்றியை - வீழச்செய்து, அயலதாகிய புறறில் கிடககின்ற உடும்பின்கண் சென்று செறிந்தது (புறம். 152:1-5). கேழல் 1. காண்க.

**கேள் - 1. காதலன்.** 'குன்ற நாடனாகிய தலைவன் நாம் உடுத்தற்குரிய தழை தந்தனன; அவற்றை உடுப்போமெனறால் அன்னைக்கு அஞ்சுகின்றோம்; வேண்டாவென அவனிடமே கொடுத்துவிடுவோ மென்றால் கேளுடைய - காதலனுடைய - ஆற் றாமைக் கேட்டிற்கு அஞ்சுகினறோம்' எனத் தோழி தலைமகளது குறிப்பறியுமாறு பேசினாள் (நற். 359:3-6). 'தெரியிழாய், நீயும் நின் கேளும் கூடும்படியாக இம்மலையுறை தெய்வம் உவக்கு மாறு யாம் குரவையாட அக்குரவைக் கூத்தின கொண்டுநிலையை நீ பாடுவாயாக' என்று தோழி தலைவியிடம் கூறினாள் (கலி. 39:26–29). திங்களி னுள்ளே விளங்கி யிருந்த குறுமுயலே, இவ்வுலகத் தில் எம் கேள் இருக்குமிடத்தைக் காட்டுவாயாக' என்று கணவனது பிரிவினால் கலக்கமுற்ற தலைவி வேண்டினாள் (கலி. 144.18,19). வையையில் நீராடிய மகளிருள் சிலர், 'எம் கேளும் யாமும் கிழவர் கிழவியர் எனப்படாமல் இத்தவம் நிலைத்த இளமையைத் தரச செல்வத்தோடும் சுற்றத்தோடும் யாம் நிலைபெறுக' என அவ்வையையைத தொழுது வேண்டினர் (பரி. 11:120, 121). வையைக் கரையில் தன் காதில் அசோகமலரைச் செருகிக் கொண்டு முன்கையாலே கூந்தலில கண்ணியை அழகுறத் திருத்தி நின்ற ஒருத்தியின் குறிப்பினால் அவளரு கிலிருக்கும் ஒருவனை, 'இவன் இந்நல்லவளுடைய கேள்' என்று பிறர் கண்டனர் (பரி. 12:88–92).

**2. கேளிர் (உறவினர்).** வாட்டாற்று எழினியாதன் கேள் - கேளிர் - இல்லர்தவர்களுக்குக் கேளாகுவன் (புறம். 396:11,13). கேளைக் கேடு நீக்கித் தாங்கவும் கிளைஞர் உண்ணவும் கேளல்லாத கேளிர் செழு தகையினராய்க் கூடியொழுகவும் வேண்டித் தலை வன் ஆள்வினைக்கு எதிர்நத ஊக்கமொடு சென்று பொருளீட்டினன் (அகம்.93.1-7) 'இனிய கிளவியினை யுடையாய, நின கேள என்னைப் பலநாளும் புதுமை யுறப் பாராட்டுதலால் யானும் இப்பாராட்டு ஒரு பிரிவையுடையதெனக் கருதினேன' என்று தலைவி தலைவனைக குறித்துத தோழியிடம் கூறினாள் (கலி. 24:3-5). கற்புக் காலத்தில் தலைவ னொடு தலைவிக்கு நேரும் புணர்ச்சிகள் அவளு டைய கேள் கேட்டு அணங்குறுமாறு பரத்தையால தன் மனைக்கண் அலர் தூற்றப்படுகின்ற குறை யுடையன வாகும் (பரி. 9:21).

**3. உறவு.** 'யான் கேள் - உறவு - இல்லாத சேய் நாட்டின்கண் நின் வளமை குறித்த விருப்பத்தால இரங்கி நினது அடிநிழலில் பழகிய அடியில் வாழ் வேன்' என்று வடம வண்ணக்கன பேரிசாத்தனார் தமக்குப் பரிசில வழங்காத பாண்டியன் நன்மாற னிடம் கூறினார் (புறம். 198:23-26). தன்னை நாடி வந்த பொருநன பேணிப் பாடுதற்கு முன்னரே சோழன் கரிகாற் பெரு வளத்தான அப்பொருந னொடு முன்பே பொருந்திய கேளிரைப போல அவனுடன கேள் கொள்ளுதலை விரும்பிஅவனுக்கு முகமன கூறினான (பொரு. 73-75). 'நமக்கு அவன கேள் அல்லன; அவனை முயங்காதீர்' எனக் காமக் கிழத்தி, தலைவனை முயங்கக் கருதிய தன் தோள் களுக்குக் கூறி அவற்றுடனே மாறுபட்டு அவ னொடு ஊடியிருந்தாள் (கலி. 68:10,11).

**4. காதலி.** பெதும்பைப் பருவத்தாளாகிய பரத்தை யொருத்தியுடன் மறைநதொழுகி வநது அவ்வகை ஒழுக்கம இல்லை யென்ற தலைவனிடம தோழி, கொண்கனே நின் கேளை – காதலியை - யாம் கண்டோ மல்லமோ என்றாள் (ஐங். 121-128: 1).

'நாடன வேண்டுவானாயின் பசுப்போல் பெண்டிர் பலரையும் பெறுவான்; அவ்வாறின்றி இத்தலைவி அவனுககுப் பழைய கேள் ஆதலால் இவளை அவன் வரைவு வேண்டினான்' எனறு தோழி செவிலிக்கு அறததொடு நினறாள் (ஐங். 271:2-4).

5. **கேண்மை.** பரணர் பேகனது காரெதிர் கானத்தைப பாடியது கேட்ட நிலையில் அவனால் துறக்கப்பட்ட அவன் மனைவி அழுது நின்றனளாக, அவர் அவளை, இளையோய, எம கேள் - கேண்மை விரும்புவோனுக்கு (பேகனுக்கு) நீ உறவுடையையோ' என வினவினார் (புறம். 144:2-8).

6. **நண்பன்.** அறுகை என்பான் தன் பகைவனான மோகூர் மன்னனுடன் எதிர்த்துப் பொருதற்கு ஆற்றாத நிலையில சேரமான கடல்பிறக்கோட்டிய செங்குட்டுவனால் உதவி செய்யப்படுதற்கு மிகவும் தொலைவி விருப்போனாயினும், 'எனக்கு அச் சேரன்தான் கேள் - நண்பன்' - என மொழிந்து தன நாட்டை விட்டு நீங்கி ஒளித்த வருத்தத்தைப் போக்கும் பொருட்டுச் செங்குட்டுவன் அம்மோகூர் மன்னனை வென்றான் (பதி. 44:10-16).

7. **தோழி.** தோழி என்னும் பொருள்படும் 'கேள்' என்பது, 'எம்கேளே, - தோழியே - எனறு தலைவி தோழியை விளித்தல முறையில் வந்துள்ளது (கலி. 106: 36, 39, 42, 45).

**கேள்வர் - கணவர்.** மலையிடததுக் குறவர் மகளிர் தாம் தத்தம் கேள்வரை - கணவரை – தப்பாத வராய் அவரே தெய்வமென்று தொழுது எழுதலால் அவர்தம் ஐயன்மாரும் தாம் தொடுத்த அமபுகள் இலக்குத் தப்பாதவராயினார் (கலி. 39 : 15 - 18). 'உலகத்துள் உறைகின்ற கேளவர் இலராயின் அக் கணவர் மேலுள்ள வேட்கையோடே இறந்துபடும் மாட்சிமைப்பட்ட மனத்தைப் பெற்றவா குற்றமில்லாத துறக்கத்தே சென்று தாம் நுகர விரும்பிய வறறை விரும்பியபடியே பெறுதல மெய்யென்று நூல்கள் கூறிய வென்னில் யானும் அங்ஙனம் என் கணவனமேல் விருப்பத்தோடே உயிர்போய் அவனைப் பெற்றுப் புகழுடையேனாவேன்' என்று பிரிவாற்றாத தலைவி பேதுற்று மொழிந்தாள் (கலி. 143 : 44 – 47). சால்புடைமை மிக்கவராகிய கற்புடை மங்கையர் தம்மைக் கேள்வர் இகழினும் தாம அவரை ஏத்தி இறைஞ்சுவார் (பரி. 20:88,89).

**கேள்வன் - கணவன்.** 'நிரைதார் மார்பனாகிய நின் கேள்வன் – கணவன் - களத்தில் பகை மறவருடன் போர்மலைந்து ஒருபுறம் நிறப, அரவுமிழ்ந்த மணியை எவரும் குறுகாதது போல, அவனை யாவரும் குறுகா ராயினர்' என்று தானை மறவனொருவனது சிறப்பினை அவன் மனைவிக்குக் கூறும் முறையில் பெருந்தலைச் சாத்தனார் பாடியுள்ளார் (புறம். 294:7-9). 'ஆயர் இங்கே ஊதுகின்ற குழல் நீலமணிபோலும் காயாம் பூவாற் செய்த மாலையினை யணியும் இயல்பினையுடைய கேள்வனை நமக்குத் தருதற்கு நன்னிமித்தமாக இசைத்தது காண்' என்று ஏறுகோடல் நிகழ்ச்சியில் தோழி தலைவிக்குக் கூறினாள் (கலி. 101: 34,35). 'தோழீ, இவள் கேள்வன் கொல்லேற்றினைத் தழுவினா னென்று ஊரார் புகழ்ந்து சொல்லுகின்ற சொல்லைக் கேட்டவாறே மோரை விற்று யாம் வருகின்ற செல்வத்தை எம் கேள்வன் தருமோ' எனத் தலைவி தோழி யிடத்து விரும்பி வினவினாள் (கலி. 106: 43-45). பிரிவு நீட்டிப்பினால் கலக்க முற்றிருந்த தலைவி, பின்னர் இரவிடை மீண்டு வந்து கூடியளித்த கேள்வனாகிய அந்நல் லெழில் மார்பனைச் சார்ந்து தெளிவடைந்தாள் (கலி. 142 : 60-66). 'அருளில்லாத என் கேள்வன் என்னை உறுத்திய இந்தக் காமமாகிய நெருப்பு தனக்குப் பகையாகிய நீருள்ளே புகுந்தாலும் சுடுகின்றது' என்று பிரிவுக் கலக்கமுற்ற தலைவி உரைத்தாள் (கலி. 144:61,62). 'ஊரீர், நீர் என்னை இகழ்ந்திருப்பினும் என் கேள்வன் சிறிதும் என்னை இகழ்ந்திரான்; நினைப்பினும் கண்ணுள்ளே தோன்றுவான்' என்று அவனது பிரிவிடைக் கலங்கிப் பேசிய தலைவி, தன் காமநோயுடைய நெஞ்சிலே அடித்துக்கொண்டு வருந்தியழுது பின்னர், 'நீங்கள் எல்லீரும் தேடிச் சென்றும் எம் கேள்வனைக் காணீரோ' என்றாள் (கலி. 145:51,52,60,61). 'ஞாயிறே, இப்பொழுது எம் கேள்வன் யாதோரிடத்தே இருந்தானாயினும் எனக்குக் கொண்டு வந்து காட்டுவாயாக' என்பது தலைவனது பிரிவிடைக் கலங்கிய தலைவியின் வேண்டுகோள் (கலி. 147:27,28). 'மாலையே, நீ எம் கேள்வரை முன்புபோல மனத்தைக் கனலப் பண்ணி எம்மிடத்தே தருதலும் செய்திலை; ஆதலால் நீ எமக்குத் துணையல்லை' எனத் தலைவனின் வரைவிடைப் பிரிவில் தலைவி மாலையொடு புலம்பினள் (கலி. 148: 16, 17). திருப்பரங் குன்றின்மேல் துடியோசைக்கு இயையுமாறு அடிபெயர்த்துத் தோளசைத்து ஒருத்தி ஆட, அவ்வாடலைத் தன் தலைவன் அருகிருப்பப் பார்த்துக் கொண்டிருந்த தலைவியொருத்தி, ஆடுவாளது 'அழகு கண்டு இஃது இவன் மனத்தை வேறுபடுத்துமென்று எண்ணிச் சிவந்த நோக்குடன் தன் துணையனை கேள்வனைத் துனித்து நோக்கினாள் (பரி. 21: 19-22).

சுனை நடுவே மூழ்கி நீர்மேலெழுந்த ஒருத்தி, கரையில் நிற்கும் கேள்வனை மூங்கிற்புணை வேண்ட, அவன் அதனைத் தராது அரக்குநீர் வட்டினை அவளிடத்தே எறிய, புணை பெறாத அவள் நீரில் தத்தளித்த துயர்கண்டு கொழு நனாகிய அவன் மகிழ்ந்து புனலிற் பாய்ந்து அவளைத் தழுவும் தன்மை கொண்டது தண்பரங் குன்று (பரி. 21:39-45). திருப்பரங்குன்றத்தில் சீர்தகு கேள்வன் உருட்டுகின்ற துடியின் தாளத்திற்கேறப ஒருத்தி ஆடினாள் (பரி. 21:60,61).

**கேள்வி - 1.** வேதம். நல்ல பல கேள்வி - வேதம் - கற்று முற்றிய வேள்வியந்தணர் (புறம். 361:3,4). கேள்வி மலிந்த வேள்வித் தூணம் (புறம். 400.19). பல்யா னைச் செல்கெழு குட்டுவன் கடவுளைப் பேணும் பொருட்டுச் சொல்விலக்கணம், பொருளிலக்கணம், நாட்டம் (சோதிடம்), கேள்வி, புலனவழி ஓடாது உள்ளடங்கிய தூய நெஞ்சம் எனச் சொல்லப்படும் ஐநதையும் ஒருங்கு போற்றி அவற்றின் துணை யுடனே வேள்வி செய்யத் தொடஙகினன் (பதி. 21: 1-6). உரைசால் வேள்வி முடித்த கேள்வியந்தணர் (பதி. 64:4,5). செல்வக் கடுஙகோ வாழியாதன் கேள்வியை ஓதி உயர்நிலை யுலகத்து மேலோரை இன்புறுத்தினான் (பதி. 70:18-19). தகடூர் எறிநத பெருஞ்சேர விரும்பொறை கேள்வி நெறிகளை வல்லார்வாய்க் கேட்டுணர்ந்து நோன்புகளைத் தவ றாமல் நோற்று உயர்நதோர் உவக்குமாறு வேள்வி வேட்டனன (பதி. 74:1,2). கேள்வியந்தணர் செய்தற் கரிய கடனாகச் செய்து முடித்த வேள்வித் தூணம் (பெரு. 315,316). கேள்வியநதணர் வேள்வியைக் கடவுவர் (கலி. 36 : 25, 26). வடுவில்லாத கொள் கையினை யுடைய உயர்நதோர் ஆய்நத கெடு தலில்லாத கேள்வியால தெரிந்துணருங்கால் திரு மால் உயிர்தோறும் உயிர்தோறும் நிற்பர் (பரி. 2: 24,25). கேள்வியுட் கிளந்த வேள்வி முதல்வன் சொல் திருமாலின் உருபாகும் (பரி. 2:61,65). விளங்கிய கேள்வித் திறத்தில் திரிவில்லாத அந்தணர் நெருங்கி உறைதற்கிடமானது, அறத்தில் திரியாததாகிய திரு மாலின் இருந்தையூர் (பரி. தி. 1:19-21). மாயோன கொப்பூழினகண் மலர்ந்த தாமரைப் பூவினுட் பிறந்தோனாகிய நான்முகனது நாவினுட் பிறந்த நான்மறையாகிய கேள்வியை வைகறைப் பொழு தில் அந்தணர் ஓத, அவ்வொலி தம் ஏம இன் துயி லைப் போக்கி எழுப்புதலால் எழுவதல்லது மதுரை யில் வாழ்வோர் கோழியின் கூக்குரலால துயிலெ ழார் (பரி. தி. 7:1,7-11).

**2.** நூற்பொருள் முதலியவற்றைக் கேட்ட அறிவு. நான் மறை முதல்வர் ஆன்ற கேள்வியையும் - நூற் பொருள் முதலியவற்றைக் கேட்ட அறிவையும் - ஐம்புலனும் அடஙகிய கொள்கைகளையும உடைய வர் (புறம். 26:12-13). கபிலர் மிக்க கேள்வியை யுடையவர் (புறம். 53:12). ஓங்கிய சிறப்பின் உயர்ந்த கேள்வி யமைந்தவர் மாங்குடிமருதனார் (புறம். 72: 13,14). கோப்பெருஞ்சோழன் குற்றமற்ற கேள்வியை யுடைய உயர்நதோர்க்குப் புகலிடமானவன (புறம். 221:6). பல்யானைச் செல்கெழு குட்டுவனுடைய புரோகிதராகியநெடும்பாரதாயனார்உயர்ந்தகேள்வி யமைந்தவர் (பதி. ப. 3:9,10). நெடுநுண் கேள்வி அந்துவன் (பதி. ப. 7:2). இளஞ்சேரலிரும்பொறை தன் அமைச்சனான மையூர் கிழானைக் குற்றமற்ற கேள்விச் செலவத்தையுடைய தன் புரோகிதனைக் காட்டிலும் அறநெறியறிபவனாகச் செய்தான் (பதி. ப. 9:11,12). மறையோர் மணஙகள் எட்டினுள ஐந்தாம் மணத்தில் (கந்தருவத்தில) குறையாத களவு நெறிப்பட்ட குறிஞ்சிப்பாட்டு, ஆற்றலமைந்த கேள்வியையுடைய அறம், பொருள், இன்பம் என் னும் முப்பொருளையும போற்றிப் புனைந்த பொருள்நலம் கொண்டது (குறி. வெ. 2). தொல் லாணை நல்லாசிரியர் பலகேள்விகளால் துறை போகக் கற்றவர் (பட். 169, 170). 'இத்தலைவியின் திருமுகம் பசப்பூர்ந்து தொலைந்தக்கால், நீ மெய்ப பொருளுணர்ந்தோரை நினைந்து சென்று அவரி டத்தே கற்ற பொயயற்ற கேளவியால முனபு மனத்தில் தங்கிய மாசற்ற நோனபுகளால் அம் முகத்தழகை மீட்டல் பொருந்துமோ' எனத் தோழி, பிரிவுணர்த்திய தலைவனை வினவினாள் (கலி. 15: 14-17).

**3.** இசை. நரம்பின் கேள்வி - இசை - முற்றுப்பெற்ற நீண்ட விசித்தலையுடைய தொடர்ச்சி யமைநதது பாலையாழ் (பொரு. 17,18,22). இனிய யாழ் தனது பயன் விளங்குகினற கேள்வியொடு கூடியது (சிறு. 228,229). வெணசிறு கடுகளவும் கேள்வி தப்பாத வாறு ஓசையை ஓர்ந்து பார்ததுக் கட்டிய, வடித்து முறுக்கிய நரம்பினையுடையது பேரியாழ் (மலை. 22, 23,37).

**4.** யாழ். கேட்பார் பலரும் அறிதற்கரிதாய் அறி வார் சிலராதலின சில்செவிக் கணணதாகிய கேள்வி யை-யாழை-இப்பாண் சாதியது உணவிற்கு முதலா கப்பெற்ற பரிசு என்னவென்று வெறுத்துப் பாணன சோர்ந்திருந்தான் (புறம். 68:3,4). பொன் கம்பி யாய் ஒழுகினா லொத்த முறுக்கடங்கிய நரம்பின் கட்டமைந்த கேள்வியைப் பாணன் தனது இடத் தோளின்பக்கததே அணைத்திருந்தான் (பெரு 15,16.)

5. செவி. ஏனாதி திருக்கிள்ளி போரைக் காணின் அப்போரை வெனறு அப்பகைவரது படையை விலககி எதிர்நிற்றலால் வாள் வாய்த்துத் தைத்த வடுவழுந்திய உடம்புடனே கேள்விக்கு - செவிக்கு - இனியன; கணணுக்கு இன்னாதவன (புறம். 167: 1-4). அரவு, கண்ணி'லேயே அமைந்த கேள்வியை யுடையது (புறம. 382:13,14).

6. கேட்டல். .வையைத்துறை முன் நிறைந்த அணி யாக நினறவர் மொழிகினற மொழிகள் ஒன்றை யொனறு ஒவ்வாது பலபலவாக ஒரு காலத்தெழுந் தன; அவறறைக் கேள்வி - கேட்டல் - கூடா; கேட் டன சிலவே எனப் புலவர் கூறுவர் (பரி. 12:36-39). அன்பர் தம்முளளே கூறுகின்ற குறைகளையும் கேட்டறிதலால திருமால் கேள்வி நுணுக்கமுடைய வர் (பரி. 13:55).

7. மந்திரம். இருபிறப்பாளர் உச்சிக் கூப்பிய கையினராய், தனனைப புகழ்ந்து ஆறெழுத்தினை அடக்கியிருககின்ற கேடடற்கரிய, மறைய உச்ச ரிக்கப் படுகின்ற கேள்வியை - மந்திரத்தை - நாப் புடைபெயரும் அளவிலே பயில உச்சரித்துப் பொழு தறிந்து நுவல, முருகன் அதறகுப் பெரிதும் உவந்து திருவேரகத்தில் உறைதலு முரியன் (முரு. 182,185-189).

8. ஆகமம். திருமால், விரிந்தகனற கேள்வி - ஆக மம் - அனைத்தானும் வலியானும் மனத்தானும் உணர்வானும் மறறும் எல்லாவற்றானும் தமக்கு வனப்பும் எலலையும் அறியப்படாத மரபினர் (பரி. 3:48-50).

**கேளல் கேளிர்** - உறவல்லாத உறவினர். 'சங்கிலியாற் பிணிக்கபபட்ட நாய்போலப் பிணித்துத் துன்பப் படுத்தி இருத்திய கேளல் கேளிருடைய - உறவல் லாத உறவினருடைய - உதவியால் வந்த தண் ணீரை இரந்துண்ணக் கடவேமல்லேம் என்னும் மனவலிமையினறி வயிற்றுததீயை ஆற்றவேண்டித் தாமே இரந்துண்ணும் அள்வினை யுடையாரை, குழவி இறந்து பிறப்பினும் தசைத்தடியாகிய மணை பிறபபினும் அவற்றையும் ஆளல்லவென்று கருதாது வாளோச்சுதலில் தவறாதவராகிய அரசர் பெறுவரோ' என்று தனனிலைமைக்கு இரங்கிச் சேரமான கணைக்காலிரும்பொறை உயிர் துறந் தான (புறம். 74). உறவினரைக் கேடு நீககித் தாங்கவும கிளைஞர் உண்ணவும் கேளல் கேளிர் கெழுதகைய்னராயக் கூடி யொழுகவும் வேணடித் தலைவன ஆள்வினைக்கு எதிர்ந்த ஊககமொடு சென்று பொருளீட்டினன (அகம். 93:1-7).

**கேளன்** - உறவினன். 'துறைவன் நமக்கு நல்குவன் போலக் கூறி நல்கானாயினும் அவன் நம்மிடத்தே பழமைகொண்ட கேளன - உறவினன் - 'எனத் தலைவனைக் குறித்துத் தலைவி தோழியிடம் கூறி னாள் (ஐங. 167:2-4).

**கேளார்** - கேளாதவர். 'மலைகளைக் கடந்து சென்ற தலைவர் இங்கு நீ உழக்கும் துயர்நிலைகளைக் கேளார் - கேளாதவர் - ஆதவர்; கேட்டனராயின் நின்துயர் கெடுமாறு பிரிவு நீடலராய் வருவர்' எனத் தோழி தலைவியை வற்புறுத்தினாள் (குறு. 253).

**கேளாளன்** - கேண்மையை ஆள்பவன். 'ஏறு கொள்ள வல்லார் என்னொப்பார் பிறரில்லை யென்று நம் பசுத்திரளில் நினறு தனது தாளாண்மையைக் கூறும் தலைவன் பின்னொரு நாளிலே யாயினும் ஏறு தழுவி நமக்குக் கேளாளன் - கேண்மையை ஆள்பவன் – ஆகாமையில்லை' என்று தோழி தன கண்களால் பெற்ற நன்னிமித்ததைத தலைவி யிடததுக் கூறி அவளை ஆற்றுவிததாள் (கலி. 101: 43–46).

**கேளிர்** – 1. உறவினர். வன்புலத்தினின்றும் வந்த கேளிர்க்கு - உறவினர்க்கு - விருந்தயரும் மென்புலத் தூர்களையுடைய நல்ல நாட்டுக்கு வேந்தன குள முற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் (புறம். 42:17,18). 'எமக்கு யாதும் ஊரே, யாவரும் கேளிர்' என்பர் கணியன் பூங்குன்றனார் (புறம். 192:1). தனனை நாடிவந்த பொருநன் பேணிப் பாடுதற்கு முன் னரே சோழன் கரிகாற் பெருவளத்தான அப் பொருநனொடு முன்பே பொருந்திய கேளிரைப் போல அவனுடன் கேள் கொளளுதலை விரும்பி அவனுக்கு முகமன் கூறினான (பொரு. 73-75). வள மான ஊர்களிடத்துள்ள குடிகளெல்லாம் பசியால் உலர்ந்து புறநாட்டிலிருக்கும் செழுமையுடைய கேளிரைத் தமக்குப் பாதுகாவலாகச் சென்று சேரும்படி பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் பகைவர் நாடு களைப் பாழாக்கினான் (மது. 167,168,176). நாளும் முயற்சியால் மெய்வருந்தா உள்ளமொடு இருந் தோர்க்குச் சிறப்பு மிக்க கேளிருடைய கேடுகள் பலவற்றையும் தாஙகுதல் இல்லையாகும் (அகம். 173: 1-3). தம் காதலியரின் மென்முலை முற்றத்தைப் பிரியாது உறைவோர் நண்பரது செல்வமின்மை யையும் கேளிரது துன்பத்தையும் பகைவரது பெரு மிதத்தையும் கண்டு ஓரூரிலேயே மடிந்திருத்தலைப் பொறுத்துக் கொள்வர் (அகம். 279:1-5). வேற்று நாட்டிற் சென்று தங்கிப் பொருளீட்டுதலைக்

குறிக்கொண்டு, பெறுதற்கரிய கேளிர் பின்வந்து விடைதரப் போய்ப் பொருளினை ஈட்டிக்கொணட விருப்பம் மிக்க நெஞ்சத்தொடு தலைவன் மீண்ட னன் (அகம். 351:1-4). 'எனதாயும் நினதாயும யார் யாரோ; எநதையும் நுந்தையும் எம்முறையிலே கேளிர்; இப்போது பிரிவினறி யிருக்கும் யானும் நீயும் இதற்குமுன் ஒருவரை யொருவர் எவ்வாறு அறிந்தோம; இம்மூன்றும இல்லையாகவும் செம் புலப் பெயல்நீர் போல அனபுடைய நெஞ்சங்கள் தாமே கலந்தன' எனத் தலைவன தலைவியிடம் மொழிந்தான் (குறு. 40). ஆதியருமனது மூதூரில் பனங்கள் உணணச் சென்ற கேளிர் அதனை உண்பதோடு பனையில உள்ள நுங்கைக கொண் டும் மீள்வர் (குறு. 293:1-4). 'யான் நினனைச் செலவு விலக்கிக் கூறியவற்றை யெலலாம் நீ ஏற்றுக்கொள்ளாயாயினும், இததலைவியைப் போல் கண்டார்க்கு அருள வரக் காரணமானவற்றை நினக்கு மேலும் மேலும காட்டி, நீ செல்லும் கானமே மேலாய் நின்று உணமை கூறிக் கழறும் கேளிரைப் போல நின போக்கினைத் தடுக்கும்' என்று தோழி தலைவன் செலவழுங்குமாறு கூறி னாள் (கலி. 3:19-23). அறிவுடையோர் தம்முடைய செல்வம் முடிவடைந்தமையால் வறுமையுற்று அவ் வருத்தத்தைக களையத்தக்க கேளிரிடத்தே சென்று தம் குறையை அவர்க்கு வாய்விட்டுச் சொல்லத் தொடங்கிப் பின் அதனை முடியச் சொல்ல இய லாது தயங்குவர் (கலி. 61:2-4). தலைவனது பிரிவை ஆற்றாது பேதுற்றுக் கலங்கிய தலைவி, 'வாழிய கேளிர்' எனச் சுற்றத்தாரை விளித்துப் பேசினாள் (கலி. 147:22).

2. நண்பர். 'என்னொடு பொருவேமென்று வரும் வேந்தரைப் போரின்கண்ணே பொருது அவர் புறக் கொடையைக் காணேனாயின, மையலென்னும் ஊர்க்குத் தலைவனாய மாவனும் எயிலென்னும் ஊரையுடைய ஆந்தையும் புகழமைந்த அந்துவஞ் சாத்தனும் ஆதனழிசியும் வெஞ்சினத்தையுடைய இயக்கனும் எனற இவர் உட்படப் பிறருமாகிய என் கண்போலும் நண்பினையுடைய கேளிரொடு - நண் பரொடு - கூடிய இன்களி மகிழ்நகையை யான் இழப் பேனாக' என ஒலலையூர் தந்த பூதப் பாண்டியன் வஞ்சினம் மொழிந்தான் (புறம். 71: 2-5, 11-16). 'அம்ம வாழி கேளிர்' எனத் தோழனை விளித்துத் தலைவன் பேசினான் (அகம். 130: 1). தம்மை விரும்பி யிருப்போரைப் புரந்து தாம் விரும்பிய இனிமை பொருநதிய கேளிரொடு இன்பம் மிக இயைந்து மகிழ்ந்திருத்தலை மாட்டாராவர் வறுமையுற்றோர் என்று தலைவன் பொருளீட்டப் பிரிந்தான் (அகம். 151: 1-5). 'இடித்துரைக்கும் கேளிரே' என்று தலை வன் பாங்கனை விளித்தான் (குறு. 58: 1). 'கேளிர் வாழியோ கேளிர்' எனபது தன் காதலைக் கழறிய பாங்கனைக் குறித்த தலைவனது விளியாகும் (குறு. 280: 1). திருமாலுககு மாறறோரும் இலர்; கேளிரும் இலர் (பரி. 4 : 53, 54).

3. காதலர். 'என்னைக் கூடிய கேளிர் - காதலர் . மீண்டு வந்து கூடும் காலம் இரவோ பகலோ என் றறியேன்' எனப் பிரிவாற்றாது கலங்கிய தலைவி பேதுற்றாள் (கலி. 144 : 51). தலைவன் வையை மணலைத் தொட்டுச் சூளுரைத்தபோது தோழி, கேளிரை யொத்த மணலோடு உனக்குள்ள நட்பும் இததனமைத்தோ என இகழந்தாள (பரி. 8 : 61-63). கார்காலத்து வையைப் புனலில் மகளிர் தம் கேளி ரொடு விளையாடித்திளைக்கும் தோறறததை உரைக் குங்கால் அது நாள்தோறும போாக்களம் போலும் தனமையுடையது எனபர் (பரி. 11: 58-61). பிரிநத கேளிர் வநது புணர்நது பின நீஙகாமைப பொருட்டு மகளிர் யாழை மீட்டிப பாடுகினற பாட்டை விரும்புபவர் செவ்வேள் (பரி. 14: 23, 24).

**கேளிர்கள் - உறவினர்கள்.** தன்னைச் சேர்நது வாழும கேளிர்கள் - உறவினாகள் - நெஞசழுஙகத தன் னோடே பொருநதுதலுற்ற செலவததிலே நினறு அசசெல்வத்தை மேனமேலும் வளர்க்கும் முயறசி யிலலாதவனுடைய குடி நாள்தோறும் தேயும் (கலி. 149: 8, 9).

# கை

**கை - 1. உறுப்புவகை.** கருங்கை ஒள்வாட் பெரும் பெயர் வழுதி எனப பாண்டிய மனனனை விளித்து 'நிலம பெயரினும் நின சொல் பெயரல்' என இரும்பிடர்த் தலையார் அறிவுரை கூறுவர் (புறம். 3:13,14). பல்யாக சாலை முதுகுடுமிப் பெரு வழுதியை நான்மறை முனிவர் ஏநதுகை எதிரே நின சென்னி இறைஞசுக எனக் காரிகிழார் அறிவுறுததுவர் (புறம.6.19,20). அம்பொடு பொருது பிறர்க்கு இடக் கவிந்த வண்மை பொருந்திய கையுடனே அழகிய விலலையுமுடையவன கரிகாற் பெருவளத்தான (புறம. 7:3,4). வாலிழை மடமங கையர் அரிமயிர்த்திரள் முன்கையினர் (புறம். 11: 1,2). செல்வக் கடுஙகோ வாழியாதனின தாள் தோய் தடக்கைகள் யானையைத் தோட்டியால்

செலுத்தியதாலும் குதிரையின் குசையைத் தாங்கிப் பிடித்ததாலும் வில்லினின்று அம்பைச் செலுத்திய தாலும் பரிசிலர்க்கு அருங்கலம் நல்கியதாலும் வலியனவாகும் (புறம். 14:1-11). செல்வக் கடுங்கோ வாழியாதனைப் பாடுவாரின் கைகள் ஊன் சோறு உணடு வருந்து தொழில் அல்லது பிறிது தொழில் அறியாமையின் மெல்லியவாயின (புறம். 14:13-19). கருங்கைக் கொல்லன் (புறம். 21: 7; 36: 6; 170 :15; 180 : 12; பெரு. 437). சேரமான் குட்டுவன் கோதை வலிதுஞ்சு தடக்கையினன் (புறம். 54:14). தாள் தோய் தடக்கைத் தகைமாண் வழுதி (புறம். 59:2). வன்கை வினைஞர் (புறம். 61:8). இயல்தேர்ச் சென்னிவேல் விளங்கு தடக்கையினன் (புறம். 61: 13). பேய்மகளிர் போர்க்களத்தில் மாய்ந்த வீரரது புண்ணைத் தோண்டிக் குருதி தோய்ந்த தம் செங்கையால் கூந்தலைக் கோதினர் (புறம். 62:2-4). ஆம்பல் வள்ளித் தொடிக்கை மகளிர் (புறம். 63:12). வறுந்தலை யானை கள்பருகுநர் நடுங்கு கை உகுத்ததால் உண்டாய நறுஞ்சேற்றில் படிந்து ஆடும் (புறம். 68:15,16). பாணனது கையில் இலக் கண முறைமை நிரம்பிய யாழ் இருந்தது (புறம். 69:1). தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ் செழியன் இளமையிலேயே குறுந்தொடி கழித்த கையில் வில்லையேந்தி நெடுந்தேர்க் கொடுஞ்சி பொலிய நின்று பொருதான் (புறம். 77:4,5). இடக் கவிந்த கையினை உடைய மள்ளன் கைப்பட்டவர் யாவரேயாயினும் இரங்கத் தக்கவராவார் (புறம். 81:3-5). கட்டில் பின்னும் இழிசினனது கையிலுள்ள ஊசி விரைந்தது போல ஊர் கொள்ள வந்த பொருநனோடு சோழன் பெருநற்கிள்ளியின் போர் விரைந்து நிகழ்ந்தது (புறம். 82:3-6). அதியமான் கணைய மரத்தை ஒக்கும் தாள்தோயும் தடக்கை யினையும் வழுவற்ற வன்கையினையும் உடைய மழவர் பெருமகன் (புறம். 90: 10,11). கழல் தொடித் தடக்கையினன் அதியர் கோமானஅஞ்சி (புறம். 91:2 - 4). பொகுட்டெழினி திரண்டு நீடு தடக்கை யுடையவன் (புறம். 96:2). வேல் அதிய மானின் கையகத்தது (புறம். 100:1). அதியமானிட மிருந்து பரிசில் பெறுங்காலம் நீட்டினும் நீட்டா தாயினும் யானை தனது கோட்டிடை வைத்த கவளம் போல அப்பரிசில் கையகத்ததாகும் (புறம். 101 : 5-8). இசைவிளங்கு கவிகை நெடியோய் எனப் பொகுட்டெழினி விளிக்கப் பெறுதல் (புறம். 102:6). கோல திரள் முன்கைக் குறுந்தொடி மகளிர் (புறம். 113: 8). வளைகை விறலி (புறம். 135: 4). வளைகை விறலியர் (புறம். 140:3). வல்வில் வேட்டு வனாகிய நள்ளி தன்னைத் தொழுது எழுந்திருந்த வன்பரணரைக் கை கவித்து இருத்தித் தானே கடைந்த தீயில் மான் இறைச்சியைச் சுட்டுத் தந்து பசிபோக்கி அவர் விடைபெறும் போது தன் மார் பில் பூண்ட முத்தாரத்தையும் முன்கையில் அணிந் திருந்த கடகத்தையும் ஈந்தனன் (புறம். 150: 7-21). விறலியர் பிறப்புணர்த்தும் கரிய கோலைக் கையின் கண்ணே தாருங்கள் என்று சொல்லி ஓரியை அணுகி இருபத்தொரு பாடல் துறையும் பாடிமுடித் தனர் (புறம். 152: 18-20). இழையணி யானையை இரப்போர்க்கு ஈயும் பசும பொன்னாற் செய்த அணியினையும் வளைந்த கடகம் அமைந்த முன் கையினையும் உடையவன் ஆதன் ஓரி (புறம். 153: 2-4). இழி பிறப்பாளன் தன் வலிய கை சிவப்பத் துடிகொட்டுவான் (புறம். 170:5,6). பசிப்பிணி மருத்துவனாகிய பண்ணனது இல்லத்தில் பெருஞ் சுற்றத்தோடு கூடிய பிளளைகள சோறுடைய கைய ராய் வேறுவேறு செல்வர் (புறம். 173:8-11). சிறு குழநதைகள் குறுகுறு நடந்து சிறுகை நீட்டி இட்டுந் தொட்டும் கவ்வியும் துழந்தும் நெய்யுடை அடிசிலை மெய்பட விதிர்த்தும் தம் பெற்றோரை இன்பத் தால் மயக்குவர் (புறம். 188:3-6). முன்னை நாள் பரிசில் கையில் கிடைத்தது போலக் காட்டிப் பிற்றை நாள் பொய்யைப் பெற்று நின்ற நின் புற நிலைமைக்கு யான் வருந்திய வருத்தத்திற்கு நீ நாணவில்லை என்று பரிசில் நீட்டித்த சேரமான் குடக்கோச் சேரலிரும்பொறையிடம் பெருங்குன் றூர்கிழார் கூறினார் (புறம். 211:10-13). யானை வேட்டைக்குச் செல்பவன் யானையை எளிதாக வும் பெறுவான்; காடை வேட்டைக்குச் செல் பவன் அது பெறாது வறுங்கையினனாகவும் வருவன (புறம். 214:4, 5). கிளளி வளவனைக் கொண்ட கூற்று பாடுவோரைப் போலக் கை தொழுது ஏத்தி இரந்துதான் அவன் உயிரைக் கொணடிருக்க வேணடும் என்பது மாறோக்கத்து நப்பசலையாரின் கையறுநிலைக் கூற்றாகும் (புறம். 226:3-6). நரந்தம்பூ மணம் கமழும தன் கையால் அதியமான் புலால் நாறும் தம் தலையைத் தடவியதாக ஔவையார் கையறுநிலைப் பாடலில் குறித்துள்ளார் (புறம. 235:8,9). அதிய மானின மாரபில ஊடுருவிச் சென்ற வேல் பாணர் மண்டையைத் துளைத்து இரப்பவர் கையுள்ளும் தைத்து உருவிப் புரக்கப்படும் சுற்றத்தாரது கண் ணின் பாவை ஒளிமழுஙக இறுதியில் புலவர் நாவில் சென்று வீழ்ந்தது என ஔவையார் புனைந் துரைப்பர் (புறம்.235:10-15). வச்சிரத் தடக்கை நெடி யோன் (புறம். 241:3). தொடித்தலை விழுத்தண்டி னார் தண்கயத்தில் விளையாடும் மகளிரோடு கை

பிணைந்து தழுவுவழித் தழுவி, அசையுமிடத்து அசைந்து, இளமையில் விளையாடியதை முதுமையில் நினைவு கூர்ந்து கையற்று இரங்குவர் (புறம். 243 :1-5). விறலியர் முன் கையில் தொடி பொலியும் (புறம். 244:2). கைம்மை மகளிர் நறுநெய் தீண்டாமல் இலையிடையே கிடந்த கையாற் பிழிந்து கொள்ளப்பட்ட நீர்ச்சோற்றுத் திரளை எள்ளரைத்த சாந்துடனே புளிகூட்டிச் சமைத்த வேளையிலை வெந்த வேவையை உணவாகக் கொள்வர் (புறம். 246:5-8). 'கணவனை இழந்த பெண் வளையில்லாத வறிய கையைத் தலைமேலே சுமந்து கொண்டு, நின் சுற்றத்திடம் செல்வேனோ நின் உரையைக் கூறுக எனப் பறந்தலையில் மாய்ந்து கிடந்த கணவனை நோக்கி வினவினாள் (புறம். 253:5,6). 'இடைச்சுரத்தே மாய்ந்து கிடக்கும் இளையோய், வளையில்லாத வறிய கையைத் தலைமேலே வைத்து இளையோன் இத்தன்மையன் ஆயினன் என்று நினது இறந்து பாட்டைக் கூறினால் நின் அனனை என்னாகுவளோ' என்று கணவனை இழந்த மனைவி வருந்தி உரைத்தாள் (புறம். 254:3-11). இறந்த கணவனை இவ்விடத்தினின்றும் எடுத்துக்கொண்டு போக நினைத்தால் அவனது அகன்மார்பை என்னால் எடுக்க இயலவில்லை; ஆதலின், 'என் நிரைவளை முன்கை பற்றி மலை நிழற்கண்ணே செல்வதற்கு மெல்ல நடப்பாயாக' என மனைவி கலங்கிக் கூறினாள் (புறம். 255). பகைவரது ஆனிரை செல்கின்ற இடத்தைப் பார்த்துத் தன் கையால் குறித்து மெல்ல எண்ணிக் கரந்தையார் செய்யும் பூசலை மாற்றி மறவன் வில்லாற்றலால் கொண்டு வந்தான் (புறம். 257: 8-10). வீரனொருவன் கந்தாரம் என்னும் மதுவை உண்டு பச்சூனைத் தின்று நிணம் மிக்க எச்சில்பட்ட ஈரக்கையை வில்லின் புறத்தே திமிர்ந்து வேற்று நாட்டிற்குச் சென்றான (புறம். 285:1-6). பாணன் வெளியே புறப்பட்ட அளவில் ஒரு மனைவி விரித்த கூந்தலொடு வருதல் நோக்கித் தீ நிமித்தம் என்றெண்ணிக் கள்ளிமர நிழலிலுள்ள தெய்வத்தை ஏத்திப் பசியுடன் இரங்கிக் கையால் தொழுது தலைவனைக் காணமாட்டேனோ என எதிர்வருவாரை வினவினான் (புறம். 260:1-8). புரவலன் உனக்கு விட்ட விளைநிலங்களைக் கைப்பற்றி உண்பாயாயினும் அன்றி உயிர்வாழ்தற் பொருட்டு இரத்தலை மேற்கொண்டு வருத்தங் கொள்வாய் ஆயினும் இரண்டும் நின் கையிடத்துள்ளன எனப் பாணனிடம் எதிர்வருவார் கூறினர் (புறம். 260:8-11). வீரனின் கருங்கைவாள் பகைவர்களை வெட்டி வீழ்த்தியது (புறம். 269: 12). பகைவர் வேலுடன் பொர வந்த போது மறவனொருவன அவர்களைக் கையினால் வளைத்துத் தழுவிக் கொணடு வலிமையால் ஊக்கிப் போர் மலைந்தான் (புறம். 274:4-7). வீரத்தாய் தன் ஒரே மகனைச் செருப்பறை கேட்டு விருப்பத்துடன் வேலைக் கையில் கொடுத்துச் செருமுகம் நோக்கிச் செல்கவென விடுத்தாள் (புறம். 279:7-11). போரிற்பட்ட வீரனின் புண்ணை இரவந் தழையோடு வேம்பையும் செருகி யாழொடு பல்லியம் கறங்கக் கையை மெல்லப் பெயர்த்து மையிட்டு ஐயவ் சிதறி ஆம்பலங்குழல் ஊதி மணியடித்துக் காஞ்சிப்பண் பாடி அகில் முதலிய நறும்புகை புகைத்துக் காத்தல் மரபு (புறம். 281). வேவ் துடியன கையது (புறம். 285:2). கேடகம் பாணன் கையது (புறம். 285:4). புண்பட்ட மறவரைக் காகக வீட்டிலுள்ளார் நெய்யுடைக் கையராய் ஐயவி புகைத்தனர் (புறம. 296:2). அழகிதாக அமைநத வளைந்த கோட்டினை உடைய சீறியாழைக கையால் இசைக்கும பாணர்க்குக கரமபைகள நிறைநத சீறூர்கள வழங்கப் பெறறன (புறம். 302:5-8). ஒணணுதல அரிவை நடுகல்லைக் கைதொழுது பரவுதல் மரபு (புறம். 306:3,4). பாலை வழியில சென்ற தலைவனிடம கைப்பொருள் யாதொனறும் இல்லை (புறம். 313:1,2). பாரி எப்பொழுதும் ஈதல இயல்புடைய இலங்கு தொடித் தடக்கையன் (புறம. 337:5,6). தொடி பிறழ முனகை இளையோள (புறம. 350:10). வண்கை எயினன் (புறம். 351:6). ஆமபல் வள்ளித தொடிக்கை மகளிர் (புறம். 352:5). பரிசிலை விரும்புவோர் கையில் நிரப்புதலைப் பாதுகாபபாயாக எனத் தந்துமாறனிடம் சங்க வருணர் எனனும நாகரியர் கூறினார் (புறம். 360:13,14). கையிற பெயத தான நீர் கடலிற் சென்று பரவியது (புறம. 362:12) புறங்காட்டில் உப்பில்லாத அவிப்புழுக்கலைக் கையிற் கொணடு பின்புறம் நோக்காது இழிபிறப்பினோனால் ஈயப்பெற்று நிலம் கலனாக அப்புல் உணவை உண்ணும் இனனா வைகல வாராமுன் நல்வினை செய்க என ஐயாதிச் சிறுவெண்டேரையார் அறமுரைப்பர் (புறம். 363:10-17). இரந்த பார்ப்பார்க்கு ஈர்ங்கை நிறையப் பூவையும பொனனையும் தாரை வார்த்துக் கொடுக்க என வேந்தர்க்கு ஔவையார் அறமுரைத்தார் (புறம். 367:4,5). தொடியுடைத் தடக்கை (புறம். 370:23). கரவு இல்லாத கொடையாற் கவிந்த கையோடு வாழ்க எனப் பெயர் பெற்றோராகிய பிறர்க்கு உவமையாக இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளி விளங்குவானே அலலது இவனுக்கு உவமமாக விளங்கப் பிறரில்லை எனபது

உலோச்சனார் கூற்று (புறம். 377:8-11). செருப்பாழி யெறிந்த இளஞ்சேட்சென்னி திருந்து வேல் தடக் கையினன் (புறம். 378:3). நட்பு எதிர்ந்தோர்க்கு நாஞ்சில் வள்ளுவன் அங்கை போன்று நெருங்கிய வன் (புறம. 380.11). கிணைஞன கையிலுள்ள ஒரு கண் மாக்கிணை யானையின் அடிபோல் தோன் றும் (புறம். 392:4,5). கிணைஞனின் ஈர்ங்கை மறந்த இரும்பேரொக்கல் கிள்ளிவளவனின் நல்லிசை யுள்ளிச் சென்றது (புறம். 393:9,10). வலிதுஞ்சு தடக்கை வாயவாட் குட்டுவன் (புறம். 394:3). நெடுங்கை வேண்மானுக்குரியது பிடவூர் (புறம். 395: 20). இமையவரம்பன் நெடுஞ்சேரலாதன் வலி பொருந்திய தடக்கையினன (பதி. 14:12). உலகத்து உயிர்களுககுக் குறையாமல் கையினால் கொடுத்து நீங்காத கையிடத்துள்ள வண்மையினாலே மிகுதி யும் நலகி நல்லிசை பெற்றவன் நெடுஞ்சேரலாதன் (பதி. 15:35-39). இமையவரம்பன் நெடுஞ்சேர லாதன் போர் வினை மேற்கொண்டமையின முன்பு மாட்சிமை பெற்றிருந்த பகைவர் நாடுகள் இப் பொழுது காணுநர் கைபுடைத்து இரங்குமாறு பின்பு திருத்த முடியாதபடி உருமாயந்தன (பதி. 19: 25-27) இமையவரம்பன் நெடுஞ்சேரலாதன் யவனரை நெய் தலைப்பெய்து கையைப் பினனால் கட்டிக் கொணர்ந்தான் (பதி. ப.2:8,9). மேகம் மக்கள் கையுற வணங்க உயிர்கள் உயரும் பொருட்டு வலமாக வானததில் எழுந்து முழங்கி மழை பொழியும் (பதி. 24:26-28). பல்யானைச் செல்கெழு குட்டுவனின் மறவர் சீறிய நாட்டினர் கண்பனி நிறைந்து கைபுடைத்துத துன்புறுமாறு அவர்தம் நாடு பாழ்படுத்தப்பட்டது (பதி. 26: 8-14). வளைக்கை மகளிர் வள்ளை கொய்வர் (பதி. 29:2). வெண்கை மகளிர் குருகோப்புவர் (பதி. 29:6). முர சுறைக் கடவுளை வழிபடுவோன் அதற்குப் பலி யாக இட்ட அரிய பிண்டத்தைக் கொள்ளவியலாது பேய்மகள் கைபுடைத்து நடுங்கினாள் (பதி. 30:34-36).உலகத்து மககள் ஒரு தன்மைப்படக் கைகளைத் தலைமேல ஏநதித் தம் குறையை எடுத்துக் கூறி வேண்டிக் கொள்ளும் ஆரவாரம் நானகு திசைகளிலும் ஒலிக்கத் துழாய் மாலை யணிந்த செல்வனின (திருமாலின) சேவடி பரவினர் (பதி. 31: 2-9). களஙகாய்க கண்ணி நார்முடிச் சேரல் வெற் றியால் ஆடிய வீரவளையை அணிந்த தோளை யுடைய மேலெடுத்த கையை உடையவன (பதி. 40: 12,16). கடல் பிறக்கோட்டிய செங்குட்டுவன் வண்கை வேந்தே என விளிக்கப் பெற்றான் (பதி. 43:36). பாணமகளிர் ஒளி மிகுகின்ற விளங்கிய தொடியணிந்த முன்கையினை உடையவர் (பதி. 46:2,4). மனங்கொள்ளாப் பாடலுக்கும் எளிதின் ஈயும் கல்லாத வாயமையுடையவன இவனென்று கடல்பிறககோட்டிய செங்குட்டுவனை இளையர் தத்தம் ஒத்த கைகளை நீட்டிக் காட்டினர் (பதி. 48:6-9). பகைவரது உடலிற் புகுநத வேல் முதலிய கருவிகளைப் பறிக்கும்போது ஒழுகும் குருதியை அளைதலால மறவர் சிவந்த கையை யுடையவர் (பதி. 49:10). அம்பு கிழித்த கரிய கண்ணை யுடைய தண்ணுமை வாசித்தலில் வல்ல இளையர் தம் கையால வருந்துதல் கெடக் கூற்றம் வலைவிரித்தாற் போலக் களத்தில் எதிர்ந்த மாற்றாரைக் கொல் லக் கருதி நோக்கின நோக்கினை யுடையவன ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் (பதி. 51: 33-36). ஆடுகோட்பாட்டுச் சேரலாதனின நல்லமர்க் கடநத, இடியை ஒத்துப் பகைவரை அழிககின்ற தடக்கைகள் இரபபவர்க்குக் கவிதல் அல்லாமல் பிறரிடம் செனறு இரத்தற்கு விரிதலை அறியா (பதி. 52:10-12). துணங்கைக் கூத்துள் மகளிர்க்குத் தலைக்கை கொடுததனால் சினநத சேரனுடைய தேவியின கையதாகிய எறிய ஓக்கிய சிறுசெங் குவ ளையை அவன் ஈயென்று கேட்பவும் அவள் அதற்கு மனம் பொருந்தாளாய், 'நீ எமக்கு எனன முறைமை யுடையையோ' எனறு வெகுணடு கூறி னாள் (பதி. 52:14-24). ஆடுகோட்பாட்டுச் சேரலா தனின் களிறுகள் பகைவர் மதிலிலுள்ள கதவைக் காணின் மதத்தால் பாகர் கையிலுளள குத்துக் கோலைக் கடநது தம் நுதலினிடததே ஏநதிய துதிககையைச் சுருட்டித தோட்டியையும கடநது அடங்காது அக்கதவைத தம் கொம்பாற் குததும (பதி. 53:16-21). பணிநத கட்டினையுடைய நரம்பி னையுடைய விரலால் இசைததுப் பழகிய பேரி யாழ் பாணர் கையிடத்தது (பதி. 57: 7,8). மறவர் மதில்களை எறிகினற வலவில்லினகண்ணே அமபு களைத் தொடுததற்குரிய கூறுபாடுகளெல்லாம முற்றக்கற்று விளஙகிய பெரிய கையினை உடை யவர் (பதி. 58:10,11). வனகை வினைஞர் புன் புலம வித்தினர் (பதி. 58:15). நிலவைப் போன்ற வெள்ளிய வேலைப பாடும் விறலி முழவிடத்துச் செலுததிய தாளததிற்கு இசையவிடும் எழிற் கையை யுடைய விழாவைப போனற ஆரவாரத்தை யுடையது செலவக் கடுங்கோ வாழியாதனின் ஓலக்கம் (பதி. 61:16-18). செல்வக் கடுஙகோ வாழி யாதனின் பகைவர் அணங்குடைத் தடக்கையினர் (பதி. 62:11,12). வனகை வினைநராகிய உழவர் கள்ளுண்டனர் (பதி. 62:16). பெருஞ்சேரலிரும் பொறை கனறுடை ஆயத்தை ஏற்றுடன புலவு வில் இளையர்க்குத் தர அவர் அவ்வாயத்தைத் தம்

அங்கையினின்றும் பிறர்க்கு நல்கினர் (பதி. 71:13-15). மறவர் தொடி சுடர்வரும் வலி முன்கையினர் (பதி. 80:6). இராப்பொழுதில் மறவர் குளிருக்காகத் தம் கையினால் தோளைக் கட்டிக் கொண்டனர் (பதி. 88:9-11). இளஞ்சேரலிரும்பொறை போர்க் களத்தில் பகைவரைக் கொன்று அமர் கடந்த வெந் திறல் தடக்கை யுடையவன் (பதி. 86:1-3). பகைவரின் அரண்களைக் கைப்பற்றி அங்குள்ள பெரும் பொருள்களைக் கொணர்ந்து பரிசிலர் பலர் தம் கையில் வழங்கிய வெற்றிச் செல்வத்தையுடைய வலியோரின வழித்தோன்றல் என இளஞ்சேரல இருமபொறை விளிககப் பெற்றான் (பதி. 90:22-24). விலலை மார்புற வளைத்து நாண் பொர விளங் கிய வலிகெழு தடக்கையினை யுடைய வயவர் பெரு மகன் இளஞ்சேரலிருமபொறை (பதி. 90.32,33,39). செவ்வேள் செறுநரை அழித்த இடியொடு மாறு பட்ட பெருமை மிகக கைபினையுடையவர் (முரு. 5). சூரரமகளிர் கையாற புனைநது இயற்றாக் கவின் பெறு வனப்பினர் (முரு. 17,41). பேய்மகள் முடை நாற்றத்தை யுடைய கரியதலையை ஒள்ளிய தொடியை யுடைய தடக்கையிலே ஏந்தி வெற்றிக் களத்தைப் பாடித் தோளசைத்து நிணம் தின்ற வாயளாய்த் துணங்கை ஆடினாள் (முரு. 53-56). செவ்வேளின் ஒருகை விண்ணிலியங்கும் முறைமை யினையுடைய ஐயர்ககு (தெய்வ இருடிகளுக்கு) காவலாக அமைந்தது; ஒருகை இடுப்பிலே ஊனறி யது; ஒரு கை தோட்டியைச் செலுத்தியது; ஒரு கை ஆடையையுடைய துடையின் மேல் கிடந்தது; இரண்டு கைகள் பரிசையுடனே வேலையும் வல மாகச் சுழற்றின; ஒரு கை மாாபொடு விளஙகியது; ஒரு கை மார்பின் மாலையொடு பொலிந்தது; ஒரு கை தொடியொடு மேலே சுழன்றது; ஒரு கை மணியை மாறிமாறி ஒலித்தது; ஒரு கை மேகத் தாலே மழையைப் பெய்விததது; ஒரு கை தெய்வ மகளிர்க்கு மணமாலையைச சூட்டியது; இங்ஙனம் அவர்தம் பன்னிரு கைகளும் தொழில செய்தன (முரு. 107-118). இருபிறப்பாளர் தலைமேலே கூப் பிய கையினராயத துதித்து, ஆறெழுத்து அடங் கிய அருமறை மந்திரத்தை உச்சரிதது நறுமலர் ஏநதி முருகனை வழிபட்டனர் (முரு. 182, 185-188). வேலன் மகளிர் குரவையாடி அசையும் கூத் தினுள் தன்னுடைய முழவை யொத்த பெருமை யுடைய கையினால் அவரைத் தழுவி எடுதது முதற்கை கொடுப்பான் (முரு. 215, 216). செவ் வேளை முற்படக் காணின் முகம் விரும்பித் துதித் துக் கைதொழுது பரவிக் காலுற வணங்குதல் வேண்டும் (முரு. 251,252). வேலகெழு தடக்கைச் சால்பெருஞ் செல்வ' எனச் செவ்வேள் விளிக்கப் பெற்றார் (முரு. 265). குன்றம் எறிந்ததும் குன்றப் போர் செய்ததும் அமரர் இடர் தீர்ததும் இன் றென்னைக் கைவிடாமல் நின்றதும் நககீரரைக் கற்பொதும்பில் காத்ததும் செவ்வேளின் கையி லுள்ள வேல் ஆகும எனறு அடியார் முருகனைப் போற்றுவர் (முரு.வெ. 2:2-4). வீரவேல், தாரைவேல், விண்ணோர் சிறைமீட்ட தீரவேல, கடலில் குளித்த வேல்,கொற்றவேல, சூர்மார்பும் குனறும் துளைதத வேலாகிய செவ்வேளின் திருக்கையிலுள்ள வேலே அடியார்க்குத் துணையாகும் (முரு. வெ. 3). 'பன்னிரு கைக் கோலப்பா' என்று செவ்வேள் போற்றப் பெறுதல் (முரு. வெ. 5:2,3). ஒருகை முகன் (விநாயகன்) தம்பியே, நின்னுடைய தணடைக் காலையே எப் பொழுதும நம்பிக் கைதொழுவோம் என அடி யார் முருகனை வணஙகினர் (முரு. வெ. 7:2-4). அடி யார் பரங்குன்றிலுள்ள பன்னிருகைக் கோமான தனபாதத்தைக் கரம கூப்பித் தொழுது கண் குளிரக் கண்டு முருகாற்றுப்படையைப பூசையாகக் கொணடு ஓதுவா (முரு. வெ. 9). பாடினி அரிமயிர் முனகையினள (பொரு. 32,47). பொருநர் படம் விரித்த பாம்பினது பொறியை யொபபக கையின் வடுப்பட்டுக் கிடந்த கணணகனற தடாரிப் பறையை முழக்கிப பாடுவா (பொரு. 69-71). தன கடுமையால் சிறிதமையுமெனறு கைகவிததறகுக் காரணமான பூக்கமழ் தேறலை நாடோறும் மேன் மேலும் கலத்தில் வார்ததுத் தரத்தரப பொருநர் உணடு மகிழந்தனர் (பொரு. 156-158). நுணாக் கட்டையைக் கூரிய உளிகளாற செதுககிக் கையாற் புனைந்து கடைநத சாதிலிஙகம் தோய்நத மணி மாலையணிந்த மாாபினை உடையது மந்தி (சிறு. 52-56). நறறோச செம்பியன பகைவா தூஙகெயிலை அழிதத தொடி விளஙகும் தடக்கையினன (சிறு. 81, 82). கழல் தொடித தடககைக் காரி (சிறு. 95). நள்ளி பகைப்புலததே கொலைத தொழிலான விளங்கும் பெருமையை யுடைய கையினை உடையவன (சிறு. 105,107). நல்லியககோடன இரவலர்க்குப் பிடித் திரளைக் கொடுக்கும பெயல மழை போனற பயனை யுடைய தடக்கையினன் (சிறு. 124,126). செழுங்குலைக் காந்தள் கைவிரல போலப் பூக்கும் (சிறு. 167). உழவரது தங்கை பிடியினது துதிக் கையைப் போன்ற பினனின மயிர் வீழ்நது கிடக்கும் சிறிய முதுகினையும் தொடியணிநத கையினையும் உடையவள் (சிறு. 190-192). முதியோர்க்குப் பல காலும் குவிதத கைகளையுடையை என நல்லியக் கோடனைப் பாணர் புகழ்நதனர் (சிறு. 231). நெகிழ வேண்டிய வழி நெகிழநது இறுக வேணடிய வழி

இறுகும் யாழின் வார்க்கட்டு மகளிரின் முன்கையி லுள்ள குறுந்தொடியை யொக்கும் (பெரு. 12,13). தொண்டைமான் இளந்திரையன் காவல்புரியும் நாட்டில் சுரநெறியிற் செல்வோரை அலறத் தாககி அவர்தம் கையிலுள்ள பொருள்களைக் கவரும் களவு வாழ்க்கையுடைய கொடியோர் இலர் (பெரு. 39-41). வம்பலர் கூற்றுவனை யொத்த வேலினைத் தடக்கையிலே ஏந்திப் பிறக்கிடாத தன்மையர் (பெரு. 75,76). இடையன் பசுக்களுக்கு வருத்தஞ் செய்யும் தடியை ஊன்றிய மரங்களை எறியும் கோடரியால் தழும்பிருந்த வலிய கையினை உடையவன் (பெரு. 170, 175). தீக்கடை கோலாலே அழகிய நுண்ணிதாய் விளங்கும் புகை கமழக் கையாலே கடைந்து கொண்ட செந்தீக் கடைக் கொள்ளியால் கருந்துளைக் குழல் துளைக்கப் பட்டது (பெரு. 177-179). கருங்கை வினைஞர் காதலஞ் சிறாஅர் (பெரு. 223). வளைக்கை மகடூஉ (பெரு. 304). மகளிர் முத்தையொத்த வார்ந்த மண லிலே மெத்தெனக் கையிற் புனைந்த குறுந்தொடி அசையப் பொற்கழங்கு விளையாடுவர் (பெரு. 334,335). பகைவர் சந்து செய்வதற்கு உடன்பட்டன ராயினும் அதற்கு மனம் பொருந்தாமைக்கும் காரணமாகிய வாளை உடைய தடக்கையினையும் பகைப்புலத்துக் கொள்ளையாகிய உணவினையும் உடைய தொண்டையோர் மருக என இளந்திரை யன் விளிக்கப் பெற்றான் (பெரு. 452-454). பாணர் இளநதிரையனை முற்படக் கண்டக்கால் பேரி யாழை இசைத்துச் செய்யும் கடனை அறிந்த முறைமையோடு கையால் தொழுது வாழ்த்தினர் (பெரு. 462,463). வளைந்த அரிவாளைக் கொண்ட வடுவுள்ள வன்கையினை யுடைய மடையன் பல இறைசசிகளைச் சமைத்தான் (பெரு. 471,472). ஆழி யொடு வலம்புரியைத் தாங்கும் பெரிய கைகளை யுடைய திருமால் (மாவலி) வார்த்த நீரைப் பெற்ற தும் உயர்நத வடிவெடுத்து நிமிர்ந்தார் (முல்லை. 1-3). பெருமுது பெணடிர் மாலைப்பொழுதில் முல்லைப் பூவையும் நெல்லையும் தூவிக் கை தொழுது தெயவத்தை வணங்கி நறசொல கேட்ட னர் (முல்லை. 6-11). ஆயர்மகள் குளிரால் நடுங்கும் தோளின் மேல் கட்டிய கையளாய் மாலைப்பொழு தில் இளங்கன்று பாலுணணாமல் உறும் துயர் நோக்கி அதனிடம் கையிலே வளைந்த கோலை யுடைய கோவலர் பின்னின்று செலுத்த நின் தாயர் விரைவில் வருகுவர் என்று கூறினாள் (முல்லை. 12-16). மங்கையர் குறுந்தொடி முன்கை யினர் (முல்லை. 45,47). பொழுதளந்தறியும் பொய்யா மாக்களாகிய நாழிகைக் கணக்கர் மன்னனைத் தொழுது காணும் கூப்பிய கையராய் வணங்கி வாழ்த்தினர் (முல்லை. 55,56). ஒருகையை படுக்கை யின் மேல் வைத்து ஒரு கையின் கடகத்தை முடி யோடு சேர வைதது அரசன் போர்க்கள நிகழ்ச்சி களை நெடிது நினைந்தான் (முல்லை. 75,76). பேய் மடையன் தொடித் தோளையுடைய கைகளைத் துடுப்பாகத் துழாவி ஊன சோற்றினைச் சமைத் தான் (மது. 34-36). நெடுஞ்செழியன விறலியர் தம் வறுங்கையில் அணியக் குறுநதொடி நல்கினான் (மது. 218). நெல் விளைந்த கழனியில் வன்கை வினைஞர் அரிபறை முழக்கினர் (மது. 261,262). உவலைக் கண்ணியினை உடைய வன்சொல் கிளை ஞர் சிலையுடைக் கையராய்க் கவர்த்த வழிகளைக் காத்தனர் (மது. 311,312). வன்கைப் பரதவர் அறுத்த கொழுமீனின் துடியின கண்போன்ற துணடஙகள் நாவாயினில் ஏறறப்பட்டன (மது. 319-322). மயில்ய லோரும் மடமொழியோரும் தம்மைக் கோலஞ் செய்து கொண்டு மெல்ல நடந்து கையைத் தட்டியழைத்துக் கல்லா மாந்தரொடு மகிழ்ந்து திளைததனர் (மது. 418-420). வளங்கெழு செலவர் மேகம்போல் வரையாது கொடுக்கும் வணகையினர் (மது. 442). கடுஞசூல் மகளிர் மயில் போல மெல்ல நடநது இறைவனைக் கை தொழுது ஏத்திச் சாலி னியால் (தேவராட்டியால) பரவுக் கடனைச் செலுத் துவர் (மது. 607-610). நாளதோறும் தமக்குச் செல் வம் மிகுமபடி கையால் தொழுது வாழ்த்தி நாட் காலத்தே திறையாகக் கொடுதத சீரிய கலன்கள் மதுரையில் நிறைந்தன (மது.694-699). பொன்னாற் செய்தலினால பொலிவு பெற்ற விளக்கம் (மோதிரம) நெடுஞசெழியனின வலிகெழு தடக்கையில் தொடி யொடு திகழ்ந்தது (மது. 719, 720). கோவலர் பெருமபனி நலியப் பலருடன் கையிலே கொள் ளியை உடையராயப் பல் பறை கொட்ட நடுங்கி னர் (நெடு. 3-8). அங்காடித் தெரு மாலைக் காலத்தை விளக்கேற்றி நெலலும் மலரும் தூவிக் கை தொழுது கொணடாடியது (நெடு. 42-44). கோயி லில மகளிர் யவனர் இயற்றிய பாவை தன் கையிலே ஏந்தியிருக்கும் அகல விளக்கு நிறைய நெய் சொரிநது திரியைக கொளுததி விளக்கேற்றி இருளை ஓட்டினர் (நெடு.100-105). கோப்பெருநதேவி பொன்னாற் செய்த தொடி கிடந்து தழும்பு இருந்த மயிர் ஒழுங்கு பட்டுக் கிடந்த முன கையில வலம் புரி வளையொடு காப்பு நாண் அணிந்திருந்தாள் (நெடு. 141, 142). பாண்டியன் நெடுஞசெழியன பாச றையிடத்துத் தோளினின்று நழுவி விழும் துகிலை இடப்பக்கததே தழுவிககொண்டு வாளைத் தோளில் கோத்த வன்கண்மையுடைய வீரனின தோளில்

வைத்த வலக்கையை உடையனாய்ப் புண்பட்ட வீரரைக் கண்டு முகனமர்ந்து உரையாடினான (நெடு. 181-183). தலைவன் பூண் இறுகின தடக் கையிலே அம்புகளைத் தெரிந்தெடுத்து வண்ணவரி வில் ஏந்தினான் (குறி. 123, 124). நைவளம் முற்றுப் பெற்ற பாலை யாழை வாசிக்க வல்லவன் தன் கையாலே வாசித்த நரம்பு போல வண்டினம் இம் மென ஒலித்தது (குறி. 146-148). கடம்பின் அடி மரத்தை மாலை சுற்றி வளைத்தாற் போன்று மக ளிர் கைகோத்தலை விடாது தலைவனைச் சூழ்ந்தி ருந்தனர் (குறி. 176-179). தலைவன் மலையில் உறை கின்ற கடவுளை வாழ்த்திக் கை தொழுது வணங் கித் தலைவியிடம் நின்னைப் பிரியின் அறனல்லது செய்தேனாவேன எனறு வாய்மையினால் தேற்றி அருவி நீர் அருந்தி வஞ்சினம் உரைத்தான் (குறி. 208-211). மன்றத்திலே ஆட்டுககிடாயோடு சிவலை யுங்கொண்டு பொருவிதது விளையாடும விளை யாட்டில் மாறுபாடு செய்யும் வலியினையுடை யோர் பெருஞ்சினத்தினால் பொருதற்குச் சமைந்த போர்க்களததே சென்று முதுகு கொடாமல் கையாற் குத்தியும் படைக்கலங்களால் வெட்டி யும் ஒருவர் மெய்யோடு ஒருவர் மெய் உறும்படி கலந்தும் போரினைச் செய்வர் (பட். 69 - 77). நனனன் விற்றொழிலிலே பயின்ற தடக்கையினன் (மலை. 63,64). புனத்திலுள்ள வரகுகளின், தருக்கங் கூறுகின்றவன கையிடத்தில் இணைந்த விரல்களை யொத்த இரட்டித்த கதிர்கள் முற்றி வளைந்தன (மலை. 112,113). செறிதொடி விறலியர் இறை வனைக் கைதொழுது வணங்கி வாழ்த்துவர் (மலை. 200,201). தினைபபுனங் காக்கும் குறவர் குறுங் காட்டிடத்தே தினையைத் தின்றழிக்க நிற்கும் யானைகளை ஓட்டப் பரணில் ஏறிக கை புடைத் துக் கவண்கல் எறிவர் (மலை. 203-206). வளை கையினின்றும் போதற்குக் காரணமான புன் தலைப் பிள்ளைகளோடு இரவில் மேலும் போதலை நீக்கிக் கன்முழைஞ்சுகளிலே இராக்காலத்தே தங்கி இளைப்பாறி விடியலில் செல்க எனக் கூத்தர் ஆற்றுப் படுத்தப்பட்டனர் (மலை. 253-258). 'விற லியர் பக்கமலையில் குறிஞ்சிப் பண்ணைப் பாட நீவிரும் அங்குறையும் கடவுளரைக் கைதொழுது பரவி வாழ்த்திச் செல்வீராக' என்று கூத்தர் ஆற்றுப்படுத்தப்பட்டனர் (மலை. 358-360). மேகம் கிடக்கும் பெரிய மலையிடத்தில் கையால் பிடிக்கும் தன்மையை யொத்த அனுகுதலையுடைய கரிய மேகத்திரள் பஞ்சி போலப் பொங்கித் துவலை களைத் தூவுகையினால் திசைகள் மறையும் (மலை. 361-364). முன் போகின்றவன் வாங்கி விட்ட கடு

விசையுடைய திரண்ட கோல் யாழின் பத்தரையும் முழவின் கண்ணையும கெடுக்காதபடி காத்து அவனைக் கைப்பிடித்துக் கோடலை விடாது மெல் லப் போவீர் எனக் கூத்தர் ஆற்றுப்படுத்தப்பட்ட னர் (மலை. 380-383). தேன் சொரியும் கண்ணியி னையும் தேரைக் கொடுத்துக் கவிந்த கையினையு முடைய ஓம்பா வள்ளல் நன்னன் ஆவான் (மலை. 399,400). சுருங்கின அறிவினை உடையராய் இரந்து வந்தோர்க்கு இல்லேம் என்று கூறி விரித்த கையினராய்த் தம் பெயரைத் தம்மோடு கொண்டு மாய்ந்தவர் சேயாற்று எக்கர் மணலினும் பலரா வர் (மலை. 552-556). நன்னன் வறிய புலவரின் ஏற்ற கை நிறையும்படி பேரணிகலன்களைச் சொரி தலினால் கவிழ்ந்த கழல்தொடித் தடக்கையினன் (மலை. 576,577). குந்தாலியுடன் கூடிய மழுப்படை மணிமிடற்று அந்தணன் (சிவன்) கையிடத்து விளங்கும் (அகம். க. வா. 5,15). ஐயை அரத்தாற் பிளக்கப் பெற்ற அழகிய வளைகளாற் பொலிந்த முன் கையினள் (அகம். 6:2,3). பெருங்கையினை யுடைய ஆண்கரடி புற்றாஞ் சோறாகிய உண வினை உண்ணும் (அகம். 8:1,2). 'என் நெஞ்சு தலைவியிடத்துக் கையைக் கவித்துச் சென்று கண்ணைப் புதைத்துப் பெண்யானையின் துதிக் கையை ஒத்த பின்னலைத் தீணடி அவளது தொடிக்கை பொருந்தத் தழுவியதோ' என வினை முற்றி மீளும் தலைவன தேர்ப்பாகன் கேட்பக் கூறினான் (அகம். 9:20-26). கான யாறறினது பூங் கொத்துக்களையுடைய கிளைகள் தாழ்ந்த எக்க ரிடத்தே தலைவன் மெய்கள் ஒன்றின ஒனறு புகு வதை ஒத்த கைகவர் முயக்கததைப் பெறுவான் (அகம். 11:8-11). வன்கை எணகு (அகம். 15:16). பொலந் தொடிப் புதல்வன் மாசில்லா அங்கை யினன் (அகம். 16:3,5). தலைவி சில்வளை சொரிந்த மெல்விறை முன் கையினள் (அகம். 19 : 15, 18). நெடுவேள் வணங்காரைத் தேய்த்தொழித்த பல வகைப் புகழ்களைக் கொண்ட பெரிய கையினை யுடையவர் (அகம். 22:5,6). திதியன பகைவர் எதிர்ந்து வரும் போரினை வென்றொழித்த வில் கெழு தடககையினன் (அகம். 25:18-20). தலைவி தலைவனிடம் ஊடல் கொண்டு அவன கேட்பச் செவிலி கையிடத்திருந்த புதல்வனை நோக்கி, 'நீயிர் நும் பரத்தையர்க்கு ஒத்தனிர் ஆவிர்; யாம் இச்செல்வனுக்கு ஒத்தனம ஆவோம்' என்று கூறி மெல்லெனப் புதல்வன்பாற் சென்றாள் (அகம். 26:18-21). தலைவன் தலைவியை நோக்கி, 'சூரர மகளிரின் நின்ற நீ யாரையோ, எம் அணங்கி னோய் நின்னை நுகர்வேன்' என்று கூறிச் சிறு

புறம் தழுவி நிற்க அவள் நெகிழ்ந்து வருந்திய தன் உள்ள நிலையைக் கரந்து மனததோடு கூடாத கடுஞ்சொற்களைக் கூறி அவன் கையை அகற்றி னாள் (அகம். 32:7-12). தலைவி செநதார்ப் பைங் கிளியை முன்கையில் ஏந்தி இல்லிலுள்ளோர் அறிவ ரோ என அஞ்சி மெலலெனச் 'சென்ற தலைவர் இன்று வருவார் என உரைப்பாய்' என்று அதனிடம் மழலை இன்சொல் பயிற்றினாள் (அகம். 34:14-18). உழவர் தொழிற் செருக்கால் வந்த மயக்கம் ஒழியக் கொள்ளொடு பயறு, பால் கலந்து அட்ட உணவை வளைத்துண்ட கை போதுமெனத் தடுத்த பின்னர் நெல்லைக்குவித்துச் சுற்றி ஞாயிறு வெம்மை நீங்க மருதமர நிழலில் எருதோடு வதிவர் (அகம். 37:2,12-16). இடையர் கோலினைக் கையிலுடையவர் (அகம. 54:1). தலைவி தன் இள முலைகள் அழுந்தத் தொடிவிளங்கும் முன்கை வளைநது புறததினைச் சுறறிக் கொள்ளப் பன முறை தலைவன மார்பை முயங்கினள் (அகம். 58: 7-9). பீலியை வில்லில சுற்றி அம்புடைய கையின ராய் அரண்பல அழித்து நன்கலன கொணரும் மறவர்கருத் தலைவன ஆய் (அகம். 69:14-18). புற்றாஞ் சோற்றினைக் கெணடும் பெருங்கை யேற்றை இருமபு செய் கொலலன் போல் தோன்றும் (அகம். 72:5,6). தினையைக் காக்கும் பரண் மேலிருப் பவன கையினகண உள்ளதும் பிடி கையினகண பொருநதியதுமான கனல்வாய்க் கொள்ளி விடும் சுடா போல மினனி மழை பெய்யும (அகம. 73:14-17). அவிர்தொடி முனகை ஆயிழை மகளிர் (அகம். 75:11). பிட்டன் வளைநத விலலையுடைய தடக் கையினன (அகம். 77:15,16). கருங்கை ஆடவர் (அகம். 79:1). கடுங்கைக் கானவன (அகம். 88.5). இடையன நள்ளிரவில் கொள்ளியின தீயில அங்கை யைக் காய்ததினான் (அகம். 94:3-7). பனந்தோட்டி னைக கடமபோடு சூடித் தாளததோடு பொருநதிக் கையை உயர்ததி முருகனது பெருமபெயரை ஏதததி வெறியாடு களம் பொலிய வேலன வெறியயர்ந தான் (அகம். 98:16-20). கொடிசசி தன் கூந்தலைக் காற்றுப புகுந்து உலர்ததக் கையாற பெயர்ததுக் கோதிக்கொணடு பெருமலைப் பக்கத்தில குறிஞ்சிப் பணணைப் பாடினாள் (அகம். 102.4-6). காந்தள் அணி மலரின் நறுந்தாதினை ஊதும் தும்பிகள் கையினகண வைதது ஆடும் வட்டுப் போலத் தோனறும (அகம். 108:15-17). அறனில் வேந்தன சுரநெறியிற் செலவோர் கையில் பொருள் இலலை யாயினும் அவரைக் கொல்லாது வநத பிழைக் காகத தன ஏவலரிடம களிற்று மருப்போடு புலிததோலைத் தண்டமாகப் பெறுவான் (அகம். 109:10-14). எவ்வி வீழ்நத போர்க்களத்தே பாணர் கையாற்றொழும் முறைமையோடு முனபெல்லாம் பரவிய யாழின மருப்பினை ஒடித்துப் போட்டனர் (அகம். 115:8-10). செலுத்தும் கை விருமபும் செல வினையுடையது குதிரை (அகம். 124:10). கைதொழு மரபினையுடைய கடவுட்டன்மை நிரம்பியது ஓதல் வினை (அகம். 125:14,15). வேலனும் கட்டுவிச்சியும் வேப்பிலையும் நீலமும் சூடி இன்னியம் கறங்கக் கையால் தொழுது முருகனை மனைக்கண் வரு வித்துக் களிறும் கடமபும் பாடித் தோடும் தொட லையும் கையிற்கொண்டணிந்து அசைந்தசைந்து இரவெல்லாம் ஆடினர் (அகம். 138:4-13). பழஞ் சேற்றிலே அழுந்திய வண்டியின் இடையூறு நீங்க இழுக்கும உமணர் கையிற் பற்றிய பகடு வருந்தும (அகம. 140:12-14). மாந்தரம் பொறையன் கடுங்கோ பலரினும் மேம்பட்டுக் கொடுத்தலான் கவிந்த கையினையுடைய வள்ளலாவான (அகம். 142:3,5). தலைவி வளைவு பொருந்திய திரண்ட வளைகள் செறிநத முன்கையினள் (அகம். 142:17). போர் விரும்பிக் கிளர்நதெழும் மறவர் தம் கை யிடத்ததாகிய கூர்வாள் முனை சிதைய மாறறார் படையை வீசிக் கொல்வர் (அகம். 144:14,15). கூந் தலைக் கையாற் பற்றி அருளாது அலைகரும் கோல சிதையுமபடி அடிக்கவும் தன்முதுகு தனக் குரியது எனறு கருதாது நின்ற என மகளை அலைத்த கைகள் அனனி அடியுடன் துணித்த திதியனது புனனை போலப் பெருந் துனபத்தை அடைவனவாக என மகட்போககிய செவிலித்தாய் வருநதினாள் (அகம். 145:11-14,19-22). பெருங்கை எண்கு (அகம. 149.4;171.15; 201:16; 307: 10). காற்று வீசுதலினால உதிர்நத கோங்க மலர் கையினால் விடப்பெறும் சுடர்பபொறி போலத் தோனறும் (அகம். 153.16-18). விலகெழு தடககை வெல்போர் வானவன (அகம. 159.15). ஞாயிறு தன கதிரே கை யாக ஈரததினைக் கவர்நது பசுமையறக காயும் (அகம். 164:1,2). கருங்கைக் கானவன (அகம். 172:6). தலைவன தலைவியின பலவாய் மாட்சிமைப்பட்ட தெரிவளை முனகையினைப் பற்றி அளிசெய்து கார்காலத்து வினைமுடித்து வருவேன் என்றான (அகம். 175 : 7-9). பரததை தனது குறுநதொடி முன் கையினால பிணிதத பிணிப்பினைத் தலைவன் விடுததுச செனற அளவிலே உடன்றனளாயத் தன் முகத்து எழுதெழில சிதைய ஏங்கி அழுதனள் (அகம் 176:16-22). சிற்றிலிழைத்து விளையாடும் சிறுமிகளது கை செய் பாவைகளை உடையது துறை (அகம். 181:18,19). களைக்கொட்டினை யுடைய கையினராய்க் களையினை வெட்டி எறியும் தொழி

லுடையவர் கள்ளினை நிறைய உண்டு மகிழ்வர் (அகம். 84:13,14). பேடியாகிய பெண் உருவு கொண்டு ஆடுவானின் வளைந்த கையைப் போன்று எருமையின் பணைத்த முறுக்குண்ட கொம்பு தோன்றியது (அகம். 206:2,3). அணிகளைப் பெய்தற்குக் கவிழ்ந்த கழல் தொடித் தடக்கையின்கண் சோழர் வெற்றி பொருந்திய வாளினைக் கொண்டிருந்தனர் (அகம். 213 : 20,21). வில்லைப் பிடித்த மறவர் தாம் குறித்த இலக்குத் தப்புவதாயின் அம்பினைத் தொடுத்த தம் கை விரலை வாயாற் கவ்வுவர் (அகம். 215:7-10). தலைவி செறிதொடி முன்கையினள் (அகம். 225:16). பரத்தை தொடியணிந்த முன் கையினை உடையவள் (அகம். 226:11). கலிமான் நள்ளி கழல்தொடித் தடக்கையினன் (அகம். 238:14). அன்னை தன் ஆயத்துடன் அணங்குடைய பனித்துறை உறையும் கடவுளைக் கைதொழுது ஏத்தும் (அகம். 240:8,9). தலைவி எல்வளை நெகிழ்ந்த முன்கையள் (அகம். 242:13,14). 'கூந்தலை மொய்க்கும் வண்டினைக் கடிந்து ஓம்பல் தேற்றாத நீ, வளை ஒலிக்கும் முன் கையினையுடைய பணைத்தோள்களை வீசி நடக்கும் வன்மை பெற்றுள்ளாய்' என உடன்போக்கின்கண் தலைவன் தலைவியிடம் கூறினான் (அகம். 257:8-12). ஊனைத் தின்று வேட்கை நீங்கத் தோப்பி பருகிய கொடுநோக்கு ஆடவர் புலால் நீங்காத கையினராய்க் கழுவாத வாயினராய் அருஞ்சுரத்தில் திரிவர் (அகம். 265 : 15 - 22). தலைவி தொடியணிந்த முன்கை விரலைக் குவித்து நம்மைக் காண வேண்டுமென்ற விரதம் கொண்ட நெஞ்சத்தோடு பகல் துணையாக வருந்தி இருப்பாளோ என்று இடைச்சுரத்தில் தலைவன் தன் நெஞ்சினை வினவினான் (அகம். 287:1-3). தலைவனின் மெத்தென்ற பிணிப்பு மிக்க கை நெகிழ்ந்து சிறிது விலகினும் வருந்தும் மடப்பமுடையவள் தலைவி (அகம். 289:7,8). பரண்மீதிருந்து தினைப் புனம் மேயும் யானைமீது வன்கைக் கானவன் கவண்கல் எறிதல் (அகம். 292:8-11). வாடைக்காற்றால் நடுக்கம மிகும் பாதியிரவில் ஒருவர் மெய்யில் ஒருவர் மெய்புகுவது போலும் கை விரும்பும் முயக்கத்தால் ஈருடம்பிற்கு ஓருயிரெனக் கருதத்தகும் காதலரும் வேய்ங்குழல் ஒலிகேட்டு வருந்துவர் (அகம். 305:3-8,16). வெல்போர் வழுதி பகைவர் ஓடுபுறம் கண்ட தாள்தோய் தடக்கையினை உடையவன் (அகம். 312: 10-12). கதிரவனோடு திரிதரும் நெருஞ்சிப் பூப்போலத் தலைவனை என்னுடன் திரியச் செய்யேனாயின் சோழரது வல்லத்துப் புறத்தே காவற் காட்டின்கண் வந்த ஆரியர் படைபோல எனது நேரிய சந்தினையுடைய முன்கையின் திரண்ட வளைகள் சிதைந்தொழிவனவாகுக' என நயப்புப்பரத்தை இற்பரத்தைக்குப் பாங்காயினார் கேட்பக் கூறினாள் (அகம். 336:18-23). கடுங்கண் மழவர் படையுடைக் கையர் (அகம். 337:8,11). தூது செல்லும் பார்ப்பானைக் கொன்று வீழ்த்திய கடுங்கண் மழவர் பின்னர் அவனது வறுமையை நோக்கிச் செங்கோல் அம்பினராய்க் கைந்நொடித்துப் புறம் பெயர்ந்தனர் (அகம். 337:7-13). தென்னன் பலபோரையும் வென்ற இடியுடன் மாறுபடும் தடக்கையினன் (அகம். 342: 9,10). அரத்தாற் பிளக்கப் பெற்ற அழகிய வளைகள் செறிந்த முன்கையினைத் தாம் வரைந்து கொண்டு பற்றியதாலாய தொல்கவின் தொலையத் தலைவர் என்ன பொருளைக் கருதினரோ என்று பிரிவின்கண் தலைவி தோழியிடம் கூறினாள் (அகம். 349:1-3). தலைவி திருந்திழை முன்கையைக் கன்னத்தில் வைத்து அணையின்மீது இருந்து பின் படுக்கையில் பொருந்திய விடத்து வருந்து தோளின் துன்பத்தைப் போக்கும் மருந்தென ஒலிக்கும் பல்லி நம் வினை முடித்து மீளும் இயக்கத்தினை அறிவுறுத்துமோ எனத் தலைவன் தன்னெஞ்சினை வினவினான் (அகம். 351:4,5,13-17). தலைவன் தலைவியை நெடுந்தெருவின் நடுவே கதுமெனக் கண்டு அவளது பொற்றொடி முன்கையினைப் பற்றிட அவளும் அன்னாய் என்று கூவினமை கண்டு நீண்ட நாளாக வரும் விருப்பினை நீக்காமலே அவளைக் கைவிட்டனன் (அகம். 356:4-8). அணிவளை முன்கை ஆயிழை மடந்தை (அகம். 361:4). நெல்லினைத் தூற்றுவதனால் எழுந்த துகள் உப்பளத்தில் வீழ்ந்ததெனப் பரதவர் கழனி உழவரோடு மாறு கொண்டு எதிர்த்துச் செய்யும் போரினைக் கண்டு நரைமூதாளர் அவர் கைப்பிணிப்பினை விடுத்து விலக்குவர் (அகம். 366: 4-10). மங்கையர் ஒண்டொடி செறித்த முன் கையில் முறையானே கொண்டு பலபாராட்டவும் கிளிகள் பாலுண்ணவில்லை (அகம். 369: 2-4). இடைச் சுரத்திடத்துத் தலைவன் அருஞ்சுரம் நீந்திய வருத்தத்தோடு கையற்றுப் பெரும்புன் மாலை தனிமை தரத் திண்மையுடைய மனம் மீண்டும் தலைவிபால் செல்லுதலை வற்புறுத்த முழந்தாள்களைக் கையாற் கட்டிய தனித்த நிலையினதாகிய இருப்புடன் தனது நிலையினை எண்ணி வருந்தினான் (அகம். 373:5-9). பலவின் கனிகளைக் கவர்ந்தெடுத்த கைகளையுடைய கல்லா மந்தி கடுவனோடு துள்ளித் திரியும் (அகம். 378:20, 21). மெய்புகு வன்ன கைகவர் முயக்கம் (அகம். 379:15). தலைவன் தன் வளையுடைய முன்

கையினைப் பற்றியும் மேகலையுடைய அல்குலை அணைததும் பெரிதும் ஊககமுறுத்த ஊக்கங் கொணடு தலைவி வழிவருத்தம் எண்ணாது அவனுடன் சென்றாள் (அகம். 385: 11-16). பாண னோடு பொருத ஆரியப் பொருநனின முழவுத் தோள்கள பாணன கையகப்பட்டு ஒழியக் கிடநத கிடக்கையைப் பார்த்து நற்போர்க் கணையன் நாணினான் (அகம். 386:3-8). பரத்தை தலைவியை அணுகி நினக்கு நுங்கை ஆகுவேன் என்று கூறித் தன் கையின் மோதிரம் அணிந்த மென்விரல் களால் தணணெனத் தலைவியின நுதலையும் கூந் தலையும் தடவினாள் (அகம. 386: 12-14). இரப்ப வரது ஏந்தும் கை நிறைந்திட அவரைப் புரப் போர் வருத்தமில்லாத உள்ளத்தோடு புதிய பொருள்களைத் தந்து மகிழ்தற் குரிய அரும் பொருள் வேட்டம் எணணித் தலைவன் பொருள் வயிற பிரிந்து சென்றான் (அகம. 389:11-13). தெறு தற்கரிய தெய்வத்தின் முன் தெளிவித்து என் மெல் லிறை முன்கையினைப் பற்றிச் சொல்லிய சொல் லினைக கடநது ஆர்வ நெஞ்சம் மேன்மேலும் மகிழ்சிறக்க நின மார்பினைத் தாராயாய் ஏதிலான ஆயினை எனக் காதற்பரத்தை தலைவனைச் சினந்து கூறினாள் (அகம. 396: 7-10). தலைவன எம்முடைய வீட்டில பெருமொழிகளைக் கூறித தம் முடைய வீட்டில் கையையும் காலையும் தூககத் தானும தூக்குகின்ற ஆடிப்பாவை போலத் தம் புதல்வன் தாய்க்கு அவள் விரும்பியவற்றைச் செய் வான என்க காதற் பரதகை தலைவிக்குப் பாங்காயினார் கேட்பக் கூறினாள் (குறு. 8:3-6). தொகுவளை முன்கை மடநதை (குறு. 15: 6). 'யானும ஓர் ஆடுகள மகளே; என் கை யிலுள்ள சங்கை அறுத்துச் செய்த வளை யலகளை நெகிழச் செயத பீடுகெழு குருசிலும் ஓர் ஆடுகள மகனே என்று தலைவி தோழியிடம கூறி னாள (குறு. 31: 4-6). நீர்த்துறை யிடத்தே எம் நேரிறை முன்கையைப் பறறித தெய்வ மகளிரைச் சுட்டிக கூறிய சூள் எமமைத துன்புறுத்தின என்று வரைவு நீட்டித்த தலைவனிடம் தோழி கூறினாள் (குறு. 53.1,5-7). ஞாயிறு காயும் வெம்மை யுடைய பாறையினிடத்தே கையில்லாத ஊமையன கணணி னாலே காக்கும் வெண்ணெய் உருகுதல் போல என்பாலுணடான காமநோய் பரவியது எனத் தலைவன பாங்கனிடம் கூறினான் (குறு. 58.3-6). நெடுவரையில் பெருந்தேனைக் கணட, இயங்காமல் இருத்தலையுடைய முடவன உள்ளங்கையைக் குழி வாகக் குவித்துக் கீழிருந்தபடியே அத்தேனிறாலைப் பன்முறை சுட்டி நககியினபுறுதல் போலத் தலை வன் அருளாது நயவாவிடினும் அவனைப் பல்காற் காண்டல் உள்ளத்துக்கு இனிது எனத் தலைவி கூறினாள் (குறு. 60). தச்சன் செய்த சிறிய குதிரை பூட்டப்பெற்ற சிறு வண்டியைச் சிறுவர் ஏறிச் செலுத்தி இன்பமடையாராயினும் கையினால் ஈர்த்து இன்புறுவர் (குறு. 61:1-3). அஞ்சி, ஓவாது ஈயும் மாரி வண்கையினன் (குறு. 91:5,6). எம்மை வருத்தியவள் இளையள், முளைவாள் எயிற்றள், வளையுடைக் கையள் என்று தலைவியைப் பற்றித் தலைவன் பாங்கனிடம் கூறினான (குறு. 119:3,4). குறுங்கை யிரும்புலிக் கோள்வல் ஏற்றை (குறு. 141:5). நரையுடைய தலையின்கண துகிலையுடைய அவைமாக்கள் தண்டினைக் கையிற் கொண்டிருந் தனர் (குறு. 146:3-5). மலையன் போருக்குரிய வேற் படை விளங்குகின்ற தடக்கையினன் (குறு. 198:5,6). ஆடுடைய இடையர் பறியோலையைக் கொணட கையினர் (குறு. 221:2,4). தெபபத்தின தலைப்பைத் தோழி பிடித்துக் கொண்டால் தலைவி தானும் அவ்விடத்தைக் கொள்ளுவாள்; கடைப் பகுதியைப் பிடித்துக் கொண்டால் தானும் அககடைப்பகுதி யைக் கொள்ளுவாள்; தெப்பத்தைக் கை சோரவிட் டுப் புனலோடு சென்றால் அங்கும் வருவாள போலும என்று தலைவியும் தோழியும் நீராடிய வழித தலைவன் கூறினான (குறு. 222). தலைவி யைத் தழுவும பொருட்டு என் நெஞ்சு எனனினும் முந்தி அவள்பால் சென்றதாயினும கையால் தழுவு தல நெகிழுமாயின் அது சென்றும் பயனில்லை என வினைமுற்றி மீளும தலைவன தேர்ப்பாகனி டம் கூறினான் (குறு. 237:1-3). கொடிச்சி கையி லுள்ள குளிர் என்னும் கருவி தினைப்புனததில் படியும் கிளியை ஓட்டும (குறு. 291: 1, 2; 360: 5, 6). நிரைவளை முன்கை நேரிழை மகளிர் (குறு. 335.1). கானவனது சோர்வறிந்து ஆண குரங்கு தன கையால் மணங்கமழும பெரும் பலாப்பழத்தைத் தோண்டியது (குறு. 342: 1,2). உடனபோககுககு முன இசைந்த தலைவி நாணம் தடுக்க, நாளை செல்லலாம் என்று தோழியிடம் உரைத்தபோது தலைவன் இன்றே வந்திருப்பதை யறிந்த அவள கையும் காலும ஓய்வனவாய் வருநதத் தீயில் விழுந்த தளிரைப போல நடுஙகி யான் செயற்குரியது யாதும் இல்லை என வருந்திக் கூறினாள (குறு. 383). மகளிர் கையே கருவி யாக நெய் பெய்து மாலைக்காலத்தில விளக்கு ஏற்றுவர் (குறு. 398: 3-5). திகிரியோனாகிய திரு மால திசைகளைக் கைகளாக உடையவர் (நற்.க. வா. 3, 7). 'தலைவன என கையினைக் கொணடு தன் கண்ணை ஒற்றியும் தன்னுடைய கையினைக்

கொண்டு என் நன்னுதலை நீவியும் அன்னையைப் போல இனிய கூறியும் கள்வரைப் போலக் கொடியனாய் நின்றான' எனத் தோழி தலைவியிடம் கூறினாள் (நற். 28 : 1-4). இளமுலைகள் நோவனவோ என்று நினைத்து அணைததிருந்த கையை நெகிழ்த்த அளவிலே அதனைப் பொறானாய்த் தன் பேரமர் மழைக்கண் கலுழ வெய்ய உயிர்ப்பவனாகிய என் மகள் அருஞ்சுரத்தில் செல்ல வல்லுநளோ என்று மகட்போககிய தாய் தன மகளை நினைத்து இரங்கிக் கூறினாள் (நற். 29 : 5-11). பண்பமைநத சீறியாழ் பாணன் கையிடத்தது (நற். 30: 2). குறுங்கை யிரும்புலிக் கோள்வல் ஏறறை (நற். 36: 1). மலையில் ஆமான் வேங்கை மரத்தின் கீழ் தன் கன்றோடு தங்கி உறங்க அதனைக் கண்ட மநதி தன சுற்றத்தை ஒலிசெய்யாது இருக்கக் கவித்து அமர்த்திவிட்டு நெருங்கிப் பாலசுரந்த மடியை அமுக்கிப பாலைத் தனகுட்டியின கை நிறையப் பிழியும் (நற். 57: 1-6). உழவன விடியற் காலததில் வரால மீனோடு அரிசியாலாய சோறறை விருப்பம் மிக்க கையினால் நிறைய உண்டு நாற்று நடுதற்கு உழத்தியோடு செலவான (நற். 60: 2-8). வளையணி முன்கை நின் இகுளை (நற். 71: 2). கொடிச்சியாலே பிணிப்புணட என் னெஞ்சம் அவள கையகத்தது எனத் தலைவன பாஙகனிடம் கூறினான (நற். 95 : 9, 10). பைங்கிளியைத் தலைவி கைதொழுது இரந்து தன் குறை முடிக்குமாறு வேண்டினாள (நற். 102: 1-4). தலைவியிடம் தன் காதல் நோயைத தலைவன உரைக்க அவள் மறுமொழி கூற இயலாதவளாய் ஞாழலது பூங்கொத்தைப் பறித்து அதனோடு இளந்தளிரைச் சேரப் பிசைந்து உதிர்த்த கையளாய அறிவு மயக்க முற்றாள் (நற்.106:4-9). மலைக்குப் பககததே விளைநத தினைப்புனத்தில் யானையைக் கண்ட குறவா கையில் கவணோடு விரைந்தனர் (நற். 108: 1-4). தேன கலந்த தீம்பாலைப பொற்கலததில் இட்டு அதனை ஒரு கையில் ஏநதிச் செவிலி உணணெனறு பூநதலைச சிறுகோலை ஓச்சத் தலைவி சிலம்பொலிக்க ஓடினாள் (நற். 110:1-7). வன்கை யிடையன (நற். 169: 7). தலைவியின தந்தை வலிய நெடிய கையை உடையவன் (நற். 198: 9, 11). பாணன் கைகள் விருமபுவதற்குக் காரணமான நரமபினை உடைய யாழிலே இசைப்பாட்டினை இசைக்க வல்லவன் (நற். 200: 8). நம் கையிலுள்ள செம்பொன்னாலாகிய கழன்று வீழ்கின்ற தொடியை நோககி நம புதல்வன நம்மை அணைத்துக்கொண்டு அழுகின்ற இனகுரலைக் கேட்குந்தோறும் ஆசை கொள்கினற மனத்தையுடையேமாகிய நாம் மகிழுமாறு தலைவர் வந்தனர் எனத் தோழி தலைவியிடம் கூறினாள் (நற். 212:7-10). கண்ணில் விழுகினற நுண்ணிய துகளைக் கை விலக்குமாறு போல நம்மையுற்ற துன்பத்தை நீக்காராயினும் தலைவர் இல்லாத ஊர் இனனாததாகும் எனப் பரத்தை தலைமகள் பாஙகாயினார் கேட்பப் பாணனிடம் கூறினாள் (நற். 216:3-5). வேங்கையின் வளைந்த கிளையிலே தழும்புபடக் கட்டிய வளையவிட்ட கயிற்றினால் ஆகிய கைவனமையாலே செய்த சிறிய முடக்கததை உடையது ஊசல (நற். 222: 1-3). விசும்பில் தோன்றும் எழுமீன கைதொழுந தகுதியுடையது (நற். 231.2). காதலர் தாம கையாலணைத்து முயங்கும் முயக்கம் மெயயிலே பொருநத வேண்டா வெனறு மாறுபடுதலாலே எனமெய் இனித் தனியே கிடநது துயிலுவதனாலே துனபப் படும் தனமைய தாயிற்று எனப் பிரிவிடை மெலிந்த தலைவி கூறினாள (நற்.240:2-5). இனனகை மகளிர் வெயிலில் காயும் தினையைக் கையாலே துழாவி வருதல் போல் நண்டின கூட்டம் ஞாழலின் உதிர்ந்த மலரைக் காலால் வரித்துக் கோலஞ் செய்யும் (நற்.267:2-5). வனகைக் கானவன (நற். 285:3). நொச்சி மாலையைச் சூடிப் பலிகள இடுதற்கு அமைந்த கையை உடைய முதுகுயவன் இடுபலியை உண்ண அணங்குகளையும் காககைகளையும் அழைப்பான (நற். 293:1-3). சுடாத் தொடிக் கோமகள் சினங்கொண்டவுடன அதனெதிர் மடப்பதை யுடைய ஆயததார் கை தொழுது இறைஞ்சுவர் (நற். 300:1,2). கடலில் வன கைப்பரதவர் இட்ட வலையை அறுத்துச் சென்று சுறா மீன் நீர்த்துறையில் இயங்கும் (நற். 303:8-12). இசையறி விலங்காகிய அசுணத்தைக் கொல்பவருடைய கையைப் போலத் தலைவன மார்பு இன்பமும் துன்பமும் உடையதாயிற்று எனத தலைவி தோழியிடம் கூறினாள் (நற். 304:8-10). கிளிகடி கருவி கொடிச்சி கையில் இருந்தது (நற். 306:3). பாணன் கையிடத்துள்ள பெரிதாக ஒலித் தலையுடைய தண்ணுமை போல உள்ளே யாது மில்லாத ஒரு மேற்போர்வையுடைய சொறகளைச சொல்லுகினறிலையோ எனத் தோழி வாயிலாகப் புக்க விறலியை வினவினாள் (நற். 310:8-11). வளையார் முன்கை நலலோள் (நற். 323:5,6). 'என் நலன முழுதும் தொலையினும் நினனை நெருங்க விடேன்; நெருங்க விடுவே னாயின் எனது வாயினால் நின்னை விலக்கப்பட்டும் என அகத்திடு கைகள் நின்னை வல்லே அணைத்து முயங்கும்' எனத் தலைவி பரத்தையிடமிருந்து வந்த தலைவனிடம் கூறினாள் (நற். 350:5-7). புதல்வனை ஈன்ற பூங்கண்

மடந்தைதன் கொங்கையைக் கையால் பிடித்துத் தன் புதல்வன வாயில ஊட்டுவது போலக் காந்தளின் பூங்கொத்தொடு பொருந்திய கொழுமடல் வாழை தோன்றியது (நற். 355:1-3). புதல்வனை ஈன்று பாயலிலே படுத்திருந்த தலைவியை அணுகித தலைவன புதல்வனை ஈனறதனால் முதுபெண்டாகித் துயின்றனையோ என்று கூறிக்குவளைமலரால், வயிற்றிடத்தில் ஒற்றிடத் தலைவி முல்லை முகை போல நகை தோற்றுவித்துத் தன் மையுண்ட கண்களைக கையால் மூடி மகிழ்ந்தாள் (நற். 370:4-11). வேங்கை மரத்தின கிளையில மறைந்திருந்த மந்திக் குட்டி கொடிச்சியின் கையிலுள்ள தேன கலந்த தீம்பாலைக கலததோடு பற்றிக் கொண்டதால் அவள தன எழுதெழில் சிதைய அழுதனள (நற். 379:1-6). ஒண்டொடி முனகையினை யுடைய யாம் அழுமாறு தலைவர் பிரிந்தார் எனப் பரததை தன் தோழியிடம் கூறினாள (ஐங். 38.4,40:2). தலைவியின தநதையது கையிலுள்ள வேலுக்கு அஞ்சாமல தலைவன் அவளது இல்லத்திற்கு இரவில் வநதான் (ஐங். 60:3,4). ஒண்டொடி முனகை ஆயம் (ஐங். 83: 3). நெய்தல் நறுமலரைச் செருந்தியோடு விரவிக் கையாற் புனைநத நறுந்தார் கமழும் மார்பினன தலைவன் (ஐங். 182:1,2). தலைவி கடற்சங்கை அறுத்துச் செய்யப்பட்ட வளைகள் நெருங்கிய முன் கையினள் (ஐங். 191:1). இளம்பெண்டிர் வளை யணிந்த முன்கையினை உடையவர் (ஐங். 198:1,2). குறுங்கை யிரும்புலிக் கோள்வல் ஏற்றை (ஐங். 216: 1). இடககண்ணும் துடிக்கும்; மயிர்வார் முன்கை வளையும செறிவுறும; ஆதலின் பெருங்கல நாடனாகிய தலைவன விரைய வந்து வரைவான் என நன்னிமித்தம கண்டுதோழிதலைவியிடம் கூறினாள் (ஐங். 218). தலைவி வேங்கை மலர்கொண்டு மலையுறை கடவுளை வாழத்தி இனிமையான பலியை அளித்த ஈர்நறுங் கையள் (ஐங். 259:1-4). சிறுகட் பனறிப் பெருஞ்சின வொருத்தலோடு குறுககை இரும்புலி போர செய்தது (ஐங். 266:1,2). தலைவி மலையிடத்துக் கமழும் காந்தளின நறுங்குலை போன்ற தன் நலம்பெறு கையினால் தலைவன கண்களைப பொத்தினாள (ஐங். 293:1,2). நம்மிடம் பெறுகின்ற உடல் பொருந்துமாறு கைகள் விரும்புகின்ற முயக்கத்தைக் காட்டிலும் பொருள் சிறப்புடையதோ என்று தலைமகன பொருள்வயிற் பிரிந்தவழித் தலைவி தோழியிடம் வினவினாள் (ஐங். 337). ஆயத்தார் நேரிறை முனகையினை உடையவர் (ஐங். 384:5). நலலோரிடத்துக் கை தொழுது பனமுறையும் அறிவு சுழன்று வினவுகின்ற வளே, நின் மகளைத் திணணிய தோளையுடைய வல்விற் காளையோடு சுரத்திடையே கண்டேம் என இடைச்சுரத்தார் மகட்போக்கிப் பின்சென்ற செவிலியிடம் கூறினர் (ஐங். 390). 'பாகனே, நாம் தேர்ப்புரவியை விரைந்து செலுத்திச் சென்றால் வரிசைப்பட வளையலணிந்த முன்கையினையுடைய நம் தலைவி தன பிரிவுத்துன்பமாகிய வருத்த மொழிவாள்' என வினைமுற்றி மீளும் தலைவன் பாகனை விரைவுபடுத்தினான் (ஐங். 422). தலைவி நேரிறை முன்கையினள் (ஐங். 493:4). கடுங்கூளியினது முதுகிடாத போரினையும் மணிமிடற்றினையும் உடைய எண்கையினன் சிவபெருமான் (கலி. 1:3,4). தலைவன் செய்வினை இடத்துச் செல்லு தலை மனத்தான் எண்ணுதலினால் தன் கையாலே எழுதி வழித்த வல்வில்லின் நாணைத் தடவினான் (கலி. 7:5,6). ஒரோவொரு கைகளாலே தமமுளளே தழுவிக்கொணடு ஒரோவொரு கைகளாலே ஒனறன கூறாகிய ஆடையை உடுத்திருப்பவரே யாயினும் பிரியாது ஒன்றியிருப்பாரது வாழ்ககையே வாழக்கை யாகும் (கலி. 18:9-11). (துரியோதனன்) சூழ்சசியாலே பாண்டவர் ஐவர் இருந்த கையாலே புனையப் பட்ட அரக்கு மாளிகையை நெருப்புச சூழந்தது (கலி. 25:2-4). 'காதலையுடைய கணவரைக கூடின மகளிருடைய கவவுக் கையை நெகிழாதே பூந்தாதை வீழ்க்கும் இளவேனிற் காலம் வந்தது; என மையுணகண வருந்தப் பிரிநதவர் வாராராயினார்' எனத் தலைவி தோழியிடம் கூறினாள் (கலி. 33: 7-9). தலைவியின் கையிலுள்ள வளைகள் அவள் காப்பவும் நில்லாது கழனறன (கலி. 33:18,19). கண் உறுகின்ற வருத்தததைக் கை களைநதாற போலத் தலைவி உற்ற துயரை நீக்கத் தலைவன் குதிரையில விரைந்து வநதான (கலி. 34:22-24). 'ஊச லாட்டததின் போது தலைவன மார்பில் கை நெகிழநது பொய்யாக வீழநதேன; அதனை அவன உண்மையென்று கருதி அப்பொழுதே விரைய என்னை எடுதது அணைத்துக கொணடான்' எனத் தோழி தலைவியிடம் கூறிக குறிப்பறிந்தாள (கலி. 37:16-18). இமையவில் வாங்கிய ஈர்ஞ்சடை அந்தணனாகிய இறைவன இறைவியோடு இருந்த இமைய மலையை எடுத்தற்கு அரக்கர் கோமான (இராவணன்) தொடிப்பொலிவு பெற்ற தன் தடக்கையைக் கீழே செலுத்தி அதனை எடுககலாற்றாது வருநதினான் (கலி. 38:1-5). மேகந்தவழும் மலையையுடைய தலைவனது மணவணியைக் காணாமல் கையாற் புதை பெறும் கண்களும் கணகளாகுமோ எனத் தோழி தலைவியை வினவினாள (கலி. 39:41,42). கொடிச்சியர் மலையிலுளள தெய்வத்தைத் தொழுது கூப்பிய கை போல நறவினையுடைய கொததுக்கள்

அசையும் காந்தள் தோன்றியது (கலி. 40:11,12).
என் முன்கையிலுள்ள வளை கழலும்படி என்
னைப் பிரிந்து வாராதவன மலையாயிருந்தும் அதன்
கண் இளமழை உலவும்; அதுதான ஒருகாலத்து
உலவுத லனறி நாடோறும் உலவுகின்றதே எனத்
தோழியிடம் தலைவி வியந்துரைத்தாள் (கலி.
41:25-27). தலைவன் தனனை நயநதோர்க்குத்
தேர்களை வழங்கும் வணகையினை உடையவன
(கலி. 42:20,21). யாம் பாட மறைநது நின்று கேட்ட
தலைவன் என் தோழியை வரவு கூறாமல் கையைக்
கவித்து என் சிறிய புறத்தைச் சேர ஞாயிற்றைக்
கண்ட இருள்போல என மேனியின் பசப்புக் கெட்
டது எனத் தலைவி கூறினாள் (கலி. 42:28-32).
அழகுடைய மகளிர் கையிலிட்ட தாட்கூட்டாகிய
நீலக்கடைச் செறி போலக் காந்தள முகை மேல
தும்பி அது மலருங காலத்தைப் பாாததிருக்கும
(கலி. 43:8,9). விலலின மேல் வைத்த கையினனாய
நிரைத்த வளையணிநத முனகையை உடைய தலை
வியை அவளுக்குக் காமக் குறிபபு நிகழுமபடி
நோக்கித் தலைவன அவளைத் தினைப்புனததில்
கிளி கடிதலை மறபபித்தான (கலி. 50:7-10). தொடி
செறிந்த கட்டுவடங்கள அமைந்த அரிமுன்கையி
னையும் அணைபோலும் தோளினையும் உடைய
வள தலைவி (கலி. 54:3). தலைவன் தொய்யில
எழுதின தலைவியின் இளமுலையை இனியவாகத்
தடவி அததொயயிலைக் கொண்டு வநத தடக்கை
யினாலே தான் விரும்பும் பிடியை அளிக்கும்
மையல் யானை போல மெய் முழுதும் தடவுதலை
யும் செயதான் (கலி. 54:12-14). 'மயிர்வார்ந்த வரி
முன்கை மடநலலாய்' எனத் தலைவியைத் தலை
வன் விளித்தல் (கலி. 56: 24). சிலம்பின மணி
ஆர்ப்ப நிரைத்த தொடியை உடைய கையை
வீசித் தன் ஆருயிரைக் கவர்ந்து கொண்டு இளமை
யால் அதனை அறியாது தலைவி செனறாள்
என்பது தலைவன் கூறறு (கலி. 58:56). காநதளின
குளிர்நத எழுச்சியை உடைய வடிவினைக் கொணட
துடுப்பெனக கூறும்படியாக ஒக்கும் திரணட தம்
மில் இணையொத்த மெல்லிய முன்கையினால்
தலைவி சிறு பானையாலும் பாவையாலும் விளை
யாடினாள் (கலி. 59:3-6). வணங்கிறை வரி முன்கை
யுடையவள் தலைவி (கலி.60:4). தலைவன நாணில
னாய்த் தன்னொடு புணர்ச்சிக் குறிப்பின்றி நிற்பா
ரையும் தான் புணர்சசிக் குறிப்புடையனாய் வலி
திற் கைப்பற்றினான் என்று தலைவி கூறினாள்
(கலி. 62: 1,2). முடமுதிர் பார்ப்பான் தன்னைப்
பெண் பிசாசு என்று கருதி அஞசினன் ஆதலைக்
கண்ட தலைவி ஒரு கையாலே மணலை அள்ளிக்
கொண்டு அவன் மேலே தூவிட அவனும் கடிதா
கக் கதறிக் கூவத் தொடங்கினான் (கலி. 65:20-22).
'குறியிடத்தே நினனைக காணாமையால் எம்மி
டத்தே வநதாய் எனறு கருதி எம் கதவினைத தட்
டித் தன் கையின் வளையினாலே தன் வரவினைச
சொல்லுதலை இயலபாக உடைய பரத்தையரை
நோவேமோ' எனக கூறிக் காமக்கிழததி தலை
வனை ஊடிச் சினந்தாள (கலி. 68:8,9). தன செவ
வியால் அலராது கையினாலே வலிய அலததுதலின
முகையலர்நதாற் போல இனிதல்லாத முயககத்தில
எமககுத தணபனிககாலம் கொடிதாயிருகக நுமமை
யினறித் தங்குதலும் தகைமை யுண்டோ எனத்
தலைவி தலைவனை வினவி ஊடல தீர்நதாள் (கலி.
78:25-27). புதல்வன் முற்றத்திடததே உருளையால
ஓடுதல் வல்ல தேரைக கையாற் செலுததி நடை
கற்று ஆலமலர் செல்வன மகன் போல வருவான
(கலி. 81:7-10). வீதியில புதல்வனைக் கணட அவ
னின் வேற்றுத்தாயர் (பரத்தையர்) அடியிற் சிலம்
பொலிகக அணுகி, 'நின கணணாலும நுதலாலும
கதுப்பாலும் நினனைத தழுவிய தாயர்ககு வினக
கத்தைக் கொடுககவலல அழகிய கையினால நின
தந்தைக்குத் தன்னை நீ செய்யும் சிறபபுககளை
போல எமககும் சிறபபுக்கள செயது இவவிடாக்
காலத்தே தங்கிச் செலவாயாக' எனறு கூறினா
(கலி.83:16-23). மகன புறம்போநததால பாலகட்டிக
கொண்டமையின் மறைததுத தலைவி தனது
அங்கையால் நகிலை அமுககித தேயககவும் அநதக
கையின எல்லையில நிலலாமல விம்மிச் சுரநது
ப்பால் வெளிபபட்டு வீணாயிறறு (கலி. 84: 3,4).
எம்மை இகழநது பரததையா நின கையில இட்ட
மோதிரங்கள் யாவை; யான அவற்றைக் காண்
பேன் எனத் தலைவி புதலவனிடம புலநதுரைத
தாள் (கலி. 84:20,21). வெந்த புண்ணிலே வேலால
எறிநத தன்மைத்தாக தந்தையுடைய முனகைத
தொடியை புதல்வன கையிடததே இட்டவா யார்
எனத் தலைவி தோழியை வினவினாள (கலி. 84:
30-32). 'இத்தொடியை நின கையில் இட்டவர்
யாவர்' எனத் தலைவி வினவ, அதற்குப் புதலவன
அஞ்சினமை கண்டு அவள் 'அஞ்சாதே நீயும் தவ
றிலை; நின் கையினகண் இததொடியைத தநத
பூவெழில் உண்கண்ணவளுந் தவறிலள்; நுநதை
யையும் ஈண்டு நோவாரிலலை; இத்தொடியை
இவன கையிலிட்டவர் யாவரென்று கேட்ட யானே
தவறுடையேன' என்று தனனுள்ளே அழிநது
கூறினாள் (கலி. 84: 36-41). புதல்வன் கையி
னிடத்து நண்டின கண் தன்மைபெற நெருங்கப்
பல அருப்புத் தொழில் சூழப்பட்ட சில

கோற்றொழில் அவிர்கின்ற தொடியினை அணிந்திருந்தான் (கலி. 85:6,7). 'நினக்கென்று வைத்த பாலை உண்டற்கு நினது திண்ணிய தேரிலமைந்த கொடிஞ்சியினைக் கையாலே பிடித்து மெத்தென அசைந்து என் கையிடத்தே வருவாய்' என்று தலைவி புதல்வனை அழைத்தாள் (கலி. 85:18-21). இளைய களிற்றினது தலையிலே தொங்குகின்ற மூன்று வடம் போலப் புதல்வனின் கயந்தலையிடத்தே கையாற் புனைந்த மூன்று வடம் தொங்கியது (கலி. 86:1,2). வண்டினத்திற்கு அஞ்சிய மகளிருள் ஒருத்தி அடியிலே தாழ்ந்த துகிலையும் முடிதாழ இருங் கூந்தலையும் கைகளால் பற்றிக் கொண்டு பூவேய்ந்த கயத்தில் பாய்ந்தாள்; மற்றொருத்தி அத்திரட்சி கொண்ட வண்டுகள் மொய்க்கையினாலே கையாற் கடிய மாட்டாளாய்த் தன மாலையை அறுத்துக் கொண்டு ஓட்டி அதற்கும் அவை போகாமை கண்டு தனக்குக் காப்பாக ஓடத்தில் ஒதுங்குவாள்; மற்றொருத்தி கள்ளின் களிப்பால இமை கூடுதலான பார்வை மறைந்த கண்ணை உடையளாய் மொய்க்கும் வண்டுகளை ஓட்டுகின்றவள் தனது களிப்பாலே அவற்றை ஓட்டும் இடம் அறியாளாய்க் கை சோர்ந்தாள் (கலி. 92:42-50). யாழ் வாசித்தலாற் கவிழ்ந்த கையினை உடையவன் பாணன் (கலி. 95:10). புணர்ச்சிக் காலத்துக் கவுளிடத்துச் செய்யும் வடுக்களையும் செய்யாமல் மெய்ம் முழுவதையும் கையாலே எப்பொழுதும் தடவி நீ விரும்பினும் தன்னை வெல்லாமல் கொண்டு புணரும் ஒட்டுதலை யுடையாளது கலவிப் போரைக் கண்டாயும் போலே இருந்தாய்; நின் மனக்குறிப்பை நின் முகம் காட்டிக் கொடுக்கும் எனத் தலைவி தலைவனிடம் ஊடிக்கூறினாள் (கலி. 95:19-22). நல்லவளே, யான் செய்த தவறுகளை என்மேலேயிட்டு என் பொய்களை யெல்லாம் எனக்கு ஏறத் தெளிவித்து என் களவைக் கையோடே பிடித்துக் கொண்டாய்; யானும் நின்னைப் பிழைத்தேன்; இனி எனக்கு நீ அருள் செய்வாயாக எனத் தலைவன் தலைவியை வேண்டினான் (கலி. 95:27,28). 'குதிரை ஏறி வந்தேன்' என்று கூறிய தலைவனிடம் தலைவி, 'கதிர் விரியும் வைகலில் கையிற் பிடித்த அலகாலே குப்பையை வாரிக்கொண்ட மதுரையின் பெரிய முற்றம் போல நின் மெய்யின்கண் கீறியது அக்குதிரைதானோ என்று அவனது பரத்தைமையைக் குறிப்பில் வினவினாள் (கலி.96:22-24). வினை வல பாங்கன தோளின் மேல் கோலை வைத்த கையை யுடையவன (கலி. 101:40). ஏற்றினங்களின் குருதி தோய்ந்த கொம்புகளுடன் ஏறுதழுவினவனின் குடர்கள் சுற்றிப் பிணைக்க அவன் அக்குடரை வாங்கி வயிற்றிலே இடுவது, சிவந்த நூற்கழியை ஒருவன் இரண்டு கையிலும் கோத்துப் பிடித்திருக்க அந்நூலை மூன்று நூலாகக் கொள்கின்றவனை ஒக்கும் (கலி. 103:27-31). பொதுவர் ஏறுகள் துளைத்த தம் புண்களிலிருந்து சோரும் குருதி வழுக்குதலாலே மணலை அள்ளிக் கையைப் பிசைந்து உடம்பையும் திமிர்ந்து தாழ்க்காது மீண்டும் ஏற்றைத் தழுவினர் (கலி. 106:22-25). ஆய்ச்சியர் மேயும் புலத்தில் ஏறுபரத்தலைச் செய்யும்படி செலுத்திய தம் அன்புமிக்க காதலருடைய கையைக் கோத்து இன்பமுற்றுக் குரவையாடுவர் (கலி. 106:31-33). முடிக்கும் பூ இது வென்றறியாத தன் கூந்தலிலே ஏதிலான் கையாலே புனைந்த கண்ணியை முடித்தாள் என்று தாய் கேட்பின் என்னாகுமோ எனத் தலைவி தோழியை வினவினாள் (கலி. 107:15-17). நெய்யைக் கடைந்து வாங்கின பாலிடத்து நுகர்வார்க்குச் சிறிதும் பயன்படாது அவர் கை சென்று தோய்ந்து விடும் அளவில் அமையும் (கலி. 110:17,18). பிறர் காணாமல் உண்ட கள்ளின் களிப்பு மெய்யிடத்தே தோன்றிப் பின் நாணாமற் சென்று பிறர் நடுங்கும்படி கள்ளுண்டதனை உரைத்தாற் போன்று நாம் கரந்த களவொழுக்கமும் வெளிப்பட்டுக் கையோடு பிடிக்கப்பட்டோம் எனத் தலைவி தோழியிடம் கூறினாள் (கலி. 115:1-3). ஆயர்மகன் சூடி வந்த முல்லைத் தொடையும் கண்ணியும் வெண்ணெய் தேய்க்க விரித்த தலைவியின் கூந்தலிலிருந்து வீழ்ந்ததைக் கண்ட செவிலி நெருப்பினைக் கையால் தொட்டவர் போல விதிர்ப்புற்றாள் (கலி.115:4-11). 'தொய்யில் எழுதின வனமுலையையுடையாய், நின் கையிடத்துள்ளது யாது' எனத் தலைவன் வினவத் தலைவி 'என் கையிலுள்ளது காதலையுடைய புலைத்தி விற்பதற்காக முடைந்ததொரு புட்டில்' என்று கூறினாள் (கலி.117:4-7). கையாலே வாசித்தலையுடைய யாழினது இசையைப் போன்ற ஓசையை உடைய இன வண்டுகள் ஆர்த்தன (கலி.131:8,9). கங்குலில் தோன்றிய கனவில் தலைவன் தோன்றினானாக, யான் அவனை வளைத்துப் பிடித்துக் கொண்டேன்; அங்ஙனம் பிடித்துக் காண்பேனாகப் பையென விழிக்க, யான் பிடித்த கையுள்ளே மறைந்து போயினான் என்று பிரிவிடையாற்றாத பெருந்திணைத் தலைவி பேதுற்று மொழிந்தாள் (கலி. 142:33-36). பிரிவிடை ஆற்றாத தலைவி ஞாயிற்றை நோக்கி, 'கதிர்பகா ஞாயிறே, அவரை நினைத்துத் தேடிப்பிடித்து என் கையிடத்தில் தப்பாது தருவையாயின் என் காமத்தீ அவியும்' என்றும் 'நீ மலையிற் சேர்ந்து மறைவை

யாயின் மீண்டும் நீ கடலில் தோன்றிப் பகலைச் செய்யும் வரை யான் என் தலைவனைத் தேடும்படி கை விளக்காகச் சில கதிர்களைத் தருக' என்றும் கலங்கி மொழிந்தாள் (கலி. 142:37-44). தலைவன் தலைவியின் நீங்குதலில்லாது அரிமயிரினை உடைய முன் கையிடத்துக் கிடந்து சுழலும் வளையிடத்தைப் பிடித்து அவளைத தெளிவித்துக் கூடினான் (கலி. 147:36,37). எண்ணிறந்தமையான் நின் கைகள் நின் புகழை யொத்தன எனத் திருமாலைக் கடுவனிள வெயினனார் போற்றுவர் (பரி. 3:31,32). நின் பெண் வடிவத்தைக் கண்டு மகிழ்ந்த மகிழ்ச்சியே அவுணர்க்கு அச்சமாய் முடிய அமரர்க்கு நல்லமிர்தினைப் பகுத்தளித்ததால் நடுவுநிலைமை திறம்பிய நயமில்லாத ஒரு கையை உடையை எனத் திருமாலைக் கடுவனிள வெயினனார் வஞ்சப் புகழ்ச்சியாகக் குறிப்பிடுவர் (பரி. 3:33,34). 'இருகை மாஅல், முக்கை முனிவ, நாற்கை யண்ணல், ஐங்கை மைந்த, அறுகை நெடுவேள், எழுகை யாள, எண் கை ஏந்தல், ஒன்பதிற்றுத் தடக்கை மன்பேராள, பதிற்றுக்கை மதவலி நூற்றுக்கை யாற்றல் ஆயிரம் விரித்த கைம்மாய மள்ள, பதினாயிரங்கை முதுமொழி முதல்வ, நூறாயிரங்கை ஆறறி கடவுள்' என்று கடுவனிள வெயினனார் திருமாலை விளித்துப் போற்றுவர் (பரி. 3:35-43). திருமால் தம் அன்பர் தொழுத கையினது தாழ்சசிக்கண் அகப்படுவார் (பரி. 4:70,71). இளம் பருவத்திலேயே விரும்பி விளையாடிய போரில் செவ்வேளின் வறுங்கைக்கு இந்திரன் தோற்றோடினான் (பரி. 5:55,56). இந்திரன், அனலன், இயமன் முதலியோர் கொடுத்த மறி. மயில், கோழிச் சேவல், வில், தோமரம், வாள், ஈட்டி, குடாரி, கணிச்சி, மழு, பாசம், மணி ஆகியவற்றைச் செவ்வேள் தம் பனனிரு கையிலும் கொண்டார் (பரி. 5: 55-68). 'முன்பு எனக்காகக் கொய்து வந்த தளிரெல்லாம் வாடாதிருந்தன; இப்பொழுது வாடின; வேறொருத்திக்குக் கொடுத்த தளிரை அவள் ஏற்க மறுத்து அதனை இங்குக் கொணடு வந்ததுதான் தளிரின் வாட்டத்திற்குக் காரணம்; நின் மார்பினில அணிந்த தார் வாடுமாறு தளிரைக் கொய்தும் அவள் உடன்பட வில்லையோ, கொய்த தழையைக் கையிற் கொண்டு சென்று நீ செய்த வணக்கத்திற்கும் அவள் நேர்ந்திலளோ' எனக் காதற்பரத்தை தலைவனிடம் வினவினாள் (பரி. 6: 61-67). ஊடிய காதற்பரத்தையிடம் தலைவன் தண் பரங்குன்றின தலையைக் கையால் தொட்டேன் எனச் சூளுரைத்து ஊடல் தீர்க்க முயன்றான் (பரி. 6:94,95). வையை யாறு தன்பால் புனலாடுவாரின் கண்ணி, கைவளை, ஆழி முதலியவற்றைக் கவர்ந்தது (பரி. 7:43-48). வையையில் புனலாடுவாருள் ஒருத்தி மேல் வேறொருத்தி நீரை அள்ளி வீசினாள்; அதற்குத் தோற்று அவள் தன் கண்களைக் கையால் மூடிகொண்டாள்; உடனே அவள் மேல் நீர் வீசிய பெண் தன் பொனனாணால் அவளது தோளைக் கட்டிச் சிறைப்பிடிக்க, அவளுககுப் பரிந்து அவளது கைககட்டை நீக்க மற்றொருத்தி விரைந்தாள் (பரி. 7:51-57). தலைவனது பொய்ச் சூளால் வரும் துன்பத்தை நீக்கத் தலைவி தன் கையால் மணியடித்துச் செவ்வேளை வணங்குவாள் (பரி. 8:84-89). மகளிர்தம் கைகள் தாமரை மலரை ஒத்தன (பரி. 8:115). தேவசேனை செவ்வேளிடம் 'நின் இயல்பறியாது அகப்பட்ட மகளிர் திறம் மழை பெய்ய வேண்டி வருந்தும் சோலையை ஒக்கும்; ஆதலால் அவரே தவறுடையராவ தன்றி நீ தவறுடையை யல்லை; நின்னை எயதும் திருவுடையார் மென்தோள் மேல் தங்கி அருளுதலும் நினக்கு இன்று; ஆகையால் நின் மாணலம் உண்ணக் கடவேனோ' எனத் தனனைக் கையாற் சுட்டிச் சொல்லி வெகுண்ட நோக்கததுடன் வள்ளி காரணமாகப் புலவி கொணடாள் (பரி. 9:30-36). மதுரையில் அணிநிலை மாடத்துக கையினால் வேங்கை போன்ற உருவினைச் செய்தமைத்திருந தனர் (பரி. 10:45,46). வறுமையுற்ற புலவர்தம் ஏற்ற கை நிறைய வழுதி பொன வழங்கினான் (பரி. 10:126,127). வையையுள் வாழைத் தண்டைத் தழுவி நீராடும் ஒருவன் ஒருத்தியைக் கணட பொழுதிலே தன்நெஞ்சு அழிநதான்; அவ்வளவிலே புனல் அவன் கையை வலித்தது (பரி. 11:106,107). வையையை நோக்கிக் கழுத்தோடு பொருந்திய கையை நீங்காத காதலரைத் தழுவும் வீறு பெறுக என வேண்டுவோம் எனறு மகளிர் சிலர் கூறினர் (பரி. 11:116,117). வங்கியத்தின இசையெழ, முழவு முதலியவற்றின் ஓசையையுடைய தாளத்தைஅளநது அழகுதக நிருத்தத்தின்கண் ஒக்கத் திகழும் அரிவையர் தம் நேரிறை முன் கையால் அத்தாளததைத் தூக்கி அளந்தனர் (பரி. 12:40-44). தன் கணவனை அணங்கை யொப்பா ளொருத்தி நோக்க, அது கண்டு பொறாத தலைவி அவனைக் கோதையைக் கோலாக் கொண்டு புடைத்துத் தன் மார்பிலுள்ள வடத்தை வாங்கி முன் கையை இறுகக்கட்டி, நீ பிழையுடையை என்று சினநது கூறினாள் (பரி. 12: 57-60). பொற்குழையைப் போலத் தொங்கும்படி தன் காதில் அசோக மலரைச் செருகிக் கொண்டு பூங்கொடி போல அசைந்து தன் முன்கையாலே கூந்தலிலுள்ள கண்ணியை அழகாகத் திருத்தும்

இவள் செய்த இக்குறிப்புத் தொழிலால் அருகிலிருக்கும் இவன் நேரிறை முன்கையினையுடைய இந் நலலாளது கணவனாக இருந்தான்; காண்மின் என வையையில நீராடியோரைச் சுட்டிக் காட்டிச் சிலர் கூறினர் (பரி. 12:87-92). பெரிய மேகத்தின் இருபுறமும் இருசுடர்கள இலங்குதல் போல நேமியையும் சஙகையும் ஏந்திய கையுடனே விளங்கும் திருமாலின் மார்பைத் தொழுவோர்க்குத் துறக்க உலகம் உரிமையுடையதாகும (பரி. 13:7-13). திருமாலின் கை வளவிய இதழையுடைய தாமரைப் பூவை யொககும் (பரி. 13:50,51). வளை முன்கை வணங்கிறையார் (பரி. 17:33). கார்காலத்தில் தோன்றும காந்தட்குலைகள் செறிந்த அழகால போரில் தோற்றுக் கட்டுண்டார் கையை யொக்கும் (பரி. 18:34,35). தும்பி கட்டவிழ்க்கும் அழகு மிக்க காந்தள் முகைகள் யாழ் நரம்பின புரியை நெகிழ்ப்பார் கையை யொத்தன (பரி. 18:36,37). திருப்பரங் குன்றத்திற்கு முருகனைக் காணச் சென்றோரில் சிலர் கைவைத்து ஊதிக் குழலின் இசையை அளந்தனர் (பரி. 19:41). கமழ் குலைக் காந்தள் கை போலப பூத்தன (பரி.19:76). கொடி போன்ற பெண்களின் கை போல் காந்தள் முகை குவிந்தன (பரி. 20:98) அவுணர் தமக்குத் துணையாக மதித்த மாமுதல் தடிந்து புள்ளொடு பெயரிய பொருப்பை (கிரவுஞ்சகிரியை) பிளந்த வேல் செவ்வேளின் கையிலுள்ளது (பரி. 21:8,9). சுனையில் குளித்த ஒருத்தி கரையில் நினற தன கேள்வனைப் புணையாகிய மூங்கிலை நீரில் அழுந்தும தன்னுடைய கையின்கண் தருக என வேண்டினாள் (பரி. 21:39-41). மதுரை மக்கள் கையாற் புனையப் பட்ட தாரினை அணிந்தனர் (பரி. தி. 2:11).

**2. யானையின் துதிக்கை.** பெரிய கை – துதிக்கை-உடைய யானையின் கழுத்திடத்தே யிருந்து கூற்றத்தின் கொலைத் தொழிலைச் செய்தவன் கருங்கை யொள்வாட் பெரும்பெயர் வழுதி (புறம். 3:11–13). போரில் புண்பட்ட யானையினது துளையுடைய பெருங்கை வாயுடனே துணிந்து வீழ்நது கலப்பை யொப்ப நிலத்தின் மேலே புரண்டது (புறம். 19:9-11). யானை தூங்கு கையொடு ஓங்கு நடையுடையது (புறம். 22:1,8). ஆவூர் முற்றுகையிடப்பட்ட போது யானை கட்டுத்தறியில் கம்பத்தைச் சாய்த்து நில மிசைப் புரளும கையினதாய்ப் பெருமூச்செறிந்து இடியென முழங்கிற்று (புறம். 44:3-5). மலையை ஒத்த யானை பனையை ஒத்த தடக்கையை உடையது (புறம். 161:16,17). மாந்தரஞ் சேரல் இரும்பொறை துஞ்சியதால் போர் யானை கையை நிலததே இட்டு வைத்து உறங்கியது (புறம். 229:18,22). பொருது இறந்த ஒருகை யுடைய யானையின் கொம்பில் வளைந்த வாளைத் திருத்தி மறவன பகைவனைப் புறங்கண்டு நகைத்தான (புறம். 284:5-8). இரும்பனை யன்ன பெருங்கை யானை (புறம. 340:7; பெரு. 436). கருங்கை யானை மேகமாக உருவகிக்கப்பட்டது (புறம். 369:2). புகர் முக வேழம் பல்பிணர்த் தடக்கை யுடையது (புறம. 371:19,20). யானை ஏநதுகோட்டு இரும்பிணர்த் தடக்கை உடையது (புறம். 387:10,11). யானையின் கைகள் வெட்டப்பட்டு அவை கிடந்த போர்க்களம் பனைமரத்தை வெட்டிய புனம் போலக் காணப் பட்டது (பதி. 36.5,6). பெருங்கை மதமா (பதி. 43:4). தடக்கை யானை (பதி. 51:29). ஆடுகோட்பாட்டுச் சேரலாதனின் களிறுகள் பகைவர் மதிலிலுள்ள கதவைக் காணின் மதத்தால் குத்துகோலைக் கடந்து தன் நுதலினிடத்தே ஏந்திய கையைச் சுருட்டி தோட்டியையும கடந்து அடங்காது அக் கதவைத் தன் கொமபாற் குத்தும் (பதி. 53:16-21). பெருஞ்சேரலிரும்பொறை போரிற் புணபட்ட பெருஙகையை யுடைய யானைத் தொகுதியின துயரைப் புண்ணை யாற்றிப் போக்கிப் பின் அதனை இரப்போர்க்கு நல்கினான் (பதி. 76:5-8). திருக்கிளா செல்வன் (இந்திரன) ஏறிய யானை தாழ்பெருந் தடக்கையினை யுடையது (முரு. 158, 159). பிடியினுடைய பெருமையுடைய கையைப் போலச் செறிந்து ஒன்றித் திரண்ட குறங்கினை யுடையவள் பாடினி (பொரு. 40-47). யானை பருத்த பெரிய தடக்கையினை உடையது (பொரு. 171,172). ஈர்ந்து நிலத்தே செறியும் கரிய பிடியினது பெருமையை யுடைய கைபோல அடியோடு தொடர்பு பட்டுப் பருத்து மலையிலே வளர்ந்த வாழையெனத் திரண்டு விறலியின் துடை ஒன்றோடொனறு நெருங்கியிருக்கும் (சிறு. 18-21). உழவர் தங்கை பிடியின் கையைப் போன்ற பின்னிய மயிர் வீழ்நது கிடக்கும் சிறிய முதுகினை யுடையவள் (சிறு. 190-191). நெடுங்கை யானையின நெயம் மிதி கவளத்தை மந்தி கவரும் (பெரு. 394). நாற்சந்தி யான முற்றத்தே நின்ற காவல் யானை கருமபோடு நெற்கதிரைக் கட்டிய உணவையும் அதிமதுரத் தழையையும் உண்ணாமல் அவற்றால தன நெற்றியைத் துடைத்துக் கூரிய முனையுடைய கொம்பினிடத்தே ஏறட்ட தன் கையிடத்தே அவற்றைக் கொண்டு நினறது (முல்லை. 29-34). பாம்பு பதைப் பது போனற பதைப்பினை எய்திப் பகைவரது யானையின் பருத்த கைகள் அற்று வீழும்படி செய்து அரசர்க்கு வெற்றி உண்டாக்கி வீரர் செஞ் சோற்றுக் கடன் கழித்தனர் (முல்லை. 69-72).

மாயோன் பிறந்த ஓண நன்னாளில் தோட்டி வெட்டிய வடுவழுந்திய முகத்தையும் பலகாலும் போர் செய்தலால் தழும்பிருந்த போரைத் தாங்கும் பெரிய கையையுமுடைய கடுங்களிறுகளை மறவர் தம்முள் பொரச் செய்தனர் (மது. 591-597). பெருஞ் செய் ஆடவர் வினைநவில் யானையின் நீண்ட திரண்ட தடக்கை நிலத்திற் புரளப் போர்க்களத் தில் யானையைக் கொன்றனர் (நெடு. 169-171). மூங்கிலைத் தின்பதற்கு மேனோக்கி நின்று வருந்தின யானை அவ்வருத்தம் தீரும்படி முத்து நிறைந்த கொம்பிலே ஏறட்டுத் தொங்கும் கையை யொப்பச் சிறுதினையின் தலைவளைந்த பெரிய கதிர்கள் தோன்றின (குறி. 35-38). கானவர் அம் பெய்து புனத்தினின்றும் ஓட்டுதலினால் மதஞ் செருக்கிய மையல் வேழம் மரங்களை முறித்து இடியென முழங்கித் தன் தலைமைக்குத் தக்க தாய்க் கரிய சருச்சரை பொருந்திய பெரிய கையைச் சுருட்டி நிலத்தே எறிந்து கூற்றுவனைப் போல விரைந்தது (குறி. 160-165). பெருங்கை யானை தன்னை அகப்படுத்த அகழ்ந்த குழியில் ஏறுதற்கு அரிய கரைகளைக் கோட்டாலே இடியும்படி குத்திக் குழியைத் தூர்த்துப் பிடியை அடையும் (பட். 223-225). தம்மில் விளையாடிப் பொருகின்ற யானைக் கன்றுகளின் ஒன்றோடு ஒன்று சேர்ந்த கைகளைப் போனறு தினை தம்மிற் பிணையும் கதிர்களை உடையது (மலை. 107,108). பிடியின் கையை யொத்தது சிவந்த கணனை யுடைய வரால் (மலை. 457). தலைவியின் பின்னின கூந்தல் பிடியானையின் கையை ஒக்கும் (அகம். 9: 22). ஞாயிற்றின் வெம்மையால் வாடின மடப்பிடி மேலே உயர்த்திய தன் கையும் மறையத் தக்க ஆழ்ந்த வெள்ளத்தில் களிற்றுடன் படிந்து விளை யாடும் (அகம். 43:3,4). இற்றியின் நெடிய விழுது துறுகல்லைத் தீண்டிக் காற்றடித்தலால் அசைவது பெருங்கை யானை கையை அசைப்பது போல் தோன்றும் (அகம். 57:6-8). கடுங்கண் யானை தன் நெடுங்கையைச் சேர்த்துக் காலால் உதைத்துண் டாக்கிய புழுதியில் குறும்பூழ்ச் சேவல் பெடை யோடு குடையும் (அகம். 63:4-7). வயக்களிற் றொருத் தல் கரிய சருசசரையுடைய தடக்கையால் ஏமுறத் தழுவவும் முதற்சூலையுடைய மடப்பிடி ஆளியினை அஞ்சி நடுங்கும் (அகம். 78: 1-6). இரும்புலி தொலைத்த பெருங்கை யானையின் மதநீரில் வண்டினம் ஆர்ப்ப அதனை யாழிசை யென்று கருதி மலைக்குகையில் அசுணம் கூர்ந்து கேட்கும் (அகம். 88:9-12). கூற்றுவனை ஒத்த வலியுடன ஆட்களை நிலத்தின்கண்ணே எறிந்து கொல்லுத லைத் தப்பாத அச்சம் வருகின்ற தடக்கையினை யுடையது கடும்பகட்டு யானை (அகம். 93: 18-20). ஓடைக்குன்றத்து ஞெமையின் மீது பின்னிய சிலம் பின் கூடு மேற்காற்றால் அசைய, அதனை மேகம் என மருண்ட களிறுகள் பலவும் ஒருங்கே தூக்கிய வருத்தத்தினை யுடைய நெடுங்கைகள் கூத்தரது தூம்பு போலத் தோன்றி ஒலிக்கும் (அகம். 111: 5-9). பெரிய கையினை யுடையது யானை (அகம். 118:8). மறப்புலியுடன் பொருதலால் பிளவுபட்ட சென்னியின்கண் உறுநோய் வருத்த உண்ணுநீர் வேட்டுச் சென்ற யானை வறுஞ்சுனை யிடத்தே தனது கையைத் தோய்த்து நீரின்மையால் பெருமூச் செறியும் (அகம். 119: 16-19). யானை திரண்ட பனையை யொத்த பருத்த அழகிய வலிய வளைந்த கையையுடையது (அகம். 148:1,3). பாழிடத்திலுள்ள முருங்கையைத் தின்ற பெருங்கை யானையின் சிறுபுறம் உராய்தலின் நெடுஞ்சுவரின் விட்ட மரம் வீழ்ந்தது (அகம். 167 : 10 - 13). ஒருங்கு பிணித்து நெய பூசப்பெறும் நறு நாற்றமுடைய கூந்தல், சிறுகண் இரும்பிடியின் தடக்கையினை ஒக்கும் (அகம். 177:3 - 5). நெருப்புப் பரந்த பெரிய காட்டிடத்துச் சிறுகண் யானை பேய்த் தேரின்பால் தன் நெடிய கையினை நீட்டியும் பெரிய வாயினைத் திறந்தும் நீரினைப் பெறாது அக்காட்டை வெறுத்துக் கடந்து செலலும் (அகம். 179:2-6). புலிப்பகை வென்ற புண்கூர் யானை கல் லகச் சிலம்பில் கையை உயர்த்தி உயிர்ப்பின் வேங்கைப்பூ மேலெழுந்து புதரின்மேல பரவிக் கிடக்கும் (அகம். 202:3-8). வெயிலினால் வருந்திய களிற்றொருத்தல சருச்சரை அழிந்த பெருங்கையி னால் நீர் வேண்டி உவர்க்கிணற்றினைத் துழாவும் (அகம். 207:9-11). இரும்புலி தொலைத்த பெருங்கை வேழம் (அகம். 272:1). ஞாயிறு காயும் வெம்மை மிக்க இடத்தே புலியினை வென்ற யானை வருந்தி மதம் வாடிக் கொம்பிலே பெரிய கையை அணைத் துக்கொண்டு பல மரங்களை உடைய ஒருபக்கத்தே பிடியொடு வதியும் (அகம். 295:2-6). நெடுநல் யானை நீர் வேட்டுச் சுனையின்கண் இட்ட கையினைப் புலிக்குட்டி கடித்து முழங்கும் (அகம். 329:10-13). வேனிற் காலத்தில் இளம் பனையைப் போலக் கையை உயர்த்தி யானையின் பெருங்கூட்டம் மேகத்தை நோக்கிக் கதறும் (அகம். 333:11,12). மேகம் பெரிய களிற்றின் பருத்த கை போலக் கால் வீழ்த்தி மழை பெய்யும் (அகம். 334:5,9). புலி பாய்ந்த தெனக் களிறு முழக்கிய ஒலியினை அஞ்சித் தன் கன்றினை விட்டு ஓடிய மடப்பிடி தன் கையைத் தலை மீது வைத்துக் கொண்ட மயக்கத்துடன்

கன்றினை விரைந்து தேடித் திரியும் (அகம். 347:11-15). களிறு தனது வரிகள தங்கிய நெற்றியில் வைத்த வலிமை குன்றிய பெரிய கை குன்றத் திடத்தே ஊர்ந்து செல்லும் பாம்பு போலத் தோன்றியது (அகம. 349:11-13). பெருங்களிற்று இனநிரை காட்டிலுள்ள தீஞ்சுளைப் பலவின் கனிகளைத் தம் கைகளால் தோணடித் தின்று செல்லும் (அகம். 357:8-10). களிறு மண்ணில் ஊன்றிய வெண்கொம்பினை அசைத்துப் பெயர்கக இயலாது தன் வாயில் நிறையுமாறு புகுத்திய வலிகுன்றிய பெரிய கை குன்றில் நுழையும் பாம்பு போலத் தோன்றும் (அகம். 391: 11-13). வெண்கோட்டு யானை தாழ்பெரும் தடக்கையினை யுடையது (அகம். 392:1,2). பிடியின் பசியைக களைய வேண்டிப் பெருங்கை வேழம் யாமரத்தின் மென்சினையை ஒடித்தது (குறு. 37:2,3). குறிய கருமையான பிடியானை கையை மறைத்தாற் போன்று கரிய நிறத்தை யுடைய துறுகல் தோன்றியது (குறு. 111:4,5). நெடுங்கை வன்மான் (யானை) (குறு. 141:4). செந்திணைக் கதிர்கள் மடப்பிடியின் தடக்கையினைப் போனறனவாகி, பால் நிரம்பிக் கரியை எடுக்கின்ற குறட்டைப் போல வளைந்தன (குறு. 198:2-4). தடமருப்பு யானை யாமரங்களின் அடியைத் தன் கொம்பாற் குத்திக் கிளைகளை வன்மை பொருந்திய வளைந்த கையினால் வளைத்து யானைப் பெரு நிரையின் உறுபசியைத் தீர்க்கும் (குறு. 255: 1-5) களிறு தன் மடப்பிடி வருத்தத்தைப் பொறாமல் யாமரம் அழியக் குத்திப் பசையற்ற வெண்பட்டையைக் கொண்டு வறுங்கையைச் சுவைத்து வருந்தும் (குறு. 307:4-8). கையுடைய களிறுகள் பிடியொடு சேர்ந்து மேகம் சூழ்ந்த மலையிடததை அடையும்படி மாலைக்காலததே பெருமழை பொழிநதது (குறு. 319:3-5). மடப்பிடியைத் தழுவீத் தடக்கை யானை குன்றிடத்துள்ள சிற்றூரிடத்தே இறங்கிச் செலலும் (குறு. 332: 4-5). தினையின் பெருங்கதிர் பெண்யானையின கை போன்றது (குறு. 360: 5). காட்டிலுள்ள யாமரக் கிளையினைப் பிளக்கும்வலிமை இளமையின யானை தன் கையை மடித்து வருந்தும் (குறு. 388: 5-7). இடியேறு மலைமேல் மோதி இளமபிடி வருந்தத் தன் கையை ஊனறி இறங்கும் களிற்றினை எறிந்து அதனைக் கொனறது (நற். 114: 9-12). பல்பிணர்த் தடக்கை ஏந்து கோட்டு யானை தேர்ப்படையோடு பொருதது (நற். 141: 8,9). பெருஙகை யானை இரும்பிணர்த் தடக்கையால் ஊற்றுக்குழியில் நீரை முகநது கொண்டு பிடியெதிரே ஓடும் (நற். 186: 1-3). நிலததின்கண் ஈர்த்தலையுடைய நெடிய கையை உடையது யானை (நற். 194: 4, 5). கன்றோடு மடப்பிடியைத் தழுவிய தடக்கை வேழம் வேங்கையின பூங்கொத்துக்களாகிய உணவினைப் புறந்தந்து ஊட்டும் (நற். 202: 3-6). கானவன் முதுகு போன்ற பெரிய கையினையுடைய வேழம் வேட்டுவனது எறிகணைக்கு அஞ்சிப் பிளிறும் (நற்.228:5-8). சிறுகண் யானைப் பெருங்கை ஈரினம் சுனையிலே கூடி வாழையை வெறுத்துப் பலாப்பழம் தின்னும் (நற். 232: 1-5). ஓமையின் தழையை ஒடித்துத் தின்ற உயர்ந்த கோட்டினையுடைய யானை தன் புள்ளியை யுடைய நீண்ட கையைச் சுருட்டித் தூக்கி வேறொன்றனை அறிகின்றதன் காரணமாக இடையீடுபட்டுப் பிளிற்றியதனைப் பிடியானை வேறாக வுணர்ந்து விடரகம் சிலம்பப் புலம்பும் (நற். 318: 5-9). இரும்புலி தொலைத்த பெருங்கை யானை வெஞ்சின இடி போல முழங்கும் (நற். 353. 9, 10). யானைக் கன்று பாகர் இருப்பு முள்ளாற் குத்தி அலைத்தலினாலே துன்புற்றுத் தன் கையிடையே வைத்த கவளத்தை மெய்யின் மேல் வாரி இறைத்துக் கொள்ளும் (நற். 360: 7-9). செந்தினை முறம் போலும் செவியையுடைய யானையினது வளைந்த கைபோல வளைந்து தலைசாய்ந்த கதிர்களை உடையது (நற். 376: 1, 2). வெம்மை மிக்க சுரத்திடத்தே சிறுகண் யானை தன் புள்ளிகளையும் வரிகளையுமுடைய தடக்கையைச் சுடுதல் அஞ்சி நிலத்தைத் தொட்டுத் தோய்ந்து செல்லாது (ஐங். 327:1-3). விழுத்தொடை மறவர் வில்லிடத் தொலைந்தோரது எழுத்துடைய நடுகல்லினைப் போன்று யானை சருச்சரை பொருந்திய பெருங்கையினை யுடையது (ஐங். 352: 1-3). நீரற்ற கடுஞ்சுனையைச் சூழ்ந்து தண்ணீர் உண்ணுதலை விரும்பிய உடம்பு வருநதின யானைகள் தாம் சேரப் பதிந்து அவ்விடத்தில் கைகள் சுடப்படுதலினால் ஒழுங்குபட்ட அந்த யானைத்திரள் வெவ்வேறாகும்படி மலைச் சாரல் தோறும் ஓடும் (கலி. 12: 3-6). களிறுகள் இருக்கும் உலர்ந்த மூங்கிலை யுடைய மலையை நெருப்புச் சூழ்ந்திட கணையத்தை மாறுபடுகின்ற தடக்கையினை யுடைய தலைமை வேழம் அந் நெருப்பை அதர்பட மிதித்துத் தன இனத்தோடு கூடி வெளியேறும் (கலி. 25:5-11). பரத்தையாகிய புத்தியானை பிறர்க்கு வருத்தத்தைச் செய்யும் மெல்லிய தோளாகிய தடக்கையாலே வாங்கிக் கொண்டு தன்னைக் கணடாருடைய நலமாகிய கவளத்தை முத்தை யொக்கும் முறுவலால் வெண்பல்லைத் திறந்து காட்டிக் கொள்ளும் (கலி. 97: 19,20). கூநதற் கை நீட்டியான் (துச்சாதனன்) நெஞ்சைப் பிளந்து பகைவர் நடுவே தன் வஞ்சினத்தை முடித்

தவன் (வீமன்) (கலி. 101:18-20) சுங்கை மதமா (பரி. 10:49). அருவிகள் சொரிந்த பலவகையான மலர்களை அலைகள் தள்ளிக் கொண்டு வரச் சுருங்கையின் நடுவாகிய வழியிலே வரும் புனலை மதுரையிலுள்ள மதில் சொரியும் போது அப்புனல் கடுமாவாகிய களிறுகள் கையைத் தூக்கிவிடும் நீரை ஒத்தது (பரி. 20:100-107).

3. செயல். 'பரத்தையோடு நேற்றுப் புனலாட்டயர்ந்தனை எனப் பலரும் கூறுப; யாம் அதனைப் பொய்யென்று புறத்தே மூடி மறைக்கவும் எம் கை - செயல் - கடந்து அலராயிற்று' என்று தோழி தலைவனிடம் வாயில் மறுத்துக் கூறினாள் (அகம். 116: 9-12). காட்டரண்களில் உள்ளார் குடியெழுந்தோடிய பாழ்பட்ட நாட்டிடத்தே பனங்குருத்தைத் தின்னும் யானை இளைய ஞாயிற்றை உடைய காலையிலே துயிலு மிடத்தினில் கையொடுங்கி அசைந்து கொண்டிருக்கும் (அகம். 187:17-20). மலைநாடனது கேண்மை மெய்யுறு புணர்ச்சியைத் தருவதோர் கையில் தங்கியது எனத் தோழி கூறினாள் (குறு. 308:6,7). கையுற வீழ்ந்த முகில்கள் ஒரு சிறிதும் இல்லாத தூய வானத்தோடு கூடிய பொழுதில் காதலர் வந்தார் (ஐங். 235:1 2).

4. ஒழுக்கம். அரசமாதேவிக்கு ஆற்றாமை மிக்க கை - ஒழுக்கம் - மிகுதலினால் செம்முகச் செவிலியர் திரண்டு குறியவும் நெடியவுமான உரைகளைப் பலகாற் சொல்லித் தேற்றினர் (நெடு. 152-154). யான் கூறுகின்ற மெய்யைப் பொய்யென்று மயங்கிய நீ கை (உலகவொழுக்கம்) ஒன்றும் அறியாய் போலே இருந்தாய் எனத் தலைவன் ஊடலுற்ற தலைவியிடம் கூறினான் (கலி. 95: 25,26). தலைவி இட்டுக் கூறும் துனிக் காரணத்தைக் கையாறாக (ஒழுக்கநெறியாக) கொண்டு யான் கூறியதைப் பொய்ச் சூள் என்று கருதி இறைவன் என்னை ஒறுக்கும் ஆதலின் அதனைத் தடுக்க அவன் அடி சேர்ந்து ஆற்றுக எனத் தோழியைத் தலைவன் வேண்டினான் (பரி. 8: 77-79). தெய்வ விழாவும் விருந்தயர்தலும் ஆகிய இவை திருப்பரங்குன்றிற்கும் பாண்டியனது மதுரைக்கும் தம்மில் காரண காரியங்களாய்த் தடுமாறி வருதல் இல்லற நெறியாதலின் கை ஆயிற்று (பரி. 17:42-46).

5. ஒழுங்கு. பூதங்கள் தம் சுற்றத்துடன் கைபுணர்ந்து - ஒழுங்காகச் செறிந்து - துணங்கைக் கூத்தாடும் (பெரு. 234,235). நெய்யை உமிழும் திரிக்குழாயை உடைய சிற்றாட்கள் நெடுந்திரியைக் கொளுத்திக் கையமை (ஒழுங்காய் அமைந்த) விளக்குகள் அவியுந்தோறும் தம் கையிலுள்ள பந்தத்தைக் கொளுத்தினர் (முல்லை. 48, 49). மகளிரது கை மாட்சிமைப்பட்ட தோளி என்னும் விளையாட்டைப் போன்று பிடாமரத்திடத்தே மயிலின் கூட்டம் மெல்லென இயங்கும் (அகம். 344:3-6).

6. அழகு. அறனில் யாய் தலைவியின் கை - அழகு - மிகச் சில்சுணங் கணிந்த செறிந்து வீங்கு இள முலைகளை ஒலிவரும் கூந்தலோடு பன்முறையும் நோக்கினாள் எனத் தோழி சிறைப்புறம் நின்ற தலைவன் கேட்பத் தலைவியிடம் கூறினாள் (அகம். 302:12-15).

7. இழிவு. களவிற் புணர்ந்த மைந்தர் மாமயிலன்னார் காமம் சிறப்புடைய அக்களவொழுக்கத்தை விட்டுக் கை - இழிவு - கொண்ட கற்பொழுகத்தை உற்றாற் போல, வையை தன் பிறந்தையாகிய மலையைக் கைவிட்டு இருத்தற்குரிய தன் கடற்றலைவன் இல்லத்துத் தனியே சென்றது (பரி. 11:41-44).

8. வழி. தலைவன விழாக் காலத்துத் துணங்கையாடிய களவைக் கைபபடுக்கச் சென்ற போது அவன் நெடிய நிமிர்நத தெரு முடிநத வேறொரு கை - வழி - வந்து புகுந்த வளைந்த விடத்தே எதிர்ப்பட்டான் எனத் தோழி கூறினாள் (நற். 50: 2-5).

9. இடம். 'மணற்சிறுகரை தீம்புனல் தாக்க அழிந்து விழுதல் போலக் காமம் மேன்மேலும் நெருக்க நாணம் தாங்கும் வரையில் தாங்கித் தன கை - இடம் - நில்லாது அழிந்தது; இஃது இரங்கத்தக்கது' என்பது தலைவி கூற்று (குறு. 149). நினனைக் காணின் என்னை உன்னிடத்தே செலுத்தித் தானும் நின் கை (இடத்தே) தங்கி வருந்தும் நெஞ்சு என்னும் தம்மோடு உடனவாழ் பகையுடையார்க்கு நின் மார்பைப் பொருந்தேம் எனறு கருதும் நிறை யென்னும் குணத்தைப் பெறுதல் எளிதனறு' எனத் தலைவி தலைவனிடம் கூறி ஊடல் தீர்ந்தாள் (கலி. 77:21-24).

10. கோடரியின் கை. கொல்லன் அரத்தால் கூர்மை செய்யப் பெற்ற அழகிய வாயினை யுடைய நெடுங் கைக் கோடரி வெட்டுதலால் சோலைகள் தோறும் காவன்மரங்கள் சாய்ந்தன (புறம். 36:6-9).

11. வண்டியின் ஓர் உறுப்பு. சகடம், கணையமரம் இரண்டு சேர்ந்ததைப் போன்ற பருத்த கைகளை யுடைய வலிய பாரை யுடையது (பெரு. 48,50).

12. பக்கப்படை. வேலைச் செலுத்தி எழுகின்ற பகைவரின் கையை - பக்கப்படையை - கவர்கின்ற

விரைந்த தூசிப்படையை யுடையவர் வேந்தர் (பதி. 49:6,7).

13. கைப்பிடி. மலையிடத்தே ஊர்கின்ற பாம்பு போலே யானைக் கொம்பாற் கடைந்திட்ட வெள்ளிய கையினை - கைப்பிடியினை – உடைய ஒள்வாள் தன்னிடத்தே விரவின வரியுடைய கச்சினாலே மறவர் தோளிலே கோக்கப்பட்டு ஒரு பக்கத்தே தொங்கியது (பெரு. 71,72).

14. யானைக்கொம்பு. பத்தலின் துளைகளில் சுள்ளாணிகளைத் தைத்து அதன் குறுக்கே புதியதாகிய வெண்கையினால் - யானைக்கொம்பினால் - செய்த யாப்பை அமைத்துப் பொன்னிறம் போலும் நிறத்தையுடைய தோல் போர்த்தப் பெற்றது (மலை. 25-29).

15. ஆற்றல். 'தேரைச் செலுத்துதலில் கை - ஆற்றல் - உடைய வலவ, பசப்புறு படரால் வருந்திய அன்பு மிக்க இனிய காதலியின் நகைமுகம் காணத் தேரினை விரைந்து இயக்குக' எனத் தலைவன் தேர்ப்பாகனை ஏவினான் (அகம். 344: 11-13).

**கைக்கிளைக்காமம்** – ஒருதலைக் காமம். 'நறுநீர் வையையே, மின்னிழையையும் நறுநுதலையு முடைய மகட்டன்மை மேம்பட்ட கன்னிமை முதிராத கைக்கிளைக் காமத்தை - ஒருதலைக் காமத்தை - தருகின்ற நின்னிடத்து இத்தைந் நீராடலை முற்பிறப்பிற் செய்த தவத்தாலே இப்பிறப்பிற் பெற்றோம்; அதனை நின் நீர்நிறைவின் கண்ணே மறுபிறப்பினும் பெறுவேமாக' எனத் தோழி வையை நோக்கித் தலைவன் கேட்பக் கூறினாள் (பரி.11: 135-140).

**கைக்கொள்ளுதல்** - 1. கைப்பற்றுதல். சோழன் நலங்கிள்ளி பொதியின் மலையினையுடைய பாண்டியனது நல்ல நாட்டுள்ளும் ஏழெயிலின் கதவத்தை அழித்துக் கைக்கொண்டு - கைப்பற்றி – தன் புலிப் பொறியைப் பொறித்தான் (புறம். 33:7-9). மறவன் ஊரினை நீங்கினதும் இலன்; தனக்கு அரணாகக் கருதிக் காட்டினைக் கைக்கொண்டதும் இலன்; இற்றைய நாட்காலையில் பகைவர் இனநிரை போகின்ற இடத்தைப் பார்த்துத் தன் கையாற் குறித்து மெல்ல எண்ணிக் கரந்தையார் பூசலை மாற்றி வில்லாலே அவ்வின நிரையைக் கவர்ந்து வந்தனன் என மறவன் ஒருவன் புகழ் போற்றப் படுகின்றது (புறம். 257 : 6-10). ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் பகைவர்தம் தார்ப்படை அழிந்து அலறும்படி நீடுவரை அடுக்கத்தையுடைய அவர் நாடுகளைக் கைக்கொண்டு பொருது சினந்தணிந்த செருப்புகல் ஆண்மையுடையவன் (பதி. 55:16-19).

2. கருத்திற் கொள்ளுதல். திசைமயக்கம் நாடியறிவார் கூறிய திசையைக் கைக்கொண்டு - கருத்திற் கொண்டு - செல்வீர் எனக் கூத்தர் ஆற்றுப்படுத்தப் பெறுவர் (மலை. 287).

**கைகவர் இரும்பு** - உலைத்துருத்தியின் வாயிரும்பு. பிடியானை மூச்சு விட்டாற் போலக் காற்று விடும் கைகவர் இரும்பு - உலைத் துருத்தியின் வாயிரும்பு - போன்றது இரட்டைக் கதவமைந்த சுருங்கை வழி (புறம். 345:7-9).

**கைகவித்தல்** - விலக்குதல். 'தலைவன் நாம் பார்க்குங்கால் பிறர்காண நம்மை நோக்கித் தொழுகிறான்; இங்ஙனம் தொழுது நமக்குப் பழியைத் தூற்றுமென்று கருதிக் கைகவித்து - (தொழுதலை) விலக்கி - போக்குங்கால் போகாம லிருக்கிறான்; அவனை நம்பால் வாராமற் காத்தல் அரிது' என்று தோழி தலைவியிடம் கூறினாள் (கலி. 63:1-4).

**கைகாய்த்தல்** – குளிரின்மிகுதியால் கையைக் காய்த்தல். வாடைப்பாசறைக்கண் குளிரின் மிகுதியால் காட்டிலுள்ள மரங்களை யெல்லாம் விறகாக எரித்துக் கை காய்த்திய - கையைக் காய்த்திய - நீடுநாள் இருக்கையை யுடைய இன்ன தன்மைத்தாய் நாள் பல சென்றமையான் நின்னைப் பாடிக் காண வந்தேன்' என்று இளஞ்சேரலிரும் பொறையிடம் பெருங்குன்றூர் கிழார் கூறினார் (பதி. 82:9-11).

**கைசேர்த்தல்** - தூக்கிவைத்தல். மணல் மேட்டில் நின்ற (ஆல) மரத்தில் சீர்மிகு சிறப்பினோன் (தக்கணா மூர்த்தி) தாம் இருப்பதற்கு முன்னே கைசேர்த்த-தூக்கி வைத்த-நீர்நிறைந்த குண்டிகை போல் பழந்தூங்கும் தாழை காணப்பட்டது (கலி. 33:2-4).

**கைதலைவைத்தல்** – கையைத் தலைமீது வைத்து அலறுதல். கலங்குதற்கு ஏதுவாய போர் நிகழும் இடங்களையுடைய சீறூரிலுள்ளார் கைதலை வைத்துக் கலங்கி அழ அவர்தம் கொழுத்த ஆக்களை மழவர் கவர்ந்து செல்வர் (அகம். 129:11,12).

**கைதூவல்** - விட்டொழிதல். உரவு வேல் காளையான தலைவன் பரிசிற் பொருள்களைப் பரிசிலர்க்கு வழங்குதலின் கைதூவான் - விட்டொழியான் - அவன் மனையோளும் பாணர்களை உண்பிக்கவும் பரிசிலரை ஓம்பவும் ஊணொலி அரவமொடு கைதூவாள் ஆயினாள் (புறம். 334:5-11). கூத்தயர்கின்ற விழாவினையுடைய மூதூரிடத்தே ஆடை

களை ஆராய்ந்து கழுவுந் தன்மையால் புலத்தி பெரிதும் கைதூவாளாயினாள் (நற். 90:1-3). எனது நல்ல மனையிடத்து வருகினற மிக்க விருந்தினரை ஓம்புதல் கைதூவு இன்மையின் தலைவனை எதிர்ப் படப் பெற்றிலேன் என்று வாயில்வேணடிச் சென்ற தோழிக்குத் தலைவி வாயில் மறுத்துக் கூறினாள் (நற். 280:8-10). தலைவன தேரையும் களிற்றையும் தன்பால வந்த புலவர்க்குக் கொடுத்தலாற் கை தூவல் இலனாய் மழையினும் அளி சிறந்தான் (கலி. 50:15-17). நின மழலையைக் கேட்டு இனிமை மாறா மனத்திற்கு அமிழதம் அயின்றாற் போல, இனி தாய் விருந்தினர் வருதலாற் கைதூவாத எம்மை யும் நினையாயாய்ப் பெருந்தெருவில நின்னைக் கொணடாடித் தாய்மார் கற்பிககக் கற்ற திருந் திய சொற்களிற் சிலவற்றை யாம் கேட்கக் கூறு வாயாக என்று தலைவி புதலவனை வேண்டினாள (கலி. 81:11-15).

**கைதை** - தாழை. தலைவியும் ஆயமும் பறித்துக குவித்த மலர்களும் கைதையும - தாழையும் - ஒன்றா கும் (குறி. 83). ஊர் கைதை வேலிகளைக் கொணட அழகிய தோட்டங்களை யுடையது (அகம. 100:18). கைதையின தாழ்ந்த சினையில காமர் பெடை யோடு துன்பம் மீக்கூரத தளர்ந்திருககும கடற சிறு காககை சுறாமீன் திரியும் வேட்டை நீங்கிய இடத் திலுள்ள வெளளிறாலை உண்பதாகக் கனவும் (அகம.170:9-12). தலைவன் முனபு நம் பணைத்தோள் உள்ளி நள்ளிரவில் வந்த காலை, கானலம் பெருந் துறையின கவின் பாராட்டிப் புகழ்ந்தனன்; இனித் தன் சாயலமார்பில் யாம் கண்துயிலலை யகற்றிக் கைதையின தாழந்த கிளைகளால் தன் கடுந்தேர் தடைப்படுதலின் செலவரிது என்று கூறுவன் எனத் தோழி தலைவன் சிறைப்புறமாகத் தலைவியிடம் கூறினாள் (அகம. 210:6-13). மலர்கள் நெருங்கிய சோலையையும் கைதையையும் தண்புனலையும் உடையவன் நெய்தல் நிலததலைவன் (குறு. 304: 6-8). பெருங்கடலருகிலுள்ள நீலநிறப் புனனையின பக்கத்தில் தனிமையி னிருக்கின்ற கைதையின ஒள்ளிய மடல் வானத்தில் விளங்கிய ஒளிமிக்க ஞாயிற்றின் பாடு சாய்கின்ற அலகு போலத் தோனறும் கைதைச் சோலை சூழ்ந்தது கானலந் துறை (நற். 163:7-12). நாரையினால் நலன் உண்ணப்பட்ட நல்கூர் பேடை கழிக்கரையிலே சிறுமீனை உண்ணாது கைதையின தாழந்த கிளை யிடத்துப் புலம்போடு வதியும் (நற. 178:2-5). அடும்புமலரைப் பறித்தும் கைதையைப் பறிக்கத் தூக்கியும் நெய்தலைக் கொய்தும் நஙகாதலியை முயங்கினாம போலக் கருதிப உள்ளத்தோடு வைகலும் இனையமாகத தோழியின பின்னின்று முனியாது திரிகின்ற நம்மிடத்துப் பரதவர் மகள் என்னென நினைககினறனளோ எனத் தலைவன் தன்னெஞ்சோடு கூறினான (நற். 349). பெருங் கடலின் மணற்பாங்கரில தளையவிழந்த பூக்களை உடைய கைதை நிறைந்திருக்கும் (கலி. 127: 2 - 5).

**கைந்நிறுத்தல்** - அடக்குதல். நம்முள் மறைநதுறையும் காமத்தினை இவட்குக் கூறுவேமோ அன றிக் கூறாது விடுவேமோ எனறு எண்ணி யெணணி முடிவில் கைநநிறுத்தல - அடக்குதல் - இயலாது, நாம் வெளியிட்டு இரநத இன்மொழியை விரும்பித் தலைவி நளளென யாமத்து வந்து முயஙகிச் சென் றனள் எனத் தலைவன தனனெஞ்சிறகுக் கூறினான (அகம். 198:1-4).

**கைந்நூல்** - கையில் கட்டும் காப்பு நூல். நம் உயிாக்கு உயிர் போனறோ ராதலின தலைவரை இமைப் பொழுதளவேனும பிரிநது வாழ வியலாத நமமை மறந்து ஆண்டேயிருபபாராயின அவர் பொருட்டு விறலகெழு சூலிக்குப பலிககடன செயதலும் கைந நூலை - காபபுநூலை - கட்டுதலும் நிமித்தம் ஓா தலும் விரிச்சி கேட்டலும் எனன பயனைத தரும் எனத் தலைவி தோழியை வினவினாள (குறு. 218).

**கைநிமிர்தல்** - கைகடத்தல். எழில் மருபபிணையுடைய வேழம சொரியும மதததினால பாகனுககு அடஙகாது தன்னை விலககும தோட்டியைக் கைநிமிர்நது - கை கடநது - சென றது (கலி. 138 1,2).

**கைநீவுதல்** - கைகடத்தல. இளவேனிற் காலததை நினையாமல் நம்மை மறநத தலைவரிடத்து மனம விரும்புதலால எனமேனி வாடுதலைப பிறர் அறிய லாகாது என மறைபபேன; யான மறைத்ததனைக் கைநீவ - கைகடககுமாறு - மாலைக காலம வருதது கின்றது என்று தலைவி தோழியிடம கூறினாள (கலி. 29:14-17). 'யாம் தீதிலேம்' எனறு சூளுறவும அச்சூளுறவைக் கை நீவி எமமிடம் துணிதத நிலை யில் மீட்சி இல்லையாயின நாம மேதக்க எநதை பெயரனை எடுததுக் கொளவேம் எனத தலைவி யிடம் தலைவன கூறினான (கலி. 81.33-35). தலை வனிடம் தனபுதலவன செலலுதலைத தலைவி விலககவும் அவன கைநீவித தநதையின அகனற மார்பில பாயந்தான (கலி.86:31-34). புலிமுகமாடத தில் செயது வைத்திருநத புலியுருவததைக் கணடு அஞ்சிய பிடி, பாகா செயலுககு அடங்காமல சிதைந்தது; அநநிலையைக கணட களிறு ஆற்றாது தோட்டியைக் கைநீவி பிளிறியது (பரி. 10:41-50).

**கைப்பட்டோர் - அகப்பட்டோர்.** 'படையினது ஆரவாரம் கடலொலியினும் பெரிது; அவன் களிறு இடியினும் முழங்குதலை அமையா; ஆத்திக் கண்ணியினையும் இடககவிந்த கையினையுமுடைய சோழன் போர் வைக கோபபெரு நற்கிள்ளியிடம் கைப்பட்டோர் - அகபபட்டோர் - இரங்கததக்கவராவார்' எனப் பெருநற்கிளளியின் மறத்தைச் சாத்தந்தையார் போறறுவர் (புறம். 81).

**கைப்படுக்கப்படுதல் - அகப்படுத்திக் கொள்ளுதல்.** குறியிடத்துத் தனித்து நின்ற தலைவியிடம் முட்முதிர் பார்பபான், 'சிறியவளே, நீ என்னால் கைபபடுக் கபபட்டாய' - அகப்படுத்திக் கொள்ளப்பட்டாய் - எனறு கூறிப் பின் 'பெண் பிசாசாகிய நினனை யொழிந்த ஆண் பிசாசு யான; எனக்கு அருள்க' என வேண்டினான (கலி. 65: 16, 17). நீ கூறுங் கூற்றோ மாயம்; ஆதலின் நீ எம்மால கைப்படுக்கப் பட்டாய்; நீ கண்ட கடவுளரை (பரத்தையரை) யாம் கூற இனிக் கேட்பாயாக எனத தலைவி தலைவனிடம கூறினாள் (கலி. 93:14-16).

**கைப்படுத்துதல் - தெளிவடைதல்.** நின் மாயப் பரத்தைமையை மற்றவர்க்குக் காட்டுதற்கு வந்தமையை எனனெஞ்சில் கைப்படுத்தேன்- தெளிவடைந்தேன்-; இதனை முன்பு கேட்டும் அறிவேன் எனப் பரத்தையிற் பிரிந்து வந்த தலைவனிடம் தலைவி கூறினாள் (கலி. 98: 6-8). பாணனே, பரங்குன்றில் வாழும் மழைக்கணணாரது (பரததையரது) இறுகத் தழுவிய முயககத்தை அவா உகிர் செய்த தலைவனது மார்பிலுள்ள வடுவால் யாம் கைப்படுத்தேம; நீ பாடிய பாட்டுத்தான் பொய்வளம் பொலிநதது எனறு தலைவி பாணனிடம் கூறினாள் (பரி. 18:15-21).

**கைபரிதல் – ஒழுங்கு குலைதல்.** கார்காலத்து மேகக் கூட்டததின முன்னே கைபரிந்து-ஒழுங்கு குலைநது- எழுகினற கொக்கின் நீண்ட வரிசை யொப்பக் கொலகளிறுகள் செறிந்த பல கேடகஙகளின தொகுதியோடு நெடுநதேர்களில் அசைகின்ற கொடிகள விளங்கின (பதி. 83:1-4).

**கைபிழைத்தல் - பொய்யாகுதல்.** அருவரைக்கண் சென்று செவவேளின அடிமலரைத் தொழுத மகளிர் 'கனவினகண யாம் எம காதலரைத் தொட்டது கைபிழையாது - பொய்யாகாது - நனவின்கண்ணும் எய்த வையை, புதுப்புனலை அணிவதாக' என வேணடினர் (பரி. 8:102-105).

**கைபுணர்தல் - ஒருசேரக் கட்டுதல்.** தலைவனது குதிரை ஊதைக் காற்றில பகலிரவு என்று கருதாமல் ஒலிக்கின்ற இனமணிகள் கழுத்தில் கைபுணர்ந்து - ஒருசேரக் கட்டப்பட்டு - ஒலிக்க மணற்குன்றில் ஏறிச் சென்றது (நற். 163:2-5).

**கைபுனைவேழம் - கையாற் புனைந்த யானை.** புதல்வன் விளிமபிடத்தே முத்தை அரும்பாக அழுத்திப் பவழத்தாற செய்த வட்டப்பலகை சுமநது நிற்ப நினற, கவழத்தைக் கொள்ளுதலறியாத கைபுனை வேழத்தை - கையாற் புனைநத யானையை - தன் காலிற் கட்டின கெச்சை ஆரவாரிக்க முப்புரியாக முறுக்கின கயிற்றாலே பைய ஈர்த்து வந்தான் (கலி. 80:4-8). பவளப் பலகையின மேலே வேறோர் யானையை இறக்குமாறு குத்துகின்ற, போர்த் தொழிலைத் தனனிடததே கொண்டு விளங்கும்படி பொன்னாற் செய்த, காவலையுடைய அரணங்களைக் குத்தாத கைபுனை வேழததோடு புதல்வன் தனனடியில் நிறைந்த சதங்கை ஆரவாரிப்ப மகளிரிழைத்த வண்டலிடத்து உழககி நடந்தான் (கலி. 86:6-9).

**கைம்மகவு - கைக்குழந்தை.** நும் மனைவியரோடும் இருமுது குரவரோடும் கைம்மகவோடும் - கைக் குழநதையோடும் - சுறறத்தோடும் கூடி, இருங் குனறத்தைத் தெய்வமாக மதித்து அஃதுளள திசை நோக்கித் தொழுது சென்மின் என்று அன்பர் ஆற்றுப்படுத்தப்பட்டனர் (பரி. 15:45-48).

**கைம்மா - யானை.** களிறுகளைத் தரப் பெற்றுச் செல்வேமென்று கருதினால், மழைமுகிலைத் தடுக்கும் குன்றுகள் போலக கைம்மா - யானை - எல்லாம நின அம்பு பட்டு இறந்தன என்று சேரமான் குடக்கோ நெடுஞ்சேரலாதன் பெருநறகிள்ளியோடு பொருது வீழ்நத ஞான்று கழாத்தலையார் பாடினார் (புறம.368:1-3). விளங்குகின்ற ஒளியினையுடைய கொம்பினைக் கொண்ட கைம்மாவினை அலைப்பவர் அதனை ஓட்டும் கவணையாலே பூஞ்சினையிலுள்ள பூக்களை உதிர்ப்பர் (கலி. 23:1,2). வையையுள் நீராட வநதோருள் சிலர் குதிரையினையும் பொனனாலாகிய சேணத்தையுடைய கைம்மாவினையும் வையைநீர் வெள்ளத்துள் விட்டு ஊர்நது உழககுவர் (பரி. 11: 52,53). கைமமான், கைமான் காணக.

**கைம்மாறு - எதிருதவி.** மலைமிசை யுளள கட்டுப் பரன் வறிதாமபடி விடுத்துச் சென்று மந்தியுமறியா மரங்கள் செறிந்த ஓரிடத்தே குன்றக வெற்பனோடு நாம விளையாடும் பொழுது தினைக்கதிர்களை அழிக்கா தொழிநத யானைகட்கும் பசுங்கிளிகட்கும நாம் யாது கைம்மாறு-

எதிருதவி - செய்வோம் எனத் தோழி தலைவியை வினவினாள் (நற் 194).

**கைம்மாறுவார்** – மேற்கொள்ளுவார். வானவன் மகளின் (தேவசேனையின்) பாங்கியர் போரை மேற்கொள்ள அதனைக் கண்ட வள்ளி பாங்கியராகிய மென்சீர் மயிலியலவர் மென்மைப்பட்ட சென்னியையுடைய மதத்தாற் கமழ்கின்ற களிற்றியல்பைக் கைம்மாறு வார் - மேற்கொள்ளுவார் - (பரி. 9:50,56).

**கைம்மான்** - யானை. முஞ்ஞையொடு முசுண்டைக் கொடியும் முன்றிலில செறிந்திருத்தலால் வேறு பந்தல் வேண்டாத பலவுக்கனி தொங்கும் நிழலில் கைம்மான் – யானை - வேட்டுவன உறக்கத்தை மேற்கொண்டனன் (பலர் தூங்கு நீழல் எனறும் பாடம்) (புறம. 320:1-3). வையையில் நீராடற்கு அழகாக அணிந்த அணிகளையுடைய மைந்தரும் மகளிரும் அவ்வணிகளை நீககிப் புனலாடற்கேற்ற அணி களை அணிந்து கைம்மான் எருத்தின மேலும் குதிரையின மேலும் இவர்ந்து புறப்பட்டனர் (பரி. 6:27-33). கைம்மா, கைமான் காண்க.

**கைம்மிகல்** - அளவு கடத்தல். தலைவி காதலால் பெரி தும் வருந்தவும் அவள் நெஞ்சம் தனனொடும் சூழாது கைம்மிக்கு – அளவுகடந்து – தலைவன வரும் வழியிற் சென்று இருளிடை மிதிபபுழி அவன் தளரடியைத் தாங்கச் சென்றது (அகம. 128:5-15). யான் இரவுதோறும் காணும கனவுகள் கைம்மிக இனியவாகினறன எனத் தலைவி தோழிக்குரைத் தாள (அகம். 141:1,2). ஞாயிறு கைம்மிகத் தெறுத லின் காடு கவினழிந்தது (அகம். 143:1,2). சொல் லுக்கு எதிர்பேசாது நாணததால் முகம் இறைஞ் சிய தலைவியிடம், 'காமம் கைம்மிகின் அதனைத் தாங்கி பிருத்தல் அரிது' எனத் தலைவன் கூறினான் (நற். 39:1-3). தலைவி தன காமநோய் கைம்மிகப் பெரிதாயிற்று என்றும் தனனுடம்பும் தீயை உமிழ் கின்ற கொதிபபினால் வெப்பம் உடையதாயிற்று என்றும் கூறினாள் (நற். 236:1,2). 'வேங்கை நாண் மலரைக் கூந்தலில் அணிபெறச் சூடிக் காண்ப தற்கு விருப்பம் கைம்மிகுதலால் நம்மைப் பிரிந் திருக்கின்ற தலைவரை எவ்வாறு சென்று சேர் வோம்' என்று தோழி சிறைப்புறத் தலைவன் கேட்பத் தலைவிக்குரைத்தாள (நற். 313:1-6).

**கைம்முற்றல்** - முடிவுபோதல். 'மாந்தரஞ் சேரலிரும் பொறையே, நின் புகழ விரித்துச் சொல்லின் அளவு பெருகும்; தொகுத்துச் சொல்லின் ஒழிவுபடும்; ஆதலால் மம்மர் நெஞசத்தை யுடைய எம்ம னோர்க்கு நின் புகழ் கைம்முற்றல் - முடிவுபோதல் - இல்லை' எனப் பொருந்திலிளங்கீரனார் கூறுவர் (புறம. 53:5-8).

**கைம்மை** - கணவனை இழந்த துன்ப நிலைமை. தலை யாலங் கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன் பகைவேந்தரைப் போரில் கொன்ற பொழுது அவர்தம் பெணடிர் மார்பில் அடித்துக் கொண்டு கைம்மை – கணவனை இழந்த துன்ப நிலை – மிகக் குவையிருங் கூந்தல் கொய்தனர் (புறம். 25:5-14). வெள்வேல் விடலை இறந்தமையின் அவன் மனைவி கொய்யப்பட்ட மொட்டையாகிய தலையுடனே, அணிகலன்களை அகற்றிக் கைம்மை யுறக் கலங்கினாள் (புறம். 261:15-17). ஆண் குரங்கு இறந்ததனால் கைம்மைத் துன்பத்தைப் போகக முடியாத மந்தி, தன் இளைய குட்டியைச் சுற்றத் திடம் ஒப்படைத்து வரை பாய்ந்து உயிரைப் போக்கிக் கொண்டது (குறு. 69:1-4).

**கைமான்** - யானை. பொகுட்டெழினி முற்றுகை யிட்டுள்ள வளமான ஊர்மக்கள் அவன் கைமான - யானை – யாறுங் குளனும் முதலாகியவற்றின துறைநீரை உண்ணுமெனக் கருதி அவனிடத்து உறைதலை வெறுப்பர் (புறம். 96:7-9). கைம்மா, கைம்மான காணக.

**கையகப்படுதல்** - 1. பிடிபடுதல். பெருந்திருமாவள வனும பெருவழுதியும் ஒருங்கிருந்தபோது காரிக் கணணனார் அவரை நோக்கி, 'நீவிர் இருவீரும் வேறுபடாது ஒருவர்க்கொருவர் உதவியாய இருப் பின் கடல்சூழ இவ்வுலகம் உங்கள கையகப் படுதல் - பிடிபடுதல் - பொய்யாகாது' என உரைத் தார் (புறம். 58:20-23).

2. வெளிப்படுதல். 'நெருநல் நீ பரத்தையோடு வையைப் புதுபபுனல் ஆடியதை அவள் ஆயத்தார் மறைப்பவும் அலர் எழுந்தது; நீ பொய்யற்க; நின் மாயம் அறிவேன்; அபபுனலாடிய செய்தி கையகப்பட்டமை - வெளிபபட்டமை - நீ அறி யாய்' எனத் தோழி தலைவனிடம் கூறி வாயின் மறுத்தாள் (அகம். 256:8-13).

**கையது** - கலை (ஆகுபெயர்). கரிகாற்பெருவளத்தான் பொருநரின் கையதை - கலையை - கேட்பதற்கு முன்பே விரைந்து அவர்தம் பழைய சிதாரைப் போக்கிப் பட்டுடை உடுப்பித்துப் பொலங்கலத்தில் கட்டெளிவை மேனமேலும் வார்த்துத் தந்து பரிசிலும் நல்குவான் (பொரு. 151-158).

**கையழிதல்** - செயலறுதல். ஆய் அண்டிரன் இறந்து பட்டமையால் புலவர் கையழிந்து - செயலற்று- வாடிய பசியினராகிப் பிறர்நாடு செல்லுவா

ராயினர் எனக் குட்டுவன் கீரனார் இரங்குவர் (புறம். 240 3,6,12-14).

**கையறவு - 1.** செயலற்ற நிலை. விண்ணுலகத்தவர் தாம் செய்த நலவினையால் இன்பம் பொருந்துவ தல்லது செலவமுடையோர் வறியோர்க்கு வழங்கு தலும வறியோர் செலவமுடையோர்பாற் சென் றிரத்தலும் ஆண்டுச் செய்யக் கடவது அல்லாமை யால் விண்ணுலகம் கையறவு - செயலற்ற நிலை- உடையது (புறம். 38:12-15). 'காமம் மடலூர்தலைத் தந்தது; ஊரெடுக்கும் அலர் எருக்கம்பூ மாலையைத் தநதது; மாலைப் பொழுது தனிமையைத் தந்தது; இவற்றிற்கு மேல் பெடைபுணர் அன்றிலின் உயங்கு குரல் கொண்டு கங்குலும் கையறவு தந்தது' என மடல் வலித்த தலைவன் முன்னிலைப் புற மொழியாகத் தோழி கேட்கக் கூறினான் (நற். 152).

**2. வறுமை.** ஏறைக்கோனிடம் அமைந்துள்ள சிறப் புக்களுள் ஒன்று பிறர் கையறவுக்கு - வறுமைக்கு- தான் நாணம் அடைதல் (புறம். 157:2).

**3. ஊடல்.** வையையைச் சேர்ந்த மகளிரிற் சிலர் காமமாகிய மழு உடைப்பதனால் கையறவை- ஊடலை - சுழற்றி யெறிந்துவிட்டுத் திரையை வீழ்த்துப் படுக்கையிற் சேர்ந்தனர் (பரி. 10:33,34).

**கையறுதல் - 1.** செயலறுதல். போர் வெற்றி எய்திய அண்ணலின் (கோப்பெருஞ் சோழனின்) நாடு தலையளிக் குங்கால் காணப்பெறும் ஒண்முகம் போல முழுத் திங்களின் கதிர் விளங்கும் மாலைப்பொழுது கண்டு பிசிராந்தையார் கையறுபு - செயலற்று - வருந்தி னார் (புறம். 67:2-5). பாரி மாய்ந்தவுடன் கபிலர் கலங்கிக் கையற்று நீர்வார் கண்ணராய்ப் பறம்பு மலையைத் தொழுது வாழ்த்திச் சென்றார் (புறம். 113:5-7). பரிசில் நீட்டித்த குடக்கோச் சேரல் இரும் பொறையிடம் 'நின்னை வெகுண்டாரது அணுகுதற் கரிய காவலை யுடைய முனையிடத்து அரணைப் போலப் பெரிய கையற்ற என வறுமையை முன்னே போகவிட்டு இனனாமையுடைய நெஞ்சத்துடனே போவேன' எனப் பெருங்குன்றூர்கிழார் கூறினார் (புறம். 210:13-15). மதுரையிலிருந்த ஊர்காப்பாளர், கடவுள் வழங்கும் கையறு கங்குலினும் காவலில் தப்பிலராயப் போந்து விருப்புடன் உலவி வநதனர் (மது. 650,651). கூதிர்க் காலத்தில் மனையுறை புறவின் செங்காற் சேவல் தன இன்புறு பெடை யுடன் மன்றிலே இரைதேடி உண்ணாமல் கையற்று மதலைப் பளளியில மாறி மாறி இருந்தது (நெடு. 45-48). தலைவி ஆறறுந் தன்மைத் தல்லாத நோயினை யுடையளாய் மானமர் நோக்கங் கலஙகக் கையறறு மெலிநதாள் (குறி. 25,26). முசுக்கலை ஏறமுடியாதென்று கையற்ற நெடுவரை யில் கானவர் கண்ணேணி வைத்தேறித தேன் கொணர்ந்தனர் (மலை. 315-318). தலைமகனைப் பிரிந்த தலைவியின் நெஞ்சம் மாலைப் பொழுதில் வீசிய கொண்டற்காற்றால் கையறுபு வருந்தியது (அகம். 40: 6-8). மாலைப்பொழுதில் தொழுவிலே நிறையப் புகும் ஆக்களின் மணி ஒலியைக் கேட்குந் தொறும் தலைவி கையறு நிலையளாய்க் கலங்கி னள் (அகம். 64:14-17). பகலாற்றுப்படுத்த பழங்கண் மாலையில் ஐயறிவு அகற்றும கையறு படரொடு அழகிய மேகங்களை அகன்ற வானம் தந்தது (அகம். 71:7-9). தலைவியின் எல்வளை நெகிழ்ந்தமை கண்டு கையறு நெஞ்சினளாய அன்னை,முதுவாய்ப் பெண்டிரிடம் அவ்வளை நெகிழ்ச்சிக்குக் காரணம் கேட்டாள் (அகம். 98:7-9). 'காதலர், பாணன் நன் னாட்டு உம்பர் சேயர் என்றலின், சிறுமையுற்ற என் கையறு நெஞ்சத்தின் எவ்வம் நீங்க என் உயிர், மெய் இவண் ஒழிய அவர் செய்வினை மருங்கிற் சென்று பொருந்துமாயின் நாம் அழாமே உறைதற்கும் உரியோம்' எனத் தலைமகன் பிரிவின கண் தலைவி தோழிக்குக் கூறினாள் (அகம். 113: 9-27). 'கார் காலத்து முகில்கள் முழங்குந் தோறும் தலைவி நம்மை வெறுத்துக் கையற்று ஒடுங்கித் துன்பினை எய்திய, பசலை பாய்ந்த மேனியளாய் எந்நிலை அடைவாளோ' எனப் பருவம் குறித்து வநத தலைவன் பாசறைக்கண் தன நெஞ்சிற்குக் கூறினான் (அகம். 174: 7-10). 'அழகு கெடுமாறு பெரிய கையற்ற நெஞ்சமோ டிருக்கும் நம்மைக் கைவிட்டுச் சென்ற தலைவர் இரும்பான் இயன்ற இனிய உயிரை உடையவர் போல வலித்திருக்க வன்மையுடையோராயினர்' எனத் தலைவி தோழியிடம் கூறினாள் (அகம். 185: 1-5). வாடிய மரங்களில் அறல்பட்ட நிழலில் தங்கித் திரங்கிய மரலைக் கவ்வும் கையறு மான கூட்டத் தில் செந்நாய் புகுந்து தாக்கியது (அகம். 199:5-9). 'நாம் பிரியும் முன்பே பிரிவோம் என்ற அச்சத் தால் கையற்ற நெஞ்சுடன் தலைவி நமமை அக லாது அணுகும் இயல்புடையவள்' என இடைச் சுரத்துத் தன நெஞ்சிற்குத் தலைவன் கூறினான் (அகம். 279:14-17). காதலரைப் பிரிந்துள்ள கையறு மகளிரின் நீர் வார் கண்போல் பனிநீர் வாரக் கருவிளை மலர்நதன (அகம். 294:4,5). சோர்ந்த விட்டம் வீழ்ந்த முதிய தூண்களை யுடைய அம்பலத்தே அருஞ்சுரம் நீந்திய வருத்தத்தால் கையற்று, மாலைக்காலத்தே தனிமை வநதடைய, திண்மையை யுடைய உள்ளம் மீண்டு செல் லுதலை வலியுறுப்பத் தாள் கை பூட்டிய தனி

நிலை இருக்கையில் இருந்து தலைவன்சிந்தித்தான் (அகம். 373:4-8). காலை, பகல், கையறு மாலை, யாமம், விடியல் என்ற சிறுபொழுது இடை தெரியு மாயின் அத்தகையோரின் காமம் உண்மையன்று (குறு. 32: 1-3). கையறத் தைவரல் ஊதை வந்தது (குறு. 55:3). காதலர் கையறவிடின் காமம், தாயில் லாத யாமை முட்டை போல உட்கிடந்து அழியும் (குறு. 152). அன்றில் தன் பெடையுடன் தடா மரத் தின் உயர்ந்த கிளையில் இருந்து, பிரிந்தோர் கையற நள்ளிரவில் நரலும் (குறு. 160:1-4). 'கதிர் சினந் தணிந்த கையறு மாலைக்காலத்தை நீந்தலோ அரிது; அதனை நீந்தினும் பின்வரும் கங்குல் வெள்ளம் கடலினும் பெரிதாய்த் துன்பம் செய்யும் எனப் பிரி விடை வற்புறுக்கும் தோழிக்குத் தலைவி கூறினாள் (குறு. 387). மழை இனிது வீழ்ந்த கார் காலத்தில் தலைவரைப் பிரிந்த மகளிர் கையறும்படி துன்பம் தரும் மாலைக்காலம் வந்தது (குறு. 391:4-6). முரசும் சங்கும் ஒலிப்ப மாலைவிளக்கின் எதிர்கொள்ளும் மாலைப்பொழுது பிரிந்துறை மகளிர் கையற வந் தது (நற். 58:6-8). 'செல்வர் நல்லில் உறையும் சேவற்புறா தான் வீழ்துணையைப் பயிரும் கையறு முரல்தரலோசையைத் தலைவி நும்மைப் பிரிந்து தனிமையாயிருந்து கேட்குந்தோறும் பேரவாவால் நடுங்குவாள்' எனத் தோழி தலைவனிடம் கூறிச் செலவழுங்குவித்தாள் (நற். 71:6-11). மயக்கத்தை யுடைய மாலைப்பொழுதில், வேற்றுப்புலத்தொடு பேடையைப் புணர்ந்து மீண்டு வந்த சேவலை அத னுரிய பேடை தன் பிள்ளையொடு சென்று, குடம் பையுள்ளே புகாதவாறு தடுத்துப் பின்பு அதன்மீது இரக்கங்கொண்டு, தன்பால் வருமாறு அழைப்பக் குருவிச் சேவல் கையற வந்தது (நற். 181:1-9). 'அடங்காத நோயுடனே பலப்பலவாக எண்ணிக் கழிக்கின்ற துன்பமிகுதலாலே கலக்கமெய்திக் காம மானது அளவுகடந்து பெருகுதலானே கையறு துயரங் கொண்டு நான் வருந்துவதைக் கண்டும் தலைவியைக் கூடுமாறு நீ முயலாதது என் ஊழ் வினையே' என்று தலைவன் பாங்கனிடம்நொந்து கூறினான் (நற். 185:1-3,12). கையறத் தம் காதலி மாரைத் துறப்போரைப் பார்த்து மாங்குயில் 'அறி வுடையீர், நிலையற்ற பொருளை ஏதுவாகக் கொண்டு நும் காதலிமாரை விட்டுப் பிரியா திருங்கள்' என்று கூறுவது போலக் கூவுவதாகக் கற் பனை செய்யப்பட்டுள்ளது (நற். 243:3-8). கொண் கன் குறித்த பொழுதில் வந்து கூடித் தலையளி செய்யாமையால், தலைவிகொண்ட விருப்பம் பழு தாக அதனாலே பெரிய கையற்ற அவள் நிலை கண்டு ஊரில் அலர் எழுந்தது (நற். 272:6-10).

'துறைவனே, எக்காலத்தும் கருணை செய்யும் பெரிய கேண்மையுடைய நும்மைப் போலச் சால் பினை எதிரேற்றுக் கொண்ட செம்மையுடையா ரும் தம்மை அடைந்தாரைக் காப்போம் என்று அரிய சூள் வைத்து, அவர் தெளியாத நெஞ்சு டனே கையறுபு வாட, நெடுநாள்காறும் விரும்பா திருப்பராயின் அங்ஙனம் தஞ்சமென வந்தோர் உயிர் வாழ்வதெவ்வாறோ' எனக் கேட்டுத்தோழி தலைவனைத் தெருட்டினாள் (நற். 345:5-10). வெள் ளாங்குருகின் பார்ப்பு இறந்ததாக வெள்ளாங்குரு கினைக் காணச் சென்ற நாரை அதனைக் கண்டு, கையற்று அரற்றியது (ஐங். 152:1-3). 'என் தலை வன் பிரிந்தமையால் கையறு மாலைக் காலமே, நீ நண்பகலிலேயே வந்து விடுகிறாய்; நீ காலைப் பொழுதில் வரினும் உன்னைத் தடுப்பா ரில்லை' எனப் பிரிவாற்றாத தலைவி கூறினாள் (ஐங். 183). காதலரைப் பிரிந்தோர் கையற வருந்தும்படி தண் பனி வாடை மிக்க முன்பனிக் காலம் வந்தது (ஐங். 223 : 3-5). தலைவி கையறத் தலைவன் பிரிந்துள் ளான் என்பதை அவன் குறித்துவந்த கார்காலம் இடியொடும் வந்து அவனுக்கு நினைவூட்டி வருந் தியது (ஐங்.441:2,3). கார் காலத்தின்கண் நாம் கை யறுமாறு பிரிந்த தலைவர் வினைமுடித்து விரைந்து தேரில் மீளாமை எத்தன்மைத்து' எனத்தலைவி பரு வங்கண்டழிந்தாள் (ஐங். 451: 1,2). தலைவியின் கண் பசலை பாய அருந்துயர் உழப்பவளின்கையறு நெஞ்சிற்கு உசாத்துணையாகச் சிறிது பொழுது நீ தங்குவை யாயின் நான் விரைந்து வருவேன்' என்று தலைவன் தலைவியிடத்துப் பாணனைத் தூதாக விடுத்துக் கூறினான் (ஐங். 477). 'அறியாமை யுடைய நெஞ்சே, பொருள்களைக் கண்கள்காணாத படி இருளைப் பரப்பி உயிர்களெல்லாம் கையறு மாறு செய்த கங்குலினிடத்தே, காமநோயைச் செய்த தலைவன்பாற் சென்றாய், நீ அவனைக் கண்டாயா, காணவில்லையா' எனத் தலைவி வினவினாள் (கலி. 123:5-8). தலைவி கனவிற் கண்ட கணவனை மெய்யென்று கருதித் தழுவுமிடத்து அவன் வடிவு காணாளாய்த் தான் கண்டது கன வென வுணர்ந்து பின்பு கையற்றுக் கலங்கினாள் (கலி. 126: 16, 17). 'இம்மாலைப் பொழுதின் கண்ணே, ஐயர் (இருடிகள்) விளங்குகின்ற அழலை ஆவுதி பண்ணி எழுப்ப, என் கையறு நெஞ்சும் தானும் கொதித்து எனக்கும் காமத்தீயைக் கொளுத்தும் (கலி. 130:8-10). நடுங்குங் காம நோயைச் செய்த தலைவன் அருளாமையால் அவனையே நினையும் தலைவி பனிக் காலம் கை மிக்கு வர அப்பொழுதே கையாற்றுள் ஆழ்ந்தாள்

(கலி. 134:15,16). 'என்னலத்தை உண்டவர் ஈண்டு வாராதபடியாலே, எனனெஞ்சு அவரை நினைக் கையினாலே, அதுகண்டு பனிக்காலம் வருத்த அப் பொழுதே கையறு நெஞ்சினேனாய்க் கலககத்துள் ஆழநதேன்' எனத தலைவி புலம்பினாள் (கலி. 134: 19,20).

2. இல்லையாதல். 'ஞாயிற்றை ஒத்த வீரமும் திங்களன்ன மென்மையும் மழையனைய வண்மை யும் கொண்டு இல்லோர் கையற - இல்லையாம் படி - நெடுஙகாலம் வாழ்க' என இலவந்திகைப் பள்ளித துஞ்சிய நன்மாறனை மதுரை மருதனிள நாகனார் வாழ்த்தினார் (புறம். 55:13-17). உடன் போககிற் செனற தன மகள், புழுதிமிகக காட்டு வழியில் சூடிய மாலை சிக்குணடாலும் வளை நெகிழினும காஞ்சி யணிந்த அலகுலின் மேல் நாலுகினற பொற்காசினம் முறை பிறழ்ந்து கிடந் தாலும் அவற்றைத் திருததுதற் கறியாளாய்த் தனது மாணலம் கையற அழுவாள எனத் தன் மனையகத் திருநது தாய மருணடு வருந்திக் கூறி னாள் (நற். 66:5-10).

3. வருந்துதல். புள்ளினம் பல பழத்தையும் நச்சித் தாம் வாழ்தற் கிடமாகிய விசும்பின்கண் உயரப் பறந்து பெரியமலையின் முழை எதிரொலி முழங்கச் சென்று அவ்விடத்துப் பழமுடைய பெரிய மரம் பழுத்து மாறிற்றாசக் கையற்று - வருந்தி-பெறாதே மீளும் (புறம். 209:7-10).

**கையாறு** - செயலறவு. 'பூந்தாதினால் செய்யப்பட்ட நின் பாவை நின்னால ஓம்பப் பெறாமல் காலைப் பொழுதிலேயே வருநதுகின்ற கையாற்றினை செயலறவினை - தவிர்ப்பாயாக' என்று ஓரை ஆயத்தினர் தலைவியை ஆற்றுவித்தனர் (குறு. 48: 1-3). பிரியக் கருதிய தலைவன தலைவியைக் குறித்து, 'செறிந்த தொடியணிநத முன் கையினை யுடையாள் கையாறு கொள்ளாளாய்க் கடிமனை காத்தோம்ப வல்லுவள கொல்லோ' என்று கன விலே அரற்றினான் (கலி. 24: 7-9). 'தலைவர் மீளும் பருவமாகக் குறித்த இளவேனிற் காலம் வருந் துணையும் ஆறறியிராதபடி முன்பனிக் காலத்து வாடையாலும் பின்பனியாலும் உண்டாகிய கையாறு இறப்பினை நமக்குக் கூட்டுதலால் நெஞ்சு கலக்குறுகினறது' எனத் தலைவி பிரிவாற்றாது தோழியிடம மொழிந்தாள் (கலி. 31: 6-8) 'எம்மைப் போலே கையாறுடையவர் இல்லத்திற் சேறலன்றி வேறோர் இல்லததில் நீ செலலாதே' எனத் தலைவி தன் மகனைத் தலைவனுடைய பரத்தையரில்லிற்குப் போகாமல் விலக்கினாள் (கலி. 82: 33, 34). 'எனக்கு நடுங்குகின்ற காமநோயைச் செய்தவர் என்னை அருளாத படியால் எனனெஞ்சு அவரை நினைத் தலின, அப்போது கடிய பனிககாலம் கைம்மிகுந்து வர யான் கையாற்றுள் அழுந்துவேன்' என்பது தலைவியின் ஆற்றாமையிரக்கம் (கலி. 134: 15, 16). 'எனக்குக் கையாறு செய்தவனை யான் கனவிலே கண்டேனாயின் அக்கண்ணைக் கடுக விழித்துப் பாராமல் மெத்தெனப் பார்பபேன்; பார்த்துப் பின் அவன் தப்பிப் போகாதபடி அவனது துகிலைப் பிடித்துக் கொள்வேன்; எனனை ஐயங்கொண்டு அறியாது விடுவனேல கள்வன என்று பூசலிடுவேன' என்று தலைவனின பிரிவிடைத் தலைவி கலங்கி மொழிநதாள் (கலி. 147: 48, 49).

**கையிடுதல்** - கையாற் குறி செய்தல். முதிரமலையில் பலாவின் முட்புற முதுகனியைப பெற்ற கடுவன் தன் காதல மந்தியைக் கையிட்டு - கையாற் குறி செய்து - அழைககும் (புறம். 158: 22-25).

**கையுறை** - காணிக்கை. தலைவிக்கு உற்ற நோயினைத் தணிக்கும் முகத்தான அவளுடைய அன்னை நிலைத் துறைக் கடவுளுக்குக் கையுறையாக - காணிக்கை யாக - கள்ளையும் கண்ணியையும் வெள்ளாட்டுக் கிடாய் உட்படச் செலுத்தியும் அவளது நோய் தணியும் வகையறியாளாய் அழுதாள் (அகம். 156: 13-16). தலைவியின் மகன் தன் தந்தையால் காமு றப் பெற்ற தொடக்கத்துத் தாயிடத்தே சென்றா னாக, அவள் அவனுக்கு மருப்புப் பூணினைக் கையுறையாக அணிந்து பெருமான் நகைமுகங் காட்டு என்றாள் (கலி. 82: 10-12). தலைவன் மக னைத் தெருவிடைக் கண்டு தடுத்த தாயர் தத்தம் அணிகளுள் அவனது வடிவிற்கு ஒத்தவற்றை ஆராய்ந்து கையுறை என அணிந்தனர் (கலி. 84: 11-17).

**கையூண் இருக்கை** - கையே கலனாக உணவுண்ணும் நிலை. தினைக்கதிரைக் கொண்ட மந்தி அதனைத் தன் அகஙகை நிறைய நெமிட்டிக் கொண்டு கவு ளில் அடக்கி மழையில் நனைந்த நிலையில் நோன் பியர் கையூண் இருக்கை - கையே கலனாக உண வுண்ணும் நிலை - போலத் தோன்றும் ('கையூண் இருக்கை' என்றும் பாடம்) (நற். 22: 1-7).

**கைவண்மை** - ஈகை. மாவளததானைக் கைவண் தோன்றல எனத் தாமப்பல் கண்ணனார் விளித் தார் (புறம். 43:12). தன்பால் இரந்தார்க்கு ஆனாது ஈயும் கவிகை வண்மை யுடையவன் சேரமான குட்டுவன் கோதை (புறம். 54:6-8). கைவள்ளீகை யுடையவன் பண்ணன் (புறம். 70:13). யாதும் அறி வில்லாதவரும் புல்லிய குணங்களை யுடையவரும்

ஆகிய இவர்கள் சென்றாலும் பாரி கைவண்மை செய்தலைக் கடப்பாடாக வுடையவன் (புறம். 106: 4,5). சான்றோர் பிறரும் போன வழி யென்று உலகத்தார் கருத, அந்த நற்செய்கையிலே ஆய் அண்டிரனது கைவண்மை பொருந்தியது (புறம். 134:2-4). பேகனது கைவண்மை, எத்துணை யாயி னும் ஈத்தல் நன்றென மறுமையை நோக்கிய தன்று; பிறர் வறுமையை நோக்கியது (புறம். 141: 13-15). கைவள்ளீகைக் கடுமான் பேக (புறம். 143: 6). கைவள்ளீகைக் கடுமான் கொற்ற எனப் பிட் டங்கொற்றன் விளிக்கப் பெறுகின்றான் (புறம். 168: 17). இருங்கோவேளிடம் பாரிமகளிரை அழைத்துச் சென்ற கபிலர், 'இவர் கைவண் பாரி மகளிர்' என அறிமுகம் செய்தமைக்கு வருந்தினார் (புறம். 202: 14-16). அக்குரன அனைய கைவண்மை உடைய வன் இமைய வரம்பன் (பதி. 14:7). இரும்பொறை யின் கைவண்மை உலகத்து மககள் அளவைக் கடந்தது (பதி. 73:15-17). கைவண் தோன்றல் என் பது தொண்டைமான இளந்திரையனைக் குறித்த விளி (பெரு. 420). கைவண்செழியன் (அகம். 47:15). கடும்பரிப் புரவிக் கைவண்பாரி, வேந்தரைப் புறங் கண்டவன் (அகம். 78:21,22). பெரியன் என்பான் பாடுநர்த் தொடுத்த கைவண் கோமானாவான் (அகம். 100:11,12). நற்றேர்க் குட்டுவன கொய்சுவற் புரவிக் கைவண் கோமான் எனச் சிறப்பிக்கப்பெறு வன் (அகம். 270:8,9). கைவண் சோழர் (அகம். 369: 13). கைவள் ஓரியின் கானம் மணம் மிக்கது (குறு. 199:3,4). கைவண கிள்ளி (நற். 390:3). கைவண் விராஅன் (ஐங். 58:2). கைவண் மத்தி (ஐங். 61:3). வையைக்கரை பாண்டியன் கைவண்மை மிக்க ஈகை போல மிளகு, சந்தனம் முதலிய பிறவற்றால் நிறைந்தது (பரி. 16:1-4).

**கைவலித்தல்** - கைப்பற்றல். 'யான் சூளினை மேற் கொண்டு ஊரனைக் கைவலித்தலை - கைப்பற் றலை - எண்ணியுள்ளேன்' என்று பரத்தை தலை வனைக் குறித்துத் தலைவியின் பாங்காயினார் கேட்பக் கூறினாள (அகம். 76:2,13).

**கைவழி** – யாழ் (ஆகுபெயர்). நள்ளி கொடுத்தோம்பு தலைக் கடனாக மேறகொணட வண்மையினால் பாணர் மாலையில் மருதப் பண்ணைப் பாடிக் காலையில் கைவழியினகண் - (கையகத்ததாகிய) யாழின்கண் - செவ்வழிப் பண்ணைப் பாடிவரும் முறைமையை மறந்தனர் (புறம். 149).

**கைவளம்**– 1. கைவண்மைக்கொத்த பொருள். 'நெஞ்சே பெரிய கொடைச் சிறப்பமைந்த ஓரியின் கைவளம் - கைவண்மைக்கொத்த பொருள் - கிடைப்பதாயி னும் அப்பொருள் நம் காதலியின் முயக்கத்தைக் காட்டிலும் சிறந்ததன்று; மிக மென்மையுடையதே யாகலின யாம் அவளைப் பிரிந்து வாரோம்; நீ வேண்டுமாயின் தனியே செல்வாயாக' என்று தலைவன் செலவழுங்கினான் (நற். 52:8-11).

2. நகக்குறி (ஆகுபெயர்). 'பாணா, திருப்பரங்குன் றினமேல் வாழும் மழைக் கண்ணாரது இறுகிய முயக்கத்தைத தலைவனது மெய்யின்கண் அவரு டைய கைவளம் - நகக்குறி - பொலிந்த வடுவால யாம் தெளிவா் யறிந்தோம்' எனத் தலைவி தலை வனது பரத்தைமையைப் பாணனிடம் கூறினாள் (பரி. 18:15-21).

**கைவளை** - வளையல். 'துறைவன் நம்மிடத்தே வாராது அமையினும் அமைக; அதனால் நின உடல்மெலிய, கைகள் முன்னர் அணிந்துள்ள வளை களை யிழப்பினும் அம்மெலிவு பிறருக்குப் புலப் படாமல் பின்னர் அணிவதற் கேற்றனவாக விலை ஞரால் விற்கப்படுவனவற்றுள் கைவளை - வளை யல் - சிறியனவும் உள்ளன-' என்று தோழி தலை வன் வரைவு நீட்டித்த நிலையில் தலைவியிடம் கூறினாள் (குறு. 117:4-6). 'நம்மைப் பிரிநது செனற தலைவர் காரெதிர் தண்புனததைக் காணபாரா யின், வெண் கூதாளத்தின உள்துளையுடைய அழகிய புதுமலர்கள் காம்பினினறு கழன்று உதிர் தலைப் போல நின் கைவளை சோர்நது வீழும் என்பதை யுணர்ந்து விரைவில வருவர்' எனத் தலை வனது பிரிவினகண் தோழி தலைவியை ஆறறுவித் தாள் (குறு. 282:4-8). 'என காமம் பெரிதாகலின தலைவரது பிரிவை யான் ஆற்றியிருப்பினும் என் கைவளை நெகிழ்தலுற்றது' என்று தலைவி பிரி விடையே தன் மெய வேறுபாட்டினைத் தோழி யிடம் கூறினாள் (குறு. 371). வையைப் புனல தன கண் விரைந்தாடும் மகளிருடைய கைவளை, மைந் தருடைய ஆழி முதலிய எல்லாவற்றையும கவர்ந்து சென்றது (பரி. 7:43-50).

**கைவன்மை** - செயல்திறன். மரவேலை செய்யும் தச் சனின் கைவன்மை - செயல் திறன - மிக்க சிறுவர் தமக்குரிய கருவிகளுடன காட்டகம் செலலின தாம் வேண்டிய பொருள்களைச் செயது முடிப்பர் (புறம். 206:11-13). பாணர் கைவல் சீறியாழைக் கடனறிந்து இயக்கினர் (புறம. 398:4,5). பரிசில பெறச் செனற பாணருடன செனற கைவல் இளை யர் கடவுளைப் போற்றிப் பாடினர் (பதி. 41.6). கைவல் இளையர் கடலபிறக் கோட்டிய செங்குட்டு வனை இரவலர்க்கு எளிதில் ஈயும் கல்லா வாய்மை யன் இவனெனச் சுட்டிக் கூறினர் (பதி. 48:6-8).

*அம்பு கரிய கண்ணையுடைய தண்ணுமையைக் கிழித்தலால் கைவல இளையர் செயலற்று அழுங்கினர் (பதி. 51.33,34). 'கடனறி மரபிற் கைவல் பாண' எனப் பாணன் விளிககப் பெறுகின்றான் (பதி. 67:3) கைவல் பாண்மகன் சீறியாழை இடப் பககம் தழுவிப் பண்ணினை வாசிக்கும் முறைமையறிந்து இயக்கினான் (சிறு. 35-37). செங்கேழ் வட்டம் (விசிறி) கைவல் கம்மியனால் கவின் பெறப் புனையப் பெற்றது (நெடு. 56,57). கைவல் கம்மியன் கதவில் தாழ் முதலியவற்றைப் பொருத்தி முடுக்கினான் (நெடு. 83-85). தலைவனது கடும்பரி பூட்டிய நெடுந்தேரைக் கைவல் பாகன் மெல்ல இயக்கினான் (அகம். 230:11,12). கடுந்தேர்ச் சோழர் கைவல் யானை உடையவர் (அகம். 385:3). கைவல் கம்மியன அழகு பெறக் கழுவாத மண்ணாப் பசு முத்து ஒப்பப் புனனை அரும்பியது (நற். 94:4-6). 'கைவல சீறியாழ்ப் பாண' என்பது பாணனைக் குறித்த விளி (ஐங். 472:1). 'கைவல பாண' (ஐங. 473.5).*

**கைவாள் - கையிடத்தேயுள்ள வாள்.** *கரந்தை மறவரொடு நேர்ந்த நெடிய போரில் வெட்சி மறவனது வலிய கைவாள் - கையிடத்தே யுள்ள வாள்- ஆனிரையைத் தழுவிப் பகைவரைத் தடிந்து மாறு பாட்டினைப் போக்கியது (புறம். 269:9-12).*

**கைவிடுதல் - 1. நீங்குதல்.** *பாண்டியன கூடகாரத்துத் துஞ்சிய மாறனவழுதி போரைக கருதுவானாயின அவன பகைநாட்டு அம்பலங்கள், முழவு முதலாகிய ஒலிபொருந்திய கடவுள் தாழுறையும் தூணங்களைக் கைவிட - நீங்க - அவ்வளவிற்குப் பலிகள் இடம் மாறிப பாழ்படும் (புறம. 52:6-17). மூவேந்தருடைய நாட்டினைப் பொதுமையினறித் தமக்கே உரியவாய் ஆண்ட வேந்தாக்கும் வாழநாள் கழிந்தன; அவர் தொகுத்த செலவமும் செலலுயிர்க்குத துணையாவ தில்லை; அவரவர் செய்யும் அற வினையே விழுத்துணையாகும்; அத்துணையாகிய புணையைக் கைவிட்டோர்க்குத் தாம் பொன்றுங் காலை இவ்வுலகினின்றும் வீட்டுலகப் பேற்றினை எய்துதல இலலையாம் (புறம். 357). வையததையும் தவததையும சீா தூக்கினால் தவத்துக்கு வையம் சிறுகடுகளவும் நேர்படாது; ஆதலின் வீட்டுலகை அவாவினோர் இவ்வுலகப் பறறினைக் கைவிடடனர் (புறம. 358:1-5). இளஞ்சேரலிரும்பொறையுடன போரைக கைவிட்டு அவனமுன் செல்லாமல் முதலில அவனது வலிமையொடு மாறுப்பட்டுப பினனர் எதிாககப் பெறாத, வன்மையிலலாத வீரரொடு தம குலததை அவன் அழித்தற் கஞ்சி அவனுடைய பகைவேந்தர் தத்தம் அரண்களையே பாதுகாப்பாகக் கொண்டு துஞ்சா ராயினர் (பதி. 81:33-36). செவ்வேளின் கைவேல் தன்னைக் கைவிடாது நின்றதாகப் புலவர் பாடுவர் (முரு. வெ. 2). 'நெஞ்சே, சுரன நமக்கு எளியவாயினும் இளையோளாகிய காதலியின் பெருந்தோளில் பெறுகின்ற இனிய துயிலை யான் கைவிடுகலன்' என்று தலைவன பொருள்வலித்த நெஞ்சிற்குச் சொல்லிச் செலவழுங்கினான் (அகம். 193:11-14). மாசில் கற்பினையுடைய மடவாளொருத்தி போரில் புண்ணுற்று வீழ்ந்த தன் கணவன் பொருட்டுத் தன் குழவியைப் பேய் வாங்க அதனிடத்தே கொடுத்துக் கைவிட்டாற் போலத் தலைவனிடத்துக் கொண்ட காதலின் பொருட்டுத் தலைவி தன் நாணத்தையும் கைவிட்டாள் (நற. 15:7-10). 'அஞ்சற்க' என்று துணை செய்த வேந்தன் கைவிட்டானாகப் பகைவேந்தன் படையொடு வந்து முற்றுகையிடக் காணும், உடைந்த மதிலையுடைய ஓரெயில் மன்னன் அப்பகையைக் களைந்துதவுவாரைக் காணாது கலங்குவான் (நற். 43:8-11). 'நெடுந்தகாய், இத்தலைவியைப் பாதுகாத்தலைக் கைவிட்டு நீ நயந்த அச்சுரத்திலே செல்வது எநநாளிலோ, அந்நாள் இவளுடைய உயிரைக் கொண்டு போகும்' எனத் தோழி தலைமகனைச் செலவழுங்குவித்தாள் (கலி. 5:17-19). 'நம்முள் முயங்கிய முயக்கத்தைக் கைவிட்டுப் போதலால் பெறுகின்ற பொருளிடத்து அவாவைக் கைவிடுதலே நுமக்கு நிலை பெற்ற பொருளாம்' என்பது தலைவனிடத்துத் தோழியின் கூற்று (கலி. 14:17-19). 'நீர் நீங்கினால் என் நலம் நிழலில நின்ற தளிர்போல வெளுத்தலை அறிவேனாதலால் யான் உம்முடைய திருவடியின் அருளைக் கைவிட்டு இங்கிருத்தலைச் சூழ்வேனோ' எனறு தலைவி தலைவனிடம் கூறிப் பிரிவு விலக்கினாள் (கலி. 20:17,18). பண்புடை நன்னாட்டில் பகை தம்மிடத்தே வந்ததாக அந்நாட்டைக் கைவிட்டுப் போய் வேறொரு மன்னனுடைய ஆட்சியுட்பட்ட ஊர்களை இருப்பாக நினைத்துக் குடிமக்கள் தங்குவர் (கலி. 78:4-6). நொதுமலர் வரைவு நேர்ந்தவிடத்துத் தலைவி தோழியிடம், 'யான் தெருமரலைக் கைவிட்டு இருக்கவோ; ஆயர் மகளிர்க்கு இருமணம் கூடுதல் இல்லியல்பன்று; எனவே குடிப்பழுதுமாய்க் கற்பும் நீங்குமன்றோ' என்றாள் (கலி. 114:18-21). தலைவனது பிரிவு நீட்டிப்பில் கலக்கமுற்ற தலைவி தனக்குரிய நாணத்தையும் கைவிட்டுக் கண்ணீர் உகுத்துக் கவிழ்ந்து நிலம நோக்கினாள் (கலி. 144:3,4).*

**2. தவறவிடுதல்.** *புணையைக் கைவிட்டோர்க்கு –*

தவறவிட்டோர்க்கு - ஆற்றின் இக்கரையிலிருந்து அக்கரை சேறல் அரிது (புறம். 367:7-9). நீராடும் போது தோழி புணையைக் கைவிட்டுப் புனல்வழி ஈர்த்துச் செல்லப்பட்டால் தலைவி தானும் அவளுடன் செல்வாள் (குறு. 222:3-7).

3. **பிடிவிடுதல்.** தினைக் காவலரது கவணொலியை வெருவிக் கானயானை கைவிடும் - பிடிவிடும் - பசுமூங்கில் மீனைக் கவர்ந்து கொண்ட தூண்டிலைப் போல மேலெழும் (குறு. 54:2-4).

4. **வீசியெறிதல்.** இரவில் கோங்க மரத்தினின்று கழன்று வீழும் மலர், கைவிடும் - வீசியெறியப் படும் - சுடர்போல் தோன்றும் (அகம். 153:16-18). தினைப்புனத்தை மேய்ந்த யானையின் அடியொதுக்கம் கேட்ட கானவன் பரணேறிக் கடுவிசைக் கவணையினால் கல்லைக் கைவிட்டான் (கலி. 41:7-10).

**கைவிளக்கு** - கையிற்கொள்ளும் விளக்கு. 'தலைவனது பிரிவிடையே கலக்கமுற்ற தலைவி கதிரவனை நோக்கி, 'சுடரே, நீ மேறகு மலையைச் சேர்கினறாயாயின் கடலின் நீரிடத்தே மீண்டு வந்து தோன்றிப் பகற்பொழுதை உண்டாக்குமளவும் என காதலனை யான் தேடும்படி எனக்குக் கைவிளக்காக - கையிற் கொள்ளும் விளக்காக - சில கதிர்களைப் பகுத்துத் தாராய்' என்றாள் (கலி. 142:41-44).

**கைவினை** - 1. **கைவேலைப்பாடு.** கருந்தொழில் வினைஞரின் (தச்சரின்) கைவினை - கைவேலைப்பாடு - எல்லாம் முற்றுப் பெற்று ஏறிப்பார்த்து ஒட்டமுண்டென்று பெயர் பெற்ற அழகிய நடையினையுடையது தேர் (சிறு.257,258). வேங்கையின் புதுப்பூ பொனசெய் கம்மியனது கைவினை யொப்பத் தகைவனப்புற்றன (நற். 313:1-3). கைவினையால் பொலிவு பெற்ற மணிகள் இடையிடை அமைந்த பொனமணி வடத்தினைத் தலைவியின் மகன தன் இடையில் அணிநதிருந்தனன் (கலி. 85:3).

2. **கைத்தொழில்.** கைவினை - கைத்தொழில் - செய்யும் உழவர் தம் செய்வினையை முடிக்கும் பொருட்டு வயலில் மலர்ந்த நெய்தலாகிய களைகளை யெடுத்து வரப்பிலேயிட்டு வாடவிடுவர் (குறு. 309:1-6).

# கொ

**கொக்கு** - 1. **பறவையுள் ஓரினம்.** மீனைக் கவர்ந்துண்ணும் கொக்கினுடைய தூவி போனற வெள்ளிய நரைத்த கூந்தலையுடையவள் முதியவள் (புறம். 277: 1, 2). பசிய காலையுடைய கொக்கினது பிளந்த வாயையுடைய குஞ்சு அடைகரையில் மீன்களை மேய்ந்துண்ட பின்பு ஆரலமீனின் ஐயவி யன்ன முட்டைகளையும் இறாமீனின குஞ்சுகளையும் தாய் தரப் பெற்றுணணும (புறம். 342: 7-10). நெல்லின் சோறு கொக்கின் நகம் போனறது (புறம. 395: 36; 398: 25; நற். 258: 6). நீரறற இடததின்கண் செல்லாத கூர்மையாகிய பாாவையையுடைய கொககினது இரையை விரும்பிக் குத்துதலுக்கு அஞ்சுதலில்லாததும் பகைவா போருடற்றாவாறு குறுககிட்டுக் கிடப்பதுமான அயிரை எனனும் நெடுவரைக்குப் பொருநன் பல்யானைச் செல்கெழு குட்டுவன் (பதி. 21: 26-29). மழையாலே வருந்தி எழுந்த, பசிய காலை யுடைய கொக்கினது மெல்லிய சிறகரையுடைய திரள் செவ்வரி நாரையோடு சேறு பரந்த ஈர வெண்மணலிடததே யிருநது கடுமபுனலினின்றும் அற்றநீர்க்கு எதிரே வரும் கயல்மீனகளைக கவர்நதுணணும (நெடு. 15-19). செவ்வேள் மார்பினிடதது முததாரம போலச் செவ்வானததைப் பொருந்தி, மீனையருநதும் பசிய காலையுடைய கொக்கின இனம வரிசையாகப பறந்தது (அகம். 120: 1-3). சிறுவா இட்ட நுண்கயிற்று வலையில சேவல் பட்டதெனச சூட்டினையுடைய கொககினது பைங்காற் பேடை தனிததிருககும காலததே இரையைத் தினனாது தன பிள்ளையைத தழுவிப் பனைமரத்திடததிருநது அன்புதோன்ற நரலும் (அகம். 290: 1-7). மாரிககாலத்து இறப்பின மேலுளள சுதை பூசிய குளிர்நத மேலிடத்தை யொதத இறகினையுடைய குறுகப பறககும் கொக்கின சேவல் கயல்மீனைப் பெறக கருதி, உழவர் கழனியிலுளள பள்ளங்களில் நீரைத் தேககி வைததுள்ள அணையின மேலே தேஙகி வழியும் கடுநீரினை நோக்கி, மெல்லச சென்று பார்ததிருககும் (அகம. 346: 1-11). மாரிக்காலத்து ஆம்பல மலரைப் போன்ற தோற்றததையுடைய கொககினது பார்வையை அஞ்சிய நண்டு தாழைவேரிடத் துள்ள தன வளைககுட் செலல இடையர் பிணித்த கயிற்றினை அறுததுச் செல்லும எருதுபோல விரையும் (குறு. 117: 1-4). பசிய கால்களை உடைய கொக்கினது புல்லிய புறத்தைப் போன்ற ஆம்பல் மலர்கள் குவிந்தன (குறு. 122 : 1, 2). பெரிய உகிரையுடைய கார்காலதது உலவுகின்ற கொக்கினது கூரிய மூக்குப் போன்றது ஆழநத நீரின் முளைதத ஆம்பறபூ (நற். 100: 1-3). ஆம்பலின் கூமபிய முகை கயத்தினகண்ணுள்ள அழகிய கொக்குப் போன்றது (நற். 230 : 2, 3). கொக்கு வந்து அமர்ந்ததனால் கிளையினினறும் கழன்ற மாங்கனி, கொக்கினது குவிநத நிலை

போன்ற முகைகளையுடைய ஆம்பல் மிக்க நீர் நிலையில் துடுமென வீழும் (நற். 280: 1-3). கொழுஞ் சுளைப் பலவின கிளையில தங்கிய கொக்கு மீனைக் குடைந்து தின்னுதலால் உண்டாகிய புலவு நாற் றத்தைப் பொறுககவியலாது துய்த்தலை மந்தி தும்மும் (நற். 326: 1-4). தலைக்கு மேலும் நடு இலலையாய், வாள் போனற வாயை யுடைய கொக்கை உரிததாற் போன்ற வளைந்த மடுப்பை யுடையவள் கூனி (கலி. 94:17,18).

2. மாமரம். மறைகாப்பாளர் உறைகின்ற ஊரி டத்தே தங்குவீராயின் நெடிய மரமாகிய கொக்கி னது - மாமரத்தினது - பசிய கொத்திடத் துள்ள நறிய வடுவினைப் பலவாகப் போகட்ட, மாட்சி மைப்பட்ட ஊறுகறியோடு பிறவற்றையும் வகை படப் பெறுகுவீர் என்று பாணர் ஆற்றுப்படுத்தப் பட்டனர் (பெரு. 301,308-310). பாறையி லுள்ள நெடுஞ்சுனையிடத்தே உதிர்ந்த, பெரிய அடியை யுடைய கொக்கின் தீங்கனியினாலும் பலவின் நெகிழ்ந்து வீழ்ந்த நறும்பழத்தினாலும் விளைந்த தேறலை நீரெனக் கருதி உண்ட மயில் விழாக் களத்தின்கண் ஆடுமகள கழைக்கயிற்றில் கூத்தாட வியலாது தளருமாறு போலத் தளரும் (குறி. 187-194). தேன் கொக்கின் கனியை முள்ளைப் போனற கூரிய பற்களையும் செவ்வாயையுமுடைய மலையில் ஆடுகினற குரங்குக் குட்டியும் கடுவனும் உணணும் (குறு. 26:6-8). நிறைந்த கருப்பத்தை யுடைய பெண்வாளைமீன் 'கொத்தையுடைய தேக் கொக்கின் தீம்பழத்தைக் கவ்வும் (குறு. 164:1,2). பாலைக் கலந்தாற் போன்ற இனிமையுடைய தேக் கொககின கனியைத் தினற வெளவால் நெல்லி யின் புளித்த காயை உண்டு அயலிலுள்ள மூங் கிலின்கண்ணே தொங்கும் (குறு. 201:2-5).

**கொகுடி** - ஒருவகை முல்லை. தலைவியும் ஆயமும் பாறையிற் பறித்துக் குவித்த மலர்களுள் நறிய தண்ணிய கொகுடியும் ஒன்றாகும் (குறி. 81).

**கொங்கர்** - கொங்கு நாட்டவர். மலையமான் திருமுடிக் காரி தன்னையும் தன் மலையையும் பாடி வரு நர்க்கு இனமுகம் கரவாது உவந்து அளித்த அண் ணல யானைகளை எண்ணின அவை, கொங்கரை மேறகடறகண்ணே புறங்கொடுத்து ஓடச் செய்த ஞானறு அவர் தம்மிடத்தினினறும் பெயர்த்திட்ட வேலினும் பலவாகும் (புறம். 130:3-7). பெருஞ் சேரல் இருமபொறையின் தானையிடத்துப் பருக் கைக் கறகள மிக்க மேட்டு நிலத்தில் நீரை வெளிக் கொணரத தோண்டும் கணிசசி முதலிய கருவி களை யுடைய கொங்கரின் பசுக்கள் பரந்தாற் போன்று பல யானைகள் காணப்பட்டன (பதி. 77: 10-12). கருங்கை ஆடவர் தீயுண்டாகப் பாறை களைக் கல்லி இயற்றிய உவர்க்கிணற்றில் ஊறல் நீரை உண்ணவேண்டி நீர்பருக நிமிர்ந்து செல் லும் கொங்கர்தம் செவ்விய ஆக்கள் வன்னிலம் துணிபடச் சென்று எழுப்பிய செம்மண் புழுதி அகலிரு விசும்பில் மிக்குத் தோன்றும் (அகம். 79: 1-8). பொற்பூவினை யணிந்த கொங்கரை அகற்றி அவர்தம் நாடு பலவற்றையும் கைக்கொண்ட பசும்பூண் பாண்டியன் கூடல் நகர்க்கண் ஆடிய இன்னிசை ஆர்ப்பினைக் காட்டிலும் தலைவி குறித்து எழுந்த அலர் பெரியது (அகம். 253:3-7). தலைவனும் தலைவியும் சுனைநீர் ஆடியமை பலர் வாயினும் பேசப்பட்டுக் கொங்கர் மணியினை இடையிற் கட்டிக்கொண்டு தெருவில் ஆடும் உள்ளி விழவின் ஆரவாரம் போன்று அலராகியது (அகம். 368:10-19). தலைவன் மாலை குழையும்படி தலைவி முயங்கியதால எழுந்த அலர் வாகைப் பறந்தலையிடத்துப் பசும்பூண பாண்டியனின் ஏவ லில் வல்ல அதிகன் களிற்றோடு பட்ட காலத்தில் ஒளிர்கின்ற வாட்படையை யுடைய கொங்கர் செய்த ஆர்ப்பினும் பெரிது (குறு. 393). சோழர், கொங்கரை அடககும் பொருட்டு வெண்கோட்டு யானைகளை யுடைய போஎர் என்னும் ஊர்க்குத் தலைவனான பழையனிடம் வேற்படையைப் பெற்று வைத்திருந்தனர் (குறு. 10:6-8).

**கொங்கர்கோ** - கொங்கர்க்குத் தலைவன். முரசுகள் ஒலிக்கின்ற, வரிசையாக அமைத்த கேடக வரைப் பினைக் கொண்ட களிற்றிடத்தே வெல்கொடிகள் நுடங்கும் பாசறையையும் பகைவரது ஆரெயிலை வருத்திய கல்லைக் கக்கினாற் போன்று வீசும் கவ ணினையும் நாரால் அரிக்கப்பட்ட கள்ளையு முடைய கொங்கர் கோவே - கொங்கர்க்குத் தலை வனே - என இளஞ்சேரல் இரும்பொறை விளிக்கப் பெறுதல் (பதி.88:16-19). இளஞ்சேரல் இரும்பொறை சர்க்கரைக் கட்டியோடு கூட்டின அவரை முதலிய வற்றின் விதையாகிய உணவினையுடைய கொங் கர் கோவே என விளிக்கப்பெற்றான் (பதி. 90:25).

**கொங்கர்நாடு** - கொங்குநாடு. கணிச்சியால் திண்ணிய பாறையை உடைத்தலின் சிலவாக ஊறிய நீரைத் தன்னகத்தே கொணட குழியில் பறியாகிய கயிற்றை வாங்கும் பாத்திரத்தைச் சுற்றி நீருண் ணும் பொருட்டுச் சுழல்கின்ற பசுக்கள் பொருந்திய கொங்கர் நாட்டை - கொக்கு நாட்டை - கைக் கொண்டவன் பல்யானைச் செல்கெழு குட்டுவன் (பதி. 22:12-15).

**கொங்கு - 1. தாது.** பொய்கைக்கரையில் வளர்ந்த கடம்பின் இணைதல் நிறைநத மாலை, இந்திர கோபத்தை யொத்த கொங்கினை - தாதினை - உதிர்த்தலின் நீருண்ணும் துறை சித்திரத்தை யொத்துக் காணப்பட்டது (சிறு. 68-71). தலைவியும் ஆயமும் பறித்துக் குவித்த மலர்களுள் கொங்கு முதிர்ந்த நறிய சுரபுன்னையும் ஒனறாகும் (குறி. 83). உலைக்களத்து அடிக்குங்கால் தெறித்து விழும் பொற்றூள் போல மலைப்பூக்களாலான மாலை யிலிருந்து கொங்குகள் உதிர்ந்து வீழ, இனிய மொழிந்து, தொடிக்கண் வடுக்கொள்ளுமாறு தலைவி தலைவனை முயங்கினாள் (அகம்.142:23-26). கொங்கினை ஆராய்ந்து உண்ணும் வாழ்க்கையி னையும் உள்ளிடத்தே சிறகையும் உடையது தும்பி (குறு. 2:1). கொங்கு முதிர்ந்த முள்ளிச் செடி அணிற் பல் போனற முள்ளையுடையது (குறு. 49:1). தலைவி தாமரையின் கொங்கினைப் போன்ற நுண்ணிய பல தேமற் புள்ளிகளை யுடையவள் (குறு. 300:3,4). மாமை நிறத்தையுடையவள் திதலை போல் மா ஈன்ற தளிரின் மேலே இளவேனிற் காலத்தில் பல மலர்களின் வியக்கத்தக்க கொங்குகள் உதிர்ந்தன (கலி. 29:7,8).

2. தேன். வெண்டாமரையினது அரும்பு விரிந்த நாட்காலத்தில் மலர்கின்ற பூவில் கொங்கினை - தேனினை - நுகர்கினற வண்டொழுங்கு திங்க ளைச் சேர்ந்த கரிய பாம்பு போலத் தோன்றும் (சிறு. 183-185). 'நின் கவினைக் கொண்ட அனபி லாளனாகிய தலைவன் மணங்கமழும் காந்தளினது கொங்கினை உண்ணும் வண்டினைப் போன்று நினையாதே பெயர்ந்து சென்று புறம்மாறி மீட்டும் வந்தனன் காண்' எனத் தோழி தலைவியிடம் கூறினாள் (ஐங். 226).

3. கொங்கர். சோழன் குராப்பள்ளித் துஞ்சிய கிள்ளி வளவன் முரசம் இடியென முழங்கவும் களிறுகள் முகில் போலத் திரளவும் தேர்களும் குதிரைகளும் மழைத்துளி போற் சிதைந்து வீழவும் அம்புகள் காற்றெனச் செல்லவும் இடமகன்ற பாசறைக்கண் வலியுடைய மறவர் போர் செய்தற்குச் சேர்ந்திருக் கின்ற பெரிய தானையால் கொங்கினை - கொங் கரை - புறங்கண்ட கொற்ற வேந்தனாவான் (புறம். 373:1-8).

**கொங்கை - முலை.** கண்ணாகிய தாமரை மலரும் முகமாகிய தாமரை மலரும் அடியாகிய தாமரை மலரும் கையாகிய தாமரை மலரும் கொங்கைகளா கிய - முலைகளாகிய - தாமரை மொட்டுக்களும் ஆகிய, செவ்வாயாகிய அரக்காம்பலோடு கூடியியங் கும் இத்தாமரைகள் சுனையிற் பூத்த தாமரையோடு காட்சி வேறுபாடு உறாத கூரெயிற்றாராகிய மகளி ருடைய குவிமுலைப் பூணோடு அவர்தம் கணவன் மார் மார்பணிகலன்கள் மயங்கின (பரி. 8:113-119). வானவன் மகளின் (தேவசேனையின்) தோழியர் மார் பினை அணிசெய்யும் கொங்கையிடத்து அணிந்த கச்சினை மத்திகையாகக் கொணடு வள்ளியின் தோழியரைப் புடைத்தனர் (பரி. 9:46).

**கொட்டம் - சிறிய ஓலைப்பெட்டி.** கொழுவிய கொடி யினையுடைய முசுண்டை கொட்டம் - சிறிய ஓலைப் பெட்டி - போன்ற பூக்களைத் தன்னிடததே கொண்டது (சிறு. 166).

**கொட்டம் பலவனார் - புலவர்.** நற்றிணையின் 95-ஆம் பாடலொன்றே இவருடையதாகக் காணப்படு கின்றது. கொட்டம்பலம் என்னும் ஊரினராகலான் கொட்டம்பலவனார் எனப் பெயர் பெற்றார் என வும், தம் பாடலில், 'குறக்குறு மாக்கள் தாளங் கொட்டும் குன்று' என ஆண்டுள்ள தொடரில் 'கொட்டும்' என்ற சொற்சிறப்பால பெயர் பெற் றார் எனவும் இவர் பெயர்க்கு இருவகை விளக்கங் களையும் தருவர் பி. நா. (நற். பாடினோர் வரலாறு). மற்றும் அவரே கோட்டம்பலம் என்னும் ஊர்ப் பெயராட்சியைக் காட்டி அவ்வூரின் பெயரால் இப புலவர் கோட்டம்பலவனார் எனப் பெயர் பெற் றிருக்கலாம் என்றும் விளக்குவர். அதற்கேற்பக் கோட்டம்பலவனார் எனவும் இவர் பெயர்க்குப் பாடவேறுபாடு உள்ளது. ஆயின், வையாபுரிப் பிள்ளையின் சங்க இலக்கியப் பதிபபு இப்புலவ ரைத் தொடரால் பெயர் பெற்றவர் வரிசையிலேயே நிறுத்துகினறது. மொ. அ. துரை அரங்கசாமியும் அவ்வகையிலேயே கொட்டு என்னும சொற் சிறப்பை விளக்கி அதனாற் பெயர் பெற்ற அம்பல வனார் என இவரது இயற்பெயரையும் விளக்குவர். இவர் பாடலில் குறிஞசித் திணையில அமைநத ஆடுமகள் நடந்த கயிற்றில் குரங்குக் குட்டி தொங் குதற் கிசையக் குறக்குறு மாககள் தாளங்கொட்டும் என்ற புனைவு நயமானது. மந்தியின் முகத்திற்கு அத்திப்பழத்தை நிற உவமை காட்டுவதும் 'குன்ற கத் ததுவே குழுமிளைச் சீறூர், சீறூ ரோளே நாறுமயிர்க் கொடிச்சி, கொடிச்சி கையகத ததுவே பிறர் விடுத்தற் காகாது பிணித்தவென் னெஞ்சே' என அந்தாதித் தொடையமைந்து இயலவதும் இவர் பாடலின் சிறபபுக்களாகும்.

**கொட்டில் - தொழுவம்.** சீறூரில் உள்ள குடியிருப்பு சகடத்தின உருளைகளோடு கலப்பையும சார்த்தி வைக்கையினாலே நெடுஞ்சுவரிடத்தில் தேய்ந்த

புகை சூழ்ந்த கொட்டிலை - தொழுவத்தை - உடையது (பெரு. 188-191).

**கொட்டு** - பறை முழக்கு. பெரிய குன்றத்தில் மன்னரின் கொட்டுக்கு - பறை முழக்கிற்கு - ஏற்ப மயில் ஆடும (ஐங். 371:1,2).

**கொட்டை** - 1. முடிச்சு. கரிகால் வளவன் பொருநர்க்கு அழுக்கேறிய தைத்த ஆடையை நீக்கித் தூயவாகிய திரள முடிந்த கொட்டை - முடிச்சுகளை - கரையிலேயுடைய பட்டாடைகளை வழங்கினான் (பொரு. 154,155).

2. தாமரைக்கொட்டை. தெய்வத் தன்மையுடைய தாமரையிடத்துச் சிவந்த இதழ்கள் சூழ்ந்த செம்பொன்னாற் செய்தா லொத்த கொட்டையில் - தாமரைக் கொட்டையில் - தும்பி தன் இனிய பெடையைத் தழுவித் துயில் கொள்ளும் (சிறு. 73-76). பொய்கையிடத்துப் பூவினுடைய தேனையுண்ட வரிவண்டு, கழியிடத்துப பூத்த நெய்தற் பூவின் தாதை மனம் பொருந்தி நுகர்ந்து வயலிற் பூத்த தாமரைப் பூவினது விளங்குகின்ற கொட்டையாகிய மாண்பதியிடத்தே மீண்டு வரும் (கலி. 74:1-4). அனலன், இந்திரன் முதலியோர் படையாகத் தந்த மறிமுதல மணியீறாகச் சொல்லப்பட்ட வேறு வேறு உருவினவாகிய இவற்றை ஆறிருகையினும் கொண்டு பொறிவரிக் கொட்டையினின்றும் பெயராத அவ்விளமைப் பருவத்தே முருகன் அமரர் சேனைக்குத் தலைவனாகி, அதனால் இந்திரனின் புகழ் வரம்பைக் கடந்தான் (பரி. 5:57-70).

**கொட்பித்தான்** - சுழலப்பண்ணினவன். 'நிறைந்த வளை கொட்பித்தான் - சுழலப் பண்ணினவன் - செய்த வருத்தத்தாலே எனக்கு முன்கைச் சந்துதொறும் சந்துதொறும் காமத்தீ மூண்டது; இவ்வெம்மை ஆறுமபடி நீ கடல் நீரை முகந்து எனமேல் பெய்வாயாக' எனப் பிரிவாற்றகில்லாத் தலைவி மேகத்தை நோக்கிக் கலங்கிக் கூறினாள் (கலி. 145: 55-58).

**கொட்பு** - சுழற்சி. பொருதுகளம்பட்ட தன் கணவனைக் கணட தலைவி, பாடுதல் வல்ல பாண மக்களை நோககி வெள்ளிய ஆடையை யுடைய கரியவனை அணுகிப் புட்பூசலை ஓம்புமின; யானும் விளரிப் பண்ணைக் கொட்புற - சுழற்சியுற - பாடித் தின்னவரும் நரிகளை ஓட்டுவேன்' எனக் கூறினாள் (புறம். 291:1-4). நிலம் பின்னிடுவது போலக காற்துளம்பை ஊன்றிக் காண்போர் ஊக்கதைதைக் கெடுக்கும் விரைந்த கொட்பினை யுடைய குதிரைமீது ஏறிப் பகைவரைக் கொல்லும் காளை வநதான (புறம். 303.1-3). வீரரின் புண்ணைத் தைக்கும் ஊசி போன்ற அலகுடைய சிரற்பறவை இரையின் பொருட்டு மீனை ஆராயும் கொட்பினால் பனிக்கயம் மூழ்கியது (பதி. 42:2,3). பாரியினது பறம்பு அரணில் குருவிக் கூட்டம் காலையில் புறம்போய்ச் செந்நெற்கதிர்களைக் கொணரக் கதிருள்ள இடத்தை ஆராயும் கொட்பினவாகி மாலையில் மீண்டு வரும் (அகம். 303.10-14). புள்ளொலித்தாற் போன்ற கொட்பின் பெரிய ஒலியையுடைய மணிகள் பிணைத்த மாலையணிந்த கடிதாகச் செல்லுகின்ற குதிரை பூட்டிய தேரில் தலைவன் பகலிலே வந்தான் (நற். 91:10-12). பிரிவாற்றாத தலைவியின் தோளிலிருந்து வளைகள் கொட்புடன் கழலுதலில் நீங்கிற்றில (நற். 133:1).

**கொடி** - 1. தாவரக்கொடி. ஐந்தலை சுமந்த வெந்திறல் நாகம் புக்கதாக வானம் தீப்பிறக்குமாறு பசிய கொடியை யுடைய - தாவரக்கொடியை யுடைய - பெருமலை விடரகத்தில் இடியேறு எறிந்தது (புறம். 37: 1-4). தலையாலங் கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் வேப்பந்தளிரை நீண்ட கொடியாகிய உழிஞைப் பவரொடு மிடைந்து சூடிப் பொருது எழுவர் நல்வலம் அடங்க வென்றி கொண்டான் (புறம். 76:4-12). தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் தன் குடுமி களைந்த நுதலில வேம்பினது ஒள்ளிய தளிரை நெடிய கொடியாகிய உழிஞைப் பவரொடு மிலைந்து போருக்குச் சென்றான் (புறம். 77:2-4). பாரியின்பறம்புமலையில் உழவரால் உழுதுவிளைக்கப்படாதனவாகிய நான்கு விளையுளுள ஒன்று கொழுவிய கொடியை யுடைய வள்ளிக் கிழங்கு (புறம். 109:1-6). 'புதுவரகு அரியத் தினை கொய்ய எள்ளிளங்காய் கறுப்ப அவரையினது கொழுவிய கொடியின்கண் வெள்ளைக்காய் அறுக்கும் செவ்வியாக வளமுடன் விளங்கும் பறம்பு நாடு இனி நந்துங்கொல்லோ' எனக் கபிலர் இரங்கிக் கூறினார் (புறம். 120: 9-16). கொடி மருங்குல் விறலியர் அடிவருந்த நெடும் பொழுது மலையேறினர் (புறம். 139:3,4). பூவைத் தன் தலையில் கொண்டுள்ள கொடிமுல்லை ஒப்பனை செய்யப்பட்டது போல் தோன்றியது (புறம். 200:9). தூது சென்ற பார்ப்பனன் வயலைக் கொடி போல் வாடிய மருங்குலை உடையவன் (புறம். 305:1,2). வரகும் தினையும் சிறுகொடிக் கொள்ளும் அவரையும் ஆகிய இந் நான்கல்லது உணவும் இல்லை (புறம். 335:4-6). சிறுகொடிப் பாகல் (புறம். 399:6). கரந்தையாகிய பெரிய கொடியையுடைய விளைவயலில் தானை தங்கியது (பதி. 40:5,6). உளையுடன் கூடிய பூக்களைக் கொண்ட வாகையை முடியிலே பெற்ற

நுண்ணிய உழிஞைக் கொடியைச சூடிப் படைவீரர் பொருதனர் (பதி. 43:23,24). அறுகை எனபான நுணணிய கொடியாகிய உழிஞைப பூவைச் சூடிப் பொருதான் (பதி. 44:10). ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் பொன்னாற் செய்த கொடியாகிய உழிஞை சூடினான (பதி. 56:5). குறவர் மகளான மடவரல் வள்ளி கொடி போனற நுசுப்பினள் (முரு. 101,102). வேலன் பைங்கொடியால் நறைக்காயை நடுவேயிட்டுத் தக்கோலத்தைக் கலநது குளவி, வெண் கூதாளம் விரவிக் கணணியமைத்தான் (முரு. 190–192). பழமுதிர்சோலை மலையில மிளகுக் கொடியின கரிய கொத்துக்கள் சாய அருவி இறங்கியது (முரு. 309,316). கொழுவிய கொடியினையுடைய முசுண்டை கொட்டம்(ஓலையால் ஆன சிறுகூடை) போல பூததது (சிறு. 166). நல்லியக்கோடன இடுகொடி ஓடிய மார்பன (சிறு. வெ. 2: 2,3). இடையன காட்டிலுளள மரக்கிளைகளிலுள்ளவும் கொடிகளிலுள்ளவும் ஆகிய பல பூக்கள் கலநது கட்டிய படலைக் கண்ணி உடையவன் (பெரு. 172-174). பசிய கொடிகள் அசையும வயலில் கள்ளுணபார் பலரும் புகுவர் (பெரு. 337). இளமரக்காவில் காஞ்சி மரத்தைச் சூழ்நத நெடிய கொடியினையும் பசிய இலையினையு முடைய குருக்கத்தியின் பூக்கள் நீர்க்குழிகளில் விழுந்து கிடந்தன (பெரு. 375-379). அதிரல் பூதத அசைகின்ற கொடியினையுடைய சிறு தூறுகள துவலையோடு வரும் காற்றிற்த அசைநதன (முலலை. 51,52). மதுரை அஙகாடியில் உடலுக்கு அழகைக் கொடுககும் களிக்கலந்த இனிய நீரினையுடைய பசிய பாக்குடனே வளர்நத கொடி யீனற வெற்றிலை விற்போர் இருநதனர் (மது. 400,401). மழை பருவத்தே பெய்து வளர்க்கையினாலே கொடி விட்டு அழகு பெற்று மெல்லிய சுருள் விரிந்த சிறிய இலைகளையுடைய இலைககறிகள் அங்காடியில் வீற்கப் பெற்றன (மது. 530,531). புல்லிய கொடியினையுடையது முசுண்டை (நெடு. 13). செம்பினாலே செய்தாற் போன்ற தொழில்கள் அமைநத நெடிய சுவரிலே வடிவழகினை யுடைய பல பூக்களைக் கொண்ட ஒபபிலலாத கொடியை எழுதினர் (நெடு 112, 113). நெடுங்கொடி யவரை (குறி.87). புலலிய கொடியினை உடைய முசுண்டை விசும்பில் கார்த்திகை மீன்போல வெள்ளிதாக மலர்ந்தன (மலை. 100,101). குழிகளதோறும் வலிய பிடியின மடித்த முழந்தாளை யொப்பக் கொழுவிய கொடியினையுடைய கவலைக் கிழங்கு சீரிதாகக் கீழே வளர்த்தன (மலை. 127,128). பிள்ளைகளுடன மரங்களிற் சுற்றிக் கிடககின்ற பசிய கொடியாகிய பெரிய பற்றுக்கோட்டைப பிடித்துக் கால வழுக்காமல் மலைபபககம ஒருவர் பின ஒருவராகச் செலலுமாறு கூத்தர் ஆற்றுப்படுததப் பெற்றனர் (மலை. 215-219). நாறுகினற கொடிகளையுடையது காடு (மலை. 407). நறைக்கொடி மழையாற செருககின அருமபுகளையும பரவும மணததையும் பெறறது (மலை. 514). மிளகினது கரிய கொடியில பசிய மிளகுடைய கொததுக்கள் காய்ததன (மலை. 521). நீர் நாய் பழனததிலுளள அநதூம்பு வளளை ஆய் கொடியை உழக்கி வாளையைப் பற்றித தினறது (அகம. 6: 16-18). தலைவன் பிரிவால வருநதும் தலைவி பூக்கள ஒழியப பெறற கொடிபோலப பொலிவறறு மெலலச் சென்றாள (அகம. 19 16). வராற் போதது தூண்டிலிலுளள இரையினை விழுங்கித குவளை மலர் சிதையப் பாயநது அழகிய வள்ளைக் கொடியினைக் கலக்கிச் செருக்குமிககுக கயததை உழககியது (அகம. 36:1-8). கொடி பினலிய காட்டிலுளள யானை சோரும செவவியைப புலி பாாததிருககும (அகம. 73 12,13). பைஙகொடி முல்லையின் மெனபதப புதுவீ, வெளளிய களராகிய அறலபட்ட மணலில பரவிக் கிடககும (அகம. 74. 6,7) கவட்டிலை அடும்பின செநநிற மெனகொடியைத தேராழி அறுத்துச் சென்றது (அகம. 80.8,9). அரததின வாயபோனற அழகிய முட்களையுடைய பிரம்பின் நெடுஙகொடி ஆமபல இலையைச் சுறறித தூக்குமாறு வாடைககாற்று வீசியது (அகம. 96:3-6). புதலகளிற படர்நத பூவையுடைய அவரைக் கொடியிலுளள உளளீடு இலலாத காய் போனறு வெளளாட்டு வெண் குட்டியின வயிறு தோனறியது (அகம. 104:7-9). வளம் மிகக மழையால் பசிய முலலைககொடி மலர்நது கமழநதது (அகம். 124:11,12). குளிர்நத மழையால அருமபிய பசிய முலலைககொடியினது கூரிய முனை வாயநத வெளளிய அருமபுகள மலர்நதன (அகம. 144 3,4). வயலிலுள்ள இளநெற கதிரை முதிய பசு தின்பதைக கண்டு அஞசிய காவலா கருமபினை உண்பிததுப் பாகலின்சிறநதகொடியைபபகனறைக் கொடியுடன் அறுதது அவற்றால காஞசி மரத்தில கட்டினா (அகம. 156.3-6). கோங்கின மீது படர்ந்து இரவில் மலர்நத அதிரறகொடியைக் காட்டு யானைகள விடியலில அருமபுடன இழுததுக கவளம் கொள்ளும (அகம். 157.5-8). நிறைசூல யாமை அடும்பினைக கொடி சிதைய இழுததுக கழியிடதது மணல் மேட்டின பக்கம சோதது அதனகண மறைய ஈனறு புதைதத முட்டையை ஆண்யாமை அதனிடததினின்று குஞசு வெளிப்படும் வரை ஓமபும (அகம. 160.3-8). திரமபிய

கால்களிற் படர்ந்த முதிய முல்லைக்கொடி தளிர்க்கு மாறு மேகம் நீர் சொரிந்து முழங்கியது (அகம். 174:5-8). மனையின்கண் விளங்கும் மரத்திற் படரும் வயலையாகிய கொழுவிய கொடியினை ஆம்பல் மலருடன சேர்த்துக் கட்டிய தழையுடை உடுத்து மகளிர் விழாவயர்நதனர் (அகம். 176:13-15). பசிய கொடியையுடைய பாகலின் செங்கனியை விரும்பி நிறைநத சூலுடைய கானமஞ்ஞை அயிரி யாற்று அடைகரையில ஊதுகொம்பென ஒலிக்கும் (அகம். 177:9-11). கலைமான கள்ளியின புன்றலை மூடிய முலலைக் கொடியின ஆர்க்குக் கழன்ற புதிய பூக்களை மூச்செறிதலால் ஒதுக்கித் தெளிந்த நீரைக் குடிக்கும (அகம். 184:8-11). பாதிரி மலர் நுண் கொடியாகிய புனலியின் மலரொடு சேர்நது மணலிடத்தே கோலம் செய்தது (அகம். 237:1,2). கார்காலத்து மாலையில கொடிமிசை அரும்புகள் வாய் திறந்து மலர்நத ஒலிபொருந்திய முல்லை மணமகள் கூந்தலைப் போல மணந்து வண்டின தொகுதிகளைச செல்ல வொட்டாது தடுக்கும் (அகம. 244:4-6). கூதாளியின முதிய இலைகளை யுடைய கொடிகளின் கூட்டத்திற் கிடந்து பலாக் காய போன்ற புறத்தையுடைய பசும்பழப பாகல் அசையுமாறு வாடைக்காற்று வீசிற்று (அகம். 255: 13-15). உயர்ந்த பதுக்கைகளில் ஏறிப் படர்ந்த நெருங்கிய அதிரற்கொடியின் பூக்கள் நடுகல்லின காலைப் பலிக்குப் பயன்பட்டது (அகம். 289:2,3). காட்டிலுள்ள, முள்வேலியை யுடைய புலால் நாறும் முற்றத்தே ஓவியத்தில் எழுதினாலொத்த கொடிபோல நீணடு மெலிநத பூனையின குட்டிகள் தாயைச் சூழ்ந்திருந்தமை மதிசூழ மீன்போல தோன்றியது (அகம. 297:11-15). வெளளிய பூக்களையுடைய பகனறைக் கொடியினைச் சூடிக்கொண்டு எருமை போரில் வெனறி எய்திய வீரர் போல மூதூரின் கண புகும (அகம். 316:3-7). 'தலைவன வநது மீளும் தேர் வெண்மணல் மேட்டில் ஏறியும் அங்குளள தாழை மடல்களிற சென்றும் அழகிய அடும்பின் கொடிகளை அறுத்தும் ஓடியது (அகம. 330:12-14). சேற்றிலுள்ள அழகிய துளையுடைய வள்ளை யாகிய ஒள்ளிய கொடியை மயககி நெல்லினது வளைநத கதிர் விரிநதிட இறாமீன பாயும (அகம். 376:13-16). வயலையின் பலவாகிய கிளை களையுடைய கொடியும் கொம்புகளும் வருந்தும்படி அது மிகுதியாக மலர்நதது (அகம். 383:6,7). பூ விற் போரின அகனற வட்டியில் காட்டுப்பூனையின் கூரிய எயிறுபோனற மெல்லிய வரிகளை யுடைய அருமபுகளுடன் கூடிய நுணணிய அதிரற் கொடியின பூககள் நிறைநதிருந்தன (அகம. 391 : 2-4). 'மழை பெய்யாதொழிந்த, உயர்ந்த கொடி பரந்த காடடர்ந்த பரப்புக்களிடையே தலைவன் தலைவியை அழைத்துக் கொண்டு உடன்போக்கு மேவினான் (அகம. 397:5-8). உருண்டைக் கல்லின் அருகிலுள்ள மாணை என்னும் பெரிய கொடி துஞ்சும் களிற்றின்மேல் படரும் (குறு. 36:1,2). பனிக்காலத்தில் குறவன சிறுதினை யரிநத மறுகாலிடத்தில் கொழுங்கொடி அவரை பூக்கும் (குறு. 82:4-6). குறித்துச் செனற கார்காலத்தில் தலைவர் வாராமையால் பெயல் புறந்தந்த பூவையுடைய கொடி முல்லை, முகையை எயிறாகக் கொண்டு நகுகின்றது எனத் தலைவி தோழியிடட் கூறினாள் (குறு. 126). மேகம் முல்லை நிலத்தில் முல்லை மென்கொடி பற்களைப் போல முகை அரும்பும் (குறு. 186:1-3). புதலின்கண் படர்ந்த பசிய கொடியாகிய அவரை கிளி மூக்கைப் போல் ஒளிவிடும் பன்மலரை முகிழ்த்தது (குறு. 240:1,2). நீலமணி ஒழுகினாற் போன்ற கரிய கொடியாகிய அறுகினது பிணிப்பு நீங்கிய மெல்லிய தணடினைப் பிணையுடன் மான் ஏறுகள் உண்டு விளையாடின (குறு. 256 1-3). மழையை எதிர்கொண்ட பசிய கொடியாகிய முல்லையின் அரும்பு மலர்ந்த மணம செமமுலலை மலரின் மணத்துடன் கலந்து வீசும் (குறு. 382:1-3). கொல்லையின் கண குறவர் வெட்டியழித்தலானே குறைபட்ட கொடியாகிய நறைக்கொடி, மீண்டும் தளிர்த்துச் சந்தன மரத்திற் படர மழை பொழிந்தது (நற. 5:3-5). பரததை தலைவன் மார்பினுற்ற முயக்கத்தினால சோர்கின்ற குழையையும் நீட்டித்த பிணியுற்ற இரண்டு தோள்களையும் துவண்ட மாலையையும் உடைய கொடிபோன்று தலைவி வாழும் மறுகின்கண சென்றனள (நற். 20:8-11). கரிய கொடியையுடைய அதிரற பூவுடன பாதிரி மலரையும் சேர எதிரெதிர் வைத்து மலர்மாலை தொடுத்து மகளிர் கூந்தலில் சூடினர் (நற். 52:1,2). காய்ந்த கொடிகள் சுற்றிய இலவமரத்தின் கிளைகள் நடுங்கும்படி கடுங்காற்று வீசியது (நற. 105:1-3). கழியின கணுள்ள நீர் அலை மோதும் ஈரவெண் மணலிலே படர்ந்த வலிய கொடியாகிய அடும்பின் மலரை மகளிர் கூந்தலிலிடும் மாலைக்குக் கூட்டுவர் (நற். 145:1-3). ஞாயிறு மறைந்தமையால் இராப் பொழுது பூ உதிர்நத கொடிபோலத் தனிமையாற் பொலிவு குன்றியது (நற். 218:1,2). புதர்மேல் ஏறிப் படாகின்ற முல்லையாகிய கொடி மலரக் கார் காலம் வந்தது (நற். 242:2,5). தலைவன தலைவியின அன்பைப் பெறுதற்பொருட்டு வண்டல் மனையை அழகு செயதும் அலையை எற்றியும் மலைபோலுயர்ந்த வெளிய மணல் மேட்டிலே

படர்ந்த கொடி அடும்பின் பூவைப் பறித்தும் உதவி
னான் (நற். 254:1,2). நோன்பினை யுடைய மகளிர்
தாம் வைகுதற் பொருட்டு ஆண்டு நெருங்கிப்
படர்ந்துள்ள அடும்பின் கொடிகளைக் கொய்தழித்
தனர் (நற். 272' ,3). தேனெடுக்கும் வேடர் சநதன
மரத்தின கிளைகளிலே சுறறிய பசிய நிற இலை
யையுடைய நறிய தமாலக் கொடியை அறுத்துச்
செல்வர் (நற். 292:1-3). சரக்கொனறையின் கிளை
களில மலைமேல் மலர்ந்துள்ள கொடி போனற
பூங்கொத்து போரில் வலல யானையின் முகத்தில்
அணியும் பொன்னோடை போலத தோனறியது
(நற். 296:2-5). பிரிவுத் துன்பத்தால தலைவிககு,
நுணணிய கொடியை யுடைய பீர்க்கினது பழம்
பூவின நிறமபோலப் பசலை தோனறியது (நற்.
326:6,7). அடும்பின் கொடி துண்டிதது விழுமபடி
தேருருள் ஊர்நது வரும் தலைவன தேரின் இன்
னொலி இரவு நெடும பொழுதாகியும் கேட்க
வில்லை எனத தலைவி கூறல் (நற்.338:2,3). மிளகின்
அமலையங் கொழுங்கொடி துஞ்சுபுலியின் வரிப்
புறததைத் தடவும (நற்.தி. 8,9). மனைக்கு அயலிலே
வளர்கினற பசிய காயையுடைய வயலைச் செங்
கொடியினை நணடு அறுக்கும் (ஐங. 25:1,2).
வயலையினது சிவந்த கொடியால் மலர்மாலை
கட்டுதலாலே தலைவியின் செவ்விரல் மேலுமசிவந்
தன (ஐங். 52'1,2). கொண்கன் தேர், எழுசசியை
யுடைய பசிய கொடியாகி அடும்பு அற்றுபபோகும்
படி செலுத்தப் பட்டு நெய்தல மயக்கி வந்தது
(ஐங். 101). கடுவன பாறையில் படியும் சூல் கொள்
ளாத இளைய முகிலைத் தணணிதாய நறுமணம்
கமழும் நறைக்கொடியால் புடைக்கும (ஐங். 276:
1-3). கார்ப்பருவத்தில் மீள்வேன என்று கூறிப்
பிரிந்து சென்ற தலைவன குறித்த பருவம் வரு
முனனர் மீண்டுவநதது, புள்ளும மாவும் புணர்ந்து
இனிது உகளக் கோட்டினகண் மலர்வனவும
கொடியின்கண் மலர்வனவும் ஆகிய பல்வேறு
மலர்கள் நிறைந்து மணங்கமழும முல்லைநிலப்
பரபபைக் காணுமாறு தலைவியிடம் கூறினான
(ஐங.414). 'நெடிய கொடியையுடைய முல்லைகளின்
மலர்களும் செம்முல்லை மலர்களும் உதிரும்படி
விரைந்த செலவினையுடைய புரவிகளைச் செலுத்
திச் செல்வோமாயின தலைவி வருந்தாள்' என
மீள்கினற தலைவன பாகற்குரைத்தான் (ஐங்.422).
முல்லை, தம் பக்கலிலே படர்நதுள்ள செம்முல்
லைக் கொடிகளைப் பற்றுக்கோடாகத் தழுவிக்
கொண்டு அரும்பீன்று கார் காலத்தை விரும்பி
நினறது (ஐங. 454). வெள்ளிய இதழ்களையுடைமை
யால பாதித திங்கள் வடிவாகக் காணப் பெறும்
மலர்கள் நிறைந்து பகன்றை வெண்கொடி ஈங்கைப்
புதன்மிசைப் படர்ந்து அழகு செயயும் (ஐங. 456:
1-3). பெரிய புதல்தோறும் படரும் கொடியாகிய
பீர்க்கு பொன போல மலாநதது (ஐங். 464:1,2).
கார்ப்பருவம் சிறப்புறுதலான கருவிவானம் முழங்
கப் பசிய கொடியினையுடைய முல்லை அரும்பி
மலரும் பருவத்தை எய்தியது (ஐங். 476:1,2). அடும்
பினது தழைத்த நெடிய கொடி உளபுதைநது
ஒளிக்குமாறு வெண்மணல் பரவி இருநதது (ஐங்
தி. 6:1,2). எண் கையனாகிய சிவன கொடுகொட்டி
யென்னும் கூத்தை ஆடுங்கால், கொடி போனற
நுசுப்பினை உடையாள் (உமை) சீரைத தருவாள்
(கலி. 1:5-7). தமக்குப் பற்றுககோடெனறு சேர்ந்து
படரப்பட்ட மரம வாட, அதனைச் சேருதலைக்
கைவிட்டு வீழந்து கிடககும் பூஙகொடிகள கானத
தில் தலைவன் செலவைத் தடுக்கும் (கலி. 3:12,13).
இளவேனிற் காலத்துப் பொழில் அழகுபெற அன்
பால் கூடினவருடைய புலவுதலைப போலக்
கொடிகள் பினனுத லுறறன (கலி. 32: 12, 13).
கொடியிலும் கொமபிலும் உள்ள மலா வடிவாக
நெருபபிலிட்டுப் பணணிய பொன்மலர் மாலை
யைத் தலைவி அணிநதாள் (கலி. 54 1,2). பிளளை
யினறி வாடியவர் பெறறெடுதத செலவ மகள்
மென்கொடி போல அசைநது, இடையில பல
கோவைகளாலாய மேகலை தவழப பூககரையிட்ட
கலிங்கத்தை உடையவளாய வநதாள (கலி. 56:
10-12). நுடக்கத்தால கொடி எனவும விளககத்
தால் மின்னல் எனவும கட்புலனாகாமையின்
அணங்கு எனவும் சொலலப பெறும இடையுடை
யவள தலைவி (கலி. 57:4,5). தலைவி கொடிபுரை
நுசுப்பினாள (கலி. 58:4). பூ நெருங்கின மெல்
லிய கொத்து நீங்காத கொடியைப் போனறவள்
தலைவி (கலி. 62.4,5). பக்கமுயர்நத எழுசசியை
யுடைய அகன்ற அல்குலையுடைய கொடியனனார்
பரத்தையா (கலி. 67:10). குறுமக்கள் பனையின
பசிய குரும்பையைக் கொடியாற் கட்டி இழுத்து
விளையாடுவர் (கலி. 83:8-10). கொடியியல் நலலார்
(கலி. 88:1). 'புனததிடதது வளர்ந்த பூங்கொடி
போன்றவளே' எனத் தலைவன் தலைவியை விளித
தல் (கலி. 92:1). கொடியை யொத்த அழகினை
யுடையார் காவினிடத்து எழுநது நினறதோர்
பூங்கொடியை வளைதது அதிற கொத்துக்களைப்
பறிக்க அதிலிருநத வண்டின திரள உடைந்தது
(கலி. 92:25-29). பொழிலில் காற்றடிக்க ஒதுங்கி
வளைநது கொடியும் கொடியும தம்மிற் பிணங்
கியவை போல மகளிர் தெரியிழை ஆர்ப்பத தம
மிலே மயஙகி அங்குள்ள வண்டுகளுக்குக கெட்டோ

* இபொ க தொ 2-33அ

டினர் (கலி. 92:51-54). 'திரண்ட மரத்தின் வளை வான இடத்தை விட்டு நீங்காமற் பற்றி வளர்ந்த பூங்கொடி போலத் தன வடிவொதத வில்லாத யாக்கையை முயங்கிப் புரப்பேம் என்று பலர் கூறினர்' என்பது கூனி கூறறு (கலி. 94:22-25). பிட வமும் படாகின்ற கொடியினை உடைய முல்லை யும் தோன்றியும் கொன்றையும் நெருங்கி மலர்ந் தன (கலி. 102:2-4). தாழகினற கொடியிலே மண முலலை இதழ் விரிநதது போலத் தகைமிக்க புணர்ச்சியில் ஈடுபட்ட மகளிர் முறுவல் பூத்தனர் (கலி. 118:19,20). தன் மென்மையால் அணிகளைப் பொறுக்கலாற்றாத இடையாலே அணிகலன்கள் அணியாமல் பூ மாறின கொடிபோலத் தலைவி காணப் பெற்றாள் (கலி. 132:18). கொன்றை மரங்கள் கொடிபோன்று நீண்ட பூங்கொத்துக் களை மலர்ந்தன; முல்லை முதலிய கொடிகளின் மலர்கள் நறுமண முடையவாய மலர்ந்தன (பரி. 8:24,25). மதுரையிலுள்ள மாடத்தினகண் மகளிர் எழுப்பிய நறுமணபபுகை, மலையின பூங்கொடி களிடத்தே தங்கியது (பரி. 10:122-125). நல்லவள ஒருத்தி அசோகினது சிவந்த புதுமலரைக் குழை போலத் தன் காதிற் செருகிக் கட்டலர்ந்த மலரை யுடைய பூங்கொடி போல ஒல்கி அடிமேல அடி யொதுங்கித தன கண்ணியை அழகுறத திருத்தி னாள் (பரி. 12:87-92). தோனறியினது கொழுந்து விட்டுப் படர்ந்த கொடியினகண தோனறிய பவழம் போனற செந்நிறமுடைய மலர்கள் பரக் கும்படி காராகாலம மிக்கது (பரி. 14:15-17). பரங் குனறததின ஒருசார் வாடைக்காற்று அசைந்த விடத்துப் பூஙகொடிகள அசைநதாடின (பரி. 17: 16). செவவேள் குறப் பெணணாகிய கொடியை ஒதத வளளியை மணந்தவர் (பரி. 19:95). 'கொடி இயலாய்' எனத தலைவியைத் தலைவன விளித் தான (பரி. 20:94). கொடிபோனற அழகினை யுடைய மகளிரின குவிநத கைபோலக் குவிந்த காந்தள் அரும்புகள தோன்றின (பரி. 20 : 98). துடிகொட்டும கணவன எழுப்பும் தாள ஓசைக் கேற்ப முததுமாலை அசைய ஆடுபவளது அழகு வாடையால உளரப்பட்டுத தனது ஆடையும் அணிகலனும் அசைய ஆடுவதொரு பூங்கொடி உளதாயின, அதன அழகை ஒககும் (பரி. 21: 59-63). காறறாகிய நட்டுவன மெல்லிய கொத் துக்களையுடைய பூங்கொடியைக் கண்டோர்க்கு விருபபம வருமாறு ஆடச் செய்தான் (பரி. 22: 42, 43).

2. துகிறகொடி. தாழசடைப பொலிந்த அருந்த வததோன (சிவன) ஊர்தியாகிய ஆனேறு, சீர்கெழு கொடியாகவும் - துகிற்கொடியாகவும் - அமைந்தது (புறம். 1: 3, 4). பலயாக சாலை முதுகுடுமிப் பெரு வழுதியின் கொல்களிற்றின்மேல எடுக்கப்பட்ட கொடி விசும்பை நிழல செய்யும் (புறம். 9: 7,8). உயர்ந்த மதில் ஏந்துகொடியை யுடையது (புறம். 17: 27). தலையாலங்கானத்துச் செருவென்ற பாணடி யன் நெடுஞ்செழியன கொடியாற் பொலிந்த தேரி னை உடையவன (புறம். 24: 23). 'சோழன் நலங் கிள்ளி, பரிசிலர் சுறறத்தின் அடுகலததை நிறைக் கும் பொருட்டு விலையாக நெடுங்கொடி கட்டி யுள்ள வஞ்சி நகரையும் தருவான் (புறம். 32: 1, 2). குளமுறறத்துத் துஞசிய கிள்ளிவளவன, மலையை யொக்கும மழகளிற்றின்மேல் வானைத தடவுங கூறுபாட்டை யுடையன போல விரவின பல நிறத் தையுடைய கொடிகள அசைந்து தோனறும் பரநத படையை யுடையவன் (புறம் 38: 1-4). உறையூரை முற்றியிருந்த நலங்கிள்ளியையும் அடைத்திருநத நெடுங்கிள்ளியையும் சந்து செயவிக்கும் கோவூர் கிழார், 'நும செயல் நுங்குடிக்குத தக்கதொன றன்று; கொடியாற் பொலிந்த தேரையுடைய நும் மைப் போலும் வேந்தர்க்கு உடம்பு பூரிக்கும் உவ கையைச் செய்யும இம்மாறுபாடு' என அவர்க்கு அறிவுரை கூறிப் போரைத் தவிர்க்க முயனறார் (புறம். 45 : 7-9). கடிய சினததுடன் கூடிய கொல் களிறும் விரைந்த செலவினையுடைய குதிரையும் நீண்ட கொடியினை உடைய தேரும் வீரரும் என்ற நாலவகையான மாட்சிமை பெற்றது படை (புறம். 55: 7-9). வென்றியை விரும்பும மாயோன் நீலமணி போலும் திருமேனியையும் வானுற வோங் கிய புட்கொடியையும் (கருடககொடியையும) உடைய வர் (புறம். 56: 5, 6). கொடி எடுக்கப்பட்ட பாச றையில் வேந்தரது கொலயானை புண்பட்டு வருந தும் (புறம். 69: 9). மோரியர் விணபொரு நெடுங் குடையையும் கொடியணிந்த தேரினையும உடைய வர் (புறம். 175: 6). மன்னர் கொடி நுடங்கும் உச் சியினை உடைய தேரினர் (புறம. 197: 2). கிளளி வளவன் கொடிநுடங்கு யானையுடையவன (புறம். 228 : 10). வென்வேல் நெடுந்தகை சீறூர்க் குடியுமா வான்; கொடியெடுத்து நிறையழிந்து எழும் தானைக்குக் காவலுமாவான் (புறம். 314: 5-7). மன னர்க்கு மகள் மறுத்த தந்தை கணைய மரத் தைக் குறுக்கிட்டு அமைத்துத்திண்ணிய கதவினையும் அரைத்த மண்ணாலமைந்த மதிலினையும் நாள் தோறும் பெற்ற வெற்றிக்கு அறிகுறியாக எடுத்த நாட்கொடியையும் உடையவன் (புறம். 341: 4,5). பணைத்தாள் யானையும் கொடி நுடங்குமிசைய தேரும் மாவும் படையமை மறவரொடு நெருங்கி

நால்வகைப் படைகள் கடல் போன்று தோன்றின (புறம். 351: 1-4). விசய வெண்கொடி (புறம். 362: 5). கொற்ற வெணகுடைக் கொடித் தேர் வேந்திர் (புறம். 367:14). இமையவரம்பன் நெடுஞ்சேரலாதன் பலவாகிய யானைக்கூட்டத்தோடு வெல்கொடி நுடங்கும் படையை யுடையவன் (பதி.14:16,17). பல வகைக் கொடிகளின் நிழலில், பொன்னை மிகுதி யாக வுடைய கடைவீதி அமைந்திருநதது (பதி. 15: 19). பல்யானைச் செல்கெழுகுட்டுவன் பெரிய மலையின் பக்கத்தினின்றும் ஒழுகும் அருவியைப் போல் விளங்குகின்ற கொடியசையத தேரைப் பகைவரின நாட்டிடத்துச் செலுத்தினான் (பதி. 25: 10-13). கொடித்தேர் அண்ணல் (பதி. 33:1). நெடுங் கொடியை யுடையது தேர் (பதி. 34:5). கடல்பிறக் கோட்டிய செங்குட்டுவன், நிலத்தைப் புடைப் பதைப் போன்ற முழக்கத்தோடு வானத்தைத் துடைத்து மிக உயர்ந்த வெல்லுகினற கொடிகள் அசையும் தேரேறிச் சென்று அமர் புரிந்து வென் றான் (பதி. 44.1-3). கடலபிறக் கோட்டிய செங் குட்டுவன் நாட்டுத் தெருவிலுள்ள மாடத்தில் காற்றிடத்தே விளங்குகின்ற கொடிகள் மலையின மேலிருந்து வீழ்கின்ற அருவியைப் போலக் காட்சி யளித்தன (பதி. 47:3,4). விளங்குகின்ற கொடி அசையும்படி போர்க் களத்தில் தேர் மறிந்து சுழன்றது (பதி. 49:5;81:7). குடவர் கோமானாகிய நெடுஞ்சேரலாதன் வடவர் அஞ்சுதற்குக் காரண மான வான்தோய் வெல்கொடியை யுடையவன் (பதி. ப. 5:1,2). கொடிகள் அசைகின்ற நிலையை யுடைய கொல்களிறுகள் மிடைந்து நின்றன (பதி. 52:1). ஆடுகோட்பாட்டுச் சேரலாதனின் களிறு மேம்பட்ட எடுத்த கொடி தன் மீது அசையப் பகைவர் கதவு காணின் பாய்நது தாக்குவதல்லது அடங்கி நில்லாது (பதி. 53:20,21). ஆடுகோட் பாட்டுச் சேரலாதன் குடவர் கோவும் கொடித் தேர் அண்ணலு மாவான் (பதி. 55:9). செல்வக் கடுங்கோ வாழியாதன் பகைவரைக் கொன்றமை யால் வெற்றி குறித்து எடுத்த கொடி விண்ணிலே அசைந்தது (பதி. 67:5). வீரர் பகைவேந்தர் ஏறிச் செல்லும் யானையினது வெண்கோட்டைக் கொடி நுடங்கும் கள்ளுக்கடை சென்று கள்ளுக்கு விலை யாகக் கொடுத்து அதனைப் பெற்றுணடு மகிழ்வர் (பதி. 68:9-11). மலைபோன்ற யானைமேல் வான ளாவ எடுத்த வெற்றிக்கொடி வரைமிசை யருவி போல இடந்தோறும் அசைந்து விளங்கியது (பதி. 69:1,2). பெருஞ்சேரலிரும்பொறை 'கொடித்தேர்ப் பொறைய' என்று விளிக்கப் பெறுகினறான் (பதி. 73:11). பெருஞ்சேர லிரும்பொறையே, நின் பகை வர்தம் கடும்பரி பூட்டப் பெற்ற நெடுந்தேரின் மீது அசைகின்ற கொடிகள் இனிப் பகைமுனை நில வெல்லையில் தோன்றா என அரிசில்கிழார் குறிப் பர் (பதி. 80:12-17). பல்வகைக் கொடிகள் அசை கின்ற வலியினையுடைய பகைவரது போர்களை அழித்த சிறப்புடையன இளஞ்சேரலிரும் பொறை யின் யானைகள் (பதி. 82.3,4). நீண்ட கூதிர்ப் பாசறையில் தேர்க்கொடி நுடங்கியது (பதி. 82:8,9). கார்காலத்து மழை முகிலின் முனனே கொக்குகள் ஒழுங்கு குலைந்து எழுந்து நீளப் பறக்கும் தோற்றம், போர் 'யானைகளுடன் மிடைநது வரும் கிடுகுப் படையொடு தேரிற் கட்டிய கொடி யசைந்து வரும் காட்சி ஒத்தது (பதி 83:1-4). கொடிகள் அசைகின்ற வெல்லுதற்கரிய மதில்களை எண்ணின், அவை அளவிடற் கரியன (பதி. 84:8). பாசறையில உலாவுகின்ற களிறுகளின் மேல் நின்ற வெல்கொடிகள் அசையும (பதி. 88.17). கொன் முனைக் கொடியினம் (பதி. இ. 2.5). 'வஞ்சி யாது எதிர்நினறு அடுகினற வெற்றியை யுடைய கோழி மேலாய் நின்ற கொடி நெடுங்காலம் வாழுக' எனறு சோலையில சூரரமகளிர் பாடி யாடினர் (முரு. 38-41). மதுரையில போரை வென்று விரும் பிக் கட்டின சேயநிலததே சென்றுயர்நத கொடி விளங்கியது (முரு. 67). பல பீலிகளையுடைய மயில செவ்வேளின் ஆணையினாலே வெனறெடுதத கொடியிலே யிருந்து அகவும் (முரு 122). பல வரிகளை யுடைய வளைந்த சிறகினைக கொணட புள்ளினை (கருடனை) அணிநத நீண்ட கொடியையுடைய செல் வன் திருமால (முரு. 150,151). ஊர்தோறும் எடுக்கும தலைமை பொருந்திய விழாவினகண வாரணக் கொடியை நிறுவினர் (முரு. 219,220). மாட்சி மைப்பட்ட தலைமையினை உடைய கோழிக் கொடி யோடே உருகெழு வியனகரை அமைவரப் பண்ணி னர் (முரு. 227,244). வெற்றி பெற்ற படையினர் வெல்கொடியை எடுதது வெற்றி தோன்றக் கொம் பும் சங்கும் முழங்கினர் (முல்லை. 91,92). பெரிய மரக்கலத்தில் நெடுங்கொடி பாய்மரத்தின மேலே ஆடும் இயல்பினது (மது. 79,83). கோயில்களுக்கு விழாக்களை நடத்திப பல அழகிய கொடிகளைக் கட்டினர் (மது. 366). தண்டத் தலைவர் அரசனேவ லாற் சென்று அரிய மதிலைக் கைக் கொள்ளுந தோறும் நலம் பெறு புனை கொடி நட்டனர் (மது. 367,368). வீரர் வேற்படையோடே சென்று பகை வரைக் கொன்று தமக்குப் புகழை யுண்டாக்கி விறல்சால் நனகொடி எடுத்தனர் (மது. 369-371). அங்காடி வீதியில் கள்ளினது களிப்பு மிகுதியைச் சாற்றும் கொடி இருந்தது (மது. 372). பல வேறு

பட்ட அங்காடியில் கல்வி. கொடை, தவம் முதலிய வற்றின் சிறபபுணர்த்தும் திரட்சியை யுடைய கொடிகள எடுக்கபபெறறன (மது.372,373). மலையை நடுவே வெளியாகத் திறநதாற் போனறமைதத ஓங்குநிலை வாயில வழியே வென்றி கொண்டெழும் கொடிகளோடே யானைகள சென்று புகும (நெடு. 87,88). மலைகளைச் சேர்நது இநதிரவில் கிடந்தாற் போன்று அரண்மனையில் பலவிடத்தும் பனனிறக் கொடிகள் விளங்கின (நெடு. 108,109). இல்லுறை தெய்வம் மகிழ மலரணிந்த மனைவாசலில் பலர் தொழும் கொடிகள் அமைத்தனர் (பட். 159, 160). கால்கள் நட்டு வைத்த கவிந்த சட்டங்களின் மேலே நட்டு வைத்த வெள்ளிய துகிற்கொடிகள் அசைந் தன (பட். 167,168). காவிரிப் பூம்பட்டினத்தில் பல்கேள்வித துறைபோகிய தொல்லாணை நல்லா சிரியர் சொற்போர் செய்யக் கொடிகள் எடுத்தனர் (பட். 169-171). புகார்த துறையின முன்னே நிறைந் திருக்கும் நாவாயில் நட்ட பாய் மரத்தின மேல் கொடி கட்டப் பட்டிருநதது (பட். 173-175). கள்ளுண்பார் பலருஞ் செல்லும் மனைகளிற் சிறபபுடைக் கள்ளின விலைக்குக கட்டின கொடி யோடே ஏனையவற்றிற்குக் கட்டின கொடிகளும் மிகக் கலந்திருந்தன (பட்.179-181). நன்னனது மலை யினின்றும விழுகின்ற அருவிகள் வெனறுயர்கினற கொடிபோல் தோன்றும் (மலை. 581-583). கொய சுவல புரவி பூண்ட கொடி எடுத்த தேரினை உடை யவன ஆலங்கானததமா வெனற செழியன் (அகம். 36:13,14). கொய்சுவற் புரவிக கொடித்தேர்ச் செழியன (அகம். 57:14). மூதூரில் உளள அங்காடி களில் கட்டிய நீண்ட கொடிகள அசையும் (அகம. 83:7). மருதநிலங்கள் சூழ்நத மதிலில கொடிகள் நுடஙகும் (அகம. 84:14). நாவாயில் நெடுங்கொடி அசையும் (அகம. 110.18). அரச யானை கொணட துகிற்கொடி போல ஓடை என்னும் குனறத்துளள ஞெமை மரததின மீது பினனிய சிலமபியின் கூடு மேற்காற்றால அசைநதது (அகம. 111:3-6). வான தோய் மதிலில நெடுங்கொடி நுடங்கும் (அகம். 114: 9). கள் மிகக தெருவில நீணட கொடிகள் அசையும (அகம. 126:10). செழியனின் கூடல் மறுகில் கொடி நுடஙகும் (அகம. 149:13,14). மயிற்கொடியினை உயர்ததிய இடையறா விழவினைக் கொணட நெடி யோன (முருகன) குனறம் கூடலின் மேற்பாலுள்ளது (அகம். 149:14-16). பசும்பூண் பாண்டியனது களிற் றினமீது எடுதத வெல்லும் கொடியை ஒபப நெடு வரையிலிருநது அருவி வீழும் (அகம். 162:21-24). நெடுங்கொடி நுடங்கும் நறவு மலி பாக்கம் (அகம். 196:1). வெல்லும கொடியினை யுடைய விரையும் காற்றையொத்த புனைதேரினை யுடையவர் கோசர் (அகம். 251:6,7). மேகங்கள் யானைகளை ஒப்பன வாகி வலமாக எழுந்து கோலினகண் நிமிர்ந்த கொடிபோல மினனியது (அகம். 278:1-4). அட்டவா யில் எனனும் ஊரிடத்தே யுள்ள செல்வர் தேர் குழித்த தெருககளில நெடுங்கொடி நுடங்கும் (அகம். 326:3-5). யானைப போர் நிகழும் பாசறைக்கண் வெனறி முரசம் போர்க்களத்தே ஒலிக்க வேந்த னும் வென்று கொடியை உயர்ததினன் (அகம்.354: 1-3). பெரிய மலையினினறு ஒழுகும் நீண்ட வெள் ளிய அருவி நெற்றிப் பட்ட மணிநத யானையின மீது தூக்கிய, அசையும வெண் துகிற கொடியினை ஒக்கும் (அகம. 358:12-14). வெறியாட்டெடுப்போர் கடம்பின்கட் கொடியினைக் கட்டி மாலை சூட்டி, வாசசியங்களைக் கொண்டு நெடுவேளைப பாடும் பாட்டிறகு ஏறபக களம சிறப்ப மெலல ஆடுவர் (அகம.382:3-7). நனனன கொடியணிந்ததேரினையும் பொன்னாலாய பூண்களையும உடையவன் (அகம். 396:1,2). நெடிய கொடிகள நுடங்கும கடைததெருக் களையுடைய பழைய ஊரின்கண உள்ள செல் வனின் மகன் தலைவன் (நற. 45:4,5). இடி முழங் கும் நள்ளிருளில் நடுயாமத்திலே கொடி நுடங் கினாற் போன்று மேகம் மின்னி மழை பெய்தது (நற. 68:8,9). கிளளிவளவனுக் குரிய அம்பர் என் னும் நகரில அழகு செய்யபபெற்ற உயர்ந்த கொடி கட்டியிருந்தது (நற. 141 : 9,10). சோழர்க் குரிய ஆர்ககாடு கொடி நுடங்கும தெருக்களையுடையது (நற. 227:5,6). யானை பகைவரின வெற்றிக கொடி உயர்ததிய அரணத்தை அழிததது (ஐங. 429.2-4). கூற்றுவனை யொதத வேறபடையினை யுடைய தலைவர் புகழ வளர்கின்ற உயர்நத கூடலிலே நெடிய வெற்றிக் கொடிகளைக் கட்டும்படியாகப் புகுந்தார் எனறு தோழி கூறிப் பருவங்கணடழிநத தலைவியைத் தேற்றினாள் (கலி. 31:24,25). காமன கொடியாகிய மகரம் பொறிதத மோதிரத்தைத் தலைவனின சிறுவன கையில பரததை இட்டாள் (கலி. 84 : 23 - 25). ‘இழையணிநத கொடியினை யுடைத்தாகிய திண்ணிய தேரினையும் மணிகட்டின இனமாகிய யானையினையும் உடையாய் என அரசனாகிய தலைவனைச் சான்றோர் விளித்தனர் (கலி. 99:7). திருமால் தம் கையில் ஏநதியுள்ள சங்கு, அவருடன பொர வந்த அவுணரின் கொடிகள் அற்று முறிந்து வீழவும அவாதம் செவிகள் செவிடுபட்டுப போகவும் முடிகள் அதிரவும் நிலை தளர்ந்து நடுங்கவும் இடிபோல முழங்கியது (பரி. 2: 36-40). திருமால சிவநத அலகினையுடைய உவணம் (கருடன) எழுதப்பெற்ற உயர்நத கொடியை உடைய

வர் (பரி. 2:60). தன் தாயின் துன்பமகற்றிய புள்ளினை (கருடனை) ஓங்கி உயர்ந்த கொடியினிடத்தே உடையவர் திருமால (பரி. 3:17,18). திருமால் சேவலோங்கு உயர்கொடியை (கருடக்கொடியை) உடையவர்; சேவலோங்கு உயர்கொடியை உடைய திருமாலின் உயர்கொடி ஒன்று பனை; அவரின் மற்றொரு கொடி நாஞ்சில்; பிறிதொரு கொடி யானை; இங்ஙனம் பல கொடிகள் உளவேனும் அவரின் ஒன்றாக உயர்ந்த (கருடக்) கொடியை அக்கொடிகள் ஒததல் இல்லை (பரி. 4:36-41). திருமாலின் கொடி மேல் இருக்கும் கருடன் எறிந்தெடுக்கும் இரை பாம்பாகும் (பரி. 4:48). செவ்வேள் பகைவரை வென்று வெற்றிக்கு அறிகுறியாக எடுத்த (சேவற்) கொடியாலே பெருமை பெற்றவர் (பரி. 9:80). கிடை முதலியவற்றால செய்த வாள், குநதம் முதலிய படையேநதிய மகளிரும் மைந்தரும் கொடியை உடைய திண்ணிய தேரில் ஏறி வையைக் கரை அடைந்தனர் (பரி. 11:50,51). புள் (கருடன்) எழுதிய புனை கொடியை உடையவர் திருமால் (பரி. 13:4). பலவாகிய நிறம் அமைநத விரிநத சிறகினை யுடையதும் பாமபினது பகையும் ஆகிய கருடனைக் கொடி எனக் கொண்ட கோடாச் செல்வன் திருமால் (பரி. 13:38,39). 'சேவலோங்கு உயர்கொடிச் செல்வ' எனத் திருமால விளிக்கப் பெறுகிறார் (பரி. 13:41). 'புள்ளணி பொலம் கொடியவை' எனத் திருமால் போற்றப் பெறுகிறார் (பரி. 15:56). கொடியணிந்த தேரானுக்கு (பாண்டியனுக்கு) உரியது வையை (பரி. 16 : 47). திருப்பரங்குன்றத்திலுள்ள செவ்வேளை வழிபடச் சென்றோர் இசைக்கருவிகளும் நறுமணப் பொருள்களும் அகிற்புகையும் கொடிகளும் ஆகிய இவற்றை ஏந்திச் சென்றனர் (பரி. 17:5,6). ஏனைய அரசருடைய குதிரை பூட்டிய தேர்களாலே சூழப்பட்ட கொடித்தேர்ப் பாண்டியனுக்குரிய நகரம் கூடல் (பரி. 17:45). செவ்வேள் புள் (சேவல்) எழுதிய உயர்ந்த கொடியினை உடையவர் (பரி. 17:48). செவ்வேளுக குரிய கோழிச் சேவல் எழுதப்பெற்ற கொடியினை ஏற்றுதற்குரிய யானையின மத்தகம் குங்குமத்தால் புனையப் பெற்றது (பரி. 19:85,86,91). 'பகைவரை வென்ற வெற்றியாலே கோழிக் கொடியை அழகுறச் செய்த செலவ' எனச் செவவேளை நல்லச்சுதனார் விளிப்பர் (பரி. 21:17). கொடி கட்டிய தேரையுடைய பாண்டியனுககுரியது மதுரை (பரி. தி. 8:3;10:3).

3. ஒழுங்கு. செந்நெற்கதிரால் வேயப்பட்ட, மெல்லிய கரும்பாற் கட்டப்பட்ட கொடி - ஒழுங்கு - பொருந்திய கூரை விழாக்கொண்ட களம்போல வேறுவேறாகப் பொலிந்து தோனறியது (புறம். 22: 14-17). ஊர்தொறும் மீன் சுடுகின்ற புகையினது நெடிய கொடி வயலிடத்து மருதினது வளைந்த கோட்டைச் சூழும் (புறம். 52.9,10). பகைவர் நாட்டில் ஒருகாலத்தும் வளப்பம் குன்றுதலையறியாத பெரிய மருதநிலங்களை நிறமும் கொடியும் உடைய எரியுண்ண நாடெனும் பெயர் போய்க் காடெனும் பெயர் உணடாயிற்று (மது. 154-156). குதிரை கொடிபடு பிடரியினையும் இடுமயிரினையும் உடையது (மது. 391). குலமகளிர் கண்பொர எறிக்கும் மின்னுக்கொடி ஒப்பச் சிலம்பு முதலிய அணிகலன் ஒலிப்பச் சென்று காலையில் கதவுகளைத் திறநதனர் (மது. 665-667). காட்டிடத்து இலையிலவாய் மலர்ந்துள்ள அருமபில்லாத இலவம் பூக்கள், மகளிர் கூட்டம் மகிழந்து கூடி எடுதத அழகிய (கார்த்திகை) விளக்கின நெடிய கொடி போலத் தோனறின (அகம். 11:3-5). கணணகன் விசும்பில் மேகம் சினந்தெழுந்து பொறிவீடுகின்ற கொள்ளிபோல கொடிபட மினனி நள்ளிரவில் படு மழை பெய்தது (அகம. 108.6-8). தேககு மரங்களின் காயந்த இலைகள் உதிரநது கிடககும பககமலையிடத்துக் காயந்த தூறுகளிற் பிறநததும் காற்றினால் வளர்நதோங்கியதுமான மிகக தீயின ஒளி மிக்க நீணட கொடி மேலே எழுநது குகைகளில் முழங்கும் (அகம. 143.4-7). விசுமபில தீயின் கொடியை ஒத்த மினனல மேகததைப பிளநது கொணடு அசைந்து செனறது (அகம. 162:3,4). தேராழி நுண்ணிய மின்னுகினற கொடிபோனறு பசிய பயிர்கள் அழிய விரைநது செலுததப் பெற்றது (அகம. 254:13,14). வெலபோா வழுதி வென்று செலலும் போரில தூககிய கொலலும் புகழ்வாய்ந்த வேல் போலக் கொடிபட மினனி மழை பெயதது (அகம். 312:12 - 14). வண்டுகள் தேன் உணணுதற்கு வந்து வீழும்படி, மலர்நத கொடியினரைத் தழையிடை இட்டுத் தலையணிகளுடன மகளிர் கதுப்பினை ஒப்பனை செயதனர் (குறு. 21:1-3). கொனறை மரங்கள் வமப மாரியைக் காரென மதித்துப் பருவம் வாரா அளவை கொம்புசேர் கொடியிணர் ஊழ்த்தன (குறு. 66). அறுமீன் (கார்த்திகை நாளின்) பெயராலே பெயர் பெற்ற அறஞ்செய்வதற் குரிய திஙகளில் எடுக்கப் பட்ட விளக்குகளின் நெடுங்கொடி போலக் கோங்க மலர்கள் காட்டினை அழகு செயதன (நற். 202:9-11). காட்டுத் தீயின் கொடி படர்ந்து அகத்திடப் பெற்ற செவ்விய மலை தலைவனின் சுடர் பூண் விளங்கும் ஏநதெழில் மார்பிற்கு உவமை (ஐங்.353:1,2). இடி படிதலுற்று நெருப்பை யுமிழந்து ஒலிக்கும்,எங்கும் கலநத பெயலாலே இருண்ட நடு

நாளில் கொடி விட்டு மினனல உண்டாகியது (கலி. 41 5,6). பலவேறு நிறமுடைய ஏறுகளைத் தொழு விறுள விடுத்து ஆயர் புகையிட்டனர்; கொடிபட்ட புகை சூழந்த அததொழு மழை ஒருங்கு திரியும் மலையைப் போனறு காட்சி தந்தது (கலி. 103: 20,21). இராக்காலத்து இடியை உமிழ்கின்ற மேகத் திருளைப போழும கொடி மின்னலை வாங்கிக கொள்வேன் எனறு ஒருவன விரும்பின அததன்மை யளாய்த் தலைவி உளளாள்' என மடலேறும் தலை வன சான்றோரிடம் கூறினான் (கலி. 141:17,18). இருண்ட முகில முழங்கிய சிகரமும் அதனகண் தோன்றிய கொடி மின்னலும் செவ்வேளின் ஓடை யுடைய களிற்றை யொக்கும (பரி. 18:23-27). முகிலில் தோன்றும் கொடி மின்னுப் போல ஒளிவீசித் திகழும் பொற்றகட்டினை இடை யிடையே அறல்படும்படி இழைத்துத் தலைக்கோலம் சமைத்தனர் (பரி. 21:54-56).

4. நீட்சி. ஒருநரி ஏற்றை கொடியாக - நீட்சியாக- ஒழுகிய குருதியுடன் தொங்கிக் கிடந்த குடலைக் கடித்து வரிகளை யுடைய மரல் பொருந்திய நெறியில கள்ளி நீழலில் கூக்குர லிட்டுத் தங்கி யிருநதது (அகம். 337:14-17). தனனால மறத்தற் கரிய தலைவி, தழுவுவ தில் விரைவுடையள்; காமர் வனப் பினள்; குவிதலையுடைய மெனமுலையள்; கொடிக் கூந்தலள் எனப் பாங்கற்குத தலைவன் உரைத்தான் (குறு. 132:1-3). கொடிப்பூ வேழம (கொறுக்காந் தட்டை) தீண்ட அயலிலுள்ள பிஞசு ஈனற மாமரததின இளந்தளிர் நுடங்கும் (ஐங. 114.1,2). கழனியூரன் மகளாகிய தலைவி கரும்பின் பூவால் தொடுக்கப் பெற்ற கொடி மாலையினை உடையவள் (ஐங. 91:3,4).

5. தீக்கொழுந்து. இமையவரம்பன் நெடுஞ்சேர லாதன பகைவர் நாட்டை அழிக்கக் கொளுத்திய தீ காற்றுப் பொருதலால் கொடி - தீககொழுந்து- விடடெழும் குருஉப் புகை பிசிராக உடைநது பரந்து அதனை உருவறக் கெடுத்துத் தொலகவினை அழித்தது (பதி. 15:6-8). சூறாவளி வெப்பமுறச் செய்த கொடிவிடு மிக்கதீ மூங்கிலை ஒலியுணடாகத் தாககிப் பககஙகளில் எழுநது மலையடுககங்களிற் பரநதது (அகம. 47:4-6).

6. கீழத்திசை. 'சான்றீர், கொடிமிசை - கீழ்த் திசைககண் - தோனறின பொய்யற்ற நன்மக்கள் உயர்ததுப் புகழநத, மாசற்ற ஞாயிறறின மண்டி லததை யான வாங்கிக் கோடறகு விரும்பின அதததனமையளாயத் தலைவி உள்ளாள்' என மடலேறும தலைவன கூறினான் (கலி. 141:11,12). ஞாயிறு கொடியிடத்து மலைமீது வந்து தோன்றிப் பின்பு கொதித்துப் பரநது தான கொணட கோடைக்காலத்திலே போதற்கு அரிய வழியென்று கருதாளாயத தலைவன் பொருள் தேடச் சென் றான் (கலி. 150.15,16).

7. தொய்யிற்கொடி - மகளிர் தம்தோள் முதலிய வற்றில் எழுதப்பெற்ற கொடி - தொய்யிற்கொடி - ஒனறோடொன்று கலநது அழியுமாறு நெருஙகி வையையைக் குறுகினர் (பரி. 6:15).

**கொடிச்சி** - குறிஞ்சி நிலத்துப் பெண். கொடிச்சி – குறிஞ்சி நிலத்துப்பெண்-மயிர்ச்சாந்து பூசப்பெற்ற கூந்தலை அசைவளி புகுந்து உலர்த்தத் தழைத்து நீணட அக கூந்தலைக் கையாற் கோதிக்கொணடு பெருவரையின பக்கததே குறிஞசிப் பணணைப் பாட அதனைக கேட்ட களிறு தான கொண்ட தினைக் கதிரினையும உட்கொளளாது நினற நிலை யினின்றும் பெயராது துயில் வரபபெறாத பைங் கண் துயிலப் பெறறு உறங்கும (அகம. 102.3-9). கானவரது தங்கையாகிய அழகிய மூங்கிலினை யொத்த மென்றோளினையும் ஆயிதழ மழைக் கணணினையும் அசையும் இயல்பினையும் உடைய கொடிச்சியை அருள செய்தா யாயின நும் இனிய ஊர்க்கு வரைநது செலவாயாக எனத தோழி தலைவனிடம உரைததாள (அகம். 132:5-8,14). கானவன் வித்திய தினையைக காக்கும் புறத்தின் கண்ணே தாழந்த அழகிய சிலவாகிய கூநதலையும் மெலிநத சாயலையும் உடைய கொடிசசியினது திருந்திழை அல்குற்குத் தழைபுடையை யளித்து அசோகினது பெருதத அடிமரம் ஒழிநதது நினறது (குறு. 214:1-5). தன தமையனமார் ஆண்மானின கழுத்திலே குததிக் குருதியோடு பறித்த சிவந்த திரட்சியை யுடைய அமபு ஒனறையொனறு மாறு பட்டாற போனற மையுணட கணகளையும மணம் வீசுகின்ற கருங்கூநதலையும் உடைய கொடிச்சியின் தோள்களை மீட்டும் ஒருகால் தழுவுதலும இயையுமோ எனத் தலைவன பாங் கனை வினவினான (குறு. 272). முள்ளெயிற றினையும் அமிழதம் ஊறும் செவ்வாயினையும் அகிலும் ஆரமும கமழகினற அறல் போன்ற கூந்தலினையும் பேரமர் மழைக்கணணினையும் உடைய கொடிசசியின முறுவலோடு செருக்கின நோக்கினை நினைத்துப் பாாப்பேன போலவேன் எனறு தலைவன் தோழியிடம் தனக்கும் தலை விக்கும் முனனுளள நட்பினைக் குறிப்பாக அறி விததான (குறு. 286). தினையிடததுப் படியும் கிளி களை ஓட்டுகினற கொடிச்சியின கையிடத்துள்ள

கிளிகடி கருவியின் இசையோடு பொருந்திய தாளத்தை அவளது பாட்டென்று கருதிக் கிளிகள தினையினின்றும் எழாதிருகக அதன பொருட்டுப் புலந்தழுத அவள் கண்கள் சாரறபைஞ்சுனையிற் பூத்த குவளையின் வண்டு பயிலும் பல்லிதழ் கலைநது மழைத்துளியினை ஏற்ற மலர்களைப் போனறன (குறு. 291). கானவர் தங்கையாகிய பெருந்தோட் கொடிசசி இருந்த ஊர், நேரிழை மகளிர் அகலறையில் செந்தினை பரப்பிச் சுனையிற் பாயும் சோர்வினை நோக்கிக் கிளையினின்றும் இழிநத மந்தி தன பார்ப்போடு அததினையைக் கவரும் மலையினிடததே பொருநதியது (குறு. 335). தினையை உணணுகினற கிளியை ஓட்டும கொடிச்சியின கையிலுளள குளிர் எனனும் கருவி சிலம்பைப் போல ஒலிககும (குறு. 360.5-7). மலைப பக்கததிற் கொடிசசி காககும் பைநதினைக கதிர்களை மந்தி கவரும் (நற்.22:1,2). 'நன்னடைக் கொடிச்சி, யான் கொண்ட காமநோயும் அதனாலாய மெய்யின் தளர்ச்சியும் ஒழியுமாறு முயங்கிக் கிடநத மூங்கில் போலுமவனபுற்ற தோளையுடையை ஆதலின் முருகனைக் கலநதுடன சென்ற வள்ளி போல எம் சிறுகுடிக்கண் நீ என்னுடன் வருதியோ; நின் வடிவின் ஒளி கணணில் வீசுதலான யான நின்னை நோக்குதலை ஆறறேன' எனறு தலைவன தலைவியிடம் கூறினான (நற. 82:1-5,11). சாரலில கானவன எய்து கொணர்நத முட்பன்றியின் கொழுந்தசையைத் தேன் கமழும் கூநதலையுடைய கொடிச்சி மகிழ்ந்து ஏறறு அதனைக காந்தளஞ் சிறுகுடியார்க்குப் பகுததுக் கொடுபபாள் (நற். 85: 7-10). குன்றகத்தி லுள்ள சீறூரிடத்து வாழும் மணங்கமழும கூந்தலை யுடைய கொடிச்சியின கையகத்தது தலைவனைப் பிணித்த அவன் நெஞ்சம் (நற. 95: 7-10). மலையகததுளள தினையிடததுவீழும் கிளிகளை ஓட்டும் பொருட்டுக கொடிச்சி, நீ கிளி கடி கருவியாகிய தட்டையைக் கைக்கொண்டு புனத்துககுச் செலவாயாக' என்று தாய் மகளிடம் கூறினாள (நற. 134:3-6). தான செயத குறியிடத்து வநது, இனிய கூறி, ஏறறினைப பிரியும் மடப பிணை போல தான வேறாகப பிரிநது சிறுகுடியிடத்துப் பெயரும் கொடிசசியின செல்புறம் நோக்கித தலைவன் வருந்தினான (நற். 204:8-12). 'யாம் குறவர் மகளிரேம; குன்றுகெழு கொடிசசியேம்; எம்மூர் இம்மலையி னகத்தது; நீ நின் ஊர் செல்லாது எம்மூரை யடைந்து கள மாநதி வேங்கை முன்றிலிற குரவையும் கண்டு செல்வாயாக' எனத் தோழி தலைவனிடம் கூறினாள் (நற. 276:4-10). 'கிளிகடி கருவி பொருநதிய கையையுடைய கொடிச்சியே' நீ மனையகம் செலவாயாக' என்று நலல இனிய மொழிகளைக் கூறிக் கானவர் மெலல விளைநத தினைக்கதிரைக் கொய்யத தொடங்கினா (நற் 306.3-5). தன தநதையின மேகநதவழும் கரிய மலைவளம பாடிக் கொடிச்சி ஐவன வெண்ணெல லைக குற்றும் மலைநாடனாகிய தலைவனோடு மலையின் அருவியாடி வேங்கையில அமைத்த பரண் மீதேறித தினைபபுனம வரும் கிளி கடிந்தாள் (நற். 373:3-8). வேங்கையின தாழநத கிளைமீது மறைந்திருநது குரங்குக் குட்டி கொடிசசியின கையிலிருநத தேன்கலநத தீமபாலைக் கவர்தலின அவளின எழுதெழில சிதைய அழுதகணகள குடவாயிலிடத்துக கிடஙகினகண் தணணென மலர்நது மழைநீரை ஏற்ற நீலமலர் போனறன; மேலும பாற்கலம் பறிககப் பட்டதற்கு ஆறறாது அழகிய வயிறறிலே அடிததுக் கொளளுதலின அவளுடைய செவ்விரல்கள் பொதியில எனனும் மலையிடததுப் பூத்த காந்தளின கொழுமுகை போனறன (நற. 379 4-13). 'குனறக் குறவனின காதன மடமகளாகிய வண்டுபடு கூந்தலினையும தணடழை ஆடையினையுமுடைய கொடிசசி, வளையலணிநதவள; முளை வாள் எயிறறள; இளையளாயினும அருநதுயரைத தருபவள' எனறு தலைவன தோழியிடம கூறினான (ஐங். 256). 'குனறக குறவனின காதன மடமகளாகிய அணிமயில போனற அசைநடையினை யுடைய கொடிசசியைத தலைவன வரைநது கோடறகு விரும்புவானாயின, நாமும இசைநது கொடுததனமாயின நனறு, வரைபு வேணடி விடுதத பினனும நனனுதலின துயா அசையாது' எனறு தோழி தமாககுரைததாள (ஐங. 258). 'புனத தினகண தினையும விளைநதன, தினையின வீழும பைங்கிளிகளையும கடியாள, ஆதலின குனறக குறவன காதன மடமகளாகிய மெனறோளினை யுடைய கொடிசசியை இனிப பெறுதறகு அரிதாகும்' எனத தோழி தலைவனிடம கூறினாள (ஐங. 260). 'ஒளியையுடைய அணிகலனகளையும் கரிய பலவாகிய கூநதலையும உடைய கொடிசசி தன பெருந தோளாற செயயும புனஙகாததல தொழிலைத தோறறுவிதத கிளிகள, வெள்ளம எனனும பேரெணணை எலலையாகவுடைய ஊழிகள பல கழியினும் நினறு வாழவனவாகுக' எனறு தலைவன கிளிகளை வாழததினான (ஐங. 281). பேரமா மழைக்கண்களை யுடைய கொடிசசி கடியவும் சோலைச் சிறுகிளி சாரல புறத்துளள சிறுதினைக் கதிரை உண்ணும (ஐங். 282.1-3). விருபபம வருதறகுக் காரணமான மெலலியற கொடிசசி காத்தற்கு ஏதுவாகும்படி தினைபபுனததின மீது பரவி வநது

நன்றே உதவி செய்த கிளிகளின் நன்மையைத் தெரிந்து என்ன கைம்மாறு செய்வோம் எனத் தலைவன் தன்னெஞ்சிற்கு உரைத்தான் (ஐங். 288). 'கொடிச்சியின் இன்குரலோசையைக் கிளியின் ஓசையெனக் கருதி அடுக்கத்தின்கண் வாழும் கிளி களெல்லாம் தினைப்புனத்தில் வந்து படியுமென்று எமர் எம் தினைப்புனக் காவலைக் கடிந்தனர் போல்வர்; ஆதலின் நீ அவளை வரைந்து செல்வா யாக' என்று தோழி தலைவனிடம் கூறினாள் (ஐங். 289). 'விளங்கிய மலர் மணக்கும் கூந்தலையுடைய கொடிச்சியால் நோக்கப் படுதலானும் கடியப்படு. தலானும் கிளிகள், அறம்புரி செங்கோன்மை யுடைய தலைவனைக் காட்டிலும் நனி சிறந்தன போலும்' என்று தோழி தலைவன் கேட்பக் கூறி னாள் (ஐங். 290). கொடிச்சி காக்கின்ற தினையின் பெருங் கதிரினைப் பக்க மலையில் வாழும் மயில்கள் கவர்ந் துண்ணும் (ஐங். 296:1,2). 'மழை வர வினை யறிந்து மயில்கள் ஆடுதற் கிடனான பக்க மலை பொருந்திய நல்ல ஊரினை யுடைய அசை நடைக் கொடிச்சி எமக்கு அருள் புரியாளாயினும் யாம் அவளை நினைத்தலை ஒருநாளும் மறந்தறி யேம்' என்று தலைவன் தோழியிடம் கூறினான் (ஐங். 298). அழகிய சிலவாகிய கூந்தலையும் அசைந்த நடையினையும் உடைய கொடிச்சியின் கண்போல் மலர்தல் பைஞ்சுனையிற் பூத்த குவளைமலர்க்கும் அரிதாம்; அவளைப் போன்ற சாயலை உடைத்தா தல் மயிலுக்கும் அரிதாம் (ஐங். 299). கொடிச்சி யின் கூந்தல் போல மயில் தன் அழகிய தோகையை விரிக்கும் (ஐங். 300:1,2).

**கொடிச்சியர்** - குறிஞ்சி நிலப் பெண்டிர். கொழுநரது மார்பிலே புலி பாய்ந்ததனான் உண்டான நெடிய பிளப்பையுடைய விழுப்புண்ணை ஆற்றுதற்குக் காவலென்று கருதி அறல்போன்ற கூந்தலையுடைய கொடிச்சியர் - குறிஞ்சி நிலப் பெண்டிர் - பாட்டி னைப் பாடுவர் (மலை. 302-304). கூதிர்க் காலத்தில் இன்னிசையிடியோடு மிக்க மழை பெய்திட உயிரி னம் துயின்ற நள்ளிரவில் ஆராய்ந்தெடுத்த அணி களையும் தேன் நாறும் கூந்தலினையு முடைய கொடிச்சியரின் தந்தை காட்டு வேட்டையில் துயி லிடம் பெறாது புலித்தோற் படுக்கையில் இல்லிலே வந்து தங்கியிருப்பான் (அகம். 58: 1-6). கையிரண் டையும் குவித்துக் கொடிச்சியர் மலையைத் தொழு கின்ற கைகள் போல நறவினையுடைய கொத் துககள் அசையும் காந்தள் தன்னிடத்துள்ள தேன் ஒழுகும்படி அசையும் (கலி. 40:11-13).

**கொடிஞ்சி** - தேர்த்தட்டின் முன் தாமரைப் பூவடிவில் அமைக்கப்பெறும் தேருறுப்பு. 'யான் செல்க என்று கூறவும் செல்லாது என்னை நோக்கியவனாய்த் தன் நெடுந் தேரின் கொடிஞ்சியினைப் பற்றிக் கொண்டு தலைவன் நின்றனன்; இன்றும் என் கண் முன் நிற்பது அந்நிலையே' எனத் தோழி தலை வனைப் பற்றிச் செவிலியிடம் கூறி அறத்தொடு நின்றாள் (அகம். 110:23-25). கொடிஞ்சி நெடுந்தேர் (அகம். 230: 11; 320: 11; 334: 12). விளக்கமுறும் கொடிஞ்சி பொலிவுற்றுச் காண கடிவாளத்தினை ஆய்ந்து தேரினை விரைந்து செலுத்துவாயாக என்று வினைமுற்றிய தலைவன் தேர்ப்பாகனிடம் கூறினான் (அகம். 344:10,11). கொடுஞ்சி காண்க.

**கொடிது** - தீது. உலகத்தார் ஒன்றுபட்டு வழிமொழி யக் கொடிதினை - தீதினை - போக்கிக் கோலைச் செவ்விதாக்கி ஆறிலொன்றாகிய இறையை உண்டு நடுநிலைமையைச் செய்து சுடர்நேமியான் உல காண்டவர் வழிகாவல, எனத் தலையாலங்கானத் துச் செருவென்ற நெடுஞ்செழியன் விளிக்கப் பெற் றான் (புறம். 17:4-8). அலர் கூறலாகிய அணங்குற்ற கொடிது மொழிதலையே அறியும் பெண்டிர் கூறும் சொற்களைக் கேட்ட அன்னை, தலைவியை இல் லின்கண் காவற்படுத்தினள் (அகம். 20:11-13). நடுவு நிலை நீங்கிய அருளில்லாத அமைச்சன் தன் கருத் தைத் தோற்றுவிக்க, அது கேட்டுக் கொடிது சூழ்ந்த மன்னனது கொடுங்கோல் காய்வதுபோல ஞாயிறு காய்ந்தது (கலி. 8:1-3).

**கொடிமங்கலத்து வாதுளி நற்சேந்தனார்** - புலவர். கொடிமங்கலம் என்னும் ஊரினர். இவ்வூர் கோடி மங்கலம் என்று வழங்கப் பெறும் என்பர் ஆ. சிங் காரவேலு முதலியார் (அ. சி. பக். 508). நற்சேந்த னார் என்பது இப்புலவரின் இயற்பெயர். வாதுளி நற்சேந்தனார் என்பதனால் இவரை வாதூல கோத்திரத்து அந்தணராக இருத்தல் கூடுமெனக் கருதுவர் அபிதான சிந்தாமணி ஆசிரியர். அக நானூற்றில் இருபாடல்கள் (179,232) இவருடை யன. இவர் அவ்விரு பாடல்களையும் தோழி கூற் றில் பாடியுள்ளார். பிரிவுணர்த்திய தலைமகனுக்குத் தோழி செலவழுங்கச் சொல்லிய துறையிலமைந்த பாலைத் திணைப்பாடலில் (179) அந்நிலப் புனைவு அழகுற அமைந்துள்ளது. கானல் நீர் ஓடும் காட்டில் யானை கைந்நீட்டியும் வாய்திறந் தும் புனல் பெறாது புலந்து அந்நிலத்தே விட்டு அகல்வதும் கொடுவில் ஆடவருடைய நடுகல் நிலை பெற்றுத் தோன்றுவதும் குறும்பர் செய்யும் பூச லைக் களையுந ரில்லாததும் ஆகிய சுரநெறியில் போகத் துணிந்து தலைவியைப் பிரியக் கருதும்

தலைவனைத் தோழி செலவழுங்குவித்தலாக இவர் அப்பாடலைப் பாடியுள்ளார். குறிஞ்சித் திணைப் பாற் பட்ட மற்றைப் பாடலில் (232) மேக முழக்கம் கேட்ட யானை அதனைப் புலியின் உருமலாகக் கருதி வெருக்கொண்டு மலை முழைஞ்சு எதி ரொலிக்குமாறு பிளிறிப் பெயரும் என்று புனைந் துள்ளார். தலைவனது தொடர்பு தம்மில்லத்தே வெறியாட்டுக்காக வேலனை யழைக்கும் நிலையை உருவாக்கியது என்று தோழி, அவன் சிறைப்புறத்து நிற்கையில் கூறும் முறையில் இவர் அப்பாடலை இயற்றியுள்ளார்.

**கொடியர்** - கொடுமையுடையவர். அச்சந்தரும் கடவுள் கொடுமை யுடையோரை வருத்தும் என்பர்; எம் குன்றுகெழு நாடர் ஒரு சிறிதும் கொடியர் - கொடுமையுடையவர் - அலலர்; என் நுதல் அவரை விரும்பியதனால் பசந்தது; எம்மனம் அவர் திறத்து நெகிழ்ந்தமையான் தடமென்றோள் மெலிந்தது என்று தலைவி தெய்வத்தை வேண்டினாள் (குறு. 87). சுரும்பு உண்ணுமாறு மலர்ந்த மணம் கீழே படும்படியும் வரப்பிலே வாடும்படியும் உழவர் அறுத்து இட்டாலும் கொடியராகிய இவர்தம் நிலத்தினின்று நீங்கி உறைவேம் என்னாத நெய்தல் மீட்டும் அந்நிலத்திடத்தே பூக்கும் (குறு. 309:1-5).

**கொடியவை** - தீயவை. தாம் செய்யும் தவறுகளை உணர்ந்தவர் ஒருவரும் இலர் என்று எண்ணித் தகைவின்றித் தாம் செய்யும் வினைகளுள் தன்னெஞ்சு அறிந்த கொடியவற்றை - தீயவற்றை - மறைப்பினும் அவற்றை அறிவாருள், அவர் நெஞ்சைக் காட்டிலும் அறிந்து சான்று கூறவல்லார் பிறரில்லை (கலி. 125:1-4).

**கொடியன்** - கொடுமையுடையவன். சிறுசொற் சொல் லிய சினமுடைய வேந்தரைப் பொருது முரசோடு அவரைக் கைக்கொள்ளேனாயின என்னிழல் வாழ்நர் தாம் சென்றடையும் நிழலைக் காணாது கொடியன் - கொடுமையுடையவன் - எம் வேந்தன் என்று கருதிக் கண்ணீர் வடித்துக் குடிமக்கள் பழி தூற்றும் கொடுங்கோலை யுடையேனாகுக என்று பாண்டியன் நெடுஞ்செழியன் வஞ்சின முரைத் தான் (புறம். 72:7-12). கடக்க எண்ணுநர் அஞ்சும் சிறுநெறியினகண் அருள்புரி நெஞ்சமோடு வேல் துணையாக வந்த தலைவன் கொடியன் அல்லன்; குறிவழி வரச் செய்த நீயும் தவறுடையை யல்லை; நின்பால் அரிய துன்பத்தினைச் செய்த யானே தவறுடையன் என்று தலைவி தோழியிடம் கூறி னாள் (அகம். 72:17-22). கொடியனாகிய குன்று கெழு நாடன் தலைவியின் தோள்வளைகளை நெகிழ்த்தான் (குறு. 252:1,2). தலைவன் என் கையி னைக் கொண்டு தன் கண்ணை ஒற்றியும் தன் கையினைக் கொண்டு என்னுதலை நீவியும் அன்னை போல இனியன கூறியும் கள்வன் போலக் கொடியன் ஆனான் என்று தோழி தலைவியிடம் கூறினாள் (நற். 28:1-4). தலைவன் கொடியன் ஆயி னும் அவனே என்னுயிர்க் காவலன் எனத் தலைவி தோழியிடம் கூறினாள் (ஐங். தி. 6:3,4).

**கொடியான்** - கொடுமை யுடையான். உள்ளத்தைக் கொண்டு அகன்றவர் துணை தாராத பொழுதின் கண் வெள்ளத்தில் அகப்பட்டுக் கரையேற இய லாத மானினது மார்பிலே அம்பைத் தொடுக்கும் கொடியானை - கொடுமையுடையானை - ஒப்பத் துன்பத்தில் அழுந்தியிருக்கும் என்னைக் கையறவு எய்துவிக்க வந்தனையோ' எனத் தலைவி மாலைப் பொழுதினை வினவினாள் (கலி. 120.10-12).

**கொடியூர் கிழார் மகனார் நெய்தல் தத்தனார்** - புலவர். நெய்தற்றத்தனார் காண்க.

**கொடியோர்** - கொடுமையுடையோர். 'அரண்மனை முற்றத் தில் முரசு எப்பொழுதும் இனிதாக ஒலிப்பக் கொடியோரை - கொடுமையுடையோரை - தெறுத லும் நடுநிலை யுடையாரை அருளுதலும் ஆகிய இடையறாத முறைமையால் மடிதல் இல்லையாகி நல்லதன் நலனும் தீயதன் தீமையும் இல்லை யென் போருடன் இனமாகாது ஒழிவாயாக' என்று உறை யூர் முதுகண்ணன் சாத்தனார் சோழன் நலங் கிள்ளிக்கு அறிவுரை கூறினார் (புறம். 29:8-12). தொண் டைமான் இளந்திரையன் காவல் புரியும் நாட்டில் வழிச்செல்வோரை அலறுமாறு தாக்கி அவர் கைப் பொருளைக் கவரும் களவினையே உழவு வாழ்க் கையாக உடைய கொடியோர் இல்லை (பெரு. 39-41). 'அருஞ்சுரம் இறந்த கொடியோராகிய தலை வர் பிரிவிற்காக நின் அலர்முலை ஆகம் வருந்த அழாதே என்று கூறுவாய்; வேனிலில் யாற்றின் அடைகரைப் பொங்கரில் மஞ்சு தவழக் குயில் அக வும் குரல் கேட்போர்க்குக் கண்ணீரை நிறுத்துதல் எளிதோ' எனத் தலைவி தோழியை வினவினாள் (அகம். 97:8, 13-24). மலையையும் நடுங்கச் செய்வது போன்ற குளிரைக் கொண்ட வாடைக் காற்றே, நீ கொடியோராகிய தலைவர் சென்ற திசையில் அய ராது செல்வையாயின் பொருளீட்டும் தொழிலில் பெருவேட்கை யுடையார் என்னை நினைத்து வரு தலும் உண்டு எனத் தலைவி வாடைக்காற்றை விளித்துக் கூறினாள் (அகம். 163: 9-14). நீண்ட பெரிய குன்றினகண் ஆறலைப்போராகிய கொடி யோர் நெருங்கியிருப்பர் (அகம். 288:8,9). தலைவன்

பிரிந்ததனால் ஏழு நண்டுகளால் மிதிக்கப்பட்ட அத்தியின் ஒரு பழம் போலத் தலைவி வருந்தும் படி கொடியோரின் நாக்கள் கலலென்று அலர் தூற்றி முழங்கின (குறு. 24:3-6). மன்றத்திடத்துள்ள மராமரத்தில் தங்கும் பிறர்க்கு அச்சத்தைத் தரும் கடவுள் கொடியோரை வருத்தும் (குறு. 87: 1,2). கொடியோராகிய தலைவர் தண்ணளி செய்யாரா யினும் நின் தொடி விளங்கும் தோள்கள் கவின் பெறு வண்ணம் அவர் மலையை வந்து காண் பாயாக எனத் தோழி தலைவியிடம் கூறினாள் (குறு. 367:1-3,7).

**கொடியோள்** - 1. கொடுமை யுடையோள். தலைவி உடன்போக்கு மேற்கொண்டமையின் கிளி பால் உண்ணவில்லை; மகளிர் ஆயம் விளையாடவில்லை; தாழியும் மலர் அணியா; சுவர்ப் பாவையும் பலி பெறா; இவை கண்டு வருந்துவதோடு நினைவிலே னாயக் கொடியோள் - கொடுமை யுடையோள் - எண்ணியதையும் உணர்ந்திலேன்; அவள் சீரும் சிறப்பு மின்றி வறிய மனையிலே சிலம்புகழி நோன்பை மேவினளோ எனக் கூறி மகட்போக்கிய செவிலி வருந்தினாள் (அகம். 369:4-26).

2. கொடியை யுடையோள். தன்னை வணங்காதவரை அழித்த தாழ்ச்சி யில்லாத பகைவரை ஆளுந் தன்மையுடைய நன்னன் கொடியோளின் - கொடி யையுடையோளின் - கணவனானவன் (மலை. 423, 424).

**கொடியோன்** - கொடுமை யுடையவன். தலைவன் ஒருத்தி யோடு வதுவை வேண்டித் தேரிற் செல்லும் வழி யிற் புதல்வனைக் கண்டு தேரினின்றிழிந்து புல்லிப் பின் செல்கவென விடவும் ஒல்லானாகிக் கலுழ் தலின் அவனோடு மனையகம் புகத் தலைவி இக் கொடியோன் - கொடுமையுடையவன் (மகன்) - தலை வனை இடித்துக் கலக்கினன் போலும் என்று கருதி அடிக்குங் கோலோடு அவனை நெருங்கத் தலைவன் புதல்வனைத் தன்பால் அணைத்துக் கொண்டனன் (அகம். 66.7-21). தலைவன் தலை விக்கு உரியனாகும் தன்மையிலான் போலக் கட்டு விச்சி இந்நோய் தெய்வத்தான் வந்ததெனத் தீது மொழியினும் மலையில் விளையாடும் குட்டியின் தந்தையாகிய கடுவனும் அக்கொடியோனாகிய தலைவனை அறியும்; அது தன் கண்ணாற் கண்ட தைக் காணேனென்று பொய் கூறாது எனத் தோழி கூறினாள் (குறு. 26.3-8).

**கொடிவிடுதல்** - மிகுதியாதல். ஊடலை உணர்த்து தலால் ஊடல் தீர்ந்த காதற்பரத்தை, தலைவன் ஆகியோர் களளுண்டு களித்தனர்; வையையில் நீராடினர்; காமவின்பம் கொடிவிட - மிகுதியாகும் படி - ஊடினர்; ஊடல் சிறிது மிக்கவுடன் அது தீர்ந்து கூடினர் (பரி. 6:102-104).

**கொடிற்றுப்புண்** - கவுளிடத்துச் செய்யும் வடு. பரத் தைக்கு வருத்தமாகவும் கூடுமென்று கருதித் தலை வன் புணர்ச்சியில் அவளுக்குக் கொடிற்றுப்புண் - கவுளிடத்துச் செய்யும் வடு - செய்யாமல் அவளது மெய்ம்முழுதையும் கையால் தடவிப் புணர்ந்தான (கலி. 95:19-21).

**கொடிறு** - பற்றுக் குறடு. கொல்லனுடைய முறிந்த கொடிறு - பற்றுக் குறடு - போன்ற கவைத்த கால் களை யுடையது நண்டு (பெரு. 207,208). பாலை மரம் கொடிறு போலும் காய்களை யுடையது (நற். 107:3).

2. கன்னம். தளிரை யொத்த கொடிற்றினை - கன் னத்தினை - உடையது கோழிச் சேவல் (அகம். 367: 10,12). மகளிர் தம் கொடிற்றின்கண் எழுதிய செம்பஞ்சுக குழம்பு அவர்கள் நீராடுதலால் அழியு மாறு வையையில் வெள்ளம் வந்தது (பரி. 6:17,22).

**கொடுகூர்** - ஓரூர். கடல்பிறக்கோட்டிய செங்குட்டு வன் வியலூரை யழித்து அதற்கு அப்பாலிருந்த கொடுகூரையும் எறிந்தான் (பதி. ப. 5:11,12).

**கொடுகொட்டி** - சிவபெருமான் எல்லாவற்றையும் அழித்து ஆடும் கூத்து. 'நின் கையில் ஒலிக்கின்ற பறை பல வாச்சியங்களையும் ஒலிக்க, நீ பல்லுரு வங்களையும் பெயர்த்துக்கொண்டு கொடுகொட்டி யெனனும் கூத்தினை ஆடுங்காலத்துக் கொடிபுரை நுசுப்பினாளோ (உமையம்மையோ) சீரினைத் தருவாள்' எனச் சிவபெருமான் வாழ்த்தப் பெறுகின்றார் (கலி. 1:5-7).

**கொடுங்கால்** - ஓரூர். திருக்கோவலூர்க் கோமானா கிய மலையமான் திருமுடிக் காரியின் கொடுங்கால் என்னும் ஊரின் துறைமுன்னே ஓடுவது பெண் ணையம் பேரியாறு (அகம். 35:14-16).

**கொடுஞ்சி** - தேர்த்தட்டின் முன் தாமரைப்பூ வடிவில் அமைக்கப் பெறும் தேருறுப்பு. 'கிண்கிணி களையப் பட்ட காலிலே வீரக் கழலினைச் செறித்துக் குடுமி களையப் பட்ட நுதலில் வேம்பின் தளிரை உழிஞைக் கொடியொடு சூடிக் குறுந்தொடி கழிக் கப்பட்ட கையில வில்லைப் பிடித்து நெடிய தேரி னது கொடுஞ்சி - தேருறுப்பு - பொலிவு பெறு மாறு நின்ற இவன் யாரோ தான்' என இளம் பருவத்திலேயே போர்க்கோலம் பூண்டு நின்ற தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழி யனைக் கண்டு இடைக் குன்றூர் கிழார் வியந்து

பாடினார் (புறம். 77:1-6). கொடுஞ்சி நெடுந்தேர் (புறம். 368:4; பெரு. 416; மது. 752;அகம். 194:17;250:6; குறு. 212: 1, 3; 345:1). யானைக் கோட்டினாற் செய்த கொடுஞ்சி அமைந்த நெடுந்தேர் (பொரு.163). கொடிஞ்சி காண்க.

**கொடுஞ்சினை** - கொடுஞ்சி. 'நின் உருட்டுதலுறுகின்ற திண்ணிய தேரில் கொடுஞ்சினையை - கொடுஞ்சியை - கையாலே பிடித்து மெத்தென மெத்தென அசைந்து இங்கே பாலுண்ண என் கையிடத்து வருவாயாக' என்று தலைவி தன் மகனை அழைத்தாள் (கலி. 85:17-21).

**கொடுஞ்சொல்** - கொடிய சொல். 'மகளிரே, பாணன் செய்யும் அல்லல் பலவாய் வளர்ந்தன வாகலின் அவன் கூறும் பொய் பொதிந்த கொடுஞ்சொல்லை - கொடிய சொல்லை - நம்பாமல் நீவிர் நும்மைக் காத்துக் கொள்ளுமின்' எனத் தலைவனுடைய பாணனைப் பற்றி ஊர்மகளிர்க்குக் கூறுமாறு, திருவிழாவையறிவிக்கும் குயவனிடம் தோழி வேண்டினாள் (நற். 200:4-11).

**கொடுத்தோய்** - வழங்கினோய் (விளி). '(பாண்டவர்) ஐவரொடு சினந்து ஈரைம்பதின்மரும் (கவுரவரும்) பொருது போர்க்களத்தின்கண் படுந்துணையும் பெருஞ்சோறாகிய மிக்க உணவை இரு படைக்கும் வரையாது கொடுத்தோய் - வழங்கியோய் -' என்று சேரமான் பெருஞ்சோற்றுதியஞ் சேரலாதனை முரஞ்சியூர் முடிநாகராயர் விளித்துப் பாடினார் (புறம். 2:13-16).

**கொடுத்தோர்** – ஈந்தோர். நீரை இன்றியமையாத உடம்பிற் கெல்லாம் உண்டி கொடுத்தோர் - ஈந்தோர் - உயிர் கொடுத்தோராவர் (புறம். 18:18,19). 'தலைவனொடு பாலை வழியே சென்ற மடவரலுக்குத் தாய் என்னும் பெயரையே யான் எடுத்தேன்; எனக்கு அப்பெயரைக் கொடுத்தோர் அவளுடைய ஆயத்தோராவர்' எனச் செவிலி, தலைவி தலைவனுடன் போன நிலையில் இரங்கி மொழிந்தாள் (ஐங். 380).

**கொடுப்பான்** - தருவான். புலவியால் நீங்கிய தேவசேனையைச் செவ்வேள் சென்றெய்தித் தன் தலைமாலை அவளது திருந்தடியைத் தோயுமாறு வணக்கமாகிய திறையைக் கொடுப்ப, அவ்வாறு கொடுப்பானை - தருவானை -அவள் 'வருந்தாதே' எனச் சொல்லி அவனுக்குத் தன் மார்பையளித்தாள் (பரி. 9:36-38).

**கொடுப்போர்** - கொடுப்பார். வழுதியுடன் திருப்பரங்குன்றத்தின் மேல் ஏறியோர் அங்குள்ள குரங்குகள் அருந்துமாறு அவற்றிற்குப் பண்டங்களைக் கொடுப்போரும் - கொடுப்பாரும் - பிற வேடிக்கைகளில் ஈடுபடுவோருமாய்ச் சென்றனர் (பரி. 19:38-40).

**கொடுப்போன்** - விடுப்போன். தலைவிக்கு வேறாக ஒருத்தியை மணந்துகொள்ளச் செல்லும் தலைவன் தன் தேர்மணி ஓசை கேட்டுத் தொடர்ந்த மகனைத் தழுவி, 'இனி அகத்தே செல்' எனக் கொடுப்போனுக்கு - விடுப்போனுக்கு - இசையானர்கி அச் சிறுவன் அழுதனன் (அகம். 66:7-16).

**கொடும்பாடு** - வழக்கழிவு. 'அரிய மரபினோய், எம் அறிவு கொடும்பாடு - வழக்கழிவு - அறியாது மெய்யுணர்வினையே அறிவதாக என்று யாம் துளக்கமில் நெஞ்சினேமாய் நின்னடியை வணங்கிப் பலகாலும் ஏத்தி வாழ்த்தி வேண்டிக் கொள்வோம்' எனக் கீரந்தையார் திருமாலைப் பரவுகின்றார் (பரி. 2:72-76).

**கொடும்புரி** - முறுக்குண்ட புரி. குன்றகச் சீறூரில் பக்கத்திலே குழலொலிப்ப வாச்சியங்கள் முழங்க ஆடும் கழைக் கூத்தி நடந்த கொடும்புரி - முறுக்குண்ட புரி - அமைந்த வலிய கயிற்றில் மந்தியின் குட்டி தொங்கியாடக் குறக்குறு மாக்கள் தாளம் கொட்டுவர் (நற். 95:1-7).

**கொடும்புறம்** - முதுகு. தலைவனுடன் வதுவை நிகழ்ந்த பின் ஓர் அறையில் அவனுடன் கூடும் முதலிரவில் தலைவி கொடும் புறத்தினை - முதுகினை - வளைத்துக் கோடிக் கலிங்கத்துள் ஒடுங்கிக் கிடந்தாளாகத் தலைவன் அவளைப் புறந்தழுவி முகந்திறந்தான் (அகம். 86:17-23).

**கொடும்பூண்** - ஆரம். விளங்கிய மணிகளால் இயன்ற கொடும்பூண் - ஆரம் - அணிந்தவன் ஆய் அண்டிரன் (புறம்.130:1). கொடும்பூணையுடையவன் எழினி அதியமான் (புறம். 158:9). அதியமான் நெடுமானஞ்சியின் மகன் பொகுட்டெழினி கொடும் பூண் அணிந்தவன் (புறம். 392:1,2). கொடும்பூண் மகளிர் (பெரு. 327). கொடும்பூணை யுடையவன் பல்வேல் முசுண்டை (அகம். 249:8,9). மாலை தவழும் மார்பின்கண் மின்னுதல் பொருந்திய கொடும்பூண் அணிந்தவன் தலைவன் (நற். 187:8,9).

**கொடுமணம்** - ஓரூர். 'பாணனே, நீ செல்வக் கடுங்கோவாழியாதனைப் பாடிச் சென்றால் கொடுமணம் என்னும் ஊரில் பொருந்திய நன்கலன்களைப் பந்தர் என்னும் மூதூரினிடத்துக் கடலினின்று எடுக்கப்பட்ட முத்துக்களுடன் பெறுகுவை' என்று பாணன் ஆற்றுப்படுத்தப் பெறுகின்றான் (பதி. 67: 1-4,23). தொழில் மாட்சிமைப்பட்ட அரிய அணி

*கலனகளால சிறபபுற்றது கொடுமணம எனனும் ஊா (பதி. 74 5).*

**கொடுமரம** - வில். '*நீண்ட அமபினையும கொடுமரத்தையும - விலலையும - உடைய மறவர்க்குத் தலைவனே' எனறு தாமபபல கணணனார் சோழன் நலஙகிளளியின தம்பியாகிய மாவளத்தானை விளிததார்* (புறம். 43:10,11). *ஆறலை களவரான ஏவலாடவா கொடுமரம் பிடிதத வனகண்மையர்* (அகம. 215.9,10). *பாலை வழியே வேடர் கொடு மரத்தினால கொலலப்பட்டவருடைய உடலம் மறையுமாறு விடட பதுககைகள நிரைததுக் கிடக்கும* (கலி. 12;1-3).

**கொடுமுடி** - ஒரு தலைவன். *கொடுமுடி எனபான் காதது வருகினற நெடிய மதில் சூழ்ந்த பெருஞ சிறபபினையுடையது ஆமூர்* (அகம. 159:18,19).

**கொடுமை** - வன்கண்மை. *பெருஙகுனறூர் கிழார் தம்மை எதிரேற்றுக் கொளளாத மாந்தரது கொடுமையை - வனகணமையை - சேரமான் குடக்கோச சேரலிருமபொறை யிடததுக் கூறவும் அவன் அவர்ககுப் பரிசில் நலகானாயத் தனனுடைய நினைவினபடியே செயதான* (புறம். 211:9,10). *'கொனறா லொத்த கொடுமையுடன இனறு யாமம பொருநத வருமாயின் காமம செறிநது கடலினும் பரவிக் கரை கடந்து செல்லும' எனத் தலைமகள் தன தோழியிடம கூறினாள்* (அகம். 128:2-4). *'அனனையே, துறைவனொடு நின் மகளைச சார்ததி இநத ஊர் ஒபபறற தனது கொடுமையால் அலாபாடும' எனத தோழி தலைவியின களவினை யறிவிததுச் செவிலியிடம் அறத்தொடு நினறாள்* (அகம். 190:3,4). *இரவுக்குறிக்கண தலைவன வராத நிலையில் தலைவி அவனது கொடுமையைத தோழியிடத்துக் கூறினள்* (அகம். 298:19). *தலைவியை அருளானாயத் தலைவன் செயத கொடுமைக்கு அவனிடம் கழறிப புலத் தலை யஞ்சி அவனது மலையினினறு இழியும் ஆறு மலாகளைப போர்தது மறைந்தொழுகியது* (அகம். 398:6-14). *தலைவனது பரததைமை யொழுக்கமாகிய கொடுமையைத் தலைவி தோழியிடததுச சொலலுதற்கு நாணி மறைத்தனள்* (குறு. 9:7,8;10; 4,5). *தலைவனது வரைவு நீட்டிப்பாகிய கொடுமையை நினைநது மிகுகினற துனபத்தோடு வருந்தித தலைவி நள்ளிரவில துயிலாது இருநதனள* (குறு. 145:2-4). *தலைவன துனபம மிகக நீண்ட வழிகளில பிரிநது சென்ற கொடுமையை நினைநது தலைவி துஞசா நோய கொண்டனள* (குறு. 224:1-3). *'தலைவா வரைவிடைப பிரிந்து நீட்டிககும் கொடுமை பலரும் அறியுமாறு பரந்து வெளிப்படுமாயின் அது என நலமிழநததனினும் நனி இனனாதது' எனறு தலைவி தோழியிடம் கூறினாள்* (குறு. 245). *'துறைவனொடு யான ஒருநாள் நகைத்த பழியுமிலலாதிருக்க இவ்வூர் தனது கொடுமையால் வீணே அலர் தூற்றுகினறது' என்றாள் தலைவி* (குறு. 320:4-8). *'தோழி, நம் தலைவரது பழமுதிர் குன்று தமமோன நமமிடத்துச் செய்த கொடுமையை நினைந்து நம்பால பெரிதும் அன்புடைமையால் தன் வருத்தத்தை அடக்கவியலாமல் 'கண்ணீரே அருவியாகப பெருகும்படி அழும்' என்று தோழி தலைவிக குரைபபாளாய்ச சிறைப்புறத் தலைவன் கேட்கக் கூறினாள்* (நற. 88.6-9). *துறைகேழ் ஊரனாகிய தலைவனது பரத்தைமை யொழுக்கக் கொடுமையை வெளியிடுதற்கு நாணித் தலைவி அவனை நல்லன எனறாள* (ஐங. 11:2,3). *'துறைபொருநதிய ஊரனாகிய தலைவனது பரத்தைமைக் கொடுமையை யாம் மிகவும் ஆற்றியிருப்போமாக' எனத் தலைவி கருததழிநது கூறினாள்* (ஐங. 12:2,3). *தலைவன பிரிவு நீட்டித்தானென்று அவனது கொடுமையைத் தூற்றித தலைவி வாடிய நெறறியளாய நோய மிகப் பெறறு மெலிந்தாள்* (ஐங். 478:1-3). *தலைவன அருமை செயது அயர்த்த போது தோழி தலைவியை ஆற்றுவிததற் பொருட்டு அவனை இயறபழிததுப் பாடினளாக அது பொறாத தலைவி, 'ஏடீ, அவன கொடுமையை எஞசாமல் கூறாதே' என நெஞ்சைப் பிணிததவன் அஞசுவது அஞ்சா அறனிலி அல்லன எனறுரைததாள* (கலி. 42 : 25 - 27). *கடிய குதிரையைப் பினனும் கடிதாகச் செலுததும தாறறுககோல் போலே, நீ சிறிதும் கொடுமையுடையை அல்லை எனபதை அறிநதிருந்தும் யான தலைவியை நினனிடத்தே சேர்த்துவேன்' என்று தோழி தலைவனிடம் கூறினாள்* (கலி. 50 : 19, 20). *தலைவியின தொடிகள் சுழனறு கழலும்படியாகத் தலைவன் அவளைக கைவிட்ட கொடுமையைக் கடிதென்று உணராது இருந்தான* (கலி. 99 : 19 - 21). *அரசனாகிய தலைவன இவ்வுலகிலுள்ள பகைவர் நெஞ்சம் அஞ்சும்படியாக வெருவந்த கொடுமையமைந்தவன* (கலி. 100:2). *'என்னைபபோல ஓர் எல்லை காணாத காம நோயிலே மூழகாதவனை உயர்ச்சி கெடுமபடி கூறிக கொடுமை நுவல்கின்றவரே' எனறு பிரிவினில் காமக கலககமுறற தலைவி சான்றோரை விளிததுப பேசினாள* (கலி. 146:25, 26). *'நடுவு நிலைமை செய்தலனறி ஒருபாற படாத கூற்றமே, சுறாககொடியையுடைய இககாமன செய்கினற கொடுமையை நீயும் நின ஓலையிடததே*

எழுதி வைத்துக்கொண்டு தண்டிப்பா யன்றோ; அவன் எமக்கு வழிபடு தெய்வமாதலின் அவனைத் தண்டியாமல் தணிவாயாக' என்பது தலைவன் பிரிவை யாற்றாது கலங்கிய தலைவியின வேண்டுகோள் (கலி. 147:42-45). வெகுளியும் அருளும் கொடுமையும செம்மையும் ஆகிய இவை மறமும் அறமும் உடையாரிடத்து உடையராய் இல்லாரிடத்து இல்லாதவராய் இருத்தலல்லது திருமால் மாற்றாரது உயிரிடத்தும் கேளிரது உயிரிடத்தும் அதனை மாற்றும் தொழிலும் அதற்கு ஏமம் செய்யும் தொழிலும் உடையரல்லர்; ஏனெனில், அவருக்குக் கேளிரும் பகைவரும் இல்லை (பரி. 4 : 49 - 54). 'நின்னால் வருத்தமுற்ற பரத்தையர் நீ செய்யும் கொடுமைகளை என்னிடத்தே வந்து வெறுத்துச் சொல்லாமையை யான் பெறின், இயற்கை நலததை யிழந்த கண்துயில் பெறுதலை விரும்பேன' எனத் தலைவி பரததைமைத் தலைவனிடம் கூறினாள் (கலி. 77:13-15).

**கொடுமைகள் - வன்கண்மைகள்.** கொடுமை காண்க.

**கொடுமையோர் - வன்கண்மையோர்.** பார்ப்பாரைப் பிழைத்த கொடுமையோர் - வன்கண்மையோர் - உள்ளிட்ட தீமை செய்த பலர்க்கும் அவர் செய்த வழுவாய்களை ஆராயுமிடத்து அவற்றைப் போக்கும் வழியுமுள எனவும் நிலம கீழ் மேலாகும கால மாயினும் ஒருவன் செய்த நனறியைக் கொன்றோர்க்கு உய்தியில்லை எனவும் அறநூல் கூறிற்று (புறம. 34:1-7).

**கொடுவரி - புலி.** கொடுவரி — புலி - கோடுயர்ந்த நெடுவரையில் நடமாடும் (புறம. 135:1). யானையைத் தாக்கிக் கொனற வயமான் பின்னர் அந்த யானையினும் வலிய கொடுவரியின் குட்டியைப் பாய்நது கொள்ள விரும்பினாற் போன்று முற்படப் பகையரசருடைய மதிலகளையழித்துப் பிறபட அவ்வரசர்தம் முடிக்கலம் முதலியவற்றை வாங்கிக் கொண்டு வீரமுடி புனையும் வெற்றியினையே விரும்புவான் தொண்டைமான் இளந்திரையன் (பெரு. 448-452). கூரிய உகிர்களையுடைய கொடுவரிக் குருளை கூட்டிடத்தே அடையுண்டிருந்து வளர்ந்தாற் போலத் திருமாவளவன பகைவரது காவலிடத்தே யிருந்து பெருமை வயிரமாக முற்றினான் (பட். 220 - 222, 299). தம் கணவர் தம் மார்பிலே கொடுவரி பாய்ந்ததாகப பட்ட நெடிய பிளப்பை யுடைய புணணை யாற்றுதறகுக் காவலெனறு கருதிக் கொடிச்சியர் பாடலைப் பாடினர் (மலை. 302-304). காட்டுப் பன்றியின் இறைச்சித துண்டுகளைத் தினற கொடுவரிகள் மலைச்சாரலின்கண் கூடி முழங்கும் (அகம். 332: 10,11). கொடுவரி வந்து தாககியதனால அதனை எதிர்த்து வென்ற வருத்தத்தோடே மலையிடததுத் துயிலும் யானை, நனவில் தான் செய்ததைக் கனவில் கண்டு வெருவி, அருகே புதுவதாக மலர்ந்த வேங்கை மரத்தை அப்புலியென உணர்ந்து தாககி அதன் அழகிய நலத்தைக் கெடுத்துச் சினநதணிநது நாணும் (கலி. 49:1-9).

**கொடுவாய் இரும்பு - தூண்டில் முள்.** மீனைத் தப்பாமல் பிடிததலில வல்ல பாண மகனுடைய மூங்கிலாலாகிய தூண்டில் கோல் நடுங்குமாறும் அதனிடததே யமைந்த கொடுவாய் இரும்பின - தூணடில் முளளின் - மடித்த தலை இரையின்றித தனிமை யுறுமாறும் அதனிடததே பொதியப்பட்ட இரையை வாளைமீன் கவ்விச் சென்றது (பெரு. 284-287). வரால் மீனாகிய போத்து கொடுவாய இரும்பினிடத்தே கோககப்பட்ட இரையைக கவ்விச சிககுண்டு ஆமபலிலை கிழியக் குவளைமலர் சிதையப பாயநது வள்ளைக் கொடியை மயக்கித் தூண்டில வேட்டுவன் வாங்கவும் வாராது முககணாங்கயிறு இடபட்டு இழுக்கப்படும் சினமிகக எருது போல செருக்கு மிகுநது கயததைக் கலககும் (அகம. 36 1-8).

**கொடுவாள் - அரிவாள்.** சமையல் வலலோன கறிகளை யரியும் கொடுவாள - அரிவாள - பற்றிய வடுவழுந்திய வலிய கைகளை யுடையவன (பெரு. 471,472).

**கொடுவினை - தீவினை.** அவுணா கொனறுணணலால் வருகினற தீமைககஞ்சாத கொடுவினையும - தீவினையும் - கொலலபபடும் தகைமையினையு முடைய மாயம வல்லவா (பரி. 5 6,7).

**கொடை - 1.** பொருட்கொடை. ஆதன ஓரியது மழை போலும் வளளிய கொடையை - பொருட்கொடையை—காணடற்குச் சென்ற கூத்தச் சுற்றததினர் மணிமிடைந்த குவளைப் பூவையும பொன்னரி மாலையையும் பிற அணியையும் யானையினத்தோடு பெற்றுப் பசி நீங்கி இனனியங்களை முழங்கத் தமது பாடுதலையும் மறநது ஆடுதலும் மாட்டாராயினர் என வல்விலோரியின் ஈகைததிறனை வன்பரணர் போற்றினர் (புறம். 153:4-12). ஈர்ந்தூர் கிழான தோயன மாறன் தன் அரசுக்கு வநத போரிடும்பையைத் தாங்கிப் படைக்கலனால கொண்ட விழுப்புண் நோய் தீர்நது மருந்து கொள் மரமபோல வாள்வடு விரவி வசையின்றி அழகு பெறற உடம்பையுடையனாய்க் கொடையை ஏற்றுக கொண்டு ஈர்ந்தை என்னும் ஊரிடத்தே இருநதனன (புறம். 180:3-7). யானைக் கட் சேஎய்

மாந்தரஞ்சேரலிரும் பொறை பகைவரைப் பிணித்துக் கொள்ளும் வலியையும் விரும்புவோருக்கு அளந்து கொடுத்தலறியாத கொடையையும் உடைய மணிவரை போன்ற மாயோனாவான் (புறம். 229: 25-27). நுண்ணுணர்வினால் பெருங்கொடை முதலிய பண்புகளால் பலர்க்கும் பயனுண்டாகத் தக்க செயல்களைச் செய்து இந்நிலம் இன்ப மடையுமாறு ஆண்ட மன்னர் சிலரே யாவர் (புறம். 360:3,6-8). சிறுகுடி கிழான் பண்ணன் 'கொடை மேந்தோன்றல்' எனச் சிறப்பிக்கப் பட்டான் (புறம். 388:7). பெருஞ்சேரலிரும்பொறை இரப்பவராகிய பரிசிலர் நடுவே கொடையைப் போற்றாது அளவிறந்து கொடுப்பான் (பதி. 79:2). மரத்திலுள்ள காக்கை காற்று மோதுகின்ற நெடுங் கிளையில் தன்மேல் விழுகின்ற மழைத்துளியுடனே அசைந்து கொண்டு கழார் என்னும் ஊரில் கொள்ளும் நல்ல பலவகையான, மிகுந்த பலிக்கொடையோடு உகுக்கப்பட்ட சோற்றுத் திரளுடனே புதிய ஊனோடு கலந்து இடப்படுகின்ற பெருஞ்சோற்றைத் தின்னக் கருதி யிருக்கும் (நற். 281:1-6). 'கொடைத் தக்காய்' எனத் தலைவன் போற்றப் பெற்றான் (கலி. 136:11).

2. மகட்கொடை. தலைவனுக்கு எந்தையும் கொடை எதிர்ந்தனன்; அலர்கூறும் ஊரவரும் நின்னை அவனொடு சேர்த்தே மொழிவர்; யாயும் நினக்குரியன் அவனே என்பள்; யாமும் மணநாள் விரைந்து வருக என்றுமென்விரல் கூப்பி இல்லுறை கடவுட்குப் பலி செலுத்துவோமாக எனத் தோழி தலைவியிடம் கூறினாள் (அகம். 282:12-18). ஊரற்கு மடங்கெழு பெண்டாகிய விறலி மகட்கொடை எதிர்ந்தாள் (நற். 310:5). 'இரவில் வரும் இடும்பையினின்று பிழைக்க வேண்டிக் காதலர்புதியராய் வரும் வருகையும் நின் வதுவை நாண் ஒடுக்கமும் காணுங்கால் வரைய வந்த வாய்மொழிக்கேற்ப நமர் கொடைக்கு உடன்படுவர் போலும்; அங்ஙனம் உடன்படுவாராயின் காதலரோடு மகிழ்ந்து பேசுவரோ' எனத் தோழி தலைவியை வினவினாள் (நற். 393:8-13). 'பெருங்கல் வெற்பனாகிய தலைவன் வரைவு வேண்டி வந்தனன்; நமரும் கொடை எதிர்ந்தனர்; இனி நின் சிறப்புப் பொலிவதாக' எனத் தோழி தலைவியிடம் கூறினாள் (ஐங். 300:3,4). ஏறு தழுவின பொதுவனுக்கே எம் சுற்றத்தார் மகிழ்ந்து, அலர் கூறிய ஊராரின் உச்சியை மிதித்துக் கொடை நேர்ந்தார் எனத் தோழி தலைவியிடம் கூறினாள் (கலி. 104: 73-76).

3. பண்டங்களை விற்றல். கொடையும் - பண்டங்களை விற்றலும் - கொள்ளலும் பொருந்தி நெருங்கின பல குடிகளையுடைய கடையினையும் உடையது மூதூர் (பெரு. 399,400,411).

**கொடைக்கடன்** - ஈகைக்கடன். இமையவரம்பன் நெடுஞ்சேரலாதன் கொடைக் கடனை - ஈகைக்கடனை - விரும்பிய ஒருபால் கோடாத நெஞ்சினன் (பதி. 20: 23). தொண்டைமான் இளந்திரையன் கொடைக் கடனை முடித்த கூம்பா உள்ளத்தினன் (பெரு. 446). நன்னனது முன்னோர் அணிவகுத்து நின்ற யானைப் படையிலே சென்று பொருத வேற்போரின் விளக்கத்தையுடைய அறிவுடையோர்க்குக் கொடைக்கடன் இறுத்தனர் (மலை. 88,89). நன்னன் தன்பேர் இன்று இவ்வுலகிலே நடந்து முடிந்து விடாதே உலகமுள்ளளவும நிற்கும்படி கொடைக் கடன் இறுத்த செம்மலாவான் (மலை. 541, 543). உதியன் கொடைக்கடனை ஏற்றுக் கொண்ட கோடா நெஞ்சினன் (அகம். 168 : 6,7).

**கொடைமடம்** - கொடையிடத்து அறியாமை. வற்றிய குளத்தில் பெய்தும் வயலிடத்துப் பொழிந்தும் உவர் நிலத்தில் பெய்தும் எவ்விடத்தும் வரையாத மரபினையுடைய மாரி போலப் பேகன் கொடைமடம்- கொடையிடத்து அறியாமை - படுதல் அல்லது தான் படையிடத்து அறியாமைப் படான் (புறம். 142).

**கொண்க** - தலைவ. (விளி) கொண்க - தலைவ - (குறு. 114 : 2; நற். 172 : 9; 183 : 6; 258: 2; 395 : 3; ஐங். 121-128: 1; 139 : 1; 193: 3; 194 : 2; 307 : 3; கலி. 125 : 11; 133 : 16).

**கொண்கன்** - தலைவன். கொண்கன் - தலைவன்- ஊர்ந்த கொடுஞ்சி நெடுந்தேர் தெண்கடல் அடைகரையிடத்து மணிகள் ஒலிப்பத் தலைவியும் தோழியும் காணும்படி வந்து அவர் நாணும்படி பெயரும் (குறு. 212 : 1-3). 'கொண்கன் வயச்சுறா திரியும் நீருடைய வழியில் முன்னர் வந்து கொண்டிருந்த வரவினைச் சில நாட்களாக அறியானாயினான்; அவ்வாறு வாராதிருத்தலைத் தானாகவே துணிந்து ஒழுகும் இடல்புடையனல்லன்; என் பேதைமையால் அவன் வருந்தி இங்கு வாரா வண்ணம் செய்த செயலொன்றை யான் உடையேனோ' எனத்தோழி தலைவியிடம் வருந்திக் கூறினாள் (குறு.230). கானற் புன்னை வளர்ந்த மேட்டு நிழலில் புணர்குறியைப் பெற்ற காலத்தில் எம் கண்கள் கொண்கனைக் கண்டன; எம் செவிகள் அவன் சொற்களைக் கேட்டன; எம் தடமென்தோள்கள் அவன் மணப்பின் நலமெய்திப் பிரியின் நெகிழும் எனத் தலைவி

தோழியிடம கூறினாள (குறு. 299). யான அன
னைக்கு அஞ்சுவேன ஆகலின நீ அகன்று போவாய
என்றாலும அககாலததும் நம் கொணகன நம்மை
விட்டுபபிரியக் கருதுபவனல்லன; அது இப்பொழுது
கழிநததே என்று தோழி தலைவியிடம் கூறினாள
(நற். 72: 5-7). பெரிய கழி சூழநத பாககம் கல்லென
ஒலிககுமாறு கொண்கனது தேர் வரும் என,
விரிசசி கேட்ட தோழி தலைவியிடம் கூறினாள்
(நற். 111:9,10). கணடோர் விரும்பும் தன்மை
யுடைய கொண்கனது அச்சந தரும் வெய்ய
நட்பு முன்பு பொருந்தியிருந்து இபபொழுது யா
தொரு தொடர்பும இல்லா திருநதும் அறனில
அனனை அவன் நம்மொடு புணர்நதனன போலக்
கூறி இப்பொழுது யாங்குளன் என வினவும் என்று
தோழி தலைவன சிறைபபுறமாக நிறபக் கூறினாள
(நற். 145: 4-7). குதிரை பூண்ட நெடுநதேரைச்
செலுத்தி நள்ளிரவில வரும், இயனற தேரையுடைய
கொண்கனோடு நீஉடன செலலுமாறு யான உடன
பட்டேன்; இனி இவ்வழுஙகல ஊர் அலர் சுமந்து
ஒழிவதாக எனறு தோழி தலைவியிடம் கூறினாள்
(நற். 149·7-10). மாலைப் பொழுதும் வநதது; ஆத
லால் இவ்வூருடனே தேனை ஊதும் வணடுகள்
ஒலிக்கும மாலையணிந்த மாாபினகணணே மின்னு
தல பொருந்திய கொடும் பூணினையுடைய கொணக
னோடு இனிய உவகை பொருநத நாம் முயங்கி
விளையாடிய சோலை நமக்கு எவவண்ணமாக
அமையுமோ எனத் தலைவி தன்னுளளே அழிநது
கூறினாள் (நற். 187.6-10). துறைகெழு கொணகன
துறந்து செனறொழிந்தனன எனறு யாரிடத்தில
யான வருநதி உரைபபேன என்று வரைவு நீட்
டித்தவழித் தோழி சிறைபபுறமாகத் தனனுள்ளே
கூறினாள் (நற. 211.1,9). புனனையஞ சோலையை
யுடைய கொணகன தந்த காதல நம்மை விட்டு
நீங்காமையினாலே கடல்துறை யாம தமியேமாய்
நோக்குதறகு இன்னாமை உடைதது எனத் தலை
வன சிறைபபுறமாகத தோழி கூறி வரைவு கடா
யினாள் (நற். 231.5-9). வரிவணடின ஓசையைப
புலியோசை எனறு வெருவிப் பனமுறை இழுதது
நிறுததவும் நிலலாவாகித தேரிற பூட்டிய குதிரை
யின கால்கள் தாவிச் செல்லச் சேரியிலே கல
லெனனும் ஓசையோடு தோனறி அம்பல மூதூர்
அலர் எழுமாறு கொண்கனது தோ செனறது
(நற். 249 : 6 - 11). தலைவனது தேரிற் பூட்டிய
கோவேறு கழுதையின் குளமபில் சிவந்த இறா
மீனகள் ஒடுங்கப்பட்டு அழிநதன; அவனது
கோதையிலும் காற்றால் எறியபபடும வெண
மணல ஒடுங்கின; ஆதலின் நினககே அவன
கொணகன ஆமாறு விரைவில் வநதனன போலும்
எனறு இபபொழுது தான யான அறிநது கொண
டேன எனத தோழி தலைவியிடம் கூறினாள (நற்.
278:5-9). தலைவியின பூபபோனற உணகணணிற
பொருநதிய நோயக்கு மருநதாகிய கொணகனது
தேர் அடம்பங கொடிகளை அறுத்து நெய்தற்
கொடியைச சிதைத்து வந்தது (ஐங. 101:2-5). நமது
ஊரினகணணே நளளென யாமததில் பலரும உறங்
கும் பொழுதில நலம் மிகவும் மழுஙகி வநத தோ
மறவனாகிய செலவஞ்சிறநத கொண்கனின மகனு
டைய ஊர் நலனெல்லாம் உடையது என்று
தோழி செவிலியிடம் கூறினாள (ஐங். 104). 'யாம்
கொணகனை எதிர்ப்படுகின்றிலேம; அவன் வாரா
னாயினும் அவனுடைய நாட்டிறகு யாமே சென்று
அவனைத் தலைப்படுவேமா' எனத தலைவி
தோழியை வினவினாள் (ஐங். 114). மெனமை
யுடைய நெயதனிலக கொண்கன நம இனனா
நிலையை உணராமையானே வரைநது கோடற்குக்
காரண மாகாத பிறநெறிகளை மேறகொணடு
வாராதா னாயின் உறுதியாக அவன பெரிதும்
அன்பிலன எனறு தலைவி தோழியிடம் கூறினாள்
(ஐங். 119:2-4). இவவூரில் அலா எழாது இருககு
மாயின கொண்கனது நட்பு மிகவும நனமையுடை
யது என்று தலைவி பாணனிடம கூறினாள
(ஐங். 131). 'நெடுநதேரையுடைய கொண்கனோடு
எனனைப் பிரிநதுபோன என மாமைககவின மீண
டும் வநதெயதியதனை நீயே உணாநது கொளவா
யாக' எனறு தலைவி பாணனிடம கூறினாள (ஐங்.
134). பாணனே, நினனை யானெனனறு வினவு
வேன; நுமமூாத தலைவனாகிய திணணியதேரை
யுடைய கொணகனை நயநத மகளிரும தம் பண
டைய நலததை மீணடும் பெறுவரோ எனத் தலைவி
பாணனை வினவினாள் (ஐங். 137). மென்புலக்
கொண்கனை அனபிலாத கடுமொழி கூறி இடித
துரைததுப் பரததையர் சேரியினினறும் இவவூரி
டதது அழைதது வாராத நீ நற்பணபினை
உடையை யலலை எனத் தலைவி பாணனை இடித்
துரைததாள (ஐங்.138). 'பாணனே, நீ என நிலையை
உரைததற் குரியை ஆதலின துறைகெழு கொணகன
பிரிநததனால எல்வளை கழனற என நிலையைக்
காணபாயாக' என்று தலைவி பாணனிடம்
கூறினாள் (ஐங். 140). துறைகெழு கொணகன
அளி செய்வா னாயின இவவழுஙகல் ஊரில
உறைதல எனறும இனிதே யாகும எனறு தலைவி
தோழியிடம கூறினாள (ஐங். 191:4,5). தலைவி,
நெயதனில மகககள் சங்கினற முத்தினை விலை
பகர்தற்கு இடனான கடல் பொருந்திய கொண

கனின காதல் மடமகளாவாள் (ஐங். 195:1,2). நின் ஒளி வளைகளும் ஆயநுதலும் கவின் பெறும்படி பொனனாலாய தேரையுடைய கொண்கன வந்தனன ஆதலின, நினதுசெவ்வரி நெடுங்கண்ணினைத் திறந்திடுக; நம் நலங்கவர்ந்த பசலையை எள்ளி நாம நகைத்திடுவோம் எனறு தோழி தலைவியிடம் கூறினாள் (ஐங். 200).

**கொன்கானங் கிழான்** - குறுநில மன்னன். கொண் கானம் என்னும் மலைக்குத் தலைவனான இவனது இயற்பெயர் தெரிநதிலது. புறநானூற்றில் மூனறு பாடல்கள் (154, 155, 156) இவனைக் குறித்து மோசிகீரனார் பாடியுள்ளார். அம்மூன்று பாடல் களிலும் இவனது கொடைச்சிறப்பும் வென்றிச் சிறப்பும் விளங்குகின்றன. நெருஞ்சிப்பூ ஞாயிற் றையே நோககியிருப்பது போல வறிய யாழ்ப்புல வரின் உண்கலனகள் இவனது மார்பத்தையே நோக்கி மலர்ந்தன எனபது (புறம். 155) அவ்விரு சிறப்பிறகும் ஏற்ற அரிய விளக்கமாம். ஆகவே இவன் மார்பின வலிமையால் பொருளாக்கி அதனைப் புலவர்க்கு நல்கும் புகழமைநதவன் எனபது தெளிவு. கொண்பெருங்கானத்துக் கிழவன் எனவும் பாடப் பெறுகின்ற இவனது கொண்கானம் கொங்கணம என்றும வழஙகப் பெறும்.

**கொண்கானம்** - ஒரு மலை. 'பொதும்பின்கண் படர்ந்த கொடியை மேய்ந்த எருமை, அக்கொடியினின்று தினறொழிதத மலைப்பச்சையின இலைகளை ஒண்டொடி மகளிர் இழையணிதற்குப் பயன் படுத்தும் கொண்கானத்திலுளள நன்னனது நாட்டிலுள்ள ஏழிற்குன்றதைப் பெறுவதாயினும் நின்னை விட்டுப் பிரிபவர் யார்' எனறு கூறிப் பிரிவுணர்ததப்பட்டு ஆற்றாளாய தலைவியைத் தோழி தேற்றினாள் (நற். 391:2-8).

**கொண்டல் - 1. கீழ்ககாறறு.** இவ்வுலகத்தில் சான் றோர் செய்த நல்வினை உணடாயின் இமைய மலையிடத்துத் திரண்டு இனிய ஓசையைப் பயிற் றிக் கொண்டலால் - கீழ்ககாற்றால் - வரும் மாமு கில் பொழிநத நுண்பல துளியினும பலகாலம் வாழ் வாயாக எனறு கிள்ளிவளவனை ஆலததூர் கிழார் வாழ்த்தினார் (புறம். 34:20-23). கொண்டலால் கடலின அலைகள் உடைக்கும் மணல மேட்டிற் கிடக்கும் பழம படகின் சிதைவு போக்கிப் புதுக் கிய புதுவலைப் பரதவர் சுறாமீன்களைப் பாக்கத் திலுள்ளார்க்குப பகுத்துக் கொடுப்பர் (அகம். 10: 8-12). தலைவியும ஆயமும் கொணடல் குவித்த மணலில குரவையாடினர் (அகம். 20:7). மாலைப் பொழுதில தாழைகள தளர்நதிட அசைந்து, வருந்த வந்த கொண்டலால் மிக்க துன்பம் கொணட காமர் நெஞ்சம செயலற்று வருந்த நமக்குத் துன்பத்தினைச செய்து அருளாராயினும் தலைவர் கேண்மை ஒழியாதிருப்பதாக எனறு தலைவி தோழியிடம் கூறினாள் (அகம். 40:6-10). பாம்பினது படம் ஒடுங்கியதைப் போலக் குவிந்து கொணடலினால் வீழ்த்தப் பெற்ற காந்தள் மலர் பாறையின் மேல் கவிநது கிடக்கும் (குறு. 185:5-7). மலர் விரிகின்ற புதிய மணற் சோலையிலுள்ள புன்னையின் நுண்தாது அசைகின்ற கொண்டல் வந்து மோதுநதோறும் குருகின் வெண்முதுகில் நெருங்கத் தூர்க்கும் (நற். 74:6-9). கொணடல் செலுத்துகையினாலே வானத்திற் செறிந்து அலையிலுள்ள பிசிர் போல மலையினுசசியில் ஏறி ஒழுங்காக அமைந்து நிறைவுற்ற மேகம் மிக்க மழையைப் பெய்தது (நற். 89:1-4).

**2. மேகம்.** கொண்டலால் - மேகத்தால் - முகந்து சொரியப்பட்ட நீரிடத்துக் கோடை காயினும் மகளிர் கண் போன்ற குவளை மலர்கள் மலரும் (புறம. 137:7,8). பெரிய அலையின் ஒலியோடு அலை ஓய்நதிருந்த கொண்டல சூழ்ந்த இரவில் கொழுமீனைப் பிடிக்கும் பரதவர் கடலில் மடுத்த அம்பியிலுள்ள இருள் நீக்கும் ஒண் சுடர், வேநதன பாசறையிடத்துள்ள யானையினது முகபடாத்தின் ஒண்சுடர் போலத் தோனறும் (அகம. 100:5-10). பகலும் இரவும் எனறில்லாது கல் லென்னும் ஓசையுடன் கொண்டல் பெருமழையைப் பெய்தது (அகம். 178:17,18). பயனதரும் நிலங்கள் தளிர்க்கப்பெய்து, பின பெய்தலை வெறுத்து மலையைச் சேர்ந்த கொண்டலாகிய கரிய மேகம் மீண்டும் இரவில் தங்குதலுற்றுப் பொங்கித் துளித் தது (அகம். 235:4-6). பேகனது கொண்டல் தவழும் பெரிய மலைபோலும மணம் உடையளாய் அழகிய இனிய சொலலையுடைய தலைவி வந்து புணர்ந்த மையால் மெய்ம்மலிநது மிக்க மகிழ்ச்சி உடையே மாயினேம என்று தலைவன் தன்னெஞ்சிற்குக் கூறினான் (அகம். 262:12-18). ஏறுகள் ஒன்றோ டொன்று தாக்கு அடிபெயர்த் தொற்றி மருப் பினால் எவ்விடத்தும் குத்துகையினாலே மெய் யினின்றும் வடிகினற குருதியை உடையனவாய் நாட்காலையில் பெய்யும் கொண்டல் நிரையை யொத்தன (கலி. 106:11-14).

**3. மழை.** கொண்டல் - மழை - வளர்க்கையினாலே கொடிகள் விட்டு அழகு பெற்று மெலலிய சுருள விரிந்த சிறிய இலைகளையுடைய இலைக்கறிகள் முதலிய பல்வேறு உணவுப் பொருள்களை ஆங்

காங்கே பலவிடங்களிலும் வழங்கினர் (மது. 530, 531-535). அலர்கின்ற பருவத்தே கையாலலர்ததி மோந்து பார்த்தாலொதத மிக்க மணமுடைய சுரும்புகளுக்கு மலரும் பல குவளைப் பூக்களை வரைவின மகளிர் கொண்டலுக்கு மலர்ந்த மல்ரை யுடைய சிறு தூற்றை யொபபச் சூடினர் (மது.566, 568).

**4. கொள்ளுதல்.** கலங்கி வருகின்ற நீா முதலீய தொகுதியோடு பக்கத்திற் பொருநத இறங்கி மன்னுயிர் நிலைபெற, வலமாக எழுநது முழங் கும் கொண்டல் – கொள்ளுதல் - உடைய தண்துளி களாகிய நிறைந்த சூலையுடைய மாமழை கார் காலததில் பெய்தலை மறந்தாலும் பல்யானைச் செல்கெழு குட்டுவனின வளம், மாறாத புது வருவாயுடையது (பதி. 24:26-30). நீரைக கொண்ட லுடைய கரிய மேகம் மேறபாலுள்ள மலையிலே எழுநது மழை பெய்தது (நற். 140:1).

**5. மழைக்காலம்.** 'தலைவனைச சிறிது மறத்தல வேண்டும் எனகின்றாய்; கொண்டல - மழைக் காலத்து – அவரைப் பூவைப் போனற வெள்ளிய தலையை யுடைய மேகததைச் சூடித் தலைவனது மணி நெடுங்குன்று அமையாது தோனறுகினறது. அதனைக் காணும யானஎவ்வாறு ஆற்றுவேன' எனறு தலைவி தோழியிடம் கூறினாள் (ஐங். 209).

**கொண்டி - கொள்ளை.** 'நமமொடு பொருவானும் இளையன்; அவனது நாட்டிற் கிடைகக விருககும கொண்டியும் - கொளளையும் - பெரிது' என இகழ்நது வநத வம்ப மளளர் புலலெனனும் கண்ணையுடையராய்ப் புறததிற போக அவரைப் பாணடியன நெடுஞ்செழியன போாககளததிற் கொலல உடனபடானாய் அவர்தம் ஊரிடததே சென்று கொனறான (புறம. 78:5-12). தமிழ நாட் டெல்லை முழுதும் கொண்டியாகக் கொண்டு தன பகைவரைத தாழத்து அவருடைய பொருள களையும் கவர்நதுணணும் தணிப்பருங் கடுநதிற லினன பாண்டியன இலவநதிகைப் பள்ளித துஞ சிய நன்மாறன (புறம். 198:12-14). கடல்போலும் படையைக் கொண்டு சென்று பகைவரை யடுத லால் பெறுகின்ற கொணடி மண்டுற்ற வலிய முயற்சியுடைய சோழநாட்டுப் பொருநன் நலங் கிள்ளி (புறம. 382.1-5). செலவக் கடுங்கோ வாழி யாதன் உழிஞை மாலையைச் சூடிக் கொணடி மிகைபடுமாறு தண்டமிழ் நாட்டுப் படைகளை இடையறப்படுத்தி உருமெனச் சீறி ஒரே வளைப பில் சோழனையும் பாணடியனையும வென்றான் (பதி. 63:8-11). காவிரிப்பூம்பட்டினதது வணிகர் தம் பொருள்களையும் பிற பொருள்களையும் ஒப்ப ஆராய்நது தாம கொளவனவற்றையும் மிகையாகக் கொள்ளாது கொடுபபனவற்றையும் குறையாகக் கொடுக்காது பல பண்டஙகளையும் பகர்நது கொடுக்கும பழையதாகிய கொண்டியினை யுடைய வர் (பட். 209-212). பரதவர், உயர்ந்த மணலை யுடைய அடைகரையில வநது கிடக்கும் கோட்டு மீனாகிய கொண்டியினை மணஙகமழ பாககத்தின கண் பகுககும் வளம் பொருநதியது தொணடிட பட்டினம் (அகம். 10:10-13). வையையில நீர்விளை யாட்டயர்நது மாலையில் மதுரை மீளும மகளி ருடைய கதுப்பின்கண் அணியபபட்ட மலர்களின் தேனைக கொண்டிய (கொள்ளை கொணட) வண்டுகள் இன்குரலோடே ஆரவாரிததன (பரி. 10:120,121).

**2. திறை.** பாண்டியன் கூடகாரத்துத் துஞ்சிய மாறன் வழுதி, தமிழ்நாடு மூவேநதாககும பொது வெனறு கூறப் பொறானாயப் போரையேற்றுக கொணடி - திறை - வேணடுவனாயின, கொளக எனச சொலலி அதனை முனனே கொடுத்த மன்னர் நடுககம் தீரநதாராவர் (புறம். 51.4-7).

**3. கொளபொருள்.** அதியமான நெடுமானஞ்சி தன்னைப் பாடி வநத பொருநனுடைய சுறறததின துன்பம் களையச செநநெலலைப் போரொடு நல்கி, 'இககொணடியை - கொளபொருளை - பெறுக' எனறான (புறம. 390:20-23).

**4. உணவு.** கள்ளாகிய கொணடியினை - உணவினை- உடைய பாக்கங்களைக கொணடது கொறகை (மது. 137,138).

**5. பொருளைக கொள்ளை கொள்ளும் பரத்தை.** 'தலைவன முனனாப பிற மாதரை விரும்பாத கோட்பாட்டினை உடையனாயிருநது இபபொழுது தன்னை விரும்பிய கொணடியினிடத்து - கொள்ளை கொளளும் பரததையினிடதது - தன மார்பினை மடுப்பா னாயினன்' எனறு தலைவி தோழி யிடத்துக் கூறினள் (நற். 174.9,10).

**கொண்டிமகளிர் - பொருளைக் கொள்ளை கொள்ளும் பரத்தையர்.** விசும்பிடத்தே விரும்பியாடும வானவ மகளிரைப் போனறு தமமைக் கண்டோருடைய நெஞ்சை வருத்தமுறுவிக்கும் கொண்டி மகளிர் - பொருளைக் கொள்ளை கொள்ளும பரததையா - விண்ணிடமெல்லாம பரந்து கமழுமபடி வெண மலர் மாலைகளைக கொணடையில் முடிததுத தொடிகள் விளஙகும்படி,கைகளைவீசிநடபபர்;விடு பூக்களின மணம் தெருவெல்லாம் கமழுமபடி, பல ருடன் புணாந்தமையால் குலைந்த ஒப்பனைகளைப்

பின்னும் புதுமையுண்டாக ஒப்பனை செய்து, செங்கழுநீர் மலர்களையும் ஏனைப் பூக்களையும் சூடிக்கொள்வர்; தம்மைப் புணர்வோருடைய நுண்பூண்களணிந்த மார்பைத் தம் மார்பிடத்தே வடுப்படும்படி அணைத்து இடையிடையே மாயப் பொய்ம்மொழிகள் பலவற்றை அவருளம் இனிக்க மொழிவர்; அவர் தரும் பொருளைப் பெறுமளவும் தம் வஞ்ச முயக்கம் தோன்றாதவாறு மறைத்துச் செயரும் அணைமையருமாய்த் தம் வடிவழகைக் காமுற்று வந்தோராகிய அவ்விளஞ் செல்வருடைய பொருள்கெடக் கவர்ந்து கொள்வர்; அலரும் பருவம் பார்த்து மலரின் தாதுக்களையுண்டு அது வறிதானவுடன் நினையாது துறந்து போகும் வண்டினம் போன்று அச்செல்வரின் நெஞ்சு கலக்கமுறும்படி அவருடன் கூடும் கூட்டத்தைத் துறப்பர்; பின்னர்ப் பழுமரங்களை நாடிச் சென்று அவற்றின் பழங்களைக் கவர்ந்துண்ணும் பறவைகளைப் போன்று கொழுங்குடிச் செல்வரும் பிறரும் கூடிய மணவிழா நிகழும் இல்லங்களைத் தேடிச் சென்று, அங்கே பொற்றொடி முதலியவற்றை யணிந்த இளமையுடையராயச் சுடர் விளக்கின் ஒளியில் பலரும் நெருங்கி, யாழிசையோடு பொருந்தி முழங்கும் மத்தளத்தின் முழக்கத்தால் மனம் மகிழ்ந்து கூத்தாடுவர்; பின்னும் நீர்த்துறையிடத்துக் குவிந்த மணற்பரப்பில் ஆடி அவ்விடத்தை வெறுத்துழி மெல்லிய தளிர்களைக் கொய்து நீர்க்கீழ் அரும்புகளோடே பொருந்தக் கட்டிய நெடுந்தொடர்க் குவளை மலரை வடிம்பிலே விழும்படி உடுத்து மணங்கமழ் மனைதொறும் விளையாடுவர் (மது. 561-589).

2. **போரில் பிடித்து வரப்பெற்ற பகைவர் மனைவியர்.** கொண்டி மகளிர் - போரில் பிடித்து வரப்பெற்ற பகைவர் மனைவியர் - பலரும் நீருண்ணும் துறையிலே சென்று முழுகி மெழுகும் மெழுக்கத்தினையும் அவர்கள் அந்திக் காலத்தே கொளுத்தின அவியாத விளக்கினையு முடைய திருமாவளவனின் பகை நாட்டு அம்பலங்கள் எல்லாம் காட்டு யானைகள் புகுந்து தூண்கள் சாயும்படி தம்முடலை உராய்ந்து அங்கேயே உறையுமாறு அவனால் பாழ்படுத்தப் பட்டன (பட். 246-251).

**கொண்டி மள்ளர்** - கொள்ளையிடும் மறவர். 'மெல்லிய வாகை மலர், நுண்கொடி உழிஞை ஆகிய இவ்விரண்டினையும் மாலையாக அணிந்தவரும் வெற்றியை விரும்புபவரும் பகைவர்க்கு அச்சம் தரும் சிறப்பினை உடையவருமாகிய கொண்டி மள்ளர் - கொள்ளையிடும் மறவர் - எதிரிகளைக் கொல்லும் களிறுகளைப் பரிசிலாகப் பெறுக' என்று கடல் பிறக்கோட்டிய செங்குட்டுவன் கூறினான் (பதி. 43: 23-25).

**கொண்டியள்** - கொள்ளை கொண்ட செல்வத்தை யுடையவள். ஒற்றை மதில் சூழ்ந்த நகரிடத்தேயுள்ள மன்னனுடைய இளைய மகள் பெருத்த சீருடனே பகைவருடைய அரிய கொண்டியள் - கொள்ளை கொண்ட செல்வத்தையுடையள் - (புறம். 338:5,12).

**கொண்டியுண்டி** - கொள்ளையுணவு. 'பகைப்புலத்துக் கொண்ட கொண்டியுண்டியை - கொள்ளையுணவை - உடைய தொண்டையோர் மருகனே' என்று தொண்டைமான் இளந்திரையன் விளிக்கப் பெறுவான் (பெரு. 454).

**கொண்டுநிலை** - குரவைக் கூத்தினுள் ஒருவர் கூற்றினை ஒருவர் கொண்டு பாடும் பாடல். 'தெரியிழாய், நீயும் நின் கேள்வனும் கூடுதற்கு இம்மலையிலுறைகின்ற தெய்வம் மனம் மகிழ நாம் மகிழ்ந்து குரவைக்கூத்தில் கைகோத்து ஆடுதற்கு அக்கூத்தினுள் கொண்டு நிலையை - ஒருவர் கூற்றினை ஒருவர் கொண்டு பாடும் பாடலை - நீ பாடிக் காண்' எனத் தோழி தலைவியிடம் கூறினாள் (கலி. 39:26-29).

**கொண்டை** - கூந்தல் முடிப்பு. கொண்டை - கூந்தல் முடிப்பு - ஆகிய மயிரையுடையவர் கடைசியர் (புறம். 61:1). வள்ளிக்கும் தேவசேனைக்கும் நிகழ்ந்த போரில் வெறியாட்டை விரும்பினோனாகிய முருகனது குன்றத்து (வள்ளியின) வண்டு தேவசேனையின் கொண்டையின்மேல் செறிந்த வண்டை மேற்சென்று பாய்ந்தது (பரி. 9:41-44). வையையில் நீர் விளையாட்டயரும் தலைவனது பூமாலை நீரோட்டத்தின்வழி முறையே வந்து தன் கொண்டையை அடைந்தது என்று அதனை யெடுத்துப் பரத்தை தன் கொண்டையில் நாடறியச் சூடிக் கொண்டாள் (பரி. தி. 2:51-53).

**கொண்டோள்** - கொள்ளப்பட்டவள் (காதற் பரத்தை). உன்னால் இப்பொழுது கொண்டோள் - கொள்ளப் பட்டவள் - மிகவும் மடவள்' என்று தலைவனிடம் அவனுடைய காதற்பரத்தையைக் குறித்துத் தலைவி கூறினாள் (ஐங். 67:1).

**கொண்பெருங்கானம்** - கொண்கானம் (ஒரு மலை). 'நீ பரிசில் நல்கினும் நல்காயாயினும் நினது ஆண்மையினையும் உச்சியினின்று பலவாய் இழியும் குளிர்ந்த தண்ணிய அருவியையுடைய நினது கொண்பெருங் கானத்தையும் - கொண்கானத்தையும் - பாடுதல் எனக்கு எளிது' என்று கொண்கானங்கிழானை மோசி கீரனார் பாடினார் (புறம். 154:8-13). நெருஞ்

சிப்பூ எழு ஞாயிற்றை எதிர்கொண்டாற் போல வறிய யாழ்ப்புலவரின் ஏற்கும் மண்டை, விளங்கிய புகழையுடைய கொண்பெருங் கானத்துக் கிழவனது மார்பினை மலர்நது நோக்கின (புறம. 155: 4-8). தன் பால் பரிசில் விரும்பி வந்த பரிசிலர் காரணமாக, அவர்க்கு முன்பு கடன் கொடுத்தோரால வளைப்புண்டு கிடத்தலும் மாற்றரசரைத் திறை கொண்டு மீட்கும் தலைமையொடு விளங்குதலுமாகிய இரண்டு நன்மைகளை யுடையது கொண் பெருங்கானம் (புறம். 156:2-6).

**கொண்மூ** - மேகம். ஞாயிற்றைத் தன்மேல் கொண்ட பக்கம திரண்ட கொண்மூ - மேகம் - உயர்ந்த வானத்தின் நடுவே நின்று அஞ்ஞாயிற்றினது வெயிலை மறைக்கும் (புறம் 35:17,18). கடல் குறைபட நீரை முகந்து கொண்டு விரைந்த செலவையுடைய கொண்மூ வேண்டு மிடததே திரண்டு மலைபோலும் தோற்றத்தை யுடையனவாய்ச் சூல் முதிர்ந்து உருமேறு இடிக்கும்; மின் முதலாகிய தொகுதியுடனே கூடி மழையை முறையாகப் பெய்து வளத்தைத் தரும் (புறம். 161:1-5). இடியினது மிக்க ஓசையை யுடைய புதுப்பெயலைத் தர வேண்டிக் கால்வீழ்த்துக் கடலிடத்தே திரண்ட தலைமையை யுடைய கொண்மூ நீரின்றி மீளாது (புறம். 205:10-12). யானைப் படையையே கொணமூவாகக் கொண்டு சேரமான் கடலோட்டிய வேல் கெழு குட்டுவன் போராகிய உழுதொழிலைச் செயவான் (புறம். 369:1,2). சோழன் குராப்பள்ளித் துஞ்சிய கிள்ளிவளவன் யானைப் படையினையே கொண்மூவாகக் கொண்டு போராகிய உழு தொழில் செய்து கொங்கரைப் புறம் பெற்றதாகிய விளைவைக் கண்டான் (புறம். 373: 2, 8). கடலைக் குறையுண்டாம்படி முகந்து கொண்டு முரசு முழங்கினாற் போன்ற இனிய குரலையுடைய இடியேற்றோடு வரிசையாகச் செல்லுதலையுடைய ஓங்கிய கொண்மூ முருகனது வேல் போல மினனல் மயங்கும் தொகுதிகளை உடையதாய் வானத்தில் வீசும் காற்று மோதுதலால் கலங்கி மலைமேல் மழை பெய்தது (குறி. 47-53). கரிய மலையைச் சேர்ந்த சிவந்த கொண்மூப் போலக் கடலின் கரிய உயர்ந்த; அலையொடு காவிரியின் சிவந்த நீர் பரந்து கலக்கும் (பட். 95-97). வானில் இடித்துப் பெய்தலைச் செய்யும் இனமான பல கொண்மூ நீங்காது பெய்தலால் வெள்ளம் இடந்தோறும் எழுந்து பரந்தது (அகம். 68: 14-16). அரும்பு முதிர்ந்த ஈங்கையின் பூக்கள் பரவவும் குவளையின் போது பிணிப்பு நெகிழவும் மழையைப் பெய்து வறுமை யெய்திய பொங்கும் செலவினையுடைய கொண்மூ வானின் திசைகளில் திரியும் (அகம். 125:3-10). முதிய முல்லைக்கொடி தளிர்க்குமாறு கீழ்த்திசை வானிலெழுந்த கடிய குரலையுடைய கொண்மூ நீரைப் பெய்து முழங்குந்தோறும் தலைவி தன்னைப் பிரிந்து சென்ற தலைவனை வெறுத்துச் செயலற்று ஒடுங்குவாள் (அகம். 174 : 5-8). பெரிய கூட்டமான கொண்மூ கடலிலே மிக்குச் சென்று நீர் பருகியுண்ட மிக்தியையுடையனவாய் மேற்கே யெழுந்து சூலுற்ற பிடியானைக் கூட்டம் போல இடந்தோறுட தோன்றி ஒலி மிகுந்து பெய்தற்கு ஒருங்கு திரளக் கார்காலம் வந்தது (அகம. 183: 5-10). 'பெரிய கடல நீரை முகந்து கொண்ட கரிய கூட்டமான கொணமூவே, நீதான் இருண்டு வானில் வலமாக எழுந்து சுற்றி முரசுபோல முழங்கி, வீரர் உறையினின்றும் உருவி வீசும் வாள்போலச் செறிந்து விளங்கும் மின்னின் தொகுதியை உடையையாய் நாள்தோறும் பயனின்றி ஆரவாரம் செயதொழிவாயோ' எனத் தோழி வினவினாள் (அகம். 188: 1-8). மாக் கடல் நீரை முகந்து, திசைகளில் சென்று இருண்டு உலகம் மறைய வலமாக எழுந்து, பொனறையால் வருத்தம் கொண்ட கொழுத்த பல கொண்மூ வானைப் பிளந்தன போலப் பலவும் ஒருங்கே மின்னி, இறங்குவன போல நெருஙக நெருங்க வந்து, கவிழ்ந்தன போல மிக்குப் பொழிந்து, இடியும் முழக்கமுமின்றி இனிய குரலுடன மிகக துளியைப் பொருந்தி மழை பெய்து கழிந்தது (அகம். 374 : 1-10). உலகம் வற்கடம் நீஙகும்படி பெய்தற்குக் கிழக்கே எழுந்து கூதிர்க் காலத்தே தோன்றிய கொண்மூப் போல தலைவியின் முலை பாலால் விம்முமாறு, அவளுடைய மகனை யழைத்துக் கொண்டு தேவர் கோயில வலம் வரச் சென்ற தோழி காலம் தாழ்த்து மீண்டாள் (கலி. 82:1-4). ஆயர் ஏறுதழுவுதற்காக ஏறுகள் பலவற்றையும் வடிவையுடைய பல கொண்மூத் 'திரண்டவை போல முழங்கும்படி விரும்பித் தொழுவிலே புகவிட்டனர் (கலி. 104 : 15-17). தலைவனின பிரிவினால் கலக்க மெய்திய தலைவி வெண்மேகத்தை நோக்கி, 'கொண்மூ, நீ பெய்யாமல் என்ன செய்கின்றாய், நின் இனத்தோடு கூடி என் கண்ணீரால் சிறந்த கடலில முகந்து பரந்து முழங்கி, என்னைத் துறந்து தொடி நெகிழ்த்த என்தலைவன் போன கானத்தினை நெருப்புச் சுடாமல செறிந்த துளியை வீசாயோ' என அழுது வேண்டினாள் (கலி. 145: 18-23). பாண்டியன போரின்கண் யானைகளை வரிசையாக நிறுத்தினாற் போலக் கொண்மூ நெருங்க வானம் மழை பொழிந்தது (பரி. 22:1,2,3).

காங்கே பலவிடங்களிலும் வழங்கினர் (மது. 530, 531-535). அலர்கின்ற பருவத்தே கையாலலர்த்தி மோந்து பார்த்தாலொத்த மிக்க மணமுடைய சுரும்புகளுக்கு மலரும் பல குவளைப் பூக்களை வரைவின் மகளிர் கொண்டலுக்கு மலர்ந்த மல்ரை யுடைய சிறு தூற்றை யொப்பச் சூடினர் (மது.566, 568).

4. **கொள்ளுதல்.** கலங்கி வருகின்ற நீர் முதலிய தொகுதியோடு பக்கத்திற் பொருந்த இறங்கி மன்னுயிர் நிலைபெற, வலமாக எழுந்து முழங் கும் கொண்டல் – கொள்ளுதல் - உடைய தண்துளி களாகிய நிறைந்த சூலையுடைய மாமழை கார் காலத்தில் பெய்தலை மறந்தாலும் பல்யானைச் செல்கெழு குட்டுவனின் வளம், மாறாத புது வருவாயுடையது (பதி. 24:26-30). நீரைக் கொண்ட லுடைய கரிய மேகம் மேற்பாலுள்ள மலையிலே எழுந்து மழை பெய்தது (நற். 140:1).

5. **மழைக்காலம்.** 'தலைவனைச் சிறிது மறத்தல் வேண்டும் என்கின்றாய்; கொண்டல் - மழைக் காலத்து – அவரைப் பூவைப் போன்ற வெள்ளிய தலையை யுடைய மேகத்தைச் சூடித் தலைவனது மணி நெடுங்குன்று அமையாது தோன்றுகின்றது. அதனைக் காணும் யான்எவ்வாறு ஆற்றுவேன்' என்று தலைவி தோழியிடம் கூறினாள் (ஐங். 209).

**கொண்டி** - **கொள்ளை.** 'நம்மொடு பொருவானும் இளையன்; அவனது நாட்டிற் கிடைக்க விருக்கும் கொண்டியும் - கொள்ளையும் - பெரிது' என இகழ்ந்து வந்த வம்ப மள்ளர் புல்லென்னும் கண்ணையுடையராய்ப் புறத்திற் போக அவரைப் பாண்டியன் நெடுஞ்செழியன் போர்க்களத்திற் கொல்ல உடன்படானாய் அவர்தம் ஊரிடத்தே சென்று கொன்றான் (புறம். 78:5-12). தமிழ் நாட் டெல்லை முழுதும் கொண்டியாகக் கொண்டு தன் பகைவரைத் தாழ்த்து அவருடைய பொருள் களையும் கவர்ந்துண்ணும் தணிப்பருங் கடுந்திற லினன் பாண்டியன் இலவந்திகைப் பள்ளித் துஞ் சிய நன்மாறன் (புறம். 198:12-14). கடல்போலும் படையைக் கொண்டு சென்று பகைவரை யடுத லால் பெறுகின்ற கொண்டி மண்டுற்ற வலிய முயற்சியுடைய சோழநாட்டுப் பொருநன் நலங் கிள்ளி (புறம். 382:1-5). செல்வக் கடுங்கோ வாழி யாதன் உழிஞை மாலையைச் சூடிக் கொண்டி மிகைபடுமாறு தண்டமிழ் நாட்டுப் படைகளை இடையறப்படுத்தி உருமெனச் சீறி ஒரே வளைப் பில் சோழனையும் பாண்டியனையும் வென்றான் (பதி. 63:8-11). காவிரிப்பூம்பட்டினத்து வணிகர் தம் பொருள்களையும் பிற பொருள்களையும் ஒப்ப ஆராய்ந்து தாம் கொள்வனவற்றையும் மிகையாகக் கொள்ளாது கொடுப்பனவற்றையும் குறையாகக் கொடுக்காது பல பண்டங்களையும் பகர்ந்து கொடுக்கும் பழையதாகிய கொண்டியினை யுடைய வர் (பட். 209-212). பரதவர், உயர்ந்த மணலை யுடைய அடைகரையில் வந்து கிடக்கும் கோட்டு மீனாகிய கொண்டியினை மணங்கமழ் பாக்கத்தின் கண் பகுக்கும் வளம் பொருந்தியது தொண்டிப் பட்டினம் (அகம். 10:10-13). வையையில் நீர்விளை யாட்டயர்ந்து மாலையில் மதுரை மீளும் மகளி ருடைய கதுப்பின்கண் அணியப்பட்ட மலர்களின் தேனைக் கொண்டிய (கொள்ளை கொண்ட) வண்டுகள் இன்குரலோடே ஆரவாரித்தன (பரி. 10:120,121).

2. **திறை.** பாண்டியன் கூடகாரத்துத் துஞ்சிய மாறன் வழுதி, தமிழ்நாடு மூவேந்தர்க்கும் பொது வென்று கூறப் பொறானாய்ப் போரையேற்றுக் கொண்டி - திறை - வேண்டுவனாயின், கொள்க எனச் சொல்லி அதனை முன்னே கொடுத்த மன்னர் நடுக்கம் தீர்ந்தாராவர் (புறம். 51:4-7).

3. **கொள்பொருள்.** அதியமான் நெடுமானஞ்சி தன்னைப் பாடி வந்த பொருநனுடைய சுற்றத்தின் துன்பம் களையச் செந்நெல்லைப் போரொடு நல்கி, 'இக்கொண்டியை - கொள்பொருளை - பெறுக' என்றான் (புறம். 390:20-23).

4. **உணவு.** கள்ளாகிய கொண்டியினை - உணவினை- உடைய பாக்கங்களைக் கொண்டது கொற்கை (மது. 137,138).

5. **பொருளைக் கொள்ளை கொள்ளும் பரத்தை.** 'தலைவன் முன்னர்ப் பிற மாதரை விரும்பாத கோட்பாட்டினை உடையனாயிருந்து இப்பொழுது தன்னை விரும்பிய கொண்டியினிடத்து - கொள்ளை கொள்ளும் பரத்தையினிடத்து - தன் மார்பினை மடுப்பா னாயினன்' என்று தலைவி தோழி யிடத்துக் கூறினள் (நற். 174:9,10).

**கொண்டிமகளிர்** - **பொருளைக் கொள்ளை கொள்ளும் பரத்தையர்.** விசும்பிடத்தே விரும்பியாடும் வானவ மகளிரைப் போன்று தம்மைக் கண்டோருடைய நெஞ்சை வருத்தமுறுவிக்கும் கொண்டி மகளிர் - பொருளைக் கொள்ளை கொள்ளும் பரத்தையர் - விண்ணிடமெல்லாம் பரந்து கமழும்படி வெண் மலர் மாலைகளைக் கொண்டையில் முடித்துத் தொடிகள் விளங்கும்படி,கைகளைவீசிநடப்பர்;விடு பூக்களின் மணம் தெருவெல்லாம் கமழும்படி, பல ருடன் புணர்ந்தமையால் குலைந்த ஒப்பனைகளைப்

*அவள்து தோள்களை ஓர் பொன்னங்கொம்பு - கொம்பு போல்வாள் - தன் பொன்நாணால் கட்டிச சிறையாகப் பிடித்தாள் (பரி. 7:51-56).*

**கொம்மை - 1. பெருமை.** *ஆடல் மகளிர் தாம் பாடு கினற பாட்டினை யாழ் தனனிடத்தே கொள்ளும் படி நரம்பைக் கூட்டுதற்குக் குளிர்ச்சியாலே தன் நிலை குலைந்த இன்குரல் நரம்பைக் கொம்மை- பெருமை - பொருந்திய தம் எழுகின்ற முலையின் வெப்பத்தே தடவிச் சீறியாழைப் பண் நிற்கும் முறையிலே நிறுத்துமாறு கூதிர்க்காலம் நிலை பெற்றது (நெடு. 67-72). வெம்மை குறையாத எரி பரந்த பாழிடத்தே கொம்மை வாடிய வழிச் செல்லும் யானை நீருள்ள இடமறியாது பேயத் தேர் தோன்றும் இடமெல்லாம் ஓடி வழியிடத்தே வருந்திக் கிடக்கும் (அகம். 29:15-18). அரிய சுர நெறிகள் கொம்மை வரிமுலை மகளிர் செல்லுதற்கு அரியவாகுமெனத் தலைவன் தலைவியோடு போக் குடன்படாமல் செலவழுங்கினான் (அகம். 65:17-20). தலைவியின தழையணிந்த அல்குலைத் தாங்குத லாற்றாத சிற்றிடைக்குத் துன்பமுண்டாம்படி அழகிய மெல்லிய மார்பகம் நிறையப் பருத்துக் கொம்மை வரிமுலை செப்பின் வடிவததோடு மாறு பட்டு வளர்ந்தன (குறு. 159:1-4).*

**2. திரட்சி.** *மயில்கள் ஆர்க்கினைத் தலையிலுடைய கொம்மை - திரட்சி - அமைந்த அழகிய பசிய காய் முற்றிய பாகற் பழத்தைத் தினனும் (அகம். 15:3-5). கொம்மை கொண்டது பனைமரம் (குறு. 281:2).*

**3. இளமை.** *'நின் மார்பின்கண் குறுகிய புள்ளிகள் அமைந்த கொமமை - இளமை - கொண்ட அழகிய நிறத்தையுடைய கருங்கண் வெம்முலைகளை நெருங்க அணைத்திருந்தபடியே எமக்கு இரவு கழிவதாக' என்று தலைவன் தலைவியிடத்துக் கூறிப் பொய்த்தனன் (நற். 314:4-8).*

**4. இளமுலை.** *'வாரணிந்த கொம்மை - இளமுலை - மகளிர் வையையாற்றிற்கு அழகோ, வையையின் நீர்ப்பெருக்கு இம்மகளிர்க்கு அழகோ' என்று தேர் தற்கரிய முறையில் மதுரை மகளிர் வையையில் நீர் விளையாடக் கருதி அதன் கரையில் நெருங் கினர் (பரி. 22:30-35).*

**கொய்யுநர் - பறிப்பவர்.** *ஆய்மகள் அட்ட வரகுச் சோற் றையும் வேளைப் பூவினைத் தயிருடன கூட்டி அட்ட புளிங்கூழையும் அவரை கொய்யுநர் நிறைய உண்ணுவர் (புறம். 215:1-5). வேங்கை மலர் கொய்யு நர் பஞ்சுரம் என்னும் பண்ணைப் பாட அரிய வழியிடைச் செல்வோர் அதுகேட்டு அவ்வழிப போக அஞ்சுவர் (ஐங். 311:1,2).*

**கொல் - கொல்லன்** (ஆகுபெயர்). *புழுகெனப் பெயர் பெற்ற தூணி கொல் - கொலலன - தொழிலால் பொலிவு பெற்றது (அகம. 9.1,2). நள்ளிரவில் மின் மினிகள் மொய்த்திருக்கும் புற்றில் இரும்பினைக் காய்ச்சி யடிக்குங்கால் சிதறும் பிதிர்போல அம் மின்மினிகள் ஒளிவிட அதிலுளள புற்றாஞ் சோற்றினைத் தோண்டி யெடுககும் பெரிய கை யினையுடைய கரடியேறு இரும்பு வேலை செய் கொல் போலத் தோன்றும் (அகம். 72:2-6).*

**கொல்லேறு - ஏறுதழுவுதற்குரிய காளை.** *போரினகண் களத்தைத் தமதாககிக் கொள்ளும் முயறசியில வீரரின் கழல்கள் சிதைந்தவை கொல்லேற்றின் - ஏறு தழுவுதற்குரிய காளையின் - கொம்புகளை ஒத்தன (புறம். 4:3,4). கொல்லேறு காண்க.*

**கொல்லன் - கருமான்.** *உக்கிரப் பெருவழுதி கானப் பேர் என்னும் அரணைக் கொண்ட ஞான்று அவ் வரணுக்குரிய வேங்கைமார்பன் கருங்கைக கொல் லன் - கருமான் - செநதீயின் காய்ச்சிய இரும்பு உண்ட நீரபோல் மீட்டற்கரிது என இரங்கினான (புறம். 21:6-9). கருங்கைக் கொலலன் அரத்தால கோடரியைச் செப்பம் செய்தான (புறம். 36:6,7). பிட்டங்கொற்றன் பகைவர்க்கு, இரும்பைப் பயன் படுத்துகின்ற கருங்கைக் கொல்லன் விசைத்து அடிக்கும் கூடத்தோடு மாறுபடும் உலைக்கல் போன்ற வலிமை யுடையவன (புறம். 170:14-17). ஈர்ந்தூர் கிழான தோயன மாறனிடம் சென்று பாணர் இரக்குங்கால் அவன் அப்பாணரின உண்ணாத மருங்குலைக் காட்டித் திருந்திலை நெடுவேல் வடித்துத தருமாறு தன்னூர்க் கருங் கைக் கொல்லனை இரப்பான் (புறம். 180:10-13). வீரன போர் செய்தற்கு வேண்டும் வேலினை வடித்துக் கொடுத்தல கொல்லற்குக் கடனாகும் (புறம். 312:3). மெத்தெனற துருத்தியை அமுககி ஊதுகின்ற உலையில உள்ள கொல்லனின் முறிந்த கொடிறு போன்று கவைத்த காலை உடையது நண்டு (பெரு. 206-208). கருங்கைக கொல்லன் பெருங்கை யானைக்கு வளைந்து கிடக்கும் பூண் சேர்ப்பவ னாவான் (பெரு. 436,437). களிறு பக்க மலையில் கையை உயர்ததிப் பெருமூச்செறிதலால வேங்கைமலர்கள் கொல்லன் துருத்தியை மிதித்து ஊதும் உலையிற் பிதிர்ந்து எழும் தீப்பொறி போலப் பொங்கிப் புதரில் பரவும் (அகம். 202:3-8). பாகனால் தேரில் பூட்டப் பெற்ற குதிரைகள்*

கொலலன வலிதது இழுக்கும துருததியினைப் போல வெபபமாகப் பெருமூசசு விட்டன (அகம். 224 2-5). கொலலனது உலைக்களதது அடிககும இருமபின் பொறி சிதறுமாறு போலச சிறிய பல காயையுடைய வேஙகையின மலாகள் உதிரும் (நற். 13:5-7). இரைதேடும ஆணகரடி புறறினை அதன் கண உளள நலல பாமபு நடுஙகுமாறு முழங்கிக் கொல்லன் ஊதுகினற உலைமூககுப போனறு பெருமூசசெறிநது பறிககும் (நற. 125:1-4). பிரிவாற்றாத தலைவியைத தோழி தேற்றிய போது, 'இரும்புசெய் கொல்லன் பனைமடலால் வெவ்விய உலையில் தெளித்த நீர் அவ்வுலை நெருப்பைச சிறிது அவிக்குமாறு போலக காமநோய மிக்க என நெஞ்சில் அநநோயைச் சிறிதளவு தணிக்க நின் சொல ஏமமாய இருந்தது என அவள் தோழியிடம் கூறினாள் (நற. 133:8-11).

**கொல்லன் அழிசி - புலவர்.** கொல்லன் என்பது தொழிலால வந்த இனப்பெயர். அழிசி எனபது இயற்பெயர். இப்பெயர் அழூசி எனறும் பாட வேறு பாட்டுடன் காணப்படுகினறது (குறு. 240). இவர் பாடியனவாகக் குறுந்தொகையில் மட்டும நான்கு பாடல்கள் (26,138,145,240) உள்ளன. அவற்றுள் தலைவி கூற்றாக இரண்டையும் தோழி கூற்றாக இரண்டையும் இவர் பாடியுள்ளார். நறறாயும செவிலியும் தலைமகளது வேறுபாடு கண்டு கட்டு விசசியை வினவிக் கட்டுக காணகையில் அவளது வேறு பாட்டிற்குக காரணம் தெயவமெனறு கூறக் கேட்ட தோழி, அக்கூற்றின பொய்மையை மாற்றி மெயச செயதியை உணர்த்துவாளாய், 'அவளுககு நோய செயத அககொடியோனைக கடுவனும் அறியும்' என அறததொடு நிலை வகையில் குறிபபிற் கூறும் நயம (26) சிறபபானது. 'பெரிய ஊரே துயினறாலும எம இலலத்திற்கு அயலதாகிய ஏழிற் குனறத்தின மேலுளள நொசசிப பூவின வீழத லோசையை மிகக கேட்டவாறே யாம் துயிலாது விழிததிருபபோம்' எனறு தலைவனிடததுத தோழி கூறுவதாக இவர் பாடியுளள பாடல (138) இரவுக் குறி நேர்தல, அலலகுறிபபட்ட பிறறைநாள் கூறல் ஆகிய இருதுறைச சூழலகளுக்கும் ஏற்ற முறையில் அமைநதுளளது. வரைவிடை ஆற்றாது வருநதும் தலைவி தனகரு ஆறுதல கூறாதுறங்கும் தோழியைக் குறித்து ஊாமேலிட்டுக கூறும முறையில 'இச சிறுகுடி நாம தங்கியிருததறகுத் தககதனறு' என வெறுததுக கூறுவதாக அமைந்த இவர் பாடல (145) உணர்சசி மிககது. தலைவன பிரிவில வாடை வநத நிலையிலும் அவனது மலையைக் கண்டு ஆற்றியிருந்த தலைவி மாலைப்பொழுதில் அதன் மறைவிற்கு இரஙகுவதையும் இவர் அழகுறப் புனைந்துள்ளார் (240). அரும்பற மலர்ந்த கருங் கால் வேங்கை மரத்தின கிளையில் இருந்த தோகை மயில் பூக்கொய்யும் மகளிர்போலத தோன்று மென்றும் கடலிலே ஆழகின்ற கலத்தைப் போல இருளிலே மலை மறையுமெனறும இவர் பொருந்திய உவமைகளைச் சிறபபுற ஆண்டுள்ளார்.

**கொல்லி - மலை.** உயர்ந்த உச்சியையுடைய கொல்லி மலைக்குத் தலைவன் வல்விலோரி (புறம். 158:4,5). வண்டுகள் ஒலிக்கின்ற சோலையையும் மிக்க மழையையும் உடைய கொல்லி மலையிலுள்ள இரு வாட்சியும் பச்சிலையும் பறித்து மகளிர் சூடினர் (பதி. 81:24-28). கொல்லிமலை சேரனுக்குரியது (அகம். 33:14;213:15). களிறு கெழு தானைப் பொறையனின் கொல்லி மலையிலுள்ள அருவி நீரினையுடைய பக்கமலையின அகன்ற இடத்தில் அழகுறக் கடவுள் எழுதிய பாவை போன்றவள் தலைவி (அகம. 62:13-16). ஓரிககுரிய பலாவின்பயன் மிக்க கொல்லியில் கார் கால மலர்கள் மணம் கமழும் (அகம். 208:21-23). காரிவள்ளல நல்லிசை வாயநத வல்விலோரியைக் கொன்று அவனுக்குரிய கொல்லி மலையைச் சேரலர்க் கீந்தான; அம்மலை வேர்ப் பலாப்பழம் மிக்கது; தெய்வக் கடவுளால் இயற்றப் பட்ட புகழமிக்க பாவையை யுடையது (அகம். 209: 12-17). பொறையனின் தெய்வம விரும்பியுறையும் அகனற இடத்தினையுடைய மிகப் பெரிய கொலலியின உச்சியில அருவி இழிதரும் (அகம. 303 : 4-7). பகைவரைக் கொனறழிககும் பொறையனுடையது அகன்ற கரிய காடு சூழ்நத கொலலி மலை (அகம. 338: 12-14). சேரனுககுரிய அச்சந் தருதல் மிக்க கொல்லிமலையி லுளள கரிய கணகளை யுடைய தெய்வம அம்மலையின மேற்குப் பக்கத்தில் எழுதிய நல்லியல பாவையை ஒததவள தலைவி (குறு. 89: 4-7). தலைவி வலவிலோரியின கொலலி மலையின மேல்பக்கத்திலுள்ள பாவை போனறவள் (குறு. 100: 5,6). பொறையனது (சேரனது) புகழ் வாய்ந்த கொல்லி மலையிடத்துப் பாணர் பரிசிலாகப் பெற்ற குதிரைகளின குளம்பு மோதுதலாலே செப் பமாகிய சிறுநெறியில் இரவலர் மெலியாது ஏறுவர்; அம்மலையில் மேற்குப் பகுதியில காநதட் குலையில் பாய்ந்து வணடுகள் தேனடைகளை இழைத் தன; அங்குத தெய்வம் எழுதிய வினைமாண பாவை இருநதது (நற். 185: 3-11). பயனமிக்க பலாமரங்களை யுடைய கொல்லிமலையின் மேற் பகுதியில முனபுதெயவம புதிதாக இயற்றிய பாவை

ஞாயிற்றின் இளங்கதிர்பட்டுச் சிறந்த நலத்துடன் பிறங்கியது (நற். 192: 8-11). செவ்வேர்ப் பலாமரங்கள் பொருந்தியதும் தெய்வம் காக்கும் தீது தீர்ந்த நெடிய கொடு முடியை யுடையதும அழகிய அருவியையுடையதுமாகிய கொல்லி மலையில் காற்று, இடி, மழை முதலிய இயற்கை ஊறுபாடுகளாலும் செயற்கை ஊறுபாடுகளாலும் நிலம கிளர்ந்தாலும தன் அழகிய நல்ல வடிவம கெடாத பாவை இருந்தது (நற். 201: 5-11). ஓரி வள்ளலுக்குரிய கொல்லி மலையில் இருக்கும் செருககிய மயிலின் கலாபம் போன்ற தழைத்த கூநதலையுடையவள் தலைவி (நற். 265: 7-9). பொறையனின பெருந்தண் கொல்லி மலையிடத்துள்ள சிறிய பசிய மலைப்பச்சையின் மணங்கமழும் கூந்தலையுடையவள் தலைவி (நற். 346 : 8-11).

**கொல்லிக்கண்ணனார் - புலவர்.** கண்ணனார் என்ற இயற்பெயரை யுடைய இவர் கொல்லிமலையைச சேர்ந்த ஊரினராதலால கொல்லிக் கண்ணனார் எனப் பெயர் பெற்றார். இவருடைய பாடலாகக் குறுந்தொகை (34) ஒன்றே யுள்ளது. தலைவன தலைவியை வரைவு வேண்டி வந்த நிலையில் அவனது வரைவு மலிவினைத் தோழி ஊர்மேலிட்டுத் தலைவிககுணர்த்தும நுட்பம் இவர் பாடலில அழகுற அமைநதுள்ளது. 'தலைவனொடு சேர்தற்கியலாது பிரிநதிருநது வருநதும் நிலையில அவ்வருத்த முணராது தமர் ஒறுககவும் அது கண்டு அவ்வருததத்தினின்றும நீங்காதவராயும் இங்ஙனம வருந்துதல தகாதென்று தோழியா பல காரணஙகள கூறி மறுக்கக் கேட்டுத் தெளியாதவராயும் தமியராய உறங்கும் துன்பமின்றி இனி இவ்வூரார் தலைவனின வரைவுச் செய்தி கேட்டு மகிழ்ச்சியடைக' என்று இவர் அத்தோழியைப் பேச விடுத்துள்ளார். இவா பாடலில, கடற்கரையிலுள்ள யானையங் குருகின் பெரிய கூட்டம் பகைவரைக் கொன்ற வீரரது வெற்றி முழககத்தினை அஞ்சுதற்கிடமான குட்டுவனுககுரிய மரந்தை நகர் பற்றிய குறிப்பு வந்துள்ளது.

**கொல்லிக்கூற்றம் - கொல்லிமலையைச் சூழ்ந்த நாடு.** பெருஞ்சேரலிரும்பொறை கொல்லிக் கூற்றத்து - கொல்லி மலையைச் சூழ்நத நாட்டினது - நீமிக்க மலையின் உச்சியிலபலவேற்றானை அதிகமானொடு இருபெரு வேநதரையும ஒருசேர வென்றான (பதி. ப.8:2-5).

**கொல்லிப்பொருந - கொல்லிமலைத் தலைவ.** பெருஞ்சேரலிரும்பொறை கழை விரிநது எழுதருகின்ற மழை தவழும் நெடிய உசசியையுடைய கொல்லிப் பொருந - கொல்லிமலைத் தலைவ - என அரிசில் கிழாரால விளிக்கப பெற்றான (பதி. 73:10,11). கொல்லிப் பொருநன் காணக.

**கொல்லிப்பொருநன் - கொல்லிமலைத் தலைவன்.** 'விடர்ச் சிமை ஓங்கிருங் கொல்லிப் பொருநன' - கொல்லி மலைத் தலைவன் - என வல்விலோரி சுட்டப் பெறுகின்றான் (புறம். 152.30,31).

**கொல்லியோர் - கொல்லிமலையோர்.** 'மாற்றரசர் பணிந்து தநத திறையால தம்மை அடைநத வருடைய சுற்றததை நிறைக்கும் உயர்நத கொல்லியோர் - கொல்லிமலையோர் - அடுபொருந' என மாநதரஞ்சேரலிரும்பொறை விளிககப பெற்றான (புறம் 22:26-28).

**கொல்லேறு - ஏறுதழுவுதற்குரிய காளை.** நல்ல பாமபு வாழும புற்றுப போலவும் கொல்லேறு - ஏறு தழுவுதற்குரிய காளை - திரிதரு மன்றுவெளி போலவும விளஙகும பாசறையில வீரன ஒருவன ஒளியுடன் இருககின்றான எனப பகைவர் அஞ்சினா (புறம். 309:3-6) கொல்லேற்றின பைந்தோலை மயிர் சீவாது போர்தது மாக்கண முரசமைததனா (மது. 732,733). 'கொல்லேற்றைச சாடுதற்குச் சமைநதிருநதவர்களுக்குப பலவான கரிய கூநதலினை யுடையவளைக் கொடுப்போம்' எனத தலைவியின் சுற்றததாராய ஆயா கூறினா (கலி. 101:41,42). 'கொல்லேற்றின கோட்டுககு அஞ்சும பொதுவனை மறுபிறப்பிலும ஆயாமகள தழுவாள என்று குரவைக கூததில ஆய மகளிர் தம் மரபைப பாடுவர் (கலி. 103 63,64,75). 'நறுநுதால, கூநதலை ஆற்றுஙகால வெண்ணெய நாறாது முல்லைப்பூ நாறியதற்கு எம சுற்றததார் தலைவன தழுவிய கொல்லேறு போலச சினநதனா' என்த தலைவியிடம தோழி கூறினாள (கலி. 105 53-56). பலமுறை யாகத் தயிரைக் கடைகையினாலே பாயநத புள்ளிகளின மேலே கொல்லேற்றைத் தழுவினவனுடைய குருதி மயக்க முறும்படி தழுவுதல ஆயமகளிர் தோளிற்கு அழகும சிறப்புமாகும என ஆயச்சியா குரவை அயருங்கால பாடினர் (கலி. 106:37-39). இவளுடைய கணவன கொல்லேற்றைத தழுவினான என்று ஊரார் புகழநது சொல்லும சொற்களைக் கேட்டு மோரை விற்று யாம வரும் செல்வததை எம கணவன தருமோ' என ஆயச்சியர் குரவையாடுகையில் பாடினர் (கலி. 106 43-45). ஆட்டிடையாகவும் மாட்டிடையாகவும் கொல்லேறு தழுவுதலே காரிய மென்று ஆயர் தொழுவினுள் ஏறு

களைப் புகுத விட்டனர் (கலி. 107'2-4). கொலல வேறு காணக.

2. ஆண்சுறா. கானலினகனை மாலைப்பொழுதில் கொலலேறு - ஆண் சுற வினம் - அவ்வழிப் போவாரைப் போகாமல் தடுக்கும் (கலி. 123:9).

**கொல்லை** - 1. புன்செய். கானவர் கரிந்த புனத்தை மயங்க உழுத அகனற இடத்தையுடைய கொலலைக் கண - புனசெயககண - ஐவன நெல்லோடு தினையும விதைப்பர் (புறம். 159'15-18). கரிகாற் பெருவளத்தான அளிதத இறைச்சியைப் பொருநர் பகலும் இரவும் தினறமையால் அவர் பற்கள் கொலலை நிலததை உழுத கொழுப்போல முனை மழுஙகின (பொரு. 117,118). கார்காலம் கூடியதால் பசிய புதல்களையுடைய முல்லை நிலத்தே புதுக் கொல்லைகளை யுடைய மலையின் பக்கததே காயா, இலவு ஆகிய மலர் சுமந்து கான்யாறு ஓடியது (அகம. 133.5-10). கொல்லை உழவர் கூழ் உணடற்கு நிழலாகவிட்டுவைத்த குருந்த மரத்தின் கிளையிலிருந்து மயில் அகவும் (அகம். 194:11-15). தீயெரித்த கொல்லையின்கண் ஏனல் கதிர் விளைந்து வளைந்தது (அகம். 288:5). குறவர் மலைச் சார்பிடத்தில் அகலப்படுத்தி வளைந்த கொல்லைக காட்டினை மழை பெய்த பதத்தில் உழுது சிலவாகிய தினை விதைகளைக் கலப்பாக விதைத்து விளைத்தனர் (நற். 209:1-4). கொல்லை களில் தனியே இருக்கும் கோவலரின் சிறுபுனத்தில் உள்ள குராமரததின் பூ இடைமகன் சூடக் கொத் தாய் மலரும் (நற். 266:1-3). கொல்லையிற் கோ வலர் இரவில தீககொளுத்திய வெட்டுண்ட பெரு மரத்தின வேரடிக் கட்டை தானே வெந்து தணி யும் (நற். 289:7-9). சிறுகுடியீரே, நீவிர் அறம் அல் லாதவற்றை விரும்பி ஒழுகுதலால இவ்விடத்து வள்ளியும் கிழங்கு கீழ் வீழா; மலையில் தேனும் உண்டாகா; கொலலையில தினைகளும் கதிர் வாங்கி ஈனா எனக குரவை அயரும் பெண்டிர் கூறினர் (கலி. 39.11-14).

2. முல்லை நிலம். கார் காலத்தே கொல்லையில் - முல்லை நிலத்தில் - நெடிய வழிகளிலே இந்திர கோபம் ஊர்ந்து திரியும் (சிறு. 168). கொல்லையி லுளள யானையினது கடும் பகையினால் வருநதிய ஆண்புலி நள்ளிரவில் செநநாயைத் தாக்கப் பதம் பார்த்திருககும் (குறு. 141:3-7). மழைபெய்த கொல் லைப் புனததிலுள்ள மெல்லிய முலலைக் கொடிகள் பற்களைப் போன்று அரும்பீனும் (குறு. 186).

3. முல்லை திரிந்த பாலை. கொலலை இரும்புனம - முலலை திரிந்த பாலை நிலம - பேய்த்தேர் ஓடும் வறண்ட இடத்தினையும் பேராந்தைச் சேவல் மாறிமாறி ஒலிக்கும் இடத்தினையும உவர்மண ஒழிநதமையான களர்மண பரநத கல்பொருந்திய நெடுமருங்கினையும் உடையது; அங்கு வீங்குசிலை மறவர் வணிகரைக் கொனறு கொணர்நத அருங் கலததைத் தாமே கோள்முறைக் கேற்பப் பகுப்பர் (அகம. 89 2-17).

**கொலை** - கொல்லுதல். மாந்தரஞ்சேர விரும்பொறை யின் குடை நிழறகண் வாழவோர் வானத்துள்ள இநதிரவில அலலது பகைவரது கொலை - கொல் லுதல் - செய்யும் வில்லை அறியார் (புறம். 20:9,10) குறவர் பெருமகனாகிய ஏறைக்கோன் கொலை வேலினை உடையவன் (புறம். 157:6,7). வேட்டுவர் காந்தட் பூவாற் சேய்த கண்ணியையும் கொலை செய்யும் வில்லினையும் உடையவர் (பதி. 30:9). ஆடு கோட்பாட்டுச் சேரலாதனின தானை கொலை வினையாகிய போர்ததொழிலை விரும்பும் (பதி. 60:1). பாடினி கொலை செயயும் விலபோன்ற புருவத்தினை யுடையவள் (பொரு. 26). மேழித் தொழிலையே விரும்பும உழவர் கொலை புரிவா ரிடத்து அத்தொழிலை நீக்கியும் களவு காண்பா ரிடத்து அத்தொழிலை நீககியும் இன்ன பிற நல் லறங்கள் செய்தும இல்லறம் நடததினர் (பட். 199, 205). கொலைவில் ஆடவர் இரவில காட்டரண் களிலுள்ளாரை அலறககொனறு கைககொண்ட நிரைகளைப் பகுத்துப பெரிய கற்பாறையின் முடுககிலே தசையினை அறுததுத் தினபர் (அகம். 97: 4-6). குறிய இறப்பினையுடைய குடிசையில வாழும் கொலை வெமபரதவர் எறியுளியால் பெருமீன் எறிந்து கொள்வா (அகம். 210:1,2). 'தழைத்த பலவாய கூந்தலையுடையாய, தலைவன் நம்பால் அருள் செய்யாது கொனறனன் ஆயினும் கொலை பழுது அன்று' என்பது தலைவியிடம் தோழி கூற்று (அகம். 356:16,17). கொலையை விரும்பும் கோட்பாட்டினையும் கொடியதொழிலி னையும் உடைய மறவர் பாலை வழியே வரு வாரை எதிர்நோக்கியிருந்து அரியமார்பில வேல் எறிந்து கொல்வர் (அகம். 363:9-12). போர்மேற் சென்ற தலைவன பிரிவால் தலைவி வருநதுகையில் அவளைக் கொலை குறித்தது போன்று மாலைக் காலம் வந்தது (அகம். 364:12,13). ஆறுசெல் வம்ப லர் வேறு வேறு பிரிநது அலறுமாறு கொலை செய் யும் பொருட்டுக் களிறு நிலை பெயர்ந்து உறையும் (அகம். 389:18-20). என்றும் கூற்றுவனைப் போனற கொலைவேல் மறவர் வழியிடைத் தங்கியிருந்து வழிப்போக்கரைக் கொல்வர் (குறு. 283:4-6). நீரா டச் சென்ற பெண் புனல்தரு பசுங்காயைத் தின்ற

குற்றத்திற்காக, எண்பத்தொரு களிறும் அவள நிறையளவு பசும் பொன்னாற் செய்த பாவையும் ஏற்றுக் கொள்ளானாய் நன்னன பெண கொலை புரிந்தான். (குறு. 292:1-5) 'கொல்லிமலையில் தெய வத்தாற் செயது வைககப் பெறற பாவை போன்ற தலைவி என்னைக் கொலை செயயும் வண்ணம் ஆராய்நது நன்றாக அறிநது கொண்டனள்; அத னால் நான் செயலழிந்து வருநதுகினறேன்' எனத் தலைவன கழறிய பாங்கற்கு உரைத்தான் (நற்.185: 10-12). செவிலிக்கு அறததொடு நிற்கும் தோழி நொதுமலர் வரைவுழி, தலைவியின் நிலையைக் குறிதது 'வலையும் தூண்டிலும் பற்றிய பேரலை வீசும் கடலையடைந்த கொலை வெஞ சிறார்ப் பாற் பட்டனள் அவள்' எனறு கூறினாள் (நற். 207:9-12). கொலை வில் எயினர் (ஐங. 363:2). மணிமிடறறு எண்கையனாகிய சிவபெருமான கொலை உழுவைத தோலை உடுத்துளளாா (கலி. 1:4,11). கொலையஞ்சா அமைசசராலே நெறியன றிப் பொருளை வாஙகிக் கொணடு செங்கோல் வளைநத அரசனின குடை நிழலில தஙகிய உலகம் போலக காடு உலறின உயாந்த மரங்களுடன வெம்மையுடையதாயிற்று (கலி. 10:5-7). கொலை யிடத்துக் கடுங் கொள்கையுடன சென்ற நாய் தனககென அகப்படுத்திய மான் தனககு உரித்தா காது வலைவாக்கு உரிததாயிற்று (கலி. 23:16,17). ஏறுகள் கொலை செயயும் தொழிலின் மிக்க சினை செறிநத குறறத்தைச் செயயும் சினமிக்கு வெவ் விதாய் எழுநது ஏறுதழுவுவார்மேல ஓடின (கலி. 102:19,20). கொலைத தொழிலையுடைய ஏற்றி னது கொம்பின இடையிலே தாம் விரும்பும் மகளி ருடைய மார்பின் முலையிடையே விழுமாறு போல விழுவாரிடம் ஆயா தம் மகளிர்ககு முலைவிலை வேணடார் (கலி. 103:71-73).' 'கொலைததொழில் வாய்நத கண்ணினை யுடையவள தலைவி (கலி. 108:52).

**கொலையேறு** - ஏறுதழுவுதற்குரிய காளை. ஆயர்மகள் தோள், உயிரை மதியாது அஞ்சாமல் கொலை யேற்றை - ஏறுதழுவுதற்குரிய காளையை-தழுவு பவர் பொருநதுதறகுரியவே யன்றி வருத்தம் கொண்டு தழுவாதவர் பொருந்துதற் குரிய வல்ல (கலி. 103:65-67). 'குரால் நிறத்தவாகிய கணணினை யுடைய கொலையேற்றினைத் தழுவுபவன் மான் போலும் நோக்கினையுடைய இவளைக கொள் வான்' என ஆய நங்கையின தமர் கூறினர் (கலி. 104:22,23). கொலையேற்றின் கோடு குறி செய்த பொதுவன் மார்பினைப பாடுவோம் வருக என்று தோழி தலைவியையும் ஆயத்தையும் அழைத தாள் (கலி. 104 63,64). 'குரூஉககண் கொலையேறு யான்கொண்டேன எனனுமசெருக்கால ஆயர்மகன நாம குரவை ஆடுங்காலை நமககு வருத்தம உண டாகுமாறு நோக்குகின்றான' எனத் தலைவி தோழியிடம் கூறினாள (கலி. 104.71,72). 'தலை வியே, கொள்ளல் அரிதாக நம் சுற்றத்தார் நிறுத தின கொலையேறாகிய காரியின சினததிறகு அஞசானாயத் தழுவின பொதுவனுககே அலர் எடுதத ஊராரை உச்சி மிதித்து எமர் நின்னைக் கொடுப்பதற்கு ஒருப்பட்டார்' எனத் தோழி கூறி னாள் (கலி. 104:73-76). 'தோழி, கொலையேறு சாடின புண்களை. முலையின வெம்மையாலே ஆறும்படி ஒறறித் தழுவிக் கொண்டு பொதிநது விடுவேம்' எனக் கூறித் தலைவி குரவை யயாந தாள் (கலி. 106:34-36).

**கொலைவர்** - வேடர். கட்டு முளளால் இடும் நெடிய வேலி போலக கொலைவர் - வேடா - விலலாலே கொல்லப்பட்டவருடைய உடலம மறையவிட்ட இலைககுவை அமைநதிருநதது (கலி. 12 1,2).

**கொலைவன்** – 1. வேடன். 'வேழம், உழுவை, கலைமான, பனறி இவற்றை வீழததிப பின உடும்புப புறறில தங்குமாறு புகழநிறைந்த சிறபபோடு ஓா அமபு தொடுககும் கொலைவன - வேடன - யாாகொல. மற்று இக்கொலைவன் விலை காரணமாகக கொனறவன போல்தோனறவிலலை; பெருஞ செல வனாகக் காட்சியளிககினறான' என வலவிலோரி யைப பரணா பாராட்டினர் (புறம். 152:1-9).

2 அழித்தல் தொழிலுடைய சிவன. கொலைவன்- சிவன - சூடிய குழவித் திங்கள் போல் சிவநத ஏறு வளைநது நிறைந்த கொம்பைப் பெறறிருநதது (கலி. 103:15,16).

3. கொலைஞன். 'பலசூளுறவா லும என மனததைத் தேற்றிப் பின்னும தெளிவித்தவன என்னை அணைத்து முலையிடத்தே முயங்கினான்; அங் ஙனம் முயங்கிப் பின்னர்த் தெளிவு பொயயாம்படி. கைவிட்ட கொலைவனை - கொலைஞனை - யான் தேடிக் காணேனோ' எனப் பிரிவுற்ற தலைவி கலங்கிப் புலம்பினாள (கலி. 147:23-25).

**கொழு** - 1. காறு. புனபுலத்தில பல்பகடு பூட்டி உழும் வினைஞர் கலப்பை உழுத கொழுவினது - காறினது - படைச்சாலின பக்கததே அழகிய கதிர்மணியைப பெறுவர் (பதி. 58:15-18). கரிகாற் பெருவளததான் அளிதத விருந்துண்ட பொருநரின பறகள் இரவு பகலாய் இறைசசியைத் தினறலின கொலலையை உழுத கொழுவை ஒப்ப முனை மழுங்கின (பொரு.

117,118). உழவர் வளைந்த வாயுடைய கலப்பை யின உடுபபினது முகத்தை ஒத்த பெருங் கொழு மறைய அழுத்தி வளைய உழுது விதைத்தனர் (பெரு. 199-201).

2. கொழுப்பு. இடிகாட்டில கொழு - கொழுப்பு- இலலாத பசிய இறைச்சித் துண்டங்களை வைத்த இடததை மறந்த சேவற கோட்டானைப் பெடைக் கோட்டான் வருத்தும் (பதி. 44:17-19).

**கொழுந்து** - 1. தலைப்பகுதி (முதற்பகுதி). வேள்வி செய் யாத ஊர்ப்பாாப்பான அரத்தால அறுத்தெடுத்த வளைகள் போக எஞ்சிய சங்கின் கொழுந்து - தலைப் பகுதி - போன்று பகனறை அரும்புகள் விளங்கின (அகம. 24:1-3).

2. தளிர். பினபனிக்காலம் வரும் என்று முன்பனி யின் கொழுந்தை - தளிரை - முற்படவிட்டு அறி வுறுததி அதற்கு அடையாளமாகக் குராமரம் அரும்பு கட்டின (நற். 224:2,3).

**கொழுநர்** - கணவர். தம் கொழுநர் - கணவர் - மார் பிலே புலிபாயந்ததால் உணடாய பெரிய புண்ணை ஆற்றுதற்குக் காவல எனறு கருதிக் கொடிச்சியர் பாடுவர் (மலை. 302-304). வரால்மீனின துண்டத் தினை விற்றுக் கள்ளுண்டு ஆடி, வேட்டை மறந்து துஞ்சும் தம் கொழுநர்க்கு அவரவர் மனைவிய ரான பாண் மகளிர் அமலை வெஞ்சோற்றைப் பிரம்பின் கனி பெய்து வைகறையில் இடுவர் (அகம. 196:2-7). இளைய பரத்தை தழையணிந்து தெரு வின்கண் சென்ற அவ்வளவில் எழிலமாமேனி மக ளிர் தம் கொழுநரைக் காத்து நனமையடைந்தனர் (நற். 320 3-10) 'கணடார்க்கு வருத்தம் உண்டாக்கு பவள் இவள் எனறு கருதி ஊர்ப்பெண்டிர் தம் கொழுநரைப புறத்துப் போகாமற் காத்து நாள் முழுவதும் வாயிலை அடைத்து நிற்பர்' எனக் காமஞ் சாலாத தலைவியிடம் தலைவன கூறினான (கலி. 109:21-26). தம் கொழுநன் - கணவன் - காவலையுடைய அகலிய கோயிலுள் மிகச சிறிது பொழுது தனிததிருப்பினும், உயிர் தளரும் பெருங் கோப்பெனடு தன இளமைபுறங்கொண்டு நீர்வார் கூந்தல் முதுகில் தாழத் துனபம் மேவிய கண்ணை யுடையளாய்ப் புறங்காட்டைப் பார்த்துச் சுழலும் (புறம். 247:5-10). 'இளையமாக இருந்தபோது தழை யுதவிய ஆம்பல், கொழுநன் இறந்தானாகக் கைம்மை நோற்குங்காலத்துப் புல்லரிசியாய் உத வின' என்பது கைமபெண் கூற்று (புறம். 248). நேற்றைய போரில் கொழுநனை இழந்த வீரக்குடி மகள இன்று போர்ப்பறை கேட்டுத் தன் ஒரு மகனைப போருக்கு அனுபபினாள் (புறம். 279:5-11). 'பறத்தல ஒழிந்த முதிய சிரற் பறவை தாமரை இலையில் தங்கிச் சிறு மீனகளை உணணும துறை பொருந்திய ஊரனது பெண்டு (தலைவி) தன கொழுநனை நம்மொடு கூட்டி வெறுத்துப் பேசு கின்றாள் எனக கூறுவர்' என்று பரத்தை மொழிந் தாள (அகம். 106:2-6). 'யான் தலைவிக்குப் பகையா வேன அல்லேன; சேரிப் பரத்தையுடன கூடி இன் புறும் அவள் கொழுநனே அவளுடன் கூடியுறை யும் பகையாவான்' எனத் தலைவிக்குப் பாங்கா யினார் கேட்ப இற்பரத்தை கூறினாள் (அகம். 186: 18-20). 'நானும் தலைவனும் புதுப்புனலாடப் புகுகின்றோம்; தலைவி அதற்கு அஞ்சுவாள் எனின் தன பாங்காயினாரொடுங் கூடிக் கொழு நன் மார்பைக் காப்பாளாக' எனப் பரத்தை தலைவிக்குப் பாங்காயினார் கேட்கக் கூறினாள் (குறு. 80). 'ஆதி அருமன் மூதூரன்ன சேயிழை (பரத்தை) தழையுடைய துடையின்கண் மாறி மாறி அசைய அணிகலன்களுடன் என் கொழுநனைக் காணும் பொருட்டு வருவாள்; யான் அளியேன்' எனத் தலைவி தலைவனுக்கு வாயிலாக வந்த தோழிக்கு உரைத்தாள் (குறு. 293:4-8). தன்னை மனைவியாகக் கொண்ட கொழுநனின் குடி வறுமையுற்றதாகத் தந்தையின் செல்வமிக்க உணவை நினையாது ஒருபொழுதின்றி ஒருபொழு துண்ணும் சிறுமதுகையளாகத் தலைவி விளங்கி னாள் (நற். 110:10-13). 'விழாக்களம் பொலிய வந்து நிற்கும் விறலியைக் காண்மின்; நம் கொழு நனை இனறும் வேறொரு பரத்தையால் இவள் தூது சென்று செலுத்தாதபடி நாம் காப்போம்' எனக் கூறித் தோழி விறலிக்கு வாயில் மறுத்தாள் (நற். 170:4,5). பரங்குன்றின் ஆழ்ந்த சுனையின் நடுவே மூழ்கி நீர்மேல் எழுந்தவள் கரையின் நின்ற தன் கணவனிடம் தனக்குப் புணையாக மூங்கில் தர வேண்டினாள்; அவன அதனைக் கொடாமல் அரக்கு வட்டை எறிந்தான்; நீரில் தத்தளிக்கும் அவளின் துயர்கண்ட கொழுநன் இன்புற்று நீரில குதித்து அவளைத் தழுவினான் (பரி. 21:39-45).

**கொழுநன்** - கணவன். கொழுநர் காண்க.

**கொழுப்பு** - கொழுமை. சீறூரிலுள்ளார் தம் கையைத் தலைமீது வைத்து அலறக் கொழுப்பினையுடைய - கொழுமையினையுடைய - பசுக்களைக் கவர்ந்து சென்ற மழவர் அவற்றைக் கொன்று தின்பர் (அகம. 129:11,12). பசுவினத்தைப் பற்றிக் கொண்ட கடுங்கண் மழவர் வாளால் வீசியும் அம்பினை விடுத்தும் பகைவரைச் சேண்மைப்படுத்திக் காட்டி டத்தே பசுக்களைச் செலுத்தித் தெய்வம் தங்கிய

வேப்ப மரத்தினடியில் கொழுப்பினையுடைய பசுவினைத் தடிந்து குருதியைத தூவிப் பலியிட்டு அதன் புலாலைப் புழுக்கி உண்டனர் (அகம். 309: 1-6).

**கொழுமீன்** – ஒருவகை மீன். சோழன் முடித்தலைக் கோப்பெருநற்கிள்ளி கொழுமீனையும் விளைந்த கள்ளையும் உடைய நீராகிய வேலியை யுடைய நாட்டையுடையவன் (புறம். 13:12,13). கொழுமீனை உண்ணுதலை யுடையனவாய் மரந்தோறும் கூடித் தங்கும் நாரைகள் மகளிர் குருகோப்பும் ஒலி கேட்டு இரிந்தோடும் (பதி. 29:4-6). கொழுமீன் துணியுமாறு நடந்து கழுநீர்ப் பூவைத் தின்ற எருமை பலாவின் நிழலிலே மஞ்சள் மெல்லிலை முதுகினைத் தடவத் தேன் நாற மெனறு அசையிட்டுக் காட்டு மல்லிகையாகிய படுக்கையில் துயில் கொள்ளும் (சிறு. 41 – 46). தீம்புளியும உப்பும் கானலிடத்தே பரதவர் அறுத்த கொழுமீன் களின் துடியின் கண் போல் உருண்ட துணியலும் நாவாயில் ஏற்றப்பட்டன (மது. 318 - 321). தலைவியும் தோழியும் புன்னை நிழலில் தங்கிக் கடலினின்று தந்தை தந்த கொழுமீன் வற்றலைக் கவர வரும் பறவைகளை ஓப்பினர் (அகம. 20:1-3). நெடும்படகிலிருந்து மீன் பிடிக்கும் தொழிலில் தஙகிய தன தந்தைக்குக் குறுமகள் உப்பு விற்றுககொண்ட நெல்லினாற் சமைதத வெண்சோற்றை அயிலைமீனை இட்டாக்கிய புளிக் கறியினைச சொரிநது கொழுமீன தடியோடு கொடுததனள (அகம். 60:3-6). இரவில் கொழு மீனைப் பிடிக்கும் பரதவர் கடலிலே விடுதத அம் பியிலுள்ள இருளை நீககும் ஒணசுடர் வேநதன் பாசறைககணணேயுள்ள யானையின அணிமுகத் திடத்தாய ஓடையின் ஒண்சுடர் போலத் தோன றும் (அகம். 100:6-10). தலைவன் தளர்ச்சி மிகவுடையனாய்த் தலைவி தோழியரை அணுகி, 'நல்லீரே, மெல்லிலை மீது நீயிர் இடும் விருந்துணவையுண்டு இச்சிறு குடியில் தங்கின் எய்தும் குறையுண்டோ' என்று கூற, அவர்கள் நாணி 'இவ்வுணவு நுமக் குரியவல்ல; இழிந்த கொழுமீன் உணவு' எனறு மொழிந்தனர் (அகம். 110:10-17). பரதவர் சிறார் கொழுமீன உணவினை யுணபர் (அகம். 290:3). கொழுமீன் உண்ணுதலையுடைய, செழுமையுற்ற மாளிகையிலுள்ள தலைவியின ஐயனமார் தமது தொழிலன்றிப் பிறிதொனறுங் கல்லாத சின முடையவா (நற். 127:4,5). வளப்பமிக்க மனையகம் கொழுமீன் உணவினை யுடையது (நற். 159:7). நெடுங்கடலை அலைத்து மீனகளைப் பிடித்த, மீன்படகுகளை யுடைய பரதவர் தாம் கொணட கொழுமீன்களை மணற்பரப்பில் குவித்து, மீன் நெய்யை வார்த்துக் கிளிஞ்சிலில் ஏறறிய சுட ரொளியில் துயிலவர் (நற். 175:1-4). கரிய கழியி லுளள நீர்நாயக்குருளை கொழுமீன்களை மாந்தித் திலலை மரப்பொநதுகளில் பளளிகொள்ளும (நற். 195:1-3). கொழுமீன கொள்பவர் உறைகினற பாக்கமெங்கும் கல்லெனனும ஓசையுணடாகுமாறு நெடுந்தேரில தலைவன் வருவான (நற். 207 : 3,4). நாரையினம் அள்ளல் சேறறில் உளள திணமிகக தலையையுடைய கொழுமீனை அருந்த வேணடி, மணற்குன்றினமீது ஏறியிருந்து அரசரின காலாட் படைக் கூட்டம் போல விளங்கித தோனறும் (நற். 291:1-4). கொழுமீனகளைச் சுடுகினற புகை தெருக் களினூடே கலநது சிறுமலருடைய ஞாழல் மரங்கள மிக்க துறை இனிமை பெற்றது (நற். 311:6,7). கடலி லிருந்து பரதவர் கொணர்நது தந்த கொழுமீனா கிய உணவினைத் தின்னக் கருதிப் பறககும ஆற் றல் கெட்ட முதுகுருகு செவ்வி பாாநதிருககும (ஐங. 180:1-3).

**கொள்** - 1. தானிய வகை. மழை பெயயினும பெயயாது ஒழியினும் கொளளிற்கு உழுத நிலத்திடையே நீரோடு காலாக நெடுமலைச சிகரநதோறும அருவி இழிதரும் (புறம. 105:4-6). கருங்கால வரகு, பெரிய கதிரையுடைய தினை, சிறிய கொடியாகிய கொள, பொறிகளை யுடைய அவரை ஆகிய இநநானகு உணவுப பொருளனறி வேறு உணவுப பொரு ளில்லை (புறம. 335.4-6). காவலையுடைய அகனற மனைகளில் குற்றேவல வினைஞர் கொளளின நிறத்தை யொத்த சாநதம்மியில கததூரி முதலிய பசுங்கலவையை அரைபபர் (நெடு. 49,50). உழுவா கொள்ளொடு பயறறையும பாலுடன கலநது ஆக்கிய, வெள்ளிய கம்பியை, அளவாக நறுககி வைத்தாற் போனற அவிழக் கஞ்சியை நிறைய உண்டு கடாவடி விட்ட நெலலைக குவித்துக கூடாக்கிச் சுற்றி ஞாயிறறின வெம்மையகல மருத நிழலில் தம் எருதுகளோடு வதிவர் (அகம.37:12-16).

2. **குடைவேல்** (ஒரு வகை மரம). பொகுட்டெழினி பகை மன்னர் அருமதிலைப பொருதழிததுப போர்க்களந்தோறும் கழுதை ஏர்பூட்டி உழுது வெள்ளை வரகும கொளளும் - குடைவேலும - விதைககும் உழவன ஆவான (புறம. 392:6–11). பெருஞ்சேர லிரும்பொறையின வழியொழுகாத பகைமனனர் வெள்வரகு விததுதறகு உழுத கொள உடைய கரமபை நிலததில இருநது, செநநெல உணவினைப் பெறாமல மிடிபபடுவா (பதி. 75:11, 12).

**கொள்கலம் - பண்டம் இடுங்கலம்.** 'உள்ளிவருநர் கொள் கலம - பணடம இடுஙகலம் - நிறைப்போய' எனறு சேரமான வஞசன விளிககப் பெற்றான் (புறம. 398.14). தலைவியால முயஙகப பெறற தலைவன 'மாநதரம பொறையன கடுங்கோவைப பாடிச் சென்ற வறியோரது கொளகலம போல இனிப பெரிதும மகிழவாயாக' எனறு தனனெஞ்சிறகுக் கூறினான (அகம. 142.4-7). ஈஙகையின அரும்பும் அதிரல மலரும மணலமேட்டில உதிாந்து மான களின குளமபினால மிதிபட்டு அழுநதுதலின வெள்ளியைக் கொளகலத்தில் இட்டு உருக்கிச் சாயத்தாற் போல அவறறினினறும் தெளிந்த நீர்க் குமிழி வடியும (நற.124.4-8). 'தலைவியின நனனுதல் நலததை நுகர்நது அவளைத் துறத்தல், தீம பாலைக் குடிப்பவர் பாலையுணடு கொளகலத்தைக் கவிழதது விடுவது போலவதனறு ஆதலின, நின னால வருநதியவள் துயரை வரைநது சென்று களைவாயாக' எனத் தோழி தலைவனிடம கூறி னாள் (கலி. 133.16-19).

**கொள்கை - 1. கோட்பாடு.** அநதணா அறத்தை விரும் பிய கொள்கையையும் - கோட்பாட்டினையும் - நானகு வேதத்தையும உடையவா (புறம. 93.7). சானறோா நற்குணஙகளால அமைநது, பணிய வேணடும உயர்நதோரிடததுப் பணிநது ஐமபுலன களும அடஙகிய கொள்கையினர் (புறம. 191:6,7). பெரியோர் உணமையே யுரைத்துப புலனைநதும் அடஙகிய கொள்கை உடையவர் (பதி. 15:29,31). சளஙகாயக் கணணி நார்முடிச்சேரல் தொனனி லைச் சிறபபினையுடைய தன்னிழற்கீழ வாழ வார்க்குக் கொடுமையறுமபடி வைதத மாறுபடாத கொளகையை உடையவன் (பதி. 37:10-12). யாத்த செயயுள் அடஙகிய கொள்கையினை யுடைய காக்கை பாடினியார் நச்செள்ளையார் ஆடு கோட்பாட்டுச் சேரலாதனைப் பத்துபபாடல் களினால் பாடிப் போறறினார் (பதி. ப. 6:11-14). செல்வக்கடுஙகோ வாழியாதனின முன்னோா அவனைப போனறு மாறுதல் இலலாத கொள்கை யர் (பதி. 69:11,17). செலவக் கடுங்கோ வாழியா தன அழியாத கொளகையினையுடைய அமைச்சர் முதல்ய சுறறத்தார் சூழநதிருகக வேள்வி செய்து கடவுளரை உணபித்தான (பதி. 70:17,18). கபிலர் செலவக கடுஙகோ வாழியாதனின் நாண்மகிழ் இருககைககணணே, அரசவை பணியுமாறு அறத் தையே விருமபி விளங்கிய மறம்புரி கொளகையைத் தன வயங்கு செநநாவினால் பாடினார் (பதி. 85: 8-13). செவவேளின சேவடியிற் செல்லுதற்குக் காரணமான நலம்புரி கொள்கையானே செம்மல உள்ளத்தோடு செலவினை விரும்பினீராயின் நீவிர் முன்னிய வினையை இபபொழுதே பெறுகுவீர் என அடியார் செவ்வேளிடத்து ஆற்றுபபடுத்தப் பட்டனர் (முரு. 62-66). புள்ளணி நீள் கொடிச் செல்வன (திருமால) நாலபெருந் தெய்வத்தையுடைய நலலூர்கள் நிலைபெற்ற உலகத்தைக் காககும் ஒரு தொழிலையே விருமபிய கொள்கையாக உடை யவர் (முரு. 151,160,161). இருபிறப்பாளர் (அநதணர்) அறததை நவில்கினற கொளகையினர் (முரு. 180, 182). பேரிசை நலலியக் கோடனைக காணுதற்கு விரும்பிய கொள்கையுடையராய இரவலர் சென்ற னர் (சிறு. 125,126). குதிரை ஓட்டுவோன ஐந்து கதியையும் பதினெட்டுச் சாரியையுமாகிய கொள் கையைப் பயிற்றுகையினாலே புரவிகள் குளம்புகள் அழுநதின வட்டமான இடததிலும் ஆதியெனனும் கதியில் ஓடின (மது. 389-391). இரவலா நனனனை நினைத்த கொள்கையுடனே அவன தரும பரிசிலை உள்ளிச் சென்றனர் (மலை. 64,65). தோழியரும் தாயும புலமபப் பாழி நகரை யொத்த காவலை யுடைய பெருமனையின காவலையும் கடந்து தலை வனோடு கூடித தன் இனிய துணைவனை நினநத கொள்கையினை உடையளாயத் தலைவி உடன போக்கினை மேறகொண்டனள் (அகம். 15: 9-12,17). அலர்தூறறும் பெணடிரது இன்னா மொழிகள் என மகட்குப் பொருநதுவன அல்ல எனறு தெய்வத்தைப் பரவி நம களவொழுககத்தை உணர்ந்து வைத்து அமைதியுற்றிருககும் கொளகை யினையுடைய அனனை முன், யாம் இக்களவொ ழுக்கததில பட்டொழுகுதல எவ்வாறு இயலும் எனறு தலைவி தோழியை வினவினாள (அகம். 95: 12-15). தலைவன் வெறுபபிலலாத கொள்கையுடன் உவநதளிதத இனிய உளளம இன்னாவாயினமை யினால் உணடான வருத்தம தலைவன் மார்பினை உறுவதாலே தணிதலை அனனை அறியாளாய வெறியயர்தலை மேற்கொளளின எனனாகுமோ எனறு தோழி தலைவன கேட்பத் தலைவியிடம் உரைததாள் (அகம். 98:1-6). 'நமமிடதது விரும்பிய கொள்கையினை யுடைய அரிவையை விரைந்து சென்று அடைதற்குத தேரை ஓட்டுவாயாக' எனத தலைவன் தேர்ப்பாகனிடம் கூறினான் (அகம். 154: 13-15). தலைவர் பிரியேம் எனறு பொயமிகக உள்ளத்தால் நாம் விரும்புமாறு கூறி, உறுதியில் லாத கொளகையராகி இப்பொழுது நோய மிக்க வருத்தத்தால் நுதல் பசக்கவும நாம் அழவும் பிரிந்து சென்றார் எனத தலைவி தோழியிடம் கூறினாள் (அகம. 205:3 - 7). தலைவியுடன ஒனறு பட்டுள்ள கொள்கையை உடையேமாய ஒரு

பெற்றியே தழுவி நின்று இன்று இவ்விடத்தேமாகி நாளை அருஞ்சுரத்திடத்துச் சீறூர்க்கண் காதலியின் நோககததையும புலவியையும் நினைந்து தனித்துத் தங்கியிருப்பேமோ எனத் தலைவன் தன னெஞ்சிடம் கூறினான் (அகம். 225:3,4,13-17). 'பயனை உண்டாக்கும் கொளகையோடு இனிமை நீங்காது கூறும் நின் வாயின இனமொழி உண்மை யாகும்படி தலைவர் வருவாராயின் நனறாகும்' எனத் தலைவி தோழியிடம் கூறினாள் (அகம். 333:15-17). மறவர் கொலையை விரும்பும் கொள்கை யினையும் கொடுநதொழிலினையும் உடையவர் (அகம். 363:10). எந்தையும் யாயும் உணரும்படி களவொழுக்கத்தை வெளிப்படக் கிளந்தபின் தலைவன் வரைவோடு வந்து இரப்ப நமர் நன்மை யைச் செய்யும் கொள்கையினால் பலவாறு மயங்கியிருந்த இமமையல் ஊர் நம்மோடு ஒனறுபட்டது என்று தோழி தலைவியிடம் கூறினாள் (குறு. 374). அனபு கலந்து நம்பால விரும்பிய கொளகையுடன் என்றுந் தனனெஞ்சில் எம்மை நினைந்து உறையும் காதலியின் ஊர் வன்புலத்ததாகிய காடு சூழ்ந்த நாட்டின்கண்ணது எனறு வினைமுற்றி மீளும் தலைவன் தேர்ப்பாகனிடம் கூறினான (நற். 59:6-8). 'எம்பால் அன்பிற் குறையாத கொள்கையுடன் எங்காதலர் வரவை விரும்பி யாம் இரவில துஞ்சாது அலமரும் பொழுதில் யாவரும் அஞ்சி விழிக்கும்படி கடுங்குரல் பயிற்றாதே' எனறு தோழி கூகையை விளிததுக் கூறினாள் (நற். 83:4-9). தலைவன் முன்பு பிற மகளிரை விரும்பாத கொள்கை யுடையவனாயிருந்து இப்பொழுது தன்னை விரும்பிய பரத்தையினிடத்துத் தன வளப்பமான மார்பினை மடுத்தனன்; இனி, அன்பில்லாத அவன் மார்பினை யான் புலவுவது இயலுமோ எனத் தலைவி தோழியிடம கூறினாள (நற். 174:9-11). புகழும் இன்பமும் ஈதலும் இலலிலே செயலற்று இருநதோர்ககுக கைகூடுவது இல்லென வினை வயின் பிரிநத வேறுபட்ட கொளகையுடன் நின கதுப்பிடத்துக் கார் கால மலரை அணியும் பொருட்டு வருதும் என்று சூளுரைததுச் சென்ற தலைவர் மேகத்தின் இடிகுரலைக் கேட்டிலரோ எனறு தலைவி தோழியை வினவினாள (நற். 214). செலலுகினற நெறியில இனனவாறு செல்வோ மென்னும கொள்கையுடன் சென்றிருநது பொருள் சேர்த்த லலலாது இலலததில் மனமடிநது இருந்தோர்க்கு அரும்பொருள சேர்க்கை ஒருபோதும சேர்வதிலலை (நற். 252:3,4). காதலர் மகன்றில் போல உடன்புணர் கொள்கையர் (ஐங். 381:4,5). மாட்சிமை யில்லாததொரு கொள்கையோடு யாம் பெரிதும் மயங்குமாறு துயர் செய்த அன்பற்ற உடன் போககாகிய அறம், என மகளை மீண்டும் கொணர்ந்து காட்டுதற்கு அருளிற்று என்று உடன் போய்த் தலைவி வந்துழித் தாய் சுறறத்தார்க்குக் கூறினாள் (ஐங். 394). நாய் கொலைவெங் கொளகையது (கலி. 23:16). 'நனனெறியிற செலலும் திறனில்லாதவரை அநநெறிக்கண் செலலும்படி திருத்திய தீதுதீர் கொள்கையினையுடைய மறனும் பகைவர்க்கு அணங்கும் நீயே' எனத திருமாலைப் புலவர் சுட்டுவர் ('தீதுதீர் சிறப்பு' என்றும் பாடமுணடு) (பரி. 1:39,40).

**2. விரதம்.** அந்தணர் அமைந்த கேள்வியையும் ஐம்புலனும் அடங்கிய கொள்கையையும் - விரதத்தையும் - நான்கு வேதத்தையும் உடையவர் (புறம்.26.12,13). சொல், பொருள், கணியம், மறை ஆகிய நூல்கள் தூய நெஞ்சம் ஆகிய ஐந்தையும் போற்றி அவற்றைத் துணையாகக் கொணடு பிறவுயிர்க்குத் தீங்கு நினையாமல் விளக்கமுற்ற கொள்கையுடையவன பல்யானைச் செல்கெழு குட்டுவன (பதி. 21.1-3). கூத்தர் புறஞ்சிறையிடததே வரக காணின தாழக காது விரைநது குதிரைகளையும தேரகளையும இழையணிநது கொடுமின எனறு ஏவி ஈகையில் ஆனாக கொள்கை உடையவன் செலவககடுங்கோ வாழியாதன் (பதி. 64:8-11). வருத்தமில்லாத கொள்கைகளை யுடைய தவத்தொழில முடிபபாரது மனத்தினகண் பொருநதித் தோனறும செவ்வேளின் ஒளியையும நிறத்தையுமுடைய ஆறு முகங்களில் ஒரு முகம் உலகம குற்றமறறு விளஙகுமபடி பல கதிர்களையும் தோற்றுவிததது (முரு. 89-92). கல்விகளெல்லாம் நிறைநது அடஙகின அறிவினை யுடையார் தமக்கமைநத கொள்கையினையும் அதறகேற்ப இளையாத மெய்யினையும உடையவர் (மது. 480,481). சிறநத கொளகையினை யுடையவர் அறஙகூறவையததார் (மது.492). அநதணா அறததை விரும்பிச் செய்தற்குக் காரணமான அரிய மறைகளைப பயினற நாவினையும் கறறாங்கு ஒழுகும் ஆற்றலுள்ள கொள்கையினையு முடையவர் (ஐங். 387:1,2). உயர்ந்தோராகிய ஞானிகள் குற்றமறற கொள்கையினர் (பரி. 2.24).

**3. கற்பு.** பெருங்குன்றூர் கிழாரின் மனைவி குற்றம் தீர்ந்த கொள்கையினை - கற்பினை - உடையவள் (புறம். 210:5). தூவியற் கொள்கைத் துகளறு மகளிர் (புறம். 224:6). செவ்வேள் வருத்தமிலலாத கொள்கையினையுடைய மடந்தையோடு (தெய்வயானையாரோடு) ஆவினன்குடி என்னும் ஊரிலே சில நாள் இருத்தலும உரியன (முரு. 175,176). மகளிர்

செயிர்தீர் கொள்கையினர் (அகம். 75.10,11). வெறுப்பற்ற கொள்கையினை யுடைய தலைவி இனிமை உறவும் நமக்குப் பாசறை வருத்தங்கள் ஒழியவும் புரவியை விரைந்து செலுத்துவாயாக என்று தலைவன் தேர்ப்பாகனிடம் கூறினான் (அகம். 124:7-10,13). தலைவி செயிர்தீர் கொள்கை யினள் (நற்.269.5).

4. இயல்பு. புதல்வரைப் பயந்த மகளிர் தொழில் வளம் சிறந்த சிலம்பும் அடங்கிய கொள்கையும் - இயல்பும் - நிறைந்த அறிவும் நல்லிசையும் உடைய வா (பதி. 57:10-13). 'தொழில் வளம் பொருந்திய சிலம்பினையும் அடங்கிய கொள்கையினையும் அறகற்பினையும் தேறிய நல்லிசையினையும் வண் டாரக்கும் கூந்தலினையுமுடைய ஒண்டொடி கணவ' என்று இளஞ்சேரலிரும்பொறை விளிக்கப் பெறல (பதி. 90:48-50). ஊர்காப்பாளர் பேய் முதலியவற் றிற்கு அஞ்சாக் கொள்கையர் (மது. 644,647) தலை வன் பாணர் முல்லைப்பண் பாடவும் தலைவி முல் லைப்பூச் சூடவும் வெறுப்பற்ற கொள்கைக்குக் கார ணமான தன் புதல்வனோடு பொலிந்து இனிது இருந்தனன் (ஐங். 408). 'ஞாயிறு காய்தலின் நீர் அற் றுக்கயம் துகளாகிய வழியின் கொள்கை கெட்டு இன னாவாயினும் காதலன் பாராட்ட உடன் சென்ற என் மகள் போகிய சுரநெறி இனிய வாகுக' என்று மகட்போக்கிய செவிலித் தாய் கூறினாள் (ஐங். தி. 7). 'இளவேனிற் காலத்தை நினையாராய் நம்மை மறந்தாரை மனம் விரும்புதலால் என் மேனி வாடும் கொள்கையைப் பிறர் அறியா வண்ணம் மறைப் பேன் ஆயினும், யான் மறைத்ததனைக் கைகடக்கும் படியாக மாலைக் காலம் வந்து வருத்தத்தைத் தரும்' என்று தலைவி தோழியிடம் கூறினாள் (கலி. 29:14-17).

5. கொள்ளுதல். தலைவன் உடன்போக்குக்கு உடன்பட்டமையை அறிந்த தோழி, 'நம் கருத் தினை உணர்ந்து கொள்கையோடு - கொள்ளுத லோடு - தான் அறிந்தவற்றைக் கரந்து ஒழுகும் அன் னையின் கடுஞ்சொல்லினின்றும் தப்புவோம்; சேரியம் பெண்டிரது அலரினையும் நீங்குவோம், உதியஞ் சேரனைப் பாடிச் சென்ற பரிசிலர் போல இனி மகிழ்வாயாக' எனத் தலைவியிடம் கூறினாள் (அகம். 65 1-7). பரதவர் கொள்கையினால் கொ ணர்ந்த கொழுமீன்களை மணற்பரப்பிலே குவித்து மீனநெய்யை வார்த்துக் கிளிஞ்சலில் ஏற்றிய சுடர் விளக்கொளியில் துயில்வர் (நற். 175:1-4). 'பரத்தை யர் முலைகள் அழுந்திப் பூசின பாடழிந்த சந்த னத்தை யுடையனாயத் தலைவன் பண்பினறி வருவானாயின் ஊடியிருப்பேனென்று கூறுவேன் ஆயினும் யான் கூறியதனைக் கொள்கையில்லாத என்னெஞ்சு அவனைக் காணின் கூடுவேன் என்று கூறும்' எனத் தலைவி தோழியிடம் கூறினாள் (கலி. 67:10-13).

**கொள்ளம் பக்கனார் -** புலவர். இவர்தம் இயற்பெயர் பக்கன் என்றும் கொள்ளம் ஓர் ஊர் என்றும் பி. நா. கூறுவர் (நற். பாடினோர் வரலாறு). இவர் பாடிய ஒரே பாடல் நற்றிணை 147 ஆகும். 'அன்னை நின்னை நோக்கிச் சிறுதினை பெருங்குரலைச் செவ்வாய்ப் பைங்கிளி கவர நீ எங்குச் சென்றனை என்று கேட்டதற்கு அருவியார்க்கும் பெருமலை நாடனை அறியலும் அறியேன; காண்டலும் இலன்; பூக்கொய்து அவனோடு சுனை பாய்ந்து ஆடிற்றுமிலன் என்று கூறிவிட்டனையே; அதைக் கேட்டு அன்னை சினத்தோடு வெள்கித் தலையி றைஞ்சினள்; இனிப் புனக் காவல் மேற்கொள்ள வியலாது; நீ இரங்கத்தக்காய் எனத் தலைவன் சிறைப்புறமாகத் தோழி கூற்றில் அமைத்துத் தலை விக்குக் கூறியதாக இவர் பாடியுள்ளது புதுமைச் சுவை மிக்கது.

**கொள்ளார் -** பகைவர். ஆசைப்பட்டுத் தன்னை நினைந்து வருவாருடைய வறுமை நீங்கக் கொடுக் கும் வண்மையினையுடைய நள்ளி கொள்ளாரை - பகைவரை - வென்றவன் (புறம். 158:13-16).

**கொள்ளி - 1.** நெருப்பு. முள்ளம் பன்றியைக் கொன்ற வீரர், உடும்பின் தசையை மனைமுற்றத்தில் பகுத் தளித்தற் பொருட்டுக் கொள்ளியில் - நெருப்பில் - வேகவைத்த கொழுவிய நிணத்தின் மணம் தெரு வெல்லாம் கமழும் (புறம். 325:6-10). வாடை தம் உடம்பைக் குளிரால் வருத்துகையினாலே கோவலர் பலரும் கூடிக் கையிடத்திலே கொண்ட கொள்ளிய ராய்ப் பற்பறை கொட்ட நடுங்கினர் (நெடு. 7,8). 'ஆண்மை முன்னே இழுக்கவும் காமம் பின்னே நின்று தடுக்கவும் அவற்றால் இருபாற்பட்ட நெஞ் சமே, கணுக்களில் தீப்பற்றி எரிதலின் இருதலையும் கொள்ளியினை யுடைய ஒரு புழல் தட்டையின் உள்ளே நின்று வருந்தும் எறும்புபோல நலம் தடு மாறும் நிலையுடையோம்' எனத் தலைவன் கூறி னான் (அகம். 339.7-10). விசும்பினின்றும் வீழும் கொள்ளியினாற் பயிர் அழிவது போலத் தலைவன் செலலும் தேரின் உருளையால் பயிர் அழிந்தது (குறு. 189:3,4). புனவர் இட்ட கொள்ளிக்கு அஞ்சிய மயில் அரிதாளிலே இருந்த குருவி துன்புறுமாறு சிறகை விரித்துப் பறந்தாடு மகளிர் போல் தன் புகலிடம் செலலும் (ஐங். 295:3-5).

2. கொள்ளிக்கட்டை. குறத்தி அடுப்பிலிட்டு எரித்த வற்றிய கொள்ளி – கொள்ளிக் கட்டை - சந்தன மரமாதலால் அதிலிருந்து எழுந்த புகை அயல தாகிய வேங்கையின் பூங்கொம்பில் தவழும் வள முடையது பறம்பு மலை (புறம். 108:1-3). தினை காக்கும் பரண் மேலுள்ளோன் கையிலுள்ள கனல் மிக்க கொள்ளி விடும் சுடர்ப்பொறிகளைப் போல மின்னி மழை பெய்தது (அகம். 73:14-17). இடையன் முல்லைப் பூவினைத் தோன்றிப்பூவுடன் இணைத்து வண்டுகள் மொய்க்கத் தொடுத்த நீர் ஒழுகும் கண்ணியனாய் மென்மை வாய்ந்த கொள்ளியின் தீயில் உள்ளங்கையைக் காய்ச்சினான் (அகம். 94:4-7).

**கொள்ளை - 1.** **மிகுதி.** கூட்டமாய மேகங்கள் கடலிலே சென்று நீரைப் பருகியுண்ட கொள்ளையவாய் - மிகுதியுடையனவாய் – மேற்கே எழுந்து சூலுற்ற பிடியினம் போல் தோன்றின (அகம்: 183:6-9). யானைக் கோட்டைக் கடைந்தாலொத்த கொள்ளை யாகவுள்ள வெள்ளிய இருப்பைப் பூக்களைக் கரடி யினம் கவர்ந்துண்ணும் (அகம். 267:6-8;331:1-4). கீழ்க்கடலின் நீரை முகந்த கொள்ளை மேகங்கள் வேந்தர்தம் பலபடைகளில் உள்ள யானை வரி சையை ஒத்துக் காணப்பட்டன (அகம். 278:1-3). நாட்காலையில் வலையினால் மீன் பிடித்த பரதவர், பின் பறியால் கொண்ட மீன் கொள்ளையராய் (மிகுதியுடையராய்) அவற்றை நுண்மணலிடத்தே உணக்கினர் (அகம். 300:1-3). கவர்த்த நெறிகளில் குருதியாடிய எருவைச் சேவலின் கிளையுடன் கூடிய கூட்டம் பசிய ஊனின் கொள்ளையைத் தெரிவித் துப் பறந்தெழுந்து செவ்வானம்போல விசும்பினை அழகு செய்யும் (அகம். 881:8–12). தாம் வைத்த சுருக்குவாரில் பன்றியொருத்தல் பட்டதாக வாரை அழித்துக் கொன்று நாய்கள் பற்றிக்கொண்ட கொள்ளையாகிய தசைகளை அவை கொண்டு போகா வண்ணம் தடுத்து அப்பன்றியிறைச்சியைக் கானவர் கொணர்வர் (நற். 82:7-11). தன் நிழ லைப் பார்த்து மகிழ்ந்து விளையாடுகின்ற, ஊனைத் தின்னுதலில் விருப்பமிக்க முதுநரி பசிய தசையைக் கொள்ளையாகத் தின்று வாய்வறந்து பேய்த்தேரை நீரென்று கருதி அலையும் (நற்.352: 5-7).

2. கொள்ளையடித்தல். பகலும் இரவும் எண்ணாது பகைவரது ஊரைச் சுடுகின்ற தீயினது ஒளியின் கண்ணே தம் சுற்றத்தை யழைத்தலுடனே அழு கின்ற ஆரவாரத்தோடு கூடிய கொள்ளையை - கொள்ளையடித்தலை - கரிகாற் பெருவளத்தான் விரும்புவான் (புறம். 7:7 - 9). மறவர் கொள்ளை யால் வரும் பொருள்களை உணவாக உடையவர் (பதி. 19 : 1). இளஞ்சேரலிரும்பொறை பகை வரது நாட்டை அடிப்படுத்தினமையால் முன்பு நிகழ்ந்த கொள்ளையை மாற்றினான் (பதி. 81:15). பகைவர் நாட்டில் கொடுவில் எயினர் கொள்ளையா கக் கொண்டுண்ட நெல் பின் இல்லையான வறுங் கூட்டின் உள்ளிடத்தே யிருந்து கூகை நன்பகலிற் குழறியது (பட். 265-268). மலையிடத்துண்டான ஓசைகளுள் பெரும் பயனுண்டாகத் தேனீ திரட்டி வைத்த தேனைக் கொள்ளை கொள்ளுதலால் உண்டான ஓசையும் ஒன்றாகும் (மலை. 317).

3. அரிசி. திரிமரம் தேய்த்த சுளகினால் கொழிக்கப் பெற்ற வெள்ளிய அரிசியைப் பூண் மாட்சிமைப் பட்ட உலக்கையால் முறையாகச் செலுத்தி உரலிற் பெய்து தீட்டிய உரலின் குழி நிறைந்த கொள்ளையை - அரிசியை - சுனை நீருடன் கூட்டிக் குடவர் புழுக்கினர் (அகம். 393:10-16).

**கொள்ளைசாற்றுதல் -** விலை கூறி விற்றல். பெருங்கல் நாட்டு உமணர் சிறிய வெண்மையான உப்பினைக் கொள்ளை சாற்றுவர் - விலை கூறி விற்பர் – (புறம். 386:16,17). உப்பு வணிகர் சில்பத உணவாகிய உப்பின் கொள்ளை சாற்றி ஊர் தோறும் சென்ற னர் (பெரு .64,65). கொடுமுடி வலைஞர் கழனி யிலும் இலஞ்சியிலும் பொய்கையிலும் மீன் முகந்து கொணர்ந்து கொள்ளைசாற்றினர் (மது. 247-256). படகு வெள்ளை உப்பினது கொள்ளை சாற்றி நெல்லைக் கொண்டு வந்தது (பட். 29,30). பரதமாக்கள் கிளையுடன் கூடி நுண்மணல் செறிந்த பக்கத்துள்ள கரை ஒலிப்ப வலையிழுத்து மீன் பிடித்து அவற்றை இரந்தோர்க்கு நல்கி எஞ்சியவற்றைப் பல கூறுகளாக அமைத்துக் கொள்ளை சாற்றி மணல்மேட்டில் உறங்குவர் (அகம். 30:3-11). உமணரின் காதன் மடமகள் மீன் வேட்டை செய்யும் சிறுகுடிப் பரதவர் உப்பங் கழியாகிய வயலில் உழாது விளைவித்த வெண் கல்லுப்பின் கொள்ளை சாற்றிக் குன்றங்களைக் கடந்து போவாள் (அகம். 140:1-5). தெளிந்த கழி யில் விளைந்த வெண்கல் உப்பின் கொள்ளை சாற் றிய உப்புவணிகர் வண்டிகளிற் பூட்டிய எருதுகள் பலவற்றையும் மேயும்படி அவிழ்த்துவிட்டுச் சமை துண்டு இளைப்பாறிச் செல்வர் (அகம். 159:1-4) செறிந்த கோல்களைக் கொண்டுள்ள உமண உவர் நிலத்திலே விளைந்த உப்பினது கொள்ளை சாற்றி நெடுந்தொலைவு செல்வர் (அகம். 390:1-3 வெண்கல் உப்பின் கொள்ளை சாற்றும் உமண கூட்டமாகிய ஆனிரையை எழுப்புகின்ற நெடி நெறியில் வண்டிகள் மணலில் மடுத்து முழங்கு

ஓசை கேட்டுக் கழனி நாரை அஞ்சும் (நற். 4:7-11). மருத நிலததிலுள்ள உப்பு வணிகர் தம் நாட்டில் விளைந்த வெள்ளிய நெல்லை ஏற்றிச் சென்று கொடுதது நெய்தல் நிலததில் விளைந்த உப்பைப் பெற்றுக கொள்ளை சாறறி மணலைக் கடந்து நெடுநெறி செல்வர் (நற் 183:1-3).

**கொள்ளைமாந்தர்**– கொள்ளை கொள்ளும் மக்கள். மலைச் சாரலில மரையாவை வலம்படத் தொலைச்சிய புலி விட்டுசசெனறு முடைநாற்றம வீசும் புலாலைச் செஞ்செவி எருவை கொள்ளை மாந்தர் - கொள்ளை கொள்ளும் மக்கள் - போல விடாது கவரும் (அகம. 3.5-10).

**கொள்ளையர்** - கொள்ளையடிப்பவர். தீயுண்டாகும் சிறிய அம்பினை விலலொடு கையிற் பறறிச் செனறு மரததினைக் கவர்நது கொண்டு பகைவர் காவலிடததே செனறு கனறுடன கூடிய ஆனிரை களைக் கொண்ட கொளளையர் - கொள்ளை யடிபபவர் - அவவினத்தினை அவ்விடததினினறும் அகற்றிச செனறனர் (அகம். 101:7-11).

**கொளை** - 1. **பாட்டு.** பாலை பாடிய பெருங்கடுங் கோவைப் பாடி அணிகலங்கள் பெற்ற விறலியின் முதறறானமாகிய குரலிலே வந்து பொருந்தும் அளவையுடைய கொளையில் - பாட்டில - வலல பாணனும் வெள்ளிநாரால் தொடுக்கப் பெற்ற பொறறாமரைப் பூவைப் பெற்றான் (புறம். 11: 14-18). கள் நிறைநத மனைகளை யுடைய கோசர் தீவிய கள தெளிவை உண்டு களிப் பேறிக குரவையாடும் இடததெழும் கொளை இசைப்பர் (புறம. 396:7-9). 'பெருஞசினக் குட்டு வனைக் கண்டு வருதற்காக, விறலியரே, யாமும் செல்கின்றோம; நீ விரும்பி வருக; கொளை வன்மையால் வாழும் நும் சுற்றததார் உடுப்பன வும் அணிவனவும பெறுவதே யனறி இனிய உணவும் பெற்றுண்பா' என விறலியர் அழைக்கப் பெற்றனர் (பதி. 49:1-3,17). யாழோசை போலும் வணடின் கொளைக்கு ஏற்ப மயிலகள் தோகையை விரித்து நிலவுபோலும் இடுமணலில் பல பகுதிப் பட ஆடின (பொரு. 211-213). கடம்பின்கண கொடியினைக் கட்டி மாலை சூட்டிப பல்வேறு குரலையுடையனவாகிய, தாளததின வழிப்படும் ஒரு தூக்கினையுடைய இனிய வாச்சியஙகளைக் கொணடு காட்டிற பொருநதிய நெடிய முருகனைப் பாடும் கொளைகது ஏற்ப வெறியயர் களத்து மெல்ல ஆடுதலைக் குறவர் விரும்பினர் (அகம. 382.3-7). 'மகளிர் ஓச்ச விலகாது அவர்தம் கோதை யிற் பூவை பூதும வணடினத்தின் யாழிசை போன்ற கொளையைக் கேண்மின்' என மகளிர் தம்முட் கூறினர் (பரி. 11:125). 'கொளைப் பொருள் தெரிதரப் பாடாதிருககவும் இனிதாகினற வண்டின் இசையைக் கேண்மின்' என மகளிர் கூறினர் (பரி. 11:126,127). சோலையில், தாளததிற்கும் கொளைச் சீர்க்கும் பண்ணினது சீருக்கும் ஏற்பத் தம் சிறகு களை விரித்துத் தும்பியினம் ஆடியது (பரி. 11:128-130). கழனிகள், மலர்ந்த பூக்களைச் சுமந்து பூநீர் நிறைதலின் முழவு முதலிய இசைக் கருவிகளின் கண்ணிடத்தே எழும் இசையையும் கொளையை யும் பயின்ற மகளிர் ஆடும் கூத்தாட்டரங்கினது அழகினை ஒக்கும் (பரி. 16:11-13).

2. **இசை.** ஓடாப்பூட்கையும் போரில் ஆர்வமும் உடைய மறவர்க்குப் பெருஞ்சோறு அளிததற்குப் பல்யானைச் செலகெழுகுட்டுவனின முரசு, நிலனை அதிரச் செய்யும் இடிபோனற மறவா குரலொடு கொளை - இசை – சேரப்பெற்று முழங்கும் (பதி. 30:40-44). போர் வினையை எனறும விரும்பி யிருத்தலின் கடல்பிறக் கோட்டிய செங்குட்டுவ னைப் பகைவர்களும் மனம் தாங்காமல புகழ்வர் எனறும் மந்தமான கொளையுடைய முழவினை யும் அழியாத கலவியையும் உடையவன என றும் பரணர் குறிப்பிடுவர் (பதி. 43:28-31). பாலை யேழினையும் உடைய புரிநரம்பினகண் இனிய கொளையைத் தருகினற யாழும மிடறறுப் பாடலும் தம்முள் ஒகக, குழல் சுருதியை அளநது நிற்க, முழ வுகள ஆர்ப்ப அரஙகேறிய தலைக்கோல் மகளிரும பாணரும் ஆடலைத் தொடங்கினர் (பரி. 7:77-80).

3. **கோட்பாடு.** முக்கோற் பகவர் ஐம்பொறியும் தமக்கு ஏவல செயதலை இயலபாகவுடைய கொளை - கோட்பாட்டையும் - தமககுரிய ஒழுக கத்தையும் உடைய அந்தணர் எனச் சுட்டப்பெறு வர் (கலி. 9:3,4) 'முறுககவிழநத பூக்களையுடைய சினையிடததே சுரும்பினம யாழ்போல ஒலிததுப் பருவம் தோன்றவும கொளை தளராதவரின தீமையை யான மறைத்தேன' எனப் பருவங்கண்ட ழிநத தலைவி கூறினாள (கலி. 34.16,17).

4. **பயன்.** அடும்பங்கொடி பரந்த இடுமணலிலே தலைவியைக் கூடிய பொழுது தலைவன 'நின்னை யான பிரியேன' என்று கூற, அதனை மெய் யென்று உட்கொண்ட கொளை - பயன - அன்றோ, பூ மாறின கொடியை ஒத்த தலைவி மருந்தால் மாட்சிமைப்படாத காமநோயில் அழுந்தியது எனத் தோழி தலைவனிடம் கூறி வரைவு கடாயி னாள் (கொளை – கோட்பாடு எனபா நச.) (கலி. 132: 16-19).

5. **இசைக்கருவி** (ஆகுபெயர்). அடியவர் கோல் விளக்கு, கொளை – இசைக் கருவிகள் - மணப்பொருள்கள், அகிற்புகை, கொடிகள் ஆகிய இவற்றை ஏந்தித் திருப்பரங்குன்றத்தின் அடியுறைதலை விரும்பினர் (பரி. 17:5-8).

**கொற்கை - துறைமுகப்பட்டினம்.** மறப்போர்ப் பாண்டியன் அறநெறி வழாது காக்கும் அழகிய கொற்கைப் பெருந்துறையில் பெறும் முத்துக்களைப் போன்ற முறுவலாற் சிறந்து விளங்கும் பற்கள் பொருந்திய துவர் வாயினை யுடையவள் தலைவி (அகம். 27:8-10). அலைகள் கொணர்ந்து வீசிய முத்துக்கள் குதிரையின் கால்களை வடுச்செய்து செலவினைக் கெடுக்கும் நற்றேர் வழுதியின் கொற்கை முன்றுறைக் கண்ணுள்ள வண்டு வாய்திறந்த கழி நெய்தற்பூ தலைவியின் மையுண் கண்களுக்குப் புறங்கொடுக்கும் (அகம். 130:9-14). பாண்டியனது புகழ்மிக்க சிறப்புடைய கொற்கை முன்றுறையில் விளங்கும் ஒளியினையுடைய முத்துக்களுடன் வலம்புரிச் சங்கினையும் சொரிந்து பழையர் மகளிர் துறைத்தெய்வத்தினைப் பரவுவர் (அகம். 201:3-7). பெரிய கடற்பரப்பில் சுறாமீனை ஒதுக்கி வலம்புரி முத்தினை மூழ்கி யெடுத்த பரதவர் சங்குகள் கல்லென ஆர்க்கும்படி ஆரவாரமிக்க கொற்கை நகரிலுள்ளோர் எதிர்கொள்ளப் படகினின்றும் இறங்குவர் (அகம். 350:10-13). தலைவியின் கண்கள் அழுதலன்றியும் முத்துக்கள் விளைகின்ற கடற்பரப்பினை யுடைய கொற்கை முன்றுறையிலிருக்கும் நெய்தலின் தெளிந்த நீரிலுள்ள மலர்போல அழகு குலைதலின் அவை காமத்தை மறைத்தற்கு அரிய வாயின (நற். 23:5-9). நெய்தற்பூ மலிந்த கொற்கை முன்றுறையின் இலங்கும் முத்தை நிகர்க்கும் பற்கள் பொருந்திய துவர் வாயினள் தலைவி (ஐங். 185:1-3). பெருங்கழியிலுள்ள இறாலை நாரையினம் கவர்ந்துண்ணும் கொற்கைக் கோமானாகிய பாண்டியனின் கொற்கையம் பெருந்துறையிடத்து வைகறைப் பொழுதில் மலரும் நெய்தற்பூப் போலத் தலைவியின் கண்கள் மிகுந்த பெருமை யுடையன (ஐங். 188).

**கொற்கைப் பொருநன் - பாண்டியன்.** கடற்பரப்பில் மீன்களைப் பிடிப்போர் முகந்த சிப்பிகளைக் கள்ளிற்கு விலையாகச் சேர்க்கும் பெரிய புகழினையுடைய கொற்கைப் பொருநனான வென்றியைத் தரும் வேலையும் யானையையும் நெடுந்தேரையும் உடைய செழியன், மலையை யொத்த நெடுநகரையுடைய கூடற்கண் வெற்றிக் களிப்பால் ஆடியதனால் எழுந்த ஆரவாரம் போலத் தலைவன் பரத்தை யோடு பொழிலில் துயின்று பின்னர் வையையில் நீராடியமை பலர் வாயாலும் கூறப்பட்டு அலராகியது (அகம். 296:3-14).

**கொற்கைக்கோமான் - பாண்டியன்.** உமணர் சகடத்தோடு வந்த பிள்ளையை யொத்த மந்தி முத்தைக் கிளிஞ்சிலிலிட்டு உமட்டியர் ஈன்ற புதல்வரோடு கூடிக் கிலுகிலுப்பை விளையாடும், முரிகின்ற நீரைத் தனக்கு எல்லையாக உடைய கொற்கைக் கோமானும் தென்புலத்தைக் காக்கும் குடியிலுள்ளானுமாகிய செழியனுடைய தமிழ்நிலை பெற்ற மதுரையும் நல்லியக் கோடன் நல்கும் பரிசிலுக்குச் சிறிதாகும் என்று பாணரை ஆற்றுப்படுத்தும் முறையில் அவனது வண்மை மிகுத்துக் கூறப்பட்டுள்ளது (சிறு.55-67). பெரிய கழியிலுள்ள இறாலை நாரையினம் கவர்ந்துண்ணும் கொற்கைக் கோமானாகிய பாண்டியனின் கொற்கையம் பெருந்துறையிடத்து வைகறைப் பொழுதில் மலரும் நெய்தற்பூப் போலத் தலைவியின் கண்கள் தகைமையினை உடையன (ஐங். 188).

**கொற்கையோர் - கொற்கையிலுள்ளோர்.** நன்மக்களிடத்தே மேலாய்த் தோன்றுகையினாலே புகழுடைய விழுச்சிறப்பினையும் சீரிய முத்தினையும் விளங்குகின்ற சங்கினையுமுடைய சங்கு குளிப்போர் இருப்பினையும் கள்ளுணவினையுடைய குடிப் பாக்கத்தினையுமுடைய கொற்கையோரது விரும்பும் பொருநனே என்று தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் போற்றப் பெறுகிறான் (மது. 133-138).

**கொற்ற - மன்ன** (விளி). 'கையால் வழங்கும் வள்ளிய கொடையினையும் கடிய குதிரையையு முடைய கொற்ற' எனப் பிட்டங்கொற்றன் விளிக்கப் பெற்றான் (புறம். 168: 17).

**கொற்றங் கொற்றனார் - புலவர்.** இவர் நற்றிணையில் 259-ஆம் பாடற் புலவராவர். அகநானூற்று 54-ஆம் பாடலையும் இவருடையதாகவே அடக்குவர் வையாபுரிப் பிள்ளை (ச.இ) அவ்வகப் பாடலின் ஆசிரியர் பெயர் மாற்றூர் கிழார் மகனார் கொற்றங்கொற்றனர் எனவும் நொச்சி நியமங்கிழார் மகனார் கொற்றங்கொற்றனார் எனவும் காணப் படுகின்றமையால் இவருடைய ஊர் மாற்றூரோ நொச்சி நியமமோ ஆகலாம். மாற்றூராயின் அப் பெயரில் பலவூர்கள் இருத்தலின் இவரூர் எது வென்று விளங்கவில்லை. நொச்சி நியமமாயின், அஃது இக்காலத்து நொச்சியம் என்று வழங்கப் படுகின்றது (உ. வே. சா. புறம். பாடினோர் வரலாறு). அப்பெயர்களால் இவர் தந்தையார் ஊருடைய

இயைந்த புகழுடையவரென்பதும் வேளாளரென பதும் விளஙகும். நொச்சி நியமங்கிழாரே இவர் தநதையாராயின் அவரும் சங்கப் புலவரென்பது (புறம. 293; அகம. 52; நற். 17, 208, 209) போதரும். வினைமுற்றி மீளும் தலைவன் தேர்ப்பாகறகுச் சொல்லியதாகவும தோழி செறிப்பறிவுறுத்தித் தலைவனை வரைவு கடாவியதாகவும் இவர் தம் பாடலகளை இயற்றியுளளார். வேந்தனுக்கு உற றுழி உதவப் பிரிந்த தலைவன் அவ்வேந்தனும் வெம்பகை தணிந்து கார்காலமும் வந்த நிலையில் புதலவனைப் பேணியிருக்கும் தலைவியின் நிலையை நினைநது உடனே சென்று அவளைக் காணுதற்குத் தேரை விரைந்து செலுத்துமாறு பாகனிடம் கூறும் முறையில் அவனது ஆர்வத்தை இவர் அமைத்துக் காட்டுவர் (அகம். 54). முன்பு தினைப்புனங் காக் கையில் தலைவனொடு இயைந்த கேண்மை பின்பு தினைமுற்றிய நிலையில் தலைவி இற்செறிக்கப் படுதலால் அருகியொழியும் பானமையைத் தோழி எடுததுக்கூறித் தலைவனை வரைவு கடாவுவதை இவர்தம் நற்றிணைப்பாடல் நனகு புனைகின்றது (நற். 259). மாலைப்பொழுதில் கோவலர் கொன்றை யங் குழலராய்ப் பின்வர, ஆனிரை மேய்ச்சல் மாறி மீளலையும் அப்போது தலைவி நிலவினைக் காட்டிப் புதல்வனுக்குப் பாலூட்டலையும் இவர் அழகுறச் சொ[illegible]லோவியப் படுத்துவர். தனக்கென வாழாப் பிறர்க்குரியாளன் எனறு இவர் சிறுகுடி கிழான் பணணனைப் பாராட்டுவர். அவனுடைய சிறு குடிப் படப்பையில் நெல்லிக்காய் நிறைந்திருத்தலை யும் அக்காயினைத் தின்றவர் நீர்குடித்துக் காணும் சுவையினையும் இவர் பாடல் காட்டும் (அகம். 54).

**கொற்றம் - 1.** வெற்றி. ஐயூர் மூலங்கிழார் புலவரால் பாடப்படும் துறைகளை முடித்த கொற்றம் - வெற்றி - பொருந்திய வேந்தே எனக் கானப்பே ரெயில கடந்த உக்கிரப் பெருவழுதியைப் பாராட் டல் (புறம். 21:10,11). தலையாலஙகானத்துச் செரு வென்ற பாண்டியன் நெடுஞ்செழியன தொன் முதிர் வேளிரின் திரண்ட நெலலினையுடைய முத் தூற்றுக் கூற்றத்தை வென்ற கொற்ற நீள் குடை யினையும் கொடித்தேரினையும் உடையவன் (புறம். 24:21-23). களிற்றினதலைப் பொருத போர்க்களத் தில் வருகின்ற படையை எதிர்த்து நின்று பொறுத்து அது தோற்று மீளும் புறக்கொடை கண்டு ஆர்ததுப் போர் செயயும் படைதரும் கொற்றம், நிலத்தில் கலப்பையால் உழுத சாலி டத்து விளைந்த நெலலினது பயனாகும் (புறம். 35:23-26). கடுஞ்சினத்தினவாகிய கொல்களிறும் விரைந்த செலவையுடையவாகிய செருக்கிய குதிரை யும் நெடுங்கொடிய உயர்தேரும் மனவலியுடைய போர்மறவரும் என நான்கு படையுடன மாட்சி மைப்பட்டதாயினும் அரசின் கொற்றம் அற நெறியை முதன்மையாக உடையது (புறம். 55:7-10). வேம்பும் ஆத்தியும் போந்தையுமாகிய மூன்றையும் அணிநத சென்னியராய், வில்லராய், கொற்ற வேந் தர் மூவரும் மகட்கொடை வேண்டி வந்தாலும் சீறூரின் தலைவன் தன் தகுதிக்கேற்பத் தன்னை வணங்கார்க்கு மகட்கொடை நேரான் (புறம். 338: 6-9). சேரமான் மாரிவெண்கோவும் பாண்டியன் கானப்பேர் தந்த உக்கிரப் பெருவழுதியும் சோழன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளியும் ஒருங் கிருநதவழி அவரைக் கண்ட ஔவையார், 'கொற்ற வெண்குடைக் கொடித்தேர் வேந்திர்' என விளித் துப் போற்றினார் (புறம். 367:14). 'கொங்கு நாட் டாரைப் புறங்கண்ட கொற்ற வேந்தே' என்று சோழன் குராப்பள்ளித் துஞ்சிய கிள்ளிவளவன் விளிக்கப் பெறுதல் (புறம். 373:8). ஆடுகோட்பாட் டுச் சேரலாதன் வீறுடைய பெருங்கொற்றத்துச் செல்வர் செல்வனாவான் (பதி. 59:9,10). ஊழித்தீ யின் வண்ணத்தைக் கொள்ளுதற்குக் காரணமான கடுந்திறலால் பகைமையின துறைகளெல்லாம் முற்ற முடித்த கொற்ற வேந்தன் செல்வக் கடுங்கோ வாழியாதன் (பதி. 62:8,9). பகைவரைப் பிணம் உயரும்படி கொன்று அவருடைய செட்ட குடி களை மீண்டு அவர் நாட்டிலே வாழச் செய்த கொற்ற வேந்தன் செல்வக் கடுங்கோ வாழியா தன எனக் கபிலர் குறிப்பர் (பதி. 69:9,10). இளஞ் சேரலிரும்பொறை வேந்தரும் வேளிரும் பின் வந்து வழிபட்டு வணங்கும்படி கொற்றம் எய்திய பெரியோரது வழியில் வந்தவன் (பதி. 88:13,14). மலையி லுள்ளனவும் நிலத்தி லுள்ளனவுமாகிய அரண்களைக் கைப்பற்றிப் பகைவரது வன்மை யைக் கெடுத்து அவ்வரண்களில் பெற்ற பொருள களைப் பரிசிலரது கையிலே இருத்திய கொற்றத் தால் வரும் செல்வத்தையுடைய வலியோருடைய வழித்தோன்றல் இளஞ்சேரலிரும்பொறை (பதி. 90: 22-24). செவ்வேள அவுணரது நல்வலம் அடங்க மாமரத்தை வெட்டின குற்றமில்லாத கொற்றத் தையும் நல்லிசையையும் உடையவர் (முரு. 59-61). ஆயிரங்கண்ணினையும நூறாகிய பல வேள்வி களை வேட்டு முடித்ததனாற் பெற்ற, பகைவரை வென்று கொலகிளைற கொற்றத்தினையும் உடைய வன் திருக்கிளர் செல்வன் (இந்திரன்) (முரு. 155-159). குருகாற் பெயர்பெற்ற மலையைப் பிளந்த குன் றாத கொற்றத்தையுடைய, விண்ணைத் தீண்டும் நெடுவரைகளையுடைய குறிஞ்சிக் கிழவன் செவ்

வேள் (முரு. 266,267). செவ்வேளின் திருக்கையி லுள்ள வேல் விண்ணோரைச் சிறைமீட்டதும் கடலில் குளித்ததும் சூரனது மார்பையும் குன்றை யும் பிளந்ததுமான அரிய செயல் செய்து கொற் றம் எய்தியது (முரு. வெ. 3). மேற்றிசையில் தோன் றிய நின் குலத்திற்குப் பழையதாகிய எல்லோரும் தொழும் பிறை நாடோறுஞ் சிறக்குமாறு போல, நின் வலம்படு கொற்றம் வழிவழிச் சிறக்க என்று தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழி யனை மாங்குடிமருதனார் வாழ்த்துவர் (மது. 193,194). கொற்றச் செழியன் பகைவர் யானை களைப் போரின்கண் சிதையக் கொல்லும் ஒளிறு வாள தானையினை யுடையவன் (அகம். 46:11-13). 'எம் ஒண்டொடி தழும்புறும்படி அழுத்தாதீர்; வண்டல் இயற்றி ஓரை ஆடினும் மேனி வாடு மெனச் சினப்பவளாகிய அறனில அன்னை இத னைக் காணின் வெல்லும் வேலினையுடைய கொற்றச் சோழர் குடந்தையில் வைத்த பகைநாடு திறையாகக் கொடுத்த நிதியைக் காட்டிலும் அருங் காவற்படுத்துவள் என்று தோழி தலைவனிடம் கூறினாள் (அகம். 60:10-15). வாட்படையினை யுடைய கொற்றச் செழியன் போரில் அடுந்தோறும் பாணன் களிற்றினைப் பெறுவான் (அகம். 106: 10-12). களங்காயக் கண்ணி நார்முடிச் சேரல் வாகைப் பெருந்துறைச்செருவில் நன்னன் பொருது களத்தொழிய வலம்படு கொற்றம் தந்த, வாய்த்த வாளினையுடையவன் (அகம. 199:19-22). பயற்றில் பசு மேய்ந்ததன் பொருட்டுக் கோசர் அன்னிமிஞி லியின் தந்தையை அருளாது கண்ணைப் பிடுங்கித் துன்புறுத்திய கொடுமைபற்றி அவள் உண்ணா மலும் உடையினை உடுத்தாமலும் சினத்தில் கொண்ட வடிவம் மாறாளாய், மறங்கெழு தானை யினையுடைய கொற்றக் குறும்பியனாகிய திதிய னிடம் உரைத்து அவன் அக்கோசரது இன்னுயிர் களைப் போக்கக்கண்டு சினம் ஒழிந்தாள் (அகம். 262:4-12). இனிய கடுப்புடைய கள்ளையும் இழை யணிந்த நெடுந்தேரினையும் உடைய கொற்றச் சோழர் கொங்கரை அடக்கப் பேளர் என்னும் ஊர்க்குத் தலைவனான பழையனிடம் வேற்படை பெற்று வைத்திருந்தனர் (நற். 10:5-8).

**கொற்றவ** - 1. மன்னவ (விளி). களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரல் 'அடுபோர்க் கொற்றவ'- மன்னவ - என விளிக்கப்பெற்றான் (பதி.32:9). 'கற் பினால் சிறந்தாளுடைய கணவ, சான்றோர் புரவல, அடுபோர்க் கொற்றவ நின்னைக் காண விரும்பி வந்தேன்' என ஆடுகோட்பாட்டுச் சேரலாதனை விளித்துக் காக்கை பாடினியார் நச் செள்ளையார் பாடினார் (பதி. 55:1,2).

2. வெற்றியையுடையவ (விளி). 'தலைமை யமைந்த உயர் நெலலின் பெயரைப் பெற்ற சாலியூரைக் கொண்ட உயர் கொற்றவ'-வெற்றியையுடையவ - எனத் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் விளிக்கப் பெற்றான் (மது. 87,88).

**கொற்றவர்** - வெற்றியுடையோர். பகைவரது அரண்களை அவ்வவ்விடங்களிலே சென்று கைக்கொண்டு நீங் கிய விழுச்சிறப்பினையுடைய தென்றிசைக்குக் கும ரியும் வடதிசைக்கு மேருவும் கீழ்த்திசைக்கும் மேற் றிசைக்கும் கடலும் எல்லையாக உடைய இடைப் பட்ட நிலத்தில் வாழ்வோரெல்லாம் பழமையைச் சொல்லி ஏவல் கேட்கும்படி வெற்றியோடு செறிந்து ஒழுகிய கொற்றவரது-வெற்றியுடையோரது-தலை வனாவான் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் (மது. 67-74).

**கொற்றவா** - வெற்றியையுடையவா (விளி). அச்சந்தருகின்ற வேற்படையால் சூர்தடிந்த கொற்றவா என்று செவ்வேள் போற்றப் பெற்றார் (முரு. வெ. 4'2).

**கொற்றவை** - காடுகெழு செல்வி. வையையில் நீராடும் மக ளிருள் தன் காதில் நீல மலரணிந்தாளைப் பார்த்து அசோகந் தளிரணிந்த ஒருத்தி, 'இவள் தன் காது களில் நீலமலரைச் செருகி நான்கு விழி படைத் தாள்' என்று கூறிக் கொற்றவையின் - காடுகெழு செல்வியின் - கோலத்துக்கு ஒப்பாகும்படி நெற்றி யிலுள்ள கனலவிழியைப் போலத் தோற்றும் வண் ணம் திலகமிட்டாள் (பரி. 11.96-100).

**கொற்றவை சிறுவ** - கொற்றவையின் புதல்வ (முருக) (விளி). வெற்றி வேல்போர்க் கொற்றவை சிறுவ - முருக - எனச் செவ்வேள் போற்றப் பெறுவார் (முரு. 258).

**கொற்றன்** - பிட்டங்கொற்றன். திருந்திய வேலையுடைய கொற்றன் பெரிய தகைமை யுடையவன், சினமிக்க காளைகளைத் தொழுவத்தோடே வேண்டினும் களத்தில் மலிந்த நெல்லின் குப்பையை வேண்டி னும் அருங்கலன்களைக் களிற்றோடு வேண்ட டினும் நமக்கேயன்றிப் பிறர்க்கும் அத்தன்மைய அறஞ்செய்யும் தகுதியுடையவன், முன்னே தந்தேன் என்னாது நாடோறும் செல்லினும் பொய்யலன் ஆகி யாம் வேண்டியாங்கு எம் வறுங் கலத்தை நிறைப்போன; தான் வேண்டியாங்கு தன் மன்னவன் உவப்ப அருந்தொழில் முடிப்பா னாக; எம் தலைவனது உள்ளடிக்கண் முள்ளும் நோவச் சென்று உறாதொழிக; ஈவோர் அரிய இவ்வுலகத்தில் வாழ்வோர் வாழ அவன் தாள் வாழ்வதாக என்று பிட்டங்கொற்றனைக் காரிக்

கண்ணனார் போற்றி வாழ்த்துவர் (புறம். 171). பிட்டன், பிட்டங்கொற்றன் காண்க.

**கொற்றி** - கொற்றவை. 'பெருங் காட்டிலுள்ள கொற்றிக்கு - கொற்றவைக்கு - அவள் அறியாதன சில உண்டாகப் பேய் நொடி சொன்னாற்போல, உன் பொய்களை என்னிடம் கூறி வருந்தாதே, யாம் முன்பே நின் வஞ்சனைகளைத் தெளிந்தேம்' என்று தலைவி தலைவனுடன் ஊடி உரைத்தாள் (கலி. 89: 7-9).

**கொற்றுறை** - கொல்லன் உலைக்களம். அதியமான் தூதுவிடத் தொண்டை மானிடத்துச் சென்ற ஔவையார், இவ்விடத்துள்ள வேல்கள் பீலியணி யப்பட்டு மாலை சூட்டப்பட்டுக் காம்பு அழகு படத் திருத்தப் பெற்று, நெய்யணியப் பெற்றுக் காவலையுடைய அகன்ற அரண்மனையிடத்தன; அதியனின் கூர்வேல்கள் பகைவரைக் குத்துதலாற் கோடும் நுனியும் சிதைந்து கொற்றுறையில் - கொல்லன் உலைக்களத்தில் - கிடக்கின்றன என்று வஞ்சப் புகழ்ச்சியாகக் கூறினார் (புறம். 95.1-5,9).

**கொன்** - 1. பயனின்மை. பெருந்தலைச் சாத்தனார் காட்டிலுறையும் குமண வள்ளலைக் கண்டு பாடி நின்றபோது அவ்வள்ளல் பாடு பெறு பரிசிலன் கொன்னே - பயனின்றியே - செல்லல் தான் நாடு இழந்ததனினும் நனி இன்னாதெனக் கருதினான் (புறம். 165:8-11). 'வேந்தன் பொருட்டுக் கொன்னும் (பயன் கருதாமலும்) உயிர் கொடுத்தற்கு விழைபவனாகிய என் தலைவனுக்குத் தன் மார்பில் இருந்த பல்வட மணிமாலையைச் சூட்டினான் அவ்வேந்தன் என்று வீரனின் மனைவி கூறினாள் (புறம். 291: 6-8). 'விசும்பில் கொன்னே விளங்கும் ஞாயிறே, எங்கோனாகிய கழல் தொடி ஆஅய் அண்டிரன் போல ஒளியுடையை ஆயினும் வண்மையுடையையோ' என்று வினவி உறையூர் ஏணிச்சேரி முடமோசியார் ஆய் அண்டிரனது புகழ் பாடுகின்றார் (புறம். 374:15-18). 'மணலமேட்டில் ஆயத்தாரோடு வண்டல் இயற்றி ஓரையாடினும் தலைவியின் மேனி உயங்கும்' எனக் கொன்னும் சிவப்பவளாகிய யாய தலைவியின் நிலை காணின், அரிய காவற்படுத்தி விடுவள் எனத் தோழி தலைவனுக்குரைத்தாள் (அகம். 60:9-15). தேரில் வந்த தலைவன் தலைவிக்குக் குவளை மலராலாய கண்ணியைப் பின்னுப் புறம் தாழக் கொன்னே சூட்டி நலல வளர்ச்சியையுடைய இளைய முலையைப் பாராது நெடிது நினைந்து நில்லாது பெயர்ந்தனன் (அகம். 180:4-9). பெருங்கடல் முகந்த முகிலினம் வானில் எழுந்து முரசுபோல முழங்கி, வீரர் வாளைப்போல மின்னி, நாளும் கொன்னே அரவம் செய்தது (அகம். 188: 1-8). பாறைகளின் வழியே தூது செல்லும் பார்ப்பான் கையிலுள்ள வெள்ளோலையைப் பொன்னெனக் கருதிய கடுங்கண் மழவர் கொன்னே அவனை வெட்டி வீழ்த்தினர் (அகம். 337:6-11). 'புலால் நாறும் துறையையுடைய தலைவனொடு ஒரு நாளேனும் மகிழ்ந்து விளையாடிய பழி இலம்; அங்ஙனம் இலமாகவும் இவ்வூர் தன் கொடுமையால் கொன்னே அலர் தூற்றுகின்றது' என அலரஞ்சிய தலைமகள் தலைவன் கேட்பத் தோழிக்குக் கூறினாள் (குறு. 320.3-8). 'பெருங்கல நாடன் நாளும் நின்னை வந்து கூடியிருத்தலானே அவன்பால் அருளுடையை யாயினை; ஆதலால் நீ இனி என் சொல் கொள்ளா யல்லை; ஆயினும் என் சொல் கொன் ஒன்று என்று நீ கருதினாலும் ஒரோ வொன்று நினக்குக் கூறுவன்' எனத் தோழி சிறைப் புறத் தலைவன் கேட்குமாறு தலைவியிடம் கூறினாள் (நற். 233:4-7). எம்மைக் கைவிட்டு வேற்று நாடு அகல்வீராயின் இல்வில் ஆற்றியிருத்தல் எமக்குப் பொருந்துவ தொன்றாம்; அன்றியும் கொன் ஒன்று கூறுவேன்; நீர் பிரிந்து வேற்றுநாடு செலலக் கருதி எம்மை இல்லின்கண் இருத்திய காலை யாம் வருந்துதல் பெருங்குடியிற் பிறந்தார் நிலை ஆகாதன்றோ எனப் பிரிவுடம்பட்ட தோழி கூறினாள் (நற். 266.5-9). 'அன்னையே, தலைவி பசலையில் மூழ்கி மெலிந்தமைக்குக் காரணம் என்ன எனக் கொன்னே வினவுகின்றாய்; கோங்க மலரே பசலையைத் தந்தது போலும்' எனக் கூறித் தோழி செவிலிக்கு அறத்தொடு நின்றாள் (ஐங். 366).

2. பெருமை. களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரலின் சால்பும் செம்மையும் வளனும் வென்றியும் ஆகிய குணங்கள் எல்லாவற்றையும் எண்ணில் இடுகழங்கும் போதா; அக்குணங்களுள் கொன் - பெருமை - உடைய ஒன்றைக் கண்டு வியந்தேன்; என்க் காப்பியற்றுக் காப்பியனார் கூறி விளிப்பர் (பதி. 32.1-9). 'ஈதல் உள்ளமொடு புகழைப் பெரிதும் விரும்புபவனே, நினக்குக் கூறற்பாலது இல்லையெனினும் கொன் ஒன்று சொல்லுவன் கேட்பாயாக' என மாங்குடி மருதனார் நெடுஞ்செழியனுக்குக் கூறினார் (மது. 205-208). பூக்களைச் சுமந்து செல்லும் காட்டாற்றின் கண்ணே காற்று எழுப்புதலின் மேலே எழும் துளிகளையே உணவே மாகிய எம்முடனே வருதற்கு வன்மையுடையையோ என்று தலைவர் கொன் ஒன்று கூறி வினவினர் எனத் தலைவி ஆற்றுவல் என்பது படத் தோழிக்குரைத்தாள் (அகம். 133: 10-13). எம் வீட்டின் அயலதாகிய நொச்சியினது நீலமணி

போன்ற மலர்கள் உதிரும் ஓசை கேட்டுக் கொன் பொருந்திய ஊரார் துஞ்சினும் யாம் துஞ்சே மாயினேம் எனச் சிறைபபுறத் தலைவன் கேட்பத் தோழி கூறினாள் (குறு. 138).

3. அச்சம். அலர் முதலியவற்றான் கொன் - அச்சம் - மிகும் ஊரின்கண்ணே தனக்குப் பொய்யாயிருக் கின்ற இரவுக் குறியில் வருதல் ஒழுக்கமன்று என் றும் வரைந்து கொள்ளுதல் நல்லொழுக்கம் என் றும் தலைவன் துணிநதான் (குறி. 245,246). பரத் தைபால் சென்று மீண்ட தலைவனுக்கு உடன் பட்ட தலைவி தன் நெஞ்சிடம் 'நின நெஞ்சில் துன்பம் பலவாகுக; அதியமான் அஞ்சியின் கொன் செய்யும் போர்க்களத்தில் உள்ள ஊரினர் இரவில உறங்காதது போல நீ உறங்கும் நாள்கள சில வாகுக' என்று கூறினாள் (குறு. 91:4-8). மலை யினிடத்தில் தாழ்ந்து வீழ்கின்ற தூய வெள்ளிய அருவி கொன் தரும் இலையால வேய்ந்த குரம் பையின் அருகில் இறங்கி ஓடியது (குறு. 284:6,7). 'கொண்க, எம்முடைய தாய் இனறு தலைவியின் நறுநுதலைக் கூர்ந்து நோக்கியவழி அஃது அவட்கு மயககததைச் செய்ததாகலின கொன ஒன்று உடைத்துப் போலும் என ஐயுறறாள்' எனத தலைவனிடம தோழி கூறி வரைவு கடாயினாள் (ஐங். 194).

4. காலம். தடாரிப் பொருநன் கொன - காலத்தில் - போந்து கிணைப்பறை கொட்டித் தலைவன் புகழைப் பாடித் துயிலெடை செய்தல மரபு (புறம். 379:11). தலைவன் நின் அருளையே மருந்தாக உடையான; ஆதலால் அவன் நின முகத்தைக் கொன்னே பெறின் மருந்தாகப் பெற்றுய்வான எனத தோழி கூறினாள் (கலி. 60:19-21).

கொன்றை - மரவகை. அருநதவத்தோற்கு (சிவபெருமா னுக்கு) தலைமாலையாகிய கண்ணி கார்காலத்து மலரும் கொன்றையால் ஆனது; அவனது வணண மார்பில் உள்ள தாரும் கொன்றையால் ஆனது (புறம். 1:1,2,13). எரியன்ன நிறமுடைய சிவபெருமான் விரிநத கொத்தாய் மலர்ந்த கொன்றை மலரால் ஆகிய தாரணிந்த மார்பினையுடையவன் (பதி. க. வா. 12). செல்வக் கடுங்கோ வாழியாதனின் படை வீரர், மணங்கமழுகின்ற பூஙகொத்துக்களையுடைய கொன்றையைப் பனங்குருத்தின்கண் வைத்துத் தொடுத்த கண்ணியை அணிந்திருந்தனர் (பதி. 67: 31). முல்லையம் புறவில் தளவம், தோன்றி, முல்லை, தேற்றா, பொன்போலும் பூவினையுடைய கொனறை, காயா முதலியன இருநதன (பொரு. 199-202). கொன்றையின் மெல்லிய கொம்புகளிலே பனிமாசு கிடந்து தவழ்கினறவை போல, மகளிரின் பசிய மணிகள் கோத்த வடஙகளையுடைய அல் குலில் மெல்லிய துகில் அசைந்தது (பெரு. 327-329). தளிரினையும கொத்தினையும் உடைய கொனறை நன்றாகிய பொனனைச் சொரிந்தது போல் மலர்ந தது (முலலை. 94). சுடர்ப் பூங்கொனறையின் பரந்த நிழலிடத்தே பரப்பினா லொதத பாறை அழகு பெற விளங்கியது (மது. 277,278). தலைவி தன ஆயத்தாருடன் கூடிக் குறிஞ்சி நிலத்தில் பறித்த பூக்களுள் அசைகின்ற பூஙகொத்தினை யுடைய கொன்றையும் ஒன்றாகும் (குறி. 86). கார்காலதடே மலரும் பொன்போன்ற கொனறைப் புது மலரால் ஆகிய தாரினையும் கண்ணியினையும் உடையவன சிவபெருமான் (அகம். க. வா. 1,2). கார்ப் பருவத்தில் கானில் உள்ள பசிய அடியினை யுடைய கொன றையின் முகைகள் மெலலிய கட்டு நெகிழந்து விரிந்தன (அகம். 4:2-7). கரடிக் கூட்டம் கொனறை யினது அழகிய கிளைகளிலுள்ள குழல போலும பழததைக் கொழுதும் (அகம். 15.15,16). ஒளிபொருந் திய கொத்துககளை யுடைய சுடரும் பூக்களை யுடைய கொனறையின் முறையாக முற்றி விளைநத நெற்றுக்கள் எவ்வி வீழ்ந்த செருவில் பாணர் யாழின வளைந்த கோட்டினை ஒடிததுப போட்ட தைப் போல பாறைமீது பரவிக கிடைக்கும (அகம். 115:8-12). ஒள்ளிய பூங்கொத்துககளை யுடைய கொன்றை ஓங்கிய மலையை யடுதத நெறியில தலைவன் தலைவியைப் பிரிந்து பொருள் தேடச் சென்றான் (அகம. 197:16-18). சிறநத பொனனா லாய அணிகளைத் தொங்கவிட்டாற் போனற நீண்ட பூங்கொததுக்களையுடைய கொனறைஅழகு பெறுமாறு கார்பபருவம வந்தது (அகம. 364:4,5,9). வணடு வீழுமபடி செறிந்து மலர்நத நீணட பூங் கொத்துக்களைத் தழைகளின இடையிடையே மேற் கொணடு பொனனாற் செய்த தலையணிகளைக் கோத்துக் கட்டிய மகளிர கூந்தலைப போலத் தோனறும் புதிய பூக்களையுடைய கொன்றையை யுடையது கானம (குறு. 21 : 1 - 4). தடவுநிலைக் கொன்றை தலைவர் குறித்த கார்பபருவம் வாராத காலத்திலே பெய்யும வம்பமாரியைக் கார் காலத்து மழையெனக் கருதிச் சிறு கொம்புகளிற் சேர்ந்த ஒழுங்காகிய பூங்கொத்துககளை மலர்வித் தன; ஆதலால் அம்மரங்கள் உறுதியாகப் பேதைமை உடையன' எனக் கூறிப் பருவங் கண்டழியும்தலை வியைத தோழி தேற்றினாள் (குறு. 66). செல்வச் சிறாரின் சீறடியிற பொலியும தவளைவாய் போன்ற வாயையுடைய பொன்னாற் செய்யப் பெற்ற கிண்கிணிக் காசைப் போன்ற பேரரும்பைக்

கொனறை ஈன்றன (குறு. 148:1-3). கொன்றையின் அழகிய செவ்வி மலர்கள பசலைபோன்ற நிறமுடையனவாயக் கார்காலத்தில் மலரும (குறு. 183:1,2). காட்டில கவலைககிழங்கைக கல்லியதனால் உண்டான சிறுகுழி கொன்றையின ஒள்ளிய மலர் பரவப்பெறறுச் செல்வர்க்குரிய பொன் பெய்யும் பேழையின மூடியைத் திறந்து வைத்தாற் போனறு தோனறும் (குறு. 233:1-4). கொன்றையின் இனிய சுவையுடைய கனிகள் பாணர் ஐயங்கொள்ளும்படி அவர் தமது பறையை முழக்கும் குறுந்தடி போலப் பாறையில விழுந்து கிடந்தன (நற்.46:5-7). பருவங் கண்டு ஆற்றாளாய தலைவியைத் தேற்றும் தோழி, அறிவில்லாது பருவ காலததை மறநது கடனீரை யுணடதனாலாகிய நிறைந்த சூலைத் தாங்காத மேகம் பெய்த வளமழையைக் காரெனறு மறந்த உள்ளத்துடன் ஏற்றுப் பிடவும கொன்றையும் காந்தளும் அறியாமை உடையன ஆதலின மலர்ந்தன என்று கூறினாள் (நற். 99:5-10). யானையின் விலா உராய்தலால பொரிநத பரந்த அடியுடையனவும் உள்ளே துளையுடைய காய்களைக் கொண்டனவுமாகிய கொனறை குன்றில் உறையும் நீடிய சடையும் ஆடா மேனியும் உடைய தவசியர் போலத் தோனறும் (நற். 141:2-5). செம்புலப் புறவில் பொற்காசினைத் தொங்க விட்டாற் போன்ற அழகையுடைய நல்ல மலரை யுடைய கொன்றையின் ஒள்ளிய பூங்கொத்துக்கள் அதன் கிளைகள் தோறும் தொஙகிப் பிற மலர்களின் நறுமணத்தோடு கலந்து மணம் பரபபின (நற். 221:3-5). கொன்றைகள பொன்போல் மலர்ந்தன (நற். 242:3). பொனபோலும மலரையுடைய கொனறையுடன் பிடவமும புறவில் மலர்ந்தன (நற். 246:7,8). அரசருடையபோர் யானையின் முகத்தில் அணிநத பொன்னாற்செய்த நெற்றிப பட்டததின் புனைநலம் போல உள்ளே துளையமைந்த காயையுடைய கொனறையின் கிளைகளில் அழகிய கொடிபோன்ற பூங்கொத்துக்கள் பெரிய மலையின் உயர்ந்த இடத்தில மேமபட மலரும் (நற். 296:1-5). பொனனாலாய அணிகலன்களை மிக அணிந்த மகளிர் போல, யாவரும விரும்பும வண்ணம் மலர்விரிந்த நீண்ட சுரிநத பூங்கொத்தில உள்ள விளங்குகினற பூவையுடையது அழகு மிக்க கொன்றைக் காடு (நற். 302:1-3). நிறைய மலர்ந்திருக்கும் காயா மரங்களை உடைய குனறததினகண் இடையே கொனறை மலர்நதாற் போல மலையின் பிளவிடம் விளங்க மேகம் மினனின (நற். 371:1,2). 'பேரமர்ககண்ணி, காயா, கொனறை, நெய்தல், முல்லை, தளவம், பிடவு ஆகியன மலர்ந்து புறவு பூவணி கொண்டது ஆதலால் விளையாடுவோம்' எனக் கிழவன் பருவம் பாராட்டித் தலைவியிடம் கூறினான் (ஐங். 412). பொனபோல் மலர்ந்த கொனறையொடும் காயாவொடும் தோன்றியொடும் கூடிப் புறவு அழகு பெற்றது (ஐங். 420:1-3) நெடிய மலை மேல் நிறகும் குறுங்காற் கொன்றை பொற்றகடு போனற ஒளியுடைய மலரிதழ்களைக் கொடுக்கும் (ஐங். 430:1,2). நம் பெருமான சென்றவழி தூய்மை செய்த பொன் போன்ற நிறமும் ஒளியும் உடைய கொன்றை மலரைச் சூடிக் கொண்டு தன்கண் செல்வார்க்கு இன்பந்தரும் சிறப்பினதாம் (ஐங்.432:1,2). தலைவர் சென்ற வழியில் நிலத்தை அழகுறுத்தும் நெய்தற் பூக்கள் யாண்டும் மலரப் பொன் போன்ற நிறமுடைய அழகிய கொன்றையும் பிடவமும் நிறைந்திருந்தன (ஐங்.435). தலைவர் சென்ற வழியில் ஓடவிட்ட பொன்னையொத்த ஒளிபடைத்த கொத்தாக மலர்ந்த கொன்றையுடன குருந்த மலர்களும் நிறைந்துள்ளன (ஐங். 436). கொத்தாகக் காய்த்த காயையுடைய கொன்றையின் குழல போன்ற காய்கள் முதிர்ந்தன எனப் பருவ முதிர்ச்சி கண்ட தலைவி கூறி வருந்தினாள் (ஐங். 458 :1). பருவங் கண்டு வேறுபட்ட கிழத்தியிடம் 'காரணமின்றியே பெய்த வம்ப மாரியைக் கார்ப் பருவ மழையென்று பிறழவுணர்ந்த அறிவில்லாதனவாகிய கொன்றை தோற்றுவித்த மாலை போன்ற மலர்க் கொத்துக் களைக் கண்டு நீ துன்பம் கொள்ளற்க' எனக் கூறித் தோழி தெளிவித்தாள் (ஐங். 462: 1-3). கொன்றை குறிய பலவாகிய மாலைகளைப் போல மலரும் வண்ணம கார்காலம் வந்தது (ஐங். 497:1-3). பிரிவால் பசந்த தலைவியின் கண் போலக் கொனறைப் பூக்கள் மலர்ந்தன (ஐங். 500: 1). சிவ பெருமான் புலித்தோலுடுத்துக் கொன்றைப் பூவாற் செய்த மாலை தோளிலே அசைய அயன் தலையைக் கைக்கொண்டு காபாலம் என்னும் கூத்து ஆடினார் (கலி. 1: 11, 12). மழையை ஏற்று ,விளங்குகின்ற கொத்தினையுடைய கொனறை பூத்து நெருங்கியது (கலி. 102: 1-3). மெலலிய கொததினையுடைய கொன்றைப் பூவாலும் பிற பூக்களாலும் செய்யப் பெற்ற கண்ணியை ஆயர் மகளிர் சூடினர் (கலி. 103: 1-4). கோவலர் கொனறையின காயைத் திறந்து செய்த இனிய குழலில இசையெழுப்பும் இயல்பினர் (கலி. 106: 3). கொனறை, மாலை போன்ற பூங்கொத்துக் களைத் தோறறுவித்தன (பரி. 8: 24). மிக்க மழையை மேகம் பெய்தலால் நாண் மலராகிய புதிய கொன்றை மலர்க் கொத்துக்கள் பொன்னாலாகிய மாலைகளைப் போனறு விளங்கின (பரி. 14 : 10).

**கொன்றைத் தீங்குழல் - கொன்றைப் பழத்தால் அமைந்த**

குழல். கோவலர் நீள வளர்ந்த கொன்றைக் காயால அமைந்த கொன்றைத் தீங்குழலில் இசை எழுப்புவர் (கலி. 106: 3). கொனறையந தீங்குழல காணக.

**கொன்றையங்குழலர்** – **கொன்றைப் பழத்தால் அமைந்த குழல் உடைய இடையர்.** வளைநத மடிகோலிய உடையினரும் கோலைக் கையில உடையவருமாகிய இடையர் கொன்றையங்குழலராய - கொனறைப் பழத்தால் அமைநத குழலை யிசைப்பவராய - பின்னே நடந்துவர, ஒலிககும் மணிகட்டிய கழுததினை யுடைய பாறபசுக்கள மாலைக் காலத்தே மனை தொறும் செல்லும் (அகம். 54: 9-12).

**கொன்றையந் தீங்குழல்** – **கொன்றைப் பழத்தால் அமைந்த குழல்.** இடிமுழகக மில்லாத மழையுடனே கழுததில் கட்டப்பெற்ற மணிஓசை ஊரினகண்ணே கேட்கு மாறு ஆனிரையைச செலுத்தி வநத ஆயருடைய கொன்றையந் தீங்குழல் – கொனறைப பழததால் அமைந்த குழல் - மன்றுதொறும் இனிமையாக ஒலிகக மாலைக காலம் வநதது (நற். 364.7–11). கொன்றைத் தீங்குழல காணக.

**கொன்றையலங்கலந்தெரியலான்** - **கொன்றை மாலை யணிந்த சிவன்.** நீர்நிலைக் கருகே விளங்குகினற நறுங்கொன்றையலங்கலந் தெரியலான - சிவன் - இயங்கு மூவெயிலை எய்கையிலே பிறநத முழங்கழல் போல ஞாயிறு எங்கும வெமமை பரபபிச் சுட்டது (கலி. 150:1-3).

**கொன்றையவன்** - **கொன்றை மாலையணிந்த சிவன்.** தலைவன் பிரிவால் புலம்பும் தலைவி தன சிற்றிலில் கூடலிழைக்கத் தொடங்கி ஒருபாகம் இழைத்த போது இளமபிறையைக் கணடு இதுதானே பின்னர் நிறைமதியாய் வளர்ந்து வருததும் எனக் கருதி துகில் தலைப்பால மூடினாள்; பின்னர் 'மணி மிடற்றை யுடைய மாட்சிமைபபட்ட கொன றையவன - சிவன - சூடுதற்கு இதனைக் காணாது வருந்துவன் ஆதலால நெஞ்சே, இதனை அவனுக்குக் கொடுத்து விடு' எனக கூறினாள (கலி. 142:24-30).

**கொன்றோர்** - **1.அழித்தவர்.** ஒருவன் செய்த நன்றியைக் கொனறோர்க்கு - அழித்தவர்க்கு - அததீவினையி னின்றும் நீங்கும் உயதி இல்லையென அறநூல் கூறும் (புறம். 34:5-7).

**2. கொலைசெய்தவர்.** அம்பலம் ஒலியடங்க மனை களும் துயின்ற இந்நிலையில் கொன்றோரை - கொலை செய்தவரை - ஒத்தகொடுமையொடு நடு யாமம் பொருநத வரின் காமம் கடலினும் மிக்குக் கரைகடந்து செல்லும் (அகம. 128.1-4). மூங்கிற் காட்டில் வழிச்செலலும் வணிகர் போகும் இடங களின் பினனே இருதது இரக்கமினறி அவரைக் கொன்றோராகிய ஆறலைபபோர் அவர் இறநத தற்கு வருந்தாது தம அமபுகள கழிநததன பொருட்டே வருநதுவர் (அகம. 327 17-19).

**கொன்னாளன்** - **பயனறறவன.** 'நமக்கு அருளசெயது இலலறப பயன கொள்ளாத கொனனாளன - பயனற்றவன் - காட்டு மலையாயிருநதும கோங்கம் பூத்த பகக மலையெலலாம பொன்னாற செயத பல மாலையணிநத யானைகள் போல் தோனறு கின்றதே; இதற்குக் காரணம் என்ன' எனததோழி தலைவனை இயறபழித்தாள (கலி. 42:16-18).

# கோ

**கோ** - **1. வேந்தன.** 'அறநெறியைச சொலலும் மேற் கோளையும அதறகேறற மறததையு முடையவனும கொலயானை மேலே எடுககப்பட்ட கொடிகள் ஆகாயத்தை நிழல செயயுமபடி அதனை ஊாபவனு மாகிய எம் கோ - வேநதன - பலயாகசாலை முது குடுமிப பெருவழுதி பஃறுளியாறறின மணலினும பலகாலம வாழவானாக' எனறு நெட்டிமையார வாழததிப் பாடியுள்ளார (புறம. 9:6-11). 'உடுததுக கொளளவும போர்த்துக கொள்ளவும மாட்டா எனபதை அறிநதும படாததினை மயிலுககுக கொடுதத எம்கோ பேகனின கைவணமை எததுணை யாயினும ஈததல நனறு எனறு மறுமையை நோக கிறறனறு; பிறரது வறுமையை நோககிறறு' எனப பரணர அவனது ஈகையைப பாராட்டுவர் (புறம 141 10-15). நும் கோ யாரென வினவுவீராயின எமகோ கோப்பெருஞ்சோழன எனறு அவனொடு கெழுதகைமை கொணடு பாடுவர் பிசிராநதையார (புறம. 212.1,8). 'நும கோ யாரென வினவுவீராயின எம்கோ சேரலாதன' எனபர் குமட்டூர்க கணணனார் (பதி. 20:1,5). இமைய வரமபன நெடுஞ்சேர லாதனைக் குமட்டூர்க கண்ணனார பததுப பாடல களால பாடினாராக, அக்கோ அபபுலவர்ககு உம்பற் காட்டு ஐநநூறூர பிரமதாயம கொடுதது முப்பததெட்டியாணடு தெனனாட்டுள் வருவத னில பாகமும் கொடுததான (பதி. ப. 2. அடிககுறிபபு). களங்காய்க் கண்ணி நார்முடிச்சேரலைக் காப்பி யாற்றுக் காபபியனார் பத்துப் பாடலகளால பாடினாராக அககோ அபபுலவர்க்கு நாறபது நூறாயிரம் பொன் ஒருஙகு கொடுததுத் தான ஆள்வதில் பாகமும் கொடுததான (பதி. ப. 4. அடிக் குறிபபு). கடல்பிறககோட்டிய செஙகுட்டுவனைப

பரணர் பாடினாராக அக்கோ அவர்க்கு உடம்பற் காட்டு வாரியையும் தன்மகன் குட்டுவன் சேர லையும் கொடுத்தான் (பதி. ப. 5. அடிக்குறிப்பு). ஆடு கோட்பாட்டுச் சேரலாதனைக் காக்கை பாடினி யார் நச்செள்ளையார் பத்துப்பாடல்களால் பாடி யதற்குப் பரிசிலாக அக்கோ கலன் அணிகவென அவர்க்கு ஒன்பது காப்பொன்னும் நூறாயிரம் பொற்காசுகளும் கொடுத்து அவரைத் தன் அரச வையிற் பக்கத்தே அமர்த்திக் கொண்டான் (பதி. ப. 6. அடிக்குறிப்பு). 'பெருவெற்றியுடையவனும் நல் லோர் கணவனும் உன்னத்துப் பகைவனும் ஆகிய எம்கோ' என்று பாரியைக் குறிப்பர் கபிலர் (பதி. 61:1-8). செல்வக் கடுங்கோ வாழியாதனைக் கபிலர் பத்துப் பாடல்களால் பாடினாராக, அக்கோ அப்புலவர்க்குப் பரிசிலாகச் சிறுபுறம் என நூறாயிரம் பொற்காசுகளைக் கொடுத்து, நன்றா என்னும் குன்றேறி நின்று தன் கண்ணிற் கண்ட நாடெல்லாம் காட்டிக் கொடுத்தான் (பதி.ப. 7. அடிக்குறிப்பு). இளஞ்சேரலிரும்பொறையைப் பெருங்குன்றூர் கிழார் பத்துப்பாடல்களால் பாடி னராக, அக்கோ மயக்கம் இல்லாதார்க்கு அவர் மயங்குமாறு கொடுப்பீராக என்று அப்புலவர்க்கு உவகையினால் முப்பத்திரண்டாயிரம் பொற்காசு களைக் கொடுத்து அவர் அறியாமலே ஊரும் மனையும் வளமிகப்படைத்து அழகும் இன்பமும் இயலுமாறு பரப்பி எண்ணற்ற அருங்கலச் செல் வத்தோடு பன்னூறாயிரமாக வகுத்துக் காப்பு மறமாகிய கொடையினையும் அளித்தான் (பதி ப.9. அடிக்குறிப்பு). 'யாம் குரவைக் கூத்தாடித் தொன்னி லம் ஆளும் உரிமையுடைய எம் கோவாகிய பாண்டியன் இவ்வுலகின்கண் வாழ்வானாக என்று தெய்வத்தைப் பரவுவோம்; நீயும் அங்ங னம் பாடுதற்கு வருவாயாக' என்று தோழி தலைவியை அழைத்தாள் (கலி. 103 : 75 - 79). 'ஏற்றினையும் அதனை நம் பொருட்டுத் தழுவிய காதலரையும் பேணி நாம் கானத்தைப் பாடினோ மாய்த்த திருமாலை வழிபடுவோம்; அப்பயனால் எம் வீரம் பொருந்திய கோ (பாண்டியன்) பகைவர் நாடு என்னும் பெயர் கெட்டுத் தன்னாடு என்னும் பெயர் பெறுமாறு அவர் நாட்டைத் திறை கொண்டு அவரை வெல்வானாக' என்று ஆய்ச் சியர் குரவையாடினர் (கலி. 106:47-50).

2. வேந்த (அண்மை விளி). 'நின்னைப் பாடிய செவ்விய நா பின்னைப் பிறர் புகழைப் பாடாத வாறு நினக்கென்று ஒன்றையும் காத்துக் கொள் ளாது கொடுக்கும் ஆற்றலுடைய எம்கோ - வேந்த' - என்று சேரமான் யானைக்கட்சேய் மாந்தரஞ்சேர லிரும்பொறையைக் குறுங்கோழியூர்கிழார் விளித் துப் பாடுவர் (புறம். 22:31-33). வன்பரணர் காட்டி டத்தே வேட்டமாடியிருந்த வல்விலோரியை அணுகி இருபத்தொரு பாடல் துறையையும் முறையே பாடிமுடித்துப் பின்னர்க் கோ' என்று அவன் பெயரைக் கூறி விளித்தார் (புறம்.152:19-21).

3. தலைவன். 'அருவிகளையுடைய பாயல் மலைக் குரியோனான கோ - தலைவன் - ஆரமொடு பிற வற்றையும் தன்புகழ் எங்கும் பரவ வழங்கினன்' என்று சேரமான் வஞ்சனைத் திருத்தாமனார் பாடுவர் (புறம். 398: 27 - 30). 'இழும் என்னும் இசையுடன் இழியும் அருவிகளையும் வானளாவ உயர்ந்த உச்சிகளையும் உடைய தோன்றி மலைக் குரியனான கோ, வானத்தே விண்மீன்கள் பூத் தாற் போன்ற ஒளியும் நிறமும் அமைந்த பல ஆனி ரைகளைக் காளைகளுடனே நல்கினன்' என்று தாமான் தோன்றிக் கோனை ஐயூர் முடவனார் பாடியுள்ளார் (புறம். 399:30-34).

4. முன்னோன். 'எம் வேந்தனாகிய பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி தம் கோ - முன்னோன் - ஆகிய நெடியோனால் உளதாக்கப்பட்ட பஃறுளி என்னும் யாற்றின் மணலினும் பலகாலம் வாழ்வா னாக' என்று அவனை நெட்டிமையார் வாழ்த்திப் பாடியுள்ளார் (புறம். 9.8-11).

5. தந்தை. 'நீ அருள் செய்து என்னைக் கூடப் பெறின் அவ்விடத்தே நின் தாயும் அயலாருமே அன்றிப் பின்னர் நின் கோ - தந்தை – தாமே வரி னும் வருக; யான் அதற்கு வருந்தேன்' என்று வினைவல பாங்கின் தலைவன் அவ்வகைத் தலை வியை வழியிடையே விலக்கிக் கூறினான் (கலி. 116: 10-12).

6. பசு. 'இளையோளே, மறுவினையுடைய ஏற்றின் மேல் இருந்து ஆடிவிட்டுப் பின்னர் நீர்த்துறையில் தெப்பத்தின் மேல் கிடந்து அதனைத் தள்ளுகின்ற வனைப் போல தோன்றும் இவன் கோ - பசு - இனத்தையுடைய ஆயர் மகனல்லவோ, இவனைக் காணாய்' என்றுதோழி தலைவிக்கு ஏறுதழு வல நிகழ்ச்சியைக் காட்டினாள் (கலி. 103:36-39).

**கோஓய்** - கள் முகக்கும் கலம். வேளூரில் கள் விற்கும் இல்லத்திலுள்ள கட்சாடியைக் கோஓய் - கள் முகக் கும் கலம் - உடைத்திடின் அச்சாடியிலுள்ள கள் மழைத்துளி போலத் தெருவெல்லாம் துளிக்கும் (அகம். 166:1-4).

**கோஒல்** - அரசாட்சி. கோஒல் - அரசாட்சி - செம்மையா யிருத்தலால் சான்றோர் பலராகி மழை பிழைத் தலை அறியாத புன்புலத்தின்கண் உள்ளது, வளை

யலணிந்த மகளிருடைய தந்தையாகிய பாரியின நாடு (புறம். 117.6-10). கோல் காண்க.

**கோக்குளமுற்றனார்** - புலவர். 'கோககுளம் என்பது ஓரூா' அது வெண்காடு எனக் குறிக்கும். உ. வே. சா. 'கோககுளமுற்றம் என்ற சொல முழுதுமே ஓரூரின் பெயா எனறும் கொள்ளலாம்' என்பா (குறு. பாடினோர் வரலாறு). 'குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன்' எனற தொடரைக் காட்டிக் குள முற்றம எனபதே ஊர் எனவும கோ எனவும உரிமை பெற்ற உழுவித்துண்ணும வேளாண் மர பினர் எனற முறையில் இப்புலவா கோக்குளமுற்ற னார் எனறு பெயர் பெற்றாா எனவும விளககு வர் பி. நா. (நற். பாடினோர் வரலாறு). எவவாறாயி னும் இவர் ஊரால் பெயர் பெற்றவர் என பது தெளிவு. வையாபுரிப் பிள்ளையின் சஙக இலக் கியப் பதிபபும் இப்புலவர் பெயரை அவ்வகையி லேயே அடககும் (ச. இ. புலவர்களின் பெயா வகை). இவர் பாடல்கள் குறுநதொகையில் ஒனறும் (98) நறறி ணையில ஒனறும (96) ஆக இரணடுள. இரண டிலும் தலைவியின பசலை நோயினை இவர் பாடி யுளளார். பருவங்கண்டு ஆறறாது நெஞ்சழிந்த தலைவி பசலையுற்ற தனனிலைமையைத் தலைவ னுக்கு மாரிப பீரததலா சில கொண்டு அறிவிப பாரைப் பெறறால நன்று எனத் தோழிக்குரைத தலை இவரது குறுந்தொகைப பாடல் கூறும. நற் றிணைப் பாடலில், தலைவனொடு தொடர்ந்து பயின்ற பொழிலையும துறையையும் கானலையும் நோக்கி நினையுந்தோறும உருகித தலைவி பசந்த நிலையைச் சிறைபபுறத தலைவன் கேட்பக கூறித தோழி வரைவு கடாவுதலை இவா குறிததுள்ளார். இவருடைய இவ்விரு பாடலகளிலும் முலலைத் திணையும் நெயதறறிணையும சிறககினறன.

**கோகுலம்** - குயில். திருபபரஙகுன்றத்தில் முருகன் கார ணமாக மூணட போரில வள்ளியின பாஙகியர்க்கு ஆற்றாத ஆயிரங்கண்ணோன மகளுடைய பாங்கி யா முருகனைச சூழ்ந்து கோகுலமாய் - குயிலாய் - கூவினர் (பரி. 9:58-65).

**கோங்கம்** - கோங்கு. தலைவியும் தோழியும் அருவியா டிய பின மலையெருககம் பூவுடனே விரிநத பூக களையுடைய கோங்கம் - கோங்கு - உள்ளிட்ட பல மலர்களையும் கொயது பாறையிலே குவித்த னர் (குறி. 73). மாணிழை மகளிருடைய மதர்த்த அழகமைநத பூணணிநத முலைகளைப் போனற முகைகள அலாநத கோஙகம பூக்களொடு கொத் துககளாகிய புனலிப் பூககள் முதலியன கூடிக் கிடககக கானம பெரிதும விருமபததககதாயிருந தது (அகம். 99:8-10). 'கைநதொழில் வல்ல கம்மி யன் அழகு பொருந்துமாறு மாணிக்கக் கற்களை இடைடிழைநத பொன்னினாலாகிய சுரிதகம எனனும அணிபோன்ற வடிவினை முளவேனிலில பெரிய கோஙக மரத்தின அவிழ்ந்த முகைகள மலாந்தன (நற். 86:5-6). 'கார்த்திகைத் திங்களில எடுககப பட்ட ஒளியையுடைய நெடிய விளக்குகளின வரிசை போலப் பல பூக்கள நிரம்பிய கோஙகம காட்டினை அழகு செய்யும (நற். 202:9-11). 'திண ணிய நிலையினையுடைய கோங்கமரம முகிழ்த்த அழகு மிகும் கொழுத்த மொட்டுக்கள அலர்ந்த கால மாகிய இளவேனில வநதது; இபபருவததே தாம மீள்வதாகக் குறிததுச சென்ற தலைவரோ இன னும் வநதிலா' எனறு தலைமகள் இரஙகி மொழிந தாள் (ஐங. 343). 'அன்னையே, தளிரையும பூங கொத்துக்களையுமுடைய கோஙகமரம் கொடுதத தாகிய இத்தலைவியின நோயைச் சிறிதும் அறியலா குமோ' எனத் தோழி செவிலியிடத்து வினவுமுறை யில தலைவிககும தலைவனுககும் இடையில நேர்நத பூத்தரு புணாச்சியைப புலபபடுத்தி அறததொடு நினறாள (ஐங. 366). 'இவ்விளவேனிற பொழுது, புதிய மலாகளையுடைய கோங்கம பொன என னும்படி தாதினை உதிர்க்குமாறு வந்து கொடுமை செய்யும' எனறு தலைவி தலைவனாற குறிக்கப பட்ட பருவ வரவினைக்கண் ஆற்றாது நெஞ்சழிந் தாள் (கலி. 33:12-14). 'நம்மை அருளி இல்லறப பயனை ஆளாமல பயனின்மையை ஆளுகினற தலை வனது நாட்டு மலையாயிருநதும தனமை மிகக நறுமணமுடைய கோஙகம பூத்த பககமலைபோல லாம் பொனனால செயத பல ஆரமணிந்த யானை கள் போலச சிறநது தோனறும்' எனத் தலைவனை காண்பதற்கு அரியனான காலததில தோழி அவனை இயறபழிதது மொழிநதாள் (கலி. 42:16-18). திருப்பரஙகுன்றத்துச் சுனையினருகே காலம் குறியாது பூக்கும கோங்கம் உள்ளிட்ட மலர்கள பலவும் நிறைநதும நிறம் மாறுபட்டும இடையிட் டும் நெருங்கியும பூததிருநதன (பரி. 19:74-84).

**கோங்கு** - கோங்கம், வேனிற் காலத்திற பூப்பதாகிய கோங்கின - கோங்க மரததின - பூவிடததேயுள்ள பொகுட்டுப் போனற வளைநத அழகிய செவி களையுடையது கொல்லை வரபபில வாழும எலி (புறம். 321:4,5) வேங்கை மலையில விரிநத கோங் கின் அரும்பினது வனபபுடன ஏநதிய முற்றா இளமுலைகளை யுடையவள தலைவி (புறம். 336:9-11). சூரர மகளிர் கோஙகின் குவிநத அரும்பை யொதத தம் இளமுலையில மருதமபூவை அப பினாற போல் சந்தனக் குழமபை அப்பி முருகனது

கொடியை வாழ்த்தி மலையகம் எதிரொலிக்கப் பாடி யாடுவர் (முரு. 33-41). புதிதாகப் பூத்தலை யுடைய கோங்கினது விளக்கம் மிக்க முகையை இகழ்ந்த முலையை உடையவர் விறலியர் (சிறு. 25, 26,31). தாதுக்கள் சூழ்ந்த கோங்கின பூவும் ஏனை மலர்களும் பரந்து மாலை ஒழுகினாற் போல ஓடும் பெரு நீர் வரவை யுடையது வையை (மது. 338-340). வண்டுகள் இலவ மலரில் உகுத்த கிளைத்த பூக்களையுடைய கோங்கின் நுண்தாது பவளச் செப்பிலே விற்போர் பொற்பொடியைச் சொரிந்தது போல் தோன்றும் (அகம். 25:9-11). உயர்ந்த மலைத்தொடரின் உச்சியில் இரவில் விண்மீனொடு பொலிந்த வானம் போல் தோன் றித் தேன ஒழுகப்பட்டு ஆரவாரிக்கும் விளக்க முடைய பூங்கொத்துக்களைக் கொண்ட கோங்கின் மீது காற்று மோதுதலால் கழன்று வீழும் இட மெல்லாம நறுமணம் கமழ்வதாகிய புதுமலர் தனது இடத்தினின்றும் வீழ்கின்ற விண் வீழ் கொள்ளி போலத் தோன்றும் (அகம். 153:13-18) கோங்கின மீது படாந்து இரவில மலர்ந்த அதிரல் கொடியைக் காட்டு யானைகள் வைகறையில் அரும்புடன் இழுத்துக் கவளமாய் உண்ணும் (அகம் 157:5-8). 'தலைவியது கோங்கு அரும்பினாற் போன்ற குவிந்த முலையினையுடைய மார்பகத்தே இனிய துயிலைத் தலைவன விரும்பினான (அகம் 240:9-12). பொன்னால் இயன்ற கன்னத் தட்டு (தராசுத்தட்டு) பொலிவுற அதில் வெள்ளிக் கம்பியின அறுத்த துண்டங்கள உதிருமாறு போல இள வேனிற் காலத்தில் கோங்கின் பூவகத்தே குரவ நறுமலர்கள் வண்டினம் ஊதுந்தோறும கிளையி லிருந்து உதிரும் (அகம. 317:8-11,14). 'கோங்கும் மெல்ல மெல்லக் கொய்யப்படும் தளிர்களை எய் தின' என இளவேனிற்காலத்தை நோக்கிப் பிரி வினக்கண தலைமகள் இரங்கினாள் (அகம். 341:1,2, 12). 'இலையில்லாத அழகிய கிளைகளிடத்தே இனமான வண்டுகள் ஆரவாரிக்கும்படி முலை களை யொத்த மெல்லிய அரும்புகள் விரிந்த கோங் கின முதற பூக்கள மலரத தொடங்கின (குறு. 254). புல்லிய புறவிதழ்களையுடைய கோங்கின மெல் லிய அகவிதழ மிக்க குடைபோன்ற பூக்கள் வைகறைப் பொழுதில் விளங்கும் விண்மீன்களைப் போல தோன்றும (நற். 48:3,4). காட்டாற்றில் நீராடிய தலைவி அதன நீரோட்டத்தால் ஈர்க்கப் பட்டு ஆழும நிலையில், பொரிந்த அடிமரத்தை யுடைய கோங்கின் பொன்போன்ற நிறம் அமைந்த பசிய மலரை வேங்கைப் பூங்கொத்துடன வேற றுமை தெரியச் சூடிக் கொண்டு தேரில் வந்த தலை வன் அவளைக் காப்பாற்றிக் கரை சேர்த்தான் (ஐங். 367). வளம் பொருந்திய கிளைகளை யுடைய கோங்கின் மலரால் புனையப்பட்ட குளிர்ந்த மணங்கமழும் மாலையை வண்டினம் மொய்க்கும் படி தலைவன பரத்தைக்குச் சூட்டி அவளுடன் விரும்பித் தங்கினான் (ஐங். 370:1-3). 'நல்லவளே, முற்றிய கோங்கினது இளமுகை யென்னுமாறு பெருத்த நின் இளமுலைகள் நின்னைக் கண்ட வருடைய உயிரை வாங்கிக் கொள்ளும் என்கின்ற நிலைமையை நீதான் அறிவாயோ, அறியாயோ' என்று காமஞ்சாலா இளமையோளைக் கண்ட தலைவன் வினவினன (கலி. 56:23-26). 'முதிராத கோங்கின் இளமுகையை ஒப்பத் தோன்றிய தொய்யில் எழுதிய வனமுலையை உடையவளே' எனத் தலைவன தலைவியை விளித்தான் (கலி. 117:2-4).

**கோச்சேரமான் யானைக்கட்சேஎய் மாந்தரஞ் சேரலிரும் பொறை** - சேரவேந்தன். சேய் என்பதே இவனது இயற்பெயர். யானையினது நோக்குப் போலும் நோக்கினை யுடையவனாதலால் இவன் யானைக் கட் சேய் என அழைக்கப் பெற்றான. அதனுள் சேய் என்பது இங்கே சேஎய் என அளபெடுத்து வந்தது. 'வேழ நோக்கின் விறல்வெஞ் சேஎய் (புறம். 22,29) என்று இப்பெயரைப் பாடலிற் பயிற்றுவர் குறுங்கோழியூர் கிழார். மாந்தரஞ் சேரலிரும் பொறை என்பது இவனுக்குரியதொரு சிறப்புப்பெயர் (திருக்குறள் 355: பரிமேலழகருரை) சேர வேந்தருள் கோச்சேரமான என்ற பெரும்பெயர் பெற்றவன இவனே. குறுங்கோழியூர் கிழார் (புறம். 17,20,22), பொருந்தி லிளங்கீரனார் (புறம். 53), கூடலூர் கிழார் (புறம். 229), பெருங்குன்றூர் கிழார் (பதி. 90), பரணர் (அகம். 142) ஆகியோரால் இவன் பாடப்பெற்றுள்ளான். கடலின் ஆழத்தை யும் உலகில் பரப்பையும் திசையையும் ஆகாயத் தையும் 'வரையறுத்தறியினும் அறிவும் அன்பும் கண்ணோட்டமுமாகிய பண்புகளையுடைய இவன் அளத்தற்கரியவன் எனக் குறுங்கோழியூர் கிழார் பாராட்டுமாறு இவன் அப்பண்புகளில் மேம்பட்டு விளங்கினான. இவனது குடைநிழற்கண் வாழ் வோர் செஞ்ஞாயிற்றின் வெம்மை யல்லது வேறு வெம்மை யறியார்; இந்திரவில் அல்லது பகை வரது கொலைவில்லை யறியார்; கலப்பை அல்லது வேறு படைக் கலமும் அறியார் என்னுமாறு இவன் அறம் தங்கும் செங்கோல் செலுத்தினான. 'மாந், தரஞ் சேரல் ஓம்பிய நாடு தேவருலகத்தை ஒக்கும்' என்று இவனது காவற்சிறப்புப் பிறரால் பேசப்பட்டது. தன்னைப் பாடிய புலவர்

பின்னைப் பிறர் புகழைப் பாடாதவாறு இவன தனக்கென்று பாதுகாத்துக் கொள்ளாது கொடுக் கும் ஆற்றலை யுடையவன. 'இவனுடைய புகழ விரிப்பின் அகலும்; தொகுப்பின் எஞசும்' என்பது பொருந்திலிளங்கீரனாரது கணிப்பாகும். இவன் கபிலா பால் மதிப்புடையவன. தன்னைப் பாடுதற்கு அவர் இலலையே எனறு இவன பின்னாளில ஏங்கி னான் எனறும் அந்த ஏக்கம் ஒழியுமாறு பொருந்தி விளங்கீரனார் பாடினார் எனறும் புறப்பாடல் ஒன்றால் (53) அறியலாம். ஒருகால் இவனுக்கும் சோழன் இராசசூயம் வேட்ட பெருநற் கிள்ளிக்கும் போர் மூள, அசசோழனுக்குத் தேர்வண்மலையன துணை வநதமையால இவன் படைகுன் றித் தோற்க நேர்ந்தது (புறம். 125). மற்றொருகால் பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழி யனால எவ்வாறோ சிறைப்படுத்தப்பட்ட இவன் வலிதில தானே சிறை நீங்கிப் போய்த் தனனரசு எய்தினான் (புறம். 17). யானை அகப்படும் குழிமேல் பாவபபட்டதைத் தன் மனச்செருக்கால பாது காவாது சென்று ஆழ்ந்த அக்குழியினகண அகப் பட்ட கொல்களிறு அதன நிலை சரியக் குழியைத் தூர்த்துத் தன்னினம் விரும்பச் செனறு பொருநதிய செயலை உவமை காட்டி இவனது இவ்வாற்றலைப் பாராட்டுவர் குறுங்கோழியூர் கிழார். அறவோனா கவும மறவோனாகவும் ஆண்ட இவன் தன் அவைக் களப்புலவராய கூடலூர் கிழாரைக் கொண்டு ஐங குறுநூறறைத் தொகுப்பிததுத் தமிழ்த் தொண்டி லும் தனக்கென ஓரிடம் அமைததுக் கொண்டான. இறுதிக் காலத்தில் இவனது இறப்பிறகான வானி யல் குறியினைக் கணட கூடலூர் கிழாரும் பிறரும் ஐயுற்று 'இவன நோயிலனாயின நனறு' என நெஞ சழிந்திருக்க, அன்றைய ஏழாம் நாளே இவன தப்பாது மேலோருலக மெய்தினான. சேஎய், சேரமான் மாந்தரஞ்சேரலிரும்பொறை, சேரமான யானைக்கட்சேஎய் மாந்தரஞ்சேரலிரும்பொறை, சேரமான் யானைக்கட் சேய் மாந்தரஞ்சேரலிரும் பொறை, சேரன் மாந்தரஞ்சேரலிரும்பொறை, மாந்தரஞ்சேரலிரும்பொறை, மாநதரம் பொறை யன் கடுங்கோ, மாந்தரன், யானைக்கட்சேய் மாந்தரஞ்சேரலிரும்பொறை காண்க.

**கோசர்** - ஒருவகை வீரர். வெற்றிவேலையுடைய இளைய பல கோசர் விளக்கம் மிக்க படைக்கலம் கற்பாராய் மாறுபட்டு எறிந்த முருக்க மரத் தூணாகிய இலக்கு தொலையாது நிற்கும் (புறம். 169: 8-12). வெறறியை விரும்பும் கோசருடைய அவைக்களம் (புறம். 283: 6). வாட்டாற்று எழினியாதனது நாட்டில்,மலர்களிடத் திலிருந்து வடித்துப்பெற்ற கள் நிறைந்த மனைகளை யுடைய கோசர் இனிய அக்கள்ளின் தெளிவை உண்டு களிப்புமிகுதது குரவைக கூத்தாடு மிடத் தில் இனிய பாடல்கள் இசைக்கப்படும் (புறம்.396:7-9). பழையனது மோகூரிடத்து அவையகம விளக்க முறும்படிஅறியக கூறியநானகு வகையாகிய கோசர் வஞ்சின மொழியினால் மேம்பட்டு விளஙகினா (மது. 508-510). பகைவரை வஞ்சியாது எதிர்நின்று பொருது கொல்லும் தப்பாத வாளினையுடைய இளைய பலராகியகோசர் நினனுடைய வாயமொழி யைக் கேட்டு அதன்வழி நடகக நீ இனிதே உறை வாயாக எனப் பாண்டியன தலையாலங்கானத துச்செருவென்ற நெடுஞ்செழியனை மாங்குடி மருத னார் வாழ்த்துவர் (மது.773,774,781). மெய்ம்மொழி யாற் சிறந்த பெரிய அணிகளையணிநத தலைமை கொண்ட கோசர்களுடையது துளுநாடு (அகம். 15:2,5). படைக்கலம் உணடாககிய வடுககளை யுடைய முகத்தினரான அஞசாமை கொணட கோசர்ககுரியது நியமம எனனும் செலவம மிகக ஊர் (அகம். 90. 11,12). நணபா ஆக்கம கெட்ட காலததிலும் அவரிடததுக கொணட பழைய நட் பினில் திரியாதவராயச செனறு அவர் குறிப்பி னில் ஒழுகும் மாறுபாடில்லாத அறிவுடைமையால அஃதை எனபவளைக் காத்து அவளைக காவ லமைந்த இடததே நிலை நிறுததியவர் பல வேல களையுடைய கோசர்; அவாககுரியது புதிய கள் மணம் கமழும் நெய்தலஞ்செறு எனனும ஊரினை யுடைய வளம பொருநதிய நாடு (அகம. 113 1-7). அனனி மிஞிலி எனபாள தன தநதையின கணண ழகைக் கெடுத்துக குருடுபடுததிய தவறறிறகாக நெடு மொழியினையுடைய கோசரைத திதியனது அழுநதூரிடததே அச்சமுண்டாகக் கொலலச செயது மாறுபாடு தீர்நதாள் (அகம. 196 8-12). உணமை நிலைபெறறவரும நெடுநதூரததும் விளங் கும்நல்ல புகழினையுடையவருமாகிய வளம பொருந திய கோசரது விளககமுறற படையினை யழிதது அவரது நிலததைக கைககொளள விரும்பினான் சோழன் (அகம. 205 8-10). ஆதன எழினியின செலலூரிடததே இளம்பல கோசர் கடலாடும் மக ளிர் கொய்து வநத புலிநகக் கொனறைப பூவையும் கழனியில் உழுவோர் களையெடுககையிற பறிதது வந்த குவளைப் பூவையும காவற் காட்டினை யுடைய முல்லை நிலததே பூத்த முலலைப் பூவுடன் சோத்துத் தலைமாலை கட்டி விளையாடுவர் (அகம். 216:8-14). வெறறிக கொடியினையும் காற்றை யொத்த விரைவினையுடைய அணி செய்யப் பெற்ற தேரினையும் கொணட கோசர் மிகக தொனமை வாய்ந்த தமது ஆலமரத்தின மனறத்திடததே முர

சம முழங்கப் பகைவரது போர்முனையை அழித்த னர். அப்போது மோகூர் மன்னன் பணியாமையால அவர்க்கு நண்பராய குதிரைகள் நிறைந்த தானை களையுடைய மோரியர் அம்மோகூர் மன்னன்மேல பகை கொண்டு வந்தனர் (அகம.251:6-12). புனசெய நிலததில செழிதது வளர்ந்த பயற்றினை மேயந்த தறகாக அன்னி மிஞிலி எனபவளுடைய வாய்மை மிக்க தந்தையைப் பழமை வாயநத ஊரிலுள்ள கோசர் அருளாமல கண்ணைக் களைந்து துன்புறுத் தினர்; அககொடுமை பற்றி அவள உண்ணாம லும உடுக்காமலும சினத்தினால மேற்கொண்ட நோனபிறகுரிய வடிவம மாறாமலும் இருநது திதி யனிடத்தே கூறி அவரது இன்னுயிரை அவனால் போக்கிச சினம் மாறி உவகை உற்றனள (அகம்.262: 1-13). 'தோழி, விடலையொடு (தலைவனொடு) நம் மகளாகிய மடந்தை கொண்ட நட்பு முரசு முழங் கவும சங்கொலிக்கவும் மணவினையிலே முடிநத மையின அந் நட்பு தொனமை மிக்க ஆலமரத் தின் கீழ அமைநத மனறததின்கண தங்கி விளங் கிய நாலூர்க கோசரது நன்மொழிபோல உண்மையானது' எனச செவிலி, தலைவனொடு தலைவி உடனபோய மணநத நிலையில் நற் றாய்ககு அறததொடு நினறு கூறினாள (குறு. 15). 'நனனனது காவல மரமாகிய மாமரததை வெட்டி அவனது நாட்டினுள் புகுந்து கைபபற்றிய வருசி னததையுடைய கோசர் போலச் சிறிது வன் கண்மை யமைந்த சூழ்ச்சியும நமககு வேண்டும்' என்று தோழி, தான தலைவனுககுப் பகறகுறி மறுத்து இரவுக்குறி நோநதுப் பின அதுவும் மறுத்த நிலையில தலைவியிடம கூறினாள் (குறு. 73.2-5).

**கோட்டம் - 1 வளைவு.** கோட்டம - வளைவு - அமையாத கொடுத்த கண்ணி சூடிதல இவனுககுப பொருநதியுளது எனப போர் மறவனொருவன புகழ்ப பெறுகினறான (புறம. 275:1-3). திரண்ட மரத்தின கோட்டமான இடததை விட்டு நீங்கா மல் பற்றி வளர்ந்த பூங்கொடி போல எம முடைய வடிவொப்பில்லாத கூறுடம்பை முயங்கி எம்மைக காப்போமென்று கூறுவோர் பலர் எனக் கூனியாய தலைவி குறளனான தலைவன் கேட்பத் தனககுள் கூறினாள (கலி. 94:22-25). செவிமறை யாய் இருக்கும் ஏறறைத் தழுவிய தலைவனின தலையில கிடந்த முல்லைபபூவால கட்டப்பட்ட கோட்டமுடைய கண்ணியைக் கொமபிலே எடுத் துககொண்டு அலைத்த பெரிய புகர்நிற ஏறு துள்ளியதனால் அப்பூங்கண்ணி தலைவியின் கூந்தலில சென்று வீழந்தது (கலி. 107:6-9).

2. கோயில். முழங்கும் கலங்களைத தொடக கூடா மல விலக்குண்ட பூபபுடை மகளிர், வருத்தும் இயலபுடைய முருகன கோட்டத்தை - கோயிலை - அணுகுதறகஞ்சி அகலவர் (புறம. 299:6,7). 'தேவர் கோட்டம வலம் வந்து பினனர் இவனோடே நீ சென்ற இடங்களை யெல்லாம் எமக்குச் சொல்' என்று தலைவி தோழியைக் கேட்டனள் (கலி. 82:4,5). காமஞ்சாலா இளமையளாய வினை வல பாங்கின தலைவியைக் கண்ட தலைவன், 'இவள் தெயவததிறகுச் சமைககும பாலோடே காமன்கோட்டம் புகுவாளாயின் அக்காமனும் இவளைக் கண்டு நெஞ்சழிந்து தன் கைபபடை யைக் கீழே போட்டு விடுவான' எனக் கூறினான் (கலி. 109:19,20).

3. கரை. மேகம் நீங்கிய விசும்பிடத்து மதியைச் சேர்ந்த வெள்ளிய மகமீனின வடிவுபோனற வலிய உயர்நத கோட்டத்தை - கரையை - உடைய நல்ல பொய்கைகள் நிறைந்தது காவிரிப பூம்பட்டினம் (பட். 34-38).

4. மாறுபாடு. தலைவனை இடையீடின்றிக கூடப் பெறாமையால தோனறிய தலைவியின மெய்வேறு பாட்டை வேறொன்றாகக் கருதித் தெய்வததால் அறியப்படுகின்ற கழங்கினால் கோட்டம் - மாறு பாடு - இன்னதெனக் காட்டி வெறியாட்டு எடுத்த வழி இமமாறுபாடு தீரும் என்று அறிநத உளளத் துடன செவிலி அதற்காக ஆட்டினை யறுத்து விழா வயர்ந்தாள் (நற. 47:7-10).

**கோட்டம்பலத்துத் துஞ்சிய சேரமான் - புலவர்.** சேர வேந்தர், கோட்டமபலம எனனுமிடத்தே உயிர் நீத்தமையால் கோட்டமபலத்துத் துஞ்சிய சேர மான எனப பினனர் வழஙகப் பெற்றார். சேர மான கோட்டம்பலத்துத துஞ்சிய மாக்கோதை என்ற புறநானூற்றுப புலவர் (245) இவராகவே இருத்தல கூடுமாதலின இவரது இயறபெயர் மாக் கோதை என்று கொளளற்கு இடமுண்டு. வையா புரிபபிள்ளையின் சஙக இலக்கியப பதிபபு, கோட் டமபலத்துத் துஞ்சிய சேரமானையும் சேரமான் கோட்டம்பலததுத துஞ்சிய மாககோதையையும் இருவராக வேறுபடுததுமாயினும் ஒருவராக உணர் வதே சாலும். எனவே, புறநானூறறில ஒனறும் (245) அகநானூற்றில ஒன்றுமாக (168) இரு பாடல்களையும இவருடையனவாகக் கொளள லாம். தம் மனைவி, மாயநதாளாக அவளைக் கள்ளி வளர்ந்த புறங்காட்டுள் ஒள்ளழற் பள்ளியில சேர்ததியபின காதலியை இழந்த தபுதார நிலை யாக இவர் பாடிய புறபபாடல இரககம் மிக்கது. 'ஞாங்கர் மாய்ந்தனள மடநதை, இன்னும் வாழ்

வல் என்னிதன் பண்பே' என்ற அடிகளால் மனைவி யிடத்து இவர் கொண்ட அன்பும் அவள் மாய் வில் இவருற்ற இரக்கமும் வெளிப்படுகின்றன. இவர் தம் அகப்பாடலைக் குறிஞ்சித் திணையில் இரவுக்குறி வந்த தலைமகனைத் தோழி ஆற்ற ருமை கூறிக் குறி விலக்கி வரைவு கடாவிய துறை யில் பாடியுள்ளார். அப்பாடலில் பலலான குனறு, குழுமூர் ஆகிய இடங்களையும் கொடைககடன ஏற்ற கோடாத நெஞ்சையுடைய உதியன் என்பா னது ஆரவாரம் மிக்க அட்டிற் சாலையையும் இவர் குறிப்பிட்டுள்ளார். இரவில் புலி முழக்கங் கேட்டுக் களிறு தன் ஈன்றணிமை கொண்ட பிடி யைத் தழுவியவாறே கனறினைக் காத்து நிற்கும் அன்புக் காட்சியையும் அப்பாடலில் அழகிய புனை வாகக் காணலாம்.

**கோட்டம்பலவனார்** - புலவர். 'கொட்டம்பலவனார்' காண்க.

**கோட்டி** - மாந்தர் கூட்டம். 'கோட்டியுள் - மாந்தர் கூட்டத்துள் - கொம்பு போல்வாளுடைய குவி முலையை நோக்கும் இவன் இளநெஞ்சன; திண்மை இல்லாதவன்' என வையை நீர்த்துறை யில் ஒருவனைக் குறித்துச் சிலர் பழித்தனர் (பரி. 12:50,51).

**கோட்டியூர் நல்லந்தையார்** – புலவர். பாண்டி நாட்டி லுள்ள திருக்கோட்டியூர் எனனும் ஊரினரான நல் லன என்பானுக்குத் தந்தையார் என இவரது பெயர் விளககம் பெறும். நல்லன் தந்தையார் நல்லந்தையார் என முடிவதற்குத் தொலகாப்பிய எழுததததிகார 348-ஆம் நூற்பாவிலமைதத 'துவர' என்னும் கிளவியைக் காட்டுவர் பி.நா. (நற். பாடினோர் வரலாறு). இப்புலவர் நெய்தற்றிணையில பாடிய ஒரு பாடல் நறறிணையில் (211) இடம்பெற் றுள்ளது. வரைவு நீடலால் தலைவியின் ஆற்றாமை யைத் தோழி சிறைப்புறத் தலைவனுக்கு உணர்த்தி அவனை வரைவு கடாவுவதாக இவர் அப்பாடலை இயற்றியுள்ளார். கடற்கரையில இரைதேடி வந்த குருகினது எற்றுதலினின்று தப்பியோடிய இறாமீன் அருகிலுள்ள தாழம்பூவை நோக்கி அக்குருகென அஞ்சும என்ற புனைவினுள் ஊரார் பழிதூற்றலி னின்று தப்பிய தலைவி அன்னையைக் கண்ட விடதது அவளையும் ஏதிலாட்டியெனக் கருதி அஞ்சுவாள் என்ற அழகிய உள்ளுறைப் பொரு ளைத் தோழி கூற்றில வைத்துத் தலைவனுக் குணர்த்தும் நயததை இவர் பாடலில காணலாம்.

**கோட்டினம்** - எருமையினம். 'போரரை விரும்பும் ஏற்றின கழுத்திலே பாய்நது அதற்கு இட்ட மாலை போல அதனைத தழுவியவன கோட்டி னதது - எருமையினத்தை உடைய - ஆயர் மகனா வான் காண்' எனத் தோழி தலைவிககுக் காட்டி னாள் (கலி. 103:32-35). 'நெடிய கரிய கூநதலை யுடையவளே, யான கூறும சொலலையும ஆராயநது பார்பபாயாக; கோட்டினத்து ஆயர் மகனோடு யாம் கூடியதறகு எமமுடைய சுற்றத் தாரோ இனனும் பொறுபபா; அது பொறாத அயலார் தமமுடைய கணகள எங் கணகளை நோக் கித் தீய்ந்து போவது என்ன பயனுடைதது' எனத் தோழி தலைவியைக் கேட்டாள (கலி. 105:57-60)

**கோட்டுமா** - 1. யானை. குளமுற்றததுக் துஞ்சிய கிள்ளி வளவனின் படை, மன்னரது கொல யானை புண் பட்டு வருநதும் கொடியெடுககப்பட்ட பாசறைக் கண் குருதிப் பரப்பில கோட்டுமா - யானையை - கொன்று புலாலையுடைய போர்க்களத்தை உண் டாககியது (புறம். 69:8-11). 'மலைநாடனே, இருள் முதலிய இடையூறுகள் பெருகுவன வாயின, ஆத லால் இனிக் கோட்டுமா திரியும் அடாநத காட்டு வழியினூடே நீ வாரறக' என இரவுக்குறி வந்து மீளும் தலைவனிடத்துத தோழி கூறினாள (ஐங். 282.3-5).

2. பன்றி. வேட்டுவன் மலைச்சாரலில கோட்டு மாவை - பன்றியை - கொல்ல எய்த அம்பு ஊர்நத பசிய தசையில ஊடுருவிச் சிவநத நிறம் எய்தியது போலத் தலைவி செவ்வரி பரநத கணகளை யுடையவள் (நற். 75:5-8).

**கோட்டுமீன்** - சுறா. மாவின தீங்கனி நறும புளியும வரால் இறைச்சியும் கோட்டு மீனின - சுறாமீனின - கொழுவிய துண்டமும வளளைக் கீரையும பாகற் காயும சேர்த்துச சோறு அமைக்கப பெற்றது (புறம். 399:4–9). தொணடியில உளள பரதவர் மணல மேட்டு அடைகரையில வநது கிடக்கும் கோட்டு மீன் கொளளையைப பாக்கத்திலுளள பலர்க்கும் பகுத்துக கொடுப்பர் (அகம். 10:10-13). முதலையோடு கோட்டுமீன வழங்கும் கரிய உபபங் கழியாகிய அரிய வழியினைக் கடநது சேர்பப னாகிய தலைவன் இரவுககுறிககண வந்தான (அகம். 80:1-3). தாழை மரததின கிளையில விருப பம் மிக்க பெடையுடன் வருத்தமுடன் தளர்நதிருக் கும் சிறிய கடற்காக்கை யாமததில கோட்டுமீன வழங்குகினற, வேட்டையாடுதல நீங்கிய இடததி லுள்ள வெள்ளிய இறாமீனைப பற்றி யுண்பதாகக கனவு காணும (அகம். 170:9-12). வளைநத மீன் படகை யுடைய பரதவர் கோட்டுமீன் எறியுளி யால வீசக் கரையிடததே இருந்த அன்னத்தின

கூட்டம் கெட்டோடும் (குறு. 304:1-6). 'மீனைக் கவர வரும புள்ளை ஓபபலின பகற் பொழுது கழிநதது. எமரும் கோட்டுமீன எறிநத உவகைய ராயப பின்னும வேட்டை மேற்செலலாது தததம் மனையிடதம்த தங்கிவிட்டனர்' எனக் கூறித தோழி தலைமகளை இரவுககுறி நயப்பிததாள் (நற். 49 4-6).

**கோட்டை** - அரண். மலையமான சோழிய ஏனாதி திருக்கண்ணன் புலி எழுதப்பெற்ற இலாஞ்ச னையை யுடைய கோட்டையை - அரணை - உடை யவன (புறம். 174:17).

**கோட்படுதல்** - **கொளளபபடுதல்.** ஆடுகோட்பாட்டுச் சேரலாதன, தண்டகாரணியததுப பகைவரால கோட்பட்ட - கொளளபபட்ட - மலையாடுகளை மேறகரையிலுளள தொண்டி நகரத்தே கொணடு வநதான (பதி. ப. 6:3,4). நடுவே பாய்நது கழுத்தி டததே தழுவிக்கொணடு கிடந்தவனோடே பர ணின மேல தாவிப் பாயும் வெள்ளிய ஏறு பாம் பின் வாயால் கோட்பட்டு அப்பாமபுடனே வானத் தில் போகும் பால்மதியைப் போனறு இருந்தது; (கலி. 105:43-46). ஆயாமகன சூடி வநத முலலைத் தொடையினையும் கணணியையும் நான் கூந்தலி விட்டு முடிததேன; வெணணெய தேய்க்கச் செவி லிததாய என கூநதலை விரிததபோது வீட்டவா எலலோருங்காண அமமுலலைபபூ வீழ்நதது; அத னால் நாம் கரநத களவொழுககம வெளிப்பட்டுக் கையொடு கோட்பட்டாம எனத தலைவி தோழி யிடம் கூறினாள் (கலி. 115.3-9).

**கோட்பதம்** - **பயன்கொள்ளும் நிலை.** பாரியின் பறம்பு மலையில அவரையின கொழுவிய கொடியின்கண் வெளளைக்காய கோட்பதம - பயன் கொளளும நிலை எயதியது (புறம. 120:10,11).

**கோடல்** - **1. காந்தள்.** குறவர் தலைவனாகிய ஏறைக் கோன கோடல - காநதள் - பூவாற் செயத கண ணியினை யுடையவன (புறம. 157·7). முல்லை நிலத திலை கோடலின குவிந்த முகை அஙகை போல விரிநது தோனறின (முலலை. 95). கோவலர் சூடிய கோடலின நீணட இதழ்களால கட்டின கண ணியை மழைநீர அலைததது (நெடு. 5,6). கோடல வாடைக்காறறில முகையோடு அலமநது எரிபோற் பொஙகித தோனறியது (நெடு.வெ. 1). தலைவி தன ஆயததுடன் பறிதத மலர்களுள் கோடலும் ஒன றாம (குறி. 83). சஙகு உடைந்தாற் போனற கோடற் பைம்பயிர் பளளஙகளில் தழைத்திருநதது (அகம். 23.5,6). கொடிய சினமுடைய பாம்பின படம் மேலே நிவநதாற் போன்ற தண்ணென மணக்கும் கோடலபூவின் தாது கட்டவிழந்து விரிந் தது (அகம. 154:6,7). வரிகளையுடைய வெண கோட லின வளைந்த குலையிலுள்ள சிறந்த பூக்களை மிகுதியாகச் சூடிய கோவலர் நீாதிகழ கண்ணிய ராயப் பல்லான நிரையொடு ஊரிடததே மீண்ட னர் (அகம். 264:3-6). கோடல, முலலை, குவளை மலர்களை இடைஇடையே பொருந்தும்படி கலந்து அழகியதாக மாலை தொடுக்கப பெற்றது (குறு. 62:1-3). 'மதியில்லாமையால பருவ காலத்தை மறந்து கடலநீரை உணடதனால் நிறைநத சூலை யுடைய கரிய மேகம் தான தாங்க மாட்டாமல் பெய்த மழையை நோக்கி இது காாகாலமென மறதியுற்ற உளளத்துடன் அறியாதனவாய்ப் பிட வமும் கொனறையும் கோடலும் மலர்ந்தன' எனக கூறிப் பருவஙகண்டாற்றாளாய தலைவியைத் தோழி பருவம் அன்றென வற்புறுத்தினாள் (நற். 99:5-10). 'பக்கமலையில் அருவிநீர் வீழவும் கோடல் நீடவும் காதலரைப் பிரிநத மகளிரைத்துன்புறுத்தும் அசசிரப் பெரும்பொழுது வந்து சேர்தற்கு முன்பே நம் தலைவர் வநது விட்டனா' எனக்குறித்த பருவத்திற்கு முன்பே தலைவர் வந்த செயதியைத் தோழி தலைவிககுக் கூறினாள் (ஐங். 223). 'ஐயனே, நீ பிரிகினறேம் எனகின்ற தனிமையில்லாத நெஞ்சத்தோடே பொருளைத் தேடற்குப் போகச் சக்கரததின் வாயைத் துகள் போகத் துடைக்கின் றாய், அதுகணடு தலைவிக்கு அசைகின்ற இதழினை யுடைய கோடற்பூ ஊழ்நது விழுகினறவை போல வளையல்கள் முன்கையினின்றுங கழலுகின்றன' எனக்கூறித் தோழி தலைவனைச் செலவழுங்குவித் தாள் (கலி.7:13-16). களவொழுக்கம் நிகழும காலத் துக் கடிய காவலையுடைய தாய முன்னே, தலை வியின் கையிலுள்ள வளைகள் மலைச்சாரலில் உள்ள ஊழுறு கோடல போல உகும் (கலி. 48:10,11). கோடல கார்காலத்து முற்பட்ட மழைககுத் துடுபபுப்போலும் முகையை முனனர் ஈனறு பின்னாத தீயைக கடைந்து அதிற் பிறநத நெருபபைச் சேர நிரைத்தாற போன்ற அலர்நத இதழுடன பூததது (கலி. 101:3,4). பொது வர் மலையிலும காட்டிலும் தோன்றும் கொன்றை, காயா, வெட்சி, பிடவு, தளவு, குலலை, குருந்து, கோடல, பாங்கர்ப் பூக்களால் அமைத்த கமழுங் கண்ணியினைச் சூடி ஏறு தழுவுதலைக் காண வநதனர் (கலி. 103:1-5). தலைவன் ஒருவழித் தணந்த விடத்துத் தலைவியின் கைவளைகள் கமழ்கின்ற தணணய தாதுதிர்நது சிந்தும்படி முறைமையுற்ற இதழவீழும் கோடல்வீ போலக் கழன்று வீழ்ந்தன (கலி. 121:11-14).

2. கொள்ளுதல். கொல்லையிலுள்ள முற்றிய கதிரைத் தாங்க மாட்டாமல் சாய்ந்த தினையின் வளைந்த தாள் நிமிர்ந்து நிற்குமாறு அவற்றின கதிர்களைக் கோடல் - கொள்ளுதல் - கருதிக் குறவர் முன்றிலில் தங்கினர் (நற். 44:5-8). வதுவையயர்ந்து வரும தலைவன் விருந்தொடு வந்தமையின், விருந்து எதிர் கோடலினாலே அவன்பால கொண்ட புலவியை மறந்ததாகத் தலைவி தோழிக்குரைத்தாள் (கலி. 75:14-17). ஆட்டிடையர்க்கும் பசு இடையர்க்குமாகக் கோவினத்தார் கொல்லேறு கோடலே காரியம் என று தொழுவிலே ஏறுகளைப் புகுதவிட்டனர் (கலி. 107:2-4).

கோடி - 1. பேரெண் (நூறுநூறாயிரம்). தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனை 'ஒன்றைப் பத்துமுறையாக அடுக்கப்பட்டதாகிய கோடி எனனும் பேரெண்ணினை உடைத்தாக நினது வாழநாள' எனக் குடபுலவியனார் வாழ்த்தினார் (புறம். 18:5,6). 'அறிவுடைய அரசன் வரிகொள்ளும் நெறியறிந்து வரி வாஙகுவானாயின அவன் நாடு கோடிப் பொருளினை ஈட்டிக கொடுத்துத் தானும மிகவும் தழைககும்' எனப் பாண்டியன அறிவுடைநம்பிககுப் பிசிராந்தையார் உணமை உணர்ததினார் (புறம. 184:5,6). சிறறரையம், பேரரையம் என இருகூற்றாற் பெயர் பெற்ற பழைய ஊர் இருங்கோவேளிர்க்குப் பலகோடியாக அடுககப்பட்ட பொருளை உதவியது (புறம.202:6,7). கோடையாயினும கோடி நலகும் காவிரிபுரக்கும் சோழநாட்டின தலைவன் குளமுற்றத்துத் துஞசிய கிளளிவளவன (புறம. 393:22,23).

2. கோடிக்கரை. பாண்டிய வேநதரின் மிகப்பெரிய பழைய கோடியில - கோடிக் கரையில் - இராமன அரக்கரை வெலலுதற்குச் செய்யும் போர் பற்றிய அருமறையைப் பிறருடன ஆலினகீழ இருநது ஆராய்தற் பொருட்டுக் கைகவிததுப் பறவை ஆரவாரததை அடககினான் (அகம. 70:13-17).

3. புதியது. வதுவை கழிந்த பின்றை, தமர் தர மணமகனும் மணமகளும் ஓரில்லிற் கூடிய கங்குலில் நாணத்தாலே தன் முதுகினை வளைத்துக் கொண்டு கோடிக் கலிங்கத்து - புதியதாகிய புடைவைக்குள் - ஒடுங்கிக் கிடந்த மணமகளைத் தழுவும் விருப்பத்துடன் அவள் முகத்தினை மூடி இருந்த புடைவையை மணமகன் திறந்தான் (அகம். 86:19-23).

கோடியர் - கூத்தர். விழவின்கண் கோடியர் - கூத்தரின் - வேறுபட்ட கோலம் போல முறை முறையே தோன்றி இயங்கி இறந்து போகினற இயல்புடையது இவ்வுலகம் (புறம்.29:22-24). குடக்கோ நெடுஞ்சேரலாதனின் திருமணி மிடைந்த தோள கோடியர் முழவு போனறு அழகுற விளங்கியது (புறம். 368:16, 17). கடல்பிறக்கோட்டிய செங்குட்டுவன் கோடியர் பெருங்கிளை வாழ வழங்கிய குதிரைகளை எண்ணின் கடலில தணணிய பலவாக வரும் அலைகளைக் காட்டிலும பலவாம (பதி. 42 : 14 - 23). அறியாமை மிகுதலான் பகை கொண்டு படையெடுத்து வந்த பகைவேந்தர் தம் உடம்பை மறததற்குக் காரணமான வெற்றிச் செல்வம் அழிந்து கெட்ட போர்க்களத்தில் ஆடும் அரசன விழாப பெருமையோடு விளங்கிய தன ஊரினிடத்தே கோடியா முழவின் முனனர் ஆடு தலை வலலவன் அல்லன்; அவன் கணணி வாழவதாக எனக் காக்கை பாடினியார் நச்செளளையார் ஆடுகோட்பாட்டுச சேரலாதனைப் பாராட்டினார் (பதி. 56). சேர சோழ பாணடியர் எனனும மூன்று முடிமனனரும் ஒருங்கே திருவோலக்க மண்டபத்தே அரசு வீற்றிருநதால தோன்றும் பெருஞ் சிறப்பை ஒதத சிறப்புடைய பாடற பயனைத் தனபாற கொணட யாழினையுடைய கோடியர் தலைவ எனப பொருநன் விளிககப பெற்றான் (பொரு. 54-57). முதிர்நத சுரபுனனையையும் குறிய மலைகளையும உடைய நலல நாடுகளைக் கோடியர்கககு கொடுத்தவன ஓரி (சிறு. 108-111). நல்லியக்கோடன பலவேறு இசைக கருவிகளையுடைய கோடியரைப புரததல வலலவன (சிறு 125-126). கடல சேர்ந்த நாட்டையுடையவனாகிய பனந்தார அணிநத சேரனுடைய நாளோலகக இருப்பிலே அவனை, கணகள வளைநத பறையினைக கொணட கோடியர் சுறறம் வாழத்தும் (மது. 523-525). அரிய விலைக்குக கொணட நறிய பூககளைச சிதறிய தெருவிடததே அறிவு வாயததலை யுடைய கோடியரின முழவோடு இயைநத யாழிசையைக் கேட்டறகுக காரணமான பகைவர் நாட்டு மனறம் திருமாவளவன படையெடுப்பால பாழபட்டது (பட். 253-257). நெடுமலை அடுக்கதது அசையும் கொமபினையுடைய பலாக்கள் சுரநெறியில போகினற கோடியரின மத்தளங்கள் போலே கீழும் மேலும பல காயத்து முறறுதல் கொணடு தாழந்தன (மலை. 141-144). கரும்பறைக் கோடியரின பிள்ளைகள் போனறு நெடிய மூங்கிலின கவடுகளில உளள கடுவன பாயும் (மலை. 236,237). பெருமை மரத்தின மீது பின்னிய சிலம்பியின கூட்டினை மேகம் என மயஙகிய இளைதத களிறுகள பலவும் ஒருங்கே உயாததிய நெடுங்கைகள் புகழினைத திரட்டிக்

ச இ பொ க தொ 2-36

கூறும் கோடியரின் தூம்பினைப் போல் தோன்றி ஒலிக்கும் (அகம். 111:5,9). மிகப் பெரிய சுற்றத் தினையுடைய கோடியர் சிறுவங்கியம், பெரு வங்கியங்களின் ஒலியோடு தண்ணுமை ஓசை பொருந்தி ஒலிக்கத் தாளம் அமைத்துச் சில்லரி கறங்கும் சிறிய பல இயங்களுடன் பல ஊர்க்கும் சென்று கூத்தாடுவர்; ஆடி முடித்தவுடன் பல தொகையாகிய வாச்சியங்களைப் பையிலிட்டுக் கட்டி வேற்றூர் செல்வர்; கோடியர் ஆடிய மன்றம் அடுத்த நாள் பொலிவழிந்து மூதூர்க்கு இன்னாததாகத் தோன்றும் (அகம். 301:17-25). கோடியர் காடு மிக நீண்டது என்றெண்ணாராய் நல்ல போர்த்திறன் வாய்ந்த சேரனது திருந்திய கழலணிந்த சேவடியை விரும்பிச் செல்வர் (அகம். 309:9-11). கோடியர் விழாவினைக் கொண்டா டும் முதிய ஊரில் விறலியின் பின்பு நிற்கும் முழ வன் போலக் கடுவன் குடம் போன்ற பெரிய பலாப்பழத்தினைத் தழுவிக்கொண்டு பாறையின் பக்கத்தில் ஆடுகின்ற மயிலின் பின் நின்று தன் இன்துணையாகிய மந்தியினை அழைத்தது (அகம். 352:1-7). அரிய சுரத்தின் கவர்த்த நெறிகளில் தங்கிய கோடியரின் வாச்சிய ஒலி பெரிய மலை யிடத்து எதிரொலிக்கும் (அகம். 359:8,9). பெரிய மலையின் உச்சியிலுள்ளதாகிய நெடுவெள்ளருவி அறிவு வாய்த்தலை யுடைய கோடியரின் முழவைப் போல ஒலித்துப் பக்கமலையின்கண் வீழும் (குறு. 78:1-3). பார்வை ஒன்றனை வைத்து வேட்டுவன் அமைத்த வலையைக் கண்டு வெருவிய கணந்துள் என்னும் பறவை தான் தனிமையிலிருந்து எழுப்பும் ஒலி சுரத்தின் கண்ணே செல்கின்ற கோடியர் விரைவில் ஒலியெழுப்பி இசைபாடுகின்ற யாழோ சையோடு சேர்ந்து ஒலிக்கும் (நற். 212:1-4).

**கோடு** - 1. விலங்கின் கொம்பு. உருவப்பஃறேர் இளஞ் சேட் சென்னியின் களிறுகள் பகைமன்னரின் எயிற் கதவங்களை முறித்து வெகுண்டு உலாவி நுனை தேய்ந்த வெளிய கோட்டினை - கொம்பினை - உடைமையான் உயிரையுண்ணும் கூற்றையொத் தன (புறம். 4:10-12). யானை பிடிக்க அமைத்த பள்ளத்தின்மேல் பாவிய பொய்ப்பரப்பைத் தன் மனச்செருக்கால் போற்றாது ஆழமான குழியிலகப் பட்ட கோடு முற்றிய கொல்களிறு குழியைத் தூர்த்துத் தன் கிளை விரும்பத் தன் இனத்திற் சென்று சேர்ந்தது (புறம். 17:14-19). ஊரின்கட் சிறுபிள்ளைகள் தனது வெள்ளிய கோட்டைக் கழுவுதல் காரணமாக நீர்த்துறைக்கண் படியும் பெரியகளிறு அவர்க்கு இனியதாய் இருத்தல்போல் அதிகமானும் புலவர்க்கு இனியன் (புறம். 94:1-3). 'பரிசில் பெறுங்காலத்தை அதியமான் நீட்டிப் பினும் நீட்டியாதொழியினும் யானை தன் கோட் டிடை வைத்த கவளம் போல அப்பரிசில் நம் கையகத்தது' என ஔவையார் தன் நெஞ்சிற் குரைத்தார் (புறம். 101:5-9). பிட்டங்கொற்றன் சிறுகண் யானையின் வெண்மையான கோட்டி னின்றும் பெற்ற ஒளி விளங்கு முத்தத்தை விறலி யருக்குக் கொடுத்தான் (புறம். 170:10, 11). புல்லிய தலையையுடைய சிறுவர் வளைந்த கோட்டினை யுடைய ஆமானின் நடுங்கும் தலையையுடைய இளங்கன்றைத் தம்முடைய சிறுதேர்க்குச் சேங் கன்றெனப் பூட்டி விளையாடுவர் (புறம். 319:10,11). கள்ளி மரத்தின் கவைமுட்கள் நிலத்தை உழுது ஓய்ந்த காளையின் தலையில் முளைத்த கோடு போல் இருந்தன (புறம். 322:1,2). 'ஒளிவிடும் கோடு டைய பலகளிற்றொடு குதிரைகளையும் தேர்களை யும் இரவலர்க்கு அருகாது கொடுப்பின் நீ மேலு லகம் சென்ற பின்னரும் ஈகையால் உளதாம் நின் புகழ் ஈண்டு நெடிது நிற்கும்' எனக் காவட்ட னார் அந்துவன் கீரனுக்கு அறிவுரை வழங்கினார் (புறம். 359:13-18). களிற்றின் (பன்றியின்) கோடு போன்ற வெள்ளிய பற்களால் கடித்து ஈர்த்துத் தசையொடு விரவிய வெள்ளிய கொழுப்பைத் தின்று சுவை காண்பவளாய்த் தலையாலங் கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனை வாழ்த் திப் பேய்மகள் ஆடினாள் (புறம். 371:22-28). ஓடியதனால் அழிந்து கெட்ட போர்க்களத்தில் மாடங்களைப் பற்றி யெரிக்கும் தீப்போல நெருங்கி இடியேற்றால் தாக்குண்டு வீழும் மலை போலக் கோடு ஒடிந்து நிலத்தே வீழுமாறு களிற்றினைக் கொலைவன் கொன்றான் (புறம். 373:19-22). புள்ளி பொருந்திய நெற்றியையும் கிம்புரி அணிந்த கோட் டினையும் உடைய யானைப்படைத்தலைவரும் பிற படைத்தலைவரும் சூழ வீற்றிருந்த இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளியை உலோச்சனார் வாழ்த் தினார் (புறம். 377:23-30). சிக்கற்பள்ளித் துஞ்சிய செல்வக்கடுங்கோ வாழியாதனின் பகைப்புல மன்னர் நீறாடிய கவுளினையும் பருத்த கழுத்தை யும் உயர்ந்த கோட்டினையும் சருச்சரை பொருந் திய பெரிய கையினையும் திருந்திய தொழில் செய்தலில் திறனையும் உடைய யானைகள் பல வற்றை அவனுக்குத் திறையாகத் தந்தனர் (புறம். 387:6-12). பாலையிலுள்ள வேடர் சிவந்த கோடு டைய காட்டுப் பசுவின் இறைச்சியொடு காட்டி லுள்ள வன்மை மிக்க யானையின் வெள்ளிய கோட்டினைத் தாம் வாங்கும் கள்ளிற்கு விலை யாகத் தருவர் (பதி. 30:9-12). செல்வக் கடுங்கோ

வாழியாதனின் வீரர் பகைவரின் பெருங்கை யானையின் தொடிக்கோடு துமிக்கும் வாளையுடை போராவர் (பதி. 51:29,30). செல்வக்கடுங்கோ வாழியாதனின் படை வீரர் பகைவேந்தர் ஊர்ந்து வரும் களிற்றினைக் கொன்று கொணர்ந்த வெணகோடுகளைக் கள் விலையாகத் தந்து கள்ளைப் பெற்று மகிழ்வர் (பதி. 68:9-11). தன்னுடன் இணங்காமல் எதிர்த்து யானைமீதேறிப் போருக்கு வந்த பகை மன்னருடைய முரசின் கண்ணைக் கிழித்து அவரின் பட்டத்து யானைக் கதறக்கதற அதன் கோடுகளை அறுத்துக் கொற்றவை வீற்றிருக்கும் பலிக் கட்டிலைப் பெருஞ் சேரலிரும்பொறை அமைத்தான் (பதி. 79:9-14). பழமுதிர் சோலை மலையின் உச்சியிலிருந்து வீழும் அருவி பெருங்களிற்றின் முத்துடைய வெள்ளிய கோடுகளைத் தழுவி இறங்கியது (முரு. 304-306). கரிய கோட்டினை யுடைய ஆமாவின சிறந்த ஏறுகள் முழங்குமாறு பழமுதிர் சோலைமலையின் உச்சியிலிருந்து அருவி இழுமெனக் குதித்தது (முரு. 314-316). நெடுந்தேரில் அமைந்த தாமரை முகை வடிவிலான கொடுஞ்சி யானைக் கோட்டினாலாயது (பொரு. 163). வெள்ளிய கோடு பொருந்திய கரிய யானைப் பிணத்தைக் குருதியாறு இழுத்துப் போகும்படி ஈரைம்பதின்மரும் (துரியோதனன் முதலிய நூற்றுவரும்) பொருது களத்து மாண்டனர் (பெரு. 414,415). தம் தவப்பள்ளியின் முற்றத்தே செந்தீ யோம்பும் முனிவர் வெள்ளிய கோடு உடைய களிறு தந்த விறகால வேள்வி செய்வர் (பெரு. 497 - 499). பிணங்களைக் கோத்த கோடுகளை யுடையனவாய் இறந்துபட்ட யானைத் திரளின் நிணத்தைத்தினறு பேய்மகளிர் துணங்கையாடினர் (மது. 24,25). தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன் போரிற் கவர்ந்த பொருள்களுள் பகை மழவர் தோற்று ஓடியபோது விட்டுச் சென்ற ஏந்தின கோட்டினையுடைய யானைகளும் அடங்கும் (மது. 687,688). தலைவன இரவுக் குறியில் தலைவியைச் சந்திக்க வரும் வழியில் உழுவையும் யாளிகளும் உள்ளே துளைபொருந்திய கோடுடைய ஆமானின் ஏறும் பிறவும் இருததலை எண்ணுந்தோறும் தலைவி கண கலங்கினாள் (குறி. 248-261). அறலபட்ட கோட்டினையுடைய புல்வாய்க் கலையொடு அதன பிணைமான் துள்ளி விளையாடியது (பட். 245). கானவர் பனறித் தசையும் பிறதசைகளும் நிறைந்த வட்டிகளைத் தம்மில் பொருதுபட்ட யானையின் கோடுகளைக் காவுமரமாகக் கொணடு காவி வந்தனர் (மலை. 152-155). நெடுவேள் ஆவி என்பானுக்குரிய பொதினி மலை

அறுத்துத் திருத்திய கோட்டினைக் கொண்ட யானையை உடையது; அறுகோட்டு யானை என்பதை அறுகு ஓட்டு யானை எனக் கொண்டு சிங்கத்தை வென்றயானை எனவும் கூறலாம் (வே. வி.) (அகம். 1:3,4). கிணறு வெட்டுவோர் அகழ்ந்து பார்த்தும் நீர் ஊறாமையின் விட்டேகிய தழை மூடிய கிணறுகளைக் கானவர் தம் வெண்கோடு நயந்து அமைத்த குழி என்று எணணி அவற்றைக் களிற்றினம் தூர்க்கும் (அகம். 21:22-26). சிறுகண் யானை பகைவர் மதிற்கதவங்களைப் பாய்தலினால் பூண் பிளக்கப்பட்டுக் கூரிய முனை மழுங்கிய வெண்கோட்டினை உடையதாயிற்று (அகம். 24:11-13). மறப்போர்ப் பாண்டியர் வேங்கடம் பயநத வெண்கோடு வாய்ந்த யானையினர் (அகம். 27:7,8). சேற்றில் நிற்றலை வெறுத்த செங்கட்காரான் நள்ளிரவில் கட்டினை அறுத்துக் கொணடு கூர்முள் வேலியைத் தன் கோட்டால் நீக்கி நீர் மிக்க வயலில் உள்ள தாமரை மலரைத் தின்றது (அகம். 46:1-6). இரும்பால் செய்தாலொத்த கூரிய கருங்கோட்டினையுடைய எருமை ஆம்பலின் மெல்லிய இலைகள் கிழியக் குவளையின மலர்களை நிறையத் தின்றது (அகம். 56:3-5). கள்வர் கோமானாகிய புல்லி எனபான் இளையர் பலருடன் அண்ணல் யானையின் வெள்ளிய கோட்டினைக் கொண்டு அதனுடன் கள்ளினை விற்றுக் கொண்ட நெல்லால் நாளோலக்கச் சிறப்புச் செயவான (அகம். 61:8-12). பாம்புறையும புற்றின் குளிர்ந்த மேற்புறத்தைக் குத்தியமையால் மணபொருந்திய கோட்டினையுடைய அண்ணல் ஏறு, எக்காலத்தும் தன்னோடு உடனிற்றலை விரும்பிய தன் இளைய பசுவினைத் தழுவி ஊர்க்கண் மீண்டு செலலும் (அகம். 64:10-13). நிமிர்ந்த கோட்டினையுடைய களிறு இருத்தலின் காடு மேம்படக் கூறப் பெற்றது (அகம். 65:16). மிக்க மழையால் உண்டான வெள்ளம் இடந்தொறும் சிறப்ப யானைக் கனறின் கால்களை இழுத்துச் செல்லும் கடுஞ்சுழியினையுடைய வெள்ளத்தில் புன்தலை மடப்பிடிகளின் பூசல் பலவுடன் வெள்ளிய கோடு உடைய களிறுகள் தாம் அழைக்கும் ஒலியும் சேரத் துழவும் (அகம். 68:15-19). முல்லை நிலத்தில் கருங்கோட்டு இரலையின் காமர் மடப்பிணையது மருண்ட பார்வையினைக் காணுந்தோறும் தலைவன் தலைவியை நினைந்து விரைந்து தேரைச்செலுத்தி மீள்வான் என்று கூறித் தோழி தலைவியை ஆற்றுவித்தாள் (அகம். 74: 8-12). கைவண்மை யுடைய பாரி வாட்போர் செய்து ஏந்து கோட்டு யானைகளையுடைய வேந்தரை வெனறான் (அகம். 78: 20-22). கள்ளிக் காட்டில்

உளள புள்ளிமானை வறட்சியுற்ற அழகிய கோடு சிதர்ந்தொழிய அதன் ஓட்டததினை வென்று பற் றித தினற புலால் விருப்பமுடைய புலி விட்டுச் சென்ற முடை நாற்றமுடைய தசை கிடக்குமிடத்தே பருந்தும் கழுகும் சூழந்திருக்கும் (அகம். 97:1-7). தம கோட்டினால பகையாயவற்றைக் குத்தி உழும் இயல்புடையது களிற்றின கூட்டம் (அகம். 109:4). பிறையை யொத்த வெள்ளிய கோட்டினையும் தலைமையினையும் உடையது யானை (அகம். 115: 13). இதழ் குவிந்த வெள்ளிய இருப்பைப் பூக்கள் (யானையின்) கோட்டினாற் கடைநது செய்த கழங்கு போனறிருக்கும் (அகம். 135:18,19). குட்டிகள் மூன் றினை ஒரு சேரப் பெற்ற பெண்புலி பசித்த தாக அதன் பசியை நீக்க ஆண்புலி அறல்பட்ட கோட்டினை யுடைய ஆணமானின் குரலை உற்றுக் கேட்கும (அகம். 147:4-7). குறுங்கால் உழிஞ்சில் (வாகை மரம்) கலைமான் தலையின் அடியிடத்தில் கவர்தத கோடு போலக் கவடுவிட்டது (அகம். 151: 6-8). தாய், துறையில நிலைபெற்ற கடவுட்குக் கையுறையாகக் கள், மாலை, நிமிர்ந்த கோட்டினை யும தொங்கும் காதினையும் உடைய வெள்ளாட்டுக் கிடாய் ஆகியவற்றைச் செலுத்தியும் தன் மகளுக்கு உறற நோய தணியும் வகை அறியாளாயினாள் (அகம்.156:13-17). நிறை சூல யாமை யானைக்கோட்டி னாற் செய்த வட்டின வடிவமுடைய முட்டையை அடும்பங் கொடியில் மறைய ஈன்று மணல் மேட் டில் புதைததது (அகம். 160:3-6). கானவன வெண் கடம்பினை ச் சார்ந்து நினறு அம்பினால யானை யைக் கொனறு அதன் வெண்கோடு கொணர்ந்து தன் குரம்பையில் ஊன்றினான் (அகம். 172:6-10). நிறை சூலினையுடைய இளைய பிடியினைத் தழு விக் கிடநத வெணகோட்டினை யுடைய இனத் துடன் கூடிய களிறு கனறு தன மீது ஏறி இறங்கப் படுதநிருநதது (அகம. 197.13-15). வெளியன வேண் மான ஆஅய் எயினன் தன குனறினைப் பாடும் அகவுநர் வேணடின வெள்ளிய .கோட்டினையும் தலைமையினையும் உடைய யானையை ஈவான் (அகம. 208.1-5). ஈன்று காவறபட்ட பெண்புலி பசித்ததாக, இரை வேட்டு எழுநத ஆணபுலி, காட்டுபபசு சேயமைககண நினறு அலற, வளைந்த கோட்டினையுடைய தலைமையான ஏற்றினை வலிபபககும் வீழக் கொனறு இழுததுச் செனறது (அகம.238:1-9), களிறுதும பெணடிா மனையகததே களிறகு உரிய விலைப பொருள கொடுககு இல்லா மல மறவர், தம் மனை ... உள்ள யானை வெண் கோட்டினைக் கொ... றுது தம புதல்வனது புலலிய தலைமைய ... (அகம். 245:7 - 12).

முசுண்டை என்பான் அகவுநர் இரந்து வேண்டின் பொற்பூணினைக கோட்டில் நெருங்கச் சேர்த்துப் பொனவரிமாலையினைக் கழுத்தில் அணிவித்துச் சந்தனம் பூசிய அழகிய இமில் ஏற்றினை வழஙகு வான் (அகம். 249:4-9). குற்றமற்ற வெள்ளிய கொம் பினையுடைய அண்ணல் யானை தன் வாயினின் றும் தப்பிய வயப்புலியைப் பெரிய நிலம் குழியக் குத்திக் கொன்று தேக்கு மரங்கள் நிறைந்த காட் டில் காவல் இன்றிச் செருக்குடன் தங்கும் (அகம். 251:15-18). ஆளி உயர்ந்த நெற்றியை யுடைய யானையின் புள்ளி பொருந்திய முகத்தைத் தாககி அதன் வெண்கோட்டினைப் பறிக்கும் (அகம். 252: 2-4). வேட்டைக்குச் சென்ற கானவன் தன்னொடு பொருதுபட்ட யானையின் வெண்கோடு கொண்டு மலையில் சிறந்த பொன்னை அகழந தெடுத்தான (அகம். 282:1-4). போர் வெற்றியினையுடைய குட்டு வன வெண்கோடு பொருந்திய யானையையுடைய வன் (அகம். 290:12). காட்டில் உதிர்ந்து கிடக்கும் நெலலிக்காயைப் பெண்மான் உணண நினைதத ஆண் மான, அற்று விழும கொம்பினை ஒழிதத தலையில் தோன்றுவனவும் தோலால் பொதியப பெறுவனவும் ஆகிய இளங்கோடு அதிர்ந்நிடக கூவியழைக்கும் (அகம். 291:16-20). ஏநதுகோட்டு யானையையுடைய வேந்தன பாசறையில தங்கிய தலைவன் தலைவியை நினைநது வருந்தினான (அகம். 304:17,18). இருப்பைபபூ யானைககோட்டி னைக் கடைநது வைத்தாற்போன்ற வெண்ணிற முடையது (அகம். 331:1,2). நீர்த்துறையருகே தன னைத் தாக்கற்குப் பதுங்கிய புலியொடு பொருது கொனற யானை, கூரிய முனையில குருதி தோய்ந்த கோட்டினை மிக்க மழையில் கழுவும் (அகம். 332:2-5). புலி தன மீது பாய்நததனால் வெண் கோட்டு யானை முழக்கிய ஒலியினைக் கேட்டு அஞ்சி கன்றைவிட்டு ஓடிய பிடி பின்னர்க் கன் றைத் தேடியது (அகம். 347:11-13). வெயில் மிக்க வேனிற் காலத்து, வெவ்விய காட்டில் தளர்ந்த பிணையை உடன் கொண்ட, அறல்பட்ட கோடு உடைய அழகிய கலைமான நீரற்ற குளததினை நோக்கிச்சென்று துன்பததால் மெலிந்து தளர்ந்தது (அகம. 353:10-14). வெண கோட்டு யானை பாயநது குத்தியதால புண் மிக்க புலி கற்குகையினுள ஒடுஙகிக கிடக்க அதனை அதன பிணவு காவல் காத்து நினறது (அகம். 362:2-6). குருதிதோய்நத செறிந்த விரலகளை யுடைய கழுகுச சேவல் ஏறியிருககினற யாஅ மரத்தின் வெளளிய கொம்பு களின கூட்டம் குருதி படிந்து இளமபெருஞ் சென்னியின ஏவலால பாழி எனனும அரண்மனை

யைத் தகர்த்து அங்குள்ள வடுகமறவரின் தலை யைக் குத்திக் கொன்ற யானையின் கோடு போலத் தோன்றும் (அகம். 375:7-15). பல்வேறு இனத்தைச் சார்ந்தனவாக மலையில் வாழும் மலையாட்டின் கோடு முதிர்ந்த இளைய கிடாய்கள் செய்யும் முழக்கத்தைக் கேட்ட மயில் அஞ்சிக் கூத்தாடு களத்தில் ஊதப்படுகின்ற கொம்பு போன்று ஒலித் தது (அகம. 378:5-8). ஆளியேறு யானையின் உயர்ந்த வெள்ளிய கோடு பறித்து அதன் குருத் தினைத் தின்னும் (அகம். 381:1-3). காட்டிடத்தே தான் விரும்புகின்ற பிடியினை இழந்த வருத்தத் தாலே நிலத்தில் தோயத் தாழ்ந்த மிகப் பெரிய கையையும் வெள்ளிய கோட்டினையுமுடைய களிறு தழை உண்ணாது விட்டமையால் உண்டான மெலிவு போல மெலிந்த யாக்கை யுடையவன் தலைவன் (அகம். 392:1-4). முருகன் சிவந்த கோட் டினைக் கொண்ட யானையை உடையவன் (குறு. 1:2,3). பொன்மிக்க பாடலியில் உள்ள சோணை யாற்றில் வெண்கோட்டு யானை படியும் (குறு. 75: 3,4). வல்விலோரியின் கொல்லிமலையிலுள்ள சிறு குடியினர் உணவினறிப் பசித்தாராயின் தறு கண்மை மிக்க யானையின் கோடு விற்று அவ் விலையால் வரும் உணவை உண்ணுவர் (குறு. 100: 3-5). 'ஐய, நும்மொடு மகிழ்ந்து சிரித்த தூய வெண்பற்கள் பாலை நிலத்தில் செல்லும யானை யின மலையைக் குத்திய கோடு போல முறிவன வாக' எனத் தலைவி புலந்து தலைவனிடம் கூறி னாள் (குறு. 169:1-3). 'கொன்றையின் செவ்வி மலர்கள் நம்மைப்போலப் பசலை நிறத்தையடை யும் கார்ப்பருவத்தில் பெண் மானிடத்தினின்றும் நீங்கிய நெறிந்த கோட்டையுடைய ஆண்மானை நம் தலைவர் காணாரோ' எனக் கூறித் தோழி தலைவியை ஆற்றுவித்தாள் (குறு. 183:1-4). சேந்தன் தந்தையாகிய அழிசி, காவிரி நீர்த்துறைக்கண வளர்ந்த மருதத்திற் பிணித்த ஏந்து கோட்டு யானையை உடையவன் (குறு. 258:2-7). புலி ஏறு மதங் கொண்ட அண்ணல் யானையின் முகத்தில் பாய்ந்து அவ்வியானையின வெண் கோட்டினைத் தன குருதியால கறைபடியச் செய்து மேல் காறறு வீழ்த்திய வேங்கைக்கிளை போல இறந்து கிடந் தது (குறு. 343). இளம்பிடியை விரும்பிய, மூங்கில முளை போலும் கோடு உடைய இளங்களிறு குன்றம் பொருந்தி அங்குள்ள குறவர் முழங்கிய தனால் ஊரிடத்துள்ள மன்றத்தைப் போழ்ந்து சென்றது (குறு. 346:1-3). காட்டிடத்து மேய் புலத்தை நாடிச் செல்லும் யானையினது கோட்டி டைத் தங்கிய ப்லலைமலர் மிக்க கொடி போல, தலைவியின் கண்ணீர்த் துளி அவள் வனமுலையை நனைத்தது (குறு. 348). ஓமை மரத்தினைக் குத்திய உயர்ந்த கோடு உடைய ஆண் யானை, அடி வாரத்தில் மேகம் முழங்கும் கடிய முழக்கத்தைக் கூர்ந்து கேட்கும் (குறு. 396:3-6). பேளர் என்னும் ஊரின் தலைவனாகிய பழையன் வெண்கோட்டு யானைகளையுடையவன் (நற். 10:6-8). மதநீரொ ழிந்த சினந்தணிந்த யானையின் பெரிதாய நிலைத் துள்ள ஒரு கோடு போல ஒன்றாகி விளங்கிய அருவியை யுடைய குன்றைக் கடந்து தலைவன பொருள தேடச் சென்றான (நற். 18:8-10). மலை யின்கணுள்ள வேங்கைமரத்தின கீழ் வளைந்த கோடுடைய ஆமான் தன கன்றொடு வந்திய, அது துயில்வதனைக் கண்ட மந்தி, சுற்றத்தை ஒலி செய்யாவாறு தன்கையால் அமர்த்திவிட்டு ஆமா னின் அருகில் சென்று அதன் மடியில உள்ள பாலைத் தன குட்டியின கையிற் பிழிந்தது (நற். 57: 1-6). புலியொடு பொருத புண்மிக்க யானையின் நல் கோடு நட்ட அன்பற்ற கானவர் எய்த அம்பு பட்டு அவ்வியானை பிளிறறலின பேரொலி இடி முழக்கம் போல கேட்கும் (நற். 65:5-9) இடிதாக்கி இறந்த களிற்றின் வெண் கோடு கொணர்ந்து, அதன் ஊன்காயுமாறு அகன்ற பாறையில குன்றக் குறவர் இட்டனர் (நற். 114:1,2,12). பகைவருடைய தேர்ப்படையுடன் பொருத, நீண்ட கையையும் தலையேந்தின கோட்டினையும் உடைய யானைப் படையை உடையவன கிள்ளிவளவன் (நற். 141: 8, 9). புலியை அதன் முழையருகில் மோதிக் கொன்று கிடத்தி அதன் குருதி படிதலால் சிவந்த மறுக்கொண்ட வெண்கோட்டு யானை அருவியின்கண் சென்று கழுவி மறுவினைப் போக் கும் (நற். 151:2-4). புலியொடு பொருதமையால் குருதி தோய்ந்து சிவந்த புலவு நாற்றத்தையுடைய கோடு பொருந்திய களிறு கன்றொடு மடப்பிடி யைத் தழுவிச் சென்றது (நற். 202:1-4). இரை விரும்பி எழுந்த, புலியால தாக்கப்பட்ட கூரிய நுனி வெண் கோட்டு யானையை ஆளி என்னும் விலங்கு இழுத்துச் செல்லும் (நற். 205:1-4). முருக வேளை ஒத்த வலியொடு கடுஞ்சினம் மிகுத்துப் போர் செய்த யானையின் குருதி படிந்த வெண் கோடுபோல வாழை அப்பொழுது ஈன்ற தாற்றின் கொழுமுகை விளங்கியது (நற். 225:1-3). புலியைக் கொன்ற யானையின் சிவந்த கோடு நிறம் மாற மேகம் மழை பொழிந்தது (நற். 247:1-3). அறு கோட்டினையும் உடைய கலைமான் காய்ந்த புல் லினை மேயும் (நற். 265:1,2). மலையிடமெல்லாம் புலியைக் கொன்ற யானையின் கோடு கண்டாற்

போன்ற செவ்விய புறத்தையுடைய காந்தள் அரும்பின (நற். 294:5-7). அச்சத்தைச் செய்கின்ற யானையின உடைந்த கோடு போன்று வெண்டாழை மலர்ந்தது (நற். 299:1,2). காட்டில கோடு முற்றிய யானை நிறைந்திருந்தன (நற். 324:4). பெண்பன்றியுடன் தினைக்கதிரை அளவின்றித் தின்றழித்த வெணகோட்டு ஏற்றினைக் கானவன் கொன்று கொண்டு வந்து தர அவன் மனைவி அறுத்துத் தன் குடிக்கெல்லாம் பகுத்துக் கொடுத்தாள் (நற். 336:1-6). மலையில் மேய்ந்த சிறு கோடு உடைய சிவந்த பசு, காந்தளைத் தீண்டியதால் அதன் தாதுக்கள் தன்மேல் உதிரப் பெற்று நிறம் வேறுபட்டதால் அதன் கன்று தாயென்று அறியாமல மயங்கும் (நற். 359:1-3). கரிய கோட்டினையும் சிவந்த கண்ணினையுமுடைய எருமைப்புனிற்றா தன்காதற் குழவிக்குச் சுரக்கும் முலையை ஊட்டும் (ஐங். 92:1,2). போர் மறவரை ஒத்த பெருங்கோட்டு எருமைக் கடாக்கள் மகளிர் போனறு சிறந்த தம் பெண் எருமைகளோடு இனிதாக உறையும் (ஐங். 94:1,2). கருங்கோட் டெருமை கயிற்றை அறுத்துக் கொண்டு சென்று நெற் கதிரை உண்ணும் (ஐங். 95:1,2). கருங்கால் எருமைக் கன்று, பகன்றைமலர் சிக்கியுள்ள தன்தாயினது கோட்டைக்கண்டு தன் தாயன்று என வெருவும் (ஐங். 97:1,2). தண்புனல் ஆடும் தடங்கோட்டு எருமை திண்ணிதாகக் கட்டப்பட்ட தோணி போலத் தோன்றும் (ஐங். 98:1,2). நெடுங் கோட்டினையுடைய ஆட்டுக்கிடாய் பிற யாடுகளை விரும்பிப் போய்விடினும் தன் பால் பினபு அது வரும் எனனும் ஆசையால் புருவை வாழும் (ஐங். 238:1,2). கேழற்பன்றி இளம் பிறை போனற, வடிவமும் வண்ணமும் அமைந்த கோட்டினை யுடையது (ஐங். 264:1). புலியிடமிருந்து தப்பியுய்ந்த கவைத்த கோட்டினையுடைய முதிர்ந்த ஆணமான் தன்னைப் பிரிந்து சென்ற பிணையை ஆண்குரல் தோனற அழைக்கும் (ஐங். 373:2,3). யானையின் தடங்கோடுகள் பகைமன்னரின் அரண்களைக் குத்திப் பெயர்த்தமையான் பூண்கள் பிளக்கப்பட்டுக் கூர்த்த நுனிகள் மழுங்கின (ஐங். 444:2,3). 'தலைவர் மேற்கொண்டு சென்ற தூதுத் தொழிலின் பயனையும் அடைந்து, உயர்ந்த கோட்டினையுடைய சிறந்த யானைகளையுடைய மாற்று வேந்தனால் நன்கு பாராட்டி அனுப்பப்பெற்றுக் குறித்த நாளில் வருவர் என்பது உறுதி' எனக் கூறித் தோழி தலைவியைத் தேற்றினாள் (ஐங். 466:1-3). வேந்தன் ஏந்துகோட்டு யானை உடையவன் (ஐங்.498:3). பூத்த வேங்கை மரத்தைப் புலியெனக் கருதி அதன் அடியறுத்த்திய மதயானை நீண்ட பெரிய முழைஞ்சிடமெல்லாம் ஒலிக்கும்படி பிளிறித் தன கோட்டினை எடுக்கவியலாமல் வருந்தும் (கலி. 38:6-9). மூங்கில் நெல்லைப் பாறையாகிய உரலிலே பெய்து, களிற்றுக் கோட்டினை உலக்கையாகக் கொண்டு குற்றிச் சேம்பின் இலையைச் சுளகாகப் புடைத்துத் தலைவியும் தோழியரும் வள்ளைப் பாட்டுப் பாடினர் (கலி. 41:1-4). 'கொன்ற யானையின் கோட்டாலே மூங்கில் நெல்லைக் குற்றுதற்கு நாம் தலைவன் செய்த கொடுமையின் கூற்றை வள்ளைப் பாட்டாகப் பாடுவோம்' எனக் கூறித் தோழி தலைவனை இயற்பழித்தாள் (கலி. 42:7-9). தனக்கு மாறாகிய யானையை அதன் புகர் நுதலைப் புண்ணாக்கின மறம் மிகுந்த வேழம் குத்திவாங்கின கோடு போலக் காந்தள் நாடொறும் அரும்பீன்றன (கலி. 53:3-5). பாண்டியனின் பகைவர் ஏந்து கோட்டினையும் எழிலினையும் கொண்ட யானையை உடையவர் (கலி. 57 : 10). தான் ஒரு புத்தியானை கண்டு அதன் மீது ஏறிக் காணத் தங்கியதாகப் பொய்யுரைத்த பரத்தைமைத் தலைவனிடம், 'தொய்யில் எழுதின அழகினையுடைய முலையாகிய வெண் கோட்டையுடைய வேழத்தை இன்று கண்டாய் போல நீ எம்மைப் பொய்யாக்குவது என்ன பயனுடைத்து' எனத் தலைவி புலந்து கூறினாள் (கலி. 97:12,21). மகட்கொடை நேர்ந்த ஆயர் சேரக்கூடி, இறைவனுடைய குந்தாலிப்படை போலக் கூரிதாகக் கோட்டினைச் சீவி ஏறுகளைத் தொழுவிடத்தே புகுதவிட்டனர் (கலி. 101:8,9). 'எருததினது நோக்கை அஞ்சானாய் அதன் மேலே பாயந்த பொதுவனைச் சாவக் குத்திக் கோட்டிடத்தே எடுத்துக் கொண்டு உடலைக் குலைக்கின்ற தோற்றத்தைப்பார்' எனத் தோழி தலைவிக்குக் காட்டினாள் (கலி. 101:16,17). ஆயர் நேர்ந்துவிட்ட வெள்ளை யெருத்தினது சினத்தை அஞ்சானாய் அதன்மேலே பாய்ந்த பொதுவனை நுதியைத் துகைத்துக் கோட்டு முனையால் எடுத்துக் குலைப்பதைப் பார், எனத் தலைவிக்குத் தோழி காட்டினாள் (கலி. 101:27-29). ஆயர் ஏறுதழுவுவதற்குத் தொழுவினுட் புகுத்திய ஏறுகளுள் கொலைவன் (சிவன்) சூடிய பிறைத் திங்களைப் போல வளைந்து நிறைந்த கோடுடைய சிவந்த ஏறும் இருந்தது (கலி. 103:15,16). கணிச்சிப் படையை யுடைய இறைவன் சூடிய பிறையிடத்துக் கிடந்த செந்நிற மாலை போலப் பகையேறுகளை விரும்பிப் போக்குவனவாகிய ஏற்றினங்களின் குருதி தோய்ந்த கோட்டுடன் குடர்கள் சுற்றிப் பிணித்தன (கலி. 103:25-27). கோட்டுடன சுற்றிக்

குடர்கள் பிணித்த ஏற்றின் முன்னே நின்று ஒருவன் ஆடி அக்குடரை இரண்டு கையாலும் வாங்கித் தன் வயிற்றிலே இட்டான் (கலி. 103:28, 29). ஆயமகளிர் குரவையாடும் பொழுது கொல்லுகின்ற ஏற்றினுடைய கோட்டிற்கு அஞ்சும் பொதுவனை மறுபிறப்பினும் ஆயர் மகள் தழுவமாட்டாள் எனப்பாடுவர் (கலி. 103:63,64). குரவையில், 'கொலைத் தொழிலையுடைய ஏற்றினது கோடடிடையே தாம் விரும்பும் மகளிருடைய மார்பின் முலையிடையே விழுமாறுபோல வீழில் எம்முடைய இனத்தில் ஆயர் தத்தம் மகளிர்க்கு முலைவிலை வேண்டார்' என ஆயமகளிர் பாடினர் (கலி. 103: 71-73). சினமிக்க அழகிய ஏறு, ஏறுதழுவுபவர் பலரும் நீங்கும்படியாக, எலும்பு முறிந்து குடர்களற்றுக் கவிழும்படி குத்திய பின்னர்த் தன் கோட்டின் வலியழியத் தழுவினவனை அலைத்துக் கொண்டு திரிந்து துகைக்கும் (கலி. 104:39-42). கொம்பு படுதலை மார்பு கொடுத்து ஏற்றுக் கொள்பவர் சிலர்; கொம்பின் மேல் பாய்ந்து ஏறுபவர் சிலர்; கோட்டிடையே புகுவர் சிலர்; ஏறுகொள்ள வல்லேம் என்று சாற்றுபவர் பலர்; இங்ஙனம் ஏறுதழுவுமிடத்து பொதுவர் பலர் நின்றனர் (கலி. 104:55,56). 'கொல்லேற்றின் கோடு குறி செய்த பொதுவனுடைய மார்பைப் பாடுவோமாக; வாருங்கள்' என ஆய்ச்சியரும் ஆயரும் தலைவியையும் ஆயத்தையும் அழைத்தனர் (கலி. 104 : 63, 64). நீண்ட மருப்புத் தைக்கும்படி குத்திஆயர் தழுவுகின்ற கழுத்திடத்தைத் தழுவக் கொடாதே ஏறுகள் அவரை நீக்கி நிறுத்தின; அங்ஙனம நிறுத்தின பின்பும் சென்று தழுவுவாரைக் கோட்டிடத்தே சாம்படி குத்தின (கலி. 105 : 35, 36). சிவந்த கரிய ஏற்றினுடைய கொம்புகள் படுதலை மார்பிலே ஏற்றுக் கொண்டவரைக் கோட்டினாலே படும்படி குத்திய ஏறு மேனோக்கி நின்றன (கலி. 105:39,40) 'தன் மேல் மிக்குச் சென்ற சிவந்த கரிய ஏற்றினுடைய கோட்டிடையிலே இற்றை நாள் அவன் செல்ல என் நெஞ்சும் உடன் சென்றது' என்பது தலைவி கூற்று (கலி. 105:68,69). செவி மறையாயிருக்கின்ற ஏற்றைத் தழுவினவனுடைய சென்னியிற் கிடந்த குவிந்த முல்லைப்பூவாற் கட்டின வளையினையுடைய கண்ணியைக் கோட்டினால் எடுத்துக் கொண்டு அலைத்த புகரேறு துள்ளுகையினாலே அப்பூ வந்து என் மயிருக்குள் வீழ்ந்தது, என்றாள் தலைவி (கலி. 107:6-9). சூல் முதிர்ந்த மேகம் மலையைச் சூழ்ந்து பெய்து, புலியைக் குத்திய யானை மருப்பு கோட்டிலுள்ள குருதிக் கறையைக் கழுவிற்று (பரி. 20:1–5).

2. குவடு. பொன்னிறக் கோடு - குவடு – பொருந்திய இமய மலையில் மான்பிணைகள் அந்திக் காலத்தே அந்தணர் அருங்கடன் செய்யும் முத்தீ விளக்கின் கண் துயிலும் (புறம். 2:20-24). உயர்ந்த எல்லையளந்தறியப்படாத பொன்படுகின்ற நெடிய கோடுகளையுடைய இமயத்தில் சேரன் வில்லைப் பொறித்தான் (புறம். 39:13-16). அணங்கு பொருந்திய நெடுங்கோட்டினையுடைய மலைக்குகையில் துயிலை வெறுத்தெழுந்த புலியேறு ஊனை விரும்பித் தான் விரும்பிய இடத்திற்குச் சென்றது (புறம். 52 : 1-4). கண்ணேணியையுடைய நெடிய மலையினது கோடுதோறும் இழிதரும் நீரினும் மிக இனிய மென்மையுடையவன் வேள்பாரி (புறம். 105: 6-8). கொடிய புலி வழங்கும் உயர்ந்த கோடு உடைய நெடுவரையின் சிறு நெறி வழியே விறலியுடன் சீறியாழ்ப்பாணன் சென்றான் (புறம். 135: 1-10). 'நல்வினை செய்தோர் தொய்யாவுலக இன்பத்தைப் பெறுவர்; அவ்வின்பம் சிறிதாயின் வீடு பேற்றைப் பெறுவர்; வீடுபெற்றோர் மீளப் பிறவார்; மறுபிறப்பு இல்லை யென்று சொல்வோர் இமயமலையின் கோடு ஓங்கினாற் போன்ற தமது புகழை நிலை நிறுத்தி வசையில்லாத உடம்பொடு கூடி நின்று இறத்தல் தலையாயது' என்பது கோப்பெருஞ்சோழன் அறிவுரை (புறம். 214:6-13). 'கோடு ஓங்கிய உயர்ந்த மலை பொருந்திய நாடு முழுவதும் பகைவர் கொடுப்பவும் கொள்ளாத அதியமான் நாரால் அரிக்கப்பெற்ற தேறலைச் சிறு கலத்துக் கொடுப்பவும் கொள்வானோ' என அவனது நடுகல்லிற்குச் செய்யும் வழிபாடு கண்டபோது ஔவையார் வருந்தி உரைத்தார் (புறம். 232:3-6). அருவிகள் உள்ள பொன்னின் நிறம் பொருந்திய நெடிய கோட்டினையுடைய இமயம் போலப் பொன்னோடையணிந்த யானைகள் விளங்கின (புறம். 369:23-25). வளைந்த இடத்தையுடைய புரமதில் கோடு (மலையுச்சி) உறழ்ந்து எடுக்கப் பெற்றது (பதி. 16:1). அயிரைமலை நல்ல பயன் தருவதாகிய நீண்ட கோட்டினை யுடையது (பதி. 21. 25,29). அகப்பா என்னும் அரணம் பெருமையுடையது; பெரிய கோடுகளை யுடையது (பதி. 22. 26). 'தேவர் உறையும் உலகும் கேட்கும்படி இழிதரும் அருவிகள், மிகப் பெரிய கோடுதொறும் நிறைந்து விளங்கும் அயிரைமலைபோலச் செல்வக் கடுங்கோ வாழியாதன் வாழும் நாள் நிலைத்துப் பெருகுவதாக' என அவனைக் கபிலர் வாழ்த்தினார் (பதி. 70:23-27). கொடித்தேர்ப் பொறையனாகிய பெருஞ்சேரல் இரும்பொறை முழங்கில் விரிந்து

எழுகினற மேகங்கள் தவழும் உயர்ந்த கோட்டினை யுடைய கொலலிமலைக்குத் தலைவன (பதி. 73:10, 11). நனறா என்னும் மலை, சுனைகள் நிலைபெற்ற மலைவளத்தை யுடையதும் கோடுபல விரிந்த நாடு காண் நெடுவரை பெறறதும ஆகும் (பதி. 85.6,7). பருவம் பொய்யாது மழை பொழியும் காற்றுத் தங் கும் நெடிய கோட்டினை உடைய மலை நாட்டிற் குத் தலைவன நள்ளி (சிறு. 106,107). இமயமலையின் விளங்குகின்ற ஒளியுடைய நெடிய கோட்டினின் றும் பொனனைக் கொழித்துக் கொண்டு கங்கை யாறு இழிதரும் (பெரு. 429-431). தலைவனின நெடிய மலைக் கோட்டினின்றும் குதிக்கின்ற வெண் துகிலையொக்கும் வெள்ளருவியில் நீராடு தலைத் தலைவியும் ஆயத்தாரும் விரும்பினர் (குறி. 54-56). எம் தோட்டத்தினை அடுத்துள்ள, தேனி றால் வைக்கப் பெற்ற, கோடு உயர்ந்த நீண்ட மலைக்கண் காந்தளம் புதரிடத்து நீ பகல் வரினும் தலைவியின் தோளைப பொருந்துவை' எனத் தோழி கூறிப் பகற்குறி நேர்ந்தாள (அகம். 18: 13-16). கரடி இருப்பையின இ◦னிய பழத்தை வெறுப்பின் கறையான் முயன்றெடுத்த புல்லிய வளைகளையுடைய புற்றினது நெடுங்கோட்டினைப் பெயர்த்து இரைதேடும் (அகம். 81:1-5). எண்கின் கூட்டம் கறையான் புற்றினது மண்ணுற்புனைந்த நீண்ட கோடு உடைந்திடப் பெயர்த்துப் புற்றாஞ் சோறாகிய இறையினை விரும்பிச சூழ்ந்து கொண்டி (ருக்கும் (அகம். 112:1-4). புலியுடன் போர் செய்தமை யால் புண்மிக்க யானைகள் புள்ளிகள் சிதைந்த முகத்தினவாய், குருதி ஒழுக உயர்ந்த உச்சியினை யுடைய நெடிய கோட்டில் உரும் என முழங்கும் (அகம். 145·7-9). முசுக்கலை மிளகின் தளிரைத் தின்று வெறுத்து உயர்ந்த உச்சியினை யுடைய நீண்ட கோடுகளில் தாவுதலால் மணம் நாறும் பூக்கள் உதிர்ந்து பரந்து கிடப்பது, வேலன் வெறி யாடும் களம் போல காணப்பட்டது (அகம. 182: 14-17). மேகங்கள் தவழும் ஏறுதற்கரிய நெடிய கோட்டினினறும் தோன்றும் வெள்ளிய அருவிகளை யுடைய வேங்கடம் போர் வல்ல தொண்டையர்க் குரியது (அகம. 213:1-3). பருந்து மரக்கிளைகளிற்றங் கியிருககும் நீண்ட உச்சியினையும் கோடுயர் பக்க மலைகளையும் உடைய மலையைக் கடந்து தலைவன பொருள் தேடச் சென்றான் (அகம். 247: 11-13). புனஙகாக்கும குறவர் மாம்பழம், பலாசசுளை, தேன் இம்மூன்றையும் கூட்டியாக்கிய அரியலாகிய தோப்பியை உயாந்த கோட்டினை யுடைய, தெயவம் உறையும் உயர்ந்த வரைக்குப் படைதது உணடனர் (அகம. 348:2-9). கோடு உயர்ந்த பெரிய மலையினின்று ஒழுகும் நெடு வெள்ளருவி, 'யானையின் மீது தூக்கிய அசையும் வெண் துகிற் கொடியினை ஒக்கும் (அகம். 358:12-15). பொருள் தேடச் சென்ற தலைவன் உயர்கோடு உடைமையான் நெடுந்தொலை விளங்கும் மலைகள் பலவற்றைக் கடந்து சென்றான் (அகம். 393:1,2). மூங்கில்கள் ஒலிக்கும் கோடு வெம்பிய மலைப் பக்கத்தில் உள்ள காடுகளைக்கடந்து தலைவன் பொருள்தேடிச் சென்றான் (அகம். 395:14,15). மிக உயர்ந்து ஓங்கிய வானுயர் நெடுங்கோட்டுக் கோடைக்காற்றுக்கு மூங்கில் நெல் சுழலும் (அகம். 397:14-16). 'ஆறுசெல் மாக்கள் புலவு நாறும் கல்லளையில் தங்குதற் கிடமான கோடு உயர்ந்த மலைகளைக் கடந்து தலைவர் சென்றார் (குறு. 253:6-8). அருவியையுடைய மலைப் பக்கத்தில் உயர்ந்த மூங்கில் விசும்பின்கண் ஓடு கின்ற முகிலைக் கிழிக்கும் உச்சியையுடைய கோடு உயர்ந்த மலைக்குரியவன் தலைவன் (நற். 28:5-9). வேட்டுவன் நீணட கோடுகளையுடைய புற்றுக் களை வெட்டி ஈயலைத் தாழியிற் பெய்தான் (நற். 59:2,3). முகில் ஒளியினைப் பரப்பி, இடிமுழங்கி நடுயாமத்தில் கொடி நுடங்கினாற் போன்று மின்னித் தலைவனின் கோடுயர் குன்றில் தங்கி மழை பெய்தது (நற். 68:7-10). வினைமுடித்துக் கார்ப்பருவத்தில் மீண்டு தலைவியுடன் பள்ளியிடத் தானாகிய தலைவன், 'மேகமே, எனக்கு உதவி செய்யும் நீ இவ்வுலகத்துக்கோர் அடிப்படையாக யாவரும் தொழுமாறு ஆங்காங்குளள குன்றின் கோடுதோறும் பொருந்தி உலவுவாயாக' எனவாழத் தினான் (நற். 139:1-3,10). மேகம் மலை முழையின கண் எதிரொலி முழங்கும்படி கோடுயர் குன்றில் தங்கியது (நற். 156:9,10). கொல்லி மலை, தெய்வத் தாற் காக்கப்படுகின்ற தீதுதீர்ந்த நெடிய கோட்டி னையும் அழகிய வெள்ளிய அருவியையும் உடையது (நற். 201 : 5-7). கருமந்தி கடுவன் நடுங்குமாறு தன்சிறு குட்டியுடன் கோடு உயர்ந்த மலைப்பக்கத்து இயங்கும் மேகத்தை மறைவிட மாகக் கொணடு ஒளிக்கும் (நற். 233 : 1 - 3). மிக்க மழையைப் பெய்த மேகம் வில்லால் எறியப் பட்ட பஞ்சுபோலாகி விடியற் காலத்திலே கோடு உயர் நெடுவரையில் இயங்கும் (நற். 247: 3-5). மேகம் விரைநது மழை பெய்யத் தொடங்கிய குளிர்ச்சி மிக்க மலையிலே, மூங்கில் நெருங்கிப் பரந்த மிக உயர்ந்த நெடிய கோட்டின்கண்ணே வெள்ளருவி வியன்மலைக் கவானில வீழும் (நற். 257: 1-4). காலையில் தோன்றும் இளவெயிலைத் துய்க்க அருவி யொலிக்கின்ற அச்சமுடைய நெடிய கோட்டின்

பக்கத்தில் மயில் தன் பெடையொடு ஆடும் (நற். 288 : 1-3). கைம்பெண்டிர் முயன்று நூற்கின்ற நுணங்கிய நுண்ணிய பஞ்சுபோல உயர்ந்த நெடிய வரையின் கோடு தொறும் கூட்டமாக மேகங்கள் தவழ்ந்தன (நற். 353: 1-3). கடலில் இரை அருந்திய செங்காலன்னம் பொன்பொருந்திய நெடுங் கோட்டு இமயத்துச்சியில் வாழும் வானர மகளிர் விருப்பத் தொடு விளையாடுவதற்கு வைத்துள்ள தம் பார்ப் பிற்கு இட்டுண்ணும் உணவைக் கொண்டு செல்லும் (நற். 356: 1-5). மந்தியின் மகவு கொடிச்சி கையிலி ருந்த பாலைக் கலத்தொடு பறித்துச் சென்றமைக்கு அவள் அழுது வயிற்றில் அடித்துக் கொண்டமை யால் அவள் விரல்கள் மேகம் தவழும் கோடு உயர்ந்த பொதியில் மலர்ந்த கொழுவிய காந்தள் மலர்போல் சிவந்தன (நற். 379: 5-9, 13). உலவும் அலைகள் இட்ட மணற் கோட்டின்கண் முண்ட கத்தின் நறுமலர் கமழும் (ஐங். 177: 2, 3). தீப்பரவி யழித்த பாழிடத்தோடு வறிய கோடு உயர்ந்து ஞாயிற்றின் ஒளியால் காய்ந்து சுடருகின்ற மலை களைக் கடந்து தலைவன் பொருள் தேடச் சென் றான் (ஐங். 318: 4, 5). கோடு உயர் பன் மலை கடந்து தலைவன் பொருள் தேடச் செல்லல் (ஐங். 358: 1). பாண்டியனின கோடு உயர்ந்த பொருப்பில் உள்ள வேங்கைப் பூவையொத்த சுணங்கினை யுடையவள் தலைவி (கலி. 57: 16, 17). எயிலைக் குத்துங்களிறு போல இடு மணலினது நெடிய கோட்டினைத் திரை, காற்றைப் பாகனாகவும் வலம்புரிகளைக் கொம்புகளாகவும் கொண்டு நடு நாட் கண்ணே குத்தி முழங்கும் (கலி. 135: 1 -5).

3. மரக்கிளை. பெரிய மரத்தின்கண்ணே இலை யில்லாத நெடிய கோடு - கிளை - தீப்பற்றுதல், பின தீமை வரவிருப்பதை முன்னர்க்காட்டும் தீ நிமித்தங்களுள் ஒன்றாகும் (புறம். 41:5). தொடித் தலை விழுத்தண்டினார், ஆயத்துடன் கூடி நீர்த் துறைக்கண் தாழ்ந்துள்ள மருதமரத்தின் கோடு ஏறிக் கரையவர் மருளும்படி நெடுநீர்க் குட்டத் துத் துடும் எனப்பாய்ந்த தமது இளமைப் பருவ நிகழ்ச்சியை நினைந்து கழிவிரக்கம் கொண்டார் (புறம். 243:5-11). மருத வயற்கண் தம் இனத்துடனே மேய்ந்துண்டு வஞ்சி மரத்தின் கோட்டின்கண் தங்கி உறங்கும் இயல்புடைய நாரை கரும்பின் பூவைத் தின்னும் (புறம். 384:1-3). வரகின் அரி காலில் வாழும் எலியைப் பிடிப்பதற்கு முயலும் குறும்பூழ்ப் பறவையின ஆரவாரத்தால் அங்குள்ள குறுமுயல் அஞ்சியோட அயலிடத்தே நிற்கும் கரிய கோட்டினையுடைய இருப்பை மரத்தின் பூக்கள் உதிரும் (புறம். 384:4-7). பகற்பொழுதைத் தரும் கதிரோன் பல்கதிர் பரப்பியமையால் கஞ்சங் குல்லை தீய்ந்தது; கோடுகளை நெருப்புத்தினறது (பொரு. 233,234). கோட்டினகண் பூங்கொததை யுடைய வேம்பின் இலையை இடையிடையே கட் டப்பட்ட தழைமாலையை முழுவலி மாக்களாகிய உமணர் அணிநதனர் (பெரு. 59-61). சீறூர்மாக்கள் கரடியின் ஒலியினை உணர்வாராய் அம்புடன் இடமெல்லாம் தேடி வருதலின் கரடி தரையிற் கிடக்கும் உணவினை உணணாமல் சினைகளில் உள்ள பூக்களை உண்ணக் கரிய கோட்டினை யுடைய இருப்பை மரத்தில ஏறும (அகம். 171 8-15). முல்லை நிலத்தில குறிய கோட்டினையும் குறிய முட்களையும் உடைய கள்ளியின உச்சியில முல்லைககொடி படர்ந்தது (அகம். 184:7-9). வயற் புறத்தேயுள்ள கருங்கோட்டினை உடைய மாமரத் தின் கொம்புகளில் உள்ள புதிய பூககள மழைத் துளிபோல உதிர்ந்து பரவிக் கிடக்கும் (அகம். 236: 6-8). காட்டகத்தே வழிசசெல்லும் புதியவரைக் காணும் பொருட்டு, ஆறலைப்போராகிய ஆடவர் யாஅ மரததின கோட்டினை இடமாகக் கொள வர் (அகம். 263:5-8). நிலங்கள் நீர் இலலையாகிச சுனைகள் வறளவும் குன்றிலுள்ள கோடு எரியவும ஞாயிற்றின் கதிர் கடுமையாகக் காயந்தது (அகம. 295:1,2). உயர்ந்த மரத்தினது கோடு தொடடுப் பெருகும் மிக்கவெள்ளம் பின கையால இறைத் துண்ணும் அளவு சிறுகிச் செனறு அறறதுபோல, வெள்ளத்தைப் போன்ற பெரிய காமநோய தலை வியைக் காண்டலால் முடிவடைநதது எனபது தலைவன் கூற்று (குறு. 99:4-6). கருஙகோட்டுப புன்னை மரங்கள் பூம் பொழிலில் அடர்நதிருநதன (குறு. 123:3). பலாமரத்தின் வேரிலும் அடிமரததி லும் கோட்டிலும் ஒருபடியாகத் தொடுத்து வைதத தன போலக் காய்ககுலைகள் தொஙகின (குறு. 257: 1-3). ஆறலைகளவர், விடுதறகுரிய அமபுகளை வில்லோடே பிடிதது உகாய மரததின கனிகள உதிருமாறு அதன கோடு ஏறி வருவாரைப பாரப பர் (குறு. 274:1-4). விளாமரம் நிலம் பிளவுபடு மாறு இறங்கிய வேரும பெரிய கோடும் உடையது (நற். 24:1,2). விளாம்பழம் கோட்டிலிருநது மூக்கு இற்று விழுந்து பசிய பயிரினகண்ணே ஆடுதல ஒழிந்த பந்துபோலப் பரவிக கிடககும (நற்.24:3-5). இறாமீனைத் தின்றெழுந்த கருஙகால வெண் குருகு வெள்ளிய உப்புக குவட்டின மேலாகப பறந்து சென்று கடற்கரையிலுள்ள கரிய கோடு டைய புன்னை மரங்களிலே தஙகின (நற். 67:3-5). பிடி தின்னுதற் பொருட்டு மேலுள்ள தோலைப் பறிததுககொணடதனால் வெட்பாலை

நாரில்லா வெண் கோடுகளையும் பற்றுக் குறடு போன்ற காய்களையும் வெள்ளிய பூங்கொத்துக் களையும் கொண்டு விளங்கியது (நற். 107:1-3). பொற்காசினைத் தொங்கவிட்டாற்போன்ற மலரை யுடைய சரக்கொன்றையின் பூங்கொத்துக்கள் அதன் கோடுதொறும் அசைந்தன (நற். 221:3,4). இரும்பு போன்ற கரியகோடுடைய புன்னையின் நீலம் போன்ற பசிய இலையிட மெங்கும் வெள்ளி போன்ற விளங்கிய பூங்கொத்தினிடையுள்ள பொன் போன்ற நறிய மகரந்தம் எங்கும் உதிர்ந்தது (நற். 249:1-4). பொன்போன்ற தாது பொருந்திய புன்னை மலர்களில் அணிந்து கொள்பவர் கொய்து தொடுத்தனபோக எஞ்சியன கோடுதொறும் காயா கத் தொங்கின (நற். 278:3-5). அரசருடைய போர்த் தொழில் வல்ல யானையின் முகத்தில் அணிந்த பொன்னாலாய நெற்றிப்பட்டம் போல மலையின் உயர்ந்த இடத்தில் கொன்றையின் கோட்டில் அழ கிய கொடி போன்ற பூங்கொத்துக்கள் மலர்ந்தன (நற். 296:2-5). கரிய கோட்டினையுடைய புன்னை மலரில் உள்ள தேனைப் பருகி வண்டுகள் ஒலித்தன (நற். 311:9,10). கடற்கரைச் சோலையில் புன்னை யின் கோடுகளில் தங்கிய குருகினம் மகரந்தம் உதி ரும்படி இரை வேண்டிப் பெயர்ந்துலவும் (நற். 375: 1-3). பெரியகடற்கரையில் வாழும் கடற்காக்கை கருங்கோட்டுப் புன்னையில் தங்கும் (ஐங். 161:1,2). மணங்கமழ் முல்லை நிலப்பரப்பில் பறவையினமும் விலங்கினமும் தம் துணையுடன் புணர்ந்து களித்து ஆடின; கோட்டின்கண் மலர்வனவும் கொடியின் கண் மலர்வனவும் நிறைந்தன (ஐங். 414). கொடி யில் உள்ளனவும் கோட்டில் உள்ளனவு மாகிய பூப்போலப் பொன்னாற் செய்த பூக்களாலாய கோதையினைத் தலைவி அணிந்தாள் (கலி. 54:1,2). கரிய கோட்டினையுடைய நறும்புன்னையின் சிறிய சினையில் மலர்தோறும் மலருஞ்செவ்வி பார்த்து நுகருதற்குச் சுரும்பினம் ஆரவாரித்தது (கலி. 123: 1,2).

4. பக்கம். ஞாயிற்றைத் தன்மேற் கொண்ட கோடு - பக்கம் - திரண்ட மேகம் வானத்தின் நடுவு நின்று வெயிலை மறைத்தது (புறம். 35:17,18). தன் நாட்டைத் தலையளி செய்யும் கோப்பெருஞ்சோழ னின் விளங்கிய முகம் போலக் கோடு (இருபக்க மும்) கூடிய மதியம் மாலையில் விளங்கிற்று (புறம். 67:2-5). விறலி, மணிக்கோவையாகிய இழையாற் பொலிந்த ஏந்திய கோடு அமைந்த அல்குலினள் (புறம்.89:1,2). உணவு அடுதலை மிகவும் மறந்த கோடு உயர் அடுப்பின்கண் காளாம்பி பூத்திருந்தது (புறம். 164:1,2). புரவியும் களிறும் தேரும் வளமிக்க நாடும் ஊரும் பாடுநர்க்குக் குறையாதளிக்கும் ஆஅய் அண்டிரன் கோடு உயர்ந்த அல்குலையும் குறுந் தொடியையும் உடைய உரிமை மகளிருடன் மேலோர் உலகம் எய்தினன் (புறம். 240:1-6). அழகிய தழையி னையும் உயர்ந்த கோட்டினையுடைய அல்குலினை யும் செம்பொறிச் சிலம்பினையுமுடைய இளை யோள் தந்தை, வேந்து மகட்கொடை வேண்டவும் கொடானாய்ப் போருக்கெழுந்தான் (புறம். 341:1-9). சோறு சமைக்கும் கூந்தல் விறலியர் உயர்ந்த கோடு வாய்ந்த அல்குலினையும் முகிழ்த்த நகையினையும் உடைய இளையோர் ஆவர் (பதி. 18:5,6). கோடு கூடு மதியம் நீலமணியின் நிறத்தை ஒத்த கரிய இருளை அகற்றி நிலவைச் சொரிந்தது (பரி. 31:11, 12). பொருள் முற்றி மீண்ட தலைவன் தான் இடைச் சுரத்துக் கண்ட கனவில், தலைவியின் கோடு உயர் புருவத்துடன் திரண்டு சிறுகிய நுதலை நீவிக் கூந்தலைக் கோதியதாகக் கூறினான் (அகம். 39:20-23). 'மேகலையணிந்த கோடு ஏந்து அல்கு லினை உடைய மெல்லியற் குறுமகளே' எனத் தலை வியைத் தலைவன் விளித்தான் (அகம். 75:19,20). பாண்டியனின் கொற்கைத் துறையிலே தழையுடை அணிதலாற் பொலிவுற்ற கோடு உயர்ந்த அல்கு லினை யுடைய பழையர் மகளிர், முத்தையும் வலம் புரியையுஞ் சொரிந்து கடற்றெய்வத்தைப் பரவினர் (அகம். 201: 3-7). திருநுதல் மகளிர் வண்டல் விளையாட்டுக்குரிய பாவையை நீர் உண்ணும் துறையில் கொணர்ந்து வைத்துப் பொற்கா சினைத் தொடுத்து அணிந்த கோடேந்து அல்குலி டத்தே நன்னிறம் வாய்ந்த பூங்கொத்துக்கள் தழையுடன் கூடி அசையக் குரவைக் கூத்து ஆடுவர் (அகம். 269:19,20). சுணங்கு படர்ந்த விரிந்தகன்ற அல்குலின் கோடு கட்டிய தழையுடை யினும் தலைவியின் மருங்கிருந்து நீங்காதவன் தலைவன் என்பது தோழி கூற்று (குறு. 294:5-7). 'கோடேந்து அல்குலையும் பெருத்த தோளையுமு டையீர், முதிர்ந்த செழுங்கதிருடைய தினைப்புனங் காவலும் நும்முடையதுதானோ' எனத் தலைவன் தலைவி தோழியரை வினவினான் (நற். 213:9- 11). இலங்குகின்ற வளைகள் நெகிழவும் கோடு உயர்ந்த அல்குலில் அழகிய வரிகள் வாட்டமடைய வும் நன்னுதலின்கண்ணே பசலை பாயவும் தலை வன் நோய் தந்ததமையை அறியாது தாய் வெறி யெடுத்தாள் (நற். 282:1-4). கிளி கடிந்தும் ஊசலா டியும் கோடேந்து அல்குலில் தழையுடையணிந்தும் நும்மோடு அருவியாடி வருதலினும் இனியதொரு செயலுண்டோ எனத் தோழி தலைமகனிடம் கூறி னாள் (நற். 368:1-4). சிவபெருமான் ஊழிக் காலத்

திருதியில் கொடுகொட்டி என்னும் கூத்தை ஆடுங் கால் கோடு உயர்ந்த அல்குலினையுடைய கொடி போன்ற இடையையுடையோள் (உமை) சீரைத் தந்து நிற்பாள் (கலி. 1:6,7). பரத்தையர் கோடு உயர்ந்த எழுச்சியை யுடைய அகன்ற அல்குலை யுடையவர் (கலி. 67:10). தமர் தலையிற் சூட்டிய கண்ணியையும் சுமக்க மாட்டாத கோடு ஏந்தின அகன்ற அல்குலையுடையவள் ஆயர் மகள் (கலி. 109: 9-12).

5. மரக்கொம்பு. இடையன் உச்சியை யுடைய கோட்டில் - மரக்கொம்பில் - உள்ளனவும் கொடிகளில் உள்ளனவுமாகிய காட்டிடத்துப் பல்வேறு பூக்களும் கலந்து அமைக்கப் பெற்ற கலம்பக மாலை அணிந்திருந்தான் (பெரு.172-174). இடையன்குழலை ஊதிஎழுப்பின பாலைப் பண்ணை நுகர்ந்துஅதனை வெறுப்பின் குமிழியினது உட்டுளை பொருந்திய கோட்டினை வளைத்துக் கட்டின மரலின் கயிறாகிய நரம்பையுடைய வில்லாகிய யாழிலே குறிஞ்சிப் பண்ணை விரலாலே தெறித்து எழுப்புவன் (பெரு.175-183). வஞ்சி மரமும் காஞ்சி மரமுமாகிய வெள்ளிய கோடுகளைக் கைகளுக்கு நடுவே கலந்து நாற்றி வேழக்கோலை வரிச்சாக வைத்துத் தாழை நாராற்கட்டித் தருப்பைப்புல் வேயப்பட்டுக் குறுகிய இறப்பை உடையதாக வலைஞரின் குடில் அமைக்கப் பெற்றது (பெரு. 263-265). வலைஞருடைய குடிலின் முற்றத்தில் புன்னையின் கோடுகளை வெட்டியிட்டுப் பந்தர் அமைத்தனர் (பெரு. 266,267). கோடுகள் பலவும் முற்றிய கோளியாகிய ஆலமரத்திடத்தே பல இசைக் கருவிகளை ஒத்த பல ஓசையும் கூடின பறவைத் திரள் இருந்தது (மலை. 268,269). பூக்கொள்ள வல்லோன் கோட்டினை அடித்து அசைக்கும் கோல்போல மராஅ மரத்தின் மலர்கள் உதிரத் தென்றல் தாக்கியது (அகம். 21:10-12). கோடு பொருந்திய ஓலைக் குடையைத் தலையிற் சூடிய கொல்லை உழவர், பறையொலியுடன் வரகுப்புனத்தில் களை பறித்தனர் (அகம். 194:7-9). நாரை சிவந்த பூவினையுடைய புலி நகக் கொன்றையின் கரிய கோட்டின் பெரிய கிளையில்தனியே இருக்கும் தன்குஞ்சினை நினைத்துக் கழியினின்றும் மேலே எழுந்து பறந்தது (அகம். 240:1-4). வேங்கை மரத்தின் பூங்கொத்துக்கள் நிரம்பிய கோடு மலையின் பக்கத்ததாய் அழகிய மயிலினது சூட்டுப்போலக் காணப்படும் (அகம். 368:5-7). பக்கமலையில் உள்ள பலாமரத்தின் சிறு கோட்டில் பெரும் பழம் தொங்கியது போலத் தலைவியின் சிறிய உயிர் பெரிய காமத்தைக் கொண்டிருந்தது (குறு. 18:3-5). ஆற்றங்கரையில் முளைத்து வளர்ந்த அத்திமரம் வெண்கோடு உடையது (குறு. 24:3) உயர்ந்த கோட்டில் உள்ள மந்தியை அதன் குட்டி அகனுறத் தழுவிக் கொண்டது (குறு. 29:5-7). கரிய முகத்தையுடைய ஆண்குரங்கு கிளை தாங்கும் படி பாயாத தவற்றினால் அதனை ஏற்ற கோடு முறிந்தது (குறு.121:2-4). ஊரார் அன்னை கொடுத்த அசைகின்ற குழையுடைய வான்கோடு குலைதலாலே தலைவி வருந்தினாள் என்று கருதி நிகழ்ந்ததற்கு வருந்தாதே என்று கூறினர் (நற். 372:8-10). வாடைக்காற்று அசைக்கையினாலே வளைந்த தாழையின் அசைகின்ற கோட்டிலிருந்த நாரை நம் தோளைத் துறந்து நமக்கு அருளாதவரைப் போலக் கங்குலிடத்து நம் துயரை அறியாமல் அளியின்றி வருத்தமின்றி விளியாது நரலும் எனத் தலைவி தோழியிடம் உரைத்தாள் (கலி.128: 1-5). கோட்டில் தோன்றி அசைகின்ற பூங்கொத்துக்களாலே பொலிந்த கருங்கூந்தலினள் தலைவி (பரி. 22:46).

6. யாழ்த்தண்டு. களாப்பழம் போலும் கரிய கோடு-தண்டு - பொருந்தியது சீறியாழ் (புறம். 127:1; 145:5). சீறியாழ் வளைந்த கோட்டையுடையது (புறம். 155:1;302:5). சீறியாழ் கருங்கோட்டினை யுடையது (புறம். 316:7; நெடு. 70; மலை. 534; அகம். 331:10). கருங்குரங்கு பாம்பின் தலையைப் பிடித்த காலத்து அப்பாம்பு ஒருகால் இறுகவும் ஒருகால் நெகிழவும் அதன் கையைச் சுற்றுமாறு போன்று யாழ்க் கோட்டின்கண் வேண்டுமிடத்தே நெகிழ்ந்தும் இறுகியும் வார்க்கட்டு விளங்கியது (சிறு. 221, 222). அருந்திறற் கடவுளை வாழ்த்தி நுமது கருங்கோட்டு இனியயாழை இசைத்துச் சென்மின் எனப் பெரும்பாணன் ஆற்றுப்படுத்தப் பெற்றான் (பெரு. 389-392). பருக்கோட்டு யாழ் (பரி. 10:56).

7. சங்கு. கோடு - சங்கு - முழங்கும் கடல் கலங்க வேலினைச் செலுத்திப் பகைவரைச் செங்குட்டுவன் வென்றான் (பதி. 46:11-13). செங்குட்டுவன் பாசறையிடத்தே தங்கியதால் கோடு முழங்கும் முழக்கமும் பிற ஒலியும் அவன் துயிலைப் போக்கின (பதி. 50:22-26). மதுரை அங்காடியில் கோடு சுடுதலால் உண்டான சுண்ணாம்பு விற்பவர் இருந்தனர் (மது. 401). மூத்த பெண்டிர் தம் நரைத்த கூந்தலைக் கோதிப் பின்னே இட்ட முடி, கடலின் வெண் கோட்டை ஒத்துக் காணப்பெற்றது (மது. 407-409). மதுரை மாநகரத்தில் கோட்டினை அறுத்து வளையல் முதலியன கடையும் தொழிலாளரும் இருந்தனர் (மது. 511). வெண்காந்தட்பூ கோடு உடைந்தது போன்று மலர்ந்தது (அகம்.23:6). கடல்

கோடு பெருகும் ஆழத்தினையுடையது (அகம். 162: 1-3). கோட்டினை அறுத்துச் செய்த கைவளை நெகிழத் தலைவி பிரிவிற கலங்கினாள் (குறு.11:1,2) தலைவியும் ஓர் ஆடுகள மகள்; அவள் கையிலிருந்த கோட்டினை அறுத்துச் செய்த வளையலை நெகிழச் செய்த தலைவனும் ஓர் ஆடுகள மகனே (குறு.31:4-6). பிரிவால் தலைவியின் கண்கள், கோடுகளை அறுத்துச் செய்த விளங்குகினற வளைகள் நெகிழ நாளும் துயிலாது நீர் சிந்தும் (குறு. 365: 1,2). வெண்கோடு முழங்க வரிசையாக எடுக்கப்பட்ட விளககுகளுடனே மாலைக்காலம் வந்தது (நற. 58:6-8). மணற்கரையில் கோடுகளைக் குலையாகத் தொடுததாற போன்று குருகுகளின வரிசை காணப்பட்டது (நற். 159:3,4). பாணர் பாடும் மெலலிய இசைப்பாட்டுப் போல வெள்ளிய வலம்புரிக் கோடு ஒலிக்கும் (நற். 172: 7,8). தாழையின் அரும்பு முதிர்ந்த வெள்ளியபூ, கோட்டினை நீட்டித்து வைத்தாற் போன்று இருந்தது (நற். 203: 2-4). வளையாகிய கோடு போனறது வெண்மணல் (நற். 372:5,6). கடலிலுள்ள கோட்டினை அறுத்துச் செய்யப் பெற்ற வளையலணிந்த முன்கையினள் தலைவி (ஐங். 191:1). கடல் பொங்கி யெழுந்து கரையின்கண் ஏறுதலானே கடலின்கண்ணவாகிய கோடு நிலத்தில் ஊர்ந்து திரிந்தன (ஐங். 192:1). கடலின்கண் பிறந்த கோட்டினை அறுத்துப் பின்னர் ஈர்வாளாற போழ்ந்து செய்யப்பெறற வளையணிந்தவள் தலைவி (ஐங். 194:1,2). ஒளி பொருந்திய வளையல் கோட்டினை ஈர்ந்து செய்யப்பட்டது (ஐங். 196:1).

8. கரை. கோடைக் காலம் நீட்டித்து நின்றதாயினும் வற்றுதலை அறியாத, கையை மேலே கூப்பி முழுகி நீர்நிலை காட்டுங்காலத்தும் கையமிழும் குளத்தின் கோடு - கரை - வலைஞரால் காக்கப் பெற்றது (பெரு. 272,273). பரதவர் வலையால் இனமாகிய மீனகளை முகந்து, சுற்றத்துடன் கூடிக் கரையில் இழுத்து வநது, இரநதோரின் வறுங்கலம் நிறையச் சொரிநது, எஞ்சியவற்றைக் கூறு செய்து விற்பர் (அகம். 30:1-10). கோடை நீணட பசுமையற்ற காலத்திலே குன்றங்களைக் கண்டாற் போனற கோடுகளை உடைய பெரிய குளங்கள் நீரின்மையால் வெப்பம் மிக்கனவாயின (அகம். 42:6-9). புதிதாக மிக்கு வந்த வெள்ளம் காவிரியின் கோடு தோய்ந்து வநதது (அகம். 166:14,15). நள்ளிரவில் பெருமழை பொழிய, அதனால் நீர் நிரம்பி அலை மோத, அதன் துளிகள் கரையின் மேலிடமெங்கும் பரததலின மெலிந்த கோட்டினையுடைய பெருங் குளத்தைக் காத்தல செய்பவனபோலத் தலைவியை அவள் அன்னை துயிலின்றிக் காத்தனள் (அகம். 252:10-14). உலகு புடை பெயர்ந்தாலொத்த வங்கம் பகலும் இரவும் ஓரிடத்தும் தங்குதலின்றிக் கடல் நீரைப் பிளந்து செல்லக் கோடு உயர் அகன்ற துறைக்கண் உள்ள மாட ஒள்ளெரியினால் (கலங்கரை விளக்கத்தால்) இடமறிந்து நீகான் செலுத்தினான் (அகம். 255: 1-6). கோடு உற உயர்ந்த நீண்ட பெரிய பரப்பினையுடைய புதுநீர்ப் பெருக்கில் பரத்தையருடன் தலைவன் ஆடினான் (அகம். 266:1-6). நாடுகள் நிறைதற் கேதுவாகிய காவிரியின் கோடு பொருந்தி ஓடக்கோல் மறையுமளவு வெள்ளம் வந்தது (அகம். 341:4,5). வலம்புரி முத்தினைக் கடலில் மூழ்கியெடுத்த பரதவர் சங்குகள் ஒலிக்கும்படி கொற்கையோர் எதிர் கொள்ளுமாறு படகினின்று இறங்கும் மணலையுடைய நீண்ட கோட்டில் தம் ஊர் இருப்பதாகத் தோழி கூறினாள் (அகம். 350:11-15). 'தலைவனின் தேர் இன்றும் வருகின்றது, நாம் எதிர் கொள்ளாவிடில் நாணமுடைய அவன நாம் அன்பிலேம் என்று துணியக் கூடும் ஆதலால், நெடிய வெண்மணற் கோட்டில் நான் மறைந்து கொள்ளவா, உன் கருத்தினைக் கூறுவாயாக' எனத் தோழி தலைவியிடம் கேட்டாள் (அகம். 380:9-13). கருங்காற் குருகின் குத்துக்குத் தப்பிப் பிழைத்தோடிய இறவின் ஏற்றை அலை கொழித்திடப்பட்ட மணல்மேடாகிய நெடுங்கோட்டின் கண்ணே உள்ள தாழையின் பூவைக் கண்டு இதுவும் ஒரு குருகு என எண்ணி அஞ்சும் (நற். 211:4-8). அலைகள் தழுவும் எக்கரால ஆன நெடிய கோட்டின்கண் முண்டகத்தின் நறுமணம் கமழும் (ஐங். 177:2-3).

9. வளைவு. சிறிய கோடு - வளைவு - பொருந்திய குழவித் திங்களைச் செம்பாம்பு தீண்டினாற்போல மகரவாயாகிய தலைக்கோலத்தைச் சேர்த்தின சுரும்புகள் சூழும் சுடர்நுதல் விளங்கியது (பெரு. 383-385). முன்பு பூத்தொழிலையுடைய ஆடை கிடந்த உயர்ந்த கோட்டினையுடைய அல்குலில் கணவனைப் பிரிந்தமையால் கோப்பெருந்தேவி மாசேறிய அழகிய துகிலை உடுத்திருந்தாள் (நெடு. 145,146). வேங்கை மரத்தின் மணங்கமழும் பூவுடன் கூடிய தழையை வேறுவேறு வைத்தாற் போன்று தசையின் மறைப்பு நீங்காத கோட்டு உகிர் பொருந்திய மூன்று புலிக் குட்டிகளைப் பெண்புலி ஈன்றது (அகம். 147:2-5). கோடு பொருந்திய அழகிய சிறகுகளையும் நெடிய கால்களையும் உடைய கணந்துள் என்னும் பறவை வேட்டுவ மக்கள் இருப்பதை அறிவுறுத்தி வழிப்போகும் வம்பலரின் படையை அவ்விடத்தினின்று நீங்கச்

செயயும் (குறு. 350: 3-5). சிற்றிலுள்ளே கூடலி ழைதது அவனைக் கூடுவேனோ என்று ஆராய் கின்ற தலைவி அக்கூடலின ஒரு பாகத்தை இழைத்த அளவிலே அவ்வாராய்ச்சிக்குப் பிறி தொன்றாகிய கோடு தன்னிடத்தின் முழுதுங் கூடாத இளம்பிறையைக் கண்டாள் (கலி.142:24,25).

**10. கொம்பு.** திரண்ட கோடு - கொம்பு - உடைய வாளை மீன்கள் நீர்மேல் பிறழ்ந்தன (புறம். 249: 2). நீர்நிலை களியாய்க் காய்ந்து போகும் கோடைக் காலத்தும் ஆம்பல் இலையின் நிழற்கீழ்க் கதிர் போலும் கோட்டை யுடைய ஆண் நத்தை இளைய சங்குடன் பகற காலத்தே மணங்கூடும் (புறம். 266: 1-6). பரதவர், வெண்கூதாளப் பூவாலாய மாலை யணிந்து சினையுடைய சுறாமீனின் கோடு நட்டு வழிபட்டனர் (பட். 85-87). பாண்மகள் தன் தலை யனமார் விடியலிற் கொணர்ந்த கணைக் கோட்டு வாளைக்கு நெலலின் முகவை கொள்ளாது முத்துக் களுடன் சிறந்த அணிகலன்களை விலையாகப் பெறுவாள் (அகம். 126: 7-12). திரண்ட கோட்டி னையுடைய வாளை மீனின சூல் நிறைந்த பெண் மீன தேமாவின் இனிய பழத்தினைக் கௌவும் (குறு. 164: 1, 2). தாழை சுறாமீனின் முகத்தில் நீண்டுளள கோடு போன்று முள் பொருந்திய இலை களையுடையது (நற். 19. 2). மடை திறந்து கொண்டு ஓடிய குளத்தினின்றும் புறம்போந்து கால்வாயை அடைந்த திரண்ட கோட்டினையுடைய வாளை, அங்கிருந்து கழனிக்கு ஓடி ஆண்டுள்ள உழவர் தம் கைக்கோலால் புடைத்தற்கும் அஞ்சாது செருக்கி வயலின் வரப்படியில் புரளும் (நற். 340: 3-8).

**11. ஊது கொம்பு.** முருகனை வழிபடுவோர் ஆடு களம் சிலம்பப் பாடிக் கோடு - ஊதுகொமபு பலவற்றையும் சேர ஊதிக் கொடுமணி இயக்கிப் பிணிமுகம் என்னும் அவன் யானையை வாழ்த் தினர் (முரு. 245-248). கூததர் எடுத்துச் சென்ற பல்வேறு இசைக் கருவிகளுள் கரிய பீலியாகிய அழகினையுடைய தழையைக் கட்டின கோடும் ஒனறாகும் (மலை. 5). தினைப்புனக்காவலர் தினை உண்ண வரும் பன்றியின் பெருங் கூட்டத்தை ஓட்டுதற்குக் கரிய கோட்டினால் ஓசை எழுப்புவர் (அகம். 94:9-11). 'தலைவனே, நீ வரும் நெறி அஞ் சத்தக்கதாதலின் இன்றுமுதல் வாரறக; வரின திரும் புங்கால் நின சிறுகுடி எயதிய பின்றை எம் துனபம் நீங்குமாறு வேட்டை நாயகளை அழைககும் குறிப் பினைக் கொண்டுள்ள கோட்டினை ஊதல் வேண் டும்' எனத தோழி அவனிடம வேண்டினாள் (அகம். 318 : 9-15). பலலான கோவலர் தமமுடைய ஆனிரை வறண்ட பாலையிற் புகுந்ததாகக கோடு துவைத்து அவற்றை அஙகிருந்து விலக்கிக் கொன்றை நிழலில தங்கச் செய்தனர் (அகம். 399: 8-11). கோடு ஊதி, விளவிக் கொல்லும நாயுடன் மான்வேட்டை கொள்ளும் வயவர் மகளிர் எனத் தலைவன் தலைவியையும் தோழியையும சுட்டி னான் (நற். 276: 1-3).

**12. மேடு.** பல்வகைப பூக்களும் உதிர்ந்து வாடிக கிடக்கும் காடுகள பயன்படும் தன்மை திரிநது செவ்வரக்குப் போன்ற நுண்ணிய மணல் பொருந திய கோடுகளை - மேட்டு நிலத்தை - உடைய வாய் ஒண்ணுதல் மகளிர் கழற்சிக்காயுடன மறுகும் நிலையுடையவாயின (பதி. 30:26-28). உழவர் சநதனததையும் அகிலையும் வெட்டிக் கோட்டில் தோரை நெலலை விதைத்தனர் (மது. 286,287). இருப்பைப் பூககள் ஆர்கருக் கழனறு காற்றாற் சிதறுண்டு பவளம் போனற சிவந்த கோட்டு வழிகளில் குருதி மீதுளள கொழுப்புப போலப் பரந்து கிடக்கும (அகம். 9:3-9). மேல் காற்றுக் கொணர்நதிட்ட, அடும்பங் கொடி படர்ந்த மணற்கோடு பரவியிருநதது (குறு. 248: 4,5). தாழஞ் சோலை சூழந்த துறைவனுடைய குதிரைகள இரவு பகல எனனாது கழுததுமணி ஒலிக்க நிலவு பரநதாற போன்ற மணறகோடு ஏறிச் செல்லும் (நற். 163.3-7,12).

**13. புடைப்பு.** மணங்கமழும் கூந்தலையுடைய புது மணமகள் இளையமகளிருடன கூடி மண மனையில பல கோடு - புடைப்பு - உடைய அடுப்பில பால உலை ஏற்றிச் சமைத்தாள் (அகம். 141:13-16). இராப்பொழுதில் உண்ணும் இரையினை விரும்பிய எண்குக குட்டி புல்லிய கோடுகளை உடைய சிறுதூறுகள படாநதிருந்த புற்றினகண வெளளிய பாமபுகள பிறழும்படி கையால் வவ்வும் (அகம். 257:18-21).

**14. மலை.** உழவர் அரிவாளால நெலலை அறுததுச் சூட்டைக் கோடாக அடுக்கினா (பொரு. 242,243). நீலமணி போலும மயிலினுடைய விரிநத தோகைக்கு நடுவே மஞசைப பரபபித தவழும் கோட்டுககு உரியவன நலலியக் கோடன (சிறு. 264,265). மேகம் கடலைக் குடிதது வலமாக எழுநது கோட்டினை இருபபிடமாகக கொணடு கார் காலத்தே பெருமழை பெய்தது (முலலை. 4-6). அஙகு உடைய கோடு தந்த அருவியில புலியை வெனற பெருஙகையானை புகர் நுதலைக கழுவியது (அகம. 272.1-3).

**15. வரி.** உமணரின வண்டி உருளில் உள்ள பூண், நடுகல்லில் உளியால் இயற்றப் பெற்ற கோடு -

வரி - மறைந்த எழுத்துக்கள் அவ்வழியே செல்லும் புதியவர்க்கு வேறு பொருளினவாய்ப் பிறழ்ந்து காணப்படும் (அகம். 343:4-8). 'அணிகலன் நெகிழும்படி நீசிந்தும் கண்களுடன் மயங்காதே; சென்ற நாட்களை ஆராய்கின்ற கோடு கிழித்துச் சுவரினிடத்தைப் பற்றி நிற்கும் நின் துன்பம் நீங்குமாறு தலைவர் வருவதாகக் கூறிய கார்ப்பருவம் வந்தது' என்று கூறித் தோழி தலைவியைத் தேற்றினாள் (குறு. 358:1-4). தலைவி நுண்ணிய பலவாகிய கோடு பொருந்திய அல்குலையுடையவள் (நற். 198:5-7).

16. கங்கு. அதியமானின் படைக் கலங்கள் பகைவரைக் குத்துதலால் கோடும் - கங்கும்- நுனியும் சிதைந்து கொல்லனது கொட்டிலில் கிடந்தன (புறம். 95:4,5).

17. வரப்பு. குறும்பூழ்ப் பறவையின் சேவல் சுளகிடை உணங்கும் வெள்ளிய எள்ளைக் கவர்ந்துண்டு உடனே வளைந்த காதுகளையுடைய கோட்டில் - வரப்பில் - வாழும் எலியை அலைதததது (புறம். 321:1-5).

18. கொடுமை. களங்காய்க்கண்ணி நார் முடிச் சேரல் பழைய நிலைபெற்ற சிறப்பினையுடைய தன் நிழலில் வாழ்வார்ககுக் கோடு - கொடுமை - நீங்க வைத்த கொள்கையுடையவன் (பதி. 37:10,11).

19. முலை (ஆகுபெயர்). ஒருத்தி தன் கேள்வன் ஒலிக்கும் துடியின் தாளத்திற்கேற்பத் தன் கோட்டில் - முலையில் - உள்ள முத்தமாலை அசைய ஆடினாள் (பரி. 21:60,61).

20. அடித்தண்டு. புன்னையின் மேலோங்கி வளைந்த கரிய கோடு - அடித்தண்டு - உடைய பெரிய கிளையில் புதுவதாக வந்து தங்கிய வெண்தருகு ஆர்த்தது, ஆஅய் வள்ளலின் நாளவையில் பரிசிலாகப் பெற்ற தேரின ஒலி போன்றிருந்தது (நற். 167:1-4).

21. முனை. நெடிய தெருவில் தழை விரவின மாலையினையும் முறுக்குண்ட உடம்பினையும் முழுவலியையும் உடைய மாக்கள் வாடைக் காலத்து வீழும் தண்ணிய சிறுதுளிக்கு அஞ்சாதவராய் இரண்டு கோடு - முனை - உடையதாக முன்னும் பின்னும் தொங்கலாக விட்ட ஆடையினராய்த் திரிநதனர் (நெடு. 30-35).

22. விறகு. 'புறங்காட்டின்கண் கரிய கோடு - விறகு - அடுககப்பட்ட பிணப்படுக்கை உங்கட்கு அரியதாகுக; கண்வனை யிழந்த எனக்குத் தாமரைப் பொய்கையும் தீயும் ஒன்றாகும்' எனப் பூதபாண்டியன் தேவி பெருங்கோப்பெண்டு தீப் பாய்வாள் கூறினாள் (கோடு - முருடு என்றும் கொள்வர்) (புறம். 246:11-15).

23. தலைமுடி. 'நீ குறிசெய்த இடத்திற்கு வந்து கூடியவளுடைய கொத்தாகிய கூந்தலின் கோடு - தலை முடியினை - வகிர்ந்து வகை செய்து முடிக் கையினாலே வீழ்ந்து கிடந்த துகளை அறிவில்லாத அந்தணன் எனக்குக் காட்டுமாறு கூறினானோ' எனப் பரத்தைமைத் தலைவனைத் தலைவி வினவினாள் (கலி. 72:18-20).

24. நீர் வீசும் கொம்பு. வையையில் நீராடச் செல்லும் மைந்தரும் மகளிரும் புனுகு நெய்யான் மாண்ட துருத்தியையுடையவராய் உள்விட்ட பனி நீரால மணம்மிக்க கோட்டினராய் - நீர் வீசும் கொம்பினராய் - திரண்டனர் (பரி. 6:34).

25. களைக்கொட்டு. களையினை வெட்டி எறியும் தொழிலையுடையவர் கோடு - களைக்கொட்டு - பொருந்திய கையினராய் விளைந்த கள்ளினை நிறைய உண்டு களிப்புற்றனர் (அகம். 184:13, 14).

**கோடை** - 1. மேற்காற்று. முதுவேனிற் காலத்து மலைமுழைஞ்சுகள் நிறைவினை யுடைய கோடையை - மேற்காற்றை - முகந்து கொள்ளுத லால் அம்மலையிடத்துப் பாலையாகிய சுரம் காற்று மிகுந்த கடல்போல் ஒலிக்கும் ஆரவாரத்தை உடையது (மது. 308-314). கானத்தின்கண் நெடிய மலைகளில் உள்ள மூங்கில்கள் கோடைக்குத் தளர்ந்து வளையும் (அகம். 27:1-3). மூங்கிலில் துளைக்கப் பெற்ற துளையிடத்தே கோடையாகிய அழகிய காற்றினால் எழும் ஒலி குழலிசை போன்றிருந்தது (அகம். 82:1,2). காட்டிடத்து ஞாயிற்றின வெப்பம் பரக்கச் சுழன்று வரும் கோடையினால் முருங்கையின முற்றிய பல பூக்கள் கார்காலத்து ஆலங்கட்டி போலப் பரவி உதிரும் (அகம். 101: 11-16). ஓடைக்குன்றத்து ஞெமை மரத்தின் மீது பின்னப் பட்ட சிலந்திக் கூடு கோடையினால் அசைந்தது (அகம். 111:5,6). ஞாயிற்றின் கடுங்கதிர் காய்தலால் தேக்குமரங்களின நீண்ட கிளைகள் வறியனவாக அவற்றின் வாடிய இலைகள் கோடையால் உதிரும் (அகம். 143:2-5). விளா மரத்தின் கனியில் தோன்றிய துளையினூடே வெப்பத்தோடு வீசும் கோடை நுழைந்து இசைத்தலால் எழும் ஒலி கோவலரது குழலிசை போன்றிருக்கும் (அகம். 219:14-16). புதர் பரந்த இடத்தேயுள்ள மூங்கிலில் வண்டு துளைத்த குறுகிய துளை வழியே கோடை புகுந்து வருதலால் எழும் ஒலி ஆனிரைக்குப் பின்னே வரும் ஆயர்தம் குழலிசை போல் அழகிதாக ஒலிக்கும் (அகம். 225:5-8).

மழவர் காட்டு நிழலில் தங்கி இளம் பசுவைக் கொன்று அதன் ஊனைத் தின்ற இடமான புலால் வீசும் களத்தினைத் துழாவிய புழுதியைத் தன்னிடத்தே கொண்ட கோடையின் ஓசையை இரை விரும்பி எழுந்த புலி, மானைப் பற்றியதனால் உண்டான ஓசையெனக் கருதி உழைமான்களின் இனம் அலறியோடும் (அகம். 249:11-18). காட்டிடத்தே கோடை கிளைகளை மோதி உதிர்த்த இருப்பைப் பூக்களை கரடிக் கூட்டம் கவர்ந்துண்ணும் (அகம். 267·4-8). ஆலமரத்தின் தனித்த விழுதினை மோதிய கோடை அச்செயலால் துணைப் புறாக்களை ஓட்டும் (அகம். 287:7-9). காட்டு நெறியில் நெல்லி மரங்களிலிருந்து கோடை உதிர்த்த பசுங்காய்கள் நூலற்று உதிர்ந்த பளிங்குக் காசுகளை யொப்ப வறுநிலத்திலே உதிர்ந்து கிடக்கும் (அகம். 315:10-13). வறுஞ்சினைக்குள் புகுந்து வரும் கோடையின் தெளிந்த ஓசை பறையொலி போல மலைப்பிளப்பில் ஒலிக்கும் (அகம். 321:2,3). வேனிற் காலத்தில் கோடையினால் குருத்து இற்றுதிர்ந்த இளம் பனையின் உச்சி கூம்பி வற்றியிருக்கும் (அகம். 333·8-11). வேனிற்காலத்து வெப்பம் மிக்க காட்டினில் மூங்கில் தண்டைத் தாக்கிக் கலலெனும் ஒலியுண்டாக ஞெமைமரத்தின் இலைகளை உதிர்த்த வெப்பம் பொருந்திய கோடை, நீண்ட களர்நிலப் புழுதியை முகந்து கொண்டு சுழலும் (அகம். 353:7-10). நெடிய மலையுச்சிகளிலுள்ள காட்டினகண் மூங்கிலின் புல்லிய இலைகள் கோடையாகிய வெம்மை மிக்க காற்றினால் அலையும் (அகம். 397:14-16). கடற்கரைச் சோலையிடத்தில் அடியிடம் புதையும்படி கோடை கொணர்ந்து இட்ட மணற்குவியல் பரவியதனால் நெடிய பனைமரங்கள் குறியனவாகும் (குறு. 248:3-6). தலைவனது மலைநாட்டில் அண்ணல் யானையின் முகத்திலே பாய்ந்த ஆண்புலி அந்த யானைக் கொம்பினில் தானே குத்துண்டு அதனைத் தன் குருதியால் கறைப்படுத்திவிட்டுக் கோடை முறித்து வீழ்த்திய வேங்கைமரத்தின் வாடிய பூங்கிளை போல இறந்து கிடக்கும் (குறு. 343). ‘தோழி, நம் தலைவர் அருளி இசைந்தனராகலின், அருவழியிலேயுள்ள வாகையின் ஓசையுடைய நெற்றுக்களைச் சிலம்புபோல ஆரவாரிப்பக் கோடை அலைக்கின்ற கானத்தினூடே நாமும் அவருடன் செல்வோம்’ எனத் தோழி தலைவிக்கு உடன் போக்கினை உணர்த்தினாள் (குறு. 369). நீரைத் தனக்கு அடியிலே கட்டப்பெற்ற குவளைச் செடி கோடை வீசினும் வாடாது (குறு. 388:1,2). காட்டு வழியில் இற்றிமரத்தின், நிலத்தில் படாது தொங்குகின்ற நெடிய விழுதினை கைசுற்றைப் பொழுதில் ஊசலைப் போன்று கோடை அசைக்குந்தோறும் அவ்விழுது கீழே துயிலுகின்ற பிடியானையை வருடும் (நற். 162:9-11). நெருங்கிய கட்டவிழ்ந்த மலர்களையுடைய தாழைப் புதரில் இயங்குகின்ற கடிய கோடை தாக்குதலால் அம்மலர்களின் நுண்தாதுக்கள் மகளிருடைய வளைகள் உடைந்து உதிர்ந்தாற் போல உதிர்ந்து பரவும் (நற். 299:2-4).

2. **வேனிற்காலம்.** மலையிடம் பொடியவும் காடு தீ மிகவும் மிக்க நீரையுடைய நிலைகள் பலவும் வற்றவும் இவ்வாறு கோடை – வேனிற்காலம் – நீண்ட பசுமையற்ற காலத்துப் பெரிய நிலம் குழியுமளவு மழை பொழிந்தாற்போலத் தன் முன்னோனாகிய தந்தை இறந்த நிலையில் திசையெங்கும் சூழ்ந்து கவலையுற்ற மன வருத்தம் கெடுமாறு மலையமான் சோழியவேனாதி திருக்கண்ணன் தோன்றினான் (புறம். 174:18-28). மாமழை பெய்யாது மாறி நீர் நிலைகள் களியாய் வற்றும் கோடையாயினும் ஆம்பலின் இலைநிழலில் ஆன் நத்தை இளம் சங்கோடே பகலில் மணம் புரிகின்ற நீர்விளங்கும் வயலையுடைய நாட்டினன் சோழன் உருவப்பஃறேர் இளஞ்சேட் சென்னி (புறம். 266:1-6). ‘கிள்ளிவனே, நிலவுலகம் கூலமின்றிக் கெடுமாறு நின்ற கோடை, மழை முகிலின் முழக்கிசையுடன் பெய்து நீங்கிய பின் நீ சேய்மைநாட்டில் இருப்பினும் இந் நாட்டிலேயே இருப்பினும் இப்போது யான் கொடுக்கும் இப்பரிசிலைக் கொண்டே அப்போது என்னை நினைவாயாக’ எனக் கரும்பனூர் கிழான் பரிசில் அளித்தான் (புறம். 381.17-20). ‘நீர் நிறைந்து மெல்லிதாயுள்ள பனை நுங்கின் கண் வற்றி வலிதாகவும் கானவேம்பின் காய்கள் முற்றாமலே உலரவும் ஆழ்ந்த நீர்நிலை களியாய் வற்றும் கோடையாயினும் அப்போது எம்மையும் நினைப்பானோ இப்பிள்ளையம் பொருநன்’ என்று ஆவல்கொண்டு அவனுக்கு ஈத்தனன் ஆதனுங்கன் (புறம். 389 1-6,13). ‘ஆடுமகளது இடைபோலப் பயிரினங்கள் வாடியழியும் கோடையாயினும் கோடிக்கால்களாய்ப் பாய்ந்து காவிரி காக்கின்ற நல்ல நாட்டுக்குத் தலைவ, என் சுற்றத்தினது மிக்க பசித்துன்பம் கெடுமாறு கொழுத்த ஊனைத் துண்டாக்கிக் கோடையில் விளையும் பருத்தியாகிய பஞ்சி திரிக்கப்பட்ட மூடைகளை நிறைத்தாற் போலும் வெண்ணிறக் கொழுப்புத் துண்டங்களை உண்பித்துச் செல்வமும் நல்குவாயாக’ என்று சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனை நல்லிறையனார் வேண்டினார் (புறம். 393.10-23). கோடை நீட்டித்திருத்தலால் குன்றங்கள் பொலிவழிய அருவி

ஒழுகாமல் அற்றுப்போன பெரிய வறட்சிக் காலத் திலும் பல்யானைச செல்கெழு குட்டுவனின் நாட்டி லுளள பேரியாற்றில கரைககு மேலும் உயர்ந்து வழிந்து, கரம்பை நிலஙகளின் வெடிப்புக்களி லெல்லாம் நீர் நிறையுமாறு வயல்களின் வாய்க் கால்களில் பரவித் தழைகளைச் சூடிக் கொண்டு வெள்ளம் பாய்ந்து வரும் (பதி. 28:7-12). கோடை நீட்டிப்பினும் குறைபட்டு வற்றுதலையறியாது கையை மேலே கூப்பி முழுகி நீர்நிலை காட்டும் காலத்துக் கைமுழுகும் குளங்களின் கரையினை வலைஞர் காததிருபபர் (பெரு. 272-274). மழை பெயயாமையால் நாடு வறட்சியுறவும் கலப்பை உழுதொழிலற்று ஒழியவும் கோடை நீண்ட பசுமை யற்ற காலதத்தே, பெரிய கரைகளையுடையனவும் நீரிலலாதனவும் அதனால் பறவைகள் வந்து தங்கப் பெறாதனவும் வெப்பம மிக்கனவுமாகிய அகன்ற குளஙகளெல்லாம் நிறையுமாறு வீசிப் பெருமழை பொழிந்த இனிய வைகறைப் பொழுதில் பலரும் உவநதனர் (அகம். 42:5-11). வாடிய உழுஞ்சிலின் விளைந்த நெற்றுக்களைக் கொண்ட கொத்து. கூத்தரது ஆடுகளத்தில் ஒலிக்கும் பறைபோல விட்டுவிட்டு ஒலித்திடக் கோடை நீண்ட அகன்ற பெரிய குன்றததினிடத்தே நீரில்லாத அரிய சுர நெறியில் களிற்றினைக் கொன்று புலி திரியும் (அகம. 45:1 - 5). நன்னனுடைய பக்கமலையில் காடுகள் அழகழியக் கோடை பரவி நிலைபெற்று நீரை உறிஞ்சுதலால் வற்றிய மூங்கிலின் கணுக்கள் பிளக்கத் தெறித்து விழுகின்ற முத்துக்கள் கழங் குகள் போனறனவாய் அங்குள்ளார் கழங்காடிய பழங்குழிகளில் பரவும் (அகம். 173:12-17). அகன்ற வயலிலுள்ள கருமபின பெரிய பூக்கள் கோடைக் காலததுப் பூளைப்பூப் போல வாடைக் காற்றால் அசையப் பனிப்பருவம வநதது (அகம். 217 : 3 - 5,13). வானம மழையாகிய வளத்தைத் தரா தொழிய, காடுகள காயந்து இலைகள இல்லா தனவாக, ஏறுகளையுடைய ஆனிரைகளைப் பசி வருத்த, குளங்கள் நீரற வற்றிய கோடையினால் மலைகள வளமொழிந்தன (அகம் 291:1-5). மாமரத் தின் நன்மணம் கமழும் இனியகனி கோடையில் முதிரும (அகம். 348:2, 3). கோடை நீடினமையால் வறண்ட நிலத்தே உதிர்ந்த சிறிய புல்லரிசியை எறும்புகள் கொண்டு வந்து தம் வளையில் தொகுதது வைக்கும் (அகம். 377:1-3).. 'நெஞ்சே, நம காதலியைப் பிரியாது நாம் அவளருகில் இருக் கவும் கோடைததிங்களிலும் நடுங்கும் அவள், நாம் பிரிநது செனறால் வாடைப பெரும பனிப் பருவத் தில தனியளாயிருநது எனன பாடு படுவாளோ' என்று தலைவியை நினைந்து தலைவன் பொருள் வயிற் பிரியக் கருதிய நிலையில் வருந்தினான் (நற். 312). காட்டிலே நிலம் ஈரம் அறும்படி ஞாயிறு சினத்தோடு தன் கதிர்களைச் சொரிதலால் மாறுத லில்லாத வெம்மை மிக்க கோடைக் காலத்திற்குக் குளிர்ச்சியை விரும்பி அணி கொள்ளும் களிற்றி னத்தைத் தாங்கும் மலை வெம்ப, மண் பிளக்க, நீர்நிலைகளும் நீரற்றுத் துகளுண்டாகச் சுரநெறி செறிந்த அழலை உடையதாயிற்று (கலி. 20:1-6). ஞாயிறு கீழ்த்திசைக் குன்றிடத்து வந்து தோனறிப் பின்பு கொதித்துப் பரந்து தான் கொண்ட கோடை யினால் போதற்கரிய வழியெனக் கருதாதவனாய்த் தலைவன் பொருள் வயிற் பிரிந்து சென்றான் (கலி. 150:15,16).

3. வெயில். மழையால் முகந்து சொரியப்பட்ட நீர் கோடை – வெயில் - காயினும் வற்றாமையால் அதில் மகளிர் கண்போனற குவளை முதலிய மலர் கள் பூக்கும் வளம் சான்றது நாஞ்சில் மலை (புறம். 137:7,8,12).

**கோடைக்காலம்** - வேனிற்காலம். கோடைக் காலத்து - வேனிற்காலத்து - வெம்மையுற்ற பொழுதின்கண் அடைந்தார்க்குக் கொழுநிழலை ஒத்து யாரிடத்தும் பொய் கூறுதலறியாத அறிவுடையோன வெளிமான் (புறம். 237:3,4).

**கோடைப் பொருநன்** - 1. கோடைமலைத் தலைவன். கடிய நெடுவேட்டுவன். அஞுசி வந்தடைந்த பகை வர்க்குப் புகலிடமாயும் போர் செய்யக் கருதும் பகைவருடைய முயற்சியமைந்த உள்ளத்தைக் கெடுக்கும் படையினையுடையவனாயும் விளங்கிய வன். வெள்ளிய பூவையுடைய முல்லை வேலி யுட்பட்ட கோடை மலைக்குத் தலைவனே என்று இவனை விளித்துப் பாடுவர் பெருந்தலைச் சாத்த னார் (புறம். 205). 'சிறியனவும் பெரியனவுமாகிய புழைகளைப் போக்கற விலக்கிய மான் கணத்தைத் தொலைத்த கடிய விசையையுடைய சினமிக்க நாயையும் வலிய வில்லையுமுடைய வேட்டுவ' என அப்புலவர் இவனை விளித்துப் பாடுவது கடிய நெடுவேட்டுவன் என்ற இவனது பெயருக்கேற்ற புனைவாகப் பொருநதுகின்றது. கால்வீழ்த்துக் கடலிடத்தே திரண்ட முகில் நீரின்றி மீளாதவாறு போல இவனையடையும் பரிசிலர் சுற்றம், தேரும் களிறுமினறி மீளாது. அத்தகைய கொடையாளி யாகிய இவன் யாது காரணததாலோ ஒருமுறை பெருந்தலைச் சாத்தனார்க்குப் பரிசில் நீட்டித்தா னாக அவர் இவனை வெறுத்துப் பாட நேர்ந்தது.

அஃது இவன் கொடைப் பெருமைக்கஃ ஒரு சிறுமையாகவே அமைந்தது.

2. கோடைமலைத் தலைவன். பண்ணி. இவன் தென்னவனான பாண்டியனின் படை மறவன். தனது தென்கடலில் தோன்றிய முத்தாரமும் தனக்குரிய பொதிய மலையில் தடவுளைப் பேணிக் குறவர் கொணர்ந்து கொடுத்த சந்தன ஆரமும் ஆகிய இருபேராரங்களையும் எழில்பெற அணிந்து திருமகள் விரும்பும் மார்பினனாய் இவன் திகழ்ந்தான. குழிகளில் அகப்படுத்திக் கைப்பற்றிக் கொண்ட பழகாத யானைகளுக்கு மொழியைக் கற்பித்துப் பழக்கும் சிறுபொழுதேயன்றிப் பழக்கிய பின்னர் அவற்றைத் தனக்கென்று பாதுகாத்து வைத்துக் கொள்ளாது இரவலர்க்கு ஈயும் ஈகைச் சிறப்பினையும் கூரிய வாயமைந்த அம்பினையு முடைய இக் கோடைப் பொருநனையும் பெருந்தலைச் சாத்தனாரே பாடியுள்ளார் (அகம். 13). பண்ணியென்னும் இயற்பெயரோடே பாடப்பெறும் இவன் பயன்மிக்க வேள்விகள் பலவற்றைச் செய்து மேம்பட்டான்.

**கோடை பாடிய பெரும்பூதனார்** - புலவர். பெரும்பூதனார் என்ற இயற்பெயரையுடைய இப்புலவர் கோடைமலையையோ கோடைக் காலத்தையோ சிறக்கப் பாடிய சீர்மையினால் கோடை பாடிய பெரும்பூதனார் என அடையடுத்து அழைக்கப் பெற்றார். இவரது கோடைப் பாடல் இப்போது கிடைக்கவில்லை. கரந்தைத்திணைக்கண் செருமலைதல் துறையிலமைந்த புறப்பாடல (259) ஒன்றே இவருடையதாகக் கிடைக்கின்றது. ஏறுகளையுடைய பெரிய ஆனிரையைக் கவர்ந்து கொண்டு போகின்ற போக்கினிடையே காட்டில ஆங்காங்குத் தலைமறைந்து காத்திருக்கும் வெட்சி மறவருடைய ஒடுக்கத்தையும ஆனிரையின் அடக்கமில்லாப் போக்கினையும் காட்டிக் கரநதை மறவனை மேற்செல்லாது சானறோ னொருவன் தடுப்பதாக இவர் அப்பாடலைப் பாடியுள்ளார். இடமறியாது சென்று இன்னலுக்குட்படுதலாகாது என்ற அருமைக் கருத்து இவர் பாடலில அழகுறப் புனைவு பெற்றுளளது. 'முருகு மெயபபட்ட புலைத்தி போலத், தாவுபு தெறிக்கும் ஆன்' என்று ஆனிரையின் தாவிச்செல்லும் துள்ளற் போக்கிற்கு இவர் காட்டியுள்ள உவமை உணர்ந்து இன்புறத் தகுவதாம்.

**கோண்** - கோணல். வேந்தருடைய கோண் - கோணல் (மனக் கோணல்) - தணிதறகேதுவான மதிலரண் போலக் காவல் மிகுதிக்கு உட்பட்டுத் தலைவனால் காண்பதற்கரியளானாள் தலைவி (அகம். 372:14-16). கைவினை வல்லோன வாளரத்தினால் அராவிய கோண் அமைந்த அழகிய வளையணிந்த முன்கையுடையவள் தலைவி (நற். 77:8-11).

**கோண்மா** - 1. கொல்லும் விலங்கு. மிக்க மழைபொழிந்த பாதியிரவில், உயிரினங்களையே உணவாகக் கொள்ளும் கோண்மா - கொல்லும் விலங்குகள் பலவும திரியும் இருளிலே தனியனாய் வருதலைச் சிறிதும் அஞ்சாமல தலைவன் இரவுக்குறியிடத்திற்கு வந்தனன (அகம். 108:8 - 11).

2. புலி. 'நும் பகைவர்தம் குன்று பொருந்திய நாடுகள் வளைந்த வரியை யுடைய கோண்மா-புலி - வடிவாகச் செய்யப்பட்ட பொறியை (சின்னத்தை) கயலுடனே சேரப் பொறித்த சிகரங்களை உடையனவர்க' என்று சோழன் குராப் பள்ளித் துஞ்சிய பெருந்திருமாவளவனையும் பாண்டியன் வெள்ளியம் பலத்துத் துஞ்சிய பெருவழுதியையும் ஒருங்கே வாழ்த்தினார் காவிரிப்பூம் பட்டினத்துக் காரிக்கண்ணனார் (புறம். 58:29-32).

3. சிங்கம். தலைவி ஏந்தியிருந்த புதலவனைத் தலைவன தனனிடத்தே தரவேண்டியபோது அவன்மேல் தாவிய மகனை அவள் கடிந்து விலக்கவும் விலகாதவனாய் அம்மகன் அவளைக் கை கடந்து மலையடி வாரத்தில் கோண்மா - சிங்கம்-பாய்ந்தாற் போலத் தன் தந்தையின் அகன்ற மார்பிலே பாய்ந்தான் (கலி. 86:29-34).

**கோண்மா நெடுங்கோட்டனார்** - புலவர். கோண்மா என்பது புலியையும் சிங்கத்தையும் குறிக்குமொரு சொல். கோடு எனபது கொம்பிற்கும் பல்லிற்கும் வரியினுக்கும் வரும் பொதுச் சொல். இப்புலவர் கோண்மாவின கோட்டினை நெடுகோடு என்று பாடியதனால் இபபெயர் பெற்றாரோ என்று எண்ணத் தோனறுகின்றது. ஆயினும் அப்படியொரு தொடரமைந்த பாடல இப்பொழுது கிடைத்திலது. தலைமகட்குப் பாங்காயினார் கேட்பப் பரததை சொல்லியது என்னும் துறையில் (நற்றிணை) இடம் பெற்ற ஒருபாடலே (40) இவர் பெயரில் காணப்படுகினறது. தலைவி புதல்வனை ஈன்ற செய்தியறிநது தலைவன் பரத்தையர் கண்களிற் படாது கள்வனைப்போல் கடிமனைக்குட் புகுந்த நிலையைப் பரத்தை கூற்றிலேயே வைதது இவர் பாடியுள்ள நயம் நகை சான்றது. மகவீன்ற மனைப்புனைவு இவர் பாடலில் பொலிவுற இயன்றுள்ளது.

**கோண்மீன்** - கோளாகிய மீன். அதியமான் பொகுட்டெழினி தன்னைப் பாடிவந்த கிணைஞனுக்குக்

கள்ளினைக் கோண்மீன் - கோளாகிய மீன் - போன்ற பொற்கலத்தில் பெய்து உண்ணும் முறையில் ஈததனன் (புறம். 392: 16-18). ஓய்மானாட்டு நல்லியக்கோடன் பாணர்க்குப் பல்வேறு அடிசிலை வானத்தில் ஒளியமைந்த நிறத்தையுடைய கோண்மீன பலவும் சூழ்ந்த இளங்கதிர் ஞாயிற்றை இகழும் தோற்றம் பொருந்திய பொற்கலத்தில் விரும்புவனவற்றை உணர்ந்து விருப்புடன் தானே முன்னின்று ஊட்டுவான (சிறு. 241 - 245). ஓரினச் சுற்றத்தையுடைய பரதவப் பிள்ளைகள் நீல நிறத்தையுடைய வானத்தில் வலமாக எழுந்து திரியும் நாண்மீன்களுடனே கலந்த கோண்மீன் களைப் போல மன்றததிலே குழுமி விளையாடினர் (பட். 61-69). 'பெருந்தகையே, பொருள்வயிற் பிரியக் கருதிய நும்மை நாண்மீனும் கோண்மீனும் தீயனவாய் நினறு தடுத்தலைச் செய்கின்றன' எனத்தோழி தலைவனைப் பிரிவு விலக்கினாள் (கலி. 5:8,9).

**கோணம் - தோட்டி** (அங்குசம்). கோணம் – தோட்டி - வெட்டிய வடுவழுந்தின முகத்தை யுடையவை போர் யானைகள் (மது. 592, 597).

**கோத்தை** - அழிவு. மீனக்கொடி பறக்கும் தேரினை யுடைய பாண்டியனால் வளர்க்கப்பட்ட தமிழ் மொழி உள்ள மட்டிலும் மதுரை சிறப்புற்று விளங்கிச் செல்வம் பொலிதலனறி அந்நகர்க்குக் கோத்தை - அழிவு - உண்டாகாது (பரி. தி. 10).

**கோதமனார் - புலவர்.** இவர் தருமபுத்திரனைப் பாடியதாக ஒரு பாடல் புறநானூற்றில் (366) உள்ளது. பாரத வேந்தனான பாணடவர் தலைவன் தருமபுத்திரனையே (அறக்கடவுள் மகனாதலால்) 'அறவோன் மகனே' எனறு இவர் விளித்துப் பாடியுள்ளார் எனவும் அதனால இவரைப் பாரத காலத்தவர் எனவும் கருதுவர் அபிதான சிநதாமணியாசிரியர். அனறியும் பாரதப் போரில் உணவளித்த உதியஞ் சேரலின் மகனான பலயானைச் செல்கெழு குட்டுவனைப் பதிற்றுப் பததினுள் மூனறாம் பத்தால் பாடிய பாலைக் கௌதமனார் இக்கோதமனாரே என்று கூறுவதும வழுவாகாது என்பர் அவர். 'இவர் பெயா கௌதமனாரெனவும் பாலைக் கௌதமனாரெனவும வழஙகும்' என உ. வே. சா. குறித்துள்ளது (புறம. பாடினோா வரலாறு) இதற்கு முன்மொழியாகும். ஆகவே. பதிற்றுப் பத்து மூன் றாம்பத்தும மேறகுறித்த புறபபாடலும் ஆகிய பதினொரு பாடலகளை இவர் இயற்றியுள்ளார் எனலாம். வையாபுரிப் பிள்ளையின சங்க இலக்கியப் பதிப்பு இபபதினொரு பாடல்களையும பாலைக் கௌதமனார் என்ற ஒருவர் பெயரிலேயே அடக்கியுள்ளதும் நோக்கத் தகும். பெருங்காஞ்சித் துறையில இவர் தருமபுத்திரனைப் பாடிய புறப் பாடலில், 'ஒருதா மாகிய பெருமை யோரும், தம் புகழ் நிறீஇச் செனறுமாய்ந் தனரே' என நிலையாமையை முதலில் எடுத்துக் கூறிப் பின்னர் சில அரசியல் அறிவுரைகளைச் செவியறிவுறுத்துகின்றார். 'நின் வலிமையைப் பிறர் அளந்தறியாதபடி காத்து, நீ பிறர் கூறும்மொழியைத் தெரிந்துணர்ந்து பகலில் ஆள்வினைக்கு உதவி இரவில் பின்வரும் பொருளை ஆராய்ந்து அரசியல் நடத்துவாயாக' என்று இவர் கூறுவது சிறந்த அறிவுரையாகும். 'பாலைக் கௌதமனார்' காண்க.

**கோது - சக்கை.** நெடியோனான பாரியின் தேர்வழங்கும் இருக்கை, யானை மென்று இட்ட கவளத்தின் சக்கை போல மதுவைப் பிழிந்து இட்ட கோது - சக்கை - உடைய சிதறலினின்றும் வார்ந்த மதுச் சேறு ஒழுகும் முன்றிலை யுடையது (புறம். 114:3-6). எருமையின் பெரிய கொம்பு போலும் நெடிய முற்றிய நெற்றுக்களினுடைய பச்சைப் பயறுகளை உதிர்த்துவிட்ட கோதினாலியனற வளைந்த படுக்கையில் கன்றையுடைய மரையான் துயிலும் (புறம். 297:1-4). மலை வழிகளில் யாமரத்தின நாரினை யுடைய அடிமரத்தில் நீா வரும்படி உரித்துக் களிற்றியானை சுவைத்துப் போட்ட கோதுகளின் சுள்ளி அவ்வழியே செல்லும் உமணர்க்குத் தீமூட்டுந் துரும்பாகும் (அகம. 257:14-17,21).

**கோதை – 1.** மாலை. வளடுபட மலர்ந்த தண்ணறும் கானலிடத்து உள்ள முள்ளிப்பூவாற் செய்யப் பெற்ற கோதை – மாலை - அணிந்த ஒண்டொடி மகளிர் பனைநுங்கின நீரும் கரும்பின் தீஞ்சாறும் இளநீரும் ஆகிய மூனறையும் கலந்துண்டு கடலாடுவர் (புறம். 24:10-16). கோதையுடைய மார்பிற்கு அணிந்த கோதையானும் சேரனைப் புணர்ந்த மகளிர் சூடிய கோதையானும் கழியின் கண மலர்ந்த நெய்தறபூவானும கானலநதொண்டி தேன. மணம் கமழும் (புறம். 48:1-4). 'நீ அருளாமையால் அருந்துயர் உழககும் நின் மனைவியின் கூநதலில் கமழ்புகை கொள்ளுவித்துத் தண்கமழ கோதை புனைய நின தேரைக குதிரைகள் பூணபனவாக; அதுவே நின்பால யான வேணடும் பரிசில்' எனப் பேகனிடம் அரிசில கிழார் கூறினார் (புறம். 146: 5-11). 'பிட்டன கொற்றனது கை வண்மையால், யாரும் உணவைத்தேடி வருந்தல் வேண்டா; உலை ஏற்றுக; சோறு ஆக்குக; கள்ளை நிறைய உண்டாக்குக; விறலியர் கோதையும்புனைக; அன்னவை பிறவும செய்க' எனக் கூறி வடம

வண்ணக்கன் தாமோதரனார் அவனைப் பாராட்டுவர் (புறம். 172:1-5). நரந்தம் மலர்களால் ஆகிய பல்காழ் கோதை யாழின் கோட்டில் சுற்றப் பெற்றது (புறம். 302:4,5). கொடுங்குழை மகளிர் கோதை சூடினர் (புறம். 304:1). விறலியர் அசையும் கோதை யணிந்தனர் (பதி. 49:2). மகளிராடும் துணங்கைக் கூத்திற்கு முதற்கை கொடுத்தமையின் தன் தலைவனொடு சினந்த சேரமாதேவி வருந்தும் கோதை போன்ற தன்மையளாயினாள் (பதி 52:14-18). பகைவரைத் தேய்த்த ஆண்மையினையும் மகளிர் தோளிடைக் குழைந்த கோதையணிந்த மார்பினையும் உடையவன பெருஞ்சேரலிரும் பொறை (பதி.79:6,7). மலைபோன்ற மார்பில் சந்தனம் பூசித் தண்கமழ் கோதை சூடிப பூணணிந்து பொலிவுடன திகழ்ந்தான் இளஞ்சேரலிரும் பொறை (பதி. 88:30-36). மயிலைக் கண்டாற் போன்ற மடநடை மகளிர் இதழ் பறித்துக் கட்டின கோதையினை உடையவர் (முரு. 206,205). நாட்காலத்தே கோதை கட்டினாற் போல இடையறாமல் தொடுத்த நறும்பூக்களையுடைய சிறிய கொம்புகளை உடையது குறுங்காற் காஞ்சி (சிறு. 178,179). புதுநீர் விழாவின் ஆரவாரத்தையுடைய மகளிர் கூட்டம் தாம் அணிந்த நெருங்கின கோதை தமகணவர் மார்பின் தாரோடு பொலிவு பெறுமாறு கூடி நீராடுதலின் ஓசை உண்டாயிற்று (மது. 264-266). தாதுக்கள் சூழ்ந்த கோங்கினுடைய மலர்களும் ஏனைய மலர்களும் பரந்து கோதை ஒழுகினாற் போல ஓடும் பெருநீர் வரவினை உடையது வையை (மது. 338-340). வளங்கெழு செல்வர், அணி விளங்கும் மார்பிடத்தேயுள்ள ஆரமொடு கலந்த மாணிக்கம் ஒழுகினாற் போன்ற ஒள்ளிய பூங்கோதையினை யுடையவர் (மது. 438, 439, 442). கொண்டிமகளிர் (பரத்தையர்) நீர் திரண்டாற் போன்ற வெள்ளிய பூக்களாற் செய்த கோதைகள் விசும்பிலே சென்று கமழும்படி அவற்றைக் கொண்டையில் முடித்தனர் (மது. 561, 562, 583). கோதையால் பொலிவு பெற்றது சேக்கை (மது. 713). மகளிர் கூதிர்க்காலத்துக் குளிர்ச்சி மிகுதியால் தம் பல்லிருங் கூந்தலில் கோதையிட்டு முடியாராய், சிலவாய மலரிட்டு முடிப்பர் (நெடு. 53,54). தலைவியும் தோழியரும் பலவாய் வேறுபட்ட நிறத்தையுடைய அழகமைந்த கோதைகளைத் தம் மெல்லியற்கருங் கூந்தலிலே கவின்பெறச் சூடினர் (குறி. 103, 104). கங்குற் பொழுதில் மாடத்திடத்தே யிருந்து நுகர்ந்த கள்ளின் மயக்கம் மிக்கமையான் மைந்தரது கண்ணியை மாலையென மகளிர் சூடினர்; மகளிரது கோதையைக் கண்ணியென மைந்தர் மலைந்தனர் (பட். 109,110). மகளிர் பலநிறம் பொருந்தின இடத்தையுடையதாகிய பிணையல் கோதையினை உடையவர் (மலை. 349). 'கோதை ஆயமொடு விளையாடும் விளையாட்டினை மேற்கொண்டு அரிச்சிலம்பு ஒலிப்ப என்மகள் விளையாடும் இடந்தோறும் அகலாதிருப்பேன்; அது கழிந்ததே' என்று மகட்போக்கிய செவிலித்தாய் வருந்திக் கூறினாள் (அகம். 49 : 16-18). தலைவி கோதை ஆயத்தாரோடு வண்டலயன்றி ஓரையாடினும் தாய் அவள் மேனி வாடுமெனச் சினப்பாள் (அகம். 60:10-12). நறுமணம் கூட்டி அரைக்கபபெற்ற சந்தனத்தைப் பூசி உயர்வுறப்பூண்ட கோதை மார்பினனாய் நீ இரவினில் வந்து நின் மார்பு வடுவுண்டாக முயங்கிப் போதல் எமக்கும் இனிதாகும் எனத் தோழி தலைவனிடம் கூறினாள் (அகம். 100 1-4). மாவண் சோழரது காவிரி கடலில் மண்டுப் பெருந்துறைக்கண்ணே பெருங்கடல் ஓதம் இறாமீனோடு வந்து கோதையோடு மீளும் (அகம். 123. 10-13). தலைவி வண்டார்க்கும் தாழிருங் கூந்தலினையும் சுரும்புகள் தேன் உண்ணும்படி மலர்ந்த பூக்களாலாய பெருந்தண் கோதையினையும் உடையவள் (அகம். 131:3,4). தலைவி நள்ளென் யாமத்தில் பைய வந்து மழையின் அலைத்தலாற் கலங்கிய மலைப்பூக்களாலாய கோதையினின்று உலைக்களத்து அடிக்குங்கால் தெளித்து விழும் பொற்றூள் போலத் தேன துளித்து வீழ இனிய கூறித் தன் முலைக்கண் வடுக்கொள்ளுமாறு தலைவனைத் தழுவினாள் (அகம். 142:20-26). கோதையினைத் தரிக்கும் அழகினை இழந்த கூந்தலையும் நினையார் ஆயினர் எனப் பிரிவிடை ஆற்றாத தலைவி தோழியிடம் கூறினாள் (அகம். 144:4,5). தலைவி அழகு மிக்க கோதையுடைய ஆயத்தாருடன் திரணட மணல் மேட்டில் ஏறி மலர்நிறைந்த கானலில் வண்டல் அயர்ந்தனள் (அகம். 180:1-3). 'அருஞ்சுரம் இறந்த தலைவர் வந்தனர்; ஆதலின் நின வளைகள் தோளில் ஏறுவனவாக; நின்துன்பமும் தீர்வதாக; நெளிந்த கரிய கூந்தலில் கோதையும் புனைக என்று தோழி தலைவியிடம் கூறினாள் (அகம். 259: 1,2). விசும்பில் வேகங்கொண்டெறிந்த கூதாளியின் கோதை போல வெள்ளாங்குருகு தாவும் தன் சிறகினை வளைத்துக் கடற்பக்கத்தே நாட்காலையில் பரவி அமரும் (அகம். 273:1-3). வேலன் கோதை தன்மார்பில அசைந்திட வெறி ஆடுவான் (அகம். 292:5,6). குறுங்காற் காஞ்சி கோதை போன்ற கொத்துக்களை உடையது (அகம். 296:1). தலைவன் அரிய இருள்நீங்க வெள்வேல் ஏநதி மெல்லிய அரும்பு மலர்ந்த தாழ்ந்த கோதையின்

கண் உவதும் வண்டினை ஓட்டி நள்ளிரவில்
தலைவியைத் தேடிவந்தான் (அகம். 2?8 : 11 - 14).
ஆவிரைச் செடியின் விளங்கும் பூக்களாலாய
கோதை, மகளிர் வண்ணமார்பின் முலையிடத்துக்
கிடநது அசைநதது (அகம. 301:12,14,15). அறுகம்
புல்லினைத தின்று நீரினைக் குடித்த ஏறுகள்
குறுங்காற் காஞ்சியின கோதை போனற மெல்லிய
பூங்கொத்துக்களினின்றும் உதிரும் பொன்
போன்ற நறுந்தாது மேலே உதிர்ந்திட ஒருங்கு
கூடி நெடுமணல எக்கரில் துஞ்சும் (அகம்.341:6-11).
காந்தள் மலரையும் செவ்விய மலர்களாகிய
முலலைப பூக்களையும் கமழும் இதழ்களையுடைய
குவளை மலர்களோடு இடையிடையே பொருந்
தும்படி கலந்து அழகிதாகத் தொடுத்த மாட்சி
மைப் பட்ட கோதையைப் போல நறுமணத்தை
யுடையவள் தலைவி (குறு. 62:1-4). கடலாடு மகளிர்,
கட்டிய கோதையை யணிந்த மூங்கிலைப் போன்ற
பருத்த தோளினை உடையவர் (குறு. 326:1,2).
தலைவன பலவகை மலர்கள் கலந்த கோதை
யணிந்த நின் நல்ல மார்பைத் தழுவுதல் நின்
உண்கண் கலுழப் பசலை உண்டாகாததன் முன்பு
மிக இனியதாயிற்று என்று தோழி தலைவியிடம்
கூறினாள் (குறு. 339:3-7). தலைவன் விராவிய
மலரையுடைய நின் கோதை குழையும்படி முயங்
கிய நாட்கள் மிகச் சிலவாகும்; அலரோ வாகைப்
பறந்தலையில் அதிகன களிறோடு பட்ட காலத்தில்
கொங்கர் செய்த ஆர்ப்பினும் மிக்கது எனத்
தோழி தலைவன் கேட்பத் தலைவியிடம் கூறினாள்
(குறு. 393). தலைவன செய்தறி இடையீடு பட்டுத்
தவறுதலாலே சூடாது கிடந்த பூமாலை போலத்
தலைவி மெய் வாடினாள் (நற். 11:1,2). நின் காதற்
பரத்தை, நினனைப் பிரிதலாலே விளங்கிய பூண்
களுடன சுணஙகணியப் பெற்றவளாய் முன்பு
நின மார்பிலுற்ற முயக்கத்தால் சோர்ந்த குழை
யையும் பிணியுற்ற தோளகளையும் துவண்ட
கோதையினையும் உடைய கொடி போனறு
இனறு எம் மறுகின்கண சென்றனள் எனத்
தலைவி தலைவனுடன் ஊடிக் கூறினாள் (நற். 20:
8-11). தலைவன குழையணிநது கோதை சூடித்
தொடி யணிந்தவனாய் விழாக்களத்துத் துணங்கை
யாடச் செனறான் (நற். 50:2,3). சூடிய கோதை
சிகுண்டாலும் குறுவளை கையினினறு நழுவி
னாலும் அலதுலின் மேல் தொங்கும் காசு முறை
பிறழநது கிடந்தாலும் அவற்றைத் திருத்துதற்கு
அறியாளாய்க் கலுழநது நிற்கும் என் புதலவியின்
மலாக்கணகள் வெஞ்சுரத்தில சிவந்து ஒளி மழுங்
கிக் கலங்கினவோ என மகட்போக்கிய தாய்

வருந்தினாள் (நற்.66:7-11). கொடியடும்பின் பெரிய
இதழ்களையுடைய மலர்களை மகளிர் தம் கூந்த
லில் இடுகின்ற கோதைக்குக் கூட்டுவர் (நற். 145:2,
3). வண்டுகள் ஒலிக்கின்ற கோதை யணிநத மார்
பின்கண்ணே கொடும்பூண் கொண்கனோடு
நாம் உவகை பொருந்த முயங்கி விளையாடிய
கானல் இவ்வூரோடு இனி எவ்வண்ணமாக
அமையுமோ என்று பகற்குறி வந்த தலைவன்
மீளுதலை நோக்கிய தலைவி அழிந்து கூறினாள்
(நற். 187:6-10), அணி மலர்க் கழி முள்ளியின் நுண்
ணிய கோதையைக் கூந்தலில் வண்டுகள் பொருந்து
படி சூடித் தலைவி கடலிலே தோழியரோடு
நீராடினாள் (நற். 245: 2-4). என்னுடைய தழைத்த
பலவாய கூந்தல் அணி பெறச் சூடிய அரும்பு
மலர்ந்த கோதை வாடும்படி செய்த மிக்க பகைவ
னல்லையோ நீ, என்று பரத்தையிற் பிரிந்து வந்த
தலைவனைத் தலைவி வினவினாள் (நற். 260: 8-10).
தலைவனது கோதையிலும் மற்றெவற்றினும் காற்
றால் எறியப்படும் வெண்மணல் ஒடுங்கின (நற்.
278: 9). பரத்தையின் கொங்கையினாலே தழுவப்
பெற்ற சந்தனத்தை உடையை; அவள் குழைய
முயங்கலாலே துவண்டு வாடிய கோதையை உடை
யை; ஆதலால் நின்னைத் தீண்டுதல் கலங்கழித்
தெறிந்த தாழி முதலியவற்றைத் தீண்டிய தன்
மையை ஒக்கும் எனறு பரத்தையிற் பிரிந்து வந்த
தலைவனைத் தலைவி சினந்து மொழிந்தாள் (நற்.
350: 7-9). பைந்தழையுடை சிதையக் கோதை வாட
எல்வளை நெகிழ நேற்று மாலைப்பொழுதில் நின்
னோடு அலவனைப் பிடித்தாட்டிய என் தோழியின்
சிலம்பு உடை பட்டதனாலே அதனைக் கட்டுதற்கு
மண்ணெடுக்கும் துறையிலுள்ள மணலைக்
கொண்டு வந்து தந்து செல்வாயாக எனத் தோழி
தலைவனை வேண்டினாள் (நற். 363: 5-10). மெல்
லியல் அரிவையே, நின் பல்லிருங் கூந்தலில் சூடிய
மாலை போலக் குவளை மலரோடு இடையிட்டுத
தொடுத்த நறும்பூ முல்லையின் மூட்டுவாயவிழ்ந்த
மலராகிய தண்ணறுங் கோதையைச் சூடி இளை
யரும் வந்தனர்; நம் காதலரும் குதிரையை
விரைந்து செலுத்தித் தாழ்க்காது வருகுவர் என்று
தோழி தலைவியிடம் கூறினாள் (நற். 367: 7-13).
பரத்தையர் பைஞ்சாய்க் கோரையால் அமைந்த
கோதையினர் (ஐங். 54: 5). 'தலைவனே, நின் உறவி
னள் ஒருத்தி முண்டகக் கோதை நனையக் கடலில்
பாய்ந்து நீராடி நின்றதனைக் கண்டோம்' எனத்
தோழி தலைவனிடம் கூறினாள் (ஐங். 121).
'காதலால் முலையிடையிற் கோதை குழையும்படி
முயங்கும் முறைமையினையுடைய நாட்கள் பயனின்

றிக் கழிதலுறாமையை நெஞ்சாலே காண்பாய்' எனப் பிரிவுணர்த்தப்பட்ட தோழி தலைவனிடம் கூறினாள் (கலி. 12:13,14). தலைவன் சிறுவனாயிருந்த போது தலைவி தெருவிடத்துச் செய்த சிற்றிலைக் காலால் அழித்துக் கூந்தலில் சூட்டிய கோதையை அறுத்து வரிப்பந்தை எடுத்துக் கொண்டோடி நோவத்தக்க தொழில்களைச் செய்தான் (கலி. 51: 1-4). கொடியிலுள்ளனவும் கோட்டிலுள்ளனவு மாகிய பூக்கள் நீரினறி நிறம் பெறுமபடி நெருப் பாற் பணணப்பட்ட பொற்பூவாற் செய்த கோதை யினை உடையவள் தலைவி (கலி. 54:1,2). தோழி அழகினையுடைய வகிர்களைக் கூநதலிடத்தே விளங்க விட்டுப் பின்னால் தாழம்பூ வகிர்நத வற்றையும் இடையிலேயிட்டு முடிதத மிகவும் மணக்கினற நறும்பூங் கோதையினை உடையவள் (கலி. 55:2,3). தலைவி நறுங் கோதையினையுடைய மணம் கமழ்கின்ற கார் போன்ற கருங்கூந்தலினள் (கலி. 60:2). 'சுரும்புகள் ஒலிக்கின்ற பூவாற்செய்த கோதையினை யுடைய அழகிய நல்லாய்' எனத் தலைவி விளிக்கப் பெறுதல் (கலி. 64 : 12). நின மார்பின் தாரினைக் கொண்டவளது (பரத்தை யது) தலைக்கோதையை வைகறைப் பொழுதில் தடுமாறிப் பூண்டு நின் ஈரணி சிதையாது எம் இலலத்திற்கு வந்து நின்றது அவளுடன் புனலாடி னாய் என வந்த பூசலைக காட்டிலும் கொடிய தாகும் எனத் தலைவி தலைவனிடம் புலந்து கூறி னாள் (கலி. 66:13-16). 'பரத்தையர் தம் கோதை யாலே அடித்த நலத்தினையுடைய அழகினையும் நகத்தாலும் எயிற்றாலும் அலைத்த புண்களையும் வடுககளையும் காட்டி என்னிடத்து அன்பின்றி வரும் தலைவனைப் புலப்பேன் யான் எனறாலும், என கையறு நெஞ்சம் கலப்பேன் எனறு கூறும்' எனத் தலைவி தோழியிடம் கூறினாள் (கலி. 67: 6-9). தலைவனைப் பிரிநத காமக்கிழத்தியர் பூச் செப்பிலே பயன்படாது தஙகிய கோதையினை யொதத தனமையர் (கலி. 68:15). கூட்டத்தால் மகிழச்சி யுற்ற பரத்தையரின் கமழகின்ற கோதை முயக்கத்தால் தலைவன் மார்பு மென்மையுற்றது (கலி. 72:19,20). அலமரல் உண்கண்ணாராகிய பரத்தையரது அழகிய கோதைகள் முயக்கத்தாற் குழைவிதத தன மலர்ந்த மார்பில் பூசின பாட ழிந்த சந்தனம் தலைவன் பரத்தைமையைத் தலை விக்குரைத்தது (கலி. 73:12,13). முடியிலே பொருந் தும் கோதை போலத் தலைவி வாடும்படி தலை வன் பரத்தையர் தொடியினாலுற்ற வடுவினைக் காட்டித் தம்மில்லிற்கு வந்தான (கலி. 78:21,22). ஐயனே, எம் காதின் கனங் குழையை வாங்கிப் பெயருந்தோறும் எம் பூவில் வறுந்தலையில் நின்னை வைத்துக் கொள்வது நுந்தையின் அகன் மார்பிலுள்ள தாதைத் தேரும் வண்டினம் மொய்க் கும்படி கட்டின கோதையை எம் ஏதிலாரிடத்து நுந்தை வைத்த அன்பு தேயுமாறு நீ அறுத்து விளையாடுதற்கேயாம் எனத் தலைவி தனபுதலவ னிடம் கூறினாள் (கலி. 80:22-26). பரதனதயர் தெரிந்த கோதையை யுடையவர் (கலி. 88 18). தம நலத்தை நுகர்வன போல வணடுகள் மொயக்கை யினாலே அஞ்சிய மகளிருள் ஒருத்தியின பணணுத லமைந்த கோதை வேறொருத்தியின தொடி யோடு தடுத்துக் கொண்டது; வேறொருதகி அவ் வண்டுகளைக கையாற் கடியமாட்டாளாய் மணம் நாறுகினற கோதையை அறுத்துக் கொண்டு ஒட்டி னாள்; அதறகும் அவை போகாமை கணடு ஓடத்தே ஒளிந்தாள் (கலி. 92 : 31-34,45-47). 'தெரி கோதை அநநல்லாய்' எனத் தலைவி விளிக்கப் பெறுதல் (கலி. 98:9). மழையை ஏறறு நின்ற பிட வமும் முல்லையும் தோன்றியும் கொனறையும இவை போலவனவாகிய பிற பூத்த மலர்களையும் நெருங்கும்படி தழையையும் கோதையையும் இழை யையும் கட்டினராய மகளிர் மகிழ்நது விளையாடி னர் (கலி. 102:1-6). 'முறறிழாய, நின தாதுசூழ கூந்தல் தகைபெறுமாறு கோதை புனைவேனோ' எனத் தலைவன் தலைவியை வினவினான (கலி. 111:12,13). கோதை ஆயம் (கலி. 122:1). சேர்ப்ப னாகிய தலைவனைக் கோதையே கோலாகக் கொண்டு அடிப்பேன் போலவும் அவன யான செய்த பிழைதான் எனனே என நடுஙகி எனனைத தெளிவிப்பான் போலவும் அவனைக் கனவிற் கண்டேன தோழி; கனவில் வநத சேர்ப்பன் நனவில வருதலும் உண்டெனறு என அரும்பெறல உயிரும நினறது எனத தலைவி தோழியிடம் கூறினாள (கலி. 128:18-26). தலைவன் இவவிடத்திலதான பூ வினையுடைய அடுமபின மலரைக கொணடு கோதை புனைந்து கொடுத்தான எனப் பிரிவிடை ஆறறாத தலைவி பேதுற்றுக கூறினாள் (கலி. 144:30,31). சூடிக் கழித்த மெனமலரும் மைநதர் தாரும் மக ளிர் கோதையும் பிறவும் கலந்து வையை விரிபுனல் நலனழிந்ததால மக்கள் அதன்கண நீராடுதலைத தவிர்ததனர் (பரி. 6: 46-49). கோதைபோல என மார்பினுள் அழுத்தப்பட்டவள யாவளோ, அவ ளோடு யான் ஆடிய யாறுதான யாது எனத தலை வன் ஊடலுற்ற காதற்பரததையை வினவினான (பரி. 6:90,91). நறவு உண்டு சிவநத தலைவியின் கண்களைத் தலைவன் ஏததிப் பாட, அதனைக் கேட்ட வேறொருத்தி அவனோடு கூடக் கருதிய

தனை யறிந்த அவன் இனி நமக்கு என்ன நேரப் போகிறதோ என அஞ்சியவனாய்த் தலைவியை அடைநது நடுக்கமுறத தலைவி அவள் மேல் பகை மிக்குத் தன கோதையைப் பியததெறிநது மிக வெகுண்டாள (பரி. 7:65-72). செவ்வேள் தேவ சேனையுடன் கூடினமை கண்ட வள்ளி 'இனி அவ ளைக் குறுகல்' என்று அவன் கையை இறுகப் பிணித்துக் கோதையைக் கோலாகக் கொண்டு புடைத்தாள் (பரி. 9:39,40). தேவசேனையின் பாங் கியர் கோதையையும் வரிப்பந்தையும் கொண்டெறி வாராய்த் தம் பேதைமையுடைய மெல்லிய நோக் கம் வெகுளியால வேறுபட வள்ளிப் பாங்கிய ரோடு பொருதலை மேற்கொண்டனர் (பரி. 9:47-49). தெரி கோதை நல்லார் (பரி. 11:58). தன் கண வனை அணங்கையொப்பாள் ஒருத்தி பார்க்க, அது பொறாத தலைவி அவனைக் கோதையைக் கோலாகக் கொண்டு புடைத்துத் தன மார்பி லுள்ள வடத்தை வாங்கி முனகையை இறுகக் கட்டி நீ பிழையுடையை என ஊடினாள் (பரி. 12: 57-60). தாரினையுடைய மைந்தரும் கமழ்நறுங் கோதையராகிய மகளிரும் பொருள்களை ஈந்து அதன் பயனாகிய போகத்தை நுகரவேண்டி நாள் தோறும் ஆடுதலான், அவர் கையுறையாகிய பொன்மீன் முதலியனவும் அலரணிந்த சாந்தும் கோதையும் ஈரணி புலர்த்தும் புகையும் அவியுண வும் இடையறாமல் இருக்கும் வண்ணம் மழை மாறாமற் பெய்க; நின்பால வெள்ளம் அறாதொ ழிக என வையையை வேண்டினர் (பரி. 16:50-55). வையையில் நீராட விரைந்தோருள் சிலா தாம் முந்த வேண்டும் என்ற விரைவினால் மகளிர் கோதையை மைந்தரும் மைந்தர் தாரினை மகளி ரும் முறைமாறி அணிந்தனர் (பரி. 20: 20-22). வையைக்கண் நீராட விழைந்தவர் பூங்கோதை களையும் தாரையும் மாலைகளையும் பிறவற்றை யும் அணிந்தவராய் வையைக் கரைக்கண்ணே நின் றனர் (பரி. 20:27-31). சுடர் பரந்த மின்னலைப் போலப் பொன்னால் இடையிடை யிழைத்துச் செயத கோதை கூந்தலில் அசையக் கள்ளைக் குடிதத ஒருத்தி மகிழ்ச்சி தடுப்பத் தளர்ந்து துகில் நெகிழக் கண சிவப்பக் கொடிபோல அசைந்தாள் (பரி. 21: 54-59). சந்தனமும் தாரும் கோதையும் சுண்ணமும் கூந்தலிலிருந்தும் குடுமியிலிருந்தும் உதிர்நத பூவும் நிறைந்திருத்தலின் வையை நீரின் நிறம் தோன்றாதாயிற்று (பரி. இ. 2: 84-86).

2. சேரன். கோதையுடைய மார்பிற்கு அணிந்த மாலையாலும் கோதையை - சேரனை - புணர்ந்த மகளிர் சூடிய மாலையாலும் கழியிடத்து மலர்ந்த நெய்தற் பூவாலும் கானலந் தொண்டி தேன் மணம் கமழும் (புறம். 48:1-4). ஓங்குவாட் கோதையை (சேரமான் கோக்கோதைமார்பனை) குறிஞ்சி நிலம் உடைமையால் நாடன் என்பேனோ; மருத நிலம் உடைமையால் ஊரன் என்பேனோ; நெய்தல நிலம் உடைமையால் சேர்ப்பன் என்பேனோ; என்றுகூறும் வாயிலாக அவனது நாட்டு வளத்தைப் பொய்கையார் சிறப்பிப்பர் (புறம். 49:1-3). கடு மான் கோதை (மாந்தரஞ்சேரலிரும் பொறை) வானம் நாண வரையாது வழங்கும் வண்மையாளன்; வலி துஞ்சு தடக்கையினையுடைய அவனது நாடு பகை மனனர்க்கு இடையன் ஆட்டினததோடு அணுகமுடி யாத புலிதங்கும் வியன்புலம் போனறது (புறம். 54). பிட்டனின போரை வெல்லும் வேலும் அவன் தலைவனாகிய மாவள்ளீகைக் கோதையும் அவ னோடு பகைத்த மன்னரும் நெடிது வாழியர் என்று வடமவண்ணக்கன் தாமோதரனார் வாழ்த் துவா (புறம். 172:8-11). கொடும் பறையினை யுடைய கூத்தருடைய சுற்றம் வாழ்த்தும் தண்கடல் நாடனாகிய ஒள்ளிய பூங்கோதையின பெரிய நாளோலக்க இருக்கையில எல்லாக் கலைகளையும் உணர்ந்த விழுமியோர் அவன் கேட்குமாறு தருக் கங்களைக் கூறுதலான் கம்பலை எழுநதது (மது. 523-526). கடுமபகட்டு யானையினையும் நெடுந் தேரினையுமுடைய கோதையின் செல்வமிக்க நக ரான கருவூரின் துறைமுன் தெளிநத நீரினை யுடைய ஆனபொருநை யாற்றின் உயர்கரையில் குவிந்துள்ள மணலினும் பலவாகத் தலைவியைப் பனமுறை முயங்குவோம்; செல்வாயாக என்று வினை முற்றி மீளும் தலைவன் தன்னெஞ்சிற்குக் கூறினான் (அகம். 93:20-23). ஒளி வீசும் வேலை யுடைய கோதை ஓம்பிக் காக்கும் வஞ்சி போன்ற எனது வளமனை பொலிநது விளங்க வெறுப் பின்றி என மகளது வளரும் முலைப் பரப்பில் அவள் தலைவன் இன்புற்றுத் துயிலும் துயிலினை வதுவையால் இனிதாகக் கூட்டி வைத்திருப்பேன்; அது கழிந்ததே என மகட்போக்கிய தாய் புலம்பி பினாள் (அகம். 263:11-15).

3. பூங்கொத்து. நெருங்குகின்ற தன்மையையுடைய கடம்பினது இணைதல் நிறைந்த கோதை - பூங் கொதது - தன்னிடத்துள்ள இந்திரகோபத்தை யொத்த தாதை உதிர்த்தலின் நீருண்டுறை ஓவியம் எழுதினாற் போனறு காணப்படும் (சிறு. 69-71). அயனமையுடைய மழையைக் காரென மயங்கிய பேதைமையுடைய கொனறையின் கோதை நிலையை நோக்கி நீ கலங்கற்க; நாடிறந்தோராகிய நம் தலைவர் நின் தகையெழிலை வாட்டுநர் அலலர்

எனத் தோழி தலைவியிடம் கூறினாள் (ஐங். 462). குறிய பலவாகிய கோதையினையுடைய கொன்றை மலரக் கார் காலம் தொடங்கியது (ஐங். 497:1,3).

4. கூந்தல். தலைவி பொற் பூக்கள் நெருங்கியிருந்தாற் போன்ற ஒளி பொருந்திய கொத்துக்களையுடைய செருந்தியின் பல பூக்களைச் சூடிய அழகு பொருந்திய கோதையினை - கூந்தலினை - உடையவள் (அகம். 280:1,2).

**கோதை மார்பன்** – சேர வேந்தன். சேரமான் கோக் கோதை மார்பன் என்றும் இவன் வழங்கப் பெறுவான். இவனைப் பொய்கையார் புறநானூற்றுப் பாடல்கள் இரண்டினால் (48,49) புகழ்ந்து பாடியுள்ளார். அவற்றால் இவனது சிறந்த கொடைப் பண்பு விளங்குகின்றது. இவனுடைய கடற்கரைச் சோலையமைந்த தொண்டி நகர் பூவளம் மிக்குத் தேன்மணம் கமழும் என்றும் இவன நாட்டில புனங் காப்போர் கிளிகடி கருவியைப் புடைப்பின் அப்புனத்தின் அயலிலுள்ள வயலின கண்ணும் கடற்கரையின் கண்ணும் பறவைகள் ஒருங்கெழுமாறு குறிஞ்சி மருதம நெய்தல் நிலங்கள் தம்முள் மயங்கி இருக்குமென்றும் அதனால் இவனை நாடனென்றோ ஊரனென்றோ சேர்ப்பனென்றோ தனிப்படக் கூறவியலாது என்றும் பொய்கையார் குறிப்பிடுவர். நக்கீரருடைய அகப்பாடல் ஒன்றினால் (அகம். 346) பாண்டியன் பழையன் மாறன் போன்றோர் இவன் பகைவர் எனவும் சோழன் கிள்ளிவளவன் இவன் நண்பன் எனவும் அறியலாம். ஒருகால் கிள்ளிவளவன மிகுதியான தானையுடன் வேற்றுப் புலங்களில் தங்கி அப்புலங்களை வென்று வருகையில் பழையன மாறனை அவனுக்குரிய கூடனமாநகரிலேயே நற்போரில் சாய்ததுு அவனுடைய புரவிகளோடு களிறுகளையும் கைப்பற்றியதோடு மேலும் தன் பகைமன்னர் ஊர்களைப் பற்றக கண்ட இக் கோதை மார்பன் பெரிதும் உவந்தனன் என அவ்வகப பாடலில் நககீரர் குறிக்கின்றார்.

**கோதையர்** - 1. மாலைகளையுடையோர். பலவகையாக விரித்து வைத்த ஒனறற்கொன்று மாறுபட்ட கோதையர் - பூமாலைகளை யுடையோர் - உள்ளிட்ட பண்டம் விற்போர் பலரும் மதுரை நகர வீதிகளில் மாட நிழலிலே வெயிலுக்கு ஒதுங்கியிருந்தனர் (மது. 397-406). காவிரிப்பூம் பட்டினத்தில் பரதவர் தம் காதல் மகளிரொடு உவா நாளில் சுறாமீனின் கொம்பைநட்டு வழிபட்ட தெய்வம் காரணமாக வெண் கூதாளத்தின குளிர்சசி மிக்க பூவாற செய்த கோதையராய்த் தாழை மலரைச் சூடியும் பனங் கள்ளை அருந்தியும் மகிழ்ந்தாடினர் (பட். 85-93). வளைந்த கோதையராய் இள மகளிர் வண்டல் விளையாட்டினை அயாநது மாலைப் பொழுதில் மீள்வர் (அகம். 370:1,2). ஆயர் ஏறுதழுவும் தொழுவினுள், புறவிதழ் ஒடிநத மணத்தையுடைய ஒத்த இதழால் கட்டிய கோதையராய் மகளிர் வரிசை வரிசையாக அணி வகுதது நின்றனர் (கலி. 105:26). வையை வெள்ளம், தன்னிடத்தே விரைநதாடுவாராகிய ஆராய்ந்து தொடுக்கப்பட்ட கோதையரின காதுகளில் தளிரைச் செருகியது (பரி. 7:43-45,50). தாரினையுடையராகிய மைந்தரும் கமழ்நறுங் கோதையராகிய மகளிரும் முன் செய்த ஈகையின் பயனை நுகரவேணடி வையையில் நீராடினர் (பரி. 16:50,51). மதுரையினின்றும் திருப்பரங்குனறம் போகும் இடைவழியில் மகிழ்ச்சி மிக்க இனிய மணங்கமழும் கோதைகளை யுடையரான மகளிரும் மைந்தரும் நெருங்கிச் செல்லுதலால் அவருடைய கூந்தலிலிருந்தும்ம யிரிலிருந்தும் வீழ்ந்து அவிழ்ந்த மாலைகளால தடைப்பட்டு அங்கே செல்லும் வழி இல்லாதாயிற்று (பரி. 17:23-27). மகளிர் குளிர்சசி பொருந்திய வெட்சி மலரால் தொடுக்கப்பட்ட கோதையராய் நீர் விளையாட்டிற்காக வையைக் கரையில் நிறைந்தனர் (பரி. 22:22,25).

**கோதையவர்** - மாலையணிந்த மகளிர். இளவேனிற் காலத்தில ஆடவர் வையையில் நீராடுதற்கமைந்த அணிகள் அணிந்த மார்பகத்தே, அவ்வழகிய ஒப்பனையையும அதற்கேற்ற அணிகளையுமுடையவராகிய ஒளிதிகழும கட்டுவகையமைந்த மூட்டுவாய புணைநத தொழிலதிறம் வாய்ந்த பொனனாலாகிய கோதையவரொடு - மாலையணிந்த மகளிரொடு - இடைவிடாது இறுகப் புணர்தற்கு இன மதுவை நுகர்நது களிப்புக கொண்டனர் (பரி. 11: 62-67). வையைக கரையில் நீல நிறத்தையுடைய நெய் தங்கிய கோதையவரான மகளிர் விலக்க விலகாது அவரது அமமாலையில் பூவினை ஊதும் வண்டினம யாழையொக்கப் பாடியது (பரி. 11:124, 125).

**கோதையள்** - கூந்தலள். பொற்பூக்கள் நெருங்கியிருந்தாற் போன்ற ஒளி பொருநதிய கொத்துக்களையுடைய செருந்தியின பல பூக்களைச சூடிய அழகு பொருந்திய கோதையளாய - கூந்தலளாய் - தலைமகள கடற்கரையில் நணடினை ஓட்டி விளையாடினாள் (அகம். 280:1-4).

**கோதையன்** – மாலையணிந்தவன் குழையணிந்தவனாய்க் கோதையனாய் - மாலையணிநதவனாய்-

குறுகிய பைந்தொடியணிந்தவனாய்த் தலைவன பெண்வேடம் பூண்டு பரத்லையரொடு விழாக் களத்தில் துணங்கைக் கூத்தாடினான் (நற். 50:2,3).

**கோதையார்** - மாலையணிந்த மகளிர். இணைந்த மலராக ளாற் செய்த கோதையார் - மாலையணிந்த மக ளிர் - ஆகிய கலைகளெல்லாம் முற்றக் கற்று முதிர்ந்த பரத்தையர் தாமே நன்றென்று சொண் டாடும்படி தலைவன் நாள்தோறும் மணம செய் தான் (கலி. 70:9,10).

**கோதையாள்** - மாலையணிந்தவள். 'தாமரைப் பூவால் செய்த கண்ணியை அணிந்தவனாய்க் குளிர்ந்த நறுமணம் மிக்க சந்தனத்தைப் பூசியவனாய் நீ ஒத்த இதழ்களால் கட்டப்பட்ட கோதையாள் - மாலையணிந்தவள் - ஆகிய நின் காதலி குறித்துச் சொன்ன குறியிடத்தே வருவையாயின் இச்சிறு குடியிலுள்ளார் நின்னை மலையிலிருந்து பலி கொள்ளும் மணங்கமழும் அணங்கென அஞ்சுவர்' என்று தோழி தலைவனை இரவுக்குறி மறுத்து வரைவு கடாவினாள் (கலி. 52:7-10).

**கோப்பு** - கோவை. அகவன் மகள் சங்குமணிகளா லான கோப்பு - கோவை - போன்ற வெண்ணிற முடைய நன்னெடுங் கூந்தலையுடையவள் (குறு. 23: 2,3).

**கோப்பெருஞ்சோழன்** – சோழவேந்தன். இவன், 'பெருங் கோக்கிள்ளி' (புறம். 67:11) எனவும் 'தேர்வண் கிள்ளி' (புறம். 220:6) எனவும் வழங்கப் பெறுவன். 'கோழியோனே கோப்பெருஞ்சோழன்' (புறம். 212: 8) என்றதனால் இவன உறையூரிலிருந்து அர சாண்டவன் என்பது விளங்கும். இவன் புலமை நலம் வாய்க்கப் பெற்ற செந்தமிழ்ச் சான்றோனா கவும் திகழ்ந்தனன். குறுந்தொகையில் நான்கு பாடல்கள் (20, 53, 129, 147) இவனது புலமை யைப் புகல்கின்றன. தலைவனின் பிரிவைத் தோழி உணர்த்திய நிலையில் 'அருளும் அன்பும் நீக்கித் துணை துறந்து, பொருள்வயிற் பிரிவோர் உரவோ ராயின், உரவோர் உரவோராக, மடவமாக மடநதை நாமே' (குறு. 20) என்று தலைவி கூறுவ தாக இவன் பாடியுள்ள பாடலின் சொல் நயமும் பொருள் நயமும் உணர்ந்து இன்புறத் தகுவனவாம். கடல் நடுவே எட்டாம் நாள் திங்கள் தோன்றி னாற் போலத் தலைவியின் கூந்தலுக்கு அயலே விளங்கும் அவளது அழகிய நெற்றி தன்னைப் புத்தியானையைப் பிணிப்பதுபோல் பிணித்துக் கவர்நதது எனத் தலைவன பாங்கனிடத்தே பகர் வதும் (குறு. 129) 'கனவே, எம் காதலியைக் கொணர்ந்து தந்தோய் போல நீ எம்மைத் துயி லெழுப்புகின்றாயே, எம்மைப்போல் துணையைப் பிரிந்தோர்க்கு நீ இவ்வாறு உதவுவதனால் அவர் நின்னை இகழ மாட்டார்காண்' எனத் தலைவன் தான் பிரிநத இடததே கனாக்கண்டு பேசுவதும் (குறு. 147) இவன் பாடல்களில் காணத்தகும் சிறந்த பகுதிகளாகும். இத்தகைய சான்றோனாய இவன் புரையிலா நண்பினையுடைய பொத்தியா ரொடு நெருங்கிய கேண்மை கொண்டிருநதான் (புறம். 212:8,9). மற்றும், பாண்டி நாட்டுப் பிசிர் எனனும் ஊரினராகிய ஆந்தையாருடன் உணர்ச்சி மாத்திரையில் உயரிய நட்புடையனாய் விளங்கி னன் (புறம். 215:6,7). அவரும் இவனிடத்தே இன் னதொரு உள்ளத் தொடர்பை வளர்த்திருந்தார். இவனிடத்து அன்னச் சேவலைத் தூதுவிடும் பிசிராந்தையார், நீ பெருங்கோக்கிள்ளி கேட்கு மாறு உன்னை, 'ஆந்தையாரின் அடிமை' என்று கூறுவையாயின் நின பேடை அணியுமாறு அவன் நல்லணிகலன்களை நினக்கு நல்குவான் (புறம். 67: 11-14) என்பதனால் அவரிடத்து இவன் கொண்ட அன்பின் ஆழத்தை யுணரலாம். அவ்வாறே, 'நுங்கோ யாரென வினவின் எங்கோ, கோப் பெருஞ்சோழன்' (புறம். 212:1,8) எனப் பிசிராந்தை யார் கூறுவதும் 'தன்பெயர் கிளக்குங் காலை என்பெயர், பேதைச் சோழன் என்னும் சிறந்த காதற் கிழமையு முடையன்' (புறம். 216:8-10) என அவரைக்குறித்து இவன் கூறுவதும் அவர் இவனி டத்துக் கொண்ட அன்பை யுணர்த்தும். இம் முறையே இவனும் அவரும் நேரிற் காணாதே நெஞ் சத் தொடர்பு கொண்டிருந்தனர். பின்னாளில் இவன் தன்னொடு முரணிய மக்கள் இருவர்மேலும் போருககெழுந்த நிலையில் புல்லாற்றூர் எயிற்றி யனார் எனனும் புலவரால் அறிவுறுக்கப்பட்டு (புறம். 213) வடக்கிருந்து உயிர் துறக்கத் துணிநத னன். அப்போது 'செய்தலங் கொலலோ நல்வினை' என இவன் பாடிய பாடல் (புறம். 214) அரிய தொரு பொருண்மொழிக் காஞ்சியாகும். வடக்கி ருக்கும் அளவில் இவன் பிசிராந்தையாரைக் குறித்து, 'பிசிரோன் என்பவென உயிரோம் புநனே, செல்வக் காலை நிற்பினும், அல்லற் காலை நில்லலன்' (புறம். 215:7-9) எனவும், 'இன் னதோர் காலை நில்லலன், இன்னே வருகுவன் ஒழிக்கஅவற்கு இடனே' (புறம். 216:11,12) எனவும் தெளிவுறக் கூறியதற்கேற்ப அவரும் வந்தாராக, அருகிருந்த பொத்தியார், 'நினைக்குங் காலை மருட்கை யுடைத்தே' (புறம் 217) என வியந்து பாடுவர். வந்த பிசிராந்தையாரும் இவனுடன் வடக்கிருந்தார் (புறம். 218). மற்றும் சான்றோர்

பலரும் இவனது கருத்திற்கேற்பத் தாமும் வடக்கிருந்தனர். அப்போது அனைவர்க்கும் பிற்பட வந்தமை பற்றிக் கருவூர்ப் பெருஞ்சதுக்கத்துப் பூதநாதனார் என்னும் புலவரோடே இவன் புலந்து சொல்லாடாதிருந்தான (புறம். 219). இவன் வடக்கிருக்கையில் தாமும் துணிந்த பொத்தியாரை இவன் மறுத்து, 'நின் புதல்வன பிறந்தபின் நீ வா' என விடுததான (புறம். 222). பிசிராநதையாரும் தமக்கு மகன் பிறந்தபின் சென்று வேண்ட, அப்போது உயிர்நீத்து நடுகலலாயிருந்த இவன் அவர்க்கும் வடக்கிருக்க இடம் தந்தனன் (புறம. 223).

**கோபம்** – தம்பலப்பூச்சி. கோபத்தை - தம்பலப் பூச்சியை - ஒத்த நிறம் பிடிக்காதே இயல்பாய்ச் சிவந்த பூந்துகிலையுடையவர் சூரர மகளிர் (முரு. 15,41). கொல்லை யிடதது நெடுவழிகளிலே கோபம் ஊர்ந்து செல்லக் காடு கார்காலத்தில் பொலிவடையும் (சிறு. 168,169). 'மேகம் இனிய மழையைப் பெய்தமையால் ஓவியம் போன்ற கோபத்தையுடைய சிவந்த நிலத்தே ஆழி பதிந்து உருளத் தேரினை விரைந்து செலுத்துவாயாக' என்று வினைமுற்றி மீளும் தலைவன் பாகனுக்குரைத்தான் (அகம். 54:2-6).

**கோமகள்** – அரசன்மகள். விளக்கம் மிக்க தொடியணிந்த கோமகள் - அரசன்மகள் - சினமுற்ற நிலையில் அவ்விடத்தே தோழியர் குழாம் கைதொழுது இறைஞ்சினாற் போல, ஆம்பற பூக்கள் கடியகாற்று மோதுதலால வளைநது தாமரை மலர்க்கு முன் வணங்கும் (நற். 300:1-4).

**கோமான்** - அரசன். 'களிற்றுக் கணம் போரிட்ட இடமகன்ற பாசறைக்கண் விசும்பிற் பறக்கும பருந்தினை ஊனதுண்டடம் தடுக்குமாறு பகைவர் தேயத்திலே தங்கியிருக்கும் அழகிய பெரிய செல்வத்தையுடைய முதுகுடுமியாகிய கோமானை-அரசனை -கண்டு, புல்லரிசிக் கூழை மட்டுமே உண்டிருக்கும் நம் வறுமையைக் கைவிட்டுச் செல்வம் பெற்று வருதற்கு வீறலியே, நாம் போவோமோ' என்று நெடும்பல்லியத்தனார் பாடுவர் (புறம். 64:2 - 7). மையலென்னும் ஊர்க்குக் கோமானாகிய மாவன் ஒல்லையூர் தந்த பூதப்பாணடியனுககுக் கண் போன்ற நண்பனாவன (புறம. 71:9-12,15). 'வெற்றியுண்டான தப்பாத வாளையெடுத்துப் பகைவர் போர்க்களத்தில் வீழுமாறு வெனற, வீரவளை பொருந்திய பெரிய கையினையும் ஆரவாரம் செய்யும் மதுவினையுமுடைய அதியர் கோமான்' என்று ஔவையார் தமக்கு நெலலிப்பழம் தநத அதியமானை விளித்து வாழ்த்தினார் (புறம். 91:1-3). 'செல்வமுண்டாயின் உணவு கொடுத்து இல்லையாயின் உள்ளதனைப் பலரோடு கூடவுண்ணும் வறியோர் சுற்றத்திற்குத் தலைவனாகிய தலைமைத் தன்மை அமைந்த எம் கோமான்' என அதியமானை ஔவையார் குறிப்பர் (புறம். 95:6-9). பறம்பிற்குக கோமானாகிய பாரி, முரசறையும் குறுங்கோல் அதனை அறையவும் வெண்சங்கு முழங்கவும் வேந்தருடனே போரிட்டவனாவன் (புறம். 158:1-4). 'ஊர் எல்லாவற்றையும் இரவலர்க்கு வழங்கித் தேரினை ஏறுதறகேற்பச் சமைத்த அணையோடும் புரவியோடும் கூட முல்லைககு வழங்கிய தொலையாத நல்லபுகழையும் யானையையுமுடைய பறம்பிற்குக் கோமானாகிய பாரியின மகளிராவர் இவர்' எனறு அம்மகளிரை மணத்தின் பொருட்டு இருங்கோ வேளிடத்தில் கொண்டு சென்ற கபிலர் அறிமுகப்படுத்தினார் (புறம். 201: 1-5). மதிபோன்ற வெண்கொற்றக் குடையையுடையஅதியர் கோமானாகிய வளைந்த பூண்களையணிநத எழினியின் நெடுங்கடை வாயிலில் நின்று கிணைஞன் கிணை கொட்டினான் (புறம. 392 1-5). சேரலாதனுக்கு வேளாவிககோமான மகளாகிய பதுமன்தேவி ஈனற மகனாவான களங்காயக் கண்ணி நாாமுடிச் சேரல (பதி. ப 4.1-3). வடநாட்டரசர் அஞ்சுமபடி உயர எடுககப்பட்ட வானளாவும் வெற்றிக் கொடியினையுடைய குடவர் கோமான் நெடுஞ்சேரலாதன (பதி. ப. 5·1, 2). போர்க்களத்தில துணஙகைக் கூததினை ஆடிய வெற்றியுண்டாகும கோமானாகிய ஆடுகோட்பாட்டுச சேரலாதன, புறங்கொடுததோடாத கொள்கையுடைய பகைமறவரது வலிமை கெடுப்படி, தனது பெரிய பனமபூமாலையோடு சிவநத வீரக்கழல மேலும் சிவக்கக் குருதியைத் தூவுகினற புலால நாறும் போர்க்களத்தைச சார்நத பாசறையில தங்கினான (பதி. 57:1-4). குடககோ நெடுஞ்சேரலாதனுக்கு வேளாவிக்கோமான மகள் ஈன்ற மகனாவன ஆடுகோட்பாட்டுச் சேரலாதன (பதி ப. 6:1,2,11). 'பாணனே, நீ நின சுற்றததோடே நேரிமலைத் தலைவனான செலவககோமானைப பாடிச் சென்றால் பந்தர் எனனும் பெயரைபபெற்ற மூதூரிலுள்ள கடலினின்று எடுக்கப்பட்ட முத்துககளோடே கொடுமணம எனனும ஊரிலுண்டான நல்ல அணி கலன்களைப் பரிசிலாகப் பெறுவாய்' என்று செல்வக் கடுங்கோ வாழியாதனிடம் பாணனை ஆற்றுப்படுத்தப் பெற்றனன (பதி. 67:1-4,22,23). செல்வக் கடுங்கோ வாழியாதனுக்கு வேளாவிக் கோமான் மகளான பதுமன்தேவி ஈனற மகனாவன் தகடூரெறிந்த பெருஞ்சேரலிரும்பொறை (பதி. ப.

8:1,2,9,10). தென்புலங் காவலாகிய பாண்டியர் குடியில வந்தவனும கொற்கைக் கோமானுமான கடுநதேர்ச செழியன், பகைவரது நாட்டினை மாறு பாட்டாலே கைக்கொணடான (சிறு. 62-65). மிகுந்த வெள்ளருவி குதிக்கும் பக்கத்தையுடைய பறம்பு மலைக்குக் கோமானாகிய பாரி, சிறிய பூக்களை யுடைய முல்லைக்கொடி தடுத்ததற்கு அது வேணடிற்றாகக் கருதிப் பெரிய தேரினைக் கொடுத் தான (சிறு. 89-91). ஓயமானாட்டு நல்லியக் கோடன கிடங்கில எனனும ஊர்க்குக் கோமானும் குறிஞ்சி நிலத்திற்குக கோமானுமாவன் (சிறு. 160,267,269). நெடிய தேரினையுடைய மலையமான் திருமுடிக்காரி முழவொலியறாத திருக்கோவலூர்க்குக் கோமான் (அகம. 35 14,15). கழலணிந்த பினனிடாத அடிய மைந்த கள்வர் கோமானாகிய மிக்க வண்மை யுடைய புலவியெனபவன மழவர் நாட்டை வணங் கச் செயதான; அவனுக்குரியது திருவேங்கடம் (அகம. 61:11-13). பாடி வருவோரை வேற்றிடம் செலல விடாது வளைத்துக் கொள்ளும் கைவணமை அமைநத கோமானாகிய, குதிரைகள் பூணட சிறந்த தேரினையுடைய பெரியன் என்பா னுக்குரியது புனனைமரச் சோலைசூழ்ந்த புறந்தை என்னும் ஊா (அகம.100:11-13). பொனனால் அணி யபபெற்ற நெடிய தேரினையுடைய தென்னர்க்குக் கோமானாகிய, கணையமரத்தை மாறுபடும் திண்ணிய தோளினையும் நன்கியனற தேரினையு முடைய பாணடியன் நெடுஞ்செழியன் தன்மேற் பகைதது வந்த எழுவரையும் முற்றும் வென்ற தலையாலங்கானத்து வெற்றி யாரவாரத்தினும் பெரிதாக அலரெழுநதது எனத் தலைவி அழுதாள் (அகம. 209:2-7). கடலாடும் பெணடிர் கொய்து வந்த புலிநகக் கொன்றைப் பூவையும் கழனியில் உழுவோர் பறித்து வந்த குவளைப் பூவையும் காவற் காட்டினையுடைய முல்லை நிலத்தே பூத்த முல்லைப்பூவுடன் சேர்த்துக் கோசர் கண்ணியாகக் கட்டி விளையாடும் மிக்க வளம் பொருந்திய செல் லூர்க்குக கோமான் ஆதன் எழினி (அகம். 216:8-14). பரதவர்கதுக் கோமானாகிய பல வேற்படைகளை யுடைய மதத் என்பானுக்குரியது கழார் என்னும் ஊர் (அகம. 226:7,8). கைவண்மை மிக்க கோமானா கிய நலல தேரினையுடைய குட்டுவனுக்குரியது கழு மலம் (அகம். 270 8,9). பரிசிலர்க்குக் கோமான் எனக் குறிக்கப் பெறும் ஒருவன் அரலைக் குன்றத்தைத் தனக்குரியதாகக் கொண்டிருந்தனன் (குறு. 59:1,2). தோ வழங்கும் கோமானாகிய பாண்டியனுக் குரியது தேனூர் (ஐங். 55:2). கொற்கைக் கோமான் எனப பாணடியன குறிக்கப் பெறுவான் (ஐங். 188:2). இமயமலையாகிய வில்லை வளைத்தவ னாகிய ஈரச்சடையுடைய இறைவன் இறைவி யோடே பொருந்தி உயர்ந்த கயிலை மலையிலி ருந்தானாக ஐயிரு தலைகளை யுடையவனாகிய அரக்கர் கோமான் (இராவணன்) அம்மலையை எடுத்தற்குக் கையைக் கீழே செருகி எடுக்க மாட் டாமல் வருந்தினான் (கலி. 38: 1-5).

**கோய்** - கள்முகக்கும் கலம். முதல்நாள் பகற் போரில் ஒரு படை வீரனால் கொல்லப்பட் டோனின் தம்பி, அகலின்கண் பெய்த குன்றிமணி உருளுதல் போலச சுழல்கின்ற கண்ணையுடைய னாய் ஊரின்கண் காய்ச்சிய கள்ளைப் பெறுதற்கு மனைக்கண் புகுந்து கோயினை - கள் முகக்கும் கலத்தை - தேடினான் (புறம். 300:2-6).

**கோயில்** – அரண்மனை. பிசிராந்தையார், அன்னச் சேவலை விளித்து, ‘நீ சோழநாட்டு உறையூரின் கண் உள்ள உயர்நிலைமாடத்து நின் பெடை யொடு தங்கி வாயில் காவலர்க்கு உணர்த்திவிடா மல் தடையின்றிக் கோயில் - அரண்மனை - புகுந்து எம் பெருங்கோக்கிளளி (கோப்பெருஞ்சோழன்) கேட்கு மாறு யான் பிசிராந்தையின் அடியுறைவேன் என்று கூறின் நின் மாண்புறு இனிய பெடை அணியத்தக்க சிறந்த கலன் நல்குவன’ எனக் கூறி னார் (புறம். 67:8-14). ‘பாணர் பாடிக் களிறு களைப் பெற்றுச் சென்றமையான் ஈகை அரிய இழை (தாலி) மட்டும் அணிந்திருந்த மகளிருடன் ஆஅய் கோயில் பொலிவழிந்தது என்று சொல் லுவர்; ஆயினும் முரசுகெழுசெல்வரின் நகர் இதற்கு ஒவ்வாது’ என உறையூர் ஏணிச்சேரி முட மோசியார் ஆஅயின் கொடைநலத்தைப் பாராட்டு வர் (புறம். 127). வச்சிரத் தடக்கை நெடியோ னாகிய இந்திரன் கோயிலுள்ளே ஆய் அண்டி ரனை வரவேற்க முரசம் முழங்க வானத்தில் ஆர்ப்பு எழுந்தது (புறம். 241). செருப்பாழியெறிந்த இளஞ்சேட் சென்னியின் கோயிலின்கண் உள்ள பெருமனையைப் பொருநன் தடாரி கொட்டிப் புகழ்ந்து பாடிப் பெறற்கரிய கலன்கள் பெற்றான் (புறம். 378:5-11). கரிகாற் பெருவளத்தானுடைய கோயிலின் ஒரு புறத்தே தங்கி, தவஞ் செய்தோர் அத்தவத்தின பயனை இம்மையுடம்போடே பெற் றாற் போன்று வேறு மனக்கவலையின்றி இன் புறத் துயின்ற பான்மையைப் பெற்ற பொருநன் பெறவிருக்கும் பொருநனுக்குச் சொன்னான் (பொரு. 90-95). தலையாலங்கானத்துச் செருவென்ற பாண் டியன நெடுஞ்செழியனின் கோயில், பல்வகைப் பட்ட ஓசையும் ஒலிகளும் நிறைந்த மலைபோல்

ஆரவாரம் நிறைந்திருந்தது (நெடு. 100). அட்டிற் சாலைகளில் சோறுவடித் தொழுக்கிய கொழுங் கஞ்சி, தெருக்களில் யாறுகள் போல் ஓடி அவ் விடத்தே காளைகள் தம்முட் பொருதலாலே சேறாகிப் பின்பு, பல தேர்களும் ஓடலாலே துக ளாய்ப் பரவி ஆண்டுள்ள வெள்ளிய கோயிலை, புழுதியை மேலே பூசிக் கொண்ட களிறுபோல மா சூட்டும் (பட்.44-50). திருமாவளவன் காடுகளை அழித்து நாடாக்கி, குளந்தொட்டு வளம் பெருக்கி, மாடங்களை உடைய உறந்தையைப் பெரிதாககிக் கோயிலோடு குடிகளை நிலைநிறுத்தி னான் (பட். 283-286). அரசன அடியைத் தொட்டு இனி நின்னை இகழ்ந்து கூறேன் எனக் குறளன கூறியது கேட்டுத தானும் இகழ்தலைக் கைவிட்டு இனி இககோயிலுள் கண்டவர்கள் நம்மை நகா வண்ணம காவின் கீழே போதருவாயாக எனக் கூனி இசைந்துரைத்தாள் (கலி. 94:34-41). மதுரை நகரம் தாமரை மலரையொக்கும்; அந்நகரத்துள்ள தெருக்கள் அம்மலரின் இதழ்களை ஒக்கும்; அண்ண லாகிய பாண்டியனின் கோயில், அவ்விதழ்களின் நடுவே அமைந்துள்ள அரிய அழகுடைய பொன் பொகுட்டை ஒப்பதாகும் (பரி. 7:1-4).

**கோயிலாள்** - பட்டத்தரசி. பெருஞ்சேரலிரும்பொறை யும் அவன் கோயிலாளும் - பட்டத்தரசியும் - புறம் போந்து நின்று கோயிலில் உள்ளவெல்லாம் கொண்மின் என்று காணம் ஒன்பது நூறாயிரத் தொடு அரசுகட்டிற் கொடுப்ப அரிசில் கிழார் அவற்றை ஏலாது, 'யான் இரப்ப நீ இதனை ஆள்க' என்று கூறி அவன்பால் அமைச்சுப் பூண் டார் (பதி. ப. 8. அடிக்குறிப்பு).

**கோரம்** - கொடிது. குதிரையேறி வந்தேன் என்று பொய் யுரைத்த பரத்தைமைத் தலைவனிடம்; நீ ஏறும் குதிரை கூரிய உகிராலே மாட்சிமைப்பட்ட குளம் பினை யுடையது ஆதலின் மிகவும் கோரம் - கொடிது- அதனை ஏறும் நீ தப்பின்றி வாழ்வா யாக' எனத் தலைவி எள்ளியுரைத்தாள் (கலி. 96: 25,26).

**கோல்** - 1. கம்பு (கழி). இளைய வீரர் எறியும் கோலுக்கு - கம்புக்கு - அஞ்சாது எதிர் மண்டும் பாம்பு போன்றவர் (புறம். 89: 5, 6). பிறப்புணர்த் தும் கரிய கோலைக் கையின்கண்ணே தருக எனக் கூத்தன் விறலியிடம் கேட்டான் (புறம். 152: 18). தன் பிள்ளைப் பருவததில் வள்ளத்தில் பாலேந்தித் தாய் உண்பிக்கவும் உண்ணானாய் அவள் செறாது ஓச்சிய சிறுகோலை அஞ்சிய மறவன் இப்பொழுது பல களிறுகளைக் கொன்றதனோடு அமையானாயத் தன் கேடகம் கீழ்ப்படத் தான் அதன் மேல்வீழ்ந்து பட்டனன் (புறம். 310). கோவலர் தம் முல்லையின பூக்களைப் பறிக்கும் குறுங்கோலால் எறியப்பட்ட நெடுஞ்செவிக் குறுமுயல் நீர்நிலையிலுள்ள வாளை மீனகளோடு ஒப்பத் துள்ளித் தாவும் (புறம். 339: 2-5). புரவிகள் சிறுகோலுக்கு வருந்தும் (புறம். 352: 15). பூண் தலையிலே அழுந்தப் பெற்ற திரட்சி யையும் வலியையும் கொணட வயிரததினையுடைய சீரிய கோல் செருகிய உளிபோலும் வாயுடைய பாரைகளாலே எயிற்றியர் கட்டிகள் கீழ் மேலாகு மாறு குத்திக் கரமபை நிலததிலுண்டாகிய புழு தியை அளைந்து புல்லரிசியை வாரியெடுப்பர் (பெரு. 90-94). பசலைக் கன்றின் உறுதுயரை நோக்கிய ஆய்மகள் அதனிடம் கையிடத்தில் வளைந்த கோலையுடைய கோவலர் பின்னே நின்று செலுதத நின் தாயர் இப்பொழுதே வருகுவர் எனறு கூறி னாள் (முல்லை. 12-16). கடுங்கட் கூளியர் (வேட்டுவர்) பகைவரூரைச் சுடுகின்ற விளக்கிலே நிரைகாத்த மறவரை வெட்டி வீழ்த்தி ஆனிரை கவாந்து அவற்றை வேலே கோலாகக் கொண்டு ஓட்டி வருவர் (மது. 690-692). ஞாயிற்று மண்டிலம் இரண் டிடத்து நாட்டின இரணடு கோலிடத்தும் சாயாத நிழலால் (அந்நிழல் வடககும தெற்கும சாயதலின்றி அக கோல்களிலேயே அடங்கி நிறறல்) அதன நிலையைக குறித்துக் கொணடு சித்திரைத் திங்களின நடுநின்ற பத்து நாட்களில் யாதானுமோர் நாளின் பதினைந தாம் நாழிகையிலே அரண்மனை கட்டுதற்குத திருமுளைச் சார்த்துச் செயதனர் (நெடு. 73-75). வழி முழுதும் பினனி வளர்ந்த நுண்ணிய கோல களையுடைய சிறு மூங்கிலோடு வேழததின் (கொறுக காந்தட்டையின்) மெல்லிய கோல்களையும பற்றுக் கோடாகப் பிடித்துப் போவீர் எனக கூததர் ஆற்றுப் படுத்தப் பெற்றனர் (மலை. 223, 224). நின்று கண்ணால் நோககினும் கண்ணொளியை வாங்கும் மலையில் அரிய வருதத்தைச செய்யும குழிகளிடத்துண்டான இடையூறுகளை முழவின காமரமாகிய கோலைக் காலாகக கொணடு தளர்தல் ஓம்பிக் கழிமின் எனக் கூத்தர் ஆற்றுப்படுத்தப் பெற்றனர் (மலை. 368-372). முன் போகினறவன முகததிலடியாமல் வாங்கி விட்ட கடுவிசையையுடைய திரண்ட கோல் யாழின் பத்தரையும் முழவின கண்ணையும் கெடுக்காதபடி காத்து அவன கையி னைப் பிடித்து மெல்லச் செலவீர் எனறு கூத்தர் ஆற்றுப்படுத்தப் பெற்றனர் (மலை. 380-383). கொடுங்கோல் உமணர் (அகம். 17: 13). கோவலர் கையில் கோலை உடையவர் (அகம். 54 :10). பரதவர் பெருங்கடற்பரப்பில் இறாமீன நடுங்க முகக்கும்

கொடுந் தொழிலையுடைய நேரிய கோலையுடைய அழகிய வலையை உடையவர் (அகம். 60: 1-3). வதுவை அயர்தல் வேண்டிச் சென்ற தலைவன் தெருவில்புதல்வனைக் கண்டு தழுவி இல்லில புகத் தலைவி அதற்கு நாணி இக்கொடியோன் தலைவனை இடித்துக் கலக்கம் உறுவித்தனன் போலும் என்று கூறி அடிக்கும் கோலோடு புதல்வனை அணுகினாள் (அகம. 66.8-21). விறலியர் பெரிய மூங்கில்களையுடைய சிறுகாட்டில ஆராய்ந்து கொண்டு அறுத்திட்ட சிறிய கணுக்களை யுடைய நுணணிய கோலினை உடையவர் (அகம். 97:9,10). கூநதலைக் கையாற்பற்றி அருளாது அலைக்கும் கோல சிதையும்படி அடிக்கவும் தனமுதுகு தனக் குரியது எனறு கருதாது நின்ற எனமகளை அலைத்த கைகள் அன்னி அடியுடன் துணிதத திதியனது புன்னை போலப் பெருந்துன்பத்தை அடைவனவாக என மகட்போக்கிய செவிலித்தாய் வருந்தினாள் (அகம். 145:11-14,19-22). தித்தன் வெளியன் நுணணிய கோலையுடைய பாணரைப் புரந்த பெரிய புகழையுடையவன (அகம்.152:4,5). தலைவன் நட்போ செழித்த கொறுக்கங் கோலாலாகிய புணையினைத் துணையாகக் கொண்டு புனல் விளையாடும் அளவினதே; அதனால் எழுந்த அலரோ பெரியதாகும் என இல்லிடைப் பரத்தைக் கூறினாள் (அகம். 186:7-9). கோலுடை உமணர் (அகம். 191:4). முதுவாய் வேலன் ஆடை சூழ்ந்த பெரிய உச்சியினையும் சிறிய பை தொங்க விடப் பெற்ற பல தலையையுடைய வளைந்த கோலினையும் உடையவன் (அகம். 195:12-14). நுண்கோல் அகவுநர் (அகம. 208:3). பெரிய கழியைத துழாவி முகநத நேரிய கோல்களையுடைய அழகிய வலை, இறாமீனோடு பிற மீனினங்களையும் குவிக்கும் (அகம. 220:16,17). வண்டு துளைத்த மூங்கிற் கணணே துளையில மேறகாறறுப் புகுதலின எழும் ஒலி நீணட கோலினையுடைய ஆயாதம் குழலிசையென ஒலிக்கும் (அகம்.225:5-8). கோவலர் கவர்த்த கோலினர் (அகம். 264:4). இடையன் செம்மறியாட்டின தொகுதி பாதுகாவல அடைய எடுத்த கடையும் கோலில எழுநத சிறுதீ மேலும் வளர்ந்திட விறகினைச சேர்ப்பான் (அகம். 274:4,5). மேகம் கோலின்கண் நிமிர்ந்த கொடிபோல வானம் பிளக்கும்படி மின்னும் (அகம். 278:1,4). கோலால் அடிக்கப்பட்ட பாம்பு போல வேறு துணையின்றி யிருநது வாடுவையோ என அல்லகுறிப்பட்டு மீளும் தலைவன தன்னெஞ்சிற்குக் கூறினான் (அகம். 322:5,6). உமணர் செறிந்த கோல்களை உடையவர் (அகம். 390:3). வெள்ளிய முனையையுடைய சிறிய கோலைக் கொண்டவர் அகவன் மகளிர் (குறு. 298:6). சிறிய கோல்களால் ஆகியது கூடு (குறு. 301:2). கொடுங்கோற் கோவலர் (நற். 69: 8). தேன் கலந்த தீம்பாலைப் பொற்கலத்தில்இட்டு அதனைக் கையில் ஏந்திச் செவிலி உண்ணென்று புடைப்பாகச் சுற்றிய பூவொத்த மெல்லிய நுனியையுடைய சிறுகோலை ஓச்சத் தலைவி உண்ணேன் எனறு சிலம்பொலிக்க ஓடினாள் (நற். 110:1-7). ஊர்மகளிர் சிலரும் பலருமாய்க் கூடிநின்று கடைக்கண்ணாலே சுட்டி நோக்கி மூக்கின் நுனியிலே சுட்டு விரலை வைத்து அம்பல் தூற்ற அதனைக் கேட்ட அன்னை சிறுகோலேந்தித தலைவியை அலைத்தாள் (நற். 149: 1-4). எம் அன்னை நெருங்கிய கணுக்களையுடைய சிறுகோலைக் கையிலேந்திச் சினம் மிக்கவளாய உள்ளாள் எனப் பரதநதை பாணனிடம் கூறினாள் (நற். 150: 10,11). குளத்தினின்றும் புறஞ்சென்று கால்வாய் வழியே சென்ற வாளை கழனியில் ஓடி எருமையின காற் சேறு பட்ட புள்ளியுடையதாய் உழவர் கோல் கொண்டு புடைத்தற்கும் அஞ்சாது செருக்கி வரம்படியில் புரளும் (நற். 340: 3-8). கடுவன் பிரம்பின் சிறுகோலைக்கொண்டு அகன்ற பாறையிடத்துள்ள மழைநீர்க் குமிழியைப் புடைக்கும் (ஐங். 275: 1-3). மலையின் கண்ணுள்ள மூங்கிலின் கணுக்கள் தோற்றுவித்த கழைக்கோல் தன் மீதிருந்த குரங்குக் குட்டி பாய்ந்து செல்லுதலினால் குளத்தின மீனெறி தூண்டில் போல நிமிர்ந்தெழும் (ஐங். 278:1-3). மந்திக்குட்டி பெருமூங்கிலின் கழையேறி அசைந்தாடும் போது அது சிறுகோல் கொண்டு மதியைப் புடைப்பது போல் தோன்றும் (ஐங். 280:1-3). பசுக்கள் நீரருந்த வேண்டிக் கோவலர் தம் கோலால் தோண்டிய பள்ளத்திலுள்ள நீரை யானை கவர்ந்துண்ணும் (ஐங். 304: 1,2). நுண்குழிப் புற்றின் மண்ணிடத்துள்ள ஈயல் கோலைப் பிடித்திருக்கும் குருடரைப்போல் தோன்றும் (ஐங். தி. 4: 3,4). பிடியானை தானே வளைந்த மூங்கில் கோலை நெல்லுடன் வளைத்துத் தின்னும் (கலி. 50:1,2). புதல்வன் பரத்தையர் இல்லிற்குச் சென்று வந்தான் எனச் சினந்த தலைவி இவனை அலைத்தற்குக் கோல் ஒன்று தா என்று தோழியைக் கேட்டாள் (கலி. 82: 24,25). வினைவல பாங்கன் சுவலின் மேலே கோலை வைத்த கையினையுடையவன் (கலி.101:40). அன்னை தன் கண்களுடையவாகிய கோலையுடையளாய்த் தலைவியை வருத்தியதற்கு ஊரார் தலைவிக்குப் பொதுவனோடு கூட்டம் உண்டென்று அலரை உண்டாக்கினர் (கலி. 105: 62-65). மேய்கின்ற நிரைகளுக்கு முன்னே ஒரு கோலை ஊன்றி

அந்நிறை மேய்த்து நின்ற நீ ஆயனை அல்லை;
வேறாக ஞாயிற்றின் மகனோ எனத் தலைவி
தலைவனை வினவினாள் (கலி. 108: 11-13). வணங்கி
நின்ற தலைவனை மாலையே கோலாகக் கொண்டு
அலைப்பேன் போலவும் யான் செய்த தவறு
யாதென்று வினவி நடுங்கி நீ பெரிதும் பேதையை
என்று என்னைத் தெளிவிப்பான் போலவும்
அவனைக் கனவிடத்தே கண்டேன் எனத் தலைவி
தோழியிடம் கூறினாள் (கலி. 128: 18-21). திருமால்
அருளைக் குடையாகவும் அறத்தைக் கோலாகவும்
கொண்டு மூவேழுலகத்தையும் பொதுக்கடிந்து
தனியே காக்கும் காப்பை உடையவர்(பரி. 3: 74-76).
செவ்வேள் வானவன் மகளை (தேவசேனையை) வணங்
கியதைக் கண்ட வள்ளி; 'இனி அவளைக் குறுகல்'
என்று கூறி அவன் கையைப் பிணித்துத் தன் மாலை
யைக் கோலாகக் கொண்டு புடைத்தாள் (பரி. 9:
36-40). பல்வேறு மலர்களையும் திரை தள்ளிக்
கொண்டு வந்து திருமருதத் துறைக்கண் தருதலான்
அத்துறை, பூவை ஆராய்ந்து பறிக்கும் கோலினை
யுடைய வயவர் பல மலர்களையும் பறித்து வந்து
குவிக்கும் மலர் மன்றம் போல் விளக்கமுற்றது
(பரி. 11: 24,25). வையையில் நீராட வந்தோருள்
சிலர் நெட்டியினாலாய வாளைச் சுற்றுவார்; சிலர்
அதனாலாய ஈட்டியை ஏந்துவார்; கொள்வதற்
குரியார் கோல் கொள்ளச் சிலர் தேரில் ஏறுவார்;
இவ்வாறு பலரும் தத்தம் அன்பரோடு அளவளா
வித் திளைத்தனர் (பரி. 11:50,51). தன் கணவனை
அணங்கை யொப்பாளொருத்தி நோக்கியதனைக்
கண்ட தலைவி, அது பொறாது அவனைக் கோதை
யைக் கோலாகக் கொண்டு புடைத்துத் தன்மார்பின்
வடத்தினால் அவன் முன் கையை இறுகக் கட்டி நீ
பிழையுடையை என்று கூறினாள் (பரி. 12: 57-60).

2. செங்கோல். தீத்தொழிலைப் போக்கிக் கோலை -
செங்கோலை - செவ்விதாக்கி ஆறிலொன்றாகிய
இறையை உண்டு நடுவுநிலைமை செய்து நேமி
யால் நிலவுலகு முழுதும் ஆண்டோரது மரபைக்
காத்தவன் தலையாலங்கானத்துச் செருவென்ற
நெடுஞ்செழியன் (புறம். 17: 5-8). இவர் நம்மவர்
என்று கோல் கோடாது இவர் அயலார் என்று
அவர் நற்குணங்களைக் கொல்லாது வீரமும் மென்
மையும் வன்மையும் உடையையாகி நீ நீடு வாழ்க
எனப் பாண்டியன் இலவந்திகைப் பள்ளித் துஞ்
சிய நன்மாறனை மருதனிளநாகனார் வாழ்த்தி
னார் (புறம். 55:11-17). பாண்டியன் வெள்ளியம்
பலத்துத் துஞ்சிய பெருவழுதி வரையிடத்துச் சந்த
னமும் கடலிடத்து முத்துமென இவற்றை இமிழ்
குரல் முரசம் மூன்றுடனே ஆண்ட தமிழ் கெழு
கூடல் தண்கோலை உடைய வேந்தனாவான் (புறம்.
58: 11-13). என்னோடு பொருவேமென்று கூறி
வந்த வேந்தரைப் போரின்கண்ணே அலறத் தாக்கி
அவர் புறக்கொடை காணேனாயின் அறம் நிலை
பெற்ற அன்பினையுடைய அவைக்களத்தில் அறத்
தின் திறப்பாடில்லாத ஒருவனை வைத்து முறை
திரிந்து கோலை மெலிவித்தே னாகுக என்று ஒல்
லையூர் தந்த பூதப்பாண்டியன் வஞ்சினமுரைத்
தான் (புறம். 71:3-9). தன் கோல் செல்லாத தேயத்தே
உறையும் சான்றோனது நெஞ்சைத் தன்னிடத்தே
உரித்தாகப் பெற்ற தொல்லிசையுடைய பெரி
யோனை இழந்த இவ்வுலகம் இனி என்னாவது
கொல்லோ என்று கோப்பெருஞ்சோழன் வடக்கி
ருந்தவழிச் சென்ற பிசிராந்தையாரைக் கண்டு
பொத்தியார் இரங்கிக் கூறினார் (புறம். 217:10-13).
கோப்பெருஞ்சோழன் அறத்திறமுடையோர் புக
ழப்பட்ட நீதி நூற்குத்தக ஆய்ந்து நடத்திய
கோலை உடையவன் (புறம். 221:3). இமையவரம்
பன் நெடுஞ்சேரலாதன் இமயத்துக்கண் விற்
பொறித்து இமிழ்கடல் வேலித் தமிழகம் விளங்கு
மாறு தன்கோலை நிறுவினான் (பதி. ப. 2:4-6).
பல்யானைச் செல்கெழு குட்டுவன் உம்பற்காட்
டைத் தன் கோலின் கீழே நிற்குமாறு செய்தான்
(பதி. ப. 3:2). பெருஞ்சேரலிரும்பொறை தன்
கோலின் கீழ் அடங்கி வாராத பகைவருடைய
முரசின்கண்ணைக் கிழித்து அவர் பட்டத்து
யானை கதறும்படி அதன் கொம்பை வெட்டி அத
னால் இயற்றப்பட்ட தெய்வத்தன்மையுடைய கட்
டிலின் மேல் இருந்தான் (பதி. 79:11-14). இளஞ்சேர
லிரும்பொறையின் கோல் செம்மையின் வானம்
சுரந்தது; கானத்தின்கண் மானேறு துணையைப்
புணர்ந்தின்புற்றது; கிளைகளில் புள்ளும் மிஞி
றும் ஆர்த்தன; பழனும் கிழங்கும் எக்காலத்தும்
கிடைத்தன; ஆனிரைகள் புல்லருந்தித் திரிந்தன;
கூலங்கள் வளம் பெற்றன; நல்ல பலவான ஊழி
கள் நடுவுநிலையால் நிலை பெற்றன (பதி. 89:1-9).
'ஏரினை உடைய உழவர்க்கு நிழல் செய்த
கோலினை உடையை' என நல்லியக் கோடன்
போற்றப் பெற்றான் (சிறு. 233). கூற்றம் ஆராய்
தலைப் பொருந்திய கோலையுடையது (மது. 632,
633). தலைவியின் தடமென்றோள்கள் திருமாவள
வனின் கோலினும் தண்ணியவை என்பது தலை
வன் கூற்று (பட். 299,301). ஆத்தி மாலையணிந்த
மார்பையுடைய சிலவாகிய ஊர்களை ஆட்சி
செய்யும் கோலையுடைய சோழனது ஆரேற்றைப்
போன்றவள் தலைவி (நற். 265:5,6). குடிகள் கூவும்
படி கொலையஞ்சாத அமைச்சனாலே நெறியன்றிப்

பொருளைக் கொள்ளும் கோல் வளைந்த மன்னனது குடை நிழலில தங்கிய உலகம் போல ஞாயிறு தெறுதலின உலறின மரங்களையுடைய வெஞ்சுரம் தோனறியது (கலி. 10.4-7). 'ஒரு பக்கதைதக் கொள்ளுதலின்றி முறைமை செய்தற்குச் சாயாத கோலைச் செவ்விதாக நடத்துவதில் நின் தந்தையை ஒத்திரு' எனத் தலைவி தன மகனிடம் கூறினாள் (கலி. 86: 17,18). உயிரை உடம்பினின்றும் போக்கும் கூறறுவன் முறை செய்வது போல, யாவரையும் உலகததுறையும் எல்லையில் நிறுத்தின கோலால் மன்னன் முறை செயவான் (கலி. 100:15,16). திருந்து கோல் ஞமன (யமன்) செவ்வேளுக்குத் தன் மெய்யினின்று பிரித்து வெள்யாட்டு மறியினைக் கொடுத்தான் (பரி. 5:61,62).

3. பறையறை கோல். கயத்தில் வாழும் யாமையை நாராசத்தினகண்ணே கோததாற் போன்ற நுண்ணிய கோலாற் பிணிக்கப் பட்ட தெளிந்த கண்ணையுடையது கிணைபபறை (புறம். 70:2,3). 'எறிகோல் கொள்ளும் இழிசின' என்று புலையன் விளிக்கப் பெற்றான் (புறம். 287:2). தெண்கண் மாக்கிணை பலரும் அறிய எனதாதல் போல இக்கடல் சூழ் வையகம் உனதே; அக்கிணையின் கண்ணிற் கட்டப்பட்ட நுண்ணிய அரித்த வோசையை எழுப்பும் சிறிய கோல் அடிக்குந் தோறும் அக்கிணைக் கண் நடுங்குவது போல் நின் பகைவர் கேட்குந் தோறும் நடுங்குமாறு அவர் அவைக்கண் நீ வென்ற தேர்களைச் சொல்லி ஏத்துவேன் எனச் சோழன் நலங்கிள்ளியைக் கோவூர் கிழார் போற்றுவர் (புறம். 382:18-23). கிணைஞன் சேவல் துயிலெடுப்ப எழுந்து வைகறைப் பொழுதில் நுண்கோல் சிறு கிணையைக் கொட்டி நெடுங்கடை நின்று பகடுகளை வாழ்த்தி அவற்றையுடைய அவியன புகழை ஏத்தினான் (புறம். 383:1-5). கிணைஞன் வலிய கோலைத் தூயமை செய்து கொண்டு வார் அறுப்புணடு கிடநத தெண்கண் மாககிணையைப் புதுவாா கொண்டு விசிததுக் கட்டி வார்கள் ஒலிகக இயககித் தோன்றிக்கோனிடம் பகடு வேண்டினான (புறம். 399:22-28). ஆடுமகள் கோலால் அரிததெழும் ஒலியுண்டாக்கும் பறைபோல வாகை நெற்றின குலை ஒலிக்கும் (அகம். 151:8-10). வாரினால் இறுகப் பிணித்துக கட்டிய. இழுத்து அடிக்கும் கோலினையுடைய தெளிந்த ஒலியினையுடையது கிணைப்பறை (அகம். 249:2,3).

4. தாற்றுக்கோல். 'கரிகாற் பெருவளத்தான் -பொருநர்க்கும் விறலியர்க்கும் - நல்குவன நல்கி உண்பன உண்பித்து நெடுந் தேரிலே குதிரைகள் நான்கினைப் பூட்டித் தன் காலாலே ஏழடி பின்னே வந்து செலுத்துதற்கு இனிதாகிய செலவு முடுக்குங் கோலைப் போககி, ஏறெனை ஏற்றி விடையளித்தான் (பொரு. 163-167). கையிலே கோலினையுடைய குதிரையோட்டுவோன் ஐந்து கதியையும் பதினெட்டுச் சாரியையும் பயிற்றுகையினாலே புரவிகள் குரங்கள் அழுந்தின வட்டமான இடத்திலும் ஆதி யென்னும் கதியில் ஓடின (மது. 389-391). உமணர் கடாவினை விரையத தூண்டும் கோலினை உடையவர் (அகம். 140:5). தலைவன் தேரில் பூட்டப்பட்ட குதிரைகள் செல்வப்புதல்வர் சிறுதோளில் மாட்டிய பறையின் கண்ணில் எழுதிய குருவி அடிபடுதல் போலக் கோலினால் அலைக்கப் படுவனவாக எனத் தோழி கூறினாள் (நற். 58:1-4,10,11). தேர்ப் பாகன் கோலாலே தூண்டப்பட்டறியாத மனஞ் செருக்கிய குதிரைகள் பூண்ட சேர்ப்பனது தேர் மணிக்குரலைக் கேட்பாயாக எனத்தோழி தலைவியிடம் கூறினாள் (நற். 78:9-11). தலைவன் தண்ணுமை ஆர்ப்பக் குற்றமற்ற இலக்கணம் பொருந்திய குதிரைகள் பூட்டிய தேரைக் கோலால் எறிந்து செலுத்தி விடியற் காலத்தில் ஊரின் புறத்தே தோனறினான் (நற். 130:1-4). இயல்பிலேயே கடுகிச் செலலும் குதிரையைப் பின்னும் விரையச் செலுத்தும் கோல் கொடுமையுடையது (கலி. 50:19,20).

5. திரட்சி. எருமையின் பெரிய கொம்பைப்போலும் நெடிய முற்றிய நெற்றுக்களையுடைய பயற்றின் கோதுகளின் கோலை - திரட்சியை - படுக்கையாகக் கொண்டு கன்றுடை மரையான் துஞ்சும் (புறம். 297:1-4). கொண்டி மகளிர் ஆய்கோல் அவீர் தொடி விளங்கும்படி கையை வீசி மனைகள் தோறும் சென்று பொருள் தரும் இளையரோடு விளையாடுவர் (மது. 563,583,589). திருந்து கோல் எல்வளை (குறி. 167). உமணர் காதல் மடமகள் சில்கோல் எல்வளை ஒலிக்க வீசி நெல்லுக்கு நேர் கல்லுப்பு என விலை கூறி விற்பாள் (அகம்:140:5-8). தலைவி வெள்ளியினாலாய வளைவு பொருந்திய கோல் வளை செறிந்த முன்கையினள் (அகம். 142: 16,17). தலைவியின் விளங்கும் கோல் பொருந்திய ஆய்தொடி நெகிழுமாறு தலைவன் பொருள் வயிற் பிரிந்து சென்றான் (அகம். 171:6,15). சில் கோல் எல்வளை (அகம். 224:16). செங்கண் ஆடவர் தீக் கொள்ளியுடன் பிடித்துள்ள நீண்ட கோலையுடைய அம்பினராய்ச் சென்று இரவில் மாற்றார் ஊரினைப் போரில் தொலைத்து ஆனிரையைக் கவர்வர் (அகம். 239:3-5). நுண்கோல எல்வளை (அகம். 257:10). வான் கோல் இலங்கு வளை (அகம். 261:4, 5). திருந்து கோல் ஆய்தொடி (அகம். 271:16). வார் கோல் செறிதொடி (அகம். 300:6,7). கடுங்கண் மழவர்

செங்கோல் அம்பினர் (அகம். 337:11,13). நுண் கோல் அவிர்தொடி (அகம். 338:9). செவ்வேள் அவுணரைக் கொன்ற செங்கோல் அம்பினர் (குறு. 1:1, 2). தலைவி நிரை கோல் குறுந்தொடியினள் (குறு. 233:7). குறுமகள் கோலமைந்த குறுந்தொடியினள் (குறு. 267:5). செங்கோல் வாளி (குறு. 272:6). தலைவி கோலமைந்த குறுந்தொடி யணிந்த தளிர் போன்ற மென்மையள் (குறு. 356:8). பரத்தை பொன்னாலாகிய கோலுடைய அவிர்தொடியினை உடையவள் (குறு. 364:3). மயிரை நிரைத்து வைத்தாற் போன்ற நீண்ட கோலையுடையனவாய் வளைந்த செந்நெற் கதிர்களை உடைய வயல்களில் அன்னப் பறவை துஞ்சும் (நற். 73:7,8). அவிர்கோல் ஆய்தொடி (ஐங். 330:5). தலைவி முத்தை அழுத்திச் செய்த கோலுடைய அவிர்தொடியினள (கலி. 69:2).

6. தண்டு. அரசுரிமையை விழும்யோன் பெறுவானாயின் அது வற்றிய கயத்திடத்துச் சிறிய கோலாகிய - தண்டாகிய-நெட்டியின் கோடையில் உலர்ந்த சுள்ளியைப் போலப் பெரிதும் நொய்தாம் தன்மையுடைத்து (புறம். 75:7-10). வேட்டுவச் சிறுவர் உடைவேல மரத்தின் முள்ளை ஊகம் புல்லின் நுண் கோலில் செருகிய அம்பை வளாரால் செய்யப்பட்ட வில்லில் வைத்து வலித்துப் பருத்தி வேலியடியில் உறையும் காட்டெலியை வீழ்த்தற்குக் குறிபார்ப்பர் (புறம். 324:3-7). கருங்கோற் குறிஞ்சி (புறம். 374:8; அகம். 308:16; குறு. 3:3). இரலைமான் அறுகின் சிவந்த கோலோடு மென்கொததுக்களைத் தனமடப்பிணைக்கு ஊட்டும் (அகம்.34:4-6). கிளிகள் தூக்கிச் செல்ல வியலாத பெருங்கதிரை முறித்த கோலாகிய தலையை யுடைய கட்டைகள் கொய்தொழிந்த வறும்புனத்தில் இருந்தன (அகம். 38:12-15). களிறு சிவந்த கோலையுடைய வெண கொத்துக்கள் அசையத் தனது துதிக்கையால் பற்றித் தன் முதுகினைச் சொரிந்து கொணட வெண் கடம்பின் நிழலிலே பிடியோடு வதியும் (அகம். 121: 6-9). செங்கோல் கருங்கால் மராஅம் (அகம். 127: 12, 13). இன்றுணையைப பிரிந்த மலை எருது செவ்விய கோலகளையுடைய அறுகின நீணட கொததைத் தின்னும் மலைப்பசுவைப் பார்த்து வெயதுற்று உகாய மரத்தின வரிநிழலில் தங்கும் (குறு. 363:1 4). பெருங்கோல் குறிஞ்சி (நற். 301:1). வளைந்த கதிர்களைக் கொய்தொழித்த கோலாகிய தலையையுடைய தினைத் தாள்கள் விழாவொழிந்த களம் போலப் பொலிவழிந்து தோனறும் (நற். 306: 5-7). ஆய்கோல் மிளகின் கொழுங்கொடி, துஞ்சுகின்ற புலியின் வரிப்புறத்தைத் தடவும் (நற். இ. 2 : 8, 9).

7. கோற்றொழில். மகளிர் நீணட கோலால் - கோற்றொழிலால் - செய்யப்பட்ட குறிய வளையை உடையவர் (புறம். 36:2-4). கோலால் செய்யப்பட்ட திரண்ட குறிய வளையணிந்த முன் கையினை உடையவர் மகளிர் (புறம். 113:8). தலைவியின் நீண்ட கோலால் அமைந்த. செறிந்து இலங்கும் எல்வளை நெகிழ்ந்தமை கண்ட தாய் கையற்று அதற்குரிய காரணத்தைக் கட்டுவிச்சியிடம் வினவினாள் (அகம். 98 : 6 - 9). தலைவி நீண்ட கோலமைந்த வளையலையும் திருந்திழையையும் உடையவள் (அகம். 129:14-16). தலைவன் பரததையின் கூந்தலைப் பற்றி யீர்த்து அவள் கையிலுள்ள கோல் அமைந்த வளையினைக் கழற்றிக் கொளளுதலினாலாகிய பூசலாலே சினமுற்ற முகத்தளாய 'இதனை நின மனையோட்கு உரைப்பல' என்று கூறினாள் (நற். 100:3-7). திருந்து கோல் எல்வளை (நற். 136:1). மேகம் மகளிரின் முன் கையிலணிந்த சிறிய கோலமைந்த பொற்றொடி போல மின்னும் (நற். 197 : 8, 9). வார் கோல் எல்வளை (நற். 239: 10). கோல் நேர் எல்வளை (நற். 340 : 10). தலைவி ஆய்கோல் தொடி நிரை முன்கையினள் (கலி. 24: 7,8). புதல்வனின் கையிடத்து அருப்புத் தொழில் சூழப்பட்ட சில கோல் அமைந்த அவிர் தொடி விளங்கியது (கலி. 85:6,7). இலங்கு கோல அவிர் தொடி (கலி. 100:14).

8. அம்பு. வார் கோலினையும் - நீண்ட அம்பினையும் - வளைந்த வில்லினையுமுடைய மறவர்க்குத் தலைவ என மாவளத்தான் விளிக்கப் பெற்றான் (புறம். 43 : 10, 11). தலைவன் நெடுங் கோலையுடைய உடுசேர்ந்த கடுவிசை அம்பை வலித்து அண்ணல் யானையின் அணிமுகத்தே எய்தான (குறி. 169-171). செங்கண் மழவர் கூடிய திறல்வாய்ந்த தீயுண்டாகும் சிறுகோலை வில்லோடு கையிற் பற்றிச் சென்று ஆனிரை கவர்வர் (அகம். 101:5-7,10). கருங்கைக் கானவர் மரா மரததைப் பொருந்தி நின்று கோலை ஆய்ந்தெடுத்து வரிநுதல் யானையின் மார்பில் செலுதநி அதன் வெண்கோடு கொள்வர் (அகம். 172 : 6-9). தெறித்து விடுக்கும் கோலினையுடைய மறவர் விசைத்த வில்லராய் வேட்டம் போகி முலலைத் தோட்டத்திடத்தே மானை அறுத்துணணுவர் (அகம். 284:8-10). வழிச் செல்லும் வணிகர்களை இரக்கமுறாது கொன்ற ஆறலைப்போர் தங்கள் கோல் கழிந்ததன பொருட்டே இரங்குவர் (அகம். 327:17, 18). நீண்ட கோலினையும வலிய விலலினையும் உடையவர் கானவர் (குறு. 335 : 5, 6). மலையிடத்துக் குறவர் மகளிர் தாம தததம் கணவரைத் தெயவமென்று

பொழுது எழுதலால அவர்தம் ஐயன்மாரும் தாம் தொடுதத கோல்கள் இலக்குத் தப்பாதவராயினார் (கலி. 39 : 15,16).

9. துலாக்கோல். பொருள்களை ஆராயும் கோலினது - துலாக்கோலினது - சமன்வாய் போல ஒரு பககம் கோடாது ஒழிக எனக் காரி கிழார் பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதிக்கு அறிவுரை பகர்வர் (புறம். 6 : 9, 10). புறாவினது வருத்தத்தைக் களைய வேண்டி, யானையினது வெண் கோட்டினால் கடைந்து செறிக்கப்பட்ட வெளிய கடையினையுடைய கோலாகிய நிறுக்கப் படும் துலாத்தின்கண்ணே புகுந்த செம்பியன் மரபிற் றோன்றியவன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் (புறம். 39 : 1-3). நன்னன் வெுமன் தெரிகோலை யொத்த குற்றமற்ற மெய்ம் மொழியினை உடையவன் (அகம். 349 : 3, 4, 8). ஒரு கூற்றிற் சாயாது நிற்கும் கோல் போல ஓர்தலுற்று அறத்தையே விரும்பின நெஞ்சத்தை யுடையவன் தலைவன் (கலி. 42 : 14, 15). உலகத்தை ஒரு தட்டிலும் கூடல் மாநகரைப் பிறிதொரு தட்டிலும் வைத்துப் புலவரின் அறிவாகிய கோலால் தூக்கின் கூடல் மாநகர் வைத்த தட்டே தாழும் (பரி. தி. 6).

10. கொடுங்கோல். சிறுசொல கூறிய சினங்கெழு வேந்தரைப் போரின்கண்ணே சிதறப் பொருது முரசோடு அவரை அகப்படுத்தேனாயின், எனது குடைநிழற்கண் வாழவார் சென்னிழற்காணாது, எம் மன்னன் கொடியன் எனக் கண்ணீர் வடித்துக் குடிமக்கள் தூற்றும் கோலேன் - கொடுங்கோலை உடையேன் - ஆகுக என்று தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் வஞ்சினமுரைத்தான் (புறம.72:7-12). நடுவு நிலைமையைக் கைவிட்ட அமைச்சன் வினையைக் கூற அதுகேட்டுக் கொடுந் தொழிலைச் செய்யும் அரசன் கோல் போல ஞாயிறு காய்கதிர்களைச் செலுத்திச் சினத்தாற் சுடும் (கலி. 8:1-3).

11. கம்பி. உழவர் கொள்ளும் பயறும் சுவை பொருநதப் பாலுடன் கலந்து ஆக்கிய வெள்ளிக் கோலை - வெள்ளிக்கம்பியை - ஒரளவாக நறுக்கி வைததாற் போனற வெள்ளிய அவிழ்க் கஞ்சியை உண்டனர் (அகம். 37:12,13). பொன்னாலியன்ற கனனத்தட்டு பொலியுமாறு வெள்ளியின் மென் கோல் அறுத்தலால் குறைந்து உதிர்வன போல வண்டினம ஊதுநதோறும் கோங்கின் பூவகத்தே குரவமலர் உதிரும (அகம். 317:6-11).

12. கிளை. கோலினுள்ள நறுமலர் மடப்பத்தை யுடைய மயிலினது உசசிக கொண்டை போலத் தோன்றும் (குறு. 347:2,3). ஆயத்தார், மழைபெய்து தழையச் செய்த சிறு கோல்களில் பூங்கொத்துக் களையுடைய சந்தனக் குறையோடு பிறபொருள் களையும் சேர்த்து அமைக்கப் பெற்ற சாந்தம் பூசிய கூந்தலை அணிபெற வாரினர் (நற். 140:1-5).

13. ஊன்றுகோல். பெருஞ்சித்திரனாரின் அன்னை தான வாழும் நாளைப் பலவாக வெறுத்துத் தான் பிடித்த கோலே - ஊன்றுகோலே - காலாகக் கொண்டு ஒன்றற்கொன்று அணுகப் பல அடியிட்டு நடந்து கண மறைந்து முற்றத்திடத்துப் புறப்படமாட்டாத மூப்பை யுடையவள் (புறம். 159:1-5).

14. அழகு. தலைவி கோல் - அழகு - வாய்ந்த சிறந்த வளையல் விளங்கக் கையை வீசிக் காற்று வீசப்பெற்ற தளிரென நுடங்கி வந்து தலைவன் வருத்தம் தீர அமையாது முயங்கினாள் (அகம். 162: 14-16). மறவர் கோலுடைய வீரவளை யணிந்தவர் (நற். 48:6)

15. தூண்டிற்கோல். பாண்மகள் கயிற்றினைக் கொண்ட நுணணிய கோலால் - தூண்டிற் கோலால் - மீனை ளைப் பிடிப்பாள் (அகம். 216:1).

கோல்கோடியவன - செங்கோல் வளைந்த அரசன். ஞாயிற்றின பரந்தகதிர் சுடுகையினாலே, கொலைத் தொழிலுககு அஞ்சாத அமைச்சராலே நெறியன்றி பொருளை வாஙகிக் கொணடு கோல்கோடியவன்- செங்கோல் வளைந்த அரசன் - குடைநிழலில் தங்கிய உலகம் போல உலறின உயர்ந்த மரங்களை யுடைய காட்டைக் கடநது தலைவன பொருள் தேடச் சென்றான் (கலி. 10:4-8).

கோலப்பா - அழகுடையவனே (விளி). பன்னிருகைகளுடன கூடிய கோலப்பனாகிய முருகன் கோலப்பா என விளிக்கப் பெற்றான் (முரு. வெ. 5:2,3).

கோலம் - 1. அழகு. ஏறுகள் கோலம் - அழகு - விளங்கும்தம்மருப்பினாலதோண்டிய வரிக்குடர்கள் நானறு விழும்படி பருந்து அவற்றை எடுத்துக கொண்டு உயர்ந்து பறநதன (கலி. 106:26,27)., வையையில் நீராடும் மகளிரிற் சிலர், அப்புதுநீர் கோலம் கொளளும பொருட்டு மலர் மாலைகளை யும சநதனம் முதலியவற்றின குழம்புகளையும் அணிகலன்களையும் அந்நீரின்கண் இடுவர் (பரி. 10:92,93). தைந்நீராடும் கன்னியருள் ஒருத்தி மற்றொருத்தியைச் சுட்டி, 'குழைக் காதினை யுடைய இவளை கோலச் செவிக்கண் குவளை மலரைச் செருகி நான்கு விழிபடைத்தவள் ஆயினாள' என்று அவளைப் பாராட்டினாள் (பரி. 11:97,98). மதுரை

மக்கள் புதுப்புனலாடலை விரும்பி, தூசிப்படை போல ஒருவரின் ஒருவர் முற்பட்டு, தத்தம் இயற்கை அழகிற்குப் பொருந்திய ஒப்பனைகளால் கோலம் கொண்டு, நீரங்காடியிற் பெற்ற பொருள் களாலும் தம்மை அழகு செய்து கொண்டு வையைக்கரை அடைந்தனர் (பரி. தி. 2:5-10).

2. வடிவம். நீரினுள் முழுகிக் கிடந்த நிலத்தைத் திருமால் பன்றியாகி மேலே கொணர்ந்து அதன் கண் உயிர்கள் தோன்றி வாழத் தகுந்ததாகச் செய்த காரணத்தால் திருமால் மேற்கொண்ட அவதாரத்தொடு புணர்த்தப்பட்ட பெயராகக் கேழற்கோலம் - வடிவம் - வராககற்பமாக விளங் கியது (பரி. 2:15-17). தன் காதுகளில் நீல மலரைச் செருகிக் கொண்டவளைப் பார்த்த ஒருத்தி, 'இவள் நான்கு விழிபடைத்தாள், என்று பாராட்டி னாள். மற்றொருத்தி கொற்றவையின் கோலம் போல் அவள் தோன்றவேண்டு மென்று கருதி நெற்றி விழியாகத் திலகம் இட்டாள் (பரி. 11: 97-100).

**கோலன்** - மத்திகையுடையான் (குதிரை வலவன்). கோலன் - மத்திகையுடையான் - பயிற்றியபடி வட்டமான இடத்தில் ஆதி என்னும் செலவில் குதிரைகள் ஓடின (மது. 389,390).

**கோலெரி** - தண்டு விளக்கு. திருப்பரங்குன்றத்து முரு கனை வழிபடுவோர் கோலெரி – தண்டு விளக்கு - நறுமணப் பொருள்கள், அகிற்புகை, கொடி முதலியன ஏந்திச் சென்று வழிபட்டனர் (கோலெரி திவர்த்தி எனப் பெருமழைப் புலவர் கொள்வர்) (பரி. 17: 5-8).

**கோலோர்** - பரிக்கோற்காரர். யானை சினம் சிறந்து கோலோரை - பரிக்கோற்காரரை - கொன்று, கட்டுத்தறியை முறித்துக் கம்பத்தைக் கைவிட்டுச் சுழலும் (மது. 380-383).

**கோவத்தனார்** - புலவர். 'கோவர்த்தனார்' காண்க.

**கோவதத்தனார்** – புலவர். 'கோவர்த்தனார்' காண்க.

**கோவம்** - தம்பலப் பூச்சி. சோழ நாட்டில் பொய்கைக் கரையில் வளர்ந்த கடம்பின் பூங்கொத்துக்கள் கோவம் - தம்பலப்பூச்சி - போன்ற தாதுக்களை யுதிர்த்தலால் அப்பொய்கைத் துறைகள் ஓவியங் களை ஒத்திருக்கும் (சிறு. 68-71).

**கோவர்த்தனார்** - புலவர். இவர் பெயர் கோவதத்த னார் என்றும் கோவத்தனார் என்றும் முறையே குறுந்தொகை உ. வே. சா. பதிப்பிலும் கழகப் பதிப்பிலும் காணப்படுகின்றது. ஆயினும வையா புரிப் பிள்ளையின் சங்க இலக்கியப் பதிப்பு கோவர்த்தனார் எனறு கொண்டு, தெய்வத்தாற் பெயர் பெற்றவர் வரிசையில் இவரை நிறுத்து கின்றது. இவரால் பாடப்பட்டனவாகக் குறுந் தொகையில் மட்டும் இரு பாடல்கள் (66,194) காணப்படுகின்றன. இரு பாடல்களிலும் இவர் முல்லைத் திணையையே புனைந்துள்ளார். தலை வன் குறித்துப் பிரிந்த பருவம் வந்த வளவில் அது கண்டழிந்த தலைமகளை இது பருவமன்றென வற்புறுத்தும் தோழி, 'தலைவர் கூறிய பருவம் வராத அளவிலேயே பெய்த வம்பமாரியைக் கார் கால மழையென மதித்து மலரத் தொடங்கிய கொன்றை அறிவில்லாதது கண்டாய்' எனக் கூறுவதாக இவர் பாடியுள்ள (குறு. 66) நயம் காணத்தகும். அதேபோல் பருவ வரவின்கண், வானத்து மேக முழக்கமும் அதற்கெதிரான மயில் களின் அகவலும் எனற இரண்டையும் கேட்டுத் தலைவி ஆற்றாதுரைப்பதையும் இவர் அழகுறப் புனைந்துள்ளார் (குறு. 194). இவரது இப்பாட லால் இவ்விரு ஓசையும் காதலரின் பிரிவுத்துன் பத்தைப் பெருக்கும் எனபதனை யுணரலாம்.

**கோவல்** – கோவலூர். முழவொலியறாத கோவலுக்கு - கோவலூருக்கு - அரசன் மலையமான் திருமுடிக் காரி (அகம். 35:14,15).

**கோவல** - ஆய. (கோவலன் என்ற சொல்லின் விளி வடிவம்). திருமால் கோவல - ஆய - என்று விளித்துப்பாடப் பெறுகின்றார் (பரி. 3:83).

**கோவலர்** - ஆயர். அருவி நீரற்று உலகத்தினர் அஞ் சும்படி வெம்மையுற்றுப் பெரிய பஞ்சம் வந்த வேனிற்காலத்தில் பசித்த ஆனிரையைக் காத்தற் பொருட்டுக் கோவலர் - ஆயர் - வேங்கைமரக் கொம்புகளைப் பூக்களுடனே உதிருமாறு கழித்து அதன் தழைச் செறிவை யழிப்பர் (புறம். 224:12-16). ஊரை மிகவும் கடந்து அப்பாற்பட்ட போர்க் களத்திலே வேங்கைப் பூங்கொத்துக்களைப் பனை யோலையால் புனைந்து தொடுத்துப் பல பசுக் களையுடைய கோவலர் தழையிடையிட்ட மாலை யைச் சூட்டுமாறு, ஒரு தலைவன் கரந்தைப் போரில் ஆனிரை மீட்டு உயிர் துறந்து நடுகல்லா யினன் (புறம். 265:1-5). அகன்ற மேய்ச்சல் நிலத் திற்குச் சென்ற பல பசுக்களோடு கூடிய பெரிய காளைகள் பூக்களையுடைய மரநிழலில் தங்கி அசையிட்டிருக்கையில் கோவலர் வறிதேயிராமல் முல்லைப்பூப் பறித்தனர் (புறம். 339:1-3). பூழி நாட்டுச் செருப்பு என்னும் பெயர்கொண்ட மலை யில் முல்லைமலர்களால் கட்டப்பட்ட தலைமாலை யணிந்தவரும் பல பசுக்களை யுடையவருமான

கோவலர் புலலுடைய அகன்ற மேய்ச்சல் நிலத்திலே அப்பலவாகிய பசுக்களையும் மேய விட்டுத் தாம் துறுகறகள் உயர்நத காட்டினிடையே ஒளியையுடைய மணிகளைக் கண்டு எடுப்பர் (பதி. 21: 20-23). 'நீவிர் தொண்டைமான இளந்திரையனைக் காணச் செலதையில, சீழக்கையொலி செய்தற்காக மடிதத வாயையுடைய கோவலரது குடியிருப்பிலே தங்குவீராயின், தினையரிசிச் சோற்றைப் பாலுடனே பெறுவீர்' என்று பெரும்பாணர் ஆறறுப்படுத்தப பெறுகின்றனர் (பெரு. 166-168). கார்காலததே பெருமழை பொழிந்த மாலையில தொழுவத்தில் கட்டபபட்டிருநத இளங்கன்றுகளின் பசிததுயரைப பார்தது இடையர்மகள் ஒருத்தி, 'மேய்ச்சலுக்குச் சென்ற நும் தாயர், கைகளின் கொடிய கோலையுடைய கோவலர் பின்னே நின்று செலுத்த இப்பொழுதே வருவர்' என்றாள் (முலலை.12-16). வானம் புதுமழை பொழிந்ததனால், வெள்ளத்தை வெறுத்த கொடிய கோலையுடைய கோவலர், கடாக்களை யுடைய ஆட்டினஙகளையும் பசுக்கூட்டத்தையும் மேட்டு நிலததே மேயவிட்டு, தாம் பயின்ற நிலத்தைக் கைவிட்டுப் போகும் தனிமையினால் வருந்தி, காந்தள் மலரால் கட்டப்பட்ட தலைமாலை நீர் அலைத்தலால் கலக்கமடைய, தம்முடம்பினைக் குளிர் வருத்துதலால் பலரும் கூடிக் கையில் கொள்ளியினை உடையராய்ப் பற்கள் பறை கொட்டி நடுங்குமாறு கூதிர்காலம் நிலைபெற்றது (நெடு. 2 - 8, 72). கோவலர் பலவிடங்களிலும் நின்று ஆம்பல் என்னும் பண்ணினை யுடைய குழலிடத்துத் தெளிந்த ஓசையைப் பல முறையும எழுபப மாலைப் பொழுது வந்தது (குறி. 221, 222, 230). கூத்தர் ஆற்றுபபடுத்தப் பெறும் மலைவழியில் முல்லைநிலக் கோவலரும் குறிஞசி நிலக்குறவரும, வெல்லும் காளையின வெற்றி தோனற ஆரவாரிககும்படி, இனத்தினினறும் பிரிநது தனித்த காளையும் எக்காலத்தும் போர்செய்து போர்த்தொழில் கைவரப்பெற்ற மரையான் ஏறும் பின்னடையாத வலிமையுடன் புணணுண்டாகும்படி முட்டிப் போரிடுகின்ற ஓசை எழும் (மலை. 330-335). 'நீவிர் செல்லும் காட்டுவழியில் ஆனிரையைக் காவல் செய்யும் கோவலருடைய மகளிர் பசுக்களின் இனிய பாலைக் கொண்டு வந்து கொடுத்தலால், நும வழி நடந்த வருத்தம் அகல அங்கே விருந்தினிராவீர்' என்று கூத்தர் ஆற்றுப்படுத்தப் பெறறனர் (மலை.409-412). ஆனினததை அகனற முல்லை நிலத்திலே மேய விட்டுக கோவலர் மாலைப் பொழுதிலே சிறிய குன்றுகளிடத்தே நறுமலர்களை மாலையாகத் தொடுத்து மகிழ்வர் (அகம். 14:7,8,12). கூழினையுண்ணும் கோவலர் தம்மிடத்துள்ள வலிய வாயினையுடைய குந்தாலியினால் வனனிலத்தை உடைத்து வெட்டிய கிணறுகளில் நீர் ஊறாமையால் அவற்றை அப்படியே விடாமல் தழைகளையிட்டு மூடிச் செலவர் (அகம். 21:21-23). வளைந்த மடிகோலிய உடையினராகிய கோலைக் கையிலே கொணட கோவலர் கொன்றைக் கனியாலான குழலினை யிசைப்பவராயப் பினனே நடந்துவர, மாலைக்காலததில பாறபசுக்கள் மேய்சசலினின்றும் மீணடு தத்தம இளங்கன்றுகளிடத்தே மனை தோறும் செல்லும் (அகம. 54:7-12). 'வளைந்த கோலினையுடையவரும் தம் தொழிலன்றிப் பிற தொழிலகளைக் கல்லாதவருமான கோவலர் ஊதுகின்ற குழலோசை, நாளதோறும் வருததத்தைத் தருகின்ற மாலைபபொழுதுடன் கூடி வருத்தா திருப்பின் நின் ஆறுதல மொழிகளையேற்று நான் தலைவர் பிரிவை ஆற்றியிருப்பேன' எனத தலைவி தோழியிடம் கூறினாள் (அகம். 74:12-17). அந்திக் காலத்தே கோவலரது அழகிய குழலோசை தலைவனது ஊரின் நிலாமுற்றங்களில் வந்து இயம்பும் (அகம். 124:14-16). பலவிடத்தும் பாறபசுக் கூட்டம் சேர்ந்துளள பாணாட்டில் நீண்ட சீழ்க்கையொலியையுடைய கோவலர் வேனிலால் வறண்ட கிணறுகளில் பின்னும் சிறுகுழி தோண்டி அவற்றினின்றும் நீரை இறைத்துத தம் ஆனிரைக்கு ஊட்டுவர் (அகம். 155:6-9). பசுககளை மேய்ச்சலினின்றும் மீட்டுவரும் கோவலர் புல்லாங் குழலுடன் பொருந்த யாழினகண் செவ்வழிப் பணணை இசைத்துப் பாடுவர் (அகம். 214:12,13). நீரில்லாத நீண்ட பாலை வழியில் செநநாயககு அஞ்சி வெருவிய கலைமான விளாங்கனியின் ஓட்டில தோனறிய துளையில் மேல்காற்று நுழைநது இசைத்தலால் எழும் அவ்வோசையைக கோவலரது குழலோசை எனக்கருதி அவ்விடத்தைத் தனக்கு அரணாக எண்ணிச் செல்லும் (அகம். 219:13-16). கூட்டம் மிக்க கோவலரது நெடிய கூப்பீட்டொலியை அறிந்து தன் பசுவினத்ததைத திரட்டிக் கொணரும் காளையின கழுத்திலே அவர் தமக்குரிய உணவைச் செறித்த மூங்கிற்குழாயைத் தாழக கட்டியிருப்பர் (அகம். 253:12-16). வெணகாந்தள பூக்களை மிகுதியாகச் சூடியவரும் கவர்த்த கோலினைக் கொண்டவரும ஆகிய கோவலர் பகறபொழுதில் மழையால் வருந்திய பல பசுததிரளோடு நீர்த்துளி விளங்கும் மாலையினராய்க் கூதிர்க்காலத்தில் ஊரிடததே மீண்டுவருவர் (அகம். 264:3 - 6, 10).

இரக்கமில்லாத கோவலர் தாய்ப்பசுவைப் பிரித்து விட்டுத் தனித்துக் கட்டியதனால் அத்தாயையே நெஞ்சத்தில் விரும்பி அதன் கன்று பலகாலும் கதறி அழைக்கும் (அகம். 293:11,12). புல்லி என்பா னது நல்ல நாட்டில், நீரற்றுத் திசையெல்லாம் கொதிக்கும் வேனிற்காலத்தில் வழிப்போக்கராய் வருவோரைப் போற்றிக் கோவலர் தம் எருதுகளின் கழுத்தில் கட்டியுள்ள மூங்கிற்குழாயினுள்ளிருக்கும் புளிச் சோற்றை அவ்வழிப்போக்கரது பசியா லுண்டான காதடைப்பு நீங்கத் தேக்கிலையில் பகுத்தளிப்பர் (அகம். 311:8-12). பாலை நிலத்தில் தம் ஆனிரைகள் பருகுதற்காகக் கோவலர் விடு நிலத்தே கற்களை உடைத்துக் கிணறுகளை இயற் றுவர் (அகம். 321:7,8). மாலைப்பொழுதில் கன்று களுடனே பலவான கறவைப் பசுக்கள் காடுதொறும் தாவி வருமாறு கோவலர் தம் வாயில் குழலை வைத்து ஊதுவர் (அகம். 354:3-5). பல ஆவினங் களையுடைய கோவலர் காட்டைச் சார்ந்த பக்கத் தில் தாம் மழுவினால் தோண்டிய குழியில் தங்கிய ஊற்று நீரை உண்ட ஆனிரை வறண்ட பாலை நிலத்திலே புகுந்த நிலையில் ஊதுகொம்பினால் ஒலியையுண்டாக்கி அவற்றை அங்கிருந்து விலக்கிக் கொன்றை மரத்தின் குறை நிழலில் தங்கச் செய்து பின்னர்க் கல்லாமலே ஊதுகினற சிறிய மூங்கிற் குழலினின்றெழும் தனிமை கொண்ட தெளிந்த ஓசையை நெல்லிக்காய்களை உண்டு அசையிடும் இளைய மரைமான் கூர்ந்து கேட்கும் (அகம். 399: 6-15). கார்காலத்து மாலைப்பொழுதில் பல பசுக் களையுடைய கோவலர் முல்லையின மெல்லரும்பு களால் கட்டிய கண்ணியை அணிந்திருப்பர் (குறு. 358:5-7). மாலைப்பொழுதில் மேய்ச்சலினின்று மீளும் ஆனினங்களின் மணியோசை வளைந்த கோலையுடைய கோவலர்தம் குழலிசையோடு கலந்து வந்து மெல்ல ஒலிக்கும் (நற். 69:7-9). பகல் ஒளி மழுங்கிய மாலையில் ஆவினங்களுக்குப் பூண் களாகக் கோவலர் கட்டிய மணிகள் அந்த ஆவி னம் மேய்ச்சலிலிருந்து மீண்டு நடத்தலால் ஒலிக் கும் (நற். 264:6-8). கொல்லைகளில் தனித்திருக்கும் கோவலரது குறும்புனத்தைச் சார்ந்து குராமரம் இருந்தது (நற். 266:1,2). பிரிந்த தலைவன் குறித்த பருவத்து வாராத நிலையில் கார்காலத்தைக் கண்ட தலைவி, 'கொல்லையிலிருக்கும் கோவலர் இரவிலே எரிகொளுத்திய வெட்டுண்ட பெருமரத்தின் வேராகிய அடிக்கட்டையைப் போலக் காமநோய் கனற்ற வருந்தியிருந்தாள் (நற். 289:6-9). மாலைப் பொழுதில் மணியோசை ஊரின்கண் புகுந்தொலிக் கப் பல ஆனிரைகளையும் மேய்ச்சலிலிருந்து மீளக் கொண்டு வருகின்றவராகிய பிறதொழிலைக் கல் லாத கோவலருடைய கொன்றைப்பழத்தால் செய் யப்பட்ட குழலின் இன்னிசை ஊர்மன்றம் தோறும் இயம்பும் (நற். 364:8-11). கார்காலத்து மாலைப் பொழுதில் தலைவன் மீண்டு வராத நிலையில் தலைவி பிரிவாற்றாது அழத் தொடங்கினாளாக அவளது அழுகையை மிகுவிப்பவர்போலக் கோவ லர் குழலூதத் தொடங்கினர் (நற். 371:5-9). தலைவனது ஊரில் பகன்றைப் பூவால் கட்டிய தலைமாலை யணிந்தவராகிய பல ஆனினங்களை யுடைய கோவலர் கரும்பையே குறுநதடியாகக் கொண்டு மாங்கனியை உதிர்ப்பர் (ஐங். 87:1-3). கல் நிறைந்த கிளைத்த வழிகளில் பிற தொழி லொன்றையும் கல்லாத கோவலர் ஆனிரைகளு ஊட்டுதற்காகக் கோலினால் தோண்டிய ஊற்று நீர்ப் பள்ளத்தில் யானைகள வந்து நீர் அருந்தும் (ஐங். 304: 1-3). 'தலைவர் பிரிந்து சென்ற வழியில் குருந்தம்பூக்களாலான தலைமாலையணிந்த கோவ லருடைய குளிர்ந்த பாக்கங்கள் பல உளவாதலின் அவ்வழி அவர் செல்லுதற்கு நனறாகவே யமையும் எனத் தோழி தலைவியை ஆற்றுவித்தாள் (ஐங். 439). கார்காலத்து மாலைப் பொழுதில பல பசுக்களை யுடைய கோவலர் தாம் தொடுக்கும் தழையிடை யிட்ட மாலையில் முல்லைப் பூக்களையும் விரவிக் கட்டுவர் (ஐங். 476: 1-4). வழுவிய சொற்களை யுடைய கோவலர் கறவைக் கலங்கள் வைத்த உறி யோடு தோற்பையில் கழுவையும் சூட்டுக்கோல் களையும் இட்டுச் சுருக்கியவற்றையும் தூக்கிக் கொன்றைக் குழலினால் ஊதும் இனிய ஓசைய ராய்த் தம் பசுவினத்தைக் கார்காலததிலே மேய்ச் சல் நிலத்திற்கு ஓட்டிச் சென்றனர் (கலி. 106: 1-5). மாலைக் காலத்தே கோவலருடைய தனிக் குழ லோசை தையென்னும் ஒலிக் குறிப்போடு இசைக கக் கேட்டுத் தலைவனைப் பிரிந்திருக்கும் தலைவி நெஞ்சு வருந்துவாள் (கலி. 118:13,14). 'இம்மாலைப் பொழுதில் கோவலருடைய இனிய குழலோசையால் நெஞ்சு வருந்த, பூவின் அழகினையுடைய என் மையுண்கண் தனிமை கொண்டு வருந்தும்' எனத் தலைவி தலைவனது பிரிவினையாற்றாது புலம்பி னாள் (கலி. 130:14-16).

கோவலூர் - திருக்கோவலூர். அதியமான் நெடுமானஞ்சி தனனொடு மாறுபாடு மிக்க பகைவரது கோவ லூரை— திருக்கோவலூரை - அழித்து வென்று பிற அரண்களையும் அழித்த ஆழி தாங்கிய தோளாற்ற லைப் பிறரால் பாடற்கரிய நிலையில் பரணர் தம பெருமையால் பாடினார் எனபது ஔவையாரின் பாராட்டுரை (புறம். 99: 11-14).

**கோவினத்தார்** -பசுவினத்தையுடையவர். கோவினத்தார்- பசுவின ததையுடையவர்-ஆகிய தலைவியின் சுற்றத் தார், 'எம் கொல்லேற்றைத் தழுவுதலே செயல்' என்று ஆட்டிடையர்க்கும் பசுவிடையர்க்கும் அறி விதது்த் தொழுவத்தில் ஏறுகளைப் புகவிட்டார் (கலி. 107: 1-4).

**கோவினம்** - பசுவினம். 'இளையோளே, மறுவினை யுடைய ஏற்றின் மேலிருந்து ஆடிவிட்டுப் பின்னர் நீர்த்துறையில் தெப்பத்தின் மேல் நின்று அதனைத் தள்ளுபவனைப் போல் தோன்றும் இவன் கோவினத்து - பசுவினத்து - ஆயர் மகனல்லவோ' என்று ஏறுதழுவல் நிகழ்ச்சியில் ஒருவனைத் தோழி தலைவிக்குக் காட்டினாள். (கலி. 103: 36-39).

**கோவூர் கிழார்** - புலவர். கோவூர் என்னும் ஊரினரான வேளாண் மரபினர் ஆகலின இவர் கோவூர் கிழார் என வழங்கப் பெற்றார். இப்பெயரோடே இவர் புகழ் மேம்பட்டமையால் இயற்பெயர் வேண்டா தொழிந்தது. இவருடைய பாடல்கள், புறநானூற் றில் பதினைந்தும் (31, 32, 33, 41, 44, 45, 46, 47, 68, 70, 308, 373, 382, 386, 400) குறுந்தொகையில் ஒன்றும் (65) நற்றிணையில் ஒன்றும் (393) ஆக பதினேழு காணப்படுகின்றன. புறப்பாடல்களால் இவர் சோழன் நலங்கிள்ளி, அவன் தம்பி மாவளத் தான், சோழன் காரியாற்றுத் துஞ்சிய நெடுங்கிள்ளி, சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன், சோழன் குராப்பள்ளித் துஞ்சிய கிள்ளிவளவன் ஆகி யோரைப் பாடியுள்ளார். பண்ணனையும் அவனது சிறுகுடியையும் இவர் ஒரு பாடலில் (புறம். 70) குறித்துள்ளார். மறப்பண்பைப் பாடுவதில் இவர் சிறப்புடையவர். சோழன் நலங்கிள்ளி வலமுறை யாகப் படையெடுத்து வருதலு முண்டெனறு அலமந்து நெஞ்சு நடுங்கும் அவலம் பாய வட புலத்து அரசுகளெல்லாம் துஞ்சாக் கண்ணவாயிருக் கின்றன என்பதும் (புறம். 31) சோழன் குளமுற்றத் துத துஞ்சிய கிள்ளிவளவன் படையெடுத்து வருவா னெனபதைக் கனவிலும் நனவிலும் கண்டவற்றால் உணர்ந்து மயக்கம் கொண்ட பாதுகாப்பில்லாதவ ராகப் புதல்வர் பூங்கண்ணினை முத்தமிட்டு மனை யோளறியாதவாறு தம் துன்பததை மறைக்கும் வருத்தம மிக்க ஆடவருடனே அவனது பகைநாடு பெருங் கலக்கமுற்றது என்பதும் (புறம். 41) மறப் பண்பைப் பாடுகினற இவர் மாண்பிற்குச் சிறந்த எடுத்துக் காட்டுக்களாம். வேந்தரிடத்துக் கெழுமிய உரிமையுடைய இவர் அவர் தமக்குள் முரண்பட்டுப் போரிட்ட போதெல்லாம் சந்து செய்து அமைதிப் படுத்தினார். சோழன் நலங்கிள்ளி உறையூரை முற்றுகை இட்டிருந்த நிலையில் நெடுங்கிள்ளி வெளிப்படாது அதனை யடைத்து உள்ளே இருந் தானாக இருவரையும் சந்து செய்யுமுகமாக இவர், 'குடிப்பொருள் அன்று நும் செய்தி' எனப் பாடி அவர் இகலைத் தீர்த்தமை (புறம். 45) இதற்குப் பொருந்திய காட்டாகும். சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் யாது காரணத்தாலோ மலையமான் மக்களை யானைக்கால்களில் இட்டுக் கொல்லத் துணிந்தபோது இவர் இடையிட்டு அச் சிறுவரை உய்யக் கொண்டதும் (புறம். 46) சோழன் நலங்கிள்ளியிடத்திருந்து உறையூர் புகுந்த இளந் தத்தன் என்னும் புலவனை ஒற்றனெனக் கருதிச் சோழன் நெடுங்கிள்ளி கொல்ல முற்பட்டபோது இவர் குறுக்கிட்டு அப்புலவனை உய்யக் கொண் டதும் (புறம். 47) கொடுமையைக் களைதலில் இவர்க்கிருந்த கொள்கையூறறத்தைக் காட்டுவன வாம். மற்றும் இவரது நன்றியுணர்வு அரசிய லறிவு, ஒற்றுமையுணர்வு, பெருமிதம் போன்ற பண்பு நலன்கள் பலவற்றையும் இவருடைய பாடல்கள் புலப்படுத்துகின்றன. அப்பாடல்களால் இவர்க்கிருந்த கனவுநூல், கணிதநூல், இசைநூல் புலமைகளும் போதரும். குறுந்தொகை, நற்றிணைப் பாடல்களில் இவர் முல்லை, நெய்தல் திணைக ளைப் புனைந்துள்ளார். எல்லாப் பாடல்களிலும் இவரது சொல்லாற்றல் சிறந்து விளங்குகின்றது.

**கோவே** - வேந்தே (விளி). 'எல்லார்க்கும் எப்பொரு ளும் வரையாது கொடுக்கும் வண்மையுடைய குட வர்கோவே - வேந்தே -' என்று யானைக்கட்சேய் மாந்தரஞ்சேரலிரும்பொறையைக் குறுங்கோழியூர் கிழார் விளிதது்ப் பாராட்டுவர் (புறம். 17:40). 'ஆவியர் கோவே' என்பது வையாவிக் கோப் பெரும் பேகனைக் குறித்த விளி (புறம். 147:9). 'பூழியர் கோவே' என்று பல்யானைச் செல்கெழு குட்டுவனும் இளஞ்சேரலிரும் பொறையும் விளிக் கப் பெறுவர் (பதி. 21:23;84:6). 'குடவர் கோவே' என்பதும் 'போர்க்களத்தில் வெற்றியோடு ஆடும் கோவே' என்பதும் ஆடுகோட்பாட்டுச சேரலா தனைக் குறித்த விளிகள் (பதி. 55:9;56:8). 'செல்வக் கோவே' என்று செல்வக்கடுங்கோ வாழியாதனை விளிப்பர் கபிலர் (பதி. 63:16). இளஞ்சேரலிரும் பொறை, 'கொங்கர் கோவே' என்று ஈரிடங்களில் விளிக்கப் பெறுவன் (பதி. 88:19;90:25,. பாண்டியன் தலையாலங்கானத்துச் செரு வென்ற நெடுஞ்செழி யன் குட்ட நாட்டை வென்று அந்நாட்டவாக்கும் அரசனானமை பற்றி, 'பல்குட்டுவர் வெல்கோவே' என்று சிறப்புற விளிக்கப் பெறுவான் (மது. 105).

2. வேட்கோவே (குயவனே). அடுகலம் வனையும் கோவே - வேட்கோவே - என்று குயவனை விளித்துப் பாடுவர் புலவர் (புறம். 228:1, 4; 256:1,7).

**கோவேங்கைப் பெருங்கதவனார்** - புலவர். குறுந்தொகை 134-ஆம் பாடலொன்றே இவருடையதாகக் கிடைக்கின்றது. அதனுள் வேங்கை மரத்தைக் கதழ் வீழருவி தாக்குவதாக இவர் புனைந்திருத்தலின் கோவேங்கைப் பெருங் கதழ்வர் எனப் பெயர் பெற்றார் என்று உ. வே. சா. இவர் பெயரின் இறுதியைக் கதழ்வர் எனறு கொண்டு காரணம் கூறுவர் (குறு. பாடினோர் வரலாறு). ஆயின், பாடலின் கீழ்க் கதவன் என்னும் ஈற்றோடே பெயர் காணப் படுகினறது. வையாபுரிப்பிள்ளையின் சங்க இலக்கியப் பதிப்பு 'ஆர்' விகுதியைச் சேர்த்துக் கோ வேங்கைப் பெருங்கதவனார் எனறு காட்டித் தொடரால் பெயர்பெறறவர் வரிசையில் இவரை நிறுத்துகின்றது. கோ எனனும் அடை மொழியினாலும் 'ஆர்' விகுதியில்லாத அமைப்பினாலும் இவரை அரசப் புலவராக விளக்குவர் மொ. அ. துரை அரங்கசாமி (ச. சி. பெ. பக். 141,142). மற்றும், கதவன் என்பது வாயிலை இடமாகக் கொண்டு வீற்றிருக்கும் தெய்வத்தின பெயராகலாம் எனறும் அவர் மேற்கோள் காட்டி மொழிவர் (ச. சி. பெ. பக். 141). இவர் தம பாடலை, வரைவிடைப் பிரிவில் ஆற்றாளாகிய தலைமகள் தன்னை ஆற்றுவிக்கும் தோழிக்குச் சொல்லியதாக இயற்றியுள்ளார். 'நாடனொடு கலந்த நட்பு நம்மொடு பிரிவின்றாயின் நன்று' என இவர் பாடலின் தலைவி ஏங்குவது காணத்தகுவதாம். மலையுச்சியிலிருந்து நிலப் பரபபில் இழிந்து வளந் தருவதான அருவி இடையே வேங்கை மரததின் மீது வீழ்ந்து அதன் மலர்களை உதிர்த்துக் கல்லைப் பொருது பாம்பு போலத் தோன்றுமெனத் துன்பத்திற்கேதுவான செயலைச் செய்ததுபோல் தலைவி கூற்றில் இவர் புனைந்துள்ளார். இதனால், வரைவுக்கு வேணடிப் பொருள்வயிற் பிரிந்து முடிவில் நனமையைத் தருவதான நாடனது நட்பு இடையில் ஆற்றாமைத் துன்பத்தை அளிக்கின்றது எனும் குறிப்பினை இவர் புலபபடுததும் நயம் பாராட்டிற்குரியது.

**கோவை** - வடம். தன்னால் விரும்பப் பெற்ற தலைவன், பல நிளைகளாய் நெருங்கிய பெரிய மாலையாகிய அழகிய கோவை - வடம் - ஆகிய மேகலையணிந்த தனது அல்குலையணைத்து ஊக்கமுறுத்தியதனால் தலைவி ஊக்கமுற்றவளாய் அவனுடன் போயினள் (அகம். 385:11-17). தலைவியின் மகன் தன் இடையில் மணியிடையிட்ட பொன்வடத்தின் மேல் அழுக்கில்லாத சிவந்த பவளக் கோவை அணிந்திருநதான் (கலி. 85:3,4). வையையில் புனலாடச் சென்ற மதுரை மகளிருடைய கோவை அற்று முத்துதிர்நது நூல தோனறுமாறு அவருடல் பூரிகக, அவருள்ளத்து நிறைப்பனைபை அவ்வையை வெள்ளம் உடைத்தது (பரி. 6:15,21).

**கோழ்** - 1. கொழுமை. கரிகாற்பெருவளத்தான் செம் மறிக்கிடாயின அழகிய புழுக்காகிய மேற்றொடையின் வெந்த இறைச்சியினையும் இரும்புகம்பியிற் கோத்துச் சுடப்பட்ட கோழ - கொழுமை - உடைய ஊன் துண்டங்களையும் பொருநர்க்கு அளவின்றிக் கொடுததான் (பொரு. 103-106). தென்திசைக்கண் உள்ள குறுநில மன்னராகிய பரதவர் கோழ் ஊன் கலந்த வளமான சோற்றினை உண்டனர். (மது. 141,142,144).

2. செழுமை. கோழ் - செழுமை - வாய்ந்த இலையையுடைய வாழையில் காய்த்தல் மிக்க பெருங் குலை கனிவுற்றிருந்தது (அகம். 2:1). கார்காலத்தில் அழகுற்றுக் கோழ் பொருந்திய பூங் கொத்துக்கள் தோன்றிய மரங்களுடன் காடு கவின் கொண்டது (அகம். 41:8,9). பாறையின் மேலிருந்த அழிவெய்திய குடிலின் கண்ணதாகிய தாழியின் கண்ணே முளைத்துத் தழைத்துள்ள கோழ் இலைகளையுடைய பருத்திச் செடியிற் காய்த்துள்ள பொதி வயிற்று இளங்காயைப் பிளந்து ஆண் பறவைகள் தம் பெடைக்கு ஊட்டும் (அகம். 129.6-9). பனிப் பருவத்தில் கோழ் இலைகளையுடைய அவரை பூத்தது (அகம். 217:9,13).

**கோழி** — 1. உறையூர். பிசிராந்தையார் அன்னச் சேவலிடம், 'நீ சோழநாட்டை அடைவாயாயின், கோழியில் - உறையூரில - உள்ள உயர்நிலை மாடத்துத் தங்கிக் கோப்பெருஞ்சோழனிடம் சென்று யான் ஆந்தை அடியுறை எனக் கூறின் நின் பெடை அணியத்தக்க நன்கலனகளை நலகுவன' எனக் கூறினார் (புறம. 67:8-14). மதுரையில வாழ்வோா வைகறையில் நான மறை ஓதும் ஒலிகேட்டு எழுவ ரல்லது வஞ்சியிலும் கோழியிலும் உள்ளாா போலக் கோழியின ஒலிகேட்டு எழாா (பரி.தி.7:7-11). சூரர மகளிர் கோழியின உருவத்தைத் தன்னிடத்தே கொண்டுளள வெற்றியை யுடைய கொடி நெடுங காலம் வாழ்வதாக என்று வாழ்த்திப் பாடிச் சோலையில் ஆடினர் (முரு. 38-41). பீலியையுடைய மயில்களோடே கோழியின் வலிய பேடைகள கெட்டோடப் பழமுதிர் சோலையில அருவி 'இழும்' என்னும் ஓசையுடன் இறங்கியது (முரு. 310, 311,316,317). உமணரால் சகடத்தின்மேல் கட்டப்

பட்ட கோழி கிடக்கும் கூட்டிற்குத் தினைப்புனத்தே பரண்மேல் காவல் செய்வோர் கட்டிய சிறுகுடில் உவமை (பெரு. 51-53). வேதவொழுக்கத்தைக் காக்கும் மறையவர் வாழும் சாணத்தால் மெழுகப் பட்ட வீட்டில் மனைகளிலே தங்கும் கோழிகளுடன் நாயும் சேர்வதில்லை (பெரு. 298-301). உலரும் நெல்லைத் தின்னும் கோழியை மகளிர் தம் மகரக் குழைகொண் டெறிந்தனர்; அக்குழை சிறுவர் உருட்டும் தேரைத் தடுத்தது (பட். 20-25). குட்டிகளையுடைய பன்றிகளும் பல வகைக் கோழிகளும் உறைக் கிணறுகளும் உடைய புறச்சேரிகளில் ஆட்டுக் கிடாய்களுடன் சிவல் (கௌதாரி) விளையாடின (பட். 75-77). இரவுக் குறிக்கண் தலைவனைச் சந்திக்க விரும்பும் தலைவிக்கு உண்டாம் இடையூறுகளுள் ஒன்றாக மனையில் வளர்க்கப் பெறும் கோழியின் மாண்குரலைத் தலைவி குறிப்பிட்டாள் (அகம். 122:16). மனையின்கண் உறையும் சேவற்கோழியின் தாடி தொங்குவது போன்று யாஅ மரத்தின் கவைத்த ஒளி' பொருந்திய தளிர் விளங்கும் (அகம். 187:14,15). கூரிய அலகினையும் தீப்பிழம்பு தளிர்த்தாற் போன்று அழகாகச் செறிந்த மயிரினையும் உடைய மனையுறை கோழி, போர் புரியுங்கால் அதன் கழுத்து மயிர்கள் செறிந்து காணப்படுவது போன்று செம்முருக்கின் பூங்கொத்து காணப்படும் (அகம். 277:15-18). மனையில் உறையும் கோழியின் பேடை, மாலைப்பொழுதில் காட்டுப்பூனை இனம் வரவே புகுமிடம் அறியாது, ஒருங்கே கூடும் பொருட்டுத் தம் குஞ்சுகளை அழைத்தது (குறு. 139:1-4). 'கோழி குக்கூ என்று கூவியது; என் தோளை மணந்த காதலரைப் பிரிக்கும் வைகறை வந்ததென்று என நெஞ்சம் அச்சத்தை அடைந்தது' என்பது பூப்பெய்திய தலைமகள் கூற்று (குறு. 157). 'அறிவில்லாதோர் வானம் சிவக்க முல்லை மலரும பொழுதை மாலை என்று வரையறுத்துக் கூறுவர்; துணைவரைப் பிரிந்தவர்க்குக் குடுமிக் கோழி கூவும் விடியற் காலமும் மாலையாகும்' எனத் தலைவி கூறினாள் (குறு. 234). காட்டிடத்துள்ள கோழியின கவர்த்த குரலையுடைய சேவலின் புள்ளிகள் பொருந்திய கழுத்தில் நீர்த்துளி விழும்படி புதலின்கண் நீர் ஒழுகும் மணம வீசும் முல்லை நிலத்தில் தலைவி இருந்தாள் (குறு. 242:1-4). 'போரிடைச் செலுத்துவாரும் பிரித்து நீக்குவாரும் காண்பாரும் இன்றி நிகழும் குப்பைக் கோழியின் தனிப்போர் போல என் துன்பம் தானே தணிதலன்றித் தணிப்பாரிலர்' எனத் தலைவி தோழிக்கு அறத்தொடு நின்றாள் (குறு. 305:5-8). நீரினகண் வாழும் இயல்புடைய நீலநிறமுடைய சேவலைக் கூரிய நகமுடைய அதன் பேடை நினைந்து வயாநோய் நீங்கும் (ஐங். 51:1,2). முருகனின் ஊர்தியாகிய யானையின் பிளிற்றொலி இடியொலி போன்றது; அந்த யானையின் முழக்கம் கேட்ட கோழி குன்றதிரக் கூவியது (பரி. 8:17-19). மதுரையில் வாழ்வோர் நான்முகன் நாவிற்றோன்றிய நான்மறையை ஓதுவார் ஒலி கேட்டு எழுவ ரல்லது வஞ்சியிலும் உறையூரிலும் உள்ளவர்களைப் போலக் கோழியினது குரல் கேட்டு எழார் (பரி. தி. 7:7-11).

**கோழிக்கொற்றனார் - புலவர்.** இவர் பெயர் கோழிக் கெற்றன், கூழிக்கொற்றன, கூளிக்கொற்றன் என மூவகை வடிவில் காணப்படுகின்றது. பாடலின கீழ்க் கூழிக் கொற்றன் எனப் பதிப்பித்த உ. வே. சா. குறுந்தொகை - பாடினோர் வரலாறு எழுதுகையில கோழிக் கொற்றனார் என்று கொண்டே எழுதியுள்ளார். சங்க இலக்கியப் பதிப்பும் கோழிக் கொற்றனார் எனறே கொண்டுள்ளது. கோழியென்ற பெயரையுடைய உறையூரைச் சார்ந்த கொற்றனார் என இவர் பெயர்க்கு விளக்கம் காணலாம். குறுந்தொகையில் 276-ஆம் பாடல் ஒன்றே இவருடையது. தலைவியைக் குறித்த தனது குறையைத் தோழி மறுககாதவாறு அவளிடம் முன்னிலைப் புறமொழியில் தலைமகன கூறுவதாக இவர் அப்பாடலை இயற்றியுள்ளார். 'பணைத் தோள் களையுடைய குறுமகளுககுப் பாவையைப் பண்ணிக் கொடுத்தும் அதன்பொருட்டுப் பஞ்சாய்க் கோரை வளர்ந்த பள்ளத்தைச் சுற்றியும் யான அவளுடைய உருத்தெழுகினற வனமுலையில் எழுதிய தொய்யிலை அவளைக் காப்போர் அறிநதிலர்; இந்நிலையில் யான் முறை கூறும் அரசனது அறங்கூறவையத்தில் அவளைக் குறித்து வினவினால் அஃது எவ்வாறு சென்று முடியும, அதனையறியாமையால் இவ்வூர் பெரிதும் பேதைமையுடையது' எனத் தலைவன கூற்றில் அமைந்த இவர் பாடலால் அக்காலத்து அரசரது அறங்கூறவையத்தின் செம்மையை உணரலாம.

**கோழியோன் - உறையூரிடத்தான்.** கோப்பெருஞ் சோழன் பாணர் சுற்றத்தினது பசிக்குப் பகையாய்க் கோழியோன் - உறையூரிடத்தான் - என்று பிசிராந்தையார் அவனைப் பாடுவர் (புறம். 212:6-8).

**கோள் - 1. காய்.** தொன்டி குலை இறைஞ்சிய கோள்-காய் - உடைய தென்னை மிக்கது (புறம்.17:9-13). உழவர்தம் செல்வர் தென்னை தரும் பழத்தை வெறுப்பின் நெடும் போரேறிச் செழுங்கோட் பனையின் பழத்தைத் தொடுதற்கு முனைவர் (புறம்.

61:8-11). கோழிலை வாழைக் கோள்மிகு பெருங் குலை (அகம். 2:1). அணிலாடும் பெருங்கிளையில் விழுக்கோட் பலவின் பழமாகிய பயனைக் கோடற் குக் குறவர் குடிசை யமைத்தனர் (அகம். 12: 7-9). மலையகத்தில் கோளறாத பயனுடைய பலாவி னோடு வேங்கை மரமும் இருந்தது (அகம். 162: 19,20). குறுமுயல்கள் வரகின் குருத்தினைத் தின்று கோளுடைய கொடிகளுள் புகுந்து கிடந்து உறங் கின (அகம். 284:2-6). கமுகின் தொடுத்தல் அமைந்த பன்மலர்களின் தொகுதியை மூடிக் கட்டிய குடை யினை யொத்த கோள் பொருந்திய எருத்தினிடத் துள்ள பாளை பற்று நீங்கி ஒழிந்தது (அகம். 335: 12-15). செழுங்கோட் பலவின் பழம் (அகம். 382:10). ஆயரின் குழலோசையைப் பளிங்கினைப் போன்ற தோற்றத்தையுடைய பல்கோள் நெல்லியின் பைங் காய்களை உண்டு அசையிடும் மரைமான் ஓர்க்கும் (அகம். 399:11-15). பலவின் கிளையினின்று கனிந்து கீழே வீழ்கின்ற கோள் முதிர்ந்த பெரும்பழம் பிற ருண்ணாதபடி மலையின் பிளப்பாகிய அளையினுள் வீழ்ந்தது (நற். 116: 6-8). செழுமையாகிய கோள் மிக்க பலாவின் பெருங்கிளையிடத்து வந்து தங்கிய கொக்கு மீனைக்குடைந்து தின்னுதலால் உண்டா கிய புலவு நாற்றம் மந்தியைத் தும்மச் செய்யும் (நற். 326:1-4).

2. குலை. புதிய தினைக்கதிரைக் கொணர்ந்து மரையாவின் பாலை உலை நீராக வார்த்துச் சந்தன விறகால் சமைக்கப்பெற்ற சோற்றைச் செழுமையான கோள் - குலை - உடைய வாழை யின் அகன்ற இலையில் குதிரைமலைக்கிழவனா கிய பிட்டங்கொற்றன் பகுத்துக் கொடுப்பான் (புறம்.168:6-14). குடிப்பாக்கம் கோள் தெங்கினையும் குலைவாழையினையும் கொழுங்காந்தளினையும் மலர் நாகத்தினையும் பேராந்தையினையும் உடை யது (பொரு. 208-210). பெரிய கோளினையுடைய பனைமுலையென வளர்ந்த நுங்கின் நீர் தன்நீர் மையால் தாழும் எயிற்றினை உடையவள் விறலி (சிறு. 26-28). தாழ்கோள் பலவு (பெரு. 356). கோள் தெங்கு (பட். 16). வண்கோட் பலவின் சுளை விளை தீம்பழம் (மலை. 337). பக்கமலை வேரிலே கோளுடைய பலா மரங்கள் செறிந்தது (குறு. 18: 1,2). தினை, செறிந்த கோள் உடைய பசிய கதிர் களை உடையது (குறு. 198:2,4). வீழ் கோள் பலவு (குறு. 257:3). பல்கோட் பலவு (நற். 102:5). பனை யின் கோள் உடைய நெடுமடலிலிருந்து சேவல் தன்பெடையைக் கூவின் அவ்வொலியைக் கேட்டுப் புலி எதிரோசை எழுப்பும் (நற். 174:2-4). பல்கோட் பலவு (கலி. 50:12).

3. கொல்லுதல். மதம் மிக்க வலிய யானை நிலத்தை எறிந்து நெருங்கி வந்து ஆட்களைக் கோள் - கொல்லுதல் - தொழிலில் தப்பாத அஞ்சத் தகும் பெருங் கையினை உடையது (அகம். 93:17-20). வாள்வரி வயமான் கோள் உகிர் போன்றது முருக்க மலர் (அகம். 99:1,2). கோள் வல் ஏற்றை (அகம். 171: 9). குறும்பொறை மருங்கின் கோட்சுரம் நீந்தித் தலைவன் சென்றான் (அகம். 271:5). கோட் சுறா (அகம். 340:21;நற்.78:1;207:8;215:11). குறுங்கை யிரும் புலிக் கோள் வல் ஏற்றை (குறு. 141:5). கோட்புலி வழங்குஞ் சோலை (குறு. 237:6). கூற்றுவனது அற னில்லாத கோளை நன்றாக அறிந்தோர் உலகத்தின் கண் பெரு வளத்தை ஒருங்கே பொருந்துவதாயி னும் தலைவி நீங்கியிருப்பத் தாம் மட்டும் தனித்துப் பிரியார் (குறு. 267). கொடுங்கால் முதலைக் கோள் வல் ஏற்றை (குறு. 324:1). குறுங்கை இரும்புலிக் கோள்வல் ஏற்றை (நற். 36:1; ஐங். 216:1). தலை வன் தலைவியை முயங்கியதனால் உண்டான புது மணத்தைக் கருதி அவள் தோளைச் சார்ந்து வண்டுகள் அளவிலாது மொய்க்கையினாலே தாய் தன் கண்களால் கோள் போல் நோக்கி அவளிடம் 'பண்டும் நீ இத்தன்மை யுடையையோ' என்று வினவினாள் (நற். 55:4-7). செங்கண் இரும்புலிக் கோள்வல் ஏற்றை (நற். 148:9). கோள் உகிர்ப் பூம் பொறி உழுவை (நற். 205:2,3). கோள் வாய் நாய் (நற். 276:1). தலைவன் பகைவரைக் கோள் இசைத்த வில் வல்லன் (ஐங். 313:4). கோள் வல் வேங்கை (ஐங். 385:2).

4. முகம். பால் முதலியன பெய்யப் படாமையின் சிறிதும் வெண்கோள் - வெள்ளிய முகம் - தோன் றாத பானையைக் காண்டலோடு உறை தெறிப்பக் கடையும் மத்தினொலி கேளாது விடியற்காலத்தே மறவனொருவன் தான் கவர்ந்த ஆனிரையைப் பிறர்க்கு நல்கினான் (புறம். 257:8-13).

5. கோட்பாடு. நாவலின் கருங்கனியைத் தம்மின மென்று கருதி வண்டுகள் மொய்த்திட, அதனைக் கனியெனக் கருதிப் பல்கால் நண்டு கைக்கொண்ட கோளினால் - கோட்பாட்டினால் - வண்டுகள் அந் நண்டை விலக்கித் தாம் அக்கனியை வலிந்து கொள்ளப்படாதனவாய் யாழோசை போல் ஒலித் தன (நற். 35:2-5).

6. இராசி. நாள், கோள் - இராசி-திங்கள், ஞாயிறு, கனையழல் ஆகிய ஐந்தும் ஒருங்கிணைந்த விளக்கத் தனையை என இமையவரம்பன் நெடுஞ்சேரலா தன் புகழப் பெற்றான் (பதி. 14:3,4). தீய கோள் களின் தொடர்பு நீங்கப் பெற்ற திங்களைச் சிறந்த

புகழுடைய நாள் (உரோகிணி) அடைந்த விடியற் போதில் திருமணம் நிகழ்ந்தது (அகம். 86:5-7,17).

7. மனத்தாற் குறித்துக் கொள்ளுதல். நின்மகளின் உண்கண்ணைப் பன்முறை நோக்கிக் குன்று கிழவோன் சென்றனன்; மாலைப் போதில் அவன் மறையும் திசைநோக்கித் 'தோழி இவனொரு மகனே' என்று தலைவி என்னிடம் கூறினாள்; மதிவல்லோர்க்கு அதனை வாக ஒரு கோள் - மனத் தாற் குறித்துக் கொள்ளுதல் - உண்டு எனத் தோழி செவிலிக்கு அறத்தோடு நின்றாள் (அகம். 48:21-26).

8. கடைப்பிடித்தல். கரும்பனூரன் இருங்கோளை யும் - பெரிய கடைப் பிடித்தலையும் - ஈராப்பூட் கையினையு முடையவன் (புறம். 381:25,26).

9. செம்பாம்பு. மகளிர் சுரும்பு சூழும் சுடர் நுதலில் மகரவாயாகிய தலைக் கோலத்தை அணிந்திருத் தல் பிறைத்திங்களைக் கோள்- செம்பாம்பு - தீண்டி னாற் போல் தோன்றியது (பெரு. 383 - 385).

10. வகை. 'பல கோள் - பலவகை - செய் தார் மார்ப' எனக் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவன் விளிக்கப் பெற்றான (புறம். 397:7,8).

11. பழுத்தல். கார்காலத்தாலே கோள் - பழுத்தல்- உடைய பலாவின் காயை மிகவுடைய கொத்தை யொப்ப முழவு, ஆகுளி முதலிய இசைக் கருவி களைப் பையிலிட்டுக் கட்டி அவற்றைக் கூத்தர் காவிச் சென்றனர் (மலை. 3-13)

12. கூற்றம். தூண்டிலினுள்ள தனக்குக் கோள்- கூற்றம் - ஆகிய இரையினை வராற்போத்து விழுங் கியது (அகம். 36:1,2).

13. கொள்ளுதல். கொழுங்கொடி அவரையின் வெள்ளைக்காய் கோட்பதம் - கொள்ளும் செவ்வி - உற்றது (புறம். 120:10,11). கோள் – கோள்ளுதல் - (புறம். 211:21; 260:15; 289:9; 297:5; 341:9; 392:16; பதி. 24:18; 29:13; ப. 5:4; 53.8; 72:1; 77:8; பொரு. 141; 142; 236; பெரு. 284; 400; நெடு. 11; 82; குறி. 38; மலை. 311; 505; அகம. 33: 5; 61:2; 63:18; 79:14; 81:1; 89:16; 109:9; 111: 10; 113:17; 118: 8; 122:5; 186:2; 297:16; 300:1; 325:7; 343:4; குறு. 159:6; 209:2;232:6; நற். 77:9; 211:4; 340:10; ஐங். 136:2; 218:3; 373: 2; 383:1; கலி. 102:32; 103:5; 104:30, 37. 47; 56, 73; பரி. 4:56; 57).

**கோளாளர்** - ஏறுகொள்ள வல்லார். 'கோளாளர் - ஏறுகொள்ள வல்லார் - என்னை யொப்பவர் பிறரில்லை' என்று தலைவியைச் சார்ந்தோரது பசுத்திரளிலே நின்று தலைவன் தன் தாளாண்மை யைக் கூறினான் (கலி. 101:43,44).

**கோளி** - பூவாமல் காய்க்கும் மரம். பருத்த அடி மாய்ந்த கோளி - பூவாமல் காய்க்கும் மரம் - ஆகிய ஆலமரத்தின் கொழு நிழலையுடைய கொம்புகளை அதன் வீழ்துகள் தாங்கும் (புறம். 58:2,3). ஊர் முன்னர்ப் பழுத்த கோளியாகிய ஆலமரத்தில் பறவைகள் மிகுந்து தங்கிப் பழமுண்டு ஆரவாரிக் கும் (புறம். 254:7,8). கோளி பலவற்றுள்ளும் பழத் தின் இனிமையால் மேலாகச் சொல்லப் படுவது பலாமரம் (பெரு. 407,408). 'கொம்புகள் பலவும் முற்றிய கோளியாகிய ஆல்மரத்திடத்தே பல இசைக்கருவிகளை யொத்த ஓசை யெழுப்பும் பற வைத்திரளையுடைய நாடுகளமைந்த மலை வழி களை மெல்ல மெல்லக் கடந்து போவீராக' என்று கூத்தர் ஆற்றுப்படுத்தப் பெறுகின்றனர் (மலை: 268-270).

**கோளியூர்கிழார் மகனார் செழியனார்** - புலவர். கோளி யூர் என்னும் ஊரால் பெயர் பெற்ற வேளாளர் ஒருவர்க்கு மகனாரான செழியனார் என இவர் பெயர்த் தொடர்க்கு விளக்கம் காணலாம். கோளி யூர் சோழநாட்டிலும் தொண்டை நாட்டிலும் பாண்டி நாட்டிலும் உள்ளன வெனினும் செழிய னார் என்னும் இப்புலவரது இயற்பெயரை நோக்க இவரது கோளியூர் பாண்டி நாட்டதே எனத் தெளியலாம் என்பர் ஔவை. து (நற். 383: முன்னுரை). நற்றிணை 383-ஆம் பாடல் ஒன்றே இவருடையது. தலைவன் இரவுக் குறியிடத்து வரு கின்ற வழியின் கொடுமையை அவனுக்குணர்த்தித் தோழி அவனை வரைவு கடாவுதலாக இவர் அப் பாடலைப் பாடியுள்ளார். 'ஈன்ற பிணவின் பசி யைப் போக்குதற்குப் புலியேறு களிற்றினைக் கொன்று முழங்குகின்ற அச்சம் மிக்க பாதியிரவில் நீ தலைவியிடத்தே அருளுடையை போல வரினும் இருள்செறிந்த அவ்வழியில் பாம்புகளின்மேல் சினந்து வீழ்நது கொல்லும் இடிகள் இடிக்கையில் வருதலால் நீ அருளுடையை அல்லை'என்று அப் பாடலில் இவர் தோழியைப் பேசவிடுகின்றார். அவள் கூற்றாக இவர் புனையும் வழிக்கொடுமை நிகழ்ச்சிகள் சிறந்த இயற்கைப் புனைவாகும். வரி களமைந்த புலிக்குட்டிக்கு இவர் வேங்கைமலர் மாலையை உவமை கூறுவர்.

**கோன்** - அரசன். 'பாணர்க்கு நீங்காத செல்வமெல் லாவற்றையும் செய்தோனாகிய எம் கோன் - அரசன் - வளவன் வாழ்வானாக, என்று சொல்லி நின் தாளைப் பாடேனாயின் கதிரவன் தோன்று

தலறியான்' எனச் சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனை ஆலத்தூர் கிழார் பாடினார் (புறம். 34:14-18). 'எம் கோன் இருந்த மூதூரிடத்தே அதனையுடையோர் போலக் காலம்பாராதுஅணுகி நாளவையின்கண் செம்மாந்து புகுதல் எம்போலும் வாழ்க்கையையுடைய இரவலர்க்கு மட்டுமே எளிதாம்' என்று சேரமான் குட்டுவன் கோதையைப் பாராட்டுவர் கோனாட்டு எறிச்சிலூர் மாடலன் மதுரைக்குமரனார் (புறம். 54:1-4). 'கடற்கரையிடத்துக் கழியின் நீரால் விளைந்த உப்பை முகந்து கொண்டு மலை நாட்டை நோக்கிச் செல்லும் சகடம் குழியில் அழுந்துதலைத் தீர்த்துச் செலுத்தும் வலிமையமைந்த பாரம்பொறுக்கும் காளையை ஒப்பவனாகிய எம் கோன்' எனச் சோழன் குராப் பள்ளித்துஞ்சிய பெருந்திருமாவளவனைக் குறிப்பர் உறையூர் மருத்துவன் தாமோதரனார் (புறம். 60: 6-9). 'யான் வடக்கிருத்தலைக் கேட்டுப் பிசிராந்தையார் இங்கே வருவார்' என்று துணிந்து சொல்லிய கோனாகிய கோப்பெருஞ்சோழனது பெருமையும் அவன் சொல்லிய சொல் பழுதின்றாக வந்த பிசிராந்தையாரது அறிவும் 'வியக்குந்தோறும் வியக்குந்தோறும் வியப்பு மேம்பட்டது' என அந்நிகழ்ச்சியை வியந்து பாடுவர் பொத்தியார் (புறம். 217:7-9). 'தன் மலையடுக்கத்தைப் பாடியோர்க்கு முள்ளம்பன்றியின் கொழுத்த ஊனும் சந்தனமும் யானை மருப்பும் ஆகிய மூன்றையும் புலித்தோலில் குவித்துக் கொடுக்கும் நாடனாகிய எம்கோன் ஆய் அண்டிரன் போல ஞாயிறே, நீ வள்ளன்மை யுடையையோ' என்று வினவுவார்போல் அவன் கொடையை உறையூர் ஏணிச்சேரி முடமோசியார் பாராட்டுவர் (புறம். 374:8-17). உன்னமரத்தின் பகைவன் எங்கோன் எனக் கபிலர் பாரி மறத்தைச் சிறப்பிப்பர் (பதி. 61:6,8). பகைவரது அரண்களை அவ்வவ்விடங்களிலே சென்று கைக்கொண்டு நீங்கிய விழுச்சிறப்பினை யுடையவரும் தென்றிசைக்குக் குமரியும் வடதிசைக்கு மேருவும் கீழ்த் திசை மேற்றிசைகட்குக் கடலும் எல்லையாகவுடைய இடைப்பட்ட நிலத்தில் வாழ்வோரெல்லாம் பழமையைச் சொல்லி ஏவல் கேட்கும்படி வெற்றியோடு செறிந்து ஒழுகியவருமான கொற்றவர்தம் கோன் ஆவான் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் (மது. 67-74). மலைநாடனான கோன் நன்னனின் நறுநுதலார் மேனியின் மாமைநிறம் பிரிவினால் பசப்பெய்தின (மலை. வெ.). குறளன் கூனியிடம் இனி யான் உன்னை இகழ்ந்து கூறேன் என்பதற்குக் கோன் அடிதொட்டேன் என்று கூறிச் சூளுரைத்தான் (கலி. 94:36).

**கோனாட்டு எறிச்சிலூர் மாடலன் மதுரைக் குமரனார்** – புலவர். மதுரைக் குமரனார் என்பது இவரது இயற்பெயர். மாடலன் என்பது தந்தையார் பெயர் கோனாட்டு எறிச்சிலூர் இவரது ஊர். புதுக்கோட்டைக்குத் தெற்கின் கண்ணதாகிய கோனாட்டில் இக்காலத்து எறிச்சி என்று பழையதோர் ஊருள்ளதெனவும் அவ்வூரே இப்புலவரது எறிச்சிலூராகலாம் எனவும் கருதுவர் உ. வே. சா. (புறம். 167,394. அடிக்குறிப்புக்கள்). மாடலன் என்ற தந்தையார் பெயரை நோக்க இப்புலவரை அந்தணரென அறியலாம் என்பர் ஔவை து. (புறம். 54. முன்னுரை). இவர் பாடியனவாகப் புறநானூற்றில் மட்டும் ஆறு பாடல்கள் (54, 61, 167,1 80, 197, 394) உள. அவற்றால் இவர், சேரமான் குட்டுவன் கோதை, சோழன் இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நலங்கிள்ளி சேட்சென்னி, ஏனாதி திருக்கிள்ளி, ஈர்ந்தூர் கிழான் தோயன்மாறன், சோழன் குராப் பள்ளித் துஞ்சிய பெருந்திருமாவளவன், சோழிய ஏனாதி திருக்குட்டுவன் ஆகிய அறுவரையும் பாடியுள்ளார். அவருள் சோழன் குராப் பள்ளித் துஞ்சிய பெருந்திருமாவளவன் ஒருவனை யொழிய ஏனை ஐவரையும் இவர் சிறப்பாகப் பாராட்டியுள்ளமை காணலாம். அச்சோழன் இவர்க்குப் பரிசில் நீட்டித்தமையால் இவரால் பாராட்டப் பெறாதொழிந்தனன். இவர் பாடல்களில் சொல் நலமும் பொருள்நலமும் செம்மையாய் உள்ளன. அணிகளுள் வஞ்சப்புகழ்ச்சியணி அமையப் பாடுதலில் இவர் வல்லவர். ஏனாதி திருக்கிள்ளி போரைக் காணின் அப்போரை வென்று பகைவரது படையை விலக்கி எதிர் நிற்றலால் வாள் தைத்து வடுவழுந்திய உடம்புடனே கண்ணுக்கு இன்னாதவன் எனப் பழித்தது போலப் புகழ்தலும் அவன் பகைவர் அவனைக் காணில் புறந்தருதலால் புண்ணறியா உடம்புடன் கண்ணுக்கு இனியர் எனப் புகழ்ந்தது போலப் பழித்தலும் ஆகிய அணி நயத்தை இவர் ஒரு பாடலில் (புறம். 167) அழகுற அமைத்துள்ளார். சோழிய ஏனாதி திருக்குட்டுவனது வண்மையை இவர் இகழ்வது போலப் புகழ்வதும் (புறம். 374) இங்கே உணர்ந்து இன்புறத்தகும். சேரமான் குட்டுவன் கோதையின் நாடு அவன் பகைவர்க்கு இடையன் ஆட்டினத்தோடே அணுகுதற்கரிய புலிவாழிடம் போன்றது என்னும் இவரது உவமை நயம் (புறம். 54) உணரத்தகும். 'தேரினை யுடைய ரெனவும் களிற்றினை யுடைய ரெனவும் வெற்றியை யுடைய ரெனவும் கருதி அரசர்தம் செல்வத்தை யாம் மதித்தலில்லோம்; மற்று, சீறூர்

